னர். சிரில்பர்ட்டின் ஆராய்ச்சிகளைத் திறனாய்ந்த சிலர் கூறுவது - 'அறிவியல் முறையிலமைந்த ஆராய்ச்சி விதிகளை எவ்வாறு புறக்கணிப்பது என்ப தற்கு இவரது ஆராய்ச்சிகள் ஒரு தெளிவான எடுத் துக் காட்டாகும்'.

அறிவுத்திறனும் ஆற்றலும் அறிவியல் உலகில் பெருமதிப்பும் பெற்றிருந்தாலும், நேர்மையைக் கடைப்பிடிக்காவிடில், ஓர் அறிவியலறிஞரின் படைப்பு களும் பெயரும் எவ்வாறு சிறுமை எய்தும் என்பதற் குச் சர் சிரில் பர்ட்டின் வாழ்க்கை ஒரு சிறந்த எடுத் துக்காட்டாகும். வே.க.

**துணை நூல்:**

Hearnshaw, L. S., Cyril Burt: Psychologist, London: Hodder & Stoughton, 1979.

*சிரீகாகுளம்*: இது ஆந்திரா மாநிலத்தில் சிக்கா கோல் இருப்புப் பாதைக்குத் தெற்கே 24 கி.மீ. தூரத்தில் உளளது. இவ்வூரில் உளள சிரீகூர்ம நாத சுவாமி கோயில் மிகவும் சிறப்புப் பெற்றது. இக் கோயில் கி பி. 10-ஆம் நூற்றாண்டில் கிழைச சாளுக் கிய மன்னர்களால் கட்டப்பட்டது. இது ஆநதிர- கலிங்க எல்லையில் உள்ளது.

இக்கோயிலில் விட்டுணு, ஆமைவடிவத்தில் உள் ளார். மூலவர் கூர்மேசுவரர். இககோயிலில் பல புனித தீர்த்தங்கள் உளளன. சுவேத மன்னரை வாழ்த்து வதற்காக இஙகே கடவுள் அவதரித்தாரெனக் கூறப் படுகிறது. இககோயிலில இராமர். சீதை, இலக்கு மணன் ஆகியோரின் படிமங்கள் உளளன. இக்கோயில் கீழைச் சாளுக்கியப் பாணியில் அமைந்துளளது.

கே.சே.

*சிரீகிருட்டிண தேவராயா பல்கலைக் கழகம்* ஆநதிரப் பிரதேசத்தில் அணமைக் காலங் களில் தோற்றுவிக்கப்பட்ட பல்கலைக் கழகங்களுள் ஒன்று. இது 1981-இல் ஆந்திர அரசால் தொடங்கப் பட்டது. இராயலசீமா பகுதி மக்களின் நெடுநாளைய வேண்டுகோளை ஆந்திர அரசு ஏற்று அனந்தப்பூர் மாவட்டத்தில் சிரீ வேங்கடேசுவரபுரம் என்னும் ஊரில் 510 ஏக்கர் பரப்பில் சிரீகிருட்டிண தேவராயா பல்கலைக் கழகம் (Sri Krishnadevaraya University) அமைக்கப்பட்டுள்ளது. ஆந்திரப் பிரதேசத்தை ஆண்ட சிறந்த அரசர்களுள் ஒருவரான கிருட்டிண தேவராயர் பெயரில் இப்பல்கலைக்கழகம் தோற்று விக்கப்பட்டுள்ளது.

இப்பல்கலைக் கழகம் கற்பித்தல், உயராய்வு ஆகிய பணிகளை முதன்மையாகக் கொண்டுள்ளது. இங்குத் தெலுங்கு, ஆங்கிலம், வணிகவியல், பொரு ளியல். சட்டவியல், ஊரக வளர்ச்சி, உயிர் அறிவியல் (Bio-Science). வேதியியல், இயற்பியல் ஆகிய துறை களில் கல்வி பெறலாம். இளம் அறிவியலும், இளங் கலைப் பட்டப் படிப்புகளும் இங்கு வழங்கப்பட வில்லை. சட்டவியலிலும் நூலகவியலிலும் மட்டும் இளம் பட்டப்படிப்பு உண்டு. ஆராய்ச்சிப் பட்டங்கள் பெறவும் இங்கு வசதியுள்ளது.

தொழிலாளர் சட்டம், வரிச் சட்டங்கள், எந்திர வியலும் தொழில்நுட்பமும் முதலானவற்றில் பட்ட யப் படிப்பு (Diploma) மேற்கொள்ள வசதியுண்டு. இவ்வாறே நூலகவியல், தமிழ், சமசுகிருதம் முதலான வற்றில் 6 மாதங்கள் பயின்று சான்றிதழ்ப் பட்டங்கள் பெறலாம்.

இப் பல்கலைக் கழகத்தில் 40,000 க்கும் மேலான நூல்களைக் கொண்ட நூலகம் உள்ளது. நாட்டு நலப்பணி, விளையாட்டு முதலானவற்றில் ஈடுபட மாணவர்களுக்கு வசதி உள்ளது. சீ.ப.

*சிரீசக்கரம்*: சக்தி வழிபாடு இந்திய நாட்டில் தொன்றுதொட்டு நிலவி வருகிறது. அதனை இரண்டு வகையாகப் பிரிக்கலாம். ஒனறு மனத்தால் வழிபடு தல். மற்றொன்று அனனையைச் சிரீசக்கரத்தில், தூலவடிவத்தில் கொணர்ந்து வழிபடுதல்.

சிரீசக்கரம் சாதாரணமாகத் தாமிரத் தகடு களிலோ, சந்தனம், குங்குமம் அல்லது மஞ்சள் இவற் றின் மீதோ, புதிய பட்டுத்துணி போன்ற தூய பொருளின் மீதோ வரையப்பட்டு. மலர்கள், சந்த னம், குங்குமம் இவற்றைக் கொண்டு அருச்சிக்கப்படு கிறது. வழக்கமான வழிபாட்டு முறைப்படி நிவேத னங்கள் படைக்கப்பட்டு, ஊதுபத்தியும், விளக்கு களும் ஏற்றப்பட்டுக் கறபூர ஆரத்தி காட்டப்பட்டு அன்னை ஆராதிக்கப்படுகிறாள.



சிரீசக்கர வரைபடத்தில் முதலில் அமைவது ஒன்றையொன்று வெட்டிக் கொள்ளும் 4 முக்கோணங்கள். (காண்க:படம் 1) இவற்றின் 4 முனைகளும் மேல் நோக்கி இருக்கும். அவை சிவசக்கரம் எனப் படும். மேற்கூறிய முக்கோணங்களை வெட்டிக் கொண்டு கீழ்நோக்கிய முனைகளோடு கூடியமையும் 5 முக்கோணங்கள் சக்தி சக்கரம் எனப்படும்.

பிறகு சிவசக்கரமும் சக்தி சக்கரமும் ஒன்றன் மேல் ஒன்று பொருத்தப்படுவதால் மொத்தத்தில் 43 முனைகள் கொண்ட வடிவம் கிடைக்கும். (படம்:3). இவற்றின் வெளி முனைகளை ஒட்டி ஒரு வட்டம் வரையப்பட்டு அதனை ஒட்டி 8 தாமரை இதழ்கள் அமையும்.



இதனை ஒட்டி மற்றோர் வட்டம் வரையப்பட்டு அதைச் சுற்றி 16 இதழ்கள கொணட தாமரை வரையப்படும். இவ்வமைப்பைச் சுற்றி மூன்று வட்டங்கள் அமையும். முடிவில் அவை நான்கு வாசல்கள் கொண்ட கோட்டை மதில் போன்ற அமைப்பால் பாதுகாக்கப்படும் (படம் 4). சிரீசக்கரத்தின் பாகங்களைக் குறிக்கப் பல்வேறு வண்ணஙகள் பயன்படுத்தப் பட்டிருக்கின்றன.



**சிரீசக்கரத்தின் பாகங்கள்:**

1. பிந்து: இதுதான் சிரீசக்கரத்தின் நடுவில் அமையும் புள்ளி. இதுவே சக்தி வீற்றிருக்கும் இடம் (சிவப்புப் புள்ளி). 2. திரிகோணம்: பிந்துவினை உள்ளடக்கிய சிறு முக்கோணம் (வெள்ளை நிறம்). 3. அட்டகோணம்: திரிகோணத்தை உள்ளடககிய எண முக்கோணப் பகுதி (நீலநிறம்), 4. அந்தர்-தசாவரம்: அட்டகோணத்தை உள்ளடக்கிய பத்து முக்கோணப் பகுதி (வெள்ளை நிறம்). 5. பகிர்-தசாரம்: அந்தர்-தசாரத்தை உள்ளடக்கிய பத்து முக்கோணப் பகுதி (பச்சை நிறம்). 6. சதுர்தசாரம்: பகிர் தசாரத்தை உள்ளடக்கிய 14 முக்கோணப் பகுதி (மஞ்சள் நிறம்). 7. அட்டதளம்: சதுாதசாரத்தை உள்ளடககிய 8 தாமரை இதழ்ப் பகுதி. 8. சோடச-தளம் அட்டதளத்தை உள்ளடக்கிய 16 தாமரை இதழ்ப் பகுதி. 9. மேகலா திரயம்: சோடசத்தை உள்ளடக்கிய மூன்று வட்டங்கள். 10. பூபுரம்: சிரீசக்ரத்தைப் பாதுகாக்கும் கோட்டை போன்ற அமைப்பு; நான்கு வாசல்கள் கொண்டது.

சாதாரண நோக்கில், 4 முனைகள் கொண்ட சிவசக்கரம், மச்சை, சுக்கிலம் (ஆண்கரு), பிராண வாயு, சீவாத்மா என்ற நான்கையும் குறிக்கும். 5 முனை கொண்ட சக்தி சக்கரம், தாது, தோல், இரத்தம், மாமிசம, எலும்பு ஆகிய ஐந்தையும் குறிக்கும். மொத்தத்தில் சிவ, சக்தி சக்கரங்களின சேர்க்கை படைப்பின் தத்துவத்தைக் குறிக்கிறது.

தத்துவ முறையில் பார்க்குங்கால், ஐநது முனைச் சக்தி சக்கரம் பஞ்ச பூதங்களைக் குறிக்கிறது. நான்கு முனைச் சிவசக்கரம், மாயை, சுத்த வித்யை, மகேசுவரர், சதாசிவர் ஆகிய தத்துவங்களைக் குறிக்கிறது. ஐம்புலன்களை வென்று பஞ்ச பூதங்களினால் பாதிக்கப்படாமல, மாயையை அகற்றி ஆனந்த வடிவினனான இறைவனுடன் ஒன்றுபடுதலே 'வீடு' எனனும் தத்துவத்தைச் சிரீசக்கரம் அறிவிக்கிறது என்பர் அறிஞர்.

சிரீசக்கரம் குண்டலினி என்னும் இறைசக்தியின் படிப்படியான முன்னேற்றத்தை எவ்வாறு குறிக்கிறது என்பதனைச் 'சௌந்தரியலகரி' என்னும் பகுதி குறித்துளள விளக்கத்தால் அறியலாம். சிரீசக்கரத்தின தத்துவங்களைச் சௌந்தர்யலகரியில் 'மஹீம்மூலாதாரோ' என்று தொடங்கும் செய்யுளும், 'பவானித்வம் தாசே' என்று தொடங்கும் செய்யுளும், விவரித்துள்ளமையைக் காணலாம்.

சிரீசக்கரம் வரையும் முறை மேலே கொடுக்கப் பட்டது. ஆயினும் சிரீசக்கரத்தில் பல வகைகள் உள.

குறிப்பிட்ட முக்கோணங்களுக்குக் குறிப்பிட்ட வணணங்கள் கொடுப்பதின் மூலம், திரைலோக்கிய மோகன சக்கரம், சாவாசா பரிபூரசக்கரம் போன்ற பலவகைபபட்ட சிரீசக்கரங்கள் கிடைக்கப் பெறுகின் றன.

சிரீசக்கரத்தை வரைபடமாக வரையும் முறை மேலே கொடுக்கப்பட்டது. அவ்வாறன்றிப் பிந்து முதல், பூபுரம வரையிலான பகுதிகள் ஒன்றன் கீழ் ஒன்றாகப் பிரமிடு வடிவத்தில் பஞ்சஉலோகத்தில் வார்க்கப்பட்டு வழிபாட்டுக்குப் பயன்படுத்தப்படு கிறது. இதனை 'மேரு' என்று சொலவர். இதிலும பல வகைகள உண்டு. எடுத்துக்காட்டாக, மாங்காடு காமாட்சி அம்மன கோயிலில் இருக்கும மேரு ஆமையின் முதுகுப்புறம என்ற வகையைச் சார்ந தது ஆகும்.

சிரீசக்கர வழிபாடு எல்லாத் தேவதைகளுக்கும உகந்ததாகக் கருதப்படுகிறது இவவழிபாட்டினைக் கைக் கொளளத் தகுந்த மனநிலையும் நமபிக்கை யும் கொள்கைப் பிடிப்புமே தேவை. ஆண பெண் வேறுபாடின்றிக் குலம, கோத்திரம் வேறுபாடினறி அனைவரும் கைக் கொளளலாம் ஆனால, இதனைத் தகுநத குருமார்களிடம் உபதேசம பெறற பினனரே கைககொளளவேணடும் என்ற விதிமுறை உணடு. எந்த ஊரிலும் எந்த இடததிலும் செய்யததகக, இக்காலத்திறகேறற வழிபாட்டு முறை சிரீசக்கர வழிபாடே ஆகும் என்பது அறிஞர்களால் கருதப்படு கிறது. சு.இராம.

**துணைநூல்கள்:**

**Parasuramakalpasutra**, Gaekwad Oriental Series, Vol. XXII, Baroda, 1923.

**Srichakra**, S. Sankaranarayanan, Aurobindo. Ashrama, Pondicherry, 1970.

**Sricakralekha**, Ed., Purnachandra Rath, Rourkela, 1982.

**Tanntasamgrapha**, Varanasi Samskrita Viswa Vidyalaya Series, 1970.

*சிரீசைலம்*: இது ஆந்திர மாநிலத்தில கர்னூல மாவட்டததில் ஓடும கிருட்டிணா ஆறறின் தென கரையிலுளள இடபகிரியில் உள்ளது. இவ்வூர் சைவ சமயததினரின் முக்கிய புணணியத் தலமாக விளங்குகிறது. இது சிரீசைலம் அல்லது சிரீபருவதம் என்று சொலலபபடுகிறது. சிரீசைலம் பரமசிவனின் பல அம்சங்களில் ஒன்றாகும். இதனுடைய புனிதத் துவத்தை இந்துக்களும் பௌத்தர்களும் போட்டி போட்டுக் கொணடு புகழ்கிறார்கள். இவ்விடத்தைப் பற்றிய செய்தி மகாபாரதத்தில் ஓரிடத்தில் வரு கிறது. சங்கறபம் செய்யும் போது இந்துக்கள இப் புனிதத்தலத்தைப் பறறிக் கூறுகினறனர்.

இந்துக்களின் காவியங்களிலும் புராணங்களிலும் இவ்விடத்தைப் பறறிய குறிப்புகள் வருகின்றன சீனப்பயணிகளான பாகியானும், யுவானசுவாங்கும் பௌத்த துறவி நாசார்ச்சுனர் என்பவா கி.பி. முத லாம் நூற்றாணடில் இங்கே வாழ்நதாரெனக் கூறுகினறனர். இதிலிருந்துஇவ்விடத்தின் தொன்மை விளங்குகிறது.

புராணக கதைகளின்படி பரமசிவன வாகனமான இடபம்இங்கே தவங்கிடந்தது உடனே பார்வதியும் பரமசிவனும் மலலிகார்ச்சுனர் பிரமரம்பா உருவங களிலஇடபத்தின் முன தோனறி வரங்கொடுத்தனர். பாதாள கஙகை எனப்படும கிருட்டிணா ஆற்றில வழிபாட்டுக்குரிய பல இலிஙகஙகள (புனிதக்கறகள) உள்ளன.

சிரீசைல அரசனின் மாநில அலுவலர்களுள ஒருவர் பொன்னாலான ஓர் எருதையும் பிருஙகி முனி வரின சிலையையும் இவ்வூர் கோயிலுக்கு அன்பளிப் பாகத் தநதாா என இவவூர்க் மக்கள நம்புகின்றனர். பரமசிவனுககாகத் தவஙகிடநது, தவஙகிடநது எலும் புக்கூடாகிவிட்ட பிருஙகி முனிவருககு நிறபதற்காகப் பரமசிவன மூனறாம் காலை வழங்கினார். ஆகவே தான இஙகேயுளள பிருஙகி முனிவருக்குமூனறு கால கள் உளளன.

சிரீசைலம (Srisailam) கி.பி. 8-ஆம் நூற்றாண டில் ஆதிசங்கரருடன தொடர்பு கொணடு விளங் கியது. இரண்டாம சந்திர குபதரின மகள் பிரபாவதி எனபவள இஙகுளள சிவனுககுப் பூசை செய்தமை புராண வரலாறாகக கூறப்படுகிறது. இவளது சிற்பம் ஒனறு இககோயிலில் உளளது. இச்சிற்பம சாளுககியரின காலத்தைச சார்நதது. சிரீசைலம மலைப்பகுதிகளில செஞ்சு (Chenchu) எனப்படும் மலையின மககள வாழநது வருகின்றனர். இவாகள இங்குளள சிவனைத் தங்களுள ஒருவராககக கருதி வழி படுகின்றனர். தங்கள் இனத்துப் பெணணையே சிவன் மணநதாரென இவர்கள் கூறுகினறனர். எனவே, இச்சிவனைச் செஞ்சு மலலையா எனக் கூறு கின்றனர்.

இங்குளள கோயில் மிகப் பெரியது இக்கோயி லின் வெளிப்புறச் சுவர்களில் பல சிற்பங்கள் செதுக கப்பட்டுள்ளன. இவை சைவ புராணத் தொடர் புடைய சிற்பங்களாகும். கோயிலின கல்வெட்டுகள் கி.பி. 13, 14-ஆம் நூற்றாண்டுகளைச் சார்ந்தவை யாகும். அவை காகதிய, விசயநகர அரசர்களின்



சிரீசைலம் கோயில்

கல்வெட்டுகளாகும். இக்கோயிலின் உள்ளே தான் பிரமரம்பா கோயில் உள்ளது. இரணடாம் அரிகரர் கட்டிய தூண் மண்டபம் இககோயிலின் உள்ளே உள்ளதாயப் பல அழகிய சிறபஙகளைப் பெற்றுத் திகழ்கிறது.

விசயநகர மன்னர்களான நரசிங்கராயரும், அரிகரரும் இவ்விடத்திற்கு வருகை தந்துள்ளனர். அரிகரர் சகஆண்டு 1326-இல் இக்கோயிலில் ஓர் முக மணடபத்தையும் கட்டியுளளார். கோயிலுக்கு வடக்கேயுள்ள கல்யாண மணடபம், சகஆண்டு 1451-இல் கிருட்டிண தேவராயரின் பணியாளர் ஒருவரால் கட்டப்பட்டுப் பொன்வேயப்பட்டது. இலிங்கத்திறகும் தனியான உட்கோயில் இங்கே உளளது. மாமன்னர் கிருட்டிண தேவராயர் இவ்வூரில உள்ள தேரடித் தெருவில் சகஆண்டு 1438-இல் பல மண்டபங்களைக் கட்டியுள்ளார்.

கி.பி. 15-ஆம் நூற்றாண்டுச் செப்புப் பட்டயத்தின்படி, அந்நூற்றாண்டில் பிராமணர்களுக்கும் சத்திரியருக்கும, வைசியருககும் இடையே சில கோயில் உரிமைகளைப் பற்றிப் பூசல் ஏற்பட்டது. இப் பூசல் கி.பி. 1416-ஆம் ஆண்டு பிப்பிரவரி 13-ஆம் நாள் வைசியருக்குச் சாதகமாக முடிந்தது. சு.இரா.;கே.சே.

**சிரீநகர்** சம்மு-காசுமீர மாநிலத்தின் கோடைக் காலத் தலைநகரம். சிரீநகர மாவட்டத்தின் தலை நகரமாகவும் இந்நகரம் விளங்குகிறது. இந்நகரம் சீலம் நதிக்கரையில் அமைந்துள்ளது. சிரீநகரத்தில் மலைகளும் ஏரிகளும் சூழ்ந்துள்ளன. இந்நகரத்தின் பொருளாதாரம் சுற்றுலாப் பயணிகளின் மூலம் பெரிதும் வளர்ச்சியடைந்துள்ளது. சீலம் நதியின் குறுக்கே இந்நகரில் 7 மரப்பாலங்கள் கட்டப்பட்டுள்ளன. சீலம் ஆறு பல கால்வாய்களாக இந்நகரத்தில் பிரிக்கப்பட்டுள்ளது. இந்நகரத்தில் பல மசூதிகளும் கோயில்களும் உள்ளன. இங்குளள அசரத்பால் மசூதியில் முகம்மது நபியின் தலைமுடி உள்ளது. இந்நகரில் உள்ள சாமி மசூதி கி.பி. 15-ஆம் நூற்றாண்டில் கட்டப்பட்ட மசூதியாகும். தால் ஏரியில உளள மிதக்கும் தோட்டங்கள இந்நகருக்கு வருகை புரியும் சுற்றுலாப் பயணிகளைப் பெரிதும் கவருபவையாக உள்ளன.இவ்வேரிக்குஅருகிலுள்ளசாலிமார்,நிசாத்துப் (Nishat) பூங்காக்களும் புகழ்பெறறவையாகும். சிரீநகரம் விளைபொருளகளின் சந்தை நகரமாகவும் விளங்கி வருகிறது. இநநகரம் மெல்லிய ஆடைகள, விரிப்புகள், உலோகப்பொருள்கள், மரவேலைப்பாடுகள் ஆகியவற்றிற்குப் புகழ்பெற்றது. காசுமீர் பல கலைக் கழகம் இந்நகரத்தில் 1948-ஆம் ஆண்டு நிறுவப்பட்டது இந்நகரத்திலிருந்து வானூர்திகள் தில்லிக்கும் அமிர்தசரசிற்கும் செல்கின்றன.



சாலிமார் பூங்கா

இந்நகரத்திற்கு அருகில் குல்மார்கு (Gulmarg) என்ற பகுதி உள்ளது. இது உரோசா வகைப் பூக்களுக்குப் புகழ் பெற்ற இடமாகும். இங்கிருந்து காசுமீரப் பள்ளத்தாக்கின் அழகைக் கண்டு களிக்கப் பேரெண்ணிக்கையுள்ள சுற்றுலாப்பயணிகள் வருகின்றனர். நங்கபருவதம் மலையுச்சியையும் இங்கிருந்து காணமுடியும். இம் மலையுச்சி 26,699 அடி உயரமுடையது. நகர மக்கள்தொகை 533368 (1981).

சிரீநகர மாவட்டத்தின் பரப்பளவு 3,013 ச.கி.மீ. ஆகும். இம்மாவட்டத்தில் உள்ள காசுமீரப் பள்ளத் தாக்கு பெரிதும் வளமுடைய பகுதியாகும். சம்மு காசுமீர மாநிலத்தில் மிக அதிக மக்கள்தொகை. கொண்ட பகுதி இப்பள்ளத்தாக்கே ஆகும். இம் மாவட்டத்திலுள்ள மலைகளில் காடுகள் உள்ளன. மாவட்டத்தின் மக்கள்தொகை 708328(1981).சு.இரா.

*சிரீபிரகாசா* (கி.பி. 1890-1971): இவர் ஓர் அரசியல் வலலுநர்; பத்திரிகையாளர்; வழக் குரைஞர்; கல்வியாளர்; விடுதலை வீரர். அலகாபாது, கேம்பிரிட்சுப்பல்கலைக் கழகங்களில் தமது மேற் படிப்பை முடித்துவிட்டு 1914-இல் வழக்குரைஞராக வாழ்க்கையைத் தொடங்கினார். ஆனால், ஒரு சில நாட்களில் காங்கிரசுக் கட்சியில் சேர்நதார். அனைத்து இந்தியக் காங்கிரசுக் குழுவிற்கு 1918-இல் உறுப்பினராகத் தேர்ந்தெடுக்கப்பட்டார். அப்பதவி யிலேயே 1945 வரை இவர் நீடித்திருந்தார். இடை யில 1928 முதல் 1934 வரை உத்தரப்பிரதேசக் காங் கிரசுக் குழுவின் செயலராக இருந்தார்; 1929 முதல 1931 வரை இந்தியத் தேசிய காங்கிரசின் செயலராக இருந்தார்; 1934முதல் 1935 வரை உத்தரப்பிரதேசக் காஙகிரசுக் குழுவின தலைவராக இருநதாா; 1934, 1945-இல் சட்டமன்ற உறுப்பினரானார். இவர் 1947முதல் 1949வரை பாகிசுத்தானில் இந்தியத் தூது வராகப் பணியாற்றினார். 1949 முதல் 1950 வரை அசாம் (Assam) ஆளுநராக இருந்தார். மத்திய வணிக அமைச்சராக 1950-51வரை இருந்தார். பின்னர் 1951 முதல் 52 வரை தேசிய கனிவளங்கள், அறிவியல் ஆராய்ச்சி அமைச்சராக இருநதார். மேலும் 1952 முதல்1956 வரை சென்னை ஆளுநரா கவும் இருந்தார். 1956முதல் 1962 வரை பமபாய் ஆளுநராகப் பொறுப்பேற்றிருந்தார்.

இவர் நூல்கள் பல எழுதியுளளார். அவற்றுள் சிறந்தது அன்னிபெசண்டு பற்றி இவர் எழுதிய நூலாகும். இவர் 1971-ஆம் ஆண்டு வாரணாசியில் தமது இல்லத்தில் காலமானார். கே.சே.

*சிரீவசன பூடணம்*: வைராக்கிய சீலரான வடக்குத் திருவீதிப் பிள்ளையின் புதல்வர் இருவர். இருவருள் மூத்தவர் பிள்ளை லோகாசாரியர். இளை யவர் அழகிய மணவாளப் பெருமாள் நாயனார். இப்பெருமக்கள் இருவராலும் வைணவம் புத்தொளி பெற்றது. இவ்விருவரும் பெருமாளும் இளைய பெரு மாளும் போல் இருந்தனர் என்று யதீந்திரப் பிரண வம் கூறும்.

பிள்ளை லோகாசாரியர் பதினெட்டு இரகசிய நூல்களை இயற்றினார். அந்நூல்களின் தொகுப்பை 'அட்டாதச ரகசியம்' என்று வழஙகுவர். இராம காதையில் சுந்தர காணடம் சிறப்புற்றுப் பொலிதல் போல் 'அட்டாதச ரகசியத்தில்' 'சிரீவசன பூடணம்' தனித் தகுதி பெற்றுச் சான்றோர்களால் அனுசந திக்கப் பெறுகிறது.

சிரீவசன பூடணம் திட்ப நுட்பம் செறிந்தது; ஆழ்ந்த கருத்தைக கொண்டுள்ளது. இந்நூலின் சிறப் பியல்பை அனுபவித்தறிந்த மணவாள மாமுனிகள் உபதேசரத்தின மாலையில், 'ஆர் வசன பூடணத்தின் ஆழ் பொருளெல் லாமறிவார்? ஆர் அது சொல் நேரில் அனுட்டிப்பார்' என்று ஈடுபட்டுப் பேசினார்.

சிரீவசன பூடணத்திற்கு மூன்று உரைகள் எழுதப் பெற்றன. அவற்றுள் தலை சிறந்தது மணவாள மாமுனிகளின் விரிவுரையே. பிரம்ம சூத்திரம் எம் பெருமானாரால் விளக்கம் பெற்றது போல் இந்நூல் இவரால் விளககம் பெற்றது.

சிரீவசன பூடணத்தின் குறிக்கோள், இறைவ னையே பற்றுகோடாகக் கொண்டு, மன்னுயிரை யெல்லாம் தன்னுயிர் போல்எண்ணித் தனக்கென வாழாதுபிறர்க்கென வாழும் சிறந்த மனிதனை உரு வாக்குவதே.

தன்னை மேலும் உயர்த்த விரும்பும் அடியவன் குறிக்கோளாகக் கொள்ளத் தககது வேதம். இவ் வேதம் கரும காணடம் என்றும் ஞான காண்டம் என்றும் இருவகைப்படும். இவறறுள ஞானகாண்டமே தலைசிறந்தது. அந்த ஞான காண்டத்தை விளக்கு வன இதிகாசங்களும் புராணங்களும் ஆகும். புரா ணங்களை விட இதிகாசங்களே தலைசிறந்தவை.

இதிகாசம் இரண்டனுள் இராமாயணத்தால் தேவ மாதர்களின் சிறையை விடுவித்தற்காகச் சிறையிருந்த பிராட்டி (சீதை)யின் ஏற்றம் பேசப் படுகிறது;மகாபாரதத்தால் தூது போனவன் ஏற்றம் விளக்கப்படுகிறது. இவ்விரு நூலகளும் மனிதன பிறர்க்காகவே வாழவேண்டும் என்பதை வற்புறுத்து கின்றன.

பிராட்டி கருணையே வடிவமானவள். அவள் உலகில் மன்னுயிர்கள படும் அல்லல்களைக் கண்டு உருகுகின்றாள். பெருமாள் பக்கம் போய் உயிர்கள் பால் இரக்கங்காட்டுமாறு மன்றாடுகின்றாள். 'பெரு மானே! நீ கருணையின்றி இவ்வுயிர்களை வெளியே தள்ளிக் கதவடைத்தால் இவர்கட்குப் புகலிடம் உண்டோ' என்று வேண்டுகிறாள். இந்நிகழ்ச்சி பெருமானும் பிராட்டியும் தனித்திருக்கும்போது நிகழ்வது.

பிராட்டி பெருமானைப் பிரிந்திருக்கும் நிலையில சேதனர்களைத் திருத்த முயல்கின்றாள. கொடிய வனான இராவணன பக்கலிலும் கருணைகொண்டு 'நீ எம்பெருமானைப் பற்றுக' என்று கூறியது உலகம் அறிந்தது.

குற்றமே வடிவான மன்னுயிர்கள் ஒரு பால் இனிக்கினற குற்றங்களைச் செய்து கொண்டுள்ளனர். இறைவனோ, தன்னை யார் தட்டிக் கேட்கப் போகினறார்கள் என்று பெருமிதத்துடன இருக்கின றான். பிராட்டி முயன்று இருசாராரையும் திருத்து கின்றாள.

இறைவனுடன ஒன்றியிருக்கும்போது பெரு மானைத தன் அழகாலே திருத்துகிறாள். இறை வனைப் பிரிந்திருக்கும்போது மன்னுயிர்களை அருளாலே திருத்துகிறாள். இவவாறு இநநூல் நய முறப்பேசுகிறது.

பிராட்டியால் திருத்தப் பெற்ற மன்னுயிாகள கரும யோகத்தையும் ஞான யோகத்தையும் பகதி யோகத்தையும் விட்டுவிட வேண்டும். பிரபத்தி நெறி ஒன்றையே மேற்கொளள வேணடும். கருமயோகம் முதலான நெறிகள பலவிதமான கட்டுப்பாடுகளை விதிசகின்றன. அவற்றில் சிறு குறை நேரினும் பேரி டரும் பேரிழப்பும் உண்டாகும்.

பிரபத்திக்கு, இன்ன காலத்தில், இன்ன இடத் தில், இன்னான மேற்கொள்ள வேண்டும் எனனும் கட்டுப்பாடுகள இல்லை. அருசசுனன் போர்ககளத் திலே பிரபத்தி செய்தான். பாஞ்சாலி துரியன் முத லான தீயவர்கள் நடுவில் பூப்புற்ற நிலையில் பிர பத்தி செய்தாள். விலங்கான கயேந்திரன் மடுவில் பிரபத்தி செய்தான்.

இவற்றால் பிரபத்தி செய்பவர்க்கு எவ்வித நிபந் தனையும் இல்லை என்பது புலனாகின்றது. ஆனால்; பிரபத்தி செய்பவன அருசசாவதாரத்தையே பற்ற வேணடும் என்னும் கட்டுப்பாட்டை விதிக்கிறது.

பரமபதத்திலும் பாற்கடலிலும் உள்ள பெரு மானுக்குத் தரும் சிறப்பையெல்லாம அருச்சாமூர்த் திக்கு வழங்க வேண்டும். அருசசாவதாரம் எளிய மக் களின் பொருட்டு அமைக்கப்பட்டது என்று கருது வதை விசிட்டாத்துவிதம் வனமையாக மறுக்கிறது. ஆழ்வார்கள் அனைவரும் பிரபத்தி செய்தது திவ்விய தேசங்களில் உளள பெருமான் பக்கலிலே.

'ஆழ்வார்கள பல இடங்களிலும் பிரபத்தி பண் ணிற்று அருச்சாவதாரத்திலே' என்று இந்நூல் உறுதி படப் பேசுகிறது.

பிரபத்தியை மேற்கொணடவனுக்கு அக அடக் கமும் புற அடக்கமும் தானே அமையும். இவ்விரண்டு பண்பும் வந்த பின் ஆசாரியன் வலிய வந்து ஆட் கொள்வான். ஆசாரியன் தொடர்பால் திருமந்திரம் எளிதே கிட்டும்.

பிரபததியை மேற்கொண்டவன் எப்போதும் 'நீசனேன் நிறைவு ஒன்றும் இலேன்' என்று கருதிய வணணம் இருத்தல் வேண்டும். அங்ஙனம் இருப்பது சிறப்புடையதே. ஆனால், எம்பெருமான் சேதனன் பால் கொண்ட பேரன்பால் தன்னைத் தாழவிட்டுக் காட்சி தருவான்; புரையற்றக் கலப்பான். அபபோது பிரபந்தன் (பிரபத்தியை மேற்கொண்டவன்) பத றாமல் அவன் திருவுளளத்துக்கு ஏற்ப நடத்தல் வேண்டும். இதனை உலகியல் காட்டி இநநூல் விளக் குவது நயப்பாடுடையது.

'அழகுக்கு இட்ட சட்டை அணைக்கைக்கு விரோதி யாமாப் போலே' என்று திட்பமாகவும் நுட்பமாகவும் விளக்குகின்றார் ஆசாரியர்.

ஒருவன் பிரபத்தி செய்தபின், எம்பெருமான், அவனைத் திருப்பாற்கடலாகவும், வைகுநதமாகவும், திருமலையாகவும எணணி அவன் இதயத்திலேயே வாழ்கிறான். நம்மாழ்வார் இப்படிப்பட்ட சமயத் தில், 'கல்லும் கனைகடலும வைகுந்த வான் நாடும் புலலென்று ஒழிந்தன கொல் ஒ பாவம' என்று மனம கரைந்து பேசுகின்றார்.

பிரபத்தி செய்த ஒருவனை அவன் பிறந்த குலம் கருதி அவமதிப்பதைப் பெருமான பொறான். எம் பெருமான் வேதம் உணர்ந்தாரை நோக்கி, பிரபத்தி செய்தவர்கள் மிகமிகத் தாழ்ந்த குலத்திற பிறந் தாலும், நீங்கள அவாகளுடைய திருவடிகளிலே விழுந்து வணஙகுங்கள்; ஆராதியுஙகள. அவாகள உங்களபால ஞானம் பெற விரும்பினால் அருளுங்கள்; அவர்கள் பகவத் ஞானததை உங்களுக்கு உபதேசித் தால் கேட்டுப் பயன பெறுஙகள். 'நான் எப்படி வழி பாட்டிறகு உரியவனோ அதே போல அவர்களும் வழிபாட்டுக்கு உரியவர்கள' என்று கூறுகின்றான.

பிரபத்தியை மேற்கொணடவன் பால் நற்பண்பு கள தாமாக வந்து சேரும். அப்போது, 'நம்முடைய பெருமை அளவிடற்கரியது; நாம் பெரியோம' என்று கருதுதல அழிவுக்கு ஏதுவாகும்.

நற்பண்புகள் யாவும் ஆசாரியன் திருவருளாலும் எம்பெருமான் திருவருளாலும் வந்தன என்று எண்ணி எண்ணி அடக்கமாக இருத்தல் வேண்டும்.

பிரபத்தி செய்பவன் இறைவன் மூலமாகவும் உய்வு பெறலாம்; ஆசாரியன் மூலமாகவும் உய்வு பெறலாம். இரண்டினுள்ளும் ஆசாரியனைப் பற்றுவதே சிறந்தது. இறைவனைப் பற்றி உய்வு தேடுவது ஒருவன் மற்றொருவன் கையைப் பற்றிச் செயலை நிறைவேற்றக் கருதுதல் போன்றது. ஒருகால் அவன் கையை உதறி வெளியே போ என்று கூறினாலும் கூறலாம்.

ஆசாரியனைப் பற்றுவது தக்க தலைவன் காலைப் பற்றுவது போன்றது. ஒருவன் காலைப் பற்றும்போது எவ்வளவு கொடியவன் ஆனாலும் காலையுதறிச் சீறமாட்டான். குன்றனைய குற்றமும் காலைப் பற்றிய அளவில் தலைவன் கண்ணுக்குத் தோன்றாது

இக்கருத்தை, 'ஈச்வரனைப் பற்றுகை கையைப் பற்றிக் காரியங் கொள்ளுமோபாதி, ஆசாரியனைப் பற்றுகை காலைப் பிடித்துக் காரியம் கொள்ளுமோபாதி' என்று சுருங்கக் கூறி விளங்கவைக்கிறார். (கொள்ளுமோபாதி – கொள்வது போன்றது).

ஆசாரியன் திருவருள் இருந்தால்உய்வு பெறலாம்; அவன் அருளில்லையேல் உய்வேயில்லை. அவனது அருள் பெற்றவனை இறைவன் வலிய வந்து ஆட்கொள்வான்.

'தாமரையை அலர்த்தக்கடவ ஆதித்தியன்தானே நீரைப் பிரிந்தால் அத்தை உலர்த்துமாப்போலே சொரூப விகாசத்தைப் பண்ணும் ஈச்வரன் தானே ஆசாரிய சம்பந்தம் குலைந்தால் அத்தை வாடப் பண்ணும். ஆகையால் ஆசாரிய அபிமானமே தாரகம் என்று இந்நூல் விளக்குகிறது.

திருமாலின் திருவருளைப் பெற்று ஆன்மாக்கள் உய்யவேண்டும் என்னும் கருணையால் பிள்ளை லோகாசாரியர் இயற்றிய இந்நூல் எம்பெருமானாரின் திருவுள்ளத்தையும் ஆழ்வார்களின் திருஉள்ளத்தையும் நிறைவு செய்ய உதித்த ஞான சூரியனாகும். எஸ்.கே இ.

***சிரீவிசயம்*** தென்கிழக்கு ஆசியாவில் இருந்த கடலோரப் பேரரசு. இப்பேரரசு கி.பி.7 முதல் 13-ஆம் நூற்றாண்டு வரை மிகவும் உன்னத நிலையில் இருந்தது. இது எப்பொழுது தோன்றியது என்று எவராலும் அறுதியிட்டுக் கூறுதல் இயலாது. எனினும் வரலாற்றறிஞர் கருத்துப்படி இது சுமத்திராவிலுள்ள பாலம்பாங்குப் (Palembang) பகுதியாகலாம்.

சிரீவிசயத்தின் ஆட்சி சிறுகச் சிறுகச் சுமத்திரா, பங்கா, சாவா முழுவதிலும் பரவி மலேயா முந்நீரகத்தின் பெரும்பகுதியிலும் பரவி ஆதிக்கம் செலுத்தியது. யுவான் சுவாங்கிற்குப் பிறகு இந்தியாவிற்கு வருகை தந்த இட்சிங்கு (I-Tsing) என்னும் சீனப்பயணி தனது நூலில் இதைப் பற்றிக் குறிப்பிடுகிறார். சிரீவிசயத்தை இவர் சீ-லீ-போ-சீ அல்லது போ-சீ என்று குறிக்கிறார். இது மகாயான பௌத்த சமயத்தின் மையமாக இருந்தது. இதைப் பற்றிய செய்திகள் கி.பி.7-ஆம் நூற்றாண்டுக் கல்வெட்டுகள் மூலமும் நமக்குக் கிடைக்கின்றன.

இது கி.பி. எட்டாம் நூற்றாண்டில் சைலேந்திர மன்னர்கள் ஆட்சியின்கீழ் இருந்தது. கி.பி. பத்தாம் நூற்றாண்டின் இறுதியில் இதற்கும் சாவாவிற்கும் இடையே பெரும் பகை மூணடது.

தென்னிந்திய வரலாற்றிலேயே இராசேந்திர சோழன் கடாரம் என்று சொல்லப்பட்ட சிரீவிசயத்திற்கு அனுப்பிய கப்பற்படை முக்கிய பங்கைப் பெற்றது. இதைப் பற்றிய செய்தியை இவரது ஆட்சியாண்டு பதினான்கில் செதுக்கப்பட்ட கல்வெட்டுகள் கூறுகின்றன. இவர் முன்னோடியான இராசராசன் காலத்தில் சிரீவிசய சைலேந்திரர்கள் சுமுகமான உறவை வைத்திருந்தனர். இராசேந்திரன் ஆட்சியின் தொடக்கத்தில் காம்போச மன்னர் இவரது உதவியை நாடினார். உடனே இராசேந்திரன் தனது தூதுவர்களை 1016, 1033, 1077 ஆகிய ஆண்டுகளில் அனுப்பி வைத்தார். கி பி 1025-இல் சிரீவிசயத்திற்கு இவரது கப்பற்படை அனுப்பப்பட்டது.

வணிகப் போட்டி இதற்குக் காரணமாக இருக்கலாம். இராசேந்திரன் தமது இராணுவ வலிமையைப் பறைசாற்றுவதற்காகவே சிரீவிசயத்திற்கு ஒரு கப்பற்படையை அனுப்பினார் எனப் பேராசிரியர் சத்தியநாதையர் கருதுகிறார். ஆனால், கடற்கொள்ளையைத் தடுப்பதற்காகத்தான் இது அனுப்பப்பட்டது எனப் பேராசிரியர் எ எல். பாசம் (Basham) கருதுகிறார். கலிங்கத்துப்பரணியும், குலோத்துங்கச் சோழன் உலாவும் இவனது படைவலிமைக்குச் சான்று பகருகின்றன. இப்போரில் இராசேந்திரன் வென்றானெனச் சோழர் கல்வெட்டுகளும் செப்பேடுகளும் கூறுகின்றன.மேலும் இராசேந்திரன் 'கடாரம்கொண்டான்' என்ற பட்டத்தையும் சூட்டிக்கொண்டான். மீண்டும் 1068–இல் வீரஇராசேந்திரன் காலத்தில் இங்கே ஓர் கடற்படை அனுப்பப்பட்டது. 11-ஆம் நூறறாண்டில் சீனாவிற்கும் சிரீவிசயத்திற்குமிடையே சுமுகமான உறவு இருந்தது. இருப்பினும் இறுதியில் சிரீவிசய மன்னரான சங்கராமவிசயதுங்கவருமன் கைது செய்யப்பட்டார். பண்ணை, மலையூர், மாயிருடிங்கம், இலங்காசோகம், பப்பாளம், இலிம்பங்கம், வளைப்பந்தூர், தக்கோலம், கடாரம் ஆகியவை சோழர்களால் கைப்பற்றப்பட்டன. சோழப்பேரரசிற்

கும் சிரீவிசயத்திற்குமிடையே கி.பி.1088-இல சுமுக மான வர்த்தகத் தொடர்பு இருந்ததுஎன்பதைச் சுமத் திராவிலுள்ள ஒரு தமிழ்க் கல்வெட்டுக் கூறுகிறது.

எனினும், கி.பி 13ஆம் நூறறாண்டில் சைலேந்திர மன்னர்களுள ஒருவரான சந்திரவானு இலங்கைக்கு ஒரு கடற்படையை அனுப்பினார். அங்கே நடந்த கடற்போரில் அவர் தோல்வி அடைந்தார்; பிறகு கொல்லப்பட்டார். இதற்குப்பின் சைலேந்திரப் பேரரசு தனது செல்வாக்கு இழந்து வரலாறறிலிருந்து மறைந்தது. கே.சே.

***சிரீவில்லிபுத்தூர்:*** இது தமிழ் நாட்டில் மதுரைக்கு அணமையில் காமராசர் மாவட்டத்தில் உள ளது. இங்குத்தான் பெரியாழ்வாரும் ஆண்டாளும் பிறந்தனர். விட்டுணுசித்தன் எனப்பட்ட பெரியாழ்வார் இங்குளள வடபத்திரசாயி (ஆலிலையில துயின்றோன்) கோயிலில் தலைமைப் பட்டராக இருந் தார். விட்டுணுவின் சித்தத்தில் இருப்பவர், அவர் சித்தம்போல் நடப்பவர் என்பதால் விட்டுணுசித்தர் என்று சொல்லப்பட்டார். இவர் வைணவ நூல களைக் கற்று வல்லவராகித்திருமால் கைஙகரியத் திற்கே தம்மை முற்றிலும் உரிமையாககினார்.



சிரீவில்லிபுத்தூர்

விட்டுணு சித்தன் காலத்தில் மதுரையில் திருவல் லபதேவன் என்ற பாண்டிய மன்னர் ஆண்டு வந்தார். இவர் கி.பி. 9-ஆம் நூற்றாண்டில் வாழ்ந்தவர் என்று அறிஞர் கோபிநாத ராவ் கருதுகிறார். இப்பாண்டிய மன்னர் பல சமயங்களிலும் உள்ள உண்மையைக் காண்பதற்கு ஒரு பெரிய அவையைக கூட்டினார். இதற்குப் பெரியாழ்வார் அழைக்கப்பட்டார். நாத்திகர்களும், சமணர்களும் பௌத்தர்களும் அழைக்கப்பட்டனர். மன்னர் வாதத்தில் வெல்பவர்க்கு பரிசாகத் தூக்கிக் கட்டிய பொறகிழி அப்படியே இருந் தது. இறுதியாகப் பெரியாழ்வார் பேசத் தொடங்கித் தருக்க முறையில் தம் கொள்கையை நிலை நாட்டினார். பொறகிழி தானாகத் தாழ்நதது. மன் னர் அதை அறுத்து ஆழ்வாரின் திருவடிகளில வைத தார். ஆழ்வார் திருமாலின் பெருமையைக் கூறி வைணவ தத்துவத்தை நிலைநாட்டினார். மன்னரது ஐயமும் நீங்கிற்று. உடனே அவர் ஆழ்வாரைத் தம் பட்டத்து யானைமீதேற்றி, சங்கும் மற்ற வாத்தியங் களும் முழங்க அரச மரியாதையுடன் ஊாவலமாக அழைத்து வந்தார். உடனே திடீரெனறு வானத்தில் திருமால் திருமகள், நிலமகளுடனாய்க் கருடன மீது காட்சியளித்தார். ஆழ்வாரை வாழ்த்தி ஆசீர் வதித்தார். ஆழ்வாரும் பலலாண்டு பல்லாணடு பல் லாயிரத் தாணடு என்று திருமாலைப் புகழந்து பாடி னார்.

வைணவ சமயத்தின் வரலாற்றில் இந்நிகழ்சசி ஒருபெருமைமிக்க நிகழச்சியாகும். பாணடிய நாட்டில் வைணவம் பரவவும் தழைக்கவும் இது உதவியது.

இஙகேயுள்ளஆண்டாள கோயிற கோபுரம் மிக வும் உயர்ந்தது. மந்துகமுனிவர் வடபத்திரசாயியை வழிபட்டுள்ளார். நாயக்க மன்னர்கள இங்கே ஓர் அரண்மனையைக் கட்டியிருந்தனர். இது பாணடிய நாட்டுத் திருப்பதி என்று சொல்லப்படுகிறது இது108 வைணவத் திருப்பதிகளுள ஒன்று. கே. சே.

***சிரீ வேங்கடேசுவரா பல்கலைக் கழகம்*** ஆந்திரப்பிரதேசத்தில் சித்தூர் மாவட்டத்தில அமைந துள்ள வைணவப் புணணியத் தலமான திருப்பதியில 1954- இல் தோற்றுவிக்கப்பட்டது. இப் பல்கலைக்கழ கம் திருவேஙகடப் பெருமானின் பெயரில் அமைந் துள்ளதால், திருவேஙகடவன பலகலைக் கழகம் (Sri Venkateswara University) என்றும் வழங்கப்படு கிறது.

திருமலையின் அடிவாரத்தில்925 ஏக்கரில் அமைக கப்பட்டுள்ள இப் பலகலைக்கழகம் கற்பித்தல, ஆராய்ச்சி, இணைப்புரிமை வழஙகுதல் (Affiliation) முதலான பணிகளை முதன்மையாகக கொண்டுள் ளது. இப்பல்கலைக்கழகத்தின் ஆளுகை (Jurisdiction) அனந்தப்பூர், கடப்பா, கர்நூல், சித்தூர், நெலலூர் ஆகிய மாவட்டங்களைக் கொணடுள்ளது. நிருவாக மும், பெரும்பாலான புலங்களும், சில கல்லூரிகளும்

திருப்பதி வளாகத்தில் செயற்படுகின்றன இதன் விரிவாக்க மையங்களும், இணைப்புரிமை பெற்ற கல்லூரிகளும் மேற்கூறிய மாவட்டங்களில் இயங்குகின்றன. இப்பல்கலைக்கழகத்தில் சற்றேக்குறைய 60 இணைப்புரிமை பெற்ற கல்லூரிகள் உள்ளன.

ஆந்திரப் பிரதேசத்தின் மிகப்பெரும் பல்கலைக் கழகங்களுள் சிரீவேங்கடேசுவரா பலகலைக் கழகமும் ஒன்றாகத் திகழ்வதற்குக் காரணம், இங்குக கலை, அறிவியல் கல்லூரிகள், சட்டக் கலலூரிகள், இசை, மொழிக கல்லூரிகள, வேளாண்மைக் கல்லூரிகள், பொறியியற் கல்லூரிகள், மருத்துவக் கலலூரிகள், அஞ்சல்வழிக கலவித்திட்டம் முதலானவை செயற்படுவதேயாகும். இங்குச்செயறபடும் புலங்கள், தனி மையங்கள (Schools)பின்வருவனவாம். கலை, வணிகவியல், சட்டவியல், கீழை மொழிகளின் மையம், சமுதாய அறிவியலும் நடத்தைசார் அறிவியலும் (Social science and Behavioural science) கல்வியியல, பொறியியல், மருத்துவம், உயிரியல் மற்றும் மணணியல் அறிவியல்கள (Earth sciences) ஆகியவையாம்.

இப் பல்கலைக்கழகத்தில் பயிற்றுவிககப்படும் சில குறிப்பிடத்தக்க பாடங்கள பின்வருவன. முதியோர் கல்வி, உடல்சார் மானிடவியல் (Physical Anthropology), சமுதாய மானிடவியல், உயிர் வேதியியல் (Biochemistry), தமிழ், சமசுகிருதம், அரேபிய, பெர்சிய, உருது மொழிகள, மககள தொகையியல, மனையியல், உடற்கலவி, நடனம், இசை, மின்னணுவியல் மற்றும் தொலைத் தகவல தொடாபு ஆகியவையாகும்.

இப் பல்கலைக் கழகத்தில் புகுமுகப்படிப்பு (PUC) இல்லை. இளம் பட்டப்படிப்பு முதல் ஆராய்ச்சிப் பட்டங்கள் வரை கற்கலாம். பொதுவாக இங்குக் கற்பிக்கப்படும் அனைத்துத துறைகளிலும் முனைவர் பட்டம் வரை பயில வாய்ப்புணடு.

தொலை தூரங்களில் வாழ்வோருக்கும் நேரடியாகச் சேர்ந்து பயில வாய்ப்பில்லாதவர்களுக்கும இப் பல்கலைக்கழகம் அஞ்சல்வழிக் கல்வியை 1972-73 முதல் நடத்துகிறது. தனிப்பட்ட முறையிலும் (Private study) பயின்று பட்டங்கள் பெறலாம். இவ்வகையான படிப்பு பொதுவாகக் கலைப் புலத் துறைகளில மட்டுமே வழங்கப்படுகிறது. கணிதவியலையும் இம்முறையில பயிலலாம். இவை தவிரப் பட்டயப் (Diploma) படிப்புகளும் சான்றிதழ் (Certificate) படிப்புகளும் இங்கு வழங்கப்படுன்றன. மருத்துவப் பிரிவுகள், வயது வந்தோர் கல்வி, வங்கியியலும் கணக்கர் துறையும் (Accountancy), மொழியியல், அயல்நாட்டு மொழிகள் முதலானவற்றில் ஓர் ஆண்டு பயின்று பட்டயத் தகுதி பெறலாம்,

இப் பல்கலைக்கழகம் வழஙகும் சிறப்பு நிலைப பட்டங்கள (Honorary Degree) டி.எசுசி.,டி.லிட், எல்எல்.டி முதலானவையாகும்.

சிறந்த பல்கலைக் கழகங்களில் கிடைக்கும் அனைத்து வசதிகளும் மாணவர்களுக்கு இங்குக் கிடைக்கின்றன. சிறந்த நூலகம், ஆய்வுக்கூடங்கள், மருத்துவக் கல்லூரி மாணவர்களுக்குச் சிறந்த மருத்துவ மனைகள், வேளாண் கல்லூரி மாணவர்களுக்குச் சிறந்த பயிரிடும் தோட்டஙகள முதலானவை உயர்கல்வியின் தேவைகளை நிறைவு செய்வனவாக உள்ளன, நாட்டு நலப்பணி, விளையாட்டுத் துறை முதலானவற்றிலும் மாணவர்கள ஈடுபட வசதியுண்டு, மாணவர்கள, ஆசிரியர்கள, ஊழியர்கள முதலானோருக்கு உறைவிடங்களும் உள்ளன. சீ.ப.

**சிரீ வைகுண்டம்** இன்றைய சிதம்பரனார் மாவட்டத்திலுளள ஒரு வட்டத்தின் தலைநகர். இவ்வூர் தாமிரவருணியாற்றின் வடகரையில் அமைந்துள்ளது. 1911 வரை இவ்வூர் தனி வட்டமாக வில்லை. திருநெலவேலி வட்டத்தில் உள்ள பேரூராக இருந்தது. திருநெல்வேலியிலிருந்து 22 கி.மீ. நேர் கிழக்கே திருச்செந்தூர் செல்லும பாதையில் இவவூர். உள்ளது; மருத வளமுடையது. தாமிரவருணியாற்றின் இறுதி அணை இவவூரில உளளது.

கள்ளப்பிரான் என வழங்கும் திருமால கோயில் இவ்வூரின் பெரிய கோயிலாகும். வைகுண்டபதி சுவாமி கோயில் என்றும் கூறுவர். இங்குள்ள திருவேங்கடமுடையான மண்டபம், வைகுண்ட ஏகாதசி மண்டபம் மறறும் தூண்களில் அழியா அழகுடைய சிற்பங்கள் இன்றும் காணப்படுகினறன. நவதிருப்பதிகளில் ஒன்று சிரீ வைகுண்டம். பாண்டியர் காலக் கல்வெட்டுகள் இங்கு உள. சிவநெறியாளர்க்குரிய கைலாசநாதர் கோயில் ஒன்றும், முருகன் கோயிலும் உள. ஒன்பது கயிலாயஙகளில் இதுவும் ஒன்றாதலின் அரியும் சிவனும் ஒன்று எனும் பெருநோக்குப் பெற்றுள்ள பெருமை இவ்வூருக்கு உணடு. சிவன் கோயிலைச் சுற்றியுள்ள பகுதி கயிலாயபுரம். திருமால கோயில் கொண்டுள்ள பகுதி வைகுந்தப்பகுதி. சிவன் கோயிலிலும் ஆறு கல்வெட்டுக்கள் உள. இவை வீர பாணடியன் காலத்தவை.

இவ்வூரின் கயிலாயபுரத்தில் குமரகுருபரர் தோன்றினார். இவரால் தோற்றுவிக்கப்பெற்ற மடங்கள் இன்றும் திருப்பனந்தாளிலும், காசியிலும் புகழ்

பெற்று விளங்குகின்றன. இவ்வூரில் குமரகுருபரர் பெயரால் பல அறநிறுவனங்கள் உள. தொடக்கப் பள்ளி, மேல்நிலைப் பள்ளி, கல்லூரி, சங்கம், அச்சகம், காசிமடம் வெளியீடு, குமரகுருபரன் எனும் இலக்கியத் திங்கள் இதழ் ஆகியவை இக்கவிஞர் பெருமான் பெயரால் நடைபெற்று வருகின்றன. தமிழ் இலக்கிய உலகிற்குச் சிற்றிலக்கியங்கள் தந்த குமர குருபரர் எழுதிய கைலாசபதி பதிகம் இவ்வூரின் சிறப்பைக் கூறும். நம்மாழ்வார் பாடல்களிலும் இவ்வூர் இடம்பெற்றுள்ளது. குமரகுருபரர் பெயரால் ஓர் ஆலயமும் உள்ளது. குமரகுருபரர் உயிர் நீத்த நாளன்று இன்றும் குருபூசை நடைபெற்று வருகிறது.

நகரப் பேரூராட்சியாக விளங்கும் இவ்வூரில் அரசு அலுவலகங்கள், நீதிமன்றங்கள், காவல் நிலையம், மருத்துவமனை, நூல்நிலையம், பேருந்து நிலையம், புகைவண்டி நிலையம் ஆகியவை உள. காசிமடத்தின் பெயரால் திருமுறை ஓதுதல், அன்னம்பாலித்தல் போன்ற அறக்கட்டளைகள் நிகழ்ந்து வருகின்றன.

பாளையக்காரர்களுக்கும் ஆங்கிலேயருக்குமிடையே ஏற்பட்ட பூசலில் இவ்வூர் இருசாராருக்கும் பாதுகாப்பைத் தந்த கோட்டையாக விளங்கியுள்ளது இங்குக் கட்டபொம்மன் தம் பதிவேடுகளைக் கோட்டைக்குள் பாதுகாத்து வைத்தாரெனக் கூறுவர். கோயிலே கோட்டையாக விளங்கியுள்ளது.

கோட்டைக்குள் வாழும் நூதன இனத்தாராகிய கோட்டைப் பிள்ளைமாரகளுக்கு உரிய மண கோட்டையில் 400 குடும்பங்கள் இருந்தன என்றும், இப்போது 52 ஆண்களும் 42 பெண்களும் மட்டுமே உள்ளனர் என்றும் திருநெல்வேலி அரசிதழ் (1931) கணக்கிட்டுக் காட்டுகிறது. இப்போது 10 அடி உயர மண்சுவர் மட்டுமே காணப்படுகிறது. இதிலுள்ள மக்கள் வெளியேறிவிட்டனர்.

வரலாற்றாலும் இலக்கியத்தாலும் மண் வளத்தாலும இணைக்கப் பெற்ற இவ்வூர் சைவத்தையும் வைணவத்தையும் இணைக்கும் பேரூராய்த்திகழ்கிறது
பி.தெ.

*சிருங்கேரி* கருநாடக மாநிலத்தில் சிக்மகளூர் மாவட்டத்தில் அமைந்துள்ள தலம். பெங்களூரிலிருந்து 336 கி.மீ. தூரத்தில் உள்ளது. பெங்களூர்-மீராசு இருப்புப்பாதைத் தடத்தில் பீரூர் எனனும் இருப்புப் பாதை நிலையத்திலிருந்து இங்குச் செல்லலாம். கொப்பா என்னுமிடத்திலிருந்து 24 கி.மீ. தொலைவில் துங்கா நதியின் இடக் கரையில் அமைதி தவழும் சூழலில் அமைந்துள்ளது.

கி.பி. 8ஆம் நூற்றாண்டளவில் அத்துவிதச் சமயத்தைத் தோற்றுவித்த ஆதிசங்கரர் என்ற சங்கராச்சாரியார் உருவாக்கிய நான்கு முக்கிய மடங்களுள் ஒன்றான சாரதா பீடம் இங்குள்ளது. இம்மடத்தின் தலைவராகத் திகழ்ந்த மாதவர் எனப்பட்ட வித்யாரணயர் விசயநகரப் பேரரசு உருவாகக் காரணமாயிருந்தவர். ஆதிசங்கரரால் கட்டுவிக்கப்பட்ட சாரதாம்பாள் ஆலயம், இவ்வூரினை அலங்கரிப்பதோடு திராவிடக் கலைககுச் சான்றாகவும் உள்ளது. வித்தியா சங்கரர் ஆலயம் (கி.பி. 15-ஆம் நூ.) சிற்பக் கலைக்குப் பெயர் பெற்றது. சமய அடிப்படையில் புகழ் வாய்ந்ததான இப் பழைமையான ஊரில் ஏறத்தாழ 40 கோவில்கள் உள்ளன. இங்கமைந்துள்ள சிருங்கேரி என்ற குன்றின் மீது மல்லிகார்ச்சுனர் ஆலயம் உள்ளது. மா.கா.

*சிருங்கேரி மடம்*: காண்க: திருமடங்கள்.

*சில்கோ ஏரி*: கனடா நாட்டில் பிரிட்டிடானியக் கொலம்பியாவின் வடமேற்குப் பகுதியில் உள்ள இந்த ஏரியின் நீளம் 64 4 கி.மீ. அகலம் 1.6 முதல் 6.4 கி மீ. சில்கோ ஏரியை (Chilko Lake) அடுத்து நன்னம்பிக்கை (Good hope) மலைத் தொடர் உள்ளது. இதன் நீர் சில்கோ ஆறு வழியாக ஓடுகிறது. ஆற்றின் நீளம் 95 கி.மீ.

இதே பெயரை உடைய ஓர் ஏரி இந்தியாவில் ஒரிசா மாநிலத்தின் வட்கிழக்கில் உள்ளது. ஆனால், இது ஆழமற்றதாகவும் வளைகுடாவாகவும் அமைந்துள்ளது. தெ.பெ.

*சில்யாபின்சுக்கு* உருசியாவில் உள்ள ஒரு நகரம். இது உருசியக் குடியரசில் மேற்குச் சைபீரியாவில் உள்ளது. மக்கள்தொகை. 1,007,000 (1977). யூரல் (Urals) மலைகளின் அடிவாரத்தில் உள்ள சில்யாபினசுக்கு (Chılyabisnk) தொழில வளமும் உலோக வேலைகளும் மிகுதியாக உள்ள ஒரு முக்கிய பகுதியாகும். இங்கு எங்கும் வேளாண் கருவிகளும் உற்பத்தி செய்யப் படுகின்றன. மூலப் பொருள்களிலிருந்து இரும்பு எடுக்கப்படுகிறது. இந்நகரம் கி.பி. 1786- ஆம் ஆண்டிலேயே ஒரு எல்லைப்புறக் காவல் நகராகத் தோற்றுவிக்கப்பெற்றது தெ.பா.

*சில்லறை நன்மைகள்*: தொழிலாளர்கள், அவர்கள் செய்கின்ற வேலைக்கு ஊதியம் பெறுகின்றனர். இந்த ஊதியத்தோடு அவர்களுக்கு வேறு சில நன்மைகளும் கிடைக்கின்றன. அவை சில்லறை நன்மைகள் (Fringe Benefıts) எனப்படுகின்றன. இந் நன்மைகள் தொழிலாளர்களின் பண ஊதியத்தோடு

சோவதில்லை எனினும் அவை அவர்களது உண்மை வருவாயைக் (Real Income) கூட்டுகின்றன

தொடக்கக் காலத்தில் தொழிலாளர்களுக்குக் கிடைத்த சில்லறை நனமைகள் அவர்களது மொத்த ஊதியத்தோடு ஒப்பிடுகையில மிகவும குறைவாகவே இருநதன. இககாலத்தில இவற்றின அளவு குறிப் பிடத்தக்க வகையில உயாநதிருககிறது. சில்லறை நன்மைகள் கூடுகினறபொழுது தொழிலாளர்களின வாழ்க்கைத்தரம் மேம்படுகினறது.

**வரலாற்றுப் பின்னணி:** தொழிலாளர் கழகங்கள (Trade Unions) முதலில் தொழிலாளர்களின் உரிமை களைப் பெறவும், நலனைக் கட்டிக காககவும் முயன்றன. போராடின. அவறறின் வலிமை பெரு கியதால் அவற்றால் தொழிலாளருககெனப்பல புதிய நன்மைகளைப் (சலுகைகளை) பெற முடிந்தது. எடுத்துக்காட்டாக மருத்துவச் செலவுகள, பிளளை களுக்கான படிப்புச் செலவுகள், விபத்துக்குளளான வர்களுக்கு மருத்துவ உதவிகள் போன்றவற்றைக் கூறலாம்.

காலப்போக்கில் நல அரசுகள் (Welfare States) அமைநதபொழுது, தொழிலாளாகளின் நலனகளைப் பெருகக அரசே முயன்றது தொழில் நிறுவனஙகள் தொழிலாளர்களுககுச் சில குறைந்த அளவு நனமை களைச் செயய வேணடுமென்பதை வலியுறுத்திச் செயற்படுத்தி வருகின்றன.

ஒரு தொழில் நிறுவனத்தின அளவையும், இயல் பையும் ஒட்டித தொழிலாளர்கள் சில நனமைகளைப பெறுகினறனர். மிகப் பெரிய நிறுவனங்களில பணி செய்கிறவர்கள, அவை பெறும் ஆதாயத்திற்கேற்ப மிகுதியான நனமைகளை அடைகினறனர்.

சிலலறை நன்மைகள வகைகளிலும் அளவிலும் மிகுதிப்பட்டதற்கான காரணங்களாவன: 1) ஒரு நிறுவனததில பணிசெய்யும் தொழிலாளர்களை ஊக்கப்படுத்தச சில நனமைகளை வழஙகினர். இது மறைமுகமாக நிறுவனத் தின் ஆதாயத்தில தொழி லாளர்களுக்கும் பங்கு அளிப்பதாகஇருந்தது. இதற்கு எடுத்துககாட்டாக ஒரு நிறுவனம் தனது தொழி லாளர்களுககுக குடியிருப்பு, மருத்துவ வசதிகளை அமைத்துத் தருவதைக கூறலாம்.

2) சில நிறுவனங்கள் நல்ல திறமையான தொழிலாளர்களைக் கவர்ந்திழுக்கச் சில சிறப்பு வகையான நன்மைகளை அளிக்கினறன. நாட்டுப புறங்களில் அமைகினற பெரிய தொழிற்கூடஙகளில பணிசெய்ய வர உயர்ந்த தொழில நுட்ப அலுவலர் கள தயங்குகின்றனர். அவாகளுக்கு வாடகை யில்லாமல குடியிருகக வீடு, ஊதியத்தோடு கூடுதல விடுமுறை, குறைந்த விலையில தேவைப் பொருளகள ஆகியவற்றை வழஙகினால் நல்ல திறமையான ஊழியர்கள் பணியாறற வருவாாகள.

3) இப்பொழுது இருக்கும் வருமான வரி அமைப்பு முறையில தொழிலாளர்களின வருவாய் கூடு கினறபொழுது அவர்கள வருமான வரி செலுத்த வேணடியதிருககும். வருவாய் உயர்வுககு மாற்றாக, சில்லறை நனமைகளாகப பெற்றால் அவர்கள அவறறிற்கு வருமான வரி செலுத்த வேணடியய தில்லை. வரியிலிருந்து விலககுப் பெறும் நோககில உயர்ந்த பதவியில் உள்ளவாகளகூட, ஊதியததின் ஒரு பகுதியைச் சிலலறை நனமைகளாகப் பெற விரும புகின்றனா.

4) கூட்டாக ஆயுளகாப்பீடு செய்யுமபொழுதோ, உடல் நலனைக் காககும பணிகளை மேற கொளளும். பொழுதோ மொததச் செலவு குறைவாக இருககும.

5) தொழிலாளர் கழகங்கள் புதுப்புதுச் சில்லறை நன்மைகளைப் பெற்றுத் தருவதன் மூலம தஙகள செலவாக்கை உயாத்திககொளள முயல்கினறன ஆதலால, வாய்பபுக கிடைககும்பொழுதெலலாம் சில்லறை நன்மைகளைப் பெற்றுத் தருகினறன.

**வகைகள்:** தொழிலாளர்களுக்கு வழங்குகின்ற சில்லறை நனமைகள அவை வழங்கப்படும அடிப் படையை ஒட்டியும், அவை வழஙகும் நனமைகளின இயல்பையொட்டியும இருமுறைகளில வகைப்படுத்தப் படுகின்றன.

அரசின் சட்டப்படி கிடைக்கின்ற சில்லறை நன மைகள் எல்லாத் தொழில நிறுவனஙகளில பணி செய்பவர்களுக்கும் ஒன்றுபோல கிடைககும். அரசு அதறகாகத தனி அலுவலர்களை அமர்த்தி, எலலாத் தொழிலாளர்களும் நனமை பெறுகிறார்களா வென்று கவனிககிறது. இத்தகைய நன்மைகள நாட் டிற்கு நாடு வேறுபாடுகின்றன.



தொழில் நிறுவனங்கள வழங்கும் சில்லறை நனமைகள அவற்றின அளவையும் இயல்பையும் ஆதா யத்தையும ஒட்டி அமைகினறன. பெரிய தொழில் நிறுவனங்களால் ஓரளவு மிகுதியான நன்மைகளை வழங்க முடிகிறது. தொழில நிறுவனங்கள் தங்களது தொழிலாளர்கள் அனைவருக்கும் ஒன்றுபோல் நன்மைகளை வழங்குவதில்லை, அவர்களை வகைப் படுத்தி, விருப்பப்படி வேறுபட்ட பல வகைகளில் சில்லறை நன்மைகளை வழங்குகின்றன.

தொழிலாளர் கழகங்களின் வேண்டுதல்களின படி கிடைககிற நன்மைகள ஒனறுபோல் அமைவ திலலை. எநதெந்தத் தொழில்களில் தொழிற் கழகங கள வலுவாக உளளனவோ அங்கெலலாம் ஓரளவு சில்லறை நனமைகளைப் பெற முடிகிறது. தொழி லாளர் சஙகஙகள் நாட்டளவில ஆற்றல மிக்கவை களாக வளர்ந்தால், அவைவிரும்புகிற நன்மைகளைப் பெறச் சட்டமியற்ற அரசினைத் தூணட இயலும்.

சில்லறை நன்மைகளின் இயல்பையொட்டிய முறையின் பிரிவுகளாவன:

அ) ஊதியத்தோடு கிடைக்கிற விடுமுறை ஓய்வு நேரங்கள ஆகியனவும் தொழிலாளர்களுககுக் கிடைக்கும் சிலலறை நன்மைகளாகும். ஊதியத் தோடு ஆண்டுதோறும் சில நாள்கள விடுமுறை, தேர்தல நாள்களில் விடுமுறை, குடும்பத்தில யாரா வது இறந்துவிட்டால சிறபபு விடுப்பு, நோய்வாய்ப் பட்ட காலததிற்கு விடுப்பு, நாள்தோறும் கிடைக் கின்ற சாப்பாட்டு நேரம், ஓய்வு நேரம்ஆகியவறறைக் கூட்டுதல போன்றவை தொழிலாளர்களின உணமை வருவாயைக் கூட்டும்.

ஆ) சில குறிப்பிட்ட காலங்களில் பணி செய்பவர் களுக்குச் சிறப்பு ஊதியம் வழங்கலாம். அதாவது இரவு நேரங்களில பணி நேரத்திற்குப் பினபு (Over Time) விடுமுறை நாளகளில் பணியாற்றுகின றவர்களுக்குக் கூடுதலஊதியம் வழங்குவதும் சில்லறை நன்மைகளோடு சேரும்.

இ) உடல் நலம், பாதுகாப்புத் தொடர்பாகத் தொழிலாளர்கள் பெறுகின்ற நன்மைகளும் சில்லறை நன்மைகளுள அடங்கும். தொழிலாளாகளுக்கு ஆயுள் காப்பீடு செயவது, ஓய்வுகால ஊதியம் வழங்குவது, நோய்வாய்ப்பட்ட காலத்தில் மருந்து, பிற செலவு களை வழங்குவது, பேறு கால விடுமுறையோடு செலவையும் தருவது ஆகியவை இவ்வகை நன்மை களைச் சேரும்.

ஈ) அதிக ஊதியமாக அமையும்வகையில் சில நன்மைகள் கிடைக்கின்றன. ஆண்டுதோறும் கிடைக் கின்ற ஊக்க ஊதியம் (Bonus), ஆதாயத்தில் பங்கு, நீண்ட காலம் விடுமுறை எடுககாமல் பணி செய்பவர் களுக்கு ஊக்கத்தொகை போன்றவை குறிப்பிடத் தக்கவைகளாகும்.

**கருத்துச் சிக்கல்:** தொழிலாளர்கள் பெறுகினற சில்லறை நன்மைகளை அவாகள ஊதியத்தோடு சேர்ததுககொள்வதா, வேணடாமா என்பது பொருளியலில் ஒரு கருத்துச் சிககலாக இருந்து வருகிறது.

சில்லறை நன்மைகள் பொதுவாகப் பணமாகத் தரப்படுவதில்லை அவை பல்வேறு வடிவங்களிலும் அளவுகளிலும் கிடைப்பதால் அவறறைப் பண அளவில் மாறறுவதில நடைமுறைச் சிக்கலகள உள்ளன. மேலும், சில்லறை நனமைகள் ஆளுக்கு ஆள ஆணடுககு ஆணடு மாறுபடுகினறன. இவறறைத் திட்ட வட்டமாகக் கணககிட இயலாது. ஆதலால் இவற்றை ஊதியததோடு சேர்த்துக் கணக்கிடக் கூடாதெனக் கருதுவோரும் உள்ளனர்.

இக்காலத்தில சிலலறை நன்மைகள் வகைகளா லும் அளவாலும விரைந்து வளர்நது வருகின்றன. சில்லறை நனமைகள மிகுதியாகவுள்ள தொழில் நிறுவனங்களையும் பணிகளையும தொழிலாளாகள் மிகவும் விரும்புகின்றனர்.

உயர்ந்த ஊதியம் உள்ளவர்களுக்கு வரிலியிருந்து விலக்குப் பெறுவதற்காகச் சில்லறை நன்மைகளை வழங்குவது நல்லதன்று எனபதும் குறைந்த ஊதியம் உளளவர்களுககுச சிலலறைநன்மைகள வழஙகுவதை வரவேறகலாம் எனபதும் பொதுவான கருத்தாகும்.

பா.சு.

**துணை நூல்கள்:**

**Albert Rees**, The Economics of Trade Unions, James Nisbet & Co, Digswell Place, 1964.

**Lloyd G Reynolds**, Labour Economics and Labour Relations, Prentice-Hall Inc., New Jersey, 1974.

**Mhetras, V C**, Labour Participation in Management, Manaktalas, Bombay, 1966.

**Milton. L.Rock**, Hank-Book of Wage and Salary Administration, Mc Graw Hill Book Co., New York, 1972.

**Neil W.Chamberlain**, Labour, Mc Graw Hill Book Co., New York, 1958.

**Richard A. Lester**, Economics of Labour, The Macmillan Company, New York, 1964.




Richard Perlman, 'Labour Theory, John Wiby & Sons, New York, 1969.'

**சில்லூக்குப் பழங்குடி** வடகிழக்கு ஆப்பிரிக்க நாடான சூடானில வாழும் தொன்மையான குடியாகும். நைல் ஆற்று மக்கள் எனச் சிறப்பாகக் கூறப்படும் மக்கள் இனத்தவர்களுள் சில்லூக்குப் (Shilluk) பழங்குடி இனத்தவர்களும் அடங்குவர் இவர்கள் நீக்கிரோ இனத்தைச் சேர்ந்தவர்கள்; வெப்ப மண்டலப் பிரதேசத்திற்கு ஏற்ற தகவமைப் புடன் கூடிய உடலமைப்பைப்பெற்றுளளவர்கள. பொதுவாக நீக்கிரோ மக்களினத்தார்களுள நைல் ஆற்றுப்பகுதி மக்கள் உயரமானவர்கள்; மெலிந்த உடலமைப்பைப் பெற்றவர்கள். அவர்கள் கை, கால்கள மிக நீண்டவை; கரும்பழுப்பு நிறத்தவர்கள், தலை மயிர் மிகவும் சுருட்டையானது; உதடுகள தடித்தவை. இவை அனைத்தும் சில்லூககுப் பழங்குடி யினரை அடையாளம் காட்டும். இவர்கள் நைல்-சகாரா மொழிக குடும்பத்தைச் சேர்நத சாரி-நைல் (Chari-nile) என்னும் பிரிவைச் சோநத மொழி யினைப் பேசுகின்றனர்.



சில்லூக்குப் பழங்குடிகள்

சில்லூக்குப் பழங்குடியினர் தம்மை நியிகாங்கு (Nyikang) என்னும் அரசன் மரபில் வந்தவர்கள் எனக் கூறுவர். இவர்கள் நியிகாங்கைத் தலைவனாக மதிக்கின்றனர். கி.பி. 16-ஆம் நூற்றாண்டில் வெற்றி கொண்ட பழங்குடிகள் அனைவரும் ஒன்று சேர்ந்து இவனுடைய தலைமையில் வாழ முற்பட்ட னர். இவர்கள் அனைவரின் ஒட்டுமொத்தப் பெயரே சில்லூககு என்பது, இவர்களின் மரபுக் கதைகளின வழக்கிலிருந்து பெறப்படும். நியிகாங்கு ஏற்படுத்திய அரசு முறை இவர்களிடையே இனறும் நிலவி வருகிறது.

சில்லூக்கு மக்கள் தம் வாழ்வில் நியிகாங்கு ஏதோ ஒரு வகையில் பங்குபெற்றுள்ளானென எணணு கின்றனர். பூமியும் ஆகாயமும் நியிகாங்கு வடிவில உள்ளன என்று இவர்கள கருதுகின்றனர். இதனாலேயே நியிகாங்கு பல பெயர்களில சில்லூக்கு மக்களிடையே குறிப்பிடப்படுகிறான். இவனைச சொர்ககம், நைல் ஆற்றின் மைநதன், பூமி, பூமியின் ஆசிரியன் எனப் பலவாறாகக் கூறும் பெயாகள இவர்கள் வழக்கில் உள்ளன. நியிகாங்கு தோன் றியது குறித்துப் பல மரபுக கதைகள வழக்கில் உளளன நியிகாங்கு ஒக்வா (Okwa) என்பவனின் மைந்தன் என்பது ஒரு வழக்கு. ஒக்வா எனபவர் பல தலைமுறைகளைக்கடந்து நிற்கும் சாம்பல் நிறப பசு ஒன்றிலிருநது தோன்றினாரெனவும்அந்தப் பசு கடவுளி னால் ஆற்றில தோற்றுவிக்கப்பட்டதெனவும் கூறுவர். நியிகாங்கின தாய் ஆமை என்றோ ஆமைககு மிக நெருங்கியவிலங்கினம என்றோ குறிபபிடுவர். ஆத லால சில்லூக்கு வாழ்க்கைத் தத்துவத்தில் ஆமைக்கு முதலிடம் உண்டு. ஆற்றங்கரைகளில் ஆமைகளைப் பார்க்கும்போதும் சில முதன்மையான சடங்குகளின் போதும் அதற்கு வழிபாடுகள் செய்வர்.

சில்லூக்குப் பழங்குடியினர் 100 குலஙகளுக்கும் மேலாகப் பாகுபட்டுள்ளனர். இக்குலங்கள அனைத் தும் ஆண்வழி மரபுடையன. நாட்டின் அனைத்துப் பகுதிகளிலும் இக்குலத்தவர்கள் வாழ்கின்றனர். ஒவ்வொரு கிராமத்திலும் ஒரு குலத்தவர் ஆதிக்கம் பெற்று விளங்குகின்றனர்.இவர்களிலிருந்தே அக்கிரா மத்தின் தலைவன் நியமிக்கப்படுகிறான. ஆனால் அரசர் முறை ஏற்பட்ட பிறகு ஒவ்வொரு குலத்தாரும ஒவ்வொரு கிராமத்தில் பெற்றிருந்த தலைமைப் பொறுப்பும் அதிகாரமும் பறிபோயின. இரெத்து (Reth) எனப்படும் அரசரே சில்லூக்குப் பழங்குடியினர் நாட்டின் தலைவரானார். இவர் குவாரெத்து (Kwereth) என்னும் குலத்தாராவார். இககுலத்தில உளளோர்மட்டுமேஅரசபதவியை அடைய முடியும்.



சில்லூக்குக் குடியிருப்பு

சில்லூக்கு அரசர்கள் பெரும் அதிகாரங்களையோ செல்வாக்கையோ கொணடு அனைவரையும் அடக்கு முறை செய்யும் தன்மையைப் பெற்றிருக்கவில்லை. இவர்கள் பெரும்பான்மையாகச் சடங்குகளையும் சமய நிகழ்ச்சிகளையும் கண்காணிக்கும் அதிகாரம் கொணடவராவார். சூடானில் வெளியார் ஆதிக்கம் மிகுந்திருந்தபோது சில்லூக்கு அரசனின் அதிகாரங் கள் மேலும் குறைக்கப்பட்டன.

சூடான் விடுதலை பெற்றபின், அரசு இந்த அரசர்களுக்கு நீதிபதி முறையில பொறுப்பளித்துச் சிலலூக்குப் பழஙகுடிகளின் மரபுசார்நத வாழகககை முறையில சிறப்பிடம் கொடுத்தது. இப்பதவி அரச பதவிக்குச் சமமானதாகும் எனக் கருதினர். இப்போது மூனறு குடும்பங்களைச் சேர்ந்தோரே இப்பதவியைப் பெறுகின்றனர். இறுதியாகச் சூடான் அரசு 1975-ஆம் ஆண்டு 33-ஆம் பதவியை நியமித்தது.

சில்லூக்கு வாழ்வில் சடங்குகள் மிகுந்துள்ளன. முக்கியமான சடங்குகளின்போது அனைவரும் கூடி மகிழ்கின்றனர். அரசர் கலந்துகொளளும் சடங்கு நிகழ்ச்சி சில்லூக்கு நாட்டு மக்கள் அனைவருக்கு மாதலால் அச்சடங்கின்போது அரசர் அனைவருக்கும் வாழ்த்துக்கூறி மகிழ்வார்.



சில்லூக்குத் தலைவன்

இவர்களின் முதன்மைத் தொழில்கள் கால்நடை வளர்த்தல், வேளாண்மை, வேட்டையாடல் முதலியன. கால்நடைகளே உணவிற்கும் பிற பொருளாதார உயர் விற்கும் வழிகோலுகின்றன. வேட்டைத் தொழிலும் தோட்டப் பயிர்களைப் பயிரிடுதலும் இவர்களின் துணைத் தொழில்களாக உள்ளன.

சமய நம்பிக்கை மிகுந்த சில்லூக்குகள் பல ஆவி களையும் இயற்கை கடந்த ஆற்றல்களையும் வழிபடு கின்றனர். முன்னோர் வழிபாடும் இவர்களிடையே உண்டு. சீ. ப.

**சில்லோர் போட்டி**: பண்டங்களின் சந்தை யானது, அப்பண்டத்தின் விற்பனையாளர்களின் எண்ணிக்கை, விற்பனைப் பண்டத்தின் தன்மை மற்றும் விற்பனை நடவடிக்கைகளை அடிப்படை யாகக் கொண்டு நிறைவுப் போட்டி, சர்வாதீனம், நிறைகுறைப் போட்டி என மூன்று பெரும் பிரிவுகளில் ஆராயப்படுகின்றது. சில்லோர்போட்டி என்பதுநிறை குறைப் போட்டியில் ஒரு வகையாகும். இது சிலர் முற்றுரிமையென்வும் சொல்லப்படுகிறது. இத்தகைய சந்தையின் தன்மைகளை அறிந்து கொள்வதன் மூலம் பண்டத்தின் விலையானது எப்படித் தீர்மானிக்கப் படுகிறது என்பதனை மட்டுமன்றி அதிலுள்ள சிக்கல் களையும் தெரிந்து கொள்ளலாம்.

எல்லா வகைப் பண்டங்களின் விலையும் சந்தை யில் அதனுடைய தேவை மற்றும் அளிப்பு ஆகியவற் றைச் சார்ந்திருக்கும். பணடத்தின் உற்பத்தியை ஏற்று நடத்தும் தொழில் நிறுவனங்கள் தங்களின் உற்பத்திச் செலவு மற்றும் பண்டத்திற்குத் தேவை ஆகியவற்றை ஒப்பிட்டு உச்ச அளவு இலாபம் தரு கின்ற விலையை நிர்ணயிக்கும். அத்தகைய விலையில் இறுதிநிலைச் செலவும், இறுதிநிலை வரு வாயும் சமமாக இருக்குமென மார்சல் என்ற பொருளியலறிஞர் நிறுவியுள்ளார். உணவுப் பொருள் களான நெல், கோதுமை, எண்ணெய் வித்துகள், பருப்பு வகைகள் ஆகியவற்றை உற்பத்தி செய்பவர் கள பலராக உள்ளனர். அத்துடன் அவை யாவும் விரைவில் அழியக்கூடிய பொருள்கள். ஆனால் உரொட்டி, சோப்பு, உணவு, எண்ணெய், முகப்பொடி ஆடை ஆகியவற்றை உற்பத்தி செய்பவர்கள் பலராக இருந்தாலும் காலப்போக்கில் உற்பத்தியில் அகச் சிக்கனங்கள் காரணமாக விற்பனையாளாகள் சில ராகக் குறையலாம். பலரிடையே போட்டியைத் தவிர்த்து மிகுதியாக இலாபம் பெற வேண்டியும் சிலர் போட்டிச் சந்தை உருவாக்கலாம் பண்டத்தை வாங்குபவர்களின் எண்ணிக்கையோ அதிகமாகவே இருக்கும். நடைமுறையில் பெரும்பான்மையான பண்டங்களின் சந்தையில் சிலர் போட்டி முறையே நிலவுகின்றது.

**சில்லோர் போட்டியின் தன்மைகள்**: சில நிறுவனங் கள் ஒரே வகையிலோ வேறுபட்ட வகையிலோ நெருங்கிய மாற்றுப் பொருள்களை உற்பத்தி செய்து விற்பனை செய்கின்ற சூழ்நிலையைக் குறிப்பதே சில்லோர் போட்டி. இங்கிலாந்துப் பொருளிய லறிஞர் திருமதி சோன் ராபின்சனின் 'நிறைகுறைப் போட்டி மற்றும் அமெரிக்கப் பொருளியலறிஞா சாம்பர்லின் கூறிய 'முற்றுரிமைப் போட்டி' சந்தை யில் ஒருவகைச் 'சிலலோா போட்டி' எனபது 'சிலர் முற்றுரிமை' ஆகும் இதில் விற்பனையாளர்களுக கிடையே மறைமுகமான இணைப்புகள் இருக்கக் கூடும். நிறைவுப் போட்டியில் பண்டத்தின் தனமை யில் மாற்றமில்லாததால் விளம்பரமும் தேவை யில்லை. சில்லோர் போட்டியில் உறபததிப் பணடத் தின் தன்மையில் வேறுபாடு இருப்பதன காரணமாக வாங்குபவரைக் கவர விளம்பரப்படுத்தும் நடவடிக் கைகளைப் பின்பற்றுதல் அவசியமாகிறது. ஈட்டி முனைப் போட்டி நிறுவுவதன் காரணமாகத் தற்காப்பு மற்றும் எதிர் நடவடிக்கைகள் விற்பனையாளர் களால் மேற்கொள்ளப்படுகின்றன. சிலலோர்போட் டியின் இத்தகைய தன்மைகளைப் பின்வருமாறு வகைப்படுத்தலாம்.

**அ) விற்பனையாளர்களிடையே சார்ந்த நிலை:** நிறைவுப் போட்டியில் எண்ணற்ற விற்பனை யாளாகள் இருப்பதாலும், அவர்களால்விலையை மாற்ற இயலாத காரணத்தாலும் ஒருவிற்பனை யாளர் ஏனையோரைச் சார்ந்திருப்பதில்லை ஆனால், சிலலோர்போட்டியில் எண்ணிக்கையில். குறைந்த நிறுவனங்கள் இருபபதாலும், பண்டத் தின் தன்மை மற்றும் உற்பத்திச் செலவிற்கேற்ப விலையை மாற்ற இயலும் காரணத்தாலும், ஒரு விற்பனையாளரின் நடவடிக்கை பிறரைப்பாதிக்கும். உதாரணமாக விற்பனையை அதிகரிக்க வேண்டி ஒருவர் விலையைக் குறைக்குங்கால் ஏனையோரும் விலைக் குறைப்பை மேற்கொள்ளலாம். அத்தகைய சூழ்நிலையில் விலைக்குறைப்பு விறபனையை அதிகப் படுத்தாது. எனவே, விற்பனை சம்பந்தப்பட்ட நட வடிக்கைகளை மேற்கொள்ளும் சமயம், நிறுவனங்கள் ஒன்றையொன்று சார்ந்து செயற்படுவது அவசியமா கிறது.

**ஆ. உறுதியற்ற தேவை வளைகோடு:** சில்லோர் போட்டிச் சந்தையில் பண்டத்தின் தேவையைப் பல் வேறுபட்ட விலைகளில் நிர்ணயம் செய்ய இயலாது; ஏனெனில் குறிப்பிட்ட விலை குறிப்பிட்ட விற்பனை யாளரின் பொருளுக்குத் தேவை. ஏனைய விற்பனை

யாளர்கள் பின்பற்றப்போகும் விலைகளைச் சார்ந்திருக்கும் ஒருவர் விலைக்குறைப்பைச் செயற்படுத்தினால் ஏனையோரும் அதனைப்பின்பற்றலாம். ஆனால் விலைஅதிகரிக்கப்படும்பொழுது மற்றவர்களின் நடவடிக்கையை உறுதியாகக் கூற இயலாது. அவர்கள் விற்பனை அளவு குறைந்துவிடும் என்ற பயத்தால் விலையை மாற்றாமல் இருக்கலாம். இத்தகைய காரணங்களால் பண்டத்தின் தேவைக்கும் விலைக்கும் இடையேயுள்ள தொடர்பு நிர்ணயிக்க இயலாததாக உள்ளது. எனவே, தேவை வளைகோடு நிலையானதாகவோ, உறுதியானதாகவோ இருப்பதில்லை. இதன் காரணமாக விலை நிர்ணயம் கடினமாகிறது.

**இ முற்றுரிமை இயல்பு:** சிலரே பண்டத்தின் உற்பத்தியில் ஈடுபட்டிருப்பதால் ஒவ்வொரு நிறுவனத்தின் கட்டுப்பாட்டின் கீழும் கணிசமான விற்பனை இருக்கும். பண்டத்தின் தன்மையில் வேறுபாடு காரணமாக வாங்குபவரைக் கவர்ந்திழுக்கவும் இயலும். அத்துடன் விளம்பரம், மற்றும் இலவசப் பரிசுப் பொருள்களின் மூலமாகவும் சந்தையில் தங்கள் பொருளின் விற்பனையளவை அதிகரிக்கும் ஆற்றல் பெறலாம். எனவேதான் இச்சந்தை 'சிலர் முற்றுரிமை, எனவும் சொல்லப்படுகிறது.

**ஈ, நிறுவனங்களின் முரண்பட்ட நோக்கங்கள்:** பண்டத்தின் விலைக் குறைப்பு மற்றும் விளம்பரச் செலவுகளின் காரணமாகத் தங்களுடைய வருவாய் குறைவதையும் விற்பனைச் செலவுகள் அதிகமாவதையும்,உணர்ந்து கொண்ட நிறுவனங்கள், போட்டியைத் தவிர்க்க விற்பனையளவில் இரகசிய உடன்படிக்கைகள் செய்து கொள்ளும். ஆனால், சில சமயங்களில் போட்டியிட்டுச் சந்தையில் முற்றுரிமைபெறுவதிலேயே நாட்டம் கொள்ளும். இவ்வாறாக இணைந்து செல்வது அல்லது போட்டியிடுவது என்ற இரு முரண்பட்ட நோக்கங்களையும் சில்லோர்போட்டியில் காணலாம்.

**உ. விற்பனைச் செலவின் ஆதிக்கம்:** தனி நிறுவனங்கள் விலைமாற்றங்களைச் செய்யும் சுதந்திரம் பெற்றிருந்தாலும் சில்லோர்போட்டியில் நிறுவனங்கள், ஒன்றையொன்று சார்ந்திருக்கும் தன்மை காரணமாக விலைக்குறைப்பு நடவடிக்கையை மேற்கொள்வதில்லை; விலை அதிகரிப்பையும் விரும்புவதில்லை. எனினும், விற்பனையளவை அதிகப்படுத்துவதின் மூலம் அதிக வருமானம் மற்றும் உச்ச இலாபம் பெற முயலும். அம்முயற்சியில் வெற்றியடைய தங்களுடைய உற்பத்திப் பொருளை உயர்வாக விளம்பரப்படுத்தும். அத்துடன் இலவசப் பரிசுப் பொருள்களை. வழங்கும். இத்தகைய விற்பனைச் செலவுகள் விலையில் பெரும்பங்கினை உடையதாக இருக்கும்.

**சில்லோர் போட்டிச் சந்தையில் சமநிலை:** பண்டத்தின் சந்தையில் சமநிலை இருப்பதாகக் கூறும் பொழுது, அதன் தேவையும் அளிப்பும் சமமாக இருக்கும் சூழ்நிலையையும், அந்நிலையில் நிர்ணயிக்கப்படும் விலையையும் காணலாம். சமநிலை நிலையானதாக அமையும் பொழுதுதான், விற்பனையாளாகளிடையே சுமுகமான சூழ்நிலை நிலவுவதோடு பண்டத்தின் உற்பத்தியும் சீராக இருக்கும். அத்துடன் விற்பனையாளர்களுக்குக் கிடைக்கும் இலாபம் உச்சமாக இருக்கும். நிலையற்ற சமநிலையானது விற்பனையாளர்களிடையே பாதுகாப்பின்மை, மற்றும் பண்டத்தின் விலையில் பன்முறை மாற்றங்கள் ஆகியவற்றை உருவாக்கும். நுகர்வோர் மற்றும் உற்பத்தியாளரின் கண்ணோட்டத்தில் இத்தகைய மாற்றங்கள் விளம்பத்தக்கவையல்ல. எனவே,நிலையான சமநிலை விலையை நிர்ணயிக்கும் கோட்பாடுகளைப் பல்வேறு நாட்டைச் சார்ந்த பொருளியல்அறிஞர்கள் விவாதித்துள்ளனர்.

சில்லோர்போட்டியின் தன்மைக்கேற்பச் சந்தையின் விலையை நிர்ணயிக்கும் முறை மாறுபடுகிறது. உற்பத்திப் பண்டத்தின் தன்மையில் வேறுபாடு இல்லாதிருந்தால் தூய சில்லோர்போட்டியெனவும், உற்பத்திப் பண்டத்தின் தன்மையில் வேறுபாடுள்ள மாற்றுப் பொருள்களாக இருந்தால் அந்நிலை நிறைகுறை சில்லோர்போட்டியெனவும் சொல்லப்படும். தூய சில்லோர்போட்டியில் பண்டத்தின் தன்மையில் வேறுபாடில்லாத காரணத்தால் விற்பனையாளரிடையே சார்ந்திருத்தல் நெருங்கியதாக இருக்கும். எனவே, விலை நிர்ணயத்தில் தன்னிச்சையாகச் செயற்படுவதைக்காட்டிலும், இணைந்து செயற்பட்டால் சர்வாதீனத்தில் நிலவக்கூடிய உயர்ந்த விலையை வாங்குவோரிடமிருந்து பெறமுடியும். உற்பத்திச் செலவு ஒருவருக்கு மட்டும் மற்ற நிறுவனங்களைவிடக் குறைவாக இருந்தால் அவரே சர்வாதீனராக வருதற்கும் வாய்ப்புண்டு.

நிறைகுறைச் சில்லோர்போட்டியில் பண்டத்தின் தன்மையில் வேறுபாடுகள் இருப்பதன் காரணமாக அவற்றின் விலையானது நிறுவனங்களின் விருப்பப்படி தீர்மானிக்கப்படுகிறது. ஏனெனில், நுகர்வோரின் இரசனை மற்றும் சுவைக்கேற்பப்பொருளின் விற்பனையானது அதன் விலைமாற்றத்தால் பாதிக்கப்படுவதில்லை. நடைமுறையில் சில்லோர் போட்டியில் தூய சில்லோர் போட்டி நிலவாத காரணத்தால் நிறைகுறைச் சில்லோர் போட்டியில் விலை நிர்ணயிக்கும்

முறைகளைப் பற்றி விவாதிக்கலாம். இம்முறைகள் கோர்னாட்டு, பெர்ட்ராண்டு போன்ற பிரெஞ்சுப் பொருளியலறிஞர்களின் இருவர் முற்றுரிமைப் படிவங் களையும், சாம்பர்லின் என்ற அமெரிக்கப் பொருளிய லறிஞரின் நிறைகுறைப் போட்டியின் சமநிலைக் கருத் தையும் அடிப்படையாகக் கொண்டுள்ளன. இவற்றின் பின்னணியில் அமைந்த நிறைகுறைச் சில்லோர்போட்டி யில் விலை நிர்ணய முறைகள் பின்வருமாறு.

**அ) தன்னிச்சையான விலை நிர்ணயம்:** இம்முறை பிற விற்பனையாளரோடு இணைந்து செயற்படாமல் தனிப்பட்ட நிறுவனம் உச்ச இலாபம் பெறவேண்டி விலையைச் சுதந்திரமாகத் தீர்மானிப்பதையும் மாற்றுவதையும் குறிக்கும். இலாப நோக்கத்துடன் விலையை மாற்றுங்கால் எதிராளியின் நடவடிக்கை யையும் கவனத்தில் கொள்வர். விற்பனையை அதிகரிப் பதில் ஆசை இருப்பது போல எதிராளியின் மறு விளைவினைப் பற்றிய பயமும் இருக்கும். வாங்குபவ ரின் இரசனையில் மட்டுமே நம்பிக்கை வைத்து விலையை அதிகரிக்கும் நடவடிக்கையைத் துணிந்து எடுக்க மாட்டார்கள். விற்பனையை அதிகப்படுத்தும் நோக்குடன் விலையைக் குறைக்கத்தயங்க மாட் டார்கள். இத்தகைய காரணங்களால் 'விலைப் போர்' அல்லது 'நிலையான விலை' தோன்றக் கூடும். இவ்வாறாக விலை மற்றும் உற்பத்தியைத் தீர்மானிக்க இயலாமை அல்லது நிலை மாறாமல் இருக்கின்ற சூழ்நிலை உருவாகும்.

**1. விலைப் போர்:** மற்ற விறபனையாளரைப் பற்றித் தெரிந்தோ புரிந்தோ கொள்ளாத நிறுவ னங்கள், தம் விலைக்குறைப்பு நடவடிக்கையை அவர் களும் பின்பற்றுவர் எனக் கருதாமல் விலையைக் குறைக்கும். அதனால் மற்றவர்களும் தங்களது பண் டத்தின் விற்பனையில் ஏற்படும் சரிவைக் கட்டுப் படுத்த விலையை இன்னும் குறைப்பர். விற்பனை யாளர்களுக்கு இழப்பு ஏற்படாதவரை இந்த விலைப் போர் நீடிக்கும். யாராவது ஒருவருக்குச் சாதாரண இலாபம் (Normal Profit) கிடைக்காவிட்டால் அவர் தொழிலிருந்து விலகிவிடுவார். எல்லோருக்கும் அள வுக்கும்மீறிய இலாபம் கிடைத்தால் புதுநிறுவனம் தொழிலைத்தொடங்கலாம். அப்படிப் புதிதாக வருப வர் தம்முடைய பொருளை விளம்பரம் செய்ய அதிக மாகச் செலவழிக்க வேண்டும். அதனால் நிலையான சமநிலையை நிறுவனங்கள் அடைய முடியாது.

**2) நிலையான விலை:** விலை மாற்றங்கள் காரணமாகச் சமநிலை நிலையற்றதாக இருப்பதால் சில்லோர் போட்டியில் விற்பனையாளர்களுக் கிடையே உடன்படிக்கைகள் உருவாகின்றன. அவ்வா றின்றிக் கடந்த கால அனுபவங்களின் வாயிலாகவும் நிலையான விலையைத் தேர்ந்தெடுக்கலாம். இத னையே அமெரிக்கப் பொருளியலறிஞரான இசுவீசி என்பவர் திருப்பமுறைத் தேவைககோடு (The Kinked Demand Curve) தத்துவத்தின் மூலமாக விளக்கு கிறார். பெரும்பானமையான அழியாத நுகர்வோர் பணடங்களின் விற்பனையில் (Durable Consumer Goods) சில்லோர் போட்டி நிலவினால் விலை மாற் றங்கள் ஏற்படுவதில்லை. தேவை மற்றும் செலவில் மாற்றங்கள் ஏற்பட்டாலும் விலை மாறாமலேயே இருக்கும் (உ.ம்) தொலைக் காட்சிப் பெட்டி, குளிர் பதனப் பெட்டி, மோட்டார் சைக்கிள். இவ்வகைப் பண்டங்களின் தேவைக் கோடு உயர்ந்த விலையில நெகிழ்ச்சி குறைந்ததாகவும் இருக்கும். திருப்பு முனையில் இறுதிநிலை வருவாய், இறுதிநிலைச் செலவிற்குச் சமமாக இருப்பதால் அநதப் புள்ளியில் குறிக்கப்படும் விலையே சமநிலை விலையாக இருக் கும்.

விலையானது நிலையாக இருக்கும் என்பதற்குப் பல காரணங்களைக் கூறலாம். விலைமாற்றங்கள் மூலம் பாதுகாப்பின்மையோ புது நிறுவனங்கள் உற் பத்தியில்ஈடு படுவதோ ஏற்படலாம். எனவே, கிடைக் கும் இலாபத்தில் திருப்தி கொண்ட நிறுவனங்கள் விற்பனையை அதிகப் படுத்தத் தங்களுடைய விளம் பர முறையை நவீனப்படுத்தலாம். அத்துடன் கடின உழைப்பின் மூலம் அதிகப்படுததிய விற்பனையை விலை அதிகரிப்பு மூலமாக இழக்க விரும்பமாட்டார் கள். விற்பனைவரி மற்றும் மூலப் பொருளின் விலை அதிகமானால் தான் விலையை அதிகப்படுத்துவர்.

**ஆ) முழுமையாக இணைந்து செயற்படுதல்:** இம்முறையில் அதிக இலாபம் பெற வேண்டி நிறுவ னங்கள் தம்மிடையே போட்டா போட்டியைத் தவிர்த்து விலை, உற்பத்தி அளவு மற்றும் விற்பனை இடங்கள் பற்றிய ஒப்பந்தங்களைச் செய்து கொள் கின்றன. இத்தகைய இணைப்புகள் வெளிப்படை யாகவோ இரகசியமாகவோ இருக்கலாம். உச்ச இலாபம் பெறவேண்டி இறுதிநிலை வருவாயை எல் லோருடைய இறுதிநிலைச் செலவிற்கும்,சமமாக்குவர். இத்தகைய சூழ்நிலையில் விலை, உற்பத்தியளவு, இலாபம் எல்லாமே சர்வாதீனத்தில் உள்ளது போலி ருக்கும். நிறுவனங்களிடையே இணைப்பு பரிபூரண மாக இல்லாவிடில் இலாபம் குறைவாகவே இருக் கும். சில நேரங்களில் தங்களிடையே விற்பனையில் பங்கீடு பற்றி உடன்படிக்கை செய்வர். இரகசியமாக விலைத் தள்ளுபடி மற்றும் பரிசு கொடுப்பதன் மூலம் விற்பனையை அதிகப்படுத்த யாராவது ஒருவர் முயற்சி செய்தாலும் இணைப்பு வெற்றிகரமாக

அமைபாது. அத்துடன் புதுநிறுவனம் நுழையும் அச்சுறுத்தல் இருந்தால் ஏனைய விறபனையாளர்கள் அதனைத் தவிர்க்கப் புத்திக்கூர்மையுடன் விலையைக் குறைக்க வேண்டும்.

இ. **விலைத் தலைமை:** விற்பனையாளர்களிடையே இணைப்பு பூரணமாக இல்லாத சூழ்நிலையில், அளவில் பெரிய நிறுவனத்தைத் தலைமையாகக் கொண்டு பிறநிறுவனங்கள் செயற்படும். இந்த நிறுவனம் தீர்மானிக்கும் விலையையே பிற நிறுவனங்கள் பின்பற்றும். சிலசமயங்களில் உற்பத்திச் செலவு குறைவாக உள்ள நிறுவனம் தலைமைப் பொறுப் பேற்கலாம். பிற நிறுவனங்களோடு விவாதித்து உச்ச இலாபந்தரும் விலை நிருணயிக்கப்படும். பொருளியலறிஞர் இசுடிக்லரின் கூற்றுப்படி அளவில் பெரிய நிறுவனமே தலைமை நிறுவ்னமாகும். சில சமயங்களில் புத்திக் கூர்மையுடைய தொழில் அமைப்பாளரே பொருளின் தேவை மற்றும் செலவுகளைக் கணக்கிட்டு விலை மாற்றத்தை அறிவிக்கலாம். பிற நிறுவனங்களும் ஏறத்தாழச் சர்வாதீனத்தில் நிலவும் இலாபத்தைப் பெற வேண்டி இதனைப் பின்பற்றும். புகைப்பூஞ்சுருள், உரம், உரொட்டி போன்ற பண்டங்களின் உற்பத்தியில் இம்முறை பின்பற்றப்படுகிறது.

நிறைகுறைப் போட்டியில் பண்டத்தின் உற்பத்தியில் மிஞ்சிய திறன் முழுமையாகப் பயன்படுத்தப் படாமல் இருப்பது போலச் சில்லோர் போட்டியிலும் இருக்கும். இதன் காரணமாக நுகர்வோரிடமிருந்து பெறும் விலையும் அதிகமாக இருக்கும். மொத்த உற்பத்தியும் குறையும். இதனால் உற்பத்திச் செலவும் அதிகமாக இருக்கும். அத்துடன் கடும் போட்டியின் காரணமாக வீணாகின்ற விளம்பரச் செலவுகள அதிகமாகும். இதனால் பாதிககப்படுபவர் நுகர்வோர் தாம்.அதிலும் இக்கால யுகம் விளம்பர யுகமாகத் திகழ்கிறது. செய்தித் தாள், வார இதழ்கள், மாத இதழ்கள் விளம்பர அறிக்கைகள், வானொலி ஆகியவற்றில் மட்டுமன்றித் தொலைக்காட்சிப் பெட்டியிலும் விளம்பரம் செய்யப்படுகின்றது. இத்தகைய விளம்பரம் மற்றும் விற்பனைச் செலவுகள் விலையில் சேர்க்கப்படுகின்றன. எனினும், போட்டியின் காரணமாகத் தரம் உயர வாய்ப்பு இருக்கிறது என்ற கருத்து இக்காலத்தில் நிலவுகிறது. நா.மா.

**துணை நூல்கள்:**


**Baumol. W.J.**, Economic Theory and Operations Analysis, Prentice Hall Inc, New Delhi, 1982.

**Chamberlin. E.M**, The Theory of Monopolistic Competition, Harvard University Press, 1956.

Fellnes S., Competition Among the Few, Alfred A Knopt Inc., New York, 1949.


*சிலந்திவலைக் கோட்பாடு*, வாணிகச் சுழற்சியினால் உண்டாகும் பொருளாதார ஏற்றத் தாழ்வுக் காரணிகள பலவற்றுள குறிப்பிட்ட சில பொருள்களின் உற்பத்தி, விலைகள் ஆகியன சார்பான சுழற்சி சிலந்தி வலைக்கு (Cob Web) ஒப்பிட்டு விளக்கப்படுகிறது. பொருளியல் வரலாற்றில் செழிப்பு (Boom), தேக்கம் (Stagnation), மந்தம் (Depression) போன்றவற்றின செயற்பாட்டினால் மொத்தப் பொருளாதாரத்தில் மாறிமாறித் தோன்றும் ஏற்றத் தாழ்வுகள் வாணிகச் சுழற்சி எனப்படும். இச் சுழற்சிகளினால் குறிப்பாக உற்பத்தி, வேலை, வருமானம், விலைகள் ஆகியவற்றில் உண்டாகும் மாற்றங்கள் முதலீடு, ஆதாயம், தொழிற்றுறை, வேளாண்மைத்துறை, பணித்துறை (Service Sector) மக்களின் வாழ்ககை நிலை (Standard of living), செலாவணி மதிப்பு ஆகியவறறில் பெருந் தாக்கங்களை உண்டுபண்ணும். இவற்றின மறைமுக நேர்முக விளைவுகளைப் பொருளியல் அறிஞர்கள் ஆராய்ந்து பல கோட்பாடுகளை வகுத்துளளனா. அவற்றுள் சிலந்திவலைக் கோட்பாடு (Cob Web Theory) தனிச் சிறப்புடையதாகும். இதனைக் கடுஞ் சிக்கற் கோட்பாடு எனவும் கூறுவர்.

சிலந்திவலைக் கோட்பாட்டை 1930-ஆம் ஆண்டில் சூல்சு (H. Schultse), தின்பெர்சன் (Tinbergen J.), இரிசி (Ricci U.) ஆகியோர் தங்கள் ஆய்வுக கட்டுரைகளில் தனித்தனியாக வெளியிட்டனர். இக் கோட்பாட்டின் மையக் கருத்தான விலைகளின் நகர்வு வரைபடத்தில் கடுஞ்சிக்கலான சிலந்திக கூடு போன்று அமைந்ததால அதனைப் பொருளியல் அறிஞர் கால்டர் (Kaldor N.) சிலந்திவலைக்கோட்பாடு என முதன்முதலில் குறிப்பிட்டார்.

தொன்மைப் பொருளியல் (Classical Economics) கோட்பாடுகளின்படி, உற்பத்தியும் விலையும் சமன்பாட்டிலிருந்து விலகி மாற்றங்கள் நிகழுமாயின், அவை தன்னிச்சையாக மீண்டும் சமன்பாட்டையடையும்என்பதாகும். இக்கருத்து தொன்மைப்பொருளியல் ஆய்வுகளின் எடுகோள்களை (Assumptions) அடிப்படையாகக் கொண்டது. தூயபோட்டிப்(Pure Competition) பொருளாதாரத்தில் நிலையான இயக்கம் செயற்படும்போது (Under Static Condition) விலைகளும் உற்பத்தியும் மாற்றங்களுக்குட்பட்டுச் சமன்பாடு குலைந்தால், தன்னிச்சையாகவே சமன்பாட்டு நிலையை அடைய இயலாது என்பதனை சிலந்திவலைக் கோட்பாடு விளக்குகிறது.

சிலந்திவலைக் கோட்பாட்டின் அடிப்படை எடு கோள்களாவன: 1) நிறைவுப்போட்டிப் பொருளா தாரத்தில் ஒவ்வொரு உற்பத்தியாளருககும் நடை முறையிலிருக்கும் வரையறுக்கப்பட்ட விலை நிலை யானது. உற்பத்தி செய்யப்படும் பொருள்களின் திட்ட வரையறை அளவுகளினால் அங்காடியில் மாற்றங்கள் நிகழா. பொருள்களின் உற்பத்தி அளவு, ஒருமுறை திட்டமிட்டு வரையறுக்கப்பட்ட பின்னர் அடுதத காலகட்டம் வரை மாறாதிருக்கும். 2) விலைகள் அளிப்பைச் சார்ந்தவை. நடைமுறைக் காலத்தில் நிலவும் விலை, அதறகு முந்தைய காலத் தின் அளிப்பினால் முடிவு செய்யப்படுகிறது. 3) விலைகள பொருள்களின் அழிவுத் தன்மையையும் பொறுத்தவை.

சிலந்திவலை ஆய்வு வரைபடங்கள் 1,2,3, முறையே மூன்று காலங்களின் போக்கை (Trend) ஆராய்கின்றன. முதற் காலத்தின் விலை P, அக் கால உற்பத்தி அளிப்பு அளவான $Q_1$ ஆல் வரை யறுக்கப்படுகிறது. உற்பத்தியாளர் $P_1$ விலையின்

1)




அடிப்படையில் இரண்டாம் கால உற்பத்தி அளவை முடிவு செய்கின்றனர். இரணடாம் கால உற்பத்தி

2)




அளவு$Q_2$ அக்கால விலையை $P_2$இல் வரையறுக்கிறது. மூன்றாம் கால உற்பத்தி அளிப்பு $Q_3$ இரண்டாம் கால விலை $P_2$-ஆல் முடிவு செய்யப்படுகிறது.

முதற்காலத்தின தேவை நெகிழ்சசி ($DD_1$) (Elasticity of Demand) அளிப்பு நெகிழ்ச்சிக்குச்($SS_1$) சரிசமனாக உள்ளது. அதனால் விலையும் உற்பத்தி யும் நிலையான ஒரே வகைப்பட்ட மாற்றஙகளுககு உட்படுகின்றன (Constant Regular Fluctuations).

இரண்டாம் காலத்தின் அளிப்பு நெகிழ்ச்சித் தேவை, நெகிழ்ச்சியை விடக் கூடுதலாக உள்ளது. அதனால் ஏற்படும் மாறறங்கள சிலந்தி வலை வடி வத்தின் வளைவையொததிருக்கிறது. நெகிழ்ச்சியில ஏற்படும் இத்தகைய மாறறங்கள் உற்பததியிலும் விலையிலும் நிகழாதிருந்தால் கடுஞ்சிக்கல் நிலை நிலவும்.

மூன்றாம் காலத்தின் அளிப்பு நெகிழ்ச்சி, தேவை யைவிடக் குறைவாக உளளது. அதனால் ஏறபடும மாற்றங்கள சிலந்தி வலைகுவிகிற (Converging)

3)




மையத்தையடையும் அமைப்பையொத்திருக்கின்றன. வரைபடத்தின் மையப்புள்ளியில் விலையும் உற் பத்தி அளிப்பும் இறுதியில சமன்பாட்டையடை கின்றன.

சிலந்திவலைக் கோட்பாடு குறிப்பிட்ட காலங் களில் போட்டியிட்டு உற்பத்தி (Competitively Produced) செய்யப்படும் பொருள்களின் ஏற்றத்தாழ் வுகளை (Fluctuations) ஆராயகிறது. விலைகள், அளிப்பு ஆகியவற்றில் மாறிமாறி நிகழும் ஏற்றத் தாழ்வுகள் சுழற்சியாக மேலும் கீழும் எதிரெதிரான திசைகளில் (Up & down in opposite directions) நகருகின்றன. இத்தகைய மாற்றம் பொதுவாக வேளாண்மை விளைபொருள்களில் காணப்படுகிறது.

விளைபொருள்களின் விலை உயர்வாக இருக்கும் போது, வேளாண்மையினர் உற்பத்தி அளவினைப் பெருக்குகின்றனர். அதனால் விலைகள் வீழ்ச்சியடைகின்றன. விலைக் குறைவினால் அடுத்த கட்டத்தில் வேளாண்மையினர் உற்பத்தி அளவினைக குறைக்கின்றனர். அதனால், விலைகள் உயர்கின்றன. மீண்டும் உற்பத்திப் பெருக்கம், விலை உயர்வு என மாறி மாறிச் சுழற்சி ஏற்படுகிறது. அதனையே சிலந்தி வலை வரைபடங்கள் 1,2,3, தெளிவாக விளக்குகின்றன.

சிலந்திவலைக் கோட்பாடு தேவை-அளிப்பு-விலை ஆய்வுக்கான ஒரு பொது விளக்கமாகும். இக்கோட்பாட்டில், இயங்குநிலை ஆய்வுக்கான (Dynamic Analysis) மூலக் கருத்து காணப்படுகிறது. பொருளியல் மாறிகள் (Variables) பலவகைப்பட்ட திசைகளிலிருந்து பன்முக நோக்கில் மாறுங்கால் கால அடிப்படையில் அவற்றின் உறவுகளைத் துல்லியமாக இக் கோட்பாடு ஆராய்வதால் இயங்குநிலை ஆய்வின் அடிப்படையைத் தன்னுள்ளடககுகிறது போட்டி அங்காடியின் செயற்பாட்டையும் இககோட்பாட்டில் காணலாம். இது போட்டி அங்காடியில் நிலவும், சமன்பாட்டின் மையச் சிக்கல்களைத் தெளிவாக விளக்குகிறது.

அ.கு.சா.

*சிலப்பதிகாரம்*: தமிழ் மொழியில் தோன்றிய தலைக்காப்பியம். இது 5001 அடிகளைக் கொண்டது. சேரன் செங்குட்டுவன் இளவல், இளமைத் துறவு பூண்ட இளங்கோவடிகள் இந்நூலின் ஆசிரியர். அவர் அரச மரபிலே பிறந்து, சமண நெறியிலே கனிந்து, தமிழ் இலக்கிய உலகிலே தனித்திறம் காட்டியவர்.

இதன் காலம் கி.பி. 2ஆம் நூற்றாண்டு என்பது பெரும்பாலோர் கருத்தாகும். மு. இராகவையங்கார் கி.பி. 4 அல்லது 5ஆம் நூற்றாண்டு என்பர். எசு. வையாபுரிப் பிள்ளை, கி.பி. 8ஆம் நூற்றாண்டிற்கும் பிற்பட்டது என்பர்.

இந்நூல் புகார்க் காண்டம், மதுரைக் காண்டம், வஞ்சிக் காணடம் என்று மூன்று காண்டங்களையும் முப்பது காதைகளையும் உள்ளடக்கியது. உட்பிரிவுகளில் சில வரி, பாடல் எனக் கூறப்படினும் பொதுவாக எல்லாப் பிரிவுகளையும் காதை எனும் சொல்லால் குறிப்பது மரபாகும். பேரளவு அகவற்பாக்களாலும் சிற்றளவு கலிப்பா, வெண்பா போன்ற ஏனைய இயற்பாக்களாலும், ஆற்றுவரி, ஊசல்வரி, கந்துகவரி போன்ற இசைப் பாக்களாலும், உரைப் பாட்டுகளாலும் உருவானது. சோழநாடு, பாணடிய நாடு, சேரநாடு என்னும் மூன்று நாடுகளின் இயல்புகளையும், முறையே அவற்றின் தலைநகரங்களாகிய புகார், மதுரை, வஞ்சி ஆகியவற்றின் பெருமைகளையும் மூவேந்தர் சிறப்புகளையும் விளக்குகிறது. 'ஐந்திணை வளங்கள், திணைமக்களின் பழக்க வழக்கங்கள், பல்சமயத் திறங்கள், அயல் நாட்டுறவுகள், தமிழக ஆட்சி முறைகள், மன்னர் வரலாறுகள், தமிழ் மொழியின் ஆற்றல் என்றினைய வெல்லாம் காட்டும் தமிழ் நாகரிகக் களஞ்சியம் சிலப்பதிகாரம்' என்று அறிஞர் கூறுவர்.

இக்காப்பியம் வலியுறுத்தும் நீதிகளாக, நூலிற்குப் பின்தோன்றிய பதிகம் மூன்று கருத்துகளைக் குறிப்பிடுகிறது. அவை, 1. 'அரசியலில் நீதி தவறியவர்களுக்கு அறக்கடவுளே உயிர்நீக்கும் பகையாகும்; 2. புகழ்சான்ற பத்தினித் தெய்வத்தை உயர்ந்தோர் போற்றி வணங்குவர்; 3. ஊழ்வினை பயன் கொடுக்காமல் விடாது' என்பன. அவற்றுள் தலையாயது பத்தினியைப் பரவுதலே ஆகும். அம் மூன்று உறுதிப் பொருள்களையும் சூழ்வினைச் சிலம்பு கொண்டு விளக்குவதால் இந்நூல சிலப்பதிகாரமாயிற்று. கண்ணகி வழிபாடே இந்நூலின் பாவிகம் எனத் துணிந்து கூறலாம்.

**கதைச் சுருக்கம்:**

**புகார்க் காண்டம்:** புகார் நகரில் கொடை சிறந்த மாநாய்கன் மகள் கண்ணகிக்கும், தன்னிகரில் செல்வன் மாசாத்துவானின் மகன் கோவலனுக்கும் சிறப்பாகத் திருமணம் நடைபெற்றது. இருவரும் சில ஆண்டுகள் இல்லற இன்பத்தில் திளைத்தனர். இந்நிலையில் கோவலன் ஆடல், பாடல், அழகிற் சிறந்த நாடகக் கணிகை மாதவியை விரும்பினான். அவளிடம் 'விடுதல் அறியா விருப்பினன்' ஆயினான். காதல் மயக்கத்தால் கடமை மறந்தான். ஈட்டும் முயற்சி சிறிது மின்றி, முன்னோரின் பெருஞ்செல்வம் அனைத்தையும் தொலைத்தான். கோவலனும் மாதவியும் தீராக் காதலில் திளைக்க, பிரிவாற்றாமையால் கவலைக் கடலில் மூழ்கினாள், கணணகி. ஒப்பனை துறந்தாள்; உறக்கம் இழந்தாள்.

இந்நிலையில் புகார் நகரில் ஆண்டுதோறும் நிகழும் இந்திரவிழா வந்தது. விழா முடிவில் மாதவியுடன் கடலாடச் சென்ற கோவலன், மாதவி மீட்டிய யாழை வாங்கி, அகப்பொருட்சுவை அமைந்த பல வகை வரிப்பாடல்களைப் பாடினான். அப்பாடல்களால் கோவலன் பிற மகளிரிடம் விருப்புடையன் ஆயினான் எனத் தவறாக எண்ணிய மாதவி, தானும் வேறு குறிப்புடையவள் போல அகச்சுவைப் பாடல்களைப் பாடினாள். மாதவி தன்னிலை மயங்கினள் எனத் தவறாகக் கருதிய கோவலன், அவள் மீது சொல்லொணா வெறுப்புற்றுப் பிரிந்தான். தோழி மூலம் மாதவி அனுப்பிய ஓலையையும் வாங்க மறுத்

தான். அதே நேரத்தில் தான் கண்ட தீய கனவினைத் தேவந்தி என்னும் பார்ப்பனத் தோழியிடம் கண்ணகி விவரிக்க, சோமகுண்டம், சூரிய குண்டம் என்ற பொய்கைகளில் நீராடி, காமகோட்டம் சென்று தொழுதால் இம்மையிலும் மறுமையிலும் காதல னோடு மகிழ்ச்சியாக வாழலாம் என்று தோழி கூற அதைப் 'பீடன்று' என்று மறுக்கிறாள் கண்ணகி. இந்த நேரத்தில் வீடு திரும்பிய கோவலன், 'பொய்யை மெய்யாகக் காட்டும் பாத்தையோடு ஆடி, குலத்தார் சேர்த்து வைத்த அரும்பொருள் அனைத்தையும் இழந்தேன்' என்று தன் ஒழுக்கக் குறைவிற்கு நாணி னான். மாதவிக்குக் கொடுக்கப் பொருளின்றி வருநது கிறான் என நினைத்த கண்ணகி, 'இச்சிலம்பினைக் கொள்ளுங்கள்' எனக் கொடுத்தாள். அச்சிலம்பை முதலாகக் கொண்டு, இறந்த பொருளை ஈட்டக் கருதிய கோவலன் ஒருவரும் அறியாதபடி இரவின் கடையாமத்தில் கண்ணகியுடன் மதுரைக்குப் புறப் பட்டான. இவ்வாறு வினை வழி நடத்தியது. எதிர் பாராமல் சமணத் துறவியாகிய கவுந்தியடிகள வழித்துணையாக வர அவர்கள் உறையூரை அடைந் தனர்.

**மதுரைக்காண்டம்:** மூவரும் மதுரையை அடைந்த னர். கவுந்தியடிகள் கோவலன் கண்ணகியை இடைக் குலப் பெண் மாதரியிடம் அடைக்கலமாகத் தநதார். 'சிலம்பு விற்று வருவேன்' எனக் கூறிப் பிரிநதான் கோவலன். பாண்டிமாதேவியின சிலம்பினைத் திருடி, வாய்ப்பினை எதிர்நோக்கியிருந்த அரசவைப் பொற் கொல்லன் எதிர்ப்பட்டான். அவன் சூழ்ச்சியால கள் வனாக்கப்பட்ட கோவலன், வினை சூழந்த பாண்டி மன்னன் ஆணையால் கொலை செய்யப் பட்டான். கண்ணகியிருந்த இடையர்சேரியில் தீப் உற்பாதங்கள் பல நிகழ்ந்தன.செய்தியறிந்து துடித்துப் புலம்பினாள். காய்கதிர்ச் செல்வனைக் 'கள்வன் அல்லன்' எனப் பேசவைத்தாள். சிலம்பெறிந்து அரசவையில் மெய்ப்பித்தாள். தவறுணர்ந்த பாணடி யன் உயிர் நீத்தான். பாண்டிமாதேவியும் உடனுயிர் துறந்தாள். சினந்தணியாத கண்ணகி தன் ஆற்றலால் மதுரையை எரித்தாள். மதுராபதித் தெய்வம் தோன்றி 'ஊழ்வினையின் விளைவு' என விளககி, 14 நாட்களுக்குப் பிறகு நீ நின் கணவனைத் தெய்வ உருவிற் காண்பாய், எனக் கூறிச் சென்றது. கண்ணகி வையைக் கரைவழியே மேறகுநோக்கிச் சென்று மலை நாடு அடைந்தாள. திருச்செங்குன்று மலையேறி வேங்கை மரநிழலில் நின்றாள்.தேவர்களொடு தெய்வ வடிவில வந்த கோவலனைக் கண்டு தானும் வான வூர்தி ஏறினாள்.

**வஞ்சிக்காண்டம்:** இதைக் கண்ட வேடர்கள் வியப்புறறு, மலைவளங் காண மனைவியுடன் வந்திருந்த சேரன் செங்குட்டுவனிடம் தெரிவித்தனர். உடனிருந்த தமிழாசான் சாத்தனார் கோவலன், கண்ணகி, பாணடியன் ஆகியோர் வரலாறுகளை விரித்துக் கூறினார். கேட்டு வருந்திய செங்குட்டுவன் தன் மனைவியின் கருத்துப்படி பத்தினித் தெய்வமான கண்ணகிக்குப் படிமம் சமைகைக் கருதினான். படை யுடன் வடநாடு சென்று தமிழரசரை இகழந்த கனகவிசயரைச் சிறை பிடித்து அவர் தலைமீதுபடிமஞ் சமைத்தற்குரிய இமயமலைக் கல்லினை ஏற்றிக் கொண்டு வந்தான். விதிப்படி பத்தினிக் கடவுள் படிமம் சமைத்துப் பத்தினிக் கோட்டம் எழுப்பினான. கோவலன் கொலையுணட செய்தியை மாடலனால் அறிந்த தேவந்தி, செவிலித்தாய், அடித்தோழி ஆகியோர் மாதரி மகள் ஐயையுடன சேரநாடடைநது கண்ணகிக்கும் தங்கட்கும் உளள உறவை அழுது ஏங்கிச் செங்குட்டுவனுககுத் தெரிவித்தனர்.கணணகி நல்லாள் மின்னற் கொடிபோல் தோனறிச் செங்குட்டு வனை வாழ்த்தினாள். கற்புக்கடவுளை வலம் வநது வணங்கினான சேரன். சிறை நீங்கிய கனக விசயரும், குடகக் கொங்கரும் மாளுவ வேந்தரும் இலங்கைக் கயவாகு வேந்தனும் தங்கள் நாட்டிலும பத்தினித் தெய்வத்தைப் பரவ விரும்பி வரம் பெற்றனர். பத்தினித் தெய்வம் தேவந்தி மீது ஆவேசித்து இளங்கோவின் 'இளமைத துறவை'ப் பாராட்டியது. தன் துறவு வரலாறு கூறிய பத்தினியின் கற்பு வரலாற்றைத் தாம் கூறும் பேறு பெற்றதாகக் கூறும் இளங்கோ தம்காப்பியத்தைக் கேட்பவர்கள் தெய்வம் தெளிநது தெளிநதோர்ப் பேணித் தீதின்றிவாழ வாழ்த்துகிறார்.

**சிலப்பதிகாரம் பெறும் இடம்:** சங்க இலககியங் கள் பெரும்பாலும் காதலுக்கும் வீரததிற்குமே முதன்மை தருவன. அவற்றில் தனிமனித உணர்ச்சி கள் பொதுமை நிலையிலேயே பாடப்பட்டன. வாழ்க்கையை முழுமையாகப் பார்த்து, உயர்ந்த உண்மைகளைக் காட்டி, மனித சமுதாயத்தை வழி நடத்தும் முயறசியை முதன முதலில் சிலப்பதிகாரத் தில்தான் காண முடிகிறது.

ஐம்பெருங் காப்பியஙகளுள் 'சிலம்பும் மேகலை யுமே' முதல் நூல்களாகும். ஏனையன வழிநூல் களாகும். ஒப்பற்ற பாத்திரப் படைப்பாலும் கிளைக் கதைகளை மூலக் கதையோடு ஒருங்கிணைக்கும் திறனாலும், காட்சிகளை விவரிக்கும் அழகாலும், வருணனைச் சிறப்பாலும், உரையாடல் நயததாலும், சமயப் பொதுமையாலும், அறம் வலியுறுத்தும் பாங்கினாலும், கலை மாட்சியாலும், ஒருமைப் பாட்டுணர்வாலும் இத் தலைக்காப்பியம் தலையாய காப்பியமாகத் திகழ்கிறது.

சிலப்பதிகாரம் தமிழ் இலக்கியத் துறையில் தந்த புதுமைகள் பலப்பல. முதற் புதுமை 'ஒரு குடும்பப் பெண இக்காவியத்தின் தலைவி' என்பது. 'சிலப்பதிகாரம் தமிழ் நிலத்துப் பிறந்து தமிழே பேசி வளர்ந்து புகழ்வளம் பெற்ற மக்களைத் தலைவர் களாகக் கொண்ட நாட்டுக் காப்பியம்' எனப் பாராட்டப்படுகிறது. இக்காப்பியம் 'தமிழிசை மறு பிறவி எடுத்து வளர்வதற்கும், யாழ்நூல் தோன்று வதற்கும் அடிப்படைச் செல்வம் நிரம்பிவிளஙகுகிறது.

பாவகையால் ஒவ்வொரு காதையும் தனித்தனிச் செய்யுளாக அமைந்து நிறறலாலும் கூற்றுவகையான் தனிப் பாடல்களாக அமைந்திருத்தலாலும் சங்க இலககியத்திலிருந்து வளர்ந்துவந்த தொடர்நிலைச் செய்யுளே சிலப்பதிகாரம். சங்க இலக்கிய மரபின் இறுதி எல்லையாகவும்,பின்னர் எழுந்த புராணங்கள, காப்பியங்கள் ஆகியவற்றின் போக்கு, அமைதி போன்றவற்றிற்குத் தோறறுவாயாகவும் அமைந்து விளங்குகிறது.

அறநெறிகளையும், கலைச் செய்திகளையும், சமயக் கருத்துகளையும கதைப்போககில் இரண்டறக் கலந்து சொலலோவியமாககியிருப்பது வேறு எககாப் பியங்கட்கும் இல்லாத தனிச் சிறப்பாகும்.

**காப்பியக் கட்டமைப்பு:** இக்காப்பியத்தில் பொருளும் வடிவும் பண்ணும் பாட்டும் போல இணைந்துள்ளன. 5001 அடிகளையுடைய காப்பியத் தில் 2146 அடிகள மட்டுமே கதைப்பகுதி வருகிற தென்பர். எனினும் எஞ்சிய அடிகளும் காப்பியக கட்டமைப்பிறகுப் பயன் தரும் வகையிலேயே அமைக்கப்பட்டுள்ளன.

**கதையமைப்பு:** கண்ணகியை மையமாக வைத்தே காப்பியக் கதை வளர்கிறது. கண்ணகி, கோவலன் திருமணம், இல்லற வாழ்ககை, கோவலனின் மையல், மாதவியின் இன்ப வாழ்வு, கணணகியின் துன்பநிலை ஆகியன முதல் ஐந்து காதைகளில் விவரிககப் படுகின்றன. இந்திர விழவூரெடுத்த காதையில் கணணகி, மாதவி கண்கள் மாறித் துடிப்பதன் மூலம் ஆர்வநிலை தோறறுவிக்கப்படுகிறது. மாதவியின் ஆடலும் பாடலும் கோவலனின ஊடலும் அவர்தம் பிரிவும் பின்தொடரும் மூன்று காதைகளில் பேசப் படுகின்றன. 'கனாத்திறம் உரைத்த காதை'காப்பியக் கதையின் பின் வளர்ச்சியை முன்கதைச் சுருக்கம் போலக் கோடிட்டுக் காட்டுகிறது. மேலும், கதை மாந்தர்களின் தனிப் பண்புகளையும் நுணுக்கமாகச் சித்திரிக்கிறது. தொடரும் காதைகளில் கணணகி, கோவலன்பண்பு நலன்கள் நாடகப் பாங்கில்சொல்லப் படுகின்றன. கதை விரைந்து செல்கிறது. கோவலன் கொலைப்படுகிறான். தொடர்ந்து வரும் காதைகளில் அவலச் சுவை உச்சம் பெறுகிறது. கண்ணகி வழக் குரைக்கிறாள். வஞ்சினம் கூறுகிறாள். மதுரையை எரிக்கிறாள். கதை மிகவும் விரைந்து செல்கிறது. வஞ்சிக் காண்டக் காதைகளில் 'பத்தினிப் பரவல்' நிறைவேறுகிறது. இறுதிக் சதையான வரந்தருகாதை ஏறத்தாழக் சதைமாந்தர் அனைவரையும் கொண்டு வந்து களத்தில் நிறுத்துகிறது. புகார் நகரத்து மாதரார் தொழுதேத்தும் மாநாய்கன் மகள், நாடும் உலகும் தொழும் பத்தினிக் கடவுள் ஆவதைப் படிப்பவர் உள்ளம் ஏறகுமாறு ஆற்றலோடு படைத்துக் காட்டுவது இககதையமைப்பின் சிறப் பாகும்.

**காட்சியமைப்பு:** முப்பது காதைகளும் தத்தம் அளவில் தனிமுழுமை உடையன வாயும், காப்பிய முழுமையின அஙகங்களாக அமையுமாறும் ஆக்கப் பட்டுள்ளன. காதை எனப் பெயர் பெறும் 22 பகுதி களும் கதைப்பகுதி மிக்கன. எஞ்சிய 3 பகுதிகளும் இசைப்பாடல்கள். ஆனால், கதைத் தொடர்புடை யவை முதறகாட்சி திருமணம் எனற இடைப்பகுதி யில் தொடங்குகிறது. காட்சி மாற்றங்களில் நாடக அமைப்புப் புலனாகிறது. முதறபதினைந்து காதை களில நிதானமாக ஆற்று நடையைக் காணலாம். 16-ஆம் காதையில் நடை ஓட்டங் கொணடு 'அருவி நடை' யாகிறது. 23-ஆம் கதை வரை இததன்மை தொடர்கிறது. பின் வேகமடங்குகிறது தனி வாழவு பொதுவாழ்வோடு இணைக்கப் பெறுகிறது. நாடக அமைப்புக்கு மாறாகக் கவிஞன் குரலை அடிக்கடி கேட்க முடிகிறது. கானலவரி, கனாத்திறம் உரைத்த காதை, கொலைக களககாதை போன்ற இன்றியமை யாத இடங்களில் கவிஞர் நேர்முக விளக்கம் தருகி றார். காப்பிய முடிவில் கவிஞர் தாமே நேரில தோன்றிக காப்பியக் கதையோடு தம்மை இணைத்துக் கொளவதையும் காணமுடிகிறது.

**கட்டுக்கோப்பு:** (Architectonics) இயைபு வடிவமைப்புகளும் (Symmetry) முரண் வடிவமைப்பு களும் (Contrast) கட்டுக்கோப்புக்கு உதவுவன. சிலம் பில் இரண்டும் காணப்படுகின்றன. மங்கலமாகத் தொடங்கும் காப்பியம் அவலத்தில் முடிகிறது. மனையறம் படுத்தகாதைக்குப் பின் அரங்கேற்று காதை, கானல் வரிக்குப் பின் வேனிற்காதை, நாடு காண் காதைக்குப் பின் காடுகாண்காதை, அடைக கலக் காதைக்குப் பின் கொலைக்களக் காதை என முரண்பட்ட தன்மை தலைப்புகளிலேயே புலனாகின் றது. மூன்று நாடு, மூனறு நகர், ஆறுகள், அரசர் பற்றிய செய்திகளை இயைபு வடிவமைப்பிற்கு ஏற்ப இக்காப்பியம் எடுத்தியம்புகிறது.

இக்கட்டுக்கோப்பிற்குப் பல உத்திகளைத் திறமையுடன் கையாண்டுள்ளார் இளங்கோ. நாடகக் குறிப்பு மொழிகள் பல, காப்பியப் பின்வளர்ச்சியை முன்னுணர்த்துகின்றன. கண்ணகி, மாதவி கண் துடித்தல் மூலமும், இமிலேறு எதிர்த்துவரல், குடத்துப்பால் உறையாமை போன்ற தீநிமித்தங் கள் மூலமும், 'பழியொடு படராப் பஞ்சவ', கூற்றத் தான் போன்ற குறிப்புச் சொற்கள் மூலமும், தற் குறிப்பேற்ற வருணனைகள் மூலமும் பின்வருவதை முன் உணர்த்துகிறார் ஆசிரியர். கண்ணகி கனவு கோவலன் கனவு, கோப்பெருந்தேவி கனவு மூன்றும் கதை வளர்ச்சியில் குறிப்பிடத்தக்கன.

காப்பிய ஒருமை அல்லது முழுமைதான் கட்டமைப்பில் இன்றியமையாதது. இடம் பெறும் சிறு கூறுகள் ஒவ்வொன்றும் அவ்வொருமை நோக்கியே அமைய வேணடும். பதிகம் குறிப்பிடும் மூன்று கோட் பாடுகளில் பத்தினிப் பரவலே காப்பியத்தின் தலை யாய குறிக்கோளாகும். சிலம்பின் நிகழ்ச்சிகள் அனைத்தும் இவ்வொருமை நோக்கியே பின்னப் பட்டுள்ளன.

**நாடகக் காப்பியம்:** (Dramatic Epic) 'நாடக உறுப்புக்களை உடைத்தாலின் நாடகக் காப்பியம்' என்பது அடியார்க்கு நல்லார் கருத்தாகும். உயிர்த் துடிப்பு நிறைந்த உரையாடல், பொருள் மிகுந்த சொற்கள், பாத்திர வளர்ப்பு, தொடக்கம், முடிவு, செயலொருமை, கால ஒருமை, புனைந்துரை அனைத்தாலும் நாடகக் காப்பியம் என்ற பெயருககுப் பொருத்தமாகிறது இக்காப்பியம். சில இசைப்பாடல்கள் ஒருவர் கூற்றாக மட்டும் அமை யாமல் பாத்திரங்கள தமக்குள் பேசுவனவாகவும், அனைவரும் ஒனறு சேர்ந்து பாடுவனவாகவும் அமைந்து நாடகக் காட்சி போல் அமைதலினால் இதற்கு நாடகக் காப்பியம் என்றொரு பெயர் வந்திருத்தல் கூடும். 'கானல் வரி' வேட்டுவவரி, ஆய்ச் சியர் குரவை, குன்றக குரவை, வாழ்த்துககாதை உரையாடற்றிறன் சிறந்த வழக்குரை காதை ஆகியவை நாடகப் போக்கில் அமைந்துள்ளன எனலாம்.

**தொடக்கம்:** சிலப்பதிகாரம் 'நாடகக் காப்பியம் என்பதற்கு நூலின் தொடக்கம் ஒரு சான்று. திங்களைப் போற்றதும், ஞாயிறு போற்றுதும், மாமழை போர்ற்றதும், பூம்புகார் போற்றும் என்ற தன்மைப் பன்மை நடையில், நடிப்பதற்கு முன் நாடக மாந்தர் கூடித் தொழுவது போல் அமைந் திருத்தல் அதனை விளக்கும்' எனறு சில ஆய்வாளர் கள் குறிப்பிடுவர். தொடக்கம் நாடகக் கலைச் சுவையோடும் மரபோடும் அமைந்துள்ளது.

**செயல் ஒருமை, கால ஒருமை:** கண்ணகியை மையமாக வைத்தே காப்பியம் வளர்ந்து செல்வதால் செயலொருமை போற்றப்பட்டுள்ளது. தேவந்தி கதை முதலிய கிளைக் கதைகளும் மையக் கதைக்குத் துணைபுரிவனவாகவே உள்ளன.

கால ஒருமை சிலம்பில் மிகுதியும் போற்றப் பட்டுள்ளது. பல ஆண்டுகளில் பல்வேறு காலங்களில் நிகழ்ந்த கதை மாந்தரின்வாழ்க்கைச் செயல்கள் அடுத்தடுத்து நிகழ்ந்தனவாகப் பிணைத் தும் இணைத்தும் சொல்லப்பட்டுள்ளன. சான்றாக, கண்ணகி தன் கணவனொடு சில ஆண்டுகள் இல்லறம் நடத்தினாள் என்பது, 'யாண்டு சில கழிந்தன இற்பெருங் கிழமையிற் காண்டகு சிறப்பிற் கண்ணகி தனக்கென்' என்று சுருங்கச் சொல்லப்படுகிறது. வஞ்சியினின்றும் வடநாடு படை யெடுத்த செங்குட்டுவன் பகைவரைத் தோற்பித்துப் பத்தினிக்கல் எடுத்து வருவதற்கு முப்பத்திரண்டு திங்கள் ஆயின என்பது, 'இறையோன் செவ்வியிற் கணியெழுந் துரைப்போன் எண்ணான்கு மதியம் வஞ்சி நீங்கியது' என்பதால் புலப்படுகிறது. கால இடையீடு குறையக் குறைய நாடகக் கவர்ச்சி பெரு கும் என்பதும், காலக் குறுக்கம் செய்தல்நாடக அறம் என்பதும் இளங்கோ காட்டும் இலக்கணம். சான்றாக முதல் நாள் மாலை கோவலன் இறந்த செய்தியை மறுநாள் மாலைதான் கண்ணகி அறிகின்றாள. ஆனால், பாட்டில் இருநாள நிகழ்ச்சி ஒருநாள் நிகழ்ச் சியாகக் காட்டப்படுகிறது.

> 'வண்டார் இருங்குஞ்சி மாலைதன் வார்குழல் மேல்
> கொண்டாள் தழீஇக் கொழுநன்பாற் காலை வாய்ப்
> புண்டாழ் குருதிபுறஞ்சோரமாலைவாய்க்
> கண்டாள அவன் தன்னைக் காணாக் கடுந்துயரம்'

காலையில் உயிரோடு கணவனைத் தழுவிய கண்ணகி மாலையில் குருதியோடு அவனைத் தழுவினாள் என்ற கருத்தோட்டம் கற்பார் நெஞ்சை அவலப் படுத்துகிறது.

**புனைந்துரைகள்:** நாடக இலக்கியம் படிப்ப வர்க்கு, நாடகத்துக் கண்முன் தோன்றும் சூழ் நிலையை எழுத்து வடிவில் காட்ட வேண்டியது இன்றியமையாதது. ஆகவே தான், இயற்கை வருணனை சிலம்பில் காதை காதைகளாகப் பெருகி யிருக்கிறது. கனாத்திறம் உரைத்த காதை, அடைக் கலக் காதை, கொலைக்களக் காதை, ஊர்சூழ்வரி, வழக்குரை காதை தவிர மற்றையவெல்லாம் காலம்

இடம் காட்சிகளைப் புனையும் நாடகத் திறங்களாக உள' என்று ஆய்வாளர் கூறுவர். சிலம்பில் இடம் பெறும் பின்புலக்காட்சி வருணனை, பாத்திரங்களின் அசைவு, நடிப்பு ஆகியவற்றைச் சொல்லும் ஆசிரியர் கூற்றுகள் யாவும் விரிவான நடிப்புக் குறிப்புகளே யாகும்.

**நாடக வளர்ச்சிமுறை:** நாடகத்தில் சிக்கலின் தோற்றம், வளர்ச்சி, உச்சம், வீழ்ச்சி, முடிவு ஆகிய ஐந்து கூறுகள் இருக்க வேண்டும் என்பர் மேலை அறிஞர். கோவலன் கண்ணகி திருமணத்திலேயே சிக்கலுககு விதையூன்றப் பெறுகிறது. பாத்திர அறிமுகத்திலேயே பொருத்தமும் பொருத்தமின்மையும் புலப்படுத்தப் படுகிறது. 'மாநகர்க் கீந்தார் மணம்' என்னும் கவிக் கூற்றும் சுற்றியிருந்தோரின் 'தீதறுக' என்னும் எதிர் மறை வாழ்த்தும், கதிரவனும் மதியமும் போல் ஒருங கிருந்தனர் என்னும் வருணனையும் அவல முடிவை யும் முரண்பாட்டையும் விளக்குகின்றன. கோவலன் மாதவியை அடைதலும் பிரிதலும் சிக்கலை வளர்க் கின்றன. சிக்கல கோவலன் கொலைப்படுவதில உச்சம் பெற்று, கண்ணகி வழக்குரைத்து மதுரையை அழிப்பதில் வீழ்ச்சியடைகிறது; கண்ணகி தெய்வமா வதில் முடிவுபெறுகிறது. உலக நாடகத் திறனாய் வாளர்கள் குறிப்பிடும் நாடகத்தின் பல்வேறு கூறு களும் சிலம்பில் காணப்படுகின்றன. உரையும் பாட்டும் செய்யுளும் வருவதே இசை நாடகம் (Opera). அது சில சமயங்களிற் கூத்தைக் கொண்டு இயலும். செய்யுளும் பாடல்களும் நாடகப் பண்பையும், பண்ணின் திறங்களையும் பெறுதல் வேண்டும். இவையே இசைநாடக இலக்கணம். இவ்விலக்கணத்தைச் சிலப் பதிகாரம் முழுக்க முழுக்கப் பெற்றுள்ளது என்பதனை ஆய்வாளர் காட்டியுள்ளனர். இவ்வாறு நாடகக் காப்பியம் என்ற பெயருக்கு முற்றிலும் உரித்தாகின்றது சிலப்பதிகாரம்.

**ஒருமைப்பாடு:** மக்களிடத்தே ஒருமை மனப் பான்மை வளர வேண்டும் என்று வழிகாட்டுவது சிலப்பதிகாரம். 'ஆட்சியால் தமிழகம் மூன்றாகப் பிரிவுற்றிருந்த போதிலும் பண்பாட்டால் மொழி வகையால் தமிழர் என்ற ஓர் இனம் வாழும் நாடே என்ற கொள்கையை வலியுறுத்த முயன்றார். அதனால் முடியுடை வேந்தர் மூவர்க்கும் உரிய ஒரு காவியத்தைத் தமிழகத்தின் பொதுக் காவியமாகவே ஆக்கித் தந்துள்ளார். ஒரு வேந்தன் மற்றொரு வேந்தனை வெறுக்காத வகையிலும், வெறுப்புத் தோன்றினாலும் மாறித் திருந்தும் வகையிலும் பல நிகழ்ச்சிகள் அமைத்துத் தமிழகத்தின் ஒற்றுமைக்குக் கால்கோள் இட்ட தமிழ்ச் சான்றோர் இளங்கோவடிகளாவர்.

இளங்கோவடிகள் மூன்று நாடுகளையும் பிணைத்து, தமிழ்நாடு என ஒரு நாடாகப் போற்றிப் பாராட்டியுள்ளார். சேரனையும் சேர நாட்டையும் காட்சிக் காதை ஊசல்வரி ஆகியவற்றிலும், சோழனையும் சோழநாட்டையும் இந்திர விழவூ ரெடுத்த காதை, நாடுகாண் காதை, வாழ்த்துக் காதை, அம்மானைவரி ஆகியவற்றிலும், பாண்டியனையும் பாண்டிநாட்டையும் காடுகாண் காதை, ஊர்காண் காதை, கந்துக வரி ஆகியவற்றிலும்' மூவரையும் வள்ளைப்பாட்டு, ஆய்ச்சியர் குரவையிலும் புகழும் பகுதிகளால் இது புலனாகிறது.

**பெண்ணின்பெருமை:** சிலம்பின் தலையாய குறிக்கோள் பத்தினியைப் பரவுதலாகும். இதற்கேற்பத் தொடக்கம் முதல் இறுதி வரை படிப்படியே கதை நாயகி கண்ணகி பெருமைப்படுத்தப்படுகிறாள். காப்பியத் தொடக்கத்தில் இவளை அறிமுகப் படுத்தியது குறித்து 'இவளை முற்கூறிற்று கதைக்கு நாயகியாதலின்' என்பர் அரும்பதவுரையாசிரியர். 'கண்ணகியை முற்கூறினார் பத்தினியை ஏத்துதல் உட்கோளாகலான்' என்பர் அடியார்க்கு நல்லார். 'மாதரார் தொழுதேத்த வயங்கிய பெருங்குணத்துக் காதலாள்' என்று அறிமுகம் செய்வர் இளங்கோ. புகார்க் காண்டத்தில் 'காமவேள் கோட்டம் சென்று தொழலாம்' என்று கூறும் தேவந்தியிடம் 'பீடன்று' என மறுக்கும் கணணகியைக் காட்சிப்படுத்தியவர், மதுரைக் காண்டத்தில் வேட்டுவ வரியில் தெய்வ முற்ற சாலினியின் மூலம், 'இவளோ கொங்கச் செல்வி குடமலையாட்டி, தென்தமிழ்ப் பாவை செய்த தவக்கொழுந்து, ஒருமா மணியாய் உலகிற் கோங்கிய, திருமா மணி' என்று பாராட்டுகிறார். 'கற்புக்கடம் பூண்ட இத்தெய்வம்' என்று கவுந்தியடிகள் மூலம் புகழ்கிறார். 'வம்பப் பெருந்தெய்வம்' என்று மதுரை மக்கள் பேசுகிறார்கள். பாண்டியன் அரண்மனைக் காவலன் கொற்றவை, காளி என்று குறிப்பிடுகிறான். 'கற்பின் கனலி' என்பது தீயுண்ட மதுரையால் தெரிவிக்கப்படுகிறது. இறுதியில் சேரன் செங்குட்டுவனால் பத்தினிக் கோட்டம் பெறும் கண்ணகியை, இலங்கைக் கயவாகு உள்ளிட்ட பிற வேந்தரும் போற்றி வணங்குகிறார்கள். இவ்வாறு கண்ணகி என்னும் 'பெண்ணின் பெருமை' யே நூல் முழுவதும் விரிவாகப் பேசப்பட்டுள்ளது. மேலும், இளங்கோவடிகள் மாதவியையும் கணிகையர் குல வொழுக்கத்திற்கு மாறுபட்ட சிறப்பு மிகுந்த செந்தாமரையாகவே ஓவியப் படுத்தியுள்ளார். மாதவி கோவலனுக்கு எழுதும் இரண்டாம் கடிதத்தின் மூலம் அவள் அன்பு, ஒழுக்கம், தியாகம் ஆகிய பண்புகளை வெளிப்படுத்தியுள்ளார். இன்னும் பாண்டியனோடு உடன் உயிர்துறந்த பாண்டிமா தேவியும் கோப்பெருந்தேவியால் போற்றப்பட்டுள்

ளாள். அடைககலம் தவறியதறகாக உயிர்துறநத மாதரி போன்ற மாதர் குல மாணிக்கங்களையும் உண்ணாவிரதம் இருந்து உயிர்துறந்த கவுநதியடி களையும் படைததுக காட்டியுள்ளார். ஆகவே, இக காப்பியம் பெண்ணின் பெருமை பேசுவது என்று போற்றலாம்.

**பாத்திரப்படைப்பு:** ஒரு காப்பியத்திறகு மிக இன்றியமையாத கூறு பாததிரப் படைப்பாகும். இக் காப்பியததில் அளவான பாததிரங்களைச செறி வாகவும் நிறைவாகவும் படைத்துள்ளார் இளங்கோ வடிகள. ஏற்ற இடஙகளில பாததிரங்களைப் பேசச செய்துளளார்.

ஒன்றிரண்டு சொற்களிலேயே உள்ளப் பண்பை ஓவியமாக்கியுளளார். பெரும்பாலும் பிற பாததிரங களின வாய்மொழி கொணடும், அக்குறிப்பிட்ட பாத்திரத்தின வாய்மொழி மற்றும் செயலகளைக் கொணடும் பணபினை விளக்கியுளளார். தலைமைப் பாத்திரஙகளைப் பற்றித் தன் கூறறாகவும் விளக்கி யுள்ளாா. அக அழகைப போலப் புறக கோலத்தை யும் தேவையானஅளவு விவரித்துளளார். சானறாகக் கோவலன கண்ணகி குறிதத மஙகலவாழத்துப பாடல வருணனை (வரி 25-39) யினைச் சுட்டலாம.

சிலப்பதிகாரத்தில் கோவலன், கண்ணகி எனத் தனிப் பாத்திரஙகளும், எயினா எயிறறியர், பாடும பாணர், விசும்பியங்கு முனிவர், மலைமிசை மாககள எனத்தொகைப் பாத்திரஙகளுமாகப பலர் இடம பெறுகினறனர். பெண பாத்திரஙகளுள கண்ணகி, மாதவி, கவுந்தியடிகள, தேவநதி, மாதரி ஆகி யோரும் ஆண பாத்திரஙகளில கோவலன், நெடுஞ் செழியன், பொறகொலலன, செஙகுட்டுவன, மாடலன ஆகியோரும் மிகுதியும இடம்பெறும பாத்திரங்களாவர்.

**கண்ணகி:** கற்பென்னும் திண்மை இவள் அடிப் பணபாகும். 'திருமகள் போன்ற வடிவமும் அருந்ததி போன்ற கற்பும் மாதாகள போற்றும் பெருங குணமும் நிரம்பியவள்' எனறு ஆசிரியரால அறிமுகப் படுததப் படுகிறாள. 'வடுநீங்கு சிறபபின மனை யாள்' எனறு ஆசிரியராலும், 'குலப்பிறப்பாட்டி' என மாதவிடாலும், ஒருமாமணியாய உலகிற கோங்கிய திருமாமணி, எனச சாலினியாலும், 'தன் துயர் காணாத தகைசால் பூங்கொடி' எனக் கவுநதி யடிகளாலும், நப்பினனை போலவள என மாதரி ஐயையாலும், 'நாணும் மடனும் நல்லோர் ஏத்தும் பேணிய கற்பும் பெருந்துணையாக என்னொடு போந்தீங் கென்துயர் களைந்த பொன்' எனக் கோவலனாலும், 'தீ முறை செயதாள்' எனக்குனறக குறவராலும், 'பத்தினிக் கடவுள' எனச் சேரமா தேவியாலும் பாராட்டப் பெறுகிறாள்கண்ணகி.

**கோவலன்:** உணர்ச்சி வழி இயங்குபவன். பாத்திர அறிமுகத்தில இவன் அழகையும் புகழையுமே எடுத்து மொழிவா இளஙகோ. அடைக்கலக் காதையில மாடலன் மூலம் கருணை மறவன் செல்லாச் செல்வன், இலலோா செம்மல்' எனச சிறப்பிப்பா. பொதுவாழவில் இவன் கொணடிருந்த வள்ளனமை யும்,அன்புப் பெருக்கமுமே கொணடாடப்படுகினறன. தனிவாழவில கண்ணகிக்கு இணையான நிறையும் அறிவும் இவனிடம் இலலை எனலாம். மாதவியைச் சேர்வதும், விட்டுப் பிரிவதும், கணணகியுடன மதுரைக்கு இரவில் புறப்படுவதும் உணர்சசி வழிப் பட்ட பாத்திரம் ஏன்பதை நிறுவும். சூழ்நிலைகளின பாவையாகவே வாழ்ந்தான் எனச சுருஙகக் கூறலாம்.

**மாதவி:** கணிகையர் குலததில் பிறந்தாலும் ஒருவனையே விரும்பி வாழந்த உத்தமி பிரிவு நேர்ந்தபோது அவலத்தால் அலைககழிககபபட்டுத துறவியாகப் பெருமை பெறுகிறாள. கணணகியைக குறிக்கும் பெரும்பாலான இடங்களில் கறபினையும் இணைத்துச் சுட்டும் இளஙகோ, மாதவி குறித்த விவரணைகளில் ஓரிடத்துக் கூடக் கற்பை இணைத்துக் கூறவில்லை என்பர் ஆய்வாளர். அவள் தன் உறுப்பு நலனும் அணிநலனும் கலைநலனுமே பாராட்டப் படுகின்றன. கோவலனைத் தவறாக நினைதது இவள் பாடிய 'கானல்வரிப் பாடலே' சிககலை வளர்க்கிறது. இதனை 'மாதவி மடந்தை கானற பாணி கனக விசயர் தம் முடிததலை நெரிததது' என மாடலன கூறறாக விளக்குகிறார் இளஙகோ. மாதவி கோவலனுக்கு எழுதும் இரண்டு கடிதஙகளும் அவள் உளள வளர்ச்சியைத் தெள்ளத தெளிவாகக் காட்டுகினறன. முதல் கடிததத்தின் மூலம் தன உரிமையை நிலை நாட்டும் கலையரசியாக மட்டுமே காட்சி அளிப்பவள், இரண்டாம் கடிதத்தின் மூலம் தன் குற்றத்தை உணர்ந்து வருநதிய பண்புச செல்வியாக உயர்கிறாள். மனனிப்புக் கேட்கும் பெருநதன்மையையும் கணணகியைப் போறறும உயர் மனத்தையும் இவளபால் காண முடிகிறது.

**வரலாற்றுச்செய்திகள:** சிலம்பில கூறப்படும் மூவேந்தரைப் பற்றிய வரலாற்றுச் செய்திகள 1) உண்மையானவை, 2) கறபனையானவை, 3) உண்மையின் அடிப்படையில் அமைக்கப்பட்ட கற்பனைகள என்ற கருத்துகள் தமிழுலகில் நிலவு கின்றன. வி.ஆர்.ஆர்.தீட்சிதர், மு.இராகவையஙகார், போன்றோர் சிலம்பினை வரலாற்றிலக்கியம என்பர். மற்றும்சிலர் கற்பனை இலக்கியம் எனப் பல்வேறு

சான்றுகள காட்டி நிறுவுவர். சிலம்பில் சோழ மன்னனின் பெயர் குறிக்கப் பெறவில்லை. உறையூர் சிறப்பிக்கப் பெறவில்லை, இடைச் செருகல் என உறுதியாகத் தெரியும் கட்டுரை தவிர மதுரைக் காண்டத்தின் பல இடங்களில் பாண்டியனின் பெயர் குறிக்கப் பெறவில்லை, சேரன் பெயர் செங்குட்டுவன் என்று குறிக்கப்பட்டாலும் அவனுடைய வடநாட்டுப் படையெடுப்பு, பத்தினிக் கோட்டம் அமைத்தது ஆகிய தலையாய செய்திகளைச் சிறந்த வரலாற்றுக் கவிஞரான பரணர் பாடவில்லை, பரணரால் பாடப் பட்ட ஐந்தாம்பத்தின் பாடல்களுக்கும் பிற்காலத்தில் எழுதப்பட்ட அதன் பதிகத்திற்கும் இடையே கருத்து மாற்றம் நிரம்பக் காணப்படுகிறது. மூவேந்தரைப் பற்றிய சிலம்பின் புகழுரைகள் பலவும் புராணப் புகழ்ச்சிகளாகவே உள்ளன. சேரர் பரம்பரை பற்றிச் சிறப்பித்துக் கூறிச் செங்குட்டுவனை ஆற்றுப்படுததும் சோழ நாட்டைச் சேர்ந்த மாடலன், சோழ அரச னோடு தொடர்புடையவனாகச் சித்திரிககப் பெற வில்லை. செங்குட்டுவன் அவைக்கு வந்திருந்த இலங்கைக் கயவாகு குறித்துப் பதிறுப்பததிலோ மணிமேகலையிலோ இலங்கையின வரலாற்று நூலான மகாவம்சத்திலோ குறிப்புகள் ஏதுமில்லை. இக்காரணங்கள் சிலப்பதிகாரம் கற்பனை இலக கியம் என்போர்காட்டுவனவாகும்,'இளங்கோவடிகள் தமிழ்நாட்டு மூவேந்தர்களை எண்ணிப் பாடியது ஓர் இலட்சியச்சிந்தனையேயாகும் என்றும் கூறுவர்.

காவிய மாந்தரின் வாழ்க்கைகளைப் பற்றிய வரையில் ஆராய்ந்தால் வரலாற்றுக் குறிப்புகள் பல இருத்தல் காணலாம். காவியத்தில் ஆஙகாங்குக் கூறப்படும் விளக்கங்களையும் வருணனைகளையும் ஆராய்ந்தால் நாட்டின் வரலாறு பற்றிய குறிப்புகள் பல இருத்தல் காணலாம். இவ்வகையில் கோயில்கள், வழிபாடுகள், விழாக்கள், காவிரிப் பூம்பட்டின நகர மைப்பு, நாகரிகம் பல்வகைத் தொழில்கள் ஆகிய வற்றைக்குறிப்பிடும் இந்திர விழவூரெடுத்த கதையும் மதுரை நகரம் குறித்தும் பாண்டியன் அரணமனை குறித்தும் விவரிக்கும் 'புறஞ்சேரியிறுத்த காதையும்', பரத்தையர்கள், கலைகள்,விற்பனைக்குவந்த பொருள் கள் குறித்துக் கூறும் 'ஊர்காண காதையும்', விருந் தோம்பும் முறை, களவரின் திறமை பற்றி விளக்கும் கொலைக்களக்காதையும், வேட்டுவர், ஆயர், குறவர் வாழ்க்கை நிலைகளைக் குறிப்பிடும் வேட்டுவவரி ஆய்ச்சியர் குரவை,குன்றக் குரவை ஆகியனவும்,போர் மரபுகள் குறித்து (போர்முறை, ஒற்று, வழிபாடு வீரர்க்குச் செய்யும் சிறப்பு) விவரிக்கும் காட்சிக் காதை, கால்கோள் காதை, நீர்ப்படைக் காதை நடுகற் காதை ஆகியனவும் குறிப்பிடத் தக்கனவாம்.

**கவின் கலைகள்:** இளங்கோவின் காவியம் ஒரு 'கலைக் களஞ்சியம்' ஆகும். தமிழ்நாட்டின் சிறந்த கலைகளாகிய இசைநாட்டியம் பற்றிய எண்ணற்ற குறிப்புகள இந்நூலில் உள்ளன. ஒப்பனைக்கலை, கட்டடக் கலை, பொன், மணி தொடர்பான கலை பற்றிய செய்திகளும் காணப்படுகின்றன. இவ்வகை யில் அரங்கேற்று காதை, கடலாடு காதை, கானல் வரி, வேனிற்காதை, வேட்டுவ வரி, ஆய்ச்சியர் குரவை, குன்றக் குரவை, நீர்ப்படை காதை, நடுகற் காதை ஆகிய காதைகளில் அளவற்ற கலைச் செய்திகள் உள்ளன. அரங்கேற்று காதை இவற்றில் மிகவும் இன்றியமையாத இறப்புடையது.

**ஆடல்:** ஆடற் குறிப்புகளாகப் பிண்டி, பிணை யல், எழிற்கை, தொழிற்கை, கூடை, வாரம் ஆகியவை குறிப்பிடப்பட்டுள்ளன. கூத்து வகைகளாக இருவகைக் கூத்து (வேத்தியல்,பொதுவியல்) பதினோ ராடல், குரவை, வரி என்பன சொல்லப்பட்டுளளன. கூத்தில் பங்கு கொளளும் கூத்தியது அமைதி, ஆடலா சிரியரின் அமைதி (3:12.25) இசையாசிரியன் அமைதி (3:26:36), கவிஞன் அமைதி (3:37.44), தண்ணுமை யாசிரியன் அமைதி (3.44-55), குழலோன் அமைதி (3:56-69),யாழாசிரியன் அமைதி (3:70.94) என்பன விளக்கப்பட்டுள்ளன. நாட்டிய அரங்கின் இலக்கண மும் விரிவாகக் கூறப்பட்டுள்ளது. சமயத் தொடர் போடு வளர்ச்சியுற்ற கூத்துகளாக 1) கொடு கொட்டி2) பாண்டரங்கம், 3) அல்லியம் 4)மல்லினா டல், 5)துடி 6) குடை 7) குடம், 8) படி,9) மரக்கால் 10)பாவைக்கூத்து, 11) கடையம் ஆகியன கடலாடு காதையில் காட்டப்பட்டுள்ளன. காமத் தொடர்பு டைய 1) கண்கூடுவரி, 2) காண்வரிக் கோலம், 3) உள்வரியாடல் 4)பின்புற வரி5)கிளர்வரிக் கோலம், 6) தேர்ச்சி வரி, 7)காட்சி வரி,8) எடுத்துக் கோள்வரி ஆகியன விளக்கப் பட்டுள்ளன. இவற்றோடுஅவ்வந் நிலத்திற் கேற்ப ஆடும் ஆடல்களும்(Folkdances)சிலம் பில் உள்ளன. வேட்டுவராடல், ஆய்ச்சியர் ஆடல், குற வர் ஆடல்கள் விவரிக்கப் படுகின்றன. மகளிர் விளை யாட்டுக்களோடு தொடர்புடைய அம்மானைவரி, கந்துகவரி, ஊசல் வரி,வள்ளைப் பாட்டு, துணங்கை, குரவை போன்றவையும் விளக்கப் பெற்றுள்ளன. போர்க்கள ஆடல்களைக் கால்கோட் காதையில் காணலாம்.

**பாடல்:** கானல் வரி யாழ் மீட்டும் வகையையும் திறத்தையும் காட்டுகின்றது; இசைக் கரணத்தை யும் தருகின்றது (7.1. 12-15) வேனிற் காதை யிலும் ஒன்பான் விருத்தி, பகை நரம்புகள் படாமல் வாசிக்கும் முறைமை, நால்வகைச் சாதிப் பண்கள், மூவகை இயக்கம் எனப் பலப்பல செய்திகளை

இசைத் தொடர்பாக வழங்குகிறது (8.25-44). செங்கோட்டியாழ், சீறியாழ்பற்றிய செய்திகளைப் புறஞ்சேரியிறுத்த காதை, நடுகற் காதை ஆகியவற்றில் காணலாம். இசைக்குப் பலவகை இலக்கணங் கூறும் சிலம்பில் இசைப் பாடல்களும் விரவியுள்ளன. கானல் வரி முழுமையும் இசைத்தமிழ்ப் பாடல்களாகும். இசையுடன் ஆடல் கலப்பதை வரிப்பாடல்களும் குரவைகளும் காட்டுகின்றன. வாழ்த்துக்காதை, இசைப்பாடலகளாலாகித்தமிழ் மகளிரின் ஆடல் பாடல் சிறபபுக்களை ஒருங்கே விளக்குகின்றது. இவ்வாறு எண்ணற்ற இசை, நாட்டியச் செய்திகளை இணைத்து இலக்கியத் தரம் குன்றாமல விளங்குகிறது சிலப்பதிகாரம். முடிவாகக் கூறுமிடத்துத் தமிழ்க் காப்பிய உலகில் சிலப்பதிகாரம் தலைமை சான்றதும் தனிச் சிறப்புடையதும் ஆகும். தலைப்பிலும் நுட்பம் உடைய காப்பியம் இது, இது இயல், இசை, நாடகம் என்னும் மூன்றும் மொழிவதால் முத்தமிழ்க் காப்பியம்; காலம், இடம், காட்சிகளைத் திறம்படப் புனைவதாலும, உரையாடற பகுதிகளில தனித்திறன் காட்டுவதாலும் நாடகக் காப்பியம; முடிமக்களைத் தவிர்த்து, வணிகர் குலத்திலே பிறநத கணணகி, கோவலனைக் காப்பிய நாயகர்களாக்கி யிருப்பதால் குடிமக்கள காப்பியம்; வேற்றுமை யுணர்வை நீககி ஒற்றுமையுணர்வை வலியுறுத்துவதால் ஒருமைப்பாட்டுக் காப்பியம்; இல்லறத்தோர் துறவறத்தோரைப் போற்றும் நெறிக்கு மாறாகத் துறவி இல்லறத்தோரைப் போற்றித் தொழுவதால் புரட்சிக் காப்பியம் எனத் தகும்சிறப்புடையது.

**துணை நூல்கள்:**

**சாமிநாதையர். உவே,.** சிலப்பதிகார மூலமும் அரும்பதவுரையும் அடியார்க்கு நல்லாருரையும், ஐந்தாம் பதிப்பு, சென்னை, 1950.

**மாணிக்கம், வ. சுப.,** இரட்டைக் காப்பியங்கள். இரணடாம் பதிப்பு, காரைக்குடி, 1960

**மார்க்கபந்துசர்மா,** சிலம்பின் இரசனை, முதற் பதிப்பு, சென்னை, 1961.

**மீனாட்சிசுந்தரம், தெ.பொ.** குடிமக்கள் காப்பியம், நான்காம் பதிப்பு, மதுரை, 1975.

**வரதராசன், மு. இளங்கோவடிகள்,** மூன்றாம் பதிப்பு, சென்னை, 1975.

பழ.மு.

## சிலம்பு கழி நோன்பு

**சிலம்பு கழி நோன்பு**: அணிகலன்கள் ஆடவர்க்கும் மகளிர்க்கும் பொதுவுடைமை. அவரவர்க்குத தனியுடைமையான அணிகலன்களும் உள்ளன. அணிகலன்களை அணிவதில் ஆடவரினும் மகளிர் நாட்டம் மிகவுடையர். அணிகலன்கள் அழகு கருதியே அணியப்பெற்றன. ஆயினும், அவற்றுட் பெரும்பான்மையானவை அழகிற்கு முதலிடம் தரப்பட்டு அணியப்பெற்றன; சில மரபிற்கு முதலிடமும், சில மங்கலத்திற்கு முதலிடமும் தந்துஅணியப்பெற்றன.

சிலம்பு, கைவளை, தாலி, காதணி, மூக்குத்தி என மங்கல அணிகள அமைந்தன. இவற்றை அணிகலன்கள் என்பதோடு மங்கலச் சின்னங்கள என்றும் சொல்ல வேண்டும். இச்சின்னங்களுள சிலம்பு காலணி. அது, காலில் கிடந்தாலும் அணியால் ஒரு தனி அழகுடையது; கலைத்தொழிலால் தனிச் சிறப்புடையது; மரபால் எளிமை ஏற்றம் கொணடு திகழ்வது; சின்னத்தால் கன்னித் தன்மை காட்டுவது.

மீன்வாய்க் கணையாழி, பீலி, காற் கணையாழி விரல்வளை, மெட்டி முதலியன காலின் விரலணிகள். இவறறிற்கு மேல், காலில நிறைவாக அணிய விரும்பியோர் ஐந்து அணிகலன்களைக் கொணடனர். அடியில் பரியகம்; அதன்மேல் சிலம்பு; அதன் மேல் பாடகம், மேல் சதங்கை; மேலாக அரியகம் என மேன்மேல் முறையாக அணியப் பெற்றன. இவறறுள் பின்னிரண்டும் ஆடற்கலைக்குரியன. சிலம்பும சதங்கையும் அரியகமும் ஒலி யெழுப்புவன. இவை யாவற்றினும் சிலம்பு இளமங்கையர்க்கு இனறியமையாதது; தனித் தன்மை சுட்டுவது.

சிலம்பு காலில் பரியகத்திற்கு மேலாகக் குதிகாலை ஒட்டி வளைந்து, கணுக்கால் பரட்டின கீழாகத் தொடர்ந்து, புறங்காலில் படிவதாக வளைந்த-இடை குறுகிய நீள்வட்ட வடிவங் கொணடது. இரண்டு வில் வடிவங்களை இணைத்த வட்ட வடிவாகவும் செய்யப்படும். முழு வடிவத்தில் நீள் வட்டமாயினும் இரண்டு பகுதிகளாக விலக்கும் அமைப்புடையது. இரணடு பாதிகளும் விலகிச் சேருமாறு கீல்மூட்டு வைக்கப் வைக்கப்பெற்றது. இம்மூட்டுப் பகுதி குதிகாலில் அமரும். புறங்கால்மேல் பொருந்துவாய் படியும். இப்பொருந்துவாய் திருகாணியால் பொருத்தப் பெற்றிருக்கும்.

சிலம்பு உள்ளே கூடாகவும், வெளியே புடைப்பாகவும்அமைந்தது. சிறுசிறு குட உருவங்களைக் கோவையாக்கிய வடிவுடையது. தனித்தனி ஒவ்வொரு குடமும் தனித்தனிப் பத்திபத்தியாக அறையாகத் தடுக்கப்பெற்றது. ஒவ்வொன்றிலும் ஒலியெழுப்புவதற்கெனச் சிறு சிறு உருண்டைக் குண்டுகள போடப்பெற்றன. இக்குண்டுகள் 'பரல்' அல்லது 'அரி' என்ப்பெற்றன.

சிலம்பின் உடல் பொன்னாலும் வெள்ளியாலும் செம்பாலும் அவரவர் செல்வ நிலைக்கேற்பச் செய்யப்பட்டது இதற்கேறப உள்ளே பெய்யப்பெற்ற

பரல்கள் கல, வெள்ளி, பொன் உருணடைகளாகவும், முத்து, மாணிக்கங்களாகவும் ஒரே வகைப் பரவலாக பெய்யப்பெற்றன. இவை நடக்கும்போது குலுங்கி இனிய ஒலியை எழுப்பும். இப்பரலகளைக் கொணடு 'பொன்னரிச் சிலம்பு', 'அரிச்சிலம்பு', 'முத்தரிப் பொற் சிலம்பு' 'இன்மணிச் சிலம்பு' எனப் பாடப்பட்டது. ஆரியப்படை கடந்த நெடுஞ்செழியன் மனைவி கோப்பெருந்தேவியின் காற்சிலம்பு முத்தரிச் சிலமபு. வணிகப் பெருமகன் கோவலன் மனைவி கண்ணகி யின் காற்சிலம்பு மாணிக்க-மணி-அரிச்சிலம்பு எனச் சிலப்பதிகாரம் காட்டுகின்றது.

சிலமபின் பொருந்துவாய் மிகச் சிறந்த வேலைப் பாடுடையது. இப்பகுதியின் தலைப்பகுதியாம் மத் தகம் இரு புடைப்பாக மணி பதிக்கப் பெறறது. இரணடு வயிரம் பதிக்கப்பெற்றது உடறபகுதி முன் குறித்த பத்திபத்தியாகக் கல்லழுத்தும் குழிகளை யுடையது. இக்குழி 'கேவணம்' என்னும் தொழிற சொல்லால் குறிக்கப்பெறும்; 'கிளிச்சிறை' என்னும் பசும்பொன்னால் செய்யப்பட்டது. சூல்கொண்ட உள்ளே கருக்கொணட குடஙகளின பத்திபோன்ற அமைப்பினது. பூக்களுடன சித்திரங்கள் செதுக்கப் பெறறது. இதனைச் சிலப்பதிகாரம், 'மத்தக மணி யொடு வயிரங் கட்டிய, பத்திக் கேவணப் பசும்பெற் குடச் சூல, சித்திரச சிலம்பு' என வருணித்தது. இது கண்ணகி காற்சிலம்பு.

'சில' என்றால் ஒலி. சிலமபல ஒலித்தல; உள பரல்கள் ஒலியெழுப்புவதால் 'சிலம்பு' எனப் பெயர் பெற்றது. இரணடாக விலகிப்பின பொருந்துவதற்கு நெகிழ்வதால - ஞெகிழவதால -'ஞெகிழம்' எனப் பெற்றது. 'பிணிநெகிழ் துளையினை' தெளியொளி திகழ்ஞெகிழ்' எனறு பரிபாடல (திரட்டு 1:61) அடி ஞெகிழவதால 'ஞெகிழம்' எனப் பெயர் பெற்றதைக் குறிக்கின்றது. சூல்கொண்ட குடம்போன்ற வடிவ மைப்பு உடைமையால் 'குடச்சூல்' என்ற அடைமொழி பெற்றது. இவ்வடை மொழியே இதறகொரு பெய ராகவும் பெரும்புலவர்களால் பாடப் பெற்றது. ஒலியை-அரவத்தை - உணடாக்குவதால 'அரவம்' என்றும். பரலகள பெய்யப்பெற்றுத் தளைக்கப்பெறற தால 'அரிதளை' என்றும் பெயர் சூட்டப்பெறறது. ஓசையெழுப்பத் தளைக்கப்பட்டதால் 'ஓசை செய் தளை' எனப்பெற்றது. அளவில் சற்று பெரியதை 'நூபுரம்' எனறனர்

இப்பெயர்களுள் 'ஞெகிழம்' என்னும் வழககு முற காலததோடு முடிநதது குடச்சூலும் அவ்வாறே. அர வம் 'அரிதளை' ஓசைசெய்தளை' என்னும் பெயர்கள் நிகண்டுகளோடு நின்றன. 'சிலம்பு' என்னும் பெயரே இலக்கிய வழக்காகவும் உலக வழககாகவும் நின்று நிலவியது. மகளிர் அணிகளுள பல பெயர்களைப் பெற்றது சிலம்பு ஒன்றே என்பது குறிககத்தக்கது

சிலம்பு உலோகத்தால்செயயபபடடது போன்றே மரத்தாலும், நெட்டியாலும் துணியாலும புல்லாலும செய்யப்பட்டு அணிவிககபபெறறன இவ்வாறு எளிய பொருள்களாலும் சிலம்பு செய்யப்பட்டு அணிவிக்கப பெற்றமை கொண்டு ஓர் உண்மையை உணர முடிகின் றது. இது ஒரு 'மரபு அணி' என்பதே அவ்வுண்மை,

அது என்ன மரபு? பெண சிறுமியாக நடை போடத் தொடங்கும்போது சிலம்பு அணிவிப்பது ஒரு தமிழ் மரபாக இருந்தது. பெணகளுக்குரிய அறி குறி அணி என்பது மட்டுமனறி அவளுடைய கன்னித் தன்மையைக் குறிக்கும் சினனமாகவும் கொணடே சிலம்பணி அமைந்திருந்தது. அதனால். இது ஓர் இன்றி யமையாத மகளிர் மரபாயிறறு. மரபைக் கடைப் பிடிக்கும் இன்றியமையாமை கருதி அனைத்து நிலை யினரும் தத்தம் தகுதிககேறற பொருள்களால சிலம்பைச் செய்யவேணடியதாயிறறு செய்யப்படும பொருளுககேற்பவும், பெண்ணின் வளர்ச்சிககேற்பவும் சிலம்பு அவ்வப்போது மாறறபபட்டிருககும.

**சிலம்பு கழி நோன்பு**: இவ்வாறு மரபணியான சிலம்பு ஒரு நிலையில் கழறறபபெறும் மரபையுங் கொண்டது. திருமண நாளின முன் நாள் சிலமபு கழறறும் நிகழச்சி அமைநதது இநநிகழ்சசி ஒரு சிறு இல்ல விழாவாகச் 'சிலம்பு கழி நோன்பு' எனப் பெயர் பெற்றது.

மணமகன், மணமகள காலில் கைவைத்துச் சிலம் பைக கழறறி அவள கையிலோ அவள தாயின கையிலோ கொடுப்பான். அந்நாளில் மணமகள ஒரு நோன்பை மேற்கொள்வாள, மறுநாள அவளை மணந்து, அவளைக கூடி அவளுடைய கன்னித்தனமை யைக் கழிகக இருக்கும் மணமகன் சிலம்பை மட்டும் கழறறவில்லை. அவளுடைய கன்னித் தன்மையையும கழிப்பவனாயினான். கன்னி கழிககும் சினனமே இச்சி லம்பு கழிநோன்பு தறகாலத்தும் சில குடுமபஙகளில 'கன்னிகழித்தல், என்னும் சிறு நிகழ்ச்சியும், அநநா ளில் மணமகள் நோன்பிருப்பதும் அருகிய வழக்காக உள்ளன. சிலம்பணியும் பழககம் போய்விட்டதால கழறறும்நிகழ்ச்சி இல்லாமற் போயிற்று.

ஓர் ஆடவன் உறவினர் சூழ்ந்திருக்க, ஒரு பெண ணின் காலில் கைவைத்துச் சிலம்பின் திருகாணியைச சுழறறிக் கழறறும் காட்சி பகடிக்கு உரியதாகவும அமைந்தது. மணமகளின் தாய்க்கு இக்காட்சி கணணிற்கும் உளத்திற்கும் உவப்பைத் தருவதாயிற்று. ஒரு தாய், 'சிலம்பு கழிக்கும் காட்சியாகிய செல

வத்தை எனக்குத் தாராமல் பிறர் கண்டு மகிழுமாறு என்மகள் தன் காதலனுடன் போய்விட்டாளே, என்று புலம்பினாள். இக்காட்சியைச் 'சிலம்பு கழிஇய செல்வம். (நற் 279:10, 11) என்று பூரிப்புச் செல்வ மாகப்பாடினர்.

உலகில் முதுபெருங் குடிகளிடையே கன்னி கழிக்கும் மரபு உண்டு. சோவியத்து நாட்டில் ஒரு வகை மலையினத்தில், திருமணத்தன்று மணமகள் கண்ணீர் விட்டு அழுவாள். தன் கன்னித் தன்மை கழியப் போகிறதே என்ற இழப்பின் உணர்ச்சி வெளிப்பாடாகக் கண்ணீர் வடிப்பாள். இக்காலத்தும் இது மரபு நிகழ்ச்சியாகி, இயற்கையில் அவ்வுணர்ச்சிக் கண்ணீர் வாராது போனாலும் மரபிற்காக அழவேண் டும் என்பது நடைமுறையாக உள்ளது.

திருமணம் மணமகள் இல்லத்தில் நிகழ்வது மரபு. தன் காதலியை உடன்போக்காகக் கூட்டிச் சென்ற காதலன் திரும்ப அவளைத் தன் இல்லத்திற்கே அழைத்துவந்தான். அவன் தாய் தன் இல்லத்தில் திரு மணம் நடத்த ஏற்பாட்டைச் செய்தாள். நாள் குறித்து அந்நாளின் முன் நாளில் சிலம்பு கழிநோன் பைச் செய்துவிட்டாள். இதனை அறிந்த மணமகளின் தாய், 'தலைவனின் தாய் தன் இல்லத்தில் சிலம்பு கழிநோன்பைச் செய்தாலும், வதுவை மணத்தை என் இல்லத்தில் வைத்துக்கொள்ள மனம் பற்றுவாளோ, (ஐங்குறுநூறு:399)என்று பேசினாள்.

சிலம்பு கழற்றுதல் என்றில்லாமல் 'சிலம்பு கழி' என்று கழிக்கும் சொல்லால் குறிக்கப்பெற்றதாலும், மணமகள் நோன்பு கொண்டதாலும், சிலம்பை மண மகன் கழித்ததாலும், இவ்விழா ஒரு மகளிர் விழா வாக நிகழ்த்தப்பட்டமையாலும் சிலம்பு ஒரு கன்னிச் சின்னமாக அணியப்பட்டதை உணரலாம். கழற்றப் பெற்ற சிலம்பு போற்றிப் பேணப்பெற்றது.சிலபோது எடுத்து அணியவும் செய்தனர்.

'குலந்தரு வான்பொருள் குன்றம் தொலைத்த' கோவலன் கையில் கண்ணகியின் சிலம்பு சிக்காமல் போனது, அதுமீண்டும் அணியப் பெறாமல் கன்னிச் சின்னமாய்க் கண்ணகியால் பேணப் பெற்றமை யாலேயே. பாண்டிமாதேவியின் சிலம்பு அவ்வப்போது துப்புரவாகத் தூய்மை செய்யப்பட்டதும் கன்னிச் சின்னமாகப் பேணப்பெற்றதைக் குறிக்கின்றது.

இக்காலத்தில் மணநிகழ்ச்சியின்போது மணமகள் கால்விரலில் மணமகன் மெட்டி அணிவிக்கும் பழக் கம் உள்ளது. இது கழற்றியது போய் அணிவிக்கும் மாற்றாகச் சிலம்பு கழி நோன்பு தடம்புரண்டதைக் காட்டுகின்றது.

குறிப்பிடத்தக்க சிறந்த அணிகலனாக, ஒரு மரபு அணியாக, கன்னிச் சின்னமாக, பொருள் பொதிந்த நிகழ்ச்சிக்குரியதாக, போற்றிப் பேணப்பெறும் சிறப் புடையதாக விளங்கிய சிலம்பு இக்காலத்தில் அணி யப் படாததாக, அதன் வடிவத்தையும் காண முடியாததாகப் பெயரும்வழக்கற்றதாகப் போனா லும், தன் பெயரால் 'சிலப்பதிகாரம்' என்னும் பெருங்காப்பியத்தில் அதிகாரப்பட்டு நிலைத்திருக் கின்றது. கோ.இ.

*சிலர் நல ஆட்சி*: சிலர் நல ஆட்சி அல்லது செல்வச் சிறுகுடி ஆட்சி என்பது பண்டைக் கால முதலே இருந்து வந்த ஆட்சி வகைகளுள் ஒன்று ஆகும். பணடைய கிரேக்க நகரரசு ஒவ்வொன்றிலும் அளவிற் பெரிய எளிய மக்களுடைய வகுப்பும், அளவிற் சிறிய செல்வர் வகுப்பும் இருந்தன என்று தெரிகிறது. ஏதென்சு நகரரசில் முதலில் பரம்பரை அடிப்படையில் இயங்கிய முடியாட்சியும், அதனை அடுத்து அளவிற் சிறிய உயர்குடிப் பிரபுககளாட்சியும் (Aristocracy)தோன்றின. உயர்குடிப்பிறப்பே சிறந்த அறிவும், பொதுநலம் பேணும் பண்பும், ஆட்சி செய் தற்குரிய தகுதியும் வளருவதற்குத் துணைசெய் கின்றது என்று பிளேட்டோவும் அரிசுட்டாட்டிலும் எண்ணினர்.

உயர்குடிப் பிரபுக்கள் பிறப்பினடிப்படையில் செல்வமும் உடையராயிருந்தனர். அவர்களுடைய ஆட்சி பொதுநலம் பேணும் இயல்புடையதாக இருந்தது. காலப்போக்கில் வாணிகத்தில் பெரும் பொருளீட்டிய புதிய செல்வர்கள் வகுப்பு ஒன்று தோன்றியது. இப்புதிய வகுப்பினர் ஆட்சிக்குரிய அதிகாரிகளாகத் தேர்ந்துதெடுக்கப்பட்டதால் செல வச்சிறுகுடி ஆட்சி, சிலர்நல ஆட்சி (Oligarchy) தோன்றியன. இவ்வகுப்பார் பொதுநலம் பேணும் நோக்கத்துடன் ஆட்சி செய்யாமல், தங்களுடைய நலன்களைப் பாதுகாத்தற்கே ஆட்சி செய்தமை யால். இவ்வாட்சியும் உயர்குடிப் பிரபுக்களினாட் சியின் ஒரு சிதைந்த வடிவமாகவே ஆகுமென்று கிரேக்க சிந்தனையாளர் குறிப்பிடுவர். உயர்குடிப் பிரபுக்களாட்சியும் சிலரால் நடத்தப்பட்டதாயினும், அது பொதுநல நோக்கத்துடன் செயற்பட்டதால், அது சாதாரண மக்களால் ஆதரிக்கப்பட்டு வந்தது. ஆயினும், அது நெடுங்காலம் நீடித்திருக்க இயலாத படி புதிய பணககாரர் வகுப்பு ஆட்சிக்கு வந்தது. இது தன்னலத்துக்காகச் செயறபட்டு, பொது நலத்தைப் புறக்கணித்ததனால், சாதாரண மக் களால் வெறுக்கப் பட்டு, ஒற்றையாளின் எதேச்சா திகார ஆட்சி (Tyranny) தோன்றிற்று. எதேச்சாதி ராக ஆட்சியும், குடியாட்சிக்கு (Democracy) இன்றி

யமையாத சமூக சமத்துவத்தை ஏற்படுத்தியதும் மறைந்தது.

**சிலர்நல ஆட்சி முறைகள்;** பண்டைய ஏதென்சு நகரரசில் முடியாட்சி, உயர்குடிப்பிரபுக்களாட்சி, சிலர்நல ஆட்சி, ஒற்றையாளின் எதேச்சாதிகார ஆட்சி, குடியாட்சி முதலிய ஆட்சி வகைகள் ஒன்றன் பின் ஒன்றாகத் தோன்றின. குடியாட்சி கி.மு. 6–ஆம் நூற்றாண்டினிறுதியில் நகரரசில் தோன்றிற்று. ஆயினும், செல்வர் வகுப்புக்கும், சாதாரண மக்களடங்கிய வகுப்புக்குமிடையே வகுப்புப் பகைமை தொடர்ந்தே இருந்தது. இந்த உட்கிடைப் பூசலே அளவிற் சிறிய நகரரசுகள் தம்முடைய ஒற்றுமையை இழத்தற்குக்காரணமானதாகவும், பொதுவான பகை நாட்டை எதிர்ப்பதற்கு ஒத்துழைக்க இயலாதவாறு செய்துவிட்டதாகவும் கிரேக்க வரலாற்றாசிரியர் குறிப்பிடுவர். இசுபார்ட்டா நகரரசில் (Sparta) இருந்தசெல்வர் வகுப்பிலிருந்தே 28 உறுப்பினர்கள் அந்நாட்டரசியலமைப்பிலிருந்த மேலவைக்கு (Gerousia) மக்கள் மன்றத்தால் வாழ்நாள் உறுப்பினர்களாகத் தேர்ந்தெடுக்கப்பட்டனர். இந்த மன்றம் நெடுங்காலமாக அரசர்களுடைய அதிகாரத்தைக் கட்டுப்படுத்திற்று, ஆகையால், செல்வரடங்கிய மன்றம் அரசர்களுடைய அதிகாரத்துக்கு ஒரு தடையாக இருக்கும்பொருட்டே வழக்கத்தில் இருந்தது. உரோம் நகரரசின் அரசியலமைப்பில் இருந்த மேலவை மன்றம் (Senate) என்பதும் முடியாட்சிக் காலத்தில் அரசர்களுக்கு அறிவுரை வழங்கிய ஆலோசனை மன்றமாக இருந்தது.

குடியரசாக உரோம் மாறிய போதும் இம்மேலவையானது உயர் நிருவாக அதிகாரிகளுக்கு அறிவுரை வழங்க அமர்த்தப்பட்ட உறுப்பினர்களையுடைய மன்றமாக இருந்தது. நாளடைவில் உரோமுக்கு ஒரு பேரரசு ஏற்படவும், அங்கு ஒரு புதிய செல்வர் வகுப்புத் தோன்றிற்று. இவ்வகுப்பார் உயர் நிருவாக அதிகாரிகளாகத் தேர்ந்தெடுக்கப்பட்டனர். அவர்களுடைய பணிக்காலத்துக்குப் பின்னர் அவர்கள் மேலவையில் வாழ்நாள் உறுப்பினராக ஆயினர். இம்மன்றம் எப்பொழுதும் கூடியிருக்கவல்ல அதிகாரம் பெற்றிருந்ததால், இதுவே நாளடைவில் அரசியலமைப்பிலுள்ள மற்றெல்லா மன்றங்களையும் அதிகாரிகளையும் தன் விருப்பப்படி, தன்னலத்துக்கேற்றவாறு செயற்படும்படி கட்டுப்படுத்திற்று. இம்மன்றத்தில் செல்வர்களே உறுப்பினராதல் இயலும். எவ்வாறெனில், இவர்களை அமர்த்துபவரும் உயர்நிருவாக அதிகாரியாகப் பதவி ஏற்றிருந்த செல்வர்தாம். ஆகையால், உரோமானிய அரசாங்கம் கி.மு. 2–ஆம் நூற்றாண்டில் குடியாட்சி என்ற அமைப்பாகக் காணப்பட்டாலும், உண்மையில் அவ்வாட்சியை நடத்தியது உரோமானியப் பணக்கார வகுப்பார் நிறைந்த மேலவைதான். இப்பணக்கார ஆட்சியை நீக்குதற்காக முயன்ற காரணத்தினால்தான் சூலியசு சீசர் சூழ்ச்சியாளரால் கொல்லப்பட்டார்.

உரோமில் கி.மு. 2–ஆம் நூற்றாண்டில் சிலர் நல ஆட்சி அல்லது செல்வச்சிறுகுடி ஆட்சி நடைபெற்றதுபோல, இங்கிலாந்திலும் கி.பி. 18,19–ஆம் நூற்றாண்டுகளில் செல்வராட்சி அல்லது சிலர்நல ஆட்சி நடைபெற்றது. ஆட்சி அதிகாரம் பாராளுமன்றத்துக்குப் பொறுப்புள்ள அமைச்சர் குழுவுக்கு வழக்கத்தின் படிமாறிற்று. தொடக்கத்தில் சொத்து உடையவர்களுக்கே வாக்களிக்கவும், வேட்பாளராகப் பாராளுமன்றத் தேர்தல்களில் போட்டியிடவும் உரிமைகள் இருந்தன. எனவே, அயல்நாட்டு வாணிகத்திலீடுபட்டுப் பொருளீட்டிய செல்வர்களும், நிலக்கிழார்களும், தொழிலதிபர்களுமே பாராளுமன்ற உறுப்பினர்களாகவும், அமைச்சர்களாகவும் தேர்ந்தெடுக்கப்பட வாய்ப்பிருந்தது. இங்கிலாந்தின் ஆட்சியை கி.பி.1720 முதல் கி.பி.1830 வரை நடத்தியவர்கள் வாணிகத்திலும், தொழிலிலும் முன்னேற்றமடைந்திருந்த விக்குக் (Whig Party) கட்சியினராகையால், அவ்வாட்சியானது உண்மையில் சிலர் நல ஆட்சியே ஆகும். பின்னர்ச் சொத்துரிமையை ஆதாரமாகக் கொள்ளாமல், வயது வந்தோருக்கு வாக்குரிமை அளிக்கப் படவே, ஆட்சி குடியாட்சி இயல்புடையதாக ஆயிற்று.

**பிளேட்டோவும் அரிசுட்டாட்டிலும் கூறிய கருத்துகள்:** பிளேட்டோ, பொருளாதார நோக்கங்களே அரசியற் செயல்களையும், அரசியல் இணைப்புகளையும் உருவாக்குகின்றன என்றும், அதன் அடிப்படையில் மக்கள் பிளவுபட்டிருத்தல் மிகவும் இடர்ப்பாடான அரசியற் சூழ்நிலையை உண்டாக்குகிறது என்றும் கருதினார். பொருளாதார வளமே அரசியற் செல்வாக்குத் தோன்றுதற்கு அடிப்படை. பொருளாதார வேறுபாடுகள் மிகுதியாயிருப்பின், நல்லாட்சி தோன்றுதல் இயலாது. பொருளாதார வளத்தினாலேற்பட்ட செல்வர்கள் புரட்சி, தம் நகரரசாகிய ஏதென்சில் நடந்ததை அவர் நேரில் கண்டவர். பொருளுடையாரால் நல்லாட்சி செய்தல் இயலாது என்று அறிந்த காரணத்தால், அவர் பொருளுடையாருடைய தீமைகளை அகற்றும் பொருட்டுத் தாம் வகுத்த குறிக்கோள் அரசில் நாட்டை ஆளுவோர்க்கும், போர்வீரர்க்கும் பொருளுடைமை கூடாது என்று கூறினார். இதற்கு அவர் இசுபார்ட்டாவில் (Sparta) குடிமக்களுக்குப் பணம், காசு முதலி

யவைகளைக் கையாளவும், வாணிகம் செய்யவும் உரிமை இல்லாதிருந்த நிலையை முனமாதிரியாகக் கொண்டார். பிளேட்டோ தமது 'குடியரசு' (Republic) என்ற நூலில் மிகச் சிறந்த அரசின் சிதைந்த அரசாங்க வகையாக இராணுவ அரசையும் (Timocracy or Military State), இராணுவ அரசின் சிதைந்த வடிவமாகச் செல்வர்கள் ஆட்சி அல்லது சிலர் நல ஆட்சியையும் குறிப்பிடுகிறார். சிலர் நல ஆட்சியின் சிதைந்த வடிவமே குடியாட்சி ஆகும். குடியாட்சியிலிருந்துதோன்றும் சிதைந்த வடிவமே வல்லாட்சியாகும். அவர்தம் இரண்டாம் நூலாகிய 'அரசியலறிஞா' (Statesman) என்ற நூலில முடியாட்சியையும், உயர்குடிப்பிரபுககளாட்சியையும, மிதமான குடியாட்சியையும் தூயவகை ஆட்சிகளாகவும், இவற்றினசிதைந்த வகைகளாக முறையே வலலாட்சி, சிலர் நல ஆட்சி, தீவிரகுடியாட்சி முதலியவைகளையும் குறிப்பிடுகிறார். அரிசுட்டாட்டிலும், பிளேட்டோவைப்பினபற்றிச் சிலாநல ஆட்சியை உயாகுடிபபிரபுக்களாட்சியின் சிதைந்த வடிவமாகக் கூறுகிறார்.

சிலர் நல வகுப்பார் எப்போதும் தந்நலப் போககுடன் செயற்பட்ட காரணததால் அவர்களுககும் அளவிற் பெரிய சாதாரண வகுப்புகளுக்கும் பகைமை இருந்தது. அதன் காரணமாகவே பணடைய கிரேகக நகரரசுகள உட்பூசலினால் நலிவுறறுப் பெரிய அரசுகளினால் வெல்லப்பட்டன. செலவாகள உழவர்களைத் துன்புறுத்தியும், கடனாளிகளை ஒடுககியும், வந்தமையால் அவர்களுடைய ஆட்சி பொதுமககளால வெறுககப்பட்டது. பா கு

**துணை நூல்கள்:**

Greenidge, A.H.J., A Handbook of Greek Constitutional History, Macmillan, 1920

Sidgwick, H., The Development of European Polity Macmillan, 1903.

*சிலாவக்கு மொழி*: சிலாவக்கு மொழி ஒரு இந்திய ஐரோபபிய மொழியாகும். இது இந்திய ஐரோப்பிய மொழிக் குடும்பத்தில பாலடோ-சிலாவிக்குமொழிப் பிரிவைச்சேர்ந்த சிலாவிய மொழிகளில ஒன்றாகும். இம்மொழி செக்கசுலோவாககியாவின அரசியல் மொழிகளுள் ஒன்று. இது செக்கசுலோவாககியாவின ஒரு பகுதியான சிலாவாக்கியாவில வழங்கப்படுகிறது. சுமார் 4,00,000 மககள இம்மொழியைப் பேசுகினறனா.

கி பி. 9-ஆம் நூற்றாண்டு முதலே சிலாவாக்கியா அங்கேரிய ஆட்சியின் கீழ் இருந்தபோதும் சிலாவக்கு மொழி பிற மொழிகளால் பெரிதும் பாதிக்கப்படாது, தனனுடைய பழைமைக் கூறுகள பலவற்றைப் பாதுகாத்து வநதிருப்பது இம்மொழியின் ஒரு சிறபபாகும இதனாலேயே இம்மொழி எலலாச் சிலாவிய மொழி மக்களும் ஓரளவு புரிந்து கொளளும நிலையில உள்ளது.

அஙகேரிய ஆட்சியின் கீழ்ப் பல நூற்றாணடுகள இம்மொழியினர் இருந்தமையால் இமமொழி வளர்சசி அடையாத நிலையிலேயே இருநதது இன்றைய இலக்கிய மொழி கி.பி. 19-ஆம் நூற்றாணடை ஒட்டிய காலப பகுதியில் தான உருவெடுத்தது. ஆயினும் இம்மொழியின பழைய எழுததுருவங்களை கி பி. 11-ஆம நூற்றாணடு முதலே காணலாம். அஙகேரியன ஆட்சியில இலத்தீன எழுததுமொழியாக இருநதபோது அமமொழியில எழுதபபட்ட கையெழுததுப் பிரதிகளில (கி.பி. 11-15-ஆம நூறறாணடு) பல சிலாவககு மொழிச சொறகள காணப்படுகினறன. கி.பி. 14,15,16-ஆம் நூறறாணடுகளில செக்கு மொழியின் செல்வாக்கு இப பகுதியில ஓங்கத் தொடங்கியது. சிலாவககு மொழியுடன மிக நெருங்கிய ஒற்றுமைகள் கொணட செக்குமொழி இப்பகுதியில் விரைவாக வளாந்து இலககிய மொழியாக வாழத் தலைப்பட்டது. செக்கு பயினற பல சிலாவக்கு அறிஞாகள எழுதிய செககு புத்தககங்களில் சிலாவககுக கூறுகள பல கலந்த நிலையில் செககசுலாவக் எனற கலப்பு மொழி ஒன்றும் தோன்றி வளாந்தது கி பி. 15-ஆம் நூற்றாணடிலிருந்தே இமமொழியில சில எழுததுப் பிரதிகளைக காணலாம். ஆனால 17, 18 -ஆம் நூற்றாணடுகளில் இந்நிலை மாறியது. கததோலிகக மதகுருககள பலர் சிலாவக்கு மொழியிலேயே எழுதவேணடும என எணணியதால் வேதாகமம கோயில நூலகள் போன்றவை இமமொழியிலேயே எழுதப்பட்டன. இம்மொழியிலேயே முக்கியமான, சிலாவக்கு நூலகள் பல தோன்றின. கி.பி. 19-ஆம் நூற்றாணடில தொடங்கிய இமமொழிக கவிதைகள சிறநத வளர்சசி அடைநதுளளன.

சிலாவக்கு மொழி உரோமன் எழுத்துமுறையில எழுதப்படுகிறது. இம்மொழியினகண பதினான்கு உயிாகளும் இருபத்தேழு மெய்களும் உள்ளன. உயிர்களில குறில, நெடில் வேற்றுமை காணபபடுகிறது

சிலாவக்கு மொழி இருமை எண்ணை இழந்து ஒருமை, பனமை ஆகிய இரு வேறுபாடுகளையே கொணடுள்ளது. ஆயினும் ஒரு சில பெயர்களில இருமை எண் காணக்கூடியதாக இருககிறது. எழுவாய், அது, கு ஐ,ஆன், கண் ஆகிய ஆறு வேறறுமைகளைக் கொணடுள்ள இம்மொழியில் விளிவேற்றுமை இல்லை.

தமிழ் மொழியைப் போன்றே சிலாவக்கு மொழியிலும் தன்மை, முன்னிலை, படர்க்கை ஆகிய மூவிடப் பெயர்கள உள்ளன இம்மொழியில சுட்டுப் பெயர்களும், மூவிடப் பெயர்களும் தனிததனியாக உள்ளமை இங்குக குறிப்பிடத்தக்கது. ஒனென் (Onen) 'அது (சுட்டு), ஒனொ (ono) '—அது (மூவிடப் பெயர்)

சிலாவக்கு மொழியில் பெயரடைகளும் வேற்றுமை உருபுகளை ஏறபதுடன் எண், பால் வேற்றுமைகளையும் காட்டுகினறன. வினைச் சொற்கள் இறந்த காலம், நிகழ்காலம, எதிர்காலம் போன்ற கால வேற்றுமைகளையும், தன்மை, முன்னிலை, படர்க்கை ஆகிய இட வேற்றுமைகளையும் காட்டி நிறகின்றன. தமிழ்மொழியைப் போலன்றி தன்மை, முன்னிலையிலும், இம்மொழி வினைச் சொற்கள் பால வேற்றுமை காட்டுவதைக் காணலாம்.

சிலாவிய மொழிப் பிரிவில் 11 முக்கிய மொழிகள் உள்ளன. இவற்றைத் தெற்குச் சிலாவிய மொழிகள், கிழககுச் சிலாவியமொழிகள், மேற்குச் சிலாவிய மொழிகளா என மூனறு பிரிவுகளாகப் பிரிப்பர்.

**தெற்குச் சிலாவிய மொழிகள்:** பலகேரியன், மாசிடோனியன, சொபோகிரேசியன், சிலாவினியன் ஆகியவை தெறகுச் சிலாவிய மொழிகளாகும். இவை பல்கேரியா, யூககுலோவியா, கிரீசு ஆகிய நாடுகளில் வழங்குகின்றன. பல்கேரியன் மொழியை 7,000,000 மககளும், மாசிடோனியன் மொழியை 1,000,000 மக்களும், செர்போ கிரேசியன் மொழியை 15,000,000 மக்களும், சிலாவினியன் மொழியை 2,000,000 மக்களும் பேசுகின்றனர். இவற்றிடையே காணப்படும். ஒற்றுமை வேற்றுமைகளின் அடிப்படையில் இவறறைக் கிழக்குப் பிரிவு மொழிகள், மேற்குப் பிரிவு மொழிகள் என இரண்டாகப் பிரிப்பர். பல்கேரியன், மாசிடோனியன் ஆகிய இரண்டும் கிழக்குப் பிரிவு மொழிகள்; செர்போ கிரேசியன், சிலாவினியன் ஆகிய இரு மொழிகளும் மேற்குப் பிரிவு மொழிகள். வரலாற்று நோக்கில் தெற்குச் சிலாவிய மொழிகள் மிக முக்கியமான இடத்தை வகிக்கின்றன. சிலாவிய மொழிகள அனைத்திற்கும் ஒளி கொடுத்து அவற்றின் இலக்கியங்களின் பிறப்பிறகுக்காரணமாக இருந்தது பழைய சிலாவினிய மொழியே. இன்றைய சிலாவிய மொழிகளின் சிரில்லிக்கு எழுத்து முறையினைத் தந்த சிரில், மெதோடியசு ஆகியோரின் பிறப்பிடம் மாசிடோனியாவே ஆகும். தம்முடைய பேச்சுமொழியின

| | | | | |
|---|---|---|---|---|
| நியெசொல் | சொம் | niesol | som | சுமந்தேன் (ஆண்) |
| நியெசொல் | சி | niesol | si | சுமந்தாய் (ஆண்) |
| நியெசொல | | niesol | | சுமந்தான், சுமந்தது (ஆண்) |
| நியெசுல | சொம் | niesla | som | சுமந்தேன (பெண்) |
| நியெசுல | சி | niesla | sí | சுமந்தாய் (பெண) |
| நியெசுல | | niesla | | சுமந்தாள், சுமநதது (பெண) |
| நியெசுலி | சும்ர் | niesli | smr | சுமந்தோம் (ஆண்) |
| நியெசுலி | சுதெ | niesli | ste | சுமந்தீர்கள் (ஆண்) |
| நியெசுலி | | niesli | | சுமந்தார்கள் (ஆண) |
| நியெசுலை | சுமெ | niesly | sme | சுமந்தோம் (பெண) |
| நியெசுலை | சுதெ | niesly | ste | சுமந்தீர்கள் (பெண்) |
| நியெசுலை | | niesly | | சுமந்தாாகள் (பெண) |

எம் சு.

***சிலாவிய மொழிகள்*** இந்திய-ஐரோப்பிய மொழிக் குடும்பத்தில் சதம் மொழிப் பிரிவைச் சேர்ந்தவை. இவை சிலாவானிக்கு மொழிகள் எனவும் பெயர் பெறும். உருசியா, போலந்து, கிழக்குச் செருமனி, செக்கசுலோவாக்கியா, யூககுலோவியா, பல்கேரியா ஆகிய நாடுகளில் வாழும் சுமார் 268,000,000 மக்கள் இம்மொழிகளைப் பேசுகினறனர். இவை இந்திய-ஐரோப்பிய மொழிக் குடும்பத்தில் பாலடிககு மொழிகளுடன் மிக நெருங்கிய தொடர்புடையவை. ஆகவே, இவ்விரு பிரிவு மொழிகளையும் இணைத்துப் பால்டோ-சிலாவிய மொழிகள்எனக் கூறப்படுகின்றன.

அடிப்படையிலேயே சிரில் இவ்வெழுத்து முறையினை அமைத்தார்

**மேற்குச் சிலாவிய மொழிகள்:** போலிசு, செக்கு, சிலாவக்கு, உலுசேசியன் ஆகிய மொழிகள் மேற்குச் சிலாவிய மொழிகளாகும். இவை செக்கசுலோவாக்கியா, போலந்து, செர்மனி ஆகிய நாடுகளில் வழங்குகின்றன. போலிசு மொழியை 65,700,000 மக்களும், செக்கு மொழியை 10,000,000 மக்களும், சிலாவக்கு மொழியை 4,000,000 மக்களும், உலுசேசியன மொழியை 1,000,000 மக்களும் பேசுகினறனர். போலந்தில் வாழும் 200,000 மக்களும் பேசும கசுபியன் மொழியையும், எலப்பு நதிக்கரையில் பேசப்பட்டு வழக்கிழந்த பொலாபியன் மொழியையும் போலிசு மொழியுடன இணைத்து இலெக்டிக்கு மொழிகள் எனத் தனியொரு பிரிவாகக கருதுவர் மொழியியல் அறிஞாகள். இதுபோன்றே செக்கு, சிலாவக்கு ஆகிய இரண்டையும் இணைத்துச் செக்கசுலோவக்கு என்று பெயரிட்டனர். சிலாவக்கு மொழி எல்லாச் சிலாவிய மொழி மக்களும் ஓரளவு புரிந்துகொளளும் நிலையில் கிழக்கு, மேற்கு, தெற்குச் சிலாவிய மொழிக்கூறுகள் சிலவற்றைக் கொண்டுள்ளது. உலுசேசியன் மொழிகளை வெண்டிசு அல்லது சோர்பியன் மொழிகள் என்றும் கூறுவர்.

மேற்குச் சிலாவிய மொழிகளில் மேற்கு ஐரோப்பிய மொழிகளின் செல்வாக்கினை நன்கு காண முடியும். இவை உரோமன் எழுத்து முறையிலேயே எழுதப்படுவதுடன் இலத்தீன் மொழியின் செல்வாக்கினையும் கொணடுள்ளன.

**கிழக்குச் சிலாவிய மொழிகள்:** இரசியன், உக்ரேனியன், பைலோ உருசியன் ஆகிய மூன்றும் கிழக்குச் சிலாவிய மொழிகளாகும். இவற்றை முறையே பெரிய உருசியன், சின்னஉருசியன், வெள்ளைஉருசியன் எனவும் கூறுவர். இவை உருசிய நாட்டில் வழங்குகின்றன. சுமார் 136,000,000 மக்கள் உருசிய மொழியையும், 38,000,000 மக்கள் உக்ரேனியன் மொழியையும், 7,000,000 மக்கள் பைலோ உருசியன் மொழியையும் பேசுகின்றனர். உருசியன், உக்ரேனியன், பைலோ உருசியன் என மூன்று மொழிகளாகப் பிரிவதற்கு முன்னர் வழங்கிய பொதுவான மொழியைப் பழைய உருசியன் என்று கூறுவர். கி.பி. 12, 13-ஆம் நூற்றாண்டுகளில் பழைய ரசியன் உக்ரேனியன், உருசியன் என இரண்டாகப்பிரிநதது. பின்னர், கி.பி.16, 17-ஆம் நூற்றாண்டுகளில் உருசியன் மொழி பைலோரசியன், உருசியன் என இரணடாகப் பிரிந்தது. இம்மொழிகளில் இன்று உருசிய மொழியே உலக மொழியாகச் சிறப்பிடம் பெற்று விளங்குகிறது. எம்.சு

**துணை நூல்:**

**அகத்தியலிங்கம், ச.,** உலகமொழிகள் – இரணடாம் பகுதி, அண்ணாமலைநகர், 1969.

சிலி தென்னமெரிக்காவில் உள்ள ஒரு குடியரசு நாடு. இதன் வடக்கில் பெரு நாடும், கிழக்கில் பொலிவியாவும், தெற்கிலும் மேற்கிலும் பசிபிக்குமாக்கடலும் உள்ளன. இதன மேற்கிலும் தெற்கிலும் உளள பல தீவுகள் சிலிக்கு(Chile) உரியன. சிறப்பாக, ஈசுட்டர் தீவு குறிப்பிடத்தக்கது. சிலி ஏறத்தாழ 4240 கி.மீ. நீளமுள்ள கடற்கரையைப் பெறறுள்ளது. இதன் சராசரி அகலம் சுமார் 192 கி.மீ.




சிலி அமைவிடம்

நாட்டின் பரப்பு 756,943 ச.கி.மீ. தலைநகரம் சாண்டியாகோ (Santiago). நாட்டின் மக்கள் தொகை 11,682,260 (1983). தலைநகரின் மக்கள் தொகை 4,132,293 (1983). அண்டார்க்டிகாவின் (Antarctica) ஒரு பகுதியிலும் சிலி உரிமை கொண்டாடுகிறது. ஒழுங்கற்ற தெற்குக் கடலோரத்தைக் கொண்ட சிலி நாட்டில் பல துறைமுகங்களும் பல கடற்கழிகளும் உள்ளன.

இந்நாட்டின் வடக்குப் பகுதி பாலைநிலம். இதற்கு அட்டகாமா (Atacama) என்று பெயர். வெப்பம் நிறைந்த இந்த வறண்ட பகுதியில் மிகுதியாகத் தாதுப் பொருள்கள் கிடைக்கின்றன. நாட்டின் நடுப் பகுதி ஒரு பள்ளத்தாக்கு. இது நீர்வளமும் நிலவளமும் மிகுந்ததாக உள்ளது. மக்கள் இங்கு வேளாண்மையைச் சிறப்புறச் செய்து வருகின்றனர். நாட்டின் தெற்குப் பகுதி மலைப்பாங்கானது. குளிர் மிகுதியாக உள்ள இப்பகுதியில் காடுகள் பல உள்ளன. மிகுதியான மழை எல்லாக் கால்த்திலும் இங்குப் பெய்கிறது. இந்நாட்டின் ஆறுகள் மிகக் குறுகியனவாக இருந்தபோதிலும், மிக விரைவாக ஓடுகின்றன. சில ஆறுகளே நீர்ப்பாசனத்திற்குப் பயன்படுத்தப்படுகின்றன.

சிலி நாட்டில் பல தாதுப்பொருள்கள் கிடைக்கின்றன. முக்கியமாக, வெடியகி என்னும் உப்பியற் பொருள் (Nitrate) குறிப்பிடத்தக்கது. உலகிலேயே இந்நாட்டில்தான் இயற்கை வெடியகி மிகுதியாகவும், பூமியின் மேற்புறத்திலும் கிடைக்கின்றது. அடுத்து, இங்கு மிகுதியாக உள்ள தாதுப் பொருள் செம்பு. மேலும், மங்கனம், வெள்ளி, பொன், இரும்பு, நிலகரி முதலியனவும் கிடைக்கின்றன. தியரா-தெல-பியூகோ (Tierra-del-Fuego) என்னும் நகரில் எண்ணெய்க் கிணறுகள் உள்ளன. இந்நாட்டுக் காடுகளிலிருந்து மிகுதியான மரங்கள் கிடைக்கின்றன.



சாண்டியாகோ நகரம்

இங்கு நடைபெறும் கைத்தொழில்களில் முக்கியமாகக் குறிப்பிடத்தக்கவை: மருந்து தயாரித்தல், கண்ணாடி உற்பத்தி, புகையிலைப் பொருள்கள் தயாரித்தல், காகிதம் செய்தல், மிதிஅடிகள உற்பத்தி, பட்டுநெசவு, கம்பள உற்பத்தி, சாராயம் தயாரித்தல் ஆகியனவாம். கால்நடை வளர்த்தலும் சுரங்கத்தொழிலும் சிறப்பாக நடைபெறுகின்றன.



சிலி நாட்டைச் சார்ந்த அழகுமிக்க தீவு

**வரலாறு:** இசுபானியர் (Spaniards) கி.பி. 16-ஆம் நூற்றாண்டில இங்கு வருவதற்கு முன்பு அரௌகானிய இந்தியர் (Araucanian Indians) என்ற ஆதிகுடிகள் நீண்டகாலமாக இந்நாட்டில் வாழ்ந்து வந்தனர். இவர்களுடைய எதிர்ப்புக் காரணமாக கி.பி. 1535-36-இல் இசுபானியர் இங்குக் குடியேற முயன்றது தோல்வியுற்றது. ஆனால், மீண்டும் கி.பி. 1540-இல பெட்ரோ-டி-வால்டீவியா (Pedro-de-Valdivia) என்பவனின் தலைமையின்கீழ் இசுபானியர் சிலியுள் நுழைந்து எதிர்ப்புகளை சமாளித்துக் கொண்டு கி.பி. 1541-இல் சாண்டியாகோ குடியேற்றத்தை நிறு

வினர். இசுபானிய ஆதிக்கம் வேரூன்றியது. இதை எதிர்த்துச் சிலி மக்கள், கி.பி. 1810-இல் விடுதலைப் போரைத் தொடங்கினர். சான் மார்ட்டின் (John Martin) என்பானின் தலைமையின்கீழ், அடுத்துள்ள அர்சண்டைனாவில் விடுதலைப் போர் ஏற்பட்டதால், அத்தலைவனின் ஆதரவு சிலி மக்களுக்கும் கிடைத்தது. சாக்காவூக்கோ (Chacavuco) என்னுமிடத்தில நடந்த போரில் இசுபானியப் படை தோல்வி கண்டது (கி.பி. 1817). உடனே, அடுத்த ஆண்டில் சிலி விடுதலை பெற்று ஒரு குடியரசாகியது. ஓ'கிகின்சு (O'Higgins) என்பவன் சிறிது காலம் இங்கு வல்லாட்சி நடத்தினான். நாட்டுக்குப் புதிய அரசியலமைப்பு கி.பி. 1825-இல் வகுக்கப்பெற்றது. இதன்படி குடியரசுத் தலைவர் ஆறு ஆண்டுகளுக்கு ஒரு முறை மக்களால் தேர்ந்தெடுககப்படுவார். ஆளவை மன்றம் (Senate), ஆட்பேர் மன்றம் (Chamber of Deputers) என்ற அவைகளைக் கொண்ட ஒரு சட்டசபை அமைக்கப்பட்டது. மக்களாட்சித் துறையில் போதுமான அனுபவம் இல்லாத காரணத்தால், சிலி மக்களின் ஆட்சி அமைப்பு அடிக்கடி மாறுதல்களுக்கு உட்பட்டது. சருவாதிகார முறையில் பல சிக்கல்களுக்குத் தீர்வு காண நேர்ந்தது. புதிய அரசியலமைப்பு 1981-ஆம் ஆண்டு முதல் நிலவி வருகிறது. இதன்படி எட்டு ஆண்டுகள் சென்றபின் (1981 முதல்) முழுக்குடியாட்சி முறை செயற்படும் என்றும், அது வரை நாட்டின் தலைவர் சருவாதிகார முறையில் செயற்பட வேண்டியது இன்றியமையாததாகும் என்றும் அறிவிக்கப்பட்டுள்ளது. மேலும், 24 மாநிலங்களைக் கொண்ட சிலி, ஆட்சி முறை வசதிக்காக 15 பிரிவுகளாகப் பிரிக்கப்பட்டுள்ளது. ஒவ்வொரு பிரிவுக்கும் ஓர் ஆளுநர் உண்டு. தெ.பா.

*சிலிமென், என்றிச்சு* செருமரனியத் தொல்லியலறிஞராவர். இவர் திராய் (Troy), மைசினே (Mycenae), திரின்சு (Tiryns) போன்ற பண்டைய நகரங்களை அகழாய்வு செய்து புகழ் பெற்றவர். சிலிமென், என்றிசசு (Schliemann, Heinrich) கி. பி. 1822-ஆம் ஆண்டு சனவரி மாதம் 6-ஆம் நாள் செருமனியில் மெக்லன்பர்கிலுள்ள (Mecklenburg) நியூபுகவு (Neubukow) என்ற இடத்தில் பிறந்தார். வரலாற்றுக்கு முற்பட்ட காலக் கிரீசை உலகிற்கு வெளிப்படுத்தியவர் என இவர் போற்றப்படுகிறார். சிலிமேனின் தந்தை ஆயராக இருந்தவர். தம் மகனுக்குத் திராய் நகரத்தைப்பற்றிய புத்தகம் ஒன்றை அவர் அளித்தார். ஓமரின் கவிதைகளில் கூறப்பட்டுள்ள வரலாற்று நகரங்களைக் கண்டறியும் ஆர்வம் இளமையிலேயே இவரது மனத்தில் எழுந்தது. சிலிமேன் தம் 14-ஆம் வயதில் மளிகைக் கடையில் சேர்ந்தார். பல ஆண்டுகள் அங்குப் பணிபுரிந்தபின் உடல்நலக் குறைவால் அப்பணியிலிருந்து விலகி, அம்பர்க்கிலிருந்து வெனிசுலாச் செல்லும் கப்பலில் பணியாளராகச் சேர்ந்தார். தச்சுக் கடற்கரையில் அக்கப்பல் உடைந்த பின் ஓர் அலுவலகத்தில் ஊழியராகவும் ஆம்சுடர்டாமில் ஒரு நிறுவனத்தில் கணக்கெழுத்தராகவும் பணியாற்றினார். இவர் பல மொழிகளைத் தடையின்றிப் பேசுவதிலும் நினைவாற்றலிலும் வல்லவராக விளங்கினார்.



சிலிமென் என்றிச்சு

இவர் பணிபுரிந்த நிறுவனம் இவரை கி.பி. 1846-இல் புனித பீட்டர்சுபர்க்கிற்கு அனுப்பிவைத்தது. இவர் கி. பி. 1852-இல் எகதரினா இலைசின் (Ekaterina Lyschin) என்னும் பெண்ணை மணந்தார். இவர் 1850-ஆம் ஆண்டில் அமெரிக்க ஐக்கிய நாட்டின் குடிமகனானார். இவர் முப்பத்தாறாம் வயதில் வரலாற்றுக்குமுற்பட்ட தொல்லியலை ஆய்வதில் ஈடுபட்டார். கிரீசு, இத்தாலி, இசுகாண்டிநேவியா, செருமனி, சிரியா ஆகிய நாடுகளில் முழுவதுமாகச் சுற்றிய என்றிச்சு இந்தியா, சீனா, சப்பான் ஆகிய நாடுகளுக்கும் சென்றுள்ளார்.

இவர் கி.பி. 1868-ஆம் ஆண்டு கிரீசிற்குச் சென்று ஓமர்குறிப்பிட்ட பண்டைய நகரங்களைப் பார்வையிட்டார். அது குறித்து ஓர் ஆய்வு நூலையும் வெளியிட்ட இவர் இசார்லிக்கு என்னும் இன்றைய பகுதியே அன்றைய திராய்நகரம் எனக்குறிப்பிட்டார். உருசிய நாட்டைச் சார்ந்த இவர் மனைவி எகதிரினாவை மணவிலக்குச்செய்துவிட்டுக் கிரீசு நாட்டைச் சார்ந்த பள்ளிமாணவி சோபியா எங்கசுட்ரோமனசு (Sophia Engastromenos) என்பவளை மணம்புரிந்து கொண்டார்,

கிரீசின் வரலாற்றுககு முறபட்ட கால வர லாற்றை உருவாக்கிய பெருமை சிலிமெனையே சாரும். இசார்லிக்கில் கி.பி. 1871-இல் அகழாய்வு களை மேற்கொண்ட இவர் கட்டடங்களின் அழிபாடு களையும் பல தொன்மைச் சின்னங்களையும் வெளிப் படுத்தியதுடன் தங்க அணிகலன்கள் பலவற்றையும் கண்டுபிடித்தார். தங்க அணிகலப் புதையல் பிர யாம் (Priam) அரசருடையது என இவர் கருதி னார். இவர் கண்டுபிடித்தவற்றைத் திரோசன் அரும்பொருள்கள் (Trojan Antiquity) என்ற நூலில் குறித்துள்ளார். ஆர்கோமினசு (Orchomenus) என்ற இடத்தில் கி.பி. 1874-76-ஆம் ஆண்டுகளில் இவர் அகழாய்வுகளை மேற்கொண்டார். மைசீனேவில் அகழாய்வை மேற்கொணட இவர் கி.பி. 1876 ஆகசுட்டு மாதம் சிங்க நுழைவாயிற பகுதியிலும், நகர அரணின் உட்பகுதியிலும் குழிகளைத் தேர்ந் தெடுத்து அகழ்ந்தார். இவ்வகழாய்வுகளில் பொன் புதையலும், வெள்ளி, செம்பு, தந்தப் பொருள்களும் பெருமளவில் கிடைத்தன. இவையாவும் அகமெம்னன் (Agamemnon) கல்லறையைச் சார்ந்த பொருளகள என இவர் கருத்துத் தெரிவித்தார். மைசீனே அக ழாய்வைக் குறித்து கி.பி. 1878-ஆம் ஆண்டு ஒரு நூலை வெளியிட்டார்.

இதாகாப் பகுதியில் செய்த அகழாய்வில் யாதொரு பயனும் கிடைக்காத நிலையில் இசார்லிக்கில் மீண டும் அகழாய்வுகளை இவர் கி. பி. 1878-இல் மேற கொண்டார். அக்காலத்திலேயே திராய் நகரை மீண் டும் அகழாய்வுகள் செய்தார். திராய் நகரில் முதலில் அகழாய்வு மேற்கொண்டபொழுது இவர் மனைவி சோபியா உதவிபுரிந்தார். எமில் பர்னாபு (Emile Burnouf) என்பவர் கி.பி. 1879-இல் இவருக்கு ஆய் வில் உதவிகள் புரிந்தார். செருமனியைச் சார்நத உருடால்பு விர்செள (Rudolf Virchow) என்பவரும் இவ்வகழாய்வுகளில் கலந்து கொண்டார். இறுதிக் கால அகழாய்வுகளில சிலிமெனுக்கு உதவியாக வில கெல்ம் தோர்பெல்டு (Wilhelm Dorfeld) என்பவா உதவியாளராக இருந்தார். தோர்பெல்டு, ஒலிம்பியா அகழாய்வுகளில் பங்கு கொண்டவர். அவர் திராய் நகருக்கு வரவழைக்கப்பட்டார். தொல்லியலில் மிக்க ஈடுபாடு கொண்ட அவர் மண்ணடுக்காய்வில் (Stratigraphy) சிறந்தவல்லுநராக விளங்கினார். சிலி மென் அவருடன் இணைந்து கி.பி. 1884-இல் மைசீனே விற்கு அருகில் திரினசு (Tiryns) என்னும் அரண் நகரை அகழ்ந்தார்.

சிலிமென், தம் இறுதிக் காலத்தில் காதுவலியால் துன்பப்பட்டார். அதற்காகச் சிகிச்சை பெற ஐரோப்பா முழுவதும் சென்றார். ஆயினும் அத்துன் பத்தை எவராலும் நீக்க இயலவில்லை. நேப்பிள்சு நகரச் சதுக்கத்தின் வழியாக கி.பி. 1890-ஆம் ஆண்டு திசம்பர் 25-ஆம் நாள நடந்து சென்றபொழுது வலி அதிகமாகி மறுநாள் உயிர் நீத்தார்.

சிலிமென், ஓமரின் திராய் நகரைக் கண்டுபிடித்த துடன் ஓமருக்கும் முன்புஇருந்த செப்புக் காலக் கிரீசை உலகிறகு வெளிப்படுத்தினார். துருககியின் வரலாற் றுக்கு முற்பட்ட காலம் இவரால் கண்டுபிடிக்கப்பட் டது. இரணடு புதிய நாகரிகங்களைக கணடுபிடித்த பெருமை சிலிமெனைச் சாரும். வரலாற்றுக்கு முற பட்ட கிரீட்டு நாகரிகத்தைக் கணடுபிடித்த பெருமை யும் இவரையே சாரும். தொல்லியலின் சிறப்பை இதழ்கள மூலம் உலகத்திற்கு வெளிப்படுத்திய பெரு மையும் சிலிமெனையே சாரும். சு.இரா.

**சிலுவைப் போர்கள்:** இசுலாமியர்களுக்கும் கிறித்தவர்களுக்கும் இடையே கி.பி. 11, 12-ஆம் நூற றாண்டுகளில் புனித இடங்களைப் (Holy Places) பறறி நடைபெற்ற போர்களுக்குச் சிலுவைப் போா கள் என்பது பெயர். கிறித்தவர்கள, சிவப்புத் துணி யிலான சிலுவைச் சின்னத்தைத் தங்கள் ஆடையில் அணிந்துகொண்டு போர் செய்தமையால் இவை சிலுவைப் போர்கள் எனப்பட்டன. எட்டுச் சிலுவைப் போர்கள் நடைபெறறனவெனக் கூறப்படுகிறது.



முதலாம் இரிச்சர்டு மூன்றாம் சிலுவைப்போரில் கலந்து கொள்ளுதல்

இயேசு கிறித்து பிறந்து, வளர்ந்து, மறைந்த இடம் என்பதால் பாலசுத்தீன நாட்டைப் புனித இடமாகக் கிறித்தவர்கள் கருதுகின்றனர். அதில் அடங்கியுள்ள பெத்லகேம் மற்றும் செருசல நகரில் உள்ள புனித இடங்களுக்கு ஐரோப்பியக் கிறித்தவர்கள் புனிதபயணம் மேற்கொண்டு வந்தனர். அராபிய முசுலீம்கள் கி.பி. 637-இல் செருசலத்தைக் கைப்பற்றினார்கள். அவர்கள கிறித்தவப்பயணிகளைத் துன்புறுத்தவில்லை. அவர்கள் பாலத்தீனத்திற்குப் புனிதபயணம் மேற்கொள்ளுவதைத் தடை செய்யவுமில்லை. பின்னர் கி.பி. 1076-இல் செருசலத்தைத் துருக்கியர்கள் கைப்பற்றிக்கொண்டனர். அவர்கள் கிறித்தவப் பயணிகளை மிகவும் துன்புறுத்தினர். பிரான்சு நாட்டைச் சார்ந்த பீட்டர் என்ற கிறித்தவ முனிவர் ஐரோப்பாவின் பல்வேறு பகுதிகளுக்குச் சென்று புனித இடங்களை மீட்கப் போர் தொடுகக வேண்டினார். அவருடைய பேச்சாற்றல் கேட்போர் மனத்தை நெகிழ வைத்ததோடல்லாமல் அவர்களை விறிட்டெழவும் செய்தது. செருசலத்தைத் துருக்கியரிடமிருந்து மீட்டு அங்குக் கிறித்தவப் பேரரசை ஏற்படுத்தவேண்டும் என்ற எண்ணத்தை அவாகளிடையே வளர்த்தார். இந்தச் சூழ்நிலையைத தமக்குத் துணையாகப் பயன்படுத்திக் கொள்ளப் போப்பு இரண்டாம் அர்பன் முடிவு செய்தார். கிளர்மாண்டு என்னும் ஊரில் கி பி. 1905-இல் ஒரு கிறித்தவப் பேரவையைக் கூட்டினார். கிறித்தவர்கள் படும் துன்பங்களை எடுத்துக்கூறி, முசுலீம்களிடமிருந்து புனித நாட்டை மீட்கும்படி கேட்டுக் கொண்டார். அங்குக் கூடியிருந்த மக்கள் அதைக் கடவுளின் ஆணையாகக் கருதிப் போர்புரிய ஆயத்தமாயினர். போப்பு அவர்களுக்குச் சிலுவையைவழங்கி அதனைச் சின்னமாகத் தங்கள் உடைகளில் அணியும்படி கூறினார். கிறித்தவப் படை கி.பி.1096-இல் கிழக்கு நோக்கிப் புறப்பட்டது.

சமயக் காரணங்களேயன்றி வேறுசில காரணங்களும் இப்போர்களுககு உண்டு. இடைக்காலத்தில் நிலமானிய முறை நடைமுறையில் இருந்தது. நிலமானியப் பிரபுக்கள் வீரச்செயல்கள் புரிய விருப்பங்கொண்டிருந்தனர். சிலுவைப் போர்கள் அவர்களுடைய வீரத்தைக் காட்டுவதற்கு வாய்ப்பளித்தது. விலங்குகள் போல் நடத்தப்பட்டு வந்த விவசாய அடிமைகள் (Serfs) இப்போர்களில் சேர்வதால் சுதந்திரம் பெறுவர் என்றும், கடன்காரர்கள் தங்களுடைய கடன் தொல்லைகளில் இருந்து மீளலாம் என்றும் கிளர்மாண்டு சபையில் அறிவிக்கப்பட்டது. எனவே, அவர்கள் இப்போரில் சேர்ந்தனர். வணிகர்கள் புதிய வழிகளை ஆராய்ந்தறிந்து தங்களுடைய கீழை நாட்டு வாணிகத்தைப் பெருக்க இப்போரில் கலந்து கொண்டனர்.

முதலாவது சிலுவைப்போர் 1096-இல் தொடங்கியது. இதில் ஐரோப்பிய அரசர்கள் எவரும் கலந்து கொள்ளவில்லை, பல பிரபுக்கள் இதில் பங்குகொண்டனர். அவர்களுள் காட்பிரேயும் (Godfrey) பால்டுவினும் (Balwin) முக்கியமானவர்கள். அவர்கள் செருசலத்தைக் கைப்பற்றி அங்குக் கிறித்தவ அரசு ஒன்றைக் காட்பிரேயின் தலைமையில் அமைத்தனர். அவ்வாறே எடிசா (Edessa), ஆண்டியாக்கு (Antioch) ஆகிய இடங்களிலும் கிறித்தவ அரசுகள் ஏற்படுத்தப்பட்டன. புனித இடங்களைக காக்கவும், புனித பயணிகளுக்கு உதவவும் சமய வீரர்கள் அடங்கிய நிறுவனங்கள் அமைக்கப்பட்டன. அவற்றுள் சான் முனிவரின் வீரர்கள் (Knight of St.John), கோயில் வீரர்கள் (Knight Templers) என்னும் அமைப்புகள குறிப்பிடத்தககனவாகும்.

எடிசாவில் அமைககப்பட்டிருந்த கிறித்தவ அரசை முசுலீம்கள் வீழ்த்தியதால் இரண்டாம் சிலுவைப்போர் கி.பி. 1147இல் தொடங்கியது. இம்முறை பிரான்சு நாட்டரசர் ஏழாம் லூயியும், செருமானியப் பேரரசர் மூன்றாம் கான்ராடும் கலந்துகொணடனர். அவர்கள் தாமசுகசு நகரம் அடைவதற்குள் அவர்களிடையே கருத்து வேறுபாடுகள் தோன்றின. அதனால், கிறித்தவர்கள் தோல்வி கண்டனர். சலாவுத்தீன் (Saladin) கி.பி. 1187-இல் செருசலத்தைக் கைப்பற்றினார். எனவே, மூன்றாம் போர் தொடங்கியது. இதில் செருமானியப் பேரரசர் பிரெடரிக் பார்பரோசாவும் பிரெஞ்சு அரசர் இரண்டாம் பிலிப்அகசுடசும் இங்கிலாந்து மன்னர் முதலாவது இரிச்சர்டும் கலந்துகொண்டனர். போகும் வழியில் நீரில் மூழகிப் பிரெடரிக்கு இறந்துவிட்டார். ஏக்கர் (Acre) என்ற இடத்தை அடைந்தபிறகு பிலிப் அகசுடசு, இரிச்சர்டுடன் சண்டை போட்டுக் கொண்டு நாடு திரும்பிவிட்டார். தனியாக விடப்பட்ட இரிச்சர்டுதொடர்ந்து போரிட்டு வந்தார். இறுதியில் சலாவுத்தீனுடன் சமாதானம் செய்துகொணடு வெறுங்கையுடன் நாடு திரும்பினார். ஆயினும், கிறித்தவர்கள் புனித இடங்களுக்குச் சென்றுவரச் சலாவுத்தீன் அனுமதிதந்தார். அதற்காக அவர்கள் சிறுவரியொன்றைச் செலுத்தவேண்டும் என்று ஏற்பாடு செய்யப்பட்டது.

நான்காம் சிலுவைப்போர் கி.பி. 1202-இல் தொடங்கியது. போப்பு மூன்றாம் இன்னொசென்ட்டு இதற்குக் காரணமாவார். புனித இடங்களை மீட்கும் நோக்கம் நிறைவேறவில்லை. அதற்குமாறாகக் கிறித்தவ ஆட்சி நடைபெற்று வந்த கான்சுடாணடி

நோபிளைத் தாககி அந்நகரைச் சூறையாடினர் அங்கு இலத்தீன் அரசு ஒன்று நிறுவப்பட்டது. கிரேக்கத் திருச்சபை போப்பின் அதிகாரத்துக்கு உட்படுத்தபபட்டது.

ஐந்தாம் சிலுவைப்போரை (கி.பி. 1218-1221) குழந்தைகள் சிலுவைப்போர் என்பர். செருமானியச் சிறுவன் நிக்கோலசும், பிரெஞ்சுச் சிறுவன் இசுடீப னும் இவர்களுக்குத்தலைவர்கள். 45,000 குழந்தைகள இதில் பங்கேற்றனர். ஆல்ப்சு மலையைக் கடந்து இத்தாலிக்குச் சென்றனர். அங்குப் பலர் இறந்தனர். பலர் மத்தியதரைக் கடலைக் கடக்கும்போது உயிரி ழந்தனர். வேறு பலர் பசியால் மடிந்தனர். மற்றும் பலர் முசுலீம்களால் கைப்பற்றப்பட்டு அடிமைக ளாக விற்கப்பட்டனர்.

ஆறாம் சிலுவைப்போர் (கி.பி.1228-1229) செரு மானியப் பேரரசர் இரண்டாம் பிரெடரிக்கின் தலைமையில் நடத்தப்பட்டது. சிலுவைப்போரை அவர் நடத்தப்போவதாகப் பல முறை வாக்களித் தும் அதைச் செய்யாமையால் அவரைப் போப்பு மத விலக்குச் செய்தார். அத் தண்டனையிலிருந்து மீளச் சிலுவைப்போர் ஒன்றை அவர் மேற்கொண்டார். அச்சமயம் முசுலிம்களுக்கிடையே செருசலத்தில் சச் சரவு நடந்துகொண்டிருந்தது. அது பிரெடரிக்கு மன னருக்குத் துணையாயிற்று. முசுலிம்கள அவருடன் உடன்படிக்கை செய்துகொண்டனர். செருசலத்தின் மன்னராகப் பிரெடரிக்கு ஏற்றுக் கொள்ளப்பட்டார்.

செருசலம் மீண்டும் கி.பி. 1224இல் முசுலிம்கள் கைகளுக்கு மாறியது. பிரெஞ்சு மன்னர் ஒன்பதாம் லூயி செருசலத்தை மீட்க ஏழாம் சிலுவைப்போரை நடத்தினார். அவர் தாமெய்ட்டா(Damietta) துறை முகத்தைக் கைப்பற்றினார்; கெய்ரோ (Cairo) நோக்கி முன்னேறினார். வழியில் மன்சூரா என்னும் இடத்தில் நடந்த போரில் அவர் தோல்வி கண்டாா. உலூயி சிறைப்பட்டார். பின்னர்ப் பணம் கொடுத்து அவரை விடுவித்துக்கொண்டனர்.

எட்டாம் சிலுவைப் போரை ஒன்பதாம் லூயி கி.பி. 1270-ல் நடத்தினார். துனீசியாவிலுள்ள கார்த் தேசு என்னும் இடத்தில் பாசறையிட்டு இருந்த போது அவரது பாசறையில் தொற்றுநோய் பரவி எண்ணற்ற வீரர்களைப் பலிவாங்கியது. உலூயியும் அவர்களுள் ஒருவர். அச்சமயம் இங்கிலாந்து இள வரசர் எட்வர்டு துனீசியாவிற்குச் சென்று சிலுவைப் போரில் பங்குகொண்டார். அவர் ஏக்கருக்குச் சென்று சில நாள்கள் தங்கிவிட்டு நாடு திரும்பினார். இசுலா லாமியர் மீண்டும் கி.பி. 1291 இல் ஏக்கரை மீட்கப் போர் தொடங்கும் எண்ணத்தைக் கைவிட்டனர்.

கிறித்தவர்களுடைய தோல்விக்குப் பல கார ணங்கள் உண்டு. முதலில் அவர்களிடம் ஒற்றுமை யில்லை. நல்ல தலைவர்களை அவர்கள் பெற்றிலர். தலைவர்கள் ஒவ்வொருவரும் தங்களுடைய தனிப் பட்ட வீரத்தைக் காட்டிப் பேரும் புகழும் பெற விரும்பினர், புனித இடங்களை அடைய வீரர்கள் நெடுந்தூரம் பயணம் செய்யவேண்டியதாக இருந்தது. வழியில் பல இன்னல்களை அவர்கள் சந்தித்தனர். பேரரசர்களுக்கும் போப்புக்கும் இடையே ஏற்பட்ட மோதல்கள் மக்களுடைய சமய ஆர்வத்தைக் குறைத்துவிட்டன. கைப்பற்றிய புனித இடங்களில் ஏற்படுத்தப்பட்ட கிறித்தவ அரசுகள் தங்களுக்குள் சச்சரவிட்டுக்கொணடன. மேலும், கான்சுடாண்டி நோபிளைத் தாக்கியதால் கிழக்கு உரோமானியப் பேரரசர்கள் சிலுவைப்போர் வீரர்களுக்கு உதவு வதற்கு மாறாக இடையூறுகளை விளைவித்தனர். எல்லாவற்றிற்கும் மேலாகத் துருக்கிய வீரர்கள் வீரத்துடன் போர் புரிந்தமையாலும், சமய உணர்வு அவர்களிடம் மேலிட்டெழுந்திருந்தமையாலும், சலா வுத்தீன் போன்ற சிறந்த தலைவர்களைக் கொண்டி ருந்தமையாலும் அவர்கள் வெற்றி கண்டனர்.

சிலுவைப் போர்களில் எண்ணற்ற ஐரோப்பியர் கள் உயிரிழந்தனர். கோடிக்கணக்கான பணம் வீணா யிற்று. ஐரோப்பாவின் அரசியல், சமூகம் மற்றும் பொருளாதார நிலை பாதிக்கப்பட்டது. அரசர் களுடைய அதிகாரத்தைப் பெருக்க அவை உதவின. அரசருடைய அதிகாரப் பெருக்கத்திற்குத் தடையாக இருந்த நிலமானியத் திட்டம் அழிந்தது. அத்திட் டத்தில் முக்கிய அங்கம் வகித்திருந்த பிரபுக்கள் பலர் இப்போர்களில் உயிரிழந்தனர். போர்க்களத்தில் இருந்து திரும்பிய பலர் ஏழைகளாகிவிட்டனர். மற் றொரு அங்கமான விவசாய அடிமைகள் போரில் ஈடுபட்டு விடுதலை பெற்றுவிட்டனர். மேலும், நக ரங்கள் போருக்குத் தேவையான பணத்தைப் பிரபுக் களுக்குக் கொடுத்துவிட்டுச் சுதந்திரம் பெற்றுவிட் டன. அதனால், ஐரோப்பாவிற்கும் ஆசியாவிற்கும் வாணிகம் பெருகியது. மேலும், ஆசியாவுடன் ஏற் பட்ட தொடர்பின் காரணமாக ஐரோப்பியர்கள் சர்க்கரை, நறுமணப் பொருள்கள் போன்ற புதிய பொருள்களை அறிந்தனர். அவற்றை விரும்பலா யினர். அதனாலும் வாணிகம் வளர்ந்தது. நகரங்கள் தோன்றின. புதிய நடுத்தர வகுப்பாரும் தோன்றி னர். திருச்சபை இப்போர்களை நடத்தக் காரண மாக இருந்தமையால் அதன் அதிகாரம் வளர்ந்தது. இப்போர்கள் காரணமாக அரேபிய நாகரிகம் ஐரோப்பாவில் பரவியது. அரேபிய மருத்துவ முறை, வேதியியல், கட்டடக்கலை ஆகியவை ஐரோப் பியரின் மனத்தைக் கவர்ந்தன. ஐரோப்பாவில் தோன்

றிய மறுமலர்ச்சிக்கு இப்போர்கள் காரணமாக இருந்தன என்றால் அது மிகையாகாது. தி.ஆ இரா.

**சிவக்கந்தவர்மனின் (யுவமகாராசன்) செப்பேடுகள்,** ஆந்திர மாநிலத்தில் குண்டூர் மாவட்டத்திலுள்ள நரசசாவ் பேட்டைக்கு அருகில் உள்ள மயிதவோலுஎன்னுமிடத்தில் கி.பி. 1899-ஆம் ஆண்டு கண்டுபிடிக்கப்பட்டன. காஞ்சிபுரத்தைத் தலைநகராகக் கொண்டு பல்லவ நாட்டினை ஆண்டு வந்த யுவமகாராசன் சிவக்கந்தவர்மனால் இச்செப் பேடுகள் வழங்கப்பட்டன.

மயிதவோலு சாசனத்தைக் கல்வெட்டறிஞர் டாக்டர் உல்சு (Dr. Hulzsch) இந்தியக் கல்வெட்டியல் (Epigraphica Indica) ஆறாம் தொகுதி 86-89-ஆம் பக்கங்களில் முதன் முதலில் வெளியிட்டார். இச்சேப்பேடுகள் இபபோது சென்னை எழும்பூரில் உள்ள அருஙகாட்சியகத்தில் வைக்கப்பட்டுள்ளன. பல்லவ குலத்தினனும், பாரத்துவாச கோத்திரத்தில் பிறந்தவனுமான யுவமகாராசன் சிவக்கந்தவர்மன், ஆந்திர பதத்திலுள்ள விரிபரம் என்னும்கிராமத்தைத தனது வெற்றி, தருமம், ஆயுள்-ஆகியவற்றின முன்னேற்றத்திற்காகப் பூர்வகோட்டிஆரியன், கோநந்தி ஆரியன் ஆகிய இரு பிராமணர்களுக்குத் தானமாக வழங்கிய செய்தியே இச்செப்பேடுகளில் கூறப்பட்டுள்ளது.தான் வழங்குகின்ற இந்தப் பிரமதேயதானத்தை நிறைவேற்றும்படி, இவ்வேந்தன் தான்யகடகத்திலுள்ள தன் அதிகாரிக்கு ஆணை பிறப்பித்தமையை இச்செப்பேடுகள் கூறுகின்றன. தானம் வழங்கப் பட்ட கிராமமாகிய விரிபரம் நரசராவ்பேட்டை வட்டத்திலுள்ள விப்ரல்லா என்னும் கிராமமாக இருக்கலாம். சிலர் இரணடாம் புலிகேசியின் கொப்பரம் செப்பேடுகளில் குறிக்கப்பெறும் விற்பாறு எனும் கிராமமே இது என்பர். எப்படியிருப்பினும், இப்பகுதி, சாசனம் வழங்கப்பட்ட காலத்தில் பல்லவரின் ஆட்சிக்குட்பட்டிருந்தது என்பது தெளிவு.

இதில் எட்டுச் செப்பேடுகள் கோக்கப்பட்டுள்ளன. இவற்றைக் கோத்திருக்கும் வளையத்தின் இணைப்பில் அமைக்கப்பட்டுள்ள முத்திரையில், படுத்த நிலையில் உள்ள காளைமாட்டின் உருவம் பொறிககப் பட்டுள்ளது. இவற்றில் மொத்தம் 28 வரிகளே பொறிக்கப்பட்டுள்ளன. சாசனம் பிராகிருத மொழியில் எழுதப்பட்டுளளது. இதில் பொறிககப்பட்டுள்ள எழுத்துகள் செயவர்மனின் கொண்டமுடிச் செப்பேடுகளைப் போன்றுள்ளன.

பல்லவர் காலத்திய எழுத்து வடிவங்களைப் பற்றி ஆய்வு செய்பவர்களுக்கு இச்செப்பேடுகள் மிகவும் பயன்படும் இதில் காணப்படும் அ,க,ர ஆகிய எழுத்துகளின் நேர்கோடுகள் பெரும் பாலும் நாகார்ச்சுன கொண்டாவின் எழுத்துகளை ஒத்துள்ளன. ஸ,ம ஆகிய எழுத்துகள் சாதாரண பிராமி எழுத்து களைப் போன்றில்லை. இதனைப் போன்றே ஹ, ஜ, என்னும் எழுத்துகளும் அந்தக் காலத்துப் பிராமி எழுத்து வடிவததை ஒத்திருக்கவிலலை

**கிரகடகள்ளிச் செப்பேடுகள்:** இவை பிராமணர் களுக்குச் சிவக்கந்தவர்மன் அளித்த தானத்தைக குறிப்பிடுகின்றன. இத்தானம் முன்னதாகவே மகா ராசாவான பப்பசுவாமிகள என்பவரால் வழங்கப் பட்டது. பப்பசுவாமிகள் அளித்த நிலங்களுடன் வேறு சில நிலஙகளையும் சேர்த்துச் சிவககந்தவர்மன் மறு படியும் அளித்துப் பட்டயத்தையும் வழங்கினான்.

மகாராசாவான பப்பசுவாமிகள, சாதாகநி இராட்டிரத்தில் (ஏறத்தாழப் பெல்லாரி மாவட்டம்) சிலலரேக கொடுங்க என்னும் ஊரிலுள்ள தோட்ட நிலத்தை ஆபிட்டி எனும கிராமத்தில் வசிப்பவர்களும் சில்லரேக கொங்க கிராமத்தை அனுபவித்து வருப வர்களுமான பிராமணர்களுக்குத் தானமாக முன்னாளில் வழங்கினான். பின்னர்ச் சிலகாலங் கழித்து, காஞசிபுரத்திலிருந்துகொண்டு, அக்னிட்டோம, வாசபேய, அசுவமேதயாகங்கள் புரிந்த தாமராசாதிராச னான பல்லவ வேந்தன் சிவக்கந்தவர்மன், அப்பிரா மணர்களுககு முன்பு அளிக்கப்பட்ட நிலங்களுடன் மேலும் சில நிலங்களையும் சேர்த்து வழங்கியுள் ளான். இப்பட்டயத்தில் இவ்வேந்தன் பாரதது வாச கோத்திரத்தில் பிறந்தவன் என்றும், யாகங்கள் பல இயற்றியவன் என்றும் கூறப்பட்டுள்ளான். இதனால இவ்வேந்தன ஆற்றல் மிக்கவனாகவும் பேரரசனா கவும் திகழ்ந்தான் என்பது புலனாகும்.

சித்தம் எனும் மங்கலச சொல்லுடன் தொடங் கும் இச்சாசனம் பிராகிருத மொழியில் உள்ளது. சென்னை அருங்காட்சியகத்தில் வைக்கப்பட்டுளள இச்செப்பேடுகள் 8 தகடுகளைக் கொண்டுள்ளன. இச் சாசனம் பெல்லாரி மாவட்டத்திலுள்ள கிரகடகளளி என்னும் ஊரிலுள்ள சென்னப்பா எனும் வணிகரிட மிருந்து வாங்கப்பட்டது. இந்தியக் கலவெட்டியல் முதல் தொகுதி-இரண்டாம் பககத்தில் இது முதன் முதலில் வெளியிடப்பட்டது. இச்செப்பேடுகள் பல்லவர் அரசு நிறுவப்பெற்ற காலத்தைத் கணிக்கப் பேருதவியாக உள்ளன. பட்டிசம்மன் என்னும அந்த ரங்கக் காரியதரிசி இதனை எழுதியுள்ளான். ம இ.

*சிவக்கொழுந்து தேசிகர்:* காண்க: கொட்டையூர் சிவககொழுந்து தேசிகா.

சிவகங்கை: இது தமிழ்நாட்டில் பசும்பொன் முத்துராமலிங்கத் தேவர் மாவட்டத்திலுள்ள ஒரு வட்டம். இவ் வட்டத்தின் தலைநகருக்கும் சிவகஙகை என்பதேபெயர். சிவகங்கை வரலாற்றை அறிவதற்குச் சில அரிதான மூலங்களே உள. அவற்றுள் குறிப்பிடத் தக்கது நீல நூலாகும் (Blue Book). இதுவும் இப் போது நல்ல நிலையில் இல்லை.

சிவகங்கைக்கு வடக்கே சில கிலோ மீட்டர் தொலைவில் நாலுகோட்டை என்னும் சிறிய கிராமம் உள்ளது. இது ஒக்கூர் கிராமத்திற்குத் தென் மேற்கே உள்ளது. பல்லாண்டுகள் இது இராமநாத புரச் சேதுபதிகளின்கீழ் இருந்தது. கிழவன் சேதுபதிக் குப் பிறகு ஆட்சிக்குவந்த விசய இரகுநாதன் காலத்திலிருந்துதான் நாலுகோட்டை குடும்பத்தைப் பற்றி அறியமுடிகிறது. நாலுகோட்டை உடைய தேவர் என்பவர் சேதுபதிகளின்கீழ் முதன்மையான பதவி வகித்திருந்தார். அவருக்குச் சசிவர்ண தேவர் என்ற மகன் இருந்தார். சேதுபதி அவருக்குத் தன் மகள அகிலாண்டேசுவரி நாச்சியாரைத் திருமணம் செய் வித்துச் சீதனமாக வரிவிலக்குப் பெற்ற சில நிலங் களை வழங்கினார். பிரான்மலை, திருப்புத்தூர், சோழபுரம், திருப்புவனம் ஆகிய நாலு கோட்டை களைச் சசிவர்ணத்தேவரிடம் சேதுபதி ஒப்படைத் தார்.

சசிவர்ணத் தேவர் திறமையுள்ளவராக இருந்தார். இராமநாதபுரத்தில் நிலவிய குழம்பிய சூழலைத் தமக்குச் சாதகமாக ஆக்கிக் கொணடார். இவரது உறுதுணையுடன்தான் கட்டையத்தேவர் சேதுபதி மன்னரானார். அதற்குக் கைம்மாறாக இவருக்குப் பல உரிமைகளை வழங்கினார். சேதுபதி இவருக்கு இராச முத்து விசய இரகுநாத பெரிய உடையதேவர் என்ற பட்டத்தையும் வழங்கினார். இவருடைய ஆட்சியில் சாத்தப்ப ஐயர் என்ற ஒரு ஞானி இவ ருக்கு ஆலோசராக இருந்தார். சசிவர்ணர் அவரது பெயரில் ஓர் மடத்தையும் அமைத்தார். இவர் காலத் தில் சிவகங்கை இவரது தலைநகராக ஆகியிருக்கக் கூடும்.

இவர் கி.பி. 1750இல் இறந்தார். இவருக்குப் பிறகு இவர் மகன முத்து வடுகநாத பெரிய உடைய தேவர் பதவிக்கு வந்தார். அவர் அரியணையில முப்பது ஆண்டுகள் வீற்றிருந்தார்; அமைதியாக ஆட்சியை நடத்தினார். அனைத்துப் போர் முறை களிலும் இவர் வல்லவர். பாரதக் கதை மூலம் மக்க ளிடையே வீரத்தைப் பெருக்கி அவர்களைப் போருக்குப் பழக்கிவந்தார். ஒவ்வோர் ஊரிலும் திரௌபதியம்மன் கோயிலை உருவாக்கினார். அங்கே ஒவ்வொரு நாளும் பாரதம் படிகக ஏற்பாடு செய் தார். ஒருவர் பஞ்ச பாண்டவர்களின் வீர வர லாற்றை ஆவேசமாகச் சொல்வார். அதைக் கேட்கும் மக்களுக்கு உணர்ச்சி பிறக்கும. பாரதக் கதைகள் நாடகங்களாக நடிக்கப்படும். அதைக் காண்பவர் வீர உணர்வுகொள்வர்.

மக்களுக்குக குத்துச் சண்டை, சிலம்பம், வாள வீச்சு, துப்பாக்கிச் சுடுதல், கோட்டை ஏறுதல் முதலியவற்றில் பயிற்சி அளித்தா. நாட்டை அடி மைப் படுத்த முற்படும் அந்நியரைத் துரியோதனர் கூட்டமாகவும், உரிமைப் போரிலீடுபட்டோரைப் பாண்டவர்படையாகவும் கருதச்செய்தவர் முத்து வடுகநாதர். வரிகட்டும்படி கேட்டு வெளளையர் அனுப்பிய அஞ்சலை நான்காகக் கிழித்து உறையில் வைத்து அவர்களுக்கே திருப்பியனுப்பினார் முத்து வடுகநாதர். அவர் வெள்ளையரை எதிர்த்துக் காளையார் கோவிலில் நடத்திய போரில் வீரமரணம் அடைந்தார். கணவனை இழந்த வேலு நாச்சியார் மனம் தளரவில்லை. அவரிடமும் வரிகேட்டு வெள்ளை யா அஞ்சல் எழுதினர். அதை அவர் எட்டாகக் கிழித்து வெள்ளையர்களுக்கே திருப்பி அனுப்பினா.

முத்துவடுகநாதனுக்கு ஆண் வாரிசு இல்லை. வேலு நாச்சியாரும், அவர் மகள் வெள்ளசசியும் சிவகங்கையைவிட்டு ஓடினர். அப்போதுதான் மருது சகோதரர்கள் சிவகங்கை அரசியலில் தலையிடத் தொடங்கினர். இவர்கள பெரிய மருது, சின்ன மருது என்று அழைக்கப்பட்டனர். இவர்கள் இருவரும் முன்பு முத்துவடுகநாதனின் அடைப்பைக்காராகளாக இருந்தனர். கருநாடக நவாபைச் சிவகங்கையி லிருந்து துரத்துவதற்கு இவர்கள் மைசூர வீரர் ஐதர் அலியின் உதவியை நாடினாரெனத் தெரிகிறது. அவருடைய உறுதுணையுடன் வேலு நாச்சியாரை மீண்டும் அரியணை ஏற்றி, அம்மையாரின் அமைச்சர் களாகவும் இராணுவ வீரர்களாகவும் ஆயினர்.

வேலு நாச்சியார் கௌரிவல்லபன் என்பவரைத் தத்து எடுத்தார். வேலு நாச்சியாருக்குப் பிறகு கௌரி வல்லபன் ஆட்சிக்கு வருவதை மருது சகோ தரர்கள் விரும்பவில்லை. எனவே, அவர்கள் வெள் ளச்சியை நாலு கோட்டையைச் சேர்ந்த வெங்கள பெரிய உடைய தேவருக்கு மணமுடித்தனர். இத னிடையே கி.பி. 1790-இல் வேலு நாசசியாரும் இறந்தார். உடனே வெள்ளச்சியை அடுத்த வாரிசாக அறிவித்தனர் மருது சகோதரர்கள். வெள்ளச்சி பெய ரளவிலதான் அரசியாக இருந்தார். செயலளவில் மருது சகோதரர்கள் தான் ஆட்சிசெய்தனர்.

வெள்ளச்சியும் கி பி. 1793-இல் இறந்தாள. உடனே வெள்ளை மருது தம் மகளைப் பெரிய உடைய தேவருக்கு மணமுடித்தார். வீர பாண்டிய கட்டபொம்மனுக்குப் பிறகு அவர் சகோ தரர் ஊமைத்துரை இந்திய விடுதலைப் போரைத் தொடர்ந்தார். இவர் நேரே மருது வீரரிடம் சென் றார். போர்க்களம் திருநெல்வேலிச் சீமையிலிருந்து சிவகங்கைச் சீமைக்கு மாறிற்று. மருதுசகோதரர்களி டம் இருபதினாயிரத்திற்கு மேறபட்ட போர் வீரர் கள் இருந்தனர். ஏறக்குறைய பத்தொன்பதாண்டுகள் மக்கள் உள்ளத்திலே நாட்டுப்பற்றைப் பரப்பி இருந் தனர். ஆகவே, அவர்களின் போராட்டம் பாஞ்சாலங் குறிச்சிப் போராட்டத்துக்கே முடியாக அமைந்தது. மண்டியிட்டு மாற்றார் உரிமையின் கீழ் நல்வாழ்வு வாழ்வதிலும் சாவதே மேல் என்று இவர் போராடி னார்.

கமுதி, காளையார் கோயில் (கானப்பேரெயில்) சிறுவயல் ஆகிய இடங்களில் அவர்கள் வெள்ளையரு டன் பொருதனர். துரோகிகள் காட்டிக் கொடுத்த தன் விளைவாக, மருது பாண்டியன் என்ற சின்ன மருது பிடிபட்டான். பெரிய மருது வெள்ளையருடன் போர் செய்த போது அவர் தொடையில் வெள்ளை யரின் குண்டு ஒன்று பாய்ந்தது. பெரிய மருதுவும், சின்ன மருதுவும் தூக்கிலிடப்பட்டனர். அவர்களின் உடல்களைத் திருப்புத்தூரிலும், தலைகளைக் காளையார் கோவிலிலும் புதைத்தனர்.

மருது சகோதரர்களின் வீரமரணத்திற்குப் பிறகு கி.பி. 1801-இல் கௌரி வலலப பெரிய உடைய தேவர் சிவகங்கைச் சமீன்தாராக ஆக்கப் பட்டார். இம்மரபினர் 1948 க்குப் பிறகு அரசுக்கு அனைத்து விதங்களிலும் உதவி புரிகின்றனர். இவர்களது அரண் மனை இப்போது அரசு கல்லூரியாகத் திகழ்கிறது. சிவகங்கை முத்துராமலிங்க மாவட்டத்தின் தலை நகராக இப்போது விளங்குகிறது.

**சிவகங்கை (2):** இது கருநாடக மாநிலத்தில் உள்ள ஊர். இது தென்காசி என்றும் சொல்லப் படுகிறது. இங்கே உள்ள குன்றுக்குக் காகுத்கிரி என்று பெயர். இது 5000 அடி உயரத்தில் உள்ளது.

இவ்வூரின் தலபுராணம் காகுத்கிரி மகாத்மியம் எனப்படுகிறது. இங்குள்ள கோவில் வடக்குத்திசையில் உள்ளது. படிகளைக் கடக்கும்போது, கணபதி, வீர பத்திரர், சுப்பிரமணியர் ஆகிய உருவங்களைப் பார்க்கலாம். பிறகு கங்காதரேச்சுரர் கோயிலும், எருமேபாகவா என்று சொல்லப்படுகின்ற ஒரு பெண் நந்தியும் உள்ளன. இக்கோயில் வடக்கு நோக்கி உள்ளது. நான்கு முகங்களும நான்கு கரஙகளும் கொண்ட பிரம்மனது உருவத்தில் சநதிரசேகரர் இங்கே இருக்கின்றார். இவர் கரத்தில் திரிசூலத்தை யும், கோடரியையும் தண்ணீர்ப் பானையையும் தாங்கி நிற்கிறார். இக்கோயிலின் உள் சுற்றில் சப்தமாதர்களின் உருவம் உள்ளது. அட்டதிக்குப் பாலகர்கள, நவக்கிரகங்கள், முனிவர்கள், இசை மேதை உருவங்கள ஆகியவை உள்ளன. இவர்கள் அனைவரும் சிவ-பார்வதி திருமணத்தைப் பார்க்க அங்கே குழுமியுள்ளனர் என்பது ஐதிகம். விமானம கட்டடக்கலைக்குச்சிறந்த எடுத்துககாட்டு.

ஒன்னதேவி (Honne Devi) கோவில் கிழககுத் திசையில் உள்ளது. ஒன்னதேவி வடமொழியில் சுவர்ணாம்பாள் என்று சொல்லப்படுகின்றாள். இங்கே யுள்ள சாந்தனீசுவர் கோயில் கி.பி. 1139-ஆம் ஆண்டு எழுப்பப்பட்டது. இககோயிலில் இராமாயண பாகவத புராணக்கதைகள் சிற்ப வடிவில் காட்டப் பட்டுள்ளன. இராமனின் பிறப்பு முதல் முடி சூட்டுவது வரையிலான நிகழ்ச்சிகள்விளக்கப்பட்டிருக் கின்றன. சிறப்பாக, இரிசிய சிருங்கர் ஆடற் பாவை களினால அயோத்திக்குக் கொணரப்பட்ட நிகழ்ச்சி யும் இங்கே காணப்படுகிறது. இங்கேயுளள படிகளில் பல விலங்குகளின உருவங்கள் காணப்படுகின்றன. குன்றின்மேல் கன்வ, குருபவதி, பாதாள கங்கை, சக்கரதீர்த்தம், சங்கராச்சாரியார் தீர்த்தம், மைத் ரேய தீர்த்தம், மண்டலியதீர்த்தம், கங்கை தீர்த்தம், அகத்தியதீர்த்தம்ஆகிய தீர்த்தங்கள உள்ளன. கே.சே.

*சிவகாசி:* தமிழ்நாட்டில் காமராசர் மாவட்டத் தில் சாத்தூர் வட்டத்தில் உள்ளதொரு நகரம். இந் நகரத்தில் தீப்பெட்டித் தொழிற்சாலைகள், வெடி மருந்துப் பொருள்கள், வண்ண அச்சுத் தொழிற் சாலைகள் போன்றவை உள்ளன தமிழ்நாட்டில் இந்நகரத்தின் தீப்பெட்டித் தொழிற்சாலை முதன் முதல் 1923-ஆம் ஆண்டு தொடங்கப்பட்டது. இவ் வாண்டில் வெடிபொருள்கள் தயாரிக்கும் தொழிற் சாலையும் இங்குத் தொடங்கப்பட்டது. இநதியாவி லேயே குடிசைத் தொழில் முறையில் தீப்பெட்டியும் வெடிமருந்துகளும் தயாரிப்பதில் இந் நகரம் முதலிடம் பெறுகிறது. இந்தியாவின் வெடிமருந்துப் பொருள்கள் இந்நகரத்திலிருந்து பல்வேறு நாடு களுக்கு ஏற்றுமதி ஆகின்றன. தெ.பா.

*சிவகீதை:* கீதை என்னும் சொல் பாடப்பட்டது என்று பொருள்படும். சிவகீதை ஆன்ம தத்துவத்தைக் கூறும் நூலாகும். மகாபாரத்தின் வீடும பருவத்தில், கண்ணன் அருச்சுனனுக்குப் போர்க்களத்தில் போதித்ததாக அமைந்துள்ள 'பகவத் கீதை'யைப்

பின்பற்றி எழுந்த நூலகளுள் சிவகீதையுமொன்று. கண்ணன் அருச்சுனனுக்கு ஆன்ம தத்துவத்தைப் போதித்தது போன்றே, சிவபிரான் இராமனுக்கு உபதேசித்ததாக இந்த நூல் அமைந்துள்ளது. இதுவும், உரையாடல்களைப் போன்று, சுலோகங் களால் அமைக்கப்பெற்றுளளது. இந்நூல் பதும புராணத்தின் ஒரு பகுதியாகும். பகவத்கீதைதோன்று வதற்குக் காரணமான சூழலைப் போன்றதொரு சூழலில் சிவகீதையும் தோன்றியுளளது. சீதையின் பிரிவினால் மனம் தளர்ந்த இராமன் அகத்திய முனி வரைக் கண்டு வணங்கியபோது, அம்முனிவர் இராம னிடம், 'விரசா தீட்சை' செய்து கொணடு சிவபெரு மானைக் குறித்துப் பாசுபத விரதத்தை மேற் கொள்ளுமாறு கூறினார். அவ்வாறே இராமன் பாசுபத விரதத்தை மேற்கொண்டார். அதனால் மகிழ்ந்த சிவபிரான் இராமன் முன் தோன்றி இராவணனை வெல்லுதற்குரிய ஆயுதங்களைக் கொடுத்தார். அப்போது பிரபஞ்ச உற்பத்தி, மனித உற்பத்தி, வீடுபேறு முதலியவற்றை விளக்குமாறு இராமன் சிவனிடம் வேண்டினார். சிவன் கூறிய விடையாக அமைந்ததே சிவகீதை. பகவத் கீதையின் கருத்தளவிலும், சொல்லளவிலும் ஒப்புமை காணக் கூடிய பல இடங்கள் சிவகீதையிலுமுண்டு. இந்த நூல் உரையுடன் அச்சில் வெளிவந்துள்ளது. வீடு பேற்றை அடைவதறகு நான்கு வருணத்தாரும், பெண்களும் உரியவராவர். சிவனே பரம்பொருள். அவனை வணங்கியே ஞானத்தைப் பெறமுடியும். கருமங்களால் மட்டுமே இறைவனை அடையமுடி யாது. உலகப்பற்றே அனைத்துத் துன்பங்களுக்கும் மூல காரணம். இந்தப் பற்றைத் துறக்க வேணடு மாயின், சிவபெருமானைப் பற்றவேணடும். அப்போது தான் மற்றப் பற்றுகள் விடுபடும். அந்தநிலையில் ஞானம் ஏறபடும். அனைத்துக் கருமங்களும் அழிந்து இறைவனோடு கலக்கும் ஆனந்த நிலையைப் பெற லாம் என்பதே சிவகீதையின் முடிந்த பொருளாகும்.

என்.சீ.

**சிவகுருநாதப் பிள்ளை,ந.** கி.பி 19-ஆம் நூற்றாணடின் பிற்பகுதியிலும் 20-ஆம் நூற்றாண டின் முற்பகுதியிலும் வாழ்ந்த தமிழ்ப் புலவர். இவர் பாண்டி நாட்டைச் சேர்ந்த எட்டையபுரம் என்னும் ஊரில் நமச்சிவாயம் பிள்ளைக்கும் மகாலட்சுமி அம்மாளுக்கும் கி.பி. 1873-ஆம் ஆண்டு மகனாகத் தோன்றினார். இவருடன் பயின்ற மாணவர்களுள் குறிப்பிடத்தக்கவர் வ உ. சிதம்பரம்பிள்ளையாவார். இவர் இளமையிலிருந்தே சமய நூல்களைப் பயின்று புலமை சிறக்கப்பெற்றார். அதன் பயனாக இவர் மாணவர்களுக்குச் சைவ சித்தாந்த நூல்களைக் கற்பிக்கும் பணியினை ஏறத்தாழ 40 ஆணடுகள் தொடர்ந்து செய்தார். இவர்தம் சிறப்பையுணர்ந்து சென்னைத்தமிழ்ச் சங்கத்தார் இவருக்குச்'சித்தாந்தப் பேராசிரியர்' என்னும் பட்டத்தினை வழங்கிச் சிறப்பித்தனர்.



சிவகுருநாதப்பிள்ளை, ந.

சித்தாந்தப் புலமை மிக்கவரான இவர் தூத்துக் குடியில் கி.பி. 1892-ஆம் ஆண்டு 'சைவப்பிரகாச அச்சகம்' என்ற ஓர் அச்சகத்தை நிறுவினார். நீண்ட நாள்கள் அதன் செயலாளராகவும் இருந்து பணி யாறறியுள்ளார். தூத்துக்குடியில் உள்ள 'சைவ சித்தாந்த சபை'யில் கி.பி. 1889 முதல உறுப்பின ராகவும் இருந்தார். இவர் சைவத்தில் கொண்ட ஈடுபாட்டால் சைவப் பேரவை உள்ள இடங்களுக் கெல்லாம் சென்று சைவசித்தாந்த விரிவுரைகள் நிகழ்த்திவந்தார். மேலும், இவர் சிவஞான சித்தியார் ஆராய்ச்சி நூலொன்று எழுதி 1949-இல் வெளி யிட்டார். இவ்வாறு சைவத்திற்கு இடையறாது தொணடு புரிந்த இவர் 1953-இல் இறந்தார்.

வீ.சே.

**சிவசம்புப் புலவர்** கி.பி. 19-ஆம் நூற்றாண்டில் வாழ்ந்த யாழ்ப்பாணத் தமிழ்ப் புலவர்களுள் ஒருவர். இவர் யாழ்ப்பாணத்திலுள்ள உடுப்பிட்டி என்னும் ஊரில் அருளம்பல முதலியாருக்கு கி.பி. 1830-ஆம் ஆண்டு மகனாகத் தோன்றினார். சைவக் குடும்பத்தில் பிறந்த இவர் தமிழ் இலக்கண இலக்கியங்களை நன்கு கற்றுத் தேர்ந்தார். இவர்தம் ஆசிரியர்கள் யாழ்ப் பாண நல்லூரைச் சேர்ந்த சரவண முத்துப் புலவரும் சம்பந்தப் புலவரும் ஆவர். இவர் இளமையிலிருந்தே கவிபாடும் ஆற்றல பெற்றிருந்தார். அதனால் இவருக்கு ஆறுமுகநாவலர் புலவர் பட்டம் வழங்கிச்

சிறப்பித்தார். பிரபந்தங்களை மிகுதியாகப் பாடிய புலவர் ஈழநாட்டில் இவர் ஒருவரே என்று கூறுவா.

தமிழ்ப் புலமையில் சிறந்து விளங்கிய இவர், பல நூல்களும் பல நூல்களுக்கு உரையும் எழுதியுள்ளார். இவர் இராமநாதபுரம் பாசுகர சேதுபதியைப் புகழ்ந்து கல்லாடசாரக் கலித்துறை என்னும் நூல் இயற்றியுள்ளார். மேலும், இவர் பாசுகர சேதுபதி இரட்டைமணிமாலை, பாசுகர சேதுபதி நானமணி மாலை, பாண்டித்துரைத் தேவர் நான்மணி மாலை புலோலி நான்மணிமாலை, மயில்வாகன வம்ச வைப வம், கந்தவன நாதர்பதிகம், கந்தவனநாதர் ஆசிரிய விருத்தம், பராக்கு மங்களம், வல்லிபுரநாதா கலிவெண்பா, செந்தில் யமகவந்தாதி, தருவேரக அந்தாதி, திருச்செந்திற்றிருவந்தாதி, எட்டுக்குடிப் பிரபந்தம், பருத்தித் துறை விநாயகர் ஊஞ்சல், எச்சரிக்கை முதலிய நூல்களை எழுதியுள்ளார். இவர் யாப்பருங்கலக் காரிகையுரையும், மறைசை யந்தாதியுரையும், கந்தபுராணம் வள்ளியம்மை திருமணப் படல உரையும் எழுதியுள்ளார். இவர் பாடல்கள் சொல்லும் பொருளும் தொடைவகைகளும் சிறப்பாக அமையப் பெற்றவை. இவ்வாறு நூல்கள உரைகள பல எழுதியும் தமிழைப் பலருக்குக் கற்பித்தும் தமிழ்த் தொண்டு புரிந்த இவர் 1910-இல் காலமானார்.
வீ.சே.

*சிவசமுத்திரம்:* கருநாடக மாநிலத்தில் பெங்களூருக்கும் மைசூருக்குமிடையே உள்ள மத்தூருக்கு அருகில் உள்ள இந்நகரம் இம்மாநிலத் தின் பொருளாதார வளர்ச்சிக்கு மிகுதியாக உதவு கிறது.காவிரி ஆற்றினால் இது சிறப்புப்பெறுகிறது. இங்கு இந்த ஆறு இரண்டாகப் பிரிந்து நீர்வீழ்ச்சி களாக விழுகின்றது. ஒவ்வொரு நீர்வீழ்ச்சியும் ஏறத் தாழ 320 கி.மீ. உயரமுள்ளது. இப்பகுதி இயற்கை வளங்களை மிகுதியாகப் பெற்றுள்ளது. இந்த இயற்கை அழகை மேல்நாட்டுப் பயணிகளும் வியந்து எழுதியுள்ளனர். இங்கு அமைக்கப்பட்டுள்ள நீர்-மின்சார நிலையம், கோலார் தங்கவயல், பெங்களூர் முதலிய பல இடங்களுக்கு மின்சாரவசதியை அளித்துவருகிறது.
தெ.பா.

*சிவசுப்பிரமணியக் கவிராயர்* கி.பி.19-ஆம் நூற்றாண்டில் வாழ்ந்த தமிழ்ப் புலவர்களுள் ஒருவர். இவர் திருநெல்வேலி மாவட்டத்தில் உள்ள கல் லிடைக் குறிச்சி என்னும் ஊரைச் சேர்ந்தவர். இவர் தந்தையார் பொதிகை நிகண்டு இயற்றிய சாமிநாதக் கவிராயர் என்பவராவார். இவர் நாமதீப நிகண்டு, பூவைப் புராணம் ஆகிய நூல்களை எழுதியுள்ளார். நாமதீப நிகணடு என்னும் நூல் வெண்பா யாப்பில அமைந்து உயர்திணைப் படலம், அஃறிணை யுயிர்ப் படலம், அஃறிணையுயிரில் படலம், குணநாமப் படலம் ஆகிய நானகு படலங்களைக கொண்டுள்ளது. ஒவவொரு படலமும் பல வருக்கங் களாகப் பிரிக்கப்பட்டுள்ளது. இவ்வகையில் இது மற்ற நிகணடுகளைக் காட்டிலும் சிறப்பு வாய்ந்த தாகும். இந்நிகண்டு நூல் ஏனைய நிகண்டு நூல களைக் காட்டிலும் காலத்தால் பிற்பட்டதாகும் பூவைப் புராணம் என்னும் நூல் கி.பி. 1810-ஆம் ஆண்டில் அரங்கேறறப் பட்டதாகும்.
வீ.சே.

*சிவஞானச் செட்டியார்* 20-ஆம் நூற்றாண டில் வாழ்ந்த தமிழ்ப் புலவர்களுள் ஒருவர். இவர் சென்னையைச் சேர்ந்தவர். முருகப்பச் செட்டியார் என்பவருக்கு மகனாகப் பிறந்த இவர் தமிழில ஈடு பாடு கொண்டு திகழ்ந்தார். இவர் தோத்திரப் பாடல் பாடுவதிலும் இசைப்பாட்டுப் பாடுவதிலும் சிறந்து விளங்கினார். இவர் வரசித்தி விநாயகர் தோத்திரம் எனற நூலும இசைப்பாடல் என்ற பெயரில் ஒரு நூலும இயற்றியுளளார்.
வீ.சே.

*சிவஞானசித்தியார்:* சைவ சமய மெய்ப் பொருள (தத்துவம்) நுவலும் நூல்களுள் பதினான் கினைத் தொகுத்து அறிஞர்கள் போற்றியுள்ள னர். அவை திருவுந்தியார், திருக்களிற்றுப் படியார், சிவஞான போதம், சிவஞானசித்தியார், இருபா இரு பஃது, சிவப்பிரகாசம், திருவருட்பயன், கொடிக்கவி, வினாவெண்பா, நெஞ்சு விடுதூது, போற்றிப் பஃறொடை, சங்கற்ப நிராகரணம், உண்மை விளக் கம், உண்மை நெறி விளக்கம் என்பனவாம்.

இவற்றுள் சிவஞான சித்தியார் பல்லாற்றானும் போற்றிப் பாராட்டத்தகும் பெரு நூலாகும்.இதனை அருளியவர் அருளநந்தி சிவாசாரியார் ஆவர். வட மொழி, தென்மொழி ஆகிய இரு மொழிகளிலும் வல்லவர். தம் குருமூர்த்திகளாகிய மெய்கண்டார் அருளிய சிவஞானபோதத்திற்கு விரிநூலாக இந் நூலைச் செய்துள்ளார். 'சிவத்திற்கு மேல் தெய்வம் இல்லை, சித்திக்குமேல் நூல் இல்லை' என்னும் பழ மொழியாலும், 'பார் விரித்த நூல் எல்லாம் பார்த்த றியச் சித்தியிலே, ஓர் விருத்தப் பாதி போதும்' என வரும் சிவபோகசாரத்தாலும், 'வள்ளுவர் சீர் அன்பர் மொழி வாசகம் தொல்காப்பியமே, தெள்ளு பரி மேலழகன் செய்தஉரை – ஒள்ளியசீர்த் தொண்டர் புராணம் தொகுசித்தி ஓர் ஆறும், தண்டமிழின் மேலாம் தரம்' என வரும் பழம் பாடல் ஒன்றாலும் இதன் பெருமை விளங்கும்.

மெய்கண்ட நூல்கள் பதினான்கனுள் பிறர் மதத்தை விதந்துரைத்து மறுத்திருக்கும் நூல்கள் இரண்டாம். அவை சங்கற்ப நிராகரணமும், இச் சிவஞான சித்தியாரும் ஆம் இவ் இரணடனுள்ளும் பிறன் கோள மறுத்ததோடு அமையாது, தன் கோள் நிறுவியும் அமைந்த சிறப்பு இச்சிவஞான சித்தி யார்க்குண்டு. பிறன கோள் மறுப்பைப் பரபக்கம் என்னும் பெயராலும், தன் கோள நிறுவுவதைச் சுபக்கம் என்னும் பெயராலும் அமைத்து ஆசிரியர் விளககுகின்றார்.

தாம் எடுத்துக்கொண்ட மெய்ப்பொருளை அள வைகளானும் பொருந்து மாற்றானும் கூறமுற்படும் ஆசிரியர் அளவைகளின் இலக்கணத்தை 'அளவை யியல்' எனும் பகுதியால் முதற்கண எடுத்து விளககி யுள்ளார். இதன் கண உளள பாடல்கள் பதி னான்காம். இது இந்நூற்கு அமைந்த தனித்தன்மை யாம்

பிறர் கொளகைகளை எடுத்து மறுக்கும் பர பக்கத்தில் பதினான்கு கொள்கைகள இடம் பெற்றுள் ளன. அக்கொளகையினர் உலகாயதர், சௌத்திராந் திகர், யோகசாரர், மாததியமிகர், வைபாடிகர், நிகண்டவாதி, ஆசிவகர், பட்டாச்சாரியர், பிரபா கரர், சத்தப்பிரமவாதி, மாயாவாதி, பாற்கரியர், நிரீச்சுர சாஙகியர், பாஞ்சராத்திரி என்போராவர். இப்பகுதிக்கண் அமைந்த பாடல்கள் 301.

சுபக்கம் என்பது தன் கோள நிறுவும் பகுதி யாகும். இப்பகுதியில் அமைந்த பாடல்கள் 328. 'மெய்கண்டான் நூல் சென்னியில் கொண்டு சைவத் திறத்தினைத் தெரிக்கலுற்றாம்' என்று தாம் குரு வணக்கம் கூறியதற்கு ஏற்ப இப்பகுதியைச் சிவஞான போதத்தின் வழி நூலாக அமைத்துள்ளார். சிவ ஞான போதத்திற்குச் செய்யுள் வடிவில் அமைந்த முதல் உரைநூல் இது எனக் கருதலாம். 'அவன் அவள் அது எனும், அவை மூவினமையின் தோற்றிய திதியே' என்பது சிவஞானபோதம். 'ஒருவனோடு ஒருத்தி ஒன்று என்று உரைத்திடும் உலகம் எல்லாம் வருமுறை வந்து நின்று போவதும் ஆதலாலே தரு பவன் ஒருவன் வேண்டும்' என்பது சிவஞானசித்தி யார். 'அளவையே தானேயாய்' என்பது சிவஞான போதம். 'உலகெலாம் ஆகி வேறாய் உடனுமாய்' என்னும் சித்தியார் முதனூல் கருத்தை வழிநூல் எவ்வளவு பாங்காக விளக்கி நிற்கின்றது என்பதை இவற்றின் வழி அறியலாம். இவ்வாறே, 'ஐம்புல வேடரின் அயர்ந்தனை வளர்ந்து' என வரும் எட் டாவது நூற்பாவின் தொடரை, 'மன்னவன் தன் மகன் வேடரிடத்தே தஙகி,'எனத் தொடங்கும் விருத் தப் பாடலால் முற்றுருவகப்படுத்தி, ஒரு சிறு நாடக நிகழ்ச்சியாகவே விளக்கிக் காட்டியிருக்கும் திறம் பெரிதும் போற்றற்குரியதாகும். 'மெய்ப்பொருள் கருத்துகளை இவ்வாறெல்லாம் விளக்கி இருக்கும் இந்நூல் சிற்சில இடங்களில் அறவுரை வழங்கும் அருள் நூலாகவும் காட்சியளிக்கின்றது. கு.சு.

**சிவஞான பாடியம்:** தமிழில் தத்துவ ஞானத்தை உணர்த்தும் நூல்கள் பல உள்ளன. அவற்றுள் தலையாய நூலாக விளங்குவது மெய் கண்டார் அருளிய சிவஞானபோதம் ஆகும்.

சிவஞான போதத்திற்குப் பழைய உரைகள் சில உள. ஆயின், அவையெல்லாம் அந்நூற் பொரு ளின் ஆழத்தையும் அகலத்தையும் காட்டுவன அல்ல. பின் வந்த சிவஞான முனிவரே தமது சிற்றுரை, பேருரை என்னும் இரு சீரிய உரைகளாலும் நூலின் உட்கிடையை உள்ளவாறு கண்டு இனிது விளக்கி னார். வடமொழியில் பேருரையை 'மகாபாசியம்' என வழங்குவர். அவ்வழக்குப் பற்றிச் சிவஞான முனி வர் செய்த பேருரை 'மாபாடியம்' எனப்படுகிறது.

பாடியம் செய்தவர் பெயரையும் இணைத்துப் பதஞ்சலி பாடியம், சங்கர பாடியம் என இவ்வாறு வழங்குதல் மரபு. அவ்வாறே சிவஞான போதப் பேருரையைச் செய்தவர் 'சிவஞானம்' என்னும் பெயருடையவர் ஆதலால் அவரது பெயரையும் சேர்த்துச் 'சிவஞான மாபாடியம்' என வழங்குதல் மரபாயிற்று.

வடமொழியில் உள்ள வேதாந்த சூத்திரத்திற் குச் சங்கரராலும், இராமாநுசராலும், மத்துவரா லும், நீலகண்டராலும் பாடியங்கள் இயற்றப்பட்டி ருப்பதுபோலத் தமிழ்மொழியில் சிவஞானபோதத் திற்குச் சிவஞான முனிவரால் பாடியம் செய்யப்பட் டுள்ளது. அதனால், அவரது பாடியம் 'திராவிட மாபாடியம்' என வழங்கப்படுகிறது.

இப்பேருரை உபநிடதங்களையும், ஆகமங்களை யும், பன்னிரு திருமுறைகளையும், திருக்குறள முத லிய நூல்களையும் தழுவித் திட்ப நுட்பம் செறிய இயற்றப்பெற்றது; மேலும் இலக்கண நெறி பிறழா மல் அமைந்திருத்தலோடு தருக்க முறையிலும் சிறநது விளங்குகிறது.

சிவஞானபோத நூலின் உட்பகுதிகள் யாவும் பொருள் தொடர்ச்சி அமைய இயைபு பெற்று விளங்குதலைப் பாடியம் திறம்பட எடுத்துக்காட்டு கிறது. அவ்வியைபு ஐந்து வகைப்படும். அவை: நூல் இயைபு, அதிகார இயைபு, இயல் இயைபு, பாத

இயைபு, அதிகரண இயைபு என்பன. அவ்வியைபுகளெல்லாம் அவ்வவ்விடங்களில் அமைந்திருத்தலைத் தவறாமல் சுட்டிச் செல்கின்ற போக்குப் பாடியத்திற் காணப்படுகின்றது.

சமயங்களைப் புறச்சமயம் என்றும், அகச் சமயம் என்றும் இரண்டாகப் பகுத்துக் கூறுதலே முன்னைய வழக்கம். அப்பாகுபாட்டினை மேலும் விரித்து நால்வகைப்படுத்திக் காட்டுகிறார் சிவஞான முனிவர். கடவுள், உயிர்கள், ஆணவம், கன்மம், சுத்தமாயை, அசுத்த மாயை என்னும் ஆறு பொருளுண்மை கொள்ளாத சமயங்கள் புறச் சமயங்கள் எனப்படும். அவற்றிற்கும் சைவ சித்தாந்தத்திற்கும் உள்ள வேறுபாட்டின மிகுதி குறைவு நோக்கி அவை புறப்புறம், புறம், அகப்புறம் என மூன்றாக வகுக்கப்படுகின்றன. அம்மூன்றும் முக்கூறுப் புறச் சமயங்கள் எனப்படும். இனி, மேற்கூறிய ஆறு பொருள்களையும் ஒப்புக கொண்டு, சைவ சித்தாந்தத்தோடு சிலவற்றில் மாறுபடுகின்ற சமயங்கள் அகச் சமயங்கள் எனப்படும். இந்நால்வகையிலும் ஒவ்வொன்றிலும் அவ்வாறு சமயங்களாக இருபத்து நான்கு சமயங்கள் அமைந்து நிற்றலையும், சித்தாந்த சைவம் அவற்றிற்கெல்லாம் அப்பாற்பட்டு விளங்குதலையும் மாபாடிய அவையடக்கப் பகுதியில் விளக்கிக் காட்டியுள்ளார் சிவஞான முனிவர்.

'அத்துவிதம்' என்பதன் மெய்ப்பொருளைக் கண்டு கூறிய சிறப்புப் பற்றியே மெய்கண்டாருக்கு அப்பெயர் அமைவதாயிற்று என்பர். சிவஞான முனிவர் அவர் வழிநின்று, அத்துவிதம் என்னும் சொல்லியல்பை ஆராய்ந்து அதற்கு ஏனையோர் கூறும் பொருள்களை மறுத்து அதன் உண்மைப்பொருளைத் தெளிவுறுத்தியுள்ளார். இது பற்றிய விளக்கங்களை மாபாடியத்தில் இரண்டு, ஆறு, பதினொன்று, பன்னிரண்டு ஆகிய சூத்திர உரைகளிற் காணலாம்.

இந்தியத்தத்துவங்கள் உலகிற்கு முதற் காரணமாய் உள்ள பொருளைக் குறித்துப் பலவாறு கூறும். நியாயக் கொள்கை பரமாணுக்களே முதற்காரணம் என்று கூறும். சாங்கியக் கொள்கை மூலப் பகுதியை முதற் காரணம் எனக் கொள்ளும். பிரமமே உலகிற்கு முதற் காரணம் என்று கூறும் மதங்களும் உள்ளன. மாயாவாதம், அறியப்படுகின்ற எல்லாப் பொருட்கும் காரணமாய மாயை இன்னதென்று சொல்லப்படாது அநிர்வசனமாய் நிற்பதொன்று எனக் கூறும். சிவஞான முனிவர் இக்கொள்கைகளையெல்லாம் ஆராய்ந்து அவற்றிலுள்ள குறைபாடுகளை எடுத்துக்காட்டி மறுக்கின்றார்; பின் சைவ சித்தாந்தம் கூறும் மாயையின் இயல்புகளை வரையறுத்துக் கூறுகின்றார். இவ்வாராய்ச்சியைச் சிவஞானபாடியம் இரண்டாம் சூத்திரத்திற் காணலாம்.

உலகிற்கு முதற் காரணமாகிய மாயையிலிருந்து முதலில் தத்துவங்களே தோன்றும். பின் அத்தத்துவங்களினின்றும் உலகம் தோன்றும். ஏனைய இந்திய சமயக் கொள்கைகள் பொதுவாக இருபத்து நான்கு தத்துவங்களைக் கொள்ளுகின்றன. சைவ சித்தாந்தம் அவற்றைச் சில வேறுபாடுகளுடன் 'ஆன்ம தத்துவங்கள்' என ஏற்றுக்கொண்டு, அவற்றிற்கு மேல் ஏழு வித்தியா தத்துவங்களும், அவற்றிற்கு மேல் ஐந்து சிவ தத்துவங்களும் உள்ளன என்று கொள்ளும். இம்முப்பத்தாறு தத்துவங்களின் தோற்ற முறையினைச் சிவஞான முனிவர் பாடியத்தில் விரிவாக ஆராய்ந்து கூறியுள்ளார். அவ்வாராய்ச்சியில், அவ்வத் தத்துவங்களின் உண்மைக்குப் பிரமாணம் காட்டுவார்; அவ்வத் தத்துவங்களுக்குரிய இலக்கண வரையறையைக் கூறுவார்; அவ்வத் தத்துவங்கள் தோன்றும் முறைமைக்குப் பொருத்தம் காட்டுவார்; அவ்வத் தத்துவங்களின் தொழிற்பாட்டினை உணர்த்துவார்; தத்துவங்களின் பெயர்க் காரணத்தைச் சுட்டுவார்; உரிய இடங்களில் பிற சமயக் கோட்பாடுகளை மறுப்பார். சிவஞான முனிவரைப் போல வேறு எவ்வாசிரியரும் இத்தத்துவங்களை இத்துணை விரிவாக ஆராயவில்லை என்று கூறிவிடலாம்.

மேலும், இருவினையொப்பு, மல பரிபாகம், சத்திநிபாதம் முதலான சைவ சித்தாந்தக் கலைச் சொல் பற்றிய விளக்கங்களையெல்லாம் மாபாடியத்தில் தெளிவாகக் காணலாம்.

உள்ளதுதான் தோன்றும், இல்லது வாராது; சடப் பொருளிடத்தில் சித்துப் பொருளும் சித்துப் பொருளிடத்தில் சடப் பொருளும் தோன்றா; உருவம் மாறுமன்றி ஒரு பொருளும் அழிவதில்லை; காரணத்தின் தன்மையே காரியத்தில் உள்ளதாகும், மாறுபட்ட இரண்டு தன்மைகள் ஒரு பொருளிடத்தில் இருத்தல் இயலாது என்பன போன்ற அறிவியல் நெறிக்கு ஏற்ற உண்மைகளை மாபாடியம் பலவிடங்களில் வலியுறுத்திச் சைவ சித்தாந்தக் கொள்கை ஆய்வு நெறிகளுக்கு இயைய அமைந்திருத்தலை விளக்கிச் செல்கிறது.

சிவஞான போதத்தின் அகத்தைத் திறந்து காட்டவல்ல திறவு சிவஞான பாடியமே என்பது அறிஞர் துணிபு.

ஆ.ஆ.

**சிவஞான பாலய சுவாமிகள்:** தமிழகத்திலுள்ள மயிலம் பொம்மபுர ஆதீனத் திருமடங்கள் வீரசைவ சமயத்தைச் சார்ந்தனவாம். இத்திருமடங்களில் இரண்டாம் ஞானசிரியராக விளங்கியவர்

சிவஞான பாலய சுவாமிகள் ஆவர். இவர் சிவஞான பாலய தேசிகர் எனவும் சிவஞானி எனவும் வழங்கப் படுவர். இவர் சிதம்பரம் பசசைகந்த தேசிகர் மரபில் வந்தவர். இவருடைய முதல் ஞானாசிரியராகிய பால சித்தர் தம்முடைய பொம்மபுர மடத்திலும், தாம் வழிபாடு செய்வதற்கு அமைத்த மயிலம் முருகன் கோயிலிலும் ஆற்றிவந்த தவவொழுக்கங்களையும் வழிபாடுகளையும் தம் ஞானசிரியர் அருளியவாறே செவ்வனே செய்துவந்தார். முருகப் பெருமான் ஆணையின்படி பாலையே உணவாகக் கொணட தால் சிவஞான பாலய சுவாமிகள் என்ற பெயர் பெற்றார் இதனைப் 'பாலுண்டு பாலையன் என்றி ருந்தாய்' என்ற செய்யுளடி உணர்த்தும். (சிவஞான பாலய சுவாமிகள கலம்பகம் – செய்யுள் 27). இவர் பல அரிய செயற்கருஞ் செயல்களைச் செய்துள் ளார்.

செஞ்சி மன்னனுடைய இளம் பருவமகளின் வெண்கூந்தல் கருங்கூந்தலாகும்படி திருநீறிட்டு ஆக் கினார். இதனால், அம்மன்னன் பொம்மபுரத்தில் கருங்கற்களினால் ஆன திருமடம் அமைத்துக் கொடுத் தான்.

பின்னர் நடுநாட்டில் சிதம்பரபூபதி என்பவர் சில இடங்களை ஆணடு வந்தார். அவருக்கு உண டான பகைவரால் ஆட்சியை விடுத்துச் சுவாமிகளை யடைந்திருந்தார். அதையறிந்த சுவாமிகள் அவர்மீது கருணை கூர்ந்து சிறுசேனையுடன் சென்று பகை வரை வெல்ல அருள்புரிந்தார். அவருக்குத் திருநீறு அளித்து மீண்டும் ஆட்சிபுரிய ஆணையிட்டார்.

இவர் காஞ்சியில்தங்கியிருந்தபொழுது விடந்தீண்டி இறந்த ஒருவனை அன்பர்களின் வேணடுகோளின்படி உயிர்ப்பித்தார். அதனையறிந்த அந்நாட்டை ஆண்டு கொண்டிருந்த நவாபு தன் மனைவிக்குற்ற சூலை நோயைப் போக்க வேணடினான் அவன வேண்டு கோளினபடி சூலை நோயைப் போக்கினார். அநத நவாபு ஏகாம்பரருக்கு நாள்தோறும்நடைபெற வேண டிய பூசையில் தமமால் குறைக்கப்பட்ட நிலையை மாற்றி முன்னிலும் மிகுதியாகத் தொடர்ந்து நடக் கச் செய்தார். இவ்வாறு பொதுமக்கட்கு நோய் போக்குதல் முதலிய நன்மைகளையும் பக்குவ ஆன மாக்களுக்கு ஞானோபதேசமும செய்து வந்தார். பல செல்வந்தர்களால அளிக்கப்பட்ட விளைநிலங்களைப் பெற்றார். இவருக்குக் காஞசி, திருவணணாமலை, செய்யூர், பெரும்பேறு கண்டிகை, கருஙகுழி மற்றும் பல இடங்களிலும் திருமடங்கள் உள்ளன.

இவருடைய முதல் ஞான சீடர் நல்லாற்றூர்ச்சிவப் பிரகாச சுவாமிகள் ஆவார். சிவப்பிரகாச சுவாமிகள் இவர்மீது நெஞ்சுவிடுதூது, தாலாட்டு, பிள்ளைத் தமிழ், கலம்பகம், திருப்பள்ளியெழுச்சி ஆகிய ஐந்து நூல்களைப் பாடியுள்ளார். இந்நூலகளில் கவிச்சுவை யும், தத்துவப் பொருள்களும், வரலாற்றுச் செய்தி களும் அடங்கியுள்ளன. சிவப்பிரகாச சுவாமிகள இயற்றிய 'பிரபுலிங்கலீலை' எனனும் நூலின் காலம் கி.பி.1652 ஆகும். ஆதலின், சிவப்பிரகாச சுவாமிகளின் காலமே சிவஞான பாலயசுவாமிகளின் காலமாகும்.

இவர் பொம்மபுர மடத்தில் உள்ள ஒடுக்கத்தில் வைகாசி விசாகம் பௌர்ணமியன்று சீவ சமாதி கூடி திருநீறு மயமானார். ஆண்டுதோறும் அந்நாளில் திருமடத்தில் அன்னதானமும், விழாவும், சிறப்பாக அவ்வப்பொழுது எழுந்தருளும் குருமார் களால் நடத்தப்பெறுகின்றன. வீ.கு.

**சிவஞான போதம்**: சைவ சித்தாந்தம் என் னும் தத்துவக் கொள்கையினை விளக்க எழுந்த சாத்திர நூல்களுள் தலைசிறந்து விளங்குவது சிவ ஞான போதம். இந்நூல், அறிஞர்கள் வியந்து போற் றும் வண்ணம் சுருக்கமும், தெளிவும், திட்பமும், நுட்பமும், முன்னொடு பின் முரணாமையும் ஆகிய இயல்புகளை ஒருங்கே பெறறுத் திகழ்கிறது.

இம்மெய்ந் நூலினைச் செய்தருளியவர் திரு வெண்ணெய் நல்லூரில் வாழ்ந்த மெய்கண்டார். இவரது காலம் கி.பி. 13-ஆம் நூற்றாண்டு ஆகும்.

மெய்கண்டார் இந்நூலினை வடமொழியினின் றும் மொழி பெயர்த்தார் என்னும் வழக்கு உள்ளது. அவ்வழக்குப் பிழையானது என்பதும், சிவஞான போதம் தமிழ முதல் நூலே என்பதும் இன்று அறி ஞர் பலரும் ஏற்றுக கொள்ளும் முடிபாகும்.

சிவஞானபோத நூலின் தொடக்கத்தில் காப்புச் செய்யுள் ஒன்றும் அவையடக்கச் செய்யுள் ஒன்றும் உள்ளன. நூல் பன்னிரண்டு சூத்திரங்களுடையது. நாறபது அடிகளை உடையது. சூத்திரங்கள் நான் கடிப் பெருமையும் மூன்றடிச் சிறுமையும் கொண டவை. சூத்திரப் பொருள் பிறகாலத்தில் ஐயந்திரி பின்றி விளங்குதற் பொருட்டு ஆசிரியரே சூத்திரந் தோறும் கருத்துரையும், வாாததிகமாகிய பொழிப் புரையும் செய்துள்ளார். வார்த்திகப் பொழிப்புரை யில் ஒவ்வொரு சூத்திரமும் பல கூறுகளாகப் பகுக்கப் பட்டு ஆய்வு செய்யப்படுகிறது. அக் கூறுகள் அதி கரணங்கள் எனப்படும். ஒவ்வொரு அதிகரணத்திலும் மேற்கோள், அதனைச் சாதிக்கும் ஏது, அவ்வேதுவை வலியுறுத்தும் உதாரணம் ஆகியவை இடம்பெறு கின்றன. மேற்கோளும், ஏதுவும் உரைச்செய்யுளாக அமைய, உதாரணம் பாச் செய்யுளாகிய வெணபா வால் இயன்றுள்ளது.

இந்நூல் பொது அதிகாரம், உண்மை அதிகாரம் என்னும் இரு பிரிவுகளை உடையது. முன் ஆறு சூத்திரங்கள் பொது அதிகாரம், பின் ஆறு சூத்தி ரங்கள் உண்மையதிகாரம். இனி அதிகாரத்திற்கு இரண்டுஇயல்களாகநான்கு இயல்கள் அமைந்துள்ளன. பொது அதிகாரத்தில் பிரமாண இயலும், இலக்கண இயலும், உண்மை யதிகாரத்தில் சாதன இயலும் பயனியலும் உள்ளன. இயலுக்கு மூன்று சூத்திரங் களாகப் பன்னிரு சூததிரங்களும் இந்நான்கியல்களுள் பகுப்புற்று நிற்கின்றன.

இனிச் சூத்திரங்களின் பொருள்நிலை அறிதற் குரியது. முதற் சூத்திரம் இறைவன் உண்டு என்பதை நிறுவுவதாகும். உலகம் தோன்றுதலும் நிற்றலும் அழிதலும் உடைய ஒரு காரியப் பொருள் என்பதை முதலில் நிறுவி, காரியம் தானே செயற்படாது ஆகையால், காரிய உலகைத் தோற்றுவித்து நடத்து தற்குப் பேரறிவுடைய முதல்வன் ஒருவன இருத்தல் வேண்டும் என்பதை உணரவைககிறது இச்சூத்திரம்.

இரணடாம் சூத்திரம் இறைவன் உயிர்களோடு கொண்டுள்ள பிரிப்பில்லாத தொடர்பினைச் சொல் லுவது. இறைவன் பிரிப்பின்றி உயிர்களோடு ஒன்றாயும் வேறாயும் உடனாயும் நின்று அவற்றைப் பிறப்பு இறப்பிற் செலுத்தி ஐந்தொழில் செய்கின் றான் என்பது இச்சூத்திரத்திற் கூறப்பட்டுள்ளது.

அடுத்து வரும் மூன்றாம் சூத்திரம் உயிா உண்மையை நிறுவுகிறது. உயிர் சூனியம் அன்று. பருவுடம்பு உயிராகாது. ஐம்பொறிகளும் உயிர் ஆகா. நுண்ணுடலும் உயிராகாது. பிராண வாயுவும் உயிர் அன்று. பிரமமும் உயிர் அன்று. உயிர் இத்தனைக கும் வேறாகிய தனிப்பொருள் என்பது வலியுறுத் தப்படுகிறது.

நான்காம் சூத்திரம் உயிர்க்கு அறியாமையை விளைப்பதாகிய இயற்கை மலம் ஒன்று உணடு என்பதையும், உயிர் அடையும் ஐந்து நிலை வேறு பாடுகளையும் உணர்த்துகிறது.

ஐந்தாம் சூத்திரம் இறைவன் உயிர்களின் அறிவை விளக்கி உதவி செய்தலையும், அதனால் அவன் ஒருசிறிதும் மாறுதல் அடையான் என்பதையும் எடுத்துக்காட்டுகிறது.

ஆறாம் சூத்திரம் இறைவனின் சிறப்பியல்புகளை உணர்த்துகிறது. இறைவன் உயிரறிவால் அறியப் படாதவன் என்றும், அவனது திருவருளைத் தலைப் பட்டு அதனோடு ஒற்றுமைப் பட்டு நின்று உணரும் அனுபவ உணர்வால் அவன அறியப்படுபவன் என்றும் கூறுகிறது.

ஏழாம் சூத்திரம் உயிரின் சிறப்பியல்பினை உணர்த்துவதாகும் முன்னர் அசத்தாகிய உலகத்தைச் சார்ந்து அசத்தாய் நின்ற உயிர் பின் சத்தாகிய இறைவனைச் சார்ந்து சத்தாய்-சிவமாய் - நிறகும் என்பதை இச்சூத்திரம் விளக்குகிறது.

எட்டாம் சூததிரம் உயிர் ஞானம் உணரும் முறைமையினைக கூறுவதாகும். பக்குவ முதிர்ச்சி யினை உடைய உயிருககு இறைவன் ஞானாசிரியனா கத் தோன்றி மெய்யுணர்வினை அளிப்பான் என்ப தையும், உண்மையை உணர்ந்த உயிர் பாசக் கூட்டத்தினின்றும் நீங்கி இறைவன் திருவடியைத் தலைப்பட்டு இன்புறும் என்பதையும் இச்சூத்திரம் உணர்த்துகிறது.

ஒன்பதாம் சூத்திரம், உயிர் உலகப் பற்றுகளை நீக்கினால் திருவருள் ஞானம் வெளிப்படும் என்றும், அத்திருவருளே கண்ணாகக் கொண்டு இறைவனைத் தன் அறிவின்கண நாடிக் காணவேண்டும் என்றும், அவ்வாறு கண்ட காட்சி சலியாதிருத்தற் பொருட் டுத் திருவைந்தெழுததை விதிப்படி உச்சரித்தல் வேண்டும் என்றும் கூறுகிறது.

பத்தாம் சூத்திரம் பாச நீக்கம் பற்றியதாகும். உயிர் தன்முனைப்பினறி இறைவனிடத்தில் அடங்கி அவனது அருள்வழி நிற்றல் வேண்டும் என்பதும் அவ்வாறு நிற்றலால மும்மலங்களும் பற்றறக கழியும் என்பதும் கூறப்பட்டுள்ளன.

பதினோராம் சூத்திரம் உயிர் அடையும் இன்பப் பேற்றைக் கூறுவதாகும். பிறப்புநிலை, வீட்டுநிலை என்னும் இரண்டிலும் இறைவன் செய்யும் உபகா ரத்தை உயிர் தெளிய உணரும். அதன பயனாக இறைவன் மீது இடையறாப் பேரன்பு மீதூர்ந்து எழும். அந்நிலையில இறைவனை அழுந்தி உணர்ந்து பேரின்பத்தில் திளைககும் இந்நிலை அதீத நிலை என்றும், இன்புறுநிலை என்றும் கூறப்படும்.

பன்னிரண்டாம் சூத்திரம் ஞானிகள் செயலைக் கூறுவதாகும். அவர்கள் மலவாதனை தோன்றாதபடி ஞான நீரால் அதனைக கழுவுவர்; மெய்யன்பரோடு கூடி நிற்பர்; திருக்கோயில்களில் உள்ள திருவுருவங் களையும், திருவேடத்தையும் சிவன் எனவே கண்டு வழிபடுவர் என்பது இவ்விறுதிச் சூத்திரத்தில் உணர்த் தப்பெறும் பொருளாகும்.

சிவஞான போதத்திற்குப் பாண்டிப் பெருமாள் செய்த விருத்தியுரையும், சிந்தனையுரை என்பதும், வேறு சில உரைகளும் உள்ளன. மாதவச சிவஞான யோகிகள் சிற்றுரை, பேருரை என்னும் இரண்டு

சிறந்த உரைகளை ஆக்கியுள்ளார் அவருடைய உரைகளே சிவஞான போதப் பொருளை முழுமையுறக காட்டும் நிறைவான உரைகளாகத திகழ்கின்றன.

ஆ.ஆ.

**சிவஞானம்பிள்ளை, செ.** கி.பி.19-ஆம் நூற்றாண்டின் பிற்பகுதியிலும் 20-ஆம் நூற்றாண்டின் முற்பகுதியிலும் வாழ்ந்த தமிழ்ப் புலவர். இவர் சென்னையைச் சேர்ந்த மயிலாப்பூரில கி.பி.1871-ஆம் ஆண்டில் பிறந்தார். இவர் தந்தையார் பெயர் வெள்ளியம்பல உபாத்தியாயர். தந்தையார் ஆசிரியராக இருந்தமையால் அவரிடமே கல்வி கற்றார். மேலும் காஞ்சிபுரம் மகாவித்துவான் இராமசாமி நாயுடு, திருமயிலை சண்முகம் பிள்ளை ஆசியோரிடத்திலும் தமிழ் இலக்கண இலக்கியங்களைப் பயின்றார். இவர் சென்னை அரசாங்கக் கல்வித்துறையில் 1926-ஆம் ஆண்டு வரை எழுத்தராகப் பணியாற்றினார். தமிழின்பால் மிகவும் ஈடுபாடு கொண்ட இவர் கந்தபுராணத்தி லுள்ள அரிய செய்யுட்களைத் தொகுத்துக் கந்த புராணச் சுருக்கமாக வெளியிட்டார் தேவார ஆசிரியர்களின் வரலாற்றினை ஆராய்ச்சிக் குறிப்புகளுடன் எழுதி வெளியிட்டார். இவர் கல்வி கற்பிக்கும் பணியிலும் ஈடுபட்டிருந்தார். தம் வாழ்நாளெல்லாம் தமிழ்த் தொண்டு புரிந்த இவர் 1933-இல் காலமானார்.

வீ.சே

**சிவஞான முனிவர்:** இவர் திருநெல்வேலி மாவட்டத்தில் பாவநாசத்தைஅடுத்த விக்கிரமசிங்க புரத்தில் கி.பி.18ஆம் நூறறாணடின் முற்பகுதியில் தோன்றினார். தந்தையார் ஆனந்தக்கூத்தர்; தாயார் மயிலம்மையார். இவர் கருவிலேயே திரு வாய்க்கப் பெற்றவர். முக்களாலிங்கர் என்பது பெற றோர் இவருக்கு சூட்டிய பிள்ளைத் திருநாமம். முக்களாலிங்கம் என்பது பாவநாசத்தலத்திலுள்ள இறைவனுக்குரிய பெயராகும். அவரையே வழிபடுதெய்வமாகக் கொண்ட குடும்பமாதலின் இவருக்கும் இப்பெயர் சூட்டப்பெற்றது. ஐந்து வயதானதும் முறைப்படி பள்ளியில் பெற்றோர் முக்களாலிங்கரைப் படிக்க வைத்தனர். ஒருசமயம் பளளியிலிருந்து நணபகலுணவிற்காக வீட்டுக்கு வரும்போது வழியில் காவியுடை கட்டிய திருவாவடுதுறை ஆதீனத்தைச் சார்ந்த சில துறவிகளை முக்களாலிங்கர் கண்டார். அவர்களைத் தம் வீட்டுக்கு அழைத்துச் சென்று உண்பிக்க அவாக்கொணடார். உடனே அவர்களைத் தம் இல்லத்திற்கு உணவருந்த வருமாறு அழைத்தார். அவர்களும் இளைஞனின் பேரார்வத்தைக் கண்டு மெச்சி உடன் சென்றனர். முக்களாலிங்கர் தம் அன்னையாரிடம் அடியார்களுக்கு அமுது படைக்க வேண்டினார். அவ்வம்மையாரும் மனமுவந்து விரைவில் ஆயத்தம் செய்து அமுது படைத்தார். உண்ட துறவிகள் அவ்வம்மையாரையும், முக்களாலிங்கரின் புத்திச் சிறப்பையும் புகழ்ந்து சென்றனர். பின் வெளியே சென்றிருந்த தந்தைக்கு விவரம் தெரிந்ததும் அவரும் தம் மகனுடன் அவ்வடியார்களிருக்குமிடம் சேர்ந்து கண்டு வணங்கினார்



சிவஞானமுனிவர்

திருவாவடுதுறை ஆதீனத்திற்கு நெல்லைமாவட்டத்தில் நிறைய மானியங்கள் இருக்கின்றன. அவற்றை மேற்பார்ப்பதற்குச் சின்னப்பட்டமாக விளங்கும் துறவியை அங்கு இருக்கச் செய்வது வழக்கம். அம்முறையில் அக்கிளைமடத்தில் அவ்வடியார்கள் பலரும் தங்கியிருந்ததால் முக்களாலிங்கரும் அவர் தந்தையும போய் அவர்களைப் பார்க்க வாய்ப்பாயிற்று. அவ்வமயம் முக்களாலிங்கருக்கு அவ்வடியார்களுடன் தாமும் சென்று தம் சமய நூல்களைப் படித்து முன்னேற வேண்டும் என்னும் எணணம் ஏற்பட்டது. தநதையார் முதலில சிறிது பிள்ளையைப் பிரிய வருந்தினும், படிப்பு மேம்பாடு கருதி அனுப்ப முற்பட்டார். முக்களாலிங்கரும் அவ்வடியார்களுடன் சுசீந்தரம் சேர்ந்தார் அங்கு, வேலப்பதேசிகர் என்னும் அடியவரிடம் முக்களாலிங்கர் சமய தீக்கை பெற்றார். அப்பொழுதே சிவஞானம் என்னும் தீக்கைக்குரிய பெயர் வழங்கப் பெற்றது. பின் முக்களாலிங்கர் சிவஞானத் தம்பிரான் என அழைக்கப்பெற்றார்.

வேலப்ப தேசிகர் திருவாவடுதுறை செல்ல விரும்பினார். அதனால், அடியார்கள் புடைசூழப் பாண்டி நாட்டுத் தலங்களை வணங்கிக் கொணடு கொங்கு நாடு சென்று பேரூரிலிருந்தபோது,வேலப்ப தேசிகர்

இயற்கையெய்தினார். தம் குருநாதருக்கு ஆற்ற வேண்டிய கடன்களை முடித்தபின் மற்றவர்களோடு சிவஞானத் தம்பிரான் திருவாவடுதுறை சேர்ந்தார்; வடமொழி, தென்மொழிகளைக் கற்றுத் துறை போனார். திருவாவடுதுறையிலிருந்த காலத்துப் பஞ்சாக்கர தேசிகர் மாலை என்னும் நூலை இயற்றினார். பின் நன்னூல் சங்கர நமச்சிவாயருரையைத் திருத்தியும் புதுக்கியும் ஓர் அருமையான விருத்தியுரையை எழுதி உதவினார். அக்காலத்துத் திருவாரூர் வைத்தியநாத தேசிகர் இயற்றிய இலக்கண விளக்கம் என்னும் நூலுக்கு மறுப்பாக இலக்கண விளக்கச் சூறாவளி என்னும் நூலைச் செய்தார். சித்தாந்த மரபு கண்டன கண்டனம்,சிவஞானபோதச் சிற்றுரை, சிவஞான சித்தியார் சுபக்கப் பொழிப்புரை முதலிய நூல்களையும் செய்தார். இவ்வாறு கல்வியிலும் சாத்திர தோத்திரங்களிலும் மிகவும் வல்லவராய் விளங்கியதால் தமிழுலகம் இவரைச் சிவஞான முனிவர் என அழைக்க முற்பட்டது.

ஒரு சமயம் சிவஞான முனிவர் திருப்பாதிரிப் புலியூர் சென்றார். அங்குக் கூடிய பேரவையில் செல்வர் ஒருவர் "கரையேற விட்ட முதல்வா உன்னையன்றியுமோர் கதியுண்டாமோ' என்று ஈற்றடி அமையுமாறு ஒரு செய்யுள் இயற்றுவோருக்குரிய பரிசாக நூறு பொன் கொண்ட பண முடிப் பொன்றை வழங்கினார். பலரும் பாட முயன்று வெற்றி பெறவில்லை. ஏழை தன் வறுமையைப் போக்க இதை வாய்ப்பாகக் கருதிச் சிவஞான முனிவர் பெருமையையுணர்ந்து தனக்கு ஒரு செய்யுள் அவ்வீற்றடியைக் கொண்டு இயற்றித் தருமாறு வேண்டினான். முனிவரும் இரக்கம் மீதூர்ந்து 'வரையேற விட்டமுதம்' எனத்தொடங்கும் ஒரு செய்யுளை மிகவும் நயம் அமையப் பாடிக் கொடுத்தார். அப்பாட்டைக் கண்ணுற்ற அவையினர் அதன் சிறப்பையுணர்ந்து அப்பொற்கிழியை அவ்வேழைக்கு வழங்கினர். அவன் வறுமை நீங்கிச் சிவஞான முனிவரை வாழ்த்தி வணங்கிச் சென்றான்.

பின்னர்க் காஞ்சிபுரம் சென்ற போது வைணவர் ஒருவர் முனிவரிடம் கம்பராமாயணம் போல் ஒரு சிறந்த நூல் சைவத்துக்கு உண்டா என்று அதைப் புகழ்ந்து சைவத்தை இழித்துப் பேசினார். இது முனிவருக்கு வெறுப்பைத் தநதது. கம்பராமாயணம் மிகவும் பிழை மலிந்தது. முதற் செய்யுளே குற்றங்கள் நிறைந்தது என்று முனிவர் கூறி அதிலுள்ள குற்றங்களையெல்லாம் கற்றோர் ஒப்புமாறு ஒவ்வொன்றாய் எடுத்துக் காட்டினார். இதனைக் கண்ட வைணவர் முகம் மிகவும் வாடிவிட்டது. உடன் முனிவா தம் புலமைச் சாதுரியத்தால் இவ்வளவு பிழைகளிருப்பினும் ஒருவாற்றால் அமைதி கொள்ளலாம் என அப்பிழைகளுக்கெல்லாம் உடன் அமைதி கூறியருளினார். அதுகேட்டதும் அவ்வைணவர் முகம், சிறிது வாட்டம் தவிர்ந்தது. இவ்வாறு கூறிய மறுப்பு, பின் கூறிய அமைதியுரை முதலிய வற்றையெல்லாம் சேர்த்துக 'கம்பராமாயண முதற் செய்யுள் சங்கோத்தர விருத்தி' என்னும் நூல ஒன்றினை அன்பர்கள் வேண்டுகோட்கிணங்க எழுதினார். மேலும் எழுத்து என்னும் சொல்லுக்கிட்ட வைரக் குப்பாயம், சிவசம வாதவுரை மறுப்பு என்னும் கண்டன நூல்களையும் இயற்றினார்.

சித்தாந்தப் பிரகாசிகை, சுலோக பஞ்சகம், தருக்க சங்கிரகம் (அன்னம்பட்டீயம்), சிவதத்துவ விவேகம் முதலியன இவரால் வடமொழியிலிருந்து மொழிபெயர்க்கப் பெற்ற தமிழ் நூல்களாகும். தொல்காப்பியப் பாயிர விருத்தி என்னும் விருத்தியுரை ஒன்றினையும் வெளியிட்டார். காஞ்சிபுரத்தில் முனிவர் சில காலம் தங்கியிருந்தார். அங்குள்ளோர் முனிவரை மிக ஆதரித்து அன்பு காட்டினர். அப்போது சிவஞான போதத்திற்குப் 'பாடிய' உரை எழுதினார். அதற்காகச் சிவாகமங்கள் பலவற்றையும் தக்கார் வாயிலாக ஓதி உணர்ந்தார். பின் திருவாவடுதுறை சென்று சிவஞான போத மாபாடியம் அரங்கேற்றப்பட்டது. தமிழில் மாபாடியம் செய்த பெருமை முனிவர் ஒருவருக்கே உரியது.

திருத்தொணடர் திருநாமக்கோவை என்னும் நூலொன்றினையும் பாடினார். சிவதலங்களை வழிபடச் சென்றபோது திருமுல்லைவாயில் அந்தாதி, குளத்தூர்ப் பதிற்றுப்பத்தந்தாதி, சோமேசர் முதுமொழி வெண்பா, இளசைப் பதிற்றுப்பத்தந்தாதி முதலிய நூல்களையும் இயறறினார். காஞ்சியிலிருக்கும்போது திருவேகமபரந்தாதி, கச்சி ஆனந்த ருத்திரேசர் பதிகம், ஆனந்தக் களிப்பு, காஞ்சிப் புராணம் முதற்காண்டம் முதலிய நூல்களைப் பாடினார். தொட்டிக்கலை என்ற ஊருக்குச் சென்றபோது கலைசைப் பதிற்றுப்பத்தந்தாதி, கலைசைச் செங்கழுநீர் விநாயகர் பிள்ளைத் தமிழ் முதலிய நூல்களைப் பாடினார். அமுதாம்பிகைப் பிள்ளைத் தமிழ், அகிலாண்டேசுவரர் பதிகம் முதலியனவும் முனிவர் பாடிய நூல்களே. இலக்கண, இலக்கிய, தருக்க, சைவ சித்தாந்த, மொழிபெயர்ப்பு ஆகிய ஐந்து துறைகளிலும் வல்லவராய் மொத்தம் இவர் இயற்றிய நூல்கள் இருபத்தெட்டு.

இவருக்கு மாணவர்கள் பலர் இருந்தனர். அவர்களுள் தலையாயவர்கள் பன்னிருவர் என ஆன்றோர் கூறுவர். தணிகைப் புராணம் பாடிய கச்சியப்ப முனிவர், தொட்டிக்கலைச் சுப்பிரமணிய முனிவர், இலக்

கணம் சிதம்பரநாத முனிவர் முதலியோா முனிவரின் மாணாக்கராவர்.

இவருக்குத் திராவிட மாபாடியகாரர், ஆதீன குலதெய்வம் என்றெல்லாம் அறிஞர்கள் பல்வேறு பெயர்களைச் சூட்டி மகிழநதனர். இம்முனிபுங்கவர் கி.பி. 1785–ஆம் ஆண்டு ஏப்பிரல் திஙகளில (விசுவா வசு ஆணடு சித்திரை ஆயிலியத்தில) திருவாவடு துறையில் காலமானார். இரா.ச.

**சிவஞானயோகிகள் விருதை:** இவர் தமிழ் நாட்டில் வாழ்ந்த சைவத் துறவியார். இவர் கோயம் புத்தூர் மாவட்டத்தைச் சோந்த அவிநாசி என்னும் ஊரில் இராமசாமிப் பிள்ளைகளும் கிருட்டிணம்மை யாருக்கும் கி.பி.1840–ஆம் ஆண்டில் பிறந்தார். இளமை முதற்கொண்டே கலவியில் ஆர்வம் கொண்டு கற்றுத் தமிழிலும் ஆங்கிலத்திலும் புலமை பெற்றார. இவர் உதகமண்டலத்திற்கு அணமையி லுளள வெலலிங்டன் என்னும் ஊரில வணிகரொரு வரிடம் பணியாற்றினார். அச்சமயம் சித்த மருத்துவ அறிஞரான சச்சிதானநத அடிகளின் தொடர்பு இவ ருக்கு ஏற்பட்டு அவரிடம் சித்த மருத்துவக் கலையி னையும் யோகப் பயிற்சியையும் கற்றுத் தேறினார். இவர் சிறப்பாகத் தமிழ் நூல்களைப் பழனி மாம் பழச் சிங்க நாவலரிடமும், வடமொழி நூல்களை எட்டையபுரம் குருநாதக் கலைஞரிடமும், சைவ சித் தாந்த நூல்களைச் சைவசித்தாந்த சண்ட மாருதம் சோமசுந்தர நாயகரிடமும் பயின்றார்.

இவர் மருத்துவமனை யொன்றை விருதுநகரில தொடங்கினார். இவரே மருத்துவராக இருந்து பணி யாற்றியுள்ளார். விருது நகாச் சிவன் கோயில் ஒன்று பழுதடைந்து யாரும் கவனிப்பாரற்று இருந்தது. அக் கோயிலைச் சிறப்புறக் கட்டிமுடித்தார். இவர் செல் வர் பலரிடம்பொருள் திரட்டித் திருப்பணிகள் பலவும் செய்துள்ளார். கோவில்பட்டியில் சித்த மருத்துவ மனையொன்றை ஏற்படுத்திச் சமூகப் பணியாறறியுள ளார். மகாகவி சுப்பிரமணிய பாரதியாருக்குப் பாரதி என்னும் பட்டத்தினை வழங்கியவர் இவரேயாவார்.

இவர் திருச்செந்தில் சிலேடைவெண்பா, செப் பறை வெணபா, நெல்லையந்தாதிமாலை, தமிழ் மொழியும் சிவநெறியும், தமிழ்த் தொன்மை அக வல், கீதாமிர்த மஞ்சரி, சிவஞான விளக்கம், வேதா கம உண்மை, தமிழும் மருத்துவமும், தமிழக வொழுக்கம், கோயில் பட்டிப் புராணம், சிவகலைப் புராணம், தேவோபாசனாதீபம் முதலிய நூல்களை எழுதியுள்ளார். மேலுமிவர் பதஞ்சலியோக சூத்திர மொழிபெயர்ப்பு, பிரமசூத்திர மொழிபெயர்ப்பு, சுவேதாசுவதர உபநிடத மொழிபெயர்ப்பு முதலிய மொழிபெயர்ப்பு நூல்களையும் இயற்றியுள்ளார். இவர் ஆபிரகாம் பண்டிதர் இயற்றிய கருணாமிர்த சாகரம் என்னும் நூலிற்கு 250 அடிகளில் பாயிரம் வழங்கிச் சிறப்பித்துள்ளாா. இவர் 1924–இல் கால மானார். வீ.சே.

**சிவஞான வள்ளல்:** காழிக் கண்ணுடைய வள்ளல அமைத்த வளளல் ஆதினத்தில் அவருக்குப் பின் தலைமை ஏற்றிருநத சுயம்பிரகாச வளளல் என்பவரின் மாணாக்கருள ஒருவர் சிவஞானவள்ளல். இவா தஞ்சை மாவட்டத்திலுள்ள சீகாழி நகரினில பிறந்தவராவார். இவரது காலம் கி.பி. 15–ஆம் நூற்றாணடாகும். இவர் வள்ளலார் சாத்திரம் எனப் பெயரிய தொகுப்பு நூலினை இயற்றியுள்ளார். இருபது நூல்கள் கொண்ட அத்தொகுப்பு, சைவ உலகில ஓரளவு நன்கு அறிமுகமானதாகும். இவர் நூல்கள் சித்தாந்த உணமைகளைக் கூறுவதாக இருப் பினும், வேதாந்தச் சார்புடையன என்று கூறப்படும். இந்நூலினைச் செய்தவர் சிவஞான வள்ளல் என்ப தனைப் 'புனலிடை ஆழாக்காழிப் புரிவருபோத வள்ளல்' என்ற குறிப்பில் புலப்படுத்தியுள்ளார். இவர் தம் நூல்களில் சுயம்பிரகாச வளளலையும் கண்ணுடைய வள்ளலையும் போறறிப் பாடியுளளார். இவர் சைவ சமயச் சான்றோர்களாகிய ஞானசம் பந்தர், அப்பர், சுந்தரர், மாணிக்கவாசகர், காரைக் காலம்மையார், திருமூலர் போன்றோரின் சொற் களையும் தொடர்களையும் பயன்படுத்தியுள்ளார். மேலும், தம் நூலுள் திருக்குறளை நன்கு ஆணடுள் ளார். சைவ சமய குரவர்களையும், சந்தான குரவா களையும் போறறும் இவர், சரியை, கிரியை, யோகம், ஞானம் ஆகிய பாதஙகளையும், பதி பசு பாச இலக் கணங்களையும், துறவிலக்கணம் போன்றவற்றையும் தம்நூலுள விளககியுள்ளாா. சைவ சமய நாட்டம் மிகக் கொணடு பேசும் இவர் ஆழ்வார் பாடல்களை யும் மேற்கோள் காட்டியுளளார். இவர்தம் நூலகள் வளமான தமிழில் அமைநது விளஙகுகின்றன. இவா இயறறிய நூல்கள் பின்வருவன: 1. சத்திய ஞான போதம். நூற்பா அமைப்பில் 115 செய்யுட்கள் கொண்டது. சித்தாநதக் கருத்துகளுக்கிடையே, இந் நூலில் ஆசிரியர்தம் வேதாந்தச் சாயல் புலப்படு கிறது. 2. சித்தாந்த தரிசனம் பாயிரத்தோடு, பதி, பசு, பாசம், பாபவிமோசனம், சிவயோகம் என்னும் ஐந்து இயல்களையும் 379 குறட்பாக்களையும் கொண்டது. 3. பதி பசு பாச விளக்கம். இது 257 விருத்தங்களால ஆகியது. 4. உபதேசமாலை. நூறு வெணபாக்கள் கொண்டது. இது சைவ சமயக் கருத் துகளைத் தொகுத்துக் கூறுகிறது. 5. சிவஞானப் பிரகாச வெண்பா. இது 100 வெணபாக்களைக்

கொண்டது. இதில் சைவச் சான்றோர் பலர் குறிப்பிட்டுப் பாராட்டப்பட்டுள்ளனர். 6. ஞானவிளக்கம். இது 101 வெண்பாககளைக் கொண்டது. 7. அத்துவிதக் கலிவெண்பா. குரு உபதேசச் சிறப்பினைக் கூறும் இச்சிறுநூல் 30 கண்ணிகள் கொண்டது. 8. அதிரகசியம். இது 66 விருத்தங்கள் கொண்டது. 9. சிவாகமக் கச்சிமாலை. இது 100 கட்டளைக் கலித்துறைச் செய்யுள் கொண்டது. 10. கருணாமிர்தம். இது 64 விருத்தங்கள் கொண்டது. 11. சுருதி சார விளக்கம். இது 91 விருத்தப்பாடல்கள் கொண்டது. இதில், திருமூலர் வெண்காடர் ஆகியோரொடு சடகோபரையும் வணங்கியுள்ளார். 12. சிந்தனை வெண்பா. இது 35 வெண்பாக்களைக் கொணடது. 13. நிராமய அந்தாதி. இது 10 வெணபாக் கொண்டது. 14. திருமுகப்பாசுரம். இதில் 7 பாசுரங்கள் உரையோடு உள்ளன. அறுபத்து நாலு சங்கை, தச வழக்குச் சிந்தனை, குருமரபு சிந்தனை, அனுபவ சந்திரிகை, அதிகாரப்பிள்ளை அட்டவணை, மரபு அட்டவணை ஆகிய ஆறு நூல்கள் உரைநடையில் அமைந்தனவாகும். அ.மா.ப.

***சிவப்பிந்தியர்***: காண்க: அமெரிக்க இந்தியர்.

***சிவப்பிரகாசக் குறுந்திரட்டு***: சிவப்பிரகாசச் குறுந்திரட்டை ஆக்கியவர் சொரூபானந்த சுவாமிகளின் சிடராகிய தத்துவராய சுவாமிகள் ஆவர். இவர் தம் குருவின் குருவாகிய பரமகுரு சிவப்பிரகாசரின பெயரால் இத்திரட்டினை அமைத்துள்ளார். இது சிவப்பிரகாசப் பெருந்திரட்டின் பின்னர்த் தோன்றியதாகும். இவர் தம் குருநாதர் சொரூபானந்தர் திரட்டியருளிய பெருந்திரட்டிலுள்ள பாடல்கள் பலவற்றையும் எடுததுக்கொண்டு தாமும் வேறு பாடல்களை உடன்சோத்து இக்குறுந்திரட்டை அமைத்துள்ளார். எனவே, இக்குறுந்திரட்டினை முன் வந்த பெருநதிரட்டின் சுருக்கம் எனலாம். இத்திரட்டில் தத்துவராயர் சேர்த்த புதுப்பாடல்கள் 424. மொத்தம் குறுந்திரட்டுப் பாடல்களின் எண்ணிக்கை 1390. ஆகப் பெருந்திரட்டுப் பாடல்களுள் 966 பாடல்கள் இக்குறுந்திரட்டிலுமுள்ளன.

இங்ஙனமாகவே சிவப்பிரகாசப் பெருந்திரட்டைப் பதிப்பித்தோர் 'சிவப்பிரகாசப் பெருந்திரட்டு — குறுந்திரட்டுடன்' என்று ஒரே நூலில் இரண்டு திரட்டு நூல்களையும் அமைத்துள்ளனர். தத்துவராயரால் குறுந்திரட்டில் சேர்த்துக்கொள்ளப்பெற்ற பாடல்களுக்கு உடுக்குறியிட்டுக் காட்டியுளளனர். மிகுதியாகச் சேர்க்கப்பெற்ற செய்யுட்களை அவை வருமிடங்களில் அடிக் குறிப்பாய்த் தந்து அச்சிட்டுள்ளனர். இக்குறுந்திரட்டின் அமைப்புமுறை முதலியன எல்லாம் பெருந்திரட்டை ஒத்த தன்மையதே. எனவே, நூலின் அமைப்பு, திரட்டுநூல்களின் பதிப்பு வரலாறு முதலியவற்றை அறியச் சிவப்பிரகாசப் பெருந்திரட்டு என்னும் பகுதியை நோக்கல் வேண்டும். மு ச.

***சிவப்பிரகாசசுவாமிகள், துறைமங்கலம்***: சிவப்பிரகாசர் என்னும் பெயரில் புலவர் பலர் இருந்துள்ளனர். அவர்களுள் துறவியர்களும் இருந்துள்ளமையால், வேறுபாடு அறியும் வகையில், சிறிது காலம் வாழ்ந்த துறைமங்கலம் என்னும் ஊர்ப் பெயரைச் சேர்த்து இப்புலவர் துறைமங்கலம் சிவப்பிரகாச சுவாமிகள் என வழங்கப்பெற்றார். இவர், கி.பி. 17-ஆம் நூற்றாண்டின் இடைப்பகுதியில் வாழ்ந்தவராவார். காஞ்சிபுரத்தில் வாழ்ந்த குமாரசாமி தேசிகர் இவர் தந்தையார். சிவப்பிரகாசர் வீர சைவ சமய நெறி மேற்கொணடு ஒழுகினார். இவருக்கு, வேலையர், கருணைப்பிரகாசர் என்று இருதம்பியரும், ஞானம்பிகை என்னும் தங்கையும் இருந்தனர்.

தந்தையாரிடம் கல்வி பயின்ற இவர், தந்தையார் காலமான பின்னர், மேலும் கல்வி கற்க விரும்பித் திருநெல்வேலியில் வாழ்ந்த வெள்ளியம்பல வாணத் தம்பிரானிடம் சென்றார். செல்லும் வழியில் வாலிகண்டபுரம் என்னும் ஊர்க்கு அருகிலுள்ள துறைமங்கலம் சென்றபோது, அங்கு அப்பகுதித் தலைவராக விளங்கிய அண்ணாமலை ரெட்டியாரின் வேண்டுகோளை ஏறறுச் சிறிதுகாலம் தங்கிப் பின்னர் அவரது இசைவுடன் திருநெல்வேலி சென்று வெள்ளியம்பலத் தம்பிரானை அடைந்து அவரிடம் கல்வி கற்பிக்க வேண்டினார். இவர் திறமையைச் சோதித்தறிந்த தம்பிரான் இவரை மாணவராக ஏற்று, இலக்கண இலக்கியங்களில் வல்லவராக்கினார். குரு காணிக்கை அளிக்க விரும்பிய சிவப்பிரகாசரிடம், தம்பிரான் பொருள் விரும்பாது, காழ்ப்பினால் தம்மை இகழும் ஒரு புலவரைப் புலமைத் திறத்தால் அடக்கி வென்று வருதலையே விரும்பினார். குருவின் விருப்பத்தை ஆணையாக ஏற்றுச்சென்று, அப்புலவரொடு நாலியற்றும் போட்டியில் ஈடுபட்டு அவரைத் தோல்வியுறச் செய்து உடன் கொணர்ந்து தம் குருவினை வணங்குமாறு செய்தார். அப்போட்டியில் இவர் பாடிய நூல் முப்பது செய்யுட்கள் கொணட, திருச்செந்தில் நிரோட்டக யமக அந்தாதியாகும்.

துறைமங்கலம் திரும்பிய சிவப்பிரகாசர், அண்ணாமலை ரெட்டியார் அமைத்த திருமடத்தில் சிறிது காலம் இருந்து வீர சைவ சமயத் தொண்டும் சமய இலக்கியத் தொண்டும் புரிந்துவந்தார். அருகிலிருந்த வெங்கை என்னும் வெங்கனூர் இறைவன்

மீது சில சிற்றிலக்கியங்களை இயற்றினார். மணப் பருவம் எய்தியும், மணவாழ்க்கையை விரும்பாது நடையறாத் துறவியாக வாழ்ந்த சிவப்பிரகாசர் உரிய காலத்தில் தம் தம்பியருக்குத் திருமணம் செய்துவைத்தார். சாந்தலிங்கர் என்னும் பெரியாருக் குத் தம் தங்கையை மணம்புரிவித்தார்.

சிதம்பரம் சென்று நடராசப் பெருமானை வழி பட்டு வரும் நாளில பல நூல்களை இயற்றினார். பின்னர்க் காஞ்சிபுரம் சென்று சிறிதுகாலம் தங்கிய போது, சாந்தலிங்கப் பெரியாரொடு தொடர்பு கொண்டார். இருவரும், பொம்மபுரம் சென்று சிவ ஞானபாலைய சுவாமிகளைக கண்டு வணங்கி அவர் மீது, தாலாட்டு, தூது, திருப்பள்ளி எழுச்சி, பிள் ளைத்தமிழ்-ஆகிய பிரபந்தங்களை இயற்றினார். பின்னர், வெங்கனூர் சென்றபோது, விருத்தாசலத் தில் சிதம்பர பூபதி என்பார் அமைத்த திருமடத்தில் வசித்து வந்தார். அப்போது கிறித்தவப் பாதிரியாா ஒருவரோடு வாதிட்டு, ஏகமத நிராகரணம் என்னும் நூலினை இயற்றினார். இவர் இளவல் கருணைப் பிரகாசர் வெங்கனூரில் காலமாயினமை அறிந்து அங் குச் சென்று மிகவும் துயருற்று இரங்கிப் பாடினார். பின்னர் மீணடும நல்லாற்றூர் சென்றடைந்து, அபிடேகமாலை கைத்தல மாலை முதலிய, வீரசைவ சமய நுட்பங் கூறும் துதி நூல்களை இயற்றினார். இவர் நல்லாற்றூரில், வாழ்ந்தபோது தம் 32-ஆம் வயதில் காலமானார்.

தமிழ் இலக்கியம், இலக்கணம், சமயம், தருக்கம் ஆகிய துறைகளில் சிறந்த புலமை பெற்று விளங்கிய சிவப்பிரகாசர் வட மொழியினை நன்கு கற்றுப் புலமை மிக்குத் திகழ்ந்தார். இவர்தம் செய்யுட்கள், சொற்சுவை, பொருட்சுவை மிக்கவையாய், அணி நல னும் கற்பனை வளமும் செறிந்து திகழ்கின்றன. அத னால், இவரைக் 'கற்பனைக் களஞ்சியம்' என்று தமிழ் உலகு பாராட்டுகின்றது. இவர் தம்பியராகிய வேலையரும் கருணைப்பிரகாசரும் சிறந்த புலவர் களாய்விளங்கியமை குறிப்பிடத்தக்கது.

**இவர்இயற்றிய நூல்கள்: புராணங்கள்:** 1. திருக் கூவப்புராணம். இது தொண்டைநாட்டிலுள்ள திரு விற்கோலம் என்னும் கூவத்தில் கோயில் கொண் டுள்ள இறைவன் மீது 703 விருத்தப்பாக்களில பாடப்பட்டது. 2. சீகாளத்திப் புராணம். இதில் கண்ணப்பச் சருக்கமும் நக்கீரச் சருககமும் இவர் பாடியன. 3. பிரபுலிங்கலீலை. அலலமதேவரின் வரலாறு கூறும் இந்நூல் 1157 விருத்தங்கள் கொண் டது. இது சக ஆண்டு 1574-இல்(கி.பி.1652) செயயப் பட்டது.

**சிற்றிலக்கியங்கள்:** 4. வெங்கைக்கோவை. 425 கலித் துறை கொண்டது. 5. திருச்செந்தில் நிரோட்டக யமக அந்தாதி. 30 செய்யுட்கள கொண்டது. 6.பழ மலை அந்தாதி. 100 செய்யுட்கள் கொண்டது., 7. சோணசை மாலை. திருவண்ணாமலை இறை வன்மீது பாடப்பட்டது. 100 விருத்தங்கள் கொண்டது. 8. நால்வர் நான்மணிமாலை. சைவ சமய குரவர் நால்வர்மீதும் 40 பாடல்களால் பாடப் பட்டது. 9. சதமணி மாலை. சைவ சித்தாந்த உண்மைகளை 100 செய்யுட்களில் கூறும் நூல். 10. பிட்சாடண நவமணி மாலை. விருததகிரிப் பெருமான் மீது பாடப்பட்டது. ஒன்பது செய்யுட் கொண்டது. 11. இட்டலிங்க அபிடேக மாலை, 12. நிரஞ்சன மாலை, 13.கைத்தலமாலை, 14. வெங்கைக் கலம்பகம். வெங்கனூர்ச் சிவன்மீது பாடப்பட்ட 100 செய்யுட்களைக் கொணடது .15. சிவஞான பாலையர் கலம்பகம். பாலைய சுவாமிகள் பெருமை கூறுவது. இதில் 93 பாடல்களே உள்ளன. 16. திருவெங்கை யுலா. இது 419 கண்ணிகளில வெங்கனூர்ச சிவ பெருமான்மீது பாடப்பட்டது. 17. சிவஞான பாலையர் நெஞ்சுவிடுதூது. 255 கண்ணிகள கொண்டது. 18. சிவஞானபாலையர் பிள்ளைத்தமிழ் 100 செய்யுட்கள் கொண்டது.19.சிவஞான பாலையர் தாலாட்டு. 100கண்ணிகள் கொண்டது. 20. சிவஞான பாலையர் திருப்பள்ளி எழுசசி, பாலைய சுவாமி களைத் துயிலெழுப்பும் பாங்கில் அமைந்த நான்கு செய்யுட்களைக் கொணடது. 21. வெங்கை அலங் கராம். 5செய்யுட்களைக் கொணடது.

**சமய சாத்திர நூல்:** 22. சிவப்பிரகாச விகாசம், சைவ சித்தாந்த மரபினை விளக்குவது, பதியியல், பசுவியல், பாசவியல், பிரளயவியல் என்னும் நான்கு இயல்கள கொண்டது. 23. வேதாந்த சூடாமணி. கன்னட மொழியிலிருந்து மொழிபெயர்க்கப்பட்ட இந்நூல் வேதாந்தக் கருத்தினை விளக்குவது. இது 185 விருத்தங்களைக் கொண்டது. 24. சித்தாநத சிகாமணி. வீரசைவ சமயம் பற்றிக் கூறுவது. 880 விருத்தங்கள் கொண்டது. இந்நூல் வடமொழி யிலிருந்து தமிழாக்கம் செய்யப்பெற்றது. 25. சிவநாம மகிமை. 11 பாக்கள் கொண்டது. சிவ என்னும் சொற்பெருமை கூறுவது. அளவை நூல். 26. தருக்க பரிபாடை. வடமொழியிலிருந்து உரைநடையாகச் செய்யப்பட்டது.

**நீதிநூல்:** 27. நன்னெறி, நாற்பது வெண்பாக் களால் இயற்றப்பட்டது. சிறந்த ஒழுக்கங்களை எடுத்துக்கூறுவது.

**பல்துறை:** 28. கொச்சகக் கலிப்பா. இக்காலத்தே கிடைககவில்லை. 29.பெரியநாயகி அம்மைகலித்துறை 30. பெரியநாயகி திருவிருத்தம். 31. தலவெண்பா. 32. நெடுங்கழிநெடில். 33. குறுங்கழிநெடில்.

**வேற்றுச் சமய மறுப்பு:** 34. ஏசுமத நிராகரணம் இது கிறித்தவ சமய கண்டனமாக அமைந்த நூல. இன்று இந்நூலின் இருபாடல்களே கிடைத்துள்ளன.

அ.மா.ப.

*சிவப்பிரகாசப் பெருந்திரட்டு*: திருவாரூர் சிவப்பிரகாசர் என்பார் கி.பி. 16-ஆம் நூற்றாண்டில் வாழ்ந்தவர்; வைதிக அந்தணர் மரபினராகிய இவர் அத்துவைதப் பெருஞானியாய் விளஙகினார். கோவத் தம் என்னும்சிற்றூரில் நாணற் புதர்களிடையே நிட்டை கூடியிருந்த இவரிடம் ஞானோபதேசம் பெற்றுச் சிறப்புற்றவர் சொரூபானந்தர் என்பவராவர். இவரும் அத்துவைத மத சித்தாந்தங்களில் வல்லவரா யிருந்தார். தம்மிடம் உபதேசம் பெற்ற தத்துவராயர் என்பாரைக் கொண்டு அத்துவித நூல்கள் பல ஆக்குவித்தவர்.

சொரூபானந்த் சுவாமியும் அந்நாளில் நிலவிய பல்வேறு ஞான நூல்சளையும் அத்துவைத சித்தாந்த நூல்கள் பலவற்றையும் ஆராய்ந்து நன்கு கற்றுச் சிறந்துவிளங்கினார். தாம் கற்ற நூல்களிலிருந்து வேதாந்தப் பொருள் விளக்கும் பாடல்கள் பல வற்றைத் திரட்டிப் பல்வேறு தலைப்புகளில் பல அதிகாரங்களாக அமைத்தார். தாம் திரட்டிய இந்த ஞானத் திரட்டினைத் தம் ஞான குருவாகிய சிவப் பிரகாசர் பெயரால் 'சிவப்பிரகாசப் பெருந்திரட்டு' என்னும் பெயரில் தொகுத்து உலகிற்கு உதவினார்.

சிவப்பிரகாசப் பெருந்திரட்டு கலைக்கட்டளை, அனுபவக்கட்டளை என்னும் இருபெரும் பகுதிகளைக் கொண்டுள்ளது. முன்னதில் பாயிரப் பணை முதல் பக்குவரியற்பணை ஈறாகப் பதினாறு பணைகளும் பின்னதில் உபதேசப் பணை முதல் மங்கலப் பணை ஈறாகப் பத்துப்பணைகளும் உள்ளன. பணை என்னும் பெருந்தலைப்பின் கீழ்ப் பல்வேறு பொருள் பற்றிய அதிகாரங்கள் காணப்படுகின்றன. அவ்வப் பொருள்களுக்கு ஏற்புடைய பாடல்கள் ஒரு நிரக்கின்றிப் பல்வேறு எண் தொகைகளில் தரப் பட்டுள்ளன. இச்சிவப்பிரகாசப் பெருந்திரட்டின் செய்யுள் தொகை 2821.

இச்செய்யுள்கள 146 நூல்களிலிருந்து திரட்டப் பெற்றுள்ளன. இந்நூல்கள் எல்லாம் அந்நாளில் ஓலைச் சுவடிகளாய் இருந்தனவே. இவற்றுள் மாண் டொழிந்தவை பல; இன்றும் கிட்டுபவை சில; இவற் றுள்ளும் அச்சுருப் பெற்ற நூல்கள் மிகச் சிலவேயாம். சொரூபானந்தர் நோக்கிய நூற்பட்டியலைக் காண்போமாயின் சமய சாத்திரங்களாயும் தோத் திரங்களாயும் அவர் நாளில் பயன்பட்ட நூல்களின் பெருக்கம் தெரியவரும். சிவப்பிரகாசப் பெருந்திரட்டு அச்சுநூலில், அந்நூலின் பெயர்களைப் பதிப்பாசிரியர் அகர வரிசையில் தந்துள்ளார்.

இந்த நூற்பட்டியலைக் கூர்ந்து நோக்கினால் தேவாரம், திவ்வியப்பிரபந்தம் முதலாகவுள்ள தோத் திர நூல்கள் தொடக்கமாக இந்த ஆசிரியர் வாழ்ந்த கி.பி. 16-ஆம் நூற்றாண்டு வரையுளள ஞான நூல் கள் பலவும் இடம்பெற்றிருத்தல் காணலாம். ஞானப் பாடல் திரட்டில் இடம்பெற்ற நூல்கள பல முழுமையாய்க் கிட்டாத நிலைமை இருந்துவருகிறது இந்நூலில் இடம்பெற்ற சில நூல்களுக்கான சுவடி கள் கிட்டுதலும் கூடும். இத்திரட்டில் இடம்பெற்ற 'மெய்ம்மொழிச் சரிதை' என்னும் பெருநூல் சென்னைப் பல்கலைக் கழகத் தமிழாய்வு இதழில் கட்டுரையாக வெளிப்படுத்தப்பட்டுள்ளது

திருநாவுக்கரசர் அருளிய திருமுறைகளை மட்டுமே இத்திரட்டு 'தேவாரம்' என்று குறிப்பிடு கிறது. திருஞான சம்பந்தர் திருமுறைகளைத் 'திருக் கடைகாப்பு' என்றும் சுந்தரமூர்த்தி சுவாமிகளின் பாடல்களைத் 'திருப்பாட்டு' என்றும் குறிப்பிடுதல் நோக்கத்தக்கது.

'இத்திரட்டைப் படிப்பவர் உலோகாயத முதல் வேதாந்த மீறாகவுள்ள மதங்களின் சொரூபமும், கண்டன மண்டனங்களும், யோக லட்சணங்களும், ஞானத்தின் சாட்சாத் சாதனங்களின் சொரூபமும், குருபத்தியின் அருமை பெருமையும் பிறவும் செவ்விதி னுணர்ந்தவராவர்' எனறு பதிப்பாசிரியர் குறிப் பிட்டுள்ளார்.

இத்திரட்டு நூலை முதன் முதலாக 1912-ஆம் ஆண்டில் பரிசோதித்துப் பதிப்பித்தவர் வேதாந்தப் பெரும்புலவர் கோ. வடிவேலுச் செட்டியாரும் மங்கலம் சண்முக முதலியாரும் ஆவர்.

இதனை அச்சிட்டு வெளியிட வேண்டும் என்று ஊக்கமளித்தவர் சென்னை மாநில நீதிபதியாயிருந்த பூ. இராசரத்தின முதலியார் ஆவர். அவர் தம்மிட முள்ள பெருந்திரட்டுப் பிரதிகள் இரண்டினை முதலில் தந்து ஊக்குவித்தார். இப்பெருந்திரட்டு நூலின் பதிப்பாசிரியர் இதனை அச்சிட்ட பின்னர்க் கிடைத்த சுவடிகளை அச்சிட்ட பகுதிகளோடு ஒப் பிட்டுப் பார்த்துக் கிடைத்த திருத்தங்கள் முதலிய வற்றையெல்லாம் 'பிழைதிருத்தம்' என்னும் பகுதியில் தந்துள்ளார்.

மு.ச.

***சிவப்பிரகாச பண்டிதர்***, கி.பி.19-ஆம் நூற்றாண்டில் வாழ்ந்த யாழ்ப்பாணத் தமிழப் புலவர்களுள் ஒருவர். இவர் யாழ்ப்பாணத்திலுள்ள நீர்வேலி என்னும் ஊரில் கி.பி.1864-இல் பிறந்தார் இவர்தம் தந்தையார் பெயர் சங்கர பண்டிதர். தந்தையாரிடமே தமிழ் நூல்களையும் வடமொழி நூல்களையும் நன்கு கற்றுத் தேர்ச்சி பெற்றார். இவர் பாலபாடம், பாலாமிர்தம் முதலிய நூல்களை இயற்றியுள்ளார். மேலும் திருச்செந்தூர்ப் புராண உரை, சிவானந்தலகிரித் தமிழுரை முதலிய உரை நூல்களும் சில மொழிபெயர்ப்பு நூல்களும் எழுதியுள்ளார். இவ்வாறு தமிழ்த் தொண்டு புரிந்த இவர் 1916-இல் காலமானார். வீ. சே.

***சிவப்பிரகாசம்***: சைவ சித்தாந்த உண்மைகளை உலகுக்கு உணர்த்தத் தோன்றிய பதினான்கு சாத்திர நூல்களுள், மெய்கண்டார் அருளிய சிவஞான போதத்தையும், அருணந்தி சிவம் இயற்றிய சிவஞான சித்தியாரையும் அடுத்துப் பயிலத்தக்கதாக அமைந்திருப்பது கொற்றவன்குடி உமாபதி சிவம் இயற்றிய சிவப்பிரகாசம் என்னும் சிறந்த நூல்.

சிவஞான போதம் முதல் நூலாகவும், சிவஞான சித்தியார் வழிநூலாகவும் அமைய இந்நூல் சார்பு நூலாகத் திகழ்கிறது. இறை, உயிர், தளை எனனும் முப்பொருள்களின் இயல்புகளையும் முதல்நூல் வழி நூல்களை ஒட்டி வகுத்துக் கூறினும், அந்நூல்களிற் காணப் பெறாத சில தனித்தன்மைகளும், புதிய போக்குகளும், வியத்தகு விளக்க முறைகளும் இந் நூலின்கண் காணப்பெறுகின்றன என அறிஞர்கள் பாராட்டிக் கூறுவர்.

இந்நூல் காப்புச் செய்யுள் உட்பட 101 ஆசிரிய விருத்தப் பாக்களால் அமைந்ததாகும். சிவப்பிரகாசம் என்னும் பெயர் ஆசிரியராலேயே இடப் பெற்றது என்பது பாயிரத்தாற் புலனாகும். நூல் பொது, உண்மை என இரு பகுதிகளாகப் பகுக்கப் பட்டுள்ளது. இப்பகுப்பு முறையை நூலின் தொடக்கம், நடு, இறுதி என்னும் மூவிடங்களிலும் குறித்துள்ளார். ஆசிரியர் இந்நூலை முதல்நூல் வழிநூலகளிற் காணப்படுமாறு போலப் பன்னிரு சூத்திரங் களாகப் பகுத்துக்கொள்ள விலலை எனபதும், பொது, உண்மை எனபதே அவரது பகுப்பு முறை என்பதும் அறிந்துகொள்ளுதற்குரியது. இப்பொழுது இந்நூலிற் காணப்படும் சூத்திரப் பகுப்புமுறை பின்வந்தோரால் செய்யப்பெற்றதாதல் வேண்டும்.

உமாபதி சிவம் பாயிரப் பகுதியில் திருநந்தி தேவர் முதலான அகச் சந்தான குரவர் நால்வரைக் குறிப்பிடுகின்றார். இக்குறிப்பு முதல் நூலாகிய சிவஞான போதத்திலோ, வழிநூலாகிய சிவஞான சித்தியாரிலோ காணப்பெறாத புதிய செய்தியாகும். இந்நால்வரோடு மெய்கண்ட தேவர், அருணந்தி சிவம், தமது ஆசிரியராகிய மறைஞான சம்பந்தர் ஆகிய மூவரையும் சேர்ததுப் போற்றுகிறார்; தமது குருவாகிய மறைஞான சம்பந்தருக்குத் தனியாகவும் வணக்கங் கூறியுள்ளார்.

'புறச் சமயத்தவர்க்கிருளாய்' எனத் தொடங்கும் பாடலில், பிறசமயக் கொள்கைகளோடு உறழ வைத்துச் சைவ சித்தாந்தத்தின் உயர்வினை ஆசிரியர் எடுத்துக்காட்டியுள்ள திறம் அவரது தெளிந்த சமயநூற் புலமைக்குச் சான்றாக உள்ளது.

சிவஞானம் ஒன்றே வீடுபேற்றிற்குரிய சிறந்த சாதனம் எனப்படும். அது பரஞானம், அபர ஞானம் என இரு வகைப்படும். பரஞானம் என்பது உயிரைப் பிணித்துள்ள மல இருளை நீக்கும் திருவருள் ஆகும். அபரஞானம் என்பது அத்திருவருளைப் பெறுதற்குரிய நெறியை மயக்கமற உணர்த்தும் சிவாகமங்களாகும். இவ்வாறு உமாபதி சிவம் பாயிரத்தில் தெளிவுபடுததிக் கூறியுள்ளார்.

அவையடக்கத்தில் 'தொன்மையவாம் எனும் எவையும் நன்றாகா; இன்று தோன்றிய நூல் எனும் எவையும் தீதாகா' என ஆசிரியர் கூறியிருப்பது இனறைய ஆராய்ச்சியுலகம் ஏற்றுப்போற்றுதற்குரிய கருத்தாக மிளிர்கிறது.

உமாபதி சிவம் பொது எனப்படும் முற்பகுதியில் இறைவனாகிய பதியின் இலக்கணம், உயிராகிய பசுவின் இலக்கணம், ஆணவம் மாயை கன்மங்களாகிய பாசத்தின் இலக்கணம் ஆகியவற்றைத் தெளிவான முறையில் தொகுத்துத் தநதுள்ளார். தத்துவங்களின் தோற்றமும் ஒடுக்கமும், அவை காரியப் படும் முறைமையும் இப்பகுதியில் விளக்கிக் கூறப்பட்டுள்ளன. உயிர் அடையும் மூன்று நிலைகளாகிய கேவலம், சகலம், சுத்தம் என்பவை பற்றிய விளக்கத்தையும் இங்குக் காணலாம்.

உண்மை எனப்படும் பிற்பகுதியை ஆன்மா, அஞ்சவத்தை, உணர்த்தும் தன்மை, ஞான வாய்மை, அதன் பயன், புனிதன் நாமம் (திருவைந்தெழுத்து), அணைந்தோர் தன்மை என ஏழாகப் பகுத்துக் கொண்டு விளக்கியுள்ளார். ஞானத்தின் பயனை ஆன்ம தரிசனம், ஆன்ம சுத்தி, ஆன்ம லாபம் என மூன்றாக அமைத்துக் காட்டுகிறார். உயிர் ஞானம் பெறும் முறையைப் பத்துப் படிநிலைகளாக உணர்த்

துவது தச காரியம் எனப்படும். உமாபதி சிவம் அப் பத்தினையும் இம்மூன்றனுள அடக்கி அழகுற விளக்கி காட்டியுள்ள திறத்தினை இந்நூலிற் காணலாம். திருவைந்தெழுத்து, அணைந்தோர் தன்மை ஆகிய வற்றை இநநூலிற் போலவே தமது மற்றொரு நூலாகிய திருவருட் பயனிலும் ஆசிரியர் விளக்கிக கூறியுள்ளமை அறிதற்குரியது.

சிவஞான முனிவர் தமது சிவஞான பாடியத்தில சித்தாந்த நுட்பங்களை விளக்கும் இடங்களில் சிவப் பிரகாசத்தினினின்றும் மிகுதியான மேற்கோளகளை எடுத்துக்காட்டியுள்ளமை இந்நூலின இன்றியமை யாச் சிறப்பினைப் புலப்படுத்துவதாகும். சிவாகமங்க ளாகிய கடலைக் கடகக உதவும் மரக்கலம் என இந்நூலைக குறிப்பிட்டுப் பாராட்டுவர் நிரம்ப அழ கிய தேசிகர். டி.பி.சி.

**சிவப்பிரகாசம் பிள்ளை.மு.** கி.பி.19- ஆம் நூற்றாண்டின் பிறபகுதியிலும் 20-ஆம் நூற்றாண் டின் முற்பகுதியிலும் வாழந்த தமிழப் புலவர்களுள் ஒருவர். இவா தெனனார்ககாடு மாவட்டம் சிதம் பரததிற்கு அருகில் உளள இடையன்பாற்சொரி என்னும் ஊரில் முத்துச்சாமிப் பிள்ளைக்கும் சொர்ணம்மாளுக்கும் கி.பி.1875-ஆம் ஆணடு மகனா கப் பிறந்தார்.தமிழ், ஆங்கிலம் முதலிய மொழிகளில் மிகக ஈடுபாட்டுடன் பயினறு புலமையாளரானார். பள்ளிக் கல்வியை முடித்துக் கொண்ட இவர் கல் லூரியில் தத்துவததை விருப்பப் பாடமாகக கொணடு இளங்கலைப் பட்ட வகுப்பில பயின்று வெற்றி பெற் றார். பினனர்த் தென்னார்க்காடு மாவட்டத் தலை வர் அலுவலகத்தில் வருமான வரித் துறையில பணியாற்றினார். இளமை முதற் கொண்டே இவர் தத்துவப் பாடத்தில ஆாவம கொணடிருந்தமையால் அறிவு நூல்களைக் கறறு உண்மைப் பொருளை அறிய முயற்சி செய்தார். இவருககுக கிடைத்த ஓய்வு நேரங்களிலெல்லாம் தத்துவ ஆய்விலேயே ஈடு பட்டார்.

இவர் தம் அலுவல் காரணமாகத் திருவண்ணா மலைக்குச் சென்றாா. அப்பொழுது அங்கிருந்த இர மண முனிவரின் தவக்கோலத்தினைக் கண்டார். அம்முனிவரை அணுகி நான்யார் என்பதைத் தெளி வாகச் சொல்லுமாறு கேட்டார். மௌன நிலையி லிருந்த அம்முனிவர் இவருக்கு அதன் பொருளை எழுத்து மூலமாகத் தெளிவாககினார். அவ்வகையில் மெய்யறிவு பெற்றுத் திரும்பிய இவர் மீண்டும் திரு வண்ணாமலைக்குச் செல்வதையும் அம்முனிவரைக கண்டு வணங்குவதையும் வழக்கமாகக் கொண்டார். இவ்வாறு இம்முனிவரிடம் அன்பும் ஈடுபாடும் கொணடிருந்த இவர் இரமண சற்குருமாலை, இரமண சரித அகவல், இரமண தேவமாலை, இரமண பாத மாலை, நானாா, விசார சங்கிரகம் முதலிய நூல்களை இயற்றியுள்ளார். மேலும் உள்ளது நாற் பது என்னும் நூலுக்கு உரையும் எழுதியுள்ளார். இவர் 1948-ஆம்ஆண்டு காலமானார். வீ.சே

**சிவப்பிரகாசர்** (சுகவனம்) 20-ஆம் நூறறாண டில வாழ்ந்த தமிழப் புலவர்களுள் ஒருவர். இவர் சேலம் மாவட்டத்தில் உளள வலசையூர் பண்ணியப் பட்டி என்னும் ஊரில் சினனைய பிள்ளைககும் அரங் கம்மாளுக்கும் மகனாகத் தோன்றினார். இவர் கருணீ கர் மரபினர் ஆவார். இவா தமிழிலுமஆங்கிலததி லும் ஆர்வமுடையவராக விளங்கினார் இளமை முதல் நன்றாகக் கல்வி கறறு வநத இவர் மதுரைத் தமிழ்ச் சங்கம் நடத்திய தேர்வில் வெற்றி பெற்று 1919-இல் பால பண்டிதர் பட்டம் பெறறாா. பின்னர் அங்கேயே 1921-இல் பணடிதா பட்டமும் பெற்றாா. இவர் 1916-19-ஆம் ஆணடுகளில சேலம் அரசினர் ஆசிரியா பயிறசிப் பள்ளியில் ஆசிரியர் பயிற்சி பெற்றார். மேலும சிதம்பரத்திலிருந்த மீனாட்சி கீழ்த்திசைக் கல்லூரியில் பண்டிதர் பயிற்சியும் பெற் றார். இவர் 35 ஆணடுகள் சேலம் மாவட்டத்தில் உள்ள உயர்நிலைப் பள்ளிகளிலும் சில ஆணடுகள் சென்னை வேப்பேரியிலுள்ள உலூர்து மகளிர் உயர் நிலைப் பளளியிலும் தமிழாசிரியராகப் பணிபுரிந்துள் ளாா். இவர் ஆசிரியர் தொழிலேயனறிச் சமயத் தொடாபான சொற்பொழிவுகளையும் பல இடங் களில் செய்துள்ளார். இவர் சைவ சமயத்தில் பற்றுக் கொண்டிருந்தாலும் சிறப்பாகத் தம் கருணீக மரபினருக்காகப் பெரிதும பாடுபட்டார். அவா மரபின் பெயரிலேயே கருணீகமித்திரன் என்னும் இதழை 1924-இல் தொடங்கினார். இவாதம் குல உயர்வைக் கருதி 1926-இல் காஞ்சிபுரத்தில் கருணீ கர் மாநாடு ஒன்றைக் கூட்டி நடத்தினாா. இவர் வடலூர் அடிகளாா வரலாறு, பெண்மனம, உடல் நலம், கபிலை வாசகம், சவகர் சதை, குட்டிக்குறள் திருக்குறள் நூறபா, சைன தருமம் முதலிய நூல் களை எழுதியுள்ளார். வீ.சே.

**சிவப்பிரகாசர், தில்லை** கி.பி. 17-ஆம் நூற் றாண்டில் வாழ்நத தமிழ்ப் புலவர். சைவ சமயத்தைச் சேர்ந்தவர். இவர் திருவாவடுதுறையைச் சேர்ந்தவர் என்பர் சிலர். இவர் இளமையில் தொண்டை நாட் டில் பாலாற்றங்கரையில் அமைந்துளள முப்பந் தோட்டி என்னும் ஊரில வாழ்ந்து வந்தார். தெய்வ பக்தி மிக்க இவர் அவ்வூரில் கோயில் கொண்டுள்ள சோமநாதேசுவரர் மீது பிரபந்தம் ஒன்று பாடினார்.

அப்பிரபந்தம் முப்பந் தொட்டியுலா எனப் பெயர் பெறும். அந்நூல் 427 கண்ணிகளைக் கொண்டு படிப் பதற்கு இனிய நூலாக அமைந்துள்ளது. அங்கிருந்து சிதம்பரம் சென்று நடராசப் பெருமான் திருவடியை வணங்கும் பொருட்டுச் சிலகாலம் அங்கேயே தங்கி வாழ்ந்தார். அதனால் இவர் தில்லைச் சிற்றம்பலவர் என்ற வேறு பெயராலும் வழங்கப்பட்டார். சிதம்பரத்தில் வாழ்ந்த காலத்தில் இறைவனுடைய அருளால் சைவசித்தாந்த சாத்திரங்கள் பதினான் கனுள் திருவுந்தியார், திருக்களிற்றுப்படியார் ஆகிய இரு நூலகளுக்கும் உரை எழுதினார். அவ்வுரை படிப்பதற்குத் தெளிவாகவும் விரிவாகவும் அமைந்தது அந்நூல்களுக்குக் கிடைத்துள்ள உரைகளுள் இவரு டைய உரையே பொருட் சிறப்புப் பெற்று விளங்கு கின்றது. அனைவராலும் விரும்பிக் கற்கக் கூடியதாய் உள்ள அந்நூல் மூலநூலின் கருத்தை மாற்றாமல் எடுத்துரைப்பதாக அமைந்துள்ளது. வீ.சே.

**சிவப்பிரகாசர், மதுரை:** சிவப்பிரகாசர் என்னும் பெயரில் சைவ சமய ஆசிரியர்கள் சிலர் இருந்துள்ளனர். அவர்களுள் வேறுபாடறிய இவர் மதுரைச் சிவப்பிரகாசர் எனப்படுகின்றார். இவர் சைவ சித்தாந்த சாத்திரமாகிய இருபா இருபஃது, சிவப்பிரகாசம் ஆகிய நூல்களுக்கு உரை வரைந்துள் ளார். இவரது காலம் கி.பி.15-ஆம் நூற்றாண்டாகும். மதுரை ஞானப்பிரகாசர் என்பவர், சிற்றம்பல நாடிகள் மரபில் வந்தவர்; காவை. அம்பலநாதத் தம்பிரானுக்கு மாணவர். அந்த ஞானப்பிரகாசரின் சீடர் சிவப்பிரகாசராவார். இவர் துறவியாக வாழ்ந் தார். இவர்இருபா இருபஃது என்னும் சித்தாந்த சாத்திர நூலுககுச் சகம் 1410-ஆம் ஆணடில் (கி பி.1488) உரைஎழுதிய செய்தியினை உரைநூலின் பாயிரப்பாடல் குறிப்பிடுகிறது. உரை எழுதுமுன் இருபா இருபஃது நூல் தோன்றிய வரலாறறினை எழுதியுளளார். சிவப்பிரகாசத்திற்கு விரிவான உரை இயற்றியுள்ளார். இதன் 22-ஆம் திருவிருத்த உரை யில் சிவஞான சித்தியார்ச் செய்யுள ஒன்றுக்கு உரை வரைந்துள்ளார். இவர் தம் உரையில் கூறுங் கருத்துகளுக்கு ஆதாரமாக எடுத்துக்காட்டுத் தரும் போது, எடுத்தாளும் பாடல்களின் நூற்பெயரைக் குறிப்பிடுகிறார். அதனால் இவரால் குறிப்பிடப்படும் நூல்களின் காலத்தை அறியும் வாய்ப்பு உண்டா கிறது. வடமொழியிலும் வல்லவராகிய இவர் சூத சங்கிதை, அசிந்திதம் போன்றவற்றிலிருந்து மேற கோள் காட்டியுள்ளார். திருக்கோவையாரை இவா கோவைத் திருவாசகம் என்றும் திருககுறளைத் திருவள்ளுவப் பயன் என்றும் கூறுவது குறிப்பிடதக்க தாகும். சாத்திரக் கருத்துகளுக்கு இவர் மிகுதியாகத் திருமுறைகளிலிருந்தே சான்றுகள் காட்டுவது மரபு ஒளவைக் குறளை வீட்டு நெறிப்பால் என்கின்றார். இவருக்குப் பின்னர் இவருடைய உபதேச பரம்பரை தொடர்ந்து வந்தது. அ.மா.ப.

**சிவபாதசுந்தரம்,** சு., கி.பி. 19-ஆம் நூற் றாண்டின் பிற்பகுதியிலும் 20-ஆம் நூற்றாண்டின் முற்பகுதியிலும் வாழ்ந்த தமிழ்ப் புலவர். இவர் யாழ்ப்பாணத்திலுள்ள புலோலியூரில் சுப்பிரமணியம் பிள்ளைக்கும் வள்ளியம்மை அம்மையாருக்கும் கி.பி.1878-இல் மகனாகத் தோன்றினார். இவர் இளங் கலைப் பட்ட வகுப்பு வரை படித்துச் சென்னைப் பல்கலைக் கழகத்தில் பட்டம் பெற்றார். இவர் தமிழையும் வடமொழியையும் வ. கணபதிப் பிள்ளை, பார்வதி அம்மையார் முதலியோரிடத்தில் சிறப்பாகப் பயின்று தேர்ச்சிபெற்றார். இவர் தம் உறவினர் பள்ளியொன்றில் ஆசிரியராகப் பணியைத் தொடங்கித் திரிகோணமலையில் உள்ள புனிதசோசப் புப் பள்ளியில் தலைமை ஆசிரியராகப் பதவி உயர்வு பெற்று இரணடாண்டுகள் பணியாற்றினார். பின்னர் விக்டோரியா கல்லூரியின் முதல் தலைமையாசிரிய ராகப் பொறுப்பேற்றார். அப்பணியில் நனறாக ஈடுபட்டுச் செயலாற்றியதனால் அக்கல்லூரியின் முதல்வர் பொறுப்பும் இவருக்குக் கிடைத்தது. இலங்கை அரசு அந்நாட்டின் கல்வி முறையை மாற்றி அமைக்கும் பொருட்டு ஓர் ஆணைக் குழுவை 1939 -இல் அமைத்தது. அக்குழுவில் இவரும் நியமன உறுப்பினராகச் சேர்ந்து செயல்புரிந்துள்ளாா.

சைவ சமயத்தில் நாட்டம் கொண்ட இவர், அச் சமயத்தினை இகழும் கிறித்தவர்கள், சைவ சமயத்த வரை மதம் மாற்றம் செய்பவர்கள், கோயில்களில பலியிடுவோர் முதலியோரைக் கடுமையாகக் கண்டித்தார். சமயம் பரவுவதற்குப் பள்ளிகள்தாம் முதன்மையானவை என்பதையுணாந்து சைவப் பாட சாலைகளைப் பல இடங்களில் தொடங்கத் திட்ட மிட்டார். திருக்கேதீசரக் கோயில் திருப்பணிக் குழு வின் தலைவராக இருந்து தொண்டாற்றியுள்ளார். தம்முடைய இறுதிக் காலத்தில் அமைதியான வாழ்க்கை வாழ விரும்பிக் 'கந்தவனம்' என்னும் முருகன் கோயிலுக்கு அருகில் திருமடம் ஒன்றனை அமைத்து அங்கிருந்து சைவத் தொண்டு புரிந்தார்.

இவர் தமிழிலும் ஆங்கிலத்திலும் நூல்கள் பல இயற்றியுள்ளார். இவர் சைவபோதம், சைவக்கிரியை விளக்கம், சைவசமய சாரம், சைவ சமயத்தின் பெருமை, கந்தபுராண விளக்கம், திருவருட் பயன் விளக்கவுரை, திருவாசக மணிகள், திருப்பெருவடிவம், அளவைநூல், அகநூல் முதலியவற்றைத் தமிழில்

எழுதியுள்ளார். மேலும், அளவையியலின் அடிப்படைக்கூறுகள் (Essentials of Logic) இந்து சமயத்தின் சைவக் கோட்பாடு (Saiva School of Hinduism), சைவ சமயத்தின் பெருமைகள் (Glories of Saivism) ஆகிய நூலகளை ஆங்கிலத்திலும் எழுதியுள்ளார். இவ்வாறு சைவததிறகும் தமிழிற்கும் தொண்டு புரிநத இவர் 1953-ஆம் ஆணடு காலமானார்.
வீ.சே.

**சிவராசபிள்ளை, கே.என். (கி.பி. 1879-1941):** ஆங்கிலம் கற்று மேனாட்டுக் கலைப்பண்பில் திளைத்து ஆசையுடன் அருந்தமிழ் கற்று பெருந்தொண்டு புரிந்த பெருமக்களுள் ஒருவர் கே.என். சிவராசபிளளை. இவர் பத்திரிகை வாயிலாகத் தம்மைத் தமிழுலகிற்கு அறிமுகப்படுத்திக்கொணடவர். தமிழிலும் ஆங்கிலத்திலும் சிறந்த முறையில ஆய்வுரைகளை எழுதி இந்த நாட்டில் மட்டுமன்றி வெளிநாட்டிலும் அறிஞர்களின் நன்மதிப்பைப் பெற்றவர். இயல்பாகக் கவிபாடும் திறம்பெற்ற கவிஞா. இத்தகைய பேராற்றல் படைத்து விளங்கிய சிவராச பிளளை சென்னைப் பல்கலைக் கழகத் தமிழாராய்ச்சித் துறையின முதல் தலைவராய் அமரும சிறப்பினைப் பெற்றார்.

இவர்தம் மூதாதையர் கன்னியாகுமரி மாவட்டம் என வழங்கும் நாஞ்சில் நாட்டில் வீமநகரி என்னும் ஊரைச் சார்நதவராயினும், சிவராச பிள்ளை பிறந்தது திருநெல்வேலி மாவட்டத்திலுள்ள கங்கை கொண்டான எனனும் ஊரிலாகும். இவருடைய தந்தையார் பெயர் நாராயண பிள்ளை என்பது. இதனால்தான் ஆங்கில முதலெழுத்துகளைக் கொணடு கே.என். சிவராசபிள்ளை என வழங்கப் பெற்றாா. இவர்தம் தாயார் பெயர் முத்தம்மை என்பது இவருடைய தமையன்மாா மூவருள் கே.என். குமரேச பிள்ளை தமிழிலும் சிறப்பாகக் கம்பராமாயணததிலும் பேரீடுபாடு கொண்டிருந்தாா. 'கம்பராமாயணம் குமரேசபிள்ளை' என்னும் சிறப்புப் பெயர் பெற்று விளங்கினார். இவருடன் சிவராச பிள்ளையும் சேர்நது தமிழாராய்ந்து இரட்டையர் எனப் போறறும் வகையில் வாழ்ந்து வந்தனர்.

சிவராசபிளளையின் படிப்பு நாகர்கோயிலிலும் சென்னைக் கிறித்தவக் கல்லூரியிலும் நிகழ்ந்தது. இவர் பி.ஏ. பட்டதாரியானார். பட்டம் பெற்றதும் சில காலம் சுசீந்திரத்தில் காவல்துறை மேலாளராய்ப் பணியேற்றாா. இலக்கிய நாட்டமுடைய இவர் அதனை விடுத்து விலகினார்; பத்திரிகை நடத்த முற்பட்டார். இவர் வெளியிட்ட பத்திரிகை 'நாஞ்சில்நேசன்' என்னும் வாரப் பத்திரிகையாகும். பின்னர்த் திருவனந்தபுரத்தில் பேராசிரியர் சுந்தரம் பிள்ளை நடத்தி வந்த 'பீப்பிலசு ஒப்பினியன்' என்னும் ஆங்கில இதழின் துணையாசிரியரானார். திருவனந்தபுரத்திலிருந்தே 'மலபார் குவார்ட்டர்லி ரிவ்யூ என்னும் முத்திங்கள் இதழையும் ஆங்கிலத்தில' நடத்தி வந்தார். இவர் பததிரிகை வழி வெளிப்படுத்திய தமிழ் ஆங்கில ஆய்வுரைகள் அறிஞர் பெருமக்களின் போற்றுதலைப் பெற்றன. கெயிக்குவார் பரோடா மனனர் அறிவித்திருந்த கட்டுரைப் போட்டியில் உலக அறிஞர்களோடு கலநதுகொண்டு முதற் பரிசு பெற்று உலக அறிஞர்களிடையே தமிழன் புகழை நிலைநிறுத்திய பெருமைக்குரியவரானார். சிறு பாமாலை, மேக மாலை என்பவை அந்நாளில் வெளிவரத் தொடங்கின. இவ்வாறாகப் பத்திரிகை வாயிலாகவும், நூல வாயிலாகவும் வெளிவந்த தமிழ்-ஆங்கில ஆய்வுரைகளும் கவிதைகளும, இவாதம் புலமையை உலகறியச் செய்தன. சில காலம், இலங்கை யாழ்ப்பாணத்தில புகழுடன விளங்கிய சர். பொன்னம்பலம் இராமநாதன் அழைப்பினபேரில அங்குச் சென்று அவருடைய நூலுக்காகத் துணை புரிந்து திரும்பினார்.

சென்னைப் பல்கலைக் கழகத்திலே 1927-ஆம் ஆண்டு தமிழ்த்துறை தொடங்கப்பெற்றபோது, சிவராசபிள்ளை அத்துறையின் முதல் தலைவராய் அமரும் பேறு பெற்றார். ஏறத்தாழ ஏழாண்டுகள இங்குப் பணிபுரிந்தார். 'உந்து' என்னும் சொல்லாராய்ச்சி அல்லது புறநானூற்றின் பழமை என்னும் ஆய்வு நூல் தமிழில் வந்தது (1929). தமிழிலக்கியம் இலக்கணம் முதலியன தொடர்பாக ஆய்வுக் குறிப்புகள் பலஅவவப்போது வெளிவந்தன. இப் பல்கலைக் கழக வழி தமிழகததில் அகத்தியர் (Agasthiya in Tamil Land, 1930), பழந்தமிழர் காலக் கணிப்பு (Chronology of Early Tamils, 1932) என்னும் இரு நூல்களஆங்கிலத்தில் வெளியாயின. நடுநிலையுடன் பொருளகளை ஆராய்ந்து தகுந்தமுறையில் விருப்பு வெறுப்பினறி இவர் வெளியிட்டுளள பாங்கினை இவர்தம்ஆய்வுரைகளில் காணலாம்.

இவர் 1934-இல் ஓய்வு பெற்றபின் நாகர் கோவில் நகரில் தமககெனச் சொந்த இல்லம் ஒன்று கட்டிக்கொண்டு வாழ்நதுவந்தார். தமிழ்ப் பணிகளில் தொடர்ந்து ஈடுபட்டு வந்தார். திருவிதாங்கூர்ப் பல்கலைக் கழகத்தில் தமிழ் நிலைபெற ஆவன செய்தார். 'சனமித்திரன், என்னும் பெயரில் பத்திரிகையும் நடத்தி வரலானார். இந்நாளில் இவர் எழுதியவை பல. 'நாஞ்சில் வெணபா' என்பது 1935-இல் வெளியிடப்பெற்றது. இவர் எழுதி வைத்துச் சென்றுள்ள தமிழ்ச் செல்வங்களுள் வாழ்ககை நூல், கம்ப

ராமாயணக் கௌத்துபம், உரிச் சொல்லாராய்ச்சி, சில தமிழ்ச் சொல்லாராய்ச்சி, புதுஞானக்கட்டளை, இயற்கைப் பாவினமும் சில்லறைப் பாக்களும், நாட்டுக் கணணிகளும், சந்தப்பாக்களும், இசைப்பாட்டுகள் என்பவை குறிப்பிடத்தக்கன.

1941-இல் சிவராசபிள்ளை மறைந்தபின், இந் நூல்களும் அவர் எழுதி வைத்திருந்த பல குறிப்புகளும் பேணுவாரின்றிப் போயின. பிள்ளையவர்களின் மூத்த மகளார் சரசுவதியம்மையாரின் முயற்சியால், சில தமிழ்ச் சொலலாராய்ச்சி, கம்பராமாயணக் கௌத்துபம் என்பவை வெளிவந்தன. ஏனையவை வெளிவராமல் முடங்கிக் கிடக்கின்றன. அந்நூல்களும் அச்சில் வெளிவருமாயின் சிவராசபிள்ளையவர்களின் முழுமையான உழைப்பின் பயனைத் தமிழுலகம் பெற இயலும். மு.ச.

*சிவராத்திரி*: சிவபிரானைக் குறித்து விரதம் காக்கும் இரவு சிவராத்திரி என்னும் பெயரால் வழங்கப்பட்டு வருகிறது. வைணவர்களுக்கு ஏகாதசியைப் போலச் சைவர்களுக்கு மிகவும் சிறப்பான விரதநாள் சிவராத்திரி. இரண்டுக்கும் மிக முக்கியமான ஒற்றுமை ஒன்று உண்டு. இவ்விரு நாட்களிலும் விரதம் இருப்பமர்கள் இரவு முழுவதும் உறங்குவதில்லை.

மாசி மாதம் தேய்பிறை நாளில்வரும் சதுர்த்தசி இரவு பதினான்கு நாழிகை அளவுள்ள காலம் 'மகா சிவராத்திரி' 'புண்ணியகாலம்'என அழைக்கப்படுகின்றது. தேய்பிறை நாள் திரயோதசி 30 நாழிகைக்குச் சதுர்த்தசி வியாபிப்பது உத்தமம் என்றும், திரயோதசி இல்லாமல் சதுர்த்தசி வியாபிப்பது அதமம் என்றும் ஆகமநூல் கூறுகின்றன. அது இலிங்கோற்பவ காலம். எனக் கருதப்படுகின்றது.

சிவராத்திரியன்று அமாவாசை கலந்திருக்குமானால் அது பரியாய சிவராத்திரி எனப்படும். மகா சிவராத்திரியன்று வரும் திரயோதசி சிவபெருமானுக்குத் திருமேனி எனவும். சதுர்த்தசி தேகி எனவும் கூறப்படுகிறது,

மகா சிவராத்திரி சைவர்கட்கு மிகவும் முக்கியமான விரதநாள், பிரமன் திருமால் இருவரின் பொருட்டுச் சிவ பரம்பொருள் இலிங்க வடிவமாக எழுந்தருளிய அந்நாள் தேவர்களாால பூசிக்கப்பட்டதெனவும் கூறுவர்.

சிவராத்திரி பற்றிப் பல்வகை விளக்கங்கள கூறப்பட்டுளளன. சிவசக்தி ஒரு பிரம கற்பத்தில நான்கு யாமத்திலும் சிவனைக குறித்துப் பூசை செய்து அதனைச் சிவராத்திரியாக அனைவரும் கொண்டாடும்படி வரம் பெற்றாள். அதுவே சிவராத்திரி. ஒரு முறை அம்பிகை விளையாட்டாக இறைவன் கண்களைக் கையால் பொத்த உலகம் முழுவதும் இருண்டமையால் மீண்டும் ஒளி உண்டாவதற்காகத் தேவர்கள் சிவபெருமானை வேண்டித் தொழுதநாள சிவராத்திரி. ஒரு கற்பகாலத்தில் அண்டங்கள யாவும் இருண்டன. உருத்திரர் அவ்விருள் நீங்குவதற்காகச் சிவபரம் பொருளை வேண்டிப் பூசித்து வரம் பெற்ற நாள் சிவராத்திரி. தேவர்கள் அமுதம் பெற வேண்டிப் பாற்கடலைக் கடைந்தனர். அதில் எழுந்த ஆலகால நஞ்சினைச் சிவன் உட்கொண்டார். அதன் நச்சுக் கொடுமை நீங்குவதற்காகத் தேவர்கள் இரவு முழுவதும் கண்விழித்துப் பூசை செய்த நாள் சிவராத்திரி. கோவில்களில் இரவு ஆறுகாலப் பூசனை செய்து வழிபாடு செய்வர்.

சைவர்கள் தூய்மையாக இருந்து இரவு முழுவதும் கண்விழித்துப் பட்டினியாயிருந்து விரதம் காப்பர். பக்திப் பாடல்களைப் பாடுவர். பூசைகள் செய்வர். கண் விழிப்பதற்காகக் கதா காலட்சேபங்களும் நடக்கும். இவ்விரதத்தை மேற்கொள்வோர் இம்மையில் பலவகைச் செல்வங்களையும் பெற்று, மறுமையில் முத்தி அடைவர். அ.ஆ ந.

*சிவராமமூர்த்தி*, க. 20-ஆம் நூற்றாண்டில் கலை வரலாற்றில் அறிஞராக விளங்கியவர் இவர் தமிழ்நாட்டில் வடஆர்க்காடு மாவட்டத்தில் களம்பூர் என்னும் ஊரில் பிறந்தார்.இவரது தந்தையார் சுந்தர சாத்திரி, தாயார் மரகதவல்லி அம்மையார். இவர் தம் வாழ்நாள் முழுவதும் இந்தியக் கலை வரலாற்றை ஆராயும் பணியில் ஈடுபட்டார். தொல்பொருள் ஆய்வாளராகவும் வல்லுநராகவும் கல்வெட்டாய்வாளராகவும், வரலாற்று வல்லுநராகவும், வடமொழி அறிஞராகவும் விளங்கிய இவர் இந்தியக்கலையின் கூறுகளை ஆராய்ந்து அவற்றின் பெருமைகளை உலகுககு வெளிப்படுத்திய மாபெரும் அறிஞர் ஆவார்.

க.சிவராமமூர்த்தி சென்னைப் பல்கலைக் கழகத்தில் சமசுகிருதத்தில் முதுகலைப்பட்டம் பெற்ற பின் சென்னை அரும்பொருட் காட்சியகத்தில் தொல்லியல் பிரிவின் காப்பாளரானார். இத்துறையிலும், இது தொடாபுடைய பல்வேறு துறைகளிலும் இவர் சீரிய முறையில் தொண்டாற்றினார். பின்னர் இந்தியத் தொலபொருள் பரப்பாய்வுத் துறையின் இயக்குநராகக் கல்கத்தா அரும்பொருட்காட்சிச் சாலையில் பணிபுரிந்தார். இவர் கலை, சிற்பம், ஓவியம், வரலாறு ஆகிய துறைகளில் ஆர்வம் காட்டினார்.

புதுதில்லியில உள்ள தேசிய அரும்பொருட் காட்சிச்சாலையின் இயக்குநராகப்பின்னா மாற்றஞ் செய்யப்பட்டார். சீரிய முறையில் பண்டைய கலை களில் ஆய்வுகள் மேற்கொண்ட இவரை இந்திய அரசு அரும்பொருட்காட்சிசாலைகளின் மதிப்பியல் அறிவுரை யாளராக நியமித்தது பாரிசு நகரில உள்ள அரும் பொருட் காட்சி சாலைகளின் பன்னாட்டுக் குழுவில செயற்குழு உறுப்பினராகவும், பின்னர் அந்நிறுவனத் தின் இந்தியத் தேசிய குழுவின் தலைவராகவும் இவர் தொண்டாறறினார்.

இலலித கலைக் கழகத்தின் ஆராய்ச்சியாளராகத் திகழ்ந்த இவர் அமெரிக்காவிலும் ஐரோப்பியநாடுகளி லும் பல கருத்தரங்குகளில பங்குபெறறார். இந்தியா வைப் பற்றிய கல்வி நிறுவனங்களிலும் (Institutes of Indology)சிறப்பு ஆராய்ச்சியுரைகள பல ஆற்றியுள் ளார். காஞ்சி சங்கராச்சாரியார் இவருக்கு 'விசிததிர சித்தன்' என்ற பட்டத்தை அளித்துச் சிறப்பித்தார். 'பத்ம சிரீ' (Padma Sri) என்ற விருதை 1968-இலும், 'பத்மபூசன்' (Padma Bhusan) என்ற விருதை 1976-இலும் இந்திய அரசு இவருக்கு அளித்துப் பெருமைப் படுத்தியது.

இந்தியக் கலை, சிற்ப, ஓவிய வரலாறுகளைக் கற்று அறிந்து, ஆய்வுகளை மேற்கொண்ட சிவராம மூர்த்திதாமே ஒரு நல்ல சிற்பியும் கலைஞரும் ஆவார். மேற்கூறிய வரலாறுகளையும், கல்வெட்டியல, நாணயவியல், இறை உருவவியல் ஆகியவற்றையும் பொதுமக்களிடையே பரப்புவதற்கு இவர் பல ஆய்வு நூல்களை வெளியிட்டுளளார். இவரே தம் நூல்களில் வரைபடங்களையும் வரைந்துளளார்.

சவகர்லால் நேரு ஆதரவுத் திட்டத்தின் கீழ் 'இந்தியக்கலை, இலக்கியத்தில் நடராசர்' என்னும் பொருள் பற்றி இவர் ஆய்வுகள மேற்கொண்டு நூல ஒன்றை வெளியிட்டுள்ளார். இந்நூலில இந்திய ஓவிய வரலாற்றினை அழகுற எடுத்துரைத்துள்ளார் இவருடைய இந்தியககலை (The Art of India), சிவ நடனம் (The Dance of Siva), 'சமணக் கலை ஆய்வு (Panorama of Jaina Art) ஆகிய நூல்கள உலக அறிஞர்களிடையே புகழ் பெற்றனவாம்.

இவர் எழுதிய மற்ற நூலகளுள் குறிப்பிடத் தக்கவை முற்காலக் கீழைச் சாளுக்கியச் சிற்பம், காளிதாசரால் அகத்தூண்டுதல் அளிக்கப்பட்ட சிற்பம், வடமொழி இலக்கியமும் கலையும், இந்தியப் பண் பாட்டின் மெய்விளக்கங்கள, இந்தியச் சிற்பம், இந்தியப் படிமங்கள், தென்னிந்தியப் படிமங்கள், கழுகுமலையும் முற்காலப் பாண்டியர் குகைக் கோயில்களும் தென் னிந்திய ஓவியங்கள், இந்திய ஓவியம் ஆகியவையாகும் இவர் 1985-ஆம் ஆணடு காலமானார். சி.கே சி.

**சிவவாக்கியர்**: சிவவாக்கியருடைய இயற்பெயர் என்னவென்பது தெரியவில்லை. 'எழுத்தை உன்னிச சொல்லுவேன் சிவவாக்கியம்' என்று காப்புச்செய்யு ளில் கூறியிருப்பதால், இவரைச் சிவவாக்கியர் என்றே அழைக்கத் தொடங்கினார்கள். இவர் திருமூலரைப் பற்றிக் குறிப்பிடுவதால், இவருடைய காலம் திருமூல ருக்குப் பிற்பட்டதாகும். சிலர் கி பி. 9-ஆம் நூற்றாண் டாக இருக்கலாம் என்பர். இவருடைய சிறப்பை நோக்கித் தாயுமானவர் தம் பாடலுள குறிப்பிடுகி றார். இவரது வரலாறு பற்றிச்சான்றுகளின் அடிப்படை யிலான செய்திகள் ஏதும் கிடைக்கவில்லை.

இவருடைய செய்யுள் நடை, சில இடங்களில் திரு மூலரின் நடையை ஒத்து இருக்கிறது. சிறு சொற்க ளைப் பயன்படுத்தி எளிய நடையில் உயர்ந்த தத்து வங்களை இவர் விளக்கியிருக்கிறார். "நட்ட கல்லும் பேசுமோ நாதன் உள்ளிருக்கையில்" என்னும் பாடல வரி பொதுவாக எல்லாருமே அறிந்த ஒன்று. சமயச் சடங்குகள், சமயச் சின்னங்கள், கோவில் வழிபாடு முதலிய புறச் செயல்களில் இவருக்கு வெறுப்பு. சமயங்களில் பொதுமையே கண்ட இவர் சிவனைப் பரம்பொருள் என்று குறிப்பிடுவார். கடவுளும் உயிரும் வேறு; வீடுபேறு வாழக்கையின குறிக்கோள்; அதை ஞானத்தால் பெறலாம்; கடவுள் ஆன்மாவில் ஞான வடிவாக இருக்கிறார்; அவரை அனுபவத்தால் காண வேண்டும். என்பனபோன்ற கருத்துகளை இவர் வெளி யிட்டிருக்கிறார். இறைவன் உள்ளே இருக்க, வெளியே 'கோயிலாவது ஏதடா குளங்களாவது ஏதடா' என்று கேட்கிறார். எங்கும் பரந்துளள பிரமத்தைச் 'சுருக்கம் அற்ற சோதி' என்று குறிப்பிடுகிறார், ஒரே கடவுள் தான் உண்டு என்பதைக் குறிக்க வருகின்றவர், 'தில்லைநாயகன் அவன் திருவரங்கனும் அவன், எல் லையான புவனமும் ஏக முத்தியும் அவன' என்பார். முக்தி நிலையைக் குறிக்க, நாழி உப்பும் நாழி அப் பும் நாழியானவாறு போல்' என்று குறிப்பிடுகிறார். மனத் தூய்மையே வேண்டியது எனபதைப் பலவாறு வற்புறுத்துகிறார். மற்றைய சித்தர்களைப் போலவே இவரும் சில குறியீடுகளைப் பயன்படுத்துகிறார். எண்களைப் பயன்படுத்தி நுண்ணிய கருத்துகளை விளக்குகிறார்.

ஒன்றே குலம் ஒருவனே தேவன்; உள்ளமே கோயில்; ஆன்ம அனுபவமே பரமுக்தி ஆகியவையே இவர் கூறும் உண்மைகளாம். இவற்றை உணர ஐந் தெழுத்துத் துணைசெய்யும். டி.பி.சி.

**சிவன்,** இந்துக் கடவுளாகிய மும்மூர்த்திகளுள் ஒருவர். சிவனது தோற்றம் பற்றிய வரலாறு எங்கும் கூறப்படவில்லை. அருணகிரியந்தாதி'சோணேசர் இல்லிற் பிறந்த கதையும்கேளேம் பேருலகில்வாழ்ந்துண்டு இறந்த கதையும் கேட்டிலேம்'எனக் குறிப்பிட்டுள்ளது. சிவனுக்குப் பிறப்பு இல்லையாதலால் இவரைப் பற்றிய பிள்ளைத்தமிழ்ப் பிரபந்தங்கள் தோன்றவில்லை. இந்தியாவில் சிவ வழிபாடு மிகத் தொன்மையானது. அமரகோசம் என்னும் நூல் சிவனை 48 பெயர்களால் குறிப்பிடுகிறது.வேத கால உருத்திரனே சிவன் எனக் கொள்ளப்படுகிறது. உருத்திரன தோலாடை அணிந்து மலையினை உறைவிடமாகக் கொண்டவர் என வேதங்கள் கூறுகின்றன. இவருடைய ஆயுதங்கள் வில்லும் அம்புமாகும். இவர் மூன்று உலகத்தின் தந்தையாகவும் கருதப்பட்டார். சிவனுடைய மனைவியின பெயர் அம்பிகை. வேதத்தில் குறிப்பிடப்பட்டுள்ள உருத்திரன் கொடூரமானவராகச் சித்திரிக்கப் படுகிறார். மக்கள் தங்களைத் தண்டிக்கவேண்டாம் என்றும் தங்களைக் காக்கும்படியும் இவரை வேண்டினர். உருத்திரனை வழிபட்டவர்கள் பிணியிலிருந்து நீங்கினர். இவர் மக்களின் அருமருந்தாகவும் விலங்குகளைக் காப்பவராகவும் விளங்கினார். எனவே, இவர் 'பசு பதி' எனக் கூறப்பட்டார். உருத்திரன் கி.மு. 6-ஆம் நூற்றாண்டுவரை கொடூரமான கடவுளாகவே கருதப்பட்டார்.உருத்திரனை ஆரியர்கள் கொடூரமான கடவுளாகவே கருதினர். புராண காலத்தில் உருத்திரன் என்னும் பெயர்சிவனாக மாற்றப்பட்டது.திராவிடர்களே உருத்திரனைச்சிவனாக வழிபடத் தொடங்கினர் என்று கூறுவர். சிவன் சாந்த கடவுளாக மாறினும்,அவர் தோலாடை தரித்து உடல்முழுமையும் திருநீறு பூசி மண்டையோட்டு மாலையணிந்து கையிலே கபாலம் ஏந்திக் காடுகளிலும் மலைகளிலும் சுற்றித் திரிபவராகச் சுட்டப்படுகிறார். ஆரியர்கள் சிவ வழிபாட்டை ஏற்றுக் கொண்டபின் இவர் முத்தொழில்களில் அழிக்கும் தொழிலின் கடவுளானார்.



சிவலிங்கம்

இன்று இந்துக்கள் பெருமளவில் வழிபடும் கடவுளான சிவனுக்குக் கோயில்கள் மிகுதியாக உள்ளன. இவருடைய பக்தர்கள் சைவர், பாசுபதர், காபாலிகர், காளாமுகர், இலகுலிசர்,வீரசைவர் எனப் பல வகைப்படுவர். சிவபுராணம் இவர் முத்தொழிலுக்கும் கடவுள் என்று கூறுகிறது.

**சிவநாமம்:** வசி என்பதிலிருந்து சிவ என்னும் சொல் தோன்றியதாகக் கூறுவர்.எங்கும் பரவி விளங்கும் கடவுளே சிவம் என்பது பற்றிக் குறிப்புகள் காணப்படுவதற்கு முன்னரே சிவ வழிபாடு சிந்து வெளி நாகரிகத்தில் இருந்தது. இந்நாகரிகத்தின் சின்னங்களில் சிவலிங்கங்களும் காணப்பட்டன.

**சிவனின் பல நிலைகள:** சிவன் பரசிவம், சொரூபசிவம், தடத்த சிவம், சதா சிவம், மகா சதாசிவம் முதலிய பல நிலைகளைப் பெற்றுள்ளார். சொரூபசிவமே இவற்றுள் மேலான நிலை. சொரூப சிவ நிலையில் மக்களின் மனம் வாக்குக் காயங்களுக்கு அப்பாற்பட்டவராகச் சிவன் இருககிறார். இந்நிலையில் மக்களிடம் இருந்து மிக விலகி இருப்பதால் சிவனே தனது நிலையிலிருந்து கீழிறங்கி மக்களிடம் தொடர்புகொள்ளத் தடத்த நிலையை அடைகிறார். இதற்குச் சகளம் என்றொரு பெயருமுண்டு. சகள நிலையில் இவருக்கு 64 மூர்த்தங்கள் உண்டென்று புராணங்கள் கூறுகின்றன.

**சிவ வழிபாடு:** சிவன் கோயிலகளில் கருவறையில் இலிங்கமே காணப்படும். இலிங்க வழிபாடு எப்பொழுது தோன்றியது என்பது பற்றிக் கருத்து வேறுபாடுகள் உள்ளன. ஆரியர்கள் இலிங்க வழிபாட்டை நாடோடி மக்களிடமிருந்து பெற்றனர் என முனைவர் ஆர்.சி. பண்டர்கார் குறிப்பிடுகிறார். சர். சான் மார்சல் சிந்துவெளி நாகரிகப் புதைவிடங்களில் இலிங்கங்கள் பலவற்றைக் கணடுபிடித்தார். முனைவர் இசுட்டின் (Dr. Stein) என்பவரும் பலுசிசுத்தான் பகுதியில் இலிங்கஙகளைக் கண்டுபிடித்துள்ளார். எனவே, இலிங்கவழிபாடு ஆரியருக்கும் முற்பட்டது எனலாம். திருமந்திரம், சிவலிங்கம், அண்டலிங்கம், பிண்டலிங்கம், சதாசிவலிங்கம், ஆத்மலிங்கம், ஞானலிங்கம் முதலியவை பற்றிக் கூறுகிறது.

**சிவலிங்க தத்துவம்;** சிவலிங்கத்தில் எல்லாத் தத்துவங்களும் அடஙகியுள்ளன எனச் சாத்திர நூல்கள் கூறுகின்றன. ஈசானம், தத்புருடம், அகோரம், வாம தேவம், சத்தியோசாதம் என்னும் ஐந்து மூர்த்தங்கள் (பஞ்சபிரம மூர்த்தங்கள்) உண்டு. இவற்றுள்

ஈசானம் வடகிழக்காக நோக்கும் உச்சிமுகம்: தத்புருடம் கிழக்கிலுள்ள முகம்: அகோரம் தெற்கில் உள்ள முகம்; வாமதேவம் வடக்கிலுள்ள முகம்; சத்யோசாதம் மேற்கிலுள்ள முகம் ஆகும். சிவலிங்கத் தத்துவத்தைப் பெரியபுராணம், ஆகமங்கள், சித்தாந்த சூறாவளி, சிவஞான சித்தியார் போன்ற நூல்கள் எடுத்துரைக்கின்றன.

**நடராசர்**: சிவாலயங்களில் தெற்கு நோக்கியவாறு நடராசர் அம்பலம் காணப்படும். சிவனது பல்வேறு வடிவங்கள் சிவன்கோயில்களில் இடம் பெற்றிருக்கும். அவற்றுள் தலையானது நடராசர் வடிவம் ஆகும். சோமாசுகந்தர், தட்சிணாமூர்த்தி, பிட்சாடனர், சந்திரசேகரர் முதலியோர் உருவங்கள் பிற வடிவங்களாகும். நடராசர் நடனமாடும் நிலையில் இருப்பார். தில்லை நடராசர் சிறப்பு வாய்ந்தவர். ஆடல்வல்லான் என்றும் இவர் கூறப்படுவார். நடராசர் பல்வேறு தாண்டவங்கள் ஆடிப்பல்வேறு பெயர்களுடன் விளங்குவார்.

சிவன் அனுக்கிரகமூர்த்தியாக வடிவங்கள் எடுத்து வேண்டிய வரங்களை நல்குவார். அனுக்கிரகமூர்த்தி வடிவங்களுள் குறிப்பிடத்தக்கவை சண்டேச அனுக்கிரக மூர்த்தி, விட்டுணு அனுக்கிரகமூர்த்தி அல்லது சக்கரதாண்டவ மூர்த்தி, நந்தி அனுக்கிரகமூர்த்தி, விக்னேசுவர அனுக்கிரக மூர்த்தி, இராவண அனுக்கிரக மூர்த்தி, இலிங்கோத்பவ மூர்த்தி ஆகியவை ஆகும். கொடுமைகளை அழித்து நன்மையைச் செய்ய இவர் சம்கார மூர்த்தியாக வடிவெடுப்பார். அவ்வாறு எடுக்கப்படும் வடிவங்கள் கங்காள மூர்த்தி, கச சம்கார மூர்த்தி, திரிபுராந்தக மூர்த்தி, சர்வேச மூர்த்தி, காலாரி மூர்த்தி, பிரமா-சிர்சா சச்சேதக மூர்த்தி, காமாந்தக மூர்த்தி, அந்தகாசுர-வத-மூர்த்தி முதலியன ஆகும். சிவன் கங்காதர மூர்த்தி, அர்த்த நாரீசுவரர், அரிகரர், கல்யாண சுநதரமூர்த்தி, தட்சிணாமூர்த்தி, மகாயோகி, சந்திரசேகர மூர்த்தி போன்ற உருவங்களும் எடுப்பார். சு.இரா.

**சிவன், பாபநாசம்**: இவர் தஞ்சை மாவட்டம் போலகம் என்னும் சிற்றூரில் கி.பி. 1890-ஆம் ஆண்டு பிறந்தார். இவருக்கு இராமையா என்பது பிள்ளைத் திருநாமம். இராமசாமி சிவன் என்ற பெயராலும், பிற்காலத்தில இவர் வாழ்ந்த ஊரின் பெயருடன் 'பாபநாசம் சிவன்' என்ற பெயராலும் புகழ் பெறலானார்.

**கல்வி**: இளமைப் பருவத்தில் தமது கல்வியைத் தமிழ் நாட்டில் கற்றார். பின் திருவனந்தபுரத்தில் வடமொழியைக் கற்றார். அச்சமயம் அங்கு வாழ்ந்த 'நீலகண்ட சிவன்' என்று புகழுடன் அழைக்கப் பெற்ற சிறந்த சாகித்திய சுருத்தாவிடம் இசைபயிலும் வாய்ப்புடன், இசைப் பாடல்கள் இயற்றும் முறைகளையும் கற்றார். இசைப் பாடல்களைப் புனைவதிலேயே இவருக்கு நாட்ட மேற்பட்டது. பின்னர்க் கோனேரி ராசபுரம் வைத்தியநாதையரிடம் இசை பயின்றார். அத்துடன் இசைப் பாடல்களைப் புனையும் நுணுக்கங்களையும் கற்றுத் தெளிந்தார்.



சிவன் பாபநாசம்

**இவர்தம் இசைப் பாடல்கள்**: இவரது முதல் இசைப் பாடல் திருவாரூர் தியாகராசப் பெருமானைப் போற்றிய பாடலாகும். நீலகண்ட சிவன் அரிகதை (இசைக்கதை) களுக்குப் பல நிருபணங்களை இயற்றியவர். அவரிடம் பயின்ற பழக்கத்தால் இவரும் பல அரிகதைகளுக்குப் பாடல்களைப் புனைந்துள்ளார். கவிகுஞ்சரபாரதி, சுவாதித் திருநாள் ஆகியோரைப் போல இவரும் இராமாயணத்தை இராகமாலிகையாக இயற்றியுள்ளார். பல இசைப் பாடல்களை நல்ல சொற்சுவை, பொருட்சுவையுடன் இயற்றியுள்ளார். 'நான் ஒரு விளையாட்டுப் பொம்மையா'? 'கற்பகமே கடைக் கண் பாராய்' போன்ற பாடல்களை எடுத்துக்காட்டாகக் கூறலாம். இவர் இயற்கையிலேயே இறையுணர்வும், இசையறிவும், தமிழ்ப் புலமையும் உள்ளவர். அதனால் இராகங்களின் சீவ சுரங்களமைந்த சாகித்தியங்களை இயற்றுவதில் வல்லவராக மதிக்கப் பெற்றார். இவரது சாகித்தியங்களில் 'இராமதாசன்' என்ற முத்திரையைப் பதித்துள்ளார். சுமார் 3000 பாடல்களுக்கு மேல்பாடியுள்ளார் எனத் தெரிகிறது.

**இசைத் தொண்டு**: இவர் மயிலைக்கபாலீசுவரர்-கற்பகவல்லியிடம் பக்தி கொண்டவர். மார்கழி மாதந்தோறும் விடியற்காலை பசனைக்குழுவுடன் பாடுவார். அது பிற்காலத்தில் 'சிவன் மண்டலி' என்று வழங்கலாயிற்று. தனது முதுமைப் பருவத்திலும் நடக்க முடியாமல் அமர்ந்து கொண்டு மெய் மறந்த நிலையில் பாடியுள்ளார்.

அந்தக் குழுவில் புகழ் மிக்க இசைக் கலைஞர்களும், இளங்கலைஞர்களும், இசைப்பிரியர்களும் சூழ்ந்திருந்து இசைப்பர். அந்நிலையில் ஆசுகவிதைகளாக இவர் புனைந்த பாடல்களுமுண்டு. இவர் இசையரங்குகளில் இசைநிகழ்ச்சிகள் மிகுதியாகச்செய்ததாகத் தெரியவில்லை. ஆயினும் பல இசைக் கருத்தரங்குகளில் கலந்து கொண்டுள்ளார். இவர்தம் பாடல்களை முன்னணி இசைக் கலைஞர்கள பாடுவதை வழக்கமாகக் கொண்டனர். மதுரை மணி, டி.கே. பட்டம்மாள், மதுரை சோமு போன்றவர்கள இவர்தம் பாடல்களுள் ஒன்றையாவது பாடாமல் இசை நிகழ்ச்சியினை முடிக்க மாட்டார்கள்.

**திரைப்படத்தில் சிவன்:** இவர் பக்த குசேலா, தியாகபூமி முதலிய திரைப்படங்களில் நடித்திருக்கிறார். பகத குசேலாவில் இவர் குசேலராக நடிததுப் புகழ பெற்றார்.இயற்கையிலேயே மெலிந்த உடலும், உச்சிக் குடுமி முதலியனவும் கொணடு பஞ்சகசசத்தோடு விளங்கும் இவர், படத்தில் வறுமையில் வாடிய குசேலராகக் காட்சியளித்ததால் மிக்க புகழ் பெற்றார். இவர் பக்தி நெறியில் நாட்டம்மிகக் கொண்டிருந்ததால் திரைப் படங்களில் பாட்டெழுதவும், நடிக்கவும் விரும்பாமல் அத்துறையிலிருநது விலகினார்.

**பாராட்டுதல்:** இவர்தம் தமிழிசைப் பாடல்களுள் சிலவற்றைத் தொகுத்து அண்ணாமலைப் பல்கலைக் கழகம் வெளியிட்டுள்ளது சென்னைத் தமிழிசைச் சங்கத்தின் 1965-ஆம் ஆண்டு பண்ணாராய்ச்சிக் கருத்தரங்கில் தலைமையேறறார். அப்போது இவருக்கு 'இசைப் பேரறிஞர்' என்ற பட்டம் வழங்கிப் பாராட்டினர். சென்னை இசைக்கழகம் (Muisc Academy) இவருக்குச்'சங்கீத கலாநிதி' என்ற பட்டம் வழங்கியது.

இவர் 1973-ஆம் ஆணடு தம் 83-ஆம் வயதில காலமானார்.

என்.சீ.

***சிவாக்கிர யோகிகள்*** சூரியனார் கோயில ஆதீனத்தைச் சேர்நதவர். இந்த ஆதீனம கந்த பரம்பரை என்றும், வாமதேவ சந்தானம் என்றும வழங்கப்படும். இந்த ஆதீனத்தை நிறுவியவா சிவக கொழுந்து சிவாசாரியார். அவர் கலவி கேளவிகளிலும் சிவஞானத்திலும் சிறந்தவர்.

அக்காலத்தில் தொணடை நாட்டில் பிராமண குலத்தில் பிறந்து, கல்விச் சிறப்பும் பக்திச் சிறப்பும் கொணடிருந்த ஒருவர், தக்க ஞானாசிரியரைத் தேடிக் காவிரி நாட்டை வந்தடைந்தார். சிவக் கொழுந்து தேசிகரின் பெருமையைக் கேள்வியுற்ற அவர் அங்கே சென்று ஞானாசிரியரை வழிபட்டார். அவருடைய வேடப்பொலிவையும் பக்குவத்தையும் கண்ட ஆசிரியர் அவருக்கு நிருவாண தீட்சையும் சந்நியாசமும் வழங்கினார். சர்வ ஞானோத்தர ஆகமத்தை உபதேசித்து, ஆசாரிய அபிடேகமும் செய்து 'சிவாக்கிர யோகி' என்னும பெயரைச் சூட்டித் தமது ஆதீனத்தில் இரண்டாம ஆசிரியராக இருக்கச் செய்தார்.

குருவினிடம் அறிவுரையும் ஞானமும் பெறற சிவாக்கிர யோகிகள் சிவானந்த நிட்டையில் இடையறாது ஈடுபட்டிருந்தார். அதனால அவர் 'அதிவர்ணாசிரம ஆசாரிய ஆரிய சைவ சமய பரிபாலக சிவாக்கிர யோகீநதர ஞான சிவாசாரிய சுவாமிகள்' என்று பாராட்டப்பட்டார். அவர் காலத்திலுள்ள அரசர்களும் பொது மக்களும் அவருடைய பெருமையைக் கேள்விப்பட்டு அவருடைய ஆதீனத்துக்கு வநது அவரையும் அவருடைய குருவையும வணங்கிவிட்டுப் போவார்கள. அக்காலத்தில் வாழ்ந்திருந்த வைணவப் பெரியாராகிய மணவாள மாமுனி (கி.பி. 1370-1443) என்பவருடன் இவர் பதினேழு நாட்கள சொறபோர் நடத்திச் சைவ சமயத்தின் பெருமையை நிலைநாட்டினார் என்று சொலலுவதுணடு.

பின்னர் அவர் தமது குருநாதரிடமும் அரசரிடமும் அனுமதி பெறறு, திருவீழி மிழலையில் வசிககத தொடங்கினார். அதனால் அவர் வீழிச் சிவாக்கிர யோகிகள என்றும் வழஙகப்பெற்றார். துறவு பற்றிய விவாதம் ஒன்று, சுமிருதி வழி ஒழுகும் சிலருக்கும் சிவாகம நெறி வழி ஒழுகும் சிலருக்கும் இடையே ஏற்பட, அதனைத் தீர்த்து வைக்கும் முறையில சிவாக்கிர யோகிகள 'சைவ சந்நியாச பத்ததி' என்னும் நூலை இயற்றினார். எட்டுப் படலங்களைக கொண்ட அந்த நூல் குளியல, சந்தி, பூசை, தீட்சை, சந்நியாசம் முதலிய பலவற்றை விரித்து விளககுகிறது.

ஒருமுறை சூரியனார் கோயிலுக்குச் சென்று தங்கி ஆசிரியரை வணஙகி நிறக, அவருடைய கட்டளையின்படி வடமொழிச் சிவஞானபோதத்துக்குச்'சங்கிரக வியாக்கியானம்' என்னும் ஒரு சிற்றுரையும் 'சிவாக்கிரபாடியம்' என்னும் பேருரையும இயற்றினார். அந்தப் பேருரையில அகோர சிவாசாரியாரின சிவசமவாதக் கருத்துகளை மறுத்திருக்கிறார் சிவாக்கிர பாடியமும், வேறு சித்தாந்த நூல்களும் கற்கும் மாணவர்களுக்காகச் சித்தாந்தக் கொள்கைகளைச் சுருக்கமாக விளக்கும் வகையில் 'சைவபரிபாடை' எனனும் நூலை வடமொழி உரைநடையில் செய்தருளினார். அது ஐந்து பரிச்சேதங்களை (பகுதிகளை)க கொண்டது. மேலும் சர்வ ஞானோத்திரம், தேவிகாலோத்திரம் ஆகிய நூல்களுக்கும் அரதத்தாசாரியார்

இயற்றிய சுருதிசூகதி மாலை என்னும் நூலுக்கும் தமிழில் உரை எழுதினார்.

இரண்டாம சந்தானாசாரியாகிய அருள் நந்தி சிவாசாரியாரின் சிவஞான சித்தியார் எனனும் நூலில் பரபக்கம, சுபக்கம் என்னும் இரண்டு பகுதி களுக்குமே உரை எழுதினார். ஆனால், பரபககத் துக்கு இவர் எழுதிய உரை இதுவரை கிடைக்க வில்லை.

பின்னர், சுவானந்த நாச்சியார் என்னும் அடி யாரின பொருட்டுச் 'சிவநெறிப் பிரகாசம்' என்னும் தமிழ்ச் செய்யுள நூலை இயற்றித் தநதாா. இவ ருடைய மாணவராகிய நந்தி சிவாக்கிர யோகிகள் அந்த நூலுக்கு உரை எழுதி இருககிறார்.

சிவாக்கிர யோகிகள் தம் ஆசிரியராகிய சிவக் கொழுந்து தேசிகரின் முடிவு நெருஙகியதை அறிநது, சூரியனார் கோயிலுக்கு வந்து, அங்கே சிறிது காலம் தங்கி இருந்து தம் குருவின் மறைவுக்குபபின் தம் மாணவராகிய நந்தி சிவாக்கிர யோகிகளுக்கு ஆதீனப் பட்டம் சூட்டித் திருவீழிமிழலைக்கே திரும்பிச் சென்று அங்கேயே காலமானார். டி.பி சி.

**சிவாசி பல்கலைக் கழகம்** தென் மகா ராட்டிர மாநிலத்தில் 1962-இல் நிறுவப்பட்டது. இப் பல்கலைக் கழகம கி.பி. 17-ஆம் நூற்றாணடில் வாழ்ந்த மிகப்பெரும் வீரரும், அரசருமான சததிரபதி சிவாசி (Chhatrapati Shivaji) நினைவாக அமைக்கப் பட்டது. தென் மகாராட்டிரத்தின் உயர் கலவித் தேவையை நிறைவு செய்யும நோககத்துடன கோலாப்பூரில ஒரு பலகலைக் கழகம் வேண்டுமெனறு 1930 முதலே வலியுறுத்தப்பட்டது.

சிவாசி பல்கலைக் கழகம் (Shivaji University) இன்று கோலாப்பூர், சாஙலி (Sangli), சத்தாரா (Satara) சோலாப்பூர் (Sholapur) ஆகிய மாவட்டங் களுக்கு உயர்கல்வி வழங்கும் நிறுவனமாகக் கோலாப் பூர் மாவட்டத்தில வித்யா நகரில் அமைக்கப்பட்டுள ளது. கற்பித்தல்,ஆராயச்சி, இணைப்புரிமை (Affilia-tion) வழஙகுதல முதலான பணிகளை இப்பல்கலைக் கழகம் முதன்மையாகக் கொணடுள்ளது.

இப்பல்கலைக் கழகத்தில் கலை, வணிகவியல, கல்வியியல், சட்டம், சமுதாய அறிவியல், மருத்து வம், ஆயுர்வேத மருத்துவம், பொறியியல், அறிவியல் முதலான புலங்கள் உளளன. இவற்றில் பல துறை கள் செயற்படுகின்றன. இங்கு மராத்தி, ஆங்கிலம், உருசியமொழி, புவியியல், வரலாறு, கலவி, பொரு ளியல், சமுதாயவியல், இதழியல், நூலகவியல், அரசி யல், தாவரவியல, வேதியியல், கணிதவியல், இயற் பியல், விலங்கியல், மருத்துவம்,பொறியியல் முதலான வற்றில் இளநிலைப் பட்டத்தையும் பெறவசதியுண்டு.

இப்பல்கலைக் கழகத்தில் 85 க்கும் மேற்பட்ட இணைப்புரிமை பெற்ற கல்லூரிகள உள்ளன. பல் கலைக் கழகத்தில் இல்லாத ஒருசில பாடங்கள் கல்லூரிகளில் உளளன. இணைப்புரிமை பெறாமல் இப்பல்கலைக் கழகத்தின் இசைவு பெற்றுசசத்திரபதி சாகு வாணிகக்கல்வி ஆராய்ச்சி மையம் (Chhatrapati Shahu Central Institute of Business Education and Research) உளளது. இங்கு வணிகவியல தொடர்பான பலதுறைக் கல்வி வழங்கப்படுகிறது.

முதுநிலைப் பட்டத்திற்குப்பின் முனைவர், முது முனைவர் முதலான ஆராய்ச்சிப் பட்டங்கள் பெற இங்கு வசதியுணடு சிவாசி பல்கலைக் கழகம் எல்எல்டி (LLD) பட்டம் ஒனறையே சிறப்புநிலைப் பட்டமாக வழங்குகிறது.

முழுநேரக் கல்வியல்லாது பகுதி நேரத்திலும் மாணவர்கள் பயின்று பட்டங்கள் பெற இப்பலகலைக் கழகம் வசதி செய்துள்ளது. மாணவர்கள தனிப்பட்ட முறையிலும் பயின்று (Private Study) பட்டங்கள் பெறலாம். பெண்களும் மராத்தி பேசும் மாணவர் களும் தனிப்பட்ட முறையில் நேரடியாகத் தேர்வில கலந்து கொண்டு பட்டங்கள் பெறலாம். இந்த வசதி கோவா, பெல்காம், கார்வார் மாவட்டஙகள முதலான பகுதிகளைச் சேர்ந்த மாணவர்களுககும் உண்டு.

இவைதவிர, பட்டயத் தகுதி (Diploma) சான் றிதழ்த் தகுதி (Certificate) நிலைகளிலும் பயில வழி யுணடு. இந்தி மொழிகளுள் சில, அயல்நாட்டு மொழி களுள் சில, கூட்டுறவுச் சட்டம், வரிச்சட்டங்கள், தொழில் சட்டம், மருத்துவப் பிரிவுகளுள சில (DCH, DGO, D. Ortho), மேலாண்மையியல் முதலான பாடங்களில் பட்டயத் தகுதி பெற வாய்ப்புண்டு. இளம்நிலைப் பட்டங்கள் பெற்றவர்களுக்கும் பல்கலைக் கழக ஊழியர்களுக்கும் ஆஙகிலப் பயிற்சி யளிக்கும் பாடத்திட்டமும் இஙகு உள்ளது. சீ.ப.

**சிவாசி, முதலாம்:** இந்தியாவை ஆண்ட அவுரங்கசீபு என்ற முகலாய மன்னருடைய மத வெறியை எதிர்த்துப் போராடுவதற்கு மராத்திய மக்களை ஒரு வலிமை பொருந்திய தேசிய இனமாக மாற்றியமைத்தவர் சிவாசியேயாவாா. தமது இளம் வயது முதற்கொண்டே இந்து மதத்தில் மிகுந்த பற் றுக்கொண்டிருந்த இவர் ஓர் இந்து அரசை நிறுவ வேண்டுமென்ற ஆசையை வளர்த்துக்கொண்டுவந்த தில் வியப்பேதுமில்லை. இவருக்குக் குலதெய்வம்

பவானி. இந்து தருமத்திற்குப் புத்துயிர் கொடுக்க வந்தவர் என இவரைப் போற்றுகின்றபோதிலும், இவர் மதவெறியர் அல்லர். முசுலீம்களுடைய மேலாண்மை மற்றும் அவர்கள் கையாண்ட மத வெறியை வெறுத்தாரேயன்றி இசுலாம் மதத்தை வெறுக்கவில்லை. இசுலாமிய சமயாசிரியர்களுக்கு மரியாதை செய்தார். மசூதிகளுக்கு வரியிலா நிலங்களைத் தந்தார். இசுலாமியரைத் தம் படையில் சேர்த்துக்கொண்டார். அவர்களைக் கொண்டு தம் வீரர்களுக்குப் படைப் பயிற்சி அளித்தார். தம் வீரர்கள் பிறர்நாட்டைச் சூறையாடுவதில் ஈடுபட்ட போது மசூதிகளை அழிக்கக்கூடாது என்றும் குரானை அவமதிக்கலாகாது என்றும், எந்தப் பெண்ணையும் கற்பழிக்கக்கூடாது என்றும் ஆணையிட்டார். ஆணையை மீறியவர்களுக்குக் கடுமையான தண்டனை வழங்கினார். தம்மிடம் குரானை எவராவது ஒப்படைத்தால் அதை மரியாதையுடன் காப்பாற்றி யாரேனும் ஒரு முசுலீமிடம் கொடுத்துவிடுவார். இசுலாமியப் பெண்கள் சிறைப்படுத்தப்பட்டால் அவர்களைப் பணம் கொடுத்து அவர்களுடைய உறவினர்கள் விடுவிக்கும் வரை அவர்களைச் சிவாசி கணகாணித்து வந்தார்.

சிவாசி கி.பி. 1627-இல் (1630-இல என்று சிலர் கூறுவர்) சிவ்னெர் (Shivner) எனனும் இடத்தில பிறந்தார். இவரது தந்தையின்பெயர் சாசி பான்சுலே (Shahji Bhonsle). தாயார் பெயர் சீசா பாய் (Jiha Bai). சீசா பாய் தேவகிரியை ஆண்டுவந்த யாதவர்கள் மரபில் தோன்றியவர். சாசி, மேவாரைச் சார்ந்த சிசோதியாக்கள் (Sisodias) பரம்பரையில் வந்தவர். கருநாடகச் சாகீரைச் (Jagir) சாசி பெற்ற பின்பு அவ்விடத்திற்கு அவரும் அவர்தம் இரண்டாவது மனைவியும் சென்றுவிட்டனர். பூனாவி லுள்ள சாகீரில் சிவாசியும் அவர் தாயாரும் தாதாசி கொண்ட தேவு என்ற கல்விமானிடம் ஒப்படைக்கப் பட்டனர். சாசியின் சாகீரை ஆட்சிபுரிந்து வருவதுடன் சிவாசிக்குக் குதிரையேற்றம், சண்டைப் பயிற்சி, ஆட்சிமுறை பற்றிய பாடங்கள் ஆகியவற்றைக் கற்றுக்கொடுத்தார். தம் தாயாரிடமிருந்து வீரம், இந்து தருமத்திடம் பற்று ஆகியவற்றைக் கற்றுக் கொண்டார். இவருடைய தாயார் இவருக்கு இந்து வீரக் காவியங்கள், புராணங்கள் ஆகியவற்றில இருக்கும் கதைகளை இவருக்குக் கூறி இந்து மதத்தை முசுலீம்களின் தாக்குதல்களிலிருந்து காப்பாற்ற வேண்டியதன தேவையை வலியுறுத்தி வந்தார். மேலும் மாவலி (Mavali) இளைஞர்களுடன் சேர்ந்து கொண்டு மலைப் பகுதியில சுற்றிவந்தார். அதனால் மலைப்பகுதியிலுள்ள வழிகள அனைத்தையும் அவர் நன்குணர்ந்திருந்தார். அப்போது அவுரங்கசீப்பிற்கும் தக்காணத்தில் ஆட்சி செய்துவந்த பீசப்பூர் மற்றும் கோல்கொண்டா சுல்தான்களுக்குமிடையே போர் நடந்து வந்தது. மேலும் பீசப்பூரில் வயது நிரம்பாத அரசர்கள் ஒருவர்பின் ஒருவராகப் பட்டம் எய்தினர். பிரபுகள் தன்நலத்தில் கணணும் கருத்துமாயிருந்தனர். ஆகவே, அங்குக் குழப்பம் ஏற்பட்டது. இத்தகைய அரசியல் சூழ்நிலைகள் சிவாசிக்குச் சாதகமாக அமைந்தன. அவர், தோர்னா எனற மலைக்கோட்டையை கி.பி. 1640-இல் கைப்பற்றி அதனருகே இரெய்கார் என்ற கோட்டையை உருவாக்கினார். பீசப்பூர் சுல்தானின் ஆளுகைக்குட்பட்டிருந்த அதிகாரிகளிடமிருந்து பல கோட்டைகளைக் கைப்பற்றினார். அதனால கோபமுற்ற பீசப்பூர் சுல்தான், தம்மிடம் பணியாற்றிவந்த சாசியைச் சிறையிலிட்டார். அதன் காரணமாகச் சிவாசி தம் போர் நடவடிக்கைகளை இடைக்கால ஏற்பாடாக நிறுத்திக்கொண்டார். தாம் கைப்பற்றிய இடங்களில் தமது ஆட்சியைக் கி.பி. 1649 முதல் 1655 வரை வலிமைப்படுத்தினார்.

பீசப்பூர் மீது அவுரங்கசீப் படையெடுத்து வந்த போது சிவாசி முகலாயருக்குச் சொந்தமான அகமதாபாதைத் தாக்கினார்; சுன்னாரைச் (Junnar) சூறையாடினார். ஆனால், இறுதியில அவர் தோற்கடிக்கப் பட்டார். சிவாசி மீணடும் கி.பி. 1658-இல் போரைத் தொடங்கினார். வட கொஙகணத்திலுள்ள கல்யாண, கொலாபா, பிவாண்டி, மஹுலி (Mahuli), மாகத்து (Mahad) ஆகிய இடங்களைக் கைப்பற்றினார். கல்யாணில் பீசப்பூர் ஆளுநருடைய மருமகளைச சிவாசியின் முன் நிறுத்தினா. ஆனால், சிவாசி அவரைத் தக்க மரியாதையுடனும், பாதுகாப்புடனும் பீசப் பூருக்கு அனுப்பிவைத்தார். பீசப்பூர் சுல்தான் தம் படைத்தலைவர் அப்சல்கான் எனபவரைச் சிவாசியுடன போரிட்டு அவரை உயிருடன அல்லது பிணமாகக் கொண்டு வரும்படி பணித்தார். அவருடன் போரிட்டு வெலவதரிது என்பதை உணர்ந்த அப்சல்கான் அவரைத் தநதிரமாகத் தம் பாசறைக்கு வரவழைத்து அவரைக் கொல்லத் திட்டமிட்டார். கிருசுணாசி என்ற மராத்திய பிராமணர் வாயிலாக அத்திட்டத்தை அறிந்துகொண்ட சிவாசி தக்க முன்னேற்பாடுகளுடன பேச்சுவார்த்தை நடத்த அப்சல்கான் பாசறைக்குச் செனறார். அன்புடன் அவரைத் தழுவுவதுபோல் நடந்து கொண்டு ஒரு கையில் அவருடைய கழுத்தை நெறித்துக்கொண்டு மற்றொரு கையில் உடைவாளால் கொல்ல முயன்றார். சிவாசி கணப்பொழுதில் தமது புலிநகம் போன்ற இரும்புக்கையுறையைக் கொண்டு அப்சல் கானைக் கொன்றார். மறைந்திருந்த மராத்தியப் படையினர் தலைவனற்ற பீசப்பூர் படையை முறியடித்துப் பாசறையைச் சூறையாடினார்கள். அடுத்த இரண்டு ஆண்டுகள் தென் கொங்கணத்தைக் கைப்பற்றுவதில் செலவிடப்பட்டன. சிவாசியின் படை

கள் பீசப்பூர் வரை முன்னேறின. இறுதியில் சிவாசியின் நேரடிக் கட்டுக்குள இருந்த பகுதிகளுக்குச் சிவாசியே அரசராக இருககப் பீசப்பூர்சுல்தான்ஒப்புக் கொணடார்.

அவுரங்கசீபு கி.பி. 1660-இல் செயிசுதகான் என்பவரைத் தக்கண ஆளுநராக நியமித்துச் சிவாசியை ஒடுக்கும்படி கட்டளையிட்டார். செயிசுதகான பூனாவைக் கைப்பற்றினார். திருமணக் கும்பலபோல் வேடம் தரித்துககொண்டு சிவாசியும் 400 வீரர்களும் பூனாவிற்குச் சென்று செயிசுதகானுடைய பாசறைக்குள் புகுந்து அவரைத் தாக்கினார்கள். சனனல் வழியாகத் தப்பித்து ஓடும்போது செயிசுதகான் தன் விரல்கள இரண்டை இழந்தார். அதையடுத்து அவர் பூனாவை விட்டு நீஙகினார். அதனால் அவுரங்கசீபு அவரைத்தில்லிக்குத் திருப்பி அழைத்துக்கொண்டார். சிவாசி கி.பி. 1664-இல் சூரத்தைத் தாக்கினார். அவர் 10 மிலியன் உருபாய்கள மதிப்புள்ள கொளளைப் பொருள்களை அங்கிருந்து கொண்டு செனறார். சிவாசியின் அட்டகாசத்தைப் பொறுக்க முடியாமல் அவுரங்கசீபு செயசிங்கை அனுப்பிவைத்தார். மிகக் கவனமாக முனனேறிச் சென்று சிவாசியைச் சுற்றிலும் பகைவர்களைச் செய்சிங்கு தோற்றுவித்தார். பின்னர், புரந்தரை முற்றுகையிட்டார். அதைக் காக்கும் முயற்சியில் 300 மாவலி வீரர்கள் உயிரிழந்தனர். அதன்பின்னர் இரெய்காரைத் தாக்கச் செய்சிங்கு முயற்சித்தார். ஆகவே, அவருடன் சிவாசி புரந்தர் உடனபடிக்கையைச் செய்துகொண்டார். முகலாயப் பேரரசரைத் தம் மேலாளராகச் சிவாசி ஏற்றுக் கொண்டார்; 23 கோட்டைகளைப் பேரரசருக்குக் கொடுத்துவிட்டார்; 5,000 குதிரை வீரர்களைப் பேரரசர் படைக்கு அனுப்புவதறகு இசைநதார்.

சிவாசியையும் அவருடைய மகனையும் ஆக்ராவிற்கு வரும்படி செய்சிங்கு கேட்டுக்கொண்டார். பேரரசருடைய வலிமையைநேரடியாகக் காண்பதற்கு இது உதவியாக இருக்குமென்று எணணிய சிவாசியும் அதறகு இசைந்தார். ஆனால ஆக்ராவில் அவருக்குத் தக்க வரவேற்பு அளிக்கப்பட வில்லை. மூன்றாம் தரமன்சப்தார்கள வரிசையில் அவருக்கு இடம் ஒதுக்கப் பட்டது. அதனால் கோபமுற்று சிவாசி அவுரங்கசீபை நிந்தித்து மயக்கமுற்றார். சிவாசி சிறையிலிடப் பட்டார். எவ்வளவோ கெஞ்சியும் அவர் விடுவிக்கப் பெறவில்லை. ஆகவே, தந்திரமாகத் தப்ப எண்ணினார். நோய்வாய்ப்பட்டதுபோல் நடித்துத் தன் உடல் நலம் தேற ஒவவொரு நாளும் கூடை கூடையாகப் பழங்களையும், இனிப்புகளையும் அனுப்பி வந்தார். ஒருநாள் அக்கூடைகளில மறைந்துகொண்டு தம் மகனுடன் தப்பித் தாயகம் திரும்பினார்.

செய்சிங்கிற்குப் பிறகு சசுவந்தசிங்கு தக்காண ஆளுநராக நியமிக்கப்பட்டார். அவர் சிவாசியுடன் நட்பு நாடினார். மேலும் அவுரங்கசீபின் எணணம் வடமேற்குப் பகுதியில் திரும்பியதால் சிவாசியுடன் அவுரங்கசீபு நட்புறவு மேற்கொள்ள வேண்டிய தாயிற்று. சிவாசி மன்னர் பட்டம் தரிக்க அவுரங்கசீபு ஒத்துக்கொண்டார். பீரார் சாகீரும், சிவாசிக்கு அளிக்கப்பட்டது. அத்துடன் மனநிறைவு கொள்ளாமல் இழந்த கோட்டைகளை மீட்க முயன்றார். சூரத்தை மீண்டும் சூறையாடினார். காணடேசு, அகமதுநகர் போன்ற முகலாயப் பகுதிகளையும் சூறையாடினார். பீசப்பூருக்குச் சொநதமான ஊப்ளி, கார்வார் ஆகியவற்றையும கைப்பற்றினார். இவ் வெற்றிக்குப் பிறகு கி.பி. 1674-இல் சத்திரபதி (அரசருக்கு அரசர்) என்ற பட்டத்தைச் சூட்டிக்கொண்டார். அது ஒரு புதிய இந்து அரசின் பிறப்பை அறிவித்தது.

சாகும்வரை சிவாசி முகலாயர்களுடனும் பீசப்பூர் சுல்தானுடனும் போர நடத்தி வந்தார். கோல் கொண்டாச்சுல்தானுடன் நட்புக்கொண்டு செஞ்சி, வேலூர், தஞ்சை ஆகிய பகுதிகளை வென்றார். மைசூர் மேட்டுப் பகுதியையும் தம் ஆட்சியின்கீழ்க் கொண்டுவந்தார். சுரத்தினாலும், சீதபேதியினாலும் பீடிக்கப்பட்டு கி.பி. 1680-ஆம ஆண்டு ஏப்பிரல் மாதம் 14-ஆம் நாள் உயிரிழந்தார்.

சிவாசி ஒரு சிறந்த ஆட்சியாளராகத் திகழ்ந்தார். அவருடைய பேரரசு மூன்று மாகாணங்களாகப் பிரிக்கப்பட்டது. ஒவ்வொன்றிறகும் ஓர் ஆளுநர் நியமிக்கப்பட்டார். மாகாணங்கள் ஒவ்வொன்றும் பல பிராந்து (Prants) களாகப் பிரிக்கப்பட்டது. கிராமங்களில் பஞ்சாயத்து முறை நிலவியிருந்தது. சிவாசிக்கு உதவ எட்டுப்பேர் அடங்கிய அட்டபிரதான் என்ற அமைச்சரவை இருநதது. அவர்களுள் தலைமைபீசுவா என்பவர் அமைச்சராவார். நிலமானிய முறை பற்றிய அமிசங்கள் யாவும் ஒழிக்கப்பட்டன. ஒருமுகப்படுத்தப் பெற்ற ஆட்சி அமைக்கப்பட்டது. இரயத்துவாரிமுறை அமலாக்கப்பட்டது. குடியானவர்களுக்குக்கடனுதவி வழங்கப்பட்டது. அதை எளிதான தவணை முறையில் திருப்பித்தர ஏற்பாடு செய்யப் பட்டது. குடியானவர்களிடம் வரி வசூலிக்கும் அதிகாரிகள் இரக்கத்துடன் நடந்துகொள்ள வேண்டும் எனறு சிவாசி ஆணையிட்டார். ஒரு நிரந்தரமான படையொன்றை நிறுவினார். அதில் 4,000 குதிரை வீரர்களும் 10,000 காலாட் படையினரும் 200 கப்பலகள கொண்ட கப்பற்படையும் வைத்திருநதார். இந்தவகையில் அவரை ஒரு முன்னோடியாகக் கருதவேண்டும். ஏனெனில் இது

வரை மராத்தியர்கள் கப்பற்படையைப் பற்றிய அறிவைப் பெற்றிருக்கவில்லை.

நாட்டின் பாதுகாப்பில் கோட்டைகள் பெரும பங்கு வகித்தன. மொத்தம் 240 கோட்டைகளை அவர் பராமரித்து வந்தார். வீரர்களிடம் கட்டுப் பாட்டை மிகுந்தஅளவில்சுமத்தியிருந்தார்; எனினும், அவர்களிடம் அன்பாக நடந்து கொண்டார்; கொரில்லாப் போர்முறையைக் கையாண்டார்.

தி.அர.இரா.

**சிவாசி இரண்டாம் (சாகு)** கி.பி. 1707-1749: மராட்டிய சத்திரபதிகளுள் (மன்னர்) மூன்றாமவர். சத்திரபதி சிவாசியின் பேரனும், சாம்பாசியின் மகனு மான இரண்டாம் சிவாசி (சாகு) மராத்தியர்களால் பெரிதும் போற்றப்பட்டவர். எனவேதான் சர்தேசாய் என்னும் வரலாற்றறிஞர். 'சிவாசிக்கு அடுத்தபடி யாக மராத்திய அரசை முன்னேற்றுவதில் சாகு மிக இன்றியமையாப் பங்கு வகித்தார்' என்று குறிப் பிடுகின்றார்.

சாம்பாசிக்கும் சேசுபாயி சர்க்கேவுக்கும் கி.பி. 1682-ஆம் ஆண்டு மகனாகத் தோன்றிய சாகு கி.பி. 1689-இல் தம் தாயாருடன், மொகலாயப் பேரரசர் அவுரங்க சீபால் (கி.பி. 1658-1707) கைது செய்யப் பட்டு, மொகலாய அரணமனையில் வளர்க்கப்பட் டார். அவுரங்கசீபு இவரைச் 'சாகு' (திருடர் அல் லாதவர்) என அழைத்தார். ஏறத்தாழ 18 ஆண்டுகள இவர் மொகலாய அரண்மனையில் கைதியாகக் காலத்தைக் கழித்தார். அவுரங்கசீபின் மகள் சினத் துன்னிசா பேகம் இவரை நேசமாக வளர்த்தார். அவுரஙசீபு இவரை மதமாற்றம் செய்வதில் முயன்று தோற்றார். சுல்கபிரகான் நுசரத்சிங்கு சாகுவுடன் நெருஙகிப் பழகியதுடன், அவர் மீது மிகுந்த அக்கறை கொண்டிருந்தார். இவர் நெடுங்காலம் சிறையில் கழித்ததால், மராத்திய அரசியல் நிகழ்வுகளை நன்கு அறிந்திருக்கவில்லை. இராசாராம் (கி.பி. 1689 -1700) சமாதான நிபந்தனையின் பேரில் சாகுவை விடுதலை செய்யக் கேட்டுக்கொண்ட போதும் அவுரங்கசீபு இணங்கவில்லை.

அவுரங்கசீபு கி.பி. 1707-இல் இறந்தபின், சுல் பிகர்கானின் அறிவுரையின் பேரில் சாகு விடுதலை செய்யப்பட்டார். மராத்தியப் பேரரசின் உயிர்நாடி யாகத் திகழ்ந்து வந்த தாராபாய்க்கும் (கி.பி. 1700-1708), சாகுவுக்கும் மொகலாயர் எதிர்பார்த்தபடி உள்நாட்டுப் போர் மூண்டது. சாகுவிற்கு மராத்திய அரசில் உரிமையில்லை என்று தாராபாய் எதிர்த் தார். தானாசிசாதவு (Dhanaji Jadav) முதலான மராத்தியத் தலைவர்கள் சாகுவின் பக்கம் சேர்ந்து கொணடனர். தாராபாய் கி.பி. 1707-ஆம் ஆண்டு கெடு (Khed) என்ற இடத்தில் தோற்கடிக்கப்பட்டு, தம்மகன் மூன்றாம் சிவாசியுடன் கோலாப்பூர் சென்று விட்டார். சாகு கி.பி. 1708-இல் சதாராவில் சத் திரபதியாக முடிசூடினார். இத்துடன் போராட்டம நின்றுவிடவில்லை இராசாராமிற்கும் அவன இரண் டாம் மனைவி இராசுபாய்க்கும் பிறந்த இரண்டாம் சாம்பாசி சாகுவிற்குப் போட்டியாளராக நின்றான். இவனையும் இவர் சமாளிக்க வேணடியதாயிற்று. இருப்பினும், கி.பி. 1731-இல் இருவரிடையே ஏற் பட்ட வார்ணா உடன்பாட்டால், இருவருக்கும் சமா தானம் ஏற்பட்டது. இதன்படி கிருட்டிணா, துங்க பத்திரா இடையிட்ட பகுதி சாம்பாசிக்கு அளிக்கப் பட்டது.

சாகு கி.பி. 1713-இல் தம் நிருவாகப் பொறுப்பு களைப் பாலாசி விசுவநாத்து என்னும் பேசுவா (Peshwa-தலைமை அமைச்சர்) விடம் ஒப்படைத் தார். அதிலிருந்து மராத்திய ஆட்சி அரசிடமிருந்து பேசுவாவின் கைக்குமாறியது. இதன் பின்னர்ப் பேசு வாக்கள் தொடர்ந்து மராத்திய நாட்டை ஆண்டு வந்தனர். இவ்வாறு பேசுவா ஆட்சியைத் தொடங்கி வைத்த முன்னோடியாகச் சாகு திகழ்கிறார். சத்திர பதி சிவாசியைப் போன்றோ இராசாராமைப் போன்றோ, சாகு சிறந்த வீரராகவோ, நிருவாகத் திறன் மிக்கவராகவோ திகழவில்லை. எளிமை, கருணை உள்ளம், ஈகை, இரக்கம், தெய்வபக்தி, மத உணர்வு, பிறருக்கு உதவும் பண்பு முதலான நற் பண்புகளை இவர் பெற்றிருந்தார்; விவசாயிகளுக்கும் ஏழைகளுக்கும் நன்மை புரிந்தார்; தரிசு நிலங்களைச் சாகுபடிக்குக் கொண்டு வந்தார்; எல்லோருடனும் நன்கு பழகினார்; நண்பரானார்; மக்களால் நன்கு விரும்பப்பட்டார். அதிகாரிகளைத் தேர்ந்தெடுப் பதில் திறமைசாலியாக இருந்தார். சில குறைபாடு கள் காணப்பட்ட போதிலும், மராத்திய வேந்தருள் புகழ்மிக்கவராகத் திகழ்ந்தார்.

**சிவாசி, மூன்றாம்:** மராட்டிய மன்னர்களுள ஒருவன். இராசாராமிற்கும் தாராபாய்க்கும் மகனா கப் பிறந்தவன். சாகுவிற்கு ஆளுநராக விருந்த இராசாராம் கி.பி. 1700-இல் இறந்ததும், தாரா பாய் தன் அறிவாற்றலால் தன் மகன் மூன்றாம் சிவாசியை அரியணையில் அமர்த்தித் தானே அவனு டைய ஆளுநராக அமர்ந்தாள். சாகு கி.பி. 1708 -இல் ஆட்சியை ஏற்றுக் கொண்டதும் மூன்றாம் சிவாசியின் ஆட்சி முடிந்தது. இவனது ஆட்சிக் காலத்தில் தாராபாய் ஆட்சியை நன்கு கவனித் தாள்.

ம.இ.

**துணை நூல்:**

G.S.Sardesai - The main currents of Maratha History-1949 Delhi.

*சிவாத்துவிதம்*: அத்துவிதம் என்ற கொள்கை 'பிரமம்' என்னும் பொதுப் பெயரால் பரம்பொருளைக் குறிப்பிடுகிறது. சிவன்தான் இந்தப் பிரமம் என்று சிவாத்துவிதம் கூறுகின்றது. காசுமீர சைவமும் அத்துவிதமும் ஒத்துக் காணப்படுகின்றன. சிவாத்துவிதம் விசிட்டாத்துவிதத்தோடு ஒத்திருக்கிறது. சிவனைப் பரம்பொருளாக விவரிப்பதால் சிவாத்துவிதத்திற்கும் சைவசித்தாந்தத்திற்கும் தொடர்பிருக்கிறது என்று கூறுவாரும் உளர். இரண்டும் ஆகமங்களையும் வேதங்களையும் பிரமாணமாகக் கொள்கின்றன. வேதங்கள் பொது எனவும் ஆகமங்கள் சிறப்பு எனவும் இரண்டிற்கும் வேற்றுமையில்லை எனவும் திருமூலர்கூறுகிறார். சிரீகண்டர் வேதங்கள் மட்டுமல்ல, உபநிடதங்களும் சைவ ஆகமங்களின் முடிவையே உடையன என்று கூறுகிறார். தமக்கு முன்பிருந்த ஆசாரியர்கள் வேதாந்த சூத்திரங்களின் பொருளைத் தெளிவாக உரைக்காததினால், தாம் அவற்றின் பொருளைத் தெளிவுபடுத்த உரை எழுதியதாகச் சிரீகண்டர் கூறுகிறார். அவருடைய கருத்தென்னவெனில், நீலகண்டமுடையவனும் உமையொரு கூறுடையவனுமான சிவனே பரம்பொருள். சிவனைப் பற்றி அறியாமல் ஒருவன் வீடுபேறு அடைய முடியாது. உபநிடதங்கள், சாக்கிரம், சொர்ப்பனம், சுழுத்தி, துரியம் என்ற நான்கு நிலைகளை மட்டும் விவரிக்கின்றன. ஆகமங்கள் துரியத்தைக் கடந்த துரியாதீதத்தைப் பற்றிக் கூறுகின்றன. சைவசித்தாந்தம் இறைவனை நிமித்த காரணமாக மட்டும் கருதுகிறது. சிவாத்துவிதம் இறைவனை உபாதான காரணமாகவும் கொள்கிறது. சிரீகண்டர் மலங்கள் மூன்று என்று கூறினாலும், ஆணவத்தைப் பற்றி மிகுதியாகக் கூறவில்லை. மேலும் சிரீகண்டர் தம் பாடியத்தில் சக்திக்குச் சிறப்பான இடம் அளிக்கிறார். சக்தியில்லாமல் உருவங்களும் குணங்களுமுடையவனாகச் சிவன் தோற்றமளிக்க முடியாது. இறைவன் உயிர்கள் மீளும் பொருட்டுப் படைப்புத் தொழில் செய்கிறான். அவனுக்கு அதனால் யாதொரு பயனும் இல்லை. உயிர்கள் தாமே இயங்கும் சக்தி உடையன அல்ல. இறைவன் அவற்றினுடைய முயற்சிக்குத் தகுந்தபடி விடுதலை பெற உதவுகின்றான்.

பிறவி என்னும் துன்பத்திலிருந்து விடுதலையடைய நீலகண்டமுடைய உமையொரு பாகனை வுணங்க வேண்டும். விடுதலையடைந்தவுடன் உயிர்கள் மீண்டும் பிறப்பு, இறப்பு என்னும் சூழலில் வீழவதுமில்லை; இறைவனோடு ஒன்றாகக் கலந்து விடுவதுமில்லை. பாசம் நீங்கியவுடன், இறைத் தன்மையை உயிர்கள் அடைகின்றன. நீலகண்டத்தை உடைய சிவன், அருள் மேலீட்டால், தன் உருவை உயிர்கள் ஏற்கச் செய்கிறான். இத்தகைய சிவனை வேதங்களும் ஆகமங்களும் உபநிடதங்களும் வேதாந்த சூத்திரங்களும் மனிதனின் புகலிடமாகக் காட்டுகின்றன என்று சிரீகண்டர் சிவாத்துவித உரையில் காட்டுகிறார். இரா.கோ.

*சிவாலய முனிவர்*: இவர் கி.பி. 14-ஆம் நூற்றாண்டில் வாழ்ந்த சைவத் துறவியருள் ஒருவர். அகத்தியர் தேவாரத்திரட்டு என வழங்கும் நூல் ஒன்று உருவாவதற்குக் காரணமாக இருந்தவர். இவருடைய குரு, தத்துவ விளக்கம் பாடிய சம்பந்த சரணாலய முனிவராவார். தம் குரு பிற்காலத்தில் சித்தாந்த சைவ நெறியிலிருந்து மாறி ஒழுகிய போதிலும், இவர் அவரைப் பின்பற்றாது சித்தாந்த சைவ நெறியினையே பின்பற்றி ஒழுகிவந்தார். இவர் பொதிகை மலையில் வாழ்ந்த குறுமுனியால், தேவாரத்திரட்டு தொகுத்தளிக்கப்பெற்றார். பல ஏட்டுப் பிரதிகளாக அமைந்த அத்திரட்டு நூலினையும், திருவாசகம், திருவிசைப்பா, திருப்பல்லாண்டு, பெரிய புராணம் ஆகியவற்றிலிருந்து சில செய்யுட்களையும் ஒரு தொகுப்பாக்கி, ஆறுமுக நாவலரவர்கள் 'அருட்பா' என்னும் பெயரில் வெளியிட்டுள்ளார்கள். அதில் அகத்தியர் தேவாரத் திரட்டு தோன்றியதற்கான வரலாற்றைக் குறிப்பிட்டுள்ளார். அது வருமாறு: சைவ ஒழுக்கங்களில் சிறந்து விளங்கிய சிவாலய முனிவர், நாள்தோறும் அடங்கல் முறையினை முழுதுமாக ஓதி வழிபட விரும்பினார். செய்யுள் எண்ணிக்கை மிகுதியால் அது நிறைவேறவில்லை. அதனால், கவலை கொண்ட முனிவர், தில்லைப்பெருமானிடம் தம் எண்ணத்தைக் கூறித் தவமேற்கொண்டொழுகினார்.

இறைவன் திருவருளால், 'பொதியை மலையிலுள்ள அகத்திய முனியிடம் சென்றால் நின் கருத்து நிறைவுறும்' என்றொரு வானொலி வாக்குக் கேட்டது. அது கொண்டு சிவாலயர் பொதிகை மலை சென்று, அகத்தியர் அருளை வேண்டித் தவம் புரிந்தார். அகத்தியர் தோன்றி, அடங்கன் முறையினை அவருக்கு அருளிச் செய்ததோடு, அதிலிருந்து 25 பதிகங்களைத் தேர்ந்தெடுத்து நல்கி அவற்றை நாளும் ஓதினால், திருமுறை அனைத்தையும் ஓதிய பயன் கிடைக்கும் என்றும் கூறினார். அவ்வகையில் அகத்தியர் தேவாரத் திரட்டு உருவாகியது. குரு உருவம், வெண்ணீறு, பஞ்சாட்சரம், திருக்கோயில், அரன் உருவம், திருவடி, அருச்சனை, தொண்டு ஆகிய உண்மைகள் எட்டையும் விளக்குவனவாக அந்த 25 பதிகங்களும் அமைந்துள்ளன. இதனை, 'சிட்டான அர்ச்சனையும் தொண்டும் சிவாலயர்க் கென்று இட்டார் அகத்தியனார் எட்டு' என்னும் வெண்பாப் பகுதி தெரிவிக்கிறது.

அகத்தியர் தேவாரத் திரட்டின் அமைப்பையும், உட்கிடையினையும் ஒரு செய்யுள், 'தோடு கூற்றுப் பித்தா மூன்றும்' பீடுடைத் தேசிகன் பேரருளாகும்' என்று தொடங்கி இறுதியில் 'தீதிலா அகத்தியத் திரட்டினை உலகில், ஓதினர் அடங்கலும் ஓதினர் ஆவரே' என்று அத்திரட்டினைப் பயில்வோர் எய்தும் பயனைக் கூறி முடிகிறது.

அகத்தியர் தேவாரத் திரட்டினை உருவாக்கிய அகத்தியர், பண்டைய அகத்தியர் ஆகார் என்றும், பொதிகை மலையில் அகத்தியர் பெயர் கொண்டு விளங்கிய ஒரு சைவச் சான்றோர் என்றும் ஆய்வாளர்கள் கருதுகின்றனர்.

தேவாரத் திரட்டினை உருவாக்கிய அகத்தியரே திருவாசகப் பதிகங்களுக்கும் கருத்துரை செய்துள்ளார் என்றும், அதனையும் சிவாலய முனிவருக்காகவே செய்தார் என்றும் கூறப்படுகிறது. அ. மா. ப.

**சிவாலிக்குக் குன்றுகள்** இமய மலைத் தொடரின் ஒரு பகுதியாகும். இங்குப் பல மனிதப் புதை படிவங்களும் விலங்கின் எலும்புத் துண்டுகளும் கண்டெடுக்கப்பட்டுள்ளன. இக்குன்றுகள் சிவாலிக்கு (Siwalik) மலைத்தொடர் எனவும் இமயமலையின் வெளிப்பகுதி எனவும் கூறப்படும். இமயமலைத் தொடரின் தாழ் பகுதியிலிருந்து மேற்கு, வடமேற்குத் திசையில் பரவியுள்ள சிவாலிக்குக் குன்றுகள மூன்று நாடுகளின் எல்லைகளைத் தொடுகின்றன. சிக்கிம் பகுதியில் ஓடும் திசுதா (Tista) ஆற்றில் தொடங்கி நேப்பாளம், வடமேற்கு இந்தியா் வழியாக வடக்குப் பாகிசுத்தான் பகுதியில் இதன் தொடர்ச்சி முடிகிறது. இதன் நீளம் 1,600 கி.மீ. ஆகும். சற்றேறக்குறைய 16 கி.மீ. அகலமுடைய இந்த மலைத்தொடரின் சராசரி உயரம் 3000-4000 அடிகளாகும்.

இம்மலைத் தொடர் சிந்து கங்கை ஆகிய ஆறுகளின் சமவெளியிலிருந்து சீராக உயர்ந்து செல்லாமல் திடீரென உயர்ந்து நிற்கிறது. வடக்கு இமய மலைத் தொடருககு இணையாகச் செல்லும் சிவாலிக்கு மலைத் தொடர் பின்பு பளளத்தாக்குகளால் பிரிக்கப்படுகிறது. பிரமபுத்திரா ஆற்றிலிருந்து தென் பூட்டான் வரையுள்ள அசாம் இமயமலையின தெற்கு அடிவாரப் பகுதியும் சிவாலிக்குக்குன்றுகள் எனக் கூறப்படுவதுண்டு. நேப்பாளப்பகுதியைச் சேர்ந்த சிவாலிக்குக் குன்றுகள் சூரியா (Churia) மலைத் தொடர் எனவும் கூறப்படுவதுண்டு.

வடமொழியில் சிவாலிக்கு என்பதன் பொருள் சிவனுக்கு உரியது என்பதாகும். இம்மலைத் தொடர் அரித்துவார் (Hardwar) நகரில் தொடங்கி பியாசு (Beas) ஆறு வரை உள்ளது. இம்மலைத்தொடரில் காட்டு வளம் குறைந்துவிட்டதால் மண் அரிப்பு மிகுந்துள்ளது. காலந்தோறும் ஏற்படும் வெள்ளத்தாலும் பெருமளவு மண் இடம் பெயர்ந்து விடுகிறது.

விலங்கினப் படிமலர்ச்சியைக் குறிப்பாக மனிதப் படிமலர்ச்சியைக் காட்டும் பல புதைவடிவங்கள் இங்குக் கிடைத்தன. இதனால் உலகத்தின் பல்வேறு பகுதிகளோடு இந்திய நிலப்பகுதியையும் ஒப்பிட்டு மனித இனத்தின் வளர்ச்சியை அறிய உதவுகிறது. மண்ணியலாருக்கும் இக்குன்றுகளின் மலர்ச்சி பல புதிய கருத்துகளுக்கு இடம் அளித்துள்ளது. இக்குன்றுகளின் படிமங்கள் பல காலவரிசையைக் காட்டுகின்றன என்று மண்ணியலார் கூறுகின்றனர். 2,500,000 ஆண்டுகளுக்கு முன் தோன்றி 10,000 ஆண்டு வரை முடிந்த ஊழிக் காலத்தில் (Pleistocene Period) இங்கு நிகழ்ந்த மண்படிமங்கள் பல உயிரினங்களின் புதைபடிவங்களைக் கொண்டுள்ளன. இவற்றுள் முதுகுத்தண்டுள்ளவிலங்கினங்களுள், குறிப்பாக மனித மூதாதையர்களுக்கு முந்திய விலங்கினங்கள் எனக் கருதப்படும் வாலிலாக் குரங்கு (Dryopithecine) வகையும், சில மனித மூதாதையர்களைக் காட்டும் வகைகளும் இங்குக் கிடைத்துள்ளன. சி.ப.

**சிவானந்த யதீந்திரர்** கி.பி.19-ஆம் நூற்றாண்டில் வாழ்ந்த தமிழ்ப் புலவர். இவர் தஞ்சாவூர் மாவட்டத்தைச் சேர்ந்த திருமறைக் காட்டிற்கு அருகிலுள்ள ஆயக்காரன்புலம் என்னும் ஊரில் சாமித் தேவருக்கும் மதுரம்மாளுக்கும் மகனாகப் பிறந்தார். அகமுடையார் வகுப்பைச் சேர்ந்த இவருக்குப் பெற்றோர் சூட்டிய பெயர் கலியபெருமாள் என்பதாகும். முதலில் இவர் இராமையா அடிகளிடம் தமிழ் இலக்கணங்களையும் சமய நூல்களையும் பயின்றார். நாட்டுக்கோட்டைச் செட்டியார்களுக்கு உரிய கோவிலூர் மடத்தின் தலைவராக விளங்கியவர் வீரசேகர ஞானதேசிகராவார். அவரிடம் கைவல்லியம் முதலிய தத்துவ நூல்களைக் கற்றுத் தெளிந்தார். சிவானந்தர் என்னும் பெயரும் பெற்றார். மேலும், காசி முதலிய இடங்களுக்குச் சென்று வடமொழியிலுள்ள வேதங்களையும் வேதாகமங்களையும் பயின்றுபுலமையடைந்தார். அதனால் சென்னையிலிருந்த ப. இராமசாமிப் பிள்ளை வேண்டிக்கொண்டவாறு வேதங்களைத் தமிழில் மொழிபெயர்த்தார். இவர் சாமவேத மொழி பெயர்ப்பு, எசுர்வேத மொழி பெயர்ப்பு, இருக்குவேத ருத்திரி, சாம வேத ருத்திரி, வச்சிர சூசிகை, உபநிடதம் முதலிய மொழி பெயர்ப்பு நூல்களைச் செய்துள்ளார். மேலும், இவர் இராமலிங்க சாமிகள் திருவுள்ளம், வீரசேகர புராணம், சங்கர திக்கு விசயம், கோயிலூர் நான்மணி மாலை, சைவத் தெளிவு, அத்வைதத் தீர்ப்பு, சிவஞான போதசாரம்,

திருவொற்றியூர் மான்மியம், திருமண விளக்கம், கரபாத்திர சிவப்பிரகாச சாமிகள் வரலாறு, கிருட்டிணோபநிடதம், வேலூர் தோலா சாமிகள் வரலாறு முதலிய நூல்களை எழுதியுள்ளார். வீ.சே.

**சிவானந்தர்** திருநெல்வேலியிலுள்ள பத்த மடை என்னும் கிராமத்தில் கி.பி. 1887-ஆம் ஆண்டு செப்டம்பர் மாதம் 8-ஆம் தேதி பிறந்தார். இவர் சிறிதுகாலம் மருத்துவராகப் பணியாற்றினார். இவர் குழந்தைகளுடன் குழந்தை போன்றும், பெரியவர் களுடன் பெரியவர் போன்றும், அறிவாளிகளுடன் அறிஞர் போன்றும் பழகும் வல்லமை படைத்தவர். எல்லோரிடமும் அன்பாகவும், வேறுபாடு மனப் பான்மையில்லாமலும் இவர் நடந்துகொள்வார். சிவானந்தருடைய வாழ்க்கை பிறருக்கு எடுத்துக்காட் டாகவும், அவருடைய எழுத்துகளும் சொற்பொழிவு களும் நல்ல வாழ்க்கைக்கு வழிகாட்டுவனவாகவும் அமைந்தன. வாழ்க்கைக்கு ஏற்ற சிறந்த கருத்துகளை எல்லோரும் விளங்கிக்கொள்ளும் வண்ணம் எளிதில் விளங்க வைக்கும் ஆற்றல் படைத்தவர். இவருடைய நூல்கள் எளிய நடையுடையனவாய்ப் பெரிய தத் துவக் கருத்துகளைச்சாதாரண மனிதர்களும் புரிந்து கொள்ளும் வண்ணம் உள்ளன. மனிதர்களுடைய துயரங்களை இவர் நன்றாக அறிந்தவர்; அவர் களுடைய அறியாமையின் காரணத்தையும் அவர் களின் தேவைகளையும் நன்றாக உணர்ந்தவர். ஆத லின் இவர் அவர்களின் உடல் நன்மைக்காக ஆசனங் களையும், உயிர் மேம்பாட்டிற்காக ஒழுக்கவிதிகளை யும் ஆன்மிக சிந்தனைகளையும் பயிற்றுவித்தார். இமய மலையின் அடிவாரத்தில் ரிசிகேசத்தில் தெய்வ நெறிக் கழகம் (Divine Life Society) அமைத்து நல்லமுறையில் மக்களுக்குச் சேவை செய்துவந்தார். இந்தியாவிலுள்ள கிராமங்களில் தெய்வ நெறிக் கழ கத்தின் கிளைகள் அமைந்திருக்கின்றன.

இவர் உலகில் காணப்படுகின்ற அறியாமையை யும் துன்பத்தினையும் அகற்ற ஒரு தெய்வ நெறிக் கொள்கையைப் போதித்து அதற்காக அல்லும் பக லும் உழைத்தார். இவர் புலன் கடந்த நுண்பொருள் ஆய்வு நூல்களும், நீதிக்கதைகளும், யோக மார்க்கத் திற்குரிய நூல்களும், சமயச் சடங்குகள் பற்றிய நூல் களும் எழுதினார். அவை எளியனவாகவும் மனத் திற்கு அமைதி தருவனவாகவும் அமைந்தன. தெய்விக நெறியில் வாழ விரும்புவோர் அறிவுள்ளவர்களாய் உலகப் பொருள்களில ஆசையில்லாதவர்களாய், நற் குணம் படைத்தவராய், விடுதலை அடைய வேண்டும் என்ற எண்ணம் படைத்தவராய் இருத்தல் வேண்டும். மேற்கூறிய குணங்கள் படைத்தவராக இருந்தாலும், சில ஐயப்பாடுகளும், மனத்தில் குழப்பங்களும் ஏற் படுகின்ற காரணத்தால், நல்ல முறையில் வழி நடத்தச் சிலருக்கு ஒரு குரு தேவைப்படுகிறார். சுவாமி சிவானந்தர் அத்தகையோருக்கு ஒரு சிறந்த குரு வாகத் திகழ்ந்தார். இவருடைய நூல்கள் உலகில் காணப்படும் துன்பங்களைப் பற்றியும், அவற்றினை வெல்லும் வழிகளைப் பற்றியும் நன்கு விவரித்தன.

சங்கரரைப் போல் சிவானந்தரும் ஒரு பரம் பொருள் உண்டென்றும், அதைத்தவிர்த்து வேறொரு பொருள் இல்லை என்றும் உறுதியாகக் கூறினார். வாழ்க்கை என்பது ஒரு சிறந்த தத்துவத்தை நடை முறையில் காட்டுகிறதென்றும், தத்துவம் என்பது வாழ்க்கையில் மறைந்து கிடக்கும் உண்மைகளை வெளியே எடுத்துக்காட்டுகின்றது என்றும் கூறினார். தத்துவம் என்பது ஆழமாகப் புதைந்து கிடக்கிற உண்மைகளை வெளியே கொண்டு வரும் வாதமே யொழிய புரியாத விடுகதை அன்று. தத்துவம் என் பது புலனுக்கெட்டாத உண்மைகளைப் பற்றிக் கூறு வதன்று. அது கண்ணுக்குக் காண்கின்ற பொருள் பற்றியும், மனிதனின் தேவைகளைப் பற்றியும், அன் பைப் பற்றியும், புகழைப் பற்றியும், மனிதனின் சக்தியைப் பற்றியும், மக்களைப் பற்றியும் உண்மை யான மதிப்பீடுகளைப் பற்றியும் (Values) கடைசி யாக மனிதன் இறைவனோடு ஒன்றுபட்டு அழியாத தன்மையடைய வேண்டுமென்பதைப் பற்றியும் விவ ரிக்கிறது.

சுவாமி சிவானந்தர் தெய்விக அன்பைப் பற்றி யும் மனிதர்கள் ஒருவரை ஒருவர் நன்றாகப் புரிந்து கொண்டால் வேறுபாடு மறைந்துவிடும் என்றும் கூறி னார். ஒவ்வொரு தனிமனிதனும் இறைவனோடு ஒன்றுசேர்ந்துவிட வேண்டும் என்றும், அதுதான் வாழ்க்கையின் குறிக்கோள் என்றும் உணரவேண்டும். அத்தகைய ஓர் எண்ணம் ஏற்பட்டால், சகோதர மனப்பான்மை எல்லோரிடமும் ஏற்படுவதோடு எல் லோரும் இன்புற்றிருக்க வேண்டும் என்ற மனப்பான் மையும், ஓர் உலக அரசாங்கமும் ஏற்படும் வாய்ப்பு உண்டாகும் என்றும் சுவாமி சிவானந்தர் கூறினார். இத்தகைய மனித இன நலப்பற்று மனிதனைத் தெய்வ நிலைக்கு உயர்த்துகிறது. கடவுளுடைய புக ழுக்கு வரையறை கிடையாது என்றும், மனித முயற சிக்கு முடிவு கிடையாதென்றும் வேதங்கள் கூறுகின் றன. சுவாமி சிவானந்தர் இதனை நன்றாகப் புரிந்து கொண்டு ஆன்மிக போதனைக்கு எல்லையில்லை என்றும், எப்பொழுதும் நன்னெறிகளைப் போதித்துக் கொண்டும், கேட்டுக்கொண்டும், ஒவ்வொரு நிலை யிலும் மாணவர்களைக் குருவானவர் நன்றாகக் கவனித்துக் கொண்டுமிருக்கவேண்டும் என்றும் சுவாமி சிவானந்தர் கூறினார். இவர் ஒவ்வொரு நிமிடமும்

ஆன்மிகப் பயிற்சி செய்யக் கிடைக்கிற வாய்ப்பு என்றும், மிகவும் கவனத்தோடு பயிற்சி செய்ய வேண்டுமென்றும், அப்பயிற்சியில் தவறுகள் ஏற்படு மென்றும், மிகவும் கவனமாக இருக்கவேண்டும் என் றும் குறிப்பிட்டுள்ளார்.

உண்மையான தத்துவ நெறியானது, புனிதமான செயல்கள் அடிப்படையில் அமைந்தது என்றும், உணமையையும நேர்வழியையும் கடைப்பிடிககும் வழி எனறும் கூறினார். இரா.கோ.

*சிவேதன்:* சிலப்பதிகாரத்தால் அறியப்பெறும் வடநாட்டுச சிற்றரசர்களுள் ஒருவன். கண்ணகிக்குப் படிமம் அமைககக் கல கொண்டு வருவதறகாக இமயம சென்ற சேரன் செஙகுட்டுவன் நண்பாகளான நூற்றுவர் கன்னர் உதவியால கங்கையாற்றைக் கடந்து, பின்னர் உத்தரகோசலம் அடைந்து பாசறை அமைத்துத் தங்கினான. அப்போது கனகவிசயர் எனனும ஆரிய அரசர் தம துணைவாகளான உத்தரன் முதலிய எட்டுச் சிறறரசர்களோடு சேர்ந்து போர்ககோலம பூணடு எதிாத்துப் போர் செய்தனர். அவ்வாறு கனக விசயர்கருத் துணைவேந்தர்களாக வநத வடநாட்டுச் சிற்றரசர்களுள ஒருவன் சிவேதன். செங்குட்டுவனோடு நிகழத்திய அப்போரில சிலர் தோற்றோடச் சிலர் இறந்துபட்டனர்.

**சிவேதன்[2]** : பெருங்கதையில் இடம்பெறும் அமைச்சர்களுள் ஒருவன். பிரச்சோதன மன்னனின் அமைச்சனாகக் கூர்தத மதியுடையவனாக விளஙகிய இவன், அரசர்க்கு அறிவுரை கூறுவதில் சிறநது விளங்கினான். நளகிரி என்னும் அரச யானை மதம் மிக்கு நகரை அழிததபோது, மன்னன் பிரசசோதனன் ஆணையினபடி, இவன், சிறையிலிருந்த உதயணனை வேணடி அவனை வெளிக்கொணர்நது, அந்த யானை யினை அடக்கச் செய்தான். உதயணனைப் பிரச் சோதனனுக்கு அறிமுகம் செய்து வைத்து இருவருக் கும் இணக்கம் ஏறபடுமபடி செய்தான. அதன பய னாக, அரச குமாரர்களுககும் வாசவதத்தைக்கும் கல்வி கறபிக்குமாறு உதயணன் அரசனால் நியமிககப் பெற்றான. உதயணனுக்கு வேண்டிய பணிகளை எல்லாம் சிவேதன மகிழ்வோடு செய்தான். இவ வாறு பணி செய்ததற்குப் பரிசாகப் பினனர், ஐராபதம் என்னும் மலையில கிடைத்த பொன்னாற செய்யப்பெற்ற பதினாயிரம் பொன நாணயங்களை உதயணனால் அளிக்கப்பெற்றான.

**சிவேதன்[3]** : மகாபாரதத்தில் இடம்பெற்றுள்ள ஒரு வீரன். மச்ச நாட்டு மன்னனான விராடனின் மைந்தனாவான். சிவபெருமானை நோக்கித் தவ மியற்றி, விற்போரில் யாராலும் வெல்லப்படாத தன் மையை வரமாகப் பெற்றிருந்தான். பஞ்சபாண்ட வர்க்கும் துரியோதனாதியர்க்கும் நடைபெற்ற போரில் பாண்டவர் பக்கல் நின்று, அவர்தம் படை களுக்கு முதல் சேனாபதியாகப் போரிட்டான். துரி யோதனன் பக்கல் இருந்து போர் புரிந்த, பெருவீர ராகிய வீடுமர் போன்றவர்களைப் போரில் வென் றான். விற்போரில் இவனை வெல்ல இயலாது என் பதனை அறிந்த வீடுமர், இவனை வாட்போர் புரியு மாறு தூண்டினார். அவர் தூண்டுதலால் இவன வாட்போர் செய்யும்போது வீடுமரால் கொலலப் பெற்றான். அ மா.ப.

*சிற்பக்கலை:* மனிதன் கண்டகலைகளுள் மிகச்சிறந்த கலை சிற்பக்கலை. சிறிய சிற்பமாயினும் காண்பவருக்கு மனத்தில அமைதி, மகிழசசி, வியப்பு ஆகியவற்றை ஏற்படுத்தினால் அது சிறநத படைப் பாகக் கருதப்படும்.சிற்பக்கலை சமயத்துடன் பெரிதும் தொடர்பு கொணடே வளர்ந்தது. வரலாற்றுககு முற்பட்ட காலத்திலிருநதே இக்கலை வளர்ந்து வரு கிறது. பழங்கற்கால மனிதன எலும்புகளிலும் தந்தத் திலும் சிற்ப வேலைப்பாடுகளைச செயதான். முப் பதாயிரம் ஆண்டுகளுக்கு முனபே இக்கலை தோன்றி யது.

சிற்பங்களைவிட மனிதனின் நாகரிகத்தையும் வளர்ச்சியையும் எடுத்தியம்பும் சானறுகள் இவ்வுலகில வேறு எதுவும் இல்லை. வரலாற்றுச் சான்றாக இவை விளஙகுகின்றன. சிற்பங்கள ஒரு குறிப் பிட்ட மக்களின அலலது ஒரு குறிப்பிட்ட காலத் தின் கூறுகளைப் பற்றிக் கூறும் இயல்புடையன. நாகரிகத்தின் கூறுகளை உணர்த்துவன சிற்பங்களே ஆகும். எடுத்துக்காட்டாகக் கிரேக்கச் சிற்பங்கள மனித நாகரிகத்தை உணர்த்துவனவாக அமைந் துள்ளன. கிரேக்கக் கடவுள்கள பெரும்பாலும் மனி தனின் பொதுவான வடிவங்களையே பெற்றுத திகழந் தன. இந்தியா, சீனா மற்றும் பல நாடுகளில சமய அடிப்படையில் சிற்பவளர்ச்சி ஏற்பட்டது. இன்றைய சிற்பிகள, சிற்பங்களைத் தங்கள் கருத்து களை வெளிப்படுத்தும் வகையில் அமைககின்ற னர். மக்களின் சமய சமூக நம்பிக்கைகளை வெளிப் படுத்துவனவே சிற்பங்களாகும். எகிப்து, ஆசியா, அமெரிக்கா, இந்தியா போன்ற நாடுகளின் தொன்மை வரலாறு, அம்மக்கள வளர்த்த சிற்பக் கலை மூலமாகவே பெரிதும் தெரிய வருகிறது. சிற்பங் கள் நினைவுச் சினனங்களாகவும், தொன்மைச் சின்னங்களாகவும் விளங்குகின்றன. 'கல், உலோகம் போன்றவை நீண்ட நாள்கள் அழியாமல் இருக்கக் கூடியவை. எனவே, நினைவுச் சின்னங்கள் இவ்வகைப் பொருள்களாலேயே செய்யப்படும். இவவகைச் சிற்பங்

கள் நினைவுச் சிற்பங்கள்(Commemorative sculpture) எனப்படும். பணடைக் காலத்தில் மேலை நாடுகளில் நினைவுச் சிறபங்கள் எழுப்பும் மரபு இருந்து வநதுள் ளது. அவை பெரும்பாலும் முககிய பிரமுகர்கள், தலைவர்கள் ஆகியோருக்காக எழுப்பப்படும். இந்தியாவிலும் இம்முறை இருந்து வருகிறது. இக் காலத்தில் இவவகைச் சிறபங்கள் பெருமளவில எழுப் பப்படுகின்றன.

சிற்பிகள தஙகள் மனத்தில் படும் கருத்துகளின் அடிப்படையிலும் சிற்பங்களை உருவாக்குகின்றனர். அழகை வெளிப்படுத்தும் இவ்வகைச் சிற்பங்களை ஒருவர் காணும்பொழுது அவருக்கு மனத்தில் சிறபி எதனை வெளிப்படுத்த இச்சிற்பத்தைப் படைத்தான என்ற கேள்வி எழும். சிற்பங்கள இக்காலத்தில மிகுதி யாக வடிக்கப்படுகினறன. இக்காலச் சிற்பங்களில் உணமை நிலையையே பெரிதும் காணமுடிகிறது. இக்காலத்தில் சிற்பங்கள் செய்ய இரும்பு, நெகிழி (Plastics), அலுமினியம், கணணாடி போனற பிற பொருள்களும் பயன்படுத்தப்படுகின்றன.

சிற்பங்கள பொதுவாகக் கட்டடக் கலையுடன் தொடர்புடையனவாகும். ஏனெனில், இவ்விரு கலைக் கும் ஒரே மூலப் பொருளகள்தாம் பயன்படுகின்றன. தொனமை நாகரிகங்களின கட்டடச் சிதைவுகளில் சிற்பங்கள் பல காணப்படுகினறன.

வரலாற்றுககு முறபட்ட காலச் சிற்பங்கள எலும்புகள, விலஙகுக் கொம்புகள், பாறைகள் ஆகியவற்றில் செதுக்கப்பட்டன. இவை வாழும் உயிர்களின் வடிவங்களாகவே வடிக்கப்பட்டன. வர லாற்றுக்கு முற்பட்ட பழஙகாலச சிற்பங்கள் விலங்கு கள், மனிதன், மனிதன் விலங்குகளைக் கொல்வது போன்ற அமைப்புடையனவாய வடிக்கப்பட்டன. அவற்றுள் குறிப்பிடத்தக்கவை எருது தன்னை நக்கிக் கொள்ளும் சிற்பம் (Bison licking itself), விலலண் டோர்பு வீனசு சிற்பம் (Venus of Wiliendorf) போன்ற சிற்பங்களாகும். விலலண்டோர்பு வீனசு சிற்பம் ஒரு பெண் தெய்வமாகும். இவள் மனித னுக்கு வாழ்வும் உணவும் கொடுக்கும் தெய்வமாகக கருதப்பட்டாள. வரலாற்றுக்கு முற்பட்ட மனிதன் மட்கலன்களைச் செய்து அதனைச் சூளையில் இட்டு சுட்ட பிறகு பயன்படுத்தத் தெரிந்து கொணட பின் களிமன் உருவங்களையும் அநத வகையிலேயே செய்தான். இவைபோன்ற சுடுமண் உருவஙகள் பல்வேறு நாடுகளில் கிடைத்துள்ளன. சு.இரா.

**கண்ணால் கண்ட** உருவங்களையோ கற்பனை உருவங்களையோ வடிவமைத்துச் செய்வது சிற்பம் எனப்படும். கல், உலோகம், செங்கல, மரம், சுதை, தந்தம், வண்ணம், கண்டசருக்கரை, மெழுகு என்னும் பத்துப் பொருள்களும் சிற்பம் செய்ய ஏற்றவை என்று பிங்கல நிகண்டு கூறும். உலோகங்களுள வெணகலம் பல ஆயிரக்கணக்கான ஆண்டுகளாகச் சிற்ப வேலைக்குப் பயன்பட்டு வருகிறது இதுதவிர பொன், வெளளி, செம்பு முதலிய பிற உலோகங் களும் சிற்ப வேலைக்குப் பயன்படுகின்றன.

கல்லில் கருங்கல், மாக்கல், பளிங்குக்கல், சலவைக் கல் போன்றவற்றால் சிறபங்கள் செய்யப்படுகின்றன. நுட்பமான வேலைப்பாடுகளுக்குத் தந்தம் ஏற்ற தென்றாலும், வழிபடு படிமங்களை அதில் செய்வ தில்லை. தந்தப் படிமங்கள் காட்சிப் பொருள் களாகவே கருதப்படுகின்றன. சிற்பங்கள் வடிப்பது குறித்துச் சிற்ப நூல்கள் பல இயம்புகின்றன.

**சிற்ப வகைகள்:** சிற்பம், வடிவக்கலை. வடிவத்தை அமைக்கும் நிலையை ஒட்டிச் சிற்பத்தைப் பல வகை களாகப் பிரிக்கலாம். வடிவம் முழுவதையும் அதாவது முன்புறம் பின்புறம் இரண்டையும் காட் டும் சிற்பஙகளை முழுவடிவச் சிற்பங்கள் என்றும், வடிவத்தின் ஒருபுறம மட்டும் காட்டும் சிற்பங்களைப் புடைப்புச் சிறபங்கள் என்றும் வகைப்படுத்தலாம். கோயில்களில் காணப்படும் முதன்மைத் தெய்வத் திருமேனிகளும் உற்சவத் திருமேனிகளும் முழுவடிவச் சிற்பங்கள்.

தேவகோட்டங்களிலும் கோயிற் சுவர்களிலும் அமைக்கப்படும் சிற்பங்கள புடைப்புச் சிற்பங்கள். மாமல்லபுரத்துப் பகீரதன் தவம், திருச்சிராப்பள்ளி மலைக்கோட்டை மேல் குடைவரையிலுள்ள கங்கா தரர் சிற்பம் போன்றவை புடைப்புச் சிற்பங்களுக்குச் சிறந்த எடுத்துக்காட்டுகளாகும்.

புடைப்புச் சிற்பங்களை வடிவங்களின் பரிமாணம் கருதி உயர் புடைப்புச் சிற்பங்கள், தாழ் புடைப்புச் சிற்பங்கள் எனப் பிரிக்கலாம், தேவகோட்டச் சிற்பங் களை உயர் புடைப்புச் சிற்பங்களாகவும், திருவையாறு தென் கைலாசம் கோயில் தூண்களி லுள்ள மெல்லிய சிற்பங்களைத் தாழ் புடைப்புச் சிற்பங்களாகவும் கருதலாம்.

புடைப்புச் சிற்பத்தின் வடிவம் செதுககப்படும் பொருளின் மேற்பரப்பினும் உயரமாகப் பிதுஙகி நிற்கும். மேற் பரப்பைக் குடைந்து வடிவம் அதனி னும் தாழ்ந்து இருக்கும்படியாக அமைக்கப்படும் சிற்பம் குடைவுச் சிற்பம் (Intaglio) எனப்படும். இது புடைப்புச் சிற்பத்திற்கு நேர்மாறானது. புள்ளமங்கை, திரு ஆலந்துறை மகாதேவர் கோயில் சிற்றுருவச் சிற்பத் தொகுதிகள் குடைவுச் சிற்பங்களுக்குச் சரி யான எடுத்துக் காட்டுகளாகும்.

சிற்பங்களை அளவுமுறையால் மூன்று வகைப் படுத்துவர். ஏழு தாள அளவு உயரமுள்ள உருவம் வாமனம். எட்டுத் தாள அளவு உயரமுள்ள சிற்பம் மானுடம். ஒன்பது தாள உயரமுள்ள வடிவம் தெய் விகம்.

சிற்பிகள் இறைவடிவங்கள், மனித வடிவங்கள், விலங்கு, பறவை, செடி கொடி போன்ற இயற்கை வாழ் இனங்கள், கற்பனைக் காட்சிகள் என்று எல்லாவற்றையும் சிற்பங்களாகப் படைத்துள்ளனர். இந்தியாவில் சிற்ப அமைப்பில் இறை வடிவங்கட்கே முதன்மை அளிக்கப் பட்டுள்ளது.

**இறைச் சிற்ப வகைகள்:** சிற்பிகள் உயர்ந்த அறிஞர்களின் கருத்திற்கேற்பப் பரம்பொருளை முப் பெரும் நிலைகளில்-உருவம், அருவம், அருவுருவம் என்று மூன்று வகைகளில்-அடக்கினார்கள், தலை, உடம்பு, கை, கால்கள் பொருந்திக் கண்களுக்குப் புலனாகும் வடிவம் உருவம் எனப்படும். அவ்வாறு கண்ணுக்குப் புலப்படாதது அருவம் ஆகும். இரண் டும் கலந்தது அருவுருவம். சிற்ப நூல்கள் இலிங்க வடிவத்தை அருவமேனி என்றும், எல்லா உறுப்புக் களும் நிறைந்த் சந்திரசேகரர் வடிவம் போன்ற தெய்வத் திருமேனிகளை உருவ மேனிகள் என்றும், முகலிங்கத்தை அருவுருவம் என்றும் வரையறுக்கின் றன.

சிற்பங்களை அவற்றை இருத்தும் நிலையால் சலம், அசலம், சலாசலம் என்று மூன்று வகைகளாகப் பிரிப்பர். செய்த இடத்திலிருந்தோ நிறுவப்பட்ட இடத்திலிருந்தோ அசைக்க இயலாவண்ணம் இருப் பின் அப்படிமங்கள் அசலப் படிமங்கள் எனப்படும். ஓரிடம் விட்டு வேறிடம் நகர்த்தக் கூடியனவாய் அமைக்கப்பட்டால் அவை சலம் எனப்படும். இடம் விட்டு இடம் மாற்றக்கூடிய படிமங்களை மாற்றக் கூடாது என்னும் நோக்கில் நிறுவினால், அவை சலா சலம் எனப்படும்.

தோற்ற அமைப்பைக் கொண்டு சிற்ப நூல்கள் இறை வடிவங்களை அமைதித் தோற்றம், அச்சம் அகற்றி அருள் தரும் தோற்றம், அச்சுறுத்தும் தோற்றம் என்று மூன்றாய்ப் பிரிக்கின்றன. இயற்கை யான அமைதிநிலையும், அன்பர்க்கு வேண்டுவன வழங்கும் திருக்கைகளையும் கொண்டிலங்கும் திரு மேனிகள் அமைதித் தோற்ற வகையின. ஆலமர் கடவுளின் வடிவம் இதற்குத் தக்க எடுத்துக் காட்டா கும். நின்ற கோலத்தில அல்லது ஊர்தியில் ஏறியிருக் கும் நிலையில பலவகை அணிகலன்களை அணிந்து அம்பு, வாள் முதலிய படைக்கலன்களுடன் அச்சம் அகற்றி அன்பரைக் காத்தருளும் கைக் குறிப்பில் காணப்படும் படிமங்கள் அச்சம் அகற்றி அருள் தரும் தோற்றத்தனவாம். ஆறுமுகப் பெருமானின் திருக் கோலம் இதற்குச் சான்றாகும். அம்பு, வாள் முதலிய படைகளால் கொடியவர்களைக் கொல்வதாகவும், எப்போதும் அச்சுறுத்தும் தோற்றததை உடைய தாகவும், போர்த்தொழிலில் மகிழ்வு கொண்டது போலவும் விளங்கும் வடிவங்கள் அச்சமூட்டும் தோற்றத்தன. மகிடாசுரமர்த்தினி, காலாரி மூர்த்தி திருவுருவங்கள் இவ்வகையின.

இவை தவிர உருவச் சிற்பங்களும் (Portrait Sculptures) உள்ளன. குறிப்பிட்ட ஒருவரின் உரு வத்தை உள்ளது உள்ளவாறு இயற்கையாகக் காட்டும் சிற்பங்களை உருவச் சிற்பங்கள் எனலாம். அன்னை செம்பியன் மாதேவியின் கணவரான கண்ட ராதித்த சோழரின் உருவச் சிற்பங்கள் கோனேரிராச புரம் உமா மகேசுவரர் கோயில், ஆனாங்கூர் அகத்தீசு வரர் கோயில் போன்ற பல கோயில்களில் உள்ளன. கோனேரிராசபுரம் உமாமகேசுவரர் திருக்கோயிலில் உள்ள கண்டராதித்த சோழரின் உருவச் சிற்பம் கல் வெட்டுடன் கூடியது.

**சிறப்பியல்பு:** இந்நாட்டுச் சிற்பங்களின் சிறப் பியல்புகளுள் ஒன்று ஆடற்கலை இலக்கணங்கள் அவற்றில அளவாய் அமைந்துள்ள நிலையாகும். இரண்டு கலைகளுமே கோயில்களால் வளர்க்கப்பட் டமையால், இது எளிதாகக் கைவந்தது. சிற்ப வடி வங்கள் நின்றாலும், அமர்ந்தாலும், கிடந்தாலும், வேறெந்த அமைதியில் தோன்றினாலும், அவை பெரும்பாலும் ஆடற்கலை இலக்கணத்தையொட்டி அமைந்திருப்பதைக் காணலாம். சிற்பிகள் ஆடற்கலை இலக்கணத்தை அறிந்து வேண்டுமளவு அதைத் தழுவி, தம் கலையுணர்வு, கற்பனை உணர்வு ஆகியவற்றைக் கலந்து, அமைக்கப்படும் திருமேனிக்கும் நிறுவப்படும் இடத்துக்கும் தக்கவாறு சரிந்து, வளைந்து, நெளிந்த கைகளையும் கால்களையும் பல அமைதிகளில் வடித்துக் காண்பவர் கலையழகை மட்டுமன்றி, அவ் வடிவ அமைப்புகளின் உட்கருத்தையும் உணருமாறு செய்திருக்கிறார்கள்.

சிற்பங்களைப் பொறுத்தமட்டில் கை அமைதி கள், உடலின் வளைவமைதிகள், இருக்கை அமைதிகள் ஆகிய மூன்றும் ஆங்கிகா அபிநயம் எனப்படும். சிற்ப வடிவங்களையும் வழிபடு படிமங்களையும் அவ்வவற் றிற்குரிய ஆடைகள், அணிகலன்கள், தலைக்கோலங் கள், படைகள் ஆகியவற்றைச் சேர்த்துச் செப்பம் செய்தல் அகார்ய அபிநயம் எனப்படும். உள்ளத்து உணர்வுகளைப் புருவம், கண், உதடு ஆகிய மூன்றின் மூலம் வெளிப்படுமாறு அமைப்பது சாத்விக அபி நயம். சுருக்கமாகச் சொன்னால், ஆடற்கலைத்

தோற்றங்களின கற்பனையும் கருத்தும் சலந்த படப் பிடிப்பே சிற்பத் தோற்றங்கள் எனலாம்.

**சிறப மரபுகள்:** இந்தியச் சிற்பங்களை வரலாற்றுக் கண்ணோட்டத்தில் பல மரபுகளாக அறிஞர்கள் பிரித்துள்ளனர். வரலாற்றுக்கு முற்பட்ட கால மரபு, மௌரிய மரபு, சுங்க மரபு, குசானிய மரபுச் சிற்பங்கள், அமராவதிச் சிற்பங்கள், குப்தர் காலச் சிற்பங்கள், இடைக்கால இந்து மரபு, பௌத்த, சமண மரபுச் சிற்பங்கள், பல்லவர், சோழர் மரபுகள், சாளுக்கியர்மரபு, ஒய்சாளர் மரபுச் சிற் பங்கள், விசயநகரநாயக்கர் காலச் சிற்பங்கள் எனறு இவை பல்வகைப்படும்.

ஒவ்வொரு மரபுக்கும், சிற்பத் தோற்றத்திலும், சிற்ப அமைப்பிலும், வெளிப்பாட்டு உணர்வுகளிலும் நிறைந்த வேறுபாடு உண்டு. வேறுபாடுகள குறைநத மரபுகளும் உண்டு. குறிப்பாக கி.பி. 6-ஆம் நூற் றாணடிலிருந்து 9-ஆம் நூற்றாணடுக்கு இடைப்பட்ட பல்லவர், பாண்டியர், வேளிர், அதியர் சிற்ப மரபு களில் மிகுந்த வேறுபாடுகளைக் காணமுடிவதிலலை. திருப்பரங்குனறம் குடைவரைச் சிற்பங்களும் பலல வர் குடைவரைச் சிறபங்களும் அதியரின் நாமக்கல் குடைவரைச் சிற்பங்களும் பெருமளவு தோற்றப் பொலிவில், சிற்ப அமைப்பில், செதுககுத்திறனில் ஒத் திருப்பதைப் பல சிறப வல்லுநர்கள் சுட்டிக்காட்டி யுளளனர்.

**சிற்பச் சாதனைகள்:** இந்தியச் சிற்பக் கருவூலங் களுள காலத்தால் முற்பட்டவை மௌரியர் சிற் பஙகள். சாரநாத்திலுள்ள சிம்மப் போதிகை, தௌலி யிலுள்ள யானையின் செதுக்குச் சிற்பம், பாடலி புரத்து அருங்காட்சியகத்திலுளள இயக்கி உருவம் ஆகியவை மௌரியாகளின சிற்பத் திறமைக்குச் சிறந்த எடுத்துக்காட்டுகள்.

பாரூத்துச் சிற்பங்கள் சுஙகர்களின் மரபிற்கும், அமராவதி, குடிமலலம் சிற்பங்கள் சாதவாகனர் மர பிற்கும் சிறந்த எடுத்துக்காட்டுகள்.

குப்தச் சிற்பங்களுள் மிகச் சிறந்தவற்றை அசந்தா, சாரநாத்து, பூமரா, தியோகர் முதலிய இடங்களில் பார்க்கலாம். எளிமையும் அழகும் நிறைந்த இவ்வடிவங்கள் மிக நுட்பமானவை.

சாளுக்கியர்களின் ஒப்பற்ற சிற்பங்களைப் பாதாமி, பட்டடக்கல், அய்கொளே ஆகிய இடங் களிற் காணலாம். சிவபெருமானின் பல்வகையான ஆடல் தோற்றங்கள் இச் சிற்பங்களில் குறிப்பிடத் தக்கவை. அழகும் எளிமையும் நளினமும் நிறைந்த சிற்பங்கள் இவை.

ஏறத்தாழ இக் காலகட்டத்திலேயே தமிழகத் தில் பல்லவர்களின் மாமல்லக் குகைக் கோயில்களின் சிற்பத் தோற்றங்கள் வரலாற்றுப் புகழ் படைத் தவை. காஞ்சிக் கயிலாசநாதர் கோயிலில் காணப் படும் சிவபெருமானின் ஆடற்கரணச் சிற்பங்கள், பர தரின் நாட்டிய நூலில் உள்ள கரண இலக்கணங் களுக்கு வடிவ விளக்கங்களாய் நிற்கும் எழிற் படிமங் களாகும்.

கொடும்பாளூர் வேளிர்களின் மூவர் கோயிற் சிற பங்களும், கழுகு மலை வெட்டுவான கோயில், திருப் பரங்குன்றம் குடைவரைகள் முதலியவற்றிலுளள பாண்டியர் சிற்பங்களும் தமிழகச் சிற்பிகளின கலைத்திறனுக்குச் சான்றாக விளங்குகின்றன.

இடைக்காலத்தின் பிற்பகுதியில் எழுந்த சிற்பங் களுள் மத்தியபிரதேசப் பகுதியில் அமைந்துள்ள கசு ராகோ, புவனேசுவரத்திலுள்ள இலிஙகராசா, இராசா இராணிக் கோயில்கள், தமிழகத்தில் சோழர் காலக் குடந்தை நாகேசுவரர் கோயில், சீனிவாசநல் லூர் குரங்க நாதர் கோயில, தஞ்சைப் பெரிய கோயில, கங்கைகொண்ட சோழீச்சுரம், தாராசுரத்து ஐராவதேசுவரர் திருக்கோயில ஆகியவற்றிலுளள சிற் பங்கள் பெருமைக்குரியவை; புகழத்தக்கவை. இவை சிற்பக்கலையின் வளர்ச்சியையும், சிற்பங்களை வடிப் பதில் சிற்பிகள் மேற்கொண்டிருநத பல்வேறு சோத னைக் கட்டங்களையும் தெளளிதின் உணர்த்துகின் றன.

சிற்றுருவச் சிற்பங்களும் கி.பி. 9-ஆம் 10-ஆம் நூற்றாண்டுகளில் செழித்து வளர்ந்தன. தமிழக அள வில் சோழ வேந்தாகளான முதலாம் ஆதித்தனும், முதலாம் பராந்தகனும் இதைப் போற்றி வளர்த்த மைக்குப் புள்ளமங்கை ஆலந்துறை மகாதேவா திருக் கோயில், சீனிவாசநல்லூர் குரஙகநாதர் திருக் கோயில், குடந்தை நாகேசுவரர் திருக்கோயில் சிற்பங் கள் சிறந்த எடுத்துக் காட்டுகளாகும். பிற்காலத்தில இரணடாம் இராசராசனின கலைப் படைப்பாய் எழுந்த தாராசுரம் ஐராவதேசுவரர்திருக்கோயில் சிற் பச் சாதனைகளின் உச்சம். இங்கு வடிவமைப்பிலும், சமய நோக்கிலும் பற்பல சோதனைகள் நிகழ்நது புதிய தோற்றங்களில் இறைச் சிறபங்கள உருவெடுத் தன. இவை அழகிலும் நுணுக்கத்திலும் ஆற்றலிலும் குறைவில்லாச் சிற்பங்களாகும்.

ஆந்திராவிலுள்ள காகதியச் சிற்பங்களும், கரு நாடகத்திலுள்ள பேலூர், அளேபீடுச் சிற்பங்களும் அலங்காரமும் ஆடம்பர வேலைப்பாடுகளும் மிகுந் தவை. குறிப்பாக ஒய்சாளச் சிற்பங்கள் சிற்ப வேலைப்பாடுகளின் சிகரமெனலாம்.



ஒய்சலீசுவர கோயில் அலிபீடு, மைசூர்

பிற்காலத்தில் எழுந்த சிற்ப மரபுகளுள் குறிப்பிடத்தக்கன விசயநகரச் சிற்பங்களும், நாயக்கர் சிற்பங்களுமே. அம்பிக்கு அருகிலுள்ள விட்டலர் கோயிலும், அசாரா இராமர் கோயிலும் விசயநகரச் சிற்பங்களுள மிகச் சிறந்தனவற்றைக் கொண்டுள்ளன. அசாரா இராமர் கோயிலின் உட்புறச் சுவர்களில் இராமாயணக் காட்சிகளைக் காட்டும் புடைப்புச் சிற்பங்கள் மிக்க அழகுடன் செதுக்கப்பட்டுள்ளன.

நாயக்கர் சிற்பங்களுள குறவன், குறத்திச் சிற்பங்களும், குதிரை மண்டபத்து வீரர் சிற்பங்களும சிறப்பானவை. கிருட்டிணாபுரம், தாடிக்கொம்பு, புது மண்டபம் முதலிய கோயில்களில் நாயககர்களின் நயமான சிற்பங்களைக் காணலாம். உடலமைப்பு சிறப்புற அமைந்திருப்பது இச் சிற்பங்களின் பெருமை எனலாம்.

சிற்ப மரபுகளுள் ஒவ்வொன்றும் பல நுணுக்கமான வேறுபாடுகளையும் பரநதுபட்ட கலையமைப்புகளையும் கொணடு விளங்குகிறது.

**இந்தியச் சிற்பங்கள்:** சிற்பக்கலை இநதியாவின பழம்பெரும் கலைகளுள் ஒன்றாகும். வரலாற்றுக்கு முற்பட்ட காலத்திலிருந்தே இந்தியர்கள இக்கலையில தேர்ந்த விற்பன்னர்களாய் விளங்கினர். சிந்துவெளி நாகரிகம் செழித்தோங்கியிருந்த மொகஞ்சொதாரோ, அரப்பா, உலொகுஞ்சொதாரோ போன்ற இடங்களில் கிடைத்துள்ள மண் உருவங்களும் கற்சிலைகளும் வெண்கலவடிவங்களும் புடைப்புச் சிற்பங்கள் கொண்ட முத்திரைகளும் பெருஞ் சிறப்புக்குரியவை.

**சிந்துவெளிச் சிற்பக்கலை:** மொகஞ்சொதாரோவில் கிடைத்த யோகி வடிவச் சுணணாம்புக் கற்சிலை அக்கால மக்களின் கலைத்திறனைக் காட்டுவதாய் உள்ளது. சித்திரத் தையல் போர்வை போர்த்து, மீசையினறித் தாடியுடன், ஒழுங்காகச் சீவப்பெற்ற தலைமயிரில் வட்டப் பதக்கத்துடன் கூடிய தலையணி அணியப்பெற்று மிடுக்குடன் காட்சியளிககும் இச் சிற்பம், சிந்துவெளி நாகரிகத்தின் சிற்பக்கலையாற்றலைச் சித்திரித்துக் காட்டுகிறது.

அரப்பாவில் கிடைத்துள்ள மணற் கல்லாலும், பழுப்பு நிறக் கல்லாலுமான இரணடு கற்சிலைகள குறிப்பிடத்தககவை. இவற்றின் கைகள் தனியே செய்து இணைப்பதற்கு ஏற்றவாறு, இச்சிலைகளில் துளைகள் உள்ளன. கற்களில் இணைப்பு வேலை செய்துளள சிற்பிகளின் திறமை காணபோரை வியக்க வைக்கிறது.

சிந்துவெளி அகழாய்வுகளில் இது போல் பல சிற்ப வடிவங்களும், ஆயிரக்கணக்கில் மாக்கல் முத்திரைகளும் கிடைத்துள்ளன. இம்முத்திரைகளின் ஒருபுறம் சித்திர எழுத்துகளும், குடைவுச் சிற்ப வடிவங்களும் செதுக்கப் பெற்றுள்ளன. விலங்குகள், மனித வடிவங்கள, மனித-விலங்குக் கலப்புத் தோற்றங்கள் என இசசிற்பங்கள் வடிவெடுத்துளளன. உலகப் புகழ பெற்ற கிரேக்கக் கலைமுறை தோன்றும் முனபே, இந்தியச் சிற்பக்கலை எத்துணைத் தொன்மையும் முதிர்வும் உயர்வுமாய் விளங்கியதென்பதற்கு இச் சிற்பத் தோற்றங்களும், மொகஞ்சொதாரோவில் கிடைத்த வார்ப்புருவ ஆடற்பெண்ணும் சிறந்த சான்றுகளாகும்.

**பிற இடங்களில்:** சிந்துவெளி போலவே கங்கைக் கரையிலும வரலாற்றுக்கு முற்பட்ட காலதது மனித வடிவச் சிற்பங்கள் கிடைத்துள்ளன. கான்பூர்க் கோட்டத்தில் சில பகுதிகளில் செம்பினாலான மானிட உருவஙகள் கண்டுபிடிககப்பட்டுளளன. சென்னைக்கு அருகிலுள்ள பல்லாவரத்தில் களிமண்ணும் மணலும் கலந்து செய்யப்பட்ட மானிட வடிவமும், சேலத்தில் செம்மணணாலான பெண வடிவஙகளும் அகழ்ந்தெடுக்கப்பட்டன. சேலத்துப் பெண வடிவத்தின கூந்தல் வியப்பூட்டும் எழிலோடு அமைந்துள்ளது இப்போதைய மேலைநாட்டுப் புது நாகரிகத் தலைக் கோலம் போல், கூந்தல் பல சுருளகளாகத் தலை முழுவதும் சுருட்டப்பட்டு, அச்சுருள்கள் மீது உயாந்த சீப்புகள செருகியது போல் முடியலங்காரம் அமைந்துள்ளது.

**மௌரியர் சிற்பக்கலை.** மௌரியப் பேரரசர்கள சிற்பக்கலைக்கு ஆற்றிய தொணடு அதை வளர்ச்சிப் பாதையில் வழிநடக்க வைத்தது. புத்தரின் ஆணைகளைத் தாங்கி நிற்கும் அசோகர் தூணகளும், அவற்றின் போதிகைகளில இருக்கும் யானை, குதிரை, சிங்கம் முதலிய சிற்பஙகளும் மௌரியரின சிற்பக் கலை வளர்ச்சிக்குச் சிறந்த எடுததுக்காட்டுகள். புவனேசுவரத்திலுள்ள தௌலிப் பாறை யானை, பாட்னாவில் கிடைத்த யட்சிணி வடிவங்கள் ஆகியவை குறிப்பிடத்தக்கவை.

சிநதுவெளியின் முதிர்ச்சியை மௌரியரின் கலை வடிவங்களில் காண முடிகின்றது. மௌரியச் சிறபங்கள் அக்காலத்தவரின் வலிமையையும் எழுச்சியையும் கொணடுள்ளன. மௌரியச் சிற்பக்கலையில பாரசீக கிரேக்கக் கலைகளின் செல்வாக்குச் சிறிது இடம் பெற்றுள்ளபோதிலும், அவை இந்தியக் கலைப் போக்கை மாற்றவில்லை. நீண்டகாலப் பயிறசியின் அநுபவம் மௌரியர் கலையின் சிறப்பங்களாகும்.

**சுங்கக்-குசானியர் சிற்பக்கலை:** மௌரியரைத் தொடர்ந்து வந்த சுங்கமரபினரின் சிற்பக்கலைச் சிறப்புகளைப் பாருத்து, புத்தகயா, சாஞ்சி முதலியு

இடங்களிலுள்ள பௌத்த தூபிகளைக் கொண்டும், அவற்றைச் சுற்றிலும் அமைந்துள்ள கல்வேலிகளைக் கொண்டும் அறியலாம்.

சுங்கச் சிற்பங்கள் நயமாக மெருகிடப்படவில்லை. இவர்தம் சிற்பக்கலை மரபு மௌரிய மரபினின்றும் வேறுபட்டுள்ளது. இதைப்பாருத்துத் தூபியின் தோரண வாயில் புடைப்புச் சிற்பங்கள் மெய்ப்பிக்கின்றன. பாருத்துப் புடைப்புச் சிற்பங்கள்பெரும்பாலும் புத்தர் சாதகக் கதைகளின் விளக்கங்களாகவே உள்ளன. பெரிய வடிவங்களிலுள்ள யட்சிணிகள், தேவதைகள், நாக வடிவங்கள் ஆகியவை குறிப்பிடத்தக்கவை. பாருத்துப் புடைப்புச் சிற்பங்களில் சிற்பங்களின் எண்ணிக்கை, அவை விளக்கும் சாதகக் கதைகளுக் கேற்றாற்போல் அமைந்தன. புத்த கயாவிலோ இந்த எண்ணிக்கை குறைகிறது. இங்குக் கதையின இன்றி யமையாத வடிவங்கள் மட்டுமே சிற்ப வடிவு பெற்றுள்ளன. அதனால் வடிவங்கள் தெளிவாகவும இயற்கையாகவும் அமைந்துள்ளன.

சாஞ்சிச்சிற்பங்கள் பெரும்பாலும்பாருத்துச் சிற்பக் காட்சிகளின் படப்பிடிப்பே என்றாலும், வடிவமைப்பி லும்தொகுப்பு முறையிலும் அழகூட்டலிலும் பாராட் டத்தக்கவிதத்தில் அமைந்துள்ளன. சிற்பக்கலை, சாஞ் சிச் சிற்பங்கள் செதுக்கப்பட்ட காலத்தில் வளர்ச்சிப் பாதையில் இருந்ததை உணரமுடிகிறது.

குசானரின் ஆட்சிக்காலம் மதுரா, காந்தாரம் என்று இரு வேறுபட்ட கலைமுறைகளைச் சிற்பவர லாற்றில் முத்திரைகளாய்ப் பதித்தது. வடஇந்தியா வில், யமுனைக் கரையில் அமைந்துள்ள மதுராவில் கி.பி முதலிரண்டு நூற்றாண்டுகளில சிற்பக்கலை சிறந்து விளங்கியது. இங்குச் சிறிய அளவிலான புடைப்புச் சிற்பத் தூண்கள மிகுதியாகக் கிடைத் துள்ளன. மதுராச் சிற்பங்களுள முற்பகுதிக்குரியவை சிறப்புக் குறைந்தவை. பிற்பகுதியில் புத்தருக்கு வடிவம் அமைக்கும் புதிய இயல்பு உருவானது. மது ராவில் தோன்றிய இவ்வமைப்பு இந்தியச் சிற்பக் கலையில் ஒரு புதுயுகத்தைத் தோற்றுவித்தது. இது மதுராக்கலை மரபு என்றே கூறப்படுகிறது.

மதுராப் புடைப்புச் சிற்பங்களில் முதன்மை வடிவம் மிகவும் உயரமாகக் காணப்படும். மேலாடை (அங்கவத்திரம்) மேற்கைகள், கால்கள, இடுப்பு வழி யாகச் சுற்றப்பட்டிருக்கும். பிற்காலத்தில் இத்துணி யின் சுற்றுகள் கோடுகளால் உணர்த்தப்பட்டன. கி.பி. 2-ஆம் நூற்றாண்டுச் சிற்பங்கள் அசைவு நிலை களில் அமைந்தன. மெய்ப்பாடுகளையும் அங்க அசைவுகளையும் வடிவமைப்பில் காட்டிச் சிற்பக் கலையில் புதிய திருப்பத்தை ஏற்படுத்திய பெருமை மதுராச் சிற்பிகளுக்கு உரியது.

**காந்தாரக்கலை:** இந்திய, கிரேக்க, பாரசீகப் பண்பாடுகளின் இணைப்புப் பாலமாக விளங்கிய உலகப் புகழ்பெற்ற சிற்பக்கலை மரபே காந்தாரக் கலை. இது கலப்புக் கலையென்றாலும், இந்திய மரபுகளையே பெரிதும் பின்பற்றியமைந்தது. இந்தி யாவின் பிற சிற்பங்களில் காணமுடியாத சில தனி இயல்புகள் காந்தாரச் சிற்பங்களில் உள்ளன. காந்தா ரச் சிற்பிகள் மனித வடிவங்களை உடற்கூற்று விளக் கங்களுடன் இயற்கையாக அமைத்துத் தந்தனர். வடிவங்களின உடலமைப்புக்கு முதன்மை தந்து, அதை எடுத்துக்காட்டக்கூடிய ஆடைகளைச செதுக் கினர். இந்த இயல்பு கிரேக்கக் கலை சார்ந்த தாகும்.

புத்த வடிவத்தின் பரிணாமம் காந்தாரச் சிற்பக கலையின் தனிப்பெருஞ் சாதனை. காந்தாரப் புத்த வடிவம் கிரேக்கக் கடவுள அப்பாலோ வடிவம் போன்று மென்மையும் இளமையும் ததும்ப, அழகு மிக்க தோற்றத்துடன் விளங்குகிறது. காந்தாரச் சிற பங்கள் பெரும்பாலும் காரை பூசப்பட்டு வண்ணம் தீட்டி மெருகிடப்பட்டுள்ளன.

**அமராவதிக் கலைமரபு:** வட இந்தியாவில் காந்தா ரமும் மதுராவும் சிற்பக்கலையில் புதிய சிந்தனை களைப் படைத்துக் கொண்டிருந்த அந்தக் கால கட்டத்திலேயே கிருட்டிணா நதிப் பள்ளத்தாக்கில அமராவதி, நாகார்ச்சுன கொண்டா முதலிய இடங் களில் சாதவாகனர்கள் சிற்பககலையில புதியதோா அமைப்பை ஏற்படுத்தினர். அமராவதித் தூபியின் அடிப்பீடத்து மேடைகளில் உருவான தூண்களின் போதிகைகளில் காணப்படும் சக்கரமும் பௌத்த குறியீடுகளும், சாஞ்சி, பாருத்துப் போன்ற இடங் களில் காணப்படாதவை.

அமராவதிப் புத்தர் சிலைகளைப் பார்க்கும் போது குசானிய சிற்பக்கலைத் தொடர்பும், வேறு சில வடிவங்களைக் காணும்போது மதுராச் சிற்ப மர பின் தொடர்பும் தெரிந்தபோதும், அமராவதியின் தனித்தன்மை, அதன் சிற்பத் தொகுதிகளில் புலனா கிறது. இச்சிற்பத் தொகுதிகள மதுரா, காந்தாரச் சிற்பத்தொகுதிகளைவிடச் சிறப்பும் சிக்கலும் நிறைந் தவை. கதைகள், நாடகக் காட்சியமைப்பு முறையில் தொடர்ச்சியாகக் காட்டப்பட்டுள்ளன. இது சிற்பக் கலைவளர்ச்சியைக் காட்டுகிறது. இந்தியச சிற்பக் கலை அமராவதியில் முதிர்ச்சி நிலையை அடைந்தது என்று சொல்லலாம்.

**குப்தர் காலக் கலைவளர்ச்சி:** குப்தர்கள் காலம் கலைகளின் பொற்காலம். இந்தியச் சிற்பக்கலையின் முழு வளர்ச்சியைக் குப்தர் சிற்பங்களில் காணலாம்



கசுரகோ சிற்பம் -இளம்பெண் காதல் கடிதம் எழுதுதல்

கலையின் நோக்கமும் தத்துவமும் மிகத் தெளிவாகப் புலப்படும் வகையில் அமைந்த இச்சிற்பங்கள உலகப் புகழு வாய்ந்தவை. அசந்தாக் குகைகளில் பத்தொன்ப தாம் குகையிலுள்ள தூணகள் குப்தர் காலக் கலை மாற்றத்தையும் வளர்ச்சி வேகத்தையும் எடுத்துக் காட்டும் சான்றுகளாய் நிற்கின்றன. உதயகிரியி லுள்ள சந்திரகுப்தக் குகையின் தலைவாயிற் போதிகைகள, அவற்றின் மேலுள்ள மகர வடிவம், இரதிதேவதைகள் முதலான சிற்பக் களஞ்சியங்கள் குப்தர்களின் தனிக் கலையாற்றலை விளக்கவல்லன.

குப்தர் கால மதுராப் புத்தர் வடிவம், ஏழடி மூன்றஙகுல உயரமுள்ளது. புத்த வடிவத்தின் முடி வான அமைப்பாக விளங்கும் இச் சிற்பத்தில் ஆன்மிக உணர்ச்சி ததும்புகிறது. குப்தர் காலத்திலதான மேற்கிந்தியாவிலும் தென்னிந்தியாவிலுமுள்ள பாறைக குடைவுக் கோயில்களும் விகாரங்களும் எண ணற்ற எழிலார்ந்த சிறபங்களால் மெருகிடப்பட்டன. குப்தர் காலச்சிற்பக்கலை, அழகும் சமய மேம்பாடும் நிறைந்து விளங்கிய கலையாகும்.

**இடைப்பட்ட காலத்தில் சிற்பக்கலை** இடைப் பட்ட காலத்தில் (கி.பி. 600 க்கும் கி.பி. 1200க்கும்) சிற்பக்கலை, வளர்ச்சியின் சிகரத்தை எட்டிப் பிடித் தது. புவனேசுவரத்தில் உள்ள கோயில்கள கட்டட அமைப்பிலும் சிற்பச் சிறப்பிலும் செம்மாந்து நிற்கின் றன. பரசுராமேசுவரர் கோயில் புடைப்புச் சிற்பங் களும், ஆடற் காட்சிகளும் அற்புதமானவை. இலிங்க ராசர் கோயிலில் உள்ள தெயவ வடிவங்கள கற் பனைத் திறனுடன் படைக்கப்பட்டவை. இராசா இராணி கோயில் தூண்கள் மிக நுணுககமான வேலைப்பாடுகள் கொண்டவை.

கோனாரக்கிலுள்ள சூரியன் கோயிற் சிற்பங் களுள குறிப்பாக யானை, சிம்ம வடிவங்கள, இநதியச் சிற்பிகள் வடித்த கற்பனை வடிவங்களுள மிகவும் சக்தி வாய்ந்தவையாகக் கருதப்படுகின்றன. கசுரா கோவிலுள்ள சைவ, வைணவ, சமணசமயக் கோயில் கள் சந்தேல மரபைச் சார்நத அரசர்களால் கட்டப் பட்டவை. இங்குள்ள சிற்பஙகள் நளினமும் எழிலும் நிரம்பியுள்ளன. வரிமான நிலைகளில் காணப்படும் தொடர் சிற்பங்களும், கொடுங்கையின் கீழ்க் காணப் படும் நெடிய மனித உருவங்களும் கலையழகு மிக் கவை. ஆண், பெண் உறவின் நெகிழ்வை நயம்பட எடுத்துக்காட்டும் இணையற்ற பாலுணர்வுச் சிறபங் களை (Erotic sculpture) இங்குக் காணலாம். சற் றும் விரசமின்றிக் கலைப் பார்வையோடு படைக்கப் பட்டிருக்கும் இச்சிற்பங்கள இநதியப் பெருமைக்குத் தக்க சான்றாய் நிற்கின்றன.

**சாளுக்கிய ஒய்சளர் கலை:** கருநாடகத்தில் சிற்பக் கலை வளர்ச்சிக்குப் பேராதரவு தந்தவர்கள் சாளுக்கியப் பேரரசர்கள் ஆவர். கி.பி. 6-ஆம் நூற் றாண்டிலிருந்து 8-ஆம் நூற்றாண்டின் கடைசிவரை கருநாடகத்தின் பகுதிகளையும், தக்காணத்தின் ஒரு பகுதியையும் ஆண்ட இவர்தம்சிற்பக் கருவூலங்களைப் பட்டடக்கல், பாதாமி, அய்கொளே, மகாகூடா முத லிய இடங்களிற காணலாம். சாளுக்கிய கோயில்களில் காணப்படும் புடைப்புச் சிற்பங்கள் கலைப் புதையல் களாகும். சிவபெருமானின் தாண்டவக் கோலங்களும் நசுனகபந்தா வடிவங்களும், கலையும் தத்துவமும் கலந்த சிற்பச் சாதனைகளாகும்.

ஒய்சாளர்களின் சிற்பக்கலல, சாளுக்கியர் கைவண்ணத்திலிருந்து முற்றிலும் மாறுபட்டது. பேலூர், அளேபீடு கோயில்களில் இழைத்து வைக்கப் பட்டிருக்கும் சிற்பங்கள் அலங்கார மிகுதியும், ஆடம் பரத் தோற்றமும் கொண்டவை. உணர்வு நெகிழ்வு கள் உன்னதமாக விளங்கும் சாளுக்கியக் கலை வடிவங்களிலிருநது விலகி, நுணுக்கத் திறனுக்கே முக்கியத்துவம் தந்து முகிழ்த்தகலை ஒய்சாளர் கலை. தளவரிசைச் சிற்பங்கள் புதுமையும் சிக்கலுமான படைப்புகளாகும்.

**எல்லோரா-எலிபெண்டா:** பல்வேறு காலகட்டங் களில் எழுந்த எல்லோராக் குகைக் கோயில் களுள் கி.பி. 8-ஆம் நூற்றாண்டில் இராட்டிரகூட அரசன் ஒருவனால் கட்டப்பட்ட கைலாசநாதர் கோயிலே சிறப்புடையதாகும். இந்தியாவின் மிகச் சிறந்த சிற்பங்களுள் சிலவற்றை இஙகுக் காணலாம். இராவணன கைலை மலையை எடுக்க முயல்வதாகக் காட்டும சிற்பம் பெருஞ்சிறப்புடையது. சிவபெரு மானைத் திரிபுராந்தகராகவும், கங்காதரராகவும் காட்டும் சிற்பக் கோலஙகள் எழில் நிறைந்தவை. தசாவதாரக் கோயில் சிற்பங்களும், சிவதாண்டவ வடிவங்களும் குறிப்பிடத்தக்கவை.

எலிபெண்டா அழிவிலும் அழகாய் நிற்கும் சிற்பக் கருவூலம். கி.பி. 6-ஆம் நூற்றாண்டின் இடைப்பகுதியில் குடையப்பட்ட இக்கோயிலில்தான சிவபெருமானின் உலகப் புகழ்பெறற சதாசிவத் திருவுரு அமைந்துள்ளது.

**தமிழகத்துச் சிற்பக்கலை:** இந்தியச் சிற்பக்கலை யின் ஓரங்கமாய், அதேசமயம் தனக்கேயுரிய தனிக் கலை முறையில், தமிழகமும் சிற்பக்கலை வளர்ச்சி யில் சீரான பல படிகளைச் சிறப்பாகக் கடந்து வந்த தைச் சங்க இலக்கியங்களில் தொடஙகி முறையாகக் காணலாம்.



விக்டோரியா அருங்காட்சியகத்திலுள்ள சிற்பம்- இலண்டன்

சங்க இலக்கியங்களாகக் கருதப்படும் பத்துப் பாட்டு, எட்டுத் தொகை நூல்களில் பல இடங்களில் சிற்பக்கலைக் குறிப்புகள் காணப்படுகின்றன. சிற்பப் பாட்டான நெடுநல்வாடையும், நடுகற்களைப் பற்றிப் பேசும் மலைபடுகடாமும் சங்ககாலத்துச் சிற்பக்கலை வளர்ச்சியை வரிவடிவமாக்கித் தருகினறன.

சிலப்பதிகாரத்திலும் மணிமேகலையிலும் பட்டிய லிடப்படும் பூம்புகார்க் கோயில்கள் காப்பிய கால சிற்பக்கலை வளர்ச்சியைக் கண்முன் நிறுத்துகின்றன. காவிரிப்பூம்பட்டினத்து மாளிகைகளில் சுதையுருவங் கள் இருந்ததை மணிமேகலை எடுத்துக்காட்டுகிறது.

தமிழகச் சிற்பக்கலையைப் பொறுத்தமட்டிலும் கி பி. 6-ஆம் நூற்றாண்டு ஒரு மறக்கமுடியாத மைல் கல். பல்லவரும் பாண்டியரும் வடக்கிலும் தெற்கிலு மாய்த் தமிழகத்தில் கலை வளர்க்கத் தொடங்கிய கருத்தான காலமிது. மகேந்திரனின் திருச்சி மலைக் கோட்டைக் குடைவரையில் உள்ள கங்காதரர் சிற்பம் புடைப்புச் சிற்பவகையினது. உலகத்தை அழித்து விடுவேன் என்று பெருவெள்ளமாகப் பாய்ந்து வந்த கங்கையைச் சிவபெருமான் ஒரு துளி யளவாகத் தமது சடாமுடியில் ஏற்றுக் கொண்டதை இச்சிற்பம் காட்டுகிறது. எல்லோராக் குடைவரைக் கோயில்கள் உட்பட எத்தனையோ இடங்களில் கங்காதர மூர்த்தியின் வடிவம் காணப்பட்டாலும், திருச்சிக் குடைவரைக் கங்காதர மூர்த்தியின் நளின மும் மெய்ப்பாடும் தனி அழகுடையவை.

மகேந்திரனின் வழித்தோன்றல்களால் சிற்பக் கலை பெருவளர்ச்சியுற்றது. முதலாம் நரசிம்மவர் மனும், இரண்டாம் நரசிம்மவர்மனான இராசசிம்ம னும் படைத்ததாகக் கருதப்படும் மாமல்லபுரத்துச் சிற்பங்கள் வரலாற்றுப் புகழ் படைத்தவை. மாமல்ல புரம் பல்லவர்களின் படைப்புத் தொட்டில், இங்குள்ள குகைக் கோயில்களும், பாறைப் புடைப்புச் சிற்பஙகளும், ஒற்றைக் கற்கோயில்களும், கடற்கரைக் கோயில்களும் பல்லவர் காலச் சிற்பக் கலையாற்ற லின் சிறந்த சான்றுகள். குன்றைக் குடைந்து செதுக் கிச் செய்யப்பட்ட ஒற்றைக் கற்கோயில்களின் புறச் சுவர்க் கோட்டங்களிலுள்ள பல்லவச் சிற்பங்கள் எளிமையும் எழிலும் நிறைந்தவை.

பல்லவர் காலச் சிற்பக் கலையின் சிறந்ததோர் பட்டயம் மாமல்லபுரம் என்றால் அக்கலையின் மகுட மாய்த் திகழ்வது காஞ்சிக் கைலாச நாதர் கோயிலா கும். இங்குள்ள சிற்பங்கள் உலகப் புகழ் பெற்றவை. சிவபெருமானின் ஆடல் கோலங்களும், சிங்கத் தூண் களும், சிறு கோயில்களுமாய் நிறைந்திருக்கும் இத் திருக்கோயில், இராசசிம்மன் காலத்துக்கலை வளர்ச் சியைக் கண்முன் நிறுத்துகின்றது. பல்லவர் காலத் துச் சிற்பங்களைப் போலவே தூண்களும் அழகு வாய்ந்தவை. இந்தத் தூண்களின் அமைப்பு மாறுபாடு களைக் கொண்டே பல கோயில்களை இன்னார் கட்டியவை என்று இனம் பிரித்திருக்கிறார்கள்.

பல்லவர்களைப் போலவே தென் தமிழகத்தில் கலைப் பணியாற்றியவர்கள் பாண்டியர்கள். பரங் குன்றத்துக் குடைவரை, திருமயம் குடைவரைகள், கழுகுமலை வெட்டுவான் கோயில் போன்றன, பாண்டியரின் சிற்பக்கலை வளர்ச்சியையும், அதில் அவர்கள் காட்டிய ஈடு இணையற்ற ஆர்வத்தையும் விளக்கவல்லன.

பல்லவ பாண்டியச் சிற்பங்கள் ஏறத்தாழ சம காலத்தில் அமைக்கப்பட்டமையால் மிக்க மாறுதல் களைப் பெறவில்லை. முப்புரி நூல் இடத் தோளி லிருந்து வல மேற்கையினைத் தழுவியபடி செல்லும் வகையில் பல்லவர் கால வடிவங்கள அமைந்துள்ளன. பல்லவர் சிற்பங்கள் அளவில் பெரியவை; குறிப்பாக மனித வடிவங்கள். இச் சிற்பங்களின் முகம் அகன்றும், மூக்கு ஆழ்ந்தும் காணப்படும். மிக்க வேலைப்பாடு களைப் பெறாமல், மிக எளிமையாக, அதே சமயம் அழகாகக் கண்ணைக் கவரும் விதத்தில் செதுக்கப் பட்டுள்ளன. அணிகலன்களும் தலையலங்கார வகை களும் பல்லவர் பாண்டியர் காலச் சிற்பங்களில் மிகுதி யாக இல்லை எனலாம்.

பல்லவர்கள் தொடங்கி வைத்த கற்றளிக் கலை யைச் சோழர்கள் ஆர்வத்தோடு வளர்த்தனர். அவர் தம் காலத்தில் கட்டடக்கலை, சிற்பக் கலை, வார்ப் புக்கலை ஆகிய மூன்றும் வளர்ச்சியின் சிகரத்தை எட்டிப் பிடித்தன. தொடக்க காலத்தில் பல்லவர் முறையையே பின்பற்றிச் சற்று அதில் மாறுதல் களைச் செய்து சோழச் சிற்பங்கள் பிறந்தன. இவ் வகைச் சிற்பங்களைச் சீனிவாசநல்லூர் குரங்கநாதர் கோயில், குடந்தைக் கீழ்க்கோட்டம் எனப்படும் நாகேசுவரர் திருக்கோயில் முதலிய கோயில்களில் பார்க்கலாம்.

இந்தக் கால கட்டத்தில்தான் கொடுப்பாளூரில் வேளிர்களும், பழுவூரில் பழுவேட்டரையர்களும் தங்க ளால் இயன்ற கலைத் தொண்டைத் தமிழகத்திற் குச் செய்தனர். மூவர் கோயிலும், அவனி கந்தர்ப்ப ஈசுவரமும் சிற்பக் களஞ்சியங்கள். அழகு பொலியும் சிற்பங்களை இங்குக் காணலாம். எளிமையும் கலை நயமும் பொருந்தி உருண்டையான முகத்துடன் அமைந்தவை இக் காலச் சிற்பங்கள். கொடும்பாளூ ரில் கிடைத்த திரிபுராந்தகர் திரிபுரசுந்தரி வடிவங்கள

சிற்பக் கலையின் வளர்ச்சிக்கு அளவு கோல்களாய் அமைந்தவை.

கட்டடக் கலை அமைப்பிலும், சிற்பத் திறனிலும் குறிப்பிடத்தக்க எத்தனையோ கோயில்களை முற்காலச் சோழர்கள் கட்டியிருந்தாலும் அவற்றையெல்லாம் சிறு புள்ளிகளாக்கிவிட்டதுபோல், கலைக் கோயிலாய், சிற்பமேருவாய் எழுந்தது, முதலாம் இராசராசனின் பெரிய கோயிலாகும். இங்குள்ள ஒவ்வொரு சிற்பமும் ஓர் இனிய வரலாறு.

தந்தையையும் மிஞ்சிய விதத்தில கங்கை கொண்ட சோழபுரத்துச சிற்பங்களை உருவாக்கித தமிழகத்துச் சிற்பக்கலையைத் தன் காலத்தில் இமயத்திற்கு உயர்த்தியவன முதலாம் இராசேநதிர சோழன். தமிழகத்தின் நளினமும் மென்மையும் நிறைந்த எழிலார் சிற்பங்களை இங்குக் காணலாம். உடலமைப்பு, உறுப்பளவு, உணர்வு காட்டல், அழகூட்டல் என்று ஒவ்வொரு நிலையிலும் இச்சிறபங்கள உயர்ந்து நிற்கின்றன. காமனை எரித்தழித்த மூர்த்தி, கலைமகள், சண்டேசுவரர்கக அருள் செய்த சிவமூர்த்தி ஆகிய இம் மூன்று சிற்பங்களும் சொல்லொணாப் பேரின்ப உணர்வூட்டும் சிற்பப் புதையல்களாகும்.

பெரிய அளவில் சிற்பங்கள் அமைந்த காலத்தை யொட்டியே சிற்றுருவச் சிறபங்களும் சிறப்பாகச் செதுக்கப்பட்டதை முதலாம் ஆதித்தன் காலததிலிருந்தே பார்க்கலாம். முதலாம் பராந்தகனின புளள மங்கை ஆலநதுறையார் கோயில் சிற்றுருவச சிற்பங்களைக் குடைவுச் சிற்ப வகையினவாகக் கொள்ளலாம். இவற்றையெல்லாம் விஞ்சும் வகையில சிற்றுருவச் சிற்பச் சோதனைகளுககும், சாதனைகளுக்குமென்றே இரண்டாம் இராசராசனால் கட்டப்பட்டதுதான் இராசராசேச்சுவரம் எனப்படும் இன்றைய தாராசுரக் கோயில.

இக்கோயிலின் முன் மணடபத் தூண்கள்யாவும பல நிலைகளில் மிகச சிறு சிற்ப வேலைப்பாடுகளால் நிரப்பப்பட்டுள்ளன. ஒவ்வொரு தூணும் ஒரு காவியம். கருவறையின் புறசசுவர்களில் திருத்தொண்டர்களின் வரலாறுகள் சிற்றுருவத் தொகுதிகளாய்க் காணப்படுகின்றன. சிறிய சிற்ப வடிவங்களின் திருப்புமுனையான காலம் என்று இதைக் கூறலாம். இக் கோயிலில் உருவான யானையை அழித்த மூர்த்தி, கங்காளமூர்த்தி, பணிப்பெண்கள் போன்ற பெரிய சிற்ப வடிவங்களும் சிறப்பானவையே.

சோழர்கள் சிற்பக்கலையில் தொடாத இடமில்லை; முயலாத முறையில்லை. சோழர்கள பல்லவர்களைப் போல் அளவில் பெரிய சிற்பங்களையும் படைத்தார்கள். மிகச் சிறிய நுணுக்கமான சிறபங்களாலும் கோயில்களையும் தூண்களையும் இழைத்தார்கள். சிற்பக் கலையின் சகல பரிமாணங்களையும் அவர்கள் முயன்று பார்த்து வெற்றி கண்டார்கள். சோழர்களின் கலைத்திறனும், அவர்தம் இணையற்ற கலைப் படைப்புகளும் தமிழகக் கலை வரலாற்றில் பொன்னெழுத்துக்களால் பொறிக்கப்பட வேண்டியவை. சோழர்களின் சிற்பங்களில் அழகும் அலங்காரமும் மிகுதி; வேலைப்பாடுகளும் மிகுதி; உருண்டை வடிவில் அமைந்த முகத் தோற்றங்களில் நளினமும் மெல்லுணர்வு மெய்ப்பாடுகளும் நிறைந திலங்கும்.

கி.பி. 15-ஆம் நூற்றாண்டில் விசயநகரப் பேரரசர்களாலும், அடுத்த இரு நூற்றாண்டுகளில் நாயக்கர்களாலும் தமிழகச் சிற்பக்கலையில், மாற்றம் விளைந்தது. தாடிக் கொம்பு, கிருட்டிணாபுரம், பேரூர், புதுமணடபம், மதுரை மீனாட்சியம்மன கோயில், ஆயிரக்கால் மண்டபச் சிற்பங்கள் முதலியன நாயக்கர் காலச் சிற்பங்களின் செம்மாநத நிலைகள். மனித உடலின் மகோன்னதங்களை மிடுக்குடனும் இயல்புடனும் எடுத்துக்காட்டும் புதிய பாஙகினை நாயக்கர் கலைமுறையில் காணலாம். காலில் ஓடும் இரத்தக் குழாய்கள், பாதம் கீழ்க் காலுடன இணையுமிடத்திலுளள எலும்பு மூட்டுகளின் புடைப்பு ஆகியவற்றை உடலியல் கூற்றுத் தத்துவங்களை உளளபடி காட்டுவனவாய் நாயக்கர் சிற்பங்கள் அமைந்துள்ளன.

அரை நூற்றாண்டுக்கும் குறைவாகத் தமிழகத்தையாண்ட ஒய்சாளப் பேரரசர்களின் கலை நுணுக்கமும் தமிழகக் கலை அறிவும் இணைந்து வெளிப்பட்டிருப்பதைத் திருவரஙகக் குழலூதும் பிள்ளைக் கோயிலில காணலாம். இங்குள்ள மகளிர் சிற்பஙகள் எழில் கொஞ்சும கலை வடிவங்களாகும்.

கல்லைப் போலவே தந்தத்திலும் மரத்திலும் சிற்பக்கலை சிறந்து வளர்ந்தது. பழமையான தந்தச் சிற்பஙகளைப் பார்க்க முடியாவிட்டாலும், நாயக்கர் காலத்துச் சிற்பங்களைப் பலவாகக் காண முடிகிறது. திருவரங்கம் கோயில் அருட்காட்சியகத்திலுள்ள பல தந்தத் திருமேனிகள் குறிப்பாகச் சதாசிவர், காதலர் வடிவங்கள், பிட்சாடனர் என்பன குறிக்கத்தக்கவை.

கோயிற் கதவுகளிலும், தேர்களிலுமாய்க் காணப்படும் மரச்சிற்பங்கள் தமிழர்களின் கலையாற்றலைத் தெளிவாகக் காட்டுகின்றன. தேர்ச் சிற்பங்களுள் பல பிற்பட்ட காலத்தவையாக இருந்தாலும், அழகு மிளிர அவை படைக்கப்பட்டுள்ளன. இறைச் சிற்பங்களும் பாலுணர்வுச் சிற்பங்களுமே இவற்றில் மிகுதி. கோயிற் கதவுகளில் சிற்பப் பெருமையால் சீர் பெற்று

நிற்பவை பிரமதேசம், திருநல்லூர், இரத்தின கிரீசுவரர் திருக்கோயில் போன்றவை. திருநெல்வேலி நெல்லையப்பர் கோயில் மாடச் சிற்பங்களும், ஆண்டாள் கோயில் மரச்சிறபங்களும் குறிப்பிடத்தக்கன.

சங்க காலத்தில் சீர்பெற்று, பல்லவர் காலத்தில் வளர்ச்சிப் பாதையில் அடியெடுத்து வைத்து, சோழர்கள் காலத்தில சிகரத்தைத் தொட்ட சிற்பக்கலை, நாயக்கர் காலத்தில் புதிய மெருகுகளைப் பெற்று ஒளிர முயன்றது. ஆனால் ஆங்கிலேயர் நுழைவும், அதன் தொடர்பாய் நிகழந்த உரிமைப் போர்களும், விடுதலைக்குப்பின் அமைந்த வாழ்க்கையின வேகமும் சிற்பக்கலையின் சரிவுக்குக் காரணங்களாயின. இன்று தமிழக அரசு சிற்பக்கலையின் வளர்ச்சியைக் கருத்திற் கொண்டு அதற்கென ஒரு கல்லூரி அமைதது நடத்தி வருவது குறிப்பிடத்தககது. இரா. க.

**அயல்நாட்டு சிற்பங்கள் மெசபடோமியா:** மெசபடோமியச் சிற்பங்கள் பற்றி சிறிதளவே நமக்குத் தெரிய வருகின்றன. இவை பெரும்பாலும் அரசராகவோ சமயத்தலைவராகவோ வடிக்கப்பட்டுள்ளன. ஊர்-நம்மு (Ur-Nammu) என்ற அரசரின் நடுகற் சிற்பத்தில் அவர், நிங்கல் (Nıngal) என்னும் பெண தெய்வத்தைப் பூசிப்பது போன்று செதுக்கப்பட்டுள்ளது. இச்சிற்பங்கள் விறைப்பான அசைவியக்கமற்ற முறையில் செதுக்கப்பட்டன.

**அசிரியா:** அசிரியப் பேரரசு (கி. மு. 900-கி. மு. 600) காலத்தில் சிற்பங்கள் பொதுவாகக் கட்டடங்களிற் காணப்பட்டன. அசிரியர்கள தங்கள் அரண்மனை நுழைவாயில்களில் பெருந் தூணகளை அமைத்தனர். இத்தூண்களில எருதின் உடலமைப்பும் மனிதத் தலையும் கொண்ட சிற்பங்கள் பல இடம் பெற்றன. இச்சிற்பங்கள் யாவும் அசிரியர்களின் போர் நடவடிக்கைகளையும், பிற முக்கிய நிகழ்ச்சிகளையும் கூறுகின்ற வகையில் அமைந்துள்ளன. இவ்வகைச் சிற்பங்கள் நினிவே (Nineveh) என்ற இடத்தில் கண்டுபிடிக்கப்பட்டுளளன. அசிரியச் சிறபிகள் விலங்குகளின் அசைவியக்கங்களை மிக அருமையாகச் செதுக்கியுள்ளனர். ஆனால், மனித உருவங்களை அசைவியக்கமற்ற நிலையில் வடித்துள்ளனர்.

**பாரசீகம்:** பாரசீகச் சிற்பிகள் விலங்கு உருவ அமைப்பை மிக நேர்த்தியான முறையில் முதலாம் தேரியசின் (Darius I) பெருவறை என்னும் படிக்கட்டின் பக்கவாட்டுப் பகுதியில் செதுக்கியுள்ளனர். குறிப்பாகச் சிங்கமும் எருதும் சண்டையிடும் சிற்பம் சிறப்புமிக்கது. பாரசீகர்கள் தங்களது கட்டடங்களை மிக ஆடம்பரமான முறையில் புடைப்புச் சிற்பங்களால் அலங்கரித்தனர்.

**இட்டைட்டுகள்:** ஆசியாமைனரில் கி.மு. 2000-க்குப் பின் இட்டைட்டுகள் தங்களது அரசை நிறுவியபின் கட்டடக் கலை சார்நத சிற்பக் கலைக்கு ஆதரவு தந்தனர். இச்சிறபங்கள் அசிரியப் புடைப்புச் சிற்பங்களை ஒத்திருந்தன. அசிரியர்கள் பெரும்பாறைகளில் சிற்பங்களைக் குடைந்தனர்.

**ஈசியர்:** ஈசிய நாகரிக மக்கள் வெண்மையான சலவைக் கற்களில் சிற்பங்களைக் குடைந்தனர். இச்சிற்பங்களுள் பெரும்பாலானவை பெண் சிற்பங்கள் ஆகும். கிரீட்டு (Crete) நகர மினான்(Minoan)மக்கள் வழிபாட்டுச் சிற்பங்களைச் செம்பில் வார்த்தனர். இச்சிலைகள் வழவழப்புத் தன்மையற்றுக் கரடு முரடாகக் காணப்படுகின்றன, மினானியர்களைப் பின்பற்றிக் கிரேக்க நாட்டு மைசீனியர்கள் செப்புப் படிமங்களை வார்த்தனர். இச்சிலைகள் மினான் படிமங்களைவிடச் சிறிதளவு மேம்பட்டுக் காணப்பட்டன.



புத்தர் சிற்பம்-இலங்கை

**எகிப்து:** எகிப்தில் கி. மு. 3000-ஆம் ஆண்டளவி லேயே சிற்பக்கலை வளர்ந்திருந்தது. எகிப்தியச் சிற்பங்கள் குறிப்பிட்ட அளவிற்கே செய்யப்பட்டன. இவை அரசர்களின் நினைவுச் சிலைகளாகவோகுறிப் பிடத் தக்கவர்களின் சிலைகளாகவோ காணப்பட்டன. எகிப்தியர்கள் அரசர்கள் அரசிகள் ஆகியோரின் சிற் பங்களையே கடவுளர்களாக வழிபட்டனர். இச்சிலை களுள் பல பேருருவச் சிலைகளாகும். அபுசிம்பல் என் னும் இடத்தில் செதுக்கப்பட்ட இரண்டாம் இராமா செசு என்றும் அரசரின் சிற்பம் ஏறக்குறைய 20 மீ. உயரமுடையது. போர் நிகழ்ச்சிகளை விவரிக்கும் சிற் பங்களையும் எகிப்தியர் வடித்தனர். எகிப்தியச் சிற்பி கள் கல் மரம் ஆகியவற்றைக் குடைந்தும் சிற்பங் களை அமைத்தனர். இவை எகிப்தியக் கல்லறைகளில் வைக்கப்பட்டன. இப்புடைப்புச் சிற்பங்கள் மனித வாழ்வில் நடக்கும் செயல்களை வெளிப்படுத்துவன வாக அமைந்துள்ளன. உண்மை நிலையே சிற்பங் களில் இருத்தல் வேண்டும் என்ற கொள்கைக்கு மாறாக எகிப்தியச் சிற்பிகள் சிற்பங்களை வடித்த னர். அரசரை வடிக்கும் பொழுது சாதாரண மனி தனைவிட உயரமாகச் செதுக்கினர். மனித உருவம் எவ்வெவ்வாறு அமைய வேண்டும் என்பதில் இவர்கள் பெரிதும் அக்கறை காட்டிச் சிற்பங்களைச் செதுக் கினர்.

**சீனா:** சீனர்களின் தொன்மையான சிற்பங்கள் அவர்களின் கல்லறைகளில்தான் காணப்படு கின்றன. அவை மிகச் சிறிய சிற்பங்களே ஆகும். சீனர்கள் கி.பி. 3-ஆம் நூற்றாண்டில் செம்பினால் செய்யப்பட்ட மணிகளையும் மட்கலன்களையும் செய்தனர். இவை சீனர்களின் மூதாதையர் வழி பாட்டிற்குப் பயன்பட்டன. சீனச் சிற்பிகள் உருளை வடிவ அமைப்பில்' சிலைகளைச் செய்யும்பொழுது அவற்றின் உட்பகுதியை வெற்றிடமாக விட்டு வடித் தனர். ஆன் மரபு (Han dynasty) காலத்தில் பௌத்த மதம் இந்தியாவிலிருந்து சீனாவிற்குச் சென்றதன் விளைவாகப் பௌத்த கலையும் சீனா வில் வேரூன்றியது. புத்தரின் சிற்பங்கள் பல கல் லிலும் மரத்திலும் செதுக்கப்பட்டன. சீன போதி சத்துவர் சிற்பங்கள் இந்திய போதி சத்துவர் சிற்பங் களைவிடச் சீன அமைப்பில் அமைக்கப்பட்டன. இவற்றுள் முத்துச் சரம் போன்று செதுக்கப் பட்டுள்ள போதி சத்துவரின் சிற்பம் குறிப்பிடத் தக்கது. அணிகலன்கள் மிகுந்தும் இச் சிற்பங்கள் காணப்பட்டன.

இந்தியாவின் பண்பாடு சீனா மட்டுமன்றி இலங்கை, தென்கிழக்கு ஆசிய நாடுகள் ஆகியவற்றிற் கும் பரவின. இதனால், இந்தியக் கலைகளும் இந்



ஆப்பிரிக்கச் சிற்பங்கள்

நாடுகளில் பரவத் தொடங்கின. இலங்கை (ஸ்ரீ இலங்கா), பர்மா, தாய்லாந்து, கம்போடியா, மலாயா, சாவா, சுமத்திரா ஆகிய நாடுகளில் இக் கலை பரவியது. போராபுதூர் தூபி, அங்கோர் வாட்டு, ஆங்கோர்தோம் போன்ற இடங்களில இந்தியச் சிற்பங்களின் வடிவமைப்பைக் காண முடிகிறது.

**சப்பான்:** சப்பானிய நாட்டில் வரலாற்றுக்கு முற்பட்ட கால சுடுமண் பொம்மைகள் சடங்குகளுக் காகச் செய்யப்பட்டன. சீனாவிலிருந்து பல்வேறு கூறு களைச் சப்பானியச் சிற்பிகள் பின்பற்றினர். புத்தரின் சிற்பங்கள் பல இவ்வாறு வடிக்கப்பட்டன. சப்பானி யர்கள் மரத்தைக் குடைந்தும் சிற்பங்கள் செய்தனர் இவற்றின் மீது தங்க நிறம் பூசப்பட்டது.

**கிரேக்கம்:** கிரேக்க நாட்டுச் சிற்பங்கள் உண்மை யான உருவ அமைப்பில் வடிக்கப்பட்டன. கிரேக்கச் சிற்பிகள் உரோமானியச் சிற்பிகளின் நுட்ப முறையைப் பயன்படுத்தினர். கிரேக்கச் சிற்பக் கலை மூன்று வகையாகப் பிரிக்கப்படும். அவை, கி.மு. 630க்கும் கி.மு. 400க்கும் இடைப்பட்ட தொடக்க காலம், பண்டைய கிரேக்கச் சிறப்புக் காலம் (Classical age), எலனிய காலம் (Hellenistic period) எனப்படும்.

தொடக்க காலக் கிரேக்கச் சிற்பிகள் சிறிய சிற்பங்களைக்களிமண் அல்லது செம்பில் செய்தனர். இக் காலத்தில் மரவேலைப்பாடு மிக்க சிற்பங்களும் சிறிதளவு செய்யப்பட்டன. இவர்கள் கி.மு. 600–ஆம் ஆண்டளவில் களிமண்ணை அழுத்தி அச்சு நுட்பத்தில் (Moulds)சிற்பங்களை வடித்தனர். இந்நுட்பத்தை இவர்கள் பியூனிசியர்களிடமிருந்து கற்றறிந்தனர். எகிப்தியர்களிடமிருந்து கி.மு. 600–ஆம் நூற்றாண்டின் முடிவில் மிகப் பெருஞ்சிலைகள் செய்யும் கலையைக் கிரேக்கர்கள் அறிந்து கொண்டனர். கடின வெள்ளைக் கற்களைக் குடைந்து மிக்க அழகிய சிற்பங்களை இவர்கள் செய்தனர். ஆடையற்ற பல்வேறு இளைஞர்களின் நிற்கும் நிலைச் சிற்பங்கள் இக்காலத்தில் தத்ரூபமாக வடிக்கப்பட்டன. இவ்வகைச் சிற்பங்களைக் கௌரை (Kourai) எனக் குறித்தனர். இச்சிற்பங்களைக் கோயில்களிலும் கல்லறைகளிலும் பணியாளர்களாக நிற்கவைத்தனர். இது போலவே ஆடையுள்ள மங்கைச் சிற்பங்களையும் செதுக்கினர். இவை கோரை (Korai) எனப்பட்டன. அழகு வாய்ந்த உருவங்கள் கிரேக்கர்களால் வடிக்கப்பட்டன. தெல்பியில் (Delphi) கிடைத்த கடவுளுக்கும் அரக்கருக்கும் நடந்த போர் நிகழசசிச் சிற்பம் (Battle of the Gods and Giants) மிக்க அழகு வாய்ந்தது.

இரண்டாம் கட்டக் கிரேக்கச் சிற்பங்களில் மனித வடிவம் மாறாவண்ணம் சிற்பங்கள் வடிக்கப்பட்டன. மனிதனின் ஒவ்வொரு பகுதியும் மிக நேர்த்தியான முறையில் கிரேக்கச் சிற்பிகளால் செதுக்கப்பட்டன இக்காலத்தில் சிற்பங்களில் ஆடை உரு அமைதி மிகுந்த அளவில் காணப்பட்டது. மடிப்பு மடிப்பான முறையில் ஆடைகளை அழகாக அணிந்துள்ளது போல இவர்கள் செதுக்கினர். இவ்வாடைகள் அங்கி போன்று தொங்கிய நிலையில் காணப்பட்டன. தெல்பி நகரிலுள்ள தேர்ப்பாகன் சிற்பம் இவ்வகையைச் சார்ந்தது.



இயேசு நாதர் சிற்பம்

பிற்காலத்தில் இவ்வமைப்பில் ஆடைகளின்மடிப்பு மிகுந்து காணப்பட்டும் காற்றில பறப்பது போனறும் சிறபங்களில் செதுக்கப்பட்டது.

கிரேக்கர்கள் தாங்கள் வழிபட்ட கடவுளை மனித அமைப்பிலேயே படைத்தனர். சீயசுக் (zevs) கடவுள் மனித உருவம் போன்றே வடிக்கப்பட்டார்.



தென்மார்க்கிலுளள சிற்பம

கிரேக்கச சிற்பங்களின் மிக உன்னத நிலையை ஏதன்சு நகரில் உளள பார்த்தனான் கோயிலில் காணலாம். இவை கி. மு. 400 க்குப் பின் செதுக்கப் பட்டவை. கிரேக்கச் சிற்பஙகளில் கரடு முரடான தன்மையுடைய சிற்பங்களை வடிப்பது கி. மு. 300 ஆம் ஆண்டுகளில் ஏற்பட்டது. பெண் கடவுளர் சிற்பங்களை வடிப்பதில் அக்காலத்தில் இலெசிப்பசு (Lysippus), பராகசைட்டில்சு (Praxiteles) போன்ற சிற்பிகள் தலைசிறந்தவர்களாக விளங்கினர். அக் காலச் சிற்பிகள் ஈமப் பேழைகளிலும் தங்களின் கைவண்ணத்தைக் காட்டினர். மனித வடிவங்களும் இக்காலத்தில் வடிக்கப்பட்டன.

எலனிய காலத்தில் மகா அலெக்சாநதர் கிரேக்கச் பணபாட்டை எகிப்திற்கும் கிழக்கு நாடுகளுக்கும் கொண்டு சென்றார். அலெக்சாந்தர் கி.மு. 323-இல் இறந்தபின் அவரது பேரரசு பல சிறு சிற்றரசுகளாகப் பிரிநதது. இச்சிற்றரசுகள் கலையை வளர்க்க ஊக்க மளித்தன. பல கலைப் பளளிகள இக்காலத்தில் தொடங்கப் பட்டன. அவற்றுள் குறிப்பிடத் தககவை உரோட்சு (Rhoads), பெர்காமம் (Pergamum), அலெக்சாந்திரியா ஆகிய நாடுகளில காணப்பட்டன. சிற்பிகள் உள்நாட்டுக் கலை அமைப்பைக் கிரேக்கச் சிற்பக் கலையுடன் இணைத்துப் புதிய சிற்பங்களை வடித்தனர். இககலை எலனியக் கலை எனப்படும். சிற்பங்கள் பாவங்களைக காட்டும் அமைப்பில் இக்காலத்தில் வடிக்கப்பட்டன. எடுத்துக்காட்டாகக் குத்துச் சணடை இடும் ஒரு மனிதனின் முகத்தில் அவனது மூக்கு உடைபட்ட நிலையில் வடிக்கப் பட்டது.

**எட்ருசுகர்:** எட்ருசுகர் சிற்பிகள் கிரேக்கச் சிற்பிகளின் அமைப்பு முறைகளையே பின்பறறினர். எட்ருசுகர் சிற்பங்கள் செம்பாலும் சுடுமண்ணாலும் செய்யப்பட்டு அதன்மீது மிகுந்த அளவில் வணணங் கள் பூசப்பட்டன. எட்ருசுகர் சிற்பங்களில் குறிப்பிடத் தக்கவை அப்பாலோ சிற்பமும் வீல்(Veil) என்னும் இடத்திலுள்ள கோயிலில் காணப்படும் மனித அளவு உயரமுடைய சிற்பங்களும் ஆகும். எட்ருசுகர் சிற்பிகள சுண்ணாம்புக கல்லிலும் சிற்பங்களைக் குடைந்தனர். விலங்கின உருவங்கள் இவ்வகையில் அமைக்கப்பட்டன. இவ்விலங்கினச் சிற்பங்களைக் கல்லறைகளைக் காக்கும் சிற்பங்களாக இவர்கள் வைத்தனர்.

**உரோமானியர்:** உரோமானியர்கள எட்ருசுகர் சிற்ப அமைப்பைப் பயன்படுத்தியும் கிரேக்கக கலைஞர்களின் கலை மரபைப் பயனபடுத்தியும் சிற்பங்களைச் செய்தனர். உரோமானியர்கள கிரேக்க நாட்டை கி.மு. 100-ஆம் ஆண்டுகளில் தாக்கி வெற்றி பெற்று, கிரேக்க நாட்டு எலனியச் சிற்பங்களைத் தங்கள் நாடான இத்தாலிக்கு எடுத்து வந்தனர். இக்காலத்தில் நிலவிய உரோமானியப் பேரரசர்களின ஆதரவில் கிரேக்கச் சிற்பிகள் வளர்ந்தனர். இவர்கள் முழுமைபெற்ற எலனியக கலையை இத்தாலியில் வளர்த்தனர். உரோமானியப் பேரரசுச் காலத்தில் தன் உருவச் (Portrait) சிற்பங்கள் வடித்தல் பெரிதும் காணப்பட்டது. இவ்வகையில் குறிப்பிடத் தக்க சிற்பம் உலூசியசு வீருசு (Lucius Verus)உருவச் சிற்பம் ஆகும்.

இச்சிற்பம் மனித அமைப்பின் முக பாவத்தைச் சிறப்பான முறையில் கொண்டு விளஙகும் சிற்ப மாகும். உரோமானியர் சமயச் சார்பற்ற சிற்பங் களை வடித்ததுடன் வரலாற்று நிகழ்ச்சிகளையும் சிற்பஙகளில் செதுக்கினா. போர் நிகழ்ச்சிகளை



புடாபெசுட்டிலுள்ள சிற்பம்

விளக்கும் பல சிற்பங்கள் தூண்களிலும் நினைவு வளைவுகளிலும் குடையப்பட்டன. இவற்றுள் குறிப் பிடத்தக்கவை திராசன் தூணும், மார்கசு அரேலியசு (Marcus Aurelius) தூணும் ஆகும். ஈமக் கற்பேழை களின்மீது பல உருவங்கள் குடையப்பட்டன. இவற் றுள் உரோமானிய சமயக் கருத்துகள் இடம் பெற் றிருந்தன.

இடைக்காலத்தில் உரோமில் சிற்ப வளர்ச்சி குறையலாயிற்று. எனினும், தந்தப் பொருள்களில் சிறு சிறு சிற்பங்கள் செய்யப்பட்டன. பைசாண்டியப் பேரரசுக் காலத்தில் கான்சுடாண்டிநோபிளில் சிற்பி கள் பலர் வாழ்ந்தனர். இக்காலத்தில் கிறித்துவச் சமய அடிப்படையில சிற்பக்கலை இங்கிலாந்திலிருந்து வடக்கு இத்தாலிக்குச் சென்றது. ஐரோப்பாவில் கிறித்தவத் தேவாலயங்கள் இக்காலத்தில் சிறப்பிடம் பெற்றிருந்தன. அனைத்துக் கலை வளர்ச்சியும் தேவா லயங்களின் மூலமே நடைபெற்றது. உரோமானிய வழிப்பானிச் சிற்பக்கலை கி.பி. 1135-ஆம் ஆண்டள வில் ஐரோப்பா முழுவதும் பரவியது. சிற்பங்கள் உற்று நோக்கு முக அமைப்புடனும் மிகுந்த வேலைப் பாடுடனும் ஆடை அணி வகைகளுடனும் செதுக்கப் பட்டன. திருச்சபைகளை அழகுபடுத்தும் பெரும் பணிகளைச் சிற்பிகள் இக்காலத்தில் மேற்கொண்ட னர். பாரிசு நகரில் கி.பி. 1150 முதல் கி.பி. 1300 வரை கோதியச் சிற்பக்கலை (Gothic Sculpture) வளர்ந்தது.

ஐரோப்பாவில் கி.பி. 1200-ஆம் ஆண்டுகளில் அரசர்களின் கல்லறைகளில் சிற்பங்களைப் பெருமள வில் ஏற்படுத்தும் பழக்கம் ஏற்பட்டது. நாளடைவில் இம்முறையைப் பிரபுக்கள், உயர் வீரர்கள் ஆகி யோரின் கல்லறைகளிலும் ஏற்படுத்தினர். கல்லறை களின் மீது உருவ அமைப்புச் செதுக்கப்பட்டது.

அரசர்களும் இளவரசர்களும் தங்களது அரண் மனைகளை அழகுபடுத்தச் சிற்பிகளை ஊக்குவித்த னர். இக்காலத்தில் பாரிசு நகரில் கன்னியும் குழந்தை யும் என்ற சிற்பம் மிகப் புகழ் பெற்று விளங்கிய சிற்பமாகும். இச்சிற்பம் தந்தத்தால் செய்யப்பட்டது.



பிரான்சு நாட்டுச் சிற்பம்

இதன் உயரம் 36 செ.மீ. ஆகும். திருச்சபைகள் தேவாலயங்களைப் புதியதாகக் கட்டுவது கி.பி. 1400-ஆம் ஆண்டுகளில் வீழ்ச்சியுற்றபின், அதுவரை திருச்சபைகளின் வெளிமுகப்புப் பகுதியைச் சிற்பங் களால் அலங்கரித்த சிற்பிகள் பழைய திருச்சபைகளின் உட்பகுதியில் சிற்ப அணி வகைகளைச் செய்யத் தலைப்பட்டனர்.

கோதியச் சிற்பக்கலையின் இறுதிக் காலத்தில் பிளாண்டர்சு, ஆண்ட்வெர்பு, நூரம்பர்கு, உல்ம், ஆக்சுபர்கு, மியூனிச்சு ஆகிய நகரங்களில் சிற்பக்கலை பேராதரவு பெற்றுத் திகழ்ந்தது. இத்தாலி மறு மலர்ச்சிக்குப்பின் சிற்பக்கலையில் ஒரு புதியதொரு அத்தியாயத்தைத் தொடங்கியது. மனிதனை அடிப் படையாகக் கொண்டு சிற்பங்கள் வடிக்கப்பட்டன. மனிதனுக்கு முக்கியத்துவம் கொடுக்கப்பட்டு அவ னுடைய நடவடிக்கைகள் ஒவ்வொன்றையும் சித் திரிக்கும் வகையில் சிற்பங்கள் வடிவமைக்கப்பட்டன




கிரேக்க உரோமானியப் பண்பாட்டை வலியுறுத்தும் சிற்பங்கள் பல செய்யப்பட்டன.

மறுமலர்ச்சிக்காலச் சிற்பங்களுள் குறிப்பிடத் தக்கவை, நிக்காலோ பைசனோ (Nicola Pisano) அவர் மகன் கியோவினி (Giovanni) ஆகியோர் செதுக்கிய சிற்பங்களாகும். தொனதெல்லோ (Donatello) என்பவரும் மிகச்சிறந்த சிற்பியாக இக்காலத்தில் விளங்கினார். அவர் தாவீது (David) கற்சிற்பத்தைச் செதுக்கினார்.



கிளாசு ஓல்டன்பர்கு உருவாக்கிய சிறபம்

மறுமலர்ச்சிக் காலத்தின் தொடக்க காலத்தில் வாழ்ந்த தொனதெல்லோ வேத நூலை அடிப்படையாகக் கொண்ட பாத்திரமான தாவீது என்னும் சிற்பத்தை மிகச் சிறப்பான புதிய முறையில் வடித்தார். செப்புப் படிமத்தில் உருவாக்கப்பட்ட இவ்வுருவம் ஆடைகளற்றுக் காணப்பட்டது. இத்தாலியன் சிற்பக் கலையில் இயற்கையைச் சித்திரிக்கும் நிகழ்ச்சிகளும் பெரிதும் இடம் பெற்றன. இக்காலத்தில் எழுந்த மனித வடிவங்களுள் குறிப்பிடத்தக்கது புடைப்புச் சிற்பமான சூலியசு சீசர் சிற்பம் ஆகும்.



வடக்கு வெராகுரசுச் சிற்பம்

தொடக்கக்கால, மறுமலர்ச்சிக் காலததில் சேகபோ தெல்லா குயிர்சியா (Jacopo della Quercia), மைக்கலேசோ மைக்கலோசி (Michelozzo Michelozzi), பெர்னார்டோ (Bernardo), அணடோனியோ ரோசில்லினோ (Antonio Rossellino) போன்றோர் சிறந்த சிற்பிகளாக விளங்கினர்.

தொனதெல்லோ கி.பி. 1400-ஆம் ஆணடுகளின் இடைக்காலத்தில் பதுவா (Padua) நகருக்குச் சென்று குடியேறினார். அங்கு அவர் மிக நுட்பமான முறையில் சிற்பங்களை வடித்தார். அவரது கலை முறையினைப் பின்பற்றிப் பல சிற்பக்கலைஞாகள் நாளடைவில் தோன்றினர்.

இத்தாலி, சிற்பக்கலையின் உச்சநிலையை மைக்கேல் ஏஞ்சலோ (Michelangelo) காலத்தில் அடைந்தது. இவர் தம் சிற்பஙகளுள குறிப்பிடத்தக்கவை விடியலும் மாலையும், இலாரன்சோ தெமெடிசி (Leronzo-de-medici) கல்லறை போன்றவை ஆகும்.

ஐரோப்பியச் சிற்பக்கலைகளுள் கி.பி 16-ஆம் நூற்றாண்டில் வாழ்ந்த சியன் இலாரன்சோ பெர்னினி (Gian Lorenzo Bernini) என்னும் இத்தாலியச் சிற்பி சிறந்தவராகக் கருதப்படுகிறார். இவரது சிற்பங்களுள் புகழ்பெற்றது போப்பு எட்டாம் அலெக்சாந்தரின் கல்லறைச் சிற்பங்களாகும். இவரது சிற்பங்களில் உணர்ச்சிகளும் உத்வேகமும் கலநதிருந்தன. பிரெஞ்சு பிளமியச் சிற்பிகள் கி.பி. 1700-ஆம் ஆண்டுகளில் தேவாலயத் திருச்சபைகளில் பல சிற்பங்களைச் செதுக்கி அழகுபடுத்தினர்.

செருமனியில் புதியதொரு சிற்பக்கலை இக்காலத்தில் தோன்றியது. சிற்பங்களில் மிகுந்த ஒப்பனை

செய்யப்பட்டது. எனவே, இது மிகு ஒப்பனைக் கலைப்பாணி (Rococo) எனப்பட்டது. இக்கலையில் வலலவர்களாக இக்னசு குந்தர் (Ignuz Gunther), பெர்டினாணடு தைட்சு (Ferdinand Dietz) போன்றோர் விளங்கினர்.

**அமெரிக்கா:** அமெரிக்காவின் வடபகுதியில் கி.பி. 1700 முடிய குறிப்பிடத்தக்க சிற்பிகள் காணப்படவில்லை. இருப்பினும், நாட்டுப்புறக் கலையை அடிப்படையாகக் கொண்ட கலைகள் இக்காலத்தில் நிலவின. ஐரோப்பாவில் தோன்றிய மிகு ஒப்பனைக் கலைப்பாணி அமெரிக்காவில் வில்லியம் உரூச்சு (William Rush) என்பவரின் மரச் சிற்பங்களில் காணப்பட்டது. சீன் அந்தோனி ஊடன் (Jean Antoine Hovdon) என்னும் பிரெஞ்சு நாட்டுச் சிற்பியின் வழிவந்தோர் அமெரிக்காவிற்குச் சென்று குடியேறிச் சார்சு வாசிங்டனின் உருவச் சிற்பத்தை உருவாக்கினர். அமெரிக்காவின் சிற்பிகள பலர் இத்தாலிக்குச் சென்று சிற்பக்கலையினை அறிந்தனர். அமெரிக்காவில் கி.பி. 1800-ஆம் ஆண்டுகளின் இறுதிக் காலத்தில் தானியல் செசுடர் பிரெஞ்சு (Daniel Chester French) என்னும் சிற்பி சிறந்த சிற்பியாக விளங்கினார்.

**ஆப்பிரிக்கா:** ஆப்பிரிக்காவில் உருவச்சிலை செய்யும் கலைகளும் முகமூடி செய்யும் கலையும் வளர்ந்திருந்தன. இவை சடங்குகளுக்குப் பயன்படுத்தும் பொருளகளாக விளங்கின. ஆப்பிரிக்கச் சிறபிகள் மிக உயர்ந்த, நுட்பமான பொருள்களில் சிறபஙகளை வடித்தனர். சுடுமண் பொம்மைகள், தந்த உருவங்கள், மரச்சிற்பங்கள போன்றவை இவற்றில் அடங்கும். ஆப்பிரிக்காவில் நைசீரியாவில் கி.மு.500-இல் இருந்த நோக்குப் பண்பாட்டுக (Nok culture) காலத்தில் மரக்குடைவுச் சிற்பங்கள், சுடுமண் சிற்பங்கள், உலோகச் சிற்பங்கள் ஆகியவை செய்யப்பட்டன.

ஆப்பிரிக்காவின் நடுப்பகுதியிலும் மேற்கிலும முகமூடிகள் பல செய்யப்பட்டன. இவை பெரும்பாலும் மூதாதையர்களின உருவ முகங்களாகும். இவை மரபுக் கதைகளில் கூறப்பட்டுள்ளவாறும் அமைக்கப்பட்டன. ஆப்பிரிக்கச் சிற்பங்களில் ஆடம்பரமான அணி வேலைப்பாடுகள் மிகுந்து காணப்பட்டன. இவற்றுள் குறிப்பிடத்தக்கது அரசர் சமபா போலன்கஙகோ (King Shamba Bolongongo) என்பவரின் சிற்பமாகும்.

**பசிபிக்குத் தீவுகள்:** பசிபிக்குப் பெருங்கடலில் அமைந்துள்ள தீவுகளுள் ஒனறான ஓசியானாவில் (Osiana) சிற்பஙகளைப் பிற மூலப் பொருளகளிலும் செய்தனர். இறகுகள, தோலாடை, சிலந்திக்கூடு, ஆமை ஒடு போனறவற்றில் சிற்பங்கள் செய்யப்பட்டன. மிகப்பெரிய அளவான உருவங்களும் பசிபிக்குத் தீவுகளில் செய்யப்பட்டன.



மைக்ரோனீசியச் சிறபம்

**அமெரிக்க இந்தியர்:** அமெரிக்க இந்தியர்களின் சிற்பங்களில் குறிப்பிடத்தக்கவை ஆல்மக்குப் (Olmec) பண்பாட்டுக் காலச் சிற்பங்களாகும். இப்பண்பாட்டுக் காலத்தில் கற்பலகைகளில் மிகப் பெரிய சிலைகள் செதுக்கப்பட்டன. ஆல்மக்குப் பண்பாட்டுக் காலச் சிற்பத்தில் மழைக் கடவுளின் சிறபம் குறிப்பிடத்தக்கது. ஆல்மக்குப் பண்பாட்டிற்குபபின் மெக்சிகோப் பகுதியில் பல்வேறு நாகரிகங்கள தோன்றின. அவற்றுள மாயா, தோல்தெக்குப் பண்பாட்டுக் காலத்தைச் சார்ந்த பல சிற்பங்கள் புகழ் பெற்றவை.

சிற்பக் கலையில் கி.பி. 19-ஆம நூற்றாண்டில் புதியதொரு மாற்றம் ஏற்பட்டது. சிற்பிகள் பல்வேறு வகையான முறைகளைப் பயன்படுத்தத் தொடங்கினர். நாடுகளின் கூறமைப்புகள இவற்றில காணப்பட்டன. மனித வடிவங்களை வடிக்கும் கலை பெரிதும் வளர்ந்தது. உண்மை நிலையை எடுத்தியம்பும் முறை இக்காலத்தில் முக்கியத்துவம் பெற்றது. இக்காலத்தில் வாழ்ந்த பிரெஞ்சுச் சிற்பி அரிசுடைடு மைலலோல் (Aristide Maillol) எனபவர் இப்புதிய மாற்றத்திற்கு ஊக்கமளித்தார்.

முதல் உலகப் போருக்குப்பின் சிற்பக் கலையிலும் ஓவியக் கலையிலும் கன வடிவங்களின் அடிப்படையும், குறிப்பு அடையாளமுறை அடிப்படையும் தோன்றின. இக்காலத்தில் உம்பர்ட்டோ (Umberto)


உரோமானியச் சிற்பம்

என்னும் இத்தாலியச் சிற்பியும், கான்சுடான்டைன் என்னும் உரோமானியச் சிற்பியும் வாழ்ந்தனர். இந் நூற்றாண்டில் உலோகம், நெகிழிப் பொருள் (Plastics) போன்றவை பயன்பாட்டில் வந்தன. இயந்திரங்களைப் பயன்படுத்திச் சிற்பங்கள் மிக நுணுக்கமான முறையில் செய்யும் கலை இந்நூற்றாண்டில் ஏற்பட்டுள்ளது. சுற்றுப்புறச் சூழலை விளக்கும் சிற்பங்கள் பலவும் இக்காலத்தில் வடிவமைக்கப்பட்டன. சு.இரா.

**சிற்ப நூல்கள்:** சிற்பக்கலை தொன்றுதொட்டு தந்தை மகனுக்கு எடுத்துக்கூறி வழிவழியாகப் பயிற்றுவிக்கப்படும் ஓர் உன்னத கலையாகும். கல்வி முறையில் வளர்ந்தோங்கிய தலைசிறந்த கலைஞர்கள் தங்களுடைய செய்முறை அனுபவங்கள், உணர்வுகள் ஆகியவற்றுடன், முன்னோர் அளித்த செய்திகளையும் இணைத்து அவர்தம் புலமை, ஆற்றல் அனுபவம் ஆகியவற்றிற்கு ஏற்றவாறு இலக்கணங்களை வகுத்தனர். மேலும் பலவகையான கட்டடங்களையும், சிற்பங்களையும் தோற்றுவித்த பின்னர் அவற்றின் சிறப்புக்களைக் கண்டும் கணித்தும் சிற்பக் கலை நூல்களை எழுதிவைத்தனர்.

சங்க இலக்கியங்கள் சிற்பநூல்கள், சிற்பக் கலைஞர்கள் பற்றியும், அவர்கள் கோயில்கள் அரண்மனை, கோட்டை, நகரம், மனைகள் ஆகியவற்றை மனைநூல் மரபுப்படியே அமைத்தனர் என்பது பற்றியும், அக்கலை வல்லுநர்கள் ''நூலறிபுலவர்'' என்று போற்றப்பட்ட செய்திபற்றியும் கூறுகின்றன.

மேலும், சிற்பங்களை அளவிட்டுச் செய்வதற்கு 24 விரல் கொண்ட அளவுகோல் இருந்தமையை ''நூல்நெறி மரபின் அரங்கம் அளக்கும் கோல் அளவிருபத்து நால் விரலாக'' என்ற இலக்கிய அடிகள் உணர்த்துகின்றன. இங்ஙனம் தோன்றிய சிற்ப நூல்களை 1. சிற்பக் கலை பற்றிக் கூறும் நூல்கள், 2. கட்டடக்கலை பற்றிக் கூறும் நூல்கள, 3. சிற்பமும் மனையும் பற்றிக் கூறும் நூல்கள் என மூவகைப் படுத்தலாம்.

பண்டைய சிற்பக்கலை நூல்கள் அனைததும் ஓலைச் சுவடியில் கிரந்தத்தாலும் வட மொழியாலும் எழுதப்பட்டன. சிற்பக் கலையில் பயிற்சியும், கலை நூல்களில்ஆராய்ச்சியும் கொண்டவர்களே இவற்றைப் புரிந்துகொள்ள இயலும்.

மானசாரம் என்பது கட்டடக்கலையைப் பற்றிக் கூறும் சிற்ப நூலாகும். இந்நூலில் பல வகையான சிற்ப நூல்களின் பெயர்கள் காணப்படுகின்றன. அவை விசுவகர்மீயம், விசுவம், விசுவசாரம், பிரபோதம், விருத்தம், மயமதம், துவசுட்டாதந்திரம், மனுசாரம், நளம், மானவிதி, மானகல்பம், மானசாரம், பெருகருதம், சிருசடம், மானபோதம், ஆதிசாரம், விசாலாட்சம், விசுவகாசியபம், வாசுதுபோதம், மகாதந்திரம், வாசுதுவித்யாபதி, பாராசர்யகம், காலயூபம், சைத்தியம், சித்திரம், ஆவர்யம், சாதகசார சம்கிதை, பானுமதம், ஐநதிரமதம், உலோக்கனம், சௌரம் ஆகியனவாகும்.

மனுசாரம் என்ற சிற்ப-கட்டடக்கலை நூலில 28 சிற்ப நூல்களின பெயர்கள் உள்ளன. அவை ஈசானம், சித்ரகாசியபம், பிரயோகமஞ்சரி, பெருகிதம், பௌத்தமதம், கௌதமம், குலாலம், வாசிட்டம், மனோகல்பம், பார்க்கவம், மார்க்கண்டம், கோபாலம், நாரதீயம், நாராயணீயம், காசியபம், சித்ரயாமளம், சித்ரயாகுல்யம், தேசிகம் போன்ற நூல்களாகும்.

இவற்றில் பல இன்று கிடைக்கவில்லை. இன்று கீழ்க்காணும் நூல்களே இருக்கின்றன. அவையாவன: மயமதம், விசுவகர்மீயம், மானசாரம், ஐந்திரமதம், மனுசாரம், காசியபம்.

இச்சிற்ப நூல்கள் யாவும் சிற்ப-கட்டடக்கலை பற்றி விவரிக்கும் நூல்களாகும். இந்நூல்களை ''வாசுது சாத்திரம்'' என்றும் கூறுவர்.

வாசுதுவித்யை, மனுசயாலயச் சந்திரிகை என்ற மேலும் இரு சிற்ப நூல்கள் உள்ளன. இவை மனை நூல்களாகும்.

சிற்பங்களைப் பற்றியே விவரித்துக் கூறும் சிற்ப நூல்கள் மூன்று. அவை, சாரசுவதீயம், பிராம்மியம், சகளாதிகாரம் என்பனவாகும். இவையன்றி மேலும் சில சிற்ப நூல்கள் உள்ளன. அவை சில்பரத்தினம்,

சர்வார்த்த சிற்ப சிந்தாமணி, சிற்பரத்தினாகரம், பூர்வகாரணாகமம், குமாரதந்திரம், சுப்ரபேதாகமம், அசுதாகமம் ஆகும்.

தஞ்சை மகாராசா சரபோசி சரசுவதி மகால் நூலகம் காசியபம், மானசாரம், மயமதம், களாதி காரம், சில்பரத்தினம் போன்ற சிற்ப நூல்களைத் தமிழில மொழி பெயர்த்து வெளியிட்டுள்ளமை குறிப்பிடத் தக்கதாகும்.

மாமல்லபுரம் சிற்பம்-கட்டடக்கலைக் கல்லூரி எளிய, இனிய தமிழில் எல்லாவித சிற்ப நூல்களை யும் ஆராய்ந்து சுருக்கமாக 'சிற்பச் செந்நூல்' என்ற சிற்ப நூலினை வெளியீடு செய்துள்ளதும் குறிப்பிடத் தக்கதாகும்.

வே இரா.

**சிற்றின்பவியல்**, பால்சார்ந்த நடத்தையை ஒழுங்கு முறையாக ஆராய்கின்ற ஓர் அறிவியலாகும். இது நெடுநாட்களாக ஒழுங்கு முறையான ஆராய்ச்சி யிலிருந்து புறக்கணிக்கப்பட்டு வந்தது. சிற்றின் பவியல் (Sexology) இன விருத்திக்கான ஒரு நட வடிக்கை மட்டுமன்றி மனித வாழ்க்கையின் பெரும் பகுதியில்பங்கும் கொண்டிருக்கிறது என்ற கருத்து ஏற்றுக் கொள்ளப்பட்ட பிறகு மிகுதியான ஆராய்ச் சிகள் நடைபெற்று வருகின்றன. அதன்காரணமாகத் தான் பள்ளிகளிலும் கல்லூரிகளிலும் கூடச் சிற்றின் பவியல் ஒரு பாடமாக வைக்கப்பட வேண்டும் என்று வலியுறுத்தப்பட்டு வருகிறது. மேலும், மனிதர்களு டைய சீர்கேடுகளும் நடத்தைச்சீர்கேடுகளும் சிற்றினப முரண்பாடுகளை அடிப்படையாகக் கொண்டி ருப்பன என உளவியல வல்லுநர்கள் பெரிதும் நம்பு கின்றனர். மனிதர்களுடைய ஆககச சிந்தனைகளுக்கடி யில் சிற்றின்ப ஊக்கங்களே மறைந்திருக்கின்றன என் பதை உளப் பாகுபாட்டு வல்லுநர்கள வெளிப்படுத்தி யிருக்கின்றனர். சிக்மண்டு பிராய்டு (Sigmund Freud) கூறுகின்ற கருத்தை முழுவதும் ஏற்றுக் கொளள முடி யாது என்றாலும், மனித வாழ்க்கையில் அதனுடைய முக்கியத்துவத்தைத் தள்ளிவிட முடியாது. அணமைக் காலத்தில் எழுதப்படுகின்ற பொது உளவியல (General Psychology) நூல்களில் கூட ஓர் அத்தி யாயம் சிற்றின்ப நடத்தையை விவரிக்க ஒதுக்கப்படு கிறது. ஊக்கிகளை விவரிக்கின்றபோது சிற்றினப ஊக்கியை (Sex drive) விளக்கித்தானாக வேண்டும். உணவு, நீர் முதலியன இன்மையால் வாழும் உயிர் கள் உயிர்துறப்பதைப் போன்று சிற்றின்பம் இன்மை யால் எவரும் உயிர் துறப்பதில்லை. ஆனால், சிற றின்ப வெறி உயிர்களைப் பலி கொள்ளுகிறது. சிற் றின்பத்தைப் புறக்கனித்தும் மனிதன் உயிர் வாழ லாம். சமநிலையைப் பாதிக்கின்ற அளவுக்கு அதனு டைய புறக்கணிப்புச் செல்லுவதில்லை.

எனவே, தனிமனிதன் உயிர் வாழ்வதற்குச் சிற் றின்பம் இன்றியமையாததாக இல்லை என்றாலும் இனவிருத்திக்குச் சிற்றின்பம் இனறியமையாத தாகிறது. சிற்றின்ப ஊக்கி இயற்கையான தேர்வுச் செயல் முறையினால் அழியாமல் பாதுகாக்கப்படு கிறது. உயிரினங்களில் ஆண்-பெண் இணைவுக்கான (Mating) விருப்பம் இயல்பாகவே ஏற்படவில்லை என்றால் அடுத்த பரம்பரை தோன்ற முடியாது. மனித இனத்தில் சிற்றின்ப ஊக்கியை வெளிப்படுத்து வதில் சமுதாயச் சட்டங்களும், பழக்க வழக்கங்களும் கட்டுப்பாடுகளை அமைத்திருககின்றன. அதை எவ் வாறு யாரிடம்வெளிப்படுத்தவேண்டுமென்பதில்தான் கட்டுப்பாடுகள் ஏற்படுத்தப்பட்டிருக்கின்றன. ஆனா லும் சிற்றின்ப ஊக்கி ஒரு வலிமையான கருவியாக என்றும் இருநது வருகிறது. எதிலும் புதுப்பாணியைத் தேடித்திரிகின்ற சமுதாயம் சிற்றின்ப ஊக்கியைக் கவர்ச்சிகளுக்கான கருவியாகப் பெரிதும் பயன் படுத்துகிறது. உற்பத்திப் பொருளகளையும் கருத்து களையும் விளம்பரப்படுத்துவோர் சிற்றின்ப உணர்ச்சி களையும் நடவடிக்கைகளையும் அவைகளுடன் இணைத்துப் பொதுமகசள் கவனத்தை ஈர்க்கின்ற னர். சாதாரணப் பற்பசை, பற்பொடி முதல் கார், வீடு விற்பனை வரையிலும், வானவூர்தியில் பிரயா ணம் செய்வதிலும் சிற்றின்ப ஊக்கி வெளிப்பாடு களே இடம் பெறுகின்றன.

இயற்கையானது எல்லா உயிரினங்களிலும் ஆண், பெண் என்ற இரண்டு பால்களைப் படைத்திருக் கிறது. எல்லா உயிரினங்களிலும் ஆண்-பெண் இணைதல் நடத்தை நடைபெறுகிறது. மனிதர் களிடையே நடைபெறும் இந்நடத்தை காதல் செய் தல் (Courtship) என்று சொல்லப்படுகின்றது. ஆண் மகன் செருக்கல் செய்தோ, விசில் அடித்தோ,இருமல் செய்தோ அல்லது வேறு ஏதேனும் புதுமையான செயல்கள் மூலமோ பெண்மகள் மீதுள்ள தன்னு டைய அக்கறையை வெளிப்படுத்துகிறான். இந்த விதமான வழிகளில் தன்னுடைய பால் விருப்பத் தைத் தெரியப்படுத்துவதைப் பெண்மகள புறக் கணிக்கலாம் அல்லது ஏற்கலாம். ஏற்றுக் கொண் டால் அவனை அந்த நடவடிக்கைகளில் மேல் நோக் கிச் செல்ல அனுமதிக்கின்றாள். இல்லை என்றால் ஏதேனும் ஒரு வழியில் தன்னுடைய வெறுப்பை வெளிப்படுத்துகிறாள.

பாலினம் சார்ந்த இணைதல் நடவடிக்கை உயிரி னங்களில் பலவழிகளில் வேறுபடுகிறது. குட்டி போட்டுப் பால் கொடுக்கும் அல்லது முதுகெலும் புள்ள உயிரினங்களின் பால்சார்ந்த நடவடிக்கை களைத் தற்செயலாக அல்லது சோதனை மூலம் காண நேரிடலாம். மனிதனைத்தவிர மற்

றெல்லா உயிரினங்களிலும பெண்ணினம் நானகு கால்களையும் உறுதியாகத் தரையில் ஊன்றுகின் றது. ஆணினம் அதன் மீது பின்னால் ஏறி நின்று யோனிக்குழாயில் (Vagina) ஆண்குறியைப் (Penis) புகவிடுகின்றது. பெண்ணினம் இதற்கு ஏற்ற வகை யில் நின்றோ, உடலை வளைத்துக் கொடுத்தோ ஒத்துழைக்கின்றது. இவ்விதமான துலங்கல் முன் னோக்கிய வளைவு (Lordosis) எனச் சொல்லப்படு கிறது. இந்தவிதமான பால்சார்நத நடத்தை சிறிய உயிரினங்களான எலி, அணில், பூனை, நாய், குரஙகு முதல் பெரிய விலங்கினங்கள் வரையில் நடைபெறு கினறது.



குரங்குகள் சிற்றின்பம் நுகர்தல்

எல்லாவிதமான சிற்றின்ப அல்லது பால் சார்நத நடவடிக்கைகளும் ஆண் - பெண் இனங்களிடையே நடைபெறுமானால் அவை பெரிதும் இனவிருத்திச் செயல்களாகினறன. இனவிருத்தி ஏறபடுவதற்கு வழி யில்லாத சிற்றின்ப நடவடிச்கைகளுமிருக்கின்றன. அவைகளில் முக்கியமானது ஓரினப்புணர்ச்சியாகும (Homosexuality). எல்லா மனித சமுதாயங்களிலும் சில விலங்குகளிடையேயும் இந்நடவடிக்கை காணப் படுகின்றது. பெண்ணின்மீது ஆண் ஏறிநின்று நட வடிக்கையில் ஈடுபடுவது போலவே ஆணினத்தின்மீது ஆணினம் ஏறி நின்று நடவடிக்கையில ஈடுபடுவதும் நடைபெறுகிறது. இந்நடத்தை பெரும்பாலும் எலிகள், அணில்கள், குரங்குகள், நாய்கள் ஆகியவை களிடையே மிகுதியாக நடைபெறுகிறது. மனிதர் களிடையே ஓரினப்புணர்ச்சி ஆணகளிடையே பெரும் பாலும் நடைபெறுகிறது. பெணகளிடையிலும் இந்த ஓரினப்புணர்ச்சி நடைபெறுகிறது. மனிதர்களிடையே ஆண - பெண் மாற்றினப்புணர்ச்சி (Heterosexual) நடைபெற வழியில்லாதபோது ஓரினப்புணர்ச்சி நடை பெறுகிறது. சில சமூகங்களிடையில் குமரப்பருவத்தில ஓரினப்புணர்ச்சி நடத்தை இயல்பானது என்று கருதப் படுகிறது. பிறகு இச் சமூக ஆண்களும் பெண்களும் திருமணம் செய்து கொண்டு மாற்றினப்புணர்ச்சியில் ஈடுபடுகினறனர். இது பற்றி ஆராய்ச்சிகள் பல நடை பெற்றிருக்கின்றன. மணி என்பவரும் எர்காரட்டு என்பவரும் (Money and Ehrhardt, 1972) நடத்திய ஆராயசசிகளின்படி, ஓரினப் புணர்ச்சியில் ஈடுபட் டுள்ள ஆணபாலரும், பெண்பாலரும் பிறகு மாற்றினப் புணர்ச்சியில் ஈடுபடுவதேயில்லை என்பதாகும். இவ் விதமான நடத்தைக்கு உடல் சார்ந்த கூறுகள் காரண மாக இருக்குமோ என்றும் அறிய முயற்சிகள் எடுத்துக் கொளளப்பட்டன. அவற்றின் முடிவுகளில் காணப் பட்டது என்னவென்றால், சுரப்பிகளின் இயல் பிறழ்ந்த செயல் முறைகள அல்லது அணுகோல் களில் (Chromosomes) உள்ள குறைபாடுகள என்று காணப்பட்டது. ஓரினப்புணர்ச்சி நடத்தை பெரும் பாலும் XXY அல்லது XYY அமைப்புள்ள அணுக் கோல்களைக் கொண்ட ஆண்களிடந்தான் மிகுதி யாகக் காணப்படுகிறது.

மனிதர்களின் சிற்றின்ப நடத்தையைப்பற்றி அண்மைக்காலத்தில் பெரும் ஆராய்ச்சிகள் நடத்திய வர்களுள் மாசுடர்சு (Masters) என்பவரும் சான்சன் (Johnson) எனபவரும் முககியமானவர்கள். இவர் களுடைய ஆராய்ச்சிப்பரிசோதனைக்கு இணங்கி முன் வந்த ஆண்களும் பெணகளும் புணர்ச்சியின் உச்ச உணர்ச்சித் துடிப்பு நிலையையடையும் வரையில் புணர்ச்சி நடவடிக்கையில் ஈடுபட்டனர். அச்சமயங் களில் அவர்களின் உடற்கூறு சார்ந்த துலங்கல்களைச சிறப்பான கருவிகளைக் கொணடு பதிவு செய்தனர். இந்த ஆராய்ச்சிப் பரிசோதனையில் மனிதர்களின சிற்றின்பப் புணர்ச்சியில் நான்கு வகையான கட்டங் கள் இருக்கக்கணடனர். அவை. 1. உணர்ச்சித் துடிபபு (Excitement), 2. உயர்ந்த சம மட்டம் (Plateau), 3. உச்ச உணர்ச்சித் துடிப்பு அல்லது புணர்ச்சிப்பர வசநிலை (Orgasm), 4. ஒருமை குலைதல்(Resolution) என்பன.

1. முதல் கட்டத்தில மகளிரின் யோனிக்குழா யில் உராய்வுத்தடை, யோனிக்குழாயின் சுவர்கள் தடிததல், யோனியிலுள்ள கந்து (Clitoris) எழுச்சி யுறல், உயர்தல் ஆகிய குணப்பண்புகள் காணப்படு கின்றன. ஆண்களிடத்தில் ஆண்குறி விரைப்படை தல், விதைகள் உயர்தல், முலைக்காம்பு ஆண், பெண ஆகிய இரு இனத்தினருக்கும் நிமிர்தல் போன்ற மாற்றங்களும் ஏற்படுகின்றன.

2. இரணடாம் கட்டத்தில் இருபாலரிடத்திலும் இதயத் துடிப்பின் வேகம் மிகுகின்றது மூச்சுவிடுதல்

தசைநார்களின் இறுக்கம் ஆகியவைகளும் மிகுகின்றன. ஆண்குறியின் அளவு மிகுகின்றது. அதன் நுனி பெரிதாகின்றது. ஆணின் விதைகளின் பரிமாணம் மிகுகின்றது. விதைப்பை அண்ட கோசம் (Scortum) உயர்த்தப்படுகின்றது. மகளிரிடத்தில் யோனியின வெளிச்சுவர் உப்புகின்றது. யோனியிலுள்ள கந்து பின்வடைகின்றது.

3. மூன்றாம் கட்டத்தில் ஆண், புணர்ச்சியின உச்ச இன்ப உணர்ச்சிக் கட்டத்திலிறங்குகிறான. இது யோனியில ஆண்குறியைச் செலுத்திய சில மணித்துளிகளுக்குள் பலதடவை நடைபெறுகின்றன. இந்த நிலையில் தசைநார்கள் தன்னிச்சையான கட்டுப்பாட்டை இழக்கின்றன. நரம்புத்தசை நார்களின இறுக்கம் பெரிய அளவுக்கு விடுவிக்கப்படுகிறது. கைகளிலும் பாதங்களிலும் இறுக்கமான பிடிப்பு அசைவுகள் உண்டாகின்றன. மகளிரின் யோனி, கருப்பை ஆகியவைகளின் தசைநார்கள் ஒரு வகையான சுருங்குதல் அனுபவத்தைப் பெறுகின்றன. இருபாலரிடத்திலும் தசைநார்கள் உடல்முழுவதிலும் சுருங்குகின்றன. உடற்கூறு சம்பநதப்பட்ட அளவில் மகளிரின் உச்ச உணர்ச்சித் துடிப்பு ஆண்களுடையது போன்றதேயாகும். யோனியின் கந்து தூண்டல் மூலமும் யோனியின் தூண்டல் மூலமும் உண்டாக்கப்பட்ட உச்ச உணர்ச்சித் துடிப்புகளுக கிடையில் எந்தவிதமான மாறுபாடுகளுமில்லை. இந்தக் கட்டத்தில் விந்து வெளிப்படுகிறது. விந்து வெளிப்படும் கட்டமே புணர்ச்சியின் உச்ச உணர்ச்சிக் கட்டமாகும். விந்து வெளிப்படும்போது மூத்திர ஒழுக்குக் குழாய் ஒருவித சந்தத்துடன் விட்டு விட்டுச் சுருங்குகிறது. முதல் மூனறு, நான்கு சுருங்குதல்கள் மிகவும் மும்முரமானவைகளாக இருந்து பெருமளவு விந்துவை மிகவும் வலிமையாக வெளியில் தள்ளுகினறன. இதைத்தொடர்ந்து வருகின்ற சுருங்குதல்கள் அவ்வளவு மும்முரமானவைகளல்ல. விந்துவை வெளித்தள்ளும் சுருங்குதல்கள் முக்கால் வினாடிக்கொன்றாக ஏற்படுகிறது. விதைகள் மிக அதிகமாக உயர்த்தப்படுகின்றன. இருதயத்துடிப்பு ஒரு மணித்துளிக்கு 180 தடவைகளுக்கு உயருகினறன.குருதியழுத்தம் 220/110 க்கு உயருகின்றது மூச்சுவிடுதல் ஒரு மணித்துளிக்கு 12 தடவையாக இருப்பது 41 தடவையாக உயருகிறது.

பெரும்பாலான ஆண்களுக்கு விந்து வெளிப்பாடுதான் உசச இனப உணர்ச்சியின முககிய அங்கமாக இருக்கின்றது. உச்ச இன்ப உணர்ச்சி விநது வெளிப்பா டின்றியும் ஏற்பட முடியும்.

4. நான்காம் கட்டத்தில், அதாவது ஒருமை குலைதல நிலையில் எழுசசி சார்ந்த செயல்முறை ஒரு ஒய்வு நிலைக்குத் திரும்புகிறது இது ஒத்திசைவற்ற காலகட்டம் (Refractory Period) என்று கூறப்படுகிறது. பயனுடைய சிற்றின்பத்தூண்டல்கள ஏற்படுவதில்லை இந்தக்கட்டத்தில் ஆண்குறி விரைப்பை இழந்து விடுகிறது. ஏனென்றால் விரைப்பு மையம் ஒத்துணர்வு நரம்பணுக்களின் நடவடிக்கையின் ஆதிக்கத்தில சென்று விடுகிறது. இதனால் ஆண்குறியின் விரைப்பு ஏற்படும் பகுதிககு குருதி செலுத்தல குறைகிறது. குருதியினமையால் 50 சதவிகிதம் ஆண்குறியின அளவு விரைவாகச் சிறுத்து விடுகிறது. மற்றத் துலங்கல்களான சதை நார் விரைப்பு, இருதயத்துடிப்பின் வேகம், குருதியழுத்தம், மூச்சு விடுதலின் வேகம் முதலியவைகளும் விரைவாக மறைகின்றன. பிற மாற்றங்களான ஆண்குறி இறுதியாகச் சுருங்கி இயல்பான நிலைக்கு வருதல், விதைப்பையின் தசைத் தளர்ப்பு, விதைகள் கீழே இறஙகுதல், முலைக்காம்பின் விரைப்பு நீங்குதல முதலியவை ஏற்படுவதற்கு அதிக நேரம் எடுத்துக் கொள்ளப்படுகிறது. மூன்றில் ஒருவருக்கு உடல் முழுவதும் வியர்த்துக் கொட்டும். பலர் உறங்குவதற்கு விரும்புகின்றனர். ஒருமை குலைதலின கட்டம் முற்றுப்பெற ஏறக்குறைய இரண்டு மணி நேரம் பிடிக்கலாம். ஆணகள ஒருமை குலைதலைத் தாமதப்படுத்தலாம். இறுகக மான உடல் தொடர்பு கொண்டு ஆணகுறியை யோனியிலேயே வைத்துக் கொண்டிருத்தல் மூலம் இதைச் செய்யலாம்

சிற்றினப நடத்தை எல்லா உயிரினங்களிடையேயும் நடைபெறுகிறது. அவைகளிடையே இது இன விருத்தி நடத்தையாகும். விலங்குகளிடையே நடைபெறும் இந்நடத்தை இனத்திற்கினம் சற்று மாறுபடுகின்றது. முதுகெலும்புள்ள உயிரினங்களிடையே மாற்றினப்புணர்ச்சியில் விந்தணு முட்டையணுவில மாற்றம் செய்யும் செயல்முறையாக இருக்கிறது. புணர்ச்சி நடவடிக்கை விலங்குகளிடையே இனவிருத்தி நடவடிக்கைதான் என்றாலும் அது இயற்கையாகவே நிகழுகிறது. இதுபற்றி விவரம் சேகரிப்பதற்காக மனிதர்களில் யாரும் ஆண்-பெண் புணர்சசி செய்து காட்டுவதில்லை. விலங்குகளிடையே நடத்தப்பட்ட பரிசோதனைகள் பல மனிதர்களுக்கும் பொருந்துவனவாக இருக்கினறன.

உயர் பாலூட்டிகளில் (Primats) குரங்குகளின புணர்ச்சி நடத்தையைக் கவனமாக ஆராய்நது பார்க்கும் போது மனிதரின் சிற்றின்பப்புணர்ச்சி நடத்தையைப் புரிநது கொளளுவதற்கு ஏற்ற விவரங்கள் கிடைக்கின்றன. கின்சியும் (Kinsey, 1948) அவரது கூட்டாளிகளும் நடத்திய ஆராய்ச்சி முடிவுகள தெளிவான விளக்கங்களைத் தருகின்றன.

சிற்றின்ப நடத்தை எல்லா வயதுக்கட்டங்களி லும் நடைபெறுகிறது. குழந்தைகள் இரண்டு அல்லது இரண்டரை வயதில் அவர்களுடைய சிற்றின்பத்தைப் பற்றி உணருகின்றனர். இது பெரிதும் சிறுவர்கள் தங்களுடைய பிறப்புறுப்புகளை மற்றவர்களுடைய பிறப்புறுகளோடு ஒத்திட்டுப் பார்ப்பதில் தெரிகிறது. பிராய்டு இதை வாய் சார்ந்த நிலை (Oral stage) என்று கூறுகிறார். சிலசிறுவர்/சிறுமிகள் தங்களுடைய பிறப்புறுக்களைத் தாமே தூண்டல் (Self-stimulation) மூலம் சிற்றினப உணர்ச்சியை நிறைவு செய்து கொள் கின்றனர். கின்சியின் கணக்குப்படி 36 விழுக்காடு சிறுவர்கள் உச்சச் சிற்றின்ப உணர்ச்சியைப் பெறு கின்றனர்.

இளம் சிறுவர்கள், 3வயது முதல் 7 வயது வரையி லுள்ளவர்கள் சிறுவர்களும் சிறுமிகளும் சிறறின்பத் தொடர்புடைய நடவடிக்கைகளில் மிகவும் கவர்ச்சி கொள்கின்றனர். பிறப்புறுப்புக்களைத் தூண்டல், செயற்கைச் சிற்றின்பக் கையாடல் பழக்கம் (Mastur-bation) ஆகியவைகளில் ஈடுபடுகின்றனர். பிராய்டு இக்கட்டத்தை இனஉற்பத்தி உறுப்பு உருவ வழிபடு நிலை (Phallic stage) என்று கூறுகிறார். சிற்றின்பத் தொடர்புடைய பல விளையாட்டுகளை யும் சிறுவர், சிறுமியர்கள் உருவாக்குகின்றனர்.

அடுத்த கட்டமான முன்குமரப்பருவத்தில் சிற் றின்பக் கவர்ச்சியும் நடவடிககையும் உறங்குவது போன்ற நிலையிலிருக்கின்றன. முன் குமரப்பருவம் எட்டு வயது முதல் பன்னிரண்டு வயது வரையில செல்லுகின்றது. சிற்றின்ப நடத்தை வெளிப்படாத கட்டம் என்று பிராய்டு கூறுகிறார். உடல் மாறறங கள, பூப்பின் செயல்முறைகள் தொடஙகுகினறன. பல முன்குமரப்பருவத்தினர் தங்கள உடலில் ஏறபடு கின்ற மாற்றஙகளைக் கணடு மன நிறைவினமை கொள்கின்றனர். சிலர் அவைகளை விரும்புவதில்லை. இந்த வயதுக்கட்டத்தில் ஆண்பால் பெண்பால இயக்கும் நீர்மங்கள (Androgen) மிகுகின்றன. சிற்றின்ப ஊக்கி மலரத் தொடங்குகிறது. மற்றவர் களோடு சேர்ந்து சிற்றின்ப ஊக்கிககு ஒரு வடிகால ஏற்படுத்திக் கொள்ள முடியாமையால இநத வயதில் செயறகைச் சிற்றின்பக் கையாடல் பழககம் மிகத் தொடங்குகினறது. அண்மையில் கிடைத்துளள புளளி விவரப்படி, பதின மூனறு வயதில் 63 சதவிகித ஆண் களும் 33 சதவிகித பெண்களும் இந்த வயதில செயற் கைச் சிற்றினபக் கையாடல் புரிகின்றனா. ஆண்களில 50 முதல் 60 சதவிகிதத்தினரும் பெண்களில 33 சத விகிதத்தினரும் ஓரினப்புணர்சசியில் ஈடுபடுகின்றனா.

குமரப்பருவம் 13 ஆம் வயதில் தொடங்கி 19 வயது வரையில செல்லுகிறது. இந்த வயதில் சிற் றின்ப ஊக்கியில் ஒரு எழுச்சி ஏற்படுகின்றது. பிராய்டு இதை பிறப்புக்குரிய நிலை (Genital stage) என்று கூறுகிறார். பெரும்பாலானவர்கள் இந்த வய தில் திருமணமாகாதவர்கள். அவர்களுடைய நேர மெல்லாம் மாற்றுப்பாலினரோடு தோழமை கொள வதாகவே இருககினறது. இந்த வயதினர் அமெரிக்கா வில மிக அதிகமான சிற்றின்ப நடத்தையில் ஈடுபடு கினறனர். சென்ற பரம்பரையினரை விட இன்றைய பரம்பரையினர் மிக அதிகமாக ஈடுபடுகினறனர். பெரும்பாலான ஆணகளும் மூனறில் இரண்டு பங்கு பெண்களும் திருமணத்திறகு முன்பே, 25 வயதிற்குள சிற்றின்பப் புணர்ச்சியில் ஈடுபடுகின்றனர். அணடடு (Hunt) என்பவரின் ஆராய்ச்சியில, 72 சதவிகித ஆண கள வாய்சார்ந்த மாற்றினப்புணர்சசி (Hetrosexual fellatio) அனுபவமும், 69 சதவிகித பெணகள நாக்கு அல்லது வாய்சார்ந்த மாற்றினப்புணர்சசி (Hetro sexual cunnilingus) அனுபவமும் குமரப்பருவத்தில பெற்றிருக்கின்றனர் என்பது காணப்பட்டது. இன றைய குமரப்பருவத்தினர் யோனியில ஆண குறி யைச் செலுத்திப் புணர்ச்சி செய்யும் சிற்றினப நட வடிக்கையில் மிகப் பல வகைகளைக் கையாணடிருக கின்றனர் என்று அணட்டு கூறுகிறார்.

குமரப் பருவத்தைத் தாணடி வயது வந்தவர் கட்டத்தில் (Adult) பெரும்பாலான ஆண்களும் பெண்களும் திருமணம் செய்து கொண்டு விடுகின் றனர். இநதக் கட்டத்தில் அவர்களுடைய சிற்றின்ப நடத்தை பெரிதும் புணர்ச்சியின் எண்ணிக்கையைப் பொறுத்ததாகும். ஓர் ஆணும் பெண்ணும் ஒருவாரத் தில எத்தனை தடவை சிறறின்பப்புணர்ச்சியில ஈடுபடு கின்றனர் எனபதை 1939, 1949ஆண்டுகளில் கின்சி என்பவரும் 1972-ஆம் ஆண்டில் அண்ட்டு எனபவ ரும் 1970-ஆம் ஆணடில் வெசுடோவு (Westoff) என்பவரும் ஆராய்ச்சிப் பரிசோதனைகள நடத்தி னார். ஒரு வாரத்தில் நடைபெறும் சிற்றினபப் புணர்ச்சியின் எண்ணிக்கை ஒவ்வொரு பண்பாட்டி லும் மாறுபடுகின்றது. எனவே, ஒரு பண்பாட்டின புள்ளி விவரத்தை எல்லாப் பணபாட்டினருக்கும் பொதுவாகச் சொல்ல முடியாது எடுத்துக்காட்டாக, இங்கிலாந்து,அமெரிக்கா,போன்ற நாடுகள் குளிர் அதிக மாக உள்ள நாடுகள. இந்தியா, ஆப்பிரிக்கா போனற நாடுகள் வெப்பமிக்க நாடுகள். சிற்றின்ப ஊக்கியின் எழுச்சியும் நடவடிக்கைகளும் தட்பவெப்ப நிலைக்குத் தகுந்தாற் போல் மாறுபடுகின்றன. வெப்பம் மிகுதி யாக உள்ள நாடுகளில் சிறறினப நடவடிக்கையின் எண்ணிக்கை சற்று உயர்வாகவே இருக்கலாம். இது பற்றி ஒப்பீட்டு ஆராய்ச்சி (Comparative study) செய்தால்தான் சிறறின்ப நடத்தையைப் பற்றி விரி வாகக் கூறமுடியும். பொதுவாக 25 வயதுக்குட்பட்ட

வர்கள் எல்லாப் பணபாட்டிலும் வாரத்தில் மூனறுக்கு மேற்பட்ட புணர்ச்சியில ஈடுபடுகின்றனர். வயது ஏற ஏற இந்த எணணிக்கை குறைகிறது. அதாவது, 35 முதல் 45 வயதுள்ளவாகள வாரத்தில் இரண்டு முதல் மூன்று முறை புணர்ச்சியில் ஈடுபடுகினறனர். நாற்பத்தைந்து வயதுக்கு மேற் சென்றால வாரத்தில் ஒரு முறைதான் புணர்ச்சியில் ஈடுபடுகின்றனர்.

பொதுவாக-ஆண பெண்களிடையே நடைபெறுகின்ற சிற்றின்ப நடவடிக்கை மாற்றினப்புணர்ச்சியாக (Hetrosexual coitus) இருக்குமானால் அது அவர்களுடைய நல்ல மனநலத்தைக் காட்டுகிறது.அவ்வாறன்றி இயற்கையாக நடைபெற வேண்டிய இத்தகைய புணர்ச்சி,இயல்பிலிருந்து எந்தவழியிலவேறுபட்டுநடைபெறறாலும் அது மனநலமின்மையைக் காட்டுகிறது. அத்தகைய நடவடிக்கைகளைச சிற்றினபத் திரிபுநிலை (Sexual deviance)எனறும், அத்தகையநடத்தையில ஈடுபடுகின்றவர்கள சிற்றினப இயல்பு திரிந்தவர்கள் (Sexual deviants)என்றும் கூறுகின்றனர். அவைகள், ஓரினப்புணர்சசி,போலி உருவ வழிபாடு (Fetishism), சிற்றின்பப்பங்கு எதிர்மாறாக்குதல்(Transsexualism), கொடு வெறிக்காமம் (கொடுமை செய்து பெறும் புணர்ச்சியின்பம்)(Sadism). கொடுமை ஏற்றுப் பெறும் புணர்ச்சியின்பம் (Masochism), நிருவாணக் காட்சியில் புணர்சசியின்பம் (Voyeurism), புணர்ச்சியுறுப்பைக் காட்டிப் பெறும் புணர்ச்சியினபம் (Exhibitior-sm) குழந்தைப் புணர்சசி (Pedophilia), தகாப் புணர்சசி (Incest), பிணத்தைப் புணருதல் (Necrophilia), விலஙகைப் புணருதல் (Beastiality), வலிந்து புணர்ச்சி செய்தல் (Rape) முதலியனவாகும். இவையெல்லாம் மனிதரின் இயல்பு நிலை திரிந்த சிற்றின்பப்புணர்ச்சி நடத்தையாகக கருதப்படுகினறன சமூகவிரோத நடிவடிக்கைகளில் (Antisocial) ஈடுபடுகின்றவர்கள இத்தகைய திரிபு நிலை சிற்றின்பப் புணர்ச்சியுடையவர்களாக இருக்கினறனர். மு இரா.

**துணை நூல்கள்:**


**Bardwick, J.M.**, Psychology of Women: A Study of Bio-cultural Conflicts, New York: Harpor and Row, 1978.

**Hunt, M.**, Sexual Behaviour in the 1970s, Chicago: Playboy Press, 1974.

**Jones, R.E.**, Human Reproduction and Sexual Behaviour, Englewood Cliffs, N.J. Prentice-Hall INC., 1984.

**Kands, T.M.**, Sexual Behaviour and Family Life in Transition, New York: Elseviel-New York, 1978.

**Kinsey, A.C.**, Sexual Behaviour in the Human Male, Philadelphia, W.B. Saunders, Co., 1948.

**Kinsey, A.C.**, And Paul Gebhard, Sexual Behaviour in the Human Female. Philadelphia, W.B. Saunders Co., 1953.


*சிற்றுதவி*: வேலையில்லாதவர்களுக்கு வேலை கிடைககின்ற வரை ஒரு குறிப்பிட்ட காலத்திற்கு அரசு உதவித்தொகை வழங்குகின்ற முறை சில நாடுகளில் உளளது. இத்தகைய உதவியைச் சிற்றுதவி (Dole) என்கின்றனர். வேலை செய்ய ஆற்றல் இருந்து, வேலை செய்ய விரும்பி முயன்றும் வேலை இல்லாமல் இருககின்றவாகள வாழ்க்கையில் அலலற்படுகின்றனர். குறிப்பாக வறிய நிலையில் உளளவர்கள் வேலையினமையால் பலவகையான துன்பஙகளுக்கு உட்படுகின்றனர்.

தொடர்ந்து வேலையில்லாமல் இருப்பவர்கள் வருவாய் கிடைக்காமையால் வறுமையில் வாடுகின்றனர். வேலையில்லாதவர்கள காலப்போக்கில் தன்னம்பிக்கையை இழக்கின்றனர். பலர் மனச் சோர்வால முடங்கி விடுகின்றனர். வேலையற்றவர்களால் எழுகின்ற சமுதாயச் சிக்கல்களும் நோக்கத் தக்கவையாகும். நாட்டில் ஏற்படுகின்ற சில சமுதாயக் குற்றங்களுக்கும் சீர்கேடுகளுக்கும் நாட்டில் நிலவும் வேலையின்மையும் காரணமாகின்றது.

உலகத்தில் முதன்முதலில் வேலையிலலாதவர்களுக்குச் சிற்றுதவி வழங்கும் பழக்கம் 1929-இல உலகப் பெருமந்தம் (Great Depression) ஏற்பட்ட பொழுது தோன்றியது. இஙகிலாந்து, அமெரிக்கா போன்ற முனனேறிய நாடுகள் சிற்றுதவி தரும் திட்டங்களைத் தீட்டி நிறைவேற்றின.

உலகப் பெருமந்தம் ஏற்பட்டபொழுது நாட்டுப் பொருளாதாரம் சீர்குலைந்தது. மக்களின் பணவருவாய் குறைந்ததால் பலவேறு வகையான பொருள்களுக்குரிய தேவை குறைந்தது. தேவை குறைந்ததால் தொழிற் சாலைகள் உற்பத்தியைக் குறைத்தன. அதனால், நாட்டில் வேலை வாய்ப்புகள் குறைய, வேலையில்லாத் திண்டாட்டம் மிகுந்தது.

சான் மேனார்டு கீன்சு போன்ற பொருளியல் அறிஞர்கள் பொருளாதாரச் சூழலைச் சீர்ப்படுத்த மக்களின் தேவைகளைக் கூட்டும்படி கூறினர். வருவாய் இல்லாத நிலையில் மக்களின் தேவையைக் கூட்ட வருவாயைக் கூட்டவேண்டும். மக்களின் வருவாயைக் கூட்டும் வழிமுறைகளில் ஒன்றாக, வேலையில்லாதவர்களுக்குச் சிற்றுதவி வழங்கும் முறை தோன்றியது.

பின்னர், நல அரசுகளின் பணிகளில் ஒன்றாக மக்களுக்கு வேலைவாய்ப்பை வழங்குவதையும் கருதினர். வேலைவாய்ப்புக் கிடைக்காதவர்களுக்குச் சிற்றுதவி வழங்குவது அரசின் பொறுப்பாயிற்று.

இப்பொழுது முன்னேறிய நாடுகளில் வேலையில்லாதவர்களுக்கு ஓரளவு குறைந்த வாழ்க்கைத்தரம் அமைத்துக்கொள்ளும் முறையில் சிற்றுதவி தருகின்றனர். வேலை கிடைக்கின்றவரை இந்த உதவி தொடர்கின்றது. இத்தகைய உதவிபெறச் சில கட்டுப்பாடுகளையும் விதிமுறைகளையும் வகுத்துள்ளனர்.

**தமிழக அரசு:** தமிழ் நாட்டில் வேலையிலலாதவர்களுக்குப் பொதுவாக உதவித்தொகை வழங்க நாடு தழுவிய அளவில் எந்தத் திட்டமும் இல்லை. தமிழக அரசு வேலையில்லாத பட்டதாரிகளுக்கு உதவித்தொகை வழங்கும் திட்டத்தைச் செயற்படுத்தி, இதில் முன்னோடியாகத் திகழ்கின்றது.

இத்திட்டத்தின்படி, பட்டம் பெற்ற ஒருவர் வேலை தேடித்தரும் நிறுவனத்தில் (Employment Exchange Office) பதிவு செய்து கொண்டு மூன்று ஆண்டுகள் வேலை கிடைக்காமல இருந்தால் இந்த உதவித் தொகை பெறும் தகுதி பெறுகின்றார். மாதம் ஐம்பது உரூபாய் அரசு உதவித்தொகையாகத் தருகின்றது.

**நன்மைகள்:** வேலையில்லாதவர்களுக்குச் சிற்றுதவி கொடுப்பதால் ஏற்படக் கூடிய நன்மைகளைத் தொகுத்துக் கூறலாம்.

1) வேலையில்லாமல் திண்டாடும இளைஞாகள தன்னம்பிக்கை பெறுவார்கள். மனமுறிவு ஏறபடாமல வேலையைப் பெற முயல்வார்கள். நல்ல குடிமக்களை உருவாக்க இத்திட்டம் துணைசெய்கினறது.

2) வேலையில்லாதவர்கள் குடும்பத்தில் மற்றவர்களைச் சார்ந்திருக்கும் நிலை மறையும். பல குடும்பங்களில் சிலர் உழைக்க, பலர் அவர்களைச் சார்ந்து வாழ்கின்றனர். இதனால் மக்களின் வாழ்க்கைத் தரம் மிகவும் குறைவாக இருக்கின்றது. வேலையில்லாதவர்களுக்கு உதவிததொகை வழங்குவதன் மூலம் மக்களின் வாழ்க்கைத்தரத்தை உயர்த்தலாம்.

3) இன்று சமுதாயத்திலும் அரசியலிலும் தோன்றுகின்ற சில குறைகளைப் போக்க இத்தகைய உதவி துணை செய்யும். வேலை இல்லாமல் இருப்பவர்களுக்குச் சமுதாயத்தின் மீதும், அரசு மீதும ஒரு வகை வெறுப்பு வருகின்றது. இதனால் சில தவறுகளைத் தயங்காமல் செய்கின்றனர். வன்முறையை வளர்க்கின்றனர். உதவித்தொகை வழஙகினால் அவர்கள் பொறுப்புள்ளவர்களாக நடந்துகொள்வார்கள்.

4) ஒரு நல்ல சமுதாயத்தை உருவாக்க, எலலோரும் மகிழ்ச்சியாக வாழ இத்தகைய உதவித் தொகை தேவையாகின்றது. நல அரசுகள் எல்லோருககும் வேலை வாய்ப்புகளை வழஙகும் பொறுப்பை ஏற்க வேண்டும் வேலையில்லாதவர்களுக்கு உதவித் தொகை வழங்குவது அரசின் கடமையாகின்றது.

**குறைகள்:** அரசு வேலையற்றிருப்போருக்குச் சிற்றுதவி வழங்குவதில் உள்ள குறைகளையும் சுட்டிக் காட்டலாம்.

1) சிலருக்குச் சிற்றுதவி கிடைப்பதால் வேலை தேடுவதில் ஆர்வம் குறைந்து விடுகின்றது தொடர்ந்து அரசின் உதவியைப் பெற்றுக்கொண்டு வாழும் மனப்பான்மை வந்துவிடுகின்றது

2) அரசுக்கு இது ஒரு பெருஞ் சுமையாக மாறுகின்றது. சொந்த வேலைவாய்ப்புகளின மூலம் வருவாய் பெறுகின்றவர்களகூட வேலையற்றவர்களாகத தங்களைக் காட்டிக்கொண்டு அரசின உதவியைப் பெறலாம். அரசு இப்படி உதவித்தொகையாகக் கொடுக்கின்ற பணத்தைப் பயன்படுத்தித் தொழில்களைத் தொடங்கினால் நாட்டில் வேலைவாய்ப்புகள் பெருகுமென்று வாதிடுவோர் இருக்கின்றனர்.

3) மக்கள்தொகைப் பெருக்கம், தொழில் அமைப்பு முறை, தொழில்நுட்ப வளர்ச்சி ஆகிய வற்றினால் ஏதாவது ஒருவகையில் வேலையில்லாத் திண்டாட்டம் ஏற்படுவது இயல்பேயாகும். இது காலப்போககில் சரி செய்யப்படும. ஆதலால, சிற்றுதவி கொடுப்பதால் இந்தச் சிக்கல் தீரப்போவதில்லை என்று சிலர் எடுத்துக் கூறுகின்றனர்.

நல அரசுக் கருத்து வளர்ந்து வருகின்றது. அரசு, மக்கள் அனைவருக்கும் வாழ்வளிகும் பொறுப்பை ஏற்றுக்கொண்டுள்ளது. ஆதலால், வேலையில்லாதவர்களுக்குச் சிற்றுதவி தருவது அரசின் கடமையாகின்றது.

நலப் பொருளாதாரத்தின் (Welfare Economy) அடிப்படையிலும் சிற்றுதவியை ஆதரிக்கின்றவர்கள் உள்ளனர். இன்றைய பொருளாதார அமைப்பில் பலர் நன்றாக வாழ்கின்றனர். அதன் விளைவாகவே சிலர் வேலை கிடைக்காமல அல்லற்படுகின்றனர். நன்றாக வாழகின்றவர்களின் மீது வரி போட்டு, அந்த வருவாயைக் கொண்டு வேலையிலலாதவர்களுக்கு உதவித்தொகை வழங்குவது காலத் தேவையாகும்.

இன்று வளர்ச்சி பெற்ற நாடுகள் எல்லாம் ஏதாவது ஒருவகையில் வேலையில்லாதவர்களுக்கு

உதவித்தொகை வழங்குகினறன. மற்றைய நாடு களிலும் இந்தக் கருத்து செல்வாக்குப் பெற்று வரு கினறது. மா.பா.கு

**துணை நூல்கள்:**

**Lloyd G Reynolds,** Labour Economics and Labour Relation, Prentice Hall Inc. New Gersey, 1974.

**Neil W. Chamberlain,** Labour, Mc Graw Hill Book Co., New York, 1958.

**Richard A. Lester,** Economics of Labour, The Macmillan Co., New York, 1964.

***சிற்றோவியங்கள்,*** சிறிய அளவில் நுணுக்க மாகத் தீட்டும் வண்ண ஓவியங்களாகும். தீட்டப்படும் ஓவியங்களின் அளவை வைத்தே இப்பெயர் ஏற பட்டது. எனினும், சிற்றோவியங்களின சிறிய அளவு காரணமாகச் சில தனிமுறைகளைக் கையாள நேரிடு கிறது. அதனால், இவ்வோவியங்களுக்குத் தனிச் சிறப்பும் ஏற்பட்டது.

தொன்றுதொட்டு இந்தியர்கள தங்கள இலககியங் களை ஓலைச் சுவடிகளில எழுதியும். அவறறில் காணும் நிகழ்ச்சிகளை வண்ண ஓவியமாக அச்சுவடி களிலேயே வரைந்தும் வந்தனர். இவையே சிற்றோ வியம் தோன்றக் காரணமாயின. சமணரும் பௌத் தருமே இத்தகைய சிற்றோவியங்களைப் பெரிதும் வரைந்தனர். அவறறுள் மிகப் பழமையானவை மறைந்து விட்டன. இப்போது நமக்குக் கிடைக்கும் மிகத் தொன்மையான சிற்றோவியச் சுவடிகள் கி.பி.11 -ஆம் நூற்றாணடைச் சார்ந்தவை. இவை பௌத்த மதத்தைச் சாரந்தவை. இவை அசந்தா ஓவியங களை (கி.பி. 5-ஆம் நூற்றாண்டு) நினைவூட்டு கின்றன. அப்பெரு ஓவியப் பாணியைச் சிறிய அளவில வரைவதற்கேற்ப எளிமைப்படுத்தி உருவாக்கப் பட்டதே சிற்றோவிய மரபாகும்.

முகம்மதியர்கள் கி.பி. 12-ஆம் நூற்றாணடில் நாலந்தாவைச் சூறையாடியதிலிருந்து இவ்வோவிய முறை இந்தியாவில் நலிவடைந்தது. எனினும், குசராத்து மாநிலத்தில் சமணர்கள் இம்மரபினைப் பேணிக காத்தனர். இங்குக் கிடைக்கும் கி.பி. 13-ஆம் நூற்றாண்டுச் சிற்றோவியங்களே மிகத் தொன்மையான சமணச் சிறறோவியங்களாகும். இவர்கள் தங்கள் சமய நூல்கள் பலவற்றையும் சிற்றோவியங்களாகச் சித்திரித்த போதிலும், கல்ப சூத்திரம், காலகாசாரியர் கதை ஆகிய இரு நூல் களையே பெரிதும சிற்றோவியங்களாகத் தீட்டினர். இம்மரபு சமணர்களிடையே கி.பி. 16-ஆம் நூற் றாணடு வரை தொடர்ந்தது.

முசுலீம மனனாகளின் அவைக்கள ஓவியாகள் கி.பி. 14-ஆம் நூற்றாணடு முதல் சிற்றோவியங களைக் காகிதத்தில் வரையலாயினர். இவற்றில் பாரசீக நாட்டுச் சிறறோவிய மரபின் தாக்கத்தைக காணலாம். இவை பாரசீகக கதைகளையே கூறுவன வாக அமைந்துள்ளன. வட இந்தியாவில் கி.பி. 15-ஆம் நூற்றாணடில் ஏற்பட்ட பக்தி இயக்கததாலும பண் பாட்டு மலாச்சியாலும் இவ்வோவிய மரபில் ஒரு புத்துயிர்ப்பு உண்டாயிற்று. எனவே, இந்துக்கள கி.பி. 16-ஆம் நூற்றாண்டின் தொடக்கம் முதல மகா பாரதம், பாகவதம் ஆகிய இதிகாச புராணங்களைச் சிற்றோவியங்களாகவரையத் தொடங்கினர். இவறறில் இசுலாமிய நூல்கள் தவிர, முகலாயப் பேரரசர்களின வாழக்கை வரலாறுகளும் அடங்கும். இவற்றுள் அக பர் நாமா சிறப்பிடம் பெற்றது. சிறந்த வண்ண ஓவி யங்களுடன் கூடிய இந் நூலின் படி ஒன்று இன்று இலண டனிலுள்ள விக்டோரியா-ஆலபர்ட்டு அருங்காட்சிய கத்தில் உள்ளது அக்பரின ஓவியர்களும் இராசபுத்திர மன்னர்களின் ஓவியர்களும் இராமாயணம மகாபார தம் ஆகிய இரு நூல்களையும் பாரசீக முறைப்படி சிறறோவியங்களாக வரைந்தனா. அதனால் 'இராச சுத்தானி மரபு' என்னும் புதிய சிற்றோவிய மரபு உருவாகியது. இம்மரபின் சிறந்த ஓவியஙகள் இனறு செய்ப்பூர் மனனரின் கலைப்பொருட் சேகரிபபுகளி டையே காணப்படுகின்றன.

சகாங்கீர், சாசகான் காலத்தில் அரச உருவங்க ளும் (Portrait Painting in Miniature) விலங்குகள், பறவைகள் ஆகியவற்றின் உருவங்களும உணமை யான தோற்றம் உடையவைபோல் சிற்றோவியங் களாக வரையப்பட்டன. மொகலாயப் பேரரசர் ஔரங்கசீப்பு காலத்தில் ஓவியர்கள் இராசபுத்திர மன் னர்களின் ஆதரவை நாடினர். இம்மன்னாகள கண்ணனின் வாழ்க்கையை (குறிப்பாக அவன் கோபி யர்களுடனும், இராதையுடனும் புரிநத காதல் காட்சி கள், நடனங்கள ஆகியவறறை) வரைநதிட ஊக்கு வித்தனர். இம்மன்னர்களின் ஆதரவால் பல 'இராச புத்திரச்சிற்றோவிய மரபுகள்' தோன்றின. அவறறுள மேவார் மரபும், கிசணகர் மரபும் உலகப் புகழ்பெற் றன.

முகலாயப் பேரரசின் மறைவுக்குப்பின் கி.பி.18 -ஆம் நூற்றாணடில் காசுமீரத்திற்கு அருகே இமய மலை அடிவாரத்தில பல இராசபுத்திரச் சிற்றரசர் கள் வாழ்ந்தனா. இவர்கள அனைவருமே சிற்றோவி யங்களை ஆதரித்தனர். அதனால் சுமார் இருபதிற் கும் மேலான 'கிளை மரபு' கள் தோன்றின. அவற றைப் பொதுவாகப் 'பகாரிப் பாணி' (மலை மரபு) என்பர். இதனுள் பசோலி (Basholi), கர்கவால் (Garhwal), காங்கரா (kangra) ஆகிய கிளை மரபு

கள் உலகப் புகழபெற்றவை. இவை யாவுமே கண் ணன-இராதை காதல் ஊடல்களை விவரிக்கும் 'கீத கோவிந்தம' என்னும் வடமொழிக் காவியத்தையும் பாகவதத்தையும், மழைக்காலம், வசந்தகாலம் முத லிய பருவகாலஙகளையும், வடஇந்திய இராகங்களை யும் குறிக்குமாறு வண்ண ஓவியஙகளாகத் தீட்டப் பட்டன. இன்று இச்சிற்றோவியங்களுள பல பல்வேறு ஐரோப்பிய அமெரிக்க நாடுகளின் அருங்காட்சியகங் களில் போற்றிக் காக்கப்படுகின்றன. இவற்றுள பாசுட்டன் (Boston) அருங்காட்சியகம் குறிப்பிடத் தக்கது.

'பகாரி மரபு' கி.பி. 19-ஆம் நூற்றாண்டில் சிறிது சிறிதாக நலிவடைந்து அந்நூற்றாண்டின் முடி வில் தோன்றிய கடும் நில நடுக்கத்தால் முற்றும் மறைந்துவிட்டது. ஒரிசாவில கி.பி. 17-ஆம் நூற் றாணடு முதல் ஒருசிற்றோவியமரபுதோன்றியது-அது கி.பி. 19-ஆம் நூற்றாணடில நலிவடைந்தது.

ஐரோப்பாவில் சிற்றோவிய மனித உருவஙகள் வரையும் கலை கி.பி.16. 17-ஆம் நூற்றாண்டுகளில் தோன்றியது. இங்கிலாந்தில் எட்டாம் எனறி அரசர், சிற்றோவியங்கள வரையும் கலைஞர்களை ஊககு வித்தார். இவர்களுள் குறிப்பிடததக்கவர் ஆன்சு ஆல்பின் (Hans Holbein) ஆவர். இந்நாட்டில பல சிற்றோவியக கலைஞர்கள தோன்றி இக்கலையை வளர்த்தனர். ஐசக் ஆலிவர் (Isaac Oliver) எனப வர் சிற்றோவியங்கள் வரைவதில் வல்லவராக விளங் கினார். பிரானசிலசின் கலூட்டு (Jean Clouet) என்ப வர் சிற்றோவியங்கள வரைவதில் வல்லவராக விளங கினார். இத்தாலி நாட்டு ஓவியராகிய உரோசால்பா கேரியிரா (Rosalba Carriera) சிறறோவியங்களில் புதிய முறையைத் தோற்றுவித்தார. இவர் தந்தப பொருளகளில் சிறு ஓவியங்களை வரைநதார். பிரான் சில் பல புதிய மாற்றங்கள் இவ்வோவியஙகளில பிற காலத்தில் தோனறின. ஆர்.வெ.

**சிறப்பினமாக்கம்:** உலகிலுள்ள உயிரினங்கள் அனைத்தும் பல பிரிவுகளாக வேறுபட்டுள்ளன. ஒவ் வொரு பிரிவும் பல சிறப்புப் பண்புகளின் அடிப்படை யில் பிற உயிரினங்களிலிருந்து வேறுபடுகிறது. இப் பண்புகள் அனைத்தும் அந்தந்த உயிரினத்திற்கே உரியனவாக அமைந்திருக்கும். உயிரினங்களின் படி மலர்ச்சியை (Evolution) நோக்கினால் ஓரணு உயிரியிலிருந்து மனிதன் வரையிலான வளர்ச்சியில் உயிரினங்கள் பல வேறுபாடுகளுடன் உள்ளன என்பது புலப்படும். இந்த வேறுபாடுகளுக்குச் சிறப்பினமாக் கமே (Speciation) காரணமாகும்.

சிறப்பினமாக்கம் என்பது பொதுவான பண்பு களைக் கொண்ட ஒரு விலங்கினத் தொகுதியிலிருந்து (Phylum) பல சிறப்பினங்கள் (Species) தோன்றுவ தாகும். அதாவது பாலூட்டிகள் என்னும் தொகுதி யில ஆடு, மாடு, குதிரை, குரங்குகள, மனிதன் முத லான அனைத்து விலங்கினங்களும் அடங்குகின்றன. இவையனைத்தும் பல பொதுப் பணபுகளைப் பெற்றிருந்தாலும் ஒவ்வொரு விலங்கும் தனித் தன்மைகளைப் பெற்றுள்ளதால் அவை சிறப்பினமா கின்றன. எடுத்துக்காட்டாக மனிதனின நிலையை வரிசைப்படுததிக் கணடால் சிறப்பினமாககத்தின் நிலையை அறியலாம். முதுகுத் தண்டினத் தொகு தியைச் (Phylum Chordata) சேர்ந்த மனிதன பாலூட்டி வகுப்பையும் (Class Mammalia), உயா பாலூட்டி வரிசையையும் (Order Primate), மனித குடும்பத்தையும் (FamilyHominidae) 'மனிதன' எனனும் சிறப்பினத்தையும் சேர்ந்தவனாகிறான் இவ்வாறே பாலூட்டி வகுப்பைச் சேர்ந்த பிற விலங்குகளும் தனித்தனிச் சிறப்பினங்களாக உள்ளன. படிமலர்சசி நிகழ்வினாலேயே இசசிறப்பினங்கள தோன்றின.

சிறப்பினமாக்கம் பற்றிப் பல அறிஞர்கள ஆராய்ந்துள்ளனர். முதன்முதலில் உயிரினங்களை அவற்றின் பணபுகளைக் கொண்டு பிரித்தவர் இலின்னேயசு (Linnaeus). இவர் உயிரினங்களைப் பேரினம் (Kingdom), வகுப்பு (Class), வரிசை இனம் (Genus), சிறப்பினம் (Species) எனனும ஐந்து பிரிவுகளாகப் பிரித்தார். இவரைத் தொடர்ந்து, தோப்சான்சுகி (Dobhzhansky), பாட்டர்சன் (Patterson), சிம்சன் (Simpson) முதலான பலரும் அதனை விரிவுபடுத்தினர்.

சிறப்பினமாக்கம் எவ்வாறு நிகழ்கிறது என்பது தார்வின் (Darwin) எழுதிய 'சிறப்பினததின் தோற றம்' (Origin of Species) என்னும் நூலில் முதன் முதலில் விளக்கப்பட்டது. சிறப்பினமாக்கத்தைப் பற்றி இன்று கொண்டுள்ள முழுமையான விளக கத்தினை அன்று தார்வின் கூறவிலலையாயி னும் இதுபற்றிய கருத்திற்கு வித்திட்டவா எனற பெருமையை அவர் பெறுவார். இயற்கைத தேர் வினாலும் (Natural Selection), வாழ்க்கைப் போராட்டத்தினாலும் பொதுப் பண்புகளைப் பெற்றுள்ள ஒரு விலங்கினம் சிறப்புப் பணபுகளைப் பெற்றுத் தனிச் சிறப்பினமாக (Species) மாறுகிறது என்று தார்வின் அந்நூலில் குறிப்பிட்டிருநதார். அதனோடு ஒவ்வொரு குறிப்பிட்ட விலங்கினமும் ஒரு குறிப்பிட்ட வகையான சூழலில் வாழப் பழகிக் கொண்டுள்ளது. பரம்பரை பரம்பரையாக அவ்வாறே சிறப்பாக வாழ முயற்சிசெய்கின்றது. சிறப்பாக வாழ முடியாதவையும், அதன் சூழலுக்கேற்ப மற்ற விளங்கினங்களோடு போட்டியிட்டுத் தம் தேவை

களை நிறைவு செய்து கொள்ளாதவையும் காலப் போக்கில் அற்றுப்போகின்றன என்றும் தார்வின் குறிப்பிடுகிறார். சிறப்பின மாக்கத்திற்கு அவர் கூறும் பல எடுத்துக்காட்டுகள் அனைவரையும் சிந்திக்கச் செய்தன. ஓரிடத்தில் வாழும் விலங்குகள் மற்றோர் இடத்திற்குச் செல்லும்போது அவ்விடத்தின் சூழ் நிலைக்கேற்பத் தம் வாழ்க்கைமுறையை மாற்றிக் கொள்கின்றன. அதனாலேயே அங்கு அவற்றால் வாழ முடிகின்றது. எடுத்துக்காட்டாக ஒரு விலங் கினம் பாலைவனச் சூழலில் வாழவேண்டிய நிலைக்குத் தள்ளப்படும்போது அச்சூழலிற்கேற்ற வாறு உடலுறுப்புக்களை மாற்றிக்கொண்டு வாழ முயற்சி செய்கின்றது. அவ்வாறே மலைப் பகுதி களிலும் நீர்நிலைப் பகுதிகளிலும் வாழ முற்படும் விலங்கினங்கள் அந்தந்தச் சூழலின அமைப்பிற் கேற்பத் தம்மை தகவமைத்துக் கொள்கினறன. அதனால் புதிய சூழ்நிலைகளில் புதிய சிறப்பினங்கள் தோன்றுகின்றன எனத் தார்வின் சிறப்பினமாதல் பற்றி அவரது நூலில் குறிப்பிட்டிருந்தார்.

தார்வினுக்குப் பின் பல அறிஞர்கள் சிறப்பின மாக்கம் குறித்து ஆராய்ந்தனர். அவர்கள் புதிய சிறப்பினங்கள் உண்டாவதற்குத் தனிமைப்படுத் தல் (Isolation) மிகவும் தேவையெனக் கூறினர். புவிப் பரப்பு அடிப்படையில் விலஙகினங்கள் புதிய பண்புகளைப் பெற்றுத் தனி உட்சிறப்பினமாகவோ (Sub Species), தனிச் சிறப்பினமாகவோ மாறுகின் றன. உட்சிறப்பினமாக மாறினால் அது காலப்போக் கில் மேலும் மேலும் புதிய பண்புகளைப் பெற்றுத் தனிச் சிறப்பினமாகி விடுகிறது.

சிறப்பினங்கள் எவ்வாறு தோன்றுகின்றன. என்று அறிவதற்குமுன் அவற்றின் இயல்பான நிகழ்வுகளை முதலில் அறியவேணடும். உயிரினங்கள் அவை அறிந்தோ அறியாமலோ, தேவைக்காகவோ தேவை யில்லாமலோ படி மலர்ச்சி நிகழ்வில் இடம் பெற்றன. இந்த நிகழ்வில் எளிய உடலமைப்புகளைப் பெற்றிருந்த நிலையிலிருந்து சிக்கலான உடலமைப் பைப் பெற்ற நிலைக்கு மாறி யுள்ளன. இந்த மாற்றத்தில் பல சிறப்பினங்கள் தோன்றியுள்ளன. ஒரு சிறப்பினம் பல சிறப்பினங்களாக ஆவதும் இரு சிறப்பினங்கள் கலப்புற்று ஒரு புதிய சிறப்பினத்தைத் தோற்றுவிப்பதும் உண்டு.

உயிரினங்கள் ஒன்றை மற்றொனறு சாாநது வாழ்வதும், இவை இயற்கையோடு இணைந்து செயற் படுவதும், இவற்றிற்கிடையே எழும் வாழ்க்கைப் போராட்டங்களுமே படிமலர்ச்சி நிகழ்விற்குக் காரண மாகின்றன. படிமலர்ச்சி நிகழ்வின் அளவினைப் பொறுத்து வளர்ச்சி மாற்றத்தின் அளவும், வளர்ச்சி மாற்றத்தின் அளவினைப் பொறுத்துச் சிறப்பினமா தலின் நிகழ்வும் வேறுபடுகின்றன. படிமலர்ச்சி நிகழ் வினால் ஓர் உட்சிறப்பினத்திலிருந்து ஒரு சிறப்பினம் தோன்றுவதும், ஒரு விலங்கினத்தில் பல மாறுதல்கள் ஏற்படக் காரணமாயிருக்கும் மாற்றங்களும் நுண்ணி லைப் படிமலர்ச்சி (Micro evolution) எனக் கூறப் படும். அதே நேரத்தில் படிமலர்ச்சியினால் பல மாற்றங்கள் பெற்றுப் புதிய சிறப்பினம் தோன்று வதற்கான பெரும்பான்மை உருமாற்றம் பெற்றுவிட் டால் அது பெருநிலைப் படிமலர்ச்சி (Macro-evolution) எனக் கூறப்படும்.

**சிறப்பினமாக்கத்தின் முறைகள்:** சிறப்பினங்கள் பல்வேறு முறைகளில் தோன்றுகின்றன. ஒரு சிறப் பினத்திலிருந்து புதிய சிறப்பினம் உண்டாவது ஒரு முறை. இவ்வகையில் புதிய சிறப்பினம் சிறிதுசிறிதாக மாற்றம் பெற்றுக் காலப்போககில் பழைய இனத்திலிருந்து முற்றிலும் மாறுபட்ட பணபு களைப் பெற்றதாக உருவெடுததுவிடும். இவ் வகையாக ஒரு தொடர்ச்சி நிலையைப் பெறும் மாற்றம் சீரான மாற்றம் (Gradual Transformation) எனப்படும். வேறொரு சூழலில் ஒரு சிறப்பின மானது இரணடு அல்லது அதறகும் மேற்பட்ட உட் சிறப்பினங்களாகப் பிரிநது பின் அதிலிருநது ஒவ வொன்றும் தனித்தனிச் சிறப்பினமாக மாறினால் அது விரியும் சிறப்பினமாக்கம் (Divergent Speciation) எனப்படும். இதற்கு மாறாக இரண்டு வேறு பட்ட சிறப்பினங்கள் ஒத்த சூழலில வாழ நேரிடும் போது கலப்படைந்து ஒரு புதிய சிறப்பினத்தை உண்டாக்கலாம். இந்தக் கலப்பினம் பொதுவாக மலட்டுத் தன்மையுடையதாக இருக்கும். அவ்வாறில் லாமல் கலப்பினம் சந்ததிகளை ஏற்படுத்தக்கூடிய ஆற்றலைப் பெற்றிருந்தால் அந்த இனம் தொடர்ந்து பல மாற்றங்களை ஏற்படுத்திக்கொண்டு புதிய சிறப்பினமாக மாறும். இரணடு தனிச் சிறப் பினங்கள் ஒன்றுசேர்ந்து ஒரு புதிய சிறப்பினத்தை உருவாக்குவதால் இதனைக் குவிதல் சிறப்பினமாக் கம் (Convergent Speciation) எனக் கூறுவர்.

சிறப்பினமாக்கத்தின்போது உட்சிறப்பினத்தைத் தொடர்புபடுத்திக் குழப்பம் பெறக்கூடாது. மனிதன் என்பது ஒரு சிறப்பினம். மனிதர்களுக்குள் உள்ள பல பிரிவினர்களான நீக்கிரோ, காக்கேசியர், மங்கோலியர் ஆகிய இனத்தவர்கள் ஒவ்வொருவரும் தனித்தனிச் சிறப்பினத்தவர்கள் (Species) அல்லர். இவர்கள் மனிதன் என்னும் சிறப்பினத்தின் உட்சிறப் பினங்களே (Races). இதனை மானிடவியலார் வகை (Varieties) என்று கூறுவர். மனித வகைப் பாட்டினைப் பலர் பலவாறு குறிப்பிட்டுள்ளனர். சிலர் பல்வேறு உறுப்புகளை அடிப்படையாகக் கொண்டு மனிதச் சிறப்பினத்தை நூற்றுக்கு மேலான

குலங்களாகப் பிரித்திருக்கிறார்கள். காது அமைப்பிலோ, தோல் நிறத்திலோ, மூக்கு வடிவத்திலோ, கால், கை நீளத்திலோ, தலை மயிர் அமைப்பிலோ, உடல் உயரத்திலோ உள்ள வேற்றுமைகளைக் கொண்டு மனிதர்களைப் பல இனங்களாகப் பிரிக்க வேண்டியதில்லை. மரபுப் பண்புகளைக் (Genetic Characters) கொண்டு பல இனங்களாகப் பிரிக்க வேண்டும்.

கூன் (Coon) என்பவர் மனிதச் சிறப்பினத்தை 30 உட்சிறப்பினங்களாக (Subspecies) அல்லது இனங்களாகப் (Races) பிரித்திருக்கிறார். பாயிடு (Boyd) என்பவர் 5 உட்சிறப்பினங்களாக மட்டுமே பாகுபடுத்துகிறார். இவர்களையடுத்து வந்த இனவியலார் பல்வேறு முறைகளில் மனிதச் சிறப்பினத்தைப் பல்வேறு இனங்களாகப் பாகுபடுத்துகின்றனர். இவற்றில் புவியியல்சார் இனங்கள (Geographical Races), வட்டார இனங்கள் (Local Races) நுண்ணினங்கள் (Micro-races) முதலானவையும் அடங்கும். ஆனால, பெரும்பாலான மானிடவியலார் மனிதச் சிறப்பினத்தை நீக்கிரோ,காக்கேசியர், மங்கோலியர் என்னும் முப்பிரிவாகப் பாகுபடுத்தியுள்ளனர். சிலர் ஆசுத்திரேலிய இனத்தவர் (Australoids) என்று மேலுமொரு வகையினைச் சுட்டிக் காட்டுவர்.

**புவிசார் சிறப்பினமாதல்:** ஒரு குறிப்பிட்ட நிலப் பரப்பு இயற்கையின் நிகழ்வுகளினால் பிரிக்கப்பட்டுப் புதிய சூழல் ஏற்படுமானால், அங்குள்ள சிறப்பினங்கள மாறும் புதிய சூழலிற்கேற்பப் புதிய பண்புகளைத் தகவமைத்துக்கொள்கின்றன. எடுத்துக்காட்டாக ஒரு சமவெளிப் பகுதி பூகம்பத்தால் பிளவுபடுதல், நிலப்பகுதி கடல் பெருக்கத்தால் தனித் தீவாகி விடுதல், ஒரு தீவு கடற்கோள் ஏற்படுவதால் இரண்டாகப் பிரிதல் முதலான பல்வேறு முறைகளில ஒரு பகுதி இரண்டாகப் பிரிந்து, தனித்தனி சூழ்நிலைகளை ஏற்றுக்கொள்கிறது.

குறிப்பிட்ட ஓரிடத்தில் வாழும் ஒரு சிறப்பினம் மலை அல்லது ஆறு போன்ற புவிச் சூழலால் பிரிக்கப்பட்டிருப்பினும் பெரும் முயற்சியால் இந்தத் தடையைக் கடந்து வேறு பகுதிக்குச் செல்லும் சிறப்பினம் அந்தப்புதிய சூழலில வாழவேண்டியுள்ளது. அங்குக் குறைந்த அளவில் மாற்றங்களை ஏற்படுத்திக் கொண்டால் அது அந்தச் சிறப்பினத்தின ஓர் உட்சிறப்பினமாக மாறிவிடுகிறது. பெரும் மாற்றங்களை ஏற்படுத்திககொண்டால் அவை தனிச் சிறப்பினமாகவே மாறிவிடுகின்றன.

ஒரு பகுதியில் வாழும் ஆடு, மாடு, பிற விலங்குகள் முதலானவற்றைப் பிற நாடுகளுக்கோ தீவுகளுக்கோ கொண்டு செல்லும்போது அவை அங்குள்ள சூழ்நிலைக் கேற்ப உட்சிறப்பினமாகவோ தனிச்சிறப்பினமாகவோ மாறலாம்.

**சூழ்நிலைச் சிறப்பினமாதல்:** இவ்வகைச் சிறப்பினமாக்கம் நான்குவகையில் நிகழ்கின்றது. அவையாவன: 1)சூழ்நிலைப் புவிசார் சிறப்பினமாதல்(Eco Geographical Speciation), 2) சூழலியல்சார் காலநிலைச் சிறப்பினமாதல் (Eco-climatic Speciation), 3)சூழநிலைத் தகவமைப்புச் சிறப்பினமாதல் (Eco-topic Speciation), 4)சூழ்நிலைப் பழக்கச் சிறப்பினமாதல் (Eco-biotic Speciation).

சூழ்நிலைப் புவிசார் சிறப்பினமாதலில் காலமும் இடமும் முதன்மையான பங்கேற்கின்றன. சூழ்நிலைக் காலநிலைச் சிறப்பினமாதலில் காலநிலைகள், தட்ப வெப்ப நிலைகள சிறப்பினமாவதற்குக் காரணமாகின்றன. சூழநிலைத் தகவமைப்புச் சிறப்பினமாதலில் ஒரே சூழலைப் பெற்றுள்ள மர வாழ்க்கை, குழிவாழ்க்கை, நில வாழ்க்கை, நீர் வாழ்க்கை, போன்ற வாழ்க்கைமுறைகள் மூலமும் சிறப்பினமாக்கம் நிகழும். சூழ்நிலைப் பழக்கச் சிறப்பினமாதலில் சூழ்நிலைக்கேற்பப் பழக்கவழக்கங்களில் மாற்றத்தை ஏற்படுத்திக்கொண்டு புதிய சிறப்பினங்களாகவோ உட்சிறப்பினங்களாகவோ மாறுகின்றன,

**பலமயமாகுதலால் புதிய சிறப்பினம் தோன்றல்:** பலமயமாகுதலால் பல புதிய சிறப்பினங்கள் தோன்றியுள்ளன. முட்டைக் கோசுக்கும் முள்ளங்கிக்கும் ஏற்பட்ட ஒரு கலப்பினத்தில் 36 மரபுக் கீற்றுகள் (Chromosomes) உள்ள சிறப்பினம் தோன்றிற்று. இவ்வாறே மனித உட்சிறப்பினங்கள் தோன்றியுள்ளன. ஆங்கிலோ-இந்தியர்கள், ஐரிசு மக்கள், அமெரிக்க நீக்கிரோவினர் முதலானோர் கலப்பினால் தங்கள் இனப் பண்புகளிலிருந்து மாறுபட்டு உட்சிறப்பினமாக உள்ளனர்.

பலமயமாகுதலால் (Polyploidy)புதிய சிறப்பினம் தோன்றுவது விலங்கினங்களில் மிகக் குறைவே. பாலூட்டிகளில் வெவ்வேறு வரிசைகளில் உள்ள விலங்குகளில் மரபுக் கீற்றுகளின் எண்ணிக்கை வேறுபட்டிருந்தாலும் அவை பலமயமாகுதல் நிகழ்வினால் தோன்றவில்லை. சில ஆய்வாளர்களின் கருத்துப்படி பால் கலப்பின்றி இனப்பெருக்கம் செய்யும் உயிரினங்களில் பலமயமாகுதலால் சிறப்பினங்களோ உட்சிறப்பினங்களோ தோன்றுகின்றன.

**ஓரிடச் சிறப்பினமாதலும் வேற்றிடச் சிறப்பினமாதலும்:** ஒரு சிறப்பினத்தின் கூட்டமோ உட்சிறப்பினங்களின் கூட்டமோ ஒரு குறிப்பிட்ட இடத்தில் வாழ்ந்தால் அவை ஓரிட உயிரினக்கூட்டம் (Sym

Patric Population) எனக் கூறப்படும். அவ்வாறன்றி ஒரு சிறப்பினம் அல்லது அதன் உட்சிறப்பினங்கள் பல்வேறு பகுதிகளில் சிதறிவிடுமேயானால் அவை வேற்றிட உயிரினக் கூட்டம்(Allopatric Population) எனக் கூறப்படும். இவ்விரண்டு வகையான உயிரினக் கூட்டங்களும் சிறப்பினங்களைத் தோற்றுவிக்கும். ஓரிடத்தில் வாழும் உட்சிறப்பினங்கள் காலப் போக்கில் புதிய சிறப்பினங்களாக மாறினால் அதை ஓரிடச் சிறப்பினமாக்கம் (Sympatric Speciation) என்றும், வேறுபட்ட இடத்தில் வாழும் உட்சிறப்பினங்கள் புதிய சிறப்பினங்களாக மாறினால் அவை வேற்றிடச் சிறப்பினமாக்கம்(Allopatric Speciation) என்றும் கூறப்படும்.

ஓரிடச் சிறப்பினங்கள் அல்லது உட்சிறப்பினங்கள் ஒரே சூழ்நிலையில் வாழ்கின்றன. இவை ஒரே இடத்தில் நெருங்கி வாழ்வதாலும் பழகுவதாலும் அவற்றின் இனப்பெருக்கம் செய்வதாலும் அவற்றின் மரபணுக்கள் (Genus) ஒன்று சேருகின்றன. சில கூட்டங்கள் செழிப்புடையதாகக் (கருவளத்துடன்) காணப்படுவதால் அவை மேன்மேலும் உயர்ந்துபரவுகின்றன. காலப்போக்கில் ஓரிட உட்சிறப்பினங்கள் ஒன்றுடன் ஒன்று மிகுதியாகக் கலந்து பொதுவான மரபணுச் சேர்மத்தை (Gene Pool) ஏற்படுத்துகின்றன. இதனால், இவை தொடர்ந்து வாழும் தன்மை பெற்றவையாகி விடுகின்றன. ஆனால், சில உட்சிறப்பினங்களுக்கிடையே வேறுபாடுகள் காணப்படுவதால் அவை ஒன்றுடன் ஒன்று சேர்ந்துபோக இயலா நிலையில் விலகிச் செல்கின்றன. அவற்றினுள் காணப்படும் வேறுபட்ட பண்புகள் ஒன்றுடன் ஒன்று இணையத் தடை செய்வதால் காலப்போக்கில் அவை இணைவதற்கே வாய்ப்பின்றி முற்றிலும் வேறுபட்ட சிறப்பினங்களாக மாறிவிடுகின்றன. இவை அச்சூழலுக்கு ஏற்புடையதாக இருப்பின் அவை தொடர்ந்து வாழ்கின்றன. தகவமைந்து வாழ இயலாதவை அழிந்து போகின்றன.

வேற்றிடச் சிறப்பினமாதல், சூழநிலைத் தனிமைப்படுத்தல் (Ecological Isolation) போன்றது. ஒரு சிறப்பினம் வேறுபட்ட சூழ்நிலையில் வாழந்து விடுவதால் அது உருவமைப்பிலும் பாரம்பரிய அமைப்பிலும் சில மாறுதல்களை ஏற்படுத்திக்கொண்டுள்ளது. சூழலமைப்பிற்கு ஏற்பவும் இயற்கைத் தேர்வினாலும் மரபுப் பண்புகள் ஒவ்வோர் உட்சிறப்பினத்திற்கும் தனித்தன்மை உடையதாக அமைந்து விடும். இவற்றின் இனப்பெருக்கம் தொடர்ந்து அந்தந்தப் பகுதியிலேயே செயற்படுவதால் அதன் தனித்தன்மை புதிய சிறப்பினத்தையோ உட்சிறப்பினத்தையோ உண்டாக்கும். புவிசார் தனிமைப்படுத்தல் (Geographical Isolation) மூலமும், இல்லாத இடத்தில் இனப்பெருக்கத் தனிமைப்படுத்தல் (Breeding Isolation) மூலமும் உட்சிறப்பினங்கள் தோன்ற வாய்ப்புண்டு. சீ.ப.

**சிறப்பு எடுப்பு உரிமைகள்:** பன்னாட்டு வாணிகம் மிக வேகமாக வளரும்போது தங்கம், செலாவணி இருப்பு ஆகியவைகளின் அதிகரிப்பும் அதே அளவிற்கு அதிகரிக்க வேண்டும். இத்தகைய நிலை இல்லாதிருந்தால் பன்னாட்டு நீர்மைச் சிக்கல் (International Liquidity Problem) தோன்றி விடும். உலக நாடுகளிடையே 1969-ஐச் சேர்ந்த ஆண்டுகளின் இறுதி நிலையில் இத்தகைய சிக்கல் தோன்றியது. இதனைத் தவிர்ப்பதற்காகக் காகிதப் பொன் (Paper gold) எனப்படும் சிறப்பு எடுப்பு உரிமைகளை வெளியிடுதல் என்றதொரு திட்டத்தை 1970-இன் தொடக்கக்காலத்தில் பன்னாட்டுச் செலாவணி நிதி (International Monetary Fund) தோற்றுவித்தது. பன்னாட்டு நீர்மைச் சிக்கலைத் தீர்ப்பதற்காகவும் உலக இருப்பு அளவை அதிகரிப்பதற்காகவும் நிபந்தனையற்ற இருப்புச் சொத்துகளாக (Unconditional Reserve Assets) 1969-இல் பன்னாட்டுச் செலாவணி நிதியின் விதிகளுக்கான முதல் திருத்தம் என்ற வடிவில் இவை தோற்றுவிக்கப்பட்டன. இத்திட்டம் 1970-ஆம் ஆண்டு சனவரித் திங்கள் முதல் நாளிலிருந்து நடைமுறைக்கு வந்தது.

தோற்றுவிக்கப்பட்ட தொடக்க நிலையில் ஒரு சிறப்பு எடுப்பு உரிமையின் மதிப்பு 0.888671 கிராம் தங்கத்திற்குச் சமமாக, அதாவது அமெரிக்காவின் 1க்குச் சமமாக இருக்குமாறு அமைக்கப்பட்டது. ஆனால், 1973 க்குப் பிறகு ஒரு சிறப்பு எடுப்பு உரிமையின் மதிப்பு 1க்குச் சமம் என்ற அமைப்பை மாற்றி அமெரிக்காவின் தாலர் (Dollar) செருமனியின் மார்க்கு, இங்கிலாந்தின் பவுன், பிரான்சின் பிராங்கு (Franc), சப்பானின் என் (Yen), கனடாவின் தாலர், இத்தாலியின இலிரா, நெதர்லாந்தின் கில்டர் (Guilder), பெல்சியத்தின் பிராங்கு, சுவீடனின் குரோனா (Krona), ஆசுத்திரேலியாவின் தாலர், ஆசுத்திரியாவின் (Austrian)சில்லிங்கு (Schilling), தென அமெரிக்காவின் இராண்டு (Rand) இசுபெயினின் (Spain) பெசட்டா (Peseta), நார்வேயின் (Norvegian) குரோன் (Krone), தென்மார்க்கின் (Denish) குரோன் (Krone) ஆகிய பதினாறு நாடுகளின் செலாவணிகளின் மொத்த அடிப்படையில் (Basket of 16 Currencies) சிறப்பு எடுப்பு உரிமையின் மதிப்பு நாள்தோறும் நிருணயிக்கப்பட்டது. 1978-ஆம் ஆண்டில் தென் அமெரிக்கா, தென்மார்க்கு ஆகிய நாடுகளின் செலாவணிகளை இக் கூடையிலிருந்து நீக்கிவிட்டு சௌதி அரேபியா (Saudi

Arabia), ஈரான (Iran) ஆகிய நாடுகளின் செலாவணிகள் ஏற்றுக்கொள்ளப்பட்டன. பன்னாட்டு வாணிகத்திலும் நிதி அங்காடிகளிலும் (Finnacial Markets) ஒவ்வொரு நாட்டின் செலாவணிக்கும் இருக்கும் மதிப்பின் அடிப்படையில் ஒவ்வொரு நாட்டிற்கும் மதிப்பு எடை (Weight) கொடுக்கப்பட்டது. ஆனால், 1978-ஆம் ஆண்டில் பன்னாட்டுச் செலாவணி நிதியின் விதிகளில இரண்டாம் திருத்தம் கொணடு வரப்பட்ட பிறகு சிறப்பு எடுப்பு உரிமை பன்னாட்டுக் கணக்கீட்டுப் பண அலகாக (International Unit of Account) மாற்றப்பட்டது. சிறப்பு எடுப்பு உரிமையின் மதிப்பு நிருணயத்தை எளிமையாக்குவதற்காக 16 செலாவணிகளின் மொத்தத்தை அமெரிக்காவின தாலர், செர்மனியின் மார்க்கு, இங்கிலாந்தின் பவுன், பிரான்சின் பிராங்கு, சப்பானின் என் ஆகிய ஐந்து செலாவணிகளின் மொத்தம் எனக் குறைக்கபபட்டது. இதனால் 1984 ஆம் ஆண்டு அக்டோபர் திங்கள முதல்நாளில் சிறப்பு எடுப்பு உரிமை ஒன்றின் மதிப்பு 1.031க்குச சமமாக இருந்தது. சிறப்பு உரிமை 1986 ஆம் ஆண்டு சனவரி திங்கள் முதல் நாளிலிருந்து மதிப்பிற்கு எடையிடும் முறையை ஐந்தாணடுகளுக்கு ஒருமுறை மறுபரிசீலனை செய்வதென்றும், உறுப்பினர் நாடுகளின்பணடங்கள், பணிகள், ஆகியவற்றின ஏற்றுமதி, இறக்குமதி மற்றும் பிற உறுப்பினர் நாடுகளில் மற்ற உறுப்பினர் நாடுகளின் செலாவணிகளின் இருப்பு ஆகியவைகளின் அடிப்படையில் அத்தகைய பரிசீலனையைச் செய்வதென்றும ஒப்புக்கொள்ளப்பட்டது.

சிறப்பு எடுப்பு உரிமை என்பது காகிதமோ நாணயமோ அன்று; அதுவொரு கணக்குப் பதிவே. பன்னாட்டுச் செலாவணி நிதி (International Monetary Fund) சிறப்பு எடுப்பு உரிமைக் கணக்கில (Special Drawings Account) இவ் வுரிமைகளைப பதிவு செய்து கொளளும். உறுப்பினா நாடுகளின் அயல் செலாவணிச் சிக்கல்கள் தோன்றும்போது அவைகளுக்கு ஒதுக்கிய சிறப்பு எடுப்பு உரிமைகளைப் பயன்படுத்திக கொணடு சிக்கலகளிலிருந்து விடுபடலாம். சிறப்பு எடுப்பு உரிமையைப் புகுத்திய பிறகு பன்னாட்டுச் செலாவணி நிதியில, பொதுக் கணக்கு (General Account), சிறப்பு எடுப்பு உரிமைக் கணக்கு என இரு வகைக் கணககுகள் பயன்படுத்தப்படுகின்றன.

தங்கத்திற்கு மாறறாக இது பயன்படுகிறது. இருப்புச் செலாவணியாக (Reserve Currency) உறுப்பினர் நாடுகளில் இது ஏற்றுக் கொள்ளப்படுகிறது. உறுப்பினர் நாடுகளின் கணக்கில் நிலைபேறான உரிமையாக இவ்வுரிமை சேர்த்துக் கொளளப்படுகிறது. எவ்வளவு சிறப்பு உரிமையை எந்த வழிகளில் பயன்படுத்தலாம் என்பதை உறுப்பினர் நாடுகளே தீர்மானித்துக் கொள்ளலாம். உறுப்பினர் நாடுகளுள் ஒவ்வொன்றும் சிறப்பு உரிமையைப் பெற்றுக் கொண்டு அதற்குப் பதிலாகச் சொந்தச் செலாவணியைத் தர ஆயத்தமாக உள்ளது. சிறப்பு எடுப்பு உரிமையின் அளவை அதிகரிக்க 85 விழுக்காடு பெரும்பான்மை உறுப்பினரின் ஆதரவு வேண்டும் என்றும் ஏற்றுக் கொள்ளப்பட்டிருக்கிறது.

சிறப்பு உரிமைக் கணக்கில் பங்கு அளவுக்கு (Quota) மிகுதியாக இருப்பு வைத்திருப்பவர்கள் வட்டி வருமானத்தைப் பெறுகிறார்கள்; குறைவாக இருப்பு வைத்திருப்பவர்கள் வட்டி செலுத்துகிறார்கள். வட்டி விகிதம் 1969 முதல் 1974 சூன் 30 ஆம் நாள் முடிய ஆண்டொன்றுக்கு 1.5 சதவீதமாக இருந்தது. ஆனால் 1974 சூலைத் திங்கள் 1 ஆம் நாளில் இவ் விகிதம் 5 விழுக்காடாக அதிகரிக்கப்பட்டு 1975 சூலைத் திங்கள் 7 ஆம் நாள் முடிய நடைமுறையில் இருந்தது. அதன் பிறகு உறுப்பினர் நாடுகளின் செலாவணிகளுக்கேற்ப வட்டி விகிதம் மாற்றியமைக்கப்பட வேண்டும் என்ற கருத்து ஒப்புக் கொள்ளப்பட்டு, 1985-ஆம் ஆண்டு சூலை முதல் நாளிலிருந்து ஆண்டொன்றிற்கான வட்டி விகிதம் 14.04 விழுக்காடு என நிருணயிக்கப்பட்டுள்ளது.

அந்நியச் செலாவணியில் துணையான நிலையில் இருக்கும் நாடு கேடான நிலையில் இருக்கும் நாட்டின் செலாவணியைப் பெற்றுக் கொண்டு சிறப்பு எடுப்பு உரிமையைக் கொடுக்கலாம்; விற்கலாம். பன்னாட்டுச் செலுத்துதல்களுக்காகப் பன்னாட்டுச் செலாவணி நிதி இதனை ஏற்றுக் கொள்கிறது.

உறுப்பினர் நாடுகளின் பங்களவுத் தொகைக்கேற்பச் சிறப்பு எடுப்பு உரிமையின் அளவு அமைகிறது. தொடக்கநிலை மூன்றாண்டுகளில் (1970-72) 9.3 பிலியன் சிறப்பு எடுப்பு உரிமைகள் தோற்றுவிக்கப்பட்டு, 112 உறுப்பினர் நாடுகளிடையே பயன்படுத்தப்பட்டன. 9.3 பிலியனாகவே 1978 வரை இருந்த இதன் அளவு 1979, 1980, 1981 ஆகிய ஒவ்வோர் ஆண்டுகளிலும் 4.0 பிலியன் அளவு அதிகரிக்கப்பட்டதால் 1979 இல் 13.3 பிலியன், 1980-இல் 17.3 பிலியன், 1981-இல் 21.3 பிலியன் அளவுக்கு அதிகரித்தது. அதன் பிறகு அதன் அளவு அதிகரிக்கப்படவில்லை.

பன்னாட்டுச் செலாவணி நிதியின் நிதி ஒதுக்கீட்டிற்கு 1944-இல் பின்பற்றிய அடிப்படையிலேயே உறுப்பினர் நாடுகளுக்குச் சிறப்பு உரிமைகள் ஒதுக்கி இருப்பது சரியன்று என்று பலர் இதனைக் குறை கூறுகிறார்கள். இந்நாடுகள் 1944-இல் இருந்த நிலைகள்

பெருமளவில் மாற்றமடைந்துள்ளன. வலுவுள்ள நாடுகளாக இருந்தவையும் வலுவற்ற நாடுகளாக இருந்தவையும் அவைதம் நிலை மாறி உள்ளன. மேலும் நாடுகளின் பொருளாதார வளர்ச்சி வேகமும் முடுக்கி விடப்பட்டுள்ளது. ஆகவே, சிறப்பு எடுப்பு உரிமையின் ஒதுக்கீட்டை மறு ஆய்வு செய்து மாற்றியமைக்க வேண்டும். அப்படிச் செய்யாதவரை சிறப்பு எடுப்பு உரிமையால் அமெரிக்கா, இங்கிலாந்து, பிரான்சு, செருமனி போன்ற முன்னேறிய நாடுகளுக்குத் தான் இத் திட்டம் துணையாக இருக்குமே தவிர வளரும் நாடுகளுக்குத் துணையாக இருக்க வாய்ப்பில்லை என்று குறிப்பிடுவோரும் உளர். மேலும், பன்னாட்டு நீர்மையை (International Liquidity) மிகுதிப்படுத்தும் நோக்கத்துடன் தான் சிறப்பு எடுப்பு உரிமைத் திட்டம் கொண்டு வரப்பட்டது. ஆனால், பன்னாட்டு நீர்மையில் சிறப்பு எடுப்பு உரிமையின் அளவு 1973-ஆம் ஆண்டில் 4.1 விழுக்காடாகக் குறைந்ததுடன், 1983-ஆம் ஆண்டில் 2.7 விழுக்காடாகவும் குறைந்து விட்டது. இதன் விளைவாக வளரும் நாடுகளின் அந்நியச் செலாவணிச் சிக்கல்கள் இன்னும் முனைப்பாகவே இருந்து இந்நாடுகளைத் தொல்லைப் படுத்திக் கொண்டே வருகின்றன என்றதொரு குறையைச் சுட்டிக்காட்டுபவர்களும் உள்ளனர்.

என்.எஸ்.பா.

**துணை நூல்கள்:**

**Bu Soderson**, International Economics, Macmillan, London, 1983.

**Sundaram, M.C.**, & Sudarna Singh, International Economics, Oxford & IBH Publishing Co., New Delhi, 1983.

**Thingan, M.L.**, International Economics, Konarch Publications, New Delhi, 1986.

***சிறப்புக் கல்வி:*** ஒரு நாட்டு மக்களின் அறிவாற்றலைப் பெருக்குவதற்கமைந்த கருவி கல்வியாகும். ஒரு குழந்தைக்கு அளிக்கப்படும் கல்வி அக்குழந்தையின் அறிதிறனுக்குத் (Cognition) தக்கவாறு அமைதல் வேண்டும். சில குழந்தைகள் மீத்திறனுடையராயும் சிலர் மிக்க மந்தராயும் உள்ளனர். ஆகவே, அவரவர்க்குரிய சிறப்புக்கல்வி அளிக்கப்பட வேண்டும். பொதுவாகச் சிறப்புக்கல்வி என்பது ஊனமுற்றோர், பிற்பட்டோர், மீத்திறன் உடையோர் ஆகியோர்க்குத் தனிக்கவனம் செலுத்திக் கல்வி அளிப்பதாகும்.

ஊனமுற்ற குழந்தைகளுக்கான சிறப்புக் கல்வி முறை கி. பி. 19-ஆம் நூற்றாண்டில் இட்டார்டு (Itard), செகுய்ன் (Seguin), கல்லாவ்டெட்டு (Gallaudet), கோவ் (Howe), மாண்டிசோரி (Motessori) பிரெய்லி (Braille) போன்ற அறிஞர் பலரது பணிகளால் தொடங்கப் பெற்றது

ஊனமுற்ற குழந்தைகளை மூன்று வகையாகப் பிரிக்கலாம்: 1. உடல் ஊனமுற்றோர்; 2. மன ஊனமுற்றோர்; 3. சமூக ஊனமுற்றோர்

**1. உடல் ஊனமுற்றோர்:** இவர்களுள் குருடர், செவிடர், ஊமையர், அங்கக் கோணலுடையோர் போன்றோர் அடங்குவர். பிரிட்டனில் வெளியான புள்ளி விவரப்படி நூற்றுக்கு ஒரு குழந்தை உடல் ஊனமுடன் பிறக்கின்றது. உடல் ஊனம் பெரும்பாலும் மரபுநிலைப் பட்டதாகவோ, தாயின் வயிற்றில் குழந்தை வளரும்போது சூழ்நிலைக் கோளாறுகளின் விளைவாகவோ ஏற்படுகிறது. இளம்பிள்ளை வாதம், வாயுநிலையினால் ஏற்படும் இதயக் கோளாறுகள், வலிப்புகள் போன்றவையும் உடல ஊனங்களில் அடங்கும். குருடர், செவிடர், ஊமையர்களுக்குத் தனிப்பள்ளிகள் ஏற்படுத்தப்பட்டுள்ளன. உடல் ஊனமுற்ற குழந்தைகளுக்கெனத் தனியாகப் பயிற்சிபெற்ற ஆசிரியர்கள் நியமிக்கப்படுகிறார்கள் இக்குழந்தைகள் தாழ்வு உணர்ச்சி கொள்ளாமல் பார்த்துக் கொள்ள வேண்டும். இவர்களுக்குத் தாழ்வு உணர்ச்சி வந்துவிட்டால் இவர்களுடைய மனநலம் பெரிதும் பாதிக்கப்படும். ஆளுமை வளர்ச்சியும் கெடும்.

**2 மன ஊனமுற்றோர்:** மன எழுச்சியால தொல்லையுறும் குழந்தைகளும், மனவளம் குன்றிய குழந்தைகளும் இவ்வகையில அடங்குவர். வாழ்வின வெற்றிக்கு மன எழுச்சி துணைபுரியும். ஆனால், மன எழுச்சி அளவு கடந்து போகும்போது கட்டுப்பாடற்ற நிலையில் வாழ்வில்தொல்லைகள மிகும். இளவயதில் ஒருவருக்கு ஏற்படும் மனஎழுச்சி அதிர்ச்சிகள் அவர் கோளாறுகளுக்கும் பிறழ்வுகளுக்கும் காரணமாகின்றன. தீவிர மனஎழுச்சிகள் உடலின் உள்ளுறுப்புகளின் பணியிலும் குறுக்கிடுகின்றன. மாணவரின் இயல்பு மீறிய நடத்தைக்கும் நெறிபிறழ்தலுக்கும் மன எழுச்சிப்போராட்டங்கள காரணங்களாகின்றன. பெற்றோரும் ஆசிரியரும் மாணவரிடம் நடந்து கொள்ளும் முறையினாலும் மாணவரிடம் தீவிர மனஎழுச்சிச் சிக்கல்கள் எழலாம். இதன் விளைவாக எதிர்த்துப் பேசுதல், வன்செயலில் ஈடுபடுதல், தனித்து வாழ்தல் போன்ற முறைகேடான நடத்தைகளிலும் மாணவர் ஈடுபட வாய்ப்புள்ளது. சமூகச் சூழல்களாலும் மாணவர் மன எழுச்சி தூண்டப்பெறும். மாணவரின் மனஎழுச்சி சமநிலையடைய ஆசிரியரும் பெற்றோரும் உதவ வேண்டும். ஆசிரியரும் பெற்றோரும் சிறந்த முன்மாதிரிகளாக விளங்க முயல வேண்டும்

மன எழுச்சியால் தொல்லையுறும் (Mentally disturbed) மாணவரின் மனஎழுச்சிகளைத் தூய்மைப் படுத்த இசை, சிறபம், ஓவியம், நடனம், கவிதை, இலக்கணம் முதலியன பெரிதும் உதவும். சமயப் பற்றும் வழிபாடும் மாணவர்தம் மன எழுச்சிகளைத் தூய்மையாக்கிச் சமநிலையுறச் செய்யவல்லனவாகும்.

மரபு நிலையினால் தீவிரமான பிற்பட்ட நிலைக்கு உட்பட்ட குழந்தைகள் மனவளம் குன்றிய வர்களாவர். இவர்கள் அனைத்துப் பாடங்களிலும் மிகவும் பிற்பட்டிருப்பர். இவர்களது கல்வியில் எழக் கூடிய சிக்கல்களும் பிரச்சினைகளும் மாறுபட்டவை களாக இருக்கும். இவர்களுக்கென்று தனியாக நிறுவப் பட்ட பள்ளிகளில் பயிலச் செய்தால் மட்டுமே இவர் கள் பயன்பெறுவர்.

**3. சமூக ஊனமுற்றோர்:** சமூகப் பொருத்தப் பாடற்ற குழந்தைகள், அநாதைகள், இளங்குற்ற வாளிகள் போன்றோர் இவ்வகையில் அடங்குவர். வீடு மற்றும் சமூக அனுபவம் இழந்தவர்களும் பண பாட்டு இழப்புடையவர்களும், பாதகமுற்றோரும் சமூக ஊனமுற்றவர்களாகின்றனர்.

பொதுவாக, இயக்கக் குறைபாடுள்ள குழந்தை கள், உடல் உறுப்புக் குறைபாடுள்ள குழந்தைகள், நுண்ணறிவில் மந்த நிலையிலுள்ள குழந்தைகள், காதுகேளாதோர், கண்பார்வை மங்கியவர்கள், தீவிர மான எழுச்சிக்குட்பட்ட குழந்தைகள் போன்றோர் பெரும்பாலும் பொருத்தப்பாடின்மை (Maladjusted) நிலையைப் பெறுகின்றனர். இத்தகைய குறைபாடு கள் குழந்தைகளின் கல்வி வளர்ச்சியிலும் திறன் வளர்ச்சியிலும் குறுக்கிட்டுப் பொருத்தப் பாடின்மை நிலையைத் தோற்றுவிக்கின்றன. இவர்களிடம் தாழ்வு உணர்ச்சி தோன்றினால் ஆளுமை வளர்ச்சி யும் பிறழ்வுறும். குறைபாடுகள் உள்ள குழந்தைகள் தம் குறைபாடுகளை மறக்கப் பெருமுயற்சி எடுத்துக் கொள்வர். தம் திறன்கள்மீது குழந்தைகள் அவ நம்பிக்கை கொள்வார்களாயின், அவர்தம் காப் புணர்ச்சி குன்றி மனஎழுச்சிச் சமநிலையும் சீர் குலைந்துவிடும். பொருத்தமில்லா அனுபவங்களால் குழந்தைகள் பொருத்தப்பாடின்மை நிலையைப் பெறுகின்றனர். அவர்களைத் தண்டிக்க முற்படின் தீவிரவிளைவுகள்ஏற்படும். மகிழ்ச்சியான குடும்பச் சூழலும் பள்ளிச் சூழலும் இத்தகைய குழந்தைகளுக்கு நலம்பயக்கும். ஆசிரியரும் பெற்றோரும் இத்தகைய குழந்தைகளை மிகுந்த தனிக்கவனத்துடனும் அன்பு டனும் அணுக வேண்டும்.

அநாதைக் குழந்தைகளுக்கு அநாதை இல்ல அமைப்புடன் கூடிய பள்ளிகளும், இனம், குற்றவாளி களுக்குச் சீர்திருத்தப் பள்ளிகளும் உள்ளன. கடந்த காலத்தைவிட இக்காலத்தில் மிகுதியான குழந்தை கள் பலதிறப்பட்ட ஊனங்களைப் பெற்றுள்ளன. ஊனமுற்ற குழந்தைகள் தமது தேவைகளிலும் மிகுந்து வருவதைச் சிறப்புக் கல்வித் திட்டமியற்றும் எவரும் இன்று உணரத் தலைப்பட்டுள்ளனர். பள்ளி முன் பருவத்திட்டங்களில் (Pre-School Programmes) இத்தகைய ஊனமுற்ற குழந்தைகளுக்கு அளிக்கும் தீவிரக் கற்பித்தல் முயற்சிகள் நற்பயனைத்தரும் என்பதும் கண்டறியப்பட்டுள்ளது.

**பிற்பட்ட குழந்தைகள்:** ஊனமுற்ற குழந்தை களேயன்றி பிற்பட்ட குழந்தைகளும் சிறப்புக்கல்வி பெறத் தக்கவர்களாகின்றனர். தம்மைப் போன்ற பிற குழந்தைகள் எவ்வகுப்புக்குரிய பாடவேலை களைத் திறம்படச் செய்து முடிக்கின்றார்களோ அவ் வகுப்பிற்கும் கீழான வகுப்புப் பாடவேலையையும் செய்ய இயலாதநிலையில் இருக்கும் குழந்தைகள் பிற் பட்ட குழந்தைகள் எனப்படுவர் (சிரில்பர்ட்டு).பள்ளி யில் பயிலும் குழந்தைகளுள் 8 முதல் 10 விழுக்காடு பிற்பட்டவர்களாகவே உள்ளனர்.

பிற்பட்ட குழந்தைகளை இயற்கையாகவே பிற் பட்டவர்கள் (Naturally Backward), ஆக்கநிலையி னால் பிற்பட்டவர்கள் (Conditional Backward) என இருவகையாகக் கொள்வர். மரபு நிலையினால் இயற்கையாகவே பிற்பட்ட குழந்தைகளைச் சரிப் படுத்துவது மிகக் கடினமாகும்.சூழ்நிலையின் தவிர்க்க இயலாதசில காரணங்களால் ஆன ஆக்க நிலைப் பிற்பட்டவர்களைத் திருத்தமுடியும்.

பிற்பட்ட குழந்தைகள் பொதுவாக உடல் வளர்ச்சி, மன எழுச்சி நிலை போன்றவற்றில் ஏனைய குழந்தைகளைவிடப் பின் தங்கியவர்களாயிருப்பர். பிற்பட்ட நிலை பல காரணங்களால் ஏற்படும். புலக் குறைபாடுகளுடன் பிறக்கும் குழந்தைகளும் தாழ்ந்த நுண்ணறிவு ஈவு (I.Q) உடைய குழந்தை களும் என்றும் உடல்நலக் குறைவுள்ள குழந்தைகளும் இயல்பாகவே பிற்பட்டுக் காணப்படுவர்.

பிற்பட்ட மாணவர்தம் நிலையை உயர்த்தி அவர்களுக்கு உதவிபுரிய வேண்டுவது ஆசிரியரின் கடமையாகும். நெறிபிறழ் குழந்தைகளைச் சீர் திருத்துவதற்குக் குழந்தைகள் உள மருத்துவ நிறு வனம் (The Juvenile Psychopathic Institute) போன்ற அமைப்புகள் அமெரிக்கா, பிரிட்டன் போன்ற மேலைநாடுகளில் நிறுவப்பட்டுள்ளன. இந் நிறுவனங்களில் ஓர் உளவியலறிஞர், ஒரு மருத்துவர், ஒரு மனமருத்துவர், ஒரு சமூகத்தொண்டர் ஆகி யோர் இருப்பர். இவர்கள் குழந்தையை உற்று

நோக்கி ஆராய்ந்து குழந்தையின் அந்நிலைக்குரிய காரணங்களைக் கண்டு ஆலோசனைகள் வழங்குவர். அவற்றின் அடிப்படையில் ஆசிரியரும் பெறறோரும் செயறபடுவர்.

பிறபட்ட மாணவர்களுக்கெனத் தனி வகுப்புகளை ஏற்பாடு செய்வதும் உண்டு. தனி வகுப்பு மாணவர்மீது ஆசிரியர் தனிக்கவனம் செலுத்த வேண்டும். பிற்பட்ட மாணவர்களைப் பிற மாணவர்களுடன் தாராளமாகப் பழக வாய்ப்பளித்தால் அவர்களுடைய தாழ்வு மனப்பான்மை மாறிவிடக்கூடும். இத்தகைய மாணவர்களின் குடும்பச்சூழலையும் சுற்றுப்புறச் சூழலையும் உயர்த்த முயலவேண்டும். குறையறி சோதனைகள் (Diagnostic Tests), குறை நீக்க உதவும் கற்பித்தல் (Remedial Teaching) போன்றவை இத்தகைய மாணவாகளுக்குப் பெரிதும் உதவும்.

எல்லாப் பாடங்களிலும் பிற்பட்ட நிலையிலுளள மாணவர்களைப் பிற்பட்டவர்களுக்கென உருவாககப் பட்ட தனிப்பள்ளிகளுக்கு அனுப்புவதே ஏறறதாகும். பிற்பட்டமாணவரிடம் ஆசிரியர் பரிவு காட்ட வேண டும். வெறுப்பைக் காட்டலாகாது. உடற்குறைபாடுள்ள மாணவராயின் அக்குறைகளுககான காரணங் களைக் கண்டறிந்து அவற்றைத் தீர்க்க முயல்வது ஆசிரியரின் கடமையாகும். மாணவர் தன்னம்பிககை கொள்ளுமாறு ஆசிரியர் உற்சாகமூட்டுதலே சிறப்புடையது. மாணவர்தம் சமூகப் பின்னணி பறறி ஆசிரியர் அறிந்துகொளளலும் பெரும் பயன்தரும்.

பிற்பட்டோர் பள்ளியில் பணியாற்றும் ஆசிரியர்கள் அதற்கென அமைந்த கற்பிததல் முறைகளில் தனிப்பயிற்சி பெற வேண்டும். பொறுமை, தன்னம்பிக்கை, சமூக உணர்வு, தொணடுள்ளம் ஆகியவை இவர்களிடம் மிகுந்திருக்க வேண்டும்.

மாரிகபோலக்கு, மரியம்போலக்கு போன்றோர் மிகவும் பிற்பட்ட குழந்தைகளுக்குக் கல்வி கற்பிதத லில் இருபதாண்டுகளுக்கு மேல ஆய்வு நடத்தியுள்ளனர். இவர்கள் கருத்துப்படி இத்தகைய பிற்பட்ட குழந்தைகள் பல்வேறு சமூகப் பொருளாதார நிலைகளில் இடம் பெற்றுள்ள பெற்றோர்களின் குழந்தைகளாவர்.

பிற்பட்டோர் பள்ளிகளின் முக்கிய நோக்கம் இவற்றில் பயிலும் மாணவர்கள் நற்பழக்கங்களையும் தற்காப்புத் திறனையும் பெற்று நற்குடிமக்களாக வாழப் பயிற்சிபெற வேண்டும் என்பதாகும். இப்பள்ளிகளில் கற்பிக்கப்பட வேண்டிய பாடங்களும், புதிய கருத்துகளும், பயனுள்ள செயல்திட்ட அடிப் படையில் கற்பிக்கப்படும்; ஆக்க வேலைகளுக்குப் பல வாய்ப்புகள் அளிக்கப்படும். மாணவரின் மன எழுச்சிகளை வெளியிட இசை, நாடகம் போன்றவை பயன படுத்தப்படும. பிற்கால வாழ்வுக்குப் பயன்தரும் ஒரு கைத்தொழில் கறபிக்கப்படும். சமூக வாழ்க்கைக்கு இன்றியமையாத பல பண்புகள இப்பளளியில வளர்க்கப்படும்.

**மீத்திறமுடைய குழந்தைகள்:** ஊனமுற்றோர், பிற்பட்டோர் போன்ற மீத்திறனுடைய குழந்தைகளும சிறப்புக் கல்வி பெற வேண்டியவர்கள் ஆவர். அறிவுத திறன் மிகுதியாகப் பெற்ற இக்குழந்தைகளை மீத்திறமுடையோர் (Gifted) எனக கூறுவர். பளளிகளில் 3 முதல் 5 விழுக்காடு மாணவர்கள் இததகையோராவர். தம்மிலும் நுண்ணறிவு குறைநத மாணவர்களுடன் இணைந்து கல்விகறகும் வாயப்பு மீத்திற மாணவர்களுக்குப் பெரும்பாலும் அளிககப படுவதால் அவர்கள் மனமுறிவு அடையககூடும். குறுக்கீடுகள் ஏதுமின்றி, நல்ல சூழலில் வளர்க்கப்படடால் மீத்திறன் மிக்க மாணவர்கள் நிசசயமாக வருங்காலத்தில் திறமைமிக்க பெரிய மேதைகளாக விளங்குவார்கள் என்று தெர்மன எனனும் உளவியலறிஞர் கூறுகிறார்.

மீத்திறன் மாணவர்களபால் தனிக்கவனம் செலுத்தாவிடில் அவர்கள் உற்சாகம் குன்றுவர். பகறகனவில் மூழக நேரிடும். சில மாணவர்கள் வெறுப்புணர்ச்சி வயப்பட்டு நெறிபிறழ் நடத்தையுடையவராகவும் மாறிவிடக் கூடும். பொதுவாக நுண்ணறிவு ஈவு (IQ) 130க்கு மேல் பெற்ற குழந்தைகள் மீத்திறக் குழந்தைகளாவர். இவர்களைக கண்டறிந்து இவர்களின் முழுவளர்ச்சிககு வேண்டிய வசதிகளையும் வாய்ப்புகளையும் அளிக்க வேணடியது ஆசிரியரின் இன்றியமையாத கடமைகளுள் ஒன்றாகும். மீத்திறக் குழந்தைகள இருவகைபபடுவர்; 1 நுண்ணறிவு மிகுந்த மீத்திறக் குழந்தைகள் (Intellectually gifted), 2. குறிப்பிட்ட துறைகளில் மீத்திறம் பெற்ற குழந்தைகள் (Specifically talented).

நுண்ணறிவு மிகுந்த மீத்திறக் குழந்தைகள் தமது நுணணறிவில் பொதுக் காரணி மிகுதியாகப் பெற்றிருப்பர். குறிப்பிட்ட துறைகளில் மீத்திறன பெற்ற குழந்தைகள் இசை, ஓவியம், கலை, நாட்டியம் போன்ற குறிப்பிட்ட துறைகளில் ஆர்வமும் ஆற்றலும் மிகுதியாகப் பெற்றிருப்பர். சமூகத்திறன் மிகுதியாகப் பெற்ற (Socially gifted) மீத்திறக் குழந்தைகள என றொரு பிரிவும் உள்ளனர். நுண்ணறிவு மிகுந்த மீத்திறக் குழந்தைகளிடம் பகுத்தறியும் திறன், விடா முயற்சி, முன்னேற விழையும் மனப்பான்மை, புதிதாகக் கறறலில் தக்கமுறையில் சிந்திக்கும் ஆறறல், நகைச் சுவை உணர்வு போன்றவை மிகுந்திருக்கும.

பிற்பட்ட மாணவர்களுக்கென்று தனி வகுப்பு தொடங்குவதைப் போன்று பள்ளியில் மீத்திறனுடைய மாணவருக்கெனத் தனிப்பிரிவு ஒன்றை ஏறபடுத்துதல் சிறந்த முறையாகும். மீத்திறனுடைய மாணவர்களுக்குக் கற்பிக்க இருமுறைகள் அமைந்துள்ளன. 1. துரிதப் பிரிவு மாற்றல் முறை (Grade Accleration Method), 2 பாடத்திட்ட அதிகரிப்பு முறை (Enrichment method).

துரிதப் பிரிவு மாற்றல் முறையில் மீத்திறக் குழந்தைகள் ஓராண்டு இறுதியில் மாறவேண்டிய வகுப்பிற்கு அடுத்த உயர்வகுப்பிற்கு மாற்றப்படுவர். தெர்மன், கம்ப்சு போனறோரின் ஆய்வுகள் துரிதப் பிரிவு மாற்றத்திற்கு ஏற்ப மீத்திறன் மாணவர்களின் சமூகப் பொருத்தப்பாடு மாறறம் பெறுவதில்லை என மெய்ப்பிக்கிறது. விருமபத்தகாத பண்புகளையும் மனப் போக்குகளையும் அவர்கள பெற்றுவிடக்கூடும்.

பாடத்திட்ட அதிகரிப்பு முறையே மீத்திறன் மாணவர்களுக்கு ஏற்ற சிறந்த முறையாகும். இம்முறைப்படி வகுப்பில் மீத்திறன் மிக்க மாணவர்கள தனிப்படுத்தப்பட்டு, அவர்களுக்கெனத் தனியே அதிகப்படியான வேலைகள் அளிக்கப்படும். அவர்களுக்குக் கற்பிக்கத் தனி முறைகளையும் ஆசிரியர் மேற்கொள்வர். குறிப்பிட்ட சில ஆற்றல்களில் மீத்திறன் பெற்ற மாணவர்களை அவர்களின ஆற்றலுக்கு ஏற்றவாறு அவர்களுக்கு மேல் வகுப்பிலுளள மாணவர்களுடன் இணைத்து உயர்கல்வி கற்பிக்கலாம்.

மீத்திறனுடைய குழந்தைகளுக்குச் சிறப்புக் கல்வி அளிப்பதில் கீழ்க்காணுவனவற்றை மனத்தில் கொள்ள வேண்டும். குழந்தையின் அறிதிறன் மிகுதியை அறிந்து அதன் அறிவுகுகுப் பயிற்சி அளிக்கக்கூடிய வேலை தர வேண்டும். குழநதையின் சிறப்புணர்ந்து பெறலோா ஆதரவு தர வேணடும. இதகு குழநதைகள சமூகத்துடன் பொருந்தி வாழ்வதற்கு வேண்டிய உதவிகளை நல்க வேண்டும். தாழ்வு மனக்கோட்டம் உணடாகாதவாறு இவர்கள செயல்களையும் விழைவுகளையும் சமுதாயம் ஆதரிக்க வேண்டும். அளவு கடந்து புகழ்நது அவர்களிடம் செருக்குமிகச் செய்யலாகாது.

மீத்திறனுடைய மாணவர்களைக் கண்டறியப் பினேயின (Binet) ஆய்வுகள் உதவுகின்றன. தனியாள் மன இயல்புச் சோதனை (Individual Mental tests), அடைவுச் சோதனை (Achievement test) போன்றனவும் இதற்கு உதவும் ஒன்பது வயதடைந்த மீத்திறனுடைய மாணவர் 14 வயதுடைய சாதாரண மாணவரை ஒத்திருப்பார் என்று கூறுவர். பொதுவாக மீத்திறனுடைய மாணவர் ஏனைய மாணவரை விட மிகுந்த திறனும் ஆற்றலும் நுண்ணறிவும் கொண்டிருப்பதோடுசமூக முன்னேற்றத்துக்குத் தேவையான பண்புகளும் சமூகத் தலைமைக்குரிய பண்புகளும் பெற்றிருப்பர். மீத்திறனுடைய மாணவர் ஒவவொருவரையும் தனித்தனியே கவனித்து அவர்தம் ஆற்றலுக்கும் இயல்புகளுக்கும் ஏற்றவாறு கல்வித் திட்டத்தையும் கற்பித்தல் முறைகளையும் மாற்றி அமைத்துக் கல்வி அளிப்பதன் மூலம் வருங்கால மேதைகளை உருவாக்கிட முடியும். சே.தா.

**சிறப்புத் தணிக்கை:** ஒரு நிறுமத்தில் சரியான தொழிற் கொள்கைகள் அல்லது வாணிகக் கோட்பாடுகளின்படி நிருவாகம் நடைபெறாத போதும், தொழில் நலனுக்குப் புறம்பாக நிருவாகம் நடந்து கொள்கிற போதும், நிறுமத்தின் நிதிநிலை மிகவும் மோசமாக உள்ள போதும் இந்திய நிறுமச் சட்டம் பிரிவு 233 A-இன் கீழ் அந்த நிறுமத்தின் கணக்குகள் சிறப்புத் தணிக்கை (Special Audit) செய்யப்பட வேண்டும் என்று மத்திய அரசு ஆணையிடலாம். எந்தக் காலப் பகுதியின் கணக்குகளுக்கு இச் சிறப்புத் தணிக்கை செய்யப்பட வேண்டும் என்று அவ்வாணையில் குறிப்பிட வேண்டும். இத் தணிக்கையைச் செய்திடும் தணிக்கையாளர் சிறப்புத் தணிக்கையாளர் (Special Auditor) என்று சொல்லப்படுவார். ஒரு நிறுமத்தின் தணிக்கையாளரே அவ்வாறு சிறப்புத் தணிக்கையாளராக நியமிக்கப்படலாம். இவர் அதிகாரம், கடமை, பொறுப்பு ஆகியவைகளை நிறுமச் சட்டம் பிரிவு-227 கூறுகிறது.

சிறப்புத் தணிக்கையாளரின் அறிக்கை மத்திய அரசிற்கு அனுப்பப்படும். அவ்வறிக்கையின் அடிப்படையில் தக்க நடவடிக்கை எடுக்குமாறும் மத்திய அரசு பணிக்கலாம். அவ்வறிக்கை கிடைத்த நான்கு நாள்களுக்குள் அரசு நடவடிக்கை எடுக்கவில்லையென்றால், அவ்வறிக்கையின் படி ஒன்றில் அரசு தன் கருத்துகளைக் குறிப்பிட்டு நிறுமத்திற்கு அனுப்பிவிடும். இந் நகல் நிறும உறுப்பினர்களுக்கு அனுப்பப்படலாம்; அல்லது நகலைப் பொதுக் கூட்டத்தில் படித்திடலாம். சிறப்புத் தணிக்கையாளரின் ஊதியம், பிற செலவுகள் போன்றவைகளை மத்திய அரசு நிருணயம் செய்யும். இச் செலவுகளை நிறுமம் ஏற்க வேண்டும். கே.என.இரா.

**சிறப்புத் திருமணச் சட்டம்:** இந்தச் சட்டம் 1.1.1955-இல் நடைமுறைக்கு வந்தது. இது 1872-ஆம் ஆண்டு இயற்றப்பட்ட சிறப்புத் திருமணச் சட்டத்தை மாற்றியமைக்கும் வண்ணம் இயற்றப்பட்டது. இச்சிறப்புத் திருமணச்சட்டம் (Special-

Marriage Act, 1954) இந்தியாவில் உள்ள அனை வருக்கும் பொருந்தும். சம்மு-காசுமீர் மக்களுக்கும், வெளி நாட்டில் தங்கி இருக்கும் இந்தியர்களுககும் இது பொருந்தும். மேலும், இச்சட்டம் 1) இந்து திரு மணச் சட்டத்தினகீழ்த் திருமணம் செய்து கொளளும மணமக்களுக்கும் 2) முகமதியர்கள் சட்டப்படி நிக்கா செய்துகொள்ளுவோர்க்கும், 3) வெவ்வேறு மதங்களைத் தழுவியமணமக்களுக்கும் பொருநதும். காட்டாக மணமக்களுள் ஒருவர் இந்துவாகவும் மற் றொருவர் முகமதியராகவும் இருப்பினும் இந்தச் சட்டம் பொருநதும். 4) இந்தியாவில் நடைபெறும் திருமணங்கள் மட்டுமன்றி, வெளிநாட்டில் செய்து கொள்ளும் திருமணங்களையும் சிறப்புத் திருமணச் சட்டத்தின்கீழப் பதிவு செய்து கொளளலாம். இந்தத் தனிச்சிறப்பு சிறப்புத் திருமணச் சட்டத் திற்கு மட்டுமே உள்ளது. மேலும், சிறப்புத் திரு மணச் சட்டததில 'இப்படித்தான் திருமணம் செய்து கொள்ளவேண்டும்' எனறில்லாமல், 'எப்படியும் செய்து கொள்ளலாம்' என்ற நெகிழவு உள்ளது. இதன் பயனை அனுபவிக்கும் பொருட்டு எநத மதத் தினைத் தழுவியவர்களாக இருப்பினும் அனைவரும் தங்கள் திருமணங்களை இச்சட்டத்தின்கீழப் பதிவு செய்து கொள்ளலாம். பழந்தமிழர் பண்பாடு கூறும் பல வகைத் திருமணங்களும் இதில் அடங்கலாம். 5) வெளி நாட்டில் வசிக்கும் இந்தியர்கள எந்த மொழியைப் பேசுபவர்களாக இருநதாலும், எந்தச் சமயத்தைத் தழுவியவர்களாக இருந்தாலும், தங களின் திருமணங்களை இந்தத் திருமணச் சிறப்புச் சட்டத்தின்கீழ்ப் பதிவு செய்து கொள்ளலாம். இத னால், இச் சட்டம் கூடுதல் எல்லை (Extra territorial Nature) கொணடு விளஙகுகின்றது.

6. திருமணம் செய்து கொள்ளும் மணமக்கள் தங் கள் மதப்படியோ மதிப்படியோ திருமணம் செய்து கொண்டாலும், அதனைப் பதிவு செய்து கொளவ தற்குச சில நடைமுறைகள் சிறப்பாகப் பின்பறற பட வேண்டும் என்பது இச்சிறப்புத் திருமணச் சட் டத்தின் நோக்கம் ஆகும். அவை யாவை' என்ப தனை இச்சட்டத்தின் பிரிவு 4 விளக்கமாகக் கூறுகின் றது. வெளிநாட்டில் தங்கி இருக்கும் இந்தியர்களுககு வெளிநாட்டில் உளள இந்தியத் தூதராலயம் திருமண அலுவலகமாகவும், தூதுவர் திருமண அதிகாரியாக வும் செயற்படுவார்.

பழைய சிறப்புத் திருமணச் சட்டம் 1872-இன் படி யும், இந்து திருமணச் சட்டம் 1955-இன படியும் தடை செயயப் பட்ட உறவு முறைக்குள திருமணம் செய்து கொண்டால், திருமணம் செல்லாது என்ற நிலை இருந்து வநதது. இத்தகைய கசப்பான நிலையை மாற்றும் பொருட்டு 1963-இல் சிறப்புத் திருமணச் சட்டததில் மாற்றங்கள் கொண்டு வரப் பட்டுச் சட்டம் திருத்தி அமைக்கப் பட்டது. இதனபடி பழக்க வழககங்கள (Custom andUsage) அனுமதிக்கு மேயானால், தடைசெய்யப் பட்ட உறவு முறைக்குள் திருமணம் செய்து கொள்பவர்களுக்குக்கூட இந்தச சிறப்புத் திருமணச் சட்டம் பொருந்தும். அத்தகைய திருமணமும் செல்லுபடி ஆகும், இச்சிறப்புத திரு மணச் சட்டங்களின்கீழ்ச் செய்து கொளளும் திரு மணங்கள் திருமண ஒப்பந்தங்களே ஆகும்.

திருமணச சிறப்புச் சட்டத்தின்கீழ், திருமணங களைப் பதிவு செயயககீழ்ககாணும் கட்டுப்பாடுகள அல்லது நடைமுறைகள் நிறைவேற்றப் படவேண்டும.

அ) மணமக்களுள் ஒருவர் வேறு ஒரு திருமண ஒப்பந்தத்தில் ஈடு பட்டிருக்கக் கூடாது. அப்படி ஈடு பட்டிருக்கும்போது, அத்தகைய திருமணத்தின மறு தரப்பினர் உயிருடன் இருந்தால் இச்சட்டத்தின்கீழ்ச செய்து கொள்ளும் திருமணம் செல்லாது.

ஆ) திருமணத்தின் தரப்பினர்கள் செல்லக்கூடிய இசைவு (புத்தி சுவாதீன மினமையால்) கொடுக்க முடியாத சூழ்நிலையில் இருந்தால் இத்திருமணம் செல்லாது.

இ) திருமணத்தின் தரப்பினர்கள் சித்தம் குழம் பியவர்களாக அல்லது பித்தர் நிலையினர்களாக இருந்தால் திருமணம் செல்லாது.

ஈ) திருமணம் செய்து கொள்ளும் ஆணமகன் 21 வயதும், பெண் மகள் 18 வயதும் நிரம்பியவர் களாக இருக்க வேண்டும்.

உ) திருமணத்தின் தரப்பினர்கள், தடை செய்யப்பட்ட உறவு முறைக்குள் இருந்தால் அவர் கள் பழக்கவழக்கப்படியும், வழக்காறறின் படியும் அத்திருமணங்கள் அவர்கள் இனத்தில் அனுமதிக்கப் படுமேயானால், திருமணச் - சிறப்புச் சட்டம் அவற்றை வாழத்தி வரவேற்கின்றது.

சிறப்புத் திருமணச் சட்டத்தின்கீழ்த் திருமணம் செய்து கொள்ளக் கீழ்க் காணும் நடைமுறைகள் பின் பற்றப்பட வேண்டும். இவை பின்பற்றப்படவிலலை என்றால், செய்து கொணட திருமணம் செலலாது

**அறிக்கை:** திருமணம் செய்து கொள்ள விரும்பும மணமக்கள், தங்கள் விருப்பத்தினையும், திருமணம் செய்து கொள்ள விரும்பும் தேதியினையும் அவர்களு டைய குடியிருக்கும் முகவரியினையும் குறிப்பிட்டு 15 நாட்களுக்கு முன்னரே திருமணப் பதிவு அதிகாரிக்கு அனுப்ப வேண்டும். திருமணம் செய்து கொளளு

வோருள் ஒருவராவது அநத முகவரியில் குறைந்தது 30 நாள்கள் தங்கி இருக்க வேணடும். இவ்வாறு கொடுத்த அறிக்கை 3 மாத காலங்களுக்கு மட்டுமே செல்லும் 3 மாத கால கட்டத்திற்குள் திருமணம் செய்து கொள்ளவிலலையானால புதிய (திருமண) அறிகையினை அவர்கள் கொடுக்க வேணடும்.

**அறிக்கை வெளியிடல்:** திருமணம செய்துகொள்ள விழையும் மணமக்கள தங்கள் விருப்பத்தினைப் பதி வாளருக்குத் தெரிவித்தவுடன, அவர் அதனை அதற கென வைத்திருக்கும் பதிவுப் புத்தகத்தில் பதிவு செய்துகொணடு, அந்த அறிக்கையின நகலினை அறி விப்புப் பலகையில் ஒட்டச் செய்து, அனைவருககும் தெரியப்படுத்துவார். இத்திருமணம் குறித்து மறுப்புத் தெரிவிப்பவர்கள அந்த அறிககை அறிவிப்புப் பலகை யில் ஒட்டிய 30 நாள்களுக்குள் தெரிவிகக வேணடும. அந்த மறுப்பு அறிக்கையினைத் திருமண அதிகாரி 30 நாளகளுக்குள் பரிசீலனை செய்து ஏற்றும கொள ளலாம; தளளியும் விடலாம். அறிக்கையினைத் தள்ளு படி செய்யுமபோது, மறுப்புத் தெரிவித்தவாகள அதன்மீது மாவட்ட நீதி மன்றத்திறகு மேலமுறையீடு செய்து கொள்ளலாம். நீதி மனறத்தின் தீர்ப்பே இறுதியானது. அந்த முடிவினைப் பதிவாளர் ஏறறுக் கொளள வேண்டும்.

**பதிவாளரின் அதிகாரங்கள்:** திருமணப் பதிவாள ருக்கு, உரிமை இயல் நீதி மன்றங்களுக்கு உளள அதி காரஙகளைச் சிறப்புத் திருமணச் சட்டப் பிரிவு 9 அளிக்கினறது. இநத அதிகாரததினபடி, அவர் சாட்சி யங்களை விசாரணை செய்ய அழைப்பாணைகளை (Summons) அனுப்பலாம்; சாட்சிகளைச் சததியப் பிரமாணம் செய்து வைத்து விசாரணை செய்யலாம். பதிவேடுகளைக் கணடுபிடிக்கவும், பார்வையிடவும், சமர்ப்பிக்குமபடி ஆணையிடவும் அதிகாரங்கள வழங கப்பட்டுள்ளன. பிரிவு 11-இன படி, திருமணம செயது கொள்ள விரும்பும் மணமக்களும், அவர்கள் கொணடு வரும் 2 சாட்சிகளும் நடைபெறப் போகும் திருமணம் பற்றி அறிவிப்புச செய்து பதிவாளர் முன் கையொப் பம் இட வேணடும்.

**இடமும் முறையும்:** இதுபற்றித திருமணச் சிறப்புச் சட்டப் பிரிவு 12 கூறுகினறது. திருமணப் பதிவாள ரின அலுவலகத்திலேயே இத்திருமணம் நடைபெற லாம்; அல்லது திருமணப் பதிவு அதிகாரி அலுவலகத திற்கு அருகிலும் நடைபெறலாம். இந்தத் திருமணம் எநத முறையிலும் (அதாவது, சாதி, சமயம், பழகக வழக்கஙகள முறைப்படியும்) இருக்கலாம். குறிப் பிட்டுச சொல்லும்படி இந்த முறையில்தான இருகக வேணடும் என்ற கட்டாயம் கிடையாது. இந்து சமய முறைப்படியோ முகமதிய சமய முறைப்படியோ கிறித்தவ சமய முறைப்படியோ திருமணம் செய்து கொண்டிருந்தால்கூட அத்தகைய திருமணங்களையும இந்தச் சிறப்புத் திருமணச் சட்டத்தின்கீழ்ப் பதிவு செய்துகொள்ளலாம் என்ற சிறப்புச சலுகை வழங்கப் பட்டுள்ளது. ஆனால், அப்படிப் பதிவுசெய்து கொள்ள வேண்டுமானால் இந்தசசிறப்புத் திருமணச் சட்டத்தில் கூறியுள்ள நிபந்தனைகளைப் பூர்த்தி செய்யவேணடும்.

**திருமணச் சான்றிதழ்:** திருமணம் குறித்துப் பதி வாளர் கொடுக்கும் சான்றிதழே திருமணம் குறித்த அறுதிச் சான்றுறுதி ஆகும். இதற்காகப் பிரிவு 13இச் சட்டத்தில் இயற்றப்பட்டுள்ளது. நடைபெற்ற சிறப் புத் திருமணம இச்சட்டப்படி, அதற்கென்று வைக்கப் பட்டுள்ள பதிவுப் புத்தகத்தில் பதிவு செய்யப்படும். அதில் திருமணப் பதிவு அதிகாரியும், திருமணத் தம் பதிகளும் சான்றுரையர்களும் (சாட்சிகள்) கையொப் பம் இடவேண்டும்.

**மேல்முறையீடு:** திருமணப் பதிவு அதிகாரி திரு மணத்தைப் பதிவு செய்ய மறுக்கும் போது, பாதிககப் பட்டவர்கள், மாவட்ட உரிமையியல் நீதிமன்றத்திற் குத் திருமணப்பதிவு அதிகாரி மறுப்புத் தெரிவித்த 30 நாள்களுக்குள் மேல் முறையீடு செய்து கொளள லாம். மாவட்ட உரிமையியல் நீதி மனறத்தின் தீர்ப்பே இறுதித் தீர்ப்பாகும்.

**விளைவுகள்:** இதனைப் பற்றிச் சிறப்புத் திருமணச் சட்டம் பிரிவு 18 கூறுகின்றது. அதன்படி, திருமணம் பதிவு செய்யப்பட்ட நாளிலிருந்து தமபதிகளுக்கு இந்தச் சட்டமே பொருந்தும். அவர்களின வாரிசு களுக்கும் இச்சட்டமே பொருந்தும். திருமணத்தமபதி கள் வேறு முறைப்படி திருமணம் செய்திருந்தாலும் (அதாவது 10 ஆண்டுகளுக்கு முன்பு இந்து முறைப் படி திருமணம் செய்து கொண்டவர்கள் கூட) இந் தச் சிறப்புத் திருமணச் சட்டத்தின்கீழ்த் தங்கள் திரு மணத்தை இன்றும் பதிவு செய்து கொள்ளலாம். பதிவு செய்து கொண்ட நாள் முதல் அவர்கள் இச் சட்டத்தினகீழ்த் திருமணம் செய்து கொண்டவர் களாகக் கருதப்படுதலவேண்டும். அவர்களின் குழந்தை கள் சட்ட முறைப்படி (Legitimate) பிறந்த குழந்தை களாகக் கருதப்பட வேண்டும். அப்படித் திருமணம் செய்து கொள்ளுவோர், பிரிவினை ஆகாத கூட்டுக் குடும்பத்தில் இருந்து பிரிநது சென்றவர்களாகக் கரு தப்படுவார்கள்.

**கழுவாய்கள்:** 1. சிறப்புத் திருமணச் சட்டம் பிரிவு 22, நீதிமுறைப்படி சேர்ந்து குடுமபம் நடத்த உளள உரிமைகள் (Restitution of Conjucal rights) பற்றிக் கூறுகின்றது. 2. கணவனோ மனை வியோ தகுந்த காரணம் இன்றி, இல்வாழ்க்கையில்

இருந்து விலகிச் சென்று தனித்து இருப்பாரேயானால், பாதிக்கப்பட்டவர் சேர்ந்து வாழும் பொருட்டு உரிமையியல் நீதிமன்றத்தில் வழக்குத் தொடுக்கலாம்.

3. சிறப்புத் திருமணச் சட்டம் பிரிவு 34 நீதி முறைப்படி பிரிந்து வாழும் உரிமை (Judicial Seperation) கொடுக்கிறது. இதற்கான விண்ணப்பத்தினையும் மாவட்ட நீதிமன்றத்தில் திருமணத் தம்பதியர் கொடுக்கலாம். அதற்குண்டான நிபந்தனைகளை இச்சட்டத்தின் பிரிவு 27 கூறுகின்றது. அவை பின் வருவன:

1. எதிர்வாதி வேறு ஒருவருடன் உடல் உறவு கொண்டு இருப்பாரேயானால்,
2. வாதியை இரண்டு ஆண்டுக் காலத்திற்கு ஒதுக்கி வைத்திருந்தால்,
3. எதிர்வாதி ஏழு ஆண்டுச் சிறைத் தண்டனை அனுபவிக்க வேண்டியிருக்குமேயானால்,
4. வாதியை எதிர்வாதி கொடுமைக்கு உள்ளாக்கி இருப்பாரேயானால்,
5. தரப்பினர்கள் பித்தர் நிலையிலோ (Insane) சித்தம் கலங்கிய நிலையிலோ (Mental disorder) இருப்பாரேயானால்,
6. எதிர்வாதிக்குத் தொழுநோய், மற்றும் பால் சம்பந்தமான நோய் குணமாக்க முடியாத அளவுக்கு முற்றியிருந்தால்,
7. எதிர்வாதி ஏழு ஆண்டுக் காலமாகக் காணாமல் போய் இருப்பாரேயானால்,
8. நீதிமன்றம் எதிர்வாதியை, வாதியுடன் சேர்ந்து வாழ வேண்டும் என்று ஆணையிட்ட பின்னரும் அந்த ஆணையை நிறைவேற்றாமல் இருப்பாரேயானால, அவர்கள் பிரிந்து வாழலாம்.

**மணவிலக்கு:** மேலே கூறியிருக்கும் 8 காரணங்களுக்காக மணவிலக்குப் பெறத் திருமணத் தம்பதியருக்கு உரிமை உண்டு. இச்சட்டப்பிரிவு 28இன் படி தம்பதிகள் இருவரும் மனமொத்து (Mutual Consent) மணவிலக்குச் செய்து கொள்ளலாம். இச்சட்டப்பிரிவு 30இன்படி, மண விலக்குச் செய்து கொண்ட தம்பதியர் தங்களுக்கு விருப்பப்பட்ட ஒருவரைத் திருமணம் செய்து கொள்ளலாம்.

வாழ்க்கைப் படித்தொகை (Maintenance) இச்சட்டப்பிரிவு 36 மற்றும் 37-இன் படி நீதி மன்றம், மனைவிக்கும் குழந்தைகளுக்கும் வாழ்க்கைப் படித்தொகை கொடுக்க வேண்டும் என்று கட்டளையிடலாம். தி.ஆ.இ.

***சிறப்புத் தீர்மானம்:*** நிறுமங்களின் கூட்டங்களில் மேற்கொள்ளப்படும் நடவடிக்கைகள் தீர்மானங்களாக உருப் பெறுகின்றன. தீர்மானங்கள் சாதாரணத் தீர்மானம், சிறப்புத் தீர்மானம், சிறப்பு அறிக்கை தேவைப்படும் தீர்மானம் என்று மூன்று வகைப்படும்.

தீர்மானத்துக்கு எதிர்ப்பாக உள்ள வாக்குகளை விட மூன்று மடங்கு தீர்மானத்திற்கு ஆதரவாக இருந்து நிறைவேற்றப்படும் தீர்மானம் 'சிறப்புத் தீர்மானம்' எனப்படும். அதாவது, ஒரு பொதுக் கூட்டத்தில் நேரிலும், மாற்றாள் மூலமாகவும் வந்துள்ள உறுப்பினர்களில் 3/4 பாகம் பெரும்பான்மை பெற்று இத் தீர்மானம் நிறைவேற்றப்படும்.

**நிபந்தனைகள்:** 1) இதை இயற்றுவதற்குக் கூட்டப்படும் கூட்டத்திற்கு 21 நாள்கள முன்னறிவிப்புத் தர வேண்டும். 2) மேலும் ஒரு தீர்மானம் சிறப்புத் தீர்மானமாகி நிறைவேற்றப்பட இருப்பது குறித்து நிறும (Company) உறுப்பினர்களுக்கு அனுப்பும் அறிவிப்பினைக் குறிப்பிடுதல் வேண்டும். 3. கூட்டம் நடைபெறும் விவரமும் கூட்டத்தில் முடிவு செய்யப்பட வேண்டிய நடவடிக்கைகளும் கூட்ட அறிவிப்பில் குறிப்பிடப்பட்டிருத்தல் வேணடும். கூட்டம் உரிய முறையில் கூட்டப்பட்டிருத்தல் வேண்டும். சிறப்புத் தீர்மானத்தின் படி ஒன்றினைத் தீர்மானம் நிறைவேற்றப்பட்ட நாளிலிருந்து 30 நாள்களுக்குள் நிறுமப் பதிவாளரிடம் சோப்பிக்க வேண்டும். நிறுமச் சட்டமும்நிறுமச் சங்க நடைமுறை விதிகளும், குறிப்பிட்ட சிலநடவடிக்கைகளைச் சிறப்புத் தீர்மானத்தின் மூலமாகவே மேற் கொள்ளும் படி குறிப்பிடுகின்றன.

சிறப்புத் தீர்மானம் கீழ் வரும் நிலைகளில் நிறைவேற்ற வேண்டியுள்ளது.

1. நிறுமத்தின் பெயர் மாற்றப்படும் போது;
2. நிறும அமைப்புப் பத்திரத்தின் நோக்கங்கள் திருத்தப்படும்போது;
3. நிறும மூலதனம் குறைக்கப்படும்போது;
4. நிறுமங்களின் பதிவு பெற்ற அலுவலகத்தை ஒரு மாநிலத்திலிருந்து மற்றொரு மாநிலத்திற்கு மாற்றுவதற்காக நிறுமங்களின் அமைப்புப் பத்திரம் திருத்தப்படும்போது;
5. சங்க நடைமுறை விதிகள் மாற்றப்படும் போது;
6. சங்க நடைமுறை விதிகள் அனுமதி அளிக்குமானால் நிறும மூலதனத்திலிருந்து வட்டி கொடுக்க விழையும் போது;

7. நிறுமம் தன்னுடைய நிலையைப் பரிசீலனை செய்யும் பொருட்டுக் கண்காணிப்பாளர்களை நியமிக்க விரும்பும் போது;
8. நிறுமங்களின் அழையா முதலைக் (Uncalled capital) காப்பு மூலதனமாக (Reserve capital) மாற்ற விழையும் போது;
9. நிறுமச் சங்க நடைமுறை விதிகளில் குறிப்பிட்டிருந்தால் இயக்குநர்களின் சம்பளத்தை உறுதி செய்யும் பொழுது;
10. ஓர் இயக்குநரை நிறுமங்களிடமிருந்து இலாபம் ஈட்டும் வகையில் ஒப்பந்தத்தில் ஈடுபட அனுமதிக்கும் பொழுது;
11. நிறுமச் சட்ட முறைப் புத்தகங்கள், முதற் குறிப்பகராதிகள் ஆகியவற்றை நிறுமம் பதிவு பெற்ற அலுவலகத்திலிருந்து வேறு இடங்களில் வைத்துக் கொள்ள விழையும் பொழுது;
12. நிறுமம் கலைக்கப்பட்ட பிறகு நிறுமங்களின் புத்தகங்கள், தாள்கள் முதலியன எவ்வாறு பயன்படுத்தப்பட வேண்டும் என்னும் நிலையில்;
13. நிறுமம் நீதிமன்றத்தின் மூலம் கலைக்கப்படும் பொழுது;
14. இயக்குநர்களுக்கு ஊதியமாக நிறும இலாபத்திலிருந்து ஒரு குறிப்பிட்ட விழுக்காட்டுப் பகுதியினை நிறுமம் செலுத்த விழையும் பொழுது;
15. ஒரே நிருவாகத்திலுள்ள வேறொரு நிறுமத்திற்குக் குறிப்பிட்ட நிறுமம் கடன் கொடுக்க விழையும் பொழுது;
16. தன் விருப்பக் கலைப்பில் நிறுமம் ஈடுபடும் பொழுது;
17. இயக்குநர்கள் பொறுப்பை வரையறையில்லாத பொறுப்பாக்க விழையும் பொழுது.

எடுத்துக்காட்டாக, ஒரு நிறுமத்தின் பெயரான கண்ணன் மருந்து நிறுமம், வரையறுக்கப்பட்டது என்பதனைப் பார்த்திபன் மருந்து நிறுமம், வரையறுக்கப்பட்டது என மாற்றிடச் சிறப்புத் தீர்மானம் தேவைப்படுகிறது.

தீர்மானங்கள் நிறைவேற்றிட வழக்கமாகப் பயன்படும் முறைகளான ஆரவார முறை (Acclaration), வாய்க் கூற்று முறை (Voice vote), பிரிவு முறை (Division), கை தூக்கல் முறை (Show of hands), வாக்குச் சீட்டு முறை (Ballot method), வாக்கெடுப்பு முறை (Poll method) போன்றவைகளில் ஏதாவது ஒன்றைப் பயன்படுத்திச் சிறப்புத் தீர்மானத்தை நிறைவேற்றிடலாம். கே.என்.இரா.

**துணை நூல்கள்:**

Ashok K. Bagiral, Vikas Publishing House, PVT Ltd, New Delhi, 1982.

Shah, S.M., Lectures on Company Law, Tripathi Private Ltd., Bombay, 1981.

***சிறப்புலி நாயனார்***: சைவ சமய நாயன்மார்களுள் ஒருவராகிய இவர் பொன்னி வளநாட்டில் சிறப்புமிக்க திருஆக்கூரில் பிறந்தவர்; அந்தணர் குலத்தவர்; வறுமையுற்று வருவோர்க்கு இல்லை என்னாது ஈயும் இயல்பினர். இவர் பிறந்த ஊரில்மறை ஒலி முழக்கம் மாமழை முழக்கத்தினும் பெரிதாக இருக்கும். வேள்விச் சாலைகளின் ஆகுதிப் புகை அகிற் புகையின் மிக்கிருக்கும். அந்தணர் அருந்தவமியற்றும் ஆக்கூரில் தோன்றிய சிறப்புலி நாயனார் திருநீலகண்டத்தவராகிய இறைவன் திருத்தொண்டினை மேற்கொண்டு ஈகைத் திறத்தினில் தலைசிறந்து நின்றார்.

சிவபெருமானிடம் அன்பு பூண்ட அடியார்கள் வந்த போதில் அவர்களை வணங்கிப் பணிந்து, ஆதரவுடன் முன்பு நின்று இனிய கூறி, நல்லமுதமூட்டி, அவர் விரும்பியவற்றை நல்கி நீடுமின்பத்தில் நிலைத்து இருந்தார்.

ஐந்தெழுத்தினை அன்புடன் ஓதுதல், அங்கிவேட்டு வேள்வி செய்தல் முதலியவற்றை நாளும் செய்து அடியாரிடத்து இடையறா அன்பு பூண்ட இவர் ஈசன் திருவடி நிழலில் இடம்பெற்றார்.

இவரை 'மறைப்பெருவள்ளலார்' எனச் சேக்கிழாரும், 'சீர்கொண்ட புகழ் வள்ளல் சிறப்புலி' எனச் சுந்தரரும் பாடிப் பரவியுள்ளனர். ஜி.ஆர்.கி.

***சிறார் நீதிமன்றம்***: வயது வாராதோரை விசாரிக்கும் ஒரு குற்றவழக்கு நீதிமன்றம் சிறார் நீதிமன்றம் (Juvenile Court) எனப்படும். இளங்குற்றவாளி ஒருவர் பதினாறு வயதிற்கு உட்பட்டவராக இருக்கும்போதும், அவர் மரணதண்டனை அல்லது ஆயுள்தண்டனை விதித்துத் தண்டித்தற்குரிய குற்றங்களைச் செய்யாதிருக்கும்போதும், அவரை ஒரு தலைமை நீதித்துறை நடுவர் மன்றம் விசாரிக்கும்; அல்லது 1960-ஆம் ஆண்டுக் குழந்தைகள் சட்டம் அல்லது இளங்குற்றவாளிகளை வழிப்படுத்துதற்கும் அவர்களின் பயிற்சிக்கும் புனர்வாழ்விற்கும் ஏற்பாடு செய்கிற அவ்வப்போது அமுலிலுள்ள வேறெந்தச்

சட்டத்தின்படி சிறப்பாக அதிகாரமளிக்கப்பட்டுள்ள ஒரு நீதிமன்றம் விசாரிக்கும். பு வே.

*சிறிய திருமடல்*, வைணவ சமயத்தைச்சார்ந்த ஆழ்வார்களுள் ஒருவராகிய திருமங்கை ஆழ்வாரால் இயற்றப்பட்ட நூலாகும். ஆழ்வார் தம்மை நாயகியாகவும் நாராயணனை நாயகனாகவும் கொண்டு சிற்றின்பச்சுவை நனி சொட்டச் சொட்டப் பாடப்பட்ட இலக்கியமாகும். இவர் சிறிய திருமடல் எனவும், பெரிய திருமடல் எனவும் இருநூல்கள் இத்திறத்தில் இயற்றியுள்ளார். தான் விரும்பிய தலைவியினை அடையமுடியாத தலைவன் பனை ஒலையால் குதிரை போல் செய்து,தலைவியின் உருவத்தினை ஒரு கிழியில எழுதி ஊர்வலம் வந்து அழிதல் என்ற முறையில் காதல் வயப்பட்ட தலைவன் மேற்கொள்ளும் செயலே மடலேறல் என இலக்கியங்கள் கூறுகின்றன.அதனால் 'மடலேறுதல்' என்பது தலைவியை அடையப் பல காலும்முயன்று முடியாத தலைவனின் இறுதி முயற்சியென்றே கூறலாம். இவ்வாறு, மடலேறுதல் தலைவற்கே உரிய செயலாக இலக்கணங்கள், இலக்கியங்கள் கூறியிருப்பினும், வழக்கிற்கு மாறாகச் சிறிய திருமடல் தலைவியே மடலேறுவதாகக் கூறுவது இலக்கியப் புதுமையாகும். 'கடலன்ன காமம் உழநதும், மடல் ஏறாப், பெண்ணிற் பெருந்தக்கது இல்' என வள்ளுவர் கூறும் வரையறையினை மீறும் செயலாகும் இது. கடல் போன்ற காமம் மீதூரப் பெற்றாலும் மகளிர் முறை மாறி மடல் ஏறுதல இல்லை என அறுதியாக வளளுவர் கூறுகின்றார். ஆனால், திருநாரணன் மீது காமம் மிகக்கொண்டு உழந்த தலைவியாகிய பரகால நாயகி இங்கு மடலேறத் துணிகின்றாள்.திருமங்கை யாழ்வார் இம் முறை மாற்றத்திற்குக் காரணமாக, 'கடலன்ன காமம் உழந்தாலும் தமிழ்ப் பெண்டிர் மடலேறார் என்பதுதமிழர் கணட நெறி; நான் இத்தமிழ் நெறியினைப் பினபற்றாது வடவர் நெறியினைப் பற்றி முறை மாறி மடலேறத் துணிகின்றேன்' என்று விளக்கம் தந்துள்ளார். இக்கூற்றினால் பரகால நாயகி பரந்தாமனாகிய தலைவன் பால் கொண்டுளள எல்லையற்ற அன்பினை - பக்தி மேம்பாட்டினை - அறிய முடிகிறது. பேரின்ப நிலையினை எய்துதற்கு உயர்ந்த சிற்றின்ப நெறியும் கருவியாக அமையும் என்பதனை இச்சிறிய திருமடல் விளக்கிக் காட்டிப் பேரின்ப உலகிற்கு வழிகாட்டும் வாயிலாகத் திகழ்கிறது.

இச்சிறிய திருமடல் அமைப்பு அகத்துறையில் வெறியாட்டயர்தல்' என்பதனை ஒத்துள்ளது.தலைவியின் வேறுபாட்டை உணர்ந்த தாய், பலவாறாக எண்ணிக் குறி சொல்வாரை அழைத்து. நேர்ந்து கொள்கின்றாள். ஒப்பனையோடு தோழியர்களுடன் சென்ற தலைவி செங்கண்மால் ஆடிய குடக்கூத்தில் தன் உள்ளத்தைப் பறி கொடுத்துப் பித்துற்றுப் பேதலித்தாள்.அவ்வேறுபாட்டினைக் களையவே குறி சொல்லும் சிலரை அழைத்துத் தாய் வினவுகின்றாள். பேராயிரம் உடையவனின் காரார் திருமேனி கண்டே இம்மங்கை மாறுதல் கொண்டார் என்று அவர்கள் கூறுகின்றனர்.பேராயிரம் கொண்ட பிரானகுடிகொண்டு விளங்கும் திருக்கோயில்களையுடைய நூற்றெட்டு வைணவத் திருத்தலங்களையும், அவற்றின் பெருமையினையும் கூறி அத்தகைய பெருமாளைக் கூடுவேன். அவ்வாறு கூடாது ஒழிந்தால் மடல் ஏறவேன் எனப் பரகால நாயகி கூற்றில் அமையப் பெற்ற காவியமே இச்சிறிய திருமடல் ஆகும். இதன்கண் அழகிய சில பழமொழிகளும், அன்று நாரணன் நிகழ்த்திய அரும்பெருஞ் செயலகளும், அப்பெருமான் உகந்தருளும் திருத்தலச் சிறப்புகளும் விளக்கமாகக் கூறப்பட்டுள்ளன. இம்மடல் பொதுவாக இறைப் பற்றுடையோர்க்கும் குறிப்பாக வைணவர்கட்கும் ஒரு பக்திச் சுரங்கமாக விளங்குகிறது. கி.கோ.

*சிறுகதைகள்:* உரைநடையால் ஆக்கப்பட்ட புனைகதைகளின் வகைகளுள் ஒன்று சிறுகதை. புதினத்தையும் குறும் புதினத்தையும் விடச் செறிவானது; அழுத்தமானது. இவை அனைத்தும் கதையிலக்கியத்தின் மாற்றுருவங்கள்.கதை என்ற பெயரில் கற்பனை உலகிலேயே நடமாடிய நிலைமாறி எதனையும் உண்மை நோக்கில், இயற்கையோடு இணைந்து நோக்கவேண்டும் என்ற எண்ணம் தோன்றியபோது தான் சிறுகதைகளும் புதினங்களும் தோன்றின. சிறுகதை ஏதேனும் ஒன்றை மையப்படுத்துவது; சுருங்கச் சொல்லி விளங்கவைப்பது. எனவே, தேவையற்ற சொல் ஒன்றுகூட இடம்பெறக்கூடாது என்பர் எட்கர் ஆலன்போ (Edger Allan Pee). சிறுகதையில் கட்டுக் கோப்பே முககியம் என்பர் உருசிய நாட்டு ஆண்டன் செக்காவ (Anton Chekhov). நிகழ்ச்சிகளையும் உண்மைகளையும் வெளிப்படுத்தும் விதமே முதன்மையானது என்பர் இ சே.ஓ. பிரியன் (E.J.O. Brian). குதிரைப்பந்தயம்போல் விறுவிறுப்பாக அமைய வேணடும் என்பர் செட்சுவிக்கு (Sedgewick). வாழ்வின் ஏதோ ஒரு சிறுபகுதியை உயிர்க்களையோடு படம்பிடித்துக் காட்டுகிறது சிறுகதை. எனவே, தனித்தொரு சூழமைவே(Single Situation)சிறுகதையில் முக்கியம் என்பர் எவ்லான்மே ஆல்பிரைட்டு. (Evelynmay Albright). 'சுவையான ஒரு நிகழ்ச்சி அல்லது சூழ்நிலை அமைப்பு, கவர்ச்சியான ஒரு காட்சி, நெருங்கிப் பின்னப்பட்ட சிறு நிகழ்ச்சிகள், ஒருவரின் தனிப்பண்பு, ஒரு சிறு அனுபவம்,வாழ்க்கை

யின் ஒரு பெற்றி, அற உணர்வால் விளைந்த ஒரு சிக்கல் இவற்றுள் ஏதேனும் ஒன்று அல்லது இவை போன்ற ஏதேனும் ஒன்று நல்ல சிறுகதையின் அடிப் படையாக அமையலாம்'' என்பர் முனைவர் மு.வ. சிறுகதைகளுக்கு முதன்மையாக வேணடும் இருபண்பு கள் முழுமையும், ஒருமை அழுத்தமுமே என்பர். இந்த ஒருமைக்கு மாறாக ஒரு சொலகூட வரக்கூடாது. எந்த ஒரு நல்ல சிறுகதையிலும் சொல்வதைவிடச் சொல்லாமல் விடுவதுதான் மிகுதி. இச்சிறப்பை எர்னசுட்டு எமிங்வே மிதக்கும் பனிப்பாறைகளுடன் ஒப்பிட்டு விளக்குவார். கடலுக்கு மேலே கண்ணுக்குத் தெரியும் பகுதி மிகக் குறைவானது. புலப்படாத பகுதியே மிகுதி. அரைமணி நேரத்திலிருந்து இரண்டு மணி நேரத்திற்குள படிக்கக்கூடியதாக இருக்க வேண்டும். குறைந்தது சில நூறு சொற்களையும் மிகுந்த அளவு 7000-8000 சொறகளையும் கொண டிருக்கவேண்டும் என்றும், தொடக்கக் காலத்தில கருதப்பட்டது. சிறிய கதைகள் எல்லாம் சிறுகதைகள ஆகா எனற எண்ணம் இப்போது நிலை பெற்றுளளது. எனினும், சிறுகதையின் கவர்சசியும் வளர்ச்சியும் போதுமான அளவு அமைந்த அதன் சுருக்கத்திலேயே இருக்கிறது எனலாம். சில பாத்திரங்களை உள்ளடக் கிய ஒன்றிரண்டு காட்சிகளில் ஒரு கருப்பொருளை விளக்குவதே சிறுகதை என கூறுவது ஓரளவு பொருத்தமாகலாம். இதுதான் சிறுகதை எனத் திட்டவட்டமாக வரையறுக்க இயலாது.

**உலக அரங்கில் சிறுகதை:** உலக நாடுகள் எல்லா வற்றிலும் மிகப் பழஙகாலத்திலேயே கட்டுக்கதை களும் நீதிககதைகளும் வழங்கப்பட்டு வந்துள்ளன. இக்கதைகளில் பல இயற்கை இறந்த நிகழ்ச்சிகளைச் சித்திரிப்பவை. வரலாற்றை நோக்கும்போது மனிதன் பல்வேறு வகைகளில் கதை கூறி மகிழ்ச்சி அடைந் துள்ளான் எனத் தெரிகிறது. நையாண்டிக்கதை நூதனக்கதை, ஒட்டுவமைக்கதை, மந்திரதந்திரக் கதை கட்டுக்கதை என்ற வகைகளைக் காணமுடி கிறது. இவற்றின் மேல் வளர்ச்சியாக கி.பி. 19-ஆம் நூற்றாண்டில் தோன்றிய சிறுகதையைக் கருதுவதில் தவறில்லை. மேலும் அந்த நூற்றாண்டில் வணிக விவசாயமும் கைத்தொழில் வளர்ச்சியும் பெருக நில மானிய அமைப்புச் சிதையத் தொடங்கியது. இதன் தாக்கத்தால் கூட்டுக்குடும்ப வாழ்க்கை முறை சிதைந்து தனி மனிதன் முதன்மை பெறத் தொடங்கினான். தனிமனிதனுக்கும் சமுதாயத்திற் கும் உள்ள மரபுவழி உறவு பிறழத் தொடங்கியது. இதனால், ஏற்பட்ட தனிமனித, சமுதாயச் சிக்கல்கள் புனைகதைவடிவில் (புதினம், சிறுகதை) வெளிவரத் தொடங்கின. அமெரிக்கா, உருசியா, பிரான்சு, செரு மனி ஆகிய நாடுகளில் உரைநடையில் அமைந்த புனை கதைகள் தோன்றின. அமெரிக்கச் சிறுகதை மரபின் தோற்றுவாயாக கி.பி. 1819, 1820-ஆம் ஆண்டுகளில் வெளி வந்த வாசிங்டன் இர்வின் (Washington Irvin) என்பார் எழுதிய குறிப்பேடு தான் அமைந்தது. அதில் உள்ள இரிப்வான் விங்கிள் (Rip Van Winkle) என்பதுதான் முதல் அமெரிக்கச் சிறுகதையாகும். எட்கர் ஆலன்போ, நதானியல் ஆத்தர்ன் என்போர் கி.பி. 1832-ஆம் ஆண்டில் சிறு கதைகளை எழுதத் தொடங்கினர். ஆலன்போவின் பங்குக் குறிப்பிடத் தக்கது. பிரெஞ்சு நாட்டில் மாப் பசானும் உருசிய நாட்டிய துர்க்கசேவ், செக்காவ் ஆகியோரும் சிறுகதையை வளர்த்துள்ளனர். தொடக்கக்காலத்திலேயே இருவேறு வகையான போக் குகள் தென்பட்டன. மாப்பசான கதைகளில் மரபு நிகழ்ச்சிகளுக்கு முதன்மை தரப்பட்டது. செக்காவ் கதைகளில் மனித எணணங்களுக்கு முதன்மை தரப் பட்டது. இவ்விரு மரபுகளிலிருந்தும் வடிவக் கட்ட மைப்பை முதனமைப்படுத்தும் மூன்றாம் மரபு தோன்றியது. இலக்கிய வளர்ச்சியிலும் சிறுகதை வளர்ச்சியே முன்னணியில் நிற்பதாக அறியப்படு கிறது. இதற்குக் காரணம் மக்களின் மனப்போக்கும் இதழ்களின் ஆதரவுமேயாகும்.

**இந்தியாவில் சிறுகதை:** இந்தியாவில். வங்காள மொழியில்தான் முதன் முதலாகச் சிறுகதை இலக் கியம் செழித்து வளரத் தொடங்கியது. இரவீந்திர நாத தாகூர் புதுமரபின் முதல்வராகத் தம்மை வெளிப்படுத்திக் கொண்டவர். அசாமிய மொழியில் எல்.என். பெசுபரூவா என்பாரும், உருது மொழியில் பிரேம்சந்தும், இந்தியில் 'கிசோரிலால கோசுவாமி' யும்; தெலுங்கில் 'குசராடா அப்பாராவும்' மராத்தி யில் திலகர் கிருட்டிணாவும் சிறுகதை இலக்கியத்தைத் தொடங்கி வைத்தார்கள். சுருங்கச் சொன்னால் இருபதின் தொடக்கப் பகுதியில் சற்று முன்பின்னாக இந்திய மொழிகள ஒவ்வொன்றிலும் சிறுகதை இலக் கிய வடிவம் பிறந்தது எனலாம்.

**பழந்தமிழில் சிறுகதைக் கூறுகள்:** சிறுகதையின் வடிவம்தான் புதியதே தவிரக் கதைகள் புதிதல்ல. தொல்காப்பியச் செய்யுளியல் 171-ஆம் நூற்பாவில் வரும் 'பொருளொடு புணர்ந்த பொய்ம்மொழி' என்ற தொடருக்குப் பேராசிரியர் தரும் உரை மூலம் கதை புனைந்துரைத்தல் பண்டை இயல்பு என்பதை உணர முடிகின்றது. கலித்தொகையில் வரும் சில பாடல்கள் சிறுகதைகள் போன்றே அமைந்துள்ளன. காப்பியங் களில் வரும் (சிலம்பு, மேகலை) கிளைக்கதைகளும் இன்றைய சிறுகதைப் போக்கினையே நினைவூட்டு கின்றன.

**தொடக்க காலக் கதை முயற்சிகள்:** தமிழில் முதன் முதலில் உரைநடையில் சிறுகதையை எழுதி

யவர் வீரமாமுனிவர் ஆவார் (கி.பி. 1680-1748) அவர் எழுதி கி.பி. 1845-ஆம் ஆண்டில் வெளியான 'பரமார்த்த குருகதை, மக்கள் பேசும் எளிய வழக்கில் ஆனது. அன்றைய இந்து மதத் துறவிகளை எள்ளி நகையாடுதற் பொருட்டு எழுதப்பட்ட இது 'உரை நடை அங்கதம்' என்ற பாராட்டையும் பெற்றுள்ளது. மேலை நாட்டார் குறிப்பிடும் புனைகதை என்னும் வகையில் இதனை அடக்கலாம். இக்கால கட்டததில் தாண்டவராய முதலியாரால் எழுதப்பட்ட பஞ்ச தந்திர வசனமும், கதாமஞ்சரியும், வீராசாமி செட்டியாரின் விநோதரச மஞ்சரியும் (கி.பி.1876) வெளி வந்தன. சி. மாணிக்க முதலியாரின் கதாசிந்தாமணியும் (கி.பி. 1873), இராசேந்திரம்பிள்ளையின் பூலோக விநோதக் கதைகள் (கி.பி.1879) ஆகியனவும் இக்காலப் பகுதியில் எழுந்தன. பண்டித எம். எசு.நடேச சாத்திரியார் திராவிட மத்திய காலக் கதைகள், தக்காண பூர்வ கதைகள் ஆகியவற்றை கி.பி. 1886-ஆம் ஆண்டு வெளியிட்டார். இவ்வாறு வெளிவந்த கி.பி. 19-ஆம் நூற்றாண்டுக் கதைகளை ஒருசேர நோக்கும்போது கற்பனையும் உணர்ச்சியும் புலப்படக் கதை சொல்லும் நாட்டம் பண்டைக் கதாசிரியர்களுக்கு இருந்தமை நன்கு புலனாகிறது.

**சிறுகதைக் கூறுகள்:** சிறுகதைக் கூறுகளில் சிறப்பாகக் குறிக்கத் தக்கவை 1. கருப்பொருள் (Theme), 2. கதைப்பின்னல் (Plot), 3. பாத்திரப்படைப்பு (Characterisation). 4. நோக்குநிலை (Point of View), 5. பின்னணி (Settings) என்னும் ஐந்துமாகும். இக்கூறுகள அனைத்தும் ஒன்று மற்றொன்றோடு இணைந்து செயற்பட்டுச் சிறுகதைகளுககு ஒரு வடிவத்தையும் (Form), அமைப்பினையும் (Structures) தருகின்றன. ஒருமுக விளைவையும் (Unified Effect) உண்டாக்குகின்றன.

**கருப்பொருள்:** கருப்பொருள் என்பது கதையின் மொத்த வடிவமும் சுருக்கமாக உணர்த்தும் முழுப் பொருளே ஆகும். ஒரு படைப்பில் கருப்பொருள் நேரடியாகவோ மறைமுகமாகவோ அமையலாம். கதைப்பொருள் (Subject Matter) என்பதும் கருப் பொருள் (Theme) என்பதும் வேறு வேறானவை. கதை எதைப் பற்றியது எனபதைக் கூறுவது கதைப் பொருள். கதையின் எல்லாக் கூறுகளும் ஒன்றாக இணைந்து நின்று உணர்த்தும் முழுப்பொருள் யாது என்பதைப் பற்றிக் கூறுவது கருப்பொருள்.

**கதைப்பின்னல்:** கதை (Story) என்பதும் கதைப் பின்னல் (Plot) என்பதும் ஒன்றல்ல. கதையென்பது காலமுறைமைப்படி நடந்த நிகழ்ச்சிகளை அடுககிக் காட்டுவது. கதைப்பின்னல் என்பது அவ்வாறு அமையும் நிகழ்ச்சிகளிடையே காரண காரிய இயைபினை அமைத்துக் காட்டுவது. கதைப்பின்னலின் மூலம் கதாசிரியன் தனித்தன்மை புலனாகும்.

**பாத்திரப்படைப்பு:** சிறுகதையின் பாத்திரப்படைப்பு முக்கியமானது. ஆனால், முதன்மையானது என்று கூற இயலாது. பாத்திரமே கதைப் பின்னலை உருவாக்குகிறது. கதைப்பின்னல் பாத்திரத்தின் விளைவாகவும் அதனைச் சார்ந்ததாகவும் அமைகிறது. பாத்திரங்களைப் படைப்பதில் இரண்டு முறைகள் உள்ளன. 1. நேரடி முறை (Expository Method) 2. நாடக முறை (Dramatic Method). பாத்திரப் பண்புகளை ஆசிரியரே நேரடியாக விளக்கலாம். அல்லது பாத்திரங்களின் எண்ணம், கூற்று, உரையாடல், செயல் இவற்றாலும் விளக்கலாம்.

**நோக்கு நிலை:** கதை யாரால் கூறப்படுகிறது. கதையில் அவருக்குள்ள நிலையென்ன என்பதை இது எடுத்துரைக்கிறது. நோக்குநிலையில் பல வகை உண்டு. கருப்பொருளுக்கேற்பவே நோக்குநிலை அமையும். படர்க்கைக்கூற்று நோக்குநிலை (Third Person Point of View), தன்மைக்கூற்று நோக்குநிலை (First Person Point of View), பல்வேறுபட்ட நோக்குநிலை (Multiple Point of View), முழு உரையாடல் முறை (All Dialogue Method), கடிதமுறை ஆகிய நோக்கு நிலைகள் குறிப்பிடத்தக்கன.

**பின்னணி** கதை நிகழும் இடம் (Place), காலம் (Time) ஆகிய இரணடையும் குறிப்பதாகும் ஆசிரியர் நன்கு பழகிய இடங்களைப் பின்னணியாகக் கொண்டால் கதை சிறப்புப்பெறும்.

**தமிழ்ச் சிறுகதை முன்னோடிகள்:** இந்திய மொழி இலக்கிய வரலாறுகளில் ஒரு பரவலான மறுமலர்ச்சி அரும்பத் தொடங்கிய காலம் கி.பி. 19-ஆம் நூற்றாண்டின் முடிவும் 20-ஆம் நூற்றாண்டின் தொடக்கமும் ஆகும். ஆஙகிலக் கல்வியும் ஆங்கில இலக்கிய அறிமுகமும் இந்த மறுமலர்ச்சியின் தூணடுதல்களுக்குக் காரணங்களாக இருந்தன. ஆங்கில இலக்கிய உலகில் செல்வாக்குப் பெற்றிருந்த இலக்கிய வகைகளை இக்காலப் பகுதியில் வாழ்ந்த ஆங்கிலம் கற்ற தமிழறிஞர்கள் தமிழில் அறிமுகம் செய்ய விரும்பினர். இவர்களுள் குறிப்பிடத்தக்கவர்கள் பாரதி, வ.வே.சு., மாதவையா ஆகியோராவர். மூவரும் இலட்சிய நோக்கு (Idealism) உடையவர்கள். இலககியவாதிகளாக வாழ்ந்தவர்கள் என்பதைவிட அரசியல் சமூக இயக்கங்களின் தலைவர்களாக விளங்கியவர்கள் என்பது பொருந்தும். அவர்கள்

விளம்பர நோக்கத்துடனேயே சிறுகதைகளைப் படைத்தவர்கள.

**பாரதி:** இவர் 1908-1918 ஆகிய காலப்பகுதியில் தாகூரின் சில கதைகளைத் தமிழில் மொழியாக்கம் செய்தார். மேலும், பழைய மரபினையொட்டி கிளிக் கதை, நவதந்திரக் கதை ஆகியவற்றையும் எழுதினார். அவை சிறிய கதைகள் என்ற அளவில் நின்றுவிட்டனவே தவிரச் சிறுகதைகளாக உயரவில்லை. எனினும், பாரதியார் செய்துவைத்த அறிமுகம் தமிழ்ச்சிறுகதை வரலாற்றில் ஒரு நல்ல அடித்தளமாக அமைந்தது என மதிப்பிடுகிறார் இரா. தண்டாயுதம்.

**வ.வே சு.:** புதிய தமிழ்ச் சிறுகதை இலக்கியத்தின் தந்தை என்ற புகழுக்குரியவர் வ.வே.சு. ஐயர் ஆவர். ஆங்கிலம், பிரெஞ்சு, இலத்தீன், கிரேக்கம் செருமானியம் ஆகிய மொழிகளில் புலமை மிகுந்தவர். வ.வே.சு. ஐயரால் 1915-ஆம் ஆண்டளவில் எழுதப்பட்டு 1927-ஆம் ஆண்டில் 'மங்கையர்க்கரசியின் காதல்' என்ற பெயரில் நூலாக வெளிவந்த சிறுகதைகள் மேலைச் சிறுகதைக் கூறுகளைப் பின்பற்றி உருவானவை. சிறுகதைகளைச் சமுதாய மாற்றத்திற்குப் பயன்படுத்தலாம் என்று நம்பியவர். காதலும் வீரமும் இவர்தம் பாடுபொருள்கள். காவியப் பாங்கும் நாடக உத்திகளும் இவர்தம் கதைத் தன்மைகள. இவரது 'குளத்தங்கரை அரச மரம் சொன்னகதை' என்பதே தமிழின் முதற் சிறுகதை என்ற பெருமையினைப் பெறுகிறது. பாடுபொருளாலும் பாத்திரப் படைப்பாலும் நோக்குநிலையாலும் உத்திச் சிறப்பாலும் மொழிநடையாலும் சிறப்புப் பெறுவது இக்கதை என்பர் மா. இராமலிங்கம். 'சிறுகதை என்ற இலக்கிய வடிவத்தின் கட்டமைப்பைப் பற்றிய அறிவு' இவரிடம் முழுமையாக இருந்தது என்பர் ஆய்வாளர். நம்பகத்தன்மை, கலைத்தன்மை இவர் படைப்புகளில் குறைவு. கதைகளுக்கு முன் சூசிகை அல்லது முன்னுரை என்ற பெயரில் கதை விளக்கம் தந்துள்ளமை குறிப்பிடத்தக்கதாகும்.

**மாதவையா:** இவருடைய சிறுகதைகள் (கி.பி. 1872-1925) குசிகர் குட்டிக் கதைகள் என்ற பெயரில் இரண்டு தொகுதிகளாக வெளிவந்தன. முதலில் ஆங்கிலத்தில் எழுதப்பட்டு மொழியாக்கம் செய்யப் பெற்றவை இவை. சமூகச் சீர்திருத்தமே இவர் நோக்கம். சிறுகதைகளைக் கருவியாகக் கொண்டு சாதிவேற்றுமை, குழந்தைமணம், பொருந்தா மணம், மூடநம்பிக்கைகள் போன்றவற்றை எதிர்த்துப் பிரச்சாரம் செய்தவர். கலைத்தன்மை இவர் கதைகளில் குறைவு. சிறுகதையின் உருவத்துக்கு வ.வே.சு; உள்ளடக்கத்துக்கு மாதவையா எனப் பாராட்டுவர் சி.சு. செல்லப்பாவும்இரா.தண்டாயுதமும். சிறுகதைத்துறை 1925-க்குப் பிறகு ஏறத்தாழ 7,8 ஆண்டுகள் வளர்ச்சி பெறவிலலை.விடுதலை தாகம் கொழுந்து விட்டெரிந்ததாலும், கதைகள் இளைஞர் மனத்தைக் கெடுப்பன என்ற தவறான எணணம் முதியோர் நடுவே ஏற்பட்டு விட்டதாலும் சிறுகதை நூலகம் தேக்கமடைந்தது.

**மணிக் கொடியும் பிற இதழ்களும்:** சிறுகதை 1930 முதல் மீண்டும் உயிர்ப்புப் பெறத் தொடங்கியது. கல்கி, இரா. கிருட்டிண மூர்த்தி, கே. சீனிவாசன், சங்கு சுப்பிரமணியம், டி.எசு. சொக்கலிங்கம் ஆகியோரை ஆசிரியராகக் கொண்டு வெளிவந்த ஆனந்தவிகடன், மணிக்கொடி,சுதந்திரச் சங்கு, காந்தி ஆகிய இதழ்கள் சிறுகதையாளர்க்கு ஊககம் அளித்தன. கல்வியறிவு பெற்ற நடுத்தர வருக்கத்தினர் ஆர்வத்தோடு இத்துறையில் ஈடுபட்டனர். எனவே, கதையிலக்கியம் பற்றிய கட்டுரைகளும் விவாதங்களும் இதழ்களில் வெளிவரத் தொடங்கின. 1933-இல் அரசியல் ஏடாகத் தோன்றி 1935-இல் முழுக்க முழுக்கச் சிறுகதை ஏடாக மலர்ந்த மணிக்கொடி, சிறுகதை இலக்கிய வானில் ஒரு விடிவெள்ளி எனப் புகழப்பெறுகிறது. பல புதிய எழுத்தாளர் தோன்றினர். உலகத்தின் சிறந்த கதைகளோடு போட்டியிடக்கூடிய பல சிறுகதைகள் இவ்வேட்டில் வெளிவந்தன. புதுமைப்பித்தன், கு.ப. இராச கோபாலன், எம்.வி. வெங்கட்ராமன், கா.நா. சுப்பிரமணியம், பிஎசு.இராமையா, ஆர். சண்முகசுந்தரம், ந. சிதம்பர சுப்ரமணியம், கி.ரா., தி.ச.ர., ந. பிச்சமூர்த்தி, சி.சு. செல்லப்பா, சங்கு சுப்பிரமணியம் போன்ற பல்வேறு நோக்கும் போக்கும் உள்ளவர்கள் இவ்விதழில் தரமான சிறுகதைகளைப் படைத்தனர். இவர்கள் அனைவரும் புதியன படைக்க விரும்பியவர் என்பது குறிப்பிடத்தக்கது. புதுமைப்பித்தனின் 'ஞானக்குகை', ந. பிச்சமூர்த்தியின் 'தாய்' தி.ச.ர.வின் 'பைத்தியக்காரி' முதலிய கதைகள் குறிப்பிடத்தக்கனவாகும். மொழிபெயர்ப்பு, தழுவல் கதைகளுக்கும் இவ்விதழ் இடம் தந்தது. கலைமகள், பாரதமணி, அனுமான், க.நா.சு.வின் சூறாவளி, சந்திரோதயம், கு.ப.ரா.வின் கிராமஊழியன், வி,ஆர். இராசகோபாலனின் கலாமோகினி, தேனீ ஆகிய இதழ்களும் இலக்கியத்தரமான கதைகளை வெளியிட்டு வந்தன. இவ்விதழ்களின் மூலம் தங்களை இனங்காட்டிக் கொண்ட எழுத்தாளர்களாக வல்லிக்கண்ணன், தி. சானகிராமன், 'லா.ச.ரா.' ஆகியோரைக் குறிப்பிடலாம். ஆனந்தவிகடனும் (1933-34-ஆம் ஆணடுகளில்) கல்கியும் நடத்திய சிறுகதைப் போட்டிகள் கதை வளர்ச்சிக்குப் பெரிதும் உதவின.

**சிறுகதைத் துறையில் பெண்கள்:** பெண்களுள் வை. மு. கோதைநாயகி அம்மாள், பண்டிதை

இரா. இரங்கநாயகி, கி. சரசுவதி, சரோசா இராம மூர்த்தி, கமலா விருத்தாசலம்,கி.சாவித்திரி அம்மாள், குமுதினி, எம். எசு. கமலா, கு.ப. சேது அம்மாள் முதலியோர் குறிப்பிடத்தகுந்த தொடக்க காலச் சிறுகதையாசிரியர்கள் ஆவர். சிறுகதை எழுதியவர் களுள் 1930-59 என்ற காலப்பகுதியில் குறிப்பிடத்தகுந் தவர்கள் புதுமைப்பித்தன், கு.ப. இராசகோபாலன், கல்கி, பி.எசு. ராமையா, ந. சிதம்பர சுப்பிரமணியன, ந. பிச்சமூர்த்தி,மௌனி, ஆகியோர்.

**புதுமைப்பித்தன்:** காப்பிய வரலாற்றில், கம்பன் பெறும் இடத்தைச் சிறுகதை வரலாற்றில் புதுமைபித்தன் பெறுகிறார் என்பர் ஆய்வாளர். இவர் எழுதியனவாக ஏறத்தாழ 102 கதைகள். கிடைத்துள்ளன. துடி துடிக்கும் உயிரோட்டமுளள வேகமான நடை, துணிவாகக் கையாளப்பட்ட கதைக் கருக்கள், மனத்தில் நிற்கக் கூடிய கதை மாந் தர்கள், கதைப் பொருள்களின் இயல்புக்கேற்பச சொல்லும் முறை இவை புதுமைப்பித்தன் கதைகளை ஒப்பற்ற கதைகளாக்கிவிட்டன.சிறுகதையின் உருவம், உள்ளடக்கம், உத்தி அனைத்திலும் சோதனை பல செய்து, சாதனை கண்டவர். வறுமையும், வருக்க பேதமும் இவரது தவிர்க்கமுடியாத சிக்கல்கள். இவர் கதைகளின் அடிப்படை உணர்ச்சி நம்பிக்கை வறட்சி. விரக்தியும் கசப்பும் இவர் இயல்பு.

முதன் முதலில் சிறுகதை இலக்கியத்தில் உண்மை நெறியைப் புகுத்தியவர், நினைவோட்ட உத்தியைக் கையாண்டவர் இவரே எனப் பாராட்டுவர். மேலும் தமிழ்ச் சிறுகதையைத் தமிழ் இலக்கிய மரபுடன் இணைத்தார். தமிழ் இலக்கிய மரபில் வரும் நிகழ்சசி களைத் தலைசிறந்த கதைகள் ஆக்கினார் என்று பாராட்டி அன்று இரவு, சாபவிமோசனம், சிற்பியின் நரகம், அகல்யை, கபாடபுரம் ஆகிய கதைகளை எடுத்துக் காட்டுவர் பா.[a] சிவத்தம்பி. இவர் எழுதிய கதைகளுள் கடவுளும் கந்தசாமிப்பிள்ளையும், மனித யந்திரம், நாசகாரக் கும்பல்,'மிசின் யுகம்', தெருவிளக்கு, கவந்தனும் காமனும், கயிற்றரவு, வழி, வாடா மல்லிகை முதலியன குறிப்பிடத்தகுந்தவை.

**கு ப.ரா.:** பெண்மையின் மென்மையும் நளினமும் இவர் கதைகளில் காணப்படுகின்றன. நிகழ்ச்சிகளை விட நிகழ்ச்சிகளால் எழும் உணர்வு நிலையே இவர் கதைகளில் மிகுதியாகச் சித்திரிக்கப்படுகிறது. இவர் கதைகளுள் பெரும்பாலானவற்றின் பாடுபொருள் ஆண் பெண் உறவு. பெண்ணின் மனநிலைகளை, உணர்ச்சி முனைப்புகளை, ஆழமாக, அகலமாக, நுட்பமாக, கூர்மையாக, நாகரிகமாக இவர்போலக் கண்டவர் இன்றுவரை எவருமிலர் என்றுகூடக் கூறி விடலாம். எளிய சொறகள மூலம் ஆழ்ந்த நினைப்பு களை உருவாக்கியவர், உரையாடற் கலையில் வல்ல வர். பொருளாதார முறையால் பெண்ணுலகச் சிக் கல்களை இவர் அணுகவில்லை என்பது குறிப்பிடத் தக்கது. எனினும், தனிமனிதப் போக்கிலும் சமுதாயப் போக்கிலும் மாறுதல்களை விரும்பியவர். இவர் கதைகளில் மின்னற்கலை, விடியுமா? அடிமறந்தால ஆழம், அர்ச்சனை, உரூபாய், ஆறறாமை, சிறிது வெளிச்சம், மோகினிமாயை ஆகிய கதைகள சிறப் பானவை.

**கல்கி:** இவர் தமிழ்ச் சிறுகதைகளைப் பொதுமக் களின் சுவைக்கு உட்படுத்தியவராவர்; அதன் அகல வளர்ச்சிக்குக் காரணமானவர். படிப்பவர்களின மகிழ்ச்சியையும் உணர்ச்சியையும் முன் நிறுத்தி எழுத எண்ணியதால் மிக விரிவாக எழுதுவது இவர் இயல பாகிவிட்டது. ஏராளமான நிகழ்ச்சிகளை உளளடக் கியே இவர்தம் பல சிறுகதைகள் எழுதப்பட்டுள்ளன. கதைத் தொடக்கம் சிறப்பாக இருககும். முடிவுகள சுமாரானவை. பாத்திரப் படைப்பிலும் உரையாடற் பாங்கிலும் ஓரளவு வெற்றிபெற்றுள்ளார். நகைச்சுவை இழையோட எழுதுவது இவர் இயல்பு. கதைப்பின்ன லில் மிகையார்வம் உடையவர். எதிர்பார்ப்பு, புதிர் ஆகியவற்றை விரும்பிக் கையாண்டவா. நம்பகத் தன்மை இவர் கதைகளில் மிகக்குறைவு. சிறுகதைப் பொருள் வளர்ச்சிக்கும் இதழ்களின் மூலம் அதன் பரவலுக்குக் காரணமாக அமைந்தவர். இவா தம் கதைகளுள் சாரதையின் தந்திரம், ஒன்பது குழிநிலம், விடமந்திரம், கேதாரியின தாயார் ஆகியன சிறப் பானவை.

**க.நா சுப்பிரமணியம்:** இவர் சிறந்தகலைப்படைப்பு களையும் சாதாரண பத்திரிகைக் கதைகளையும் படைத்தவர். சாவித்திரி, மணிக்கூண்டு, கிரகப்பிர வேசம் என்பன இவர்தம் கலைப்படைப்புகள். மனித வாழ்வின் சில அடிப்படைச் சிக்கல்களே இவர் கதை களில் முதன்மை பெறுகின்றன. உணர்வு அடிப்படை யில் இன்றி அறிவு அடிப்படையில் சிக்கல்களை அணுகி யவர். சோதனை உணர்வுடன் சில கதைகளைப் படைத்துள்ளார்.

**ந பிச்சமூர்த்தி:** இவர் செறிவு, குறிப்பு நுட்பம், கவிதைப் பண்பு அமையத் தத்துவப் பார்வையோடு கதை எழுதியவர். தனி மனிதப் பண்பாடே சமுதாய நல்வாழ்விற்கு அடிப்படை என்ற கொள்கையாளர்.

**மௌனி:** புதுமைப்பித்தனால் சிறுகதை உலகின் திருமூலர் எனப் பாராட்டப்பட்டவர் மௌனி. இவர் ஆன்மிகக் கலைஞர். அகவயமான செய்திறன் நிறைந்த கதைப்போக்கை உடையன இவர் கதைகள். இவர்

மாயாவாதக் கொள்கையில் ஈடுபட்டவர். இவர்தம் பாடுபொருள இருண்மை நிறைந்தது மொழிநடை மருட்சியைத் தோற்றுவிப்பது. பிரபஞ்சகானம், அழியாச்சுடர், மனக்கோலம், மாறுதல், எங்கிருந்தோ வந்தான் ஆகிய கதைகள் சிறப்பானவை.

**நுவல்பொருளும் வடிவமும்:** இக்காலகட்டக் கதைகளின் நுவல்பொருளகளை 1. திருமணச் சிக்கல்கள (குழந்தைமணம், பொருந்தாமணம், கைம்பெண் மணம்), 2. திருமண முறையில உளள தடைகள் (சீதனம், சாதகம், உடற்குறைபாடு. சாதிகள்) 3. குடும்பச சிக்கல்கள் மற்றும் குடும்ப உறவு, 4.காதலும் காமமும், 5. குழந்தைமணம், 6. எழுத்தாளர் வாழ்க்கை, 7. காந்தியச் சிந்தனைகள் (மதுவிலக்கு, தீண்டாமை, விடுதலை), 8. சமுதாயத் தீமைகள் (சாதிக் கொடுமையும் மதமாற்றமும்), 9. தனி மனிதனும் சமூகமும், 10. ஆனமிக அனுபவங்கள், 11. சாவு, 12. வரலாற்றுச் செய்திகள், 13, இயற்கை இறந்த கூறு, 14. புராணம் என்ற தலைப்புகளில் வகைப்படுத்துவர் மா. இராமலிங்கம்.

வடிவங்களைப் பின்னல் சிறந்த கதைகள், புறச் சட்டகக் கதைகள், பாத்திர வரைபடக் கதைகள், வட்டாரக்கதைகள் அக நோக்குக் கதைகள், உருவகக் கதைகள், நையாண்டிக்கதைகள், நகைச்சுவைக் கதைகள், ஒட்டுவமைக்கதைகள் எனப்பிரித்துக்காட்டுவர்.

1950-70 ஆகிய காலப் பகுதியில் எழுதியோருள் விந்தன், அகிலன், சிதம்பரரகுநாதன், கு. அழகிரிசாமி, லா. ச. இராமாமிர்தம், தி. சானகிராமன், சி.சு. செல்லப்பா, தி.ச ர., இராசாசி, மு.வ., க.நா. சு., செயகாந்தன், ஆர். சூடாமணி, அநுத்தமா, இராசம் கிருட்டிணன்,நா. பார்த்தசாரதி,சுந்தர ராமசாமி முதலியோர் குறிப்பிடத்தக்கவர்கள்.

மேலே குறிப்பிடப்பட்ட எழுத்தாளர்களுள் சிலர் 1940 முதலே எழுதத் தொடஙகினாலும்கூட 50-70 என்ற காலப்பிரிவில் தான் தங்களை நிலைநிறுத்திக் கொண்டவர்களாவர்.

**அகிலன்:** ஏறத்தாழ 176 கதைகள் எழுதியுள்ளார். கதைச்சுவை கெடாமல் தாம் உணர்த்த வேண்டியவற்றை மிக நேர்த்தியாக உணர்த்த வல்லவர். சொல்லும் முறையும் எடுத்துக்கொள்ளும் கதைப் பொருள்களும் அமையும் வடிவமும் அழகிய நடையும் இவர் கதைகளின் சிறப்புக் கூறுகள. எரிமலை, வெள்ளம் வந்தது, காசுமரம், இரவும் பகலும், பூச்சாண்டி, மனிதர்கள், வெட்கம், பெரியமீன ஆகிய கதைகள குறிப்பிடத்தக்கவை.

**லா.ச.ரா.** தமிழ்ச் சிறுகதை இலக்கிய உலகில் தனித்தன்மை நிரம்பியவர். கவிஞனாகவும் தத்துவாசிரியராகவும் முகங்காட்டுபவர். நெருப்பு என்றால் வாய் வேக வேண்டும் என்ற கொள்கையாளர். குடும்பமே இவரது பல கதைகளின் கதைக்களமாகும். வெளியீட்டில் தமக்கெனத் தனிமுறையை உடையவர், வார்த்தைச் சிக்கனம் இல்லாதவர்; அலங்கார நடையாளர்; பிற உத்திகளைப் பின்பற்றியிருந்தாலும் நனவோடை உத்தியில் நனிசிறந்தவர். இவரது பாத்திரங்கள் மனமுதிர்ச்சியும் தத்துவப் போக்கும் உடையவை 'பாற்கடல்' இவரது முதன்மையான கதை. சாவித்திரி, சுவாலை, ஆடுபுலி, கொட்டுமேளம், இதழ்கள் முதலியன ஏனைய சிறந்த கதைகள்.

**தி. சானகிராமன்:** மனிதனிற் காணப்படும் தனித்துவப் பண்பின் ஆழத்தைக் காண முனைந்தவர். மானுடநேயம், உயர்களிடத்து அன்பு, இரக்கம், மன்னிப்பு ஆகியவற்றையே கதைப்பொருள்களாகத் திரும்பத் திரும்பச் சொன்னவர். பழமை புதுமை இரண்டுக்கும் பாலமாக விளங்கி இரணடிலும் உள்ள நல்லவற்றை எடுத்துக்காட்டியவர். மரபு வழியான கட்டுப்பாடுகளை மீறித் துணிச்சலான கதைக் கருக்களைக் கையாண்டவர். காத்திருந்து கதை படைத்ததால் உருவம் சிறந்த கதைகளைத் தமிழுக்குத் தந்தவர். உரையாடற் கலையில் வல்லவர். தஞ்சை மாவட்ட வட்டார வழக்கைத் தேவையான அளவு சிறப்பாகக் கையாண்டவர். இவருடைய கதைக் கருக்களை,1. மானுடநேயம் சிறப்பு, 2. பண்புக் குறைகள், 3. உழைப்பின் உயர்வு, 4. இறைப்பற்று, 5. குடும்ப நல உறவுச் சிக்கல்கள், 6, துறவுச் சிந்தனைகள், 7.பெண்கள் நிலை, 8.தீமைகள்-போராட்டங்கள் என எண்வகைப் படுத்துவர் ஆய்வாளர். பஞ்சத்து ஆண்டி, மறதிக்குக்கடன் தீர்ந்தது, கண்டாமணி, கோபுர விளக்கு, சிவப்பு ரிக்சா, மனம், செய்தி, மேரியின் ஆட்டுக்குட்டி, தேடல், இவனும் அவனும் நானும் போன்ற கதைகள் சிறந்த கதைகளாகும்.

**செயகாந்தன்:** தொடக்ககாலத்தில் புதுமைப்பித்தனைப் போல இடைக்காலத்தில்சிறந்து விளங்கியவர் செயகாந்தன். சமுதாயச் சிக்கல்களின் சிக்கலே இவர் கதைகள். இலக்கியத்தரமான கதைகள், சனரஞ்சகமாக அமையமாட்டா என்ற கருத்தைப் பொய்யாக்கியவர். சரசுவதி என்ற முற்போக்குப் பத்திரிகையின் மூலம் தம்மை வெளிப்படுத்திக கொண்டவர். இணையில்லாச் சிறுகதை எழுத்தாளராக 55-70 எனற காலப்பகுதியில் புகழ் பூத்தவர். உயிரோட்டமான நடை, வலுவான சொற்கள், உணர்ச்சி கலந்த நிகழ்ச்சிப் பின்னல்கள் இவர் கதைகளில் காணக்கிடப்பவை. உருவத்தைவிட சிறுகதைப் பாடு பொருளில் கவனம் செலுத்தியவர்.

ஆசிரிய ஆளுமை எல்லாக் கதைகளிலும் தெரிவது குறிப்பிடத்தக்கது. தருக்கமும் விவாதமும் இவர் பாத்திரங்களின் பொதுவியல்பாகும். வேகம் நிரம்பிய உணர்ச்சிப் பெருக்குடன் எழுதியவர்; சமுதாயத்தின் நலிந்தபகுதிகளைப் படம் பிடித்தவர்; அமுக்கப்பட்டவரின் சிக்கல்களை அழுத்தமாக எடுத்துக்கூறியவர். சமுதாயத்தால் ஒதுக்கப்பட்ட மனிதர்களின் குண நலன்களை வியந்து பாராட்டுவது இவர்தம் தனி இயல்பாகும்.

ஒருபிடி சோறு, உண்ணாவிரதம், இருளைத் தேடி, பகல்நேரப் பாசஞ்சர் வண்டியில, இனிப்பும் கரிப்பும், புதிய வார்ப்புகள், அக்கினிப் பிரவேசம், தாம்பத்யம் முதலிய கதைகள் செயகாந்தனின் ஆளுமைச் சிறப்பை நிறுவுவன.

வி. கோவிந்தன் எனும் விந்தன் அடித்தட்டு மக்களின் அவலங்களை உணர்ச்சியோடு சித்திரித்தக கொள்கையாளர். வஞ்சப் புகழ்ச்சியணி, இவா கதைகளில் சிறந்து விளங்கும். சமுதாய அமைப்பைக் கடுமையாகத் தாக்கியவர்; பொதுவுடைமைச் சமுதாயம் காண விழைநதவர். இரகுநாதன் கதையமைப்பில் வல்லவர். மனித உணர்வுகளைப் படம் பிடித்தவர். இவர்தம் சொற்களும் நடையும் கூர்மையானவை. வட்டாரச் சிறுகதைகளைச் சிறப்பாக உருவாக்கியவர். வெனறிலன் என்றபோதும், ஞானோதயம், ஐந்தாம்படை, ஞானமணிப் பதிப்பகம், ஆனைத்தீ, முதலியவை இவர்தம சிறநத கதைகள. கு.அழகிரிசாமி எளிய நடையில அங்கதச்சுவை அமையக் கதைகள் எழுதியவா. பாத்திரங்களை எடுதது்க் கூறும் முறையில சிறநதவர். சுந்தரராமசாமி அழுத்தமான கொளகையாளர்; எளளல் நடையாளா குமரி மாவட்ட மண்வாசனை இவர் கதைகளின சிறப்புக் கூறாகும். தமிழ்ச் சிறுகதை உததியிலும் பொருள் மரபிலும் வளாந்துளள சிறப்பினை இவர் கதைகளில் உணரலாம். உரையாடல் உத்தியைக் குறிக்கும் 'சன்னல', அங்கதப் பொருளைக் காட்டும் செங்கமலமும் சோப்பும், நுண்ணிய மன அலைகளை விவரிக்கும் 'அகம்' ஆகியவை இவர்தம் சிறந்த கதைகளாகும்.

**நுவல் பொருளிலும் வடிவத்திலும் வளர்ச்சி:** நாட்டின் சமுதாய அரசியல் சூழல்களில் எழுந்த இயக்கங்களும் மாற்றங்களும் படைப்பாளர்களைப் பாதித்தன. எனவே, படைப்புகளின் களம் விரியத் தொடங்கியது. பல்வேறு இதழ்கள் சிறுகதை வளர்ச்சியில் பங்காற்றின. பதிப்பகங்கள் பல சிறுகதைத் தொகுதிகளை வெளியிட்டு உதவின. கல்விப் பரவல், தொழில்வளம் போன்ற புற நிலைகளும், கருத்துச் சுதந்திரம், பேச்சுரிமை போன்ற அகநிலைகளும் இவ விரிவுக்குத் துணைநின்றன. தத்தம் இன, இட உணர்வோடு எழுதியவர்கள் குறுகிய எல்லை நீங்கி, நாடு உலகம், என்ற விரிநத நிலையில் எழுதத் தொடங்கினர். தாழ்த்தப்பட்ட மக்கள், உழைப்பாளிகள், தொழிலாளர்கள், ஏழைகள் இவர்தம் எரியும் சிக்கல்கள் வடிவம் பெற்றன. பொதுவுடைமை, பல்வகைச் சுதநதிரஙகள், உரிமைகள், பொருளாதாரச் சிக்கல்கள சமூகப்புரட்சிகள் எனக் கதைக் களம் விரிவடைந்தது. நடப்பியல் நெறியும் இயற்பியல் நெறியும் (Realism and Naturalism) மிகுவழக்குப் பெற்றன. வடிவத்திலும் உத்தியிலும் புதிய சோதனைகள மேற்கொள்ளப்பட்டன. நனவோடை உத்தி மௌனி, லா.ச.ரா போனறோரால வளர்க்கப்பட்டது. பின்னோககு உத்தி சிறப்பாகக் கையாளப்பட்டது. குறியீட்டுக் கதைகள் வெளிவரத் தொடங்கின. பாலுணர்வைத் தூண்டும் கதைகளும் மிகுதியாக எழுதப்பட்டன.

**எழுபது எண்பதுகளில்:** இக்கால கட்டத்தில் புதினங்களைவிடச் சிறுகதைகள தாம் மிகுதியாகப படைக்கப்பட்டன. பெருகிவரும் இதழ்களின் தேவைக்கேறபச் சிறுகதைகள் உருவாக்கப்பட்டன. வாழ்க கையின் மீதான வழிவழியான மதிப்பீடுகளை எழுத்தாளர்கள உடைத்தார்கள். பெண்ணுலகச் சிக்கல்களைப் புதிய கோணத்தில் அணுகத் தொடங்கினர். சமுதாயக் கொடுமைகளுக்கு எதிரான அழுத்தமான எதிர்ப்புக் குரலை இளைய சிறுகதை ஆசிரியர்கள் எழுப்பினார்கள். எழுத வேண்டுமா என்று விலக்கிய பொருள்களைக் கூட ஈடுபாட்டோடு எழுதினார்கள். நடை மிக எளிமை ஆயிற்று. புரிந்து கொளள இயலாத அளவிற்குச் சிலர் வட்டார வழக்குகளை மிகுதியாகக் கலந்தனர். தொடக்க காலச் சிறுகதைகளில் வடசொற்கலப்பு மிகுந்திருந்தது போல இன்றைய கதைகளில் ஆஙகிலச் சொற்கலப்பு மிகுதியாக உள்ளது. இதழ்களில் வணிக நோக்கிற்கேறப ஆபாசக் கதைகள எழுதிக் குவிககப் படுகின்றன. ஆண்டொன்றுக்கு சுமார் 3000 சிறுகதைகள் தோன்றினாலும் தரத்தில உயர்ந்த சிறுகதைகள ஒரு நூறுக்குள்ளே அடங்கிவிடுகினறன.

**சிறுகதையின் பயன்கள்:** சிறுகதை வாழ்க்கையின விளக்கமாக அமைந்து படிப்பவரை ஆற்றுப்படுததுகிறது. நிகழ்காலச் சிக்கல்களை எளிமையாகவும், கூர்மையாகவும் விளக்கிச் சமுதாய அமைப்பு மாற்றம் உருவாகத் துணைபுரிகிறது. காந்தியக் கொள்கைகள், பொதுவுடைமைக் கொள்கைகள எனக் காலந்தோறும் மாறிவரும் நல்ல கொள்கைகளைப் விளம்பரம் செய்யும் கருவியாகவும் செயற்படுகிறது. போராட்டங்களுக்கு நடுவே அலுத்துச் சலிக்கும் மனிதர்க்குப்

பொழுதுபோக்குக் கருவியாகவும் அமைகிறது. அறிவியல், நிலவியல், வரலாற்றியல், சமூகவியல், உளவியல், தத்துவவியல் போன்ற பலதுறைத் தகவல களையும் பொது மக்களும் அறிய ஓரளவு உதவுகிறது. மக்கள் பயன்படுத்தும் மொழியிலும் அவர் தம் எண்ணத்திலும் பண்பாட்டிலும் மாறுதல்கள் ஏற்படுத்தும் முகவராகவும் பணியாற்றுகிறது. மொத்தத்தில் சிறுகதை நாளைய நல்வாழ்க்கையை உருவாக்கும் படைப்பாளியாகச் சிறக்கிறது.

**சிறுகதையின் வகைகள்:** வரலாற்றுக் கதைகள், வீரதீரக் கதைகள், சமூகக் கதைகள், அங்கதக் கதைகள், அறவியற் கதைகள், உணர்ச்சிக் கதைகள், அறிவியற் கதைகள், உளவியற் கதைகள, பத்திரிகைக் கதைகள, கவர்ச்சிக் கதைகள், குட்டிக கதைகள், உருவகக் கதைகள், ஒருபக்கக் கதைகள் எனப் பல வகைகள் உண்டு.

**சிறுகதையின் வளர்ச்சியும் எதிர்காலமும்:** தொடக்ககாலத் தமிழ்க் கதைகள் குடும்பச் சூழலை யொட்டியே படைக்கப்பட்டன. பிராமண சமூகமே மிகுதியாகச் சித்திரிக்கப்பட்டது. மரபுவழியான கதைப்பின்னல்களே பலகதாசிரியர்களால் பின்பற்றப் பட்டன. சிக்கலின் தோற்றம், வளர்ச்சி, உச்சம், முடிவு என்ற வகையில் கதையமைப்பு இருநதது. அக உணர்வுக் கதைகள் மிகுதியாகத் தோன்றவில்லை. இருக்கின்ற சமுதாய அமைப்பைக் கட்டிக் காக்கும் வகையில் மனிதப் பண்பாடுகள, வலிமை, இறையாற் றல் போன்றவை போற்றப்பட்டன. சமுதாயச் சீர் திருத்தக் கருத்துகளும் (பெண்ணுரிமைச் சிக்கல்கள்) இடையிடையே சொல்லப்பட்டன. புதுமைப்பித் தன, மௌனி, க.நா.சு. போன்றே சிலரே உருவகம், உள்ளடக்கம், உத்தி இவற்றில் சோதனை முயற்சி களை மேற்கொணடார்கள். இடைக்காலச் சிறுகதை களில் காலமாற்றத்திற்கேற்ற கருத்து மாற்றங்களைக் காணமுடிகிறது. மனித மனங்களின் ஆசா பாசங்கள், வேட்கைகள், இழிவுகள் போனறவை அப்பட்டமாகப் படம் பிடிக்கப்பட்டன. மரபு வழியான மதிப்பீடுகள் தகர்க்கப்பட்டன. புதிய சமுதாயம் காணும் வேட்கை வளரத் தொடங்கியது. சிறுகதை அமைப்பிலும் மாற்றம் ஏற்பட்டது. உச்சகட்டத்தில் தொடங் கிப் பின்னோக்கி முன்னோக்கும் உத்தி ஓர ளவு கையாளப்பட்டது. வட்டார வழக்கு சிறு கதைகளில் கணிசமான இடத்தைக் கைப்பற்றியது. அக உணர்வுகளைப் படம் பிடிக்கும் போக்கு மிகுதி யாயிற்று. முன்னைய 'அற்புத நவிற்சி வாதத்திற்கு' மாற்றாக இயற்பியல் நெறியும் நடப்பியல் நெறியும் பெருவழக்குப் பெற்றன. எதுவும் இலக்கியப் பொரு ளாகலாம் என்ற நிலை ஏற்பட்டது. பாலுணர்வைத் தூண்டும் கதைகளே இதழ்களில் மிகுதியாக வெளிவருகின்றன. கருத்தைவிட நடையலங்காரம், மக்களால் விரும்பப்படுகிறது. ஆங்கிலச் சொற்கலப்பு படைப்பவராலும் படிப்பவராலும் விரும்பப்படுகிறது. உளவியல், அறிவியல் சார்ந்த கதைகள் ஓரளவு படைக்கப்படுகின்றன. பெண்களின் மன இயல்புகள் நுணுக்கமாக விவரிக்கப்படுகின்றன. நகர்ப்புற வளர்ச்சி யால் நலிந்து போன மனிதப் பண்பாடுகள் ஓவியப் படுத்தப்படுகின்றன. வருணனைப் போக்கு மிகப் பலரிடம் குறைந்து வருகிறது. ஏழ்மையின் கொடுமையும் முதலாளிகளின் சுரண்டலும் முற்போக்கு இதழ் களில் திரும்பத்திரும்பக் கதைப் பொருளாகின்றன. மனிதாபிமானத்தை மைய அச்சாகக் கொண்டு சிறுகதைச் சக்கரம் சுழல்வதைக் காணமுடிகிறது.

பிறமொழிக் கதைகளும் மொழிபெயர்க்கப்பட் டுள்ளன. இந்தி, மராத்தி, வங்காளம், தெலுங்கு, மலையாளம், குசராத்தி மொழியில் தேர்ந்தெடுக்கப் பெற்ற கதைகள் தமிழ்வடிவம் பெற்றுள்ளன.

ஏறத்தாழ 1930 முதல் ஈழத்திலும் 1950 முதல் மலேசியாவிலும் சிறுகதைகள் தரத்தோடு வளர்ந்து வருகின்றன. இன்று எண்ணிக்கை அளவில் புதினத்தை நோக்கச் சிறுகதைகள் பெருகிவருகின்றன. இக்கால வாழ்வின் ஒவ்வொரு பகுதியும் ஆழமாகப் புலப்படுத் தும் எண்ணற்ற கதைகள் எழுதப்படுகின்றன. அதே நேரத்தில் பெருகிவரும் இதழ்களின் பெரும் பசிக்குத் தீனியாக விரைந்து எழுதப்படும் பாலுணர்வுக் கதைகள் சமுதாயச் சீரழிவிற்குத் துணையாகின்றன.

சிறுகதை வெறும் பொழுதுபோக்கிற்காக மட் டுமே என்ற நிலையில் எழுதிவரும் ஆசிரியர்கள் மன மாற்றம் அடையவேண்டும். சமுதாயக் கண்ணோட் டத்துடன் சிக்கல்களின் மூலம் கண்டு வழிகாட்டும் போக்கினை முழுமையாக மேற்கொள்ளவேண்டும். இதழ்கள் வணிக நோக்குடன் சிறுகதைகள் வெளியிடுவதை நிறுத்திப் பயன் நோக்குடன் ஆற்றுப் படுத்தவேண்டும். இலக்கிய உலகை அதற்குப் புறம் பான திரைப்படம், அரசியல் போன்ற சக்திகள் ஆளுமைபுரியும் போக்கு முற்றாக நீங்கவேண்டும். இதற்கேற்ப வாசகர்கள் விழிப்புணர்வுடன் நல்ல படைப்புகளையே வரவேற்று விவாதிக்கும் போக்கு வளரவேண்டும். இவை அனைத்தும் நடைமுறைக்கு வருமானால் தமிழ்ச் சிறுகதை வருங்காலத்தில் உயர் வும் உன்னதமும் கொண்டு முழுமைப் பயன்தரும் ஆற்றல் இலக்கியமாக விளங்கும். பழ.மு.

**துணை நூல்கள்:**

**அகிலன், ராஜதுரை, ரா.** (ப.ஆ.) வளரும் தமிழ் இலக்கியம், கிறித்தவ இலக்கியச் சங்கம், சென்னை, 1970.

**அசோகமித்திரன், என்.ஆர்.தாசன்,** மூன்று பார்வை கள், தமிழ்ப் புத்தகாலயம், சென்னை, 1984.

**செல்லப்பா, சி.சு.** ' தமிழ்ச் சிறுகதை பிறக்கிறது எழுத்துப் பிரசுரம், சென்னை, 1974.

**தண்டாயுதம், இரா.** தற்காலத் தமிழ் இலக்கியம் தமிழ்ப் புத்தகாலயம், சென்னை, 1973.

**முருகரத்தினம், தி.,** புதுமைப்பித்தன், சிறுகதைக்கலை, சர்வோதய இலக்கியப் பண்ணை, மதுரை, 1976.

**வேதசகாய குமார்,எம்.,** தமிழ்ச்சிறுகதை வரலாறு, (முதற்பகுதி) ஆசிரிய வெளியீடு, மு.ப. திருவனந்த புரம், 1979.

**சிறுகுடி கிழான் பண்ணன்,** சங்க காலத்தில் கொடைச் சிறப்பும், வீரமும் ஒருங்கே பெற்று வாழ்ந்தவன். கொற்றங் கொற்றனார், கோவூர் கிழார், செயலூர் இளம்பொன் சாத்தன் கொற்றனார், மதுரை அளக்கர் ஞாழார் மகனார் மள்ளனார் முதலிய புலவர்களும்,சோழன் குளமுற்றத்துத் துஞ்சிய கிள்ளி வளவன் என்னும் மன்னனும் இவனது சிறப்பைப் போற்றிப் பாடியுள்ளனர்.

இவனுடைய 'சிறுகுடி' காவிரிக்கு வடகரையில் இருந்தது. இச்சிறுகுடியைச் சார்ந்த தோட்டத்தில் சிறிய இலைகளையும், சிறிய விதைகளையும் உடைய நெல்லிக்கனிகள் நிறைந்திருந்தன. அக்கனிகளைத் தின்றவர்கள் பின் நீர்குடிக்கும்போது இனிய சுவையினைப் பெறுவர். இவன் ஊரிலுள்ள குளிர்ந்த குளத்தினை அடுத்திருக்கின்ற மாமரம் பெரிய அடிப் பரப்பினை உடையது. தழைத்துப் பொலிவோடு இருக்கும் தளிர்களைப் பெற்றது. மணமுள்ள மலர் களையுடைய பாதிரி மரங்கள் நிறைந்திருக்கும். இத்தகு நீர்வளமும், நிலவளமும் ஒருங்கிணைந்த சிறுகுடிக்கு உரியவன்.

தனக்கு என்று வாழாத பெருமைக்குரியவன். பிறருக்கே உரியவனாக வாழ்ந்தவன். தன் வெற்றி வேலின் முனைநிறம் மாறுபட்டுச் சிவப்பு நிறம் அடையுமாறு அதனை உயர்த்தி, எதிர்க்க வரும் பகைப் படைகளின் போர் யானைகளை அழித்துப் போரில் வெற்றி பெறுபவன்; வீரக் கழல் விளங்கும் காலினன்; புலவரைப் போற்றும் சிறந்த கொடையாளன்; பசியோடும், நடை வருத்தத்தோடும் செல்லும் புலவர்களை அவர்கள் வறுமைத் தீரக் கனிவுடன் கண்டு, பரிவுடன் பேசிப் பசி தீர்க்கும் மருத்துவன்.

இவனிடம் பரிசில் பெற்றவர்கள், தங்களின வாழ் நாளையும்சேர்த்துஇப்பண்ணன்வாழவாழ்த்தும் சிறப் பும் பெற்றவன்; வளமான பகுதிகள் வறண்ட காலத் திலும் வறட்சித்துயர் போக்க இசைப் புலவர்களைப் போற்றும் இயல்பை உடையவன்; தன்னை நாடுவோரின் துயரம்முற்றும் தீருமாறு கொடுப்பவன்; புலவர் களால் தலைவராக ஏற்றுக கொள்ளப்பட்டவன்; புலமை வளம் மிக்க புலவர்களுக்கு வரப்பிலே புல நிறைந்திருக்கும் விளை நிலங்களை அளிக்கும் இயல பினன்.

சங்க காலத்தில வீரத்தின விளைநிலமாகவும் கொடைக்கு எடுத்துக்காட்டாகவும் திகழந்தான் சிறு குடி கிழான பண்ணன்.

கி.சே.

**சிறுகுற்ற வழக்கு**: காணக: அழைப்பாணை

**சிறுத்தொண்ட நாயனார்**: இவர் பெரிய புராணம் சிறப்பிக்கும் நாயன்மார்களுள் ஒருவர். உழவுத் தொழில் சிறக்கும் காவிரித்திருநாட்டுச் செங் காட்டங் குடியில், காவல தொழிலில சிறந்த மாமத் திரர் குலத்தில தோனறியவா சிறுததொண்ட நாயனார். இவரது இயற்பெயர் பரஞ்சோதியார் என்பது. ஆயுள வேதம், வடநூற் கலைகள், படைக் கலப் பயிற்சி ஆகியவற்றில் இவர் சிறந்த பயிற்சி பெற்றவர். யானை ஏற்றம், குதிரை ஏற்றம் ஆகிய வற்றில் வல்லவர். கலைகளை முறையாகப் பயின்ற தால், சிவன் கழலில் செறிந்த அன்பு பளள மடை யாக அமையப் பெற்றவர். மன்னவரிடம் நெருங்கி நின்று பணி செய்தவர். பல போர் முனைகளில படைத் தலைவராகப் பணி செய்து வெற்றி தேடித் தந்தவர். வடபுலத்து வாதாவி நகரத்தை அழித்து மணியும் நிதியும் கொணர்நதவர். இவரது வீரம் மன்னரால் பாராட்டப்பட்ட ஒன்று. இவரது திருத் தொண்டின பெருமையுணர்ந்த அரசன் இவரைவணங் கினான். செம்மை நெறித் திருத்தொணடு செய்யும் உரிமை பெற்ற பரஞ்சோதியார் திருச்செங்காட்டங் குடியினை அடைந்து கணபதீச்சுரத்து இறைவனை இறைஞ்சித் தொண்டு புரிந்து இருந்தார்.

திருவெணகாட்டு நங்கையுடன் மனையறம் பேணி நாள்தோறும் சிவனடியார்களுக்குத் திருவமுது செய்வித்துப் பின்பு உண்ணும் வழக்கம் கொண்டார். அடியாரை வழிபடுங்கால் சிறியராய்ப் பணிந்து இருந் தமையால் 'சிறுத்தொண்டர்' எனப்பட்டார். இறை யருளால் இவர்க்கு மகன் பிறக்கச் சீராளன் எனப் பெயரிட்டு வளர்த்தார். மூன்றாமாண்டு கல்வி பயில

வைத்தார். திருஞான சம்பந்தர் திருச்செங்காட்டங் குடிக்கு எழுந்தருளியபோது அவரை எதிர் கொண்டு வரவேற்றார். இவரது உள்ளமும் தொண்டும் உணர்ந்த சம்பந்தர் தாம் பாடிய பதிகத்துள் இவரைச் சிறப்பித்தார்.

இவரது அன்பின் பெருமையை உலகறியச் செய்ய இறைவன் வைரவ சமய அடியவராக வந்தார். 'சிறுத் தொண்டர் மனையில் உள்ளாரோ?' என வினவி னார். தொண்டரைத் தேடி அவர் சென்ற நிலை அறிநது, திருவெண்காட்டு நங்கையிடம் 'யாம் அத்தி மரத்தடியில் இருப்போம்' என்று உரைக்கத் தொண்டர் அடியாரைச் சென்று கண்டு பணிந்து 'இனறு அடியேன் மனையில் அமுது செய்தருள வேணடும்' என்றார். அதற்கு அப்பைரவக் கோலமு டைய பெருமான் 'யாம் ஆறு மாதத்திற்கு ஒரு முறையே உணபது. அதுவும் பசுவே உணவு' என்றார். அதுகேட்ட சிறுத்தொணடர் தம்மிடம் மூவகைப் பசுக்கள் இருப்பதாகக் கூற 'யாம் உணபது நரபசு. ஐநது வயதுக்குட்பட்டதாக, உடம்பில் மறுவற்றதாக இருக்கவேணடும். அம்மகனையும் தாய் பிடிககத் தநதை அரிந்து தர ஆக்கிய கறியே யாம் விருமபு வது' என்றார். இதறகு இசைந்த சிறுத்தொணடர் தம் மனையவளிடம் இதனைக் கூற, இத்தகைய சிறுவனைப் பெறுவது எவ்வாறு என்று அவர் வினவி னார். அதற்குச் சிறுத்தொணடர் யான் உய்ய நீ பெற்ற மைந்தனை அழைப்போம் என்று பள்ளி சென்று மகனை அழைத்து வந்தார். அமமையார் மகனை மஞ்சனமாட்டிக கோலம் செய்து கொடுக்க இருவரும் மகனை அரிந்து சந்தனத் தாதியிடம் கொடுக்க அவர் அதனைப் பக்குவப்படுத்தினார்.

பயிரவரை அழைத்துப் பாதம் விளக்கி வழிபட்டு உணவு படைத்தார். தலையிறைச்சி திருஅமுதுக்கு ஆகாது என விட்டோம் என்று கூற, அதுவும் நாம் உண்பது என்றார் பயிரவர். சந்தனத் தாதியார் அதனையும் முன்பே கறியாக்கியமையால் எடுத்து உதவினார். 'தாம் தனியே உண்ணுவதில்லை. அடி யாரை அழையும்' என்றார் பயிரவர். அடியார்களைக் காணாது திகைத்த பொழுதில் 'நீர் உடன் உணபீர்' எனறார். மேலும் 'உமது மகனையும் அழையும்' என் றார். அவன், இப்போது உதவான் என்று தொண் டர் கூறப் பயிரவர் மீண்டும் வலியுறுத்தச் சிறுத் தொண்டரும் அவரது மனைவியாரும் வாயிலிற் சென்று 'மைந்தா! செய்ய மணியே! சீராளா!' என்று அழைத்தனர். பள்ளி சென்று வருவானைப் போல ஓடிவந்த மகனை அழைத்துக் கொண்டு விரைந்து மனையுட் சென்று பார்க்கப் பயிரவர் மறைந்தார்.

அப்போது வானிடை இறைவன் மலை பயந்த தையலொடும் சரவணத்துத் தனயரொடும் நின்றார். தொண்டர் வியந்து பணியத் தம்மைப் பிரியாது இருக்கும் பெருநிலை நல்கினார். இவரது அரிய செய லைப் பட்டினத்தடிகள் 'வாளால் மகவரிந்து ஊட்ட வல்லேன் அல்லேன்' என்று பாராட்டியுள்ளார்.

ஜி.ஆர்.கி.

*சிறுதேவபாணி*: இது இசைப்பாட்டு வகையுள் ஒன்று. பாணி என்பது பாட்டு எனப் பொருள்படும். இசை என்னும் பொதுப் பொருளிலும், இசையுறுப் பாகிய தாளம் என்னும் பொருளிலும் இச்சொல் வழங்கப்படுவதுண்டு. தேவர்களைப் பற்றிப் பாடுவது தேவபாணி எனப்பட்டது. அது சிறுதேவபாணி, பெருந் தேவபாணிஎன்று இருவகைப்படும். இப்பெயர்கள் இய லிசை நாடகம் ஆகிய முத்தமிழுக்கும் பொருந்தும் பெயராகும். இது இயற்றமிழில் அமையும்போது கொச்சக ஒருபோகு என்னும் பாவில் அமைக்கப்படும். சிலப்பதிகாரத்தில் இடம்பெறும் 'மாயோன் பாணி' எனனும் தொடரை விளக்குமிடத்து அடியார்க்கு நல்லார் இவைபற்றிக் குறிப்பிட்டுள்ளார் (சிலப்6:35 உரை). தேவபாணி இசைப்பாவின் பகுதியாகும் என் றும், அப்பகுதி பத்து வகைப்படும் என்றும், அவற்றுள் சிறுதேவ பாணி பெருந்தேவபாணி ஆகிய இரண்டும் அடங்கும் என்றும் அடியார்க்கு நல்லார் குறிப்பிட்டு அதற்குச் சான்றாகச் சிகண்டியாரின் இசை நுணுக்க நூலிலிருந்து ஒரு நூற்பாவினைக் காட்டியுள்ளார். மேலும் அடியார்க்கு நல்லார் தேவபாணி நாடகத் தமிழில் வரும்போது சிறுதேவபாணி வருணப் பூதரை யும், பெருந்தேவபாணி பல தேவரையும் துதிக்கும் பாங்கில் மூவடி முக்கால் எனப்படும் வெண்பாவால் பாடித் துதிக்கப்பெறும் என்று குறிப்பிட்டு, மதிவாண னார் நாடகத் தமிழிலிருந்து எடுத்துக்காட்டும் தந் துள்ளார். அவ்வாறு பாடுங்கால் அத்தேவர்கள் அணியும் மாலை, ஆடையின் நிறம், கொடி ஆகிய வற்றைச் சுட்டிப் பாடித் துதிக்கப் பெறும்.

பிற்காலப் பாட்டியல் நூல்கள் ஒருபோகு என் னும் தலைப்பில் தேவபாணிக்கு இலக்கணம் கூறியுள் ளன. பன்னிரு பாட்டியல் 'தேவபாணி தெரியுங் காலை, மாசறு துழாய் முடி மலைந்த சென்னி, நீர் நிலமளந்த நெடியோன் மேற்றே' என்று இலக்கணம் கூறுகிறது (பன்னிரு.210). இதில் தேவபாணி திரு மாலைப் பாடுவது என்னும் கருத்து கூறப்பட்டுள் ளது. நக்கீர தேவர் பாடிய பெருந்தேவபாணி பதி னோராந் திருமுறையில் இடம்பெற்றுள்ளது. அரு கனைப் பரவும் கலிப்பா, பெருந்தேவபாணிக்கு எடுத்துக்காட்டாக யாப்பருங்கல உரையில் அமைந் துள்ளது.

அ.மாப.

*சிறு தொழில்கள்*: சிறிய அளவில் நடத்தப் படும் தொழில்கள் சிறுதொழில்கள் (Small Scale Industries) எனப்படுகின்றன. அவற்றின் அளவையும் தன்மையையும் வரையறுப்பதில் கருத்து வேறுபாடு கள் நிலவுகின்றன. சியார்சியாத் (Georgia) தொழில் நுட்பப் பள்ளியின் ஆய்வின்படி 75 நாடுகளில் 50 வகைகளில் சிறு தொழில்களுக்குப் பொருள் விளக்க கம் அளிக்கப்படுகிறது. எனினும், முதலீட்டின் அளவு, வேலை செய்யும் தொழிலாளர் எண்ணிக்கை ஆகிய இவ்விரண்டின் அடிப்படையிலேயே பெரும்பாலான நாடுகளில் சிறுதொழில்கள் வேறுபடுத்தப்படுகின்றன. இந்தியாவில் சிறு தொழில்களுக்கு முதன்முதலில் விளக்கம் அளித்த 1948-ஆம் ஆண்டுத் தொழிற் கொள்கைத் தீர்மானம் (Industrial Policy Resolution) கைத்தறி, கைவினைத் தொழில்கள், கயிறு, பட்டு, கதர், கிராமத் தொழில்கள் ஆகியவற்றைச் 'சிறுதொழில்கள்' என அறிவித்தது. சிறுதொழில்கள் வாரியம் (Small Scale Industries Board) 1955-இல் உரூ. 5 இலட்சம் வரை இயந்திரத் தொகுதிகளில் முதலிட்டு ஆள்மாற்று முறையும் (Shift System), மின் ஆற்றலும் பயன்படுத்துவதாயிருந்தால், உயர்ந்த அளவு 50 தொழிலாளரும் அதனைப் பயன்படுத்தாத நிலையில் உயர்ந்த அளவு 100 தொழிலாளரும வேலை செய்யும் தொழில்களைச் 'சிறுதொழில்கள்' என வரையறுத்தது. ஆள் மாற்று முறைத் தொடர் பான வரையறை மட்டும் 1956-இல் விலக்கிக்கொள் ளப்பட்டது. மூன்றாண்டுகளுக்குப் பின் தொழிலாளர் எண்ணிக்கை பற்றிய வரையறை முற்றிலுமாக அகற்றப்பட்டது. பின்னர் 1966-இல் இந்திய அரசின் தொழிற்றுறை முதலீடு தொடர்பான உச்சவரம்பை உரூ. 7.5 இலட்சமாக உயர்த்தியது. இவ்வரம்பு 1974-இல் சிறுதொழில்கள் வாரியத்தால் உரூ 10 இலட்சமாகவும், 1980-ஆம் ஆண்டுத் தொழிற்கொள் கையின்படி உரூ. 20 இலட்சமாகவும் உயர்த்தப் பட்டது.

சிறுதொழில்களின் சிறப்புக் கூறு அவற்றின் பல வகையான தன்மைகளாகும். அவையாவன: நகரங் களிலும் ஊரகங்களிலும் நன்கு அமைக்கக்கூடியன, மரபு பேணும் பொருள்களை உற்பத்தி செய்வன, நவீனபொருள்களை உற்பத்தி செய்வன, பகுதி நேரத் தொழில்களாகவும், முழு நேர வேலைவாய்ப் பினை அளிப்பனவாகத் தொழிலாளருக்குப் பயன் படுவன, குடும்பத்தவர்கள் சேர்ந்து உழைக்கக்கூடி யன, குடிசைகளில் உற்பத்தி செய்யக்கூடிய இயல் புடையன, கைவினைப் பொருளகளையோ அந்தந்த வட்டாரத்தில் மட்டும் தேவைப்படும் அன்றாட நுகர் பொருளகளையோ உற்பத்தி செய்யக்கூடியன.





சிறுதொழில் நிறுவனம்

இந்தியாவில் வேளாண் விளைபொருள்களாகிய நெல், கோதுமை, எண்ணெய்வித்துக்கள், கரும்பு போன்றவைகளைச் சிறுசிறு இயந்திரங்களைப் பயன் படுத்தி அரைத்துப் பிழிந்து, பக்குவப்படுத்தும் சிறு தொழில்கள் ஊரகங்களில் பரவலாகச் செயற்படுகின்

றன. நுட்பமான அறிவியல் கருவிகள் நவீன மருத்துவக் கருவிகள், மின்னணுக் கருவிகள், வேதியியல் பொருள்கள முதலியவற்றின் உற்பத்தியிலும் சிறு தொழில்கள் ஈடுபட்டுள்ளன. இவ்வகைத் தொழில்கள் நாட்டிலுள்ள பெருந்தொழில்களுடன் போட்டி யுறவோ கூட்டுறவோ கொண்டுள்ளன.

சிறுதொழில்கள் முன்னேறிய நாடுகளிலும் சிறப் பான பங்கு வகிக்கின்றன. அமெரிக்கத் தொழில் நிறுவனங்களில் 90 விழுக்காடு 1954-இல், பத்துத் தொழிலாளருக்குள் தொழிலாளரை அமர்த்தியிருந்த சிறுதொழில்களேயாம். இவை மொத்தத் தொழில் உற்பத்தியில் 22 விழுக்காடும், ஆலைத் தொழிலாளர் களில் 26 விழுக்காடும் கொண்டிருந்தன. மேலும், இவற்றில் ஈடுபட்டிருந்த தொழிலாளி, அதே வகைப் பெருந்தொழிலில் ஈடுபட்டிருந்த ஒரு தொழிலாளி யுடன் ஒப்பிடும்போது 70 விழுக்காடு உற்பத்தித் திறமை உடையவனாக இருந்ததாகக் கணிக்கப்பட் டது.

சப்பான் (Japan) சிறுதொழில்களின் தாயக மாக விளங்குகிறது. அங்கு 1952-இல் இயங்கிய தொழில் நிறுவனங்களில் 99 விழுக்காடு சிறு தொழில் களே. அவை மொத்தத் தொழில் உற்பத்தியில் 37 விழுக்காடும், ஆலைத் தொழிலாளர்களில் 59 விழுக் காடும் கொண்டிருந்தன. சப்பானியச் சிறுதொழில்கள் கட்டமைப்பின் ஒரு சிறப்புக் கூறு அங்குச் செயற் படும் கீழ் ஒப்பந்த (Sub-Contracting) நடைமுறை யாகும். பெருந்தொழில் நிறுவனங்கள தம் முடைய செய்பொருள்களின் வெவ்வேறு பகுதிகளை உற்பத்தி செய்து தருமாறு சிறுதொழில் நிறுவனங் களுடன் ஒப்பந்தம் செய்துகொள்கின்றன. இவ் வாறு பல்வேறு சிறு நிறுவனங்களிடமிருந்து பெறு கிற பகுதிகளை இணைத்து, இறுதியில் வினை முற்றிய பொருள்களைப் பெருந்தொழில்கள் அங்கா டிக்கு அனுப்புகின்றன. இவ்வாறு சப்பான் கப்பல் கட்டுந்தொழில் 137 கீழ் ஒப்பந்தங்களை உள்ள டக்கிப் பணியாற்றுகிறது. இந்தக் கீழ் ஒப்பந்தப் பணியாளர்களின் எண்ணிக்கை தானூர்தித் (Auto-Mobile) தொழிலில் 136-உம், தகவல்-தொடர்பு கருவிகள் தொழிலில் 102-உம், மின் இயந்திரங்கள் தொழிலில் 96-உம் ஆகும். பெருந் தொழில்களின் துணைத் தொழில்களாகச் சிறுதொழில்கள் திகழும் நிலை சப்பானில் மட்டுமே பெருமளவில் நிலவுவது ஒரு சிறப்புத் தன்மையாகும்.

வளர்ச்சி குறைந்த நாடுகளில் (Under Developed Countries) சிறுதொழில்கள் பல காரணங் களால் மிக விரும்பிப் பேணி வளர்க்கப்படுகின்றன. இந்நாடுகளின் தலையாய சிக்கல் முதல் பற்றாக் குறை. எனவே, குறைநத அளவு முதலுடன் தொடங்கமுடிகிற சிறுதொழில்கள் இயல்பாகவே வரவேற்கப்படுகின்றன. இவ்வகைத் தொழில்கள் மிகுதியான அளவு, மிகுந்த நுட்ப வினைமுறைகளை எதிர்பார்ப்பதில்லை. தேர்ச்சியும் நுட்பத் திறனும் குறைந்த தொழிலாளரைக் கொண்டே இவற்றை நடத்திவிட முடியும். தேர்ச்சியும் நுட்பத்திறனும் இல்லாத வேளாண்மைத் தொழிலாளரைக கொணடு தொழில் வளர்ச்சி காணவேண்டிய நிலையிலுள்ள பின்தங்கிய நாடுகள் இயல்பாகவே சிறு தொழில் களை விரும்புகின்றன.

முதல், உழைப்பு, தொழில்முயற்சி, மூலப்பொருள் கள் ஆகிய நாட்டு வளங்களை நன்கு பயன்படுத்தச் சிறுதொழில் வளர்ச்சியே வழி வகுக்கிறது. குறைந்த அளவு முதலீட்டுடன் இத்தொழில்களைத் தொடங்க முடிவதால், ஓரளவு முதலுள்ளவர்களும் தொழில் களைத தொடங்கி நடத்த முடிகிறது. இது தனியார் சேமிப்பை ஊக்குவிக்கிறது. பெருந் தொழில்களை விட மிகுதியாகச் சிறுதொழில்களால் வேலைவாய்ப்பு களைப் பெருக்க முடிகிறது. இந்தியாவில் 1974-75 -இல் சராசரி ஒரு சிறு தொழிற் சாலைக்கு உரு 3700 இயந்திரத் தொகுதிகளில் முதலீடு செய்திருக்க அதுவே பெருந்தொழிற் சாலைக்கு உரு.30,500 என அவ்வாண்டைய தொழில் ஆய்வறிக்கை கூறுகிறது. இதிலிருந்து பெருந்தொழில்களில் தனி ஒருவன் வேலைபெறும் அளவு முதலீடு செய்தால் அதுவே சிறுதொழில்களில் 10பேருக்கு வேலைவாய்ப்பினை அளிக்குமென அறியப்படுகிறது. மேலும் அளவுக்கு மீறிய நிலையில் இந்திய உழைப்பாளர் வேளாண்மை யைச் சார்ந்திருக்கும் நிலைகளில், சிறுதொழில் வளர்ச்சி அந்தச் சார்பு நிலையிலிருந்து விடுபடப் பெரிதும் உதவுகிறது.

தொழில் முயற்சியின் நாற்றங்கால்களாகச் சிறு தொழில்கள் விளங்குகின்றன. முயற்சியுடைய, போதிய அளவு முதல் வசதி இல்லாதவர்களால், சிறுதொழில்களை முதலில் தொடங்கி, அவற்றைப் பெரிய அளவில் பின்னர் விரித்துக்கொள்ள முடியும்.

குறிப்பிட்ட பகுதிகளில் மட்டும் கிடைக்கின்ற மூலப்பொருள்களை உரியமுறையில் பயன்படுத்தியும் சிறுதொழில்கள் வளர்ச்சியடைகின்றன. இத்தொழில் கள் வேளாண்மைக்கும் செய்பொருள் துறைக்கும் இடையே பாலமாக அமைந்துவிடுகின்றன.

பொருளாதாரச் செல்வம் ஓரிடத்தில் குவியாமல் அவற்றைப் பரவலாகப் பங்கீடு செய்யவும் சிறு தொழில்கள் உதவுகின்றன. இவற்றில் பெரும்பாலா

னவை தனியாள் தொழில்களாகவே திகழ்வதால் இது இயல்வதாகிறது. இதுபோன்றே வட்டார ஏற்றத் தாழ்வுகளை அகற்றப் பிற்பட்ட பகுதிகளில் நிறுவப் படும் சிறு தொழில்கள் உறுதுணையாகின்றன.

ஓர் இயக்கநிலைப்பட்ட பொருளாதாரத்தைச சிறுதொழில்களால் இயற்றித் தரமுடியும். சம வலிமையுள்ள சிறுசிறு அலகுகளிடையே தோன்றும் போட்டி, நன்மை மிக்கதாக அமைந்துவிடுவது இயல்பு. நாட்டுப் பொருளாதாரத்தில் பெரும் பான்மை மக்களை அது ஈடுபட வைககிறது. இது தொழில் துறை மக்களாட்சிக்கு (Democratic) வழிகோலுகிறது. இவற்றின் விளைவாக ஒரு நிலைபேறான பொருளாதாரச் சமுதாயம் தோன்றி வளர முடிகிறது.

பெருந் தொழில்களினால் விளையும் சுற்றுப் புறச் சூழ்நிலைகள் மாசுபடுதல், இயற்கைவளங்கள் அழிந்துபோதல் போன்ற குறைகள சிறுதொழில் களில இல்லை. இதனால 'சிறியது அழிகிறது' என் பாரும் உளர். எனினும், அரசு தலையிடாதிருந்தால் ஆங்கிலேயர் கால இந்தியாவில் ஏற்பட்டதுபோல, சிறுதொழில்கள நலிந்து போகவே வாய்ப்பு மிகுதி. சிறுதொழில்களின வளர்ச்சியை அரசு பலவழிகளில ஊக்குவித்து வருகிறது. இத்தகைய ஊக்குவிப்பு ஏற் பாடுகளில் இந்திய அரசு உலக நாடுகளுககு ஓர் எடுத்துக்காட்டாகவே திகழ்ந்து வருகிறது. நாடெங் கும் பல தொழிற் பேட்டைகள் 1955-முதல் நிறு வப்பட்டு வருகின்றன. மின் ஆற்றல், நீா, சாலை கள் முதலிய அனைத்து அடிப்படை வசதி களையும் தன்னகத்தே கொண்ட தொழிற்சாலைக் கட்டடங்களைக் கொண்டவை இப்பேட்டைகள இவற்றைக் கட்டிமுடித்த பின், சிறுதொழில முனை வோருக்கு (Entrepreneurs) அரசு குத்தகைக்கு விடு கிறது;அல்லது ஆதாயமும் இழப்பும் இல்லாத விலை யில விற்கிறது. இதனால சிறுதொழிலகளைத் தொடங்குவதற்கான இட வசதியைத் தேடி அலைய வேணடிய தொலலையிலிருநது விடுதலை பெற முடி கிறது. தமிழ்நாட்டிலுள்ள கிண்டி தொழிற்பேட்டை ஆசியாவிலேயே மிகச் சிறந்ததாக மதிப்பிடப்பட் டுளளது என்பது இங்குக குறிப்பிடத்தககது.

அண்மைக் காலத்தில் அரசு, மாவட்டந்தோறும் மாவட்டத் தொழில் மையங்களை அமைத்து வரு கிறது. இம்மையங்கள் தொழில் முனைவோருக்குத் தேவையான அனைத்து உதவிகளையும 'ஒற்றைப் பலகணி' (Single Window) வழியாகப் பெற உதவி செய்கின்றன. தொழில்களைப் பதிவு செய்வது, தேவையான நிதி, மின் ஆற்றல் ஆகியவற்றைப்பெறு வது,மூலப்பொருள்களைத் திரட்டுவது, உறபத்தி செய்யப்பட்ட பொருள்களை விற்பனை செய்வது ஆகிய ஒவ்வொன்றுக்கும் வெவ்வேறு துறைகளை நாடிச் செல்வதற்குப் பதிலாக அனைத்து வசதிகளை யும் ஒரே முகமை (Agent) வழியாகப் பெறுவதால் வீண் காலதாமதங்கள் குறைக்கப்படுகின்றன.

சிறுதொழில்களுக்குக் கடனுதவப் பல திட்டங்கள் செயற்படுகின்றன. வணிக வங்கிகளும், ஊரக வங்கி களும் சிறுதொழில்களுக்குக் கடனுதவும் இந்தியத் தொழில் வளர்ச்சி வங்கியும் நிதியுதவுகின்றன.இந்திய மைய இருப்பு வங்கியும், நாட்டுடைமையான வங்கி களும் ஊரக வங்கிகள் வழியாகச் சிறுதொழில்களுக்கு உதவுகின்றன. மாநிலத் தொழில் நிதிக் கழகம், தேசிய சிறுதொழில் வளர்ச்சிக் கழகம் முதலியனவும் சிறுதொழில்களுக்குக் கடனுதவுகின்றன. சிறுதொழில் களுக்கு மைய மாநில அரசுகள் கடனுதவிச் சட்ட விதிகளின்படி நேரடியாகக் கடன்உதவுவதோடு, கொடை உதவியும் பெருமளவில் அளிக்கின்றன. மேற்கூறிய நிதி நிறுவனங்கள் நடைமுறை முதல் தவணைக் கடன்கள், இயந்திரங்கள், கடன் வாக் குறுதி, மறு நிதியுதவி ஆகிய அனைத்து வசதிகளை யும் சிறுதொழில்களுக்குச் செய்துகொடுக்கின்றன.

சிறு தொழில்களின் தொழில்நுட்பத் தரத்தை உயர்த்துவதற்கெனப் பல வழிகள் உள்ளன. ஒவ் வொரு மாநிலத்திலும் நிறுவப்பெற்றுள்ளசிறுதொழில் பணிப்பள்ளிகள் இத்துறையில் சிறப்பாக ஈடுபட்டுள் ளன. இவை தொழில்களின் தொழில் நுட்பக் கூறு கள் பற்றிய கள அறிக்கைகளைத் தயாரித் தளிக்கின்றன. புதிய பொருளகளையும், கருவிகளை யும் வடிவமைத்துக் கொடுக்கின்றன. உயர்ந்த அளவு ஆதாயத்தை ஈட்டுவதற்கு இன்றியமையாத நிருவாகக் கட்டுப்பாட்டு நெறிமுறைகளைப் பரிந் துரைக்கின்றன. தொழிலாளர், மேலாளர் ஆகியோர் தங்கள் திறமையை வளர்த்துக் கொள்வதற்கென்றே சிறப்புப் பயிற்சி வகுப்புகள நடத்துகின்றன.

குறிப்பிட்ட சிறுதொழில்களின் உற்பத்தியைக் குறிப்பாக அவற்றின் ஏற்றுமதியைப் பெருக்கும்நோக் குடன் தனித்தனி வாரியங்கள் சிலவற்றை அரசு உருவாக்கியுள்ளது. அங்காடி-ஆய்வுகள் நடத்துதல், தர வரையறை செய்தல்,ஆய்வு நிலையங்கள் அமைத் தல், அயல்நாடுகளில் விற்பனை மையங்கள் நிறுவுதல் போன்ற பலதுறைகளில் இவை ஈடுபட்டுள்ளன. கயிறு வாரியம், மையப் பட்டு வாரியம், அனைத்திந்தியக் கைவினைப் பொருள்கள் வாரியம், அனைத்திந்தியக் கைத்தறி வாரியம் ஆகியவை இவ்வகைப்படுவன. இந்தியக் கைவினைப் பொருள்கள் மற்றும் கைத்தறி ஏற்றுமதிக் கழகம், இந்தியக் கனிவளங்கள் உலோ

கங்கள் வணிகக் கழகம் முதலியன குறிப்பிட்ட பொருள்களின் ஏற்றமதிக்கென்றே நிறுவப்பட்டுள்ளன.

வருமான வரி, கலால் வரி, விற்பனை வரி, மின் சார வரி,தல வரி போன்றவற்றிலிருந்து சிறுதொழில் களுக்குச் சில விதிவிலக்குகள் அளிக்கப்பட்டுள்ளன. அரசுக்குத் தேவையான பொருள்களை வாங்குவதி லும் சிறுதொழில்களுக்கு முன்னுரிமை தரப்பட்டுள் ளது. அரசு 379 பொருள்களைச் சிறுதொழில்களிட மிருந்து மட்டுமே வாங்கவேண்டுமென ஆணையிட்டுள் ளது.

இந்தியாவின் சிறுதொழில் அலகுகளின் எண் ணிக்கை 1972க்கும் 1981க்குமிடையே 2.6 இலட்சத்தி லிருந்து உரூ.8 இலட்சமாகவும் அவற்றின் உற்பத்தி மதிப்பு உரூ. 5510 கோடியிலிருந்து உரூ.28,080 கோடி யாகவும், அவற்றில் வேலைசெய்வோர் எண்ணிக்கை 35இலட்சத்திலிருந்து67இலட்சமாகவும்வளர்ந்துள்ளன. சிறுதொழில்களுள ஏறத்தாழ60விழுக்காடு மகாராட்டி ரம், தமிழ்நாடு, மேற்கு வங்கம், உத்தரப்பிரதேசம், பஞ்சாபு,குசராத்து ஆகிய 6 மாநிலங்களில் செறிந்து காணப்படுகின்றன. கோயம்புத்தூர், உலூதியானா போன்ற குறிப்பிட்ட சில மாவட்டங்கள் சிறுதொழில கள் வளர்ச்சியில் முன்னணியில் உள்ளன.

சிறு தொழில்களுள்40-45 விழுக்காடு அலகுகள் நலிந்த நிலையிலேயே உள்ளன. இவை தொடர்ந்து இழப்பில் ஓடுகின்றன. இவை வங்கிகளிடமிருந்து பெற்ற கடனைத் திருப்பிச் செலுத்த இயலாத நிலையிலுள்ளன. உள்ளிடு பொருள்களின் (Inputs) பற்றாக்குறை, மின் ஆற்றல் கிடைப்பருமை, பெருந் தொழில்கள் போட்டி, உற்பத்திச் செலவுஉயர்வு, நிதி வசதிக்குறைவு, வட்டிப்பளு, தொழிலாளர் வேலை நிறுத்தம், நடைமுறை முதல் வசதிக் குறைவு போன்ற பல காரணங்கள் நலிவு நிலையின் பின்னணி யாகச் சுட்டிக் காட்டப்படுகின்றன. நலிவுநிலையைச் சுட்டிக்காட்டிப் பெருமளவு முதலுடன் செயற்படும் பெருந்தொழில்கள் இயல்பாகவே திறமை மிக்கவை என்றும், அவற்றுக்கெதிராகச் சிறுதொழில்களைப் பாதுகாக்க முயல்வது பயனற்ற முயற்சி என்றும் கூறும் ஓர் ஆய்வுக் கருத்து நிலவுகிறது. வேலையின மைச் சிக்கலால் பெருமளவில் தொல்லையுறும் இந்தியா போன்ற நாடுகளில், வேலைவாய்ப்பு நோக் கில் சிறுதொழில்களை வளர்த்துத்தான் ஆகவேண் டும். கார்வே குழு கூறியதுபோல, குறிப்பிட்ட பொருள்களின் உற்பத்தியைச் சிறுதொழில்களுக் கெனச் சிறப்பாக ஒதுக்கிக் கொடுப்பதன் வழியாகவே இத்தொழில்களை வளர்ச்சியடையச் செய்யவும் பேணவும் பாதுகாக்கவும் இயலும். தே.வே.

**துணை நூல்கள்:**


Vasant Desai, Organisation and Management of small Industries, Himalaya Publishing House, Bombay, 1983.

World Bank, Employment and Development of Small Enterprises, World Bank, Washington, 1978.


**சிறுநிகழ்வுப் பதிவேடு:** மாணவரை நீண்ட காலம் இயற்கையான சூழலில் உற்று நோக்கி, அவ ரது கற்றல் மற்றும் வளர்ச்சி நிலைகள குறித்து முக் கிய தகவல்களைச் சேகரிக்கும் வாய்ப்பு ஆசிரியருக்கு மிகுதியாக உள்ளது. பல்வேறு சூழல்களில் நிகழும் நிகழ்ச்சிகளையும் அன்றாட நிகழ்வுகளையும் அவரால் உற்று நோக்கமுடியும். அவற்றின் துணைகொண்டு மாணவர்தம் செயல்கள், நடத்தைகள் குறித்த தெளி வான எண்ணம் அவருக்கு ஏற்படும். அவரது தீர்ப்பு கள் பெரும்பாலும் புறவயத் தன்மையுடையதாயிருத் தல் வேண்டும்.

ஆசிரியர் உற்று நோக்கிய அனைத்துத் தகவல் களையும் சரியானதொரு பதிவேட்டில் அவர் குறித்து வைத்திருக்க வேண்டும். இல்லையேல் அத்தகவல்கள் உருத்திரிந்துபோய்விடும். இத்தகைய பதிவுகளை வைத்துக்கொள்ள மிகவும் சிறந்த முறை சிறு நிகழ்வுப் பதிவேடுகளைப் (Anecdotal Records) பராமரிப்ப தாகும்.

சிறுநிகழ்வுப் பதிவேடு என்பது, மாணவர் ஈடு படும் நிகழ்வுகள் அல்லது செயல்களை அது நிகழும் பொழுதோ பிறகோ ஒருவரால் பதிவு செய்யப்படுவ தாகும். ஒரு மாணவரின் வாழ்வில் நிகழும் முக்கிய நிகழ்ச்சிகள் அனைத்தையும் ஆசிரியர் உற்றுநோக்கிப் பதிவு செய்து, செய்திகளை விளக்குவதாக இப்பதி வேடுகள் அமைகின்றன. ஒவ்வொரு மாணவருக்கும் தனித்தனிப் பதிவேடுகளைப் பயன்படுத்த வேண்டும். வெவ்வேறு சூழல்களில் மாணவரின் நடத்தை மாற் றங்கள் குறித்து விளக்குவதற்குத் தனித்தனிப் பதிவு கள் மிகவும் பயன்படும். தம் தேவைகளுக்கு ஏற்ப ஆசிரியர் சிறுநிகழ்வுப் பதிவு அட்டைகளைத் தயாரித் துக் கொள்ளலாம்.

கடந்த அரை நூற்றாண்டுக் காலமாக ஆராய்ச்சி யாளர்கள் சிறுநிகழ்வுப் பதிவு, திரள்பதிவு, தனியார் ஆய்வு, உடல்நலம் மற்றும் பிற ஆய்வுகள் என்னும் நால்வகைப் பதிவேடுகளில் தீவிரக் கவனம் செலுத்தி வருகின்றனர்.

சிறுநிகழ்வுப்பதிவுகள் மாணவரின் படிப்பில் முன் னேற்றம், உடல்நிலை அல்லது சமூகச் சீரமைப்பு

**கீழ்க்காணும் படிவத்திலும் சிறுநிகழ்வுப் பதிவேடு அமையலாம்**

*சிறுநிகழ்வுப் பதிவுப்படிவம்*

. ... ... ... . ஆண்டு வகுப்பு .. . .. . .

... ... . .. . . பள்ளி நாள் .. . ..

மாணவர் பெயர் . .. ... ... ... .. ..

மாணவரை உற்று நோக்கிய இடம் .. . ...

உற்று நோக்கிய ஆசிரியர் பெயர் ... . . ... .

**நிகழ்ச்சி:** (நிகழ்ச்சி பற்றிய தெளிவான விவரம்)

**விளக்கம்:** (மாணவர் நடத்தையின் பொருள் குறித்து விளக்கம்)

ஆசிரியர் கையொப்பம்.

போன்ற நடத்தைகள் பற்றி முதன்மையாகக் கூறுகின்றன. பெரும்பாலும் சிறுநிகழ்வுப் பதிவுகள் ஆசிரியர்களாலேயே எழுதப்படுகின்றன. சில இடங்களில அறிவுரையாளர், பள்ளிச் செவிலியர், சமூகத் தொண்டர் அல்லது நிருவாகிகள் எழுதுவர். அனைத்து மாணவர்களுக்கும் சிறுநிகழ்வுகளைப் பதிவு செய்வது நடைமுறை வழக்கத்தில் இல்லை. படிப்பு அல்லது சமூகச் சிக்கல கொண்ட மாணவர்தம் நடத்தை, நிகழ்வுகளை விளக்குவதற்கே அவை பதிவு செய்யப்படுகின்றன. மாணவர் பற்றி ஆசிரியர் மேற்கொள்ளும் கருததுகள் இருவகைப்படும். 1. மதிப்பிடும் கருத்துரை: இது மாணவரின் நடத்தை நன்மையுடையதா அல்லது தீமையுடையதா என்பதைக் காட்டுவது. 2. விளக்கும் கருத்துரை: இது மாணவரின் நடத்தைக்கான காரணம் காட்டும்.

சிறுநிகழ்வுகளைப் பதிவு செய்யும்போது ஆசிரியர் உண்மையாக எதை உற்று நோக்கினாரோ அது குறித்த சரியான தகவல்களையே தரவேண்டும். அப்பொழுதுதான் அப்பதிவினைப் படிக்கும் எவரும் அந்நிகழ்வு பற்றிய உணமையான காட்சியைப் பெற முடியும். உற்றுநோக்குபவரின் எண்ணங்களை அதில் கலந்து பதிவு செய்யலாகாது. நல்ல சிறுநிகழ்வுப் பதிவின அடையாளமே புறவயத் தன்மையுடைமைதான். அது உண்மையான, நடுநிலைமையான வரைவாக இருத்தல் வேண்டும். நிகழச்சி பற்றிய விளக்கம் அல்லது நடத்தை பற்றிய யோசனை எதுவாயினும் தனியே எழுதப்பட வேணடும்.

சிறுநிகழ்வுப் பதிவில் கீழ்க்காணும் மூன்று வகைப் பதிவுகள் இருக்கலாம். அ) நிகழ்வு பற்றிய விருப்பு வெறுப்பற்ற புறவயத்தன்மை வாய்ந்த உண்மையான விவரம்; ஆ) நிகழ்வு பற்றிய விளக்கம், உள்ளார்ந்த பண்பின் கூறு அல்லது மாணவரின் தன்மையைக் குறிப்பது; இ) நிகழ்வு குறித்து நடவடிக்கை எடுக்கப் பரிந்துரை அல்லது யோசனை.

ஆளுமைச் சிறப்புப் பண்பினை மதிப்பீடு செய்ய மிகவும் உயர்ந்த கருவியாகச் சிறுநிகழவுப் பதிவேடு அமைந்துள்ளது. ஒருவரைப் பற்றிப் பல்வேறு சூழல்

களில் கிடைத்த எண்ணிறந்த நிகழ்வுப் பதிவுகள் கிடைத்து விட்டால், அவரது ஆளுமை குறித்த நிலையான பொதுப்பண்புகள் சிலவற்றைப் பெறுவது எளிதாகும். ஒருவரது வாழ்வில் நிகழும் உண்மையான நிகழ்ச்சிகளே சிறுநிகழ்வுகளாயிருத்தலால் அவற்றினின்றும் பெறும்எந்த ஒரு முடிவும் அவரது உண்மையான நடத்தையை இனிது காட்டும். அதனைக் கொண்டு தொடர்புடைய சூழல்களில் அவரது நடத்தை பற்றி மிக உயர்ந்த நம்பகத் தன்மையுடன் முன்மதிப்பிட்டுக் கூறிவிட முடியும்.

சிறுநிகழ்வுப் பதிவேடுகள், தர அளவுகோல்களை விட மிகவும் மதிப்பு வாய்ந்தவை. ஏனெனில் தரங்கள் என்பன ஒருவரது நடத்தை குறித்து உற்றுநோக்கியவர் கொண்ட பொதுக் கருத்தின் பண்பியலான வெளிப்பாடுகளாகினறன. ஆனால், சிறுநிகழ்வுகளின் புறவயத்தன்மை வாய்ந்த பதிவுகள் இருப்பின் உற்றுநோக்குபவரின் கருத்துகள் அல்லது விளக்கங்களைக் கொண்டு சரியான முடிவுகளை மேற்கொள்ள முடியும்.

சிறுநிகழ்வுப் பதிவேடுகள் பல வகைகளில் உதவுகின்றன. அனைத்து நிகழ்வுகளும் இடைநிகழ்ச்சிகளும் எழுத்து வடிவில் பதிவு செய்யப் படுவதால, அவற்றை மறுப்பதற்கோ தவறாக நினைவு கொள்வதற்கோ வாய்ப்புகள் குறைவு. ஆசிரியர் விரும்பும் அல்லது வெறுக்கும் மாணவர் பற்றிய சில நல்ல நிகழ்வுகள் அல்லது தீய நிகழ்வுகள் மட்டுமே நினைவுகூர்கின்ற மனப்பான்மைக்கு எதிரான அரணாகவும் செயலாற்றும். திரள் பதிவேட்டின் ஒரு பகுதியாகவும் சிறுநிகழ்வுப் பதிவேட்டினை வைத்துக் கொள்ளலாம். உற்றுநோக்கப்பட்ட மாணவர் குறித்த பல உண்மைத் தகவல்களைச் சிறு நிகழ்வுப் பதிவேடு புலப்படுத்தும். நேர்மை, உண்மை குறித்துப் பல செய்திகளை ஆசிரியர் வகுப்பறையில் கற்பிக்கின்றார். சிலமாணவர்கள் பொய் கூறுவதையும் பள்ளிப் பொருள்களை அழிப்பதையும் ஆசிரியர் உற்றுநோக்குகிறார். இத்தகவல்கள் அனைத்தும் சிறுநிகழவுப் பதிவேட்டில் பதிவானால் ஆசிரியர் தனது கற்பித்தல் முறையை மாற்றிக் கொள்வது குறித்தும் மாணவர் தம் மனப்பான்மையை மாற்றிக் கொள்ள உதவுவது குறித்தும் சிந்திக்கலாம். விதிவிலக்கான ஆனால் பொருள் பொதிந்த சில நிகழ்ச்சிகள் சிறுநிகழ்வுப் பதிவேடுகளில் பெரும்பாலும் பதிவாகின்றன. தனது படிப்பில் அக்கறையிலலாத மாணவர் திடீரென்று கணிதத்தில் ஆர்வம் காட்டக்கூடும். சிறுநிகழ்வுப் பதிவேடு இத்தகைய நடத்தைகள் குறித்து ஆசிரியரை உணர்வு கொள்ளச் செய்யும். பிற முறைகளால் இத்தகைய நடத்தையை மதிப்பிட இயலாமற் போகலாம். பொதுவாகச் சிறார்கள் கள்ளமின்றியும் தமது நடத்தையில் போலித் தன்மையின்றியும் இருப்பர். இயல்பாகவும் தடையின்றியும்அவர்கள் நடந்து கொள்வர். ஆகவே, மிகச் சிறிய குழந்தைகள் குறித்த சிறுநிகழ்வுப் பதிவேடுகளைத் தயாரித்தல் மிக எளிது. மந்தமான மாணவர் குறித்த சிறுநிகழ்வுப் பதிவேடுகளைத் தயாரிததலும் எளிது. மிகச்சிறிய மற்றும் இயற்கை மீறிய குழந்தைகள் குறித்த சிறுநிகழ்வுப் பதிவேடுகள் பெரும் பயன்தரவல்லன. ஏனெனில் தாள்-எழுதுகோல், சோதனை, இணையினர் மதிப்பீடு, தன்மதிப்பீட்டு முறை போன்ற புறவயத் தன்மை வாய்ந்த பிறவகைச் சோதனைகளுக்கு அவர்களால் பொதுவாக விடையளிக்க இயலாது. மாணவர் ஒருவரைப் பற்றி அவரது பெற்றோர்களுக்கு ஆசிரியர் அறிக்கையொன்று அளிக்க வேணடுமெனில் சிறு நிகழ்வுப் பதிவேடுகள் அவருக்கு உற்ற கருவியாகும். ஆசிரியர் கூட்டத்தில் பங்கேற்கும் போதும் பள்ளி உளவியலறிஞரைச் சந்திக்கும் போதும் சிறு நிகழ்வுப் பதிவேட்டில் பதிவாகியுள்ள செய்திகள் குறித்து ஆசிரியர் விவாதிக்கலாம். சிறு குழந்தைகள் தமது ஆசிரியர்களைப் போன்று நடிக்க முயலுகின்றனர். பெரும்பாலான மாணவர்கள் தமது ஆசிரியரின் சொற்களை மூதுரையான உண்மை என ஏற்கின்றனர். ஆகவே, ஆசிரியரின்செயல்களும்மற்றும் அவரது சொந்தச சார்புடைய கருத்துகளும் சிறுநிகழ்வுப் பதிவேட்டில் எதிர் நிழலிடுகின்றன. ஆசிரியர் தமது குறைகள் சிலவற்றைத் திருத்திக் கொளளவும் இப் பதிவேடு உறுதியாக உதவும்.

சிறுநிகழ்வுப் பதிவேடு நேரத்தை விழுங்கும் பணியாகவும் உள்ளது. குறிப்பிட்ட ஒரு மாணவரை நெடுநேரம் உற்று நோக்கினால்தான் சிறுநிகழ்வுப்பதிவேட்டினை நிரப்பமுடியும். பல்வேறு நிகழச்சிகளைப் பதிவு செய்யப் பல்வேறு அட்டைகளைப் பயன்படுத்த வேண்டியுள்ளது. ஒரு மாணவனைப் பற்றி நம்பகமான கருத்தைப் பெறுவதற்குப் பல்வேறு ஆசிரியர்களை உற்று நோக்கச் செய்து தனித்தனியே சிறுநிகழ்வுப் பதிவேடுகளைத் தயாரிக்க வேண்டியிருக்கும். சிறுநிகழ்வுப் பதிவேட்டைப் புறவயத் தன்மையுடையதாகச் செய்வது அடுத்த இடர்ப்பாடாகும். விரிவுரை வழங்குவது எளிது. ஆனால் அறிககையை எழுத்துருவில் அளிக்கும்போது பணி கடினமாகி விடுகிறது.

ஆசிரியரும் மனிதரே. அவருக்கெனத் தனிசசார்புகள், விழைவுகள், நாட்டங்கள, நம்பிக்கைகள், தனி மனப் போக்குகள் உள்ளன. அவரால் நேசிக்கப்படும் மாணவர் தம் நடத்தைகள் அனைத்தும் விரும்பத் தக்கவை என அவர் ஏற்கக்கூடும். இத்தகைய நிலையில் ஒருவருக்கு மேற்பட்ட ஆசிரியர்கள தனித்தனிச் சிறுநிகழ்வுப் பதிவேடுகளைத் தயாரிக்க வேண்டும்.

இவற்றின் சராசரியை எடுத்துக்கொண்டு ஆராய லாம். சிறுநிகழ்வுப் பதிவேடுகளுக்காக உற்று நோக் கல் செய்வதன் முன் ஆசிரியர்கள் போதிய பயிற்சி யும் பெற வேண்டும்.

சிறுநிகழ்வுப் பதிவேடுகளைச் செம்மைப்படுத்தப் பலவழிகள் உள்ளன. உற்று நோக்கல் மற்றும் பதிவு செய்தலைப் பயனுடையதாக்குவதற்குக் கீழ்க்காணும் கருத்துகளை உளவியல் வல்லுநர்கள் தெரிவித்துள் ளனர். 1. எதை உற்று நோக்க வேண்டும் என்பதை முன்கூட்டியே தீர்மானிக்க வேண்டும். தனிச் சிறப்பு டைய நடத்தையில் விழிப்புடன் இருத்தல் வேண்டும். தாள் எழுதுகோல் சோதனைகளால் மதிப்பிட முடி யாத நடத்தைகள் எவை என்பதையும், உற்று நோக் கல் மூலம் மதிப்பிடக்கூடியவை எவை என்பதையும் முதற்கண் தீர்மானித்தாக வேண்டும். மேலும் மாண வர் ஒருவரின் வளர்ச்சி நிலையில் மிக மதிப்புடைய தும் தனிச்சிறப்புடையதுமான நிகழ்ச்சிகளை ஆசிரி யர் காணத் தவறிவிடலாம். அத்தகைய நடத்தை களை மதிப்பிட உற்றுநோக்கல் முறையைப் பயன் படுத்தல் வேண்டும். 2. நடத்தையைப் பொருள் பொதிந்ததாகச் செய்வதற்குப் போதிய சூழல்களை உற்றுநோக்கிப் பதிவு செய்யவேண்டும். சில நேரங் களில ஒரு குழந்தையின் சில நடத்தைகளை அதன் பின்னணியைப் புரிந்து கொள்ளாமல் விளக்குவது ஆசிரியருக்கு இடர்ப்பாடாக அமையும். ஒரு மாண வர் வழக்கத்திற்கு மாறானதும் வலியத் தாக்கும் தன்மையுடையதுமான நடத்தையைச் சிலநேரம் பெற்றிருக்கலாம். விசாரித்துப் பார்த்தால், அம்மாண வர் தவறேதும் செயயாதபோது அவரது வகுப்புத் தோழர்களால தேவையின்றியே அவர் சினங் கொள் ளுமாறு செய்யப் பெற்றிருப்பது தெரியவரும். இத் தருணததில் வலியத்தாக்கும் தன்மையுடையவர் என அம்மாணவரைக் குறை கூறிவிடமுடியாது. ஆகவே அத்தகைய நடத்தைக்குக் காரணமான சூழல்பற்றிய முழுவிவரமும் பதிவாக வேணடும். 3. உற்று நோக் கும் பொழுது அல்லது உற்றுநோக்கியபின் எவ்வளவு விரைவில் முடியுமோ அவ்வளவு விரைவில் நிகழவு களைப் பதிவு செய்துவிடல் வேண்டும். 4. ஒரு நேரத் தில் ஒரு நிகழ்ச்சியை மட்டுமே உற்றுநோக்கவேண்டும். அதுபற்றிய பதிவுகளை முடித்த பின்னரே அடுத்த மாணவர் அல்லது நிகழ்ச்சியை உற்றுநோக்க வேண டும். 5. உற்று நோக்கிய செய்திகள் விவரமும், உற்றுநோக்கியவரது விளக்கங்களும் தனித்தனியே பதிவுசெய்யப்பட வேண்டும். விளக்கங்கள் தெளிவாக எழுதப் பெற வேண்டும். எதிர்ப்புணர்ச்சி, வெட்கம், வருத்தம், சோம்பல், பரிவின்மை போன்ற சொற களை இயன்றவரையில் விலக்க வேண்டும். இத்த கைய சொற்களைப் பயன்படுத்தியே தீர வேண்டு மெனில் தனி இடத்தில் அவற்றை எழுதலாம். 6. உடன்பாடானதும் எதிர் மறையானதுமான நடத்தை நிகழ்வுகளைத் தெளிவாகப் பதிவு செய்தல் வேண் டும். 7. பல்வேறு காரணங்களால் வெவ்வேறு சூழல் களில் வெவ்வேறு விதமாக ஒரு மாணவர் நடந்து கொள்ளலாம். ஒரு குறிப்பிட்ட மாணவரின் நடத்தை அமைப்புக் குறித்துத் தெளிவாகப் புரிந்து கொள்வ தற்குப் பல்வேறு நடத்தை நிகழ்ச்சிகளை உற்று நோக்குதல் சிறப்புடையது. 8. உற்று நோக்க வேண் டிய நிகழ்ச்சியைத் தெரிந்தெடுப்பதில் புதிய ஆசிரிய ருக்கு இடர்ப்பாடு ஏற்படலாம். புறவயத் தன்மை யுடன் பதிவு செய்வதில அவருக்குத் திகைப்பு ஏற்பட லாம். ஆகவே. இத்தகைய பணியைச் செய்ய விழை யும் ஆசிரியருக்குத் தனிப்பயிற்சி தேவைப்படும். ஒரு வல்லுநர் அல்லது அனுபவமுடைய ஆசிரியர் அவருக்கு வழிகாட்டலாம்.

வகுப்பறை ஆசிரியருக்கு மாணவரைப் பற்றிய தெளிவான கண்ணோட்டம் பெற மிகச் சிறந்த அளவுகோலாக சிறுநிகழ்வுப் பதிவேடுகள் விளங்கு கின்றன. சே.தா.

*சிறுபஞ்சமூலம்* பதினெண் கீழ்க்கணக் கினைச் சார்ந்துள்ள ஓர் அறநூல். மூலம் என்பது மரஞ்செடிகளின் வேரினைக் குறிக்கும். சிறுபஞ்சமூலம் என்னும் தொடர் சிறிய ஐந்து வேர்களைக் குறிகும். இது தமிழ் மருந்துத் துறையில் அமையும் ஒரு பெயர். 'கண்டங்கத்தரி, சிறு வழுதுணை, சிறுமல்லி, பெருமல்லி,நெருஞ்சி இவற்றின் வேராகும்மே' என்று பொருட்டொகை நிகண்டு (867) குறிப்பிடுகிறது. பதார்த்த குண சிந்தாமணி என்னும் நூலும் இதற்கு இவ்வாறே விளக்கந் தந்துள்ளது (495). இதில் குறிப் பிட்ட ஐந்தும் சிறுசெடிகளாதலின் இவை இப் பெயர் பெற்றன. இந்த ஐந்து வேர்களாலும் ஆகிய மருந்து உடற் பிணியைத் தீர்க்கவல்லது. அவ்வாறே பாடல் கள் தோறும் கூறப்பட்டுள்ள ஐந்தைந்து நீதிகளும், கற்றொழுகுவார்களின் ஆன்மநலம் பேணவல்ல தாகும். அவ்வொப்புமை கருதி அவ்வாறமைந்த பாக்களாலாகிய நூலும்'சிறுபஞ்சமூலம்' எனப்பட்டது.

சிற்பஞ்ச மூலம் என்றதற்கேற்ப, வில்வம் பெருங்குமிழ், தழுதாழை, பாதிரி, வாகை ஆகிய ஐந்து பெருமரங்களின் வேர்களைப் பெரும் பஞ்ச மூலம் என்று முற் கூறிய நூல்கள குறிப்பிட்டுள்ளன. ஆனால், அப்பெயரில் தமிழில் இலக்கியம் அமைய வில்லை. சிறுபஞ்சமூலம் போலவே, பதினெண் கீழ்க் கணக்கில், திரிகடுகம், ஏலாதி ஆகியனவும் மருந்தின் பெயரடிப்படையில் பெயர் பெற்று விளங்குகின்றன.

இந்நூலாசிரியர் பெயர் காரி ஆசான். காரி என்பது இயற்பெயர். ஆசான் என்னும் பின்னடை

தொழில் பற்றி அமைந்ததாகும். இவர், சமண சமயத்தினராகக் காணப்படுகிறார். இவர்தம் ஆசிரியர் பெயர் மாக்காயனார் எனபது. கணிமேதாவியார் இவருடன் பயின்ற மாணவராவார்.

'முழுதுணர்ந்து' எனத் தொடங்கும் கடவுள் வாழ்த்தொடு இந்நூல் தொடங்குகிறது. சிறப்புப் பாயிரமாக இருவெண்பாக்கள் உள்ளன. நூல் 102 வெண்பாக்களைக் கொணடுள்ளது. ஆனால் இதன், 85,86,87,88,89 ஆகிய ஐந்து பாடல்கள் கிடைக்கவில்லை. எஞ்சியுள்ள பாடல்களைச் சாராத மூன்று வேறுபாடல்கள் புறத்திரட்டு என்னும் தொகை நூலில் கிடைத்துள்ளது (புறத்.206, 207, 311). அம்மூன்று பாடல்களையும், கிடைக்காத ஐந்து பாடல்களுள் மூன்றாகக் கருதிச் சிலர் நூலைப் பதிப்பித்துள்ளனர். அவ்வகையில் கடவுள் வாழ்த்தும் இரு சிறப்புப் பாயிரச் செய்யுள்களும் நீங்க இன்று 100 பாடல்களே இதன்கண் அமைந்துள்ளன.

'நாள், கூட்டம், மூழ்த்தம்' எனத் தொடங்கும் வெண்பா (42) சோதிடக் கருத்தைக் கொண்டுளளது 'உண் இடத்தும்' எனத் தொடங்கும் வெணபாவில், உறுதவமேல் கங்கைக் கரைப் பூசல் போற்றல், என்றமைந்த பகுதியில் பஞ்சதந்திரக் கதையில் இடம் பெறும் மைனாவுக்கும் முயலுக்கும் வழக்குத் தீர்த்த பூனையின் கதை குறிப்பிடப்படுகிறது. 'தோற் கன்று காட்டிக்கறவார்' என்று இந்நூல் சுட்டும் அறக் கருத்து அக்காலத்திற் சிலர் பசுவிற்குத் தோற் கன்று காட்டிப் பால்கறக்கும் வழக்கம் கொணடிருந் ததனைச் சுட்டி, அதனைக் கடிந்து கூறுவதாக உள் ளது. (82). இந்நூலுக்குப் பழைய உரை ஒன்றுள்ளது அது பாடற் கருத்தினை நனகு உணர்ந்துகொள வதற்குப் பேருதவியாக விளங்குகிறது. அ.மா.ப.

**சிறுபாணாற்றுப் படை** சங்க இலக்கியமாகிய பத்துப்பாட்டில் மூன்றாவதாக இடம் பெற்றுள்ள பாடலாகும்.நனனூல் உரையாசிரியர் மயிலைநாதர் பத்துப்பாட்டு எனனும் தொகையை ஆளக் காணலாம். பத்துப்பாட்டில் புறப்பொருள் தொடர்பான பாடல்களுள் ஆற்றுப்படைத் துறையிலமைந்தவை ஐந்து. அவற்றுள் ஒன்று சிறுபாணாற்றுப்படை. பரிசில பெற்ற கலைஞன பரிசில பெற விரும்பிய கலைஞனிடம் தான் பரிசில் பெற்ற நெறியினைக் கூறி வழிசொலலும் பாங்கில் குறிப் பிட்ட தலைவனைப் புகழ்வதே ஆற்றுப்படைத் துறையாகும். பாடாணதிணையுள் இத்துறை அமையும். இத்தகைய ஆற்றுப் படைத்துறைப் பாடல்கள் புறநானூறு பதிற்றுப்பத்து ஆகிய நூல்களில் குறைந்த அடிகளில் அமைந்துள்ளன. பத்துப்பாட்டில் அவை வருணனைப் பகுதிகள் மிகுந்த காப்பியப் போக்கில் வளர்ந்து நெடும் பாடலாக உருப்பெற்றுள்ளன.

பரிசில் பெற்ற பாணன் பரிசில் பெறவிரும்பிய பாணனை ஆற்றுப் படுத்துவதுபோல் பாடுவது பாணாற்றுப்படையாகும். புற நானூற்றிலும் இத் தகைய பாணாற்றுப்படைப் பாடல்கள் உள. யாழில் இருவகை உண்டு, பேரியாழ், சீறியாழ் என. 'இன் குரல்சீறியாழ்' (சிறுபாண்.35) என்று சிறுபாணாற்றுப் படையில் வருவது காணலாம். சீறியாழ் இசைக்கும் சிறுபாணன, சிறுபாணனை ஆற்றுப் படுத்துவதால் இது சிறுபாணாற்றுப்படை எனப்பட்டது என்பர். பத்துப்பாட்டிலுள்ள பாணாற்றுப்படைப் பாடல் களுள் இது அளவில் சிறியதாகலின் சிறுபாணாற்றுப் படை எனப்பட்டது என்ற கருத்தும் உளது.

இதன் ஆசிரியர் இடைக்கழி நாட்டு நல்லூர் நத் தத்தனார். மதுராந்தகம் வட்டத்தில் உப்பங்கழிக் கும் கடற்கரைக்கும் இடைப்பட்ட நிலப்பகுதியே இடைக்கழி நாடு என்றும், அது இன்று எடக்கநாடு என்று மருவி வழஙகப்படுகிறது என்றும் டாக்டர் மா. இராசமாணிக்கனார் கூறுவார். (பத்துப்பாட்டு ஆராய்ச்சி ப.55) அப்பகுதியில் உள்ள நல்லூரைச் சார்ந்த புலவர் நத்தத்தனார்.

பாட்டுடைத் தலைவன் ஒய்மானாட்டு நல்லியக் கோடன் ஆவான்; ஓவியர் குடியைச் சார்ந்தவன். இன்றைய திண்டிவனம் பகுதியே ஒய்மானாடு என்று வழங்கப்பட்டது. மாவிலங்கை என்னும் தலைநகரிலிருந்து அந்நாட்டை ஆண்டுவந்தான். இசைக்கருவியில் வல்லவன் என்பதால் நல்லியக்கோடன் என்று பெயர் பெற்றான் என்பர். இப்பாடல் 269 அடிகள் கொண்டது. பாணன் வறுமையினால வாடியநிலை, மூவேந்தர், எழுவேளிர், நல்லியக்கோடன் சிறப்பு, பாணன் பொருள் பெற்ற நிலை, எயிற்பட்டினம், வேலூர், ஆமூர் வழியாகக் கிடங்கில் செல்லல், நல் லியக்கோடன் பண்பு, பரிசிலரைப் போற்றும் சிறப்பு ஆகிய பொருட்கூறுகளை இப்பாடல் கொண்டுள்ளது. இதில் குட்டுவன் வஞ்சி, செழியன் மதுரை, செம்பியன் உறந்தை ஆகியவற்றின் வளம் சிறப்புற வருணிக் கப்பட்டுள்ளது. பேகன், பாரி, காரி, ஆய், அதிகன், நள்ளி, ஓரி எனும் ஏழு வள்ளல்களின் அருஞ்செயல் கள் அடுத்து விளக்கப்படுகின்றன. பெருஞ்சித்திரனா ரும் இவ்வாறு எழுவள்ளல்களை ஒருஙகிணைத்துப் பாடும் நிலையை (புறம்.158) நோக்கச் சங்க காலத் திலேயே எழுவள்ளல்களை ஒருங்கிணைத்துப் போற் றும் போக்கு இருந்தமை புலனாகிறது.

பாணனது வறிய நிலை 10 அடிகளில் வருணிக் கப்படுவது குறிக்கத்தக்கது. பெருந்தலைச்சாத்தனார்

(புறம்.164) பாடலிலும் இத்தகைய வறுமைச் சித்திரத்தைக் காணலாம்.

'பாலைநின்ற பாலை நெடுவழி' (சிறுபாண் 11) முல்லைசான்றமுல்லையம்புறவு' (சிறுபாண். 169) 'மருதஞ்சான்ற மருதத் தண்பணை' (சிறுபாண். 186) பாடல் சான்ற நெய்தல் நெடுவழி' (சிறுபாண். 151) 'குறிஞ்சிக்கோமான்' (சிறுபாண். 367) என ஐந்திணைச் செய்திகளை வருணிப்பதோடு திணையைக் குறித்துச் சொல்வதும் ஒரு சிறுப்பாகும். விறலியை வருணிப்பது பிற பாடல்களில் உள்ளதுபோல் அமைந்துள்ளது. யாழின் வருணனை இறுதிப் பகுதியிலமைந்துள்ளது.

அந்தாதி அமைப்புமுறை இப்பாடலுள் பலவிடங்களில் அமைந்துள்ளது. அழகிய உவமை ஒன்றினோடு தொடங்கும் இப்பாடலில் பற் பல உவமைகள் இடம் பெற்றுள. வருணனையில் 'ஓங்கெயிற்கதவம் உருமுச்சுவல் சொறியும் (சிறு.80) 'மதியேக்கறூஉம் மாசறுதிரு முகம் (சிறு.157) என்பது போன்ற உயர்வு நவிற்சி பல காணப்படுகின்றன வேலூர்ப் பெயர்க்காரணம், வள்ளல்கள் பெருமை, பீமபாகம் ஆகியவற்றைக் கூறும்போது புராணச் செய்திகள் பல இடம் பெற்றுள்ளன. நல்லியக்கோடனது சிறப்பியல்புகள் அனைத்தையும் (சிறு 205-220) தொகுத்துக் கூறுவது குறிக்கத்தக்கது. மூவேந்தர், எழுவள்ளல்கள் ஆகியோர் செய்திகளை உரைப்பதால் இது சங்க காலத்தின் இறுதிப்பகுதியில் எழுந்த பாடல் என்பா.

நா.செ.

**சிறுபான்மையினர்**:சிறுபான்மையோர் பெரும்பான்மையோர் என்ற சொற்கள் முறையே எண்ணிக்கையில் குறைந்தவர்கள் எண்ணிக்கையில் மிகுந்தவர்கள் என்ற கருத்துகளை உணர்த்துகின்றன. சில சிறப்பான, தனிப்பட்ட தேசிய, பண்பாட்டு இயல்புகளை உடையோரைச் சமூகவியலார் சிறுபான்மையோர் (Minorities) என்று கருதுகின்றனர். சிறுபான்மையருக்குச்சில தனித்தன்மைசள் இருக்கின்றன. இத்தன்மைகள் இல்லாதவர் பெரும்பான்மையராவர். சிறுபான்மையருடைய தனித்தன்மைகள் மற்றவருடைய இயல்புகளோடு கலநதுவிட்டால், சிறுபானமையர் சிறுபான்மையராகத் தொடர்ந்து இருக்க மாட்டார். சிறுபான்மைருடைய தனித்தன்மை மற்றவருடைய பண்புகளோடு கலத்தலை, சிறுபான்மையரும் பெரும்பான்மையரும் எதிர்க்கும் வரையில்தான், அந்தத் தனமையை உடையவர் சிறுபான்மையராக மதிக்கப்படுவர்.

சுவிட்சாலந்து நாட்டில் சூரிச்சு (Zurich) நகரத்தில் நடைபெற்ற உலகச் சமூகவியல் மாநாட்டில் (1950) சிகாகோ பல்கலைக்கழகப் பேராசிரியர் உலூயி விர்த்து (Louis Wirth) உரையாற்றுகையில், சிறுபான்மையர் என்போர் சமூகத்தில் 'உள்ள ஏனையோரினின்றும் இன, பாண்பாட்டுக்கூறுகளின் அடிப்படையில் வேறானவராகக் கருதப்படுவோரும், அத்தகைய இன, பண்பாட்டு இயல்புகளின் காரணமாக மற்றவருக்கு அளிக்கப்படும் மதிப்பினின்றும் வேறான, தாழ்வான மதிப்பு அளிக்கப்படுவோரும், இவ்வாறு தங்களுக்களிக்கப்பட்ட தாழ்ந்த நிலையைப் பற்றி ஓர் உணர்வை வளர்த்துக்கொண்டோரும் ஆவர்' என்று கூறினார். இவர் கூறும் இலக்கணத்திலுள்ள இன அடிப்படையில் சிறிய எணணிக்கை யுடையவரும், தாழ்வாக மதிக்கப்படும் நிலையிலுள்ளவரும் சிறு பான்மையர் என்ற கருத்து இப்போது ஒப்புக்கொள்ளப்படுவதில்லை. ஐக்கிய நாடுகள் சபையின் சிறுபான்மையர் பாகுபாட்டுத் தடுப்புப் பாதுகாப்புக் குழு (U.N. Commission on Prevention of Discrimination and Protection of Minorities) சிறுபான்மையரைப் பற்றி இலக்கணம் வகுக்கும்போது, ஒரு மக்கள் கூட்டத்திலே பெரும்பான்மையாளருடைய இன, சமய, மொழி மரபுகளினின்றும் அல்லது கூறுகளினின்றும் மிகவும் வேறுபட்ட இன, சமய, மொழி மரபுகளை அல்லது கூறுகளைப்பெற்று, அவற்றைப் பாதுகாத்தற்கு ஆர்வம் உடையவரே சிறுபான்மையோர் ஆவர்'என்று கூறுகிறது. மேலும், இந்த ஐ. நா. குழு, 'சிறுபான்மையோருடைய மரபுகளையும், கூறுகளையும் வளர்த்துக்கொள்ளுதற்கு ஆர்வமுடையவர் பலராவது அக்கூட்டத்தில் இருத்தல் வேண்டுமென்றும், 'சிறுபான்மையினர் அனைவரும் தாம் எந்தத்தேசியத்தைச் சேர்ந்தவரோ (Nationals) அந்தத் தேசியத்திற்குப் பற்றுறுதியோடு இருத்தலவேண்டும்' என்றும் கூறுகிறது.

**சிறுபான்மையோர் வரலாறு**: வரலாற்றில் மக்கள் சமூகங்களில் சிறுபான்மையோர் என்ற நிலைதோனறி வந்துள்ளது. மக்களுடைய இயக்கங்கள் கருத்துகள், அரசியற் கோட்பாடுகள் முதலியவை சிறுபான்மைக்குழுக்கள் தோன்றக் காரணமாயிருநதன. சமய வேறுபாடுகளின் காரணமாகச் சிறுபான்மையோராகக் கருதப்பட்ட குழுக்களுக்குப் பாலசுத்தீனத்துச் சமாரியர்களும், உரோமானியப் பேரரசில் கிறித்தவர்களும் எடுத்துக்காட்டுகள் ஆவர். பின்னர்த் தேசிய உணர்வு வளர்ந்தபோது அதனடிப்படையில் சிறுபான்மைக் குழுக்கள் தோன்றின. பிரெஞ்சுப்புரட்சிக்குப் பின்னர்த் தேசிய உணர்வினடிப்படையில் நாட்டிஎெல்லைகளை வரையறுக்க அரசாங்கங்கள் முயன்றன. இத்தகைய அரசாங்க முயற்சிகளை எதிர்த்துச் சிறுபான்மையோர் தங்களுடைய தனிப்பட்ட இயல்புகளைப் பாதுகாக்க முயன்றனர். அவர்களின் இயல்புகள்

பெரும்பானமையோரின் இயல்புகளோடு கலந்துவிடு தலை விரும்பவில்லை. பெரும்பான்மையருடைய இயல்புகளினின்றும் சிறுபான்மையருடைய இயல்புகள் மிகவும் வேறுபட்டிருக்குமானால், அவற்றைப் பெரும் பான்மையர் ஏறறுக் கொள்ளவும் விரும்பவில்லை. இந்நிலையில் சிறுபான்மையர் தேசிய கொள்கை யினின்றும் மாறுபட்டவராகக் கருதப்பட்டுத் தனிப் பட்ட குழுக்களாகக் கருதப்பட்டனர்.

அமெரிக்காவில் குடியேறிய இந்தியர், நீக்கிரோ வர், ஆசிய மக்கள் முதலியோர் சிறபான்மையராகக் கருதப்படுகின்றனர். இந்தியாவில் சாதி அடிப்படை யில் பெரும்பான்மையா, சிறுபான்மையர் என்ற வேறுபாடுகள் தோன்றியுள்ளன. அங்கு இசுலாமிய கிறித்தவ சமயங்களுக்கு மாறியவர்கள் சிறுபான்மை யோருக்குரிய இயல்புகளைப் பெற்றுள்ளனர்.

தென்னாப்பிரிககாவில் ஐரோப்பியரே அரசியலா திக்கம் பெற்றுள்ளனர். இவர்களுள் ஆங்கில மொழி ஐரோப்பியர், ஆப்பிரிககான் (Afrikaaner) மொழி பேசுவோர் என்ற பிரிவுகளிலிருந்தாலும், ஐரோப் பியர் ஆப்பிரிக்க நாட்டிலேயே வாழும் கறுப்புநிறக் குடிமக்களைவிட எண்ணிக்கையில் சிறியவர்களாக இருநதாலும், இவர்கள் அரசியலாதிக்கம் பெற றுள்ள காரணத்தால், இவர்கள் சிறுபானமையராகக் கருதப்படவிலலை. கிழககு, தெற்கு ஆப்பிரிக்காவில் வாழும் இந்தியர்களின் எண்ணிக்கை உயர்ந்திருந்தா லும் அங்குச் சிறுபான்மையர் சிக்கல் தோன்றியுள்ளது. தென்னாப்பிரிக்காவில் எண்ணிக்கையில் சிறிய வெள்ளை இனத்தவர் ஆட்சியிலிருப்பதால், அந்நாட் டில் குடியேறியுள்ள இந்தியச் சிறுபான்மையரையும், அந்நாட்டினராகவே வாழும் ஆப்பிரிக்கப் பெரும் பான்மை மக்களையும் 'சிறுபான்மையாளர்கள்' என்றே கருதி ஒதுக்கி நடத்துகின்றனர். இனவேறு பாடு, நிறவேறுபாடு ஆகிய காரணங்களை மட்டுமே ஆதாரமாக வைத்து, இந்தியர்களும் ஆப்பிரிகக (கறுப்புநிற) மக்களும் சிறுபான்மையோராகக் கருதப் படுதலால் அவர்களுக்குக் குடியிப்பு இடங்கள் தனியாக ஒதுக்கவும், சொத்துக்கள் வாங்குவதைத் தடுக்கவும், அவர்களுக்கு அரசியவுரிமைகளை மறுக்கவும் வழி செய்யும் இனஒதுக்கல் சட்டங்கள் செயற்படுகின்றன. நிற வேறுபாடு காரணமாக இச்சிறுபான்மையோர் பல இடர்ப்பாடுகளுக்குஆட்படுமாறு சட்டங்கள்மூலம் வற்புறுத்தப்படுகின்றனர். சோவியத்து நாட்டில் 150 வரை வேறுபட்ட தேசிய இனங்கள் இருந்தாலும், அந்நாட்டு அரசு ஒவ்வொரு தேசிய இனத்துககும் பணபாட்டுத் துறையில் முழுச் சுதந்திரமும் (Cultural autonomy), பெருமளவு நிலப்பகுதிகளில் வாழும் பெரிய தேசிய இனங்களுக்குத் தன்னாட்சி உரிமையும் (Poltical autonomy) வழங்கியுள்ளது. இரண்டாம் உலகப்போரின் விளைவாக மக்கள் ஒடுக்கப்பட்டும் குடிபெயர்க்கப்பட்டும, நாட்டெல்லைகள் மாற்றப் பட்டும் போகவே சிறுபான்மையர் சிக்கல் கடுமை யாகியுளளது.

**சிறுபான்மையர் நிலை:** தேசிய கருத்து பரவிவரும் இக்காலத்தில் சிறுபான்மை என்ற நிலை விரும்பத் தகாத ஒன்று அன்று என்ற எண்ணம் தோன்றி யுள்ளது. இலங்கையில் இன, சமய, மொழி அடிப் படைகளிலும், எண்ணிக்கையினடிப்படையிலும் சிறுபான்மையோராக உள்ள தமிழர்கள் தங்களு டைய அடிப்படை உரிமைகளுக்குப் பாதுகாப்புப் பெறும் பொருட்டுக் கிளர்ச்சிகள் நடத்துகின்றனர். சிறுபான்மையர் என்ற எண்ணத்தையே அழிக்கும் முயற்சிகள் வெற்றிபெற வில்லை. பலதேசிய இனங் கள் ஒரே அரசால் வாழ்தல் இயலும் என்ற கொள் கையை ஆங்கில, அமெரிக்க நாடுகளில் பலர் ஆதரிக் கின்றனர். இக்கொள்கையே சோவியத்து நாட்டின ஆட்சிக்கொள்கையும் ஆகும். ஆயினும், பல தேசிய இனங்கள் ஒரே அரசின்கீழ் வாழும் அமைப்பில் சிறுபான்மையோர் சிக்கல்தோன்றுதல் எளிது. கல்விப் பயிற்சி, கொள்கைப்பரப்பு முதலியவற்றின் வழியாக ஒவ்வொருவரும் பிறருடைய கருத்துகளை மதித்தற் கும், தனியார் சுதந்திரத்தை வளர்த்தற்கும் வாய்ப் புகள் இருத்தல் வேண்டும். மேலும், மனித சுதந்தி ரத்தையும் சமத்துவத்தையும் பாதுகாத்தற்கு ஒவ் வொரு நாட்டின் அரசியலமைப்பிலும் சட்டங்களி லும் வகை செய்யப்பட்டிருத்தல் வேண்டும்.

**ஐக்கிய நாடுகள் சபையும், சிறுபான்மையோர் நிலையும்:** பன்னாட்டுச் சங்கத்தின் சார்பாகச் செய் யப்பட்ட உடன்படிக்கைகளிலும், அறிக்கைகளிலும் இன, சமய, மொழி அடிப்படையிலான சிறுபான்மை யருடைய உரிமைகளின் பாதுகாப்புக்கு ஏற்பாடுகள் செய்யப்பட்டுள்ளன.ஆனால்,அவற்றைச் செயற்படுத் துதற்கு அச்சங்கத்தால் நடவடிக்கை ஏதும் எடுக்க இயலவில்லை. இப்போது ஐக்கிய நாடுகள் சபை, பன்னாட்டுச் சஙகத்தைவிடச் சிறுபான்மையோர் சிக்கலைச் சட்ட இயலான முறையில் தீர்த்துவைக்க முயலுகிறது. அதனுடைய நான்கு முக்கிய நோக்கங் களுள் ஒன்று, இன, பால், மொழி, சமய வேறுபாடு களின்றி யாவருடைய அடிப்படைச்சுதந்திரங்களையும் மனித உரிமைகளையும் மதிக்கவும் பாதுகாக்கவும் ஊக்குவிக்கவும் ஆவன செய்தல் ஆகும். இந்நோக்கம் அச்சபையின் பட்டயத்தின் 55-ஆம் பிரிவில் காணப் படுகிறது; அதனுடைய 56-ஆம் பிரிவின்படி உறுப்பு நாடுகள தனித்த முறையிலும், சபையோடு ஒத்து ழைத்தும்,பிரிவு 55-இல் சொல்லிய நோக்கங்களுக்கா கத் தக்க நடவடிக்கை எடுத்தல் வேண்டும். ஐ. நா. சபையின் சார்பாக 1948-ஆம் ஆண்டு திசம்பரில்

'உலக மனித உரிமைகளின் அறிக்கை' (Universal Declaration of Human Rights) வெளியிடப்பட்டது; ஐ நா.மனித உரிமைகள் ஆணையமும் (U.N. Human Rights Commission) நிறுவப்பட்டது. இவ் வாணையம், மனித உரிமைகளடங்கிய ஒப்பந்தங் களை வரைந்து, அவற்றை உறுப்பு நாடுகளால் நிறைவேற்றப்படுதற்குரிய உடன்படிக்கைகளாக ஆக் கிற்று. ஆயினும், அவற்றைமீறி நிறவெறிச் சட்டங் களைச் செயற்படுத்தும் தென்னாப்பிரிக்க வெள்ளை அரசாங்கத்துக்கெதிராக இவ்வாணையத்தால் எந்த நடவடிக்கையும் எடுக்க இயலவில்லை. இதேபோல மனித உரிமை மீறுதலைப் பற்றிய பல விண்ணப்பங் கள் ஆணையத்துக்கு விடுக்கப்பட்டாலும், அவற்றில் கூறப்பட்ட குறைகளை விசாரித்தற்கும் நீககுதற்கும் ஆணையத்துக்கு அதிகாரம் இல்லை.

**இந்தியாவில் சிறுபான்மையோர் பாதுகாப்புகள்:** சிறுபான்மையோரும் பெரும்பான்மையோரைப் போல உரிமைகள் பெற்றுள்ள நாட்டுக் குடிமக்க ளாகையால், சிறுபான்மையோர் தம் உரிமைகளைச் செயற்படுத்துதற்கு வாய்ப்பளிக்க அரசாங்கத்துக்குப் பொறுப்பு இருக்கிறது. இதனை இந்தியாவை ஆண்ட ஆங்கிலேயர் உணர்ந்து முதன்முதலில் 1909-ஆம் ஆண்டின் இந்திய அரசியல் சட்டத்தில், சிறுபான்மை யராகிய இந்திய இசுலாமிய மக்களுக்குச் சட்டமனறத் தில் பிரதிநிதித்துவம் இருக்கும்பொருட்டுப் பொதுத் தொகுதியிலேயே இந்துவும் இசுலாமியரும் தேர்ந் தெடுக்கப்படுதற்கு வகை செய்தனர். இதன்படி ஒரு கூட்டுத்தொகுதியில் (Joint electorate) பல வகுப்பு வேட்பாளர்கள் போட்டியிட்டாலும், அவருள் இசுலாமிய வேட்பாளரே தேர்ந்தெடுக்கப்பட்ட வராக அறிவிக்கப்படுவார். இதுவே, வகுப்புவாரிப பிரதிநிதிததுவம் என்ற கொளகை (Principle of Communal Representation) ஆகும். இந்த வகுப்பு வாரிப் பிரதிநிதித்துவக் கொள்கை இசுலாமிய மக்க ளுக்குப் பின்பற்றப்பட்டதுபோலச்சீககியர், இந்தியக் கிறித்தவர், தாழ்த்தப்பட்ட சாதியினர், ஆங்கிலோ இந்தியர் ஆகியோருக்கும் சட்டமன்றங்களில் பிரதி நிதித்துவம் கிடைக்குமாறு 1919-ஆம் ஆணடு இநதிய அரசியல் சட்டத்திலும், 1935-ஆம் ஆண்டு இநதிய அரசியல் சட்டத்திலும் வகைசெய்யப்பட்டது. இன, சமய அடிப்படையில் சிறுபான்மையராகக் கருதப் பட்ட இசுலாமியருக்கு அரசியல் சலுகைகள பெருகி, 1947-இல் பாகிசுத்தான் என்ற தனிநாடே கிடைத்தது. இநதியநாடு சுதந்திரம் பெற்றபின் அதற்காக வரைந்துகொள்ளப்பட்ட அரசியலமைப்புச் சட்டத் தின் முன்னுரையில் எல்லா இந்தியக் குடிமக்களுக்கும் சமூக, பொருளாதார, அரசியல் துறைகளில் நீதியும், எண்ணவும் பேசவும் சமய நம்பிககையோடிருக்கவும் சுதந்திரமும், சமத்துவ நிலையும், வாய்ப்பும் தனி யாளுக்கு மதிப்பும், நாட்டிற்கு ஒற்றுமையும் உணடா கும் பொருட்டு இவ்வரசியலமைப்பு வரையப்பட்ட தாகக் கூறப்படுகிறது. இந்திய அரசியல் சட்டம் பிரிவு 14-இல் யாவரும் சட்டத்தின்முன் சமத்துவ நிலையினரென்றும், பிரிவு 15-இல் சமய, இன, சாதி, பால், பிறந்த ஊர் ஆகியவற்றின் அடிப்படையில் குடி மக்களுக்கிடையே பாகுபாடு காட்டப்படுதல் சட்டப் படி தண்டனைக்குரிய குற்றமாகுமென்றும் கூறப்படு கின்றது. மேலும், அடுத்துவரும் 15-ஆம் உட்பிரி வில் குடிமக்களுக்கு இருக்கும் தனிமனித சுதந்திர உரிமை, அவன் சுரண்டப்படாமலிருத்தற்குள்ள உரிமை, சமய உரிமை, பண்பாடு, கல்வி உரிமைகள் முதலியன கூறப்பட்டுள்ளன. இவ்வுரிமைகளை அரசாங்கமோ தனியாட்களோ மீறினால் அவற்றைப் பாதுகாத்தற்கு அரசியலமைப்பின் காப்பு உரிமை களும் உள்ளன. இந்த அடிப்படை உரிமைகள எல்லா இந்தியக் குடிமக்களுக்கும் உரியவை ஆகும்.

இவ்வடிப்படை உரிமைகளை இந்தியக்குடியரசில் வாழும் எல்லாக் குடிமக்களும்பெற்றுள்ளனர் என்று அரசியலமைப்பில் கூறப்பட்டிருந்தாலும், சிறுபான் மையோருக்கும் இவ்வாதார உரிமைகள உரியவையே யாயினும், சிறுபான்மையோருக்குச் சட்டமன்றங்களி லும், கல்வித்துறைகளிலும், அரசுப் பணிகளிலும் இட ஒதுக்கீடு செய்யப்பட்டுளளதை, அரசியலமைப்பின் 16-ஆம் பாகத்தில் (Part XVI) காணலாம்.

'நடுவண பாராளுமன்றத்தின் கீழ்அவையில தாழ்த்தப்பட்ட வகுப்பாருக்கும், பழஙகுடி மக்களுக் கும் இடங்கள் ஒதுக்கப்படுதல வேண்டும் (பிரிவு330)'

'ஆங்கிலோ-இந்திய சிறுபான்மையோருக்குப் பிரதிநிதித்துவம் அளிக்கும் பொருட்டு அவ்வகுப் பிலிருந்து இருவரை கீழவையில் குடியரசுத் தலைவர் அமர்த்துவார் (பிரிவு 331).'

'இதேபோல் மாநிலச் சட்டமன்றம் ஒவ்வொன் றிலும் தாழ்த்தப்பட்ட வகுப்பாருக்கும் பழங்குடி வகுப்பாருக்கும் இடங்கள் ஒதுக்கப்படுதலும், ஆங் கிலோ - இந்திய வகுப்பிலிருந்து ஒருவரையோ சிலரையோ ஆளுநர் அமர்த்துதலும் வேணடும் (பிரி வுகள 332, 333)'

'ஒதுக்கப்பட்ட வகுப்பாருக்கும் பழங்குடிமக்க ளுக்கும் நடுவண மாநில அரசுப்பணிகளிலும், பதவிகளிலும் ஆட்சி முறையின் திறம் பாதிக்கப் படாதவாறு பங்கு இருக்கத்தக்கவாறு அவர்களு டைய உரிமைகளுக்கு முக்கியத்துவம் அளிக்கப்படுதல் வேணடும். (பிரிவு 335)'

தொகுக்கப்பட்ட சாதியினர், பழங்குடிமக்கள் ஆகியோருடைய நலனகளைப்பாதுகாக்கும்பொருட்டு ஒரு தனி அதிகாரியை (Special Officer) குடியரசுத் தலைவர் அமர்த்துதல் வேணடும் (பிரிவு 338-1).

எழும் எல்லாச சிக்கல்களையும், பாதுகாப்புக்கள் ஒழுங்காக வேலை செய்கின்றனவா என்ற விவரததை யும தனி அதிகாரி ஆராய்ந்து, ஓர் அறிக்கையை வரைந்து குடியரசுத் தலைவருக்கு அளித்தலும், குடியரசுத் தலைவர் அவ்வறிக்கையைப் பாராளுமன்றத் தின இரு அவைகளிலும் அளித்தலும் வேண்டும் (338-2).

இந்தியாவின் எந்தப் பகுதியிலும் வாழும் சமூக, கல்வித்துறைகளில் பினதங்கிய வகுப்பாருடைய நிலைகளை ஆராய்ந்து, அவர்களுடைய இடர்ப்பாடு களை நீக்குதற்குரிய பரிந்துரைகளைக் கூறுதற்காகக் குடியரசுத் தலைவர் ஓராணையத்தை (Commission) அமர்த்தலாம். பரிந்துரைகளின்படி நடுவண், மாநில அரசுகள் பின்தங்கிய வகுப்பாருடைய இடர்ப்பாடு களை நீக்குதற்கு மானிய உதவிகளை வரையறுத்துக் குடியரசுத் தலைவர் பாராளுமன்ற அவைகளுக்கு அளித்தல் வேண்டும். அறிக்கையோடு, அதனைச் செயற்படுத்தியதைப்பற்றிய குறிப்பும் அளிக்கப்படுதல் வேண்டும் (பிரிவு 340-1,2,3).

குடியரசுத் தலைவர் ஆளுநரைக் கலந்தாலோ சித்து அரசியலமைப்பிலசேர்க்கப்படுதறகுகந்த தாழ்த் தப்பட்ட சாதியார், இனங்கள, பழங்குடி மக்கள் யார், யாரென்று குறிப்பிட்டுக்கூறும் அறிக்கையை வரையச் செயவார். பாராளுமன்றம் இவ்வறிக் கையை அரசியலமைப்பின் தாழத்தப்பட்ட சாதியார், பழங்குடிமககள ஆகியோரின் பட்டியல்களில் சேர்க கவோ விட்டுவிடவோ செய்தல் கூடும் (பிரிவுகள் 341,342).

இநதிய அரசியலமைப்பில் இவ்வாறு மிகவும் விரி வாகச் சிறுபான்மையோருடைய உரிமைகளைப் பாது காத்தற்காக மிகவும் விரிவாகவும் நுணுக்கமாகவும் ஏற்பாடுகள் செய்யப்பட்டுள்ளன. பா.கு.

**சிறுமோலிகனார்** சங்க காலப் புலவர்களுள் ஒருவர். இவர் பாடியதாக நற்றிணையில் ஒரே பாடல் (61) இடம்பெற்றுள்ளது. குறிஞ்சித் திணையி லமைந்த அப்பாடல் தலைவன் களவுறவை விரும்பி வந்து நிற்பதை அறியாள்போலத் தலைவியிடம் தோழி கூறுவதாக அமைந்துள்ளது. நச்சினார்க் கினியர் அப்பாடலைத் தலைவி தோழிக்குக் கூறுவ தாகக் கொள்வர் (தொல். பொருள். சூ.111 உரை). 'இரவுப்பொழுதில் மிகுந்த ஆசை வருத்தியபொழுது அம்பு பட்ட பெணமானைப் போல வருந்தினேன. அவவருத்தத்தை உணர்ந்த தாய் வினவியபொழுது ஏதம் உண்டாகும் என்றெண்ணி யாதுமில்லை எனக் கூறி வருத்தத்தை மறைத்துக கொணடேன்' எனக் கூறுவதாக உள்ள அப்பாடலில், முற்றிலும் நம் கள வொழுக்கத்தைத்தெரிந்துகொணடால்தாய் என்னை இற்செறிந்து விடுவாள், இனிக் காணமுடியாது ஆக லின் விரைவில மணந்துகொள்க என்னும் குறிப்பி னைத் தலைவனுக்கு உணர்த்துவதாக அமைத்துப் பாடியிருப்பது நயமிககதாகும். வீ.சே

**சிறுவெண்தேரையார்.** காணக: ஐயாதிச் சிறுவெணதேரையார்.

**சிறைக்குடி ஆந்தையார்** சங்க காலப் புல வர்களுள் ஒருவர். இவா இயற்பெயர் ஆந்தையார் எனபதாகும். சிறைக்குடி என்னும் இவரது ஊர்ப் பெயரோடு இவர் பெயரும் சேர்ந்து இவவாறு வழங் கப்பெறறார். இவர் பாடியனவாகக் குறுந்தொகை யில் 8 பாடல்களும் (56, 57, 62, 132, 168, 222, 273, 300) நற்றிணையில் ஒரு பாடலும் (16) இடம்பெற் றுளளன. தலைவி கூற்றாக அமைநத குறுந.57-ஆம பாடல் காவல் மிகுதியால் தலைவனைக் காணப பெறாமல் வருநதும் தலைவி தோழியிடம் கூறுவதாக அமைந்துள்ளது. அப்பாடலில், நீரில வாழும மகன றில் பறவைகள் இணைந்து நீந்தும்போது தாமரை யின் இடையீட்டால் அவை பிரிந்து செனறு பினகூட நேரிடும். அவ்வாறு பிரிய நேரும் சிறுபொழுதும் நீண்ட நாள் பிரிவுபோலக் கருதித் துன்புறும் அப்பற வைகளின் சேர்க்கையைப் போலப் பிரிவு அரிதாகிய துய்க்காத காமத்தோடு பிரிய நேர்ந்த அக்கணமே தன் உயிரும் உடலைவிட்டு நீங்குவதைத் தலைவி விரும்புவதாகக் கூறியுள்ளது தலைவனமீது அவள கொண்டுள்ள அன்பினைப் புலப்படுத்துவதாக உள்ளது. தலைவன கூற்றாக அமைந்த பாடலில் (குறுந்.168) தலைவியைப் பிரிந்து சென்று பொருளீட் டச் சொல்லும் தன் நெஞ்சிற்குத் தலைவியின் தோள களைப் பொருந்துதலும் பிரிதலும் இல்லாமல் இருக் கிறோம், பிரிந்தால் உயிர் வாழ்தல் அரிது என்பதைப் 'புனற்புணை யன்ன சாயிறைப் பணைத்தோள, மணத்தலுந் தணத்தலு மிலமே, பிரியின வாழ்தல் அதனினும இலமே' எனக் கூறி மறுத்துரைப்பது தலைவி மீதுளள விருப்பத்தின ஆழத்தை வெளிப படுத்துவதாக உளளது நயமிக்கதாகும். வீ.சே.

**சிறைத் தண்டனை:** ஒரு தனி மனிதனின்மீது வேணடுமெனறே அவரது சம்மதமின்றித் துன்பத்தை (வேதனையை) உணடாக்குவதோ, அம்மனிதனின் உயிருக்கோ சுதந்திரத்திற்கோ சொத்திற்கோ இழப்

பினை ஏற்படுத்துவதோ தண்டனை எனப்படும். சட்டத்தினை மீறுபவர்மீது இவ்வகைத் தண்டனை களை அரசாங்கம் சட்டப்படியாக விதிக்கிறது.

தண்டனைகள் பலவகைப்படும். அதில் இக்காலத் தண்டனைச் சட்டங்களில் மிகவும் அதிகமாகக் காணக்கூடியது சிறைத்தண்டனை (Imprisonment) ஆகும்.

சிறைத்தணடனை என்பது தண்டனைக்கு உட் படுத்தப்பட்டவரின் நடமாடும் உரிமையைத் தடுத்து நிறுத்துவதைக் குறிக்கும். பழங்காலத்தில் தண்ட னைக்கு உட்பட்ட ஒருவரைக் குழி ஒன்றில் தள்ளி அடைத்துவைத்தல் மூலமாகவோ, மரததில வைத்துக் கயிற்றினால கட்டிவைப்பது மூலமாகவோ, கூணடில அடைத்துவைப்பதின மூலமாகவோ, சஙகிலியினால் கைகளைப் பிணைப்பதின மூலமாகவோ அத்தண் டனையை நிறைவேற்றினர். இககாலத்தில சிறைச சாலைகள கட்டி அவற்றிற்குள் தவிர ஏனைய இடத் தில் குற்றவாளிகளின நடமாடுகின்ற உரிமையை ஒரு குறிப்பிட்ட காலம்வரை (தண்டனைக் காலம்) தடை செய்வதின் மூலம் சிறைத்தணடனை நிறை வேற்றப்படுகிறது.

**இந்தியத் தண்டனைச் சட்டமும் சிறைத்தணடனை யும்:** இந்தியத் தணடனைச் சட்டத்தின் 53-ஆம் பிரிவு இநதியாவில் நடைமுறையிலுள்ள சிறைத்தணடனை களின் வகைகளைப் பறறிக் கூறுகிறது. இதனபடி சிறைத்தணடனைகளை மூன்று வகைப் படுததலாம். அவையாவன: 1) சாதாரண சிறைத்தணடனை, 2) கடுஞ் சிறைத்தணடனை, 3) ஆயுட் சிறைததண டனை.

சாதாரண சிறைத்தணடனை பெற்றுச் சிறைக் கைதிகள் பூட்டப்பட்ட தங்களது சிறைசசாலையின அறைகளின உள்ளேதம தணடனைக் காலத்தைக் கழிப்பர், இவர்கள் நடமாடும் உரிமை மட்டும் தண்டனைக்காலத்தின்போது பறிக்கப்பட்டதேயன்றி வேறு எந்தக் கடின வேலையும் இவர்கள் சிறையில இருக்கும்போது செய்ய வேண்டியதிருககாது.

**கடுஞ்சிறைத்தண்டனை:** இத்தண்டனை பெற்ற வர்களின் நடமாடும் உரிமை தணடனைக் காலத்தில பறிக்கப்பட்டது மட்டுமன்றி இத்தண்டனை பெறற வர்கள கடுமையான உடல் உைப்புத் தேவைப்படுகினற வேலைகளைச் செய்தாகவும் வேணடும. தானியஙகள உடைத்தல், மண் தோண்டுதல், தணணீர் இறைத்தல், விறகு பிளத்தல் போன்ற கடிமான வேலைகளை இத் தண்டனை பெற்றவர்கள் செய்யவேண்டும்.

**ஆயுட் சிறைத்தண்டனை:** ஆயுட் சிறைத்தண டனை என்பது தணடனை பெற்றவர் தம் எஞ்சிய ஆயுள் முழுவதையும் சிறையில் கழிக்கவேண்டும் என்ப தைக் குறிக்கோளாகக் கொண்டுளளது.இத்தண்டனை அனுபவிப்பவர்கள் கடுஞ்சிறைத் தண்டனைக்குட்பட் டவர்கள் எப்படிக் கடின உடல் உழைப்பினைத் தரத்தகுந்த வேலைகள் செய்ய வேண்டுமோ அது போலவே வேலைகள் செய்ய வேண்டும். இருந்தபோதி லும் சிறைச்சாலைகளின் விதிகளின்படி தண்டனைக் காலத்தில் தண்டனை அனுபவிப்பவர்களுக்கு வழங்கப் படும் தண்டனைக் குறைபபுகளை வைத்துப் பார்க்கும் போது ஆயுள தண்டனைக் காலம் 14 ஆணடுகள என்று எணண வாய்ப்புளளது. நடைமுறையில் 14 ஆண்டுகள் சிறைச்சாலையில் இருந்தால் ஆயுட்சிறைத் தண்டனை முடிந்துவிடுகிறது என்றாலுங்கூடச் சட்டத் தின்படி ஆயுள்தண்டனை என்பது, தண்டனைக்குட் படுத்தப்பட்டவரின் ஆயுட்காலம் வரையே ஆகும்.

**துணை நூல்கள்:**

**Hansvon Hentig**, Punishment: Its Origin, Purpose and Psychology, Petterson Smith, 1973.

**Ratanlal & Dhirajral**, The Indian Penal Code, Wadhwa & Co. 1987.

*சின்பேன்:* இங்கிலாந்தின ஆட்சிககு உட்பட் டிருநத அயர்லாந்தில, நாட்டு விடுதலைக்காக கி.பி. 1906-இல் ஆர்தர் கிரிபிதது (Arthur Griffith) என் பாரால ஏற்படுத்தப்பெறற தேசிய இயக்கத்திற்குச் சின்பேன் (Sinnfein) தேசிய இயக்கம என்பது பெயா. இது கி.பி 1906-இல் தொடங்கப் பெற்றநு நாட்டுச் சுதந்திரத்திற்காகப போராடிய இநத இயக்கம், வன்முறையை விடுத்து, அமைதியான முறையில் ஆங்கில அரசை எதிர்த்தது. அரசுக்கு வரிகள் கொடுக் காமலும், அரசுப்பணிகளில் சேராமலும், ஆட்சியா யாளருக்கு இடையூறுகள் செயயவேண்டுமென்பதே இவர்களின் முக்கிய நோக்கம். தொடக்கத்தில் மக்க ளின ஆதரவு இந்த இயக்கத்தினருக்குக் கிடைகக வில்லை. முதலாம் உலகப் போர்க் காலத்தில், இவா கள் நடுநிலைக் கொளகையைப் பின்பற்றினர். ஐரிசுத் தொண்டர் படை ஒன்று உருவாகியது. 'அரசிய லாரை நம்பாமல் நாம், நமக்கு உழைக்க வேணடும்' என்ற கருத்துடன் 'நமக்கு நாமே' என்ற பொருளை யுடைய 'சினபேன்' என்ற குறியீடு இவாகள் இயக்கத் திற்கு அமைந்தது. இவர்கள கிளர்ச்சியை ஆங்கிலேய அரசு 1916-இல அடககிவிட்டது. எனினும், சின்பேன இயககம் அழிவுறாமல் மேலும் மேலும் வலிமை பெறத் தொடங்கியது.

சின்பேன் இயக்கத்தினருக்கு 1918-ஆம் ஆண்டுத் தேர்தலில் பெரு வெற்றி கிடைத்தது வெற்றிபெற்ற

உறுப்பினர்கள் ஆங்கிலப் பாராளுமன்றத்துக்குப் போகாமல், அயர்லாந்திலேயே ஒரு சுதந்திர அரசை நிறுவி, இங்கிலாந்தை எதிர்த்தனர். வேறு வழியின்றி ஆங்கில அரசு அயர்லாந்தை இரண்டாகப் பிரித்தது. தென் அயர்லாந்து, வட அயர்லாந்து எனப் பெயர்கள் கொடுத்து, இருபகுதிகளுக்கும் 1920-ஆம் ஆண்டுச் சட்டப்படி சட்டமன்றங்கள் ஏற்படுத்தியது. இச்சட்டத்தைச் சின்பேன் இயக்கத்தினர் விரும்பவில்லை. போராட்டம் தொடர்ந்தது. பிறகு 1921-இல் ஓர் அமைதிஉடன்படிக்கை ஏற்பட்டது. வடக்கு அயர்லாந்து இங்கிலாந்துடன் இணைந்திருக்க முடிவு செய்தது. தெற்கு அயர்லாந்து சுதந்திர நாடாகியது. இதற்கு அயர் (Eire) என்ற பெயர் கொடுக்கப்பட்டது ஆங்கிலேயப் பொது நலக்காப்பரசில, அயரும் ஒரு நாடாயிற்று. இந்த இணைப்பை விரும்பாமல் தெவேலரா (Devalera) என்பவர் தலைமையின் கீழ மீண்டும் போராட்டம் தொடங்கியது. முடிவில 1949-ஆம் ஆண்டு அயர் முழுச்சுதந்திரம் வாய்ந்த குடியரசாகியது. இங்கிலாந்தின் தொடர்பு அறுபட்டது. (காண்க: அயர்லாந்து). தெ.பா.

**சின்மரபு**: சீனாவில் கி.மு. 221 முதல் 207 வரை ஆட்சிபுரிந்த மரபு சின்மரபு (Chin Dynasty) எனப்பெறும். இம்மரபின் ஆட்சிக் காலத்தில் அந்நாட்டில் முதன் முதல் நடுவண் அரசின் ஆதிக்கம் மிக மேலோங்கியிருந்தது சீனப் நாட்டை வலிமை பொருந்திய இந்த நடுவண் அரசு அமைதிக காலத்தில்கூடச் சருவாதிகார முறையில ஆட்சிபுரிந்தது. சின்மரபு ஆட்சியில் சீனப்பெருஞ்சுவர் கட்டுவதற்குத் தொடக்கம் செய்யப்பெற்றது. இம்மரபுப்பெயரிலிருந்தே சீனாஎன்ற பெயரை அந்நாடு பெற்றது இம்மரபில் மிகச் சிறப்பு வாய்ந்த மன்னன சி-உவாங்-டி (Shih Huang ti) இவனால்தான சிதறிக்கிடந்த சீனாவின் பலபகுதிகள ஒன்றாக இணைக்கப்பெற்றன; நிலமானியப் பிரபுக்களின் ஆதிக்கம் ஒழிக்கப்பெற்றது. நிலங்களை யாரும் விற்கக்கூடாது என்ற பழைய சட்டத்தை மாற்றி, நில விற்பனை அனுமதிக்கப்பெற்றது. பல சாலைகள புதிதாக அமைக்கப்பெற்றன. நீர்ப்பாசன வசதிகள பெருக்கமுற்றன. சி-உவாங்-டி செருக்கு மிகுதியாகப் பெற்றவன. தன் காலத்திலிருந்து புதிய சீனா உருவாக வேண்டுமென்ற ஒரு பேராவத்தின காரணமாக, அதுகாறும நிலவிய நூலகள யாவும் தீக்கிரையாககப் பெற்றன. பழைய கருத்துகள் யாவும் மாற்றம் பெற்றன. ஆனால்,கி.பி. 210-இல் அவன் இறந்தவுடன், நாட்டின் ஒற்றுமை குலைந்தது. கலகங்களும் உள்நாட்டுப் போரும் மலிந்தன. சி-உவாங்-டியின் சட்டதிட்டங்கள யாவும் மாற்றப்பெற்றன, இக்குழப்பதைப் பயன்படுத்திக் கொண்டு ஆன் (Han) மரபினர் சின மரபை முடிவுறச் செய்து,தமது ஏகாதிபத்தியத்தைச் சீனாவில் நிறுவினர். தெ.பா.

**சின்மரபு**.[2] மங்கோலோய்டு என்ற இனத்தைச் சேர்ந்தவர்களுள் சில குறிப்பிட்ட இனமக்களின தொகுப்பினைச் சின் மரபினர் என்று வரலாற்றாசிரியர்கள குறிக்கின்றனர். பர்மா நாட்டினையும், அசாம் பகுதியினையும் பிரிக்கின்ற மலைப்பகுதியில சின (Chin ) இனத்தவர் வாழுகின்றனர். இப்பகுதியில 260,000 சின் இனத்தவர் வாழ்கின்றனர். இப் பகுதியின் வடக்கே இலசு ஏய் (Lush Hei) இன மக்களும், தெற்கே ஆக்கா, இலாக்கர் இனமக்களும், வடக்கே குக்கி என்ற இனமக்களும் வாழ்கின்றனர். இவர்களோடு பல வகைகளில் சின் இனத்தவர் உறவு கொண்டுள்ளனர்.

சின் இனத்தவரின் வரலாற்றினை கி.பி. 1600-ஆம ஆண்டிலிருந்துதான அறிய முடிகிறது. பலவேறு இனமக்களோடு ஓயாது போர்புரிய வேண்டிய சூழ் நிலையில் வாழ்ந்த இனத்தினர் இவர்கள. சுவர்கள் பக்கத்தில வாழ்ந்த மக்களோடு போரில் ஈடுபட்டு அவர்களின் உடைமைகளைக் கொள்ளை அடித்தனர் கி பி. 1777-இல் சிட்டகாங்குப் பகுதியினையும், கி பி 1856-இல் மணிப்பூர் பகுதியினையும், இவர்கள படையெடுத்துக் கொள்ளையடித்தனர்.

சின் இனத்தவர் வாழ்ந்த மலைப்பகுதிகளை கி.பி. 1889-இல் ஆங்கிலேயா கைப்பற்றினா. சின் இனத்தைச் சார்ந்த போர் வீரர்கள, மற்றவர்களின தலைகளைத் துண்டிப்பதில் ஆர்வம்காட்டினர். மற்றாரைப்போரில் வென்று அடிமைகளாக ஆக்கினர்.

சின் இனமக்கள கூட்டம் கூட்டமாகப பல நூறு வீடுகள் கொண்டதாகத் தன்நிறைவுபெற்ற வகையில பகுதி பகுதியாகக கிராமங்களில் வாழ்ந்தனர். இன்றும் அவ்வாறே. மூத்தவர்கள அடங்கிய குழு ஒன்று ஒவ்வொரு பகுதியினையும் ஆட்சி செய்கிறது. சில கிராமங்களில, வீர தீரச் செயல்களால் போர்த்திறம் கொண்ட தலைவர்கள் ஆட்சிப் பொறுப்பேற்றனர். இவர்கள் கொடூரமாகவும் நடந்து கொண்டனா.

சின இனத்தவர் வாழ்ந்த பகுதிகளில் மக்கள வேளாண்மையை நம்பி வாழ்ந்தனா. நிலத்தினைப் பகுதி பகுதியாகப் பிரித்து, ஒரு பகுதியினைப் பயிரிடும்போது மற்றப் பகுதியினைத் தரிசாகப் போட்டு, மாறி மாறிப் பயிரிட்டனர். சில பகுதிகளில காடுகளை வளர்த்தனர். கலப்பைகளைக கொண்டு நிலத்தை உழுது பண்படுத்தினா. நெல், கேழ்வரகு, சோளம் முதலிய தானியங்களைப் பயிரிட்டனா. உயரமான மலைச் சரிவுகளிலும பயிரிட்டனர்.

இவர்கள் உணவுக்காக இறைச்சிதரும் ஆடு, மாடு, கோழிகளை வளர்த்தனர். பசு மாடுகளிலிருந்து பால் கறக்காமல், இறைச்சிக்காகவே பசுக்களை வளர்த்தனர். மித்தான் என்ற விலங்கையும் வளர்த்த னர். இது விலை உயர்ந்தது. இவ்விலங்குகளை வைத் திருப்பவர்களும் வளர்ப்பவர்களும் மிகவும் செல் வர்களாகக் கருதப்பட்டனர். பன்றிகள், ஆடுகள், கோழிகள் வளர்க்கப்பட்டு உணவிற்காகப் பயன் படுத்தப்பட்டன. மதச் சடங்குகளில் பலியிடுவதற் காகவும் அவை வளர்க்கப்பட்டன.

இவர்கள் வேட்டையாடிய விலங்குகளையும் பறவைகளையும் சமைத்து விருந்து பரிமாறி மகிழ்ந் தனர். நல்ல 'தரமான வெற்றியின் விருந்து' என்று இப்பழக்கம் கருதப்பட்டது. அவ்வாறு, விருந்தோம் பலில் ஈடுபடுபவர்கள் தங்கள் மரணத்திற்குப் பிறகு நல்வாழ்க்கையினைப் பெறுவர் என்று நம்பப்பட்டது இவ்வாறாக, விருந்தோம்பலில் ஈடுபடுபவர்கள் சின் சமுதாயத்தில் உயர்ந்த இடத்தைப் பெற்றனர்.

இம் மக்களின் வாழ்க்கை முறையில் சடங்குகள் மிக்க அளவில் காணப்பட்டன. திருமணங்கள், பிறப்பு, இறப்பு, சுகவீனம் ஆகியநிலைகளில் மக்கள் மிக்க அளவில் தொன்னெறிகளில் திளைத்தவர் களாய் மிகுந்த செலவு செய்தனர். இவர்கள் மதத் தில் ஆழ்ந்த நம்பிக்கை கொண்டிருந்தனர். பல உரு வங்களை வழிபாடு செய்தனர்; ஆவிகளை வணங்கி னர்; தெய்வச் சிலைகளுக்குப் பூசைகள் நடத்தப்பட் டன. பலிகளும் செலுத்தப்பட்டன.

கிறித்தவப் பாதிரிமார்கள், சின் மக்களுடன் தொடர்பு கொண்டு கிறித்தவ மதத்திற்கு மதமாற் றம் செய்தனர். கிறித்தவ மதத்தின் அடிப்படைக் கோட்பாடுகளுடன் சின் மரபு நம்பிக்கைகளையும் உள்ளடக்கிய வகையில் பாவ்சின் என்ற மதக்கோட் பாடு உருவாகியது.

ஆக்கா, இலாக்கர், குக்கி முதலிய இனமக்களும், சின் மக்கள் வாழும் பகுதிகளைத் தங்களுக்கும் உரியன என்று உரிமை கொண்டாடுகின்றனர். இவர்கள் யாவரும் ஒரே வாழ்க்கை முறையினைக் கொண்டி ருப்பது குறிப்பிடத்தக்கது. திபெத்து மொழியும் பாமிய மொழியும் கலந்த வகையில் தங்கள் மொழி யினைச் சின் மக்கள் பேசுகின்றனர்.

ஆண்கள் பல பெண்களைத் திருமணம் செய்து கொள்ளுகின்றனர். வீரமிக்க ஆண்கள் தலைவர்களா கத் திகழுகின்றனர். நிலமானியமுறை, சின் சமுதாயத் தில் காணப்படுகிறது. இவர்கள் தங்கள் தனித் தன்மையைப் பாதுகாத்து வருகின்றனர். பர்மியர் களின் பண்பாடு, மொழி சின் இனத்தவரைப் பாதிக்க வில்லை. தா.எ.

*சின்மலைகள்* மேற்குப் பர்மாவில் உள்ளன. இவை ஒரு மலைத்தொடர். இதற்குவடக்கில் மணிப்பூர் குன்றுகளும், தெற்கில் ஆரக்கான்யோமா (Arakanyo-ma) மலைத் தொடரும் உள்ளன. சின் மலைகளின் (Chin Hills) சராசரி உயரம் 1545 மீ முதல் 2440 மீ. வரை உள்ளது. இதன் மிக அதிகமான உயரப்பகுதி 3053 மீ. சின் மலைத்தொடரின் குறுக்கே மணிப்பூர் ஆறு ஓடுகிறது, இப்பகுதியில் வாழும் 'சின்' மக்களு டைய பெயராலே இம்மலைத்தொடர் குறிப்பிடப்படு கிறது. தெ.பா.

*சின்முத்திரை*: சனகர், சனந்தனர், சனாதனர், சனற்குமாரர் ஆகிய நால்வரும் பிரமதேவரின் குமா ரர்கள். பரமசிவனே ஞானகுருவாக வந்து ஞானோப தேசம் செய்ய வேண்டுமென்று இந்நால்வரும், கல்லால மரத்தின் கீழ் வடக்கு நோக்கி உட்கார்ந்து தவம் செய்தனர். இப்படித் தவம் செய்துவந்த நால்வரின் மீது பரமசிவன் கருணைகொண்டு சங்கராசாரியாராய் மாணிடவேடங்கொண்டு வந்து கல்லால மரத்தின் அடியில் நால்வருக்கும் தெற்கு முகமாய் அமர்ந்தார்.



சின்முத்திரை

அப்போது நால்வரும் கண்களை விழித்துப் பார்த்து ஆனந்தமாய்ச் சங்கரரைத் துதி செய்து, ஆசனத்தின் மீதெழுந்தருளச் செய்து, நால்வரும் வேத சாத்திர மடங்கிய ஓலையேட்டுப் புத்தகங்களைக் கையில் பிடித்துச் சங்கரருடன் வாதம் செய்யத் தொடங்கி னர் வாதம் முடிவில்லாமல் நடந்துகொண்டிருந்தது உடனே சங்கரர் கண்களை மூடிச் சின் முத்திரையை விரல்களால் பிடித்துக் காட்டி மௌன சமாதியில் ஆழ்ந்தார். பிரமதேவர் குமாரர்கள் நால்வரும் மிக வும் கூரிய புத்தியுடையவர்களாதலால், சங்கரர் பிடித்துக்காட்டிய சின்முத்திரையின் கருத்தைச்சிந்தித் துத் தாமும் சின்முத்திரையைப் பிடித்துச் சமாதியில்

ஆழ்ந்தனர். சங்கரர் சுண்டு விரற் குறி கண்களுக்குக் காணப்படும் தூல சரீரமென்றும், மோதிர விரற் குறி கண்களுக்குக் காணப்படாத, மனம், புத்தி, சித்தம், அகங்கார மெனப்படும் சூக்கும சரீரமென்றும், நடுவிரற் குறி சஞ்சித மெனப்படும் பாவபுண்ணிய மாகிய இருவினைகளே காரண சரீரமென்றும் காட்டி, கடவுள் ஆகாய ரூபம் போல் எங்கும் நிறைந்த வெட்டவெளியாய் இருக்கின்றார் என்று குறிப்பினால் புலப்படச் செய்தார். சீடர்கள் ஆத்ம சொரூபமாயிருக்கின்றார்கள். ஆகையினால், முன்கூறிய தூல, சூக்கும காரணமென்னும் மூன்று சரீரங்களையும் நீக்க வேண்டும். ஆள்காட்டும் விரலே சீவாத்மசொரூபம். பெரு விரலே பரமாத்ம சொரூபம் ஆதலால், எந்தத் தருக்கமும் செய்யாமல் சும்மாயிருந்து மனத்தை வெட்ட வெளியாகிய பரமாத்ம சொரூபத்தில் சேர்க்கவேண்டும் என்று சங்கரர் ஆள் காட்டும் விரலைப் பெருவிரல் கோட்டில் சேர்த்துக் காட்டினார் என்று பிரம தேவரின் குமாரர்கள் நால்வரும் அறிந்து அதுபோல் அவர்களும் சின் முத்திரையை விரல்களால் பிடித்து எந்தவித எண்ணங்களுமில்லாமல் உட்கார்ந்து பிரமானந்த சுகத்தை அறிந்து மகிழ்ந்தார்கள்.

இரா கோ.

**சின்னக்குட்டிப்புலவர்** கி.பி 18-ஆம் நூற்றாண்டில் வாழ்ந்த யாழ்ப்பாணத் தமிழ்ப் புலவர்களுள் ஒருவர். இவர் யாழ்ப்பாணம் மாவிட்டபுரம் என்னும் ஊரைச் சேர்ந்தவர். மாதகல் சிற்றம்பலப் புலவரிடம் கல்வி கற்றார். தெல்லிப்பழை என்னும் ஊரில கல்வியிலும பொருளிலும் சிறப்புற்று விளங்கிய செல்வரான கனகநாயக முதலியார் இவரை ஆதரித்து நலமாக வாழவைத்தார். அவ்வாறு ஆதரித்த அன்புள்ளத்திற்கு நன்றியுணர்வுடன் இவர் நடத்துகொண்டார். கனகநாயக முதலியார் மகன் கந்தப்ப முதலியாருக்குக் கல்வி கற்பித்தும், அவருடைய வாழ்வின் இன்ப துன்பங்களில் பங்கு கொண்டும் பல உதவிகளைப் புரிந்துள்ளார். இவர் 'தண்டிகைக் கனகராயன்பள்ளு' என்னும் நூலினை இயற்றியுள்ளார். அந்நூல் கனகநாயக முதலியார்மீது பாடப்பட்டதாகும். அந்நூலுக்குத் தெல்லிப் பழைஎன்னும் ஊரைச் சேர்ந்த வழக்கறிஞர் வ. குமாரசாமிப்பிள்ளை விளக்கக் குறிப்புகள் எழுதி 1932-இல் அச்சிட்டு வெளியிட்டுள்ளார். இவர் கந்தப்ப முதலியார் மீதும் தனிப்பாடல் பலவற்றைப் பாடியுள்ளார்.

வீ.சே.

***சின்னச் சவரியார்* (கி.பி 1701-1774):** இவர் பெயர் சேம்சு தாமசு தெ ரோசி (James Thomas De Rossi.S.J.) என்பதாகும். இவர்கி.பி. 1701-ஆம்ஆண்டு இத்தாலியிலுள்ள அபுலியா என்னுமிடத்தில் பிறந்தார். நேபில்சு நகரில் இயேசு சபையில் சேர்ந்த இப்பெரியார் கி.பி. 1731-ஆம் ஆண்டு தமிழகம் வந்து கி.பி. 1736-ஆம் ஆண்டு முதல் இராமநாதபுரத்திலுள்ள சருகணி என்ற இடத்தில் தங்கி, அங்கு வாழ்ந்த மறவ நாட்டு மக்களிடையே சமயப் பணியும் சமுதாயப் பணியும் புரிந்தார். புனித பிரான்சிசு சவரியார் என்னும் பெரியாரைப் பின்பற்றி இவரும் மக்களை மனந்திருப்பி ஞானதீட்சையளித்து அன்புப் பணிபுரிந்ததால, உரிமையோடு 'சின்னச் சவரியார்' என்று போற்றப்பட்டார்.

தமிழ் உரைநடை மிகுதியும் வளர்ச்சி பெறாத காலத்தில் சின்னச் சவரியார் பல உரைநடை நூல்களைப் படைத்தார். அந் நூல்கள் எளிய நடையில் குறைந்த கல்வியறிவுடைய மக்களும் புரிந்து கொள்ளும் வண்ணம் நல்ல உவமைகளுடன் அமைந்துள்ளன. இவ்வாறு இவர் எழுதிய நூல்கள் திங்கள் கிழமைப் புதுமை, செவ்வாய்க் கிழமைப் புதுமை, புதன் கிழமைப் புதுமை, வியாழக் கிழமைப் புதுமை, வெள்ளிக் கிழமைப் புதுமை, சனிக்கிழமைப் புதுமை, ஞாயிற்றுக்கிழமைப் புதுமை, பிரதிதினச் சுகிர்த பிரசங்கம் ஆகியனவாகும்.

கிறித்தவர்கள் திங்கட் கிழமைகளை உத்தரிக்கிற ஆன்மாக்களுக்காகவும், செவ்வாய்க் கிழமைகளைச் சம்மனசுகளுக்காகவும், புதன் கிழமைகளைத் தூய சூசையப்பர் வழிபாட்டிற்காகவும், வியாழக் கிழமைகளைத் தேவநற்கருணை மன்றாட்டிற்காகவும் வெள்ளிக் கிழமைகளை இயேசுநாதரின் திருப்பாடுகளைத் தியானிப்பதற்காகவும், சனிக்கிழமைகளைத் திரித்துவ (Trinity) வழிபாட்டிற்காகவும் ஒதுக்கியுள்ளனர். இவர்களின் வாழ்வில் நடந்தேறிய புதுமைகளுள் சிறப்பான 52 நிகழ்ச்சிகளைத் தேர்ந்து, ஒவ்வொரு நாளும் கற்று ஆண்டு முழுதும் தியானிக்கத் தக்க வகையில், இக்கிழமைப் புதுமை நூல்களைச் சின்னச் சவரியார் உருவாக்கியுள்ளார்.

'பிரதி தினச் சுகிர்த பிரசங்கம்' என்ற இவரது நூல் கிறித்தவ சமயம் சார்ந்த புனிதர்களின் வரலாற்றை மையமாகக் கொண்டது. ஆண்டில் வரும் ஒவ்வொரு நாளுக்கும் ஒரு புனிதரைக் குறிப்பிட்டு அவரது வாழ்க்கை வரலாற்றை முற்பகுதியில் கூறி, அதன்வழி விளங்கும் அறிவுரையைப் பிற்பகுதியில் விளக்கியுள்ளார்.

சின்னச் சவரியார் கி.பி. 1774-ஆம் ஆண்டு காலமானார். இறுதிவரை, சருகணிப் பகுதி மக்களுக்குத் தொடர்ந்து தொண்டு செய்ததன் வாயிலாகச் சமய ஊழியம் புரிந்து வந்தார். இவரது உடல், இவர் விரும்பிய மக்கள் வாழ்ந்த பகுதியிலேயே அடக்கம் செய்யப்பட்டது. புனித பிரான்சிசு சவரியார் திரு

நாளின்போது அப்பகுதி மக்கள் இவர்தம் கல்லறைக்குச் சென்று வழிபாடு செய்துவருகின்றனர்.

இவர் எழுதிய நூல்கள் கிறித்தவப் பெருமக்களால் பெரிதும் வரவேற்கப்பட்டன. அவை தமிழ் உரை நடை வளர்ச்சியின் படிக்கற்களாகவும் அமைநதன. இன்று அவை அக்காலத் தமிழ் உரைநடையின் இயல்புகளை அறிநதுகொள்ள உதவும் கருவிகளாகவும் பயன்படுகின்றன. புதுவை நகர மாதா அச்சுக் கூடத்தினரும், கிறித்தவச்சங்க அச்சுக் கூடத்தினரும் இவர்தம் நூல்களைப் பத்துப் பதிப்புகளுக்கு மேலும் வெளியிட்டுள்ளனர். இர.ஆ.

**சின்னச்சாமி முதலியார்**: இவர்20-ஆம் நூற்றாண்டின் முற்பகுதியில் வாழ்ந்தவா. இவர் ஒரு எம்.ஏ. பட்டதாரி. சென்னையில் அரசுச் செயலகத்தில் இவர் ஒரு கண்காணிப்பாளராகப் பணியாற்றினார். இளமை முதல இவர் இசையில் ஆர்வம் காட்டினாா. இவர் காலத்தில உமையாள்புரம் கிருட்டிண பாகவதா, சுந்தர பாகவதர் ஆகியோர் சங்கீத மேதைகளாக விளங்கினர். பாகவதர் இருவரும் தியாகையரிடம் சங்கீதம் பயின்றவர்கள். முதலியார் இவ்விரு இசை மேதைகளிடமும் மாணாக்கராக அமாந்து முறைப்படி கருநாடக இசை பயின்றார். மேனாட்டார் கருநாடக இசையை அனுபவிதது மகிழ்வதற்கு இவர்தம் ஆஙகிலப் புலமை உதவியது. இவர், மேனாட்டுச் சங்கீதக் குறியீடுகளில் தியாகையரின் கீர்த்தனைகளையும், ஏனைய சங்கீத வித்துவான்களின் உருப்படிகளையும் அமைத்து கி.பி. 1892-இல் ஒரு நூலாக வெளியிட்டார். அதில கீர்த்தனைகளேயன்றி நாட்டுப்பாடலகளும் அடங்கியுள்ளன. இவர், இந்நூலின் தொடக்கத்தில் கருநாடகஇிசை பற்றி மிக விரிவான கட்டுரை ஒன்று ஆங்கிலத்தில எழுதியுள்ளார். அக் கட்டுரையில் கருநாடக இசையின் நுணுக்கமான இயலபுகளைத் தெளிவாக விவரித்துள்ளார். மேனாட்டு இசைவாணர்கள் கருநாடக இசையின் மேன்மையை இவரது கட்டுரையின் வாயிலாச நன்கு உணர்ந்தனர். சுப்பராம தீட்சிதர் என்பவர் சங்கீத சம்பிரதாய பிரதர்சனி என்ற நூலை 1904-இல் இயற்றி வெளியிட்டார். அதற்குப் பெரிதும் உதவியாக இருந்தவர் சின்னச்சாமி முதலியார். எட்டயபுரம் மன்னர் இந்நூலை வெளியிட இசைந்தமைக்கும் முதலியார் காரணமாவார். இப்பெருமகனார் பாடிய சீரிய பாடல்கள் அமைந்த ஏடுகள் பல இன்றுவரை வெளியிடப்படாமல் உளளன. இவர் ஓர் உரோமன் கத்தோலிக்கர். வீ.சொ.


சின்னச்சாமி முதலியார்

**சின்னத்தம்பி புலவர்** கி. பி. 18-ஆம் நூற்றாண்டில் வாழ்ந்த யாழ்ப்பாணத்தமிழ்ப் புலவர்களுள் ஒருவர். இவர் யாழப்பாணத்திலுளள நல்லூரைச் சேர்ந்தவர். இவர் தந்தையார் பெயர் செல்லவராய முதலியார். யாழ்ப்பாணத்தின் வளமைச் சட்டத்தைத் திருத்தியமைக்கப் பாடுபட்டவர்களுள இவர் குறிப்பிடத்தக்கவராவர். இவர் இளமையில் முறையாகப் பள்ளிக்குச் சென்று கல்வி கறகவில்லை யெனினும் இளமையிலேயே கவிதை புனையும் ஆற்றல் பெறறிருந்தார். ஒருநாள், தநதையார் ஒரு செய்யுள இயற்றத் தொடங்கி ஓரடியினை எழுதி மற்றைய அடிகளைப் பின்னர் எழுதலாமென்று வைத்துவிட்டு வெளியில் சென்றார். அதனைக் கணட இவர் அவ்வடியை வைதது ஏனைய மூன்று அடிகளையும் எழுதி ஒரு வெண்பாவாக்கி முடித்துவைத்தார். வெளியில் சென்று வநத தந்தையார் அப்பாடலைப் படித்து மகிழ்ந்தார். இவர் பள்ளிக்குச் செல்லாமையால தந்தையார் இவர்மீது கொண்டிருந்த கோபமும் நீங்கியது. ஒருமுறை இவர் சிறுவயதில் தெருவில விளையாடும் போது புலவரொருவர் தந்தையைக் காண வந்து இல்லம் தெரியாமல் திகைத்துக்கொணடிருந்தார். அவரிடம், தம் இல்லம் முன் கொன்றை மரமொன்று நிறகும் என்று அடையாளம் கூறும் அச்செய்தியைச் செய்யுளில் பாடித் தெரிவித்தார். அதனைக் கேட்ட அப்புலவர் வியந்து இவரைப் பாராட்டினார். இவர் புலவர் குழுவில் கம்பராமாயணச் செய்யுளுக்கு உரை விளக்கம் கூறிப் பாராட்டுப் பெற்றுள்ளார்.

இவர் மறைசையந்தாதி, கல்வளையந்தாதி, கரவை வேலன் கோவை, பருளைப்பள்ளு முதலிய நூல்களை இயற்றியுள்ளார். மறைசையந்தாதி என்னும் நூல் தமிழநாட்டிலுள்ள திருமறைக் காட்டீசா மீது பாடப்பட்டதாகும். கல்வளையந்தாதி என்பது யாழ்ப்பாணத்தில சண்டியிருப்பாயில் கல்வளை என்னும் ஊரிலுள்ள பிள்ளையார் மீது பாடப் பெற்றதாகும். யாழ்ப்பாணத்தைச் சேர்ந்த கரவெட்டியில இருந்த செல்வர் வேலாயுதம் பிள்ளை என்பவரை

பற்றிப் பாடப்பட்டது கரவை வேலன் கோவையா கும். இந்நூலிலுள்ள ஒவ்வொரு செய்யுளுக்கும் வேலாயுதம்பிள்ளை ஒவ்வொரு பொற்றேங்காய் வழங்கிச் சிறப்பித்தார் எனறும் கூறுவர். இவருடைய நூல்களுக்குப் பலர் உரை எழுதியுள்ளனர்.

வீ. சே.

***சின்னப்ப நாயக்கர்***: இவர் பழநியில் வாழ்ந்த தமிழ்ப் புலவர். இவர் பழநிப் பிள்ளைத் தமிழ் இயற்றிய நூலாசிரியர் என்று டாக்டர் உ.வே. சாமிநாதையர் அவருக்குக் கிடைத்த ஏட்டுப்பிரதி யில் உள்ளதாகக் குறிப்பிட்டுளளார். பழநிக்கருகி லுள்ள பாலசமுத்திரமென்னும் ஊரில வாழ்ந்த விசுவ கோபாலதுரை என்னும் குறுநில மன்னர் இவரை ஆதரித்தார் எனபதனை அவர் நூலுள் வரும் 'விசய கோபாலர் வரவிட்ட சிறுதேர்' (31) என்னும் தொடரால் அறியலாம் எனறு உ. வே. சாமிநாதை யர் கூறியுள்ளாா. இருப்பினும் அப்பாட்டில் 'நின் மாமனாரான கருணைச் செல்வராமெழில் விசய கோபாலர்' என்றுள்ளதால் அது திருமாலைக் குறிப்ப தாகவும் கொள்ளலாம் என்பர். அந்நூல் 1954-இல் உரையுடன் ப்திப்பிக்கப்பெற்றது. அந்தப் பதிப்பில் பழநிப் பிள்ளைத் தமிழின் நூலாசிரியர் பழநிச் சமீன் விசயகிரி வேலச்சின்னோவையன் எனக் குறிக்கப் பட்டுளளது. சமீன்கள அக்காலத்தில் நாயக்கர் பட்டத்தையும் பெற்றிருந்தனர் என அந்தப் பதிப் பின் முன்னுரையில் கூறப்பட்டுளளது. எனவே, சினனப்ப நாயகரும் இவரும் ஒருவரா என்பதும வேறானவரா எனபதும் ஆய்தற்குரியன. அப்பதிப் பின் முன்னுரையில் விசயகிரி வேலச்சின்னோவை யன் என்பவர் சூராவடிவேலன் வண்ணம், மீனாட்சி யம்மை கும்மி, வையாபுரிப்பள்ளு முதலிய நூல களை இயற்றியுள்ளார் எனத் தெரிகிறது. வீ. சே.

***சின்னப்பா பி.யு.***: இவர் இருபதாம் நூற் றாண்டின் இடைப்பகுதியில தமிழகததே நாடகத் துறையிலும், பின்னர்த் திரையுலகிலும் சிறந்து விளங் கிய நடிப்பிசைக் கலைஞர்களுள் ஒருவர்; முறையான இசைப்பயிற்சி பெற்றவர். புதுக்கோட்டை நகரில் உலகநாதப்பிள்ளையின் மகனாக கி.பி. 1897-ஆம் ஆண்டில் பிறந்தார். இவரது இயற்பெயர் சின்னச் சாமி என்பதாகும்.

நடிப்பில் ஆர்வம்கொண்ட இவர் தம் ஆறாம் வயதில் மதுரை நாடகக் குழு ஒன்றில் (Madurai Original Boy's Company) மாதம் பதினைந்து உருபாய் ஊதியத்தில் சேர்ந்தார். மூன்று ஆணடு களுக்குப் பின்னர்ப் பிறிதொரு குழுவில் சேர்ந்து இரங்கூன சென்று ஆறு மாதங்கள் தங்கியிருந்தார். பின்னாளில் புளியம்பட்டி நாடகக் குழுவோடு இலங்கைக்குச் சென்று நடித்தார்.

இவர் சந்திரகாந்தா எனனும் நாடகத்தில் சுண்டூர் இளவரசராக நடித்து நாடகப் புகழ் எய்தி னார். தம் முயற்சியாலும் தன்னம்பிக்கையாலும் இசையாலும் நடிப்பாலும் நாளடைவில் நாடகத்தில் முதன்மைப் பாத்திரம் ஏற்று நடிக்கும் சிறப்பெய்தி னார்.

சிறப்பு நாடகங்களில் (Special Drama) நடிக்கத் தொடங்கிய இவருக்கு, இவர்தம் குரல் வளம் பக்க பலமாக அமைந்தது. இசைப் பயிற்சியோடு உடற் பயிற்சியும் பொருந்திய வீர விளையாட்டுகளிலும் ஆர்வம் கொண்டு உழைத்ததால், பிற்காலத்தில் சிறந்த சண்டை நடிகராகவும் திகழ முடிந்தது.

கரிய நிறமும் கட்டையான உருவமும் கொண்ட வராக விளங்கிய இவர் தலைசிறநத அய்யனார் பக்த ராவர். நாடகங்களில் நாலரைக் கட்டைச் சுருதி யிலும் திரைப்படங்களில் இரண்டரைக் கட்டைச சுருதியிலும் இவர் பாடுவார்.

இவர் கொன்னக்கோல் வாசிப்பதில் வல்லவர். தனி இசைநிகழ்ச்சி செய்யும்போது இவரது இராக ஆலாபனை கேட்பவரை மெய்மறக்கச் செய்யும். 'நமக்கினி பயமேது' என்ற இவரது கல்யாணி இராகப் பாடல் புகழ்பெற்றதாகும்.

இவரது திரைப்பட வாழ்விற்குச் 'சவுக்கடி சந்திர காந்தா' என்னும் திரைப்படம் வாயிலாக அமைந் தது. ஆரியமாலா, கண்ணகி, பிருதிவிராசு, உத்தம புத்திரன் முதலிய திரைப்படங்கள் இவருக்குப் பெரும் புகழ் தநதன.

சங்கரதாசு சுவாமியிடம் தொடங்கிய இவரது நாடக வாழ்வு திரைப்படம் வரை வளர்ந்து ஒளிவீசி யது. நடிப்பு, பாட்டு, தெளிவான உச்சரிப்பு, சணடை யிடும் திறம் ஆகிய நிலைகளில் இவருக்கு இணையான நடிகர் இல்லை என்னுமளவிற்குச் சிறந்து விளங்கி னார். சகுந்தலா என்னும் நடிகையினைக் காதலித்து மணந்தார். இவர் 1945-ஆம் ஆண்டில் தம் நாற்பத் தெட்டாம் வயதில் காலமானார். இரா.குரு.

***சின்னப்பா பிள்ளை, சி வை.***, கி.பி. 19 -ஆம் நூற்றாண்டில் யாழ்ப்பாணத்தில் வாழந்த தமிழ்ப் புலவர்களுள் ஒருவர். இவர் யாழ்ப்பாணத்தி லுளள சிவப்பிட்டி என்னும் ஊரைச் சேர்ந்தவர். தந்தை வைரவநாதப்பிளளையாவார். தமிழ்ப் புலவ ரான சி.வை. தாமோதரம்பிள்ளை இவர்தம் உடன் பிறந்தவர். இவர் தமிழ்நூல்களைக் கற்றுச் சிறந்த

புலமையுடையவராக விளங்கினார். இவர் இரத்தின பவானி, விசயசீலம், வீரசிங்கன்கதை ஆகிய புதினங் களை எழுதியுள்ளார். வீ.சே.

***சின்னமனூர்***, மதுரை மாவட்டத்தில் கம்பம் பள்ளத்தாக்கில் உள்ள வரலாற்றுச் சிறப்புமிக்க ஊர். இவ்வூரில் இராசசிம்ம பாண்டியனின் செப்பேடுகள் கண்டுபிடிக்கப்பட்டன. எனவே, இச் செப்பேடுகள் 'சின்னமனூர்ச் செப்பேடுகள்' எனப்படுகின்றன. இராச சிம்ம பாண்டியன் தன் பட்டப்பெயரால் இவ் வூருக்கு 'அரிகேசரிநல்லூர்' எனப் பெயரிட்டுஇவ்வூரை அந்தணர்களுக்குத் தானமளித்தான். முதலாம் இராசேந்திர சோழனின் கல்வெட்டிலும், கோச் சடைய மாறனின் கல்வெட்டிலும்,குலசேகர தேவரின் கல்வெட்டிலும் 'அரிகேசரிநல்லூர்' என இவ்வூர் குறிக்கப்பட்டுள்ளது.

சின்னமனூர் கி.பி. 13-ஆம் நூற்றாண்டில் பெரிய தொரு சந்தை நகரமாகத் திகழ்ந்தது. இங்கிருந்து, நூல், துணி, சட்டிக்கிழங்கு, சாக்கு, மிளகு, இஞ்சி மஞ்சள் முதலிய பொருள்கள் மற்றைய ஊர்களுக்கு ஏற்றுமதி செய்யப்பட்டன. அப்பண்டங்கள்மீது சுங்க வரி விதிக்கப்பட்டது. இவ்வணிகத்தில் ஈடுபட்டோர் நாலு நகரத்துப் பதினெண் விசயத்தார் என்னும் வணிகக் குழுவினரும், சோணாட்டு தளச்செட்டிகளும் ஆவர். இச் சந்தையிலிருந்து கிடைத்த வருவாயைச் சின்னமனூரிலுள்ள நடுவிற்கோயிலான பெருமாள் கோயில், இராச சிம்மேச்சுவரர் கோயில் ஆகிய கோயில்களில் திருவிழா, பூசை முதலியன நடத்து வதற்குச் செலவிட்டனர் என்னும் செய்தி கல்வெட் டில் உள்ளது. சீவல்லபனின் படைவீடு இவ்வூரின் ஒரு பகுதியாக விளங்கிய விக்கிரமபாண்டீச்சுரத்தில் அமைககப்பட்டது என்பதைச் சடையவர்மன் வீர பாண்டியன் (கி.பி.1278-79) கல்வெட்டால் அறிய முடிகிறது. கோனேரின்மை கொண்டான் என்னும் இரண்டாம் மாறவர்மனின் (கி.பி. 1250-65) ஆட்சிக் காலத்தில் சீவல்லபன் படைவீடு விக்கிரமபாண்டீச் சுரத்தில் அமைக்கப்பட்டது. எனவே, பாண்டியர் களின் ஆட்சிக்காலம் வரை சின்னமனூர் நற்செய் கைப்புத்தூர் எனவும், மந்திர கௌரவமங்கலம் என வும், அரிகேசரிநல்லூர் எனவும் பெயர் பெற்றது என வும், இதன் ஒரு பகுதி பின்னர் விக்கிரம பாண்டீச் சுரம் எனப்பெயர் பெற்றதெனவும் அறியமுடிகிறது.

நாயக்கர் ஆட்சிக்காலத்தில் குறிப்பாக இராணி மங்கம்மாள் ஆட்சியின்போது (கி.பி. 1689-1706) பாளையப்பட்டுள் ஒருவனாகிய சின்னமநாயக்கன் என்பவனுடைய பெயரால் இவ்வூர் சின்னமனூர் எனப் பெயர் பெற்றது. இவ்வூரின் அருகே அமைந் துளள உத்தமபாளையம் ஞானம்மன் கோயில் திரி சூலக் கல்வெட்டில் 'சின்னம நாயக்கனூர்' எனக் குறிக்கப்பட்டுள்ள செய்தியால் இவ்வூரின் மற்றொரு பெயர் 'சின்னம நாயக்கனூர்' என்பதை அறிய முடி கிறது.

சின்னமனூரில் வரலாற்றுப் புகழ்பெற்ற இரண்டு கோயில்கள் உள்ளன. இப்பொழுது சிவகாமியம்மன் கோயில் என்று வழங்கப்படும் கோயிலின் பழைமை யான பெயர் 'திருப்பூலாந்துறை' யாகும். இக்கோயி லில் இராசேந்திர சோழனின் கல்வெட்டும், மாறவர் மன் குலசேகரதேவரின் கல்வெட்டும், மாறவர்மன் திரிபுவனச் சக்கரவர்த்தி சோணாடு வழங்கிய சுந்தரபாண்டிய தேவரின் கல்வெட்டும், சடையவர் மன் வீரபாண்டிய தேவரின் கல்வெட்டும், மாறவர்மன் குலசேகர தேவரின் கல்வெட்டும் காணப்படுகின் றன.

சின்னமனூரில் இடம்பெறும் மற்றொரு வரலாற் றுச் சிறப்புடைய கோயில் பெருமாள் கோயிலாகும். இங்குள்ள கல்வெட்டுகளுள் மூன்றாம் இராச சிம்ம னின் கல்வெட்டுகளே பழமையானவை. இவ்வூரிலுள்ள நத்தமேட்டுப் பகுதிகளில் பெருங்கற்காலச் சின்னங்கள் கண்டுபிடிக்கப்பட்டுள்ளன.

**சின்னமனூர்ச் செப்பேடுகள்:** இச் செப்பேடுகள் பாண்டிய மன்னர்களின் பரம்பரை, ஆட்சிச்சிறப்பு பற்றிய செய்திகளைக் கூறுகின்றன. இச் செப்பேடு கள், சின்னமனூரிலுள்ள பெருமாள் கோயிலுக்கு மடைப்பள்ளி கட்டுவதற்காகத் தோண்டிய கடைக் காலில் கண்டுபிடிக்கப்பட்டன.

சின்னமனூர்ச் செப்பேடுகள் சிறிய செப்பேடு எனவும், சின்னமனூர்ப் பெரிய செப்பேடு எனவும் இரண்டு பிரிவுகளாகப் பிரிக்கப்பட்டுள்ளன.

சிறிய செப்பேட்டின் இடையில் சில ஏடுகள காணப்படவில்லை. இச்செப்பேடு 8-11/12 அங்குல நீளமும் 3 அங்குல அகலமும் கொண்டது. இதில் மூன்று ஏடுகள் மட்டும் உள்ளன. இச் செப்பேடு கிரந்த எழுத்தில் வடமொழியிலும், வட்டெழுத்தில் தமிழ் மொழியிலும் எழுதப்பட்டுள்ளது. இச்செப் பேடு அரிகேசரி என்பவரால் எழுதப்பட்டது.

சின்னமனூர்ப் பெரிய செப்பேட்டை வழங்கிய மன்னன் இராசசிம்மன் என்பவனாவான். இவன் இதைச் சிஙகமங்கலத்தைச் சார்ந்த புழல் என்னு மிடத்திலிருக்கும்பொழுது வெளியிட்டான். இச்செப் பேட்டின் முதல் ஏடும் கடைசி ஏடும் கிடைக்கப்பட வில்லை. இவ் இரண்டிற்குமிடையே ஏழு ஏடுகள் மட்டும் கிடைத்துள்ளன. இவை 10 அங்குல நீளமும் 3-3/8 அங்குல அகலமும் கொண்டவை. செப்பேட்

டில் காணப்படும் கிரந்த எழுத்தில் வடமொழிச் சுலோகங்களும், வட்டெழுத்தில் தமிழ்ப்பகுதியும் இடம்பெற்றுள்ளன. வடமொழியில் உள்ளவை சிறப்பாகப் பாணடியர்தம் புகழ்பாடும் புராணக் கதைகளும் அக்கால மன்னர்கள, ஆட்சிப்பகுதி பற றிய செய்திகளும் ஆகும். வடமொழியில் கூறப்பட் டவை தமிழ்ப் பகுதிகளிலும் இடம்பெறுகின்றன என பது குறிப்பிடத்தக்கதாகும். இச் செப்பேடுகளின் வாயிலாகப் பணபாடு, பழக்க வழக்கஙகள், நாட்டுப் பிரிவுகள், அதிகார முறைமைகள், அரச நீதிகள முதலியன தெளிவாகின்றன. இரா.ப

*சின்னூல்*: காணக: நேமிநாதம்.

*சின்னையச் செட்டியார், நா.* 20-ஆம் நூற்றாணடில் வாழ்ந்த தமிழ்ப் புலவர் இவர் சேலம் மாவட்டததிலுள்ள பெணணாகரம் என்னும் ஊரைச் சேர்ந்தவர். பெற்றோர்: நாகைய செட்டி யார், மாறக்கம்மாள. 8-ஆம் வகுப்பு வரை கல்வி கற்ற இவர் தமிழிலும் ஆஙகிலத்திலும் புலமையுடைய வராக விளங்கினார். சென்னையில் டாக்டர் பி. வரதராசலு நாயுடு என்பவரால் தொடஙகப் பெற்ற தமிழ்நாடு இதழில் பணிபுரிந்தார். இவர் கலப்பு மணம் புரிவதை ஆதரித்தும் கைம்பெண்கள மரணத்தை எதிர்த்தும் தொணடு செய்தார். தீண டாமையை ஒழிக்கப் பெரிதும் பாடுபட்டார். இவர் யோக சாதனை, யோகாசனப் பயிற்சி ஆகியவை பற்றிய கருத்துகளை விளக்கிப் பத்மசோதி என்ற இதழிலும் பிற இதழகளிலும் கட்டுரைகள் எழுதினார். இவர் ஆன்ம ஞானம அல்லது அவசிய அறிவு, இன் பம் தரும் இயற்கை வழி, உண்மை ஒளி அல்லது உலக ஒழுக்கம் முதலியநூல்களை இயற்றியுளளார். வீ.சே.

*சின்னைய முதலியார், மணலி*: இவர் ஒரு சிறந்த வள்ளல். இவர் தந்தையார் முத்துக்கிருட்டிண முதலியார். வள்ளல் சின்னைய முதலியார் அறிஞர் களையும் இசைப்புலவர்களையும் ஆதரிக்கும் இயல்பு டையவர். இராமசுவாமி தீட்சிதர் என்ற இசை மேதை இவரிடம் பல ஆண்டுகள தங்கியிருந்தார். தீட்சிதரின இசைப்புலமையைப் பாராட்டி அவருக்குப் பொற்கிழி அளித்துப் பெருமைப்படுத்தினார். இவருக் குக் கருநாடக இசையில் பேரீடுபாடு உண்டு.

இராமசுவாமி தீட்சிதரின் மகன் பாலசுவாமி தீட்சிதர் சென்னையில் தங்கியிருந்த மேனாட்டு இசையாசிரியர் ஒருவரிடம் 'பிடில்' (Fiddle) என்னும் நரம்பிசைக் கருவியை மீட்டக் கற்றுக் கொள்வதற்கு முதலியார் ஏற்பாடு செய்தார். சின்னைய முதலி யார் பெயரில் அறக்கட்டளைகள் சில இன்றளவும் சென்னையில் செயற்பட்டு வருகின்றன. இவரது காலம் கி.பி. 19-ஆம் நூற்றாண்டு. சா.உ.

*சினம்*: சினம் அல்லது கோபம் மனவெழுச்சி வகையைச் சார்ந்ததாகும். அச்சம், அன்பு, காதல், மகிழ்ச்சி, வருத்தம், துன்பம் ஆகியவைகளும் மன வெழுச்சிகளேயாகும். மனிதன் ஒரு மனவெழுச்சி உயிர்வகையைச் சார்ந்தவனாவான். மனவெழுச்சி என்று ஒன்று இல்லையெனில் மனித வாழ்க்கை சுவை யற்றதே. அதனால்தான் அமெரிக்க நாட்டு உள வியல் வல்லுநர் மர்பி (Murphy, G.) என்பவர் மன வெழுச்சிகள், மனித வாழ்க்கையில் நறுமணப் பொருள்களாக இருக்கின்றன என்று கூறுகிறார். எனவே, சினம் மனிதர்களிடம் தோன்றும் முக்கிய மனவெழுச்சிகளுள் ஒன்று. வாட்சன் (Watson, J.B.) கி.பி.1878-1958) என்ற அமெரிக்க உளவியல் வல்லு நர் நடத்தைக் கோட்பாட்டை உருவாக்கினார். அவர் கருத்துப்படி அச்சம், சினம், அன்பு அல்லது காதல் ஆகிய மூன்றுமே அடிப்படை மனவெழுச்சி கள். மற்றவைகள் இந்த மூன்றும் வெவ்வேறு படித் தரத்தில் இணைந்தவைகளாகும் என்று கூறுகிறார். சினமும் அச்சமுந்தான் மனவெழுச்சிகளில் மிகுந்த எழுச்சி நிலையை உண்டாக்குகின்றன. சினமும் அச்ச மும் ஒரு வழியில் தொடர்புடையவைகளேயாகும். மேலும், இவை இரண்டும் திடீர்த்தேவை மன வெழுச்சிகளாகும் (Emergency Emotions) மகிழ்ச்சி யற்றவகையைச் சார்ந்தவை.

எந்த ஒரு பண்பாட்டிலும் குழந்தைகளை வளர்க் கின்ற முறையில் அச்சமும் சினமும் அடிக்கடி ஏற்படு கின்ற துலங்கல்களே என்றாலும், அச்சத் துலங்கலை விடச் சினத்துலங்கல்தான் மிகுதியாக ஏற்படக் காணலாம். பிரிட்சசு (Bridges) என்பவர் குழந்தை களின்மீது நடத்திய ஆராய்ச்சிகளில், பிறக்கும்போது மனிதனிடம் சினமில்லை என்று கூறுகிறார். குறிப் பிட்ட சினத்தின் வடிவம் ஒன்று தோன்றும்போது அது ஏற்படுவதற்கான மூலத்துலங்கல் ஒன்று உண்டு. பொதுவாகக் குழந்தைப் பருவத்தில் சினம் தோன்று வதற்கான சூழ்நிலைகள் வலி, சங்கடம், உடல் துன் பம் போன்றவைகளாகும்.

சினத்தின் புறவெளிப்பாட்டுக் குணப்பண்பு, மனி தனின் வயது அனுபவங்களுக்கேற்ப மாறி வருகிறது. குழந்தைப் பருவத்தில் பொதுவாக ஏற்படுகின்ற சினம் நான்கு குணப் பண்புகளைக் கொண்டிருக்கின் றது. மார்கன் (Morgan, 1934) என்பவரின் ஆராய்ச சியின், முதலாவதாக இளம் குழந்தைப்பருவத்தில் மனிதன் முற்றிலும் தன் முனைப்பாக (Egocentric) இருக்கிறான். தன்னுடைய உடலுக்கு ஏற்படுகின்ற வலி, இடையூறு, அல்லது மனக்குலைவு ஆகியவை தன

னுள்ளிருந்தும் வெளியிலிருந்தும் ஏற்படுமானால் அது சினத்திற்குக் காரணமாகிறது. அவன் முற்றிலும் தன்னலமுடையவனாகவே (Self-centred) இருக்கிறான். இரண்டாம் கட்டத்தில் தன்முனைப்பாக மட்டுமன்றி உடல் துன்பத்தை முற்றிலும் பொறுத்துக்கொள்ள முடியாதவனாக இருக்கிறான். அவன் பசியோடிருக்கும்போதோ, வலி, உடல்சார்ந்த துன்பம் ஏதும் ஏற்படும்போதோ அவன் அதைச் சினம் கொணடு வெளிப்படுத்தும்போது வீறிட்டுக் கத்துகிறான்; கால்களைத் தரையில் போட்டு உதைககிறான்; உடலை வளைத்துச் சுருட்டுகிறான். மூனறாவதாக, எதையும் மிக அதிகமாக வேண்டுமென்கிறான். தன்னுடைய உடல் துன்பத்தைச் சிறிதும் பொறுத்துக்கொள்ள முடியாதென்றும், உடனடியான உதவி வேண்டுமென்றும பிடிவாதம் செய்கிறான. தன்னுடைய தேவைகளின் நிறைவைத் தள்ளி வைக்க முடிவதில்லை. நான்காவதாக, அவனுடைய சினம் வெளிப்படுகின்ற நடவடிக்கைகளில் மிகுந்த சீற்றமும் வன்முறையும் காணப்படுகின்றன. சினத்தின் இந்த நானகு குணப் பண்புகளெலலாம் சிறுவர்களிடம் மட்டும் காணப்படுபவைகளல்ல. இவ்வகைச் சினங்கள குமரப் பருவத்திலும், வயது முதிாநதவர்களிடத்திலும் காணப்படுகினறன. அச்சமயத்தில அவர் மனவெழுச்சிப் பக்குவமற்றவர் என்று கூறப்படுகிறார், சினத்தின வன்முறை சார்ந்த திடீர் எழுசசி சிறுவாகளிடம மிகவும் பொதுவாகும். குழநதைப் பருவததிலும் பள்ளிக்குச் செல்லும் முன் பருவத்திலும் ஒரே தனமையான சின வெளிப்பாடுகளிருப்பதாக மார்கன கூறுகிறார். சினத்தைத் தோற்றுவிக்கும் மன முறிவுச சூழ்நிலைகள் எல்லாம் ஒரே தன்மையானவையலல, சினத்தைத தூணடும் சூழ்நிலைகளில் சிறுவர்கள சினம் கொளளாமலஇருப்பதுமுணடு. இது அவர்கள் வளர்ந்துவரும் சூழ்நிலையையும் வளர்த்துக்கொணடுள்ள உணர்ச்சி இயலபுகளையும் (Temperaments) குடும்பச் சூழ்நிலையையும் பொறுததிருககிறது.

சினத்தை விவரிக்கும் பகைமையுணாச்சியையும் (Hostility)சேர்த்தே உளவியலார் கூறுகினறனர். இவ்விரண்டும் ஒரு காரண அடிப்படையையே கொண்டிருக்கின்றன. இவ்விரண்டும் பெரும்பாலும் ஊக்கிகளின் செயற்குலைவுகள், உணாசசிசசிதைவுகள், அவமதிப்புகள், பயமுறுத்தல்கள் முதலியவைகளுககு எதிர் வினைகளாகின்றன. பொதுவாக, ஒருவர் தம்முடைய குறிக்கோளையடையும் முயற்சியில தடைகளை உணடாக்கி, ஊக்கிகளைச் செயலிழககச் செய்தால் எந்த வயதினருக்கும் சினம் ஏற்படுகிறது. சினம் ஒரு நிலைப்பட்டதன்று. பரந்த அளவுககு மாறுபடுந் தனமையது. மனமுறிவு அல்லது எண்ணக் குலைவு, செயற்குலைவு ஆகியவை காரணமென்றாலும் பல உளவியற் காரணங்களுமுண்டு.

எடுத்துக்காட்டாக,குழந்தையின் விளையாட்டில் யாரேனும் தலையிட்டால் அவன் சினம் கொள்கிறான் ஒருவருடைய விவாதத்தை மற்றவர் புரிந்து கொள்ளாதபோதும், சுய மரியாதைக்கு இழுக்கு ஏற்படுகின்றபோதும் எந்த மனிதனும் சினம் கொள்கிறான். மனிதர்கள் மட்டுமன்றிப் பறவைகளும் மிருகங்களும் சினம்கொண்டு எதிரிகளைத் தாக்குகின்றன. கோழியின் குஞ்சுகளைக் கோழியின் எசமானி தொட்டாலும் கோழி சினம்கொண்டு தாக்குகின்றது. பூனைக்குட்டியைத் தொட்டால் தாய்ப் பூனைக்குச் சினம் ஏற்படுகிறது. எனவே, சினம் ஒரு மனவெழுச்சித் துலங்கலாகும். அது தாக்கும் செயலில வெளிப்படலாம். கடுமையான சொல்லிலும் வெளிப்படலாம். சினம், பெருஞ்சினம் (Rage) என்று கூறப்படும்போது அது உடலாற்றல் முழுவதையும் ஒன்றுதிரட்டும் வகையைச் சார்நததோா மனவெழுச்சியாகிறது. இது ஒரு மனிதனைத் தீவிரமான செயல்வினைக்கு உந்துகிறது. சண்டையிடுதலுக்கான இயல்பூக்கத்தின (Combat Instinct) விளைவாகவே சினம் அமைகின்றது என்று இயல்பூக்கக் கொள்கையாளரான வில்லியம் மெக்டூகல் (William McDougall, கி.பி. 1871-1938) என்பவர் கூறுகிறார். சினம், இறப்பு இயல்பூக்கததின (Death Instinct) ஒரு படிவம் என்று சிக்மன் பிராய்டு (Sigmund Freud, கி.பி. 1856-1939) என்பவர் கூறுகிறார். சினம் மரபுநிலையாகவும் அமைகிறது; பகைவர்களுடன சணடையிட்டு அவாகளை அழிக்கும் மரபுவழியில் அமையும் ஒரு துடிப்பாகவும் அமைகிறது. மனமுறிவு-ஆக்கிரமிப்பு, புனைக் கொள்கையின்படி (Frustration-Aggression Hypothesis)சினம் என்னும் மனவெழுச்சி,மனிதன ஏதேனும ஒரு குறிக்கோளைநாடும் நடவடிக்கையில சந்திக்கின்ற மனமுறிவினால ஏறபடுகிறது என்பதாகும். மனிதன் தனனுடைய அனறாட வாழ்ககையில் பல சிறு சிறு மனமுறிவுகளைச் சந்திககிறான். அப்பொழுதெலலாங் கூடஇததகைய சினங்களைக் கொணடிருககலாம்.

சினம் சில இடங்களில் ஏற்றுக்கொள்ளப்பட்ட மனவெழுச்சியாவும் இருக்கிறது. விளையாட்டு மைதானத்தில் நடைபெறும் போட்டி விளையாட்டுகளில் மிகவும் மூர்க்கததனமாக விளையாடுகிறவர்கள வெற்றி பெறுகின்றனர்.விளையாட்டு மைதானத்திலும், போர்முனையிலும் உடல் சார்நத போட்டிகளிலும் சினம் முக்கிய பங்கு கொணடிருக்கிறது. நாகரிகம் முதிர முதிர,மனிதர்கள் மனவெழுசசிகளை மறைக்கக் கற்றுக்கொளகினறனர். சினம், அச்சம், அன்பு முதலியவை தனித்தனி மனவெழுச்சிகளே என்றாலும் அவைகளைக் கோடிட்டுப் பிரித்தறிதல் கடினம். எப்பொழுது சினம், அச்சம்,அன்பு ஆகியவை தோன்றி எப்பொழுது மறைகின்றன என்று கூற முடியாது. சினமோ அச்சமோ மிகவும் செறிவாக

இருந்தால்தான் ஒன்றிலிருந்து மற்றொன்றைப் பிரித்தறிய முடியுமென்று கிளர்ச்சிக் கொள்கையாளர் (Activationists) கூறுகின்றனர். சினத்தின் வெளிப்பாடு பண்பாட்டுக்குப் பணபாடு வேறுபடுகிறது. எனவே, சினத்தின் எந்த நிலையும் உலகம் முழுவதும் ஒரேதன்மையாக இருப்பதிலலை. சினம் மிகவும் செறிவாக இருக்குமானால் அது உடலுக்கு ஊறு செய்கிறது; சமநிலையைச் சிதைக்கிறது. தானியங்கு நரமபு மணடலத்தின்(Autonomous Nervous System) ஒரு பகுதியான ஒத்துணர்வு நரம்பு மண்டலம் (SympatheticNervous System)செயலில் ஈடுபடுகிறது. உடல் துடிக்கிறது. நாடித்துடிப்பு மிகுகிறது. குருதியழுத்தம் மிகுதியாகிறது. சுவாசங்கள் வேகமாகச் செயற்படுகின்றன. குருதியோட்டம் தசைநார்களில் பெருகுகிறது. செறிமானம் தடைபடுகிறது. கண்கள் சிவக்கின்றன. இயல்பான நிலையைவிட உடலில் செயலாற்றல் மிகுகிறது. இந்தநிலையில் சினம் ஒரு உளவியல் ஊக்கியாகவும் செயற்படுகிறது. இது சக்தியை ஒன்றுதிரட்டித் தீவிர நடவடிக்கையில ஈடுபடுத்திக் குறிககோளை வெற்றியடையவும் செய்கிறது.

மு.இரா.

**துணை நூல்கள்:**

**Arnold, M.B**, Emotion and Personality, Columbia University Press, New York, 1980.

**Kendler, H.H.**, Basic Psychology, Metheuen and Co. Ltd., London, 1963.

**McDougall, W.**, An Outline of Social Psychology, Metheuen, London, 1935.

**Morgan, C.T.**, Physiological Psychology, Mcgraw-Hill Book Co., New York, 1936.

***சினாய் மலை***: எகிப்து, இசுரேல், சவூதி அரேபியா ஆகிய நாடுகளுக்கு இடையில் அமைந்துள்ள முக்கோண வடிவமான முந்நீரகம் சினாய் மலை என்ற இடமாகும். இவ்விடத்திற்கு வடககே மத்தியதரைக்கடல் அமைந்துள்ளது. சூயசுக் கால்வாயும், சூயசு வளைகுடாவும் மேற்கில் அமைந்துள்ளன. இதன் தெனகிழக்கில் அகாமா வளைகுடா அமைந்துள்ளது. பொதுவாக நோக்குங்கால், இப்பகுதி ஆசியாவைச் சேர்ந்தது எனலாம். அரசியல்முறையில் பார்க்கும் போது, இது ஐக்கிய அரபுக் குடியரசு என்று சொலலப்படும் எகிப்தின் பகுதியாகும். அகாடியாவின் தெய்வமான 'சின்' என்ற பெயரிலிருந்து ஏற்பட்டது 'சினாய்' என்பது. சினாய்ப் பகுதியில பழம் பெரும் பாறைகள் உள்ளன. இங்கு



சினாய் மலை

மிக உயர்ந்த மலைகளும் உள்ளன. சுருங்கக்கூறின், இது பாறைகளும் மரங்களும் அடர்ந்த பகுதியாகும்.

சினாய்ப் (Sinai) பகுதியின் பரப்பளவு 60,714 ச.கி.மீ. இதன் மக்கள் தொகை 10, 104(1976). இதன் தலைநகர் அல்அரிசு (Al-Arish) இப்பகுதியில் விலங்குகளைக் காண்பது அரிதாகும். இதன் தட்பவெப்ப நிலை உடல் நலத்திற்கு உகந்ததாக அமைந்துளளது. மலைப்பகுதிகளாக இருப்பதால், இரவு நேரங்களில் குளிர் அதிகமாக உளளது. கோடைக் காலங்களில இப்பகுதியின் பெரும்பாலான இடங்களில் வெயில் கடுமையாகவும் கொடுனமயாகவும் உள்ளது. மழைக் காலங்களில் பெரும் வெளளச் சேதங்கள் ஏறபடுகின்றன. மக்கள் கிணறுகளின் மூலம் குடிதண்ணீர் பெறுகிறார்கள். காட்டுப்பகுதியான இவ்விடத்தில சிறுத்தை, காட்டுப்பூனை, நரி, முயல் போன்றவை நடமாடுகின்றன.

சினாய்ப் பகுதியின் மக்கள் 'பெது' (Bedu) அல்லது 'பெரிதாயின்' இனத்தைச் சேர்ந்தவர்களாவர். அவர்கள் 'சாவாலிகா' என்றும், 'தெராபின்' எனறும் இரு பிரிவாக உள்ளனர். இப்பகுதியில்வண்டிகள் செல்வது கடினம். போக்குவரத்து குறைந்தே காணப்பட்டதால், இப்போது அதற்குரிய நடவடிக்கைகள் எடுக்கப்பட்டுளளன.

சினாய் மலை பழம் பெருமை வாய்ந்ததாகும். இங்குத்தான் மோசசு (Moses) என்பாரின் பணி தொடங்கியது. இங்குப் புனித காதரைன் மடாலயம் கட்டப்பட்டது. ஏ.எச். கார்டினர், ஈ.டி. பீட்டு என்போர் அப்பகுதிவாழ் மககளின் தொடக்க எழுத்து முறைகளை வெளியிட்டுள்ளனர். உரோமப் பேரரசு காலத்தில் அராபிய மாநிலமாகச் சில காலம் இது இருந்துவந்தது. கிறித்தவ ஊழியின் தொடக்க காலத்

தில் துறவிகள் வாழ்விடமாக இது விளங்கிவந்தது. முதலாம் சசுத்தினியன் (Jastinian) காலத்தில் மேற் கூறிய மடாலயம் கட்டப்பட்டது என்று ஆதாரங் கள் தெளிவுபடுத்துகின்றன. இடைக்காலத்தில் இது புனிதப் பயணம் பேற்கொள்ளுபவர்கள் அனைவரும் செல்லும் புனிதத் தலமாக விளங்கியது. கன்னிமேரி யின நினைவாக இங்கு ஒரு திருக்கோயில் எழுப்பப் பட்டுள்ளது. ஒரு நூல் நிலையமும் இங்கு உள்ளது. இது கி.பி. 1517-ஆம் ஆண்டிற்குப்பின் உதுமானியத் துருக்கியர் வசம் போய்ச்சேர்ந்தது. இப்ராகிம் பாசாவின் காலத்தில், அதாவது கி.பி. 1831-ஆம் ஆண்டில், இது நல்ல முன்னேற்றம் கண்டது. முதல உலகப் போரின் இறுதியில் இப்பகுதி எகிப்துக்கு அளிக்கப்பட்டது; எகிப்து-இசுரேல் போரில் (கி.பி. 1956) பெரிதும் இன்னலுககுட்பட்டது. ஐ.நா.வின் தலையீட்டால் இசுரேல் படை இங்கிருந்து விலகியது. ஆசியாவிற்கும் ஆப்பிரிக்காவிற்கும் நிலவழிப் பால மாக அமைந்துள்ள சினாய் மத்தியகிழக்கு விவகாரங் களின் மையமாக அமைந்துள்ளது எனலாம். நா.ஜெ.

*சினிமா*: காண்க: திரைப்படக் கலை.

*சினேந்திர மாலை*: சினேந்திர மாலை என் னும் சோதிட நூல் உபேந்திராசாரியார் என்னும் சமண முனிவரால இயற்றப்பட்டது. இவருககுச் சைன மாமுனிவர், சினேந்திரர் என்ற பெயர்களும் உண்டு. சோதிடக்கலை பற்றிய பல அரிய செய்திகள் வெணபா யாப்பில் இநநூலில் சொல்லப்பட்டுள்ளன. இந்நூலில் 24 காண்டங்களும், 464 பாடல்களும் உள் ளன. இந்நூல் வடமொழிநூலைப் பினபற்றியது. சைவ சமயத்தைச் சார்ந்த ஒருவர் இதற்கு உரை எழுதியிருக்கிறார்.

ஆய கலைகள் அறுபத்து நான்கில் சோதிடக் கலையும் ஒன்று. இதைப் பற்றிப் பாடக் கவிஞராக இருந்தால் மட்டும் போதாது. கணிதஞானம் மிக்கவ ராகவும் இருத்தல் வேணடும். கவிதையிலும் கணக்கி லும் வானநூல் அறிவிலும் வல்லவராக இம்முனிவர் திகழ்கிறார். சோதிடக்கலை பற்றிப் பாடிச் 'சினேந் திர மாலை' எனறு பெயரிட்டிருப்பது ஆசிரியர் அருகன் மேல் கொண்டுள்ள அளவற்ற பக்தியைப் புலப்படுத்துகிறது.

தாயினிடத்துப் பிள்ளைகளுக்கும், கடவுளிடத்து அன்பர்களுக்கும் சிரத்தை உணடாதல போல, ஆரூட சாத்திரிகளிடத்து ஆரூடம் கேட்க வருகின்றவர்களுக் கும் அது உண்டாக வேண்டும் என்று பாயிரம் குறிப்பிடுகிறது. சிரத்தையிலலாதவர்க்கு வேதமும் பொய்க்கும். அதுபோல நம்பிக்கை இல்லாதவருக்குச் சோதிடம், மந்திரம், மருந்து அனைத்தும் பொய்க்கு மெனறு சொல்லப்பட்டிருக்கிறது. மேலும், காணிக்கை செலுத்தாமல் வெறுங்கையோடு வருகின்றவர் களுக்குச் சோதிடம் சொல்லப்படுதல் கூடாது என்ற செய்தியும் பாயிரத்தில் காணப்படுகிறது.

காண்டப் பொழிப்பு என்னும் முதல் காண்டத் தில், 'உதயத்தை ஓர்ந்ததனைச் - சிந்தித்து, நாடிக் கொணர்ந்தெணண நண்ணும்' எனறு ஆசிரியர் கூறுகிறார். உதயம் அதாவது பிறக்கின்ற நேரம் சரியாகக் குறிக்கவேண்டும் என்று கூறுகிறார். சிறிது நேரம் தவறி எழுதப்படினும் எல்லாம் பிறழ்ந்து போகும் என்பது இங்குக்குறிக்கப்படுகிறது. மேலும், இதே காண்டம் கோள்களைப் பற்றியும் இராசிகளைப் பறறியும் மிக நுணுக்கமாக எடுத்துக் காட்டுகிறது. ஆண கோள், பெண் கோள், அலிக் கோள் பற்றிய குறிப்பும், ஆண் இராசி, பெண இராசி, அலி இராசி பற்றிய குறிப்பும் தரப்பட்டுள் ளன. இவற்றின் குலம், நிறம், கால், வடிவம், கொம்பு, கதிர், அளவு, வயது, வடு (மச்சம்), வடுவின் பக்கம், வடுவின் வடிவம் ஆகியன தெளிவாகக் குறிக்கப்பட் டுளளன. கோளகளின சேர்விடங்களும் குறிக்கப்பட் டுளளன.

ஒவ்வொரு கோளுக்குமுரிய மணிகளும், மரங்களும் தானியங்களும் தாது காணடத்தில் விளககப்பட்டுள ளன. சீவ காணடம் இன்னின்ன கிரக அமைப்பால இனனின்ன பிறவிகள உண்டாகும் என்று காட்டு கிறது இங்கு விலங்குப் பிறவிகளுக்குரிய கிரக அமைப்பு களும் சொல்லப்படுகின்றன. சோதிடக் கட்டங்களில் ஒவ்வொரு கட்டத்திலும் உளள பலன்கள் யார் யாருக்குரியது என்பது நட்ட முட்டி சிந்தனைக் காண் டத்தில் குறிக்கப்படுகிறது. இதே காண்டம், பொது விதியையும், இழப்புகள் எவ்வனம் ஏற்படுகின்றன என்பதையும் நன்கு எடுத்துக்காட்டுகிறது. இழப்பு வரக்கூடிய திசை முதலில் சொல்லப்படுகிறது. இழப்பு தன்னால் வருமா, பிறரால் ஏற்படுமா என்பதும் விளக்கப்படுகிறது. கள்ளர்கள் ஆண்களா, பெண் களா என்று சொல்லப்பட்டு அவர்களின் நிறம், குலம், வடு ஆகியனவும் உணர்த்தப்படுகின்றன.

நலந்தீங்கு காணடம் கிரக அமைப்புகளால் ஒரு வருக்கு ஏற்படக் கூடிய நன்மை, தீமைகளை நன்கு விளக்குகிறது. கொலை, களவு, விடந் தீண்டுதல், தீப் படுதல், மரணம் வருதல் ஆகியன எந்தெந்தக் கோள களால் ஏற்படும் என்பதை இது விளக்குகிறது. நினைத்த காரியம் கைகூடுதலுக்கு உளள அமைப்பும் கூறப்படுகிறது.

பிணிக் காண்டம் பிணி வருவதற்கான சாத்தியக் கூறுகளையும், எந்தெந்த உறுப்புகள் பிணியால் தாக்

கப்படும் என்றும், இன்னின்ன கிரக அமைப்பிறகு இன்னின்ன நோய்கள் வரும் என்றும், அவை தீாக்கக கூடிய பிணிகளா தீர்க்கவியலாப் பிணிகளா என்றும் எடுத்துக்காட்டுகிறது.

மரண காண்டம் ஒருவருக்கு ஏற்படக்கூடிய கண டங்களைக் காட்டுகிறது. மேலும் மரணம் ஏறபடக் கூடிய காலத்தையும், மரண வேதனையையும், மர ணம் நேரும் இடத்தையும், மரணத்தின் பின் அடை யும் மறுபிறவியையும் உணர்த்துகிறது.

சகுன காண்டம், சகுனமின்மை, சகுனத்தடை, நற்சகுனங்கள், சகுனம் வலமாதல்-இடமாதல ஆகிய வற்றை நன்கு எடுத்துக்காட்டுகிறது.

காம காண்டம் இல்லற வாழ்க்கையை விளக்கு கிறது. தலைவி தலைவனின் குடியும் குலமும் உணர்த்திக் கற்புடையார் எவர், கறபிலார் எவர் அன்புடையார் எவர், அன்பில்லாதவர் எவர், என் றும் சயனத் தவறுகளையும் சரியாகக் காட்டுகிறது.

மகப்பேறு காணடம் மகப்பேறும், மகப்பேறின மையும் காட்டுகிறது. மேலுமது மகப்பேற்றில், ஆண் பெண் உணர்த்தி மகப்பேறு காலம் உணர்த்தி பால ரிட்டத்தையும், தாய் தந்தைக்கு ஏற்படக்கூடிய நன்மை தீமைகளையும் காட்டுகிறது.

படை வரவு காண்டம் படை வருதலையும் வெற்றி தோல்விகளையும் நிருணயிககிறது.

யாத்திரைக் காண்டம் யாத்திரை கிட்டுமா? கிட்டாதா? என்றும், யாத்திரைத் திசைகளையும், சென்ற இடத்திலே ஏற்படக்கூடிய இடையூறுகளை யும் இயம்புகிறது. யாத்திரை சென்றார் வருவாரா, மாட்டாரா என்பதும் சொல்லப்படுகிறது. மழை வரவு காணடம் மழைபெய்தலையும் பெய்யாமையை யும் காட்டுகிறது

ஆசிரியர் கிரகங்களினால் ஒருவருக்கு நேரக்கூடிய இன்ப துன்பங்களை மிகத் துல்லியமாகக் கணக்கிட் டுக் காட்டியிருக்கிறார். விலங்குகளுக்குரிய கிரகங்கள் குறித்தும் சொல்லியிருப்பது வியப்புக்குரியது. சமணர் கள் அனைத்துத் துறையிலும் வல்லவர்களாக இருந் தார்கள் என்பதற்கு இநநூல் ஓர் எடுத்துக்காட்டு. மனித வாழ்க்கை இன்ப துன்பங்கள் நிறைந்தது. அவை நேருவதறகான சூழ்நிலைகளைச் சினேநதிர மாலை மூலம் நன்கு அறியலாம். சு.சு.தே.

சீ சிகரத்திற்கு உரிய குறிப்பைப் பார்க்க. அதே முறையில் வளர்ச்சி அடைந்தது. முதன்முதலில் சீ என்ற எழுத்திற்கு நெடில்குறி முதல் பல்லவ பரமேச்சுவரனின் கூரம செப்பேடுகளில் காணப்படுகிறது இடப் புறம் சுழிக்கப்பட்டது. ... ... . .

பின்னர்ச் சிகரத்திற்குக் கூறப்பட்டதே இதற்கும் பொருநதும்,

வட்டெழுத்தில் சிகரத்திற்குக் காணப்படும் உருவத்தில ஒரு சுழி இடம்பெறும். .. .

கே ஜி.கி.

**சீக்கிய சமயம்**: பஞசாபு மாகாணத்தில் சீக்கிய மதம் கி.பி. 15-ஆம் நூறறாண்டில் குரு நானக்கு என்பவரால் தோற்றுவிக்கப்பட்டது. அம மதத்தினரைச் சீக்கியர்கள் எனறு குறிப்பிட்டார்கள். சீககியர்கள் என்றாலே சீடர்கள என்று பொருள் படும். குருநானக்கு முதல் கோவிந்தசிங்கு ஈறாகப் பத்துக் குருமார்கள் இருந்தனரெனக் கூறப்படுகிறது. சீக்கிய மதமானது இநது வைணவ பக்தி மார்க்கத் தின் வளர்ச்சியடைந்த நிலையாகும் என்று கருதப் படுகிறது. வடநாட்டில் இது இராமாநுசரால் அறி முகப்படுத்தப்பட்டது. இசுலாமிய மதத்துடன் கி.பி. 14,15-ஆம் நூறறாணடுகளில் எதிர்ப்பு ஏற்பட்டு மெது வாக இநதிய, கங்கைச் சமவெளியில் பரவியது பக் தர்கள் கடவுளைப் பல பெயர்கள கூறித் தோத்திரம் செய்தாலும், அவர் ஒருவரே; மற்றவை எல்லாம் மாயையே; அவருடைய நாமத்தை உசசரித்துக் கொண்டிருப்பதே மேலான வழியாகும். தியானம் செய்வதற்குக் குருவின உதவி தேவையாகும். பக்தி மார்க்கமானது சாதி வேறுபாடுகளைக் கணடிப்ப தோடன்றி அந்தணர்களின் தனிஉரிமையையும் மறுக் கிறது.

கபீர் என்பவர் இந்து பக்தி மார்க்கத்தையும் இசுலாமிய சூபி மார்ககத்தையும் இணைத்தார். சீக்கிய மதம் மேற்கூறிய இரண்டு மதங்களிலுமுள்ள நல்ல கருத்துகளைப் பினபற்றியது. நானக்கு எனப வர் கி.பி. 1469-ஆம் ஆண்டு இலாகூரின் அருகிலுள்ள இராய் போய் தி தால்வான் டி (Rai Bhoi dı Talvandı) என்னும கிராமத்தில் பிறந்தார். சிறு வயது முதறகொணடே அவர் பெரிய துறவிகளுடன தொடர்பு கொண்டார். சுல்தானபூரில் நானக்கு இறைவனைக் காணும் பேறு பெற்றார். இந்து என றும் முகம்மதியர் எனறும் வேறுபாடுகிடையாது என்று அவர் கூறினார். அவர் கி.பி. 1539-ஆம் ஆண்டு இறந் தார். அவருக்குப் பிறகு அவர் சீடா அங்காடு (Angad) என்பவர் குருவானார். அதன் பிறகு பல குருமார்கள் வந்தார்கள.

**கல்சாவின் (Khalsa) தோற்றம்.** முகமமதியாகள சீக்கிய குருமார்களைக் கொனறதால் சீக்கியர்கள ஆயுதங்களை ஏந்தினர். கோவிந்த ராய்(Gobınd Rai) என்பவர் ஐந்து சீககியர்களுக்கு ஞானஉபதேசம் செய்து, அவர்களைக் கல்சா எனனும் பெரியோர்கள அடஙகிய சபையில் சேர்த்தார். அவர்களைச் சிங்கு என்றழைத்தார். அதன் பிறகு சீச்கியர்கள பஞ்சாபில ஆட்சி செய்தார்கள. இரஞ்சித் சிங்கு (Ranjıt Sıngh) என்பவர் கி.பி. 1799-ஆம் ஆணடு தலைநகரை ஏற் படுத்தி, இரணடு ஆண்டுகளுக்குப் பிறகு பஞ்சாபின அரசரானார். ஆங்கிலேயர்களும் ஆப்கானிசுத்தானில தலையிட்டு, இரஞ்சித் சிஙகுடன் ஓர் உடனபடிக்கை செய்து கொணடனர்.

ஆதிகிரந்தம் (Adi Granth) எனற நூலை அர்சுன் (Arjun) எனற குரு தொகுத்தார். இந்து மதத்தின

நூல்களிலிருந்து பல கருததுகள சீக்கிய கொள்கையில் சேர்க்கப்பட்டன. சீககியர்கள் சம்சாரக் கொள்கை யான, பிறப்பு, இறப்பு, மீணடும் பிறப்பு முதலியவை கள் ஒரு மனிதனின் செயல்களால் ஏற்படுகின்றன என்று கூறுகினறனர். அவர்கள் பிறவிகளுள சிறநதது மனிதப் பிறவி என்றும், இந்தப் பிறவியிலதான் முகதி யடைய முடியும் எனறும் கருதினர்.

கல்சா எனனும் பெரியோர்கள அடங்கிய சபை யினர் ஐந்து கொளகைகளைக் கடைப்பிடிததனர். குடியை வெறுத்தல, புகையிலையை நீக்குதல், போதையூட்டும் பொருளகளை ஒதுக்கல, பிரார்த் தனை செய்தல், நேர்மைக்காகப் போராடுதல முதலி யன. மேலும், அவர்கள முடியையும் தாடியையும் வளர்த்தார்கள். சீப்பும் கால்சட்டையும் கிர்பானும் வலக்கையில காப்பும் அணிநதிருப்பார்கள. நானக்கு 'ஓம்' என்ற அடையாளம் கடவுளைக் குறிக்கிறது என்று கூறினார். அவர் கடவுள ஒருவர், உணமை யானவர், படைக்கிறவர், எனறும் உளளவர், எங்கும் நிறைந்தவர், உருவமற்றவர் எனறும் கூறினார்.

சீக்கிய மதம் உருவ வழிபாட்டை ஆதரிக்க வில்லை. சீக்கியர்கள் ஆதிகிரந்தததை வழிபட்டார்கள, அவர்கள் சூரியனையும் நதிகளையும் மரங்களை யும் வழிபடுவதிலலை; புனித யாத்திரைகள் செயவது மில்லை. இநது மதத்தில அந்தணர்களைப் போல், சீக்கிய மதத்தில உயர்ந்த சாதி என்று இலலை. குரு வின் உதவி சீடர்களுக்குத தேவை எனறு சீக்கிய மதம் கூறுகிறது குரு உணமையை அறிய வழி காட்டுவாா; இறைவனின் தன்மையை உணர்த்து வார். சீக்கிய மதத்தை நாம மார்க்கம் எனச் சொல் லுவதுணடு. நாமம் ஆன்மாவின அழுக்கை மாறறு கிறது; ஆணவத்தை அகறறுகினறது; ஆசை, கோபம், பற்று, தறபெருமை முதலியவற்றை அகற்றுகிறது. சீக்கியர்கள் குழந்தையைக குருத்துவாரத்திறகுக கொணடு சென்று, ஆதிகிரந்தததைப் படிககச் செய் வார்கள. திருமணச்சடங்கில ஆதிகிரந்தத்தைச் சுற்றி மணமககள நானகு தடவை வரவேணடும. மரண மடைநதால் அதிலுள்ள வாககியங்களைப்படிப் பார்கள. இறநதவருடைய சாம்பலைக் கங்கையிலோ புனித நதியிலோ கரைப்பார்கள.

இறைவனை வணங்குவதறகேற்ற நேரம் காலை நேரம். தியானம் செயவதற்கேற்ற நேரமும் அதுவே யாகும். அமிர்தசரசிலுளள அரிமநதிர் (Harımander) புனித யாத்திரை செய்வதற் கேற்ற இடமாகும். நானக்கு பிறந்த இடமான நான்கானா (Nankana) இரண்டாம் குறிப்பிடத் தக்க இடமாகும். சீக்கியர்களால் நான்கு அரசிருக்கை கள் சிறப்பாகக் கருதப்படுகின்றன. அவையாவன, அமிர்தசரசு, அனந்தப்பூர், பாட்னா, நன்தெது (Nanded), பாட்னாவில் குருகோபிந்த சிங்கு பிறந தார்; நன்தெத்தில் இறந்தார். குருநானக்கு சீக்கிய சமய வழிபாட்டிற்காகக் கார்தர்பூர் (Kartarpur) என்ற இடத்தில் கோயில் கட்டினார். அதன்பிறகு சீக்கிய கோயில் குருத் வாரா (Gurdwara) எனப் பெயர் பெற்றது. குருதவாரா என்றால் குருவையடை யும் வாயில் என்று பொருள். ஏறக்குறைய இருநூறு குருத்வாராக்கள இருக்கின்றன. சீக்கிய குருத்வாரா கி.பி. 1925-ஆம் ஆண்டு சட்டப்படி குருத்வாராக் களை மேறபார்வை செய்ய ஒரு குழு அமைக்கப்பட் டிருக்கிறது. குருத்வாராவில் செலுததப்படும் காணிக் கைகள் எல்லாம் கல்சா அமைப்பின கீழுளள பள்ளி களுக்கும் கல்லூரிகளுக்கும் செலவு செய்யப்படுகின் றன.சீககியர்கள் ஆதிகிரநதத்தை மட்டும் வழிபடு கிறார்கள். வழிபடுகிறவர்கள் பணமும் மலர்களும் வைத்து வணங்குகிறார்கள் அவர்களுக்கு காரா பிரசாதம் (Karal Prasad) அதாவது மாவும் நெய்யும் சீனியும் அளிக்கப்படும். வடஇந்தியாவில் இந்துக்கள கொண்டாடுகின்ற எல்லாத் திருவிழாக்களையும் சீக்கியர்களும் கொண்டாடுகின்றனர். மேலும் முதல் குருவின் பிறந்த நாளையும், கடைசிக் குருவின் பிறந்த நாளையும் கொணடாடுகின்றனர். கல்சா சங்காத்து (Khacsa Sangat) எனறால் புனித மனிதர் களின் கூட்டம் என்று பெயர். அது தெய்விகத் தன்மை வாய்ந்தது. ஒவ்வொரு குருத்துவாரத்தி லுள்ள சங்கமும் அவர்களின ஆட்சிக் குழுவினைத் தேர்ந்தெடுககும். பெண்கள உரையாடலில் கலந்து கொள்ள மாட்டார்கள். கோவிந்த சிங்குடன் குருக கள் சந்ததி முடிந்து விடவில்லை என்றும், இப்பொழு தும் குருவானவர் இருக்க வேண்டும் என்றும் கல்சா (Khalsa) குழுவினர் நம்புகிறார்கள்.

ஒவ்வொரு சீக்கியரும் ஐந்து அணிகலன்கள் அணிய வேண்டும்.அவற்றுள் ஒவவொனறும் ஒவ்வொரு குணங களைக் குறிப்பது. அதாவது 1,கங்கம் (சீப்பு) தூய்மை யைக் குறிப்பது, 2, கரம் (கைவளை) நேர்மையான குணத்தைக் குறிப்பது, 3, கச்சம் (அரைக்கச்சம்) ஐம்புலன்களின் கட்டுப்பாட்டைக் குறிப்பது, 4, கிா பான் (கத்தி) ஆன்மிக சக்தியைக் காட்டும், 5. கேசம (நீண்டமுடி) தியாக மனப்பான்மையைக் குறிப்பது. மேற்கூறிய ஐந்து அணிகலன்களையும் அணிந்து, மிகவும் தைரியத்துடன் வாழ வேணடும் என்பது குரு கோவிந்த சிங்கின் திட்டமாகும். இரா.கோ.

**துணை நூல்கள்:**

**Jogendra Singh & Raja Daliit Singh,** The Great Humanıst GuruNanak,Languages Dept.,Punjab, 1970.

Suda, J P, Religions in India - A Study of their essential Unity, Sterling Publishers, Pvt, Ltd., New Delhi, 1978.

***சீக்கியப் போர்கள்***: சீக்கியர்கள் கி.பி. 19-ஆம் நூற்றாண்டின் பிற்பகுதியில் ஆங்கிலேயருடன் போரில் ஈடுபட்டனர். அப்போர்கள், சீக்கியப் போர்கள் எனக்குறிப்பிடப் பெறுகின்றன.முதலாம் சீக்கியப் போர் ஆர்டிஞ்சுப் பிரபுவின் பதவிக் காலத்தில் கி.பி. 1845 முதல் கி.பி 1846 முடிய நடைபெற்றது. இரண டாம் சீக்கியப் போர் தல்கௌசிப் பிரபுவின் பதவிக் காலத்தில், கி.பி. 1848 முதல் 1849 முடிய நிகழ்ந்தது.

**முதலாம் சீக்கியப் போர் (கி பி 1845-கி.பி.1846):** காரணங்கள் 1) இரஞ்சித்சிங்கின் இறப்பிற்குப்பின், பஞ்சாபில் தொடர்ந்து நடைபெற்ற கலகங்களும் கொலைகளும் ஆங்கிலேயரை விழிப்படையச் செய் தன. மேற்கெல்லையான சட்லசு (Sutlej) ஆற்றை யும் கடந்து சீக்கியரின் அட்டகாசம் பரவிவிடுமோ என்று ஆங்கிலேயர் அச்சம் கொண்டனர். எனவே, அவ்வெல்லையைப் பாதுகாக்கப் படைகளைக் குவித் தனர். ஆனால், சீக்கியர்களோ தம்மீது வலுத்தாக் குதல் நடத்தப் போகிறார்களோ என்று ஆங்கிலேயர் பால் ஐயங்கொண்டனர். எனவே, சீக்கியரும் ஆயத்த நிலையில் நின்றனர். 2) முதலாம் ஆப்கானியப் போரில் ஆங்கிலேயர்கள் தோற்றதால், வெள்ளை யரை வெல்வது எளிதென்று சீக்கியர் நினைத்தனர். 3) கல்சாப் படையின் தான்தோன்றித்தனத்தைக் கண்டு அஞ்சிய அரசி சிண்டான் அதனை ஆங்கிலே யருடன் மோதவிட்டுப் புத்திபுகட்ட எண்ணினார்.

கல்சாப் படைத்தலைவர் தேசுசிங்கும் அமைச்சர் இலால் சிங்கும் 1845-இல் சீக்கியப் படைகளை நடத் திச் சென்று, சட்லெசு ஆற்றைக் கடந்து ஆங்கிலே யரது எல்லைக்குள் புகுந்தனர் ஆங்கிலப் படைக்கும் சீக்கியப் படைக்கும் பிரோசபூர், மாவட்டத்திலுள்ள முட்கி என்னுமிடத்தில் பெரும் போர் நிகழ்ந்தது. போரின் இறுதியில் சர் கியூ காபு (Sir Hugh Gough) தலைமையிலான ஆங்கிலப்படை வெற்றி பெற்றது. இருப்பினும் ஆங்கிலப் படைக்குப் பெருஞ்சேதம் ஏற்பட்டது. இப்போரில் தேசுசிங்கு போர்க்களத்தி லிருந்து ஓடியதால்தான் தொடக்கத்தில் வெற்றி முகமாகச் சென்ற சீக்கியப்படை தோற்றது ஒரு மாதம் சென்ற பின்னர், சீக்கியப்படை இரஞ்சோர் சிங்கு தலைமையில் மீண்டும் போரைத் தொடங்கியது. புத்திவால் என்னுமிடத்தில் 1846-இல் சர் ஆரிசுமித்து தலைமையிலான ஆங்கிலப்படையைச் சீக்கியர் வெற்றி கண்டனர். ஆனால், உலூதியானாவிற்கு அருகில் உள்ள அலிவால் என்னுமிடத்தில சீக்கியர் தோற்கடிக்கப்பட்டனர். இறுதியாக, சட்லெசு ஆற் றங்கரையிலுள்ள 'போசுரான் (இலாகூர் மாவட்டம்) என்னுமிடத்தில் நடந்த போரில், சர் கியூ, சர் ஆரிசுமித்துஆகியோரின் கூட்டு முயற்சியால் சீக்கியர் முறியடிக்கப்பட்டனர். இதில் 8000 சீக்கிய வீரர்களும் 2383 ஆங்கிலப் படைவீரர்களும் மாண்டனர்.

இப்போரின் விளைவாக ஆங்கிலேயருக்கு வட இந்தியாவில் இருந்த பேரிடர் நீங்கியது. இலாகூர் என்னுமிடத்தில் இருதிறத்தாருக்குமிடையே 'இலாகூர் உடன்பாடு' (கி.பி.1846) கையெழுத்தாயிற்று ஆங கில-இந்திய வரலாற்றில இவ்வுடன்பாடு மிகவும் சிறப்புவாய்ந்த தொன்றாகும். இவ்வுடன்பாட்டின் விளைவாக 1) சட்லெசு, பியாசு ஆறுகளுக்கிடையில உள்ள சலந்தர் பிரதேசம் ஆங்கிலேயர் வசமாயிற்று 2) காசுமீரம், அசாரா ஆகிய இடங்களும் ஆங்கிலே யர் வசமாயின. 3) சீக்கியர், போர் இழப்பீட்டுத் தொகையாக ஒன்றரைக் கோடி ரூபாயை ஆங்கிலே யருக்கு வழங்க வேண்டியதாயிற்று. 4) சீக்கியப்படை குறைக்கப்பட்டது. 5) பஞ்சாபின் தலைநகரில் ஆங கில நிலையர் ஒருவர் அமர்த்தப்பட்டார். 6) துலீப் சிங்கு சீக்கிய மன்னராக ஏற்றுக் கொள்ளப்பட்டார் முதலமைச்சர் இலால்சிங்கின் அறிவுரைப்படியே அவர் நடக்க வேண்டும் என்றும் விதிக்கப்பட்டது.

அவ்வுடன்படிக்கையைச் சீக்கியர் ஏற்றுக்கொள் ளாமல், கிளர்ச்சியில் ஈடுபட்டனர். இதைக் கண்ட ஆங்கிலேயர் கி.பி.1846-இல் மீண்டும் ஓர் உடன்படிக் கையை உருவாக்கினார். இதுவே 'பகிரோவால உடன்பாடு' எனக் குறிக்கப் பெறுகிறது. இதனால், பஞ்சாபில் ஆங்கிலேயரின் ஆதிக்கம் பெருகியது இலாகூரின் நிருவாகம் எட்டுச் சீக்கியச் சர்தார்கள் கொண்ட பாதுகாப்புச் சபையிடம் ஒப்படைக்கப்பட் டது. இவர்கள் ஆங்கில நிலையரின் (Resident) அறிவு ரைப்படியே செயற்படநேர்ந்தது. திலீப்சிங்கு உரிய வயதடையும் வரையில் சீக்கிய நாட்டில் ஆங்கிலப் படை நிறுத்தப்பட்டது.அதன செலவைச் சீக்கியரே ஏற்க வேண்டியவராயினர். இவ்வுடன்படிக்கையால் ஆங்கில நிலையர் என்றி லாரன்சு பஞ்சாபின் முடி சூடாமன்னராக விளங்கினார். அவர் பல சமூக சீர் திருத்தங்களை மேற்கொண்டார்.

**இரண்டாம் சீக்கியப் போர் (கி.பி. 1848 - கி.பி. 1849):** ஆங்கில நிலையரின் பஞ்சாபு நிருவாகம், பல சீக்கியர்களைக் கிளர்ந்தெழச் செய்தது. அரசி சிண் டானை ஆங்கிலேயர் பதவியினின்றும் விலக்கியதால், சீக்கியரின் ஆத்திரம் மிகுந்தது. ஆங்கிலேயர் முகமதியர்களுக்குக் காட்டிய சலுகைகளை சீக்கியர் வெறுத்தனர். அதனால் சீக்கிய-ஆங்கிலேய பகைமை

வளர்ந்து போராக உருவெடுத்தது. தல்கௌசிப் பிரபு 1848-இல் இரண்டாம் சீக்கியப் போரைத் தொடங்கினார். நவம்பர் 16-ஆம் நாள் தளபதி காபு இரவி ஆற்றைக்கடந்து, இராம் நகரில் போரைத் தொடங்கினார். முலதான் கோட்டை முற்றுகை இடப்பட்டது. ஆங்கிலேயர் வெற்றிவாகை சூடினர். சிலியன்வாலா என்னுமிடத்தில் 1849-இல் இருதிறத்தாருக்கும் கடும் போர் நடைபெற்றது. ஆங்கில வீரர் பலர் கொலையுண்டனர். போா வெற்றி தோல்வியின்றி முடிந்தது. இருப்பினும் 21.2.1849-இல் இறுதிப்போர் நடைபெற றது. சீக்கியரும் ஆப்கானியரும் இணைந்து ஆங்கிலேயருடன் போரிட்ட போதிலும தோல்வியுற்றனர். பீரங்கிப் போர்க்களம் எனப் போற்றப்படும் 'குசராத்துப் போர்க்களம்' சீக்கியரின் கலலறையாயிற்று.

இப்போருக்குப் பின்னர்ப் பஞ்சாபு முழுமையும் ஆங்கில அரசுடன் இணைக்கப்பட்டது. பேரரசர் தீலீபசிங்கு அரச பதவியிலிருந்து அகறறப்பட்டார். அவருக்கு ஓய்வூதியம் வழங்கப்பட்டது. பஞ்சாபை கி.பி. 1849-இல் தல்கௌசி பிரபு ஆங்கில அரசுடன் இணைத்த செயல் அநீதியான செயல்தான். இருப்பினும் நிருவாகச் சீர்திருத்தங்களால் சீககியர் அமைதிப்படுத்தப்பட்டனர். ம.இ.

***சீக்கியர்***: வடஇந்தியாவில் குருநானக்கு என்ற பெரியோரால் கி.பி. 15-ஆம் நூற்றாண்டில தோற்றுவிக்கப் பெற்ற சீக்கிய மததததைப் பின்பற்றுவோர் சீக்கியர் எனப்பட்டனர். சீககிய சமூகம் அக் காலத்தில் இநதியாவில் ஏற்பட்ட மறுமலர்சசிக்காலச் சமூகங்களில ஒனறு. கடவுள ஒருவரே என்ற நம்பிககையுடன் சீக்கியர், சாதி சமய வேறுபாடுகளையும் சமயச் சடங்குகளையும் கணடித்தனர். வழிவழியாக வந்த பல குருமார்கள தலைமையின்கீழ்ச் சீக்கியரின எண்ணிக்கையும் நிலப்பரப்பும் பெருகின. சீக்கியருக்கும் முகலாயப் பேரரசர்களுக்கும் இடையே பகைமை வளர்ந்தது. சீக்கியர் பல இடுக்கண்களுககு உளளாயினர். முகலாயரின வீழச்சி சீக்கியரின் புதிய எழுச்சிக்கு உதவியது. ஆனால், ஆங்கிலேயருடன் போரிட வேணடிய கட்டாயம் சீக்கியர்களுககு ஏற்பட்டது. இப்போர்களின விளைவாகச் சீக்கியரின வளர்ச்சி குனறியது. இறுதியில் ஆஙகிலேயரும் சீக்கியரும் தமது பகைமையை மறந்து நட்புப் பூணடனா. தெ.பா.

***சீகன்பால்கு பார்த்தலோமியா*** செருமானிய நாட்டினர். இளமையில் பெற்றோரை இழந்தவர். இறக்குநதறுவாயில் இவர்தம் தாய் விவிலியத்தைப் படிக்குமாறும், திருமறைக் கொள்கைகளைக் கடைப்பிடிக்குமாறும் வேண்டுகோள் விடுத்தார். அதன் விளைவாக இவர் சமயப்பணியில் ஆர்வம் கொண்டார்.

செருமானியம், இலத்தீன், கிரேக்கம் ஆகிய மொழிகளைக் கற்றறிநத இவர் மெர்சேபர்கு (Merseburg), எர்பர்ட்டு (Erfurt) ஆகிய இரு இடங்களில் ஆசிரியராகப் பணியாற்றினார். அச்சமயத்தில் வெளிநாடுகளில் மறைப்பணியாற்றத் தொண்டர்கள தேவை என்னும் தெனமார்க்கு மன்னரின் எணணம் தெரியவந்தது. சமயப்பணியில் ஈடுபட எணணியிருநத இவருக்கு இச்செய்தி நல்வாய்ப்பாக அமைநதது. இவர், கி.பி. 1765-இல் கப்பற்பயணம் செய்து தமிழகத்தில் தரங்கம்பாடி வந்து சேர்ந்தார். அஙகுள்ளோர் ஆதரவு தர மறுத்தனர். பல்வேறு இன்னல் கட்கிடையே எர் ஆாதர் (Herr Arthur) என்பார் உதவியால் அவருடன் தங்கினார்.

தமிழின் சிறப்பினை உணரத் தலைப்பட்டதும் தமிழரோடு வாழவும், தமிழைத் தமிழரைப்போலக் கையாளவும், அம்மொழியில் தேர்ச்சி பெற வேண்டும் என்று எணணினார். ஆதலின் தொடக்கத்தில் திண்ணைப்பள்ளியில் தமிழ் பயின்றார். தமிழோடு, தச்சு, தேனிசு, செருமானியம் ஆகிய மொழிகளை அறிந்திருந்த எல்லப்பன் (Aleppa) என்பாருடன் தொடர்பு கொணடு தமிழ்ப் புலமையில் சிறநதார்.

இவர் கி.பி. 1708 நவம்பர் 19-ஆம் நாள் அரசு அலுவலர் ஒருவரின் பொறாமை காரணமாகச் சிறைப் படுத்தப்பட்டார். சிறைச்சாலையில காவலர் உதவியால் எழுதுகோல், காகிதங்களைப் பெற்றுத் தம திருமறைப் பணிகள், சிந்தனைகளை எழுதினார். 'கிறித்தவம்' என்னும் தியான நூல் உருவாகும் நிலையில் விடுதலையடைந்தார். பின்னர்த் தரங்கம்பாடியை விட்டுத் தஞ்சாவூருக்குத் திருமறைப்பணியாற்றச் சென்றார். இவர் கி.பி. 1714-இல ஐரோப்பா சென்றார். கி.பி. 1715-இல் மரிய தோரத்தே (Maria Dorathea) என்பாரைத் திருமணம் செய்துகொண்டார். மீணடும் தரங்கம்பாடிககு கி.பி. 1716-இல திரும்பினார்.

இவர் கி.பி. 1708-இல் விவிலியத்தைத் தமிழில் மொழிபெயர்க்கத் தொடங்கி கி.பி. 1714-இல புதிய ஏற்பாட்டின் நான்கு நற்செய்திகளையும் பதிப்பித்தார். கி.பி 1715-இல் அப்போசுதலருடைய நடவடிக்கைகளை மொழிபெயர்த்துப் பதிப்பித்தார். அதன்பின் பழைய ஏறபாட்டை மொழிபெயாக்கத் தொடங்கினார். இடையில் உருத்து ஆசுமத்துடன நிறுத்தி விட்டு ஐரோப்பாவிற்குச் சென்றார். முதன் முதல் விவிலியத்தைத் தமிழில் மொழிபெயர்த்து அச்சேற்றிய பெருமை இவருக்கே உரியது.

இவர்தம் அகராதிப் பணியும் குறிப்பிடத்தக்கது. வழக்குச் சொற்களையும் பிறவற்றையும் சேர்த்து 40,000 சொற்களையுடைய அகராதி ஒன்றனையும் 17,000 சொற்களையுடைய செய்யுள் அகராதி ஒன்றனையும் தொகுத்து வைத்திருந்தார்.

தாம் பார்வையிட்ட, படித்த நூல்களின் அட்டவணை ஒன்றையும் தயாரித்துள்ளார். அதுவும், அச்சேறாத 'கிறித்தவம்' என்னும் நூலும் ஆலே நகர நூலகத்தில் பாதுகாத்து வைக்கப்பட்டுள்ளன.

தாம் சேர்த்து வைத்திருந்த நூல்கள் அனைத்தையும் இலூட்கேன்சுக்கு (Lutkens) அனுப்பி வைத்திருந்தார். கையெழுத்துச் சுவடிகளாக உள்ள அவையனைத்தும் ஆலேயில் இப்பொழுது வைக்கப்பட்டுள்ளன. சீகன்பால்கு அவற்றை நான்கு பகுதிகளாகப் பாகுபாடு செய்திருந்தார். முதற்பகுதி இவர் எழுதிய 14 நூல்களுக்கான விளக்கமாகும். இரண்டாம் பகுதி உரோமன் கத்தோலிக்கு மறை பரப்புநர் எழுதிய 21 நூல்கள் ஆகும். மூன்றாம் பகுதி இந்துக்கள் தம் சமயம் பற்றி எழுதிய 119 நூல்கள். நான்காம் பகுதி இசுலாமிய சமயத்தினர் அவர்தம் சமயம் பற்றி எழுதியவை.

கி.பி. 1707-இல் புதிய செருசலேம் (New Jerusalem) என்னும் பெயரில் ஒரு கோவிலை எழுப்பினார். அவ்வளாகத்தில் முதன் முதல் அடக்கம் செய்யப்பட்டவரும் இவரே. கடலூரில் ஒரு பள்ளியையும் நிறுவியுள்ளார். சூ.இ.

*சீகாளத்தி*: காண்க: காளத்தி.

***சீகாளத்திப் புராணம்*** என்னும் நூல் இப்பொழுது திருக்காளத்தி என வழங்கும் ஊரின் சிறப்பினைக் கூறுவது. சீ என்பது சிலந்திப் பூச்சியையும் காளம் என்பது பாம்பினையும் அத்தி என்பது யானையையும் குறிப்பதாகக் கொண்டு சிலந்தி, பாம்பு, யானை ஆகியவற்றால் வழிபடப் பெற்றது இவ்வூர் என்று இவ்வூரின் பெயர்க் காரணம் கூறப்படுகிறது. இது தொண்டை நாட்டுத் தலங்களுள் ஒன்று.

சீகாளத்திப் புராணத்தைக் கருணைப்பிரகாசர், சிவப்பிரகாசர், வேலப்பதேசிகர் ஆகிய மூவரும் இயற்றியுள்ளார்கள். இப் புராணத்தின் பலவிடங்களிற் சிவப்பிரகாசரின் கற்பனைத் திறங்களை அங்கங்கே காணலாம்.

திருக்காளத்தி பஞ்சபூதத் தலங்களுள் வாயுத்தலமென்று கூறப்படும். இப்புராண உண்மையை, இப்பொழுதும் இங்குள்ள திருக்கோயிற் கருவறையினுள் இறைவன் திருமுன் எரியும் பல விளக்குகளுள் ஒன்று காற்றினால் மோதப் பெற்றதுபோல எபபொழுதும் அசைந்து கொண்டிருப்பது கொண்டு உணரலாம். இத்திருவூரைத் தென் கயிலாயம் எனறு சிறப்பிக்கின்றது இந்நூல்.

இத்திருக்காளத்தி இறைவனைத் திருமால், பிரமன், திருமகள், கலைமகள், திக்குப்பாலகர் முதலான தேவர்களும், அகத்தியர், வசிட்டர் முதலான முனிவர்களும், திருஞானசம்பந்தர், திருநாவுக்கரசர், சுந்தரர் ஆகிய சமய குரவர்களும், மேலும் முசுகுந்த சக்கரவர்த்தி, நக்கீரர் முதலான பெரியோர்களும் வழிபட்டுப் பேறு பெற்ற சிறப்பை இந்நூல் விவரிக்கின்றது.

அன்பின் திருவடிவான கண்ணப்பர் வரலாற்றை மிக உருக்கமாக அன்புச் சித்திரமாக இந்நூல் விளக்கிக் காட்டுகின்றது.

கண்ணப்பராகிய திண்ணனார் காளத்திநாதராகிய சிவபெருமான் சிவலிங்கவடிவில் மலையுச்சியில தனித்திருப்பதைக் கண்டு தனித்திருக்கின்றாயே பெருமானே, உனக்கு இங்கு யார் துணையுமில்லையே கொடிய விலங்குகள் நிறைந்த காடாயிற்றே எனக் கலங்கும் காட்சி, உணவு கொண்டு வரச் செல்லும் பொழுது ஏதாவது விலங்குகளாலோ வேடர்களாலோ துன்பம்வரின் என்னை 'ஓய்' எனக் கூவி அழை; உடன் ஓடிவந்து துன்பத்தை நீக்குவேன என்று கூறும் காட்சி முதலியன உள்ளத்தை நெகிழ்விப்பனவாக உள்ளன.

இப்புராணத்தில் பெரிய புராணத்தில் காணப்பெறாத ஒரு செய்தி காணப்படுகிறது. கண்ணப்பரது முற்பிறப்பு வரலாறு இந்நூலில் கூறப்பெறுகின்றது.

அருச்சுனன் பாசுபதாத்திரத்திற்காகத் தவம் செய்தபோது, அதற்கு இடையூறாக வந்த மூகாசுரனாகிய பன்றியை இறைவன் வேட வடிவத்தோடு துரத்திக் கொண்டு வந்து அருச்சுனன் எதிரேவிட, அருச்சுனனும் அம்பு தொடுக்க. தன் அம்பால தான் பன்றி வீழ்ந்தது என்று வேட வடிவம் கொண்ட இறைவன் கூற, அருச்சுனன் தன்னாலேதான் வீழ்ந்தது என்று கூறி வேட வடிவங் கொண்ட இறைவனை வில்லாலடிக்க, இறைவன் காட்சி தந்து பாசுபதாத்திரம் நல்கி மறுபிறப்யில் நீ வேடனாகத் தோன்றி என்பால் காளத்தியில் அன்பு காட்டி முத்தி அடைவாய் என அருளிச் செய்தார். அவ்வாறே அருச்சுனன கண்ணப்பராகப் பிறந்து முத்தி அடைந்தான் என்னும் செய்தியினைச் சீகாளத்திப்புராணம் கூறுகிறது.

விரை ஆனந்தகூத்தர் பாடிய புராணம் ஒன்று இவ்வூருக்கு உள்ளது. ஆயினும், சீகாளத்திப் புராணமே சிறப்பாகக் கொண்டாடப்படுகிறது. சு.சு.

*சீசர், சூலியசு*: காண்க: உரோமப் பேரரசு.

**சீட்டாட்டம்** ஒரு பொழுதுபோக்கு விளையாட்டு. இது உலகம் முழுவதிலுமுள்ள சூதாட்டங்களில் பரவலாகக் காணப்படுகின்ற ஒன்று. சீட்டுக் கட்டுகளைக் கொண்டு பணத்திற்காகவும், பொழுது போக்கிற்காகவும் இது விளையாடப்படுகிறது. இச் சீட்டாட்டத்தில் (Card Playing) பலவகைகளுண்டு. இது எளிய வழியில் பணம் ஈட்ட விரும்புவோரை பெரிதும் கவருகிறது. இவ்விளையாட்டில் நல்லூழைப் (Luck) பொறுத்தே வெற்றி-தோல்விகள் அமைகின்றன. சீட்டாட்டத்தைப் பொறுத்தவரை திறமையை விட நல்லூழினையே ஆடுபவர் சார்ந்திருக்க வேண்டியுள்ளதாக டாக்டர் மமோரியா (Dr.Mamoria) என்ற அறிஞரும் குறிப்பிடுகிறார்.

சீட்டாட்டம் எந்த நாட்டில், எக்காலத்தில், யாரால் கண்டுபிடிக்கப்பட்டது என்பது அறியப்படவில்லை. இந்தியா, சீனா, அரேபியா ஆகிய நாடுகளில் இது நெடுங்காலத்திற்கு முன்பே இருந்துவந்ததாகச் சான்றுகள் உள்ளன. சீனாவில் கி.பி.969-இல் இவ்வாட்டம் பரவியிருந்ததாகச் சொல்லப்படுகிறது. மேலும் இது கி.பி.12-ஆம் நூற்றாண்டுச் சீன இலக்கியத்தில் குறிப்பிடப்பட்டுள்ளது. ஐரோப்பிய நாடுகளில் 14-ஆம் நூற்றாண்டின் இறுதியில் இந்த ஆட்டம் பரவியது. செருமனி (Germany), இசுபெயின் (Spain) போன்ற நாடுகளில் கி.பி. 1377-இலும், பெல்சியத்திலும் (Belgium) இத்தாலியிலும் கி.பி 1379-இலும் பிரான்சில் கி.பி. 1392-இலும் இந்த ஆட்டம் தொடங்கப்பட்டது.

தொடக்க கால இத்தாலிய, இசுபானியச் சீட்டுக்களில் 1)கோப்பை(Cup),2) வாள்(Sword),3) பணம் (Money),4)தடி(Club) ஆகிய நான்கு சாதிகள் இருந்தன. இவற்றில் நாட்டுக்கு நாடு வேறுபாடுகள் இருந்தன. தொடக்கத்தில் ஒரு சீட்டுக்கட்டில் 78 சீட்டுகள் இருந்தன. அவைகளில் 56 சீட்டுகள் மட்டும் எண்களை உடையவை. மற்றவை படச்சீட்டுக்கள், வட இந்தாலியிலும் மத்திய ஐரோப்பாவிலும் இன்றும் 78 சீட்டுகள் வைத்து ஆடும் ஆட்டம் நடைபெற்று வருகிறது.

பழங்காலத்துச் சீட்டுகள் இங்கிலாந்து அருங்காட்சியகத்திலும், சின்சினாட்டியிலுள்ள அருங்காட்சியகத்திலும் வைக்கப்பட்டுள்ளன. பழங்காலத்தில் ஐரோப்பாவில் சீட்டுகள் கையாலேயே தயாரிக்கப்பட்டு வண்ணம் பூசப்பெற்றன. எனவே மிகுதியான விலைக்கே கிடைத்தன. ஆனால் இப்பொழுது இயந்திரத்தின் மூலம் அட்டைகளில் செய்யப்படுகின்றன. மேலும் வெடியகக்காடியும் மரக்கூறும் கலந்த கலவையாலான (Nitro-cellulose) தகடுகளினால் உயர்ந்த ரகச் சீட்டுகள்கூட இப்பொழுது உற்பத்தி செய்யப்படுகின்றன. சீட்டுக்கட்டுக்களின்மீது ஒவ்வோர் அரசாங்கமும் வரி விதித்திருப்பதால் அரசாங்கங்களுக்கு இதன்மூலம் ஒரு நிலையான வருமானமும் கிடைக்கிறது.



இக்கால வழக்கிலுள்ள 'இசுபேடு' (Spade), 'ஆடுதன்' (Heart), 'தயமண்டு' (Diamond), 'கிளாவர்' (Club)ஆகிய நால்வகைச் சாதியில் 52 சீட்டுகளுடன் கூடிய சீட்டுக்கட்டு முதன்முதலாக 16-ஆம் நூற்றாண்டில் பிரான்சில் செய்யப்பட்டது. இருப்பினும் கி.பி. 1806-இல்தான் படங்கள் மேலும்கீழும் தலை உள்ளனவாகச் செய்யப்பட்டன. பின்னர் இன்றுவரை சீட்டுக் கட்டுகளில் எந்தவித மாறுதல்களும் ஏற்படவில்லை. ஒவ்வொரு சீட்டுக்கட்டிலும் நான்கு சாதியிலுமாக 52 சீட்டுகள் இருக்கும்படியாகச் செய்யப்படுகின்றன. ஒவ்வொரு சாதியிலும் குறைந்த மதிப்புள்ள ஒரே குறி மட்டுமுள்ளது 'ஆசு' (Ace)என்று சொல்லப்படுகிறது. மற்றவை 2 முதல் 10 வரை எண்ணுள்ள குறிகளும், ஓர் அரசனும், ஓர் அரசியும், ஒரு 'சாகசியும்' (Jack)ஆகும்.

சீட்டாட்டத்தில் பலவகையான விளையாட்டுகள் உள்ளன. அவை பொழுதுபோக்கிற்காகவோ பணத்

திற்காகவோ விளையாடப்படலாம். இதில் ஒருவரே ஆடும் ஒருவகைச் சீட்டாட்டம் பொறுமை (Patience) எனப்படும். இருவருக்கு மேற்பட்டவர்கள் ஆடுவதற்குப் பல ஆட்டங்கள் உள்ளன. குறிப்பிட்ட எண்ணிக்கையினர் மட்டுமே ஆடக்கூடிய சில வகை ஆட்டங்களும் உண்டு. இந்தியாவில் முக்கியமாகத் தென்னிந்தியாவில் 'இரம்மி' (Rummy), 'அவுட்டு' (Out), பிடி, கழுதை, 28,304,504 முதலிய ஆட்டங்கள் வழக்கில் இருப்பவையாகும். இவற்றைத் தவிர, தெரிந்தெடுத்தல் (Pick), 'பெசிக்கு' (Bezique), 'ஏலப்பிரிட்சு' (Auction Bridge), 'ஒப்பந்தப் பிரிட்சு. (Contract Bridge), 'போக்கர்' (Pocker), 'விசுட்டு' (Whist) முதலிய மேலை நாட்டு ஆட்டங்களும் ஆடப்படுகின்றன.

நல்லூழினை நம்பியே பெரும் அளவு இந்த ஆட்டம் இருப்பதாலும், மிக்க உழைப்பின்றிப் பணம் கிடைக்க வழி இருப்பதாலும் ஏழை முதல் பணக்காரன் வரை அனைவரும் விரும்பி ஆடுகின்றனர். ஆனால், இந்தியாவைப் பொறுத்தவரை இந்தச் சீட்டாட்டத்தால் அழிந்துபோன குடும்பங்கள் மிகப்பல. எனவேதான், இங்குச் சீட்டாட்டம் ஒரு குற்றமாகக் கருதப்படுகிறது. பொதுச் சூதாட்ட விதி சீட்டாடுவதற்குத் தண்டனையும் விதிக்கிறது. இருப்பினும், அரசு அனுமதிபெற்ற சீட்டாட்ட நிலையங்களிலும், அனுமதி பெறாத பொது இடங்களிலும் சீட்டாட்டங்கள் நடைபெற்றே வருகின்றன. காண்க: சூதாட்டம். பூ.த.

**சீட்டுக்கவி** கடித முறையில் எழுதப்படும் செய்யுள். ஓலை, முடங்கல், முகம், திருமுகம், கையோலை, கைச்சீட்டு, சீட்டு என்னும் சொற்களும் கடிதம் என்னும் பொருளையே குறிப்பன.

பனை ஓலையில் எழுதப்பட்டது ஓலை எனப் பெற்று, அதில் தூதுச் செய்திகளும், புலவர் தம் வேண்டுகோள்களும் சங்க காலத்தில் எழுதப்பட்டன. பாரதியார் 'ஓலைத்தூக்கு' என்னும் சொல்லைக் கையாண்டார். ஓலையில், மடலில் எழுதி முடக்கி-மடக்கி-மடித்து அனுப்பியதால் 'முடங்கல்' எனப்பெற்றது. மாதவி கோவலனுக்கு எழுதிய கடிதம் 'முடங்கல்' என்று சிலப்பதிகாரத்தில் குறிக்கப்பெற்றுள்ளது. முகத்திற்கு முன் முகம் நிறுத்தி நேருக்கு நேர் உரைப்பது போன்று எழுதப்பட்டதால் 'முகம்' என்றாகி, மங்கலச் சொல்லாகத் 'திரு' என்னும் அடைமொழி பெற்றுத் 'திருமுகம்' என்னும் பெயரைப் பெற்றது. 16-ஆம் நூற்றாண்டளவில் எழுதப்பட்ட திருவிளையாடற்புராணத்தில் சேரமான் பெருமாள் நாயனார்க்குச் சிவபெருமான் எழுதியதாகக் கூறப்படும் முடங்கல் 'திருமுகம்' எனப்பெற்றது. இக்கதையைக் கூறும் படலமும் 'திருமுகம் கொடுத்த படலம்' எனப் பெயர் கொடுக்கப்பெற்றது.

இத்திருமுகம் பின்னர்ச் 'சீட்டுகவி' என்று பெயர் பெற்றது. 'சீட்டுக்கவி' என்னும் சொல்லைச் செய்யுள் ஆட்சியாகப் பெரிதும் காணமுடியவில்லை. 'திருவிளையாடற் பயகரமாலை' (கி.பி 17.நூ.) என்னும் நூலில் மேற்கண்ட திருமுகம் எழுதப்பட்ட நிகழ்ச்சி குறிப்பிடப்பெறும் பாடலில், 'சேரற்குச் சீட்டுக்கவி பாடிக்கொடுத்த சொக்கே பரதேசி பயகரனே' என வருதலின் 'சீட்டுக்கவி' என்னும் சொல்லைக் காணலாம். அந்நூலில் 'திருமுகம்' என்னும் சொல்லும் உள்ளது. தொடர்ந்து 'சீட்டுக்கவி' வழக்காயிற்று. உமாபதி சிவம் என்னும் சைவப் பெரியாருக்குச் சிற்றம்பலவர் பெத்தான் சாம்பானுக்கு முத்திகொடுக்கவேண்டிப் பரிந்துரைத்து அனுப்பியபாடலில் 'கைச்சீட்டு' என்னும் சொல் உள்ளது.

'சீட்டு' என்னுஞ்சொல் 'சில' என்னும் அடித்தளப் பொருளில் தனிஇதழ், பட்டியல் என்னும் பொருள்களில் வழங்கப்பெறுகிறது. பிரயோக விவேக உரைகாரர் 'நூற்றொரு பேதமாய்விரியுமென்று பாடிய காரர் சீட்டுக் (பட்டியல்) கொடுத்தார்' என்று 'பட்டியல்' என்னும் பொருளில் 'சீட்டு' என்னும் சொல்லைக் கையாண்டார் முடங்கலைத் தனி ஓலையில் தனித்தாளில் எழுதியதாலும் அதில் தாம் விரும்பும் பொருள்களைப் பட்டியலிட்டு எழுதியதாலும் அவ்வாறெழுதப்பட்ட பாட்டு, 'சீட்டுக்கவி' எனப்பெற்றது. அவ்வந்நாளைய கணக்குப் பட்டியல் கொண்டது 'சிட்டை' எனப்படுவதும், தனித்தனிக் குறிகள் கொண்ட விளையாட்டு அட்டைகளின் தொகுதி 'சீட்டுக்கட்டு' எனப்படுவதும், 'ஒரு சீட்டுக் கொடுத்தனுப்பு' என்னும் வழக்கும் நடைமுறையில் உள்ளன

சீட்டுக்கவிக்கெனத் தனி இலக்கணம் வகுக்கப் பெறவில்லை. இது ஒரு தனிப்பாடல் ஆதலால் 96 வகைச் சிற்றிலக்கியங்களுள் ஒன்றாகவில்லை. தனிப்பாடலுக்கு இலக்கணம் வகுத்துள்ள 'இலக்கண விளக்கம்' என்னும் நூலிலும் இதற்கு இலக்கணம் இல்லை. இலக்கியம் கண்டதற்கு இலக்கணம் கூறுதல் முறையாதலின், இந்தச் சீட்டுக்கவியின் தோற்ற வளர்ச்சியைக் கண்டு இலக்கணத்தை அமைத்துக் கொள்ளலாம்.

முற்காலத்தில் கருத்துகளையோ செய்திகளையோ செய்யுளாகவே எழுதி அனுப்பினர். அவ்வாறு எழுதப்பட்ட தனிப்பாடல்களின் தொகுப்புகள் சங்கத் தொகை நூல்களாக உள்ளன. அவை திணை, துறை என்னும் இலக்கண வரம்புகளுக்கு உட்பட்டு அமைந்

தவை. அவற்றுள் ஒன்று 'பரிசில் கடாநிலை' என்னும் புறத்துறை.

இத்துறை மன்னரிடமும் வள்ளல்களிடமும் பெறும் பரிசில தொடர்பான செய்திகளைக் கொண்டது. பரிசு வேண்டுதல், பரிசு தரக் காலம் நீட்டித்தால் கவல்தல், தகுதியறியாது பரிசு அளித்தால் மறுத்தல் முதலிய கருத்துகளைக் கொண்டது. பரிசு வேண்டும்போது மன்னரை வள்ளல்களைப் புகழ்தல், தம் வறுமை நிலை கூறல், பொதுவாக உதவி வேண்டல் எனனும் இவ்வகையில் பாடற் கருத்துகள் அமைந்தன. இதனைப் பிற்காலச் சீட்டுக்கவியின் தோற்றுவாய் - அடித்தளம்-எனலாம். மன்னர் புகழ், தம் நிலை, வேண்டும் பொருள ஆகிய இவை மிகைபட எழுதப்படாமல் தன்மை நவிற்சியாகவே அமைந்தன.

இத்தோற்றுவாய்க்கு அடுத்ததாகத் திருவாலவாயர் திருமுகத்தைக் கூறலாம். இடையில் பிறவும் பிறந்திருக்கலாம். இத்திருமுகமும் மூன்று கருத்துப் பகுதிகளைக் கொணடது. 'மதி மலி புரிசை' என்று தொடங்கும் இப்பாடலில் முன அடிகளில மதுரை நகர் வளங்கூறி, அங்கு 'மன்னிய சிவன்யான் மொழிந்திடு மாற்றம்' என்று திருமுகம் எழுதுபவர் தன்னறிமுகம் செய்து கொள்கின்றார். அடுத்து மன்னன் சேரமான் பெருமாளின் கொற்றக்குடை கூறி, வீரம் கூறிச் 'சேரலன் காண்க' என்று முகமன் கூறப்படுகின்றது. நிறைவாக யாழ்வலல பாணபத்திரனது இயைபு கூறி, 'காண்பது கருதிப் போந்தனன் மாண்பொருள் கொடுத்து வரவிடுப்பதுவே' என்று பரிசுக்குப் பரிந்துரைககின்றது. இது தமக்கு ஏதும் வேண்டாது பிறர்க்குப் பரிந்துரைக்கும் திருமுகம். இதில் அமைந்த மூன்று பகுதி அமைப்புகளே பின்னா எழுந்த சீட்டுக்கவிகளுக்கு அமைவாகி, சீட்டுக்கவி இலக்கணமுமாகிவிட்டன. இத்திருமுகம் 12 அடிகளை ஒவ்வோர் அடிக்கும் நந்நான்கு (ஈற்றயலடி தவிர) சீர்களைக் கொண்ட அகவற்பாவால் ஆகியது. பின்னர் எழுந்தவை ஆசிரிய விருத்தங்களாக அமைந்தன. செய்திகளை மிகுதியாகச் சொல்ல விரும்பியமைக்கு ஏற்பச் சீர்களைப் பெருககி 12 முதல் 24 சீர்களைக் கொண்ட கழிநெடில் ஆசிரிய விருத்தங்களாக எழுதினர். பிற்காலப் புலவர்களிற் பெரும்பாலோர் 'சீட்டுக் கவி' எழுதியே பலவகை உதவிகளைப் பெற்று வாழ்ந்தனர். அந்தகக் கவி வீரராகவ முதலியார் (கி.பி. 16-நூ.) சீட்டுக்கவி எழுதுவதில திறன்மிக்கவராகப் பாராட்டப்பெற்றவர். இவர்தம் சீட்டுக்கவிக்கு முன் பிறர் சீட்டுக்கவிகள் 'காட்டுக்கெரித்த நிலாவாயிற்று' என்றும் பாடிப் பரிசு பெறுவதில் இவர்தம் சீட்டுக்கவிகளே பெரும்பயன் பெற்றன என்றும் குறிப்பிட்டுள்ளனர். அட்டாவதானம் சரவணப் பெருமாள் கவிராயர் (கி.பி. 18-ஆம் நூ.) மிகுதியான சீட்டுக்கவிகளைத் திறம்பட எழுதியவர். இவர் மகன், பெயரன் ஆகியோரும் எழுதிய சீட்டுக்கவிகளும் உள்ளன. அருணாசலக் கவிராயர், சொக்கநாதப் புலவர் முதலியோரும் சீட்டுக்கவியிற் குறிப்பிடத் தக்கவர்கள்.

முற்கூறியாங்கு மூன்று பகுதிகளாக அமையும் இக்கவி முதற் பகுதியாகச் சீட்டுக்கவி விடுக்கும் புலவரது பெருமையையோ, சீட்டுப்பெறுபவர் பெருமையையோ கொண்டிருக்கும். விடுப்போர் தம் பெருமையும் திறனும் கூறி, 'விடுக்கும் ஓலை', 'எழுதும் ஓலை', 'விடுக்கும் மாற்றம்', 'எழுதும் நிருபம்', 'அனுப்பும் ஓலை', 'கையோலை', 'எழுதும் காகிதம்', 'விட்டசனது' என்றெல்லாம் குறித்தனர். மன்னவன் அவையில் ஓலை படைக்கும்போது, புலவன் 'தானே தன்னைப் புகழ்ந்து கொள்ளலாம்' என்பது இலக்கணம். இதன்படி விடுப்பவர் தற்புகழச்சி அமையலாம்.

இதுபோன்றே அடுத்த பகுதியாக அமையும் மனனர் அல்லது வள்ளல்கள் புகழும், திறனும் மிக்க உயர்வு நவிற்சியாகவே அமைந்தன. 'எதிர்கொண்டு காண்க', 'ஏழடி எதிர்ந்து காண்க' என்றெல்லாம் பெருமை வைத்துத் தகுதிப்பாடு காட்டினர். இது புலமை மிடுக்காகலாம். மனனர், செல்வர் எனத் தனி ஒருவரை மட்டுமன்றி ஊரார், ஊரிலுள்ள பலவகைச் சாதியார் எனத் தொகையினரும் விளித்து உதவி வேண்டப் பெற்றனர்.

மூன்றாவது பகுதி புலவர் தம் நோக்கத்தைப் புலப்படுத்துவதாகும். பொன் பொருள் முதலிய பரிசுகளை வேண்டுவது மட்டுமன்றித் தாம் எழுதிய நூலை ஏற்க வேண்டியும், அரங்கேற்ற வேண்டியும் எழுதினர். 'பால் பெருத்த மேதி வரவிட வேணடும' என்று எளிமையாக எருமைமாடும் வேண்டப்பட்டது. 'வரிசை வரவிடுக' எனப் பொதுவாகவும், 'பன்னொன்று லட்சம் கோடி பொன் பெற செய்துனைத் தேடிவந்தேன்' என்று குறிப்பிட்டும் வேண்டினர். ஒரு புலவர் 20 இலட்சம் பொன் வேண்டினார். அதனை நேரிடையாக எழுதாது, 'உவ்வொன்று யவ்வொன்று லவ்வொன்று டவவொன்று சவ்வொன்று மவ்வொன்று வவ்வொன்று ரவ்வொன்று கவவொன்று னவ்வொன்று வரவிடல் வேணடுமே' என்று குறிப்பு முகமாகப் பாடினார். ஒவ்வொரு சீரிலும் உளள முதல் எழுத்தை மட்டும் எடுத்துத் தொடுத்தால் 'உய லட்சம் வராகன்' என்று வரும். இத்தொகை, 'செழுஞ்சென்னப் பட்டணம் அதிற்கு ஏகுவோம் வழிச்செலவுக்கு வேண்டும்' தொகையாம்

ஆசைக்கோர் அளவில்லாது பாடினும் இவற்றை எழுதும் பாங்கில் அமைந்துள்ள நயம், புலமைத் திறம், சொற்சித்திரம், சொற்சிலம்பம் முதலியன வியப்பை எழுப்புகின்றன. வடசொற் கலப்பு மிகுதி யாயினும் நல்ல இலக்கியப் படைப்பாக அமைந்தது.

அந்தகக் கவி வீரராகவ முதலியார் சேலம் புரநது தாகந் தீர்த்த செழியன் என்னும் வள்ளலிடம் ஒரு குதிரை வேணடிச் சீட்டுக்கவி விடுத்தார். அதில் 'குதிரை' என்ற பொருள்தரும் கந்தருவம், கந்துகம், கோணம், கொக்கு, கோடை, குந்தம், பாடலம், மா, சடிலம் எனும் பல சொறகளைக் குறித்தார். அவற்றையும் 'பாடாத கந்தருவம், அனற் பணணாத கோடை' என வெளிப்படை என்னும் இலக்கணத் தால் மறை முகமாக எழுதினார்.

இவ்வாறு திறம்பட எழுதியமை கொண்டு சீட்டுக் கவியைப் பெறும் மன்னரோ வளளலோ இவறறைப் புரிந்துகொள்ளும் புலமைத்திறன் படைத்தவராக இருநத உண்மையும் புலப்படுகின்றது.

சங்கப்புலவர்கள் பரிசு கிடைக்காதுபோனாலும், காலங் கடத்தினாலும் கலங்கிப் பாடினர்; கடிந்து பாடவில்லை. 'கெடுக' என்றோ 'அழிக' என்றோ கனன்று பாடவிலலை. பிற்காலச் சீட்டுக்கவிகள் சில இதற்கு மாறான கருத்துகளைத் தருகின்றன. திரு மலைராயன பட்டணத்து வாழ்வாரை விளிதது வேணடு பவர் 'கனதன வரிசை உதவினால உமது குடி வாழி வாழி' என்று வாழ்த்தியதுடன் 'உதவாதிருபபீரெனில் உமதுபட்டணம் இன்னும் (முனனம் காளமேகம் பாட மணமாரி பெய்தது போன்று) ஒருமிக்க மணமா ரியே' என்று அழியவும் பாடினார்.

தமிழ்க் கவிதைக்கு மறுமலர்ச்சி கூட்டிய மாகவி ஞர் சி. சுப்பிரமணிய பாரதியார் தொன்மை மரபு களையும் தழுவிப் பாடியவர். கிடைத்துளள அவர் கவிதைகளில முதலாவதாகக் கருதப்படும் கவிதை சீட்டுக்கவி அமைப்பை உடையது. இது அவரது 15-ஆம் அகவைத் தொடக்கத்தில் பாடப்பெற்றது. பின்னர் எட்டயபுரம் குறுநில மனனர்க்கு இரண்டு சீட்டுக்கவிகள விடுத்தார். சீட்டுககவியின் மரபுப்படி, 'தமிழ நாட்டில் தமிழ் அறிந்த மன்னர் இல்லை என்ற வசை உன்னால் இறந்தது' என்று வேங்கடேச எட்டப்பரைப் புகழ்ந்தும், 'கவியரசர் தமிழ்நாட்டுக்கு இல்லை என்னும் வசை என்னால் கழிநதது' என்று தம்மைப் புகழ்ந்தும் எழுதினார். தொடர்ந்து தம் கவிதை 'சுவை புதிது, நயம் புதிது, வளம் புதிது, சொற் புதிது ; எந்நாளும் அழியாத மாகாவிதை; வெளி நாட்டார் மொழிபெயர்த்துப் போற்றிப் பாராட்டும் தகுதியுடையது' எனக் கவிதைத் திறம் குறித்தார். இப்பெருமைகள இக்காலத்தும் உண்மை களாக விளங்குகின்றன. 'முரசுக் கொட்டி வரவேற்று, சால்வை போரத்தி, பொன் வழங்கி, பல்லக்கு முத லிய விருதுகளுடன் பரிசு வழங்குக' என வேணடி வாழ்த்தியுள்ளார். அறுசீர் ஆசிரிய விருத்தங்களில் எழுதியுள்ளார். சீட்டுககவி உலகில் கல்லெழுத்தாய்ப் பதிவாகத்தக்க சிறந்த இலக்கியப் படைப்பு இது.

நிறைவாக, சீட்டுக்கவி இலக்கணத்தை இவ்வாறு குறிக்கத் தோன்றுகிறது.

சீட்டுக்கவி முடங்கல் முறைச் செய்யுள். அகவல் அல்லது ஆசிரிய விருத்தததால் ஆவது. பரிசு வேண் டல், நூல் அரங்கேறற விரும்பல் முதலிய நோக்கங் களைக் கொணடது. வழங்குவோர் புகழ், வேண்டு வோர் நிலை – தற்புகழ், வேண்டும் பொருள என மூன்று கருத்தமைப்புகளைக் கொணடது. புலமைத் திறத்தைச் சுவைபடக காட்டும் இலக்கியப் படைப்பு

கோ.இ.

***சீத்தலைச் சாத்தனார்:*** இவர் மணிமேகலைக் காப்பிய ஆசிரியர். சாத்தனார் என்பது இவா இயற் பெயர். இவர் கூலவாணிகர் ஆதலின் இவரைக் கூல வாணிகன் சாத்தனாரெனவும், சீத்தலை என்னும் ஊரினராதலின் சீத்தலைச் சாத்தனார் எனவும் வழங்கினர். பிறர் நூலில் குற்றங்கண்டபோது தம் தலையில் தாமே குட்டிக் கொண்டதால் இவா தலை சீழ் பிடித்திருநததென்றும், அதனால இவர் சீத்த லைச் சாத்தனார் எனப் பெயர் பெற்றார் எனறும கூறுவது பிற்கால வழக்கு. இவரைத் 'தண்டமிழ்ச் சாத்தன' (பதிகம் 10), 'தண்டமிழாசான் சாத் தன்' (காட்சி. 66), 'நன்னூற் புலவன' (காட்சி. 100) என இளங்கோவடிகள் சிலப்பதிகாரத்தில் சிறப்பித் துள்ளார்.

இவர், பத்தினிக் கடவுளாகிய கண்ணகியின் வர லாற்றையும், அவள் மேம்பாட்டையும் சேரன் செங குட்டுவனுக்குஅறிவுறுத்தினார்.அது கேட்ட அந்த மன் னன் அவளுக்குக் கோயில் கட்டவும், அதற்கு நித்திய பூசை முதலியன நடைபெற ஏற்பாடுகள் செய்யவும் காரணமானார். கண்ணகியின் வரலாற்றைச் சிலப் பதிகாரம் என்னும் தொடர்நிலைச் செய்யுளாகச் செய்ய இளங்கோ அடிகளுககு ஆர்வம் ஊட்டியவர் சாத்தனார் ஆவார். சிலப்பதிகாரத்தை, நேரில் கேட்டவரும் ஆவர். இவற்றைச் சிலப்பதிகாரத்தின பதிகத்தாலும் அந்நூலிலுளள 25-ஆம் காதையாலும் அறிய முடிகிறது.

எட்டுத்தொகை நூல்களுள இவர் இயற்றியனவாக 10 செய்யுட்களும் (நற்.3, குறுந்.1, அகநா. 5, புறநா. 1) திருவள்ளுவமாலையில் ஒரு செய்யுளும் காணப் படுகின்றன. ஆனால், இப்புலவர் பெயர் தொகை

நூல்களில் ஒரு படித்தாகக் குறிக்கப் பெறவில்லை. சாத்தனார் எனவும் சீத்தலைச் சாத்தன் எனவும் மதுரைச் சாத்தனார் எனவும் குறிக்கப்பட்டுள் ளது. இவர்களின்று வேறுபட்டவர் மணிமேகலை இயற்றிய சீத்தலைச் சாத்தனார் என்பது ஆராய்ச்சி யாளர் கருத்து.

'வள்ளுவர் முப் பாலால், தலைக்குத்துத் தீர்வு சாத்தற்கு' என்று மருத்துவன் தாமோதரனார் திருக் குறளைச் சிறப்பித்துக் கூறியிருப்பதால் இவர் தாமோ தரனார் காலத்தவர் எனக் கருத இடமுண்டு. 'இயற் பெயர் சினைப்பெயர்' (தொல். சொ. 20) என்பதன் உரையில் ஆசிரியர் இளம்பூரணர் முதலியோர் சினை முதற்பெயருக்கு எடுத்துக்காட்டாகச் 'சீத்தலைச் சாத்தன்' என இவர் பெயரைக் காட்டியுள்ளனர். சீத்தலை என்னும் ஊரிலுள்ள ஐயனார் பெயர் சாத்தனாரென்றும், அதுவே இவரது இயற்பெய ரென்றும்சிலர் கூறுவர். திருக்கச்சூர் கல்வெட்டில் முத்தமிழாசிரியரென்னும் சிறப்புப் பெயர் பெற்ற சாத்தனார் வழிவந்த பெருநம்பியென்னும் ஒருவர் கூறப்படுகிறார்.சாத்தனார்சேரன் செஙகுட்டுவனிடத் தும்,இளங்கோவடிகளிடத்தும் நட்புரிமை பூணடவா என்று மணிமேகலை குறிககின்றது. வஞ்சி மாநகர் புக்க காதையின் இறுதியில் செங்குட்டுவனுடைய செங்கோன் முறையையும் வெற்றிச் சிறப்பையும் விளக்கியிருத்தலால் இதை உண்மையாகக் கொளள லாம். சாத்தனார் திருக்குறளில் மிகவும் ஈடுபாடுடை யவர். அதனை இவர் தம் நூலின் பல இடங்களில் திருக்குறளைக் கையாண்டிருப்பதன் வாயிலாக அறிய முடிகின்றது.

சிலப்பதிகாரத் தலைவன் கோவலனுக்கும் ஆடற் கணிகையாகிய மாதவிக்கும் மகளாகப் பிறந்த மணி மேகலையின் வரலாற்றினைக் கூறுவது மணிமேகலைக் காப்பியம். சாத்தனார் எந்த நிகழ்சசியும் பண்டைய வினையின் பயனாக விளைவதென்னும் கொள்கை உடையவர். கோவலன் கொலையுண்டது முறபிறப் பில் அவன் செய்த தீவினையே எனபதை மதுராபதித் தெய்வம் கண்ணகிகுக் கூறியதைக் கேட்டறிந்தவர் இவர். அவ்வாறே உதயகுமரன் கொலையுண்ட நிகழ்ச்சியையும் குறிப்பிட்டுளளார். மேலும், உதய குமரன் முற்பிறப்பில் சமையற்காரன் ஒருவனை வாளால் வெட்டியவினைக்காகத் திட்டிவிடம் என்னும் பாம்பால் இறந்து,மறுபடியும் இப்பிறப்பில் விஞ்சையன் வாளால் வெட் டப்பட்டான் என்று மணிமேகலைக் குக் கந்திற்பாவையின் மூலம் எடுத்துரைக்கின்றார்.

சீத்தலைச் சாத்தனார் பௌத்த மதத்தினர் என்பதை அவர் நூல் தெளிவாகக் காட்டுகிறது. தம் சமயக் கருத்துகளைப் பொருந்துமாற்றால் எடுத்துக் காட்டுவதில் இவர் வல்லவர். சுதமதி யின் வரலாறறால் சமணரையும், ஆபுத்திரனது வர லாற்றால் வேள்வியையும் குறை கூறுதலைக் காண லாம். இவர் பிற சமயக் கோட்பாடுகளைத் தம் காப்பி யத்தில் வெளிப்படையாக நையாண்டி செய்கிறார். பல்வேறு சிறுதெய்வங்கள் இருப்பினும், ஊழி முதல் வனே ஆற்றல் படைத்தவன்; சிறு தெய்வங்களுக்கு உயிரை அளிக்கவோ, அழிக்கவோ வன்மையில்லை என்னும் உறுதிப்பாட்டினைச் சக்கரவாளக் கோட்ட முரைத்த காதையில் தன் மகனையிழந்த கோதமை யென்னும் அந்தணப் பெண்ணின் வரலாறு மூலம் எடுத்துரைக்கின்றார். சாத்தனார் ஒரு சமூகச் சீர் திருத்த வாதியுமாவார்; பெண்ணைத் துறவியாக்கிப் பெருமை தேடித் தந்தவர்; கணிகையின் மகளையே காப்பியத் தலைவியாக்கிய திறமுடையவர். இளங்கோ வடிகள் போன்று பத்தினிப் பெண்டிரது மேம்பாட் டினை ஆதிரையின் வாயிலாக எடுத்துரைககின்றார். 'பிறப்பொக்கும் எல்லா வுயிர்க்கும்' என்னும் வள்ளுவா வாக்கிற்கொப்பப் பிறப்பால் இழிந்த மக்கள் இலலை யென்னும் கோட்பாடுடையவர் சாத்தனார்.

ஆபுத்திரனைச் சாலி என்னும் ஒழுக்கந்தவறிய அந்தணப் பெண்ணுக்குப் பிறந்தவன் என அநதணர் கள் இழித்துக்கூற, அதற்கு ஆபுத்திரன், பிரமனுக்கும தேவலோகத்து ஆடற் பெண்ணான திலோத்தமைக் கும் பிறந்தவரே வசிட்டரும் அகத்தியருமாவர்; அவர்கள் உங்களால் போற்றப்படுபவராயிருக்க என அன்னை சாலிக்குண்டோ தவறு என்று எடுத்துரைக் கின்றான்.

சான்றோாக்குத் தீங்கு செய்தால் தீமையும், நன்மை செய்தால் நலமும் பயக்குமென்று சாத்தனார் எடுத்துக் கூறியுள்ளார். ஏழ்மையைவிடக் கொடிய தொன்றில்லை. ஒருவருக்கு ஏழ்மை வரின் அவர் நிலை என்னவாகும் என்பதையும் எடுத்துரைத்து, பசிப் பிணியைப் போக்குதலே மேலான அறம் எனக் கூறு கின்றார் சாத்தனார். உலகத்து வாழும் மக்களுக்கு உண்டி கொடுத்தல் அவர்களுக்கு உயிர் கொடுத் தலுக்குச் சமமாகும் . எனறு குறிப்பிடுகின்றார். மக்கள் அறம் செய்துதான் உயரவேண்டுமே தவிர தேவர்களின் வரம்பெற்று 'உயரவேண்டியதில்லை என்னும் நல்ல பண்பாட்டினை ஆபுத்திரன் வாயி லாக அறிவுறுத்துகின்றார். தேவேந்திரன் தன் வெள்ளை யானை மீதேறி ஆபுத்திரன் இருக்கும் இடம் வந்து, 'இந்திரன் வந்துள்ளேன் உனக்கு வேண்டிய வரம் யாது' எனக் கேட்டான். அதற்கு ஆபுத்திரன் தனக்கு எவ்வரமும் வேண்டா. பசித்து வந்த மக்களுக்கு உணவளித்து அவரது மகிழ்ச்சியைக் காட்ட வல்ல தெய்வத் தன்மையுடைய என்னுடைய

பாத்திரமே போதும் என இறுமாந்து கூறும் நிலை யினைக் காணலாம். சிறைச்சாலையை அறச்சாலை யாக்கிக் காட்டிய பெருமையும் சாத்தனாருக்கு உண்டு தன் மகன் இறந்தமையால் சினமுற்று மணி மேகலையைத் துன்புறுத்திய அரசமாதேவியையும் அறிவுபெறச் செய்து உலகத்து உயிர்களிடம் அன்பு செலுத்துமாறு செய்த செயலும் வியக்கத்தக்கது.

சீத்தலைச் சாத்தனார் தருக்க நூலிலும் வல்ல வர். இதனைச் சமயக் கணக்கர் தந்திரங்கேட்ட காதையின் மூலம் அறியலாம். காவிரிப்பூம்பட்டினம், வஞ்சிமாநகர், கச்சியம்பதியென்னும் பெரிய நகரங் களைப்பற்றி இவர் விரித்துக் கூறியுள்ள பகுதிகள் அக் காலத்து நாகரிகச் சிறப்பையும், கைத்தொழில் மேம் பாட்டையும், நகர வளத்தையும் விளக்கும் தன்மை யையும் தாம் கண்டவற்றைக் கண்டவாறே அறிவிக் கும் ஆற்றலையும் உடையவர் இவர் என்பதைப் புலப்படுத்தும்.

சுதமதி உதயகுமரனுடன் உடலின் தன்மையைக் கூறும் பகுதியும், சித்திராபதி மணிமேகலையை அழைத்துவருமாறு உதயகுமரனைத் தூண்டும் பகு தியும் இன்னவகைச் செய்தியை இன்னாருடன் இவ் வாறு சொல்லவேண்டுமென்னும் முறையைப் புலப் படுத்தி நிற்கின்றன. சாத்தனார் தம் நூலில் உருவ கம், சிலேடை முதலிய அணிகளைத் திறம்படக் கையாண்டுள்ளமை போற்றத்தக்கதாகும். பொதுவா கச் சாத்தனார் நூலறிவு, நுணணறிவு, உலகியலறிவு, தருக்க அறிவு எல்லாம் நன்கு கைவரப்பெற்ற பெரும் புலவர் ஆவார். நா.சி.

**சீதக்காதி** இராமநாதபுரம் மாவட்டத்தின் தென் காயல் என்றழைக்கப்பெறும் கீழக்கரையைச் சேர்ந்த இசுலாமியப் பெருமகனார். இவரது இயற் பெயர் செய்கு அப்துல் காதிறு இவர் செய்யத்காதிறு, செய்தக்காதி, சைதகாதி, சீதக்காதி எனப் பலவாறு அழைக்கப்பெறுகிறார். இவர் தந்தையார் கடல் வாணிகம் செய்து வந்தார். பெரிய தம்பி மன்னர். இவர் தந்தையார்; தாயார் சையது அகமது நாச்சியார். சீதக்காதியும் இராமநாதபுர மன்னர் கிழவன் சேதுபதி என்ற விசயரகுநாதத் தேவரும் உற்ற நண்பர்கள். மன்னர் இவரை விசயரகுநாதப் பெரிய தம்பி என்று அழைத்து மகிழந்தார். அரசரின் நட்பால் இவரது கடல் வாணிகம் வளம்பெறறது. இசுலாமிய சமயப் பெரியார் சதக்கத்துல்லாவலியா ருடன் இவருக்கு ஏற்பட்ட நட்பின் பெருமையை உணர்ந்த ஔரங்கசீபு, சீதக்காதியை வங்காளத்தின தலைவராக்கினார். சில காலம் இவர் அப்பதவியில இருந்தார்.

சீதக்காதி சிறந்தகொடையாளி. 'செத்துங் கொடுத்தான் சீதக்காதி' என்பது பழமொழியாகும் இவரது தூண்டுதலால் நபிகள் நாயக வரலாற்றை உமறுப் புலவர் சீறாப்புராணமாகப் பாடினார். இவர் ஆதரித்த மற்றொரு புலவர் படிக்காசுப்புலவர் ஆவார். இப்புலவர் தாம் எழுதிய தனிப்பாடல்களில் இவ்வள்ளலைப் புகழ்ந்து பாராட்டியுள்ளார். பெரிய பஞ்சம் ஒன்று கி.பி.1713-இல் ஏற்பட்டது எனறும், தினம் கொடுக்குங் கொடையானே தெனகாயற் பதி யானே சீதக்காதி என்றும் படிக்காசுத் தம்பிரான பாடியுள்ளார். சீதக்காதி வாழும் நாட்டை நன்னாடு என்றும், சீதக்காதி கொடை மிகுந்த சீமான் எனறும, அவன் இறந்திட்ட போதே புலமையும் செத்தது என்றும், பாடினார் நமசிவாய புலவர். இவரை நாடிய வேறு புலவர்களுள் குறிப்பிடத்தகுந்தோர் நமசிவாயப் புலவர், கந்தசாமிப்பிள்ளை என்போரா வார்.

இவரைச் சிறப்பிக்கும் நூல்களாகத் தமிழில் இரு நூல்கள் உள. அவை செய்தக்காதிறு மரக்காயர் திருமண வாழ்த்தும், செய்தக்காதி நொண்டி நாட கமும் ஆகும். எட்டயபுரம் உமறு கத்தாப் புலவர் இயற்றிய திருமண வாழ்த்து நூல், அம்மானை வடிவில எளிய நடையில் அமைந்துள்ளது. நொண்டி நாட கத்தில் ஆசிரியா பெயரை அறிய முடியவில்லை. எனி னும் இது ஓர் இசைத்தமிழ் நூலாக இலங்குகிறது. பி தெ.

**சீதநாடு** செந்தமிழ் நிலத்தினைச் சார்நது வழங்கியனவாகக் கருதப்பட்ட கொடுந்தமிழ நிலஙகள பன்னிரண்டனுள் ஒன்றாகும். இயறசொல்லை விளக்க வந்த நன்னூலார் அதுசெந்தமிழ் நிலத்து மொழியாக அமைந்தது என்பதனைச் 'செநதமிழாகி' என்னும் நூற்பாவில் (நன்.271) விளக்கியுள்ளார். திசைச்சொல்லை விளக்க முற்பட்ட நன்னூலார் அது, செநதமிழ நிலம் சேர் பனனிரு நிலத்தினும் வழங்கும் தமிழமொழி என்று குறிப்பிட்டார் (நன். 273). இயற்சொல செந்தமிழ் நிலத்துச சொல் எனக் கொண்ட உரையாசிரியர்கள், செந்தமிழ் நிலத்தைச் சேர்ந்து விளங்கும் பன்னிரண்டு கொடுந்தமிழ் நிலத்தில் வழங்கும் சொல் திசைச் சொல் என்று கொண்டு விளக்கம செய்துள்ளனர் செந்தமிழ் நிலத்தை- நாட்டைச்- சேர்ந்த பன்னிரண்டுகொடுந் தமிழ் நிலங்களையும்- நாட்டையும்- 'தெனபாண்டிக் குட்டம்' என்னும் ஒரு பழைய வெண்பா தொகுத்துச் சுட்டுகிறது. அவற்றுள் ஒன்றாகிய சீதநாடு, இக் காலத்திய கோயமுத்தூர் நீலகிரி மாவட்டங்கள் அடங்கிய பகுதியினைக் குறிப்பதாகும். அப்பகுதி மலைத்தொடர்கள் மிக்கதாக உள்ளமையால், குளிர் மிகுதி பற்றிச், சீதநாடு என்று வழங்கப்பட்டது. இலக்கண உரையாசிரியர்களின் உரைகளினால், சீத

நாட்டு மக்கள் தோழனை, எலுவன் என்ற சொல்லாலும், தோழியை இகுளை என்ற சொல்லாலும் வழங்குவார்கள் எனனும் செய்தி புலனாகிறது.

அ.மா.ப.

*சீதனம்*: திருமணத்தின் போது மணப்பெண கொண்டுவரும் சொத்து சீதனம் எனப்படும். சீதனம் கொடுப்பதும் வாங்குவதும் சட்டப்படி குற்றமாகும். சீதனம் சொத்தாகவோ அல்லது மதிப்பாவண மாகவோ இருக்கலாம். திருமணத்தின் போதோ, அதற்கு முன்னரோ, அதன் பின்னரோ திருமணத் திற்கு மறுபயனாக, நேரடியாகவோ, மறைமுக மாகவோ திருமணத்தில் ஒரு தரப்பினர் மறுதரப் பினருக்குச் சீதனம் அளித்தல் தடை செய்யப்பட்டுள் ளது. திருமணத் தரப்பினரின் பெற்றோர், மறுதரப்பி னருக்குச் சொத்து அல்லது மதிப்பாவணம் அளித்தல் தடை செய்யப்பட்டுள்ளது. மேற்கண்ட சூழ்நிலை களில் சொத்தை அளித்தல் மற்றும் உரிமை மாற்றம் செய்தல் குற்றமாகும். சீதனத்தைத் தர அல்லது வாங்க உடநதையாயிருத்தலும் குற்றமாகும். சீதனம் தருமாறு கேட்டலும் குற்றமே.

ஆனால், திருமணத்தின்போது மணமக்களுக்கு அளிக்கப்படும் பரிசுப் பொருள்கள், நகைகள், ஆபர ணங்கள், துணிமணிகள் மற்றும் இன்னோரனன பொருள்கள் சீதனமாகக் கருதப்பட மாட்டா. சீத னம் தரவோ அலலது வாங்கவோ செய்யப்படும எந்த ஓர் உடன்படிக்கையும் இல்லா நிலை உடன் படிக்கையாகும். இந்த உடன்படிக்கையை நீதிமன்றத தில் செயற்படுத்துதல் இயலாது.

முகமதியர் திருமணத்தின்போது திருமணத்தின் மறுபயனாக மனைவி கணவனிடமிருந்து பெறுதற் குரிய பணம் அல்லது சொத்து சீதனமாகக் கருதப் படமாட்டாது. இதனை 'மகர்' அல்லது முகமதிய மணக்கொடை என்பர். திருமணத்தின்போது, திரு மணத்திற்கு மறுபயனில்லாமல கொடுக்கப்படும் பொருள் சீதனமாகாது. திருமணத்தினபோது மறு பயனாகக் கொடுக்கப்படும் பொருள்கள் அல்லது பிற் காலத்தில் பொருள்கள் தரப்படும் என உடன்படிக்கை செய்தல் சீதனமாகும். திருமணத்தின்போது பொருள்கள் தருவதாக உறுதி செய்யப்பட்டு அப் பொருள்கள் பின்னர் அளிக்கப்பட்டாலும் அவை சீதனமே. சீதனம் தருவதும்,வாங்குவதும் தடை செய் யப்பட்டிருப்பதால் அதனைப் பெறும் பொருட்டு நீதி மன்றத்தில் வழக்கிட்டு வெற்றி பெறுதல் இயலாது. அதற்கான வட்டியோ, நீதிமன்றச் செலவுகளோ பெறுதல் இயலாது.

ஒரு பெண்மணியின திருமணத்தின்போது அவ ருக்கு வாரிசுரிமைச் சட்டப்படி அவருக்குரிய பங்கை அளித்தல் சீதனமாகாது.

ஒரு திருமணத்தின்போது மணமகள் அல்லாது வேறு எந்த நபரும் சீதனம் பெற்றிருந்தால் அதனை அப்பெண்மணிக்கு உரிமை மாற்றம் செய்திடல் வேண்டும். சீதனம் திருமணத்திற்கு முனனர்ப் பெறப் பட்டிருந்தால் திருமண நாளிலிருந்து ஒரு வருடத் திற்கு முன்னரும், சீதனம் திருமணத்தின்போதோ அதன் பின்னரோ பெறப்பட்டிருந்தால் அதனைப் பெறறதிலிருந்து ஒரு வருடத்திற்குள்ளாகவும்,சீதனம் மணப்பெண் இளவராக இருக்குங்கால் பெறப்பட் டிருநதால் அவர் உரிய வயதை அடைந்ததிலிருந்து ஒரு வருடத்திற்குள்ளாகவும் உரிமை மாற்றம் செய்யப்படல் வேணடும். மேறகுறிப்பிட்ட ஒரு வருட கால வரையறையில் அப்பொருள் வைத்திருப்போர் அப்பெண்மணியின் நன்மைக்காகப் பொறுப்புள்ள வராகப் பொருளை வைத்திடல் வேண்டும். மேற் குறிப்பிட்ட காலவரையறைக்குள் அப்பெணமணிக்குச் சொத்தை உரிமை மாற்றம் செய்யாதிருத்தல் சட்டப்படி குற்றமாகும். அவ்வாறு சொத்தினைப் பெறாமல் அப் பெண்மணியும் இறந்துவிட்டால் அவரது மரபுரிமையர் அச்சொத்தைப் பெறத் தகுதி யுடையவர் ஆவர். சீதனம் சம்பந்தமான குற்றவியல் வழக்குகளை மாநகரக் குற்றவியல் நீதிபதி அல்லது முதல் வகுப்புக் குற்றவியல் நீதிபதி மட்டுமே விசா ரணை செய்யலாம். எந்த ஒரு குறறததையும் குற்றம் புரிந்த நாளிலிருந்து ஒரு வருடத்திறகுப் பின்னர் நீதி மன்றம் கொள்தகு நிலைக்கு எடுத்து விசாரணை செய்தல் கூடாது. மாநகரக்குற்றவியல் நீதிபதி அல்லது முதல் வகுப்புக் குற்றவியல் நீதிபதி சட்டத்திறகுகந்த எத் தண்டனையும் விதிக்கலாம். சீதனம் குறித்த குறறங்கள் புரிந்தவரைப் பிடியாணை பெற்றே கைது செய்திடலாம். இக்குறறங்கள் பிணைவிடு குறறங் களாகும். வழக்கில சம்பந்தப்பட்ட இருதரப்பினரும் சமாதானம் செய்து கொண்டு நிறுத்திசைவு பெறுதல் இயலாது.

சீதனத்தை மகனுக்காகத் தந்தை பெற்றிருந் தால் தந்தையும் மகனும் குற்றவாளிகளாகக் கருதப் படுவர். சொத்தின் உரிமை மாற்றம் மணமகள் எந்த இடத்தில் வசிககின்றாரோ அஙகே செய்திடல் வேண டும். எனவே, அவர் வசிக்கின்ற இடத்தில் குற்ற முறையீடு செய்யலாம்.

மீ.அ.

*சீதை*: அமுதத்தோடு பிறந்த வேகவதியென் பாள் குசத்துவனைக் கணவனாகப் பெறத் தவமிருந தாள். திக்கு விசயம் செய்த இராவணன் அவளைக்

காமுற்று வலிந்து தழுவியதால் அவன் தீண்டிய தன் உடலைத் தீயிலிட்டுச் சிதைக்குங்கால், தான் எடுக்கும் அடுத்த பிறப்பில் அவனையும் அவன் குலத்தையும் அழிக்கும் ஒருத்தியாகப் பிறப்பதாகக் கூறி இறந்தாள்.



சீதை

பின்னர் அவள் இலங்கையில் உள்ள ஒரு தாமரைப் பொய்கையில குழந்தையாகப் போந்திருந்தாள். இராவணன் அக்குழவியைக்கண்டு வியந்தெடுத்து அரண்மனை புக்கபோது சோதிடர்கள் அக்குழவியால் இலங்கை அழியும் என்றனர். அதுகேட்ட இராவணன் அதனைப் பேழையொன்றிலடைத்துக் கடலிலிட்டான். அது கடல்வழி மிதந்து விதேக நகரத்து மிதிலைக் கடற்கரையில் ஒதுங்கி மணலில் புதைந்து கிடந்தது.

அப்பொழுது அத்தேசத்தையாணட சனகன் வேள்விச் சாலையமைக்க நிலத்தை உழுதபோது படைச்சாலில் தட்டுப்பட்ட பேழையில் குழநதையொன்று இருக்கக் கணடு அதற்குச் சீதையெனறு பெயரிட்டு வளர்த்துவந்தான். இவள் இராமன் மேற்கொள்ளும் இராவணவதத்திறகுக் காரணமாகப் பிறந்தவள். அதனால், இராமனைத் திருமாலாகக் கூறும்போது இவளைத் திருமகளாகக் கூறுவதுணடு. எனறாலும், மூவராலும் வெல்லமுடியாத இராவணனைக் கொல்லப் பரம்பொருள் திருமால் தொழில் செயயப் போந்ததால சீதை மூவகை உலகவாக்கும் மூவருககும் அனனையாகவும், காத்தற்றொழில் புரியும் திருமாலை நோக்கத் திருமகளாகவும், இராவணன் பெற்ற சாபத்திற்கேற்ப வேகவதியாகவும் பேசப்பெற்றுள்ளாள்.

கோசிக முனிவன் தன் வேள்வி காத்த இராம இலக்குவர்களை அழைத்துச் செல்லும்போது சனகன் அரண்மனையின் கன்னி மாடத்து மேல் நிலையில் அழகெல்லாம் ஒருங்கு திரண்டன்ன சீதை நிற்பக் கண்டு, இராமன் அவள் யாவள் என்று அறியாமலே அவளிடம் மனம் போக்கிவிடுகின்றான். முனிவன் தனனோடுஅழைத்துச் சென்ற இராம இலக்குவர்களை அறிமுகப்படுத்துகின்றான். சனகன் தன் அரண்மனையிடத்துப் பலகால் ஒருவராலும் தொழிற்படுத்த முடியாது கிடந்த சிவதனுசை நாணேற்றும் வல்லானுக்குத் தன்மகள் சீதையை மணங்கூட்டுவிப்பதாகக் கூற, இராமனும் அவ்வில்லின் நாணைப் பூட்ட முனையும் போது அவ்வில் அவன் ஆற்றலுக்காற்றாது ஒடிந்து விடுகின்றது. அதுகண்டு வியந்த சனகன் அவனுக்குச் சீதையை மணங்கூட்டுவிக்கின்றான்.

மணம் முடிநதபின் இராமனோடு அயோத்தி சென்று வாழும் நாளில் தயரதன் இராமனை முடி சூட்டிக்கொள்ள வேண்டி அதற்குரியவற்றை இயற்றுகின்றான். ஆனால், அம்முடிபுனைவிழா கைகேசியால் தடையுறுகின்றது. இராமன் துறவுக்கோலம் பூண்டு காடேகும்போது சீதையும் மரவுரி உடுத்து உடன் புறப்படுகின்றாள். அனைவரையும் சுமந்திரன் தேரில் ஏற்றி நாட்டு எல்லையில் விட்டு விடைபெறும்போது சீதை தயரதனுக்கும் அத்தையர்க்கும் வணக்கம் கூறி, தன் தங்கையர்க்குத் தான வளர்த்த கிளியைப் போற்றுமாறு வேண்டியனுப்புகின்றாள். பல இயற்கைக் காட்சிகளைக் கண்டுகொண்டே கங்கைக் கரையை அடைகின்றனர்.

கங்கையைக் கடக்கக் குகன் உதவுகின்றான். பின்னர் அவர்கள் தொடர்ந்து செலலும்போது இராமன் அவட்குச் சித்திரகூட மலையில் நிகழும் பல திறப்பட்ட காட்சிகளைக் காட்டி அழைத்துச் செல்கின்றான். அவர்கள் தணடகவனம் புகுந்தபோது பேராற்றல் படைத்த விராதன என்ற அரக்கன் சீதையை ஒருகையால் பற்றிக் கொண்டு செல்லக் கலங்கிய சீதை கதறியழுகின்றாள. பின் இராம இலக்குவர்கள் அவனை வாள்கொண்டு வெட்டிக் கொன்று சீதையை மீட்கின்றனர். சடாயு என்ற கழுகரசன் அவர்களைக் கண்டு, தான் அவர்களைக் காப்பதாகக் கூறித் தவமியற்ற உதவுகின்றான். அவன் வழி காட்டப் பஞ்சவடி என்ற இடத்திற்குச் சென்று இலக்குவன் அமைத்த குடிலில் தங்குகினறனர். அங்குச் சூர்ப்பணகை எனற அரக்கி இராமனைக் கண்டு காமுறுகின்றாள். அவள காமம் நிறைவேறாமைக்குக் காரணம் அழகெல்லாம் ஒருங்கு திரண்டவளாய் இருந்த சீதையேயென்று துணிந்து அவளை அச்சுறுத்திப் பறற நிற்பக் கண்ட இலக்குவன் அவள் உறுப்புகளைச சிதைத்துப் போக்குகின்றான். இவ்வாறு ஒறுக்கப்பெற்ற சூர்ப்பணகை தனக்கு உற்றானாயுள்ள கரன் முதலியோரிடம் கூற அவர்களும் இராமனால் அழி

வுண்டது கண்டு இராவணனிடம் முறையிடச் சென்று சீதையின் அழகெல்லாம் விரித்துரைத்து, அவன் உள்ளத்து அவளைக் குடிகொள்ள வைத்து, அவளை அவன் வெளவி வந்து வாழுமாறு கூறுகின்றாள். அதனைக் கேட்ட இராவணன், மாரீசனை மாயமானாகப் போந்து சீதையை வஞ்சிக்கச் செய்தான். அதன் வழியாக இராம இலக்குவர்களை அவளினின்றும் பிரித்துப் பின கவர முற்பட்டான்.

சீதை தனக்கு இராமனால் காவல் வைக்கப்பெற்றிருந்த இலக்குவனை மான் பின் போன இராமன ஏதமுற்றதாகக் கருதி, அவனுக்குத் துணையாகப் போகுமாறு பணிக்கின்றாள். இராமன் ஏதமுறான் என்ற துணிவால் இலக்குவன் அவளை விட்டகலாது காவலாக இருக்கின்றான். அவளைப் பிழைபட உணர்ந்த அவள் கடிந்துரைப்ப, அச்சொல் பொறாது இராமனைத் தேடிச் செல்கின்றான். அப்பொழுது இராவணன் துறவியர் வேடம் பூணடு வர, அவள் அவனைத் துறவி என்று கருதி முறைப்படி வரவேற்றுப் பேணிய போது அவன் பேச்சால் கெட்டவனென்று அறிந்து அவன் உயர்த்திக் கூறிய இராவணனை இழிவாகப் பேசி அவன் குலத்தை அழிக்கவே இராம இலக்குவர்கள் போந்துள்ளனர் என்று கூறுகின்றாள். அது கேட்ட இராவணன் சினங் கொண்டு தன் உண்மை வடிவைக் காட்டி வீரம் பேசுகின்றான். அவனை எளியனாகப் பேசி அறிவுரை கூறியவளை அவள் இருந்த சாலையோடு பெயர்த்தெடுத்துத் தன் புட்பக விமானத்தில் கொண்டு, இலங்கைபுகுந்து அசோகவனத்தில் சிறை செய்கின்றான். அங்கு அரக்கியர் பலரிடையில் திரிசடை எனற வீடணன் மகள் உற்ற தோழியாய் அமைகின்றாள். இராவணன் சீதையிடம் அடிக்கடி சென்று தனக்கு இணங்குமாறு வேண்டுந்தோறும் அறிவுரை பகர்கின்றாள்.

வனத்தில் சீதையைக் காணாது தேடிச் சென்ற இராம இலக்குவர்க்கு அனுமன் நண்பனாகின்றான். அவன் தென்திசைக் கடலைத் தாண்டி இலங்கையில் இராவணனால் சிறைப்படுத்தப் பெற்ற சீதையைக் கண்டு இராமன் துன்புறும் செய்தியை அவளுக்குக் கூறுகின்றான். இராமன கொடுத்தனுப்பிய கணையாழியைக் காட்டித் தான் இராமனுக்கு தூதன் என்பதனை நம்ப வைக்கின்றான. பின் அனுமன் தன் ஆற்றலைக் கூறி அவள் தன் மீது இவர்நது கொண டால் இராமனிடம் கொண்டு உய்ப்பதாகக் கூறுகின்றான். அது கேட்ட சீதை அச்செயலைக் கடிந்து தானே தன் ஆற்றலால் தன்னை மீட்டுக் கொளளக் கூடுமென்றும், அது இராமன் வில்லாற்றலுக்கு இழுக்காகுமென்றும், இராமனே தன்னை மீட்கும் கடப்பாடுடையவன் என்றும் கூறியதோடு தான் ஒரு சேண்பகல் இருப்பதாகவும் மீட்டிலனேல் உயிர்விடப் போவதாகவும் கூறித் தனனிடமிருந்த சூளாமணியைக் கொடுத்தனுப்புகின்றாள.

பின் அனுமன் இராவணனின் பொழிலழிக்க, அது கண்டு மேகநாதன் அவனைப் பிரமாத்திரத்தினால் கட்டி இராவணனிடம் உய்க்கின்றான். இராவணனிடம் தான் இராம தூதன் என்றும், சீதையை விடுவிக்குமாறும் கூறுகின்றான். அவன் கூறிய உரைகேட்ட இராவணன் அவனைக் கொல்லுதற்கு வேறாக அவன் வாலில் பந்தம் சுற்றிக் கொளுத்துகிறான். தீயிடைப் பட்டுக் கருகாவண்ணம் சீதைத் தீக்கடவுளைச் சுடாதிருக்கப் பணிக்கின்றாள். பின் அனுமன் இலங்கைக்கு எரியூட்டி மீள்கிறான். மீண்டு இராமனிடம் அவள் இயலிடம் கூறுகின்றான்.

இலங்கை எரிவாய்ப்பட்ட பின்னர் இராவணன் மந்திரமிருக்கின்றான். அங்குக் கும்பகருணன் வீடணன் முதலியோர் சீதையின் கற்பின் பெருமை கூறி அவளை இராமனிடம் உய்ப்பதே அறமென்று கூறியும் கொண்டிலன். தனக்குப் பலவாறு அறிவுரை கூறிய வீடணனை இகழ்ந்து தன் விழி எதிர் நின்றால் வாளாற் சிதைப்பதாகக் கூறுகின்றான். செய்வகை அறியா வீடணன் இராமனிடம் அடைக்கலம் புகுகின்றான்.

சீதை இருக்குமிடமறிந்த இராமன் சுக்கிரீவன் துணையால் கடலடைத்து இலஙகையை முற்றுகின்றான். இராமனுக்கும் இராவணனுக்கும் முதற் போர் நிகழ்கின்றது தோல்வியுறற இராவணனுக்கு வீடணன் கூறியவாறு சீதையை இராமன்பால் உய்த்திருந்தால் அத்தகைய இழிவு நேர்ந்திருக்காது என்று கூறுகின்றான். பின் மந்திரமிருக்கின்றனர். கும்பகருணன் அழைக்கப்பெறுகின்றான். அவனும் சீதையை விட்டுவிடுமாறு கூறிப் பயனில்லாமையால போருக்குச் சென்று மடிகின்றான்.

இதற்கிடையில் இராவணன் மகோதரனை நோக்கிச் சீதையைத் தான் அடையும் வழி கேட்கின்றான். அவன் மருத்தன் என்பவனைச் சனகனாக வடிவெடுக்கச் செய்து மாய முறையில் சீதையைக் கூட்டுவிப்பதாகக் கூறிச் சீதையை மாயச் சனகன் தனக்குற்றகேடுகளைக் கூறி இராவணன் விருப்பத்திற் இணங்குமாறு வேண்டச் செய்வதாகவும்,அவள் அவன் கூற்றுக்கு உடன்படாது போனால் அவள் காண அவனை வெட்டி அச்சுறுத்தி இணங்க வைப்பதாகவும் கூறுகின்றான். அங்ஙனமே மாயச் சனகனை மகோதரன் அழைத்துவருகின்றான். வந்த அவன் தான் உயிர் வாழத் தன்னைக் கொலலாதிருக்குமாறு வேண்டுகின்றான். இதனைச் சீதை காணுகின்றாள்.

அப்பொழுது இராவணன் சீதையிடம் தன் விருப்பத்திற்கு இணங்குமாறு வேண்டுகின்றான். அவள் சினந்து மறுக்கும்போது மாயச் சனகன் சீதையிடம் தன் உயிர்க்கு உய்தி தர இராவணனுக்கு உடன்பட்டு வாழுமாறு வேண்டுகின்றான். அது கேட்டுச் சீதை அவன் பேச்சைக் கொள்ளாததோடு தன் தந்தை சனகன் அவ்வாறு கூறான் என்று ஐயுற்றுத் தன் தந்தையேயாயினும் தான் கொண்டது விடாது மறுத்துக் கூறுகின்றாள். அந்த நிலையில் கும்பகருணன் போரில் மாண்ட செய்தி வரக் கேட்டு இராவணன் புலம்புகின்றான். அது கண்ட சீதை பெருமகிழ்வெய்துகின்றாள். மகோதரன் அச்சனகனைச் சிறையில் வைக்குமாறுகூறி இராவணனோடு போய்விடுகின்றான். திரிசடை மகோதரன் செய்த மாயத்தை விளக்கிச் சீதைக்கு ஆறுதல் கூறித் தெளிவிக்கின்றாள்.

கும்பகருணன் இறந்தபின் இந்திரசித்து செய்த போரில் பிரமாத்திரம் எய்து இராமன் முதலிய அனைவரையும் உயிர்மயங்கச் செய்து விடுகின்றான். அப்பொழுது இராவணன, இறந்த அரக்கர்களைப் போர்க்களத்தினின்றும் அகற்றிச் சீதையைப் புட்பகத்திலிருத்திப் போரில் இராமன் முதலியோர் இறந்துகிடப்பதைக் காட்டித் தன்னை மணக்குமாறு வேண்டுகின்றான். சீதை இராமன் முதலியோர் இறந்தாகக் கருதி அளவிலாத் துன்பமுறுகின்றாள். திரிசடை, அமங்கல மகளிரைப் புட்பகம் சுமக்காததலால்இராமன் இறக்கவில்லை என்று தெளிவித்துத் தேற்றுகின்றாள். பின்னர் அனுமன் கொணர்ந்த சஞ்சீவியால் அனைவரும் உயிர்பெறுகின்றனர்.

இறுதியில் இராமனால் இராவணன் கொல்லப்பெற்றதும் சீதை இராமனிடம் மங்கலக் கோலம் பூண்பித்து அழைத்துவரப் பெறுகின்றாள். இராமன் அவளைக் கணடு பலவாறு குறைகூறிச் சினந்து பேசுகின்றான். பின்னர் இராமன் இலக்குவன் வாயிலாக அமைத்த எரிபுகுந்து அவள் கற்பினைப் புலப்படுத்தப் பணிக்கின்றான். அவளும் எரிபுக அங்கியங்கடவுள் சீதை மேனியின் கற்பெரியால் தன் உடல் சுடப்பெற்றுப் புண்ணுற்றதாகக் கூறிக் கலங்குகின்றான். பின்னர்ச் சிவன் பிரமன் உள்ளிட்ட அனைவரும் போந்து சீதையின் கற்பின் திறம் பேசி இராமனை ஏற்றுக்கொள்ள வேண்டுகின்றனர். சீதையை ஏற்றுக் கொண்ட இராமன் அயோத்தி புகப் புட்பகம் ஏறிய போது, சீதை தான் தனியாளாய் அயோத்தி புகாமல் தனகுற்றாராய் உள்ளவரோடும் குரங்கின மகளிரோடும் சேர்நது செல்லுமாறு வேண்டுகின்றாள்.

இராமன் அயோத்தி புகும் வழியில் சேதுவைக் காட்டி, அது வீடணனோடு நட்புற்ற இடமென்றும், சுக்கிரீவன் அனுமன் உள்ளிட்ட எழுபது வெள்ளக் குரங்குப் படைகளால் அமைந்த சேதுவைக் காட்டி அவ்விடத்துப் பெருமை பிரமனுக்கும் கிடைப்பரியது என்றும், எல்லையில்லாப் பாதகம் புரிந்தோர்க்கும் உய்தியளிக்கவல்ல இடமென்றும், வருணன் தன்கண போந்து அடைக்கலம் பெற்ற இடமென்றும் கூறுகின்றான். அதனைக் கேட்டுச் சீதை உவக்கினறாள்.

பின் தமிழ் முனிவன் அகத்தியன் வாழிடங் காட்டி, அனுமன் சுக்கிரீவனோடு நட்புற்ற கிட்கிந்தையைக் காட்டி, வாலியைக் கொன்ற இடத்தையும் காட்டிக் கோதாவரி அதன்பக்கலமைந்த குன்றுகள் பலவற்றைக் காட்டிச் சீதை தன்னை விட்டுப் பிரித்த இடம் காட்டிப் பரத்துவன் இருக்கையில் சென்று தங்குகின்றான். பின் பரதன் நிலையை முனிவன் கூறக் கேட்டு, அனுமனைத் தன் வரவுணர்த்துமாறு அனுப்பிப் புட்பகமிவர்ந்து அயோத்தி சென்று எரிபுக நின்றபரதனைக கண்டு அவன் துயர் போக்குகின்றான்.

அயோத்தியில் சீதை தன் மாமியரைக் கண்டு வணங்கி அரியணையில் இராமனோடிருந்து முடிசூட்டிக் கொண்டு இராமனுக்குப் பட்டத்தரசியாக வீற்றிருந்து முடிபுனைந்த இராமனோடு அளவற்ற களிப்பில் மூழ்கிச் செம்மாந்திருந்தாள். கு.தி.

*சீபா* ஒரு சப்பானிய நகரம். தோக்கியோ (Tokyo) விரிகுடாக்கரையில் இது அமைந்துள்ளது. ஒரு சிறந்த வணிக நகரமாக இன்று விளங்கும் சீபா (Chiba) கி.பி. 12-ஆம் நூற்றாண்டு முதல் கி.பி. 16-ஆம் நூற்றாண்டு வரை தைமியோ (Daimio) எனப்படும் ஒரு நிலமானிய, செல்வம் மிக்க குடும்பத்தினரின் ஆதிக்கத்திற்குட்பட்டிருந்தது. அக்குடும்ப ஆட்சி முடிவுற்றபின் அப்பகுதி சிறப்பிழந்து ஒரு சிற்றூராக மாறியது. அண்மைக் காலத்தில் இது மீணடும் வளர்ச்சியுற்று, வாணிகத் தொழிலைச் சிறப்பாக நடத்தி வருகிறது. ஆடை வகைகள், காகிதம் முதலியன இங்குத் தயாரிக்கப்படுகின்றன. பழையகால கி பி. 8-ஆம் நூற்றாண்டுக்குரிய பௌத்த கோயில் இங்கு இருக்கிறது. இதன் மக்கள் தொகை 757,000 (1983). தெ.பா.

*சீம்துய்புய்* நேராட்சிக்குட்பட்ட மிசோரத்தில் உள்ளதொரு மாவட்டம். இது 4,000 ச.கி.மீ. பரப்பளவுடையது. சீம்துய்புய் (Chhimtuipui) மாவட்டத்தின் வடக்கில் உலுங்லீ (Lunglei) மாவட்டமும் தென்கிழக்கில் பர்மாவும் மேற்கில் வங்காளதேசமும் உள்ளன. இம்மாவட்டத்தின் நடுவில் வடக்கு தெற்காக மலைத் தொடர்கள் செல்கின்றன. இம்மலை

யில் பல ஆறுகள் உற்பத்தியாகின்றன. மலைகளில் மரங்கள் மிகுதி. திபெத்து-பூர்மன் மொழி இன மக்கள இப்பகுதிகளில மிகுதியாக வசிக்கின்றனர். இவர்கள், நெல், பருத்தி, புகையிலை, காய்கறிகள் ஆகியவற்றைப் பயிரிடுகின்றனர். பெரும்பாலான சிற்றூர்கள் மலைகளின் மேல் உள்ளன. இரும்பு, களிமண, சுண்ணாம்புக்கல் போன்றவை இங்குக் கிடைக்கின்றன. மரம் அறுத்தல், நெல் அரைத்தல், எண்ணெய் ஆட்டுதல், மூங்கில் வேலைகள், செங்கல் அறுத்தல் போன்றவை இப்பகுதியில் நிகழும் முக்கிய தொழில்களாகும். சைகா (Saiha) இம்மாவட்டத்தின் தலைமை நகரமாகும். இம்மாவட்டத்தின மக்கள் தொகை 66,420 (1981). சு இரா.

***சீயகங்கன்***: இவன், கி.பி. 12-ஆம் நூறறாண டில் சோழநாட்டில் வாழ்ந்த ஒரு சிற்றரசன். கங்க மரபினனான இவன் மூன்றாம் குலோத்துங்கன் (கி.பி. 1178-1216) காலத்தில் சோழநாட்டின் ஒரு பகுதியில் சோழப் பேரரசுக்கு அடங்கிய நிலையில ஆட்சி செலுத்தி வந்தான். கங்க நாடு பறறி அமைந்த தம் மரபுப் பெயரைத் தமக்குரிய பெயராகக் கொணடிருந்தாலும் தமிழ்மொழிமீது தணியா வேட்கை கொண்டவன் இவன், சிறந்த வீரனாகவும் விளங்கினான். கங்க மன்னர்கள பெருவீரர்கள் என்றும், ஆற்றல் படைத்தவர்கள் என்றும் அகநானூறு (அகம்-44) கூறுகிறது. பழம்பெருமை வாய்ந்த குலத்தவனான இவனைப் பற்றிய செய்திகள் மெய்க்கீர்த்திகளில் வந்துள்ளன. அமராபரணன் என்றும், கங்க குலோற்பவன் என்றும் இவன் குறிப்பிடப்பெறுகின்றான். திருவேகம்பமுடையான் என்னும் சிறப்புப் பெயர் இவனுக்கு உண்டு என்பதைக் கல்வெட்டால் அறியலாம். காஞ்சிபுரக் கல்வெட்டு ஒன்றில் இவன் தந்தை சோழேந்திர சிம்மன் எனக் குறிக்கப்பெறுகின்றான்.

நன்னூல் என்னும் தமிழ இலக்கணம் எழக்காரணமாக இருந்தவன் இச்சீயகங்கனே. இவனது வேண்டுகோளினபடியே பவணந்தி முனிவர் நன்னூலை ஆக்கி அளித்தார். இதனை நன்னூல் சிறப்புப் பாயிரத்தால் அறியலாம். அருங்கலை வாணனான இவன் வீரக் குடியான கங்கர்குடி வழியினன், கங்கர்குடி வழியினர் சமண சமயத்தைத் தழுவியோர் ஆவர். சீயகங்கனும் சமணனே. நன்னூல் இயற்றிய பவணந்தியாரும் சமணரே. கங்கர்குடி குறித்து அகநானூறும் சிலப்பதிகாரமும் செய்திகள தந்துள்ளன.

சீயகங்கனின் மனைவி பெயர் அரியபிள்ளையாகும். இவ்விருவரும் குலோத்துங்கச் சோழன் காலத்தில் வாழ்ந்த செய்தி தென் இந்தியக் கல்வெட்டொன்றில் பொறிக்கப்பட்டுள்ளது.

தமிழ்நாட்டுப் பேரரசர்களின்கீழ் வாழ்ந்த குடியினர் என்றாலும் தமிழ் மொழியின்மீது ஆர்வம் கொண்டிருந்தனர். கங்கர் குலத் தோன்றலின் தூண்டுதலால் நன்னூல என்னும் தமிழ் இலக்கணம் தமிழ் மொழிக்கு அரிய கருவூலமாக அமைநதது.

பி.தெ.

***சீயமங்கலம்***, வட ஆர்க்காடு மாவட்டத்தில் வந்தவாசி வட்டத்தில் உள்ளதோர் ஊர். இவ்வூர் கட்டடக் கலைச் சிறப்புப் பெற்றதாகும். சீயமங்கலத்தின் உண்மையான பெயர் சிம்மமங்கலம் ஆகும். இது மருவி இப்போதைய பெயர் நிலைத்துவிட்டது. இங்குள்ள குடைவரைக் கோயில் முதலாம் மகேந்திர வர்ம பல்லவன் குடைவித்த கோயிலாகும். இக்குடைவரையில் உள்ள கல்வெட்டில் இக்குடைவரையை இலலிதாங்குரன் என்னும் அரசன் குடைவித்தான் என்று கூறப்பட்டுள்ளது.



சீயமங்கலம் குடைவரைக் கோயில்

இக்குடைவரைக் கோயில் அவனிபசன பல்லவேசுவரம் என்னும் கல்வெட்டில் குறிப்பிடப்பட்டுளளது. இக்குடைவரையின் முகப்பு மண்டபத்தில் முன் வரிசையில் இரண்டு தூண்களும், பின் வரிசையில் இரண்டு தூண்களும் காணப்படுகின்றன. மண்டபத்தின் பின்னுள்ள கருவறையில் இலிங்கம் உள்ளது. இதன் நுழைவாயிலின் இருபக்கமும் துவாரபாலகர்களின் சிற்பங்கள் காணப்படுகின்றன. இங்குள்ள சிவனின் புடைப்புச் சிற்பம் மிக அழகாகச் செதுக்கப்பட்டுள்ளது. சிவன் நடனமாடும் நிலையில் ஒருகையில் நெருப்பும், மற்றொரு கையில் கோடரியும் வைத்

துள்ளார். அவரது தலைமுடி அவரைச் சுற்றிப்பரந்து காணப்படுகிறது. அவரது காலடியில் முயலகன் காணப்படவில்லை. அதற்கு மாறாகப் பாம்பு ஒன்று படமெடுத்த நிலையில் இசையைக் கேட்பதுபோல் செதுக்கப்பட்டுள்ளது. சு. இரா.

**சீயாட்டல்** அமெரிக்காவின் சிறப்புப் பெற்ற நகரங்களுள் ஒன்று. இது வாசிங்டன் மாநிலத்தில் ஏழு குன்றுகளின் மீது அழகாகக் கட்டப்பட்டுள்ளது. இதைச் சுற்றியுள்ள மாவட்டத்திற்குக் கிங்கு மாவட்டம் (King County) என்பது பெயா. அம் மாநிலத்திலேயே மிகப் பெரிய சீயாட்டல் (Seatle) சிறந்த வாணிகத் தலமாகவும், துறைமுகமாகவும்,



சீயாட்டல்

ஒரு கைத்தொழில் நகரமாகவும் விளங்குகிறது. இங்குள்ள பல்கலைக் கழகம் மிகச் சிறப்பு வாய்ந்தது. ஆடைகள் உற்பத்தி, சிமிண்டு தயாரித்தல், இயந்திரப் பொருள்கள் உற்பத்தி, கப்பல் கட்டுதல், விமான வேலை முதலிய பல தொழில்கள் இங்கு நடைபெறு கின்றன. அலாசுகாவில் கி. பி. 1897-இல் தங்கச் சுரங்கம் கண்டுபிடிக்கப்பட்ட பிறகு சீயாட்டலின் முக்கியத்துவமும் மக்கள்தொகையும் பெருகின. இதன் மக்கள் தொகை 493,846 (1980). தெ. பா.

**சீர்:** இது செய்யுள் உறுப்புகளுள் ஒன்றன் பெய ராகும். முப்பத்து நான்காகக் கூறப்படும் செய்யுள் உறுப்புகளுள் சீர் ஒன்று என்பதனைத் தொல்காப்பி யம், 'யாத்த சீரே அடியாப் பெனாஅ' என்னும் செய்யுளியல் நூற்பாப் பகுதியில் (தொல்.சொல். செய்.1) குறிப்பிட்டுள்ளது. செம்மை, ஒழுங்கு, அழகு முதலிய பொருள்களின் அடிப்படையில் சீர் என்னும் பெயர் அமைந்துள்ளது. சீராவது, அசை என்னும் உறுப்பினால் ஆக்கப் பெற்றுத் தளை என்னும் உறுப்பிற்குக் காரணமாக அமைவது என்று பிற்கால இலக்கண ஆசிரியர்கள் விளக்கியுள்ளார்கள்.

அசைகள் தனித்து நின்றோ, ஒன்றும் பலவும் இணைந்து நின்றோ சீர் என்னும் உறுப்பு அமையும். அசைகளை நேர், நிரை, நேர்பு, நிரைபு என்று தொல்காப்பியம் கொண்டமையால், அவற்றின் வழி அமையும் சீர்களின் எண்ணிக்கையில் வேறுபாடுகள் காணப்படுகின்றன. நன்னூல் தோன்றிய பின்னர், இடைக்காலத்தில் தொல்காப்பிய எழுத்ததிகாரம், சொல்லதிகாரம் ஆகியவற்றின் பயிற்சி ஓரளவு குறைந்தது. அவ்வாறே யாப்பருங்கலம், யாப்பருங் கலக் காரிகை ஆகிய யாப்பியல் நூல்களும் அவற்றின் உரைகளும் தோன்றிய பின்னர்த் தொல்காப்பியச் செய்யுளியற் பகுதியின் பயிற்சியும் குறைந்தது. அதனால், அசை, சீர் போன்ற உறுப்புகளைச் சுருக்க மும் எளிமையும் கருதி, யாப்பருங்கலம் அல்லது யாப் பருங்கலக் காரிகை நூல்களையே பெரும்பாலும் பின்பற்றிக் கொள்வாராயினர்.

யாப்பருங்கலக் காரிகை சீரிலுள்ள அசைகளின் எண்ணிக்கை கொண்டு சீர்களை வகைப்படுத்துகிறது. ஓரசைச்சீர் 2, ஈரசைச்சீர் 4, மூவசைச்சீர் 8, நால சைச்சீர் 16 ஆக, 30 சீர்கள் கொள்ளப்படுகின்றன. தேமா, புளிமா என அமைவன மாச்சீர் என்றும், கருவிளம், கூவிளம் என அமைவன விளச்சீர் என்றும், இவ்விரு வகைச் சீரும் அகவற்சீர் அல்லது ஆசிரிய உரிச்சீர் என்றும் கூறப்படும். நேர் என முடியும் மூவசைச்சீராகிய காய்ச்சீர் நான்கும் வெண்பா உரிச்சீர் எனவும், நிரை என முடியும் மூவசைச்சீரா கிய கனிச்சீர் நான்கும் வஞ்சி உரிச்சீர் எனவும் பெயர்பெறும். தளைகொள்ளுங்கால் நேர் என முடியும் நாலசைச்சீர் எட்டும் காய்ச்சீரோடு ஒத்தும், நிறை என முடியும் நாலசைச்சீர் எட்டும் கனிச் சீரோடு ஒத்தும் கொள்ளப்படும்.

வாய்பாடு கூறுங்கால் ஓரசைச்சீரில் நேர் நாள் என்றும், நிரை மலர் என்றும் கூறப்படும். ஈரசைச் சீர்களில் மாச்சீர் இரண்டும் தேமா புளிமா என்றும், விளச்சீர் இரண்டும் கூவிளம் கருவிளம் என்றும் பெயர் பெறும். மூவசைச் சீர்களில் நேர் என முடியும் நான்கு சீர்களும், தேமாங்காய், புளிமாங்காய், கூவிளங்காய், கருவிளங்காய் என்றும், நிரை என முடியும் நான்கு சீர்களும் தேமாங்கனி புளிமாங்கனி, கூவிளங்கனி, கருவிளங்கனி என் றும் கூறப்படும். ஈரசைச் சீர்களோடு தண்பூ, தண்ணிழல், நறும்பூ, நறுநிழல் ஆகியவற்றைத் தனித்தனிக் கூட்டி உறழ்ந்தால், தேமாந்தண்பூ புளி மாந்தண்பூ, தேமா நறுநிழல், புளிமா நறுநிழல் முத லான நாலசைச் சீர்கள் பதினாறும் கிடைக்கும்.

ஓரசைச்சீர் பெரும்பாலும் வெண்பாவின் ஈற்றில் வரும். பொதுச்சீர் எனப்படும். நாலசைச்சீர் வெண்

பாவில் இடம்பெறாது. மேலும், அச்சீர் ஆசிரியம், கலி ஆகிய செய்யுட்களில் குற்றுகரம் வந்தாலல்லது வாராது; வஞ்சிப்பாவில் குற்றுகரம் வாராமலும் இடம்பெறும். அங்கு ஓரடியில் இரண்டு நாசைலசசீர் வருதலும் உணடு.

தேமா புளிமா என்னும் நேரீற்று இயற்சீர் இரணடும், விளங்கனி என்னும் நிரை நடுவாகிய வஞ்சி உரிச்சீர் இரண்டும் கலிப்பாவில் வாரா. நிரை நடுவாகிய வஞ்சி உரிசசீர் இரண்டும ஆசிரியப்பாவில் இடம்பெற மாட்டா. அ.மா.ப.

*சீர்காழி* தேவாரப்பாடல் பெற்ற தலங்களுள ஒன்று. இது தஞ்சை மாவட்டத்தில் மயிலாடுதுறை வட்டத்தில் உள்ளது. சென்னையிலிருந்து 260 கி.மீ. தூரத்தில் சென்னை–இராமேசுவரம் தொடர் வண்டித் தடத்தில் அமைந்துள்ளது. 'பிரமபுரம் வேணுபுரம்' எனத் தொடங்கும் வெண்பா இவ்வூருக்குரிய பன்னிரு பெயர்களையும் தொகுத்துக் கூறுகிறது. அவை, பிரமபுரம், வேணுபுரம், புகலி, வெங்குரு, தோணிபுரம், பூந்தராய், சிரபுரம், புறவம், சணபை நகர், காழி, கொச்சைவயம், திருக்கழுமலம் என்பனவாகும். இப்பெயர்களோடு சங்க நிதிபுரம், பதுமநிதிபுரம், சிவாசாாியபுரம், உமாபதிபுரம், கிரி புரம், சிவன் முத்திபுரம், எழுகூற்றிருக்கைப் பதி மாலைமாற்றுப்பதி, குய்யகாசி முதலிய பல பெயா களும் இத்தலத்திறகு வழங்குகினறன. கழுமலை ஆறு இவ்வூரைச் சுற்றிச் செலகிறது. சீர்காழியில நானகு தேர்வீதிகளைச் சுற்றிப் பிடாரியின் பெயரிலமைநத நான்கு நெடுந் தெருககள் உள்ளன.

கோயிலமைப்பு நான்குபுறமும் வாயில்களும் இராசகோபுரங்களும் உடையது. இக்கோயிலில மூனறு பகுதிகள் உள்ளன. பெரிய பகுதியில் தோணியபபர், சட்டநாதர் சந்நிதிகளும், வடக்குப் பகுதியில திரு நிலைநாயகி கோயிலும், அதன்முன பிரமதீர்த்தமும் அமைந்துள்ளன. இக்குளத்தின் தென்பகுதியில் ஓர் அழகிய வளைவு உளளது. இவ்விடத்திலதான் சம்பந்தருக்கு இறைவி ஞானப்பால அருளினார் என்பது கூறப்படுகிறது. இரண்டு கோயில்களுக்கும் இடையில் மேலைக் கோடியில் திருஞானசம்பந்தருககுத் தனிக்கோயில் உணடு.

இத்தலத்தில் திருத்தோணியப்பரும் சட்டநாத ரும் உறையும் கட்டு மலையை மாடக்கோயில் என்பர். தரையிலிருந்து உயரத்தில் இருப்பதோடு, மேன்மாடத்தில் தெய்வ சந்நிதிகளையும் கொண்டுள்ளது. தோணியப்பர் உமா மகேசுவரராக, பெரியநாயகி சமேத பெரிய நாயகராகச் சுதை வடிவில் மலைமீது எழுந்தருளியுள்ளார். இங்குள்ளதுபோன்ற பெரிய சுதை வடிவச் சிவமூர்த்தியினை வேறெங்கும் காணல் அரிது. மேலேயுள்ள அடுத்த தலத்திற்குச் சென்றால் சட்டநாத சுவாமியை வழிபடலாம். இறைவனுக்கு வழிபாட்டு வேளையில் புனுகுச் சட்டம் சாத்தப்படுவதால் 'சட்டநாதர்' என அழைக்கப்படுகிறார்.

இத்தலம் மூர்த்தி, தலம், தீர்த்தம் என்னும் மூவகைச் சிறப்பினையும் பெற்று விளங்குகிறது. இங்கு இருபத்திரண்டு தீர்த்தங்கள உளளன. ஊழிக்காலத்தில் உலகமெல்லாம் நீரினுள் மூழ்கிய பினனும் இத்தலம் அழியாதிருந்தது. அப்போது சிவபெருமான் உமையம்மையுடன் தோணியின் மீதமர்ந்து உலகை மீண்டும் படைத்தார் என்கிறது புராணம். தரும வடிவமான விடையே சிவபெருமான் வாகனம். விடையே தோணியாகிறது. அறத்தோணியின் மீத மர்ந்து அம்மையப்பன் அருளாட்சி செய்கிறார். உலகைச் சுற்றிக் கிடக்கும் பெருங்கடல் ஊழிககாலத்தில பொங்கி எழுந்து அண்டத்தையே அழித்தபோது உமாமகேசுவரர் பிரணவத்தையே தோணியாகக் கொண்டு கடலில் மிதந்து வந்தார். வந்தவர், இத்தலத்தில் தங்கியதால் 'தோணியப்பர்' என அழைக்கப்பட்டார் எனற கதையும் வழங்குகிறது.

இத்திருக்கோயில் தருமபுர ஆதீன நிருவாகத்திலுள்ள 27 தலங்களுள் ஒன்று. இத்தலத்தில் குரு, இலிங்கம், சங்கமம் ஆகிய மூவடிவிலும் இறைவர் எழுந்தருளியுள்ளார். பிரமபுரீசுவரர் இலிங்க வடிவம், தோணியப்பர் குரு வடிவம், சட்டையப்பர் சங்கம வடிவம். மேலும் இம்மூவரும் மூவேறு பொருளில் அமைந்த மூர்த்தஙகள். பிரமபுரீசுவரர் சிலாமூர்த்தம், தோணியப்பர் சுதை மூர்த்தம், சட்டையப்பர் மர மூர்த்தம். திருஞான சம்பந்தரின் திருமணக்கோல உருவம் இக்கோயிலில் உள்ளமை தனிச்சிறப்பாகும்

திருவிழாக்கள் பல நடந்தாலும், சித்திரையில் நடக்கும் திருமுலைப்பால திருநாள தனிச் சிறப்புடையது. இது சம்பந்தர் ஞானப்பால் உண்ட விழாவாகும். ஞான சம்பந்தரைத் தொடர்ந்து இசையை வழிவழியாக வளர்ப்பவர்கள் பலர் இத்தலத்தில் தோனறியுள்ளனர்.

இத்தலத்தின் சிறப்புகளைப் பெரியபுராணம் விரித்துரைக்கிறது. திருஞான சம்பந்தர், மச்சுச் செட்டியார், சீர்காழிச் சிற்றம்பலநாடிகள், காழி கண்ணுடைய வள்ளல், சீர்காழி மறைஞான சம்பந்தர், அருள் நந்தியார், சண்பை ஞானப்பிரகாசர், முத்துத் தாண்டவர், மாசிலாமணி தேசிகர், சிதம்பர நாத முனிவர், அருணாசலக் கவிராயர் முதலியோர் இத்தலத்தில் பிறந்து, வளர்ந்து, வாழ்ந்து, இத்தலத்திற்குப் பெருமை சேர்த்தார்கள்.

இத்தலத்தைப் பாடிய சான்றோர்கள் திருநாவுக்கரசர், சுந்தரர், மாணிக்கவாசகர், நம்பியாண்டார் நம்பி, பட்டினத்தடிகள், அம்பலவாணக் கவிராயர், சேக்கிழார், அருணகிரிநாதர், மீனாட்சி சுந்தரம் பிள்ளை ஆகியோராவர்.

இந்நகர் 'இராசராச வளநாட்டுத் திருக்கழுமல நாட்டுப் பிரமதேசம் திருக்கழுமலம்' எனக்கல்வெட்டில் குறிக்கப்பெற்றுள்ளது. அக்காலப் பழக்கவழக்கங்கள், நில அளவை முறைகள், தலம், மூர்த்தி அமைப்புகள், கோயிலுக்கு மன்னர்கள் அளித்த நிவந்தங்கள் முதலியவற்றை இங்குள்ள கல்வெட்டுகள் குறிப்பிடுகின்றன.
ச.மெ.

***சீரங்கப்பட்டணம்*** கருநாடக மாநிலத்தில் மாண்டியா மாவட்டத்தில் உள்ளதோர் ஊர். மைசூரிலிருந்து வடக்கில் காவிரி ஆற்றின் நடுவில் தீவு போன்று அமைந்துள்ள இவ்வூர் வரலாற்றுச் சிறப்புப் பெற்ற ஊராகும். இங்கு அரங்கநாதரின் கோயிலொன்று இருப்பதால் சீரங்கப்பட்டணம் எனக் கூறப்படுகிறது. இக்கோயில் கி.பி.12-ஆம் நூற்றாண்டுக் கோயிலாகும். மைசூர் அரசர்களின் தலைநகரமாக விளங்கிய இவ்வூர் மதில்களால் சூழப்பட்டது. ஐதர் அலி, திப்பு சுல்தான் போன்ற அரசர்களின் தலைநகரமாகவும் இது விளங்கியது. ஆங்கிலேயர்கள் இந்நகரை அழித்ததன் விளைவாக அவர்கள் ஆங்கிலேயர்களுடன் ஓர் உடன்படிக்கை செய்ய நேர்ந்தது. நான்காம் மைசூர்ப் போரில் இவ்வூர் கி.பி.1799 இல் முழுவதுமாக ஆங்கிலேயரின் வசம் வந்தது. திப்பு சுல்தான் இப்போரில் கொல்லப்பட்டார்.

இவ்வூருக்கு இன்று பெருமளவில் சுற்றுலாப் பயணிகள் வருகை புரிகின்றனர். இங்குள்ள கி.பி.17-ஆம் நூற்றாண்டைச் சார்ந்த இந்து கோயில்களையும திப்பு சுல்தானால் கட்டப்பட்ட மசூதியையும் அவர் கோடைக்காலத்தில் தங்கியிருந்த அரண்மனையையும் காணப் பயணிகள் வருகின்றனர். இவ்வரண்மனை தாரியா தௌலத்து (The Daria Daulat)எனக் கூறப்படுகிறது. இதனுள் பல அழகிய ஓவியங்கள உள்ளன. போர் ஓவியங்களும் ஊர்வல ஓவியங்களும் இவற்றுள குறிப்பிடத்தக்கவையாகும். அரண்மனைககு அருகில செந்தோட்டம் (RedGarden)ஒன்று உள்ளது. இது இலால் பாகு (LalBagh)எனக் கூறப்படுகிறது. இங்கு இரண்டு சுல்தான்களின் கல்லறைகள் உள்ளன. சீரங்கப்பட்டணத்தீவிற்கு அருகில் பல்வேறு சிறு தீவுகள் உள்ளன. அவற்றுள் குறிப்பிடத்தக்கது அரங்கநாதர் திட்டு. இது பறவைகளின் சரணாலயமாகும். இங்குப் பல்வேறு பறவைகள் உள்ளன. சீரங்கப்பட்டணத்தின் மக்கள்தொகை 18137(1981).
சு.இரா.

***சீரங்கம்***: காண்க: திருவரங்கம்.

***சீரசு*** உரோமானிய சமயத்தில் வணங்கபபடும் முதன்மையான தாய்த் தெய்வங்களுள் ஒன்று. உணவுப் பயிர்கள் செழித்து வளர இத்தெய்வத்தை உரோமானியாகள் சிறப்பாக வழிபட்டனா. சீரசு (Ceres) தெய்வத்தைத் தனியாகவோ, திலசு (Telus) என்னும் புவித் தாய்த் தெய்வத்துடன் இணைத்தோ வழிபடும் மரபினை இவர்கள் கொண்டிருந்தனர்.



சீரசு தெய்வம்

தொடக்க காலத்தில் உரோமானியர் இத்தாய்த் தெய்வத்தின் மகிமையைக் குறைக்கும் பொருட்டு திமத்தர் (Demeter) எனனும் கடவுளைப் பல பகுதிகளில் வழிபட்டனர். ஆனால் சிபிலைன் (Sibyline) என்னும் சமய நூலின் கருத்திற்கேற்பச் சீரசு, இலிபர் (Liber) போன்ற வழிபாட்டு மரபுகளை மீண்டும் மேற்கொள்ளத் தொடங்கினர். இத்தெய்வ மரபுகள் கி மு. 493-இல் அவண்டைன் குன்றில் (Aventine Hill) கட்டிய கோயிலில் விளக்கப்பட்டுள்ளன. இக்கோயிலின் சிறந்த கலைப்பொருள்கள் கி.மு. 31-இல் ஏற்பட்ட தீ விபத்தால் சேதமுற்றன. அதன்பின் அகசுடசு (Agustus) என்பவரால் அவை மீண்டும் புதுப்பிக்கப்பட்டன.
சீ.ப.

***சீராநெவாடா*** அமெரிக்காவில் உள்ள மலைத் தொடர். கலிபோர்னியா மாநிலத்தின் கிழக்குப் பகுதியில் உளள சீராநெவாடா (Sierra Nevada) மலைத்தொடரின் நீளம் 645 கி.மீ. அகலம் 65 முதல் 130 கி.மீ. இதன் குன்றுகளில் மிகப்பெரிய குன்றான

விட்னி (Whitney)யின் உயரம் 4,420.7 மீ. இம்மலைத் தொடரின் இடையே உள்ள ஒரு கணவாய் 2162 மீ. வரை மேல்மட்ட முடையது. இதன் வழியாகவே, கி.பி. 1800-ஆம் ஆண்டளவில் ஆயிரக்கணக்கான மக்கள் புலம் பெயர்ந்து உட்புகுந்தனர். சீராநெவா டாவின் இயற்கைக் காட்சி மிகவும் காணத்தக்க பேரழகுடையது.

இதே பெயரை உடைய ஒரு மலைத்தொடர் தெற்கு இசுபெயின் (Spain) நாட்டில் உள்ளது.

தெ.பா.

*சீலம் ஆறு* பஞ்சாபு மாநிலத்தில் பாய்கின்ற ஐந்து ஆறுகளுள் ஒன்று. இவ் ஆறு (Jhelum) பாகி சுத்தானிலும் பாய்கிறது. இது வெர்னாகு (Vernag) என்னும் இடத்தில் ஊற்றாகத் தோன்றுகிறது. வெர் னாகு சம்மு காசுமீரப் பகுதியில் அமைந்துள்ளது. இந்த ஆறு பீர்பஞ்சால் மலைத்தொடரின் சரிவுகளில் ஓடி, காசுமீரில் நுழைந்து, வடமேற்காக வளைந்து செல்கிறது. பின்னர் அனந்துனாக்கு, சிரீநகர் வழி யாக ஓடி ஊலர் ஏரியில் (Wular Lake) கலக்கிறது. ஊலர் ஏரியிலிருந்து பீர்பஞ்சால் மலைத்தொடரைச் சோபூர் (Sopur) என்னுமிடத்தில் கடந்து இரண் டாகப் பிரிந்து செல்கிறது. ஆசாது காசுமீரின் தலை நகரமான முசபராபாத்தில் கிசன் கங்கை (Kishan Ganga) ஆற்றுடன் கலந்து தெற்கில் வளைந்து சென்று ஆசாத்துக் காசுமீரின் கிழக்கு எல்லையாக விளங்குகிறது. பின்னர்ப் பாகிசுத்தானின் தென்பகுதி யில் பாய்ந்து செல்கிறது. சிவாலிக்குக் குன்றுகளில் ஊடுருவிப் பாயும் சீலம் ஆறு மங்களா (Mangala) என்ற இடத்தில் வண்டல் மண் சமவெளியை உரு வாக்கியுள்ளது. இச்சமவெளியின் பழங்கால மண்ண டுக்குகளில் மனித நாகரிகத் தடயங்களும் விலங்கினப் புதைபடிவங்களும் கண்டுபிடிக்கப்பட்டன. பாகிசுத் தானில் உள்ள சீலம் நகரில் இந்நதி தென்மேற்காகத் திரும்பிக் குசாபு (Khushab) என்னும் இடத்திற்குச் செல்கிறது. அங்கிருந்து மீண்டும் தெற்கே வளைந்து சீனாபு (Chenab) ஆற்றுடன் திரிம்மு (Trimmu) என்ற இடத்தில் இணைகிறது. சீலம் ஆற்றின் நீளம் ஏறக் குறைய 750 கி.மீ. ஆகும். சீலம் மாவட்டம் ஒன்றும் பாகிசுத்தானில் உள்ளது.

சீலம் ஆறு வேளாண்மைக்குப் பெரிதும் பயன்படு கிறது. நீர்மின்சக்தியும் எடுக்கப்படுகிறது. இந்த ஆற் றின் குறுக்கில் மங்களா அணை கட்டப்பட்டுள்ளது.

சு.இரா.

*சீலாந்து:* நெதர்லாந்து நாட்டின் தெற்குப் பகுதியில் அமைந்துள்ள மாநிலத்தின் பெயர் சீலாந்து. இது கடல் வாணிபத்துக்குக் புகழ் பெற்ற மாநிலம். இது 2,700 கி.மீ. பரப்பளவு உள்ளது. புவியியல் அமைப்பில் சீலாந்து முக்கியமானது. பெல்சியம் நாட்டின் எல்லைப்பகுதியில் இம்மாநிலம் அமைந் துள்ளது. கடல் உள்ளே புகுந்ததால், சீலாந்தின் பல பகுதிகள் காலப்போக்கில் கடலில் மூழ்கிவிட்டன. எனினும், கடல் ஆதிக்கத்திலிருந்து சீலாந்து (Zeeland) தப்பித்துவருவதால், 'நான் போராடுகிறேன், நான் வெற்றிபெறுகிறேன்' என்ற பழமொழியும் அந் நாட்டில் வழங்குகிறது.

வெள்ளம் பெருக்கெடுத்து இம்மாநிலத்தை அழிக் கும் நிலையும் அடிக்கடி ஏற்படுவதுண்டு. வெள்ளப் பெருக்கால் (1953) 1,800 மக்களுக்கு மேல் உயிரிழந்த னர். பொருட்சேதம் அதிகம் ஏற்பட்டது. கடல் உள்ளே புகுந்துவிடாமல் தடுக்கத் தடுப்புச் சுவர் தச்சு (Dutch) அரசாங்கத்தினால் எழுப்பப்பட்டுள்ளது. இதனால், சீலாந்து மாநிலத்தின் சமூக, பொருளா தாரத் துறைகளில் கணிசமான முன்னேற்றம் ஏற் பட்டுள்ளது. கட்டப்பட்டுள்ள புதிய பாலங்கள் மூலம் சீலாந்து மாநிலமானது, மத்திய ஆலந்து, உரோட்டர் டாம் (Rotterdam)பகுதியோடும் மற்ற தீவுகளோடும் இணைக்கப்பட்டுள்ளது.

சீலாந்து தச்சு நாட்டின் ஐந்தாவது சிறிய மாநிலம். மக்கள் தொகையும் குறைவு. தொழிற்சாலை கள் அதிகம் இல்லை. பெரிய நகரங்களும் கிடையா. பிளசிங்கு (Flushing) என்ற நகரில் 40,440 மக்கள் வாழ்கின்றனர். கப்பல் கட்டும் தொழிற் சாலைகள் உள்ளன. மிடில்பர்கு (Middle Burg) என்ற நகரம்தான் சீலந்தின் தலைநகர் ஆகும். கோயசு (Geos) என்ற சிறுநகரம் கல்வித் துறையில் முன் னேற்றம் அடைநதுள்ளது. இங்கு வாணிபம் சிறந்து விளங்குகிறது. தெர்னியூசென் (Terneuzen) என்ற நகரில் பல தொழிற்சாலைகள் உள்ளன.

கெண்டு - தெர்னெசென் (Ghent Ternesen) கால்வாய் இம்மாநிலத்தின் பொருளாதாரத்திற்கு ஏற்ற வகையில் போக்குவரத்துக்குப் பயனபடுகிறது. சீலாந்து மாநிலம் வேளாண்மையில் மிகவும் முன் னேறியுள்ளது. புதியமுறை வேளாண் கருவி களை உபயோகித்து, அதிக உற்பத்தியினைப் பெற்று முன்னேறும் மாநிலம் இது. கோதுமை, பார்லி, ஓட்சு, உருளைக்கிழங்கு, வெங்காயம் மற்றும் பல்வேறு தானியங்கள் அதிக அளவில் உற்பத்தி செய் யப்படுகின்றன. மற்ற மாநிலங்களுக்கும் அனுப்பப் படுகின்றன.

சீலாந்து மாநிலத்தில் மிகச் சிறந்த, வலிமையான குதிரைகளை வளர்க்கின்றனர். இக் குதிரைகள் மிகவும் புகழ்வாய்ந்தவை.

பழத் தோட்டங்களுக்குப் பெயர்போனது சீலாந்து மாநிலம். இரண்டாம் உலகப் போரினால் இந்த மாநிலம் பலத்த சேதமுற்றது. மக்களின் கடும் உழைப்பால், நிருமாணப் பணிகளின் மூலம் பொருளாதாரத் துறையில் நல்ல முன்னேற்றத்தினை இம் மாநிலம் அடைந்துள்ளது.

இங்கு 1953-இல் ஏற்பட்ட பெருவெள்ளத்தினால அடைந்த சேதத்தினைக் கணக்கிட்டு வெள்ளத்தினைத் தடுத்திடப் பல பெரிய அணைகள் கட்டப்பட்டுள்ளன. பண்ணைகள் செழிப்பாக உள்ளன.

மீன்பிடிதொழிலில் புதிய முறைகள் புகுத்தப பட்டுள்ளமையால, மிகவும் இலாபகரமான தொழிலாக உள்ளது. புருன்னிசே (Brunnese), பிலிப்பைன (Philippine) என்ற இரண்டு கிராமங்கள மீன பிடித்தல் தொழிலில் மிகவும் முன்னேறியுள்ளன.

இந்த மாநிலத்தின் பக்கத்தில் அழகிய கடற்கரைப் பகுதிகள் இயற்கையாகவே அமைந்திருப்பதால் வெளிநாட்டவர் ஓய்வு எடுக்க இப்பகுதிக்கு ஏராளமாக வருகின்றனர்.

சீலாந்து மாநிலத்தில், முக்கிய இடங்கள் இருப்புப் பாதைகள் மூலம் நன்கு இணைக்கப்பட்டுள்ளதால பொருளாதார முன்னேற்றம் சிறப்பாக உள்ளது.

தா.எ.

**சீவகசிந்தாமணி** தமிழ்ப் பெருங் காப்பியங்களுள் ஒன்றாகும். இதனை இயற்றியவர் திருத்தக்க தேவர். இவர் ஒரு சமணத் துறவி. இவர் சோழ நாட்டில் கி.பி. 10-ஆம் நூற்றாண்டில் வாழ்ந்தவராவர்.

இக் காப்பியம் நாமகள் இலம்பகம் முதல் முத்தி இலம்பகம் ஈறாகப் பதின்மூன்று இலம்பகங்களையும் 3145 விருத்தப்பாக்களையும் கொண்டுள்ளது.

சீவகசிந்தாமணி ஏமாங்கத நாட்டு இளவரசனாகிய சீவகனின் கதையைக் கூறுகிறது. சச்சந்தன் என்பவன் ஏமாங்கத நாட்டு மன்னனாவன். அவன தன் மாமன் மகள் விசயையைக் காதலித்துத் திருமணம் செய்து கொள்கிறான். அவள்பால் தான் கொண்ட ஆராக் காதலினால் அவளை ஒருகணமும் அவனால் பிரிந்திருக்க இயலவில்லை. எனவே தன் நாட்டின் ஆட்சிப் பொறுப்பைத் தன் முதலமைச்சனாகிய கட்டியங்காரனிடம் ஒப்படைத்து முழுநேரமும் சச்சந்தன் தன் மனைவியோடு இன்பப் பொழுது போக்குகிறான். கட்டியங்காரன் கொடியவன். அவன் திடீரென அரசனைத் தாக்கி அவனைக் கொல்கிறான். அப்போது கருவுற்றிருந்த அவன் மனைவி விசயை மயிற்பொறி என்னும் வானவூர்தியின் துணையால் அரணமனையிலிருந்து தப்பி வெளியேறுகிறாள. விண் வழியாகச் சென்ற மயிற்பொறி ஒரு சுடுகாட்டில இறங்குகிறது. அங்கு விசயை ஒரு மகனை ஈன்றெடுக்கிறாள. இறந்த தன மகன் உடலைப் புதைப்பதற்காகக் கந்துக்கடன என்ற வணிகன் அச் சுடுகாட்டிற்கு வருகிறான். அவனைக் கண்ணுற்றதும் விசயை குழந்தையைத் தனியே தரையில் கிடத்தி ஒரு மரத்தின் பின் மறைந்து கொள்கிறாள். விசயையின குழந்தையைக் கந்துக் கடன் காண்கிறான். அவன் மிகவும் மகிழ்ச்சியடைந்து குழந்தையைத் தன் வீட்டிற்கு எடுத்துச் சென்று அதற்குச் சீவகன் என்று பெயரிட்டு வளர்த்து வருகிறான்.

சீவகன் ஓர் அழகு மிக்க இளைஞனாக வளர்கிறான். அவன ஆசிரியர் அச்சணந்தி என்பவரிடம் பல கலைகளையும பயின்று தேர்ச்சி பெறுகிறான; அவரிடமிருந்து தன் உணமை வரலாற்றையும் அறிகிறான்; தன் தந்தையைக் கொன்ற கட்டியங்காரனை எதிர்த்துப் போரிட விரும்புகிறான். ஓராணடு வரை கட்டியங்காரனை எதிர்க்கக்கூடாது என்ற வாக்குறுதியை அச்சணந்தி ஆசிரியர் சீவகனிடமிருந்து பெறுகிறார்.

காந்தருவதத்தை எனற வித்தியாதர மகளைச சீவகன் யாழ்ப் போட்டியில வென்று திருமணம் செய்து கொள்கிறான் குணமாலை என்ற அழகு மிகக நஙகையை அசனிவேகம் எனற பட்டத்து யானையிடமிருந்து சீவகன் காப்பாற்றுகிறான். தனனைக் காப்பாற்றிய சீவகன் மீது குணமாலை காதல கொள்கிறாள. அவளுடைய பெற்றோாகள அவளை அவனுக்குத் திருமணம செய்து கொடுககிறாாகள, தன பட்டத்து யானையைச் சீவகன் அடககிய செய்தியைக் கட்டியங்காரன் அறிந்து சீற்ற முறுகிறான்; சீவகனைச் சிறை செய்யும் படி கட்டியஙகாரன ஆணையிடுகிறான. கட்டியங்காரனின் வீரர்கள் சீவகனைச் சிறை செய்யும்போது சீவகனின் நண்பனான சுதஞ்சணன் என்ற வித்தியாதரன வீரர்களிடையே குழப்பம் விளைவித்து அவர்கள் அறியாமல சீவகனைத் தன நாட்டிற்குத் தூக்கிச் செலகிறான். பினபு சீவகன பல நாடுகளுக்கும் செலலுதற்குரிய வழிகளைக கூறி அவனுக்கு விடை கொடுத்து அனுப்புகிறான.

சீவகன் பல்லவ நாடு செல்கிறான். அங்கு மன்னன் மகள் பதுமை என்பவள் பாம்பால் கடியுண்டு உணர்விழந்திருப்பதை அறிந்து சீவகன விரைந்து சென்று, பதுமையின் உடலினின்றும் விடத்தை நீக்கி

உணர்வு பெறும்படி செய்கிறான். பதுமை அவனைக் கண்டதும் அவன்பால் காதல் கொளகிறாள. பிறகு இருவருக்கும் திருமணம் நிகழ்கிறது. அடுத்து, சீவகன் தக்க நாட்டின் தலைநகராகிய கேமமாபுரம் செல்கிறான். அங்குச செல்வமிக்க வணிகன் மகள் கேமசரி என்பவளைக் கண்டு திருமணம் புரிந்து கொள்கிறான். கேமமாபுரத்திலிருந்து அவன் மத்திமதேயம் சென்று கனகமாலை என்ற இளவரசியை மணம் செய்து கொளகிறான். பின்பு தண்ட காரண்யத்தில் முதன் முதலாகத் தன் தாய் விசயையைச் சந்திக்கிறான். தன் மாமன கோவிந்தன் துணை கொணடு கட்டியங்காரனை எதிர்த்துத் தன் நாட்டை மீட்கும் படி அவள் சீவகனுக்கு அறிவுறுத்துகிறாள். அவ்வாறே செய்வதாகச் சீவகன் உறுதி கூறி, ஏமாங்கத நாட்டின் தலைநகராகிய இராசமாபுரத்திற்குத் திரும்புகிறான். வழியில் பேரழகு வாய்ந்த பாவையாகிய விமலை என்பவளை எதிர்ப்பட்டு அவளைத் திருமணம் செய்து கொள்கிறான். ஆடவர்பால் மிகவும் வெறுப்புக் கொண்டிருக்கும் சுரமஞ்சரி என்பவளைச் சீவகன் கிழவன் வேடம் பூண்டு தனக்கு இணங்குமாறு செய்து, பின்பு தன் உண்மை வடிவத்தை வெளிப்படுத்தித் திருமணம் புரிகிறான்.

தன் மாமன் கோவிந்தனின் படை உதவி கொண்டு சீவகன கட்டியங்காரனை எதிர்த்துக் கொல்கிறான். பின்பு ஏமாங்கத நாட்டின் மன்னனாக முடி சூட்டிக் கொளகிறான். அவனுடைய மாமன் கோவிந்தன் தன் மகள் இலக்கணையை அவனுக்குத் திருமணம் செய்து கொடுக்கிறான்.

சீவகனின் அன்பும் அருளும் நிறைந்த ஆட்சியில் குடிமக்கள் அனைவரும் வாழ்க்கையில் வளமுற்று இன்ப வாழ்வு வாழ்கின்றனர். சீவகனும் தன் மனைவியர் எண்மரோடு முப்பது ஆண்டுகள் வாழ்க்கை இன்பம் திளைக்கிறான். பின்பு துறவுபூண்டு, கடுந்தவமியற்றி ஈறிலா இன்பப் பேற்றை எய்துகிறான்.

சீவகன் கதையின் பெரும்பகுதி அவனுடைய காதல் செயல்களைப் பற்றியும் திருமணங்களைப் பற்றியும் விளக்கமாகக் கூறுகிறது. இத்தகைய கதையைத் திருத்தக்க தேவர் தம் காப்பியத்திற்குரிய கதையாக ஏன் தேர்நதெடுத்திருக்கவேண்டும் என்பது சிந்திக்கற் பாலது. இவ்வுலக இன்பத்தை முழுமையாகத் துய்க்கும் ஆன்மா நாளடைவில் பணபட்டு முடிவில் பெருநிலையை எய்தும் என்பது திருத்தக்கதேவரின் நம்பிக்கையாகும் எனலாம். திருத்தக்க தேவரின் கொள்கை எப்பிகூரசு (Epicurus) என்ற அதீனிய தத்துவ அறிஞரின (Athenian philosophe) கொள்கையோடு ஒப்புநோக்கத் தக்கது. இவ்வுலகத்தின் இன்ப வாழ்க்கையே பெரு நன்மை பயக்க வல்லது என்பது எப்பிகூரசின் கொள்கையாகும். உண்மையும் தூய்மையும் வாய்ந்த இவ்வுலக இன்பமே மனித வாழ்க்கையின் முடிவாகவும் அவர் கொண்டார். ஆனால் சிந்தாமணி ஆசிரியர் ஆன்மா பெருநிலை எய்துதற்கு இவ்வுலக இன்பத்தினை ஒருவழியாகக் கொள்கிறார். இவ்வுண்மையை விளக்குதற்குச் சீவகன் கதை மிகவும் பொருத்தமுடையதாகும்.

இவ்வுலக இன்பத்தை ஆரத் துய்த்த சீவகன் ஒருநாள் தன் மனைவியர் எண்மரோடும் சோலையில் உலாவச் செல்கிறான். அங்குச் சோலைக் காவலன் மந்தியின் கையிலிருந்த பலாப்பழத்தைப் பிடுங்கிக் கொள்வதை அவன் கண்ணுறுகிறான். இச்சிறு நிகழ்ச்சி அவன் மெய்யுணர்வு பெறச் செய்கின்றது. வலி குன்றியவனை வலி மிக்கவன் வெல்ல முடியும் என்ற உண்மையினை அக்காட்சி அவனுக்கு உணர்த்துகிறது. மநதியினும் சோலை காவலன் உடல் வனமை மிக்கவன்; ஆகையினால் அதனிடமிருந்து பலாப் பழத்தை எளிதில் பிடுங்கிக் கொள்ள அவனால் முடிந்தது என்றும், தானும் கட்டியங்காரனை விட ஆற்றல் மிக்கவனாய் இருந்தமையால் அவனிடமிருந்து அரசியலைக் கைப்பற்றத் தன்னால் முடிந்த தென்றும், தன்னைவிட வலிமையுடையவன் தோன்றின் தன்னாட்டினை அவனும் எளிதில் கைப்பற்றிக் கொள்ள இயலும் என்றும் சீவகன் எண்ணுகிறான். இத்தகைய எண்ணங்கள் இவ்வுலக நிலையாமையை அவன் நன்குணருமாறு செய்கின்றன. உடனே அவன் இந்நிலவுலக வாழ்வை வெறுத்துத் துறவுபூண்டு, ஓராண்டுக் காலம் மலை உச்சியின்கண் கடுந்தவமியற்றி முத்தி எய்துகிறான்.

சீவக சிந்தாமணி முழுமையும் இலக்கியச் சுவையும் நயமும் எழிலும் மிளிர்கின்றன. அதன்கண இலக்கியக் கூறுகளில் தலைசிறந்ததாகிய உணர்சசிக் கூறு மிக்க ஆறறலோடும், பலவகைத் திறத்ததாயும் தரம் மிகுந்ததாயும் விளங்குகிறது. இவ்வுணர்சசியே காப்பியத்தின் இலக்கியத் தரம் சிறந்து விளங்கும் படியாகச் செய்துள்ளது.

கனகமாலையிடமிருந்து விடைபெறுவதற்காகச் சீவகன் அவளிடம் செலகிறான். அவனுடைய பிரிவைக் குறித்து அவள் பெரிதும் தனக்குள வருந்துகிறாள. பிரிவைத் தாங்கொணாது பெருமூசசெறிகிறாள. வருத்த மிகுதியால் அவளுடைய பெருமூச்சு மிகுநத வெப்பத்தோடு வெளிப்பட்டு அதனால் அவள் கையிலிருந்த சிவந்த செங்கழுநீர் மலர் கருகி விடுகிறது. இதனைக் கவிஞர் 'செங்கழுநீர் மலரினைக் கருங் குவளை மலராக ஆகும்படி செய்தாள்' என்று கூறுகிறார்.

'கையிற், புள்ளாவிச் செங்கழுநீர் குவளை செய் தாள் புனை பூணாள்' (சிந்தா. 1887) இதனின்றும் அவளுடைய பிரிவுத் துன்ப மிகுதியை உணர முடிகிறது.

சீவகனின் வித்தியாதர நண்பனாகிய சுதஞ்சணன் சீவகன் பல நாடுகளுக்கும் செல்லுதற்குரிய வழிகளை விளக்கிக் கூறுகிறான். வழியில் சீவகன் அடைதற்குரிய ஒரு நீண்ட நேரான வழியை அவன் குறிப்பிடுகிறான். 'அந்நீண்ட நெறியில் நறுமணமிக்க அழகான முல்லை மலர்களும் கத்திகை மலர்களும் வேறு பல மலர்களும் உதிர்ந்து நிறைந்திருக்கும். அக்காட்சி மலர் மாலை வீழ்ந்து கிடப்பது போலத் தோன்றும். கற்புடைய மகளிர் மனம்போல அவ்வழி நேராக அமைந்திருக்கும். பூக்களிலுள்ள மகரந்தப் பொடிகள் படிந்து வழி மென்மைத் தன்மையுடையதாய் அமைந்திருக்கும்' என்று அவ்வழியின் தன்மையை விளக்குகிறான்.

'கற்புடை மாதரார் மனமெனக் கிடந்தசெந்நெறி தாதின் மேல்நடந்ததோர் தன்மைத் தென்பவே' (சிந். 1208) கற்புடைய பெண்டிரின் மனம் தூய்மையுடையதாய் நேர்மை பொருந்தியதாய், அன்பும் அருளும் நிறைந்து மென்மையுடையதாய் இருக்கும். அதுபோல் அந்நீண்ட செந்நெறி மலர்கள் படிந்து நறுமண மிக்கதாயும் நேர்மையுடையதாயும் மென்மைத் தன்மை வாய்ந்ததாயும் உள்ளதாகும் எனக் கூறுவது உண்மையிலேயே கற்போர் நெஞ்சைத் தொட்டு உயர்தர உணர்ச்சியை மிகுவிக்கிறது.

மேற்கூறிய சான்றுகளிலிருந்து சிந்தாமணியிலுள்ள கற்பனை நயங்களை உணரலாம். இக்காப்பியத்தில் கற்பனைகள் பல திறத்தனவாக அமைந்து இலக்கிய இன்பத்தைப் பெருக்குகின்றன.

சீவக சிந்தாமணியில் பல சிறந்த வாழ்க்கை உண்மைகள் பொதிந்துள்ளன. அவலமிக்க சச்சந்தன் கதை வாயிலாக ஒருவர் காமத்திற்கு இரையாகக் கூடாது என்பதும், அவர் கடமையிலிருந்து எக்காரணத்தை யொட்டியும் தவறுதல் கூடாது என்பதும் புலப்படுத்தப்பட்டுள்ளன. சீவகன் பல அரிய பண்புகள் ஒருங்கே வாய்க்கப் பெற்றுத் தனிப் பெருங் குரிசிலாகத் திகழ்கிறான். அப்பாத்திரத்தின் வாயிலாக உணர்த்தப் பெறும் நிலைபேறுடைய உண்மைகளுள் கீழ்க்காணுபவை குறிப்பிடத் தக்கனவாகும்.

(1) இவ்வுலக நிலையாமையை உணர்தற்கு மனிதன் காமத்திற்கு அடிமையாகாமல் இவ்வுலக வாழ்க்கை இன்பங்களை முழுமையாகத் துய்த்தல் வேண்டும்.

(2) உண்மை வீரமாவது எல்லாக் காலங்களிலும் நிலைகளிலும் அகிம்சை நெறியை மேற்கொண்டொழுகுவதாகும்.

(3) மனிதனின் ஆன்மா நிறைவெய்தி உயர்வு பெறுதற்கு ஆன்மிக உணர்வு இன்றியமையாததாகும்.

இவை போன்று எஞ்ஞான்றும் பயன்தரத் தக்க பல வாழ்க்கை உண்மைகள் சிந்தாமணியில் நிறைந்து காப்பியத்திற்குப் பெருஞ் சிறப்புத் தந்து விளங்குகின்றன.

தமிழ்க் காப்பிய வரலாற்றில் சீவக சிந்தாமணி தனிச் சிறப்பு வாய்ந்ததெனலாம். விருத்தப் பாக்களால் ஆக்கப்பட்ட முதற்காப்பியம் சிந்தாமணியேயாகும். ஒரு காப்பியத்தைக் கடவுள் வாழ்த்தோடு தொடங்க வேண்டும் என்ற புதிய முறையைப் புகுத்தியதும் இக்காப்பியமேயாகும். மேலும் நாட்டு வருணனை, ஆற்று வருணனை, நகர வருணனை ஆகியவைகளைக் கொண்டுவிளங்கும் முதல் காப்பியமும் இதுவேயாம். சிந்தாமணி ஆசிரியரே அவையடக்கம் என்றமற்றொருபகுதியையும் புதுமையாகப் பாடியவராவார். சிந்தாமணிக்கு முன் தோன்றிய இலக்கியங்களில் அவையடக்கத்தைக் காண இயலாது.

சீவகசிந்தாமணி மற்றைய சிறந்த காபியங்களைப் போல் என்றும் பயனுடைய ஒரு பேரிலக்கியமாகும். அதன்கண் மிளிரும் பெருநிகழ்ச்சிகள், சிறந்த பாத்திரப் படைப்புகள், இலக்கியச் சிறப்புக்கள், பேருண்மைகள் இன்னோரன்னவைகளால் இப்பெருங் காப்பியம் என்றும் நிலவுலகில் நிலைத்து நின்று மாந்தருக்குப் பெரும் பயன் அளிக்க வல்லதாகும். தா.ஏ.ஞா.

**சீவகன்** சிந்தாமணிக் காப்பியத் தலைவனாவன். இவன் இளம்பருவத்தில் அச்சணந்தி ஆசிரியரிடமிருந்து பல கலைகளையும் கற்றுத் தேர்ச்சி பெறுகிறான். அவரிடமிருந்து தன் தந்தையாகிய மன்னன் சச்சந்தனை முதலமைச்சன் கட்டியங்காரன் கொன்று அரசினைக் கவர்ந்து கொண்டதையும், அப்போது கருவுற்றிருந்த தன் தாய் விசயை அரண்மனையிலிருந்து தப்பிச் சென்று தன்னைச் சுடுகாட்டில் ஈன்றதையும், கந்துக்கடன் தன்னை வளர்த்து ஆளாக்கி உயர்நிலைக்குக் கொணர்ந்ததையும் அறிகிறான். தன் ஆசிரியரின் ஆணைப்படி கட்டியங்காரனை ஓராண்டுக்குப் பிறகு எதிர்த்து நாட்டைக் கவர்வதென முடிவு செய்கிறான்.

இவன் யாழ்ப் போட்டியில் வென்று காந்தருவதத்தையையும், தான் அசனிவேகம் என்ற பட்டத்து

யானையினின்று காப்பாற்றிய குணமாலையையும் பல்லவநாட்டில் பதுமையையும் தக்கநாட்டில் கனக மாலையையும் திருமணம் செய்து கொள்கிறான். தன் தாய் விசயையைத் தண்டகாரண்யத்தில கண்டு இராசமாபுரத்திற்குத் திரும்பிய பிறகு விமலை என் பவளையும் சுரமஞ்சரியையும் திருமணம் புரிகிறான், பின்பு கட்டியஙகாரனை எதிர்த்துக் கொன்று ஏமாங்கத நாட்டின் அரசனாகிறான். இவனுடைய மாமன கோவிந்தன் தன் மகள் இலக்கணையை இவனுக்கு எட்டாம் மனைவியாகத் திருமணம் செய்து கொடுக்கிறான்.

சீவகன் நீதிநெறி வழுவாமல் அரசு புரிந்து தன் மனைவியர் எண்மரோடும் முப்பது ஆண்டுகள் இன்ப வாழ்வு வாழ்கிறான். பிறகு இவ்வுலக வாழ்க்கையின் நிலையாமையை உணர்ந்து, துறவுபூண்டு தவ மியற்றிப் பேரின்ப நிலையை எய்துகின்றான்.

சீவகன் பல அரிய பண்புகள் வாய்க்கப் பெற்றுத் தன்னிகரில்லாத் தலைவனாக விளங்குகிறான். இவன் பேரழகு வாய்ந்தவன். இவனைக்காணும் காரிகையர் அனைவரும் இவன் அழகின்பால் தங்கள் கருத்தை இழக்கின்றனர். சீவகன் பல கலைகளிலும் வல்லவன். யாழ்ப் போட்டியில் இவன் காந்தருவதத்தையை வென்றது இவன் இசைப் புலமைக்குச் சான்றாகும். வில்லாற்றலிலும் சீவகன் பேராற்றல் வாய்ந்தவன். இவன் காந்தருவதத்தையை யாழிலே வென்றதும், கட்டியங்காரனின் தூண்டுதலால் யாழ்ப் போட்டியில் தோல்வியுற்ற பல மன்னர்களும் சீவகனை எதிர்த்து விற்போர் புரிகினறனர். சீவகன் தன் வில்லாற்றலால் அம்மன்னர் அனைவரையும் கொன்று வெற்றி பெறு கிறான். வேட்டுவர்கள் கவர்ந்து சென்ற ஆயர்களின் பசுக்களை மீட்பதற்குச் சீவகன் வேட்டுவர்களோடு விற்போர் புரிகிறான். இப்போரில் வேடர்களில் ஒரு வரைக்கூடக் கொல்லாமல் அவர்களே தளர்ச்சி யுற்றுத் தோற்று ஓடும்படி சீவகன் அவர்களோடு போர் புரிந்தான். அது இவன்தன் வில்லாற்றலின் தனித் திறமையைப் புலப்படுத்துகிறது. முடிவில் இவன்கட்டியங்காரனோடு போர் செய்து அவனைக் கொன்றது, விற்கலையில் இவன் எய்தியிருந்த தனிப் பெருந் திறமையை உணர்த்துகிறது.

வீரமந்திரம், ஐம்பதமந்திரம், மங்கையரை மயக்கும் மந்திரம், காமனும் விரும்பும் வண்ணம் இனிமையான குரலைத்தரத்தக்க மநதிரம், பாம்பின் நஞ்சினைத் தீர்க்கும் மந்திரம், வேற்றுருவத்தைத் தரத்தக்க மந்திரம் ஆகியன சீவகனுக்கு நன்கு தெரியும்.மேலும் பல்வகையான அழகிய மாலைகளைத் தொடுக்கும் கலை, ஒப்பனைக் கலை, ஓவியக் கலை முதலிய கலை களிலும் இவன் வல்லவன்; சமய தத்துவங்களிலும் ஆழ்ந்த புலமையுடையவன்.

அகிம்சை நெறியியே உயர்வான நெறி என்பது சீவகனின் உறுதியான நம்பிக்கை. குணமாலையைப் பட்டத்து யானை துரத்திச் சென்றபோது அந்த யானையை எந்த வகையிலும் புண்படுத்தாமலும் துன்புறுத்தாமலும் குணமாலையை அதனின்றும் விடு விக்கிறான். வேளவிக்கென வைத்திருந்த உணவை உண்ட நாய் அந்தணர்களால் உடல் முழுவதும் அடிபட்டு நீர்நிலையில் உயிர் தவித்துக் கொண் டிருந்தபோது, சீவகன் பேரிரக்கங் கொண்டு நீரிலிருந்து அந்நாயைக் கரைக்கு எடுத்து வந்து அதன் செவியில் ஐம்பத மந்திரத்தை ஓதுகிறான். அம்மந் திரத்தின் ஆற்றலால் அந்நாய் தேவனாக மாறுகிறது. அத்தேவனே சுதஞ்சணன் என்ற பெயரோடு சீவகன் நண்பனாகிறான்.

சிந்தாமணிக்காப்பியம் கி.பி. 10-ஆம் நூற்றாண் டில் சோழர் காலத்தில் தோன்றியதாகும். அக்காலப் பழக்கவழக்கத்தை யொட்டியே அக்காப்பியத் தலை வனாகிய சீவகன் மஙகையர் எண்மரை மணந்தான் என்பது உணரற்பாலது. பிற்காலச் சோழ மன்னர்கள் ஒவ்வொருவரும் பல மனைவியரை மணந்தனர் என் பதை அவர்களுடைய கலவெட்டுக்கள் கூறுகின்றன. ஒருவன் பல மனைவியரை மணப்பது அக்கால நிலைக்கு இன்றியமையாததாய் இருந்தது.

சீவகனின் எட்டுத் திருமணங்கள் வாயிலாகத் திருத்தக்கதேவர் மற்றோர் உண்மையை உணர்த்து கிறார். சீவகனின் தந்தையாகிய சச்சந்தன் ஒருத் தியையே மனைவியாகக் கொள்ளினும் அவளழகிலே அவன் தன் சிந்தையை மறந்து முடிவில் அழிகிறான். சீவகன் எண்மரை மணந்தும் இறுதிவரை காம இன் மத்தில் ஆழ்ந்துபடாமலும் கடமையை மறக்காமலும் ஒழுகி, நாட்டை மீட்பதாகிய தன் குறிக்கோளை நிறைவேற்றுகிறான். இவன் தன் மனைவியர் எண்ம ரோடு இன்பவாழ்வு வாழத் தொடங்கியதிலிருந்தே இவன் உள்ளம் ஆன்மிக நெறியை நாடத்தலைப் பட்டது. இவன்தன் கனிந்த இன்ப வாழ்வின் விளை வாக அது பண்பட்டுப் பக்குவம் எய்துகிறது.முடிவாக இவன் உள்ளத்தில் உலக நிலையாமை வேரூன்று கிறது. உடனே இவன் வாழ்க்கையைத் துறந்து மலை உச்சியின்கண் ஓராண்டு கடுந்தவம் புரிந்து முத்தி அடைகிறான்.

இவ்வாறு சீவகன், சீவகசிந்தாமணியில் பண பினால் உயர்ந்து ஒப்பாரும் மிக்காரும் இல்லாத தனிப்பெருங் காப்பியத் தலைவனாகத் திகழ்கிறான்.

தா.ஏ.ஞா.

**சீவ சம்போதனை:** இது சமணசமய சித்தாந்த நூல். மகத தேசத்தை ஆண்ட சிரேணிக மகாராசன் கேட்கக் கௌதம பணாதிபரால் கூறப்பட்டது. இந்நூலின் ஆசிரியர் தேவேந்திர மாமுனிவர். இந்நூலின் இறுதியில் உள்ள வெண்பாவில் ஆசிரியர் தம்முடைய பெயரைக் குறித்திருக்கிறார். 'தேவேந்திர மாமுனிவர் சீவசம்போதனையைப் பாவேந்தர் நற்றமிழால் பாடினார் என்பது அப் பகுதியாகும். அவருடைய காலமும் ஊரும் தெரியவில்லை. அவர் சமண சமயச் சங்கங்களில் எந்தச் சங்கத்தைச் சார்ந்தவர் என்பதும் தெரியவில்லை.

இந்நூல் உயிர்களுக்கு நன்மை பயப்பனவாகிய பன்னிரண்டு சிந்தனைகளைப் பற்றி (துவாதச அனுப்ரேட்சை) விளக்குவதால் 'சீவ சம்போதனை' என்று பெயர் பெற்றது. (சீவன் – உயிர்; அனுப்ரேட்சை – அடிக்கடி சிந்திக்க வேண்டியவை)

இந்நூல் உரையிடையிட்ட பாட்டுடைச் செய்யுளாக உள்ளது. இதில் பன்னிரண்டு அத்தியாயங்களும் 550 பாடல்களும் உள்ளன. இந்நூலின் வசனப் பகுதி மணிப்பிரவாள நடையாகவும், செய்யுட்பகுதி நல்ல தமிழ் நடையிலமைந்த வெண்பாவாகவும் உள்ளன. வசனம் பெரும்பாலும் செய்யுட்கருத்தைச் சான்றுகளோடு விவரிப்பதாயினும், சிற்சில இடங்களில் செய்யுட் பொருளோடு தொடர்ந்தும் இருக்கிறது. கன்னட சீவசம்போதனையிலும் இங்ஙனமே அமைந்துள்ளது. கன்னட மொழியில் அதனை இயற்றியவர் பந்துவர்மன். இவ்விரண்டு நூல்களிலும் பல இடங்களில் சொற்களும் தொடர்களும் ஒரே மாதிரி இருப்பதனால் இவற்றைத் தமிழிலும் கன்னடத்திலும் சிறந்த புலமை வாய்ந்த ஒருவரே இயற்றியிருக்க வேண்டும்; அல்லது ஒருவருடைய நூலைப் பார்த்து மற்றவர் இயற்றியிருக்க வேண்டும். இந்நூலில் திருக்குறள் தொடர்களும், சீவக சிந்தாமணித் தொடர்களும் விரவியிருக்கின்றன.

இந்நூலில் கூறப்படும் சமண சமயக் கொள்கைகள் பன்னிரண்டு. அவையாவன: 1. அநித்யானுப்ரேட்சை (நிலையாமை). இது பல்வேறு பொருள்களின் நிலையாமையை அடிக்கடி சிந்தித்தலும், ஆன்மா ஒன்றே நிலையானது என்று மெய்யுணர்தலும் ஆகும். 2. அசரணம் (புகலிடமின்மை).இது, இந்திரனாயினும் இறப்பைத் தடுக்கஇயலாது; அறமே உயிருக்கு அரணாவது எனச் சிந்தித்து ஒழுகுதல். 3. ஏகத்துவம் (தனித்தன்மை), இது அவரவர் வினைகள் அவரவரையே பற்றும் என்றும், பிறக்கும்போது தனியாகப் பிறத்தல் போல இறக்கும்போதும் தனியாகவே இறத்தல் வேண்டும் என்றும் உணர்தல். 4. அன்யத்துவம் (உறவற்ற தன்மை). இது, உயிரும் உடலும் ஒன்றுபட்டிருப்பினும் வெவ்வேறாகும் என்று உணர்தல் 5. சம்சாரம் (மாற்று). ஒரே உயிர் மக்கள், தேவர், நரகர், விலங்குகளாகிய பௌதிக மாற்றங்களை அடைதல். 6. உலகம்: இது மேல், நடு, கீழ் என மூன்று வகைப்படும். உயிர்கள் இம்மூவகை உலகிலும் மாறி மாறிப் பிறந்து முறையே இன்பமும் துன்பமும் அடையும் தன்மையுடையன. 7. அசுசித்வம் (அழுக்குடைத்தன்மை). இது, உடல், ஊன் உதிரங்களால் உண்டாகியது என்றும், அருவருப்புத் தன்மை உடையது என்றும் அடிக்கடி சிந்தித்தல். 8. ஆசுவரம் (ஊற்று). வினை ஊற்றே பிறவித் துன்பத்திற்கு மூல காரணம் என அடிக்கடி சிந்தித்து அறநெறி ஒழுகுதல். 9. சம்வரை (செறிப்பு). உயிர்களிடம் வினைகள் ஊற்றெடுக்க விடாமல தடுத்தல் 10. நிர்ச்சரை (உதிர்ப்பு). உயிரினிடம் முன்னரே பற்றியுள்ள வினைகளுள் சிலவற்றைக் கழித்தல். 11. தருமம் (அறம்). வினையை வென்ற அருகன் உரைத்த அறமே உயிர்களுக்கு நன்மை ஊட்டுவதாகும் என்று உணர்ந்து அறநெறி ஒழுகுதல். 12. போதி துர்லபம் (அறிவு பெறற்கருமை). மக்களாகப் பிறத்தல் அரிது; அப்படிப் பிறப்பினும் கல்வி, அறிவு, ஒழுக்கம் எனனும் மும்மணிகளைப் பெறுதலரிது எனச் சிந்தித்து அறநெறி ஒழுகுதல்.

இப் பன்னிரண்டு கொள்கைகளையும் தனித்தனியாகச் சாதித்து நற்கதியடைந்த பன்னிருவர் வரலாறுகள் இந்நூலில் கூறப்பட்டுள்ளன. ஆசுவரத்தின உட்பிரிவுகளை விளக்க மேலும் ஐந்து கதைகளும், தருமத்தின் உட்பிரிவுகளை விளக்க மேலும் மூன்று கதைகளும் கூறப்பட்டுள்ளன. க.க.தே.

**சீவனாம்சம்:** தன்னைச் சார்ந்து வாழ்வோருக்கு உணவு, உடை, உறையுள் முதலிய வாழக்கைத் தேவைகளை அல்லது அவற்றுக்கான பணத்தை வழங்குதல் வாழ்க்கைப் பொருளுதவி அல்லது சீவனாம்சம் எனப்படும். தன்னைச் சார்ந்து வாழும் குழந்தைகள் மற்றும் பெற்றோரைக் காத்தல் சட்டப்படி ஒருவருக்குள்ள கடமையாகும். இவர்களைக் கவனிக்காமல் இருப்பதையும், வாழ்க்கைத் தேவைகளை அளிக்காமல் ஒதுக்குவதையும் சட்டம் தடை செய்கிறது.

சீவனாம்சம் பெறுவது குறித்துக் குற்றவியல நடைமுறைச் சட்டத்தின் 125 முதல் 128 வரையிலான பிரிவுகள் விளக்குகின்றன. இப்பிரிவுகள் விரைவான மற்றும் குறைந்த செலவிலான பரிகாரத்தை வழங்குகின்றன. இப்பிரிவுகளின் நோக்கம் சார்ந்து வாழ்வோர் பட்டினி கிடந்து சாவதைத்

தடுப்பதும், அவர்கள் குற்றம் புரியாது பாதுகாத்த லும் ஆகும்.

சீவனாம்சம் குறித்துக் குற்றவியல் நடைமுறைச் சட்டத்தில் கூறப்பட்டிருக்கும் கருத்துகள எலலாச் சமயத்தைச்சார்ந்தவருக்கும பொருந்தும். இவ்வழக்கு களை மாநகரக் குற்றவியல் நீதிபதி அல்லது முதல் வகுப்புக் குற்றவியல் நீதிபதி மட்டுமே விசா ரணை செய்யலாம். இநநீதிபதிகளால் அளிக்கப்படும் பரிகாரங்கள் குறிப்பாக உரிமையியல் குணவகை கொணடவையாக இருந்தாலும், நீதிபதிகள தீர்ப்புச் செய்தவை யாவும் முடிந்த முடிபு அல்ல. இருதரப் பினரும் உரிமையியல் நீதிமன்றத்தில் தங்கள் உரிமை களைகுற்றவியல் நீதிபதியின தீர்ப்புககுப் பினனரும் நிலைநாட்டலாம்.

பின்வரும் பகுதிகளில சீவனாம்சம் பெறத் தகுதி யுடையோர், அவை வழங்கப் பெறும் நிலைகள, நீதி மன்றத்தின ஆள்நிலைவரம்பு, நடைமுறைகள், சீவ னாம்சத்தின் அளவு மற்றும் அவை வழங்கப்படும முறை பற்றிக் காணலாம்.

**சீவனாம்சத்தகுதி:** வறிய நிலையிலிருககும் மனைவிக்கு வாழககைப் பொருளுதவி அளித்தல் கணவனின் கடமையாகும். மனைவி சட்டப்படி மணம் புரிந்தவராக இருத்தல் வேண்டும். இருவர் கணவன் மனைவி போன்று சேர்ந்து வாழ்ந்த காரணத்தால் மட்டுமே அப்பெண் சீவனாம்சம் பெறுதல் இய லாது. மணவிலக்குப் பெற்று மறுமணம் புரியாத மனைவி சீவனாம்சம் பெறத் தகுதியுடையவர். மனைவி எந்த வயதினராகவும் இருககலாம். அவா இளவராகவோ உரிய வயதினராகவோ இருக்கலாம். குழந்தைத் திருமணத் தடைச் சட்டத்தின்படி 18 வயதிற்குக் குறைந்த பெண்ணுக்குத் திருமணம் செய் தல் குற்றமாயினும், அவ்வாறு திருமணம் செய்த பெண் சீவனாமசம் பெறத் த குதியுடையவர் ஆவார்.

**முறை மணப்பிறப்பு மற்றும் முறையிலா மணப் பிறப்புக் குழந்தைகள்:** வறிய நிலையிலிருக்கும் இள வர் சீவனாம்சம் பெறத் தகுதியுடையவர். அவா களுக்குத் திருமணம் நடைபெற்றிருப்பது ஒரு தடை யன்று. பதினெட்டு வயதடையாத ஆண் மற்றும் பெண் குழந்தைகள் சீவனாம்சம் பெறத் தகுதியுடை யவர். திருமணமான பெண இளவராக இருக்கும் வேளையில் கணவரிடமிருநதோ தந்தையிடமி ருநதோ இருவரிடமிருந்தோ சீவனாம்சம் பெறலாம். ஆனால், கணவரிடம் தகுந்த செல்வம் இல்லாத போது திருமணமான உரிய வயதடையாக் குழந்தை யைக் காப்பாறற வேண்டியது தநதையின் கடமை யாகிறது.

**உரியவயதை அடைந்த மனநலம் குன்றிய முறை மணப்பிறப்பு, முறையிலா மணப்பிறப்புக் குழந்தைகள்:** உரிய வயதை அடைந்த உடல் மற்றும் மனநலம் குன்றிய குழந்தைகள வறிய நிலையில இருக்குங்கால் அவர்களைக் காததல பெறறோரின் கடமையாகும். ஆனால், திருமணமான உரிய வயதடைந்த மகளைக காத்தல் தந்தையின் கடமையன்று. இத்தகையோ ரைக் காத்தல் கணவரின் கடமையாகும்.

**தந்தையும் தாயும்:** வறிய நிலையிலிருக்கும் தாய்-தந்தையருக்கு வாழ்க்கைப் பொருளுதவி அளித்தல் மகனின் கடமையாகும். பல மகன் அல்லது மகள இருக்குங்கால் பெற்றோர் எலலோரிடத்திலும் கேட்க லாம் அல்லது குறிப்பிட்ட ஒரு சிலரிடத்தில் மட்டுமே பரிகாரம் கேட்கலாம்.

**சீவனாம்சம் அளிக்கப்படுவதற்கான நிபந்தனைகள்:**
1. எவரிடத்திலிருந்து சீவனாம்சம் வேண்டப்படுகின் றதோ அவர் சீவனாம்சம் அளிககும் நிலையில் இருகக வேண்டும். ஒருவரிடத்தில சொத்து, நிலம், மற்றும் வேலை இருநதால் மட்டுமே அவர் சீவனாம்சம அளிககும் நிலையிலுள்ளார் என்று கூறுதல் இயலாது. ஒருவர் உடல் ஆரோககியமும் வலிமையும் உள்ள வராக இருந்தாலே அவர் தம் மனைவி குழநதைகள மற்றும் பெற்றோரைக் காக்கும் தகுதி உடையவ ராகக் கருதப்படுவர். ஒருவர் நொடிப்பு நிலையி லிருந்தாலும், பிசசை எடுத்தே வாழ்க்கையை நடத் தினாலும், அவர் வலிமையுடையவராக இருக்குங்கால் மனைவியைக் காத்தல அவரது கடமையாகிறது.

**2. வாழ்க்கைப் பொருளுதவி அளிக்க மறுப்பு மற் றும் கவனியாமை:** மனைவி, தாய் தந்தையர் மற்றும் குழந்தைகளைக் கவனியாமல் இருத்தல் மற்றும் வாழ்க்கைப் பொருளுதவி அளிக்க மறுத்தல் சொல லாலோ செயலாலோ ஏறபடலாம். இவை நேரடி யாகவோ மறைவாகவோ இருக்கலாம.

**3. வாழ்க்கைப் பொருளுதவி வேண்டுவோர் வறிய நிலையில் இருத்தல் வேண்டும்:** வாழ்க்கைப் பொருளுதவி வேணடுமுன்னர் தாய் தந்தையர், குழந் தைகள் மற்றும் மனைவி தங்களுக்கான வாழ்க்கைத் தேவைகளைப் பெற இயலாத நிலையில் இருக்க வேண்டும். ஒருவருக்குத் தேவையான செலவம், சொத்து, நிலம் முதலியன இருக்குங்கால் அவர் வாழ்க்கைப் பொருளுதவி பெறுதல் இயலாது. வாழ்க்கைத் தேவைகளைப் பெற இயலாத நிலையில் உள்ள மனைவி மட்டுமே சீவனாம்சம் பெற இயலும்.

**4. திருமணமான உரிமை வயதடையாப் பெண்:** திருமணமான உரிமை வயதடையாப் பெண தன்

கணவர் நன்னிலையில் இருந்தால சீவனாம்சம் வேண்ட லாம். அவ்வாறு கணவர் வாழக்கைத் தேவைகளை அளிக்கமுடியாதபோது தந்தை நன்னிலையில் இருந் தால, தநதையிடமிருநது சீவனாம்சம் வேண்டலாம்.

5. கணவரிடமிருநது வாழ்க்கைப் பொருளுதவி வேணடுங்கால் மனைவி பிற ஆடவருடன் சேர்ந்து வாழ்தல் கூடாது; மனைவி பிற ஆடவருடன் சேர்நது வாழுஙகால் கணவன வாழ்க்கைப் பொருளுதவி அளிக்க வேண்டியதிலலை. ஆனால், ஒரு தடவை மட் டும் பிற ஆடவருடன் புணர்தலால் மனைவி வாழக் கைப் பொருளுதவி பெறும் தகுதியை இழந்து விட மாட்டாள. மனைவி பிற ஆடவருடன தொடர்நது புணர்ந்து வாழ்நதால் மட்டுமே தகுதி இழப்பாள். பிற ஆடவருடன நேசமாக இருத்தல் புணர்தல ஆகாது.

6. மனைவி கணவருடன் வாழ மறுத்தல் கூடாது. காரணமின்றி மனைவி கணவருடன் வாழ மறுத்தல கூடாது. ஆனால் கணவர் வேறு ஒரு பெண்ணுடன திருமண ஒப்பநதம் செய்து கொணடாலோ வேறு பெணணுடன் வசித்தாலோ மனைவி கணவருடன வாழமறுத்தல் தகுநத காரணமாகும். எனவே மேற கண்ட காரணங்களால வாழகைப் பொருளுதவி வேண்டலாம்.

7. கணவர், மனைவி ஆகிய இருவர் சம்மதத் துடன் மனைவி தனியாக வாழுங்கால் வாழ்கைப் பொருளுதவி பெறுதல் இயலாது.

**நீதிமன்றங்கள்:** சீவனாமசம் குறித்த வழக்குகளை மாநகரக் குற்றவியல நீதிபதிகள அல்லது முதல வகுப்புக் குறறவியல் நீதிபதிகள் மட்டுமே விசாரணை செய்யலாம. வேறு எந்த நீதிபதிகளும பிறப்பிததிடும் கட்டளைகள செல்லாதவை ஆகும். சீவனாமசம் குறித்த வழக்குகளை எதிர்தரப்பினர் எந்த நீதிமனற எலலைக்குள் வசிககினறாரோ அங்கோ அலலது அவா அலலது அவர் மனைவி வசித்திடும் நீதிமனற எலலைக் குள்ளோ, அவர் இறுதியாகத தம மனைவியுடன எஙகு வசிததாரோ அந்த நீதிமன்றத்திலோ விசா ரணை செயயலாம்.

**வாழ்க்கைப் பொருளுதவியின் அளவு:** நீதிமன்றத தால் கட்டளை பிறபபிககப்படும வாழ்க்கைப் பொரு ளுதயிவின் அளவு ரூபாய் ஐந்நூறுக்கு மிகாமல இருத தல் வேணடும். நீதிபதி எவருக்குச சீவனாமசம் அளித்திடல வேண்டுமெனக் கட்டளையிடுகின்றாரோ அவருக்கு அளித்திடல் எதிர் மனுதாரரின் கடமை யாகும். கட்டளை பிறப்பித்த நாளிலிருநது வாழ்க் கைப பொருளுதவி பெற மனுதாரர் தகுதி படைததவராவார். ஆனால, நீதிபதி, விணணப்பம் கொடுககப்பட்ட நாளிலிருந்து மனுதாரர் வாழ்க் கைப் பொருளுதவி பெறத தகுதியுடையவர் என அறிவிக்கலாம். அப்போது அநநாளிலிருநது வாழ்க் கைப் பொருளுதவி பெற மனுதாரா தகுதி படைத தவராவார். நீதிபதி கட்டளையிட்ட பினனரும வாழ்க்கைப் பொருளுதவி அளிககாத எதிர்மனுதா ரர் மீது நடவடிக்கை எடுக்கலாம். வாழ்க்கைப் பொருளுதவியைச செலுத்தாதவர் மீது தணடம வசூலிகக எம்முறை பின்பறறப்படுகினறதோ அம முறையைப் பின்பற்றி நடவடிககை எடுககலாம்.

**சீவனாம்சக் கட்டளையை நீக்குதல்:** 'மனைவி பிற ஆடவருடன தொடர்ந்து புணர்நது வாழதல அல்லது கணவருடன சேர்நது வாழ மறுத்தல் அலலது கணவா மற்றும் மனைவி தனித்தனியாக வாழ இசைந்து அவவாறு வாழ்வது நிரூபிககபபட்டால நீதிபதி சீவனாம்சம் குறித்துத் தான இட்ட கட்ட ளையை நீககிவிடலாம். குற்றவியல் நீதிபதி சீவ னாம்சம் குறிததுக கட்டளை பிறப்பித்தபின உரிமை யியல் நீதிமனறம் ஏதாவது முடிவு செய்திருப்பின, குற்றவியல நீதிபதி தான பிறப்பித்த கட்டளையைக் காப்பாறறலாம்; நீககிவிடலாம். அதுபோனறு சீவனாமசம் குறிதது நீதிபதி கட்டளையிட்ட பின மனைவி மறுமணம் புரிந்திருப்பின, நீதிபதி தான ஏறகெனவே பிறப்பித்த கட்டளையை நீககிவிடலாம்.

சீவனாம்சம் பெறுபவரின வாழ்கைச சூழ் நிலையில் மாறறங்கள் ஏதும் ஏற்பட்டிருப்பின் அத னைக கருததிற் கொணடு சீவனாம்சததின அள வைக் குற்றவியல நீதிபதி மாறறியமைக்கலாம அவ்வாறு மாறறம் செய்யுங்கால சீவனாம்சத் தொகையின் அளவு ரூ. 500/ககு மேல் மிகுதல ஆகாது. மீ.அ.

*சீவானந்தம்,ப.* (1907-1963) இந்தியப் பொது வுடைமைக் கட்சியின தமிழகத் தலைவருள் ஒருவா, சுயமரியாதை இயக்கம், இந்தியத் தேசிய காங்கிரசு ஆகியவறறிலும இருந்துளளாா; சிறந்த மேடைப பேசசாளா; இதழியல, இலக்கியத் துறைகளிலும் குறிப்பிடத்தக்கவாறு பணியாறறியுளளார்.

சீவானந்தம் (சீவா) குமரி மாவட்டத்திலுளள பூதப் பாண்டி என்னும் ஊரில் 1907-இல் பட்டம் பிளளைக்கும் உமையமமாளுக்கும மகவாய்ப பிறந தார் இவரது இயற் பெயர் சொரிமுத்து; மூககாணடி என்னும பெயரும் உண்டு.

இவர் மாணவப் பருவத்திலேயே நாட்டு விடு தலையை வலியுறுத்தும் செய்யுள்கள், நாடகம், புதினம் ஆகியவற்றை எழுதியுள்ளதாகத தெரிகிறது.


சீவானந்தம், ப.

தாழ்த்தப்பட்ட சாதியினர் உரிமைக்காக 1924-இல் நடந்த வைக்கம் போராட்டத்தில் இவர் கலந்துகொண்டதால் பள்ளிப் படிப்பைக் கைவிட நேர்ந்தது. சிலகாலம் நெல்லை மாவட்டம் சேரன்மா தேவிப் 'பரத்துவாச ஆசிரமத்தில்' தங்கியிருந்தார். பின்பு, காரைக்குடிக்கு அண்மையிலுள்ள சிராவயல் என்னும் ஊரில் 'காந்தி ஆசிரமம்' என ஒன்றைத் தோற்றுவித்தார்; சீவானந்தம் என்னும் பெயரைத் தாமே வைத்துக்கொண்டார்; அடுத்துத் தனித்தமிழ் இயக்கத்தில் பற்றுக் கொண்டு 'உயிர் இன்பன்' எனப் பெயர் கொண்டிருந்தார்.

சீவா, 1927-இல் காந்தியடிகளைச் சந்தித்து வருணாசிரமக் கொள்கைக்குத் தம் மறுப்பைத் தெரிவித்தார்; சிராவயலுக்கு அருகில் உள்ள நாச்சியார் புரத்தில் 'உண்மை விளக்க நிலையம்' என்னும் புதிய ஆசிரமம் தொடங்கினார்.

சட்ட மறுப்புப் போராட்டம் காரைக்குடியில் 1932-இல் இவரது தலைமையில் நடந்தது. காலப் போக்கில் இவர் பொதுவுடைமைக் கொள்கையில் ஈடுபாடு கொண்டார்.

இவர் 'சனசக்தி' வார இதழை 1937-இல் தொடங்கினார்; தொழிலாளர் போராட்டங்கள் பலவற்றை நடத்தினார்; புதிய தொழிற் சங்கங்களை உருவாக்கினார்; பின்னர் 1939-இல் தொடங்கிய உலகப் போரை எதிர்த்துப் பேசியமைக்காக இவர் இரண்டரை மாதச் சிறைத் தண்டனை பெற்றார்; விடுதலைக்குப்பின் தாழ்த்தப்பட்ட சாதியைச் சேர்ந்த கண்ணம்மா என்பாரை மணந்துகொண்டார்.

சோவியத்து நாட்டைச செருமனி (Germany) 1942-இல் தாக்கியதால், பொதுவுடைமைக் கொள்கையாளர் செருமனிக்கு எதிராகக் கிளம்பினர். செருமனியை எதிர்த்த ஆங்கில அரசு பொதுவுடைமையாளரை விடுதலை செய்தது.

நாஞ்சில நாட்டுத் தமிழர்கள், தமிழகத் தமிழரோடு இணைய விரும்பினர். சீவா 'அகில திருவிதாங்கூர்த் தமிழ் மாநாடு' கூட்டித் தமிழர்களை ஒருங்கிணைத்தார்.

பம்பாயில் விமானப்படையினரும், கப்பற் படையினரும் தொடங்கிய வேலைநிறுத்தம் 1946-இல் உள்நாட்டுப் போராய் வளர்ந்தது. இவர் அதனை ஆதரித்ததால் அடக்குமுறைக்கு உளளானார். தம் முதல் மனைவி காலமானதால் சீவா 1948-இல பத்மாவதி என்பாரை மணந்தார். இவருக்கு மூன்று மக்கள் பிறந்தனர்.

இந்தியப் பொதுவுடைமைக் கட்சி, 1951-இல் வன்முறையைக் கைவிடுவதாக அறிவித்தது. அதன் பின் 1952-இல் நிகழ்ந்த பொதுத்தேர்தலில இவா போட்டியிட்டுத் தென்சென்னைச் சட்டமன்ற உறுப்பினரானார். சென்னைப் பல்கலைக் கழகப் பேரவை (Senate) உறுப்பினராக 1955-இல் தேர்ந்தெடுக்கப் பட்டார்.

சீவா 1951க்குப்பின் இலக்கிய நிகழ்ச்சிகளில் ஈடுபட்டார். 'தாமரை' என்னும் இலக்கியத் திங்களிதழை 1959-இல் தொடங்கினார். 'தமிழ்நாடு கலை இலக்கியப் பெருமன்றம்' என்னும் அமைப்பை 1961 இல் உருவாக்கினார். மாசுக்கோவில 1962-இல நடந்த உலக அமைதிக் குழு மாநாட்டில் கலந்துகொண்ட பின் இந்தியா திரும்பினார். இந்திய சீன எல்லைச் சிக்கல், சீனப் படையெடுப்பு வரை (1962) முற்றியது. சீவா சீனத்தின் போக்கைக் கண்டித்துத் தமிழகம முழுவதும் பலவேறு கூட்டங்களில் பேசினார். அதனால் இவரது உடல்நலங் குன்றியது. இவர் 1963-இல காலமானார். இவரது பெயரில் 'சீவா போக்குவரத்துக்கழகம்' இயங்கிவருகிறது. பா.ம.

***சீறாப்புராணம்***, ஓர் இசுலாமியச் சமயத் தமிழ்ப் பெருங்காப்பியமாகும். நபிகள் நாயகம் முகம்மது (சல்) அவர்களின் வாழக்கை வரலாற்றைக் கருப்பொருளாகக் கொணடது. நபிகளின் வாழ்க்கையை அரபு மொழியில சீறதுன்னபி என்னும் சொல்லால் குறிப்பர். இச்சொல்லைச் சீறத் அல் நபி எனப் பிரிக்கலாம். அந்த அல்லது இந்த தீர்க்கதரிசியின் வாழ்க்கை என்பது அதன் பொருளாகும். (சீறத் -வாழ்க்கை, அல்-அந்த அலலது, இந்த, நபி-தீர்க்க

தரிசி) சீறதுன்னபியின் சுருக்கமே சீறா ஆகும். புராணம் என்பது வடமொழியில் பழைமையான ஒரு கதையைக் குறிக்கும். இங்குப் புனிதமான வரலாறு எனப் பொருள்படுகின்றது. இசுலாமியப் பெருங்காப்பியமான இந்நூல் தண்டியாசிரியர் கூறிய காப்பிய இலக்கணம் பொருந்த அமையப் பெற்றுள்ளது. அராபிய வாழ்வியலை அரவணைத்துச் சென்றாலும் தமிழக் காப்பியக் காதல் நெறியும் தமிழ் இலக்கண மரபு முறையும் அமைந்திருப்பதால் இக்காப்பியம் இசுலாமியப் பண்பாட்டையும், தமிழ்ப் பண்பாட்டையும் இணைக்கும் பாலமாக விளஙகுகிறது.

இக்காப்பிய ஆசிரியர் உமறுப்புலவர் ஆவார் (கி.பி. 1642-1703). இவர் முன்னோர் அரபு நாட்டவர். ஆயினும், இவா திருநெல்வேலியைச் சார்ந்த நாகலாபுரத்தைச் சொந்த ஊராகக் கொண்டவர். எட்டயபுர மன்னர் அவையில் அவைககளப் புலவராக வீற்றிருந்தார். வளளல் சீதக்காதியும், வளளல் அபுல காசிமும் தூண்ட, கீழக்கரை செய்கு சதக்கத் துல்லா அப்பாவும் அவர் மாணவரும் கதை தர, இக் காப்பியத்தை இயற்றினார். இக்காப்பியம் கி.பி. 17-ஆம் நூற்றாண்டில் எழுதப் பெற்றதாயினும கி.பி. 1842-இலதான அச்சேறியது. சுவடித் தமிழ் நூலகளுள் முதனமுதலில் அச்சேற்றப்பட்ட நூல சீறாப் புராணமாகும்.

முகம்மது நபியைத் தலைவராகவும் கதிசா பீபியைத் தலைவியாகவும் கொணட இவவரலாற்றுக் காப்பியம் முப்பெருங் காண்டங்ளையும் 92 படலங்களையும, 5027 விருத்தப் பாக்களையும் கொணடதாக விளங்குகிறது. திருக்குர் ஆன் மறை உரைகளும், திருக்குறள் கருத்துகளும விரவியுளள இககாபபியம் நபி பெருமானின பிறப்பு, திருமணம, ஆற்றல, வெற்றி ஆகிய அரும்பெறற் செய்திகளை அழகுறப் புனைந்து காட்டுகிறது. முதற் காணடமான விலாதத்துக் காணடம் பாட்டுடைத் தலைவரின் இளமைக்கால வாழ்க்கையைச் சித்திரிக்கிறது. 'விலாதத்' என்ற அரபுச் சொல்லுககுப் 'பிறப்பு' என்பது பொருள். இறுதித் தூதர் நபிகளின் பிறப்பு இககாணடத்தில முதனமைப்படுததப் பெறுகின்றது. இரணடாம் காணடமான நுபுவ்வத்துக் காண்டத்தில் நபிகளுக்கும் அவர்தம் நண்பாகளுககும் பகைவர்கள் செய்தகொடுமைகள் இடம்பெறுகின்றன. நபி பெருமானாரின் அறிவுரைகளும் தீர்க்கதரிசனங்களும் இப்பகுதியில் இடம் பெற்றுள்ளன. நபி எனுஞ் சொல்தொடர்புடையதே நுபுவ்வத்துக்காண்டம். இறுதிக் காணடமான இசிறத்துக் காண்டத்தில் காப்பியத் தலைவர் அறப்பணிக்காகப் பிறப்பிடம் துறந்து வேற்றிடம் செல்லும் புனித பயணக் காட்சியைக் காணலாம். இசிறத்து என்ற அரபுச் சொல்லிற்கு இடம் பெயரல் என்பது பொருள். மக்காவிலிருந்து மதினாவிற்கு முகம்மது நபி சென்ற நிகழ்சசி இப்பகுதியில் கவிநயம் நனி சொட்டச் சொட்டப் பாடப் பெறுகின்றது. விலாதத்துக் காண்டம் 24 படலங்களையும், நுபுவ்வத்துக் காண்டம் 21 படலங்களையும், இசிறத்துக் காண்டம் 47 படலங்களையும் கொண்டிலங்குகின்றன. யாப்பமைதியில திருத்தக்க தேவரையும் கம்பரையும் புலவர் உமறு பின்பற்றியுள்ளார்.

நபி நாயகத்தின் அறவாழவு அழகுறப் பாடப் பெறறாலும் நபியின் வரலாறு முழுதும் இககாப்பியத்தில் இடம பெறாததால் சின்ன சீறா, சீறாப் புராணம் இரண்டாம் தொகுதி போன்ற நூல்களும், இப்புராணத்தைத் தழுவிக கீர்த்தனம், நாடகம், வண்ணம், விளக்கு, வெணபா, அம்மானை, பல வண்ண மாலை போன்ற பல சார்பு நூல்களும் எழுந்தன.

சீறாப்புராணத்திற்குப் பலர் உரை எழுதியிருப் பினும் சதாவதானி செய்கு தம்பிப் பாவலர் எழுதிய உரையே முழுமையான முதல் உரையாகப் போற்றப் பெறுகின்றது சிறப்பு உரையாசிரியராகத் திகழபவர் டாக்டர் கா.மு. சரீபு ஆவார். உமறுப்புலவா பிற இலக்கியக் கருத்துகளைக் கையாண்ட வகைகளைஇவ் வுரையாசிரியர் தமது உரையில கூறுவதுடன் அரபுச சொல், பாரசீகச் சொல் ஆகியவற்றிற்கு விளக்கமும் தந்துள்ளார்.அறியாமைக்கும்மெய்யறிவுக்குமிடையே தோன்றும் போராட்டத்தை இக்காப்பியத்தில காணலாம். பி.தெ.

***சீனக்கடல்***: பசுபிக்குமாக் கடலின் ஒரு பகுதியான இது மலாயா முந்நீரகத்திற்கும் சப்பான் நாட்டுக்குமிடையே உளளது. இதைத் தெற்குச் சீனக்கடல, கிழக்குச் சீனக்கடல் என்று பாாமோசாத் தீவு பிரிககிறது. தெற்குச் சீனக்கடல், பார்மோசா, பிலிப்பைன் தீவுகள், போர்னியோ, மலாயா முந்நீரகம், இநதோ சீனா, தென்கிழக்குச் சீனா முதலியவைகளால் சூழப பட்டுள்ளது. கிழக்குச் சீனக் கடலைச் சூழ்ந்து பார் மோசா, சப்பான் தீவுகள், தென்கொரியா, கிழக்குச் சீனா ஆகிய பகுதிகள் உள்ளன. தெ.பா.

***சீனக் கிளர்ச்சி***: கிளர்சசி இயக்கங்கள் சீனாவிற்குப் புதிதல்ல; மிகப் பழமையானவையாகும். முதல் ஆங்கிலேயப் போருக்கு முன்பு (கி.பி. 1839-42)இருபது ஆண்டுகளில் குவாங்கி, ஆன்சி (Hansi), இவிச்சோவ் (Kweichow), பார்மோசா (Formosa) ஆகிய இடங்களில் அடிக்கடி கிளர்ச்சிகள் தோன்றியுள்ளன. பெருங் கிளர்ச்சிகள் கி.பி. 19-ஆம் நூற்றாண்டின்

மத்தியில தோன்றாமலில்லை. தைப்பிங்குக்கிளர்ச்சியும் (Taiping கி.பி. 1848 - 1865). 1900-இல் நடந்த குத்துச் சண்டை வீரர்கள் கிளர்ச்சியும் (Boxer Rebellion) மிகவும் பயங்கரமான கிளர்ச்சிகளாகும். சீனப் புரட்சிக்கு இவையே வழிகாட்டியாக அமைந்தன.

**தைப்பிங்கு இயக்கம்:** தைப்பிங்கு இயக்கத்தைத் தோற்றுவித்தவர் அங்-கியு-சுவான் ஆவார். அவர் உழவர் குடும்பத்தைச் சார்ந்தவர். கல்வியில் தேர்ச்சி பெறாத காரணத்தால் வாழ்க்கையில் வெறுப்படைந்த அவர் அமெரிக்கப் பாதிரியான இசாச்சர் இராபர்ட்சு (Issacher Roberts) என்பவரின் உதவியை நாடினார். அவர்தம் சமயக் கருத்துகளால் பெரிதும் உந்தப்பட்ட அங-கியு-சுவான் தோற்றுவித்த முதல் இயக்கம் பாய்-சங்-டி ஊ ய் என்பதாகும். (Asscia-tion of God Worshipers) அதற்குக் 'கடவுளை வணங்குவோர் கழகம்' எனப் பொருள் கொள்ளலாம். நாங்கின் இவ்வியத்திற்கு கி பி. 1843-இல் தலைநகராயிற்று. இதற்கிடையில் அங்-சியு-சுவான், 'தியன்-வாங்' (Tien Wang) என்ற பட்டத்தைச் சூட்டிக் கொண்டார். அது (Heavenly King) விண்ணுலக மன்னன் எனப் பொருள்படும். சீனமொழியில் தைப் பிங் டியன் குவா என்பதாகும். சமயச் சார்புடைய இவ்வியக்கம் காலப் போக்கில் தீவிர இயக்கமாயிற்று. மஞ்சு அரசைக் கவிழ்ப்பதே இதன் நோக்கமாகும்.

**தோன்றக் காரணம்:** இவ்வியக்கம் தோன்றுவதற்கான காரணங்கள் பின்வருவன: சீனா வீழ்ச்சியினைத் தழுவியமை, அதிகாரிகளின் ஊழல் மிகுந்தமை, வரிச்சுமை மக்களுக்கு மிகுதியாயினமை, மஞ்சூரியர்களுக்கே முதலிடம் கொடுக்கப்பட்டமை, மக்கள் தொகை கி.பி. 1850-இல் 430 மிலியனை எட்டியமை. நிலங்கள் 35 விழுக்காடே விரிவடைந்தமை. வாணிகப் பொருளாதாரம் பாதித்தமை. குடியானவர்கள் அடிமை நிலைக்குத் தளளப்பட்டமை.

**கிளர்ச்சி பரவியமை:** தைப்பிங்குக் கிளர்ச்சி முதன் முதல் தோன்றிய இடம் குவாங்சியாகும. பின்பு இது ஊனான், ஊப்பே ஆகிய நகரங்களுக்கும் பரவி கி.பி. 1851 - இல் யாங்டிசி (Yangtse) நதியை அடைந்து அரசுப் படையைத் தோற்கடித்து ஊகான் நகரங்களைக் கைப்பற்றியது. மஞ்சு மரபை ஒழித்துக் குடியானவர்களின் வாழ்க்கைத் தரத்தை உயர்த்தி, சீனப் புகழை மீண்டும் நிலை நாட்டுவதே இதன் முக்கிய நோக்கமாகும். ஆனால், கிளர்ச்சி வெற்றி பெறவில்லை.

சீனாவில் தோன்றிய மற்றொரு கிளர்ச்சி குத்துச் சண்டை வீரர்களின் கிளர்ச்சியாகும் (Boxer Rebellion). சீனாவில் நூறு நாட் சீர்திருத்தம் வெற்றி பெறவில்லை. மேலும் வல்லரசுகளின் ஆக்கிரமிப்பு சீனாவை அரைக் குடியேற்ற நாடாக (Semi Colony) ஆக்கியது. எனவே, சீனர்கள கொதித்தெழுந்தனர். இதுவே குத்துச் சண்டை வீரர்கள கழகத்திற்கு வழி வகுத்தது. இவ்வியக்கம் எப்போது தோன்றியது என்பது சரியாகத் தெரியவில்லை. எனினும், இது ஒரு இரகசியக்கழகமாகும். இது கி.பி. 19-ஆம் நூற்றாண்டில் நிலவியது. இதற்கு ஐ-கோ சுவான் எனப்பெயர். இது 'நியாயப் போர்க் கரங்கள்' எனப் பொருளபடும். 'சகோதரர்கள் இயக்கம்' (Harmonious Brotherhood) எனவும் பெயர் பெற்றது. ஐரோப்பியர்கள் இவர்களைக் குத்துச் சண்டை வீரர் எனக் குறிப்பிட்டனர்.

**வெளிநாட்டினர் எதிர்ப்பு:** சீனர்களின் கிளர்ச்சிகளைக் கண்டு வெளிநாட்டினர் வெருண்டனர். மஞ்சு அரசிடம் பாதுகாப்பு வேண்டினர். ஆயினும் பயனில்லை. முடிவில் அவர்களே தத்தம் அரசாங்கத்தின மூலம் பாதுகாப்பைத் தேடிக் கொண்டனர். 8000 சப்பானியப் படைவீரர்களும், 4500 உருசியப் படைவீரர்களும், 3000 ஆங்கிலேயப் படைவீரர்களும, 2500 அமெரிக்கப் படைவீரர்களும், 800 பிரஞ்சுப் படைவீரர்களும் சீனாவுக்குள் வந்து சேர்நதனர். சீனருக்கும் வெளிநாட்டினருக்கும்போர் தொடங்கியது. செருமன் நாட்டுக் கெய்சரை மகிழ்விக்கக் கவுன்ட் வொன வால டர்சி (Count Von Waldersee) என்பவரை வெளிநாட்டினர் படைக்குத் தளபதியாக்கினர். ஆனால், பீக்கிங்கு நகர் பிடிக்கப்படும்வரை அவர் வந்து சேரவில்லை. எனவே, உருசியத் தளபதி இலினிவிசசு (Linievitch) அப் பொறுப்பை ஏற்று நடததினார். அப்போரில் இலட்சக் கணக்கான சீனர்கள் கொல்லப்பட்டனர். கிராமங்களும், நகரங்களும் அழிக்கப்பட்டன. சரியான தலைவர்களின்றி இவ்வியக்கம் தோல்வியுற்றது. குத்துச் சண்டை வீரர்கள் உடன்படிக்கை (Boxer Protocal) 1901 ஆம் ஆண்டில் ஏற்படுத்தப்பட்டது. மஞ்சு அரசுக்கு இதனால் பெரும் இழப்பு ஏற்பட்டதுடன் அதன் வீழ்ச்சிக்கும் இக் கிளர்ச்சி காரணமாய் அமைந்தது. இவ்வாறு பல கிளர்ச்சிகள் சீனாவில் தோன்றியதன் விளைவாகச் சீனர்கள் விழிப்புற்றனர். சீனாவில் 1911-இல் புரட்சி தோன்றியது.

க.பூ.சி.

**சீன-சப்பானியப் போர், முதலாம் (கி.பி. 1894-95):** செய்மைக் கிழக்கு நாடுகளின் வரலாற்றில் சீன-சப்பானியப் போர் சிறப்பான இடத்தினைப் பெற்றுள்ளது. சீனாவிற்கும் சப்பானுக்குமிடையே கி.பி. 1885-ஆம் ஆண்டு ஓர் ஒப்பந்தம் கையெழுத்தான பிறகு சில ஆண்டுகளில் சப்பானின் பேராதிக்க

உணர்வு மேலும்மேலும் வளர்ந்தது. சீனாவிற்கும் சப்பானுக்கும் இடையில் அமைந்துள்ள கொரியாவின் காரணமாக இவ்விரு நாடுகளிடையே போர் மூண்டது.

சீன-சப்பானியப் போர் உருவாகப் பல காரணங்கள் இருந்தன. கொரியாவில் உருசியாவின்செல்வாக்கு வளர்வதைச் சப்பான் விரும்பவில்லை. எனவே, சப்பான் உருசியாவின் ஆதிக்கத்தை முறியடிக்கத் தக்க நடவடிக்கைகளை மேற்கொண்டது. உணவுப்பற்றாக் குறையினால் வாடிக் கொண்டிருந்த சப்பான், நெல் மிகுதியாக விளையும் கொரியாவில் தன் அரசியல் செல்வாக்கை நிலைநாட்ட விரும்பியது.

அண்டை நாடான கொரியாவில் உள்நாட்டுக் குழப்பமும் கலவரங்களும் தலைவிரித்தாடின. இந்நிலையில் சப்பான் கொரியாவின் விவகாரங்களில் தலையிட்டு அமைதியை நிலைநாட்ட முயன்றது. சப்பானின் தலைமை அமைச்சராக இருந்து ஈட்டோ, தம் நாட்டில் அரசுக்கெதிராக எழுந்த அரசியல் கட்சிகளைத் திசை திருப்பப் போரில் இறங்கவும் தயாரானார். சீனாவும், சப்பானும் கி.பி.1885-ஆம் ஆண்டில் கையெழுத்தான தினசுட்டின (Tienstein) உடன்படிக்கையைச் செல்லாததாக்க விரும்பின. கொரியாவில் தம் செல்வாக்கை நிறுவ, ஐரோப்பிய நாடுகள் பல முனைந்தன. இதனைக் கண்ட சப்பான் கொரியாவில் தானே முன்னணியில் நிற்க எண்ணியது. கொரியாவில் ஏற்பட்ட ஒரு கிளர்ச்சியே, சீன-சப்பானியப் போரின் உடனடிக் காரணமாகத் திகழ்ந்தது. அக்கிளர்ச்சி சமயத் தொடர்புடையது. சமய இயக்கமாகத் திகழ்ந்த அந்த இயக்கம் விரைவில் ஓர் அரசியல் இயக்கமாக மாறியதால், நாட்டில் கொலைகள் மலிந்தன. இதனை அடக்க இயலாத சூழலில் கொரிய அரசு, சீன அரசின் படை உதவியை நாடியது. சீனப்படை கொரியா வந்தடைந்தது. ஒப்பந்தப்படி சீன அரசு சப்பானுக்கு இதனைத் தெரிவித்தது. சப்பான் படையும் கொரியாவை அடைந்தது. இப்படைகள் கொரியாவை அடையும் முன்பே இக்கிளர்ச்சி ஒடுக்கப்பட்டது. எனவே, இரு நாடுகளின் படைகளையும், கொரியாவை விட்டு வெளியேற வேண்டுமென்று கொரியா ஆணையிட்டது. கொரியச் சிக்கலில் சப்பானின் தலையீட்டைச் சீனாவும், கொரியப் பிற்போக்காளர்களும் எதிர்த்தனர். சீனாவின் தூண்டுதலால், கொரிய அரசு சப்பானை வெளியேறுமாறு வேண்டியது. சப்பான் இக்கோரிக்கைகளைப் புறக்கணித்ததுடன், சீனப் படைகளே முதலில் வெளியேற வேண்டுமென வற்புறுத்தியது. இந்நிலையில் இரு நாடுகளும் மேலும் மேலும் தம் படைகளைக் கொரியாவில் குவித்தன. சப்பான் திடீரெனக் கொரியாவின் தலைநகரான சியோலைக் கைப்பற்றியது. சீனப்படைகள் வெளியேற்றப்பட வேண்டுமென ஆணையிடக் கொரிய அரசை வறபுறுத்தியது சப்பான். சீன-சப்பானியப் போர் தொடங்கியது.

**போரின் போக்கு:** மேலை நாட்டுப் புதியப் போர் முறைகளைக் கற்றிருந்த வலிமை மிக்க சப்பானியப் படை, சீனப்படைகளை இரண்டே மாதங்களில் கொரியாவிலிருந்து விரட்டியடித்தது. 'யாலு' நதிக்கரையில் சீனாவின் கப்பற்படையும் தோற்கடிக்கப்பட்டது. 'போர்ட் ஆர்தா துறைமுகம்' சப்பானியா வசமாயிற்று. மஞ்சூரியாவைக் கைக்கொண்ட சப்பான் சீனாவின உட்பகுதியில் நுழைந்து சாண்டுங்கு மாகாணத்தின் வடக்கிலுள்ள வைகைவைத் (Wai-Hai-Wai) துறைமுகத்தையும் கைப்பற்றியது. அச்சமுற்ற சீனா, சப்பானுக்கு அடிபணிந்தது. கி.பி.1895-இல் சிமோனாசெகி உடன்படிக்கையில் (Treaty of Shimonoseki) கையெழுத்திட்டது. அவ்வுடன்படிக்கையின் முக்கிய அமிசங்களாவன: 1) கொரியா சுதந்திர நாடாக்கப்பட்டது. 2) இலியோடுங் தீபகற்பமும், பார்மோசாத் தீவும், பாசுகபோர்சுத்தீவுக்கூட்டங்களும் சப்பானுககு வழங்கப்பட்டன. 3) சீனா சப்பானுக்குப் போர் இழப்பீடாக 251,602,56 பொறகாசுகளை வழங்க ஒப்புக்கொண்டது. அத்தொகை கொடுக்கப்படும் வரை வைகைவைத் துறைமுகப்பட்டினத்தைச் சீனா சப்பானிடம் பிணையாக வைத்தது. 4) சாசி(Sahsi) சுங்கிங்கு (Chung King), சூச்செள (Soochow), காங்செள (Hangchow) ஆகிய நான்கு துறைமுகங்களையும் சப்பானிய வாணிகத்திற்குச் சீனா திறந்து விட்டது. மேலும், ஐரோப்பிய நாடுகளுக்குச் சீனாவில் அளிக்கப்பட்ட சலுகைகள அனைத்தும், சப்பானுக்கும் அளிக்கப்பட்டன. 5) சப்பான் சில பொருள்களைச் சீனாவில் உற்பத்தி செய்ய உரிமை பெற்றது. அப்பொருள்களுக்கு எல்லாவித வரிகளிலிருந்தும் விலக்களிக்கப்பட்டது.

**விளைவுகள்:** இப்போர் தூரக் கிழக்கு நாடுகளின் வரலாற்றில் குறிப்பிடத்தக்க ஒன்றாகும். இப்போரின் விளைவாகச் சப்பானின் பெருமை யாங்கணும் உயர்ந்தது. அது பல நன்மைகளைப் பெற்றது. சீனாவின திறமையின்மை உலகுக்கு நன்குபுலப்பட்டது. சீனத் தோல்வியின் விளைவாக, ஐரோப்பிய நாடுகள் சீனாவைத் தங்களுக்குள் பங்கு போட்டுக்கொள்ள நினைத்தன. கொரியா விடுதலை பெற்றதும, பார்மோசா சப்பானுக்கு வழங்கப்பட்டதும் சீனாவிற்குத் தீங்காக முடிந்தன. இலியோடுங் தீபகற்பம் சப்பானுக்கு வழங்கப்பட்டதை உருசியா (Russia) எதிர்த்தது, உருசியா, செருமனி, பிரான்சு ஆகிய நாடுகள், சப்பான் இலி

யோடுங் தீபகற்பத்தைச் சீனாவிடமே ஒப்படைக்க வேண்டும என்று வற்புறுத்தி, அதில் வெற்றியும் கண்டன. இலியோடுங் தீபகற்பத்திறகு இழப்பீடாகச் சப்பான், 49 மிலியன் பொற்காசுகளைப் பெற்றது. இந்நிகழ்ச்சிக்கு முழு முதற்காரணமாக விளங்கிய உருசியாவைப் பழிவாங்கச் சப்பான் தகக சமயத்தை எதிர் நோக்கியது. சீனாவின தோல்வி, சீனாவில் மஞ்சுவமசத்தின் வீழ்ச்சிக்கு வழி வகுத்தது. சீன மக்கள பல சீர்திருத்தங்களை விருமபினர். பல கட்சிகள் தோற்றுவிக்கப்பட்டுச் சீனாவிற்குப் புத்துயிர் ஊட்ட முயற்சிகள மேற்கொள்ளப்பட்டன. சீனாவில் கன்பூசியக் கோட்பாடு மறைந்தது. மேலை நாடுகளின் கொளகைகளும் கோட்பாடுகளும் அதன இடத்தைப் பிடித்துக் கொணடன. சீனா ஐரோப்பிய நாடுகளின வேட்டைக் காடாக மாறியது.

**சீன சப்பானியப் போர் - இரண்டாம்** (கி.பி. 1937-1941): ஆதிக்க மனப்பானமை கொணட சப்பான் சிறுகச் சிறுகத் தன் ஆதிக்கத்தை வடசீனா முழுவதிலும் பரப்புவதில முனைநதது. அதனால சப்பானியப் படைகளுக்கும் சீனப் படைகளுககும் அடிககடி கைகலப்பு ஏற்பட்டது. இக் கைகலபபுகளைப் பயன படுததிச சபபான, 1937-ஆம் ஆணடு சீனாவின மீது போர் தொடுத்தது. இபபோர் 1941-ஆம் ஆணடு முடிவுற்றது.

**காரணங்கள்:** 1. சப்பானின் ஆக்கிரமிப்புக கொளகையே இப்போரின் முதறகாரணம ஆகும். 2. கருத்து வேறுபாடுகொணட கோமினடாஙகுக்கட்சியும் பொதுவுடைமைககட்சியும் சப்பானிய ஆதிக்கததை எதிர்க்கும பொருட்டு, ஒனறுபட்டு இணைநது செயற பட்டன. அதனால், சப்பான் ஆததிரமடைநதது. 3. சீனப் பொருளாதாரம் நலிந்ததறகுச் சப்பானே காரணம் என்று சீனர்கள் கருதினா. தஙகள நாட்டின பொருளாதார முனனேற்றததிற்குத தடையாக நிறகும் சப்பானின் ஆதிககத்தைச் சீனாவில் ஒழிக்க வேணடுமென்று சீனாகள் விரும்பினர். 4. சப்பானின் முதலமைச்சர் 'கிரோதா கோக்கி' என்பார் கிழக்காசியாவில அமைதியைப் பராமரிக்கும் முழுப் பொறுப்பையும் சப்பான மேற்கொணடுளளதாக 1934-இல் அறிககை ஒன்றினை விடுததார். அயல் விவகார அமைச்சக உயரதிகாரியான அமான் எய்சி (Aman Eiji) அமெரிக்கா, செருமனி முதலான அநநிய அரசுகள் சீனாவுக்கு ஆயுத உதவியும், நிதியுதவியும் செய்வதைக் கண்டித்து எசசரிக்கை விடுத்தார். இது 'சப்பானிய மன்றோ கோட்பாடு' எனச் சொல லப்பட்டது. இதற்கு மறுப்புத் தெரிவிக்கும் வகையில் சீனாவும் ஓர் அறிககைய வெளியிட்டது. அதனால், இரு நாடுகளுக்கிடையே பகைமை வளர்ந்தது. 5. சப்பான், 1933-ஆம் ஆண்டு செகோல் என்ற மாநிலத்தைக் கைப்பற்றிக் கொண்டது. அதிலிருந்து சீனாவை அகப்படுத்தும் நோக்குடனேயே அது செயற்பட்டு வந்தது. அதற்கேற்ப 1935-இல் தியன்சின் என்னுமிடத்தில் சப்பானியச் செய்தித்தாள் நிருபர் இருவர் கொல்லப் பட்டனர். அந்நகரத்தில் சப்பானியர்கள் பல சலுகைகளைப் பெற்று வாழ்ந்து வந்தனர். இந்நிகழ்ச்சியைப் பயன்படுத்திச் சப்பான் கோ-உமேது (Ho-Umedu) என்னும் ஒப்பந்தம் ஒன்றினைச் சீனாவுடன் செய்து கொண்டது.

6. வடக்குக் கோப்பே மாநிலத்தில் 1937-ஆம் ஆண்டு தளபதி சங் செ யுவான் (Sung Chch Yuan) என்பாரின் தலைமையில் சீனப் பாதுகாப்புப்படையொன்று நிறுத்தி வைக்கப்பட்டிருந்தது. அப்போது எல்லைப் பகுதிகளில் இருந்து வந்த சப்பானிய வீரர்கள் சீன வீரர்களைக் கேலியும் கிண்டலும் செய்து வந்தனர்.

சப்பான் மஞ்சூரியாவைக் கைப்பற்றிய பின்னர் கைலுங்குகியாங்கு, கிரீன், இலியோனிங்கு என்னும் மூன்று மாநிலங்களையும் இணைத்து, மஞ்சுகோ எனும் பெயரில் பொம்மை அரசு ஒன்றினை நிறுவியது. இதனைச் சீனா கடுமையாக எதிர்த்தது. சீனர்கள் கிளர்ச்சியில ஈடுபட்டனர்.

சப்பானியப் பிரதமர் கிரோட்டா கீழ்க்காணும் மூன்று அமிசக் கோரிக்கை ஒன்றைச் சீன அரசுக்கு அனுப்பினார். 1. மஞ்சுகோவைச் சீனா அங்கீகரிக்க வேண்டும். 2. சப்பானுக்கு எதிரான ஆர்ப்பாட்டங்களை ஒடுக்க வேண்டும். 3. சீனப் பொதுவுடைமையாளர்களை நசுக்குவதில் சப்பானின் உதவியைச் சீனா ஏற்றுக்கொள்ள வேண்டும்.

**உடனடிக்காரணம்:** பீக்கிங்கு நகருக்குத் தெற்கில் இருபது கல் தொலைவில் 1937-இல், வான்பிங்கு என்னும் சிறு நகரில் மார்க்கோ போலோ பாலம் (உலுக் கௌசியா என்னுமிடம்) அருகில் பாசறை அமைத்திருந்த சீனப் படைவீரர்கள மீது சப்பானிய வீரர்கள் சுட்டனர். இதுவே 'உலுக்கௌசியா நிகழ்ச்சி' என்று கூறப்படுகிறது.இந் நிகழ்ச்சி பற்றி இருதரப்பினரும் ஒருவரை ஒருவர் குறை கூறினர்.

**போரின் போக்கு:** உலுக்கௌசியா நிகழ்ச்சிக்குப் பின் சப்பான் பீக்கிங்கு அருகில் தனது படைகளைக் குவித்தது. சீனப் படைகள் பீக்கிங்குக்கும் தியன்ட்சனுக்கும் தெற்கில் பின்வாங்கிச் செல்ல வேண்டுமென்று சப்பானிய வடசீனப் படைத் தளபதி கசூகி (Kazuki) சீனத் தளபதி சுங்கிடம் வேண்டினார்.

சுங்கு இணங்க மறுத்ததால், சப்பானியப் படை 1937 -இல் அவ்விரு நகரங்களையும் கைப்பற்றியது. பின்னர் உள் மங்கோலியாவிற்குள் புகுந்து கால்கான் நகரைக் கைப்பற்றியது. அடுத்துச் சூய்யுவான் மாநிலத்தையும் கைப்பற்றியது.

சப்பானியரால் இப்போர் யாங்கட்சிச் சமவெளிக் கும் விரிவுபடுத்தப்பட்டது. கடும்போருக்குப் பின்னர்ச் சாங்கை கைப்பற்றப்பட்டது. அடுத்து நான்கிங்கு நகரும், கடற்கரை நகரமான காண்டனும், யாங்கட்சியின் கரையிலுள்ள காங்கௌவும் வீழ்ந் தன. இருப்பினும் வடக்கிலும் மத்திய சீனாவிலும் நடைபெற்ற போர்களில் சப்பானியர் தோற்கடிக்கப் பட்டனர். சப்பானியரின் முன்னேற்றம் 1938 இறுதி யில் தடுத்து நிறுத்தப்பட்டது. அச்சமயத்தில் வட சீனா, கடற்கரைப் பகுதி, கிழக்கு மாநிலங்கள், மத்திய யாங்கட்சிச் சமவெளி ஆகியன மட்டும் சப் பானின் பிடியில் இருந்தன. மேற்குச் சீனா சுதந்திர மாய் இருநதது. உடனடியான இறுதி வெற்றிபெற முடியாததால் சப்பானிய வீரர்கள் ஏமாற்றமடைந் தனர். இந்நிலையில் இரண்டாம் உலகப் போர் மூண் டது. சீனா நேச நாடுகளை ஆதரித்தது. சப்பான் 1941-ஆம் ஆண்டு செருமனிக்கு ஆதரவாகப் போரில் இறங்கியது. இப்போர் உலகப்போரின் ஒரு பகுதியாக மாறியது. இரண்டாம் உலகப்போர் முடிவுற்றதும் சீன சப்பானியப் போரும் முடிவுற்றது. இதில் சப்பான் பெரும் இழப்பினைப் பெற்றது.

**விளைவுகள்:** இப்போரின் விளைவாகச் சீனாவில் சியாங் கே சேக்கின் செல்வாக்குக் குறைந்தது. அவரது அரசாங்கத்திலுள்ள மக்கள் ஆதரவற்றவர் களாக உணர்ந்தனர். அவரது நிருவாகம், செயலாற் றும் முறை ஆகியவற்றை மக்கள் ஐயுற்றனர். பொது வுடைமைக் கட்சியின் செல்வாக்கு விரைவில் மேலோங்கியது. அவர்கள் பன்னாட்டு அரசியல் அரங் கிலும் செல்வாக்குப் பெற்றனர். சப்பான் பீக்கிங்கில் 1937-இல் நிறுவிய சீனக் குடியரசின் இடைக்கால அரசாங்கமும், முன்பே நிறுவப்பட்டிருந்த மஞ்சுகோ அரசும் செருமனி, இசுபெயின் (Spain) இத்தாலி, உருமேனியா முதலான நாடுகளால் ஏற்றுக்கொள்ளப் பட்டன.அப்போது, உருசியா கோமின்டாங்குப்பொது வுடைமைக் கட்சியை ஆதரித்தது. இவ்வாறு சீன பொதுவுடைமைக் கட்சியின் அரசாங்கமானது உருசி யாவின் பக்கம் நெருங்கிக் கொண்டிருந்தமை, இப் போரின் விளைவுகளுள் குறிப்பிடத்தக்க ஒன்றாகும்.

ம.க.

***சீனத்தத்துவம்***: சீனத் தத்துவம் மிகச் சிறந்த உலகத்தத்துவங்களுள் ஒன்று என்று கருதப்படும். சீனாவில் தத்துவ சாத்திரத்தை (Chinese Philoso-phy) கி.மு. 551 முதல் கி.மு. 479 வரை வாழ்ந்த கன்பியூசியசு என்பவர் முதன்முதலாக விளக்கம்செய் தார். சீனாவிலுள்ள மக்களும், பிறநாடுகளிலிருந்த மக்களைப் போல் இயற்கையில் ஏற்படுகின்ற மாறு தல்களும், மக்களின் செயல்களும் கடவுள் செயல் என்று கருதினார்கள். மேலும் உலகிற்கும் மக்களுக் கும் நெருங்கிய தொடர்பு இருப்பதாக நினைத்தார் கள். ஆகையினால், இயற்கை நிகழ்ச்சிகளைக் கவ னித்து, மக்களின் எதிர்காலத்தை அறிந்து கொள்வ தற்கான மந்திரமுறைகளைக் கடைப்பிடித்தனர். அத் தகைய நம்பிக்கையைக் கன்பியூசியசு மாற்றினார். அவர் சீன இலக்கியத்தை நன்றாக ஆராய்ந்து, நான்கு பாகங்களாகவும் ஆறு சூத்திரங்களாகவும் பிரித்தார். அவைகளே சீனமக்களின் வேத நூல்களா கத் திகழ்ந்தன. ஏறக்குறைய இரண்டாயிரம் ஆண்டு களாக அவருடைய உபதேசங்களைச் சீனமக்கள் பெரிதும் பின்பற்றினர். அவருடைய உபதேசங்கள மக்களிடையே ஏற்படுகின்ற தொடர்புகளைப் பற்றி யதாகும். அவருடைய உபதேசங்களில் சிறப்பாகக் கருதப்படுவது அன்பேயாகும்.

ஓர் அரசாங்கத்தில் மக்கள் ஒருவருக்கொருவர் அன்புடையவராயிருக்கவேண்டும் என்றும், அந்த அரசாங்கமே குறிக்கோள் அரசாங்கமாகும் என்றும் கூறினார். தாவோ (Tao) மதத்தை இலவுட்சா (Lao-tza) என்னும் பெரியவர் நிறுவினார்; அவர் கி.மு. 604-ஆம் ஆண்டில் பிறந்தார். அவருடைய கொள்கை தாவோ-தே-கிங்கு என்னும் நூலில் காணப்படுகிறது. தாவோ என்னும் இயற்கைக் கொள்கை மிகவும் வல்லமையுடையது; நிலையா னது. அக்கொள்கையின்படி, இயற்கை மிகவும் அழகு வாய்ந்தது மட்டுமல்லாமல் நன்மை பயப்பதுமாகும். ஆகையினால், மக்கள் இயற்கையான வாழ்வு வாழ வேண்டும். இலவுட்சாவின் சீடரான சாவுண்ட்சே (Chauntzc) கூறிய அறிவுரை என்னவென்வில், துறவி களையும் அறிஞர்களையும் புறக்கணித்துவிடவேண் டும். அப்பொழுது தான் வழிப்பறி நிற்கும். நவரத்தி னங்களைத் தூர எறிந்து விட்டால் களவு நின்று விடும். மனிதர்கள் எளிய வாழ்க்கையைக் கடைப் பிடிக்க நினைவுச் சின்னங்களையும், ஆசனங்களை யும் அகற்றி விடவேண்டும். சண்டைகளையும் கல வரங்களையும் நிறுத்த நாழியையும் தராசையும் உடைக்கவேண்டும் என்று சாவுண்ட்சே கூறினார். இலக்கியம், சட்டம், அரசியல், அறநெறிகள் தீமைக் கும் பாபத்திற்கும் இருப்பிடம் என்று கருதினார். குயிசி (Hui-shic) என்பவரும் குங்-சன் லுங்கு (Kung-Sun lung) என்பவரும் சாவுண்ட்சே (Chaun-tze) கூறியதனை ஒத்துக் கொண்டனர். மோட்சே (Mo-tze) என்பவர் சிறந்த அறிஞர். அவர் அன்பு

யும் போர் செய்யாமையையும் நடைமுறையில் பின் பற்றினார். கான் பெயி-ட்சே (Han-Fei-Tze) என்பவர் சட்டத்தைச் சிறப்பாகக் கொணட தத்துவ சாத்திரத்தை எழுதியவர். அவர் சட்டத்தையும் அதிகாரத்தையும் அரசியல் முறைகளையும் மனிதன் புறக்கணித்தல் கூடாதென்றும், அவைதாம் மக்களுககு நனமையளிப்பவை என்றும், மக்கள் இன்பமாக வாழ அறிவைப் பயன்படுத்தவேணடும் எனறும் கூறினாா. சீனாவில் தோன்றிய தத்துவ சாத்திரங்களில் பெரும்பாலானவை 'அகத்தில் ஞானி, புறத்தில் அரசன்' என்ற கொளகையுடையன. அவை மனிதனுடைய ஒழுகக குணங்கள் எவை என்று சிந்தித்தன. நூலறிவிறகுச் சிறப்பிடம் அளிக்கவிலலை. ஒழுக்கத்திறகே சீனத்தத்துவம் சிறப்பிடம் அளிக்கிறது. (கி.மு. 221 - கி.பி. 960) சீன நாட்டினை இடைக்காலத்தில், சட்டத்தைச சிறப்பாகக் கொண்டவர்கள ஆண்டு வந்தார்கள். கனபியூசியசினகொள்கை கி.மு.136-க்கு முன் மேலோஙகியிருந்தது.

புத்த சமயம் சீனாவில் பொதுமககளால் ஆதரிக கப்பட்டது. கி.பி. 6-ஆம நூறறாணடில் இருத்தல (Being), இருத்தல் இனமை (Nonbeing) எனற சிக்கல்கள இரணடு பெரிய புத்தப் பளளிகளில தோன றின. கடைசியில சிககல்கள மறைநது போயின. தியானக் கொள்கையைப போதி தர்மா எனபவர் (Bodhi-dharma) புகுத்தினார். அவா பற்றுதல் இலலாமல, எநதப் பொருளிலும நாட்டமிலலாமல தியானததில் அமர்ந்திருக்க வேணடும எனறார்.

இக்காலத்துககுரிய (கி.மு 960- கி பி. 1912). கொளகையானது, புதியகனபியூசியசு கொள்கை எனபதாகும். அக்கொள்கை ஒன்று பலவாகவும், பல ஒன றாகவும் சேரும் என்பதாகும. பகுத்தறிவுளள புதிய கன்பியூசியசு கொளகை, பகுத்தறிவுக் கொள்கை என வும் கருத்துக் கொள்கை எனவும இருவகைப்படும. செங்-சுவின் (Cheng-chu) கருதது மனிதனுடைய தன்மை குறைபாடில்லாத குணங்களோடு மட்டும் நின்றுவிடாமல், மற்றும் பல தனமைகளைக் கொணடிருக்கவேணடும். மனிதனிடம் ஒழுங்கான குணங்கள் அமைந்திருக்கவேணடும். சென் (Sen) என்றால உயிர் கொடுககின்ற சக்தி எனறு பொருள்படும். அது மிகவும் சிறப்புடையது. ஒவ்வொரு மனிதனிடமும் அது அடங்கியிருககிறது. மனிதனுடைய கடமை அதனை வளர்ச்சியடையச் செய்தலாகும். செங்-காவோ (Cheng Hao) என்பவர் மேற்கூறிய உயிர்ச்சக்தி எல்லாப் பொருள்களிலும் காணப்படுகிறது; அது நன்மை தீமைகளைப் பிரித்து அறியும் சக்தியுடையது. மனம் அமைதியாயிருப்பதறகுத் தான் என்ற அகங்கார குணம் இல்லாமலிருக்க வேண்டும்; வஞ்சனை இல்லாதிருக்கவேண்டும் என்று கூறுகிறார்.

கருத்தியலான புதிய கன்பியூசியசு கொள்கை (Idealistic Neo-confucianism), பகுத்தறிவு வாய்ந்த புதிய கன்பியூசியசு கொள்கைக்கும் (Principle) பருப்பொருள தன்மை வாய்ந்த சக்திக்கும் (Material Force) இடையே ஒரு சமநிலையை ஏற்படுததுகிறது. யு-கிசியாங-சான் (Ui Hsiang-shan) என்பவா மனந்தான கொளகையின் அடிப்படை என்றார்.

சீனத் தத்துவத்தில் 20-ஆம் நூற்றாண்டில் சிறிது குழப்பநிலை ஏறபட்டது. மேலை நாடுகள சீனக் கொள்கைகளில் தலையிட்டன சேம்சு (James), தூயி (Dewey) முதலியவர்களின் பயன்வழிக் கொளகையைப் (Pragmatism) புரட்சித் தலைவரான கியு சி (Hu-shih) மக்களுககு எடுத்துரைத்தார். மார்க்சின தத்துவத்தை மக்கள் பினபற்றினா. பங்-யு-லான (Fung Yu-lan) எனபவர் கி.பி. 1895-ஆம் ஆணடில் பகுததறிவுக கொளகையுடைய புதிய கனபியூசியசு கொள்கையை வளர்ததா. கிசியங-சி-லி (Hsiung shih-li) என்பவர் கருத்தியல் சாாபான புதிய கனபியூசியசு கொள்கையை மக்களுககு எடுத்துரைத்தா. சாங்-துங்-சன் (Chang Tung-San) என்பவரின கொள்கையைத் திருத்தியமைககபபட்ட காணடின கொளகை எனறும, அறிவாராய்ச்சியுடைய பனமை வாதம் என்றும் கூறுவர். இவரது கொளகை காணடின (Kant) கொளகையிலிருநது பெறபபட்டதே. ஆயினும், காண்டின் சில கருததுகளை இவர் ஒத்துக கொள்ளவில்லை. அது போலவே அறிவினையும் அனுபவத்திற்கு முனபும் பினபும் எனற வேறுபாட்டினையும இவா ஒத்துககொளளவிலலை. இவா கருதது அறிவென்பது புலனகாட்சியும், கருததுணாவும், மன உணர்வும் ஒருங்கிணைந்தது என்பதே. இவா மேல நாட்டுத் தருக்கவியலை இக்கால உளவியலுடனும், சமூக இயலுடனும இணைததார். இரணடாம் உலகப் போரின்போது புலனகடந்த நுண பொருள் ஆராயசசியிலிருநது, சமூக இயலுககுக் கவனத்தைச் செலுததி, மாாகசின கொளகையை ஆதரித்தாா. மார்கசின தத்துவம செயல் முறைககு உகந்ததாகவும், அறிவியல தொடர்புடையதாகவும், பொதுமக்களைக் கவர்வதாகவும் அமைந்திருககிறது என்று இவா கூறினார். இரா.கோ

**துணை நூல்கள்:**

**Creel, H.G.**, Chinese Thought, from Confucius to Mao Tse Tung, Chicago, 1953.

**Fung Yu-lan**, The spirit of Chinese Philosophy, translated by E.R. Hughes, London, 1947.

**Hou Wai-lu et al.**, A short History of Chinese Philosophy, translated by Wangcheng chung, Peking, 1959.

*சீனப்புரட்சி*(கி. பி. 1911): சீனப்புரட்சி சீன வரலாற்றில் மாபெரும் மாற்றங்களை ஏற்படுத்திய தால் வரலாற்றுச் சிறப்புப் பெற்றுள்ளது. இப்புரட்சி கி.பி.1911-ஆம் ஆண்டில் தோன்றியது. இது நெடிது நாள் சீனாவை ஆண்ட மஞ்சு அரச குலம் வீழவும், சீனாவில் குடியாட்சி மலரவும் காரணமாக அமைந் தது. சற்றேறத்தாழ இரண்டாயிரம் ஆண்டுகளாக 'விண்ணார்ந்த பேரரசு' என்ற நிலையில் செம்மாந்து நின்ற சீனா, வலிமையின்மையின் காரணமாக நாட்டின் எல்லைகளையும் உரிமைகளையும் மக்களின் இறைமையையும் கூடக் காப்பாற்றிக் கொள்ள இயலாத வகையில், பல தடவை ஐரோப் பியர்களால் தோற்கடிக்கப் பட்டு, அவமானத்தால சோம்பிக் கிடந்தது. ஏறத்தாழ 267 ஆணடுகள் சீனாவை ஆண்டு வந்த மஞ்சு வம்சம் கி. பி. 19-ஆம் நூற்றாணடின் இறுதிப் பகுதியில் உள் நாட்டுக் குழப்பங்களாலும், பொருளாதாரச் சீர்குலை வினாலும, அயல்நாட்டினரின செல்வாக்காலும் பெரிதும் பாதிக்கப் பட்டு வலிமை இழந்தது இத்தகைய சூழலில் தோன்றிய அடுக்கடுக்கான பல நிகழ்ச்சிகள் சீனாவில் 1911-ஆம் ஆண்டில் புரட்சி தோன்ற வழி வகுத்தன.

**காரணங்கள்:** 1 )சீன மக்கள் மஞ்சு அரச வம்சத்தினரை அயலார்களாகவே கருதினர்; மஞ்சு வம்சத்தினரும் சீனர்களைத் தாழ்வாகவே கருதினர். அதன் விளைவாக மஞ்சு அரசர்களைச் சீனர்கள் வெறுத்தனர்; மஞ்சு ஆட்சியும் செல்வாக்கிழந்தது. (2) 14.11. 1908-இல் புதிய சீனாவைப் படைப்பதில் துடிப்புடன் பணியாற்றி வந்த, அரச மூதாட்டி பேரரசி தோவேசரும் (Empress Dowger-Tsu Tsı) அவரால் சிறையில் அடைக்கப்பட்ட பேரரசரும், ஒருவர் பின் ஒருவராக ஒரே நாளில் மாண்டனர். மஞ்சு குலப் பெருமைக்கு அயராது பாடுபட்ட இவ்வம்மையாரின் இறப்பிற்குப் பின்னர், ஆட்சிப் பொறுப்பேற்ற சிறுவனும் அவனுக்குப் பாதுகாவலாக அமர்த்தப்பட்ட ஆட்சியாளனும் திறமையறறவர் களாயிருந்தனர். (3) சீனப்புரட்சி தோன்றியதறகான அடிப்படைக்காரணம் பொருளாதாரச் சீரழிவே. சீனாவில் ஏற்பட்ட மக்கள்தொகைப் பெருக்கம் உணவுப் பஞ்சம், வெள்ளச் சேதம், பருவக்காற்றுத் தவறியமை ஆகியவற்றால் சீனாவின் பொருளா தாரம் சீர்கெட்டது. மக்கள்தொகை கி.பி. 1885-ஆம் ஆண்டு 377 மிலியனாக இருந்தது 1911-இல் 430 மிலியனாக உயர்ந்தது. அதற்குத தகுந்தாற்போல, நாட்டில் உணவு உறபத்தி பெருகவில்லை; மாறாக வெள்ளம் பெருகியது. பசியாலும் பட்டினியாலும் இலட்சக்கணக்கானோர் மாணடனர். அதனால் மக்கள் புரட்சியில் ஈடுபட்டனர். (4) சீனாவில் நிதிநிலை மிகவும் பாதிக்கப்பட்டமையும், புரட்சிககுக் காரணமாயிற்று. படைச் சீரமைப்பாலும், இரயில பாதைகள் அமைத்ததாலும், புதிய கலவிச் சாலைகள நிறுவப்பட்டதாலும் அரசின செலவினஙகள மிகவும உயர்ந்தன. சீன சப்பானியப் போரின விளைவாகச் சீனா பெரும் பொருளைப் போர் இழப்பீட்டுத தொகையாகச் சப்பானுக்கு வழங்க வேணடியிருந்தது. மேலும், 1900-இல ஏறபட்ட பாகசர் கலகமும் அரசின நிதிநிலையைச் சீரகெடச் செயதது. எனவே அரசு, மககள மீது வரிப் பளுவைச் சுமததியது. மக்களோ அரசை எதிர்த்தனர், அகற்றவும் எண்ணி னர். (5) சீனாவிலிருந்து அயல்நாடுகளுககுக் குடியே றியமககள், அங்குக் கண்ட நாகரிகத்திலும் சனநாயகக் குடியரசுத் தத்துவங்களிலும் ஈடுபாடு கொணடு, தாயகம் திரும்பியதும் புரட்சி வழியில் சென றனா; புரட்சி இயக்கங்களை நிறுவினர். (6) சீனாவில புரட் சிக் கருத்துகள் காட்டுததீப்போல பரவச செய்தித் தாள்கள், தபால்தந்திப்போக்குவரத்துச் சாதனங்கள் ஆகியவை மிகவும் பயன்பட்டன. எனவே, சீர்திருத்த வாதிகள் தம் கருத்துகளை மககளிடையே எளிதில் பரப்பினர். (7) நாட்டின் மைய அரசு வலிமைமிக கதாக இல்லை. அதனால நாடு முழுவதிலும மன்ன ரின் அதிகாரம் ஏற்றுக்கொளளப் பெறவில்லை. மாநில அரசுகள் மத்திய அரசுடன் ஒத்துழைகக மறுத்தன. எடுத்துக்காட்டாக இருப்புப்பாதைகள் அமைக்கும் உரிமையை மைய அரசு அயல்நாடுகளுக்கு வழங்கியது.மாநில அரசுகளோ அதனைக் கடுமையாக எதிர்த்தன. மாநில ஆளுநர்கள் குட்டி அரசர்கள் போன்று சுய ஆட்சி செலுத்தினர். (8) அயற் படையெடுப்பினின்றும் நாட்டைக் காக்க மஞ்சு அரசர்களால இயலவில்லை. அபினிப் போர்களில இவர்கள் படுதோல்வியுற்றனர்; அண்டை நாடான சப்பானுடன் நடந்த போரிலும் தோல்வியே கண்ட னர். இதுபோன்ற அடுக்கடுககான தோல்விகளால் மக்களுக்கு வலிமையற்ற மஞ்சு அரசின மீது நம் பிக்கை தளர்ந்தது. (9) ஐரோப்பிய அரசுகள் சீனா வின் பல பகுதிகளைக் கைப்பற்றிக் கொண்டு, ஆங் காங்குத் தம் செல்வாக்கினை நிலைநாட்டின. போர் நிர்ப்பந்தங்கள் மூலம் பல சிறப்பான வாணிகச் சலுகைகளைப் பெற்ற அயல்நாட்டினர், இருப்புப் பாதைகள் அமைக்கும் உரிமையும் பெறறனர். ஐரோப்பியரின் பொருளாதாரச் சுரண்டல் சீனாவை மேலும் வறுமையாக்கியது. (10) உருசிய-சப்பானியப்

போரில், சப்பான ஈட்டிய மாபெரும் வெற்றி, சீனா வில் தேசிய உணர்சசியைக் கிளர்ந்தெழச் செய்தது. மேலும் சீர்திருத்தப் புரட்சிக் கருத்துக்களுக்கு இது உரமூட்டியது (11)சீனாவில தோன்றிய துங்-மெங்-கு (Tung-Meng-Hui) என்னும் புரட்சி இயக்கத்தின் தோற்றமும, சன-யாட்-சென்னின் வருகையும் சீனா வின் புரட்சி தோன்ற நல்லதொரு சூழலை உரு வாககின. மேறகூறப்பட்ட காரணங்களால உழவர்கள் மாணவர்கள், வணிகர்கள், ஏழைகள, மாநில ஆளு நர்கள் ஆகிய அனைத்துப் பிரிவினரும் மஞ்சு வம்ச ஆட்சியினரைத் தகர்த்தெறியத் துடித்தனா.

இந்நிலையில் இருப்புப் பாதைகளைத் தேசிய மயமாக்குவதில் ஏற்பட்ட சிக்கல், சீனாவில புரட்சி வெடிக்க உடனடிக் காரணமாக அமைந்தது. சீனா வில் இருப்புப்பாதைகள அமைக்க உரிமைகள் பெற்ற பிரிட்டன், பிரான்சு, செர்மனி, அமெரிக்கா முத லான நாடுகள மைய, தெற்கு, தென்மேற்குச் சீனா வில் இருப்புப்பாதைகளை அமைத்தன. அந்த நேரத் திலேயே சீனாவின் சில தனியார் கம்பெனிகளும் 1905 முதல் இருப்புப் பாதைகளை அமைக்கும் பணி களில் ஈடுபட்டிருநதன. சீன அரசு 1911-இல் தனி யார் இருப்புப்பாதை அமைக்கும் உரிமைகளைத் தேசியமயமாக்கியது. இவ்வாறு செய்வதன் மூலம் சீன அரசு 6 மிலியன் பவுனகளை அயலாரிடம் கடனாக எதிர்பாாத்தது. இதனை அறிந்த புரட்சியாளர்களும் மாநில ஆளுநர்களும் கலகம் செய்தனர். செக்வான் மாநிலத்தில பெருங்கலகம் ஏற்பட்டது. 9.10.1911 -இல ஆனகௌ (Hankow) நகரில் வெடிகுணடு ஒனறு வெடிததது; அதனால புரட்சியும் தோனறியது. அதைத தொடர்ந்து இராணுவப் புரட்சியும் ஏற் பட்டது. இலீ-யுவான-கஙகு(Lee-Yuan-Hung) புரட்சி அணியின் தலைவராகப் பதவி ஏற்றார். புரட்சி காட்டுத் தீயெனப் பரவியது. ஆன்கௌ, கன்யாங்கு ஊசாஙகு (Hankow, Hanyang, Wuchang) முதலான நகரங்கள புரட்சியாளர்களால கைப்பற்றப்பட்டன. யாஙட்சி நதிப் பளளத்தாக்கிலிருந்து புரட்சி படிப்படி யாகத் தென் மாநிலஙகள முழுவதும் பரவியது. வட மாநிலங்களில புரட்சி பரவவில்லை.

**புரட்சியின் போக்கு:** காட்டுத் தீப்போல புரட்சி பரவி, ஏறத்தாழ 18 மாதங்களில் 14 மாநிலங்களில் புரட்சிக் கொடிகள பறநதன. இந்நிலையில் மஞ்சு அரசாஙகம செயலிழந்து காணப்பட்டது. பேரரசரும அரசவையாரும் கலககமுற்றனர். புதியதாக நிறுவப் பட்ட தேசிய சபையும் புரட்சியைப் பயன்படுததிக் கொணடு, அரசிடம பல புதிய உரிமைகளை வழங்கு மாறு வற்புறுத்தியது. இநநிலையில் தளபதி யுவான -சி-கே தலைமையமைசசராக அமர்த்தப்பட்டார். யுவான்-சி-கேயிடம் நம்பிக்கை கொண்டிருந்த சுன்-யாட்-சென அவராலேயே சீனாவில் குடியரசை அமைக்கலாம் எனறு கருதினார். ஆனால தலைவராக அமர்ந்த யுவான்-சி-கே குடியரசு இலட்சியங்களுக்கு மாறாக நடக்க முற்பட்டார். படை வலிமை அவரிட மிருந்ததால் தம் விருப்பம்போலச் செயலாற்றத் தொடங்கினார்; அடக்குமுறை ஆட்சியை அமைத்தார். அதைக் கண்ட சுன்-யாட்-சென்னின் தொணடர்கள் புதிய தலைவரான யுவானுக்குப் பகையாகக் கிளர்ச சிகள் செய்யலாயினர். சுன-யாட்-சென், 1911-இல் நிறுவிய கோமின்டாங்கு என்ற தேசிய கட்சி புரட் சியில் இறங்கியது. இப்புரட்சி, யுவானால் நசுக்கப் பெற்றது. சன்-யாட்-சென சப்பானுக்குத் தப்பி ஓடி னார். யுவான் தானே அரசராக முயறசி செயதார். அதற்கு நாட்டில் எதிர்ப்பு இருந்ததால் உள்நாட்டுக் கலகம் தொடர்ந்தது. இநத நிலமையைப் பயன் படுத்திக் கொண்ட சப்பான சீனாவைத் தன் ஆதிக்கத் தின்கீழ்க் கொணர முற்பட்டது. இத்தருணத்தில முதலாம் உலகபபோர்தொடஙகியதால், சீனாவின நிலைமை தொடர்நது குழப்பஙகளுக்கு உட்படலா யிற்று முடிவாக, 1911-ஆம ஆணடு சீனப்புரட்சியின விளைவாக, 1912-இல் சீனாவின மஞ்சு குல அரசு முடிவுற்றது. முடியாட்சியை எதிர்த்த குடியரசுத் தலைவர்களின் தோல்வியின் காரணமாகச் சீனா, பொது உடைமைககட்சியின் ஆதிககத்தை ஏற்றுக் கொளள வேணடியநிலைமை ஏறபட்டது. ம.சு.

***சீனப் பெருஞ்சுவர்*** உலகின் மிக நீளமான சுவராகும. இதன் நீளம் 2,410 கி.மீ. ஆகும். சீனப் பெருஞ்சுவர் சீனாவின் வடபகுதியில் உள்ள கிழக்குக கடற்கரைப் பகுதி ஊரான சான்-கை-கூன்(Shan-hai-Kuan) என்ற இடத்திலிருநது கான்சுப் (Kansu) பகுதி வரை நீண்டு செல்கிறது. சீனர்கள இச்சுவரைச சீன நீட்டளவை முறையில 10,000 இலி (Li) நீளச் சுவர் (The Wall of Ten thousand Li) எனக் கூறுகின்றனர். இலி 0.5கி.மீட்டருக்கு சமமானது. சீனப் பெருஞ்சுவரின் உயரம் 8 மீட்டர் ஆகும். இச்சுவரில் ஆங்காங்கே உள்ள இடைவெளிகளில 11 முதல் 12 மீ. உயரமுடைய சிறு கோபுரங்கள காணப்படுகின்றன. இவை180 முதல் 270 மீ. இடை வெளிகளில் தொடர்ச்சியாக உள்ளன.

இச்சுவரின் அடிபபகுதியின் அகலம் 8 மீட்டரும் மேறபகுதியின் அகலம் 5 மீட்டரும் ஆகும். சுவரின் இடையில் மண், செங்கல், கருங்கல் ஆகியவறறை நிரப்பிப் பாதைபோல் செய்து உள்ளனர். இவற்றின் மேல் செங்கற்களைப் பரப்பிச சுண்ணாம்பால் பூசி உள்ளனர். சுவரின் மேல உளள இப்பாதை குதிரை வீரர்கள் செல்வதற்கு ஏற்றவாறு அமைக்கப்பட்டுள் ளது.



சீனப் பெருஞ்சுவர்

இச்சுவரை முழுவதும் அறிவியல் வளர்ச்சியுறாத காலத்திலேயே கைகளால் கட்டியுள்ளனர். இதனைக் கட்ட நூறு ஆண்டுகளுக்கும் மேற்பட்ட காலம் பிடித்தது எனக் கூறப்படுகிறது. சீனாவின் சின் (Chin) மரபுப் பேரரசர் குட்டையாக இருந்த சுவரை உயரமாக்கினார். தொலலியல் ஆயவுகளின் மூலம் சின் மரபு காலத்திற்கு (கி.மு. 221 முதல் கி.பி. 206 முடிய) முன்பே இச்சுவர் எழுபபப்பட்டது எனபது கணடு பிடிக்கப்பட்டது. சா ஆரெலஇசிட்டீன் (Sir Aurel Stein) என்பவர் சிஙகியாஙகு (Sinkiang) என்ற பகுதியில் உள்ள பாலை நிலப்பகுதிகளில ஆய்வு செய்து இச் சுவரின் பகுதிகளைக் கண்டு பிடித்தார். இப்பகுதியில் உளள சுவர் ஆன் மரபு (Han period) காலத்தில் (கி.மு. 202 முதல கி பி. 220 முடிய) கட்டப்பட்டது என்பதை இவர் கணடுபிடித்தார். எனவே, இச்சுவர் பல்வேறு காலங்களில் கட்டப்பட்டும் பெரிதுபடுததப்பட்டும் உள்ளது. நாடோடிக்கூட்டத்தினரின் படையெடுப்பைத் தடுப்பதற்காகவே நீளமாக இச்சுவர் கட்டப்பட்டது.

சூய்(Sui)மரபினர் காலத்தில(கி.பி.589 முதல் கி.பி. 618 வரை) சீனப் பெருஞ்சுவரின் நீளம மேலும விரிவுபடுத்தப்பட்டது. மிகபபெரும் விரிவு மிங்கு(Ming) மரபினர் காலத்தில் நிகழ்ந்தது. இதன் பின்னர் வந்த அரசாகள இச்சுவரின் விரிவாக்கத்தைப் பற்றிக கருதவில்லை. இககாலத்தில் சீன அரசு இச்சுவரைப் புதுப்பித்தும் பாதுகாத்தும வருகிறது. சு.இரா.

**சீனமொழி**: ஆசிய நாடுகளில் மிகப்பெரிய நிலப்பரப்பையும மக்கள தொகையையும் கொணட நாடு சீனா. இது 9597900 ச.கி.மீ. பரப்பளவுடையது. இது உலகின் நிலப்பகுதியில் 1/14 பங்கு ஆகும். வடககில மங்கோலியா மககட் குடியரசும், வடகிழக்கில் சோவியத்து ஒன்றியமும் வடகொரியாவும், கிழக்கில மஞ்சட் கடலும், கிழக்குச் சீனககடலும், தென்கிழக்கில் தென் சீனக்கடலும், தெற்கில் வியட்நாம், இலாவோசு, பர்மா, இந்தியா, நேபாளம, பூட்டான் ஆகியவையும், தென்மேற்கில் பாகிசுத்தானும் இதன் எல்லைகளாக அமைந்துள்ளன.

சீனாகளின் மொழியாகிய சீனமொழி சீன-திபெத்திய (Sino-Tibetian) மொழிக்குடும்பத்திலுள்ள ஒரு தனித்த கிளைமொழி ஆகும் சீனதிபெத்திய மொழிக்குடும்பத்தில திபெத்திய மொழி, உலோலோ-பர்மியமொழி (Lolo-Burmean), காரன் மொழி(Karen சீன மொழி (Chinese) ஆகியன அடங்கும். ஆனால் அண்மைக்கால ஆய்வுகளில் அறிஞர்கள காரன்,

உலோலோ-பர்மியன் இரண்டும் நெருக்கமான உறவுடையவை என்ற முடிவைத் தந்துள்ளனர்.

ஒவ்வொரு சீன-திபெத்திய மொழிப்பிரிவுகளுள்ளும் பல மொழிகள் இடம்பெறுகின்றன. சீனமொழியினுள்ளும பல பிரதேச மொழிகள் (Dialects) உள்ளன. அவற்றுள் சில ஒன்றுககொன்று தெளிவற்றனவாய்க(Mutually Unintelligible)காணப்பெறுகின்றன. இவற்றிடையே ஒலிப்பு முறையிலும் இலக்கண அமைப்பிலும் வேறுபாடுகளும் உள்ளன. வடக்கு, மத்திய, மேறகுச் சீனப்பகுதிகளில மாணடரினும் தென்கிழக்குச் சீனப்பகுதிகளில் கான். காக்கர், சியாயும் (Ksiay) வழங்குகின்றன. அலுவலக மொழியாக (Official Language) மாண்டரின் பிரதேச மொழியே காணப்படுகின்றது.

சீன எழுத்து மொழி முதலில் உயர் இலக்கியங்களில (Classical Literature) இடம்பெற்றது. இது அமைபபிலும் சொலலாட்சியிலும் பேசசுமொழியிலிருந்து பெரிதும் வேறுபட்டது. பல்லாண்டுக் கால இலக்கியப் பயிற்சி உடையாருககே இது புரிந்து கொள்ளப்படும் நிலையில் காணப்பட்டது. இதில் ஆயிரக்கணக்கான வரிவடிவங்கள் இடம்பெறறன. அவற்றுள் பெரும்பான்மையும் குழப்பம் நிறைந்தவை. இச் சிக்கல் நிறைந்த சீன எழுத்துக்களே பெரும்பாலோர் கலவியறிவு பெறுவதைத் தடைசெயதன எனலாம். ஒரு திட்டம 1900-இன முற்பகுதியில் மணடரின் பேச்சு அடிப்படையில தேசிய மொழியின ஒற்றுமைக்காக உருவாககப்பட்டது. பெய்கூய் (Paihue) என்னும எழுத்துமுறை 1920-இல கண்டுபிடிக்கப்பட்டது. இது பழைய எழுத்துமுறையை மாற்றியமைததது.இதைச் சில மாதஙகளிலே கற்க முடியும். இதன வரி வடிவங்களும் எளிமையாக்கப்பெற்றன. பெரும்பாலான பொதுவடிவங்கள் உருவாக்கப்பட்டன. இவை அனைத்து வெளியீடுகளிலும் பழைய எழுத்துகளுக்குப் பதில பயனபடுத்தப்பட்டன. இது பொது மொழி அல்லது தேசியமொழி எனப்பட்டது. ஐக்கிய நாடுகளில உள்ள ஐந்து மொழிகளில் இதுவும் ஒன்றாயிற்று.

ஒரு பிரதேச மொழியின் பேச்சாளி (Speaker of the Language) தன் சொந்தப் பிரதேச மொழியின உச்சரிப்பிற்கு ஏற்பவே நூல்களைப் படிப்பதால இடத்திற்கு இடம் ஒரே மொழி ஒலிப்புமுறையில வேறுபட்டது. எனவே,பீக்கிங்குப்(Peking) பிரதேச வரிவடிவத்தின ஒலிப்பு முறையை அடியாகக் கொண்டு 1956-இல இக்காலப் பொது மொழியைப் பரப்பும் பொருட்டுப் பின-இன (Pin-yin) ஒலிப்புமுறை உருவாக்கப்பட்டு, 1958-இல் நடைமுறைக்குக் கொண்டு வரப்பட்டது.

சீனமொழி வரலாற்றறிஞர்கள் கி.மு. 500 வரையுள்ள சீன மொழியைப் பழஞ் சீனமொழி (Proto-Chinese) எனறும், கி.மு. 500 முதல் கிறித்தவ ஆண்டுத் தொடக்கம் வரையுள்ள சீனமொழியை ஆர்ச்சிய சீனமொழி (Archaie Chinese) என்றும், கிறிததவ ஆண்டுத் தொடக்கமுதல கி.பி. 1000 வரையுள்ள சீனமொழியை இடைக்காலச் சீனமொழி என றும், கி.பி. 11 முதல இக்காலம் வரை உள்ளனத இக்காலச் சீனமொழி என்றும் வகைப்படுத்துவர். பழஞ் சீனமொழி பழைய கல்வெட்டுக் காலத்தவை என்றும், அதன்பிறகு உள்ள மொழியில் பெரும்பாலும் கடன் வாங்கப்பட்டவை மிகுதி என்றும்,கன்பியூசியசு, மென்சியசு ஆகியோரின் படைப்புக்கள் ஆர்ச்சிய சீனமொழிக் காலத்தவை என்றும் குறிப்பர்.

சீனமொழியின் ஒலி அமைப்பு (Sound System) குரல் ஒலிப்பு முறையை (Tone) அடிப்படையாகக் கொண்டுளளது. எனவே, இதை ஒலிபபுமுறை மொழி (Tonal Language) என்பர்.குரல் ஒலிப்பின் வேறுபாடுகளால் ஒரே சொல்லைப் பல பொருள்படுமாறு காட்டலாம். பொதுவாக ஒரே ஒலியைத்தான் உயிர் மெய் கொண்டிருக்கும். எழுவாய் முறையால் தான் வேறுபடுத்திக் காட்டமுடியும். ஆர்ச்சிய சீன மொழியில் ஆறு குரல் ஒலிப்புகள் (Tones) உள்ளன. இக்காலச் சீனமொழியில் நான்கு மட்டுமே உள்ளன

சீனமொழிகளில் பெருமபாலும் ஈரசைச் சொற்களே உள்ளன. இக்காலச் சீனமொழியில் கூட்டுச் சொற்கள் (Compound Words)கையாளப்படுகின்றன ஓரசைச் சொற்கள் பெரும்பாலும் மெய்யில் தொடங்கும். மெய்யெழுத்தில் இவை முடிவதில்லை. மெய் இணைப்பு (Consonant Cluster) கிடையாது. சீனக் கூட்டுச் சொற்களில் முன் ஒட்டு (prefix) இல்லை. இடை ஒட்டுகள் காணப்படுகினறன. ஆனால் பெரும்பான்மையானவை பின் ஒட்டுகளாகவே (Sufix) உள்ளன. இடம் (Person), எண் (Number) இவற்றை வினைச் சொற்களுக்குப் பதில் சுட்டுப் பெயரிலேயே (Pronouns) இடுகின்றனர்.

சீன எழுத்து மொழியில் பட (Pictorial)எழுத்துக்களே கையாளப்பெறுகின்றன. சீன அகராதிகள வேறுபட்ட 40,000 அடையாளங்களைப் (Symbols) பதிவு செய்துள்ளன. ஆனால், நடைமுறையில் எல்லாக் கருத்துக்களையும் வெளியிட 10,000 அடையாளங்கள் போதுமானதாய் உள்ளன. சீனமொழி கற்றவர்களுக்கு 20,000 அடையாளங்கள் மட்டுமே தேவையாக உள்ளன. குறிப்பிட்ட சொற்கள பெரும்பாலும் ஒரு குறி அல்லது குறிகளின் கலவையால் விளக்கப்பெறுகின்றன. கி.பி. 2-ஆம் நூற்றாண்டின்

முறபகுதியில் சீன எழுத்துமுறை கண்டுபிடிக்கபட்டது எனக் கருதப்பெறுகிறது. பழங்காலச் சீனக் கல்வெட்டுக்களில் பத்து முதல் அறுபது வகைக் குறிகள காணக்கிடைக்கின்றன. இவை சாங்கு (Shang) பரம்பரைக் காலத்தவை (கி.மு. 1766-1122) எனப்படுகின்றன. இதற்குப்பின சீன எழுத்துமுறையிலுள்ள பிற்கால முன்னேற்றங்களைக் காண முடிகிறது. சூ (Chou) பரமபரை வரை (கி.மு.1122-221) இந்நிலை நீடிக்கிறது. இக்காலத்து முக்கிய வரி வடிவங்களைச 'சூ வரிவடிவம' எனக் குறிப்பிடுகின்றனா. பினனர் எழுதுவதற்குரிய தூரிகை (Brush) கண்டுபிடிககப் பட்டது இது, தடையினறி வேகமாகவும் தெளிவாக வும் எழுத வகைசெய்தது. வரிவடிங்கள புதுப்பொலிவு டன் விளஙகின.

மரபுப்படி சீன எழுத்துக்களை ஆறுவகையாகப் பாகுபடுத்துவர். இவற்றுள மிகப் பொதுவானவை சாங்-சிங்கு (Ksong-shing); 75 விழுக்காடு இவ வகையே பயன்படுத்தப்படுகிறது, மேலும, சியாங்-சிஙகு (Ksiang-kshing), சிப்-சிப்பு (Chip-ship), ஙீய் (Hui-i) சௌ-சூ (Chuau-chu) சியா-சே (Chia-chich) என்பனவும் பயனபடுத்தப்படுகின்றன தா.ஈ.

துணை நூல்:

Trimothy Shopen, Language and their status, Winthr-of Publisher, Cambridge, 1979.

**சீனர் ஆண்டுக் கணக்கீடு**: சீனரின் பண்டைய கால ஆண்டுக் கணககீடு நிலவுக்கும் கதிரவனுக்கும் ஒருங்கே தொடர்பான (Luni Solar) கணக்கீடாக இருந்தது. சாதாரணமாக ஓராணடு 12 மாதங்களாக நிலவைச் சார்ந்து பிரிககப்பட்டது. அதனைக கதிரவன கணிபபுடன இசைவு செயய 13-ஆம் மாதம ஒன்றினைச் சேர்த்து அதனை ஓர் 'ஞாயிறு ஆணடு' (Solar year) எனக் கூறினர். சீனர்கள தங்கள ஆணடுத் தொடக்கத்தை மதிநிலை மாதத்தில தொடங்குகின்றனா. அச்சமயம் கதிரவன வான் நிலையில் மீனம் (Pisces) இராசிககுள நுழையும் போது புத்தாணடைத் தொடஙகுகின்றனர். இப்புததாணடு நாள் சனவரித் திஙகள 20-ஆம நாள முதல பிப்பிரவரித் திங்கள 19-ஆம் நாளகளுக கிடையே ஓர் நாளாக உளளது. சீனர்கள வரலாறறு நிகழ்ச்சிகளைக் குறிக்க, 60 ஆண்டுகள் கொணடது ஓ காலமண்டலம் என்றனர். இக்கால மணடலம், ஆட்சி செய்யும் அரசன அரியணை ஏறியதிலிருந்தும கணக்கிடப்பட்டது பு.எ.மோ

**சீனா**: தென்கிழக்கு ஆசியாவில் உள்ள மிகப் பெரிய நாடு சீனா. இது உலகிலேயே மிக்க மக்களைக் கொணட நாடு சீனாவில் (China) சுமார் 95 கோடி மக்கள் வாழ்கின்றனர். இதன் பரப்பளவு 97,40,000 சதுரக் கிலோ மீட்டர்.




சீன அமைவிடம்

சீனாவின வடககு, மேற்கு, தெற்குத் திசைகளில உயர்ந்த மலைகள சூழ்நதுள்ளன. சீனாவின கிழககுப் பகுதி சமவெளி ஆகும். இங்கு, யாங்டீசு, ஊவாங்ஓ என்னும் பெரிய ஆறுகள் பாய்கின்றன. சீனாவின பெரிய நகரஙகள இப்பகுதியில்தான் இருக்கின்றன. சாங்கை, காணடன், தீன்ட்சுடின் சீனாவின முககிய நகரங்கள. பீக்கிங்கு நகரம், சீனாவின தலைநகரம ஆகும். இப்போது இநநகர் பெய்சிஙகு (Beijing)என்று வழஙகப்படுகிறது

தென்கிழக்குச் சீனாவில நெல அதிகம் விளைகிறது. கோதுமை, சோளம், பருத்தி, புகையிலை, கருமபு முதலியன பயிரிடபபடுகினறன. இரும்பும் நிலக்கரியும் சீனாவில் மிகுதியாகக் கிடைபபதால், தொழிற சாலைகள சீனாவில மிகுதியாக உளளன.

சீன நாகரிகம் பழைமை வாய்ந்தது. சீனர்கள 3,000 ஆணடுகளுக்கு முன்பே பட்டுத் துணிகளைத் தயாரித்து மற்ற நாடுகளோடு வணிகத்தில் ஈடுபட்டனர். காகிதத்தைச் சீனர்களே முதன்முதலில தயாரித்தனர்; அச்சுக்கலையைக் கண்டுபிடிததனர். வெளிநாட்டினர் படையெடுக்கா வணணம் சீனாவின எல்லை நெடுகிலும் சுமார் 2,400 கிலோ மீட்டர் நீளமுளள பெரும் சுவர் ஒன்றினைச் சீனர்கள

கட்டினர். கி.மு. 3-ஆம் நூற்றாண்டில் கட்டப்பட்ட இச்சுவர் இன்றும் பழுதடையாமல் இருக்கின்றது. சீனர்களின் கட்டடக் கலையின் திறமையினை இச் சுவர் வெளிப்படுத்துகினறது.




சீன நிலப்பிரிவுகள்

மட்பாணடங்கள செய்வதில் சீனர்கள் உலகப் புகழ்பெற்றவர்கள. சீனர்கள சிற்பக் கலையிலும் ஓவியக் கலையிலும் கைதேர்ந்தவர்கள்.

சீன மக்கள் பௌத்த மதத்தைப் பின்பறறுகிறார் கள். இசுலாம், கிறித்தவ மதத்தைப் பின்பற்றுபவர் களும் உணடு. சீனாவில் பௌத்தமதம், இந்தியாவி லிருந்து கி.பி. 2-ஆம் நூற்றாண்டில் பரவியது. பௌத்த சிற்பக்கலை அடிப்படையில் பல கோயில் கள் சீனாவில் கட்டப்பட்டுள்ளன. அவற்றைப் பகோ டாக்கள எனறு கூறுகின்றனர்.

ஏறத்தாழ 2,500 ஆண்டுகளுக்கு முன்பு வாழந்த கன்பியூசியசுஎனற சீனப் பெரியாரின் கொள்கைகளைப் பின்பற்றும் மதம் சீனர்களால் விருமபப்பட்டுப் பலர் அம்மதத்தினைப் பின்பறறுபவர்களாகவும் உளளனர்.

சீனாவில் பல நூற்றாண்டுகளாக மன்னர் ஆட்சி நடைபெற்றது. பல வமிசங்களைச் சேர்நத மன்னர் கள் ஆட்சி செய்தனர். செங்கிசுகான் எனற மனனர் பல அரசர்களை வென்று சக்தி வாய்ந்த ஒரு பேரரசை நிறுவினார். செங்கிசுகானுடைய பேரன குப்ளே கான் ஆட்சி ஐரோப்பா வரையிலும் பரவியிருந்தது.

சுன்யாட் சென் என்ற தலைவர் கி.பி. 1912-இல் சீனாவை ஒரு குடியரசாக மாற்றினார். சிறிது காலத் திற்குப் பின் சீனாவில் அரசியல் குழப்பங்கள் ஏற்பட் டன.

பொது உடைமைக் கட்சியினர் கி.பி. 1949-இல் சீனாவில் ஆட்சிக்கு வந்தனர். அப்போது சீனாவின் ஆட்சிப் பொறுப்பில் இருந்த சியாஙகேசேகசு பார் மோசாத்தீவுக்குத் தப்பியோடினார்.

சீனாவின் பொதுவுடைமைக் கட்சியினர் 1949 -ஆம் ஆணடு ஆட்சிக்கு வந்தனர். ‘சீன சனநாயகக குடியரசு’ எனறு சீனாவைக் குறிப்பிட்டனர். சுமார் 37 ஆண்டுகளாக உளநாட்டுக் குழப்பங்களாலும், போர் களினாலும், வெளிநாட்டினரின் படையெடுப்புக களாலும் வறுமையாக்கப்பட்ட சீனாவின் மக்களை யும், சீனாவின் பல்வேறு பகுதிகளையும் ஒற்றுமைப் படுத்துகின்ற முயற்சியில் சீனாவின் பொதுவுடைமை அரசாங்கம் முயன்று வெற்றிபெற்றது; சீனாவைப் புதிய நாடாக்கும் முயற்சியில அரசு முனைந்து தொழிற்சாலைகள் நிரம்பிய சமதரும சமுதாயத் தைச சீனாவில் அமைத்திடத் திட்டஙகள் தீட்டி வெற்றி பெற்றது. உலக வல்லரசு நாடுகளுள் ஒன் றாகச சீனா இன்று மதிக்கப்படுகிறது.

மக்களின் சுகாதார முன்னேற்றத்தில் சீன அர சாங்கம் மிக்க அக்கறை காட்டி, எலலோருக கும் கட்டாயமாகத் தடுப்பு ஊசி போட்டுத்தொத்து வியாதிகள் பரவாமல தடுத்துவிட்டது. மருத்துவர் களின் எண்ணிக்கையினை மிகுதிப்படுத்தி எல்லோருக் கும் தகுந்த மருத்துவ வசதியினைச் சீன அரசாஙகம் அளிக்கிறது.

சீன அரசாங்கம் நாட்டின முன்னேறறத்திற்காக நிலச் சீர்திருத்தங்களைக் கொண்டு வந்தது. வேளாண்மை செய்யப்படாத நிலங்களையெல்லாம், வேளாண்மை செய்ய மக்களை ஊககுவித்து, வேளாண்மை செய்யப்படாத இடங்களுக்கு மக்கள் குடியேற வழிவகுத்தது. வேளாண்மையில மக்கள் ஈடு பட்டதால் உற்பததி பெருகியது.

சீனா, 1953-ஆம் ஆணடு முதல், ஐந்தாண்டுத் திட்டங்களை தீட்டித் திட்டமிட்ட பொருளாதார முன்னேற்றத்திற்கு வழி செய்தது. தொழிற்சாலை கள் பெரும் அளவில ஏறபடுத்தப்பட்டன. சிறு நகரங் கள் பெருகின. மற்றநாடுகளோடு கடல் வழியாக வாணிகம் மேற்கொண்டதனால், கடற்கரைப் பகுதி களில் சிறிய நகரங்கள் வளரலாயின.



மஞ்சூரியாத் தொழிற்சாலை

தொழில துறையில் முன்னேற்றம் அடைய முயற்சி கள் மேற்கொண்ட சமயம், வேளாணமை நலிந்து போகாமல் இருக்க மக்கள் அரசாங்கம் தகுந்த நட வடிக்கைகளை எடுத்தது. சீனாவில் 1960 முதல் 1969 வரை, பணபாட்டுப் புரட்சி சீன அரசின் வழிகாட்டு தலோடு நடைபெற்றது. கோடிககணக்கான மகக்ள பெரும்பாலும் இளைஞாகள், பெண்கள் நகரங்களை விட்டுக் கிராமப்புறங்களுக்குச் சென்று உழவர் களோடு வாழ்ந்து, அவர்களின் உழவு தொழி லில் உதவிகள் செய்து, கிராமப்புறங்களில் முன்னேற் றம் காணப்புரட்சியில் ஈடுபட்டனர். கிராமஙகளில் சிறு தொழிற் சாலைகள் ஏற்படுத்தப்பட்டன. உழ வர்கள் வேளாண்மையில் ஈடுபட்டு, வேலையில்லாமல இருக்கும் காலங்களில் சிறு தொழில்களில் ஈடுபாடு கொள்ளச் சிறு தொழிற்சாலைகள் கிராமப்புறங் களில் தோன்றின. அதனால், சீனாவில் பொருளா தார முன்னேற்றம் ஏற்பட்டது.

**ஆன் (Han) சீனர்கள்:** சீனர்களில் 90 விழுக் காட்டினர் மரபுவழி ஆன் சீனர்கள் என்று கூறப் படுகின்றனர். சீன மொழியினை இவர்கள் பலவேறு வகையில் (Dialects) பேசுகின்றனர்.

**சீனர்களின் சமயம்:** மேலைநாடுகளில காணப் படும் சமயம் சீனர்களிடம் இல்லை. சீனர்களின்பண பாடு, ஒரு குறிப்பிட்ட சமயத்தின் அடிப்படையில் அல்லது பின்னணியில் வளரவில்லை. மேலை நாடுகளில் இருப்பதுபோல், சீனாவில் ஒரு பலமான திருச்சபை தோன்றி வளரவில்லை. சமுதாய ஒழுக்க நெறிகளும், தேசிய கொளகைகளும், சீனாவில் ஒவ்வொரு பகுதியிலும் காணப்பட்ட நம்பிக்கைகளும் சடங்குகளும், படித்தவர்களின் பண்பாடும் இணைந்து சீனாவின் சமயத்தினை வளர்த்தன. சீனா களின் மதம், இப்பின்னணியில்தான் வளர்ந்தது என் பது கூர்ந்து நோக்கற்பாலது.

மூன்று வகையான மத நமபிக்கைகளும் பாரம் பரியங்களும் சீனாவில் தோன்றி வளர்ந்தன. அவற் றைப்பின்பறறுவோருள முதலில் கன்பியூசியசு.என்ற தத்துவ ஞானியின் கொள்கைகளைப் பின்பற்றுபவர் களும், அடுத்து, தாவோ (Tao)என்ற தத்துவ ஞானி யின் கொள்கையினைப் பின்பற்றுபவர்களும.அடுத்துப் பௌத்த சமயக் கொள்கைகளைப் பின்பற்றுபவா களும் அடங்குவர்.

சீன அரசியல் சட்டத்தினபடி (1954), சீனர் களுக்குச சமய சுதந்திரம் உண்டு. நல்ல கல்வி யினை மக்களுக்கு அளித்துவிட்டால், ஒரு புதிய சமு தாய ஒழுங்கினை ஏற்படுத்திவிட்டால, குருட்டு நம பிக்கைகள தாமாகவே மறைந்துவிடும் எனச் சீனப் பொதுவுடைமை அரசாங்கம் கருதுகிறது.

**சீன அரசாங்கமும் அரசியலும்:** சீனாவில் பொது வுடைமைக கட்சி 1921-இல் தோற்றுவிக்கப்பட்டது. சீனமக்களின் குடியரசு1949-இல் தோன்றியது. சீனா வில் புரட்சி ஏற்படவும, மறுமலர்சசி தோன்றிடவும, வெவ்வேறு காலகட்டங்களில் சீனப் பொதுவுடைமைக கட்சி தன் கொள்கைகளில் தத்துவ முறையிலும் அரசியல் பின்னணியிலும், சில மாறுதலகளை ஏற படுத்திக் கொண்டது.

சாங்கை என்ற பெரிய நகரில், சீனாவின் பொது வுடைமைக் கட்சி தோற்றுவிக்கப்பட்டது. நகர்ப்புறங களில் வாழும் மக்கள் மூலம் சீனாவில் மககள் குடி யரசு ஏற்பட முடியும என்று மககள் பொதுவுடை மைக் கட்சி நம்பியது. ஆனால், 1927-இல் பொது வுடைமைக் கட்சிக்கு எதிராகச் சியாங்-கே-சேக்கு தலைமையில் இயங்கிய கோமின்டாங்கு என்றதேசிய கட்சி சீனப் பொதுவுடைமைக் கட்சியினரைச் சீனா வின நகர்ப்புறங்களிலிருந்து, இராணுவப் புரட்சியின் மூலம் விரட்டியது. இநநிலையில், பழமையான மரபு களில ஊறிப்போன கிராம மக்களின் ஆதரவினைச் சீனப் பொது உடைமைக் கட்சியினர் பெறுவதற்காகத் தங்கள அரசியல நடவடிக்கைகளைச் சீனாவினகிராமப் புறங்களில மேற கொண்டனர். சீனாவில் வேளாண மைப் புரட்சி ஏற்பட வேண்டும் என்ற கொள்கை யினைப் பரப்பினர். நிலமில்லாத உழவர்கள, நிலச் சுவான்தார்களிடமிருந்தும், பண்ணை முதலாளிகளிட

மிருந்தும், நிலங்களைப் பறிமுதல் செய்து, நிலமில்லாத உழவர்களுக்குப் பகிர்ந்தளிக்க வேண்டும் என்று சீனப் பொதுவுடைமையர் வாதிட்டு நேரடி நடவடிக்கைகளில் இறங்கினர். இந்தச் சீனப் புரட்சியின் பின்னணியில் தோன்றிய மாபெருந் தலைவர் தான் மா-சே-துங்கு ஆவர்.

சீனாவில் கிராமப்புறங்களில் வாழ்ந்த உழவர்களை, நிலச் சுவான்தார்களின் கொடியபிடியிலிருந்து விடுவிக்க, உழவர்களின் சங்கங்கள் ஒன்றுபட்டு இயங்க வேண்டும் என்று வற்புறுத்தினார் மா-சே-துங்கு. இந்தக் கருத்தின் பின்னணியில்தான் 'கிராமப்புறஙகளிலிருந்து நகரங்களைச் சூழ்ந்து கொளளல்' என்ற புரட்சிக்கான வழிமுறையினைச் சீனப் பொதுவுடைமைக் கட்சி உருவாக்கியது. இதை நடைமுறைப்படுத்துவதற்குச் சீனப் பொதுவுடைமைக் கட்சி செஞ்சேனை (Red army) என்ற ஒன்றினைக் கட்டுப்பாடுளள அங்கத்தினர்களைக் கொண்டு உருவாக்கியது. கோமிணடாங்குக் கட்சியினர் தாககுதல் நடத்தினால், அதை எதிர் ஏற்க வேண்டிய பயிற்சியும் பொதுவுடைமையினருக்குத் தரப்பட்டது. எங்கெங்குச் சீனக் கட்சியினர் செல்வாக்கு உள்ளதோ, அங்கஙகெல்லாம் வட்டார அரசாங்கத்தினை ஏற்படுத்தினர்.

சீனா 1940-ஆம் ஆண்டில் மக்கள் குடியரசினை ஏற்படுததியதிலிருந்து ஒரு புதிய சக்திவாய்ந்த அரசினை அமைத்துவிட்டனர். 'மக்களின் சனநாயக ஆதிக்கம்' என்று புதிய அரசாங்கத்தினை பற்றிக் கூறினர். சீனாவின் சமூக, பொருளாதார, அரசியல, இராணுவ முன்னேற்றத்திற்கான திட்டங்களைச் சீனப் பொதுவுடைமைக் கட்சியின் உயர்மட்டக்குழு தீட்டியது. அக்குழுவில சீன உயர் அதிகாரிகளாகச் சுமார் 200 அறிஞர்கள் உள்ளனர். சீனாவின வெளிநாட்டுக் கொள்கையினையும் இவ்வுயர்மட்டக் குழுவினரே உருவாக்குகின்றனர்.

நான்கு வகையான 'சீன மக்கள் சமுதாயம்' சீனாவில் உண்டு என்று சீனப் பொதுவுடைமை அரசாங்கம் கருதுகிறது. சமூக-பொருளாதார அடிப்படையில் சமுதாயம் கவனிக்கப்படுகிறது. 1. உழைக்கும் இனத்தினர் - உழைப்பாளிகள். 2. சிறு நடுத்தரவகுப்புக்குடிமக்கள் (Bourgeois) 3. உழவர்கள் 4. தேசிய நடுத்தர வகுப்புக் குடிமக்கள். இவர்களை மட்டும் உள்ளடக்கிய சமுதாயத்தினை 'மக்கள்' ('The People')என மா-சே-துங்கு விளக்கினார். இவர்களுக்கு எதிரியாகக் கீழ்க்காணுபவர்கள் கருதப்பட்டனர்.

1. பெரும் நிலச் சுவான்தார்கள்
2. அதிகாரத்தில் உள்ள பெரும் முதலாளிகள்
3. பெரும் குற்றங்களைப் புரிபவர்கள
4. கோமின்டாங்குக் கட்சியினர், அவர்களின் ஆதரவாளர்கள்.

ஆக, முதலில் சொல்லப்பட்ட சீனமக்கள் சமுதாயத்தினை, மக்கள் சனநாயக எதேச்சாதிகார அரசு (சீன அரசாங்கம்) சனநாயகத் தத்துவத்தின் அடிப்படையில் பாதுகாக்கும் என அறிவிக்கப்பட்டது. மக்களுக்கு எதிரியாக உள்ளவர்களை எதேச்சதிகாரத்தின் மூலம், அரசு அவர்களை அடக்கும் எனச் சீன அரசாங்கம் அறிவித்தது.

சீனப் பொது உடைமை அரசாங்கம் 1949 முதல் 1953 வரை மக்கள் மத்தியில் தன் செல்வாக்கினைப் பெருக்கியது. அரசாங்கப் பணியில், மக்களின் பேராளர்களை அமர்த்தியது.

சீன மக்களின் அரசியல் ஆலோசனை மாநாடு ஒன்றினைப் பீக்கிஙகு நகரில், 1949-ஆம் ஆண்டு சீனப் பொதுவுடைமை அரசாங்கம் கூட்டியது. இநத மாநாட்டில் 622 அங்கத்தினர்கள் கலந்து கொண்டனர். நாட்டின் எல்லாப் பகுதிகளிலிருந்தும் வந்த மக்கள் பிரதிநிதிகள் இவர்கள். சீனாவின் முன்னேற்றத்திற்காகத் திட்டஙகள் உருவாக்கப்பட்டன. 'புதிய சனநாயகத்தினை உருவாக்குவது' என்று முடிவு செய்யப்பட்டது.

**அரசியல் அமைப்புச் சட்டம்** (1954): தேசிய அளவில், நிலச் சீர்திருத்தங்கள் செய்யப்பட்டன. அரசாங்க எதிரிகள் ஒடுககப்பட்டனர். சீனாவில் உளள எல்லாத் தேசிய இனஙகளுக்கும் சம உரிமைகள் அளிககப்பட்டன. நிரநதரமான அரசியல் அமைப்புச சட்டம் எழுதப்பட்டது. இதுதான், சீனாவின் 1954 -ஆம் ஆண்டின் அரசியல் அமைப்புச் சட்டம் என்று குறிப்பிடப்பட்டது. சீனப் பொதுவுடைமை அரசாங்கத்தின் அடிப்படைக் கொள்கைகளின் எதிரொலியாக, 1954-ஆம் ஆணடின் அரசியல் அமைப்புச் சட்டம் அமைநதது. மக்கள சனநாயகக் குடியரசாக, சீனா உருவாக்கப்படும.மக்களிடமே எல்லா அதிகாரங்களும் இருக்கும். ஒற்றுமையான நாடாகச் சீனா உருவாக்கப்படும் பல்வேறு தேசிய இனங்கள கொணட நாடாகச் சீனா இருககும். அதன்படி எல்லா இனங்களுக்கும் சமமான உரிமைகள் அரசியல் அமைப்புச் சட்டத்தின் மூலம் அளிக்கப்பட்டது. சுரணடலற்ற சமுதாயம் உருவாகிட வழிவகைகள் காணப்பட்டன. பொதுவுடைமைப் பொருளாதாரம் அமைந்திடப் பொருளாதாரத் திட்டங்கள் வகுக்கப்பட்டன. தேசிய அளவில் பொருளாதார முன்னேற்றத்திற்கென்று திட்டங்கள் தீட்டப்பட்டன. தேசிய சனநாயக காங்கிரசு என்ற அமைப்பு, சீன அரசின

ஓர் அங்கமாகச் சட்டங்கள் உருவாக்கும் பணியினை மேற்கொண்டது. குடியரசின் தலைவர் பதவி உரு வாக்கப்பட்டது. நிருவாகத்தினை மேற்கொள்ள ஒரு தேசிய ஆலோசனைக்குழு அமைக்கப்பட்டது. தலைமை மக்களின் நீதிமன்றம் உருவாக்கப்பட்டது. நீதி நிருவாகத்தினை இம்மன்றம் கவனித்துக் கொண்டது.

சீனாவில் 1976-வரை, சூ-என்-லாய் (Chou-En-lai) பிரதமராகவும், மா-சே-துங்கு சீனப் பொது வுடைமைக் கட்சியின தலைவராகவும், சூ-டே (Chu Teh), அரசாங்க உயர் அதிகாரியாகவும் சீன அரசியலில் புகழபெற்று விளங்கினர். இவர்கள சீன மக்களின் அன்புக்குரிய தலைவர்களாக விளங்கினர்.

பண்பாட்டுப் புரட்சியின் விளைவாக, மாநிலங களுக்கு மிக்க அதிகாரங்கள கொடுக்கப்பட்டன. நிருவாகத்தில், இராணுவத்தின் பங்கு அதிகரிககப் பட்டது. மா-சே-துங்கு 'நிர்வாகத்தினை எளிமைப் படுத்துக' (Simplify Administration) என்ற கொள்கை யினை 1967-இல அறிவிதது வெற்றியும கண்டார். மாநிலச்சுயாட்சியுடன், கீழ்மட்டத்தில உள்ள மாவட் டங்கள்இட நிருவாக அமைப்புகள யாவறறிற்கும், அரசியல் அமைப்புச் சட்டத்தின் மூலம் அதிக உரி மைகள கொடுதது, எல்லாப் பகுதிகளிலும் உள்ள சிக்கல்களைத் தீர்க்க அதிக உரிமைகளையும, அதி காரங்களையும் வழங்கினார்.

சீன மக்களின் விடுதலைப் படை என்ற அமைப் பானது, 1965க்குப் பிறகு, சீன அரசாங்க நிருவாகப் பொறுப்பில் பெரும்பங்கினை ஏற்றது; நீதி, நிருவா கப் பொறுப்பினையும் ஏற்றது. சமுதாயத்திலபொதுச் சுகாதாரம், நிதி நிருவாகம, பொது மக்களின் நலத திற்கு ஏற்றவாறு பேருநதுப் பயணங்களை ஒழுங்கு படுததுதல போன்ற பணிகளை மேற்கொணடது.

சீன அரசாங்கத்தில் சில மாற்றங்கள 1971-இல செய்யப்பட்டன. இராணுவ அமைச்சர் இலின பியா (Lin Piao) பதவி நீக்கம் செய்யப்பட்டார். நிருவா கத் துறையில் இராணுவத்தினரின் பஙகு குறைககப் பட்டுக் குடிமக்கள் ஆதிக்கத்திற்குள கொண்டுவரப் பட்டது.

**1975-இல் உருவாக்கப்பட்ட சீன அரசியல் அமைப்புச் சட்டம்:** சீனாவில் 1966-இல் ஏற்பட்ட பண்பாட்டுப் புரட்சியின் விளைவாக, அரசியல் அமைப்புச் சட்டத்தில மாற்றங்களைச் செய்து, 1975-இல் புதிய அரசியல் அமைப்புச் சட்டத்தினை உருவாக்கிச் செயற்படுத்தினர். அதன்படி பொது வுடைமைக் கட்சியின் மத்திய குழுவின் தலைவரே சீனாவின் இராணுவ அமைச்சராக இருப்பார்.

இந்த அரசியல் அமைப்புச் சட்டத்தின் வாயிலாக உழவர்கள தங்களுக்கென்று சொந்தமாகச் சிறி தளவு நிலப்பரப்பை ஆக்கிக்கொள்ள உரிமை வழங்கப்பட்டது. உழைப்போர் வேலை நிறுத்தத்தில் ஈடுபடவும் உரிமை கொடுக்கப்பட்டது. உழைப்போர் அனைவரும் தங்கள வருமானத்தைப் பெருக்கிக் கொள்ளத் தனியார் துறையில் ஈடுபட உரிமைகள வழங்கப்பட்டன.

**சீனாவில் நிருவாக அமைப்பு முறை:** நிருவாகத் தின் ஒழுங்கு முறைக்காகச் சீனா, 29 பகுதிகளாகப் பிரிக்கப்பட்டுளளது. இதில் 21 மாநிலங்கள உண்டு. மாநிலங்கள், செங்கு(Sheng) என்று சொலலப்படுகின றன; 5 பகுதிகள் சுய ஆட்சிப் பகுதியாக அமைக்கப் பட்டிருக்கின்றன. 3 பகுதிகள நகராட்சித் தகுதி உடையன.

சீனாவில், சீனப் பொதுவுடைமைக் கட்சியின தலைமையில்தான் அரசாங்கம் நடைபெறுகிறது. 1954-ஆம ஆண்டு சீன அரசியல் அமைப்புச் சட்டத் திலிருந்து, இககொள்கை எந்தவித மாற்றமும இல லாமல், இன்றுவரை நடைமுறையில் இருந்துவரு கிறது. திருத்தப்பட்ட 1975-ஆம் ஆண்டு அரசியல் அமைப்புச் சட்டத்தில், பொதுவுடைமைக கட்சியின மேற்பார்வையில், உழைப்பாளர்களும் உழவர்களும் கூட்டாகச் சேர்ந்து சீனாவின் தலைமைப் பொறுப் பினை ஏற்று, வழிநடத்திச செல்ல வேண்டும் என்ற கொள்கை உறுதி செய்யப்பட்டது. சீனப் பொது வுடைமைக் கட்சியின் மத்திய செயறகுழுவிறகே அதிக அதிகாரங்கள் தரப்பட்டன. இக்குழுவே அரசியல் அமைப்புச் சட்டத்தைத் திருத்த முடியும்.

சீனப் பொதுவுடைமைக் கட்சி, சீனாவை நவீனப் படுத்தும் முயற்சியில், 1949 முதல் தீவிரமாக ஈடு பட்டுள்ளது, பழைமையான சமூகக் கருத்துகளை ஏற்க மறுத்துவிட்டனர். மார்க்சிசம்-லெனினிசக கொள்கைகளை ஏற்றுக் கொண்டு, சீன நாட்டின் சமு தாய மறுமலர்ச்சிக்காகச சீனப்பொதுவுடைமை கட்சி பாடுபடுகிறது. மனிதர்களுக்குள் இருக்கும் ஆக் கும் சக்திக்கு அதிக முதன்மை தரப்படுகிறது. சீனா வில், சமுதாயத்தில உள்ள அனைவரும் சிக்கனத தைக் கடைபிடிக்க வேண்டும்; தன்னலமற்றவர்களாக வாழ வேணடும்; அரசுக்கும் கட்சிக்கும் உண்மையுள்ள வர்களாக இருக்க வேண்டும், தன்னடக்கம் உள்ள வர்களாக, தற்கட்டுப்பாடுடையவர்களாக இருக்க வேண்டும் எனப்பொதுவுடைமைக் கட்சி அறிவுறுத்து கிறது.

பொதுமக்களின் கல்வியில் மிகுந்த அக்கறை காட்டப்பட்டுத் திட்டங்கள் இயற்றப்பட்டுச் செயற் படுத்தப்பட்டன. பொதுமக்களை ஒன்று திரட்டி, பொதுவுடைமை இயக்கத்திற்குள் கொணடுவர முயற்சிகள எடுக்கப்பட்டன. சீன அரசியலில் பொது மக்கள் அனைவரும் பங்கேற்க வேண்டும் என்று வலி யுறுத்தப்பட்டது. இக்கொள்கைகளின் செயற்பாடு 'பொதுமக்கள நடவடிக்கை' என்று கூறப்பட்டது.

பொதுவுடைமைக் கோட்பாடுகளின் அடிப்படை யில், சீனநாட்டின சமுதாய மறுமலர்ச்சிக்கான கல்வி அறிவினைப் பொதுவுடைமை அரசாங்கம், திட்ட மிட்ட வகையில் மக்களுக்கு அளிக்கிறது.

கட்டுப்பாடுள்ள, அரசியல் நம்பிக்கையுள்ள, பல இலட்சக்கணக்கான பொதுவுடைமை இளைஞர் களைக் கட்சி உருவாக்கியுள்ளது. வகுப்பறையில் பணிபுரிந்தாலும், வயல்வெளிகளில் வேலை செய்தா லும், ஆலைகளில் பணி ஆற்றினாலும், பொது வுடைமைக்கோட்பாடுகளின் அடிப்படையில் கடமை உணர்வோடு ஒவ்வொரு சீனக் குடிமகனும் பணி யாற்றிடல் வேணடும் என்று அறிவுறுத்தப்பட்டு நடைமுறையிலும் வெற்றி கணடுள்ளனர் சீன மக்கள்.

**சீனர்களின் சமுதாயத்தில் உள்ள சிறப்புக் கூறுகள்:** பல்வேறு நாடுகளிலிருந்தும் சீனாவைப் பார்க்க மக்கள் வருகினறனர். புகைவண்டிப் பயணம் மிகவும் இனியதாகச் சீனாவில் உள்ளது. இருக்கைகளும், புகைவண்டிப் பெட்டிகளும் சுத்தமாக இருக்கின்றன. வசதியாகப் பிரயாணம் செய்ய உட்காரும் இருக் கைகள், பினபுறமாகச் சாய்நது தூங்க வசதியாக அமைக்கப்பட்டுள்ளன. குளிாசாதனப பெட்டிகள உள்ள தொடர்வணடிப் பெட்டிகள், சீனாவில் பயணம் செய்பவர்களுக்கு வசதியாக உள்ளன. தொடர்வண்டிப் பெட்டியில் பயணம் செய்பவர் களுக்காகப் பணிபுரியும் பெணகள், ஈரத்துணியால் நடை பாதையினையும் மற்ற இடங்களையும் சுத்தஞ் செய்கின்றனர்.

சீனர்கள் தாம் அருந்தும் தேனீரைப் 'பச்சைத் தேநீர் என்று கூறுகின்றனர். சீனர்கள், அதிகம் பதப்படுததப் படாத 'பச்சைத்' தேயிலையையே பயன்படுத்துகின்ற னர். பாலோ சீனியோ கலப்பதிலலை. தேயிலையைக் கோப்பையில் போட்டு. வெந்நீரை ஊற்றிச் சில வினாடிகள் மூடிவிட்டுப்பிறகு அதைக் குடிக்கினறனர்.

பிற நாட்டிலிருநது சீனாவுக்கு வரும் சுற்றுலாப் பயணிகளையும், அரசாங்க விருந்தாளிகளையும் 'சம தரும உடன்பிறப்பு உணர்வுடனும்' சீனர்களுக்கே உரித்தான விருந்தோம்பும் உபசார மரபுடனும் வர வேற்றுத் தங்கள் நாட்டின் பல்வேறு பகுதிகளைக் காட்டுகின்றனர். சீனர்கள் தாங்கள் செய்யும் ஒவ் வொரு செயலிலும் மிகவும் கவனமாக இருக்கின் றனர்.

சீனாவின் கிராமங்கள், கிராமப்புறங்கள் முத லியன சிறப்பாக அமைந்துள்ளன. வளர்ந்துவரும் நகரங்கள், பெரிய தொழிற்சாலைகள், தொழில் நுட்பக் கல்லூரிகள், நகர்ப்புற வளர்ச்சித் திட்டங்கள் ஆகியவை அடங்கிய நாடு சீனா ஆகும்.

உற்பத்தியைப் பெருக்குதல், அறிவியலில இடைவிடா ஆராய்ச்சி ஆகியவற்றையெல்லாம் சீனா வில் உள்ள கிராமங்களில் காணலாம்.

தந்தத்தினாலான பொருள்களைச் செதுக்குதல சீனாவின் பழமையான கலைகளுள ஒன்று. சீனர் களின் இளைய தலைமுறையினர் மரபுவழித் தொழில்களை நன்கு கற்றுக்கொளகின்றனர்; அனு பவ அறிவினைப் பெறுகின்றனா. பழங் கலைகள் மறுமலர்சசி பெற்று வளர்கின்றன. கலைத்துறையில் வளர்ச்சியும் தொடர்சசியும் பாதுகாககப்பட்டு வருகின்றன.

சித்திரப் பூ வேலைப்பாடுகள் அமைந்த பட்டுத துணிகள் உற்பத்தியில் சீனா புகழ்பெற்று விளங்கு கிறது. மேடைவரிப்பந்து (Table Tennis) விளை யாட்டில் சீனர்கள் மிக்க ஆர்வம் காட்டுகின்றனர். இந்த விளையாட்டில் சீனர்களே உலகில் முன்னணி யிலுள்ளனர்.

நடனக்கலையில் மிகுந்த ஆர்வம் காட்டுகின்ற னர். தேசப்பாதுகாப்பு, கைத்தொழில், வேளாண்மை அறிவியல், தொழில் நுட்பம் ஆகியவற்றையெல்லாம் நவீனமயப்படுத்துதலில் குறிப்பிடத்தக்க முன்னேற் றத்தினைச் சீனர்கள் அடைந்துளளனர்.

கிராமப்புறங்களில் 'வெறுங்கால்'வைத்தியர்களை' (Barefoot doctors) அனுப்பிக் கிராம மக்களின் சுகாதார நலனில் அக்கறை செலுத்தி வருகிறது சீன அரசாங்கம். சீன 'ஆயுர்வேத' வைத்திய முறை புகழ்வாய்ந்தது. சீனாவில் உள்ள மலைகளில் கிடைக் கும் பச்சிலைகள, வேர்கள், பட்டைகள் போன்ற மூலப்பொருள்களைக் கொண்டு ஆயுர்வேத வைத்திய முறையில் மருந்துகள் தயாரிக்கின்றனர். மக்கள் தங்கள் உடல் நலத்தில் அக்கறை செலுத்து. கின்றனர். தயிசிசுவான் என்ற சீன மரபுவழி உடற் பயிற்சியினை நாடோறும் விடியற்காலையில் செய் கின்றனர்.

தா.எ.

**துணை நூல்கள்:**

**Bonavia, D.,** The Chinese, New York, 1980.

**Bonavia, D.,** The Chinese A portrait, London, 1981.

The Cambridge History of China, 14 Vols. C.U.P. 1978.

***சீனாபு ஆறு***: தமிழகத்தில் தஞ்சை மாவட்டத்திலுள்ள திருவையாறு (திரு ஐயாறு) ஐந்து ஆறுகள் (காவேரி, வடவாறு, வெட்டாறு, வெண்ணாறு, குடமுருட்டி) செல்லுமிடமாக இருப்பதால் அப்பெயர் பெற்றுள்ளது போல, வடமேற்கு இந்தியாவிலுள்ள பஞ்சாபு (ஐந்து ஆறுகள்) என்ற மாநிலம்,சிந்து ஆற்றின் துணையாறுகளாகிய சீனாபு, சீலம், சட்லசு, இராவி, பியாசு ஆகிய ஐந்து ஆறுகள செல்லுமிடமாகவிருப்பதால் அப்பெயர் பெற்றுள்ளது.



சீனாபு ஆறு

சீனாபு ஆறு,இமயமலைப் பகுதியில் உற்பத்தியாகிப் பஞ்சாபு மாநிலத்தில், உலகின நீண்ட ஆறுகளுள் ஒன்றாகிய சிந்து ஆற்றுடன் அதன் துணையாறாகக் கலக்கிறது. சீனாபு ஆறு சம்மு காசுமீர் வழியாக மேற்கு நோககி ஓடி, பிறகு தென்மேற்காகச் சென்று, பாகிசுத்தான் நாட்டிற்குள் புகுந்து சட்லெசு ஆற்றுடன் இணைகிறது. சீனாபு ஆற்றின் நீளம் ஏறக்குறைய 964 கி.மீ.

பனி மூடிய இமயமலையில் உற்பத்தியாவதால் சீனாபு ஆறு பனி நீரைத் தொடாந்து பெறுகிறது. இமயமலையின் உயர் குனறுகளிலுள்ள நீர் பெறும் தளங்களிலிருநது (Catchment Area) நீரைப் பெறுகின்றது. நீர்பெறும் தளங்களிலிருந்து பாதி நீரைச் சிந்து ஆறும், அவ்வளவில் நான்கில் ஒரு பாகத்தைச் சீனாபு ஆறும், எஞ்சிய நீரை மற்ற ஆறுகளும் கொண்டு செல்கின்றன.

கிழக்குப் பாகிசுத்தானிலும், மேற்குப் பஞ்சாபிலும் பல ஆயிரம் ச.கி.மீ. நிலங்கள் சீனாபு ஆற்றினால் நீர்ப்பாசனம் பெறுகின்றன.

சிந்து ஆறும், அதன் துணையாறுகளும் இந்தியா, பாகிசுத்தான் ஆகிய இரு நாடுகளிலும் பாய்வதால் 1960-ஆம் ஆணடில் சிந்து ஆறு உடன்படிக்கையொன்று, இரு நாடுகளுக்குமிடையே உருவாயிற்று. அதன்படி மேற்கு ஆறுகளாகிய சிந்து, சீனாபு, சீலம் ஆறுகள் பாகிசுத்தான நாட்டிலும், இராவி, பியாசு, சட்லெசு ஆறுகள் இந்திய நாட்டிலும் பயன்படுத்திக கொள்ள வேண்டுமென ஒப்பந்தமாகியுள்ளது.

சீனாபு ஆறு பாகிசுத்தான் நாட்டிற்குப் பயன்படும் முக்கிய ஆறுகளுள் ஒன்றாகும். பாகிசுத்தானில் கிழக்குப் பஞ்சாபு மாநிலம் தான அதிக மக்கள தொகையுள்ள இடம். மழை இங்குக் குறைவாகப் பெய்த போதிலும், சீனாபு மற்றும் பிற ஆறுகளின் கால்வாய்கள் மூலம் நீர்ப்பாசனம் பெறுவதால் உழவுதொழில் பெருமளவில் செய்யப்படுகிறது. தொடர்ந்து வேளாண்மை செய்வதற்குத் தேவையான நீரைப் பெற்றுக்கொள்ள, மலையடிவாரத்தில் இவ்வாறுகளின் குறுக்கே அணைகள் கட்டபபட்டுள்ளன.

சீனாபு, சீலம் ஆறுகள் வேளாண்மை உற்பத்திப் பொருள்கள் விளைவிக்கப் பெரிதும் பயனபடுகின்றன. கோடையில் பருத்தியும் கரும்பும் பயிர் செய்வதற்கும், குளிர் காலத்தில் கோதுமை, பார்லி, சோளம் ஆகிய தானிய வகைகள் பயிர் செய்வதற்கும் இவ்வாறுகள் பயன்படுகின்றன சி.பி.

***சீனிச் சர்க்கரைப் புலவர்***.இவர் கி.பி.18-ஆம் நூற்றாண்டில வாழ்ந்த புலவர்களுள் ஒருவர். இவர், பாணடி நாட்டைச் சேர்ந்த இராமநாதபுரததையடுத்த திருப்புன்னை வாயிலுக்கு 1 கி.மீ. தொலைவிலுள்ள சிறுகம்பையூரில் இரண்டாம் சர்க்கரைப் புலவரின் இரண்டாம் மகனாகப் பிறந்தவர். இவர் தமையன் சாந்துப் புலவர்; தம்பி முத்து முருகப் புலவர்.

இவர் திருசசெந்தூர்ப் பரணியை இயற்றியிருப்பினும், 'புகையிலை விடுதூது' எனும் தூதுச் சிற்றிலக்கியத்தால் புகழ்பெற்றவர். முருகப் பெருமான் மீது அன்பு கொண்டவராதலின, முருகனுக்கும் புகையிலைக்கும் சிலேடையாக அந்நூலினைப் பாடியுள்ளார். இவர் புகையிலையை முருகனுக்கு மட்டுமன்றிச் சிவபெருமான், பிரமன், திருமால் ஆகியோருக்கும் தமிழுக்கும் உவமைப்படுத்திச் சிலேடை

யாகக் கூறியுள்ளார். இதில், பிரமபத்திரம் எனப்படும் புகையிலையே சிறப்பிடம் பெற்றுள்ளது. இத்தூதுப்பிரபந்தம் பழனி முருகன் மீது மையல் கொண்டு, அவர்பால் புகையிலையைத் தூதாக விடுத்ததாக 59 கண்ணிகளால் பாடப்பட்டதாகும். அவற்றுள் 53 கண்ணிகள் புகையிலையினைப் புகழ்ந்துரைப்பனவாக அமைந்துள்ளன. வீ.சொ.

***சீனிவாச அய்யங்கார் சேசாத்திரி* (கி.பி. 1874-1941):** இவர் கி.பி. 1874-ஆம் ஆண்டு இராமநாதபுரம் மாவட்டத்தில் சீனிவாசனின் தலைமகனாகப் பிறந்தார். இவர் தன் மேற்படிப்பை மதுரைக் கல்லூரியிலும், சென்னை மாநிலக் கல்லூரியிலும், சட்டக் கல்லூரியிலும் முடித்தார். சென்னை உயர்நீதி மன்ற நீதிபதியாகயிருந்த திரு. பாசியம் அய்யஙகாரின் மகள் அரஙகநாயகியை மணந்தார். இவருக்கு ஒரு பெண்ணும், ஒரு மகனும் இருந்தனர். காங்கிரசுத் தியாகியான அம்புசம்மாள்தான் இவர்தம் புதல்வியாவர். இவர் மகன் பார்த்தசாரதி வழக்குரைஞராகப் பணியாற்றினார். இவர் இப்போது ஆவடியில வைணவக் கோயிலை உருவாக்கி அதைப் பராமரித்தும் வருகிறார்.

திரு. சீனிவாசன் தம் வழக்குரைஞர் தொழிலை கி.பி. 1898-இல் சென்னை உயர்நீதி மன்றத்தில தொடங்கினார். மயினுடைய (Mayne) இந்து சட்டத்தை இவர் வெளியிட்டார். இவர் கல்வி, சமுதாயச் சீர்திருத்தம, அரசியல் ஆகியவற்றிலும நாட்டம் கொணடிருந்தார். சென்னைப் பல்கலைககழக உறுப்பினராக 1912-இல் இருநதார். கோவையில 1916-இல் கூட்டப்பட்ட சமுதாயச் சீர்திருத்த மாநாட்டிற்குத தலைமை தாங்கினார். இவர் காங்கிரசுத் தலைவர்களான சர் சங்கரன் நாயர், சேலம விசயராகவாச்சாரியார் ஆகியோருடன் நெருஙகிய தொடர்பு கொண்டிருந்தார். முதலில் கோகலேயுடனும் பிறகு காந்தியடிகளிடமும நெருங்கிய தொடாபு கொண்டிருந்தார்.

இவர் அரசியலில் 1920-இல் தீவிரமாக ஈடுபட்டார். தலைமை வழக்குரைஞர் பதவியை விட்டு விலகித் திருநெல்வேலியில் நடந்த சென்னை மாநில மாநாட்டிற்குத் தலைமை தாங்கினார். சட்டமனறக் குழு உறுப்பினர் பதவியையும் விடுத்துக் காங்கிரசுக் கட்சி வளர்ச்சியில் மிக்க ஈடுபாடு காட்டத் தொடங்கினார். சென்னையில் ஏறக்குறையப் பத்தாணடுகள் காங்கிரசு இயக்கத்தை வெற்றியுடன் நடத்தினார். அக்கட்சிக்கு வெற்றியும் 1926-இல் தேடித் தந்தார். சென்னையிலிருந்து மத்திய சட்டமன்றத்திற்கும் தேர்ந்தெடுக்கப்பட்டார். அம்மன்றத்தில் காங்கிரசின துணைத்தலைவராகவும் தலைவராகவும் பணியாற்றினார். கௌகாத்தியில் 1926-இல் நடந்த காங்கிரசு மாநாட்டிற்குத் தலைமை தாங்கினார். இவர் இந்து-முசுலீம் ஒற்றுமைக்காகப் பாடுபட்டார். எதிர்கால இந்தியாவிற்குக் கூட்டாட்சியைப் பரிந்துரைக்கும் விதத்தில் ஓர் அரசியலமைப்பை உருவாக்கி வெளியிட்டார்.

சென்னையில் சைமன் குழுவைப் புறக்கணித்தார். இவர் 1928-இல் ஐரோப்பா சுற்றுப் பயணம் செய்தார். இந்தியத் தேசிய காங்கிரசின் இலண்டன் கிளையை உருவாக்கினார். மோதிலால் நேருவுடன் 1930-இல் ஏற்பட்ட கருத்து வேறுபாடு காரணமாக அரசியலிலிருந்து இடைக்காலமாக விலகினார். மீண்டும் 1939-ஆம் ஆணடு அரசியலுக்குத் திரும்பித் திருபுரா மாநாட்டில் கலநது கொண்டார். 1941-ஆம் ஆண்டு மே மாதம் 19-ஆம் தேதி மாரடைப்பினால் மயிலையில் தமது வீட்டில் இறந்தார். இவரது நினைவாகச் சென்னை ஆள்வார்பேட்டையில் ஓர் தெரு இருக்கின்றது. கே.சே.

***சீனிவாச அய்யங்கார், பி.டி.*:** இவர் கி.பி. 1863-இல் தஞ்சை மாவட்டத்திலுள்ள புள்ளை பூதம் குடியில் பிறந்தார். இத்தலம் வைணவ ஆழ்வார்கள் அவதரித்த தலமாகும். இவர் கும்பகோணம் அரசுக் கல்லூரியிலும், திருச்சி புனித சூசையப்பர் கலலூரியிலும் மேற்படிப்புப் படித்தார். 1884-இல் முதுகலைப் பட்டம் பெற்றவுடன் புனித சூசையப்பர் கல்லூரியில் 5 ஆண்டுகள் விரிவுரையாளராகப் பணியாற்றினார். விசாகப்பட்டினத்திலுள்ள திருமதி. ஏ.வி.என். கல்லூரியில் 1890-இல் முதல்வராகப் பணி ஏற்ற இவர் 27 ஆண்டுகள் தொடர்ந்து இருந்து ஓர் வரலாற்றுச் சாதனையைச் செய்துளளார். இவர்தாம் ஓய்வுபெறற பிறகும்கூட தமது அறிவுப் பசியைப் போக்கவில்லை. இவர் எழுதிய நூல்களான மராத்தியர் காலம, இந்தியக் கற்காலம் (1925) இரண்டும் புகழைத் தேடித்தந்தன. இவரது ஆற்றலுககு மதிப்புக் கொடுத்துச சென்னைப் பல்கலைக் கழகம் இந்திய வரலாற்றுத் துறையில் ஓர் இணைப் பேராசிரியராக 1928-இல் இவரை ஆக்கியது. இவர் 1930-இல் அண்ணாமலைப் பல்கலைக் கழகத்தில வரலாறு, அரசியல் துறைப் பேராசிரியராக ஆனார். இவருக்கு முன்னர் பேராசிரியர் க. அ. நீலகண்ட சாத்திரியார் இப்பதவியில் இருந்தார். தமது வாழ்நாளில் இறுதி மூன்றாண்டுகளில் மூன்று வரலாற்றுச் சிறப்பு வாய்ந்த நூல்களை எழுதினார். அவையாவன: முந்தைய ஆரியப் பண்பாடு, தமிழர்

வரலாறு, போசராசா. இவைகளுள் போசராசா அண்ணாமலைப் பல்கலைக்கழகத்தின் முதல் வர லாற்று வெளியீடாகும்.

ஏறக்குறைய நாற்பதாண்டுகள் கல்வித்துறைக்கு இடைவிடாது இவர் தொண்டாற்றியுள்ளார். சென்னைப் பல்கலைக்கழக ஆளவை உறுப்பினராக வும் இவர் பல்லாண்டுகள் இருந்துள்ளார். மும்முறை சென்னை மாநிலக் கல்வி மாநாட்டிற்குத் தலைமை தாங்கியுள்ளார். தாய்மொழிதான் பயிற்றுமொழி யாக இருத்தல் வேண்டுமென்ற கருத்தை அடிக்கடி வலியுறுத்தினார். மேலும் பல பொதுப் பதவிகளை வகித்து அவற்றிற்கு இவர் பெருமை தேடித் தந்துள் ளார்.

இவர்தம் படைப்புகள் அனைத்தும் எளிமைக்கும், தெளிவிற்கும் நேர்மையான தன்மைக்கும் எடுத்துக் காட்டு இவர் ஆங்கிலேயர் உடையைத்தான் எப்போதும் அணிவார். இவர் மாணவர்களுள் தலை சிறந்தவர் சத்தியநாத அய்யர், எசு.கே. கோவிந்த சாமி, திருவேங்கடாச்சாரி ஆகியோர். இவர் விசய நகரக் கல்லூரியில் ஆங்கிலப் பேராசிரியராகவும் பணி யாற்றியுள்ளார். புனிதசூசையப்பர் பயிற்சிக் கல்லூரி யில் 1915-20-இல் கல்வித்துறைப் பேராசிரியராக வும் பணியாற்றியுள்ளார். இவர் 1931-ஆம் ஆண்டு தமது 68-ஆம் வயதில் இறந்தார். கே சே.

*சீனிவாச சாத்திரி, வி.எஸ்.*: சிறந்த சொற் பொழிவாளர் என்று பெயரெடுத்த சீனிவாசசாத்திரி, கி.பி. 1869-ஆம் ஆண்டு தமிழநாட்டில், தஞ்சை மாவட்டத்தைச்சேர்ந்த வலங்கைமான என்ற ஊரில பிறந்தார். இவர் ஆசிரியராகத் தம் வாழக்கையைத் தொடங்கினார். அநத அனுபவத்தின விளைவாகத திருவல்லிக்கேணி இநது உயாநிலைப் பளளியின தலைமை ஆசிரியராக ஆனார். ஆனால, 1907-ஆம ஆணடு விடுதலை இயககத்திற்கு ஆதரவு அளிக்கும் வகையில் இந்திய ஊழியர் சஙகத்தில உறுப்பினராகச் (Servants of India Society) சேர்ந்தார். நாளடை வில இவா அதன் தலைவராகவும் ஆனாா.

இவர் இந்தியச் சட்டமன்ற உறுப்பினராகவும் 1916-இல் அரசுச் சட்டமனற உறுப்பினராகவும் (Imperial Legislature Council) இருநதார். இவருக குப் பல பல சிறப்புப் பட்டஙகள் கிடைத்தன. அப் பட்டங்கள் அனைத்தும் இவர் ஆற்றிய சமுதாயத் தொண்டிற்காகக கிடைத்தன.

இவர் 1929-ஆம் ஆண்டு அண்ணாமலை நகரில் அண்ணாமலைப் பல்கலைக் கழகம் தொடங்கியபின்


சீனிவாசசாத்திரி, வி.எஸ்.

அதன் துணைவேந்தராக நியமிக்கப்பட்டார். ஆனால் இவர் சனவரி முதல் ஏப்பிரல் மாதம் வரையிலதான் அப்பதவியில் இருந்தார். ஏனெனில், இவர் ஆங்கிலப் பொது ஆளுநரின சார்பாளராகத் தென் ஆப்பிரிக்கா விலுள்ள கெனியாவிற்கு அனுப்பப்பட்டார்.

ஆனால 1935 சூன முதல் 1940 மே வரை இவர் மீணடும் அணணாமலைப்பல்கலைக் கழகத்தின துணை வேந்தராக நியமிக்கப்பட்டார். இவரது காலத்தில் அண்ணாமலைப் பல்கலைக்கழகம் மிகவும் முன்னேறி யது. இவர் பலகலைக கழக மாணவாகளிடம நெருங் கிப்பழகினார். கோகலேயின் பெயுரைத தாஙகி நிற் கும அறையில் மாணவர்களுக்கும் ஆசிரியர்களுககும் ஆஙகிலப் பாடம் நடத்தினார். இவரது ஆங்கில உச் சரிப்பு ஆஙகிலேயரையே வியப்பில ஆழத்தும! அதே நேரத்தில் இவர் தமிழிலும தஙகுத தடையினறி பேசும் ஆற்றல பெற்றிருநதாா இவர் சமசுகிருத மொழியிலும வல்லவர் எனவே இவரைப் பனமொழிப் புலவா என்று கூறுவது சாலப் பொருந்தும

இவரது பதவிக காலத்தில் ஆராய்சசிக்கு முதனமை அளிததார். அதன்விளைவாகச் செஞ்சியின வரலாற்றைப் பேராசிரியா சீனிவாசாச்சாரியார் வெளியிட்டார். பேராசிரியர் வி.சி.இராமகிருட்டிணன கூட்டுறவைப் பற்றிய ஓர் நூலை வெளியிட்டார். பேராசிரியர் ஆனநத வைத்தியநாதன் முதன முத லாகத் தமிழில் ஒரு வேதி நூலை வெளியிட்டாா. தமிழத் துறையில பேராசிரியா சோமசுந்தர பாரதி யும் பணடிதமணி கதிரேசன செட்டியாரும பல ஆராய்ச்சி நூல்களை வெளியிட்டுத் தமிழுககும் பல் கலைக் கழகத்திறகும் பெருமை தேடித் தந்தனர். பெரும்புலவர் ரா. இராகவய்யங்கார் தமிழ் வரலாறு

எழுதித் தமிழ்மொழிக்கும் சோமாலி, சுவாகிலி, பார சீகம் ஆகிய மொழிகளுககும் இடையே உள்ள தொடர்பையும் ஒற்றுமையையும் சுட்டிக்காட்டிப் பெருமை தேடித் தநதார்.

ஏறக்குறைய நாற்பதாண்டுகள் அரசியல் பொது, கல்வித் துறைகளில் இடைவிடாது தொண்டாற்றிய மன அமைதியுடன் 1940-ஆம் ஆண்டு ஓய்வு பெற் றார் சாத்திரி. இவர் 1946-ஆம் ஆணடு இறந்தார்.
கே.சே.

**சீனிவாசம் பிள்ளை, கே. எஸ்.** 20-ஆம் நூற்றாண்டில் வாழ்ந்த தமிழ்அறிஞர். இவர் திருச்சி மாவட்டம் அரியலூருக்கு அருகில் உள்ள கீழப்பழூர் என்னும் ஊரைச் சேர்ந்தவர். இவர் தந்தை பெயர் சிவசிதம்பரம் பிள்ளை. கார்காத்த வேளாளர் மர பினர். பள்ளிக் கல்வியை முடித்த இவர் தமிழிலும் ஆங்கிலத்திலும் புலமை மிக்கு விளங்கினார். எனவே, திருச்சி மாவட்டத் தலைவர் அலுவலகத்தில் எழுத்த ராகப் பணிபுரிந்தார். பின்னர்த் தாமாகவே கல்வி பயின்று பட்ட வகுப்பில் தேறினார். மேலும், வழக் கறிஞர் பட்டம் பெற்று நாகப்பட்டினத்தில் வழக் கறிஞராகப் பணி தொடங்கிப் பின் தஞ்சையில அதனைத் தொடர்ந்தார். அப்போது தஞ்சைக்குப் பக்கத்திலுள்ள கரந்தைத் தமிழ்ச் சங்கத்தின் வாயி லாகத் தமிழ்ப் பணியாற்றி வநத உமாமகேசுவரம் பிள்ளை அவர்கள் இவரிடம தொடக்கநிலை வழக் கறிஞராகப் பயிற்சி பெற்று வந்தார். அவரும் கும்ப கோணம் அரசுக் கலலூரித் தமிழ்ப் பேராசிரியர் தியாகராசச் செட்டியாரும் இவருக்குத் தமிழார்வம் ஊட்டி இவர்தம் தமிழ் ஆய்வுக்கு வழிவகுததனர். அத னால், தமிழ் இலக்கிய வரலாறு முழுவதும் எழுதும் முயற்சி மேற்கொண்டார். புலவர்களின் காலங்களை அறுதியிட்டுக் கூறக் கல்வெட்டு ஆராய்ச்சியை மேற் கொண்டார்.

இவர் தஞ்சாவூர் நகராண்மைக் கழகத்தின் தலைமைப் பொறுப்பினை மூனறு முறை வகிததுள் ளார். அப்போது தஞ்சாவூரில் அமைந்துள்ள சரசுவதி மகால் நூல் நிலையம் அங்கு நிலைக்கப் பாடுபட்ட வர்களுள இவர் குறிப்பிடத்தக்கவராவார். இவர் அங்குளள நூல்நிலையப் பட்டியல் ஒழுங்கான முறை யில் அமைய உலகநாதம் பிளளைக்கு ஆலோசனை கூறி நெறிப்படுத்தினார். இவர் 'தமிழ் வரலாறு' என்னும் நூலினை எழுதியுள்ளார். நான்கு பகுதி யான அதன் முதலிரு பகுதிகள் மட்டுமே வெளி வந்துளளன. தஞ்சையில இவர் பெயரில் ஒரு தெருஉள்ளது.
வீ.சே.

**சீனிவாசராகவன்:** இவர்1905-ஆம் ஆணடு, தஞ்சை மாவட்டத்தில் திருவையாற்றிற்கு அருகில் உள்ள கண்டியூர் என்னும் ஊரில், ஒரு வைணவக் குடும்பத்தில் பிறந்தார். தந்தை திரு. அண்ணாத் துரை அய்யஙகார், தாயார் திருமதி ரெங்கநாயகி. கண்டியூரில் உள்ள திண்ணைப்பள்ளியிலும் நாகப்பட் டினம் உயர் நிலைப் பள்ளியிலும் பயின்ற இவர் பின்னர்ச் சென்னைப் பல்கலைக் கழகத்தில் ஆங்கி லத்தில் எம்.ஏ. பட்டம் பெற்றார்.


சீனிவாசராகவன்

திருச்சி, தூய வளனார் கல்லூரியில் ஆங்கில ஆசிரியராக 1925-ஆம் ஆண்டு பணியில் சேர்ந்தார். பிறகு பாளையங்கோட்டை புனித சேவியர் கல்லூரி யிலும், திருநெல்வேலி ம.தி.தா. இந்து கலலூரியி லும் ஆங்கில விரிவுரையாளராக 14 ஆண்டுகள் பணி புரிந்தார். பிறகு செனனை விவேகானந்தா கல்லூரி யில் ஆங்கிலப் பேராசிரியராகச் சிறிது காலம் பணி புரிந்து, தூத்துக்குடி வ.உ. சிதம்பரம் கல்லூரி முதல்வ ராக 1951ம்ஆண்டு சேர்ந்தார்.அக்கல்லூரியில இருபது ஆண்டுகள் முதல்வராகத் தொண்டாற்றியபின், பல் கலைக்கழக மானியக்குழுவினால் மதிப்பியற் பேராசி ரியராக நியமிக்கப்பட்டு, சில வருடங்கள பணிபுரிந்து ஓய்வு பெற்றார்.

இவர் ஆங்கிலத்திலும் தமிழிலும் பேச்சிலும் எழுத்திலும் பெரும் புலமை படைத்தவர்; கம்பனை யும் வள்ளுவனையும் நாயன்மார்களையும ஆழ்வார் களையும் மேற்கோள் காட்டிப் பேசுவதில சிறந்தவர். இவருடைய பேச்சிலும் எழுத்திலும் ஒரு எடுப்பு, அழகான தொடுப்பு, இனிய முடிப்பு இருக்கும். காரைக்குடிக் கம்பன் திருநாளில் இவருடைய இனி குரல் கேளாத ஆண்டே கிடையாது.

புதுதில்லியில் நடந்த எழுத்தாளர் மாநாட்டி லும், மணிலாவில் நடந்த உலகக் கவிஞர்கள் மாநாட் டிலும், கோலாலம்பூரில் நடைபெற்ற அகில உலக இராமாயணக் கருத்தரஙகிலும் கலந்து கொணடு சிறந்த விரிவுரை ஆற்றியிருக்கிறார். மேலும், இந்தி

யாவிலும் மேலைநாடுகளிலும் நடந்த ஏராளமான பேரவைகளில் சொற்பொழிவாற்றியிருக்கிறார்.

சென்னை, மதுரைப் பல்கலைக் கழகங்களில் பல ஆண்டுகளாகக் கல்விக் குழு, ஆட்சிக்குழு உறுப்பின ராகவும், பாடத்திட்ட ஆய்வுக்குழு உறுப்பினராகவும் பணிபுரிந்துள்ளார். தென்னாட்டு ஆசிரியர் சங்கத் துணைத் தலைவராக வும் இருந்துள்ளார். இவரு டைய தமிழ்ப் புலமையையும் இவர் தமிழுக்குச் செயத சேவையையும் பாராட்டித் தருமபுரம் ஆதினத் தலைவர், 'செந்தமிழ்ச் செம்மல்' என்னும் பட்டம் சூட்டிப் பாராட்டினார்.

'அ.சீ.ரா' என்றழைக்கப்பட்ட இவா 'நாணல்'' என்ற பெயரில் பல கவிதைகளை எழுதினார். இரு பத்தைந்துககும் மேற்பட்ட தமிழ் ஆஙகில நூல்கள் எழுதியுள்ளார். இவருடைய 'வெள்ளைப் பறவை' என்ற நூல் சாகித்திய அகாதமியின் பரிசைப் பெற் றது. 'சிந்தனை' என்ற தரமான மாத இதழைச் சில ஆண்டுகள் நடத்தினார். சாகித்திய அகாதமி உறுப்பினராகவும் பணிபுரிந்துள்ளார். தாகூரின் கவிதைகளைத் தமிழில் கவிதையாக மொழி பெயர்த துள்ளார். கம்பன் கவிதைகளை ஆங்கிலத்தில் மொழி பெயர்த்துள்ளார். இவர் கடைசியாக எழுதிய நம்மாழ்வாரைப் பற்றிய நூல் சாகித்திய அகாத மியால் வெளியிடப்பட்டுள்ளது.

இவருடைய இலக்கியப் படைப்புகளில் சில; மேல் காற்று; இலக்கிய மலர்களா; காவிய அரங்கில் நிழல், மகிழமரம்; விசுவரூபம்; நினைவுத்திரை; புது மெருகு; அவன் அமரன்; கவியரசர் கண்ட கவிதை; குருதேவரின் குரல்; வெள்ளைப் பறவை. அ.சீ.ரா. அவர்கள் திறமை மிகுந்த ஆங்கிலப் பேராசிரியர்; ஆஙகிலத்திலும் தமிழிலும் சிறந்த பேச்சாளர்; ஆற் றல் வாய்ந்த கல்லூரி முதல்வர்; உயர்ந்த பண்பா ளர்; இனிய நண்பர்; திறன் படைத்த இலக்கிய ஆய் வாளர்; இசைப்புலமை மிக்கார்; பல சாகித்தியங் களை இயற்றியவர். இவர் 1974-ஆம் ஆண்டு காலமானார்.

**சீனிவாசன், இரா. திவான்பகதூர், (கி.பி. 1859-1945):** தாழ்த்தப்பட்டவர்களின் தலைவராக இருந்த இவர் 1859-இல் பிறநதார். 85 வயதுவரை வாழ்ந்தார். இவர் 1923 முதல் 1935 வரை பல அரசியல், சமுதாயப் பணிகளைச் செய்தார். சென்னை மாநிலத்திலேயோ இவர் ஒப்பற்ற ஆதி திராவிடத் தலைவராக இவர் கருதப்பட்டார். ஆதி திராவிடர்களிலேயே முதன்முதலாகக் கல்லூரிப் படிப்பை முடித்தவர் இவராவர். இவர் தமது மேற்படிப்பைக் கோவை அரசு கல்லூரியில் முடித் தார். அயல் நாட்டில் பணியாற்றிய முதல் ஆதி திராவிடரும இவராவார்.

இவர் 1904-இல் தென் ஆப்பிரிக்காவிற்குச் சென்று அரசுப் பணியில் சேர்ந்தார், 1920 வரை அப்பணியிலேயே தொடர்நது இருநதார். கிழக்கு ஆப் பிரிக்காவிலும் இரணடாணடுகள வாழ்நதிருநதார். இவர் தென் ஆப்பிரிககாவிலிருந்து இந்தியா திரும்பிய பிறகு தாழ்த்தப்பட்டோரின் சார்பாகச் சட்டமன்றக் குழு உறுப்பினராக அமர்ததப்பட்டார். இவர் 1923 முதல் 1935 வரை சட்டமன்றக் குழு உறுப்பினராக இருநதார். இவர் டாக்டர் அமபேத்காரின் நேர்மை யான சீடராக இருந்தார். தாழ்த்தப்பட்டோர் சார்பாக வட்டமேசை மாநாட்டிலும் கலந்து கொணடார்.

இவர், கி பி. 1891-இல் ஆதி திராவிட மகாசன சபை ஒன்றைத் தாழ்த்தப் பட்டோரின் உரிமைகள பாதுகாப்பிற்காக உருவாக்கினார். மேலும் 'பறை யன்' என்ற பத்திரிகையையும் தொடஙகினார். அதன் மூலம் தாழத்தப்பட்டோருககுக் கல்வி அறிவூட்டினார் மேலும், சாதி இந்துக்களின் சமுதாயக் கடமையையும் வலியுறுத்தினார். இவர் தென் ஆப்பிரிககா சென்ற உடனே பத்திரிகையும் வெளியிடப்படவில்லை. இவர் தாழ்த்தப்பட்டோரின் முன்னேற்றத்திற்காக ஆற்றிய தொணடை மதித்து ஆங்கில அரசு இவருக்கு திவான்பகதூர் பட்டத்தையும் வழங்கியது. இவர் பூனா ஒப்பநதத்தை ஆதரித்தார். தாழததப் பட்டோரை உயர்த்துவதற்காக இவா ஆறறிய தொண்டுகள் பல. இவர் 1945-இல் இறந்தார்.

கே.சே.

**சீனிவாசாச்சாரி: சி.எஸ்:** உருவில சிறியவ ராக இருந்ததினால் 'சிககா' என்று அனைவரா லும் அன்புடன் அழைக்கப்பட்ட பேராசிரியர் சீனிவாசாச் சாரியார் கி.பி. 1891-இல் சிதம்பரத்தில் பிறநதார். இவர் தநதை சிதம்பரம் சுவாமி சிதம்பரத்தில வழக்கு ரைஞராகப் பணியாற்றினார். சிக்காவுடன் பிறநத வர்கள் இருவர். அவர்கள இருவரும் வழக்குரைஞ்ரா கப் பணியாற்றினர். சிக்கா தம் மாமன் பேராசிரியா இராமானுசாச்சாரியாரின கண்காணிப்பில் வளர்ந் தார். இராமானுசாச்சாரியார் சென்னைப் பச்சையப் பன் கலலூரியில் வரலாற்றுத் துறைப் பேராசிரியராக இருந்தபோது 'சிக்கா' தம் கல்வி வாழககையைத் தொடங்கினார். இவர் அங்கேயே பல காலம் பணி யாற்றிப் பேராசிரியர் இராமானுசாசசாரியார் விட்டுச்சென்ற அனைத்து வரலாற்று நூல்களையும் உள்ளடக்கி ஓர் நூலகத்தை உருவாககினாா

நாளடைவில் விசய நகரத்தில் இருந்த பேராசிரியர் எம் எசு. இராமசாமி அய்யருடன் இணைந்து 25,000 வரலாற்று நூல்கள் அடங்கிய ஒரு நூலகத்தை உரு வாக்கினார். பிறகு அவற்றை இலங்கைப் பல்கலைக் கழகத்திற்கு விற்றுவிட்டார்.

சிக்கா ஆங்கிலத்தில் தங்குதடையின்றிப் பேசும் ஆற்றலுடையவர். இவர் வைணவ மரபொழுக்கத்தை உடை, உணவு, பழக்கவழக்கங்கள் ஆகியவற்றில் அப்படியே பினபற்றியவர்; சிம்மக்குரலைப் பெற்ற வர்; மாணவர்களிடம் நெருங்கிய தொடர்பு வைத் துக்கொண்டு அவர்களிடையே வரலாற்று உணர்வை ஊட்டியவர். இவர் உருவாக்கிய மாணவர்களுள குறிப்பிடத் தக்கவர்கள் டாக்டர் எசு திருவேங்கடாச் சாரி, டாக்டர் டி.வி. மகாலிங்கம், விருத்தகிரீ சன் ஆகியோர்.

'சிக்கா' இந்திய வரலாற்றை மூன்று பகுதிகளாக எழுதியுள்ளார். இவர் சென்னை நகரத்தைப் பற்றி யும், ஆனந்தரங்கம் பிளளை நாட்குறிப்பைப் பற்றி யும் ஆங்கில ஆதிக்கத்தைப் பற்றியும் எழுதியுள்ளார். நூற்றுக்கும் மேற்பட்ட ஆராய்ச்சிக் கட்டுரைகளை எழுதிய இவர் இந்திய வரலாற்றாராய்ச்சி இதழுக் குப் பதிப்பாசிரியராகவும் இநதிய ஆவணக்குழுவின் உறுப்பினராகவும் இருந்தார். இவர் எழுதிய நூல்க ளுள்ளே தலைசிறந்தது செஞ்சி வரலாற்று நூலாகும். இவர் சிவகங்கைக் கலலூரியிலும், காஞ்சிப் பச்சையப் பன் கல்லூரியிலும் முதல்வராகப் பணியாற்றியுள ளார். இவர் தம உறவினர். சி.வி. சீனிவாசாச்சாரி யின் பெரு முயற்சியின் பயனாக அண்ணாமலைப் பல் கலைக்கழகத்தில் வரலாற்றுத் துறைப் பேராசிரியரா கப் பணியாற்றும் வாய்ப்பு இவருக்குக் கிடைத்தது. இது இவரது வாழ்க்கையின் பொற்காலமாகும். இவர் பல வரலாற்றுப் படைப்புகளை உருவாக்கியது இக் காலத்தில்தான். பல வரலாற்று அறிஞர்களை உரு வாக்கியதும் இக்காலத்தில்தான். இவர் நகச்சுற்று நோய் காரணமாக இறந்தார். இவரது நினைவாக 60-ஆம் ஆண்டு நிறைவு விழா மலர் ஒன்று வெளி யிடப்பட்டது. அதில் பல ஆராய்ச்சிக் கட்டுரைகள் உள்ளன. கே.சே.

சு சகரத்திற்கும் உகரத்திற்கும் கொடுக்கப்பட்ட குறிப்புகளைப் பார்க்க. சகர ஒலியொடு வாய் குவித்த நிலையில் இவ்வொலி வெளிப்படும்.

சுகரத்தின் வடிவம் முதலில் மிகப்பழைய (கி.மு. 3-ஆம் நூற்றாண்டு) தென்மாநிலங்களில் கண்ட குகைக் கல்வெட்டுகளில் (திருவாதவூரில்) அடிப்படைச் சகரத்திற்குக் கீழே இழுக்கப்பட்ட ஒரு கோடு ஆகும். ..

இந்த வடிவம் கி.பி. 7-ஆம் நூற்றாண்டில் பல்லவ பரமேச்சுவரனின் கூரம் செப்பேடுகளில் நேர்கோட்டின் குறுக்கிலிருந்து கீழே இழுக்கப்பட்டது. அடிப்படைச் சகர வடிவத்தின் குறுக்குக் கோடு கி.பி. 13-ஆம் நூற்றாண்டில்தான் தோன்றியது. அவ்வாறு இருக்க, இந்தச் 'சு' வடிவத்தில் மட்டும் குறுக்குக்கோடு எப்படி வந்தது? அதாவது சகர வளைவு மேலிருந்து கீழே வரும் நேர்கோட்டைக் கடந்து எப்படி வந்தது என்பது ஒரு புதிரே. ஒருகால் இது வட்டெழுத்தின் தாக்கமாக இருக்கலாம் என்று தோன்றுகிறது. ஏனெனில், வட்டெழுத்தில் முதல் தோற்றத்திலேயே அதாவது ஏறக்குறைய கி.பி. 3 அல்லது 4-ஆம் நூற்றாண்டுகளிலேயே சகரம் குறுக்குக் கோடு பெற்றது. பிறகு அதன் வடிவம் மாறவில்லை. ... ... ..

தமிழில் சுகரத்தின் வடிவம் இந்த நிலையிலேயே இருந்தது. மற்ற எழுத்துகளில் தலைக்கட்டின் வளர்ச்சியை ஒட்டிச் சுகரத்திலும் தலைக்கட்டு கி.பி. 13-ஆம் நூற்றாண்டில் தோன்றி வளர்ந்தது. ...

கே.ஜி.கி.

**சுக்கிர நீதி** என்பது, 2200 சுலோகங்களால், அரசர்க்குரிய நன்முறைகள் யாவற்றையும் விளக்கிக் கூறும் வடமொழி நீதிநூலாகும். 'இந்நீதி நூலுக்கு ஒப்பான வேறுநூல் மூன்றுலகங்களிலும் இல்லை' என்று இதன் ஆசிரியர் நான்காம் அத்தியாய முடிவில் கூறுவது பொருத்தமுடையதாகும். மற்றெல்லா நீதி நூலாசிரியரும் இந்தச் சுக்கிர நீதியைப் பின்பற்றியே தம் நூல்களையாத்துள்ளனர். தம் 'யுக்தி கல்பதரு' என்னும் நூலில் கி.பி. 11-ஆம் நூற்றாண்டைச் சேர்ந்த போசமன்னர், 'சுக்கிரனும், பிருகசுபதியும் கூறிய நீதிக்கு ஏற்புடைய நீதியையே விளக்கியுள்ளதாகக் கூறுகிறார். இந்திய அரசியல், பொருளாதாரம், சமூகம் ஆகிய துறைகளில் காணும் தனிப்பண்பாட்டை மிக விரிவாகவும், விளக்கமாகவும் கூறும் சுக்கிரநீதி கி பி. முதலாம் நூற்றாண்டினரான அசுவகோசரையும் கவர்ந்துள்ளதில் வியப்பில்லை (புத்த சரிதம் 1.46). ஆனால், இந்நூல் கி.பி. 10-ஆம் நூற்றாண்டில் எழுந்த நூலென்று பேரா. கா.சு. பிள்ளை கூறுவார்.

சிறந்த அரசநீதிகளைத் தொகுத்துரைப்பது தேவ குருவான பிருகசுபதி என்ற வியாழனுக்கு அமைந்தது. அதுபோலவே, அசுர குருவான சுக்கிரனுக்கும் அமைந்து காணப்படுகிறது. தமிழில், அறம், பொருள்

இனபம் என்ற பெரும் பேறுகளை மனத்திற் கொண்டு பொது நீதிகளைத் தொகுத்துரைதத திருவள்ளுவரின் திருக்குறள இதனோடு ஒப்பிட்டு நோக்கத்தக்கது. குறிப்பாகத திறககுறட் பொருட்பாலினை ஆராய் தறகுத தககதோர் கருவி நூலாகச் சுக்கிரநீதி அமை கின்றது என அறிஞர் கூறுவர்.

இந்நூல் ஐந்து அத்தியாயங்கள் கொண்டது. நானகாவது நீஙகலாக ஏனைய அத்தியாயங்கள் 'பிரகரணம்' என்ற உட்பிரிவு கொள்ளாது, தொடர்நிலை கொண்டவை. நான்காம் அத்தி யாயம் ஏழு பிரகரணங்களடங்கியது. ஒழுக்கங் கள் நிலைபெறுவதற்கும், சிறப்பாக அரசியல் முறை வளர்வதற்கும் நீதி நூலறிவு இன்றியமை யாதது என்றும், ஊழ், முயற்சி என்ற இருவகைச் சாதனங்கள பயனளிக்கும் என்றும், அரசன் எட்டுத் திக்குப் பாலகரின் கூறுகளுடையான என்றும், அரச ருக்கு ஐம்பொறியடக்கம் தேவை என்றும், குடிகளைத் துன்புறுத்தாமல் இறை கொளளும் தன்மை, வரு வாயின அளவு, அதிகார அளவு ஆகியவற்றிற்கேற்ப அரசர் பலவகைப்பட்டவர் என்றும் அததியாய முகப்பு அறிவிக்கினறது. பின், நிலத்தின அளவு வகை கள கூறப்படுகின்றன. அரச நகர், அரண அமைப்பு, அரசவீதியமைப்பு, அறச்சாலைகள் ஆகியவை பற்றி யும் விளக்கங்கள் காணப்படுகின்றன.

பின்னர் ஒவ்வொரு நாளும் அரசர் செய்யவேண டிய கடமைபற்றியும், அவர் விதிக்க வேண்டிய கட்ட ளைகள, அவறறைப் பறை சாற்றும முறை, போர், வேட்டை, விளையாட்டு ஆகியவற்றின இயலபு பறறி யும விளக்குகிறது. அரசியறகுரியாரைத் தோநதெடுத் தலும், அரசவை அமைத்தலும், அரசு இலசசினை காககப்பட வேண்டியதும், குடிமக்களுக்கு அனைத துக் கலவியும் அளிக்க வேணடியதும், அரசன அய ராது சுறுசுறுப்பும், படைககலப் பயிற்சியும் பெற்றுச செயற்பட வேண்டியதும் அடுத்து ஆராயப்படுகினறன.

இரணடாம் அத்தியாயத்தில, அரசனுக்கு நல்ல நட்பினால் நன்மையும், தீய நட்பினால் தீமையும ஏற்படுவது கூறப்படுகிறது. அரசனுக்கு 'மித்திரலாபம' என்ற நட்பைப் பெறல இனறியமையாதது என்ப தைச் சுக்கிர நீதி வலியுறுததுவதனால், சுக்கிரநீதியில் 'மித்திரலாபம் சிறப்பானது' எனப் பஞ்சதந்திரம் கூறு கிறது. பின்னும், அமைச்சர், புரோகிதர், பேராளர், நீதிபதி, யானைப்பாகன், படைத்தலைவர், சத்திரத் தலைவர், பரீட்சைத் தலைவர், தணடத்தலைவர் முதலியோர் இலககணங்களையும், அவரைத் தேர்ந் தெடுக்கும் முறைகளையும் விரிவாக இவ்வத்தியாயம் கூறுகிறது. ஆவணங்கள் பல தரப்பட்டன எனறும், அவற்றை எழுதிப் பாதுகாப்பது மிகத் தேவை என றும் அங்கு விளக்கப்படுகிறது

மூன்றாம் அத்தியாயத்தில் குடிமககள தமது வாழ்க்கையை நயம்பட நடத்திக கொள்வதறகு ஏற்ற விதிமுறைகள் கூறப்படுகின்றன. கலவி, வீரம, உயர்குடிப்பிறப்பு, வலிமை, பொருள, தனமானம ஆகியவற்றால் ஒருபொழுதும் செருக்குறலாகாது எனவும் இவ்வத்தியாயம் கூறுகிறது. பொதுவாக, திறக்குறள், ஆசாரக்கோவை போனற தமிழ நூல களுடன் ஒத்துநோக்கத்தக்கபகுதி இது. முன்கூறிய படி நான்காம் அத்தியாயம மிக விரிவானது. அங்கு, சாம, தான, பேத, தண்டங்களை மேறகொள்ளு முறைகளும், தணடத்தின் வகைகளும் கூறபபட்டுள ளன. கருவூலம், நவமணிகள விளக்கம் ஆகியவையும் தொழில் பற்றிய சாதிப் பகுப்பு, நானகு வருணத்த வர் தொழில், முப்பத்திரணடு வித்தைகள, அறுபத்து நான்கு கலைகள் ஆகியவையும நன்கு ஆராயபபட் டுளளன.

நால்வகை ஆசிரம தருமங்களும, திருககோயில அமைக்குமுறையும, தெய்வத் திருவுருவம, ஊர்திகள ஆகியவை அமைக்குமுறைகளும் கூறப்பட்டுளளன, வழக்குகளை ஆராயும் முறை, நீதிமன்றங்கள, அவற் றில அஙகம் வகிககும் அவையோர் தகுதி, ஆட்சி, ஆவணம், சாட்சி என்ற சாதனங்களினியல்பு ஆகி யன பற்றி ஐந்தாம் பிரகரணம் விளககிக் கூறுகின றது. ஆறாம் பிரகரணம், நீர், நிலம், மலை, காடு ஆகிய நால்வகை அரண பற்றி ஆராய்கிறது. ஏழாம பிரகரணம் விரிவாகப் போர்க்கருவிகளையும், தேர், யானை, குதிரை ஆகிய போர்ப்படைகளின தன்மை யையும், ஆயுதஙகளுள சிறப்பாகப் 'பீரங்கி' போனற நெருப்புப் பொறிகள் பற்றியும் விளக்கம் தருவது வியபபுக்குரியதாக உளளது. மேலும், போர் தெய் விகம், ஆசுரம், மானவம் என மூவகைதது என்பது குறிப்பிடததகக செய்தியாகும. ஐந்தாம அத்தியாயம் அரசா வெற்றி கருதிக கைக்கொளள வேணடிய பல உபாயங்களையும் தெளிவுறக கூறுகிறது. இவவரிய வடமொழி நூலைப் பணடிதமணி மு கதிரேசச செட்டியாா செவவிய தமிழில் பெயர்த்துளளார். அதன் முதற் பதிப்பு 1926-இலும், இரண்டாம் பதிப்பு 1982-இலுமாக வெளிவநதுளளன. எஸ்.சீ.

சுக்கிரன் ஒனபதுகோள்களுள (நவக்கிரங்களுள்) ஒனறு. வானமண்டலத்தில் தெரியும் கோள்களுள சுக்கிரன பார்ப்பதற்குப் பெரிதாகத் தெரியும். பன்னி ரண்டு இராசிகளில இடபம், துலாம் எனனும் இரண டும் சுககிரனுக்குரிய இராசிகளாகும். சுக்கிரன ஏறத் தாழ நாற்பது அலலது நாற்பத்தைந்து நாளகளில் ஒரு இராசியைக கடக்கக் கூடிய இயல்புடையவர்

எனினும், சூரியனைப் போலவோ சந்திரன், குரு, சனி ஆகியோரைப் போலவோ குறிப்பிட்ட ஒரே வகை யாக இராசிகளைக கடக்கும் இயல்பு உடைய வராக இவர் சுட்டப் பெறவில்லை. சுக்கிரனுக்குரிய உச்சவீடாக மீனமும், நீச வீடாகக் கன்னியும் குறிக்கப்பெறுகின்றன. சோதிட நூல்கள் சுக்கிரனைக் 'களத்திரகாரகன்' எனக் குறிக்கின்றன.சுக்கிரனுக்குரிய தசை இருபது ஆண்டுகள். சுக்கிரன் ஒரு சாதகத்தில் நன்றாக அமைவது பொருளாதார நிலைக்கு இன்றி யமையாதது. சுக்கிர தசையைப்பொதுவாக வாழ்வின் உச்சத் தசையாகக் குறிப்பிடுவது பொதுமக்களின் கருத்தாகும். ஆனால், இது எல்லோருக்கும் பொருந் துவது அனறு. கடக இலக்கனத்திற்குச் சுககிரன் 'பாதகாதிபதி' என்று கூறுவர். இதனைக், கடகலக் கினத்தார்க்குச் சுக்கிராச்சாரியர் பொல்லாதவர் என்று கூறுகின்ற வழக்கினாலும் உணரலாம்.சுக்கிரன் ஒன்பான்மணிகளுள் வைரத்திற்கு உரியவர். சு.சா.

**சுக்கிரீவன்:** இவன பம்பை நதிக்கரைககண் அமைந்த கிட்கிநதை என்ற நகரை ஆணட வாலி என்ற குரங்கரசனுக்குத் தம்பியாவான். இந்திரன் முதலிய தேவர்கள் இராவணன் இழைக்கும் கொடு மையினின்றும் உய்விக்குமாறு திருமால முதலிய தெய்வங்களிடம் முறையிட, அவர் அயோத்தியில தசரத வேநதனுக்கு மகனாகப் பிறநது கொடுமை தீர்ப்பதாகக் கூறியதோடு எல்லாத் தேவர்களையும் பல பெயர்களில் பூமியில போய்ப் பிறக்குமாறும் கூறுகின்றார். அவ்வண்ணம் பிறப்பெடுத்தோருள் சூரியன் கூறாகப் பிறந்தவன் சுககிரீவன். இநதிரன கூறாகப் பிறந்த வாலிககுத் தம்பியாக அமைந்தான். வாயு கூறாகப் பிறந்த அனுமனோடு நட்புற்றிருந தான்.

கிட்கிந்தையில் வாலி தன்னிகரில்லா வகை வலி யும் வரமும் பெற்று வாழ்ந்து வரும்போது, மாயாவி என்ற அவுணன் போந்து வாலியை வலியப் போருக் கழைத்துத் தாக்கினான். வாலி பெருஞ்சினங் கொண்டு அவனை அடித்தபோது அவன வாலியின் வலிமைக்கு ஆற்றாது ஓடி ஒரு பிலத்துள் புகுந்தான. சினமடங்காது வாலி அவனைக் கொல்லத் துணிந்து தன் தம்பி சுக்கிரீவனை அப்பிலத்து வாயில் வழி அவன் தப்பித்தோடா வகை காக்குமாறு பணித்துப் பிலத்துள புகுந்தான். உட்சென்ற வாலி பதினானகு பருவங்கள் கழிந்தும் வெளிப் போந்திலாமை கண்டு பெரிதும் கவன்று, தானும் பிலம்புகுந்து உயிர்விடுவ தாகக் கூறினான. அப்பொழுது அங்கு அவனைச் சூழ்ந் திருந்த அனைவரும் அவனுக்குரிய தொழிலாக அரசு பூண வேணடுமேயன்றி உயிர் விடுதல் ஆகாது என்று கூறினர். அப்பொழுது சுக்கிரீவன் மாயாவி பிலத்து வழி ஓடாவகை மலைகள பலகொண்டு பிலத்து வாயி லைச் சேமம் செய்துவிட்டு அரசாளத் தலைப்பட் டான்.

வாலி மாயாவியைக் கொன்று மீண்டுவந்து பார்க்கும்போது பிலத்து வாயில் அடைநதிருப்பக் கணடு சினந்து தன் ஆற்றலால திறந்து கொண்டு கிட்கிந்தைக்கு வந்தான. அங்குத் தன் தம்பி சுக்கிரீ வன் அரசாளுவதைக் கணடதும் பிழையுணர்வு கொணடு சினநதான். சுககிரீவன் அவன் அடித்தலம் பற்றித தன்னைச் சீறி ஒடுககாதிருக்குமாறு வேணடி நடந்தது கூறினான். வாலி அவன் கூற்றைக் கொள ளாது அவனைக் கூற்றுக்குயப்பதாகக் கூறிக் கலக்குற அடித்தான். ஓடி உய்ய வழிகாணாது சாபங் காரண மாக வாலி புகாத இரலை மலையிலுள்ள மதங்கர் வாழிடத்தைப் புகலிடமாகக் கொண்டான். வாலி, சுக்கிரீவன் மனைவி உருமை என்பாளைத் தனக் குரியவளாக ஆக்கிக் கொண்டான். தாரமிழந்த அவனுக்கு அனுமன் என்பவன் உற்ற நண்பனானான. இவ்வாறு வாழும்போது இராம இலக்குவர்கள் தாமிழந்த சீதையைத் தேடி வருகையில எதிர்ப்பட்ட கவநதன் என்பவன் சுக்கிரீவன் துணைகொண்டு சீதையைத் தேடுமாறு கூற, அவர்கள இரலை மலைக்கு வந்தனர். வாலியின் சூழ்ச்சியால் தம்மைக் கொல்ல வருபவர்கள் அவர்கள என்று கருதிச் சுககிரீ வன் அஞ்சி ஓடி மறைய, அனுமன் மாணிப் படிவம் பூண்டு இராம இலக்குவர்களை இன்னார் எனறு அறிந்ததோடு, வாலியைக் கொன்று தமக்கு உய்தி யளிப்பவர் என்று உறுதி பூண்டு, சுககிரீவனுக்கு அறி முகம் செய்தான. இராமன அவனைத் தன்னுடன பிறந்தானாக ஏற்று, வாலியைக் கொனறு அரசு தருவதாகவும் கூறினான். அதன் வண்ணம் சுககிரீவன் வாலியைப் போருக்கழைத்துப் பொருதான்.

இராமன் வாலிமீது ஓர் அம்பினை ஏவி வீழத்தி னான் அவன் தன்னை மறைந்து நின்று கொன்ற காரணங் கேட்டுத் தெளிவு பெற்ற வாலி, தன தம்பி சுக்கிரீவன் மதுவுண்டு களித்துப் பிழைபுரிந்தால அவனைப் பொறுக்குமாறு வேண்டி உயிர்விட்டான. சுக்கிரீவன் அண்ணன் பாசம் மிகுந்து கதறியழுதான். பின்னர் இராமனால் மூடிசூட்டப்பெற்றுக் கார் காலங் கழித்துச் சீதையைத் தேடித்தர வருவதாகச் கூறிச் சென்றான். ஆனால், அவன கார்காலங் கழிந் தும் சொன்னவாறு வாராமல் மதுவுண்டு மகளிர் வாழ்வில் திளைத்து வாழ்ந்தான். சொற்பேணாத வனை ஒறுக்கும் சினங் கொண்ட இராமன், இலக்கு வனை அனுப்பிக் காரணம் அறிந்துவரப் பணித்தான். சினந்து சென்ற இலக்குவனை அனுமனும் தாரையும் அன்பால் தகைத்துச் சுக்கிரீவனைத் தெளிவித்து அழைத்து வந்தனர். அவன் தன் பிழையுணர்ந்து இலக்குவனிடம் மன்னிக்க வேண்டி இராமனைச்

சென்று கண்டு அவனிடம் தான உய்த்த தூதுவர் செய்தி கொணராமையால் காலங்கடத்திவிட்டதாக வும், காலங்கடக்குமுன போநதிலாப் பிழை பொறுக்குமாறும் வேண்டினான.

அனுமன் தென்திசைச் சென்று வந்து, சீதை இலங்கையில இராவணனால் சிறைப்பட்டிருப்பதைக் கூற,அனைவரும் இலங்கைககுச் செல்லும் வழியறியக் கடற்கரைக்கண் குழுமினர். வீடணன், இராவண னால் துறக்கப்பெற்று இராமனிடம் சரண்புக ' விரும் பினான். சுக்கிரீவன் அண்ணனைத் துறநது வநதானை நம்பலாகாது என்றும், அவனை அடைக் கலம் ஏறபதால ஏதம் சூழும் என்றும் தன் கருத்தறி வித்தான். பினனர், இராமன் வீடணனுககு அடைக கலம் தந்ததும், அவன் இராமனோடு நட்புற்றுக் கடலுக்கு அணை கட்டி இலங்கை புக உதவினான.

இலங்கையை முற்றுகையிட்டிருநத வானரத் தானைகளைக் காண இராவணன வநது மலைமேல் நின்று கண்டபோது சுக்கிரீவன அவன்மீது பாய்நது அவனோடு பொருது அவன் மகுடம் பறித்து வெறறி கணடான்.

இராமனும் இராவணனும் செய்த முதற் போரில் அரக்கர் வீரருள வச்சிரமுட்டி என்பவனோடு அரக்கர் பலரைக் கொனறான். பின் இராவணனோடு செய்த போரில் அவன் உய்த்த வயிர வாளியால தளர்ந தான. கும்பகருணனோடு பொருது அவன் கையகப பட்டுத் தவிததபோது, அவன் மூககையும காதுகளை யும் பறித்து மீணடான.

இலக்குவனும் இந்திரசித்தும போரிட்டபோது இலக்குவனுக்குத் துணையாகிப் போய் அரககர் பல ரைக கொனறான. அபபொழுது இநதிரசிதது உய்த்த அமபால் நிலை கலங்கினான். பினனா, அவன விடுத்த பிரமாத்திரததால உயிரோய்ந்து கிடந்தான். மூலபலப் படைகளை அழிகக இராமன சென்றபோது, உடன் சென்று கணடு வியநதான.

இராவண வதம் முடித்து வீடணனுக்கு அரச. ளித்து அயோத்தி மீளும் இராமன் புட்பகம் இவர்நத போது, தன்னைச் சார்ந்த அனைவரோடும் புட்பகம் இவர்ந்து போநததோடு கிட்கிந்தை வாழ் வானர. மகளிரையும் இவன் உடனழைத்துச் சென்றான்.

இராமன் முடிபுனைவிழவு கண்டு களித்துக் கிட் கிந்தைக்கு மீளும்போது இராமன தநத பரிசுப பொருளகளைப் பெற்று மீணடு அரசியல் நடாத்தி மகிழ்ச்சியோடு வாழ்ந்தான். கு.தி.

***சுக்குமா*** பண்டு மொழி பேசும ஒரு பழங்குடி இனத்தவர். இவர்கள ஆப்பிரிக்காவில் தனித்தனி அரசுகளை அமைத்து 200 ஆண்டுகளுக்கும் மேலாக அரசியல சிறப்புடன் வாழ்ந்த பழஙகுடியினராவர். சுக்குமா பழங்குடியினர் வன்சா(Mwanza)வளைகுடா விற்கும் செரஙகெட்டிச (Serengeti) சமவெளிக்கும இடைப்பட்ட பகுதியில் வாழகினறனா. இப்பகுதி தான்சானியாவில் விக்டோரியா ஏரிககுத் தெற்கிலுள் ளது பண்பாடு, மொழி ஆகியவற்றால தம பகுதிக் குத் தெற்கில் வாழும் நியாம்வேசி (Nyamwezi) மக்க ளினத்தவரை இவர்கள ஒத்துள்ளனர்.

சுக்குமா (Sukuma) இனத்தவர்கள கலப்புப பொருளாதாரததைக கொண்டவர்கள. வேளாண் மையே இதில் முதன்மையானது. பெரும்பாலோர் கால்நடைகளை வளர்க்கினறனர். இவர்களின் பயிர் வகைகளுள் தினை வகைகள், சோள வகைகள, மக காச்சோளம் முதலானவை முதலிடம் பெற்றுள்ளன. அண்மைக் காலங்களில் பணப்பயிரான பருத்தியையும் இவர்கள பயிரிடத் தொடங்கியுளளனா.

குடிவழி, மரபுரிமை, பிற குடுமப விவகாரஙகள் அனைத்தும தந்தைவழி (Patriliny) அமைப்புடை யன. ஆனால், இக்குடியினரின மூப்பன் (Chief) பதவி, முன்னாள் மூப்பனின் சகோதரியின் மகனுக்குக் கொடுக்கப்படுகிறது. பலமனைவி மண முறையே (Polygyny) இவர்கள வழக்கில் பெரும்பான்மையாக உள்ளது.

இவர்கள் அனைவரும தனித்தனிக் கிராமங்களில வாகிழ்ன்றனர். ஒவ்வொரு கிராமத்திலும் 6 முதல 100 குடும்பங்கள் வரை உளளன. இவர்கள் 200 ஆண்டுகளாகவே தனிததனியான சிறு ஆட்சிக்குழுக் களாகப பிரிந்து ஒரு தலைவனைக கொண்டு வாழ்ந்து வந்தனர். இரண்டு நூற்றாண்டுகளாகத் தான் ஆட்சிக்குழுவின தலைவனுககு (இன்தமி- Ntemi) மரபுவழியில வரும் ஆலோசகாகள இருந்து வருகின்றனர். பல சிற்றூர்களைச் சேர்ந்ததாக ஒவ் வொரு ஆட்சிககுழுவும் இருந்ததால் கிராமத் தலை வனையும் நியமித்திருந்தனர். இவர்களின சமயம் முன்னோா வழிபாட்டினை முதன்மையாகக் கொண் டுளளது. சீ.ப.

***சுக்கூர் அணை***: சுக்கூர் அணை பாகிசுத் தானத்திலுள்ள சிந்துமாநிலத்தைச் சோநத சுக்கூர் மாவட்டத்தில இருக்கிறது. சிநது ஆற்றின் குறுக்கே ஏறத்தாழ 2 கி.மீ. நீளத்திறகு இவ்வணை அமைந் துளளது. இது 1932-இல் கட்டிமுடிக்கப்பட்டது.



சுக்கூர் அணை

ஏறக்குறைய அறுபது இலட்சம் ஏக்கர் நிலப்பரப் பிற்கு இவ்வணை நீர்ப்பாசன வசதி அளிககிறது. சுக் கூர் அணையிலிருந்து பாசனத்திற்காகப் பல கால் வாய்கள் மூலம் நீர் விடப்படுகிறது. சிந்து ஆற்றின் கீழப்படுகையில் மழை மிகக் குறைவாகும். ஆயினும் சுக்கூர் அணையால் இப்பகுதி உழவுத் தொழிலுக்கு ஏற்ற இடமாக மாறறபபட்டுள்ளது.

குளிர்காலத்தில் பெரும்பகுதியான நிலப்பரப்பில கோதுமையும் பருத்தியும் பயிர் செய்ய இந்நீாத் தேக்கம் பெரிதும் உதவுகிறது. மேலும், அரிசி, எண ணெய் வித்துகள், பாாலி, சோளம் முதலியன பயிர் செய்யவும், பெரும் பழத்தோட்டங்கள் அமைக்கவும் சுக்கூா அணை பெருமளவில பயன்படுகிறது. பெரு மளவில பயிர் செய்யப்படும் பருத்தி, பாகிசுத்தானின முககிய துறைமுகமான கராச்சியின மூலம் வெளி நாடுகளுக்கு ஏற்றுமதியாகிறது.

சுக்கூர், சிந்து மாநிலத்திலுள்ள ஐதராபாது நகருடனும், போலன கணவாய் வழியாகச் செல்லும் வடமேறகு இருப்புப் பாதையினால் குவெட்டா நகரு டனும் இணைக்கப்பட்டுள்ளது. மறறொரு இருப்புப் பாதை சுக்கூரிலிருநது முல்தான் நகருககும், இரவி ஆற்றுச சமவெளி வழியே இலாகூருக்கும் செல்கிறது.

சி.பி.

**சுக்கோதைக் கலைப்பாணி:** இது தாய் லாந்தில் சுக்கோதை என்னும் நகரில் வளர்ந்த கலைப்பாணியாகும். சுக்கோதைக் கலைப்பாணியில் (Sukhothai Style) புத்தரின் படிமங்கள மிக அழகுற வடிவமைக்கப்பட்டன. இககலைப்பாணி கி பி. 14 –ஆம் நூற்றாண்டில் தோன்றியது. சுக்கோதைக் கலைப்பாணிப் புத்தர் படிமங்கள் புத்தரின வாழ்க்கை வரலாற்றைச் சித்திரிக்கும் வகையில வடிவமைக்கப் பட்டன. இக்கலைக்குத் தாய்லாந்து அரசர்கள பெரும் ஆதரவு தந்தனர்.



புத்தர் படிமம்.

சுக்கோதைக் கலைப்பாணி இலங்கைக கலைப் பாணியை ஒத்துக்காணப்பட்டது. ஈனயானபுததமதச் சிறபப்படிமங்களின் அமைப்பு இதில் காணபபட்டது. பல வளைவுகளுடனும குறைந்த எடையிலும் இப் படிமஙகள காணபபடுகினறன.இயற்கையான அமைப் பில் இப்படிமஙகள செயயப்பட்டன யானையின் துதிககையைப் போனற உடலின் தோளபகுதியையும், கிளி மூக்கை ஒத்த மனித மூக்கையும நீணட முக அமைப்பையும், தெளிவான வளைவுகளைப்பெற்ற தண புருவப் பகுதி, கண்கள, மூக்கு, வாய் ஆகியன வற்றையும் உடையனவாய்ப் படிமஙகள் சுக்கோதைக் கலைப்பாணியில் செயயபபட்டன. தலையின மேற் பகுதி புடைத்து இசசிற்பஙகளில காணபபடுகின்றது. இககலைப்பாணியில புத்தரின் உருவங்கள் இருவகை அமைப்பில் செய்யபபட்டன. தாமரை மலரில் அமர்நத நிலையிலோ நடந்த நிலையிலோ புத்தர் வடிவமைககப்பட்டார். நடந்த நிலையில உளள புத்தரின் சிற்பம் தாய்லாநது நாட்டிற்கே உரிய கலைப்பாணி ஆகும். இது போனற புத்தரின் சிற்பங் கள் இநதியாவில இல்லை. இக்கலைப்பாணி இன்றள வும் தாய்லாந்தில் பின்பற்றபபடும் ஊதாங்கு கலைப் பாணியில் சிறநத இடத்தைப் பெற்று விளஙகுகிறது.

சு.இரா.

**சுங்கக் குழுமங்கள்:** அகில உலகப் பொருளா தார ஒருங்கிணைப்பிற்குச் சுஙகக் குழுமங்கள, தடை யில்லா வணிக எலலை (Free Trade Area), பொது அஙகாடி (Common Market), பொருளாதார

ஒன்றியம்(Economic Union) போன்றவை உதவுகின்றன. ஒரு சுங்கக் குழுமத்தில் பங்கேற்கும் நாடுகள் வெளியிலிருந்து செய்திடும் இறக்குமதி மீது ஒரு பொதுவான சுங்கவரியையும் வாணிகக் கோட்பாடுகளையும் பின்பற்றுகின்றன. தங்களிடையே உள்ள வணிகவரித் தடைகளை நீக்கிவிடுகின்றன. இவ்வாறு ஒரு சுங்கக் குழுமத்தில் உறுப்பினராக உள்ள நாடுகள் உறுப்பினரல்லா நாடுகளுடன் வைத்துக் கொள்ளும் உறவுகளில் ஓர் ஒருமைப்பாட்டைக் கையாளுகின்றன. உறுப்பினர்களிடையே வரி இல்லாமல் சரக்குகளின் நடமாட்டம் நடைபெறுவதால் தடையிலலா வணிக எல்லையும், சுஙகக் குழுமமும் ஒன்றாகத் திகழ்கின்றன. ஆனால், சுங்கக்குழுமம் வெளியாருககு ஒரு பொதுவான வெளி வரியை விதிக்கின்றது.

சுங்கக் குழுமக் கோட்பாட்டு விதிமுறைகளை சாகப் வீரர் (Jacob Virer), மீடே (Meade), இலிப்சே (Lipsey), சான்சன் (Johnson), கூப்பர் (Cooper), மாசல் (Massel) போனற அகில உலக வணிக அறிஞர்கள உணடாககினர். சுங்கக்குழுமம் தோனறிய தால் உறுப்பினர்களின் உளநாட்டில உள்ள பொருள் களின் விலைகளில் ஒரு மாறறம் ஏற்பட்டுள்ளது. மேலும அவை வணிகம், உற்பத்தி, நுகர்வு போனற வறறைப் பாதுகாககின்றன. செல்வப் பகிர்விற்கும் மககள நலனுக்கும், உறுப்பினர் நலனுக்கும இககுழுமஙகள் பாடுபடுகின்றன.

சுங்கக் குழுமத்தின் விளைவுகளைப் பகுதிச் சமன் நிலை அணுகுமுறை (Partial Equilibrium Approach), பொதுச் சமனநிலை அணுகுமுறை (General Equilibrium Approach) என்ற இருமுறைகள மூலம் அறியலாம்.

**பகுதிச்சமன்நிலை அணுகுமுறை:** இம்முறையில் வணிகததை ஏற்படுத்துதல, வணிகத்தை மாற்றுதல அலலது வேறு ஒன்றிறகுத் திருப்புதல ஆகிய வற்றை வீரர் என்பவர் விளக்குகிறார். அவர் உற்பத்தி விளைவையும், இலிபசே நுகர்வு விளைவையும வலியுறுத்துகிறார்கள. ஆனால், சான்சன் என்பவர்தாம் இவவிரு விளைவுகளையும் முறையாக விளக்குகிறார். பகுதிச் சமனநிலை அணுகுமுறை கீழ்க்கணட துணிபுகளைக்(Assumptions) கொணடுளளது. அதாவது சுங்கக் குழுவை அமைத்திட உளநாடு, பஙகுதாரர் நாடு என்ற இரண்டு நாடுகள் இருகக வேண்டும். மூனறாவதாக உலகில உளள பிற நாடுகளையும் எடுத்துக் கொளள வேண்டும. பொதுவான வெளிச் சுங்கவரி ஒன்று விதிக்கப்பட வேணடும். ஒரு குறிப்பிட்ட வரியைத் தான விதிக்க வேணடும. ஒரே ஒரு பொருளைத்தான இந்நாடுகள் உற்பத்தி செய்ய வேணடும. வெளிநாட்டு விலை குறைவாகவும் உள் நாட்டு விலை அதிகமாகவும் இருக்க வேண்டும். நல்ல ஆரோக்கியமான போட்டி இருக்க வேண்டும். நாடுகளின் செல்வ வளஙகள் நிலையாக இருக்கவேண்டும். அவற்றை நன்றாகப் பயன்படுத்த வேணடும். தொழில்நுட்பம் இருக்க வேண்டும். சமநிலை வணிகம் அதாவது ஏற்றுமதியும் இறக்குமதியும் சமமாக இருக்கவேண்டும்.

**வணிக மாற்றம்:** பங்குதாரர் நாடு மீது விதிக்கப்படும் வரி நீக்கிய நிலையில் உள்நாடு அதிக விலையுடைய பங்குதாரர் நாட்டின் பொருள்களை இறக்குமதி செய்கிறது. இதனால் இரண்டு விளைவுகள ஏறபடுகின்றன. இதுவரை வெளிநாடுகளிலிருந்து இறககுமதி செய்யப்பட்ட பொருள்களைப் பங்குதாரர் நாடுகளிலிருந்து இறக்குமதி செய்வதால் பொருள்களின் விலை கூடுகிறது. அடுத்து, குறைந்த விலைப் பொருள்களுக்கு மாறாக அதிக விலையுள்ள பொருள்களை இறக்குமதி செய்வதால் நுகர்வோருக்கு இழபபு ஏற்படுகிறது. இவ்விரு விளைவுகளும வணிக மாற்றததைச் சுங்கக் குழுமத்தில ஏற்படுத்துகின்றன. இது உலக உற்பத்தித் திறனைக் குறைக்கிறது. அதனால் உலக நலன் குறைகிறது என்கிறார் விரர்.

**வணிகத்தை உண்டாக்குதல்:** உள்நாடும், பங்குதாரர் நாடும் தங்களுக்குள ஒரு சுங்கக் குழுமத்தை ஏற்படுத்திக் கொள்வதால் அந்நாடுகளுக்கிடையே வரி செலுத்த வேண்டிய அவசியமில்லை. ஆனால, எஞ்சியுள்ள நாடுகளிலிருந்து இறக்குமதி செய்யப்படும் பொருளகளுக்கு வரி செலுத்தவேண்டும். எனவே, இச்சூழலில் உள்நாடு, வெளிநாடுகளிலிருந்து பொருளை இறக்குமதி செய்யாமல் பங்குதாரர் நாடுகளிலிருந்தே இறக்குமதி செய்வதால் உள்நாட்டுச் சுங்கக் குழுமத்தில் ஒரு வணிகம் உணடாக்கப்படுகிறது. இதனால், விலையில் ஒரு விளைவு ஏற்படுகிறது. அதாவது உள்நாடு குறைந்த விலையில் பொருள்களை இறக்குமதி செய்கிறது. இதனால், உற்பத்தியிலும் ஒரு விளைவு தோனறுகிறது. உளநாட்டு உற்பத்தி குறைந்து பங்குதாரர் நாட்டிலிருந்து இறக்குமதி செய்யப்படுகிறது. பொருள் நுகர்விலும் விளைவு ஏற்படுகிறது.

**பொதுச் சமன்நிலைஅணுகுமுறை:**(General Equilibrium Approach) பொதுச் சமன்நிலை அணுகுமுறையில சில துணிபுகள் வைத்துககொளளப்பட வேண்டும். அதாவது உள்நாடு, பங்குதாரர் நாடு, உலக நாடு என்று மூன்று நாடுகள் இருக்க வேண்டும். ஒவ்வொரு நாட்டிலும் XY என்ற இரு பொருள்கள் உற்பத்தி செய்ய வேண்டும். உள்நாட்டிற்குப் பொருள் 'X' ஏற்றுமதி செய்யப்பட வேண்டும். பங்குதாரர் நாட்டிற்குப் பொருள் 'Y' ஏற்றுமதி செய்யப் பட வேணடும். உலக நாடு பொருள் 'Y'யை ஏற்று

மதி செய்கிறது. விலையிலும், வருவாய் அளவிலும் இரு பொருளகளும் குறைந்தவை அல்ல. இந்த அணுகு முறையிலும் உலக நலனை முக்கியமாக எடுததுக் கொண்டு சுங்கக் குழுமத்தில் உள்ள நாடுகளுக்கு வரிச் சலுகை செய்யப்பட்டுள்ளது.

**இதர விளைவுகள்:** மேறகூறிய இரு நிலையான விளைவுகளைத் தவிரச்சுங்கக் குழுமத்தில் சில மாறும் விளைவுகளும் ஏற்படுகின்றன. அதாவது சுங்கக் குழு மத் தோற்றத்தால் போட்டி (Competition), காரணி கள் இயக்கம் (Factor Movement), அளவு (Scale), தொழில் நுட்ப மாற்றம் (Technical Change), முத வீடு (Investment), பொருளாதார வளர்ச்சி (Economic Growth) போன்ற மாறிடும் விளைவுகள தோன்றுகின்றன.

**(1) போட்டி:** சுங்கக் குழுமம் அமைப்பதால் அது ஒரு போட்டியை உருவாக்குகிறது. காரணம் உறுப் பினர் நாடுகளுக்குச் சுங்கவரி இலலாததால அவர் களின் பொருள்களுக்குத் தேவை அதிகமாகிறது. எனவே, தயாரிப்பாளர்களிடையே போட்டி ஏற்படு கிறது. முற்றுரிமை பெற்றநாடுகள் மற்ற நாடுகளு டன் போட்டியில் இறங்குகின்றன. மேலும், திறமை யற்ற நிறுவனங்கள் இப்போட்டியைத் தவிர்ப்பதற்கு மேலாண்மைத் திறனையும், தொழில் நுட்ப வளாச் சியையும் நாடுகின்றன எனவே, இப்போட்டி, பொருள களின் விலை, உற்பத்திச் செலவு போன்றவற்றில ஒரு மாறுதலை ஏற்படுத்துகிறது. ஐரோப்பியப் பொருளாதார அமைப்பில் இப்போட்டி ஒரு பெரும் மாறுதலை உண்டாக்கியுள்ளது.

**(2) காரணிகள் இயக்கம்:** சுஙகக குழுமம ஒரு பொதுச் சந்தையை அமைபபதால் முதல், உழைப்பு, நிறுவனம் போன்றவற்றிடையே ஒரு தடை யற்ற இயக்கம் நடைபெறுகிறது, இவ்வியக்கம பேோட்டியை வளர்க்கிறது; அறிவைப் பரபபுகிறது; உற்பத்தித் திறனை அதிகரிககச் செய்கிறது; சுருங்கக் கூறின் பொருளாதார வளர்ச்சியை உண்டாககுகிறது.

**அளவு:** சுங்கக் குழுமம் அமைப்பதால் சந்தை யின் அளவு விரிகிறது; போட்டி அதிகமாகிறது; விலை யைக் குறைத்திடும் பொருள்களில அதிகக் கவனம கூடுகிறது. எனவே, இவை எல்லாம் அளவுகளின உள் அல்லது புறப் பொருளாதாரத்தில் ஏற்படுகின்றன. அநேக நிறுவனங்கள் தங்கள முழு உற்பத்தித திற னைப் பயன்படுத்தி உயர்நத அளவு உறபத்தியைப் பெருக்குகின்றன. இவ்வளர்ச்சி, குழுமத்தில் உள்ள நாடுகளின் வெளிவளர்ச்சியையும் உண்டாக்குகிறது. குழுமத்தில் திறமையான உழைப்பு, முதல், ஆராய்ச்சி மேலாண்மை போன்றவற்றால் ஏற்படுகிறது. குழு மச் சந்தை விரிவடைந்தால் பல தொழிலகள வளரும்; பொருளாதார அளவும் கூடும்.

**தொழில் நுட்ப மாற்றம்:** சுங்கக் குழுமம் அமைப் பதால் புதிய கண்டு பிடிப்பு, தொழில்நுட்பம் போன் றவை ஏற்படுகின்றன. தங்கள் நிலையைத் தங்க வைத்துக கொள்ள நாடுகள் புதிய கண்டுபிடிப்பில மூழ்குகின்றன. புதிய பொருள்கள் கண்டுபிடிக்கப்படு கின்றன. அல்லது முன்னரே உள்ள பொருளகள் மிகுதி யாகப் பெருக்கப்படுகின்றன. பொருளாதார உயா அளவை எட்டிப்பிடிததுளள நிறுவனங்களும் தொழில களும் ஆராய்ச்சி போன்ற முன்னேற்றச் செலவுகளை விரிவாகச் செய்கின்றன. தொழிலநுட்ப அறிவு மாற றமும், பொருளாதார வளர்ச்சியும் தோன்றுகின்றன.

**முதலீடு:** சுங்கக் குழுமம் அமைத்துள்ளதால் போட்டி, தொழில் நுட்ப அறிவு, சந்தைப் பெருக்கம ஆகியவை கூடியுள்ளன. இதனால், முதலீடும அதிகரித துளளது. ஆனால், அதன விளைவைக காணபது கடி னம். காரணம் சில தொழிலகளில் கூடுதல் முதலீடும், சில தொழிலகளில் குறைநத முதலீடும் நிகழ்கின றன. உள் முதலீடுகளைத தவிர வெளிநாட்டு முதலீடு களும் ஏறபடுகினறன. உறுப்பினர் நாடுகளில உளள அயல்நாட்டு நிறுவனங்கள், சுங்கக் குழும அமைப் பால் ஏறபடும கூடுதல சவால்களைச் சந்திக்கத் தயாராக உள்ளன. மேலும் சுங்கக் குழும அமைப் பால் வரி இலலாமல போவதால் தஙகள தொழிற சாலைகளைக குழுமத்திறகுளளேயே அமைக்க விரும்புகின்றன. எனவே, சுஙகக் குழுமத்தின, தோற் றத்தால் முதலீடு அதிக அளவில் கூடுகிறது.

**பொருளாதார வளர்ச்சி.** கூடுதல் போட்டி பொருளாதார அளவு, தொழிற் சட்ட அறிவு போன்றவை குழும உறுப்பு நாடுகளிடையே உற் பத்திப்பொருள், வருமானம், வேலை வாய்ப்பு போனறவற்றை அதிகரிக்கச் செய்துளளன, இவை அதிக அளவு பொருளாதார வளர்ச்சியை உணடாக்கு கின்றன. வணிக எதிர்பார்ப்பு, முதலீடு, செய்தி அதிகரிப்பு, அறிவு, புதிய தொழில்நுட்ப உததிகள போன்றவற்றில உயர்ந்த அளவு வளர்ச்சியை ஏற் படுத்தி விட்டன. இவ்வாறு எப்பொழுதும் ஏற்பட் டுள்ள அலலது தொடரும் மாற்றஙகளால் சுங்கக் குழும உறுப்பினர் நாடுகளிடையே ஒரு மாபெரும் பொருளாதார வளர்ச்சி ஏற்பட்டுள்ளது.

**ஐரோப்பியப் பொருளாதார அமைப்பு** (European Economic Community) சுங்கக் குழுமத்திற்கு இவ்வ மைப்பு ஒரு சிறந்த எடுததுக்காட்டாகும். இவ்வ மைப்பு 1978-இல் மேற்குச் செருமனி, பிரான்சு, இத்

தாலி, பெல்சியம், நெதர்லாநது போன்ற நாடுகள் சேர்ந்து அமைத்தாகும். இங்கிலாநது, தென்மாாககு, அயர்லாந்து போன்ற நாடுகள் 1977-இல் இதில் சேர்ந்தன. கிரிசு 1979-இல சேர்ந்தது. தொழிற் பொருள்களின் வணிகப் பெருக்கமும், வேளாண்மைப் பொருளகளில் மாற்றமும் ஏற்பட்டன. நிலையான நன்மைகளை விட மாறும் நன்மைகள அதிகம் உள என. ஐரோப்பியத் தடையில்லா வணிகச் சங்கம் 1960-இல்அமைக்கப்பட்டது. வளரும் நாடுகளிடையே பொருளாதார ஒருங்கிணைப்பை வளர்த்திட இவ் வமைப்புகள் பாடுபட்டன. ஆனால், குறைநத அளவு வெற்றி தான் கிடைத்தது. கே.என்.இரா.

**துணை நூல்கள்:**

**Domibick Salvatore.,** International Economics, Macmillan Publishing Co., New York, 1983.

**Gupta, K.R.,** Galt and Underdeveloped Countries, Atma Ram & sons, 1976.

**Thingan, M.L.,** International Economics Konark Publications, New Delhi, 1986.

*சுங்கக் கூட்டுறவு ஆலோசனைக் குழு:* இரண்டாம் உலகப்போர் முடிவுற்றவுடன் மேற்கு ஐரோப்பிய நாடுகளின் வாணிகத்தைப் பெருக்கவும், சீர்குலைந்திருந்த பொருளாதாரத்தை மறுசீரமைப் புச் செய்யவும் அம்மண்டலத்தைச் சார்ந்த 13 நாட் டரசுகள ஐரோப்பியப் பொருளாதாரக் கூட்டமைப் பின் (European Economic Cooperation) ஆலோச னைக் குழுவின் தீர்மானத்தின்படி 1947-ஆம் ஆண்டு செப்டம்பர்த் திங்கள் சுங்கக் கூட்டுறவு ஆலோசனைக் குழுவினை (Customs Cooperation Council) நிறுவ முடிவு செய்தன. அதற்கான பொருளாதார ஆய்வுக் குழுவும், சுங்கக் குழுவும் ஓராண்டிற்குள உருவாயின. சுங்கக் குழுவிற்குத் தொழில்நுட்பஅறிவுரைகளையும் பிறஉதவிகளையும் நல்குவதற்கென நிலையான சுங்க ஆணையகம் (Permanent Tariff Bureau) நிறுவப் பட்டது.

பொருளாதார ஆய்வுக்குழு,மேற்கு ஐரோப்பிய மண்டல நாடுகளிடையே சுங்க ஒன்றியம் அமைக்கப் படு முன்னர்ச் சுங்கம் தொடர்பான தீர்வை (Tariff), செயல்முறை (Procedure) ஆகியன குறித்த விளக்க வரையறைகளை முதலில் முடிவு செய்யவேண்டும் என்பதனை வலியுறுத்தியது. எனவே, 1950-ஆம் ஆண்டு மூன்று மாநாடுகள் கூட்டப்பட்டுச் சுங்கக் கூட்டுறவுக் குழுக்கான ஆவணங்கள், கலந்துரையாட லுக்குப் பின்னர் எழுதப்பட்டன. ஆவணக் கூறுகள பிரசல்சு (Brussels) மாநாடு வரையறுத்த பன்னாட்டு வாணிகக் கோட்பாடுகளை அடிப்படையாகக் கொணடு வரையப்பட்டன. சுங்கக் கூட்டுறவு ஆலோ சனைக் குழுவின் உறுப்பு நாடுகள,ஏற்கெனவேசெயற் படுத்த ஒப்புக்கொணடிருக்கும் நெறிமுறைகள், கொள்கைகள் ஆகியவற்றை நிறைவேற்றுவதற்கு இக் குழுவில் பங்குபெறுவதால் இடையூறு ஏற்படா வண்ணம் பாதுகாக்கப்படத் தனிச் சலுகைகள் அனு மதிக்கப்பட்டன.

சுங்கக் கூட்டுறவு ஆலோசனைக் குழு 6 துணைத் துறைக் கழகங்களுடன் (Subsidiary Department Organs) பணியாற்றுகிறது. அவையாவன: மதிப்பீட் டுக் குழு (Valuation Committee), இடுபெயர்த் தொகுதிக குழு (Nomenclature Committee), நிதிக் குழு, நிலையான தொழிலநுட்பக் குழு, இணைந்த முறைக் குழு (Harmonized System Committee), பன் னாட்டு வாணிகக் குழு. வாணிகப் பொருளகளின் மதிப்பைச் சீர்தூக்கி, சுங்கக் கூட்டுறவு ஆலோசனைக குழுவின் ஆவணக் கோட்பாடுகளின்படி அவற்றை வரையறுப்பது மதிப்பீட்டுக் குழுவின் தலையாய பணியும் பொறுப்புமாகும். இக்குழு 1953-ஆம் ஆணடு சூலைத் திங்கள் 28-ஆம் நாளிலிருந்து செயற்பட்டு வருகிறது. சுங்கக் கூட்டுறவு ஆலோசனைக் குழுவின் ஆவணக் கோட்பாடுகளின்படி வாணிகப் பொருளகள வகைப்படுத்தப்பட்டுச் சுங்க வரிகள் விதிக்கப்படுகின் றனவா என்பதனைக் கண்காணிக்கும் மேலாண்மைப் பணியை இடுபெயர்த் தொகுதிக் குழு 1959-ஆம் ஆணடு செப்டம்பர்த் திங்கள் 11-ஆம் நாளிலிருந்து ஏற்று நிறைவேற்றி வருகிறது.

சுங்கக் கூட்டுறவு ஆலோசனைக் குழுவின் மேலாண்மைப் பணிகளை மேற்கொள்ளும் தலைமைச் செயலகம் பெல்சியம் (Belgium) நாட்டுப் பிரசல்சு நகரத்தில் நிறுவப்பட்டுள்ளது. மேலாண்மைப் பணி களின் பொறுப்பைத் தலைமைச் செயலகத்தின் பொதுச் செயலாளர் உரோனால்டு இரேட்போர்ட்டு (Sir Ronald Radfort) ஏற்றுத் திறமையுடன் பணி யாற்றி வருகிறார்.

சுங்கக் கூட்டுறவு ஆலோசனைக் குழு, பன்னாட்டு வாணிகத்தின் கட்டுப்பாடுகளைத் தளர்த்திப் பொருள்களின் வகைகளிலும் சுங்கத் தீர்வை முறை களிலும் ஒருங்கிணைந்த கொள்கையையும் வரை முறைகளையும் செயற்படுத்த, உறுப்பு நாடுகளி டையே மண்டலவாரியாகக் கலந்தாலோசனைகளை யும் கருத்தரங்குகளையும் நடத்திவருகிறது. மேலும், பன்னாட்டு வாணிக நடைமுறைகள் தொடர்பான போக்குகள், முறைமாற்றங்கள், மதிப்பீடு, வகைப்

படுத்தல் போன்றவற்றில் உண்டாகும் நெறிமுறைச் சிக்கல்கள் ஆகியன தொடர்பான தொழில்நுட்ப அறிவுரைகளையும் உறுப்பு நாடுகளுக்கு அவ்வப்போது வழங்குகிறது. இவற்றுள் அதிகமான தொழில்நுட்ப உதவி, ஆலோசனை, செலவு ஆகியன, வளரும் நாடுகளுக்கு எனத் தனிச் சலுகையுடனும் அக்கறையுடனும் வழங்கப்படுகின்றன.

மேற்கு ஆப்பிரிக்க நாடுகளின் பொருளாதாரச் சமூகத்தின் (Economic Community of the West African States—ECOWAS) உறுப்பு நாடுகளுக்கும், கரீபியன் சமூக (Caribbean Community) உறுப்பு நாடுகளுக்கும் 1980-இல நடத்தப்பட்ட கருத்தரங்கும் மண்டலப் பயிற்சிப் பாசறைகளும் அண்மைக்காலச் சுங்கக் கூட்டுறவு ஆலோசனைக் குழுவின் பணிகளுள் பயன் நிறைந்தனவாகும். அ.கு சா.

***சுங்கத் தீர்வைகள்*** ஏற்றுமதி, இறக்குமதி செய்யப்படும் பொருள்களின்மீது விதிக்கப்படும் வரியைக் குறிக்கும். ஒரு நாட்டின் எல்லையை மீறிப் பொருளகள் வெளியேறும்போதோ, உள்ளே கொணடு வரப்படும்போதோ நீண்ட காலப் பழக்கமாக (Custom) வரி விதிக்கப்படுவதால் இது பழக்கமான வரி எனக் குறிக்கப் பெற்றுச் சுங்கத்தீர்வை (Customs Duties) என வழங்குகிறது. தமிழ்நாட்டில் சங்க காலத்திலேயே சுங்கத் தீாவைகள் விதிக்கப்பட்டதற்கான சான்றுகள் சங்க இலக்கியத்தில் உள்ளன. இங்கிலாந்தில் கி பி. 13-ஆம் நூற்றாணடில் சுங்கவரி விதிக்கப்பட்டதாக வரலாற்றிலிருந்து அறியப்படுகிறது.

**சிறப்பியல்புகள்:** நாட்டு வருமானத்தைப் பெருக்கும் நோக்கத்துடன் சுங்கத் தீர்வைகள் விதிககப்படுகின்றன. பொதுவாகச் சுங்கத் தீர்வையின் மூலம் அரசுகள் குறைந்த செலவில் மிகுதியான வருமானம் பெறமுயல்கின்றன. அயல்நாட்டுப் பொருள்களின குவிப்பினால் உள்நாட்டுப் பொருள் உற்பத்தியும், பொருளாதார வளர்ச்சியும் குன்றவாய்ப்பு ஏற்படும் நிலை உண்டாகுமாயினும் காப்பு வரிக் கொள்கையின் அடிப்படையில் (Protective Tariff Policy) இறக்குமதி செய்யப்படும் பொருளகளின் மீது சுங்கத் தீர்வைகள் விதிக்கப்படுகின்றன. காண்க: காப்பு வரிக் கொள்கை.

உள்நாட்டுப் பொருள்களின்மீது செய்பொருள் வரி (Excise Tax), விற்பனை வரி (Sales Tax) போன்றவை விதிக்கப்படுவதால், அதற்கீடான வரிச் சுமையை இறக்குமதிப் பொருள்களின்மீது சுங்கத் தீர்வை மூலம் விதிப்பதால் வரிச்சுமை (Burden of Tax) சமநிலைப்படும் என்ற கோட்பாட்டின் அடிப்படையில் சுங்கத்தீர்வை விதிக்கப்படுகிறது. பொதுவாக உளநாட்டில் உற்பத்தி செய்ய இயலாத இன்றியமையாப் பொருள்களுக்குத் தேவையின் அடிப்படையில், அப்பொருள்களின இறக்குமதி செய்யப்படும் போது சுங்கத்தீர்வை விதிக்கலாகாது அல்லது மிகக் குறைந்த அளவில் விதிக்க வேண்டும் என்பது கருதப்படுகிறது.

சுங்கத் தீர்வைகள் பொருளகளின் அளவு, மதிப்பு ஆகியவற்றின் அடிப்படையில் விதிக்கப்படுகின்றன. பொருள்களின் அளவு அல்லது எடையை அளவு கோலாகக் கொண்டு விதிக்கப்படும் வரி குறிப்பிட்ட வீத வரி (Specific Duty) எனபபடுகிறது. இவ்வரி விதிப்பு முறையில் பொருளின் அளவு கூடக் கூட வரி வீதமும் உயரும். பொருள்களின் மதிப்பின் அடிப்படையில் விதிக்கப்படும் வரி பெறுமான வீத வரி (Advalorem Tax) எனப்படுகிறது. குறிப்பிட்ட வீத வரி தேய்ந்து செல் (Regressive) வீதத்திலும், பெறுமான வீத வரி வளர்ந்து செல் (Progressive) வீதத்திலும் செயற்படுகின்றன.

பெறுமான வீத வரியினால் விலை உயர்வுக்கு ஈடாக வரி வீதமும் உயரும், அதனால் பணவீக்கக் (Inflation) காலத்திலும் அரசுககுச் சேர வேண்டிய பணம் தவறாது அரசுக்குச் சேரும். இவ்வரி வீதம் பொருள்களின் மதிப்புடன் நேரடித் தொடர்பு கொண்டுள்ளமையால் சமப் பஙகீடு (Equitable Distribution)கோட்பாடு நிறைவேற்றப்படவும் பயன்படுகிறது. ஆனால் பெறுமான வீத வரியைச் செயற்படுத்துவதில் சிக்கல்கள் உள்ளன. பொருள்களின மதிப்பை வரையறுப்பதும் வசூலிப்பதும் வரிக்கணக்கை கணக்கீடு (Compute) செய்வதும் பெறுமான வீத வரி முறையில் மிகக் கடினமானது எனக் கருதப்படுகிறது. இவ்வரி முறையில் விற்பனை வரி, சொத்து வரி, இறக்குமதி வரிகள் ஆகியன உள்ளடங்குகின்றன. பொதுவாகப் பொருள்களின் மதிப்பைக் குறைவாக வெளிப்படுத்துவதன மூலம் பெறுமான வீத வரி ஏய்ப்பு நடைபெறுகிறது.

**நன்மைகள்:** சுங்கத் தீர்வைகள் நாட்டு வருமானத்தைப் பெருக்குவதுடன் அயற் செலாவணியைப் (Foriegn Exchange) பெருக்கவும் பயன்படுகின்றன. நாட்டில உற்பத்தியாகும் இன்றியமையாப் பொருள்கள், மூலப் பொருள்கள் ஆகியன கட்டுப்பாடின்றி அயல்நாடுகளுக்கு ஏற்றுமதியாவதைத் தடுக்கவும் நெறிப்படுத்தவும் சுங்கத் தீர்வைகள் உதவுகின்றன. மேலும், நிலையான பொருளாதார வளர்ச்சியைப் பேணிக் காக்கவும், உள்நாட்டில் பணவீக்கத்தைக் கட்டுப்படுத்தி விலை உறுதிப்பாட்டை நிலைநிறுத்தவும் உதவுகின்றன. பிற நாடுகளிலிருந்து வாணிகச் சுழற்சியினால் (Business Cycle) பொருளாதார நட

வடிக்கைகளில் ஏற்றத் தாழ்வுகளுக்கான (Fluctuations) தாக்கங்கள உண்டாகாதவண்ணம் தடுக்கவும் சுங்கத் தீர்வைகள் பயன்படுத்தப்படுகின்றன.

சுங்கத தீர்வைகள் மறைமுக வரிகளானபடியால அவற்றின் பளுவை நுகர்வோர் வெளிப்படையாக உணர்வதில்லை. இவ்வரி முறையில் பொருளகள் பாகுபடுத்தப்பட்டு ஆடம்பரப் பொருளகள் மீது உயர் வான வரி விதிக்கப்படுகிறது அதனால், பெருமபாலும செல்வர்களே வரிப்பளுவினால பாதிககப்படுகின்ற னர். தீய பழககவழக்கஙகள், உடல்நலக் கேடு ஆகிய வற்றை விளைவிககும் பொருளகள இறக்குமதி செயயப் படாமல் தடைசெய்யச் சுங்கத தீாவை துணை செய் கிறது. ஒரு நாடு தன்னிறைவையடையும் வணணம் இளந் தொழில்களைப் பாதுகாக்கவும் உளநாட்டுஉற் பத்தியைப் பெருக்கவும சுங்கத் தீாவைகள் பயன்படு வதே அவற்றின தலையாய சிறபபுத தன்மையாகும.

எனினும், நாட்டு வருமானத்தைப் பெருக்கும நோக்கத்துடன உயர்வான சுஙகத்தீாவைகளைப் பரவலாகப் பொதுப் பயன்பாட்டுப் பொருள்களமீது விதிததால் நடுத்தர மக்களும் ஏழைகளும பெருமள வில் இன்னலுறுவர். சுங்கத்தீர்வைகள் நெகிழச்சி யற்றவையானமையால் வரிவீதம் உயரும்போது தேவை குறைந்து அரசின வருவாயும் குறையும். சுங கத் தீர்வைகளினால் தடையிலா வாணிகம் செழிப்புற நடைபெற இயலாது. அதனால், உற்பத்தி குறைந்து பொருளாதார வளர்ச்சியும் பாதிககபபடலாம். சுங்கத் தீர்வைகளின் பளு, தீர்வை விதிக்கப்பட்ட பொருளகளை வாங்குவோரையே சார்வதால பொருளகளின விலை உயரவும் வாய்பபுணடா கினறது.

சுங்கத் தீர்வைகள் மூலம ஒருசில தொழிலகள அல்லது துறைகள் பாதுகாப்புப் பெற்றால அவற றால் பயனபெறும் குறிப்பிட்ட சமுதாயம தவிரப்பிற மககள இன்னலுறுவா. அவர்கள பாதுகாக்கப்பட்ட பொருள்களின நுகாவோாாக அவற்றிற்கு உயர்ந்த விலை கொடுக்க வேணடிவரும். காப்புவரிக கொள கையில விதிககப்படும் சுஙகவரிகள, போட்டியை ஒழிப்பதால திறமையினமைககும தொடர்ச்சியான சாாபு நிலைக்கும் (Dependent Status) பொருளா தார நடவடிக்கைகளை நிலை நிறுத்துவதறகும் வாயப்பளிககினறன.

**இந்தியாவில்:** இந்தியாவில சுங்கத் தீர்வையினை விதிககும அதிகாரம மத்திய அரசின் கட்டுப்பாட்டிற் குள உளளது. நாடு விடுதலை பெற்றபின சணல், பருத்தி போன்ற மூலப்பொருளகளின் ஏற்றுமதியைக் கட்டுப்படுத்தவும், விலை உறுதிப்பாட்டை அடைய வும் பணவீககத்தைத் தடுக்கவும் வருமானம் பெற வும் இந்திய ஏற்றுமதிப் பொருள்களினமீது சுங்கத் தீர்வைகள் விதிக்கப்படுகின்றன.

சுங்கத்தீர்வைகளின் மூலம் இந்திய அரசு குறை வான வருவாயையே பெறுகிறது எனினும், நாட்டின் வரி அமைப்பு முறையில இறக்குமதி வரிகள் தனிச் சிறப்பிடம் பெறுகினறன. நாட்டின தொழில் முன னேற்றத்தைக் கருத்தில் கொண்டு மூலப் பொருள் கள, முதலீட்டுப் பொருள்களான இயந்திரஙகள, கருவிகள் போன்றவற்றிறகுக் குறைவாக வரி விதிககப் படுகிறது. இந்தியாவில் கிடைக்கக்கூடிய இரசாயனப் பொருள்கள், மருந்துகள, மதுவகைகள, ஆடம்பரப் பொருள்களான மகிழ்வுநதுகள், குளிர் அறைப் பெட்டிகள் போன்றவற்றின்மீது சுங்கத் தீர்வைகள் விதிக்கப்படுகின்றன.

அட்டவணை 1-இலிருந்து சுங்கத் தீர்வைகள மூலம் இந்திய அரசு பெறும வருமானமும் அதன் வளர்ச்சியும் அறியப்படுகின்றன.

அட்டவணை 1.

| நிதி ஆணடுகள | சுங்கத் தீர்வைகள (கோடி உரு.) |
|---|---|
| 1950-51 | 155 |
| 1970-71 | 524 |
| 1983-84 | 5879 |
| 1984-85 | 6650 |

கள்ளக் கடத்தலை ஒழித்தால அரசின் சுங்கத தீர்வை வருமானம் பெருகும் எனக் கருதப்படுகிறது.
காணக: களளக்கடத்தல் அ.கு.சா.

**சுங்கர்கள்:** வட இநதியாவில மிகுந்த புகழு டன் ஆட்சி புரிந்து, வைதிக சமயததிற்குப் பேராதரவு நல்கிய சுங்காகள் (Sungas) ஏறத்தாழ 110 ஆணடு கள் வட இந்தியாவைச் சிறப்புடன் ஆணடு, அந்நியப் படையெழுச்சியினின்றும் நாட்டைக் காததனர். மௌரிய வமிசத்தின் கடைசி மன்னனான பிரகத்திர தனைக் கொனறு, அரசைக் கைப்பற்றிய புசிய மித் திரன் என்ற படைததலைவனால் தோற்றுவிக்கப் பட்ட அரசகுலத்தவர்களே சுங்கர்கள்.

சுங்கர்களின் வரலாறு பற்றிப் பலதரப்பட்ட கருத்துகள நிலவி வருகினறன. பாணினி, செய்சுவால போன்றவர்கள் சுங்கர்களைப் பிராமணர்கள என்

றும், காளிதாசர் பெயம்பிகா மரபைச் சேர்ந்தவர் கள் என்றும், மற்றும் சிலர் ஈரானியர்கள் என்றும் கருதுகின்றனர்.

**புசிய மித்திர சுங்கன்** (கி மு. 188-152) சுங்க வமி சத்தின் முதல் மன்னனான புசியமித்திரன் (Pushyamithra) சுமார் 36 ஆண்டுகள் ஆட்சி செய்தான். அவனுக்கு உதவியாக அவன் மகன் அகனிமித்திரனும, பேரன் வசுமித்திரனும் உதவி புரிந்தனர். தான் ஆட்சி புரிந்த காலததில புசிய மித்திரன், யவனர்களுடன் இரணடு முறை போர் புரிந்தான் என்று கார்கி சம்கிதையும், காளிதாசரின் மாளவிகாக்னி மித்திரமும் கூறுகின்றன. புசியமித்திரன் முதல் போரில் சாகேதம், பாஞ்சாலம், மதுரா ஆகியவற்றைக் கைப்பற்றினான், இரண்டாம் போர் யவனர் தலைவர் மினாண்டருக்கும் வசுமித்திரனுக் கும் இடையே சிந்து நதிக்கருகில் நடைபெற்றது. அப்போரில் யவனர் படை தோற்கடிக்கப்பட்டது. விதர்ப்ப நாட்டு மன்னன் யக்ஞசேனன் தன்னாட்சி பெற முயன்று வருகையில், அக்கினிமித்திரன் அவன் தம்பி மாதவசேனனின் நட்புடன் விதர்ப்ப நாட்டைக் கைப்பற்றினான் என்றும், அந்நாட்டு இளவரசி மாளவிகாவைக் காதல் புரிந்தான் என்றும், மாளவி காக்னிமித்திரம் உரைக்கின்றது. வட இந்தி யாவில் கலிங்க நாட்டுக் காரவேலனின் ஆட்சியால சுங்கர்களுக்குப் பலத்த எதிர்ப்பு இருந்திருக்கக் கூடும் எனச் சான்றுகள் கூறுகின்றன.

**புசியமித்திரனுக்குப்பின் வந்தவர்கள்:** புசியமித்திர னுககுப்பின் அக்னிமிததிரன் (கி.மு.149-141) சுங்க ஆட்சியை நடத்தினான். தன்தந்தையின ஆட்சிக் காலத்தில் இவன் தெற்கில் இருந்த விதேக நாடு, பாஞ்சாலம்,கோசலம் ஆகியவற்றின் அரசப் பிரதிநி தியாக இருந்து, தன் தந்தைக்கு உதவினான் இவன் விதேக நாட்டின் ஆளுநராக . இருந்தபோதுதான விதர்ப்ப நாட்டை வென்றான். அக்னிமித்திர னுக்குப்பின் சுசுதா (கி.மு. 140-133) என்பான் அரி யணை ஏறி ஏழு ஆண்டுகள் ஆட்சி புரிந்தான். சுசு தாவிற்குப்பின் சுமித்ரன் (கி.மு. 133-123) ஆட்சிககு வந்தான். இவன் இளவரசனாக இருநத போது யவனர் படையெடுப்பில் பங்கு கொண்டும், அசுவ மேத யாகத்திற்குத் துணை புரிந்தும் உள்ளான். இவ் வேந்தன் பின் சிற்றின்பத்தில் ஈடுபட்டு ஆட்சியைச் சரிவரக்கவனிக்கவில்லை. இவன் மாளுவ தேவன் என்பவனால் கொல்லப்பட்டான். இவனுக்குப் பின வசுமித்திரன் (கி.மு.123-114) சுங்க வம்சத்தினை ஆண்டான். இவன் இளவரசனாக இருந்த பொழுது, யவனரைத் தோற்கடித்தான். தன் பாட்டனார் புசிய மித்திரனின் அரசப் பிரதிநிதியாக இருந்து, வட மேற்கு எல்லையைக் காத்து நின்றான். இவனை அடுத்துப் பாகவதன் (கி.மு.112-82) பட்டத்திற்கு வந் தான். இவனது ஆட்சிக் காலத்தில் சுங்கர்களுக்கும் கிரேக்க மன்னர்களுக்கும் நல்லுறவு இருந்து வந்தது. அன்றியும், கிரேக்கர்கள் வைணவ சமயத்தை மேற் கொண்டனர். சுங்க அரசு வமிசததின் கடைசி அரசன் தேவ பூதி (கி.மு.82-73) ஆவான். இவன் சிற்றின் பத்தில் நாட்டம் கொண்டதால், தன் அமைச்சர் வாசுதேவ கண்வரின சூழ்ச்சியால் கொல்லப்பட் டான். ஏறத்தாழ 110 ஆணடுகள் நீடித்த சுங்கர்களின் ஆட்சி தேவ பூதியுடன் முடிந்தது.

**சுங்க ஆட்சியின் சிறப்பு**· புசியமித்திர சுஙகனின காலத்திய அசுவமேத யாகங்கள் மிகவும் சிறப்பு வாய்ந்தவையாகவும், பின்னர் வந்த மரபினர்களுக்கு ஒரு முன்னோடியாகவும் அமைந்தன எனலாம்.

சுங்கர்களின் காலத்தில் வைதிக மதம் நன்கு வளர்ச்சியடைந்தது. வட இந்தியாவில் கிரேககத்தின் ஆதிக்கம் ஏற்படுவதைத் தடுத்தது.

சுங்கர் காலத்தில் பௌத்த தூபிகள், மரவேலி கள், அழிக்கப்பட்டுக் கற்களினால் ஆனவேலி அமைக் கப்பட்டது. பேசு (Bace) நகரில் ஒரே கல்லில் செதுக் கப்பட்ட கருடன் உருவம அக்காலக் கலைச் செல்வம ஆகும். ம.சு.

**சுங்கியாங்கு** சீனாவின் வடகிழக்கில் உள்ளநிலப் பகுதி. இது முன்பு சீனாவின் மாநிலமாக இருந்தது. இதன் பரப்பு 82,880 ச.கி.மீ. சீனாவில் தேசிய அரசு அமைந்தபின், மஞ்சூரியாவில் புதிய அரசு 9 புதிய மாநிலங்களை அமைத்தது. இது இரண்டாம் உலகப் போருக்குப்பின் ஏற்பட்ட மாற்றம். ஒன்பது புதிய மாநிலங்களுள் சுஙகியாங்கும் (Sung-Kiang) ஒன்று. இது 1954-ஆம் ஆண்டில் எய்லாங்கியாங்கு (Heilong kiang) மாலநிலத்தின் ஒரு பகுதியாக்கப்பட்டது. தெ.பா.

**சுசீந்திரம்** கன்னியாகுமரி மாவட்டத்தில் உள்ள தோர் ஊர். சுசீநதிரம் கனனியாகுமரியிலிருந்து 12 கி.மீ. தொலைவில் அமைந்துள்ளது. இவ்வூர் கோயில் களுக்குச் சிறப்புப் பெற்றது. இங்குள்ள கோயில் களுள் தாணு மாலையப்பெருமாள் கோயில் திரிமூர்த்தி எனப்படும் சிவனுக்குரிய கோயிலாகும். இக்கோயிலின் கோபுரம் மிக அழகானது. இங் குள்ள இசை அரங்கு, முன்பு உற்சவ மூர்த்திகள் வைக்கும் மண்டபமாகவும் நடன அரங்கமாகவும் விளங்கியது. இம்மண்டபத்தின் கூரையில் பூ அணி வேலைப்பாடு செய்யப்பட்டுள்ளது.

இக்கோயிலின் உள்ளே சிதம்பரேசுவரர் என்னும் நடராசர் ஆலயமும் ஊஞ்சல் மண்டபமும் திருக்கல்

யாண மண்டபம், வசந்த மண்டபம் போன்றவையும் உளளன. இவற்றின்வேறாகப் பல சிற்றாலயங்களும் இக்கோயிலினுள் காணப்படுகின்றன. காள பைரவர் சிற்றாலயத்தின் அருகில் இசைத்தூண்கள் உளளன. இத்தூணின் ஒவ்வொரு பகுதியையும் தட்டினால் வெவ் வேறு இசையைக் கேட்கலாம். இதன் அருகில் அரசர் களின் சிற்பங்கள் காணப்படும குலசேகர மண்டபம் உள்ளது. இக்கோயிலின் முன்மண்பந்தில் மாப்பெரிய அனுமார் திருவுருவம் அமைத்துள்ளது. சு.இரா.

**சுட்கசென்தோர்**: பாகிசுத்தானத்தில் கராச் சியிலிருந்து மேற்காக 480 கி. மீ. தொலைவில் அமைந் துள்ள ஊர். இது சிந்துவெளி நாகரிகப் பணபாட் டைக் கொண்டிலங்கிய ஊராகும். சுட்கசென்தோா (Sutkagendoor) அரபிக்கடலிலிருந்து 40 கி.மீ. தொலைவில் அமைந்துள்ளது. சர் ஆரல் இசுடீன் (Sir Aurel Stein) என்பவர் இங்கு ஆய்வுகள மேற கொண்டு இதன் தொன்மையைக் கண்டுபிடித்தார். இங்குக் கருங்கற்களால் கட்டப்பட்ட அரண் ஒன்றும் கட்டடங்களின் எச்சங்களும் இவரால் கண்டுபிடிக்கப் பட்டன. இவற்றிற்கு அருகில் இறந்த உடலை எரித்த சாம்பல் நிரப்பிய பெரிய பானை ஒன்றும் கணடுபிடிக்கப்பட்டது. மேலும், பல சிறு கற்கருவிகளும் அரபபா பண்பாட்டைக் கொண்ட கூறுபாடுகளும் இங்குக் கண்டுபிடிக்கப்பட்டன.

சு.இரா.

**சுட்டு**: சுட்டுதல என்னும் தொழிறபெயர் கருதுதல், குறித்தல, மதித்தல் முதலிய பொருள் தரும் பல பொருளொரு சொலலாகும். இதன முதனிலைச் சொல்லாகிய சுட்டு என்பது, 'உருபென மொழியினும் அஃறிணைப பிரிப்பினும் இருவீற்றும் உரிதசே சுட்டுங்காலை' என்றாற் போலக கருது என்னும் தன்வினைப் பொருளையும், 'தன்மை சுட்டலும் உரித்தென மொழிப அன்மைக் கிளவி வேறிடத்தான' என்றாற்போலக் கருதச செய் எனனும் பிறவினைப் பொருளையும், 'உயர்திணை என்மனார் மக்கட் சுட்டே' என்றாற்போலக கருதப் படும் பொருளையுடையது எனக குறிப்புவினைப் பெயர்ப் பொருளையும் சுட்டிவரும்.

அம்முறைமையான் இரு திணை ஐம்பாலுள ஒரு பொருளை அதற்குரிய இயற்பெயரை விட்டுப் பிறி தொரு குறியீட்டான் உணர்த்து மிடத்து, அக்குறி யீட்டுச் சொலலைச்சுட்டு என இலககண நூலார் வகுத் துரைத்தனர். தமிழ் மொழிக்கண் அங்ஙனம் சுட்டாக வருபவை மூவகைப்படும்: அவை அ,இ,உ என்பனவா கும. அவற்றை எழுத்து நிலையிற் சுட்டெழுதது எனவும் சொல்நிலையிற சுட்டிடைச் சொல் எனவும் குறிப்பிடுவர். இவற்றினடியாகப் பிறக்கும் பெயர்கள சுட்டுப் பெயர் எனப்பெறும்.

சுட்டுதல் இரு திணையுள யாதாயினும் ஒரு பொருளையே யாதலின சுட்டுப்பெயர்கள யாவும பொருட்பெயர்களைத் தனனுட் கொண்டு, அவற்றின் மாற்றுப் பெயர்களாக நினறு, கூறுவோன் கருதிய பொருளையே கேட்போன் கருதுமாறு செய்தலின, சுட்டென்பது காரணக் குறியீடாதல விளங்கும். சுட்டுப் பெயர்களைப் பிரதிப் பெயர்கள எனபர் மொழிநூலாா.

சுட்டுப் பெயர் அவன், அவள, அவர், அது (அஃது), அவை (அவ்) என இருதிணை ஐம்பாற பொருளைச் சுட்டிப் படர்க்கைப் பெயராக வரும். இ, உ என்பவையும் இவ்வாறே இறுதிநிலைகளைப பெறறுவரும்

இக்கட்டுரையில் பெரும்பானமையும் அகரச் சுட்டு மட்டுமே எடுத்துககாட்டி விளக்கப்படும் ஏனைய இகர உகரச் சுட்டுகட்கும் அவ்வாறே பொருந்துமாற்றான சொற்களை அமைத்துணர்ந்து கொள்ள வேணடும்

சுட்டெழுத்துகளை முதனிலையாகக கொணடு பல்வேறு பெயாகளும் சிறுபான்மை வினைகளும வரும. அ,இ,உ என்னும் சுட்டுகள அனறி, இன்றி உன்றி எனத் திரிந்தும் ஆ, ஈ, ஊ என நீணடும் அந் நீட்சியொடு ஆன, ஈன், ஊன என, னகரச சாரியைப் பெறறும் வரும்.

சுட்டுப் பெயர்கள அவன், அவள், அவர், அது, அவை எனறாற்போல ஐம்பாற் பொருளையும், அஙகு, ஆங்கு, ஆணடு, ஆண்டை, அதோளி, இதோளி என்றாற்போல இடப்பொருளையும், அன்று, இனறு என்றாற்போலக் காலப் பொருளையும, அம்மை இம்மை என்றாறபோலத் தனமைப் பொருளையும் இடபபொளையும், அங்ஙனம், இங்ஙனம் எனறாற போலத் தன்மைப் பொருளையும் ஒப்புப் பொருளை யும் உணர்த்தி வரும் ஆகும் என்பது இடப் பொரு ளொடு காலப் பொருளையும், ஒப்புப் பொருளையும் சிறுபான்மை உணர்த்திவரும. அன்று என்பது அறறை எனத் திரிநதும் வரும். அற்று, இறறு, அன்ன, இனன, அன்னன், அன்னள எனக குறிப்பு வினையாயும் வரும்.

சுட்டு மூன்றனுள அகரம சேய்மை நிலையை யும இகரம் அணமை நிலையையும் உகரம அவையல லாத ஏனைய நிலைகளையும் உணர வரும். அவ்வாற்

றான் அவை இடமுணர வருதலன்றிச் சொல நிலையாற் படர்க்கைப் பெயர்களேயாகும். குறிப்பு வினையாக வருமிடத்து அன்னேன், அன்னாய் அன்னை, அன்னான் என மூவிடச் சொல்லாக வரும்.

சுட்டெழுத்துகள, அவன், அது, அங்கு, அம்மை அன்று, அங்ஙனம், அன்ன, அன்னன் எனறாற்போல ஒரு சொல்லின் உறுப்பாக நிற்குமிடத்து அவறறை அகச் சுட்டு என்றும், அம்மலை, அககடல், அவ்வீடு எனத் தனித்து நிற்குமிடத்து அவற்றைப் புறச்சுட்டு என்றும இடைக்கால இலக்கண நூலார் கூறுவர். சொல்லின உறுப்பாக நிற்றலை அகம் என்பதும், தனித்து நிற்றலைப் புறம் என்பதும் அவர் கருத்தாகும்.

இனித் தொல்காப்பியத்துள்அகச்சுட்டு புறச்சுட்டு என்னும் பாகுபாடு காணப்பெறாமையாற் சுட்டெழுத துகளஅவன, அது எனச் சொல்லுறுப்பாக நிற்குமிடத்தும் அவ்வீடு ஆயிடை எனத் தனித்து நிற்கு மிடத்தும் உய்த்துணர வேணடாது அச்சுட்டுச் சொற்கள வெளிப்படையாகவே நிற்றலின் யாவும் புறசசுட்டு களே எனபதும், அவற்றுள் இறுதி நிலைகளொடு கூடிநிறபவை சுட்டுப்பெயாகள எனபதும, தனித்து நிறபவை சுட்டிடைச் சொல் எனபதும்; இனனே -இப்பொழுது, இனி-இப்பொழுது, இவ்விடத்து அணி -அவ்விடதது என்றாறபோலச் சுடடிடைசசொல இனறிச் சுட்டுநிலையை அகத்தே கொணடு நிற்ப வையே அகக்சுட்டு எனபதும தொன்னூலோர் கருத்துப்போலும்.

ஒன்றனை அதன் இயற்பெயராற் கூறிப் பினனர் அப்பொருளைச் சுட்டுப் பெயராற சொல்லுமிடத்து அதனைப் பண்டறி சுட்டு என்றும், 'அற்றைத திங்கள அவ்வெணணிலவில் எந்தையும் உடையேம் எம் குன்றும் பிறர்கொளார்' என்றாற்போல நினைவு கூரத்தக்கதாக வரும் சுட்டினைச் சிறப்புச் சுட்டு எனறும் ஒரு சாரார் கூறுவா.

இனிச் சுட்டெழுத்துகளின் அடிப்படையிற் பிறவாமல், 'யாணடுளனாயினும் ஆகுக,' எங்கிருந்தாலும் வாழ்க எனவும், 'எப்பொருளாயினும் அல்லதில லெனின்,' 'ஏனோர் மருங்கினும் எண்ணுஙகாலை' எனவும் வினாப் பொருளினறி இடப்பொருளையும் எஞ்சாமைப் பொருளையும் பற்றி ய.ா வினாவையும எகர ஏகாரங்களையும் முதனிலையாகக் கொணடு வருனவனவும் பிற, மற்று என்னும் இடைச்சொல்லடி யாக வரும் பிறன், பிறள், பிறர், பிறிது, பிற, மற்றை யான், மற்றையாள, மற்றையது, மற்றையவை என்பனவும் ஓராற்றான் சுட்டுதற் கருத்துடையன வேயாகும். ச.பா.

*சுட்டுப்பெயர்* என்னும் தொகை மொழிக்குச் சுட்டுதலாகிய பொருளையுடைய பெயர் என்பது பொருளாகும். 'சுட்டு' எனனும் சொல் முதனிலை வினைப் பெயராகவும பொருட் பெயராகவும் நின்று பொருள் செய்யும். முதனிலை வினைப் பெயராக வருமிடத்து யாதானும் ஒரு பொருளைக் கணணானும் மனத்தானும் நோக்கச் செய்தலைப் பற்றி நிற்கும். பொருட் பெயராக வருமிடத்துக் கருதப்படுவதொரு பொருளைப் பற்றி நிற்கும். 'சுட்டிக் கூறா உவமமாயின்' (தொல்.உவம-7) எனபதனுள் சுட்டுதல் சுட்டிக் காட்டப்படும் பொருளையும் 'உயர் திணை என்மனார் மக்கட் சுட்டே' (தொல். கிளவி 1) என்பதனுள் சுட்டு கருதப்படும் பொருளையும் உணர்த்தி நிற்பதை அறியலாம்.

தமிழ்மொழியின்கண ஓர் இயற் பெயரானும் வினைசசொல்லானும் உணர்த்தப்படும் பொருள்கட்கு மாற்று (பிரதி)ப் பெயராகவும், இடம் காலம் தனமை முதலியவற்றை உணர்த்தும் பெயராகவும் சுட்டெழுத்துகளை அடிப்படையாகக் கொண்டு பல்வேறு இறுதிநிலைகளொடு கூடி ஆககம் பெற்று வரும் சொற கள் யாவும் சுட்டுப் பெயர் எனப்படும்.

சுட்டுப பெயர்கள உயிர் மூக்கோணம் எனப்படும் உயிர் எழுத்துகளாகிய அ,இ,உ என்னும் மூன்றும் பாலுணர்த்தும் இறுதிநிலைகளொடு கூடி அவன இவன் அது அவை அங்கு இங்கு ஆண்டு ஈண்டு அன்று இன்று என்றாற் போல வரும். அதனால், தொல் காப்பியம் 'அ இ உ அம் மூன்றும் சுட்டு' எனக் கூறும்.

அச்சுட்டெழுத்துகள் அப்பொருள, அந்நாடு, அவ வேனில், அசசெவி, அப்பண்பு, அக்காட்சி என்றாற் போல அறுவகைப் பெயர்ச் சொற்களைச் சார்ந்து அவற்றிற்கு அடையாக வருமிடத்து அவை சுட்டிடைச சொல் எனப்பெறும்.

இடைச்சொற்கள பெயரையும் வினையையும் சார்ந்து நின்று தம் பொருளுணர்த்துவனவன்றித் தனித்து நின்று பொருள் உணர்த்த மாட்டா.தனித்து நின்று பொருள் உணர்த்துமாயின் அவை இடைச் சொல்லடியாகப் பிறந்த பெயர்ச் சொல்லாகவும் வினைச் சொல்லாகவும் கொள்ளப்படும். அம்முறையில் அவை பெயர்களைச் சார்ந்து வரும்பொழுது அகரச் சுட்டு சேய்மையிடத்தையும் இகரச் சுட்டு அண்மையிடத்தையும் உகரச் சுட்டு சேய்மையும் அண்மையுமல்லாத பிற இடங்களையும் நிலைகளையும் உணர்த்தி நிற்கும். மேலும் அகரம் படர்க்கை

நிலையையும் இகரம் முன்னிலை நிலையையும் உகரம் ஏனை நிலைகளையும் உணர்த்தி வரும்.

சுட்டிடைச் சொற்கள் மூன்றும் செய்யுள் வழக்கின்கண் ஆ, ஈ, ஊ என நெட்டெழுத்தாக நீண்டும், அன்றி இன்றி உன்றி என இகர ஈறாகத் திரிந்தும் வரும். இம்மரபுகளை 'நீட வருதல் செய்யுளுள உரித்தே' (தொல்-உயிர்மயங்-6) என்றும், அன்றியனைத்தும் பெயர்ப் பயனிலையே (தொல-வேற-5) என உடமபொடு புணர்த்தும் தொல்காப்பியம் கூறும்.

சுட்டிடைச் சொற்கள் ஐம்பாற பொருளகளை உணர்த்தும் இறுதி நிலைகளொடு கூடி அவன் இவன் உவன, அவள் இவள உவள, அவர் இவர் உவர், அது இது உது, அஃது இஃது உஃது, அவை இவை உவை, அவ இவ உவ் என வருஙகால் அவை சுட்டுப்பெயர் எனப்படும். முறறியலுகரம் குறறியலுகரம் எனனும வகையான் அஃறிணை ஒருமைச் சுட்டுப்பெயர் அது எனவும், அஃது எனவும் இருவகையாயிறறு. அஃறிணைப் பன்மைச் சுட்டுப் பெயா அவை எனறும் அவ் என்றும் இருவகையானமைககுக் காரணம் புணர்சசி வேறுபாடுகளேயாகும்.

சுட்டிடைச் சொற்கள் இடத்தையும், பொருள நிலையையும்காலத்தையும உணாததுதலைத தமககுப பொருளாகக கொண்டவையாதலின அவை ஐமபாற பெயர்களாக ஆககம பெற்று வருதலேயனறி இடம் முதலியவறறை உணர்ததும் பெயராகவும் வரும. அங்கு இங்கு உங்கு எனபவை இடப்பெயாகளாகும. இவை ஆங்கு ஈங்கு ஊஙகு என நீணடும் வரும்.செய யுள வழககின்கண ஆன், ஈன, ஊன என வரும நெடிலாகிய சுட்டுகளின் அடிப்படையில ஆணடு ஈணடு ஊஸ்டு எனவும் இடப்பெயாகள வரும்.இவை ஆணடை ஈணடை ஊண்டை என ஐகாரச சாரியை பெற்றும் வரும். அதோளி இதோளி உதோளி என இடமுணாததிய சுட்டுப்பெயர்கள முறகாலததில வழஙகப்பெற்றுப் பினனா வழக்கிறநதன என்பார் ஒரு சாரார். 'ஈதோளி' எனனும் சொல் கலித தொகையில் காணப்படுகின்றது.

அன்னன், அளனள, அன்னர், அன்னது, அனன என்பவை தகவினைச் சுட்டி வரும் சுட்டுப் பெயா களாம்.அனனன் இன்னன முதலிய உயாதிணைப்பெயர் கள் அன்னான அனனாள் அனனார் என இறுதிநீணடும வரும. இவை பயனிலையாய் முடிக்குஞ் சொல்லாக வருமிடத்து இடைச் சொல்லடியாகப் பிறந்த குறிப்பு வினைகளாம். பொனனன்னன திருவன்னள் எனபவை உவம இடைச்சொலலடியாகப் பிறந்த குறிப்பு வினை களாகும். அவ்விடத்தான இவ்விடததான எனனும் பொருளில் அன்னன், இன்னன் என்பவை வரின் அவை குறிப்புப் பெயர்களாம. குறிப்பு வினைகள் குறிப்பு வினையாலணையும் பெயர்களாகவும் வரும், அன்னன அன்னான் என வருவனற்றைச் 'சுட்டு முதலாகிய அன்னும் ஆனும்' (தொல-பெயர்-9) எனத் தொல காப்பியம் கூறும்.

அங்ஙனம், இங்ஙனம், உங்ஙனம், ஆங்ஙனம் ஈங்ஙனம், ஊஙஙனம் என்பவை தன்மைநிலையைச் சுட்டிவரும் பெயர்களாகும். இவற்றுள் ஆங்ஙனம முதலியவை ஆங்கனம், ஈஙகனம், ஊங்கனம் எனறே வரல் வேண்டும் என்பார் ஒருசாரார். அதற்கு அவர் கூறும் காரணம் நெட்டெழுத்தின பின்வரும் மெல லெழுத்து இரட்டுதல் மரபில்லை என்பதாகும். ஒரு சாரார், அஙகு+அனம், இங்கு+அனம் என்பவையே பிரிப்பப் பிரியா ஒருசொற புணர்ச்சியாய் அஙஙனம் இங்ஙனம் என வநதன என்றும், அஙகு, இஙகு என பவை ஆங்கு, ஈங்கு என நீண்டமை போல அஙஙனம இங்ஙனம் என்பவையும் ஆங்ஙனம், ஈங்ஙனம் என நீளுதல் வழுவாகாது எனறும் கூறுவர்.

இனி வழககினகண் அங்ஙனம் முதலியவற்றிற்கு ஈடாக அவண், இவண, உவண் என வழங்குபவை அவ வண்ணம், இவ்வண்ணம் எனபவற்றின மரூஉவாகும். அன்னணம், இன்னணம் என வருவனவும் மரூஉக் களேயாகும்

அன்று, இன்று, உன்று என்பவை காலமுணாத்தி வரும் சுட்டுப் பெயாகளாகும. இவை ஐகாரச் சாரியை பெற்று மெல்லொற்று வல்றொற்றாய் அற்றை, இற்றை, உற்றை எனவும் வல்லொற்றாகா மல் அன்றை இன்றை எனவும் வழங்கும். அமமை, இமமை,உம்மை எனபவை பிறவாறு பொருளுணர்த்தி வரும சுட்டுப் பெயர்களாகும. இவை பெரும்பாலும் உலகையும் மக்கட் பிறவி நிலையையும் உணர்ததி வரும. ('இம்மைச் செய்தது யானறி நலவினை உம்மைப் பயன்கொல்- சிலப் அடைக்). மேற்கூறிய சுட்டுப் பெயர்களுள உகரத்தினடியாகப் பிறநதவை பயினறுவாரா.

அப்பொருள இப்பொருள எனறாறபோலப் பெயாச் சொற்களைச் சார்ந்து வரும சுட்டிடைச் சொல்லைப் புறச்சுட்டு எனறும் அவன அவள் என்றாற் போலச் சுட்டுப் பெயர்களின முதனிலையாக வரும சுட்டெழுத்தினை அகச்சுட்டு என்றும் வழஙகும் வழக்கு உரையாசிரியன்மாரால ஏற்பட்டதாகும். இவ வழக்குப் பிற்கால இலக்கண நூல்களிலும் பாட நூல்களிலும் இடம பெறுவதாயிற்று.

இனி இருவகை வழக்கின்கணணும் எகரத்தை அடிப்படையாகக் கொண்டு பிறந்த எது எவை என்னும் வினாப்பெயர்கள் எதுவாயினும் தருக, எவையாயினும் சொல்க என்றாற் போல வரும் தொடர்களில் எது எவை என்பவை வினாப் பொருளைத் தாராமல் கருதப்படும் பொருளைச் சுட்டி நிற்றலின் அங்ஙனம் வரும் எகரத்தைச் சுட்டிடைச் சொல்லாகக் கொள்ளவேண்டும் என்றும், அம்முறைமையான் எது எவை என்பனவற்றைச் சுட்டுப் பெயராகக் கொள்ள வேண்டும் என்றும் ஒருசாரார் கூறுவர்.

'எதுவாயினும் தருக', 'எவையாயினும் சொல்க' என்னும் தொடர்களில் வரும் ஆயினும் என்பதற்குத் தரக் கருதுவது, சொல்லக் கருதுபவை என்பவை பொருளாதலின் அத்தொடர்கள், நீ கருதுவது எது அதனைத் தருக - நீ கருதுபவை எவை அவற்றைச் சொல்க எனவிரியும். ஆணடு அத்தொடர்களுள் தொக்குநின்ற அதனை, அவற்றை என்பவை சுட்டுப் பொருள் தருவனவாகும். எனவே, எது எவை என்பன வினாப் பெயராகவே நின்றன என்பது இலக்கண நெறி என்பார் ஒருசாரார். எகரத்தைச் சுட்டு என இலக்கண நூலார் கூறிற்றிலர். ச.பா.

**சுடுமண் உருவங்கள்** களிமண்ணால் செய்யப்பட்டுச் சுடப்பட்ட உருவங்களைக் கொண்ட பொம்மைகளாகும். களிமணணை வார்ப்பில் அழுத்தி எடுத்துத் தேவையான உருவத்தைப் பெற்றபின் சுடுவார்கள். சில பொம்மைகளின் பகுதிகளைத் தனித் தனியே வார்ப்பில் அழுத்தி எடுத்து இணைத்துப் பின்னர்ச்சுடுவதும் உண்டு. இவை பளபளப்புத் தன்மை அற்றுக் காணப்படும். புதிய கற்காலத்திலிருந்தே சுடுமண் பொம்மைகளை மனிதன் செய்யத் தொடங்கினான். இவை சுட்டபின் சிவப்பு அல்லது பழுப்பு நிறத்தைப் பெற்றிருக்கும். பெரும்பாலான சுடுமணண் உருவங்கள் பயன்பாட்டிற்காகவே செய்யப்படும். இவற்றைச் செய்வது எளிதாகையால் எளிய மக்களும் பயன்படுத்தினர். சுடுமண் உருவங்கள் (Terracotta Figures) கிரேக்க நாட்டில் கி.மு.3000க்கு முன்பாகவே புழக்கத்தில் இருந்தன. இந்தியாவில் சுடுமண் உருவங்கள் சிந்துவெளி நாகரிகம் விளங்கிய இடங்களை அகழாய்வு செய்யப்பட்டபோது கிடைத்துள்ளன.

தமிழகத்தில சுடுமண் உருவம் செய்யும் வழக்கம் மிகப் பழங்காலத்திலேயே நிலவி வந்துள்ளது. சுடுமண் உருவம் பற்றிய குறிப்புகளைச் சங்க இலக்கிய நூல்களிற் காணலாம். அதனை அடுத்து வந்த காலத்தில் களிமண்ணால் செய்த சிறு தெய்வ உருவங்களை வழிபடும் வழக்கம் மக்களிடத்து இருந்ததென்பது தமிழகத்தில் பல்வேறு இடங்களில் அகழாய்வுகளிலும் கள ஆய்வுகளிலும் கிடைத்துள்ள சுடுமண் உருவங்களால் உறுதிப்படுத்தப்படுகிறது. இக்காலத்திலும் கிராமிய தெய்வங்கள் சிலவும் வேண்டுதல் தெய்வங்களும் மண்ணால் செய்யப்படுதலைக் காணலாம்.

மணிமேகலை, பெருங்கதை போன்ற தமிழ் இலக்கியங்கள் மண்ணால் பொம்மைகள் செய்தமையைக் குறிப்பிட்டுள்ளன.

தருமபுரி மாவட்டத்தில் பனையகுளம் என்ற ஊரில் கண்டெடுக்கப்பட்ட பெண்ணின் திருவுருவம் தமிழகத்தில் கிடைக்கும் மிகப் பழமையான சுடுமண் உருவமாகக் கருதப்படுகிறது.

பல்லவர் காலத்தைச் சார்ந்த சுடுமண் பாவைகள் கோவை மாவட்டம் போலுவாம்பட்டி என்ற கிராமத்தில் கண்டுபிடிக்கப்பட்டுள்ளன.

இக்காலத்திலும் கிராமப்புறங்களில் உள்ள ஐயனார் கோவில்களில் மண்ணாலான குதிரைகளையும், வேண்டுதல் உருவங்களையும் காணலாம். மேலும், நவராத்திரி விழாவின்போது பொம்மைக் கொலு வைக்கும் வழக்கம் தமிழகத்தில் உள்ளது. கொலுவில் இடம்பெறும் தெய்வ உருவங்கள் பெரும்பாலானவை சுடுமண் பொம்மைகளாகும்.

சீனாவில் கல்லறைகளில் காணப்படும் நடன உருவங்களும் குதிரை உருவங்களும் சுடுமண் பொம்மைகளே ஆகும். அவை தாங்குக் ('T'ang, கி.பி.7, 8-ஆம் நூற்றாண்டு) காலத்தைச் சார்ந்தவை. கிரேக்கத்தில் சுடுமண் பொம்மைகள் சடங்குகளுக்குப் பயன்படுத்தப்பட்டன. எட்ருசுக்கர்கள் காலத்தில் சுடுமண் பொம்மைகள் பெருமளவில் செய்யப்பட்டன. அவர்கள் மிகப்பெரிய அளவில் அவ்வுருவங்களைச் செய்தனர். உரோமானியர்களும் பளபளப்புத் தன்மையற்ற சுடுமண் பொம்மைகளைச் செய்தனர். சுடுமண் உருவங்கள் ஐரோப்பாவில் மறுமலர்ச்சிக் காலத்திற்குப் பின்பு மிகுதியாகச் செய்யப்பட்டன. மா.செ.

**சுதந்திரக் கட்சி**: இந்தியா சுதந்திரம் பெற்றபின் ஆளுங்கட்சியான காங்கிரசு சமநிலைக் (Socialist) கொள்கைகளைக் கடைப்பிடிக்கத் தொடங்கியபொழுது, அதில் விருப்பம் இல்லாத செலவர்கள், தொழில் அதிபர்கள், நிலக்கிழார்கள, முன்னாள் சிற்றரசர்கள் முதலியோர் காங்கிரசின் பொருளாதாரக் கொள்கைகளை எதிர்க்கவல்ல ஓர் அரசியல்கட்சியை உருவாக்கும் முயற்சியில் தீவிரமாக ஈடுபட்டனர். எம்.ஆர்.மசானி (M.R Masani), கார்னி சிங்கு(Karni singh), செய்பால்சிங்கு(Jayapal singh), என்.சி.ரங்கா (N.G..Ranga), கே.எம்.முன்சி (K.M. Munshi) முதலியோர் அம்முயற்சியில் ஈடுபட்டனர். அதன் விளைவாக அவர்கள் 1959-ஆம் ஆண்டு

சென்னையில் இராசாசியின் தலைமையில் கூடி ஒரு புதுக் கட்சியை அமைத்தனர். அக்கட்சிகுச் 'சுதந்திரக்' கட்சி எனப் பெயர் சூட்டினர்.

**அடிப்படைக் கொள்கைகள்:** சுதந்திரக் கட்சி வலது சாரிக் கொளகைகளில தீவிரப்பற்றுக் கொண்டிருந்தது. சமூகத்தில் தனிமனிதன்தான் முக்கியமானவன்; அவனுடைய ஆளுமையை வளாக்க அவனுக்கு முழு உரிமை உணடு. தன் முயற்சி வழியாகத்தான அவன தன்னுடைய ஆளுமையை வளர்க்க முடியும். சமூகத்தின அறநெறிப் பாதுகாவலரான அரசு மக்களின பொருளாதார வாழ்க்கையில் அடிக்கடி கட்டுப்பாடினறித் தலையிடக்கூடாது; அப்படித் தலையிடுவது மக்களின் முயற்சியை அழித்து விடும். அரசின் அதிகார வளர்ச்சி அதிகாரவர்க்கத் (Bureaucracy) தின் அதிகார வளர்ச்சிக்கு வழிகோலுகிறது அவ்வதிகாரத்தை அவர்கள் தன்னலத்திற்காகப் பயன்படுத்துவதால் சமூக நலன் பெரிதும் பாதிக்கப்படுகிறது. சொத்து என்பது தனி மனிதன் முயற்சியினால் உண்டாவதாகும். எனவே, தனி மனித முயற்சிக்கு ஊக்கம் கொடுக்கத் தனியார் சொத்துரிமை இனறியமையாத ஒன்றாகும். இவை அக்கட்சியின் அடிப்படைக் கொள்கைகளாகும்.

மேலும், கட்சியின் திட்டங்களில்சில பினவருமாறு: தொழிலாளர்களின் அடிப்படைத் தேவையான உடை, உணவு, உறைவிடம் ஆகியவற்றை நிறைவு செய்து தொழிலாளர்களின் நலன காக்கப்படும். வேளாண் மக்களின் பொருளாதார நிலையை மேம்படுத்த நீர்ப்பாசன வசதி, கடன் வசதி ஆகியவை விரிவுபடுத்தப்படும். சுயவேலை முயற்சியை ஊக்குவிககக் கருவிகள், மூலப்பொருளகள் ஆகியவை வழங்கவும், கடன் வசதிகள் ஏற்படுத்தவும் தக்க நடவடிக்கைகள் எடுககப்படும். கல்வி, வேலை ஆகிய துறைகளில் தகுதிக்கு முக்கியத்துவம் வழங்கப்படும். சமூக நீதி, சமவாய்ப்பு, சட்டத்தின் ஆட்சி, சுதந்திரமான நீதித்துறை ஆகிய குறிக்கோளகளை அடையக் கட்சி அயராது உழைக்கும். பொருளாதாரத் துறையில் காநதியின் பொறுப்பாணமை அல்லது 'தாமகர்த்தா' (Trusteeship) முறையைக் கட்சி பெரிதும் வலியுறுத்தியது.

**அரசியலில் ஈடுபடுதல்:** சிறிது காலத்திற்குள் பல மாநிலக் கட்சிகள் சுதந்திரக் கட்சியில் இணைந்தன. அதன் விளைவாகக் கட்சி நன்கு பரவி, வளரத்தொடங்கியது. இது 1961-ஆம் ஆணடு பாராளுமனறத்திற்கு நடைபெற்ற இடைத்தேர்தலில் முதனமுதலாகப் போட்டியிட்டது. ஆனால், வெற்றி பெறவில்லை. இக்கட்சி 1967-ஆம் ஆண்டு பொதுத் தேர்தலுக்குப் பிறகு பாராளுமன்றத்தில் வலுவான ஒரு எதிர்க்கட்சி நிலையைப் பெற்றதோடு ஓரிரு மாநிலங்களில் ஆட்சிக்கும் வந்தது. ஒரிசாவில் சன காங்கிரசுடன் (Jana Congress) இது சேர்ந்து கூட்டு அமைச்சரவையை அமைத்தது உட்கல் காங்கிரசுடன் (Utkal Congress) சேர்ந்து மீணடுமொரு கூட்டு அமைச்சரவையை அமைத்து 1972-ஆம் ஆண்டு வரை ஆட்சியில் இருந்தது. பின்னர் 1967-ஆம் ஆண்டு பொதுத் தேர்தலில் தமிழ நாட்டில் தி.மு.க. வுடன் சேர்ந்து, அக்கட்சி ஆட்சியைப் பிடிக்கப் பெரிதும உதவியது.

இராசாசி உயிரோடு இருந்த வரையில் கட்சி ஓரளவு கட்டுப்பாட்டுடன் செயற்பட்டது ஆனால், அவர் மறைவிற்குப்பின் கட்சி நலிவுறத் தொடங்கியது.

செல்வர்களின் நலனைக் காபபதற்குள்ள கட்சி என்ற கருத்து சுதந்திரக் கட்சியைப் பற்றி மக்களிடையே பரவலாக நிலவியதன் விளைவாக, காலப் போக்கில் அக்கட்சி மக்களின் ஆதரவை இழந்து இன்று இந்திய அரசியல வானிருந்தே மறைந்துவிட்டது.

சு.மு.

**துணை நூல்:**

Sadasivan, S.N., Party and Democracy in India, New Delhi: MaCraw-Hill - Publishing Company, Ltd., 1977.

***சுதந்திரச்சிலை*** அமெரிக்க ஐக்கிய நாட்டில் நியூயார்க்குத் துறைமுகப் பகுதியில் இலிபர்ட்டித் தீவில் (Liberty Island) உள்ள மிகப் பெரிய செப்புச் சிலை. சுதநதிரச் சிலையின் (Statue of Liberty) முழுப்பெயர் 'உலகிற்கு சுதந்திரத்தைத் தெரிவிததல' (Liberty Enlightening World) என்பதாகும்.

உலகின் மிகப்பெரும் சிலைகளுள் ஒன்றாகக் கருதப்படும் இச்சிலையைப் பிரான்சு, அமெரிக்க ஐக்கிய நாட்டிற்கு கி பி. 1884-ஆம் ஆண்டு நட்பின் அடிப்படையிலும், அமெரிக்க மக்கள் சுதந்திரம் பெற்று மகிழ்ச்சியாக இருப்பதைத் தெரிவிக்கும் வகையிலும் அளித்தது. இச்சிலையை அமைப்பதற்குப் பிரான்சு நாட்டுமக்கள் 2,50,000 தாலர் அளித்தனர். அமெரிக்க ஐக்கிய நாட்டு மக்கள இச்சிலையின் பீடப்பகுதியை அமைக்க 2,80,000 தாலர் அளித்தனர். இச்சிலையின் மாதிரி ஒன்று பாரிசில் சீன் (Scine) ஆற்றின் மேல் உள்ள பாலத்தின் மீது வைக்கப்பட்டுள்ளது.

இச்சிலை பெருமிதத்துடன் நிற்கும் ஒரு பெணணின் சிலையாகும் மடிப்புகளுடன் கொண்ட ஆடை

யைத் தளர்ந்த இடைக்கயிற்றில் கட்டியவாறு மேடை மீது நிற்பதுபோல் இப்பெண் காட்சி தருகிறாள். பெண்ணின் வலக்கையில் விண்ணை நோக்கியவாறு தீபம் ஒன்று உள்ளது. இடக்கையில் அமெரிக்கச் சுதந்திரம் அறிவிக்கப்பட்ட புத்தகப் பட்டிகை காணப் படுகிறது. தலையில் சூரியக் கதிர்கள போன்ற அமைப்புடைய மகுடம் காணப்படுகிறது. இப்பெண் சிலையின காலடியில் வல்லாட்சியை ஒழிததனதைக் குறிக்கும் வகையில் உடைக்கப்பட்ட சங்கிலி ஒனறு உளளது.



சுதந்திரச் சிலை

இச்சிலை புடைப்பகழ்வு செய்யப்பட்டு அடித்துரு வாக்கப்பட்ட உலோகச சிலையாகும். இதனைச் செய்ய 300 செப்புத்தகடுகள பிடித்தன. இவை.91 கண்டி (Tons) எடையுடையவை. இசசிலையின மேற் பகுதி செப்புத் தகட்டிற்கு அடியில் சிலை உறுதியாக இருக்கும் வகையில் இரும்புக் கட்டுமானம் பொருத் தப்பட்டுளளது. இசசிலை 46.05மீ உயரமுடையது. 2,04,000 கி.கி. எடையுடையது. கையில உள்ள தீப விளக்கு சிலை மேடையிலிருந்து 92 99மீ. உயரத்தில் காணப்படுகிறது. இரவில் இத்தீபஒளி பாதரச (Mercury) ஒளியைப் பரப்பி உலகிற்குச சுதநதிர ஒளியை அளிக்கும் வகையில் அமைக்கப்பட்டுளளது. சிலையை இரவிலும் காணும் வகையில் சிலை மேடைக்குக் கீழே விளக்குகள் பொருத்தப்பட்டுள்ளன. சுற்றுலாப் பயணிகள் இச்சிலையை அருகிலிருந்து காணபதற்கு ஏற்ற வகையில் ஏணி ஒன்று சிலையின் மேடைப் பகுதியில் பொருத்தப்பட்டுளளது மேடையின மேற் பகுதிவரை இதன மேற் செல்ல இயலும். இமமேடை மீதிருந்தே நியூயார்க்குத் துறைமுகப் பகுதியினைக் கண்டுகளிக்க முடியும். இசசிலையின் முடிவு வரை செல்லவும் குறுகிய வழி ஒன்று உளளது. இச்சிலை யின் மேடை அடிப்பகுதியில எம்மாஇலாசரசு (Emma Lasarus) என்ற கவிஞர் எழுதிய கவிதை ஒன்று 1903-ஆம் ஆணடு பொறிக்கப்பட்டுள்ளது.

**சிலையின் வரலாறு:** பிரான்சு நாட்டு வரலாற்று அறிஞர் எட்டுவாடு டி இலபோலாயி (Edouard de Laboulaye) என்பவர் சுதந்திரத்தை அறிவிக்கும் வகையில சின்னம் ஒனறு அமைக்கத் திட்டமிட்டார. அவருடைய நணபா பிரடரிக்கு ஆகசுட்டு பாா தோலடி (Frederic Auguste Bartholdi) ஒரு சிலையை உருவாக்கி அதனை அமைக்கும் இடததையும் தேர்ந் தெடுத்தார். சிலையை முழுமையாக அமைப்பதற காகப் பிரான்சிலும் அமெரிகக ஐக்கிய நாட்டிலும பண வசதி பெற இவருக்கு நீணட நாள்கள ஆயின. ஈபில் கோபுரத்தை உருவாக்கிய ஈபில இசசிலையின கட்டுமானப் பணியைச் செய்து கொடுத்தார். முழு வதும் உருவாக்கப்பட்ட சுதந்திரச சிலையைப பிரான்சு மககள அமெரிகக ஐக்கியநாட்டு அமைச்சரி டம் பாரிசில கி.பி. 1884-ஆம ஆணடு சூலை 4-ஆம் நாள ஒப்படைத்தனர். இசசிலை பிரெஞ்சு நாட்டுக் கப்பலில அமெரிககாவைச் சென்றடைநதது.சிலையை நியூயார்க்குத் துறைமுகப் பகுதியில கி.பி. 1886-ஆம் ஆண்டு அக்டோபர் 4-ஆம நாள் அப்போதைய குடி யரசுத் தலைவர் குரோவர் கிளிவுலேண்டு (Grover Clevland) அமைத்துத் திறநது வைததார். இச் சிலையைத் தேசிய சின்னமாக 1924-ஆம் ஆணடு அமெரிக்க அரசு அறிவித்தது. முழுவதுமாக இச்சிலை 1967-ஆம் ஆணடு பழுது பார்ககப்பட்டது. இசசிலை அமைக்கப்பட்ட பெட்லோத் தீவின் (Bedloe's Island) பெயர் 1956-ஆம ஆண்டு இலிபர்ட்டித் தீவு எனப் பெயர் மாற்றம் செய்யப்பட்டது. சிலையின் அடிப பகுதியின உட்பகுதியில் அமெரிக்க அருங்காட்சியகம அமைத்து 1972-ஆம் ஆண்டு அதைத் திறந்து வைத் தது. அமெரிக்க நாட்டுத் தோட்டப் பணியினர் இச சிலையைப் பாதுகாத்தும் அழகு செய்தும் வரு கின்றனர்.

சு.இரா.

**சுதை ஓவியம்**: காண்க: சுவரோவியங்கள்.

**சுந்தரகிரி** ஒரிசா மாநிலத்தில உள்ளதொரு நகரம். சுநதரகிரி மாவட்டத்தின் தலைநகரமாக இது விளஙகுகிறது. மகாநதியின் துணை ஆற்றின் கரையில சுநதரகிரி (Sundargarh) அமைந்துள்ளது. காஙபூர் (Gangpur) சிற்றரசின தலைநகரமாக விளங்கிய இந்நகரம இனறு வாணிகத்தில புகழ பெற்று விளஙகுகிறது. இநநகரததில உலோக வேலைப்பாடுகளும் சிறிதளவு நடைபெறுகிறது. நகரத்தின மக்கள தொகை 23,699(1981).

இம்மாவட்டம் 9,675 ச.கி.மீ. பரப்பளவுடையது. இம்மாவட்டத்தில் மகாநதி பிராமனி ஆகிய ஆறுகள பாய்கின்றன. இமமாவட்டத்தின தெனகிழக்கில பல மலைகள உளளன. இஙகுள்ள காடுகளில சால மரங்கள மிகுதி. நெல இங்கு மிகுதியாக விளைகிறது. இரும்புக் கனிமம், நிலக்கரி போனறவை இஙகுக் கிடைககும் தாதுப்பொருளகள. இம்மாவட்டததில் உரூர்கேலா இரும்பு உருககு ஆலை உளளது. இம் மாவட்டத்தின மக்கள தொகை 1,337,871(1981).

சு.இரா.

**சுந்தர சுவாமிகள்**: இவர் தாம் செயத தொணடு காரணமாக தம் ஊர் பெயர் அடைமொழியாக அமையககோட்டுநலலூர்ச சுந்தர சுவாமிகள என்று அழைக்கப்பட்டார். திருநெலவேலிககருகிலுளள கஙகை கொணடான எனனும ஊரில் கி.பி. 1891-ஆம் ஆணடு திசமபர் 3-ஆம நாள இவா பிறநதார். தநதை எகஞேசுரசிவன; தாய் காமாட்சி அமமையாா. அந்தணமரபினர் வீரவநலலூாச சுந்தர சாத்திரிகளிடம் வேதாந்த நூலகளைக் கறறவர். சூதசம கிதை நூலை மனனம் செய்து சொற்பொழிவுகள நிகழத்தியுளளாா. இவா மனைவி பெயர் சானகி. அடைச்சானி எனற சிறறூரில் வாழ்ந்த விசுவேசுவர சாத்திரிகள மூலம் ஆனம ஞானம பெற்றார். இலலறம் துறந்து துறவியானார், சிவபதிகட்குச் செனறார்.

பத்தமடை என்ற ஊரில் இறந்த சிறுவன் ஒருவனை உயிர் பிழைககச் செய்தார் எனறும், இவா கோட்டுநலலூரில் பரநிட்டையிலிருந்தபோது இவருக்குப் பரமனே தோனறி உணவிட்டார் எனறுமகூறுவா உள்ளஙகையில் தீ இருப்பதால அபபகுதியில உணணும்போது உணவு படக்கூடாது எனறு இவர் கூறி வநதார். அதனைச் சோதிகக எணணிய அடியவர். ஒருவர் அவரிடம அடுப்பு மூட்டத் தீ கேட்டாா. அதனைத் தம உளளங்கையில் உருவாககிக் கொடுத்தார். அகத்தியர் இவருக்குக காட்சிக் கொடுத்தார் எனக கூறுவர் வியககத்தக்க பல புதுமைகளைச் சுவாமிகள் செய்துள்ளார். இவர் திரிசிரபுரம் மீனாட்சி சுந்தரம் பிள்ளையவர்களுடன தொடர்பு கொணடவர். மனோன்மணீய நாடக ஆசிரியர் பெ. சுந்தரம பிளளையவர்கட்கு ஞானாசிரியராக அமர்ந்து அருளுரை வழங்கியருளிய பெரியார் சுந்தரசுவாமிகளே, இக்குருவின் நினைவுதான் சுந்தரமுனிவர் என்ற நாடகப் பாத்திரததின் படைபபாகும்

இவர் இயற்றிய நூல்கள் வேதாகமம, சமபிரதாயப் பிரகரணம், மகாவாககியச் சுருக்கம், மனோநாச மார்க்கம், சுவானுபூதி ரசாயனம, சுவானுபவ ரச மஞ்சரி என்பனவாம.

இவர் தம் 47-ஆம் வயதில் செட்டி நாட்டிலுளள அரிமளம் எனனும ஊரில் காலமானார். பி.தெ.

**சுந்தர சோழன்**, (கி.பி.957-973) இவன ஒரு சோழ வேந்தன். இராசகேசரி என்ற பட்டப் பெயர் பூண்டு, அரிஞசய சோழனுககுப்பின் (கி.பி.957) அரியணையேறிய இவன், சோழப் பேரரசின் இழநத புகழை மீட்டான. இவ்வேநதனது பதினமூனறு ஆணடுக்கால ஆட்சியில் சோழர் இழந்த பகுதிகள மீட்கப்பட்டன. 'பாணடியனைச் சுரம் இறககின பெருமாள' என்னும் விருதினைப பெற்ற இவன இரணடாம் பராநதகன எனவும அழைக்கப்படுகிறான

அரிஞசய சோழனுககும், வைதுமப இளவரசி கல்யாணிக்கும் பிறந்த இவன், பிறககின்றபொழுதே அழகிற் சிறந்தவனாக இருந்ததால, சுநதர சோழன் என்று அழைககப்பெற்றான. இவன தனது ஆட்சியின தொடககக் காலத்திலேயே தன இரணடாம் மகன இரணடாம் ஆதிததனுக்கு இளவரசுப் பட்டம் கட்டி, ஆட்சித் துறையில தனககு உதவியாக வைததுக கொணடான். சுநதரசோழனது ஆட்சிக் காலத்தில வீரபாண்டியன என்பவன் பாணடிய நாட்டைச சுதந்திர மன்னனாக ஆணடு வந்தான. பாணடியனை ஒடுக்க எணணிய இவன், பாணடிய நாட்டினமீது படையெடுத்துச் சென்றான். கொடும்பாளூா இளவரசன் பூதிவிக்கிரமகேசரி சோழனுககுத் துணை நின்றான். இலங்கை வேந்தனாக நான்காம் மகிந்தன் பாண்டியனுக்குத் துணைபுரிந்தான. சேவூர் என்னுமிடத்தில இரு திறத்தாருககும் கடும் போா நிகழநதது போரில வீரபாணடியன தோற்கடிககப்பட்டான. சிங்களப் படைகளும் சிதறி ஓடின புறமுதுகிட்டு ஓடிய சிஙகளப் படையைத் துரத்திக் கொணடு சோழர் படை செனறது. பாணடியரை வென்ற பராந்தகன் 'மதுரை கொணட கோராசகேசரிவர்மன்,' 'வீரபாணடியனைத் தலை கொண்டவன்' 'பாணடியனைச் சுரம (காட்டிற்குள்) இறக்கின சுந்தர

சோழன்' முதலான பட்டங்களையும் புனைந்து கொண்டான். இவ்வேந்தனது ஆட்சிக் காலத்தில் இராட்டிரகூடர்களின் ஆட்சிக்குட்பட்டிருந்த தொண் டைமண்டலம் மீட்கப்பட்டது. ஆதித்தன பார்த்தி வேந்திரவர்மன என்னும் பட்டப் பெயருடன தொணடை நாட்டின் ஆட்சியாளனாக அமர்த்தப் பட்டான்.

போரில் ஈடுபட்டிருந்தபோதிலும், சுந்தரசோழன் நல்லாட்சியை மேற்கொண்டு மக்களுக்குத் தொணடு புரிவதில் முனைந்து நின்றான். வேளாணமையை முன்னேற்ற வடஆர்க்காடு மாவட்டம் பிரம்மதேசத் தில் 'சுந்தர சோழப் பேரேரி' என்னும் ஏரியினைத் தனது பெயரில அமைத்தான். 'வானவன்மாதேவி வாய்க்கால்' ஒன்றும் இவன் காலத்தில் வெட்டப்பட் டது. புதுக்கோட்டை மாவட்டம் திருமயம் பகுதியில 'சுந்தரத சோழபுரம்' என்ற நகரினை நிறுவினான். சைவத்திற்குப் பேராதரவு நல்கிய போதிலும், பிற சமயங்களை இவன் வெறுக்கவில்லை. இவன் அநிருத் தன் என்ற கல்வியிற் சிறந்த அந்தணனுக்குக் கருணா கரமங்கலத்தைப் பிரம்மதேயமாகக் கொடுதது, அதனை 'அன்பில செப்பேடுகள்' என்னும் பெயரில் அமைத்தான். பிரம்மதேயங்களை வழஙகிய இவ் வேந்தன், தென ஆர்ககாடு மாவட்டம் உலகபுரம் என்ற ஊரில் 'சுந்தர சோழப் பெரும்பள்ளி' என்னும் பெயரில் புத்தவிகாரம் ஒன்று எடுப்பிக்க உதவினான.

இவ்வேந்தன் இருமனைவியரைப் பெற்றிருந் தான். சேரமானின் மகள பராநதக தேவியம்மனும், மலையமானின் மகள வானவன் மாதேவியும் இரு மனைவியர் ஆவா. சுநதர சோழனுக்கு இரணடாம் ஆதிதத கரிகாலன், அருண்மொழித்தேவன (முதலாம் இராசராசன) ஆகிய இரு மைந்தரும், குந்தவை என் னும் மகள் ஒருததியும் இருந்தனர். ஆதித்த கரிகாலன் கி.பி. 966-இல் இளவரசுப பட்டம் கட்டப்பட்டபின் கி.பி. 973-இல் சுந்தர சோழன காஞ்சியில் உள்ள பொன்மாளிகை என்னும் அரணமனையில் இறந தான. எனவே, இவன் 'பொன்மாளிகைத் துஞ்சிய தேவர்' எனறழைக்கப்பட்டான். பட்டத்தரசியான வானவன்மாதேவி உடன்கட்டையேறினாள். இவ வேந்தனது உருவமும வானவன மாதேவியின் உருவ மும் தஞ்சைப் பெருஙகோயிலில் குந்தவைப் பிராட்டி யால் நிறுவப்பட்டன. திருச்சி வட்டம் பெருஙகுடியில உள்ளஅகத்தீசர் கோயில் சுந்தரசோழன, இரணடாம ஆதித்தன ஆகியோர் காலததில் எடுக்கப் பெற்றது.

க.ம.

**சுந்தரதாச பாண்டியர்** கி.பி. 19-ஆம் நூற் றாணடில வாழந்த புலவர். இவர் தமிழ்நாட்டிலுள்ள திருநெல்வேலி மாவட்டத்தைச் சேர்ந்த சேற்றூரில் முத்துச்சாமித்துரை என்பவருக்கு மகனாகத் தோன றினார். இவர் காலத்தில் சேற்றூர் சமத்தானப் புலவராக விளங்கியவர் முகவை இராமசாமிக் கவி ராயர். அவரிடம் தமிழ் இலக்கண இலககியங்களை நன்கு பயினறார். தமிழினபால ஈடுபாடு கொண டிருந்த இவர் தமிழப் புலவர்களை ஆதரித்து அவர் களுககு வேண்டியன அளித்து வளளல் எனப் பாராட்டப்பெற்றார். இவர் பல இடங்களுக்கும் சென்று சொற்பொழிவாற்றினார். பல இடஙகளிலு முள்ள சிவனை வழிபடும் நிலையில பல வழிபாட்டுப பாடல்களை இயற்றியுள்ளார். இவர் காலத்தில் திரு வனந்தபுர அரசராக இராமவாமா இருந்தார். அவர்மீது வணணம் பாடியுள்ளார் இவர். அதற்குத திரிசிரபுரம் மகாவித்துவான் மீனாட்சி சுநதரம பிளளையவர்கள் சிறப்புப் பாயிரம் பாடியுளளார். இவர்தம் சிறப்புகளை உணர்ந்து கல்போது பிச சுவையர், இராமசாமிக் கவிராயர் ஆகியோர் பாராட்டிப் பாடியுளளனர். வீ.சே.

**சுந்தரம் அய்யங்கார், டி வி.** (கி பி. 1877 –1955): உழைப்பால் உயாந்த பெரியோர்களுள டி.வி. சுந்தரம அய்யங்காா ஒருவா. மூன்றெழுதது நிறு வனம் (டி.வி.எசு.) என்று சுருக்கமாகவும் பெருமை யுடனும அழைக்கப்படும இககாலத்திய பெருந் தொழில் நிறுவனம இவர் பெயரில் வழங்கும நிறு வனத்தையே குறிக்கும. 'டி வி.எசு.' என்றால் சோம்ப லின்மை, சுறுசுறுப்பு, நோமை, நாணயம், நேரம தவறாமை முதலிய நற்பணபுகளே தோற்றமளிக் கும.



டி.வி. சுந்தரம் அய்யங்கார்

இவர் கி.பி. 1877-இல் கேரள நாட்டில் வங்காருசாமி அய்யங்கார அவர்களுக்கு மகனாகப் பிறந்தார். இவர் தந்தை திருநெல்வேலி மாவட்டத்தைச் சேர்ந்தவராய் இருந்தும், கேரள நாட்டில் திருச்சூரில தமிழ வழக்குரைஞராக விளங்கினார். இவர் தாயார் திருநெல்வேலி மாவட்டத்திலுள்ள திருககுறுங்குடியில் பிறந்தவா. திருச்சூரில் அரசினர் உயர்நிலைப் பள்ளியில் முதலில் கல்வி பயின்றவர். பதினோரு வயதடைந்தவுடனேயே, பள்ளியில் பயிலுமபோதே, பெற்றோர் இவருக்கு ஏழு வயதுடைய இலட்சுமி அம்மாள என்பவரை அக்கால வழக்கப்படி மணமுடித்தனர். அவ்வம்மையார் நாகர்கோவிலில் ஒரு பெரிய குடும்பத்தைச் சேர்ந்தவர். பள்ளிப் படிப்பு முடிநததும் இவர் திருநெல்வேலி இந்துக் கல்லூரியில் சேர்க்கப்பட்டார். இவர் தந்தையார் தம்மகனை ஒரு வழக்குரைஞராக்கிவிட வேண்டும் என்று விரும்பினார். அதற்கு, மாறாக மகனுக்குத் தொழிலில நாட்டம் சென்றது. படித்து உத்தியோகம் செய்வதைவிடச் சொந்த முயற்சியால் தொழில் செய்யவேண்டுமென்றே இவர் விரும்பினார். ஆகையால், இவர் கல்லூரியை விட்டு வெளியேறித் தம் சொந்த ஊராகிய திருககுறுங்குடிக்குச் சென்றாா.

அங்கே நெருஙகாணிமலை என்ற இடத்தில் சவுக்கு மரம் வளர்க்கும் தொழிலில் ஈடுபட்டார். பிறகு பிரம்பு பயிரிடும் தொழிலையும் தொடங்கினார். அம்மரஙகளை வியாபாரிகளுக்கு வழங்குவதற்கு ஒப்பந்த உரிமை பெற்றார். ஆனால், இத்தொழிலில் இவருக்குப் பல இடையூறுகள ஏற்பட்டன. இவரைப பலர் ஏளனம் செய்யவும் தொடங்கினர். எனவே, இவர் தம் குடும்பத்தினரின் தூணடுதல் பேரில் 1903-ஆம் ஆண்டு திருச்சியில் புகைவண்டி அலுவலகத்தில் ஓர் எழுத்தர் வேலையில் அமர்ந்தார். அதில் இவருக்கு மாதம் 7½ உரூபாய் ஊதியம் கிடைத்தது பிறகு இப்பணியில் இவர் தஞ்சைக்கு மாற்றப்பட்டார். அங்கு இவர் வீட்டில் ஒரு நாள் திருடர்கள் புகுந்து எல்லாப் பொருள்களையும் அணிகலன்களையும் திருடிக் கொண்டு போய்விட்டனர். அதனால், குடும்பம் நடத்துவதற்கு இடர்ப்பாடு தோன்றியது. சிறிது காலம் ஒரு புதிய இடர்ப்பாட்டுடன் குடும்பம் நடத்திய இவர், அப்பணியைத் துறந்து மதுரைக்குச் சென்றார். அங்கு இவர் அரசு வங்கியில் (இம்பீரியல்வங்கி) எழுத்தராகச் சேர்ந்தார். இவாதம் தந்தையார் 1908-ஆம் ஆண்டு காலமானார். அப்போது மேலதிகாரி அவ்வங்கியில் காசாளர் வேலைக்கு இவரை நியமிப்பதாக அறிவித்திருந்தும், தம் தநதையின் இறுதிச் சடங்குகளைச் செய்வதற்குச் செனறு திரும்பியபோது அவவேலையில் வேறொருவரை நியமித்து விட்டதாக அவர் அறிவித்தார். அதனால், ஓரளவு மனமுடைந்த இவர், எல்லாம் நன்மைக்கே என எண்ணித் தம் வேலையை உதறித் தள்ளிவிட்டுத் திருக்குறுங்குடிக்குச் சென்றுவிட்டார். சிறிதுகாலம் சென்ற பிறகு மதுரையில் வேறொருவருடன் கூட்டுச் சேர்ந்து மீண்டும் மரவியாபாரம் செய்வதில் முனைந்தார். கேரளம், பர்மா ஆகிய இடங்களிலிருந்து தேக்குக் கட்டைகளைத் தருவித்து விற்பனை செய்தார். அதே சமயத்தில், திருக்குறுங்குடியில் தம் தந்தையின் பண்ணையில் வேளாண்மைத் தொழிலையும் வளர்த்து மேம்படுத்தினார்.

தம் வியாபாரத்தில் நல்ல இலாபம் கிடைப்பதைக் கணட இவர், மேலும் ஒரு முயறசியில் ஈடுபட்டார். அதுதான் பேருந்து (Bus) ஓட்டும் முயறசியாகும். கான் பகுதூர் காதர் நவாசுகான் என்பவருடன இவர் 1912-இல் புதுக்கோட்டை, தஞ்சை சாலைகளில் பேருந்து ஓட்டும் தொழிலைத் தொடங்கினார். அது காலப்போக்கில் பலவாறாகக் கிளைத்து, தழைத்து 1955-இல 600க்கு மேறபட்ட பேருந்துகளும், சரக்குவண்டிகளும் (Lorry), மதுரையிலிருந்து கிளம்பி எல்லாத் திசைகளிலும் விரைந்தோடி வரலாயின. பயணிகள் இவ்வளவு தூரத்திற்கு இவ்வளவு கட்டணம் தரவேணடும் என்றும, கட்டணச்சீட்டுகளைப் பெற வேணடும் என்றும், குறித்த நேரத்தில் குறிதத இடத்திலிருந்து ஊர்திகள புறப்படவேணடும் என்றும், கணட இடங்களில் கண்ட நேரங்களில அவை நிறுத்தப்படுதல்கூடாது என்றும், பல ஒழுங்குமுறைகள் செயறபடுத்தப் பட்டன. இந்த ஒழுங்குமுறைகள் முதன்முதலாக இவரது நிறுவனததிலதான் ஏற்பட்டன. ஊர்திகள் செல்லும் சாலைகளைச் சீர்படுத்தும் பணியையும் அநநிறுவனம் மேற்கொண்டது

தம் தொழில் முயற்சியின் ஒரு கூறாக, இவர் சில வாகனங்களையும், எந்திர உறுப்புகளையும் மேனாடுகளிருலிந்து தருவித்து விற்பனை செய்யலானார். பிறகு மதுரையில், 'செனரல மோட்டாாசு நிறுவனத்தின்' வாகனங்கள், வாகன உறுப்புகள் ஆகியவற்றிற்கு முகவராக உரிமை பெற்றார். இது இந்த நிறுவனத்தின் வரலாற்றில் ஒரு புது திருப்பமாக அமைந்தது.

இவருக்கு ஐந்து புதல்வர்களும், மூன்று புதல்வியரும் பிறந்தனர் புதல்வர்கள் அனைவரும் தம் தந்தையார் வழியில் தொழில் முனைவர்களாகி, அந்நிறுவனத்தின் பெயரைப் போற்றிச் சிறப்பாகப் பணி செய்து வருகின்றனர். பேரன்மார்களும் அவ்வாறே. இவர் 1947-இல் அமெரிக்கா சென்றார். அங்கு வேளாண்மைத் துறையில் தாம் கண்ட புதுமைகளைத் தம் ஏர்வாடிப் பண்ணையில் புகுத்தினார். ஆர்.கி.

**சுந்தரம்பிள்ளை, பெ., (கி.பி. 1855-1897),** துணிவணிகர் பெருமாள் பிள்ளைக்கும் மாடத்தி அம்மையாருக்கும் 5.4. 1855-இல் ஆலப்புழையில் பிறந்தார். இவர் வேளாள மரபினர். பள்ளிக்கல்வி பிறந்த ஊரில முடிந்தது; கல்லூரிக் கல்வி திருவனந்தபுரம் அரசர் கல்லூரியில் தொடர்ந்தது. பி.ஏ., தேர்வில் கி.பி. 1876-இல் முதல் மாணவராகத் தேர்ந்தார். அக்கல்லூரியிலேயே தத்துவ விரிவுரையாளராகப் பணியாற்றினார். ஓராண்டுப் பணிக்குப்பின் திருநெல்வேலியிலுள்ள ஆங்கிலத் தமிழ்ப் பள்ளியின (Anglo Vernacular School)தலைமையாசிரியரானார். அப்பள்ளி கி.பி.1878-இல் இந்து கல்லூரியாக உயர்ந்த போது அதன் முதன் முதல்வராய ஓராண்டு பணிபுரிந்தார். திருநெல்வேலியில் பணியேற்ற போது சிவகாமி என்ற பெண்ணை மணநதார். கோடகநலலூர் சுந்தர சுவாமிகளைச் சந்தித்தார். வேதாந்த விளக்கங்களைக் கேட்டறிந்து மாணாக்கரானார். மனோன்மணீயம் எனும் நாடகத்தை எழுதத் தொடங்கினார்.



பெ. சுந்தரம்பிளளை

மீண்டும் திருவனந்தபுரம் சென்றார். அரசர் கலலூரியில் தத்துவப் பேராசிரியராய் விளங்கினார். கி.பி. 1880-இல் தத்துவத்தில் எம்.ஏ., பட்டம் பெற்றார். சுவாமி விவேகானந்தர் திருவனந்தபுரத்திற்கு வந்தபோது அவருடன் தத்துவக் கருத்துகளைப் பகிர்ந்து கொண்டார். திருநெல்வேலி கோடகநல்லூர் சுந்தர சுவாமிகளின் தொடாபால் சுந்தரம் பிள்ளையும் அவர்தம் மனைவி சிவகாமிஅம்மையும் சந்நியாசிகளை வரவேற்று உபசரிக்கும் பண்பில் சிறந்து விளஙகினர். சிவகாமி அம்மையாரின் ஆர். வி. புர வீட்டில் நாராயண குரு சென்று தங்கியிருந்தார் என்பர். சுநதரம்பிள்ளையின் ஆனமிகப் பற்றே இதற்குக் காரணம். பேராசிரியர் ஆர.வி. (Harvey) என்பவர் இவருக்குத் தத்துவம் கற்பித்தார். அக்குரு பத்தியின் விளைவால் இவர் திருவனந்தபுரத்தில் கட்டிய வீட்டின் பெயர் அமைந்தது அன்று நியமிக்கப்பெற்ற கல்லூரிப் பேராசிரியர்களுள நாலவரே இந்தியர்கள். அவருள் சுந்தரம்பிள்ளையும் ஒருவர். அவருடைய அறிவாற்றலைக் கண்டு வியந்து ஆங்கிலேயப் பேராசிரியர் ஆர்.வி. ஓய்வு பெற்றபோது இவரைத் தம்மிடத்தில் பேராசிரியராக நியமிக்கும்படி அரசுக்குப் பரிந்துரை செய்தார். அது முதல் பேராசிரியர் சுநதரம்பிள்ளையானார். பல்கலைக் கழகப் பேராசிரியர் யாவரும் ஆங்கிலேயராயிருந்த காலத்தில் ஆஙகிலேயர் ஒருவரின பரிந்துரையால் தத்துவப் பேராசிரியராக நியமனம் பெற்ற தமிழாபேராசிரியர் சுந்தரம்பிள்ளையேயாவார். சென்னைப் பலகலைக் கழகத் தேர்வுகளான ஆஙகிலம், தமிழ், தததுவம், வரலாறு ஆகிய தாள் மதிப்பீட்டுக் குழுத் தலைவராகவும பணியாற்றியுள்ளார். திருவனநதபுரம மகராசாவிற்கும் ஆசிரியராகத் திகழ்ந்தார்.

மன்னர் விசாகத் திருநாள் கி.பி. 1882-இல இவரை அரசின் வருவாய்த் துறை ஆணையராக்கினார். கி.பி. 1884-இல் திருவனநத புரததில் சைவப் பிரகாச சபையை நிறுவினார். அரசுப் பணியிலிருநது நீங்கி மீணடும் அரசர் கல்லூரிப் பேராசிரியராகி அதன் பின் அக்கல்லூரி முதல்வரானார்.

இவர்தம் நூற்றொகை விளக்கம கி.பி.1888-இல் வெளியாயிற்று. மறு ஆண்டு ‘சிவகாமி சரிதை’யை எழுதி வெளியிட்டார். இங்கிலாந்து வரலாற்றுக் கழகத்தின் உறுப்பினர் (F.R.H.S.) ஆனார். இவா கி.பி. 1891-இல் தம் நாடகத்தமிழ்ப் படைப்பான மனோன்மணீயத்தைத் தாமே வெளியிட்டார். சென்னைப் பல்கலைக் கழகத்தின உறுப்பினர் (Fellow of Madras University) ஆகவும், தொல பொருள் ஆய்வு வல்லாராதலின் இங்கிலாந்திலுள்ள ஆசியக் கழகத்தின் உறுப்பினர் (M.R.A.S.) ஆகவும் தெரிவு செய்யப்பட்டார். திருவாங்கூரின் பழைய மன்னர்கள் வரலாறு (Some Early Sovereigns of Travancore) என்ற நூலை கி.பி. 1894-லும் திருஞானசம்பந்தர் கால ஆராய்ச்சி பற்றிய ஆங்கில நூலை கி பி. 1985-இலும் வெளியிட்டார். இங்கிலாநது அரசு இவரது தென் இந்திய வரலாற்றுப் புலமையைப் பாராட்டி இராவ் பகதூர் எனும் பட்டத்தை கி.பி- 1896-இல் வழங்கியது. இவர்தம் 42-ஆம் வயதிலேயே (26.4.1897) காலமானர்.

பி.தெ.

**சுந்தர முதலியார், முத்து, (கி.பி. 1873-1941):** இவர் தொண்டை நாட்டில் ஆரணிக்கு

அருகிலுள்ள காமக்கூரில முத்துசசாமி முதலியாருக் கும் இரத்தினம்மாளுககும் மகனாக கி.பி. 1873-ஆம் ஆண்டில பிறந்தார். தொடக்க நிலையில் சிறிதளவே கல்வி கற்றிருந்த இவர் தொடக்கபபள்ளி ஆசிரிய ராகப் பணிபுரிந்தார். அப்போது கல்வியிற் சிறந்த ஆரணி கநதசாமி உடையார், செல்லக்குட்டி ஆச்சாரியாா, காமக்கூர் வட்டக் கோட்டாட்சித் தலைவர் சுநதரராமையர் முதலியோரிடம் கல்வி கற்றுச் சிறந்த புலமையாளரானார். முத்தமிழ்த் திறம் பெற்றிருந்த இவர், இலக்கிய இலக்கணப் பயிறசியும், சைவ சித்தாந்தப் புலமையும சோதிட அறிவும் பெற்றிந்தார். சைவ ஒழுக்கத்தில சிறநது விளங்கிய இப்புலவர் தம்மை நாடி விரும்பித் தமிழ கற்கவந்தோருக்கெல்லாம் சிறப்பாகக கற்பித்துப் புலவர்களாக்கினார்.

நாட்டுப்பற்று மிக்க இவர் காந்தியடிகள் மீது மிகுநத பற்றுக் கொண்டிருந்தார். அதனால் 'மகாத்மா காநதி சதகம்' எனனும் நூலை இயற்றி னார். தமிழில் ஆழ்ந்த புலமை பெற்றிருந்த இவா தொல்காப்பியத்தில் கூறப்படாத இலக்கணங்களை யெல்லாம் தொகுத்து, 'இலக்கணக் கோவை'எனனும் நூலை இயற்றியுள்ளார். மேலும் கம்பராமாயணத தில நீதிச் செயயுட்களாக அமைந்துள்ளவற்றைத தொகுத்துக 'கம்பராமாயண நீதிக்கவித் திரட்டு'என னும் பெயரில் நூலொன்று வெளியிட்டார். இவரது தமிழப் புலமையைப் பாராட்டித திரு.வி. கலியாண சுந்தர முதலியார் தலைமையில 16.6.38-இல இவருக்கு 'மாப்பேராசிரியா' பட்டமும், பணமுடிப்பாக உரூ. 500/-உம் கொடுக்கப்பட்டன. பெரும்புலவாகள பல ராலும் பாராட்டப்பெற்ற இவர் 1941-ல கால மானார்.

வீ.சே.

**சுந்தரமூர்த்திசுவாமிகள்:** சங்க காலத்தை அடுத்து வந்த களப்பிரர் காலத்தில் சமயம், மொழி, கலை, பணபாடு முதலியவற்றில இருட்சிபெற்ற தமிழகம் மீண்டும் ஒளி பெற்று எழுந்தது என றால் அதற்கு ஒரு மருஙகு சைவப் பேரருளாளர் களும், பிறிதொரு மருங்கு வைணவப் பேரருளாளர் களும் காரணம் ஆவர் எனபது வரலாறு கண்ட உணமையாகும். இப்பேரருளாளாகளுள அப்பரும், சம்பநதரும் பொறுத்தும், ஒறுத்தும் சைவ சமயத்தை வளர்த்தருளிய பெருமையுடையவராவா. பல்லவ ராலும், பாணடியராலும் ஒளி குறைந்திருந்த சைவ சமயத்தை மீண்டும் ஒளிமிகச் செய்த பெருமை இவர்களுக்கு உணடு. இவ்விருவரை அடுத்துத் தோன்றியவர் சுந்தரர் ஆதலின் இவருக்குப் பகை களையும் பொறுப்பு நேரவில்லை. முன் இருவரின தொணடு நெறியால் இவர்தம் தோழமை நெறி வளர்ந்தது.

இவர் திருநாவலூரில் தோன்றியவர்; ஆதிசைவ மரபினா. சடையனார், இசைஞானியார் எனும் இருமுது குரவர்க்கும் நன் மகவாகத் தோன்றியவா. முற்பிறவியில கயிலையில் மாதர் மேல் மனம் போக் கியமையால் மறுபிறவியாகிய இப்பிறவியில் மையல் மானுடப் பிறவி பெறவும அதனால ஐயர் (சிவபெரு மான்)தடுத்தாட்கொள்ளப்பெறவுமானபேறுபெற்றார். முற்பிறவியில் மனம் நேர்ந்த கமலினியாரும் அனிந் திதையாரும் மறுபிறவியில பரவையாரும் சங்கிலியா ருமாய்த் தோனறச் சுந்தரர் அவர்களை மணம் நேர்ந்தார். பான்மை விதி கடைக் கூட்ட இவவாறு இவர் இரு மணத்தைச் செய்தனரேனும் யோக நெறியை உணர்த்த வந்த பெரியவராகவே வாழ்ந்தார். 'தலைவா உனை வேணடிக் கொள வேன் தவநெறியே', 'நாடுவன் நாடுவன நாபிக்கு மேலே ஓர் நால்விரல்', 'ஊனை உயிர் வெருட்டி ஒள்ளியானை நினைத்திருந்தேன்' என வரும் வாக் குகள இவ்வுணமையை விளககும். கோட்புலியார் அளித்த மகளிரை மகண்மையாகக் கொண்டு ஏற்ற தும் நினைவு கூாதற்குரியதாகும்.

சுந்தரர் பொன்னுக்குப் பாடினார் எனக் கூறுவதுணடு. எனினும் அப்பொன்னெல்லாம் புகழ தக்க மெய்யடியார்க்கே பயனுற்றது என்பதும், அதற்காகவே இவர் இறைவனிடம் வேணடிப் பெற் றனர் என்பதும் இவர் தம் வரலாற்றால் அறியத் தகுவனவாகும்.

இறைவன் தாமே 'நம்மைத் தோழனாகத் தந்த எம்' எனக் கூறியருளும் அளவிற்கு இவர் பெருமை உயர்ந்து விளங்கிற்று. அநநெறியில் இவர் இறைவ னோடு ஊடியும், கூடியும் கூறிய கருததுகள பல 'இவர லாதிலையோ பிரானார்', 'மகததில் புக்க தோர் சனியெனக் கானாய்' 'உழையுடையான் உள் இருந்து உளோம் போகீர் - எனறானே', 'மற்றைக் கணதான் தாராது ஒழிந்தால் வாழ்ந்து போதிரே' 'இடுகு நுணணிடை மங்கை தன்னொடும் எற்றுககு இஙகிருநதீர்-எம்பிரானீரே' என்பன வாகிய வாக்குகள இறைவன்பால் இவர் கொணட ஊடற் குறிப்பை வெளிப்படுத்துவனவாம் ஆள இல்லை எம்பெருமான் இவை அட்டித்தரப் பணியே', 'கரைக்கால முதலையைப் பிள்ளை தரச் சொல்லு காலனையே' என வருவனவும், இறைவ னைப் பரவைபால் தூது விடுததுவும், தோழமை யின ஆழத்தை விளக்குவனவாகும்.

தோழமை என்பது தம் துயரம் துடைக்க வேண்டுவது மட்டுமன்று. தம் தோழனுக்குற்ற துயரத்திலும் பங்கு கொள்வதாகும். இதனை நுண்மையாக உணர்த்த வந்த பதிகம் திருக்கோடிக் குழகரை நோக்கிக் கூறிய பதிகமாகும்.

இறைவன் தம்மைத் தோழமையாகத் தந்தருளிய தோடு அமையாது சேரமான் பெருமாள் நாயனா ரிடத்தும், தோழமை கொள்ளுமாறு கூட்டுவித்தார். இதனால் தமிழ்நாட்டு மூவேந்தர்களும் தம் குறிப்பின் வழி நிற்கப் பாண்டிநாட்டுத் திருப்பதிகளில் வழிபாடு செய்யும் பாங்கு பெற்றார் சுந்தரர். 'முடியால் உல காண்ட மூவேந்தர் முன்னே, மொழிந்து ஆறுமோர் நான்கும் ஓர் ஒன்றினையும்' என வரும் திருப்பரங் குன்றப் பதிகம் இக்குறிப்பினை விளக்கும்.

தத்தம் சீரிய கொள்கைகளால் இவரிடம் பகைமை கொண்டோர் இருவர். ஒருவர் விறல் மிண்டர்; மற்றொருவர் ஏயர்கோன் கலிக்காம நாயனார். இவ்விருவருள் முன்னவர்தம் பகைமை யால் திருத்தொண்டத் தொகை உருவாயிற்று பின்னவரின் பகைமையால் இறைவன் சுந்தரரிடத்துக் கொண்ட தோழமையின் ஆழம் விளங்குவதாயிற்று அவினாசியில் அந்தணச் சிறுவனை முதலை வாயி னின்று மீட்டுக் கொடுத்தமையால் இவர் சமுதாயத் திற்கு ஆற்றிய அரும் தொண்டின் திறம் இனிது விளங்கும்.

இதுவன்றி இவர் திருத்தொண்டத் தொகை அருளியது,இவ்வுலகிற்கு ஒப்பற்றதொரு அருள்நெறிக் காப்பியந் தோன்றற்குரிய கருவை,அருந் தொண்டின் வரலாற்றை வழங்கியதொரு அருட் கொடையாகும்.

பெருமிழலைக் குறும்பர் இவர் தம் திருப் பெயரையே நாளும் நவினற நலத்தால் அட்டமாசித்தி கைவரப் பெற்றுப் பின்னர் கயிலைப் பொருப்பர் கழல் அடையும் பேற்றினையும் பெற்றார்.வேந்தரை யும் விருந்தெதிர் கொள்ளும் செல்வ நலனும், பெரிய புராணத்தின காப்பியத் தலைவனாகும் கவின் சிறப் பும் இவருக்கு இருந்தமை இவருக்கு அமைந்ததொரு ஒப்பற்ற சிறப்பாகும்.

உலகியல் பற்று நீங்க இறைவன்பால் இவர் வேண்டவும், இறைவன் யானையை அனுப்பி அதன் வழித் தன்பால் அழைத்துக்கொண்டான். திருக்கயி லையில் இந்திரன் மால்பிரமன் எழிலார்மிகு தேவர் எல்லாம் வந்தெதிர் கொள்ளவும்,மந்திர மாமுனிவன் 'இவன் யார்?' எனப் பெருமான் 'நம் தமர் ஊரரன்' என்று அருளவும் கிடைத்தபேறு இவருககுக் கிடைத்த பெறற்கரிய பேறாகும். கு.சு.

**சுந்தராம்பாள், கே.பி.:** தமிழகத்துப் பெண கலைஞர்களுள் குறிப்பிடத்தக்கவராக விளங்கிய இவர் கொடுமுடி என்னும் ஊரில் 1908-ஆம் ஆண்டில் பிறந் தார். கொடுமுடி என்னும் பிறந்த ஊர், பாலம்பிகை என்னும் தாயின் பெயர் ஆகியவற்றின் ஆங்கில முதல் எழுத்துகளைத் (K.B.) தம் பெயருக்கு முன்னால் அமைத்துக் கொணடார்.



கே.பி. சுந்தராம்பாள்

இவர்தம் இளம்வயதில் ஏழ்மை காரணமாகப் புகைவண்டியில் சென்று அதில் பயணம் செய் வோரிடம் பாடிப் பொருள்பெற்று வாழ்ந்தார். ஒரு நாள் புகை வண்டி அதிகாரியாக விளங்கிய கலை வுணர்வு மிக்க எப்.சி.நடேச ஐயர் சிறுமியாக இருந்த சுந்தராம்பாளை அவரது இசை இனிமை உணர்ந்து சிறுவர் நாடக அமைப்பில சேர்த்துவிட்டார். சுந்தராம்பாள் தொடக்க நிலையில் தஞ்சாவூர் நடேசப்பிள்ளை என்பவரிடம் வள்ளித்திருமணம் என் னும் நாடகம் பயின்றார்.

சிறப்பு நாடகங்களில் நடிப்பதற்காக இலங்கை சென்றிருந்த போது செங்கோட்டை எசு.சி கிட்டப்பா என்ற நாடகப் பாடகரை நேசித்துக் காதலமணம் புரிந்துகொணடார். ஆண் வேடமிட்டுச் சுந்தராம் பாளும், பெண் வேடமிட்டுக் கிட்டப்பாவும் வள்ளி திருமணம் எனனும் நாடகத்தில் நடிப்பார்கள். இரு வருக்கும் உள்ள தொடர்பை உணர்ந்த மக்கள் அவர்கள் பேசும் வசனங்களைச் சிறப்பாகக் கவனித்துக் கேட்டின்புறுவர். நாடகத்தின் மூலம் புகழ்பெற்றிருந்த இவர் நடித்த நந்தனார் என்னும் திரைப்படம் இவரது வாழ்வின் திருப்பு முனையாக அமைந்தது எனலாம்.

இவர், கிட்டப்பாவின் அண்ணனிடம் முறைப்படி இசை பயின்றார். தம் இசை ஆர்வத்தால் நுட்பம் மிக்க இசைக்கலையை எளிதில் உணர்ந்துகொண்டார். இவரது மணவாழ்க்கை ஐந்தாண்டுக் காலமே நீடித்தது. இவர்கணவர் கிட்டப்பா சிறுவயதிலேயே மரணமடைந்தார். கணவன் இறப்பிற்குப் பின்னர், துறவிபோலும் நிலையில் தம் வாழ்க்கையை அமைத்துக் கொண்டார். தேசிய உணர்வுபெற்று விளங்கிய சுந்தராம்பாள் தேசிய விடுதலை வீரர் திரு. சத்தியமூர்த்தியிடம் பற்றுடையவராக விளங்கினார். அவர் பேசும் கூட்டங்களில் தேசிய பாடல்களைப் பாடி மக்களுக்கு மகிழ்ச்சியையும் எழுச்சியையும் ஊட்டினார். இவருடைய பாடல்கள் பல இசைத்தட்டாக வெளி வந்தன. மணிமேகலை என்னும் திரைப்படத்தின் மூலமாகத் திரையுலகில் தோன்றிய இவர், செமினி வாசன் அவர்களால் தயாரிக்கப்பட்ட ஔவையார் என்னும் திரைப்படத்தின் மூலம் நிலைத்த இடம் பெற்றார்.

தம் கணவரின் மறைவுக்குப்பிறகு நாடகத் தொழிலை விடுத்த இவர் தரமான திரைப்படங்களில் தனித்த பாத்திரமேற்று நடித்து வந்தார். அக்காலத்தில் இசை அரங்குகளில் மிக்க ஈடுபாடு கொண்டு இசைப் பணி புரிந்து வந்தார்.

இவருடைய தெளிவான உச்சரிப்பும், அழுத்தமான, உயரிய குரல் வளமும் கேட்பவரை மயங்க வைக்கும். ஐந்தரைக் கட்டைச் சுருதியில் பாடும் இயல்புடைய இவர் பாடிய சங்கரதாசு சுவாமிகளின் 'ஞானப் பழத்தைப் பிழிந்து' என்னும் பாடல் எல்லோர் உள்ளத்திலும் இடம் பெறறுத் திகழ்கிறது.

வெண்பட்டு உடையும், தாம்பூலம் நிறைந்த செவ்வாயும், வெண்ணீறு சிறக்கும் நெற்றியும் சுந்தராம்பாளின் புறத்தோற்றப் பொலிவாகும். பல நேரம் தொடாந்து இசையரங்கிற்பாடும் இவர் தியாகையரின் கீர்த்தனை, தேசிய பாடல், பகதிப் பாடல் ஆகியவற்றை மனம்கசிந்து பாடுவார். சிறந்த பாடற்கலைஞராக விளங்கிய இவரைத் தமிழக அரசு மேலவை உறுப்பினராகச் செய்து பெருமைப்படுத்தியது.

சொந்தக்குரலில் பாடி நடித்த கே.பி. சுந்தராம்பாள், 1980-ஆம் ஆண்டு தம் எழுபத்திரணடாம் வயதில்கொடுமுடியில் இயற்கை எய்தினார். இரா.குரு.

**சுப்பராய ஐயர், செந்நெற்குடி:** இவா கி.பி. 18-ஆம் நூற்றாண்டில் வாழ்ந்தவர். பாணடி நாட்டில் உள்ள செந்நெற்குடி என்னும் ஊரைச் சேர்ந்தவர். அதனால் இவரைச் செந்நெற்குடி சுப்பராய ஐயர் என்றே வழங்குவர். இவர் தம் தந்தையார் பெயர் சேசப்ப ஐயர். இவர் வடமொழியிலும் தமிழ் மொழியிலும் நன்கு தேர்ச்சி பெற்றிருந்தார். இவர் பதினெண்புராணங்களுள் மூன்றாவதாக வைத்தெண்ணப்படும் விட்டுணு புராணத்தைத் தமிழில் பாடியுள்ளார். அந்நூல் கடவுள் வாழ்த்தோடு 4446 செய்யுள்களையும் 6 பெரும் பிரிவுகளையும் 126 சிறு பிரிவுகளையும் கொண்டு விளங்குகின்றது. பெரும் பிரிவு அமிசம் என்றும், சிறு பிரிவு அத்தியாயம் என்றும் கூறப்பட்டுள்ளன. அந்நூல் முழுவதும் திருமாலின் வரலாற்றைக் கூறுவதாக அமைந்துள்ளது. வீ.சே.

**சுப்பராயச் செட்டியார், சோடசாவதானம்** கி.பி. 19-ஆம் நூற்றாண்டில் வாழ்ந்த தமிழ்ப் புலவர். இவர் திரிசிரபுரம் வீரராகவச் செட்டியாருக்கு மகனாகப் பிறந்தார். பள்ளிக் கல்வியை முடித்த பின்னர்ப் பெரும்புலவர் மீனாட்சி சுந்தரம் பிள்ளையின்பால் தமிழ்க் கல்வி கற்றார். அந்நாளில் அவதானஞ் செய்து கொண்டிருந்த சிலர் மீனாட்சிசுந்தரம்பிள்ளையிடம் வந்து உங்கள் மாணவர்களுள் யாரையேனும் அவதானியாக்க முடியுமா எனக் கேட்டனர். அப்பொழுது நினைவாற்றல் மிகுந்த இவரைத் தேர்ந்து அவதானஞ் செய்யவேண்டிய முறைகளையெல்லாம் கற்பித்தார். இவரும்மிகக் குறுகிய காலத்தில் கற்று மிகச் சிறப்பாக 16 அவதானங்கள் செய்யும் தேர்ச்சி பெற்றார். அதனால இவரைச் சோடசாவதானம் சுப்பராயச் செட்டியார் என வழங்கினர். சென்னை நார்மல் பள்ளியில் தமிழாசிரியராகப் பணியாற்றிய போதே இராயப்பேட்டை அத்துவித வேதாந்த சபையில் வேதாந்த வகுப்பும் நடத்தினார்.

இவர் நூல்கள் இயற்றுவதிலும் நூல்களுக்கு உரை எழுதுவதிலும் நூல்களைப் பிழையறப் பதிப்பிப்பதிலும் சிறந்து விளங்கினார். விரிஞ்சேசர் சதகம், ஆதிபுரத்தலபுராணம் முதலிய நூல்களை இவர் இயற்றியுள்ளார். பரஞ்சோதி முனிவர் இயற்றிய திருவிளையாடற் புராணம், கம்பராமாயணம் அயோத்தியாகாண்டம், சிவஞான முனிவர் காஞ்சிப் புராணம், புலியூர் வெண்பா ஆகிய நூல்களுக்கு இவர் உரை எழுதியுள்ளார். திருப்போரூர்ச் சுவாமிகள் இயற்றிய சநநிதி முறை, காங்கேயன உரிச்சொல் நிகண்டு ஆகிய நூல்களைப் பிழையறப் பதிப்பித்தும், தம் ஆசிரியர் இயற்றிய மாயூரப் புராணம், திருநாகைக் காரோணப் புராணம் ஆகிய நூல்களை அச்சிட்டும் வெளியிட்டுள்ளார். இவர் பதினோராம் திருமுறை அனைத்தையும் ஏட்டுப்பிரதிகள் பலவற்

றைக் கொண்டு ஆய்ந்து திருந்திய முறையில் முதன் முதலில் கி.பி. 1869-இல் வெளியிட்டார். ஆவார். இவர் காலத்தில் வெளியிட்ட அனைத்து நூல்களின் முகப்பிலும் இவர்தம் சிறப்புப் பாயிரம் இடம்பெற் றிருக்கும். நூல் வெளியிட்ட அனைவரும் இவரிடம் சாற்றுக்கவி பெறுவதைப் பெரும் பேறாகக் கருதி னார்கள். இவருடைய விரிஞ்சேசர் சதக நூலைப் பாராட்டிப் பெரும்புலவர் மீனாட்சி சுந்தரம்பிள்ளை திரிசிரபுரம் சுந்தரம்பிள்ளை, கொட்டையூர்ச் சாமி நாததேசிகர், தியாகராசச்செட்டியார், திரிசிரபுரம் குப்பமுத்துப்பிள்ளை முதலியோர் சிறப்புப்பாயிரம் பாடிச சிறப்பித்துள்ளனர். வீ.சே.

**சுப்பராயன், பி.** (கி.பி. 1889-1962): இவர் சேலம் மாவட்டம், திருச்செங்கோடு வட்டம், கவுண்டம்பாளையம் மிட்டாவைச் சேர்ந்த போக்கம் பாளையம் என்ற சிற்றூரில் கி.பி. 1889-இல் பிறந் தார். தந்தை பரமசிவக் கவுணடர்; தாயாா பவளாயி அம்மாள். தந்தை 18 மிட்டாக்கள் அடங்கிய குமார மங்கலம் சமீன்தாராகத் திகழ்ந்தார். சுப்பராயனின் எட்டாம் வயதில் தந்தை காலமானார்.

இவர் சென்னை இந்து உயர்நிலைப் பள்ளியில் பயின்றார். பின்னர் இஙகிலாநது நாட்டில் ஆக்சு போர்டு பல்கலைக் கழகத்தில் வாதாம் கல்லூரியில் பயின்று சட்டக் கல்வியில் உயர்பட்டம் (D.C.L.) பெற்றார். அதனால் சமீன் மக்கள இவரைச் சீமைக கவுண்டர் எனக்கூறினர். இங்கிலாநதில பயிலும் போது ஆங்கிலேயரை எதிர்த்துப் போராடிய அயர் லாந்து விடுதலைப்படையுடன் மறைமுகத் தொடர்பு கொண்டதால் இவர் இஙகிலாந்து அரசின் கண காணிப்புககு ஆளானார்.

இவர் இராதாபாய் என்ற அம்மையாரைக் கலப் புத் திருமணம் செய்துகொண்டார். இவர்களுக்கு மூன்று ஆண்மக்களும் ஒரு பெண்ணும் பிறந்தனர்.

தொடக்ககாலததில நீதிக்கட்சியுடன் தம்மை இணைத்துக் கொணடார். அக்கட்சி உறுப்பினராக கி.பி. 1925-இல் சட்டமன்றததுக்குத் தோநதெடுக்கப பட்டார். பெரும்பான்மைக் கட்சியான சுயராச்சியக் கட்சி அமைச்சரவை அமைக்க முன்வாராமற் போகவே, சுப்பராயன் நீதிக் கட்சியிலிருநது விலகிச் சென்னைமாகாணத்தின் முதலமைச்சராக 1926 முதல் 1930 வரை பதவி வகித்தார். அப்போதுதான் வகுப்பு வாரிப் பிரதிநிதித்துவ முறை (Communal G.O.) கொணடு வரபபட்டது. அண்ணாமலைப் பல்கலைக் கழகம் நிறுவ இவர் தலைமையிலான அரசு அனுமதி அளித்தது.

இவர் உலோகமானிய பாலகங்காதர திலகர் கோபாலகிருட்டிண கோகலே, காந்தியடிகள், சக்கர வர்த்தி இராசகோபாலாச்சாரியார் ஆகியோருடன் நெருங்கிய தொடர்பு கொண்டமையால் இவருக்கு அரசியலில் மிக்க ஈடுபாடு ஏற்பட்டது. இவர் உப்புச் சத்தியாக்கிரகத்துக்குத் தலைமை தாங்கினார். இந்தியத் தேசிய காங்கிரசில் தம்மை முற்றிலும் இணைத்துக் கொணட இவர் இராசாசியை முதலமைச்சராகக் கொணட சென்னை மாகாணக் காங்கிரசு அமைச்சரவையில் (1937-1939) கல்வி, சட்ட அமைச்சராகப் பணியாற்றினார். பின்னர் ஓ.பி. இராமசாமி ரெட்டியாரை முதலமைச்சராகக் கொண்ட அமைச்சரவையிலும் (1947-1948) உள் துறை, சட்ட அமைச்சராக விளங்கினார்.

இந்திய அரசில் நேருவின் தலைமையில் 1959-இல போக்குவரத்து, அஞ்சல துறை அமைச்சராகப் பொறுப்பேற்றார். இவர் முயற்சியால்தான் பாரதி யார், திருவள்ளுவர் அஞ்சல் தலைகள் வெளியிடப் பெற்றன.

இவர் இந்தோனேசியாவில் இந்தியத் தூதராக வும் (1949-1951), மராத்திய மாநில ஆளுநராகவும் பதவி வகித்தார்.

இவருக்கு மட்டைப் பந்தாட்டத்தில் (Cricket) மிக்க ஈடுபாடு உணடு. எனவே இவர் 1938 முதல் 1946 வரை இந்திய மட்டைப் பந்தாட்ட வாரியத்தின் (Indian Cricket Board) தலைவராக விளங்கினார்.

பொது வாழ்வில் பல்லாண்டுகள் உழைத்துத் தமிழ்நாட்டுக்கும் பாரதத்துக்கும் பெருமை சேர்த்த டாக்டர் சுப்பராயன் 1962-இல் காலமானார்.

செ.இரா.

**சுப்பிரதீபக் கவிராயர்** என்பவர் சிற்றின்பச் செய்யுள் பாடுவதில் வல்ல தமிழ்ப் புலவராவாா. இவர் மதுரை மாவட்டத்தைச் சார்நத திருமங்கலம் வட்டத்தில் கம்மாளர் குலத்தில் பிறந்தவர் என்றும், திருவரங்கத்தில் பிறந்த வைணவர் என்றும், சிவ கங்கை ஆட்சியைச் சார்ந்த பழையனூரையடுத்த கொழுனை என்னும் ஊரினர் என்றும் பலவாறு கருத்துரைப்பர். மேலும், இவர் வீரமாமுனிவருக்கு உதவி புரிந்தவர் எனறும், கிறித்தவ சமயம் தழுவி யவர் என்றும் கூறப்படுகிறார். இப்புலவர் பலபட்ட டைச் சொக்கநாதப் புலவர் காலத்தவர் என்றும், அவரால் பாடப்பட்ட வண்டுவிடுதூது என்னும் நூல் அரங்கேற்றம் நடைபெறும்போது கவிராயர், 'சண்பக மலரில் வண்டு படியாது' எனக் கூறி அவரை மறுத் தார் என்றும் இப்புலவர்கள் இருவருக்கும் இறுதிவரை

பகைமை நிலவியது என்றும் அறிஞர்கள் கூறுகின்றாாகள். இவர் காலம் கி.பி. 18-ஆம் நூற்றாணடின் முற்பகுதி எனபர்.

இறைவனைப் பாட்டுடைத் தலைவனாகக் கொணடு சிற்றிலக்கியங்கள் எழுதப்பட்ட காலத்தே, அங்ஙனம் செய்யாது தம்மைப் பேணிப் பாதுகாத்த வள்ளல் நாகேந்திர கூளப்ப நாயக்கன் என்பானைத் தலைவனாகக் கொண்டு கூளப்ப நாயக்கன் காதல், விறலிவிடுதூது ஆகிய இரு சிற்றிலக்கியங்களையும் இயற்றிச் சிறப்புற்றார். இந்தக் கூளப்ப நாயக்கர், மதுரை மாவட்ட நிலக்கோட்டை வட்டத்தைச் சேர்நத பெஞ்சை என்னும் ஊரிலிருந்த பெருநிலக்கிழார் ஆவார்.

இப்புலவர் இவ்விரு நூல்களிலும் வள்ளல் கூளப்ப நாயக்கனின வள்ளல் தன்மையையும், அரும்பெரும குணப் பண்புகளின் சிறப்புகளையும் விளக்கமாக எடுத்தோதுகிறார். கலிவெண்பா யாப்பில அமைந்துள்ள இவ்விரு நூல்களிலும் சொற்சுவை, பொருட்சுவைகளுடன் கூடிய புலவரின் சிறந்த தமிழ் நடையைக் காணமுடிகிறது. எதுகை, மோனை, அணிச் சிறப்பு ஆகிய செய்யுள் நலங்கள் இவ்விலக்கியங்களுக்கு அழகூட்டுகின்றன.

வீரமாமுனிவர் இப்புலவரிடத்துத் தமிழ் கற்றார் என்பது கூறப்படுகிறது. இவர் பாடியனவாகப் பல பாடல்கள் தனிப்பாடல் திரட்டில் இடம்பெற்றுளளன. இரா.செ.

**சுப்பிரபாதம்**: 'பிரபாதம்' என்பது 'உதயம்', 'எழுச்சி' எனனும் பொருளுடைய சொல்லாகும். 'சு' என்பது 'நல்' என்னும் கருத்துடைய அடைமொழியாகும். எனவே சுப்பிரபாதம் என்னும் தொடருககு நல் உதயம், நல் எழுச்சி என்னும் பொருள் கொளளலாம் என்றாலும் தமிழில் வழங்கும் 'திருப்பளளி எழுசசி' என்ற தொடரே இதன் பொருள் அனைத்தையும் குறிப்பிடும் தனித் தமிழ்த் தொடராகும.

தமிழில் மாணிக்கவாசகர், தொண்டரடிப் பொடியாழவார் முதலியோர் திருப்பளளியெழுச்சி பாடியுளளனர். இப்பள்ளியெழுச்சிப் பாடல் மரபு தொல்காப்பியத்திலிருந்து தொடர்ந்து வளர்ந்து உருக் கொண்டதாகும். முதலில் மன்னனை எழுப்பிய மரபு சிறிது மாறி வளர்ந்து, பக்தி இயக்கக் காலததில இறைவனை எழுப்புவதாகக் கற்பித்துப் பாடும் திருப் பளளியெழுசசிப் பாடல்களாக வடிவெடுத்தது. பின்னர் இந்திய உரிமைப் போராட்டக் காலத்தில் 'பாரத மாதாதிருப்பள்ளி யெழுச்சியாக' விளங்கியது.

இப்படியே, ஆழ்வார் பாடலகளில் ஈடுபாடு கொண்ட திருபிரதிவாதி பயங்கரம் அண்ணா என்பவர் பாடியருளிய 'சிரீவெங்கடேச சுப்பிரபாதம்' என்னும் நூலே இப்போது சுப்பிரபாதம் என்று வழங்கப்பெறுவதாகும். இவர் மணவாள மாமுனிகளின் நன்மாணாக்கர் எண்மருள் ஒருவராதலின் மாமுனிகள காலமே இவர் காலமாகும். இவர் வடமொழியில் தோத்திரம், பிரபத்தி, மங்களம் முதலிய பல நூல்களை எழுதியுள்ளார். அவையெல்லாம 'சிரீவாதி பீகராய சூக்தி மாலிகா' என்னும் தலைப்பில் 1984-இல் வெளியிடப் பெற்றுளளன. அத் தொகுப்பில் இந்தச் சுப்பிரபாதத்தையும் காணலாம். 'சிரீவெங்கடேச சுப்ரபாரதம்' 1967-இல் திருமலை-திருப்பதி தேவத்தானத்தால் வெளியிட்டுள்ளது.

திருவேங்கடவனைத் துயில் எழுப்புதல் பொருளாகக் கொண்ட இந்நூல் 29 சுலோகங்களைத் தனனுள் கொண்டுளளது. முதலிரணடு சுலோகங்கள் திருவேங்கடவனையும் 3, 4 திருமகளையும் துயில் எழுப்புவனவாக அமைந்துள்ளன. 5,6, சுலோகங்கள அத்திரி முதலிய மாமுனிவர்களும் சிவபெருமான முதலிய தேவர்களும் வநது சேவைக்குக் காத்திருத் தலைப் பொருளாகக் கொணடன. திருவேஙகடமுடையானைச சுற்றிக் காலைப் போதில் சூழ்ந்துளள காற்று, பைங்கிளிகள, நாரதமுனிவர், வணடினங்கள் தயிர்க் குடங்கள், வண்டுகளின் இன்னோசை, அடியார் திருக்கூட்டம் ஆகியன 7-ஆம் சுலோகம் முதல் 14-ஆம் சுலோகம் வரை முறையே வருணிக்கப்படுகின்றன. ஏழுமலைகள் 15-இல் இடம்பெறுகின்றன. 16-இல் எட்டுத் திக்குப் பாலகரும் 17-இல் ஆதிசேடனும் புனைந்துரைக்கப்படுகின்றனர். 18-இல் ஒன்பது கோள்கள் குறிக்கப்பெறுகின்றன. பின்னர், 24 சுலோகம் வரை திருமால் எடுத்த பத்து அவதாரங்கள் சிறப்பிக்கப் பெறுகின்றன. 25-இல் திருமஞ்சன நீர் கொண்டுவரும் அடியார்களும், 26-இல் மங்களா சாசனம் செய்யும் சிரீவைணவர்களும் 27-இல் மங்களப் பொருளோடு வந்திருக்கும் 'சனக சனந்தனாதி முனிவர்களும் இடம் பெறுகின்றனர். 28-ஆம் சுலோகம், துயிலெழுந்து வாயிலில் காத்திருக்கும் பக்தர்களுக்குத் திருவேங்கடவன் அருளவேண்டுமென்று கேட்டுக்கொள்கின்றது. 29-ஆம் சுலோகம் இத்திருப் பள்ளியெழுச்சியைப் படிப்பவர்களும் நினைப்பவர்களும் பரம்பொருள் ஞானம் பெறுவர் என்று பயன் கூறி அமைகின்றது. பொன்.சௌ.

**சுப்பிரமணிய ஐயர், சதாவதானம்** 20-ஆம் நூற்றாணடில வாழ்ந்த தமிழ்ப் புலவர்களுள் ஒருவர். இவர் தஞ்சாவூரில் அந்தணர் குலத்தில் பிறந்து தமிழ்ப் புலமை மிக்கவராக இருந்தார். அவதானம

செய்வதில் வல்லவராக விளங்கினார். அட்டாவதானம், தசாவதானம், சோடசாவதானம் முதலியவற்றில் படிப்படியாக முன்னேறி நூறு அவதானங்கள் செய்வதில் ஆற்றல் பெற்றிருந்தார். அதனால், இவர் சதாவதானி என்று சிறப்பாக வழங்கப்பெற்றார். தமிழறிவும் ஆர்வமும் மிக்க இவர் தமிழில் பல நூல்களை இயற்றியுள்ளார். தனிப்பாடல்களும் சித்திர கவிகளும் இயற்றியுள்ளார். இவர் பாடிய தனிப் பாடல்கள் அனைத்தும் தொகுக்கப் பெற்றுப் 'பலபாடல் திரட்டு' என்னும் பெயரில் வெளியிடப்பட்டன. அந் நூல்வாயிலாக இவர் காலத்தில் வாழ்ந்த மக்களைப் பற்றிய செய்திகள் தெரியவருகின்றன.

இவர் காளையார் கோயில் புராணம், இலுப்பைக் குடிப்புராணம், கோட்டூர்ப் புராணம், உப்பூர்ப் புராணம், மாற்றூர்ப் புராணம், திருவேடகப் புராணம், திருமகள் புராணம், இராமாயண வெண்பா, தேவைப்பிள்ளைத் தமிழ், கோயிலூர்ப் பிள்ளைத் தமிழ், கோவை முத்து விநாயகர் இரட்டைமணி மாலை, மாணிக்கவாசகர் நான்மணிமாலை, பருவ வருணனைக் கலம்பகம், நடராச தயாநிதி மாலை முதலிய நூல்களை இயற்றியுள்ளார். மேலுமிவர் பல நூல்களுக்குச் சிறப்புப்பாயிரம் பாடியுள்ளார். வீ.சே·

**சுப்பிரமணிய ஐயர்,சு. (மழவை):** இவர் கி.பி. 19-ஆம் நூற்றாண்டின் இறுதியில் வாழ்ந்தவர். மதுரைக்கு அண்மையில் மழவை என்னும் கிராமத்தில் பிறந்தவர். தந்தையார் சுந்தர ஐயா. இவர் எண வகை நினைவாற்றற் கலையில் (அட்டாவதானம்) சிறப்புற்று விளங்கியவர்; சிறந்த தமிழ்ப் புலவர்; நல்ல முருக பக்தர். காரைக்குடிக்கு அணமையில் இருக்கும் குன்றக்குடி என்னும் திருத்தலத்தில அருள் புரிந்து வரும் சணமுகநாத சுவாமி மீது பிள்ளைத் தமிழ் நூல் ஒன்று இயற்றியுளளாா, இவர் இசைப புலமையும் நிரம்பப் பெற்றவராதலால் பலவேறு கீர்த்தனைகள பாடியுள்ளார் 'திருவிளையாடற் கீர்த்தனை' என்னும் நாடகம் இவர்தம் நூல்களுள் பெரிதும் பாராட்டத்தக்கதாகும். மேலும், சிவன், திருமால் ஆகியோர்மீது இவர் பாடியுளள தலபுராணங்கள் கீர்த்தனைகளைக் கொணடவை. செய்யுள் இயற்றும் திறம் மிக்க இவர் சோபனம், ஊஞ்சல் பற்றிய பாடல்களும் பாடியுள்ளார். சரசக் கழிகெடில் விருத்தம், வல்லிதுமாரசம்வாதம், ஏசல், கதவுத் திறப்பு, குமார தேவ குஞசரி சம்வாதம் முதலியவற்றையும் இவர் இயற்றியுள்ளார்.

இவரது நாடக நூலாகிய 'திருவிளையாடற் கீர்த்தனை' மதுரை அருள்மிகு மீனாட்சியம்மைத் திருககோவிலில் கி.பி. 1852-இல அரங்கேற்றம் செய்யப்பட்டது. அன்றியும், கி.பி. 1882-இல் அரங்கேற்றமான 'இலக்குமிபுரத் தலபுராணம்' என்னும் நூலும் இவர் இயற்றியதே. இவருக்குப் பொருளுதவி புரிந்த பெருமகனார் மருதாந்தபுரம் அழகப்பச செட்டியார் ஆவர். பா.மணி.

**சுப்பிரமணிய ஐயர், வ.வே.** தமிழ்நாட்டில் தோன்றிய இநதிய விடுதலைப் போராட்ட வீரர்களுள் குறிப்பிடத்தகக்வர். புரட்சியாளராக அரசியல் வாழ்வைத் தொடங்கிய இவர் பிற்காலத்தில் காந்திய வழியை மேற்கொண்டார். இவர் ஒரு சிறந்த தமிழ்த் தொண்டரும் ஆவார்.



வ.வே. சுப்பிரமணிய ஐயர்

இவர் 2.4.1881-இல் திருச்சி நகரத்திலுள்ள வரகனேரியில் வேங்கடேச ஐயருக்கும் காமாட்சி அம்மாளுக்கும் மகனாகப் பிறந்தார். இவர் கி.பி. 1897-இல் தம்மாமன் மகளான பாக்கியலட்சுமியை மணந்தார். திருச்சியில் சிறிதுகாலம் வழக்கறிஞராகப் பணிபுரிந்த இவர் 1906-இல் இரங்கூன் சென்று அதே தொழிலை மேற்கொண்டார்.

சட்டப் பேரறிஞர் (Bar-at-law) பட்டம் பெற விரும்பிய வ.வே சு. ஐயர் 1907-இல் இங்கிலாந்து சென்றார். இலண்டனில் 'இந்திய விடுதி' (India House) யில் விநாயக தாமோதர சாவர்க்கரைச சந்தித்தார். வன்முறைப் புரட்சியின் மூலம் இநதியாவை விடுதலை பெறச் செய்யும் நோக்கத்துடன் சாவர்க்கர் நடத்தி வந்த 'அபிநவ பாரத' சங்கத்துக்கு இவர் துணைத் தலைவரானார்.

இங்கிலாந்தில் வாழ்நத காலத்தில் இநதியருக்கு நாட்டுப்பற்றை ஊட்டக் கருதி இவர் எழுதிய 'கரிபால்டி சரிதம்' அப்போது பாரதியார் புதுவையில் நடத்திவந்த 'இந்தியா' இதழில் தொடாந்து வெளிவந்தது. 'நெப்போலியன்' எனனும் நூல் பின்னர் இவர் புதுவையில் வாழ்ந்த காலததில் வெளியிடப்

பட்டது. மேலும், இலண்டனில் அவ்வப்போது நடை பெற்ற நிகழச்சிகளை 'இலண்டன் கடிதம்' என்னும் தலைப்புடன் 'இந்தியா'வில் வெளியிடச் செய்தார்.

வ.வே.சு. ஐயரும் 'அபிநவ பாரத' உறுப்பினர் களும் நாட்டை விடுவிக்கப் போர்க்கருவிகளில பயிற்சி தேவையெனக் கருதி அதற்கான முயற்சிகளில் ஈடு பட்டனர். மதன்லால் திங்கரா என்னும் தேசபக்தர் 1909-இல் இலண்டனில் ஓர் ஆங்கில அதிகாரியைச் சுட்டுக் கொன்றதன் விளைவாக 'இந்திய விடுதி' மீது காவல் துறையின் கண்காணிப்பு மிகுந்தது.

இவர் 1910-இல் சட்டப்பேரறிஞர் படிப்பை முடித்த பின்னர் அரச விசுவாசம் தெரிவிக்கவிரும்பாமையால், அப்பட்டத்தை ஏற்காது விடுத்தார். அதே ஆண்டில் இவரைச சிறைப்படுத்த ஆணை பிறப்பிக்கப்பட்டது. இவர் தப்பிச் சென்று, சீக்கியராகவும் பார்சிச் செல் வராகவும் முசுலிம் பயணியாகவும் வேடம்புனைந்து, ஆலந்து, பிரான்சு, துருக்கி, எகிப்து வழியாகப் பம்பாயை அடைந்தார். பின் கொழும்பு, கடலூர் வழியாகப் புதுவை சேர்ந்தார். இப்பயணத்தில் ஒற்றர் களிடமிருந்து தப்ப இவர் காட்டிய மதிநுட்பம் வியக்கத்தக்கது.

புதுவையை அடைந்த ஐயருக்குப் பாரதியார் தாம் வசித்த தெருவிலேயே ஒரு வீடு ஏற்பாடு செய்து தந்தார். ஐயரின் மனைவியாரும் புதுவை வந்து சேர்ந்தார். ஆசுதுரையை 1911-இல் சுட்டுக் கொன்ற வாஞ்சிநாதனுக்கு ஐயரே துப்பாக்கிப் பயிறசி அளித்தார் என்பர். எனினும், சில ஆண்டு களுக்குப் பின்னர் இவரது சிந்தனைப் போக்கு மாறறமடைந்தது. இவர் 1915-ஆம் ஆணடிற்குப் பின்னர் அகிம்சைக் கொள்கையை ஏற்றுக் காந்தியடி களின் தொண்டராக மாறினார்.

வ.வே.சு. ஐயர் 1920-இல் சென்னையை அடைந்து 'தேசபக்தன்' நாளிதழின ஆசிரியரானார். வேறொருவர் எழுதி இவ்விதழில் வெளிவந்த ஒரு தலையங்கம் அரசுக்கு எதிரானதெனக் கருதப்பட்ட மையால் இவர் ஒன்பது மாதம் சிறைததணடனை விதிக்கப்பட்டார்.

சிறுவர்களுக்கு நாட்டுப்பற்றை ஊட்டும் கல்வி யைத் தர விரும்பி இவர் 1922-இல் சேரன்மாதேவி யில் 'தமிழ்க் குருகுலம்' என்னும் பள்ளியையும், அதை நிருவகிக்கப் 'பாரத்துவாச ஆசிரம'த்தையும் நிறுவினார். இலக்கியப் பணிபுரியப் 'பால பாரதி' என்னும் மாத இதழைத் தொடங்கினார்.

குருகுலத்தில் சாதி அடிப்படையில் மாணவர் இருவருக்குத் தனியே உணவு வழங்கப்பட்டமையை யொட்டித் தமிழகத் தலைவர்களிடையே கருத்து வேறுபாடு எழுந்தது. இச்சிக்கலுக்குத் தீர்வு காணக் காந்தியடிகள் எடுத்த முயற்சியும் போதிய பயன் தரவில்லை.

இவர் 3.6.1925 அன்று பாபநாசம் அருவிக்கு மேலே உள்ள ஆற்றில் சிக்கிய மகள சுபத்திராவைக் காக்க ஆற்றில் இறங்கினார். இருவருமே ஆற்றோட் டத்தில அடித்துச் செல்லப்பட்டு இறந்தனர்.

வ.வே.சு. ஐயர் கம்பராமாயணத்தின்மீது அள வற்ற பற்றுக் கொண்டவர். மாறுவேடங்கள் அணிந்து தப்பிச் சென்ற காலங்களிலும் அவரது பெட்டியில் கம்பராமாயணம் இருந்தது. இவர் பெல்லாரிச் சிறை யிலிருந்த காலத்தில் எழுதிய 'கம்பராமாயண ஆயவு' (Kamba Ramayana-A Study) என்னும் ஆங்கில நூலில் இவர் வான்மீகி, ஓமர் ஆகியோருடன் ஒப் பிட்டுக் கம்பரின் விஞ்சிய சிறப்பை விளக்கியுள்ளார். ஒப்பிலக்கிய நோக்கில தமிழிலக்கியம் குறித்து வெளி வந்த முதல்நூல் இதுவே என்பர். இவர் எழுதிய 'மங்கையர்க்கரசியின் காதல முதலிய கதைகள்' என் னும் நூலே வடிவ அமைதி கொண்ட முதல் தமிழ்ச் சிறுகதைத் தொகுபபாதலின், இவரைத் 'தமிழச் சிறு கதையின் தந்தை' என்று போற்றுவர். திருககுறளை ஆங்கிலத்தில் மொழிபெயர்த்து வெளியிட்டமை இவர் ஆற்றிய மற்றொரு சிறப்பான தமிழ்ப்பணி யாகும். இங்கிலாந்திலும் புதுவையிலும் காவல் துறை யினரால் விளைந்த இடுக்கணகளைத் தளராது ஏற்ற நெஞ்சுறுதியின் காரணமாக வ.வே.சு. ஐயர் 'வீர விளககு' எனப் போற்றப்படுகிறார். ந.மெ.

## சுப்பிரமணிய ஐயர், வை., (பட்டணம்).

இவர் கி.பி. 1845-இல் பிறந்தார். இவர்தம் முன் னோர் தஞ்சையை ஆண்ட சரபோசி மன்னர் காலத்தில் அவைக்கள வித்துவான்களாக விளங்கி னர். இவர் தந்தையார் பெயர் வைத்தியநாத ஐயர். பரதக் கலையில் சிறப்புற்று விளங்கியமையால் அவர் பரதம் வைத்தியநாத ஐயர் எனவும் பெயர் பெற் றார். சுப்பிரமணிய ஐயர் சோழநாட்டில் பிறந்து வளர்ந்தவர். ஆயினும். இவர் பல்லாணடுகள் சென்னை நகரில் தங்கியிருநதமையால், மக்கள் இவர் பெயா தாங்கிய பிறரிடமிருந்து வேறுபடுத்திக் காட்ட இவரைப் பட்டணம் சுப்பிரமணிய ஐயர் என்று அன் புடன் குறிப்பிட்டனர். தமிழகத்தில் நகரங்கள் (பட்டணங்கள்) பல இருப்பினும் அக்காலத்தில் பட்ட ணம் என்பது சென்னை நகரையே குறிப்பதாயிற்று.

பட்டணம் சுப்பிரமணிய ஐயர் சிறந்த சங்கீத வித்துவான்; தியாகய்யரின் மாணவர் மரபைச் சார்ந்

தவர். இவர் பல ஆண்டுகள் கடினமான இசைப் பயிற்சி பெற்றார். இவரது குரல் இசைக்குப் பொருந்த வில்லை எனவே, விடாமுயற்சியாலும், இடைவிடாத பயிற்சியாலும் இவர் தமது குரலைப் பண்படுத்திக் கொண்டார். அதன்பின்னர் இசையரங்குகளில் பாடும்போது இவரிடம் சிறந்த கம்பீரமான குரல் ஏறபட்டுவிட்டது. இக்குரல் மாற்றம் இவருக்குப் பெரும் பாராட்டை ஈட்டித் தந்தது. ஒலிபெருக்கி இல்லாமலே மிக்க தூரத்தில் அமர்ந்து பாடினாலும் கேட்டு மகிழ முடியும் இசைத்துறையில் மேலும் உயர்ந்து விளங்க விரும்பிய சுப்பிரமணிய ஐயர் தஞ்சையில் வாழ்ந்த தியாகய்யரின் நெருங்கிய சுற்றத்தாராகிய வேங்கட சுப்பய்யரிடம் கடுமை யான பயிற்சியை மேற்கொண்டார். அதிகாலையில் குளிர்ந்த நீர்க்குளத்தில் அமர்ந்துகொண்டு கழுத தினை நீரில் பதித்துப் பாடிப் பழகினார். அதனால் இவரது குரல் மிகவும் பண்பட்டுவிட்டது.

கடினமான கீர்த்தனைகளையும் இவர் எவ்வித துன்பமுமின்றிச் செம்பாகமாகப் பாடினார். அக் காலத்தில் சிட்டாப் பாடல்கள் எனப்பட்ட சிறுசிறு பாடல்களைத் துணை இராகங்களில் பாடிப் பெரும் பான்மையான சுவைஞர்களை மகிழ்வித்தார். இவரே பாடலகள் இயற்றவும் கற்றுக்கொண்டார். தமிழே யன்றித் தெலுங்கு, வடமொழி முதலியவற்றிலும் கீர்த்தனைகள் இயற்றத் தக்க புலமை கைவரப்பெற் றார். இவர்தம் பாடல்களில் 'வேங்கடேசுவரர்' 'வரதவேங்கடேசர்' என்ற முத்திரைகள் பதிந்திருக கும். இவருக்குப் பெரும்புகழையும் தனித்தன்மையை யும் கொடுததது 'கதன குதூகலம்' என்னும் இராக மாகும். இந்த இராகததை இவர் பாடும்போது அதற்குத் தனி மெருகு ஏற்படும். இச்சங்கீதமேதை 1902-இல காலமானார். நா.பா.

**சுப்பிரமணியக் கவிராயர்** கி.பி. 19-ஆம் நூற்றாண்டில் வாழ்ந்த தமிழ்ப் புலவர். இவர் தந்தை பெயர் சேற்றூர் இராமசாமிக் கவிராயர். இவர்தம் அண்ணன் அருணாசலக் கவிராயரும் தம்பி கந்தசாமிக் கவிராயருமாவர். திருவாவடுதுறை ஆதீ னத்தில் அம்பலவாண தேசிகர் தலைவராக விளங்கிய பொழுது இவர் ஆதீனப் புலவராக இருந்தார். சிறந்த நினைவாற்றல் மிக்க இவர் சைவமும் தமிழும் வளர அரும்பாடுபட்டார். இவர் செப்பறைப்பிள்ளைத் தமிழ் என்னும் நூலை இயற்றியுள்ளாா; ஞானாமிர் தம் எனனும் நூலை அசசில் பதிப்பித்து வெளியிட் டார். சைவப் பற்றுடைய இவர் மதுரைத் தமிழ்ச சங்கத்தில் சைவ நூல்களை ஆய்வு செய்துள்ளார். வீ.சே.

**சுப்பிரமணிய சாத்திரி, பி.எசு., (கி.பி. 1890-1978):** பின்னங்குடி சுவாமிநாத சுப்பிரமணிய சாத்திரியார் முற்றிய வடமொழிப் புலமையும், தமிழ்ப் புலமையும் ஒரு சேரப் பெற்ற பேரறிஞர் ஆவார். இவர் கி.பி. 1890-ஆம் ஆணடு பிறந்தார். கணிதத்தில் பி.ஏ. பட்டமும், (அக்காலத்தில் கணி தப்படிப்பு பி.ஏ. பட்டத்திற்குரியதாகக் கருதப்பட் டது) வடமொழியில் எம்.ஏ. பட்டமும், தமிழில் டாக்டர் பட்டமும் பெற்ற இவர் பிறந்த ஊர் திருச்சி மாவட்டத்தில் கொல்லிமலைச சாரலில உள்ள பால கிருட்டிணம்பட்டி. ஆனால, இவருடைய தந்தைவழிப் பாட்டனார் வாழ்ந்த பின்னஙகுடியில் இவர் குழந் தைப் பருவத்தைக் கழித்தார்.

திருச்சி தேசிய உயர்நிலைப்பள்ளியிலும், அந்நக ரத்திலுள்ள உள்ள தூயசூசையப்பர் கல்லூரியிலும் இவர் கல்வி பயின்று பட்டம் பெற்றார். சென்னைப் பல்கலைக் கழகத்தில் இவர் அறிஞர் (Ph. D)பட்டம் பெற்றார். தமிழிலக்கணக் கோட்பாடுகட்கும் வட மொழி இலக்கியத்தில் காணும் இலக்கணக் கூறுகட் கும் இடையே உளள தொடர்பு பற்றி ஆய்வு செய்து இவர் அறிஞர் பட்டத்தினைப் பெற்றாா.

இவர் எழுதிய நூல்கள் 33. அவற்றுள் 25 நூல் களே அச்சேறியவை. எட்டு நூல்கள் கையெழுத்து வடிவிலேயே இன்னும் உள்ளன. அந்த இருபத்தைந்து நூல்களுள சில வருமாறு: 1. தொனி விளக்கு,2.வால் மீகி ராமாயணத் திறனாய்வு, 3. தமிழுக்கும் சமசு கிருதத்துக்கும் இடையே உறவு -ஓர் ஆய்வு, 4. சங்க நூல்களும் வைதிக மார்க்கமும், 5. தமிழ்மொழி நூல், 6. வடமொழி வரலாறு, 7. வடமொழி நூல் வரலாறு, 8. தமிழ் மொழி இலக்கண ஒப்பாய்வு, 9. குமார சம்பவம் - ஓர் ஆய்வு, 10. திருககுறள - உரை விளக்கம். இவரது தொல்காப்பிய ஆங்கில மொழி பெயர்ப்பு குறிப்பிடத்தக்கதொரு முயற்சி யாகும்.

இவர் அண்ணாமலைப் பல்கலைக் கழக ஆளவை (Senate), கல்விக்குழு (Academic Council) மற்றும் பாடத்திட்டக்குழு உறுப்பினராகவும், சென்னைப் பல்கலைக் கழகப் பாடத் திட்டக்குழு உறுப்பினராக வும் பணியாற்றியுள்ளாா.

திருவையாறு அரசர் கல்லூரி முதல்வராகவும், அண்ணாமலைப் பல்கலைக் கழக வடமொழிப் பேரா சிரியராகவும் இவர் பணியாற்றியுள்ளார்.

மகாமகோபாத்தியாய குப்புசாமி சாத்திரியார், திருச்சி பிசப் ஈபர் கல்லூரி முதல்வர் மறைத்திரு ஏ.எப். கார்டினர் முதலியோர் இவரைப் பெரிதும்

போற்றினர். குப்புசாமி சாத்திரியாரே இவர் அரசர் கல்லூரி (திருவையாறு) முதல்வராவதற்குப் பெரிதும் துணை நின்றவர்.

அலகாபாது பாரதி பரிட்சத்து, சுப்பிரமணிய சாத்திரியாருக்கு மகாமகோபாத்தியாய என்ற பட்டத்தினையும், காஞ்சி சங்கராச் சாரியார் 'வாணி - திரிவேணி - பிரயாகா' என்ற பட்டத்தினையும் அளித்துப் பாராட்டியமை குறிப்பிடத்தக்கதாகும்.

சுப்பிரமணியசாத்திரியார் இரண்டாம் வகுப்புமதிப்பியல் நீதிபதியாகப் (Hony. Magistrate) பணியாற்றியது மட்டுமன்றித் தஞ்சை மாவட்டத்தில் 1935க்கும் 1943க்குமிடையே இருந்த அத்தகைய நீதிபதிகளுக்குள் சிறந்தவர் என முடிசூட்டுவிழாப் பதக்கத்தையும் (Coronation Medal) வென்றவர் என்பது ஓர் அரிய செய்தியாகும். இவர் 1978-ஆம் ஆண்டு காலமானார். இவர் தம் இறுதிக் காலத்தைத திருவையாற்றிலேயே கழித்தார். இவருக்கு ஆண்மக்கள் நால்வரும் பெண்மக்கள் இருவரும் உள்ளனர். சி.ச.

**சுப்பிரமணிய சிவா** புகழமிக்க விடுதலைப் போராட்ட வீரர். இவர் வத்தலக்குண்டில் இராசமையருக்கும் நாகம்மாளுக்கும் மகனாக கி.பி. 1884-இல் பிறந்தார். இவர் மதுரையிலும் கோவையிலும் கல்வி கற்றார்; பதினைந்தாம் வயதில் (கி.பி. 1899) மீனாட்சி எனபவரை மணந்தார். இவர்தம் இளமையில் திருவனந்தபுரத்தில் வாழ்ந்தார்; அப்போது சிலம்பம் மற்போா ஆகியவற்றில் பயிற்சி பெற்றார்.


சுப்பிரமணிய சிவா

வங்கப் பிரிவினையை அடுத்து நாட்டில நிலவிய சூழலும, ஆரிய சமாசத்தவரான தாகூர்கான் சந்திர வர்மாவின் சொற்பொழிவுகளும் சிவாவின் உள்ளத்தில் நாட்டுப்பறறுக் கனன்றெழச் செய்தன. ஆங்கில ஆட்சியை எதிர்த்துச் செயற்பட்ட இவரைச் சுதேச ஆட்சியாளர் திருவாங்கூர் எல்லையை விட்டு வெளியேற்றினர்.

நெல்லை மாவட்டத்தை அடைந்த சிவா தூத்துக்குடியில் வ.உ. சிதம்பரனாரைச் சந்தித்து அவருக்கு நணபரானார். இருவரும் ஆங்கில ஆட்சியை எதிர்த்துப் பல கூட்டங்களில் பேசினர். விபின் சந்திர பாலரின் விடுதலையைக் கொண்டாட இவர்கள் திட்டமிட்டனர். இவர்களது மேடைப்பேச்சுக்கு அரசு தடைவிதித்தது. இருவரும் தடையை மீறினர்.

இருவர் மீதும் இராசத்துரோகக் குற்றம் சாட்டப்பட்டது. சிவாவுக்குப் பத்தாணடு நாடுகடத்தல் தண்டனை தரப்பட்டது. பின்னர் இத்தண்டனை ஆறாண்டுக் கடுங்காவலாகக் குறைக்கப்பட்டது. சிறையில் கம்பளியைப் பதப்படுத்துதல், கேழ்வரகு அரைத்தல் ஆகிய கடும் வேலைகள் தரப்பட்டன. சிறை வாழ்வின் விளைவாகத் தொழுநோய் இவரைப் பற்றியது. இவர் 1912-இல விடுதலையானார்.

சிவா 1913-இல் தம் மனைவியைப் பொறுப்பாசிரியராகக் கொண்டு 'ஞானபாநு' என்னும் மாத இதழைத் தொடங்கி நடத்தினார். இதில் சிவாவுடன் பாரதியார், சிதம்பரனார், வ.வே.சு. ஐயர் ஆகியோரும் எழுதினர். இவர்தம் மனைவி 1915-இல் இறநதார். சிறிதுகாலத்தில் 'ஞானபாநு' நின்றுபோயிற்று. அதன் பின் சிவா 'பிரபஞ்ச மித்திரன்' வார இதழில் சிறிதுகாலம் பணியாற்றினார்.

திலகரின் தீவிரவாத அரசியலை ஏற்று நடந்த சிவா, காந்தியடிகளே திலகரை அடுதது வழிகாட்டத தக்கவர் எனக் கருதினார். எனவே, அவரது மது விலக்கு, கதர் இயக்கம் ஆகியவற்றில் ஈடுபாடு காட்டினார். எனினும், அகிம்சையே விடுதலைக்கு வழி எனபதை இவர் உடன்படவிலலை.

சிவாவின் கடுமையான பேச்சுகளுக்காக ஆங்கில அரசு பலமுறை இவர்மீது வழக்குத் தொடுத்தது. தொழுநோயைக் காரணம் காட்டி இவர் புகைவண்டியில் பயணம் செய்யத் தடைவிதிக்கப்பட்டார். மாட்டு வண்டியிலும், நடந்தும் சென்று சிவா சொற பொழிவுகள ஆற்றினார்.

தருமபுரியை அடுத்த பாப்பாரப்பட்டியில் சிவா பாரத ஆச்சிரமம் நிறுவியதோடு, பாரத மாதாவுக்குக் கோயில் கட்டச் சித்தரஞ்சன தாசரைக் கொண்டு அடிக்கல் நாட்டினார். இக்கோயிலில் அனைத்துச் சாதியினரும் கருவறைக்குள் சென்று வழிபடலாமென்றும், அருச்சகர் யாரும் இரார் என்றும், கோயில் நிதியால் தொழிற்சாலைகள் தொடங்கப்படும் என்றும் அறிவித்தார். இக்கோயில் கட்டி முடிககப்படவில்லை.

சிவா இளமை முதலே துறவு நெறியில் நாட்டம் கொண்டவர். திண்டுக்கல் சுப்பையா ஓதானந்தா, திருவனந்தபுரம் சதானந்தர் ஆகிய துறவியரின் தொடர்பு இந்நாட்டத்தை வளர்த்தது. மணமானவ ராயினும், முதல் வழக்கின் வாக்குமூலத்தில் தம்மை ஒரு சந்நியாசி என்றே குறிப்பிட்டுக் கொணடார். சிறை வாழ்விலும், அலைந்து திரிந்த அரசியல் வாழ் விலும் தம்மைப் பின் தொடர்ந்த மனைவியாரின் உண்மையனபுக்கு இளகி மிகக் குறுகிய காலம் இல்லற வாழ்வில் ஈடுபட்டார். மனைவியார் இறநத பின் காவியுடை தரித்துச் சுதந்திரானந்தர் என்னும் பெயர் பூண்டார். அதேவேளையில் நாட்டுப்பற்றே இவரது சமயமாக விளங்கிற்று. இவர் 1921-இல அளித்த வாக்குமூலம் ஒன்றில தமது மதம் பாரதீயம் என்றும், அம்மதத்தின் முதன்மைத் தெய்வம் பாரத மாதா என்றும் குறிப்பிட்டமை இவ்வுணமையை விளக்கும். ஆவணம் ஒன்றில் தம்மைப் பாரத சாதி யினர் எனறும் குறிப்பிட்டுள்ளார்.

தொடக்க காலத் தொழிற்சங்கத் தலைவருள் சிவாவும் ஒருவா. தூத்துக்குடி கோரல் ஆலை, மதுரை ஆர்வி ஆலை, சென்னை 'மின்னூர்தி'(Tram) ஆகியவற்றின் தொழிலாளர் போராட்டங்களில இவர் கலந்து கொண்டு வழிநடத்தினார்.

சிவா பல சிறந்த நூல்களை எழுதியுள்ளார். 'சச்சிதானந்த சிவம்' என்னும் தத்துவ நூலும், இராம கிருட்டிணர், விவேகானநதர், சங்கரர், இராமானுசர் ஆகியோரது வரலாற்று நூல்களும், 'நளின சுநதரி' எனனும் புதினமும் குறிப்பிடத்தக்கன. இவரது மொழிநடையில் வடமொழிக் கலப்பிருநதபோதிலும், வடமொழியும் ஆங்கிலமும் கலவாத தனித்தமிழில் எழுதப்படும் கட்டுரைக்குப் பரிசளிப்பதாக ஒரு திட்டத்தை இவர் 'ஞானபானு'வில வெளியிட்டார். இவ்வகையில் இவரைத் தனித் தமிழியக்க முன் னோடி எனலாம்.

பல்லாண்டுகளாகத் தொழுநோயால் துனபுறற சிவா, தனது நோய் முற்றிய நிலையில் 1925-இல் உயிர் நீத்தார். ந மெ.

**சுப்பிரமணிய தீட்சிதர்**, கி.பி. 17-ஆம் நூற்றாண்டில் வாழ்ந்த தமிழ்ப் புலவர். இவர் பாண்டி நாட்டிலுள்ள ஆழ்வார் திருநகரி என்னும் திருக்குருகூரைச் சேர்ந்தவர். இளமையிலிருநதே தமிழையும் வடமொழியையும் நன்கு கற்றுத் தேர்ந் தார். தென்மொழிககும் வடமொழிக்கும் உளள இலக்கணங்கள் ஒருவாறு ஒற்றுமையுடையன என்று எடுத்துக்காட்டித தமிழ்மொழியில வடமொழியின் இலககணத்தைப் புகுத்தினார். இவர் பிரயோக விவேகம் எனனும் நூலினை இயற்றியுளளார். அந நூல் கலிததுறையில 51 பாக்களாலாகி, காரகப் பட லம் சமரசப் படலம், தத்திதப் படலம, திஙஙுப்படலம் ஆகிய நானகு படலங்களைக் கொணடுளளது. அந நூலுள் தமிழுக்கே உரிய இலக்கணம் இன்னதென்றும, வடமொழியிலிருந்து தமிழில் வழங்கும இலக்கணம் இன்னதென்றும, இரணடிறகும் பொதுவாக உளளன இவையென்றும் உரிய சான்றுகளுடன எடுத்துககாட் டப்பட்டுள்ளன. இவர் அந்நூலுக்கு உரையும் எழுதி யுள்ளார். அநநூல மூலமும் உரையும் தெனமொழி, வடமொழி ஆகிய இருமொழி இலக்கணங்களையும நன்கு கற்றவர்ககேயன்றி ஏனையோர்க்கும் பயன் படும் வகையில் அமைந்துள்ளது. வீ.சே.

**சுப்பிரமணிய தேசிகர்**: இவா தென்பாணடி நாட்டின்கண, திருக்குற்றாலத்தை அடுத்துளள 'மேல கரம்' என்னும் ஊரில கி பி. 19-ஆம் நூறறாணடில திரிகூடராசப்பக் கவிராயா மரபில தோனறினாா. இவர்து பிள்ளைத் திருநாமம 'குற்றால லிங்கா' என்பது. இவர், தென்மொழி வடமொழி ஆகிய இரு மொழிகளிலும் புலமை வாய்ந்ததோடனறிப் பல கலைகளிலும் தேர்ச்சி பெற்றும் விளங்கினாா. நுண மாண் நுழைபுலம் மிக்கவர். 'துறைசை' எனப்படும் திருவாவடுதுறை ஆதீனத்தின் பதினைந்தாம குருமகா சந்நிதானமாக விளங்கிய திருப்பெருநதிரு அம்பல வாணதேசிகரிடம் சிவ தீட்சை பெற்றுத் துறவியாகி, அவருக்குப் பின்னர், பதினாறாம் குருமகா சந்நிதான மாக விளஙகினாா. இவர், 'மேலகரம சுப்பிரமணிய தேசிகர்' எனறு வழஙகப்பட்டாா. இவர், கி.பி.1868 முதல் 1888 வரை ஆதீனத்தலைவராக இருந்தார்.

இவர் திரிசிரபுரம், மகாவித்துவான் மீனாட்சி சுந்தரம்பிள்ளையைத் தமது ஆதீனத்தின் மகாவிதது வானாக அமர்த்திப் பல தமிழ் நூலகளை இயறறச செய்து, தமிழுலகுக்குப் பயன்படச் செய்தாா. ஆதீ னத்தில் சிறந்த முனிவராகத் திகழந்த மாதவச் சிவஞான சுவாமிகளைத் தம் வழிபடு கடவுளாகக் கொணடவர். அதனால இவர், சிவஞான சிததியாா சுபக்கத்துககு, மாதவச் சிவஞான சுவாமிகள அரு ளிச் செய்த பொழிபபுரையைத் தழுவி, சிறந்த பத வுரை விளக்கம் ஒன்றை அருளிச் செய்தார். வித்து வான் மீனாட்சி சுந்தரம்பிள்ளை அந்நூலுக்கு ஒரு சிறப்புப் பாயிரம இயறறியுளளார்.

தமிழன்பராகவும், கிறித்தவ சமயத்தினராகவும், மாவட்ட நீதிபதியாகவும் விளங்கிய மாயூரம் வேத நாயகமபிள்ளை சுப்பிரமணிய தேசிகரோடு அளவளா மகிழ்வார். அவர் ஒரு நாள, இவரோடுஅளவளாவி

ஊா திரும்பியபின், அவருக்குக கடிதம் எழுதும்போது, ‘சூர்வந்து வணங்கும் மேன்மைச் சுப்பிரமணியதேவே! நேர்வந்து நும்மைக் கணடு நேற்று ராத்திரியே மீணடு ஊர் வந்து சேர்ந்தேன். என் உள்ளம் வரவில்லை. அதனை இங்கு அனுப்புவாயே!’ என்று நயம்படப் புகழ்ந்து பாடிப்பாராட்டியுள்ளாா.

இவா புலவர்களை ஆதரித்தும், சைவமும் தமிழும் தழைத்தினிதோங்கச் செயறபட்டும். அறங் கள தழைக்கச் செய்தும் மக்கள நல்வாழ்வு வாழத் தொணடு செய்துள்ளார். இவர் தம் கரத்தால் கோடி தடவை எழுதிய பஞ்சாக்கர ஏடு (Note Book) இன் றும் ஆதீன நூலகத்தில் உள்ளது.

மகாவித்துவான் மீனாட்சி சுந்தரம் பிளளை, இவர்மீது, ‘சுப்பிரமணிய தேசிகர் மாலை’ என்ற நூறு பாடல்கள் கொணட கவிதை நூலைப் பாடிக் குறிப்புரையும் எழுதியுள்ளாா.

**சுப்பிரமணிய தேசிகர்**[2] துறைசை ஆதீனத்து 14-ஆம் குரு மகா சந்நிதானமாக விளங்கியவர். இவர், திரு வெணணெய் நல்லூரிலகோயில் கொணடெழுந்தருளி யிருநத மெய்யன் தம்பிரான் என உலகம புகழும் மெய்ஞ்ஞானச சோதியாகிய மெய்கணட தேசிகர் மேல் பத்துக் கட்டளைக் கலித்துறைகளைக் கொணட ‘மெய்கணட தேசிகர் மாலை’ என்னும் பாமாலை யைப் பாடியுள்ளார். வீ.சொ.

***சுப்பிரமணிய பாரதியார்***, சி: இவர் கி.பி. 1882-ஆம் ஆண்டு திசம்பர் 11-ஆம்நாள் சின்னச்சாமி அய்யயருககும் இலட்சுமி அம்மாளுக்கும் மகனாக இந்நாளைய சிதம்பரனார் மாவட்டத்தில் உளள எட்டயபுரத்தில் பிறந்தார். சுப்பிரமணியன் என்பது இவரது இயற்பெயர். ஆனால், இவர் ‘சுப்பையா’ என்றே அழைக்கப்பட்டார். திருநெல்வேலி இந்து கலாசாலையில் படித்தபோது பளளிப் படிப்பில் பறறு இல்லாமல் கவிதை இயற்றுவதிலேயே பெரு விருப்புக் கொண்டார். இவர் ஏழாம் வயதிலேயே கவிதை இயறறும் வல்லமை பெற்றார். பாரதி யார் தமது பதினோராம் வயதில் புலவர் கூடிய சபையில், கொடுத்த ஈற்றடிகளைக் கொணடு கவிதை களை இயற்றிச் சபையினரை வியப்பிலாழ்த்தினார். இவரது எழுத்து, சொல், கவிதை இயற்றும் வன்மை ஆகியவற்றைக் கணடு இவருக்குப் ‘பாரதி’ எனறு பட்டஞ் சூட்டி மகிழ்ந்தனர்.

பாரதியார், கி.பி.1897-இல் செல்லபப ஐயரின மகள செல்லம்மாளைத் திருமணம் செய்தார். பெரி தும் வறுமையுற்று வாழ்ந்த பாரதியார் தம் அத்தை குப்பம்மாளின் அழைப்பின் பேரில் காசிக்குச் சென்



சி. சுப்பிரமணிய பாரதியார்

றார். காசியில் வடமொழியோடு இந்தியையும் கற்றுப் பெரும் புலமை பெற்றார். அலகாபாதுப் பல்கலைக் கழகத்தைச் சேர்ந்த இநது கல்லூரியிலும் இவரது கல்வி தொடர்ந்தது. பின்பு எட்டையபுரத்து மன்னர் அழைப்பை ஏற்றுத் தமிழகம் திரும்பினார். எட்டைய புரத்தில் வாழந்த காலத்தில் மன்னரவர்கள் பெரிதும் தமிழ்ப் புலமை பெற உதவினார். மன்னருடன் கருத்து வேறுபாடு ஏற்படவே பாரதி எட்டையபுரத் திலிருந்து மதுரைக்குத் திரும்பினார். தம் நண்பர் கோபால கிருட்டிண ஐயர் உதவியால் 1904-ஆம் ஆண்டு ஆகசுட்டுத் திங்கள மதுரைச் சேதுபதி உயர் நிலைப் பள்ளியில் ஆசிரியப் பணியில் அமர்ந்தார்.

ஆசிரியப் பணியை அடுத்து இவரது மனம் பத் திரிகைகளபக்கம் திரும்பியது. சென்னைச் சுதேசமித்தி ரன் நாளிதழில் 1904-ஆம் ஆணடின் இறுதியில் துணை ஆசிரியராகச் சேர்ந்தாா. ஆங்கில நாளேடு களில் வெளியாகும் செய்திகளைத் தமிழில் மொழி பெயர்த்தார். சுதேசமித்திரனில் ‘வாழ்க வங்காளம்’ என்ற இவரது பாடல் 1905-ஆம் ஆணடு செப்டம் பர் திங்கள வெளியானது. இவர் தம் எழுத்துகளில் சாதி வேறுபாட்டைக் கடந்த புரட்சிக் கருத்துகள் வெளிப்படுத்தப்பட்டன. இவர் 1905-ஆம் ஆண்டு காசியில் நடந்த காங்கிரசு மாநாட்டிலும், 1906-ஆம் ஆணடு கல்கத்தாக் காங்கிரசு மாநாட்டிலும் கலந்து கொணடார். கல்கத்தாவில்விவேகானந்தரின் மாணவி யான நிவேதிதா தேவியைச் சந்தித்தது இவரது வாழ்க்கையில் ஒரு திருப்புமுனையாக அமைந்தது

எனலாம். அவர்தம் அருள் மொழிகள் இந்திய சமூக மறுமலர்ச்சிக்குரிய வழியைப் பாரதிக்குப் புலப்படுத்தின. அடிமைச் சங்கிலிகளில் பிணைக்கப்பட்டு அலலற்படும் அன்னையின் உருவாக இநதியாவை மனத்தில் எண்ணும்படி நிவேதிதா பாரதிக்கு அருளாசி மொழிந்தார். அதன் பலனாக அரசியலில தீவிர இயககத்தில் இறங்குவதற்குப் பாரதிக்கு ஊககம் பிறந்தது. அடிமைத தளையை அறுததெறியப் பாடுபடும் இயக்கத்தினருடன சேர்ந்து கொளள வேணடும் என்று உறுதி பூணடாா. தனது 'சுதேசகீதங்கள', 'சன்மபூமி' எனற இரு நூலகளை நிவேதிதா தேவிககுப் படையல் செய்தார். 'இந்தியா' என்றவார ஏட்டிலும, 'பாலபாரதா' எனற ஆங்கில வார ஏட்டிலும் இவரது பத்திரிகைப் பணி 1906-இல் மீணடும் தொடர்நதது. சுதந்திரப் போராட்டததில தீவிர வாத இயககததை ஆதரிதது எழுதியும் பேசியும் பாடியும் தமது ஆழநத தேசிய உணாவினை வெளிக காட்டினார். இவா 1907-ஆம ஆணடில் கிருட்டிண சாமி ஐயரின உதவியால் தேசபக்திப் பாடலகளின தொகுதி ஒனறையும், 1909-ஆம் ஆணடில 'சன்மபூமி' என்ற தலைப்பில மறறொரு தொகுப்பையும வெளியிட்டாா.

இவர் 1907-ஆம ஆணடு நடைபெறற சூரததுக காஙகிரசில திலகரது தீவிரவாதக கட்சியை ஆதரித்த இளைஞர் கூட்டததில் வ.உ சிதம்பரனாருடன சேர்நதார். சென்னைககுத திரும்பியபின பாரதியாரும் சிதம்பரனாரும் திலகரின கொளகைகளைத தீவிரமாகப் பரப்பினா. ஆங்கில அரசு சிதம்பரனாரைப பாளைச சிறையில அடைததபினனும், திலகருககு இரட்டை ஆயுள தணடனை கிடைதத பினனும தமமுடைய தேசப்பணியைப பாரதியாா தொடாநது செய்து வநதாா. கேலிச் சிததிரஙகள, தேசவுணாவுப் பாடலகள, தலையஙகங்கள, வீரமூட்டும கட்டுரைகள போனறவறறின மூலமாக 'இநதியா' இதழில பாரதியார் தமது அரசியல் பணியைத தடையினறிச செயது வநதாா.

தேசிய எழுச்சியூட்டும பத்திரிகைகளைத் தடைசெய்யும் சட்டததை ஆங்கில அரசு 1908-ஆம ஆண்டின் முற்பகுதியில் கொணடு வந்தது, பததிரிகைகளின் உரிமையாளர்களையும் தணடனைககு உளளாக்கியது. இசசூழ்நிலையில பாரதியாா தமது பததிரிகைப் பணியைத் தொடரப் புதுவை சென்றாா.

பாரதியாரின் புதுவை வாழ்வுதான (1908-1918) மிகச் சிறநத படைப்புகளுக்குக் காரணமாகியது. பாரதியைத் தொடர்ந்து மிகச்சிறந்த தேசபகதாகளான மண்டயம் சீனிவாசாச்சாரியாரும், சுப்பிரமணிய சிவாவும், சிறிதுகாலம் சென்று அரவிந்தரும், வ வே. சுப்பிரமணிய ஐயரும் புதுவைக்குச் சென்றனர் 'இந்தியா' வாரப்பத்திரிகை புதுவையில் இருந்து மீண்டும் வெளிவரத் தொடஙகியது 'விசயா', 'கர்மயோகி', 'பாலபாரதா', 'சித்திராவளி' என்ற பலவேறு இதழ்களும் புதுவையிலிருந்து வெளிவந்தன. ஆங்கில அரசு அவற்றைத் தடைசெய்ததன் விளைவாக 1910-ஆம் ஆணடின இறுதிக்குள இதழகள் எலலாம் வெளிவராமல் நிறுத்தப்பட்டு விட்டன.

பாரதியார் புதுவை செலவதற்கு முனபே 'ஞானரதம் என்ற வசன கவிதையை எழுதினார். பினபு 'பாரதி அறுபததாறு' எனற நூலும் வெளியிடபபட்டது இச்சமயத்தில அரவிநதரும் புதுவைககு வநதாா. இவரது தொடாபால பாரதிககுப் புத்தொளியும புத்துணர்ச்சியும் ஏற்பட்டன. அரசு உளவுத் துறையினர் பாரதியை எவ்வாறாயினும் கைது செய்துவிட வேணடும எனத் துடித்தனர். தொல்லைகளும் வறுமையும் சேர்ந்தபோதும் பாரதி தளாவடையாமல கவிதைகள் எழுதி வநதார் இச்சூழலில்தான பாரதியின 'பாஞ்சாலி சபதம்', 'குயிலபாட்டு', 'கணணன பாட்டு' போன்ற பல படைப்புகள வெளியாயின.

பாரதி புதுவையில் வாழ்நதபோது கடையத்தில பாரதிக்கு இரணடாம் புதல்வி பிறந்தாள். அச்சமயம பாரதியார் காளிதாசரின சாகுநதலததில் மனமீடுபட்டிருநததால் அக்குழநதைக்குச் சகுநதலை என்று பெயரிட்டார். இப்புதலவி பிறநத ஆறு மாதததிலேயே பாரதியின் மனைவியும புதுவை வநது சேர்ந்தார். சகுந்தலைககாகப் பாடப்பட்டதுதான 'பாப்பாப்பாட்டு' எனபர்

பாரதியார் 1920-இல் மீணடும் சென்னைககுச சென்று 'சுதேசமித்திரனில்' உதவி ஆசிரியராகச் சோநதார் சென்னைத் திருவல்லிகேணிப் பகுதியில வாழ்ந்து வந்த பாரதியாா அப்பகுதியிலுளள பாாததசாரதி கோவில யானையிடத்தில அனபு கொணடவராய் விளங்கினார். பாரதியார் அவ்யானைககு, செல்கின்ற போதெல்லாம உணவளிபபதை வழக்கமாகக் கொணடிருந்தார். வழக்கம்போல் ஒருநாள யானைககு உணவு அளிககச் சென்றபோது அது இவரைத் தூக்கி வீசிவிட்டது. அதனால் சறறு தூரத்தில் காயமுற்று உணர்விழநது கிடந்த பாரதியை இவர் நண்பர் குவளைககணணன் தூககி மயககம தெளிவித்துக் காப்பாற்றினார். காயம் குணமான பின்பும் வயிறறுப்போக்குத் தொடர்நது ஏற்பட்டு 1921-ஆம் ஆணடு செப்டம்பா 10-ஆம் நாள் இயற்கை எய்தினார். பாரதியாரின் இறுதிச் சடங்கு செய்வதற்குக் கூட அவரது வீட்டிலபொருளிலலை, நண்பாகள உதவியால் அது நிறைவேற்றப்பட்டது

பாரதியாரின் படைப்புகள தேசியப் பாடல்கள், ஞானப்பாடலகள், தோத்திரப் பாடலகள், நீதிப் பாடலகள, சமூகப் பாடலகள், வசனகவிதை, கண்ணன் பாட்டு, குயிலபாட்டு, பாஞ்சாலி சபதம், கதைகள், கட்டுரைகள எனப் பலவகைப்படும். அவற்றில தேசபக்தியும் கடவுள பக்தியும் சமூகச் சீர்திருத்தக கருத்துகளும் நகைச்சுவையும் நிறைந்திருப்பதைக் காணலாம். ச. செ.

**சுப்பிரமணிய பாரதியார், மழவை,** கி.பி. 19-ஆம நூற்றாண்டில வாழ்நத தமிழப புலவா. அந்தணர் வகுப்பைச் சோந்த இவா மதுரைககருகி லுளள மழவாபுரி என்னும ஊரைச சேர்ந்தவா. இவர்தம் தநதையாா பெயர் சொககைய தீட்சிதா எனபதாகும். தமிழிலும வடமொழியிலும புலமை பெறறிருநத இவர், இசையிலும் வலலவராக விளங கினாா. இவா புதுககோட்டைக்கருகிலுளள இராச மாணிகக நலலூரில பல காலம் வாழநதாா. பாடல இயற்றும திறம் பெறறிருநத இவா இராமநாதபுரம, சிவகஙகை அரசர்களிடம சென்று தம திறமையை வெளிப்படுததினாா. இவா திறமையைப் பாராட்டி அமமனனாகள பல்லககு முதலிய பல பரிசுகள அளித்துச் சிறப்பிததாாகள. இவா திருவிளையாடற புராணக கீர்த்தனை எனனும இசை நூலினை இயறறினாா. அநநூல பரஞ்சோதி முனிவா இயறறிய திருவிளையாடற புராணத்தை அடிப படையாகக் கொணடு இயறறபபட்டதாகும். கவி நயமுடைய அநநூல பழமொழிச செறிவுடையதாயக குறட்பாககள பலவறறை மேறகோளாகக கொணடு விளஙகுகிறது. அது கி.பி. 1852-இல மதுரையில அரங கேற்றபபட்டது. பினனர் 1905-இல இவர் புதலவா களால அச்சிடப்பட்டுளளது. மேலுமிவா இலககு மித தலபுராணச செய்யுள, கூடல திருவிளையாடல யமகவந்தாதி, குன்றை முருகன பிளளைததமிழ, திருவிளையாடல சுநதரமாலைச் சநதவிருத்தம, திருமெயயம விட்டுணுககோயில தல புராணக கீர்த்தனை, திருமெய்யம் ஈசுவரன கோயில தல புராணக கீர்த்தனை, முததுக்கருபபாசாரியவர்கள மீது தஙகசசிநது முதலிய நூலகளை இயறறியுளளாா. வீ. சே.

**சுப்பிரமணிய பாரதியார், வரகவி,** 20-ஆம நூற்றாண்டில் தமிழ உரைநடைககுப் பாடு பட்டவாகளுள ஒருவா. இவர் கி. பி. 1880-இல திருச்சி மாவட்டததிலுளள அலைகரை எனனும கிராமததில் அய்யாததுரை அயயருககு மகனாகப் பிறநதாா. திருசசி, முசிறி முதலிய ஊர்களிலுளள உயர்நிலைப் பள்ளிகளில் படித்த இவர் ஆஙகிலத் தில் புலமை பெற்று விளங்கினார். சுதேசமித்திரன நாளிதழின் உதவி ஆசிரியராகப் பணியாற்றியுளளார். அக்காலத்தில அமரகவி பாரதியாரின் நட்பு இவருக் குக் கிடைத்தது. இவர்தம் 16-ஆம் வயதில் தேவ குஞ்சரி என்னும் பெண்ணைத் திருமணம் செய்து கொணடாா் தம் மாமனார் சிவானந்த சாகர யோகீசுவரர் தமிழ் நூல்களைக் கற்றவராதலால அவரிடமே இவர் தமிழ் கற்றுப் புலமையாளரானார். அவர் 'வரகவி' எனனும் பட்டத்தினை இவருக்கு அளித்துச் சிறப்பித்தார்.

இவர் சடாவல்லவர், விசய பாசுகரன், சுந்தர வல்லி முதலிய நூலகளை எழுதியுள்ளார். தமிழ நூல்கள் மதிக்கப்படாமலும் விற்கப்படாமலும் இருந்த அந்தக் காலத்திலேயே இவருடைய நூல்கள மிகவும் பாராட்டுப் பெற்றன. இவர் உயர்ந்த ஒழுக் கத்தையும் சமயத்தையும் போதிக்க விரும்பி அதற்குக் குழந்தைப் பருவ முதலே தொடங்குவதுதான் நன்று எனக் கருதிக் குழந்தைகளுக்கான பல நூல்களை எழுதினாா். அதன விளைவாக உருவானவையே ஆத்திகமத உபாககியானம, மாருதி விசயம், கோதண்ட விசயம, பாலபக்த விசயம், சிறியவருக்குப் பெரிய புராணம் முதலிய நூல்களாம். அந்நூல் கள் அனைத்தும சிறியவர்களுக்காக எழுதப்பட் டாலும் பெரியவர்களும் படித்துப் பயனபெறத்தக் கவையாய் அமைநதுள்ளன. குழந்தைகளுக்கெனத் தனியாகப் 'பாலவிநோதினி' என்ற திங்களிதழைத் தொடங்கி நடத்தினாா. வடமொழிப் பாகவதத் தைத் தமிழில் மொழிபெயர்தது 1908-இல வெளி யிட்டார் வளளிநாயகி, பரதன, பாதுகா பட்டாபி டேகம் முதலிய நாடகஙகள இயற்றி அவறறை மேடைகளில் நடிக்குமாறு செய்தார். இவர் திருச்செந் தூர் முருகனமீது திருச்செந்திற் பதிகம் என்னும் நூல் ஒன்று இயற்றியுள்ளார். சுயம்பிரகாச விசயம் என னும் நூலையும் எழுதியுள்ளார். இவர் 1955-இல காலமானாா. வீ.சே

**சுப்பிரமணிய பிள்ளை, கா.** (1888-1945) திருநெல்வேலியில் சைவ வேளாளர் குலத்தில் காந்தி மதிநாதப் பிளளைக்கும மீனாட்சி அம்மையாருக்கும் 1888-ஆம் ஆணடு நவம்பர் ஐநதாம் நாள பிறநதார். இளமை தொட்டே ஒவவொரு வகுப்பிலும் முதல்தர மாணவராக விளஙகி, ஆங்கிலததிலும் (1913), தமிழி லும் (1914) எம்.ஏ. தேர்வில் முதலவகுப்பில தேறி னார். 1917-இல் சிறநத நினைவாறறலுடைய இவர், எம் எல. பட்டத தேர்வில மாநிலத்திலேயே முதல வராகத் தேர்சசி பெறறார். கல்கததாப் பலகலைக் கழகத்தில 'குறறங்களின கொளகை முறைகள்' (Principles of Criminology) எனும் தலைப்பிலே தாகூர் நினைவுச் சட்டப் பேருரையை 1920-ஆம் ஆண டில் சிறப்பாக ஆற்றியதன் காரணமாகத 'தாகூர்

சட்டப் பேராசிரியர்' என்ற சிறப்புப் பட்டம் கிடைக்கப் பெற்றார்; மேலும் பதினாயிரம் ரூபாய் பரிசும் பெற்றார் இவர் தம் தந்தையார் திருநெல்வேலிச் சீமையிலே முதன்முதல் பி ஏ. பட்டம் பெற்றவர். பி ஏ. பிள்ளை என்று பெயர் பெற்றவர். அவரினுஞ் சிறந்து, இவர் எம்.எல். பட்டம் பெற்றமையால் அப்பகுதி மககள் 'எம் எல். பிள்ளை' எனச சிறப்பித்து மகிழ்ந்தனர் தமிழ் இலக்கியவுலகம் இவரைக் 'கா. சு. பிள்ளை' என்று சுருக்கப் பெயரால் குறித்தது.



கா. சுப்ரமணிய பிள்ளை

சட்டக் கலலூரியில் இவர் 1919-ஆம் ஆணடுமுதல 1927-ஆம் ஆண்டு வரையில ஆசிரியராகப் பணியாற்றி வந்தார். அக்காலததே சென்னை அரசினா சட்டத் துறைத் தலைவராகத் திகழ்நத சா.சி.பி. இராமசாமி ஐயர் சட்டக் கல்லூரியில் நிலையான பேராசிரியா களை அமர்த்துவதன் காரணமாகப் பிற பேர்றிவாளர்களின நுணபுலமை சட்டக் கல்லூரி மாணவாகளுக்குக் கிட்டாமல போகிறது என்று கருதினாா. அதனால் கா. சு. பிள்ளை 1927-ஆம் ஆண்டில சட்டக் கலலூரிப் பேராசிரியர் பதவியிலிருநது விலகினார்

சட்டக் கல்வியின் அனுபவம் ஒருபுறமிருக்க, இவர் தம் தமிழக்கலவியும் சமயப் பயிறசியும் வாழவியலில சிறநத திருப்பத்தை யுணடாக்கின. செனனை அரசினர் 1922-23-இல அமைத்த கலைச் சொல்லாக்கக்குழுவிலும், பின சென்னை மாகாணத் தமிழ்ச சங்கம் அமைத்த கலைச் சொல்லாக்கக் கழகத்திலும் உறுப்பினராக அமர்ந்து பணிபுரிந்துள்ளாா. தமிழ்ப் புலமையின உநதுதலினால், 1929-ஆம் ஆணடில அணணாமலைப்பல்கலைக் கழகத் தமிழ்த்துறைத் தவலைராகச் சோநது இரண்டாண்டுகள பணியாற்றினாா. திருநெலவேலி நகராட்சி மன்ற உறுப்பினராக 1932 முதல 1937 வரை இருந்து நகர் முன்னேற்றத்திற்குப் பாடுபட்டார். அவவாண்டுகளில் நெல்லையப்பர் திருக்கோயிலில் அறஙகாவலராக அமர்ந்துபல நறபணிகளைப் புரிந்துள்ளார். சைவ சிததாந்த நூற்பதிப்புக் கழகத்தார்திருக்குற்றாலத்தில் நடத்திய சாரற்கால மாநாடு, கொங்கு மணடல சமரச சன்மார்க்க சங்க மாநாடு முதலிய பல மாநாடுகளுககுத் தலைமை தாங்கி அரும்பெறற் கருத்துகளை வழங்கியுளளார். தூத்துக்குடி சைவசித்தாநத சபையின் ஆணடுப் பேரவைகளில் (1921, 1939) தலைமை தாங்கிச் சிறப்பித்துள்ளார்.

பத்தாண்டு இடைவெளிக்குப்பின் 1940-ஆம் ஆண்டில் அணணாமலைப் பல்கலைக் கழகத் தமிழ்த்துறைத் தலைவராக மீண்டும் பொறுப் பேற்றார். மூன்றாணடுகள் பணியாற்றிய பின் உடல நலக் குறைவின் காரணமாகப் பதவியிலிருந்து விலகித் திருநெல்வேலிக்குத் திரும்பினார்.

தமிழையும் சைவத்தையும் இரு கணகளாகப போறறி வாழ்நத கா.சு. பிளளையவர்களுககு ஆசிரியப்பணி மிகவும் உகநததாயிற்று. தமிழிலககிய இலக்கணங்களில் அறிஞராகத் திகழ்ந்த இவருக்குச் சைவசமய இலக்கியஙகளில் பெரிதும் ஈடுபாடு உணடு. வாழ்க்கையில் சைவ சீலங்களைப் பினபற்றிச சிறந்த சிவனடியாராக விளஙகினார்; நாள்தோறுமு மூன்று வேளையும் சிவனை வழிபட்ட பினனரே உணவு கொள்வதும் அன்றாடப் பிற கடமைகளைப புரிவதுமாக வாழக்கையை அமைத்துக் கொணடார் எனவே இவரைப் 'பூசைப்பிள்ளை' என்றே நணபர்கள் குறிப்பிடலாயினர். சமய இலக்கியங்களில கொணட தோய்வு காரணமாக நேரஙகிடைத்த போதெலலாம் சைவசமய நூல்களை எழுதி வந்தாா. சைவ சித்தாந்த சமாசத்தில அமைச்சராகப பணியாற்றிப் பலரின நனமதிப்பைப் பெற்றார்.

தமிழார்வங் காரணமாக இவா நம காலத்துத் தமிழ்ப் பேரறிஞாகளையும் செலவப் பெருமக்களையும உறுப்பினர்களாகக் கொணடு 'செனனை மாகாணத் தமிழ்ச் சங்கம்' எனபதனை நிறுவினார். அசசங்கம் தொடர்நது தொணடாற்றி வருகிறது. திருநெல்வேலியிலும் ஆங்காங்குப் பல சங்கஙகள தோன்றப் பாடுபட்டார். இவாதம் இல்லத்திலேயே 'மணிவாசகர் மன்றம்' என்ற ஓர் அமைப்பைத தொடங்கி, அதன் வாயிலாகத் தம் நூல்களை வெளிவரச செய்ததுடன் மனிமாலை எனும் மாத இதழ ஒன்றையும் நடத்தினார். இவர்தம் தமிழார்வத்திறகும் சமய ஈடுபாட்டிற்கும் திருநெலவேலிச சைவ சித்தாநத நூற்பதிப்புக் கழகம் பெரிதும் துணை நின்றது. திருவாசகம் முழுமைக்கும் இவர் தம் அனுபவப் பதிவுடன் முதலாக உரையெழுதித

தந்தார். எளியவரும் புரிந்து கொள்ளும் வகையில 'தொலகாப்பியப் பொருளதிகாரக் கருத்து' என்ற அரிய நூலை எழுதியுள்ளார். சிறந்த நினை வாற்றல் காரணமாகச் சொற்குற்றமோ பொருட் குற்றமோ இன்றிக் கட்டுரை வன்மையுடன இவர்தம் எழுத்தாற்றலைப் பலலாற்றானும்புலப் படுத்தி வநதார். இவரது நடை ஆற்றொழுக்காகச் செலலும் தெளிவுளள செந்தமிழ் நடையாகும் இவர் நடையில் வழக்கொழிந்த சொற்களும் சொற்றொடர்களும் அருகியே காணப்படும் என பர்.

கா.சு.பிள்ளை எம்.ஏ. படித்தபோது மதுரைத் தமிழ்ச்சங்கத்தார் நடத்திய தமிழ்த் தேர்வில் முதற் பரிசு பெற்றார். சென்னை மாநிலக் கல்லூரியில் தமி ழாராய்ச்சிககட்டுரைக்காகப் 'பவல் மோர்கெட்டு'ப் பரிசு இவருக்குக் கிடைத்தது. சென்னையில் நடை பெற்ற ஏழாம் மாநிலத் தமிழ் மாநாட்டில் (1940) இவருக்குப் 'பல்கலைப் புலவர்' என்ற சிறப்புப் பட்டம் வழங்கிச் சென்னை மாநிலத் தமிழ்ச் சங்கம் பாராட்டியது. இவர்தம் ஐம்பத்தேழாம் வயதில 1945-இல காலமானார். இவரது பெரும் புலமையை யும் சிறப்புகளையும் தமிழுலகம் நினைவு கூரும் வகையில் திருநெலவேலிப் பெருமக்கள் இவரது நினைவுச் சின்னமாகச் சிறப்பான நடுகல் ஒன்றினை நாட்டி விழா எடுத்தனர்.

இலக்கியம், சமயம், வரலாறு, கதை, நாடகம் முதலிய துறைகளில் தமிழ் உரைநடை நூல்களை யும், சமயம், சட்டம் ஆகிய தொடர்பில்சில ஆங்கில நூல்களையும் எழுதியுளளார். இவர் எழுதிய நூல களின எணணிககை 39. அவற்றுள் இலககிய வரலாறு, தாயுமான சுவாமிகள் வரலாறும் நூலா ராய்ச்சியும், பட்டினத்தடிகள் வரலாறும் நூலா ராய்ச்சியும், குமரகுருபரர் அடிகள் வாலாறும் நூலா ராய்ச்சியும், பழந்தமிழர் நாகரிகம், Metaphysics of the Savia Siddhanta, A Short sketch of the Hindu Religions, Lectures on the Indian penal Code ஆகி யவை குறிப்பிடத்தக்கவை. செ.வை.

**சுப்பிரமணிய பிள்ளை, கோ.:** திருநெல் வேலியில் 1906-ஆம் ஆண்டு அக்டோபர் 7-ஆம் நாள் சைவ வேளாளர் குலத்தில் கோமதி நாயகம் பிள்ளைக்கு மைந்தராக இவர் பிறந்தார். சிறுவயதி லேயே தம் பெற்றோர்களின தூணடுதலால் தேவா ரம், திருவாசகம் ஆகிய திருமுறைகளைக் கற்றார். திருக்குறளை நாளதோறும் ஒவ்வொன்றாகப் பரி மேலழகருரையுடன் படித்து, அதனைத் தந்தையாரி டம் மனப்பாடமாக ஒப்புவித்து வந்தமையின் இவருக்கு இளமையிலேயே திருக்குறள் நன்கு பாட மாகி விட்டது. தமிழ்மொழியினை இவர் இளமையில ஆசறக் கறறதே போனறு ஆங்கில மொழியினையும் நன்கு கற்கலானார்.



கோ.சுப்பிரமணிய பிள்ளை,

கல்லூரியில பயிலும்போதே சேக்சுபியர் எழுதிய 'உரோமியோவும் சூலியட்டும்' எனும ஆஙகில நாட கத்தில் உரோமியோ வேடம் புனைந்து திறமையுடன் நடித்துத் தம் நடிப்பாற்றலை வெளிப்படுத்தினார். ஆங்கிலக் கவிஞன மில்டனின் படைப்புகள இவரை மிகக் கவர்ந்தன. அவற்றை மிக விரும்பிப் படித்து நுணுகூறுகள் பலவற்றைக் கூறிவந்தமையால் இவரை 'மில்டன்' என்றே கல்லூரி நணபர்கள அழைத்து மகிழ்ந்தனர். ஆங்கிலத்தில் கொண்ட ஈடுபாடு காரணமாக நாள்தோறும் திருத்தமான ஆங்கிலத்தில் பேசிப் பழகியதுடன் ஆஙகில அகராதியினையே மனப் பாடம் செய்ய முயன்றார். நணபர்களுடன பழகும போது, நாளஒன்றுக்கு ஒரு புதிய ஆங்கிலச் சொலலா வது கற்றுக்கொள்ளவிலலையெனின உணணுவதும உறங்குவதுங்கூட ஏனோ பிடிககவிலலை என்று கூறிக கொண்டே வாழ்ந்தார். நாளும் முயன்று ஆஙகிலப் பேச்சிலும் எழுத்திலும் வல்லுநராகத் திகழ்நத இவர் தம் காலத்திய மேதைகள் பலராலும் பாராட் டப்பெற்றார். எம். ஏ. பட்டமும் பி.எல. பட்டமும பெற்றஇவர்வழக்குரைஞராகப்பதிவு செய்துகொணடு அத்தொழிலில் ஈடுபட்டார். ஆனால, அத்தொழில இவருக்குப் பிடிக்காத காரணத்தால் அதனை விட்டு விட்டார்.தமிழன்னைக்குத் தொணடுபுரியும் ஆவலு காரணமாகத் தம் வாழவைத் தமிழ் வாழவாக மாற்றிக்கொண்டார். சட்டக்கல்வி பயின்றும் தம் வாழ்வைத் தமிழ் வாழ்வாக மாற்றிக் கொணட அறிஞாகள கா. சுப்பிரமணிய பிளளை, இரா. பி. சேதுப்பிளளைபோன்றே இவரும் தமிழ்வாழ்வு வாழத தலைப்பட்டார்.

தமிழில் வித்துவான் பட்டம் பெற்ற நிலையில், சென்னைப் பல்கலைக் கழகததில் பேராசிரியர் எசு வையாபுரிப் பிள்ளையிடம் தமிழ் ஆராய்சசி மாண

வராகச் சேர்ந்து இவர்தம் ஆராய்ச்சித் திறத்தினை வளர்கக முற்பட்டார். ஒருநாள் காரைக்குடி கம்பன் கழகச் செயலாளர் சா. கணேசன அறிஞா வையா புரிப் பிள்ளையவர்களைக் காண வந்திருந்தார். அவர் சுப்பிரமணிய பிளளையின் தமிழார்வத்தைப் புரிநது கொணடு, கம்பன் விழாவிலே கலந்துகொள்ளுமாறு அழைப்பு விடுத்தார். இவரும் அதனை ஏற்றுக்கொண டவராய், அவ்விழாவிலே 'கேள்விச் செல்வன்' என்ற தலைப்பில் யாவரும் பாராட்டும் வகையில் உரை நிகழ்த்திப் பேர் பெற்றார். பிறகு, இரசிகமணி டி.கே. சிதம்பரநாத முதலியாரின் சீரிய தலைமையில் நடந்த 'கதைக்கு வருணனை வேண்டுமா? வேணடமா என்ற பட்டி மன்றத்தில் இவர் துடிதுடிப்புடன் கலநது கொணடாா; கதைக்கு வருணனை வேணடும என்ற கட்சியில் நின்று கொணடு, இவர் தம் எடுத்த எடுப் பிலே 'திருமணத்துக்குப் பெண வேணடுமா? வேண டாமா? என்பதைப் போன்றது இக்கேளவி எனறு தொடங்கி அவையோரின் நெஞசைக் கவர்ந்தாா. தலைமையேற்ற டி.கே சி. இவரைத் தம்மகனாகவே அன்புடன பாவித்துச சொலலாற்றலைப் பெரிதும் மெச்சினார்.

சிறந்த நாநலம் வாய்ந்த இவர், அககாலத்தில் சிறந்த அரசியலவாதியாக விளஙகிய பொதுவுடைமை யறிஞர் ப.சீவானந்தம் என்பவரை இலக்கியத்திலும் சிறந்த பேச்சாளராக மாற்றியமைக்கக் காரணரா னார்; சீவானந்தம் இவரைத் தம் 'இலககியக்குரு'. என்று அடிக்கடி நினைவிறகொணடுமதித்து வந்தாா

**தமிழ்ப்பணிகள்:** அணணாமலைப் பல்கலைக் கழகத்தில் தமிழ் விரிவுரையாளராக நியமனம் பெறறுத் தமிழ்ப்பணி புரிந்து வருகையில், மாணவர் களின் உளளங்கவரும் வகையில் பாடம் நடத்துவதில் இவர் வல்லவர் எனப் புகழப்பட்டார். காசிப் பல்கலைக் கழகத்தில முதன்முதலில் இவர் ஆற்றிய ஆங்கிலச் சொறபொழிவுகள் 'சைவசிததாந்தம'-(Saiva Siddhantam) என்ற நூலாக வடிவெடுததன. சைவ சித்தாந்த சாத்திரப் புலமையிலும் ஆங்கிலப் புலமையிலும் இவர் வல்லவர் என்பதற்கு அந்நூல் தககச் சான்றாகும்.

சைவ சமயாசாரியர்களிடமும் அருளாளர் களிடமும் இவர் நன்கு ஈடுபாடு கொணடவரே. எனினும் நாவுக்கரசரிடம் தனி மதிப்பு வைத்திருந் தார். அடுத்த நிலையில் திருவளளுவரை 'இலக்கிய வழிகாட்டி' என மதித்துப் போற்றிவந்தார். அந்த நோககிலே நாவுககரசரையும் திருவளளுவரையும் தமிழுக்கு 'நாதி' என்றுஅடிக்கடி குறிபபிட்டு மகிழலா னார். கலைநோக்கிலே இளங்கோ உருவாக்கிய சிலப் பதிகாரத்தை ஆர்வமுடன் பயின்று நுயங்களை அவ் வப்போது எழுதியும பேசியும் வரலானார். எனினும, கம்பனிடம் கொண்ட இவரது ஈடுபாடு தனித்தன்மை வாய்நதது. அத்தகைய ஈடுபாட்டிற்கேற்ப அண்ணா மலைப் பல்கலைக் கழகத் தமிழாராய்ச்சித் துறையில் பேராசிரியராகப்பணியாற்றுகையில் கம்பராமாயணப் பதிப்பினை (பாட வேறுபாடுகளுடன் கூடிய திருநதிய பதிப்பு) நேர்த்தியாகக் கொணர நாட்டஞ் செலுத் தினார். தமிழ்ப் பேராசிரியர் (கலை) பொறுப்பினை யும் ஏற்றுத் திறம்படத் தமிழ்ப் பணிபுரிந்தார்.

பல்கலைக் கழகத்தில் பணியாற்றி வருகையில் தமிழநாட்டில பல்வேறு ஊர்களுக்குச் சென்று தர மான இலககியச் சொற்பொழிவுகள் நிகழ்த்தி வந தார். இவருடைய சொற்பொழிவுகள் ஆராய்ச்சித் தெளிவும புதுமை நயமும், நகைச்சுவையும்பொதிந்து, கேட்பாரைப பிணித்து மேலும் மேலும் கேட்கும்ஆர் வத்தைக் கிளர்நதெழச் செய்யும் பாங்கின எனலாம்.

உறையூர், வாகீச பக்த சன சபைச் சமரச சுத்த சன்மார்க்க சங்கத்தார் இவர்தம் அறுபதாண்டு நிறைவு விழாவில் 'திரு நினற தனியாளர்' என்ற சிறப்புப் பட்டந் தந்து பாராட்டினர்.

**இவர் எழுதிய நூல்கள்:** வள்ளுவர் விருந்து, அப்பர் விருந்து, சிலப்பதிகார விருந்து, மாணிகக விருந்து, முத்தமிழ் முழககம், கவியின்பம், எத்தன் ஏகாம்பரம், வெண்ணிலவில், துள்ளி வருகுதுவேல், இலககிய விருந்து, வாலிவதை ஆகியன தமிழ் நூல்கள். ஆங்கிலத்தில் சைவசித்தாந்தம் (Saiva Siddhantam), மரவழிபாடு(Tree Worship), பாம்புவழிபாடு (Ophiolatry) என்னும் நூல்களையும் இயற்றியுள்ளார்.

இவ்வாறு தமிழ் மேம்பாட்டிற்குத் தொண்டாற் றிய பேராசிரியர் கோ. சுப்பிரமணிய பிள்ளை, அண ணாமலைப் பல்கலைக் கழகத்திலிருந்து (1966) ஓய்வு பெற்றுத் திருநெல்வேலிக்குத் திரும்பினார். இவர்தம் 65-ஆம் வயதில், 26.8.71-ஆம் நாள் திருநெல்வேலி யில் காலமானார். செ.வை.

**சுப்பிரமணிய பிள்ளை வ.த.**, கி.பி. 19-ஆம் நூற்றாண்டில வாழ்ந்த தமிழ்ப் புலவர்; முருக பக்தர். இவர் சைவத்தையும் தமிழையும் இரு கணக ளெனப் போற்றியவர். இவர் செங்கற்பட்டில் தணி காசலம் பிள்ளைக்கும் இலககுமியம்மையாருக்கும் 1846-ஆம் ஆண்டு பிறந்தார். சென்னையில் கல்வி கற்ற இவர் கி.பி. 1867-இல் எப்.ஏ. பட்டம் பெற் றார். அதன் விளைவாகத் தென்னார்க்காடு மாவட் டத்தின் தலைநகராக விளங்கும் கடலூர் நீதிமன்றத் தில் எழுத்தராகப் பணி புரிந்தார். அப் பணியி

விருந்து தலைமை எழுத்தராகிப்படிப்படியாக உயர்ந்து நீதிபதிப் பதவி ஏற்றார். அப் பதவியில் இருந்தா லும் தமிழின் மீது கொண்டுள்ள ஆர்வத்தால் செய் யுள்கள் பல இயற்றியுள்ளார் இவர் பல நூலகள் எழுதியுள்ளார். அவற்றுள் பிரமோத்தர காணடம உரை நடை, திருத்தருப் பூணடித் தலபுராணம்உரை நடை, சிவத்தல மஞ்சரி போன்றவை குறிப்பிடத் தருநதன. மேலும்திருப்புகழைப் பிழையறப் பதிப் பித்தவர் எனற பெருமையும இவருக்குணடு. இவர் 1909-இல் காலமானார். வீ.சே.

**சுப்பிரமணிய முதலியார், சி.கே. (சிவக்கவி மணி:)** இவா கோயமபுததூரில சைவப் புலவரும வழக்கறிஞருமான விததுவான கநதசாமி முதலியார், வடிவம்மையார் தமபதிகளின மகனாக 20. 2. 1878-இல தோனறினார். தநதையாா, தம் புதலவர் வீட்டி லேயே தொடக்கக் கலவி பெறத் திட்டம செயதாா. கோயம்புத்தூர் அரசினர் கலைக கலலூரியின உயர் நிலைப் பளளியிலும். பின அககலைக கலலூரியிலும, கலவி தொடாநதது. இளம பருவததிலேயே பேரி லக்கியஙகளையும இலககண நூலகளையும நனகு கறறுச செய்யுள இயறறும் ஆற்றல பெறறுப் புல வர்களாலும மதிக்கப பெற்றார்.

தொடாந்து சென்னை மாநிலக கல்லூரியில பயினறபோது திருமணம் நிகழநதது. நன்கு பயினறு பி.ஏ. பட்டம பெற்றார். தமிழில மாநில முதல மாணவராகத் தோவு பெறறுப பிராஙலின பொற பதக்கமும், கலலூரியில சிறநத மாணவருககான பரிசும், மொழி பெயாபபுத தோவில் தெனனிசனின ஆஙகிலக கவிதையைக கவிதை வடிவிலே தமிழாககும செய்ததறகான ரொக்கப் பரிசும பெறறாா. பின னர்ச சட்டக் கல்லூரியில் பயிலும்போது கோயம புத்தூரில குடுமபப பொறுப்புகள விரைந்து அழைத தன.

கோவை திரும்பி வழக்கறிஞர் தொ[illegible]லைத் தொடஙகினாா. பொருளும் புகழும் பெருகலா யின. தநதையாரின தொடாபுளள பொதுத் தொண டின துறைகள அனைததும தேடி வந்தன. கலலூரியில தாம பெறற பணப பரிசுகளைத் தம் ஆசிரியர் நூலகளை வெளியிட நன கொடையாக வழஙகினாா. பொறபதககம பேரூாப் பட்டிப பெரு மானுககுக குடமுழுக்கு நடநதபோது நவமணிகளு டன் கலநது மருநது சாத்துஙகால் இடம் பெற்றது.

சென்னையில பயிலும்போதே நாட்டுப்பற்று இவரிடம முகிழ்த்தது. கோவையில் தொழில் நடத் தும் நாளில் திலகரின தலைமையை ஏற்று ஊா தோறும் பொதுக் கூட்டங்களில் ஆங்கில அரசை வன்மையாகச் சாடி வந்தார். இவர் வ.உ. சிதம்பர னாரின் நெருங்கிய நணபரானார். அந்நிய அரசின் கவனம் இவர்மீது திரும்பியது. மணியாச்சியில் நடந்த புகழ்பெற்ற, ஆசுதுரை கொலை பற்றிய வழக்கில் சிறையான திரு. நீலகண்டபிரமசாரி, காவல் துறை யினரிடம் கொடுத்த தகவலால் இவர் வீடு காவல் துறையினரின் சோதனைக்குள்ளாயிறறு.

திலகரின் மறைவுக்குப்பின் அரசியலிலிருந்து மெல்ல மெல்ல விலகிச சென்று முடிவில் கட்சி அர சியலினினறும் முற்றிலும் விலகிவிட்டார். அவவெற றிடத்தைத் தமிழப் பணியும் சைவத் தொணடும முழு அளவில நிரப்பின. கோவையில் தனியே ஒரு பெரிய கட்டடம சொநதமாக அமைத்து அதில தம் தந்தையார் தோற்று வித்த சைவப் பிரசங்க சாலையையும் தம் ஆசிரியர் தோற்றுவித்த கோவைத் தமிழ்ச் சங்கத்தையும் இயக்கி வநதார். சைவப் பிரசங்க சாலையில சமய நூல வகுப்புகளும் சொற்பொழிவுகளும் நால்வர் சேககிழார் சுவாமிகள் வழிபாடுகளும் தொடர்நது நடநதன. அங்கு இவர் ஆற்றிய சொற்பொழிவுகள சில நூல வடிவில வெளி வந்தன. தமிழச சங்கத்தில் மாணவர்களும இளை ஞாகளும் சேர்நது தமிழ இலககியங்களைப் பயின றார்கள நலல நூல நிலையம் ஒனறும் உருவா யிற்று.

இவர் தமிழ்நாட்டில நிகழ்நத எல்லாத் திருக் கோயில்களின குடமுழுக்குகளிலும் பஙகு கொணடு வழிநடத்தினார். தம் இலலததிலேயே இலவசத் தேவாரப் பாடசாலை ஒன்று நிறுவித் தக்கஆசிரியா களைக கொணடு சிறுவா சிறுமியாகட்குத் தேவார இனனிசை பயிற்றுவிததாா. பலலாணடு உழைததுப் பெரியபுராணத்துக்குஒரு பேருரைவகுத்துளளாா. சேக் கிழார் திருககூட்டம் எனற அமைப்பைத் தொடங்கி ஆணடுதோறும மலைநாட்டில சுந்தரமூாத்தி சுவாமி களஃசேரமான பெருமான் நாயனாருக்கு விழா எடுத தாா. கோவை ஆர் எசு. புாம இரத்தின விநாயகா திருககோயில் இததிருக்கூட்டததால தோறறுவிககப் பட்டுப் பராமரிககப்படுவதாகும்.

இவர் மனைவியாா 1956-இல மறைநதபினனர் மதுரை ஆதீனத்தைச் சாாந்து துறவு பெற்றுக கல லாடை அணிநது சமபநத சரணாலயத தமபிரான சுவாமிகள எனறு திடசா நாமமும் பூணடார். மிகத் தளாந்த அந்நிலையிலும நூலகள இயற்றுவதி லும் கட்டுரைகள வரைவதிலும இவர் ஈடுபட்டாா. திருககோயில வழிபாடும் தல யாததிரைகளும தொடாநதன. தமிழ எழுததாளர் சங்கம் இவ

ருக்குக் கேடயம் வழங்கிச் சிறப்புச் செய்தது சில நாள் உடல் நலம் குன்றியிருந்த இவர் 24. 1. 1961 -இல் காலமானார்.
சி எஸ்.க.

**சுப்பிரமணிய முதலியார், வெ ப.** வெள்ளக் கால் பழநியப்ப முதலியாரின் மூத்த மகனாக 14.8. 1857-இல் பிறந்த முதுபெரும் புலவர் ஆவார். தொண்டைமண்டல வேளாளர் குலத்தைச் சேர்ந்த சுப்பிரமணிய முதலியாரின் ஊர் வெள்ளக்கால் தான் எனினும், தாயார் உலகம்மாள் அண்ணி ஊரான ஆழ்வார்குறிச்சியே இவர் பிறந்த ஊராகும். திருநெல் வேலித் தெற்குப் புதுத் தெருவிலுள்ள திண்ணைப் பள்ளியில் நான்காண்டுகள் பயின்றார் உயர் பள்ளிப் படிப்பு கிறித்தவப் பள்ளியில் அமைந் தது. கல்லூரிப் படிப்பு மதுரைத் திரவியம் தாயுமானவர் இந்து கல்லூரியிலும், சென்னைக் கிறித்தவக் கல்லூரியிலும் தொடர்ந்தது. பின் னர் சென்னைச் சைதாப்பேட்டை வேளாண்மைக் கல்வி நிலையத்தில் சேர்ந்து படித்து கி.பி.1884-இல் தொழிற்கல்விப் பட்டம் பெற்றார், கி.பி.1894-இல் பம்பாய்க் கால்நடை மருத்துவக் கல்லூரியில் ஓராண்டு பயின்று உயர்பட்டம் பெற்றார். இவர் கி.பி.1895 முதல் 1915 வரை கால்நடை மருத்துவத் துறையில் பணிபுரிந்தார். இவரது எண்பதாம் ஆண்டு நிறைவு விழா டாக்டர் உ.வே. சாமிநாதையர் தலை மையில் 1937-இல் நடந்தது. இவர் 90 ஆண்டுகள் வாழ்ந்து இலக்கியத் தொண்டு புரிந்தார். 'எண்ப தாண்டு இளைஞனே இன்னமுதின் பண்பெலாங்காட்டு தமிழ்ப் பாவலனே' என்று கவிமணியால் பாராட்டப் பெற்றார். இவர் கவிதை, புலமை, ஆராய்ச்சி என னும் துறைகளில் அறுபது ஆண்டுகளுக்கு மேலாக ஈடு பட்டவர். செய்யுளியற்றல், உரையெழுதுதல், மொழி பெயர்த்தல், சொற்பொழிவாற்றல் என்னும் புலமைக்கூறுகள் பலவும் வெ.ப. முதலியாரிடம் நன் கமைந்துள்ளன என்று ந மு. வேங்கடசாமி நாட்டார் கூறியுள்ளார். பல்கலைக் கழகத்தமிழ்த் தேர்வு நடத் தும் குழுத் தலைவராகப் பல ஆண்டுகள் பணிபுரிந் தார். இவர் 1946-இல் காலமானார்.



வெ.ப. சுப்பிரமணிய முதலியார்

தமிழ்ப் பெருங்கவி வெள்ளக்கால சுப்பிரமணிய முதலியார் இயற்றிய செய்யுள் நூல்கள் ஏழாகும். அவை அகலிகை வெண்பா, நெல்லைச்சிலேடை வெண்பா, திருவாவடுதுறை அம்பலவாண தேசிக மாலை, தனிக்கவித்திரட்டு, சருவசனசெபம். கோம்பி விருத்தம், மில்டனின் சுவர்க்க நீக்கம் முதற்காண்டம் என்பனவாம். இவற்றுள் இறுதி மூன்றும் ஆங்கில மூலத்தின் தமிழ்க் கவிதை வடிவங் களாகும். பேராசிரியர் பெ. சுந்தரம் பிள்ளையின் கருத்துக் கோவையின் உரைநடை வடிவமே இவரது இராமாயணத்தின் உள்ளுறைப் பொருளும் தென் இந்தியச் சாதி வரலாறும் என்ற நூலாகும் தமிழ் உரை நடை நூல்கள், கல்வி விளக்கம் முதற்பாகம், இந்திய நாட்டுக் கால் நடைக்காரர் புத்தகம், இந்தியாவில் கால்நடைகளுக்கு ஏற்படும் மிகக் கொடுமையான நோய்களைப் பற்றிய புத்தகம், கால்நடைகளுக்கு நோய் வாராமல் அம்மை குத்துதலும் அதன் பயன் களும், கம்பராமாயணத்தையும் பெரிய புராணத் தையும் எரிக்கும் முயற்சி என்பன இவர் எழுதிய சான் மில்டனார் சரித்திரம் ஏபர்ட்டு இசுபென்சர் ஆகியவை வரலாற்று நூல்கள். வாலிவதை நியாயம் என்ற ஆய்வு நூலும் தந்துள்ளார்.

கம்பராமாயணத்தில் தனித்த ஈடுபாடு கொண்டு ஆழ்ந்து பயின்று இனிய கவிகளைத் திரட் டிப் பொருள் விளக்கம் தந்தார். இதழ்களில் தொடர் கட்டுரையாகக் கம்பராமாயணப் பாடல் களுக்கு ஆய்வுரை எழுதினார். அந்த இன் கவித்திரட் டின் தொகுப்பே இவரது கம்பராமாயணசாரம் என்ற ஆராய்ச்சி நூலாகும் செந்தமிழ்ச் செல்வியில் காஞ்சிப்புராண இன்கவித்திரட்டு எனும் தலைப்பில் பல கட்டுரைகள் எழுதினார். ஊற்றுமலை அரசர் மீது இவர் பாடிய இயற்றமிழ்ப்பாக்கள் யமகந்திரிபு அமைந்த வித்தகச் செய்யுட்களாகும். சிறந்த கல்வி யும் கவி பாடும் வன்மையும் ஒருங்கு அமையப் பெற்றவர் என்று இவரைப் பண்டிதமணி கதிரே சன் செட்டியார் பாராட்டியுள்ளார்.

மாதவையாவின் பஞ்சாமிர்தம், மதுரைத் தமிழ்ச் சங்கத்தின் செந்தமிழ், சைவ சித்தாந்த நூற் பதிப்புக்கழகத்தின் செந்தமிழ்ச் செல்வி ஆகிய இதழ் களில் இலக்கியத் தொடர் கட்டுரை எழுதியுள்ளார். தமிழ், ஆங்கிலம் ஆகிய இருமொழிப் புலமை மிக்க இவரது கல்விச் சிறப்புக் கருதி ஆங்கில அரசு 'கிலத்' விருதை வழங்கியது. 'இராவ சாகிபு'ப், பட்டமும் அன்றைய அரசு வழங்கியதேயாம். சென்னை மாகாணத் தமிழ்ச்சங்கம் முதுபெரும்

புலவர் என்னும் பட்டத்தை வழங்கிச் சிறப்பித்தது. மதிநுட்ப மிக்க இவர் பரந்த கல்வியும் பணபாடும் உடையவர். தமது அரிய நூலகத்தைத் தாம் படித்த திருநெல்வேலி இந்து கல்லூரிக்கு அன்பளிப் பாக அளித்தார். இத்தகைய தமிழறிஞர் பெயரில 1986-இல் ம.தி தா. இநது கலலூரியில், இவர் பெயரர் கிடாரைக்குளம் ந. அம்மையப்ப முதலியா ரால் தமிழ்க்கலை ஆய்வுமையம் நிறுவப்பெற்றுள் ளது. பி.தெ.

**சுப்பிரமணிய முனிவர்**: கி.பி.18-ஆம் நூற றாணடில் வாழ்நத தமிழ்ப் புலவர். இவர் திருவா வடுதுறை நமச்சிவாய தேசிகர் மரபில் வந்த அம்பல வாண தேசிகர் வழிவநதவர். தொண்டைமணடலத் தைச சேர்ந்த தொட்டிக்கலை என்னும் ஊரைச் சேர்ந்தவராதலால இவர் தொட்டிக்கலைச் சுபபிர மணிய முனிவர் என்ற வேறு பெயராலும் வழங்கப் பெற்றாா. சிவஞான முனிவரின் மாணவராக விளங் கித் தமிழ் இலக்கண இலககியங்களை நனகு பயின றார். திருவாவடுதுறையில் பல காலம் வாழ்நது பல நூல்களையும் எழுதியுள்ளார். இவர் திருவாவினன் குடிஅந்தாதி, திருக்குற்றாலச் சித்தித் திருவிருத்தம், திருச்சிற்றம்பல தேசிகர் மீது சிநது, பஞ்சரத்தின மாலை, தணிகை விருததம, கேசவப் பெருமாள் இரட்டை மணிமாலை, துறைசைக் கோவை, கலை சைச் சிலேடை வெணபா, கலைசைக் கோவை, சுப்பிரமணியர் விருத்தம் முதலிய நூல்கள் இயற்றி யுளளார். இவா சுப்பிரமணியர் திருவிருததம் பாடிப் பெருவியாதியுளளவர்களையும், திருத்தணிகை விருத் தம் பாடிக குருடர்களையும் குணப்படுத்தினாா என்பர். வீ.சே.

**சுப்புராமன், நா.ம ரா**: நாட்டாணமை மல்லி ராயலு சுப்புராமன் 1905-ஆம் ஆண்டு மதுரை யில் சௌராட்டிர சமூகத்தில் செல்வ வணிகரான இராயல் என்பவருக்கும் காவேரி அம்மையாருக்கும் மகனாகப் பிறந்தார். 'மல்லி' என்பது குடும்பப் பெயர். 'நாட்டாண்மை' என்ற பட்டப்பெயர் அக் குடும்பத்தின் தலைமை இயல்புபற்றி வந்தது.

நேர்மை, கட்டுப்பாடு, ஆன்மிகம், அன்பு, பொறுமை, எளிமை முதலிய நற்குணங்கள இயல் பாகவே இவரிடம் இளம் வயது முதல மிளிர்ந்தன. உயர்நிலைப் பளளிப் படிப்பை முடிக்கும் முன்னரே அக்கால முறைப்படி இவா தமது 15 ஆம் வயதில் பர்வதவர்ததினியை மணக்க நேரிட்டது. 'இல்வாழ் வில் புலனடக்கம்' என்ற காந்திய நெறிமுறை இவ ருக்கு இயல்பாகவே கைகூடிற்று. இவருக்கு ஒரு மகள் உண்டு. இவருடன் பிறந்த ஆடவர் இருவர்; பெண்டிர் அறுவர்.

உயர் படிப்புக்கு இங்கிலாநது செல்ல இவர் குடும்பத்தினர் அனைத்து ஏற்பாடுகளையும் செய் திருந்தனர். ஆனால், விடுதலைப் போராட்ட வேள்வி யில் குதிக்க முடிவு செய்த இவர், அப்பயணத்திற்கு உடன்படவில்லை. தொழிலிலும் வணிகத்திலும் ஈடு பட்டுப் பெரும் பொருள் ஈட்ட விரும்பாது தேசத் தொண்டில் தம்மை ஈடுபடுத்திக் கொணடார்.

இவர் ஆடம்பர உடைகளைத் துறந்து, கதராடை அணிந்து, காங்கிரசின் தீவிர ஊழியராகத் தமது அரசியல் வாழ்வைத் தொடங்கினார். ஆசிரம வாழ வில் நாட்டம் மிகவே, காந்தியடிகளின் ஆசிரமங்களை யும் தாகூரின் சாந்தி நிகேதனத்தையும் பார்த்து வநது புத்துணாவுடன அரசியலில் ஈடுபட்டார்.

காந்தியடிகளின சத்திய நாட்டம், அகிமசை நெறி, அற வழி, நிருமாணத் திட்டங்கள் ஆகியவற றில் முழு நம்பிக்கையுடன் செயற்பட்ட இவர் 'மதுரைக் காந்தி' என மக்களால் பாராட்டப்பட்டாா. இவர் 1930, 1942 ஆகிய இரு ஆணடுகளில் இரு முறை சிறை சென்று சுமார் ஐந்து ஆணடுகள நாட்டு விடுதலைக்காகத் தவம் புரிந்தாா. இவர் மனைவியும் அரசியலில் குதித்தார். அரிசன சேவை, மது விலக்கு, ஆதாரக் கல்வி, கதர் ஆகிய துறைகளில் இவர் அரும பணி ஆற்றினார்.

மதுரைக் காங்கிரசுத் தலைவராகப் பொறுப்பேற்ற இவர் மதுரையை விடுதலைப் போராட்டக் களத்தின கோட்டை ஆக்கினார். பின்னர் 1937 முதல 1942 வரை மதுரை நகராட்சித் தலைவராக விளஙகிக கல்வி, மருத்துவம், பொதுச் சுகாதாரம உள்ளிட்ட பல துறைகளில அரும் பணியாற்றினார். இவா 1937-இலும் 1946-இலும் சென்னைச சட்ட மனறத்திற்கும், 1962-இல் இந்திய நாடாளுமன்றத்திற்கும் மதுரையி லிருந்து தேர்ந்தெடுக்கப்பட்டாா. தலைசிறநத நாடாளுமன்ற மேதையாக இவர் திகழ்ந்தார்.

மதுரைக் காநதி அருங்காட்சியகம், வேதாரணியம் கத்தூரிபாய் காந்தி குருகுலம், கல்லுப்பட்டிக காந்தி நிகேதன ஆசிரமம், கோவை சிரீராமகிருட்டிணா வித்தியாலயம், தமிழ்நாடு காந்தி நினைவு நிதி, அரி சன சேவா சங்கம் முதலிய பல நிறுவனங்களின் தோற்றததிற்கும் வளாச்சிககும் இவர் அரும்பாடு பட்டார். தமிழில காந்தி நூல்கள் தொகுதி வெளி வரக் காரணமாகத் திகழ்ந்தாா. அரசியலில் கடைசி வரை அறவழியையும் நேர்மையையும் பின்பற்றிய இவர் அனைவராலும் போறறப்பட்டார். தம் சொத்துகள் அனைத்தையும பொதுநலப் பணிக்கு வழங்கிய இவர் 1983-ஆம் ஆண்டு காலமானார். ச.செ.

**சுப்பையா, ப.** (1911-1945). இவர் சிறந்த தேசத் தொண்டர்; காந்தியின சீடர்; ஒழுக்க சீலர்; தேசபபற்றே தெய்வபபற்று எனக் கருதியவர்; பெருந்தலைவா காமராசரின் நமபிக்கைக்குரிய காங் கிரசுத் தொணடா; குடும்பத்தை மறநது விடுதலைப் போரில் இன்னுயிர் ஈந்த தியாகச் சுடர்; இவரது பேச்சும் மூச்சும் இநதிய விடுதலை பற்றியவை. கிராமங்கள் தோறும நாள் தவறாமல் நடந்து சென்று சுதநதிர வேட்கையை மககளுக்கு உண்டாக் கியவர் இவா.

இவர் பிறந்த ஊர் இலுப்பையூர். இது இராமநாத புரம் மாவட்டம் திருசசுழிக்கு அணமையில உள்ளது. இவர் தந்தையார் பழனிவேல் நாடார்; தாயார் கிருட்டிணம்மாள. இவர் மனைவி பிச்சாரம்மாள். இவருக்கு ஒரு தமையனாரும் ஒரு தங்கையும் உண்டு.

எளிய குடும்பத்தில் பிறந்து மனையறம் ஏற்ற இவா, தமது குடும்பத்தினும் நாடே பெரிது என எணணியவர். சாதி, மத வேற்றுமைகளை இவர் அறி யார். தென்மாவட்டங்களில் காங்கிரசுப் பேரியக்கத் தின் குறிக்கோளையும காந்தியடிகளின் கொள்கை களையும் பரப்பிய தேசத் தொணடர்களுள் முதன்மையானவர். அஞ்சாத நெஞ்சமும் அயராத தேசத் தொணடும இவரை மக்கள மத்தியில் பெரி தும் உயாத்தின. பல இளைஞர்கள் உயர்கல்வி பெறக் காரணமாகவும் இவா விளங்கினார்.

விடுதலைப்போரில் முன்னணி வீரராக நின்ற இவர்மீது வெளளை அரசாங்கம் அடக்குமுறைக் கொடுமைகளை ஏவியது; அடியும் மிதியும் பட்டாா. துப்பாக்கியை இவர் துச்சமாக மதித்தார். காந்தி யடிகளின் தலைமையில் 1941-இல் நடநத தனிமனி தர் சத்தியாக்கிரக வேள்வியில் இவர் தம்மை முழுமையாக ஈடுபடுத்திக் கொணடார். அதன் காரண மாகக் கைது செய்யப்பட்டு அலிப்பூர் சிறையில் $1\frac{1}{2}$ ஆணடு அடைக்கப்பட்டார். பினனர் 1942-இல நடந்த 'வெள்ளையனே வெளியேறு' போராட்டத்தில் ஈடுபட்டார். மாவட்டம் தோறும் சென்று, தொண டர் படைகளைத் திரட்டி, அமைதி முறையில் அர சாங்க எதிர்ப்பினைத் தெரிவித்தார். அதனால், வெள்ளை அரசினால் அவிழ்த்துவிடப்பட்ட அடக்கு முறைகளுக்கும் அடிதடிகளுக்கும் இவர் இரையானார். இவர் இதன் காரணமாக மீணடும் கைது செய்யப் பட்டுச் சிறைவாசம் செய்தபோது இவர் மனைவி காலமானார். வாழ்க்கையில எநத இன்பமும் பெறாது, தேச விடுதலை வேள்வியில் ஈடுபட்ட இந்த உத்தமத் தியாகி நோய்வாய்ப்பட்டு 1945-இல் கால மானார். க.ச., அ.ச.

**சுபத்திரா குமாரி சௌகான்** இந்தி மொழி இலககிய உலகில் தோனறிய சிறந்த பெண கவிஞர் களுள் ஒருவர். இவர் உத்தரப்பிரதேசம் அலகாபா தைச் சார்ந்த நிகால்பூரில் கி.பி. 1904-இல் பிறந் தார். நிகால்பூரில் தம் தொடக்கக் கல்வியைப்பெற்ற இவர் தம் பதினாறாம் வயதில் மத்திய பிரதேசத்தைச் சேர்ந்த இலட்சுமணசிங்கு என்பவரை மணந்தார். திருமணத்துக்குப் பிறகு சிறிது காலம்வரை காசியில தம் படிப்பைத் தொடர்ந்தார். இளமையிலிருந்தே நாட்டுப் பற்றுடன் திகழ்ந்த இவர் ஒத்துழையாமை இயக்கம் தொடங்கப்பட்ட நேரத்தில் தம் பள்ளிப் படிப்பை விட்டுவிட்டு அரசியலில் ஈடுபட்டார். நேரடி யாகவும், இலக்கிய வாயிலாகவும் நாட்டுத் தொணடு செய்யும் பணியில் ஈடுபட்ட இவர் பலமுறை சிறை சென்றுள்ளமை குறிப்பிடத்தக்கது.

எளிய இனிய படைப்புகள் காரணமாகச் சௌகான், இலக்கிய உலகில் சிறப்புற்று உயர்ந் தார். இவர் தம் படைப்புகளில் மேறகொணட கதைக் கரு, கையாண்ட நடை, செய்திகளை எடுத் துக் கூறிய பாஙகு யாவும் முறையே எளிமையாகவும் ஆடம்பரமற்றதாகவும் உள்ளத்தைக் கவரும்படியா கவும் அமைந்தன. காதற சுவையும், நாட்டுப பறறும் இவர்தம் இலக்கியப் படைப்புகளின்பின் புலங்களாக விளங்கின. 'மானினீ ராதே', 'பிரியதம் சே', 'சல்தே சமய்', 'சிந்தா' முதலிய கவிதைகள் காதற்சுவை மிக் கன. 'மேரா நயா பச்பன்', 'பாலிகா கா பரிசய்' என்னும் கவிதைகளில் ஒரு தாயின் அன்புள்ளம் சிறப்பாகச் சித்திரிக்கப்படுகின்றது. 'சான்சி கீ ராணி', முதலிய கவிதைகள நாட்டுப்பற்றை அடிப்படையாகக் கொணடன. துக்ரா தோயாபியார் சரோ, என்னும் கவிதை ஆடம்பரமறற உண்மையான பக்தி குறித்து விளக்குகினறது.

சௌகான் தலைசிறந்த குழந்தைக் கவிஞரும் கதை ஆசிரியருமாவார். 'சபா கே சேல' குழந்தைப் பாடல்களைக்கொணட நூலாகும். 'பிக்ரே மோதி' இவர் எழுதிய கதைகளின தொகுப்பாகும். இவர் 1948-இல காலமானார். இரா.செ.

**சுபத்திரை**: சுபத்ரா என்னும் வடசொல தமிழ் மொழி ஒலியியலபுக்கு ஏற்பச் சுபத்திரை என்று ஆக கம்பெற்றது. 'சு' என்பது 'நல்' என்னும் பொருளு டையது. பத்ரா என்பதன் பொருள் பெருமை, நிறைவு, நன்மை என்பனவாம். எனவே, சுபத்திரை என்ற சொல்லுக்குப் புகழவாய்ந்தவள், நிறைவுள்ள வள், நலம் செய்பவள், வளம் தருபவள் என்ற பல பொருள்கள் உள்ளன. இத்தகு குணநலம் பல வாய்ந் தவள், யாதவகுல வேந்தன் கண்ணன் தங்கை

சுபத்திரை ஆவள். இவள்பாண்டவருள் வில்வீரனாகத் திகழ்ந்த அருச்சுனனின் மனைவி; பாரதப் போருள் பெருவீரனாகத் திகழ்ந்த அபிமன்யுவின் தாய் ஆவள். பொன்.செள.

**சுபர்னரிகா ஆறு** பீகார் மாநிலத்தில் இராஞ்சி மாவட்டத்தில உற்பத்தியாகும் ஆறு. சுபர்னரிகா (Subarnarekha) எனபதற்குப் பொன்னொளி என்பது பொருள். இந்த ஆறு சிங்பூம் மாவட்டத்தின் வழியாகக் கிழக்காகப் பாய்ந்து வங்காள மாநிலத்தில மிட்னாப்பூர் மாவட்டத்தில் வங்காள விரிகுடாவில் கலக்கிறது. காஞ்சி, கார்காரி போன்ற ஆறுகள் இந்த ஆற்றின் துணை ஆறுகளாகும். இவ்வாற்றின நீளம் 470 .கி.மீ ஆகும். சு.இரா.

**சுபாசு சந்திரபோசு(கி.பி.1897-1945):** இவர் இந்திய விடுதலைக்குப் பாடுபட்ட தீரர்; வெளி நாட்டிற்குத் தப்பிச் சென்று, கிழக்காசியாவில் விடு தலை இயக்கத்தைத் தோற்றுவித்துப் படை பலத தால ஆங்கிலேயரை இந்தியாவினின்றும் விரட்டிவிட முனைந்து செயற்பட்ட வீரர். இநதியத் தேசிய இராணுவத்தை(Indian National Army) உருவாக்கியவர்; சுதந்திர இநதியாவின் இடைக்கால அரசு ஒன்றை 1943-இல நிறுவியவர். இவர் நிறுவிய ஆசாத்து இந்து அரசு, ஆஙகிலேயர் மீதும் அவர்களின் கூட்டாளிகளின் மீதும 1940-இல போர் அறிவிப்புச் செய்யும் அளவிறகு வலிமை பெற்றிருந்தது. இந்தியாவுக்கு வெற்றி என்னும் பொருள்தரும் 'செய கிந்து' (Jai-Hind) என்னும் மநதிரத்தையும, 'தெலலி செல்வோம்' (டெல்லி சலோ) எனனும் மநதிரத்தையும் உருவாக்கி, அவற்றிறகு உயிரூட்டிய உத்தமர்.



சுபாசு சந்திரபோசு

இவர் 1943-ஆம் ஆணடின் இறுதியில,அந்தமான்-நிக்கோபாரத்தீவுகளிலும், பர்மாவில் சியாபாடி எனனும் பகுதியிலும் இந்திய சுதந்திர அரசை நிறுவி ஆங்கு மூவணணக் கொடியை முதன் முதல பறக்கவிடட தலைவர்.

ஒரிசாவிலுள்ள கட்டாக்கு நகரில் கி.பி.1897-ஆம் ஆண்டு சானகிநாத போசிற்கும் பிரபாவதி போசிற கும் மகனாகத் தோனறிய இவர், இளமையிலேயே நாட்டுப்பற்று மிக்கவராக வளர்நதார்; பல நூல களைக கற்று அறிவு பெறறார். கல்கத்தா மாநிலக் கலலூரியில பயின்று வந்த காலத்திலேயே (1914) துடுககு மிக்கவராக விளஙகினார். தாய்நாட்டிற்காக எவவித்தியாகத்தையும் செய்யக காத்திருந்தார். இந்தியா ஆஙகிலேயரின்கீழ் அடிமையாகக கிடப் பதை இவா விருமபவிலலை. இவர் 1919-ஆம் ஆணடு இங்கிலாநது சென்று, ஐ.சி எசு. (I.C.S.) தோவில் வெற்றி பெற்று, உயர்ந்த பதவியில் அமர்ந தார். வேல்சு இளவரசரின் (Prince of Wales) இந் திய வருகையைப் புறக்கணிககும் கிளர்சசியில ஈடு பட்டு, 1921-இல் கலகத்தாவில் கைது செய்யப்பட் டார். காந்தியடிகளின ஒத்துழையாமை இயககத் தில் பெரிதும ஈடுபாடு கொணடார். இவரது தியாக உணாவைப் பாராட்டிய காநதியடிகள இவரைச் சித் தரஞ்சன தாசிடம அனுப்பி வைத்தார் சுயராச்சியக் கட்சி 1922-இல் தாசால நிறுவப்பட்டபோது, 'முன் னணி' (Forward) என்னும அக்கட்சி இதழின் ஆசிரி யர் ஆனார். இவர் 1924-இல் மீணடும் கைது செய் யப்பட்டுப் பாமாவிலுளள மாண்டலே சிறையில அடைக்கப்பட்டார். சிறையில் நோய்வாய்ப்பட்ட இவர் 1927-ஆம் ஆண்டு விடுதலை செயயப பட்டார். இவர் 1930-இல் கல்கத்தாவின மேய ராகத் தேர்ந்தெடுக்கப்பட்டார். பின்னர் 1936-இல காங்கிரசின் தலைவராகத் தோந்தெடுக்கப்பட்டார். தீவிரவாதியான இவா,படை பலத்தாலதான ஆங்கி லேயரை விரட்ட முடியும என்று நம்பினாா.

இவர் 1939-இல் காங்கிரசிற்குள் இருந்து கொணடே, அகில இந்தியக் காஙகிரசுக் குழுவின தீர் மானத்திற்கு எதிராக, வங்க முழுவதிலும் அரசியல் கைதிகளை விடுவிப்பதற்காகக் கணடன நாள கொண்டாடினார். அதன் விளைவாக இவா காங்கி ரசுத்தலைமைப் பதவியிலிருந்து விலககப்பட்டார். இதே ஆண்டில் முன்னணிக் கட்சியைத் (Forward Block)தொடங்கினார். பின்பு ஆர்வில் என்ற ஆங்கி லேயரின் சிலையை அகற்றவேணடி ஓர் இயக்கத்தைத் தோற்றுவித்தார். எனவே, ஆஙகில அரசுஇவரைக காவலில் வைத்தது. சிறையில் இவா இறக்கும் வரை

உணணா நோன்பு மேற்கொண்டார். அதனால அரசு இவரை 1940-இல் விடுவித்து, இவரது வீட்டிற்குக் கடுமையான காவலை அமைத்தது. கட்டுக்காவலை யும் மீறி இவர் 1941-இல் யாருக்கும் தெரியாமல் மாறுவேடத்துடன் காபூல் போய்ச் சேர்ந்து, அங்கி ருந்து செருமானியத் தலைநகரான பெர்லினை அடைந்தார். அப்போது கிழக்காசியாவில் இரண்டாம் உலகப் போர் நடந்து கொணடிருந்தது. மிகத்துணி வுடன் நீர்மூழ்கிக் கப்பலில் பயணம் செய்து 1943-இல் இவர் சப்பான் தலைநகரான தோக்கியோ (Tokyo) சென்றடைந்தார். அங்கிருந்து சிங்கப்பூருக்குச் சென் றார். சிங்கப்பூர் இந்தியர்கள் இவருக்கு உற்சாகமான வரவேற்பளித்தனர். தென்கிழக்கு ஆசியாவைச் சேர்ந்த 30 இலட்சம் இந்தியரும் சுபாசைத் தம் தளபதியாகவும் தனிப் பெருந்தலைவராகவும் ஏற்றுக் கொண்டு, ஆங்கிலேயரிடமிருந்து தாய்நாட்டை விடு விக்க உறுதிபூணடனர். சப்பானிய அரசரிடம் தமது நாடு விடுதலை பெறுவதற்கான திட்டங்களை எடுத் துக் கூறி, அதற்குச் சப்பானின் ஒத்துழைப்பையும் ஆதரவையும் பெற்றார். விடுதலைப் போரை நடத்தப் படைச் செலவிற்காக மக்களிடம் பணம் வேணடிப் பெற்றார். போரில் ஆங்கிலேயர் தோற்றபோது விட் டுச் சென்ற இந்திய வீரர்கள் 25,000 பேரையும், கிழக் காசியாவில் வாழ்ந்து வந்த படைப்பயிற்சி பெற்ற 50,000 பேரையும் திரட்டிப் பெரும்படை ஒன்றை உருவாக்கினார். சுபாசு போசு 'நேத்தாசி' (தனித் தலைவர்) என்று எல்லோராலும் அழைக்கப்பட்டார். இந்திய தேசிய படையின் (I.N.A.) தலைவராகப் பதவியேற்ற பின்னர்(1943) சிங்கபபூரில சுதந்திர இந்திய அரசினை (ஆசாத்து இந்து அரசு) நிறுவி, அதனை உலகிற்கு அறிவித்தார். அதனைச் செருமனி, சப்பான், இத்தாலி, தாய்லாந்து, பர்மா, மஞ்சூரியா, பிலிப்பைன்சு ஆகிய நாடுகள் அங்கீகரித்தன. இந்திய தேசியபடை, செருமனி, சப்பான் ஆகிய நாடுகளின் உதவியோடு சிறப்பான முறையிற செயற்பட்டது. தேசிய படையினர் பல சாதனைகளைப்புரிந்தனர். இந்தியரின் பாராட்டைப் பெற்றனர். இப்படை 1944-இல் இந்திய-பர்மிய எல்லைகளைத் தாணடி, மணிப்பூர் பகுதியிலுளள கொகிமாவைக் கைப்பற்றி யது. இந்தியமணணிலிருந்து ஆங்கிலேயரை விரட்டி விட முனைந்து போரிட்டு வந்தது.

இந்நிலையில் 1945-இல் உலகப் போரின் போக கில பெரிய மாற்றஙகள் தோன்றின. அச்சுநாடுகள நேசநாடுகளிடம் தோல்வி அடைந்தன. சப்பான் சரணடைந்தது. இநத இக்கட்டான சூழலில், வேறு வழியினறி, தேசிய படையினரும் போரை நிறுத்திப பின்வாங்க வேணடுமாய்ப் படைகளுக்கு ஆணை பிறப்பித்தார் நேத்தாசி. அதே நாளில் நேததாசி சிங்கப்பூரிலிருந்து தோக்கியோவிற்கு விமானத்தில் பயணமானார். பார்மோசாவில் உள்ள தைகோகு விமான நிலையத்திலிருநது(Taihoku Air Port) புறப் பட்ட நேத்தாசி விமான விபத்தில இறந்தார் எனற செய்தி சப்பான் அரசால் அறிவிக்கப்பட்டது. சிலர் நேத்தாசி, விமான விபத்தில் இறக்கவில்லை என்றும் தப்பித்துச் சென்றுவிட்டார் என்றும் கூறுகின்றனர். இவரது முடிவு மாமமாக இருந்ததால் இவரது உண்மையான முடிவுபற்றி ஆராயக கோசுலா குழு நியமிக்கப்பட்டது. இருப்பினும் இவரது இறபபுப் பற்றிச் சரியான செய்திகள கிடைக்கவில்லை. ம.இ.

**சும்மா மசூதி** இந்தியாவின மிகப்பெரிய மசூதி. சும்மா (Jumma) மசூதி தில்லியில உளளது.



சும்மா மசூதி

சாம்மி மசூதி (Jammi Mosque) என்றும் இது கூறப் படும். தில்லிச் செங்கோட்டையிலிருநது 1 கி.மீ.தொலை வில் மேற்கில் அமைந்துள்ள இம்மசூதியைப் பொது மக்கள வழிபாட்டிற்காக மொகலாய அரசர் சாச கான் கட்டினார். சாம்மி மசூதியின் மூன்று பக்கங் களிலும் நுழைவாயில்கள் உள்ளன. வடக்கு, தெற்கு வாயில்கள் பொதுமக்களுக்காகவும், கிழக்கு வாயில், செங்கோட்டையிலிருந்து வந்து வழிபட அரச குடும் பத்தினருக்காகவும் அமைக்கப்பட்டன. இம்மசூதி96மீ. அடிப்பக்கமுடைய நாற்கர அமைப்புடையது.

இம்மசூதியின் சுவர், தரைப்பகுதி போன்றவை வெணசலவைக்கற்கள, கருஞ்சலவைக் கற்கள ஆகி யவை கொண்டு கட்டப்பட்டன. மசூதியின வாயி லில் உயர்ந்த மினார்களும் மூலைகளில் சிற்றரங்கு களும் காணப்படுகின்றன. சாம்மி மசூதி என்னும் பெயரில் பல்வேறு இடஙகளில் மொகலாயப் பேரர சர்கள் மசூதிகளை இநதியாவில் கட்டியுளளனர்.

சு.இரா.

**சுமத்திரா:** இந்துமாக்கடலில் தென்கிழக்கு ஆசியப் பகுதியிலுள்ள இந்தோனேசிய நாட்டில் அமைந்திருக்கும்' தீவுகளுள் சுமத்திராவும் ஒன்றாகும்.




**இயற்கையமைப்பு:** வடகிழக்கில் மலேசியா தீபகற் பத்திலிருந்து மலாக்கா நீரிணைப்பினாலும், தெற்கே சாவா (Java) விலிருந்து சண்டா நீரிணைப்பினாலும் சுமத்திரா பிரிக்கப்படுகிறது. வடமேறகிலிருந்து தென்கிழக்குவரை இத்தீவின் நீளம் 1722 கி.மீ. பெரும்பான்மை அகலம் 520 கி மீ. நிலநடுக்கோடு இத்தீவின் குறுக்கே செல்கிறது. சுமத்திரா ஒரு வெப்பநாடு.

இத்தீவு கீழ்க்காணும் நான்கு இயறகைப் பகுதி கள அடஙகியதாகும்.

1. மேற்குக் கடற்கரையோரமாக அமைந்துள்ள குறுகிய சமவெளி.
2. மேற்குக் கடற்கரையில் 10 எரிமலைகளைக் கொண்ட பாரிஸன் மலைகள்.
3. உளளடங்கிய, தாழ்ந்த, எரிமலைகளற்ற பகுதி.
4. வண்டல் மண் பகுதியான, பல ஆறுகளால் நீர்ப்பாசன வசதி பெற்ற தீவின் கிழககுப் பாதி.

கிழக்குச் சுமத்திரா சதுப்பு நிலக்காடுகளும், அழகிய ஏரிகளும் கொண்ட பகுதியாகும். இங்குள்ள தோபா ஏரி உலகப் புகழ்பெற்றது.

வடகோடியின் ஒரு சிறு பகுதி தவிர, மற்ற எல்லா இடங்களிலும் ஆண்டுச் சராசரி மழை 200 செ.மீ.

வட சுமத்திராவின் கிழக்குக் கடற்கரைப் பகுதியில் புகையிலை, இரப்பர், பனை, சந்தனம, காபோக்கு, தேயிலை, காப்பி முதலிய பயிர்த தோட்டஙகள உளளன.

நாட்டில் பல பாகங்களிலும் தென்னந்தோப்பு கள் அடர்ந்துள்ளன.

**மக்கள்:** சுமத்திரர்கள மங்கோலிய இனத்தைச் சேர்நதவர்கள். அவர்கள் ஆசுத்திரேலிய-ஆசிய மொழி பேசும் பிரிவைச் சேர்ந்தவர்கள. வடமேற்குச் சுமத்திராவில் அச்சினியர்களும், மலைப்பாங்கான வட மத்தியில் காசோ, ஆலா மக்களும், தோபா ஏரியின் தென்பகுதியில் பதக்கர்களும், படாங்கு உயர் நிலைப் பகுதியில் இனாவ்பா என்போரும், மேற்குக் கரையில் இரெடசாங்கு, இலெபாங்கு என்ற மலை வாசிகளும் இலாம்பாங்கு என்ற கடற்கரை வாசி களும், கிழக்குக் கடற்கரை, தெற்குச் சமவெளி ஆகிய இடங்களில் தீவுநாட்டுப் பொதுமொழி பேசும் மலாயர்களும் இத்தீவில் வாழும் மக்களாவர்.

**வரலாறு:** பணடைய பௌத்த நூல்களிலும் கி.பி. 2-ஆம் நூற்றாண்டைச் சேர்ந்த தாலமி யின் குறிப்புகளிலும் மலாயா, சாவா, சுமத்திரா ஆகி யவைபற்றிய செய்திகள் உள்ளன. இவறறின் மூலம் இந்திய வணிகர்களும், பணடஙகளும் இநநாட்டுத் துறைமுகங்களுக்குச் சென்றமை பற்றி அறிய முடி கிறது. சாதகக் கதைகள் போன்றவை 'சுவர்ணபூமி' எனறுசொல்லப்பட்ட இந்த நாடுகளுக்கு இந்தியாகள் கடற்பயணம் செய்தவிவரங்களைத் தெரிவிக்கின்றன. நாடிழந்த சத்திரிய இளவரசர்களும் வணிகர்களும்

பௌத்த சந்நியாசிகளும் பிராமண ஆச்சாரியர்களும் கடல் கடந்து இப்பகுதிகளுக்குச் சென்றனா.

சுமத்திராவில் கி.பி.2-ஆம் நூற்றாண்டு முதல் பல இந்து அரசுகள் இருந்தன. அவற்றுள் மிக முக்கியமானது சிரீவிசயப் பேரரசாகும். இது பின்னர் சைலேந்திரப் பேரரசு என்று கி.பி.8-ஆம் நூற்றாணடு முதல் பெயர் பெற்று மலாயா, சாவா, பாலி, போர்னியோ ஆகியவற்றையும் உளளடக்கி இருந்தது. சைலேந்திரப் பேரரசின் வலிமை, செல்வச் செழிப்பு ஆகியவற்றைப் பற்றி அரேபிய வணிகர்கள வியந்து குறிப்பிட்டுளளனர். சைலேந்திர வமிசத்துப் பேரரசர்கள் இந்தியாவுடனும் சீனாவுடனும் நெருங்கிய உறவு பூண்டிருந்தனர். மகாயான பௌத்தத்தைச் சேர்ந்த இம்மன்னர்களே மத்திய சாவாவில் போரோபுதூரில் உளள புகழ் வாய்ந்த தூபியைக் கட்டினர். இராசேநதிர சோழருக்கும் சைலேந்திரப் பேரரசுககும் கி.பி.11-ஆம் நூற்றாண்டில் ஏற்பட்ட போர்களின் விளைவாக இப்பேரரசு வீழ்ச்சியுறலாயிறறு. இங்கு இந்தியக்கலை, சமசுகிருதக் கல்விமற்றும் இலக்கியம், இந்து சமயச் சடங்குகள ஆகியவை போற்றப்பட்டன. சமசுகிருத நூல்கள பல எழுதப் பட்டன. மகாபாரதமும் இராமாயணமும் இந்தியாவைப் போலவே. இங்கும் பரவலாகப்படிக்கப்பட்டன. அரசருடைய பெயர்கள், பட்டங்கள், அரசவைச் சடங்குகள போன்ற பலவும் இந்தியாவைப் பின்பற்றியவையே.

அடுத்துச் சுமத்திராவில் இசுலாமிய ஆதிக்கம் ஏற்பட்டது. சுமத்திராவிலிருந்து இரு இசுலாமியர்களின் தலைமையில கி.பி. 1281-இல் ஒரு தூதுக்குழு சீன அரசவைக்கு வந்ததாகச் சீனக் குறிப்புகள் தெரிவிக்கின்றன. சீனாவிலிருந்து தாயகம் திரும்பிக் கொண்டிருந்த மார்க்கோபோலோ கி.பி. 1292-இல் வட சுமத்திராவில் பெர்லாக்குத் துறைமுகத்தில் இசுலாமிய வணிகர்களைக் கண்டார். இவர்கள் உள்ளூர் வாசிகளை இசுலாமியாகளாக மாற்றியதையும் இவா கேள்வியுற்றார். அதற்கு அண்மையிலிருந்த சமுத்திர (Samudra) நகரம் இசுலாமிய மன்னரால் ஆளப்பட்டது. சுமத்திராவிலுள்ள பாசை, பெதிர் ஆகிய துறைமுகங்களில் வாழ்ந்தவர்களும் இசுலாமிய மதத்தைத் தழுவினர். ஆனால், இசுலாமிய அரசுகளுக்கிடையில் இடையறாது போர்கள நடைபெறற வண்ணம் இருந்தன. போர்ச்சுகீசியர் வருகையால் இசுலாமிய ஆதிக்கம் சுமத்திராவில் மறையத் தொடங்கியது.

சுமத்திராவிலும் மற்ற இந்தோனேசியத் தீவுகளிலும் இசுலாமைத் தழுவிய மேல் வகுப்பினர் பழைய இந்துச் சட்டங்களையும், பழக்க வழக்கங்களையும் தொடர்ந்து பின்பற்றியே வந்தனர். அரசியல், வாணிக நோக்கங்களே இசுலாமின் வளர்ச்சிக்கு முக்கிய காரணங்களாயிருந்தன. அரசியல், சமயம் ஆகியவறறில் அரசர்களுக்கு அறிவுரை ஆற்றுபவர்களாக இசுலாமியத் தலைவர்கள் பதவி வகித்து, மிகுந்த செல்வாக்குப் பெற்றுத் திகழ்ந்தனர். அதே சமயம் அரசியல் ஒற்றுமைக்கான ஒரு கருவியாக இசுலாம் இயங்கவில்லை.

**சுமத்திராவில் போர்ச்சுகீசியர்கள்:** வட சுமத்திராவில் ஆட்சி செய்து வந்த இசுலாமிய மன்னர்கள் கி.பி. 1511க்கு முன் மலாக்கா அரசிற்குத் திறை செலுத்தி வந்தனர். போர்ச்சுகீசியர் மலாக்காவைக் கைப்பற்றியபின் திறை செலுத்துவது நின்று போயிற்று. மேலும், அத்தகைய சுல்தான்களால் ஆளப்பட்டு வந்த அச்சே, பெதிர், பாசை ஆகிய நகர அரசுகள் சுமத்திராவில் உற்பத்தியான மிளகு, கற்பூரம், தங்கம் ஆகியவற்றை நிறைய ஏற்றுமதி செய்தன. போர்ச்சுகீசியர்கள் இசுலாமிய வணிகர்களிடம் பகைமை பாராட்டியதால், அவர்கள் அனைவரும் இந்நகரங்களுக்கு வந்து வணிகம் செய்தனர். இதைக்கண்டு பொறாமையுற்ற போர்ச்சுகீசியர் பாசைக்கு வெளியில் தங்கள் கப்பல்களை நிறுத்தி எல்லாக் கப்பல்களையும் மலாக்காவிற்குத் திருப்பினர். பாசைச் சுல்தானுக்கு ஆயுத உதவி செய்து, அவரைப் போர்ச்சுக்கீசியர் அமைதிப்படுத்தினர். அதனால், பாசையில் வணிக நிலையமும், கோட்டையும் கட்டுவதற்குப் போர்ச்சுகீசியருக்கு அனுமதி கிடைத்தது. பாசைச் சுல்தான் பதவியிழந்து தவித்தபொழுது, போர்ச்சுகீசியர்கள அவருக்கு உதவி, மறுபடியும் பதவியில் அமர்த்தினர். இதற்குக் கைம்மாறாகப் பெருந்தொகையோடு மிளகு வாணிக உரிமை முழுவதும் போர்ச்சுகீசியருக்குக் கொடுக்கப்பட்டது.

அதேபோல் பெதிரையும் தங்களது கட்டுப்பாட்டின்கீழ்க் கொணடு வருவதற்குப் போர்ச்சுகீசியர் சூழ்ச்சி செய்தனர். இதைக் கண்ட அச்சே நகரச் சுலதான் கி.பி. 1521-இல் தற்காப்புக்காகப் பெதிரைக் கைப்பற்றினார். பெதிர் சுல்தான் பாசைக்குச் சென்று போர்க்சுகீசியரிடம் அடைக்கலம் புகுந்தார். போர்ச்சுகீசியர்கள் இவருக்கு உதவியாக ஒரு படையை அனுப்பினார்கள். அப்படையை அச்சே சுல்தான் தோற்கடித்து கி.பி. 1513-இல் பாசையையும் கைப்பற்றினார். போர்ச்சுகீசியக் கோட்டை முற்றுகையிடப் பட்டது. போர்ச்சுகீசியர்கள் கோட்டையை விட்டு விட்டு மலாக்காவிற்குப் பின்வாங்கினர். வடசுமத்திராவில் போர்ச்சுகீசியர்கள் இவ்வாறு தோல்வியுற்றனர்.

பிறகு அச்சேயுக்கும் சோகூர் அரசுக்குமிடையே ஆதிக்கப்போட்டி ஏறபட்டது. தம் பகைவர்கள தமககுள் போட்டியிட்டதால், போர்ச்சுகீசியருககு நன்மை ஏறபட்டது. சோகூரும் அச்சேயும் மலாக்காவைத் தனித்தனியே தாக்கித் தோலவியுற்றன. சோகூர், அசசே, போர்ச்சுகீசியர் ஆகிய மூவரும் கி.பி. 16-ஆம் நூற்றாண்டு முழுவதும் ஒருவரோடு ஒருவர் போர் புரிந்தனர். அச்சே படைகள் கி.பி. 1571-இல் மலாக்காவைக் கைப்பற்றின. ஆயினும், கோட்டை போர்ச்சுகீசிய படைகள் வசமே இருந்தது. இடைவிடாத இப்போர்களால போர்ச்சுகீசியருககு மிக்க அளவில் பொருட்சேதமும ஆட்சேதமும் ஏற்பட்டன. அவர்களது வாணிகமும் குன்றியது. போர்ச்சுகீசியர் வீழ்ச்சி சுமத்திராவிலும் மற்றத் தீவுகளிலும் தொடங்கியது.

**சுமத்திராவில் தச்சுக்காரர்கள்:** தொடக்கத்தில் நறுமணப் பொருள்கள் விளையும் தீவுகளுககே சென்ற தச்சுக்காரர்கள் சுமத்திராவை முக்கியமான தாகக் கருதவில்லை. சுமத்திரா நெடுங்காலம் வரை தச்சுக்காரர்களின் பிடியில் அகப்படாமல் சுதந்திரமாகவே இருந்து வந்தது.

**சுமத்திராவில் ஆங்கிலேயர்கள்:** சுமத்திராவின் தென்மேற்குக் கரையில் பென்கூலன் என்ற இடத்தில், மிளகு வாணிகத்திற்கென ஒரு வாணிக நிலையத்தை கி.பி. 1685-முதல் ஆங்கிலேயக் கிழக்கிந்தியக் குழு பெற்றிருந்தது. அவ்விடத்தில் கி.பி. 1714-இல் ஆஙகிலேயர்கள் மாலபரோக்கு என்ற கோட்டையைக் கட்டினர். வேறு சில இடங்களில் சிறு சிறு வாணிக நிலையங்களையும் ஆங்கிலேயர் பெற்றிருந்தனர். இந்தியாவிலிருந்து கொண்டுவரப்பட்ட குற்றவாளிகளை வைத்து மிளகுத் தோட்டங்களையும் ஆஙகிலக் குழு வளர்த்து வந்தது. ஐரோப்பாவில் ஏழாண்டுப் போர் (1756-1763) நடைபெற்றபொழுது பிரெஞ்சுக் கப்பற்படை ஒன்று வந்து சுமத்திராவின் பென்கூலன் முதலிய எல்லா இடங்களிலிருந்தும் ஆங்கிலேயர்களை விரட்டிற்று. நெப்போலியன் ஆலந்து(Holland) நாட்டைக் கைப்பற்றியபொழுது, தச்சுக் (Dutch) குடியேற்றங்களான சுமத்திரா, அம்பாயினா, பண்படாத தீவுகள் போன்ற பல இடங்களை ஆங்கிலேயர் எளிதில் கைப்பற்றினர். ஆலந்தில் கி.பி. 1813-இல் நெப்போலியனின் ஆட்சி முடிவுக்கு வந்தது. ஆஙகிலோ-தச்சு ஒப்பந்தத்தின்படி பெரும்பாலான தச்சுக் குடியேற்றங்கள் திருப்பித் தரப்பட்டன. பென்கூலனை ஆங்கிலேயர்கள தச்சுக்காரர்களிடம் கொடுத்துவிட்டு மலாக்காவைப் பெற்றனர்.

சப்பானியப் படைகள் 1942-இல் சுமத்திராவைக் கைப்பற்றின; தச்சு ஆதிக்கம் அழிந்தது. சுகர்னோ போன்ற தலைவர்கள சப்பானியர்களோடு சேர்ந்து செயறபட்டுத் தஙகள் கட்சியை வலிமைப் படுத்தினர். மற்றத் தலைவர்கள் தலைமறைவாகி, இரகசியமாகப் படை திரட்டினர். இப்படைக்குக் கொரில்லாப் பயிற்சியளிககப்பட்டது.

சப்பானியர் இந்தோனேசிய அதிகாரிகளின் தலைமையிலேயே இராணுவத்தைத் திரட்டினர். சுதேசிகளைக் கொடுமை செய்து அவர்களின் உற்பத்திகளையும் செல்வத்தையும் பறித்தனர். ஆயிரக் கணக்கான சுதேசிகள் அடிமை வேலை செய்வதற்காகக் கப்பல்களில் அனுப்பப்பட்டனர். இவற்றை எதிர்த்த கொரில்லாக்கள 1944-45-இல் நூற்றுக் கணக்கான சப்பானியர்களைக் கொன்றனர். சப்பானின் தோல்வி 1944-இல் தொடங்கிற்று. முதல் அணுக்குண்டு போடப்பட்டதும், தென்கிழக்குப் பகுதியின் சப்பானியத் தலைமைத் தளபதி, சுகர்னோவைச் சைகோனுக்கு அழைத்தார். அங்கு இந்தோனேசியாவிற்குச் சுதந்திரம் அளிப்பதாக 1945-இல் கூறினார். இந்தோனேசியத் தலைவர்கள் சுதந்திரத்திற்குத் தேவையான ஏற்பாடுகளைச் செய்யும் குழுவொன்றினை அமைத்தனர். சப்பானின் சரணாகதி எந்நிமிடமும் அறிவிக்கப்படலாம் என்பதை உணர்ந்த இக்குழு இந்தோனேசியாவின் சுதந்திரத்தை அறிவிப்புச் செய்து குடியரசை நிறுவிற்று. இந்தோனேசியாவுக்கு முழுச் சுதந்திரம் அளிக்கமுடியாது என்றும், நெதர்லாந்து அரசின் ஓர் அங்கமாக அதை ஆக்குவதே தங்களால் தரக்கூடிய சலுகை என்றும் தச்சு அரசு (Dutch Govt.) அறிவித்தது. இதை இந்தோனேசிய அரசு மறுத்தது. உடனே தச்சு இங்கிலாந்தின் உதவியுடன் இந்தோனேசியாவைத் தாக்கியது. இந்தோனேசியத் தலைவர்கள் நெதர்லாந்திற்குச் சென்று பேச்சுவார்த்தைகள நடத்திச் சமரச முடிவு செய்து கொண்டனர். அதன்படி சுமத்திரா, சாவா, மதுரா ஆகியவற்றை இந்தோனேசிய அரசு ஆளுவது என்றும், மற்ற இடங்களைத் தச்சுக் காராகள் நிருவாகம் செய்வது என்றும், பிறகு நெதர்லாந்து-இந்தோனேசிய ஐக்கிய அரசு உருவாக்கப்படும் எனறும் முடிவாயிற்று.

உடனே, தச்சு அரசு சூழ்ச்சிகளில் ஈடுபட்டது. ஐக்கிய அரசு ஏற்படும் வரை, குடியரசின் பகுதிகள் தச்சு அரசிடம் ஒப்படைக்கப்பட வேண்டுமெனத் தச்சு அரசு வற்புறுத்தியது. இதைக் குடியரசு ஏற்க மறுத்தது. தச்சுப்படைகள் போர் தொடங்கின. ஆங்கிலேய அரசு தச்சு அரசை ஆதரித்தது. தச்சுக் காரர்கள் சுமத்திரா, சாவா, மதுரா அனைத்தையும்

தாக்கினர். இந்தியாவும் பிற நாடுகளும் தச்சு ஆக்கிரமிப்பை எதிர்த்து ஐ.நா. பாதுகாப்புச் சபையைக் கூட்டுமாறு செய்தன. போர் நிறுத்த ஒப்பநதத்திற்கு ஏற்பாடு செய்யப்பட்டது. ஆனால், தச்சுத் துருப்புகள் தொடர்ந்து போரை நடத்தின இந்தோனேசியா முழுவதையும் 1948-இல் தச்சுக்காரர்கள் கைப்பற்றினர்.

தச்சு ஆக்கிரமிப்பைக் கண்டு ஆசிய நாடுகள் கொதித்தெழுந்தன. இந்தியப் பிரதமர் சவகர்லால் நேரு 1947-இல ஆசிய நாடுகளின் மாநாடு ஒன்றை தில்லியில் கூட்டினார். தச்சு ஆக்கிரமிப்பை அம் மாநாடு வன்மையாகக் கண்டித்தது. ஆசிய நாடுகள் 1949-இல் மீணடும் தில்லியில் கூடி அடுத்த நடவடிக்கைகள் பற்றி ஆராய்ந்தன. ஐ.நா.வில் ஆசிய நாடுகளும், பொதுவுடைமை நாடுகளும் தச்சுத் துருப்புகள் உடனே விலக வேண்டுமெனக் கூறின. சுகர்னோவையும் மற்றத் தலைவர்களையும் விடுவித்துக் குடியரசின தலைநகரை அவர்களிடம் தச்சுக்காரர்கள் விட்டுவிட வேண்டும் என ஐ நா. தீர்மானம் இயற்றிற்று. அனைவரது ஆதரவையும் இழந்த தச்சுக்காரர்கள இதை ஏற்று வட்டமேசை மாநாடு ஒனறை 1949-இல் கூட்டினர். அதிகார மாற்றம் குறித்து ஒப்பந்தம் கையெழுத்தாயிற்று. சுகர்னோ இவ்வரசின் குடியரசுத் தலைவராகப் பதவி ஏற்றார். வலுக்கட்டாயமாக இந்த அமைப்பு உருவானதால் மக்கள் இதை விரும்பவில்லை. எனவே, 1950-இல தச்சு நாட்டுடன் எல்லா உறவுகளையும் அறுத்துக் கொண்டு இந்தோனேசியக் குடியரசு என்ற பெயரில் ஒற்றையாட்சி (Unitary State) நிறுவப்பட்டது. தொடக்கத்தில் இவ்வரசு பல இடையூறுகளை எதிர் கொள்ள வேண்டியிருநதது. தச்சு ஆட்சியின்போது சாவாவைத் தவிர மற்றத் தீவுகள் முன்னேறவில்லை. சுமத்திராவிலும் மற்றத் தீவுகளிலும் நிலச்சுவான் தாரகளும், பிற்போக்குவாதிகளும் தச்சு ஆதரவோடு கிளர்ச்சிகளைத் தொடங்கினர். தசசு ஆட்சியில் நெல் விளையும் நிலஙகளெல்லாம் கரும்புத்தோட்டங்களாக மாற்றப்பட்டதால், சுதந்திரத்திற்குப் பின பெரும் அளவில் அரிசியை இறக்குமதி செய்ய வேணடியதாயிற்று. அதற்குத் தேவையான அநநியச் செலாவணி இல்லை. இந்தோனேசிய ஏற்றுமதிப் பொருளகளான சர்க்கரை, இரப்பர், தேங்காய், தேயிலை போன்ற பொருள்களின் விலை 1952-க்குப்பின குறைந்து போனதால் நிலைமை பெரிதும் பாதிககப்பட்டது.

இந்நிலையில் வல்லரசு நாடுகளாகிய அமெரிக்கா, இங்கிலாந்து போன்ற நாடுகள் சேர்ந்து, தென்கிழக காசிய இராணுவ ஒப்பந்தத்தைச் செய்து கொணடன. ஆசிய சுதந்திரத்திற்கு இநத ஒப்பந்தம் ஓர் ஆபத்து என அதிபர் சுகர்னோ கூறி மறுத்தார். அதற்கு மாறாக இந்தியா, பர்மா, எகிப்து போன்ற நாடுகளோடு இணைந்து, நடுநிலைக் கொள்கையையும், கூட்டுச் சேராக் கொளகையையும், ஆதரித்தார். வரலாறு முக்கியத்துவம் வாய்ந்த ஆசிய-ஆப்பிரிகக மாநாடு ஒன்றை 1955-இல் பாணடுங்கில் சுகானோ கூட்டினார். பஞ்சசீலக் கொள்கையும், உலக நாடுகளுக்கிடையில் சமாதான சகவாழவும் இம்மாநாட்டில் வலியுறுத்தப்பட்டன. கூட்டுச்சேராக் கொள்கையை அமெரிககா தரக்குறைவாகப் பேசிற்று. தன்னுடன் சேராத நாடுகளைக் கவிழப்பதற்கென்று அமெரிக்க மத்திய வேவு நிறுவனம்(CIA)போனறவை நிறுவப்பட்டன. அரசியல் பொருளாதாரக் குழப்பங்கள் நிறைந்திருந்த இந்தோனேசியா இவற்றிற்கு மிகவும் இலக்காயிற்று.

குடியரசுக்கு எதிராகச் சுமத்திரா, போர்னியோ தீவுகளில் கிளர்ச்சிகள் நடநதன. சுமத்திராவில் 1958-இல் ஒரு போட்டி அரசே அமைக்கப்பட்டது. இதற்கெல்லாம் தச்சுக்காராகளின ஆதரவுதான் காரணம் என்றறிந்த அதிபர் சுகர்னோ தச்சுக்காரர் அனைவரையும் வெளியேற்றினார். பின குடியரசு பலப்படுத்தப்பட்டது. சுமத்திரா குடியரசின ஒரு பாகமாகவிருந்து செயற்படுகிறது.

சுமத்திரா தீவு ஆறு மாநிலங்களைக் கொணடுளளது. அட்சேய், சுமிததிர உத்தரா (வட சுமத்திரா), சாம்பி, இரையாவு, சுமித்திரா பாரத்து (மேற்குச சுமத திரா) சுமத்திரா, செலாடான் (தென் சுமத்திரா) என பது அம்மாநிலங்களின் பெயர்களாகும். இப்போதைய முக்கிய நகரங்கள் பலம்பார்க்கு, மேதான, பெதாஙகு (Pedang) ஆகியவையாகும். இங்கு 150 ச.கி.மீக்கு 400 மக்கள வசிக்கின்றனர். சாவாவில் மக்கள்நெருக்கத்தைக் குறைக்க அங்கிருந்து, தென சுமத்திராவிலுளள இலாம்பங்கு மாவட்டத்திற்கு மக்கள குடியேறுகின்றனர் ஏறத்தாழ 90% மக்கள கிராமப்புறங்களில் வாழ்கின்றனர். சுமத்திராவில் இரப்பர், புகையிலை, தேயிலை, காப்பி, பனை எணணெய், தேங்காய், வெற்றிலை, நிலக்கடலை, மிளகு போன்ற பொருளகள் ஏற்றுமதிக்காக உறபத்தி செய்யப்படுகின்றன. அரிசி, கிழங்குகள, சோளம போன்ற தானியவகைகள், காய்கறிகள் ஆகிய பொருள்கள் பிழைப்பிற்காதார மான பொருளகளாகும். இந்தோனேசியாவின் மூன றில் ஒரு பங்கு மரம் சுமத்திராவின் காடுகளிலிருந்து கிடைக்கிறது. எண்ணெய் வித்துகளும், நல்ல நாரகளைக் கொணட மரப்பட்டைகளும் சுமத்திரா விலுள்ள காடுகளில் கிடைக்கின்றன.

வடகிழக்குச் சுமத்திராவிலும், பெடாங்கு மேட்டு நிலப்பகுதியிலும், தென்சுமத்திராவிலும் பாதை அமைப்புச் சீராக அமைந்துள்ளது. இருந்தபோதிலும், ஆறுகளும் மலைப்பாதைகளும் எங்கணும் பயன் படுத்தப்படுகின்றன. வட சுமத்திராவிலும், மத்திய சுமத்திராவிலும், தென் சுமத்திராவிலும் இரயில் பாதைத் திட்டம் சீராகச் செயற்படுகிறது.

பலம்பார்க்கு பெட்ரோலும், அதுசம்பந்தப்பட்ட பொருள்களும் ஏற்றுமதி செய்யும் முக்கிய துறைமுக மாகும். இந்தோனேசிய விமானப் போக்குவரத்து முக்கிய நகரங்களை இணைக்கிறது. மெரான் நகரில் செட்டு(Jets) விமானங்கள் இறங்க வசதியுண்டு.

மக்களுக்கு வேலைவாய்ப்புத் தரக்கூடிய கொள் கைகளைச் சுமத்திரா அரசு வகுக்கிறது; மத்திய அர சிடமிருந்தும் உதவியை எதிர்பார்க்கிறது. சுமத்திரா வின் இயற்கையமைப்பையும், செல்வத்தையும், மக்களது விருப்பத்தையும் அனுசரித்து நாடு முன் னேறச்சுமத்திரா அரசு முயற்சி செய்து கொண்டிருக் கிறது. கி.பி.

**சுமர்** மெசபடோமியாவில் யூப்ரடிசு, தைகிரிசு ஆறுகளுக்கு இடையில் இருந்த தொன்மையான நாகரிகப் பகுதி. சுமர் (Sumer) பின்னர் பாபி லோனியா எனக் கூறப்பட்டது. இது இன்றைய இராக்கில் பாக்தாத்திற்கும் பாரசீக வளைகுடாவிற் கும் இடையில் உள்ள பகுதியாகும். சுமர் நகரில் செமிட்டிக்கு இனம் அல்லாத மக்கள் கி.மு.4500க்கும் 4000க்கும் இடைப்பட்ட காலத்தில் முதன்முதலில் குடியேறினர். இவர்களுக்குச் சுமேரியமொழி தெரி யாது. இவர்களை உபையதியர் (Ubaidians) என்று கூறுகின்றனர். உபையது என்ற இடத்தில் இம்மக்கள் முதன்முதலில் வசித்ததால் இப்பெயர் பெற்றனர். சுமரில் குடியேறிய இம்மக்கள் வேளாண்மையைச் செய்து கொண்டிருந்தனர். இவர்கள் உலோக வேலைப்பாடுகளையும் அறிந்திருந்தனர்.

சுமேரியர் எனக் குறிக்கப்படும் மக்கள் இப்பகுதி யில் அனடோலியாவிலிருந்து குடியேறினர். இவர்கள் ஏறக்குறைய கி.மு. 3000-இல் 12 நகர அரசுகளைப் பெற்றுத் திகழ்ந்தனர். அவற்றுள் குறிப்பிடத்தக் கவை கிசு (Kish), ஊர் (Ur), சிப்பர் (Sippar), நிப்பூர் (Nippur), இலாகேசு (Lagash), இலார்சா (Larsa) ஆகியவை ஆகும். ஒவ்வொரு நகரமும் மதில்களைப்பெற்று விளங்கிற்று. இந்நகரங்களைச் சுற்றிச் சிறு ஊர்களும் நிலங்களும் இருந்தன. ஒவ் வொரு நகரத்திற்கும் நகரக் கடவுள் தனித்தனியாக இருந்தது. இக்கடவுளின் கோயில் நகரின் மையத்தில் இருந்தது. நகர அரசுகளுக்கு இடையே சச்சரவுகளும் அடிக்கடி ஏற்பட்டன. ஒவ்வொரு நகர அரசும் முடி யாட்சியைப் பெற்றுத் திகழ்ந்தது. சுமர் பகுதியைப் பெருவெள்ளம் ஒன்று அழித்தது. அதனால் பல நகர அரசுகள் அழிந்தன. மீண்டும் தோன்றிய நகர அரசு களை ஒருங்கிணைத்தவர் அரசர் ஈடண்ணா(Etanna) ஆவார். அவர் கிசு (Kish)நகர அரசின் அரசராவார். இப்பகுதியைப் பின்னர் ஈலாமியர்களும் (கி.மு. 2530-கி.மு.2450) அக்காடியர்களும் (கி.மு.2350-கி.மு. 2250)படையெடுத்துத் தங்கள் ஆதிக்கத்திற்குக் கொண்டுவந்தனர். இவ்வழிவந்த சார்கோன் மரபு அரசர்கள் சுமரை ஏறக்குறைய 100ஆண்டுகள் ஆட்சி செய்தனர். இம்மரபிற்குப் பின்னர், நாடோடி இன மக்கள் இப்பகுதியை அழித்தனர்.அதற்குபின் மீண்டும் நகர அரசுகள் தனித்துச் செயற்பட்டன. ஊர் நகர அரசை ஆண்ட ஊர் மன்னர் காலத்தில் சுமர் பகுதி செழித்தோங்கியது. இவர் தொன்மையான சட்டத் தொகுப்பு ஒன்றை வெளியிட்டார்.

மெசபடோமியப் பகுதியை கி.மு. 1900ஆம் ஆண் டளவில் ஆமோரைட்டுகள் கைப்பற்றினர். சுமேரியர் கள் தங்களின் சுதந்திரத்தை அக்காலத்தில் இழந்த னர். சுமர் பகுதியில் வசித்த சுமேரியர்கள் உலகிற்குப் பல அறிவியற் கருத்துகளையும் நுட்பங்களையும் விட் டுச் சென்றுள்ளனர். அவற்றுள் குறிப்பிடத்தக்கவை சக்கரம் பூட்டப்பட்ட வண்டி, மட்கலன் செய்யும் சக்கரம், ஆப்பு வடிவ எழுத்துமுறை, சட்டத் தொகுப்பு, முதல் நகர அரசுகள் ஆகியனவாகும். சு.இரா.

**சுமித்சோனியன் ஒப்பந்தங்கள்:** அமெரிக் காவில் 1960ஐச் சேர்ந்த ஆண்டுகளில் விலைகள் மிகுந்து சென்றதால் பணவீக்கம் தோன்றியது. வியட் நாம் போர் (Vietnam War) இந் நிலையை மிகவும் முனைப்பாக்கியது. அமெரிக்காவின் குடியரசுத் தலைவர்களாக இருந்த சான்சன் (Johnson), நிக்சன் (Nixon) ஆகியோர் அமெரிக்காவில் போர்ச் செலவி னால் ஏற்பட்ட பொதுச் செலவுப் பெருக்கத்தை மிகுதியான அளவிலான வரி விதிப்பின் மூலம் ஈடு செய்யாமல் பிற வகைப் பணக் கொள்கைகளைக் கையாண்டு சமாளிக்க முயன்றனர். அதனால் அமெரிக்காவில் பணவீக்கம் பன்மடங்கு பெருகியது. இப் பணவீக்க நிலையும் அதனால் தோன்றக் கூடிய அயற் செலாவணி மாற்றங்களும் தங்கள் நாடுகளின் பொருளாதாரங்களுக்கு ஊறுவிளைவித்து விடலாம் என்று அஞ்சிய ஐரோப்பிய நாடுகளைச் சார்ந்தோர் இந்நிலை தொடர்ந்து செல்வதை விரும்பவில்லை; குறிப்பாக வியட்நாம் போரில் அமெரிக்காவின் தீவிர மான ஈடுபாட்டை அவை விரும்பவில்லை.

அமெரிக்காவில் 1970-இல் பொருளாதாரப் பின்னிறக்கம் (Economic Recession) தோன்றியது. வட்டி விகிதத்தைக் குறைத்து நிலையைச் சரி செய்ய நிக்சன் நிருவாகம் முயற்சிகளை மேற்கொண்டது. அக்காலத்தில் ஐரோப்பாவில் இருந்த நாடுகளும், குறிப்பாக, மேற்குச் செருமனியும (West Germany)இறுக்கமான பணக் கொள்கைகளைக் (Strict Monetary Policies) கையாளுவதன் மூலம் உள்நாட்டுப் பணவீக்கத்தைத் தடுக்க முயன்று வந்தன. அதனால் தாலர் பெருமளவில் வெளியேறத் தொடங்கி 1971-ஆம ஆண்டில் உச்ச நிலையை அடைந்தது. எனவே, 1971-ஆம் ஆண்டு அமெரிக்கக் குடியரசுத தலைவர் நிக்சன் அதுவரை தங்கமாக மாற்றத் தக்கதாக இருந்த தாலரின் நிலையைத் தங்கமாக மாற்றத் தக்கதன்று (Inconvertibility of dollar into gold) என்றுஅறிவித தார்.

உறுதியின்மை நிலை 1971க்குப் பின் இருந்து வந்தது. பிற நாடுகளில இருந்த அமெரிக்கர்கள் அவர் தம வசம்இருந்த தாலரை மாற்ற இயலாமல் அவதியுற்றனர். தொழில துறையில வளர்ச்சியுற்றிருநத நாடுகளில் சப்பானைத் தவிரப் பிற நாடுகள் அவற்றின் செலாவணியின் மதிப்பை மிதக்க விட்டுவிட்டன (Floating the Currencies). அதாவது, நாணயத்தின் அயற் செலாவணி மதிப்பை அங்காடி அவ்வப் போது நிருணயிக்கும்படி விட்டு விட்டன. சப்பான் நாடும் அதன் செலாவணியான 'யென்னின்' மதிப்பை நிலை நிறுத்த முயன்று அம் முயற்சி தோலவியுற்ற தால் 'யெனனையும்' மிதக்க விட்டு விட்டது.

அடுத்து வநத ஒருசில திங்கள்களில் பன்னாடடு அயற்செலாவணி மதிப்புகளில் பல நிலைகள் தோன்றின. பலவிதமான கட்டுப்பாடுகளும் அதிகாரிகளின் தலையீடுகளும் பெருகின. அதன் விளைவாக எல்லா நாடுகளும் ஒன்றுகூடி நிலையானதொரு நிலையை உருவாக்க விரும்பின; தங்கத்தின் மதிப்பு அடிப்படையில் தாலரின் மதிப்பைக் குறைக்க வேண்டும் என்று வற்புறுத்தத் தொடங்கின. நாணய மதிப்பைக் குறைத்தல் என்ற கருத்தை முதலில் அமெரிக்கா விரும்பவில்லை. விரும்பவில்லை என்ப தோடு பிற நாடுகள அவற்றின் செலாவணிகளின் அயற் செலாவணி மதிப்பை அதிகரித்துக் கொள்ளலாம் என்றும் குறிப்பிட்டது. இறுதியாகப் பண சம்பந்தமான செய்திகளை மட்டும் ஆய்ந்து ஒரு முடிவை மேற்கொள்ளும் நோக்கத்துடன் வாசிங்டனில் (Washington)உள்ள சுமித்சோனியன் நிலையத்தில் (சேம்சு சுமித்சன் (James Smithson) என்ற ஆஙகிலேயரால் நன்கொடையாகக் கொடுக்கப்பட்ட சொத்திலிருந்து வாசிஙடனில் தோற்றுவிக்கப்பட்ட கல்வி நிலையம்) பத்து நாடுகள் குழு (Group of Ten Countries) என்று சொல்லப்படும் அமெரிக்கா, இங்கிலாநது, மேற்குச்செருமனி, பிரானசு, பெலசியம, நெதாலாந்து, இத்தாலி, சுவீடன, கனடா, சப்பான ஆகிய நாடுகள 1971-ஆம ஆணடு ஒனறுகூடி ஓர் ஒப்பந்தததை நிறைவேற்றின. இவவொப்பந்தம சுமித்சோனியன் ஒப்பந்தம எனப்படுகிறது.

இநத ஒப்பந்தத்தின்படி 1. ஏழு நாடுகள அவற்றின் செலாவணியைத் தஙகம், சிறப்பு எடுப்பு உரிமை (Special Drawing Rights-SDR'S) ஆகியவற்றின மதிப்பிற்கேற்ப மறுமதிபபுச செய்துகொள்வதெனறு ஒப்புக கொளளப்பட்டது. அமெரிக்கா அதன தாலர மதிப்பைக் குறைததுக் கொளவதெனறும், சுவீடன (Sweden) அதன குரோனா (Swedish Krona) மதிப்பையும் இத்தாலி அதன இலிரா (Lira) மதிப்பையும ஓரளவுககுக குறைப்பதெனறும மறறு நானகு நாடுகள் அவற்றின செலாவணிகளின மதிப்பைப் பல அளவுகளில் அதிகரிப்பதெனறும் ஒப்புக் கொளளப பட்டது. மேலும். 2. ஒப்பநதத்திறகு முன்பு $\pm$ 1 சதவீதமாக இருநத அளவை $\pm$ 2.25 சதவீதமாக மாற்றுவதெனறும் ஒப்புக் கொள்ளப்பட்டது. இநத ஒப்பநதத்தின விளைவாக அயற் செலாவணி அஙகாடியில் உறுதித் தனமையைப் பெறலாம் என்ற நமபிககையும் தோன்றியது. ஆனால், அமெரிக்கா அதன தாலரின மதிப்பை 8 விழுக்காடு அளவுக்குக் குறைத்தது; சப்பான (Japan) அதன் 'யென்'னின்' மதிப்பை 17 விழுக்காடு அளவுக்கு அதிகரித்தது; செருமனி (Germany) அதன் 'மார்க்'கின மதிப்பை 14 விழுககாடு அளவுக்கு அதிகரித்தது

'உலக வரலாறறில் இப் பண ஒப்பந்தம் மிகவும் இன்றியமையாததாகத் திகழும்' எனறு அமெரிக்கக் குடியரசுத் தலைவர் நிக்சன் இந்த ஒப்பந்தத்தைப பாராட்டினார். ஆனால் 'இநத ஒப்பநதம் நீணட கால அளவில் நிலைத்திருக்காது எனபதே இநத ஒப பந்தததின இனறியமையாத இயல்பு'என 'இலணடன எக்கனாமிசுட்டு' (London Economist) என்ற ஏடு குறிப்பிட்டது 'இலணடன எக்கனாமிசுட்டு' குறிப பிட்டது மெய்யாகி விட்டது. ஒப்பந்தம் முடிந்த ஆறு மாதஙகளுக்குள்ளாக இங்கிலாந்து அதன் செலாவணியான 'பவுனை' மிதக்க விட்டு விட்டது. அமெரிக்கா தாலரின் மதிபபை 1973-ஆம ஆண்டு மேலும் 10 விழுக்காடு அளவுக்குக குறைத்து விட்டது. இதன விளைவாகச் சுவிட்சர்லாநது, இத்தாலி, சப்பான ஆகிய நாடுகளும அவறறின் அயறசெலாவணி மதிப்பை மிதக்க விட்டு விடடன. மொத்தத்தில இவவொப்பநதம் பதினான்கு மாதங்களே செயறபடுத்தப்பட்டது.

என்.எஸ பா.

துணைநூல்கள்

Bu Soderson, International Economics, Macmillan, London, 1983.

Sundaram & Sudaura Singh, International Economics, Oxford & IBH Publishing Co., NewDelhi, 1983.

Thingan, M L., International Economics, Konarh Publications, New Delhi, 1986.

*சுமித்திரை*: சுமித்ரா (சு+மித்ரா) என்பதன் வடசொல் ஆக்கமே சுமித்திரை என்னும் பெயர் ஆகும். இப்பெயர்ச்சொல் நட்புக்கு உரியவள், நல்ல வள், இனசொல்லினள் எனப் பல பொருள் கொண் டது. இத்தகு நன்னலம் பல வாய்க்கப்பெற்ற சுமித் திரை என்பாள் மாமன்னர் தசரதரின் சிறப்பான மனைவியர் மூவருள் ஒருத்தி. இலக்குவன, சத்துருக் கனன ஆகியோரின தாய் இவள. இலக்குவன் இரா மனுக்குத் தொண்டனாகவும் சத்துருக்கனன பரத னுசகுத் துணையாகவும், வாழந்ததை இராமாயணம் வழி அறியலாம். பகவத் கைங்கரியச் சீர்மையை உணர்த்தும் இலக்குவனையும், பாகவத கைங்கரியப் பெருமையை உணாத்தும சத்துருக்கனனையும் உல குக்கு ஈந்ததனால் வைணவத் தத்துவம் இரண்டுககும் தாயாகவும் இவளைக் கொள்ளலாம். பொன்.சௌ.

*சுமித்து, சர் தாமசு*: இங்கிலாநதில் இசு டுவர்ட்டு (Stuarts) அரசர்களுக்கும், ஆங்கிலப் பாராளு மன்றத்துக்குமிடையே, தலைமை அதிகாரம் பற்றி கி.பி. 17-ஆம் நூற்றாண்டில் ஓர் உளநாட்டுப் போர் நடந்தது. அப்போருக்கு முன்னோடியாகப் பல கருத்துகள ஆஙகில அரசியலமைப்பைப் பறறி எழுதப் பட்டன. கி பி. 16-ஆம் நூற்றாண்டில் ஆஙகில அரசிய லமைப்பைப் பற்றிச சில கருத்துகளை எழுதிய ஆங கிலச சிந்தனையாளரே சுமித்து சர் தாமசு (Smith, Sir Thomas) ஆவார். இவருடைய கருத்துகள கி.பி. 17-ஆம் நூற்றாணடின தொடக்கத்தில் அரசருக்கும் பாராளுமனறததிற்கும் இடையே ஏறபட்ட பூசலின போது மேறகோளாக எடுத்தாளப்பட்டன.

**சுமித்தின் கருத்துகள்:** ஆங்கில அரசருக் கும், பாராளுமன்றததுககும் நீதி மன்றங்களுக்கும் பண்டையவழக்கததின்படி சில அதிகாரங்கள் உரியன. ஒவ்வொனறும் தனது உரிமை வரம்புக்குள், தன் முயற்சியாலேயே செயலாற்றிற்று. தலைமை அதி காரம் என்பது நாடு முழுவதிலுமே இருநதது; அது தனியாக எநத ஓர் அரசாஙக உறுப்பிலும் இல்லை. ஆஙகில அரசாஙகத்தில் செய்யப்படுகின்ற ஒவ்வொரு செயலுக்கும் அதிகாரி அரசரே ஆவார். அதே சமயத் தில் நாட்டின் உயர்தர, முழுமையான அதிகார முடை யது பாராளுமன்றமாகும். அதன் உதவியோ ஒப்பு தலோ இல்லாமல் அரசரால் மட்டுமே செய்யப்படக் கூடிய சில பொறுப்புகளிருக்கின்றன. அதேபோல் பாராளுமன்றத்தால் மட்டுமே செய்யக்கூடிய சில பொறுப்புகளுமிருக்கின்றன. எதனை அரசர் செய்தல் வேண்டும், எதனைப் பாராளுமன்றம் செய்தல் வேண்டுமென்று நாட்டின் வழக்கம் (Custom) தான் தீர்மானிக்கிறது. ஆங்கில நாட்டின் அரசியலமைப்பு பல நீதிமன்றங்கள் சேர்ந்த ஓர் அரசியலமைப்பே ஆகும். இவ்வரசியலமைப்பில் பாராளுமன்றமும் நாட்டின் உயர்தர நீதிமன்றமாகும். ஆகையால பாராளுமன்றத்தின் முடிவை அல்லது தீர்ப்பை நாட்டின் வேறு எந்த நீதிமன்றமும் மாற்றுதல் செய் யாது. பாராளுமன்றம், தனியார்களுககிடையே எழும் வழக்குகளைப் பற்றிக் கவனிப்பதில்லை; எனி னும், அது முக்கியமாக ஒரு நீதிமன்றமே ஆகும். சட்டம் செய்வதற்கும், சட்டத்தை விளக்கித் தீர்ப் புக் கூறுவதற்கும் வேறுபாடு இல்லை. நாட்டின் தலைமை அதிகாரமானது, நாடுமுழுவதிலும், அதன் சட்டத்தில் இருக்கிறது; அதுவே அரசருக்கும், பல் வேறு நீதிமன்றங்களுக்கும் அவரவர்க்குரிய அதிகாரங களை வழங்கி, அவையெல்லாம் ஒன்றுபட்டியங்குதல் வேணடுமென்ற நோக்கத்திலும் இருக்கிறது. பா.சு.

துணைநூல்கள்:

Allen, J.W., A History of Political Thought in the Sixteenth Century, London, 1951.

Gough, J.W., Fundamental Law in English Constitutional History, Oxford, 1955.

*சுமேரியா*: சுமேரிய நாகரிகம் மிகப் பழமை யானது. இது செமிட்டிச்சு, பாபிலோனிய, அசிரிய நாகரிகங்களுக்கும் முற்பட்டது. இதனை மெச படோமியா நாகரிகம் எனவும் கூறுவர். நீர்தேக் கத்தினுள் எவ்வாறு நீரானது சென்று நிரம்புகின் றதோ அதைப்போனறு பலஇனத்தினர் மெசம்படோ மியாவில் வந்து குடியேறினர். அவர்களுள் சுமேரி யர்களே மிகப் பழமையானவர்களும முதன்மையான வர்களுமாவர்.

இங்குக் குடியேறியவர்கள எந்த இனத்தைச் சார்ந்தவர்கள் என அறுதியிட்டுக் கூற முடியாது. இவர்கள் மத்திய தரைக்கடலின் (Mediterraneanl), அல்பைன் பகுதியைச் சார்ந்தவர்களுமல்லர்; செமிட் டிக்கு இனததினருமல்லர். இன அடிப்படையில பார்க்குமிடத்து, மத்திய தரைப் பகுதியைச் சார்நத

வர் போல் தெரிகிறது. இன அடிப்படையில், சிந்து நதிப்பகுதியில் வாழ்ந்த மக்களும், சுமேரியர்களும் மிக நெருக்கமுடையவர்கள் எனக் கூறுவாரும் உளர். இவர்கள் கறுப்பு வெள்ளை நிறம் கொண்டவர்கள். எங்கிருந்து இவர்கள் வந்திருப்பினும் கி மு.4000 ஆண்டில் சுமர் என்ற பகுதியில் குடியேறியவர்கள் என்பது தெளிவாகின்றது. எனவே, இவர்கள் சுமேரியர்கள் என வழங்கப்பட்டனர்.



சுமேரிய நாகரிகத்தின் எச்சங்கள்

சுமேரியாவில் நகர அரசுகள் காணப்பட்டன. அந்நகரங்களுள் பெரியவை இலாகாசு, உம்மா, நிப்பூர என்பவைகளாகும். ஒவ்வொரு நகர அரசிற்கும் அரசர் ஒருவர் இருந்தார். அரசரின் குத்தகையானது ஒவ்வோர் ஆணடும் திருவிழாவில் புதுப்பிக்கப்பட்டது. காணிக்கை பெறுதல், தொழிற்கூடம், உழவுத் தொழில் ஆகியவைகளைக் கவனித்தல், நகரங்களைப் பாதுகாத்தல் ஆகியவை இவர் பணிகளாகும்.

சுமேரியர்கள் காலத்தில் சமூகம் அதிகாரிகள், நிரந்தரப் போர் வீரர்கள், குருமார்கள் என்ற மூன்று பிரிவுகளைக் கொண்டிருநதது.

சுமேரியர்கள் தங்களுக்கென ஒரு கடவுளை வரைந்து கொண்டனர். அதன் ஆலயத்தைக் 'கால்' என அழைத்தனர். அதுவே, அவர்களின் வாழ்க்கைக்கு மையமாக விளங்கியது. தாய்க் கடவுளான இனனியா(Innıa) வுக்கு, எரிச்சு (Erech) என்னுமிடத்தில் ஆலயமிருந்தது.

சுமேரியர்கள் ஆப்பு வடிவ எழுத்துகளைக் கண்டுபிடித்தனர். களிமண் பலகையில நாணலினால் எழுதினர் நாட்காட்டியை (Calender)யும் குயவன் சக்கரத்தையும் கண்டுபிடித்தனர். நிப்பூரில காணப்படும் ஆலயம் எகிப்தியரின் கூம்புக் கோபுரத்தைப் போன்று அமைந்துள்ளது. இவர்கள் சோதிடம் தெரிந்திருந்தனர்; கணிதம், தாவரவியல் ஆகியவைகளையும் தெரிந்திருந்தனர். க பூ சீ.

**சுயமரியாதைச் சீர்திருத்தத் திருமணம்:** ஓர் இந்து ஆணும், பெணணும் உறவினர்கள், நணபர்கள அல்லது வேறு நபர்கள் முன்னிலையில், தாங்கள் புரிநது கொணட மொழியில, ஒருவரை ஒருவா கணவன் அல்லது மனைவியாக ஏற்றுக் கொள்வதாக அறிவித்தல்; அல்லது ஒருவர்கொருவர் மாலையிடுதல் அல்லது ஒருவர் விரலில் மற்றொருவர் கணையாழியை இடுதல்; அல்லது தாலிகட்டுதல் போன்ற முறைகள் ஏதேனும் ஒனறால நிகழ்த்திக் கொள்ளும் திருமணம், சுயமரியாதைச் சீதிருத்தத திருமணம எனப்படும்.

**வரலாறு:** இத் திருமண முறையை முதன்முதலில் தோற்றுவித்தவர், பெரியார் ஈ.வே. இராமசாமி ஆவார். சுயமரியாதை இயக்கத்தைத் தோற்றுவித்த பெரியாரின் அறுபதாண்டுக் கால அரசியல வாழ்க்கையில அவர் தம் பல சாதனைகளில் இத்திருமண முறை ஒரு வெற்றி முத்திரையாகும்.

இத்திருமணம் தொடக்க காலத்தில் சட்டத்தையும், சம்பிரதாயங்களையும் மீறி நடந்ததால், இதற்கெனத் தனியே சட்டவிதிகள் எதுவும் இல்லாதிருநதது. பெரியார் வகுததே விதிகளாக அமைந்திருந்தன.

தமிழக முதலமைச்சராக 1967-ஆம் ஆண்டில் இருந்த பேரறிஞர் சி என். அண்ணாதுரை இநதுத் திருமணச சட்டம், 1955 (The Hindu Marriage Act, 1955)இல, இந்துத் திருமணங்கள (செனனைத் திருத்தம்)சட்டம், 1967 மூலம் பிரிவு 7அ என்பதை இணைத்து, இத்திருமண முறைக்குச் சட்ட ஒப்புதல் அளித்தார். இது, 1968-ஆம் ஆண்டு சனவரித் திங்கள் 20-ஆம் நாள் முதல் செயறபடத் தொடங்கியது.

இத்திருமண முறையில் அம்மி மிதித்தல், அரசாணைக்கால், பானையைச் சுற்றுதல், சப்தபதி எனும சடங்கில் புனிதததீயை ஏழடி எடுத்து வலம் வருதல போன்ற சடங்குகள இல்லை. தமிழர் திருமணத்தைத் தமிழரே முனனின்று நடத்தி வைக்கலாயினர் .பு.வே.

**சுய வேலைவாய்ப்பு:** அரசு உதவியுடன் அல்லது பிற அமைப்பு அல்லது அமைப்புகளின் உதவி

யுடன அல்லது இத்தகைய உதவி எதுவுமில்லாமல் தானே முயன்று தனக்கென ஒரு வேலை வாய்ப்பை ஏற்படுத்திக்கொள்வது சுய வேலைவாய்ப்பு (Self Employment) எனப்படும்.

ஒரு நாட்டு மக்களை 15 வயதிற்குட்பட்ட இளையோர் 15 முதல் 55 அல்லது 60 வயது வரையுள்ள உழைப்பாளர், 55 அல்லது 60 வயதிற்கும் மிகுந்த முதியோர் என மூவகையாகப் பிரிக்கலாம். இளையோரில் ஒருசிலரும், முதியோரில் ஒருசிலரும் பல காரணங்களால் வருவாய்தரும் பணிகளில் ஈடுபட்டிருப்பது இயல்பு. இருப்பினும் உழைக்கும் வயது வரம்பில் உள்ள தகுதியுள்ள ஆண், பெண் அத்தனை பேரும் வருவாய் ஈட்டும் பணியில் ஈடுபட்டிருக்கும் நிலை விரும்பத்தக்கது. உழைப்பாளர்களில் தகுதியும் விருப்பமும் இருந்தும் வாய்ப்புகள் இல்லாத நிலையை வேலையின்மை நிலை என்பர்.



சுய வேலைவாய்ப்பு

வேலையின்மை நிலை தோன்றாது என்றும், அப்படியே தோன்றினாலும் அது நிரந்தரமாக இருக்க இயலாதென்றும் முழு வேலை (Full Employment) நிலைதான் இயல்பாகக் காணப்படும் என்றும் தொன்மைப் பொருளாதார அறிஞர்கள் (Classical Economists) குறிப்பிட்டிருந்தனர். ஆனால், அவர்தம் கருத்துகளுக்கு மாறாக, பல நாடுகளிலும் வேலையின்மை நிலை பெருகி வளர்ந்து வருகிறது.

வேலையின்மை அளவைக் குறைக்க அல்லது வேலையின்மை நிலையை விலக்கப் பொருளாதார அறிஞர்கள் பலவகையான கோட்பாடுகளையும் கொள்கைகளையும் வகுத்துத் தந்திருக்கின்றனர். ஆனால் இவை யாவும் ஏதாவதொரு வகையில் குறையுள்ளவையாக இருப்பதால் வேலையின்மை நிலையை விலக்க இயலவில்லை. வேலையின்மையை விலக்க மேற்கொள்ளப்படும் பல முயற்சிகளில் சுய வேலைவாய்ப்பு மிகச் சிறப்பான இடத்தைப் பெறுகிறது.

அரசு அலுவல்களின் எண்ணிக்கை, கூலி வேலை (Wage Employment) களின் எண்ணிக்கை ஆகியவற்றின் பெருக்கம் குறைந்த அளவிலும், இவ் வேலைகளை மேற்கொள்ள விரும்பும் ஆள்களின் எண்ணிக்கைப் பெருக்கம் மிகுந்த அளவிலும் பெருகிக் கொண்டிருப்பதால் வேலையின்மையின் அளவும் பெருகிக்கொண்டிருக்கிறது எனவே, சுய வேலைகளின் பெருக்கம் மிகவும் இன்றியமையாத ஒன்றாகும்.

சுய வேலைவாய்ப்பை ஏற்படுத்திக்கொள்ளும் முயற்சியில் ஈடுபடும்போது ஏற்படும் ஆபத்துகளையும் சிக்கல்களையும் நிலையற்ற தன்மையையும் கருத்தில்கொண்டு பலர் சுய வேலைவாய்ப்பை விரும்புவதில்லை. ஆனால், 'முயற்சி திருவினையாக்கும்', 'கடும் உழைப்பிற்கேற்ப ஊதியமும் உயர்வும் கிட்டும்' என்ற கருத்துகளில் நம்பிக்கையுடையவர்கள் சுய வேலைவாய்ப்பையே விரும்புவர். சுய வேலையினால் நாட்டில நிலவும் வேலையின்மை, குறை வேலை (Under Employment) போன்றவை பெருகாமல் தடுப்பதோடு, சுய வேலை செய்வோர் வேறு பலருக்கும் வேலைவாய்ப்பை ஏற்படுத்தித் தரவும் இயலுமாதலால் வேலையின்மை அளவைக் குறைக்கவும் உதவுகிறார்கள் எனலாம்.

**இந்தியப் பொருளாதாரமும் சுயவேலை வாய்ப்பும்:** இந்திய நாட்டின் மக்கட் பெருக்கத்தாலும், மக்களிடையே தோன்றியுள்ள விழிப்புணர்ச்சியாலும் வேலைசெய்ய ஆயத்தமாக இருப்போரின் எண்ணிக்கை நாள்தோறும் பெருகி வருகிறது. முதல் ஐந்தாண்டுத் திட்டக்காலத்திலிருந்தே வேலைவாய்ப்புகளைப் பெருக்கித் தர அரசு பல முயற்சிகளை மேற்கொண்டாலும் வேலைகளின் எண்ணிக்கைப் பெருக்கம் குறைவான அளவிலும் வேலைகளுக்கான தேவைப் பெருக்கம் மிகுதியான அளவிலும் பெருகி வந்த காரணத்தால் வேலையின்மையின் அளவும் அதன் தொடர்பாகத் தோன்றிய துயரங்களும் தொல்லைகளும் பெருகி வந்திருக்கின்றன. இந் நிலையைத் தவிர்க்க இந்தியாவின் ஆறாம் (1980-85), ஏழாம் திட்டக் (1985-90) காலங்களில் பெரு முயற்சிகள் மேற்கொள்ளப்பட்டு வருகின்றன.

ஆறாம் திட்டக்காலத் தொடக்கநிலையில் இந்தியாவில் 12.02 மிலியன் தொழிலாளர் வேலையின்மை நிலையில் இருந்தனர் என்றும், 1980-85- ஆம் ஆண்டுகள் காலத்தில் 134.24 மிலியன் தொழிலாளர்கள் புதிதாகத் தோன்றுவார்கள் என்றும் ஆகமொத்தம் 46.25 மிலியன் தொழிலாளர்களுக்கு 1980-85-ஆம் ஆண்டுகளில வேலைவாய்ப்புகளை ஏற்படுத்தித் தருதல வேண்டுமென்றும், ஆனால் திட்டக்காலத்தில் 34.28 மிலியன வேலை வாய்ப்புகளைத்தான் உருவாக்க இயலுமென்றும், எனவே ஏழாம் திட்டத் தொடக்கத்தில் 11.98 மிலியன் தொழிலாளர்கள் வேலையின்மை நிலையில் இருப்பர் என்றும் ஆறாம் திட்ட அறிக்கையில் குறிப்பிடப்பட்டது. மேலும், நன்கு அமைக்கப்பட்ட துறையில் (Organised Sector) தொழிலாளர் ஈர்ப்புத் திறன் (Labour Absorptive Capacity) உழைப்புப் பெருக்கத்தில் 12 விழுக்காடு அளவுக்குத்தான் இருக்கும் என்பதையும் சுட்டிக் காட்டி, வேளாண்மைத் துறையிலும், வேளாண்மையுடன் தொடர்புடைய துறைகளிலும்தான் மிகுதியான அளவில் வேலைகளைத் தோற்றுவிக்க முடியுமென்றும் திட்ட அறிக்கையில குறிப்பிட்டிருந்தது. எனவே, சுய வேலைவாய்ப்புகளுக்கு ஆறாம் திட்டக் காலத்தில் பெருமளவில் சிறப்புத் தரப்பட்டது.

நாட்டுக் கிராமப்புற வேலைத் திட்டம் (National Rural Employment Schme-NREP) மூலமாகவும் மகாராட்டிரம், தமிழ்நாடு, மத்தியப்பிரதேசம், கர்னாடகம் போன்ற மாநிலங்கள் மேற்கொண்ட வேலை உத்திரவாதத் திட்டங்கள் (Employment Gurantee Scheme) மூலமாகவும், குறைந்த அளவுத் தேவைத் திட்டஙகள் (Minimum Need Programme) மூலமாகவும் பல்லாயிரக்கணக்கான ஆள்களுக்குக் கூலி வேலையைப் பெருக்குவதற்கான முயற்சிகள் ஆறாம திட்டக்காலத்தில் மேறகொள்ளப்பட்டன. அவற்றோடு, 1) ஒருங்கிணைந்த ஊரக வளாச்சித் திட்டத்தில் (Integrated Rural Development Programme) ஒவ்வொரு வட்டாரத்திலும் (Block) 3,000 குடும்பங்களைத் தேர்ந்தெடுத்து நிதி மற்றும் பயிற்சி உதவிகளைத் தருதல், 2) பால் பண்ணை வளர்ச்சித் திட்டத்தில் (Dairy Development Programme) உதவிகள் பல தருதல், 3) மீன்பிடித் தொழிலாளர்கள் முன்னேற்றப் பதிவாண்மைகள் (Fish Farmers Develop ment Agencies) மூலமாக உதவிகள் பல தருதல், 4) கிராமங்களில் கைத்தொழில், கைத்தறித்தொழில் பட்டுப்பூச்சி வளர்த்தல் மற்றும் பலவிதமான சிறு தொழில்கள் வளர்சசிக்கான பல்வேறு உதவிகளைத் தருதல், 5) சுய வேலைக்காக இளைஞர்களுககுப் பயிற்சியளிக்கும் நாட்டுத் திட்டத்தின் (Nantional Scheme of Training Youth for Self Employment-TRYSE) மூலமாகப் பல உதவிகளையும் பயிற்சிகளையும் தருதல் போன்ற பல முயற்சிகளை மேற்கொண்டு ஆறாம்திட்டக்காலத்தில் சுய வேலைவாய்ப்புகளைப் பெருக்க அரசுகள பெருமளவில முயற்சிகள் மேற்கொண்டன.

ஏழாம் திட்டக்காலத்தில் (1985-1990) தொழிலாளர்களின் எண்ணிக்கை பெருகும் அளவைக் காட்டிலும் மிகுதியான அளவில் கூலி வேலைகளின் எண்ணிககையையும் சுய வேலைவாய்ப்புகளின அளவையும் அதிகரித்து, கிராமப்புறஙகளில் ஏறத்தாழ முழு வேலைநிலையை அடைநது இருபத்தோறாவது நூற்றாண்டில் இந்தியா காலடி எடுத்து வைக்கும் போது வேலையின்மை நிலையை முற்றிலும் ஒழித்துவிட வேண்டும் என்ற குறிக்கோளுடன் அரசுகள செயல்பட்டு வருகின்றன. இக் குறிககோள் வெற்றி பெற, சுய வேலைகளை மக்கள மிகுதியாக நாடும் நிலை தோன்றுவது அவசியம.

திறன்பெற்ற தொழிலாளர்கள (Skilled Labourers), திறனற்ற உழைப்பாளர்கள் (Unskilled Labourers), கல்வி பெற்ற உழைப்பாளர்கள் (Educated Labourers) என்று உழைப்பாளாகளைப பலவாறு வகைப்படுத்தலாம். எல்லாவகை உழைப்பாளாகளுக்கும் நிதி உதவி, ஆலோசனை உதவி, தொழிலநுட்ப உதவி மற்றும் பலவிதமான உதவிகளைச செய்துதர அரசும் பல நிறுவனங்களும் ஆயத்தமாக உள்ளன ஆனால இடர்களையும் உறுதியினமைகளையும் எதிர்நோக்கி, முயற்சிசெய்து வெறறி நடைபோடத் தேவையான மனத்திட்பத்தை அரசுகளும பிற நிறுவனங்களும் கொடுத்து உதவ இயலாது இவை இயற்கையிலேயே அமையப்பெற்ற இளைஞாகள சுய வேலைகளில் ஈடுபட்டுத் தமக்கும் தம நாட்டிற்கும் நன்மைகளைத் தருகினறனர்.

இந்தியாவில் 1951-ஆம் ஆண்டு முதல் பலவிதமான சமூகப் பொருளாதாரக் கட்டமைப்புகள (Social and Economic Infrastructure) பெருமளவில் உருவாகியுள்ளன. இவறறைப் பயன்படுத்தி சுய வேலைவாய்ப்புகளைத் தோற்றுவிததுக்கொண்டு இந்திய நாடு முழு வேலைநிலையை அடைய முயன்று வருகிறது. என எஸ.பா

சுர்குசா மத்தியபிரதேசத்தில் உளள நகரம். இநநகரம் சுர்குசா (Surguja) மாவட்டத்தின் தலைநகரமாகவும் உள்ளது. சுர்குசா நகரம் முன்பு சிற்றரசு ஒன்றின் தலைநகரமாக விளஙகியது இநநகரம் தர்மசயகர், பாட்னா, சோன்காடடு ஆகிய நகரங்களுடன் சாலைகளால் இணைக்கப்பட்டுள்ளது,

இந்நகரத்தில் விளைபொருள் விற்பனை மிகுதி. நிலக்கரியும் இங்குக் கிடைக்கிறது. நகர மக்கள் தொகை 38,291 (1981).

சுர்குசா மாவட்டம் 22,337 ச.கி.மீ. பரப்பளவுடையது. இம்மாவட்டம் மலைகளால் சூழப்பட்டுள்ளது. இம்மாவட்டத்தில் உள்ள இராம்கர் மலையில் பல குடைவரைகள உள்ளன. அவற்றுள் குறிப்பிடத்தக்கவை சீதாபெங்கா (Sitabenga) சோகிமாரா (Jogimara) குடைவரைகள் ஆகும். இக்குகைகளில் கி.மு. 2-ஆம் நூற்றாண்டைச் சார்ந்த பிராமி கல்வெட்டுகள் உள்ளன. இக்காலத்தைச் சார்ந்த ஓவியங்கள் பலவும் இக்குகைகளில் உள்ளன. இவை இந்தியாவின் பழைய ஓவியங்களாகத் திகழ்கின்றன. இம்மாவட்டத்தில் நெல், கோதுமை, எணணெய் வித்துகள போன்றவை விளைகின்றன. காடுகளில் இருந்தும் வருமானம் கிடைக்கிறது. இரும்புக் கனிமம், நிலக்கரி, சுண்ணாம்புக்கல், அலுமினிய மணவகை (Bauxite) போன்ற கனிமங்கள் கிடைக்கின்றன. சட்டிசுகர் சிற்றரசின் பகுதிகளாக விளங்கிய இம்மாவட்டத்தை கி.பி. 1818-இல் ஆங்கிலேயர்கள் கைப்பற்றினர். இது மத்திய பிரதேச மாநிலத்துடன் 1948-இல் இணைக்கப்பட்டது. மக்கள் தொகை 1,633,475 (1981). சு.இரா.

**சுர்கோட்டாடா**: குசராத்து மாநிலத்தில் கட்சுப் (Kutck) பகுதியில் உள்ளதோர் ஊர். சுர்கோட்டாடா (Surkotada) தொல்லியல் சிறப்புப் பெற்ற சிந்துவெளி நாகரிக எச்சங்கள் உள்ள ஊராகும். இந்தியத் தொல்லியல் பரப்பாய்வுத் துறையினர் இப்பகுதியில் பல கள ஆய்வுகளை மேற்கொண்டனர். பின்னர் 1971, 1972-ஆம் ஆண்டுகளில் அகழாய்வுகள் இங்கு மேற்கொள்ளப்பட்டன. அரப்பா நாகரிக மக்கள் இப்பகுதி வழியாகவே வந்து கட்சுப் பகுதியில் வாழத் தலைப்பட்டனர் என்பது அகழாய்வுகளின் மூலம் உறுதி செய்யப்பட்டது. இங்குக் கண்டுபிடிக்கப்பட்ட பண்பாட்டுக் கூறுகள் கி.மு. 2100 முதல கி.மு. 1750 வரையிலான காலத்தைச்சார்ந்தவையாகும்.

இவ்வூர் நகர அரணைக் கொண்டு விளங்குகிறது. நகரம் கோட்டைப்பகுதி, கீழை நகரப் பகுதி ஆகிய இரு பிரிவுகளைக் கொணடு விளங்கியது. அரண், களிமண, சுடப்படாத செங்கற்கள் ஆகிய வற்றைக் கொண்டு கட்டப்பட்டது. இவ்வரண இரண்டு நுழைவாயில்களைக் கொணடு விளங்கியது. ஒரு வாயில் கிழககிலும் மற்றொன்று தெற்கிலும் இருந்தன. கீழை நகரப் பகுதிக்குக் கோட்டையின் உள்ளிருந்து வெளியே செல்லத் தென் கிழக்கு மூலையில் வாயில் ஒன்றும் இருந்தது.

அகழாய்வில் கண்டுபிடிக்கப்பட்ட வீடுகள களிமண்ணால் செய்யப்பட்ட கற்களால் கட்டப்பட்டன. எழுத்துப் பொறிப்புகள் கொண்ட முத்திரைகள், செப்புவளையல்கள், சுடுமண் பொம்மைகள, மட்கலன்கள் போன்றவையும் அகழாய்வுகளில் கிடைத்தன. சு.இரா.

**சுரங்கத் தொழிலாளர்**: பயன்கருதி உள்ளத்தாலும் உடலாலும் மேற்கொள்ளும் முயற்சி உழைப்பு. இவ் உழைப்பைத் தரும் தொழிலாளர்களில் உள்ள பல வகைகளில் சுரங்கத் தொழிலாளரும் (Mine workers) ஒரு வகை. கனிவளப் பொருள்களைக் கண்டுபிடிக்கும் பொருட்டும், வெளிக்கொணரும் பொருட்டும் பல வகைச் சுரங்கங்களில் பணியாற்றுபவர் சுரங்கத் தொழிலாளர் ஆவர்.

இந்தியாவில் பீகார், மேற்கு வங்காளம், ஒரிசா, இராசசுத்தான் (Rajasthan), ஆநதிரா, கருநாடகம், மத்தியப் பிரதேசம் ஆகிய மாநிலங்களில் பல சுரஙகங்கள் உள்ளன. இவற்றில் பல்லாயிரக்கணக்கான சுரங்கத் தொழிலாளர்கள் பணியாற்றுகின்றனர்.



சுரங்கத் தொழிலாளர்

சுரங்கத் தொழில்களின் இடர் மிகு தன்மை, உடலை வருத்தும் தன்மை, துன்பம் தரத்தக்கக் கடினமான தன்மை போன்றவைகளால் (1971 ஆம் ஆண்டு கணக்கின்படி) சுரங்கத் தொழிலாளர்களில் ஏறத்தாழ 88 விழுக்காட்டினர் ஆண்களாகவும், 18 விழுக்காட்டினர் பெண்களாகவும் இருக்கின்றனர். பெரும்

இயந்திரங்களைப் பெருமளவில் பயன்படுத்துவதனா லும் இந்நிலை உள்ளது.

இந்தியாவில் சுரங்கத் தொழிலாளர்களின் பணி நிலைகள் 1923-ஆம் ஆண்டு வரை முறைப்படுத்தப் பட வில்லை. முதன் முதலாகச் சுரங்கங்கள் சட்டம் (Mines Act) 1923-ஆம் ஆண்டில்தான் இயற்றப் பெற்றது. அதைத் தொடர்ந்து இத் தொழிலாளர் களின் பணி நிலைகள் பற்றிய பல சட்டங்கள் இயற் றப் பெற்று வருகின்றன. குறிப்பாகச் சுரங்கத்தின் மேற் பகுதிகளில் பணியாற்றும் மணி அளவு, சுரங்கத் தின் ஆழப் பகுதிகளில் பணியாற்றும் மணி அளவு, சுரங்கத் தொழிலாளர்களுக்கு ஏற்படும் பலவிதமான இழப்புகளுக்கு ஈடு செய்யும் முறைகள், தொகைகள் போன்ற பலவற்றிலும் தொழிலாளர்களுக்கு ஆதர வான பல மாற்றங்கள் ஏற்படுத்தப்பட்டு வருகின் றன. 15 வயதிற்கு உட்பட்ட சிறுவர்கள் சுரங்கங் களில் பணி புரியக்கூடாது என்றும் பெண் சுரங்கத் தொழிலாளர்கள் இரவு 7.00 மணி முதல் காலை 6.00 மணி வரையில் பணி புரியக்கூடாது என்றும் பல விதிகள் அமைக்கப்பட்டுள்ளன.

பெருமளவில் புதிதாகப் பொதுத் துறையில் அமைக்கப்பட்டு வரும் பல சுரங்கங்களில் பணி நிலை கள் மிகவும் சிறப்பான முறையில் உள்ளன.

என்.எஸ்.பா.

**துணை நூல்கள்:**

Mamoria, C.B., Dynamics of Industrial Relations in India, Himalaya Publishing House, Bombay, 1983.

Mehrotra S.N., Labour Problems in India, S. Chand & Co., Delhi, 1976.

***சுரண்டல்:*** மனிதனின் உழைப்பு, ஆற்றல் திறன்களுக்கு ஏற்ப கூலியைத் தராமல், அத்திறன் களைப் பயன்படுத்தி உழைப்பை உறிஞ்சி, இலாபத் தைச் சிலர் அடையும் முறை சுரண்டலாகும். சுரண் டல் என்ற முறை மனிதன் பல்வேறு கருவிகளைக் கொண்டு இயற்கை வளங்களைச் சீர்படுத்த முற் பட்ட காலத்திலிருந்து தொடங்கியது எனலாம்.

கிரேக்க, உரோமானிய, சிந்துச் சமவெளி திராவிட நாகரிகங்கள் காலத்திலிருந்து இச்சுரண் டல் முறை பல்வேறு நிலைகளில் காணப்படுகிறது. மன்னர் ஆட்சிக் காலத்தில், அடிமைகளைப் பயன் படுத்தி, காடு திருத்தி கழனிகள் அமைத்து உழைப் பின் பலனை உறிஞ்சியதும் சுரண்டல் (Exploitation) ஆகும். இடைக்காலத்தில் நிலங்களை உடைமையாக் கிக் கொண்ட மன்னர்களும், குறுநில மன்னர்களும், நிலக்கிழார்களும் ஏழை விவசாயிகளின் உழைப்பைப் பயன்படுத்திக் கொண்டதும் சுரண்டலாகும். வரி கொடுக்கும் சக்தியில்லாத மக்கள் மீது வரிவிதித்துக் கொடுமைகள் செய்து வரி வசூலித்ததும் ஒருவகை யான சுரண்டல் முறையாகும்.

இப்படிப் பல்வேறு தனமைகளில் இயங்கி வந்த சுரண்டல் முறை தொழிற்புரட்சிக்குப் பின் புதிய வடிவமைப்பைப் பெற்றது. தொழிற்கூடங்களில் பல மணி நேர உழைப்பைப் பயன்படுத்தி, போதிய வசதியைக் கூடத் தொழிலாளர்களுக்குத் தராமல் குறைந்த கூலியைக் கொடுத்து, அதிக இலாபத்தை முதலாளிகள் ஈட்டினர். கி.பி. 18, 19-ஆம் நூற் றாண்டுகளில தோன்றிய இம்முறையை முதலாளித் துவச் சுரண்டல் முறை என அழைத்தனர்.

சுரண்டல் என்பதற்குப் பலவேறு விளக்கங்கள் கூறப்படுகின்றன. உற்பத்தி முறையாலும், அங்காடி முறையாலும் (Market System) ஒருவருக்குச் சேர வேண்டிய தொகையை மற்றவர் எடுத்துக் கொள்ளு தல் சுரண்டல் எனப்படும்.

முதலாளித்துவ சமுதாய அமைப்பில் சுரண்டல், கூலி அடிமைத்தனத்தில எதிரொலிக்கிறது. சுரண் டல் முறையின் பலவேறு கூறுகளைப் பல பொருளி யல் அறிஞர்கள் கூறியுள்ளனர் ஆடம்சுமித்து (Adam Smith), தேவிடு இரிக்கார்டோ (David Ricardo) போன்ற தொன்மைப் பொருளியல் அறிஞர்கள் சுரண்டல் முறையைப் பற்றி விளக்கியுள்ளனர்.

எவ்வித முதலீடும் செய்யாமலேயே இலாபத்தை அறுவடை செய்பவர்கள் முதலாளிகள் என்று ஆடம சுமித் கூறியுள்ளார்.

காரல் மார்க்சுதான் முதனமுதலில் சுரண்ட லின் தன்மையைப் பல்வேறு சமுதாயப் பொருளியல் கூறுகளோடு இணைத்து விஞ்ஞான அணுகுமுறையில் (Scientific Approach) விளக்கிக் கூறினார்.

தொழில் புரட்சிக்குப் பிறகு இங்கிலாந்திலும் மற்ற ஐரோப்பிய நாடுகளிலும் ஏற்பட்ட மாறுதல் களைக் கணித்து, சுரண்டல் முறை எப்படி முத லாளித்துவ அமைப்போடு ஒன்றிப் பிறந்தது என்பதையும் சுட்டிக் காட்டினார். முதளாளித்துவ உற்பத்தி முறையில மிகைமதிப்பு (Surplus Value) எப்படி உருவாகிறது என்பதையும் அந்த மிகை மதிப்பை எப்படி முதலாளிகள எடுத்துச் செல கிறாாகள் என்பதையும் எடுத்துக் காட்டினாா. இவ்வித உற்பத்தி முறையால் வருக்க வேறுபாடுகள் தோன்றுவதையும, வருக்க மோதல்கள ஏற்படுவதை

யும் விளககினார். உழைப்பிற்கு நிகரான கூலி முதலாளித்துவ அமைப்பில் கொடுக்கப்படாமல் சுரணடப்படுவதால் இப்போராட்டம் தொடாகிறது என்றும் கூறினார்.

பொருளியல் சிநதனையில் மார்க்சு உருவாக்கிய உழைப்பு மதிப்புக் கோட்பாடு (Labour Theory of Value) இன்றளவிலும் விவாதிக்கப்படுகின்ற சிறப்பினைப் பெறுகின்றது.

இலிசசோவசுகி என்ற பொருளியல் அறிஞரின் கூற்றுப்படி ஒரு நாட்டினுடைய மூலதனம் மற்றொரு நாட்டிற்கு ஏற்றுமதி செய்யப்படுவதாலும் சுரண்டல் முறை இரட்டிக்கிறது என்று கூறினார். குறிப்பாக வளர்ந்த நாடுகளின் மூலதனம், வளர்கின்ற நாடுகளில் பயன்படுத்தப்படும் போது இந்த இரட்டிப்புச் சுரண்டலமுறை செயற்படுகிறது என்றாா. இலெனின இம்முறையை அரசியல் அணுகுமுறையில் நோககி ஏகாதிபத்தியம் (Imperialism) என்றுகுறிப்பிட்டார். பன்னாட்டு முதலாளித்துவச்சுரணடலை ஏகாதிபத்தியம் என்ற சொல்லால் அழைப்பது பின்பு ஏற்றுக் கொளளப்பட்டது.

இன்றைய உலகச்சூழலில் பொருளாதாரத்தில் பல்வேறு ஆய்வுகள செய்யப்படுகின்றன. வளர்ந்த நாடுகளின மூலதனம், தொழிலநுட்ப அறிவு போனற சாதனங்களை நாட்டின் வளர்ச்சிக்குப் பயன்படுத்துதல் தவறில்லை என்று கூறப்படுகிறது. மேற்கூறிய சாதனஙகள் சுரண்டல் முறைக்கு வழி வகுக்காது என்றும் கூறப்படுகிறது. இருப்பினும் பன்னாட்டு வணிகக் கழகஙகள (Multi National Corporations) வளர்கின்ற நாடுகளில் மூலதனம, தொழில்நுட்பம் ஆகிய சாதனங்களைப் பயன்படுத்தி அதிக இலாபத்தை எடுத்துச்செல்கின்றன. இம்மாதிரியான இலாபச் சுரண்டலைப் புதிய பொருளாதாரக் குடியேற்றம் என்று பொருளியல், அரசியல் அறிஞர்கள குறிப்பிடுகினறனர்.

இந்தியாவில் கிழக்கிந்திய வாணிகக் கழகங்கள் கி.பி. 18-ஆம் நூற்றாண்டில் வணிகச் சுரணடலைச் செய்யத் தொடங்கின. பிரான்சு, தச்சு, போர்ச்சுகீசு, இங்கிலாந்து ஆகிய நாடுகளிலிருந்து வந்த வணிகக் கழகஙகள் இந்தியாவில் தென்பட்ட அரசியல் குழப்பநிலையைப் பயன்படுத்தி, வாணிகச் சுரணடலை நிரநதரமாக்கிக் கொண்டு, இந்தியாவின செல்வத்தைக் கொள்ளை அடித்தன.

இந்தியாவில் ஆங்கிலக் கிழக்கிந்திய வணிகக் (English East India Company) கழகத்தின் ஆட்சி உறுதி செய்யப்பட்டபின் வணிகச் சுரணடல்முறை கடுமையான அளவில இருந்தது இநத வணிகச் சுரணடலினால் இந்தியாவின் தொழில்கள் நலிந்து போயின. பல இலட்சக்கணக்கான பருத்தி நெசவாளர்கள் வறுமைக்குத் தள்ளப்பட்டனர். இந்நிலையைப் பற்றிக் காரல மார்க்சு குறிப்பிடும்போது 'இது போன்ற கொடுமை வணிக வரலாற்றில் எதுவுமில்லை. பருத்தி நெசவாளர்களின் எலும்புகள் பூமிக்குள் புதைக்கப்பட்டுஇந்தியச்சமவெளியை வெளுத்துக் கொண்டிருக்கினறன' என்று கூறினார்.

கிழக்கிநதிய வணிகக் கழகங்கள் நடத்திய சுரணடல் ஆங்கிலேய ஆட்சி ஏற்பட்டபிறகு மேலும் பல்வேறு துறைகளில் ஏற்பட்டது. விவசாயிகள், சிறு வியாபாரிகள், கைவினைஞர்கள் இந்த சுரண்டலினால் பெரும் பாதிப்புக்கு உள்ளானார்கள். இச்சுரண்டலை 'ஏகாதிபத்தியச் சுரணடல' என்று தாதாபாய் நௌரோசி சுட்டிக்காட்டினார்.

இச்சுரணடல் முறையினால் இரணடு இநதியாக்களை இங்கிலாந்து உருவாககிவிட்டது என்று தாதாபாய் நௌரோசி கூறினார். ஒன்று வளமுளள இந்தியா, மறறொன்று ஏழ்மை இநதியா; வளமுள்ள இநதியாவில் வெள்ளையரும் மற்ற வெளிநாட்டுக் காராகளும் சுரண்டி, உண்டு களித்தனா. ஏழ்மை இந்தியாவில் விவசாயிகள், தொழிலாளர்கள வாடினர் என்று அவர் குறிப்பிட்டார். இந்தச் சுரணடல் அமைப்பு முறை இநதியா விடுதலை அடைந்தபிறகு மாறியிருப்பினும், முழுமையான முறையில் பொருளாதாரச் சமூகச்சுரணடல் முறை மாறிவிடவில்லை.

இநதியாவிலுள்ள பொருளாதார ஏற்றத்தாழ்வுகள், நிலக்கிழார்கள் நிலமற்றவர்கள்மீது நடத்தும் தாக்குதல்கள் சுரண்டலின் வெளிப்பாடாக அமைகின்றன. திருமதி. கிருட்டிணா பரத்வாசு (Krishna Bhardwaj) போன்ற பொருளியல் பேராசிரியர்கள் ஒரிசா மாநிலத்திலுள்ள சுரணடல் முறையை ஆய்வு செய்துளளனர். அந்த ஆய்வின்படி விவசாயக் கூலித் தொழிலாளர்களைப் பயன்படுத்தி, அதிக உற்பத்தி செய்து விவசாயத்துறையில் நில முதலைகள் சுரணடல் முறையை நீடித்து வருகின்றனர். இதே நிலைமைதான் ஏராளமான இநதியக் கிராமங்களில் காணப்படுகிறது. இம்முறையைக் கொத்தடிமை முறை என்றும் கூறகிறார்கள். இமமுறையை ஒழிப்பதற்கு 6-வது ஐந்தாணடுத் திட்டக் காலத்தில் மத்திய மாநில அரசுகள நடவடிக்கைகளை எடுத்து வருகின்றன. தொன்மைமிகு சமுதாயங்களில நில உடைமை உருவாக்கிய பலவேறு சமூக, பொருளியல சுரணடல்கள இனனும் நீடிதது வருகின்றன. மு.நா.

துணை நூல்:

Seventh Five Year Plan, 1985-1990, Volume II, Planning Commission, Govt.. of India, 1986

**சுருள்வளையப் பாடத்திட்டம்**: இது கடினமான பாடப்பொருளை மாணவர்களுக்கு வழங்குவதற்காக அமைக்கப்படும் பாடத்திட்டம். எளிமையான பாடப்பொருளில் தொடங்கி, சிறிது சிறிதாகக் கடினமான பாடப்பொருள வருமாறு அமைததிடும் பாடத் திட்ட முறை, சுருள்வளையப் பாடத்திட்டம் (Spiral Curriculum) எனப்படும். ஒரு புள்ளியில தொடங்கும் சுருள் வளையம், போகப்போக வட்ட வடிவில் விரிந்து செல்வதைப்போல், மிக எளிமையான கருத்துடன் தொடங்கப்பட்ட பாடப்பொருள், மீண்டும் மீண்டும் வருகையில் ஆழமான கருத்துடனும விரிந்த அள்விலும் கடினமாகவும் வருவதால் இதற்குச் சுருள்வளையப் பாடத்திட்டம் எனப் பெயர் வந்தது.

ஒரு மாணவா தொடக்கப் பள்ளியில் போய்ச் சேர்ந்தவுடன் ஒரு பாடத்திலுள்ள சிறிய பாடப் பொருள் ஒரு கற்றல் அனுபவமாகத் (Learning Experience) தரப்படும். அதே மாணவர் தொடக்கப்பள்ளியில் அடுத்தடுத்த ஆண்டுகளில் பயிலுமபோது, முன்னர்ப்பயின்ற பாடப்பொருளின் அளவும் தன்மையும் ஆழமான கற்றல் அனுபவங்களாகப் பள்ளிப் பாடத்திட்டத்தில் தாப்படும். சுருள்வளையப் பாடத்திட்டத்தில் ஒரு பாடப்பொருளின் பல வேறு கூறுகள் குழந்தைகளின் புரிந்துகொள்ளும் தன்மைக்கு ஏற்றவகையில் அமைக்கப்பட்டிருக்கும்.

மாணவரின் வயது கூடும்போது, அறிவு முதிர்ச்சியும் கூடுகிறது. அதனால் பாடப்பொருளைப் புரிநது கொள்ளும் திறனும் கூடுகிறது என்ற உண்மையை அடிப்படையாகக் கொண்டு, மாணவரின் வயதுக்கும் வகுப்புக்கும் ஏற்றவகையில பாடப்பொருள் பிரித்து அமைக்கப்படுதலைச்சுருள்வளையப் பாடத் திட்டம் வலியுறுத்துகிறது. ஒரே ஆண்டில் ஒரு பாடப் பொருளை வயதுவந்த ஒருவரால் கற்றுவிட முடியும் என்றாலும், மாணவரின் முதிர்ச்சிககு உகந்தவகையில் அப்பாடப் பொருள பல ஆண்டுகளில கற்கும் வகையில் பிரித்து அமைக்கப்படுகிறது.

ஒரு சுருள்வளையப் பாடத்திட்டம் எவ்வாறு அமையும் எனபதை அறிவியல் பாடத்தைப் பள்ளிகளில் கற்பிக்கும் முறையினை எடுத்துக்கொண்டு விளக்கலாம். விடடில முயல் போன்ற விலங்குகளை வளர்ப்பதன தேவைகளைப் படிப்பது, ஒரு தாவரம் அல்லது செடியின தேவைகளைப் பயிலுதல, தாவரங்களும் விலங்குகளும் வாழும் சுற்றுப்புறத் தனமையைப் (Ecosystem) பற்றித் தெரிநதுகொள்ளத் தொடங்குதல், மனிதர்கள வாழும் சுற்றுப்புறத் தன்மையைப் பற்றிப் பயிலுதல், விலங்குகளையும், தாவரங்களையும் ஒரு அமைப்பாகப் (System) பயிலுதல், குடும்பத்தைச சுற்றிய வேதியியல், ஒரு நகரம் அமைப்பதிலுள்ள இயறபியல் ஆகியவற்றை முறையே முதல் வகுப்பிலிருந்து எட்டாம வகுப்பு வரை பயின்றுவிட்டுப் பின்னர் ஒன்பது, பத்து, பதினொன்றாம் வகுப்புகளில் முறையே உயிரியல், வேதியியல், இயற்பியல் ஆகியவை பறறி விளக்கமாகப் படித்தல் ஆகியன ஒரு சுருள்வளையப் பாடத திட்டத்திற்குச் சான்றாகும்.

சுருள்வளையப் பாடத்திட்டததிலிருந்து ஒரு மாறுபட்ட பாடத் திட்டத்தை 1960-ஆம் ஆணடுகளில் காசு கெல்லர் (Chas Keller) என்பவர் அமெரிக்க நாட்டில் உருவாக்கினார். இவர்தம் பாடத்திட்டத்தில், ஒரு பாடமானது (Subject) 12 ஆணடுப் படிப்பிற்குள, இரணடு அலலது மூனறே முறைகளில் முழுவதுமாகக் கற்பிக்கப்பட்டு விடும். ஒவ்வொரு முறையும் பாடத்தின் முற்றிலும் வெவ்வேறான கூறுகள மிக ஆழமாகக் கற்பிக்கப்படும். அமெரிக்க வரலாறு என்னும் பாடமானது, 12 ஆண்டுக் கல்வி வழங்கும் தொடக்கப் பளளி மற்றும் இடைநிலைப் பள்ளிகளில் மூன்று முறைகளில் கற்பிக் கப்பட்டது.

புரூனர் (Bruner) என்னும் கல்வியறிஞர் 'பாடத்திட்டம் அமைக்கும்போது, அது அடிப்படைக் கருத்துகளை உள்ளடக்கியதாக, மீணடும் மீணடும தொட்டுச் செல்வதாக அமைநதாலதான் அவற்றை மாணவர் எளிதில கற்கமுடியும்' எனக் கருதுவார்.

எஸ். த.

துணை நூல்கள்:

Ragan, W.B. and Shepherd G. D., Modern, Elementary Curriculum, Holt, Renehat and Winston, NewYork, 1977.

Tanner, D. and Tanner, L. N., Curriculum Development: Theory into practice, Macmillan New York, 1980.

**சுரேந்திரநகர்** குசராத்து மாநிலத்திலுள்ள சுரேந்திர நகர் மாவட்டததின் தலைநகரம். சுரேநதிரநகர் (Surendranagar) வத்வான் (Wadhwan) என்றும் கூறப்படும். இந்நகரம வத்வான் சிற்றரசின்

தலைநகராக முன்பு இருந்தது வேளாணமைப் பொருளகள் இஙகு விற்பனை செய்யப்படுகின்றன. இநநகரத்தில் நெசவு,சவாக்காரம்செய்யும் தொழில், கணணாடி வேலைப்பாடடுத் தொழில் போனறவை நடைபெறுகினறன. இநநகரம் இருப்புப்பாதை, சாலைகள ஆகியவற்றால் பலபகுதிகளுடன் இணைக் கப்பட்டுளளது. நகர மக்கள தொகை 130,602 (1981).

சுரேந்திர நகர் மாவட்டம் 10,488 ச.கி.மீ. பரப் பளவுடையது. கத்தியவார் முந்நீரகப் பகுதியின் வடக்கில இம்மாவட்டம் அமைந்துள்ளது. இம் மாவட்டத்தின் பழைய பெயர் சலாவாது (Zalawad) என்பதாகும். மாவட்டத்தின் முக்கிய விளைபொருள பருத்தியாகும். சுரேந்திர நகரில் பல தொழிற் சாலைகள உள்ளன. மாவட்டத்தின் மக்கள்தொகை 1,034,185 (1981). சு.இரா.

**சுரேந்திரநாத பானர்சி (கி.பி.1848-1925):** இந்தியத்தேசிய காங்கிரசு தோன்றுவதற்குக் காரண மாக இருந்த சுரேநதிரநாத பானர்சி வங்கத்தில கி.பி. 1848-ஆம் ஆண்டு பிறந்தார.

விடுதலை வேட்கை நாடெஙகும் பரவும் முன்பே மக்களுக்குத் தம் சிம்மக குரலால உணர்ச்சி ஊட்டக் கூடிய சொற்பொழிவுகளை இவர் ஆற்றி வந்தார. இவர் அமெரிக்கப் புரட்சிக கொளகையையும, மாசினி, கரிபாலடி போன்ற வீரர்களின் வரலாறு களையும் மககளிடையே எடுத்து விளக்கி விடுதலை வேட்கையைத் தூண்டினார். நீதியை நிலை நாட்ட அஞ்சா நெஞ்சுடன் போராடும் ஆறறல் உளளவராக இவர் இருந்ததால், இவரை அடிபணியாதவர் (Surrender not) எனறு நணபர்கள அழைத்து வந் தனர்.

இவர் கி.பி. 1871-ஆம் ஆணடு இநதிய ஆட்சிப் பணித்துறைக்கான போட்டித் தேர்வில் வெற்றி பெறறார். இவரை ஆட்சிப் பணித்துறையில நுழைய விடாது தடுகக முயறசி மேறகொள்ளப்பட்டன. அது பயனளிக்காது போகவே கி.பி. 1874-இல் தகக கார ணமினறி இவரைப் பதவியிலிருந்து நீககியது ஆங்கில அரசு. அதனால், மனமுடைந்த பானர்சி கல்கத் தாவில் இந்தியா கழகம் (Indian Association) ஒன்றை நிறுவினார். இநதிய இளைஞர்களுக்கு நாட்டுப் பறறை ஊட்டுவதே அதனுடைய முக்கிய நோக்கமாகும்.

இநதியரை நிருவாகத்தில் பங்கு பெறுவதைத் தடை செய்வதறகுப் பல முயற்சிகளை அரசு மேற கொணடது. எனவே, சுரேந்திர நாதர் இநதியாவின பல பகுதிகளில சுறறுப்பயணம் செய்து அனைத்து இடங்களிலும் மக்களை அம்முயற்சிகளை எதிர்ககு மாறு தூண்டினார். அதன் விளைவாக மக்கள் அனை வரும் ஒன்று சேர்ந்தனர். இந்திய தேசிய மாநாடு கி.பி 1883-இல் கல்கத்தாவில் கூடியது. அதே நேரத்தில் ஆலன் ஆக்டேவியன் கியூம் (Allan Octa-vian Hume) என்ற ஓய்வுபெறற ஆட்சிப் பணித் துறையாளர் இநதிய அரசு அனுமதியுடன் பம்பாயில் முதல் இந்தியுதேசிய காங்கிரசு மாநாட்டை கி.பி. 1885-இல் கூட்டினார். இநதியத் தேசிய மாநாடும் அதனுடன் இணைந்தது.

சுரேந்திரநாதர் கி.பி. 1895-இல் அதன் தலை வரானார்; இவர் 1921 முதல் 1923 வரை வங்க அர சில் அமைச்சராக இருந்தார். இவர் கி.பி. 1876-இலேயே அரசியலில நுழைந்து இந்திய விடுதலை இயக்கத்திற்கு வித்திட்டவராதலால், இவரை இந் திய விடுதலை இயக்கத்தின் தநதை என்றழைப்பது சாலப்பொருந்தும்.

இவர 'வங்காளி' (Bangali) என்ற பத்திரிகைககு ஆசிரியராக இருந்தார. 'உருவாகின்ற ஒரு நாடு' (A Nation in the making) என்ற தலைப்பில் ஒரு நூலையும் இவர் எழுதியுள்ளார். இவர் 1925-இல் காலமானார. கே.சே.

**சுல்தான்புரி** உத்தரப்பிரதேச மாநிலத்தி லுள்ள சுல்தான்புரி மாவட்டத் தலைநகர். இலட்சு மணபுரியிலிருநது தென் கிழக்காகக் கோமதி ஆற றின் கரையில் இந்நகரம் அமைந்துள்ளது. இநநகரம் தொன்மைச் சிறப்புப் பெற்றது. பலமுறை அழிக்கப் பட்டு மீண்டும் உருவாக்கப்பட்ட சுல்தான்புரி குச புரம் என்று முன்பு கூறப்பட்டது. இசுலாமியர் இந் நகரைக் கைப்பறறியபின் இங்குக்குடியேறினர். இவர் கள் வாழந்த பகுதி கி.பி.1857-ஆம் ஆணடு அழிக்கப் பட்டு, ஆங்கிலேயர்களின் இராணுவ முகமாக விளங் கியது. இந்நகரம் வேளாண பொருளகளுக்குப் புகழ் பெற்றது. நகரமக்கள் தொகை 48,782 (1981).

சுல்தான்புரி மாவட்டம் 4,424 ச.கி.மீ. பரப்பள வுடையது. இம்மாவட்டத்தில் கோதுமை, நெல், வாற்கோதுமை பேன்றவை பயிரிடப்படுகின்றன. மாவட்டத்தின் மககள் தொகை 2,042,778 (1981). சு.இரா.

**சுலைமான்** துருக்கியப் பேரரசின் தலை சிறந்த அரசர்களுள் ஒருவர். இவர்தம் தந்தையார் முதலாம் சலீம். தநதையார் இறந்தபின் சுலைமான் கி.பி. 1520-ஆம் ஆணடு அரியணை ஏறினார். இவர் கி.பி. 1520 முதல் 1566-ஆம ஆணடு வரை சிறப்பாக

ஆண்டார். இவரது ஆட்சிக் காலத்தில் துருக்கியரது அதிகாரம் உச்சநிலையை அடைந்தது.

பால்கன் பகுதி, மேற்கு ஆசியா, வடக்கு ஆப்பிரிக்கா ஆகியவற்றை முன்பே கைப்பற்றிய துருக்கியர்கள், இம்மன்னரது காலத்தில் கிழக்கு ஐரோப்பாவின் பக்கம் தமது கவனத்தைச் செலுத்தினர். கைப்பற்ற முடியாது என்று கருதப்பட்ட பெல்கிரேடு நகரத்தை கி.பி. 1521-இல் கைப்பற்றினர். அடுத்த ஆண்டில் உரோடுசு (Rhodes) இவ்வரசரது கட்டுப்பாட்டின் கீழ் வந்தது. அங்கேரிக்கு எதிராக எட்டு முறை படையெடுக்கப்பட்டது. சுலைமான் கி.பி. 1526-ஆம் ஆண்டு மோகாக்சு (Mohacs) என்னுமிடத்தில் அங்கேரியக் குதிரைப் படைகளை அடியோடு அழித்தார். அங்கேரிய மன்னர் இரண்டாம் உலூயி அப்போர்களத்தில் உயிரிழந்தார். அங்கேரிய நாட்டின் அரியணையைக் கைப்பற்ற இருவர் போட்டியிட்டனர். ஒருவர் ஐந்தாம் சார்லசின் சகோதரர் பெர்டினாண்டு; மற்றொருவர் சான் சாபோல்யா (John Zapolya). சுலைமான் சாபோல்யாவிற்கு ஆதரவு தந்தார். அதனால், சுலைமானும் ஐந்தாம் சார்லசும் நேரிடையாகப் போரிட நேரிட்டது. சுலைமான் கி.பி. 1529-ஆம் ஆண்டு வியன்னா நகரை முற்றுகையிட்டார். ஒரு மாதத்திற்குள் அம்முற்றுகையைக் கைவிட்டுத் திரும்பும் வழியில் சிரியாவைத் தாக்கிச் சூறையாடிக் கொண்டு சென்றார். சுலைமான் கீழ்த் திசைப் பகுதியில் தம் கவனத்தைச் செலுத்திக் கொண்டிருந்தாலும், ஆசுதிரியாவை ஒரே படையெடுப்பில் வீழ்த்த முடியாது என்ற காரணத்தினாலும் கோமகன் பெர்டினாண்டுடன் கி.பி. 1533-இல் ஓர் உடன்படிக்கை செய்து கொண்டார்; போட்டியிட்ட இருவருக்கும் அங்கேரி பகிர்ந்தளிக்கப்பட்டது. சாபோல்யா இறந்தவுடன் அவருக்குச் சொந்தமான அங்கேரி கி.பி. 1540-துருக்கிப் பேரரசுடன் சேர்க்கப்பட்டது.

சுலைமான் பாரசீகத்தின் மீது மூன்று பெரும் படையெடுப்புகளை நிகழ்த்தினார். முதல் படையெடுப்பின் மூலம் (கி.பி.1534-35) கிழக்கு ஆசியா மைனரின் எர்சுரம் (Erzurum) பகுதியைக் கைப்பற்றினார். இராக்கும் கைப்பற்றப் பட்டது. இரண்டாம் படையெடுப்பில் (கி.பி. 1548-49) 'வான் ஏரி'யை (Lake Van) சுற்றிலும் உள்ள பகுதிகள் கிடைத்தன. ஆனால், மூன்றாம் படையெடுப்பில் (கி.பி.1554-55) பாரசீகத்தில் உள்ள சபாவிடு(Safavid)நிலப்பகுதியைக் கைப்பற்றுவது மிகவும் கடினம் எனத் தெரிந்து கொண்டார். துருக்கியருக்கும் சபாவிடுகளுக்கும் இடையே கி.பி. 1555-இல் ஓர் உடன்படிக்கை ஏற்பட்டது.

சுலைமான் காலத்தில் துருக்கிக் கப்பற்படை தகர்க்க முடியாதவாறு பலம் வாய்ந்து இருந்தது. அப்படை கி.பி. 1538-இல் வெனிசும், இசுபெயினும் (Spain) சேர்ந்து அனுப்பிய கப்பற் படையைத் தோற்கடித்தது. வடக்கு ஆப்பிரிக்காவில் கி.பி. 1551-இல் திரிபோலியைத் துருக்கியர்கள் கைப்பற்றினர். அதை மீட்க வந்த இசுபெயின் படை நசுக்கப்பட்டது. சுலைமான் கி.பி. 1565-ஆம் ஆண்டு மால்டாவைத் தாக்கினார். ஆனால், அதில் அவர் வெற்றி பெற முடியவில்லை.

சுலைமானின் பிற்கால வாழ்க்கை, அவருடைய மக்களுக்கிடையே ஏற்பட்ட சண்டையினால் துன்பமயமாக இருந்தது. இளவரசர்களுக்கிடையே வாரிசுரிமைப் போர் ஏற்பட்டது. அதில் பயாசிது (Bayazid) என்ற இளவரசர் தோற்கடிக்கப்பட்டுக் கொல்லப்பட்டார். சுலைமானும் அங்கேரியில் ஒரு கோட்டையை முற்றுகையிட்டுக் கொண்டிருக்கும் போது இறந்தார்.

மேலைநாட்டினர் சுலைமானைத் தலைசிறந்தவர் (Magnificint) என்றும், துருக்கியர் சட்டங்களை உருவாக்கித் தருபவர் (Law Giver) என்றும் புகழ்ந்தனர். இவர் காலத்தில் கிழக்கு மத்திய தரைக்கடல் 'துருக்கியின் ஏரியாக' மாறியிருந்தது. சுலைமானைப் பின் தொடர்ந்த அரசர்கள் துருக்கியப் பேரரசைக் காக்க முடியாத நிலையில், விரைவில் அப்பேரரசு மறையத் தொடங்கியது. அ.சி.

**சுவரோவியங்கள்**: மனிதனின் தொன்மையான செயல்களுள் ஒன்றாக ஓவியங்கள் தீட்டுதல் விளங்கியது. சுவரில் ஓவியம் வரையும் பழக்கம் முதன்முதலில் மனிதனிடம் எப்பொழுது தோன்றியது என்று வரையறுத்துக் கூற இயலாது. இருப்பினும் பழங்கற்காலத்தைச் சார்ந்த குகைகளில் ஓவியங்கள் பல இக்காலத்தில் அறிஞர்களால் கண்டுபிடிக்கப்பட்டுள்ளன. வட இசுபெயினில் ஆல்டாமீரா (Altamira) என்ற இடத்திலும் தென் மேற்குப் பிரான்சில் பாண்ட்-டி-காமி (Font de Gaume), இலாசுகா (Lascaux) ஆகிய இடங்களிலும் வரலாற்றுக்கு முற்பட்ட பழங்கற்கால ஓவியங்கள் குகைகளில் கண்டுபிடிக்கப்பட்டுள்ளன. இக் குகைகளில் கண்டுபிடிக்கப்பட்டுள்ள ஓவியங்கள் பழுப்பு, சிவப்பு, கறுப்பு ஆகிய நிறங்கள் தீட்டப்பட்டுள்ளன. இவற்றைச் சாரமான பகுதிகளில் மனத்தில் பட்ட கருத்துகளை வெளிப்படுத்தும் வகையில் கற்கால மனிதன் வரைந்துள்ளான் என்பது இவ்வோவியங்களை நோக்கும் பொழுது புலனாகிறது. இவற்றைக் குகைகளின் வெற்றுச் சுவர்களில் எவ்வித வேலைப்பாடும் அற்ற நிலையில் கற்கால மனிதன் வரைந்

துள்ளான். இன்றளவும் இவற்றின் நிறம் மாறாமல் விளங்குவது எவவாறு என்பது பற்றி அறிஞர்கள் ஆய்வு செய்து வருகின்றனர். இவ்வோவியங்கள ஒன்றுடன் ஒன்று தொடர்பு அற்றுத் தனித்தனி யாகக் காணப்படுகின்றன. இவை கற்கால மனிதன் மனத்தில் நினைத்ததை மறக்காமல இருப்பதற்காக (Memory picture) வரைந்த ஓவியங்கள் எனறும் கூறலாம்.

எகிப்து நாட்டு ஓவியங்கள் வரலாற்றுக் காலத் தின் தொடக்ககால ஓவியங்களாக விளஙகுபவை ஆகும். எகிப்தியக்கலலறைச சுவாகளில் இவ்வோவி யங்கள் தீட்டப்பட்டுள்ளன. இவை மககளுககுச் சமய அறிவை ஊட்டுவதற்காகவே தீட்டப்பட்டன. சமயத் தொடர்பான ஓவியங்களைப் பாபி லோனியர், அசிரியர், கலதேயர், பாரசீகர் ஆகி யோரும் தீட்டினர். இவவோவியஙகள் கி.மு. 4000 முதல் கி.பி. 333 வரையிலான காலகட்டத்தைச் சாரும்.

உரோமானியர்கள் சுவரோவியங்களில புதிய வகைகளைப் பினபற்றினர். இவ்வகை ஓவியஙகள அகழாய்வின மூலம் பாம்பிநகர வீடுகளில் கணடெ டுக்கப்பட்டன. உரோமானிய ஓவியஙகள் பல்வணண ஓட்டுகளின மீது வரையப்பட்டன. இவை சுவரிலிருநது புடைப்பாகத் தோனறும். இவ்வோவியங்கள இயற கையைச் சித்திரிககும வகையில் தீட்டப்பட்டன. தாவரங்கள், விலங்குகள், மக்கள உருவங்கள் ஆகியவை இவறறில அடங்கும். பாம்பி நகரச் சுவர் ஓவியங்களுள அலெக்சாந்தரும் தேரியசும் செய்த போர் பறறிய ஓவியம் குறிப்பிடத்தக்கது.

சுவரோவியக் கலையில் இசுலாம் சமயப் பரவலால் பிறிதொரு மாற்றம் ஏற்பட்டது. இயறகையை எதிர்த்த இசுலாமியா வடிவக்கணித (Geometry) உருவங்களை ஓவியங்களில் தீட்டினர். அதில் தங களின மொழியையும் அழகுடன் எழுதினர். இவ்வகை ஓவியங்கள் எருசலேம், கெய்ரோ, தமாசுகசு (Damascus) ஆகிய நகரங்களில் உளள மசூதிகளில் தீட்டப் பட்டுளளன. கிரனடா நகரில் அல்காம்பிரா அரண மனை ஓவியஙகள், இவ்வகை ஓவியஙகளில் உலகப் புகழ் பெற்றவையாக விளங்குகின்றன.

இங்கிலாந்தில் காண்டர்பரிக் கிறித்தவக் கோயில மண்டபச் சுவரில உள்ள புனித பால் ஓவியம் இங்கி லாந்து நாடடுச் சுவர் ஓவியங்களுள குறிப்பிடததக் கது இது பைசாணடிய ஓவிய முறையில வரையப் பட்டது. பைசாண்டிய ஓவியஙகளின் உருவஙகள வானத்தில் மிதநது செல்லும் உருவம் போனறு காட்சி அளிக்கும். இதில் ஓவியங்கள் மிகத தொலை வில் உள்ளதா அருகில் உள்ளதா என்பதைக் காண இயலாது ஆனால், இங்கிலாந்தில் உள்ள புனிதபால் ஓவியம் காண்பவரின அருகில் உள்ளதுபோல் வரையப் பட்டுளளது. இதனைச் சியோடடோ (Giotto) என்ப வர் வரைந்துளளார். அவர் ஓவியங்கள உலகின மிகச் சிறந்த சுவரோவியங்களாகக் கருதப்படுகினறன.

தட்டைச் சுவரோவிய முறையில் (Flat Mural) பிரான்செசுக்கா (Francesca) எனனும் இத்தாலியர் பல்வேறு ஓவியங்களைவரைநதார். இவ்வோவியங்கள் சுவருககு இணையாக இயஙகுவதுபோல் காணப்படும். இம்முறை மறைந்து முப்பரிமாண முறை பினனர் வளர்ந்தது. இவ்வோவியங்கள் மிகத் தொலை விலிருந்தோ அருகிலிருந்தோ இயங்குவதுபோன்று காட்சியளிக்கும். இம்முறையை மோனடாகினா (Montegna) என்பவர் தோற்றுவிததார். இவர் தீட் டிய ஓவியஙகளில் பாடுவா (Padua) நகரக் கிறித்து வக்கோயில் ஓவியங்கள் புகழ்பெற்றவை. இவை புனித சேம்சு என்பவரின் வாழக்கை வரலாற்றைச் சித்திரிக் கும் ஓவியங்களாகும் முப்பரிமான முறை ஓவியங் களைத் தீட்டுவதில் வல்லவர்களாக இரபேல் (Raphael), மைக்கல் ஏஞ்சலோ (Michelangelo), திடி யன் (Titian), தியேப்போலோ (Tiepolo) போன றோர் விளங்கினர். தியேப்போலோ வெனிசு நகர மாளிகையில் வரைந்த சுதை ஓவியங்கள் புகழ்பெற் றவை. சுவரோவியக் கலை கி.பி. 18-ஆம் நூற்றாண் டில் மறையத் தொடங்கியது. உருவப்படங்கள், தாள் களில் வரைதல், துணிகளில் வரைதல போனற கலை கி.பி. 18-ஆம் நூற்றாண்டில வளர்ந்தது. இருப்பினும் சுவரோவியக் கலையைப் பீட்டர்வோன் கர்னீலியசு (Peter Von Cornelins) என்ற செருமானிய ஓவியரும் இலேட்டன் பிரபு (Lord Leighton) என்ற இஙகி லாந்து ஓவியரும் சில சுவரோவியங்களைத் தீட்டி வளர்த்தனர். சுவரோவியந் தீட்டுவதில் தலை சிறந்தவராகப் பியூவீசு டி சாவான்சு (Puvis de Chavannes) என்ற பிரெஞ்சு ஓவியர் கி.பி. 19-ஆம் நூற்றாண்டில் விளங்கினார். இரீவேரா (Rivera) ஓரோசுக்கோ (Orozco) போன்றோர சுதைஓவியக் கலையை 20-ஆம் நூற்றாணடில் வளர்த்தனர்.

**இந்தியச் சுவரோவியங்கள்:** வரலாற்றுக்கு முற் பட்ட காலத்திலேயே இந்தியாவில் சுவர் ஓவியஙகள தீட்டியுள்ளமை அறிஞர்களால் கண்டுபிடிக்கப்பட்டுள ளது. மத்தியபிரதேசம், உத்தரப்பிரதேசம், தமிழ் நாடு ஆகிய இடஙகளில் உளள குகை ஓவியங்கள் கற் காலத்தைச் சார்நதவை. பல பெருங்கறகால ஓவியங் களும் இவற்றுள அடங்கும். வரலாற்றுக காலச் சுவரோவியங்கள் அசந்தா, எல்லோரா, பாகு,(Bagh), காஞ்சிபுரம், பனமலை, சித்தனனவாசல், தஞ்சாவூர்,

உத்தரமேரூர் போன்ற இடங்களில் காணப்படுகின் றன. திருவிதாங்கூர், கொச்சி ஆகிய கேரளப் பகுதி களிலும் சுவரோவியங்கள் காணப்படுகின்றன. இலங்கையில் சிகிரியாவில் உள்ள ஓவியங்கள் அசந்தா ஓவியங்களுக்கு இணையானவையாகும் (காண்க: இந்திய ஓவியங்கள்).

**சுவரோவியம் தீட்டும் முறை:** சுவர் ஓவியங்கள் சுதை ஓவியங்களாகவும் (Fresco), எண்ணெய் ஓவியங் களாகவும் (Oil Paintings) தீட்டப்படும். எண்ணெய் ஓவியங்கள் வரைவதற்கு முன்னர் முதலில் எண்ணெய் அல்லது நெய்யைச் சுவரில் தடவிப் பின்பு வண்ணங் கள் தீட்டுவர்.

**சுதை ஓவியம்:** நன்கு அரைத்த சுண்ணாம்பைச் சுவரில் பூசுவர். அதைக் குறிப்பிட்ட கணத்திற்குப் பூசிய பின் அது உலராமல் ஈரமாக இருக்கும் பொழுதே ஓவியங்களைத் தீட்டுவர் சுதையோவியத் தில் வண்ணத்தை நீரில் குழைத்தே தீட்டுவர். அவ் வாறு செய்யும்போது வண்ணங்கள் சுதையில் ஊறும். பின்னர் சுண்ணம் உலர்ந்து ஓவியஙகளுடன் இறுகி விடுகிறது.பிறிதொருமுறை சுதை ஓவியம் சுண்ணாம்பு உலர்ந்த பினபு தீட்டப்படும் முறையாகும். இதைச் சுண்ணாம்பு நீர் ஓவியம் என்றும் கூறுவர். இவை நீண்ட நாள்கள் நிலைப்பதில்லை.

வச்சிரப்பசையை உலர்ந்த சுவரின் மீது தடவிப் பின்னர் வண்ணங்களைத் தீட்டும் முறை பசைவண்ண ஓவியமுறை (Tempera) எனப்படும். இவையாவும் சுவரோவியங்களில் இடம் பெறும் முறைகளாகும். பொதுவாக இம்மூன்றையுமே சுதை ஓவியங்கள் என்று கூறுகின்றனர். சுதை ஓவியம் தீட்டுவதற்கு முன்பே ஓவியங்கள் எவ்வாறு அமைதல் வேண்டும் என்பதை ஓவியர் முடிவு செய்வார். ஏனெனில் சுதை உலர் வதற்கு முன்னரே ஓவியம் வெகு விரைவாகத் தீட்டப் படுதல் வேண்டும். சுதை ஓவியங்களுள் மிகப் பழமை யுடையது கிரீட்டுத் தீவிலுள்ள நாசசு (Knossos) நகரிலுள்ள மைனாசு (Minos) என்ற அரசரின் அரண்மனை ஓவியம் ஆகும். தென்னிந்தியாவில் குறிப்பாகச் சோழர்காலத் தஞ்சை ஓவியங்கள் சுதை ஓவியங்களுள் புகழ் பெற்றவையாகும். சு.இரா.

**சுவாகிலி** இனத்தவர் பண்டு, அராபியர் ஆகி யோரின் கலப்பினால் தோன்றியவர்கள. இவர்கள் ஆப்பிரிக்காவின் கிழக்குக் கடற்கரை ஓரம் வாழ்கின்ற னர். சுவாகிலி (Swahili) மக்களினத்தவர் பெரும் பான்மையாக வாழுமிடம் சோமாலியாவிலிருந்து மொசாம்பிக்கு வரையிலான கடற்கரை பகுதியே யாகும். சுவாகிலி என்னும் சொல்லின் பொருளும் கடற்கரை மக்கள் என்பதேயாம். கிழக்கு ஆப்பிரிக்கா முழுவதும் பல்வேறு பழங்குடிகளுடன் தொடர்பு கொள்ளவும் வாணிகம் செய்யவும் சுவாகிலி மொழியே பயன்படுத்தப்படுகிறது. கெனியாவிலும் தான்சான்யாவிலும் சுவாகிலி மொழி ஆட்சி மொழி யாக உள்ளது. சுவாகிலியர் அனைவரும் முசுலிம களாவர்.

கிறித்து பிறந்த ஆண்டில் கிழக்கு ஆப்பிரிக்கக் கடற்கரையோரக் கிராமங்களில் அரேபிய வணிகர் கள் தங்க முற்பட்டனர் என வரலாற்றியலார் கருது கினறனர். சுவாகிலி மக்களும் அராபியர்களும நாளடைவில் இனக்கலப்படைந்தனர். இவர்களால உண்டானதே சுவாகிலி நாகரிகமாகும். சுவாகிலிய ரின் நகர அரசுகள் கி.பி. 1200 முதல் கி.பி. 1500 வரை மிகவும் சிறப்புற்ற வணிகத் தலங்களாக இருந்தன. இவற்றுள் கில்வா (Kilwa), இலாமு (Lamu), மாலிண்டி (Malindi), மொம்பாசா (Mombasa), சான்சிபார் (Zanzibar) ஆகிய நகரங்கள் முதன்மை யானவை எனக் குறிப்பிடலாம.

சுவாகிலி இனத்தவர் ஆப்பிரிக்காவின் உட்பகுதி களிலிருந்து பெறப்பட்ட தங்கம், தந்தம் போன்ற வற்றையும் அடிமைகளையும்கொடுத்து சீனாஇந்தியா பெர்சியா ஆகிய நாடுகளின் பொருள்களைப் பெற்ற னா. போர்ச்சுகீசியர்கள கி.பி. 1500 முதல் கி.பி. 1600 வரை சுவாகிலி நகரங்களைப் பெருமளவு கொள்ளை யடித்தனர். அதனால் சுவாகிலி மக்களின் வாணிகம சீர்குலைந்தது. ஓமானிய (Omani) அராபியர்கள் தலையிட்டுப் போர்ச்சுகீசியரின் செயல்களை ஒடுக்கி னர். சீ.ப.

**சுவாசிலாந்து** தென்கிழக்கு ஆப்பிரிக்காவில் உள்ள ஒரு சுதந்திர நாடு. இதற்கு வடக்கிலும் தெற்கி லும் மேற்கிலும் திரான்சுவால் மாநிலம் எல்லையாக உள்ளது. மொசாம்பிக்கும சுலூலாந்தும் கிழக்கு எல்லைகளாக உள்ளன. நாட்டின் பரப்பு 17,400ச கி.மீ. மக்கள்தொகை 626,000 (1984). சுவாசிலாந்து (Swaziland) நாட்டின் தலைநகர் இம்பாபான் (Mb abane). இதன்மக்கள்தொகை 23,109.

மலைப்பாங்கான இந்த நாடு, நான்கு ஆறுகளி னால் பயன்பெறுகிறது. இதன் ஆட்சிமொழிகள் ஆங் கிலமும் தச்சும் (Dutch) ஆகும். பெரும்பான்மையான மக்கள் சிசுவாதி (Siswati) என்னும்சூலுமொழியைப் பேசுகின்றர். மக்களுள் நாற்பது விழுக்காட்டினர் பரம்பரையான மதங்களைப் பின்பற்றுகின்றனர் எஞ்சியோர் கிறித்தவர்கள்.




சுவாசிலாந்து அமைவிடம்

இந்நாட்டில் வேளாண்மைக்கு ஏற்ற செழிப்பு நிலம் மிகுதியாக உள்ளது.இங்குகரும்பு,அரிசி,பருத்தி, சோளம், புகையிலை பயிராகின்றன. பல ஆறுகள் இந்நாட்டின் மேற்குப் பகுதியை வளப்படுத்துகின் றன. கிழக்குப் பகுதி தாழ்நிலவெளி. முன்பு மலேரி யாக் காய்ச்சல் இங்கு மிகுதியாக இருந்தது. பொது வாக, புல்லும் புதரும் இந்நாட்டில மலிநதுள்ளன. ஆடு வளர்ப்பு முக்கிய தொழிலாகும். பலவகைப் பழ வகைகளும், புகையிலை, பருத்தி, காய்கறிகள், தானி யம் முதலியனவும் பயிரிடப்படுகின்றன. கல்நார்




சுவாசிலாந்து மக்கள்

(Asbestos),ஈயம், பொன் முதலிய தாதுப்பொருள்கள் இங்குக் கிடைக்கின்றன. இந்நாட்டிலிருந்து ஏற்றுமதி யாகும் பொருள்களில் நெல், பருத்திக்கொட்டை, புகையிலை, தோல், வெண்ணெய், ஆகியன குறிப்பி டத்தக்கவை.

**வரலாறு**: சுவாசி (Swazi) என்னும் பெயரைக் கொண்ட மக்கள் கி.பி.18-ஆம் நூற்றாண்டில் இப் பகுதிக்குச் சென்று குடியேறியதால் இதற்குச் சுவா சிலாந்து என்ற பெயர் ஏற்பட்டது. ஐரோப்பியர்களும் இங்கே குடியேறியபொழுது சுவாசி மன்னன் அவர் களுக்கு கி.பி.1888-இல் தன்னாட்சி உரிமை வழங்கி னான். பிறகு ஆங்கிலேயரின் ஆதிக்கம் வளர்ச்சி அடைந்தது. சுவாசிலாந்து அவர்களுடைய ஆதிக்கத் திற்கு உட்பட்டது. இந்நாடு 1968-ஆம் ஆண்டு சுதந் திரம் அடைந்தது. சட்ட வரம்புக்கு உட்பட்ட முடி யாட்சி இங்கு நிலவுகிறது. தெ.பா.

**துணை நூல்:**

Matsebula, J.S.M., A History of Swaziland, London, 1972.

**சுவாதி** இருபத்தேழு விண்மீன்களுள் ஒன்று. சுவாதி நட்சத்திரத்தின் நான்கு பாதங்களும் துலா இராசியில் அமைநதுள்ளன. இது இராகுக்குரிய நட் சத்திரங்களுள் ஒன்று. இதனைச் சுவாதி எனவும், சோதி எனவும் குறிப்பிடுவர். இந்நட்சத்திரத்தில் பிறந்தவர்களுக்கு இராகுதிசை தொடக்க காலத் திசையாக அமையும். துலாம் இந்நட்சத்திரத்தில் பிறந்தவர்களுக்கு உரிய இராசியாகும். இராகு திசை பதினெட்டு ஆண்டுகளாகும். ஒருவர் பிறந்த காலத் தில் இந்நட்சத்திரத்தில் சந்திரன சஞ்சாரம் எவ்வளவு நாழிகையென்று கணககிடுதல் வேண்டும். அந் நாழிகை எல்லையில் எவ்வளவு நாழிகை சென்ற பின்னர்க் குழந்தை பிறந்தது எனக் கணித்துக் கொளளுதல் வேண்டும். சந்திரன் சஞ்சார நாழிகை மொத்தத்தையும் கணக்கிட்டு எடுப்பதற்கு 'ஆதியந் தம் பரம நாழிகை' எனக் கூறுவா. ஆதியநதம் பரம நாழிகையை நான்கால் வகுத்தால வருகின்ற நாழி கையளவு இந்நட்சத்திரத்தின் ஒவ்வொரு பாதத் திற்குமுரியது. அவ்வாறு வகுக்கப்பட்ட நானகில் ஒரு கூறு நான்கரை ஆண்டுகள் கொணடது. சென்ற நாழி கையையும், செல்ல வேண்டிய நாழிகையையும் கணக்கிட்டுத் திசை எச்சத்தை அறுதியிடுவர். சு.சா.

**சுவாதீன அடைமானம்**: காண்க: அடை மானம்.

**சுவாமிக்கண்ணுப் பிள்ளை, எல். டி.** கோயம்புத்தூர் மாவட்டத்தில் உள்ள சோமனூரைச்

சார்ந்த உலூரயி தாமினிக்கு சுவாமிக்கண்ணுப்பிள்ளை கி.பி. 1865-ஆம் ஆண்டு பிறந்தாவர். தந்தையார் பெயர் ஞானப்பிரகாசம் பிள்ளை. உரோமன் கத் தோலிககக் கிறித்தவராகிய இவர் 14 மொழிகளில் புலமையுடையவர்.



சுவாமிக்கணுைப் பிள்ளை, எல்.டி.

தொடக்கக் கல்வியை உதக மண்டலத்திலும் கல்லூரிக் கல்வியை நாகப்பட்டினம் புனித சூசையப் பர் கல்லூரியிலும் பெற்றார். கி.பி. 1878-இல் பளளி இறுதி வகுப்புத் தேர்வில் மாநிலத்திலேயே மூன் றாமவராகத் தேர்ச்சி பெற்றார்.மேலும் தொடர்ந்து இளங்கலைத் தேர்வில் இரணடாமவராகவும் தோச்சி பெற்றார். இளங்கலைத் (B.A.) தேர்வில் வெற்றி பெற்றதும் அக்கல்லூரியிலேயே ஆங்கில ஆசிரியராகப் பணியாற்றினார். பின்னர்ச் சென்னை மாநிலக் கல் லூரியில் இலத்தின் மொழி ஆசிரியராக அமர்த்தப் பட்டார். இக்காலத்தில் முதுகலைக் (M.A.) கல்வி பயின்று சட்டப் புலமை பெற்று அத்துறையில் பட் டங்களைப் பெற்றாா.

இரத்தினம் அம்மையாரை கி.பி. 1887-இல் திருமணம் செய்துகொண்டார். சிறிது காலத்தில் அவர் காலமாகிவிட கி.பி. 1896-இல் அன்னும்மை என்னும் அம்மையாரைத் திருமணம் செய்துகொண டார்.

கி.பி. 1892-இல் துணை மாவட்ட ஆட்சித் தலை வரானார்.பதவியில் படிப்படியாக உயர்ந்து வேளாண் இயக்குநராகிப் பின்னர் 1920-இல் ஓய்வு பெற்றார். ஓய்வுக்குப் பினனும் பொதுவாழ்வில் ஈடுபட்டுப் பெருந் தொண்டாற்றினார். சென்னைப் பல்கலைக் கழகத்தினரால் வெளியிடப்பட்ட தமிழ்ப் பேரகராதி (Tamil Lexicon) நன்முறையில் அமையப் பெரிதும் உதவியாக இருந்தார். செனனையில் கூட்டுறவு இயக் கம் அமைய அரும்பாடுபட்டார். ஐரோப்பாவிறகுச் சென்று பாராளுமன்றத்தின் நடைமுறைகளை அறிய அரசரால் அனுப்பப்படடுத் தெரிந்து வந்தாா. அரசு 1923-இல் இவரைச் சட்டமன்றச் செயலராக ஆக்கியது. அதன் தலைவராக 1923-இல உயாந்தார். இவர் 1925-ஆம் ஆண்டு செப்டம்பர் 10-ஆம் நாள் இறையடி சோந்தார்.

அரசினரால் 1909-ஆம் ஆணடு திவான்பகதூா பட்டம் வழங்கப்பட்டது. இவருக்கு 1924 ஆம் ஆண டில் சி.ஐ இ. என்னும் பட்டம் வழங்கப்பட்டது.

இவர் சிந்தனையாற்றலும் ஆராய்ச்சிப் போக்கும உடையவர். பரிபாடல் என்னும் நூல் கி.பி. 634-இல இயற்றப்பெற்றது எனபது இவர்தம் கருத்து. சீவக சிந்தாமணி, சிலப்பதிகாரம் ஆகியவற்றிற்குக் கால வரையறை செய்துள்ளார். பாண்டியா காலம், புத் தர் பிறந்த நாள், குலோத்துங்க சோழன காலம் ஆகியவற்றைப் 'பழமையாளன்' வெளியீட்டில் புலப் படுத்தியுளளார். தமிழ்க் கல்வெட்டுகள், தமிழ் இலக கியத்தின காலவரையறை முதலிய நூல்களை இயற்றியுள்ளாா. 'நினைவுமறை' என்னும் நூலினை அருளானந்தம் எனபவரோடு சேர்ந்து வெளியிட்டுள ளார். சுருக்கெழுத்துத் திருத்தங்களையும் ஆராய்ந்து வெளியிட்டுள்ளாா. கணிதத்திலும் வானவியலிலும் வல்லவராகத் திகழ்ந்தார். அவர்தம் நூல்களுள் குறிப் பிடத்தககவை பஞ்சாங்கமும் சோதிடமும, இநதிய கால வரையறை சூரிய, சந்திர கிரகங்கள (Indian Chronology, Solar, Lunar, Planetary), ஓா இந்திய நாட்கணக்கீடு, கி.பி. 1800முதல் 2000 வரை (An Indian Ephemeris, A.D. 1800 to A.D. 2000) ஆகியனவாம்.

இவற்றுள நாட்கணக்கீடு பறறிய நூல் இவரது வானவியல் புலமைக்கும், கணிதவியல் அறிவிறகும சிறந்த எடுத்துக்காட்டாகும். கடந்த 200 ஆண்டுகட குரிய ஆங்கிலம், தமிழ், மலையாளம், முகமதிய ஆணடுகள், அவற்றுக்குரிய கி பி. இசிரா, சக,விக்கிர, கலியுக, கொலலம் ஆண்டுகள், அவற்றுள் அடங்கிய ஒவவொரு நாளுக்கும் உரிய திதிகள், நட்சத்திரங் கள் சூரிய, சந்திர கிரணங்கள, இந்துக்களின் விழாக் கள், ஆகியவை விளக்கப்பட்டுள்ளன. 1910 முதல் 2000 ஆணடு வரையிலும் ஒவ்வொரு 10 நாளுக்கு முரிய கிரகங்களின் நிலையும் சூரிய சித்தாந்த முறைக்குத் தக்கவாறு விளக்கப்பட்டிருக்கிறது. சூ.இ.

**சுவாமிநாத சதானந்து** மகாத்துமா காநதி யடிகளுடன் இலண்டன் வட்டமேசை மாநாட்டுக்குச சென்றவரும், விடுதலை இயக்கச் செய்திகளைச செய்தித் தாள்களில் வெளிவரச் செய்யவேணடு மென்று விரும்பி அதற்கான பெருமுயற்சி எடுத்த

வரும் ஆவர். இவர் தநதை பெயர் சுவாமிநாதன். சதானந்து 1900-ல சென்னையில் பிறந்தார். தமது பள்ளிப் படிப்பு முடியும் முன்பே மாற்றாந்தாயின் கொடுமை காரணமாக வீட்டைவிட்டு வெளியேறி னார். இவர் தந்தை தமிழில் ஒரு பத்திரிகையை வெளியிட்டுவந்தார். எனவே, சதாநந்திற்கு இளம் வயது முதலே பத்திரிகைத்தொழிலில் ஆர்வமிருந்தது.

இவர் முதன் முதல் பம்பாயிலுள்ள ஓர் அச்சகத் தில தமது வாழ்க்கையைத் தொடங்கினார். பிறகு அலகாபாத்தில்ஒருபத்திரிகையிலும்;'இரங்கூன்டைம்சு' (Rangoon Times) என்றழைக்கப்பட்ட பத்திரிகை யிலும் பணியாற்றினார். பம்பாய்க்கு 1923-ஆம் ஆண்டு திரும்பி வந்து காங்கிரசில் சேர்ந்து கதரின் முக்கியத்துவத்தைப் பற்றி எழுதி வந்தார். மேலும், 'பிரீபிரசு' (Free Press) என்ற செய்தி நிறுவனத்தை யும் இவர் தொடங்கினார். குறிப்பாக, இந்நிறுவனம் இந்தியாவிலுள்ள நிலைமையை வெளிநாடுகளுக்கு எடுத்துச்சொல்லி, விடுதலை இயக்கத்திற்கு அங்கெல் லாம் ஆதரவைத் திரட்டியது. அந்நிய ஆட்சியை 1930-இலிருந்து 1940 வரை பெரிதும் தாக்கி எழுதிய தால், பல தடவை இவரது பத்திரிகை ஈட்டுத் தொகையை இழந்திருக்கிறது. இந்தியாவில பலரும் ஓரளவு பத்திரிகை வாங்கிப் படிக்கச் செய்த வர் இவரேயாவார். முதன் முதல் பத்திரிகையில் விளையாட்டுச் செய்திகளுக்கு முக்கியத்துவம் கொடுத்தவர் இவரேயாவர்.

நாளடைவில் இவரது பொருளாதார நிலை மிகவும் கேடுற்றது. தொடர்ந்து 1951-இல் உச்சகட் டத்தை அடைந்தது. இதன் விளைவாக இவரது உடல்நிலையும் பாதிக்கப்பட்டது. சர்க்கரை, இரத்த அழுத்தம். யானைக்கால் வியாதிகள் முதலியன இவரை மிகவும் துன்புறுத்தின. மேலும், 1952-இல் இவர் இதய நோயினாலும் பாதிககப்பட்டார். தாம் இறப்பது உறுதி என்று இவருக்குத் தெரிந்தது. எனவே, 1953-இல் இவர் தமது பத்திரிகையை விற்றார். சிலநாட்களில் இவர் இறந்தார். இந்திய விடுதலை இயக்கத்தில் சுவாமிநாத சதானந்திறகுப் பெரும்பங்குண்டு. கே. சே.

**சுவாமிமலை** சோழநாட்டுத் தெய்வத் திருத் தலங்களுள் குறிப்பிடத்தக்கது. இத்தலம் குடந்தைக்கு மேற்றிசையில் ஐந்து கல் தொலைவில் அமைந்



சுவாமிமலை

துள்ளது தஞ்சையிலிருந்து சென்னை செல்லும் புகை வண்டித்தடத்தில் இத்தலத்தின் பெயரில் அமைந் துள்ள புகைவண்டி நிலையத்திலிருந்து வடக்கே ஒரு கல் தொலைவு சென்றால் சுவாமிமலையை அடை யலாம். தஞ்சை-குடந்தை பேருந்துத் தடத்திலிருந்து பிரியும் கிளைச்சாலை வழியே இத்தலத்திற்குச் செல்லும்போது இடையில் திருவலஞ்சுழி எனனும் தலத்தைக் கண்டு மகிழலாம்.

சுவாமிமலை இயற்கைச் சூழலில் அமைந்த ஊராக விளங்குகின்றது. இவ்வூரில் இன்று தமிழக அரசால் நிறுவப்பட்ட சிற்பக் கலைப் பயிற்சிப் பள்ளியொன்றும்,சுவாமி மலை முருகன் திருக்கோயில் நிருவாகம் நடத்தும் சித்த மருத்துவ நிலையமொன் றும் உள்ளன.

சுவாமிமலை முருகப்பெருமான் விரும்பி உறையும் ஆறுபடை வீடுகளுள நான்காவதாகக் கருதபபடுகின றது. இத்தலத்தில முருகப் பெருமான குருமணியாய் விளஙகித் தந்தைக்குப் பிரணவ மந்திரப் பொருளை ஓதியருளினமையாலஇதுசுவாமிமலைஎன்றுஅழைக்கப் பட்ட தாகச் சொல்வர். 'நீயே சுவாமி ஆதலால இத்தலம் சுவாமிமலை என வழங்குவதாக' எனச் சிவபெருமான் அருளினார் என்பர். திருவேரகம், சுந்தராசலம், தாத்திரீகிரி,குருமலை என்னும பெயர் களும் இதற்குணடு.

திருமுருகாற்றுப்படையில் ஏரகம் எனபது முருகன் உறைவிடஙகளுள் ஒன்றாகச் சுட்டப்படு கிறது. உரையாசிரியரான நச்சினார்க்கினியர் இத் தலம் மலைநாட்டகத்ததோர் பதியெனக் கூறியுள ளார். சிலபபதிகாரத்திலும் ஏரகம் சுட்டப்படு கின்றது. 'சீர்கெழு செந்திலும் செங்கோடும் வெண குன்றும், ஏரகமும் நீங்கா இறைவன்' எனனும பகுதிக்கு உரையெழுதும் அரும்பத உரையாசிரியர் வெண்குன்றம் என்னும் ஊரைச் சுவாமிமலை எனறு விளக்குகிறார். அவர் கருத்துப்படி ஏரகம் வேறு, சுவாமிமலை வேறு என்பதாகிறது. கி.பி. 15-ஆம் நூற்றாண்டில் வாழ்ந்த முருகனடியாரான அருணகிரி நாதர் சுவாமிமலை பற்றிப் பல அருட்பாடலகளை யாத்துள்ளார். அப்புலவர் பெருமான, 'காவிரி யாற்றுக்குளேவரு, வளமை சோழநன்னாட்டுக்குள ஏரக, நகரிற் சீர்பெறு மோட்சத்தையே தரு பெருமாளே' என்று பாடுகின்றார். எனவே, கி.பி. 15 -ஆம் நூற்றாண்டில் சுவாமிமலைக்கு ஏரகம் என்னும் பெயர் வழங்கியமை தெளிவாகும்.

திருமுருகாற்றுப் படை பாடிய நக்கீரர் ஏரகத தில் புலராக் காழகம் புலர உடுத்து முருகனை வழி படும் பெரியோர் பற்றிப் பேசுகின்றார்.நீராடி விட்டு ஈரத்துணியோடு நின்று வழிபடும் மரபு தென் கனனட நாட்டில் குமார பருவதத்தை அடுத்துள்ள முருகன் கோவிலான குமாரசேத்திரத்தில் இனறும் இருத்தல் கொண்டு நச்சினார்க்கினியர் குறிப்பிடும் ஊர்தான் ஏரகம் எனக் காட்டுகிறார் முனைவர் மா. இராச மாணிக்கம்.

சுவாமிமலை ஒரு செயற்கைக் குனறாகும். இது தரை மட்டத்திலிருந்து ஏறத்தாழ 20 மீட்டர் உயரத்தில் அமைந்துள்ளது அடிவாரத்திலிருந்து படிக் கட்டுகளில் ஏறிச் சென்றால் மேலே இரண்டு திருச் சுற்றுக்கள் ஒன்றன்மேலொன்றாக அமையக் காண லாம். மூன்றாவது திருச்சுற்றில் முருகப் பெருமானுக் குரிய கோயில் அமைந்துள்ளது அடி வாரத்திலுளள கோயில் அருள்மிகு மீனாட்சி சுந்தரேசுவரர்க்கு உரிய தாகும். மேற்கு, கிழக்கு, தெற்கு ஆகிய மூன்று திசை களிலும் மூன்று வாயில்கள் அமைநதுள்ளன. தெற்கு வாயிலில் மட்டும் இராசகோபுரம் முருகன பற்றிய சுதைச் சிற்பங்களுடன் விளங்குகிறது. ஏனைய இரண்டு வாயில்களும் மொட்டைக் கோபுரங்களைக கொணடுள்ளன.

அடிவாரத்திலுள்ள மீனாட்சி சுந்தரேசுவரர் திருக்கோவிலில் தட்சிணாமூர்த்தி, விநாயகர், சோமாசுகந்தர், காசி விசுவநாதர் முதலான தெய் வங்கட்கும், சமயாச்சாரியர் நால்வருக்கும்,நவகோள் களுக்கும் சநநிதிகள் உள்ளன. வச்சிரதீர்த்தம் என் னும் நீர் நிலையும் உணடு. வடகிழக்குத் திசையில வசந்தமண்டபம் அமைந்துள்ளது.

மேலுள்ள கோவிலுக்குச் செல்லும் படிக்கட்டுத் தொடர் வசந்த மண்டபத்தருகே தொடங்குகிறது. இதில் அறுபது படிகள் அமைந்துள்ளன. பிரபவ முதலான அறுபது ஆணடுகட்கும் உரிய தேவதைகளே படிக்கட்டுகளாக அமைந்துள்ளன என்பர்.

உச்சிக் கோயிலுக்கு முன்பாகக் கணபதி தெற்கு முகமாக அமர்ந்து அருள்புரிகிறார். இவரை நேத்திர விநாயகர் அல்லது கண் கொடுத்த விநாயகர் என்பர். கொங்குநாட்டைச் சார்ந்த பிறவிக் குருடன ஒருவன், இப்பெருமானை வணங்கிக் கண்பெற்றான் எனபர். கொடி மரத்தைக் கடந்துசென்றால் இந்திர னால் கொடுக்கப்பட்ட ஐராவதம் என்னும் யானை யைக் காணலாம். கந்த புராணத்தில் கூறியுள்ளபடி முருகப்பெருமானுக்கு யானை ஊர்தி அமைந்திருப் பது குறிப்பிடத்தக்கது.

முருகப் பெருமான் உறையும் பகுதி மட்டும் பழைய திருப்பணியாகும். கிருதவீரியன் என்னும்

மன்னனுடைய மகன் கார்த்தவீரியனால் இது கட்டப்பட்டதாகக் கூறுவர். மகாமண்டபம், மீனாட்சி சுந்தரேசுவரா கோவில், உற்சவமண்டபம், படிகள முதலானவை பிறகாலத்தவர் திருப்பணிகளாகும்.

இங்குள்ள தீர்த்தங்களில் நீராடிப் பலர் நன்மையடைந்ததாகக் கூறுவர். பூமிதேவியே இங்குத் தலமரமாகக் (நெல்லி) காட்சி நல்குவதாகக் கூறுவர். இத்தலம் பற்றிப பல நூல்கள எழுதப்பட்டுள்ளன. ஆண்டு முழுவதும் முருகப் பெருமானுக்கு விழாக்கள் நடத்தப்படுகின்றன. அ.த

**சுவாமி விபுலானந்தர் (கி.பி.1892-1947):** ஈழநாட்டின் கிழக்கு மாகாணத் தலைநகரான மட்டக்களப்பைச் சார்ந்த காரேறுமூதூரில் சைவ வேளாளர் குலத்தில் சாமித் தம்பியார்க்கும் கண்ணம்மையார்க்கும் மகனாக கி.பி.1892-இல் பிறந்தார். இவரது இளமைப் பெயர் மயில்வாகனன். இவர்தம் 16-ஆம் வயதில் கேம்பிரிட்சு முதுநிலைத் (Senior Cambridge) தேர்வில் முதல் வரிசையில் தேர்வுபெற்றார். விடுமுறைக் காலங்களில் காரைத் தீவு வித்துவான் பொ. வயித்தியலிங்கதேசிகரிடம் தமிழிலக்கிய இலக்கணங்களையும், சில வடமொழி நூல்களையும் முறையாகப் பாடங்கேட்டார். கொழும்பில ஆங்கில ஆசிரியர் பயிற்சிக் கழகத்தில் சேர்ந்து 1912-இல் ஆசிரியப் பயிற்சிப் பட்டம் பெற்றார். கல்வி பயின்று வருங் காலத்திலேயே கொழுமபுப் பகுதியில் தமிழறிஞர்களாகப் புகழ்பெறற தென கோவைக் கநதையா பிளளை, சிற். கைலாச பிள்ளை, தாமோதரம் பிளளை ஆகியோரிடம் தமிழ இலககிய இலக்கணங்களில மேலும் பயிறசி பெற்றார்.

இளமைதொட்டே ஆங்கிலம், தமிழ், வடமொழி கணிதம், பௌதிகம் ஆகியவற்றில ஈடுபாடு கொணடு கற்கலானார். மதுரைத் தமிழ்ச் சங்கப் பணடிதத தோவிலும், இலணடன் பல்கலைக் கழக பி.எசி (B.Sc) பட்டத் தேர்விலும் வெற்றி பெற்றுப் பணடித மயில் வாகனன் என்னும் சிறப்புடன 1920 இல் யாழ்ப்பாணம் மானிப்பாய் இந்துக் கல்லூரியில முதல்வராகப் பணியாற்றினார்.

பணடைத் தமிழர்தம அறம், கலை, அரசியல, பண்பாடு, நாகரிகம ஆகியவற்றின் மேம்பாட்டினையும், இக்காலத் தமிழரின போலி வாழ்வினையும் சீர் தூக்கிச் சிந்தித்த மயில்வாகனனார், தமிழரின எதிர் கால ஆக்கத்திற்குத் தம்மாலான பணிபுரியத் திட்டமிட்டார். இவா 1917-இல் யாழப்பாணத்தில் யோகர் சுவாமிகளுடன் நெருங்கிய தொடர்பு கொண்டு, அருளனுபவத்தால் தம் உள்ளத்தைப் பக்குவப்படுத்திக் கொணடு வந்தார். இவருக்கு 1922-இல் தவத்திரு சருவானந்த சுவாமிகளின் திருவருள் நோக்குக் கிட்டியது. இவ்வாறான ஞானச் சூழலுக்கேற்ப இல்லறத்தை நாடாமல் இவர் துறவு மேற்கொள்ள விரும்பினார். வங்கநாட்டு ஞானி இராமகிருட்டிண பரமகம்சரின் அருளனுப மொழிகளில் திளைத்து, ஞான வேட்கையுடன் சென்னை இராமகிருட்டிண சங்கத் திருமடத்தைச் சார்நது பிரபோத சைதன்னியா என்னும் பிரமசரியத் திருநாமம் பெற்று மகிழ்ந்தார். கொள்கைப் பிடிப்புடன் வாழ்ந்த இவர் 1924-இல் (சித்திரை நிறைமதி நாளில்) தவத்திரு சிவானந்த சுவாமிகளால் கல்லாடை வழங்கப்பெற்று, சுவாமி விபுலானந்தர் என்னுந் துறவுத் திருநாமங் கொண்டு, சங்கத் துறவியருள ஒருவராக வாழ்ந்து வரலானார்.

விபுலானந்த அடிகள் 1925-இல ஈழநாடு திரும்பி இராமகிருட்டிண சங்கத்தைச் சார்ந்த கல்வி நிலையங்களைக் கணகாணிக்கும் பொறுப்பினை ஏற்றார். கொளும்பு, மட்டக்களப்பு, திரிகோண மலை முதலிய இடங்களில் இராமகிருட்டிண ஆசிரமங்களை அமைத்தார். மட்டக்களப்புக் கல்லடி உப்போடையில் இவர் நிறுவிய சிவானநத வித்தியாலயமும், ஏழை மாணவரில்லமும் இவருடைய தொண்டுக்குச் சான்று பகரும். வண்ணார் பணணை வைத்தீசுவர வித்தியாலயம், திரி கோணமலை இந்துக் கல்லூரி, மட்டக்களப்பு விவேகானந்தர் மகளிர் ஆங்கிலக் கல்லூரி, காரைத்தீவு சாரதா வித்தியாலயம் ஆகியவையும் இவர்தம் தொண்டால் சிறந்துதோன்றியவையாகும்.

இலங்கைப் பல்கலைக் கழகத்தில் பணியாற்றிய அநுபவத்துடன் தமிழ்நாட்டிற்கு வந்து, அண்ணாமலைப் பல்கலைக் கழகத்தில் தமிழ்த்துறைத் தலைவராகப் பொறுப்பேற்றார். அப்பல்கலைககழகத்தில் பணியாற்றிய இசைத்துறைத் தலைவர் தஞ்சாவூர் பொன்னையா பிள்ளையவர்களிடம் நட்புற்றுத் தொன்மையான இசை நுட்பங்கள் பற்றி அறிய முற்பட்டார். இவரது அடிமனத்தில் நுண்கலைகள், சிறப்பாக, இசைக் கலை பற்றிய எண்ணங்கள் பதிந்திருந்தமையால இசைத் தொடர்பான ஆராய்ச்சியில் ஈடுபாடு கொணடார். 'நரம்பின் மறை' எனத் தொல்காப்பியரும், இசையொடு சிவணிய யாழின் நூல்' எனக் கொங்குவேளிரும் குறிப்பிட்ட யாழ்நூற் பொருளைத் துருவி ஆராய்வதற்குச் சிலப்பதிகாரப் பயிறசி துணைநின்றது. சென்னைப் பல்கலைக்கழகச் சார்பில் 1936-ஆம் ஆண்டில் நடைபெற்ற இவரது இசை யாராய்ச்சிச் சொற்பொழிவுகளைக் கேட்ட

டாக்டர் உ.வே.சாமிநாத ஐயர் முதலிய தமிழ்ப் பேரறிஞர்கள், இசை பற்றிய இவரது விழுமிய ஆராய்ச்சி நூலை விரைவில் வெளியிடுமாறு வேண்டிக் கொண்டிருந்தனர். இவரும் ஆர்வங்கொண்டு, சிலப்பதிகாரம் அரங்கேற்று காதையினுள் யாழாசிரியன் அமைதி கூறும் இருபத்தைந்து அடிகளுக்குப் பொருந்திய விளக்கவுரை காண முற்பட்டார். தேர்ந்த இசை நுண்கூறுகளுடன் அருங்கலைப் பெட்டகமாக 'யாழ்நூல்' எழுதித் திருக்கொள்ளம்பூதூர்த் திருக்கோயிலில் 1947-இல் கரந்தைத் தமிழ்ச் சங்க ஆதரவில் புலவர் கூடிய பேரவை முன் அரங்கேற்றி மகிழ்ந்தார.

இதற்கிடையே சேக்சுபியர் நாடகநூற் பொருளையும், வடமொழி நாடக நூற் பொருளையும் போக்குகளையும் சிலப்பதிகார நாடகக் காப்பியநூல் முடிபுகளுடன் ஒப்புநோக்கி ஆராய்ந்து, மதங்க சூளாமணி என்னும் நாடகத் தமிழ் நூலினை இயற்றினார். அதனை மதுரைத் தமிழ்ச் சங்கத்தின் சார்பாக அன்பர்கள் வெளியிட்டு உதவினர். அனைத்துத் தமிழ்த் தொண்டுகளையும் நோக்குகையில், அடிகளார் இயல் இசை நாடகம் ஆகிய முத்தமிழுக்கும் தொண்டுபுரிந்தார் என்பது தெளிவாகும்.

இமயமலைச் சாரலிலுள்ள அத்துவித (மாயாவதி) ஆசிரமத்திற்குச் சென்று 'பிரபுத்த பாரதம்' என்னும் வேதாந்த இதழை ஆங்கிலத்தில் வெளியிடும் பத்திரிகாசிரியராக 1939-ஆம் ஆண்டில் பொறுப்பேற்றார். பின்னர் ஈழநாடு திரும்பி, இலங்கைப் பல்கலைக் கழகத்தில் முதல் தமிழ்ப் பேராசிரியராக அமர்ந்து தமிழ்ப் பணி மேற்கொண்டார். இவர் 1947-ஆம் ஆண்டு 19-ஆம் நாள் காலமானார்.

**அடிகளார் இயற்றிய நூல்கள்:**

1. **யாழ்நூல்:** பழந் தமிழரின் இசைமரபுகளையும் நுண்கூறுகளையும் ஆராய்ச்சியடிப்படையில் விளக்கிச் செல்லும் இதனைத் தம் பல்லாண்டு அனுபவப் பயனாக வெளிக்கொணர்ந்தார். நரம்பிசைக் கருவிகளாகிய வில்யாழ், பேரியாழ் (பெருங்கலம்), மகர யாழ், செங்கோட்டியாழ், சகோடயாழ் ஆகியவற்றைப் பண்ணியல் ஓர்ந்து கணித நுட்பத்துடன் ஆராய்ந்து பட விளக்கங்களுடன் வெளியிட்டுள்ளார் அடிகளார். இந்நூலில் நல்லஓசையையுடையது (சு+கோச+யாழ்) என்னும் பொருளில் சகோட யாழ் அமைந்துள்ளது என்பதும், அது 'செம்முறைக் கேள்வி' என்னும் பழந்தமிழ்ப் பெயரின் மொழி பெயர்ப்பு என்பதும் கூறப்பட்டுள்ளன. தமிழ் இசை மரபு ஒழுங்குகளையும் வடமொழியிசை மரபுஒழுங்குகளையும் ஒப்ப வைத்துச் சிந்தித்து, நூலாசிரியர் தாம் கண்ட இசையனுபவச் செய்திகளைப் பதிவாக்கி இந்நூல் வாயிலாகப் புலப்படுத்தியுள்ளார்.

**மதங்க சூளாமணி:** நாடக இலக்கண அமைதி கூறும் இந்த ஆராய்ச்சி நூல் ஒப்பாய்வு நோக்கில் இயன்றது. சேக்சுபியர் வகுத்த நாடகங்களைத் தமிழ்மொழி வடமொழி நாடகங்களுடன் தொடர்பு படுத்தி நுண் கூறுகளை அலசிக் கூறுகிறது. மதங்கர் என்னும் நாடக ஆசிரியர் பெயரால் அமைந்தது. விபுலானந்த அடிகளின் உரைநடைக்கும் செய்யுள் திறத்திற்கும் மொழிபெயர்ப்பாற்றலுக்கும் ஓர் எடுத்துக்காட்டாக இச்சிறுநூல் அமைந்துள்ளது

**நடராச வடிவம்:** சிவபெருமான் அம்மையப்பராக மக்களுக்கு அருள் புரியும் பாங்கினை எடுத்துககூறும் இந்நூல், அந்த இறைவனின் ஐந்தொழில நுட்பத்தை உட்கிடையாகக் கொணடது.

**கட்டுரைகள்:** சிறந்த கட்டுரை வனமையால் உருவான பல கட்டுரைகள் அடிகளாரின் உள்ளத்தை நன்குணர்த்துவன.'இமயஞ்சேர்ந்த காககை' என்னுங் கட்டுரை இவர்தம் பணிவையும் சமய ஈடுபாட்டையும் உணர்த்தும். 'விபுலானந்த வெள்ளம்' என்னும் நூல் இவர் சிறப்புணர்த்தும். இவரால் இயற்றப் பெற்ற தனிச் செய்யுட்களும் பலவாக உள்ளன.

செ.வை.

**சுவாரசு, பிரான்சிசுகோ** என்பவர் கி.பி. பதினாறு, பதினேழாம் நூற்றாண்டுகளில் வாழ்ந்த, புகழ்மிக்க இறையியல் ஆசிரியரும், தத்துவ ஆசிரியரும், பன்னாட்டுச் சட்டத்துக்கு அடிகோலியவரும் ஆவர். இவர் கி.பி. 1548-இல் இசுபெயினில் கிரனெடாவில் ஒரு செல்வமிக்க வழக்கறிஞரின் குடும்பத்தில் பிறந்தார். இளமையில் பிரான்சிசுகோ சுவாரசு (Francisco Suarez) சலமாங்காவில் சட்டம் பயின்று, பின்னர் அதை விடுத்து கி.பி. 1564-இல் இயேசு சங்கத்தில் (Society of Jesus) சேர்ந்தார். பின்னர் சில காலம் உரோமிலும், அல்கலா நகரத்திலும் இயேசு சங்கக் கல்லூரியில் தத்துவம், இறையியல் முதலியவைகளைக் கற்றுக் கொடுக்கும் ஆசிரியராகப் பணி செய்தார். இசுபெயினின் அரசர் இரண்டாம் பிலிப்பினால் கோயம்பராவில் (Coimbra) சிலகாலம் பேராசிரியராக அமர்த்தப்பட்டார். இவர் இவோரா பல்கலைக்கழகத்தில் (Euora) கி.பி. 1597-இல் 'பேரறிஞர்' (Doctor) பட்டம் பெற்றார். இவர் யாவரினும் மிக்க கல்வியறிவு பெற்றவராகவும், தெளிவான சிந்தனையாளராகவும் மதிக்கப்பட்டார். இவர் பல நூல்கள் எழுதினார்; அவை 28 பகுதிகளாக கி.பி. 1856க்

கும் கி பி.1878க்கும் இடையே பாரிசில்பதிப்பிக்கப்பட்டன. இவர், புனித தாமசு அக்குவினாசுக்குப் பிறகு உரோமானியக் கத்தோலிக்க இயேசு சங்கத்தின மிகச் சிறந்த தத்துவ ஆசிரியராகக் கருதப்படுகிறார். இவர் மனித விருப்பத்தினால் தோன்றுகிற பல சிக்கல்களையும் (Problems), பொது நிகழ்வுக்கும், தனி நிகழ்வுக்குமுள்ள வேறுபாட்டையும் (Concept of general versus particular phenomena) விளக்கி, கி பி. 1597-இல் எழுதிய தத்துவ விளக்க நூல் ஒரு நூறாண்டுக்கும் மேலாக ஐரோப்பியப் பல்கலைக் கழகங்கள் பலவற்றில் தத்துவப் பாட நூலாகப் பின்பற்றப்பட்டது. இவர் போப்பு ஐந்தாம் பால் என்பவருடைய வேண்டுகோளின்படி கிறித்தவ அரசின் இயல்புகளை விளக்கியும் கடவுளின் பிரதிநிதிகளாக ஆளுதற்கு அரசர்களுக்கு உரிமை இருக்கிறதென்று கூறிய ஆங்கிலிக இறையியலாரின் கருத்துகளை மறுத்தும் நூல் எழுதினார்.

**அரசியற் கருத்துகள்:** சுவாரசு சட்டஙகளைப் பற்றிய தம் நூல்லில் அரசரின் தெய்விக உரிமைக் கோட்பாட்டை மறுததோடு, மக்களே தொடக்கத்தில் அரசியலதிகாரத்தை உடையவர்களென்று ஒரு குடியாட்சிக் கருத்தையும்வரைந்தார். அவருடைய கருத்தினபடி அரசு எனபது மககள் தங்களுடைய ஒப்புதலின் பேரில்செய்துகொண்ட ஒரு சமூக ஒப்பநத்தின் விளைவாகவே தோன்றியதாகும். மனிதர் ஒவ்வொருவருக்கும் உயிர் வாழ்தற்கும், சுதந்திரத்தோடிருத்தற்கும், சொத்துகளைப் பெறுதற்கும் உரிமைகள இயற்கையிலேயே இருக்கின்ற காரணத்தால், சில மனிதருடைய இயல்புக்கேற்றவாறு அடிமை நிலை சரியானதென்ற அரிசுடாட்டிலின் கருத்து தவறானதாகும்.

**பன்னாட்டு அரசியல் சட்டம்:** இவ்வாறு சமூக ஒப்பந்தம் பற்றியும், தனியார் உரிமைகளைப் பற்றியும் சில கருத்துகளை ஆதாரமாக வகுத்தபினனர், சுவாரசு பன்னாட்டு அரசியல் நிலைகளைக் கவனித்துச் சில கருத்துகளை வெளியிட்டார். இவர் இது பற்றி எழுதிய ஒரு நூலில் இசுபானியக் குடியேற்ற நாடுகள் மேற்கிந்தியத் தீவுகளில் நிறுவப்பட்டதை மறுத்து, உலக நாடுகள் என்ற அமைப்பிலே, மேற்கிந்தியத் தீவுகள ஒவ்வொன்றும் இசுபெயினுக்கு ஒத்த நிலையில் சுதந்திர உறுப்பு நாடுகளாக இருக்கின்றன எனற கருத்தை வெளியிட்டார். மேலும், இத்தீவு மக்களெல்லாரும் நாகரிகத்தில் பின்தங்கிய நிலையிலும், கிறித்தவ நெறியைச் சேராமலும் இருந்தனரென்ற காரணத்தினால், அவர்களுடைய நாடுகளைப் போப்பாணடவரோ, புனித உரோமானியப் பேரரசரோ, வேறெந்த கிறித்தவ அரசரோ படையெடுத்துக் கைப்பற்றி ஆளுதல் நியாமாகாது என்று உறுதியாகக் கூறினார். இயற்கையின் சட்டம் என்ற கோட்பாட்டினடிப்படையில சட்டங்களைப் பற்றிய கொள்கைகளைச் சுவாரசு தொகுத்தார். இவர் இயற்கையின் சட்டத்தைப் பற்றி முறையாக வகுத்த கருத்துகளை ஆதாரமாக வைத்தே அறிவியல் வகையிலே அரசியல் கொள்கையில் தோன்றும் சிக்கல்களை அல்லது கேள்விகளை யாவரும் அணுகலாயினர். இயற்கையிலும், மனித இயல்பிலும் காணப்படுகிற சில பண்புகளே (Qualities) சிலரைச் சரியான நெறியிலும், சிலரைத் தவறான நெறியிலும் நடக்குமாறு தூண்டுகின்றன. ஆகையால், நன்மை என்பதற்கும், தீமை என்பதற்கும் இடையேயுள்ள வேறுபாடு இறைவனுடைய விருப்பத்தினபடியோ மனிதனுடைய விருப்பத்தின்படியோ தோனறாமல, அது பகுத்தறிவின் வாயிலாகத் தோன்றுகிற ஒரு வேறுபாடே ஆகும். மனிதர்களுக்கிடையேயுளள உறவுகளும், அவறறின விளைவுகளும், மனிதருடைய நடத்தையிலிருந்தே தோன்றுகின்றன. அவையே நாட்டின் சட்டத்தின் செயல்முறைகளும், விதிகளும் சரியானவையா என்றறிய உதவும் உரைகல்லாக இருககின்றன. ஆகையால், எந்தச் சட்டம் இயற்றுபவரும் பகுத்தறிவிலே தவறு என்று காணப்படுவதைச் சரியானது என்று காட்ட இயலாது. ஆகையால் பகுத்தறிவு காட்டும் இயற்கைச் சட்ட உணமைகளை அல்லது கருத்துகளை, போப்பு கூட மாற்றுதல் இயலாது. ஒவ்வொரு அரசின் சட்டத்தின பிரிவுகளுக்கும் ஆதாரங்களாக யாவராலும் ஒப்புக்கொள்ளப்படத்தக்க பகுத்தறிவுக் கருத்துகள் அல்லது விதிகள் காணப்படுகின்றன. அப்பகுத்தறிவுக் கருத்துகளே இயற்கையின் சட்டமாக அமைந்துள்ளன. ஓர் அரசிலுள்ள குடிமக்கள் ஒவ்வொருவரும் எவ்வாறு அவ்வரசின் சட்டஙகளுக்குக் கட்டுப்படுதல் வேணடுமோ, அவ்வாறே அரசுகளும் நாடுகளும் தங்களுக்கெல்லாம் பொதுவாக உளள இயற்கையின சட்டத்துக்குக் கட்டுப்படுதல் வேண்டும். இவ்வாறு சுவாரசு இயற்கையின் சட்டம் என்ற ஓர் அமைப்பிலே அரசியலமைப்புச் சட்டத்துக்கும், பன்னாட்டுச் சட்டத்துக்கும் ஆதாரங்களிருககின்றன என்று காட்டுகிறார்.

**அரசு பற்றிய கருத்துகள்:** அரசு என்பது, குடும்பத் தலைவர்கள் தம் தேவைகளை நிறைவு செய்தற்காகத் தம் விருப்பத்தின் காரணமாக இணைந்ததனால் தோன்றிய ஒரு நிறுவனமாகும். இவ்வாறு பலர் தம் விருப்பத்தினால் இணைந்த காரணத்தால், பொது நலனுக்குகந்தவற்றைத் தாம் செய்ய வேணடிய கடமையாக ஒவ்வொருவரும் ஏற்றுககொளகின்றனர். ஆகையால், இவ்வகையாகத் தோன்றும் குடிமைச் சமூகம் அல்லது அரசு என்பது வாழ்க்கைக்கு

வேண்டுவனவற்றைச் செய்யுமாறும், பொது நலனுக்கேற்ற பணிகளைச் செய்யுமாறும் தன் உறுப்பினர்களைக் (குடிகளைக்) கட்டாயப்படுத்துவதற்கு இயல்பான அதிகாரம் உடையது. இவ்வாறு காணும் போது, அரசுக்குத் தன் உறுப்பினர்களை ஆளுதற்கு இருக்கும் அதிகாரம் என்பது ஒரு சமூகக் கூட்டத்தில் காணப்படுகின்ற ஓர் இயல்பு ஆகும். அரசியல அதிகாரம் என்பது சமூகம் முழுவதற்கும் உரியது. ஆகையினால், எவருடைய அரசியற கடமையும் வரம்பற்ற கடமை அன்று, அரசியல் ஏற்பாடுகளெல்லாம் மேலெழுந்தவாரியான அமைப்புகளே ஆகும். ஓர் அரசு எவவகையாக, எவரால் ஆளப்பட்டாலும், அதனுடைய அதிகாரம் சமூகத்திலிருநதே தோன்றுகிறது. ஆகையால், அது சமூக நலததின் பொருட்டே இருககிறது. அது சீரிய முறையில் செயற படுத்தப் படாவிட்டால், அதனைக் கையாளுபவரிடமிருந்து அதனை மாற்றுதல் கூடும்.

**மதிப்பீடு:** சுவாரசு ஆன்மீக நோக்கஙகளுக்காக உலகியலதிகாரிகளைக் கட்டுப்படுத்துவதறகுப் போப்பாண்டவருக்கு அதிகாரம் உணடென்ற கருத்தை நிறுவுவதற்கே இயற்கையின் சட்டத்தை விளககினார். எனினும், இவர் அரசு எனபதும், அரச பதவி என்பதும் மனிதத் தேவைகளின் காரணமாகவே தோன்றின என்று கூறிய கருத்து அறிவியலான அணுகுமுறையே ஆகும். இவர் அரசியல் கொள்கைகளையும், சமூகக் கொள்கைகளையும், இறையியலினின்றும் பிரித்து, அரிசுடாட்டிலைப போல அறிவியல் அணுகுமுறையைப் பின்பற்றினார். பா.சு.

**துணை நூல்கள்:**

**Allen, J. W.,** A History of Political Thought in the Sixteenth Century, London, 1951.

**Gierke, Otto.,** Natural Law and the Theory of Society, (Translated by Ernest Barker), Cambridge, 1924.

**சுவான்சுகோம்பு மனிதன்:** தூரக்கிழககு நாடுகளான சாவாவிலும் (Java) சீனாவிலும் கணடெடுக்கப்பட்ட எலும்புக் கூடுகளின் எச்சங்கள், அவ்விடங்களில் ஆதி மனிதாகள் வாழ்ந்ததற்குச் சான்றுகளாக உள்ளன. அந்த ஆதி மனிதர்களின் மண்டையோடுகள், பற்கள், மூளையின் பணபுகள முதலானவை இக்கால மனிதர்களின் பண்புகளை ஒத்திருந்தன. ஏறக்குறைய அதே சமகாலத்தில், புத்தூழியின் ஈற்றயற் பகுதிசார்ந்த நடுக்காலத்தில் (Middle Pleistocene) ஐரோப்பாவின் பல பாகங்களிலும் ஆதி மனிதர்கள் வாழ்நதார்கள் என்பதற்கு அங்கங்குக கண்டெடுக்கப்பட்ட எலும்புக் கூடுகளின் எச்சங்கள் சான்றாக உள்ளன. அவவாறு கண்டெடுக்கப்பட்ட ஆதி மனிதர்களின் புதைபடிவங்களுள் முக்கியத்துவம் வாய்ந்தது சுவான்சுகோம்பு மனிதன் (Swanscombe Man) ஆகும்

பல் மருத்துவரும் தொல்பொருளியல் ஆராய்ச்சியாளருமான மார்சுடன் (A.T. Marston) 1935-ஆம் ஆண்டில் இலண்டனுக்கு அருகிலுள்ள சுவான்சுகோம்பு (Swanscome)என்னுமிடத்தில் தேம்சு நதிப் பள்ளத்தாக்கில் மனித மண்டையோட்டின் ஒரு பகுதியைக் கண்டெடுத்தார். அது சுமார் 20 முதல 25 வயதிற்குள்ளான மனிதனுடையதாக இருக்கலாமெனக் கருதப்பட்டது. அப்பள்ளத்தாக்கில் இலட்சக் கணக்கான கற்கருவிகள் பல நூற்றாண்டுகளாகக் காணப்பட்டன என்று கூறப்படுகிறது. மேற்கண்ட எலும்புப் பகுதி கிடைத்த இடத்திற்கருகிலேயே மற்றொரு எலும்புத் துணடு ஒன்றும் பிறகு கண்டெடுக்கப்பட்டது. இவ்வெலும்பு, ஏற்கனவே குறிப்பிட்ட மண்டையோட்டின் பிறிதொரு பகுதியாக இருக்கலாமெனக் கருதப்பட்டது. பின்னர், 1955-ஆம் ஆணடில் மூன்றாம் எலும்புத் துண்டு ஒனறு கணடெடுக்கப் பட்டது. இந்த மூன்று துண்டுகளையும் இணைத்து அம்மணடையோட்டிலிருந்த பொருத்துவாய்களை (Sutures) ஆராய்ந்தபோது அவைஇருபது முதல் இருபத்தைந்து வயதான ஒரு பெணணின் மண்டையோட்டின் பிடர் எலும்புகளென்றும் நடு மணடையோட்டு எலும்புகளென்றும் கண்டுபிடிக்கப்பட்டன.



சுவான்சுகோம்பு மனித மணடையோடு

இம்மண்டையோட்டு எச்சங்கள் கிடைத்த இடத்திற்கருகில் சிலவகை கைக் கோடரிகளும் காண்டா மிருகம், யானை, மான ஆகியவற்றின் எலும்புகளும் கண்டெடுக்கப்பட்டன. அவவிலங்குகள இரண்டு அல்லது மூனறாம் இடைப்பட்ட பனிக்காலத்தைசசேர்ந்தவை என்று கூறப்படுகின்றன. இந்தக் குறிப்பிட்ட காலத்தில்தான இஙகிலாந்தின தட்பவெப்ப நிலை ஆப்பிரிக்காவிலிருந்து இடம்பெயர்ந்த விலங்குகள் வாழ்வதற்குச் சாதகமாக இருந்ததாகக் கூறப்படுகிறது. எனவே, சுவான்சுகோம்பு மனிதன் இரண்டாம் பனிக்காலத்திற்கும் மூன்றாம் பனிக்காலத்திற்கும் இடைப்பட்ட காலத்தில் அதாவது சுமார் 2,50,000 ஆண்டுகளுக்கு முன்பு வாழ்ந்திருக்கலாமென்பது கருதப்படுகிறது.

சுவான்சுகோம்பு மண்டையோட்டின் எசசங்களை ஆராய்ச்சி செய்தபோது, அம்மனித மூளையின் அளவு சுமார் 1300 க.செ.மீ. ஆகஇருக்கலாமென மதிப்பிடப்பட்டது. அம்மண்டையோட்டின் சுவர் மனிதக் குரங்குகளின் மண்டையோட்டின் சுவரைவிட மிகவும் தடித்து இருந்தது. எனவே, அம்மனித எலும்புகளின் எச்சங்கள் மிகத் தொன்மையானவை என்று கருதப்பட்டன. மேற்குறிப்பிட்ட மூன்று பிடர் எலும்புகளையும் இரு நடு மண்டையோட்டு எலும்புகளையும் இக்கால மனித எலும்புகளுடன் ஒத்திட்டுப் பார்த்தபோது அவற்றின் அளவீடுகளும் அமைப்பும் பெருமளவிற்கு இக்கால மனித எலும்புகளை ஒத்திருந்தன. மேலும், மூளையின் மேற்பரப்புப் பகுதி மடிப்புகள் நிறைந்து இக்கால மனித மூளையின் அமைப்பை ஒத்திருநததாகக் கூறப்படுகிறது.

சுவான்சுகோம்பு மண்டையோட்டின் பிற்பகுதியை வைத்து முற்பகுதியை உருவாக்கியதற்கான சான்றுகள் இலலை. இருப்பினும், சுவான்சுகோம்பு மனித முக எலும்புகளும் தாடைகளும் கடினமான அமைப்பைக் கொண்டவையாக இருக்கலாமென்றும், கண்புருவ மேடுகள் வலிமையாக இருந்திருக்கலாமென்றும் கூறப்படுகிறது.

சுவான்சுகோம்பு மனிதன், ஐடல்பர்க்கு மனிதன் இசுடீன்கீம் மனிதன் (Steinheim man) ஆகியோரின், மண்டையோடுகளின் எச்சஙகளை ஒத்திட்டுப் பார்த்தபோது அம்மனிதர்கள், வாலில்லாக் குரங்கின் பண்புகளைப் பெற்றிருந்தாலும் உடலமைப்பில் இக்கால மனிதனின் பண்புகளையே ஒத்திருந்தனர் என்பது தெளிவாகியது.

ஐடல்பெர்கு மனிதனின் கீழ்த்தாடை எலும்புகள் மேற்குச் செருமனியிலுள்ள ஐடல்பெர்க்குக்கு அருகில் 1907-ஆம் ஆண்டில் கண்டெடுக்கப்பட்டன. இந்தக் கீழ்த்தாடை எலும்புகள் புத்தூழியின் ஈற்றயற்பகுதி சார்ந்த காலத்தின் முறபகுதியில் வாழ்ந்த குதிரை, காண்டாமிருகம், பலவகைப் பாலூட்டிகள் ஆகியவற்றின் பற்களுடனும் எலும்புகளுடனும் கலந்திருந்தன. இந்தத் தாடை திண்மையாக இருந்தது. மோவாய் பிதுக்கமற்றது. எனவே, இந்தப் புதைபடிவ மனிதன் வாலில்லாக் குரங்கைப் பெரிதும் ஒத்திருந்தான் என்பது கூறப்படுகிறது. இருப்பினும், இம்மனிதன் இக்கால மனிதனின் பண்புகளையும் பெற்றிருந்தான்.

அடுத்ததாக, 1933-ஆம் ஆண்டில் மேற்குச் செருமனிக்கு அருகிலுள்ள இசுடீன்கீம் என்னும்கிராமத்தில் கணடெடுக்கப்பட்ட மற்றொரு புதைபடிவ மண்டையோட்டை ஆராய்ச்சி செய்ததின் விளைவாகச் சுவான்சுகோம்பு மனிதன் ஆதிகால நிமிர்ந்து நடக்கும் மனிதனுக்கும் (Homo Eretus) இக்கால மனிதனுக்கும் இடைப்பட்டவன் என்ற கருத்து மேலும் தெளிவாகியது. இசுடீன்கீம் மனிதனின் மண்டையோட்டைத் தவிரக் கீழ்த்தாடை எலும்புகளோ வேறு எலும்புகளோ கிடைக்கவில்லை. அம்மண்டையோட்டில் தெளிவான புருவ மேடுகளும், வலிமையான மேல் தாடைகளும், அகன்ற கண் குழிகளும் காணப்பட்டன. அதன் மூக்கமைப்பு நியாண்டர்தால் (Neanderthal) மனித மூக்கமைப்பிலிருந்து வேறுபட்டிருந்தது. பிடர் எலும்பின் மேலிருந்த தசை மேடுகளின் அமைப்பு ஆதிகால நிமிர்ந்து நடக்கும் மனித மண்டையோட்டில் இருந்ததைப் போன்றே மிகுந்த வளர்ச்சியுறாமல் காணப்பட்டது.

எனவே, சுவான்சுகோம்பு மனித மண்டையோடும், இசுடீன்கீம் மண்டையோடும் ஒத்த அமைப்புடையன என்பதும் சமகாலத்தவை என்பதும் தெளிவாயின அவை இரண்டுமே இக்கால மனிதனின் மண்டையோட்டைப் பெரிதும் ஒத்திருந்தன. இரு மண்டை ஓடுகளும் இடைப்பட்ட பனிக்காலப் படிவங்களிலிருந்து கண்டெடுக்கப்பட்டன என்பதால் இவ்விரண்டுக்கும் உரியவர்கள் ஒரே சிறப்பினத்தைச் சேர்ந்தவர்களாகவோ (Species) உட் சிறப்பினங்களைச் (Sub Species) சேர்ந்தவர்களாகவோ இருககலாமென்ற கருத்தும் நிலவுகிறது. பா.ஜ.

**துணை நூல்கள்:**

**Coon, C.S.**, The History of Man, Jonathan Cape, London, 1954.

**Pfeiffer John E.**, The Emergence of Man, Harper & Row, New York, 1969.

**சுவிட்சர்லாந்து** ஒரு கூட்டாட்சிக் குடியரசாகும். இது ஐரோப்பாவிலேயே மிக உயர்ந்த அழகிய மலைச் சிகரங்களைக் கொண்ட, தொழில்துறையில மிகவும் முன்னேறிய நாடாகும். இதன் வடக்கே செருமானியக் கூட்டுக் குடியரசும், கிழக்கே ஆசுதிரியாவும், தென்கிழக்கிலும் தெற்கிலும் இத்தாலியும், தென் மேற்கு, மேற்கு, வடமேற்கு ஆகிய திசைகளில பிரான்சும் எல்லைகளாக உளளன. உலகிலேயே சுவிட்சர்லாந்து (Switzerland) தான நிலையான நடு நிலைகொண்ட நாடாக இருந்து வருகின்றது. இக்கூட்டரசில் 23 மணடலங்கள (Cantons) சேர்ந்துள்ளன. இதன் தலைநகர் பெர்ன் (Bern); நாணயம் பிராங்கு (Franc). இதன் பரப்பளவு 41,288 ச.கி.மீ. மக்கள தொகை 6.5 மிலியன (1984). இந்நாட்டின் கொடி சிவப்பு வண்ணத்தின் நடுவில் வெள்ளைச் சிலுவை பொறிக்கப்பட்டது.

வாழ்கின்றனர். பெரிய நகரங்கள் அனைத்தும் இப் பகுதியிலேயே உள்ளன. இது கடல மட்டத்திலிருந்து 395 மீட்டர் உயரத்தில உள்ளது.

ஆல்ப்சு மலையிலிருந்து பல ஆறுகள் தோனறுவதால் அம்மலை 'ஐரோப்பிய ஆறுகளின் தாய்' எனப்படுகின்றது. இந்நாட்டை வளமாக்கும் பெரிய ஆறுகள் இரைன் (Rhine), உரோன் (Rhone) ஆகிய இரணடுமாகும். மற்றவை திசினோ (Ticino), இன (Inn), ஆரே (Aare) ஆறுகளாகும. இரைன் ஆறு ஆல்ப்சு மலையில் உற்பத்தியாகி, வடக்கு நோக்கிச் சென்று, இந்நாட்டின் முக்கால் பகுதியை வளமடையசசெய்து, வடகடலில் கலக்கின்றது.

இந்நாட்டிலுள்ள 1500 ஏரிகளில 22 மிகப் பெரியவை. அவறறுள் செனிவா ஏரி அல்லது இலெமன் ஏரி, கான்சுடன்சு (Constance) ஏரி ஆகிய இரண்டும




சுவிட்சர்லாந்து அமைவிடம

**நிலவியல் அமைப்பு:** இந்நாட்டை ஆல்ப்சு மலைகள், சுரா (Jura) மலைத்தொடர், இவைஇரண்டிற்கும் இடைப்பட்ட மத்திய மேட்டுநிலம் என முப்பெரும் பிரிவுகளாகப் பகுக்கலாம். மத்திய மேட்டுநிலம் வேளாணமைக்கு ஏற்றதாக இருப்பதால் இந்நாட்டின் மக்கள தொகையில் மூன்றில் இரண்டு பங்கினர் இங்கு

முறையே பிரான்சு, செருமெனி ஆகியநாடுகளின் எல்லைகளில் அமைந்துள்ளன. இந்நாட்டிற்குள் அமைந்துள்ள ஏரிகளில் மிகப் பெரிதான நியூசேடல (Newchatel) ஏரி 216 ச.கி.மீ. பரப்பளவுள்ளதாகும்.

இந்நாட்டில் நீர்வீழ்ச்சிகள் பல உள்ளன. அவற்றுள் சடவுபாக்கு (Staubbach), கான்டெகு (Han-



ஆல்ப்சு மலையிலுள்ள ஒரு சிற்றூர்

degg), பீசுவாசு (Pissevache), இரெய்கன்பாக்கு(Reichenback), கீசுபாக்கு(Giessback) நீர்வீழ்ச்சிகள குறிப்பிடத்தக்கன.

**பருவநிலை:** இங்கு அட்லாண்டிக்குத் தட்ப வெப்ப மண்டலமும், கண்டத்தட்ப வெப்ப மண்டலமும் சந்திக்கின்றன. உயர வேறுபாடு காரணமாக இநநாட்டில் பலதிறப்பட்ட தட்பவெபப நிலைகள் உள்ளன. பொதுவாக, குளிர்காலத்தில் அதிகக் குளிரும், கோடையில் மிதமான வெப்பமும் நிலவுகின்றன. எல்லாக காலங்களிலும் இந்நாட்டில் மழை பெய்தாலும், உயரமான இடங்களில் அதிகமாகவும், மலைகளில் மிக அதிகமாகவும் பெய்கின்றது. ஆண்டில் பல மாதங்கள் மலை முகடுகள் பனியால் மூடப்பட்டுள ளன. மத்திய மேட்டு நிலத்தில் ஆண்டுச்சராசரி மழை 70 செ.மீ.

**காடுகள்:** இந்நாட்டின் பரப்பளவில் காற்பங்கு காடுகளாகும். ஆனால், இக்காடுகள் நிலச்சரிவு, வெள்ளம், பனிப்புயல் ஆகியவற்றைத் தடுக்கப் பயன் படுத்தப்படுவதால் பொருளாதாரப்பயன் அதிகம் இல்லை. இவற்றில் பலவகை மரங்கள் உள்ளன. எனவே, இந்நாட்டில் காகித உற்பத்தி அதிகம். இக் காடுகளில் 70 விழுக்காடு சமுதாயக்காடுகளாகவும், மற்றவை தனிப்பட்டவர்களுக்குச் சொந்தமானவை யாகவும் உள்ளன.

**கனிமங்கள்:** உப்பும் சுண்ணாம்புக் கல்லும் மட்டுமே இந்நாட்டில் கிடைக்கின்றன. ஆல்ப்சு, சுரா மலைகளிலிருந்து வெட்டியெடுக்கப்படும் சுண்ணாம்புக் கல் சிமெணடு உற்பத்தி செய்யப்பயன்படுகின்றது. சுரா மலைகளில் சிறிது இரும்பு, மங்கனீசு தாதுக்கள் கிடைக்கின்றன நிலக்கரி சிறிதளவே உள்ளது. பிற மூலப் பொருள்கள் வெளிநாடுகளிலிருந்து இறக்குமதி செய்யப்படுகின்றன. இந்நாட்டில் எரிபொருள் இல்லையென்றாலும் 300-க்கு மேற்பட்ட நீர்மின் விசைத் திட்டங்களிலிருநது தொழிற்சாலைகளுக்குத் தேவையான மினசாரம் உற்பத்தி செயயப்படுகின்றது. கோடைககாலத்தில் பனி உருகி, நிறைய வெள்ளம் ஓடுவதால் அதிகமான மின்சாரம் உற்பத்தி செய்யப்பட்டு, ஏற்றுமதி செய்யப்படுகின்றது. ஆனால், குளிர்காலத்தில் நீர் பனியாக உறைந்து போவதால் மின்சாரத்தைக் கடன்பெற வேண்டியுள்ளது.

**நகரங்கள்:** இந்நாட்டிலுள்ள நகரங்கள் சிலவற்றின் மக்கள்தொகை அடைப்புக்குறியில் கொடுக்கப் பட்டுளளது (1984). பெர்ன் (Bern-140,600), சூரிச்சு

(Zurich -354,500), செனீவா (Geneva -159,500), பாசெல் (Basel-176,200), இலாசேன் (Lausanne-126,200), புனித காலென் (St. Galen-74,000) விண்டர்துர் (Winterthur-86,000), உலூசெரின் (Luzern 62,000), பீல் (Biel-53,000). இந்நாட்டில் தொழிலில் ஈடுபட்டிருந்த அயல்நாட்டினர் 953,000 பேர் (1984) இவர்கள் மொத்தத் தொழிலாளர்களில் 30 விழுககாட்டினர் ஆவர்.

**பெர்ன்:** இது கி.பி. 1848 முதல் கூட்டாட்சி அரசின் தலைநகராக உள்ளது. இது கி.பி. 12-ஆம் நூற்றாண்டில் இரைன் ஆற்றின் கிளை ஆறான ஆரே (Aare) ஆற்றங்கரையில் கட்டப்பட்டது; அழகிய நீர் ஊற்றுகள், பூங்காக்கள், நிறைந்தது. இங்குள்ள பல்கலைக் கழகம் மிகவும் பழமையானது. பல தொழிற்பள்ளிகளும் கல்லூரிகளும் இங்குள்ளன. இந்



சுவிட்சர்லாந்து நாடாளுமன்றம்

நகரில் கூட்டாட்சிப் பாராளுமன்றம், உச்ச நீதிமன்றம், தேசிய நூலகம், அரசு ஆவணக் காப்பகம் ஆகியவை உள்ளன. இது இங்குளள ஒருகடிகாரம், கோமாளிகள், தோல் பொம்மைகள், கோழிகள, நடனமாடும் கரடி ஆகியவற்றைக் கொண்டு காண பார் உள்ளத்தை கவர்கின்றது.

**சூரிச்சு:** இந்நாட்டின் மிகப் பெரிய நகரமான இது, கி.பி. 18-ஆம் நூற்றாண்டில் புகழ்பெற்ற பட்டுச்சந்தையாக விளங்கியது. சிறந்த வாணிக, வங்கி மையமாகத் திகழும் இங்குப் பட்டு, பிற துணிவகைகள், காகிதம், அச்சு இயந்திரஙகள் ஆகி



ஆல்பைனில் விளையாட்டுகள்

யவை உற்பத்தி செய்யப்படுகின்றன. அமைதியான இலிம்மடு ஆறு இந்நகருக்கு அழகூட்டுகின்றது.

**செனீவா:** இந்நகர் பிரான்சின் எல்லையில் செனிவா ஏரியின் கரையில் அமைந்துள்ளது. சீன் என்றி துனன் (Jean Henry Dunant) என்னும் வணிகர் கி.பி. 19-ஆம் நூற்றாண்டில் இங்கு உலகச் செஞ்சிலுவைச் சங்கத்தைத் தோற்றுவித்தார். பன்னாட்டுக் கழகத்திற்கு (The League of Nations) 1932-இல் பல கட்டடங்கள் எழுப்பப்பட்டன. இன்று அவை ஐக்கிய நாடுகள் சபையின் ஐரோப்பியத் தலைமையகமாக உள்ளன. மேலும், இங்கு உலகத் தொழிலாளர் நிறுவனமும் (I.L O), அணுஆராய்ச்சிக்கான ஐரோப்பியக் குழுவும் உள்ளன. நனகு திட்டமிட்டு அமைக்கப்பட்ட இந்நகரில் பலபூங்காக்கள், நடன அரங்குகள், கலைக் கண்காட்சிகள், அரும் பொருட்காட்சிச்சாலைகள் உள்ளன.

**போக்குவரத்து:** வணிகத்தின் பொருட்டும் உல்லாசப் பயணிகளின வசதிக்காகவும் இந்நாட்டில் போக்குவரத்து முன்னேற்றம் அடைந்துள்ளது. நல்ல சாலைகள் அமைக்கப்பட்டுள்ளன. இருப்புப் பாதைகள் கி.பி. 1847-இல் போடப்பட்டு இன்று 5000 கி.மீ. நீளத்திற்கு தொடர்வண்டிகள் விடப்பட்டுளளன. அவை அனைத்தும் மின்சாரத்தால் ஓடுகின்றன. இங்கு விமானப் போக்குவரத்தைக் கூட்டாட்சி அரசு, மண்டலங்கள், தனியார் ஆகியோர் மூலதனத்தைக் கொண்ட ஒரு குழு (Swiss Air) நடத்துகின்றது. சூரிச்சிலுள்ள கிளோட்டன் (Kloten) செனிவாவிலுள்ள கொயிந்திரின் (Cointrin) ஆகியவை இந்நாட டின் விமானநிலையங்களாம்.

**மக்கள்:** பல இனத்தைச் சேர்ந்த மக்கள் இங்கு வாழ்வதால இவர்களுடைய குறிக்கோள 'வேற்றுமை யில் ஒற்றுமை' காணபதாகும். இவர்கள் மீது எட்ரு சுகியர் (Etruscan), கெல்ட்டுகள் (Celts), செருமானி யர் (German) முதலிய இன மக்களின் பாதிப்பைக் காணலாம். இம்மக்கள் சுறுசுறுப்பானவர்கள நல்ல உடையையும், சிறந்த மதுவையும் இவர்கள் விரும்பு கின்றனர்

**மொழி:** இந்நாட்டில் நான்கு தேசிய மொழிகள எவ்விதப் பூசலும் இன்றிப் பயன்படுத்தப்படுகின்றன. இங்கு, கி.பி. 1874-ஆம் ஆண்டு அரசியல் அமைப்பின் படி செருமன், பிரெஞ்சு, இத்தாலி ஆகிய மூனறு மொழிகளும் தேசிய மொழிகளாக ஏற்றுக்கொள்ளப் பட்டுள்ளன. உரோமன்சு (Romansh) மொழி 1937 முதல் நான்காம் தேசிய மொழியானது. இங்குள்ள மக்களுள் 64.9%பேர் செருமானிய மொழியும், 18.1% பேர் பிரெஞ்சு மொழியும் 11.9%பேர் இத்தாலி மொழியும் 0.8%பேர் உரோமன்சு மொழியும் 4.3.% பேர் பிறமொழிகளும் பேசுகின்றனர். செய்தித்தாள் கள், இதழ்கள், நாடக மேடைகள், திரைப்படங்கள், தொலைக்காட்சி ஆகியவற்றில் செருமானிய மொழி பயன்படுத்தப்படுகின்றது.

**சமயம்:** உரோமானியக் கத்தோலிக்கப் பிரிவும் சீர்திருத்தக் கிறித்தவப் பிரிவும் (Protestants) இந்நாட்டின் முக்கிய சமயப் பிரிவுகளாகும். இங்கு உரோமானியக் கத்தோலிக்கர் 3,030,069 (47.6%), சீர்திருத்தக் கிறித்தவர்கள் 2,822,266 (44 3%) பிற சமயத்தவர் 513,625 (8.1%) இருந்தனர். கத்தோலிக் கர் 1960-இல் 12 மண்டலங்களிலும், சீர்திருத்தக் கிறித்தவர்கள் 10 மண்டலங்களிலும், பெரும்பான் மையினராக இருந்தனர்.

இது முதலில் கத்தோலிக்க நாடாக இருந்தது. பின்னர் கி.பி. 1518-இல் சமயப்புரட்சி தோன்றியது. உல்ரிச்சு சுவிங்கிலி (Ulrich Zwingli)(1484-1531) சூரிச் சில் கத்தோலிக்க சமயத்திற்கு எதிராகப் புரட்சி செயதார். எராசுமசின் (Erasmus) நூல்களையும் விவிலியத்தையும் நன்கு கற்ற அவர் போப்பாண்ட வரின் செயல்களையும், பாவமன்னிப்புச் சீட்டுகள் (Indulgences) விற்பதையும் கண்டித்தார். சூரிச்சு மக்கள் சிறிது சிறிதாக அவருடைய கருத்துகளை ஏற்றுக்கொணடனர். ஐந்து கத்தோலிக்க மண்டலங் கள் சூரிச்சு மீது போர் தொடுத்ததின் விளைவாக நிகழ்ந்த கப்பேல் போரில் (The Battle of Kappel-1531) சுவிங்லி கொல்லப்பட்டார்.அவருடைய கொள் கையானது சுவிட்சர்லாந்திலும், தெற்குச் செரு மனியிலும் பரவியது.

பின்னர், சான் கால்வின் (John Calvin, கி.பி. 1509-1564) என்பார் இந்நாட்டின் திருச்சபையில் மக்களாட்சிக் கொள்கைகளைப்புகுத்தி, நல்லொழுக்க விதிகளை வலியுறுத்தினார். இவர் கி.பி. 1534-ஆம் ஆண்டு கத்தோலிக்கப் பிரிவை எதிர்த்து ஒரு நூலை (Institutes of Christian Religion) வெளியிட் டார். செனீவா நகரில் இவருடைய கருத்துகள் வேகமாகப் பரவ, கி.பி. 1541-64-இல் அது கால்வின் கோட்டையாக மாறியது. அங்கிருநது இக்கொள்கை நெதர்லாந்து, மேற்குச்செருமனி, அங்கேரி, இங்கி லாந்து, போலந்து முதலிய நாடுகளில் பரவியது.

**வேளாண்மை:** இது மலைகள் நிறைந்த நாடா கையால் மொத்த நிலப்பரப்பில் ஆறில் ஒரு பங்கில் மட்டுமே வேளாணமை நடைபெறுகிறது. இங்குக் கோதுமை, பார்லி, ஓட்சு, உருளைக்கிழங்கு, புகை யிலை முதலியன விளைவிக்கப்படுகின்றன. பல இடங்களில் திராட்சை, பிற பழங்கள், காய்கறித் தோட்டங்கள் உள்ளன. செனீவா ஏரி, உரோன் பள்ளத்தாக்குப் பகுதிகளில் இந்நாட்டிற்குத் தேவை யான மதுபானத்தில் பாதி உற்பத்தி செய்யப்படு கின்றது. மேல் வேலிசுப் (Upper Valis) பகுதியில் பியர்சு, ஆப்பிரிகாட்டுப் பழங்களும், மிட்லாந்துப் பகுதியில் ஆப்பிள், பியர்சு முதலிய பழங்களும் விளை விக்கப்படுகின்றன. இந்நாட்டில் கால்நடைகளுக்குத் தேவையான புல்வெளிகள நிறைய உள்ள்மையால், கால்நடைப் பண்ணைகள் பல இருக்கின்றன. இந் நாட்டில் கால்நடைகளுள் (1984) குதிரைகள் 48, 000, வெள்ளாடுகள், 361, 000, மாடுகள 1,943,000 (அவறறுள் பால்தரும் பசுக்கள் 840,000), பன்றிகள் 2,004,000,குதிரைகள் 6 மிலியன். உள்ளன. எனவே, பால், பாலாடைக்கட்டி, இறைச்சி, கோக்கோஇனிப்பு (Chacolate) ஆகியவை அதிக அளவில் கிடைக்கின்றன.

**தொழிற்சாலைகள்:** உணவுப் பொருள்கள், பாலா டைக்கட்டி, வெணணெய், சர்க்கரை, இறைச்சி, மது, கோக்கோஇனிப்பு, புகையிலை, சுருட்டு, வெண்சுருட்டு ஆகியவற்றை உற்பத்தி செய்யும் தொழிற்சாலைகள் பல இஙகு உள்ளன. மேலும் பல தொழிற்சாலை களில் துணி வகைகள், இயந்திரங்கள், செருப்புகள், இரசாயனப் பொருளகள், மருந்துகள், கண்ணாடி முதலியன உற்பத்தி செய்யப்படுகின்றன. இந்நாடு கடிகார உற்பத்திக்குப் பெயர்பெற்றதாகும். அத் தொழிற்சாலைகளில் 80,000 பேர் பணிபுரிகின்றனர். ஆண்டுதோறும் 70 மிலியன் கைக்கடிகாரங்கள் உற் பத்தி செய்யப்பட்டு அவற்றில் 90 விழுக்காடு ஏற்று மதி செய்யப்படுகின்றன. பெரும்பாலான கடிகாரத் தொழிற்சாலைகள் சுரா பள்ளத்தாக்கில் உள்ளன.

அடுத்து, பேசல் (Basal) தொழிற்சாலைகள் நிறைந்த நகரமாகும். அங்கு உலகிலேயே மிகப்பெரிய தொழிற்சாலைகள் இரசாயனப் பொருளகள், மருந்துவகைகள் ஆகியவற்றை உற்பத்தி செய்யப்படுகின்றன. மேலும், மை, சாயங்கள் முதலியவை தயாரிக்கப்படுகின்றன. இந்நாடு அறிவியல் பாட நூல்களை அச்சிட்டு வெளியிடுவதில் உலகிலேயே முதலாவதாக உள்ளது. எனவே.இந்நாட்டில் வேலையில்லாத் திண்டாட்டம் இல்லை. நாள்தோறும் சுமார் 50,000 அண்டை நாட்டினர் இந்நாட்டிறகுக் காலையில் வேலைக்கு வந்து மாலையில் தங்கள் நாட்டிற்குச் செல்கின்றனர்.



இரைன் ஆறு

**வணிகம்:** இநநாட்டுடன் மேற்கு செருமனி, பிரான்சு, இத்தாலி, இங்கிலாந்து, அமெரிக்க ஐக்கிய நாடுகள் ஆகியவை வணிகத்தில் ஈடுபட்டுளளன. இங்கிருந்து கடிகாரம், இயந்திரங்கள், போக்குவரத்துச் சாதனங்கள், இரசாயனப் பொருள்கள், மருந்துகள துணிவகைகள், பாலாடைக்கட்டி முதலியன ஏற்றுமதி செய்யப்படுகின்றன. மூலப்பொருள்கள், சில வகை இயந்திரங்கள், இரும்பு, எஃகு, நிலக்கரி, மண்ணெண ணெய், எரிபொருள், விலையுயர்ந்த உலோகங்கள், பேருந்துகள் (Motor Car) கமபளம், உணவுப் பொருள்கள் ஆகியவற்றை இந்நாடு இறக்குமதி செய்கின்றது.

**சுற்றுலா:** இந்நாட்டிலுள்ள முக்கிய தொழிலகளுள் ஒனறு சுற்றுலா. இது எல்லாக் காலத்திற்கும் ஏற்றதாகவும் ஆணடு முழுவதிலும் பல்வேறு பொழுது போக்குகளும் விளையாட்டுகளும் நடைபெறக் கூடியதாகவும் உள்ளது. இதன தட்பவெப்ப நிலை உடலுககும்,உள்ளத்திற்கும் புத்துணர்ச்சிஅளிப்பதாய் அமைந்துள்ளது. மலை ஏறுதல், ஏரிகளில நீச்சல் அடித்தல், மீன்பிடித்தல், படகு ஓட்டுதல், அமைதியாக ஓய வெடுத்தல் ஆகியவற்றிறகு உகந்தது. ஆல்ப்சு மலையிலுள்ள இலட்சக்கணக்கான நீரூற்றுகள மககளின் பல்வேறு பிணிகளைத் தீர்க்கின்றனவாம். இந்நாட்டில உண்டுறை விடுதிகள பல உள்ளமையால் இது 'உணவகத்தார்நாடு' (Nation of Hotel Keepers) எனப் படுகிறது. இவ்வுணவகங்களில் 1984-இல 33 மில்லியன் மக்கள் தங்கினர். அவர்களுள் 20 மில்லியன் பேர் அயல் நாட்டுப் பயணிகள்.

**வரலாறு:** கி.மு. முதல் நூற்றாண்டில் உரோமானியப் பேரரசர் சூலியசு சீசர் செனிவாவைக் கைப்பற்றினார். எனவே 400 ஆணடுகளுக்கு அது உரோமானியருக்கு அடிமைப்பட்டிருந்தது. அரசர் குளோவிசு (Clovis) இப்பகுதியில் கிறித்தவ சமயத்தைப் பரப்பினார். எனவே, அச்சமயத்தை அடிப்படையாகக்கொண்ட நாகரிகமும் பரவியது.

ஊரி, சுவிசு, அந்தர்வால்டன் (Uri, Schwyz, Unterwalden) என்ற மூன்று நாடுகள ஒன்றுகூடி அயலார் படையெடுப்பிலிருந்து தங்களைக் காத்துக் கொள்ள ஒரு நிலையான உடன்படிக்கை செய்து கொண்டன. அக்கூட்டரசு கி.பி. 1353-இல் 8 உறுப்பினர்களையும், கி.பி. 1513-இல் 13 உறுப்பினர்களையும் கொணடதாக வளர்ந்தது. அவை வலிமை பெற்று கி.பி. 14, 15-ஆம் நூற்றாண்டுகளில் கால்சுபர்குகளைப் (Halspurgs) பல போர்களில் தோற்கடித்தன. புனித உரோமப்பேரரசிலிருந்து கி.பி. 1648-இல் இவை விடுதலை பெற்றன. எனவே, சுவிசு நாட்டு வீரர்களின் புகழ் பரவியது. அவர்கள் ஐரோப்பிய நாடுகளால் மிகவும் வேண்டப்பட்டனர். அக்காலத்திலிருந்து வத்திகனில் (Vatican) அவர்களைக் காவலர்களாய் நியமிக்கும் பழக்கம் இருந்துவருகிறது. இந்நாடு கி.பி. 1515-இல் பிரான்சுடன் நடத்திய போரில தோல்வியடைந்தது.

பேரரசர் நெப்போலியன் கி.பி. 1798-இல் இதனைக் கைப்பற்றிக் எல்வெடிக்குக் குடியரசை (Helvetic Republic) நிறுவினார். அது நான்கு ஆண்டு களுக்கே நீடித்தது. அதனை அந்நாட்டு மக்கள் விரும் பாததால கி.பி. 1803-இல் புதியதோர் அரசியல் அமைப்பு அளிக்கப்பட்டது. அப்பொழுது அதில் சேர்நதிருந்த மண்டலங்களின் எண்ணிக்கை 19-ஆகப் பெருகியது. பின்னர் கி.பி. 1815-இல் வியன்னா ஏற்பாட்டின்படி அது மீண்டும் நிலையான நடுநிலை நாடாக ஆயிற்று. அப்பொழுது அதனுடன் 3 மண்ட லங்கள் இணைந்தன. புதியதோர் அரசியல் அமைப்பு ஏற்படுத்தப்பட்டு, அது முழுசுயாட்சி பெற்ற 22 கான டன்களின் இணைப்பரசாக மாறியது. அடுத்து கி.பி. 1848-இல் கொனடுவரப்பட்ட புதிய அரசியலமைப் பின்படி அமெரிக்க ஐக்கிய நாடுகளைப் போன்ற தோர் கூட்டரசாக அது ஆயிற்று. சுரா (Jura) 1979 -இல் இதன 23-ஆம் மணடலமாகச் சேர்த்துக் கொள்ளப்பட்டது.

**ஆட்சி: கூட்டாட்சி அரசு:** இது 23 மணடலங்கள அல்லது மாநிலங்கள் அடங்கிய ஒரு கூட்டாட்சிக் குடியரசாகும். கூட்டாட்சிப் பாராளுமன்றமானது மாநிலங்களின் அவை (Standerat-Council of States), தேசிய அவை (Nationalrat-National Council) என் னும் இரு அவைகளை உடையது. மாநிலங்களின் அவைக்கு ஒவ்வொரு மணடலமும் இரு உறுபபினாகள வீதம் 46 உறுப்பினர்களைத் தோநதெடுக்க வேண டும். தேசிய அவை 200 உறுப்பினர்களைக் கொண டது. அவர்கள் மககள்தொகை அடிப்படையில் தேர்ந தெடுக்கப்படுகினறனர். கூட்டாட்சி நிருவாகத்தை 7 உறுப்பினர்களைக் கொண்ட கூட்டாட்சி அவை (Bundesrat-Federal Council) நடத்துகின்றது.

பாராளுமன்ற இரு அவைகளும் தங்களுடைய கூட்டுக் கூட்டத்தில் இவ்வேழு உறுப்பினர்களையும் ஏழு மண்டலங்களிலிருந்து, 4 ஆண்டுகளுக்குத் தேர்ந தெடுக்க வேண்டும். நாட்டின் நிருவாகம் ஏழு துறை களாகப்பிரிக்கப்பட்டு, ஒவ்வோர் உறுப்பினருக்கும் ஒரு துறை அளிக்கப்படுகிறது. இதன் தலைவர் (President of the Confederation), துணைத் தலைவர் இருவரும் ஓராண்டிற்குத் தேர்ந்தெடுக்கப்படுவர்.

இந்நாட்டில் 20 வயதை அடைந்த அனை வருக்கும் வாக்குரிமை அளிக்கப்பட்டுள்ளது. இவ வுரிமையானது 1971-இல் பெண்களுக்கும் அளிககப பட்டது. பாராளுமன்ற இரு அவைகளாலும் இயற்றப் பட்ட சட்டமானது 90 நாட்களுக்குள அதனை எதிர்த்து எவரும் விண்ணப்பம் செய்யாவிட்டால் சட்டமாக ஆகும். பொதுமக்கள் வாக்கெடுப்பு (Referendum) கி.பி.1874-இல் கொண்டுவரப்பட்டது. 50,000 மக்களோ, 8 மண்டலங்களோ விரும்பினால் ஒரு தீர்மானம் சட்டமாவதற்கு முன்னர்ப் பொது மக்கள வாக்கெடுப்பிற்கு விடவேண்டும். மக்கள் சட்டமியற்று முறை (Initiative) கி.பி. 1891-இல் தொடங்கப்பட்டது. 50,000 பேர் கையொப்பமிட்டுப் புதிய சட்டம் தேவையென்றோ பழைய சட்டத்தை மாற்றவேண்டுமென்றோ நீகக வேண்டுமென்றோ கேட்கலாம்.

**மண்டல அரசு:** ஒவ்வொரு மணடலமும் முழு சுயாட்சி பெற்ற ஒருகுடியரசாக விளங்குகின்றது. கூட் டாட்சிஅரசியலமைபபிற்கு எதிராகஇல்லாத அனைத் துச் சட்டங்களையும் அது இயறறலாம். ஒவ்வொரு மண்டலத்திலும்ஆட்சிமுறை, உறுப்பினர் எணணிக்கை (5முதல் 11வரை), பதவிக்காலம் (1முதல் 5ஆண்டு கள்) ஆகியவை மாறுபடுகின்றன. ஒவ்வொரு மண்டலமும் பல மாவட்டங்களாகவும், ஒவ்வொரு மாவட்டமும் பல கோட்டங்களாகவும் (Communes) பிரிக்கப்பட்டுளளன. இவை தங்கள் பகுதிகளிலுள்ள சாலைகள், காவல்துறை, பள்ளிகள் ஆகியவற்றை நிருவாகம் செய்கின்றன.

உள்ளத்தைக் கொள்ளை கொள்ளும் இவ்வழ கிய மலைநாடு உலகிலேயே மிகப் பழைய குடியர சாகும். கடந்த 170 ஆண்டுகளாக இது நிலையான நடுநிலைநாடாகத் திகழகின்றது. இந்நாட்டில் மூலப் பொருள்கள் இல்லையெனினும், தொழில்துறையில் இது முன்னேற்றமடைந்துளது; மக்களின் வருவாய் மிக வும் உயர்ந்துள்ளது. சுற்றுலா, வங்கி, ஆயுள்காப்பீடு ஆகிய தொழில்களில் இது சிறந்து விளங்குகின்றது. உலகில் தரமான கடிகாரங்களை ஈற்பத்தி செய்வதில இன்றும் இது முன்னணியில் நிற்கின்றது. சி.இரெ.

**துணை நூல்:**

**Bonjour, E Offler, H.S. and Potter, G.R.,** A Short History of Switzerland, Oxford, 1952.

***சுவீடன்*** வட ஐரோப்பாவிலுள்ளதொரு நாடு. தாழ்நிலங்களையும், உயர்ந்த மலைகளையும் கொணடு இசுகாண்டிநேவியா (Scandinavia) முந்நீரகத்தின கிழக்குப் பகுதியாகச் சுவீடன் (Sweden) அமைந் துள்ளது. இசுகாண்டிநேவியாவின் பெரும்பகுதி சுவீடன் நாட்டிற்குட்பட்டது. இந்நாட்டின் தலை நகரும் பெருநகரும் இசுடாக்கோம் (Stockholm) என்னும் நகரமாகும்.

**எல்லைகள்:** சுவீடன் நாட்டின மேற்கில் நார்வே யும்வடகிழக்கில் பின்லாந்தும் உள்ளன.போத்தினியா





சுவீடன்

வளைகுடா சுவீடனின்வடகிழக்குக்கடற்கரையாகவும், பால்டிக்குக்கடல் தென்கிழக்குக் கடற்கரையாகவும் அமைந்துள்ளன. இநநாட்டின் தென்மேற்குக் கடற்கரை அட்லாண்டிக்குப் பெருங்கடலை நோக்கியுள்ளது. சுவீடன் நாட்டையும் தென் மார்க்கு நாட்டையும் ஓர்சந்து (Oresund) என்னும் நீர்வழி பிரிக்கின்றது. சுவீடனின் பரப்பளவு 4,49,793ச.கி.மீ. மக்கள்தொகை 8,284,000(1987).

சுவீடன் இன்றும் ஒரு முடியாட்சி நாடாகத் திகழ்கிறது எனினும், மக்களுக்கு அரசிலும் நிருவாகத்திலும் மிகுநத செல்வாக்குணடு. இந்நாட்டிற்கு கி.பி.1809-இல் எழுதப்பெற்ற அரசியல் அமைப்புத திட்டம் உளளது.

இந்நாட்டில் நிலவும் கலப்புப் பொருளாதாரத்தால் தனியார் துறையும் பொதுத் துறையும் இணைந்து செயற்படும் சிறப்பியல்பினைக் காணலாம். இதனால், இந்நாட்டு மக்கள் செல்வச் செழிப்புடனும் அமைதியுடனும் வாழ்கிறார்கள். இதன் விளைவாக, இந்நாட்டு மக்கள் உலகப்போர்களில் பங்குகொளளாமல் உண்மையான நடுநிலைமைக் கொள்கையைக் காத்து வருகின்றனர். எனினும், சுவீடன மிகப்பெரிய ஆகாயப்படையையும், திறன்மிக்க தரைப்படையையும், கப்பற்படையையும் கொண்டுள்ளது.

**இயற்கைப் பிரிவுகள்:** சுவீடனை மூனறு இயற்கைப் பிரிவுகளாகப் பிரிக்கலாம். அவை 1) நாாலாந்து, 2) நடு சுவீடன், 3) தென் சுவீடன் என்பனவாம். நார்லாந்து சுவீடனின் வடபகுதியாகும். இது சுவீடனின் பாதியளவுககு மேற்பட்ட நிலப்பரப்பைக் கொண்டுளளது. இதை நாாலாந்து என்று குறிப்பிடுகிறார்கள். நார்லாந்தின வடபகுதி ஆர்க்டிக்கு வட்டத்திற்குமேல் அமைந்திருக்கிறது. இதைத் தான் 'நள்ளிரவுச் சூரியன் நிலம்' (The land of the midnight Sun) என்பர். இங்குக் கரடுமுருடான உயர்ந்த மலைகளும், அடர்ந்த காடுகளும், பரந்த தரிசு நிலங்களும், வேகமாகப் பாய்ந்து ஓடும் ஆறுகளும் காணப்படுகின்றன. கோலன் மலைத் தொடா (Kjolen Mountain) நார்வே நாட்டின் எலலையில அமைந்துள்ளது.



சுவீடன் மாணவியர் உடற்பயிற்சி

நடு சுவீடன் மலைப்பாங்கான மேட்டு நிலப் பகுதியாகும். இம்மேட்டுநிலம் கிழக்குப் புறமாகச் சரிநது சென்று குறுகிய கடற்கரைச் சமவெளியாக உருவாகிறது. இச்சமவெளியைப் போத்தினியா வளைகுடாவினையொட்டிக் காணலாம்.

தென் சுவீடன் தாழ்ந்த சமநிலப் பகுதியாகும். இது சுவீடன் நாட்டின் தென்கோடியில் அமைந் துள்ளது.

**கடற்கரை:** சுவீடனின் கிழக்குக் கடற்கரை பல விரிகுடாக்களையும், குறுகிய முகத்துவாரங்களையும் கொணடுள்ளது. இதன எல்லையில் பல தீவுகளும் உள்ளன. போத்தினியா வளைகுடாவின் கடற்கரை களும் தீவுகளும் தாழ்ந்தும் கரடுமுருடாகவும் காணப் படுகின்றன. சிலஇடங்களில் பனிச்செனறு காணப்படும் மலையுச்சிகளும், ஏனைய இடங்களில் கடற்கரை களும் உள்ளன. தென்மேற்குச் சுவீடனில் வறண்ட மலையுச்சிகள் காணப்படுகின்றன.

**ஆறுகள்:** சுவீடனில் ஏறத்தாழ 33,000 கி.மீ. நீள அளவுக்கு ஆறுகள பாய்கின்றன. நார்வே நாட்டு எல்லையிலுள்ள ஏரிகளிலிருந்து இவ்வாறுகள் தொடங்குகின்றன. தென்கிழக்காகப் பாய்ந்து போத் தினியா வளைகுடாவிலும், பால்டிக்குக் கடலிலும விழுகின்றன. கிழக்காகப் பாய்ந்துவரும் ஆறுகளில் பல விரிவடைந்து. அகன்ற கால்வாய்களாகவும் ஏரிகளாகவும் உருமாறுகினறன. தோர்ணி ஆறு (Torne River) பின்லாநது நாட்டின் எல்லையாகத் திகழ்கிறது. உலூலே (Lule), பிட்டி (Pite) ஆகியவை ஏனைய சிறப்பான ஆறுகளாகும்.

**ஏரிகள்:** வடசுவீடனின் ஆழ்ந்த பள்ளத்தாக்கு களில் பல நீண்ட, குறுகிய ஏரிகளைக் காணலாம். ஆனால், இந்நாட்டின் தென்பாகத்தில்தான் பெரிய ஏரிகள் அமைந்துள்ளன. அவற்றுள வானெர்ன்(Vanern) என்னும் ஏரி மிகப்பெரியது வாட்டர்ன் (Vattern) என்பது பிறிதோர் ஏரி.

கோட்லாந்தும் (Gotland), ஓலாந்தும் (Oland) சுவீடனின் இரு பெருந்தீவுகளாகும்.

**தட்பவெப்பநிலை** வளைகுடா நீரோட்டமும் ஏரிகளும், சுவீடன வெதுவெதுப்பான தட்பவெப்ப நிலையில இருக்க உதவுகின்றன. வடபாகத்தில் குளிர்காலம் ஏழு மாதங்களுக்கு நீடிக்கின்றது. அப்போது கடும் குளிரும் இருட்டும் அங்கு நிலவு கின்றன. தென சுவீடனின் தட்பவெப்ப நிலை பொறுத்துக்கொள்ளும் அளவுள்ளது. மழை ஆண் டிற்கு ஏறத்தாழ 50 செ.மீ. அளவு பொழிகிறது.



சுவீடன் பாராளுமன்றம்

தென்பாகத்தில் கனமழை பொழிகிறது. வடக்கு, நடு சுவீடனில் உள்ள துறைமுகங்கள் குளிர்காலத்தில உறைந்துவிடுகின்றன.

**இயற்கை வளங்கள்:** சுவீடனில் பல காடுகள் உள்ளன. எனவே, மரமறுக்கும் தொழில் இந்நாட் டின் அடிபபடையான தொழில். வடசுவீடனில் கிடைக்கும் இரும்புத் தாதுப்பொருள் இந்நாட்டின் சீரிய கனிவளமாகக் கருதப்படுகிறது. துத்தநாகம் செம்பு, வெளளி போன்றவை வெட்டியெடுக்கப்படு கின்றன. தென் சுவீடனிலும், நடு சுவீடனிலும் பண்ணை நிலங்கள் உள்ளன. இவை உழவுக்குத் தகுதியானவை. இந்நாட்டில் நீர்மின்சக்தி மிகுதியாக உற்பத்திச் செய்யப்படுகிறது.

**மக்கள் வாழ்க்கை:** சுவீடன் நாட்டு மக்கள், நார்வே மக்களுடனும், தேனிய(Danes) மக்களுடனும் நெருங்கிய உறவு கொணடவர்கள். இவர்களுக்குச் செருமானிய உறவுமிகக் குறைவாகவுள்ளது. இலாப்பு (Lapp) இனமக்கள் சில ஆயிரவர் சுவீடனின் வட கோடியில வாழ்கின்றனர். பின்லாந்திய மக்களும் இலாப்பிய மக்களைவிட நான்கு மடங்கு மிகுதியான எண்ணிக்கையில் உள்ளனர். இவர்கள் வடகிழக்குக் கடற்கரையை யொட்டியுள்ள பகுதிகளில் வாழ்கி றார்கள்.

சுவீடிய மொழி வடசெருமானிய மொழியைப் போன்றது. சுவீடிய மக்கள் கடின உழைப்பிற்கும், கூர்த்தமதிக்கும், திறமைக்கும், நட்பிற்கும் பெயர் பெற்றவர்கள். அவர்கள் தம் நாட்டுப்புறங்களையும், நகரங்களையும் துப்புரவாகவும் அழகாகவும் காக கும் திறன்கொண்டவர்கள். பெரும்பாலான சுவீடன்

மக்கள் வசதிமிக்க வீடுகளைக் கொண்டவர்களாய் விளங்கி, வாழ்க்கைத் தரத்தில் சிறந்து காணப்படு கின்றார்கள். நாட்டுப்புற வீடுகள் வண்ணநதீட்டப் பெற்ற மாத்துண்டுகளாலும், வெண்ணிறக கற்களா லும் கட்டப்பெற்றுள்ளன. தென் சுவீடனில் கற்களா லும் செங்கற்களாலும் ஆன வீடுகளைக் காணலாம். சுவீடன் மக்கள் சத்துணவு உண்ணும் பாங்கு பெற்ற வர்கள். தமக்கு வேணடிய அளவு உணவினை எடுத் துக் கொணடு, தனித்தனியாக உண்ணும் பழக்கம் கொண்டவர்கள். மீன், முள்ளங்கி, அப்பம், பால டைக்கட்டி போன்றவற்றை விரும்பி உண்கிறார்கள். பிராந்தி மற்றும் காரமான பழரசத்துடன் கலந்த சாராயததையும் குடிக்கும் பழக்கம் கொண்டவாகள். சூரியவொளியில் ஆடிப்பாடி மகிழும் வழக்கம் கொணட சுவீடன் மக்கள் உடற்பயிற்சியில் ஊக்கம் கொண்டவர்கள். நீச்சலடித்தல், படகோட்டல், தட களப்போட்டிகள் போன்றவற்றில் நாட்டமிக்கவர் கள். பனியில் சறுக்கி விளையாடுதல் அவர்களின கேளிக்கைகளுள் ஒன்றாகும்.

**நகரங்கள்:** இசுடாககோம் (Stockholm) சுவீட னின் தலைநகர்; பெருநகர். இது இந்நாட்டின் வாணிக மையமாகும். கோட்பர்கு (Goteburg) சுவீ டனின் இரண்டாம பெருநகரம். இது பெரும் துறை முகப் பட்டினமாகும். மால்மோ (Malmo) மூன்றாம பெரு நகரமாகும். இங்குக் கப்பல்கட்டும் தொழிற் கூடங்களும் சர்க்கரைச் சுத்திகரிப்பு ஆலைகளும் நூற் பாலைகளும் இயந்திரக் கடைகளும் உள்ளன.

**செய்பொருள்கள்:** ஐந்தில் இரண்டுபாகம் சுவீடி யர்கள் செய்பொருள்களை உற்பத்தி செய்வதில் ஈடு பட்டுள்ளனர். பெரும்பாலான செய்பொருள்கள நாட்டுப் புறங்களிலும், ஐம்பதாயிரம் மக்கள்தொகைக் குக் குறைந்த ஊர்களிலும், நகரங்களிலும் செய்யப் படுகின்றன. இயற்கை வளங்கள் நாடு தழுவிக் காணப் படுவதால், நாட்டின் பல பாகங்களில் செய்பொருள் கள் உற்பத்தி செய்யப்படுகின்றன. இங்கு மிகுதியா கக் கிடைக்கும் நீர்மினசக்தி செய்பொருள் உறபத் திக்கு உறுதுணையாய் அமைகின்றது. செய்பொருள களில் பெரும்பாலானவை காடுகளில் இருந்து கிடைக் கின்றன. மரக்கட்டைகள் மரச்சாமான்கள், காகிதக் கூழ், காகிதம், செல்லுலோசு என்னும் அரக்கு வகை கள் காடுகளிலிருந்து கிடைக்கும் பொருள்களிலிருந்து பெறப்படுவன. மரமறுக்கும் தொழிற்சாலைகளும் மிகுதியாக உள்ளன. நடுசுவீடனில இரும்புருக்குத் தொழிலகள் காணப்படுகின்றன. பல தொழிற் சாலைகள், இயந்திரக் கருவிகள், இரசாயனப் பொருள் கள், ஆடைகள், பேருந்துவண்டிகள், கணணாடி, பீங் கான் பொருள்கள் போன்றவற்றை உற்பத்தி செய் கின்றன. சோன்கோப்பிங்கு (Jonkoping) என்னும் ஊரில் தீப்பெட்டித் தொழிற்சாலைகள் மிகுந்துள் ளன.

**வேளாண்மை:** சுவீடன் மக்களில் நாலிலொருவர் பண்ணைத் தொழிலில் ஈடுபட்டுழைக்கும் உழவரா வார். பண்ணைகள் சிறிய பரப்பளவைக் கொண்டவை. தெற்குச் சுவீடனும் கிழக்குச் சுவீடனும் பண்ணைகள் நிறைநதவை. இங்குக் கோதுமை, ஓட்சு, உருளைக் கிழங்கு போன்றவை பயிரிடப்படுகின்றன. தென் சுவீடனில் மேய்ச்சல் நிலங்களும் மிகுதியாக உள்ளன. எனவே, கால்நடை வளர்த்தல், பன்றிகள் வளர்த்தல போன்றவை ஏனைய தொழில்களாகும். பலவகை மான்களையும் வடகோடியில் வளர்கிறார்கள.

சுவீடியர்கள் பண்ணைகளில் திறமையாகப் பயிரி டும் பாங்குடையவாகள. மேலும், இக்கால முறைப் படி பயிரிடும் திறமை மிக்கவர்கள். பணணைகளுககு மின் வசதி கிடைக்கிறது. உழவர்களுக்கு அரசு வேளாண்மைக் கலவி கற்பிக்கிறது. பள்ளி மாணவ மாணவியர் பண்ணைக்குழுக்கள அமைத்து பண ணைத் தொழிலில் ஈடுபடப் பயிற்றுவிக்கப்படுகிறார் கள்.

பல்வேறு மரங்கள் காடுகளில் வளர்க்கப்படுகின றன. காடுகளில் பாதியளவினைத தனியார் சொத் தாகக் கொணடுள்ளனர். அரசு காற்பஙகுக் காடு களையும் கூட்டுறவுக் கழகங்கள காற்பங்கையும சொந்தம் கொண்டாடுகின்றன.

பொருளாதார வளத்திற்குக் கூட்டுறவுக் கழகங் கள் உறுதுணையாய் நிற்கின்றன. நாட்டின் பாதிக்கு மேற்பட்ட குடும்பங்கள கூட்டுறவுக் கழகத்துடன் இணைநதுள்ளன. நுகர்வோர் கூட்டுறவுக் கழகங்கள் மக்களுக்கு உணவு மற்றும் ஏனைய பொருள்களை விற்று உதவி செய்யும ஊதியத்தில் குடுமபங்களுக் கும் பங்குண்டு. அரசு கூட்டுறவுக் கழகங்களை இணைத்து உதவி செய்கின்றது. அதனால், இடைத தரகர்கள் இன்றி அரசு மக்களுக்குப்பெருமளவு உதவி செய்கின்றது. அனைத்து உற்பததிப் பொருள்களுக கும் கூட்டுறவுக் கழகங்கள் உணடு.

**போக்குவரத்து:** சுவீடன் நாட்டில் ஏறத்தாழ 90,000 கி.மீ. சாலைகள் அமைக்கப்பட்டுள்ளன. ஏறத்தாழ 15,000 கி.மீ. இருப்புப்பாதைகளும் உள் ளன. வாகனங்கள் நீர்மினசக்தியால் ஓடுகின்றன. பெரும்பகுதி இருப்புப் பாதைகள் அரசுக்குச் சொந்த மானவை.

வாணிகக் கப்பல்களுக்கும் சுவீடன் பெயர் பெற் றது. அவை உலகின் பல பாகங்களுக்குப் பொருள்

களைச் சுமந்துசெல்கின்றன. மிகுதியான தொலை பேசிக் கருவிகளும் இந்நாட்டில் இயங்குகின்றன.

**வரலாறு:** சுவீடன் தொன்மையான வரலாற்றைக் கொண்ட நாடாகும். சுவீடன் கி.பி. 13-ஆம் நூற்றாண்டில் படைமானிய நாடாக இருந்தது. செருமானிய வணிகர்கள் நகரங்களை உருவாக்கிப் பாலடிக்குக் கடற்கரையை ஆண்டார்கள். தேனியர்களின் (Danes) ஆளுகைக்குப் பல்லாண்டுகள் சுவீடன் அடிமைப்பட்டிருந்தது. ஐரோப்பாவில் சமயச் சீர்திருத்தம் ஏற்பட்டபோது, ககுடவசு என்பார் சுதந்திர சுவீடனை உருவாக்கக் காரணமானார். சுவீடன் தென்மார்க்குடனும் உருசியாவுடனும் பல போர்களைச் செய்தது. மக்களாட்சி மரபுகள் கி.பி. 18-ஆம் நூற்றாண்டில் நிலைநாட்டப்பெற்றன. நெப்போலியன் போரிட்டபோது அப்போர்களில் சுவீடன் பங்குகொள்ள வில்லை. இருப்பினும் உருசியா, தென்மார்க்கு நாடுகளின் தாக்குதல்களிலிருந்து தப்ப, நெப்போலியனுடன் நலலுறவு கொண்டது. சுவீடன் நார்வேயை 91 ஆண்டுகள் ஆண்டது. உலகப் போர்களின்போது சுவீடன் நடுநிலைக் கொள்கையை உறுதியாகப் பின்பற்றியதால் போரில் ஈடுபட வில்லை. இரண்டாம் உலகப் போருக்குப் பின்னர்ச் சுவீடன் ஐ. நா. வின் உறுப்பு நாடுகளுள் ஒன்றாகி உலக அமைதிக்குப் பாடுபடும் நாடுகளுள் ஒன்றாகப் பெயர் பெற்றுள்ளது. இரா.அ.

**சுவீடன்பர்கு** என்பார் சுவீடன் நாட்டைச் சார்ந்த அறிவியல் வல்லுநர்; தத்துவமேதை; இறையியல் ஞானி; கிறித்தவ சமயத்தின் ஒரு பிரிவான புதிய எருசெலம் திருச்சபை அல்லது புதுச்திருச்சபை என்னும் பிரிவுக்குத் தத்துவ விளக்கம் தந்த எழுத்தாளர். சுவீடன்பர்கு (Swedenburg) கி.பி. 1688-ஆம் ஆண்டு இசுடாக்கோமில் (Stockholm) பிறந்தார். தந்தையார் உப்சலாவில (Uppsala) பேராசிரியராகப் பணியாற்றியவர். இவரும் உப்சலாவில் கல்வி கற்று ஐரோப்பாவில் பயணம் செய்தவர். தொடக்க காலத்தில் இயற்பியல் கற்றுத் தேர்ந்த இவர் அத்துறையைக் கரைகண்டவராக மதிப்பிடப் பெறுகிறார்.

சுவீடன்பர்கு தத்துவத் துறையிலும் பல கண்டுபிடிப்புகளைச் செய்தவர். இம்மேதை கி.பி. 1743-முதல் தம் கவனத்தை இயற்பியலிலிருந்து சமயத் துறையின்பால் திருப்பினார். அத்துறையில் இவருக்கேற்பட்ட வியத்தகு அனுபூதியால் இறையொளி கிடைக்கப்பெற்றவரானார். சித்தர்கள் காணும் இறைக்காட்சிகளைக் கண்டு பேரின்ப வெள்ளத்தில் திளைத்தார் இப்பெரியார். இறைவனைப் பற்றிப்



சுவீடன் பர்கு

பல கட்டுரைகளையும், பல நூல்களையும் எழுதிப் புகழ்பெற்றார். தம் கோட்பாடுகள் விவிலியக் கோட்பாடுகளின் அடிப்படையில் எழுந்தவையே என்பது இவர்தம் கூற்று. ஆனால், இக்கூற்றைப் பலர் கடுமையாகக் குறை கூறினர்.

சுவீடன்பர்கு தமக்கென்று உரிமை கொண்டாடும் தனித்த சமய இயக்கத்தை நிறுவ விழைந்தாரில்லை. எனினும், இவர் காலமான பின்னர் இவருடைய அணுக்கச் சீடர்களுள் சிலர் இவர்தம் கோட்பாடுகளின் அடிப்படையில் சமயப் பிரிவொன்றை உருவாக்கினர். இதைத்தான் புதிய எருசெலம் திருச்சபை (Chruch of New Jerusalem) என்பர்.

சுவீடன்பர்கு கி.பி. 1772-ஆம் ஆண்டு இலண்டன் மாநகரில் காலமானார். இரா.அ.

**சுவீடிசு மொழி:** இது இந்தோ-ஐரோப்பிய மொழிக் குடும்பத்தைச் சேர்ந்த ஒரு வட செருமானிய மொழி. இது சுவீடன் நாட்டு அரசியல மொழியாகும். பின்லாந்தில பின்னிசு மொழியுடன் இம்மொழியும் அரசியல மொழியாக உள்ளது. சுவீடனில் 7,500,000 மக்களும், அமெரிக்காவிலும், கனடாவிலும 1,000,000 மக்களும், பின்லாந்திலும், எசுத்தோனியாவிலும் 500,000 மக்களும் சுவீடிசு மொழியைப் பேசுகின்றனர்.

சுவீடிசு மொழி கி.பி. 2-ஆம் நூற்றாண்டு முதல் இசுகாண்டிநேவியப் பகுதிகளில் வழங்கிய பொதுமொழியான முதுபழம் இசுகாண்டிநேவிய மொழி (அல்லது பழைய நோர்சு)யிலிருந்து பிறந்ததாகும். இம்மொழி பற்றிய செய்திகளைப் பழைய உருனிக் கல்வெட்டுகளிலிருந்து அறியலாம். உருனிக் கல்வெட்டுகள் கி.பி. 2 அல்லது 3-ஆம் நூற்றாண்டு முதலே கிடைக்கின்றன இரண்டாயிரத்து ஐந்நூறுக்கும் மிகுதியான இக்கல்

வெட்டுகளுள் மிக முக்கியமானது இரியோக்சுடன் என்ற இடத்தில் கிடைத்த கி.பி. 9-ஆம் நூற்றாண்டைச் சேர்ந்த ஒன்றாகும். இந்நாட்டில் தோன்றிய முதல் நூல் கி.பி. 1220-இல் இலத்தீன் எழுத்தில் எழுதப்பட்ட ஒரு சட்ட நூலாகும். இக்காலத்தில் பிற மொழிச் செல்வாக்கு இம்மொழியினகண் மிகுதியாக இல்லை. இதன்கண் ஒருசில இலத்தீன் சொற்களும் கிரேக்கச் சொற்களுமே உள்ளன. சுவீடிசு மொழி தேனிசு மொழியுடன் மிகவும் ஒத்திருந்தது; இரண்டையும் பிரித்தறிவது கடினமாகவே இருந்தது. கி.பி. 1300-இல் இவ்விரு மொழிகளுக்கிடையே வேற்றுமைகள் தோன்றி வளரத் தொடஙகின. இதுவரை தேனிசு என்றே குறிக்கப்பட்ட இம்மொழி கி.பி. 1330 முதல் சுவீடிசு மொழி என்று வழங்கப்படலாயிற்று.

செருமானியர்களின் செல்வாக்கு கி.பி. 1365-இல சுவீடனில் மிகுந்ததால் பல செருமானியச் சொற்கள் சுவீடிசு மொழியில் புகுந்தன. பாரிசில் ஏற்பட்ட பல்கலைக் கழகத்துடன் சுவீடன் நாட்டினர் கொணட தொடர்பினால் பல பிரஞ்சுச் சொற்களும் இம் மொழியில் வழங்கப்படலாயின. இக்காலத்தில்தான நான்கு கிளைமொழிகள (Dialects) இருந்த சுவீடிசு மொழியில இரண்டு அழிந்தன. இலததீன மொழிச் செல்வாக்கினால் இதன தொடரியலிலும மாற்றம் ஏற்பட்டது. தென்மார்க்கு நாட்டின் அதிகாரத்தின கீழ் இசுகாணடிநேவிய நாடுகள இருநதபோது தேனிசு மொழி பொது அரசு மொழியாக இருந்ததால், சுவீடிசு மொழி கட்டுக்கோப்பின்றி இருநதது. தென்மார்க்கின அதிகாரத்தினின்று சுவீடன விடுதலைஅடைந்தபோது சுவீடிசு மொழியில ஒரு பொதுநிலையைக கொண்டுவரப் பல முயற்சிகள் நடந்தன. ஆனால் கி.பி. 16-ஆம் நூற்றாணடில தான பலர் முயற்சியினால சுவிடிசு மொழி கட்டுக்கோப்புடன் ஒரு பொது மொழியாக உருப்பெறறது. இதன் முதல இலக்கண நூல கி.பி. 17-ஆம் நூற்றாணடில் வெளிவநதது. அகராதி ஒன்றும் வெளியிடப்பட்டது. இமமொழியின் வரலாற்றில மிக முக்கியமான காலப்பகுதி கி.பி. 18-ஆம் நூற்றாண்டு. இக்காலப் பகுதியில பல துறைகளிலும் இம்மொழி வளர்ந்தது. பிரஞ்சு, ஆங்கிலம் போன்ற மொழிகளின் செல்வாகரு இம்மொழியில் இருப்பினும் இலககணத்தைப் பொறுத்த மட்டில் கி.பி. 18-ஆம் நூற்றாண்டிற்குப் பின்னர் இம்மொழியில் மாற்றம் எதுவும் தோனறவில்லை.

ஆங்கில மொழியைப் போலவே சுவீடிசு மொழியிலும் பொது, சிறப்புச் சுட்டுகள் உள்ளன. சிறப்புச் சுட்டுகள் பின்னொட்டுகளாகவும் பெயர்களின் பால், எண்களுக்கேற்ப மாறுபவையாகவும் உள்ளன. மூவிடப் பெயர்களில் ஆண, பெண் பால்களும், அஃறிணையும் காணப்படுமாயினும், பொதுவாக இம்மொழியில் பெயர்கள் அஃறிணை, பொதுப்பால என இரு பெரும் பிரிவுகளாகவே பிரிக்கப்படுகின்றன. இம்மொழியின் பால, பகுப்பு, பெயர்ச் சொற்கள் ஏற்கும் சிறப்புச் சுட்டினை அடிப்படையாகக் கொண்டது.

சுவீடிசு மொழியின் தாய்மொழியான பழைய நோர்சு மொழி எழுவாய், ஐ, கு அது ஆகிய நானகு வேற்றுமைகளைக் கொணடிருநத போதிலும், சுவீடிசு மொழியில் எழுவாய், அது ஆகிய இரு வேற்றுமைகளே உள்ளன. சுவீடிசு பெயரடைகள், அவற்றின் பின்னால் வரும் பெயர்களின் ஒருமை, பன்மை எண்களுக்கேற்பவும், பால்களுக்கேறபவும் மாறுந்தன்மையன. பொதுவாக, இம்மொழியின் மூவிடப்பெயர்கள ஆங்கில மூவிடப் பெயர்களை ஒத்துள்ளன. ஆயினும், அஃறிணை ஒருமையில் இருவகை காணப்படுகின்றது. ஒன்று, பொதுப்பாலைக் குறிக்கவும், மற்றொன்று அஃறிணையைக் குறிக்கவும் பயன்படுகின்றன. இதே போனறு முன்னிலை ஒருமையிலும் நீ (ni), தூ (du) ஆகிய இருவகை உள்ளன. 'தூ' நெருங்கிய நணபர்கள், வீட்டு உறுபபினர்கள ஆகியோரிடம் பயன்படுவது. 'நீ' தாழநதோரிடம் பயன்படுத்தப்படுவது.

சுவீடிசு வினைச்சொறகள் ஆங்கில வினைச் சொற்களைப் போலவே காணப்படுகின்றன. இதில் நான்கு வகையான வினைசசொறகள உளளன. ஆஙகிலத்தில் இறந்தகால வினையெச்சம் (Past Participle) துணை வினையுடன் நின்று, பல கால வேறுபாடுகளைக் காட்டுதலபோலச் சுவீடிசு மொழியில 'சுபைன்' (Supine) என்ற வினையெச்சம் பயன்படுகிறது. ஆனால், இவவினையெச்சம் ஒருசில துணை வினைகளுடன் வந்து காலம் காட்டுவதுடன் பெயரின அடையாகவும் வருகின்றது.

சுவீடிசு மொழியிலுள்ள செயவென் வினையெசசத்திற்கும், ஆஙகில வினையெச்சத்திற்கும் சில வேற்றுமைகள் உணடு. ஆங்கிலத்தில் 'to' இன்றி வினையெச்சம் வாராதிருக்க, பல சுவீடிசு வினைகள் செயவென் எச்சத்தைக் குறிக்கும் 'att' இன்றியே அகர வீற்றை ஏற்று வினையெச்சமாக வருதல் காணலாம்.

| அத் கல்ல | Att Kalla | அழைக்க |
|---|---|---|
| டன்ச | Dansa | ஆட |
| பட | Bada | குளிக்க. |

எம்.சு.

**துணை நூல்:**

அகத்தியலிங்கம், ச., உலக மொழிகள-முதல் பகுதி, அணணாமலைநகர், 1968.

***சுவேதாசுவதர உபநிடதம்:*** மனிதன், காதுகளால் நல்லனவற்றைக் கேட்க வேணடும் என்றும், கண்களால் நல்லனவற்றைப் பார்க்க வேண்டும் என்றும், இறைவனை வணங்கினால் அமைதி உணடாகும் என்றும், எல்லாம் வல்ல இறைவனுக்கு வணக்கம் என்றும் சுவேதாசுவதர (Swetasvatara) உபநிடதம் கூறுகிறது. சீடர்கள் உலகத் தோற்றத்தின் காரணமென்ன, அதற்குக் காரணம் பிரமமா? மனிதன் எங்கிருந்து வந்தான்? மனிதன் ஏன் வாழ வேண்டும்? கடைசியில அமைதி எங்கே கிடைக்கிறது என்றெல்லாம் தங்களுக்குள்ளே வினாக்கள் எழுப்புகின்றனர். காலம், இடம், நீதி, தற்செயல் நிகழ்ச்சி, பருப்பொருள், முதலாவதான ஆற்றல்கள தனியாகவோ ஒன்று சேர்ந்தோ உலகிற்குக் காரணமாகா. ஏனென்றால் அவை காரியங்களாகவும் ஆன்மாவுக்குத் துணை செய்பவைகளாகவும் அமைகின்றன. தனியான ஆன்மாவும் உலகத் தோற்றத்திற்குக் காரணமாக இருக்க முடியாது. மெய்யுணர்வாளர் தியான நிலையில், தன்னுள்ளே இருக்கின்ற இறைவனைக் காண்கிறார்கள். அநத இறைவன் எலலோருடைய உளளத்திலும் காணப்படுகிறாா.சத்துவ, இராசத, தாமத குணஙகள அவரை மறைத்துக் கொணடிருககின்றன.

இந்த உலகம் சுழன்று கொண்டிருக்கிறது.எல்லா உயிரினங்களும் பிறநதும் இறநதும் மீணடும பிறந்து கொண்டேயும் இருக்கின்றன. இறைவனிடமிருந்து ஆன்மா வேறு எனற நினைவு இருக்கிற வரை மேற கூறிய சுழற்சி நடந்து கொண்டேயிருககிறது. இறைவன் அருளால் ஆன்மாவும் இறைவனும் ஒன்று என்று அறிந்தவுடன் சுழற்சி நின்று விடுகிறது. ஆன்மா அழியாத் தனமையை அடைகிறது. உலகிற்கு அப்பாற் செலலுகிறவனை வேதஙகள பரம்பொருளாகக் கருதுகின்றன. ஆனால தனிஒருவர் ஆன்மாவானது இறைத்தன்மையை மறந்து, இன்ப நினைவுகளில் மயங்குகிறது. அது இறைவனை அடையும்பொழுது எல்லாவித கட்டுப்பாடுகளிலிருந்தும் விடுபடுகிறது. மனம், பருப்பொருள், தலைவர், பணியாள முதலியவை எப்பொழுதுமே இருந்திருக்கின்றன. இவைகளை ஒன்றுபடுத்துகிற மாயையும் அநாதியாக அமைந்திருக்கிறது.

பருப்பொருள் (Matter) அழியுநதன்மையது. இறைவன் அறியாமையை அகற்றுகிறான், அவன் அழியாதவன்; என்றுமுள்ளவன்; அவனைத் தியானிக்கும் பொழுது அறியாமை நீங்குகிறது. உண்மையென்னவெனில், ஆன்மா எப்பொழுதுமே இறைவனோடு சேர்ந்திருக்கிறது. விறகில் நெருப்பிருந்தாலும் கணணுக்குத் தெரிவதில்லை. ஒரு விறகை மற்றொரு விறகோடு தேய்த்தால் நெருப்புக் காணப்படும். அதுபோலவே உடம்போடு, ஓம் என்ற மந்திரத்தை ஒலித்தால் இறைவனை உணரலாம். விறகினுள் நெருப்பு இருப்பதுபோல், உடம்பினுள் இறைவன் அமர்நதிருக்கிறான். எள்ளினுள் எண்ணெய் போல், பாலில் நெய்போல், ஆன்மாவினுள் இறைவன் இருக்கிறான். உணமையினாலும் தியானத்தினாலும் அவனைஅறிய முடியும். பிரமத்தை அறிந்தவுடன அறியாமை அகன்றுவிடும்.

இறைவனை உணர்வதற்குப் புலன அடக்கம் தேவை. பிறகு உள்ளே இருக்கின்ற ஆன்மாவைத் தியானிக்க வேணடும. மனத்தினாலும் புத்தியினாலும் புலன்களை இன்பம் தரும் செயல்களிலிருந்து விடுபடச் செய்ய வேணடும்.அறிவுடையவர்கள் மனத்தை அடக்கி, இறைவனோடு ஒன்றுபடுத்த முயற்சி செய்வார்கள். மனத்தையும் புத்தியையும் இறைவனோடு ஒன்றுபடுத்த முயற்சி செய்ய வேணடும். பிராணனை அடக்கிப் பழக வேண்டும். நிமிர்ந்து உட்காாநது மனத்தையும் புலன்களையும் உளளே இருதயததில செலுத்தித் தியானம் செய்ய வேண்டும். தியானஞ் செய்யும் பொழுது பலவிதமான உருவங்கள் காணப்படலாம். தியானத்தில் ஆழ்ந்திருககும் பொழுது ஆன்மா வேறு, உடல் வேறு எனற உணர்வு ஏற்படும் முதல் அனுபவம் என்னவென்றால், உடல கனம் குறைவாகத் தோன்றும், தெளிவான தோற்றமும், அழகான குரலும், நல்ல மனமும் ஆசையில்லாதிருத்தலும் ஏற்படும. யோகம் செய்கிறவன, உண்மையான பிரமத்தைத் தன்னுள காண்கிறான். எல்லாவிதமான மலங்களும் நீங்கப்பெற்றுச் சுத்தமாகவும் பிறவியில்லாமலும் அமையும். கடவுள் ஒருவரே படைப்போராகவும் அமைகிறாா; எல்லோருடைய உடலிலும் உள்ளத்திலும் இருக்கிறாா. அத்தகைய இறைவனை எல்லோரும் வழிபட வேண்டும். கடவுள் உலகைத் தோற்றுவிக்கிறார்; காப்பாற்றுகிறார்; பிறகு தம்முள்ளே உலகினை அடக்கிக் கொளகிறார் என்று சுவேதாசுவதர முனிவர் கூறுகிறார். இறைவனை அறிநதவர் இறப்பையும் வென்று விடுகிறார். கடவுளைவிடச் சிறந்தவர் யாருமிலலை. அவர் மாறறம அறியாதவர். உலகெங்கும் நிறைந்து காணபபடுகிறார். உலகினில காணப்பட்டாலும், உலகப் பொருளுக்கு அப்பாற்பட்டவர்; உருவமற்றவர்; எல்லோர் உள்ளத்திலும் அமர்நதிருக்கின்றார். இவ்வாறு சுவேதாசுவதர உபநிடதம கூறுகிறது. இரா.கோ.

**துணை நூல்:**

**Swami Prabhawananda. The Upanishads, Sri Ramakrishna Math, Madras, 1979,**

**சுவேதாம்பரம்**: இது சமண சமயப் பிரிவுகளுள் ஒன்று. 'சுவேதம்' என்னும் சொல்லுக்கு அன்னம் என்பது பொருள். அன்னப்பறவை வெண்மை நிறத்தினைக் கொண்டது. 'அம்பரம்' என்றால் ஆடை. சுவேதாம்பரம் என்ற சொல்லுக்கு வெண்ணிற ஆடை என்பது பொருள். சமண சமயத்தில் கி.மு. 4-ஆம் நூற்றாண்டளவில் இரு பிரிவுகள் தோன்றலாயின. அவை (1) திகம்பரம், (2) சுவேதாம்பரம் என்பனவாம். பிறந்த மேனியாகச் சமண சமயத்தைப் பின்பற்றியவர்கள் திகம்பரர் எனப்பட்டனர். அதாவது, ஆடைகளையே உடுத்தாமல நிருவாணமாக இருநதவர்கள் எனபது பொருள். திசைகளைத் 'திக்' என்பர்; திசைகளையே ஆடையாகக் கொணடவர் திகம்பரா எனப்பட்டனர். சுவேதம்பரர்கள் வெணணிற ஆடைகளை அணிந்தவர்கள

சுவேதாம்பர சமண சமயப் பிரிவினை உருவாக்கியவர் பத்திரபாகு ஆவார். சமண சமயம் பீகார் மாநிலத்தில் தோனறியது. அம்மாநிலத்தில் கி.மு 3-ஆம் நூற்றாண்டில் பல்லாணடுகள் நீடித்த வற்கடம் (பஞ்சம்) ஒனறிலிருந்து தஙகளைக் காத்துக்கொளளும முகத்தான் பத்திரபாகுவும் அவருடைய சீடாகளும் தென்பகுதிக்கு வந்ததாக வரலாறறுச் செய்தியொன்று கூறும். பத்திரபாகுவினால அமைக்கப்பெறற சமண சமயப் பிரிவைச் சேர்ந்தவர்கள் சுவேதாம்பராகள் எனப்பட்டனர்.

திகம்பரர்களும், சுவேதாம்பரர்களும் வேதநெறியை ஏற்றுக் கொள்ளாதவர்கள், இவை இரண்டும் நாத்திக சமயங்கள் என்று கருதப்பட்டவை. வற்கடம் நீங்கிய பின்னர்ப்பத்திரபாகுவின சீடர்கள் பீகாருக்குத் திருமபியபோது, வடக்கில் வாழ்ந்த திகம்பரர்கள் சுவேதாம்பரர்களைச் சமண சமயக் கொள்கைகளை நழுவவிட்டவர்கள் என்று தூற்றினர். இரு சமயப் பிரிவுகளுக்கிடையே கருத்து வேறுபாடுகள் தோன்றலாயின. எது உண்மையான சமயம் என்பதை உறுதிப்படுத்தச் சமண சமயக் குழு (Council) ஒனறு கூட்டப்பெற்றது. திகம்பரர்கள் சுவேதாம்பரர்களின் சமண சமயக் கொள்கை ஏற்றுக்கொள்ளத்தக்கதன்று என்று முடிவு செய்தனர். வஙகாளம, மத்திய இநதியா, மகாராட்டிரம், தென்னிந்தியா போன்ற பகுதிகளில் திகம்பரர்கள் செல்வாக்குறறிருந்தனர். சுவேதாமபரர்கள் இராசசுத்தானம், மேலை இந்தியா (Western India) போன்ற பகுதிகளில் வளமாகக் காலூன்றி இன்றளவும் சமண சமயத்தைப் பினபற்றி வருகிறார்கள்.

காலப்போக்கில் திகம்பர சமயப் பிரிவினர் வலுவிழந்து மறைந்தனர். இன்றும் செல்வாக்குடன் வாழ்வோர் சுவேதாம்பரப் பிரிவினரேயாவர். சுவேதாம்பராகள் வகுத்த சமண சமய நூல்களான பன்னிரு அங்கங்களைத் திகம்பரர் அதிகார பூர்வமானவையாகக் கருதவில்லை. இரா.அ.

**சுவேயூவான்** சீனக் குடியரசைச் சார்ந்த மாநிலஙகளுள் ஒன்று முன்னர் இது உள்மங்கோலியாவின் (Inner Mongolia) பகுதியாக இருந்தது. இது 1911-ஆம் ஆணடளவில் சீனக் குடியரசில பெயரளவில் இணைக்கப்பட்டிருந்தது. பின்னர் உள்மஙகோலியா மூன்று மாநிலங்களாகப் பிரிக்கப்பட்டது. அவை (1) சாகர் (Chahar or Chahaier), 2) சுவேயூவான் (Suiyuan), 3) நிங்சியா (Ningxia) என்பனவாம். சுவேயூவான் சீனப்பெருஞ்சுவருக்கும் கோபிப் பாலை நிலத்திற்கும் இடையில அமைநதுளளது. 'சீனாவின் துயரம்' எனப்படும் ஒயாங்கோ (Huang-Ho) ஆற்றின பெரிய வளைவு இப்பகுதியின வழியாக அமைந்துளளது. ஆறறுககுத் தென்பால அமைந்துள்ள பகுதி பாலை நிலத்தைப் போன்றது. வட பகுதி புல்வெளி நிரமபிய பகுதி. இமமாநிலத்தின் கிழக்குப் பகுதியில் கனிப்பொருளகள மிகுதியாகக் கிடைக்கின்றன. நிலக்கரி சிறப்பானதாகும்.

இரண்டாம் உலகப்போருக்குப் பினனர்ச் சீனாவின பொதுவுடைமைக் கட்சியினர் உள்மங்கோலியாவைக் கைப்பற்றிக் கொண்டனர். மங்கோலியர்களுக்கு இத தருணத்தில் சீன அரசு தன்னாட்சி உரிமையை வழஙகியிருந்தது. அதன் அடிப்படையில் 1947-இல் உளமங்கோலியத் தனனாட்சிப் பகுதி நிலைநாட்டப்பட்டது. (Inner Mongolian Autonomous Region). அதன் தலைநகர் உலன்காட்டு (Ulanhot) என்னும் நகர். இக காலத்தில அதனைச் சிலின் (Jilin) எனபர் மஙகோலியாகள வாழ்ந்துவந்த சீனப்பகுதிகளை உளமஙகோலியத் தன்னாட்சிப் பகுதியுடன் இணைத்துப் பெருக்கினர். சாகா (Chahar) எனனும் பகுதி 1953-இல் இணைக்கப்பட்டது. சுவேயூவான் (Suiyuan) 1954-இல் இணைக்கப்பட்டது. நிங்சியா (Ningxia) 1956-இல இணைககப்பட்டது பின்னர்த் தலைநகரும் கலகன (Kalgan) என்னும் நகருக்கு மாற்றப்பட்டது. இக காலததில் இநநகரம் சாஙகியாகோன் (Zhangjiakon) எனப்படுகிறது.

சுவேயூவான் பரந்த நிலபபரப்பைக கொண்டதுடன் மக்களதொகை மிகுந்ததுமாகும். சுவேயூவான என்னும் பெயர் கொணட நகரம் ஒனறு இருந்தாலும் அதனைத் தலைநகரமாக ஏற்றுக்கொளளவிலலை. இங்கு இருப்புப்பாதை ஒன்றும செல்கிறது.

சுவேயூவான் மாநிலத்தின் பரப்பளவு ஏறத்தாழ 4 இலட்சம் ச.கி.மீ. மக்கள்தொகை சற்றேறக்குறைய 1,000,000 ஆகும் (1982). இரா.அ.

***சுவைத்தல் நிலை:*** ஒவ்வொரு மனிதனும் பிறப்பு முதல் முதுமைப் பருவம் முடிய பலவிதமான இன்ப உணர்வுகளைக் கொணட மனவளர்ச்சி நிலைகளைக் கடந்துதான் வளர வேண்டியுள்ளது என உளவியலின தந்தை பிராய்டு கூறுகிறார். ஒவ்வொரு நிலையிலும் முழுமையாக, நிறைவுடன் அந்தந்த நிலைகளின் இன்பஉணர்வுகளைஅனுபவித்து வளர்ச்சியடைய வேண்டும் எனவும் விவரிககிறார். அவ்வாறு ஒரு நிலையில் அளவுக்கு மேறபட்டு இன்ப உணர்வுகளை அனுபவிக்க நேர்ந்தாலோ நிறைவாக அந்த உணர்வுகளில் வளர்ச்சியடைய முடியாமற் போகும் பொழுதோ அந்தப் பாதிப்புகள ஒரு மனிதனின் பிற்கால நடத்தையை நிருணயிக்கின்றன எனத் தம் கோட்பாடுகளில் தெரிவிககிறார்.

இன்ப உணர்வு வளர்ச்சி நிலைகளான ஐந்து நிலைகளில் இரண்டாம் நிலைதான் 'சுவைத்தல் நிலை' யாகும். பொதுவாக ஒரு குழந்தை பிறந்தது முதல் முதலாண்டு முடிய இந்த நிலை இருப்பதாகக் கருதப்படுகிறது. அனைத்து வளர்ச்சி நிலைகளிலும் ஒவ்வோர் உடல் உறுப்பும், வெளியார் துணையின்றி தானே இன்ப உணர்வினைத் தனது உடலில் தோற்வித்துக்கொள்ளும் தன்மை கொண்டதாகத்தான் அமைந்துளளது எனவும் விவரிக்கிறார் பிராய்டு. அந்தக் கூற்றுப்படி இந்த இரண்டாம் நிலையான சுவைத்தல் நிலையில் உடலின் ஏனைய பாகங்களை யெல்லாம்விட உதடுகளும், நாக்கும் குறிப்பாக வாய்ப் பகுதிதான் மிக்க அளவு இன்ப உணர்ச்சிகளைத் தோற்றுவிக்கிறது. ஒரு குழந்தை வெளி உலகுடன் வாய்மூலம்தான் முதனமுதலில் தொடர்பினை ஏற்படுத்திக்கொள்ளுகிறது என்பது உண்மை. ஆகவே சுவைத்தல் நிலையிலும் ஒரு குழந்தையின் மனநிலை உலகமே வாய்ப்பகுதியில்தான் மையம்கொண்டு காணப்படுகிறது. சுவைத்தல், உறிஞ்சுதல், உண வருந்துதல், அசைபோடுதல போன்ற செயல்களின் மூலம் குழந்தை இன்ப உணர்வினைப் பெறுகிறது.

ஒரு குழந்தை வாய்மூலம் இன்ப உணர்வினை நிறைவுடன் அனுபவித்து வளர்வது, அதனது பிற்கால வாழ்க்கை நடத்தையில் பாதிப்பை ஏற்படுத்துகிறது. எடுத்துக்காட்டாக, அன்புடனும் பாசத்துடனும் ஒரு தாய் தனது குழந்தைக்குப் பாலூட்டிச் சீராட்டும்பொழுது மகிழ்வுடன் பிறரைச் சார்ந்திருந்து அதன்மூலம் இன்ப உணர்விணைப் பெற ஒரு குழந்தை பழகுகிறது. அது போன்றே வேளை தவறாமல் உணவருந்தும் வாய்ப்பை ஒரு குழந்தை பெறுவதும் அக்குழந்தையின் மனவளர்ச்சியில் ஒரு வரன்முறையை ஏற்படுத்திவிடுகிறது. அவ்வாறு நிறைவுடன் இச்சுவைத்தல் நிலையிலிருந்து அடுத்த நிலைக்குக் கடந்துசெல்லவும் ஒருகுழந்தை தன்னைத் தயார்படுத்திக் கொள்ளுகிறது.

இச்சுவைத்தல் நிலையில் அளவுக்கு மிகுதியாக ஒரு குழந்தை இன்ப உணர்வினைப் பெற்றுக்கொள்ளும் வாய்ப்பைப் பெற்றால் தனது பிற்கால வாழ்வில் எதற்கும் பிறரைச் சார்ந்திருத்தல், நம்பிக்கை கொண்டு அனுசரித்துச் செல்லுதல போன்ற குணங்களைக் கொணடதாக அக் குழந்தை காணப்படும். அதற்கு மாறாக, இந்நிலையில் ஏதேனும் தடங்கல்களோ முழு இன்ப உணர்வினைப் பெற இயலாத சூழ்நிலையோ கொண்டு ஒரு குழந்தை வளர்ந்தால் தனது பிறகால வாழ்வில் ஏமாற்றமும், மன வருத்தமும் தோன்றிப் பிறரை எதிர்த்தல், புகைபிடித்தல், அளவுக்கதிகமாக உணவு உண்ணல் போன்ற தீய பழக்கங்களைக் கொண்டதாகக் காணப்படும். கை சூப்புதல் போன்ற குணங்களும் இதனது வெளிப்பாடே எனவும் கூறுகின்றனர்.

எரிக்கு எரிக்சன் (Erick Erickson) என்ற உளவியலாரும் இந்தச் சுவைத்தல்நிலைக்கு ஒத்த கருத்துக்கொண்ட "உணர்ச்சி நிலை" என்ற மனித மன வளர்ச்சி நிலைகள் பற்றிய தம் கோட்பாடுகளில் விவரிக்கிறார். நம்பிக்கையும் அவநம்பிக்கையும் ஆகிய குணங்கள் ஒரு குழந்தைக்கு இந்த நிலையில்தான் உருப்பெறுகின்றன எனக் கூறுகிறார்.

இவ்வாறு ஒரு குழந்தையின் மனவளர்ச்சி நிலைகளில் சுவைத்தல் நிலை முக்கியமான ஒரு பகுதியாகும். இந்நிலை முழுமையாகக் கடைப்பிடிக்கபபட்டால் குழந்தையின் பிற்கால வாழ்வு வளம் நிறைந்து காணப்படும். சீனி.நா.ஜா.மி.

**துணை நூல்கள்:**

**Baron, etal.,** Psychology-Understanding Behaviour, Holt: Rinehast and Winston, Tokyo, 1980.

**Coleman, J.G.,** Abnormal Psychology and Modern Life, Taraporevala and Sons Company, India, 1976.

***சுனகாத்து:*** குசராத்து மாநிலத்திலுள்ள சுனகாத்து (Junagadh) மாவட்டத்தின் தலைநகரம். சுனகாத்து நகரம் கிர்னார் மலைகளுக்கு அருகில்

கத்தியவார் முந்நீரகப் பகுதியில் அமைந்துள்ளது. இந்நகரில் உள்ள கோயில்களும் மசூதிகளும் இந்நகரின் பண்டைய வரலாற்றைக் கூறுவனவாக அமைந்துள்ளன. இந்நகரின் கிழக்கில் உபர்கோட்டு என்னும் தொன்மையான இடம் உள்ளது. பௌத்த சமயத் தொடர்புடைய குடைவரைகள் இங்கு உள்ளன. அசோகர் கல்வெட்டுகளும் இங்கு உள்ளன. இவை யாவும் கி.மு. 3-ஆம் நூற்றாணடைச் சார்ந்தவை. கிர்னார் மலைகளின் உச்சியில் சமணர் கோயிலகள் பல உள்ளன. இம்மலையில் கி.பி. 15-ஆம் நூற்றாண்டில் கட்டப்பட்ட இராசபுத்திரக் கோட்டை ஒன்றும் உள்ளது. இந்நகரை மகமது பெகாரா (Mahmud Begara) என்பவர் கி.பி. 1472-இல கைப பற்றி இதற்கு முசுதாபாது எனப் பெயரிட்டார். இங்கு ஒரு மசூதியும் இவரால் கட்டப்பட்டது. இந்நகரம் பல நகரங்களுடன் சாலை வழிகளைக் கொணடுள்ளது. விளைபொருள்கள் இந்நகரில விற்பனை செய்யப்படுகின்றன. நகரமக்கள் தொகை 120,416 (1981).

சுனகாத்து மாவட்டம் 10607 ச.கி.மீ. பரபபளவைக் கொணடது. இம்மாவட்டத்தின தென்மேற்குப் பகுதியை அரபிக்கடல் சூழ்ந்துள்ளது. இம்மாவட்டத்தில் கிர்னார் மலைகளும் கிர் மலைகளும் உளளன. கிர் மலைகளில் உள்ள காடுகளில கொடிய விலங்கினங்கள் உள்ளன. பருத்தி, தானியப் பொருள்கள், எண்ணெய் வித்துகள், கரும்பு போன்றவை மாவட்டத்தில் விளைகின்றன. இம்மாவட்டத்தின் முக்கிய துறைமுக நகா போர்பந்தர் ஆகும். மக்கள்தொகை 2,100709 (1981).

சு.இரா.



சுனகாத்துக் குடைவரை

# சூ

சகரத்திறகும் உகர ஊகாரங்களுக்கும் உரிய குறிப்புகளைப் பார்க்க.

சுகரத்திற்கு உரிய வடிவத்தில் உகரக்குறியோடு ஒரு வளைவு இணைக்கப்பட்டது. இது 7-ஆம் நூற்றாண்டில் பல்லவ பரமேச்சுவரவர்மனின் கூரம் செப்பேடுகளில் காணப்படுகிறது. மற்ற எழுத்துகளில் தலைக்கட்டின் வளர்ச்சியை ஒட்டிச் சகரஊகாரத்திலும் தலைக்கட்டு கி.பி. 13-ஆம் நூற்றாண்டில் தோன்றி வளர்ந்தது. வட்டெழுத்திலும் இதே நிலைதான்.

கே.ஜி.கி.

சூ-என்-லாய் கி.பி. 1898-ஆம் ஆண்டு சீனாவில் கியாங்கு மாநிலத்தில் உவெயன் (Huaian) நகரில் பிறந்தார். செகியாங்கு மாநிலத்திலுள்ள சௌ-சிங்கு (Shao-hsing) நகரில் தம் மாமன் பாதுகாப்பில் வளர்க்கப்பட்டுத் தொடக்கக் கல்வி பயின்றார். பின்பு தியன்சன் நகரில் பட்டப்படிப்பை முடித்து கி.பி. 1917-ஆம் ஆண்டு சப்பானுக்குச் சென்று வாசேடா பல்கலைக் கழகத்தில் சேர்ந்து (Waseda University) தமது கல்வியைத் தொடர்ந்தார். அங்கிருந்து கி.பி. 1919-ஆம் ஆண்டில் திரும்பி வந்து நான்காய் பல்கலைக்கழகத்தில் தமது கல்வியைத் தொடர்ந்தார். பீக்கிங்கு நகரில் கி.பி. 1919-ஆம் ஆண்டு நடைபெற்ற மே நான்காம் இயக்கம் (May Fourth Movement of 1919) வலுப்பெற்று, மாணவர்கள் கிளர்ச்சி வளர்ந்ததன் காரணமாக இவர் தியன்சன் வந்துசேர்ந்தார். மாணவர்களுக்கான செய்திகளில் தீவிர ஈடுபாடு கொண்டு கிளர்ச்சிகளைத் தூண்டிவிட்டார். சூ-என்-லாயின் (Chou-En-Lai) செயல்கள் அரசுக்கு எதிராக இருந்தமையால் இவர் கி.பி.1920-இல் கைது செய்யப்பட்டு 6 ஆண்டுகள சிறைத்தண்டனை பெற்றார். விடுதலையானதும் வேலையும் கல்வியும் (Work and Study Programme) என்ற ஒப்பந்தத்தில் பிரான்சு நாட்டிற்குச் சென்று இரண்டாண்டுகள் தமது கல்வியைத் தொடர்ந்தார். ஐரோப்பாவில் மாணவர்கள் பொதுவுடைமை இயக்கத்தை ஏற்படுத்தி அதில் மாணவர்களைச் சேர்த்து அவ் வியக்கத்தை வளர்த்தார். பிறகு இங்கிலாந்து சென்று அங்குப்பல மாதங்கள் தங்கியபின் செருமனி சென்று ஓராண்டுக் காலம் தமது கல்வியைத் தொடர்ந்தார்.



சூ-என்-லாய்

இவர் கி.பி.1924-ஆம் ஆண்டில் தாயகம் திரும்பியபின் சன்யாட்சென்னின் தேசிய புரட்சியில் சேர்ந்து தீவிரவாதியானார். வாம்போவா இராணுவக் கழகத்தின் அரசியல் ஆணையாளராக (Political Commissioner) நியமிக்கப்பட்டார். இக்கழகத்தின் தலைவரான சியாங்கே சேக்கின்கீழ்ப் புரட்சி இயக்கத்தினை வளர்த்தார். சாங்காய் (Shanghai) நகரின தீவிர எதிர்ப்பு இயக்கத்தின் வன்செயல்களில்

கி பி. 1927-ஆம் ஆண்டில மயிரிழையில் உயர்தப்பிய சூ-என-லாய், தென் மாநிலத்திற்குச் சென்றார். நான்சாங்கு (Nonchang), சவாடோ(Swatow), கான்டன் (Conton) மாநிலங்களில பொதுவுடைமை இயக்கத்தை வளர்த்தார் போா பிரபுக்களுக்கு (War Lords) எதிராகப் புரட்சி செய்தார். சிறையில் கி.பி 1925-ஆம் ஆண்டில் சந்தித்த தெ-யிங்-சௌ (Teng-Ying-Chao)அம்மையாரை மணந்தார். சியாங்-கே-சேக்கு 1927-ஆம் ஆண்டில் சாங்காய் (Shanghai) நகரைக் கைப்பற்றிச், சூவையும் அவர்தம் தோழர்களையும் சிறையில் தள்ளினார் சிறையிலிருநது 1928-இல தப்பிய இவர் உருசியா நாட்டுக்குச் சென்று, அங்குப் புரட்சி இயககத்தில சேர்ந்து பாடுபட்டார். புரட்சியின வளர்சசிக்கு 1931-ஆம் ஆண்டுவரை இரகசியமாக உதவினார். பிறகு தாயகம் திரும்பிச் சியாங்சு (Jiangsu) புயீசியன (Fujian) மாநிலங்களில பொதுவுடைமை இயக்கத்தை வளர்த்தார். அங்கு மக்களின புரட்சிப்படையின அரசியல ஆணையராக நியமிக்கப்பட்டார். புகழ்பெற்ற பொதுவுடைமைப் புரட்சியின போது (1934-35) 6,000 கல் தொலைவிலுள்ள வட சீனாவில சாங்சி மாநிலம் வரை 'நீணட பயணம்' (Long March) நடைபெற்ற நிகழ்சசிக்குச் சூ சப்பானியருக்கு எதிரான ஒன்றுபட்ட எதிர்ப்பு இயக்கத்தினை ஏற்படுத்தினார். சப்பானியா மஞ்சூரியாவின் மீது 1931-ஆம் ஆணடு படையெடுத்ததன் விளைவாக இவ் வெதிாப்பு இயக்கம் ஏற்படுத்தப்பட்டது.

சியாங்-கே-சேக்கு (Chiang Kai-Shek) 1936-ஆம் ஆணடு பொதுவுடைமை இயக்கத்தின் எதிரிகளாகிய அரசு அதிகாரிகளால் இரகசியமாகத் தூக்கிச் செல்லப்பட்டபோது சூ அவரைக்காப்பாறறித் தன் ஆதரவாளர்களுடன் அரசு அதிகாரிகளைச் சந்தித்து அவரை விடுதலை செய்தார். ஒன்றுபட்ட இயக்கத்தினை வளர்த்துச் சப்பானுக்கு எதிரான கிளர்ச்சியை வளர்கக முன்வநத சூ, அவ் வியக்கத்தின் வீரர்களை ஒன்றுசோத்தமையால் போர்ப படையின் தலைவராக ஆக்கப்பட்டார்.

கோமின்டாங்குக் கட்சியுடன் வேறுபட்டுத் தமது பொதுவுடைமை இயககத்தை வலுப்படுத்தி 1941-ஆம் ஆண்டு அக்கட்சிக்கு எதிராகப் போர் தொடுத்தார். நான்சிங்கு (Nanjing)தேசிய அரசாங்கத்தில் சூ பொதுவுடைமைக் கட்சியின் பிரதிநிதியாக்கப்பட்டார். பின் 1948-இல் பொதுவுடைமைக கட்சியின் உதவித்தலைவரானார். தொடர்ந்து 1949-இல் அக்கட்சியின் செயலகத்தின் உறுப்பினராக ஆக்கப்பட்டார். சீன மக்களின் குடியாட்சி 1949 அக்டோபரில் ஏற்படுத்தப்பட்டபோது சீனாவின் தலைமை அமைச்சராக ஆக்கப்பட்டார். தனது கட்சியின் தலைவரான மா-சே-துங்கின் கீழ் நாட்டுக்குத தனது சிறந்த சேவையினை அளித்தார். அவர் அயல் நாட்டு அமைச்சராகவும், ஆளும் கட்சியின் முக்கிய உறுப்பினராகவும், மக்களின புரட்சிப்படைக் குழுவின் உதவித் தலைவராகவும் பல்வேறு பொறுப்புகளை ஏற்றுச் சிறந்த பணியாற்றி உலகப்புகழ் பெறறார். இவர் 1949-58 வரை அயல்நாட்டு அமைசசராகப் பொறுப்பு வகித்தார். மாசுக்கோ சென்று சீன-சோவியத்தின் உதவி ஒப்பநதத்தில் 1950-இல் கையெழுத்திட்டார். கொரியா, இந்தோனேசியா விவகாரத்தின் மாநாடு 1954-ஆம் ஆணடில் செனிவாவில் நடைபெற்றபோது சீனத் தூதுககுழுவின தலைவராகச் சென்று கூட்டத்தில கலந்துகொணடாா. ஆசிய-ஆப்பிரிக்கக் கூட்டு மாநாடு 1955-இல பாணடுங்கில நடைபெறறபோது சீனக் குழுவின் தலைவராக அக்கூட்டத்தில கலந்து கொணடார். அயல் நாட்டு அமைச்சர் பதவியை கி.பி.1958-இல் துறநது, சீனாவின் பிரதமராகத் தொடர்ந்து பணியாற்றினார். இவரது சிறந்த சேவை கி.பி. 1966-ஆம் ஆணடு ஏற்பட்ட பண்பாட்டுப் புரட்சி வரை பாராட்டுககுரியதாயிருந்தது.

சீனப் பொதுவுடைமை மாநாடு 9-ஆம் ஆண்டு விழாவுக்குப் பின் இவர் நாட்டு நிருவாகக் குழுவாகிய ஐவர் குழுவில ஒருவராக நியமிக்கப்பட்டார். அமெரிக்க நாட்டின் தலைவர் இரிச்சர்டு எம. நிக்சனைச சீனாவிறகு வரும்படி கி.பி.1971-இல் அழைத்தார். இவ்விரு நாடுகளும் 20 ஆணடுகளாகக் கொணடிருந்த பகை நீங்கி நேசக்கரங்களை நீட்டின. வரலாற்றுப் புகழ்பெற்ற நிக்சனின் சீன வருகை இவருக்கு அரசியல் வட்டாரஙகளில் புகழைத் தேடித் தந்தது. சூவும் நிக்சனும் 1972-இல நடைபெற்ற அமைதி மாநாட்டில் கலந்துகொணடு இரு நாடுகளின நட்புறவை வளர்த்து அமைதியான சுகவாழ்வினை ஏறபடுத்த முடிவு செய்தனர். உலகம் முழுவதும் சுற்றிய சூ ஆப்பிரிக்காவிலுள்ள பல பகுதிகளுககுச் சென்று வந்தார். வளர்நதுவரும் நாடுகளுக்கிடையே சீனாவின் புகழ் வளரச்செய்து மேற்கு மற்றும் ஆப்பிரிக்க நாடுகளின் நட்பைப் பெற்றார். 'சூ' சீன வரலாற்றில அழியாப்புகழ் பெற்றபின கடின உழைப்பினால உடல் தளர்ந்து, நோய்வாய்ப்பட்டு 1976-ஆம் ஆணடு இயற்கை எயதினார். பெ.சி.

**துணை நூல்:**

**John K. Fair Bank, Edwin O Reisehauer, China (Tradition and Translation), George Allel of Union, London, 1973.**

**சூசா:** ஈரானில குசிசுத்தான் பகுதியில் உள்ள தொனமையான நகரம். சூசா (Susa), சூசான் (Shushan) என்றும் கூறப்படுகிறது. கிரேக்கர்கள் இந்நகரைச் சூசியன் (Susiane) எனக் கூறினர். பண்டைய ஈலத்தின் (Elam) தலைநகரமாகச் சூசா விளங்கியது. அக்குமீனிய அரசர் முதலாம தேரியசு (Darius I), அவருக்குப்பின் வந்த அரசர்கள் ஆகியோர்களின் அரச நடவடிக்கைகளின் தலைமை நகரமாகவும் இது விளங்கியது இந்நகரம் சகுரோசு (Zagros) மலை அடிவாரத்தில் கர்கெகூர் (Karkheh kur) ஆற்றின் கரையில் அமைந்துள்ளது.

இந்நகரத்தின் தொல்லியல் சிறப்பை கி.பி.1850 -ஆம் ஆண்டு உலோப்டசு (W.K. Loftus) என்பவர் கண்டுபிடித்தார். இங்குத் தொன்மைமிக்க நான்கு மண்மேடுகள் கண்டுபிடிக்கப்பட்டன. அவற்றுள் ஒன்று அரணாகும். இது கி.பி. 1897 முதல் 1908 வரை அகழாய்வு செய்யப்பட்டது. இதனைச் சாக்குயிசு-டி-மார்கன் (Jacques-de morgan) என்பவர் அகழாய்வு செய்தார். இவ்வகழாய்வில் பல அரும் பொருள்கள் கணடுபிடிக்கப்பட்டன. அமுராபி சட்டத்தொகுப்பு இவற்றுள் குறிப்பிடத்தக்கது. இரண்டாம் மண்மேட்டை மார்சல் தியூலாபி (Marcel Dieulafoy) என்பவர் கி.பி. 1881-ஆம் ஆண்டு அகழாய்வு செய்தார். இம்மண்மேடு முதலாம் தேரியசின் அரண்மனைப் பகுதியாகும். மூன்றாம் மண்மேடு ஈலாமியர்களின் நகரமாக விளங்கியது. இது அரச மரபினரும் உயர் வகுப்பினரும் வாழ்ந்த பகுதியாகும்.



சூசா

நான்காம் மண்மேடு ஏழைகளின் குடியிருப்புகளைக் கொண்டு விளங்கியது.

அகழாய்வுக் குழிகளின் கீழ் அடுக்குகளில் இரண்டு நாகரிகங்களைச் சார்ந்த மட்கலன்கள் கிடைத்தன. இவையிரண்டும் புதிய கற்காலத்தைச் சார்ந்தவை. இதற்கு அடுத்த மண்ணடுக்குகளில் ஈலாமிய நாகரிக மக்களின் பொருள்களும் தொடக்க கால பாபிலோனிய நாகரிகத்தின் பொருள்களும் கிடைத்தன. மேலடுக்குகளில் அக்குமீனியர் கிரேக்கர், ஈலாமியர், பார்த்தியர், சசானியர் போன்றோர் பயன்படுத்திய பொருள்கள் கண்டுபிடிக்கப்பட்டன. இப்பகுதி கி.பி. 14-ஆம் நூற்றாண்டின் பிற்பகுதியில் கரும்பு, பழ வகைகள், மெல்லிய ஆடை ஆகியவற்றிற்குப் புகழ் பெற்று விளங்கியது. சு.இரா.

**சூட்டன்கோ** இங்கிலாந்தில் சப்பக்கிலுள்ள உட்பிரிட்சு (Woodbridge) என்னும் ஊருக்கு அருகிலுள்ள பகுதி. இங்கு ஆங்கிலோ-சாக்சானிய அரசர் ஒருவர் இறந்தபின் அவரது நினைவாக எழுப்பப்பட்ட சின்னம் (Cenotaph) உள்ளது. இங்குக் கணடுபிடிக்கப்பட்ட நினைவுச் சின்னம் ஐரோப்பாவில் கண்டுபிடிக்கப்பட்ட செருமானிய நினைவுச் சின்னங்களிலேயே மிகச் சிறப்புப் பெற்றது. சூட்டன் கோப்புப் புதைவிடத்தில் (Sutton Hoo burial) தொன்மையான கப்பல ஒன்று கண்டுபிடிக்கப்பட்டது. இக்கப்பல் முழுவதும் இறப்பிற்குப் பின்பும் வாழ்வு உணடு எனக் கருதி மனிதனுக்குத் தேவையான பொருள்கள் யாவும் வைக்கப்பட்டிருந்தன. ஆனால் இக்கப்பலில் மனித எலும்புகள் எவையும் கிடைககவில்லை. ஆஙகிலோ சாகசானிய அரசர்களின் செல்வ நிலையைக இககப்பலில் கண்டுபிடிக்கப்பட்ட பொருள்களின் மூலம் நனகு அறியமுடிந்தது. இக்கப்பல் புதைப்பு 1939-ஆம ஆணடு எதிர்பாரா வகையில் கண்டுபிடிக்கப்பட்டது. மணலின அடியில் 7.6மீ. ஆழத்தில் சிதைநத நிலையில் கணடுபிடிக்கப்பட்ட இக்கப்பல் மூங்கில்களால் கட்டப்பட்டது. இது பாய்மரமற்றதாய்ககீழுளள பலகைகளை மேற்கவித்து கட்டப்பட்ட பலகைகளைக் கொணடு விளங்குகிறது. இக்கப்பல் 24 மீ. நீளமுடையது. இங்குக் கணடுபிடிக்கப்பட்ட காசு ஒனறிலிருந்து இந் நினைவுப் புதைவிடம் கிழககு ஆங்கிலேய அரசர் இரிட்வால்டு (Raedwald) என்பவருடையது எனக் கண்டுபிடிக்கப்பட்டது. இவர் கி.பி.624 அல்லது கி.பி 625-இல் இறந்திருக்க வேண்டும். இவர் புறச் சமயக் சார்புடையவராயிருந்து பின்னர்க் கிறிததவ மதத்திற்கு மாறினார் எனத் தெரியவருகிறது. இவ வரசர்யார் என்பது பற்றிக் கருத்து வேறுபாடுகள் உள்ளன. கப்பலைப் புதைக்கும் வழக்கம் சுவீடன நாட்டில் உள்ளது. எனவே ஆங்கிலேயே அரசர்கள

சுவீடியப் பழக்கவழக்கத்தைக் கொண்டிருந்தனர் என்பது தெரிய வருகிறது.

பொன்னால் செய்யபட்ட அணி வேலைப்பாடு சூட்டன் கோ கப்பற்புதைப்பில்கண்டுபிடிக்கப்பட்டது.

இக்கப்பற் புதையலில் தங்கத்தால் செய்யப்பட்ட 41 பொருள்கள் முழுமையாக கிடைத்தன. இவை பிரித்தானிய அருங் காட்சியகத்தில்(British Museum) காட்சிக்கு வைக்கப்பட்டுள்ளன. பைசாண்டியப பேர ரசர் முதலாம் அனசுடாசியசின் (Anastasius, கி.பி. 491 முதல் கி.பி. 518 வரை) முத்திரையிடப்பட்ட வெளளியாலான வட்டில் ஒன்றும் இககப்பற் புதைய லிலிருந்து கண்டு பிடிக்கப்பட்டது. இங்கிலாநதில கணடுபிடிக்கப்பட்ட பைசாண்டியப் பேரரசுக்காலப் பொருள இது ஒன்றே ஆகும். இவற்றுடன் வெள்ளி யால் செய்யப்பட்ட கிண்ணங்களும் கரணடிகளும்,



சூட்டன்கோ

கோப்பைகளும் கண்டுபிடிக்கப்பட்டன. இவற்றில் கிரேக்க எழுத்துகள காணப்படுகின்றன. ஆங்கிலோ சாக்சானிய அரசர்களின் வெளிநாட்டு வாணிகத் தொடர்பை இவை வெளிப்படுத்துவனவாக உள்ளன இப்புதையல் பற்றிய ஆய்வு நூலை உரூபர்ட்டு புருசு-மிட்போர்டு (Rupert Bruce-Mitford) என் பவர் 1975-இல் வெளியிட்டார். சு.இரா.

**சூடாமணி உள்ளமுடையான்**: காணக: உள்ளமுடையான்.

**சூடாமணி நிகண்டு** கி.பி. 16-ஆம் நூற்றாண டில் தோன்றியபோதிலும் ஏனைய நிகண்டுகளுக் கெல்லாம் தலைமணியாய் வைத்துத் தமிழுலகில் போற்றப்பெற்றது. முந்திய நிகணடுகளாகிய திவா கரம், பிங்கலம் என்பவற்றின பயிற்சி வரவரக் குறை யலாயிற்று நன்னூலிலே பவணந்தி முனிவர் பிங்கல நிகண்டிற்கு ஏற்றந்தந்து, ‘பிங்கலம் முதலா நல்லோ ருரிச்சொலின் நயந்தனர் கொளலே’ என்று சுட்டுவா ராயினர். இதற்குப் பின்னாளில் உரை கணட சங்கர நமச்சிவாயப் புலவர், ‘பிங்கலம், திவாகரம், சூடாமணி முதலிய நூலகளுள்’ என்று திவாகரத்தையும் சூடா மணியையும் உடன்வைத்துப் பேசுகிறார். ஆகவே இம்மூன்று நிகண்டுகளும் கல்வியாளர்களிடையே மிகுந்த செல்வாக்குப் பெற்றிருந்தன என்பது தெரிய வரும்.

இச் சூடாமணி நிகணடு முநதிய நிகண்டுகளி லிருந்து பாவகை மாற்றம் முதலியவற்றால் ஒரு புதிய திருப்புமுனையைக் கல்வியுலகிற்கு அறிமுகப்படுத்தி யது. நிகண்டு நூலகளில பெரும்பயன் விளைப்பது ஒரு சொல - பலபொருள் உரைக்கும் பகுதி. முநதை யோரும் சொற்களை ஒருவகை எதுகை முறையடை விற கொண்டு பொருள விளகக முறபட்டாலும் அது அத்தனை தெளிவாக இல்லை. சூடாமணியோ சொற் பொருள்களை நினைவில் எளிதாய்ப் பதிய வைத்துக் கொள்ளும் வகையில சொற்களை எதுகை முறையில அறிமுகப்படுத்திப் பொருள விளக்கம் தர முற்பட் டுள்ளது. எதுகை முறை பற்றி அமைந்த சூடாமணி கற்றுப் போற்றுவதற்கு எளிதாயிற்று.

சூடாமணி நிகண்டு வழக்கில் வந்த பின்னாத் தமிழ்ப் புலவர் இந்த நிகணடினையே விரும்பிக் கற்று வரலாயினர். அநநாளில் பள்ளிகளிலே மாணவா இந்நிகணடினை நன்கு கற்று மனப்பாடஞ் செய்து வருவாராயினர். இதனால், நிகண்டு கற்பது என்றாலே சூடாமணியைக் கறபது என்று நாட்டில் பெரு வழக்காயிறறு. ‘இயலிசை வல்லோர் கேட்ப’ இந்த நூல் பிறநதது என்பதனால் இயலிசைச சொற களை யெல்லாம் உள்ளடக்கியது இநநூல என்பது புலனாகும்.

இநநிகணடு திவாகரத்தைப் போலவே 12 தொகு திகள கொண்டதாகும்.

சூடாமணி நிகண்டிற்கு உரையுடன் யாழ்ப் பாணத்து நல்லூர் ஆறுமுக நாவலர் பதிப்பித்த பதிப்பே சிறந்ததாகும் தாண்டவராய முதலியார் புதுவை நயனப்ப முதலியார், சென்னகேசவலு நாயுடு, யாழ்ப்பாணத்து நல்லூர்ப் பொன்னம்பலம் பிள்ளை. சுன்னாகம் அ.குமாரசுவாமிப் பிளளை, தில்லை நடராச சுவாமி, அப்பாவு பிள்ளை, கணேச முதலியார் ஆகிய வேறுசிலரும் இநநிகணடினைப் பதிப்பித்துள்ளனர்.

சொற்பொருள விளக்கம் தெரியும் பொருட்டாக யாவரும் படித்து வருவது இந்நூலின் 11-ஆம் தொகுதி.இதனைத் தனிப்பட அச்சிட்டுப்பரப்பினாரும் உளர். இப்பதினோராம் நிகண்டிற்கு அமைந்த உரை களுள் புதுவை நயனப்ப முதலியாரின் உரைப்பதிப்பு

சிறப்பாகக் கூறத்தக்கது இதனைக் காலத்திற்கேற்ற வகையில் விரிவுபடுத்தி 583 பாடல்கள் கொண்ட தனி நூலாகக் களத்தூர் வேதகிரி முதலியார் ஆக்கி 'நிகண்டு' என்னும் பெயரிலே கி.பி.1843-இல் வெளி வரச் செய்தார். இதனை இவர் பெயரால் 'வேதகிரி யார் சூடாமணி' எனக் கற்றோர் குறிப்பாராயினர்.

சூடாமணிநிகண்டின் 11-ஆம் தொகுதியை மட்டும் 'ஒருசொற் பல்பொருள் விளக்கம்' என்னும் பெயருடை அகராதியாக அண்ணாசாமிப் பிள்ளை என்பார கி.பி.1850-இல் வெளியிட்டுள்ளார். மு.ச.

**சூடான்:** ஆப்பிரிக்காக் கண்டத்தில் வடகிழக் குப் பகுதியில் அமைந்துள்ள நாடு சூடான் (Sudan). ஆப்பிரிக்க நாடுகளுள் மிகப் பெரிய நாடு இது. பல தரப்பட்ட நிலப்பகுதிகளையும், வேறுபட்ட மக்களை யும் மாறுபட்ட தட்ப வெப்ப நிலைகளையும் உடை யது. இதன் வட பகுதியில் பாலைவனங்களும், மத்திய




சூடான் அமைவிடம்

பகுதியில் புற்கள் நிரம்பிய சமவெளிகளும் உள்ளன. தென்பகுதி சதுப்பு நிலங்களையும், அடர்ந்த காடு களையும் உடையது. தட்பவெப்ப நிலை கோடையில் 38°செ. குளிர் காலத்தில் வடபகுதியில் தென்பகுதி யைவிடக் குளிர் மிகுதியாக இருக்கும். நாட்டின் முழு நீளமும் தெற்கு வடக்காக நைல் நதி பாய்கின் றது. உலக நாடுகளிலேயே இதுதான் அடர்த்தி குறைவான மக்கள் தொகையை உடைய நாடு. இரண்டரை மிலியன் ச.கி.மீ. பரப்புள்ள நாட்டில் சுமார் 16 மிலியன் மக்களே வாழ்கின்றனர். நாட்டின் மக்கள் தொகையில் மூன்றில் இரண்டு பகுதியினர் அரபு மொழி பேசும் இசுலாமியர். இவர்கள் நாட் டின் வடபகுதியில் வாழ்கின்றனர். எஞ்சியுள்ள மூன் றில் ஒரு பங்கினர் ஆப்பிரிக்க நீக்கிரோக்கள். இவர் கள் நாட்டின் தென்பகுதியில் வாழ்கின்றனர். சூடான் நாட்டின் பெரும்பான்மையான மக்கள் நைல் நதி யின் ஓரத்திலோ, அதன் கிளை நதிகளின்ஓரங்களிலோ வாழ்கின்றனர். இவர்கள் நீர்ப்பாசனத்திற்கு நைல் நதியையும், ஏரிகளையும் குளங்களையுமே நம்பி இருக்கின்றனர். சூடான் நாட்டு மக்களின் முக்கிய தொழில் வேளாண்மை. பருத்தி, தானியங்கள், நெல், நிலக்கடலை, காப்பி போன்றவை பயிர் செய் யப்படுகின்றன. சதுப்பு நிலங்களிலும் காடுகளிலும் ஓரளவு உணவுப் பொருள்களும், பணப்பயிர்களும் பயிரிடப்படுகின்றன. காடுகளில் காண்டாமிருகம், யானை, சிங்கம், எருமை, ஒட்டகச் சிவிங்கி போன்ற விலங்குகள் காணப்படுகின்றன. கால்நடை வளர்ப்பும் இந்நாட்டு மக்களின் மற்றொரு முக்கிய தொழி லாகும்.



சூடான் பெண்கள்

சூடான் நாட்டின் வரலாறு மிகப் பழமையா னது. கி.பி. 6-ஆம் நூற்றாண்டில் இங்குச் சில கிறித்தவ அரசுகள் நிறுவப்பட்டன. கி.பி. 12 -ஆம் நூற்றாண்டிற்கும் 15-ஆம் நூற்றாண் டிற்கும் இடைப்பட்ட காலத்தில் இசுலாமிய அராபியர்கள் இந்நாட்டைக் கைப்பற்றினர். எகிப்து கி.பி. 1821-இல் சூடானைக் கைப்பற்றி யது. முகமது அகமது என்னும் இசுலாமியத் தலை வர் எகிப்தியர்களுக்கு எதிராக கி.பி. 1881-இல் கிளர்ச்சி செய்து சூடான் அரசைக் கைப்பற்றி ஆட்சி செய்தார். அவருக்குப்பின் வந்த காலிபா அப்துலலாகி என்பவர் கி.பி. 1898 வரை ஆண்டார். இங்கிலாந்தும் எகிப்தும் சேர்ந்து கி.பி. 1849-ஆம் ஆண்டு சூடானைக் கைப்பற்றிக் கூட்டாக ஆண்டு வந்தன. இரண்டாம் உலகப் போருக்குப் பினனர் சூடான் மக்களிடையே சுதந்திர தாகம் ஏற்பட்டு நாட்டு விடுதலைக்காகப் போராடினார். சூடான 1956-ஆம் ஆண்டு சுதந்திர நாடாக அறிவிக்கப் பட்டது. சூடான் ஒரு குடியரசாகும். இதன் தலை நகர் கார்ட்டூம் என்னும் நகர். இந்நாட்டின் ஆட்சி மொழி அரபு மொழியாகும். சுதந்திரத்திற்குப்

பினனர் பலமுறை இராணுவப் புரட்சி ஏற்பட்டு அரசு இராணுவத்தால் கைப்பற்றப்பட்டது. தெற்கில் உள்நாட்டுப் போர்களும் நடைபெற்று வந்தன. இதற்கெல்லாம் 1973-ஆம் ஆண்டு கொண்டுவரப் பட்ட புதிய அரசியலமைப்பு முற்றுப்புள்ளி வைத்து விட்டது.

சூடான் நாட்டின் முக்கிய ஏற்றுமதிப் பொருள்கள் பருத்தி, எண்ணெய் வித்துகள் மற்றும் கோநது போன்றவை. சீனா, சப்பான, மேற்குச் செருமனி, இத்தாலி போன்ற நாடுகளிலிருந்து வாகனஙகள், இயந்திரங்கள் போன்றவை இறக்குமதி செய்யப்படுகின்றன. சூடானின் மககளதொகையில் பாதிப் பேர் எழுதப் படிக்கத் தெரியாதவர். தலைநகரில ஒரு பல்கலைக்கழகம் உள்ளது. பெரும்பான்மையான மக்கள் இசுலாமியர். கிறித்துவர்களும் உளர். ஆ.செ.

**சூடிக் கொடுத்த நாச்சியார்**: காண்க: ஆண்டாள்.

**சூடேட்டி மலைகள்** போலந்து நாட்டுச் சைலீசியாவின் தென்பகுதியிலும், செக்கோசுலோவாக்கிய நாட்டுப் பொகிமியாவின் வட பகுதியிலும் அமைந்துள்ளன. இது ஒரு மலைத் தொடராகும். வடக்கிலிருந்து தென்கிழக்காக இதன் நீளம் 275 கி.மீ. அகலம் 30 முதல் 50 கி.மீ. பொகிமியாப் பகுதியில் உளள சூடேட்டி (Sudety) மலைகளும், அதன் மேற்கு எல்லையிலுள்ள இடமும் சூடேட்டனலாந்து எனச் சொல்லப்படுகின்றன. இப்பகுதியில் வாழ்ந்த மக்களுள பெரும்பான்மையினர் செருமானியர்.

**அமைப்பு**: வடக்குச் செக்கோசுலோவாக்கியாவில உள்ள இம்மலைத் தொடர் தென்கிழககில் எல்பு ஆறு (Elbe River) புகுந்து செல்லும் பகுதியிலிருந்து ஓடர் (Oder) ஆறு புகுந்து செல்லும் பகுதி வரை 275 கி.மீ. நீளம் உள்ளது. இது சூடேட்டன் மலைத் தொடரைக் கார்போதியன் (Carpathian) மலைத் தொடரிலிருந்து பிரிக்கிறது. இமமலைத்தொடர் நடுவில் உயர்ந்தும் இருபக்கங்களிலும் தாழந்தும் காணப்படுகிறது. இங்குள்ள இரீசன் (Riesen) மலைகள் இத்தொடரில உயரமானவை. இதனுடைய சராசரி உயரம் 1280 மீ.

**பயன்கள்**: இம்மலைகளின் சரிவுகளிலும் பள்ளத் தாக்குகளிலும் அடிவாரங்களிலும் நிலக்கரியும் இரும்புத்தாதும் கிடைக்கின்றன. போலந்துப் பகுதியில் வால்பிரசே (Walberzyeh) என்னுமிடத்திலும், 'செக்' பகுதியில் திரத்துநோவு (Trutnov) என்னுமிடத்திலும் நிலக்கரி வெட்டி எடுக்கப்படுகிறது. இப்பகுதியில் அடர்ந்த மரக்காடுகளும் கால்நடைகளுக்குத் தேவையான புல்வெளிகளும், வயல்களும் உளளன. ஆதலால், இங்கு மக்கள் நெருக்கம் மிகுதி. இங்குப்பாயும் ஆறுகளிலிருந்து நீர்மின்விசை உற்பத்தி செய்யப்படுவதால் உலோகங்கள், துணிவகைகள, கண்ணாடி, பீங்கான் ஆகியவற்றை உற்பத்தி செய்யும் தொழிற்சாலைகள் பல உள்ளன. சி.இரெ.

**சூத்திரம்** என்பது நூல் (இலக்கண) யாப்பிற குரிய செய்யுளின் பெயராகும. இது தமிழில் கருத்து நிலை என்னும் பொருளிலும், வட மொழியில் சொற்களைக் கொண்டு திரித்த நூல் என்னும் பொருளிலும் வழங்கப்படும இலக்கணக் குறியீட்டுச்சொல்.

பாட்டு, உரை, நூல், வாய்மொழி, பிசி, அங்கதம், முதுசொல் என்னும் செய்யுள வகை ஏழனுள நூல் (இலக்கண நூல) என்னும் செய்யுட்குரிய பாவகை இது எனத் தொல்காப்பியம் கூறுகின்றது.

முன்னைத் தமிழ் நூலோர் சூத்திர யாப்பிற்கு ஆசிரிய நடையினையும் வெண்பா நடையினையும மேற்கொண்டுள்ளனர். தொலகாப்பியம் ஆசிரிய நடையால் அமைந்துள்ளது. பழைய இசைத்தமிழ இலக்கணங்கள் வெண்பா நடையால் அமைந்திருந் தமையைச் சிலப்பதிகார உரையில் வரும் மேற்கோள் செய்யுட்களால் அறியலாம். இடைககாலத்தில நேமிநாதம் முதலியவை வெண்பா யாப்பில் அமைந்தவை. யாப்பருங்கலக் காரிகை, வீரசோழியம் முதலிய நூல்கள் வடமொழிக் காரிகை யாப்பினைத் தழுவியமைந்தவை காரிகை யாப்புத் தமிழில் கலிப்பா வகையுள் அடங்கும். பிற்காலத்தில் சுவாமிநாதம் முதலிய நூல்கள் விருத்தப்பாவில் செய்யப்பட்டுளளன.

இவ்வழக்காறுகளை நோக்குமிடத்து யாதானும் ஒரு பொருளைப் பற்றி இலக்கணம கூறும் நூல யாப்பினைச் சூத்திரம் என வழங்குதல் மரபெனறு தெரிகின்றது. இதனை ஆசிரியப்பா நடையில் மெய்கணட தேவர் இயற்றிய சிவஞான போதச் செய்யுளையும், விருத்தப்பா நடையில் அருணந்தி தேவர் இயற்றிய சிவஞான சித்தியார் செய்யுளையும் சூத்திரம் என்றே வழஙகுதலால் அறியலாகும். வடமொழியில் தெய்வப் புகழ்ச்சி, அறநெறி, வேள்விக் கரணம் முதலியவையும் சூத்திரம் என்னும் பெயரால் வழங்கப்படுகின்றன.

காலத்தால் முற்பட்ட தமிழிலக்கண நூலாகிய தொல்காப்பியம் நூற்செய்யுளைச் சூத்திரம் எனறே வழங்குகின்றது. ஓரிடத்தில் மட்டும் நூற்பா எனக் குறிககின்றது.

வடமொழியிற் சூத்திர யாப்பால் இயன்ற நூல்கள் பலவிருப்பினும் சூத்திர யாப்பிற்கு விரிவானதோர் இலக்கண விளக்கம் கூறப்படவில்லை. எவ்வளவு இயலுமோ அவ்வளவு சுருக்கமாகக் குறைந்த சொற்களைக் கொண்டு செறிவாகச் செய்யப்படுவது சூத்திரம் என அவர்கள் விளக்கந் தருவர்.

சூத்திரம் என்பது ஆடியின்கண் நிழல் போலத் தெளிவாகத் தோன்றி ஆய்ந்து தேறும் இடர்ப்பாடின்றி உணர்த்தக் கருதிய பொருள் மிகத் தெளிவாக விளங்க யாப்பினுள் அமையுமாறு செய்யப்படுவது. அது பாவண்ணத்தையும் சொற்சீரடிகளையும் உடையதாய் நடைபெறும் எனத் தமிழ் நூலார் இலக்கண வரையறை செய்துள்ளமையைத் தொல்காப்பியம், 'சூத்திரந்தானே; ஆடி நிழலின் அறியத் தோன்றி, நாடுதல் இன்றிப் பொருள்நனி விளங்க, யாப்பினுள் தோன்றயாத்தமைப் பதுவே' (செய்.162) 'பாஅ வண்ணம்,சொற்சீர்த் தாகி நூற்பாப் பயிலும்' (செய். 206) என்னும் சூத்திரங்களால் உணர்த்துகின்றது. மேலும் செந்தமிழியற்கை சிவணிய நிலத்து முந்து நூல் கண்ட சான்றோர் அதனைக் கையாளுமிடத்து அமைந்துள்ள வழக்கினை மரபியலுட் கூறுமிடத்தில், 'யாப்பமைதி பெற்ற சூத்திரம் சில்வகை எழுத்தான் அமைந்த சொற்களையுடைய செய்யுளையுடையதாகி, எடுத்து விளக்குங்கால் பரந்து விரியும் உரைவளம் செறிந்ததாகி, நோக்க நோக்க ஆழ்ந்து செல்லும் காட்சியுடையதாகி, மாறுபடுவோர் தொடுக்கும் வினாக்களான் அசையாத திணமையுடையதாகி, முடியாத பொருளுடையதாகிப் பல்லாற்றானும் சிறந்து பயனுடையதாக விளங்குதல் சூத்திரத்தின் இயல்பாகும்' என்கின்றது. நன்னூல் முதலிய பின்நூலகளும் இக்கருத்துகளையே சிறிது சுருக்கமாகக் கூறுகின்றன.

சூத்திரம் ஓரடி முதல் பல அடிகளையுடையனவாயும் இரணடே சீர்களை உடையனவாயும் வரும். முதலும் இறுதியும் கூறி இடை நிற்பனவற்றை உய்த்துணருமாறு சில சூத்திரங்கள் வரும். சில தொடைநயம் மலிந்து வரும். உவமத்தான் விளக்கிக் கூறும் சூத்திரங்களும் உண்டு. எழுவாய் உய்த்துணருமாறும் பயனிலையைக் கூட்டிக் கொள்ளுமாறும் சில வரும்.

நூலுக்காகா எனப்பட்ட பத்து வகைச் சிதைவுகளின்றிப் பத்து வகை அழகினையும் முப்பத்திரு வகை உத்தியினையும் கொணடு சூத்திரங்கள் வரும். சூத்திர யாப்பின் கோட்பாடுகள் யாவற்றிற்கும் எடுத்துக்காட்டாக அமைந்து விளங்கும் ஒரே இலக்கணம் தொல்காப்பியமாகும். ச.பா.

**சூதசங்கிதை** என்கிற சிவபுராணம், பதினெண் புராணங்களுள் ஒன்றாகிய காந்தமகா புராணத்தில் அடங்கிய ஐந்து சங்கிதைகளில் ஒன்றாகத் திகழ்வதாகும். ஆதிசங்கரர் தாம் பிரம்ம சூத்திர பாடியம் எழுதப் புகுமுன் இந்நூலைப் பதினெட்டு முறை ஓதினார் என்றும் வரலாறுண்டு. அதனால் இப்புராணத்தின் பெருமை நன்கு விளங்குகின்றது. இவ்வடமொழிநூல் சிவமகாத்மிய காண்டம், ஞான யோக காண்டம், முத்தி காண்டம், யக்ஞ வைபவ காண்டம் என்னும் நான்கு பிரிவுகளை உடையது. நான்காம் பிரிவு பூருவப் பகுதி, உபரிப் பகுதி என இரு வகைப்படும். உபரிப் பகுதி,பிரமகீதை சூதகீதை என இரு பிரிவுகளாக உள்ளது.

இந்நூலின் மொழிபெயர்ப்பாகத் தமிழில் காணப்படுகின்ற நூல்கள் நான்கு உரைநடை நூல் ஒன்று. அவை:1) சிவஞான முனிவரால் எடுத்துக்காட்டப் பெற்ற சூதசங்கிதை. 2) வல்லூர் தேவராச பிள்ளையால இயற்றப்பெற்ற சூதசங்கிதை. 3) திருவிடைமருதூர் பிச்சுசாத்திரியால் இயற்றப்பெற்ற இரு நூல்கள். 4) தத்துவராயர் இயற்றிய நூல். 5) அரியநாயகிபுரம் அனந்தகிருட்டிண சாத்திரியார் எழுதிய சூதசங்கிதை. இது உரைநடை நூலாகும்.

சிவஞான மாபாடியத்தில் எடுத்துக்காட்ட பெற்ற செய்யுளையுடைய சூதசங்கிதை இன்னும் நமக்குக் கிடைக்கவில்லை.

வல்லூர் தேவராச பிள்ளை என்பவரால் இயற்றப்பெற்ற சூதசங்கிதை நான்கு காண்டங்களையும் 109 அத்தியாயங்களையும் கொண்டு 3003 பாடல்களில் அமைந்துள்ளது. மகாவித்துவான் மீனாட்சி சுந்தரம் பிள்ளை இந்நூலை இயற்றித் தம் மாணாக்கர் வல்லூர் தேவராச பிள்ளை பெயரால். வெளியிட்டார் என்று தமிழ்த் தாத்தா உ.வே. சுவாமிநாத ஐயர் எழுதியுள்ளார்.

இந்நூலின் பல அத்தியாயங்கள் உபநிடதங்களுக்கு வியாக்கியானங்களாக அமைந்திருக்கின்றன. இதன்கண், சிதம்பரத்தின் மகிமை பெரிதும் பேசப்படுகிறது. மற்றும் காளத்தி, விருத்தாசலம், வெண்காடு, ஆனைக்கா, திருக்கோடிக்கா, இடை மருது, கும்பகோணம், ஆரூர், வேதாரணியம், மதுரை, கோகர்ணம் ஆகிய திருவூர்களும் பேசப்படுகின்றன.

வடநூலின் பகுதிகளான முத்திக் காண்டத்தையும் சூத சங்கிதையையும் திருவிடைமருதூர் பிச்சு

சாத்திரி தமிழில் செய்யுள் வடிவில் மொழிபெயர்த்துள்ளார். முத்தி காண்டம் ஒன்பது அத்தியாயங்களும் முந்நூற்று எழுபது பாடல்களும் கொண்டது. சூதகீதை எட்டு அத்தியாயங்களும் 484 பாடல்களும் கொண்டது. பிரமகீதை என்ற பகுதியைத் தத்துவராயர் என்பார் 'சொரூபானந்தசித்தி' என்ற பெயரில் 347 செய்யுள்களில் மொழிபெயர்த்தார். சூதசங்கிதை நூல் முழுமையையும் அரியநாயகிபுரம் அனந்த கிருட்டிண சாத்திரி உரைநடையில் மொழிபெயர்த்து வெளியிட்டுள்ளார். சு.சு.

**சூதமுனிவர்** பிரமனை வழிபடும் வேள்வியில் சுத்யதினத்தில் திருமாலின் அவதாரமாகத் தோன்றியவர். புராணங்களைக் கூறுவதற்கென்றே பிறந்தவராதலால் 'சூத பௌராணிகர்' எனப் பெயர் பெற்றார். வியாசர் இவருடைய நினைவாற்றல், புலமை ஆகியவற்றைக் கண்டு முனிவர்களுக்குப் புராணங்களைப் புகட்டும் பொருட்டு நியமித்தார் (கூர்மபுராணம் 1. 3-6). அதற்கிணங்கி நைமிசக் காட்டில் வேள்விகளிடையே முனிவர்களுக்குப் புராணங்களை எடுத்தியம்பினார். முன்னர், வியாச முனிவரிடம் புராணங்களைப் பயிலும்பொழுது, இவர் உரோமங்கள் மகிழ்ச்சியால் கூர்த்தெழுந்தன. ஆகவே 'உரோம அர்சணர்' என்றும் பெயர் பெற்றார். பல சாத்திரங்களையும், புராணங்களையும் அறிந்தவராதலால் 'மகாபுத்தி' என்றும் இவரைக் குறித்தனர். முனி சத்தமர், பிரம்மசுதன் என்றும் இவரைக் குறிப்பதுண்டு. இவர்தம் வழித்தோன்றல்களும் சூதர்கள் எனப்பட்டனர். அக்கினிபுராணம் இவருடைய சிறப்புகளைக் குறிப்பிடும்பொழுது-எல்லா வேதசாத்திரங்களையும் உணர்ந்தவர்; முக்காலமுமறிந்தவர்; புட்கர வேள்வியில் சுத்ய தினத்தன்று தோன்றி, புண்ணிய தீர்த்தங்களைச் சேவிக்கும் நோக்குடன் நைமிசக் காட்டிற்கு வந்தார் எனக் கூறப்படுகிறது (அக்னி.1-ஆம் அத்.).

ஒரு சமயம் கௌரவர்களுக்கும் பாண்டவர்களுக்கும் போர் மூள்வதை விரும்பாத பலராமர் தீர்த்த யாத்திரையாகக் கிளம்பி, பல திருத்தலங்களைச் சேவித்து நைமிசாரணியம் வந்து சேர்ந்தார். அப்பொழுது முனிவர்களனைவரும் அவரை வரவேற்றனர், ஆனால் சூதர் என்னும் உரோம அர்சணர் அவரை முறைப்படி வரவேற்கவில்லை. அதனால் சினங்கொண்ட பலராமர் அவரைத் தாக்கினார். அது பாவச் செயலென்றுகூறி அப்பாவத்தைப் போக்க உரோம அர்சணரின மகன் உக்கிரசிரசுக்கு ஆதரவளிக்கவும், பல திருத்தலங்களைச் சேவிக்கவும் பலராமருக்கு முனிவர்கள் பரிந்துரைத்ததாகவும் பாகவதம் கூறுகிறது (பாக.1.1.5-9) எஸ்.சீ.

**சூதர்**: மன்னருக்கு உடனிருந்து உதவுபவர் சூதர் என்று பொதுவாகக் கூறப்படுவர், அவர்கள் தஙகள மன்னரின் அரச குல மரபினை நன்குணர்ந்தவர்கள். மேலுமவர்கள் தம் மன்னருக்குத் தேரோட்டல் முதலிய செயல்களைச் செய்வதோடு, அவவபபோது அரசர்க்கு வேண்டிய அறிவுரைகளைக் கூறுபவர்களாகவும் இருந்துள்ளனர். இராமாயணத்தில் தசரதனுக்குத் தேரோட்டியாகவும், அமைச்சராகவும் செயற்பட்டு விளஙகிய சுமந்திரன், சூதர் என்பாருக்குச் சிறந்த எடுத்துக்காட்டாவார். சூதர்கள் புராண அறிவு மிக்கவராக விளங்கினர். இவர்கள் வேள்விகள், விழாக்கள் போன்று மக்கள் மிககுக் கூடும் இடங்களில் அவர்களுக்கு இதிகாச புராணங்களைப் பாடி விளக்கிக் கூறுவர். இவர்கள் அரசவையிலிருந்தும் இவற்றை எடுத்துரைப்பர்.

**சூதர்[2]** அரசர்கள் விடியலில துயில் நீங்கி எழும்போதும், இரவு உறங்கச் செல்லுமபோதும் அவர்தம் புகழ்பரவிப் பாடும் மரபுண்டு. துயில் நீங்கி எழும்பொழுது அவ்விடத்தில் நின்று புகழ் பாடுவோர் சூதர் எனப்படுவார். இவ்வாறு துயிலும் அரசரைத் துயிலுணர்த்திப் பாடுவது பழந்தமிழ் மரபாகும். இதனைத் தொல்காப்பியம், 'தாவில் நல்லிசை கருதிய கிடந்தோர்க்குச் சூதர் ஏத்திய துயிலெடை நிலையும்' (தொல். பொருள். 88) என்று குறிப்பிடுகிறது.

அரசர் புகழை ஏத்திப் பாடுவோரைச் சூதர் மாகதர், வேதாளிகர் என்று மூவகைப்படுத்தித் தமிழ் இலக்கியங்கள் கூறுகின்றன. அவர்களுள் சூதர் அரசர் முன் நின்று ஏத்தவும், மாகதர் மன்னர்முன் இருந்தேத்தவும், வேதாளிகர் ஆடிப்பாடி ஏத்தவும் செய்வர். இவர்களுக்கெல்லாம் தனித்தனியே குடியிருப்புகள் இருந்தமையினைச் சிலப்பதிகாரம் குறிப்பிடுகிறது (சிலப். 5:48).

**சூதர்[3]** இவர் வியாசரின் மாணாக்கருள் ஒருவர்; தந்தை உரோம கருடணர். இவர் ஒருகால் புராணம் படித்துக்கொண்டிருந்தபோது அங்குப் பலராமர் வரக்கண்டும் இறுமாப்பால் இகழ்ந்து எழாதிருந்தாரென்றும், அதனால் அவரால் உயிரிழந்து, ஏனைய இருடிகளின் வேண்டுகோளால் மீண்டும் உயிர்பெற்றார் என்றும் கூறப்படுகிறது. இவர் திரையாரணி முதலிய அறுவரிடம் ஆறு சங்கிதைகளையும், சுகமுனிவரிடம் நான்கு மூல சங்கிதைகளையும் கற்றார். முனிவர் பலருக்குப் புராணம் போதித்த இவர்தம் ஆசிரமத்தில், பாண்டவர்கள் சிறிது காலம் இருநதுள்ளனர்.

**சூதர்**[4] பிரமன் யாகஞ் செய்தபோது அந்த யாக கும்பத்திலிருந்து பிறந்தவர்; பின்னா பிரமன்பால் புராணம் கேட்டவர். அ மா.ப.

**சூதாட்டம்:** இது தீங்கு விளைவிக்கக்கூடிய ஒரு எளிய பொழுது போக்காகும். இது நல்லூழினை (Luck) அடிப்படையாகக் கொண்டு வரலாற்றின் தொடக்க காலத்திலிருந்து விளையாடப்பட்டு வருகிறது. இது தனிமனிதனை மட்டுமன்றிச் சமூகத்தைச் சீரழிப்பதற்கும் முக்கிய காரணியாக அமைகிறது.

மனிதன் சுருக்கமான வழிகளிலேயே பணம் ஈட்ட விரும்புகிறான். எனவே, பணியில் இருப்பவனும் அல்லது பணியில் இருக்கும் போது மிகுதியான பணம் ஈட்டுவதற்கு விரும்புபவனும் சூதாட்டத்தையே (Gambling) எளிய வழிமுறையாகத் தேர்ந்தெடுக்கிறான். சூதாட்டத்தை நல்லூழின் அறிகுறியாக நினைக்கிறான். பொதுவாக, வேலைசெய்ய விருப்பம் இல்லாதவர்களும் நல்லூழை நம்பி வாழ்பவர்களும் பகல் கனவு காண்பவர்களும் எளியவழியில் பணம் பெறுவதற்குச் சூதாட்டத்தையே தேர்ந்தெடுக்கின்றனர்.

சமூகக் கட்டுமானம், அமைப்பு ஆகியவற்றின விளைவினாலேயே பெருமளவு சூதாட்டம் நிலவுவதாக அறிஞர்கள கணடுள்ளனர். முதலாளித்துவ நாடுகளில் பிற வழிகள தவிர்த்துச் சூதாட்டமே பணம் ஈட்டுவதற்கான முக்கிய வழியாகக் கருதப்படுகிறது. பொதுவாக இது போன்ற நாடுகளில் சுரண்டலின மூலம் சூதாட்டம் தூண்டப்படுகிறது. இது தவிர்த்து, அனைத்து நம்பிக்கைகளையும் இழந்து, ஒரு சோர்வு மனப்பான்மையினைக் கொண்ட மனிதன் சூதாட்டத்தில் தலையிடலாம். அவன் தான் இழந்த பணத்தை இதன்மூலம் அடைய நினைக்கிறான்.

சூதாட்டச் சமூகப் பகுப்பாய்வு பொருளாதாரக் கண்ணோட்டத்திலேயே உள்ளது. ஏனெனில, மிகுந்த ஆவலினாலேயே மக்கள் பணம் பெறுவதற்காகச் சமுதாயத்தில் தவறான பல வழிகளைப் பின்பற்றுகின்றனர். உளவியல் கண்ணோட்டத்தில நோககினால் வேலையில்லாத மனிதன், தன்னுடைய நேரத்தைப் போக்குவதற்காகச் சூதாடுகிறான். இதற்கு நண்பர்களின் பழக்கமும் அவர்களுடைய தாக்கமும் காரணமாக அமையலாம்.

**வகைகள்:** உண்மையில் வாழ்க்கையே ஒரு சூதாட்டமாகும். முக்கியமாக, முதலாளித்துவ நாடுகளில் இப்போட்டி விளையாட்டு சாதாரண பணியாகவே அமைந்துள்ளது. இச் சூதாட்டம் சீட்டாட்டம் (Playing Cards), குதிரைப் பந்தயஙகள் (Races), பரிசுச்சீட்டு முறை (Lottery System) புதிர் காணல் (Puzzle Solving) பங்கு வணிகச் சந்தை (Stock Market) முதலிய பல வகைகளில் நிகழ்ந்து வருகிறது.

**சூதாட்டமும் ஒழுங்குக்குலைவும்:** சூதாட்டம் மனிதனுடைய ஒழுக்கச் சீர்குலைவுடன் நெருங்கிய தொடர்பு கொண்டுள்ளது. பொதுவாகச் சூதாடுவதைத் தன் வழக்கமாகவும் வாழ்கைத் தொழிலாகவும் கொண்டவன் தன்னுடைய குடும்பத்தினருக்கும் சமூகத்திற்கும் ஆற்றவேண்டிய பணிகளை மறககிறான். அவர்களுடைய அடிப்படைத் தேவைகளை நிறைவேற்றுவதற்கும் நினைக்கமாட்டான். சில நேரங்களில் பணத்திற்காகத் திருடுதல், கொள்ளையடித்தல், கொலை செய்தல் போன்றவற்றையும் செய்வான்.

பொய் பேசுதல் என்பது அவனுடைய வாழ்க்கையில் ஒரு சாதாரண நிகழ்ச்சியாகிவிடும். சமூகத்தில எவ்வளவோ நல்ல, செழுமையான குடும்பங்கள் பல முற்றிலும் அழிந்துபோவதற்குச் சூதாட்டம் காரணமாக அமைந்துளளது. சூதாட்டத்தில் பணத்தையோ பொருளையோ இழந்தவன் தனனுடைய வருத்தங்களை மறப்பதற்குக் குடி, பரத்தமை போன்ற தீய பழக்கங்களில் ஈடுபடுவான். சில நேரங்களில் அவன் தற்கொலை செய்துகொள்வதற்கும் வாய்ப்புள்ளது.

**சமூகக் காரணங்கள்:** சமூக வழக்கங்கள் (Social Customs), சமூக விழுமியங்கள் (Social Values), பொருளாதாரம், அரசியல் ஒழுங்கு, புதுவகைப்பொழுதுபோக்காகிய சமூகக் காரணங்களுக்காகச் சூதாட்டம சமூகத்தில் ஒப்புதல் பெற்றிருக்கலாம். பல சமூகங்கள சூதாட்டத்திற்குச் சமயத் தூய்மையை அளிக்கின்றன. சூதாட்டத்திற்கு அப் புனிதத்தன்மை பரம்பரையின்மூலம் வரலாம். எடுத்துக்காட்டாக, மகாபாரதப்போருக்கு மூலகாரணமே சூதாட்டந்தான். அக்காலத்தில் சூதாட்டத்திற்குச் சமூக ஒப்புதல் அளிக்கப்பட்டிருந்ததால் அப்பழக்கம் தீயதாகக் கருதப்படவில்லை. தர்பிபோட்டி (Durby Race) என்பது இங்கிலாந்தில் இக்காலத்திலுள்ள சூதாட்டமாகும். இதன் மூலம் பெறுகின்ற பணம் ஒரு நிறுவனத்தைச் சார்ந்துள்ளது. இந்தியா மற்றும் முதலாளித்துவ நாடுகளில் குதிரைப் பந்தயம் ஒரு வழக்கமாக உள்ளது. மேலும பரிசுச்சீட்டு (Lottery) முறை அரசாங்கத்தினாலேயே அறிமுகப்படுத்தப்பட்டு நல்ல விற்பனையாகி வருகிறது.

**சூதாட்டமும் அரசியல் ஒழுங்கும்:** முதலாளித் துவம், மையக் குவிமுக ஆட்சி (Bureaucracy) ஆகிய வற்றின் அடிப்படையில் அரசியல் ஒழுங்கு அமைந் திருக்கின்ற நாடுகளில் சூதாட்டம் செயல் தூண்டுத லாக விளங்குகிறது. ஆனால், சமத்துவ அமைப்பு நாடுகளில் இது பெருங்குற்றமாகக் கருதப்படுகிறது. எடுத்துக்காட்டாக, உருசியா, சீனா போன்ற நாடு களில் இது தீய செயலாகக் கருதப்படுகிறது.

**சூதாட்டமும் நவீன பொழுதுபோக்கும்:** சூதாட் டம் நவீன காலங்களிலுள்ள பொழுதுபோக்கு மையங் களில் ஏதேனுமொரு வடிவில் இருக்கும். பல பொழுது போக்கு மன்றங்களில் (Clubs) சீட்டாட்டம், சது ரங்கப் போட்டி (Chess) போன்றவைகளும், பல பந்தயத் திடல்களில் குதிரைப்பந்தயம், மாட்டு வண்டிப் பந்தயம் போன்றவைகளும், இதழ்களில் குறுக்கெழுத்துப்போட்டி, புதிர்ப் போட்டி எனப் பல வகைப் போட்டிகளும் நடைபெறுகின்றன.

இச்சமூகக் காரணிகள் தவிர்த்துக் குடும்பச் சூழ் நிலை, தீய நண்பர்களின் பழக்கம், சுற்றத்தாரின தாக்கம், சில வேளைகளில் திரைப்படங்களின தாக கம் போன்றவைகளும் சூதாட்டத்திற்குக் காரணி களாக அமைகின்றன.

**தனிப்பட்ட காரணங்கள்:** மனிதனுடைய நல்லூ ழுக்கான முயற்சி, நம்பிக்கையின்மை, வெகுமதிகளை எதிர்பார்த்தல் ஆகியவை சூதாட்டத்திறகு முக்கிய தனிப்பட்ட காரணிகளாக அமைகின்றன.

நல்லூழ் என்பதை மக்கள சமூகத்திற்குக் கிடைத்த ஒரு வெகுமதியாக நினைக்கின்றனர். சமூ கத்தில் பெரும்பாலான மனிதர்கள் பணத்தை எளிய வழியில் அடையக் கடினமான உழைப்பை விட்டுவிட்டு அவர்களுடைய நல்லூழையே நம்பியுள்ளனர்.

ஒருவன் தன் வணிகம் அல்லது தொழில் அல்லது பிற வழிகளில் பணததை இழக்க நேரிட்டால, அவன சூதாட்டத்தையே மேற்கொள்கிறான். பணத்தை எளியமுறையில் ஈட்டுவதறகு இதுவே சிறந்த வழி என எண்ணுகிறான்.

பல போட்டிகளில் வெகுமதிகள் வழங்கப்படுவ தாக அறிவிக்கப்படுகின்றன. எனவே, இப்போட்டி களை மனிதன் ஒரு பொழுது போககாவும, பணம் பெறுவதற்கான எளிய வழியாகவும் நினைக்கிறான். சீட்டு விளையாடுவதன் மூலம் வெற்றிபெற்றுப் பணத்தை அடைய விரும்புகிறான். ஏனெனில், இன்றைய சமூகத்தில் சூதாட்டம் பணம் ஈட்டுவதற்கு ஒரு திட்ட அளவையாக உள்ளது. மேலும், ஒருமனித னுக்கு அவன் வைத்துள்ள பணம் அல்லது உடைமை களைப் பொறுத்தே மதிப்பும் மரியாதையும் ஏறபடு கின்றன. பூ.த.

**சூபி தத்துவம்:** சூபி என்ற சொல முகம் மதிய மறைஞானிகளைக் குறிக்கும். அவாகள அல்லாவோடு இணைவதற்குத் துறவு மனத்துடன் துறவிகளின் செயல்களைச செய்து வந்தனர். மேலும் கம்பளியிழையினால் செயத ஆடைகளை அவர்கள தரித்துவந்தனர். பிறகாலத்தில சூபி என்ற பெயா இறைவனோடு இணைய விருமபும் எலலா முகம்மதி யர்களையும் குறிப்பதாயிறறு. துறவியர்களல்லாதவர் களையும் இப்பெயர் குறிபபதாயிற்று. சூபிதத்துவம் பலவித தூணடுதல்களால் வளர்சசியடைநதது. முத லாவதாக முகம்மதின கோட்பாடுகளில் மறைமெய சார்ந்த கருத்துகள் அமைந்திருந்தன. இரணடாவதாக அவருடைய கருத்துகள பணடைய கிறிததவ நெறிக் கருத்துகளுடனும் புத்தமதக் கருத்துகளுடனும் தொடர்புகொண்டிருந்தன. மேலும், முகம்மது இறந்த பிறகு அரேபிய நாட்டிலுள்ள சமுதாயப் புரட்சிக கருத்துகள் வெளி உலகத் துன்பங்களிலிருந்து விடு தலையளிக்கத் துணையாக இருந்தன மேலும் சூபி தத்துவ கருத்துகள ஓர் அமைதியான எழுசசியைப் புற உலகின் ஆடம்பர வாழ்கையில் ஈடுபட்டிருந்த மக்களுக்கு எதிராகத் தோற்றுவித்தது. சூபி தததுவம் சிறந்த பல கொள்கைகளையுடையதாகத் திகழந் தது. அக்கொளகைகளாவன: முழுமையான கடவுள் முழுமையான அழகுடையவர். முழுமுதற் கடவுள வெளி உலகினைத் தோறறுவிக்கிறார். வெளி உல கில மறைந்து காணப்படும் முழுமுதற கடவுளுடன தொடர்பு கொள்வதற்கு அமைதியான குணங்களான வறுமை, தவம், பொறுமை, மன உறுதி, ஒழுக்கம் முதலியவைகள தேவை. மேலும் உள்ளத்தில அமைதி, தனிமை, உலகப் பொருளகளில் நாட்டமிலலாதிருத தல், தன்னையே ஆராய்ந்துகொளளும் தன்மை ஆகி யவை இன்றியமையாதன. கடவுளைப் பற்றி எப் பொழுதுமே நினைத்துக்கொண்டவருககு நம்பிக்கை, பயத்தோடு கூடிய அச்சம் (Awe) விருப்பம் முதலி யவைகள் தேவைப்படுகின்றன. 'அல்லா இங்கே இருக் கிறார்' என்ற சொற்களை மனம் ஒரு நிலைப்படுவதற் காக அடிக்கடி உச்சரித்துக்கொண்டேயிருக்கவேண்டும். ஒருவர், மேற் கூறியவற்றைக் கடைப்பிடித்தால், மறைமெய் சார்ந்த பாதையில் முன்னேறி, அவர் மனம் ஒரு நிலைப்படுவதுமல்லாமல், ஒரேபொருள் எங்கும் நிறைந்திருக்கும் தனமையை உணருவதோடு திடீரெனறு ஞானஒளியும் பெறுவர். இறைவனோடு ஐக்கியமாகிற உணர்வும் ஏற்படும்.

சூபிதத்துவம் ஏற்படுவதற்கு முன்பே துறவு பற்றிய கருததுகள் தோன்றின. பிறகு துறவு பற்றிய கருத்துகளை உலகே கடவுள் என்ற கருத்துடன் இணைத்து, மறைமெய் சார்ந்த கருத்துடன் தியானம் செய்தல நடைபெற்றது. உலகே கடவுள் என்பதன் கருத்து 'எங்கே திரும்பினாலும் அல்லாவின முகந்தான தெரியும்' என்பதாகும். குரானில் இவ்வாறு சொலலப்பட்டுள்ளது.

சூபிதத்துவத்தின் தொடக்ககாலத்தில் இரணடு சூபித்துறவிகளை இறைவனோடு தாம் ஒன்றியவர்கள் எனறு கூறியதறகாகத் தூக்கிலிட்டுக் கொன்றார்கள். முதலாம் உயிர்த்தியாகி அபுயாசிடு (Abu Yazid) எனபவர் 'இறைவன் மிகப் பெரியவர்' என்று கூறினார். அவர் 'பானா' (Fana) என்றகொளகையை அறிமுகப்படுத்தினார். நிருவாணம் என்ற கொள்கையிலிருந்து அககொள்கை எடுக்கப்பட்டது. தனி ஒருவரின உணர்வு இறைவனோடு ஒன்றுசேருவது என்பது அகொள்கையின் பொருளாகும். சூபி தத்துவத்தில் இது மிகவும் சிறப்பு வாய்நத தன்மையாகும். இரணடாம் உயிர்த் தியாகி (Al. Hussaign Ibn. Mansur Al-Hallag), அல், உசேன், இப்ன, மன்சூர் அல், கலாகு(கி.பி.854-922)என்பவர். அவர் பாக்தாத்தின் துறவி எனப்பட்டார. அவர் 'நான் தான் உண்மை' (I am Truth)எனறு கூறினார்.

சூபி கன்னியாமடங்கள் தோற்றுவிக்கப்பட்டன. புதிய சீடர்களும் அனுபவம் வாய்த்த பக்தர்களும் சேர்நது, எளிய வாழ்க்கையைக் கடைப்பிடித்தனர். அவர்கள் மறைமெய் சார்ந்த, சமய, தத்துவ இலக்கியங்களைப் படித்தனர்; மறைமெய் சார்ந்த சடங்குகளைச் செய்தனர். துறவியாகத்தான் இருக்கவேண்டுமென்பது தேவையிலலை. அதனால சில உறுப்பினர்கள் குடும்பத்துடன் வெளியே வாழ்ந்து வந்தனர். ஆயினும் இநத மடத்திற்கு ஒழுஙகாக வருவார்கள்.

ஆபு அமீது அல் கசாலி (Abu Hamid Al-Ghazali, கி.பி.1058-1111) என்பவர் மறைப்பொருளை முகம்மதிய பாரம்பரியத்துடன் சேர்த்தார். அதன காரணமாக உலகே கடவுள என்ற கொள்கை பெரிதும் வற்புறுத்தப்படவில்லை. அவா இசுலாமை ஒரு சிறநத மறைமெய்சார்ந்த சமயமாக மாற்றிவிட்டார். அவர் ஒவ்வொருவரும் இறைவனை அடைய முயற்சிசெய்ய வேண்டும் என்றும், இறைவனின் பெருந்தன்மையையும் அழகினையும் பற்றிச் சிந்திககவேண்டும் என்றும், சூபி என்றால் இறைவனிடம் எப்பொழுதும் அமர்ந்திருத்தல் என்றும், மனிதர்களுடன் அமைதியாக நடந்து கொள்ளவேண்டுமென்றும் கூறினார்.

இடைக்காலத்தில் சிறப்பு வாய்ந்தவர்கள் பாரிடு அட்டின் அட்டர் (Farid Ad-Din Attar), இபின் -அல்-அராபி (Ibn Al-Arabi), சலால் அட் டின் ரூமி (Jalal AdDin Rumi) ஆகியோராவார். இபின் அல் அராபி என்பவர் இசுபெயின் நாட்டில் பிறந்தார்; தெமாசுகசு(Demascus) என்னும் இடத்தில் தஙகியிருநதார. மெக்கான் (Meccan), வெளிப்படுத்தல் என்ற சூபிக் கொள்கைகளையுடைய நூலை எழுதியிருக்கிறார். ரூமி மாசுநாவி (Rumi's Masnawi) எழுதிய பாரசீக மொழியிலுள்ள மறைமெய் சார்ந்த கதைகள ஆழ்ந்த சிந்தனைகளையும், வணக்க வழிபாடுகளையும், உலகே கடவுள் என்ற கொள்கையினையும், மறு பிறப்பினையும் வலியுறுத்தின. ரூமி (Rumi) பக்திமிக்க ஆடல்களைத் தொடங்கி வைத்தார். அவைகள் சுழன்று கொண்டிருககும் முகம்மதிய துறவிகளுக்கு ஒப்பாகும். இத்தகைய சுழற்சிகள் ஒரு மனிதனின் ஆனமாவையும் கடவுளையும், மெய்மறந்து இரண்டும் ஒன்றுசேரும் தன்மையையும் குறிக்கும்.

இடைக்காலத்தில் ஏறக்குறைய நூறு சூபிகள இருந்தாரகள். அவர்களைப் பின்பற்றியவர்கள் பலர் இருந்தனர். இக்காலத்தில் கவிஞர்கள் பலர் இருக்கிறார்கள். பெர்சியாவில் வாழ்ந்த மௌலானா நூர் அட்டின் சாமி (Maulana Nur Ad Din Jami, கி.பி. 1414-1492)என்பவர் சிறந்த கவிஞர். அவர் ஆன்மாவின் தோற்ற நிலையும் உலகின் மயக்க நிலையும் மாறினால் இறைவனோடு ஒனறுபட்டு விடலாம் எனறார்.

இந்தியாவில் கபீர் (Kabır,கி.பி.1435-1518) காசியில் வாழ்ந்த நெசவுத் தொழிலாளி. அவர் வைணவம் சூபிதத்துவம், ஆரியம் முதலிய எல்லாக்கொளகைகளையும் ஒன்று சேர்த்தார். அவருடையபாடல்களில் இராமன், அல்லா, விட்டுணு எல்லோரையும் குறிப்பிடுகிறார், அவர் ஆன்மாவின் தனித்தனமையை வலியுறுத்துகிறார். அனபினால் இறைவனோடு சேர்ந்து விடுவதைக் குறிப்பிடுகிறார், சூபிதத்துவத்தில் தாயத்து(Charms) மந்திரத்தாலகட்டுப்படுத்தல் முதலியவை கையாளப்பட்டன.

முகம்மது அமின் அல்குர்டி அல்சாபி அல நாக்சா பந்தி(Muhammad Amın Al-Kurdı Al-Shafci Al Nagsha bandı) என்பவர் 1914-ஆம் ஆண்டு அராபியமொழியில் மறைமெய் சார்ந்த சில கட்டளைகளையும் அல்லாவுடன இணையும் வழிகளையும் கூறினார். அவை உட்கார்ந்திரு, கண்களை மூடிக கொள்; பணிவாக இரு; நீ இறந்து விட்டதாக நினைத்துக்கொள், அழுகின்றவர்கள் எல்லோரும் தனியாக உன்னை விட்டுச் சென்றுவிட்டார்கள் என்று

நினைத்துக்கொள்; ஐம்புலன்களை எல்லாம் ஒருநிலைப படுத்து; எல்லா உணர்வுகளையும் அகற்றிவிடு; கடவுளிடம் உன்எண்ணத்தைச் செலுத்து என்பனவாகும்.

முகம்மது இக்பால் என்பவர் (Sir Muhammad Iqbal) பஞ்சாபில் பிறந்த முகம்மதியர்; கேம்பிரிட்சுப் பல்கலைக் கழகத்தில் தத்துவம் படித்தவர். அவர் பாகிசுத்தானிலுள்ள அரசினர் கல்லூரியில தத்துவம் பயிற்றுவித்தார். அவர் நான்கு நிலைகளைக் கூறினர். அவை கண்ணுக்குக்காணாத பொருளில் நம்பிக்கையும் அதைத்தேடிக் கொண்டிருத்தலும் தன் உளளே புகுந்து அந்தப் பொருளைப் பற்றித் தெரிந்துகொள்ளுதலும் கடைசியாக அதனை உணர்தலுமாம். ஒரே கடவுட் கொள்கையுடையவராதலால் காணாத பொருளுடன ஒன்று படுவதை அவர் ஒத்துக்கொளளவில்லை. இனையத் கான் (Inayat kan, கி.பி. 188-19226) என்பவர் பரோடாவிலிருந்து இலண்டனுக்குச் சென்று சூபி தத்துவத்தைக் கூறினார். வாழ்க்கையிலுள்ள ஆனமிகத்தையும் அழகினையும் எடுத்துக் கூறினார். அவர் 'கடவுளே நான் ஏன்பிறந்தேன் உன்னைக்கண்டுபிடிக்காவிடில' என்று கூறுவர்.

சூபி தத்துவம் முதலில் முலலாக்களின் பயத்தால் இரகசியமாக இயங்கி வந்தது. இமாம் கசாலி (கி.பி.1058-1111) அதை வெளிப் படையாக ஆதரித்தார். அவர் சூபி உபதேசங்களைச் சிறந்த முறையில எழுதினார். சீவன் முழு முதலின் அம்சமென்றும், முழு முதலில் இணைவதே குறிக்கோள் என்றும சூபி தத்துவம் கூறுகிறது. சீவன் மட்டுமன்று உலகமும் முழு முதலிலிருந்து வேறுபட்டதன்று. சங்கரரின் அத்துவிதவாதததிற்கும். சூபிகளின ஒருமை வாதத்திற்கும் வேறுபாடில்லை. சீவன முழு முதலுடன இணைய ஒரே வழி அன்பு. இந்தியாவில் இந்த காதல் உணர்வு பெரிய கவிஞர்களைப் படைத்தது. சம்சு, தப்ரேசு, உமர்கய்யாம், மவுலானா ரூமி, சாய்சி, கபீர் முதலிய கவிஞர்களைச் சூபி தத்துவம் அளித்தது.

**சூபி யோகம்:** இந்திய யோகத்தைப் போலவே சூபி யோகத்திலும் பல நிலைகள இருக்கின்றன. முதலாவதாகத் துறவு. அன்பிற்குரியவர், குடும்பம், இனம், பணம் ஆகியவைகளைத் துறப்பது சூபி தத்துவத்தின் முதல் நிலையாகும். இரண்டாவது தனிமைச் சிந்தனை. மனத்தைக் கவரும் பொருள்கள் இலலாத தனிமையான இடத்தில இருந்துகொணடு கடவுளைத் தியானிப்பது. மூன்றாவது செபம். தியானிக்கும் பொழுது நாவால் கடவுளின் நாமமான 'அல்லா', 'அல்லா' என்று செபித்துக்கொண்டிருப்பது. நாவும் அசையக் கூடாது. ஆனால அதே சமயத்தில் நாவிலிருந்து செபம் தியானத்தில் வெளிவருவதைப் போலத் தோன்ற வேண்டும். நான்காவது மனோ செபம்-தியானத்தின்போது மனத்தால் செபிப்பது போல் தெரியவேண்டும். ஐந்தாவது கடவுளில ஆழ்ந்த தன்மை. மனோ செபம் வளர்ந்து எழுத்துகள், உச்சரிப்பு போன்றவற்றின் எணணமே இல்லாமற் போகுமளவுக்கு மனம் ஒருநிலைப்படவேணடும். கடவுள் தன்னைவிட்டுப் பிரியாதவர்போல் தோன்றுமளவுக்கு அவரைப் பற்றிய தியானம் உள்ளத்தில நிறைந்துவிடவேணடும். ஆறாவது யோகி தரிசனம். யோகி தரிசனம் நிகழும்போது, அனைத்து ஆன்மிக உண்மைகளும் தெளிவாகக் காணப்படத் தொடங்குகின்றன. முதலில் வேகமாகத் தோன்றி மறையும் மின்னலின் ஒளிபோல் யோகிதரிசனம் முன்பே அறிவிக்கப்படுகிறது. இந்த ஒளி மெல்ல மெல்ல நிலைததுவிடுகிறது. குணங்குடி மசுதான சாகிபு ஒருசிறந்த தத்துவ ஞானியாவர். கடல சூழநத உலகிலுள்ள இருளை அவர் கருணை ஒளியினாற் களைந்தார். அவர் காட்சியிற் புலப்படாக் கடவுளுண்டெனக் கூறினார். புலனடக்கி, மனோலயம் பயில வேண்டுமெனறார். அவர் கொடியவர் குருவைப் பழிப்பார்கள என்றும், சிறப்புவாய்ந்த நூலகளைப் பழிப்பார்கள் என்றும் கூறினார். ஐம்புலனடக்கி, மெய்ஞ்ஞானம் கைவரப் பெற்றவர் உளளங்கை நெல்லிக் கனிபோல் கடவுளை உணருவர். பொருட்செலவம் புல்லியதென்று விடுத்து இந்த உலகில் அருட்செல்வம் எய்துவோர், அருள பெற்றோர் ஆவர் என்று குணங்குடி மசுதான் சாகிபு கூறினார். மேலும் அவர் சுத்த பரிபூரணப் பேரின்ப வீடுபுகுவது சமாதி; சாதி பேதத்தையும், மாதா போகத்தையும் தளளி நிற்பது சமாதி. நிதியாசையில்லாமல் துறவறத்தில் ஆசை கொணடு நல்ல நிட்டைபுரிவது சமாதி என்று கூறுகிறார்.

இரா.கோ.

**துணை நூல்கள்:**


**Arthu J. Arberry**, An Introduction to the History of Sufism, London, 1943.

**Margaret Smith Ed**, the Subi path of Love, Ar Anthology of Sufism, London, 1954.

**Reynold A. Nicholson**, Studies in Islamic Mysticism, Cambridge, 1921.


**சூயசு;** இது எகிப்து நாட்டிலுளள ஒரு துறைமுக நகர். இது சூயசு வளைகுடாவின் தலைப்பகுதியில் சூயசுக் (Suez) கால்வாயின் வாயபபுறத்திறகு மேறகில் அமைந்துள்ளது. எகிப்து நாட்டின தலைநகரான கெய்ரோவிற்கு 120 கி.மீ. கிழககே உள்ளது. இநநகரின் மக்களதொகை சுமார் 3,81,000.பண்டைக்காலந

தொட்டே இது ஒரு முக்கிய துறைமுகமாக விளங்கி யுள்ளது. உதுமானியத் துருக்கியரின் முக்கிய வணி கத்தலமாகவும், கப்பல் போக்குவரத்து மையமாகவும் கி பி.18-ஆம் நூற்றாண்டுவரை விளங்கியது. ஆனால், இடையில் கி.பி. 1869-இல் சூயசுக்கால்வாய் வெட் டும் வரை இந்நகரின் புகழ் மங்கி இருந்தது.

சூயசுக்கால்வாய் வெட்டப்பட்ட பின்னர்ச் சூயசு நகரம் மீண்டும் சிறப்படைந்தது. இக்கால்வாய் வழி யாகச் செல்லும் கப்பல்கள் இங்கு எண்ணெய் நிரப் பிக் கொள்கின்றன. எணணெய்ச் சுத்திகரிப்பும், உரத் தயாரிப்பும் இந்நகரில் நடைபெறுகின்ற முக்கிய தொழில்கள் ஆகும். அரேபியாவுக்கும் இசு ரேலுக்கும் இடையே 1967-இல் நடந்த போரில் சூயசு நகர் மிகவும் பாதிக்கப்பட்டது. அதனுடைய எண் ணெய்ச் சுத்திகரிப்பு ஆலைகள் பெருஞ் சேதத்திற்கு உளளாயின. போருக்குப் பின்னர், அங்கு இசுரேலின் படைகள் தங்கியிருந்ததால், மக்கள் அந்நகரிலிருந்து வெளியேற்றப்பட்டனர். எகிப்து அரசால் 1973-ஆம் ஆணடில் மீண்டும் இந்நகர் புதுப்பிக்கப்பட்டது.

ஆ.செ.

**சூயசுக் கால்வாய்** மத்திய தரைக்கடலையும் செங்கடலையும் இணைக்கும் 160 கி. மீ. நீளமுள்ள ஒரு குறுகிய நீர்வழி. இது இயற்கையாக ஏற்பட்ட தன்று. மனித முயற்சியினால் உண்டாக்கப் பட்டது. இக்கால்வாய் தோண்டப்பட்டதன் விளைவாக ஐரோப்பாவுக்கும், இந்துமாக் கடலுக்கும் இடையே நேரடிப போக்குவரத்து ஏற்பட்டது. இதற்கு முன்னர் ஐரோப்பாவிலிருந்து கப்பல்கள் இந்தியா போன்ற கீழை நாடுகளுக்கு ஆப்பிரிக்காவின் தென பகுதி வரை வந்து, நனனம்பிக்கை முனையைச் சுற் றிக் கொண்டு தான் வரவேண்டும். இக்காலவாய் போக்குவரத்திற்குத் திறக்கப்பட்ட பின்னர்இந்தியா வுக்கும், இங்கிலாந்துக்கும் இடையே உள்ள தூரத்தில் 9,700 கி. மீ. குறைந்துவிட்டது.

பிரெஞ்சு நாட்டைச் சேர்ந்த பர்டிணாண்டு-டி-லெசபசு என்பவரின் அயரா முயற்சியால் கி பி. 1858-இல் நாற்பது மிலியன் தாலர் (Doller) முதலு டன் சூயசுக் கால்வாய் (Suez Canal) நிறுவனம் தோற்றுவிக்கப்பட்டது. இந்நிறுவனத்தில் பெரும் பானமையான பங்குகள் பிரெஞ்சுக்காரர்களுக்கும் துருக்கியர்களுக்கும் இருந்தது. கால்வாய் வெட்டும் பணி கி. பி. 1859-ஆம் ஆணடு ஏப்பிரல் திஙகள் 25-ஆம் நாள் தொடங்கியது. இதைவெட்டி முடிக்கட பத்து ஆண்டுகள் ஆயின. இதற்கான செலவு சுமார் 55 கோடி ரூபாய். இக்காலவாய் கி. பி. 1869-ஆம் ஆண்டு நவம்பர் 17-ஆம் நாள் கப்பல் போக்குவரத்




சூயசுக் கால்வாய்

திற்காகத்திறந்து விடப்பட்டது. எகிப்து மன்னர் இசு மாயில் பணமுடை காரணமாகச் சூயசு நிறுவனத்தில் எகிப்திற்கிருந்த பங்குகளை விற்க முன்வந்தார். பிரிட்டன் பிரதமராக இருந்த திசரேலி அப்பங்கு களின் சிறப்பினை உணர்ந்து கி.பி. 1875-இல் எகிப்து அரசரிடமிருந்து அவற்றை வாங்கினார். அதன் பின்னர் ஆங்கிலேயரும் பிரெஞ்சுக்கரார்களும் அடங்கிய ஒரு குழு கால்வாய் நிருவாகத்தைக் கவ னித்து வந்தது. பிரிட்டன் எகிப்து நாட்டை கி.பி 1883-இல் கைப்பற்றிக் கொண்ட பின், சூயசுக் கால் வாய்ப் பகுதியில் பிரிட்டனின் இராணுவ மேலாண்மை ஏற்பட்டது. பன்னாட்டுப் பிரதிநிதிகள் கூடிய கூட்டத் தில் கி. பி. 1888-இல் போர்க் காலங்களிலும் ஏனைய காலங்களிலும் எல்லா நாட்டுக் கப்பல்களும் சூயசுக் கால்வாயைக் கடந்து செல்லும் உரிமை உண்டு என்று அறிவிக்கப்பட்டது. முதல உலகப்போர் நடைபெற்றுக் கொண்டிருந்த சமயத்தில் சூயசுக் கால்வாயின் பாது காப்பிற்காகப் பிரிட்டன் தன்னுடைய படையை நிறுத்தி வைத்தது. போரில் பிரிட்டனுக்கு எதிர் அணியில் இருந்த நாடுகளின் கப்பல்களுக்குக் கால்

வாயில் அனுமதி மறுக்கப்பட்டது. இரண்டாம் உலகப் போரின் போதும் அசசு நாடுகளின் கப்பல் களுக்கு அனுமதி மறுக்கப்பட்டது.

அரேபியாவுக்கும் இசுரேலுக்கும் இடையே ஏற் பட்ட போரில் 1950-ஆம் ஆண்டு எகிப்து, இசுரேலின் கப்பல்கள்சூயசுக்கால்வாயில் நுழைவதை அனுமதிக்க வில்லை. இதனால், மாபெரும் நெருக்கடி ஏற்பட்டது. இங்கிலாந்தும் பிரான்சும் எகிப்தைத் தாக்கின. இறுதியாக ஐக்கிய நாடுகள் சபையின் தலையீட்டால் சிக்கல் தீர்ந்தது. எகிப்தின் மேற்பார்வையில 1957 -இல் கால்வாய் மீண்டும் கப்பல் போக்குவரத்திற்குத் திறந்துவிடப்பட்டது. அரேபிய, இசுரேலியப் போரின், போது இசுரேலியக் கப்பல்களுக்குத் தடை விதிக்கப் பட்டு, பின்னர் 1979-இல் தடை நீக்கப்பட்டது. கால் வாய்க்கு அடியில், சூயசு நகருக்கு 16 கி மீ. தொலை வில் 1980-ஆம் ஆண்டு சுரங்கப்பாதை அமைக்கப் பட்டது. அதன் வழியாகக் கால்வாயின் ஒருபுறம் இருந்து மறுபுறத்திற்கு வாகனங்கள் செல்கின்றன.

சூயசுக் கால்வாய் வெட்டப்பட்டபோது அதன ஆழம் 8 மீட்டராகவும், அகலம் மேல்மட்டத்தில் 70 மீட்டராகவும், அடியில் 22 மீட்டராகவும் இருந்தன. இது பல சமயங்களில் ஆழப்படுத்தப்பட்டு இப்போது அதன் ஆழம் 19.5 மீட்டராகவும் அகலம் மேலமட்டத்தில் 280 மீட்டராகவும் அடிமட்டத்தில் 109 மீட்டராகவும் உள்ளது. ஆ. செ

**சூர்ப்பணகை** இராமாயணக் கதை மாநதருள் ஒருத்தி. தேவஅசுரப் போரில் தோற்றுப்போய்ப் பாதாளவுலகத்தில் வாழ்ந்த சுமாலி என்பவன் தன மகள் கைகயி என்பவளைப் பிரமன் பெயரன் விசுர வசு என்ற முனிவன் வாயிலாக மகப்பேறு பெற்று வருமாறு வேணடுகிறான். அவளும் அம்முனிவனிடம் போந்து தன்னை மணந்து மகப்பேறு அளிக்குமாறு வேணடினாள். அவன், அவள் தன்கண மகப்பேறு விரும்பி வந்த மாலைக்காலத்தில வாய்க்கும் மகவுகள் கொடியனவாக அமையும் எனறான். அவள் அதனை ஏற்காமல் வறபுறுத்த அவனஅவட்கு மகப்பேறளிக்கின் றான. அப்பொழுது இராவணன், கும்பகருணன், வீடணன் முதலியோரோடு பெண்ணாய்ப் பிறநதவள் சூர்ப்பணகை. அவள் பருத்த இடையும் கழுத்தும் பெற்று, இடிபோனற குரலோடு காலனும் கருககுலை யும் வண்ணம் பிறந்தாள.

கைகயி தன் மக்களைத் தன்தந்தை சுமாலி யிடம் ஒப்படைக்க அவன் ஆணமக்கள் மூவ ரையும் தவமியற்றிப் பேராற்றல் பெற்று வரப் பணிக கின்றான். அம்மூவரோடு சூர்ப்பணகையும் போநது வனத்தில் பல காடுகாகளைக் கணவன்மார்களாக பெற்றும், தன் வேட்கைக்கு இசையாத வரைக கொன்று தின்றும் வாழந்தாள். அவுணன் ஒருவன் அவளது பருத்த இடையைக் கண்டு காதலிக்க அவனை மணந்து வாழ்ந்து வந்தாள்.

வரங்களும் வலிமையும் பெற்ற இராவணன், திசை வெற்றி மேறகொண்டான். அப்பொழுது நடநத போரில்இராவணன் சினம் மிகுநதுஇன்னார் இனியார் என்று காணாது வாளோச்சிக கொன்று குவித்தான அப்பொழுது சூர்ப்பணகையின் கணவனும் கொல்லப் பெற்றான. அது கேட்ட சூர்ப்பணகை போர்ககளம் போநது, அவன உடலைத் தழுவிப் பூசலிட்டுப புலம்பி னாள் தன கணவனைக் கொன்ற இராவணன நாக் கைப் பிடுங்கித் தன் துயர் தீர்ப்பதாகச் சபத மிட்டுச்சென்று இராவணனைக் கணடாள. காலகேயர் பொருகளத்துத் தன் கணவன் கொலைப்பட்டதைக் கூறியது கேட்டஇராவணன் விதியால் நிகழ்ந்த செய்தி என்று ஆறுதல் கூறித் தேற்றினான். தன்சிற்றன்னை வயிற்றுதித்த வெற்றி வீரர்கள் கரன், தூடணன, திரி சிரன முதலியோர் இருநது அரசியற்றும் தண்டகம சென்று மனமகிழ்ந்து வாழுமாறு அனுப்புகிறான். அப் பொழுது அவள் கொல்லாத மைத்துனனைக் கொன றதற்குச் சினந்து அவனை மூலத்தோடு முடிக்கும் கொடு மனங் கொண்டு, பலலாலே இதழ் அதுக்கிப் போகின்றாள். போனவள் தண்டக வனத்திலிருந்து கொண்டு தான் கருதியது முடிககும் காலத்திறகுக் காத்திருந்தாள்.

இராமன் தசரதன் ஏவலால் தவம் செய்யக் காடு புகுந்தபோது, அவனைக் கணட முனிவர்கள அரக்கர் கள் கொடுமை கூறி அடைக்கலம் புகுகினறனர். அவனும் அரக்கர்தம் கொடுமை தீர்ப்பதாக உறுதி யளிக்கின்றான்.

அவ்வாறு வாழும் நாளில் சூர்ப்பணகை இராமன் பேரழகில் ஈடுபட்டு அவனை மயக்கிப் பெறுதறகு அரிய பெண்வடிவங் கொண்டு அவன் முன் செல்ல அவனும் எங்கும் காணாப் பேரழகி யார் என்றுகேட் கின்றான். அவள தான் இராவணன் தங்கை என்று கூறுகின்றாள். இராமன் அவளை ஐயுற்று அரக்கர் குலமகட்குரிய தோற்றம் மாற்றித் தோன்றும் கார ணங் கேட்கின்றான். அதறகு அவள் அரக்கர்தம் மாய வாழ்வை வெறுத்து, அறத்தின் வழிப்பட்டு,வேண டித் தவமியற்றிப் பெற்ற வடிவமே இது என்று கூறு கின்றாள. தொடர்ந்து முனனுககுப் பின் முரண்படப் பல பேசுகின்றாள். இராமன் அவள் மெய்ப்பாட்டால் பொய்யள் என்று கருதிப் புறக்கணிக்க, அவள் அவனை மணக்குமாறு வற்புறுத்துகின்றாள். அப் பொழுது சீதை ஆணடுப் புகுகின்றாள. அவளைக்

கண்ட அவ்வரக்கி, அவள அழகை நோக்கி வியந்து அவள இருக்கும வரையில் இராம னைத தான் கொள்ளமுடியாது என்று துணிந்து சீதை தனித்திருக்கும்போது, அவளை அச்சுறுத்திக் கவரக் கருதியபோது, இலக்குவன் கண்டு அவள் உறுப் புகளைச் சிதைத்து விடுகின்றான். பின்னர் அவள இராமனிடம் முறையிட்டதோடு அந்நிலையிலும் மணக்குமாறு வேண்ட இராமன் ஓடி உய்யுமாறு கூறு கின்றான். அதுகேட்டுச் சினம் கொண்ட அவள் கர னிடம் கூற அவன் போந்து இராமனோடு பொருது மடிகின்றான. இராமனைப் பெற வாய்ப்பின்மை கண்ட அவள், கரனைக் கொன்ற இராமன் தன் கணவனைக் கொன்ற இராவணனையும் கொல்வான் என்று துணிந்து, தான் கொண்ட ஆசை நோய் மூக் கிழந்ததோடு முடியவில்லை என்றும், அது இராவணன் முதலிய அரக்கர்களின் அழிவில் முடியும் என்றும் அதற்காகச் சீதையைக் காரணமாக்கிச் சூழச்சி புரிவேன் என்றும் கூறிச் செல்கின்றாள். சென்றவள் இராவணனிடம் சீதையின் அழகைப் பலபட விரித்துக் கூறி அவளை இராவணன் பெற்று மகிழற்குத் தான் சீதையைக் கவர முயன்றபோது, இராமனால் தனக் கும் தன் கிளைகளும் கேடு புகுந்ததாகக கூறுகின்றாள். அப்பொழுது இராவணன் சீதையை மனச் சிறையில வைத்த காதலால், கரன் முதலியோரை மறந்து, காம நோய் மிகுந்து, தனித்துப் போய் பலவாறு துன்புற்றுத் தங்கையைஅழைத்துப்பேசுகின்றான.நோக்குவவெல லாம் இராவணனுக்குச்சீதையாகவும், சூர்ப்பணகைக்கு இராமனாகவும தோன்ற, இராவணன் தனக்குச் சீதை தோன்றுமாறும் அவட்கு இராமன் உரு வெளிப் படுமாறும் எங்ஙனம் என்று கேட்கின்றாள். அவள், இராமன தன் உறுப்புகளைச் சிதைத்ததால் கொண்ட பெருஞ் சினம் காரணமாக அங்ஙனம்தோன்றுவதாகக் கூறுகின்றாள். பின்னர் அவள் அவனுக்கு உருவெளித் தோற்றமாகி நோய் செய்து வருத்தும் சீதையை வௌவிக் கொண்டு வநது நோய் போக்கக் கூறு கின்றாள். இராவணன் அவள் கூற்றால் சீதையை வௌவி அதன் வழிக் கிளையோடும் அழிகின்றான். இராவனனோடு இராக்கதர் குலம் எல்லாம் அழியக் காரணமானவள் சூர்ப்பணகையாவாள். கு.தி.

**சூர்மன் சான்:** மொகலாயப் பேரரசு வீழ்ச்சி யுற்றுக் கொண்டிருந்த நேரத்தில் கி.பி. 1713 முதல் 1719 வரை மொகலாயப் பேரரசராகத் திகழ்ந்த பரூக்சியர் காலத்தில் ஆங்கிலத் தூதுவராக கி.பி. 1714 முதல் 1717 வரை மொகலாய அவையில் தங்கி யிருந்தவர் சூர்மன் சான (Surman John). ஆங்கிலே யருக்கெனச் சலுகைகளைப் பெறுதலின் பொருட்டுச் சென்னை, பம்பாய், கல்கத்தா ஆகிய ஆங்கில மாகா ணங்களின்அரசுகள் சூர்மனைத் தூதுவராக அனுப்பின. அவருக்குத் துணைபுரிதலின் பொருட்டு எட்வர்டு இசு டீவன்சன்(Stevenson)என்பவரும், வில்லியம்ஆமில்டன் (Hamilton)என்றமருத்துவரும்அனுப்பப்பட்டனர். வில் லியம் ஆமில்டன் மொகலாயப் பேரரசரின் கொடிய நோயைத் தீர்த்து வைத்ததால பரூக்சியரின் ஆதரவி னையும் நட்பினையும் அக்குழுவினர் பெற்றனர். சூர்ம னின் பணி காரணமாக கி.பி.1717-இல் வங்காளத்தில் மூன்று மானியப் பகுதிகளை (Firmans) ஆங்கிலேயர் பெற்றனர். அதன் விளைவாக உருபாய் மூவாயிரம் வரை வரி செலுத்த வேண்டிய நிலையிலிருந்து ஆங் கிலேயர் விடுவிக்கப்பட்டனர். ஆங்கிலக் கிழக்கிந் திய நிறுவனம் தடையில்லா வாணிகம் செய்ய அனு மதிக்கப்பட்டது. கல்கத்தாவைச் சுற்றியுள்ள பகுதிக ளில் தமது விருப்பம் போல் இடத்தை வாடகைக்குப் பெற்று வாணிகம் செய்ய உரிமையளிக்கப்பட்டது. சென்னைக்கு அவர்கள் அளித்துவந்த வாடகைப்பணத் தைத் தவிரப் பிறவற்றை ஆஙகிலேயர் மொகலாயப் பேரரசுக்குத் தரவேண்டியதில்லை. குசராத்துப் பகுதி முழுவதற்கும் ஆணடிற்கு உருபாய் பத்தாயிரம் மட் டும் சுங்க வரியாகத் தந்தால் போதுமென்பது அறி விக்கப்பட்டது. பம்பாயில் ஆங்கில நிறுவனத்தினால் வெளியிடப்பட்ட நாணயங்கள் மொகலாயப் பேரரசு முழுமைக்கும் செல்லுபடியாகுமென்பதும் ஏற்கப்பட் டது. இவ்வாறு, சூர்மனின் அரும் பணிகளால ஆங்கி லக் கிழக்கிநதிய நிறுவனம் பல அதிகார வரம்புகள், உரிமைகள், பொருளாதார மேம்பாடு ஆகியவற்றைப் பெற்றதெனில் அது மிகையாகாது. இந்தியத் துணைககண்டத்தில் ஆங்கிலப் பேரரசுக்கு அடித்தளம் அமைக்க வழிகோலியவர்களுள சூர்மனும் ஒருவரா வார். மா.கா.

**சூரண்ணா, பிங்களி(கி.பி 1532-1583):** இவர் சிறநத தெலுங்கு மொழிக் கவிஞராவார்; இநதிய நாட்டின் பெருங் கவிஞர்களுள் ஒருவருமாவார் ஆந்திர நாட்டில தெலிங்கானாப் பகுதியில் கி.பி. 16-ஆம் நூற்றாணடில் அமரய்யா என்பவருக்கு மக னாகப் பிறந்தார். இவர், அட்டதிக்கசங்களுள் ஒருவ ராக மதிக்கப்படுகிறார். நந்தியால கிருட்டிணமராசு என்னும் அரசனின் அவைப் புலவராகத் திகழ்ந்தவா. ஆரவீடு மரபினரில வெங்கடாத்திரி என்னும் மனன ரும் இவருக்கு ஆதரவு தந்துள்ளார். இவா தமிழ கத்தை நன்கு சுற்றிப் பார்த்தவர் என்பது இவரது களாபூர்ணோதயம் என்னும் காவியத்தில் இடம் பெற்றுள்ள தமிழக வருணனைகள் மூலம் புலனா கிறது. இவா இயற்றிய கருடபுராணம், கிரிசா கல்யாணம் என்னும் காவியங்கள கிட்டவில்லை. இவா தம் சிறந்த படைப்புகள களாபூரணோதயம, இராகவ

பாண்டவீயம், பிரபாவதி பிரத்தியுமனம் என்னும் முப்பெருங் காவியங்களாகும். சூரண்ணா மிகச் சிறந்த கற்பனைத் திறனும் இணையற்ற ஆற்றலும் உடைய கவிஞராவார்; பெருமபுலமை சான்றவர்; சொல்வன் மையும் நாடகப் பாங்கான பேச்சுத்திறனும் கொணட வர். பழமொழிகள், மரபுச் சொற்கள் அடங்கிய இனிய நடை கைவரப் பெற்றவர். பாத்திரங்களின் மனோதருமங்களை மிக நுட்பமாக வருணிப்பதிலும், காதல் சுவையின் மிக நுட்பமான மன இயல்புகளை விவரிப்பதிலும் இணையற்று விளங்குகிறார்.

இவர் தம் படைப்புகளுள் மிகச் சிறந்தன எனப் படும் இராகவ பாண்டவீயம், களாபூரணோதயம், பிரபாவதி பிரத்தியுமனம் என்னும் மூன்றும் ஒவ் வொரு துறையில தனிச் சிறப்புடன் திகழ்கின்றன.

**களாபூரணோதயம்:** இக் காவியம் எட்டு அத்தி யாயங்களையும் 1955 பாடல்களையும் கொண்டது. இக் காவியம் சுயகற்பனையானக்கதையை உடையது. வடமொழியில காதம்பரி எனும் பட்டபாணரின் புனைவுக் கதைபோலத் தென்மொழிகளில் உளள சுய புனைவுக காவியம் இது ஒன்றே. பெரும்பாலும் இதிகாச புராணக் கதைகளையே தோந்து எடுததுக் காவியம் செய்வது இந்தியக கவிஞர்களின் மரபு. ஆனால, பிங்களி சூரணர் அவவிதமின்றித் தாமா கவே கற்பிதத கதையைக் காவியமாககினார். கல பாடினி எனும கணிகை, தனனுடன் இசைபயினற மணிகநதரனை உளளூறக காதலிக்கிறாள. அவன் இருப்பிடம் ஒரு யோகி மூலம் அறிநது வான்வழி யாகச் சிங்க வாகனத்தில அவனைத தேடி அநத யோகியுடன் செலகிறாள. அந்த யோகி காதலனைக் காட்டுகிறேன் எனறு கூறி அவளை ஒரு காளி கோவி லில் பலியிட அழைத்துச் செல்கிறான என்று கதை தொடங்குகிறது. ஒரே மாதிரி இருவர் வருவதும் யாா அசல் யாா நகல் என்பது புரியாமல் திகைப்பதுமான சுவையான காவிய உத்திகள் பயன்படுத்தப்பட்டுள் ளன. சேக்சுபியரின் நகைசசுவைக குழப்பம் (Comedy of Errors) என்னும் நாடகத்தின் உத்தியையே அவர் காலத்தில் இநதியாவில விளங்கிய பிங்களி சூரணணாவும் தெலுங்கில் படைத்தளிததிருப்பதைத் திறனாய்வாளர்கள் வியந்து பாராடடுவா. காதற சுவையின் நுட்பமான உணர்வுகட்கு உருககொடுத்துப பாத்திரங்களைப் படைத்தல், சிறந்த உரையாடல் கள், பழமொழிகளை இடமறிந்து பயனபடுத்தும் தனித்திறமை முதலியவற்றால் இக் காவியம சிறப் புடனும் சுவையுடனும் திகழகின்றது.

**இராகவ பாண்டவீயம்:** இராகவனாகிய இராமன் கதையையும பாண்டவர்கள் கதையையும் ஒரே காவியத்தில் சிலேடை மூலம் அமைத்த ஒப்பற்ற காவியம் இராகவ பாண்டவீயம் ஆகும். இராமாயண பாரதக் கதைகளைச் சுருக்கியும், சுவை படவும் மிக நேர்த்தியுடன் அமைத்துள்ளார். தனிப் பாடல்களில் சிலேடை உண்டே தவிர, ஒரு காவியமே சிலேடை யாக அமைத்த சிறப்பு தெலுங்கில் மட்டுமே சிறப் புற்றது. வடமொழியில் உண்டெனினும் இதனுணைச் சிறக்கவில்லை. பிற மொழிகளில் இத்தகு காவிய அமைப்பு இலலை.

சொற் சுவையோடு பொருட்சுவையும் மிக்க தாகக் காவியம் அமைத்த திறன் வியப்பூட்டுகிறது. சான்றாகத் தசரதன் அறியாமல் யானை எனறு கருதி முனி குமாரனை வதைத்ததும், பாண்டு மான உரு வில் இருந்த முனி தம்பதிகளை அறியாமல் கொன் றதுமான இரு நிகழ்ச்சிகளையும் ஒரே பாடலில் அவர் சிலேடை மூலம் விவரித்துக் காட்டுகிறார்.

**பிரபாவதி பித்தியுமனம்:** கணணன் மகன் பிரத்தியும் னன் வச்சிரநாபன் மகள் பிரபாவதியைக் கரவாகக் காதலித்து மணந்த பாகவதக் கதையைக கூறுகிறது. இககாவியம் நாடகப் பாங்காக அமைந்துள்ளது. பரிபக்குவமான ஒரு படைப்பாளனின் திறமை முழு வதும் இக்காவியத்தில் மிளிர்கிறது. சொற்சுவையில ஈடுபடாமல் பொருட்சுவையில் கவனம் செலுத்திக் கவிச்சுவை மிக்க காவியமாககியுள்ளார்.

பிங்களி சூரண்ணா தனித்திறன் வாய்ந்த இம் முப்பெருங் காவியங்களைப் படைத்து இந்திய இலக் கிய உலகில் இணையற்ற மகாகவியாக விளங்கு கிறார். மு.கு.ஜ.

**சூரத்து** நகரம் இநதியாவில உளள குசராத்து மாநிலத்தில் சூரத்து மாவட்டததின் தலைநகரமாக இருக்கிறது. தந்தி நதி முகத்துவாரத்திலுள்ள இந் நகரம் பம்பாயிலிருந்து 240 கி மீ. தொலைவில் உள ளது. இந்தியாவின் சிறந்த வணிக இடஙகளில் ஒன் றாக விளங்குகிறது.

முகமது கோரியின தளபதி குதுபுதீன ஐபககு கி.பி. 1194-ஆம் ஆண்டு சூரத்துப (Surat) பகுதியின மீது படையெடுத்தார். திலலிச் சுலதான் முகமது துக்ளக்கு கி.பி. 1347-ஆம் ஆண்டில் சூரதது நகரைச் சூறையாடினார். அவருக்குபின் வநத பிரோசு-சா-துக்ளக்கு கி.பி. 1373-இல அங்கு ஒரு கோட்டையைக் கட்டினார். போர்ச்சுகீசியர் கி.பி. 1512, 1530-ஆம் ஆண்டுகளில் அந்நகரை எரித்தனர். குசராத்து சுல்தான் கி.பி. 1546-ஆம் ஆண்டு அக்கோட்டையை மீண்டும் கட்டினார். பேரரசர் அக்பர் இந்நகரை கி.பி. 1573-ஆம் ஆண்டு அகமது நகர் அரசிடமிருந்து

கைப்பற்றினார். சூரத்து கி.பி. 16,17-ஆம் நூற்றாண்டுகளில் முகலாயப் பேரரசின் சிறந்த துறைமுகமாக விளங்கியது. சூரத்தின் செல்வத்தால் கவரப்பட்ட மராத்திய மன்னர் சிவாசி (Shivaji) இந்நகர்மீது பலமுறை படையெடுத்திருக்கிறார்.

இந்நகருக்கு கி.பி. 16-ஆம் நூற்றாண்டின தொடக்கத்தில் வந்த முதல் ஐரோப்பியர் போர்ச்சுக்கீசியர் ஆவர். ஒரு நூற்றாண்டிற்குப் பிறகு தச்சுக்காரரும் ஆங்கிலேயரும் வந்தனர். ஆங்கிலேயர்கள் தம் வணிக இடத்தைச் சூரத்தில் அமைகக முகலாயப் பேரரசர் அனுமதி அளித்தார். ஆங்கிலக் கிழக்கிந்தியக் குழு கி.பி. 1612-இல் இந்தியாவில் தன்னுடைய முதல் வாணிக இடத்தைச் சூரத்தில் தொடங்கியது; பின்னர்த் தலைமையகத்தைச் சூரத்திலிருந்து பம்பாய்க்கு மாற்றியது. தபதி நதியின் முகத்துவாரத்தில் ஏற்படும் வெள்ளங்கள், தீயினால் ஏற்பட்ட சேதங்கள் போன்றவற்றால் சூரத்து செல்வச் செழிப்பை இழந்தது.

பின்னர் கி.பி. 19-ஆம் நூற்றாண்டில் ஏற்பட்ட தொழில் வளர்ச்சியினாலும், இருப்புப் பாதைகள அமைக்கப்பட்டதனாலும் மீண்டும் சூரத்து வளர்ச்சியுறத் தொடங்கியது. பம்பாயிலிருந்து பரோடா செல்லும் இரயில் சூரத்து வழியாகச் செல்கிறது. சூரத்து உளநாட்டு வணிகவிடங்களுள் ஒன்றாகச் சிறந்து விளங்குகிறது.இங்குள்ள வாணிகப் பொருள்கள் பருத்தி, பட்டு, உயர்தரக் கைத்தறித் துணிகள், சரிகைச் சித்திர வேலைப்பாடமைந்த பட்டாடைகள், வெள்ளி அணிகலன்கள், சந்தன மரப் பொருள்கள் முதலியவையாகும். சூரத்து வளமான கருமண் பகுதியில் அமைந்த ஒரு தாழ்ந்த சமவெளி. இங்குப் பருத்தி, நெல், கரும்பு, ஆமணக்கு முதலியவை பயிரிடப்படுகின்றன. இங்குப் பல கல்வி நிறுவனங்கள் அமைந்துள்ளன. குசராத்து பல்கலைக் கழகத்தில் இணைந்துள்ள பல கல்லூரிகள் இருக்கின்றன. இங்குள்ள வணிகர்களில பலர் இந்துக்களாகவும் முகமதியர்களாகவும், பார்சிகளாகவும், சமணர்களாகவும் விளங்குகின்றனர்.

அ.சி.

**சூரத்துப் பிரிவினை:** சூரத்து என்னும் நகரில் 1907-இல் நடைபெற்ற காஙகிரசு மாநாட்டின் போது காங்கிரசு இயக்கமானது இரண்டாகப் பிரிந்தது. இதுவே சூரத்துப் பிரிவினை என்று குறிப்பிடப் படுகிறது.

இந்திய தேசிய காங்கிரசில் 1905-ஆம் ஆண்டு மிதவாதிகள், தீவ்ரவாதிகள் என இரு பிரிவினர் தோன்றினர். மிதவாதிகள் ஆங்கிலேய அரசைப் பகைத்துக் கொள்ளாமல் தங்களுடைய தேவைகளை வலியுறுத்தி வேண்டிப் பெற விரும்பினர். ஆனால தீவிரவாதிகள் ஆங்கிலேயரை எதிர்த்துத் தன்னாட்சி பெற விரும்பினர். இவ்விரு பிரிவுகளுக்கும் தலைமையேற்ற இருவருமே நாட்டுப்பற்றுள்ள மராத்தியராவர். மிதவாதிகளுக்குக் கோபால கிருட்டிண கோகலேயும், தீவிரவாதிகளுககுப் பாலகங்காதர திலகரும் தலைவர்களாக இருந்தனர்.

ஆங்கிலேயர் வங்காளத்தை இரு கூறாகப் பிரித்ததை இரு பிரிவினரும் கண்டித்தனர். ஆனால், கிளர்ச்சியில் தீவிரவாதிகள் தீவிரமாகப் பஙகேற்றனர். மிதவாதிகள அதற்கு ஒரளவே ஆதரவு தந்தனர். வங்காளத்தில் இளைஞர்கள பள்ளிகளையும் கல்லூரிகளையும் விட்டகன்றனர். சப்பான் நாடு உருசியாவை வென்றதும், இங்கிலாந்தில் தாராளவாதக் கட்சி (Liberal Party) பழைமை ஓம்பிக் கட்சியை (Tory Party) வென்றதும் இரு பிரிவுகளுக்கு இடையே கருத்து வேற்றுமையை அதிகரிக்கச் செய்தன. தீவிரவாதிகள் சப்பானின் வெற்றியைக் கீழை நாட்டுக் கலாச்சாரத்தின் வெற்றியெனவும், ஆசிய நாடுகளின் தேசியப்புகழ் எனவும் கூறினர். மிதவாதிகள், தாராளவாதிகளின் வெற்றி ஆங்கிலேயரின் தாராளத் தன்மையின் வெற்றி எனவும், அது இந்தியாவில் ஆங்கிலேயர்கள் தாராளமான சீர்திருத்தங்கள் செய்வதற்கு முன்னோடியாக அமைகிறது எனவும் கூறினர்.

இரு பிரிவினரையும் ஒன்று சேர்க்கும் முயற்சி தோல்வியடைந்ததால், தீவிரவாதிகள் காங்கிரசின் நிருவாகத்தைக் கைப்பற்ற முயற்சி செய்தனர். கல்கத்தாவில் 1906-ஆம் ஆண்டு நடைபெற்ற மாநாட்டில் திலகர் தலைவர் பதவிக்குப் போட்டியிட்டார். மிதவாதிகள் அவரைத் தோற்கடித்தனா ஆனால், தீவிரவாதிகள் கொணடு வந்த சில தீர்மானங்கள் நிறைவேற்றப்பட்டன. தீவிரவாதிகள் தாங்கள் கொண்டு வந்த தீர்மானங்களைக் காங்கிரசு விரைவில் விட்டுவிடும் என நம்பினர். இந்நிலையில் 1907-ஆம் ஆண்டு சூரத்தில் காங்கிரசு மாநாடு கூடியது. இரு அணிகளும் நேரில் மோதிக் கொளள ஆயத்தமாயின. திலகர் மிதவாதிகள் விடுதலைக்குப் பாடுபடவில்லை எனக் குற்றம் சாட்டினார், மிதவாதிகள், தீவிரவாதிகளைப் பொறுப்பற்ற கிளர்ச்சிககாரர்கள் எனக் குற்றம் சாட்டினர். பிறகு இரு அணிகளுக்குமிடையே கைகலப்பு ஏற்பட்டது. தீவிரவாதிசள் மிதவாதிகளைக் கம்புகளைக் கொணடு கடுமையாகத் தாக்கினா. குழப்பம் ஏற்பட்டதால கூட்டம் முடிவுற்றது. அடுத்த நாள் இரு அணிகளும் தனித் தனியே கூடின. இவ்வாறு சூரத்து மாநாட்டில் காங்கிரசில் பிரிவினை ஏறபட்டது.

இப்பிரிவினையால் தேசிய இயக்கம் வலுவிழந்தது. இரு பிரிவினரும் ஒருவரை ஒருவர் பத்திரிகைகள் மூலமும், துண்டு வெளியீடுகள் மூலமும் குற்றம் சாட்டிக் கொண்டிருந்தனர். ஆங்கிலேயர் இச்சூழ்நிலையைப் பயன்படுத்தித் தங்களது பேராதிக்கக் கொள்கையை வலுப்படுத்திக் கொண்டனர். தீவிரவாதிகளைக் கடுமையான நடவடிக்கைகள் மூலம் ஒடுக்கினர். மிதவாதிகளை அரசியல் சீர்திருத்தங்கள் மூலம் ஓரளவு சமாதானப்படுத்தினர். தீவிரவாதிகள் நினைத்ததைப் போல 1908-ஆம் ஆண்டு சென்னையில் நடைபெற்ற காங்கிரசு மாநாட்டில் ஆங்கிலேயருக்கு எதிரான தீர்மானம் கைவிடப்பட்டு மிண்டோ-மார்லி சீர்திருத்தம் (1909) வரவேற்கப்பட்டது. அ.சி.

**சூரதாசர்** இந்தி மொழி பக்தி இலக்கிய உலகில், கிருட்டிணபக்தி கவிகளில் தலைசிறந்தவராவார்; பக்தியை முதன்மையாகக் கொண்டு வாத்சல்ய ரசத்தையும் சிருங்கார ரசத்தையும் வருணிப்பதில் உலகக் கவிகளில் ஈடுஇணையற்றவராக விளங்குபவர்

சூரதாசர் தில்லிக்கு அண்மையிலுள்ள சீகி (அல்லது சாகி) என்னும் கிராமத்தில் பிறந்தார் என்றும், தன் வாழ்க்கையின் பெரும் பகுதியை ஆகிராவுக்கு அருகிலுள்ள 'காவுகாட்டு' என்னுமிடத்தில் கழித்தார் என்றும் கூறுவர். பிராமண குலத்தில் பிறந்தார் என்றும், இவர் தந்தை பெயர் இராமதாசு என்றும் அறியப்படுகிறது. இவர் பிறவிக் குருடர் என்றும், பிறந்த பின்னரே குருடரானார் என்றும் இருவேறு பட்ட கருத்துகள் உண்டு. சூரதாசரின் கவிதைகளில இடம்பெறும் மிகச் சிறந்த வருணனைகள்-குறிப்பாக இயற்கை வருணனைகள், இவர் பிறவிக் குருடர் என்பதில் ஐயத்தைத் தோற்றுவிக்கின்றன.

சூரதாசர் ஒருமுறை கிருட்டிண பக்தியில் ஊறித் திளைத்த வல்லபாச்சாரியாரை வழிபடச் சென்றார். அதுபோது, தான் கிருட்டிணபகவான்மீது இயற்றியிருந்த பாடல் ஒன்றைப் பாடிக் காட்ட அதனைக் கேட்டு உள்ளம் நெகிழ்ந்து வியப்படைந்த வல்லபாச்சாரியார் சூரதாசரைத் தன் சீடராக ஏற்றுக் கொண்டு, சிரிமத் பாகவதக கதையைச் செய்யுள் வடிவில் இயற்றித் தருமாறு பணித்தார் என்றும் கூறப்படுகிறது. அதுமுதல் வல்லபாச்சாரியார் சூரதாசரின் குருவானார் என்ற கருத்தும் உண்டு.

சூர்சாகர், சூர் சாராவளி, சாகித்யலகரி, நள தமயந்தி, பியாகுலோ என்பன சூரதாசரின் படைப்புகளாகக் கருதப்படுகின்றன. இவற்றுள் பின்னவை இரண்டும் தற்போது கிடைக்கவிலை. முன்னவை மூன்றனுள் 'சூர்சாகர்' என்னும் காவியம் மிகச் சிறந்த படைப்பாகக் கருதப்படுகிறது. இக்காவியம் ஒன்றே கால் இலட்சம் பதங்களில் எழுதப்பட்டது என்று கூறுவர். ஆனால், ஆறாயிரம் பதங்களே இக்காலத்தில் கிடைக்கின்றன. கிருட்டிண பகவானின் பல்வேறு இளமைக்கால இலீலைகள், அவர் கோபியர் மாட்டுக் கொண்ட அன்பு, கிருட்டிணனைப் பிரிந்த கோபியரின் விரகதாபம், அவர்தம் விரகதாபத்தைப் போக்கக் கிருட்டிணன் தன் நண்பர் உத்தவரை அவரிடத்து அனுப்புதல், உத்தவர் - கோபியர் வாத - விவாதங்கள் போன்றன இக்காவியத்துள் மிகச் சிறப்பாக இடம் பெற்றுள்ளன. கிருட்டிணன், பகவானின் அவதாரம் என்றும், இவ்வுலகை மகிழ்விக்கவே அவர் அவதாரம் செய்தார் என்றும் சூரதாசர் கொண்ட கொள்கை இக்காவியத்துள் சிறப்பிடம் பெறுதல் காணலாம்.

விருச மொழியில் அமைந்துள்ள சூரதாசரின் கவிதைகளில் பல இரசங்கள் இடம்பெறினும் வாத்சல்யரசம், சிருங்காரரசம், சாந்தரசம் ஆகிய மூன்றும் உவமை, உருவகம், தற்குறிப்பேற்றம் போன்ற அணி நயங்களுடன் உள்ளத்தை உருக்கும்படியாக அமைந்திருத்தல் காணலாம்.

இவர் கி.பி. 15-ஆம் நூற்றாண்டின் பிற்பகுதியில் பிறந்து 16-ஆம் நூற்றாண்டின் முற்பகுதியில் இறந்தார் எனக் கருதப்படுகிறது. இக்கவிஞர், இந்தி மொழிப் பக்தி உலகில துளசிதாசருடன் ஒருங்கு வைத்து எண்ணத்தக்க சிறப்பினைக் கொண்டவர். இவ்வுலக வானை ஞாயிறும் திங்களும் விளக்கிச் சிறப்பித்தல் போல, இந்திமொழி இலக்கிய வானை சூரதாசரும் துளசிதாசரும், விளக்கிச் சிறப்பிக்கும் காரணத்தால் 'சூர் சூர் துளசி சசி' என்னும் சிறப்புத்தொடர் இந்திமொழி இலக்கியவாணரிடம் வழங்குகின்றது. இரா.செ.

**சூரபதுமன்** வரலாறு கந்தபுராணத்தில் மிக விரிவாகக் கூறப்பெறுகிறது. சூரபதுமனது முற்பிறப்பு வரலாறு வியாசர் இயற்றிய வடமொழி இசுகாந்தம் சிவரகசிய கண்டத்திலும், தமிழில் சோமேரியப்ப முதலியார் இயற்றிய உபதேச காண்டத்திலும், ஞானவரோதயர் இயற்றிய உபதேச காண்டத்திலும், மருதுபாண்டியனது அவைக்களப் புலவர்களுள் ஒருவராகிய வேதாந்தம் சுப்பிரமணியப் பிள்ளை இயற்றிய மயூரகிரிப் புராணத்திலும் கூறப்பெறுகின்றன.

சுக்கிலவாது தேசத்தை ஆண்டு வநத மன்னனுக்கு நான்கு குமாரர்கள் பிறந்தார்கள். அவர்களில் மூத்த

வன் சூரன். இரண்டாமவன் பதுமன். மூன்றாமவன் சிங்கன். நான்காமவன் தாருகன்.

சூரனும் பதுமனும் ஒருநாள் அகத்திய முனிவரைக் கண்டு வழிபட்டார்கள். அம்முனிவர் முருகப் பெருமானது பெருமையையும் அவர் ஏறிவரும் மயிலினது பெருமையையும் அவர் ஏந்தியுள்ள சேவற் கொடியினது பெருமையையும் எடுத்துக் கூறினார். அதனைக் கேட்ட சூரன் முருகனுக்கு மயிலாக விரும்பினான்.பதுமன் முருகனது சேவற் கொடியாக விரும்பினான்.

அவர்கள் இருவரும் அகத்திய முனிவர் அறிவுரைப் படியே தவம் செய்யலாயினர். இச்செய்தியை முன்னமேயே முருகனைத் தாங்கிவரும் பேறுபெற்ற மயிலும் சேவலும், அன்னம் கருடனாகிய வாகனங்கள் மூலம் கேள்வியுற்றுச் சூரன், பதுமன் ஆகிய இருவரது தவத்தையும் கலைத்தன.

இவ்வுண்மையை அறிந்த சூரன், பதுமன் ஆகிய இருவரும் தம்முடைய தவவலிமையால் தேவகணங்களாகி முருகன் வீற்றிருக்கின்ற கந்தமாதனக் கிரிவாயிலை அடைந்தார்கள்..

சூரனும் பதுமனும், அங்கிருந்த மயிலிடத்திலும் சேவலிடத்திலும் அன்னம் கருடன ஆகிய வாகனங்கள பறறி மாறுபட்ட கருத்துகளைக் கூறிக் கோள் மூட்டினர்.

அக்கருத்துகளை உண்மை என நம்பிய மயிலும் சேவலும் அன்னத்தையும் கருடனையும் துன்பப்படுத்தின.

திருமாலும் நான்முகனும் முருகப் பெருமானிடம் முறையிட்டனர்.முருகப்பெருமான் உண்மையினை அறிந்து சூரனையும், பதுமனையும் அழைத்து, நீங்கள் ஆவலுற்ற எண்ணம் சிறப்புடையதாயினும் நீங்கள் அசுரத்-தன்மையோடு நடந்துகொண்டமையால நீங்களிருவரும் ஒருவராகிக் காசிப முனிவரிடத்தே மாயையின் பிளளையாகத் தோன்றி வரம் பல பெற்றுத் தேவர்களைப் பெரிதும் துன்புறுத்தும் நிலை அடைவீர்கள். அப்பொழுது நாம் அங்கு வந்து ஆட்கொள்வோம் என்று கூறி அருளினார்.

அவ்வாறே தேவாசுரப்போரில சூரபதுமன இறுதியில் மாமரமாக நிற்க, ஞானவேலால் அம்மரததை முருகன் இரு துண்டாக்கினாா. சூரன் மயிலாகவும் பதுமன் சேவலாகவும் வடிவெடுத்து முருகப் பெருமானைத் தாங்கும் பேற்றையும், சேவற் கொடியாகத்திகழும் பேற்றையும் பெற்றார்கள். சு.சு.

சூரிச்சு சுவிட்சர்லாந்து நாட்டின் வடக்கிலுள்ள மாநிலம். தலைநகரின் பெயரும் சூரிச்சு (Zurich). சூரிச்சு மாநிலத்தின் பரப்பு 1730.1 ச.கி.மீ. மக்கள் தொகை 1,122, 839 (1983). இதன் தெற்கில் சூரிச்சு ஏரியும், வடக்கில் மேற்குசெருமனியும் உள்ளன. இது வளமான வேளாண் பகுதி. மனமகிழ்ச்சி தரும் தோட்டங்களும், மரம், செடி, கொடிகளும், புல் தரைகளும், காடுகளும் இங்கு உண்டு. இயந்திரம், உலோகம், ஆடைகள் முதலியன உற்பத்தி செய்யும் தொழில்கள் நடைபெறுகின்றன.



சூரிச்சு

தலைநகர் சூரிச்சு பொருளாதாரத் துறையிலும், வாணிகத்துறையிலும் அறிவாற்றல் துறையிலும் சிறப்புற்று விளங்குகிறது. செருமானிய மொழி பேசும் சுவிட்சர்லாந்து நாட்டுப் பகுதிகளுக்குச் சூரிச்சு ஒரு தலைமைக் கேந்திரல், இதன் வரலாற்றுச் சிறப்பும் குறிப்பிடத்தக்கது. உரோமானியர் இதை கி.மு. 58-ஆம் ஆண்டில் கைப்பற்றினர். உரோமானியப் பேரரசின் வீழ்ச்சிக்குப் பிறகு இங்குப்பிராங்கியர் முதலிய படையெடுப்பாளரின் மேலாண்மை ஏற்பட்டுப் பிறகு கி.பி. 1218-இல் இது ஒரு சுதந்திரப் பேரரசு நகராகியது. இது கி.பி. 1351-இல் சுவிசுக் கூட்டரசைச் சேர்ந்தது. (Swiss Confederation). சமயப் புரட்சிக் காலத்தில் கி.பி. 16-ஆம் நூற்றாண்டில் இங்கு, சுவிங்கிளி (Zwingli) என்பவர் ஒரு புதிய மதத்தை உருவாக்கினார். இக் காலத்தில் பல்வேறு துறைகளிலும் சூரிச்சு முன்னணியில் உள்ளது. தெ.பா.

**சூரிநாம்**: இது தென் அமெரிக்காவில் உள்ள தச்சு (Dutch) குடியேற்றமாகும். இது 1975-இல் ஒரு குடியரசாகியது.

சூரிநாம் (Suriname) நாட்டை முதன் முதல் 1498-இல் கிறித்தபர் கொலம்பசு கண்டுபிடித்தார். இது கி.பி. 1650-இல் ஆங்கிலேயரின் குடியேற்றமாகியது. அடுத்த மூன்று நூற்றாண்டுகளில் ஆங்கில,தச்சு (Dutch) ஆட்சிகளின்கீழ் இது மாறி மாறி இருந்து வந்தது. இறுதியாக 1954-ஆம் ஆண்டு நெதர்லாந்தின் சுயேச்சைப் பகுதியாக இது ஆயிற்று.

இங்கே இராணுவ ஆட்சி 1980-ஆம் ஆண்டு ஏற்பட்டது.தேசிய இராணுவமன்றம் ஆட்சியை அமைத்தது. இன்று வரை இவ்வாட்சி செவ்வனே நடந்து வருகிறது. இது உலக உற்பத்தி நாடுகளில் மூன்றாம் இடத்தை வகிககிறது. அலுமினியம் உறபத்தித் தொழில இந்நாட்டின் சிறந்த தொழிலாகும. இந நாட்டில் சிறு சிறு தொழிலகளுக்கும் சிறப்பு அளிக்கப் படுகிறது.

மககளில் 3 விழுக்காட்டினர் வேளாண்மை செய கின்றனர். ஆனால, சர்க்கரை, அரிசி, பழங்கள்,காப்பி முதலியவற்றில் இது தன்னிறைவு அடைந்துள்ளது. மரத் தொழிலிலும இது சிறந்து விளங்குகிறது. தச்சு அரசின ஆதரவும் இதற்குப்பெருத்தஅளவில் உளளது. அமெரிக்காவுடன் இது நெருங்கிய உறவு வைத்துள்ளது.

இங்கே வாழும் மக்களில் பெரும்பாலோர் கிறித்தவர், இந்துக்கள், இசுலாமியர், தச்சு, ஆங்கிலம், சாவா, இசுபானிய மொழிகள் அரசு மொழிகள. இதனுடைய காகித நாணயம'சூரிநாம்கிலடர்' என்று குறிக்கப்படுகிறது. நாட்டின் பரப்பு 163820 ச.கி.மீ. மக்கள்தொகை 354 860 (1980). கே.சே.

**சூரியகாந்து திரிபாடி நிராலா** என்பவர்வங்க மொழியைத் தாய் மொழியாகக் கொண்ட இநதிக் கவிஞராவார். வங்காளத்தில் 'மேதினிபூர்' எனனுமிடத்தில் பிறந்தார். இவர் தந்தை இராமசகாய் திரிபாடி ஆவார். நிராலா இளமையிலேயே கவிதை ஆர்வம் கொணடிருந்தார். முதலில் வங்க மொழியை நனகு கற்றுத் தோந்து அம்மொழியிலேயே கவிதைகளை எழுதத் தொடங்கினார். பின்னரே, அவர் இந்தி மொழியைக் கற்றுத் தேர்ந்தார. துளசிதாசின் இராமாயண மகாகாவியத்தைப் படித்து மகிழ வேணடும் என்னும் ஆர்வம் காரணமாக இவர் இநதி மொழியைக் கற்றார் என்பது கூறப்படுகின்றது. பாரதப் பண்பாட்டிலும், இந்துமதக் கோட்பாடுகளிலும் ஈடுபாடு கொண்ட நிராலா சிறிது காலம் இராமகிருட்டிண மடத்தைச் சார்ந்த அத்துவைத ஆசிரமம் நடத்தி வந்த 'சமன்வய்' என்னும் பத்திரிகையின் ஆசிரியராகவும் பணியாற்றினார்.

நிராலா கருணை உளளமும், நாட்டுப் பற்றும், முற்போக்குச் சிந்தனைகளும் கொண்ட தத்துவ ஞானியாவார். விதவா், 'பிட்சுகு' என்னும் கவிதைகளில் அவருடைய கருணை உளளத்தையும், 'சாகோபிர் ஏகுபார்' என்னும் கவிதையில் அவர்தம் நாட்டுப் பற்றையும், தோடுதி பத்தர், 'குகுர்முத்தா' என்னும் கவிதைகளில் ஏழைகளுக்காகக் குரல் கொடுக்கும் முற்போக்குச் சிந்தனைகளையும் காணலாம். கவிதைப் படைப்புகளேயன்றி நிருபமா, அளகா, சோட்பு கி பகடு போன்ற புதினங்களையும், சாபுகு பிரபந்து பதும பிரபந்து பிரதிமா என்னும் உரைநடை நூல்களையும், 'பந்த் அவுர் பல்லவ் என்னும் திறனாய்வு நூலையும் எழுதித் தமக்கிருந்த பரந்துபட்ட இந்திமொழி இலக்கிய வளத்தினைப் புலப்படுத்தியுள்ளார். 'பரிமள', 'அனாமிகா', 'கீதிகா' என்பன இவர்தம் கவிதைப் படைப்புகளில் சிறநதன. 'துளசிதாசு' கவிஞரின மிகச் சிறந்த காவியப் படைப்பாகும.

நிராலா என்னும் பெயருககுத்தக கவிஞர் தம் கவிதைப் படைப்புகளிலும் தனித்துவத்தைக் கையாண்டார். இவர் காலம்வரை வடமொழியைப் பின்பற்றி வந்த இந்திமொழி யாப்பிலக்கண விதி முறைகளை இவர்மாற்றியமைத்தார். வசன கவிதை (Blank Verse) என்னும் புது யாப்பு முறையை இந்தி மொழியில் தோற்றுவித்து அதில் வெற்றியும் கண்டார். நிராலாவுக்குப் பின்னர் வந்த கவிஞர்கள் பலர் மரபுக் கவிதைகளை விடுத்துப் புதுக்கவிதைகளைப் படைத்துத் தந்தமைக்கு இவருடைய கவிதைகள் அடிப்படையாக அமைந்தன. நிராலா 1961-இல் காலமானார். இரா.செ.

**சூரிய நாராயண சாத்திரியார், வி.கோ. (பரிதிமாற் கலைஞன், கி.பி. 1870-1903)**: இவர் தாம் வாழ்ந்த முப்பத்து மூன்று ஆணடுகளுக்குள் பற்பல படைப்புகளையும் சோதனை முயற்சிகளையும் செய்து தமிழுக்குத் தொண்டாற்றியவர்.

மதுரைக்கு அருகேயுள்ள விளாச்சேரி என்னும் சிற்றூரில் கோவிநத சாத்திரியாரின் மகனாக கி.பி. 1870-இல் பிறநதார். தநதையிடம் வடமொழியும் மகாவித்துவான சு. சபாபதி முதலியாரிடம் தமிழும் பயின்றார். சென்னைக் கிறித்தவக்கல்லூரியில் பயின்று, கி.பி. 1892-இல் பி.ஏ. தேர்வில், தமிழிலும்,



சூரிய நாராயண சாத்திரியார்

வேதாந்த தத்துவ சாத்திரத்திலும் பல்கலைக் கழகத்தில் முதல் மாணாக்கராகத் தேறினார்.

கிறித்தவக் கல்லூரியில் தமக்குத்தரப்பட்ட தத்துவ ஆசிரியர் பதவியை மறுத்து, கி.பி. 1893-இல் தமிழாசிரியர் பதவியை விரும்பி ஏற்றார்; கி.பி. 1895-இல் தலைமைத் தமிழாசிரியரானார்; பேசும் போதும் செந்தமிழ் நடையையே கையாண்டார். அருமையான பல செய்திகளை, அழகிய நடையில் சுவைபடக் கூறியதால தமிழைப் பாடமாக எடுக்காத மாணவர்கூட இவர் வகுப்பில் அமர்ந்து பாடம் கேட்டார்கள். ஆக்சுபோர்டு பல்கலைக் கழகத்தில் தமிழ்ப் பேராசிரியராகப் பணியாற்ற அழைப்பு வந்த போது மறுத்துவிட்டார். தமிழில் ஈடுபாடு கொண்ட மாணவர்க்கு 'இயற்றமிழ் மாணவர்' எனப் பெயர் சூட்டித் தம் இல்லத்திலேயே இலவசமாகத் தமிழ் கற்பித்தார்.

தமிழ, வடமொழி, ஐரோப்பிய மொழிகளில் கூறப்பட்டுள்ள நாடக இலக்கணங்களை ஆராயந்து 'நாடகவியல' என்னும் நாடக நூலை இயற்றினார். 'உருபாவதி அல்லது காணாமற்போன மகள்,' 'கலாவதி' போன்ற நாடகங்களை இயற்றி, மேடையேற்றி, தாமே 'கலாவதி'யாகவும் 'உருபாவதி'யாகவும நடித்தார். 'அங்கம்' எனும் நாடக வகைககு எடுத்துக காட்டாக 'மான விசயம்' என்னும நாடகததை இயற்றினார். இது, தமிழில் கவிதையால இயனற முதல் அவல நாடகமாகும்.

ஈரேழ்வரிப்பா (Sonnet) வகையைச் சார்ந்துதாம் இயற்றிய பாடல்களைத் தொகுத்துத் 'தனிப்பாசுரத் தொகை'யாகப் 'பரிதிமாற் கலைஞன்' என்ற புனை பெயரில் வெளியிட்டார். சூரிய நாராயண சாத்திரி என்னும் தமது வடமொழிப் பெயரைத் தனித்தமிழப் பெயராக்கிப் 'பரிதிமாற் கலைஞன்' என இவர் வைத்துக் கொண்டார். தம் வடமொழிப் பெயரைத் தமிழ பெயராக்கும முயற்சியில் இவர் முன்னோடியாகத் திகழ்கிறார். தனிப்பாசுரத் தொகையினைப் போப்பு ஆங்கிலத்தில மொழிபெயர்த்து வெளியிட்டார். ஆராய்ச்சி முறையை மேற்கொண்டு 'தமிழ் மொழியின் வரலாறு' எனனும மொழி நூலை இயற்றினார். தமிழில், தமிழமொழி பற்றிய ஆராயச்சி உணர்வோடு எழுதப்பட்ட முதல் நூல் இதுதான.

சி.வை. தாமோதரம் பிள்ளையின் வேண்டுகோளுக்கிணங்கி, முழுவதும் உயரிய செந்தமிழ நடையில் 'மதிவாணன்' என்ற புதினத்தைப் படைத்தார். எம். எசு. பூரணலிங்கம் பிளளையுடன் இணைந்து 'ஞானபோதினி' இதழுக்கு ஆசிரியராக விளங்கினார். சித்திரகவி விளக்கம், பாவலர் விருநது, தமிழ்ப் புலவர் சரித்திரம், தமிழ வியாசங்கள, சிரீ மணிய சிவனார் - சரித்திரம் ஆகிய நூல்களையும இயற்றினார். கலிங்கததுப்பரணி, நளவெணபா ஆகிய நூல்களைப் பதிப்பித்தார். மதுரைத் தமிழ்ச் சங்கத்துடன நெருங்கிய தொடர்புடையவராதலால் 'செந்தமிழ்' முதல் இதழில 'உயர்தனிச் செம்மொழி' என்ற கட்டுரை எழுதினார். 'உயர் தனிச் செம்மொழி' (Classical Language), 'தகுந்தவை தங்கி நிறறல்' (Survival of the Fittest) போனற பற்பல கலைச் சொறகளையும் படைத்தார

கல்லூரிப் பாடத்திட்டத்திலிருந்து தமிழை விலக்கி வடமொழியைச் சேர்க்க எடுககப்பட்ட முடிவு, 1902-ஆம் ஆணடு இவரது பெருமுயற்சியால் தடுக்கப்பட்டது. இன்றேல தமிழ்மொழி கல்லூரிப் பாடத திட்டத்திலிருநது நீக்கப்பட்டிருக்கும்.

கல்லூரி ஆசிரியர், புலவர், நாடக ஆசிரியர், நடிகர் ஆராய்ச்சியாளர், பத்திரிகையாளர், பதிப்பாசிரியர் எனப் பல தன்மைகளில் உழைத்த இவர், 1903-ஆம் ஆண்டு காலமானார். வி.எஸ்.கோ.

**சூரியன்:** உலகம் முழுவதிலுமுள்ள மககள மிகத்தொன்மைக் காலத்திலேயே சூரியனைத் தெய்வமாகக் கருதி வழிபட்டு வந்துள்ளனர். இநதியர்கள், எகிப்தியர்கள், சுமேரியர்கள, கிரேக்கர்கள, அசுதக்கு மக்கள, மாயா இந்தியர், இனகா இந்தியர் போன றோர் சூரியனைக் கடவுளாகக் கருதி வழிபட்டனர். சூரியன் மக்களின் மீது சினம் கொணட காரணத்தாலேயே சூரிய கிரகணம் ஏற்படுவதாக இவாகளுள் பலர் கருதினர். சூரியனை வழிபட்டால் சினம் நீங்கும் என்பதைக் கருத்திற கொண்டு இம்மக்கள வழிபடத் தொடங்கினா. கிரேக்கர்கள் சூரியனைக் கீலியோசு (Helios) என்றும் அப்பல்லோ என்றும் கூறினர்; அவர் வானததின மேகக் கூட்டங்களூடே தம் தேரைக் கிழக்கிலிருந்து மேற்காக ஓட்டிச் செல்

வதாக இவர்கள் கருதினர். எகிப்தியர்கள் சூரியனை இரீ (Re) என்னும் பெயரால் குறித்தனர். சூரியன் தோன்றுவதை வைத்து மிகப் பழங்கால மக்கள் நேரததைக் கணக்கிட்டனர். சூரியனின் ஒளிக் கோட்டை வைத்து நேரத்தைக் கணக்கிட இங்கிலாந்தில் வசித்த தொன்மையான மக்கள் இசுடோன் எஞ்சு (Stone henge) என்னும் சின்னத்தை எழுப்பினர். சூரியனை இன்றளவும் வழிபட்டு வரும் மக்கள நாள்களின் பெயர்களிலும் சூரியனின பெயரை வைத்துள்ளனர். தமிழர்கள் ஞாயிறு என்று வாரத்தின் முதல் நாளைக் கூறுகின்றனர். சூரிய வழிபாடு பொதுவாக வேளாண்மைத் தொழில் செய்யும் மக்களிடம் இன்றளவும் உள்ளது. பண்டைய அரசர்கள தங்களது குலம் சூரிய குலம் என்றும், தாங்கள் சூரிய வம்சத்தின வாரிசுகள் என்றும் கருதினர். சப்பானியர்கள் தம் அர்சர்கள சூரியனின் வழிவந்தவர்களாகவே கருதினர். இந்திய அரசர்களுள் பலர் தங்களைச் சூரிய குலததில் உதித்தவர்கள் என நம்பினர்.



சூரியன்

இந்து சமயத்தின் அறுவகை வழிபாட்டு மரபுகளுள் சூரிய வழிபாடும் ஒன்று. இதனைச் சௌரம் எனறு குறிப்பிடுவர். ஒவ்வொரு வழிபாட்டு மரபிலும் ஓர் இறைவன் பரம்பொருளாகக் கருதப்படுவான். சூரிய வழிபாட்டு மரபில் சூரியன் பரம்பொருளாக, முழுமுதற் பொருளாகக கருதப்படுகிறார். சூரியனைப் பரம்பொருளாகக் கருதி வழிபடுவோர் சௌரர் என வழங்கப்படுவர். ஆதிசங்கரர் கி.பி. 7-ஆம்நூற்றாணடில சௌரமதத்தை நிறுவினார்.

வேதகாலத்தில் சூரியன் எல்லையற்றதைக் குறிக்கும் ஆதித்தர்களுள் ஒருவராக, ஆதித்தியாவின் மக்களுள் ஒருவராகக் குறிப்பிடப்பட்டுள்ளார். சூரியன், மித்திரன் (இந்தோ-ஈரானியக் கடவுள்), ஆரியமான் (நண்பர்), பகன் (செல்வமளிப்பவர்), வருணன் (துறக்க உலகின் மேலான கடவுள்-மழையை அளிப்பவர்), தக்கன் (அறிவு), கம்சம் (பகுதி) போன்றவர்கள் ஆதித்தர்கள ஆவர். வேதங்கள் சூரியனைச் சாவித்திரி (அனைத்தையும் தூண்டுபவள் அல்லது உதிக்கின்ற, மறைகின்ற சூரியன்), பூசன் (நலன் பயக்கும் ஆற்றல்), பகனன (செல்வத்தை அளிப்பவன்), விவசுவரன் (வேள்விகளை முதலில் செய்தவன்; எனவே மனித குலத்தின் முன்னவர்), மித்திரன், ஆரியமான், விட்டுணு என்று பல வகைகளில் குறிப்பிடுகின்றன. இருக்கு வேதம் அழகிய இறகுகளையுடைய பறவை எனச் சூரியனைக் குறிப்பிடுகிறது. மேலும் கடவுள்களின் கண் எனவும், அனைத்தையும் பார்ப்பதால் முழு உலகின் ஒற்றர் எனவும் அனைதது இருப்புகளையும் தாங்கி நிற்பவர் எனவும் மனிதர்களின நல்வினை தீவினைகளுக்குச் சாட்சியாக விளங்குபவர் எனவும், அவர்களை உறக்கத்தினின்று எழுப்பிச் செயலில் ஈடுபடச் செய்பவர் எனவும், இயங்குகின்ற, இயககமற்ற அனைத்திற்கும் உயிர் எனவும், மேலோங்கிய ஒளிக்கடவுள் எனவும், சூரியன் வேதங்களில் விவரிக்கப்படுகிறார்.

இதிகாச புராணகாலங்களில் சூரிய வழிபாடு மேலோங்கி இருநதது. சூரிய வழிபாட்டினைக் குறிபபிடும் புராணங்களான பவிடிய புராணம், பிரம்ம புராணம், வராகபுராணம், அக்கினி புராணம் போனறவை சூரியனின் மனைவியர் சமிஞ்ஞை இராஞ்ஞி, பிரபை, தையா, நிக்சுபா, சாயா போனறோர்களைக குறிப்பிடுகினறன. அவை இயமன், சுருத சிரவாசா, சுருதகாமான், மனு, யமுனை, தபதி, பிரபாது, கணபதி, பிங்களபதி முதலானோரைச சூரியனின் மக்களாகக் குறிப்பிடுகின்றன. மேலும், விசுவகர்மாவின் மகளான சமிஞ்ஞையுடன் சூரியனுக்கு நடந்த திருமணத்தை விவரிககின்றன. தன தலைவனான சூரியனின் ஆற்றலைத் தாங்க இயலாது சமிஞ்ஞை தனது நிழலான சாயையைச் சூரியனிடம் விட்டுச் சென்றதாகவும், இந்த ஏமாற்றுச் சாயை சூரியனுக்கு மூன்று குழநதைகளைப் பெற்றெடுத்த தன மூலம உண்மை புலப்பட்டதாகவும், சூரியன தன் மனைவியை வடக்குக் குளிர் பிரதேசத்தில் கண்டுபிடித்ததாகவும் குறிப்பிடப்பட்டுள்ளது. விசுவகர்மன் தன் கையினால் சூரியன உருவாதல் வேணடும் என விரும்புகின்றார். அதனபடி ஒளி ஆற்றல் அற்ற அழகான சூரியனை உருவாக்கித் தன் மகளைச் சூரியனுடன் வாழசசெய்தாா எனப் புராணங்கள கூறுகினறன.

பவிடிய புராணம், சூரிய வழிபாட்டு மரபு சாவகத்தீவிலிருந்து வந்ததாகக் குறிப்பிடுகிறது. மூல்டானில் உள்ள சூரியனார் கோவில் பற்றி யுவான் சுவாங்கு குறிப்பிடுகிறார். கி.மு. 1380-இல் வாழ்ந்த எகிப்திய அரசனான ஒடெப்பு என்பவன் சூரியனே உலக வாழ்க்கையும் ஒளியின் அடிப்படையும் எனக் குறிப்பிடுகிறான். சூரிய வழிபாடு ஈரானைச் சார்ந்தது என்பதறகு அந்நாட்டுச் சூரியக் கோயில்களின் வழிபாடு நடத்துபவர்களாகிய மாகிகள் என்பவர்களே சூரியனின் சிலையை நிறுவத் தகுதியுள்ளவர் என்பதிலிருந்து அறியலாம். இந்தியாவில் சூரியனுக்குரிய தனிக்கோயில்கள் ஒரிசாவில் கோளாரக்கிலும், குசராத்தில் மோத்கராவிலும் (Modhera) காசுமீரத்திலும், ஓசியாவிலும் சூரியனார் கோயிலிலும் உள்ளன.

ஆனந்த கிரி என்பவர் அறுவகைச் சூரிய வழிபாட்டினரைப் பற்றிக் குறிப்பிடுகிறார். உதிக்கும் சூரியனை வழிபடுவோர், மறையும் சூரியனை வழிபடுவோர், நண்பகற் சூரியனை வழிபடுவோர், சூரியனை இம்மூன்று நிலைகளிலும் ஒருங்கே வழிபடுவோர், உயிருள்ள வடிவில் வழிபடுவோர், சூரியனின் கோள வட்டத்தைச்சமயச் சின்னமாக அணிந்து வழிபடுவோர் ஆகியோர் மேற்குறிப்பிடப் பெற்ற அறுவகை வழிபாட்டினராவர். பொதுவில் சௌரர் அனைவரும் செஞ்சந்தனத்தை நெறறியிலும், செம்மலர் மாலையைக் கழுத்திலும் அணிவர். காயத்திரி மந்திரத்துடன் எட்டெழுத்தை ஓதிச் சூரியனை வழிபடுவர்.

சூரிய வழிபாடு கி.பி. 12-ஆம் நூற்றாண்டிற்குப் பின் சூரியனுக்குரிய, தனித்தன்மையை இழநது நவக்கிரக வழிபாட்டில் ஒன்றாக அமைந்தது. கிழமை ஞாயிறு ஆகும். ஆவணி மாதத்திய சிம்ம இராசியைச் சூரியன் தனது இருப்பிடமாகக் கொணடுளளதால், அத்திங்களில் வரும் ஞாயிற்றுக் கிழமைகள சூரிய வழிபாட்டிற்குச் சிறநததாகும். அனைத்துக் கோயில்களிலும் சூரிய வழிபாட்டிற்குப் பின்னர்த்தான் ஏனைய வழிபாடுகள நடத்தப்பெறுகின்றன. சூரிய இயக்கத்தைக் கொண்டே நாள்கள் கணக்கிடப்படுகினறன. அதன் ஒளியே அனைத்துயிர்களுக்கும் அடிப்படையாகும். தைத்திங்கள் முதல நாள் சூரியனின இருப்பிடம் மாறுவதால் அதனை வடநாட்டில் சஙகராந்தி என்றும் தென்னாட்டில் பொங்கல் என்றும கருதி வழிபடுகின்றனர். மயூரன் என்ற கவிஞன சூரிய சதகம் பாடிக் கண் பெற்றான் எனக் கூறப்படுகிறது. அச்சதகம் நீகச்சபேசுவரர் கோயிலில் உள்ள கல்வெட்டிற் காணபபடுவதாயும், சூரிய தீர்த்தம் ஒன்றிருப்பதாயும் வரலாறு அறிவிககிறது. அநதச் சதகமும் அப்பய்ய தீட்சிதர் செய்த ஆதித்திய தோத்திர இரத்தினமும், அகத்தியர் செய்த ஆதித்திய இருதயமும் வடமொழி நூல்களாகும்.

குசான அரசர் கனிசுகரே இந்தியாவில் சூரியனுக்கு முதன்முதலாகக் கோயில் கட்டினார். தனிக் கோயில்களைத் தவிர்த்துப் பஞ்சாயதனக் கோயிலகளில் சூரியன இடம் பெற்றார். பஞ்சாயதனக் கோயில்களில் நடுவில் சூரியன் கோயிலும் அதன் நான்கு திசைகளிலும் கணேசன், திருமால், தேவி, சிவன் ஆகியோர் கோயில்களும் இடம் பெற்றுவிளங்குகின்றன.

பொதுவாகச் சூரியனின் சிலை தாமரை மலரில் நின்ற நிலையில் வடிக்கப்படும். கைகளில் தாமரை மலர்களும் தலைக்குப்பின்புறம் சூரியப் பிரபையும் காணப்படும். வடஇந்திய சூரியன் சிற்பங்கள் உடல் முழுவதும் ஆடையணிந்து, பாதம் மற்றும் கால்களின் பகுதிகள் உயர்ந்த பாத அணியால் மறைக்கப்பட்டிருக்கும். தென்னிந்தியச் சிறபங்களில் இடுப்பில் மட்டும் ஆடை காணப்படும். சூரியனின் சிலைக்கு முனபுறம் ஒரு சிறு பெண்ணின் வடிவமும், அதன் பின்புறம் சூரியனின் தேரோட்டியான அருணன் வடிவமும் அமைக்கப்பட்டிருக்கும். அருணன் வடிவம் வலக்கையில் சவுக்குடனும், இடக் கையில குதிரையின் கடிவாளத்துடனும் அமைக்கப்பட்டிருக்கும். சூரியனின் தேர் ஒரு சக்கரத்தினால் ஆக்கப்பட்டிருக்கும். ஒன்று அல்லது ஏழு குதிரைகள் அல்லது ஏழு தலைகள கொண்ட ஒரு குதிரையினால் அத்தேர் இழுக்கப்படுவதாக அமைக்கப்பட்டிருக்கும். சூரியனின் வலப்புறம் தாமரை மலர் அல்லது சாமரம் ஏந்திய பணிப்பெண் உருவமும் அதன வலப்புறத்தில் புடைத்த வயிறு, தாடி, கைகளில எழுதுகோல், எழுதுமைப்புட்டி ஆகியவற்றைக் கொண்ட வடிவமும், அதன் வலப்புறம் அம்பு எய்யும் நிலையில் ஒரு பணிப் பெண்ணின் வடிவமும் அமைக்கப்படும். சூரியனின் இடப்புறத்திலும் இவவடிவங்கள் காணப்படினும்ஆணின் வடிவம் தாடியற்றும், கையில் வாள் ஏந்தியும் காணப்படும். ஏனைய அனைத்து வடிவங்களும் பாத அணிகளுடன் காணப்படும். இவற்றைத் தவிர்த்துப் பதினோரு சிறு சூரிய வடிவஙகள் பக்கத்திற்கு ஐவராகவும் சூரியனின் தலைக்கு மேல் ஒருவராகவும் அமைக்கப் பெற்றிருக்கும். மச்ச புராணம் தண்மை, பிங்களை ஆகியோரைச் சூரியனின் பணிப்பெண்களாகக் குறிப்பிடுகிறது. கைகளில் வாளேந்திய நிலையில் இப்பெண்கள காணப்படுவர். சில சமயங்களில் எழுதுகோலுடன் பிரமனின் வடிவம் சூரியனின் ஒரு பக்கத்தில் காணப்படும். சூரியன கால்களுடன் வடிக்கப்பட்டால் பெருநோய் பிடிக்கும் என்ற ஒரு நம்பிக்கையும் இருந்து வருகிறது. சு.இரா,பி.ஆர்.ந.

துணை நூல்:

Gupta, R.S., Iconography of The Hindus, Buddhists And Jains, Taraporevala Sons & Co Pvt. Ltd, Bombay, 1980.

**சூரியனார் கோயில் ஆதீனம்**: காண்க: திரு மடங்கள

**சூலியன் ஆண்டுக் கணக்கீடு**: உரோமா புரியை ஆண்ட சூலியசுசீசர் (கி.மு. 100-44) ஆண டுக் கணக்கீட்டில் சில சீர்த்திருத்தங்களைச் செய் தார். இத்திருத்தங்களால் கணக்கீட்டில் இருந்த பல குழப்பங்கள் நீக்கப்பட்டன. ஆகவே, கி.மு. 46-ஆம் ஆண்டைக் 'குழப்பங்களின் இறுதியாண்டு' எனக் கூறி னர். சீசர், கிரேக்க வான நூல் அறிஞர் சோசிசினிசு (Sosigenes) என்பவரின் கருத்தின்படி ஆண்டுக் கணக் கீட்டில் இசசீர்திருத்தங்களைச் செய்தார். அப் பொழுது முதன்முறையாக, இளவேனிற் காலத்தில் பகலும் இரவும் சமமாக இருக்கும்போது, கதிரவன் நிலக் கோட்டினைக் கடந்து செல்லும் நாளை (Vernal Eqvinox) மார்ச்சுத் திங்கள் 25-ஆம் நாள், எனக் குறித்தனர். அதற்காக 85 நாள்களைத் தங்கள் ஆண்டுக்கணக்கில் சேர்த்து, ஓர் ஆண்டுக்கு 365 நாட் கள் என முடிவு செய்தனர். அவர்கள் கதிரவன ஆண்டு 365.25 நாள்கள் என அறிந்தமையால் நானகு ஆணடுக்கு ஒருமுறை ஒருநாளைக் கூட்டினர். சூலியசு சீசர், புத்தாணடுத் தொடக்கத்தையும் சனவரித் திங்கள் முதல் நாளாக மாற்றினார். அந் நாளில உரோமின் அதிகாரிகளும் பதவி ஏற்றனா. சூலியன் ஆண்டுக் கணக்கீடு கி.மு. 45-ஆம் ஆண்டு, சனவரித் திங்கள் 3-ஆம் நாள் முதல் தொடங்கியது. அதற்கு முன்னர், ஓர் ஆண்டு மதியைக் கணக்காக வைத்து 10 திங்களகள உடையதாக இருந்தது. முதல் மாதம் மார்ச்சு ஆக இருந்தது. இலத்தீன மொழியின் எண்ணிக்கையின் பொருளபடி அகடோபர், நவம்பர், திசம்பர் முதலிய மாதங்கள 8,9,10-ஆம் மாதங களாக இருந்தன. இவ்வேற்றுமை சூலியன் கணக்கீட் டில களையப்படவில்லை. அதனால திசமபர் மாதம் 12ஆம மாதமாக மாறியது. பு.எ.மோ.

**சூலு பழங்குடி**: தென் ஆப்பிரிககாவில வாழும் வரலாற்றுச் சிறப்புமிகக பழங்குடியினர்


சூலு பெண்கள்


சூலு ஆண

தென் ஆப்பிரிக்க வரலாற்றில் குறிப்பிடத்தக்க பங்கினைச் சூலு (Zulu) பழங்குடியினர் பெற்றுள்ளனர். இவர்கள் பல நூற்றாண்டுகளாகத் தமக்கென்று அரசினை அமைத்து ஆட்சி செய்து பழங்குடிகளின் பண்பாட்டில் சிறப்பிடம் பெற்றவர்கள். இவர்களுடைய அரசைத் தோற்றுவித்தவன் சக்கா (Shaka) என்னும் திறமைமிக்க படைத்தலைவனாவான். இவன் குறுகிய காலத்தில், அதாவது கி.பி.1787 முதல் கி.பி. 1828 வரை, இப்போது நேட்டால் (Natal), குவாசுலு (Kwazulu) ஆகிய பகுதிகளில் வாழ்ந்த நூற்றுக்கும் மேற்பட்ட தென்கிழக்குப் பகுதி மக்களான இங்குனிக் (Nguin) குலத்தவர்களை ஒன்று சேர்த்து ஆட்சியமைத்தான். இங்குனிக் குலத்தவர்கள் தென் ஆப்பிரிக்காவிற்கு கி.பி. 10ஆம் நூற்றாண்டு முதல் கி.பி. 14-ஆம் நூற்றாண்டு வரையிலான காலத்தில் வந்திருக்கலாம் எனக் கருதப்படுகிறது. இம்மக்கள் ஆயர் குடிகளின் வழி வந்தவர்கள்.

சக்கா ஆட்சி செய்த காலம் பத்தே ஆண்டுகளாயினும் அவன் அமைத்த அரசு அறுபது ஆண்டுகளுக்கும் மேலாக நிலைபெற்றிருந்தது. அவர்களது அரசு அண்டைய குடியேற்ற வெள்ளையர்களுக்கு அச்சுறுத்துவதாகவே இருந்தது. சக்கா தன் ஒன்று விட்ட சகோதரன் திங்கேன்(Digane) என்பவனால் கி.பி. 1828-இல் கொலை செய்யப்பட்டான். அதன் பின்னர் 10ஆண்டுகளில் வெள்ளையர்களின் மேலாண்மையால் அவர்களின் அரசுக்கு அச்சுறுத்தல் ஏற்பட்டது. கிழக்குமாகாணங்களில் வாழ்ந்து வநத போயர் (Boer) வேளாண்மக்கள வெள்ளையர்களின் இனச்சார்புடைய கொள்கைளையும அவர்கள் ஆட்சி ஏற்படுத்திய மாகாணங்களையும் எதிர்த்து அங்கிருந்து கிளம்பிவிட்டனர். அவர்களுள்ஒருகுழுவினர் திங்கேனிடம் சென்று தங்கள் வாழ்விற்குத் தனிநிலம் கொடுக்குமாறு கேட்டனர். அவர்களிடையே இருந்த படைக் கருவிகள, ஆயுதங்கள் ஆகியவற்றைக் கண்ட திங்கனே அவர்களின் தலைவனையும் அவனது குழுவினருள் பெரும்பான்மையோரையும் கொன்றுவிட்டான். ஆனால் ஓர் ஆண்டிற்குப்பின் கி.பி. 1838-இல் போயர்கள சூலுப்படையினரை வெற்றி கொண்டுவிட்டனர். இந்தப்போரில் திங்கனேவின் சகோதரன் இம்பாண்டே (Mpande) 17,000 பேருடன் தப்பிச்சென்று, போயர்களிடம் அணுகிச் சூலுமக்களின் தலைவனாகத் தன்னை ஏறறுக் கொள்ளுமாறு வேண்டிப் பின் ஒப்புதலும் பெற்றான்.

சக்கா அமைத்த சூலு மக்களின் மரபு வழியிலான அரசினை இம்பாணடே நிலைநாட்டினான. அதன் பின்னர் வெள்ளையர்களுக்கும் சூலு மக்களுக்கும் பல காலகட்டத்தில் சண்டைகள் மூணடன. இங்கிலாந்



சூலு குடியிருப்பு

துப் படையினர் கி.பி. 1872-இல் நடைபெற்ற போரில் மிகப் பெரும் தோல்வியை அடைந்தனர். இதில் சண்டையிட்டோர்களுள் 55 வெள்ளையர்களும் 300 பூர்வீகநேட்டால் படையினரும் மட்டுமே உயிர் பிழைத்தனர். தென் ஆப்பிரிக்காவின் தேசிய அரசு 1948-இல் இன ஒதுக்கீட்டுக் கொள்கையுடைய (Apartheid Policy) ஆட்சி முறையை வலுப்படுத்தியது. அதன் மூலம் நீக்கிரோ இனத்தவர்களான சூலு பழங்குடியினர் அவர்களுக்கென்று ஒதுக்கப் பட்ட நிலப்பகுதிகளில் வாழ வேண்டியதாயிற்று. ஆனால் குடியேற்ற வெள்ளையர்கள் சூலு ஆட்சி முறையில் குறுக்கீடு செய்யவில்லை.

சூலு மக்களின் பொருளாதாரம் ஆயர் வாழ்க்கையையும், வேளாண வாழ்க்கையையும் அடிப்படையாகக் கொண்டது. வேளாண்மை ஒருதுணைத் தொழிலாகவே மேற்கொள்ளப்படுகிறது. இவர்களுக்கு வழங்கப்பட்ட நிலத்தின் அளவு குறைவாக உள்ளதாலும் இவர்கள் பகுதி மண அரிப்பு மிகுதியாக உள்ள பகுதியாக இருப்பதாலும் வேளாண்மையில் மிகுந்த ஈடுபாடு கொள்ளாமல உள்ளனர். கால் நடைகளை உணவு, பொருள் அனைத்திற்கும் வழி செய்கின்றன.

சூலு பழங்குடியினருள் பல கிறித்தவப் பிரிவினர் உள்ளனர். மரபு வழாத கிறித்தவர்கள் (Orthodox christians), கத்தோலிக்கக் கிறித்தவர்கள், ஆங்கிலிகன் முதலானோர் அப்பிரிவுகளுள் சிலர். கிறித்தவச் சமய நெறிகளுடன் சில மரபுவழி சார்ந்த சமய நெறிகளையும் பெற்றுள்ளனர். திருமணம் பொதுவாகக் குல அடிப்படையில் நிகழ்கிறது. ஒரு குலத்தவர்கள் தம் குலத்தவருக்குள் மணத் துணையைத் தேர்ந்தெடுக்க மாட்டார்கள். மணமகன் வீட்டார் மணப்பெண் பணமாகப் பல கால்நடைகளைத் தர வேண்டும். 'இலாபோலா' (Lobola) எனப்படும் இந்தப் பரிசைக்கொடுக்காத எந்த ஒரு மணமகனும் முறைப்படி திருமணம் செய்துகொள்ள முடியாது. இவர்களிடையே பலமண முறையும் உண்டு.

ஒவ்வொரு குலத்திலும் பல குடும்பங்கள் உள்ளன. ஒருவர் உதவி பெறவிழையும்போது முதலில் தம் குலத்தவரையே அணுகுவர். பின்னரே அடுத்த குலத்தவர்களை அணுகுவர். பிறப்பு, திருமணம், இறப்பு ஆகிய சடங்குகளில் விலங்குகளைப் பலியிடும சடங்கு முதன்மை பெறுகிறது.

இவர்களின் புராண நம்பிக்கைகளின்படி இரு வகை நோய்கள் மட்டுமே உள்ளதெனக் கூறுவர். ஒன்று இயற்கை நோய்கள் ('உம்குலேன்'). இவ்வாறான நோய்கள்மிக எளிதாக குணப்படுத்தப்படும் இயல்பின. மற்றொன்று சூலு மக்கள் மட்டுமே அறிந்துகொள்ளக்கூடிய கடுமையான நோய்கள் ('உக்குபா குவாபண்டு') ஆகும். இது மனிதர்களிடையே நிலவும் உறவுகளில் முரண்பாடுகள் ஏற்பட்டாலும் அண்ட அமைப்பில் ஏற்படும் மாறுதல்களாலும் உண்டாகும் என நம்புகின்றனர். இவர்கள் மூதாதையர்களை மதிக்கின்றனர். ஒருவரின்மீது மற்றொருவர் சூனியம் முதலான செயல்களைச்செய்வதில்லை. இன்றைய சூலு பழங்குடியினர் நகரங்களில் பெருமளவு வாழ முற்பட்டுள்ளனர். இருப்பினும் இவர்கள் பொருளாதார நிலையில் மிகுந்த வளர்ச்சியடையாதவர்களாக உள்ளனர். சீ ப.

**சூலூ-கடல்** இந்திய மாக்கடலில பிலிப்பீன் தீவுக் கூட்டத்திற்கு அண்மையில்உள்ளஓர் உட்கடல். மேற்கு-கிழக்கில் இதன் நீளம் ஏறத்தாழ 680 கி மீ. சூலூக்கடலின் (Sulu Sea) அமைவிடம் பாலாவன (Palawan) தீவிற்குக் கிழக்காகவும், வட போர்னியோவுக்கு வடகிழக்காகவும் சூலூத் தீவுக் கூட்டத்திற்கு வடமேற்காகவும், மிண்டனாவோ தீவுக்குக் கிழக்காகவும், பானே (Panay), நீக்ரோசு (Negros) தீவுகளுக்கு மேற்காகவும், கூயோ (Cuyo) தீவுக்குத் தெற்காகவும் உளளது. தெ.பா

**சூலூத் தீவுகள்:** சூலூத்தீவுகள் நூற்றுக் கணக்கான சிறு தீவுகளையுடைய ஒரு தீவுக் கூட்டமாக விளங்குகின்றன. இவை மிண்டானோ, போர்னியோ தீவுகளுக்கு இடையில் 320 கி.மீ. தொலைவிற்குப் பரவியுள்ளன. சோலோ (Jolo) என்னும் தீவு இத்தீவுக் கூட்டத்தில் உளள மிகப் பெரிய தீவாக உள்ளது. இத்தீவுக் கூட்டத்தின் தலைநகரமும் இதுவேயாகும். சூலூத் (Sulu) தீவுகள் 1738 கி.மீ. பரப்பளவு கொண்டவை. இவை பிலிப்பீன்சு நாட்டின் ஒரு மாநிலமாக இப்போது விளங்குகினறன.

சூலூத் தீவுகளில் வேளாண்மையும் மீன் பிடித்தலும் முதனமைத் தொழில்களாக நடைபெறுகின்றன. நெல், காப்பி, கோகோ, பருத்தி, சணல், அவுரி, எள், குங்குமப் பூச்செடி முதலியவை பயிரிடப்படுகின்றன. நெல் போதுமான அளவிற்குப் பயிரிட முடியாததனால் அரிசி சிறிதளவு. இறக்குமதி செய்யப்படுகிறது. குதிரை வளர்த்தல், ஆடுமாடு மேய்த்தல் போனற தொழில்களும் நடைபெறுகின்றன. முத்துச்சிப்பிகள இத் தீவுகளிலிருந்து பெருமளவில் வெளிநாடுகளுக்கு ஏற்றுமதி செய்யப்படுகின்றன. கீழ்த்திசை நாடுகளில் கிடைக்கும் மிகச் சிறந்த மரங்கள் இங்குள்ள காடுகளிலிருந்தே கிடைக்கின்றன.

இத்தீவுகளின் பழங்குடி மக்களாகிய கும்பசா னோசு எனப்படுவோர் (Guimbajanos) இங்குள்ள மலைப் பகுதிகளில் வசிக்கின்றனர். மற்ற இடங்களில் மலாய், சாமலே, மோரோ(Moro) இனமக்கள் வசிக் கிறார்கள். மோராக்கள் முகமதியர்கள் ஆவார்கள். மோரோ இன மக்கள் ஐரோப்பியர்கள் இத்தீவு களுக்கு வருமுன் வந்து, இத்தீவுகளை அரசாளத் தொடங்கினார்கள். அங்கிருந்தவர்களில் பலர் கடற் கொள்ளையை முக்கிய தொழிலாகச் செய்து வந்த னர். இக்கடற் கொள்ளையர்கள் சிங்கப்பூர் வரை சென்று கொள்ளையடித்து வந்தனர். இசுபானியர் (Spanish) பிலிப்பீன் தீவுகளை ஆக்கிரமித்த போது ஒரு படையை சோலோ நகரில் நிறுத்தியிருந்தனர். அமெரிக்கர் தொடக்க காலத்தில் (1899) இங்கு ஆக் கிரமிப்புச் செய்தபோது மோரோ இன மக்களுக்கெ திராகப் பலமுறை சண்டையிட்டனர். பின்பு இத்தீவு களின் மீது ஆதிக்கம் செலுத்தினர். ஆனால், சூலூ சுல்தான் அரசாங்கம் நடதத அனுமதி அளிததனர். இத்தீவுகள் 1903-ஆம் ஆணடு மோரோ மாநிலத்தின் ஒரு பகுதியாக இருந்தன. சுல்தான் ஆட்சி 1940-இல் ஏற்பட்ட ஓர் உடன்படிக்கைகள் மூலம் முடிவுற்றுப் பிலிப்பீன்சு பொதுநல அரசின் ஒரு பகுதியாக மாறி யது. பின்னர், இத்தீவுகள பிலிப்பீனசு குடியரசுடன இணைந்தன. இரண்டாம உலகப் போரின்போது 1942-ஆம் ஆண்டு இத்தீவுகள சப்பானியரால கைப் பற்றப்பட்டன. பினபு 1945-இல அமெரிக்கப் படை யினர் மீண்டும் கைப்பற்றிக் கொண்டனர். அமெ ரிக்கா 1947-ஆம் ஆண்டில் புதிதாக நிறுவப்பட்ட பிலிப்பீன்சு குடியரசுடன ஓர் உடன்படிக்கை செய்து கொணடு தாவி-தாவி (Tawi-Tawi)தீவில ஒரு கப்பற படைத் தளம் அமைத்துள்ளது. அ.சி.

**சூவேர்டு முந்நீரகம்**: அமெரிக்காவில் அலா சுக்கா (Alaska)வின் மேற்குப்பகுதியில் பேரிங்கடலை ஒட்டிய பகுதிக்குச சூவேர்டு முந்நீரகம் (Seward Peninsula) என்பது பெயர். இப்பகுதி 320 கி.மீ. நீளத்திற்குப் பேரிங்கடலில் உட்புகுந்துள்ளது. இது நீண்ட குளிர்காலத்தைக் கொண்ட துந்திரா பகுதி மக்கள்தொகை மிகவும் குறைவு. இங்குத் தஙகச் சுரங்க வேலை நடைபெறுகிறது. தெ.பா.

**சூவைடியே** எனபது ஆசியாக் கண்டத்தில் துருக்கியின் தெனகோடியிலுளள சிறுதுறைமுகப் பட்டினம். இது ஓராணடீசு (Orontes) ஆற்றினகழி முகப் பகுதியில் அமைந்துள்ளது. இதற்குப் பக்கத் தில் அலெக்சாந்தரின் தளபதியாக விளங்கிய செலுக் கசு நிகோடாரினால் கி.மு. 300-இல் உருவாக்கப் பட்ட செலூசியா நகர் அமைந்திருந்தது. அது புக ழுடன் விளங்கியபின் கி.பி. 6-ஆம் நூற்றாணடில் அழிவுற்றது. கிரேக்கப் பணபாட்டுப் முறையினைப் பினபற்றிய சுமார் 5000 மக்களைக கொண்டுள்ள சுவைடியே (Suveydiye) நகரம் இப்பொழுது மிகவும் பின்தங்கிய நிலையில் உள்ளது. மா.கா.

**சூழ்நிலை மருத்துவம்** மன நோயாளியின வாழ்வுச் சூழ்நிலைகளையும் நோயாளியின் சுற்றுப புறச் சூழ்நிலைகளையும் மாற்றியமைத்து மருநது தரும் முறையாகும்; மருத்துவமனையினை மருந்து அளிக்கும் சமூகமாக மாற்றி அத்தகைய சூழ்நிலையில மனப் பிணியாளர்களுக்குத் தக்கமுறையில் மருந்து தருவதாகும். சூழ்நிலையை மாற்றுவது என பது நோயாளியை மருத்துமனைக்கு மாற்றுவது அல்லது வீட்டுச சூழ்நிலையை மாற்றியமைப்பது, குழந் தையை உளககாப்பு நிலையஙகளுக்கு அனுப்புவது, சீர்திருத்தப் பள்ளியில் சேர்ப்பது என்பன போனற முறைகளுக்கு மேலான ஒரு செயலாகும். குடும்ப மருத்துவ முறையினின்றும் இது சிறப்பானதாக அமை கிறது. ஏற்றதொரு சூழநிலையினை ஏற்படுத்துவதன மூலமாக மனநோயாளி விரைவில் குணமடைய இம் மருத்துவ முறை வழிவகுககும். மாக்சுவெல சோன்சு (1953) என்னும் ஆஙகில உள மருத்துவர் சூழ்நிலை மருத்துவம் (Milieu Therapy) செயயும் முறையைக் கையாண்டார். இது முழு மருத்துவ முறை, உளப்பகு பாட்டு மருத்துவ முறை, மின் அதிர்சசி முறை ஆகிய வற்றினினறு மாறுபட்டதாகும். பிணியாளா தாம் வாழும் சூழ்நிலைக்கேற்பத் தம்மைத் தகுதிப் படுத்திக் கொளளவும், பிறரோடு நலலமுறையில உறவினைப் புதுப்பித்துககொள்ளவும் தன்னையும் தன்னைச் சார்ந் வர்களையும் காப்பாற்றிக் கொள்வதற்கான உறுதிப் பாடுகளைப் பெறவும் இம்முறையில பயிற்சி அளிக்கப் படுகிறது. இம் மருத்துவ முறை இன்று உளப் பிணியாளர்களைக் குணப்படுத்தும் பல்வேறு நிறு வனங்களில் பயன்படுத்தப்பட்டு வருகிறது. ஜி.இரா.

**சூழமைவுச் சோதனை** தனி ஒருவருடைய குணநலன்களை அறிய உளவியலறிஞர்கள கண்ட றிந்த செயற் சோதனைகளுள் ஒன்றே சூழமைவுச் சோதனை (Situational Test)ஆகும். இயறகையான அல்லது கட்டுப்பாடான சூழ்நிலையில ஒருவனின் நடத்தை எவ்வாறு அமைகிறது எனபதை இச் சோதனை மூலம் அறியலாம். இச்சோதனைக்குச் சிறந்த எடுத்துக்காட்டாக 1928-ஆம் ஆணடு ஆர்ட் சோன், மே ஆகியோர் நடத்திய குழந்தைகள் பற்றிய ஆராய்ச்சியினைக் கூறலாம். அவர்கள் குழந்தைகளி டையே நேர்மை பற்றி ஆராய்நதனர். குழந்தைகள் விரும்பினால் ஏமாற்றக்கூடிய பல சூழநிலைகளை அவர்கள் உருவாக்கினர். அச்சூழல்களில் அககுழந்தை

கள் எவ்வாறு நடந்து கொள்கின்றனர் என்று ஆய்வு செய்தனர். அதனால், ஒரே சூழ்நிலையில் எந்தக் குழந்தைகள் ஏமாற்றவும் பொய் பேசவும் திருடவும் செய்கின்றன; எக் குழந்தைகள் நேர்மையைக் கடைபிடிக்கின்றன என்றும் கண்டுபிடித்தனர்.

அச்சோதனையை இரண்டாம் உலகப்போரின் சமயத்தில் மீண்டும் பயன்படுத்த வேண்டிய நிலை எழுந்தது. அமெரிக்க உளவு நிறுவனத்துள் முன்னோடியாக விளங்கிய நிறுவனம் ஒன்றிடம் (The office of strategic services) அமெரிக்க அரசாங்கம், மிகுந்த நெருக்கடிகளுக்கிடையே இராணுவ இரகசியங்களைப் பாதுகாக்கக் கூடியவர்களைக் கண்டுபிடிக்க வேண்டிய பொறுப்பை ஒப்படைத்தது. பயிற்சி பெற்ற வல்லுநர்கள பலர் நெருக்கடியான சூழமைவுச் சோதனைகள் பலவற்றைப் பயன்படுத்தி அவ வேலைக்கு விண்ணப்பித்தோரைச் சோதனை செய்தது. இதற்கு எடுத்துககாட்டாக அனசுடாசி (1976) கூறும் விளக்கத்தைக் கீழே காணலாம்.

'சோதனைக்குட்பட்ட ஒவ்வொருவரும் மரத்தாலான முளைக்குச்சிகள், கட்டைகள், நீணட கம்புகள ஆகியவற்றைப் பயன்படுத்தி ஐந்து அடி நீளமுள்ள குழாய் ஒனறை அமைக்க வேண்டியிருந்தது. பத்து நிமிடங்களுக்குள் அந்த வேலையினை முடிககுமாறு அவர் பணிக்கப்பட்டார். அவ்வேலையினைக் குறிப்பிட்ட கால எலலைக்குள் ஒருவராலும் முடிகக இயலாதாகையால் சோதனை செய்பவருக்கு இரணடு உதவியாளர்கள தரப்பட்டனர். அவவுதவியாளர்கள சோதனைக்குட்பட்டவர் வேலையில் ஈடுபடும்போது ஏற்கனவே தீர்மானிக்கப்பட்ட குறிப்பிட்ட பஙகை நிறைவேறற வேண்டிய உளவியலறிஞர்களாக இருந்தனர். அநத இருவருள் ஒருவா மநத புத்தியுடன் கடனுககு மாரடிக்கிற கொளகையுடையவராகவும மற்றொருவர் நடைமுறைக்கு ஒவ்வாத கருத்துகளையும் தர்மசங்கடமான கேளவிகளையும் கிணடலும் கேலியுமாகக்கூறும்கொள்கையையும கொணடவராகவும் விளங்கினர். அதனால் அவ்விருவருமே பரிசோதனைக்குட்பட்டவர் எவருமே இறுதிவரை அவ்வேலையை முடிக்க இயலாதவாறு செய்துவிட்டனர்.

மேலும் இலாசரசு (1961), பண்டூரா (1969) ஆகிய உளநோய்நீக்குநர்கள இச்சூழமைவுச் சோதனை மூலமே மூடிய அறைக்குள் தனியாக இருககப் பயம் கொண்ட ஒருவரது பயத்தை நீக்கினார்கள். இவ்வாறாக, சூழமைவுச் சோதனை இயற்கைச் சூழல்களிலும், இராணுவத்திலும், உளநோய் நீக்கு நிலையங்களிலும் பயனபடுத்தப்பட்டது கணகூடு. இரா.பா.

**துணை நூல்கள்:**


Anastasi, A., Psychological testing, Macmillan, New York, 1976.

Hothersall. D., Psychology, Charles E. Merrill Publishing Co., Columbus, 1985.


***சூழற் கல்வி***: கல்வி ஒருவரின் உட்திறன்களை வகைப்படுத்தி வெளிப்படுத்தும் ஒரு கருவியாகும். கல்வியால் ஒருவரிடம் பொதிந்து கிடக்கும் திறன்கள் வரைமுறைப்படுத்தப்பட்டு ஆக்கமும் ஆற்றலும் பெறுகின்றன. முறைசார் கல்வி (Formal Education), முறைசாராக்கல்வி (Non-Formal Education) என்ற கல்வி அமைப்புகளில் அறிவியல கல்வி (Science Education), கணிதக் கல்வி (Mathematics Education), கலைக்கல்வி (Arts Education), இசைக்கல்வி (Music Education), மொழிக் கல்வி (Language Education) என்ற துணை அமைப்புகள் பலவித பிரிவுகளாக இடம்பெறுகின்றன. இன்றைய நடைமுறைப் பாடத் திட்ட நெறியானது செயல திறனோடு கூடியதாக ஒன்றோடு ஒன்று உறவுபட்டதாக, கொள்கையும் செயலும் ஒன்றுக்கொனறு விளக்கம் தருவதாக அமைதல் வேணடும என்பர். இவ்வாறான புதிய போக்குகளைக் கொண்ட ஓர் உள் அமைப்பு சூழற் கல்வி அமைப்பாகும்.

கல்வி அமைப்பு எனப்படுவது பெரும்பாலும் காலம், உட்பொருள், பயிற்றும முறைகள், நிதி நிலைகள், அறிவியல் மேலும் பல துறைகளில் முன்னேற்றம் அடைந்துள்ள கருத்துகள, பகுதிகள் பிற செயல் ஈடுபாடுகள் என்பனவற்றை உள்ளடக்கி ஒன்றின் பால் மற்றதன் தாக்கம் நிறைந்துள்ள ஒரு தன்மையாகும். மாக்சு நிக்கல்சன (Max Nicholson) கூறியது போன்று சூழ்நிலைப் புரட்சியே சூழற்கல்வி (Environmental Education) ஏற்பட ஏதுவாயிற்று எனலாம்.

கல்வி அமைப்பின் பகுதிகளை மூன்று வகைகளாகப் பகுப்பர். மனிதர், நாகரிகம், உயிர்ச் சூழ்நிலைகள் என்ற மூனறின் தாக்கம் வெளிப்படுவது கல்வியின் அமைப்பேயாகும். சூழ்நிலைக் கல்வி இக் கருத்துகளின் மதிப்புகளை அறிந்து, திறன்கள மற்றும் மனப்போக்குகள் சிறக்க வழிவகுககும் ஓர் அமைப்பாகும. மேலும் திறன்களை வளர்ப்பதில் பெரும்பங்கு ஆற்றுகின்றது. இவ்வாறான செவ்வழி மனப்போக்குகளை வளாப்பதால் சுற்றுப்புறத் தரங்களை முடிவுசெய்வதிலும் சுற்றுப்புறத்தை நன்முறையில் பேணவும் இயலுகின்றது.

இங்கிலாந்து நாட்டில் 'உயிர்வாழ ஒரு வரை படம்' (A Blue Print for Survival) என்ற கருத்து 1971-ஆம் ஆண்டு வெளியிடப்பட்டது. மக்கள் தொகைப் பெருக்கத்தால் ஏற்படும் பாதிப்புகள், இயற்கை ஆற்றல்களை மிகுதியாகப் பயன்படுத்துவ தால் சூழும் கேடுகள், சுற்றுப்புற மாசுகள் ஆகியன முற்றிலும் சூழ்வதால் மனித இனத்திற்கு நேரிடும் அழிவுப்பாதை போன்றவற்றை எடுத்துக்காட்டாகக் கொண்டு விழிப்புணர்வைத் தோற்றுவித்தது. இவ் வகைச் சூழ்நிலைத் தாக்கத்தை மக்கள் அறிய வில்லை எனின், அதனால் ஏற்படும் சூழ்நிலைக் கேடுகள், மக்கள் வாழ்வு நலக் கேடுகள், நச்சுச் சூழ் நிலை போன்றவற்றிலிருந்து தப்பித்துக் கொள்ளவே இயலாது. எனவே சூழ்நிலையின்பால் ஒரு நெகிழ வுணர்வு ஏற்படவில்லை எனின், வரும் ஆண்டுகளில் மனிதன் வாழ்வே முடியாத சூழ்நிலை ஏற்பட்டுவிடும் என்பதை உணர்த்தவே சூழ்நிலைக்கல்வி எழுந்தது.

மண்வளம், பலவித மண் வகைகட்கு இடையே யான நெருங்கிய தொடர்பு, தட்பவெப்பநிலை, இயற்கை அமைப்பு, மையநிலை, மணணியல் மற்றும் விலங்குகள் இவைகட்கும் மனித இனத்திற்கும் உள்ள உறவை விளக்க வல்லதாகச் சூழ்நிலைக் கல்வி அமையவேண்டும். இவ்வுலக அமைப்பு, மனித வாழ்க்கை, அறிவியல் முன்னேற்றம் மற்றும் நாக ரிகம் ஆகிய அனைத்துமே இவ்வகையான உறவு களின் அடிப்படையில்தான் அமைந்துள்ளன. இயற் பொருள் சூழ்நிலை (Physical Environment) மனித வாழ்வில் எவ்வாறு அனைத்து இடங்களிலும் நீக்க மற நிறைந்திருக்கிறது என்பதைப் பற்றியும் மனித இனம் இத்தகு இயற்பொருள் சூழலுக்கு என்ன தீங்குகள் செய்துவருகின்றன என்பதைப் பற்றியும் அறிதல் வேண்டும்.

தட்பவெப்பநிலை - பண்ணைத் தொழில் - மக் கட்பெருக்கம் - நகரமயமாக்கல் - மற்றும் தொழில் மயமாக்கல் - தட்பவெப்ப மாசடைதல் - தட்ப வெப்பநிலைமாற்றம் என்ற ஒவ்வொரு நிலையும் அடுத் தடுத்த நிலையின் தாக்கத்தால் மாறுதல் அடைந்து சங்கிலித் தொடர் போன்று, ஒன்றின் தாக்கம் மற்ற தில் அமைந்து மாறுபாடு அடைதல் - எனச் சூழ நிலை முழுவதுமே மாற்றம் அடைகின்றது. எனவே சுற்றுப்புறக் கல்வியின் அடிப்படைக் கருத்துகள் - வழிமுறைகள் - உயிரினச் சூழலியல் (Ecology) அடிப் படையிலேயே அமையவேண்டும்.

அனைத்து அறிவியல் துறைகளுமே சுற்றுப்புறச் சூழ்நிலை அடிப்படையில் அமைந்தவையே தவிர, தனியாக இயங்க வல்லன அல்ல. ஒவ்வொரு சுற்றுச் சூழ்நிலைச் சிக்கலும் ஒரு அறவழிக் கோட்பாட்டின் அடிப்படையில் அனைவராலும் ஒப்புகொள்ளத் தக்க அடிப்படை உரிமைகளைக் கொண்டுள்ளது.

கலை, அறிவியல், கணக்கு, மொழி போன்ற அனைத்துத் துறைகளுமே சுற்றுப்புறத் தாக்கத்தால் விளைந்தவை எனலாம். சுற்றுப்புறக் கல்வியின்பாற் படாத துறையே இல்லை என்று சொல்லும் அள விற்கு அனைத்துத் துறைகளுமே சூழ்நிலைக் கல்வி யின் பகுதிகள் எனலாம். சூழ்நிலை அமைப்பு என்ற பரந்துபட்ட பேரமைப்பின்கீழ், அணு இயற்பியல் (Nuclear Physics) நீண்ட வழிச் சுற்றுப்புற மாசுக ளால் ஏற்படும் கேடுகளையும், உயிரினச் சூழலில (Ecosystem) மனிதனின் நிலை எது என்பது பற்றி யும், பெருகிவரும் மக்கட் பெருக்கத்தில் மனிதனின் நிலை என்ன என்பது பற்றிக் கலையியலும், சமூக அறிவியலும் சமயவியலும் (Religion) காண இய லும். இதற்கு மேலாக உலகச் சிக்கல்களான வறுமை, தேசியச் சிக்கல்களான மக்கள் வாழ்வு நிலையை நேர்ப்படச் செய்தல் மற்றும் மேம்பாடடையச் செய் தல், ஒரு நாட்டுச் சிக்கல்களான நிலச் சீரமைப்பு, மற்றும் பயன்படுத்துதல், தனியாள் சிக்கல்களான செவ்வழிப் போக்குகள் போன்ற அனைத்தையும் உள்ளடக்கியுள்ளன.

சூழ்நிலைக் கல்வியை தொடக்க நிலையில் அளிக்கும்பொழுது சிறுவர்களுக்கு வாழ்வுடன் ஒவ் வொரு அமைப்பிலும் சூழ்நிலை எவ்வாறு அமைந் துள்ளது என்பதை உணரும் அளவில், சூழ்நிலைக் கற்றல் அனுபவங்களை மாணாக்கர்களுக்குத் தருதல் வேண்டும். இதற்கடுத்த நிலையில் சூழ்நிலைக் கல்வி யானது அமைப்புகளைக் (Organization) கூர்ந்து நோக்குவதினின்றும் மேலாகச் சமூகத்தையே உற்று நோக்கும் அளவிற்கு அமைந்திடல் வேண்டும்.

இன்றோ சூழ்நிலையின் பால், நெகிழ்வின்மை, அறிதிறன் இன்மை பெருகிவரக் காணலாம். இவ்வா றான நெகிழ்வின்மையே கல்வியின் அணுகுமுறை களைக் கையாள இயலாமல் செய்து வருகின்றது.

**அணுகு முறைகள்:** 1. சூழ்நிலையில் நாள் தோறும் நிகழ்கின்ற நிகழ்ச்சிகளைக் கருக்களாகக் கொள்ளுதல். 2. சூழ்நிலைக் கருத்துகளின் அடிப் படையில் பாடங்களையும் பயிற்றுதல். 3. சூழநிலைப் போராட்டங்களையும் சிக்கல்களையும் ஒருங் கிணைந்த பகுப்போடு ஆய்தல் போன்ற அணுகு முறைகளைச் சூழலியற் கல்வியில் பயன்படுத்தலாம்.

நேற்றே ஏற்படுத்தியுள்ள சூழ்நிலைக் கோடு களால் இன்று தீமை விளைகிறது.இன்று ஏற்படுத்தப்

படும் சூழ்நிலைக் கேடுகளால் நாளையும் தீமை விளையலாம். இந்நிலையில், விழிப்புணர்வு ஏற்பட, சூழ்நிலைக்கல்வியில் மாணவர்கள் சிறப்புப் பயிற்சி பெறுதல் வேண்டும். எஸ்.மோ.

**துணை நூல்கள்:**


Carson, S. McB (ed.), Environmental Education: Principles and Practice, Arnold, London, 1978.

Linke, R.D., Environmental Education in Australia, Allen and Unwin, Sydney, 1980.


*சூளாமணி*: ஐஞ்சிறு காப்பியங்களில் இரண்டாவதாக வைத்து எண்ணப்படுவது சூளாமணி. ஆசிரியர் தோலாமொழித் தேவர். இவர் சமண முனிவர். தோலாமொழி என்பது காரணப்பெயராக இருக்கலாம் என்று கருத இடமுள்ளது. தமிழ் வரலாறு என்ற நூலை எழுதிய தஞ்சை சீனிவாசப் பிள்ளை, சூளாமணி ஆசிரியரின் இயற்பெயர் சிரீவர்த்த தேவர்; தோலாமொழி அவருக்கு அமைந்த புனைபெயரே என்று குறிப்பிடுகிறார். மைசூரில் உள்ள ஒரு கல்வெட்டும் சூளாமணி ஆசிரியரை சிரீவர்த்த தேவர் என்று குறிப்பிடுகிறது.

சூளாமணி ஆசிரியர், தம் நூலில் 'நூலாராய்ந்து' (308) என்று தொடங்கும் செய்யுளில் 'தோலா நாவின்' என்ற தொடரை எடுத்தாண்டுள்ளதால் அத்தொடரையே சிறப்புக் கருதி இவருக்குப் புனை பெயராக அமைத்திருக்கலாம்.

இந்நூல், தன்மையாலும் காப்பியத் தலைவர் 'உலகின முடிக்கோர் சூளாமணியாயினான்' (2127) எனக் குறிககப்படுதலாலும் இப்பெயர் பெற்றது. சூடாமணி என்ற பெயரும் உணடு. நாட்டுச் சுருக்கம் முதல் முத்திச் சருக்கம் வரை 12 சருக்கங்களும் 2131 விருத்தங்களும் கொண்டது. கார்வெட்டி விசயன் என்னும் பல்லவ் மன்னன் விருப்பத்திற்கிணங்க இயறறப்பெற்று, சேந்தன் தமிழ்க்கிழவன் தலைமையில் அரங்கேற்றப்பட்டது. ஆருகத மாபுராணத்தைத் தழுவியது.

இந்நூல் கி.பி. 10-ஆம் நூற்றாண்டைச் சேர்ந்தது. சிறு காப்பியம் என்று குறிக்கப்பட்டாலும பெருங்காப்பியங்களுக்குரிய இலககணம் பொருந்தியது. சிறு காப்பியங்களில் சொற்சிறப்பு, பொருட் சிறப்பு மிக்கது இக்காப்பியமே. விஞ்சையர் குலமகள் சுயம்பிரபையை மண்ணுலகில் உள்ள பயாபதி மன்னனுடைய இளைய மகன் திவிட்டன் மணந்த கதையைச் சுவையோடு கூறுவது இந்நூல்.

**கருத்துகள்:** காப்பியம் முழுவதிலும் சமண சமயக் கருத்துகள் பயின்று வந்துள்ளன. பயாபதி மன்னனுக்குச் சாரணர் இருவர் 'நல்வினை தீவினை இரண்டும் பிறப்பிற்குக் காரணமானவை. ஒன்று பொன்விலங்கு; மற்றொன்று இரும்பு விலங்கு. அவ் விலங்குகள் ஆன்மாவைப் பிணித்து விடுகின்றன. அவ்விலங்குகளை அருகன் திருவடிகளை வணங்கியே அறுக்க முடியும்' என்று அறிவுறுத்துகின்றனர்.

அரசியல் பற்றிய கருத்துகள் தெளிவாகக் கூறப் பட்டுள்ளன. சடியரசன் தன் மனைவி வாயுவேகையிடம், 'அரசகுலம் அகன்று தழைத்த மரம் போன்றது. அம்மரத்தினைத் தாங்கும் அடிப்பாகம் போன்று விளங்குபவன் ஆண்மையும் அறிவும் நிறைந்த அரசன்' என்று கூறுகிறான். பயாபதி 'ஆட்சி ஓர்எந்திரம். அவ் வெந்திரத்தின் கண், காது, வாய் முறையே அமைச்சர், ஒற்றர், தூதுவர். அவ்வெந்திரம் இயங்குதற்கு இன்றியமையாத பகுதி மெய்யறிவு தரும் அரசியல் நீதி நூல்' என்று சடியரசன் அனுப்பிய தூதுவனிடம் கூறுகிறான்.

திவிட்டன், அச்சுவகண்டன் அனுப்பிய மாயச் சிங்கத்தை வென்ற போது தன்னுடைய வீரச் செயலை எண்ணி வியக்கவுமில்லை, உவக்கவுமில்லை. இது அவனுடைய பக்குவ நிலையைக் காட்டுகிறது.

அச்சுவகண்டன் திவிட்டனை அழிக்க ஏவிய ஆழிப்படை அடாத செயல்புரிந்த அச்சுவ கணடனையே அழிக்கிறது. நன்னெறி அறியான் ஒருவன் நெறிதவறாத ஒருவனைக் குறை கூறினால் அப்பழிச்சொற்கள் குறை கூறியவனையே அழிக்கும் கருவிகளாக மாறும் என்பது இதனால் விளக்கமுறுகிறது.

உடல்வலியும், பகைவரைக் கொல்லும் சூழ்ச்சித் திறனும், இன்ப வாழ்வும், தோற்றப் பொலிவும் இறுதிவரை நிலைத்திருப்பதில்லை. நிலையற்ற செல்வத்தைக் கண்டு செருக்குக் கொள்ளுதல் கூடாது என்னும் தத்துவம் அச்சுவ கண்டன் அழிவால் உணர்த்தப்படுகிறது.

**சிறப்புகள்:** உலகியலும், அருளியலும் சிறப்பாகக் கூறப்படுகின்றன. எல்லோருக்கும் நல்லவராக ஒருவர் நடக்க இயலாது என்னும் உலகியல் 'எங்குளர் உலகுக்கெல்லாம் ஒருவராய் இனிய நீரார்' (1031) என்ற வரியால் உணர்த்தப்படுகிறது. திவிட்டன் எவ்வளவோ சிறப்புகள் பெற்றிருந்தும் செருக்கற்ற திண்ணியனாய் இருந்தமை அருளியலைப் புலப்படுத்துகிறது. இல்லறத்தார் கடமைகளும், துறவியல் ஒழுக்க

மும் நிலையாமைத் தத்துவங்களும் சிறப்பாகக் கூறப் படுகின்றன. சு.சு.

**சூன்சுனு**: இராசசுத்தான் மாநிலத்திலுள்ள சூன்சுனு (Jhunjhunu) மாவட்டத்தின் தலைநகரம். இந்நகரம் வாணிக மையமாக விளங்குகிறது. இங்கு கி.பி. 10-ஆம் நூற்றாண்டைச் சார்ந்த சமணக் கோயில் ஒன்று உள்ளது கம்பளி நெசவிறகு இந் நகரம் புகழ் பெற்றது. இந்நகரத்தின் மக்கள் தொகை 47,177 (1981).

சூன்சுனு மாவட்டம் 5,929, ச.கி.மீ. பரப்பள வுடையது. மாவட்டத்தின் மக்கள் தொகை 1211583. இம் மாவட்டம் முன்பு செய்ப்பூர்ச் சிற்றரசின் ஒரு பகுதியாக விளங்கியது. சு.இரா.

**சூன்னார்**: மகாராட்டிர மாநிலத்தில் புனா நகருக்கு வடக்கில் 76 கி.மீ. தொலைவில் அமைந் துள்ள ஓர் ஊர். இவ்வூரில் உளள குன்றுகளில் குடை வரைகள் உள்ளன. இக்குடைவரைகளில் கி.பி. 100-க்கும் 300-க்கும் இடைப்பட்ட காலக் கல்வெட்டுகள் பல கண்டுபிடிக்கப்பட்டுள்ளன. இக்குடைவரைகளில் ஓவியங்கள் எவையும் காணப்படவில்லை. இவை எளிமையான முறையில் எவ்வித வேலைப்பாடும் இன்றிக் குடையப்பட்டுள்ளன. மன்மோதா (Manmoda) என்ற குன்றின் மீது சைத்தியம் ஒன்று உள்ளது. இது கி.பி. முதலாம் நூற்றாண்டைச் சார்ந்தது. இச்சைத்தியக் குகையின் முகப்பில் உள்ள காலதர் உச்சியில் நாகர்கள் இருவரின் சிற்பங்களும் அதன் கீழுள்ள அப்பகுதியில் கசஇலட்கமி உருவச் சிற்பமும் செதுக்கப்பட்டுள்ளன. இச்சிற்பம் புத்த ரின் தாய் மாயாதேவியே எனப் பூசர் (Foucher) என் னும் அறிஞரும் ஆனந்த குமாரசாமியும் கருத்துத் தெரிவித்தனர், இச்சைத்திய முகப்பைச் சண்டா (Chanda) என்ற யவனர் செய்தார் எனத் தெரி கிறது. சூன்னாருக்கு (Junnar) மேற்கே 4 கி.மீ. தொலைவில் துல்சு இலெனா (Tulj Lena) என்ற ஐந்து அறைகளுடன் கூடிய விகாரம் ஒன்று உள்ளது. இதனையடுத்துச் சைத்தியக் குடைவரை ஒன்றும் உள்ளது. இவையாவும் சிதைவுற்ற நிலையில் உள் ளன, சூன்னாரில் உள்ள குடைவரைகளில் நகபர்ணா என்ற அமைச்சர் வெட்டிய கல்வெட்டு ஒன்று உள் ளது. இது வரலாற்றுச் சிறப்பு மிக்கது. இக்கல் வெட்டு கி.பி. 124-ஆம் ஆண்டைச் சார்ந்தது. இங்குள்ள கணேச இலெனாக் குடைவரைகளில் ஒன்று இப்பொழுது கணேசர் கோயிலாக மாற்றப்பட்டுள் ளது. சு.இரா.

**சூனி பழங்குடி** வட அமெரிக்காவில் வாழும் வரலாற்றுச் சிறப்புமிக்க பழங்குடிகளுள் ஒரு குடி யாகும். இவர்கள் ஆரிசோனாவின் எல்லைப் பகுதிக்கு அருகில் அமைந்துள்ள வடமேற்கு நியூமெக்சிகோவில் வாழ்கின்றனர். சூனி (Zuni) மக்களின் தோற்றமும் தொடக்க கால வரலாறும் தெளிவாகக் கிடைக்க விலலை. இருப்பினும் இவர்கள் அனசாசி (Anasazi) இந்தியர்களின் வழிவந்தவர்கள் எனக் கூறிக் கொள் வர். ஆனால், இவர்களின் தொன்மைக் கதைப்படி இவர்களின் முன்னோர்கள் பூமிக்கடியிலிருந்து தோன்றி அவர்கள இப்போது வாழுமிடங்களில் சுற்றிக் கொண்டிருக்கின்றனர் எனக் கூறுவர். இவர் கள் பெனுதிய (Penutian) மொழிக்கு மிகவும் தொடர்புள்ள மொழியைப் பேசுகின்றனர்.

சூனிப் பழங்குடியினர் கி.பி. 16-ஆம் நூற்றாண் டில் வெள்ளையர்களின் தொடர்பினைப் பெற்றனர். முதலில் இசுபானியர்கள இவர்கள வாழ்ந்த அவிக்கு (Hawikuh) என்னும் இடத்தையும் பிற ஆறு இடங் களையும் கைப்பற்ற எண்ணி வந்தனர். இந்த இடங் கள் அனைத்தும் அக்காலத்தில் 'சிபோலாவின் ஏழு நகரங்கள்' (Seven Cities of Cibola) எனக் கூறப் பட்டன. சூனிப் பழங்குடியினர் இசுபானியர்களை எதிர்த்து அக்குழுவின் தலைவனான எசுட்டிவனிகோ (Estevanico) என்பவனைக் கொன்றுவிட்டனர்.

மெக்சிகோ போர் கி.பி. 1847-இல் முடிவடைந்த வுடன் அமெரிக்க ஐக்கிய அரசு சூனி மக்களைத் தம் கட்டுப்பாட்டிற்குள் கொண்டு வந்தது. அந்த ஆண்டி லேயே அமெரிக்க அரசு இப்போதைய நியூமெக்சிகோ, ஆரிசோனாப் பகுதிகளிலுள்ள இடத்தினை இவர் களுக்காகப் பெற்றுத் தந்தது. பின்னர் 1969-இல் 'சூனி மக்களின் ஒருங்கிணைந்த வளர்ச்சித் திட்டம்' ஒன்றை அவர்களாகவே தொடங்கி, அவர்களின் கல்வித் தரத்தை உயர்த்தி, வேலை வாய்ப்பு, வாழ்க் கைத் தரம் ஆகியவற்றை மேன்மையுறச் செய்தனர். அதனால் 1970-இல் அமெரிக்க அரசின் இந்தியப் பழங் குடிகளின் விவகாரம் பற்றிய ஆணையத்தின் செயல் களை மேற்பார்வையிடும் பொறுப்பை ஏற்ற முதல் இநதியப் பழங்குடியினராகத் திகழ்ந்தனர்.

சூனி மக்களின் பொருளாதாரம், வேளாண்மை, கைவினைத் தொழில், கால்நடை வளர்த்தல் ஆகிய மூன்றின் அடிப்படையில் உள்ளது. தொன்மைக் காலந் தொட்டே இவர்கள் வேளாண்மையை மேற்கொண் டுள்ளனர். ஆயினும், இவர்களின் கைவினைப் பொருள் கள் இவர்களுக்குச் சிறந்த வருமானத்தைத் தருகின் றன. வெள்ளி, பவழம், ஒருவகை இரத்தினக் கல்

(Turquoise) ஆகியவற்றைக கொண்டு வேலைப் பாடுள்ள அணிகலன்களைச் செய்வதே இவர்களின கைத்தொழில்களில் சிறப்பிடம் பெறுகிறது. கூடை முடைதலும், மட்பாண்டம் செய்தலும் இவர்களது துணைத் தொழில்கள். பெரும்பான்மையோர் கால் நடைகளையும் வளர்க்கின்றனர்.

இவர்கள் கற்களால் கட்டப்பட்ட வீடுகளில் வாழ் கின்றனர். சமுதாய அமைப்பு 13 தாய்வழிக் குலங் களைக் (Cians) கொண்டது. ஆயினும், நிருவாகத்தில் ஆண்களே பெரும்பங்கு வகிக்கின்றனர். ஆனால் வேறு சில நிலையில் ஆண்கள் மிகுந்த உரிமை பெற்றவர் களல்லர். மணமான ஒவ்வொரு மகனும் தங்கள் மனைவியின் வீட்டு நிலங்களில் பாடுபட வேண்டும். அவனுடைய தாயின வீட்டிலோ சகோதரியின் வீட் டிலோ வேலை செய்வதற்கு ஆண்கள் இல்லாவிட்டால் அங்குச் சென்று அவன் வேலை செய்ய அனுமதிக்கப் படுகிறான். தாய்வழியில் அமைந்த இவ்வகைச் சமு தாயத்தில் ஒரு வீட்டில் பாட்டி, அவளுடைய கணவன், அவளுடைய பெண்கள் அவர்களுடைய கணவன்மார் கள் ஆகியோர் சோநது காணப்படுவது பொருளா தார அடிப்படையில் மட்டுமே. சடங்குகளுக்கான கூட் டத்தில் ஆண்கள் வெளியார்களாகவே கருதப்படுகின் றனர். அதனால் ஆண்கள் அனைவருக்கும் இரண்டு வகையான தொடர்புகள் உள்ளன. தம் மனைவியின் கூட்டத்தாரிடையே அவர்கள் கணவர்களாகவும் தான் பிறந்த கூட்டத்தில் சகோதரர்களாகவும் இருக் கின்றனர். தங்கள் மனைவி வீட்டில் சடங்குகள நடை பெறுமபோது உரிமை பெற்றவராக இருக்க முடியாத கணவன்மாாகள் தங்கள் குழநதைகள் வயதடையும் போது சிறிது சிறிதாக தகுதியைப் பெறுகின்றனர். ஆண்மகன் சற்றேறக் குறைய இருபது ஆண்டுகள் ஒரு வீட்டில் வாழ்ந்த பிறகு, குழந்தைகளின் தந்தை என்ற உறவினால் குறைந்த அளவு அதிகாரத்தைப பெறு கின்றான்.

சூனி மக்களிடையே சடங்குகளும் ஆட்டஙகளும் பெறறுள்ள சிறப்பு போன்று வேறு எவையும் பெறவில்லை எனலாம். பல மனைவி மணமுறை (Polygyny) இவர்களிடையே வழக்கிலுள்ளது. பெரும பாலும பெற்றோாகள் மணமக்களை முடிவுசெய்து திருமணம்செய்கின்றனர். காதலித்துத்திருமணம் செய் யும் முறை இவர்களிடையே மிகக குறைவு. பெணகள ஆண்களிடம் பேசுவதற்கு வாய்ப்புகள் மிகமிகக குறைவு. மாலையில் பெண்கள் ஊறறுககுச் சென்று நீர் கொணடு வரும்போது ஒருவன் பெண ஒருத்தியை வழிமறிததுக் குடிப்பதற்கு நீர் கேட்கலாம். அவனைப் பிடித்திருந்தால் அவளும் நீர் கொடுப்பாள. முயல் வேட்டையாட எறிகழி (Throwing stick) ஒன்றைச் செய்து தரும்படி அவன் அவளைக் கேட்டுக் கொளள லாம். பிறகு அவன் கொன்ற முயல்களை அவளுக்குக் கொடுப்பான. இதைத் தவிர வேறு எந்த முறையி லும் சந்திப்பு நிகழுவதிலலை.

வேறு ஒரு முறையிலும் திருமண ஏற்பாடு நடை பெறுகிறது. ஒரு பெண்ணை விரும்பிய ஒருவன் அவள் வீட்டிற்குச் செல்வான். வீட்டிற்கு வருபவர் களுக்கு உணவு கொடுப்பது சூனி மக்களின் மரபு. உணவை உண்டபின பெணணின் தநதை அவனிடம் நீ எதையோ நாடி வந்திருக்கிறாய் எனக் கேட்டபின் அவன் தனது எண்ணத்தைத் தெரிவிப்பான். பெண் ணின் தந்தை தாமே முடிவு செய்யாமல் பெண் ணையே அழைத்துச் சம்மதம் கேட்பார். அவள் ஒப் புக்கொண்டால் தனி அறை தயார் செய்து இருவரும் நான்கு நாட்கள் கழிப்பர். பின் ஐநதாம் நாளன்று பெரிய கூடை நிறைய மாவைப் பரிசாக எடுத்துக் கொண்டு மணமகனின் தாயார் வீட்டிற்குச் சென்று விவரத்தைக் கூறுவாள்.

திருமணத்திற்குப்பின் மணமானவர்களுக்குக் குழந்தைகள் இல்லை என்றாலும் மணவாழ்க்கை மகிழ்ச்சியாக அமையாவிட்டாலும் பிரிய நினைக் கின்றனர். தனக்கு வேறொரு கணவன் கிடைப்பான் என்ற நிச்சயம் ஏற்பட்டவுடன் மனைவி தன் கணவ னின் பொருள்களை ஒன்று சேர்த்து வாயிற்படியில் வைத்துவிடுவாள் இதுவே மணவிலக்கின் இறுதிச் செயலாகும். அவன தன் தாயின வீட்டினை அடை யும் போது அவனின் வருகையைக் கணடு அனைவரும் அழுவர். இதை நல்லூழற்ற நிலையாகக் கருதுகின் றனர்.ஆனால இதற்காக உணர்ச்சிவயப்படுவதில்லை

சூனி மக்களின வாழ்வில் சமயச் சடங்குகள மிகுந்துள்ளன. அவை பல்வேறு காரணங்களுக்காக நிகழ்த்தப்படுகின்றன. பெரும்பான்மையாக இச் சடங்குகள் முகமூடியிட்ட கடவுள்களுக்காகவும், நோயைக் குணப்படுத்துவதற்காகவும், சூரியனுக் காகவும், சமயச்சார்புற்ற குறியீடுகளுககாகவும், போருக்காகவும், இறநதவர்களுக்காகவும் செய்யப் படுகின்றன. பூசாரிகள இவற்றை முறைப்படி செய்ய வேணடும் என்பதில மிகுந்த கவனத்துடன் இருக் கின்றனர். ஒவ்வொரு சடங்கிற்கெனறும் தனித்தனி யான மந்திரங்களைக் கூறிப் பூசாரி சடங்குகளை நடத்துகின்றார். சூனி மக்கள மழை வேண்டியும், தோட்டங்கள், மக்களின் எண்ணிகைக முதலான வற்றை மிகுதியாகப் பெறல் வேண்டியும் சிறப்புச் சடங்குகளை மேற்கொள்கின்றனர். கோடைக் காலத் தின் மாலைப் பொழுதில் விண்ணில் கிளம்பும் கரு மேகங்களைப் பார்த்ததும் பெற்றோர்கள், குழந்தை

களிடம், உங்கள் மூதாதையர் வருகின்றார் எனக் கூறு கின்றனர். இறந்த உறவினர்களைத்தனித் தனியாகக் குறிப்பிடாமல் மூதாதையர்களைப் பொதுவாகக் குறிப்பிடுவதையே இது காட்டுகிறது.

சூனி தெய்வங்களில் நூற்றுக்கும் மேலாக முக மூடிக் கடவுள்கள் இருக்கின்றன. முகமூடிக் கடவுள் களுள் இருவகை உண்டு. ஒன்று கச்சினாககள் (Kachi nas), மற்றொன்று கச்சினாப் பூசாரிகள. இந்த உயி ருள்ள கச்சினாப் பூசாரிகள், இயற்கைக்கப்பாற்பட்ட உலகத்திலுள்ள தலைவர்கள் எனக் கருதப்படுகின்ற னர். முகமூடிக் கடவுள்களுக்கு நிகழ்த்தப்படும் நடனங்களில் வயது வந்த ஆண்கள மட்டுமே ஆடு கின்றனர். இவர்கள ஆடும் நடனஙகளுள் குறிப்பிடத் தக்கவை சலாககோ (Shalako) ஆகும். இந்த நடனம் புதுவீடு கட்டி அதில குடிபுகும் முன் நிகழ்த்தப் படுகிறது.

இவர்கள் சமூகத்தில் மருத்துவர்கள் அடங்கிய குழுக்கள் உள்ளன. சிலருக்கு மட்டுமே கற்றுத் தரக் கூடிய முறையில் மருத்துவக் குழுக்கள் உள்ளன. மருத்துவக் குழுவில் எவரும் சேரலாம். நோய்வாய்ப் பட்ட ஒருவன் குணமான பின்பு மருத்துவக குழுவில் சேருகிறான். பெரும் நோயிலிருநது பிழைத்தபின அதற்கு ஈடாக மருத்துவக் குழுவில் சேர்ந்து மருத் துவ முறைகளைக் கற்றுப் பிறருக்கு உதவ வேண்டும். அதனால் ஆண, பெண இருபாலாரும் இதில் உறுப் பினர்களாக உள்ளனர்.

இன்று மிகுதியான உலலாசப் பயணிகள் சூனி மக்களின் 'சலாககோ' நடனத்தைக் கணடுகளிக்க வருகினறனர். இநத நடனம ஆணடுதோறும டிசம் பர் மாதத்தில புது வீடுகளுக்கு ஆசி கூற நடத்தப்படு கிறது.

சீ.ப.

**சூனிய அடிப்படை வரவு செலவுத் திட்டம்:** நாட்டின் பொருளாதார வளர்ச்சிக்குத் தேவையான நிலம், உழைப்பு, மூலதனம், மூலப் பொருளகள், இயந்திரஙகள போனறவை குறைந்த அளவே உளளன. அவற்றை அரசாங்கமும், தனியார் நிறுவனங்களும் பயனபடுத்தி நாட்டின் முன் னேற்றத்தை ஊக்குவிககவேண்டும். அவ்வாறு பொரு ளாதார வளங்களைப் பயன்படுத்தும்போது திற மையாகப் பயன்படுத்தினால் நாட்டின வளமும் நல மும் பெருகும். வளஙகளைப் பயன்படுத்துமபோது அவற்றின் செலவு நன்மை ஆகியவற்றை ஆராய்ந்து நன்மைக்குத் தகுந்தவாறு வளங்களைப் பங்கிடு செய்தால், அந்தப் பங்கீடு திறமையான பங்கீடு என்று கருதப்படும். இந்தத் திறமையான பங்கீட்டினை உறுதி செய்யும் காரணிகளில ஒன்று வரவு செலவு திட்டம்.

ஒவ்வொரு அரசாங்கமும், நிறுவனமும் தங்கள பொருளாதார நடவடிக்கைகளுக்கேற்ப வரவு செல வுத் திட்டத்தைத் தயாரிக்கின்றன. அவ்வாறு தயா ரிக்கபடும் வரவு செலவுத் திட்டம் பல வகைப்படும். அவற்றில் ஒன்று சூனிய அடிப்படை வரவு செலவுத திட்டம் (Zero Base Budget) ஆகும். இது, தொன்மை வரவு செலவுத் திட்டத்திலிருந்து மாறுபட்டதாகும்.

தொன்மை வரவு செலவுத திட்டத்திலே, ஒவ் வொரு திட்டத்துக்கும், நடவடிக்கைக்கும் பொறுப் பாக உளள அதிகாரிகள் ஒவ்வொரு ஆண்டும் தங் கள் திட்டத்திற்குச் சென்ற ஆண்டு ஒதுக்கீட்டை விட எவ்வளவு மிகுதியாக தேவைப்படும் என்பதற்குக் காரணமும், நியாயமும் கொடுத்தால் போதுமானது. எனவே அத்திட்டத்திற்காக ஏற்கெனவே செய்யப்பட்டு வரும்செலவு நியாயமானது என்று ஒத்துக் கொள்ளப் படுகிறது எடுத்துக்காட்டாக அரசாங்கம் கல்வித்துறை வளர்சசித் திட்டங்களுக்காக 1986-87-ஆம் ஆண்டு உரூ.300 கோடி செலவிட்டுள்ளதாக வைத்துக் கொள வோம் கல்வித்துறை அதிகாரிகள் 1987-88 ஆண்டு தங்கள துறைக்கு உரூ.400 கோடி தேவை என்று அரசுக்கு வேண்டுகோள் அனுப்பும்போது இந்த ஆண டுக்கு மிகுதியாகத் தேவைப்படும் உரூ100,கோடிக்கு தேவை என்ன, அதனால் ஏற்படும் நன்மைகள என்ன என்பதைப் பற்றிய நியாயத்தை அளிக்க வேணடும். அளிக்கப்படும் காரணம் சரியானதாக இருந்தால் அரசு உரூ.100 கோடியைக் கல்வித்துறைக்கு ஒதுக்கும். இதனால், சென்ற ஆண்டு செய்தசெலவு உரூ. 300 கோடி எந்தவித பரிசோதனைக்கும், மதிபபீட் டிற்கும் உட்படாமல நியாயமானது என்று கருதப் படுகிறது. இந்த முறை வரவு செலவுத் திட்டத் தினால், அரசாங்கத்தின் செலவு கட்டுக்கடஙகாமல் போவதுடன், குறைந்த அளவே பயன்தரும் செலவி னங்களைக் குறைக்க முடியாமல், அரிய வளங்களை வீணடிக்கும் வகையில் அமைந்து விடுகிறது.

சூனிய வரவு செலவுத் திட்டம் என்பது இது போன்ற செலவினங்களைக் குறைக்கவும், வளங் களைப் பயனுள்ள வகையில பரிமாற்றம செய்யவும் உதவும் ஒரு திட்டமாகும். இந்தத்திட்டத்தில், சம்பந்தப்பட்ட துறையைச் சார்ந்த அதிகாரிகள் ஒவ்வொரு ஆணடும் தங்கள் திட்டங்கள் அந்த ஆண்டிலிருந்துதான் தொடங்கப்படுவதாகக் கருதி, மொத்த செலவினத்துக்கும் தகுந்த காரணம் காட்ட வேண்டும். ஒவ்வொரு திட்டமும் பல ஆண்டுகள் செயல்படுத்தப்பட்டு இருப்பினும், அவை புதிதாக

இந்த ஆண்டில்தான் தொடங்கப்பட்டதாகக் கருதி அத்திட்டத்திற்கான செலவினை அரசிடமிருந்து கேட்க வேண்டும். அதாவது, ஒவ்வொரு திட்டமும் சூனியத்தில் இருந்து தொடங்குவதாகக் கருதி அந்த திட்டத்திற்குத் தேவைப்படும் செலவினைப் பெற வேண்டும். அந்தத் திட்டத்தைத் தொடங்குவதால் ஏற்படும் நன்மைகள் என்ன, செலவுகள் என்ன, நிகர லாபம் என்ன என்பதையெல்லாம் கணக்கில கொண்டு அத்திட்டம் மதிப்பீடு செய்யப்படும். அந்த மதிப்பீட்டிற்குத் தகுந்தாற்போல்தான் செலவு ஒதுக்கப்படும். இதுவே, சூனிய அடிப்படை வரவு செலவுத் திட்டத்தின் மையக் கருத்தாகும். இந்தக் கருத்து அரசாங்கத்திற்கு எவ்வாறு பொருந்து கிறதோ அதைப் போலவே தனியார் நிறுவனங களுக்கும் பொருந்தும்.

மேற்கூறிய தத்துவத்தை அடிப்படையாகக் கொண்டு சூனிய அடிப்படை வரவு செலவும் திட்டத்தைப் பின்வருமாறு வரையறுக்கலாம்.

சூனிய அடிப்படை வரவு செலவுத் திட்டம் என்பது ஒரு மேலாண்மைக் கருவி. அது குறைந்த அளவு வளங்களைத் திறமையான முறையில் பயன் படுத்தி, குறிப்பிட்ட நோக்கங்களை எவ்வாறு அடைவது என்பதைக் குறிக்கிறது. இங்குக் குறிக் கோள் என்று கூறப்படுவது, மற்ற எந்தத் திட்டத்தை யும் போல, விரும்பும் உற்பத்தி எவ்வளவு, அதனை அடைவதற்குத் தேவைப்படும் வளங்கள் எவ்வளவு என்பனவற்றைத் தீர்மானம் செய்வதாகும். இநதத் திட்டம் செலவினைக் குறைப்பதையே குறிககோ ளாகக் கொண்டது அல்ல. விரும்பிய நோக்கத்தைத் திறமையான முறையில அடைந்து நன்மை பெருகு மேயானால், அதிகச் செலவினமுறையே ஒருசிறநத மாற்றுமுறையாக அமையும்.

சூனிய அடிப்படை வரவு செலவுத் திட்டம் என்பது ஒரு நடைமுறைத் திட்டமாகும். இதனால், ஒவ்வொரு நிருவாகியும் தன் முழுச்செலவுக்கும் காரணம் அளிகக வேண்டியுள்ளது. ஒரு நிருவாகி பணத்தை ஏன் செலவு செய்ய வேண்டும் என்று நிரூபிக்கும் பொறுப்பை இத்திட்டத்தின் கீழ ஏற்றுக் கொள்கிறார். இந்த முறை நிறுவனத்தின் அசுரத் துறையின் எல்லா நடவடிக்கைகளையும் முறையாகத் தெரிநதெடுத்து, அவற்றை மதிப்பீடு செய்து சிறப்புக்குத் தகுந்தாற்போல வரிசைப் படுத்த வேணடும் எனறு கூறுகிறது.

சூனிய அடிப்படை வரவு செலவுத் திட்டத்தில் ஒவ்வொரு அரசாங்கத் திட்டமும் - அது இப்போது இயங்கி வரும் திட்டமாக இருந்தாலும் அல்லது புதிய திட்டமாக இருந்தாலும் ஒவ்வொரு ஆண்டும் மதிப்பீடு செய்யப்பட்டுத் தயார் செய்யப்படும்.

சூனிய அடிப்படை வரவு செலவுத்திட்டம் அனைத்துத் திட்டங்களையும் நடவடிக்கைகளையும் வரவு செலவுத் திட்ட வேணடுகோளுடன் பரிசீலிப் பதற்கு வாய்ப்பளிக்கிறது

**சூனிய அடிப்படை வரவு செலவுத் திட்டத்தின் பல நிலைகள்:** இத் திட்டம் பல நிலைகளை உள்ளடக்கி யுள்ளது. 1) திட்டத்தினைச் செயற்படுத்த முடிவெடுக் கும் நிறுவனங்களைத் தெரிவு செய்வது, 2) நிறுவனத் துறை நோக்கங்களைத் தெளிவாக முறைப்படுத்தல், 3) நோக்கங்ளை அடைய அடிப்படைத் திட்டங்களை யும் தொழில் முறைகளையும் ஏற்படுத்தல், 4) இத் திட்டங்களை மதிப்பீடு செய்து வரிசைப்படுத்தல் இறுதியாக, நிதிப் பங்கீடு செய்தல்.

**முடிவு மேற்கொள்ளும் நிறுவனத்தைத் தெரிவு செய்தல்:** அரசாங்கத்தைப் பொறுத்தவரை இந்த நிறுவனங்களைத் தெரிவு செய்வதில் சிரமம் கிடை யாது. ஏனெனில், இந்த நிறுவனங்களை உள்ளடக்கிய நிருவாக அமைப்பும் அவற்றின் மேலாண்மையும் அரசாங்கச் சட்டப் புத்தகத்தில் தெளிவாக வரைய றுக்கப் பட்டுள்ளது. எடுத்துக்காட்டாகக் கல்வித்துறை யிலே யார் முடிவு செய்வது எனபதனைப் பற்றி அர சாங்கம் முன்னரே தீர்மானம் செய்துள்ளது. அதன்படி ஒவ்வொரு ஆண்டும் அந்த அதிகாரி வரவுத் செலவுத் திட்டத்தைத் தொடங்குவார். ஆனால், தனியார் துறையில் முடிவு மேற்கொள்ளும் துறைகளைத் தெரிநது கொளவது கடினமான செயலாகும். ஏனெனில், முடிவு மேற்கொள்ளும் நிறுவனங்களைத் தெரிந்தெடுப்பதில் ஒரே வகையான தத்துவத்தைப் பின்பற்ற முடிவதில்லை.

**முடிவுத் தொகுப்பினைத் தயார் செய்தல்:** முடிவுத் தொகுப்பு என்பது வரவு செலவு வேண்டுகோள் ஆகும். அந்தத் தொகுப்பு, பின்வருவனவற்றை உள் ளடக்கும்.

1. முடிவு மேற்கொள்ளும் நிறுவனத்தின் பணி பறறி விவரிப்பு,
2. நிறுவனத்தின் செயல் மற்றும் நடவடிக்கைகளின் நோக்கங்கள்,
3. நடவடிக்கையை மேற்கொளள ஆகும் செலவி னால் ஏற்படும் நன்மைகள்,
4. நிறுவனத்தின் பொது நோக்கத்துக்கு இந்த நட வடிக்கை எவ்வாறு பொருந்தும் அல்லது உகந்த தாக இருக்கும்.

5. இந்த நடவடிக்கைக்காகப் பணம் ஒதுக்கீடு செய்யாவிடில் அதனால் ஏற்படும் விளைவுகள் என்ன?
6. முடிவுத் தொகுப்பில் உள்ள நடவடிக்கைகளுக்கு ஏற்பட இருக்கும் செலவு.
7. அந்த நடவடிக்கையை மேற்கொள்ளுவதற்கு உற்ற மாற்று வழிகள் என்னென்ன?

**முடிவுத் தொகுப்புகளை வரிசைப்படுத்தல்:** இறுதியாக, ஏதாவது செயல் முறைக்கு ஒத்துவரக் கூடிய மதிப்பீட்டின் மூலம் முடிவுத் தொகுப்புகளை வரிசைப் படுத்த வேண்டும். வரிசைப்படுத்தப்பட்ட முடிவுத் தொகுப்புகள் ஒவ்வொரு மேலதிகாரிகளுக்கும் அனுப்பப்பட்டு மதிப்பீடு செய்யப்படும். நிருவாகத்தின் உயர்ந்த அதிகாரியினால் அவை மதிப்பீடு செய்யப்பட்டு இறுதியாகத் திட்டங்கள் பண ஒதுக்கீடுக்காக ஏற்றுக் கொள்ளப்படும். அதன்பிறகே சட்டப்படியான ஒப்புதலுக்காக அந்தத் திட்டம் சட்டமன்றத்திற்கு அனுப்பி வைக்கப்படும். சட்ட மன்றம் ஒப்புதல் அளித்தபிறகு அது வரவு செலவுத் திட்டமாக மாறுகிறது. தனியார் நிறுவனத்தைப் பொறுத்தவரை இது நிருவாகத்தின் மேல்மட்டத்தில் உள்ள அதிகாரியின் ஒப்புதல் பெற்றவுடன் வரவு செலவுத் திட்டமாக மாறுகிறது.

சூனிய அடிப்படை வரவு செலவுத் திட்டம் பல நன்மைகளைப் பெற்றிருப்பினும், அதை நடைமுறைப் படுத்துவதில் பல சிக்கல்கள் உள்ளன. எல்லாத்திட்டங்களையும் ஆண்டுதோறும் மதிப்பிடுவது எளிதான செயல் அல்ல. மேலும் இந்தத்திட்டத்தின் அடிப்படையில் செலவு செய்ய வேண்டுமெனில் பல அரசுத் திட்டங்களைக் கைவிட வேண்டிவரும். இத்திட்டத்திற்கு அரசு அதிகாரிகளும், தொழிலாளர் சங்கத்தைச் சேர்ந்தவர்களும் முழு மனத்தோடு ஒத்துழைப்பு அளிக்க முன் வரமாட்டார்கள். இம் முறையைச் செயற்படுத்த ஆழ்ந்த ஆய்வறிவு தேவைப்படுகிறது

மிகவும் திறமையான முன்னேற்ற எண்ணமுள்ள நிருவாகிகள் இதற்குத் தேவை. அவர்களிடம் தேவையான அளவு முயற்சியும், சிந்தனையும், பயிற்சியும் இல்லாமற் போனால், இந்தத் திட்டத்தால் எந்தப் பயனும் இல்லாமற் போய்விடும். மேலும், முறையற்ற மதிப்பீடு இத்திட்டத்தைத் தோல்வியடையச் செய்யும். தேவையான செய்திகள் கிடைக்காமல் போனாலோ, சரியான முறையில் அவை ஆய்வு செய்யாமல் விடப்பட்டாலோ, மாற்றுத் திட்டங்கள் தயாராக இல்லாது போனாலோ, இத்திட்டம் எதிர்பார்த்த பயனைத் தாராது.

இவ்வளவு சிக்கல்கள் இருந்த போதிலும் அமெரிக்கா போன்ற வளர்ச்சியடைந்த நாடுகளில், சூனிய அடிப்படையிலான வரவு செலவுத் திட்டம் நடைமுறைப்படுத்தப்பட்டு வருகிறது. இந்தியாவில் ஒரு சில நிறுவனங்கள் இத்திட்டத்தை அண்மைக் காலத்தில் பின்பற்றி வருகின்றன. அரசாங்கமும் இத்திட்டத்தைப் பின்பற்றலாமா என்று பரிசீலனை செய்து வருகிறது. மு.இரா.

**சூனிய நேரம்:** இந்தியப் பாராளுமன்றத்தின் மக்கள் அவையில் (House of the People) ஒவ்வொரு நாள் கூட்டத்திலும் தொடக்கத்தில் ஒரு மணி நேரம் கேள்வி நேரம் என ஒதுக்கப்படும். அன்றைய கூட்டத்தில் கவனிக்கப்படவேண்டிய நிகழ்ச்சிகளை முறையாக எடுத்து அவைதீர்மானிக்கு முன்னர் அதில் குறிப்பிடப்படாத, ஆனால் உறுப்பினர்களால் முக்கியமானது என்று கருதப்படுகிற, பொருளை அவைத்தலைவரின் ஒப்புதலுடன் அந்த நேரத்தில் உறுப்பினர் எடுத்துக் கூறுவர். அந்தக் குறுகிய இடைவெளிக் காலம் சூனிய நேரம் (Zero Hour) எனப்படும். இந்த முறை மக்கள் அவையில் 1962-இல் முதல் முறையாகக் கையாளப் பட்டது. அது இன்றளவும் நடைமுறையில் உள்ளது.

**பயன்படுத்தும் முறை:** சூனிய நேரத்தில் வேலை நிறுத்தங்கள், உண்ணா நோன்பு, இயற்கை இடர்ப்பாடுகளால் மக்களுக்கு எதிர்பாராமல் ஏற்படக் கூடிய துன்பங்கள், விபத்துகள் முதலியவை அவையின் கவனத்துக்குக் கொண்டுவரப்படுகின்றன. சூனிய நேர உரிமை அவையின் செயல்விதிகளில் 337-ஆம் விதியில் இடம் பெற்றுள்ளது. வினா நேரம் முடிந்தவுடன், உறுப்பினருள் ஐந்து பேர் வரை பொது முக்கியத்துவம் வாய்ந்த எந்தப் பொருளையும் அவையில் எடுத்துக்கூறுதற்கு அவைத் தலைவர் இசைவு அளிக்கலாம். இது 1977முதல் நடைமுறையில் உள்ளது. மக்கள் அவை காலை 11 மணிக்குக் கூடி, ஒரு மணிநேர அளவுக்கு வினா-விடை நடைபெறுகிறது. வினா நேரம் முடிவடைகிற 12 மணியே சூனிய நேரம் ஆகும். அவையின் அன்றாட நிகழ்ச்சி நிரலில் (Agenda) அல்லது ஆணைத் தாளில் (Order Paper) குறிப்பிடப்படாத எந்தப் பொது,சிறப்பு வாய்ந்த பொருளையும் பற்றி மன்ற உறுப்பினர் தலைவருடைய இசைவுடன் மன்றத்தில் கொண்டு வருதல் கூடும்.

**இன்றியமையாமை:** கேள்வி நேரத்தைப போன்று சூனிய நேரமும் சட்டமன்றத்துக்கு நிருவாக உறுப்பின்மீது உள்ள கட்டுப்பாட்டதிகாரத்தை வெளிப்படுத்துகின்ற ஒரு முறை அல்லது கருவி ஆகும். கேள்வி நேரத்தில் விடுக்கப்படுகிற வினாக்கள் அமைச்

சர்களுக்குக் கூட்டம் நடைபெறும் நாட்களுக்குச் சிறிது முற்பட்ட காலத்தில் தெரிவிக்கப்படுகின்றன; ஆனால், சூனிய நேர ஆய்வோ முன்னறிவிப்பு ஏதுமின்றி, ஏதேனுமொரு முக்கியமான பொதுப் பொருளை நேரடியாக அமைச்சர்கள் எதிர்பாராத வகையில், அவர்களைத் தனித்தனியே ஈடுபடுத்தும் வகையில் நடைபெறுவதாகும். ஆகையால், இதுவும் ஆட்சியாளர்களையும், உறுப்பினர்களையும் தங்களுடைய கடமைகளில் கவனமாக இருக்குமாறு தூண்டும் கருவி ஆகும். பா.சு.

**சூனியப் பொருளாதார வளர்ச்சி**: சூனியப் பொருளாதார வளர்ச்சி என்பது மக்கள்தொகையும், உற்பத்தியும் ஒரே அளவில் அல்லது சமஅளவில் வளர்ச்சி அடையும் என்ற கோட்பாட்டைக் குறிக்கிறது. இக்கோட்பாடு மக்கள்தொகை, உற்பத்தி ஆகியவற்றில் ஒரு குறிப்பிட்ட அளவிற்குமேல் வளர்ச்சி ஏற்படாமல் பொருளாதார முன்னேற்றத்தில் தடையான நிலையை விளக்குகிறது. இத்தகைய நிலையையுடைய நாட்டுப் பொருளாதார உற்பத்தியில் வளர்ச்சியே இராது. இதுவே சூனியப் பொருளாதார வளர்ச்சியின் (Nero Economic Growth) மையக் கருத்தாகும். இவ்வளர்சசியில் உற்பத்தி, மக்கள் தொகை, மூலதனக் குவியல் (Accumulation of Capital) சேமிப்பு, முதலீடு (Investment) அனைத்திலும் வளர்ச்சி ஒரே சீராகக் காணப்படும். ஒரு நாட்டுப் பொருளாதார வளாச்சியில், நிகர நாட்டு உற்பத்தி (Net National Product) வீதம் 5 விழுக்காடாக இருக்கும்போது, அதன் எதிர்கால வளர்ச்சி வீதமும் 5 விழுக்காடாகவே தொடருமானால, அது சூனியப் பொருளாதார வளர்ச்சி எனப்படும்.

பல சிக்கல்களையும் மாற்றங்களையுமுடைய சமூக, அரசியல், சுற்றுப்புறச்சூழ்நிலைகளினால் இன்றைய பொருளாதார ஆய்வுகளில் பல முரணபாடுகள் காணப்படுகின்றன. எதுவுமே இன்றைய சமூகத்தில் நிலையாக, சீராகக் காணப்படவில்லை. அதனை எதிர் பார்க்கவும் இயலாது. இத்தகைய சூழ்நிலையில் சூனியப் பொருளாதார வளர்ச்சியைப் பற்றிய கருத்து ஓர் ஆய்வுக் கோட்பாடாகவே உளளது.

**எடுகோள்கள்**: சூனியப் பொருளாதார வளர்ச்சிக் கோட்பாடு சில எடுகோள்களை அடிப்படையாகக் கொண்டுள்ளது. அவையாவன: 1. பொருளாதாரத்தில் ஒரே ஒரு கூட்டுப்பொருள் (Composite Commodity) உள்ளீடாகப்(Input) பயன்படுத்தப்படுகிறது. அது நுகர்வுக்கோ, மூலப்பொருளாக உற்பத்தியிலோ மூலதனக் குவியலாகவோ பயன்படுத்தப்படுகிறது. 2. உழைப்புத்திறன் நிலையான வீதத்தில வளர்ச்சியடைகிறது. 3. முழுவேலை வாய்ப்பு எப்பொழுதும் இருக்கும். 4. சேமிப்பு-வருமான விகிதம் நிலையானது. 5. மூலதன-உற்பத்தி விகிதம் நிலையானது. 6. மூலதன உழைப்புக்குப் பதிலீடு இல்லை. உற்பத்திக் காரணிகள் நிலையாக வரையறுக்கப்படுகின்றன. 7. தொழில் நுணுக்க வளர்ச்சியில் மாற்றமில்லை.

சூனியப் பொருளாதார வளர்ச்சி ஒரு நாட்டுப் பொருளாதாரததிற்கு உகந்தது என்றும், உகந்தது அன்று என்றும் முரண்பாடான ஆய்வுக் கருத்துகளைப் பொருளியல் வல்லுநர்கள் வெளிப்படுத்தியுள்ளனர். இவ்வுலகில் அனைத்துப் பொருள்களும் செல்வங்களும் ஒரு கட்டுப்பாடான எல்லையைக் கொண்டிருக்கின்றன. இந்நிலையில் மக்கள் தொகை வளர்ச்சி, உற்பத்தி ஆகியன தொடர்ச்சியாகச்சீரான வளர்ச்சிக்கு மேல் பெருகிக் கொண்டேயிருக்குமாயின் உலகில் உள்ள அனைத்துச் செல்வங்களும் நன்றாகப் பயன்பட்டு விடும். அதனால், இயங்கிக் கொண்டிருக்கும் சமூகப் பொருளாதாரச்சுற்றுப்புறச் சூழ்நிலைகளில் பற்றாக்குறை ஏற்பட்டுத் தீயவிளைவுகள் உண்டாகும். இத்தகைய நிலை 20—ஆம் நூற்றாண்டில் இலலாவிடினும், வரும் நூற்றாண்டில் நிகழும். அதனால் குழப்பமும், பெரும் கேடும் நிகழ்ந்தே தீரும். இச்சிக்கல்களை நீக்க வேண்டுமானால் சூனியப் பொருளாதார வளர்ச்சிக் கொள்கையினைக் கடைபிடிக்க வேண்டும். இக்கொள்கையில் உற்பத்திக்கும் செல்வத்திற்கும் சமநிலை உறவு காணப்படுவதன்மூலம் சிக்கல்கள் ஏற்பட வாய்ப்பில்லை.

தொடாச்சியான விரைவுப் பொருளாதார வளர்ச்சி சமுதாயத்திலும் உளவியல் நிறைவுத் தன்மையிலும் பல மாற்றங்களை ஏற்படுத்துகின்றன. வளர்ச்சியினால் தொழிலாளரின் உழைப்பில் இடப்பெயர்வு இன்றியமையாததாகிறது. அதனால், நிலையான குடும்ப நிலையும் தனிமனித உறவும் பாதிக்கப்படுகின்றன. அதிக வளர்சசி, குற்றம், மனநிறைவின்மை, வாழ்க்கைத் தரச் சீர்கேடு போன்ற தீய விளைவுகளை உண்டாக்குகிறது. தொழிலநுட்ப வளர்ச்சியினால் ஏழை மக்கள வேலை வாய்ப்புகளை இழக்க வேண்டியநிலை உண்டாகும். செல்வர்களின் வாழ்க்கைத்தரம் மிகமிக உயரும். அதனால், பொருளாதார நலப்பங்கீடு சீர்குலைந்து, சமூகப் பாகுபாடு (ஏழை, செல்வர்) அதிகரிக்கிறது. இவற்றைத் தவிர்க்கச் சூனியப் பொருளாதார வளர்சசி முறை சிறந்ததாகக் கருதப்படுகிறது.

சூனியப் பொருளாதார வளர்ச்சியை ஆதரிப்பவர்கள் பொருளாதார வளர்ச்சியினால் ஏற்படும் செலவுகளையும், அழிவுகளையும் கணக்கிடுகிறார்

கள். அவற்றின் பலன்களை முழுமையாக ஆராய வில்லை. உலகில் அனைத்துச் செல்வங்களும் ஒரு குறிப்பிட்ட எல்லையைக் கொண்டிருப்பது உண்மையே. அதனால், வளர்ச்சி முற்றிலும் கூடாது என்று வாதிப்பது வீண். வளர்ச்சிக்குப் பிறகு சில பகுதிகளில் பற்றாக்குறை ஏற்பட்டால் பதிலீட்டுப் பொருள்கள் மூலமோ, ஓரிடத்தில் இருக்கும் அதிகச் செல்வங்களை மற்ற இடத்திற்கு மாற்றுவதன் மூலமோ சிக்கலைக் குறைக்கலாம். அங்காடி விலை நிலவரம் (Market Price Mechanism) இதை நிறைவேற்ற முடியாவிட்டாலும், அரசுத் திட்டத்தின் மூலம் இதை நிறைவேற்றலாம. தொழில் நுணுக்க வளர்ச்சியைக் கட்டுப் படுத்த இயலாது. இவ் வளர்ச்சியால் ஏற்படும் சுற்றுப்புறச் சீர் குலைவும் குறைய வாய்ப்புண்டு. நாட்டு உற்பத்தியில், ஒரே ஒரு கூட்டுப்பொருள, நிலையான வீதத்தில் பயன் படுத்தப்படுகிறது என்ற எடுகோள் நடைமுறையில் செயற்படுவதன்று. பொருளாதார வளர்ச்சியினால் தான் சமூக, அரசியல், சுற்றுப்புறச் சூழ்நிலைச் சீர் கேடுகள் உண்டாகின்றன எனக் கூறவியலாது. நிலையான பொருளாதாரத்திலும் (Stationary. Economy) இச்சீர்கேடுகள் ஏற்பட வாய்ப்புண்டு. சமூகப் பாகுபாடும் காணப்படுகிறது. எனவே, சூனியப் பொருளாதார வளர்ச்சிக் கொள்கையானது நடைமுறைக்கு ஒவ்வாதது. உலகில் உள்ள அனைத்து உற்பத்திக் காரணிகளும் மாற்றக்கூடிய தன்மையைப் பெற்றிருக்கும். இக் கால நிலையில் சூனியப் பொருளாதார வளர்ச்சி ஓர் ஆய்வுக் கருவுருவாகவே (Concept) கருதப்படுகிறது. ஜி.வ.

**துணை நூல்கள்:**


**Andrew Weintraub,** The Economic Growth Controversy, Macmillan Press Ltd; U.S A., 1973.

**Hanumantha Rao, C.H., & Joshi P.C.,**(Ed)'Reflections on Economic Development and Social Change: Essays in honour of Prof. V.K.R.V Rao' Institute of Economic Growth, Delhi, 1979.

**Wilfred Backerman,** 'In Defence of Economic Growth' Macmillan Press Ltd., London. 1974.


**சூனியம்:** இயற்கைக்கப்பாற்பட்ட ஆற்றல்களைப் பயன்படுத்திச் செய்யப்படும் ஒருவகை மந்திரச் செயலே சூனியம் எனப்படுகிறது. இடைக் கால ஆராய்ச்சியாளர்கள் பில்லி சூனியத்தையும் (Corcery) சூனியத்தையும் (Witchcraft) மந்திரச் செய்கைகளுள் ஒன்றாகவே கருதியதால் இவ்விரண்டையும் வேறுபடுத்தவில்லை. கி.பி. 8-ஆம் நூற்றாண்டில் இயற்றப்பட்ட ஆங்கிலேயச் சட்டங்கள் மந்திரச் செயல்களால் நஞ்சு வைத்தல் (Veneficium), மந்திர உச்சரிப்பு வழி மயக்கம் உண்டாக்குதல் (Incantation), திருவுளச் சீட்டுச் குலுக்கல் (Sortilege), குறிகூறல், மெழுகுப் பொம்மைகளைச் செய்து அவற்றைத் துன்புறுத்துதல் வழி மனிதர்களை மிகக் கடுமையான துன்பத்திற்குளளாக்குதல் ஆகியஇவை அனைத்தையுமேதீமை பயக்கும் செயல்களாகக் கருதி, இவற்றை மேற்கொள்வது குற்றமெனக் கூறியுள்ளன. சூனியக்காரர்களும், மாந்திரிகர்களும் மேற்கொள்ளும் தீய ஆவிகள வழிபாட்டினைக் குறித்துக் கிளிப்போர்டு (Clifford) ஆற்றியுள்ள சொற்பொழிவில்,சூனியமென்பது தீய ஆவிகளுக்குச் செய்யும் வழிபாட்டின் மூலம் நிகழ்த்தும் செயல் எனக் குறிப்பிட்டுள்ளார். மாயவித்தை செய்தல், வசியம் செய்தல், பில்லி சூனியம், குறிகூறல் ஆகிய அனைத்தையுமே சூனியத்தின் வகைகளாக இவர் குறிப்பிடுகின்றார்.

இக்கால மானிடவியலார் பலர் சூனியத்தையும், பில்லி சூனியத்தையும் பின்வருமாறு வேறுபடுத்தியுள்ளனர். கணணுக்குப் புலப்படாத உள்ளார்ந்த சக்தியையும் இயல்புக்கு மாறான சக்தியையும் கொண்ட சில மனிதர்களால் மட்டும் செய்யப்படுவது சூனியமென்றும், சமுதாயத்திலுள்ள வயது முதிர்ந்தோர் கருத்தூன்றிக் கையாளும் சில மந்திரச் செய்கைகளும் உத்திகளும் மாந்திரிக மென்றும் குறிப்பிடுவர். இவ்விருவகைச் செயல்களிலும் ஈடுபடுவோர் பிறருக்குத் தீமை விளைவிப்பதையே நோக்கமாகக் கொணடிருப்பினும், சூனியக்காரர்கள் கணணுக்குப் புலப்படாத சக்தியின் உந்துதலினாலும் ஆவிகளின துணை கொண்டும் இத் தீய செயலகளில் ஈடுபடுகின்றனர். ஆனால், பிலலிசூனியமோ கெட்ட நோக்கம் கொணட சாதாரண மனிதர்களாலேயே செய்யப் படுகிறது.

சூனியத்தை மேற்கொள்ளும் வழக்கம் மக்களிடையே முந்நூறு ஆணடுகட்கு முற்பட்டே இருந்திருக்கக்கூடும் எனப் பல ஆய்வாளாகள் கருதுகின்றனர். பிரிட்டனில் ஏறக்குறைய எண்ணூறு ஆணடுகட்கு முன்பிருந்தே சூனியம் கையாளப்பட்டிருக்கலாம் என்பது கருதப்படுகிறது. வரலாற்றுக் காலந்தொட்டே பெரும்பான்மை மக்களிடையே சூனிய நம்பிக்கை நிலவி வருகிறது. இதற்கு மாறாகக் கலகாரி புசுமன், அந்தமான் தீவினர் [illegible]ன்ற ஒரு சிலரிடையே சூனியத்தில் நம்பிக்கை [illegible]ளும் வழக்கம் காணப்படவில்லை. சவானியப் பழங்குடியினர் (Javanese) சூனியத்தை நம்பாமல பில்லிசூனியத்தில் மட்டும் நம்பிக்கை கொண்டுள்ளனர்.

**சூனியத்தின் தன்மை:** மனிதனால் செய்யப்படும் செயல்களையே மாயவித்தை (Magic) என்னும் சொல் குறிக்கிறது. இயற்கை மீறிய நிலையின் துணைகொண்டு மனிதனால் நிகழும் செயல்கள் அல்லது இயற்கை விளைவுகள் வழிச் சூனியம் ஏற்படுகிறது. அனைத்துப் பில்லிசூனியங்களும் அழிவினை உண்டாக்கும் மந்திரத்தைச் (Destructive Magic) சார்ந்தவை எனக் கூறமுடியாது. ஏனெனில், இவற்றுள் ஒருசில மாயவித்தைகள் சமுதாயத்தினால் ஏற்றுக்கொள்ளப்பட்டுச் செய்யப்படுகின்றன.

மாயவித்தையும் சூனியமும் ஒன்றிற்கொன்று நெருங்கிய தொடர்புடையன. ஏனெனில், எவ்விதத் துன்பம் ஏற்பட்டாலும் அது சூனியத்தாலோ பில்லி சூனியத்தாலோ ஏற்படுகிறது என நம்புகின்றனர். அவற்றைச் செய்தவர் யார் என அறிந்துகொள்ள மந்திரத்தையே பயன்படுத்துகின்றனர். எனவே, சூனியமும் பில்லி சூனியமும் ஒரே அண்டப் படைப்புக் கோட்பாட்டிலிருந்தே தோன்றியிருக்கக்கூடும் என்பது கருதப்படுகிறது.

அனைத்துச் சமுதாயத்தினருக்கும் பொருந்துமாறு சூனியக்காரரைப் பற்றியோ, பில்லி சூனியக்காரரைப் பற்றியோ பொதுமைப் படுத்திக் கூற முடியாது. ஏனெனில், சில சமுதாயத்தில் பெரும்பாலாக பெண்கள் சூனியக்காரிகளாகவும், சில சமுதாயத்தினரிடையே ஆணகள் மட்டும் சூனியக்காரர்களாகவும் உள்ளனர். சில சமுதாயங்களில் இருபாலாருமே சூனியக்காரர்களாக உள்ளனர். சமுதாயத்திற்குச் சமுதாயம் இவர்களின் விகிதம் மாறுபடுகிறது. பெரும்பாலான சமுதாயத்தினரிடையே பெரும்பாலும் ஆண்களே சமூகச் செயல்களில் தலையிடுவதால், அச்சமுதாயத்தில் ஏற்படும் இடையூறுகளுக்கு அவர்களே காரணமாக்கப்படுகின்றனர்.

ஐரோப்பாவில் சூனியக்காரர்கள மெலிந்த ஒல்லியான உருவமுடையவர்களாகவும், மத்திய ஆப்பிரிக்காவில் மனித மாமிசத்தை உண்பவர்களாகவும் குறிப்பிடப்பட்டுள்ளனர். இவர்கள் இரவு நேரங்களில் உறக்கமின்றித் தீய செயல்களில் ஈடுபடுவதால் இவர்களின் கண்கள் இரத்தச் சிவப்பாகக் காட்டப்பட்டுள்ளன. ஒவ்வொரு சூனியக்காரரும் பல்வேறு விலங்குகளைத் தத்தம் பேராளர்களாகக் கொண்டு செயற்படுகின்றனர். சூனிய நம்பிக்கை நிலவும் பல சமுதாயத்தினரிடையே சூனியம் வைப்பவர்களும், அதனால் பாதிக்கப்படுபவர்களும் ஒரே சமுதாயத்தினைச் சேர்ந்தவர்களாகக் கருதப்படுகின்றனர். இருப்பினும், இமயமலை அடிவார மக்களிடையேயும், அமெரிக்க இந்தியப் பழங்குடிகளான நவாசோ (Navajo) பழங்குடியினரிடையேயும் சூனியம் செய்பவரும், அதனால் பாதிக்கப்படுபவரும் வெவ்வேறு சமுதாயத்தைச் சார்ந்தவர்களாக உள்ளனர்.

நேர்வழிக்கு மாறாகத் தீமையான செயல்களுக்கு அடிமையாக இருப்பதே 'சூனியம்' என்னும் கருத்து பல சமுதாயத்தினரிடையே நிலவுகிறது. அவை பெரும்பாலும் மனித வாழ்க்கையில் துன்பத்தையே உண்டாக்குகின்றன. பால் அருந்தும் இளம்வயதிலிருந்தே சூனியத் தொடர்பான மனப்பாங்கு வளர்க்கப்படுகிறது. சிவா (Cewa) பழங்குடியினரிடையே, சூனியக்காரர்கள் மனித மாமிசத்தை உண்பதனால் உண்டாகும் தோல் வெடிப்பினைத் தவிர்ப்பதற்காகச் சிறு வயது முதற்கொண்டே, பெரியோரால் மந்திரிக்கப்பட்டிருக்கின்றனர்.

**சூனியத்தின் அமைப்பும் செயல்முறைகளும்:** பல்வேறு சமுதாயத்தினரும் சூனியத்தில் நம்பிக்கை கொண்டுள்ளனர். அவர்களிடையே காணப்படும் நெருங்கிய உறவுமுறையினை ஒட்டியே அவர்களின் வாழ்க்கை அமைந்துள்ளது. எவ்வகையிலும் பிரிக்க



சூனியக்காரர்

வியலா இவர்களின் உறவுமுறை, சூனியத்தில் கொள்ளும் நம்பிக்கையால் பிரிக்கப்படுகிறது. ஏனெனில், அவர்களிடையே எவரேனும் சூனியக்காரர் என்றோ பில்லிசூனியர் எனறோ கூறப்பட்டால் அச்சமுதாயத்திலிருந்து அவர்கள விலக்கப்படும் நிலை காணப்படுகிறது. இதனால், ஏற்பட்ட அச்சமே அவர்களின் சமுதாயக் கட்டுப்பாட்டிற்கு ஆதாரமாகவும், ஒருவரோடொருவர் பழகுவதில் எச்சரிக்கையாகவும் இருக்கச் செய்கிறது எனலாம்.

சூனியக்காரர்களின் பழக்கவழக்கங்களைக் குறித்துப் பல்வேறு கருத்துகள் நிலவுகினறன. பொதுவாகச் சூனியக்காரர்கள இரவு நேரத்தில் செயற்படத் தொடங்குவதாகவும், அவர்கள துடைப்பத்தில் கைப்பிடி மேல் அமர்ந்து காற்றில் பறப்பவர்கள் என்றும் சிலசமுதாயத்தில் கூறப்படுகின்றனர். மத்திய ஆப்பிரிக்காவில், சூனியக்காரர்கள் தட்டு வடிவப் புடைக்கும் கூடையில் பறக்கின்றனர் என்று கருதப்படுகின்றனர்.

சூனியக்காரர்கள், விலங்குகள் சிலவற்றைத் தங்கள் பேராளர்களாகப் பயன்படுத்துகின்றனர். இஙஙனம், ஐரோப்பாவில் நாய்கள், பூனைகள், மரநாய்கள் ஆகியவையும், சப்பானில் (Japan) நாய்களும் நரிகளும், ஆப்பிரிக்காவில் கழுதைப்புலிகள, ஆந்தைகள், மனிதக் குரங்குகள் ஆகியவையும் சூனியக்காரர்களின் பேராளர்களாகப் பயன்படுத்தப்படுகினறன. சமூகத்தினர் தலையிட்டாலோ, நடுவர் தீர்ப்பாலோ, சமரசம் செய்துவைக்க முடியாத பல சண்டைகள், சூனிய நமபிக்கையினால் தீர்க்கப்படுகிறது. இங்குச் சூனியம் மறைமுக இடையீட்டாளராகச் (Mystical Medium) செயற்படுகிறது.

சூனியக்காரர் என்றொருவர் குற்றம் சாட்டப்பட்டால் அது அவரது நற்பெயரைக் கெடுத்துவிடும். அவர் மிகக் கேவலமான சட்ட விரோதமான காரியத்தைச் செய்பவர்களுக்குச் சமமாகக கருதப்பட்டார். மேலும், இது ஒருவரது தகுதியையும் அதிகாரத்தையும் பாதிக்கச் செய்கிறது. இதற்கு எடுத்துக்காட்டு தாயிடந்தஙகல (Matrılocal) முறையைக் கொண்ட கிழகசு மத்திய ஆப்பிரிககாவின் சிவா பழஙகுடியினர். இவர்களிடையே தலைவனுக்குப்பின் ஆட்சி அவனது இளைய சகோதரனுககு உரித்தாகிறது. அவனுககுப்பின் அவனது மூத்த சகோதரியின மூத்த மகன ஆட்சிக்குரியவனாகிறான. இங்ஙனம் ஆட்சியேற்பவர் மாநதிரிகர் என்றோ, சூனியக்காரர் எனறோ குற்றம் சாட்டப்பட்டால் அவர்கள் ஆட்சியிலிருந்து உடனடியாக நீக்கப்படுவர்.

சூனியமும் பில்லிசூனியமும் பல இடையூறுகளை ஏற்படுத்துவதாகக் மக்கள் எண்ணுவதற்குக் காரணம் அவர்கள அவற்றின் மீது கொணடுள்ள நமபிக்கையே யாகும். அசாந்திப் பழங்குடியினர் தமக்கு நேரிடும் அனைத்து இன்னல்களுக்கும சூனியமும் பில்லி சூனியமும் காரணம் என்று கூறுகினறனர். அவர்கள் குறிகேட்பதிலும் நம்பிக்கை கொண்டுள்ளனர். அந்நம்பிக்கைகளே அவர்கள் சமுதாய அமைப்பினை அறிய உதவுகின்றன.எடுத்துக்காட்டாக, அவர்களிடையே எவரொருவர் நோய்வாய்ப்படினும், அவருக்கு வைக்கப்பட்ட சூனியத்தைக் குறிகேட்டல் வழி அறிகின்றனர். நோய் குணமாகக் குற்றம் சாட்டப்பட்ட சூனியக்காரரைக் கொண்டு சூனியத்தை விலக்கச் செய்கின்றனர். அவ்வாறு செய்தும் நோயாளி குணமடையாவிடில், அவருக்கு எதிர் சூனியம் வைக்கப்பட்டுளளது என்றோ, தவறுதலான மருந்து கொடுக்கப்பட்டுள்ளது என்றோ வேறுவிதமாக விளக்கமளித்து விடுகின்றனர்.

சூனியத்தில் நம்பிக்கை கொள்வதற்கான பல்வேறு விளக்கங்கள் பல ஆராய்ச்சியாளர்களால் கூறப்பட்டுள்ளன. அவற்றுள் ஐரோப்பாவில் இப்போது நிலவும் பல கோட்பாடுகளுள் ஆங்லேய எகிப்தியவியலாராகிய (Egyptologist) மார்க்கரெட்டு மர்ரே (Margrett Murray) என்பாரின் கோட்பாடு பல விவாதங்களைத் தொடங்கிவைத்தது. கிறித்தவ சமயத்திற்கு முன்பிருந்த சில சமய நம்பிக்கையற்ற சமுதாயத்தைச் (Pagan Religion) சார்ந்தவையே மேற்கு ஐரோப்பாவைச் சார்ந்த சூனியங்கள் என்பது அவர் கருத்து. அக்கோட்பாட்டினை இக்கால அறிஞர்கள் பலர்ஏற்க மறுத்துள்ளனர். கி.பி. 16,17-ஆம் நூற்றாண்டுகளைச் சார்ந்த சூனியக் கோட்பாட்டுடன் நெருங்கிய தொடர்புடையதோர் கோட்பாட்டினை அண்மையில் திரீவர் ரோப்பர் (H.R. Trevor Roper) என்னும் ஆங்கிலேய வரலாற்றியலார் கூறியுள்ளார். அதன்படி நாட்டுப் புறங்களில் நிலவிய மூட நம்பிக்கைகளைக் கொணடு, இடைக்காலத் திருச்சபைகளைச் சேர்நதோர் இயற்றிய பேய்நிலை விளக்கத்திலிருந்து வளர்ந்ததே சூனியம் என்பது கூறப்படுகிறது. இககருத்தே ஐரோப்பாவை அதன் இருண்ட காலத்திலிருநது இக்காலத்திற்குக் கொண்டு வந்துளளது என்றும் கருதப்படுகிறது.

சூனியத்தைப் பற்றிப் பரவல் கோட்பாடு, உளவியற் கோட்பாடு, சமூகவியற் கோட்பாடு போன்ற பல கோட்பாடுகள மானிடவியலாராலும், வரலாற்றியலாராலும் வகுக்கப்பட்டுள்ளன. இதில் பரவல் கோட்பாடு இக்காலம் முதற் கொண்டு வரலாற்றுக் காலம் வரை சூனியம் பரவியிருந்த இடங்கள், அதனைக் குறித்த நம்பிக்கைகள், செயல்முறைகள முதலானவை பற்றிக் கூறுகிறது. ஒரு வழியில் வெளிப்

படுத்தவியலாத சில உணர்ச்சிகள் மற்றொரு வழியில் வெளிப்படுத்தப்படுகின்றன என்னும் பிராய்டின் (Freud) கோட்பாட்டிலிருந்து பெறப்பட்டதே உளவியற்கோட்பாடு எனப்படுகிறது.

**பண்டைய வரலாற்றுக் காலத்தில் சூனியம்:** மந்திரச் செய்கைகளில் நம்பிக்கை கொள்வது பண்டைக்காலக் கீழை நாடுகளிலும் நிலவி வந்துள்ளது மந்திரத்தால் நோய்களைத் தீர்ப்பது, பிற மாந்திரிகங்களைக் கையாள்வது போன்ற செயல்கள கடவுளர், சிறந்த வீரர்கள் போன்றோருக்கே உரிய பணபுகளாகப் பண்டைக்கால இலக்கியங்கள கூறுகின்றன. இதனைப் பற்றிய குறிப்புகள் சில மெசபடோமியா எகிப்து கனான் (Canaan) போன்ற நாடுகளின்இலக்கியங்களில் காணப்படுகின்றன. குறிப்பாக, மெசபடோமியாவில் சூனியம் பற்றிய அச்சமும் அதனைத் தவிர்க்கும் முறைகளும் கையாளபபட்டுள்ளன என்பது கூறபபடுகிறது. பணடைக்கால ஈபுருக்களும், அவர்களது அணடைப் பகுதியில் சூனியத்தைக் கையாளல் அவற்றைத் தவிர்க்கும் முறை ஆகியவற்றைப் பற்றி நன்கறிநதிருந்தனர் என்று நூல குறிப்புகள் தெரிவிக்கின்றன.

தீமை விளைவிக்கும் மந்திரச் செயல்கள் மட்டுமே கிரேக்கம், உரோம் ஆகிய நாடுகளில் கண்டனம் செய்யப்பட்டுத் தண்டிக்கப்பட்டுள்ளன. நன்மை பயக்கும் பில்லி சூனியம் அதிகார பூர்வமாக அனுமதிக்கப்பட்டுள்ளது என்பது கூறப்படுகிறது. தீமை பயக்கும் மந்திரததைச் செய்பவர்களாக டையானா (Diana), செலீன் (Selene) அல்லது எகேட்டு(Hecate) போன்ற பெண் கடவுளர் கூறப்பட்டுள்ளனர். உரோமானியர் ஆட்சியின் வீழ்ச்சிக்குப் பினனர் ஐரோப்பாவில் குடியேறிய செருமானிய மக்களிடையே சூனியத்தைப் பற்றிய நம்பிக்கையும் பயமும் மிகுதியாகக் காணப்பட்டன. அம் மக்களிடையேயும் கடவுளரே சூனியத்தைச் செய்பவர்களாவும் அதனைப் பரப்புபவர்களாகவும் அச்சக்திக்கு உட்பட்டவாகளாகவும் கூறப்பட்டுள்ளனர். கிரேக்க-உரோமானிரிடையே தீமை விளைக்கும் சக்தியினைக் கொணடவர்களாகப் பெண்கள் கூறப்பட்டுள்ளனர். வயதான பெண, சூனியக்காரர்களின் உருவங்கள் ஆகியவை சில ஐரோப்பிய இலக்கியத்தில் இடம்பெற்றுள்ளன.

உரோமானியக் குடியியல் சட்டமும் திருக்கோயில் சட்டமும் (Ecclesiastical Law) பணடைக் காலத்திலிருந்தே சூனியம் செய்வதைத் தடைசெய்து வந்துள்ளன. சார்லி மாக்னே (Charle Magne) பிற மேலை ஐரோப்பிய ஆட்சியாளர் ஆகியோர் சூனிய நம்பிக்கையினைத் தீமை பயக்கும் மூட நம்பிக்கையென அறிவித்து அதனைக கையாள்பவருககு மரண தண்டனை விதிக்கலாம் எனக் கூறும் கடுமையான சட்டங்களை இயற்றினர். சூனியத்தைச் சமய நம்பிக்கையற்றோரின் வெறுக்கததகக பண்புகளாகக் கூறி அதனை அடியோடு அழிக்கவேண்டும் எனத திருச்சபையினர் தெரிவித்தனர். சூனியம், பில்லி சூனியம்,மந்திரச் செயல்கள் ஆகியவறறில் நம்பிக்கை தொண்டு ஆதரித்த மக்களிடம் அப்பழக்கத்தை விடுமாறு பழங்கால மற்றும் இடைக்காலத் தேவாலயங்கள் தூணடின. கிறிததவ சமயத்தைச் சார்நத புனித போனிபேசு (St. Boniface), புனித அகோபார்டு (St. Agobard) போன்றோர் சூனியத்தை எதிர்த்துக் குரலெழுப்பி உள்ளனர் எனறு கேனான் சட்டத்தில் (Canon Law) கூறப்பட்டுள்ளது. கி.பி. 1486-ஆம் ஆண்டு புனித தாமினிக்குத் (Dominican) துறவியா குழுவினைச் சார்ந்த எயின்ரிச்சுகிரேமர் (Heinrich Kraemer), கோகன் இசுபிரிஙகர் (Kohann Sprenger) என்னும் இரு துறவியர் செருமனியில் சூனியத்தை வேருடன் களையப் பயன்படும் வகையில், ஒரு நூலினை எழுதி வெளியிட்டனர். கிறித்துவ சமயததில் இந்நூலே பேய்நிலை ஆய்வு விளககததைப் பற்றிய அதிகார பூர்வமான களஞ்சியமாகத் திகழ்கிறது.

பிற சமுதாயங்களில் சூனியககாரர்கள் தீமை செய்பவர்கள் எனறு கூறப்பட்டாலும், ஐரோப்பிய வரலாறு சூனியக்காரர்களைத் தீமையின் இளவரசர் எனக கூறியுளளது. கி.பி. 1692-ஆம் ஆணடு நடைபெற்ற 'சேலம் சூனியக்காரர்கள் விசாரணை' பலராலும் அறியப்பட்ட வழக்காகும். இவவழக்கு விசாரணை பற்றிய ஆய்வில, சேலத்தில் சூனியம் மேற்கொள்ளப்பட்டது என்றும், அதனால், மக்கள சிலர் பாதிக்கப்பட்டனர் என்றும், அது சமுதாயததையே அப்போது மிகவும் அச்சுறுத்தியுள்ளது எனறும் அமெரிகக வரலாற்றியலாளரான சாட்விககு ஆன்சென் (Chadwick Hansen) கூறியுள்ளார்.

**இக்காலத்தில் சூனியம்:** காலப்போக்கில் அனைத்துத் துறைகளிலும் ஏற்பட்ட முனனேற்றததால் சூனியம் என்பது முட்டாளதனமான மூட நம்பிக்கையாகக் கருதப்படுகிறது. இக்காலச் சமுதாயத்தில் இருவகைச செயல்முறைகளில் சூனியம் எனனும் சொல பயன்படுத்தப்பட்டுள்ளது. பிறரைச் சூனியத்தால் துன்புறுத்துவோர் தாக்கப்படும் போதும், நடவடிக்கை அவர் மேல் எடுக்கப்படும போதும் சூனியம் என்னும்சொல் அதிகாரபூர்வமாகப பயன்படுத்தப்படுகிறது. தொன்மையான பழக்க வழக்கங்களைப் பேணிக் காக்கும் உறவினருடன்

நெருங்கிய பிணைப்புக் கொண்ட சமுதாயத்தின ரிடையே இவ்வகையில் சூனியம் எனனும் சொல் அதிகாரபூர்வமாகப் பயனபடுத்தப்படுகிறது. மற்றொன்றில, சூனியக்காரிகளின குழுவினைச சாரந்தோராகத் தம்மைக் கூறிககொண்டு, குறிப்பிட்ட காலங்களில சில சடங்குகள செய்வோரைக குறிக்கவும் சூனியம என்னும் சொல் தவறுதலாகப் பயன்படுத்தபபடுகிறது.

**பழங்குடியினரிடையே சூனியம்:** பழஙகுடியின ரிடையே நிலவும் சூனியம், அதன் தன்மை, செய்முறைகள் முதலானவை பற்றிப் பல மானிடவியலார் ஆய்ந்தறிந்துளளனர். சூனியத்தைப் பற்றிய ஆய்வு நனகு முன்னேற்றமடைந்துள்ளது. அசாந்திப் பழங்குடியினரைப் பற்றி இவான்சு பிரிட்சார்டு செய்த ஆய்வுபல கருததுகளைக் கூறுகிறது. அப்பழங்குடியினரிடையே மார்பு எலும்பிற்குக் கீழுள்ள முட்டை வடிவக் கறுத்த வீங்கியதொரு அமைப்பு அல்லது பூசனி விதைகளைக கொண்ட சிவந்ததொரு அமைப்பு அல்லது வயிறறினுள் அமைந்துள்ள வட்டமானபந்தமைப்புககொணட மங்கு' (Mangu) எனப்படும் பொருளால்தான் ஒருவர் சூனியக்காரர் ஆகிறார் என்னும் கருத்து நிலவுகிறது. இந்த மங்கு எனப்படும் அமைப்பை ஆண் சூனியக்காரர்களின் ஆணமககளும் பெணசூனியககாரர்களின பெணமக்களும் பரம்பரையாகப் பெறுகின்றனர் என்பது கூறபபடுகிறது சூனியம் என்பது ஒரே பழஙகுடியைச் சேர்ந்தவராலேயே செய்யப்படுகிறது என்றகருததும் ஒருவரைக் கணணுக்குப் புலபபடாமல செய்யச் சூனியக்காரர்கள், ஒருவகை மருநதினைப் பயன்படுத்துகின்றனர் என்ற எண்ணமும் இப்பழங குடியினரிடையே உள்ளது. மங்கு என்பது காற்றில் நெருப்புக்கோளம் போல் செல்லக கூடியதாகும் என்றும் அது தன்னை ஏவி விடுபவர் சொற்படி செயற்படுவது என்றும் இப்பழஙகுடியினர் நம்புகின்றனர். இப்பழங்குடியினரிடையே 'சூனியம்' என்பது சமூதாயத்தின் இயக்குமுறையாகத் (Social Mechanism) திகழ்கிறது. அவர்கள சூனியக்காரர்களைக் கணடுபிடிக்கக் காட்டுக் கொடியிலிருந்து தயாரிக்கப்படும் 'பென்சீ' (Benge) என்னும் நச்சுப பொருளைப் பயன்படுத்துகின்றனர். இவை தவிரப்பிறபொம்மைகளையும இவர்கள் பயன்படுத்துகின்றனர்.



சூனியப் பொம்மைகள்

நவகோப் பழங்குடியினர் சூனியத்தைப் பற்றிய பயத்தால் எங்குச் சென்றாலும் கழுகு, கரடி அல்லது மலைச் சிங்கத்தின் கல்லீரலிலிருந்து செய்யப்பட்ட மருந்தினைக் கொண்டு செல்லும் பழக்கத்தைக் கொண்டுள்ளனர்.

ஆப்பிரிக்காவில் சாம்பசி ஆற்றிற்கும் அதன் கிளையாறுகளுக்கும் இடைப்பட்ட மேட்டு நிலங் களில் வாழும் மாரவி (Maravi), சிவா (Cewa) போன்ற பழங்குடியினரிடையே, சூனியக்காராகளுக்கு நஞ்சு குடிப்பித்தல் தணடனையாக அளிக்கப்பட்டது என்றும், அவர்கள சூனியக்காரர்தள் அல்லராயின் நஞ்சைக் கக்கிவிடுவர் என நம்பப்பட்டதென்றும் அவர்களைப் பற்றி ஆய்வு செய்த காமிட்டோ (Gamitto) கூறியுள்ளாா.

நடு ஆசுத்திரேலியாவில் ஆய்வு செய்த சர் பால்ட்வின் இசுபென்சர் (Sir Baldwin Spencer), கில்லன் (F.J. Gillen) ஆகியோர் அங்கு வசிக்கும் தொல் பழங்குடியினர் பில்லி சூனியத்தில் கொண் டிருந்த நம்பிக்கையினைப் பற்றிக் குறிப்பிட்டுள்ள னர். அதாவது தொலைதூரத்தில் இருக்கும் தமது எதிரிகளைக் கூடப்பில்லி சூனியக்காரர்கள மந்திரிக் கப்பட்ட எலும்பு அல்லது குச்சியைக் கொண்டு கொல்லும் வல்லமை படைத்தவர்கள் என்று அப் பழங்குடியினர் நம்பிக்கைக் கொண்டுள்ளனா எனக் குறிப்பிட்டுள்ளனர்.

வட ஆசுத்திரேலியாவிலுள்ள 'மர்ன்சின்' (Murngin) மக்களிடையே, பில்லி சூனியத்தில் இறப்பவர் களின் மரணத்திற்கான காரணத்தைப் பிறரால் கணடுகொள்ளவியலாது என்னும் நம்பிககை உள்ளது என்று இலாய்டு வார்னர் (W. Lloyd Warner) கூறி யுளளாா.

நவகோப் பழங்குடியினரிடையே எந்தெந்தச் சூழ்நிலையில், எந்தெந்த வடிவில் சூனியம் செய்யப் படுகின்றது என்பது பற்றியும், அதனைக் கண்டுபிடிக கவும் எதிர்க்கவும் அவர்கள எடுக்கும் முயற்சி பறறி யும் குளுக்கான் (Clyde Kluckhon) குறிப்பிட்டுள ளார். இப்பழங்குடியினரிடையே, சூனியமென்பது சமுதாயக் கட்டுப்பாட்டிற்குத் தேவையானதாக உள ளது என்றும் கூறியள்ளாா.

பிறருடன் ஒத்து வாழ இயலாத இயல்புடை யோருக்குச் சூனியமும் பில்லிசூனியமும் மிகவும் பயனுள்ளதாக உள்ளன என்பது தென ஆப்பிரிக்க உலுவ்டு (Lovedu) பழங்குடியினரைப் பற்றிய ஆய் வின் மூலம் அறிய முடிகிறது. சில ஆய்வாளர்கள



சூனியப் பொருள்கள்

பண்பாட்டுச் செயல்முறைக் கட்டமைப்பின் ஒரு கூறாகக் காணப்படுவதே சூனியமென்று கருத்துத் தெரிவித்துள்ளனர். நேடல் (S.F. Nadel) போன்றோர் சூனிய நம்பிக்கை பற்றிய ஒப்புமை ஆய்வில், இந்நம்பிக்கைகள் எங்ஙனம் அவற்றின் சமுதாய அமைப்பினை ஒத்துள்ளன என்பது பற்றிக் குறிப்பிட்டுள்ளனர். யாவோப்(Yao) பழங்குடியினரைப் பற்றிய கிளைடு மிட்செல்லின் (Clyed Midsell) ஆய்வும், நெடும்புப் (Nedumbu) பழங்குடியினரைப் பற்றிய விக்டர் தர்னரின் (Victor Turner) ஆய்வும் இப்பழங்குடியினரிடையே சூனியக்காரா எனக் குறறம் சாட்டப்படுவது எங்ஙனம் அவர்களின் சமுதாய உறவு முறை வளர்ச்சியினைப் பாதிக்கிறது என்பதைத் தெளிவாகக் காட்டுகின்றன.

காலப்போககில் ஏற்பட்ட பண்பாட்டு வளர்ச்சியால பழங்குடியினரின நம்பிக்கை முறைகளிலும் மாற்றம் ஏற்படத்தொடங்கியது. எடுத்துக்காட்டாக நாகரிகம் அடைந்துள்ள ஆப்பிரிக்கர்களிடையே தங்களுக்கு ஏற்படும் இடையூறுகளுக்குக் காரணம் சூனியமதான் என்னும் நம்பிக்கை குறையத் தொடங்கியுள்ளது என்பது கிளைடு மிட்சல் (Clyde Mitchell), மார்க் சுவார்ட்சு(Marc Swatz) ஆகியோரின் கூற்று.

ஆப்பிரிக்காவில் சூனியத்தை அடியுடன களைவதற்காக மேற்கொளளப்பட்ட பல்வேறு இயக்கங்களைப் பற்றிய வெளியீடுகளும், தென்மேற்குத் தான்சானியாவைச் சார்ந்த 'காம்கேபே' இயக்கத்தைப் (Kamcape Movement) பறறிய இராய் வில்லியின் ஆய்வும் புதிய கோட்பாட்டின் அடிப்படையில் அமைந்துள்ளன. சூனிய நம்பிக்கை, ஆட்சி அதிகாரங்களைத் தலைமுறையாகப் பகிர்ந்துகொள்ள வழிவகுத்துள்ளது. ம.ந.பு.

**சூனியவாதம்**: புத்த மதத்தின் சிறப்பான பிரிவுகளுள ஒன்று சூனிய வாதம். இது பற்றிய கருத்துகள் நாகார்சசுனருககும் முற்பட்ட மகாயான சூததிரம், அசுவகோசம் போனற நூல்களில காணப்படுகினறன. எனினும், சிதறிக் கிடநத கருத்துகளை ஒழுஙகாக அமைத்துச் சூனியவாதத்தை வளர்த்த பெருமை நாகாாச்சுனரையே சாரும்.

சூனியவாதிகள் தங்களை 'மாத்தியமிகா' எனக் குறிப்பிடுகினறனர். இவர்கள புத்தரின 'நடுவழியைப் பின்பற்றினர். அது ஒன்றுக்கொன்று எதிரான இரண்டு உச்ச வழிகளைக் கடந்து நிறகின்றது. அது இருப்பு (Existence), இல்லாமை (Non-existence), அழியாமை (Eternalism), அழிவு (Nihilism) ஆகியவற்றால் விளையும் தவறுகளைத் தவிர்க்கிறது.

சூனியம் என்ற சொல்லிற்கு இன்மை (Nothing) பாழ் (Empty) எனப் பொருள் கொள்வது தவறு. சூனியம் விவரிக்க முடியாதது. ஏனெனில், அது அறிவின் நான்கு வகைகளுக்கும் அப்பாற்பட்டது. அதாவது இருப்பு, இல்லாமை, இரண்டும் உள்ள தன்மை, இரண்டும் இல்லாத தன்மை ஆகியவற்றைக் கடந்தது. நுகர்ச்சிஇயல்பான நிலையில், அதுசார்பு நிலை-பிரதீத்திய சமுத்பாதம் எனப்படும். அதாவது பிறப்பு, இறப்பு, சுழற்சி என்ற பொருளுடையது. முழுமையான அது உள் பொருள். அதாவது பன்மையிலிருந்து விடுபட்டது என்ற பொருளுடையது.

இவ்வுலகம் விவரிக்க முடியாதது. ஏனெனில, அது இருப்பு அன்று; இல்லாததும் அன்று. பரம் பொருள் அல்லது முழுமுதல் விவரிக்க முடியாதது. அது கடந்த நிலை இயல்புடையது. அறிவின் வகைகளால் அதை விவரிக்க இயலாது எல்லாம் சூனியத் தோற்றங்கள்; அடிப்படை உள்பொருள் அற்றவை. உள்பொருள் பன்மைத் தன்மை அற்றது. இவ்வாறு சூனியம் சார்புநிலை, உள்பொருள் என்ற இரு பொருள்களில் பயன்படுத்தப்படுகிறது. அதுவே, பிறப்பு இறப்பு, சுழற்சி, நிருவாணம் என்றும் பொருள் தருகிறது.

எது,சார்ந்ததும் காட்சிப் பொருளாகவும் பொருள்களுக்கு உட்பட்டதாகவும் உள்ளதோ அது சார்பு நிலை உடையது எனவே, அது அடிப்படைப் பொருள் அன்று. அனைத்துத் தோற்றங்களும் சார்பு நிலை உடையவையாக இருப்பதால அவை உணமையான தோற்றத்தைப் பெறறிருக்க இயலா. ஆகவே, அவை அடிப்படை உளபொருள அல்ல ஆனால், அவை முழுவதும் இல்பொருளும் அல்ல. அவை உள பொருளைச் சார்ந்தவையாக இருக்க வேண்டும். உள் பொருளே அதுவாகத் தோன்றுகிறது. இந்த உள் பொருள் பன்மையை உள்ளடக்கியது; முழுமுதலானது. ஆகவே சூனியம் பாழ் அன்று.

உலகப் பொருள்கள் எலலாம் மனம் சார்ந்தனவும் அல்ல; பொருள் சாாந்தனவும் அல்ல; நனவு நிலை சார்ந்தனவும் அல்ல: இலலாதனவும் அலல. அதாவது எல்லாவற்றையும் விவரிக்க முடியாது. அதனால் உள்பொருள் இல்லை என்றாகி விடாது. ஏனென்றால், உள்பொருளே அதுவாகத் தோனறுகிறது'

இந்த உலகம் இருக்கிறது எனக் கருதுபவர்கள் தவறு செய்பவர்கள். ஏனெனில், உள் சென்றுநோக்கும்

போது இவ்வுலகம் சார்புநிலை உடையது, அடிப் படையில் இல்பொருள் என அறிய முடிகிறது. இவ் வுலகம் இல்லை எனக் கருதுவது தவறு. ஏனெ னில், அவ்வாறு கருதுவது இவ்வுலகின் தெரிந்து கொள்ளக்கூடிய உள்பொருள் தன்மையை(காட்சிப் பொருள் உண்மையை) மறுப்பது ஆகிவிடும். அழிவுத் தன்மை, அழியாத் தன்மை ஆகிய இரண்டும் பொய்யே. பகுத்தாயும் சார்புநிலையும் அறிவும் தங் களுக்குள்ளேயே முரண்படுகின்றன. அவை உள் பொருளைத் தரா. உள்பொருள் எல்லாவற்றையும் கடந்தது. அதன் அனுபவம் முழுமையானது. அது சூனியம் எனச் சொல்லப்படுகிறது. அதைச் சொற் களால் விவரிக்க முடியாது. அறிபவன் அதை உடனடி அனுபவம் மூலம் அறிய வேண்டும். அமைதியான கடல்நீர் காற்றால் அலையாகத் தோன்றுவதுபோல், நனவுநிலை அறியாமையால் எல்லைக்குட்பட்ட அறி வுடை மனிதர்களாகத் தோன்றுகிறது. களிமண், பல வகைப்பட்ட பானை, சாடிகளாகத் தோன்றுவது போல, நனவு நிலை அறியாமையால் பல அறி வுடைய மனிதர்களாகத் தோன்றுகிறது. உண்மை யானஅறிவைப் பெறும்போதுதான் உண்மையை அறிய முடியும். உள்பொருள் சூனியமும் அன்று; சூனியம் அற்ற தன்மையும் அன்று; இரண்டும் அலலாததும் அன்று என்ற கருத்தையே சூனியவாதம் வளர்த்தது.

நாகார்ச்சுனர் படைப்பை மறுக்கிறார். எதையுமே எப்போதுமே தோற்றுவிக்க முடியாது. ஒரு பொருள தன்னிலிருந்தோ, தனக்குப் புறம்பானதிலிருநதோ, இரண்டிலுமிருந்தோ, இரணடுமல்லாத தனமையி லிருந்தோ தோன்ற முடியாது. காரியம காரணத்தில் இல்லை எனில் காரியத்தை உற்பத்தி செய்ய முடி யாது. எ-டு: மலடி மகன், முயற் கொம்பு. காரியம் காரணத்தில் உள்ளது எனில், உற்பத்தித் தேவை இல்லை. ஒரு பொருள் தன்னிலிருந்தே தோன்ற முடியாது எனில் தனக்குப் புறம்பானதிலிருந்து எப் படித் தோன்றும் எனக்கூறி, நாகார்ச்சுனர் தோற் றத்தை (Origination) மறுக்கிறார்.

ஒருவர் குணங்களை அறிவர். ஆனால், பொருள் களை அறிவதில்லை. குணங்களின்றிப் பொருள்களை அறிய முடியாது. பொருள்களினறிக் குணங்கள இருக்க முடியாது. குணங்கள பொருளுக்கு உள்ளேயு மில்லை. வெளியேயும் இல்லை. பொருளும் குணமும் ஒன்றல்ல; வேறும் அல்ல, இரண்டும் சார்புடையவை - இல்பொருள்.

தனி மனித அகமும் (Individual self) இருப்பற் றது. அது , கந்தங்களினின்றும் வேறானதும் அனறு; ஒன்றானதும் அன்று. அகம் கந்தமாக இருந்தால் அது தோற்றமும் அழிவும் பெற்றிருக்க வேண்டும். அகம் கந்தத்திலிருந்து வேறுபட்டது எனில் அதை அறிய முடியாது. புத்தரின் கருத்துப்படி பிரதீத்திய சமுத்பாதம் நிலைத்தன்மையும் அன்று; அழிவும் அன்று; அது சார்பு நிலையானது.

நிருவாணம் ஒரு திரிபுக் காட்சி ஆகும். தளை யும் விடுதலையும் இல்பொருள்களே. கட்டுப்படுவதும், விடுதலை பெறுவதும், இரண்டும் பெறுவதும், இரணடு மற்றதும் இல்லை. கந்தங்களில் உள்ள எதுவும், கந்தங்களில் இல்லாத எதுவும் கட்டுப்படுவதும் இல்லை. அதுபோலவே நிருவாணமும் இருப்பற்றது. ஏனென்றால், இருக்கும் மற்றப் பொருள்களைப் போல இதுவும் தொடக்கம், முடிவு ஆகியவற்றைப் பெற்றிருக்க வேண்டும். மேலும், அது ஒரு கார ணத்தை, கந்தங்களைச் சார்ந்தும் இருக்க வேண் டும். நிருவாணம் இல்லாதது அன்று இல்லாதது இருப்பதைச் சார்ந்து உள்ளது. நிருவாணம் இருப்ப தும் இல்லாததுமாக இருக்க முடியாது. ஏனெனில் அது முரண்பாடு உடையது. இரண்டும் அல்லாததாக வும் இருக்க முடியாது. ஆகவே, நிருவாணம் இருப்ப பதும் அன்று; இல்லாததும் அன்று. அது திரிபுக் காட்சியே.

சங்கரர் சூனியவாதத்தை இன்மைக் கொளகை (Nihilism) என்கிறார். அது அனைத்துச் சான்று களுக்கும் அப்பாற்பட்டது என்கிறார். இது சங்கரர் சூனியவாதத்தைப்புரிந்து கொள்ள எம் முயறசியும எடுத்துக் கொளளவில்லை என்பதைப் புலனாக்கு கிறது. ஆனால், நாகார்ச்சுனர் சூனியத்தைச் சார்புடையது (Relative)எனப் பொருள் கொள்கிறார் என்பது புலனாகிறது. மாத்யமிகர் என்ற சொல்லே, என்று முள்ள தன்மைக்கும் (Eternalism), அழிவுக்கும (Nihilism) எதிரான நடுவழியைப் பின்பற்றுபவர்கள் என்பதை விளக்குகிறது. நடுவழியின்படி உள்ள பொருள் என்றுமுள்ளதும் அன்று; என்றும் இல்லா ததும் அன்று, நாகார்ச்சுனர் கடந்த நிலையில் எல்லாம் இருப்பற்றது என நிறுவுகிறார். சங்கரரும் கடந்த நிலையில் கடவுளும் இல்லை எனக் கூறுகிறார். எனவே, சூனியவாதமும் சங்கரரின் ஒருமைக் கொள்கையும் பெரிதும் ஒத்துள்ளன.

தம் 'இரத்னாவளி' யில் நாகார்ச்சுனர் 'உள் பொருள் அறிவின் அனைத்துக கூறுகளுக்கும் அப்பாற் பட்டது' எனக் குறிப்பிடுகிறார். சூனியத்தின் பொருளை உணர்ந்தவன், பொருள்களின் உள பொருள முக்கியத்துவத்தை அறிய முடியும். ஏனை யோரால் அது முடியாது.

சூனியவாதம், கடநதநிலை (Transcendental) உண்மைச்சுய அனுபவம் மூலம் அறியப்பட வேண்டும்

என்கிறது. சித்தத்தை ஒருநிலைப் படுத்தச் சமாதி தேவை. சமாதி பயிற்சி செய்வது பிரஞ்ஞையைத் தூணடி நாடுபவன் நிலையான சித்தம் பெற உதவு கிறது. அடிப்படை உண்மையை அறியும் அனுபவத் திறகு அழைத்துச் செல்கிறது. சமாதிக்குத் துறவு, ஆறு பாரனிதாக்களைப் (Paranitas) பயிற்சி செய்தல் ஆகியவை தேவைப் படுகின்றன. கருணை நல்லொ முக்கம், அமைதி, தைரியம், தியானம், ஆன்மிக நிலை ஆகிய ஆறும் பாரனிதாக்களெனப்படும். பயிற்சி யின்றிக்கடந்த நிலையால் உண்மையை அறிய முடியாது. தவமே மிக முக்கியமானது, அது துன்பத்தை அழித்து, அறிவைப் பெற உதவுகிறது இவ்வாறு நாடுபவன் சூனியத்தை அறிகின்றான்.

எஸ்.இல.

துணை நூல்:

Radhakrishnan, S., Indian Philosophy - Vol I Blackie and Son Publishers Pvt. Ltd., 1983.

**செ** ச கரத்திற்கும் எ கரத்திற்கும் கொடுக்கப்பட்ட குறிப்புகளைப் பார்க்கவும். இவ்விரண்டு ஒலிகளுக்கும் உரிய முயற்சி அடுத் தடுத்து மேற்கொள்ளும்பொழுது இவ்வொலி தோன்றும்.

இவ்வொலிக்குரிய எழுத்தின் வடிவம் கி.பி. 4-ஆம் நூற்றாண்டு வரை ச கரத்தை எழுதிய பின் இடப்புறமாக இழுக்கப்பட்ட சிறு கோடே ஆகும். தென் தமிழ் நாட்டில் குகைகளில் காணப்படும் பழைய கல்வெட் டுகளில் இந்த வடிவம் கிடைக்கின்றது, இக்குகைக் கலவெட்டுகளில் மெய்யெழுத்துகளுக்குப் புள்ளியிடப் பெறும் வழக்கம் காணப் படவில்லை. எகர உயிர்மெய் எழுத்துகளுக்குப் புள்ளியிடும் வழக்கம் உண்டென்பது தொல்காப்பியத்திலிருந்து நாம் அறியக் கிடக்கின்றது. கல்வெட்டியல் அறிந்தவர்கள், இவ்வழக்கம் பெரும்பான்மையாக எக்காலத் தும் காணப்படவில்லை என்பதைக் கண்டிருக்கின்றார்கள். .. ... ...

பல்லவ பரமேச்சுவர வர்மனின் கி.பி. 7-ஆம் நூற்றாண்டுக்கூரம் செப்பேடுகளிலும், பல்லவ நந்திவர்மனின் திருவெள்ளறை(ஆலம் பாக்கம்) மாற்பிடுகுக்கிணற்றுக்கல்வெட்டிலும்செந்தலை முத்தரையர் கல்வெட்டுகளி லும் புள்ளிகள் மெய்யெழுத்தின் மேலும் எகர ஒகர உயிர் மெய்களின் மேலும் காணப்படுகின்றன. அவ்வாறே வட்டெழுததிலும் கி.பி. 7-ஆம் நூற்றாண்டில் பாண்டியன் சேந்தனின் 50-ஆம் ஆண்டு வைகைப் படுகைக் கல்வெட்டிலும் கி.பி. 8-ஆம் நூற்றாண்டு வேள்விக் குடிப்பராந்தகனின் வட்டெழுத்துச் செப்பேடுகளிலும் புள்ளி காணப்படுகின்றது. ... ... ...

இக்காலங்களில் இடதுபுறம் இழுக்கப்பட்ட சிறு கோடு பிரிந்து வளை வாக எழுதப்பட்டது. தலைக்கட்டை ஒட்டி எழுதப்பட்ட இக்குறி பிறகு கி.பி. 13-ஆம் நூற்றாண்டில் குன்றத்தூர் இராச நாராயண சம்புவராயன் காலத்துக்கு முன்பாகவே சகர எழுத்திற்குச் சமமாக எழுதப்பட்டது.

கே.ஜி.கி.

*செக்காவ் ஆண்டன்* என்பவர் ஒரு நாடக ஆசிரியர்; சிறுகதை எழுத்தாளர். இவர் கி.பி. 19-ஆம் நூற்றாண்டில் உருசிய நாட்டு எழுத்தாளர் களின்பேராளராக விளங்கியவர்.

நடுத்தரக் குடும்பத்தைச் சார்ந்த இவர் கி.பி. 1860-இல் பிறந்தார். இவர் பள்ளியில் படிக்கும் போதே சிறு சிறு நாடகங்கள் எழுதிப் பயிற்சி பெற் றார். இவரது படைப்பில் நகைச்சுவை மிக்கிருக்கும். இவர் இளம் பருவத்திலேயே ஆசிரியராகப் பணிபுரி யும் வாய்ப்புப் பெற்றார். ஆனால், இவரது தணி யாத கல்வி வேட்கை இவரை மேலும் படிக்கத் தூண்டியது. எனவே, மாசுகோ நகரில் கி.பி. 1880-இல் பயின்று,பின மருத்துவக் கல்லூரியில் சேர்ந்து பயின்று கி.பி. 1884-இல் மருத்துவப் பட்டம் பெற்று மருத்துவராகப் பணியாற்றிக் கொண்டே எழுத்தாள ராகவும் விளங்கினார். மெலிக்போவோ என்ற நகரில் கி.பி. 1892 முதல் 1898 வரை மருத்துவத்



செக்காவ் ஆண்டன்

தொழில் புரிந்த போது இவர் தலைசிறந்த படைப் பிலக்கியங்களை உருவாக்கினார். அவற்றுள், மிகச் சிறந்த நீண்ட கதைகளாகிய 'தொகுதி எண் ஆறு' (Ward Number Six) 'ஒரு பெண்மையரசு' (A (Women's, Kingdom), 'மூன்று ஆண்டுகள' (Three Years), 'எனது வாழ்க்கை' (My Life) 'குடியானவர்' (Peasants) ஆகியன குறிப்பிடத் தக்கன. அவற்றை மக்கள் பெரிதும் விரும்பிப் படித்தனர்.

இவர் தமது 23-ஆம் வயதில் எலும்புருக்கி நோயால் துன்புற்றார். அதனால், கி.பி. 1899-இல தம் உடல்நலத்தின பொருட்டு யால்டா (Yalta) விற்குச் சென்றார். அங்குத் தங்கியிருந்தபோது சில புரட்சிமிக்க நாடகங்களை எழுதினார். அக்காலத்தில் மாசுகோ நாடக அரங்கில நடித்துப் புகழபெற்ற ஓல்கா நிப்பக்கு (Olga Knippak) என்ற நடிகையை 1901-இல் மணநது கொணடார். அரங்கில் நடித்தற் கேற்ற 'மூன்று சகோதரிகள்' (Three Sisters), 'செங் கனித் தோட்டம்' (Cherry Orchard) முதலிய சிறநத நாடகஙகளை எழுதினார். அவை அடிக்கடி நடிக்கப் பெற்றன.

இவர் சிறந்த சிறுகதை எழுத்தாளரும் ஆவார். சிறுகதை வளர்ச்சியில இவருக்குத் தனியிடம் உணடு. எட்கார் ஆலன் போ (Edger Allan Poe) போனற புகழ் மிக்க எழுத்தாளாகளின் சிறுகதை உததிகளை மாற்றி 20-ஆம நூற்றாணடின புதிய கதை வடி வத்தை அமைத்துக் கொடுத்தவர் இவர். இவர்தம் கதைகளில் செயல் அல்லது கரு மிகவும் குறைவு. ஆனால், கதை மாந்தரின் உணர்ச்சிகளையும் பல வேறு பணபியல்புகளையும் சித்திரிப்பதில் வல்லவர். இவரது 'மகிழசசி' (Happiness) என்ற கதை நல்ல ஓட்டமுடையது. அதில், ஒரு சமவெளி, ஓர் இரவு, மங்கலான பகலவனின் எழுச்சி, ஆட்டுமந்தை, மூன்று மனித உருவங்கள் ஆகியவற்றை வைத்து மகிழ்ச்சி என்பதனை மிகத் தெளிவாகப் புலப்படுத்தியுள்ளார். அத்தகைய கதைகளில் பாடுபொருள், பாத்திரங்கள், சூழ்நிலைகள் ஆகியன ஒன்றைவிட்டு ஒன்றைப் பிரிக்கமுடியாத அளவில் நன்கு பின்னப்பட்டுள்ளன. கதை நிகழ்ச்சி ஓரளவே சித்திரிச்சப் பட்டிருப்பினும் அதன் வெளிப்படையான அல்லது வளைந்து செல் லும் நெகிழ்ச்சி வாசகர்களுக்கு இப்பெரிய உலகத்தை முன்னிறுத்திக் காட்டுவது போல் அமைக்கப்பட்டுள ளது. இவவாறு செக்காவ் சிறந்த சிறுகதைச சிற்பியாக விளஙகினார். இவர் 1904-இல் மறைந தார். சா.உ.

**செக்கு மொழி**: செக்கு மொழி ஒரு இந்திய-ஐரோப்பிய மொழி. இது, இந்திய - ஐரோப்பிய மொழிக் குடும்பத்தில் பால்டோ-சிலாவிய மொழிப் பிரிவைச் சேர்ந்த சிலாவிய மொழிகளுள் ஒன்று. இம் மொழி செக்கோசுலோவேகியாவில் பொகிமியா, மாரேவியா, சிலேசியா போன்ற பகுதிகளில் வழக்கி லுள்ளது. செக்கு மொழி செக்கோசுலோவேகியாவின் நாட்டின் அரசியல் மொழிகளுள் ஒன்று. 10,000,000 மக்கள் இம்மொழியைப் பேசுகின்றனர். இவர்களுள் 1,000,000 மக்கள் அமெரிக்க ஐக்கிய நாட்டில் வாழ்ப வர்கள். செக்கு மொழி செககோசுலோவேகியாவின் மற்றொரு அரசியல் மொழியான சிலாவக்கு மொழி யுடன் மிக நெருங்கிய தொடர்புடையது. இவ்விரண் டையும் இணைத்தே செக்கசுலோவக்கு என அழைத் தனர். செக்கு மொழி முன்னர்ப் பொகிமியன் என்று அழைக்கப்பட்டது. செக்கென்ற சொல் செசுடிசுலாவ என்ற சிலாவானித் தலைவன ஒருவனுடைய பெயரி லிருநது வந்திருக்கலாம் என்று கருதுகின்றனர் சிலர். இன்னும் சிலர் செக்குநாட்டின் மேற்குப் பகுதியான செச்சி (Cechy) யைக் குறிக்கும் பெயரிலிருந்து வந் தது என்பர்.

செருமன், இலத்தீன் ஆகிய மொழிகளின் செல் வாக்கு செக்குமொழியில் நிரம்பி நின்றது. இம் மொழியின் வரலாற்றை முற்காலம் (கி.பி.11-14 நூ.), இடைக்காலம் (கி பி 15-16 நூ.), இக்காலம் என மூன றாகப் பிரிக்கலாம். கி.பி. 6-ஆம் நூற்றாணடிலிருந்து 10-ஆம் நூற்றாண்டு வரை செக்கு மொழி பழைய கோயில் சிலாவானிய மொழியிலிருந்து மிகுதியாக மாறுபட்டுக் காணவில்லை என்று கூறுவர். கி.பி. 11-14-ஆம் நூற்றாண்டுப் பகுதியில் இம்மொழியின் கண் சில வேறுபாடுகள் தோன்றின. சில மெய் மாற்றங் களும், உயிர் மாற்றங்களும் தோன்றின. இம்மொழி யில் கி.பி.16-ஆம் நூற்றாண்டில் பல மாற்றங்கள தோன்றின. பெயா, வினைகளில் இருமை எண அழிந் தது. இன்று சில சொற்களில் இருமை எண் காணக் கூடியதாக இருக்கிறது. இம்மொழி உரோமானிய எழுத்து முறையிலேயே எழுதப்படுகிறது.

செக்கு மொழியில 14 உயிர்களும், 25 மெய்களும் உள்ளன. உயிர்களில் குறில், நெடில் வேற்றுமை காணப்படுகிறது.

செக்கு மொழி ஆண், பெண், அஃறிணை என்ற மூன்று பால்களையும், ஒருமை, பன்மை என இரு எண்களையும், எழுவாய், 'ஐ, ஆன், கு, அது, கண, விளி' என ஏழு வேற்றுமைகளையும் கொண்டுள்ளது. செக்கு மொழியில் பால்பகுப்பு இயற்கை அடிப்படையிலன்றி இலக்கண அடிப்படையில் அமைந்துள்ளது. பெயர்ச்சொற்களின இறுதி உருபுகளின் அடிப்படையில் பால பகுக்கப்படுகிறது வேற்றுமை உருபுகள பெயர்களின் பால், எணகட்கேற்ப மாறும் தன்மை கொண்டுள்ளன. சிலாவிய மொழிகளில செககு மொழியில் தான் வேறறுமைகள் மிக நன்கு பாதுகாக்கப்படுகினறன. மூவிடப் பெயர்களும், சுட்டுப் பெயர்களும் தனித்தனியாக உளளன. சுட்டுப் பெயர்களிலும் அண்மை, சேய்மை, நெருக்கம் என மூன்று வகைப் பெயர்கள உளளன. தென் (ten) இது; தென்தோ (tento) (நெருக்கத்தில்); ஒனென (onen) அது. சுட்டுப் பெயர்களில் ஆண்பால பன்மையில் உயிர்திணை, • உயிரல் திணை வேறறுமையும் உள்ளது. தென் (ten) இது, இவன்; தி (ti) இவர்கள் (ஆண்பால், உயிர்த்திணை); தி (ய்) ti(y)இவை (ஆண்பால், உயிரல் திணை).

செக்கு மொழி வினைச் சொற்கள் காலம், எண ஆகிய இலக்கணக் கூறுகளைக் கொண்டுளளன. ஓரிரு வினைகளைத் தவிர ஏனைய வினைகளா நிகழகாலம் ஒழிந்த பிற காலங்களைத் துணை வினைகளின உதவியால காட்டுகினறன. எம்.சு.

**துணை நூல்:**

**அகத்தியலிங்கம், ச**, 'உலக மொழிகள - இரண்டாம் பகுதி, அணணாமலைநகர், 1969.

**செக்கோசுலோவேகியா:** செக்கோசுலோவேகிய சமநிலைச் சமுதாயக் குடியரசு (Czechoslovak Socialist Republic) மத்திய ஐரோப்பாவிலுள்ள பொதுவுடைமை நாடுகளுள ஒன்று இதன தலைநகர் பிரேகு (Prague) வடக்கில் கிழக்கு செருமனியும் போலநதும், கிழக்கில சோவியதது ஒன்றியமும், தெற்கில் அங்கேரியும், ஆசுத்திரியாவும், மேற்கில் செருமனியும் இதன் எல்லைகளாம். இக்கூட்டரசில் செக்குக் குடியரசும் சுலோவேகியச் சமஉடைமைக் குடியரசும் சேர்நதுளளன. சுலோவேகியக் குடியரசின தலைநகர் பிரடிசுலாவா (Bratislava).




செக்கோசுலோவேகியா

**நாட்டின் அமைப்பு:** செக்கு சமநிலைச் சமுதாயக் குடியரசில் பொகிமியா, மொராவியா, சைலீசியா ஆகியவை அடங்கியுள்ளன. பொகிமியா, இக்கூட்டரசின மேற்கில் உள்ளது.சமவெளியான இப் பகுதியில் காடுகள் அதிகம். இங்கு எல்பு ஆறும், அதன் கிளையாகியஉல்டாவாவும்பாய்கின்றன.தலை நகரான பிராக்கு உல்டாவா நதிக்கரையில் உள்ளது. இப்பகுதியில் யுரேனியம் கிடைப்பதுடன் வளமிக்க பண்ணைகளும், பெரிய தொழிற்சாலைகளும் உள்ளன. பொகிமியாவுக்குக் கிழக்கே உள்ள மொராவியா (Moravia)வின் வடக்கில் சைலீசியாவும், கிழக்கில் சுலோவாக்கியாவும், தெற்கில் ஆசுதிரியாவும் உள்ளன. இப்பகுதியில் பாயும் மொராவியா ஆறு தான்யூபு (Danube) ஆற்றுடன் கலந்து கருங்கடலை அடைகிறது. உழவுத் தொழில் சிறந்திருப்பதுடன், தொழிற்சாலைகளும் மிகுதியாக உள்ளன. மொராவியாவிற்கு வடக்கே சைலீசியா (Silesia)உள்ளது. இதன் ஒரு பகுதி போலநதுடன் இணைக்கப்பட்டு விட்டது. இக்குடியரசுக்குத் தேவையான இரும்பும் நிலக்கரியும் இங்குக் கிடைக்கின்றன. சுலோவாக்கியக் குடியரசு மொரானியா, சைலீசியா இரண்டிற்கும் கிழக்கே உள்ளது. இது மலைப்பாங்கான, வறணட பகுதியாகையால், அண்மைக் காலம் வரை வறுமையில் வாடியது. இந்நாட்டு மக்கள் கல்வியிலும், பொருளாதாரத்திலும் செக்குகளை விடப் பின்தங்கி உள்ளனர். நிருவாகத்தின் பொருட்டு இந்நாடு 10 வட்டங்களாகவும் இரு நகரங்களாகவும் பிரிக்கப்பட்டுள்ளது

**வரலாறு:** முதல் உலகப்போரின் முடிவில் ஆசுதிரியா-அங்கேரி கலைக்கப்பட்டு 1918-இல் செக்கு நாடு பிறந்தது. சுலோவாக்கிய தேசிய அவை அந்நாட்டுடன் இணைய விருப்பம் தெரிவித்தது. எனவே, 1918 நவம்பரில் செக்கோசுலோவாக்கியக் கூட்டரசு ஏற்பட்டது. அதிலிருந்து 1938-வரை முதல குடியரசு நிலவியது. பின்னர் ஏற்பட்ட இரண்டாம் குடியரசு 6 மாதங்களுக்கே நீடித்தது. செருமனி 1939-இல் பொகிமியாவையும் மொராவியாவையும் கைப்பற்றித் தன்னுடைய இரெய்ச்சுப் (Reich) பகுதியுடன் இணைத்துக் கொண்டது. இரண்டாம் உலகப் போரில் ஈடுபட்ட சோவியத்து - அமெரிக்கப் படைகள் 1945-இல் விடுதலை பெற்றுத் தந்தன. 1945 முதல் 1948 வரை மூன்றாம் குடியரசு இருந்தது. பினனர் 1946-இல் நடந்த தேர்தலில் பொதுவுடைமைக் கட்சி 38 விழுக்காடு வாக்குகளைப் பெற்று, கிளமெண்ட்டு காட்டுவால்டு (Klement Gottwald) தலைமையில் கூட்டு அமைச்சரவையை ஏற்படுத்தியது. இக்கட்சி 1948-இல் நடந்த தேர்தலில் 89 விழுக்காடு வாக்குகளைப் பெறறுத் தானே ஆட்சி செய்யலாயிற்று.

பொதுவுடைமைக் கட்சிக்கொள்கையில் 1968 -இல் மாற்றம் ஏற்பட்டு, புதிய தலைவர்கள பதவிக்கு வந்து, அரசியல, பொருளாதாரத் துறைகளில் மாற்றங்களைச் செய்யச் 'செயல் திட்டம்' தீட்டப் பட்டது. இதை விரும்பாத சோவியத்து உருசியா வார்சா ஒப்பந்தப் படைகளை ஏற்றுக் கொணடு, சீர்திருத்தங்களைக் கைவிட்டு, அரசாங்கத்திலும் கட்சியிலும் பல மாறுதல்களைச் செய்தது. அடுத்து 1970-இல் செக்கோசுலோவாக்கியா-சோவியத்து உருசியா 20 ஆண்டு நட்பு, கூட்டுறவு, ஒருவருக்கொருவர் உதவுதல் ஒப்பநதம் ஏறபடுத்தப்பட்டது. அதனபடி இந்நாடு வார்சா ஒப்பநதத்தில் சேர்ந்து சோவியத்து அணியில் உள்ளது.

**அரசியலமமைப்பு:** 1969 சனவரி முதல் நாள அரசியல் அமைப்பின்படி, இக் கூட்டரசில சம உரிமைகளைக் கொண்ட செக்குச் சமநிலைச் சமுதாயக் குடியரசும், சுலோவாக்கிய சமநிலைச் சமுதாயக குடியரசும் சேர்ந்துள்ளன. ஒவ்வொன்றிற்கும் தனித்தனியே தேசிய அவைகள் இருக்கினறன. இக்கூட்டரசில இரு அவைகள் உண்டு. மாநிலங்களின் அவைக்கு (Chamber of Nations) செக்குகள 75 உறுப்பினர்களையும் சுலோவாக்குகள் 75 உறுப்பினர்களையும் தங்களுடைய தேசிய அவையிலிருந்து தேர்ந்தெடுதது அனுப்ப வேணடும். மக்கள அவை (Chamber of the People) உறுப்பினர்கள 200 பேரும் பொதுத்தேர்தலில் 5 ஆணடுகளுக்குத் தேர்ந்தெடுக்கப்பட வேண்டும். கூட்டாட்சி சபையானது அரசியலமைப்பு, அயல்நாட்டு விவகாரம்,பாதுகாப்பு, பொருளாதாரக கொள்கை ஆகியவை பற்றி முடிவெடுக்கும். இக்கூட்டரசின் ஆட்சியைக குடியரசுத் தலைவரும், அவரால நியமிக்கப்பட்ட அமைச்சர்களைக் கொணட அமைச்சர் அவையும் நடத்த வேணடும். குடியரசுத் தலைவர் கூட்டரசின அவையால் தேர்ந்தெடுக்கப்பட்டு அதற்குப் பொறுப்புடையவர் ஆவார்.

**அரசியல் கட்சிகள்:** இக்கூட்டரசில் அரசியலைக் கட்டுப்படுத்துவது 'தேசிய முன்னணி'(Natıonnl Front) என்னும் பொதுவுடைமைக் கட்சியாகும் இது செக்கோசுலோவாக்கியப்பொதுவுடைமைக் கட்சியின்ஆதிக்கத்தில் உள்ளது. இதன் உறுப்பினர்கள் மட்டுமே தேர்தலில போட்டியிடலாம். இதில் செக்கோசுலோவாக்கிய சமநிலைக் கட்சி (Socialist Party), செக கோசுலோவாக்கிய மக்கள் கட்சி, சுலோவாக்கிய சுதந்திரக் கட்சி,சுலோவாக்கியப் புனரமைப்புக் கட்சி,

பல்வேறு தொழிற்சங்கங்கள் ஆகியவை சேர்ந்துள்ளன.

**மக்கள்:** சிலாவிக்குக் குடும்பத்திலிருந்துதோனறிய இம்மக்கள் பல கிளைகளாகப் பிரிந்திருப்பினும், பெரும்பான்மையினர் செக்குகளும் சுலோவாக்குகளும் ஆவர். இக்கூட்டரசின் மக்கள்தொகை 15,437,038 (1983). அதில் செக்குகள் 64 விழுக்காடு (9805 ஆயிரம்), சுலோவாக்குகள் 31 விழுக்காடு, (4769ஆயிரம்), மீதி 5 விழுக்காட்டினர் அங்கேரியர், போலந்துக்காரர், செருமானியர், உக்ரேனியர் முதலானோர். இதன் பரப்பளவு 127,869 ச.கி.மீ. செக்கு மொழியும் சுலோவாக்கு மொழியும் இந்நாட்டின் ஆட்சி மொழிகளாகும்.

**சமயம்:** உரோமன் கத்தோலிக்கச் சமயம் இந்நாட்டின் முக்கிய சமயமாகும். இங்குச் சீர்திருத்தக் கிறித்தவர் (Protestants) 10 இலட்சம் பேர் (1948) உளளனர். அவர்களுள் பெரும்பாலோர் உலூதரன் திருச்சபையைச் சேர்ந்தவர்கள. இங்குள்ள அனைத்துக் கோயில்களும் அரசாங்கக் கட்டுப்பாட்டில் வைக்கப்பட்டு, குருமார்களுக்கு அரசாங்கம் ஊதியம் வழங்குகின்றது.

**வேளாண்மை:** இந்நாட்டின் 58 விழுக்காடு (1960) மக்களின் தொழில் வேளாணமையும் கால்நடை வளர்த்தலும் ஆகும். உழவுத் தொழில் 90 விழுக்காடு கூட்டுறவுப்பண்ணை முறையில் நடத்தப்படுகிறது. இங்கு 1983-இல் 1967கூட்டுறவுப்பண்ணைகளும் (990, 155 உறுப்பினர்கள்), 223 அரசுப் பணணைகளும் (165, 675 உறுப்பினர்கள்) இருந்தன. அப்பொழுது 134, 366 இயந்திரக் கலப்பைகள் பயன்படுத்தப்பட்டன. உருளைக் கிழங்கு, கோதுமை ஓட்சு, பார்லி, மக்காச்சோளம், புகையிலை முதலியவை முக்கிய விளைபொருள்கள். கால்நடைப் பண்ணைகள் மிகுதியாக உள்ளதால் பால், புலால் முட்டை ஆகியவற்றின் உற்பத்தி பெருகியுளளது.

**கனிமங்கள்:** நிலக்கரி, இரும்புத்தாது,ஈயம்,தாமிரம், உப்பு, சிப்சம், தங்கம், வெள்ளி, தகரம் முதலியவை இங்குக் கிடைக்கின்றன. இந்நாட்டில் எணணெய் மிகுதியாக இல்லாததால் சோவியத்து நாட்டில் வால்கா பகுதியிலிருந்து குழாய் மூலமாகக் கொணடுவரப்படுகின்றது.

**தொழிற் சாலைகள்:** 1948-இல் தொழிற்சாலைகள் அனைத்தும் நாட்டுடைமையாக்கப்பட்டு, சோவியத்து நாட்டைப் பின்பற்றிப் பல ஐந்தாண்டுத் திட்டங்கள் தீட்டப்பட்டதால், தொழில் வளர்ச்சி அடைந்துள்ளது. இந்நாட்டில் இயந்திரங்சள் ஊர்திகள், போர்க்கருவிகள், இரும்பு, எஃகுப் பொருள்கள், காகிதம், உரம், சர்க்கரை, துணி முதலியவற்றை உற்பத்தி செய்யும் தொழிற்சாலைகள் உள்ளன.

**ஏற்றுமதியும் இறக்குமதியும்:** இந்நாடு, உருசியா, செருமானிய மக்கள குடியரசு, போலந்து போன்ற பொதுவுடைமை நாடுகளுடனும், செருமானியக் கூட்டுக்குடியரசு, இங்கிலாந்து, ஆசுதிரியா முதலான நாடுகளுடனும் வாணிகம் செய்கிறது. சோவியத்து நாடு 1960-க்குப்பின் இந்நாட்டிலிருந்து ஏற்றுமதி செய்யப்படும் பொருள்களில் மூன்றில் ஒரு பங்கைப் பெற்றுக் கொண்டு, அதற்கு ஈடான, பொருள்களைக் கொடுக்கிறது. இந்நாட்டிலிருந்து ஏற்றுமதி செய்யப்பட்ட பொருள்களின் விழுக்காடு (1983) இயந்திரங்கள் 52, நுகர் பொருளகள் 17.4 (சர்க்கரை, பார்லி, போன்றவை)உற்பத்திசெய்யப்பட்ட பிற பொருள்கள் 12.2 (கணணாடி, மரம், மரச்சாமான்கள, ஆடைகள்). இது இயநதிரங்கள, அவற்றிற்கான துணைக் கருவிகள், எரிபொருளகள், கச்சாப் பொருள்கள ஆகியவற்றை இறக்குமதி செய்கின்றது. சி.இரெ.

**துணைநூல்கள்:**

Bradley, J.F.N., Politics in Czechoslovakia, 1945-1971, Lanham, 1981

Hermann, A.H.A., History of theCzecs, London,1975.

Wallace, W.V., Czechoslovakia, London, 1977.

*செகராச சேகர மன்னர்* கி.பி. 17-ஆம் நூற்றாண்டில் வாழ்ந்த வள்ளலும் புலவரும் ஆவர். இவர் யாழ்ப்பாணதது நல்லூரில் கனகசூரியச்சிங்கையாரிய மன்னர் தம்பி பரராச சேகர மனனராவார். சைவ சமயத்தவரான இவர் தமிழ் மொழியின் மீது அளவற்ற அன்பு கொண்டவா. அதனால், தமிழ்ப் புலவர்களை ஆதரித்து அவர்களுக்கு வேண்டுவனவெல்லாம் கொடுத்துதவினார். தமிழ்ச் சங்கம் ஒன்றைத் தொடங்கி அதன் வாயிலாகத் தமிழின் பெருமையைப் பல்லோரும் அறியும் வண்ணம் செய்தார். பள்ளிகள் பல தொடங்கி மாணவர்கள் கல்வி கற்கவும் தமிழ்நாட்டிலிருந்து பலதரப்பட்ட நூல்களை வரவழைத்துப் படிக்கவும் ஏற்பாடுகள் புரிந்தார். இவர் அழிவுற்ற சரசுவதி மகாலயம் என்ற நிலையத்தினைப் புதுப்பித்தும் நடத்தினார். இவர் தட்சிண கைலாசபுராணம் என்னும் நூலை இயற்றியுள்ளார். அந்நூல் பண்டிதராச புலவரியற்றிய தட்சிண கைலாசபுராணம் என்னும் நூலிலிருந்து வேறுபட்டதாகும். இவர் பெயரில் சோம ஐயர்

என்பவா செகராச சேகரமாலை என்னும் காலக் கணித நூலை இயற்றியுள்ளார் இவர் காலத்தில் செகராச சேகரம், பரராச சேகரம், அஙகாதிபதம் ஆகிய மருததுவ நூல்கள தொகுக்கப்பெற்று அதனை ஏழாலை மருத்துவர் ஐ. பொன்னையா என்பவர் அச்சிட்டு வெளியிட்டுள்ளார். வீ.சே.

### செகவீர பாண்டியன், கவிராச பண்டித:

ஆயிரதது முந்நாற்று முப்பது திருக்குறள்களையும் சுவையான கதைகள், வரலாற்று நிகழ்சசிகள ஆகிய வறறோடு விளக்கிக் காட்டியவர் செகவீர பாண்டியர். அதேபோல் கம்பா காவியச் சிறப்பைக் 'கம்பன் கலைநிலை' எனனும் பெயரால் விரிவாக எழுதிய வரும் இவராவார்.



செகவீரபாண்டியன்

மணியாட்சி நகருக்கு வடகிழக்கில் மூன்று கிலோ மீட்டர் தொலைவில் உள்ள ஊர் ஒட்டநத்தம். அவ் வூரில் வீரபாண்டியக் கட்டபொம்மன் வழிமுறை யினர் வாழ்கின்றனர். அதனாலும் வீரச்சிறப்பாலும் சின்னப்பாஞ்சாலஙகுறிச்சி என்றொரு பெயரும் அவ் வூருக்கு உண்டாயிற்று.

ஒட்டநத்தத்தில் வாழ்ந்த பெருமாள்சாமி, ஆவுடையம்மாள் என்னும் பேறுமிகக பெற்றோா களுக்குப் பிளளையாக கி.பி. 1886-ஆம் ஆண்டில செகவீர பாணடியனார் பிறந்தார்.

இளமையில் தாயார் அரவணைப்பிலே வாழ்நத இவர் ஐந்தாம் அகவைமுதல் பனனிரணடாம் அகவை வரை உள்ளூர்ப் பள்ளியிலே பயின்றார். அதன்மேல், பள்ளிப் படிப்பை நிறுத்தி வணிகத்தில் ஈடுபட்டார். அந்நிலையில், செட்டி நாட்டைச் சேர்ந்த அரிமளம் என்னும் ஊரில் இருந்து சிவா னந்தர் என்பார் ஒட்டநத்தத்திற்கு வநதார். அவரைச் செகவீரர்காணவாய்த்தது செகவீரரின இளமையையும், சிறந்த கல்வித் தேர்ச்சியையும் அறிந்த சிவானந்தர் அரிமளத்திற்கு வந்து தம்மிடம் 'வேதாந தம்' பயிலுமாறு அழைத்தார். அதனை அன்னையாா இசைவுடன் ஏற்றுககொணடு அரிமளம் சென்று ஓராண்டுக்காலம் கற்றார். பின்னர் அன்னையார் விருப்பப்படி ஒட்டநத்தத்திற்கு வந்தார். எனினும், படிப்பார்வம் மட்டும் குனறாமல் வளர்ந்தது. ஒட்ட நத்தத்தில இலக்கண முத்துக் கவிராயா என்பாா ஒருவர் இருந்தார். அவரிடம்பாடம் கேட்டார். பிறர்க் குக்கறபிககத் தக்க ஆசிரியத்தகுதியைப் பத்தொன்ப தாம் அகவையிலேயே பாணடியனார் பெற்றார்.

பாண்டியனார் புராணங்களை விரும்பிக் கற்றுச சொற்பொழிவாறறவும் திறம் பெறறு விளங்கிய நிலையில் அவர்ககுத் திருமணம் நிகழ்ந்தது. மனை வியார் பெயர் வெள்ளைத்தாய்.

இவர் தூத்துக்குககுடிக்குச் சென்று தஙகியபோது 'திருக்குறள் குமரேச வெணபா' எனனும் நூலை இயற்றினார். இதுபற்றி இவர்,

'நமது தெய்வப்புலமைத் திருவளளுவப் பெருந தகை அருளியுள்ள திருக்குறளின் கருததுகளுக்குப் பொருத்தமான கதைகளை இராமாயணம் பாரதம் முதலிய இதிகாசங்களிலும், காநதம் பாகவதம் முத லிய புராணங்களிலும், சிநதாமணி சிலப்பதிகாரம் முதலிய காவியங்களிலும், பததுப்பாட்டு எட்டுத தொகை முதலிய சங்க நூல்களிலும் வேறுபல நூல களிலும் ஆராயநதெடுத்துக் குறட்பாவில் அமைத்து, எமது குல தெய்வமாகிய குமரேசனது முன்னிலை யில் விணணப்பித்து அவற்றிற்கு விடை கூறும முறை மையில் குறளகளை உதாரணமாகத் தந்து காட்டி, இற்றைக்கு ஐந்தாணடுகட்கு முன்னரே இந்நூலை முடிதது வைததேன்' என்று குறிப்பிட்டுளளாா. இவர் 1922-ஆம் ஆணடிலேயே திருககுறள குமரேச வெண்பாவைப் பாடி முடித்துவிட்டார்.

தூத்துக்குடியில பாண்டியனார் தாம் வாழ்நத இல்லத்திறகுத 'திருவளளுவர் நிலையம்' எனப் பெயரிட்டிருநதார். மதுரைககு 1940-இல வந்த பின னரும் தம் இலலத்திற்கு அப்பெயரையே சூட்டினாா. அங்கே அமைத்த அச்சகத்திற்கு 'வாசுகி அச்சகம' எனப் பெயர் சூட்டினாா.

ஒரு தனி மாந்தர் ஓர் இயக்கமாக விளங்கமுடி யும் எனபதை நிலைநாட்டியவர் செகவீரர். நூல இயற்றுதல், அச்சிடுதல், அட்டைகட்டுதல, சிப்பம்

செய்துவிடுத்தல் ஆகிய எல்லாமும் தம் குடும்பத் தொழிலாகவே அமைத்துக்கொணடவர் அவர்.

பாண்டியனார் ஆயிரம் பிறைகண்டு அதற்கு மேலும் நிறை வாழ்வு வாழ்ந்தவர். அவர் வாழ்வால் தமிழ்பெற்ற வளம் பெரிது. திருக்குறட் குமரேச வெண்பா மூலமும் உரையும், தருமதீபிகை, வீர பாணடியம், பாஞ்சாலங்குறிச்சி வீர சரிதம் (இரண்டு பகுதிகள்), இந்தியத்தாய், கல்விநிலை, கவிகளின் சாட்சி, அகத்திய முனிவர், உலக உள்ளங் கள், அரும்பொருள் அமுதம் முதலியன அவர் வழங் கிய வளமாகும்.

திருக்குறளைப் பற்றியும் இராமாயணத்தைப் பற்றியும் அவர் எழுதிய விரிவுரை ஏறத்தாழ 12000 பக்கம் என்பர். ஆங்கில மொழியால் அறியவரும் அறநெறிகளைக் குறட்பா வகையால் இயற்றிய நூல், உலக உள்ளங்கள். அதில் 5000 பாடல்கள உள. அரும் பொருள அமுதம் என்பதும் குறள யாப்பில் அமைந்த நூலே. அதில் 2000 பாடல்கள் உள. இவை அச்சிடப் பெறவேண்டியவை.

நாட்டுப்புறப் பாடலாக வழங்கிவந்த கட்ட பொம்மன் கதையை வரலாற்றுக் காவியமாக்கி அழியா வாழ்வு தந்தவர் பாண்டியனார், பாஞ்சாலங் குறிச்சி வீர சரிதம் வரலாற்றுப் பெருமையுடை யது. அதனைத தமிழ் வளர்ச்சிக் கழகம பாராட்டி முதற்பரிசுவழங்கியது.

மதுரைத் திருஞான சம்பந்தர் திருமடத்தலை வர் செகவீரர்க்குத 'தமிழ்மாமுனி' என்று பட்டம் வழங்கிச சிறப்பித்தார். மதுரைப் பலகலைக் கழகம் தன ஆட்சிக்குழு உறுப்பினராக்கிப் பெருமை கொண டது.

மதுரைத் தமிழ் எழுத்தாளர் சங்கம் பாணடிய னார் தமிழ்த் தொண்டைப் பாராட்டி 1963-இல பணமுடிப்பு வழங்கிச்சிறப்புச் செய்தது. இவர் 1967 -ஆம் ஆணடு காலமானார். இரா இ.

செகெடு ஐரோப்பாவில் அங்கேரி (Hungary) நாட்டின் தெறகில் உள்ள ஒரு நகரம். செகெடு, (Szeged), திசா, மாரோசு ஆறுகளின இணைப்புப பகுதியில் உள்ளது. ஆற்றுத்துறைமுகமாகவும், இருப் புப்பாதை நிலையமாகவும், வேளாண் மையமாகவும் இது திகழகிறது. உணவு வகைகள் தயாரித்தல் மாவு அரைத்தல், படகுகள் கட்டுதல், தோல் வேலைகள, துணி நெய்தல், புகையிலை பயிரிடல் முதலிய தொழில்கள் இங்குச் சிறப்பாக நடைபெறுகின்றன.

துருக்கியர் ஆட்சி இஙகு கி.பி 1542 முதல் 1686 வரை நிலவியது. தெ பா.

செகோவியா (நகரம்): ஐரோப்பாவில் இசு பெயின (Spain) நாட்டின் நடுப்பகுதியில எரீசுமா (Eresma) ஆற்றங் கரையில் உள்ள ஒரு பழைய நகரம். உரோமானியர் கி.பி. முதல நூற்றாண்டில் இஙகு ஒரு கால்வாய்ப்பாலம் (Queduct) கட்டியிருந தனர். அதன் வழியாகநீர்க்குழாய் அமைத்து நக ருக்கு நீர் வழங்கினா. அதை இனறும் இஙகுக்காண முடியும். பிறகு முகமதிய மூரியர் செகோவியாவைக் (Segovia) கைப்பற்றித் தமவசத்தில வைத்திருந் தனர். சுற்றுலாப் பயணிகள் மிகுதியாக இங்கு வந்து போகின்றனர்.

செகோவியா (ஆறு): கரீபியன கடலில் கலக்கும் செகோவியா ஆறு நிகாரகுவாவின வடமேற்கில் உற் பத்தியாகி வடககிழக்கில் ஓடி வருகிறது. இதன் நீளம் 480 கி.மீ. இதன் ஆதிக்கத்திறகாக ஆண்டுராசும் (Honduras) நிகாரகுவாவும் போட்டியிட்டன. இப் பொழுது இந்தஆறு அவவிரு நாடுகளின் எல்லையாக அமைந்துளளது. இநத ஆறு, வாங்சு (Wanks)என்றும் கோகோ (Coco)என்றும் வழங்கப்பெறும். தெ.பா

செங்கடல்: வடகிழககு ஆப்பிரிக்காவிற்கும் அரேபியாவிற்கும் இடையே சூயசுக் காலவாயிலிருந்து பாபு-எல்-மாண்டபு (Bab-el-Mandeb) கடல்இடுக்கு வரையிலுள்ள உளநாட்டுக் கடலுக்குச் செங்கடல் என்பது பெயர். இப்பகுதியில் பாசி மிகுதியாக உளள தால் இக்கடல்நீர் கருநீலநிறமாகத் தோன்றும். சிற்சில சமயஙகளில இசசிகப்பு-பழுப்பு நிறமாகக் காட்சியளிப்பதால செங்கடல் என அழைக்கப்படுகின் றது ஐரோப்பிய நாடுகளுக்கும் கீழத்திசை நாடுகளுக்கு மிடையே வாணிகத்திற்கு முதன்மையான கடல் வழியாக இது விளங்குகின்றது.

இக்கடல் வடக்கிழக்கு ஆப்பிரிக்காவையும அரேபிய முந்நீரகத்தையும் இரணடாகப் பிரிக்கின்றது. இதனமேற்குக் கரையில் எகிப்து, சூடான், எதியோப் பியா முதலிய நாடுகளும், கிழக்குக் கரையில் சவுதி அரேபியாவும், ஏடனும் உள்ளன.

வடக்குப் பகுதியில் இக்கடல் சினாய் முந்நீர கத்தை இரண்டாகப் பிளப்பதால் இதன் வடமேற்குப் பகுதியில் சூயசு வளைகுடாவும், வடகிழக்கில் அகாபா வளைகுடாவும் அமைந்துள்ளன இவற்றிற்கு இடையேதான் சினாய் மலை அல்லது மோசசு மலை இருக்கின்றது. பழைய ஏற்பாட்டில் குறிப்பிட்டுள்ளது போல் இசுரேலியர் எகிப்து நாட்டிலிருந்து கூட்டமாக



செங்கடல்

வெளியேறி, சூயசுக் கால்வாய் வழியாகச் சென்று சினாய் மலையை அடைந்து, பாலஸ்தீனத்தில் குடியேறினர். சூயசுக் கால்வாய் செங்கடலை மத்திய தரைக்கடலுடன் இணைக்கிறது.

தென்பகுதியில் இக்கடல் பாபு-எல்-மாண்டபு கடல் இடுக்கு வரையில் நீண்டுள்ளது. அங்கு அரபிக் கடலின் ஒரு பகுதியான ஏடன் வளைகுடாவுடன் சேருகின்றது. இவ்வாறு செஙகடல் மத்தியதரைக் கடலையும் இந்தியப் பெருங் கடலையும் இணைக்கிறது.

சூயசுக் கால்வாயிலிருந்து பாபு-எல்-மாண்டபு வரையிலுள்ள இதன் நீளம் 2253 கி.மீ. இதனுடைய அகலம் 420 கி.மீ. லிருந்து 209 கி.மீ. வரை வேறுபடுகின்றது. இதன் ஆழம் இடத்திற்கு இடம் மாறுபடுகின்றது. உயர்ந்த அளவு ஆழம் 2134 மீட்டர் இக்கடலின் பரப்பளவு 438,000 ச.கி.மீ.

எகிப்து நாட்டிலுள்ள சூயசும், அல்-காசிரும், சூடான் நாட்டிலுளள சூடானும், சாவாகினும், எதியோப்பியாவிலுள்ள மசாவாவும், சவுதி அரேபியாவிலுள்ள சித்தாவும், ஏடன் நாட்டிலுள்ள சொடேடாவும் மோசாவும் இப்பகுதியிலுள்ள சிறந்த துறைமுகங்களாகும்.

பண்டைக் காலத்திலிருந்தே இக்கடல் வாணிபத்திற்கு மிகவும் பயன்பட்டு வந்துள்ளது.எகிப்தியர் கி.மு. 2000-இல் இங்கு வாணிபம் செய்து வந்தனர். இந்தியாவிற்குச் செல்லும் கடல்வழியாக கி.மு. 1000-த்திலிருந்து இது இருந்து வந்தது. இப்பகுதியில் கி.மு. 600-இல் பொனீசியர் வாணிகம் புரிந்தனர். பின்னர் அரேபியர் இதன் வழியாகக் கிழக்கு ஆப்பிரிக்கா, பாரசீகம் (ஈரான்) இந்தியா முதலிய நாடுகளுடன் வாணிகம் நடத்தினர். கப்பல் போக்குவரத்தில் புரட்சி ஏற்பட்டு, புதிய நாடுகளும், கடல் வழிகளும் கண்டுபிடிக்கப்பட்ட பின்னர் இதன் சிறப்பு குறையத் தொடங்கியது. ஆனால் கி.பி. 1869-இல் சூயசுக் கால்வாய் வெட்டப்பட்டதிலிருந்து மேலை நாடுகளுக்கும், கீழ்திசை நாடுகளுக்கும் இடையேயுள்ள தூரம் மிகவும் குறைந்ததால், இது ஐரோப்பாவிற்கும், ஆசியாவிற்கும் இடையிலான மிகச் சிறந்த கடல்வழியாக மாறியது. சி.இரெ.

**செங்கண்ணனார்** சங்க காலப் புலவர்களுள் ஒருவர். இவர் மதுரைச் செங்கண்ணனார் என்ற வேறு பெயராலும் வழங்கப்பெற்றார். ஆகவே, இவரது ஊர் மதுரையெனக் கொள்ள இடமுண்டு. இவர் பெயரை நோக்குங்கால், அது காரணப் பெயராகவும் இருக்கலாம் என்பர். இவர் பாடியனவாக நற்றிணையில் ஒன்றும் (122) அகநானூற்றில் ஒன்றும் (39) ஆக இரு பாடல்கள் உள்ளன. குறிஞ்சித் திணையிலமைந்த நற்றிணைப் பாடல் களவுப் புணர்ச்சியை விரும்பி வந்த தலைவன் சிறைப்புறமாக இருப்பதை அறியாள்போலத் தோழி தலைவியிடம் உரைப்பதாக அமைந்துள்ளது. அப்பாடலில் தோழி, தினைப்புனத்திலுள்ள செந்தினைகள் கொய்யப்பட்டன. பள்ளப் பகுதிகளில் உள்ள மல்லிகையிடத்தே அரும்புகள் தோன்றியுள்ளன; தலைவியின் நலிவுக் காரணத்தை அறிய அன்னை சினங்கொண்டு உறங்காமல் இருக்கிறாள். எனவே, நீ களவொழுக்கத்தைத் தவிர்ப்பாயாக என்று தலைவியிடம் கூறும் வாயிலாகத் தலைவன் விரைவில் மணந்துகொள்ள வேண்டும் என்ற குறிப்பினை அவனுக்கு உணர்த்துவதாக உள்ளது சிறப்புடையதாகும். வீ.சே.

**செங்கல்வராய பிள்ளை, வ.சு.** 20-ஆம் நூற்றாண்டில் வாழ்ந்த தமிழ்ப்புலவர்களுள் ஒருவர். இவர் வடக்குப் பட்டுச் சுப்பிரமணியப் பிள்ளைக்கும் தாயாரம்மாளுக்கும் கி.பி. 1883-இல் மகனாகத் தோன்றினார். இவர்தம் தந்தையார் அரசு அலுவலில் இருந்து பல ஊர்களுக்கும் மாற்றப்பட்டமையால் இவரது படிப்பும் பல ஊர்களில் தொடர்ந்தது. தஞ்சாவூர் புனிதபீட்டர்சுப்பள்ளியில் 10-ஆம் வகுப்புப் பயின்று, முதல் வகுப்பில் தேர்ச்சி பெற்றார். கல்வியில் சிறந்த நாட்டம் கொண்ட இவர் தொடர்ந்து படித்து முதுகலைப் பட்டம் பெற்றார்.



செங்கல்வராய பிள்ளை

இவர் அரசு அலுவலில் இருந்தாலும் தமிழில் ஆர்வம் உடையவராக விளங்கினார். இவர் தம் தமையனாரிடத்தில் பாடல் இயற்றும் இலக்கணம் அறிந்துகொண்டு செய்யுள் இயறறினார். இவர் பணியிலிருந்து ஓய்வு பெற்ற பின்னர்ப் பல செய்யுள் நூல்கள் இயற்றினார். அவற்றை உடனுக்குடன் அச் சேற்றிப் பதிப்பித்தும் வெளியிட்டார். உபதேச காணடம் என்னும் நூலினை நன்றாக ஆய்வுசெய்து வெளியிட்டது இவரது தமிழாராய்ச்சியை நன்கு எடுத்துக்காட்டுகிறது.

இவர் முருகனிடம் மிகவும் அன்பு கொண் டவர். இவர் முருகப்பெருமான் திருப்புகழ்ப் பாடல், கந்தரலங்காரம், கந்தரனுபூதி முதலியனவற்றைத் தொகுத்தார். அவற்றைச் சைவ சமயத்திற்குரிய சைவத் திருமுறைகள் பன்னிரண்டினைப் போலக் குமரக்கடவுளை வழிபாடு செய்யுங் கௌமார சம யத்திற்கும் பன்னிரு திருமுறையாக வகுத்தார். அவற்றை 'முருகவேள் பன்னிரு திருமுறை' என்னும் பெயரில் வெளியிட்டுள்ளார். இவர் திருப்புகழ் முழு மைக்கும் அருணகிரிநாதர் இயற்றிய நூல்களுக்கும் உரையெழுதி வெளியிட்டார். தேவாரம் முதலிய சைவத் திருமுறைகள் பன்னிரண்டையும் ஆய்ந்து சொல்லடைவு, பொருளடைவு எழுதியதோடு அவற்றைப் பற்றிய விளக்கக் கட்டுரைகளும் எழுதி யுள்ளார். அவையனைத்தும் திருமுறை விளக்கமாக அமைந்துள்ளன.

ஆங்கில அரசு இவர்தம் அலுவலகத் திறமை யைப் பாராட்டி 'இராவ் சாகிபு' என்னும் பட்டத் தினை 1935-இலும் 'இராவ் பகதூர்' என்னும் பட்டத் தினை 1938-இலும் வழங்கிச் சிறப்பித்தது. இவர் தம் தமிழ்த் தொண்டைப் பாராட்டி 1.9.1969-இல் மதுரைப் பல்கலைக் கழகம் டாக்டர் பட்டம் அளித்துச் சிறப்புச் செய்தது.

இவர் வள்ளி மலையில் முருகன் அடியவராக எழுந்தருளியிருந்த வள்ளிமலைச் சாமிகளைத் தம் குருவாகக் கொண்டார். அப்பெரியார் மீது 1941 -இல் 'சச்சிதானந்தர் கலிவெண்பா' என்னும் நூலி னைப் பாடினார். இவர் மயில் பாட்டு, சேவல் பாட்டு, வேல்பாட்டு, தணிகை நாயகன் மாலை, தணிகைக் கலிவெண்பா, வள்ளி கலியாணக் கும்மி, வள்ளி கிழ வர் வாக்குவாதம், முருகரும் தமிழும், தணிகேசன திருவெம்பாவை, தணிகேசன் திருப்பள்ளியெழுச்சி தணிகை தசாங்கம், திருப்புகழ் உரை, தணிகை முப்பூ, தணிகைப் பிள்ளைத்தமிழ் முதலிய நூல் களை இயற்றியுள்ளார். இவ்வாறு தமிழ்த் தொண டும் சிவத் தொணடும் புரிந்த இவர் 1971-இல் கால மானார்.

வீ.சே.

**செங்கற்பட்டு மாவட்டம்**: காண்க: தமிழ் நாட்டு ஆட்சிப் பிரிவுகள்.

**செங்கிசுக்கான் (கி.பி. 1162-1227)**: ஆசி யாவின் பெரும்பகுதியை வென்று வரலாற்றில் மிகப் பெரிய வெற்றி வீரனாக கி.பி. 13-ஆம் நூற்றாண் டில் திகழ்ந்தவன செங்கிசுக்கான் (Chenghizkhan). இவனது இயற்பெயர் தேமுசின் (Temujine). மங் கோலிய தலைவர்களின் பேரவையில் இவனுக்கு 'செங்கிசுக்கான்' என்னும் விருது கி.பி. 1206-இல் வழங்கப்பட்டது. அச்சொல்லுக்கு 'உலகை ஆள்ப வன்' என்பது பொருள். இவன் பலநாடுகளை வென்று கிழக்கு ஐரோப்பாவிலிருந்து சப்பான் வரை பரவிய ஒரு பேரரசை நிறுவினான். மங்கோலியாவிலுள்ள காரகோரம் இவனது தலைநகராக இருந்தது.

தேமுசின் கி.பி. 1162-இல் (அல்லது 1167) மங் கோலியாவில் பைக்கால் (Baikal) ஏரிக்கு அருகிலுள்ள ஓனான் (Onan) ஆற்றங்கரையில் அமைந்துள்ள தெலிகுன் புல்டக்கு என்னுமிடத்தில் பிறந்தான். போர்சிசின் (Borjigin) குடும்பின் தலைவரான இவ னுடைய தந்தை யெசுகை (Yesugei) ஆமூர் ஆற்றி லிருந்து சீனப் பெருஞ்சுவர் வரையிலுள்ள பகுதியை ஆண்டு வந்தான். அவன் தார்த்தாரியரின் தலை வன் தேமுசின் என்பானைக் கொன்றதால் தன் மகனுக்கு அப்பெயரையே சூட்டினான். ஏனெனில், இறந்த பகைவனின் வீரம் முழுவதும் அக்குழந்தையின் உடலில் புகுந்துவிடும் எனக் கருதப்பட்டது. இச் சொல்லுக்கு 'இரும்பு வேலை செய்பவன்' என்பது பொருளாகையால் சிலர் செங்கிசுக்கான் ஒரு கரு மான் எனத் தவறாகக் கருதுவர்.

துருக்கியர் மங்கோலியாவின தெற்கு, மேற்குப் பகுதிகளை கி.பி. 12-ஆம் நூற்றாண்டில் கைப்பற்றி யிருந்தனர். சிறு கூட்டத்தினரான மங்கோலியர் வெளி மங்கோலியாவின் வடகிழக்கு மூலையில், இன்றைய மங்கோலிய மக்கள் குடியரசில், வாழ்ந்து வந்தனர். அதன் கிழக்கு, தெற்குப் பகுதிகளில் தார்த்தாரியர் (Tartars) வசித்தனர். சீனாவிலும், ஐரோப்பாவிலும் உள்ளவர்கள் தார்த்தாரியர்களை யும் மங்கோலியர் எனறே தவறாகக் குறிப்பிட்ட னர். இவர்கள் இருவருக்குமிடையே அப்பொழுது பகைமை நிலவி வந்ததால் செங்கிசுக்கான் அவர் களை வென்றான். மங்கோலியர் அடிக்கடி சீனாவைத் தாக்கியதால் சீனப் பெருஞ்சுவர் எழுப்பப்பட்டது. தேமுசின் 13 வயதினனாக இருந்தபொழுது அவன் தந்தை யெசுகை தார்த்தாரியரால் நஞ்சூட்டிக் கொல்லப்பட்டான். எனவே, இவனும் இவன தாயும், பிற குழந்தைகளும் இவனது குடும்பினரால் கைவிடப்பட்டுப் பெருந்துன்பத்திற்கு உள்ளாயினர். பிறவி வீரனான இவன் சிதறுண்டு கிடந்த தன்னுடைய குடும்பினரை ஒன்று சேர்த்து, வலிமை மிக்க படையை ஏற்படுத்தி, 20 ஆண்டுகள் போரிட்டு மேலாண்மையை ஏற்படுத்தினான. பின்னர் 20 ஆண்டு கள்இடைவிடாமல் பிற நாடுகள் மீது படையெடுத்துச் சென்று, வெற்றிமேல் வெற்றி பெற்று, ஒரு பேரரசை நிறுவினான்.

இவன் கி.பி. 1206-இல் வடசீனாவின் மீது படையெடுததான். இதைச் சீனர்கள் சிறிதும் எதிர் பார்க்கவில்லை. சீனப்பெருஞ்சுவர் மூன்று இடங்க ளில் உடைக்கப்பட்டு, அவற்றின் வழியாக மங்கோலி யப்படை விரைந்து சென்று கி.பி. 1215-இல பீக்கிங் கைக் கைப்பற்றியது. சீனாவின் வடக்குப் பகுதி முழுவதும் கி.பி.1217-இல் வீழ்ந்தது. பிறபகுதி களைக் கைப்பற்றத் தன்னுடைய தளபதி முகுலியை (Mukuli) அனுப்பிவிட்டு, இவன் மேற்கு நோக்கிப் புறப்பட்டான். கொரியா முந்நீரகம் கி.பி.1218-இல் வெல்லப்பட்டது.

மங்கோலிய வணிகர் சிலர் கொலை செய்யப் பட்டதால் செங்கிசுக்கான் குவாரிசிம் (Khwarezm) மீது கி பி 1219-இல் படையெடுத்தான். இந்தியாவின் வடமேற்கில் துருககியரின் ஆட்சியிலிருநது குவாரிசிம் பேரரசில இனறைய ஈராக்கு, ஈரான், பாகிசுத்தானின ஒரு பகுதி ஆகியவை இருந்தன. அவன் அப்பேரர சைக் கொளளையடிதது, மக்களைக் கொனறு குவித்து, மூன்றே ஆணடுகளில் அதனைக கைப்பற்றி னான் முக்கிய நகரங்களான புகாராவும் (Bukhara) சாமர்கண்டும் (Samarkand) அழிககப்பட்டு, ஆயிரக் கணக்கான தொழில வலலுநர்கள், கலைஞர்கள, எழுத தாளர்கள. தொழிலாளர்கள் ஆகியோர் மங்கோலியா விற்குஅனுப்பப்பட்டனர். பின்னர் இவன் பெசாவரை யும் இலாகூரையும் அவற்றைச் சுற்றியுள்ள பகுதிகளை யும் கைப்பற்றினான். இவனால், விரட்டப்பட்ட அரசர் பலர் இந்தியாவில் புகலிடம் பெற்றிருந்தும் இவன் இந்தியாவிற்குள் நுழையவில்லை. இவன் கி.பி.1222 -இல் இரசியாவினுள புகுந்து வால்காவிலிருந்து தேனி பர் ஆறு வரையும் பாரசீக வளைகுடாவிலிருநது, ஆர் டிக்குப் பெருங்கடல் வரையும் உள்ள பகுதிகளைக் கொள்ளையடித்தான். எனவே, கி.பி. 1225-இல் ஆசியா முழுவதும் இந்தியாவும், சீனாவில சுங் பேரரசும் நீங்கலாக, இவனுடைய ஆதிக்கத்திற்கு உட் பட்டிருந்தது.

இவன் படை நிருவாகத்திலும், அதை நடத்திச் செல்வதிலும் அறிவும், ஆறறலும் மிககவனாய் இருந் தான் இவனிடம் சிறந்த ஒற்றர்கள் இருந்ததுடன, போரில் புதுப்புது முறைகளைப் புகுத்தினான். இவ னுடைய குதிரைப்படை மிக விரைநது சென்று பகை வரைச்சுற்றி வளைத்துக் கொள்ளும் ஆற்றல் மிக்கது இவனுடைய வீரர்கள் எய்த அம்பு 183 மீட்டர் தொலைவில் உள்ளவரையும் கொல்லத்தக்க வலிமை பெற்றது. எனவேதான் இவனால் பல நாடுகளை எளிதில் கைப்பற்ற முடிந்தது.

சீனாவில் சான் சி (Shan-si) மாநிலத்தில் வேட்டையாடும் பொழுது குதிரையிலிருந்து விழுந்து, அதனால் உடல்நலம் குன்றி, இவன் கி.பி.1227-ஆம் ஆணடு மரணமடைந்தான். அப்பேரரசு இவன் ஆண் மக்கள மூவரால் பிரித்துக் கொள்ளப்பட்டது பின்னர் இவனுடைய பேரன் நால்வரும் சிறந்த தலைவர்களாக விளங்கினா. எனினும் இவன் இறந்த 150 ஆண்டுகளில இவனுடைய மரபு சீனா, துருக்கி பாரசீகம், தெற்கு ஆசியா ஆகிய பகுதிகளிலிருந்து மறைந்தது

செங்கிசுக்கான் மஙகோலியரிடையே ஒற்றுமையை ஏறபடுத்தி ஒரு பேரரசை நிறுவினான். தான் வென்ற பகுதிகளில் ஒழுங்கையும் அமைதியையும் நிலைநாட் டினான். இவனுடைய பேரரசின் ஒரு கோடியிலிருந்து மற்றொரு கோடிக்குப் பயணிகள எவ்வித அச்ச மும் ஆபத்தும் இனறிச் செல்ல முடிந்தது. எனவே, சீனாவிற்குச் செல்லும் மத்திய ஆசிய வழி திறந்து விடப்பட்டு மார்ககோபோலோ, கிறித்தவ பாதிரி மார்கள மற்றும பிறர் சீனாவிற்குள பயணம செயய முடிந்தது. கிழக்கு-மேற்குப் பணபாட்டுப் பரிமாற்றத் திற்கு வழிவகுத்தது இவனுடைய முக்கியப் பணியா கும்.

இவன் தன்னுடைய சட்டத்தொகுப்பை (Jasagh or the Great Yasa) கி.பி.1206-இல் வெளியிட்டான். அதில் நீதிமன்றம், படை, நாட்டின பொருளியல், குற்றவியல, வணிகச் சட்டங்கள் ஆகியவை அடங்கியிருந்தன. இவனுடைய படையெடுப்பின் விளைவாக இவனால்விரட்டியடிக்கப்பட்ட துருக்கியர் ஐரோபபாவின் மீது படையெடுத்தனர்.

மிகச் சிறந்த வெற்றிவீரனான செங்கிசுக்கான சிறந்த நிருவாகத் திறமையும், படையை நடத்திச செலலும் ஆற்றலும் மதிநுட்பமும் பெற்றிருநதான், துருக்கியரின் எழுத்து முறையைப் பின்பற்றியதுடன், தன்னுடைய பேரரசில் அஞ்சல முறையைக் கொண்டு வந்தான்; கற்றோரிடமும் கட்டக் கலைஞர்களிடமும் மிக்க மரியாதை கொணடு அவர்களை ஆதரித்தான். அக்காலப் பாரசீக, சீன, அரேபிய எழுத்தாளர்கள் இவனை மிகக் கொடியவனாகக் காட்டியுள்ளனர். எனினும், சமயப்பொறை மிக்க இவனுடைய சிறந்த நிருவாகம மககளுக்கு நன்மை பயப்பதாக அமைநதது இவன் மங்கோலிய மககளால் இன்றும் போற்றப்படுகிறான். சி.இரெ.

**துணைநூல்:**

Lucas. S Henry-,A Short History of Civilization, Mc-Graw Hill Book Company, INC,New York, 1953.

*செங்கின்சு காதுப்போர்*: இங்கிலாந்துக்கும் இசுபெயினுக்கும் இடையே கி.பி. 1739-ஆம் ஆண்டில் நடந்த போருக்குச் சென்கின்சு காதுப் போர் (Jenkins' Ear War) எனபது பெயர். சென்கின்சு என்பவரின் அறுக்கப்பட்ட காது இப் போருக்குக் காரணமாக இருந்ததால் இது இப் பெயர் பெற்றது. இங்கிலாந்திடம் இசுபெயினுககுச் சில குறைகள இருந்தன. சிப்ரால்டரையும, மைனார்க்காவையும் முன்னொரு சமயம் இசுபெயினிடமிருந்து இங்கிலாந்து கைப்பற்றியிருநதது. அவற்றை மீணடும் தன்வசமாக்கிக் கொள்ள இசுபெயின் முயன்றது. அம்முயற்சியை இங்கிலாந்து முறியடித்தது. அதே போன்று சிசிலித் தீவை இசுபெயின் கைப்பற்ற முனைந்தபோது அதனுடைய கப்பற்படையை இங்கிலாநது சிதறடித்தது அதனுடைய வெற்றிக்குத் தடையாக இருநதது. வாணிகத் தகராறுகள் அவ் விரு நாடுகளுக்கிடையே இருந்த பகைமையை மேலும் அதிகரிக்கச் செய்தன. இசுபெயினுக்கு உரிமையாக இருந்த தென் அமெரிக்கப் பகுதிகளில் இசுபானியரைத தவிர வேறெந்த நாட்டவரையும் வாணிகம் செய்ய இசுபெயின் அனுமதிக்க விரும்பவில்லை. அதேசமயம் இசுபெயின் தன்னுடைய வாணிகத்தை அப்பகுதிகளில் வளர்ப்பதற்குரிய முயற்சிகளை மேற்கொள்ளவில்லை. அதன் விளைவாக மற்ற ஐரோப்பிய நாட்டவர் கள்ள வாணிகத்தை அப்பகுதிகளில் நடத்த வாய்ப்பிருந்தது. அவ் வாய்ப்பை ஆங்கிலேயர்கள் பெரிதளவில் பயன்படுத்திக் கொண்டனர். உட்ரெக்ட்டு உடன்படிக்கையில் காணப்பட்டுள்ள ஏசியன்டோ நிபந்தனையின்படி (Asiento clause) ஆங்கிலேயர்கள் ஒவ்வோர் ஆண்டும் ஓர் ஆங்கில வாணிகக் கப்பலை இசுபெயினுக்குச் சொநதமான அமெரிக்கக் குடியேற்றங்களுக்கு அனுப்ப அனுமதி வழங்கப்பட்டிருந்தது. அந்தச் சலுகைகளைப் பயன்படுத்திக் கொண்டு ஆணடு தோறும் ஒரு கப்பலை இசுபானியத் துறைமுகததில் நிறுத்திச் சரக்குகளைப் பகல் முழுவதும் இறக்கி வநதனர். இரவு வந்ததும் துறைமுகத்திறகு வெளியேயிருந்த ஆங்கிலக் கப்பல்களில் இருந்த சரக்குகளைச் சிறுபடகுகள வாயிலாகக் கொண்டுவந்துதுறைமுகத்தில் நிறுத்தி வைத்திருந்த கப்பலில் ஏற்றிவிடுவர். இவ்வாறாகப் பெயருக்கு ஒரு கப்பலில் கொண்டு வந்த சரக்குகளை இறக்குவதாகக் காணச் செயது உணமையில் பல கப்பல்களில கொணடு வந்த சரக்குகளைத் திருட்டுத்தனமாக இறக்கி வந்தனர். இதையறிந்த இசுபானிய அரசினர் சினமடைந்தனர். தங்களுடைய எதிர்ப்பைத் தெரிவிக்கும் வகையில தங்களுடைய பகுதிகளுக்குச் சரக்குகளை ஏற்றி வருவதாக அவாகள கருதிய ஆங்கிலக் கப்பல்களைக் கடலில் நிறுத்திச் சோதனை செய்தனர். அதனோடு ஆங்கில மாலுமிகளை மிகவும் கொடுமையாக நடத்தினர். அதன் காரணமாக ஆங்கிலேயருடைய உணர்ச்சிகள் பீறிட்டெழுநதன. அப்போது, பிரதமராக இருந்த வால்போலுடைய அரசியல் எதிரிகள் அந்தச் சினத்தைத் தூண்டிப் பெருக்கினர் அந்தநேரத்தில மக்கள் சபை முன்னர்ச் செங்கின்சு என்ற கப்பற்படைத் தலைவன் தனது அறுபட்ட காது ஒன்றைக் கொணட ஒரு குப்பியை வைத்தார். இசுபானியர் தம் காதை வெட்டி விட்டதாகக் கூறினார். இசுபானியரிடம அவர் சிக்கிக் கொண்டபோது அவர் என்னென்ன எண்ணினார் என்ற கேள்வியை மககள் சபையினர் கேட்டனர். அதறகுஅவர் பின்வருமாறு பதில் அளித்தார் 'நான் என்னுடைய ஆத்மாவைக்கடவுளுக்கும், என்னுடையசிக்கலை நாட்டுமக்களிடத்தும்ஒப்படைத்தேன்'. இந்த மறுமொழி மககளுடைய ஆத்திரத்தைத் தீவிரப்படுத்தியது. அமைதிக் கொள்கையில் பற்றுறுதிகொண்டு செயலாற்றி வந்த வால்போலுக்குப் போர் அறிவிப்புத் தவிர வேறு வழி புலப்படவில்லை. அவர் 1739-இல் இசுபெயின் மீதுபோர் தொடுத்தார்.

போரின்போது இசுபானிய அமெரிக்காவிலுள்ள கார்ட்டாசினாவைக் (Cartagena) கைப்பற்ற ஆங்கி

லேயர் முயன்றனர். அம்முயற்சி பெருத்த தோல்வியில் முடிவடைந்தது. இப்போர் கி.பி. 1740-இல் தொடங்கிய ஆசுத்திரிய வாரிசுரிமைப் போருடன் கலந்துவிட்டது. தி.அர.இரா.

செங்கோட்டை இந்தியாவின் தலைநகரமான தில்லியில் உள்ள புகழ்பெற்ற கோட்டை. இக்கோட்டையை கி.பி. 1638-இல் மொகலாய அரசர் சாசகான் கட்டினார். இக்கோட்டையினுள்ளே சாசகானாபாது என்னும் நகரையும் இவர் அமைத்தார். இக்கோட்டை சிவப்பு நிறக் கற்களால் கட்டப்பட்டதால் செங்கோட்டை எனப் பெயர் பெற்றது. சலவைக் கற்களும் கொடி, பூ வேலைப்பாடுகளும் பல வண்ணக் கற்களும் பதிக்கப்பட்டு இக்கோட்டை கட்டப்பட்டது. செங்கோட்டை நீள்சதுர வடிவமுடையது. தெற்கு வடக்காக இதன் நீளம் 1030 மீ. ஆகும். கிழக்கு மேற்காக 550 மீ. அகலத்தைக் கொண்டு இக்கோட்டை விளங்குகிறது. இதன் உள் பகுதியின் நடுவில் வடக்கு தெற்காக 530 மீ. நீளமும், கிழக்கு மேற்காக 380 மீ. அகலமும் கொண்டு உள்கோட்டைச் சுவர்கள் உள்ளன. இக்கோட்டை இரண்டு வாயில்களைக் கொண்டது. பெரிய வாயில் மேற்குப் பக்கத்தில் உள்ளது. இது இலாகூர் வாயில் (Lahore Gate) எனப்படும். மற்றொரு வாயில் தெற்கில் உள்ளது. இவ்வாயில் தனியார் பயன்படுத்துவதற்காக அமைக்கப்பட்டது. மேற்கு வாயில் வழியே சென்றால் இரண்டாம் மதிலை அடையலாம். அதனுள்ளே அரச அலுவலர், உறவினர் உறைவிடங்கள் உள்ளன. இக்கோட்டையின் புறமதிலுக்கு உட்புறத்தில் படை வீரர்களின் முகாம், பணியாளர் குடியிருப்புகள் போன்றவை காணப்படுகின்றன. புறமதியின் உட்பகுதியில் கலையழகுமிக்க அரண்மனைகள், அரங்கங்கள் போன்றவையும் உளளன. இக்கோட்டையின் முக்கியமான மண்டபம் திவானியாம் (Diwan-Iam) என்னும் பொதுமக்கள் காட்சி மண்டபம் ஆகும்.

இக்கோட்டையின் உள்ளே காணப்படும் வெண் சலவைக்கல்லால் கட்டப்பட்ட ஆறு கட்டடங்கள் அழகுமிக்கவை. இவை மொகலாயக் கட்டடக் கலைக்கு ஏற்பக் கட்டப்பட்டவை. இரங்மகால் (Rangmahail) எனப்படும் வண்ண மாளிகையும், திவானிகாசு (Diwanıkas) எனப்படும் கட்டடமும் செங்கோட்டையின் உள்ளே காணப்படும் பிற புகழ்மிக்க கட்டடங்களாகும். திவானிகாசு கட்டடம் அழகின் சிகரமாக விளங்குகிறது. அழகிய வண்ணக் கற்கள் புதைத்துக் கட்டப்பட்ட இக்கட்டடத்தில் 'விண்ணுலகமென ஒன்றிருக்குமானால் அது இது தான்' என்ற வாசகம் சாசகானால் பொறிக்கப்பட்டுள்ளது. செங்கோட்டையின் உள்ளேயே



செங்கோட்டை

சாசகான் முத்து மசூதி என்னும் மசூதியைக் கட்டினான். இக் கோட்டை இன்றும் புகழ்பெற்று விளங்குகிறது. சு.இரா.

*செச்சலசு:* இது இந்திய மாக்கடலில் மடகாசுகருக்கு வடக்கில் உள்ள ஒரு தீவுக் கூட்டம். செச்சலசு (Seychelles) சிறியனவும் பெரியனவுமாக 112 தீவுகளைத் தன்னுள்ளடக்கி உள்ளது. இன்று இதன் பரப்பு 404 ச.கி.மீ. இரண்டு பிரிவுகளாக இது அமைந்துள்ளது. மாகி முதலிய 32 தீவுகள் ஒரு பிரிவாகவும் (234 ச கி.மீ. பரப்பு) மற்றவை இரண்டாம் பிரிவாகவும் உள்ளன. கென்யாவைச் சேர்ந்த மொம்பாசாவுக்குக் (Mombasa) கிழக்கில் 1600 கி மீ. தொலைவில் இவை உள்ளன. இத்தீவுகளில் விளையும் முக்கிய பொருள்கள், கொப்பரைத் தேங்காய், தேங காய், இலவங்கப்பட்டை, மணப்பொருள் தரும் செடி வகைகள, தேயிலை; வனிலா அவரைச் செடி முதலியன. இவை ஏற்றுமதி செய்யப்படுகின்றன. மீன்பிடித்தல், மக்களின் சிறப்பான தொழில். சுற்றுலாத் தொழில்துறையும் வளர்ச்சி அடைந்து வருகிறது. இதன் மக்கட்டொகை 64,035 (1981).

**அரசியலமைப்பு:** செச்சலசு ஒரு சுதந்திரக் குடியரசு. இங்கு 1979-ஆம் ஆண்டில் ஏற்பட்ட அரசியலமைப்புப்படி ஒரே அவையைக கொண்ட ஒரு மக்கள் சட்டசபையும், நிருவாக அதிகாரியாகக் குடியரசுத் தலைவர் ஒருவரும் உள்ளனர். நான்கு ஆண்டுகட்கு ஒருமுறை 23 உறுப்பினர்களைக் கொண்ட சட்டசபை மக்களால் தேர்ந்தெடுக்கப்படுகிறது. செச்சலசு மக்கள் முன்னேற்ற முன்னணி ஒன்று தான் சட்டப்படி ஏற்றுக்கொள்ளப்பட்ட கட்சி. ஆதலால் தேர்தலுக்கு வேட்பாளர்களை நியமிக்கும் கடமை அதற்குத்தான் உண்டு. குடியரசுத் தலைவர் 5 ஆண்டுகட்கு ஒரு முறை மக்களால் நேரடியாகத் தேர்ந்தெடுக்கப்படுகிறார். அவர் அமைச்சர் குழு ஒன்றை நியமித்து அதற்குத் தலைமை தாங்கும் பொறுப்பை ஏற்றுள்ளார்.

கிரியோல் (Creole), ஆங்கிலம், பிரெஞ்சு ஆகிய மூன்றும் அரசாங்க மொழிகளாக ஏற்கப்பட்டுள்ளன. ஆயினும் 95 விழுக்காட்டு மக்கள் கிரியோல் மொழியே பேசுகின்றனர். குடியரசுத் தலைநகர் விக்டோரியா. இது அத்தீவுகளில் எல்லாம் மிகப் பெரியதான மாகியில் (Mahe) (140 சதுர கி.மீ. பரப்பு) உள்ளது.

**வரலாறு:** செச்சலசு தீவுகளை முதலில் கண்டுபிடித்தவர் வாசுகோடகாமா (1502). பிரெஞ்சியர் கி.பி. 1756 முதல கி.மு. 1768 வரை உளள காலத்தில் அங்குக் குடியேறினர். அத்தீவுகளை இங்கிலாந்து கி.பி. 1794-இல் கைப்பற்றியது. அதனை 1814 வரை மொரீசியசுத் தீவினமேற்பார்வைக்கு உட்படுத்தியிருந்தது. அத்தீவுக்கூட்டம், 1903-இல ஒரு தனித்த குடியேற்ற நாடாகியது. அதற்கு 1975-இல் உள்நாட்டுச் சுதந்திரம் வழங்கப்பெற்றது. அடுத்த ஆணடிலேயே அது, ஆங்கிலப் பொது அரசுகு உட்பட்ட ஒரு குடியரசாக அறிவிக்கப்பெற்றது. தெ.பா.

**துணை நூல்:**

**Lionnet, G., The Seychell, Newton Abbot, 1972.**

*செசப்பீக்குவிரிகுடா* அட்லாண்டிக்கு மாக் கடலின் ஓர் உட்பகுதி. அமெரிக்காவில மேரிலாந்து, வர்சீனியா மாநிலங்களின கிழக்குப் பகுதிகளிலிருந்து தெல்மார்வா (Delmarva) முந்நீரகத்தைச் செசப்பீகசு விரிகுடா (Chesapeake Bay) பிரிக்கிறது. பொடாமாக்கு முதலிய பல ஆறுகள் இதில் கலக்கின்றன. இதை முதலில கண்டுபிடித்தவர் கி.பி.1608-இல் இங்கு வநத சான் சுமித்து (John Smith) என்ற ஆங்கிலேயே நில ஆய்வராவர். தெ.பா.

*செசுனோலா, உலூய்கி பால்மாதி* அமெரிக்கஐக்கிய நாட்டின் இராணுவ அதிகாரியாகவும் தொல்லியல் அறிஞராகவும் விளங்கியவர். செசுனோலா உலூய்கி பால்மாதி (Cezuola, Luigi palmadı) கி.பி. 1832-ஆம் ஆணடு சார்டினியாவில் உள்ள பீட்மாண்டில் இரிவரோலோ (Rıvarolo) என்னும் இடத்தில் பிறந்தார்.' இவர் சைப்ரசுப் பகுதியில பல அரும்பொருள்களைச் சேகரித்தார்; அருங்காட்சியக இயக்குநராகவும் விளங்கினார்.



செசுனோலா

செசுனோலா துரினில் உளள இராணுவப் பள ளியில் கல்வி கற்றாா. இவர் தம் பதினேழாம் வய தில் இராணுவத்தில் சேர்ந்து பணியாற்றினார். கிரி மியப் போரில் பங்குபெற்ற இவர் நியூயார்க்குப் போருக்காக இராணுவ அதிகாரிகள பளளியைத் தோறறுவித்தார் இராணுவத்தின் தலைவராக உயர் பதவி பெறற இவர் சைப்பரசுப் பகுதியில் அமெரிக்க உயர் அதிகாரியாக நியமிக்கபபட்டார். அங்குத் தங்கிய 11 ஆண்டுகளில இவர் 35,000.க்கும மேற்பட்ட தொன்மைப் பொருளகளை 70,000 கல்லறைகளில் இருந்து சேகரித்தார். அப்பொருள கள் யாவும் நியூயார்க்கு நகரத்தில் உள்ள அருங் காட்சியகத்தில் வைக்கப்பட்டுளளன. அவ்வருஙகாட் சியகத்தின் இயககுநராக இவர் கி.பி. 1879 முதல 1904 வரை பணியாற்றினாா. அப்பொருள்கள் யாவும் ஆய்வாளர்களுக்குப் பெரிதும் உதவி புரிகினறன. இவர் 'சைப்பரசுத் தொனமை நகரங்கள், கல்லறைகள, கோயிலகள்' (Cyprus: Its Ancient Cities, Tombs and Temples) என்ற நூலைகி.பி 1877-ஆம் ஆணடு எழுதி னார். இவர் நியூயாாக்கு நகரததில் 1904-ஆம் ஆணடு காலமானாா. சு.இரா.

**செஞ்சி** தமிழ்நாட்டில் தென்னார்க்காடு மாவட்டத்தில் உள்ளதொரு நகரம். வரலாற்றுப் புகழ்வாய்ந்த மலைக்கோட்டைகள் இவ்வூரில உள் ளன. இங்குள்ள மூனறு மலைக்கோட்டைகளும் எதிரிகள எளிதில் தாக்க முடியா வணணம் செங்குத் தான மலைகளினமீது கட்டப்பட்டுளளன. இராசகிரி என்னும் மலைமீது கட்டப்பட்டுள்ள கோட்டை சிறப்பு வாய்ந்தது. செஞ்சிக் கோட்டை சோழர்களு டன் தொடர்புடையது எனக் கருதப்படுகிறது. கோட்டைகளின் மதிற்சுவர்களைத் தஞ்சையில ஆளுநராக இருந்த ஒருவர் கி.பி. 1442-ஆம் ஆண்டு கட்டத் தொடஙகினார். செஞ்சி, மராட்டிய மாமன்னன் சிவாசியுடனும் பிரெஞ்சுக் காரர்களுடனும ஆங்கிலேயர்களுடனும் தொடா புடையது மொகலாயர்களின வசமிருந்த இக் கோட்டையை கி.பி. 1750-இல் பிரெஞ்சுக்காரர் கள் புசி (Bussy) எனபவரின் தலைமையில் படை யெடுத்துக் கைப்பற்றினர். ஆங்கிலேயர்கள பிரெஞ் சுக்காராகளுடன் ஆறு வாரங்கள் கடும் போரிட்டுச் செஞ்சியைக் கைப்பறற முனைநதனர். இதற்கிடை யில கடும முறைக் காய்ச்சல் தாககியதால் வீரர்கள் பலர் மரணமடைந்தனர். ஆறு வாரஙகளுக்குப்பின் ஆங்கிலேயர்கள் செஞ்சியைக் கைப்பற்றினர். மலைக் கோட்டைகளுள் ஒவவொன்றும் மூன்று பெருஞ்சுவர் களால் சூழப்பட்டு எதிரிகள எளிதில தாக்காதவாறு அமைக்கப்பட்டுள்ளது. வலிமைமிக்க நுழைவாயில் களைக் கொண்ட இக்கோட்டைக்குள் எதிரி சுவர்மீது ஏறி வந்தாலும் மறைந்திருந்து தாக்கப் பல இடுக்கு வழிகளும் உள்ளன. இராசகிரி மலை அரண் காவலர் அறைகளையும் தானியக் கிடங்குகளையும் கல்யாண மகாலையும் கொணடு விளங்குகிறது. இதனை ஒட் டினாறபோல் ஒரு பெரிய திறந்தவெளி உளளது. திறந்தவெளியைச் சுற்றிலும் பல சிறு அறைகள உளளன இவை அரசகுல மகளிர் தங்கும அறை களாக விளங்கியிருத்தல வேண்டும். இம்மலையின உச்சியில் இரணடு நீர்ச்சுனைகள் உள்ளன. இவறறைத் தவிர மலையில இருப்பவர்களுககு அக்காலத்திலேயே புதிய முறைப்படி நீர்வசதி செய்யப்பட்டுள்ளது. மலையின அடிவாரத்தில் மூன்று நீர்த்தேக்கஙகள உளளன. மழைநீர் இததேக்கஙகளில் சேமித்து வைக் கப்படும். கலயாண மகாலுக்கும் அதன் உயர்ந்த 8 அடுக்குக் கோபுரத்திற்கும் இந்நீர்த் தேக்கத்திலிருநது களிமண்ணால் வனையப்பட்ட குழாய்கள் மூலம நீரைக் கொண்டு சென்றுள்ளனர். கோட்டையின் கிழக்கில் 'கைதிகள கிணறு' என்று ஒன்று உளளது. இது செங்குத்தான பெருங்கருங்கல்லினால் கிணறு போன்று அமைக்கப்பட்டுளளது. இதன் உயரம் 5.4 மீ. ஆகும். கைதிகளை இதன் உள்ளே போட்டு விடு வர். அவர்கள் பசியால் வாடியே இறந்தொழிவர். சு.இரா.

**செஞ்சிலுவைச் சங்கம்:** போரில் காயம் பட்டோர்களுக்கு நாடு, இன, மொழி, மதவேறுபாடு களின்றி உதவிடும் நோக்குடன் கி.பி. 1864-ஆம் ஆண்டு ஆக்சுட்டு மாதம் 22-ஆம் நாள செனீவாவில் செஞ்சிலுவைச் சங்கம் உருவாயிற்று. இததாலியில் சால்பரினோ எனனுமிடத்தில் கி.பி. 1859 சூன்திங்கள 24-இல் பிரான்சின் படைகள் சார்டீனியப் படை களுடன் இணைந்து போரிட்டு ஆசுத்திரியப் படை களை வென்றன. ஆனால், அப்போர்க்களத்தில் பலர் மாணடும், உடலுறுப்புக்களை இழந்தும் உயி ருக்குப் போராடியவண்ணம் எணணற்ற உயிர்கள் ஏங்கிக் கொணடிருந்ததையும் கண்ணுறககூடிய சூழல் சுவிட்சர்லாந்தைச் சோந்த சான் என்றி தூனானடு (Dunand) என்பவருக்கு ஏற்பட்டது. மனிதாபிமான மின்றி மனிதன் மனிதனால் தாக்குணடு மரண வேதனைக்குள்ளாகித் தவிப்பதைக கணட அவா மனம வேதனையால் வெம்பித் தவித்தது. காசுட்டிக கிளியோன என்னுமிடத்தில் அவ்வாறு துயருற்றவர் களுக்கு உதவும் பணிகளை மேற்கொணட அவா மனிதத் தன்மையுடன் பிறருககு உதவவேணடு, மென்ற நல்லெணணஙகொணட பெண் முன்னுதவி யாளர்களையும் தாதிமார்களையும் துணையாகக கொணடு செஞ்சிலுவைச் சங்கம் தொடஙகப்படுவ தற்கான அடித்தளத்தை அமைத்தார்.



செஞ்சிலுவைச் சங்கம்

சுவிட்சர்லாந்தின் வங்கி உடைமையாளர் ஒருவரின் மகனாக கி.பி. 1828-இல் பிறந்த அவர் கி.பி. 1862-இல் 'சால்பரினோ நினைவுகள்' என்ற நூலினை எழுதினார் அந்நூலில் போர்களில் காயம் பட்டோருக்கும், அமைதிக் காலங்களில் இயற்கையின சீற்றங்களால் துயருறுவோர்க்கும் துணை புரியக்கூடிய ஓர் அமைப்புத் தேவை என்பதை வலியுறுத்தினார். தொணடு செய்யும் தூய்மைமிக்க வாழ்க்கை வாழ வேண்டுமென்ற நோக்குடன் கசுடாவ் மாய்னீர், டாக்டர் ஆப்பிரியா, டாக்டர் மானுவா ஆகிய உறுப்பினர்களுடன் தூனான்ட்டைச் செயலராகக் கொண்ட குழு செனீவாவில் தோற்றுவிக்கப்பட்டது. பின்னர்த் தூனான்ட்டுபல்வேறு ஐரோப்பிய நாடுகளுக்கும் சுற்றுப்பயணம் மேற்கொண்டு அரசுத் தலைவர்கள பலரையும் கண்டு பேசித் தம் முடிவுக்கு ஆதரவு தேடினார். அதன் பயனாய் கி.பி. 1863 அக்டோபா 26-இல் பதினாறு நாடுகளைச் சேர்ந்த 30 பேராளர்கள மாநாடு கூட்டப்பட்டது. அதனைத் தொடர்ந்து 16 நாடுகளிலும் தேசிய உதவிச் சங்கங்கள் ஏற்படுத்த முடிவு செய்யப்பட்டது. பின்னர் கி.பி. 1864 ஆகசுட்டு 22-இல் செனீவாவில அமெரிக்க ஐக்கிய நாடும் 13 ஐரோப்பிய நாடுகளும் கூடிச் செனீவா உடன்படிக்கை ஏற்பட்டது. அதன்படி போர்க் கைதிகளை மனிதாபிமானத்துடன் நடத்துதல், போர்களில் காயம்பட்டவர்களுக்கு எவவிதமான வேறுபாடுகளும் காட்டாது முதலுதவி அளித்தல், மருத்துவர்கள், தாதிகள் ஆகியோரின் உதவியுடன்கூடியமருத்துவக் கூடங்களையும் மருத்துவ உதவிகளையும் வழங்குதல் ஆகியன முக்கிய பொறுப்புகளாகக் கொள்ளப்பட்டன. இத்தகைய உதவிப் பணிகளில் ஈடுபட்டுள்ள செஞ்சிலுவைச் சங்க உறுப்பினர்களை இனங்கண்டுகொளளத்தக்க வகையில் ஓர் அடையாளச சின்னம் தேவைப்பட்டது. எனவே, சுவிட்சர்லாந்தின் அரும் பங்கிற்குப் பெருமை சேர்க்கும் வகையில் அந்நாட்டுக் கொடியில் சில நிற மாற்றங்களைச் செய்து, வெண்ணிறத் துணியில் சிவப்பு நிறச் சிலுவை பதித்து, அதுவே அடையாளச் சின்னமாகக் கொள்ளப்பட்டது. ஏறத்தாழ அனைத்து உலக நாடுகளும் செஞ்சிலுவைச் சங்கத்தை ஏற்றுக் கொண்டபோது இந்த அடையாளச் சின்னமும் ஏற்றுக் கொள்ளப்பட்டது. ஆனால், சில முகம்மதிய நாடுகள் சிலுவைக்குப் பதில் செவ்விளம் பிறையையும், வேறுசில நாடுகள் குறிப்பாக ஈரான், செஞ்சிங்கத்தோடு சூரியனையும் தமது சின்னங்களாகக் கொண்டுள்ளன.

செஞ்சிலுவைச் சங்கத்திற்கெனத் தனிப்பட்ட விதிமுறைகள் உண்டு. இச்சங்கமும் கிளைச் சங்கங்களும் நாடு, இனம், மற்றும் மத வேறுபாடுகளின்றித் தொணடாற்ற வேண்டும். போர்கள் நடக்கும் பகுதிகளில் இந்த அமைப்புச் செயற்படும்போது அதன் இருப்பிடம் அனைவருக்கும் தெரியக்கூடிய வகையில் அமைக்கப்பட வேணடும். போரில் ஈடுபட்ட இருசாரரும் இச்சங்கத்தினைச் சோந்தவர்களுக்கும இச சங்கத்தின் பணிகளுக்கும் எவ்விதமான இடர்ப்பாடுகளும், இடையூறுகளும் தாரா வண்ணம் கவனித்துக் கொள்ள வேண்டும். கிளைச் சங்கங்கள் செனீவாவிலுள்ள தலைமைச செயலகத்துடன் தொடர்பு கொண்டு பதிவு செய்துகொளளவேண்டும்.

தூனான்ட்டு, அரும்பணி ஆற்றியதன் காரணமாக 1901-ஆம் ஆண்டில் நோபல் பரிசு பெற்றார். இவர் 1910-இல் காலமானார். ஆயினும் இறப்பதற்கு முன னர் 1906-இல் திருத்தமொன்று மேற்கொள்ளப்பட்டுப் பலவகைப் போாகளில் ஈடுபட்டோருக்கும் இச்சஙகம் உதவுவது ஏற்கப்பட்டது. போர்க்களங்களில் காயமுற்றவர்களுடன் போரில் சிறைப்பட்ட போாக் கைதிகளுக்கும் உதவ 1929-ஆம் ஆணடில் இச்சஙகம அனுமதிக்கப்பட்டது. போரில் ஈடுபடாத பிறருக்கும் செஞ்சிலுவைச் சஙகம பாதுகாப்பளிப்பது 1949 -ஆம் ஆணடில் ஏற்றுக்கொள்ளப்பட்டது. இன்று அம்மை, காலரா, கருங்கொள்ளை நோய், தொற்று நோய் ஆகியவற்றின் தடுப்புப் பணிகளிலும் செஞ்சிலுவைச் சஙகம ஈடுபட்டு வருகின்றது. மேலும் பின் தங்கிய நாடுகளில் முன்னேற்ற நடவடிக்கைகளை மேற்கொளள இந்த அமைப்புத் தூணடுகோலாக விளங்குகிறது. இயற்கைச்சீற்றங்களான புயல்,

வெள்ளம், நில நடுக்கம், பஞ்சம் போன்றவற்றால் இழப்புக்குள்ளான மக்களுக்கு உதவவும் செஞ்சிலுவைச் சங்கம் பயன்படுகிறது.

செஞ்சிலுவைச் சங்கத்தின் பன்னாட்டுக் குழு (The International Committee of Red Cross) என்பது உயர்மட்டத்திலுள்ள ஒரு நடுநிலை குழுவாகும் கிளைச் சங்கங்களைத் தோற்றுவிக்க உதவுதல், அவற்றின் நடைமுறைப் பணிகள், செஞ்சிலுவைக் கோட்பாடுகள் ஆகியன செயற்படுத்தப்படும் முறையைக் கண்காணித்தல், செனீவா உடன்பாட்டினைக் காத்தல் ஆகியன இதன் முக்கிய பணிகளாகும். இக்குழு செனீவாவைத் தம் தலைமையிடமாகக் கொண்டுள்ளது.

செஞ்சிலுவைச் சங்கங்களின் கூட்டுக்கழகம் (The League of Red Cross Societies) என்ற அமைப்பு 1919-ஆம் ஆண்டில் தோற்றுவிக்கப்பட்டது. அந்தந்த நாடுகளின் தேசிய சங்கங்களின் இணைப்பாக இது செயற்படுகின்றது. அமைதிக்காலப் பணிகளில் நட்புறவு நோக்குடன் செயற்பட்டுச் சுகாதார முன்னேற்றம், பிணி நீக்கம் மற்றும் வாழ்க்கை முன்னேற்றம் ஆகியவற்றிற்கும் இந்த அமைப்புத் துணை நிற்கிறது.

இவைபோன்று பலதரப்பட்ட துணை அமைப்புகள் பல நாடுகளில் உள்ளன. கனடாவின் கியூபெக்கு மாநிலத்தில் 1914-ஆம் ஆண்டில் பள்ளி மற்றும் கல்லூரி மாணவர்களின் அமைப்பாகச் 'சிறு செஞ்சிலுவைச் சங்கம்' செயற்பட்டது. குழந்தைகள நலப் பணிகள் இதன்மூலம் நிறைவு செய்யப்படுகின்றன. அமெரிக்க ஐக்கிய நாட்டைச் சேர்ந்த தேவிட்சன் (Davidson) என்பவரின் தூண்டுதலால் 1919-ஆம் ஆண்டில் அமெரிக்கா, பிரிட்டன், பிரான்சு, இத்தாலி, சப்பான் போன்ற நாடுகளின் இணைப்பு அமைப்பாக 'ஐக்கிய செஞ்சிலுவைப் படை' என்ற அமைப்பு உருவாக்கப்பட்டது. பாரீசில் இதன் தலைமையகம் உள்ளது. ஆசுத்திரேலியாவில 1917-இலும் இங்கிலாந்தில் 1924-இலும் சிறுவர் செஞ்சிலுவைச் சங்க அமைப்புகள தோற்றுவிக்கப்பட்டன.

இந்தியச் செஞ்சிலுவைச் சங்கம் 1920-இல் தோற்றுவிக்கப்பட்டது. இதில் 26 மாநிலக் கிளைகளும், 222 மாவட்டக் கிளைகளும் உள்ளன. இந்தியக் குடியரசுத் தலைவரே இச்சங்கத்தின் தலைவராவார். இங்கு இளைஞர் செஞ்சிலுவைச் சங்கமும் இயங்கி வருகிறது. இந்திய செஞ்சிலுவைச் சங்கச் சட்டப்படி இது உருவாக்கப்பட்டது. இச்சங்கம் பன்னாட்டுக் குழுவுடன் இணைக்கப்பட்டது.

அமைதிக் காலங்களில் செஞ்சிலுவைச் சங்கம் மூன்றுவிதமான பணிகளை மேற்கொள்ளுகிறது. சாலைகள், போக்குவரத்துப் பகுதிகள், பொது இடங்கள், தொழிற்சாலைகள ஆகிய இடங்களில் முதலுதவிப் பணிகள் மேற்கொள்ளப்படுகின்றன. தாதிப் பணிகள் மருத்துவ நிலையங்களிலும், பொதுச் சுகாதார நிலையங்களிலும் மேற்கொள்ளப்படுகின்றன. பொதுநலப் பணிகள் பல இடங்களிலும் செஞ்சிலுவைச் சங்கங்களினால் மேற்கொள்ளப்படுகின்றன. செஞ்சிலுவைக் குழு உறுப்பினர்கள் அவசரக் காலங்களில பணி புரிவதற்கெனத் தனியாகப் பயிற்சியளிக்கப்படுகின்றனர்.

உலகம் தழுவியதோர் அமைப்பாக உள்ள செஞ்சிலுவைச் சங்கம் தன்னலங் கருதாத் தன்மையுடன பிறர்நலம் பேணித் தொண்டு மனப்பான்மையுடன் மக்களினம் மகிழ்வோடு வாழப் பலவழிகளில் பணி புரிகிறது.

மா.கா.

**செஞ்சுக்கள்** ஆந்திரப் பிரதேசத்தின் சமவெளிகளிலும் காட்டுப் பகுதிகளிலும் பெரும் எண்ணிக்கையில் வாழும் பழங்குடியினர். தமிழ் நாட்டிலும் இவர்கள் குறைந்த எண்ணிக்கையில் வாழ்கின்றனர். ஆந்திரப் பிரதேசத்தில் செஞ்சுக்களின் (Chenchus) எண்ணிக்கை 1981-ஆம் ஆண்டுக குடிமதிப்பின்படி 28,297 ஆகும். இங்கு இவர்கள் அட்டவணைப் படுத்தப்பட்ட பழங்குடிகளாக உள்ளனர். ஆந்திரப் பிரதேசத்தில் இவர்கள மெகபூபு நகர் கர்நூல, குண்டூர் ஆகிய மாவட்டங்களில் நீண்டுள்ள நல்ல மலைப் பகுதிகளில் மிகுதியாக வாழ்கினறனர்.

'செஞ்சு' என்னும் சொல் மரத்தடியில் வாழ்பவன் என்பதைக் குறிக்கும். செஞ்சுக்கள தம்மை இந்நாட்டின் மண்ணின் மைந்தர்கள் என்று கூறிக்கொளவர். சிரீசைலம் கோயிலிலுள்ள மல்லிகார்ச்சுன கடவுளோடு தங்கள் இனத்தவரைத் தொடர்புபடுத்திச் செஞ்சுக்கள் பெருமைப்படுத்திக் கொள்வர். இவர்கள் இனத்தவரின் தோற்றம் பற்றிப் பல புராணக்கதைகள வழக்கிலுள்ளன. சிரீசைலப் பகுதியை ஆண்ட சந்திரகுப்த அரசரின் கால்நடைகளை வளர்த்தவாகள் இவர்கள் என்பது அவ்வழக்குகளுள் ஒன்று. மல்லிகார்ச்சுன கடவுளைத் தொடர்புபடுத்திக் கூறும் வழக்கும் இவர்களிடையே சிறப்புப்பெற்றது. இவ்வழக்கின்படி, இவர்களின் மந்தையில் ஒரு கருப்புப்பசு காட்டுப்பகுதிகளில் அடிக்கடி மறைந்துவிடுவதும் வீட்டிற்கு வந்தபிறகு பால் கொடுக்காததுமாக இருந்தது இதனைக் காணச் செஞ்சு இளைஞன் முற்பட்ட போது, மல்லிக்கார்ச்சுன கடவுள் இந்தப் பசுவைச்



செஞ்சு ஆண

காட்டில் பால் கறந்துவிடுவது தெரிந்துகொணடான் பலமுறை அவரைப் (கடவுள்)பிடிக்க முயன்று தோலவி யுற்றான். செஞ்சுப் பெண ஒருத்தி மல்லிகார்ச்சுன கடவுளைப் பிடிப்பதாகச் சபதம் செய்து இறுதியில் பிடித்தும் விட்டாள. கடவுள் அவளமீது காதல் கொண்டு அவளை இரணடாம் மனைவியாக ஏற்றுக் கொண்டார்.இவர்களுக்குப் பிறந்து வழிவழி வருபவர் களே செஞசுக்கள் என்பர். இவர்களுக்குத் திருமணம் நடந்த அந்த இடமே இப்போதைய சிறப்புமிக்க ஸ்ரீசைலம் கோயிலாகும். இதனாலேயே செஞ்சுக்களுள் சிலரை அக்கோயிலின பூசாரிகளாகவும் உதவியாளர் களாகவும் பணியமர்த்தியுளளனர்.

உடல்சார் மானிடவியலாரின் கூற்றுப்படி செஞ்சுக்கள் மெலிந்த உடலையும் நடுத்தர உயரத்தை யும் கொண்டவராவர், தோலின் நிறம் கரும்பழுப்பு முதல் செம்பு நிறம்வரை உள்ளது. தலைமயிர் அலை அலையானது முதல் சுருண்ட அமைப்பு வரை யிலானது. இவர்கள் உயர்ந்த முன்நெற்றியையும், தாழ்ந்த முகத்தையும், தாழ்வான மூக்கடியையும், பழுப்பு முதல் கருமை நிறம் வரையிலான கணணை யும் கொண்டவர்கள். மூக்குத் துளைகளும் விழிப் பள்ளங்களும் பெரியன.

செஞ்சுக்களின் ஆடைகள் எளியவை. ஆணகள் பெரும்பாலாகக் கோவணமும் தலைப்பாகையும் கட்டிக் கொணடுள்ளனர். சிலர் துண்டு போட்டுக் கொணடும்,சிலர் வேட்டி சட்டை போட்டுக்கொண்டும உள்ளனர். பெண்கள சமவெளி மக்களைப் போன்றே புடவையையும் மேற்சட்டையையும் அணிகின்றனர். வயதான பெணடிர் மேறசட்டை போடுவதில்லை பெண்கள் தலைமயிரைப் பினனால் வாரிக் கட்டிக் கொள்வார்.ஆணகளுள சிலரும் நீணட மயிரைச கட்டிச் சுருட்டிக் கொள்வர்.



செஞ்சு ஆண வில் செய்தல்

இவர்களுள் 96 விழுககாட்டினர் பேசுவது தெலுங்காகும்.பிறர் ஒரிய மொழியையும் தமிழையும் பேசுகின்றனர். இவர்களிடையே கல்வியறிவு மிகக குறைவு. கல்வியறிவுடையவர்கள 1971-ஆம் ஆணடு குடித்தொகையின்படி 6.5விழுக்காட்டினர் மட்டுமே.

செஞ்சுக்களின் வீடுகள் நீண்டுருண்டதும் கூம்பு வடிவமானதுமாகும். அம்பும் வில்லுங்கொண்டு பல்வேறு விலங்கினங்களை இவர்கள் வேட்டையாடுகின்றனர். தோண்டு கழி கொண்டு கிழங்கு வகைகளைக் காடுகளிலிருந்து தோண்டியெடுத்து உண்கின்றனர். தேன் சேகரித்தல் இவர்களின் தொழிலில் முதன்மையான இடம் பெறுகின்றது. கயிறு, தேன் சேகரிக்கும் கூடை, கத்தி போன்ற கருவிகள் முதலானவற்றைக் கொண்டு தேன் சேகரிக்கின்றனர். இவர்களின் உணவில் அரிசி, கேழ்வரகு, தினை வகைகள் முதலானவை முதலிடம் பெறுகின்றன. காட்டுப் பொருள்களைச் சேகரித்து வெளியாரிடம் கொடுத்து இவற்றைப் பெறுகின்றனர். சிலவேளையில் காட்டுப் பொருள்களை விற்பதின் மூலம் கிடைக்கும் பணத்தைக் கொண்டும் வாங்குவர். இவர்கள் மதுவை விரும்பிக் குடிக்கின்றனர். ஒருவகைப் பூவினைக் கொண்டு இவர்களாகவே காய்ச்சி வடிக்கும் இம் மதுவைவிழாக் காலங்களிலும் பல்வேறு சடங்குகளின் போதும் மிகுதியாகக் குடித்துக் களிக்கின்றனர்.

செஞ்சுக்கள் நான்கு பெரிய அகமணக் குழுக்களாகக் (Endogamous Groups) காணப்படுகின்றனர். அவை கோயா செஞ்சு (Koya Chenchu), கொண்டா செஞ்சு (Konda Chenchu), செஞ்சு தாசரி (Chenchu Dasari), ஊரு செஞ்சு (Uru Chenchu) ஆகியன. இவர்கள குல (Clan) அடிப்படையில் பால்மூரி (Balmuri), புமானி (Bhumani), குல்லா (Gulla), நிம்மல் (Nimmal), மண்டுலா (Mandla), புலிசெரலா (Pulicherala), தாசரி (Dasari), கட்ராசு (Katraju). மாரிபள்ளி (Maripalli) ஆகிய ஒன்பது குலங்களாகப் பாகுபடுவர். இவர்கள் தந்தைவழிச் சமூகத்தினராவர்.

இவர்களிடையே பொதுவாக ஒருதுணை மண (Monogamy) முறையில் திருமணம் நடைபெறுகிறது. இதில் இருவகையுண்டு. பெற்றோர்கள் நடத்திவைக்கும் திருமணம் (பெல்லி) ஒருவகை. பெற்றோர்களின் இசைவைப் பெற இயலாத காதலர்கள் வேறு இடம்



காட்டுப்பொருள்களைச் சேகரித்தல்

சென்று நடத்திக்கொள்ளுந் திருமணம் (ராசி-Raji) மற்றொரு வகை.

முதியோர்களைக் கொண்ட ஆட்சிக்குழுவே சமுதாயத்தில் எழும் சிக்கல்களைத் தீர்த்து வைக்கிறது. செஞ்சுக்கள் கொண்டுள்ள மரபு சார்ந்த சட்டங்கள் அனைவராலும் மதிக்கப்படுவதால் நல்லிணக்கமும் ஒழுங்கும் நிலைநாட்டப்படுகின்றன.

செஞ்சுக்களின் நலனை மேம்படுத்த ஆந்திர அரசும் தமிழக அரசும் பல்நோக்குக் கூட்டுறவுச் சங்கங்களை அமைத்து உதவி வருகின்றன. ஜே.பா.

**துணை நூல்கள்:**


Census of India, Ethnographic Notes on Scheduled Tribes, Vol. IX. Part V-B(I), Madras, 1961.

Haimendorf, V.C. The Chenchus, Macmillan Company, London, 1943.


*செஞ்சேரிமலை* கோயம்புத்தூர் மாவட்டத்தில் பொள்ளாச்சியிலிருந்து உடுமலைப்பேட்டைக்குச செல்லும் சாலையில் அமைந்துள்ள முருகன் தலம். இத்தலத்தை அருணகிரிநாதர் திருப்புகழில் பாடியுள்ளார். செஞ்சேரி மலை முன்பு தென் சேரி கிரி எனக் கூறப்பட்டது. இங்குள்ள குன்றின் மீது முருகன் கோயில் உள்ளது. இகுன்றின் உயரம் 150 அடி. இக்குன்றுக்கு மேற்கில் பெருமாள் மலை என்னும் வைணவ மலைக்கோயில் ஒன்று உள்ளது. இவ்விரு குன்றுகளுக்கும் இடையில் பரம்பிக்குளம் திட்டக் கால்வாய் உள்ளது. இங்குள்ள முருகன் மந்திராசலப் பெருமான் எனக் கூறப்படுகிறார். முருகன் எழுந்தருளியிருக்கும் குன்றில் தீர்த்தசுனை, தர்ப்பை சுனை என்னும் இரு சுனைகள் உள்ளன. தீர்த்த சுனைக்கு அருகில் இடும்பன்கோயில் ஒன்று உள்ளது. கோயிலுக்குத் தெற்கில் சாய்வுப்பாறை ஒன்று உளளது.

சு.இரா.

*செட்டிநாடு*: இன்று நாட்டுக்கோட்டை நகரத்தார்கள் வாழும் எழுபத்து நான்கு ஊர்களும் மற்றையோர் வாழும் ஊர்களும் அடங்கிய பகுதியைச் 'செட்டிநாடு' என்பர். இதன் நிலப்பரப்பு 1700 கிலோ மீட்டரரகும். செட்டி நாட்டின் ஊர்கள் பசும்பொன் முத்து ராமலிங்கம் மாவட்டத்திலும் புதுக்கோட்டை மாவட்டத்திலும் அடங்கியுள்ளன. செட்டிநாட்டுப் பகுதி 96 ஊர்களைக் கொணடது என்று பொதுவாகக் கூறப்பட்டாலும் இப்பொழுது 74 ஊர்கள் உள்ளனவென்று கூறப்படுகிறது. இப்பகுதியில் செட்டியார்களோடு மறவர், கள்ளர், அகம்படியர் ஆகியோரும் பிறரும் இப்பகுதியில் வாழ்கின்றனர். இங்கு வாழும் முக்குலத்தோர் நாட்டார் என்னும் பெயரால் குறிக்கப்படுவர். செட்டி நாட்டில் செட்டியார்கள் சிறுபான்மையினர். ஆயினும் அவர்கள் கல்வி, செல்வம், கோயில் திருப்பணி ஆகியவற்றால் சிறந்து, பிறர் அறியுமாறு விளங்கினர். எனவே, இவர்களை வைத்து இப்பகுதியைச் செட்டி நாடு என்று மக்கள் சுட்டினர். இப்பெயர் சிறப்பால் ஏற்பட்ட பெயர் எனக் கருதலாம். சோழமன்னர்களின் தலைநகரங்களுள் ஒன்றாக விளங்கிய காவிரிப்பூம்பட்டினத்திலிருந்து வந்தமையால், இவர்கள் நகரத்தார் என்னும் பெயரால் குறிப்பிடப்பெற்றனர் என்று கூறுகின்றனர்.

செட்டி நாடு எனத் தனி நாடோ செட்டி நாட்டுக்கு எனத் தனி அரசோ இருந்ததில்லை. ஆயினும் செட்டிநாடு என்ற பெயர்வழங்கி வருகிறது. செட்டிநாட்டுப் பகுதியில் கி.பி.1800-இல் வாழ்ந்தபாடுவார் முத்தப்பச் செட்டியார் தம்பாடலில் 'செட்டி நாடு' என்னும் பெயர் வழக்கைச் சுட்டியுள்ளார். இவர், செட்டிநாட்டின் வடக்கு எல்லை வெள்ளாறு; மேற்கு எல்லை பிரான்மலை; தெற்கெல்லை வைகையாறு; கிழக்கு எல்லை வங்கக்கடல் என்று பாடியிருக்கிறார்.

நாட்டுக்கோட்டை நகரத்தார்கள் இளையாற்றங்குடி முதலிய ஏழு திருக்கோயில்களைச் சார்ந்தவர்களாக விளங்குகின்றனர். இதனை 'இருநிதியம் சேருகின்ற எழுநகரத்தார்' என்று பாடுவார் முத்தப்பச் செட்டியார் சிறப்பித்துள்ளார்.

செட்டி நாட்டில் பெரிய நகரங்கள் காரைக்குடி, தேவ கோட்டை, பொன்னமராபதி முதலியனவாம். இங்குத் திருப்புத்தூர், திருக்கொடுங்குன்றம், திருவாடானை ஆகிய தேவாரப்பாடல் பெற்ற திருத்தலங்கள் உள்ளன. திருமெய்யமும் திருக்கோட்டியூரும் ஆழ்வார்கள் மங்களா சாசனம் செய்த திவ்விய தேசங்கள் ஆகும். பிள்ளையார்பட்டியும் குன்றக்குடியும் குகைக்கோயில்கள்; அவற்றில் பிராமிக் கல்வெட்டுகள் உள்ளன. குன்றக்குடிக் குன்றில் முருகன் கோயில் உள்ளது. இவை அருணகிரிநாதர் பாடிய தலங்கள். நாட்டரசன் கோட்டையில் கம்பன் சமாதிக் கோயில் அமைந்துள்ளது.

சேதுபுராண ஆசிரியராகிய நிரம்பவழகியதேசிகரின் துழாவூர் மடம், திருவண்ணாமலை ஆதீனமுள்ள குன்றக்குடிமடம் ஆகிய இரண்டும் இப்பகுதியில் சிறப்பானவை. வேதாந்த இலக்கியங்களை இயற்றி வெளியிட்ட கோயிலூர் மடம் குறிக்கத்தக்கது. இவை

தமிழை வளர்ப்பன. கி.பி. 1909-இல் தோன்றிய மேலைச்சிவபுரி சன்மார்க்க சபை, செட்டி நாட்டில் தமிழ் வளர்க்கும் தகையது. செட்டி நாட்டுப் புலவர்களுள முற்காலத்தில் கணியன் பூங்குன்றனார். பிற்காலத்தில் பாடுவார் முத்தப்பச் செட்டியார், முத்துக்குட்டிப் புலவர், வன்தொண்டர், சொக்கலிங்க ஐயா ஆகியோர் குறிக்கத்தக்கோர். பாரி வாழ்நத பறமபு மலை இன்று பிரான் மலையாய் உளளது. வள்ளல் அழகப்ப செட்டியார், இராசா சர் அண்ணா மலை செட்டியார், கருமுத்து தியாகராச செட்டியார் போன்ற கல்விக் கொடைஞர்கள் பிறப்பிடம் செட்டி நாடே. ஆலைகளையும் தொழிறசாலைகளையும் இந்நாட்டார் இந்திய நாடெங்கிலும் அமைத்திருக் கின்றனர். இவர்கள் பர்மா, தென் வியட்நாம், மலேசியா, சிஙகப்பூர், கம்போடியா, இந்தோனேசியா, இலங்கை ஆகிய நாடுகளொடு வணிகத் தொடர் புடையவர்கள்.

செட்டி நாட்டில், அழகப்பா பல்கலைக் கழகம் அமைந்து அங்குக் கல்விப்பணியாற்றுகினறது. இநதிய விடுதலைப்போரில சத்திய மூர்த்தி, சா. கணேசன, சின்ன அணணாமலை, சொ. முருகப்பா போனற வர்கள் பங்குபெற்றனர். சா. கணேசன், காரைக குடியில் அமைத்த கம்பன் கழகம், தமிழ்நாட்டுக கம்பன கழகங்களின் தாய்க்கழகம். கமபன் மணிமணடபத்தையொட்டி அமைந்த தமிழ்த்தாய் கோயில், சா. கணேசன் முயற்சியில் உருவானது. இன்னும் திருப்பணி முற்றுப்பெறவில்லை.

உ. வே. சாமிநாதையருக்குப் பல தொன்மை ஏட்டுக் சுவடிகளை வழங்கிய மிதிலைப்பட்டி, செட்டி நாட்டிலுள்ளது. நாட்டரசன கோட்டையில கம்பர் சமாதியும் அரிமளத்தில் கோடகநலலூர் சுந்தர சுவாமிகள சமாதியும் இருககினறன. செட்டிநாட்டில, காட்டுபாவா பளளி வாசலில், பகுருதீன் ஆணடவர் தர்கா உளது.

**செட்டிநாடு 2:** இது செட்டி நாடு எனவழங்கும் பகுதியிலுள்ள ஒரூா. இந்த ஊரை இராசா சர் அண்ணாமலை செட்டியார் 1929-இல் அமைத் தார். கானாடு காத்தான் மு அ. அணணாமலை செட்டியாருக்கு ஆங்கிலப் பேரரசு 'அரசா' என்ற பட்டம் அளித்தது. அச்சமயம் அண்ணாமலை அரசர், தமக்காக ஒரு நாடு இருக்க வேண்டும் எனற கருத்தில் இவவூரை அமைத்தார். மன்னராயின் நாடொனறு இருககவேணடும் என்ற நோக்கில், ஓர் ஊா ஒரு நாடாகப் பெயர் எய்திற்று. ஊர் அமைந்த ஆணடில் தான் இவவூரில புகைவண்டி நிலையம் கட்டப் பெற்றது. செட்டி நாட்டரசர் தம் செலவில் அநத நிலையத்தை மிக்க வசதியுடையதாகச் செய்துள் ளார் அணணாமலை அரசர் திருப்பணி செய்த சிவன் கோயில் இங்கு உள்ளது. இங்கு அமைக்கப்பட்ட சிறிய ஆகாய விமான நிலையம் சில ஆண்டுகள் பயன்பட்டது. தெ. சொ.

*செண்பகராமன்:* இவர் நாஞ்சில் நாட்டில் திருவனந்தபுரம் புத்தன சந்தையில் பிறநதவர். திருவனந்தபுரம் அரசர் கலாசாலையில் 1906- ஆம் ஆணடில் ஐந்தாம் படிவம் படித்துக் கொண்டிருந்த போதே இவர் உள்ளத்தில் விடுதலை வேட்கை தோன்றியது. அவ்வாண்டிலதான் வ.உ. சிதம்பரனார் ஆங்கிலேய ஆட்சிககு எதிராகச் சுதேசி கப்பலை ஓட்டினார். செண்பகராமன் பள்ளி மாணவர்களை ஒன்று திரட்டிச் சங்கம் அமைத்து அவர்களிடையே இந்தியா விடுதலை பெற வேண்டும் என்ற பெரு விருப்பத்தைத் தமது சொற்பொழிவுகளின் மூலம் ஏற்படுத்தினார். இவரது சொற்பொழிவுகள் இளை ஞர்களின் உள்ளத்தை ஈர்த்து நாட்டுப் பற்றை வளர்த்தன. இரகசியக் காவலர்கள் இவரைப் பின் தொடர்ந்தனர். ஆதலின், 1908-ஆம் ஆணடு செப்டம்பர் மாதம் 22 ஆம் தேதியன்று செரு மானியக் கப்பலில் ஐரோப்பா சென்றார்.

செணபகராமன் இத்தாலி சென்று இலக்கியமும் அறிவியலும் பயின்றார். பிறகு சுவிட்சர்லாந்து சென்று கல்வி பயின்றார்; பட்டங்கள் பெற்றார். பிறகு பெர்லின் சென்றார். பெர்லின் பல்கலைக் கழகத்தில் சேர்ந்து அரசியல், பொருளாதாரம், பொறியியல் ஆகிய துறைகளில படித்து 'டாக்டர், பட்டம் பெற்றார். 'இந்தியாவுக்காக' (Pro-India) என்ற ஆங்கில இதழையும் நடத்தினார்.

வீரர் செண்பகராமனின் புகழ் எங்கும் பரவியது. பெர்லினில் ஒடுக்கப்பட்ட மக்களின் மன்றம் ஒன்றை அமைத்தார். இவர் பன்னிரணடு மொழிகள் பயின்ற வர். தமது இருபத்து மூன்றாம் வயதில் ஆங்கிலே யரைத் தீவிரமாக எதிர்த்தவர் இவர். பர்க்கதுல்லா அமைச்சரவையில் செண்பகராமன உறுப்பினராக இருந்தார். அந்த அமைச்சரவையில் இருந்த அனை வரும் ஆங்கிலேய ஆட்சியை எதிர்த்து ஐரோப்பிய நாடுகளுக்குச் சென்று விடுதலை இயக்கம் நடத்தியவர் கள். பெர்லின் நகரில செண்பகராமன் இல்லத்திற்கு மோதிலால் நேரு, சுபாசு சந்திரபோசு, சவகர்லால நேரு, இலால்சந்த்து, கிரா சந்த்து ஆகியோர் சென்றி ருக்கிறார்கள். விததல்பாய்படேல் பெர்லின் சென்ற போது 1931-ஆம் ஆணடு, செண்பகராமன அவரை விமானநிலையத்தில் வரவேற்றார்.

இவர் இந்திய நாட்டின வணிக வளர்ச்சிக்குப் பெரிதும் பாடுபட்டார். இந்திய வணிக மன்றக் கூட்ட மைப்பின் சார்பாளராக 1930-இல் இவர் இருந்தார். இவர் 1934-ஆம் ஆண்டு மே மாதம் 26-ஆம் தேதி அமரரானார். பம்பாயில் 1948-ஆம் ஆணடு இவரது திருவுருவப் படம் திறந்து வைக்கப்பட்டது. இவர் புரட்சி வீரர்களுள சிறந்தவர்; விடுதலை ஒளியைப்பிற நாடுகளில் ஏற்றியவர்; 'செய்கிந்த்' எனற முழக் கத்தை முதன் முதலில் உருவாக்கி எழுப்பியவர் இவரேயாவர். கே.சே.

*செத்தவரை* தென்னார்க்காடு மாவட்டத்தில் அமைந்துள்ள ஊர். இது வரலாற்றுச் சிறப்புடையது. இவ்வூருக்கு அருகே அய்யனார் மலையில் வரலாற்றுக் காலத்திற்கு முற்பட்ட பாறை ஓவியங்கள் பல கணடு பிடிக்கப்பட்டுளளன.

இவ்வோவியங்களுள மாடு, ஆடு, பசு, குதிரை, மான், பாம்பு, மீன், அன்னம், மனிதனின் கைவடிவம், தீ, முத்திரை, வீட்டின் வடிவமைப்புப் போனறவை இடம் பெற்றுள்ளன. குறியீட்டு வடிவங்களும் விலங கினவடிவஙகளும் மனித வடிவங்களும் இஙகு ஓவியங களாகத் தீட்டப்பட்டுள்ளன.

இவ்வோவியங்களை வரைவதற்கு இயற்கை யாய்க்கிடைக்கின்ற வண்ணங்களைப் பயனபடுத்தி யுள்ளனர். இஙகுச் செந்நிறம், வெளளை நிறம ஆகியவை இடம் பெற்றுளளன. வரலாற்றுக்கு முற் பட்ட காலத்து ஓவியங்களில செந்நிறம் சிறபபிடம் பெறுகினறது.

இவ்வோவியங்களில் பசுவின் ஓவியம் சிறப்புடை யது. பசுவின முகம், கழுத்துப் பகுதிகள் ஆகியவை அடர்த்தியான செந்நிறப்பூச்சுடனும் பிற்பகுதி செவ் வணணக் கோடுகளுடனும் வரையப்பட்டுளளன. மிகத் தொன்மையான மீன் ஓவியங்களும் இஙகு இடம் பெற்றுள்ளன. மீனின் உடற்பகுதி அனைத் தும் வெள்ளை நிறத்திலும், வெளிப்பகுதி சிவப்பு நிற வரை கோட்டு உருவ அமைப்பிலும் அமைந் துள்ளன. பசு, மீன் ஆகிய இரண்டு வடிவங்களும இரு வண்ணப்பூச்சு முறையில் அமைந்துள்ளமை குறிப் பிடத் தககதாகும். இத்தகைய வடிவங்களை மத்திய இந்தியாவிலுளள பாறை ஓவியங்களில காணமுடி கிறது.

செத்தவரையில் காணப்படும் மற்றொரு சிறப்பு 'கை' ஓவியமாகும். செத்தவரை ஓவியங்களில் மான் ஒன்று மிகுந்த அழகுடன் நின்று திரும்பிக் காணும் வண்ணம் வரையப்பட்டுளளது. செந்நிறத்தில் அமைந் துள்ள இம்மானின் உருவத்திற்கு முன் வேல் ஒன்று இடம் பெற்றுள்ளது. இந்த வேல் ஒரு பொருளைத் துளைத்துச் சென்றுள்ளவாறுள்ளது. இதன் அருகே தீயின் சுவாலை போன்ற வடிவமைப்புடன் கூடிய வரைவுகள உள்ளன.

குறியீடுகள் போன்று சில வடிவங்களும் இங்கு உளளன. இங்கு வீட்டின் அமைப்புப் போன்ற ஓவியம் ஒன்றுளளது. இதனைப் பளளி அல்லது வீடு என்று கருதுகின்றனர். இவ்வகைக் குறியீடு சிந்துவெளி நாகரிகத்திலும், சுமேரிய நாகரிகத்திலும் கிடைத்துள்ளது இரா.பா.

*செதுக்குச் சித்திரம்*, உலோகத் தகடு அல்லது மரக்கட்டையில ஏதேனுமொரு உருவத் தைச் செதுக்குவதாகும். இச் செதுக்கப்பட்ட பொருளானது மையினால் உருவத்தை அச்சிடு வதற்குப் பயன்படுத்தப்படுகிறது. இவ்வாறு செதுக கப்பட்ட பொருளிலிருநது எடுக்கப்படும் படியும் செதுககுச் சித்திரம் (Engraving) என்றே சொல்லப் படுகிறது. உலோகத் தகடுகளிலிருந்து செதுக்கி எடுக்கப்படும் படிகள செதுக்குச் சிததிரங்கள் என்றும் மரக்கட்டையிலிருந்து செதுக்கி எடுககப்படும் படிகள் மரச்செதுக்குச் சித்திரங்கள் என்றும் சொல்லபபடு கின்றன.

**சித்திரம்தீட்டும் முறை:** பெரும்பாலும் செமபு (Copper), துத்தநாகம் (Zinc) போன்ற உலோகத் தகடுகளில் செதுக்குச் சித்திரம் தீட்டப்படுகிறது. தகட்டில் உருவத்தைச் செதுக்குவதற்குப் பரின(Burin) எனச் சொல்லப்படும் கூர்மையான கருவி பயன் படுத்தப்படுகிறது. இது கைப்பிடியுடன் கூடிய குத தூசி போன்ற அமைப்பினைக் கொணடிருக்கும்.

ஒரு தகட்டினைச் செதுக்குவதற்கு மிகுதியான திறமை தேவைப்படுகிறது. ஓவியர் ஒரு கையினால் பரினின் முனைக்கு எதிர்ப்புறம் தகட்டினை நகர்த்த வேண்டும். அதே நேரத்தில் மறு கையினை விரும்பும் உருவத்திற்கு ஏற்ற திசையில் பரினைச் செலுத்த வேணடும். வெட்டுப் பள்ளங்களின் ஆழம், அகலம் ஆகியவை கோட்டின் தோற்றத்தையும், படத்தின் வரி வடிவத்தையும் வரையறை செய்கின்றன. பின்னர் வெட்டுப் பள்ளங்களிலுள்ள உலோகச் சீவல களைச் (தூள்)சுரண்டு கருவியின் மூலம் நீக்கிவிட வேண்டும். ஓவியரால் வரிவடிவங்களை மாற்றவோ நீக்கிவிடவோ முடியும்; செதுக்கப்பட்ட உருவம் முழுவதையும்கூட நீக்கிவிட்டுப் புதிய செதுக்குச் சித்திரத்தை அத்தகட்டிலேயே செதுக்க முடியும்.



சித்திரம் தீட்டும்முறை

செதுக்குச் சித்திரத்தை அச்சிடுவதற்கும் திறமை வேண்டும். ஒரு தனித் தகட்டிலிருந்து எடுக்கின்ற ஒவ்வொரு படமும் ஓர் அச்சுப் பதிவாகும். (Impression). அச்சுப் பதிப்பதறகு மை (Ink), காகிதம், உருவ அச்சுப்பொறி ஆகியவை தேவைப்படுகின்றன.

ஓவியர்கள் பொதுவாகக் கையால் செய்யப்பட்ட காகிதத்தையே செதுக்குச் சித்திரங்களை அச்சுப் பதிக்கப் பயன்படுத்துவர். செதுக்குச் சித்திரத் தகட்டின்மீதுஈரமாக்கப்பட்ட காகிதத்தை வைத்து அழுத்த வேண்டும். நன்றாகப் பதிக்கப்பட்ட பின்னர்க்காகிதம் கிழிந்துவிடாதவாறு மெதுவாக எடுக்க வேண்டும். இந்த அச்சுப் பதிவினை உடனே மை உறிஞ்சும் காகிதத்தில் வைத்து உலரவிட வேணடும்.

அச்சுப்பதிவு முடிந்தபின்னர்ச் செதுக்குத் தகட்டினைக் கர்ப்பூரத் தைலத்தால் (Turpentine) துடைத்து மையினை நீக்கிப் பாதுகாப்பாகத் தகட்டை வைக்க வேண்டும்.

உலோகத் தகடுகளில சித்திரத்தைக் குடைவாகச் செதுக்கி, அதைச் சுற்றியுள்ள பகுதியைப் புடைப்பாகச் செய்து செதுக்குச் சித்திரம் தீட்டப்படுகிறது. ஆனால், மரச்செதுக்குச் சித்திரத்தில் சித்திரம் புடைப்பாக இருக்கும்படி செதுககுவார்கள். அதைச் சுற்றியுள்ள பகுதி குடைவாகச் செதுக்கப்படும். எனவே, உலோகத் தகடுகளில் படிகள் எடுப்பதைவிட மரத்தில் படிகள் எடுப்பது எளிது. மரச் செதுக்குச் சித்திரத்தில் ஒரு தடவை மை பூசினால் பல படிகள எடுத்துவிடலாம்.

**மரச்செதுக்குச் சித்திரம்:** பழங்காலத்திலிருநது மரமே செதுக்குச் சித்திரத்திற்குப் பயன்பட்டு வந்துள்ளது. முதன்முதலாக கி.பி. 500-இல் சீனாவில் இவ்வகைச் சித்திரம் தீட்டப்பட்டது. ஐரோப்பாவில் கி.பி. 12-ஆம் நூற்றாண்டில்காகிதம் உற்பத்தி செய்வதற்கு அறிந்தபின்னரே இத்தகைய செதுக்குச் சித்திரம் தோன்றியது.



மரச்செதுக்குச் சித்திரம்

**வரிச் செதுக்குச் சித்திரம்:** இது கோடுகளால் மட்டும் செய்யப்படுவது; பெரும்பாலும் உலோகத் தகடுகளிலேயே செய்யப்படுகிறது. இந்த வரிச் செதுக்குச் சித்திரத்தில் (Line Engraving) மிகப புகழ் பெற்றது ஒரு பெண்ணின சித்திரமாகும். இது

செருமனியில் பெர்லின் நகரத்திலுள்ள அருங்காட்சி யகத்தில் உள்ளது.

**உலர் முனைச் சித்திரங்கள்:** இவை பிற செதுக்குச் சித்திர முறைகளிலிருந்து வேறுபடுகின்றன. பிற செதுக்குச் சித்திரங்களைப் போல இவற்றிற்கும் உலோகத் தகடுகளே பயன்படுகின்றன. ஆனால் ஓவி யர்கள் செதுக்குவதற்குப் பரின் என்ற செதுக்குக் கரு விக்குப் பதிலாக வைரம் அல்லது கடினமான எஃகி னால் ஆன ஓர் ஊசியைப் பயன்படுத்துகின்றனர். அச்சுப் பதிப்பிற்குப் பிற செதுக்குச் சித்திரத்திற் கான முறைகளே பயன்படுகின்றன. ஆலபிரகூட்டு தியூரரின் உலர் முனைச் சித்திரங்கள் (Dry Point) மிகப் புகழ்பெற்றவை. இவைதவிர இலைனோ செதுக்குச் சித்திரம் (Lino Cut), நடுவண்ணசசெதுக் குச் சித்திரம் (Mezzotint), அரிச்சித்திரம் (Etching), மென்தள அரிச் சித்திரம் (Soft Ground Etching), நீர்வண்ணசசெதுக்குச சித்திரம்(Agna Tint) முதலிய செதுக்குச் சித்திர முறைகளும் வழக்கிலுள்ளன.



உலர் முனைச்சித்திரம்

செதுக்குச் சித்திரம் மிகப் பழமையான கலை வெளிப்பாடு. முதன்முதலாகச் செதுக்குச் சித்திரத்தை கி.மு. 5000-இல் எலும்புகளில் செதுக்கியுள்ளன ரென அறிஞாகள் கூறுகின்றனர். இப்போதுள்ள பழமையான உலோகச் செதுக்குச் சித்திரம் கி.பி. 1,400 க்கும் பிற்பட்டது. ஆனால் அதற்கு முன்னரே மரச் செதுக்குச் சித்திரம் கீழை நாடுகளில் சிறப் புற்று விளங்கியது. சீனாவில் கி.பி. 10-ஆம் நூற் றாண்டில் மரச் செதுக்குச் சித்திரம் செய்து படிகள் எடுத்துவந்தனர்.

இந்தியாவிலும் கோட்டுச் செதுக்குச் சித்திரங்கள் பெருமளவில் உள்ளன. ஆனால் பெரும்பாலும் அவை அணிகலன்கள் செய்வதற்கும் மாதிரி காட்டு வதற்கும் பயன்படுத்தப்பட்டன. அசோகர் காலத்துத் தூணகளிலும், தாசுமகாலிலும், முகலாயர், இராச புத்திரர் காலத்து ஆயுதங்களிலும், உண்கலங்களிலும் உள்ளவை இதற்குச் சிறந்த எடுத்துக்காட்டுகளாகும்.

தொடக்க காலத்தில் சீட்டுக் கட்டுகளில் அச்சுப் பதிப்பதில் வடக்கு ஐரோப்பியச செதுக்குச் சித்திரம் வல்லோர் புகழ்பெற்றிருந்தனர். மேலும் இவர்கள் சமயத் தொடர்பான படங்களும் அணிகலன்களில் சித்திரங்களும் தீட்டினர். அவற்றில் இயேசு கிறித்து சிலுவையில அறையப்பட்டதைக் காட்டும் மிகப பழை மையான சித்திரம் ஒன்று பெர்லின் (Berlin) நகரத தில் உள்ளது. இது கி.பி. 1446-இல் செதுக்கபபட் டதாகும்.



ஆல்பிரகூட்டு தியூரர் வரைந்த ஓவியம் 'துக்கம்'

செருமனியில் வாழ்ந்த ஆல்பிரகூட்டு தியூரர் (Albrecht Durer), செருமனியைசசேர்ந்த மார்ட்டின் சோன் காசர்(Martin Schongaucer), நெதர்லாந்தைச்



ஆண்ட்ரூ மான்டெக்னாவரைந்த 'மேரிமாதா-குழந்தை' ஓவியம்

சேர்ந்த இலூகாசு வான் லேடன் (Lucas Van Leyden), இத்தாலியைச சேர்ந்த ஆண்ட்ரூ மான் டெக்னா (Andrea Mantegna), அந்தோணி பொல் லைலோ (Antonio Pollaiuolo) முதலியோர் புகழ் பெற்ற செதுக்குச் சித்திர ஓவியர்கள் ஆவர்.

செதுக்குச் சித்திரத்தில் கி.பி 16, 17-ஆம் நூற நாண்டுகளில் தொழில்நுட்ப முன்னேற்றங்கள பல ஏற்பட்டன. ஆனால, இத்தாலியைச சேர்ந்த மார்க் கன்டோனியா ரேமண்டி (Marcantonio Raimondi) என்ற ஓவியரைப் பின்பற்றிப் பலர் வணிகத்திற்காகச் செதுக்குச் சித்திரங்களை உருவாக்கத் தொடஙகினர். வில்லியம் கோகார்த்து (William Hogarth) என்பவர் கி.பி. 1700-ஆம் ஆண்டுகளில் சிறந்துவிளஙகிய ஆங் கில நாட்டுச் செதுக்குச் சித்திரக்காரராஆவார். இஙகி லாந்தைச் சேர்ந்த வில்லியம் பிளேக்கு (William Blake) கி.பி. 1800-ஆம் ஆண்டுகளின் ஒரு சிறநத செதுக்குச் சித்திரககாரராக விளங்கினார். இதே போன்று பாப்லோ பிக்காசோவின் (Pablo Picasso) செதுக்குச் சிததிரங்கள் 1900-இல மிகப் புகழ் வாய்ந் தவையாக விளஙகின. 20-ஆம் நூற்றாணடில சோசப் கெக்ட்டு (Joseph Heckt) முதலியோர் இச்செதுக்குச் சித்திரக் கலைக்குச் சிறந்த சேவை செய்து வருகின் றனர். பூ.த.

**செந்தமிழ்நாடு:** சங்கம் வைத்துத் தமிழ வளர்த்தவர் பாணடியராதலின் பண்டிய நாடே செந்தமிழ் நாடு எனச்சிலர் கருதுவர். ஆனால்தொல் காப்பிய உரையாசிரியர்களான இளம்பூரணர், சேனாவரையர், நச்சினார்க்கினியர் ஆகியோரும் பிற ரும் செந்தமிழ் நிலம், வையையாற்றின் வடக்கும் கருவூரின் கிழக்கும் மருவூரின் மேற்கும் மருதையாற் றின் தெற்கும் ஆகும் எனபர். இஙஙனம் குறிப்பிடும் நிலம் சோழநாட்டைக் குறிப்பதாலும், கொடுந் தமிழ் நாடு பன்னிரண்டில் புனல்நாடு என்பது சோழநாட்டைக் குறிப்பதாலும் அது பொருந்தாது என்று சிவஞான முனிவர் முதலியோர் உரைப்பர். தமிழ்நாடு என்பது தமிழகம் என வழங்கப் பெற் றுளளது. 'வையக வரைப்பின் தமிழகம் கேட்ப' (புறம். 168:18), 'இமிழ் கடல் வரைப்பின் தமிழகம் அறிய' (சிலம்பு 3:37) என்னும்ஆட்சியைக் காணலாம்.

'வடவேங்கடம் தென்குமரி ஆயிடைத் தமிழ்கூறு 'நல்லுலகம்' எனத் தமிழ்நாட்டிற்குப் பனம்பாரனார் தொல்காப்பியப் பாயிரத்தில் எல்லை கூறியுள்ளார். நெடியோன்குன்றமும் தொடியோள பெளவமும் தமிழ் வரம்பறுத்த தண்புனல் நன்னாட்டு' (8:1,2) எனச் சிலப்பதிகாரம எல்லை சுட்டும். 'நீலத் திரைக் கடல் ஓரத்திலே நினறு நித்தந் தவஞ் செய் குமரி எல்லை-வடமாலவன குன்றம் இவற்றிடையே-புகழ் மண்டிக்கிடக்குந் தமிழ்நாடு' எனப் பாரதியார் தமிழ் நாட்டு எல்லை குறித்துப் பாடியுள்ளார். இபபொழுது மலையாளம் தனிநாடாயிற்று. வேங்கடமும்தெலுங்கு நாட்டுககுரியதாயிற்று. தமிழகம் என்னும் ஆட்சியே யன்றித் தமிழ்நாடு, தென்தமிழ்நாடு எனனும் ஆட்சியும் சிலப்பதிகாரததில் உளளது. 'இமிழ்கடல் வேலியைத் தமிழ் நாடாக்கிய' (சிலம்பு 25;105 'தென்றமிழ்நாடு ஒருஙகு காண'(சிலம்பு 23:கட்டுரை 15) என்பன நோக்குக.

செந்தமிழ்சேர்ந்த நிலம் பன்னிரண்டாகும். அவற் றைத் 'தெனபாண்டி குட்டங் குடங்கற்கா வேண்பூழி பனறி அருவா அதன் வடக்கு-நன்றாய, சீத மலாடு புனனாடு செந்தமிழ்சோ, ஏதமில் பன்னிரு நாட் டெண்' என்னும் வெண்பாவால் அறியலாம். பாரதி யார் 'செந்தமிழ் நாடென்னும் போதினிலே இனபத் தேன்வந்து பாயுது காதினிலே' எனறும், காவிரி தென பெண்ணை பாலாறு, தமிழ் கணடதோர் வையை பொருநை நதி, என மேவிய ஆறு பலவோடத், திரு மேனி செழித்த தமிழ்நாடு என்றும், தமிழ நாடு கலவியிற் சிறந்தது, கம்பன, வளளுவன், இளஙகோ போன்றபுலவர் தோன்றிப் புகழகொணடது எனறும் பலவாறாகப் புகழ்ந்து செநதமிழ் நாடு என்னும் தலைப்பில்பாடியுள்ளார். இரா.சா.

**செந்தில் நாயக அடிகள்:** 20-ஆம் நூற்றாண்டில் வாழ்ந்த தமிழ்ப் புலவர்களுள

ஒருவர். இவர் திருவாமாத்தூர் என்னும் ஊரில் வணச் சரபம் தண்டபாணி என்பவருக்கும் சுந்தரத்தம்மையார் என்பவருக்கும் கி.பி. 1884-இல் மகனாகத் தோன்றினார். இவர் தம்தந்தையிடத்திலேயே தமிழ் இலக்கண இலக்கியங்களைப் பயின்றார். அதனால் பாடல் இயற்றும் புலமையும் பெற்றார். இவர் தந்தையார் எழுதிய ஏட்டுச் சுவடிகளைப் படித்தறியும் ஆற்றலை இளமையிலே வளர்த்துக்கொண்டார் இவர் தந்தையார் நிறுவிய மடத்தில் தங்கிப் பல நூல்கள் எழுதினார். இவர் கௌமார புராணம், கௌமாரத் திருவந்தாதி, முருகன் கட்டளைக் கலித்துறையந்தாதி, திருப்புகழ்ப் பதிகம், சித்தி விநாயகர்பதிகம், மயிலம் முருகக் கடவுள் நவரத்தினத் திருப்புகழ், ஆமாத்தூர் முருகன் வண்ண மஞ்சரி, இராமாநந்தப் பிரதாப சிந்து, இராமாநந்த சுவாமிகள் வரலாறு, தண்டபாணியடிகள் புராணம், தண்டபாணியடிகள் புராணஉரைநடை, அழகியமாலை ஆகிய நூல்களை எழுதியுள்ளார். இவர்1942-இல் காலமானார். வீ.சே.

*செந்தூக்கு:* தூக்கு என்பது செய்யுள் உறுப்புகளுள் ஒன்று. அது செய்யுள்களை அடிதோறும் துணித்து நிறுத்துதலாகிய ஓசை விகற்பத்தினைக்குறிக்கும். துணித்தல், நிறுத்தல், பாடுதல் என்னும் பொருள்களுடைய சொல்லாதலால், தூக்கு என்னும் சொல் செய்யுளடிகளைத் துணித்து, நிறுத்தி, இசைத்தல் ஆகிய ஓசை வேறுபாட்டிற்குப் பெயராக வழங்கப்பட்டது. அவ்வகையில் செந்தூக்கு என்பது அகவலோசை கொண்டு விளங்கும் ஆசிரியப்பாவினைக் குறிக்கும். பதிற்றுப்பத்தின் பாடல் ஒவ்வொன்றின் கீழேயும் கொடுக்கப்பட்டுள்ள துறை முதலிய விவரங்கள் நான்கனுள் தூக்கு ஒன்றாக அமைகிறது. பதிற்றுப்பத்தின் பல பாடல்கள் செந்தூக்கு (ஆசிரியப்பா) வகையிலமைந்துள்ளன. வஞ்சியடி இடையிடையே விரவி வரும் பாடல்கள், 'செந்தூக்கும் வஞ்சித்தூக்கும்' என்று பெயர் சுட்டப்பட்டுள்ளன. உ.வே. சாமிநாதையர் தம் பதிற்றுப்பத்து உரைப்பதிப்பில் செந்தூக்கு என்பதற்கு ஆசிரியப்பா என்று குறிப்புரை வரைந்துள்ளார் (பதிற். 11. குறிப்புரை)அகவலோசையால் அமைந்த அடியினைக் கொண்ட ஆசிரியப்பா செந்தூக்கு எனப்பட்டது. அ.மா.ப.

*செப்புக்காலம்* உலக வரலாற்றில் பண்டைக் காலத்தில் மனிதர்கள் செம்பு, வெண்கலம் ஆகிய உலோகங்களை மிகுதியாகப் பயன்படுத்திய காலமாகும்.

மனித இனப் பண்பாட்டு வளர்ச்சியில் கற்காலத்தினையடுத்துத் தோன்றிய காலம் உலோகக் காலமாகும். இக்காலத்திய மனிதன் பயன்படுத்தும் வகையில் உலகின் பல பகுதிகளில் கிடைக்கப் பெற்ற மிகப் பழமையான உலோகம் செம்பு ஆகும். சுவிட்சர்லாந்தில் கி.மு. 6000-இல் உரோபனகேசனில (Robenhauzen) உள்ள ஏரிக் குடியிருப்பிலும், கி.மு 4500-இல் வரலாற்றுக் காலத்திற்கு முந்திய (Pre-Historic) மெசபடோமியாவிலும், கி.மு. 4000-இல் எகிப்திய பமேனியன இடுகாடுகளிலும், வட அமெரிக்கக் குன்றுகளிலும் செம்பு கிடைத்ததற்கான சான்றுகள் உள்ளன.

மனிதன் எப்பொழுது தன் பயன்பாட்டிற்கு உகந்தவாறு செம்பினை மாற்றியமைக்க முற்பட்டானோ அப்போதிருந்தே செப்புக்காலம் தொடங்கிற்று எனலாம். கிழக்கு மத்தியதரைப் பகுதி நிலங்களில் செம்பு மிகுதியாகக் கிடைத்ததால்ஏறக்குறைய கி.மு 4000-3000 ஆண்டுகளுக்கு இடைப்பட்ட காலத்தில் ஏலம்(Elam), மெசபடோமியா (Mesopotamia) எகிப்து ஆகிய பகுதிகளில செப்புக்காலப் பண்பாடு தோன்றியது. பிறகு அது உலகின் மற்றப் பகுதிகளுக்குப் பரவி மனித பண்பாட்டு வரலாற்றில் ஒரு மாற்றத்தை ஏற்படுத்தியது இயற்கையாகவேசெம்புகலந்த வெண்கலம் (Bronze) என்ற உலோகக் கலவை (Metal Alloy)மிகுதியாகக் கிடைத்துவந்ததால்செயற்கையாக உலோகக்கலவையை உருவாக்க மனிதன் கற்றுக்கொள்ளச் சிறிது காலமாயிற்று. கி.மு. 3000-இல் கிரீட்டு நாகரிக எச்சங்களிலும், கி.மு, 2800-இல் எகிப்திய நாகரிக காலத்திலும், கி.மு. 2000-இல் திராய் (Troy) நகரிலும வெண்கலம் பயன்படுத்தப்பட்டதற்கான சான்றுகள் உள்ளன. 'வெண்கலக் காலம்' (Bronze Age) என்ற ஒன்றை அறுதியிட்டுக் கூற முடியாத அளவிற்கு வெவ்வேறு கால அளவில்வெவ்வேறு பகுதி மக்களுக்கு இவ்வுலோகக் கலவையின் பயன் புரிந்தது. மேலும் பின்லாந்து (Finland), வடக்கு உருசியா, பாலிநேசியா (Polynesia), மத்திய ஆப்பிரிக்கா, தென்னிந்தியா, வட அமெரிக்கா, ஆசுத்திரேலியா, சப்பான (Japan) ஆகிய பகுதிகள் கற்காலத்தினையடுத்து இரும்புக் காலப் பண்பாட்டிற்குட்பட்ட (Iron age culture) பகுதிகளாக மாறின. இப்பகுதிகளுள், சிலவற்றில் வெண்கலம் பயனில் இருந்தாலும் இரண்டாந்தரச் சிறப்பு வாய்ந்த உலோகமாகவே அது காணப்பட்டது.

இந்தியாவில் ஏறக்குறைய கி.மு.3000 அல்லது 2500 ஆண்டுகளிலேயே செம்பின் பயனை மக்கள் அறிந்திருந்தனர். வட இந்தியப் பகுதிகளில் செம்பின் பயன்பாடு மிகுதி. அப்பகுதிகளில் கண்டெடுக்கப்பட்டுள்ள செம்பாலான ஆயுதங்களும், பிற கருவிகளும் இதற்குச் சான்றுகளாகும்' தென்னிந்தியாவில் வட இந்தியாவைப் போன்று செப்புக் காலம் என்ற ஒன்

றிலலை, இநதியச செப்புக்காலப் பண்பாட்டுக் கூறு களில் வெணகலத்தின பயன்பாடும் உணடு செம்பைக் காட்டிலும் உறுதியான வெண்கலம் பலவகை யான ஆயுதங்களைத் தயாரிப்பதற்குப் பயனுள்ள தாயிற்று. இருப்பினும், இந்திய வரலாற்றில் தனிப் பட்ட ஒரு 'வெணகலக்காலம்' இல்லை எனக் கூறலாம். செமபின் பயன்பாடு மிகுதியாகச் சிந்து சமவெளியில் உருவாகிய 'அரப்பா' (Harappa) அல்லது 'சிந்து வெளி' நாகரிகத்தில் காணப்பட்டது.

இந்தியாவில் சிந்து சமவெளிப் பண்பாட்டினைத தொடர்ந்து தோன்றிய செப்புக்காலப் பண்பாடு கல செப்புக்காலப் (Chalcolithic) பண்பாடு எனப்படும். இப்பண்பாட்டு மையங்களில் (Chalcolithic Sites) மட்கலங்களுடன்( Potteries) செம்பினாலான பொருள் களும் கிடைத்துள்ளன. செம்பின் பயன்பாடு இப் பண்பாட்டின் முக்கியகூறாகும். இப்பணபாட்டுக் காலத் தில் (கி மு 1750-1000) சிந்து நாகரிகக் (Indus Civilization) காலத்து நகர மரபுகள் மறைந்து, கிரா மப்புறப் பொருளாதாரச் சூழ்நிலை காணப்பட்டது இக்காலத்தில் செம்பின் பயனுடன் கற்கருவிகளும் பயனபடுத்தப்பட்டன எனபதால் இக்காலத்தைக் கல்-செப்புக் காலம் என்பர். ஒரேநிலையான உணவுப் பொருளாதாரமும் (Food Economy), தொழில் முறையும் (Technology) இப்பணபாட்டுக காலத்தில், காணப்பெறினும், வெவவேறு பகுதிகளின் வட்டாரக கூறுகளையும், சூழ்நிலைக்கேற்ப மட்கல மரபுகளையும் (Ceramic Traditions) இப்பணபாடு கொண்டிருந்தது. இந்தியாவின் கல்-செப்புக் காலப்பணபாட்டினை ஆறு வட்டார வகைகளாகப் (Regional Groups) பிரித்துள்ளனர். அவை 1) அகார்-பானாசுப் பணபாடு (Ahar Banas Culture), 2) மத்திய பிரதேசக் கல செப்புககாலப் பணபாடு, 3) வட-தக்காணக்கல்-செப்புக் காலப் பணபாடு. 4) தக்காணத்துப் புதிய கற்காலக் கல்செப்புககாலப் பணபாடு, 5) கங்கைச சமவெளிக் கல்செப்புக்காலப் பணபாடு, 6) கிழக் கிந்தியக் கல் செப்புககாலப் பணபாடு எனப்படும்.

இந்தியாவில்-செப்புக்காலப் பணபாடு கொணடு விளஙகிய முக்கிய ஊர்கள் பல அகழாய்வுகளில் கணடுபிடிக்கப்பட்டுள்ளன. அவை பானாசுப் பண் பாட்டு மையஙகளான அகார், பகோர் (Bagor), கிலுணடு (Gilund) ஆகியவையும் மத்தியபிரதேசப் பணபாட்டு மையங்களான, கயாதா (Kayatha), மகே சுவர் (Maheswar), நவததாலி (Navadatali), நாக்தா (Nagda), அவரா (Avara), மனோட்டி (Manoti), ஈரான் (Eran) ஆகியவையும், வடக்குத்தக்காணப் பணபாட்டு மையங்களான பிரகாசு (Prakash), பகல் (Bahal), சநதோலி (Chandoli), சோர்வே (Jorwe), நெவாசா (Nevasa), இனாம்கான் (Inamagaon), நாசிக்கு (Nasik) ஆகியவையும், தககாணப்பண்பாட்டு மையங்களான பிக்லிகால (Piklihal), பிரமகிரி (Brahmagiri), மாசுகி (Maski) ஆகியவையும், கங்கைச் சமவெளிப் பண்பாட்டு மையங்களான பகத்ராபாது (Bahadrabad), அம்பகேரி (Ambakheri), அத்தினாப் பூர் (Hastinapur), அத்தனசிக்கேரா (Atanjikhera) ஆகியவையும், சௌராட்டிராவில் உலோதல் (Lothal), அரங்பூர் (Rangpur), உரோசுடி (Rojdi) ஆகியவை யும், கிழக்கிநதியப் பண்பாட்டுமையங்களான சிராந்து (Chirand), பநது ராசர் தீபி ஆகியவையும் ஆம்.

மேற்கூறிய மையங்களில் நடைபெற்ற அகழாய்வு கள் கல செப்புக்கால இந்தியாவின் வரலாற்றினை நன்குணர்த்துகினறன. அகழாய்வுகளில் அறியப்பெற் றுள்ள அக்காலத்துப் பழம்பொருள்களும், சிறப்புக் கூறுகளும்-செப்புக்கருவிகள, செப்புப் பொருளகள், மட்கல மரபுகளான சாம்பல் நிற மட்பாண்டஙகள (Grey Ware), கறுப்பு வணணம் பூசிய சிவப்பு மட்கலன்கள் (Black on Red Ware), கறுப்பும் சிவப்பு முடைய மட்கலன்கள (Black and Red Ware) போன் றவையும், மட்கலன்களில் கீறல்குறிகள (Graffiti Marks), பல்வகைத் தானியங்களின பயன்பாடுகள் உழுதொழில்-கால்நடை அடிப்படையிலான கலை யான வாழ்க்கைமுறை போன்றவையும் கல செப்புகால இந்தியாவினைப் படம் பிடித்துக் காட்டு கின்றன

இந்தியாவில் கல் செப்புக்காலப் பணபாட்டின் தோற்றம் பற்றியும் அதனைத் தோற்றுவித்தவர்கள பற்றியும் கருத்து வேறுபாடுகள் தொல்லி யல் வல்லுநர்களிடையே உண்டு. அக்காலத்து மட பாண்ட அமைப்புகள், தன்மைகள், அலகுக் கருவி கள் (Blades), செப்புப் பொருள்கள், மணிகள், தானி யங்கள் ஆகியவற்றினை ஆய்ந்து, இப்பண்பாட்டின் தோற்றத்திலும் வளர்ச்சியிலும் மேற்கு ஆசியாவின் தாக்கத்தைக் காணலாம் எனச் சிலர்கருதுகின்றனர். மேற்கூறிய பழம்பொருள்களின் தோற்றத்திலும் பண்பாட்டு வளர்ச்சியிலும் வெளிஉலகின் தாக்கத் தைக் காணமுடியாது; தாமாகவே உள்நாட்டுக் கூறு களுடன் அவ்வப்பொழுது மாற்றங்களைக் கொணடு முதிர்ச்சி பெற்றது கல் செப்புக்காலப் பணபாடு எனத் தொல்லியல் வல்லுநர்களான எச்.டி. சங்கா லியா, எசு.பி.குப்தா (S.P. Gupta), எசு. ஆர் ராவ் (C.R.Rao), பி.கே தாபர் ஆகியோர் கருதுவர். இப் பண்பாடு சிந்து நாகரிகத்திலிருந்து தோன்றிய ஒன்று என்று கருதுவோரும் உண்டு. சில கூறுகளில் இரு பண்பாடுகளுக்குமிடையே பொதுத்தன்மை இருப

பினும் இரண்டுக்குமிடையே ஒரு சீரான தொடர்பு கிடையாது. அகழாய்வுகளில், மண்ணடுக்காய்வு முறையில் (Stratigraphically) சான்றுகள் இல்லை எனக் கே.சி.செயின் (K.C.Jain) போன்றோர் கருதுவர். சிந்து நாகரிகம் நகரத் தன்மையையும், கல் செப்புக்கால நாகரிகம் கிராமத்தன்மையும் கொண்டவையாம். கல் செப்புக்காலப் பண்பாடு ஆரியர்களின் பண்பாட்டினை வெளிப்படுத்தும் ஒன்று என்ற பிறிதொரு கருத்தும் உண்டு.

இந்தியாவிலுள்ள மத்தியபிரதேசம், ஒரிசா, பீகார், ஆந்திரா ஆகிய பகுதிகளில் இப்பொழுது வாழும் பழங்குடிகளான கோண்டுகள் (Gonds), பசுதர்ப் பைகர்கள் (Baigars of Bastar), சோட்டா நாக்பூர் சபரர்கள் (Sabaras of Chota Nagpur), கர்நூல் செஞ்சுக்கள் (Chenchus of Kurnool) ஆகியோரின முன்னோடிகளே கல் செப்புக்காலப் பண்பாட்டினைத் தோற்றுவித்தவர்கள் என அய்மெண்டார்பு (Haimendorf) என்னும் அறிஞர் கூறுகிறார். சி.கே.சி.

**செபசுடப்போல்:** இது உருசியா நாட்டிலுள்ள கிருமியா தீபகற்பத்தில் ஒரு துறைமுகப்பட்டினம். செபசுடப்போல் (Sebastopol) கருங்கடலின உட்குடாவில் இருப்பதால் வாணிகச் சிறப்புப் பெற்றது. கடற்படைத் தளமான இங்குக் கப்பற்கட்டுந்தொழில் நடைபெறுகிறது. சுற்றுலாப் பயணிகள் இங்கு மிகுதியாகச்செல்வது வழக்கம். ஒரு சிறந்த பொருட்காட்சிச் சாலையும் கடல்வாழ் உயிரியல் நிலையமும் இங்கு உள்ளன. தெ பா.

**செபர்சன், தாமசு:** ஐக்கிய அமெரிக்க நாடு புதிய சுதந்திரக் கூட்டாட்சியாக உருவானதும், அதனுடைய மூன்றாம் குடியரசுத் தலைவராக இருந்த செபர்சன் தாமசு (Jefferson, Thomas) அமெரிக்கச் சுதந்திரப் பட்டயத்தை வரைநதோருள் ஒருவர்; வெர்சினியாவுக்குச் சமய சுதந்திரச் சட்டத்தை இயற்றியவர்; ஒரு தாராள அரசியற் சிந்தனையாளர். செபர்சன் தம் மாநிலமாகிய வெர்சினியாவில் ஆல்பெமாரல் சிற்றூரில் கி பி. 1743-இல் பீட்டர் செபர்சன் என்ற தோட்ட முதலாளிக்கும், சேன உரொண்டால்பு (Jane Rondolph) என்ற அம்மையாருக்கும் மகனாகப் பிறந்தார். கணிதம், அறிவியல், சட்டம் முதலியன கற்றுப் பட்டங்கள் பெற்ற செபர்சன் வழக்கறிஞராகத் தொழில் செய்தார். இவர் மனைவி மார்த்தாவேலசு இசுகெல்டன் என்ற பெண மணி. இவர் உள்ளூராட்சி மன்றத்தின் உறுப்பினராகத் தேர்ந்தெடுக்கப்பட்டுச் சட்ட வரைவுகளை வரைவதில் தேர்சசி பெற்றார். அமெரிக்கக் குடியேற்ற நாடுகள் பிரிட்டனுக்கெதிராகச் சுதந்திரப் போரைத்



செபர்சன் தாமசு

தொடங்கு முன்னரே, அமெரிக்கச் சுதந்திர உரிமைகளைத் தொகுத்து ஒரு நூலை கி.பி. 1774-இல் வெளியிட்டார். இவர் ஆங்கில அரசியல் கருத்துகளுக்கு அமெரிக்கரும் உரியரெனக் கூறிச் சுதந்திரக் கிளர்ச்சியை ஆதரித்தார்.

இவர் வெர்சினியாச் சட்டமன்ற உறுப்பினராகத் தேர்ந்தெடுக்கப்பட்டபோது மனித உரிமைக் கருத்துகளைச சட்டங்களாக ஆக்கினார். வெர்சினியாவின் ஆளுநராக இவர் பணிபுரிந்தபோது (கி.பி. 1779-1781) அங்கிருந்த நிலமானிய முறைகளை ஒழித்தார். முழுச் சமய சுதந்திர உரிமையை நிலைநாட்டிச் சலுகைகளை ஒழித்துத் தொண்டு செய்தார். வெர்சினியா நாட்டின் இயற்கை, வளம், அரசாங்கம், சமூகம், பொருளாதாரம் முதலியவை பற்றி ஒரு நூலை எழுதினார். இவர் தசம நாணய முறையைக் (Decimal System of Coinage) கொண்டுவந்தார்; அடிமை ஒழிப்பு முறையை ஆதரித்தார். பின்னர் கி.பி. 1784 முதல் கி.பி. 1789 வரை பிரான்சு நாட்டில் அமெரிக்க அமைச்சராகப் பணி செய்தார். புதிதாக அமைக்கப்பட்ட அமெரிக்க அரசாங்கத்தில் அரசாங்கச் செயலாளராகப் பதவி ஏற்குமாறு முதல் குடியரசுத் தலைவர் சார்சு வாசிங்டன் விடுத்த அழைப்பை ஏற்றுப் பணி செய்தார் (கி.பி. 1790 முதல் 1793 வரை) அரசாங்கத்தில் தம் அரசியல் எதிரியாகிய ஆமில்டனின் (Hamilton) செல்வாக்கு வளரவே செபர்சன் பதவி நீங்கினார். பின்னர், இவர் கி.பி. 1793 முதல் கி.பி. 1796 வரை அரசியலிலிருந்து

ஒதுங்கி வேளாண்மையிலீடுபட்டார். அமெரிக்கக் குடியரசுக் கட்சியார் இவருக்குப் பெருமளவில் ஆதர வளித்தனர். எனவே, இவர் அமெரிக்கக் குடியரசின் துணைத் தலைவராக (Vice-President) கி.பி. 1796-இல தேர்ந்தெடுக்கப்பட்டார். பின்னர்க் குடியரசுக் கட்சியார் (Republicans) இவருக்காகக் குடியரசுத் தலைவர் தேர்தலில் முயற்சி செய்து, கி.பி. 1800-இல் நடைபெற்ற தேர்தலில் இவர் வெற்றிபெறச் செய்த னர். செபர்சன் கி.பி. 1800 முதல் கி.பி. 1804 வரை முதல் முறையாகவும், கி.பி. 1804 முதல் கி.பி. 1808 வரை இரண்டாம் முறையாகவும் அமெரிக்கக் குடியர சுத் தலைவர் பதவியைப் ஏற்றுப் புகழுடன் பணிகள் செய்தார். பதவியிலிருந்து விலகிய பின்னர், இவர் மாணடிசெல்லோவில் தம் இல்லத்தில் தம் வாழ் நாளின் கடைசிப்பகுதியைக் கழித்து கி.பி. 1826-இல் மறைந்தார்.

**அரசியற் கருத்துகள்:** செபர்சன் தாராள அரசி யற் கருத்துகளை ஆதரித்தவர். இவர் கி.பி. 17-ஆம் நூற்றாண்டின் புகழ்மிக்க தாராள அரசியற சிந்தனை யாளரான ஆல்செர்னான் சிட்னியின் கொளகை களைப் பின்பற்றினார். ஒவவொரு சமூகத்தவரும் தம்மைத் தாமே ஆளுதற்கு உரிமைபெற்றுள்ளனர்; அரசாங்கமும் தனது அதிகாரத்தை மக்களிடமிருநதே பெறுகிறது, அது அவர்களுடைய பாதுகாப்புககாக வும் நன்மைக்காகவுமே இருககிறதாகையால், அநத நோக்கஙகள் நிறைவேற்றபபடுதற்கான பொறுபபு அதற்கு இருக்கிறது. இவர் அமெரிக்க மாநிலங்களின் உரிமைகளும் (States Rights) தனியார் உரிமைகளும் அமெரிக்க அரசியலமைப்புச் சட்டத்தின் வாயிலாகப் போதிய அளவு பாதுகாப்புப் பெறுதல் வேண்டுமெனற கருத்தை உறுதியாக எடுதது உரைத்தார். அமெரிக்க அரசியலமைப்புச சட்டத்தில் உரிமைகள்மசோதா (Bill of Rights) ஒரு திருத்தத்தின வாயிலாகச் சேர்க்கப்படுவதை இவர் ஆதரிததார்.

புதிய விடுதலை நாடாக உருவாகிய ஐக்கிய அமெரிக்க நாட்டின் அயலநாட்டுக் கொள்கையை அறிவியல் நோக்கில் வகுத்தலில் செபாசன தீவிரப் போக்கை விடுத்து, அமெரிக்கரின விடுதலை உரிமை பாதுகாப்பாக இருத்தல் வேண்டுமெனற நோக் கத்தை உறுதியாக நிறைவேற்றினார். தாய் நாடா கிய பிரிட்டனுக்கெதிராக அமெரிக்க நாடுகள புரட்சி செய்து, விடுதலை பெற்றதனாலும், பிரானசு அப் பொழுது அமெரிக்கக் குடியேற்ற நாடுகளின் விடுதலை உணர்வை மதித்ததனாலும், புதிய அமெரிக்க அர சாங்கம் பிரானசுடன நட்புறவுக் கொளகையைக் கடைப்பிடிததது. செபர்சன் அமெரிகக அரசாங்கத் தின் அமைச்சராகப் பிரான்சிலிருந்தபோது, பிரெஞ் சுப் புரட்சி கி.பி. 1789-இல் தொடங்கிற்று. பிரெஞ்சுப் புரட்சியாளர்களுடைய விடுதலைக் கருத்துகளையும் அரசியலமைப்புக்குட்பட்ட முடியாட்சிக் கொள்கை களையும் இவர் ஆதரித்தார். பின்னர், பிரெஞ்சுப் புரட்சியாளர்களுடைய குறிக்கோள்களும், செயல் களும். வரம்பு மீறிச் சென்றபோது பிரெஞ்சியரின் புரட்சிச் செயல்களைத் தம் நாட்டவர் ஒத்துக் கொள்ளமாட்டார்களென்று செபர்சன் நன்கு கண்டு கொண்டார். எனினும், அமெரிக்காவோடு பிரான்சுக்கு உள்ள நட்புறவு பாதிக்கப்படுமபடியாக அமெரிக்கர்கள் பிரெஞ்சுப் புரட்சியைப் பற்றி யாதொரு கருத்தும் தெரிவிக்காமலிருததல் வேணடு மென்று இவர் கூறினார். எனினும், இவர் இரண டாம் முறையாகக் குடியரசுத் தலைவராகப் பதவி ஏற்றிருந்தபோது, நெப்போலியனின் பிரான்சுக்கும் பிரிட்டனுக்கும் போர் ஏற்பட்டது. இருநாடுகளுமே அமெரிக்க நடுவுநடுநிலையைப் பாதிககும வண்ணம், அதன் கப்பல்களை முடக்கின. அதனால், அவ்விரு நாடுகளும் அமெரிக்காவின் நடுவு நிலைமையை மதித்து நடக்கும்படி செய்தற்காக, அவற்றோடு அமெரிககா செய்துவந்த வாணிகத்தை நிறுத்தி, வாணிகத்தடையை (Embargo) கி.பி. 1807-இல விதித்தார். இது அயல்நாட்டு வாணிகத்தைச் சார்ந் திருந்த தொழில வளமிக்க நியூஇங்கிலாந்து மாநிலங களையும், தனியார் உரிமைகளையும் பாதித்ததால எதிர்ப்புத் தோன்றிற்று. பின்னர், கி.பி. 1809-இல் இவர் வாணிகத் தடையை நீக்கினார்.

செபர்சன், அமெரிக்க நாட்டின் ஒற்றுமையையும் வளத்தையும் வலிமையையும் காத்தற்காகவும், மிசி சிப்பி ஆறறில் தடையற்ற கப்பல் போக்குவரத்தைப் பெறுதற்காகவும் தமது முதல் குடியரசுத் தலைவர் பதவிக்காலததில் இசுபெயினிடமிருந்து உலூயிசி யானா மாநிலத்தை விலைக்கு வாங்கித் தம் நாட் டோடு சேர்த்தார். தம் இரணடாம் முறைத் தலை வர் பதவிக்காலத்தில் துணைத் தலைவராக இருநத ஆரன் பர் (Aaron Burr) என்பவர் மிசிசிப்பி ஆற்றின் வழியாகப் படையெடுத்ததைச் செபர்சன் உடனே தடுத்து ஒற்றுமையைக் காத்தார்.

**பிற பணிகள்:** அரசியற் காரணஙகளுக்காகத் தம் எதிரியாகிய ஆமில்டனோடு மாறுபாடு கொண்டிருந் தாலும், அவர் செய்த நல்ல நிதிச் சீர்திருத்தங்களை அப்படியே செயற்படுத்தினார். போரில் மாநிலங்க ளுக்கு ஏற்பட்ட கடன்களைக் கூட்டாட்சி அரசாங் கம் ஏற்றுக்கொளளுதற்கும், தேசிய கடன் சுமை யைக் குறைத்தற்கும் இவர் ஏற்பாடு செய்தாா. அரசி யலில் பெரும் பான்மையோர் தீர்மானத்தை யாவரும் ஏற்றுக்கொள்ளுதல் வேணடுமென்றும், சிறுபான்மை யோர் உரிமைகளைப் பாதுகாத்தல் வேண்டுமெனறும் கூறினார். மனிதப்பற்றுக் கொண்ட அரசாங்கத்தை

நிறுவியதனால், எதிர்ப்புரட்சி தோன்றக்கூடிய வாய்ப்பை இவர் தவிர்த்தார். அமெரிக்க அரசியலமைப்புச் சட்டத்தின் ஆதார விதியாகிய அதிகாரப் பங்கீட்டுக் கொள்கையை இவர் மதித்தார்; அதன்படி நிருவாகத்தைக் கட்டுப்படுத்தாமல் தனித்து இயங்குகிற சட்டமன்றத்தையும் (Congress), அதன் உறுப்பினர்களையும் மதித்தார். இவர் உலகச் சூழ்நிலையைப் பயன்படுத்திக் கொண்டு, அரசாங்கச் செலவில் சிக்கனமும் வரிக்குறைப்பும் கொண்டுவந்ததால் இவருடைய புகழ் பரவிற்று.



செபர்சன் நினைவாலயம்-வாசிங்டன்

சமயத் துறையில் சுதந்திரக் கொள்கையை இவர் ஆதரித்துக் குருமாரின் ஆதிக்கப்போக்கை வெறுத்தார். இயேசுவின் உரைகளைப் பின்பற்றுதலில் ஆர்வம் காட்டினார் கல்வியறிவு வளர்வதற்குப் பல தொண்டுகள் செய்தார். இவருடைய முயற்சியால் அமெரிக்கச் சட்டமன்ற நூல் நிலையமும் (Congress Library) வெர்சினியாப் பல்கலைக் கழகமும் உருவாயின. பா.கு.

**துணை நூல்கள்:**

**Adrienne, Koche**, Philosophy of Thomas Jefferson, Columbia University Press, 1943.

**Gooch, G.P.**, Political Thought in England: From Bacon to Halifax, London, 1946.

**செபீல்டு:** இங்கிலாந்தின் வடபகுதியில், தெற்கு யார்க்சயரில் உள்ள ஒருமாவட்டம். செபீல்டு (Sheffield), தான் (Don) ஆற்றங்கரையில் உள்ளது. இங்கிலாந்தில் மிக முக்கியமான, தொழில் வளமிக்க பகுதிகளுள் இதுவும் ஒன்று. செபீல்டு நகரத்தில், கி பி. 1359-ஆம் ஆண்டு முதல் எஃகுத் தொழில் சிறப்பாக வளர்ந்துள்ளது. முதல் பெசிமோ (Bessemer) எஃகு ஆலை இங்குத்தான் தொடங்கியது. பல வகை இரும்புக் கருவிகள், வெள்ளி, மின்சார சாதனப் பொருள்கள் முதலியன இங்குச் செய்யப்படுகின்றன. மக்கள்தொகை 542,700 (1983).

**செபீல்டு[2]** செபீல்டு என்னும் பெயர் கொண்ட ஒரு தொழில் நகரம் அமெரிக்காவில் அலபாமா மாநிலத்தில் உள்ளது. தெ.பா.

**செம்பியன்:** இது சோழமன்னர்ளைக் குறிக்கும் பெயர்களுள் ஒன்று. இப்பெயர் தனி ஒரு சோழ மனனனைக் குறிக்கும் பெயராகவும் வந்துள்ளது. சோழன் குளமுற்றத்துத் துஞ்சிய கிள்ளிவளவனைச்

'செம்பியன் மருக' என்று (புறம். 37-6) ஆலத்தூர் கிழாரும், 'செம்பியர் மருக' என்று (புறம். 228-9) மாறோக்கத்து நப்பசலையாரும் குறிப்பிட்டுள்ளனர். இவற்றில் செம்பியன் என்பது ஒருமைப் பெயராய் ஒரு சோழனைக் குறிப்பதாக உள்ளது. அது அவனது இயற்பெயரா என்பதனை அறியக் கூட வில்லை. செம்பியர் என்பது பன்மைப் பெயராய்ச் சோழ மன்னர் பலரைக் குறிப்பதாக அமைந்துள் ளது.

தலையாலங்கானத்துச் செருவென்ற பாண்டியன் நெடுஞ்செழியன், ஆலங்கானத்தில் தம் பகைவர் களை எதிர்த்துப் போரிட்டபோது, அவனை எதிர்த்த எழுவரின் பெயர்களையும் நக்கீரர் தம் அகநானூற் றுப் பாடலொன்றில் (அகம். 36) குறிப்பிட்டுள்ளார். அவ்வெழுவரும், 'சேரல் செம்பியன், சினம் கெழு திதியன், போர்வல் யானைப் பொலம் பூண எழினி, நாரரி நரவின் எருமை யூரன், தேம் கமழ அகலத்துப் புலர்ந்த சாந்தின், இருங்கோ வேண்மான், இயல்தேர்ப் பொருநன்' எனக் குறிப்பிடப்பட்டுள்ளனர். அவர் களுள ஒருவனாகச் செம்பியன் குறிப்பிடப்படுகின் றான. சேரல், செமபியன் என்ற பெயர்களை நோக் குங்கால் அவ்விரணடும் அவ்வேந்தர்களின் இயற் பெயர்களாக இருத்தல் இயலாதென்பதும் முறையே சேர, சோழாகளைக் குறிக்கும் குடிப்பெயராக அமைந்திருத்தல் வேணடும் என்பதும் புலனாகும்.

அ.மா.ப.

***செம்பியன் மாதேவியார்*** சிறந்த சிவபக்தி யும் செந்தமிழ்ப் புலமையும் ஒருஙகே அமையப் பெற்ற கணடராதித்தசோழனின் (கி.பி. 950-956) பட்டத்தரசியராவர். பிற்காலச் சோழர் காலத்திய அரசியருள் முன்னணியில வைததுப் போற்றுப் பெறும் இவர் இறைபணியே தமது தொணடாகக் கொண்டு, நீண்டகாலம் வாழ்நது பல கற்றளிகளை அமைத்துப் பல திருக்கோயில்களுககு அறக்கொடைகள அளிததுச் சைவ சமய வரலாற்றில் தமக்கெனத் தனித்ததோர் இடத்தினைப் பெற்றுள்ளார். சோழர் கலை வர லாற்றில் 'செம்பியன மாதேவிக்கலைப்பாணி' என் னும் தனிப் பாணியை உருவாககிய பெருமையும் இவருக்குண்டு.

மழநாட்டை ஆணட மழவரையரின் மகளான இவர், அரிஞ்சய சோழனின் கல்வெட்டில, 'மழப் பெருமானடிகள் மகளார் பராநதகன் மாதேவடி களான செம்பியன் மாதேவியார்' என்று குறிப்பிடப் பெற்றுள்ளார். இவர் சித்திரை மாதம் கேட்டை நட்சத்திரத்தில் பிறந்தவர். கண்டராதித்த சோழ னின் முதல் மனைவியாகிய வீரநாராயணி இறந்த பின், அவருக்கு இரண்டாம் மனைவியாகிப் பட்டத் தரசியானார். இவரது இயற்பெயர் பராந்தக மாதேவடிகள் என்பது கல்வெட்டுச் செய்தி. கண்ட ராதித்தனை மணந்த பின்னர், இவர் செம்பியன மாதேவி என்னும் பட்டப் பெயரால் குறிக்கப்பட் டார். பிற்காலக் கல்வெட்டுகளில் இவர், 'மதுராந் தகன் மாதேவடிகளான செம்பியன் மாதேவியாா' என்று பெருமையுடன் குறிக்கப் பட்டுள்ளார். சோழ வேந்தனான உத்தம சோழனை (கி.பி. 970-985) இவர் ஈன்றெடுத்துப் பெருமை பெற்றார் என்பத னைத் 'திருஉத்தம சோழரைத் திருவயிறு வாய்த்த உடைய பிராட்டியார் செம்பியன் மாதேவியாா' என்று குறிக்கப் பெற்றுள்ளதால் அறியலாம்.

தம் மகன் உத்தம சோழன் இளைஞனாக இருந்தபோதே கணடராதித்த சோழர் இயற்கை எய்தினார். கணவன் மறைந்ததும் வானவன் மாதேவி போன்று உடன்கட்டை ஏறாமல், தம் இளம்புதல் வனைப் பாதுகாத்து, நன்னிலைக்குக் கொண்டு வரு வதையே தலையாய கடமையாகக் கொணடு உயிர் வாழ்ந்திருந்தார். ஏறத்தாழ அறுபது ஆணடுகள் உயிர் வாழ்ந்த இவர், முதலாம் பராந்தகனின் ஆட்சிக் காலத்தின் இறுதிப் பகுதியிலும் (கி.பி. 941 -955), கண்டராதிக்கர் (கி.பி. 949-957), அரிஞ்சயன் (கி.பி. 956-977), சுந்தர சோழன் (கி.பி. 970-985) முதலான சோழ வேந்தர்களின் ஆட்சிக் காலத் திலும், முதலாம் இராசராச சோழனின் 16-ஆம் ஆட்சியாண்டான கி.பி. 1001 வரையிலும் இறைபணி யில் ஈடுபட்டிருந்தார்.

இவர், பல செங்கற்கோயில்களைக் கற்றளிகளாக மாற்றியும், பல கோயில்களில் திருப்பணிகள் செய் தும், அவற்றிற்குப் பல அறக்கொடையளித்தும், சைவ சமயக் காவலராக விளங்கினார்.

**கலைப் பணிகள்:** இவர் உத்தம சோழனின் ஆட்சிக்காலத்தில் கோனேரி ராசபுரம் (திருநல்லம்), குத்தாலம், திருக்கோடிக்கா, விருத்தாசலம், செம் பியன் மாதேவி, தென் குரங்காடுதுறை, ஆனாங்கூர், திருவெண்ணெய் நல்லூர்த் திருவருட்டுறை மகா தேவர் கோயில், திருநாரையூர் சித்த நாத சுவாமி கோயில், கண்டராதித்தம் சிவலோகத்து மகாதேவர் (சொக்கநாதர் கோயில்) கோயில் முதலான கோயில்களைப் புதிதாகக் கட்டியும், கற்றளிகளாக மாற்றியும் உள்ளார். இவற்றுள் கோனேரிராசபுரத்துக் கோயிலும், செம்பியன் மாதேவிக் கோயிலும் போற்றத்தக்க கலைப்பணிகள் ஆகும். திருநல்லம் என்று அப்பரடிகளால் தேவாரத்தில் குறிக்கப்பெறும்

கோனேரிராசபுரத்தில் இவ்வம்மையார் தம் கணவரின் நினைவாக, அவரது பெயரால் கற்றளியமைத்தார். இதனை உத்தம சோழனின் மூன்றாம் ஆட்சியாண்டுக் கல்வெட்டு 'செம்பியன் மாதேவியார் வெண்ணாட்டுத் திருநல்லத்து மகாதேவர் கோயில் சிரீகண்டராதித்யன் என்னும் திருநாமத்தால் திருக் கற்றளியாகச் செய்தருளுகின்றார்' என்று குறிப்பிடுகிறது. இத்திருக் கோயிலில் கண்டராதித்தன் வணங்கும் நிலையில் உள்ள சிலை ஒன்றினையும் இவர் அமைத்துள்ளார். நாகப்பட்டினம் அருகே செம்பியன் மாதேவி என்னும் ஊரில், உத்தம சோழனின் 15-ஆம் ஆட்சியாண்டில், இவர் ஒரு கற்றளியை எழுப்பினார். இத் திருக்கோயிலுக்கு உத்தம சோழனும் அவனது தேவியாரும் அறக்கொடைகள் பல அளித்துள்ளனர்.

மாமன்னன் முதலாம் இராசராச சோழனது ஆட்சிக் காலத்தில இப்பெருமாட்டி, திருவாரூர்த் தியாகேசர் கோயிலில் ஆழ்வார் கோயிலையும், திருமணஞ்சேரிக் கோயிலையும், திருவக்கரைச் சிவலோகமுடைய பரமசுவாமி கோயிலையும் கற்றளியாக்கிப் பெருமை பெற்றார். தென்னார்க்காடு மாவட்டம் விழுப்புரம் வட்டத்திலுள்ள இத்திருவக்கரைக் கோயில் இராசராசனின் 16-ஆம் ஆட்சியாண்டில் இவரால் கற்றளியாக்கப்பட்டது. இதுவே இவரது இறுதிக் கலைப் பணியாகும். கரந்தை வசிட்டேசுவரர் கோயில், மாயூரம் மாயூரநாதர் கோயில திருப்புறம்பியம் ஆதித்ததேசுவர முடையார் கோயில், திருவிடநதைக் கோயில் ஆகியனவும் இவரால் கட்டப்பட்டனவேயாகும்.

**அறக்கொடைகள்:** வடக்கே காஞ்சிபுரம் முதல் தெற்கே நாகப்பட்டினம் வரையில் பல கோயில்களைக் கட்டியும் புதுப்பித்தும் புகழ்பெற்ற இப் பேரரசி, எண்ணிறந்த கோயில்களுக்கு அறக்கொடைகள் அளித்து, அங்கு வழிபாடு தொடர்ந்து நடைபெறவும், திருப்பதிகங்கள் ஓதப்பெறவும் ஆவன செயதுளளார். இவர் முதலாம் பராந்தகனின் 4-ஆம் ஆட்சியாணடில் திருச்சிக்கு அருகிலுள்ள உய்யக் கொணடான் திருமலைக் கோயிலுக்குத் தானமளித்துள்ளார். தென்னார்க்காடு மாவட்டம் காட்டு மன்னார் கோயிலுக்கு அருகிலுள்ள, உடையார்குடி அனநதேசுவர சுவாமி கோயிலுக்கு, அரிஞ்சய சோழனின் இரண்டாம் ஆட்சியாணடில் நந்தா விளக்குக்கு 96 ஆடுகளைத் தானமளித்தார். அந்த ஆணடிலேயே திருமணஞ்சேரி மகாதேவர்க்கு மூலங்குடி என்ற ஊரில் 14 வேலி நிலத்தை வாங்கித் தானமளித்தார.

உத்தம சோழனின் ஏழாம் ஆட்சியாணடில தஞ்சை மாவட்டம் குத்தாலத்துச் சோளீசுவரா கோயிலுக்குத் தேவதானமாகச் சில நிலங்களை விட்டுளளார். இவ்வேந்தனின் 11-ஆம் ஆட்சியாணடில் விருத்தாசலம் விருத்தகிரீசுவரர் கோயிலுக்கு, இவ்வம்மையார் பொன்னாலும் முத்தாலும் செய்யப்பட்ட பல அணிகலன்களை அளித்துள்ளார். செங்கற்பட்டு திருமுல்லைவாயில் உடைய தேவர்க்கும், வடஆர்க்காடு மாவட்டம், திருவோத்தூர் இறைவர்க்கும், திருவிசலூர்ச் சோயிலுக்கும், திருநாரையூர்க் கோயிலுக்கும் இவர் உத்தம சோழனின் ஆட்சிக காலத்தில் பல அறக்கொடைகள் அளித்துள்ளார்.

சோழப் பெருமன்னன் முதலாம் இராசராசனின் ஆட்சிக் காலத்தில் இப்பிராட்டியார் பாச்சில் அவனீசுவரம் (திருச்சி மாவட்டம் இலால்குடி வட்டம்), திருமணஞ்சேரி (மாயவரம் வட்டம்) மகாதேவா கோயில், திருவாரூர் திருவறநெறி ஆழ்வார் கோயில் திருநாரையூர் மகாதேவர் கோயில், பண்டார வாடை (தஞ்சை மாவட்டம்) மகாதேவர் கோயில், தென்னேரி (செங்கற்பட்டு மாவட்டம்) ஈசுவரர் கோயில, திருவோத்தூர் கோயில் (செய்யாறு, காஞ்சியருகில்), கோனேரிராசபுரம் கோயில், திருக்கழித்தட்டை (தஞ்சை மாவட்டம்) மகாதேவர் கோயில் ஆகியவற்றிறகுப் பல தானங்களை அளித்துள்ளார். இராசராசனின் 15-ஆம் ஆட்சியாணடில் இவர் விருத்தாசலம் விருத்தகிரீசுவரர்க்குப் பொன்னாலான திருமுடியும, 206 கழஞ்சு நிறையுள்ள வெள்ளிக் கவசமும், மாணிக்கம் மூன்றும், வைரம் முப்பத்தாறும், முத்துக்கள் 1998-உம் வழங்கியுள்ளமை பாராட்டத்தக்கது. சேலம் மாவட்டம், நாமக்கல் வட்டம், வாழப்பூர் (கொல்லிமலை) அறப்பளீசுவரா கோயிலுக்கு ஆணடு தோறும் பொங்கல விழாச் சிறப்பாக நடைபெற, இவர் உத்தம சோழனின் 16-ஆம் ஆட்சியாண்டில் பொன்தானம் அளித்துள்ளார்.

**செப்புத்திருமேனிகள்:** இப்பேரரசியார் திருக் கோயில்களுச்கு விலையுர்ந்த ஐம்பொன் திருமேனிகளை வழங்கியுள்ளார். கோனேரி இராசபுரம் கோயிலுக்கு இவர் திரிபுராந்தகர், இடபவாகனர். கணபதி முதலியோரது செப்புத் திருமேனிகளை அளித்துப் பெரும்புகழ் பெற்றார். திருவெணகாட்டுக் கோயிலுக்கும் இவர் பல செப்புத் திருமேனிகளை வழங்கியுள்ளார். அவற்றுள் தங்கத்தினாலேயே கனமாகச் செய்தளித்த சந்திரசேகர மூர்த்தியின் உருவம் குறிப்பிடத்தக்கதாகும். முதலாம் இராசராசனின் ஏழாம் ஆட்சியாண்டில் இவர் திருவாரூர் திருவறநெறி ஆழ்வார் கோயிலுக்கு இரு செப்புத் திருமேனிகளை வழங்கியுள்ளார்.

தம் கணவனின் நினைவாக, அவரது பெயரால் கோனேரிராசபுரத்தில் கற்றளியமைத்த இவர் தம்

பெயரால் நாகைக்கருகில் செம்பியன் மாதேவிச் சதுர்வேதி மங்கலம் என்னும் பிரமதேயத்தை அமைத்து, அங்குக் கயிலாசநாதர் கோயிலையும் எடுப்பித்தார். அக்கோயிலுக்கு இவ்வம்மையார் மட்டுமன்றி, மகனான உத்தம சோழனும் அவர் மனைவியரும் பல தானங்களைச் செய்துள்ளனர்.

அரசரும் அரசியரும் பொதுமக்களும் போற்றும் படி திகழ்ந்த இவர் நினைவாகத் தமிழகத்தில் பல ஊர்கள், ஆறுகள், மண்டபங்கள், கால்வாய்கள், சேரிகள், செப்புத் திருமேனிகள், சிலைகள் ஆகியவை அமைக்கப்பட்டன. தஞ்சை மாவட்டம் நாகப்பட்டினம் வட்டத்திலுள்ள 'செம்பியன் மாதேவி' (செம்பியமாதேவி), தென்னார்க்காடு மாவட்டம் திருக்கோயிலூர் வட்டத்தில் உள்ள 'செம்பியன் மாதேவி' (செம்பி மாதேவி), திருச்சி மாவட்டம் அரியலூர் வட்டத்தில் திருமழபாடிக்கருகிலுள்ள 'செம்பியன் மாதேவிக்குடி (செம்பியக்குடி), சேலம் மாவட்டம் திருச்செங்கோடு வட்டத்தில் உள்ள 'செம்பக மாதேவி' ஆகியன இவரது நினைவால் எழுந்த ஊர்களாகும்.

உத்தமசோழனின் 15-ஆம் ஆட்சியாண்டுக் கல்வெட்டில் குறிக்கப்பெறும் 'செம்பியன் மாதேவி வாய்க்கால்' 'செம்பியன் மாதேவி வழி", 'செம்பியன் மாதேவி சேரி' ஆகியனவும், முதலாம் இராசராசன் வடஆர்க்காடு மாவட்டம், திருமுக்கூடலில் அமைத்த செம்பியன் மாதேவிப் பெருமண்டபமும், திருச்சி மாவட்டம், அரியலூர் வட்டம் கண்டராதித்த சதுர்வேதி மங்கலத்திலுள்ள 'செம்பியன் மாதேவி ஏரி'யும் இப்பேரரசியின் நினைவாக எழுந்தனவேயாகும்.

திருக்கோயில்கள் அமைத்தும், திருப்பணிகள் புரிந்தும், தமிழகக் கட்டடக்கலை வரலாற்றில சிறந்ததோர் இடத்தினைப் பெற்றுள்ள செம்பியன் மாதேவியாரின் திருவுருவம் தமிழகத்தின் பல கோயில்களில், செப்புத் திருமேனியாகவும் கற்சிலையாகவும் நிறுவப்பட்டுள்ளது. மயிலாடுதுறை வட்டம், கோனேரிராசபுரம் கோயிலின் கருவறைச் சுவரில், தம் கணவனை மண்டியிட்டு வணங்கும் நிலையில், இப்பெருமாட்டியின் கற்சிலை ஒன்று நிறுவப்பட்டுள்ளது. அக்கோயிலின் தெற்குச் சுற்றிலும் இவர்தம் மற்றொரு சிலை உள்ளது. நாகப்பட்டினம் அருகிலுள்ள செம்பியன்மாதேவிக் கைலாசநாதர் கோயில் திருச்சுற்றிலும், தஞ்சை மாவட்டம் சக்கராப்பளளிச் சக்கரவாகீசுவரா கோயிலிலும், கும்பகோணம் வட்டம் ஆடுதுறை ஆபத்சகாயேசுவரர் கோயில் தெற்குச் சுற்றிலும் செம்பியன் மாதேவியின் கற்சிலைகள் உள்ளன. ஆனாங்கூர் அகத்தீசுவரர் திருக்கோயில் மகாமண்டபத்தில் கண்டராதித்தர், செம்பியன் மாதேவி ஆகியோர் சிலைகள் உள்ளன. முதலாம் இராசேந்திர சோழன் கி.பி. 1019-ஆம் ஆண்டில் செம்பியன் மாதேவியில் உள்ள திருக்கயிலாயமுடையார் கோயிலில், இவர் செப்புத்திருமேனியை எழுந்தருளுவித்து, வழிபாட்டிற்கு அறக்கொடைகளும் விட்டான. வாசிங்டன் பிரேசர் கலைக் கூடத்தில் வைக்கப்பட்டுள்ள கி.பி. 10-ஆம் நூற்றாண்டைச் சார்ந்த அரசியின் செப்புத் திருமேனி, செம்பியன் மாதேவியின் உருவமே என அறிஞர் சிலர் கருதுகின்றனர்.

இவரது கலைப்பாணியில்கோயில் தேவக்கோட்டங்கள் 9 முதல் 16 வரை விரிவாக்கப்பட்டு, அவற்றில் தெய்வ உருவங்களும் நிறுவப்பட்டன. இது இவர் மேற்கொண்ட புதுமை. பல கற்றளிகளை எழுப்பித் திருக கோயில்களில் வழிபாடு நடைபெற அறக்கொடைகள் பல வழங்கிச் சைவசமயத்திற்கும் கட்டடக் கலை வளர்சசிக்கும் செப்புப் படிமக்கலைக்கும் புத்துயிர் ஊட்டிய இவர், பல சோழ இளவரசர்களை வளர்த்து, ஆளாக்கி, அவர்கட்கு வழிகாட்டியாக இருந்து, நல்லாட்சி புரியத்துணை புரிந்துள்ளார். எனவே, இவர் பெண்ணரசியருள் சிறப்பிடம் பெற்றுள்ளார். சே.சி. கார்லே (J.C. Harle) என்ற மேலைநாட்டு அறிஞர் 'நேர்த்தியான கட்டடங்கள் கட்டிய உலகின் பெண்ணரசியருள்பேரரசிசெம்பியன் மாதேவியார் தலை சிறந்தவர்' என்று போற்றிப் பாராட்டுவது (London Times, 24.1 1975) பொருத்தமுடையதாகும். க.ம.

*செம்பியனார்* சங்க காலப் புலவர்களுள் ஒருவர். செம்பியர் என்பது சோழர் குடிக்குரிய பெயர். எனவே, இப்பெயரைக் கொணடுள்ள இவரைச் சோழர் மரபினைச் சேர்ந்தவர் என்பர் சிலர். முற்காலத்தில் மன்னர்களின் குடிப்பெயர்களே, பிற்காலப் புலவர்களுக்கு இயற்பெயர்களாக அமைந்தமை நல்வழுதியார முதலிய புலவர்கள் பெயர்களால் அறியலாம். இவர் பாடியதாக நற்றிணையில் ஒரே பாடல (102) இடம் பெற்றுள்ளது. குறிஞ்சித் திணையிலமைந்த அப்பாடல், தலைவன் வருவதாகக் கூறிச் சென்ற காலம் கடந்தும் வாராமையால் நலிவுற்ற தலைவி தன் குறையைக் கிளியிடம் கூறுவதாக அமைநதுள்ளது. அப்பாடலில் தினைப்புனம காக்கும் தலைவி, முற்றிய கதிர்களைத் தின்னும் கிளியிடம், 'நீ வயிறார உணட பின்னர் என தலைவனிடம் சென்று யான் தினைப்புனம் காக்கும் நிலையினளாக உள்ளேன' என்று கூறுக எனறு கிளியைத் தூதுவிடுகிறாள். அப்பாடலில் பகற்குறி இடையீடுபட்டதனால் காமநோய் பெருகியுள்ளதைக் குறிப்பினால் காட்டியிருப்பது சிறப்பாகும். வீ.சே.

**செம்புலப்பெயனீரார்** சங்கப் புலவர்களுள் ஒருவர். இப்புலவர் இயற்றிய பாடலிலமைந்துள்ள அரிய உவமைத் தொடரால் இவ்வாறு பெயர்ப் பெற்றார். சங்கத் தொகை நூல்களை அமைக்குங் காலத்தில் அவற்றுள் இடம்பெறும் பாடலாசிரியர் தம் இயற்பெயர் அறியாத நிலையில், அதனைத் தொகுத்தோர் அப்பாடலிலமைந்த அரிய உவமை, பொருள முதலியவற்றை உணர்த்தும் தொடரைத் தேர்ந்து அதனால் அப்புலவரைச் சுட்டும் மரபு சங்கத்தொகை நூல் தோன்றிய காலத்தில் இருந்துள் ளது. இன்று பெயர் அறியப்படாத சங்கப் பாடல், சிலவற்றிற்கும் இவ்வகையில் பெயர்கள் அமைக்கப்பட் டிருத்தல் வேண்டும். பின்னர் அப்பெயரும் மறைந்து பட்டிருத்தல் கூடும்.

செம்புலப் பெயனீராரின் ஒரே பாடல் குறுந் தொகையில் 40-ஆம் பாடலாக இடம்பெற்றுளளது. குறிஞ்சித் திணையில் அமைந்துளள அப்பாடல், இயறகைப் புணர்சசி நிகழ்ந்த பின்னர்த் தலைவன பிரிந்துவிடுவானோ என்று அஞ்சிய தலைவியின குறிப்பு வேறுபாட்டினை உணர்நத தலைவன், குறிப் பினால் அஙஙனம் பிரியேன் என்று உணர்த்தும் பாங் கில் அமைந்துள்ளது. அதில், முன்னர் ஒருவரை ஒருவர் அறியாதிருந்த தலைவன் உள்ளமும் அத்தகு தலைவியின் உள்ளமும் ஒன்றுபட்டு உள்ளப் புணர்சசி அடைந்து விளங்கிய தன்மையினை விளக்கச் செந் நிலத்தின் கண்ணே பெய்தநீர் அதனோடு கலந்து அந்நிறமும் சுவையும் பெறறு விளங்கும் தன்மை யினை உவமையாக எடுத்துக்காட்டியுளளார். அதனை விளக்கும் 'செம்புலப் பெயனீர்போல, அன புடை நெஞ்சந் தாஙகலநதனவே' என்னும் பகுதியில மைந்த உவமையின் சிறப்பு நோக்கி இவா 'செம்புலப் பெயல் நீரார்' என்று வழங்கப்பெற்றுள்ளார்.'யாயும ஞாயும் யாராகியரோ', எனத் தொடஙகும் அப் பாடல் (குறுந். 40) அகவிலக்கணம சிறப்பிக்கும் உள்ளப் புணர்சசியின் மாட்சியினையும், தூய காதலின் இயல்பினையும் நன்குணர்த்துவதாக உள்ளது. அ.மா.ப.

**செம்மைப் படுத்தல்:** நடத்தைத் திருத்து தலில் பயன்படுத்தப்படும் ஓர் உத்தி செம்மைப்படுத் தல் (Shaping Technique) ஆகும. தணடனையைவிட்ச் செம்மைப்படுத்தல் உததி கல்வியாளர்களால விரும்பப்படுகிறது.

விரும்பத்தகு நடத்தையை ஒட்டிய ஒவ்வொரு நடத்தைக்கும் வலுவூட்டி வழங்குவதும், விரும் பத்தகு- நடத்தைக்கு ஒட்டாத ஒவ்வொரு நடத் தைக்கும் வலுவூட்டி வழங்காமல் விடுவதும் செம்மைப்படுத்தல் எனப்படும். இசுகின்னர் என்னும் உளவியலறிஞா எட்டு என்ற எணகளில் நடக் கும் புறாக்களுக்கு செம்மைப்படுத்தல் உத்திப்படி, தானியம் போட்டும், அவ்வாறு நடக்காதபோது தானியத்தை நிறுத்தியும், புறாக்களை எட்டு என்ற எணகளில் நடக்க வைத்துப் பழக்கினார்.

சுதா அழகாக எழுதுகிறாள்; எழுத்துப் பிழை யின்றி எழுதுகிறாள்; இலக்கணப் பிழையின்றி எழுது கிறாள்; நிறுத்தற் குறிகளை உரிய இடத்தில் வைக் கிறாள்; இருந்தும் தேர்வில் கட்டுரை எழுதுகையில் மோசமான மதிப்பெண பெறுகிறாள். அவளை எவ் வாறு திருத்துவது?

ஒரு கட்டுரை எழுதுவதில் நான்கு படிகள் உள் ளன. 1. கட்டுரையின் மையக் கருத்து. நோக்கம் ஆகி யன கொணட முன்னுரை 2. கருத்தைப் பற்றிய உண்மைகள், விளக்கம், விவாதம், செய்திகள, முதலி யன. 3. விவாதிக்கப்பட்ட செய்திகளிலிருந்து வரும் முடிவுரை 4. இறுதியாகக் கட்டுரையின சுருக்கவுரை.

கட்டுரையின ஒவ்வொரு படியினையும் செம்மை யாக எவ்வாறு செய்வது என்பதைச் சுதாவிற்குக் கற றுக் கொடுத்தல வேணடும். ஒவ்வொரு படியினையும சிறப்பாகச் செய்யும்போது பாராட்டுதல் வழங்குவ தும், அவ்வாறு செய்யாமற் போகும்போது பாராட்டு வதை நிறுத்திவிடுவதும் செம்மைப்படுத்தல் உத்தி யாகக் கருதப்படும. மேலும் கட்டுரையின் முதற் படி யில் செம்மை பெற்ற பினனரே கட்டுரையின் அடுத்த நிலையைச் சுதா கற்குமாறு செய்தல் வேண்டும்.

செம்மைப்படுத்தல் உத்தியில் கற்கும் செயலை மாணவர் விரும்பும் அளவில் சிறு சிறு குறிக்கோளாகப் பிரித்து ஒவ்வொரு குறிக்கோளையும் மாணவர் அடையும்போது, ஆசிரியர் பாராட்டுவதும், அவ்வாறு குறிக்கோளை அடையாதபோது பாராட்டுதலை நிறுத்துவதும், மேலும் ஒவ்வொரு குறிக்கோளையும் வரிசைப்படி முன்னேறிச் செல்லுமாறு கற்றல் செயலை அமைப்பதும் ஆசிரியரின் பொறுப்பாகும். எஸ்.த.

**செம்மொழி:** தொன்மைச் சிறப்பும், காலத் தால் அழியாத உயா இலக்கியங்களையும் கொண்ட மொழி செம்மொழி எனப்படும். தொன்மை, உயர் இலக்கிய வளம், தூய்மை, இலக்கணங்களுக்கு அடிப் படையாக அமைதல் ஆகிய நான்கு சிறப்பான பண்புகளின் அடிப்படையில் ஒரு மொழி செம்மொழி எனக் கூறப்படுகின்றது.

உலகின் மிகப் பழமையான மொழிகளில் ஒன றாக விளங்கி மிகத் தொன்மையான வரலாற்றி

னைக் கொண்டிருத்தல் ஒரு மொழியின் தொன்மைச் சிறப்பாகும். செம்மொழி என்பது இத்தகைய ஒரு சிறப்பைக் கொண்டது. கிரீக்கு, இலத்தீன், சமசு கிருதம், தமிழ் ஆகியவை இத்தகைய தொன்மைச் சிறப்பினைக் கொணட மொழிகள்.

காலத்தால் அழியாத சிறந்த கவிதைக் கருவூலங் களையும், காப்பியச் செல்வங்களையும் கொணடு விளங்குதல் ஒரு மொழியின் உயர் இலக்கியச் சிறப் பாகும். இவ்விலக்கியங்கள் செவ்விலக்கியங்கள் (Classical Literature) எனக் கூறப்படும். இவை மானிட இனம் அனைத்திற்கும் பொதுவான உயரிய மானிடப்பண்புகளை உணர்த்தி நிற்பவை. இப்பண்பு கள் ஒரு குறிப்பிட்ட இடத்திற்கோ ஒரு குறிப்பிட்ட காலத்திற்கோ மட்டும் உரியவை அல்ல. இவை வாழ் வின் நிலையான உண்மைகளைக் கருவாகக் கொண டவை. இவை எழுதப்பட்ட காலத்தில் எவ்வாறு மக்களைத் தம் வசப்படுத்தினவோ, அப்படியே இன்றும் என்றும் மக்களைத் தம் வசப்படுத்துபவை. ஆகவே, காலத்தால் அழியாது, காலத்தை வென்று நிற்பவை. இத்தகைய உயர் இலக்கிய வளத்தைக் கொண்டு நிற்பது செம்மொழி. கிரீக்கு, இலத்தீன் மொழி இலக்கியங்களும், சமசுகிருத இலக்கியங்களும் தமிழ்மொழியில் சங்ககால இலக்கியங்களும் செவ் விலக்கியங்களே.

ஒரு மொழி இலக்கணப் பிழையின்றிக் கற்றோர் பேசும் சொல்வளமும் கருத்துவளமும் நிரம்பிய மொழியாக இருத்தல் மொழியின் தூய்மைச் சிறப் பாகும்.

ஒரு மொழியின் நிரம்பிய இலக்கியச் செல்வம் அம்மொழிக்குச்சிறநத இலக்கணங்கள் வரைவதற்கு வழி கோலுவதாக அமையும். ஆகவே, சிறந்த இலக் கணங்கள் அமைந்து, அத்தகு இலக்கணங்கள் தோன்ற அடிப்படையாக இருப்பதும் செம்மொழியின் ஒரு பண்பாகும். எம்.சு.

**செமராங்கு** இந்தோனேசியாவில் சாவாத்தீவின் வடக்குக் கடற்கரையில் உள்ள ஒரு நகரம். இந்தோ னேசியாவைச் சேர்ந்த சாவாத் தீவில் உள்ள மத்திய சாவா மாநிலத்தின் தலைநகராக இது விளங்கு கிறது. இதன் மக்கள் தொகை 646,590. (1971). செமராங்கு (Samarang) சாவாக் கடற்கரையில் (Java Sea) ஆற்று முகத்துவாரத்தில் இருப்பதால் புகழ் மிக்க துறைமுகமாக வளர்ந்துள்ளது. சாவாவின் பெரிய வாணிக மையங்களுள் இதுவும் ஒன்று. புகை யிலை, சருக்கரை, இரப்பர், காப்பி முதலியன இங்கிருந்து ஏற்றுமதி செய்யப்படுகின்றன. துணி உற்பத்தியும் கப்பல் கட்டும் தொழிலும் இங்கே நடைபெறுகின்றன. தெ.பா.

**செமினோல் இந்தியர்** வட அமெரிக்க இந் தியப் பழங்குடியினராவர். இவர்கள் கி.மு. 18-ஆம் நூற்றாண்டில் சார்சியாப் பகுதியிலுள்ள கிரீக்கு (Creek) நகரப் பகுதிகளிலிருந்து வடக்குப் புளோ ரிடாப் பகுதிக்குக் குடியேறினர். இப்பகுதி அப்பலாச்சி (Apalachee), திமுகுவா (Timucua) ஆகிய பழங்குடி யினரின் பகுதியாகும். செமினோல் (Seminole) இந்தி யர்கள் முசுகோகியன் (Muskogean) மொழியைப் பேசுகின்றனர்.

செமினோல் என்னும் பெயர் கி.பி. 1775 முதலே வழங்கப்பெற்று வருகிறது. இப்பெயர் பலவாறு பொருள்கொள்ளப் பட்டு வழக்கிலுள்ளது. ஓடிவிட்ட மக்கள் (Runaway) என்றும், முன்னோடிகள் (Pioneer) எனறும் இப்பெயருக்குப் பொருள் கூறு வர். இசுபானிய (Spanish) மொழியின் 'சிமரான்' (Simeron) என்னும் சொல்லிருந்து இவர்களின் பெயர் வந்திருக்கலாமென்றும் கருதப்படுகிறது. அவ் வாறு ஏற்றுக்கொளளப்படின அதன் பொருள் காட் டுத் தன்மையுடையவர்கள என்பதாகும். வெளளை யர்களின் அடக்குமுறைகளுக்கு அஞ்சி ஓடிவந்த அமெ ரிக்க இந்திய மக்களும் நீக்கிரோக்களும் இவர்களு டன் சேர்ந்து கொணடனர்.

பிற வடஅமெரிக்க இந்தியப் பழங்குடிகளைப் போன்றே இவர்களும் எளிய குடிசைகள் அமைத்து வாழ்கின்றனர். வேட்டையாடுதலும் மீன்பிடித்த லுமே இவர்களின் முதனமைத் தொழில்கள். இவர் கள் வேளாண்மையில் மிகுதியாக ஈடுபடவில்லை. வண்ண ஆடைகளை அணிந்திருந்த இசுபானியர்கள் (Spanish) போன்று தோற்றமளிக்க விரும்பி மணி களை ஆடையில தைத்து அணிந்தனர். இவ்வகைப் பாணி காலந்தோறும் மாறி வருகிறது.

இவர்கள் தம் பகுதிகளுக்கு வந்த வெள்ளையர் களின் அடக்குமுறையைத் தடுப்பதற்காக கி.பி. 1817 -18, கி.பி. 1835-42, கி.பி. 1855-58 ஆகிய காலங் களில் அடிக்கடி போர்கள் நிகழ்த்தினர். இசுபெயின் தன் புளோரிடாப் பகுதியின் பிடியை அமெரிக்க அர சிற்குக் கொடுத்தது. பின்னர் கி.பி. 1832-இல் தொடங்கப்பட்ட உடன்பாட்டின்படி அமெரிக்க அரசு செமினோல் இந்தியர்களை மிசிசிப்பி ஆற்றுப் பகுதிக்குப் பின்னால் குடியேறக் கேட்டுக்கொண்ட தைப் பெரும்பான்மையோர் ஏற்க மறுத்தனர். அத னால் இரண்டாம் போர் நிகழ்ந்தது. இப்போரே இந்திய மக்களுக்கும் அமெரிக்க அரசிற்கும் ஏற்பட்ட

பொருட் சேதமுள்ள போராகும். இறுதியில் செமி னோல் பழங்குடியினர் அமெரிக்கப் படைகளிடம் சரணடைந்து அவர்களது பகுதிககே (இப்போதைய ஆக்லகாமா) சென்று குடியேறினர். சிலர் மட்டும் புளோரிடாப் பகுதியிலேயே தங்கிவிட்டனர்.

செமினோல் பழங்குடியினர் வாழும் பகுதிக்கு மேற்கில் வாழும் நான்கு பழங்குடிகளான செரோககி (Cherokee), சிக்காசா (Chickasaw), கிரீகரு (Creek), சாக்டாவு(Choctaw) ஆகியோரும் செமினோல மக் களும் கி பி. 1830-இல் அமெரிக்க அரசால் இப் போது இவர்கள வாழும் பகுதிக்குக் குடியேற்றப் பட்டார்கள். இப்பகுதியில இவர்கள விரைநது முன் னேறியதால் இந்த ஐந்து பழங்குடிகளும் நாகரிக மடைந்த பழஙகுடிகள என வெளியாரால் அடிக்கடி கூறப்படுவர். பின்னர்ப் படிபப்டியாக இவர்களுக்கு ஒதுக்கப்பட்டிருந்த நிலங்களில் ஒரு பகுதியை அரசு, வெள்ளையாகள் குடியிருப்புகளுககு ஒதுக்கிவிட்டது. இப்பழங்குடிகளின் ஆட்சியமைப்பையும் அமெரிகக அரசு 1906-ஆம் ஆணடில் வெற்றியுடன் கலைத்து விட்டது. பண்பாட்டுப் பேற்றினாலும் வளர்ந்து வரும் நகரியவாக்கத்தினாலும் இவர்கள் தங்களின் மரபுப் பண்பாட்டை விடுத்துச் சிறிது சிறிதாக மாறி வருகின்றனர். இன்று மிகக் குறைந்த எணணிக்கை யுடையோரே இவர்களுக்கென்று ஒதுக்கிய நிலங்களில் தங்களின் வாழ்க்கைத் தொழிலை அமைத்துக் கொண்டுள்ளனர். மற்றையோர் வேறு தொழில களை ஏற்றுக்கொணடுளளனர். சி.ப.

**செய்குத்தம்பிப் பாவலர், கா ப.,** கோட் டாற்றில கி.பி. 1872-இல பக்கீர் - மீரான் அசரத் ஞானியார் சாகிபு தம்பதியருக்கு மகனாகப் பிறந் தார். இளமையில் அரபி மொழி பயின்றார். தொடக் கக்கல்வியில் நான்காம் வகுப்பு வரைதான் படித்தார். ஏழ்மை காரணமாகப் படிப்பைத் தொடரமுடியாது தந்தையுடன் நெசவுத் தொழிலில் ஈடுபட்டார். எனினும், ஓய்வுநேரத்தில் கோட்டாறு சங்கரநாரா யண அண்ணாவியிடம் தமிழ்ப் பாடங் கேட்டார். தமிழிலும் மலையாளத்திலும் தேர்ச்சி பெற்றார். இளமையிலேயே தமிழில் கவிதை இயற்றும் ஆற்றல் இவருக்கு அமைந்திருந்தது. இவரது பாவன்மையே பாவலர் என்னும் பட்டத்தைப் புலவர்கள் நடுவே பெற வாய்ப்பளித்தது. கி பி. 1895-இல் ஞானியார் சாகிபின 'மெய்ஞ்ஞானத் திருப்பாடற்றிரட்டு' எனும் நூல் அச்சிடும் பணிககாக இவர் சென்னை சென் றார். அச்சகத் தலைவர் இட்டா பார்த்தசாரதி நாயுடு இவரது பணித்திறன் கண்டு பாராட்டித் தம் அச்சகத்தில் பிழைதிருத்துநர் பணியில் அமர்த்தி னார். இப்பணியிலிருந்து கொண்டே 'யதார்த்த வாதி', 'இசுலாமியமித்திரன்' என்னும் பததிரிகை களை நடத்தி வந்தார். உமறுப்புலவரின சீறாப்புரா ணம் முழுமைக்கும் உரையெழுதி வெளியிட்டார். தேவலோகக் குறறவியல் வழக்கு (தேவலோகத்துக் கிரிமினல் கேசு), வேதாநத விவகாரக் குறறவியல வழக்கு (வேதாந்த விவகாரக் கிரிமினல் கேசு) என்னும் இரு உரைநடை நூல்கள் இயற்றி வெளி யிட்டார். 'சீறா நாடகம்' என்ற நூலும் இவர் எழுதியதே

அவதானம் (பல்வேறு நினைவாற்றல) செய்யும் திறன்மிக்கவர் செய்குத்தம்பி. சென்னையிலிருந்து கோட்டாறு திரும்பியதும் 1906-இல் கோட்டாற்றில் அறிஞர்கள் முன்னிலையில் 16 வகை அவதானம் செய்து 'சோடசாவதானி' எனும் பட்டம் பெறறார். இவரது இத்திறன் கண்ட மகாவித்துவான் இராம சாமி நாயுடு 100 வகையான அவதானங்களைச் செய் யும்படி கேட்கப் பாவலரும் ஒப்புக்கொணடு, நிகழ்த் திக் காட்டி சதாவதானி, மகாமதி எனும் பட்டங் களைப் பெற்றார். 1907-இல் கோட்டாறு வந்து இல்லறம் ஏற்று நன்மககட் பேற்றினையும் பெற்றார்.

வடலூர் வளளலார் இராமலிங்க சுவாமிகளின் திருவருட்பாவை மருட்பா என்று மறுத்துரைத்த நா. கதிர்வேல பிள்ளை அவர்களின் கருத்துகளுக்கு எதிர்கருத்துகள் தந்து 'அருட்பா அருட்பாவே' என்று நிறுவினார். 'கதிர்வேல் பிள்ளையின் எதிர் வேல் பிளளை' எனப்பட்டமும் பெற்றார். இவரது நாவன்மை கண்டு வியந்த அறிஞர்கள் காஞ்சிபுரத் தில் இவருக்குத் 'தேவாமிருதப் பிரசங்கக் களஞ்சி யம்' எனும் பட்டம் அளித்தனர். தொணடி எனும் ஊரில் இவர் ஆற்றிய சீறாப்புராண உரைத் திறன் கண்ட பெரியோர் இவருக்குக் 'கலைக் கடல்' எனும் பட்டம் தந்தனர். நாஞ்சில் நாட்டு மக்கள் 'தமிழ்ப் பெரும் புலவர்' என்று இவரைப் பாராட்டினர். திண்டுக்கல்லில் இவரது உரைநெறியைப் போறறிய பெரியோர் அல்லாமா (டாக்டர்) எனும் பெரும் பட்டத்தை வழங்கினர்.

இவர், அயலவர் ஆட்சியால் துன்புறும்இந்நாட்டு மக்களைக் கண்டார்; தாய்நாட்டு விடுதலைப் போரில் பங்கு பெற்றார். இரவிபுதூர் என்னுமிடத் தில் அநநியத்துணி எரிப்புப் போராட்டத்தில 1924 -இல கலநதுகொண்டார். கதராடையே எப்போதும் அணிந்தார். காஙகிரசு 1937-இல் வெற்றிபெறத் துணைநின்றார். தெங்கம்புதூர் சாத்தாங்குட்டிப் பிள்ளை இவருக்கு முதல் மாணாக்கர் ஆவார்.

தமிழ் மொழிக்கும் நாட்டிற்கும் தொணடு புரிந்த இவர் பல சிற்றிலக்கிய நூல்களும் கவிதை

நூல்களும் தந்துள்ளார். கோட்டாற்றுப் பிள்ளைத் தமிழ், கோட்டாற்றுப் பதிற்றுப்பத்தந்தாதி, திரு நாகூர்த் திரிபந்தாதி, சம்சுத்தாசின கோவை, கல் வத்து நாயகம், இன்னிசைப் பாமாலை ஆகிய நூல் கள் இயற்றியுள்ளார். அழகப்பக கோவை, சசிவோத் தமன கோவை, நபிநாயக மான்மிய மஞ்சரி போல் வனவும் இவர் இயற்றியவையே. இவர் 1950-இல காலமானார். பி.தெ.

**செய்கைச் சோதனை:** அறிவு, செயல், விருப் பம் ஆகிய மனித நடததையை அளநதறியப் பயன படும் கருவிகளே சோதனைகள். சோதனையில் உள்ள வினாக்களுக்கு ஒருவர் தரும் விடைகளை யொட்டியே அளவைகள் அமைகின்றன. வினாக்கள் தூண்டல்கள், விடைகள் துலஙகல்கள. சோதனை யில் உளள வினாக்கள (தூணடல்கள்) மொழி வழி யாகச் சொற்களால் ஆக்கப்படுகின்றன. விடைகளும் சொற்களால் ஆக்கப்படுகினறன. விடைகளும் சொற் களாலேயே தரப்படுகின்றன. சொறகள் குறியீடு களே, உணமை நிலையை அவ்வாறே நேரிடை யாய்ப் புலப்படுத்துவனவல்ல. எனவே வினா-விடை அளவை முறை குறியீடுகளைக் கொண்டமையும அளவை முறையே; இம்முறையில உருவெளி (குறியீட்டை, சொல்லை) அளக்கப்பட்டு அது உண்மையின் அளவையாய்க் கொளளப்படுகிறது. இத னால் அளவையின ஏற்புடைமை குறையும. அறிவு செயற்படும் போது (பயன்படுததப்படும் போது) அதனை அளந்தறிதலே முறை. செய்கைச் சோதனை கள அறிவு, திறன, விருப்பம இவறறை அவை செயற படும் பாஙகில அளந்தறிதற்காய் ஆக்கப்படுவன.

செயற்படும் பாங்கினை அறிவதறகான கட்ட ளைக் கற்களாய் (Criterion) அமையும சூழலகளை யொட்டிச் சோதனைகள தயாரிக்கப்படல் வேணடும். இச் சோதனைகளில் வினாவும் (தூணடலும்) விடை யும் (துலங்கலும்) அளக்கப்படுவனவற்றை அவறறின உணமை நிலையிலேயே (Realistic), புலபபடும் அளவிலேயே அளப்பன. சொற்களால ஆன குறி யீட்டு நிலைக்குச் சொற்களே பயன்படுததப்படுவ திலலை என்பதனறு இதன பொருள. பெரும்பானமை இவை சொற் குறியீடுகளைத் தவிர்ததுச் செயற் படும் பாங்கினை அளநதறியும் சோதனைகளாயுள ளன என்பதே உணமை.

அறிவையோ திறனையோ செயற்படும் உணமை நிலையிலேயே அளநதறிவதென்பது பல சமயஙகளில் முடியாது போகலாம். போல அமையும் சூழல்களில் (Simulation) இவற்றை அளந்தறியச் செய்கைச் சோதனைகள் தயாரிக்கப்படுகினறன. போர்த்திறன், பயிறறும் திறன் ஆகியவற்றைக் அளந்தறிய, போல அமையும் சூழல்களுக்கேறற செய்கைச் சோதனைகள உளளன. போல அமையும் சூழலகளைப் பயிற்சி தர வும், பயிற்சியில் பெற்ற திறன்களை அளந்தறியவும பயன்படுத்துவர்.

அமையலாகும் ஒரு சூழலைக் கருததுள் உரு வாக்கி அச்சூழலின் அறிவுத் திறனைப் பயன்படுத்தும பாங்கினை அளந்தறிவதறகான செய்கைச் சோதனை களைச் சூழற் சோதனைகள் (Situational Test) என பர். சூழற் சோதனைகளில, நிறுவன மேலாணமை யில் உள் வரு செய்திகளையொட்டி முடிவுகாணும் சோதனைகள (Inbasket tests), பணித்தொடர்பான செயல்களின் மாதிரிச் சோதனைகள் (Work-sample tests), விளையாட்டுச் சோதனைகள் (Games tests) போன்ற பல வகைகள உள.

உளவியலில் நுண்ணறிவை அளப்பதற்கும், ஆளுமையை அளப்பதற்கும் செய்கைச் சோதனைகள பயன்படுகின்றன. முறையான கல்வி மூலம் மொழி யறிவு பெறாதார்ககும், பளளி வயது வாராத குழந் தைகட்கும் சொற்களால் அமையும் சோதனைகள பொருந்த மாட்டா. மேலும் நுணணறிவுச் சோதனை கள் சொற்களால அமையும்போது அவை ஓரளவு மொழியறிவையும் சோதிப்பனவாய் அமையும். அவ் வாறாகும்போது அவற்றிற்கு முழு ஏற்புடைமை அமை வதிலலை. இரணடாம் உலகப் போர் நிகழும்போது எழுத்தறிவில்லாதாரும அமெரிக்கப் போர்ப்படை வீரராய்ச் சேர்ந்தனர். அவர்களின நுணணறிவினை அளந்தறிநது, அவரவர்கட்கு ஏற்ற பணியில அவர் களை அமர்ததுவதற்காய் நுண்ணறிவுச் செய்கைச சோதனைகளைத் தயாரித்தனர். இளங்குற்றவாளி கள், எழுதப்படிக்கத் தெரியாதோர், படித்தற குறை பாடுடையோர், பிறமொழிகளேஅறிநதோர் ஆகியோ ரின் நுணணறிவினை அளக்கச் செய்கைச் சோதனை கள் பயன்பட்டன. இவவகைச் சோதனைகளில படம் பொருத்துதல், வரிசைப்படுத்துதல், உருவ ஒற்றுமை காணல, வேற்றுமை காணல், நிறைவு செயதல், போன்ற செய்கைகளின் மூலம் நுணணறிவு அளந தறியப்படும். மனித உருவினை வரைதல் போன்ற வரைதல் சோதனைகளும் செய்கைச் சோதனைகளுள ஒரு வகையே.

ஆளுமை அமைப்பைக் காணப் பயன்படுத்தப் படும் நடத்தைச சோதனைகள (Behaviour Tests) சூழல் சோதனை வகையைச் சாரும் செயகைச சோதனைகள். ஏமாற்றும் பணபு (Cheating), எளிதில் நிலை தடுமாற்றம் (Neuroticism) போன்ற ஆளுமைக் கூறுபாடுகளை அளத்தற்கான செய்கைச் சோதனை கள் உள.

செய்கைச் சோதனைகளைத் தொடக்கத்தில் சொற்களால் ஆன சோதனைகட்குப் பதிலாகவே பயன்படுத்தினர். இப்போது இருவகைச் சோதனை களையும் இணைத்து முழுமையான, தெளிவான, ஏற்புடைமை மிக்க அளவைகளைப் பெறுகின்றனர்.
பி எஸ் பா.

*செய்கோன்* தெற்கு வியட்நாமில் செய்கோன (Saigon) ஆற்றின் வலக்கரையில் உள்ள நகரம. இந்நகரை ஓ-சி-மின் நகர் (Ho-Chi-Minh City) என்று 1976-ஆம் ஆண்டு முதல் குறிப்பிடுகின்றனர் செய்கோன் ஆறு தோங்-நாய்(Tong Nai) என்னும் ஆற்றின் பிரிவுகளில் ஒன்று. இது மிகுதியான அளவுக்கு வாகணித தொடர்பு கொண்டுள்ளதால், செய்கோன் ஒரு சிறந்த துறைமுகமாக விளங்குகிறது. தொழில்கள் பல வளர்ந்துள்ளன. சிறப்பாக, ஆடை வகைகள் உற்பத்தி, கணணாடி வேலைகள், காகித உற்பத்தி, கப்பல் கட்டுதல், பொறிகளுக்கு இன்றிய மையாப் பொருள்கள் செய்தல் முதலியன குறிப்பிடத் தக்கவை. அரிசி, சீனி, கரும்பு, இரப்பர் முதலியன பெருமளவில் கிடைக்கின்றன.

**வரலாறு:** பண்டைய கெமர் அரசு இங்குத் தனது குடியேற்றத்தை அமைத்திருந்தது. பிறகு, கி. பி. 17-ஆம் நூற்றாண்டில் அன்னாமியர் (Annamest) இதைக் கைப்பறறினர். அடுத்து கி. பி. 1859-இல் இதைப் பிரெஞ்சியர் கைப்பற்றினர். பிரெஞ்சு ஆட்சி யின்கீழ்ச்செய்கோன் ஒரு கிராம நிலையிலிருந்து பெரும் நகரமாக வளர்ச்சியுற்றுக் கொசசின் சீனாவின தலைநகராகவும் சிறப்புற்று விளங்கியது. இநதோ-சீனாவின் தலைநகராகவும் இது திகழ்ந்தது (கி. பி. 1887-1902). தெற்கு வியட்நாம் என்னும் பெயருடன் 1954-ஆம் ஆண்டுக்குப் பின் தோனறிய நாட்டின் புதிய தலைநகரமாகத் திகழ்கிறது. வியட்நாமியப் போரில், அமெரிக்கப் படைகளும் தெற்கு வியட் நாமியப் படைகளும் இவ்விடத்திலேயே தங்கியிருந் தன. போரின் காரணமாக இந்நகர் பல இனனல் களுக்குட்பட்டது.

ஓசிமின் நகரின் மக்கள் தொகை 35 இலட்ச மாகும் (1981).
தெ. பா.

*செய்சால்மிர்* இராசசுத்தான் மாநிலத்தில் செய்சால்மிர் மாவட்டத்தின தலைநகரம். இந்நகரம் சோதிபுரி, பார்மர், பலோதி (Phalodi) ஆகிய முக் கிய நகரங்களுடன் சாலைகளால் இணைக்கப்பட்டுள் ளது. செய்சால்மிர் (Jaisalmer) நகரம் சிறந்த சந்தை நகரமாகும். இங்கு நடைபெறும் கால்நடைச் சந்தை புகழ்பெற்றது. தோல் பொருள்களுக்கும் இந்நகரம் புகழ்பெற்றது. இந்நகரத்தில் உள்ள கட் டடங்கள் யாவும் மஞ்சள் கலந்த காவி நிறக் கற் களால் கட்டப்பட்டவை. இந்நகரத்தை இராச புதனத்தை ஆண்ட செய்சால் (Jaisal) என்பவர் கி பி. 1156-இல் நிருமாணித்தார். இந்நகரத்தை நோக்கியவாறு மலை மீது அமைநதுள்ள கோட்டை யும் வரலாற்றுச் சிறப்பு வாய்ந்த கட்டடங்களும் அரண்மனையும், சமணக் கோயில்களும் இந்நகரத்தில் உள்ள குறிப்பிடத்தக்க கட்டடங்கள ஆகும். இங்குள்ள நூலகம் 'கியான பந்தார்' எனக் கூறப்படுகிறது. இந் நூலகத்தில் வடமொழி, பிராகிருத கையெழுத்துச் சுவடிகள் பெருமளவில் சீர்கேடுற்றுள்ளன. நகர மக்கள் தொகை 22,041 (1981).

செய்சால்மிர் மாவட்டம் 38,401 ச.கி.மீ. பரப் பளவுடையது. இம்மாவட்டமே இராசசுத்தான் மாநிலத்தில் மிகப் பெரிய மாவட்டமாகும். இம்மா வட்டத்தில்தான் தார்ப் பாலைவனம் உளளது. காக்னி (Kakni) ஆறு இம்மாவட்டத்தில் பாயும் ஆறு ஆகும். ஆடுகள், ஒட்டகங்கள போன்றவை இங்குள்ள முக்கிய கால்நடைகள ஆகும். செய்சால்மிர் சிற்றரசு கி பி.12-ஆம் நூற்றாண்டில் பெரும் புகழ்பெற்று விளங்கியது அலாவுதின் கில்சி தில்லியின் சுல்தானா கப் பதவியேற்றபின்பு இப்பகுதி அவரது மேலாண் மைககு உட்பட்டது. இது 1949-ஆம் ஆணடு இராச சுத்தான் மாநிலத்துடன இணைக்கப்பட்டது. மாவட் டத்தின் மக்கள் தொகை 243,082 (1981). சு.இரா.

*செய்தன செய்யும் பிறழ்நிலை:* உளப் பிணி, ஆளுமைச் (Personality) சேர்க்கையை அழிப் பதோடு நோயாளி கொண்டுள்ள சமூகத் தொடர்பு களையும் சிதைத்து விடுகிறது. உளப்பிணி நிலையில் இயல்பாக இருக்கவேண்டிய உள்தடைகளும் (Inhibition) பணபினால் ஏற்படும் கட்டுப்பாடுகளும் நீக்கப்படுகின்றன. தன் உள்ளத்தில் கணத்தில் தோன்றி மறையும் எணணங்களையும் கற்பனைகளை யும் செயற்படுத்த நோயாளி முனைகிறான். செய்தன செய்யும் பிறழ்நிலை (Echopraxia) என்பது உட லுறுப்பு இயக்க நடத்தையில் ஏற்படும் பிறழ்நிலை யாகும்.

உளச்சிதைவு (Schizophrenia) நோய் உள்ள ஒரு சிலர் மற்றவர்களின இயகக நிலைகளையும் (Movements) சைகைகளையும் (Gestures) பார்த்து அப் படியே செய்து காணபிப்பர். இதனையே செய்தன செய்யும் பிறழ்நிலை என்று குறிப்பிடுகிறார்கள். இந் நோயாளி, தன்னுடைய மருத்துவர் எப்படி எப்படி நடந்து செல்வார் என்றும் இருக்கை நிலைகளையும் மற்ற நடையுடை பாவனைகளையும் அப்படியே

நடித்துக் காட்டுவார். செயதன செய்யும் பிறழ்நிலை தனனியக்கு உளச்சிதைவு (Catatonic Schizophrenia) வகையினரிடம் மிகுதியாகக் காணப்படும். அதுவே அவர்களின் தனித் தன்மையுமாகும்.

செய்தன செய்யும் பிறழ்நிலையைக் கட்டளை களை மறுப்பின்றி அப்படியே நிறைவேற்றுவதற்கு எடுத்துக்காட்டாகக் காட்டுவதுண்டு. ஆர்.ப.

*செய்திச் சேகரிப்பு*: நூலக அறிவியலில் ஒரு குறிப்பிட்ட பொருள் பற்றிய தகவல்கள், அல்லது விளக்கங்கள் ஆகியவற்றைச் சேகரித்துத் தேடிக் கண்டுபிடித்து அவை பற்றிய பட்டியலைத் தயாரித்து ஆய்வாளருக்குக் கிடைக்கச் செய்தலே செய்திச் சேகரிப்பு அல்லது சான்றுப் பதிவு (Documentation) ஆகும். சான்று மூலங்களைத் தேடித் தக்க ஆதாரங் களைத் திரட்டி அவற்றை இடம்சுட்டிப் பதிவு செய் வதே செய்திச் சேகரிப்பு என ஆய்வியல் அறிஞர் களும் கூறுகின்றனர். செய்திச் சேகரிப்பு பல்வேறு நிலைகளில் இன்று பயன்படுகின்றது.

முதலாவதாக அது ஆய்வாளர் கூறும் கருத்து களை அல்லது தரும் மெய்ம்மைகளை (Facts) நிறுவத் துணைபுரிகிறது. அதனால், கூடியவரை குறியீடுகள் (Citation) ஆதார அடிப்படையில் அமைகின்றன. செய்திச் சேகரிப்புப் பணி, நூலகத்தைப் பயன்படுத்து வோரின் எணணத்தையும் எணணிக்கையையும் நூல கத்தின் வகையையும் பொறுத்ததாகும். பல்கலைக் கழக நூலகத்தின் அமைப்பு பல்வேறு வகைக் கல்வி பயிலும் மாணவ மாணவிகள், கற்பிக்கும் ஆசிரியர்கள், ஆய்வாளர்கள் முதலியோரின் கருத்து, தேவை ஆகியவற்றின் அடிப்படையில் தொடங்கப்படு கிறது. எடுத்துக்காட்டாக, முதுகலைப்பட்டப் படிப்பு படிக்கும் மாணவர்களுக்குத் தேவையான பாட நூல்கள் அடங்கிய பிரிவு தனியாகவும், பிறருடைய பாடங்கள் தொடர்பான நோக்கீட்டு நூல்கள் அடங் கிய பிரிவு தனியாகவும் செயற்படுகிறது. அது போலவே பொது நூலகத்தில் குழநதைகள பிரிவு, உடல் ஊனமுற்றோர் பிரிவு, கண்ணிழந்தோர் படிக் கும் பிரெய்லி (Braille) அடங்கிய பிரிவு முதலியன அடங்குவதோடு ஆய்வியல் மாணவர்கள் பயன் பெறும் வகையில் நூலகத்தில் செய்தி சேகரிப்பதற் கெனத் தனிப்பிரிவு ஒன்றும் செயற்படும். இது அநத நூலகத்தின் நிதிவசதி, ஆய்வாளர்களின எணணிக்கை, ஆர்வம் ஆகியவற்றைப் பொறுத்து அமைகிறது.

செய்திச் சேகரிப்புப் பணியைப் பொறுத்தமட்டில் அது செம்மையாகச் செயற்பட வேண்டுமெனில் அதன் நடைமுறைச் செயற்பாட்டினைச் சீராக வகைப்படுத்துதல் மிக முக்கியமானதாகும். அதனால் பலவகையான பணிகள், காலம், மனித உழைப்பு ஆகியவை வீணாகாமல் சீராகச் செயற்பட முடியும்.

நூலகங்களுக்கு வரும் ஆய்வாளர்களுக்குத் தேவையான சொற்குறிப்பு, சுருக்கக்குறிப்பு, நூற றொகை (Bibliography), நகலெடுத்துத் தரும் பணி போன்ற சிறப்புப் பணிகளைச் செய்திச் சேகரிப்புப் பிரிவே செய்து தருகிறது.

**நூற்றொகை தயாரிக்கும் பணி:** இது ஆராய்ச்சி யாளர்களுக்கும் நூலக அலுவலர்களுக்கும் மிகவும் பயன்படக் கூடியதாகும். நூலகத்திலுள்ள அனைத்து நூல்களின் விவரங்கள் பகுப்பு வரிசை முறையில் அடுக்கப்பட்டு ஒரு பட்டி (Catalogue Card) தயாரிக் கப்பட்டிருக்கும். இது ஆய்வாளர்களுக்கும் நூல் நிலையத்தில் படிப்பவர்களுக்கும் மிகவும் பயனுள்ள தாக இருக்கும். இப்பட்டியலின்மூலம் ஓர் ஆய்வாளர், நூலகத்தில் தம் ஆய்வுத்துறை தொடர்பாக உளள நூல்களின் பட்டியலை எளிதில அறிய இயலும். மேலும் இது குறிப்புதவி அல்லது செய்தித் தகவல தரும் நூலகஙகளுக்கு மிகவும் பயனுள்ளதாக இருக் கும்.

**சுருக்கக் குறிப்பு அளிக்கும் பணி:** பல்வேறு கால முறை இதழ்களில் உள்ள கட்டுரை விவரங்கள துண்டுகளில் குறிக்கப்பட்டு அவை பகுப்புமுறையில அடுக்கி வைக்கப்படும். பினனர் அததுணடுகள் ஆராய்ச்சியாளருக்குப் பயனபடும் வகையில தொகுத் துப் பட்டி தயாரிக்கப்படும். இவை தேவைப்படும போது உரிய ஆராய்ச்சியாளர்களுக்கு அனுப்பி வைக்கப்படும் இந்த விவரங்களும், அக்கட்டுரை களின் சுருக்கங்களும் (சுருக்கக்குறிப்பு) ஆராய்ச்சி யாளர்களுக்கு மிகவும் பயனுள்ளதாக இருக்கும்.

**நகலெடுக்கும்பணி:** செய்திச் சேகரிப்புப் பணியில நகலெடுக்கும் பணியும் முக்கியமான பங்கு வகித்து ஆய்வாளாகளின் நோக்கத்தை நிறைவு செய்கிறது. நகலெடுக்கும் இயந்திரம் உள்ள நூலகங்களில் ஆய் வாளருக்குத் தேவையான கட்டுரைகள் பருவவெளி யீடுகளிலிருந்தோ நூல்களிலிருந்தோ நகலெடுத்துத் தரப்படுகின்றன. அதற்காக ஆய்வாளர்கள் தங்க ளுக்குத் தேவையான கட்டுரைகள கிடைக்கக்கூடிய ஆவணங்களின் குறிப்புகளைக் குறித்து வேண்டுகோள தரவேண்டும். நூலகத்தினா அதற்காக ஒரு குறிப் பிட்ட தொகையை ஆய்வாளரிடமிருந்து பெற்றுத் தேவையான நகலெடுத்துத் தருகின்றனர்.

இந்தப் பணிகள் எல்லா வகையான நூலகங களுக்கும் பொருந்தும், ஆனால், இப்பணியில் பல் வேறு பிரிவுகளாலும் திட்டமிடப்பட்டு முறையோடு

செயற்படுவது நூலகத்திற்கு நூலகம் மாறுபடலாம்.

மு.இரா.

**துணை நூல்கள் :**

Annual Report 1985 of the Librarian Congress, Library of Congress, Washington, 1986.

Peters Jean, The Bookman's Glossary, R.R.Bowker Company, London, 1975.

Thomas (Diana.M)., The Effective Reference Librarian, Academic Press, NewYork, 1981.

*செய்தித்தாள்*: செய்திகளைத் திரட்டுவதும், பரப்புவதும் செய்தித்தாளின் தலையாய பணியாகும் செய்தித்தாள் அறிவித்தல்,அறிவுறுத்தல்,மகிழ்வித்தல் என்ற முப்பெரும் பணிகளைப் புரிகிறது. அச்சுக்கலை யின்தோற்றத்திற்கு முன்னர் அரசுச செய்திகள் வாய் மொழியாகப் பரப்பப்பட்டன.பின்னர்ச் செய்தி அறிக் கைகளாயின. சூலியசு சீசர் கி.மு. 59-இல் 'ஆக்டா டையூரனா' (Acta-Diurana) என்ற செய்தி அறிக கையை மக்கள் பார்வைக்கு வைத்தார். இவரே உலக அளவில் இதழியலின் தந்தை எனவும் போறறப்படு கிறார். சீனாவில கி.பி. 10-ஆம நூறறாணடில செய்தி ஏடு அரசுச் சார்பில் தொடங்கப்பட்டது. வெனிசு அரசு கி.பி. 1566-இல போர்ச் செய்திகளை மக்களுக்கு அறிவிக்க அறிக்கைகளைத் தயாரித்தளித தது. இவையனைத்தும் செய்தித்தாள வரலாறறில முன்னோடிகளாக அமைகின்றன. செருமனியில் கி.பி. 1609-ஆம் ஆணடில் முதற் செயதித்தாள வெளியானது. பின்னர் கி.பி. 1621-இல இலணடனி லும், 631-இல பிரானசிலும்,645-இல் சுவீடனிலும், 1690-இல் அமெரிககாவிலும்,கி.பி.1780-இல இநதியா விலும் முதனமுதல செய்தித்தாளகள தோனறின.

**இந்தியாவில் முதல் செய்தித்தாள்:** இநதிய நாட டில் செய்தித்தாளகளின் வரலாறு கி.பி. 18-ஆம் நூற்றாண்டிலிருநது தொடங்குகிறது. முதன முதல் கி.பி. 1780-ஆம் ஆணடு சனவரி மாதம் 29-ஆம் நாள முழுமை பெறறு அசசு வடிவததிலான செய்தித்தாள் கல்கத்தாவிலிருந்து வெளிவநதது. அச்சுக்கலையில ஆர்வம் கொணடிருந்த ஆங்கில நாட்டு வணிகரான சேம்சு அகசுடசு கிககி (James Augustus Hickey) என பவர்12"×8" அளவிலான இரு பக்கங்களை மட்டுமே கொணடிருநத 'பெஙகால் கெசட்டு' (Bengal Gazette) அல்லது 'கலகத்தா செனரல் அட்வர்டைசர்' (Calcutta General Advertizer) என்னும் பெயருளள செய்தித்தாளை வெளிக்கொணர்ந்தார். இதுவே முதல் செய்தித்தாள் எனற பெருமையைப் பெறு கிறது. இதழ்களின உரிமைக்காகத் தமது அரசாங கத்தை எதிர்த்துப் போராடிய ஆங்கில வணிகரான இவர் தொடங்கிய இதழிலும் இங்கிலாந்து இதழ் களில் வெளிவந்த செய்திகளும் விளம்பரங்களுமே இடம்பெற்றன. இந்திய மக்களுக்குத் தேவையான செய்திகள் இடம் பெற்றிருக்கவில்லை. ஆங்கில அரசு நடத்திய முறையற்ற செயல்களை அங்கத நடையில் கண்டித்த முதல் இதழ் இதுவாகும். அதனால், அர சின் வெறுப்புக்கும் இவ்விதழ் உரியதாயிற்று. அஞ்சல் வழியாக அனுப்பும் சிறப்புரிமை (Privilege) நீக்கப் பட்டது. சிறைத் தணடனையும் ஒறுப்புத் தொகையும் விதிக்கப்பட்டன. இருப்பினும், இவர் எதற்கும் அஞ் சாமல், சிறைக்குளளிருந்தும் இதழை வெளியிட்டார். அதனால், கி.பி. 1782-ஆம் ஆண்டு இவர்தம் அச்சுப் பொறிகளும் பிறவும் பறிமுதல் செய்யப்பட்டன. எனவே,'பெங்கால் கெசட்டு' எனற இம்முதல் இதழும் வெளிவருவது நின்றது. முதன் முதல தோன்றிய இவ் விதழ் வார இதழாகவே வெளிவந்து கொண டிருநதது.

மேற்கூறிய இதழைத் தொடர்ந்து செய்தித்தாள கள் வெளிவரத் தொடங்கின. கல்கத்தாவில் 'இந் தியா கெசட்டு' (India Gazette) என்ற இதழ் அடுத் துத் தோன்றியது. பீட்டர் ரீடு (Peter Reed), பெர் னார்டு மெசிங்கு (Bernard Mecheing) ஆகிய வணி கர்கள் இதனைத் தொடஙகினர். இவர்கள் ஆஙகில அரசுககு அடிபணிந்து அதுதரும் சிறப்புரிமைகளைப் பெறறு நடத்தினார்கள். இது இந்தியாவின இரண டாம் செய்தித்தாள் ஆகும். தொடர்ந்து 'கல்கத்தா கெசடடு அண்டு ஓரியணடல் அட்வர்டைசர்' (Calcutta Gazette Oriental Advertizr) என்ற செய்தி இதழ் கி.பி. 1784-ஆம் ஆணடு மூன்றாம் செய்தித் தாளாக வெளிவந்தது. அது அரசாங்கத்தாலேயே வெளியிடப்பட்டது. அடுதது கி பி. 1785-இல் 'பெங கால் சொனல' (Bengal Journal) என்ற இதழ் தாமசு சோனசு (Thomas Joans) என்ற வணிகரால தொடங்கப்பட்டது.

முதலில் தோன்றிய இதழகள அனைத்தும் கல கத்தாவில் தோன்றியமை குறிக்கத்தக்கது. ஆஙகிலே யர் கல்கத்தாவைத் தம் தலைமையிடமாகக் கொண டிருநதமையே இதற்குக் காரணம் எனினும், இச் செய்தித்தாள்களால் இந்திய மககளுக்குத தேவை யான செய்திகள் கிடைககப் பெறாமல் போயின.

'மதராசு கூரியர்' (Madras Courier) என்ற இதழ் கி பி. 1785-ஆம் ஆண்டு இரிச்சர்டு சான்சுடன் (Richard Johnston) என்பவரால் சென்னையில் தொடங்கப்பட்டது. இதுவே செனனையில் தோன்றிய முதல் செய்தித்தாள். நான்கு பக்கங்களைக் கொண டிருந்த இவ்வார இதழிலும் ஆங்கில நாட்டில் வெளி

யான செய்திகளே பெரிதும் இடம்பெற்றிருந்தன. இது தொடக்ககாலத்தில் ஆங்கில அரசின் ஆதரவுடன் தொடங்கப்பெற்றது. ஆயின், காலப்போக்கில் இதுவும் அரசின் வெறுப்பினைத் தேடிக்கொண்டது. பின்னர் கி.பி. 1791-இல் கியூகு பாய்டு (Huge Boyd) என்பவர் 'கரகாரு' (Carakaru) என்ற நாளிதழைத் தொடங்கினார். இதன்பின்னர் அம்பிரி (Humphrey) என்பவர் 'இந்தியன் எரால்டு' (Indian Herald) என்ற இதழ் தொடங்கினார். இவையனைத்தும் சென்னையில் தொடக்ககாலத்தில் தோன்றிய செய்தித்தாள்கள்.

அவ்வாறே பம்பாயிலும் செய்தித்தாள்கள் தோன்றின. 'பாம்பே எரால்டு' (Bombay Herald) என்ற வார இதழ் (கி.பி. 1789) பம்பாயில் தோன்றிய முதல் செய்தித்தாள் என்ற பெருமையை அடைந்தது. உலூக்கு ஆசுபர்னர் (Luke Osberner) 'பாம்பே கூரியர்' (Bombay Courier) என்ற இதழை கி.பி. 1790-இல் தொடங்கினார். இவ்விதழ கி.பி. 1838-இல் 'பாம்பே டைம்சு' (Bombay Times) என்று பெயர் மாற்றப்பட்டு இப்பொழுது 'டைம்சு ஆப் இந்தியா' (Times of India) என்ற பெயரில் வெளிவந்து கொண்டிருக்கிறது.

**செய்தித்தாள்களின் வளர்ச்சி:** கல்கத்தா, சென்னை, பம்பாய் போன்ற இடங்களில் தொடங்கிய இதழ்களில் சில தொடர்ந்து வெளிவந்தன. மற்றும் சில அரசியற் காரணங்களாலும் பிறவற்றாலும் இடையில் நின்றுபோயின. எனினும், இந்தியாவில் செய்தித்தாள்கள் தொடர்ந்து வெளிவந்தன.

கல்கத்தாவிற்கு அருகில் செராம்பூர் என்னுமிடத்தில் கி.பி. 19-ஆம் நூற்றாண்டில் கிறித்தவர்கள் அச்சகம் ஒன்று நிறுவிச் சமயத்தைப் பரப்புவதற்காக இதழ்கள் வெளியிட்டனர். இவர்கள சார்பாக வங்காள மொழியில் திக்தர்சன்' என்ற மாத இதழும், 'சமாச்சார் தர்பன்' என்ற வார இதழும் வெளிவந்தன. 'பிரண்டு ஆப் இந்தியா' (Friend of India) என்ற ஆங்கில மொழி வார இதழும் வெளிவந்தது.

கிறித்தவ சமய இயக்கத்தைத் தடைசெய்ய எழுந்தது இந்தியச் சமுதாயம். இராசாராம் மோகன் ராய் தலைமையில் எதிர்ப்புக் குரல் எழுந்தது. 'இந்திய மொழி இதழ்களின் தந்தை' என்ற சிறப்புப் பெற்ற இராசாராம் மோகன்ராய் இதழியல் துறையில் 'மொழி இதழ்கள்' தொடங்கினார். அக்கால அரசு இதழ்கள்மீது விதித்திருந்த கட்டுப்பாட்டினை எதிர்த்தவர் இவர். இவர் 'பிராமினிகல் மேகசின்' (Braminical Magazine) என்ற ஆங்கிலப் பருவ இதழைக் கிறித்தவ இயக்கத்திற்கு எதிராகத் தொடங்கினார், பின்னர் 'பிராமின் சேவாதி', 'சம்பத் கவுமுதி', 'மீரட்-உல்-அக்பர்', 'வங்க தூதன்' ஆகிய இதழ்களை வங்கம், பாரசீகம், இந்தி மொழிகளில் வெளியிட்டார்.

செய்தித்தாள்கள், சமயப் பரப்பலுக்குப் பயன்பட்டுவந்த நிலை மாறி, ஆங்கில அரசாங்கத்தை எதிர்த்துப் போராடிய விடுதலைப் போராட்ட வீரர்களுக்குத் துணைநிற்கும் பணியினையும் புரிந்தன.

இந்தியத் தேசிய காங்கிரசு இயக்கத்தின் கொள்கை பரப்பும் ஏடாக 'இந்து' (Hindu) சென்னையில் வெளிவந்தது. விசயராகவாச்சாரியார் என்பவர் கி.பி. 1876-ஆம் ஆண்டு செப்டம்பர் 20-ஆம் நாள் வாரம் ஒரு முறை வரும் இதழாகத் தம் நண்பர்களுடன் சேர்ந்து இதனைத் தொடங்கினார். இது நாளிதழாக கி.பி.1889-இல் மாற்றமடைந்தது. கசுதூரி ரங்க ஐயங்கார் 1905-இல் 'இந்து' இதழை விலைக்கு வாங்கி நடத்தினார். சென்னையிலிருந்து 'மதராசு மெயில்' (Madras Mail) என்ற ஆங்கில நாளிதழ் கி.பி. 1868-இல் வெளிவந்தது.

விடுதலைக்குப் பின்னர் (1947) பலதரப்பட்ட செய்தித் தாள்கள் வெளிவந்துகொண்டிருக்கின்றன. ஒருசில நிறுவனங்கள் பல மையங்களிலிருந்து செய்தித்தாள்களை வெளியிடுகின்றன. அவற்றுள் தேசிய அச்சகம் (National Press) நிறுவனம் பம்பாயிலிருந்து 'பிரீ பிரசு சேர்னல்' (Free Press Journal), 'பிரீ பிரசு புல்லட்டின்' (Free Press Bulletin), 'பாரத் சோதி' (Bharat Jyothi), 'நவசக்தி' ஆகிய இதழ்களை வெளியிடுகிறது. 'ஆனந்தபசார் பத்ரிகா' நிறுவனம் கல்கத்தாவிலிருந்து சில இதழ்களை வெளியிடுகிறது கசுதூரி மற்றும் மக்கள் நிறுவனம் 'இந்து' நாளிதழையும் 'பிரண்டு லைன்' (Frontline) பத்திரிகையையும் வெளியிடுகிறது. அதே போன்று 'எக்சுபிரசு' (Express) நிறுவனம் 'தினமணி (தமிழ்), 'லோக் சாட்டா' (மராத்தி), 'ஆந்திர பிரபா(தெலுங்கு), 'பைனான்சியல் எக்சுபிரசு' (Financial Express), 'இசுகிரீன' (Screen) போன்ற இதழ்களைப் பல மையங்களிலிருந்து வெளியிடுகிறது. 'பென்னட் கோல்மேன்' குழும நிறுவனமும் 'இந்துசுத்தான் டைம்சு அண்டு அலைடு பப்ளிகேசன்' (Hindustan Times and Allied Publication) நிறுவனமும் இதேபோன்று பல மையங்களிலிருந்து பல நாளிதழ்களையும், பருவ இதழ்களையும் வெளியிடுகின்றன. இவை தவிர வேறு சில நிறுவனங்களும் செய்தித்தாள்களை வெளியிடுகின்றன.

**தமிழில் செய்தித்தாள்கள்:** சுதேசமித்திரனை (கி.பி.1882) தமிழில் வெளிவந்த முதல் செய்தித்

தாள என்று கூறலாம். பாரதியார் இதில துணை ஆசிரியராகப் பணியாற்றியுள்ளார். பாரதியார் 1906-இல் 'இந்தியா' என்ற பத்திரிகையிலும், திரு வி க. தேசபக்தன், நவசக்தி என்ற இதழ்களிலும பணியாற்றியுள்ளனர். 1926-இல் 'தமிழநாடு' நாளிதழும், 1930-இல் 'சுதநதிரச் சங்கும்', 1933-இல் 'தினமணி'யும்' 1940-இல் தினசரியும், 1942-இல் 'தினத்தந்தி'யும், 1951-இல் 'தினமலரும்' தோன்றின. இவைதவிர மாலைப் பதிப்புக்களும் தமிழகத்தின் பல பகுதிகளிலிருந்து வெளிவருகின்றன. செய்தித்தாள நிறுவனத்தில மூன்று துறைகள் உள்ளன. அவை நிருவாகத் துறை, செய்தித் துறை, இயநதிரத் துறை என்பனவாகும்.

**செய்தித்துறை அல்லது ஆசிரியர் பகுதி**: ஒரு செய்தித்தாளில் வெளிவரும் அனைத்துச செய்திகளுக்கும் இத்துறையே பொறுப்பு. இத் துறையின தலைவராக ஆசிரியரும் (Editor) அவருக்குக்கீழ்த் துணை ஆசிரியர் (Sub Editior), செய்தி ஆசிரியர் (News Editor), மெய்ப்புத் திருத்துநர் (Proof Reader), செயதியாளர் (Reporter) எனப் பலர் இருப்பர். செய்தித்தாள்களுக்குச் செய்தியாளர்கள் மூலம் மட்டுமன்றி, வேறுபல வாயில்கள் (Sources) மூலமாகவும் செய்திகள் வருகின்றன. செய்தி நிறுவனங்கள், சிறப்புச்செய்தியாளர்மூலமாகவும தொலை எழுதி (Telex), தந்தித்தட்டச்சுப் பொறி (Teleprinter) மூலமாகவும செய்திகள் வருகின்றன. இவ்வாறு வரும்செய்திகளைத் தரம் பிரிததுச் செய்தி ஆசிரியர் பிற துணை ஆசிரியர்களுக்கு அளிப்பார். துணை ஆசிரியர்கள் செய்திகளைத் தம் செய்திததாளின் கொள்கைகளுக்கேற்ப வாசகர்களைக் கவரும் வகையில் எழுதவோ, பதிப்புக் குறியீடுகளை இடவோ செய்வார்கள். இததகைய செய்திப் படிவங்கள அச்சுக் கோப்பதற்காக இயந்திரத் துறைக்கு அனுப்பப்படும்.

**இயந்திரப் பிரிவு**: செய்திப் படிவத்தைப் பின் வரும் முறைகளில் அச்சுக் கோப்பார்கள். அவை: 1) கையால் (Hand Composing), 2) தனி அச்சு முறையில் (Mono Composing), 3) வரி அச்சு, முறையில் (Lino Composing), 4) நிழற்பட முறையில் அச்சுக கோத்தல என்பனவாகும்.

**கையால் அச்சுக்கோத்தல்**: முன்பே உருவாக்கப் பட்ட அச்சு எழுத்துகளை அச்சுககோப்பவர் தம் கைகளால் எடுத்து அடுக்குவது இம்முறையாகும். செய்தித்தாள நிறுவனத்தில செய்தித் தலைப்புகள இம்முறையில் அடுக்கப்படும.

**வரியச்சு முறை**: வரியச்சுப் பொறியில் தட்டச்சுப் பொறி போன்ற அமைப்புஇருக்கும். இடப் புறம் ஒரு சிறுசட்டமும், பின்புறம் அச்சு வார்க்கும் கலவையை உருக்கும் உலையும் இருக்கும். அதனுடன் பித்தளையால் செய்யப்பட்ட அச்சுக் கருக்களும் இருக்கும. இயக்குபவா பொத்தானை அழுத்தியவுடன் அச்சுக கரு கீழே இறங்கும். பின்னர் அச்சுக் கருக்கள் மீது உலோகக கலவை பாய்நது அதற்குரிய அச்சுக்கட்டை உருவாகும்.

தனியசசு முறையிலும் (Mono Type), வரியசசு முறையிலும் (Lino Type) அச்சு எழுத்துகள் அவ்வப்போது உருவாக்கப்படும். தனியசசு முறையில எழுத்துகள தனித்தனியாகவும், வரியச்சு முறையில் ஒரு வரி முழுமையாகவும் உருவாககப்படும். இவ்வாறு அச்சுக் கோத்த பின்னர் அச்சுப்படி எடுககப் பட்டு மெய்ப்புத் திருத்துநரிடம் அளிக்கப்படும். அவர் பிழைகளைத் திருத்தியவுடன் மீண்டும் இயந்திரத் துறைக்கு அனுப்பப்படும்

**பக்கம் அமைத்தல்**: ஒரு செய்திததாளை அசசிடுவதற்கு முன்னர் மாதிரிப் படிவம் ஒனறு தயாரிககப் படும். அதற்கேற்பச் செய்திகளையும், படங்களையும் விளம்பரங்களையும பிறவறறையும் அடுக்குவர்.

**அச்சுவார்ப்புப் பிரிவு**: பக்கம் அமைத்தபின்னர் அதன்மீது 'மேட்ரிக்சு' (Matrix) எனப்படும் அட்டையை வைத்துப் பதிவு எடுப்பர். பின்னா இவ்வட்டையை அரை உருளை வடிவத்தில் வளைதது அசசுக் கலவையை ஊற்றி அச்சு வாாப்புத் தயாரிப்பர். இவ்வாறு ஒவ்வொரு பக்கத்திறகும் ஓர் உருளை தயாரிக்கப்படும்.

**அச்சிடும் பிரிவு**: செய்தித்தாள் சுழல் அசசு இயந்திரத்தில் (Rotary) அசசிடப்படுகிறது. அசசு வாாப்புகளைச் சுழல் இயநதிரத்தில் உளள உருளைகளில பொருத்தி அவ் உருளைகளுக்கு இடையே அச்சிடும் தாளை அனுப்புவதன் மூலம செய்தித்தாள அசசிடப் படுகிறது. இந்த இயந்திரம் அனைத்துப் பக்கங்களையும் தானாகவே அச்சடித்து, அடுக்கி, மடித்து, தேவையான எண்ணிக்கையில் வெளியே அனுப்பும்.

**நிருவாகத் துறை**: நிருவாகத்துறையில் விளம்பரப் பிரிவு, விற்பனைப் பிரிவு போன்றவறறுடன் செய்தித்தாள் வெளியீட்டாளரும் இருப்பார். ஒரு செய்தித்தாளில விளம்பரம் பேரிடம் பெறுகிறது. 40 விழுக்காடுஅளவு இடம் இதற்காகப் பெரும்பாலும் ஒதுககப்படுகிறது. அச்சடிக்கப்பட்ட செய்தித்தாள்களை விற்பனைத் துறை அனைத்து இடங்களுக்கும் ஒழுங்காக அனுப்புகிறது.

இநதியச் செய்திததாள்களின பதிவாளர் அலுவலகம் (The Office of the Registrar of News-

papers of India) 1956-ஆம் ஆண்டு சூலைமாதம் தொடங்கப்பட்டது. இதன் பணிகளாகப் பின் வருவனவற்றைக் கூறலாம். 1) இந்திய நாட்டில் வெளியாகும் செய்தித்தாள் பற்றிய விவரங்களைச் சேகரித்து வைத்திருத்தல், 2) மாநில நீதித் துறை யினரிடம் செய்தித்தாள்களின் பெயர்களை அப்போ தைக்கப்போது அறிவித்தல், 3) செய்தித்தாள்களுக் குப் பதிவுச் சான்றிதழ் அளித்தல், 4) செயதிததாள் நிறுவனங்கள் அனுப்பும் ஆண்டறிக்கையைச சரி பார்த்தல், 5) பாராளுமன்றத்திற்குச் செய்திததாள் கள் தொடர்பான விவரஙகளை அளித்தல், 6) அச்சுக்குத் தேவையான அச்சுக் காகிதங்கள, அசசு இயந்திரங்கள் பெறுவதில் துணைபுரிதல் போனறவை யாகும்.

இந்தியாவில் ஏறக்குறைய 91 மொழிகளில் 2,100க்கும் மேலான செய்தித்தாள்களும், பத்திரிகை களும் வெளிவருவதாக ஏ.பி.சி (Audit Bureau of Circulation) கூறுகிறது. இதழ்களின் விற்பனை 1986-ஆம் ஆண்டு அறிக்கையினபடி பின்வருமாறு அமைகிறது;

கேரளத்திலிருந்து வெளிவரும் 'மலையாள மனோரமா' என்னும் செய்தித்தாளதான் தொடர்ந்து விற்பனையில் முன்னணி வகிக்கிறது மூன்று இடஙகளில வெளியாகும் இவ் இதழ 5,98,139 பிரதிகள் விற்பனையாகின்றன.

ஆங்கில மொழியில வரும் 'இந்தியன் எக்சுபிரசு' (Indian Express) 11 இடங்களிலிருந்து வெளியாகி 5,94,950 பிரதிகளை விற்பனை செய்து இரணடாம் இடம் வகிக்கிறது. இவைதவிர 'டைமசு ஆப் இந்தியா' (ஆஙகிலம்), 'ஆனந்தபசார் பத்ரிகா' (வங் காளம்), 'சிரீகன் தார்' (வஙகாளம்) அடுத்தடுத்த இடங்களைப் பெறுகின்றன.

விற்பனையில் மாநில மொழிச் செய்திததாள் முதலிடத்தைத் தொடர்ந்து பெற்றுவருவது குறிப் பிடத்தக்கது.

பருவ இதழ்களைப் பொறுத்தவரை 'குமுதம்' வார இதழ்களிலும், 'இந்தியா டுடே' (India Today) இருவார இதழ்களிலும், 'மனோகர் ககானியா' மாத இதழ்களிலும் முதலிடம் பெறுகின்றன. மு.அ

## செய்தி வள்ளுவன் பெருஞ்சாத்தன்:

இவர் சங்கப்புலவர்களுள ஒருவர். பெருஞ்சாத்தன் என்பது இவர் பெயராகும். சாத்தன் என்ற பெயரு டைய புலவரின் வேறுபடுத்திக் காண இவர் பெருஞ் சாத்தன் என்றும் குறிப்பிடப்பட்டிருக்கலாம். இவர் பெயரிலுள்ள செய்தி வள்ளுவன் என்னும் அடை மொழி கொண்டு, இவர் அரசாங்கச் செய்தியைத் தெரிவிக்கும் கருமத் தலைவர்களுள் ஒருவராகலாம் என்று ஆய்வாளர்கள் கருதுகினறனர். இப்புலவர் பாடிய 'வீழ் தாழ் தாழை' என்ற பாடல் குறுந் தொகை இலக்கியத்துள் இடம்பெறுகின்றது. 'கடி நகர் வேறுபடாது நன்கு ஆற்றினாய் என்ற தோழிக் குக் கிழத்தி உரைத்தது' என்னும் துறையில் அப் பாடல் அமைந்துள்ளது. நெய்தல் திணையிலமைந்த அப்பாடலால் தாழை தழைத்து வளர்ந்துளள நெய் தல் நிலக் கழிப்பகுதியில மலரும் மிகுதியான மணங கொணட தாழை மலர்கள் கொககுகள உலர்த்து கின்ற சிறகுகள் போல காட்சி தருகினறன என்று வருணித்துள்ளார். இவ்வாறு உப்பங்கழிகளும், கடல் திரைகளும், குருகுகளும், தாழை மலர்களின மணமும், மணல் மேடுகளும் மிக்கிருக்கும் நெய்தல் நிலப்பகுதியில் அமைந்துளள சிறுகுடிப்பகுதியின முன் றிலில் அமைதியின்றி அலைக்கரங்கள் வந்து அலைக் கும் தன்மை அழகாகக கூறப்பட்டுளளது. அத்தகைய நிலையில, நம்மை நீங்கிச் சென்றவர் பெருந் தொலைவில் உளளாராயினும் நம் அகத்திற்கு அணி யராய் உளளார் எனறு தலைவனுககு இழுககு நேராதவாறு தலைவி கூறுகிறாள். உடலால் தலை வன சேய்மைககண இருபபினும் உள்ளத்தால் அண மையில் உளளான் என்று கூறுவது தலைவியின மாட்சியினைக் கூறுவதாக உளளது. கி.கோ.

## செய்து காட்டல் வழிக் கற்பித்தல்:

கற்றல் கற்பித்தல் முறையானது நான்கு நிலைகளைக கொண்டது. அவை கற்பிததலின் நோககங்கள், பாடத்தொகுதி, போதனை முறைகள, மதிப்பீடு ஆகியன. இவை நானகும் ஒன்றுக்கொன்று தொடர்பு உடையன.

போதனை முறைகள எனபது ஒரு குறிப்பிட்ட பாடத் தொகுதியின் நோக்கங்களை அடைவதறகாக பயன்படுத்தப்பட்ட வழி முறைகளைக் குறிப்ப தாகும். கற்பித்தலின் நோக்கங்கள் நிறைவேறியுள் ளனவா? என முடிவு செய்வதற்காக உருவாக்கப் பட்டதே மதிப்பீடு ஆகும். மதிப்பீடானது முறை யான தேர்வு மூலம் அல்லது புதிய நுணுகக முறைகளைக் கடைபிடித்தல் மூலம் நடத்தப்படு கிறது.

பொதுவாகக் கற்பித்தல் சொல்விளக்கம், வாசித்தல், அறிக்கை அளித்தல், கலந்துரையாடல், சோதனை அல்லது செய்துகாட்டல் ஆகியவற்றால் நிகழ்த்தப் படுகிறது. சிறப்பான கற்பித்தல் நிகழச் சில காட்சி-கேள்வி துணைக் கருவிகள பயன்படுத்தப் படுகின்றன.

சில உத்திகள் கற்றல்-கற்பித்தல் சூழ்நிலைக்குப் பொருத்தமாக அமைந்துவிடுகின்றன. எடுத்துக்காட்டாக, அறிவியலானது சோதனை அல்லது செய்து காட்டல் (Demonstration) வழியாகக் கற்பிப்பது மிகவும் பயன் அளிக்கிறது. இதே போல் மொழிப் பாடத்தைக் கலந்துரையாடல் வழியே கற்பிப்பது பலனளிக்கும். கணிதப்பாடத்தினை விதிவரும் முறை, விதி விலக்கு முறை ஆகியனவற்றின் வழியே கற்பித்தால் கற்றல்-கற்பித்தல் நிலை மிகுந்த பலனளிக்கும்.

குறிப்பிட்ட கற்பித்தல் முறைகளைத் தேர்ந தெடுத்தல் என்பது 1) துணைப்பொருள்களின் தேவை, அவை கிடைக்கும் தன்மை, 2) பாடநூல், தேவையான துணைக்கருவிகள், 3) காட்சி-கேள்வித், துணைக்கலங்கள், 4) ஆசிரிய-மாணவர் ஆர்வம் 5) குறிப்பிட்ட கற்பித்தல முறையில் ஈடுபாடு ஆகியவற்றைப் பொறுத்தது.

சில திறமைகளையும், மதிப்புகளையும் உடைய சோதனைளைக் கற்பிததல் முறையில அதற்கே உரிய இடத்தில் பயன்படுத்துவதே செய்து காட்டலாகும். செய்துகாட்டல் என்பது முன்பே அறியப் பட்ட முடிவுகளைச் செய்துபார்த்தல் ஆகும். இம் முறையால் குழந்தைகள் நன்றாகப் புரிந்து கொள்வதால் அறிவாக்கத்தைப் பெறுகின்றனர். ஆசிரியர் பொதுவாகக் கலந்துரையாடல, வாசித்தல், விளக்கம் அளித்தல் ஆகியவற்றால் பாடம் நடத்துவார். ஆனால், அதனையே செய்துகாட்டலில் விளக்கினால மாணவர் முறையான கற்றலின் பயனைப் பெறுவர். மாணவர்கள் இதனால் மிகுந்த பயனடைவர். பொதுவாக, இம்முறையால் பறபல கற்றல்-சிக்கல்களைத் தீர்க்கக் கற்றுக்கொள்வர்.

ஆர்வத்தைத் தூண்டவும், வினா அல்லது சிக்கல வினா எழுப்பவும் செய்துகாட்டல் முறை பயன்படுகிறது. வகுப்பில வினா எழுப்புவதைச் சிக்கல்களைத் தீர்ப்பதில பயனபடுத்தலாம். அது முறையான கற்பித்தல் திறனை நிறைவேற்றுவதற்கும் சிக்கல்களைத் தீர்ப்பதற்கும் உதவுகிறது. எடுத்துக்காட்டாக, ஆகாயவிமானம் எவ்வாறு பறககிறது? மின்சாரம் எவ்வாறு பாயும்? தாவரங்கள் எவ்வாறு உணவினைப் பெறுகின்றன? வெப்பம் எவ்வாறு பரவுகிறது? என்பன போன்ற சிக்கல் வினாககளுக்கு விடை காணச்செய்துகாட்டல்முறையைப்பயன்படுத்தலாம்.

செய்துகாட்டல் முறையில் புதிய சூழ்நிலைகளில் பெற்ற அறிவினைப் பயன்படுத்துவது மதிப்பீட்டின் நுணுக்க முறைகளுள் ஒன்றாகும். உண்மையான கற்றல் என்பது, பெற்ற அறிவை எநத அளவிற்குப் புதிய சூழலில் பயன்படுத்தலாம் எனபதைப் பொறுத்தது. எடுத்துக்காட்டாக, தனி எந்திரங் களைப் பார்த்துக் குழந்தையானது அதனை அடையாளம் கண்டு, வகைப்படுத்தவும் பயன்படுத்தவும் தூண்டுவது அதைப் பற்றிய அறிவைத்தரும்.

குறிப்பிட்ட நோக்கத்தை உடையதாகவும், தனிப்பட்ட சிறப்புக் கருத்துகளை உடையதாகவும், குழந்தைகள் புரிந்துகொள்ளத் தக்க வகையில் எளிய கருத்துகளை உடையதாகவும் செய்துகாட்டல் அமையவேண்டும். குழந்தைகள் கற்பதைக் கண்டு ணர்வதால் புரிந்துகொள்ள வேண்டும். அவ்வாறு இல்லையெனில் முறையான கற்பித்தல் முறையில பயனில்லாமற் போய்விடும். பங்கு பெறும் வாய்ப்புகள் இருக்கவேண்டும். மாணவர்கள் தம் கண்முன்னே உள்ள சோதனையைப் பார்த்தே அதற்கான விளக்கங்கள் தரவேண்டும். ஆசிரியரை விட மாணவர்கள் நன்றாகப் புரிந்துகொண்டு, செய்யப்படும் சோதனையின் நோக்கத்தையும் திறனையும் நனறாக விளக்குவதால் கற்றல்-கற்பித்தல் நிகழ்ச்சி பொருள் உள்ளதாகிவிடுகின்றது. குழந்தைகள் ஒவ்வொருவரும் இம் முறையை அணுக வாய்ப்புகள் கொடுக்கப்பட வேண்டும்.

செய்து காட்டலானது சிந்திபபதையும், கலந்துரையாடலையும் வளர்க்கிறது. இம்முறையில் சோதனையின் முடிவுகளைத் தொடங்கும்போதே கூறாமல், விடைகளை விதிவரும் முறையால் வெளிக்கொணர வேண்டும்.

செய்துகாட்டல் குழந்தைகள் அங்கு வந்து கண்டுணரும் போது சோதனைக்கு ஏற்றவாறு பொருத்தமாக அமைய வேண்டும். அவ்வாறு இல்லை என்று கூறினால் மாணவர்கள் புரிநதுகொள்ளும் விதம் முற்றிலுமாக மாறிவிடும். செய்துகாட்டல் முறையானது அனைவரும் கண்டுணரும் வகையில் மிகத் தெளிவாக அமைய வேண்டும். அறிவியல் முடிவுகளைச் சோதித்து அறியாமல் சில ஆசிரியர்கள வெளியிட்டுள்ள பாட நூல்களைப் பின்பற்றுவதாலும் இத்தகைய சாதகமற்ற முடிவுகள் கிடைக்கலாம். சில ஆசிரியர்கள் தவறான முடிவுகளை மீணடும் மீண்டும் சோதித்து அறிந்து தோல்வி அடைவதைக் காட்டிலும் அனுபவம் வாய்ந்த அறிவியலாரிடம் இச் சிக்கல்களைக் கூறி விடை காண்பதே சிறந்ததாகும்

தொடக்கநிலைப் பள்ளிகளில் ஆசிரியரை விட மாணவரே செய்து காட்டல்சோதனையால் மிகுந்த பயன் பெறுகின்றனர். ஆசிரியர் செய்யக் கூடியவராகவே இருந்தாலும் அவ்விடத்தில் மாணவர் அமைதியான முறையில் உற்று நோக்குபவராகவே இருக்கவேண்டும். ஆசிரியர் மட்டுமோ, மாணவர்

மட்டுமோ செய்து காட்ட வேண்டியதில்லை. சில சமயங்களில் ஆசிரியர், மாணவர் சேர்ந்து இம்முறை யினை மேற்கொள்கின்றனர்.

சில பாதுகாப்புச் சோதனைகளில் ஆசிரியரே முழுப் பங்கு வகிக்க வேண்டும். அபாயத்தைத் தரக் கூடிய சோதனைகளை ஆசிரியர் தவிர்க்க வேண்டும். துணைக் கருவிகள் கிடைக்கும் தரத்தைப் பொறுத் துத் தனி ஆள் சோதனையாகவோ, குழுச் சோத னையாகவோ நடத்தலாம். ஒரு வகுப்பறையில முறையான செய்துகாட்டல் அமையவேண்டும். அங்கு அனைத்து வசதிகளும் (வெளிச்சம், காற்று) ஒருங்கே அமைந்திருக்க வேண்டும். இம்முறையில வகுப்பறையில் செய்யத் தவறினால், ஓர் இடத்தில் ஒரு மாணவர் பினபற்றிச செய்ய அனைத்து மாண வரும் சூழ்ந்து கவனிக்குமாறு செய்யவேண்டும்.

சில நேரங்களில் செய்து காட்டலானது தவறான முடிவுகளைத் தருகின்றது. இதனால்பல ஆசிரியர் களுக்குக் கற்பித்தலில் உள்ள ஈடுபாடு குறைய நேரி டுகிறது. இந்த முடிவுகள் உணமையான சிக்கல் களாக மாணவருக்கும் ஆசிரியருக்கும் அமைகிறது. இச்சோதனையின் தொடககத்திலிருந்து இறுதிவரை குழந்தைகளுக்குப் பல ஐயங்கள், ஆர்வங்கள ஆகி யவை ஏற்படும். சோதனையின் தவறான முடிவுகளை நனறாக ஆராய்வதாலும் தோல்விக்கான காரணங் களை மாணவர்களிடம் கேட்டு ஆராய்வதாலும் ஒவ்வொரு காரணியையும் முறைப்படி சரிபார்ப்பதா லும் உண்மையைக் கண்டறிந்து பயனுள்ள கற்றல அனுபவத்தைப் பெறலாம். தொடக்க நிலையில் ஆசிரியர் சோதனை முறையில் தவறான முடிவுகள் கிடைத்தால், அதனைச் சரிபாாக்கப் பலவிதமான சோதனைகள் செய்து மாணவரை உறறுநோக்க வைத்து அவர்களே தவறு கண்டுபிடிக்குமாறு செய்ய வேண்டும்.

துணைப் பொருள்கள் விலையுயர்ந்ததாக இருப் பின், அனைத்து மாணவருக்கும் துணைப்பொருள கள் கொடுக்க முடியாது. அதனால் ஆசிரியர் மட்டும் சோதனை செய்யவேண்டும் மாணவர் ஆசிரியரைப் பின்பற்றிச் செய்து பழகுதல் வேணடும்.

செய்துகாட்டலுக்குப் போதுமான நேரம் இருத தல் வேண்டும். நேரம் என்பது இச சோதனை அமைப் பில் குறைவாக இருந்தால் சமாளிக்க முடியாது, குறிப்பிட்ட நேரத்திற்குள் செய்துகாட்டலுக்கு வேண டிய துணைப்பொருளகள் அமைப்பதும், செயலமுறை யினைக் கூறுவதும், செய்துகாட்டுவதும், முடிவுகள சரிபார்ப்பதும் போன்ற பல்வேறு நிலைகளைச் செய்வதற்கு நேரம் ஒரு காரணியாக அமைந் துள்ளது.

மாணவர்கள், ஆசிரியர் அல்லது மற்றவர் வழியே கற்றல்-அனுபவம் பெறுவதை விட நேரடியாகத் தாங்களே செய்து பார்ப்பதால் தங்களது திறன் களை வளர்த்துக்கொள்ள முடிகிறது. எடுத்துக்காட் டாக மின்சுற்று ஒன்றினை மாணவர் தாமே அமைக் கும்போது அவர்களுடைய அறிவாக்கம் வளாசசி அடைகிறது.

கற்றலும் கற்பித்தலும் இருவழிப் பாதை. இதை அடிப்படையாக வைத்துத்தான அனைத்துக் கற்பித் தல் முறைகளும் உருவாயின. எனவே, செய்துகாட டலை முறையாகக் கையாணடு வந்தால் கற்பிததல் சிறப்படையும். எஸ்.ஆ.

**செய்ப்பூர்** இராசசுத்தான் மாநிலத்தின் தலைநக ரம். இது செய்ப்பூர் மாவட்டத்தின் தலைமையகமாக வும் அமைந்துள்ளது. இந்நகரத்தினைச் சுற்றி அரண் களாக மலைகள அமைந்துள்ளன. இந்நகரம் கி.பி. 1727-இல் மகாராசர் சாவய் செய்சிங்கு என்பவரால் நிருமாணிக்கப்பட்டது இவர் ஆம்பர் நகரிலிருநது தம் தலைநகரைச் செய்ப்பூருக்கு மாற்றினார். இநநக ரம் அழகு மிக்க நகரமாகும். திட்டமிட்டு இந்நக ரம் உருவாக்கப்பட்டுள்ளது. நகரின் கட்டடங்கள் யாவும் உரோசாவின நிறத்தைக் கொண்டு விளங்கு கின்றன. எனவே, இந்நகரை உரோசா நகரம் என வும் கூறுகின்றனர்.

பல்வேறு நகரங்களுடன இந்நகரம் சாலை, இருப்புப் பாதை, வான்வழி ஆகியவைகளின் மூலம் தொடர்பு கொண்டுள்ளது. இந்நகரம் வணிக நகர மாக விளங்குவதுடன தொழிற்சாலைகளுள்ள நகர மாகவும் விளங்குகிறது. இந்நகரத்தில் எந்திரப் பொருள்கள் செய்தல, உலோக வேலைகள் செய் தல், நெசவுத் தொழில், கண்ணாடிப் பொருள் கள் செய்தல், விரிப்புகள் தயாரிப்பு, காலணிகள் செய்தல, மருந்துப் பொருள்கள் தயாரிப்புப் போனற தொழில்கள் நடைபெறுகின்றன. செய்ப்பூர் நகரம் கைவினைப் பொருள்களுக்கும் புகழபெற்ற நகர மாகும். அணிகலன்கள, தந்தப் பொருள்கள், கல், சலவைக் கல்லால் அணிவேலைப்பாடுகள செய்தல் போன்றவற்றில் இந்நகரம் சிறந்து விளங்குகிறது.

இந்நகரத்தில் வரலாற்றுச் சிறப்பு வாய்ந்த கட்ட டங்கள் பல உள்ளன. நகர அரண்மனை, சந்தர் மந்திர் எனப்படும் வானாய்வுக் கட்டடம், காற்று மண்டபம், இராம்பாக்கு அரண்மனை, புலிக் கோட்டை (Nahargarh) போன்றவை குறிப்பிடத் தக்க கட்டடஙகளாகும். இந்நகரத்தில் ஓர் அரண மனையும், நூலகமும் உள்ளன. இராசசுத்தான் பல் கலைக்கழகம் இந்நகரத்தில் 1947-ஆம் ஆண்டு



செய்ப்பூர்

நிறுவப்பட்டது. நகர மக்கள் தொகை 1,015,160 (1981).

செய்ப்பூர் மாவட்டம் 14,000 ச.கி.மீ. பரப்பள வுடையது. இம்மாவட்டம் முன்பு ஒரு சிற்றரசாக விளங்கியது. இம்மாவட்டத்தின் கிழக்கிலும் தெற்கிலும் சமவெளிகளும், வடக்கிலும் மேற்கிலும் மலைத்தொடர்களும், பாலைவனமும் உள்ளன. இம்மாவட்டத்தில் வாற்கோதுமை, தானியங்கள, பருத்தி போன்றவை விளைகின்றன. இரும்புக் கனிமம், மணிக்கற்கள், அப்பிரகம் (Mica), செம்பு, சலவைக்கல் போன்றவை இம்மாவட்டத்தில் கிடைக்கும் கனிமங்களாகும்.

செய்ப்பூர்ச் சிற்றரசு கி.பி. 12-ஆம் நூற்றாண டில் நிறுவப்பட்டது. இராசபுத்திர அரசர்கள இச் சிற்றரசினை ஆண்டு வந்தார்கள். மொகலாயர்களின மேலாண்மை இப்பகுதியில் கி.பி. 16, 17-ஆம் நூற்றாண்டுகளில் ஏற்பட்டது. ஆங்கிலேயர்கள் கி.பி. 1817-ஆம் ஆணடு இப்பகுதியில் தம் மேலாணமையைச் செலுததினர். இராசசுத்தான் மாநிலத்துடன் இப் பகுதி 1949-இல் இணைககப்பட்டது. இம்மாவட்டத்தின் மக்கள் தொகை 3,420,574 (1981). சு இரா.

**செய்முறைத் தாள்கள்**: கணக்குகளைப் பற்றிய முக்கிய செய்திகளைக் கொண்டிருககும் தாள்களே செய்முறைத் தாளகள் (Working Papers) எனப்படுகினறன. ஒரு வாடிக்கையாளர் அலலது கட்சிக்காரரின் கணக்குகளைத் தணிக்கை செய்து கொண்டிருக்கையில் தணிக்கையாளருக்குப் பல ஆவணங்களும் தாள்களும் கிடைக்கும். அதாவது தணிக்கையின்போது அவர் சேகரிக்கும் குறிப்புகள், கடிதங்கள், சுருக்கங்கள், பகுப்பாய்வுகள் போன்றவை செய்முறைத் தாள்கள் எனப்படும். எடுத்துக்காட்டாகச் செய்முறை இருப்புச் சோதனை,நிலைச்சொத்துகள், முதலீடுகள், கடனாளி கடனீந்தோர் பட்டியல்கள், வணிகச் சரக்குப் பற்றிய சான்றிதழ், அதனை மதிப்பீடு செய்யும் முறை, சரிக்கட்டும் முதற் குறிப்பேட்டுப் பதிவுகள், கொடுபடவேண்டிய பொறுப்புகள், பெறவேண்டிய சொத்துகள் அனைத்தும் உள்ளன என்று மேலாண்மை தந்திடும் சான்றிதழ் போனறவை செய்முறைத் தாள்களாகும்.

**நோக்கம்**: தணிக்கை எழுத்தர்களின் திறனை எடைபோட இவை பெரிதும் உதவுகின்றன. கவனமின்மை போனற குற்றம் சாட்டப்படும்போது தங்களைக் காத்துக்கொள்ளத் தணிக்கையாளர்கள இவற்றைப் பயன்படுத்துகிறார்கள். இவற்றைத் தயாரிப்பது தணிக்கை எழுத்தர்களுக்கு ஒரு பயிறசி போலுள்ளது. தம் கட்சிக்காரர்களுக்கு அவர்களின் நிறுவனத்தில் காணப்படும் கணக்கு வைப்பு முறையிலுள்ள திறன குறைவு, அக் கட்டுப்பாட்டு முறையிலுளள குறைபாடு போன்றவைகளைச் சுட்டிக்காட்ட இவை உதவுகின்றன. எதிர்காலத் தணிக்கைக்கும் இவை பயன்படுகின்றன. இவற்றின் தன்மையைக கொணடு இவற்றைத் தயாரிததவர்களின் பணபைக கூறிவிடலாம்.

செய்முறைத் தாள்கள் தணிக்கையாளரின் உரிமைப் பொருளகளாகும். அவற்றைக் கட்சிக்காரர்களுக்கும் பிறருக்கும் காட்டும்படி வற்புறுத்த முடியாது. கட்சிககாரர்களின் சார்பாகக கணககுகளைத தணிககை செய்து இருப்புநிலைக் குறிப்பைத் தயாரித்த கணககர் தயாரித்த செய்முறைத் தாளகள அவருககுத்தான சொநதம் என்று சாண்டிரி மாாட்டின் அண்டு கோ. எ. மார்ட்டின் (Chantry Martin and Co.Vs Martin) என்ற வழக்கில் தீர்ப்பளிக்கப்பட்டது.

செய்முறைத் தாள்கள்மீது தணிக்கையாளர் பற்றுரிமை (Lieu) கொள்ளலாமா எனற கேளவிக்குச் சாதகமான தீர்ப்பு சோக்கோகின்சுக்கி எ. பிரைட்டு கிரகாம் குழு (Sockockinisky Vs. Bright Grahamand Co.)என்ற வழக்கில் கூறப்பட்டது. அதாவது தணிக்கைக் கட்டணம் செலுத்தப்பட்ட பின்னரும்கூடத் தணிககையாளர் செய்முறைத் தாள்களை அவரது சொந்தச் சொத்துபோல் கருதி அவரிடமே வைத்துக்கொள்ளலாம்.

தணிக்கையாளர் செய்முறைத் தாள்களமீது பற்றுரிமை செலுத்துவது கணக்கேடுகள்மீது பற்றுரிமை செலுத்துவதினின்றும் வேறுபட்டது. தணிக்கையாளர் அவருக்குரிய கட்டணம் செலுத்தப்படும் வரை அவர் கட்சிக்காரர் கணக்கேடுகள், ஆவணங்கள் மீது பற்றுரிமை செலுத்தலாம். ஆனால அவர்

ஒரு கணக்கருடைய பணியினையும் செய்திருக்க வேண்டும்.

**வேலை பிரித்துக் கொடுத்தல்:** தணிக்கையாளர் பெரும்பாலும் அவர் எழுத்தர்களைக் கொண்டே அவர் பணியைச் செய்து முடிக்கிறார். அவருடைய மேற்பார்வையில் எழுத்தாகள செயற்படுகின்றனர். ஆனால், தணிக்கையாளரே முழுப் பொறுப்பேற்கிறார். மிகப்பெரிய தணிக்கை நிறுவனத்தில முதிய கூட்டாளிகள், இளைய கூட்டாளிகள், அலுவலகப் பணியாளர்கள் போன்றோர்கள் இருப்பார்கள். தணிக்கை செய்யவிருக்கும் நிறுவனத்தின் தணிக்கை யளவைப் பொறுத்து இவர்களின் எண்ணிக்கை இருக்கும்.

திறமை, பட்டறிவு போன்றவைகளின் அடிப்படையில்தான எழுத்தர்கள், முதியர் அல்லது இளையர் எனப் பாகுபடுத்தப்படுகின்றனர். இவர்கள் பாகுபடுத்தப்படுவது வயது அடிப்படையில் அன்று. கடின உழைப்பும், மதி நுட்பமும் தணிக்கை செய்திடத் தேவையான கூறுகளாகும்

**முதியர் பணி:** மூத்த எழுததர்கள் மிகவும் பொறுப்புடன் பணியாற்ற வேண்டும் தணிக்கை செய்திடும்போது கட்சிக்காரருடன் தொடர்பு கொண்டு முக்கிய செய்திகளைத் தணிக்கையாளருக்கு இவாகள் தெரிவிக்கிறார்கள். தணிக்கையாளரும் என்ன செய்யவேண்டுமெ என்பதை இவர்களுக்குத் தெரிவிப்பார். அதை வைத்துப் பணியை எநதமுறையில் எவ்வாறு செய்ய வேணடுமென்று முதியர் திட்டமிடுவார். பின்னர் இளைய எழுத்தர்கள என்னென்ன வேலை செய்யவேணடுமென்று பணிப்பார். மேலும் அவர்களுக்குத தேவையான வழிமுறைகளையும, செய்முறைத தாளகளைப் பயனபடுத்தும் முறைகளையும் சொலலித் தருவதுடன, அவர்கள பணியினையும் மேறபாாவை செய்வார். கட்சிக்காராகளுடன பேசி விளககம் பெறுவதை அவர் பாாத்துக கொளவார்.

முதற் குறிபபேட்டுப் பதிவுகளைச் சரிபாாத்தல, கையிருப்புப் பணம், சரக்குப் போன்றவைகளைச் சரி பார்ததல், தேய்மானம, ஒப்பந்தஙகள், காப்பு நிதிகள் போன்ற முக்கிய செய்திகளை முதிய எழுத்தர்களே செய்கின்றனர். இறுதிக் கணக்குகளைத் தயாரித்ததும் அவாதம் குறிப்புகளுடன அவறறைத் தணிக்கையாளரிடம் தருவார். அவர் அவற்றைச் சரிபார்த்துச் சானறளித்து அவரது அறிக்கையைத் தயாரிப்பார்.

**இளையர் பணி:** மூத்தவாகளுடைய நேர்பார்வையின்கீழ் இளையர் வேலை செய்கின்றனர். தொழிலறிவு தேவையற்ற, இயல்பாகச் செய்யக்கூடிய பணிகளையே இவர்கள் செய்கிறார்கள். துணையேடுகள் எடுத்து எழுதியதைச் சரிபார்த்தல், ஆவணங்களைச் சரிபாாத்தல், கூலிப் பட்டியல், இருப்புச் சரக்குப் பட்டியல் போன்றவைகளைச் சரிபார்த்தல் போன்ற பணிகளை இவர்கள் செய்கிறார்கள். இவர்கள் தொழில் நடவடிக்கைகளைப் புரிந்து கொண்டு செயலாற்றவேண்டும். ஒன்றும் புரிந்துகொள்ளாமல் இயந்திரம்போல் செயலாற்றக் கூடாது. இவர்கள் பணியினை மேலும் நன்றாகச் செய்திடல் வேண்டும். புது வழிகள தோன்றினால் முதியரைக் கலநதாலோசித்து அவற்றைக் கையாளவேண்டும். முதியரும் அவர்களுக்கு ஊக்கம் தரவேண்டும் அவர்களுக்கு ஏதாவது ஐயம் அல்லது இன்னல் தோன்றினால் முதியவரிடம் கேட்டுத தெளிவு பெறவேண்டும். தேவையான இடங்களில முதியர் கட்சிக்காரரிடம் தொடர்புகொண்டு விளககஙகள பெற்று இளையருககுச சொல்லுவாா. இளையா நேரடியாகக் கட்சிககாரர்களிடம் தொடர்புகொள்ளக் கூடாது. இவ்வாறு இளையர் முதியருடன முழுமனத்தோடு ஒத்துழைக்க வேணடும்.

**புதிய தணிக்கை:** ஒரு தணிக்கையாளா புதிதான தணிககை தொடஙகுமுன சில விவரஙகளை நன்றாகக் கவனிக்கவேண்டும. அவையாவன: 1) அவரது நியமனம் நிறுமச் சட்டத்தின்படி அமைந்துள்ளதா என்று அவா உறுதிசெய்துகொள்ள வேணடும். வேறொரு தணிக்கையாளருககுப் பதில் இவர் நியமிககப்பட்டிருந்தால் அதறகுரிய காரணததைக் கேட்டறிய வேணடும். 2) அவரது கட்சிக்காரரின் நிறுவன அமைபபு எநத வகையைச் சார்ந்தது, எப்படி இயங்கி வருகிறது என்பதைத் தெளிவாகத் தெரிந்துகொளள வேண்டும். கட்சிககாரரின் தொழில, அதன் மேலாணமை, நடப்பு முறை போன்றவைகளைத் தெரிநதுகொளளுதல மிகவும் இன்றியமையாதது. நுட்பமிக்க தொழிலாக இருந்தால தணிக்கையாளர் நேரே செனறு தக்க கேள்விகள் கேட்டு அவருக்கு வேணடிய செய்திகளைச் சேகரிகக வேண்டும். அவருக்குத் தொழிலநுட்பம் தெரியாது எனத் தெரிநது கொணடு அவரது கட்சிக்காரர் அவரை ஏமாற்றி விடக்கூடிய வகையில் அவர் நடந்துகொள்ளக் கூடாது. 3) ஒரு நிறுமத்தைத் தணிககை செய்திடும போது அதன் உயர்மட்ட மேலாண்மை, செயற்படும் விதம, கொளகை தீட்டுபவர், கட்டுப்பாட்டை வைததிருப்பவரின் பொறுப்புகள போன்றவைகளைத் தெரிந்துகொளள வேணடும். 4) நிறுமத்தின் உயர் அதிகாரிகளின் பட்டியல் ஒனறு பெற்று அவர்களுடைய அதிகாரஙகள, கடமைகள், பொறுப்புகள போன்றவைகளை எழுதி வாங்கிக் கொள்ளவேணடும்.

அவர்களின் மாதிரிக் கையொப்பங்களைப் பெறுவது மிகவும் இன்றியமையாதது. 5) இயக்குநர் அவை கோட்பாட்டுத் திட்டங்களை வகுத்து அவற்றைச் செயற்படுத்த மேலாண்மையினருக்குத் தம் அதிகார மாற்றத்தை (Delegation) எவ்வாறு செய்கிறது என்றறிந்து, மேலாண்மை அலுவலர்களை எவ்வாறு கட்டுப்படுத்துகின்றது என்பதை ஆராய வேணடும் 6) அவரது கட்சிககாரர் என்ன பணியினைச் செய்துதருமாறு கேட்டுக் கொண்டிருக்கிறார் என்பதைத் தெளிவாக அறுதியிட்டு எழுதிப் பெற்றுக் கொள்ள வேண்டும். அவரது கடமைகள் யாவை? அவர் செய்யவேண்டியது தணிக்கையாளர் பணியா அல்லது கணக்கர் பணியா? எந்தத் தேதிக்குள் பணி முடிக்கப்பட வேண்டும்? அவரது ஊதியம் போன்ற பல விவரங்களை எழுத்தால எழுதிப் பெற வேண்டும். வாய் மொழியாக இருந்தால் பின்னர்க் கருத்து வேற்றுமை ஏறபடும்பொழுது சங்கடம் ஏற்படும். எனவே, எழுத்தில் இருப்பது நல்லது. ஆனால், நிறுமத் தணிக்கையைப் பொறுத்தமட்டில நிறுமச் சட்டமே தணிக்கையாளரின் உரிமை, கடமை, பொறுப்புப் போன்ற விவரங்களைக் கொணடிருப்பதால் கருத்து வேறுபாட்டிற்கு இடமில்லை. 7) தன் கட்சிக்காரர் வைத்திருக்கும் கணக்கு வைப்புமுறை எத்தகையது எனத் தணிக்கையாளர் ஆராய வேணடும் அதில் காணப்படும் குறைகளை நீக்கிடலாம். 8)நிறுவனத்தில் அகச் சீராய்வு முறை (Internal Check System) ஏதாவது செயற்பட்டு வந்தால அதை ஆராய வேண்டும். 9) அலுவலகத்தில் உள்ள அனைத்து ஏடுகளையும் வைத்திருப்பவர்களின் மாதிரிக் கையொப்பம் அடங்கியுள்ள பட்டியல் ஒன்றைத் தணிக்கையாளர் கேட்டுப் பெறவேண்டும். மேலும் முக்கிய அதிகாரிகளைச் சந்தித்துப் பேச வேண்டும். 10) கணக்கேடுகள் எழுதி முடிக்கப்பட்டு அவை இருப்புக் கட்டப்பட்ட பின்னரே தணிககையாளர் அவரது பணியைத்தொடங்கவேண்டும். முன்னரே தயாராக இல்லாதபோது தனிக்கையாளர் கட்சிக்காரரை ஏடுகளை இருப்புக் கட்டும்படியும், இறுதிக் கணக்குகளைத் தயாரிக்கும்படியும் கேட்டுக் கொள்ளவேண்டும். மேலும் முக்கிய ஒப்பந்தங்கள சட்டத் தொடாபான ஆவணங்கள், பிணையங்கள், பட்டியல்கள் போன்றவைகள் பார்வையிட வேண்டும். 11) கூட்டாணமைகளைப் நிறுவனத் தணிக்கையில் கூட்டாண்மைப் பத்திரத்தையும், நிறுமத் தணிக்கையாக இருந்தால் அமைப்புப் பத்திரம், செயல்முறை விதிகள் ஆகியவற்றையும் பொறுப்பாண்மை (Trust) போன்ற வேறு சட்டஙகளின்படி அமைந்த நிறுவனமாக இருந்தால் அவற்றின் அமைப்புப் பத்திரம் போன்றவைகளையும் படித்து முக்கிய செய்திகளைக் கவனமாகக் குறித்துக்கொள்ள வேண்டும். 12)நிறுமத்தின் முதல் தணிககையை மேற்கொள்ளும் தணிக்கையாளர் தகவலறிக்கை, விற்பனை செய்தோரிடம் செய்துகொண்ட ஒப்பந்தங்கள் தோற்றுவிப்பாளரோடு செய்துகொணட ஒப்பந்தங்கள், போன்றவைகளைப் படித்துக்கொள்ள வேண்டும். சென்ற ஆண்டு தணிக்கைக் குறிப்பினைப் படித்து அதிலுள்ள குறைபாடுகளை நீக்கவேண்டிய முயறசிகளை எடுக்க வேண்டும்.

மேற்கூறியவைகளைச் செய்து முடிப்பதற்குச் செய்முறைத்தாளகள் தணிக்கையாளருக்கு மிகவும் பயன் படுகின்றன. கு நா.இரா.

**துணை நூல:**

**Tandon B.N , A HandBook of Practical Auditing, S. Chand & Co. Ltd., New Delhi, 1976.**

*செய்முறைத் தேர்வு*: செய்முறைத் தேர்வுகள பெற்ற அறிவினைச் செயல்படுத்தும் பாங்கினைக் கண்டறிவதற்காகச் செய்யப்படுவன. ஒரு பாடத்தைக் கற்றல் என்பது அப்பாடத்தின் திரள்பொருள் அறிதலும், அவ்வறிவு செயற்படும் முறைகளைத் தெரிந்து. வேண்டுங்கால் அதனைச் செயற்படுத்தும் திறனைப் பெறுதலும் ஆகும். பாடத்தின் திரள்பொருள் அறிந்துள்ளவற்றைச் சொற்களால் ஆன சோதனைகள் மூலமும் பெற்ற அறிவு செயற்படும் (பயன்படும்) விதத்தினைக் காட்டும் திறனைச் செய்முறைத் தேர்வுகள் (Practical Examinations) வாயிலாகவும் சோதித்தறியலாம்.

செய்கைச் சோதனைகள் (Performance Tests) குறிப்பிட்ட (கொடுக்கப்பட்ட) சூழலில் சோதிக்கப் படுவோர் செயற்படும் விதத்தினைக் கணடறியப் பயன்படுவன. செய்முறைத் தேர்வு, அறிவு செயல் படும் முறையினைக் கணடறியப் பயன்படுவது. செய்முறைத் தேர்வு, அறிவு செயற்படும் முறையினைக காட்டும், விளக்கும் திறனைச சோதிக்கப் பயன் படுவது. ஒரு பாடத்தின் திரள்பொருள் அறிவு

சொற்களால் பெறப்படுவதே, 'எல்லாச் சொல் லும் பொருள் குறித்தனவே' எனினும், சொற்கள பொருள் குறிக்கும் முறையினை, பொருளொடு சொல் கொணடுள்ள உறவினை, சொல்லறிவு, செயலாய்ப் பரிணமித்தலைத் தெளிந்து உணரும் போதே, உணர்ந்து பிறர்க்குக் காட்டும் போதே கற்றல் முழுமை பெறும். எனவே எல்லாப்பாடங்களிலும் செய்முறைத் தேர்வுகள இடம் பெறக்கூடும்; இடம் பெறல் வேண்டும்.

பெரும்பாலும் அறிவியல் பாடங்களிலேயே செய்முறைத் தேர்வுகள் இடம் பெறுகின்றன. ஆய்வகங்களில் கருவிகள் கொண்டு அறிவு செயற்படு முறையை, அமைந்துள்ள முறையைச் செய்து காட்டுவது, செய்முறைத் தேர்வின் நடைமுறையாகின்றது. பாடத்தின் திரள பொருள் அறிவுச் சோதனையோடு, செய்முறைத் தேர்வும் சேர்ந்து பாடத்திற்கான மொத்த தேர்வை முடிவு செய்கின்றன. அறிவியல் பாடங்களன்றிப் பிறபாடங்களில் செய்முறைச் சோதனைகள் படம் வரைதல், செய்து காட்டுதல் அளந்து காட்டுதல், பகுத்துக் காட்டுதல், உருவாக்கிக் காட்டுதல் போன்ற செயல்களே சோதனைகளாகலாம். சோதனைகள் எல்லாம், செயல்களைச் செய்யும் முறைகளையே பெரிதும் சார்ந்திருப்பன, முறைகள் சரியாக அமையும் போது முடிவும் சரியாய் இருக்கும் என்னும் கொள்கை கொண்டன. எனவே இச் சோதனைகளில் முடிவன்றி, முறைகளே பெரிதும் சோதிக்கப் ப்டுகின்றன. செயல்முறைகளுக்கென, முறைகளின் பல நிலைகட்கும் தனித்தனியே மதிப்பெண்கள் ஒதுக்கப்படுகின்றன. மொத்த மதிப்பெண்ணும் முடிவை ஒட்டியே தரப்படுவதில்லை.

ஓவியம், சிற்பம், இசை, கூத்து போன்ற செயற்பாட்டுக் கலைகளில் (Performing Arts) செய்முறைத் தேர்வுகள் சிறப்புப் பெறுகின்றன. பாட அறிவுத் தேர்வுகள் இரண்டாம் இடததே இருப்பன. ஆயினும் முறையான பள்ளி, கல்லூரிப் பாடங்களில் செய்முறைத் தேர்வுகள் இரண்டாம் நிலையில் உளளன.

பி.எஸ்.பா.

**செய்முறைப் பொருளியல்** என்பது பொருளாதார இயலின் முக்கியமான ஒரு பிரிவாகும். இதனைக் கைகோள் பொருளியல் என்றும் குறிப்பிடுவர். இப்பிரிவில நடைமுறைச் சிக்கல்களைப் பற்றிய ஆய்வு மேற்கொள்ளப்படுகிறது. பொருளியல் கோட்பாடுகளைப் பின்னனியாகக் கொணடு அவ வாய்விற்கான கருவிகளைப் பயன்படுத்திக் கொள்கைகளைத் தீர்மானிக்கச் செய்முறைப் பொருளியல் (Applied Economics) துணை புரிகிறது. இது கால மாறுதல்களுக்கேற்ப உருவாகின்ற புதுமையான வளர்ச்சிகளைப் பற்றி ஆராய்வதாகும். பொருளியலில் பல்வேறுபட்ட பிரிவுகள் அடங்கியிருப்பதால அதிலுள்ள எல்லா சிக்கல்களையும் சுருக்கமாக ஆராய்வது எளிதன்று.

மாற்றங்கள் பெருகிவரும் இக்காலத்தில தகவல்கள் காலங்கடந்தனவாகவும், மாறுகின்ற சூழ்நிலைக்கு ஒவ்வாதனவாக்வும் இருப்பதால் செய்முறைப் பொருளியலைப் பின்பற்றுவது மிகக் கடினம். நாட்டில் ஏற்படும் விரைவான பொருளாதார மாற்றங்கள், நடைமுறைச் சிக்கல்களின் பின்னணியைப் புரிந்து கொள்வது இப்பொழுது மிகவும் அவசியமாக்குகின்றன. அத்துடன் எந்த ஒரு சிக்கலையும் புரிந்துகொள்வதற்கு அது தொடர்பான புள்ளிவிவரங்கள் பற்றியும், அவற்றில் ஏற்படும் மாற்றங்கள் பற்றியும் தெரிந்துகொள்ளுதல் தேவையாகின்றது.

செய்முறைப் பொருளியலும், பொருளியல் கொள்கைகளும் மிக நெருங்கிய தொடர்புடையன. பொருளியல் கொள்கையைத் தீர்மானிக்கக் குறிப்பிட்ட சிக்கலின் பொருளியல் கருத்துகளுக்கு மட்டுமே செய்முறைப் பொருளியலில் முக்கியத்துவம் தரப்படுகிறது ஆனால் பொருளியல் கொள்கையைப் பற்றிய விவாதத்தில் அத் துறையுடன் தொடர்புடைய எல்லாக் காரணிகளும், அவை பொருளியல் மற்றும் பிற கருத்துகளை அடிப்படையாகக் கொண்டிருந்தாலும் எடுத்துக்கொள்ளப்படுகின்றன. தேவைப்படுங்கால் பொருளியல் காரணிகளுடன் சமூகம் தத்துவம் மற்றும் மதச்சார்புடைய பிற காரணிகளுக்கும் சிறப்பிடம் தரப்படுகிறது.

இந்த வேறுபாட்டை விளக்க அரசின் நிலச் சீர்த்திருத்த முறைகளில ஒன்றான கூட்டுறவுப் பண்ணை முறையை எடுத்துக்கொள்ளலாம். இதனைச் செயற்படுத்த மக்கள் நில உடைமையாளர் என்ற தனிப்பட்ட உரிமையை விட்டுத்தர வேண்டும். சாதிகள் நிறைநத சமுதாயத்தில இதனைப் பழக்கத்தில் கொணடு வருவது எளிதானதன்று. மக்களிடையே கூட்றடுவை உருவாக்கச் சில சமூக மாற்றங்களும் மதச் சாாபற்ற தனமையும் ஏற்படவேணடும். இவ்வாறாக எந்த ஒரு பொருளாதாரக் கொள்கையையும் பினபற்ற அது தொடர்பான எல்லாக் காரணிகளும் ஆராயப்பட வேண்டும்.

**பயன்கள்:** ஆல்பிரடு மார்சல் என்பவர் பொருளியல் என்பது 'பொருள் கட்டித் தருவதாகவும், நலம் சார்ந்ததாகவும் உள்ள தனிமனிதன் மற்றும் சமுதாய நடவடிக்கைகளைக பற்றிய ஓர் ஆய்வு' எனக் கூறுகிறார். இக்கூற்றின்படி பொருளியல் கொள்கைகள் யாவும் செய்முறைப் பொருளியல் முறையைப் பின்னணியாகக் கொண்டவை

நாட்டின் வளர்ச்சிககு உகந்த பணக்கொள்கை, நிதிக் கொள்கை, பன்னாட்டு வாணிகக் கொள்கை மற்றும் அயல்நாட்டுப் பண மாற்றுவீதக் கொள்கையைத் தீர்மானிக்கப் புள்ளிவிவரங்கள் அவசியமாகின்றன. இந்தப் புளளிவிவரங்களின் உதவியுடன் கணக்கியல் பொருளியல் என்ற கருவியின் உதவியால

தருந்த பொருளாதாரக் கொள்கையைத் தீர்மானிக் கச் செய்முறைப பொருளியல் துணை செய்கிறது.
என்.மா.தெ.

**துணை நூல்கள்:**


Hanson J L. Introduction to Applied Economics, Macdonald & Evans, London, 1981.

Leslie Wagner and Nikos Baltazzis, The Clarendon Press, Oxford, 1973.


***செய்யக் கூடாததைச் செய்தால் செல் லும்*** என்பது ஒரு புரட்சிக் கருத்து. செய்துவிட்டால் செல்லும் என்னும் கோட்பாடு உரோமானியச் சட்ட முது மொழி (Quod fieri non debuit, factum Valet). இது அந்தச் சட்டத்தில் சில சாதாரண நடைமுறை களை, உரிமை உள்ள ஒருவர் கடைபிடிக்காமல் சில செயல்களைச் செய்துவிட்டால், அத்தகைய செயல் செல்லுமா என்ற கேளவிக்குச் சட்டப் புத்த கங்கள் வழி சொல்லும் என்று கூறுவர். பழங காலத்தில் நடைமுறைகளே சட்டத்தினைத் தம் முரட்டுப் பிடிக்குள் வைத்திருந்தன. ஆகவே, நீதிப் பேராணை இருந்தால் உரிமை இருக்கிறது (When there is writ, there is right) என்று கூறினார்கள். இத்தகைய நிலை சிறிது சிறிதாக மாற்றபபட்டு, இப்பொழுது உரிமை இருந்தால் நீதிப் பேராணை கிடைக்கும (When there is right, there is writ) என்ற நிலை ஏற்பட்டுள்ளது. செய்து விட்டால செல்லும் எனற கோட்பாடும் பழங்காலச் சட்டக்கோட்பாடே ஆகும். இது இந்து திருமணச் சட்டம் 1955-க்கு முன்னும் பின்னும் எவ்வாறு செயற் பட்டுள்ளது என்பது காணத்தக்கதாகும்.

தெய்வானை ஆச்சி எதிர் சிதம்பரம் செட்டியார் (1954, Madras 657) என்ற வழக்கில் கருத்தொரு மிதத காதலர்கள் பூமாலையை மாற்றித் திருமணம் செய்து கொண்டதாக அறிவித்துக் கொண்டார்கள். இதனைப் புரட்சித் திருமணம், சுயமரியாதைத் (Self-Respectors, Marriage) திருமணம் என்று புரோகித எதிர்ப்புச் சஙகம் (Anti Purohit Association of Self-respectors) வானளாவப் புகழ்ந்தது. இத் திருமணத்தைச் சட்டம் போற்றவில்லை. இத்தகைய திருமணத்தைச் செய்து கொண்டவர்கள் நெஞ்சத்தில் குமுறினார்கள். காற்றுக்கு வேலியிட முடியுமா? கடலுக்கு ஆணையிட முடியுமா? இதன் விளைவாய் 1967-இல் தமிழ்நாடு சட்ட மன்றம், சுய மரியாதைத் திருமணத்தைச் சட்டப்படி செல்லுபடியாகும் திருமணம் என்று சட்டம் இயற்றியது. செய்யக் கூடாததைச் செய்தால் செல்லும் என்ற சட்டப் புது மொழியை வைத்து நீதிபதி சந்திரா ரெட்டி அவர்கள் பொன்னுசாமி (1950 Madras 777) வழக்கில் (எந்த வித ஆசாரமும் சடங்கும் இன்றி ஒருவர் ஒரு பெண்ணைக் கோவிலில் கடவுள சிலைக்கு முன்னால், அந்த தெய்வத்தையே சாட்சியாக வைத்துப் புரோகிதர் இல்லாமல் தாலி கட்டுதல்) சடங்கின்றிச் செய்யும் சீர்திருத்தத் திருமணம் செல் லும் என்று கூறினார். இதன விளைவாக அவனுக்கு இரண்டாம் திருமணம் செய்து கொண்டதற்கான தண்டனை கொடுக்கப்பட்டது.

சட்ட வல்லுநர் (Jurist) நீதிபதி கசேந்திர கட்கர் சகோதரா (Sagotra) திருமணம் செல்லுமா என்ப தற்குச் சமசுகிருத சட்ட மூலங்களைப் புரட்டிப் பார்த்து மாதவராவ் எதிர் இராகவேந்திர ராவ் (1946 Bombay 377) என்ற வழக்கில, இத்தகைய திருமணம் செலலா நிலையது என்ற திடமான முடிவிற்கு வந் தார். ஆனால் இந்தத் தீர்ப்பு, இந்து திருமணச் சட்டத்தின்படி செல்லாததாகி விட்டது. ஏனெனில், இந்து திருமணச் சட்டம் பிரிவு 5-இன் படி திருமணத் தின் தரப்பினர்கள் வெவ்வேறு கோத்திரத்தைச் (Non-Sagotra) சேர்ந்தவர்களாக இருக்க வேண்டும் என்பதை வலியுறுத்தவில்லை. எடுத்துக்காட்டாக, பல ஆண்டுகளாகச்சென்னையில் வாழும் ஒரு கோத் திரத்தைச் சேர்ந்த ஒருவர், பல ஆணடுகளாகச்கல்கத் தாவில் வசிகும் அதே கோத்திரத்தைச்சேர்ந்த பெண்ணைத் திருமணம் செய்து கொண்டால் சட்டப் படியும் அறிவியல் முறைப்படியும் செல்லாது என்று எவர் சொல்லக் கூடும்? இத்தகைய திருமணங்களைப் புரட்சித் திருமணம் என்றும், சட்டப்படியாகச் செல் லும் திருமணம் என்றும் கூறலாம். எனவே, செய்யக் கூடாததைச் செய்தால் செலலும் என்ற சட்டப் புதுமொழி செல்லும்.

குந்தா தேவி எதிர் சிரீராம் (1963 Punjab 235) என்ற வழக்கில் தந்தை உயிருடன் இருக்கும்போது தாய் மட்டும் தன் மகளுக்குத் திருமணம் செய்து கொடுப்பாரேயானல் அந்தத் திருமணத்திற்கு அவள செய்த செலவுத் தொகையினைக் கூட்டுக் குடும்பச் சொத்திலிருநதோ, தந்தையிவிடமிருந்தோ பெற்றுக் கொள்ள முடியாது. தநதை இசைவு கொடுக்காத காரணத்தினாலேயே திருமணம் செல்லாது என்று கூற முடியாது. ஏனெனில் 18 வயது நிறைவெய்திய மகளே இசைவு கொடுக்கலாம். ஆனால் மகள் 18 வயது நிறைவெய்தாமல் இருப்பின அந்தத் திருமணம் செல்லாது. எனவே, தநதையின் சொத்திலிருந்து திருமணச் செலவுத் தொகையினைக் கேட்க முடியாது. ஏனெனில் 18 வயது என்பது கட்டா யமான (Mandatory) சட்டநிலை. இந்துத் திருமணச் சட்டம் 1955-க்கு முன்னால் இத்தகைய திருமணங்கள சட்டப்படி செல்லத் தக்கவை என்று கூறப்பட்டன.

சில சாதாரண (Directory) நடைமுறைகளைப் பின்பற்றா விட்டால் 'செய்தால செல்லும்' (Factum Valet) என்ற உரோமானியச் சட்டக் கொள்கை (Roman Civil Law Mazim) கடைபிடிக்கப்படுகின்றது. அதன் வாயிலாகச் சிம்தவாகனா (Jimtavagana) பாரம்பரிய இந்து சட்டத்தில் இல்லாத ஒன்றைச் செய்வதன் மூலம், செய்து விட்டால் ஆயிரம் சட்டப் புத்தகங்கள் எதிர்த்து நின்றாலும், ஆயிரம் கைகள் மறைத்து நின்றாலும் ஆதவன் மறையாதது போன்று, அது மறையாது, அது செல்லுபடி ஆகும் என்று கூறப்படுகிறது. ஆகவே, செய்து விட்டால் செல்லும் என்ற கொள்கை, இந்து சட்டமாயினும் உரோமானியச் சட்டமாயினும் ஒத்துக் கொள்ளப்படுகின்றது என்பது கண்கூடு. எடுத்துக்காட்டாக, மூல்சந்து எதிர் சூதியா (Mulchand Vs Shudia, 22 Bombay 812) என்ற வழக்கில் 4 வயது மகளுக்குத் திருமணம் செய்துவைக்கத் தாய் முயல்கின்றாள். தந்தை நீதிமன்றம் (Court) சென்று தடையாணை (Injunction) வாங்குகின்றார். இத்தகைய சூழ்நிலைகளில் திருமணம் செய்து வைத்திருக்கக் கூடாது. இருந்த போதிலும், தாய் சாத்திர முறைப்படி திருமணம் செய்து வைக்கின்றாள். இந்தத் திருமணம் செல்லாது என்று தந்தை மீண்டும் வழக்குத் தொடுக்கின்றார். வழக்கினை விசாரித்த நீதிபதி இரானடே (Ranade) சமசுகிருத நீதிப் புத்தகங்களைப் பார்த்து அவை தாயினும் தந்தைக்கே முதலிடம் கொடுக்கின்றன என்று கண்டறிந்தார் இருந்த போதிலும், அத்தகைய முதலிடம் மிகச் சாதாரண நடை முறையே என்றும் கண்டறிந்தார். எனவே, தாயால் நடத்தி வைக்கப்பட்ட மகளின் திருமணம், 'செய்தால செல்லும்' என்ற கருத்துப்படி செல்லுபடி ஆகும் என்று ஆணித்தரமாகக் கூறினார்.

குமார் எதிர் நாத்து (A. Kumar Vs J. Nath 1965 Calcutta 612) என்ற வழக்கில் உறவு முறையினால் திருமணம் செய்து கொள்ளத் தடுக்கப்பட்ட (Prohibited Degrees) இருவர், திருமணம் செய்து கொண்டால், அதனைச் செய்தால் செல்லும் என்ற கோட்பாட்டிற்குள் கொண்டு வரமுடியுமா என்ற கேள்வி எழுந்தது. தடை செய்யப்பட்ட உறவு முறை என்பது சாதாரண நடைமுறை அன்று. கட்டாயமாகக் கடைப் பிடிக்கப்பட வேண்டிய (Mandatory Text) தொன்றாகும். எனவே, செய்து கொண்ட திருமணம் செல்லாது என்று நீதிபதி முகர்சியா (Mookerjia) கூறினார். சிரீ பாலுசு எதிர் சிரீபாலுசு (Sri Balusu Vs Sri Balusu 22 Madras P. C.) என்ற வழக்கில் 'அ' என்பவரின் ஒரே மகனை 'ஆ' என்பவர் தத்து (Adoption) எடுத்துக் கொண்டார். இந்தத் தத்து எடுப்புச் செல்லுமா? என்ற கேள்வி இங்கிலாந்து உயர் நீதிமன்றம் (Privy Council) முன்னர் எழுந்தது. வழக்கை விசாரித்த ஆபுஅவுசு (Hobhouse) பெருமகனார் 'செய்தால் செல்லும்' என்ற உரோமானியச் சாதாரணச் சட்டக் கோட்பாடு இந்திய நீதிமன்றங்களில அசாதாரணக் குழப்பத்தை விளைவித்தது என்றார். ஏனென்றால், அங்கே மதம் என்றும், சட்டம் என்றும் மக்களின் மனம் சிதறுண்டு கிடக்கின்றது. மனம் என்பது வேறு, மதம் என்பது வேறு, சட்டம் என்பது வேறு, சம்பிரதாயம் என்பது வேறு, சம்பிரதாயப்படி ஒரே மகனை வைத்திருப்பவர் தத்துக் கொடுத்தால், அது செல்லாது என்று 'மிதாச்சரா' சட்டம் கூறுகின்றது. ஆனால், இந்து சட்டப்படி ஒரே மகனை வைத்திருப்பவர்கூடத் தத்துக் கொடுக்கலாம். அப்படிப்பட்ட மகன் இருவரின் மகன் 'துவ்ய உஷ் யாயனா' என்று பொருள்படும் படி குறிப்பிடப்படுவார். ஆகவே, மேற்கூறிய வழக்கில் ஒரே மகனை வைத்திருப்பவர் கொடுத்த தத்து செல்லுபடியாகும். நல்ல மனம் உள்ளவர்களிடம் சட்டம் சரிந்து போகும்.

சில சாதாரண நடைமுறைகளைப் (Directory Formalities) பின்பற்றாமல் செய்த காரியங்களுக்குச செய்து விட்டால செல்லும் என்ற கோட்பாட்டினை நடைமுறையில் எடுத்துக் கொண்டு, அது செலலுபடி ஆகும் என்று கூறிவிடலாம். ஆனால், கட்டாயமாகச் சட்டப்படி கடைப்பிடிக்க வேண்டிய கொள்கைகளைக் கடைப் பிடிக்காமல் செய்த காரியங்களுக்கு, 'செய்துவிட்டால் செல்லும்' என்ற கோட்பாடு பொருந்தாது என்று கூறி அது செல்லாது என்று கூறிவிடலாம். தி. ஆ. இ.

***செய்யன் இந்தியர்*** வட அமெரிக்கச் சமவெளிகளில் வாழும் பழங்குடியினர். அல்கான்கியன (Algonkian) மொழி பேசும் இவர்கள புவியியல் அடிப்படையில் வடக்குசசெய்யன் (Cheyenne) என்றும் தெற்குச செய்யன என்றும் இருபெரும் குழுக்களாகக் காணப்படுகின்றனர். வடபகுதிச்செய்யன் குழுவினா மாண்டனாப் (Montana) பகுதியில் 3,000க்கும் மேற்பட்ட எண்ணிக்கையில் வாழ்கின்றனர். தென்பகுதிச் செய்யன் ஆக்லகாமாப் (Oklahoma) பகுதியில் 4000ககு மேற்பட்ட எண்ணிக்கையில் வாழ்கின்றனர்.

செய்யன் இந்தியர்களின் வரலாறு மிக நீண்டதும் சிறப்பு மிக்கதுமாகும். அமெரிககப்போர்த்துறையினா 1979—இல் இவர்களைச் சமவெளிப் பகுதிகளிலிருந்து இவர்களுக்கென்று ஒதுக்கப்பட்ட இடங்களில் குடிபெயருமாறு பணித்தனர். மிகவும் சிறப்புமிக்க பழங்குடிகள் சிலவற்றுள் செய்யன இந்தியர்களும் ஒரு பழங்குடி எனப் பெயர் பெற்றிருந்ததால் இவர்கள்



செய்யன் இநதியர்

புதிய இடங்களுக்குச் செல்ல மறுத்தனர். பின்னாக் கடுமையான விளைவுகளைச் சந்தித்தபின் அமெரிக்க அரசு ஒதுக்கிய பகுதிகளில் குடியேறினர்.

செய்யன இநதியர்கள கி.பி 19-ஆம் நூற்றாண டின் தொடக்கக்காலம் வரை வேளாண தொழிலை மேற்கொண்டிருநதனர். இவர்கள் மக்காசசோளம், அவரை (Beans), சுரைக்காய் வகை (Squast) முத லான பயிர்களை விளைவித்தனர். இவர்கள கி.பி. 18-ஆம்நூற்றாண்டின இறுதியில வடஅமெரிக்காவின் பெருஞ் சமவெளிப் பகுதிகளில் (Great plains) குடி யேறும் வரையில நிலையாகவும் மனஅமைதியுடனும் வாழ்ந்து வந்தனர். இப்பகுதிகளுக்குக் குடியேறிய பிறகு குதிரைகளை வளர்க்கத் தொடங்கினா. இவர் கள் அண்டைய மக்களிடமிருந்து துப்பாக்கிகளைப் பெருமளவு பெற்றனர். இவர்கள் கி பி. 1830க்குப் பின் வேளாண் தொழிலை அறவே நிறுத்திக் கொண்டனர்.

செய்யன இன வரலாற்றில கி.பி. 19-ஆம நூற றாண்டின் இடைககாலம் முதல் குதிரையும் துப்பாக்கி யும் பெரும் தாக்கத்தை ஏற்படுததின. இவர்கள வாழ்ந்த சமவெளிப் பகுதிகளிலேயே தாம வாழும நிலப்பகுதிகளை உரிமையாக்கிக் கொளளப பல சண டைகள நிகழநதன. அது முதறகொணடே கொள் ளையடித்தலும் சிறு சிறு கூட்டங்களாகச் சணடை யிடுதலும் அனறாட வாழ்ககையாக மாறிவிட்டன.

செய்யன் சமுதாயத்தில் பெண்களுக்கு முதன் மையான இடம் உண்டு. கைவினைப் பொருள்கள் செய்வதில் இவர்கள் புகழ் பெற்றவர்கள். பெணகளே இதில் மிகவும் ஈடுபடுகிறார்கள். குதிரைகளால் இழுக் கப்படும கூம்பு வடிவ ஊர்தி (Sled) செய்வதிலும் பெணகளே முதலிடம் பெற்றுள்ளனர் பருவ காலத் திற்கு ஏற்ப ஓரிடத்திலிருந்து மற்ற இடங்களுக்குச் செல்லும்போது கூடாரங்கள் அமைத்தல், துணிவகை களை நெய்தல, காய்கறி, கிழஙகு வகைள், விறகுகள ஆகியவற்றைச் சேகரித்தல் முதலான அனைத்தையும் பெணகளே கவனிக்கின்றனர். ஆண்கள் வேட்டைக் குச் செல்லும் போது பெண்கள் குதிரைகளை மேயத் தல முதலான வேலைகளைச செய்கின்றனா.

செய்யன் பழங்குடிகளிடையே சடஙகுகளும் விழாக்களும் மிகுதியாகக் காணப்படினும் ஆணடிற்கு ஒரு முறை நடத்தும்விழாவே இனறியமையாததாகக் கருதப்படுகிறது. இளவேனிற் காலத்தில் நடக்கும் இவ்விழாவின்போது 4000 ககும மேற்பட்டவர்கள ஒன்றுகூடிக கொணடாடுகின்றனர். இவ்விழாவின் முக் கிய நோக்கம் ஓராண்டிற்குப் பின் மீணடும் ஆன்மிக ஆற்றலை மேமபடுத்திக் கொள்வதும் இவர்கள வாழும் மணணுககும் கால்நடைகளுக்கும் செழுமை சேர்ததுக் கொள்வதும் ஆகும் இந்த விழாவின் போது செய்யன் பழங்குடியினர் தாம கூடுவது போன்றே தம் கால்நடைகளையும் ஒன்று சேர்த்துக் கொளகின்றனர்.

இவர்கள கொணடாடும சடங்குகளுள புனித அம்புகளைப் புதுப்பிக்கும் சடஙகு சிறந்ததாகும். இந்தப் புனித அம்புகள ஆன்மிக வலிமையின் இருப் பிடம் என்றும், இவை கால்நடைகளையும் மக்களை யும் இயக்க வலலவை என்றும் நம்புகினறனர். போர்ச் செயலகளினாலும் தமக்குள் ஏற்படும் பகை மையினபோது பகைவனைக கொல்வதினாலும் அம் புகள இரத்தக் கறையைப் பெற்றுவிடுகின்றன. இச் சடஙகுகளின்போது இவ்விதககறைகள் நீக்கப்படுகின் றன என நம்புகின்றனர்.

இவர்களிடையே வழககிலுள்ள தலைமையான இரண்டாம்சடங்குஞாயிறுநடனமாகும் (SunDance). இவ்வகை நடனச் சடங்கு பிற சமவெளி இந்தியர்களி டம் பரவலாகக் காணப்படுகிறது. இச்சடஙகின நோக்கம் உலகிற்கு மீண்டும் புத்துயிர் தருவதாகும். இச்சடங்கின்போது இவர்கள் தங்கள உடலை வருத்தி இயல்பிறந்த ஆற்றல்களோடு தொடர்புகொண்டு மிகுந்த ஆற்றலைப் பெறுவர். இவ்வுலகில் மழை பெருகவும்,தாவரங்கள, விலங்குகள் பெருகவும்,பொரு ளும் வளமும் பெருகவும் வேணடி இயல்பிறந்த ஆற்றல் களை வழிபடுவர். பல நாள்கள் நடக்கும் இச்சடங் கினை ஒருவிழாவாகக் கொணடாடி இவர்கள் மகிழ் கின்றனர். இச் சடங்கின்போது நடத்தப்படும் பல நிகழ்ச்சிகள் உற்று நோக்கத் தக்கனவாய் உள்ளன. ஒரு சடங்கின்போது மார்பிலோ தோள்பட்டைகளிலோ

அகப்பைக் கோளகளைச் செருகி அதனோடு கட்டப் படும் கயிற்றின் முனையில் பொருளகளையோ கால் நடைகளின் எலும்புக்கூடுகளையோ கட்டி அதனை ஓர் இரவு முழுதும் இழுத்துச் செல்வர். அவ்வாறு செல்லும்போது அவ்விழாவிற்கே உரிய நடனத்தை ஆடுவர்.

விழாக்களின் போது இவர்கள ஆடும நடனங களுள் விலங்கு நடனமும் (Animal Dance) குறிப்பிடத தக்கது. ஆணடு முழுவதும் வேட்டையில் மிகுந்த விலங்குகள் கிடைக்க வேண்டும் என்பதறகாக இந் நடனம் நிகழ்த்தப்படுகிறது. இதில ஆணகளே பெரும்பாலாராகக் கலந்து கொளகின்றனர். இவர்கள எருமை, நரி, குதிரை போன்ற பிற விலஙகுகளைப் போன்று கத்துதல, நடத்தல் ஓடுதல முதலான பல செயல்களைச செய்வர்.

செய்யன் இந்தியர்களின அரசியல் முறை விரி வானது. இந்த அமைப்பில 44 குழுககள உள்ளள. இக்குழுக்களின தலைவாகள அமைதித் தலைவர்கள (Peace Chiefs) எனக் கூறுப்படுவர். போர்ச செயல் களில் மிகுந்த திறமை பெற்றவர்களும், மகக ளிடையே அமைதியை ஏற்படுத்தும் திறமை பெறற வர்களும்,வலிமை, அறிவு, அனபு முதலானவற்றைப் பெற்றவர்களும்அமைதித் தலைவர்களாக நியமிக்கப் படுகினறனர்.

அரசியல் அமைப்பைப் போனறே செயயன் இந்தியாகளின சமய முறையும் உள்ளது. சமயகுரு இனிப்பு மருந்துத் தலைவா (Sweet Medicine Chief) எனக கூறப்படுகிறார். இவருக்குத் துணையாக 3 அமைதித் தலைவர்கள உளளனர். இந்த நாலவா அடங்கிய குழுவே அனைத்துச சமயச சடஙகுகளை யும் நடத்திவைக்கும் பொறுப்பைக கொணடுள்ளது. பெணகளுக்கு இதில் பஙகில்லை.

அமெரிகக அரசு 1970-ஆம் ஆணடில இவாகளுக குப் பல சலுகைகளை அறிவித்தது. அவற்றில பொரு ளாதாரச சலுகைகள, கல்வி உறுதி முதலானவை அடங்கும். இன்று 7,000க்கும் மேற்பட்ட எணணிக்கை யில் உளள இவர்கள் பெரும் முன்னேற்றமடைநது வருகினறனர். சீ.ப.

**செய்யுள்** என்பது செய்தல் எனனும் பொரு ளுடையது. 'உள' தொழிற் பெயா விகுதி. அது ஆகு பெயராய்ச் செய்யப்பட்ட பாவினையும் பாவினங களையும் உணர்த்தும் இலக்கணக் குறியீட்டுப பெய ராகும். செய்தல (செய்யுள) யாத்தல், புனைதல, இயறறல், கட்டுதல் என்பவை அந் நோக்கில் ஒரு பொருட் சொறகளாகும. செயயுளுககுக கவி எனப தும் ஒரு பெயராகும்

இற்றைகசு (மொழி) இலக்கியம் எனக் கூறப்படு வனவும பா, பாடல், பாட்டு எனப்படுவனவும் சங்க காலத்திற் செய்யுள என்னும் பெயராலே வழங்கப் பெறறுளளன. காலத்தால் முற்பட்ட இலக்கண நூலாகிய தொல்காப்பியம் செய்யுளுக்குரியவை என முப்பத்து நான்கு உறுப்புகளைக் கூறுகின்றது அவை யாவன: மாத்திரை, எழுத்து, அசை, சீர், அடி, யாப்பு, மரபு, தூக்கு, தொடை, நோக்கு, பா, அளவு, திணை, கைகோள, கூற்றுவகை, கேட்போர், களன், காலம், பயன், மெய்ப்பாடு, எச்சம், முனனம, பொருள்வகை, துறை, மாட்டு, வணணம் என்பன வும், அம்மை, அழகு,தொன்மை, தோல விருநது, இயைபு, புலன, இழைபு என்பனவுமாம

அவற்றுள் எழுத்து, அசை, சீர், அடி, தொடை, அளவு முதலியவை வடிவு பற்றியனவாகும. மாத்திரை யாப்பு, பா, பாட்டு, வணணம் முதலியவை செய்ம் முறை பற்றியனவாகும். திணை, கைகோள, கூற்று வகை, பயன், முன்னம், மெய்ப்பாடு முதலியவை பொருள் பற்றியனவாகும அம்மை அழகு முதலிய எட்டும், யாப்பு நெறி பற்றியவையாகும் இவவுறுப்பு கள யாவும் ஒரு செய்யுட்கே உரியவையல்ல. பாவகை கட்கு ஏற்பச் சிலவும் பலவும் அமைந்து வரும்

தொல்காப்பியம் 'செய்யுள' (இலக்கியம்) என் பது பாட்டு உரை, நூல், வாய்மொழி (மந்திரம்) பிசி, அங்கதம், முதுசொல் என எழுவகைபபடும் எனக் கூறுகின்றது அவற்றுள் பாட்டு என்பது ஆசிரியப்பா, வெணபா, கலிப்பா, வஞ்சிப்பா, மருட்பா, பரிபாட்டு என அறு வகைப்படும் இவை ஒவ்வொன்றும் சிலபல பிரிவுகளையுடையவையாகும். இவற்றுள பரிபாடல் பண்ணமைத்து இசையொடுபாடுதற்கேற்ப அமைககப் படும் பாட்டு வகையாகும். பணணததி எனனும் பாவகை ஒன்றைத் தொல்காப்பியம் , தனியாகப பிரிததுக் கூறுகினறது.

உரை என்பது ஓசையும் யாப்பமைதியு மின்றி ஒரு பொருளைப் பற்றி உரைநடையாகச் செய்யபபடுவ தாகும். இதனை உரைச் செய்யுள எனவும் வழங்குவா. பாட்டு சூததிரம் ஆகியவற்றிற்கு விளககங் கூறுவதும் உரைச் செய்யுளுள அடங்கும். நூலஎன்பது இலககண நூலையே குறிக்கும். நூற் செயயுள பெரும்பான்மை யும் சூத்திர யாப்பினால இயற்றப்படும். சூத்திரத்தை நூற்பா எனவும் வழங்குவா. ஏனைய நான்கும் ஆசிரியப்பா, வெண்பா நடையிலும் சிறுபான்மை உரைநடையிலும அமைநது வரும. இக்காலத்து

வழங்கும் வசனகவிதை புதுக்கவிதை என்பவை தொலகாப்பியம் கூறும் உரைச செய்யுளையும், நாட்டுப் பாடல்கள் என்பவை பண்ணத்தியையும் நினைவூட்டுவனவாக உள்ளன.

யாப்பருங்கலம், யாப்பருங்கலக் காரிகை முதலிய இடைக்கால யாப்பிலக்கண நூலகள் தொல்காப்பியம் கூறும் எழுவகைச் செய்யுளுள் பாட்டு என்னும செய்யுள வகையையே செய்யுள என்க கொணடுள் ளன. வடிவமைபபிற்குரிய எழுத்து, அசை, சீர், தளை, அடி, தொடை எனபவறறை மட்டுமே உறுப் புகளாகக் கூறுகின்றன. அவவுறுப்புகளால் ஆனவற்றைப் பா எனக் கூறுகினறன. பாக்கள் வெணபா, ஆசிரியப்பா, கலிப்பா, வஞ்சிப்பா, மருட்பா என ஐந்து பிரிவாகும எனறும், மருட்பா தவிாந்த ஏனையவை ஒவ்வொனறும் தாழிசை, துறை, விருத்தம என்னும் மும்மூனறு இனங்களையுடையவை என்றும கூறுகினறன. இடைக்காலத்தும்பிற்காலத்தும் தோனறிய இலககியஙகள பெருமபானமையும் இபபா வினங்களால ஆக்கப் பெற்றுள்ளன. இனறைய எழுத் தாளர்கள மரபுக் கவிதை என்று கூறுவனவெல்லாம் காரிகை வழி வந்த பாக்களையும் பாவினங்களையுமே யாகும்.

வீரசோழியம் என்னும் இலக்கண நூல், மேற் கூறிய பாவினங்களேயலலாமல், வடமொழி மரபைப் பின்பற்றிச் செய்யுளைப் பத்தியம் கத்தியம என வகைபபடுத்திக் கூறுகின்றது. பத்தியம் என்பது பரதங்களால் (அடிகளால்) நடைபெறுவதாகும். கத்தியம் எனபது கட்டுரைப் போலியாகவும் (உரை நடை) செயயுட் போலியாகவும் நடைபெறுவதாகும். பத்தியச் செய்யுளை அது குறள சிந்து திரிபாதி, வெணபா, திலதம், விருத்தம் சவலை என ஏழுவகைப் படுத்திக்கூறுகினறது. அவையல்லாமல எழுதநெணணி அமைக்கப்பெறும சந்தம எனபதொரு வகையையும், தணடகம் (தாணடகம்) என்பதொரு வகையையும் விரிவாகக் கூறுகின்றது. சந்தச் செய்யுள் பிறகாலச் சிற்றிலக்கியங்களில பயினறு வந்துளளன. தாணடகச் செய்யுளை அப்பரடிகளும், திருமங்கையாழவாரும் மிகுதியாகப் பாடியுளளனர். இவறறை இக்காலத்தார் விருத்த வகையாகவே கருதிக் கொள்ளுகின்றனர்.

அணியிலக்கண நூலாரும் வடமொழி மரபினைத் தழுவிச் செய்யுளை வைதருப்பம், கௌடம், பாஞ்சாலம் எனனும் நெறிபற்றி வகைப்படுத்திக் கூறுவர். நூனமுறை பற்றி முத்தகச் செய்யுள், குளகச் செய்யுள் எனவும், தொகை நிலைச் செய்யுள், தொடர் நிலைச் செய்யுள் எனவும் வகை செய்து கூறுவர். தொடர்நிலைச் செய்யுளைச் சொற்றொடர் நிலை, பொருட்டொடர் நிலை என இரணடாகப் பகுப்பர். சொற்றொடர் நிலை என்பது அநதாதி யாகத் தொடருவது பொருட்டொடர் நிலையைச் சிறுகாப்பியம், பெருங்காப்பியம் என இரண்டாக வகுத்துக் கூறுவர்.

இடைக்காலத்தில் தோன்றிய பாட்டியல் என்னும் புதுவகை இலக்கண நூல்கள் யாப்பியல், அணியியல நோககினறிப் பாடலுக்கும் பாடலைப் பெறும தலைவர்க்கும் ஒருவகையான இயைபு கூறும் முறை மையில், பாட்டுடைத் தலைவனை அடிப்படையாகக கொண்ட சில பாடல (இலக்கிய) வகைகளைக கூறுகின்றன. அவையாவன, பிள்ளைத்தமிழ், கலம் பகம், உலா, தூது, மடல், கோவை, பரணி, அம்மானை, சாழல், தசாங்கம், ஊசல், சின்னப்பூ, வளமடல முதலியவையாம். அவற்றைப் பிரபந்தங்கள என்றும், அவை 96 வகைப்படும் என்றும் கூறுவர். அதற்கு மேலும் சிலவுள.

பவணந்தியார், மேற்கூறியவற்றையெல்லாம அடக்கி உயிர்க்குப் பல்வகைத் தாதுக்களால் அமைந்த உடலைப் போலச் சொற்களால் பொருளுக்கு இடமாக முத்தமிழ் உணர்வும் நால்வகைப் பொருள றிவும் நிறைந்த சால்புடையோரால அணிநலம் விளங்கச் செய்யப்படுவது செயுள் என்பாா. ச.பா.

***செயச்சந்திரன்***: இந்தியாவில் ஆட்சி நடத்திய மரபினருள் ககடவாலர் குறிப்பிடத்தக்கவர்கள். கி.பி. 11, 12.ஆம் நூற்றண்டுகளில் வாரணாசி (Benares), கன்னோசிப் (Kanauj) பகுதிகளில் இவர்தம் ஆட்சி நிலவியது. இம்மன்னர்களுள சிறப்பு வாய்ந்த செயச்சந்திரன் (கி.பி. 1170-1193), சிரி அர்சா (Sri Harsha) என்னும் மகாகவியை ஆதரித்தான். செயச சந்திரன் தெற்குப் பீகார் பகுதியில், சேனர்களைக் கட்டுப்படுத்தித் தன்ஆட்சியை நிலைபெறச் செய்து கொண்டான். சாம்பர் (Sambhar), ஆசுமீரப் (Ajmer) பகுதிகளை ஆட்சிபுரிந்து வந்த சகமான குல மன்னன் மூனறாம் பிருதிவிராசன் (கி.பி. 1177-1192) தான் இளவரசனாக இருந்தபோது, செயச்சந்திர ககடவா லனின் மகளைக் கடத்திக் கொண்டு சென்றுவிட்டா னெனக் கூறப்படுகிறது. (கி.பி.1195). சகமான மன்ன னுக்குப் பகையாகச் செயச்சந்திரன் சந்தேலர்களுடன் கூட்டுறவு கொண்டான். இந்தியாவில் படையெடுத்த கோரி முகமது கி.பி.1193-இல் சந்துவார் (Chandwar) என்னுமிடத்தில் முறியடித்த பிறகு ககடவால மரபு ஆட்சி பெரும்பாலும் முடிவுற்றது. செயச்சந்திரன் வைதிக சமயத்தை ஆதரித்த போதிலும் பௌத்த சமயத்திலும் விருப்பம் கொணடிருநதான். தெ.பா

***செயப்பிரகாசு நாராயணன்*** (1902-1979): இவர் 1902-ஆம் ஆண்டு பீகாரில் உள்ள சிதாப்-

தியாராவில் பிறந்தார். இவர்தம் தந்தை அர்சூத் பால்; தாய் பூல்ராணி. இவர் தொடக்கக் கல்வியைச சிதாப்தியாராவில முடித்தார. பாட்னாக் கல்லூரிப் பள்ளியில் உயர்நிலைக் கல்வியைத் தொடர்ந்தார். அப்பொழுது இவர் தங்கியிருந்த சரசுவதிபவன் விடுதி இவர்தம் தேசிய உணர்வை வளர்த்தது. உயர்நிலைக் கல்வியை முடித்தபின பாட்னாக் கலலூரியில் அறி வியலை விருப்பப்பாடமாகப் பயினறார். இவர்கல்லூ ரியில படிக்கும்பொழுது இவர்தம் 19-ஆம் வயதில் பீகார் காங்கிரசுத தலைவரான பிரசு கிசோர் பாபு வின் மகள் பிரபாவதியை மணந்தார்.

செயப்பிரகாசு நாராயணன் காந்தியடிகளின் ஒத்துழையாமை இயக்கத்தில சேர்ந்து தம் படிப்பை இடையில் நிறுத்திக் கலலூரியை விட்டு வெளியேறி னார். ஒத்துழையாமை இயக்கம் முடிநதபின் தொடங்கப் பெற்ற வித்தியா பீடத்தில் சேர்நது படித்தார்.

செயப்பிரகாசு 1922-ஆம் ஆணடு மேற்படிப்பிற் காக அமெரிக்கா சென்றார். அங்கு இவர் கலிபோர் னியாப்பல்கலைக் கழகம்,அயோவாப்பல்கலைக்கழகம் ஆகியவற்றில் ஒன்றரை ஆணடுகளும், சிகாகோவில் இரண்டரை ஆணடுகளும் பயின்றார். பின்னர், விசு கான்சின் மாநிலத்தில் உள்ள பல்கலைக் கழகத்தில் சேர்நதார். அஙகு இவருக்குப் பொதுவுடைமைக் கோட்பாடுகளை அறிந்துகொள்ளும் வாய்ப்புக் கிட்டியது. அக்கோட்பாடுகளால் ஈர்க்கப்பெற்ற இவர் அறிவியல் பாடத்தைத் துறந்து, சமூகவியல் பொருளாதாரம் ஆகிய பாடங்களைக் கற்கத் தொடங்கினார். பினனர், ஓகியோ பலகலைக் கழகத்தில் சேர்ந்து பி.ஏ.பட்டம் பெற்றார். அது வரை தம் உழைப்பால் பொருள் ஈட்டிக் கல்வி பயின்ற இவருக்கு அரசு உதவிப்பணம் கிடைத்தது. அதைக் கொண்டு ஆசிரியப் பயிற்சி பெற்றார். பயிற்சி முடிந்ததும் இவருக்கு உதவிப் பேராசிரியர் வேலை கிடைத்தது. அதிலிருந்துகொண்டே சமூக வியல் பாடத்தில எம்.ஏ.பட்டம் பெற்றார். எம்.ஏ. தேர்வில் இவர் எழுதிய 'சமுதாய பேதம்' என்னும் ஆய்வேடுஎவ்லோராலும் பாராட்டப்பெற்றது. இவர் 1929-ஆம் ஆணடு இந்தியாவிறகுத் திரும்பினார்.

செய்ப்பிரகாசு இந்தியா திரும்பி வந்தவுடன் அப் பொழுது காங்கிரசுத் தலைவராக இருநத சவகர் லால் நேரு இவரை அனைத்திந்தியக் காங் கிரசின் தொழிலாளர் பிரிவுக்குச செயலாளராக நியமித்தார். இவர் 1930-ஆம் ஆண்டு சத்தியாக் கிரகப் போராட்டத்தில் கலந்து கொண்டு ஆறு மாதம் சிறைப்பட்டார். விடுதலையானதும், காங் கிரசின் செயலாளர் பதவி இவரை நாடிவந்தது சிறிது காலத்தில் இவரைக் கைது செய்ய ஆங்கில அரசு உத்தரவிட்டது. சிறையில் செயலற்றிருப்பதை விரும்பாத இவர், ஓராண்டுக் காலம் தலைமறை வாகச் செயற்பட்டார். எனினும் 1932-ஆம் ஆண்டு சென்னையில் இவர் கைது செய்யப்பட்டு நாசிக்குச் சிறையில் அடைக்கப்பட்டார். சிறையில் நரேநதிர தேவு, அசோக் மேத்தா, அச்சுதபட்டவர்த்தன் முத லியோருடன் கலந்து திட்டமிட்டுக் காங்கிரசு கட்சிக் குளளேயே காஙகிரசு சமநிலைச் சமுதாயக் கட்சியை (Congress Socialist Party) நிறுவத் தீர்மானித் தார். இவர் 1934-ஆம்ஆண்டு சிறையிலிருந்து விடுவிக் கப்பட்டதும் காங்கிரசு சமநிலைச் சமுதாயக் கட்சி என்னும் பிரிவைத் தொடஙகினார். பலரது எதிர்ப்பு களுக்கிடையில்தமது அயராத உழைப்பால் கட்சியின வலிமையைப் பெருக்கினார்.

காங்கிரசுக் கட்சி 1937-ஆம் ஆண்டு நடை பெற்ற தேர்தலில் பல மாநிலங்களில் வெற்றி பெறி னும் காங்கிரசுத் தொணடர்கள சிறையிலிருந்து விடு தலை செய்யப்படவில்லை. எனவே, தொணடர் களை விடுதலை செய்ய வேண்டும் அல்லது அமைச் சரவை பதவி விலக வேணடும் என முழங்கினார் அதைத் தொடர்ந்து தொணடர்கள் விடுவிக்கப்பட்ட னர்.

இரண்டாம் உலகபபோர் 1939-ஆம் ஆண்டு தொடங்கியது. அதில இந்தியா பஙகேறகக் கூடாது எனச் செயப்பிரகாசு அறிக்கை வெளியிட்டார். சாம் செட்பூரில நடைபெற்ற தொழிலாளர் போராட்டத் தின் போது (1940) இவர் ஆற்றிய உரையைத தொடர்ந்து கைது செய்யப்பட்டார். ஒன்பது மாத சிறைவாசத்திற்குப் பின் விடுவிக்கப்பட்ட இவர் 1941-இல் மீண்டும் கைது செய்யப்பட்டு அசாரிபாகுச (Hazaribhagh) சிறையில வைக்கபபட்டார். அடுத்து, 1942-இல தொடங்கப்பெறற 'வெளளையனே வெளி யேறு' இயக்கத்தைத் தொடர்ந்து காந்தியடிகள உட் படப் பெருந்தலைவர்கள்அனைவரும் கைது செய்யப் பட்டனர். காங்கிரசு சட்டப்புறம்பான கட்சி என அறிவிககப்பட்டது. இதனால, மக்களிடம் விடுதலை உணர்வு மங்கிவிடாமல காக்கத் தாம் வெளியே இருப்பது தேவை என உணர்ந்து 1942-ஆம் ஆணடு சிறையிலிருந்து தப்பினார். அசாரிபாகிலிருந்து நேபாளததிற்குச் சென்று சுதந்திர சேனா என்ற பெயரில் ஒரு 'கொரில்லா' இயக்கத்தை தொடங்கிப் பயிற்சியளித்தார். இதை அறிந்த ஆங்கில அரசு இவ ரைக் கைது செய்து ஒப்படைக்கும்படி 'நேபாள அர சைக் கேட்டுக் கொண்டது. அதன்படி நேபாள அரசு இவரைக் கைது செய்து சிறையில் வைத்திருந்தது.

எனினும், இவரால் பயிற்றுவிக்கப்பட்ட கொரில்லாப் படையினர் திடீர்த் தாக்குதலால் இவரை விடுவித்து வங்காளத்திற்குக் கொண்டு வந்தனர். பின்னர் அங்கிருந்து மாறுவேடங்களில் பல இடங்களுக்கும் சென்று தொண்டர்களைச்சந்தித்தார். இவர் 1944-ஆம் ஆண்டு அமிர்தசரசில் மீண்டும் கைது செய்யப்பட்டு 1946-இல் விடுவிக்கப்பட்டார்.

அச்சமயத்தில் 'முசுலீம்லீக்' கட்சியின் தலைவர் முகம்மது அலி சின்னா (Jinnah) முசுலீம்களுக்குத் தனிநாடு வேண்டுமெனக் கேட்டார். இதில் காந்தியடிகள் முதலானோருக்கு உடன்பாடு இல்லை. எனினும் வேறு வழியின்றி காங்கிரசு அதற்கு இணங்கியது. அதை எதிர்த்துச் செயபிரகாசுநாராயணன் 1947-ஆம் ஆண்டுத் தொடக்கத்தில் காங்கிரசுக் கட்சியிலிருந்து, தமது சமநிலைச் சமுதாயக்கட்சியைப்(Socialist Part) பிரித்துத் தனிக் கட்சி தொடங்கினார்.

பின்னர் 1951-ஆம் ஆண்டு வினோபாவின் பூதான இயக்கம் தொடங்கப்பட்டது. அதற்குத் தமது மனப்பூர்வமான ஆதரவைத் தெரிவித்தார். செயப்பிரகாசு 1954-ஆம் ஆண்டு அரசியலிலிருந்து விலகிப் பூதான இயக்கத்திற்காகத் தம் வாழ்வை உரிமையாக்குவதாக அறிவித்தார்.

இந்திய அரசு, நெருக்கடி நிலையை 1975-இல் அறிவித்தது. அதன்படி செயப்பிரகாசு உட்படப் பல தலைவர்கள் கைது செய்யப்பட்டனர். சிறையில் இருந்த போது இவர்தம் முயற்சியின் பயனாக எதிர்க்கட்சிகள் எல்லாம் இணைந்து 'சனதா' என்னும் புதிய கட்சியைத் தொடங்கின.

இவர் தம்உடல்நிலை மோசமானதைத் தொடர்ந்து 1975 நவம்பரில் இவர்விடுதலை செய்யப்பட்டார். பின்னர்ச் சிறுநீரகக் கோளாறு காரணமாக இவர் 1979-ஆம் ஆண்டு இயற்கை எய்தினார். நா.செ.

**செயர் (ZAIRE):** காண்க: காங்கோ (பெல்சியம்).

**செயராம் ரெட்டியார், ச. (1904-1985):** இவர் இராமநாதபுரம் மாவட்டம் விருதுநகருக்கு அண்மையில் உள்ள சத்திரரெட்டிய பட்டியில் 1904-இல் பிறந்தார். இவர் தந்தையார் சங்கணா ரெட்டியார்; தாயார் சொக்கம்மாள். இவர் மனைவி பெயர் நாகம்மாள். இவருக்கு ஒரு தங்கையும், ஆண் மக்கள் மூவரும் ஒரு மகளும் உண்டு.

இவர் தொடக்கக் கல்வியைச் சொந்தக் கிராமத்தில் முடித்தபின், சென்னைக் கிறித்தவக் கல்லூரியில்



செயராம் செட்டியார்

பி.ஏ.யும், திருச்சி புனித சூசையப்பர் கல்லூரியில் எம்.ஏ. யும் படித்தார். சட்டக் கல்லூரியில் சேர்ந்த இவர் இடையில் தமது படிப்பை நிறுத்திக் கொண்டு அரசியற் பொதுவாழ்வில் ஈடுபட்டார். சர்.ஆர்.கே. சண்முகம் செட்டியார், சர்.பி.டி. இராசன் முதலியோர் தொடர்பால் நீதிக் கட்சியில் (Justice Party) சேர்ந்தார். அதன்சார்பில் 1930-33 வரை இராமநாதபுரம் மாவட்டக் கழக நியமன உறுப்பினரானார். பின்னர்க் காங்கிரசுப் பேரியக்கத்தில் சேர்ந்து 1935 முதல் 1940 வரை அதன் உறுப்பினராகவும், 1941-இல் தலைவராகவும் பணியாற்றியுள்ளார். காந்தியடிகளின் தலைமையில் நடைபெற்ற தனிமனிதர் சத்தியாக்கிரகத்தில் ஈடுபட்டு 6 மாதங்கள் சிறைத் தண்டனை பெற்றார்.

சுதந்திரப் போராட்டப் பெருவேள்வியில் முழுமையாக ஈடுபட்ட இவர் 1952-57 ஆண்டுகளில் தமிழ்நாடு சட்டமன்றப் பேரவை உறுப்பினராகவும். 1946-52, 1962-68, 1968-1974 வரை தமிழ்நாடு சட்டமன்றமேலவை உறுப்பினராகவும் விளங்கினார். சுதந்திரப் போரில் ஈடுபட்ட தொண்டர்களுக்குப் பொருளுதவியும் செய்துள்ளார். பெருந்தலைவர் காமராசருக்கு உறுதுணையாகப் பல்லாண்டுகள் அவருடன் தொண்டாற்றியவர் இவர். கிராமப்புற உழவர்களுக்கு ஒழுங்குமுறை விற்பனைக் கூடங்கள் அமைத்து உதவினார். வேலை இன்றி உழன்ற இளைஞர்களுக்கும் முடிந்தவரை உதவி செய்துள்ளார்.

இவர் வேளாண்மையிலும் பஞ்சு வாணிகத்திலும் கவனம் செலுத்தித் தமது பொது வாழ்வில் நம்பிக்

கையுடனும் தூய்மையுடனும் நடந்து கொண்டார். சுற்றுப்புறக் கிராமமக்களுக்கு நம்பிக்கை ஒளியாகவும் விளங்கினார் இவர் 985-இல் காலமானார். சு.பெ.

**செயல்-எதிர் செயல் மாதிரி.** கல்வி உளவியலில் பயன்படுத்தப்படும் செயல்-எதிர்செயல் மாதிரி (Interaction Model) என்னும் கற்பித்தற் கொள்கையினை உருவாக்கியவர் நெடு பிளாண்டர்சு (Ned Flanders) என்பவர். வகுப்பறையில் ஆசிரியருக்கும் மாணவருக்கும் இடையே நிகழும் பேச்சுகளைப பத்து வகைகளாகப் பிரித்து, ஒவ்வொரு மூன்று நொடிகளிலும் எவ்வகையான பேசும் செயல், வகுப்பறையில் நிகழ்கிறது எனக் கணக்கிடப்படுகிறது.

வகுப்பறைக் கற்பித்தலில் ஆசிரியா பேசுவதும் மாணவர் பதிலுரைப்பதும். ஆசிரியர் கேள்வி கேட்பதும், மாணவர் விளக்கம் தருவதும்உண்டு. இதை அடிப்படையாக வைத்து நெடு பிளாணடர்சு எனனும் கல்வி உளவியலறிஞர், வகுப்பறைப் பேச்சினை ஆசிரியர் பேசசு (Teacher Talk), மாணவர் பேசசு (Student Talk) என இரணடாகப் பிரித்தார். வகுப்பறையில் ஆசிரியர் பேச்சு ஏழு வகைப்படும்.

1. **உணர்வுகளை ஏற்றுக்கொள்ளுதல்.** வகுப்பறையில் ஆசிரியா மாணவாகளின உணர்வுகளை அப்படியே ஏற்றுக்கொள்ளுதல (Accepts Feelings) ஆசிரியர் பேச்சுக்கு அடிப்படையாக அமைகிறது. மாணவர்களின் உணர்வு எதிருணர்வாகவோ (negative feeling), நேருணர்வாகவோ (Positive feeling) இருக்கலாம்.

2. **ஊக்கப்படுத்தல்:** வகுப்பறையில் மாணவர்களின செயல அலலது நடத்தையினை ஆசிரியர் பாராட்டுதல் அல்லது ஊக்கப்படுத்துதல் (Praises or encourages) வழியாகவும் வகுப்பு நடைபெறுகிறது. பதற்ற நிலையைத் தணிக்க ஆசிரியா யாரையும் புண்படுத்தாமல் சொல்லும் சிரிப்புத் துணுககுகள் (Jokes), தலையை ஆட்டுதல், 'உம் .. உம்' எனக் கூறுதல், 'மேலே சொலலுக' எனக் கூறுதல ஆகியனவும் பாராட்டுதல் அலலது ஊக்கப்படுத்துதலில அடங்கும்.

3. **ஏற்றலும் பயன்படுத்தலும்:** மாணவர் கூறிய கருத்தினைப் பயன்படுத்தி, அதைக் கூறவோ, அக கருததைப் பெருககிச் சொல்லவோ, விவரித்துச் சொல்லவோ நேருமபோது (Accepts or uses ideas of Student) ஆசிரியர் வகுப்பறையில பேசுவார். அவ்வாறு விளக்கும் போது ஆசிரியர் தமது கருத்தினையே மிகுதியாகப் பேசினால், ஐந்தாவது வகையான விரிவுரைப்பேச்சுக்கு ஆசிரியர் போய்விடுவார்.

4. **கேள்வி கேட்டல்:** பாடப் பொருள அல்லது பாடச் செயல் குறித்து, மாணவர் பதில் கூற வேண்டும் என்ற நோக்கத்தோடு கேள்வி எழுப்பும்போது (Asks questions) ஆசிரியர் பேசுவார்.

5. **விரிவுரை செய்தல்:** பாடப்பொருள் அல்லது பாடச் செயல் குறித்துத் தாம் அறிநத உணமைகளையும் செய்திகளையும் கருத்துகளையும் சொற்பொழிவாக்கி, உணர்ச்சிக் குறிப்பு வினாவோடு (Rhetorical question) விரிவாக எடுத்துரைத்து (Lectures) ஆசிரியர் பேசுவார்.

6. **கட்டளையிடுதல்:** மாணவா கேட்டுச் செய்ய வேண்டியவை குறிதது்ப் பணித்தல், கட்டளையிடுதல், உத்தரவிடுதல் (Gives directions) போன்றவற்றை வகுப்பறையில் ஆசிரியா செய்யுமபோது பேசுவார.

7. **நியாயப்படுத்தல்:** மாணவரின தவறான போக்கை மாறறிச சரியான நடத்தைககு உட்படுத்தும்போது குறை கூறிப் பேசுதல (Criticises), தவறான நடத்தையுள்ள மாணவரைக் கணடிகக உரத்த குரலில் கத்துதல, ஒரு குறிபபிட்ட செயலைத் தாம் செய்வதற்கான காரணத்தை விளககுதல் (Justifies Authority), தம்மையே சான்றாகச் சுட்டிக் காட்டிப் பேசுதல் ஆகியவையும் ஆசிரியர் பேச்சில் அடங்கும்.

ஏழு வகையான ஆசிரியர் பேச்சில், உணர்வுகளை ஏற்றுக் கொளளுதல, பாராட்டுதல அல்லது ஊக்கப் படுத்துதல், மாணவர் கருத்தை ஏற்றுப பயன்படுத்துதல், கேள்வி கேட்டல் ஆகியவற்றைச் செய்யுமபோது ஆசிரியர் மாணவர் மேல் மறைமுகமான தாக்கத்தை (Indirect influence) ஏற்படுத்துகிறார எனறும், விரிவுரை செய்தல், கட்டளையிடுதல், குறை கூறுதல் அல்லது நியாயப்படுத்திப் பேசுதல் ஆகியனவறறைச செய்யும்போது ஆசிரியர் மாணவாமேல் நேரடியான தாக்கத்தை (Direct influnce) ஏறபடுத்துகிறார் என்றும் நெடு பிளாண்டர்சு கூறுகிறார்.

வகுப்பறையில் மாணவா பேச்சு (Student Talk) இருவகைப்படும் என நெடு பிளாணடர்சு கூறுகிறார். அவையாவன:

8. **மாணவர் பேச்சு-பதிலுரை:** ஆசிரியருக்குப் பதில் சொலலும் வகையில் (Student talk response) மாணவர்பேசுதல் மாணவர் பதிலுரையாக அமையும். மாணவர் பதிலுரைககு ஆசிரியர் அடிப்படைக் காரணமாக அமைவார்.

9. **பேச்சைத் தொடங்குதல்:** ஆசிரியரின் கேள்விக்குப் பதிலுரைக்கும் வகையில் இல்லாமல்

மாணவரே எழுந்து தம் சொந்தக் கருத்தைக் கூறும் வகையில் (Student talk - Initiation) மாணவர் பேசுகிறார்.

ஆசிரியரும் மாணவரும் பேசாமல் வகுப்பறையில் சில நொடிகள் கழிந்துவிடும். இதைப் பத்தாவது வகையாக நெடு பிளாணடர்சு குறித்துள்ளார்.

10. **அமைதியும் குழப்பமும்:** ஆசிரியர் கேளவி அல்லது விரிவுரை ஏதும் செய்யாமலும், மாணவர் பதில் ஏதும் கூறாமலும், வகுப்பறையில் சிறு கால இடைவெளி (Pauses), குறுகிய நேர அமைதி (Silence) அல்லது சிறு குழப்பம் (Confusion) ஆகியன நிகழ்ந்து, ஆசிரியரும் மாணவரும் பேசிக் கொள்வதும் பார்வையாளருக்குப் புரியாது போய் விடுவதும் வகுப்பறைக் குழப்பமாகக் கருதப்படும்.

வகுப்பறையில் ஆசிரியரின் தாக்கத்தை நெடு பிளாணடர்சு மூன்று விதிகளில் கூறுகிறார். 1) மாணவர்கள ஒரு செயலில் இறங்கிக் கற்கும் சுதந்திரத்தை ஆசிரியர் முதலிலேயே தடுக்கும் போது, மாணவர்கள் ஆசிரியரையே பெரிதும் சார்ந்திருபபர்; அவர்களின கல்விச் சாதனையும் குறையும்; 2) மாணவர்கள் ஒரு செயலில் இறங்கிக கற்கும் சுதந்திரத்தை ஆசிரியர் இறுதியில் தடுத்தாரேயானால், ஆசிரியரை மாணவர் சார்தல் குறைவதில்லை; ஆனால் மாணவரின் கலவிச் - சாதனை பெருகும். 3. மாணவாகள் தாமே பங்கு கொண்டு ஒரு செயலைக் கற்கும் சுதந்திரத்தை ஆசிரியர் முதலிலேயே தநதுவிட்டாரானால், மாணவாகள ஆசிரியரைச் சார்ந்திருப்பதில்லை; மாணவரின் கல்விச் சாதனையும் மிகும் பிளாண்டர்சு விதிகளிலிருந்து ஒரு செயலில மாணவர்கள் பங்கு கொண்டு கற்கும் சுதந்திரத்தை ஆசிரியர் அளித்தால் மாணவர் கற்றல் மிகும் என்பது தெளிவு.

ஓர் ஆசிரியர் வகுப்பறையில் விரிவுரை செய்தல், மிகையாகக் கட்டளையிடுதல், குறை கூறுதல் அலலது தாம் செய்ததை நியாயப் படுத்திப் பேசுதல் (5,6,7, -ஆம் வகைகள்)ஆகியவற்றைச செய்கையில்,மாணவர் பங்கெடுத்துக் கற்கும் சுதந்திரத்தைத் தடுக்கிறார். ஏனெனில், இவறறில் ஆசிரியரே மிகுதியும் பேசுகிறார். மாணவர் பங்கெடுப்புக்கு இடமேயிலலை.

ஓர் ஆசிரியர் வகுப்பறையில் மிகுதியாக மாணவர்களின் உணர்வை ஏற்றுக் கொள்ளுதல், பாராட்டுதல் அல்லது ஊக்கமூட்டுதல், மாணவர்களின் கருத்தைப் பயன்படுத்திப் பேசுதல், வினாக்கள் எழுப்புதல் (1,2, 3,4-ஆம் வகைகள்) ஆகியவற்றைச் செய்கையில, மாணவர் பங்கெடுத்துக் கற்கும் சுதந்திரத்தை ஆசிரியர் மிகுதிப்படுத்துகிறார். இவையனைத்தும்ஒரு நல்லாசிரியரின் வகுப்பறையில் இடம் பெறும; பத்தாம் வகையான அமைதி, கூச்சல் அல்லது குழப்பம் இல்லாது இருக்கும்.

வகுப்பறைக் கற்பித்தலில் சில நிகழச்சிகள் ஒரு முழுச் சுற்றாக (Cycle) ஒழுங்கான படிகளில் (Steps) நடக்க வேண்டும் என்பதைப் பிளாண்டர்சு குறிப்பிடுகிறார். 1. அறிவார்ந்த வேறுபாடு அல்லது சிக்கல் உருவாதல, 2. அச்சிக்கலின் முக்கியமான கூறுகளை அடையாளம் காணல், 3. சிக்கலினுள் இருக்கும் தொடர்புகளைத் (உறவுகளை) தனியாகப் பிரித்தல். 4. செயல் நிகழ்தல்—அதாவது, செய்தி திரட்டுதல், வாய்ப்பாட்டினைப் பயனபடுத்துதல், சிக்கலுக்கான தீர்வினைச் சோதனையாக (Trial) ஒருமுறை செய்து பார்த்தல் போன்றவை. 5. செயல் முன்னேற்றம் மதிப்பீடு மற்றும் சோதித்துப் பார்த்தல். 6. புதிய அறிவினைக் கூடுதலாக உள்ள சிக்கல்களுக்குப் பயன்படுத்திப் பொருளார்நத முறையில் விளக்கம் அளித்தல். இவற்றில் முதலிரண்டு (1-2) படிகளும்சுறறின் முதல் பகுதியாகவும், இறுதியிரணடு (5-6) படிகளும் சுற்றின் கடைசிப் பகுதியாகவும் கருதப்படும்.

கற்பித்தலின் எந்தச் சுற்றிலும் ஆசிரியரின் நேரடியான அல்லது மறைமுகமான தாக்கம் மாணவரின் கற்றலை இரு வகைகளில் பாதிகக்கும். அவை சார்நதிடும் தன்மை (Dependence), சாதனை (Achievement) ஆகும். சார்ந்திடும் தன்மை என்பது ஆசிரியரைத் திருப்திப்படுத்துவதற்காக மாணவர் எடுத்துக் கொளளும் அக்கறையைக் குறிக்கும் எனப் பிளாணடர்சு வரையறுப்பார். சார்ந்திடும் தன்மை பெற்ற மாணவர், சிக்கலைத்தீர்க்க எந்த முறையைப் பயன் படுத்தலாம் என்பதை விடுத்து, ஆசிரியர் எந்த முறையைப் பயன்படுத்தினால் மகிழ்ச்சியடைவார் என்பதில் மிகுந்த கவனம் செலுத்துவார்.

பிளாணடர்சின் கருத்துப்படி, ஆசிரியர் இடைவிடாத நேரடித் தாக்கத்தை மாணவர் மீதுசெலுத்தினால் மாணவரிடம் சார்ந்திடும் தன்மை மிகுதியாகும். சாதனை என்று பிளாண்டர்சு கருதுவது, மாணவர் ஒரு செயலைக் கற்க முற்படுவதற்கு முன் வைக்கப்பட்ட சோதனையில் (Pre-test) பெற்ற மதிப்பெண்ணுக்கும் ஒரு செயலைக் கற்றவுடன் வைக்கப் பட்ட சோதனையில் (Post-test) பெற்ற மதிப்பெண்ணுக்கும் உள்ள வேறுபாடு ஆகும். ஆசிரியரின் நேரடியான தாக்கம் மாணவரின் மதிப்பெணகளைக் குறைக்கும் எனறும், ஆசிரியரின் மறைமுகமான தாக்கம் அவர்களின் மதிப் பெண்களை மிகச் செய்யும் என்றும் பிளாணடர்சு கண்டறிந்துள்ளார். எஸ்.த.

**துணை நூல்கள்:**

**Broudy, H.S. and Palmer; J R.,** Exemplars of Teaching Method, Rand McNally, Chicago, 1965.

**DeCecco, J.P. Crawford, W.R.,** The psychology of Learning and Institution, Prentice-Hall of India, New Delhi, 1977.

*செயல் சார்புக் கோளாறுகள்:* உளக் கோளாறுகளை அதன் அடிப்படைக் காரணங்களை வைத்துப் பாகுபாடு செய்யும்போது இருவகையாகப் பிரிககலாம். முதலாவது உளசசெயல் சார்புககோளாறுகள் (Functional Disorders).இதில் உறுபபுசசார்நத காரணங்களைக் காட்ட இயலாது. இவை உள்ளம பாதிப்பதனால் தோன்றும் கோளாறுகள் ஆகும். உள்ளசசெயல சார்நத கோளாறுகளைப் பறறி சே. ஆர். இசுரேன்சு என்ற உளவியலார் தம் பிறழவு உளவியல் எனும் நூலில் உளச் செயல் சார்நத கோளாறுகள எனபன சமூக வயமாதல் சரியில்லாமற போவதாலும் மற்றஉளச் சமூகக் காரணஙகளாலும உள்ளம் சார்ந்து உணடாகும் கோளாறு எனறு கூறுகிறார். சேம்சுதவா(James Tower)தம் உளவியல அகராதியில் இதனை உறுப்பு அமைப்பில் மாறுபாடோ நோயோ இலலாதது எனறும், உறுப்பு அமைப்புப் பாதிப்புகளால் (Structural Damage) உண்டாகும் நோய்களுககு வேறுபட்டது எனறும் வரையறுககிறார். இவவகையான உளச்செயல சார்புடைய கோளாறுகளை உளளம் சார்ந்து (Psychogenic) உணடாகும் கோளாறுகள் என்று குறிப்பிடுகின்றனர்.

உளக் கோளாறுகளில் இரண்டாம் வகையைச் சேர்நத உறுப்புப் பாதிப்பால உண்டாகும் கோளாறுகள் (Organic Disorders) குறிப்பாக மூளையின் அமைப்பிலோ நாளமில்லாச் சுரப்பிகளின் செயல் நிலை பாதிப்பதாலோ உண்டாகின்றன. இந்த உறுப்புகளின் அமைப்பில் அலலது செயல நிலையில் மாறுபாடுகளஉணடாவதனால்அவை உளககோளாறுகளை உண்டாக்குகின்றன. எடுத்துக்காட்டாக மூளையில அடிபடுவதனால் உளககோளாறுகள் உணடாலாம்.

உளளம் பாதிப்புக்கு உட்படுவதனால் உணடாகும் போராட்டங்கள், சிக்கல்கள, சமூகச் சம்பந்தப்பட்ட பாதிப்புகள் ஆகியவை உள்ளம் சார்ந்த கோளாறுகளை உண்டாக்குகின்றன. சில வேளைகளில் உளச் செயல் தொடர்புடைய காரணங்களும் உறுப்புப் பாதிப்புத் தொடர்புடைய காரணங்களும் இணைந்து உளக்கோளாறுகள் உண்டாகலாம். இருப்பினும், உள நோய்களையும் உளக கோளாறுகளையும் வகைப் படுத்தும்போது உளச்செயல் தொடர்புடைய கோளாறுகள் என்றும், உறுப்புப் பாதிப்புத் தொடர் புடைய கோளாறுகள் என்றும் வகைப்படுத்துவது வழக்கத்தில் உள்ளது.

செயல் தொடாபுடைய கோளாறுகளில் எல்லா வகையான நடத்தை மாறுபாட்டுக் கோளாறுகளும் அடங்கும். இதில் மூன்று வகை உளளன. அவை நடத்தைக கோளாறுகள, நரம்புத் தளர்சசிக் (Neurotic) கோளாறுகள, உளப்பிறழ்வுக் கோளாறுகள் (Psychosis) என்பன. நடதைக் கோளாறுகளுள் சில: நகங்கடித்தல், விரல் சூப்புதல, ஊர் சுற்றுதல், பள்ளிக்குச் செலல மறுத்தல, அடம் பிடித்தல, தெற்றுவாய், தூக்கத்தில் நடத்தல், திருடுதல், வீட்டைவிட்டு வெளியேறுதல் முதலியவையும்,சிறுவர்களுக்கு உணடாகும் பீதி (Phobia), அச்சநோய் (Anxiety), மீச்சோாவு (Depression) முதலியனவும் ஆம். நரம்புத தளர்ச்சிக் கோளாறுகளை (Neurosis) எளிய மனககோளாறுகள (Mild Mental Orders) என்று குறுப்பிடுகின்றனர். இதில் அச்சநோய், பிடிபபு நோய் (Obsession) மூர்ச்சை நோய் (Hysteria), பீதி, மீசசோர்பு, நரமபுத் தளர்சசி (Neurotic Depression) என்பன அடங்கும். உளப்பிறழ்வு நோய் (Psychosis) என்பதில் உளச சிதைவு (Schizophrenia) நோய் மிகுதியாகக காணப்படுகிறது. இதில் பல உட்பிரிவுகள உள்ளன. அவற்றுள் முக்கியமானவை எளிய உளச் சிதைவு, சந்தேக உளநோய் (Paranoid),மீத்தளர்ச்சி விறைப்பு (Catatoria) என்பன. உளச்சிதைவு நோயில இரணடாம் வகை மீசசோர்வு (Depression), மிகை ஆற்றல் (Mania), எளிதில் வகைபடாக் கலப்பு உளச்சிதைவு நோய் ஆகியவை அடஙகும். இவற்றைக கடுமையான (Major) உளககோளாறுகள எனக் குறிப்பிடுகின்றனா.

இவ்வகை நோய்கள் யாவும் உறுப்புப் பாதிப்பினால் ஏற்படுவன அல்ல. எனவே இவற்றைச் செயல்சார்புக் கோளாறுகள என்று குறிப்பிட்டு, உறுப்புப் பாதிப்பினால் உண்டாகும் நோய்களை உறுப்பு சார் (Organic) கோளாறு எனக் குறிப்பிடுகின்றனர்.

நடத்தைக் கோளாறுகளின் தன்மைகளை அதன் பெயரிலிருந்தே கணடுகொள்ளலாம். இவை பெரும் பாலும் சிறுவர் சிறுமியரிடையே பரவலாகக் காணப் படுகின்றன.

**நரம்புத் தளர்ச்சிக் கோளாறுகள்:** அச்ச உணர்வு நோய் என்பது மிகையான அளவில் அதாவது

பொருத்தமற்ற அளவில் சூழ்நிலைக்கோ பொருள களுக்கோ உயிரினங்களுக்கோ அச்ச உணர்வை உணரச் செய்வதோ வெளிப்படுத்துவதோ ஆகும். இவர்கள் இனம்புரியாத அச்ச உணர்வுடன குறிப் பிட்ட ஏதாவது ஒன்றுக்கு அச்சத்தைக் காட்டுபவா களாக இருப்பார்கள. இவர்கள் படபடப்பு, பதற்றம், பயம், அமைதியின்மை, விறைப்புத்தன்மை (Tension) முதலிய நோய்க்குறிகளை வெளிப்படுத்துவார்கள்.

பீடிப்பு நோய் உள்ளவர்கள ஏதாவது ஒரு எண ணம் உள்ளத்தில் எழுவதாலோ ஒரு செயலைத் திரும்பத் திரும்பச செய்வதாலோ, செய்த செயல் முடிவுற்றுவிட்டதா என்ற ஐயம் அல்லது சரியாகச் செய்துவிட்டோமா என்ற ஐயம் அல்லது எதையா வது திரும்பத திரும்பச் செய்யவேணடும் அல்லது தொடவேணடும் என்ற எணணம் ஆகியவற்றால் பீடிக்கப்பட்டவர்களாக இருப்பார்கள. திரும்பத் திரும்ப ஒன்றையே சரிபார்த்தல், பொருள்களைக் குறிப்பிட்ட இடத்தில் வைத்தல, அளவுக்கு அதிக மாகச் சுத்தமாக இருக்க முயலுதல் முதலியன இதன் அறிகுறிகளாக இருக்கும்.

பீதி வயப்பட்டவர்கள் தேவைக்கும் மிகுதியான அளவில் ஓர் உயிர், பொருள், இடம் அல்லது செயல் ஆகியவற்றுக்கு மிகை அசசம்கொண்டு இருப் பார்கள். குறிப்பிட்ட இடமோ பொருளோ உயிரியோ இவர்களுக்கு வெகுதொலைவில் இருந்தால் இவா கள இயல்பாக இருப்பார்கள்.

மூர்ச்சை நோய் (Hysteria) என்பது பெண்களி டம் மிகையாகவும், ஆண்களிடம் சிறிதளவும் காணப் படுகிறது. மூர்ச்சை நோயில் பலவகை உள்ளன. இதன குணங்களை உடல்உறுப்புச் செயல இழப்பது (Functional Paralisis), மயக்கம் அடைவது, பேய் பிடித்து ஆடுவது, ஆளுமைப் பிளவு(Split Personality) போன்றவற்றில் அறிந்து கொள்ளலாம்.

மீச்சோர்பு நரம்புத்தளர்ச்சி என்பது மிகையான சோர்வு உணர்வு, வாழ்க்கையில் பிடிப்பு இல்லாமல் இருப்பது, தன்னம்பிக்கை இழப்பு, குற்றவுணர்வு, ஊக்கமின்மை ஆகியவற்றைக் கொண்டதாகும்.

**உளச்சிதைவு நோய்கள்:** உளச்சிதைவு நோய்களுள் ஒன்று எளியவகை. அதன் அறிகுறிகள் சுமார 18 வயது முதலே வெளிப்படத் தொடங்கும். இந்நோயி னர் பிறா தொடர்பில்லாமல் தனிமையில இருப்பர். உள்நோக்கிய சிந்தனை யுடையவராய் தன்போக்கும் சமூகவயமாகாமலும் கற்பது பாதிக் கப்பட்டும் இருப்பார்கள. சந்தேக நோய் பிடித்த வர்களாய், யாரிடமும் நம்பிக்கையின்றியும், எதற் கெடுத்தாலும சந்தேகப்படுபவர்களாகவும் பிலலி சூனியம், மந்திரம் வைத்துக் கெடுத்தல் முதலிய வற்றில் மிக்க நம்பிக்கை உளளவர்களாகவும் இருப் பார்கள். இவர்கள், மற்றவர்கள் தங்களைக் கட்டுப்படுத்துவதாகவும், ஏசுவதாகவும், குறை கூறுவதாகவும், கெடுக்க முயலுவதாகவும் நம்பித தங்களைப் பாதுகாத்துககொளவதில் தீவிரமாக இருப்பார்கள. மேலும், மற்றவர்கள் தமக்கு நஞ்சூட்டுவதாசவும் சதி செய்கிறார்கள் என்ற எண்ணத்தால் பெருமளவில் பாதிக்கபட்டும் காணப் படுவர். எபபீனியா என்ற நோய்வாய்ப்பட்டவர்கள் தங்கள் சமூகத் தொடர்புகளைக குறைத்துக் கொண்டு தம்வயப்பட்டவர்களாக தமக்குத்தாமே சிரித்துக்கொண்டும், குடும்பம் அல்லது வெளியுலகில் ஈடுபாடு இல்லாதவர்களாகவும் இருப்பார்கள. இவர் கள். தாஙகள அடைந்த பெரும்பாலான திறமை களை இழநது காணப்படுவார்கள. படிப்பில் மந்தப் போக்குக காணப்பட்டுப் படிபபையே விட்டுவிடுவா கள்.

மீச்சோர்வு நோய் கொணடவர்கள் எதிலும் பற்றுதலின்றியும், உடற் சோர்வும், மனசசோர்வும் கொண்டு எநதக் காரியததைச் செய்வதற்கும் ஆர் வமும், ஆற்றலும் இல்லாமல் வெறுப்புணர்ச்சி மிகுநது தற்கொலை எண்ணங்களைக் கொணடவர்களாகவும் இருப்பார்கள். இவர்கள, தாம் மற்றவர்களுக்குச் சுமையாக இருப்பதாக எணணுவார்கள், தம்மைப பயனற்றவாகள, செயல திறமையற்றவர்கள என்று எணணுவதோடு குற்ற மனப்பானமையையும் கொண டிருப்பர். இவர்கள எளிதில் அழுதுவிடுவார்கள். பெருங்கவலை வயப்பட்டவாகளாக வாழ்க்கையில் பற்றறறுக் காணபபடுவார்கள்.

மிகையாறறல் (Mania) நோயினால் பாதிக்கப் பட்டவர்கள எளிதில கோபமும் எரிச்சலும் அடைப வர்களாகவும் மிகுதியாக அலைநது கொண்டும் இரவு பகலாக ஏதோ ஒரு வேலை அல்லது செயலில் ஈடு பட்டுக் கொணடும், மிக்க அளவில மகிழ்ச்சியாக இருநதுகொணடும், பலமாகப் பேசிச் சிரித்துக கொணடும் இருப்பார்கள் இவர்கள பல திட்டங களைத் தீட்டுவார்கள். தம்மிடம் பெரும் ஆற்றல் இருப்பதாகவும், தம்மால எதையும் செய்யமுடியும் என்றும் நம்பி இருப்பார்கள. இவர்கள் தங்களுக்குப் பெரிய அரசியலவாதிகளை அல்லது பெரும்புள்ளி களைத் தெரியும் என்று மார் தட்டிககொணடு செருக குடன் இருப்பார்கள்.

மேற்கண்டவை யாவும் செயல் சார்புடைய கோளாறுகள. இவற்றைக குணப்படுத்த மருந்தையும்

உள மருத்துவ முறைகளையும் கையாண்டு வரு கின்றனர். கே.ஆர்.

*செயல்திட்ட முறை* தலை, கை, இதயம் இவற்றை இணைத்துச் செயறபடத் தக்க கல்வியை இன்றைய சமுதாயம வரவேறகிறது. வினை செயல வகையைப் படித்தறிந்தால் மட்டும் போதாது; அதன்படி நினறு பயன்பெறவும்வேணடும். இத்தகைய வழிமுறையைக் காட்டுகின்ற கல்வி முறையே உடல, உள்ளம், உயிர்ப்பு ஆகிய யாவற்றையும் வளப்படுத்தி வாழ்வாஙகு வாழத் துணைபுரிகிறது. அத்தகைய முறை செயல் திட்ட முறை எனபபடும்.

இந்தியக் கல்வியில் பழங்காலக் குரு குல முறை யில் கூட மாணவர்கள் ஆசிரியர் வீட்டிலேயே தஙகி அவர் சொறபடி கேட்டு நடந்து வாழக்கை வாழும பாங்கிலேயே அறிவையும் பெறறனர். அப்பொழுதும கல்வியில செயல்திறனே முனனோடியாக விளங் கிற்று. எனினும் அறிவைப் பெறுதல், உளளத்தைப் பணபடுத்தல் ஆகியவையும் பெறப்பட்டன. ஆனால கற்கும் மாணவர்கள், எதிர்ப்படும் பலதரப்பட்ட வாழ்க்கைச் சூழநிலைகளிலிருந்து தஙகளுக்குத் தேவையானவற்றைத் தேர்ந்தெடுக்க வேண்டியிருந தது. பிற்காலத்தில் கல்விக்கெனத் தனி இலலங்கள அமைத்தபோது அறிவு பெறுதலையே முதன்மை யாகக் கொண்டதால் படிததல, எழுதுதல், கணக்கு என்ற மூனறு திறனகளைப் (Reading, Writing and Arithemetic) பெறுவதில் மட்டுமே மாணவர்கள குறியாயிருந்தனர். இது இங்கு மட்டுமன்றி மேலை நாட்டிலும் கல்வியின நோககமாயிருந்தது. பிரெஞ்சு நாட்டு அறிஞர் ரூன் சேக்கசு உரூசோதம், எமிலி என்ற நூலில மூன்றாம் பகுதியில இயற்கைக் கல்வி பற்றி விரிவாக எடுத்துரைத்து, எவ்வாறு எமிலி என்ற சிறுமியை இயற்கையோடு இயைநது வளரச் செய்யும் போதே கல்வியையும பெறவைக்கலாம என்பதை விளக்கினார். புரோபெல என்ற அறிஞர் குழந்தைக் கல்வியில் நாட்டம் கொணடவராகித் தம் குழந்தைத் தோட்டம் (Kinder garten) என்ற முறை யில எவ்வாறு சிறுவர் சிறுமியரை அவர்களது உடல், உள்ளத் திறன் ஆகியவற்றை வளர்க்கும் செயல்களில ஈடுபடுத்தவேண்டும் என்று எடுத்துரைத்தார். சிற்றூா வளர்சசித் திட்டங்களில் தம் குழநதைகளை ஈடுபடுத் திக் கல்வி பயிற்றிய வில்லியம் காாபெட்டுப் பற்றி, பெர்சி நன் விளக்கிக் காட்டினார். மரியா மாணடி சோரி என்ற பெணமனி தன் மனோதத்துவ மருத் துவப் பயிற்சியைக் கல்வியின்பால் செலுத்திக் குழந்தைகளின் உணர்வுக்கு முதலிடம் தந்து பல கல்வித் துணைக் கருவிகளை உருவாக்கிப்புதியதோர் கல்வி முறையை உலகுக் கீந்தார். இராபெர்ட்ரசுக்கு குழநதைகளைச் செயல்களில் ஈடுபடுத்தும்போது, அறிவுப் பயிற்சி, பணபாட்டுப் பயிற்சியுடன் கூட் டுறவுப் பயிறசியை இணைத்து, வாழ்க்கையில் எதிர்ப் படும் சிக்கல்களைத் தக்க முறையில் நீக்கி முன்னேற முடிகிறது என்றார்.

இநதக் கல்வி வளாசசிப் பின்னணியில்தான் அமெரிக்கத் தத்துவஞானியும் உளவியலறிஞருமான சான் டுயி என்பவர் தம் கலவிக் கொள்கையை வெளியிட்டார். அதன்படி அறிவியக்கத்திற்குச் செய் முறை, கருவிவடிவம், வாழ்க்கைப் பயன் போன்ற வழிகாட்டிகளை அமைததுக் கொடுத்தார். இந்த அறிவியக்கமானது சிந்தனையை விடச் செயலையே இன்றியமையாததாகக் கருதி, கோட்பாடுகளுக்கும் செயலமுறைகளுக்குமிடையே உளள வேறுபாடுகளை அகற்ற முறபடுகிறது. செயல மூலம் கலவி எனற கல்வி மொழியை அடிப்படையாகக் கொண்டு நடத் தப்படுகிறது. பாடத்திட்டஙகளைப் பல்வேறு பாடங களாகப் பகுப்பதை இந்தக் கோட்பாடு வரவேற்க விலலை. குறிப்பிட்ட வாழக்கைச் சிக்கலைக் கல்விச் செயலில் முற்படுத்திக் குழநதைகளுக்குத் தேவையான அடிப்படை விதிகள், திறன்கள் பற்றிய முறைகளைச சொந்த அனுபவத்தின் மூலம்பெற வைக்க வேணடும். நிலையானபாடத் திட்டம்எனறு ஒன்றை அமைப்பதை விட வாழக்கைச் செயல்களையே பயன்படுத்துவது சிறப்புடையது. கற்பித்தலும் கற்றலும் பெரும் பாலும் சோதனைகளாகவே இருந்து,பின்னர்ப் பெறப் படும் வெறறியின் அடப்படையில் அவற்றை நிலைப் படுத்துவதே அறிவியக்கத்தின் கூறாக இருந்தது. இந்த அடிப்படையில எழுந்ததுதான் செயல்திட்ட முறை.

செயல்திட்டம் என்பது, ஒரு சிக்கலான செயலை அதன் இயற்கைச் சூழநிலையிலேயே வெற்றியாக முற்றுப் பெறச் செய்தலேயாகும். செயல்திட்டங்கள் அமைப்பாளர் வகை, நுகாவோர் வகை, வாழ்க்கை நிலை வகை, பயிற்சி வகை என்று வகைப்படுத்தப் பட்டுள்ளன. வீடு, தோட்டம் போன்றவறறை அமைத்தல், தொழிற்சாலை,இசைத்தட்டு, பொம்மை போன்றவற்றிற்கு மாதிரியமைத்து அதன்படி உரு வாக்குதல் ஆகியவை அமைபபாளர்வகைச் செயல திட்டங்களாம். மாணவர்கள் நேரடி அனுபவம்பெறும செயல்களான நாடகம், பட்டிமன்றம் ஆகியவறறில பங்கேற்போர்களாகவும் கேட்போர்களாகவும் ஈடு படுதல் நுகர்வோர் வகையாகும். சிக்கல் அவிழ்க்கும் செயல்களின முழுச் சூழ்நிலயை உருவாக்க முடியா விட்டாலும் தக்க செயலையும் வகுப்புப் பணியை யும் நிறைவேற்றப் பயன்படும் கருத்துரைகளுக்கு ஏற்பச்சில வாழக்கைப் பகுதிகளை உருவாக்கிப் பயன் படுத்துதல் சிக்கல் வகைச் செயல்திட்டங்கள ; முன

னேறும் இந்தியா, தமக்காக உழைப்பவர்கள், காலங் காலமாக வளர்ந்து வரும் போக்குவரத்துப் போன்ற வற்றை இவ்வகை எனலாம், இசை, நீச்சல் போன்ற செயல்களில் பலதடவைகள் ஈடுபட்டுத் திறன் வளர்க்க வேண்டியிருப்பதால் இவை பயிற்சி வகை யின் பாற்படும்

செயலதிட்டங்கள தனியார், குழுவினர் ஆகியோ ருக்கு இன்றைய, நாளைய அநுபவங்களையும் அவற் றின் பயன்களையும் பெறத்தக்கவாறு அமைந்து, பளளிக்கு வெளியே பெறப்படும் கல்வி அநுபவத்திற் குத் துணையாக அமைய வேண்டும். பல்வேறு பாடப் பகுதிகளை அறிந்துணரும் வகையில் அமைய வேண் டும். காலத்தோடு நிறைவேற்றத் தககனவாகப் பல் வேறு காலநிலைப் பருவங்கள், சமுதாய விருப்பங்கள், தொழில் தேவைகள் ஆகியவற்றோடு இயைபுடைய தாக அமைந்த செயல்திட்டங்களே வெற்றி பெறும். இளைஞர்களின் ஆறறலை எதிர்ப்படும் எண்ணங் களாகவும் செயல்திட்டங்கள் அமைய வேண்டும், தகுதி, திறமைக்குத் தக்கவாறு அவை அமையாவிடில கல்வியில் தேவைப்படும் பற்று மாணவர்க்கு எழாது. நடைமுறையில் நிறைவேற்றத்தக்க செயல்திட்டங் களே நம்பிக்கை அளிப்பனவாகும்.

மேற்குறிப்பிட்ட பணபுகளைக் கொணட செயல் திட்டங்களைத் தேர்ந்தெடுப்பதில் ஆசிரியர்கள் தக்க வழிகாட்டிகளாயிருக்க வேண்டும். எல்லா மாணவர் களின் ஒருமித்த ஒப்புதல செயல்திட்ட ஈடு பாட்டிற்கு இன்றியமையாதது. தக்க திட்டமிடல வெற்றியின் முதற்படி. எடுத்துக் கொண்ட நோக் கத்தை அடையும் வண்ணம் செயல்திட்டம் அமைய வேண்டும். காலதாமதத்தைத் தவிர்க்கும்பொருட்டு நல்ல முன் தயாரிப்புடன் செயலில் ஈடுபடத் தொடங்க வேணடும். செயல்நிகழ்வின் போது ஆசிரி யர்களின் மேற்பாாவையில் பொருளகள் வீணாவதை யும் விபத்துகளில் அடிபடுவதையும தடுகக முடியும். திட்டத்திற்கும் செயலுக்குமான தொடர்பு அடிக்கடி கணகாணிக்கப்பட்டுத் தேவையான மாற்றங்களை அவ்வப்போது நிகழ்த்த வேண்டும். மாணவர்களும் ஆசிரியர்களும் சேர்ந்து செயல் திட்டத்தை மதிப்பீடு செய்ய வேண்டும்.

செயல்திட்ட முறையின் இன்றியமையாத படி களாவன: நோக்கங்களை வரையறுத்தல், ஆசிரியர், மாணவர் கலந்து ஆலோசித்துச்செயல்திட்டங்களைத தேர்ந்தெடுத்தல, செயல்களை வரையறுத்து அவற் றிற்கான திட்டமிடல், திட்டபடி தேவையான பொருள்களைச் சேகரித்தல, செயலில் ஈடுபடுவதற் காக அதில் பங்கேற்போர் தங்களைத் தயாரித்துக் கொள்ளல், செயலதிட்ட நிறைவேற்ற ஏடு யாரித் தல், திட்டமிட்டபடி செயலில் ஈடுபடுதல், செயலின் போது எதிர்ப்படும் சிக்கல்களைத்தக்க மாற்றங்களால் தவிர்த்தல், ஆசிரியர் மேற்பார்வை, செயல்விளைவு களை நிரல்படுத்தல், கூட்டு மதிப்பீடு, செயல் வெளி யீட்டின் பயன் பெறல்.

மேற்கணட படிகளில் நிறைவேற்றப்படும் செயல் திட்டங்கள மாணவர்களின் பல்வேறு வளர்ச்சி நிலை களுக்கு ஒததவையாக அமையவேண்டும். மூன்றுவயது முதல் முதுநிலை வரை செயல்திட்டக் கல்வி முறை பயன்படுத்தப்படலாம். படங்கள சேகரித்தல், படம் வரைதல, ஊர், அஞ்சலகம், பளளி, வங்கி, உணவு, வகுப்புச் செய்தி முதலியனபற்றி இதழ் வெளியிடல், வகுப்பு நூலகம் நடத்துதல், கலை நிகழ்ச்சிகள பொருட்காட்சிகள், அறிவியற் சோதனைகள் முதலி யன மேற்கொள்ளுதல, புதிய சக்திகளைக் கணடு பிடித்தல், பயன்படுத்தும் பொறிகளில் சிக்கனத்தை உருவாக்குதல் போன்றவை நிறைவேற்றப்படலாம்.

செயல்திட்ட முறை பல கல்வி விதிகளை அடிப் படையாகக் கொணடது. இதுமாணவர்களுக்கு முழுச சுதநதிரம் அளிக்கிறது; அறிவு முதிர்சசிக்குச் சிறப் பிடம் அளிக்கிறது சமூகப் பணபுகளை உருவாக்கு கிறது. வாழ்க்கையை வாழ்வாங்கு வாழப் பயிற்சி அளிக்கிறது; மேலெழுந்த வாரியாக இன்றி ஆழ்ந்த பண்புகளை அடைய உதவுகிறது; மக்களாட்சி முறையில் வாழப் பயிற்சி அளிக்கிறது; சிக்கலை விடுவிக்கும் பாங்கினை வளர்க்கிறது; ஆசிரியரும் மாணவர்களும் இணைந்து, வளர வாய்ப்பளிக்கிறது; பள்ளி வாழ்க்கையின் போது நேரடி வாழ்க்கையைப் பெற வழி செய்கிறது; உள்ளாா்ந்த மதிப்பீட்டை வழங்கத் துணை செய்கிறது; செயல நிறைவின் திருப்தியை மாணவர்களுக்கு வழஙகுகிறது; தொழில மேன்மையை வலியுறுத்துகிறது. அறிவியல், தொழிற் பயிற்சி, செய்முறை புவியியல, நாடக இலக்கியம், கணிதச் செயல் முறை ஆகியவற்றைக் கருத்துப் பாடஙகளாகவன்றிச் செயல் நிகழவுகளாகவே இணைக்கச் செயல்திட்ட முறை சிக்கனமாகச் செயற் படுகிறது.

எனினும், பாடத்திட்டம் போன்ற நிரல்படுத்தப் பட்ட அறிவை வழங்கச் செயல்திட்ட முறை பயன் படாது. இதுசெயலுக்கு முதலிடம் கொடுத்துக் கருத்து வெளிப்பாட்டினைப் பினதளளி விடுகிறது. கற்பனை யாற்றலை வரையறுதது விடுகிறது; இக்காலக கலவி முறைப்படி பாடத் திட்டத்தினை நிறைவேற்ற இமமுறை தடையாயுளளது. தேவைப்படும் நேரம், பொருளகளுக்கேற்பஇம்முறை மாறுபடுகிறது; குறைநத கற்கும் திறனுள்ளோாக்கே பெரிதும் பயன்படு கிறது. மாணவர்களின் அறிவு விரிவில ஆங்காங்கே

வெற்றிடத்தைத் தோற்றுவிக்கின்றது. உயர்நிலைகளில் இம்முறை பிறமுறைகளுக்குத் துணையாக மட்டுமே அமைய முடியும். விரிந்த அறிவையேயன்றி ஆழ்ந்த அறிவை இம்முறை அளிக்கும் என்று கூற இயலாது. எளியவற்றினின்று கடினமானவற்றுககுச் செல்ல வேண்டும் என்ற கல்வி விதியை ஒவ்வொரு செயல்திட்டத்தின்போதும் பயன்படுத்துதல் இயலாது. கல்விக் கருவிகளை முழுமையாகப் பெறுவதில இம்முறை பயன்படுமென்று கூறுவதற் கில்லை. திறமைமிக்க, பரந்த பட்டறிவு நிறைந்த ஆசிரியர்களாலேயே இம்முறை வெற்றியுடன் கையாளப் படலாம். அண்ணல் காந்தியடிகளின் அடிப்படைக் கல்வி தொடர்ந்து திகழாமற் போனமைக்கும் செயல்திட்ட முறையின் குறைகளுககும் மிகப்பல ஒற்றுமைகள் உள்ளன.

எனவே, செயலதிட்ட முறை பள்ளிகளிலும கல்லூரிகளிலும் தக்க காலங்களில பாட அறிவுகளைப் பட்டறிவு மூலம் பயனபடுத்தத் தேவைப்படும் ஒரு சிறந்த முறையெனலாம். குறைகளிருநத போதிலும் பிற கல்வி முறைகளுடன் இதனையும் இணைத்துப் பயன்படுத்துவது இக்காலக் கலவிக்கு ஆக்கம தருவதாக அமையும.

எஸ.ச.

***செயல் நிறை மதிப்பீடு***: தொழிறசாலைகளிலும் நிறுவனங்களிலும் பணிபுரிவோரது செயலகளையும் வேலைகளையும், பணிபின் தன்மையையும அறியவும், பயிறசியின் தேவையைக் கணடறியவும், உறபத்தித்திறன், உற்பத்தி அளவு, இலாபம் போன வற்றைக்கணக்கிடவம். பணி உயர்வு, ஊதிய விகிதம் போன்றவைகளை வரையறுக்கவும் செயல்நிறை மதிப்பீடு(Performance Appraisal)செய்யப்படுகிறது

செயல்நிறை மதிப்பீடு பல்வேறு வழிகளில செய்யப்படுகின்றது பணிபுரிவோர் தங்கள் சொந்த மதிப்பீட்டைத் தருவது, தர மதிப்பீட்டு அளவுகோல்களைக் கொணடு அளவிடுவது, உயர் அலுவலாகள அல்லது கணகாணிப்பாளர்கள் நேரடியாகக கவனித்து மதிப்பீடு செய்வது, ஒதத நிலையில் வேறு நிறுவனங்களில் பணிபுரிவோர் வேலைசெய்யும் செயலநிறையைக கொண்டு ஒப்புநோக்கி மதிப்பீடு செய்வது ஆகியன அவற்றுள் சிலவாகும், மதிப்பீடு செய்பவர் எவ்விதமான சார்பு எணணமுமின்றிக் கண்ணோட்டமில்லாது நேர்மையாகச செய்திடல் மிக இன்றியமையாததாகும்.

செயல்நிறை மதிப்பீடு செய்வதன் வாயிலாகப் பணியாளர்களின் திறமை, அவர்களுக்குத் தேவையான ஊக்கம், ஆர்வம், பயிறசி, ஊதியம், வேலை நேரம், உற்பத்திக குறியீடு ஆகியவற்றை நிருவாகம் அறியமுடியும். எனவே, செயல்நிறை மதிப்பீடு இன்றியமையாத ஒன்றாகக் கருதப்படுகிறது. ஜி.இரா

***செயல்முறைக் கோட்பாடு***: கூர்நோககல் மூலமாகவும், பரிசோதனை முறையைப் பினபற்றியும் அறிவாறறல் அடைய முறபடுவதைத்தான செயல முறைக் கோடபாடு (Empiricism) குறப்பிடுகினறது. கணணால் காணபதையும், தானே அனுபவிப்பதையும் மட்டுமே மனிதன எளிதாகவும் நனறாகவும் புரிநது கொள்ள முடியும் எனறு இக கோடபாடு வலியுறுத்துகின்றது. இக்கோடபாடு விதிமுறைக் கோட்பாட்டிலிருந்து(Normative Theory) முற்றிலும் மாறுபட்டது. விஞ்ஞான முறையுடனும, நடக்கை முறையுடனும் தொடர்புடைய செயல முறைக் கோட்பாட்டில, கொளகைக்கு முக்கியதுவம் கிடையாது. செலலறிவுக் கோட்பாடு என்பது கி. பி. 17-ஆம் நூற்றாண்டில் ஆங்கிலச் சிநதனையாளர்களான ஆலிபாக்சு பிரபுவினாலும் (Marpuis of Halifax),சான் இலாக்கினாலும் (John Locke) 18-ஆம் நூற்றாண்டில் பொதுவாகப் பல பிரஞ்சு, ஆங்கில அரசியற சிந்தனை யாளர்களாலும், தாவீது கியூம் (David Hume) எனற இசுகாட்லாநதிய சிந்தனையாளராலும், 19-ஆம் நூறறாணடில செரிமி பெந்தம் (Jeremy Bentham) போனற தத்துவ இயல்பான தீவிரவாதச் சிந்தனையாளராலும் கையாளப் பட்டது.

ஆ. ஜா.

***செயல்முறைச் சமூகவியல்***: செயல்முறை சார்ந்த போககில ஆராய்சசியைச் செலுத்துகினற சமூகவியல் செயல முறைச் சமூகவியல (Applied Sociology) எனப்படுகிறது. இது சமூக நிகழவுகளுக கான காரணிகளையும், அவற்றின குறைகளைத் தீர்பபதற்கான வழிமுறைகளையும் ஆராய்கிறது. இவ்வாறு செயல் முறை சார்ந்த போககில கவனத்தைச் செலுத்தாத சமூகவியல், செயல்முறை சாராச சமூகவியல் (Pure Sociology) எனப்படுகிறது. இந்த இருவேறு பிரிவுகள் சமூகவியலில மட்டுமனறி அனைத்து அறிவியல் துறைகளிலும் இருக்கின்றன

ஓர் உயிர்மம் (Cell) உணவினை எவ்வாறு உட்கொள்ளுகிறது அலலது உயிர்மம் எவ்வாறு வளர்ச்சியடைகிறது என்பதை ஓர் உயிா வேதியியலறிஞர் ஆய்வு செய்தால் அது செயல்முறை சாரா அறிவியல் ஆகும். ஆனால பின்னர் அதே அறிஞர் எந்தப் பொருள் அல்லது செயல்முறை உயிர்மத்தின வளர்ச்சியடைகினற செயறபாங்கைக் கட்டுப்படுத்துகிறது என்பதை அறிய முறபட்டால் அது செயல்முறை அறிவியல் ஆகிறது

அது போலவே ஒரு சமூகவியலறிஞர் குடிசைப பகுதியின் சமூக நிலையமைப்பைப் (Social Structure) பற்றி ஆராய்ந்தால் அது செயல்முறை சாராச் சமூக வியலாகும். ஆனால், அதைத் தொடாநது குடிசைப் பகுதியிலுள்ள குற்ற நடத்தைகளை எவ்வாறு தடுப் பது என்பதைப்பற்றி ஆராய்ந்தால் அது செயல் முறைச் சமூகவியல் ஆகிறது.

குற்ற நடத்தை, குடிப்பழக்கம், வறுமை, சாதிச் சண்டை போனற சமூகச் சிக்கல்களுக்கான காரணங் களையும் அவற்றைத் தீர்ப்பதற்கான வழிமுறை களையும் அறியப் போதுமான அறிவியல அறிவு வேணடும். அதற்குச செயல்முறைச் சமூக அறிவியல் ஆய்வினை நாடுவதே சரியான வழியாகும்.

சமூகச் சிக்கல்களுககுத் தீாவு காண, செயல முறைச சமூகவியல ஓர் இனறியமையாத தேவை யாக உள்ளது. பொதுவாக, செயல்முறை ஆய்வுகள் அரசாங்கம் மற்றும் பிற நிறுவனஙகளுககு ஐயததுக கிடமின்றிப் பலவழிகளில் பல செயல்முறை உதவி களையும் ஆதரவையும் அளிக்கினறன. எனவே தான, சமூகவியலறிஞாகள் பலா அரசு அலுவலகங் கள், சமூக முகவாணமைகள, சமூக நல மையங்கள், மதிப்பீட்டு ஆய்வு மையஙகள போன்றவறறிலும, பல நிருவாகப் பொறுப்புகளிலும் கூட, பணி அமாத தப்படுகினறனர். சில நேரஙகளில புதிய சடடஙகள இயற்றப்படும் பொழுதும், திருததபபடும பொழுதும் நீதித்துறையினா சமூகவியலறிஞாகளின் ஆலோசனை யையே நாடுகினறனர். மேலும அவாகள, சமூகவிய லறிஞரால் மட்டுமே சமூகததிலுள்ள செயலமுறைச் சிக்கலகளை நனகு அறிநது தீர்கக இயலும் என நமபு கின்றனா. பூ.த.

**செயல்முறை விதிகள்** நிறுவனததின் (Company) உளநிருவாகம் பறறிய விதிகளையும், கட்டுப் பாடுகளையும் இது கொணடுளளது. நிறுவ னத்தின உள் நடவடிககைகள எவவாறு நிருவகிக் கப்படுகினறன எனபதையும் இது கூறுகிறது. மேலும், நிறுவனததின் இயககுநர்கள், அலுவலாகள, அதிகாரி கள, பஙகுரிமையாளர்கள போனறோரின அதிகா ரங்கள் யாவை? அவாகள எவ்வாறு நடந்துகொளள வேணடும் எனபனவற்றையும் இது கூறுகிறது. நிறு வனத்தின் நோக்கஙகளை நிறைவேற்றிடப் பினபற்ற வேணடியவழிகளையும் இது கூறுகிறது இதில சொல லப்பட்டுளள விதிகளைக கொணடு நிறுவனம செயற படவேணடும்.

பங்குகளால வரையறுக்கப்பட்ட பொது நிறுவ னம் (Public Company) தனககென்று செயலவிதி களைக் கொணடிருக்க வேணடிய தேவையில்லை. அப்பொழுது நிறுவனச் சட்டததில் இணைந்துளள முதல் அட்டவணையில் (Schedule) காணப்படும் பட்டியல் 'ஏ' (Table A) தானாகவே நிறுவனத்தின் செயல்முறை விதிகளாகச் செயற்படும். அப்பொழுது செயல்முறை விதிகள 'இலலாமல் பதிவு செய்யபபட டது' என்ற வார்த்தைகளை அமைப்பு முறையேடு கொணடிருககவேண்டும். சில நேரங்களில நிறுவனங் கள சில அதிகாரங்களைப் பெறும்வகையில் சில விதி களை உருவாககி அவற்றையும பட்டியல் 'ஏ'யில் உளள சில விதிகளையும் சோத்துத் தஙகளின் செயல் முறை விதிகளாகப் பதிவாளரிடம தாககல் செயதிட லாம். அந் நிறுவனங்கள ஏறகெனவே தமககெனச் செயல்முறை விதிகளைபபதிவு செய்திருந்தாலும அவற்றில் காணப்படாத சில தகவல்களுககுப் பட்டி யல 'ஏ'யில் உள்ள விதிகள பொருந்தும.

வரையறா நிறுவனங்களும் (Unlimited Company) பொறுப்புறுதியால (Guarantee) வரையறுத்த நிறுவ னமும், பஙகுகள் வரையறுககபபடட தனி நிறுவனங் களும் தங்களுக்கெனச செயலமுறை விதிகளைக கொணடிருககவேண்டும். அவை பதிவாளரிடமும பதிவு செய்யப்படவேண்டும். அவற்றின் செயல்முறை விதிகள (Articles of Association) முறையே பட்டி யல 'இ' (Table E), பட்டியல 'சி' (Table C), பட்டியல 'டி' (Table D) ஆகியவறறின விதிமுறைகளை ஒத் திருக்கவேணடும்.

செயலமுறை விதிகள் அசசிடப்பட்டிருக்கவேணடும். பத்தி பததியாகப பிரித்து அவற்றிற்கு வரிசை எண தரவேணடும். அமைப்பு முறையேட்டில் ஒப்பு, தல் கையொப்பமிட்டுளள எலலோரும இங்கும் சானறுரையர் ஒருவர் முன்னிலையில் கையொப்ப மிட்டு அவர்களின தொழில், முகவரி போன்றவை களைக் குறிபபிடுதல வேணடும. பொதுவாகச் செயல்முறை விதிகள கீழ்க்கணட முககிய தகவல களைக கொணடிருக்க வேண்டும். 1) பஙகு வகைகள, அவை சார்பாக உளள உரிமைகள், பங்கு மாற் றம் பற்றிய விதிகள, ஒறுப்பிழபபு விதிகள், பங்கு அழைப்பு, பங்கு முதலைக குறைப்பது அல்லது மாறறி யமைப்பது போனறவை பற்றிய அதிகாரஙகள; 2) நிருவாக அலுவலர்களை அமர்த்துதல், அவர் களின ஊதியம், கடமை, அதிகாரஙகள பற்றிய விதி கள்; 3) பங்குரிமையாளரின் கூட்டங்கள, இயக்குநர் கூட்டஙகள், அவற்றில் எடுககப்படும் தீர்மானங்கள், வாக்கெடுப்பு முறை, கணககுப்பதிவு, தணிககை, ஆதாய ஈவு, காப்பு நிதி பற்றிய விதிகள. 4) நிறுவனத் தைக் கலைப்பது பற்றிய விதிகள.

செயலமுறை விதிகளை மிகவும் கவனமுடன் உரு வாக்க வேணடும். சில காரியங்களைச் செயல்முறை

விதிகள் அனுமதித்தால்தான் நிறுவனம் செயற்பட முடியும். எனவே, அவற்றை உருவாக்கும்போது போதுமான அதிகாரங்கள் தரும் வண்ணம் அமைக்க வேண்டும். அவ்வாறு செயயாவிடில அவற்றை அடிக்கடி மாற்றியமைக்க வேண்டும். அமைப்பு முறையேட்டு அதிகாரங்களை மீறும் வண்ணம் அதன் அதிகாரங்கள் இருககக்கூடாது; நிறுவனச் சட்டத்தின விதிமுறைகளுக்கு முரணாகவும் இருக்கக்கூடாது.

செயல்முறை விதிகளைத் திருத்தியமைத்தல (Alteration of Articles of Association): நிறுவனத்தின் பொதுக்கூட்டத்தில் இயற்றப்படும் சிறப்புத் தீர்மானம மூலமாகச் செயல்முறை விதிகளைத் திருத்திடலாம். நீதிமன்றத்தின் அனுமதி பெறவேண்டிய தேவையில்லை. இவற்றின் திருத்தம் அமைப்பு முறையேட்டின் திருத்தத்தைவிட மிகவும எளிது; என்றாலும், இவற்றைத் திருத்தக் கீழ்க்கணட கட்டுப்பாடுகள் தேவை. 1) திருத்தங்கள் அல்லது மாற்றங்கள் நல்லெண்ணத்துடன் நிறுவனத்தின் பொது நலனுக்காகச் செய்யப்பட வேண்டும். பெரும்பான்மையான பங்குரிமையாளர்கள சிறுபான்மைப் பங்குரிமையாளர்களை மோசடி செய்தலுககு உரிய வகையில் அவை இருககக்கூடாது; 2) ஏற்கெனவேயுள்ள ஒப்பந்தங்களைப் பாதிக்கும் வகையிலும் முறிக்கும் வகையிலும் திருத்தங்கள இருத்தலகூடாது; 3) திருத்தம் அமைப்பு முறையேட்டிலுள்ள கூறுகளையோ நிறுவனச சட்டத்தின் விதிமுறைகளையோ மீறும் வண்ணம் இருத்தல்கூடாது; 4) பங்குரிமையாளர்கள் அவர்களின் பங்குகளுக்கு மேலும் பணம் தரும்படியாக அல்லது அவர்களின் பொறுப்பு அதிகரிக்கும்படியாக மாற்றம் இருக்கக கூடாது. ஆனால், மாற்றத்திற்கு முன்னர் அல்லது பின்னர்ப் பங்குரிமையாளர் அதறகு ஒப்புதல் அளித்தால் மாற்றம் செய்திடலாம்; 5) ஒரு பொது நிறுவனத்தைத் தனி நிறுவனமாக மாற்ற விரும்பும் சிறப்புத் தீர்மானம் மூலமாக முடிவு செய்தால் மட்டும் போதாது. மத்திய அரசின அனுமதியும் பெற வேணடும். அதுவரை திருத்தத்தைச் செயற்படுத்த முடியாது; 6) செயல்முறை விதிகளை மாற்றுவது நிறுவனத்தின் பங்குரிமையாளர்களுக்குள்ள உரிமையாகும். அதனைப் பாதிககுமவகையில் எவ்விதியும் செயல்முறை விதிகளில் இருககக்கூடாது. அதன திருத்தத்திற்குச் சிறப்புத் தீர்மானத்தின் படி ஒன்றை 30 நாளகளுக்குள் நிறுவனப் பதிவாளரிடம் தாககல செய்து பதிவு செய்யவேண்டும். அதற்குப்பின வெளியிடப்படும் செயல்முறை விதிகளின் படிவம் ஒவவொன்றிலும் அத்திருத்தம் காண்பிக்கப்படவேணடும்

**அமைப்புமுறையேட்டிற்கும் செயல்முறை விதிகளுக்கும் உள்ள வேறுபாடு:** அமைப்புமுறையேடு நிறுவனம் எந்த நோக்கததிற்காகவும், கட்டுப்பாடுகளுக்காகவும் தோற்றுவிககப்பட்டதோ அவற்றைக் கொண்டுள்ளது. ஆனால, செயல முறைவிதிகள் நிறுவனத்தின் உள் நிருவாகம் பறறிய விதிமுறைகளைக் கொணடுள்ளன. அமைப்பு முறையேடு நிறுவனச் சட்டத்திற்கு உட்பட்டதாகும். ஆனால், செயல்முறை விதிகள் நிறுவனச சட்டத்திறகும், அமைப்பு முறையேட்டிறகும் உட்பட்டனவாகும். ஒவவொரு நிறுவனமும் அமைப்பு முறையேட்டைப் பதிவாளரிடம் கொடுக்க வேணடும். ஆனால, எலலா நிறுவனமும் செயல்முறை விதிகளைப் பதிவு செய்யவேணடுமெனற தேவையிலலை. அமைபபு முறையேடு நிறுவனத்திற்கும் அயலாருக்கும் உள்ள தொடர்பை காட்டுகிறது. ஆனால், செயல முறை விதிகள் நிறுவனத்திற்கும் உறுப்பினர்களுக்கும் உளள தொடர்பைக் காட்டுகினறன. அமைப்பு முறையேட்டைத் திருத்துவதறகு மதநிய அரசின் அனுமதி தேவை. ஆனால, செயலமுறை விதிகளைத் திருத்துவதற்கு அது தேவையிலலை. ஒரு சிறபபுத தீர்மானம போதும். அமைப்புமுறையேட்டில சொலலப்பட்டுளள செயலகளைத் தவிர வேறு செயல்களைச் செய்தால அது அதிகார வரம்பிகந்ததாகக் கருதப்படும். அதைப பின்னர் ஏற்றுக் கொளள முடியாது. ஆனால, செயல் முறை விதிகளில் சொல்லப்படாத செயல்களைச் செய்தால் அது ஒழுங்கற்றதாகக் கருதப்படும. எனினும் அமைப்புமுறையேட்டிற்கு அச்செயல்புறம்பாக இல்லாத நிலையில அதைப் பின்னர் ஏற்றுக்கொளளலாம். அமைப்பு முறையேட்டால அதிகார வரம் பிகந்த ஒப்பந்தங்களுக்கு அயலார் பரிகாரம் பெற முடியாது. ஆனால், செயலமுறை விதிகளால அதிகார வரம்பிகநத ஒப்பநதஙகளுககுப் பரிகாரஙகள் உணடு

**அமைப்பு முறையேடு-செயல்முறை விதிகள் ஆகியவற்றின் சட்ட விளைவு:** இவவிரு ஆவணஙகளும் பதிவு செய்யுமபோதுளள உறுப்பினர்கள மட்டுமலலாமல் எதிர்கால உறுபபினர்களையும் கட்டுப்படுத்துகின்றன. இவை உறுப்பினர்களை நிறுவனத்திறகுக் கட்டுப்படுத்துகின்றன; உறுபபினர்களை ஒவவொருவருககும் கட்டுப்படுத்துகினறன. ஆனால, நிறுவனமும் உறுப்பினர்களும் அயலாருக்குக் கட்டுப்பட வேணடிய தேவையிலலை.

இவை பதிவாளரிடம் பதிவு செய்யப்பட்டவுடன் பொது ஆவணங்களாக மாறிவிடுகினறன. உறுப்பினர்கள ஒரு ரூபாய் செலுத்தி இவற்றின் படிகளை ஏழு நாள்களில் பெற்றிடலாம். உறுப்பினர்கள் அலலாதவர்களும் குறிப்பிட்ட கட்டணத்தைச் செலுத்திப் பார்வையிடலாம்; நகலும் எடுத்துக்கொள்ளலாம். எனவே, நிறுவனத்தோடு தொடர்பு கொணடுள்ள வெளியார் அனைவரும் இவ்வாவணச் செய்திகளை

அறிந்தவர்களாகக் கொள்ளப்படுகின்றனர். இதறகு ஆக்க பூருவ அறிக்கைக் கோட்பாடு (Doctrine of Constructive Notice) என்று பெயர். இக்கோட்பாட்டின் படி, நிறுவனம், தங்களுடன செய்திடும் செயல்களுக்கு அதிகாரம் உள்ளதா, இவ்வாவணங்களில் அதற்கு வகையுண்டா என்று அவர்கள் கண்டறிய வேணடும். அதேசமயம் நிறுவனம் தனக்குள்ள அதிகாரத்தின் படி தான் செய்கிறதா இல்லையா என்று அவர்கள கணடறிய வேணடியதில்லை. மேலும், நிறுவனம் நிறைவேற்ற வேணடிய செயல்களை நிறைவேற்றி விட்டுத்தான் செயல்களைச் செய்கிறது என எடுத்துக் கொள்ள வேணடும். இதற்கு அக மேலாண்மைக் கோட்பாடு (Doctrine of Indoor Management) எனப் பெயர். இது தர்க்குவாண்டு வழக்கு விதி (Rule in Turquands Case) எனவும் கூறப்படுகிறது.

இவ்வாறு செயல்முறை விதிகள் நிறுவனம் அமைத்திடும்போது செய்யவேணடிய விவரங்களை உள்ளடக்கும் முக்கிய ஆவணமாகவும், நிறுவனத்தின உள் நிருவாகம பற்றிய விதிமுறைகளைப் புகட்டுவ னவாகவும் திகழ்கின்றன. கே.என்.இரா.

**துணை நூல்கள்:**


Ashok K. Bagrial, Company Law, Vikas Publishing House Pvt. Ltd., Sahibabad, 1982

Shukla, M C., A Manual of Mercantile Law, S.Chand & Co Ltd., New Delhi, 1984.


*செயல்முறைவிளைவு* எனபது நுகர்வுககும் வருமானத்திற்கும் இடையே உள்ள தொடர்பினை விளக்கும் பொருளியல விதிகளுள் ஒன்றாகும். நுகர்வு ஒவ்வொருவரின் நடப்பிலுள்ள வருமானத்தைப் பொறுத்ததன்று என்றும், அது தொடர்புடைய வருமானத்தைப் (Relative Income) பொறுதத தென் றும் கொள்ளப்படும். இது தூசன்பெரி (Dusenberry) என்பார் கூற்று. இதனபின் குறைந்த வருமானமுள்ள ஒரு குடும்பம், வருமானம் கூடுதலுள்ள ஒரு குடும்பத் தோடு நெருங்கி வாழந்தால், அதன நுகர்வின் அளவும் தரமும் வருமானம் கூடுதலுள்ள குடும் பத்தின நுகர்வின் அளவையும் தரத்தையும் சார்நதே இருக்கும். ஆகவே, ஒரு குடும்பததின் நுகர்வின் அளவினைக் கணக்கிடும்போது அந்தக் குடும்பத்தின் வருமானத்தையும் அத்துடன் தொடர்புடைய ஏனைய குடும்பங்களின் வருமானங்களையும் ஒப்பிட் டுப்பார்க்க வேணடும். தூசன்பெரியின் கருத்துப்படி ஒரு குடும்பத்தின் நுகர்வின அளவு, அந்தக் குடும்பத் தின வருமானத்தை மட்டும் பொறுத்து அமையாமல மற்றைய குடும்பங்களின் வருமானத்தின் அளவையும பொறுத்தே அமையும். இதைத்தான் தூசன்பெரி செயல்முறை விளைவு என்று கூறுகிறார்.

இநத விதியின் உண்மையை எளிதில் புரிந்து கொள்ள முடியும். சான்றாக ஊரக மக்கள், நகரங் களில் வாழும்போது நகர மக்களின் வாழ்க்கை முறையைக கடைப்பிடிக்கின்றனர். அவர்களின் வருமானம் நகர மக்களின் வருமானத்தை விடக குறைந்திருந்தாலும் மற்றவர்களைப் போலத் தாமும் வாழவேண்டுமென்ற அவா அவர்களிடம் எழுகின்றது. அதனால், அவர்களின் நுகர்வின் அளவும் கூடுகிறது.

இவ்விதியின உண்மையை அமெரிக்காவில் வாழும் வெள்ளையர், நீக்கிரோ ஆகிய குடும்பங்களின் நுகர் வின் புள்ளிவிவரங்களை வைத்து ஆராய்ந்தனர். அதில் வருமானம் குறைந்த நீக்கிரோ குடும்பங்கள் வருமானம் கூடிய வெள்ளையர் குடும்பங்களோடு தொடர்புகொண்டு வாழும்போது அவர்களின் நுகர் வின் அளவு வெள்ளையர்களின் நுகர்வின அளவைப் போலவே மிகுதியாகக் காணப்பட்டது. இதே அளவு வருமானம் உள்ள நீக்கிரோ குடும்பங்கள் நீக்ரோக்கள் மாத்திரம் வாழும் நீக்கிரோ கிராமங்களில வாழும் போது, அவர்களின நுகர்வின் அளவும் தரமும் மிகக் குறைவாகவே காணப்பட்டன. அதன்மூலம் வெளிக் காட்டும் விளைவு, நுகர்வின் அளவை மாற்றியமைக் கிறது எனபதும் புலனாகிறது.

வெளிககாட்டும் விளைவினால நுகர்வு, சேமிப்பு முறைகள மாறுபடும். பொதுவாக ஒருவன வரு மானம் குறையும்போது நுகர்வு குறைவதாகக் கருதப் படுகிறது. ஆனால் நுகர்வு வெளிக்காட்டும் விளை வினைப் பொறுத்திருப்பதால், வருமானம் குறையும் போது நுகர்வு குறைவதிலலை. இதறகுத் தூசன்பெரி வேறொரு காரணமும கூறுகிறார். அதாவது, அதிக வருமானம் பெற்ற காலத்தில அனுபவித்துவந்த நுகர் வின அளவை வருமானம் குறையும்போதும் மேற் கொள்ளவே மக்கள் விரும்புகின்றனர். அதற்காகச் சிலர்தம் சேமிப்புத் தொகையையும் செலவு செய்ய முன்வருவர். அதாவது மக்கள் பழகிவரும் நுகர்வின் தன்மையைப் பொதுவாக குறைக்க எணணுவ திலலை. தூசன்பெரியின் நுகர்வு விதிக்கும், கெயின்சின் நுகர்வு விதிக்கும் உள்ள மாறுபாட்டினை எளிதில் விளக்கமுடியும. கெயின்சின விதிப்படி நுகர்வு நடப்பு வருமானத்தின் அளவைப் பொறுத்தது. அதனால வருமானம் கூடும்போது, நுகர்வின அளவும் கூடும்; வருமானம் குறையும்போது நுகர்வின் அளவு குறையும். ஆனால், தூசன் பெரியின் விதிப்படி, ஒரு குடும்பத்தின் நுகர்வு அந்தக் குடும்பத்தோடு தொடர்புள்ள, வரு மானத்திலும் வாழக்கைத் தரத்திலும் முன்னிலையில்

நிற்கும் குடும்பங்களைப் பின்பற்றி நிற்பதால, அந்தக் குடும்பங்களின் வருமானம் கூடுமபோதோ, குறையும் போதோ, நுகாவின் அளவில் மாற்றம் ஏற்படுவ தில்லை. ஆனால், குடும்பங்களுககிடையே உள்ள வருமான விகிதத்தில் மாற்றம் ஏற்பட்டால் நுகர் வின் அளவிலும் மாற்றம் ஏற்படும்.

செயலமுறை விளைவு அரசாங்கத்தின் பல செயல்களிலும் மாற்றங்களை விளைவிக்கலாம். சான்றாக, நாட்டில் விலைவாசி குறையும்போது அதைத் தடுப்பதற்கு, அரசாங்கம் வரிச்சலுகை அளிக கிறது. அதனால், மக்களின் வருமானம் கூடும்; பொருள களின் தேவை அதிகரிக்கும்; விலைவாசி உயரும என்று அரசாங்கம் எதிர்பார்க்கிறது. ஆனால், அதற்கு மாறாக நுகர்வுக்கும் வெளிக்காட்டும் விளை வுக்குமுளள தொடர்பினால் வருமானம் உயரும் போது, அதற்கு ஏற்றவாறு நுகர்வின அளவு கூடுவ திலலை. அதுபோல விலைவாசி கூடும்போதும் அதைக் கட்டுபபடுத்த அரசாங்கம் அதிக வரி விதிக்கும். அதனால், மக்களின் வருமானம் குறையும்; நுகர்வின் அளவும் குறையுமெனறு எதிர்பார்ககிறது. ஆனால், இது நடப்பதில்லை. மக்களின வருமானம் குறைந் தாலும், நுகர்வின் அளவு குறைவதில்லை. இதனால் வரித்திட்டத்தைக் கையாணடு அரசாங்கத்தால விலைவாசியின் ஏற்றத்தாழ்வுகளை எல்லா நேரத் திலும் கட்டுப்படுத்த முடியாது.

செயல்முறை விளைவு பின்தங்கிய நாடுகளின் பொருளாதார முன்னேற்றத்தைப் பெருவாரியாகப் பாதிக்கிறது என்பது நர்க்சு (Nurkse) என்ற பொரு ளாதார வல்லுநரின் கருத்தாகும். இப் பின்தங்கிய நாடுகளில் வருமானம் கூடும்போது மக்கள் சேமிப் பிற்கு முக்கியத்துவம் கொடுக்காமல் பிறநாட்டு ஆடம்பரப்பொருள்களை வாங்குகிறார்கள். இதனால் சேமிப்புக் குறைவதோடு பொருளாதார முன்னேற்ற மும் தடைப்படுமென்பது அவர் கருத்து. பா.ம.

**துணை நூல்:**

Dusenberry, J.S., Income, Saving and the Theory of Consumer Behaviour, Harvard University Press, London,1949.

*செயலாராய்ச்சி*: மனித வளர்ச்சியில் ஆராய்ச்சி ஒரு முக்கியமான, வலிமையான கருவி யாகும். சீரான ஆராய்ச்சியின்றி இவ்வளவு வளர்ச்சி ஏற்படவியலாது.

எல்லா ஆராய்ச்சிகளும் முன்னேற்றத்தையும் நல்ல வாழ்கையையுமே குறிக்கோளாகக் கொண்டி ருக்கின்றன. தனிஆள் முன்னேற்றத்துக்கும் சமுதாய முன்னேற்றத்துககும் நல்ல கல்வி, அடிப்படைத் தேவை என்பதை உணர்ந்ததிலிருந்து கல்வியில் ஆராய்ச்சியின் தேவையை அறிய தொடங்கினர் முறையான ஆராயசசியின் மூலம் எடுத்த முடிவு களால் நேரம், சக்தி, பணம் ஆகியவற்றில் விரயம், தோல்வி, அதனால் வரும் ஏமாற்றம் முதலியவற் றைத் தடுக்க முடியும்.

கல்வியில் நேரடியாக ஈடுபடக் கூடியவர்களை ஆராய்ச்சியில் ஈடுபடுத்துவது அணமைக் காலத்திய ஒரு குறிப்பிடத்தக்க போக்காகும். ஆராய்ச்சி என்பது நனகு அனுபவம வாய்ந்த, பயிறசி பெறற வல்லுநர்களின் செயலாகவே வழக்கமாகக் கருதப் பட்டு வந்தது. இப்போது செயலாராய்சசி எனபது ஆசிரியர்களையும் நிருவாகிகளையும் தங்கள் முன் னேற்றத்திற்காக ஆராய்சசி செய்வதை ஊககுவிக் கிறது எடுத்துக்காட்டாக, ஆசிரியர்களின் ஆராய்ச்சி நோக்கம் வகுப்பறைச் செயல்களை முனனேற்று வதறகானதாகும். ஒரு ஆசிரியர் தம் கற்பிக்கும் திற மையை மேம்படுத்த ஆராய்ச்சியில் ஈடுபடுகிறார். ஒரு பளளி நிருவாகி தம் நிருவாக முறைகளை முன்னேற்றுவதற்கான ஆராய்சசிகளில் ஈடுபடுகிறார். செயலாராய்சசியில் (Action Research) ஒருவர் தனியாகவோ அல்லது மற்றவாகளுடன் சேர்ந்தோ ஈடுபடலாம்.

ஆசிரியர்கள் அடிககடி பல சிக்கல்களைச் சந்திக் கிறார்கள். அடிமட்ட ஆராய்சசி சில பொதுவான கோட்பாடுகளை வகுக்கின்றன. பொருத்தமான கோட்பாடுகளை மேற்கொணடு அதிலிருந்து சிக்கல் களுக்குத் தீர்வு காண முடியும் ஆனால, தேவை யான கோட்பாடுகளைக் கணடறிவதே மறறொரு ஆராய்ச்சியாக அமையலாம். இருப்பினும் அடிப் படைக் கோட்பாடுகள் தெரிந்தபின் அவற்றைப் பரவலான பல சிறிய சிககல்களுககுப் பயன்படுத்த் முடிகிறது. சிக்கலகளைத் தனித்தனியே அணுக வேணடியது இலலை. கல்வியாளர்களின் பல சிக்கல் களுககு உடனடித் தீர்வுகள தேவைப்படுகின்றன. பல சமயங்களில் பொதுக் கோட்பாடுகளிலிருநது அவற் றிற்குத் தீர்வு காணபதைவிட, நேரடியாகவே அவற்றை ஆராய்ந்து செயற்படுவது விரைவில் பலன்கள கொடுக்கும். இவ்வாறு அவ்வப்போது ஏற் படும் சிக்கல்களுக்கு விரைவாகத் தீர்வுகள் காணபதற் காக மேற்கொள்ளப்படும் ஆராய்ச்சி செயலாராய்சசி எனப்படும். செயலாராய்ச்சியின் கருத்தை வெளிப் படுத்தியவர்களுள் இசுடீபன் எம். கோரி (Stephen M. Corey) என்பவர் முக்கியமானவர். இவருடைய 'பளளிச் செயற்பாடுகளை உயர்த்துவதில செயலா ராய்சசியின் பங்கு' (Action Research to improve

School Practice) என்ற நூல் ஆசிரியர்களிடையே பெரும் வரவேற்புப் பெற்றது.

ஒரு நல்லாசிரியர் சாதாரணமாகத் தம் முடிவு களை வழக்கத்தின் அடிப்படையிலோ, மற்றவர் பட்டறிவின் அடிப்படையிலோ, வல்லுநர்களின் பரிந்துரையின் அடிப்படையிலோ பொது நோக்கின் அடிப்படையிலோ எடுக்கிறார். செயலாராய்ச்சி என் பது இதற்கும் ஒருபடி மேலானதாகும். பல சீரான படிகளைக் கொணடு தீர்வுகள கண்டு அதன்பின் மாற்றங்களைக் கொணடுவருவது இதன் நோக்க மாகும். செயலாராய்ச்சியின்போது ஆசிரியர் சிக்கல் களைக் கண்டறிவதிலும், அதற்கான விவரங்களைத் திரட்டுவதிலும், கருதுகோள் அமைப்பதிலும் முடிவு களை மதிப்பிடுவதிலும் மிக்க கவனத்துடனும் அறி வியல் கண்ணோட்டத்துடனும் ஈடுபடுகிறார்.

கல்வி ஆராய்ச்சியை இரண்டு கோணங்களி லிருந்து பார்க்கலாம். ஒன்று, எதைப் பற்றி ஆராய்ச்சி செய்யப்படுகிறது என்பது; மற்றொன்று, நோக்கங் களின் அடிப்படையிலானது. கல்வி ஆராய்ச்சியாளா கள் இரண்டு பொருள்களின் தொகுப்புகளை மனத் தில் கொண்டு ஆராய்ச்சி செய்கிறார்கள். ஒன்று மக்களைப் பற்றியது. மாணவர்கள், ஆசிரியர்கள, ஆராய்சசியாளர்கள், நிருவாகிகள் ஆகியோர் இதில் அடங்குவர். மற்றொன்று அமைப்புகளைப் பற்றியது. வகுப்பறை பள்ளி, சமூகம், அரசு இவை அமைப்பில அடங்கும். செயல் முறைகளை மேம்படுத்துவதும் அறிவு வளர்ச்சியும் கல்வி ஆராய்ச்சியின் இரு முக்கிய நோககங்களாகும்.

செயலாராய்ச்சி முறையில் பின்வரும் கூறுகள் அடங்கும்.

1. நிறைவின்மை - ஆராய்ச்சியாளர் தம் அலுவல் சூழ்நிலை நடைமுறைகளில நிறைவின்மையும், கவலையும் அடைகிறார்.
2. நம்பிக்கை - இருப்பினும் முன்னேற்றங்கள் கொண்டு வரலாம் என்ற நம்பிககையும் கொண் டிருக்கிறார்.
3. தம் நிறைவின்மையைக் குறிபபிட்டுக் காட்டு கிறார்.
4. சிக்கலை வரையறுக்கிறார்.
5 சிக்கல்களின் காரணிகளைக் கண்டறிகிறார்.
6. மேம்படுத்துவதற்கான பயிற்சிகளையும், நட வடிக்கைகளையும் ஆராய்கிறார்.
7. கருதுகோளைச் சோதிப்பதற்கான முறையை வரைகிறார்.
8. செயலாககக் கருதுகோளை அமைக்கிறார்.

எடுத்துக்காட்டாகக் கடைசிப் பலகையில் உள்ள மாணவர்களில் சிலர் பாடத்தில் கவனம் கொள்ளாது, அடிக்கடி தங்களுக்குள் மெல்லிய குரலில் பேசிக் கொள்வதை ஆசிரியர் கவனிக்கிறார். ஆசிரியர் சிக்கலை உணர்ந்தபின், சிக்கலுக்குரிய கருதுகோளை உருவாக்குகிறார். சிக்கலுக்கான காரணிகளை அனுமானிக்க முயல்கிறார்; கருதுகோள் சோத னையை உருவாக்குகிறார்; சிக்கலைத் தீர்க்கிறார்.

இவ்வகை ஆராய்ச்சியின் பயனாகக கற்பித்தலில் முன்னேற்றம் ஏற்படுத்தலாம். மனித உறவுகளை மேம்படுத்தலாம். நிருவாகச் சீர்திருத்தங்கள் கொண்டு வரலாம். ஒப்புமைக் கல்வி, முன்னேற்ற வழி வகைகள், வரலாற்று அறிவு ஆகியவற்றில் விருத்தி காணலாம். இதன் மூலம் தத்துவ முறை யிலும், சமுதாய முறையிலும், உளவியல் முறையிலும் அடிப்படைகளில் முன்னேற்றம் கொண்டு வரலாம். செயல் ஆராய்ச்சியின் நன்மைகள்:

1. பல சமயங்களில் பொது ஆராய்ச்சியின் பயன்களை, போதுமான ஆராய்ச்சிப் பின்னணி இல்லாததன் காரணமாகவும், பல கட்டுப்பாடுகள் விதிப்பதன் காரணமாகவும், வகுப்பறை முறைகளில் பயன்படுத்த முடியாமல் போகிறது. ஆனால் செயலா ராய்ச்சியின் பயன்களை எளிதாகப் புரிந்து கொண்டு செயற்படுத்த முடியும்.

2. செயலாராய்ச்சியின் காரணமாக ஆசிரியரின நடத்தையிலும் கற்பித்தலிலும், மாற்றங்கள் வருவ தோடு அவருடைய எண்ணங்களிலும், நாட்டங்களி லும் மாற்றங்கள் ஏற்படுகின்றன. இது ஆசிரியர் தானாகவே ஓர் ஆராய்ச்சியைத் திட்டமிட்டு, நடத்தி, மதிப்பீடும் செய்வதால் உண்டாகிறது. செயல் ஆராய்ச்சியில் எல்லோரும் ஈடுபடும்பொழுது குழு ஒற்றுமையும் உணடாகிறது.

3) ஆசிரியர்கள் செயலாராய்ச்சியின் திட்டமிடும் பருவத்தில் ஒருவரோடொருவர் கலந்து பேசுவதால் பொதுவான கல்விச் சிக்கல்களைப் பற்றியும், ஆராய்ச்சி முறைகளைப் பற்றியும் நன்கு தெரிந்து கொள்ள வாய்ப்பு ஏற்படுகிறது. இவர்கள் ஆராய்ச்சித் தொடர்பான பல புத்தகங்களைப் படிக்கத் தூண்டு கிறது. இதனால் பல சிக்கல்களுக்கு ஏற்கனவே வெளி வந்த முடிவுகள் மூலமாகவும், தானாகச் செய்த ஆராய்ச்சிகள் மூலமாகவும் தீர்வுகள் காண முடிகிறது.

**செயலாராய்ச்சியின் குறைகள்:** 1) செயலா ராய்ச்சி என்பது ஒரு குறிப்பிட்ட மட்டத்தில், குறிப்

பிட்ட எண்ணிக்கையில் செய்யப்படுவதால் கல்வி அறிவியலை வளர்ப்பதில் அதன் பங்கு முதன்மை யானது என்று கூறமுடியாது. செயலாராய்ச்சியின் முடிவுகளை ஒன்று சேர்த்து ஒரு பொதுக் கருத்தைக் கொண்டு வர முடியும் என்றாலும் இவ்வகை முயற்சி இதுவரை மிகக் குறைவாகவே காணப்படுகிறது.

2) செயலாராய்ச்சியின் முக்கியக் குறைபாடு, பொது ஆராய்ச்சியுடன் ஒப்பிடும்போது அதன் குறைந்த தரமாகும்.

3) செயலாராய்ச்சியின் கண்டுபிடிப்புகளைப் பொதுமைப் படுத்த முடியாது. எடுத்துக்காட்டாக இந்த ஆண்டு மாணவர்களைக் கொணடு நடத்தப் பட்டசெயலாராய்ச்சியின் முடிவுகளை அடுத்த ஆண்டு மாணவர்களுக்குப் பயன்படுத்துவது சரியானதாகாது.

4) ஏற்கனவே வேலைபபளு மிகுந்திருககும் ஆசிரியர்களுக்கு இந்த வேலையும் சேர்க்கப்படும் பொழுது அவர்களின் பொறுப்பு மேலும் மிகுதியா கிறது என்பது செயலாய்வைப் பற்றிய பொதுவான விமரிசனம் ஆகும்.

இக்குறைகள் இருப்பினும் செயலாராய்ச்சி என் பது கட்டாயம் ஊக்குவிக்கப்பட வேணடிய ஒன்றா கும். தங்களுடைய சிக்கலகளுக்குத் தீர்வு காண்பதில் ஆசிரியர்கள நேரடியாக ஈடுபடுவதோடு பலவகை சிக்கல்களின் தீர்வுகளுக்கும் காரணமாக அமையும். தற்காலிகமான கருது கோள்கள் அமைப்பது, தற் காலிகமாகப் பொதுமைப் படுத்துவது இவற்றின் மூலம் கல்வி அறிவியலின் முன்னேற்றத்துக்கு, செய லாராய்ச்சிசிறப்பான பங்காற்றிவருகிறது. இவ்வகை ஆராயச்சியில் ஈடுபடுவது ஆசிரியர்களின் வேலைத் திறனையும் மேம்படுத்துகிறது.

ஆனால் இந்த நடைமுறைச் சிக்கல்களைப் பற்றிய இப்போதைய ஆர்வத்தைப் பற்றிக கவலைப்படும் மேல்நிலைக் கல்வியாளர்கள் பலர் இருக்கிறார்கள். ஒருசிலர் இதன்பால் கவரப் படாமல் அடிப்படை ஆராய்ச்சிகள மேற்கொண்டா லும் நடைமுறைப் பயன்கள் அடிப்படை ஆராய்ச்சி யின் உயிர்த்தன்மையை மாசுபடுத்துகின்றன எனபது இவர்களின் கவலையாகும். ஓர் ஆக்க சக்தி வாய்ந்த சிநதனையாளன் வேலை, ஒவ்வொரு மனித முயறசி யிலும், அதன் உள்ளார்ந்த மதிப்பைக் கூடப் புறக் கணித்து, உடனடி முடிவுகள் எடுப்பதன்று என்று இவர்கள் கருதுகிறார்கள. இது ஒரு தீர்க்க முடியாத சிக்கலல்ல. கல்வித் துறையில எல்லா மட்டங்களிலும் நிறையச் சிக்கல்கள் இருககின்றன. அடிப்படை ஆராய்ச்சியிலும் பயன்படுத்தும் ஆராய்ச்சியிலும் பயிற்சி பெற்ற ஆராய்ச்சி மாணவனையும், சாதா ரணமாகப் பயன்படுத்துபவரையும் ஒரே சமயத்தில் ஈடுபடுத்தலாம். சி.ஆர்.வ.

**செயலூர் இளம்பென் சாத்தன். கொற்றனார்**: சங்கப் புலவர்களுள் ஒருவராகிய இப்புலவர் அகநானூற்றில இடம்பெறும், 'தொல நலம் சிதையச் சாஅய், அல்கலும்' எனத தொடங் கும் பாடலை (அகம். 177) இயற்றியுள்ளார். இப் பாடல் பாலைத் திணையில் அமைந்துள்ளது. 'பிரி விடை வேறுபட்ட தலைமகளைத் தோழி வற்புறுத் தியது' எனற துறையில் அமைந்த இப்பாடல் சொன னயம், பொருணயம் மிக்குத் திகழ்கிறது. 'இயற்கை எழில் அழியுமாறு - நமமை விட்டு நீங்கிச் சென்ற நம் தலைவர் இனனும் வரவில்லை என்று மிகுதியாக வருந்துதலை ஒழிக' என முதறகண தோழி அமைதி கூறிச் செய்தியினைப்பின் விளக்குகின்றாள். ஆசிரியர் இப்பாடலில் அருஞ்சுரத்தின் வெம்மையினையும், இரும்பிடித் தடக்கையினை ஒத்த ஐம்பால் குழல் கற்றையினையுடைய மகளிர மலர் கொய்வதற்காகச் செல்லும் கல் நெறியின கடுமையினையும் அழகுறச சித்திரித்துள்ளார். பாகற் கனியினை விரும்பியுண ணும் கடுஞ்சூல் கொணட கானமயில பெருவங்கியம் போல் ஒலி செய்து உலவும் காட்டினைக் கடந்து சென்றோர் உரிய காலத்தில் வாராது காலம் நீட்டித் தாராயினும் கவலற்க என்று தோழி தலைவியினைத் தேற்றுகினறாள். மேலும், இப்பாடலில சோழ நாட்டுப் பண்ணன் சிறப்பு நன்கு விளககப்பட்டுள ளது. கி.கோ.

**செயலே செப்பும், பொருளே புகலும்**: ஒருவரது கவனமற்றத் தன்மையை அவரது செயலே வெளிப்படுத்துவது, செயலே செப்பும் பொருளே புகலும் (Res Ipsa Loquitur)என்பதாகும். செயலே செப்பும் பொருளே புகலும் என்பது, ஒரு சட்ட விதி அன்று; ஒரு செயலின் தன்மையை விளக்குவதற்குப் பயன்படுததப்படும் ஒரு குறிப்புப் பெயரேயாகும்.

செயலே செப்பும் பொருளே புகலும் என்பதில், எதிர்வாதியின் கவனமின்மையை வாதி மெய்ப்பிக்க வேணடிய தேவையில்லை. எதிாவாதியே அதனை மெய்ப்பிக்கக் கடமைப்பட்டவராவர். வாதி ஒருவா, இவ்விதியின கீழ், எதிாவாதி ஒருவருக்கு எதிராக வழக்குத் தொடுத்திருக்கும் போது, எதிர்வாதி தாம் அவ்வாறு கவனமற்று இருக்கவில்லை என்பதை மெய்ப்பிக்க வேண்டும். அவர் அவவாறு மெய்ப் பிக்கத் தவறும்போது, வாதிககு இழைத்த தீங்கிற்கு அவர் (எதிர்வாதி) பொறுப்பாவார்.

எ-டு: மக்கள் நடமாட்டம் மிகுந்த வீதியில் கடை, பண்டக சாலை வைத்திருப்போர், வீதியில் நடந்து செல்வோருக்குத் தீங்கு ஏற்படுமளவுக்குப் பொருள்களை ஒழுங்கின்றி வைத்திருப்பது (Byrne V. Boadle (1863) 2H & C 722);

அறுவை மருத்துவம் செய்யப்பட்ட இடத்திலிருந்து மருத்துவர் துண்டித் துணியை அகற்றாது விடுவது;

வீதியில் சென்று கொண்டிருக்கும் பேருந்து வண்டி நடைபாதையின் மீது ஏறி, அங்கு நின்று கொண்டிருக்கின்றவர்கள் மீது மோதிக் காயத்தை ஏற்படுத்தி விடுவது போன்ற செயல்கள் எதிர்வாதியின் கவனமின்மையைச் செப்புவனவாகும். பு.வே.

**செயற் கோட்பாடு:** முதியவர்கள் பற்றிய கோட்பாடுகள் சில வளர்ச்சி உளவியலில் உள்ளன. அவற்றுள் செயற்கோட்பாடு (Activity Theory) ஒன்றாகும். பணிமுதிர்வு பெற்று ஓய்வுபெறும் நிலை எய்திய முதியவர்கள், தங்கள் பிணைப்புகளை அறுத்துக் கொண்டு ஒதுங்கியிருப்பார்கள் என்பது ஒரு கோட்பாடு. மற்றையது இதற்கு மாறான கருத்தைக் கொண்ட செயற் கோட்பாடு ஆகும். இதனை வலியுறுத்துபவர் மேடாப்சு என்னும் உளவியலாளர் ஆவார். ஒருவர், தம் வளர்ச்சிப் பருவத்தில் இயல்பாகவே சுறுசுறுப்பாகவும், செயல்திறன் கொண்டவராகவும், மனநிறைவு உள்ளவராகவும் இருப்பின் அவர்கள் முதுமைப் பருவத்திலும் மனநிறைவு கொண்டவர்களாகவும், பொது நிகழ்ச்சிகளில் ஈடுபாடு உடையவர்களாகவும் செயல்துடிப்பு மிக்கவர்களாகவும் விளங்குவர் என்கிறார். ஒதுங்கி வாழ்கின்ற தன்மை என்பது சமூகமும் குடும்பமும் அவர்களைப் பயனுள்ள வழிகளில் ஈடுபடுத்திக் கொள்ளாததன் விளைவேயாகும். முதியவர்களுக்குப் போதுமான ஊக்கமும், வாய்ப்பும் அளித்தால் அவர்கள் செயல்களைச் செய்வதில் ஆர்வம் காட்டுவர் என்பதே இக் கோட்பாடு வலியுறுத்தும் கருத்தாகும். ஜி.இரா.

**செயற்பாட்டியல்:** இருபதாம் நூற்றாண்டின் தொடக்கத்தில் சமூகவியலின் கருத்தாய்வுத் தொகுதியின் (Sociological Theory) அமைப்பு முறையில் ஒரு மகத்தான மேம்பாட்டுக் கட்டம் ஏற்பட்டது. அந்தக் கட்டம்தான் செயற்பாட்டியல் (Functionalism) என்று அழைக்கப்படும் செயற்பாடு பற்றிய பகுப்பாய்வின் தோற்றம். ஒரு சமூக நிகழ்வை எவ்வாறு புறவயமாக, அறிவியல் அடிப்படையில் தெளிவாக ஆராய்ந்து விளக்கம் தருவது என்ற நிலையில் சமூகவியல் அறிஞர்கள் குழம்பி நின்ற வேளையில் எழுந்ததுதான் செயற்பாட்டியல் ஆகும். ஒரு கருத்தியல் கண்ணோட்டத்தில் ஒரு காரணியை மட்டும் நிருணயக் கூறாக வைத்துக்கொண்டு சமூகநிகழ்வுகளை ஆராய்ந்து ஏற்பட்ட கருத்தாய்வுத் தொகுதிகளும், சமூக நிகழ்வுகளை முழுமையாக ஆராயாமல் பகுதியாகவே ஆராய்ந்து வெளிவந்த கருத்தாய்வுத் தொகுதிகளும் அப்பொழுது சமூகவியல் துறையில் கோலோச்சிக் கொண்டிருந்தன. இந்நிலையில் ஒரு வலுவான, விளக்கமான, முழுநிறைவான அணுகுமுறையாகச் செயற்பாட்டியல் எழுந்து சமூக நிகழ்வுகளை அவற்றின் செயற்பாடுகளின் உருவகையில் ஆராய்ந்து முழு நிறைவான விளக்கம் தரும் போக்கிற்கு வழிவகுத்தது.

செயற்பாட்டியல் சமூக நிகழ்வுகளை அவற்றின் செயற்பாடுகளின் அடிப்படையில் ஆராய்கிறது. ஆயினும் இந்த அணுகுமுறை சமூகவியலின் கண்டுபிடிப்பு அன்று. உயிரியல் அறிவியல்களின் இந்த அணுகுமுறை முதலாவதாகக் கண்டுபிடிக்கப்பட்டு வந்தது. ஓர் உயிரியல் நிகழ்வைச் செயற்பாட்டியல் மூலமாக உயிரியல் அறிவியல்கள் ஆராய்ந்து கொண்டிருந்தன. அவற்றிடமிருந்து சமூக மானிடவியல் சமூகவியல் ஆகிய துறைகளின் அறிஞர்கள் இந்த அணுகு முறையைப் பெற்றுச் சமூகவியல் துறையில் புகுத்தினார்கள்.

'செயற்பாடு' (Function) என்ற கருத்தே உயிரியல் அறிவியல்களிடமிருந்துதான் பெறப்பட்டது. உயிரியல் அறிவியல்களில் ஓர் உயிரினப் பொருள் நிலைபெற்று இயங்க உதவிடும் ஓர் ஆதாரமான செயற்பாங்கை (Process) உயிரியல் அறிவியலறிஞர்கள் செயற்பாடு என்பார்கள். இந்தக் கருத்தைச் சமூக அறிவியல் அறிஞர்கள் கடன் வாங்கிச் சமூக அறிவியல்களில் குறிப்பாகச் சமூக மானிடவியல், சமூகவியல் ஆகிய துறைகளில் பயன்படுத்தினார்கள்.

தொடக்கத்தில் சமூகவியல், சமூக மானிடவியல் துறை அறிஞர்கள் தாம் கடன்வாங்கிய 'செயற்பாடு' என்ற சொல்லை உயிரியல் அறிவியலறிஞர்கள் பயன்படுத்திய அதே பொருளிலேயே பயன்படுத்தினர் ஒரு சமூகக் கூறு தான் சார்ந்துள்ள சமூக அமைப்பு முறை நிலைபெற்று நிற்க உதவுமமுறையில் ஆற்றிடும் பங்கைச் செயற்பாடு என்று குறித்தனர். அதாவது ஒரு சமூகக் கூற்றின் நடவடிக்கை (Operation) அல்லது செயலாக்கம் அது சார்ந்துள்ள சமூக அமைப்பு முறை நிலைபெற்று நிற்க உதவும் சமயத்தில் அந்த நிலைமையைச் செயற்பாடு என்று குறித்தனர்.

தொடக்கக் கட்டத்தில் எல்லாச் சமூகக்கூறுகளும் சமூக அமைப்பு முறை நிலைபெற்று நிற்க உதவும்

வகையில்தான் செயல்படுகின்றன என்ற கருத்து நிலவியது. இந்த அடிப்படையில்தான் செயற்பாட்டியல் கடைப்பிடிக்கப்பட்டுச் சமூகக் கூறுகள் ஆராயப்பட்டன. முதன்முதலில் இக் கண்ணோட்டத்தில் சமூகக் கூறுகளை ஆராயும் முயற்சி சமூக மானிடவியலில் ஏற்பட்டது. அம் முயற்சிக்கு வித்திட்டவர்கள் பிரானிசுலா மலினோவ்சுகி (Branislaw Malinowski 1884-1942) என்ற அறிஞரும் ஆர்தர் ஆர். இராட்கிளிப் பிரவுன் (Arthur R.Radcliffe-Brown) என்ற அறிஞரும் ஆவர்.

ஆயினும் இவர்களுக்கு முன்னரே சமூகவியலில் செயற்பாட்டியல் தொடர்பான ஒரு கருத்து நிலவியிருந்தது. ஆகசுட்டு கோம்டு (Auguste Comte 1798-1857) என்ற அறிஞர் சமூகத்திலுள்ள ஆக்கக் கூறுகள் தம்மிடைய ஓர் இசைவிணக்கமான உறவுகொணடு செயலபடுகின்றன. அதன் விளைவாகச் சமூகம் ஓர் ஒழுங்கை எய்துகிறது என்றார். அவருக்குப் பின்வநத எர்பர்ட்டு இசுபென்சர் (Herbert Spencer 1820-1903) ஓர் உயிரினப் பொருளில் இருப்பதைப் போலவே ஒரு சமூகத்தில் இருக்கிற உறுப்பு அலகுகள் இணைந்து செயல்பட்டுச் சமூகத்தை இயங்கவைக்கின்றன என்றார். வில்பிரெடோ பாரெட்டோ (Vilfredo Pareto 1848 - 1923) என்ற அறிஞர் சமூகத்தில் பல்வேறு கூறுகள் நிலவுகின்றன. அவை ஓர் இணக்கமான முறையில் இயங்கிச் சமூக அமைப்பு முறையின் சமன்பாட்டு நிலையைத் தக்க வைக்கின்றன என்றார்.

எமிலி தர்க்கைம் (Emile Durkheim-1858-1917) என்ற அறிஞர் ஒரு சமூகக் கூற்றுக்கு விளக்கம் தரமுற்பட்டால் அதை உண்டாக்கிய காரணங்களோடு அது ஆற்றிடும் செயற்பாட்டையும் ஆராய்ந்து அந்த அடிப்படையில் விளக்கம் தரவேண்டும் என்றார். ஒரு சமூகக் கூறு செயல்படும்போது அதன் நிகழ்வினால் ஒரு சமூக உயிரினப் பொருளின் (சமூக அமைப்புமுறையின்) பொதுத் தேவை நிறைவேறுகின்ற விளைவு ஏற்பட்டால் அந்த விளைவே அதன் செயற்பாடு ஆகும் என்கிறார் தர்க்கீம். அதாவது ஒரு சமூக உயிரினப் பொருளின் பொதுத் தேவையை நிறைவேற்றும் தன்மையில் தான் ஒரு சமூகக்கூற்றின் செயற்பாடு அமைகிறது என்கிறார் தர்க்கீம். ஒருசமூக உயிரினப் பொருளின் பொதுத் தேவை என்பது அதன் கட்டொருமைப்பாடு (Solidarity) ஆகும் என்பது தர்க்கிமின் கருத்து. சமூகக் கூறுகள் இந்தப் பொதுத் தேவையை நிறைவேற்றும் வகையில் அதாவது சமூகத்தின் கட்டொருமைபாட்டை ஏற்படுத்தும், வலுப்படுத்தும், நிலைநிறுத்தும் வகையில் செயல்படுகினறன. எடுத்துக்காட்டாக வேலைப் பங்கீட்டு முறை உறுப்பினர்களிடையே ஒரு பரசுபரச் சார்பு நிலையைத் தோற்றுவித்து அவர்களிடையே கட்டொருமைபாட்டை ஏற்படுத்துகிறது. இவ்வாறே மதமும் மதச் சடங்குகளிலும், நிகழ்ச்சிகளிலும் எல்லோரும் பங்கு பெறும்வண்ணம் அனைவரையும் திரட்டிவைத்து அவர்களைக் கட்டொருமைப்படுத்துகிறது. ஒரு குற்றவாளிக்குத் தரப்படும் தணடனைகூடச் சமூகக் கட்டொருமைப்பாட்டுக்கு உதவுகிறது. மேற்பார்வைக்குத் தண்டனை ஒரு குற்றவாளியைப் பழிவாங்கும் வகையில் அமைகிற நடவடிக்கையாகத் தோன்றக் கூடும். ஆயினும் அதன்மூலம் சமூகம் போற்றிடும் கூட்டுணர்வுகள், விழுமியங்கள நசுக்கப்படாமல், மீறப்படாமல் பாதுகாக்கப் பட்டு நிலைநிறுத்தப்படுகின்றன. இந்த விளைவே தண்டனையின் செயற்பாடு ஆகும் என்கிறார் தர்க்கீம்.

இவ்வாறு சமூகவியல் அறிஞர்கள் செயற்பாட்டியலுக்கு ஒரு பின்னணியை ஏறபடுத்தி அதன் வளர்ச்சிக்கு வழி வகுத்திருந்தாலும் செயற் பாட்டியல் ஒரு கொள்கையளவில் மேம்பாடு அடைந்தது மலினோவ்சுகி, இராட்கிளிப் பிரவுன் ஆகிய சமூக மானிடவியல் அறிஞர்கள் காலத்தில்தான். இவர்களதாம் செயற்பாட்டியலுக்கு வடிவம் தந்து, மேம்படுத்தி, அதை ஒரு கொள்கையாக உரு மாற்றினார்கள்.

மலினோவ்சுகி சமூக, பணபாட்டுக் கூறுகள் அமைப்புகளாகவோ, நிறுவனங்களாகவோ, செயற்பாங்குகளாகவோ, விழுமியங்களாகவோ, நெறிகளாகவோ எவ்வாறாக இருந்தாலும் சரி அவை மனிதர்கள் உயிர் வாழ்வதற்குத் தேவையான அடிப்படைத் தேவைகளை நிறைவேற்றுவதற்காக் ஏற்படுத்தப் பட்டவை. ஆகவே அவை மனிதர்களுடைய வாழ்வுத் தேவைகளை நிறைவேற்றுகின்றன. இந்தவகையில் அவற்றின் செயலாக்க விளைவுகள் அதாவது செயற்பாடுகள் மனிதர்களுக்கு நன்மை பயக்கும் விதத்தில் அமைகின்றன என்கிறார்.

மனிதர்களுடைய தேவைகள் தனித்தனியே பிரிந்து நிற்பதுகிடையாது. அவை ஒன்றோடொன்று தொடர்புகொணடு இணைந்திருக்கும். இப்படிப்பட்ட தேவைகளை நிறைவேற்றுகின்ற சமூக பண்பாட்டுக் கூறுகளும் பரசுபரத் தொடர்புகொண்டு இணைந்து நிற்கும். ஆகவே அவை செயலாற்றிடும்பொழுது இணைந்தே செயலாற்றிடும் என்கிறார் மலினோவ்சுகி. ஆனால் இராட்கிளிப் பிரவுன் சமூகக் கூறுகள் தனி மனிதர்களுக்காகச் செயல்படுவது கிடையாது. அவை ஒட்டுமொத்தமான சமூகத்திற்காகச் செயல்படுகின்றன என்கிறார்.

செயற்பாடு என்பது அமைப்புடன் (Structure) தொடர்புடையது. ஆகவே அமைப்பைத் தெரிந்து கொண்டாலொழியச் செயற்பாட்டைப் புரிந்து

கொள்ள முடியாது என்கிறார். இராட்கிளிப் பிரவுன் இதற்கு உயிரினம் சார்ந்த ஒப்புமை (Organic Analogy) அதாவது சமூகத்தை ஓர் உயிரினப் பொருளோடு ஒப்பிட்டுப் பார்ப்பது இன்றியமையாதது என கிறார்.

ஓர் உயிரினப் பொருள் பல்வேறு உறுப்புகள் இணைந்து இருக்கும்படியான அமைப்பைக் கொண்டிருக்கும். அதன் உறுப்புகள் ஒன்றுக் கொன்று தொடர்பு கொண்டவையாய் இணைந்திருக்கும். இதன் காரணமாக உயிரினம் ஓர் ஒருமைப்பட்ட முழுமைத் தொகுதியாக அமையும். உயிரினப் பொருளின் அலகுகள(உறுப்புகள்) ஒவ்வொன்றும் ஒரு குறிப்பிட்ட பணியைச் செயலாக்கத்தைத் தொடர்ந்து, திருப்பித் திருப்பிச் செய்துகொண்டிருக்கும். எடுத்துக் காட்டாக மூச்சுவிடுதல், செரிமானம், கழிவுப் பொருள்களை வெளியேற்றுதல், குருதியைத் தூய் மைப்படுத்துதல் என்று ஒரு குறிப்பிட்ட பணியை அவை தொடர்ந்து செய்துகொணடிருக்கும். இநதப் பணிகளையும் அவை ஒனறொடொன்று இணைநது பரசுபர உறவுநிலையில் புரியும். அலகுகளின செய லாக்கத்தின் காரணமாக அவை ஒவ்வொன்றும் ஒரு குறிப்பிட்ட ஆதாரமான பணியைச் செய்வதன் காரணமாக உயிரினப் பொருள் உயிர் வாழவும், இயங்கவும், நிலைத்து நிற்கவும் முடிகிறது. இவவாறு ஓர் உயிரினப் பொருளில் ஒவ்வோர் அலகும் அது உயிரோடு இயங்கவும், நிலைபெற்று நிற்கவும் பங் காற்றுகிறது. இநதப் பங்குகளே அவற்றின் செயற பாடுகள் ஆகும்.

இவ்வாறே சமூகமும் பல்வேறு அலகுகள இணைந் திருக்கும்படியான அமைப்பைக் கொண்டிருக்கிறது. அதன் அலகுகள் ஒன்றொடொன்று தொடர்பு கொண்டவையாய் இணைந்திருக்கின்றன. இதன் காரணமாகச் சமூகம் ஓர் ஒருமைப்பட்ட முழுமைத் தொகுதியாக அமைகிறது. சமூகத்தின் அலகுகள் ஒவ்வொன்றும் ஒரு குறிப்பிட்ட பணியைத்தொடர்ந்து திருப்பித் திருப்பிச் செய்துகொணடிருக்கின்றன. இந்தப் பணிகளையும் அவை ஒனறொடொன்று இணைந்து, பரசுபர உறவுநிலையில் புரிகின்றன. அலகுகள் செயலாக்கத்தின் காரணமாகச் சமூகம் இயங்கவும் நிலைபெற்று நிற்கவும் முடிகிறது. இவ் வாறு சமூகத்தின் ஒவ்வொரு கூறும் சமூகம் இயங்க வும், நிலைபெற்று நிற்கவும் பங்காற்றுசிறது.

இவ்வாறு மலினோவ்சுகியும், இராட்கிளிப் பிரவுனும் சமூகக்கூறுகள ஒவ்வொன்றும் செயற்பாடு உடையவை என்று கூறுகின்றனர். எவ்விதத்தில் அவை செயல்படுகின்றன என்பதில் அவர்களுக்கி டையேகருத்துவேற்றுமை இருந்தபோதிலும்அவற்றின் செயற்பாட்டுத் தன்மையில் அவர்களுக்கிடையே கருத்து ஒற்றுமை இருக்கிறது.

இவர்கள் தொடங்கிய செயற்பாட்டுக் கொள்கை யைப் பின்னால் வந்த அறிஞர்கள் செம்மைப்படுத்தி மேம்படுத்தி நிலைபெறச் செய்தனர். அவர்களில் முக் கியமானவர் இராபர்ட்டு கிங மெர்டன் (Robert King Merton 1910-) என்ற சமூகவியல் அறிஞராவார்.

இன்று செயற்பாட்டியல் கொள்கை பின்வரும் கருத்துகளோடு இயங்குகிறது. 1) செயற்பாட்டியல கொள்கை சமூக அமைப்பு முறை (Social System) என்ற கருத்தை உள்ளடக்கியிருக்கிறது. சமூக அமைப்பு முறை ஒன்று இருப்பதாகக் கற்பித்துக் கொண்டு அதன் அடிப்படையிலேயே தனது ஆய்வை அக்கொள்கை மேற்கொள்கிறது.மார்க்கு ஆபிராம்சன் (Mark Abrahamson) என்பவர் 'செயற்பாட்டியல் சமூக அமைப்பு முறை என்ற கருத்தைக் கற்பித்து அதை அடிப்படையாக வைத்துக்கொண்டே தனது விளக்கப் பணியை மேற்கொள்கிறது' என்று கூறு கிறார்.

இதே அடிப்படையில்தான் இராட்கிளிப் பிரவு னும் அமைப்பு பற்றிய கண்ணோட்டத்தில்தான் செயற்பாடு ஆராயப்பட முடியும் என்கிறார். இதற் காக உயிரினம் சார்ந்த ஒப்புமையைக் கொண்டு சமூகத்தை ஓர் ஒருமைப்பட்ட அமைப்பாக நோக்கி அதில் எவ்வாறு அதன் அலகுகள சமூக அமைப்பைப் பேணுகின்ற வகையில் செயல்படுகின்றன என்பதை அவர் விளக்குகிறார்.

2) சமூக அமைப்பு முறை பல்வேறு கூறுகளைக் கொண்டிருக்கிறது என்பது செயற்பாட்டியலாரின கருத்து. அதாவது ஓர் உயிரினப் பொருளைப் போலச் சமூக அமைப்பு முறை பல்வேறு அலகுகளை உறுப்பு களாகக் கொண்டு அமைகிறது.

3) இந்த அலகுகள் ஒன்றோடொன்று தொடர்பு கொண்டவை. தனித்தனியாக விலகி நிறகாமல் ஒன் றோடொன்று இணைந்திருக்கும். ஒவ்வோர் அலகும் பிற அலகுகளுடன் சேர்ந்து செயல்படும். ஒரு பரசு பர உறவுநிலையில் இருந்து அவை செயல்படும். மலிணோவ்சுகியும் இராட்கிளிப் பிரவுனும் ஒரு சமூக அமைப்பு முறையில் அதன் அலகுகள் ஓர் இணக்க மான உறவுநிலையில் தமக்குள முரண்படாமல், மோதிக்கொள்ளாமல் 'சமூகமாக ஒன்றிணைந்து ஒரே போக்கிலேயே செயல்படும். இதன்காரணமாக அதா வது அலகுகளின் இணக்கமான கூட்டுச் செயற்பாடு காரணமாக அவை உள்ளடங்கியிருக்கும் முழுமைத் தொகுதியும் (சமூக அமைப்பு முறை) ஒரே சீராக,

இயல்பாகச் செயல்படும். இந்தவகையில் முழுமைத் தொகுதி ஒரு செயற்பாட்டு ஒருமை கொண்ட அமைப்பாக அதாவது செயற்பாட்டு அளவில் ஒரே சீராக, ஒருமையாக இயங்கும்அமைப்பாக விளங்கும் எனக் கூறுகின்றனர்.

ஆனால் இக்கூற்றை இராபர்ட்டு கிங் மெர்டன் மறுக்கிறார். எல்லாச் சமுகங்களும் செயற்பாட்டு ஒருமை கொண்ட முழுமைத் தொகுதிகளாக விளங்குவது கிடையாது. ஒவ்வொரு சமூகத்திலும் ஓரளவு ஒருமைப்பாடு இருக்கும். ஆயினும் எல்லாச் சமூகங்களும் ஒரேமாதிரியாக முற்றிலும் ஒருங்கிணைந்த ஒருமைப்பட்ட முழுமைத் தொகுதிகளாக இருக்காது. சிலவற்றில் ஒருமைப்பாடு உயர்ந்த அளவிலும் பலவற்றில் ஒருமைப்பாடு குறைந்த அளவிலும் காணப்படக் கூடும் என்கிறார்.

அவ்வாறே ஒவ்வொரு சமூகத்திலும் எல்லாச் சமூகக் கூறுகளும் சமூகத்தின செயற்பாட்டு ஒருமைக்குப் பங்காற்ற வேறுசில கூறுகள் நேரெதிராகச் செயல்படும் எனகிறார். எடுத்துக்காட்டாக நட்சத்திர மீனில் சிலஉறுப்புகள்ஒரு திசையிலும்மற்றஉறுப்புகள வேறொரு திசையிலும் மீனை இழுத்துக்கொண்டு செயல்படுகின்றன என்கிறார்.

4) இராட்கிளிப் பிரவுன் சமூக அமைப்பு முறையில் ஒவ்வொரு சமூகக் கூறும் சமூக அமைப்பு முறை நீடித்து இயங்கவும், அது நிலைபெற்று நிற்கவும் பங்காற்றுகிறது என்கிறார். அவருடைய கூற்றுப்படி சமூகக் கூறுகள் அனைத்தும் ஆக்க முறையிலான் செயற்பாடு (Eufunction) கொண்டிருக்கும் என்றும் அவை சமூக அமைப்புமுறை நிலைபெற்று நிற்கும் வகையில் செயல்படும் என்றும் பொருள்படுகிறது.

ஆனால் மெர்டன், ஒரு சமூகக கூறு எப்பொழுதும் ஆக்கமுறையில் செயல்படுவதிலலை எனகிறார். ஒரு நேரத்தில அது ஆக்கமுறையிலும், இனனொரு நேரத்தில் எதிர்மறையிலும் செயல்படும என்கிறார். இவ்வாறே ஒரே சமூக அமைப்புமுறையில் அது ஒரு சிலருக்கு ஆக்க முறையிலான செயற்பாட்டையும் மற்ற சிலருக்கு எதிர்மறையிலான செயற்பாட்டையும் (Dysfunction) கொணடிருக்கும். அதுபோலச் சமூகம முழுவதற்கும் ஆககமுறையிலான செயற்பாடு கொண்டிருக்கும் ஒரு சமூகக்கூறு தனி நபர்களுக்கு எதிர்மறையிலான செயறபாட்டைக் கொண்டிருக்கும் என்பது அவர் கருத்தாகும்.

ஒரே மதம் நிலவும் சமூகத்தில் மதம் ஓர் ஒன்றிணைப்புச் சக்தியாக விளங்கக்கூடும். ஆயினும் பல்வேறு மதங்கள் நிலவுகின்ற சமூகத்தில் மதம் ஒரு பிரிவினைச் சக்தியாகச் செயல்பட்டு மக்களை மத அடிப்படையில் பிரித்துவைத்து, அவர்களுக்கிடையே இணக்கமான உறவு எழுவதைத் தவிர்த்து மதப் பூசல்கள், சச்சரவுகள், கலவரங்கள் முதலியவற்றை ஏற்படுத்தக்கூடும் என்று மெர்டன் கூறுகிறார்.

இவ்வாறே வறுமை அது பிடித்துள்ள மக்களுக்குப் பாதகமாகவும் அவர்களுக்கு உடல்நலத் தேவைகள், வாழ்க்கை வசதிகள், வாய்ப்புகள் முதலியன கிடைக்கவொட்டாமலும் செயல்பட்டு எதிர்மறைச செயற்பாடு கொணடதாக இருக்கிறது. ஆனால அதேநேரத்தில் அது மேல் தட்டு மக்களுக்குப் பல வசதிகளைச் செய்து தருகிறது. அவர்கள் கருணைக் கொடை வழங்கவும், அதன்மூலம் ஒரு மனநிறைவு எய்தவும் அவர்களுக்கு வாய்ப்பளிக்கிறது. அவர்கள் தமக்குரிய தாழ்வான வேலைகளைக் குறைந்த செலவில் நிறைவேற்றிக் கொள்ளவும் வறுமை வழிவகுத்துக் கொடுக்கிறது. அதுமட்டுமல்லாமல் வேலையில்லாதவர்களுக்கு, வறியவர்களுக்கு ஆதரவு தருகின்ற நிலையங்களிலும், சேவைப் பணிகளில் வேலை கிடைக்கவும், இராணுவத்தில் சேர்ந்து பணியாற்றவும் வறுமை உதவுகிறது.

அதிகார வருக்க முறை (Bureaucracy) ஒரு நவீன தொழிற் சமூகத்தில் ஒரு சிறந்த, மேலான நிருவாக ஆட்சிமுறையாக இயங்குகிறது. தனிநபர் விருப்பு வெறுப்புக்கு இடங்கொடுக்காமல், விதிமுறைகளின் அடிப்படையில புறவய நோக்கில் காரியங்கள நடைபெறவும் நிருவாகம் நடக்கவும் அதிகார வருக்கமுறை பெரிதும் உதவுகிறது. ஆயினும் அதில் நிலவும் 'விதிமுறைகளின்படியே எதுவும் நடக்கவேண்டும்' என்ற கொள்கை விதியின் காரணமாகச் சில வேளைகளில் தனி நபர்களுக்கு நீதியும், நியாயமும் கிட்டாமல போகக்கூடும். இதற்கு மெர்டன் ஒரு நிகழ்ச்சியைச் சான்றாக தருகிறார். பெர்னட்டு பால்சென் (Bernt Balchen) என்பவர் நார்வே நாட்டைப் பூர்வீகமாகக் கொண்டவர். அவர் பல ஆண்டுகள் 'சின்ன அமெரிக்கா' என்ற அண்டார்டிக்குப் பகுதியில் பிரிட்டு (Byrd) அண்டார்டிக்குப் பயணக் குழு என்ற குழுவோடு சேர்ந்து ஆய்வுப் பணிகளை நடத்தினார். அவர் கி.பி. 1927-ஆம் ஆணடில் அமெரிக்கக் குடிமகனாகும் பொருட்டு அமெரிக்க அரசுககு விண்ணப்பம செய்தார். அமெரிக்க நாட்டின் தொழிலாளர் துறையின் விதிப்படி ஒருவர் அமெரிக்கக் குடிமகனாக வேண்டுமானால் அவர் அமெரிககாவில குறைந்தது ஐந்தாண்டுகள தொடர்ந்து குடியிருந்திருக்க வேண்டும். ஆனால் பெர்னட்டு பால்சென் அமெரிக்காவுக்காக, அமெரிக்க ஆய்வுக்குழுவில அமெரிக்காவை ஒட்டிய ஒரு நிலபபகுதியில சொல

லப்போனால் தனக்குரியது என்று அமெரிக்க அரசு உரிமைநாடிய ஒரு நிலப்பகுதியில் பல்லாண்டுகள் பணியாற்றியபோதிலும் அவர் அரசு விதிமுறைப் படி ஐந்தாண்டுகள் அமெரிக்காவில் தங்கியிராத காரணத்தால் அவருக்குக் குடியுரிமை மறுக்கப்பட்டது. இந்நிகழ்ச்சியைச் சுட்டிக்காட்டி மெர்டன் அதிகார வருக்க முறை எவ்வாறு எதிர்மறைச் செயற்பாடு கொண்டதாகவும் அமையக்கூடும் என்று எடுத்துரைக்கிறார்.

5) மலினோவ்சுகியும் இராட்கிளிப் பிரவுனும் சமூகத்திலுள்ள ஒவ்வொரு சமூகக்கூறும் ஓர் ஆதார மான பணியைச் செய்வதால் அவை சமூகத்திற்கு இன்றியமையாதனவாக அமைகின்றன என்கிறார்கள். சமூகக் கூறுகளின் பணி ஆக்கமுறையில் அமைவ தாலும் அந்தப் பணி தனி மனிதர்களின் உயிர் வாழ்வுக்கு அல்லது சமூக நிலைபேற்றுக்குக் காரண மாக அமைவதாலும் அது சமூகத்திற்கு இன்றிய மையாததாக அமைகிறது. அந்தவகையில் இந்தப் பணியை ஆற்றுகிற சமூகக்கூறுகளும் இன்றியமையா தனவாக அமைகின்றன என்பது மலினோவ்சுகி, இராட்கிளிப் பிரவுன் ஆகியோரின் கருத்தாகும்.

ஆனால் மெர்டன் இக்கருத்தை மறுக்கிறார். அவர் ஒரு சமூகத்தின் பல கூறுகள் ஒரு பணியைச் செய்யவும் ஒரு கூறு பல பணிகளைச் செய்யவும் வாய்ப்புண்டு என்கிறார். எனவே இந்தவகையில சமூகத்தில் செயற்பாட்டளவில் இன்றியமையாத ஆதாரக்கூறுகள் (Functional Pre-requisites) அமைய அவசிய மில்லை என்கிறார். உண்மையில் செயற்பாட்டள விலான மாற்றுகள் அல்லது பதிலிகள் (Functional Alternatives or Subtitutes) சமூகத்தில் அமைந்து செயற்பாட்டளவிலான இன்றியமையா ஆதாரக்கூறு கள் அமைவதற்கு வாய்ப்பில்லாமல் செய்கின்றன. சமூகத்தில் ஒரு சமூகக் கூறு அதன் பணியைச செய்ய இயலாமற் போனால் அதற்கு மாற்றாக வேறு கூறு கள் எழுந்து நிலைமையைச் சரிசெய்கின்றன. அதே போல ஒரு சமூகக் கூற்றின் பணியை இன்னொரு சமூகக் கூறு செய்து முன்னதைச் செயற்பாட்டள விலான இன்றியமையாத ஆதாரக்கூறாக அமைய வொட்டாமல் தடுக்கிறது. பல மேம்பட்ட நாடுகளில் குடும்பத்திற்கு மாற்றாகக் 'கூட்டு வாழ்க்கைக் குழு' (Collective) என்ற அமைப்பு தோன்றித் திருமணம புரியாமலேயே ஓர் ஆணும், பெண்ணும் கூட்டாக இல்வாழ்க்கை நடத்தும் அமைப்பு தோன்றியுள்ளது. இதன்காரணமாகக் குடும்பம் ஓர் இன்றியமையாத கூறாகச் சமூகத்தில் அமையாமல் போகிறது.

6) மெர்டனுக்கு முன்னர் செயற்பாட்டியலில் ஒரு சமூகக் கூற்றின் வெளிப்படையான செயற் பாட்டை (Manifest Function) மட்டும் வைத்துக் கொண்டு அதன் செயற்பாட்டுத் தன்மையை ஆரா யும் போக்கு இருந்தது. எந்தக் காரணத்திற்காக நோக்கத்திற்காக ஒரு சமூகக்கூறு உருவாக்கப் பட்டதோ அந்தக் காரணம், நோக்கம் நிறைவேறும் வகையில் அது செயல்படுகிறதா என்பதைச் செயற் பாட்டியலார் ஆராய்ந்து வந்தார்கள். அதாவது அதன்வெளிப்படையான செயற்பாட்டை மட்டும் ஆராய்ந்து வந்தார்கள். அதன் செயற்பாடு அது உண்டாக்கப்பட்டதன் நோக்கத்திற்கு ஏற்ப ஒத்து அமைந்திருந்தால் அதைச் செயற்பாடு உடையதாகக் கருதினார்கள். அப்படி அமையாத நேரத்தில் அதைச் செயற்பாடில்லாத ஒன்று, அதாவது வெறும் எச்சப் பாடு (Survival) என்று கூறினார்கள்.

ஆனால் மெர்டன் ஒரு சமூகக் கூறு வெளிப் படையான செயற்பாடு கொண்டதாக மட்டுமன்றி மறைமுகச் செயற்பாடு (Latent Function) கொண்ட தாகவும் இருக்கும் எனக் கூறுகிறார். வெளிப்படை யாக ஒரு செயற்பாடும் மறைமுகமாக இன்னொரு செயற்பாடும் அதற்கு அமைந்திருக்கும். இந்த மறை முகச் செயற்பாடு அந்தச் சமூகக் கூறு உருவாக்கப் பட்ட நோக்கத்தை ஒட்டி அமையாமல் இருக்கும். ஆயினும் அந்தச் சமூகக்கூற்றுக்கு அது ஓர் பொரு ளைக் கொடுக்கும். 'ஓய்வு வகுப்பினர்' (Leisure Class) என்கிற மேலதரச் செல்வந்தர்கள் விலையு யர்ந்த, ஆடம்பரமான பொருள்களை வாங்கி வீட்டில் குவித்துவைப்பர். இந்தப் பொருள்கள் விலை யில் மட்டுமன்றி தரத்திலும் பயன்பாட்டிலும் நிச்ச யம் உயர்ந்திருக்கும். ஆகவே இத்தகைய பொருள் களிடமிருந்து அவர்கள் நிறைவான சுகத்தை, திருப் தியைப் பெறக்கூடும். இத்தகைய வெளிப்படையான செயற்பாட்டை அவை கொண்டிருந்தாலும் வேறொரு செயற்பாட்டையும் அவை மறைமுக மாகச் செய்யும். அதாவது அந்தப் பொருள்களைக் கொண்டிருப்பவர்களுடைய சமூகத் தகுநிலை,மதிப்பு ஆகியவை உயர்ந்திடவும் அவை வழி வகுக்கும். மதம், தண்டனை ஆகிய கூறுகளகூட இவ்வாறே வெளிப்படையான செயற்பாடு அன்றி மறைமுக மான செயற்பாடும் கொண்டவை என்று மெர்டன கூறுகிறார்.

ஆகவே செயறபாட்டியலார் வெளிப்படையான செயற்பாட்டை மட்டும் வைத்துக்கொண்டு ஒரு சமூகக் கூற்றின் செயற்பாட்டுத் தன்மையை ஆராய லாகாது என்கிறார் மெர்டன். அப்படி ஆராயும் சம யத்தில் ஒரு சமூகக் கூற்றுக்கு அத்தகைய செயற் பாடு இல்லாமல் போனால் அது செயற்பாடில்லாத வெறும் எச்சப்பாடு கருதப்படவேண்டிய என்று

நிலைமை ஏற்படும் என்கிறார். ஒவ்வொரு கூறறிலும் உடனே புலப்படாத ஓா இருட்டு அடிப்பாகம் இருக்கும். அதாவது ஒரு மறைமுகமான செயற்பாடு இருக்கும். அதை ஆராய்ந்தால் ஒரு சமூகக் கூறு செயற்பாடு உடையதா அலலது வெறும் எச்சப் பாடா என்பதை உணரமுடியும். வெளிப்படையான, மற்றும் மறைமுகமான செயற்பாடுகள் ஏதுமில்லாத சமயததில்தான் ஒரு சமூகக் கூறு வெறும் எச்சப் பாடாக அமையமுடியும என்கிறார் மெர்டன்.

7) செயற்பாட்டியலார் எலலோரும் சமூக அமைப்பு முறையை ஒரு நிரந்தரமான அமைப்பைக் கொணடதாகததான கருதுகிறார்கள். சமூக அமைப்பு முறை எப்பொழுதும் அடிப்படையில் ஒரு சமன் பாட்டு நிலையில் இருக்கும் என்கிறனர் வான் டென பொகு (Van Den Berghe) என்பவா 'ஒரு சமூக அமைப்பு முறை முற்றிலும் ஒருங்கிணைந்ததாய் இல்லாமல் இருக்கலாம். ஆயிலும் அடிப்படையில அது ஓர் இயங்கு சமன்பாட்டு நிலையில்(Dynamic Equilibrium) நிலைத்து நிற்கும்' என்கிறார். தால்காட்டு பார்சனசு (Talcott Parsons) என்ற சமூகவியல் அறிஞரும் இதே கருத்தைக் கூறுகிறார். ஒரு சமூக அமைப்பு முறையில் அதன் உறுப்புக்களுககிடையே எப்பொழுதும் ஒரு சமன்பாட்டு நிலை நிலைத்திருக்கும் சமூகததிற்கு உள்ளேயும், வெளியேயும் இயங்கும் சகதிகளால் இந்தச் சமன்பாட்டு நிலை பாதிக்கப்படுவதுணடு. அந்தவேளையில சமூகத்திற்குள்ளேயே அமைந்திருக்கும் சில ஏற்பாடுகள் (Mechanisms) சமூக அமைப்பை மாறிய சூழ்நிலைககு ஏற்பச் சரி செய்து மீணடும் ஒரு சமன்பாட்டு நிலையை ஏற்படுத்தும். இவ்வாறு பலமுறை சமன்பாட்டு நிலை சரிந்தாலும அதைத்தூக்கி நிறுத்தக் கூடிய வலிமை கொண்ட சில ஏற்பாடுகள் சமூகத்தில் உள்ளன. அவற்றின் காரணமாகச் சமூகம் சமன்பாட்டு நிலையை என்றும் தக்க வைத்துககொணடு இயங்கும் என்று செயற்பாட்டியலார் கூறுகின்றனா.

இக்கூற்றின்படிச் சமூகம மாற்றம் அடைவதில்லை என்றும், சமனபாட்டு நிலை பாதிபபுபோனற மாற்றம் ஏறபட்டாலும் நிலைமை சரிசெய்யப்பட்டுச் சமூகம் மீண்டும் சமன்பாட்டு நிலைக்கு வரும் என்றும் பொருள்படுகிறது. ஆனால் பூசல(Conflict) கணணோட்டத்தில் சமூகததை ஆராயகிறவர்கள இதை ஏற்றுக்கொள்வது நிடையாது, ஏனெனில் இக்கூற்று உண்மையானால் சமூக மாற்றத்திற்கே வாய்ப்பில்லாமல் போகும். இக்கருதது ஏற்க இயலாத ஒன்று என்பது பூசல்வாதிகளின் கூற்று. சி என்.ந

**துணை நூல்கள்:**

**Abraham, Francis.**, Modern Sociological Theory: An Introduction, Oxford University Press, Delhi. 1982.

**Merton, Robert K.**, Social Theory and Social Structure, Free Fress, Glencoe, 1957

**Wallace, Ruth A. and Wolf Alison.**, Contemporary Sociological Theory, Prentice-Hall, Inc,. Englewood Cliffs. N.J., 1980.

## செயற்பாட்டு வரவு செலவுத் திட்டம்:

வரவு செலவுததிட்டம் என்பது ஆணடுதோறும அரசு எதிர்பார்க்கும் வரிகள மற்றும் பல தோற்றுவாயகள மூலம் வரும் வருமானம், பலதுறைகளில மேற கொளள வேண்டிய செலவு பற்றிய நிதி அறிககை யாகும். வரவு செலவுத்திட்டம் ஆணடிறகு ஒருமுறை சட்ட மன்றங்களால் நிறைவேற்றபபடுகின்றன. தொன்மைப் பொருளாதார அறிஞாகள அஙகாடி முறை (Market system) அமைப்பில் வரவு செலவுத திட்டம் குறிப்பிட்ட அளவிலதான் தலையிடலாம என்ற கருத்தினை வலியுறுத்தினா. முதல் உலகப் போருக்குப் பின் பல மாற்றங்கள உலக நாடுகளின பொருளாதார அமைப்பில் ஏற்பட்டன, செலவின பங்கு அதிகரித்தது. போர்க்காலத்தில பொதுச்செலவு பல மடங்கு அதிகரிததது. அதன காரணமாகப் பல புதிய வரிகளும் விதிக்கப்பட்டன. அமெரிக்காவில் 1930-ஆம் ஆணடில் ஏறபட்ட பொருளாதார மந்த நிலையும் பல மாற்றங்களை உருவாககியது. கீனசு (Keynes) எனற பொருளியல அறிஞர் பொதுச செலவை அதிகப்படுத்துவதன் மூலம் பொருளாதார மந்த நிலையைப் போககிவிடலாம் என்ற கருத்தை முன்மொழிந்தார். மேலும் நலப் பொருளியல் கொள்கையைப் பல நாடுகளும ஏறறுக்கொணடன. எனவே நாட்டின் வளாசசியில பொதுத் துறையின (Public Sector) பங்கு அதிகரித்தது. இக்காரணங்களால் வரவு செலவுத்திட்டம் பொருளாதாரத்தின் முக்கியக் கொள்கை அறிவிப்பாகவும திட்டமாகவும் ஏற்றுக் கொள்ளப்பட்டது. வரவு செலவுத திட்டம பொருளாதார மாற்றங்களை உருவாக்குவதறகு அடிப்படையாக அமைந்தது. வருமான ஏற்றத் தாழ்வை நீக்குவது, மூலதன ஆககத்தை ஊககுவிப்பது, விலைவாசியைக் கட்டுப்படுத்துவது, வேலை வாய்ப்பைப் பெருககுவது போன்ற குறிககோள்களை வரவு செலவுத் திட்டம் எதிரொலிக்கத தொடங்கியது.

பல பொருளியல அறிஞாகள் வரவு செலவுத் திட்டம் சிறப்பான முறையில் அமையப் பல கருத்துகளை முன் வைத்தனர். வரவு செலவுத் திட்டத்தில் செலவைப் பற்றி அதிகமான முறையில் கவனம

செலுத்த வேணடுமென்றும், அரசு செய்யும் செலவை மதிப்பீடு செயய வேணடுமெனறும கூறப்பட்டது. பல திட்டங்களுக்காகவும், பொருளாதார நடவடிககை களுக்காகவும் பொதுச செலவு செய்யப்பட்டது. எனவே இத்திட்டத்தின வெற்றியும் பயனபாடும் எப்படி உள்ளன என்பதை ஒவ்வொரு திட்டத்தின மதிப்பீடும் செய்ய வேணடுமெனற கருத்தும் வலி யுறுததப்பட்டது. இதன் விளைவாகத்தான செயற் பாட்டு வரவு செலவுத்திட்டம் (Performance Budgeting) என்ற புதிய அணுகுமுறை வரவு செலவுத்திட் டத்தின் சீர்திருத்தமாகக் கொண்டுவரப்பட்டது.

செயற்பாட்டு வரவு செலவுத்திட்டத்தின் கூறு களை அடக்கிய வரவு செலவுத்திட்டம் அமெரிககா வில நகரங்களில் 1920-ஆம் ஆணடு முதல் செயற் படுத்தப்பட்டன. செயற்பாட்டு வரவு செலவுத் திட் டம் 1952-ஆம் ஆணடு முதல் ஒரு திட்டத்தினால ஏறபடும் செலவையும் பயன்பாட்டினையும் அளவிடு கிறது. நீணட காலக் குறிக்கோள்கள வெற்றி பெறு வதற்கும் இத்திட்டம் அடிப்படை யாக அமைகிறது செலவையும, பயன்பாட்டையும் அளவீடு செய்வ தால் நிதி வள ஆதாரங்களைச் செம்மையான முறை யில் அரசு பயனபடுத்துவதற்கு வழிகோலுகிறது. பொதுச செலவைச் செயற்பாட்டின் அடிப்படையில் திட்டங்களுடன் இணைக்கிறது இத்திட்டத்தின் கீழ்ப் பல துணைத் திட்டங்கள் உள்ளன. ஒவ்வொரு செயற்பாட்டின் தன்மையையும் செலவில் அடிப்படை யில் அளவீடு செய்கிறது கூவர் குழு (Hoover Commission) செயற்பாட்டுத் திட்டத்தின் நனமைகளை யும் குறிக்கோள்களையும் 1949-ஆம் ஆண்டு ஆய்வு செய்து அறிக்கை அளித்தது வரவு செலவுத் திட்டம் கணக்கு வைப்பு முறை வரையறை சட்டத்தை 1950-ஆம் ஆண்டு அமெரிக்க அரசு உருவாககியது.

மூன்று முக்கியக் குறிக்கோள்கள் இச்சட்டததின் படி ஏற்றுக்கொள்ளப்பட்டன. வரவு செலவுதிட்டம், செயல், நடவடிக்கைகள், திட்டங்கள ஆகியவற்றை உள்ளடக்கியதாக இருகக வேணடும். திட்டஙகளும் செயற்பாடுகளின் விளைவுகளும் அளவிடப்பட வேண்டும் இதன்பின் பல உலக நாடுகளின் வரவு செலவுச் செயற்பாட்டுத் திட்டம் ஏற்றுக் கொள்ளப் பட்டது. பொருளாதாரத் திட்டமுறையை ஏற்றுக் கொண்ட நாடுகளில் பொதுத் துறைக்காக அதிக முதலீடு செய்யப்படுகிறது. மேலும் திட்டம் என்பதே நிதி ஆதாரங்களையும், வள ஆதாரங்களையும் ஒன்றுபடுத்திப் பொருளாதார வளர்ச்சியை ஏற்படுத் தும் முறையாகும். நிதிப் பற்றாக்குறை உள்ள வளர் கின்ற நாடுகளில் பொதுச் செலவு முழு அளவில் பயன்பாட்டினை உருவாக்கினால்தான் பொருளா தார வளர்சசி செம்மையாக அமையும்.இக்காரணத்தி னால செயற்பாட்டு வரவு செலவுததிட்டம் வளரு கினற நாடுகளுக்குப் பெரும்பயன் அளிப்பதாகும். வரவு செலவுதிட்டத்தைச் செமமைப்படுத்தும கருதது கள இநதிய நாடாளுமன்றத்தில 1954-ஆம் ஆணடு விவாதம செயயபபட்டது. செயற்பாட்டு வரவுசெல வுத்திட்டத்தை நடைமுறைப்படுத்த வேண்டுமென்று 1958-இல் நாடாளுமன்ற மதிபபீட்டு குழு வலியுறுத் தியது

இநதிய அரசின் நிதி அமைச்சகம் அமெரிகக அர சின் வரவு செலவுத் திட்ட ஆய்வு நிறுவனததின் உதவியை நாடியது. பிராஙகு காருசு (Frank W Karuse) என்ற அமெரிகக நிபுணர் செயற்பாட்டு வரவு செலவு திட்டம தொடர்பான ஓர் அறிக்கையை 1964-ஆம் ஆண்டு அளித்தார் வருவாய்த்துறை, பொதுப பணித்துறை தேசிய சிறுதொழில நிறுவனம் ஆகிய மூன்று துறைகளில் முதன முதலாக இதை நடைமுறைப்படுததலாம் என்று அமெரிக்க அறிஞரின குழு பரிந்துரை செயதது நிருவாகச சீர்திருத்தக (Administrative Reform Commission) குழுவின 1968-ஆம் ஆண்டு அறிக்கை மத்திய மாநில அரசு களின் முக்கியத் துறைகளில் இத்திட்டம் செயலாக கபபட வேண்டுமென்றும் வலியுறுத்தியது. இப்பரிந துரையின்படி 1968-69-ஆம் ஆணடுகளில செயற்பாட்டு வரவு செலவுத்திட்டம் மததிய அரசால் ஏற்றுக் கொள்ளப்பட்டது. வளர்ச்சித் துறைகளில் 1969-ஆம் ஆண்டிற்குப் பின செயற்பாட்டு வரவு செலவுத் திட்டம் நடைமுறைப்படுததப்பட்டு வருகிறது. தமிழ் நாடு, மகாராட்டிரம, பஞ்சாபு, இராசசுத்தான், உத் திரப்பிரதேசம் போன்ற மாநிலங்களும் இத்திட்டத் தைச் சில குறிபபிட்ட துறைகளில செயற்படுத்தி வருகின்றன.

இந்தியாவில் நகராட்சிகளால் நடைமுறைப் படுத்தப்படும், கல்வி, சுகாதாரத் திட்டங்களைச் செய லாக்க, வரவு செலவுத்திட்டத்தின் கீழக் கொணடு வந்து செம்மைப்படுதத வேண்டுமென்று பல பொரு ளியல அறிஞர்கள் வலியுறுத்தி வருகினறனர். செயற் பாட்டு வரவு செலவுத்திட்டம் மேலாணமை அமைப்பு (Marginal Structure) சிறப்பாக உருவாவதற்குப் பயன்படுகிறது. திட்டத்தில் உளள பலவேறு பிரிவு களும், செயல்பாட்டுத் திட்டத்தில் பொறுப்பு ஏற்பது டன அத்திட்டத்தின் விளைவுகளுக்கும் பொறுப் பேற் கின்றன. திட்டம் பல பிரிவுகளாகச் செயல்படும் பொழுது கணக்கு வைப்பு முறையும், நிதி மேலாண்மை முறையும அத்திட்டத்தின் பிரிவுகளுக்கேற்ப செயற் படுகிறது. செயற்பாட்டு வரவு செலவுத் திட்டத் தில் பொருத்தமான செயலபடிவம் (Norms) அளவு கோல் (Yardsticks) கீழ்நிலையுளள திட்டங்களின்

செயற்பாடு தொகுதிக்கு ஆகின்ற உற்பத்திச செலவு போனறவை சரியான முறையில் நிருணயிக்கப்படு கின்றன. பல்வேறு தொகுதிகளின செயற்பாட்டுத திறன், மதிப்பீடு செயயபபட்டு அறிககை அனுபபப் படுகிறது செயற்பாட்டு வரவு செலவுத் திட்டம செயற்பட வேண்டுமென்றால திட்டத்தின் குறி யிலக்குகள சரியான முறையில குறிக்கப்பட வேணடும. குறியிலக்குகளின அடிப்படையில மட்டுமே செயற் பாட்டு வரவு செலவுத் திட்டத்தின் வெறறி அமைந துளளது. மேலும் அளநது மதிபபிடத் தகக புளளி விவரங்கள தேவைப்படுகினறன

செயறபாட்டு வரவு செலவுத்திட்டம நடை முறைக்கு வரும்போது பல நிலைகளைக் கடந்து செல்ல வேண்டியுளளது. முதல் நிலையில செயற் பாட்டு வரவு செலவுத் திட்டத்தின் குறியிலககுகள் நிருணயிககப்படுகின்றன. இரண்டாம் நிலையில் வள ஆதாரங்கள கணக்கிடப்படுகின்றன. அக்கணககில பணியாளர், பொருள்கள், பணிகள, நிதிவளஙகள ஆகியவை குறியிலக்குகளின் அடிப்படையில் அமைககப் கின்றன. மூனறாம் நிலையில அடிப்படைக் குறியீட்டு இலக்குகள், வளத்தேவைகள், வள இருப்புகள மதிப பீடு செய்யப்படுகின்றன. நானகாம் நிலையில நடை முறைப்படுத்தப்படுகின்ற திட்டங்கள் சட்டமன்றத துறையால் ஒப்புக் கொள்ளப்படுகிறது.

செயறபாட்டு வரவு செலவுத்திட்டம சில வரம் புககுட்பட்டுச்செயற்பட வேணடிய நிலையில உள்ளது. செயற்பாட்டுவரவு செலவுத்திட்டம் சிறநத முறையில செயற்படுகின்ற துறைகளிலும், நிறுவனங்களிலும மட் டுமே செயற்படுத்த முடியும. சிறநத முறையில அமைந்த துறைகளிலும் கீழ நிலையிலுள்ள தொகுதி களில் அமைப்பு முறை செமமையாக இருப்பதிலலை. மேலும், செயற்பாட்டு வரவு செலவுத் திட்டததின் மூலமே பொருளாதார வெறறிகளை முழுமையாக அடைநதிடலாம் என்று நினைப்பதும் தவறு. காரணம இச்சீர்திருத்தம வரவு செலவுத்திட்டததை மேம்படுத்துவதற்காகக் கொணடுவரப்பட்ட ஓா அணுகு முறையாகும். பொருளாதாரத்தில் உளள சிக கலகளை முழுமையான அளவில தீாக்கும்திட்டமாக இச்சீர்திருத்தத்தைக் கருதமுடியாது இது ஒரு சிறநத கருவி. இக் கருவியைப் பயன்படுத்துகின்ற திறமை யைப் பொறுத்தும் வெற்றிகள் அமைந்துளளன.

செலவுப்பயன்பாட்டு ஆய்வு முறையில் (Cost-Benefit Analysis) சொல்லப்படுகின்ற குறியிலக்குகளும் செயற்பாட்டு வரவு செலவுத் திட்டத்தின அடிப்படை யில் அமைந்துளளன. இம் முறையின மூலம் அரசின எல்லாவிதச் சிறு திட்டங்களினாலும் சமுதாயம் அடைகின்ற பயனையும் செலவையும் கணக்கிடலாம்

செயலாக்க வரவு செலவுத திட்டததை மேலும செமமைப்படுததிசசூனிய அடிப்படை வரவு செலவுத திட்டம் (Zero Based Budgeting) என்ற புதிய திட் டத்தை அமெரிக்க மாநிலங்கள ஏற்றுக கொணடுள ளன இநதச சூனிய வரவு செலவுத திட்டததிலும அரசாங்கத்தின பொதுச் செலவு மிகுத தெளிவான முறையில் மதிப்பீடு செய்யப்படுகிறது மு நா

**துணை நூல்கள்**


**Burkhead Jesse**, Government Budgeting, Willy, New york, 1956.

**Lall.G S** , Public Finance and Financial, Administration in India, H P R. Kapoor Publication, New Delhi, 1976

**Thavaraj , M J K.**, Financial Administration of India, Sultan & Chand Sons, New Delhi, 1978.


**செயிசுடாகான்** இவா இநதியாவில ஆட்சி புரிந்த முகலாய அரசா ஔரங்கசீபின் தாய்மாமன ஆவார். இவர் முகலாய அரசர்கள சாசகான காலத திலும், பினனா ஔரங்கசீபு காலத்திலும் முகலாயப படைகளின தளகாததராகவும், பினனா முகலாய அரசின அரசப் பேராளராகவும் புகழபெற்றார்.

ஔரஙகசீபு கி.பி.1656-ஆம ஆண்டு கோல கொணடாவைத தாககியபோது செயிசுடாகான தமதுபடையுடன சென்று கோல்கொணடா முறறுகை யைத் தீவிரப்படுத்தினார். பினனா வாரிசுரிமைப போரில் வெறறிபெற்ற ஔரங்கசீபு செயிசுடா கானை கி.பி. 1660-ஆம ஆணடு தககாணததின அரசப் பேராளராக நியமித்தாா. இந நியமனத் தில புதியதாக உருவாகியுளள மராத்தியர்களின வலிமையை வீழததுமபடி கட்டளையிட்டார். செயி சுடாகான கி.பி. 1660-ஆம் ஆண்டு முதல் கி.பி. 1663 வரை தக்காணததின் அரசப பேராளராக இருக்கும் போது அவருககு பீசப்பூர் சுலதானகளும் உதவினா. அவர் அகமது நகா முதல் பூனா வரையிலிருந்த பல கோட்டைகளைக் கைப்பறறி கி.பி. 1660-ஆம் ஆணடு மேத் திங்கள 19-ஆம் நாள் பூனா நகரையும் கைப் பறறினாா. பூனாவைச சுறறியிருந்த பகுதிகள மராத்தியா வசமிருந்ததால தமது போககுவரதது வசதிகளுக்காகவும் உணவு பொருள்கள முதலிய வற்றைக கொணடு செலவது கருதியும் சாக்கான் (Chakan) எனற கோட்டையை, 44 நாட்கள முறறுகைக குப் பின் ஆகசுட்டுத் திங்கள 25-ஆம் நாள கைபபற றினாா. பினனாக்கொஙகணப் (Konkan) பகுதியைக கைப்பற்ற ஒரு படையை அனுப்பினாா. இத்

தொடக்கக்கால வெறறிகளைக் கண்டும், மழைக் காலம் கருதியும் அவர் மீணடும் பூனாவில் தமது இருக்கையை அமைத்துக்கொணடார். இதனிடையே மராததிய சிவாசி, இரத்தினகிரி பகுதிகளில் பல கோட்டைகளைக் கைப்பற்றிக்கொண்டு, செயிசுடா கான் மீது ஓர் இரவுத் தாக்குதல் பற்றிய திட்டம் செய்தார். இத்தாக்குதல் கி.பி. 1663-ஆம் ஆண்டு ஏப்பிரல் திங்கள் 15-ஆம் நாள் நடைபெறறது. அனறு சிங்ககர் (Singhgarh) என்னும் கோட்டை யிலிருந்து சிவாசி விரைவாகப் பூனா நகருக்குள சென்று, தாம் பிறந்த வீட்டிலேயே தங்கியிருந்த செயி சுடாகானை 200 மராத்திய வீரர்களுடன் தாக்கினார். இதனைச் சற்றும் எதிர்பாராத செயிசுடாகான் ஆயு தம் தரித்துத் தப்பும்போது தமது மூன்று கைவிரல் களை இழந்ததாகத் தெரிகிறது. மேலும் அவரது மகன் அப்துல் பாத்தா (Abdul Fatah) வையும் மனைவியர், பணியாட்கள், அடிமைகளையும் இழந் தார். இந் நிகழ்ச்சியினால அவர் அவமானம் அடைந் தார். பின்னர் ஔரங்கசீபு அவரை வங்காளத்தின் பேராளராக நியமித்தார். செயிசுடாகான் வங்காளத் தின முகலாய அரசப் பிரதிநிதியாகக் கி பி. 1664-ஆம் ஆணடு முதல 1677-ஆம் ஆண்டுவரையும், பினனர் மீணடும் கி.பி. 1680 முதல 1688 வரையும் ஆக 23 ஆணடுகள இருந்தார். அதன்பின் கி.பி.1694-ஆம் ஆண்டு ஆக்ராவில உயிர்நீத்தார.

வங்காளத்திற்கு அரசப் பேராளராகச்செயிசுடா கான வந்தபோது அவருக்கு முனனர் அப் பதவியிலி ருந்த மீர்சுமலா (Mirjumla) பல சிககல்களை வைத்துச் சென்றிருந்தார். அச்சமயம் வங்காளத்தில் போர்த்துகீசியர்கள், பரங்கிகள -எனப்பட்டவர்கள் கடற் கொளளைகளில ஈடுபட்டனர். கடற் கொள் ளைககாரர்களின அபாயம் பரவலாக வங்காளததில நிலவியது. இக கொளளைக்காரர்கள சிட்டகாங் (Chitta gang) கில் புகலிடம் பெற்றனர். செயிசுடா கான் முதலில் ஒரு புதிய கப்பறபடையை உருவாக் கினார். சிட்டகாங்கைக் கைபபறற முதலில் தாக்கா (Dacca) விற்கும், சிட்டகாங்கிறகும் இடையே இருந்த சணட் விபு (Land Wip) தீவினைத் தமது வசப்படுத்தினார. பின்னர் கி.பி. 1666-ஆம் ஆணடு கரை, கடல் மார்க்கஙகளில ஒரேசமயத்தில் படை யெடுத்துச் சிட்டகாங்கைத் தாககிக் கைப்பற்றினார். இதனால் முகலாயப்பேரரசின எல்லை தெனகிழக்கே சிட்டகாங்கை அடைந்தது. கடற் கொள்ளைக்காரர் களின் மேலாண்மையும் ஒடுககப்பட்டது.

வங்காளத்தில் செயிசுடாகான் அரசப் பிரதிநிதி யாக இருந்த போது வணிகச் சுஙக வரி மற்றும பிற காரணஙகளால் முகலாயர்களுக்கும் ஆங்கிலேய ருக்கும் பகைமை வளாநதது. அதன் காரணமாக ஆங்கிலேயர்களின் தொழிலகங்களைச் செயிசுடாகான் கைப்பற்றினார். ஆங்கிலேயர்கள் கி.பி. 1687-ஆம் ஆண்டு இசிலி (Hijili) தீவிறகுச சென்றனர். செயி சுடாகான் அத் தீவையும் முற்றுகையிட்டார். பின்னர் ஓர் உடன்படிக்கை செய்துகொணடனர். ஆங்கிலே யர்கள் சிட்டகாஙகைத் தங்களது இருப்பிடமாக மாற் றவும் திட்டம் தீட்டினார்கள். ஆனால், அவர்கள கி பி. 1689-ஆம் ஆண்டு வங்காளத்தை விடுத்து வெளியேறிச் சென்னைக்குத் திரும்பினர். பினனா கி.பி. 1690-இல்தான மீண்டும் ஓர் உடன்படிக்கை செய்துகொண்டு ஊக்ளியில் வாணிகத்தைத் தொடங கினர்.

தக்காணத்தில் சிவாசியின் இரவுத் தாககுதலி னால் மானபங்கம் அடைந்த செயிசுடாகான் வங காளத்தில் புகழ்பெற்றார். அவர் காலத்தில் வங காளத்தில் அமைதி நிலவச் செய்தார். அயல்நாட்டி னரின் தாக்குதலிலிருநது வஙகத்தைக் காப்பாற்றி னார். உள்நாட்டு நிருவாகம் திறம்பட நடந்தது. தாக்காவில் (Dacca) பல கட்டடஙகளைக கட்டி னார். வேளாணமை வளர்ச்சியடைந்ததால் விளை பொருள்களின விலை குறைந்தது. பு.எ.மோ.

**செயிண்ட்டு ஆல்பன்சு:** இநநகரம வரலாற்றில் திருச்சபை நகரம் எனறு வழங்கப்படு கிறது. இது இங்கிலாந்திலுள்ள எர்ட்போர்டு சயர் (Hertford shire) என்ற தொகுதியின் ஒரு பிரிவாகும். இச்சமய வட்டத்தில் எர்ட்போர்டு சயா,



செயிணடு ஆல்பனசிலுள்ள திருச்சபை

பெட்போர்டு சயர் ஆகியவை அடங்கும். இதன் பரப்பளவு ஏறக்குறைய 12.75 சதுர கி.மீ. களாகும். இதன் இப்போதைய மக்கள் தொகை ஏறக்குறைய 124,867(1981).

இங்கிலாந்து நாட்டைச சேர்ந்த புனித ஆல்பன என்பவரின் நினைவாக ஏற்பட்டதே செயிணட்டு ஆல்பன்சு (St.Albans) என்ற நகரமாகும். அங்கு எழுப்பப்பட்ட திருச்சபை கி.பி.303-இல் கோலாகல மாக வழிபாட்டிற்கு திறந்துவிடப்பட்டது. இப்போது உள்ள திருச்சபை பால் டெ கேய்ன் எனபாரின வெற்றிக்குப்பின் கி.பி. 1077-இல் கட்டப்பட்டது அத்திருச்சபை அழகாக நிருமாணிக்கப்பட்டுள்ளது. அதன அமைப்பு முறை கோதிக் கலைப்பாணியில் அமைந்துள்ளது அங்கு ஒரு பள்ளியும் செயற்பட்டு வந்தது என்பது ஆதாரங்கள மூலம் புலனாகிறது. கி.பி. 1100-ஆண்டில் அது சிறப்புடன் நடைபெற்று வந்தது. அப்போது அதன் தலைமை ஆசிரியராக இருந்தவர் அலெக்சாண்டர் கிரகாம் என்பவராவார்.

இங்கிலாந்து வரலாற்றில் அத்தேவாலயம் பெரும் பங்கு பெற்றுள்ளது. அதன் அதிகாரங்கள் வளரவே சாக்சன்களின் அதிகாரம் குறையலாயிற்று. கிங்சுபன என்ற இடத்தில் சாக்சன்களின் அதிகாரம் முழுமை யாக அழிக்கப்பட்டது அப்போது இசுடீபன் என்ப வர் ஆட்சி புரிந்து வந்தார். அதன் பின் அந்தப் பள்ளி யின் வளர்ச்சிக்கு ஆக்கமும் ஊககமும் அளிக்கப்பட் டது. இங்கிலாந்து நாட்டின் மன்னர்களும் பிரபுகளும் அதற்கு உரமிட்டார்கள. கி.பி. 1215-ஆம் ஆண்டில் மகாசாசனத்தின் கருத்துகள் உருவம் கொடுக்கப் பட்டுப் படிக்கப்பட்டன. அப்போது இசுடீபன் லாங்டனி என்பவர் இருந்தார். பின்னர் நடை பெற்ற பாய்டியர்சு போரில் கைது செய்யப்பட்ட பிரான்சு நாட்டு சான் (John) மன்னன் அங்குச சிறையடைக்கப்பட்டான். அவன் திறைப் பணம் செலுத்திய பிறகே விடுதலை செய்யப்பட்டான். குடியானவர்கள் கி.பி.1381-ஆம் ஆண்டில் நடத்திய கிளர்ச்சியின்போது அந்நகரம் பாழாக்கப்பட்டது. அப்போது அக்கோயிலின் பாதிரியான தாமசு தெலா மாரே என்பவர் ஒரு பட்டயத்தினை வெளியிட்டார். ஆனால், புரட்சி நசுக்கப்பட்டபின் அப்பட்டயம் விலக்கிக் கொள்ளப்பட்டது. சான் பால் என்ற புகழ்வாய்ந்த பிரச்சாரகர் அங்குத்தான் கொலை செய்யப்பட்டார்.

மணிக் கூண்டு ஒன்றும் கி.பி. 1402 முதல் 1411 வரையிலான ஆண்டில் கட்டப்பட்டது. உரோசாப் பூச் சண்டையின்போது செயிண்ட்டு ஆல்பனில் இரண்டு போர்கள் நடைபெற்றன. யார்க்கோமகன இரிச்சர்டு கி.பி. 1455-இல் இலங்காசுப்புரியர்களை அங்குத் தோறகடித்தார். ஆஞ்சோவின் மார்கரேட வார்விக்கைச் சோநத இரிச்சர் நெவிலி என்பவனை கி.பி 1461-ஆம் ஆண்டுதோற்கடித்தார செயிணட்டு ஆலபனிசு கி.பி. 15.16ஆம் நூற்றாண்டுகளில் செல்வ மும் செல்வாக்கும் குறையலாயின. உள்நாட்டு போரின்போது எசகசுபிரபுவின் படைத் தலைமையிட மாக ஆல்பனிசு செயறபட்டது. ஆனால். கி.பி 18-ஆம் நூறறாண்டுத தேர்தலில் அது ஊழலின் உறைவிட மாக விளங்கியது இறுதியில் கி.பி.1877 முதல் அது திருசசபை நகரமாக விளங்கி வருகின்றது நா செ.

**செயிணட்டு உலூயி:** இது ஆப்பிரிக்காக் கணடத்தில், செனிகல் நாட்டின் வடமேற்குப் பகுதி யில உள்ள ஒரு நகரம். செனிகல் ஆற்றில உள்ள ஒரு தீவில இது அமைந்துளளது. மககள் தொகை 99,000 (1973). இத்துறைமுகததின வழியாக மணி லாக் கொட்டை, தோல்கள் முதலியன ஏற்றுமதி செய்யப்படுகினறன. ஆப்பிரிக்காக் கணடத்தில் மிகப் பழைமையான பிரெஞ்சுக் குடியேறறஙகளில் இதுவும் ஒனறு. இங்கு கி.பி 1638-இல ஒரு வாணிகத் தலம அமைக்கப்பெறறு, கி. பி. 1659-இல் ஒரு கோட்டை கட்டப்பெற்றது. சிறிது காலம், இப்பகுதி ஆங்கிலே யரின் ஆளுமைக்குட்பட்டிருந்தது. இருப்பினும் இங்கு பிரெஞசு மேலாணமையே நிலைததுவிட்டது மேறகு ஆபபிரிக்காவில் இருந்த எல்லா பிரெஞசுக் குடியேற் றங்களுக்கும் செயிணட்டு உலூயியே (Saint Louis) தலைநகராயிறறு. இது கி. பி. 1885 முதல 1902 வரை பிரெஞசு மேற்கு ஆபபிரிக்காவின தலைநகரா கத் திகழ்ந்தது பிறகு 1902 முதல் 1958 வரை இந நகர் செனிகல, மௌரிடானியா பகுதிகளுககும தலைநகராக இருந்தது.



செயிணட்டு உலூயி அமைவிடம்

**செயிண்ட்டு உலூயி**[2]: இது ஒரு மாவட்டம். இது அமெரிக்காவில் மின்னிசோட்டா (Minnesota) மாநிலத்தின் வடகிழக்குப் பகுதியில் உள்ளது இதன் வடக்கு எல்லை கானடாவின் ஒண்டோரியோ மாநிலமாகும் இதன் பரப்பு 15,778 ச கி.மீ. மக்கள் தொகை 220,693 (1970). இது கி.பி. 1855-இல் அமைக்கப் பெற்றது. இதன் தலைமையகம் தூலூத்து (Duluth) நகரம் நீர்வளமும் கனி வளமும் நிரம்பப் பெற்ற இப்பகுதியில் மரம் வெட்டுதல், உலோக வேலை, நெசவு, வேளாண்மை, உணவு வகைகள் தயாரித்தல், இயந்திரப் பொருள் உற்பத்தி, வேதியியல் பொருள் உற்பத்தி முதலிய பல தொழில்கள் நடைபெறுகின்றன.

**செயிண்ட்டு எலினா**: செயிண்ட்டு எலினா என்பது ஆங்கிலேயரின் குடியேற்றத் தீவாகும். இது தெற்கு அட்லாண்டிக்குப் பகுதியில் அமைந்துள்ளது. இது ஆப்பிரிக்காவின் மேற்குக் கடற்கரைக்கு 1851 கி. மீ. தொலைவில் அமைந்துள்ளது. புவியியல் அமைப்பின்படி பார்க்கும்போது அங்கு எரிமலைகள் தோன்றும் நிலை உள்ளது எனலாம். இதன் தட்ப வெப்ப நிலை நல்ல முறையில் அமைந்துள்ளது. செயிண்ட்டு எலினாவின் (St. Helena) தாவரங்கள் பிற பயிர்கள் எல்லாம் மனித வாழ்க்கைக்கு உகந்த முறையில் உள்ளன.

செயிண்ட்டு எலினா தீவானது கி.பி.1502-ஆம்



செயிண்ட்டு உலூயி நகரம்

**செயிண்ட்டு உலூயி**[3]: இப்பெயரில் மற்றொரு மாவட்டம் மிசாவுரி மாநிலத்தின் கிழக்குப் பகுதியில் உள்ளது இதன் பரப்பு, 1,2872 ச.கி.மீ. மக்கள் தொகை 15,1671 (1970). இதன் கிழக்கிலும் வடமேற்கிலும் முறையே மிசிசிபி மிசாவுரி ஆறுகள் ஓடுகின்றன. இது கி.பி. 1877-இல் அமைக்கப் பெற்றது. இதன் தலைநகர் கிளேட்டன் (Clayton). வேளாண்மையும், பாற்பண்ணைத் தொழிலும், மரச சாமான் வேலையும் இங்குச் சிறப்பாக நடக்கின்றன. உருளைக்கிழங்கு விளைச்சல் மிகுதி தெ. பா.

ஆண்டு மே திங்கள் 21-ஆம் நாள் கண்டுபிடிக்கப் பட்டது. இது சவோ தெ நோவா காசுடெல்லா (Sava De Nova Casutella) என்ற போர்ச்சுகீசியரால் இந்தியாவிலிருந்து தம் கடற் பயணத்தை மேற் கொண்டபோது கண்டுபிடிக்கப்பட்டதாகும். இங்கு முதன் முதல குடியேறியவர் பெர்னான்டோ லோபசு என்ற போர்ச்சுகீசிய ராவார். தாமசு கேவண்டித்து (Thomas Kevandith) என்ற ஆங்கிலேயர் தான் ஆங்கிலேயர்களில் முதன் முதலாக இதைப் பார்வையிட்டார் எனலாம். அதன்பின் சி. கெண்டால், சர்

சேம்சு இலங்காசுடர் (Lancastar) போனறவாகள வந்து பார்வையிட்டனர். ஆங்கிலேயக்கிழக்கு இந்தியக கம்பெனி கி.பி. 1659-இல இங்குத் தன குடியேற்றத்தை ஏற்படுத்தியது. இங்கு ஆங்கிலேயாகள கி.பி. 1611-இல இரணடாம் சேம்சு என்ற மனனன பெயரால ஒரு கோட்டையினை அமைத்தாாகள. இஙகு கி.பி. 1673-ஆம் ஆணடளவில குடியேறிய மக்கள எல்லோரும் நீககிரோககளாகவே இருந்தார்கள். ஆங்கிலக் கம்பெனி இத்தீவின் வளாசசிககு ஆக்கமும, ஊக்கமும் அளிததது. எனவே, இது வலிவும் பொலிவும் பெற்று விளங்கியது. ஆஙகிலேய ஆளுநர்களான இசுடீபன் போரியர், இராபாட்டு செனகின்சு போனறவாகள் இதன் வளர்ச்சிககு வழிகோலினார்கள. அதுமட்டுமலலாமல் எட்மணடு கேலி எனபவர் இங்குளள கேலிசு மலையில ஒரு வான ஆராய்ச்சி நிலையத்தினை ஏறபடுததினாா.

மாவீரன நெப்போலியன கி.பி.1815-ஆம ஆணடில தோலவி கண்டபின் இங்குச் சிறைக கைதியாக வைக்கப்பட்டான. இஙகு அவவீரன தனனந்தனியாக வாழ்ந்து 1821-ஆம் ஆணடில மே திஙகளில் மாணடு போனான. அப்போது இககோட்டைத் தீவு சா அட்சன் லோவே எனற ஆளுநரால நன்கு பாதுகாககப்பட்டு இருநதது. கமபெனி இததீவின பொறுப்பினை கி.பி 1833-இல முடியாட்சியிடம் ஒப்படைததது அதனபடி கி.பி. 1870 வரை இது அதன் பொறுப்பில இருநது வந்தது. அதனபின் முதல உலகப் போரின்போது இத்தீவானது நனகு பாதுகாககபபட்டது கி.பி. 1899-1901-ஆம் ஆணடுகளில ஏறபட்ட தென ஆபபிரிககப் போரின் விளைவாக 6000 கைதிகள் இஙகுச் சிறை வைக்கப்பட்டாாகள். இரண்டாம் உலகப் போரினபோது இததீவானது இராணுவத் தளமாகவும் முககிய கேநதிரமாகவும் விளஙகி வநதது.

இங்குளள மக்கள ஐரோப்பியக கலபபின மக்களாவர். இதன்மக்கள் தொகை 1964-இல் 4613. இப்போதைய மக்களதொகை ஏறககுறைய 12, 500 ஆகும. அதில் மூன்றில ஒரு பகுதியினா சேம்சுடவுன என்ற நகரில் வசித்து வருகினறனர். இததீவு ஒரு ஆளுநரால் நிருவாகம் செய்யப்பட்டு வருகிறது. ஆலோசனைச் சபையின முடிவின்பேரில் ஆளுநர் முடிவு எடுப்பார். ஆளுநரே இதன் தலைமை நீதிபதி ஆவாா. சேமசு டவுனில் ஒரு மருததுவமனை உளளது. அது நல்ல முறையில் செயறபட்டு வருகின்றது. கட்டாயக் கலவி 5 முதல் 15 வயது வரை உள்ளவர்களுக்கு அளிக்கப்படுகிறது. இத்தீவின் பொருளாதாரம் பொலிவுற்று விளங்குகிறது. ந செ.

**செர்சா சூர்.** வட இந்தியாவை ஆணட இசுலாமியப் பேரரசாகளுள ஒருவரான சொசாபசூா (Shersha sur) ஓர் ஆப்கானியா; சூா குலததைச சாாநதவா. இவர் கி.பி. 1486-இல பிறநதார். இவருடைய இயறபெயா பரீதது; தநதையின பெயர் அசன் (Hassan). இநதியாவில் போர்ச் சேவையை நாடி வந்த ஆப்கானியாகளுள் அசன ஒருவராவர் முதலில இசுபொர் பீருசாவில் பணிமேறகொணடார் பின்னர் சானபூா ஆளுநரிடம் பணிககமர்நதாா. அப போது 500 குதிரைகளை வைததுப் பராமரிப்பதறகாக இவருக்கு சசாரம் மானியமாக வழஙகப்பட்டது. இளம் வயதிலேயே தாயை இழந்த இவா, தம் சிறறனனையின் கொடுமைககு உளளானாா. தநதையும இவரைப் புறககணிததாா ஆகவே, இவருககு எட்டு வயது இருககுமபோது வீடடைவிடடு நீஙகி, சான்பூரின ஆளுநரிடம பணிககமாநதாா. ஓயவு நேரததில பாரசீக மொழியை நனகு கறறுத தோநதார். இவருடைய கலவி மேம்பாட்டினால கவரபபட்ட சானபூர் ஆளுநா மனம நெகிழநது, தந்தையையும் மகனையும ஒனறு சேர்த்தாா. அதன பிறகு இருபது ஆணடுகள் மகிழசசியுடன் சசாரததில் பரீதது வாழ்ந்தார். அபபோது தம தநதையின நிலத்தை மிகச் சிறபபுடன் மேறபாாவையிட்டார். அதனால, அவருககு நிருவாகத்தில மிகுநத பயிறசி ஏற்பட்டது மீணடும சிறறனனையின துன்புறுததல் காரணமாக வீட்டைவிட்டு வெளியேறி, ஆக்ரா சென்றாா. அப போது ஆணட உலோடி (Eydy) அரசாகளிடம வேலைக்கமர்ந்தார். உலோடி மன்னர்களின் அனபைப் பெற்று சசாரத்தைத தம் பெயருககு மாற்றிக கொணடாா. ஆனால, தம தம்பியின எதிர்ப்பின காரணமாக மீணடும அதை விடடுவிட்டு, பீகாா அரசரான பகர்கான உலோகானியிடம வேலையில சேர்நதார். ஒரு சமயம வேட்டையாடுமபோது தனித்து நினறு ஒரு புலியைக கொன்று 'சொகான' (புலித்தலைவன) எனற சிறப்புப் பெயரைப் பெறறார். மன்னரின மைந்தனுககுக கலவிகறபிக்கும் பணியும் இவருக்கு அளிககபபட்டது. தம தமபி பகர்கானிடம் சொகானுக்கு எதிராகப் புகார் செய்து, பீகாரில இருந்து அவரை வெளியேற்றினாா. பீகாரைவிட்டு நீங்கிய சொகான் இநதியாவை ஆணட முதல முகலாயப் பேரரசரான பாபரிடம் வேலைக்கமர்ந்தாா. பாபருடைய கிழக்குப் படையெடுப்பின போது சசாரம் மீண்டும் சொகானுக்கு வழஙகபபட்டது இதறகிடையில் பகர்கான் உலோகானி இறந்துவிட்டாா. அவர் மைந்தன் சிறு குழந்தையாக இருந்தமையால ஆட்சிப் பொறுப்பு அவா மனைவியிடம் மாறியது. அவா மனைவி சொகானை வரவழைத்துத் தம உதவியாளராக நியமித்தார். அவள் இறந்துவிடவே

செர்கான் உண்மையான ஆளுநராகச்செயற்பட்டு வந்தார். தமக்கென மெய்காவல் படையொன்றை அப்போது உருவாக்கினார். இவர் கி.பி. 1529-இல் சூனார்க் கோட்டையைக் கைப்பற்றினார்.

இதற்கிடையில் பாபர் இறந்துவிட்டார். உமாயூன் பேரரசராகப் பதவியேற்றார். அவருக்குப் பல எதிரிகள் தோன்றினர். அவர்களுள் முகம்மது உலோடியை உமாயூன் தோற்கடித்து, பின்னர்ச்சூனார்க் கோட்டையைமுற்றுகையிட்டார்.செர்கான் அவருடன் சமாதானம் செய்துகொண்டார். அதன் பிறகு உமாயூன் மேற்கில் குசராத்தின் அரசரான பகதூர் சாவின் மீது போர்தொடுக்கத் தம் படைகளைக் கிழக்குப் பகுதியிலிருந்து விலக்கிக் கொண்டார். அந்த வாய்ப்பைப் பயன்படுத்திக் கொண்டு, செர்கான் தமது வலிமையைப் பெருக்கிக் கொண்டார். அதைக் கண்ணுற்ற உலோகானிப்பிரபுக்கள் வங்காள அரசரான முகமது சாவின் உதவியை நாடினார்கள். முகமது சாவைச் சுராசுகார் போரில் செர்கான் கி.பி. 1535 முதல் தோற்கடித்தார். இவருடைய ஆட்சி மாங்கீர் (Monghyr)வரை பரவியது. அதையடுத்து, வங்காளத்தின் மீது படையெடுத்தார். அதன் தலைநகரான கௌரைக் (Gaur) கைப்பற்றினார். செர்கானின் வெற்றிகள் உமாயூனுக்கு அச்சத்தை ஊட்டின. எனவே, கி.பி. 1537-இல் அவர் சூனார் நோக்கிப் படை நடத்திச் சென்றார். அப்போது செர்கான் கௌர் நகரை முற்றுகை செய்து கொண்டிருந்தமையால் சூனார் உமாயூன் கையில் சிக்கியது. அதன் பிறகு உமாயூன் கௌர் நோக்கி முன்னேறினார். அதையறிந்த செர்கான் கௌரை விட்டுவிட்டுச் சூனார் திரும்பினார். சான்பூரைக் கைப்பற்றிக் கொண்டு கன்கனாசி வரையிலான முகலாயப் பகுதிகளைச் சேதப்படுத்தினார். ஆறு மாதங்களாகக் கௌர் நகரில் குடி மற்றும் கேளிக்கையில் ஈடுபட்டுக் கொண்டிருந்த உமாயூன் நிலைமை மோசமடைந்து விட்டது என்பதைக் காலங்கடந்து அறிய நேர்ந்தது. அவர் கி.பி. 1539-இல் வங்காளத்தை விடுத்துத் தம தலைநகர் நோக்கிப் புறப்பட்டார். வழியில் சௌசா போரில் செர்கானிடம் தோல்வியுற்று ஆக்ரா திரும்பினார். செர்கான் அவரைத் துரத்திக் கொண்டு செல்வதற்குப் பதிலாக வங்காளம் சென்று தம் வெற்றிகளை உறுதிப்படுத்திக் கொண்டார். அதன் பிறகு இவர் செர்சா என்ற பட்டம் சூட்டிக் கொண்டு, தம்மைப் பீகார் மற்றும் வங்காள அரசராக அறிவித்துக் கொண்டார். ஆக்ரா திரும்பிய உமாயூன் படைகளைத் திரட்டிக் கொண்டு செர்சாவை ஒடுக்கக் கிழக்கு நோக்கி வந்தார். கன்னோசியில் போர் மூண்டது. உமாயூன் தோல்வி யுற்றார். அதையடுத்து அவர் இலாகூருக்கு ஓடிவிட்டார். இம்முறை செர்சா அவரைத் துரத்திக் கொண்டு சென்று ஆக்ராவைக் கைப்பற்றிக் கொண்டார். அப்போது இவர் இந்தியாவின் பேரரசரானார்.

இவர் பேரரசராக இருந்த காலத்தில் (கி.பி. 1540-45) பல வெற்றிகளை அடைந்தார்; தில்லியைக் கைப்பற்றினார்; பஞ்சாபில் இருந்த கக்கர்களை வென்றார்; வங்காளத்தில் நடைபெற்ற கலகத்தை ஒடுக்கி, அதனைத் தமது நேரடி ஆட்சிக்கு உட்படுத்தினார், மாளவத்தை ஆண்ட இராசபுத்திரர்களை வென்றார்; இரெய்சின் கோட்டையைக் கைப்பற்றினார்; மார்வா அரசரான மால்தேவாவை வென்றார்; சித்தூர் மற்றும் இரந்தாம்பூர் நகரங்களைக் கைப்பற்றினார்; பிறகு களிஞ்சார் கோட்டையை முற்றுகையிட்டார். அதைக் கைப்பற்றும் போது இவருடைய வெடிமருந்துக் கிடங்கில் விபத்துநேர்ந்ததால இவர் கி.பி. 1545-ஆம் ஆண்டு உயிரிழந்தார்.

செர்சா சிறந்த போர் வீரராக மட்டும் திகழவில்லை; சிறந்த ஆட்சியாளராகவும் விளங்கினார். இவர் கொண்டுவந்த சீர்திருத்தங்களுள் ஒன்று, தம்முடைய நேரடியான மேற்பார்வையின்கீழ் ஒருமுகப்படுத்தப்பட்ட ஆட்சியை நிறுவியதாகும். பேரரசை 47 'சர்க்கார்'களாகப் பிரித்தார். அவற்றுள் ஒவ்வொன்றையும் தலைமைச் 'சிக்தார்' மற்றும் தலைமை 'முன்சிப்' என்ற இரு அரசு அதிகாரிகளின் பொறுப்பில் வைத்தார். ஒவ்வொரு சர்க்காரையும் பல பர்கானாக்களாகப் பிரித்தார். ஒவ்வொரு பர்கானாவிலும் ஒழுங்கை நிலைநாட்ட ஒரு சிக்தாரையும், வரிவசூலிக்க ஒரு அமீனையும், ஒரு கருவூல அதிகாரியையும், கணக்குகளைப் பார்க்க ஓர் இந்து கர்கூனையும் மற்றும் ஒரு பாரசீக கர்கூனையும் அமர்த்தினார். இவர்களுக்குச் சாகீர் வழங்குவதற்குப் பதில ஊதியம் வழங்கினார். இவ்வதிகாரிகளை அடிக்கடி இடமாற்றம் செய்து, ஊழல் செய்யாதவாறு பார்த்துக் கொண்டார். குடியானவர்களிடம் நேரடியாக வரி வசூலிக்கும் முறையைக் கொண்டு வந்தார். எனவே, இவர் 'இரயத்துவாரி' (Ryotwari System) முறையின் தந்தையாகக் கருதப்பட்டார். நிலத்தை நன்றாக அளந்த பிறகே வரி நிர்ணயிக்கப்பட்டது. மேலும், நிலம் தரம் வாரியாகப் பிரிக்கப்பட்டுச் சராசரி விளைச்சலில் மூன்றில் ஒரு பங்கு வரியாகப் பெறப்பட்டது வரியைப் பணமாகவோ தானியமாகவோ கொடுக்க ஏற்பாடு செய்யப்பட்டது. விளைச்சல் பாதிக்கப்பட்ட காலங்களில் வரி நீக்கம் செய்யப்பட்டது. ஒருசார்பு இன்றி நீதி வழங்கினார். குற்றவாளிகளைக் கண்டுபிடிக்கும் பொறுப்பைக் கிராம மக்களிடம் ஒப்படைத்தார். அதன் காரணமாக மக்கள் சாலைகளில் அச்சமின்றிப்பயணம் செய்தனர். கிழவியும் தங்க நகைகளைக் கூடை நிறைய எடுத்துச்

செல்லும் அளவிற்கு இவருடைய ஆட்சியில் திருட்டுப் பயத்தைப் போக்கினார். படைககு ஆள் சேர்ப்பது இவருடைய நேரடி யேற்பார்வையில் நடைபெற்றது. கடுமையான கட்டுப்பாட்டை இவர் படைவீரர்களுக்கு விதித்தார்; குதிரைகளை வைத்துப் பராமரிப்பதில் படைத்தலைவர்கள் செய்து வந்த ஊழலைப் போக்கினார்; நாட்டின் வாணிகத்தைப் பெருக்க நெடுஞ் சாலைகளை அமைத்தார். அவற்றுள் மிக நீளமானது பஞ்சாபையும் கிழக்கு வங்காளத்தையும் இணைத்த சாலையாகும். சாலை நெடுகிலும் இவர் மரங்களை வைத்தார்;சோர்வடைந்த வழிப்போககர்கள் இளைப் பாறச்சத்திரங்களைக் கட்டினார்;கிணறுகளைவெட்டினார்; புதிய நாணயங்களை வழங்கினார். இந்திய உரு பாயின் தநதை என்ற பெயர் இவருக்கு உண்டு. பல நகரங்களையும் கட்டிடங்களையும் எழுப்பினார். இவருடைய கட்டடஙகளுள ஒன்று சசாரத்தில் அமைந்திருக்கும் இவரது கல்லறைக் கட்டடமாகும். பொதுவாக, இவர் இந்துக்களைத் துன்புறுத்தவில்லை. அரசாங்க வேலைகளில் அவர்களை அமர்த்தினார். இந்தியாவை ஆண்ட மிகச் சிறந்த அரசர்களுள் இவரும் ஒருவராகப் போற்றப்பட்டார். தி.ஆர்.இரா.

*செர்சி* கிரேக்கக் கவி ஓமர் எழுதிய ஒடிசி (Odyssey) என்னும் காவியத்தில் கூறப்படும் ஓர் அழகிய மந்திரவாதிப் பெண். கடற் கடவுள் பெர்சிக்கும் (Perse) இலியாசு (Helios) என்பவருக்கும் இவள் பெண்ணாகப் பிறந்தாள். கிரேக்கப் புராணத் தின்படி செர்சி (Serse) தன் கணவனைக் கொலை செய்த குற்றத்திற்காக ஏயியா (Aeaea) என்ற தீவுக்கு (இத்தாலியக் கடற்கரையின் அண்மையில உள்ளது) நாடுகடத்தப்பட்டு, அங்குத் தனது மந்திர வலிமையால், கடற் பயணம் செய்யும் மாலுமிகளுக்குப் பல வகையான இன்னல்களை அளித்து வந்தாள். இவளுடைய மந்திரவலிமைக்கு உட்படாத கிரேக்க வீரன் யுலீசசு (Ulysses) இவளை மணந்து கொண்டதுடன், இவளால் பன்றிகளாக மாற்றப் பட்ட பலரையும் பழைய மானிட உருவங்கள் பெறுமாறு செய்தான். இவர்கள் இருவருக்கும் ஒரு மகன் பிறந்தபின், யுலீசசு தன்னாட்டுக்குத் திரும்பினான். தெ.பா.

*செர்பர்*: இமயமலைப் பகுதியிலுள்ள நேபாளம், திபெத்து ஆகிய நாடுகளில் வாழும் மக்களினத்



செர்பர்

தவரே செர்பர் (Serpas) இவர்கள் மங்கோலியர்கள். நடுத்தர உயரத்தையும் மஞ்சள் நிறத் தோலையும், இரப்பை அடிமடிப்புடைய கண்களையும் (Epicanthic Eyes) உடலில் குறைந்த அளவிலான மயிரையும் கொண்டுள்ளனர். இவர்கள் மொழி, பண்பாடு முத லானவற்றில் திபெத்தியரை ஒத்துள்ளனர். மிகவும் உயரமான மலைப் பகுதிகளில் வாழும் இவர்களுள் கிழக்கு நேபாளக் குழுவினர் சிறப்புத் தன்மை களைக் கொண்டுள்ளனர். இவர்கள் ஏனைய செர்பர் களிடமிருந்து தம் இனத் தன்மைகளைப் பேணிக் காத்துள்ளனர்.

இவர்கள் கும்பு (Khumbu), பாரக்கு (Pharak), சோலு (Solu) ஆகிய பகுதிகளில் பெருமளவு வாழ கின்றனர். எவரசுட்டு மலைச் சிகரத்தின் அடிவாரத் தில் உள்ள கும்புப் பகுதியில இவர்களது கிராமங்கள் 12,000 அடி முதல் 13,000 அடி வரையிலான உயரத் தில் உள்ளன. கோடைக் காலங்களில் இவர்கள வாழும் வீடுகள் 16,000 அடி உயரம் வரையிலான மலைப்பகுதிகளில் அமைக்கப்படுகின்றன. இதற்குக் காரணம் மேய்ச்சல் நிலத்திற்காக இடம்பெயர்வதே யாகும். பிற குழுவினர் சோலுப் பகுதிக்கு மேற்குத் திசையில் வாழ்கின்றனர்; சோலுப் பகுதி நேபா ளத்தின் தலைநகரான காட்மண்டுவிலிருந்து மூன்று நாள்கள் நடந்து சென்றடையும் தூரத்தில உள்ளது.

செர்பர்களின் வாழ்க்கை, சுற்றுச் சூழலையும் காலநிலையையும் பொறுத்து அமைந்துள்ளது. இவர் களின் முதன்மையான தொழில் கால்நடைகள வளர்த்தலாகும். வேளாண்மை இவர்களது துணைத் தொழில். காலநடை வளர்க்கும் ஒவ்வொரு குடும்ப மும் பல கிராமங்களில் வீடுகளைக் கொண்டுளளது. எந்த ஒரு கிராமமும் தன்னிறைவு பெறாமல் இருப்ப தாலும், காலநடைகளைப் பருவகாலத்திற்கு ஏற்ப மலைப்பகுதியில் பல்வேறு உயரங்களில் மேய்க்க வேண்டியுள்ளதாலும் ஒவ்வொருவரும் பல வீடு களைக் கொண்டுள்ளனர். ஆண்டில் பெரும்பான் மைக் காலத்தைக் கழிக்கும் கிராமங்களில் மக்கள் தங்கள் வீடுகளை ஒருவரையடுத்து ஒருவர் கட்டாமல் தனித்தனியே கட்டிக் கொள்கின்றனர். அதனால் ஒருவரின் வீட்டைச் சுற்றித் தோட்டங்களும் விளை நிலங்களும் உள்ளன. இவ் வகையான வாழ்க்கையைக் கொண்டுள்ள கிராமங்களில் இவர்களின் வீடுகள் இரண்டு அடுக்குக கொண்டதாகவும் வலுவுள்ளதாக வும் கட்டப்படுகின்றன. பெரும்பாலும் வீடுகள் மரங களால் கட்டப்படுகின்றன. கோடை வீடுகள் ஓரறை கொண்டவை.

கும்புப் பகுதியில் ஆண்டில் ஆறு மாதக் காலம் உறைபனியாக உள்ளதால், ஒரேயொரு தானியத்தை மட்டுமே ஏப்பிரல், மே மாதங்களில் விதைக்கின்றனர். இதனைச் செப்டம்பர், அக்டோபர் மாதங்களில் அறுவடை செய்கின்றனர். இவர்கள் 12,000 அடி களுக்கு மேற்பட்ட பகுதிகளில் உருளை, ஒருவகைக் கோதுமை, முள்ளங்கி முதலான ஒருசில பயிர்களை மட்டுமே விளைவிக்க முடிகிறது. கி.பி. 19-ஆம் நூற் றாண்டில் அறிமுகப்படுத்தப்பட்ட உருளைக் கிழக்கே இன்று இவர்களது முதன்மையான உணவாக உள்ளது.



வெண்ணெயில செய்யப்பட்ட பொம்மை

கோடைக் குடியிருப்புகளைச் சுற்றியுள்ள விளை நிலங்களையும் பெரும்பாலான நாள்கள் வாழும் கிராமங்களில் உள்ள நிலங்களையும் பயிரிடுவதில் இவர்கள் நன்கு தேர்ச்சி பெற்றுள்ளனர். கூலியாள் களும் நிலச் சொந்தக்காரர்களும் தொழிற் பரிமாற் றம் மூலம் பயிரிடுகின்றனர். விளைபொருள்களும் கால் நடைகளும் இவர்களுக்குத் தேவையான உணவினைக் கொடுக்கின்றன. இருப்பினும் கால்நடைகள் பெற் றிருப்பதன் எண்ணிக்கையால் மட்டுமே ஒருவரின் தகுதி நிருணயிக்கப்படுகிறது. கால்நடைகளிலிருந்து பெறப்படும் வெண்ணெய், உணவாகவும் கூலிகொடுக் கவும் வாணிகம் செய்யவும் பயன்படுத்தப்படுகிறது. மழைக்காலம் தொடங்குவதைக் குறிக்கும் ஒரு சடங்கில் வெண்ணெயைக் கொண்டு இறைவனின்

உருவத்தை அமைத்து வழிபடுகின்றனர். இவர்கள் வாணிகம் செய்த வெண்ணெய்க்கு 1950 வரையில் மிகுந்த தேவை யிருந்தது. இப்போது இதன் தேவை அளவுகுறைந்துவிட்டது.

திபெத்திற்கும் நேபாளத்தின் தாழ்நிலப் பகுதிகளுக்கும் இடையில் வாணிகத் தரகர்களாகச் செர்பர்கள் வாழ்கின்றனர். இவர்கள் செழிப்பாக வாழ்வதற்கு இத்தொழிலும் காரணமாகும். நங்கபபா கணவாய் வழியாகத் திபெத்தின் பிற பகுதிகளுக்குப் பொருளகளைக் கொண்டு செலவதில செர்பர்கள மட்டுமே திறமை பெற்றவாகளாக விளங்குகின்றனா. இவர்கள் 12,000 அடிமுதல் 18,000 அடி வரை பொருளகளைக் கொணடு செல்கின்றனர். இப்பகுதிகள உறைபனி படாந்துள்ளதாலும் பல்வேறுபட்ட மலைப்பாதையானதாலும் சொபர்களைத் தவிாதது வேறு எவரும் இதில் ஈடுபட முடிவதில்லை. திபெத்திலிருந்து உப்பு, கம்பளி முதலானவற்றைப் பெற்றுத் தெற்குப் பகுதியிலுள்ள அணடைய மக்களிடமிருநது அவற்றிற்குப் பதில் அரிசி, கோதுமை, மக்காச்சோளம் முதலானற்றைப் பண்டமாற்றம் செய்து பிறருக்குக் கொடுக்கின்றனர். பிறபகுதிகளிலிருந்து திபெத்திற்குச் செர்பாகள் கொணடு செல்லுமு முதன்மையான பொருள்கள் காய்கறிகள், வெண்ணெய், உலரவைத்த உருளைக் கிழஙகு, கையால் செய்யப்பட்ட தாள வகைகள், நறுமணப் பொருள்கள், துணி வகைகள் முதலானவையாகும். திபெத்தில் சீனர்களின் வருகையைத் தொடர்ந்து 1959 வரை இருந்த இவர்களது மரபு சார் தொழிலகள் பல மாற்றங்களைப் பெற்றுள்ளன.

செர்பர்கள் சமூக சமத்துவத்தைக் (Egalitarianism) கொண்டவாகள். இவர்கள் சமுதாயத்தின் அனைத்து நிறுவனங்களிலும் சம உரிமையையும் வாய்ப்பினையும் பெறும் தகுதியுடையவாகள். அனைவராலும் தேர்ந்தெடுககப்படும் தலைவர்களைக் கொணடு ஆட்சி நடைபெறுகிறது. ஆண் பெண இருபாலாரும் சமதகுதியினைக் கொணடுள்ளனர். திருமணம் பொதுவாக ஒருதுணை மண (Monogamy) முறையாகக் காணப்படுகிறது. பல மனைவி மணம், பல கவணர் மணம் ஆகியவையும் இவர்களிடையேவழக்கிலுள்ளன. சகோதரர்கள் அனைவரும் ஒரு பெணணை மணந்து கொள்ளுதல் இவர்களிடையே இன்றும் வழக்கிலுள்ள மண முறைகளுள் ஒன்று. மண விலக்கு எளிமையானது. ஆணோ பெண்ணோ விரும்பும்போது மணவிலக்குச் செய்துகொள்ளலாம். இவர்கள் புத்தமத நெறிகளைக் கடைப்பிடிக்கின்றனர். மணமாகாப் புத்ததுறவிகளும் மணமான இலாமாக்களும் செர்பர்களின் சமுதாயச் சடங்குகளைச செயகினறனர். கிராம இலாமாககள எழுதப்படிக்கத் தெரிநதவராகவும் திபெத்து மொழியில் எழுதப்பட்டுளள சமய நெறிகளை அறிநதவராகவும் இருக்கினறனர். ஒவ்வொரு செயலுககும் மறுபிறவியில் பலன் உணடு என்னும் நம்பிககையுடையவர்கள செர்பர்கள. வளர்ந்து வரும் சுற்றுலாத் துறையின வளர்சசியும பெருகிவரும் மலையேறறக குழுககளின் எணணிககையும பல சொபர்களை உதவியாளர்களாகவும் வழிகாட்டிகளாகவும் மாற்றியுள்ளன. தத்தம் மரபுத் தொழில்களைவிடுத்துப பெரும் எணணிக்கையிலான குடும்பஙகள இத்துறையினை நம்பி இன்றுவாழ்ந்து வருகின்றனர். சி.ப.

செர்பியா: ஐரோப்பாவில பால்கன் முநநீரகத்தில செர்பியா இனத்தவாகள வாழ்ந்து வந்த பகுதிக்குச் செர்பியா (Serbia) என்பது பெயர். இது இப்போது யூகோசுலாவியாக் கூட்டரசின் கிழக்குப் பகுதியில் செர்போ-குரோசியக் குடியரசாக அமைந்துளளது. செர்போ-குரோசியக் குடியரசின் வடமேற்குப பகுதியில் குரோசியாவும் (Croatia) மேற்கில் பாசுனியாவும், எாசி கோவினாவும் மறறும் மாணடனெக்குரோவும் (Bosnia, Herzegovina and Montenegro), தெனமேற்கில் அல்பேனியாவும் (Albania), தெற்கில மாசிடோனியாவும், கிழக்கில பல்கேரியாவும் உருமேனியாவும், வடக்கில் அங்கேரியும் (Hungary) எலலைகளாக அமைந்துள்ளன. இதன் வடக்குப் பகுதியில் வாசுவோடேனியா (Vojvodania) என்ற சுய ஆட்சி பெற்ற பகுதியும், தெற்கில் கோசோவா




செர்பியா அமைவிடம்

(Kosovo) என்ற சுயஆட்சி பெற்ற பகுதியும் உள்ளன. இவை இரண்டும் இக்குடியரசில் சேர்க்கப்பட்டுள்ளன. இம்மூன்று பகுதிகளையும் செர்போ-குரோசியக் குடியரசு, வாகவோடேனியா மற்றும் கோசோவாவையும் சேர்த்துப் பார்க்குமிடத்து இக் குடியரசு 88,361 ச.கி.மீ. பரப்புடையதாகக் காணப்படுகிறது. இதில் ஏறத்தாழ 9,000,000 மக்கள் வாழ்கின்றனர். பொதுவாக இது மலைப்பாங்கான பகுதியாகத் தோன்றுகிறது. மேற்கில் தினாரிக்கு ஆல்ப்சு (Dinaric Alps) மலைத்தொடரும். தென்மேற்கில் வட அல்பேனிய ஆல்ப்சு மலையும், சார் மலையும் கிழக்கே பால்கன் மலைத்தொடரும் இக்குடியரசில் அடங்கியுள்ளன. வடக்கில் தான்யூபு ஆற்றுடன் திசா (Tisa), சாவா (Sava), தாமிசு (Tamis) மற்றும் மோராவா (Morava) கிளை ஆறுகளும்கலக்கின்றன. பின்னர்த் தான்யூபு ஆறு தென்கிழக்காகப் பாய்ந்து யூகோசுலாவியாவிற்கும் உருமேனியாவிற்கும் எல்லையாக விளங்குகிறது. தான்யூபு ஆறு அடுத்தடுத்து இருக்கும் நான்கு பெரிய ஒடுககமான பள்ளத்தாக்குகள் வழியாக 115 கி.மீ. ஓடுகிறது. அந்தப் பள்ளத்தாக்குகளுள் ஒன்று புகழ்மிக்க இரும்பு வாசல (Iron Gate) ஆகும்.

சொபியர்கள் கி.பி. ஏழாம் நூற்றாண்டில் இங்கு வந்து குடியேறினார்கள். அவர்கள தென் இசுலாவு இனத்தைச் சேர்ந்தவர்கள. அவர்களுடைய குடியிருப்புகள் ஏட்ரியாட்டிக்குக் கடற்கரையில தெற்கே மாசிடோனியாவரை பரவியிருந்தன. அவர்கள் அங்குக் குடியேறுவதற்கு முன்னர் இல்லீரிய இனத்தவர்கள் அங்கு வசித்து வந்தனர். மாசிடோனியருக்கும் அவர்களுக்கும் இடையே அடிக்கடி சண்டை நடந்து வந்தது. மாசிடோனியாவின் அரசரான இரண்டாம்பிலிப்பு இல்லீரியர்களை வென்றார். அவர் மகன் மகா அலெக்சாந்தர் தொடர்ந்து அவர்களைத் தம் ஆட்சியின்கீழ் வைத்திருந்தார். கிரேக்கப் பேரரசு அழிந்தபிறகு இல்லீரியக் கடற்கொள்ளைக்காரர்கள் உரோமானியர்களுக்குத் தொல்லை கொடுத்து வந்தனர். ஆகவே, உரோமானியர் அவர்களைத் தாக்கி இல்லீரியாவைத் தங்கள் ஆட்சியின்கீழ்க் கொண்டுவந்தனர். உரோமப் பேரரசு வீழ்ச்சியுற்ற பினனர்ச் செர்பியர்கள அங்குக் குடியேறினர்.

செர்பியாவில்குடியேறிய செர்பியர்கள் விரைவில் தங்களுடைய நாட்டுக்குப் பக்கத்திலிருந்த பல்கேரிய மக்களுடன் போரிட நேர்ந்தது. இவவிரு சாரார்களுக்குமிடையே இருந்த பகைமை 1,000 ஆண்டுகளுக்கு மேல் நீடித்தது. அந்தக் காலப்பகுதியில் வெற்றியும் தோல்வியும் மாறி மாறி அவர்களுக்கு ஏற்பட்டன. கி.பி. 893 முதல் 927 வரை பல்கேரியாவைச் சைமியோன் (Simeon) ஆண்டுவந்த காலத்தில், செர்பியா பல்கேரியர்கள ஆட்சிக்குட்படுத்தப்பட்டது. அவர் இறந்தபின் செர்பியர்கள் தங்களுடைய சுதந்திரத்தை மீட்டனர். பின்னர் அவர்கள் பைசாண்டியப் பேரரசுக்கு உட்பட்டிருந்தனர். செர்பிய வரலாற்றில் கி.பி. 12-ஆம் நூற்றாண்டு ஒரு திருப்புமுனையாகும் அதற்கு முன்னர்ச் செர்பியர்கள் பல குழுக்களாகப் பிரிந்திருந்தனர். ஒவ்வொரு குழுவிற்கும் ஒரு தலைவன இருந்தான். அவன் சூபன் (Zupan) எனப்பட்டான். அனைவருக்கும் மேலாக ஓர் அரசர் இருந்தார். ஆனால், அவ் அரசருக்குப் போதிய அதிகாரம் இல்லை. குழுத் தலைவாகளே எல்லா அதிகாரங்களையும் பெற்றிருந்தனர். அவர்கள அனைவரையும் வலுவாகப் பிணைக்கக்கூடிய நிறுவனம் ஏதும் ஏற்பட்டிருக்கவில்லை. அதுவே, அவர்களுடைய பலக்குறைவிறகுக் காரணமாகும். அக் குறையைப் போக்கியவர் இசுடீபன் (Stephen)நெமனசா(1159முதல் 1195). இவா எலலாக் குழுத் தலைவாகளையும் தம்முடைய அதிகாரத்திற்கு முதன்முதலாக உட்படுத்திச் செர்பிய முடியாட்சிககு வித்திட்டார்; அதேநேரத்தில் தம்முடைய ஆட்சிப் பகுதியையும் விரிவு படுத்தினார்; தால்மேசியா, பாசுனியா முதலிய பகுதிகளை வென்றார். கி.பி. 1336 முதல 1356 வரை ஆணட இசுடீபன துசான் (Stephen Dusan) என்பவர் இடைக்காலச் செர்பிய அரசர்களுள மிகச் சிறந்தவராவார். வடக்கே தானயூபுஆறு முதல் தெற்கே கொரிநதிய வளைகுடா வரையிலும், மேறகே ஏட்ரியாட்டிக்குக் கடல் முதல கிழக்கே ஏசியன் (Agean) கடல் வரையிலும் செர்பியப் பேரரசு பரவியிருந்தது, அவர் இறந்தபின் அது சிதறுண்டது. துருககியர்கள கி.பி.1389-இல் அவர்களைக் கோசோவாப் (Kosovo) போரில தோற்கடித்து அவர்கள் மீணடும் தலையெடுககாத வாறு செய்தனர். அதன்பிறகு கி.பி.1459 வரை துருக்கிய அரசுககு உட்பட்ட சார்பு நாடாகச் செர்பியா இருந்துவந்தது.உதுமானியத் துருக்கிப்பேரரசின் ஓர் அங்கமாக கி.பி.1459-இல் மாறிவிட்டது. அவாகளுடைய நிலங்கள் சுலதானுடைய நிலங்களாக அறிவிக்கப்பட்டன. செர்பியர்கள அடிமைகள்போல நடத்தப்பட்டனர்.

கோசோவாப் போருக்குப் பிறகு பல செர்பியர்கள் நாட்டை விட்டு நீஙகித் தான்யூபு ஆற்றைக் கடந்து, தெற்கு அஙகேரியில் குடிபெயர்ந்தனர். ஆயினும், தமது சொந்த நாட்டிடம் கொணடிருந்த பற்றுத்தொடர்ந்து அவர்களிடம் இருந்து வந்தது. அவர்களுடைய இழிநிலைக்குக் காரணமாக இருந்தவர்களை அவர்கள் வெறுத்தனர். துருக்கிக்கு எதிராக அங்கேரி போர் தொடுத்த போதெலலாம் அதற்கு

உதவி செய்தார்கள். பிரெஞ்சுப் புரட்சி தொடங்கு வதற்கு முன்பு செர்பியாவை விடுவிக்கும் முயற்சி ஓரிரு முறை மேற்கொள்ளப்பட்டது. ஒப்ரடோவிக்கு (Obrodovic) என்ற செர்பியக் கவிஞர் பேரரசர் இரண்டாம் சோசப்பின் உதவியை நாடினார். ஆனால் பலன் ஏதும் கிட்டவில்லை. நாடுகளும் தனி மனிதர்களைப் போலத் தங்களுடைய சண்டை களைத் தாங்களே போடவேண்டும் என்ற பாடத்தை நன்கு ஏற்றுக்கொண்டன.

இக்காலச் செர்பிய நாட்டை உருவாக்கியவர் காரா சார்சு என்பவராவார். அவருடைய தலைமை யின்கீழ்ச் செர்பியர்கள் துருக்கிக்கு எதிராகக் கலகம் செய்தனர். கலகத்தை அடக்க வந்த துருக்கியப் படையை கி.பி.1806-இல் தோற்கடித்தனர். சுல் தான் செர்பியர்களுக்குச் சுய ஆட்சியை வழங்கி னார். துருக்கிய நிலக்கிழார்கள் தங்களுடைய நிலங்களை விட்டுக்கொடுத்தனர். சுல்தான் செர்பி யாவை மீண்டும் வெல்ல கி.பி. 1812-இல் முயற்சி செய்தார். அதுபோது செர்பியர்களை வழி நடத்தும் பொறுப்பு மிலோசு ஆப்ரி நாவிக்கு (Milos Obrinovic) என்பவரிடம் விடப்பட்டது. விடுதலைப் போர் மீண்டும தொடங்கியது. செர்பியா கி.பி. 1829-இல் மேற்கொள்ளப்பட்ட ஏட்ரியா நோபிள் உடன்படிக்கையின்படி ஏறக்குறைய முழுச் சுதந்திரம் பெற்ற நாடாக அமைக்கப்பட்டது. ஆனால், துருக்கி யின் மேலாதிக்கத்தின்கீழும் உருசியாவின் பாதுகாப் பிலும் அது இருக்க வேண்டுமென்று ஏற்பாடு செய் யப்பட்டது.

பின்னர் உள நாட்டுப் பூசல் ஏற்பட்டது. காரா சார்சு மற்றும் மிலோசு ஆப்ரி நாவிக்குக் குடும்பங் களுக்கிடையே சச்சரவு தோன்றியது. காரா சார்சு கொல்லப்பட்டார். ஆப்ரி நாவிக்குக்குடும்பத்தினர் கி.பி. 1842 வரை ஆண்டனர். அதிகாரம் காரா சார்சுவின் குடும்பத்தினரிடம் மாறியது. மீண்டும் மிலோசு ஆப்ரி நாவிக்குக்குடும்பத்தினர் கி.பி. 1858 -இல் ஆட்சி அதிகாரத்தைப் பெற்றனர். அக் குடும் பத்தைச் சார்ந்த மைக்கேல் பல சீர்திருத்தங்களைச் செய்தார். துருக்கியப் படைகளைச் செர்பியக் கோட்டைகளிலிருந்து விலக்கிக்கொள்ளுமாறு செய் தார். அவர் கி.பி. 1868-இல் கொல்லப்பட்டார். நான்காம் மிலான் ஆப்ரி நாவிக்கின் ஆட்சிக்காலத் தில் கி.பி. 1875-இல் செர்பியர்கள துருக்கியின் ஆட் சிக்குட்பட்டிருந்த பாசுனிய செர்பியர்களுக்குச் சாதக மாகவும் துருக்கி அரசுக்கு எதிராகவும்கொதித்தெழுந தனர். அதன் விளைவாகத் துருக்கியுடன் போர்புரிய நேர்ந்தது. போரில் செர்பியர்கள் தோல்வி கண்ட னர். அவர்களைக காப்பாற்றத் துருக்கிக்கு எதிராக உருசியா போர் தொடுத்தது. போரின் முடிவில் மேற்கொள்ளப்பட்ட சான்சுடீபனோ உடன்படிக்கை யின்படி செர்பியாவின் எல்லைகள் விரிவுபடுத்தப் பட்டன. ஆனால், பெர்லின் மாநாட்டில் புதிதாகப் பெற்ற பகுதிகளை இழக்க நேர்ந்தது. அதற்குப் பதி லாகப் பல்கேரியாவிலுள்ள சில இடங்களைக் பெற் றது. செர்பியா, மான்டெனெக்ரோ, பாசுனியா, எர் கோவினாவில் வாழும் செர்பியர்களை ஒன்றாக இணைப்பதற்குப் பதிலாக அவர்களைக் பிரித்துவைக் கும் வகையில் பெர்லின் உடன்படிக்கை அமைக்கப் பட்டது. அதற்கு ஆசுத்திரிய - அங்கேரி, முதற் காரணம் என்று செர்பியா எண்ணியது. அதன் விளைவாகச் செர்பியர்களுக்கும் ஆசுத்திரிய-அங்கேரி முடியரசுக்கும் இடையே தீராப்பகை வளர்ந்தது

பெர்லின் மாநாடு செர்பியாவை ஒரு முழுமை யானசுதந்திர நாடாக மாற்றியது. சிற்றரசர் மிலான் கி.பி.1882-இல் அரசர் பட்டத்தை ஏற்றார். அடுத்த இருபது ஆண்டுகள் சொபிய வரலாற்றில் கொலை களும் அரசவைப்பழிச் செயல்களும் நிறைந்திருந்தன. முற்போக்கு அரசியலமைப்பு கி.பி.1893-இல் ஒழிக்கப் பட்டது. ஆப்ரி நாவிக்கு ஆட்சி கி.பி.1903-இல் முடி வுற்றது. காரா சார்சு குலத்தைச் சார்ந்த பீட்டர் அரசரானார். வரம்புக்குட்பட்ட முடியாட்சியை அவர் மீண்டும் ஏற்படுத்தினார்.

ஆசுத்திரியா-அங்கேரி, பாசுனியா, எர்சிகோ வினா ஆகியவற்றை கி.பி.1908-இல் தனனுடைய நேராட்சிக்கு உட்படுத்தியது. அங்கு வாழும் செர் பியர்களையும், துருக்கியின்கீழ் வாழும் செர்பியர் களையும் விடுவிக்கும் நோக்குடன் பால்கன் கூட்டுச் சங்கம் (Balkan League) அமைக்கப்பட்டது. அதை யடுத்து முதலாம் பால்கன் போர் தொடங்கியது. அச் சங்கத்தைச் சார்ந்த செர்பியா, பல்கேரியா, கிரீசு, ஆகிய நாடுகள் துருக்கியுடன் போரிட்டுப் பல பகுதிகளை வென்றன. அதையடுத்து அந்நாடுகளுக் கிடையே போரில் வென்ற பகுதிகளைப் பிரித்துக் கொள்வதைப் பற்றிப் போர் நடைபெற்றது. செர் பியர்களும் கிரேக்கர்களும் உருமேனியர்களும் பல் கேரியாவிற்கு எதிராகப் போரிட்டனர். போரின் முடிவில் ஏற்படுத்தப்பட்ட புகாரசுட்டு உடன் படிக்கை வாயிலாக வடக்கு மற்றும் மத்திய மாசி டோனியாப்பகுதிகள் செர்பியாவிற்குக் கிடைத்தன. ஆசுத்திரியா-அங்கேரி இந்த உடன்படிக்கையைக் கிழித்தெறிய முற்பட்டது. ஏனெனில், அது பால்கன் பகுதியில் வாழும் செர்பியர்கள் யாவரும் ஒரு ஆட் சியின்கீழ் வருவதற்குரிய வாய்ப்பை ஏற்படுத்தியது. பாசுனிய செர்பியர்கள் ஆசுத்திரியாவிற்கு எதிராகக் கிளர்ச்சி செய்தனர். அச்சமயத்தில் ஆசுத்திரிய இள

வரசரான பிரான்சிசு பர்டினாண்டு பாசுனியாவின் தலைநகரான சரயேவோவிற்கு வந்தார்.ஒருபாசுனிய செர்பியர் அவரைக் கொன்றார். அக்கொலைக்குச் செர்பியாவே பொறுப்பு என்று ஆசுத்திரிய-அங்கேரி அரசு குற்றம் சாட்டியது. அதன்காரணமாக முதல் உலகப்போர் ஏற்பட்டது.

உலகப்போர் காரணமாகச் செர்பியாவின் மக்கள் தொகை 23 விழுக்காடுகுறைந்துவிட்டது. செர்பியர், குரோசியர், மற்றும் சுலோவேனியர் அரசின் ஒரு பகுதியாகச் செர்பியா மாறியது. அவ்வரசுக்கு யூகோசுலாவியா என்றபெயர் கி.பி 1929-இல் சூட்டப்பட்டது. கூட்டரசுக் குடியாட்சி கி.பி.1946-இல் நிறைவேற்றப்பட்ட அரசியலமைப்புச் சட்டப்படி அமைக்கப்பட்டது. கூட்டரசில் அங்கம் வகிக்கும் செர்பியக் குடியரசின் பரப்பளவு குறைக்கப்பட்டது.மாணடினெக்ரோவும் செர்பியமாசிடோனியாவும் அதிலிருந்து பிரிந்து தனிக் கூட்டரசுக் குடியரசுகளாயின.

இப்போதைய செர்பியக் குடியரசின் பொருளாதாரம் வேளாண்மையை அடிப்படையாகக் கொண்டுள்ளது. கோதுமை, ஓட்சு மற்றும் பிளம் (Plum) போன்ற பழவகைகள பயிரிடப்படுகின்றன. மீன்பிடித்தல் முக்கிய தொழிலாகும். உலோகத் தொழில், காகிதத் தொழில், கண்ணாடித் தொழில்,நெசவுத் தொழில், சுரங்கத் தொழில் முதலியன இங்கு நடைபெறுகின்றன தி ஆர்.இரா.

**செர்னாவிட்சி** உருசியாவில் உக்ரெயின் பகுதியில் உள்ள ஒரு நகரம். இது தொழில் வளம் மிக்கது. கார்பேத்தியன் (Carpathian) மலையடிவாரத்தில் புருட்டு (Prut) ஆற்றங்கரையில் இது அமைந்துள்ளது. மக்கள் தொகை 187,000 (1970).

செர்னாவிட்சி (Chernavtsy) நகர் கி.பி. 1775-இல் ஆசுத்திரிய (Austria) மேலாண்மைக்குட்பட்டிருந்தது. ஆசுத்திரிய- அங்கேரியப் பேரரசு 1918-இல் கலைக்கப்பட்டபொழுது, இநநகர் புதிதாக உருவாகிய உருமேனியாவுக்குக் கொடுக்கப்பட்டது. புதிய சோவியத்து உருசியா 1940-இல் இந்நகரத்தைத் தன்வசப் படுத்தியது. இங்கு இப்பொழுது மரச்சாமான்கள் செய்யும் தொழில் சிறப்பாக நடைபெற்று வருகிறது. தெ.பா.

**செரிக்கோ** தொன்மையான நகர நாகரிகத்தைக் கொண்ட ஊர், இறந்த கடலுக்கு (Dead sea) வடமூலையில் சோர்டான் (Jordan) நாட்டில் செருசலத்திற்குக் கிழக்கே 22 கி.மீ. தொலைவில் செரிக்கோ (Jericho) அமைந்துள்ளது. இவ்வூர் வரலாற்றுக் காலத்திற்கு முன்னரே ஒரு சிறந்த நாகரிகத்தைக் கொணடு விளங்கியது. இவ்விடத்தில் கி.பி. 868-ஆம் ஆண்டும், 1952 முதல் 1958-ஆம் ஆண்டு வரையிலும் அகழாய்வுகள் மேற்கொள்ளப் பட்டன. இவ்வகழாய்வுகளின் மூலம் செரிக்கோவில் நிலவிய தொன்மையான நாகரிகம் கண்டறியப் பட்டது. இங்கு நிலவிய முதல் நாகரிகத்தின் காலம் கரிமம் 14 முறைப்படி (Carbon 14) கண்டறியப் பட்டது. இங்கு நிலையான குடியேற்றத்தை இடைக் காலத்தில் நாட்டுப்பைன் வேட்டைககாரர்கள் (Natufian Hunters) கி.மு. 8840-இல் ஏற்படுத்தினர். வட்ட வடிவக் குடிசைகளை அமைத்து இவர்கள் வாழ்ந்தனர். இவர்களுக்கு அடுத்து வநதவர்கள சிறிதளவு நாகரிக முதிர்ச்சி பெற்றவர்களாகத் திகழ்ந்தனர். பத்து ஏக்கர் நிலப்பரப்பில் ஓர் நகரை நிருமாணித்து அதனைச் சுற்றி மதில்கள் அமைத்து இவர்கள் வாழ்ந்தனர். வீடுகள் கருங்கல்லினால் கட்டப்பட்டன. வட்ட வடிவ உயர்ந்த கோபுரங்களையும் இவர்கள் கட்டினர். கருங்கற்களைக் குடைந்தமைத்துக் கழிவுநீர்க் கால்வாய்களை நகரில் அமைத்தனர். இவர்களின் பண்பாட்டு மண்ணடுக்குகளில கிடைத்த அரிவாளைக் கொண்டு இவர்கள் வேளாண்மையை அறிந்திருந்தனர் என ஊகிக்கலாம். இருப்பினும், இவர்களுக்கு அடுத்துவந்த மக்களே வேளாண்மையில் பெரிதும் ஈடுபட்டனர் எனத் தெரிகிறது. செரிக்கோவில் புதிய கற்காலம் கி.மு. 6840 முதல் கி.மு. 6700 வரை நிலவியது. புதிய கற்கால மக்கள் வேளாண்மையில் ஈடுபட்டனர். இருப்பினும் இவர்கள் மட்கலன்களின் பயன்பாட்டை அறிந்திலர். செவ்வக வடிவில் இவர்கள் வீடுகளைக் கட்டினர். வீடுகள் பல அறைகளைக் கொண்டு விளங்கின. இக்காலம் மட்கலப் பணபாட்டுக்கு முந்திய புதிய கற்காலம் (Pre-Pottery Neolithic) எனக் கூறப்படுகிறது.

புதிய கற்காலத்தின் பிற்பகுதியில மக்கள் மட்கலன்களின் பயன்பாட்டை அறிந்தனர். இக்காலத்தில் பிறகலைகளையும் அறிந்தனர். சுடுமண்ணால் செய்யப்பட்ட பொம்மை விலங்குகள் அகழாய்வில் கிடைத்தன. செரிக்கோவில் கல் செப்புக்காலம்(Chal-Colithic) கி.மு. 4000 த்தில் தோன்றியது. இக்காலத்தில் பானைகள் வண்ணம்தீட்டப்பட்டன.வெண்கலக் காலம் (Bronze Age) செரிக்கோவில் கி.மு.3000 த்தில் தொடங்கியது. இக்காலத்தில் இந்நகரம் பெரிதும் வளர்ச்சி அடைந்தமையால் வீடுகள் கருங்கல்லாலும் செங்கற்களாலும் கட்டப்பட்டன. போரிடும் கருவிகள் பல இக்காலப் பண்பாட்டு மண்ணடுக்குகளில் கிடைப்பதால் இம்மக்கள் போர்ககலையை அறிந்திருந்தனர் எனத் தெரிகிறது. கேத்லியன்



செரிககோ அகழாய்வு

கென்யான் (Kathleen Kenyan) என்னும் தொல்லியல் அறிஞர் இவவூரை அகழாய்வு செய்த அறிஞராவாா. இவர் புதிய கறகாலத்தில் ஏறககுறைய 2000 மக்கள் இந்நகரததில வாழந்திருக்க வேணடும் எனக் கூறினார். செரிக்கோவில் பல மணடை ஓடுகள் அகழாயவில் கிடைத்தன. இவைகளின் மேல் பகுதி களி மண்ணால் பூசபபட்டுளளது குறிப்பிடத்தக்கது. இதைப் போனற வார்ப்பிடப்பட்ட மணடை ஓடுகள், சிரியாவில் தெல் இரமாடு (Tell Ramad) என்ற இடத்திலும கிடைத்தன. செரிககோவின புதிய கறகால நகரமைப்பு குறிப்பிடத்தககவொன றாகும். புதிய கற்கால மககள எதிரிகளால் அழிக்கப் பட்டனர்.

இவர்கள் அடிககடி பழங்குடிகளிடம் சண்டையிட நேரிட்டதால் தங்கள் நகரத்தைச் சுற்றி வலிமைமிகக உயர்ந்த கற்சுவர்கள் அமைத்துக் கொண்டனர். செரிககோ பின்னர் அயக்சாசுப் (Hyksos) பேரரசின் கீழ் வந்தது. எகிப்தியர்களால் இப்பேரரசு அழிக்கப் பட்டுச் செரிக்கோவின் புகழும் அழிந்தது. சு.இரா.

**செருத்துணை நாயனார்** பெரியபுராணம் சிறப்பிககும் நாயனமார்களுள ஒருவர். காவிரி பாயும சோழநாட்டின் பகுதியான மருகல நாட்டிலுள்ள தஞ்சாவூரில், சிறப்புடன் விளங்கிய வேளாண குடியிற் செருத்துணையார் தோன்றினார். இறைவனுக்குத் திருத்தொண்டு செய்யும் மெய்யன்பராய விளங கிய இவர் திருவாரூர்த் திருக்கோயிலில் திருப்பணி கள செய்து உரிய காலஙகளில் இறைவனை வழி பட்டு வணங்கி வந்தார்.

ஒருநாள பல்லவர் கோச்சிங்கரும, அவா பட்டத்துரிமையுடைய பெருந்தேவியும் திருவாரூர் வந்தனர். அரசி, மலர் மணடபத்தின் பக்கத்தில் விழுந்துகிடநத புதுப்பூவை எடுதது மோந்ததைக் கண்டார். அக்குற்றத்திற்சாகச் செருத்துணையார் வேகமாகச் சென்று அவளது கூந்தலைப் பிடித திழுத்து நிலத்தில் வீழ்த்தி அழகிய மூக்கினைக் கருவி கொணடு அரிந்தார். இவ்வாறு திருத்தொணடு உலகறியச் செய்த வலிமை மிக்க ஆணசிங்கம்

போனற செருத்துணையார் இறைவன் திருவடியை அடைந்து இறவாத இனபத்தினை அடைந்தார்.

இவவடியாா புராணம் பல தேவையான செய்தி களை விளக்குகிறது. இறைவன் திருக்கோயிலில் திருபபணிகள் செய்தலும், வழிபாட்டுக்கு உரிய காலஙகளில அடியார்கள சேர்நது சிவனை வழிபடு தலும் சிவ சமய தருமங்களாகும; சிவன கோயில வளாகத்தில் விழுந்த புதுப்பூ, சிவனுக்கே உரியது; அதனை எடுதது முகர்வது குற்றமாகும; அக்குற்றம கணடபோது உரியவாறு தணடிததல் அன்பர்களின் கடமை; தவறு செய்தவர்களும், தவற்றினைக் கணடித்தவர்களும் இதனால் பயன் அடைகிறார்கள்; அக்குற்றம் கணடும் தண்டிக்காது வாளாவிருத்தல் பாவம; அவ்வாறு தணடிததல இயலாவிடின் 'சிவசிவ' என்று சொல்லி அவ்விடத்தை விட்டு நீங்கு தல் வேண்டும் என்பனவாகிய சைவ சமயக் கோட் பாடுகளை இந்த நாயனார் புராணம் விளக்குவதாக உள்ளது.

திருவிற்குடி, திருப்பயற்றூர் வழியாக மண சாலை மூலம் வடவாற்றின் வடகரையில் உள்ள மருகல் நாட்டுத் தஞ்சாவூரை அடையலாம. இது கீழைத் தஞ்சாவூர் என வழங்கும். கோயிலில் செருத் துணையார் திருவுருவம் உளளது. இந்நாயனார் திருவாரூரில குமரிக கோட்டத்தில் வசித்தவா என செவிவழிச் செய்தியாக அறியப்படுகிறது. கி.சே.

**செருமனி:** நடுவண் ஐரோப்பாவிலுள்ள செருமனி 20-ஆம் நூறறாணடின் தொடக்கத்தில்




செருமனி

உலகிலேயே வலிமைமிக்க நாடாக மாறி இருஉலகப் போர்களுக்கும் காரணமாக இருநதது. இதன் வடக்கே வட கடலும் பால்டிக்குக் கடலும், தெறகே சுவிட்சர்லாநதும் ஆசுத்திரியாவும், கிழக்கே செக்கோசுலோவாகியாவும் போலந்தும், மேற்கே பிரான்சும் பெல்சியமும் ஆலந்தும் எலலை களாக உள்ளன. செருமனியை (Germany) ஆட்சி புரிந்துவந்த அரசாகளின வலிமைக்கேற்ப இதன எல்லைகளும் பரப்பளவும் அவவப்போது மாறின

**புவியியல் அமைப்பு: பருவ நிலை.** கடறகரைப பகுதியில் கடற்பருவ நிலையும், உள்நாட்டுப் பகுதியில கண்டப் பருவநிலையும் உள்ளன. சனவரியில குளிா கடுமையாக இருக்கும்பொழுது கடல்மட்டத்தில சராசரி வெப்பம் 1° செ.(30°F)கோடைக்காலத்தில் 18° செ.(64° F). தெற்கு நோக்கிச சென்றால கோடையில் மிதமான வெப்பமும், குளிாகாலத்தில மிதமான குளிரும் இருக்கும். மேட்டுநிலப் பகுதியில குளிர்காலததில குளிர் குறைவாக இருக்கும். மழைக் காலத்தில் மிக்க மழை பெய்யும். இந்நாட்டில் எலலாக் காலங்களிலும் மழை உணடு எனறாலும் கோடையில் மிகுதியாகப பெய்யும். கார்சு(Harz) மலைகளிலிருந்து பவேரியன் ஆல்ப்சு வரையிலுள்ள மலைமுகடுகள் சனவரி முதல மாாச்சு வரை பனி யால் மூடப்பட்டிருக்கும்.

**ஆறுகள்:** இங்குளள ஆறுகளில் தொடர்ந்த மழையின் காரணமாக எப்பொழுதும் நீர் நிறைய ஓடிக்கொணடிருப்பதால அவை வேளாண்மைககும தொழில் வளர்ச்சிக்கும் பயன்படுவதுடன் போக்கு வரத்திறகு உதவியாகவும் உள்ளன. ஐரோப்பி ஆறுகளிலேயே மிக முககியமான தான்யூபு இங்கு உற்பத்தியாகி 640 கி. மீ. தூரம் இந்நாட்டில ஓடு கிறது. இந்நாட்டு ஆறுகளுள மிகவும் முக்கியமான தான இரைனும், அதன் கிளை ஆறுகளும 131 கி. மீ. நீளம் ஓடி ஐரோபபிய ஆறுகள எலலா வற்றையும்விட மிகுதியாகப் போககுவரத்திற்குப் பயன்படுகின்றன. வடக்குச்செருமானியசசமவெளியில வெசர்(Weser), எல்பு (Elbe) ஆறுகள பாயகின்றன. இரு செருமனியிலும் பாயும எல்பு ஆறு, சிறிது தொலைவிறகு இவ்விரு நாடுகளுககும் எலலையாக வும் அமைந்துள்ளது. இது கிழககுச் செருமனியில திரசுடன்,மக்டிபாக்குப் பகுதிகளில் பாயந்து,மேறகுச செருமனியின் முககிய துறைமுகமும் இரணடாம் பெரிய நகரமுமான ஆம்பர்கில் (Hamburg) கட லோடு கலக்கிறது, ஓடர் ஆறு செக்கோசுலோவாகி



இரைனஆறு

யாவில் தோன்றிச செருமனியின் கிழக்கு எல்லையாக ஓடிச்இசுபிரி(Spree) ஆற்றுடன் ஒரு கால்வாயால் இணைககப்படுகினறது. அதன் கரையில்தான் பெர் லின் நகரம் அமைநதுள்ளது இவ்வாறுகள் பல கால் வாய்கள் மூலமாக இணைககப்பட்டுப் போக்குவரத் திற்கு மிகவும் பயனபடுததப்படுகின்றன. மிக நீள மான மிட்டல்லணடுக் (Mittelland) கால்வாய் வெச ரையும் எலபையும் சேர்க்கிறது. வட செருமனியி லுளள கீல் கால்வாய் வடகடலைப் பால்டிக்குக் கடலுடன் இணைக்கிறது. இரைன்-மைன-தான்யூபுக் காலவாய் பெருங்கப்பலகள் வட கடலிலிருந்து கருங் கடலுக்குச் செல்ல உதவுகிறது. இநநாட்டிலுள்ள பிற ஆறுகள் மைன்(Main), மோசல (Moselle) நைக்கர்(Necker) ஆகியவையாகும்.

**இயற்கையமைப்பு:** இந்நாட்டை மூன்று இயறகைப பிரிவுகளாகப் பிரிககலாம: அவை வடக்குத தாழ் நிலம், மத்திய மேட்டு நிலம், தெற்கு ஆல்பைன் அல்லது மலைப்பகுதி என்பன.

வடக்குத் தாழநிலம் என்பது வடக்குப் பகுதி யிலுள்ள சீரான சமவெளியாகும். செருமனியின் பெரும்பகுதி இத்தகையதாகும. பால்டிககு வடகடற் கடற்கரைப் பகுதிகளும், ஆறுகளின கழிமுகப் பகுதி யிலுள்ள பளளத்தாககுகளும இதில அடங்கும. இப்பகுதியில் நீரவளமும் நிலவளமும் இருப்பதால் வேளாண்மை நடைபெறுவதுடன் கால்நடைகளும் வளர்க்கப்படுகின்றன. கிழககுச் செருமனியில உளள தாழ் நிலப்பகுதியில பல ஏரிகளும சதுப்பு நிலஙகளும் உள்ளன. எனவே, இதுசீரான சமவெளியாக அமைய வில்லை.சமவெளிககும் மேட்டுநிலப் பகுதிக்கும் இடை யிலுளள பகுதி மணவளம் மிக்கது. ஆலி (Halle), இலெய்சிகடு,திரெசுடன (Dresden)ஆகிய பகுதிகள இத்தகையவை. இடைக் காலததிலிருநது இது சிறந்த வாணிக வழியாக இருந்துவருவதால் இஙகு மககள மிகுதியாக வாழ்கினறனா.

மத்திய மேட்டுநிலப் பகுதியில தொடர்சசியான பல மேட்டுநிலங்கள (Plateaus) உளளதால் இதில் வேறுபாடு மிகுதி. ஆறுகள் குறிபபாக இரைன, ஆழ மான பள்ளத்தாக்குகளை உணடாககியிருப்பது மிக வும் அழகாக உள்ளது. இஙகு மரங்கள மிகுதியாக வளர்கினறன. மலைச்சரிவுகளிலும் பளளத்தாககு களிலும் வேளாணமை நடைபெறுகிறது.

தென்பகுதியில மிக உயர்நத, அழகிய ஆலபைன மலைகள் உள்ளன.இது உடல்நலத்திறகுஏற்றஇடமாக வும், உல்லாசப் பயணிகளைக் கவரக்கூடியதாகவும் உள்ளது. உயர்ந்த, பனி மூடிய மலைகளிலுள்ள ஏரி களில் பயணம செய்வது சிறப்பானதாகும். கார்சு (Harz)மலைகளிலுள்ள சில சிகரங்கள் ஏறத்தாழ 300மீட்டர் உயரமுள்ளவை. கிழக்குச் செருமனிக்கும் செக்கோசுலோவாகியாவிற்கும் இடையிலுள்ள மலை களில் (Ore Mountains) பல்வேறு கனிமங்கள கிடைக் கின்றன. அண்மைக் காலத்திலிருந்து விண்மம் வெட்டியெடுக்கப்படுகிறது. கருப்புக் காட்டு மலைத் தொடரில் பல்வேறு மரவகைகள் உள்ளன.இங்கிருந்து தான தான்யூபு (Danube) ஆறு தோன்றி 640கி.மீ. தூரம் தெற்குச் செருமனியில் ஓடுகிறது.

இரண்டாம் உலகப்போருக்குப் பின்னர்ச் செரு மனி இரு நாடுகளாகப் பிரிக்கப்பட்டுள்ளது. அவற்றி னிடையே 1321கி.மீ. வெற்றிடமாகஉளளது. இருநாடு களுக்கிடையே சுவர்களும், கம்பி வேலிகளும் போடப் பட்டுள்ளன. அம் மக்கள் ஒரே இனத்தைச் சேர்நத வர்களாகவும் சிலர் ஒரே குடும்பத்தைச் சேர்நதவர் களாகவும் ஒரேமொழியைப் பேசுபவர்களாகவும் ஒரே நாணயத்தைப் பயன்படுத்துபவர்களாகவும் இயற்கை யமைப்பில் ஒரே நாட்டைச் சேர்ந்தவர்களாகவும் இருப்பினும், இன்று இரணடாகப் பிரித்து வைககப் பட்டுளளனர். அதன கிழக்குப் பகுதிக்குக் கிழக்குச் செருமனி அல்லதுசெருமானிய மக்களாட்சிக் குடியரசு என்றும் மேற்குப் பகுதிக்கு மேற்குச செருமனி அலலது செருமானியக் கூட்டாட்சிக குடியரசு என்றும் பெயர். அரசியல அமைப்பிலும், தொழில் வளத் திலும் மாறுபட்டிருக்கும் இவ்விரு நாடுகளையும் தனித்தனியே அறிதல் சிறப்புடையதாகும்.

**கிழக்குச் செருமனி:** கிழக்குச் செருமனி அல்லது செருமானிய மக்களாட்சிக் குடியரசின் (German Democatic Republic) தலைநகர் கிழக்குப் பெர்லின். இது ஒரு பொதுவுடைமை நாடாகும்.

**புவியியல் அமைப்பு:** கண்டப் பருவநிலை உள்ள தால் மழைக்காலத்தில் மிகக மழை பெய்கிறது. ஆனால், கிழக்கிலிருந்து குளிர்காறு வீசுவதால் குளிர் மிகுந்து பனி விழும். கோடைககாலத்தில் வெப்பம் மிகுதியாகவும் மழை குறைவாகவும் உள்ளது. பெர் லின் சனவரி—0.5 செ.(31 °F); சூலை 19செ.(66°F): ஆண்டின் சராசரி மழை 563 மி.மீ. (22.5 அங் குலம்), இலெய்ப்புசிக்கு (Ieipzig) சனவரி —0.6செ. (31 °F); சூலை 18.5 செ.(65 °F); ஆண்டுச் சராசரி மழை 605 மி.மீ. (24 அங்குலம்).

**பரப்பளவு:** இதன பரப்பளவு 108,333 ச.கி.மீ.

**மக்கள்:** இதன்மக்கள் தொகை 167, 015,000. அதில் ஆணகள், 78,769, 000. பெண்கள் 88,246,000 (1983). இதில் 99 விழுக்காட்டினர் செருமானியர்,



மேற்குப் பெர்லின் நகரம்

**சமயம்:** இவர்களுள் 80 விழுக்காட்டினர் சீர்திருத்தக கிறித்தவ சமயத்தினர் (Protestants); 11விழுக்காட்டினர் உரோமன் கத்தோலிக்கர்; எஞ்சிய 9விழுக்காட்டினர் பிற சமயத்தவர்.

**பொருளாதாரம்: வேளாண்மை:** இந்நாட்டில் பரம்பரையாகவே பெரிய பணணைகள இருந்துவந்ததால் பொதுவுடைமை அரசாங்கம் ஏறபட்டபினனர் வேளாண்மையில் இயநதிரங்கள் பயன்படுத்தப்பட்டு முன்னேற்றம் ஏற்பட்டது. புதிய பொருளாதாரத் திட்டம் 1963-இல் செயற்படுத்தப்பட்டதும் வேளாணமையில் பெரிய மாற்றம் தோன்றியது. 4.73 மிலியன் எக்டேர் நிலம் 1984-ஆம் ஆணடில் வேளாணமை செய்யப்பட்டபொழுது 3938 கூட்டுப் பண்ணைகளும 70,726, கூட்டுறவுப் பண்ணைகளும், 436,421 அரசுப் பணணைகளும் இருநதன. கோதுமை, பார்லி, உருளைக்கிழங்கு, பீட்கிழங்கு, ஓட்சு, எண்ணெய் வித்துக்கள ஆகியவை விளைவிக்கப்பட்டன. இந்நாட்டில் 1,250,271 எக்டேர் புல்வெளி உள்ளதால் கால்நடை வளர்ப்பில் முன்னேறறம் ஏற்பட்டுள்ளது. கால்நடைகளின் எண்ணிக்கை 1984-இல் 5,908,000. (அவற்றுள்பசுக்கள் 2,090,000),பன்றிகள் 13.058,000, வெள்ளாடுகள 2,359,000, ஆடுகள் 24,000, குதிரைகள் 88,000, கோழிகள் 53,000,000. அவர்களுடைய உணவில் 1970-இல் 70 விழுக்காடு பன்றி இறைச்சியாகையால் அந்நாட்டில் பன்றி வளாப்பு மிகுதி.

**கனிமங்கள்:** இங்குப் பழுப்பு நிலக்கரி மிகுதியாகக் கிடைப்பதால் அதன உற்பத்தியில உலகிலேயே இது முதலாம் இடத்தைப் பெற்றுள்ளது. கார்சு (Harz) மலைகளுக்குக கிழககில் பொட்டாசு மிகுதியாகக் கிடைக்கிறது சில அருகிய உலோகங்களான விண்மம் (Uranium),கோபால்டு, நிமிளை (Bismuth),அஞ்சனக் கல் (Antimony) ஆகியவையும் எடுக்கப்படுகினறன. பாறை உப்பும் மட்டமான இரும்புத் தாதும் உள்ளன. பால்டிக்குக் கடற்கரையில் சிறிதளவே எண்ணெய் கிடைப்பதால் அதுமட்டும் வெளிநாடுகளிலிருந்து இறக்குமதி செய்ய வேணடியுளளது.





கிழக்குப் பெர்லின நகரம்

**தொழிற்சாலைகள்:** இரணடாம் உலகப்போருக்குப்பின் மிகப்புதிய இயநதிரங்களைக் கொண்டு உற்பதியைப்பெருக்கியதால்,உலகிலேயேதொழிலவளம் மிக்க 10 நாடுகளுள் ஒன்றாக இது திகழ்கிறது. கனரக

இயந்திரங்கள், மின்சாரக் கருவிகள், மருந்துகள், உந்து வண்டிகள் கண்ணாடிப் பொருள்கள், பொம்மைகள், இசைக் கருவிகள் ஆகியவை உற்பத்தி செய்யப்படுகின்றன. வேதியல் தொழிற்சாலைகள், சிறப்புற்றுக் கந்தகக் காடி (Sulphuric Acid), உவர் நீரகத்தீயகை (Caustic Soda), வெடிய உரங்கள் (Nitrogen), செயற்கை இரப்பர், நெகிழி செயற்கைஇழைகள், துணிவகைகள் ஆகியவை தயாராகின்றன. இத் தொழிற்சாலைகளில் 'பெட்ரோலியம்' கிடைக்காததால் 1963-வரை பழுப்புநிலக்கரியே எரிபொருளாக மிக்க அளவு பயன்படுத்தப்பட்டு வந்தது. அதன்பின்னர் சோவியத்து ஒன்றியத்திலிருந்து 4000 கி.மீ. நீளத்திற்குக் குழாய்கள் மூலமாக இந்நாட்டின் எண்ணெய்ச் சுத்திகரிப்பு நிலையங்களுக்குக் கச்சா எண்ணெய் வருகிறது. இந்நாட்டில் இரும்புத்தாது மிகுதியாக இல்லாததால் உலோகத்தொழில் செழித்து வளரவில்லை. பின்னர் 1950-இலிருந்து சிறிது முன்னேற்றம் அடைந்து நிலக்கரி, இரும்பு எஃகு உற்பத்திக்குப் பயன்படுத்தப்பட்டது. எனவே, இரும்புக் கம்பிகள், தகடுகள். குழாய்கள் ஆகியவை உற்பத்தி செய்யப்படுகின்றன.

**ஏற்றுமதி:** இங்கிருந்து பழுப்பு நிலக்கரி, துணி வகைகள், இயந்திரங்கள், மின்சாரக் கருவிகள் ஆகியவை ஏற்றுமதி செய்யப்படுகின்றன. இந்நாட்டின் ஏற்றுமதியில் இயந்திரங்கள் 48 விழுக்காடும், பழுப்பு நிலக்கரியும் உலோகமும் 40 விழுக்காடும் ஆகும்

**இறக்குமதி:** இந்நாட்டிற்குத் தேவையான நிலக்கரி, கச்சா எண்ணெய், இரும்புத்தாது, தானியங்கள், உணவு வகைகள் (புலால், மீன், கோதுமை, பழங்கள் காய்கறிகள் முதலியவை), புகையிலை ஆகியவை இறக்குமதி செய்யப்படுகின்றன.

இந்த நாடு பொதுவுடைமை நாடுகளுடன் (உருசியா, செககோசுலோவாகியா) 65 விழுக்காடு வாணிகம் செய்கிறது. இது ஆசிய, ஆப்பிரிக்க, கிழக்கு ஐரோப்பிய நாடுகளுக்கு ஏற்றுமதி செய்கிறது



போக்குவரத்து-செருமனி

**போக்குவரத்தும் செய்தித் தொடர்பும்:** இந்நாட்டில் 47,380 கி.மீ. (1983) நீளத்திற்குச் சாலைகள் உள்ளன அவற்றில் 3463மிலியன் பயணிகளும், 141.7 மிலியன் கண்டி (Jons) பொருள்களும் கொண்டுசெல்லப் பட்டன. உந்து வண்டிகள் 3,019,875, சரக்கு உந்துகள் 223, 186, மோட்டார் சைக்கிள்கள் 1,306,788, பேருந்துகள் 53,178.

இங்கு 1984-இல் 13,941 கி.மீ. நீள இருப்புபாதை இருந்ததில் 2321 கி.மீ. நீளத்திற்கு மின்சார வண்டிகள் ஓடின. அவற்றில் 628 மிலியன் பயணிகளும் 337,4 மிலியன் கண்டி எடையுள்ள பொருள்களும் கொண்டு செல்லப்பட்டன.

பெர்லினிலிருந்து பிராக்கு, வார்சா, புதாபெசுது புகாரசுது, மாசுக்கோ, சோபியா, பெல்கிரேடு, திரனா, கெயரோ,பாக்தாது, பெய்ரூட்டு ஆகிய தலைநகர்களுக்கு விமானப் போக்குவரத்து உள்ளது. 1,420,000 பயணிகளுடன் 30,100கண்டிப் பொருள்களும் (1984) ஏற்றிச்செல்லப்பட்டன.

இங்கு 1983-இல 174 வணிகக் கப்பல்கள் இருந்தன. அவை 1.1.9 மிலியன் கண்டிப் பொருள்களைக் கொண்டுசென்றன. உளநாட்டுப் போக்குவரத்திற்காக 2,319 கி.மீ. நீளக் காலவாய்கள் உள்ளன. அவற்றில் 7 மிலியன் பயணிகருடன் 17.47 மிலியன் கணடிப் பொருள்களும் சென்றன.

இந்நாட்டில் 1983-இல் அஞ்சல் நிலையங்கள் 11,971, தொலைபேசிகள் 3,441, 484, திரைப்பட அரஙகுகள் 824 (255,132இருக்கைள), நாடக அரங்குகள் 195(56,853 இருககைள்), செய்தித்தாள்கள், இதழகள் 519 இருநதன.

**கல்வி.** கிழக்குச் செருமனியில அநநாட்டில் பரமபரையாகப் பினபற்றப்பட்டு வந்த கல்விமுறை, பிரிவினைக்குப் பின்னர்க் கைவிடப்பட்டுச் சோவியத்து ஒன்றியத்தைப் பின்பற்றி அமைக்கப்பட்டுள்ளது. இதன் முக்கிய நோக்கம் மாணவர்களுக்கு மார்க்சிச-இலெனினிசக் கொளகைகளைப் புகட்டுவதாகும். அரசாங்கக் கட்டுப்பாட்டின் கீழ் அனைத்துக கலவி நிலையஙகளும் உள்ளன.

இளஞ்சிறார்கள் பள்ளியில் சேருவதற்கு முன்னர் 3ஆணடுகளுக்குக் குழநதைப் பூங்காப் பள்ளியில் (Kindergarten) கல்வி அளிக்கப்படுகிறது. பின்னா 10 ஆண்டுப் பள்ளிக்கல்வி வழங்கப்படுறது. 1முதல்3-ஆம் வகுப்பு (Grade) வரை அடிப்படைக் கல்வியும்;4முதல 6-ஆம் வகுப்பு (Grade) வரை அறிவியல், வரலாறு, உருசிய மொழியும், 7முதல் 10-ஆம் வகுப்புவரை மூனறு அறிவியல் பாடங்கள, இரு அயல்நாட்டு மொழிகள் (அதில் ஒனறு ஆங்கிலம்), வரலாறு, குடிமைப் பயிற்சி, மார்கசிச-இலெனினிசக் கொள்கைகள் ஆகியவை கற்பிக்கப்படுகின்றன. செருமானிய மொழி, கணிதம், இயற்பியல், வேதியல், உயிரியல், நிலவியல், இசை முதலிய பாடங்களும் உணடு. மன நிலை சரியிலலாதவர்களுககும், உடல் ஊனமுற்றோருக்கும் தொழிற் கல்வி பயிலுவோருக்கும் தனிப் பள்ளிகள உண்டு. இத்தகைய பளளிகள 1983-இல் 5183 இருந்தன. அவற்றில, 1,973,902 மாணவர்கள பயின்றனர்.

10-ஆம் வகுப்புத்தேர்வுபெற்றவர்கள பல்கலைக கழகத்தில சேரவேணடுமானால 2 ஆணடுகள (11,12-ஆம் வகுப்புகள) மேலநிலைப் பளளிகளில பயிலவேணடும். தொழிற்கல்வி பெற விருமபுவோர் அதற்கான பளளிகளில இரு ஆணடுகள கற்க வேண்டும. தொழிற்கலவிக பள்ளிகள, தொழிலாளர்கள, உழவர்களுக்கான பளளிகள் ஆகியவற்றில் படித்தோர் அலலது பல்கலைக்கழக நுழைவுத்தேர்வில் வெறறிபெற்றோர் கல்லூரியில சேரலாம். தொழிலாளர்கள, உழவர்கள ஆகியோரின குழநதைகள், நல்ல மதிப்பெணகள பெற்றோா ஆகியோருககுக கலலூரிகளில் முன்னுரிமையில் இடம் வழஙகப்படும். இத்தகைய பள்ளிகள 214-இல் 1983-இல 44,985 மாணவர்கள் பயின்றனர். தொழிற பள்ளிகள் 969-இல 16,777 ஆகிரியர்களும் 411,166 மாணவர்களும் இருந்தனர். 240 தொழில்நுணுக்கப் பள்ளிகளில் 167,864 மாணவாகள பயினறனர்.

பெர்லின், இலெய்ப்புசிக்கு, கால்(Hall), சினா (Jina) முதலியவிடங்களில் பல்கலைககழகஙகள் உளளன.கலைக் கல்லூரிகளேயன்றித் தொழில் நுணுககக் கல் லூரிகள், வேளாணமைக கல்லூரிகள், மருத்துவக் கல்லூரிகள், உடற்பயிற்சிக கலலூரிகள், ஆசிரியப் பயிற்சிக் கல்லூரிகள இசைக் கலலூரிகள்ஆகியவையும் இருக்கினறன. இவற்றில 3முதல் 6ஆண்டுகள் வரை படித்தால் பட்டம அல்லது முனைவர் பட்டம் பெறலாம். பல்கலைககழகஙகளில் ஆசிரியராக இருக்க உயாந்தகல்வித்தகுதிவேண்டும. இந்நாட்டில்1983-இல 54பலகலைக்கழகஙகளில் 108,120மாணாக்காகள் முழுநேரப் படிப்பில ஈடுபட்டிருந்தனர். அவர்களுள 57,281 பேர் பெண்கள.

**நகரங்கள்: கிழக்குப் பெர்லின்.** பெர்லின்நகரம் இரண்டாகப் பிரிககப்பட்டுக கிழக்குப் பகுதியிலுளள இது இந்நாட்டின் தலைநகரமாக உள்ளது. இதன் மக்களதொகை 1,196,871(1984). மிக அமைதியான, பண்பாட்டுச் சிறப்புவாய்ந்த இந்நகரில் பல நாடக

நடன அரங்குகளும், அரும் பொருட்காட்சியகங்களும் உள்ளன. பெர்கமன் (Pergamon) பொருட்காட்சிச் சாலையிலுள்ள கிரேக்கச் சிற்பிகளின் படைப்புகள் மேலை நாட்டுப் பயணிகளைக் கவர்கின்றன. இந் நாட்டில் கி.பி 19-ஆம் நூற்றாண்டில் சிறந்த கலவி யாளராகத் திகழ்ந்தஅம்போல்டு (Humbold) பெயரில 1948-இல் தொடங்கப்பட்ட பல்கலைக்கழகம் சிறப் புடையது.இந்நகருக்கு அருகிலுள்ள போட்சுடம்(Pots dam) எனனுமிடத்திலுள்ள இரண்டாம் பிரடெ ரிக்கு அல்லது மகாபிரடெரிக்கின் அரணமனை வர லாற்றுச் சிறப்புமிக்கது.

**இலெய்ப்புசிக்கு:** பெர்லினிக்குத் தென்மேற்கி லுள்ள செருமனியின் இரண்டாம் பெரிய நகரமான இலெய்ப்புசிக்கின (Leipzig) மக்கள்தொகை 555,764 (1984). இடைக்காலத்திலிருந்தே சிறந்த வாணிக மையமாக விளங்கும் இங்கு 800 ஆண்டுகளுக்கு முன் பிருந்தே நடைபெற்றுவரும் பொருட்காட்சி உலகப் புகழ் பெற்றது. இங்கு நடைபெறும் பன்னாட்டுப் பொருட்காட்சியில அனைத்துவகை இயந்திரங்களும் மின்னியற் கருவிகளும், இழுவை இயந்திரங்களும் (Tractors) எல்லாவித நுகர்வோர் பொருள்களும் இசைக்கருவிகளும் இடம்பெறுகின்றன. இங்கு கி.பி. 1409-இல் தொடங்கப்பட்ட மிகப் பழைய பல்கலைக் கழகம் உள்ளது. புத்தக வெளியீட்டிலும் இசை விழாக்களிலும் இந்நகர் முன்னணியில் உள்ளது.

**விட்டன்பர்கு:** பெர்லினுக்கும் இலெய்புசிக்கிற்கு இடையிலுள்ளது விட்டன்பர்கு (Witttenburg) நகரம். மார்ட்டின்லூதர் இங்குச் சமயப் புரட்சியைத் தொடங்கியதால் இந்நகர் உலகப்புகழ்பெற்றுளளது. இங்குள்ள சீனாப் (Jena) பல்கலைக்கழகம் சிறப்பு வாய்ந்தது.

**திரசுடன்:** இலெய்புசிக்கிற்குத் தென்கிழக்கே 105 கி மீ. தொலைவில் சிறந்த தொழில்நகரமான திரசுடன் (Dresden) உள்ளது. இதன் மக்களதொகை 520,061 (1984). இரணடாம் உலகப்போரின்போது நேசநாடுகள் இந்நகரைக் கடுமையாகத் தாக்கின. இங்கிலாந்தின் 700 விமானங்கள் 1945-இல் 2 வாரங் கள் தொடர்ந்து தாக்கியதால் 135,000 பேர் கொல் லப்பட்டு இந்நகரில் முக்கால் பங்கு அழிக்கப்பட்டது. வரலாற்றுச் சிறப்புமிக்க கட்டடங்கள் 70 தரைமட்ட மாக்கப்பட்டன. போருக்குப்பின இந்நகரம் புதுப் பிக்கப்பட்டது. இதனருகில் 24 கி.மீ. தொலைவி லுள்ள மெய்சென் (Messsen) நகரில் வெள்ளைக் களிமண் கிடைப்பதால் பீங்கான் பொருள்களுக்குச் சிறப்புப் பெறறுளளது.

**வெய்மார்:** வெய்மார் (Weimar) இலெய்ப்புசிக் கிற்குத் தென்மேற்கில் மரங்கள் அடர்ந்த மலை களினமீது அமைந்துள்ள அமைதியான நகரம். செரு மனியின் மிகச்சிறந்த எழுத்தாளரான கெதே (Johann Wolfgang Von Goethe, கி.பி. 1749-1832) இந்நகரில் வாழ்ந்து, மறைந்ததால் இது சிறப்புடன் விளங்குகிறது. ஒவ்வோராணடும் செருமானிய எழுத் தாளர்கள் இந்நகரில் கூடி அவருடைய இலக்கியங் களைத் திறனாய்வு செய்கின்றனர். முதல் உலகப் போருக்குப்பின் இந்நாட்டில் ஏற்படுத்தப்பட்ட வெய் மார் அரசியல் அமைப்பு இந்நகரில்தான் உருவா யிற்று.

ஓடர் ஆற்றங்கரையிலுள்ள பிராங்பர்ட்டு, தானியங்களுக்குப் பெயர்போன சிக்கா (Zuickau) (மக்கள்தொகை 120,063), தொழில் மையமான மேகடிபர்கு (Magdeburg) (மக்கள்தொகை 288,934), துணிவகைகளுக்குச் சிறந்த நகரமான காரல் மார்க் சுடட்டு (Karl Mark Stadt) (மக்கள்தொகை 317,210) ஆகியன பிற முக்கிய நகரங்களாகும்.

**அரசு:** கிழக்குச் செருமனிக்கு 1949 அக்டோபர் 7-இல் அதன் அப்போதைய மக்கள் சபை அம் மக் களாட்சிக் குடியரசுக்கென ஓர் அரசியல் அமைப்பைத் தந்தது. அது 1968 ஏப்பிரல 6-இல் மககள வாக் கெடுப்பின் மூலம் ஏற்றுககொள்ளப்பட்டு ஏப்பிரல் 8 முதல் செயற்படத் தொடங்கியது. அது 1974-இல் புதுப்பிக்கப்பட்டது.

அதன்படி இம் மக்களாட்சிக் குடியரசின் தலை வர் மாநில அவையின் தலைவர் (Chairman of the Council of State) ஆவார். அவர் பொதுவுடைமைக் கட்சியின் முதல் செயலராக (The First Secretary of the Politburo) இருக்க வேண்டும். நாட்டின் நிரு வாகத் தலைவராக அமைச்சரவையின் தலைவர் (Chairman of the Council of Ministers) இருப்பார். நாட்டின் நிருவாகம் முழுவதும் 500 உறுப்பினர்களைக் கொண்ட 'மக்கள் அவை' யிடம் (Volkshammer, People's Chamber) உள்ளது. இதன் உறுப்பினர்கள 5 ஆண்டுகளுக்குத் தேர்ந்தெடுக்கப்படுவர். இருப்பி னும் அரசு அதிகாரம் முழுவதும் உயர்மட்டத்தி லுள்ள பொதுவுடைமைக் கட்சித் தலைவர்கள் கையி லுள்ளது. மாநில அவை, அமைச்சரவை, தேசிய பாதுகாப்பு அவை ஆகியவற்றின் உறுப்பினர்கள், உச்ச நீதிமன்ற நீதிபதிகள் ஆகியோரை மக்கள் அவை தேர்ந்தெடுக்கும். மாநில அவையில் ஒரு தலைவர், 8 துணைத் தலைவர்கள், 16 உறுப்பினர் கள், 1செயலர் ஆகியோர் உள்ளனர்.

தல சுயாட்சியானது மாவட்டங்கள், வட்டாரங்கள், நகரங்கள் அளவில் நடைபெறுகின்றது. இக் குடியரசில் 15 மாவட்டங்கள் (Bezirke) கிழக்குப் பொலின் உட்பட உள்ளன. இவற்றின் அளவு, மக்கள தொகை ஆகியன பெரிதும் மாறுபடுகின்றன. ஒவ்வொரு மாவட்டமும் தேர்ந்தெடுக்கப்பட்ட ஒரு நிருவாகக் குழு - ஒரு தலைவர், ஒரு முதலாம துணைத்தலைவர், 6 கூடுதல் துணைத்தலைவர்கள், 16 உறுப்பினர்கள் ஆகியோரைக் கொண்டுள்ளது. கிழக்குப் பெர்லினில் இது போன்றதோர் நிருவாகக் குழு இருந்தாலும் பெயரளவில் சில மாற்றங்கள் உள்ளன. நிருவாகக்குழு, குற்றவியல் நடுவர் (Magistrate) எனப்படுகிறது. அதன் தலைவர் 'தலைவா-மேயர்' (Chairman Mayor) எனப்படுகிறார். அவை உளநாட்டு நிருவாகம், வாணிகம், திட்டம், போக்குவரத்து, நிதி பணபாடு ஆகியவற்றை நிருவாகம் செய்கின்றன மாவட்டம் பல கவுணடிகளாகவும் (Kreise-Counties) ஒவ்வொருகவுண்டியும் பல கம்யூன்களாகவும (Gemein den-Communes) பிரிக்கப்பட்டுள்ளன அவை ஒவ்வொன்றும் இரு அவைகளால் (Assembly and Council) நிருவாகம் செய்யப்படுகின்றன.

**மேற்குச்செருமனி:** மேற்குச் செருமனி அல்லது செருமானியக் கூட்டாட்சிக் குடியரசு (Federal Republic of Germany) பான் கரைத் தலைநகராகக் கொணடுள்ளது. இது ஆங்கிலோ-அமெரிக்க அணியிற் சேர்நதுள்ளது.

**புவியியல் அமைப்பு:** பொதுவாகக கண்டப் பருவ நிலையே உள்ளது எனினும், வடமேற்கில் மட்டும் கடலின் பாதிப்பால் மழை மிக மிதமாகவும் புயலும் உள்ளன. கிழக்கிலும் தெற்கிலும் மழைக்காலத்தில் வெப்பம் மிகக் குறைவு. மிக அதிகமான மூடுபனியும் பனி வீழ்வதும் இருக்கும். கோடைக்காலத்தில் எல்லா இடங்களிலும் ஒரேதன்மையாக வெப்பம் குறைவு. ஆணடு முழுவதிலும் மழை சீராகப் பெய்யும் தாழ்நிலப் பகுதியில் ஆணடிற்கு 500 மி.மீ.(20 அங்குலம்) மழையும், ஆல்பைன் மலைப்பகுதியில் 2000 மி. மீ. (80 அங்குலம்) மழையும பெய்கிறது.

**பரப்பளவு:** இதன் பரப்பளவு 248,706 ச.கி.மீ.

**எல்லைகள்:** இதன் வடகிழக்கில் வடகடலும், வடக்கில் தென்மார்க்கும் பால்டிக்குக் கடலும், கிழக்கில செருமனியும் செக்கோசுலோவாகியாவும், தென கிழக்கு, தெற்குத் திசைகளில் ஆசுத்திரியாவும், தென் மேற்கில் சுவிட்சர்லாந்தும், மேற்கில பிரான, இலக்சம் பர்க்கு, பெல்சியம், நெதர்லாந்து ஆகியனவும் எல்லைகளாக உள்ளன.

**மக்கள்தொகை:** இநநாட்டின் மககளதொகை 61,420,700 அதில் ஆணகள 29,363,4001; பெண்கள 32,057,300. 94,4 விழுக்காட்டினர் செருமானியர்; 1 விழுக்காட்டினர் துருக்கியர்; அதே அளவு யூகோசுலாவியரும், இத்தாலியரும், 6 விழுக்காட்டினர் கிரேக்கர்.

**சமயம்:** இம்மககளில 49 விழுக்காடடினர் சீர்திருத்தக் கிறித்தவ சமயத்தினர் (Protestants); 44 6 விழுககாட்டினர் உரோமன கத்தோலிக்கர்; 6 4 விழுக்காட்டினர் பிற சமயததவர்.

**பொருளாதாரம் வேளாண்மை** இந்நாட்டில நிலங்கள் மிகச சிறிய அளவே உள்ளன. உழவர்களுககுச் சராசரி 9 எகடேர் (22 ஏக்கர்) நிலம் இருப்பினும் பெரும்பாலோா 5 ஏக்கருக்கும் குறைந்த அளவு நிலஙகளைக் கொணடவர்கள. ஐரோப்பிய நாடுகளின் நிலச் சீர்திருத்தஙகளின் விளைவாகப் பெரும் பண்ணைகள தோன்ற முடியவிலலை. சிறு நிலப் பகுதிகளில் இயந்திரங்கள் பயன்படுத்த இயலவில்லை, உழவர்களின் கடும்மையான உழைப்பு, உரமிடுதல, இயந்திரஙகளைப் பயனபடுத்துதல் ஆகியவற்றால் விளைச்சல் மிகுந்துள்ளது. கோதுமை, பாாலி, உருளைக் கிழங்கு பீட் கிழஙகு ஆகியவை பயிரிடப்படுகினறன. உரோமானியா காலததிலிருந்து இப்பகுதியானது மது (ஒயின்)விறகுப் பெயர்போனது. இரைன், நெக்கர், மோசல் பள்ளத்தாக்குகளில் திராட்சைத் தோட்டஙகள மிகுதியாக உள்ளன. காலநடைகள், கோழிகள், பன்றிகள், குதிரைகள் ஆகியவை மிகுதியாக வளர்ககப் படுகினறன. இந்நாட்டின உறபத்தியில பால் 5-ஆம இடத்தைப் பெறறுள்ளது.

**கனிமங்கள்:** இஙகு நிலக்கரி, இரும்புத் தாது, மரஉப்பு, ஈயம் தாமிரம், பெட்ரோலியம், பாறை உப்பு ஆகியவை கிடைககின்றன. உரூர் பளளத்தாககு (5200 ச.கி மீ. பரப்பளவுடையது.), இருமபு எஃகுத் தொழிற்சாலைகளின் மையமாக உளளது. சாாலாநதில் (Saarland) நிலக்கரியும. ஆககனில (Aachen) பழுப்பு நிலக்கரியும் கிடைக்கினறன. கீழ சேக்சனி, கெசிப் (Hesse) பகுதிகளில மரஉப்பு மிகக அளவில கிடைப்பதால் இந்நாடு உர உற்பத்தியில் முன்னணியில உள்ளது. வட கடலிலும் சிலசுவிக ஆல்சுடீன (Schleswig Holstien) பகுதியிலும் மண்ணெணணெய் கிடைக்கிறது. இங்கு 1984-இல் 28.94 மிலியன கணடி (Tons) பெட்ரோலும், 11. 82 மிலியன கணடி கலலெண்ணெயும் (Diesel) உற்பத்தி செய்யப்பட்டன.

**தொழிற்சாலைகள்:** இரண்டாம் உலகப்போருக்குப் பின்னர் மார்சல் திட்டப்படி இந்நாடு அமெரிக்கா

விடமிருந்து பொருளாதார உதவிபெற்றுத் தொழிற சாலைகளைப் பெருக்கியது. ஐரோப்பியப் புனர் வாழ்வுத் திட்டப்படி 1948-52-இல் அமெரிக்கா 3,500,000,000 தாலர் உதவி செய்தது. மேலும் ஐரோப்பியப் பொருளாதாரச் சமூகம் அல்லது பொதுச்சந்தையில இந்நாடு சேர்ந்ததால் தொழில துறையில் வியக்கததகு முன்னேறறம் அடைநதது. வடக்கு இரைன-வெசுட்டுபேலியா(West Phalia) பகுதி யில நிலக்கரிச் சுரங்கங்கள், இரும்பு எஃகுத் தொழிற் சாலைகள வளர்ச்சியடைந்து மூன்று மிலியன தொழி லாளர்கள் வேலை செய்கினறனர். உரூர் பளளத் தாக்கில நிலக்கரி மிகுதியாகக் கிடைக்கிறது. எனவே, இந்நாடு உலகில் மிகுதியாக இரும்பு உற்பததி செய் யும நாடுகளுள ஒன்றாக உளளது தசலடாாபு (Dusseldorf) உலோக வேலைகளுககும், சோலிங்கன (Solingon) கததிகள, ஆணிகள் மற்றும் பிற இரும் புப் பொருள்களுக்கும் பெயர் பெறறவை. மேலும், இந்நாட்டில வேதியல் பொருள்கள், துணி வகைகள, கணணாடிப் பொருளகள, புகைப்படக் கருவிகள, கடிகாரங்கள ஆகியவை சிறப்பாகத் தயாரிககப்படு கினறன. இன்று இது இயநதிரஙகள், உந்து வணடி கள், மின்னியல் கருவிகள, குறிப்பாகத் தொலைக் காட்சிப் பெட்டிகள, வானொலிப பெடடிகள், இசைக்கருவிகள், குழந்தைகளுக்கான பொம்மைகள் ஆகியவறறை உற்பத்தி செய்வதில் முன்னணியில் உள்ளது.

**ஏற்றுமதி:** இந்நாட்டிலிருந்து கனரக இயந்திரங் கள், இயநதிரக் கருவிகள, உநது வணடிகள (Motor-car), வேதியல் பொருளகள், மின்சாரக் கருவிகள, இருமபு எஃகுப் பொருளகள் துணிவகைகள் ஆகியவை ஏற்றுமதி செய்யப்படுகினறன. இந்நாடு உநது வணடிகள உற்பத்திக்கு உலகப புகழ் பெறறது. குறைந்தவிலையுள்ள ஊலசுவேகன் (Volkswagen) வணடியிலிருந்து விலைமிக உயர்ந்த மெர்சிடெசு-பென்சு (Mercedes-Benz) வண்டி வரை பலவகை யானவை ஏற்றுமதி செயயப்படுகின்றன.

**இறக்குமதி**. உணவுப் பொருளகள், உலோகஙகள, துணிவகைகள, இயந்திரஙகள பெட்ரோலியப் பொருள்கள், இரும்புத்தாது ஆகியவறறை இநநாடு இறக்குமதி செய்கின்றது. இதன இறக்குமதியில 60 விழுக்காடு இரும்புத் தாதுவாகும்

இந்நாட்டுடன் அமெரிக்க ஐககிய நாடுகள், பிரானசு, இங்கிலாந்து, நெதர்லாநது, இத்தாலி, பெல்சியம், சுவிட்சர்லாந்து, ஆசுத்திரியா, சுவீடன், சப்பான், உருசியா ஆகிய நாடுகள வாணிகத் தொடர்பு கொண்டுள்ளன.

**போக்குவரத்து, செய்தித் தொடர்பு:** இந்நாட்டில் 1984-இல் 173,250 கி.மீ. நீளச் சாலைகள் இருந்தன. அவற்றுள முதல தரமானவை 65,797 கி.மீ.; இரண்டாந்தரம் 67,277 கி.மீ. அப்பொழுது உந்து வணடிகள் 29,905,235; பயணிகள் பேருந்து 25,217,787; பாரககட்டை வணடி 1,277,940; பேருந்துகள 70, 279 இருந்தன.

1984-இல் 27,778 கி.மீ. நீளத்திற்கு இருந்த இருப் புப் பாதையில் 11,271 கி.மீ. நீளத்திற்கு மினசார இரயில விடபபட்டது. பயணிகள கி.மீ. 50, 617, பொருள்கள 64,335 கணடி (Tons). 2950 கி.மீ. நீள இருப்புப் பாதை தனியார் நிருவாகத்தில் இயங்கி வருகின்றது.

விமானப் போக்குவரத்துக் கம்பெனி 1953 சன வரி 6-இல ஏற்படுத்தப்பட்டு, 1954 ஆகசுட்டு 6-இல உலுப்தான்சா (The Deutsche Lufthansa) எனப் பெயரிடப்பட்டது. இதன தலைமையிடம் கலோன். மொத்த முதலீடு 900 மிலியன் செருமென் மார்கசு. அதில 74.3 விழுக்காடு பணத்தை அரசாங்கம் முதலீடு செயதுள்ளது. இது உள்நாட்டுப் பயணத்திறகு மடடு மன்றி ஐரோப்பா, ஆபபிரிககா, வடக்கு, தெற்கு அட்லாணடிக்கு, அண்மை, தூரக கிழககு நாடுகள ஆகியவற்றிற்குச் செல்கிறது.

இங்கு 1970 கப்பல்கள் (1983 திசம்பர் 31) இருந் தன. உளநாடடுப் போககுவரத்திறகான ஆறுகள, கால்வாய்கள ஆகியவறறின நீளம 4429 கி.மீ. அதில் 223.9 மிலியன் கணடிப் பொருளகள கொணடு செலலப் பட்டன.

1984-இல இந்நாட்டில அஞ்சல் நிலையங் கள் 17,960: தொலைபேசிகள் 36.58 மிலியன்; வானொலி நிலையஙகள் 9. 1981 கணககின்படி திரைப் பட அரங்குகள 3144, திறந்தவெளி நிலையஙகள் 15. இங்கு 1984-இல் நடன அரங்குகள் 273 (156.967 இருக் கைகள்) இருநதன. 1983-இல் இநநாட்டிலிருநத செய்தித்தாளகள 359 (படிப்போர் 25.83 மிலியன்); இதழ்கள் 6702 (படிப்போர் 260.16 மிலியன்)

**கல்வி:** மேற்குச் செருமெனியில கல்வியானது ஐரோப்பிய முறையைப் பினபற்றி அமைந்துள்ளது. அது மாநிலங்களின் பொறுப்பில விடப்பட்டுளளது. தனியார் பள்ளிகள் அரசாங்கக் கட்டுப்பாட்டில் அரசு மானியத்துடன் நடைபெறுகின்றன. இஙகுக் கல்வியின் நோககம் அறிவுள்ள, தொழில திறமை பெறற, நலல குடிமகனை உருவாககுவதாகும். அவர் களை 1960-இலிருநது பிறநாடுகள, பணபாடுகள,

சமயங்கள பற்றி அறிந்துகொளளச் செய்வதும் கல்வி யின் நோக்கமெனா அறிவிக்கப்பட்டது.

குழநதைகள் முதல 3 ஆணடுகள் குழநதைகள் பள்ளியில் (Nursery and Kindergarten Schools) பயில வேணடும். பின்னர், தொடக்கப் பளளியில் 4 ஆணடுகள், சில மாநிலங்களில 6 ஆணடுகள, படிக்க வேணடும். பிறகு உயர் தொடக்கப் பள்ளியில் 5 ஆணடுகள செருமானிய மொழி, நிலவியல், சமயம, ஆஙகிலம், உயிரியல, கணிதம், வரைவியல், கைத்தொழில்கள, வீட்டுக்கலை, தையல், இசை, உடற்பயிற்சி ஆகியவற்றைக் கற்க வேணடும். அல்லது உயர்நிலைப் பள்ளிகளில் தொழிற் கல்வி, வேளாண்மை, வணிகம் தொழில, நிருவாகம் ஆகியவறறைக் கற்கலாம. தொழில் பள்ளிப் படிப்பில் தேறியவர்கள பொறியியல் கலலூரிக்குச் செல்லலாம் அல்லது பலகலைக் கழகத்தில சேரவேண்டுமானால் 9 ஆண்டுகள் செருமானிய மொழி, சமயம், நிலவியல, ஆங்கிலம், கணிதம், உயிரியல், வேதியல், இயற்பியல் ஆகியவற்றைக் கற்க வேண்டும். இஙகு வணிகவியல் படித்தவர்கள் மட்டுமே வணிகக் கல்லூரியில் அல்லது பலகலைக் கழகப் பொருளாதாரத் துறையில் சேரமுடியும்.

பல்கலைக் கழகத்தில் 4 அல்லது 5 ஆண்டுகள் பயில வேணடும். மருத்துவம் படிப்போர் 5½ ஆண்டுகள படித்துப் பட்டம் பெற்ற பினனர் 1½ ஆணடுகள பயிற்சி பெற வேண்டும். இங்கு ஐடல்பர்கு (Heidelburg) மார்பாகு, (Marburg), காட்டிங்கன (Gottingen) போன்ற மிகப் பழைய, உலகப் புகழ்பெற்ற பல்கலைக் கழகங்கள இருப்பதுடன், 20-ஆம் நூறறாண்டில் புதிதாகப் பல பல்கலைக் கழகங்களும் தோன்றியுள்ளன. எல்லா நிலைக் கல்விக கூடஙகளுககும் தேவையான முறையில ஆசிரியர்களுககுப பயிறசி அளிக்கப்படுகிறது.

1984-85 ஆண்டில் பயின்ற மாணவர் எணணிககை, அடைபபுக் குறிக்குள மகளிர் எணணிககை

| | | |
|---|---|---|
| பல்கலைக் கழகங்கள் | 895,883 | (362,769) |
| தொழில் நுணுக்கப்பளளிகள | 86,078 | (26,687) |
| ஆசிரியப் பயிற்சிககல்லூரிகள் | 16,004 | (10,891) |
| சமயவியல் கலலூரிகள் | 3,145 | (945) |
| ஓவியப் பள்ளிகள் | 20107 | (10,200) |
| தொழில் நுணுக்கக்கல்லூரிகள் | 258,666 | (71,246) |
| வணிகக் கல்லூரிகள | 33,418 | (13,349) |

**நகரங்கள்: மேற்குப் பெர்லின்:** பெர்லின் நகரின் ஒரு பகுதியான மேற்குப் பெர்லினின பரப்பளவு 400ச.கி.மீ. மககள்தொகை 1,851,800. மேற்கு ஐரோப்பாவிலிருநது இந்நகரை அடைய 177 கி.மீ. கிழக்குச் செருமனியின் பகுதிகளைக் கடந்து செல்ல வேண்டும் புகைவணடி, சாலைப் போக்குவரத்து ஆகியவை பல சோதனைகளுக்கு உட்பட்டுள்ளதால் கடினமானது ஆகாய விமானப் போக்குவரத்தே சிறந்தது, மேறகுப் பொலினில் பல அழகிய பூங்காக்கள உள்ளன.

**பான்:** கலோன் (Cologne) நகரின தெற்கே 24 கி மீ. தொலைவில் இரைன் ஆற்றங்கரையில் பான் (Bonn) நகரம் அமைநதுள்ளது. இதன மக்கள் தொகை 291,700(1984). இங்குள்ள பான் பல்கலைக கழகம் 1949-இல் செருமானியக் கூட்டாட்சிக் குடியரசின் தலைமையிடமாக இருந்தது. இந்நகரில அரசாங்கக்கட்டடஙகளும்பாராளுமன்றமும் அழகாக அமைந்துளளன. உலக இசைப் பேரறிஞர் பீதோவான் (Ludwig Van Beethoven) இங்குத் தான பிறந்தார். அவர் பிறந்த இடம் ஓர் அரும்பொருட காட்சியகமாகப பாதுகாககப்பட்டு வருகிறது. அவருடைய பெயரில கட்டப்பட்டுள்ள இசை அரங்கில ஈராண்டுகளுக்கு ஒருமுறை பெரிய இசைவிழா நடைபெறுகிறது.

**ஆம்பர்கு** மேற்குச செருமனியில இரண்டாம பெரிய நகரமான ஆம்பர்கு (Hamburg), எல்பு (Elbe) ஆற்றங்கரையில் அமைந்துளளது இதன் பரப்பளவு 755 ச.கி.மீ. மக்கள் தொகை 1,600,300 (1984). ஐரோப்பாவிள்ள மிகப் பெரிய துறைமுகங்களுள் இது ஒன்றாகும். இந்நகரின் மையத்தில அமைந்துள்ள பலகலைக கழகக் கட்டடம வானனாவ உளளது. இடை கழிகள் (Inner Aislet Outer Aislet) இந்நகருக்கு வனப்பூட்டுகின்றன. இந்நகரில விலஙகுக காட்சிச் சாலைகள், பூங்காக்கள, திறந்தவெளி அரங்குகள, குழநதைகளுக்கான விளையாடுமிடங்கள ஆகியவை உள்ளன.

**பிராங்பர்ட்டு.** மத்திய மேறகுப பகுதியில மைன் (Main) ஆற்றங்கரையில் அமைந்துள்ள மிகப் பழைய நகரம பிராஙபாட்டு (Frankfurt). இதன மக்கள தொகை 604,600 (1984). பல நூறறாணடுகளாக இநநகரில்தான புனித உரோமப் பேரரசர்கள தேர்நதெடுக்கப்பட்டனர். இடைக்காலத்தில இங்கு வஙகித் தொழில் வளர்ந்தது. இநநகரில்தான கவிஞர் கெதே (Goethe) பிறந்தார். இங்கு இயநதிரங்கள, தோல் பொருளகள் வேதியியல் பொருள்கள ஆகியவற்றை உற்பத்தி செயயும் தொழிறசாலைகள பல உள்ளன.

**மியூனிச்சு.** பவேரியாவின தலைநகரமான மியூனிச்சு (Munich) தொழிற்சாலைகள் நிறைந்த, வேகமாக முனனேறிக் கொணடிருககும் ஒரு நகரமாகும். இதன் மக்கள் தொகை 1,277,000, இங்குள்ள உலுட்விகுமாக்சிமில்லன் பலகலைக் கழகம் (Ludwig Maximilan University) சிறப்பு வாய்ந்தது.மது (பீா) உறபத்தியில 400ஆண்டுகளாகச் சிறப்புப் பெற்ற இநநகரில் விழாக்கள் பல கொண்டாடப்படுகினறன, இரண்டாம் உலகப் போரில இஙகுளள எல்லாக் கட்டடஙகளும் பழுதடைநதன. இங்கு உலகப் புகழ் பெற்ற கலைப் பொருளகளும் வரலாற்றுச் சிறப்பு மிக்க பொருளகளும் பல காட்சிச்சாலைகளில் வைக்கப் பட்டுள்ளன.

**நியூரம்பர்கு:** இடைக்காலத்திலிருந்தே சிறந்த நகரமாக விளங்கிவருவது நியூரம்பர்கு (Nuremberg) ஆகும். இதன் மக்களதொகை 471,700, இது அழகிய பொம்மை உற்பத்திக்குப் புகழ்பெற்ற நகரம். இங்கு 1936-இல் இயற்றபபட்ட நியூரம்பர்க்குச் சட்டம் யூதர்களைத் துன்புறுத்தப் பயன்பட்டது. இரண்டாம் உலகப் போரில் நாசிகள் இழைத்த கொடுமைகள் இங்குத்தான் விசாரணை செய்யப்பட்டன. இடைக்கால அரண்மனைகள். சுவர்கள, கோபுரஙகள் ஆகியவை இன்னும் பாதுகாக்கப்பட்டு வருகின்றன.

**பிற நகரங்கள்:** எய்டல்பாகின் (Heidelburg) மக்கள்தொகை 133,500 (1984). இங்கு கி.பி.13-ஆம் நூற்றாணடில நிறுவப்பட்ட உலகப் புகழ் பெற்ற பல்கலைக்கழகம் உள்ளது. தசலடார்ப் (Dusseldorf) இரைன் ஆற்றங்கரையிலுள்ள துறை முகபபட்டினம் (மக்கள தொகை 570,700). இரைன் ஆற்றங்கரையிலுள்ள மற்றொரு நகரம் கொலோன (Cologne) மக்கள் தொகை (932,400). இங்குள்ள கிறித்தவக் கோயில கோதிக்குக் (Gothic) கட்டடக்கலைக்குச் சிறந்த எடுத்துககாட்டாக உள்ளது. புனித உரோமப் பேரரசராக கி.பி. 9-ஆம் நூற்றாண்டில் இருந்த சார்ல மேனின் தலைநகரான ஆகன (Aachen), பாலடிக்குக் கடலுக்கு அருகில் திரேவ் ஆற்றங்கரையில் அமைந்துள்ளது. உலூபக்கு (Lubeck) எனனும் சிறிய நகரமும் (மக்கள்தொகை 213,400) குறிப்பிடத்தககது.

**அரசு:** மேற்குச் செருமெனியின் அரசியலமைப்பு (Basic Law) 1949-இல திட்டப்பட்டது. இது 19 மாநிலங்களைக் (Lander) கொண்ட ஒரு கூட்டாட்சிக் குடியரசு. அதனபடி குடியரசுத் தலைவரும் அமைச்சரவைத் தலைவரும் உள்ளனர். இரு அவைகளைக் கொணட ஒரு பாராளுமனறமும் உள்ளது.

**குடியரசுத் தலைவர்:** இந்நாட்டின் தலைவர் கூட்டாட்சித் தலைவர் (Federal President) என்று சொலலப்படுகிறார். இவர் 4 ஆண்டுகளுக்குக் கூட்டாட்சி அவையால் (Federal Convention) தேர்ந்தெடுக்கப்படுகிறார். அதில் கீழ்சசபை உறுப்பினர்களும், மாநிலச் சட்டசபைகளின உறுப்பினர்களும் இடம்பெறுவர். ஆனால் உண்மையில் இவர் அரசியல் கட்சித் தலைவாகளால் தேர்நதெடுக்கப்பட்டு, அவர்களுக்குக் கட்டுப்பட்டவர். இவருக்குச் சிறப்பு அதிகாரம் எதுவும் இல்லை. கூடடாட்சி அரசு, பாராளுமன்றம், நீதிமன்றம் ஆகியவற்றின் முடிவுகளை இவர் ஏற்றுக கொள்ள வேணடும்.

**கூட்டாட்சி மன்னாய முதல்வர்:** கூட்டாட்சி மன்னாய முதல்வர் (Federal Chancellor) அரசாங்கத்தின் தலைவராவார். இவர் கீழ்ச்சபையால் தேர்ந்தெடுக்கப்பட்டு அதற்குப் பொறுப்பானவர். அரசாஙகக் கொளகைகளை இவர் வகுத்து நிறைவேற்ற வேணடும். அரசாங்க நடவடிக்கைகள் அனைததிற்கும் இவரே பொறுப்பு. கூட்டாட்சி அமைச்சர்கள இவருக்குக் கட்டுப்பட்டவர்கள். அவர்களுடைய முடிவுகளை இவர் ஏற்றுககொளளலாம் அல்லது தள்ளிவிடலாம்.

**மேல்சபை:** இந்நாட்டுப் பாராளுமன்றத்தின் மேல்சபையாகிய கூட்டாட்சி அவை (Bundesrat-Federal Council) 45 உறுப்பினர்களைக் கொணடது. அவர்கள் 1949-இல கூட்டாட்சிக் குடியரசு ஏற்பட்ட பொழுது இருநத மக்கள் தொகை அடிப்படையில், மாநிலங்களால் நியமிக்கப்படுகின்றனர். இது உலகிலேயே வலிமைமிக்க மேலசபையாகும். எலலாவித அரசாங்க, சட்டசபை நடவடிக்கைகளுககும் இதன அனுமதி தேவை. அரசாங்கச் சட்ட முன் வரைவுகள் அனைத்தும் இச்சபையில் முதலில் நிறைவேற்றபபட வேணடும். சாதாரணச் சட்டங்களுககுப் பெருமபான்மை வாக்குகளும், அரசியல அமைப்பு மாற்றத்திற்கு மூனறில இரண்டு மடங்கிற்குமேல் பெரும்பான்மை வாக்கும் வேணடும்.

**கீழ்ச்சபை:** இக்கீழச்சபை (Bundestag-Federal Assembly) உறுப்பினர்கள் பொதுமககளால் இரகசிய வாக்கெடுப்பின் மூலம் 4 ஆணடுகளுக்குத் தேர்ந்தெடுக்கப்படுகினறனர். இச்சபைககு மனனாய முதல்வரைத் தேர்நதெடுக்கவும் நீக்கவும் சட்டங்களை நிறைவேற்றவும மாற்றவும் அல்லது கைவிடவும் அதிகாரம் உண்டு. இச்சபை நிருவாகத்தின் மீது விவாதிப்பது, கேள்வி கேட்பது, விசாரணை செய்வது ஆகியவற்றின் மூலம் கட்டுப்பாடு கொண்டுள்ளது. இதில் பாதி உறுப்பினர்கள் அரசியல் கட்சி நிறுவனங்களாலும், மீதிப் பேர் மாநிலங்களால் மககள்

தொகைக்கு ஏற்பவும் தேர்நதெடுககப்படுகின்றனர். எனவே, ஒவ்வொரு வாக்காளருக்கும் கட்சி உறுப்பினருக்கு, மாநில உறுப்பினருக்கு என இரு வாககுச் சீட்டுகள உண்டு.

**வரலாறு:** செருமானியரின் நிலையான வரலாறு கி.பி. 5-ஆம் நூற்றாணடில் மேற்கு உரோமானியப் போரசின் வீழ்ச்சிக்குப் பின்னரே தொடங்கியது என லாம். இரைன், எல்பு, மேற்குத் தான்யூபு ஆகிய பகுதி களில் அவர்கள நிலைபெறலாயினர். பிராங்கு (Franks) இனத்தவர்களே அவர்களுள் முக்கியமானவர்கள். குளோவிசு (கி பி.481-511), சாாலசு மார்ட்டெல் (கி.பி. 700-741), சார்லமென் (கி.பி. 768-841) ஆகிய முக்கிய அரசாகளின் பணிகளால் செருமனி முககிய நாடாகத் திகழத் தொடங்கியது. கி.பி. 9-ஆம் நூற்றாணடின் தொடக்கத்தில் வடகடல் முதல் ஆல்ப்சு மலை வரையுளள பகுதியும் இரைன் நதி, எலபு நதி ஆகியவற்றிற்கு இடைப்பட்ட பகுதிகளும் சார்மேனின் ஒனறுபட்ட ஆட்சிப் பகுதியாயிருந்தது. போப்பு பத்தாம் இலியோவினால் கி.பி. 800-இல தூய உரோமப் பேரரசராக முடிசூட்டப்பட்ட அவர் கி.பி. 814 வரை ஆட்சி செய்தாா. ஆனால் அவரது மரணததிறகுப் பின் அப்பிரிவு 'சிதைவுறலாயிறறு. சாாலமெனின் பெயராகள கி பி.843-இல் அப்பகுதிகளைப் பிரானசு, செருமனி, உலோதரிஞசன் என்னும் பகுதிகளாகப் பிரித்துக் கொண்டனா. கான்ராடு (கி.பி. 911-918), முதலாம் எனறி (கி.பி. 918-936), மகா ஆட்டோ (936-973) ஆகியோா சாக்சனீய மனனர்களாயிருந்தனர். மகா ஆட்டோ எனப்பட்ட முதலாம் ஆட்டோ கி.பி. 962-இல் ஆட்சியாளராகப போப பாணடவரால ஏறகப்படடபோது 'தூய உரோமப் பேரரசின் செருமானிய நாடு' என்ற சொற்றொடர் முதன் முறையாகப் பயன்படுத்தப்பட்டது



முதலாம் மகா ஆட்டோ

ஆட்டோவின் வாரிசுகள காலத்தில் போலநது, அங்கேரி, பர்கணடி போன்ற பகுதிகள் செருமானியர் களின் கட்டுபபாட்டில் வந்தன கிறித்தவத் திருச் சபையில, கி பி 1039 முதல் 1056 வரை ஆட்சிபுரிந்த மூன்றாம் எனறி காலத்தில, மாற்றங்கள் மேற கொள்ளப்பட்டுச செருமானியப் பேரரசர் செல்வாக குப பெற்றார். நான்காம என்றி தாம ஆணட கி.பி 1056 முதல் 1106 வரையான காலத்தில போப்பு ஏழாம கிரிகிரியுடன் போராட வேண்டியவரானார். போப்பாணடவா, பேரரசரை கி பி 1076-இல் பதவி நீககம் செய்தார் இசசமயப போராட்டம் கி.பி 1122-இல் ஏற்பட்ட வாாம்சு அமைதி உடனபாட்டின் மூலம முடிவுககுக கொணடுவரப்பட்டது.

செருமனி கி.பி. 1138 முதல் 1268 வரை கோகன சுடௌபன் (Hohenstaufen) என்னும் மரபினரின் ஆளுகைககு உட்பட்டிருந்தது. இவவாட்சியர் களுள கி.பி 1152 முதல் 1190 வரை ஆட்சி செய்த முதலாம் பிரடெரிக்கு எனனும் பிரடெரிக்கு பார்பரோசா, செருமனியில் நடைபெற்றுக் கொணடிருந்த கிளர்ச்சிகளை அடககி ஒறறுமையை ஏற்படுத்தினாா. அவரது மரணததிற்குப் பின்னா கி பி 1190-இல் ஆறாம் எனறி (கி.பி. 1190-1197) நான்காம் ஆட்டோ (கி பி. 1198-1218), இரணடாம் பிரடெரிக்கு (கி.பி. 1194-1250) நான்காம கான்ராடு (கி பி.1250-54) ஆகியோர் அவ்வழிப் பிரிவின் ஆட்சியாளர்களாக இருந்தாாகள். அதனபின்னா அவ்வாட்சிப்பிரிவு முற்றுபபெறறது பினனர் கி.பி. 16-ஆம் நூறறாணடின தொடககம் வரை நிலையான அரசியல் வரலாறு ஏற்படவில்லை.

ஐந்தாம் சார்லசு (கி.பி. 1500-1558) ஆட்சிக காலத்தில புகழ்மிக்க மனனராயிருநதார். அவ்வமயம் செருமனியின் ஆட்சிப்பரப்பு விரிவான நிலையில் இருந்தது. ஆயினும் போர்களும் சமயப் போராட்டமும் தொடாநதன. செருமனியில் மார்ட்டின லூதர் என்பவரால சமயச் சீர்திருத்த இயக்கம் தொடங்கி வைக்கப்பட்டது.

முப்பதாணடுப் போர் கி.பி. 1618 முதல் 1648 வரை நடைபெறறு, வெசுட்டுபேலியா உடனபடிக்கையின்படி முடிவுற்றுச் செருமனியின நிலப் பரப்புகளைக் குறைத்தது. இரைன நதியின மேற்குப பகுதி, பொமரேனியா ஆகிய பகுதிகள கைமாறின. சுவிட்சர்லாநதும நெதர்லாந்தும் விடுதலை பெற்றன. இப்போரின் விளைவாக ஆப்சுபர்கு (Habsburg) ஆட்சியாளர்

களின் நிலை தாழவுற்றது. பிராணடனபர்க்கின் கோகன்சோலன் (Honenzollern) ஆட்சிப்பிரிவினர் செல்வாக்குப் பெற்றனர். நிலைப்படையானது கி பி. 1640-இல் உருவாக்கப்பட்டுச் செருமனியை வலுப் படுத்த வகை செய்தது. முதலாம் பிரடெரிக்கு வில்லியம் (கி.பி. 1713 முதல் 1740 வரை), இரண்டாம் பிரடெரிக்கு (கி.பி. 1740 முதல் 1786 வரை) ஆகியோர் ஆட்சிக்காலத்தில் செய்த செயல் களால் பிரசியா வலிமையுடைய பகுதியாயிற்று. ஏழாணடுப் போர் (1756-1763) பிரசியாவை மேலும் வலுவடையச் செய்தது. பிரசியாவின் தலைமையில் பல இழந்த செருமானியப் பகுதிகள் மீட்கப்பட்டன. பிரசியாவின் பொருளாதாரம், வாணிகம், தொழிற் றுறை ஆகியவை பெருகின.

பிரெஞ்சுப் புரட்சியும் (1789) அதனையொட்டிய நெப்போலியனின் எழுச்சியும் ஐரோப்பிய நாடு களைப் பாதிப்பிற்குள்ளாக்கின, நெப்போலியன், இரைன் கூட்டிணைவு நாடுகளைத் தோற்றுவித் தார். செனாப் போர்க்களத்திலும் பிரசியா தில்சிட்டு உடன்படிக்கையை ஏற்க வேண்டியதாயிற்று. ஆனால் அடுத்த ஏழாண்டுகள் பிரான்சு பல போர்களில் ஈடு பட்டுக் கொண்டிருந்தபோது பிரசியா பல வழிகளில் தன்னை மேம்படுத்திக்கொள்ள வகை செய்துகொண்




செருமானியக் கூட்டமைப்பு

டது. இலிப்சிக்குப் போர் நடைபெற்ற கி.பி. 1812 -இல் உருசியா ஆதரவுடன் பிரசியா நெப்போலி யனைத் தோற்கடித்தது. செருமனியின் எலலைகள் கி.பி. 1815-இல் ஏற்பட்ட வியன்னா மாநாட்டின் ஏறபாட்டின்படி, கி.பி. 1789-இல் இருந்த நிலைக்கு மீட்கப்பட்டன



ஆட்டோவான் பீசுமார்க்கு

செருமனியின் இரும்பு மனிதர் எனப்பட்ட ஆட் டோவான் பிசுமார்க்கு (Bısmarck) கி.பி. 1862-இல் குருதியும் இரும்பும் கலந்த வன்மைக் கோட்பாட்டி னால் செருமனியை இணைககப் பாடுபட்டார். செரு மானிய இணைவிற்கு கி.பி. 1834-இல் உருவாக்கப் பட்ட 'சால்வரைன்' என்ற சுங்கவரி இணைப்பு வழி கோலியது. பிரசியாவின் மன்னராக விளங்கிய முத லாம் விலவியம் தம் ஆட்சிக்காலத்தில் (1861-1888) பிரசியாவை வலிமையடையச் செய்வதில் நாட்ட முற்றிருந்தார். பிரசியாவிற்கு கி.பி. 1864-இல் நடை பெற்ற தென்மார்க்குப் போர் செலசுவிக்குப் பகுதியைப் பெற்றுத் தந்தது. பிரேக்கு(Prague)உடன் படிக்கைப்படி (கி.பி. 1866) முடிவுற்ற ஆசுத்திரிய பிரசியப் போரின் விளைவாகக் கனோவார், கெசி- காசல், நாசா, பிராங்க்பர்ட்டு, செல்சுவிகு (Schiels wig) ஒல்சுட்டீன் (Holsten) ஆகிய பததிகள பிரசி யாவுடன் இணைக்கப்பட்டன. வட செருமானியக் கூட்டமைப்பு ஏற்கப்பட்டது. பினனர், கி.பி. 1870-71 -இல் நடைபெற்ற பிரான்சு-பிரசியப் போர், பிராங்க் பர்ட்டு உடன்படிக்கையினபடி முடிவுற்றபோது அலசாசு, உலொரெயின ஆகிய பகுதிகள செரு மெனிக்குக் கிடைத்தன. அதனபடி முதலாம் கெயசர் வில்லியம் இணைவுறற செர்மெனியின் முதல் பேரரச ராக ஆக்கப்பட்டார். பிசுமார்ககின உதவியுடன செருமனி வலிமையுடைய நாடாக ஆக்கப்பட்டது

முதல் உலகப்போரில் (1914-1919) செருமனி தோல்வியுற்றது. அதன்காரணமாக 1919-இல் கையெழுததான வெர்சே உடன்படிக்கைபபடி செரு மெனி அல்சாசு-லொரெயின், வடக்குச் செல்சுவிககு, மேற்குப் பிரசியா, போசன், மேல சைலீசியா ஆகிய பகுதிகளை இழந்தது. பினனர் 1919-இல் உருவாக்கப் பட்ட வெய்மர் குடியரசும் தோலவியுறறது. வேலை நிறுத்தம், உள் நாட்டுப் போர் ஆகியவை மலிந்தன குழப்பமும் அமைதியினமையும் வலுப் பெறறன மிகச சிக்கலான, குழப்பமான, வருநததக்க நேரத தில் 1933-இல் அடாலபு இட்லா செருமனியின் சான்சலர் ஆனார்.



முதலாம் உலகப் போரில் இரணடாம விலகெல்ம (வலம்)

பல சிக்கல்களுக்கும் அவர் தீர்வு காண விழைந தார். நாசிக் கட்சி என்ற கட்சியை அவர் உரு வாக்கினார்; செருமனியர் நாாடிக்கு இனத்தவர்கள என்ற அடிப்படையில் ஒருமைப்பாட்டை உருவாக்கி னார்; வெய்மர் அரசியலமைப்பு நீககபபட்டது; அரசியல் கட்சிகளும் எதிர்ப்பாளாகளும் கடுமையாக ஒடுக்கப்பட்டனர்; அதிகாரத்தைத் தமமுடைய கைகளுககுள நிலைநிறுத்திக் கொண்டார். செரு மனியைப் பொருளாதாரச் சிககலகளிலிருநது மீட் டார். 'கெசுட்டோபோ' எனனும இரகசியப் போலீசுப் படையும அமைக்கப்பட்டது. வேலை

யின்மை நீக்கப்பட்டது. படைக்கு ஆள் சேர்ப்பதில் புதிய உத்திகள் கையாளப்பட்டன. உற்பத்திப் பெருக்கம் ஏற்பட்டது. யூதர்கள் கடுமையாக ஒடுக்கப் பட்டார்கள். அவர் உரோம்-பெர்லின்-தோக்கியோ அச்சினை இத்தாலி, சப்பான் ஆகிய நாடுகளுடன் சேர்ந்து 1937-இல் உருவாக்கினார். ஆசுத்திரியாவின் மீது 1938-இல் போரிட்டு அதனைச் செருமானியப் பகுதியாக இணைத்தார். அதறகு முன்னரே 1936 -இலேயே உலொக்காரனோ ஒப்பந்த விதிகளை மீறி ஆக்கிக் கொண்டார்; யுகோசுலாவியாவையும் கட்டுப் படுத்தினார். ஆனால், உருசியாவால் செருமனி தோல்வியுற்றுப் பின்வாங்க வேண்டியதாயிற்று. அதன்பின்னர் நிலைமை செருமெனிக்குப் பாதகமாக மாறியது. செருமனி 1945-இல் முழுமையாக வீழ்ந் தது. அவ்வாண்டு மே மாதம் சரணடைந்தது. இட் லர் செருமனியில் தற்கொலை செய்து கொண்டார். அது 1949 வரை நேசநாடுகளின் படைகளது கட்டுப் பாட்டில் இருந்தது.



உலகப் போரின் பொழுது செருமனி



இரண்டாம் உலகப்போரின் பொழுது செருமனி

னார். செக்கோசுலோவேகியாவின் பகுதியான சுடட்டன்லாந்தினை 1938-இல் செருமனியுடன் இணைத்துக்கொண்டார். மியூனிச்சு உடன்படிக் கையை மீறி 1939-இல் செக்கோசுலோவேகியாவைக் கைப்பற்றினார். அல்பேனியாவும் கைப்பற்றப்பட்டது. போலந்து இடைகழி வழியாகச் செருமனியையும் கிழக்குப் பிரசியாவையும் இணைக்கும் இருப்புப் பாதையை உருவாக்கப் போலந்தைக் கட்டாயப் படுத்தினார். ஆனால் போலந்து அதற்கு மறுத்த தால், 1939 செப்டம்பரில் போலந்தின்மீது படை யெடுத்தார். எனவே, பிரிட்டனும் பிரான்சும் செரு மனிமீது போர் அறிவிப்புச் செய்தன. செருமனி யின் மின்னல் வேகத் தாக்குதல் முறையால் போலந் தின் தலைநகர் வார்சா வீழ்ந்தது. தொடர்ந்து தென் மார்க்கு, நார்வே, ஆலந்து, இலக்சம்பர்க்கு, பெல்சியம் ஆகிய நாடுகள் செருமனி வசமாயின. உருமேனியா 1940-இல் பணிநதது. பல்கேரியா, அங்கேரி ஆகிய இரு நாடுகளின் நட்பினையும் இட்லர் தமக்குச்சாதகமாக

ஓடர், நீசு ஆகிய நதிகளுக்குக் கிழக்கிலுள்ள பகுதிகள் போலந்தின் கைகளில விடப்பட்டன. கிழக் குப் பிரசியாவின் மற்றொரு பகுதி உருசியாவின் கட்டுப்பாட்டில் விடப்பட்டது. எஞ்சியுள்ள பகுதிகள் நான்கு பிரிவுகளாகப் பிரிக்கப்பட்டன. வடகிழக்குப் பகுதி உருசியாவிடமும், வடமேற்குப் பகுதி பிரிட்ட னிடமும், தென்மேற்குப் பகுதி பிரான்சிடமும், தென் கிழக்குப் பகுதி அமெரிக்காவிடமும் விட்டுவைக்கப் பட்டன. அதேபோல் பெர்லினும் நான்கு கூறு களாகப் பிரிக்கப்பட்டது. மக்களாட்சிக் கூறுகள் செருமனியில் புகுத்தப்பட்டன. ஒருமுகப்படுத்தப் பட்ட மைய ஆட்சிக்குப் பதிலாகச் செருமனி 17 தன்னாட்சிப் பிரிவுகளாகப் பகுக்கப்பட்டது.

ஆனால் அமெரிக்கா, உருசியா, பிரான்சு, பிரிட் டன் ஆகிய நாடுகளிடையே உறவுகளில் ஏற்பட்ட விரிசல் காரணமாக, மேற்கு நாடுகள் தத்தம் பகுதி களில் புதிய நாணய முறையைப் புகுத்தியபோது,

உருசியா அதற்கு ஒத்துழைப்புத் தர மறுத்துவிட்டது. மேலும் பெர்லினில் முழுமையாகத் தனனுடைய கட்டுப்பாட்டிலிருந்த பகுதியில் தன் நாட்டிலுள்ள ஆட்சியியலுக்கு இணையாகப் பல கட்சிகளையும் கட்டுப்படுத்தி மையம் நோக்கிய ஆட்சியை உருவாக்கியது. அது செருமானிய மக்களாட்சிக் குடியரசு எனப்பட்டது.அதன விளைவாக மூன்று மேற்குப் பகுதிகளும் இணைக்கப்பட்டு 1941-இல் செருமானியக் கூட்டாட்சிக் குடியரசு ஏற்படுத்தப்பட்டது. தம கடும முயறசியாலும் உழைப்பினாலும இன்று உலகில் வளம்மிக்க நாடுகளாக அவை திகழ்கின்றன.

செ.இரெ.மா.கா.

**துணை நூல்கள்:**

**Berghahn, V.R.**, Modern Germany. Society, Economy and Politics in the Twentieth Century, C.U.P.,1982.

**Chids, D.**, Germany Since 1918, NewYork, 1980.

**Ccraig, G.A.**, Germany, 1866-1945, C.U.P., 1981.

*செரோக்கி இந்தியர்*: வடஅமெரிக்க இந்தியப பழஙகுடிகளுள் ஒரு சாரார். இவர்கள் அமெரிக்காவின் பல பகுதிகளில் வாழ்கின்றனர். சிலா இவர்களுக்கென்று ஒதுக்கப்பட்ட வட கரோலினாப் (Carolina) பகுதிகளில வாழ்கினறனர். பெரும்பாலோர் ஆக்லகாமாப் (Oklahoma) பகுதியில் வாழ்கின்றனர். இஙகு வாழபவர்களின் எண்ணிககை 1,00,000 க்கும மேற்பட்டதாகும். பெரும் எணணிக்கையிலான செரோகசி இந்தியர்கள (Cherokee Indians) பலவேறு நிலப்பகுதிகளுக்கு இடம்பெயர்நது செனறுள்ளனர். இவர்கள கி.பி. 18-ஆம் நூறறாணடில் மிகவும் செழிப்பாக வளர்ச்சியடைந்து வநத பழங்குடிகளுள் ஒரு குடியினராகத் திகழ்ந்தனர்.

தொடக்க காலச் செரோகசியர்கள தெற்கு அப்பலாச்சிய மலைப் பகுதிகளில் (Appalachian Mountain) வேளாணமையையும வேட்டையாடுதலையும் முதனமையான தொழில்களாககொணடு வாழந்தனர். இவர்கள் தம் பகுதிக்கு கி.பி. 1750-1760-களில வந்த குடியேற்ற மக்களை எதிர்த்தனர். பின்னர் 18-ஆம் நூற்றாண்டின் தொடக்கததிலிருந்து குடியேற்ற வெள்ளையர்களின பொருளாதார அரசியல் முறைகளை ஏற்கத் தொடங்கினர். செரோகசி இந்தியருள் சிலர் பெரும் பண்ணைகளையும் அடிமைகளையும் கொணடிருநதனர். மற்றையோர் சிறிய அளவிலான பணணைகளைக் கொணடிருந்தனர். இவர்கள் செரோக்கி நாடு (Cherokee Nation) என்னும் குடியரசு முறையிலான அரசினை ஏற்படுத்தி ஆட்சி செய்தனர்.

செரோக்கியர்களை மிசிசிப்பி ஆறறுக்குமேற்குப் பகுதியில் குடியேறுமாறு வெள்ளையர்கள் கி.பி.18-ஆம் நூற்றாண்டின் தொடக்கத்தில் அமெரிக்க அரசை வற்புறுத்தினர். அதனையடுத்து கி.பி. 1835-இல செரோக்கியர்களுள் சிலர் அரசின் முடிவை ஒப்புக் கொண்டனர். சான் ரோசு (John Ross) என்பவர் தலைமையைக் கொண்டு பெரும்பான்மையான செரோக்கியர்கள் அதனை மறுத்தனர். அதனால் கி.பி. 1838-1839-இல அமெரிக்கப் படையினர் 13,000 முதல் 17,000 வரையிலான செரோக்கிப் பழங்குடிகளை இப்போதைய ஆக்லகாமாப் பகுதிக்குச் செல்லுமாறு விரட்டினர். அதனால் ஆயிரக்கணக்கானோர் இறநதனர். அமெரிக்கப் படையினரால் விரட்டப்பட்ட இந்த நிகழ்ச்சியை 'கணணீரின் அடிச்சுவடு' (Trail of Tears) எனச் செரோகசியர் தமது வரலாற்றைக கூறும்போது குறிப்பிடுவர். ஆயிரத்திற்கும் மேற்பட்டோர் படைகளிடமிருந்து தப்பி வட கரோலினா மலைப் பகுதிகளிலேயே இருநதுவிட்டனர். பின்னர் இவர்கள் அரசிடமிருந்து நிலஙகளைப் பெற்றனர். அதனால் இவர்கள் செரோக்கியரின் கிழக்குப்பிரிவினர் எனக் கூறப்படுவர்.

செரோக்கியர்கள் இராக்குயக் குடும்பத்தின் (Iroquoian family) ஒரு மொழியான செரோக்கிய மொழியினைப் பேசுகின்றனர். அமெரிக்க இந்தியப் பழங்குடி மொழிகளுள் வரிவடிவம் அமைக்கப்பெற்ற மொழிகளுள், செரோக்கிய மொழியும் ஒனறாகும். இச் சிறப்பினை இவர்கள் கி.பி. 1821-இல் பெற்றனர். புதிய இடம் செனறு குடியேறிய செரோக்கியர்கள மீணடும் திருச்சபைகள, பள்ளிகள, அரசு முதலானவற்றை அமைத்துசசெயறபடத் தொடங்கினர். ஆனால் கிபி. 18-ஆம் நூற்றாண்டின் பிறபகுதியில, அமெரிக்க அரசு பழஙகுடி அரசுகளைக கலைத்து வெள்ளையர்களுடன் கலந்து வாழ அனுமதித்தது.

சீ.ப.

*செல்சூக்குகள்*: ஆசியாவின் பெரும் பகுதியை கி.பி.11-ஆம் நூற்றாண்டு முதல் 13-ஆம் நூற்றாண்டு வரை ஆணடு வந்த துருக்கி நாட்டுத் தலைவர்கள் செல்சூக்குகள (Seljuks) எனப்படுவர். இவர்கள 'செல்சூக்கு' என்பவரின் வழிவந்தவர்கள. இவர்கள 11-ஆம் நூற்றாணடில் மேற்கு ஆசியா மீது படையெடுத்துச் சென்றனர்; அங்கு ஒரு வலிமை வாய்ந்த பேரரசை ஏற்படுத்தினர். பிற்காலத்தில் அது ஈரான, சிரியா. ஆசியாமைனர் என்ற பெரும்

பிரிவுகளாகப் பிரிக்கப் பட்டது. அதனமீது படையெடுத்துச் சென்றவர்களின் வரலாறு துருக்கி நாட்டு வரலாறறின முதல் பகுதியாக அமைகிறது. இப்படையெடுப்பின்போது, 'செல்சூக்கு' தலைமையிற் சென்ற துருக்கி நாட்டு மக்கள் எா-தாரியா ஆற்றின கரையில் குடியேறினர். கிர்கிசிலிருந்து (Kırghız) சண்டு (Jand) சென்று, அங்கு இசுலாம் மதத்தைத் தழுவினர். இவர்கள முதலில் சமானிட்டுப் படையினைச்சார்ந்திருந்த போதிலும் அப்படையின் வீழ்ச்சிக்குப்பின இவர்கள் கசினி முகமதுவின் ஆட்சிக்குள் வந்தனர், இவர்கள் போரைப் பெரிதும் விரும்புபவர்களாக இருந்ததால் அமைதியாக இருக்கமுடியவில்லை. செல்சூக்கின் பேரர்களான துகரில் பெகு (Tughrıl Beg). சக்கிரி பெகு (Chagrı Begı) ஆகிய இருவரும் ஊசு இனத்தின் தலைவர்களாயினர்; பாரசீகத்தை ஊடுருவினர். கசினி முகமதுவின் மகன மசூது வட இந்தியாவின்மீது படையெடுத்துச்சென்ற வாய்ப்பினைப் பயனபடுத்திக் கொண்டு, பாரசீக பிரபுக்கள் உதவியுடனும், மத குருமார்களின் உதவியுடனும் சென்று, ஈரான், ஈராக்கு, எகிப்து ஆகிய பகுதிகளைக கைப்பற்றிக் கொண்டனா. மசூது கி.பி.1040-இல் தெண்டனகான் (Dendangan) என்ற போர்க்களத்தில் தோற்கடிககப்பட்டார். துக்ரில் பெகு கி.பி.1055-இல் பாகதாது சென்று, தம்மை மனனராக அறிவித்தார்.

செல்சூக்குகளில் முதல் மூவரது ஆட்சி 'செலசூக்குகள பேராட்சி' (Great Seljuks) என்று குறிககப் படும். துக்ரில் பெகு வலிமை பொருந்திய தலைவர். எதையும் சிந்தித்து முடிவெடுக்கும் தந்திரி, இவர் மேற்கு ஈரான், மெசபடோமியா, பாக்தாது போன்ற பகுதிகள் அடங்கிய பேரரசை நிறுவி மெர்வு (Merv எனற நகரைத் தலைநகராக்கினார், அங்கு வசித்த பேரரசராகிய காலிபு-அல்கைம் என்பவர் கி.பி-1055-இல் இவரை வரவேற்றுச் 'சுல்தான்' என்ற பட்டத்தை அளித்தார்: 'முகமதிய உலகின் பாதுகாவலன்' எனப் பெரிதும் பாராட்டினார். இவர் கி.பி.1063-இல் இறந்தார் இவருக்குப்பின் கி.பி.1063-இல் அல்பு-அர்சுலான் (Alp Arslan) மன்னரானார். இவர் சிரியாவையும் பாலத்தீனத்தையும் கைப்பற்றினார். பைசாண்டிய மன்னரை வென்று கி பி. 1071-இல் ஆசியாமைனரின் பெரும்பகுதியைப் பெற்றார். இவர் கி.பி.1072-இல் இறந்தபோது, இவர் மகன் மாலிககசு பட்டத்துக்கு வந்தார். இவருடைய ஆட்சிக் காலத்தில், பேரரசின் நிலைபேறு இசுலாமிய சமயப் பரவலால் அசைவுற்றது. இவர் கி.பி. 1092-இல் இறந்தபோது, செல்சூக்குகளின் பேரரசானது ஈரான், மெசபடோமியா, சிரியா, பாலத்தீனம், எகிப்தின எலலைப் பகுதிகள் ஆகியவற்றைத் தன்னுள் அடக்கி இருந்தது, மாலிக்-சா இறந்தபோது அவர் மக்களான பார்கயொருக்கு (Barkyaruq,), முகமது (Muhammad) ஆகியோரிடையே வாரிசுப்போர் ஏற்பட்டது. முகமதுவின் காலததில் பேரரசு மீட்கப்பட்டது. அக் குடும்பத்தில் நான்கு பிரிவினர்களும் தம்மிடையே பேரரசை பங்கிட்டுக் கொண்டனர். அவர்களில் ஒரு பிரிவினரே நீண்டகாலம் நிலைபெற்றனா; பின்பு உதுமானியர் வர்களை வென்றனர். செல்சூக்குகளின் வரலாறும் முடிவு பெற்றது. பி சி.

*செல்யூகசு நிகேட்டார்* (கி.மு. 312-281): சாதாரண படைத்தலைவராகத் தமது வாழ்க்கையைத் தொடங்கிய செல்யூகசு நிகேட்டார், (Seleukas-Nckatar) ஒரு பேரரசை ஆணடார். இவர் தந்தையான ஆண்டியாகசு (Antıochus) அலெக்சாணடரின் தந்தையான 2-ஆம் பிலிப்பின் படைத்தலைவராகப் பணியாற்றினார். செல்யூகசு, மாசிடோனியாவிலுள்ள ஈரோப்பசு (Europus) என்னுமிடத்தில் சுமார் கி.மு. 358-இல் பிறந்தார். போர் ஆர்வமிக்க செல்யூகசு அலெக்சாணடரின் படைத் தலைவர்களுள ஒருவரானார். அலெக்சாண்டர், பாரசீகத்தின்மீது படையெடுத்தபோது, ஒரு படைக்குத் தலைமை தாங்கினார். பாரசீகத்தை வென்ற அலெக்சாணடர் பாரசீகருக்கும் மாசிடோனியருக்கும் ஒரு நெருக்கமான உறவை ஏற்படுத்த எணணி, இரு பிரிவினருககுமிடையே கலப்புத் திருமணங்களை நடத்தக் கட்டளையிட்டார். அதன்படி செல்யூகசு, பாக்டீரிய அரசரான இசுபிடாமேனசின (Spıtamenes) மகளான அபாமாவை (Apama) மணந்தார். அலெக்சாண்டரின மரணத்துக்குப்பின் பல மாசிடோனியர்கள் தங்கள் பாரசீக மனைவியரைக் கைவிட்டபோதும், செல்யூகசு தொடர்நது அபாமாவைத் தம்முடனே இருத்திக் கொண்டார், அவருக்குப் பிறந்த ஆணடியகசையே (Antiochus) தம் வாரிசாக்கினார்.

அலெக்சாணடர் கி.மு.326-இல் போரசு என்ற புருடோத்தமனுக்கு எதிராகப் போரிட்டபோது கிரேக்கப் படைக்குச் செல்யூகசு தலைமை தாங்கி, வெற்றி பெற்றார், அலெக்சாண்டரின் மறைவுக்கு பின், கி.மு.323-இல் ஏற்பட்ட வாரிசுரிமைப் போரிலும் பங்கு கொண்டார்; சிறந்த குதிரைப்படைத் தலைவரானார். எகிப்தின் ஆளுநரான தாலமியின் (Ptolemy) அதிகாரத்தை நீக்கப் பாதுகாவலர் பெர்டிக்காசு (Perdiccas) திட்டமிட்ட படையெடுப்பில் பங்கு கொண்டார்; ஆனால், அங்குப் போன பின் பெர்டிக்காசின் படுகொலையிலும் ஈடுபட்டார், அலெக்சாண்டரின் பேரரசு துணடாடப் பட்டபோது கி.மு.321-இல் செல்யூகசிற்குப் பாபிலோனியாவின ஆட்சிப் பொறுப்பு அளிக்கப்பட்டது.

பெர்டிக்காசின ஆதரவாளரான யூமெனசு (Eumenes) என்ற கார்டியா (Cardia) ஆளுநரைத் தாக்க ஆண்டிகோனசு கிளம்பியபோது கி.மு. 317 -இல் இவர் துணைநின்றார். யூமெனசு கி.மு. 316 -இல் கொலை செய்யப்பட்டார். ஆனால, ஆணடி கோனசு, செல்யூகசின ஆட்சிக்குட்பட்ட பகுதியிலி ருந்து கிடைக்கும் வருமானத்திற்குக் கணக்குக் கேட்ட தன் காரணமாக இருவருக்கும் பகைமை ஏற்பட்டது. அதை விரும்பாத செல்யூகசு, அவரது எதிர்ப்பைச் சமாளிக்க எகிப்திய ஆளுநர் தாலமியின் உதவியை நாடினார். கி.மு. 316 முதல் 312 வரை தாலமியின் ஆட்சியில் பொறுப்பான பங்கு வகித்தார். அலெக் சாண்டரின் மறைவுக்குப்பின், அவரது பேரரசு முழு வதையும் தன் ஆதிககத்தின்கீழ கொண்டு வரவேண டும் என்ற பேராசை கொண்டிருந்த ஆண்டிகோன சிற்கு எதிராக ஒரு கூட்டணி அமைக்கும முயறசியில வெற்றி கண்டார். அதில் தாலமி, இலைசிமாகசு (Lysimachus) என்ற திரேசு அரசர், காசாண்டர் (Cassander) ஆகியோர் பங்கு கொணடனர். இவ்விரு பிரிவினருக்குமிடையே கி.மு. 315 முதல் 311 வரை நடைபெறற போரில், தாலமியின் படைத் தலைவர் களுள் ஒருவராகச செல்யூகசு நியமிக்கப்பட்டாா. செல்யூகசு, ஆண்டிகோனசின் மகன தெமிடிரியசு (Demetrius) எனபவரைத் தென சிரியாவிலுளள கோசா (Goza) என்ற இடத்தில் கி.மு. 312-இல் தோற்கடித்தாா.

பாபிலோனியாவின மீது தம் கவனததைத் திருப்பிய செல்யூகசு, கி.மு. 312-இல் அதை ஒரு சிறு படையின உதவியுடன் கைப்பறறினார். இதுவே செல்யூசிடு சகாப்தம் (Seleucid Era) தோன்றுவதற்கு அடிப்படையாக அமைந்தது.

செல்யூகசின் புகழ பரவுவதை விரும்பாத ஆணடி கோனசு பாபிலோனியாவைக் கிழக்கிலிருந்து தாக்கத் தம படைத் தலைவரான நிகானர் (Nicanor) என்ப வரையும், மேற்கிலிருநது தாக்கத் தம மகனான தெமிடிரியசையும் அனுப்பினாா. ஆனால், அவவிரு வரும் அம்முயற்சியில தோல்வியே அடைந்தனா. ஆணடிகோனசு மறறப பகைவர்களுடன் அமைதி ஒப்பந்தம் செய்து கொணடாரே தவிரச செலயூக சோடு நட்புக கொள்ள விரும்பவில்லை.

அடுதத சில ஆண்டுகளுககுச் செலயூகசு பற்றிய விவரஙகள் தெளிவாகத தெரியவில்லை. இவர் தாம வெனற பகுதிகளை நிலை நிறுததும் பணியில ஈடு பட்டிருந்திருக்கக் கூடும். செல்யூகசு கி.மு. 305-இல் தமது பேரரசை ஈரானிலிருந்து இநதியாவரை விரிவு படுத்தும் பணியை மேற்கொண்டார். இவரது பெரு முயற்சிக்கு இந்தியாவில் முட்டுக்கட்டை போட்ட வர் சந்திரகுப்த மௌரியர். இருவருக்குமிடையே ஏற் பட்ட போரில் செல்யூகசு தோற்கடிக்கப்பட்டு ஒப்பந் தம் செய்து கொணடனர். அதன்படிசெல்யூகசு, சந் திரகுப்த மௌரியருக்குச் சில பகுதிகளைக் கொடுப்ப தற்கும், அதற்குப் பதிலாக 500 யானைகளைப் பெற்றுக் கொள்ளவும் ஒப்புக் கொண்டார். மெகசுத னிசு என்றஅறிஞரைத் தம் தூதுவராகச் சந்திர குப்த மௌரியரின் அவைக்கு அனுப்பினார், மெகசுதனிசு 'இண்டிகா' என்ற நூலை எழுதினார். செல்யூகசு சந்திரகுப்த மௌரியருக்குத் தம் மகளைத் திருமணம் செய்து கொடுத்ததாகவும் சில பிற்காலக் குறிப்புகள கூறுகின்றன.

இதற்குப்பின், மேறகுப் பகுதியில் தம் கவனத தைத் திருப்ப வேணடிய தேவை செல்யூகசிற்கு கி மு. 303-இல் ஏற்பட்டது. ஆண்டிகோனசிற்கும், தெமிடிரியசிற்கும் எதிராகத் தாலமி, காசணடா, இலைசிமாசசு ஆகியோா மீண்டும் அமைத்த கூட்டணியில் செல்யூகசு சேர்ந்து கொண்டார். ஆசியா மைனருக்கு கி.மு. 302-இல் வந்து சேர்ந்த செல்யூகசு, காசண்டர், இலைசிமாசசு துணையுடன் கி.மு. 301-இல் இப்சசு (Ipsus)என்னுமிடத்தில் நடந்த போரில் ஆணடிகோனசைத் தோற்கடித்தார். வெற்றி பெறற வர்கள் தங்களுக்குள் வென்ற பகுதிகளைப் பிரித்துக் கொணடபோது, செல்யூகசு சிரியாவைப் பெற்றார். ஆனால், அதற்குளளாகத் தென்சிரியப் பகுதியைப் போரில் எவ்வித பங்கும் பெறாத தாலமி வலிய எடுத்துக் கொண்டார். செல்யூகசு அதுபற்றி அப் போது பெரிதும் பொருட்படுத்தாவிடினும், பின்னர் சிரியப் போர்கள் பல செல்யூகசு, தாலமி மரபின ரிடையே ஏற்பட அது காரணமாயிற்று. தமது தலை நகரைத் தைகிரிசு கரையிலுள்ள செலுசியா (Seleucia) விலிருந்து ஓரோன்டெசுக (Orontes) கரையில் புதிதா கத் தாம் அமைத்த ஆண்டியாக்கு (Antioch)என்னும் நகரத்திற்கு மாற்றிக் கொண்டார்.

புதிய உறவுகளின் மூலம் தம்மைப் பலப்படுத்திக கொள்ள விரும்பிய தாலமி, இலைசிமாவிற்குத் தம் மகளைத் திருமணம் செய்து கொடுத்தார். அதற்கு எதிராகச் செல்யூகசு, தெமிடிரியசின் மகளை கி மு. 298-இல் கோலாகலமாகச் சிரியாவிலுள்ள உரோசசு (Rhosus) என்னுமிடத்தில் மணந்து கொணடார். ஆனால், விரைவிலேயே இருவரின் உறவிலும் பிளவு ஏற்பட்டது.

செல்யூகசு கி. மு 285-இல் தெமிடிரியசைத் தோற்கடிதது அபேமியாவில் (Apamea) அடைத்து வைத்ததன் மூலம்,அவரது ஆசிய வெற்றி முயற்சிக்கு

ஒரு முற்றுப்புள்ளி வைத்தார். தெமிடிரியசு கி.மு. 283-இல் இறந்தார். இலைசிமாசசின் குடும்பத்தில் பல பிளவுகளும் குழப்பங்களும் ஏற்பட்டபோதும், இலைசிமாசசு தம் மகன் அகாதோக்ளெசு (Agathocles) என்பவரைப் படுகொலை செய்த போதும் அவற்றில தலையிட்டார். கோருபேடியம் (Corupedıum) என்ற இடத்தில் கி.மு. 231-இல் இலைசிமாசசு, செல்யூகசு ஆகியோருக்கிடையே ஏற்பட்ட போரில் செல்யூகசு வெற்றி பெற் றார். இலைசிமாசசு இறக்கவே, அவரது அரசும் செல்யூகசு ஆட்சிக்குட்பட்டது. அலெக்சாண்டரது பேரரசை மீண்டும் தோற்றுவிக்கும் அவரது நோக்கம் நிறைவு பெறும் காலம் நெருஙகியது. மாசிடோனி யாவை நெருஙகும் நேரத்தில் எகிப்திய ஆளுநரான தாலமி செரானசு (Ptolemy Ceranus), செல்யூகசை கி.மு 281-இல் கொலை செய்தார். செல்யூகசின் மக னும், வாரிசுமான முதலாம் ஆண்டியாகசு (Antıo hus-I) தன் தந்தையின் நினைவைப் போற்ற, அவ ரது இறுதிச் சாம்பலின் மீது சமாதி எழுப்பினான்.

சிறந்த நிருவாகியும், படைத்தலைவருமான செல்யூகசு பல நகரங்களைத் தோற்றுவித்தார். அறி வியல் ஆராய்ச்சியை ஊக்குவித்தார். வெண்கலத்தா லான அவரது சிலையானது இத்தாலியிலுள்ள எர்க்கு லேனியம் (Herculaneum) என்ற இடத்தில் கண்டு பிடிக்கப்பட்டு இப்போது நேபிளசு (Naples) நகரில் வைக்கப்பட்டுள்ளது.

செல்யூகசு நிகேட்டார் நிறுவிய பேரரசு, கி.மு. 3-ஆம் நூற்றாண்டில் சிதைவுற்றது. முடிவாக, கி மு. 190-ஆம் ஆண்டில் உரோமானியர் இதைவென்று இணைத்துக்கொண்டனர்.

வி.பா.

**செல்லத்தகா உடன்பாடுகள்:** சட்ட விளைவுகள் உருவாக்காத உடன்பாடுகள் செல்லத் தகா உடன்பாடுகள எனப்படும். இவ் வுடன்பாடு கள் தொடக்கத்திலிருந்தே செல்லத்தகாதனவாகும். இதற்குச் சட்டப்படியான ஏற்பு இல்லை. இதுபோன்ற உடன்பாடுகளைச் சட்டப்படி நடைமுறைப்படுத்த முடியாது. இந்திய ஒப்பந்தச் சட்டப்படி செல்லத் தகா உடன்பாடுகளாகக் குறிப்பிடப்பட்டுள்ளவை யாவன: 1) ஒப்பந்தத் தகைமையற்றோருடன் செய்து கொள்ளும் உடன்பாடு, 2) இருதலைப் பொருண் மைத் தவறுதலின் (Bilatoral Mistake of Fact) அடிப்படையில் உள்ள உடன்பாடுகள், 3) சட்டத்திற் குப் புறம்பான நோக்கத்தையுடைய உடன்பாடு, சட்டத்திற்குப்புறம்பான மறுபயன் உடைய உடன் பாடு, 4) மறுபயன் இல்லாத உடன்பாடு 5) திருமணத்தைத் தடை செய்யும் உடன்பாடு கள், 6) வாணிகத் தடை உடன்பாடுகள், 7) நீதித் துறையின் நிருவாகத்தில் தலையிடும் உடன்பாடுகள், 8) சூதாட்ட உடன்பாடுகள, 9) நடைமுறையில் செயற்பட இயலாத செயலைச் செய்வதற்கான உடன்பாடுகள்; ஒப்பந்தத் தகைமையற்றோருடன் செய்துகொள்ளும் உடன்பாடுகள். உடன்பாடு செய்து கொள்ளுபவர்களிடையே போதுமான தகைமை (Capacity) இருக்கவேண்டும். தகைமையுடையவர் களிடையே ஏற்படும் உடன்பாடே ஒப்பந்தமாக மலர வாய்ப்புள்ளது. உடன்பாடு செய்துகொள்ளும் மக் களின் தகைமையினை இந்திய ஒப்பந்தச் சட்டத்தின் கண்கொண்டு நோக்குவோமாயின் உரிமை வயதும், நல்ல நிலையும், பிற சட்டங்களினால ஒப்பந்தம் செய்யத் தகுதியற்றவர் என்று தள்ளப்படாமையும் இன்றியமையாதவவாகும்.

மனப் பக்குவக் குறையினால் அ) இளவர்களும் (Mınor), ஆ) பிறவி மந்தர்களும் (Idiots), இ) பித்து நிலையடைநதவர்களும் (Lunatic), ஈ) மது அருந் தியவரும் (Drunkard) ஒப்பந்தத் தகைமையை இழந்துவிடுகின்றனர்.

அரசியல் காரணங்களுக்காகவும், பிற சட்டங் களின் அடிப்படையில் தகுதியற்றோர் என ஆக்கப் பட்டமையினாலும் சில நேரங்களில் தகைமையற்ற நிலை ஏற்படுகின்றது. அயல்நாட்டுத் தூதுவர்கள், பகை நாட்டவர், கூட்டமைப்புகள், தீர்ப்புப் பெற்ற குற்றவாளிகள், நொடித்துப் போனவர் முதலியோர் சமூக அடிப்படையில் ஒப்பந்தத் தகைமையற்றவர் ஆவர். இவர்களுடன் செய்துகொள்ளும் உடன்பாடு கள் அனைத்தும் செல்லத்தகா உடன்பாடுகளாகும்.

இருதலைப் பொருண்மை தவறுதலின் அடிப் படையில் உள்ள உடன்பாடுகள் செல்லத்தகா உடன் பாடுகளாகும் இருதலைத் தவறு உளளது என்பதை நிலைநாட்டுவதற்குப் பின்வருவன மெய்ப்பிக்கப்பட வேண்டும். அ) இரு கட்சியினரும் தவறான எண்ணம் கொண்டிருத்தல் வேண்டும் அத்தவறு பரிமாற்ற மான தவறாக இருத்தல் வேண்டும். எடுத்துக்காட்டு: சந்திரன், மதுரையிலுள்ள இராமனின் வீட்டை வாங்க ஒப்புக்கொணடுள்ளார். வீடு தீப்பற்றி எரிந்துவிட்ட தென்ற உண்மை இருவருக்கும் தெரியாத நிலையில் ஏற்படும் உடன்பாடு செல்லத்தகாததாக ஆகிவிடு றது. ஆ) தவறு ஒரு முக்கிய உண்மையுடன் தொடர்பு கொணடிருத்தல் வேண்டும். மேலும் அவ்வுணமை ஒப்பந்தத்துடன் நெருங்கிய தொடர்பு கொண்டிருத் தல் வேண்டும்.

**சட்டத்திற்குப் புறம்பான நோக்கத்தை அல்லது மறு பயனையுடைய உடன்பாடு**· குறறவியல் அல்லது பிற சட்டங்களில் விலக்கப்பட்ட செயல்களுக்காக உடன்பாடு ஏற்பட்டிருந்தால் சட்டப்படி அவ்வுடன்பாடு செல்லாது. குறிப்பிட்டுள்ள மறுபயன் அல்லது நோக்கம் நிறைவேற்றப்பட்டால் அது நடைமுறையிலுள்ள சட்டவிதிகளைத் தோல்வியடையச் செய்யும் என்ற சூழ்நிலையிலுள்ள உடன்பாடு செல்லத்தக்கதன்று

ஓர் உடன்பாட்டின் நோக்கம் மற்றொருவருக்கு அல்லது உடைமைக்கு இன்னல் விளைவிப்பதாக இருப்பின் அவ்வுடன்பாடு செல்லத்தக்கதன்று.

ஓர் உடன்பாடு வழக்குத் தொடர்வதை மூடி மறைக்கும் தன்மையுடையதாக இருநதால் அவ்வுடன்பாடு செலலத்தக்கதன்று

மறுபயன இல்லா உடன்பாடு மறுபயன் ஒப்பநதக் கூறுகளில் மிக முககியமானதொரு கூறாகும். மறுபயனற்ற உடன்பாடுகள் செல்லத்தகா உடனபாடுகளாகும். எனினும், இவ்விதிக்குக் கீழ்க்காணும் விலக்குகள் உள்ளன. அ) பொதுப்படையான அன்பின் காரணமாகக்கொடுத்த வாக்கு நீதிமன்றததின் மூலம் செயறபடுத்தத் தக்கது. ஆ) கெடு முடிந்த கடனைத் திருப்பித் தருவதாக எழுத்து மூலமாகக் கொடுத்த வாக்குறுதி செல்லத்தக்கது.

திருமணததைத் தடைசெய்யும் உடன்பாடுகள செல்லந்தக்கனவல்ல. ஒரு நிறுவனத்தில் பணிபுரியும் மகளிர் திருமணம் செய்துகொணடால அவர்களைப் பணியிலிருந்து நீக்கும் உரிமை நிறுவனத்திற்குணடு என்று செய்துகொள்ளும் உடன்பாடு செலலத்தக்கதன்று

**வாணிகத் தடை உடன்பாடுகள்**, எந்த ஒரு தனி மனிதனுக்கும் தான விரும்பும் தொழில் அல்லது வாணிகத்தில் ஈடுபட உரிமையுளளது. இவ்வுரிமையைத் தடைசெய்யும் வகையில் அமையும் ஒப்பந்தங்கள சட்டப்படி செல்லத்தக்கவையல்ல. எனினும், அடியில்குறிப்பிட்ட சூழ்நிலைகளில் வாணிகத்தடை உடனபாடுகள் செல்லத்தக்கவையே. 1)வாணிகநற்பெயர் விற்பனை, 2)கூட்டாளிகளுக்கிடையேயான உடன்பாடுகள, 3) தொழிற் கூட்டமைப்புகள் ஏற்படுத்திக்கொண்ட உடன்பாடுகள், 4) பணி ஒப்பந்தங்களுக்கான உடன்பாடுகள். நீதித்துறையின் நிருவாகத்தில் தலையிடும் உடன்பாடுகளும், சொந்த செல்வாக்கைப்பயன்படுத்தி நீதித்துறையிலுள்ள உயர் அதிகாரிகளைத் தமக்குச் சாதகமாக நடந்துகொள்ளும்படி செய்வதற்கான உடன்பாடுகளும் செல்லத்தக்கவையல்ல.

**சூதாட்ட உடன் பாடுகள்:** ஓர் உடன்பாட்டினால் இருவர் எதிர்காலத்தில் நிகழவிருக்கும் நிகழ்ச்சியின் அடிப்படையில் ஒருவர் வெற்றி பெறவும், மற்றவர் பணம் தரவும் ஒபபுககொணடால அது பணய உடன்பாடுஅல்லது சூதாட்டஉடன்பாடு எனப்படும். இவ்வுடன் பாடு செல்லத்தக்கதன்று.

நடைமுறைச சாத்தியமற்ற செயலைச செய்வதற்காகச செய்துகொள்ளும உடனபாடுகள் செல்லத்தக்கனவல்ல. எடுத்துககாட்டாக இரு ஆளகளுககிடையே இமயமலையை அடியுடன் பெயர்தது எடுத்துக்கொண்டு வரும்வகையில் ஓர உடனபாடு இருக்குமேயானால் அது செலலத்தகா உடன்பாடாகும். ரெ.சீ.

**துணை நூல்கள்**

Iyengar S.P., Mercantile Law, New Delhi, R Chand and Co, 1982

Venkatesan E., Hand Book on Mercantile Law, E.V. Bhagiratha Rao, Madras, 1963.

*செல்லிக் கோமான்*: சங்க காலததில் வாழ்ந்த சிற்றரசர்களுள் ஒருவன். இவன் இயற்பெயா ஆதன் எழினி என்பதாகும் பெருவீரனாகிய இவனைப் பற்றிய குறிப்பு ஐயூர் முடவனாரது அக நானூற்றுப் பாடலில(அகம்.210)இடம்பெற்றுள்ளது. இவன ஆட்சியின்போது பல இளங்கோசர் இருந்துள்ளனா. அவர்கள் ஞாழல், குவளை, முல்லை ஆகிய பூக்களால கணணி தொகுத்தணிந்து விளையாடும் வளமிக்க செலலூர், இவவரசனுடைய நகரமாகும். இது சோழநாட்டிலுள்ள கிழககுக் கடற்கரையின் அருகிலுள்ள ஊராகும் (அகம் 90). அதனால் இவனை ஐயூர்முடவனார் செலலிககோமான் என்று சிறபபித்துக் கூறியுள்ளார். போர்க்களத்தில் இவன, தன வேற்படையினை யானைகளின் மேல் எறிந்து அவை துனபுறுமாறு செய்தான். அ.மா.ப.

*செல்லிங்கற்கள்* ஜூட்லாந்தில் கண்டுபிடிக்கப்பட்ட இரண்டு கல்வெட்டுகளாகும். இவை பணடைய தேசிய வரிவடிவ எழுத்துகளைக் கொண்டுளளன. இவ்விரணடு கறகளும் கி.பி. 10-ஆம் நூற்றாண்டைச் சார்ந்த புதைகுழிக் கற்களாகும். இரண்டு கற்களுள் ஒன்று கோர்ம் (Gorm) என்ற அரசரின் மனைவி தையருக்காக (Thyre) நடப்பட்டது. அவர் தென்மார்க்கின் அரசராக விளங்கினார். மற்றொரு கல் கோர்ம் அரசரின் மகனான

ஆரால்டு புளூட்டூத்து (Harald Bluetooth) என்பவர், தம் பெற்றோரின நினைவாக எழுப்பிய கல்லாகும்.

சு.இரா.

**செல்லியன் தொழிற்கூடம்** முதற் கற்காலத் தொழிற் கூடமாகும. செல்லியன் தொழிற் கூடக் (Chellean Industry) கைக் கோடரிகள மிகக் கரடுமுருடானவை. பிரான்சில் செல்லிசு (Chelles) என்ற இடத்தில் கிடைத்த கற்காலத்தைச் சார்ந்த கைக்கோடாரிகளே செல்லியன தொழிற்கூடக் கைக் கோடரிகள் எனக் கூறப்படுகின்றன. இப்பண்பாடு இப் பொழுது அச்சூலியன் தொழிற்கூடத்துடன் இணைக் கப்பட்டு அபிவிலலியன் தொழிற்கூடம் என அறிஞர் களால் கூறப்படுகிறது. செலலிசு நகரம் பாரிசுககு



அருகில் உள்ளது. இங்கு கி.பி. 19-ஆம் நூற்றாண டில் தொல்லியல் அறிஞர்கள் கற்கருவிகளைக கண்டு பிடித்தனர்.

சு இரா.

**செல்லு புத்தகம்,** என்பது வங்கியின ஏடுகளில் எழுதிடும் வாடிக்கையாளர் கணக்குகளின் மறு படிவமாகும். வாடிக்கையாளர்களுக்கு உதவுவ தற்கு வங்கி நடவடிக்கைகளை வங்கி, செல்லு புத்தகத்தில் குறிக்கிறது. அவ்வப்பொழுது வங்கியிடமும் வாடிக்கையாளரிடமும் இப் புத்தகம் சென்று வருவதால் இதற்குச் செல்லு புத்தகம (Pass Book) என்பது பெயா.

வாடிக்கையாளர்களுக்கும் வங்கிக்கும் எழுந்திடும் நடவடிககைகளை முடிவாகவும் வினா எழுப்பமுடி யாத முறையிலும் முழுமையாகப் பதிவு செய்வது தான இதன் சிறப்புப பணியாகும் வங்கியும் வாடிக் கையாளரும் அதனை அவ்வாறே ஏற்றுக்கொளவது இதன சிறப்புத் தன்மையாகும

வஙகி நடவடிக்கைகளின திருததத்திற்கும் விட்டுப் போனவைகளை எழுதுவதற்கும வாடிக்கை யாளர்கள அடிக்கடி செலலு புத்தகத்தின் பதிவு களைச் சரிபார்க்க வங்கிக்கு அனுப்பவேணடும். அவ்வாறு செய்வது அவாகளின் கடமை. அவ்வாறு நடவடிக்கைகளைச் சரிபார்த்திட வாடிக்கையாளர் தவறிவிட்டால் செலலு புத்தகத்தில் உள்ள பதிவு களே சரியானவை என்று அவர் ஒத்துக் கொண்டதா கப் பொருள். எனவே செல்லு புத்தகத்தில் உள்ள பதிவுகள முதல் தோறறத்திலேயே எடுத்துக்கொள ளப்படும் சான்றுகளாக உள்ளன. தேவயினசு எ. நோபிள் (Devaynes Vs.Noble) என்ற வழக்கில் நீதிமன்றம் செல்லு புத்தகத்தின் தனமை, விளைவு பற்றி விசாரணை நடத்தக் கட்டளையிட்டது.

செல்லுபுத்தகம் வாடிக்கையாளருக்குத் தரும் பொழுது அவர் அதிலுள்ள பதிவுகளைச் சரிபார்க்க வேணடும், அதில் ஏதாவது தவறிருந்தால் அதைச் சரிக்கட்டச் செல்லு புத்தகத்தை வங்கிக்குத் திருப்பி அனுப்பவேண்டும்; அவ்வாறு செய்யவிலலையென் றால், எல்லாம் சரியாக வுள்ளன என்று எடுத்துக் கொள்ளப்படும் என நீதிமன்றம் கருத்துக் கூறியது.

ஒரு வாடிக்கையாளர் கணக்குத் தொடங்கும் போது வங்கி அவருக்கு ஒரு காசோலைப் புத்தகம் (Cheque Book) அல்லது பணம் எடுக்கும் தாளகள் (Withdrawal Forms), பணம் செலுத்திடும் தாள்கள (Paying in Slips), ஒரு செல்லுபுத்தகம் போன்றவை களை வழங்குகிறது. காசோலைகளும், பணம் எடுத்தி டும் தாளகளும் வங்கியிலிருந்து பணம் எடுக்கப் பயன் படுத்தப்படுகின்றன. பணம் செலுத்துத்தாள்கள் வங்கி யில் பணம் போடப் பயன்படுகின்றன. செல்லு புத்தகம் ஒரு சிறிய அளவுப் புத்தகமாகும். வங்கி ஏட்டிலுள்ள வாடிக்கையாளரின் பேரேட்டின் மறு உருவை இது பெற்றுள்ளது. வாடிக்கையாளர் செலுத்தும் பணம் இதில் வரவு வைக்கப்படுகிறது; அவர் எடுத் திடும் பணம் பற்று வைக்கப்படுகிறது. ஒவ்வொரு தட வையும் அதாவது பணம் போடும்போதும் அல்லது எடுக்கும்போதும் இருப்புச் சரிக்கட்டப்படுகிறது.

செல்லுபுத்தகத்தில் உள்ள ஒவ்வொரு பதிவையும் வங்கியர் எழுதுகிறார். இதில் ஆறு பத்திகள் காணப்படுகின்றன. அவைகளில் தேதி, விவரம், பற்று, வரவு, இருப்பு, வங்கி அலுவலர் கையெழுத்து போன்றவைகள் முறையே எழுதப்படுகின்றன.

செல்லு புத்தகம் தனித்தனித் தாளகள் உளள முறையிலும் பயன்படுத்தப்படுகிறது. இம்முறையில பதிவுகள், கணக்கு வைப்பு இயந்திரஙகளால பதியப் படுகின்றன. பெரிய வங்கிகள தான இம்முறையைக் கையாளுகின்றன. இம்முறையில் அவ்வப்பொழுது அறிக்கையொன்று வாடிக்கையாளருக்கு அனுப்பப் படுகின்றது. அவர்கள் பதிவுகளைச் சரிபார்த்துத திருப்பி அனுப்பிவிட வேண்டும். இவவறிக்கைகளைச் செலலுபுத்தகமாகக் கொள்ளவேண்டும். மேலை நாட்டு வங்கிகளில் வாடிக்கையாளர்களின் எண் ணிக்கை நிறைய இருக்கும்போது வாடிக்கையாளா களின் கணக்குகளை நிழற்படப் படிவங்கள (Photo-stat Copies) எடுத்து அவர்களின் ஒப்புதலுக்கு அனுப்புகிறார்கள். எனவே, செலலுபுத்தகம் என் பது வாடிகககயாளர்களுக்கு வங்கியா அனுப்பிடும் கணக்கறிககையாகும். செலலுபுத்தகத்தில காணப படும பதிவுகளுககு வங்கியும், வாடிக்கையாளரும் எவவாறு கட்டுப்பட்டவர்கள எனக் கூறுவது கடினம். சட்டத்தின விதிகள இதுபற்றித தெளிவாகக கூற வில்லை.

**அமெரிக்காவில்:** அமெரிக்காவில வாடிககையாளர் கள் தாம தங்களின் மூலச்சீட்டுகளுடன் ஒப்பிட்டுச் செல்லுபுததகத்தில் கணக்குச் சரியாக எழுதியனுப் பப்பட்டுளளதா எனறு சரிபார்த்துக் கால தாமதம் இலலாமல வங்கிக்கு அனுப்பவேணடும். அவ் வாறு செய்யத் தவறினால பினனால இதுபறறி அவா ஒனறும் சிக்கல் எழுப்ப முடியாது. செலலு புத்தகததில பதியப் பட்டுளள பதிவுகள, வாடிக்கை யாளர்-வங்கியர் ஆகியவர்களிடையே ஒரு நிலை யான வினா எழுப்பமுடியாத பதிவாக உளளன.

**இந்தியாவிலும் இங்கிலாந்திலும்:** இந்தியாவிலும் இங்கிலாநதிலும் செலலு புத்தகத்தைச சரிபாாக் கும் கடமையில்லை. ஏதாவது தவறிருந்து சுட்டிக் காட்டத் தவறினால் அதனால் செல்லுபுத்தகம் ஒரு முடிந்த கணக்காகக் கருதப்பட மாட்டாது. எப் பொழுது அவருக்குத் தவறு என்று தெரிகிறதோ அப்பொழுது சுட்டிக்காட்டலாம். எனவே, செலலு புத்தகத்தில் காணப்படும் பதிவுகள் வாடிக்கையாள ரைக் கட்டுப்படுத்தா. ஆனால் இருப்புச் சரி என ஏற்று உறுதி செய்யும் தாள்களில் கையெழுத்துப் போட்டுவிட்டால் செல்லு புத்தகம் ஒரு ஏற்றுக் கொண்ட கணக்காகக கருதப்படும். அதன்பின் ஒவ் வொரு பதிவிற்கும் அவர் கட்டுப்பட்டவராகிறார்.

**வாடிக்கையாளருக்குச் சாதகமான பதிவுகள்:** இரு தடவைப் பதிவுகளால (Double Entry) வாடிக்கை யாளர் கணக்கறிக்கை, வரவு வைத்தல், அதிகத் தொகையை வரவு வைத்தல், சில பற்றுப் பதிவுகளை எழுதாமல விடல் போன்றவைகளால் செலலுபுதத கத்தில் வரவு இருப்பு மிகையாகக் காணப்படும். செல்லுபுத்தகத்தில் எல்லாப் பதிவுகளையும் வங்கியே எழுதுவதால் அவைகளுக்கு அதே சான் றாக உள்ளது. செலலுபுத்தகத்தில வரவு இருப்பு மிகையாகக் காட்டி அதை நம்பி வாடிக்கையாளர் பணம் எடுததுச செலவழித்துவிட்டால, அதைத் திரும்ப வேண்டும் உரிமை வஙகிக்கு இல்லை. வங்கி ஏற்கெனவே செயத தவறான வரவிறகு வாடிக்கை யாளர் கணககைப் பற்றுச செய்யமுடியாது. ஆனால் இதற்கு இரணடு கட்டுப்பாடுகள் நிறைவேற்றபட வேண்டும். அதாவது வங்கி செய்திட்ட தவறான வரவை வாடிக்கைளாளர் உணமையிலே செய்யப் பட்ட வரவாகக் கருதவேணடும். அடுத்து எல்லாப் பணத்தையும் அவர் செலவழித்துவிட வேண்டும்.

ஆனால், வணிகாகள இவ்வாறு சொல்ல முடி யாது. அவர்கள கணக்கேடுகளை ஒழுங்காக வைகு திருப்பார்கள மேலும் வங்கி சரிக்கட்டும் பட்டியல் ஒன்றைத் தயாரிப்பார்கள. 'ஒக்லி பௌடன் எதிர் இந்தியவங்கி' (Oakley Dowden Co Vs. The Indian) Bank, Ltd.) எனற வழக்கில சென்னை நீதிமன்றம் நிறுவனம் தன் வாடிககையாளர்களிடமிருநது பெற்ற கணக்கு அறிக்கைகளைச் சரிபார்ததிருந்தால் செல்லு புத்தகத்தில பதிந்துள்ள இரட்டிபபான பதிவு களைப பார்ததிருககலாம். நிறுவனத்தின் புறககணிப் பால் இத்தவறான வரவு செல்லுபுத்தகத்தில காட்டப்பட்டுளளது. எனவே, வங்கி இத் தொகை யைத திரும்பப் பெற்றுக் கொளளலாம் எனத தீர்ப்பு வழங்கியது

மேலும், இத்தகைய தவறுகளை வங்கி கணடு பிடித்தால வாடிக்கையாளருக்கு உடனே தெரிவிக்க வேண்டும் அதைக் சரி செய்திடும் வரை வாடிககை யாளர் அனுப்பும் காசோலைகளுககுப் பணம் தரக் கூடாது தவறாகவரவு வைத்துள்ள தொகை மீது காசோலை விடுத்துப் பணம எடுக்காத வகையில் உடனடியாக வாடிக்கையாளருககு அறிக்கை ஒனறு அனுப்ப வேணடும். அதேபோல் வங்கியின் எழுத்தா எழுதிடும் மோசடிப் பதிவுகளையும் வாடிக்கையாளர் நம்பக்கூடாது என்ற கருத்தைப் பிரிட்டனின் வட ஐரோப்பிய வங்கிக்கு எதிரான சால இகுடெயின்

(British On North European Bank Vs. Zol Zstein) என்ற வழக்கில நீதிபதி கூறினாா.

**வங்கியருக்குச் சாதகமான பதிவுகள்:** வரவுப் பதிவை எழுதாமல் விடல, குறைவான தொகையை வரவு வைத்தல, தவறான பற்றுப் பதிவு ஆகியவை களால செல்லுபுத்தகத்தில வாடிக்கையாளரின இருப்பு குறைவாகக் காணப்படும். இதன் விளை வாக இப்பதிவுகள் வங்கிககுச் சாதகமாகவும வாடிக்கையாளருக்குப் பாதகமாகவும் விளஙகும். இத்தகைய தவறுகளைக சுட்டிக்காட்டிடச் சரியான பதிவுகளை எழுதும்படி வாடிககையாளர் வங்கியை எப்பொழுது வேணடுமானாலும் வேணடலாம். செல்லு புத்தகத்தைத் திருப்பி அனுப்பிவிட்டதால் இதைப பினனர் சுட்டிக்காட்டக்கூடாது என்பது பொருளன்று. செல்லு புத்தகத்திலுளள பதிவு களைச் சரிபார்க்கவேணடிய கடமை வாடிக்கையாள ருக்கில்லை. எவவித மறுபபுமில்லாமல் வாடிககை யாளரிடமிருந்து பெற்ற செல்லு புத்தகததை வைத்து, வஙகி வாடிக்கையாளர் அதில் உள்ள பதிவு களை ஏற்றுககொண்டார் எனக் கொள்ளக்கூடாது எனச் சேட்டர்ட்ன் (எ) இலண்டன் மற்றும் கவுணடி வங்கி (Chettertou Vs London and County Bank) என்ற வழக்கில் கருத்துக் கூறப்பட்டது.

செலலு புத்தகத்தில் காணப்படும் பதிவுகளை ஓர் அறிவிக்கப்பட்ட கணககாக (Stated Account) வாடிக்கையாளா கொண்டால, அப்பொழுது அவருககு மேற்கூறிய உரிமை இல்லாமல் போய்விடும. அவர் இவவுரிமையைப்பெறறிடத் தம்முடைய புறக்கணிப் பிற்குச் சான்று அளிக்க வேணடும. அதன் விளைவாக வஙகி செய்துளள பதிவுகள் அவருக்குப் பாதகமாக இருக்கவேணடும். எடுத்துக்காட்டாக, மோசடிக் கையெழுத்திட்ட, காசோலையை வங்கி மதிததுப பணம் தந்த பதிலைச் செல்லுபுத்தகத்தில் பார்த்தும் வாடிக்கையாளர் தெரிவிக்காதிருந்தால்அது ஒரு புறக் கணிப்பாகும். இதை அவர் வங்கிக்குத் தெரிவித்தால் தான் அம்மோசடி வெளியில் தெரியவரும். ஆனால், அவ்வாறு தெரிவிப்பது வாடிக்கையாளர் கடமையா என்ற வினா எழுகிறது. எனவேதான் இப்பொழு தெல்லாம் வங்கி வாடிக்கையாளர்களுக்கு உறுதித் தாள்கள் (Confirmation Slips) அனுப்பி கணக்கு சரியாக உள்ளதை உறுதிப்படுத்திக கொள்கிறது. ஒரு தடவை இவ்வாறு சரியெனச் சொல்லிவிட்டால பின்னர்த தோன்றும் தவறுகளுக்கு வங்கி பொறுப் பாகாது. நடைமுறைக் கணக்குகளில் இவ்விதியை வாடிக்கையாளர்களுக்கு வங்கி முன்னதாகவே தெரி வித்துள்ளது. அதன்படி வாடிக்கையாளர் செல்லு புத்தகத்திலுளள பதிவுகளைச சரிபார்த்து ஏதாவது விட்டிருந்தால உடனே தெரிவிகக வேணடும். இல்லா விட்டால பின்னாத் தோன்றும் தவறுககு வங்கி பொறுப்பாகாது.

வெளி உடனபாடு (Express Agreement) கோட் பாட்டினபடி ஒரு வாடிக்கையாளரின கடமை தம் செல்லு புத்தகததிலுள்ள பதிவுகளைச சரிபாாப்பது தான். ஏதாவது தவறிருந்தால் அதை உடனே வஙகிக்குத் தெரிவிகக வேணடும். வாடிககையாளா அமைதியாக இருநதால அவா கணககுச் சரியாக உள்ளதாக வஙகி எடுத்துக்கொள்ளுமு. இவவழக் கததை வங்கி கடைப்பிடித்தால், பினனர் நீதிமனற மும் இப்பழக்கததிற்குச சட்ட முறையான ஒப்புதல அளித்திடும. சில வஙகிகள அவவப்பொழுது ஒரு குறிப்பிட்ட காலப் பிரிவுககுளள அறிககையை அனுப்பி அது சரிதான எனறு உறுதிசெயய வேணடு கினறன. அவ்வாறு செய்திடும்போது வாடிககை யாளர்கள் அதற்குக் கட்டுப்பட்டவாகளாகினறனா

வாடிக்கையாளர் கணககில் வரவு வைககவேண கிய தொகையை வங்கி எககாரணததைக் கொண்டும் சும்மா வைததிருககக கூடாது. ஆனால, வாடிககை யாளர் அவ்வாறிருகக ஒததுககொணடால அதை வரவு வைக்காமலிருக்கலாம்.

எனவே. வங்கி செல்லு புததகப் பதிவுகளைச சரிபார்த்து எல்லாப் பதிவுகளையும் எழுதிக் கையெழுததிட்டு அடிக்கடி வாடிக்கையாளாகளுககு அனுப்ப வேணடும. தனனிடம் நீணட நாளகளுககு வைத்திருககக் கூடாது. அவவாறு வைத்திருநதால் அதைச்சரிபாாத்திடும் வாய்ப்பு வாடிக்கையாளருககுக குறைகிறது செல்லு புத்தகததைத் திருப்பி அனுப் பும்போது வாடிக்கையாளா பதிவுகளின தேதிகளை யும், எழுத்தரின் சுருக்குக் கையெழுததும் இருக்கின்ற னவா எனறு பார்க்கவேணடும. செலலு புததகம் தொலைந்துவிட்டால் மறுபடிவச (Duplicate) செல லுப் புததகம் வாடிககையாளருககு வங்கி வழங்கிடும். ஆனால் அது 'மறு படிவம்' எனறு எழுதிட வேணடும். வணிகாகள செலலு பதிவுகளைத தஙகள பணத்தொகை ஏட்டின் பதிவுகளோடு ஒப்பிட்டு வங்கிச் சரிகட்டும் அறிக்கைப பட்டியல (Bank Reconciliation Statement) உருவாக்குகினற னர். இவ்வாறு செல்லுபுத்தகம், வங்கி–வாடிக்கை யாளாகளிடையே ஓர் உறவைஏறபடுத்தும பாலமாகத் திகழ்கிறது; ஆனால், அதைப் பயன்படுத்தும முறை யில்தான் அவ்வுறவின் சிறப்பியல்பு உள்ளது.

கே.என்.இரா.

**துணை நூல்:**

**Kumararaj. A.**, Banking Theory on Law and Practice, Pallavan Pathippagam, Madras, 1985.

*செல்லூர்க் கொற்றனார்* சங்கப புலவர்களுள் ஒருவர். கொற்றனார் என்னும் இயற்பெயர் கொண்ட இவர் செல்லூர் என்னும் ஊரினர். இவர் இயற்றிய பாடல் 'குறுந்தொகை' என்ற இலக்கியத்தின் 363-ஆம் பாடலாக உள்ளது. பாலைத் திணைப் பாடலாக அமைந்துள்ள அச்செய்யுள் 'பிரிவு உணர்த்தப்பட்ட தோழி கிழவற்குச் சொல்லியது' என்னும் துறையில் அமைந்துள்ளது. தோழி தலைவனுக்கு அருஞ்சுரத்தின் வெம்மையினையும் அங்கு நிகழும் கொடுஞ் செயல்களையும், கூறி அத்தகைய கொடிய சுரத்தில் செல்லத் துணிந்த அவனது மனத்திண்மையினை இடித்துக் கூறுவதாக அமைந்துள்ளது அப் பாடல். அண்ணல் ஏறுகள், மலைப்பசுக்களை நோக்கி, வெய்துற்றுப் பெருமூச்சுவிட்டு உகாய் மரத்தின் புள்ளி நிழலில் தங்கும் துன்பம் மிக்க பாலைநிலக் காட்சி மேலே எடுத்துக்காட்டிய குறுந்தொகைப் பாடலில் அழகுறக் காட்டப்பட்டுள்ளது. தோழி தலைவனை நோக்கி இடித்துக் கூறும்போது நின் துணைவியைப் பிரிந்து கடத்தற்கரிய வெஞ்சுரங் கடந்து பொருள் வயிற் பிரிதல் நன்றோ என எள்ளிக் கூறுகின்றாள். கி.கோ

*செல்லூர்க் கோசிகன் கண்ணனார்* சங்க காலப் புலவர். அக நானூற்றிலுள்ள 66-ஆம் பாடல் மட்டுமே இவர் பாடியதாகக் கிடைத்துள்ளது, இவர் பெயர்கொண்டு இவர் செல்லூர் எனும் ஊரினர் என்றும், கோசிகன் என்னும் கோத்திரப்பெயர் கொண்ட அந்தணர் என்றும், இயற்பெயர் கண்ணனார் என்றும் ஊகிக்கலாம்.

இவர் பெயர் செல்லூர்க் கோசங் கண்ணனார் எனவும் பாடவேறுபாடு காணப்படுகிறது. செல்லூர், செல்லி என்றும் வழங்கப்பெறும் எனவும், இது கீழைக்கடலைச் சார்ந்ததோர் ஊர் எனவும் கூறப்படுகிறது.

அரிய வலிமை வாய்ந்த கடவுளையுடைய செல்லூரின் கிழக்கேயுள்ள கோசர் வாழும் நியமம் பற்றி அகநானூற்றுப் பாடல் ஒன்று (90) குறிப்பிடுகிறது. இக்குறிப்புக்கொண்டு காணும்போது செல்லூரிலும் கோசர் குடியினர் வாழ்ந்திருக்கலாம்; கோசங் கண்ணனார் அக்கோசர் குடியினருள் ஒருவராகலாம் எனக்கருத இடமுண்டு. கோசர் குடியினருள் புலவர் இருந்தமைக்குக் கருவூர்க் கோசனார் (நற்றிணை 214) எனும் புலவர் பெயர் சான்றாகும். தலைவியிருக்கப் புதியதொரு திருமணம் செய்துகொள்ளப் புறப்படுகிறான் தலைவன். அப்போது தலைவன் தன் புதல்வனைக் கண்டு அவனைத் தழுவி இல்லத்தினுள் செல்லுமாறு கூறுகிறான். சிறுவன் மறுத்து அழுகிறான். தலைவன் புதல்வனைத் தேற்றியவாறு உள்ளே நுழைகிறான். புதுமண முயற்சியையும் கைவிடுகிறான் இவற்றைக் கண்டு மகிழ்ந்த தலைவி தோழியிடம், புதல்வனைப் பெற்றோர் இவ்வுலக வாழவிலும் மறு உலக வாழ்விலும் நற்பயன் பெறுவர் என்பது உண்மையே என்பதைக் காணும் வாய்ப்புப் பெற்றேனெனக் கூறுவதாக இப்புலவர் பாடல் அமைந்துள்ளது. பா.ம.

*செல்லூர் கிழார் மகனார் பெரும்பூதங் கொற்றனார்*: இவர் சங்க காலப் புலவர்களுள் ஒருவர். கொற்றனார் என்னும் இயற்பெயருடைய இவர் பெயரில் உள்ள பெரும்பூதன் என்பது புலவரின் தந்தை பெயர் எனத் தெரிகிறது. அவ்வாறாயின், பாட்டன், தந்தை ஆகியோர் பெயரொடு ஒருவரைக் குறிப்பிடும் மரபு, சங்க காலத்திருந்தது என்பது புலனாகும். பாட்டனுக்குரிய செல்லூர் இப்புலவருக்கும் ஊராக இருத்தல் வேண்டும். அவ்வூர் சோழ நாட்டிலுள்ள கிழக்குக் கடற்கரையினை அடுத்துள்ள, ஊர் என்பதனைச் 'செல்லூர்க் குணாது பெருங்கடல் (அகம் 90: 9-10) என்னும் அகநானூற்றுத் தொடரால் அறியலாம். செல்லூர்த் தொடர்பொடு செல்லூர்க் கொற்றனார், செல்லூர்க் கோசிகன் கண்ணனார் என வேறு சில புலவர்களும் சங்க இலக்கியங்களில் காணப்படுவதால் அவ்வூர், புலவர் பலரைத் தோற்றுவித்த பெருமைக்குரியதாக உள்ளது.

பெரும்பூதங்கொற்றனார் பாடிய ஒரு பாடல (அகம். 250) அகநானூற்றில் இடம்பெற்றுள்ளது. நெய்தல் திணையில் தோழி கூற்றாய் அமைந்த பாடல்,தலைமகனுக்குக் குறைநேர்ந்த தோழி தலைவியிடம் குறைநயக்குமாறு கூறியதாக அமைந்துள்ளது. அதில்தலைவி ஆயத்தாரொடு விளையாடியபோது, அங்கு வந்த தலைவன், தலைவி புனைந்த வரிமணல் மனையினைப் புகழ்ந்து கூறிவந்தும் மறுமொழி பெறாது மீண்ட செய்தி அழகுறச் சித்திரிக்கப்பட்டுள்ளது. அ.மா.ப.

*செல்வக் கடுங்கோ வாழியாதன்* சங்க காலத்தில் சேர நாட்டுப் பகுதியை ஆண்ட ஒரு மன்னன். இவன, பதிற்றுப்பத்தாற் சிறப்பிக்கப் பெறும் 'இரும்பொறை' மரபின் வந்த மூன்று அரசர்களுள் முதலாமவன். இம்மன்னனைக் கபிலர், பதிற்றுப்பத்தின் ஏழாம் பத்திற் சிறப்பித்துப் பாடியுள்ளார். இவன் பெற்றோர் அந்துவஞ்சேரல் இரும்

பொறையும், பொறையன் பெருந்தேவியுமாவர். பணடைச சேரமன்னர்களுக்கு மருமககட்டாய உரிமை கூறுவோர், அநதுவஞ சேரலிருமபொறை இம்மனனனுக்கு மாமன் உறவினனாவான என்று கூறுவர்.

கபிலா தாம் பாடிய பதிற்றுப்பத்து ஏழாம் பத்தில் இம் மன்னனைச் 'செலவக்கோ' (பதிற். 63-16) எனறும், 'ஆதன' (பதிற். 63-31) என்றும் குறிப்பிட்டு விளிததுப் பாடியுள்ளார். இம் மன்னன 35 ஆணடுகள் ஆட்சிபுரிநதான் என்று அப்பத்தின் பதிகம் கூறுகிறது கபிலா இம்மன்னனைச் சிறப்பித்துப் பாடிய இரு பாடலகள் புறநானூறறில் இடம்பெற்றுளளன (புறம். 8, 14). அவற்றுள ஒனறில் கபிலர். இம்மனனனைக் கதிரவனோடு ஒப்பிட்டுக் கூறியுள ளார். இவனுடைய வீரத்தையும் கொடையையும சிறப்பித்து 'ஒடுங்கா உள்ளத்து ஓம்பா ஈகைக் கடந்தடு தானைச சேரலாதன்' எனப் பாராட்டியுளளார் (புறம். 8: 4-5). அப்பாடலின் அடிக்குறிப்பு, மன்னன் பெயரைச் சேரமான் கடுஙகோ வாழியாதன் என்று கூறுகிறது.

குண்டுகட் பாலியாதனார் என்னும் புலவா இம் மன்னனைத் தம் புறநானூற்றுப பாடலில் (புறம். 387) 'செல்வக்கடுங்கோ வாழியாதன்' என முழுப் பெயரையும் குறிப்பிட்டுச சிறப்பித்துள்ளார். வஞ்சிக கோட்டை மதிலைப் பொருது செல்லும் பொருநை ஆற்று மணலினும் பலவாக மன்னன் வாழ்வானாக என்று அவா வாழ்த்துவதால் இம்மன்னன் வஞசியைத் தலைநகராகக் கொண்டு சேரநாட்டின் பகுதியினை ஆண்டிருத்தல் கூடும் என்பது புலனாகிறது.

இம்மனனன உழிஞை மாலை சூடிச் சென்று ஒரே முற்றுகையில் சோழ பாணடியரை வென்றான் எனனும் செய்தியினைக் கபிலர் குறிப்பிட்டுள்ளார் (பதிற். 63: 8-11). இம்மன்னன் தேவைப்படுவோருக்கு மாரிபோல் வழங்குபவன் என்றும், தான் வெனற நாட்டு மககளுக்கு உதவியாக நல்வாழ்வளித்தவன் என்றும், சொனன சொல்லினின்றும் பின்வாங்காச் சிறப்புடையவன் என்றும், நகைச்சுவைக்காகவும் பொய் பேசாச் சிறப்பினன் என்றும், புறஞ்சொற் கேளாதவன என்றும், அவர் தம் ஏழாம் பத்தின் பாடல்களில இவன பண்புகளைப் போற்றியுளளாா. இவன் தெய்வங்கள மகிழுமாறு பல வேள்விகளைச் செயதுள்ளான். இச்செய்தி 'வேளவியிற் கடவுள அருத்தினை' என்று நூலிலும் (பதிற். 70:18), 'ஏத்தல சானற இடனுடைப் பெரு வேள்வி, ஆக்கிய பொழுதின்' என்று பதிகத்திலும் இடம்பெற்றுளளது. திருமால் பற்று மிக்கவனான இம்மன்னன், தானே தன் புரோகிதரினும் மிகுதியான வேதக் கலவிப் பயிற்சி உடையவனாக விளங்கியுள்ளான.

இவன், தன மீது பதிறறுப்பத்தின் ஏழாம் பத்தின் பாடல்களைப் பாடிச் சிறப்பித்தமைக்காகச சிறுகொடையாக நூறாயிரங் காணம் பொன் பரிசளிததுள்ளான். மேலும், தனனாட்டிலுளள நனறா என்னும் குனறினமீது கபிலருடன் ஏறிசசென்று, அஙகிருநது தனபார்வையில் பட்ட நாட்டுப் பகுதிகள் அனைத்தையும் அவருக்குக கொடைப் பொருளாக வழஙகினான.

இம்மனனன வேளாவிக் கோமான பதுமன தேவி என்பாளை மணந்தான். இவர்களுககுப் பிறந்த பெருஞ்சேரல இரும்பொறை எனனும் மைந்தன் இவனுக்குப் பின சேர மன்னனாக விளஙகினான. புறநானூற்றுப் பாடல் ஒனறன அடிககுறிபபிலிருநது, இம்மன்னன் சிக்கற் பள்ளியில இறந்தான எனனும் செய்தி புலனாகிறது. (புறம் 387 அடிக்குறிப்பு).

அ.மா.ப.

**செல்வக் கேசவராய முதலியார்** சென்னைக்கு அருகிலுள்ள திருமணம் என்னும் ஊரில் வேளாண குடியில கி.பி. 1864-ஆம் ஆணடில பிறந்தாா. கேசவ சுப்பராய முதலியார், பாக்கியம் அம்மையார் என் போர் இவர்தம் பெறறோா ஆவர். பள்ளிப் படிப்பை முடித்த செலவக கேசவர் செனனைப் பச்சையப்பன கல்லூரியில் பி.ஏ. பட்டம் பெற்றாா. பினனர், முதன முதல தமிழ மொழியில் எம.ஏ. பட்டமும் பெறறார். தமிழ் மொழியோடு ஆங்கில மொழியறிவும் மிகக வராகத் திகழ்நதாா. இருப்பினும தமிழின்பால் மிக்க ஆர்வம் கொணடிருநதாா



செல்வக் கேசவராயமுதலியாா

செல்வக் கேசவர் தம் மககட்குப் பரிமேலழகர், நசசினார்க்கினியர், சேனாவரையர் எனப் பெயர்

வைத்துத் தம் மொழிப்பற்றை உலகுக்கு உணர்த்தினார். தம் கல்வி மாட்சிக்குத் தக அரசாங்க அலுவல்கட்குச் செல்லும் வாய்ப்பினைப் பெற்றிருந்தும், தமிழ்மொழிபால் கொண்ட பற்றின் காரணமாகப் பச்சையப்பன் கல்லூரியில் தமிழ்ப் பேராசிரியராக அமர்ந்தார். அப்பணியில் உயர்ந்த ஊதியம் பெற்று விளங்கியதோடு நல்லாசிரியர் எனவும் பாராட்டப் பெற்றார். தெ.பொ. மீனாட்சி சுந்தரம், இரா.பி. சேதுப்பிள்ளை முதலியோர் இவரிடத்துக் கல்வி பயின்ற பேராசிரியர்கள் ஆவர்.

செல்வக் கேசவர் சிறந்த சொற்பொழிவாளராகத் திகழ்ந்தார். இவர்தம் சொற்பொழிவுகள் பொருட்செறிவுடன் நகைச்சுவை கலந்து, கேட்டாரைப் பிணிக்கும் தன்மையவாக விளங்கின.

இவர் காலத்தில் நூல்களில் செய்யுள் வடிவமே சிறப்பிடம் பெற்றிருந்தது. உரைநடை நூல்கள் சிறப்பும் வளர்ச்சியும் பெறாத நிலையில் இப்பெருமகனார் உரைநடை நூல்கள் பல எழுதி உரைநடை வளர்ச்சிக்குத் தம்மாலியன்ற தொண்டினைச் செய்தார். 'அக்பர்' என்பது இவர் எழுதிய முதல் உரைநடை நூலாகும், கம்பநாடர், தமிழ், தமிழ வியாசங்கள், வியாச மஞ்சரி, கண்ணகி கதை, அபிநவ கதைகள், கலிங்கத்துப் பரணி உரைநடை, திருவள்ளுவர், இராபின்சன் குருசோ, மகா கோவிந்த ரானடே முதலியன இவர் எழுதிய பிற உரைநடை நூல்களாகும்.

செல்வக் கேசவர் நிரம்பிய சங்க நூற் பயிற்சி உடையவர், தமிழ் நூல்களில் வடசொற்கலப்புப் பற்றித் தமிழ் உலகுக்கு எடுத்துக் காட்டிய பெருமையில் இவருக்கும் பங்குண்டு. ஆசாரக் கோவை, பழமொழி, அறநெறிச் சாரம், முதுமொழிக் காஞ்சி, அரிச்சந்திர புராணம், குசேலோபாக்கியானம் முதலிய நூல்களைத் தாமே நன்கு ஆய்ந்து அச்சிற் பதிப்பித்து வெளியிட்டார். இவர் 1921-இல் தம் 57-ஆம் வயதில் இயற்கை எய்தினார். இரா.செ.

**செல்வம்:** பணத்திற்காக அல்லது பிற பண்டங்களுக்காக மாற்றத் தக்க தன்மையுடைய, பயன்பாடுடைய எதுவும் செல்வம். வருமானத்தைத் தோற்றுவிக்கத் தக்க பருப்பொருள்சார் பண்டங்களாகவும் (Physical goods) சொத்துகளாகவும் (Assets), நிதிச் சொத்துகளாகவும் (Financial assets), இவை போன்ற ஏதாவதொரு வடிவத்தில் செல்வம் இருக்கலாம். அதாவது, ஏதாவதொன்றைச் செல்வம் என்று குறிப்பிட வேண்டுமானால், அதற்குக் கீழ் வரும் இயல்புகள் இருக்க வேண்டும்.

அ) பயன்பாடு உடையதாக இருக்க வேண்டும்.

ஆ) தேவையோடு ஒப்பிடும்போது கிடைப்பதற்கரியதாக (Scarce) இருக்க வேண்டும். எவ்வளவு தான் பயன்பாடு உடையதாக இருந்தாலும்அது இலவசமாகக் கிடைத்தால் செல்வமாகாது. எடுத்துக்காட்டாக நீர், சூரிய ஒளி, காற்று ஆகியவற்றைக் குறிப்பிடலாம்.

இ) மாற்றப்படத் தக்கவையாக இருக்க வேண்டும். இசைக் கலைஞர் அவர்தம் திறமையைப் பிறருக்கு மாற்றுதல் இயலாது எனவே அவர்தம் திறமை செல்வத்தை ஈட்டும் தோற்றுவாய் தானே தவிர செல்வமாகாது. வீடு, நிலம் போன்றவை செல்வம் அவற்றின் உரிமைகளைப் பிறருக்கு மாற்றலாம்.

ஈ) பரிமாற்ற மதிப்புடையவைகளாக இருக்க வேண்டும். பயன்மதிப்பு (Use Value), பரிமாற்ற மதிப்பு (Exchange value) என்ற இரு மதிப்புகள் உண்டு. இவ்விரண்டில் பயன்மதிப்பு மட்டும் இருந்தால் அதைச் செல்வம் என்று சொல்ல இயலாது. பயன் மதிப்போடு பரிமாற்ற மதிப்பும் இருந்தால் தான் அதைச் செல்வம் என்று குறிப்பிடலாம்.

உ) தனியார் சொத்துரிமையாக எப்பொழுதும் உரிமையுடன் அனுபவிக்கத் தக்கதாக இருக்க வேண்டும்.

**செல்வத்தின் வகைகள்:** செல்வத்தைப் பல அடிப்படைகளில் வகைப்படுத்தலாம். செல்வம், வீடு கட்டடங்கள், பணம் போன்ற பருப்பொருள்களாகவும் (Physical goods) இருக்கலாம். தொழிலின் நன்மதிப்பு (Goodwill) போன்ற நுண் பொருள்களாகவும்(Non-material goods)இருக்கலாம். செல்வத்தை அ) நிலம், வீடு,உடை போன்ற தனிஒருவர் செல்வம் (Individual Wealth), ஆ) தனிப்பட்டவர்களின் செல்வத்தையும் கொடுக்கப்படவேண்டிய கடன்களையும், உள்ளடக்கிய நாட்டுச் செல்வம் (National Wealth), இ) அரசாங்கச் செல்வங்கள், இருப்புப் பாதைகள், பொது நூல் நிலையங்கள் போன்றவற்றை உள்ளடக்கிய சமுதாயச் செல்வம் (Social Wealth), ஈ) எல்லா நாடுகளின் செல்வத்தையும்நாடுகளின்பொதுச் செல்வங்களான கடல்கள், புதிய கண்டுபிடிப்புகள் போன்றவற்றையும் உள்ளடக்கிய உலகச் செல்வம் (World Wealth) என வகைப்படுத்துவர்.

**பொருளாதார இயலுக்குச் செல்வ விளக்கம்:** அரசியல் பொருளாதாரம் (Political Economy) என்று

சொல்லப்பட்ட பொருளியலைத் தொன்மைப் பொருளாதார அறிஞர்கள் 'செல்வத்தைப் பற்றிய அறிவியல்' (Science of Wealth) என்று குறிப்பிட்டனர். பொருளியலின் தந்தை என்று சொல்லப்படும் பேராசிரியர் ஆதம் சுமித்து (Adam Smith) அவரது ஆதரவாளர்களான சே.பி.சே (J.B. Say)போன்றோர் 'செல்வ உற்பத்தி, செலவப் பகிர்வு ஆகியவைற்றைப் பற்றிக் கற்கும் நடைமுறை அறிவியல் பொருளியல' என்று விளக்கினர். ஆனால் இவ் விளக்கம் நிறைவான விளக்கம் அன்று என்பதைப் பல அறிஞர்கள் சுட்டிக் காட்டியுள்ளனர். என்.எஸ்.பா.

**துணை நூல்கள்:**

**Alexander Gray**, The Development of Economic Doctrines, Longmans, London, 1963.

**Alfred W.**, Stonier T. & Douglas C. Hague, A Text Book of Economic Theory, Longmans, London, 1982.

**செல்வமும் நலனும்:** சுகாதாரம், கல்வி, சுற்றுப்புறச்சூழல், தூய்மை நிலை, முழுவேலை வாய்ப்பு, வருமானம் போன்று மனிதனுக்குப் புறத்தேயுள்ள பல நிலைகளால் ஏற்படும் நிறைவை நலன் (Welfare) என்பர். செல்வம் மனிதனின் பொருளாதார வாழ்வுக்கு மிகவும் இன்றியமையாதது. செல்வம் இருப்பின் மனிதன் அவனது இன்றியமையாத விருப்பங்கள், வசதி விருப்பங்கள, ஆடம்பர விருப்பங்கள் ஆகியவைகளை நிறைவு செய்து கொள்வதன் மூலம் உயர்வான வாழ்க்கைத் தரத்தைப் பெற்று மனநிறைவைப் பெறும் வாய்ப்புகள் உண்டு. ஆனால், மக்களின் நல் வாழ்வைச் செல்வத்தின் அளவை, மட்டும் வைத்துக் கொண்டு கணக்கிட முடியாது.

செல்வம் வைத்திருப்போரெல்லாம் மனநிறைவுடன் இருப்பவர்கள் என்று கூற முடியாது. சமுதாயக் கண்கொண்டு பார்க்கும் போது, செல்வப் பெருக்கால் மட்டுமே மக்கள் நல்வாழ்வைப் பெற முடியும் என்ற கருத்துத் தவறானதாக இருக்கலாம். மதுபான உற்பத்தி செய்யும் தொழிற்சாலையை அமைத்தால் அதன் உற்பத்தியால் நாட்டின் செல்வம் பெருகும். அதனுடைய நுகர்வால் நாட்டின் பொது நலம் கேடுறும்.

பொதுவாக, நலனைப் பொருளாதார நலன் (Economic Welfare), பொருளாதார மில்லாத நலன் (Non-Economic Welfare) என இரு வகைப்படுத்தலாம். முன்னதைப் பணத்தால் அளவிடலாம். பின்னர்க குறிப்பிட்டது அற நலன்கள், சமுதாய நலன்கள் போனற பிற நலன்களைக் குறிக்கும். மக்களின் நலனை அடிப்படையாகவும் அதைப் பெறுவதற்கானதொரு கருவியாகச் செல்வத்தையும் படிப்பது பொருளாதாரம் என்பது மார்சல் (Marshall) போன்றோர் கருத்து. ஆனால், மக்களின் பொது நலனை மிகுதிப்படுதத மிகவும் தேவையாக உள்ள இலவசப் பண்டங்களைப் பற்றிப் பொருளாதாரம் கற்பதில்லை. ஒருசில பண்டங்கள பொது நலன் களுக்குக் கேடு விளைவிககின்றன. இவற்றையெல்லாம் நன்கு ஆராய்ந்த பேராசிரியர் பிகு (Pigou), பொதுவாகச் செல்வங்களின் அதிகரிப்பு நலனை மிகுதிபடுத்தும் என்றும், செல்வங்களின் குறைவு சமுதாயத்திற்கு ஏற்படும் இழப்பு என்றும் குறிப்பிடுகிறார்.

நாடுகள் எல்லாம் விரைவான பொருளாதார வளர்ச்சியைப் பெற விழைகின்றன. இந் நோக்கத்தை விரைந்து நிறைவேற்ற இயற்கைச் செல்வங்களையும் மனிதனால் தோற்றுவிக்கப் பட்ட செல்வங்களையும் மிகுதியான அளவில் பயன்படுத்துகின்றன. பெருகி வரும் மக்கள் தொகையினாலும், விரைவான பொருளாதார வளர்ச்சியைப் பெற வேண்டும் என்ற பேரவாவினாலும், இச் செல்வங்களைப் பன்மடங்கு பயன்படுத்திப் பொருள்வள முன்னேற்றத்தைப் பெறுகின்றன. ஆனால் இம் முயற்சியினால் தோன்றும் சமுதாய இழப்புகள குறைவாக இருத்தல் வேணடும் என்ற கருத்தை வலியுறுத்துபவர்கள், சமுதாயம் பெறும் நன்மைகளும் குறைகளும் ஒன்றுக்கொன்று சமமாக இருந்தால,அந்நிலையைச் சூனியப் பொருளாதார வளர்ச்சியென்றும், வெறுமைப் பொருளாதார வளர்ச்சி என்றும் குறிப்பிடுவர். என்.எஸ்.பா.

**துணைநூல்கள்:**

1. **Alexander Gray**, The Development of Economic Doctrine, Longmans, London, 1963.

2. **Alfrad, W** Stonier T. & Douglas C.Hague, A Text Book of Economic Theory, (5th Edn)Langmans London,1982.

**செல்வமும் வருமானமும்:** பொருளாதாரப பண்டங்களிலிருந்து பெறும் மன நிறைவுகளின் உணர்ச்சியைப் பணத்தின் அடிப்படையில் வருமானம என்று குறிப்பிடுவர். தனிப்பட்டவரோ ஒரு சமுதாயமோ ஒரு நாடோ பெற்றிருக்கும் பொருள் வளத்தின் தொகுப்பு செல்வம். உரூ. 1 இலட்சம் பெறுமானமுள்ள ஒரு வீட்டை ஒருவர் பெற்றிருக்கிறார் என்றால் அது அவரது செல்வம், அவ்வீட்டி

லிருந்து வாடகையாக உரு.1000/த்தை அவர் பெறுகிறார் எனில் அது அவரது வருமானம்.

**செல்வமும் வேலையும்** செல்வத்தைப் பெறுவதற்காக உடலால் அல்லது சிந்தனையால் அல்லது உடலாலும் சிந்தனையாலும் மேற்கொளளப்படும் முயற்சி எதுவும் வேலை எனப்படும். வேலையின் அளவு மிகுந்திடும் போது செல்வத்தின் அளவும் பெருகுவதற்கான வாய்ப்புகள் உண்டு. எனவே, உழைப்பின் அளவுக்கும் செல்வத்தின் அளவுக்கும் நேர் உடன் தொடர்பு உண்டு என்பர். ஆனால்,குறிப்பிட்ட அளவுக்குமேல் செல்வத்தைப் பெற்றிருப்போர மேன்மேலும் தொடர்ந்து உழைப்பை மேற்கொள்ள விரும்பாமல் ஓய்வையும் பிற வழிகளிலான பொழுது போக்குகளையும் விரும்புவதற்கான வாய்ப்புகளும் உண்டு.

**செல்வத்தைச் சேர்த்தல்:** மிகுதியான செல்வத்தையுடைய நாடே பொருளாதாரத்திறனுடைய நாடு என்ற கருத்து வாணிகவாதிகள் (Mercantilist) கருத்தாக இருந்தது. ஒவ்வொரு நாடும் அதன் செல்வத்தைப் பெருக்க வேண்டும்; செல்வத்தை ஈட்டித் தரத் தக்க வகையிலான எல்லாவிதமான நடவடிக்கைகளையும் மேற்கொள்ள வேண்டும்; செல்வத்தை ஈட்டித் தரத்தக்க வகையிலான பன்னாட்டு வாணிக நடவடிக்கைகளை மேற்கொள்ள வேண்டும்; முடிந்த அளவுக்கு மிக அதிகமாக ஏறறுமதியையும், மிகக் குறைவான இறக்குமதியையும் மேற் கொள்ள வேண்டும் என்ற கருத்தைக் கொண்டிருந்தது. இதற்கு மாறாக, வேளாண்மை மட்டுமே செல்வத்தை ஈட்டித் தரத் தக்கது எனறும், வேளாண்மைத் துறை தவிரப் பிற துறைகள எலலாம் உற்பத்தித் திறன் அற்றவை எனறும், எனவே,செல்வத்தைப் பெறவேளாண்மைத் துறைக்கும் இயற்கை விதிகளுக்கும் மிகவும் சிறப்பிடம் தருதல் வேணடும் என்றும் இயற்கைவாதிகள் (Physiocrats) குறிப்பிட்டார்கள். இவ்வியற்கை வாதிகளின் கருத்துகளை ஏற்றுக்கொண்ட தொன்மைப் பொருளர்தாரக் (Classical School of Economists) கருத்தினருக்குத் தலைவரெனப் போற்றப்படும் ஆதம் சுமித்து (Adam smith). செல்வத்தை ஈட்டுவதற்குரிய சிறப்பான தோற்றுவாய் உழைப்பே என்பதை வலியுறுத்தி, உழைப்பின் இன்றியமையாத தன்மையை விளககினார். இதையொட்டி வேலைப் பகுப்பு முறை என்ற தம் கருத்தை மிகவும் வலியுறுத்தி விளக்கினார். அவருக்குப் பின் வந்த இலாடர்டேல் (Lauderdale) என்பவா 'பொதுச் செல்வத்தின் தோற்றத்தைப் பற்றியும் இயல்பைப் பற்றியும் ஒரு விசாரணை மற்றும் அதனை அதிகரிக்கும் காரணங்களும் வழிகளும்' (An Enquiry into the Nature and Origion of Public Wealth and into the Means and causes of its increase)என்ற கி. பி. 1804-இல் வெளியிடப்பட்ட தம் நூலில் செல்வம் என்பது பொதுச் செல்வத்தையும் கூலிகள் என்பது தனியார் செல்வத்தையும் குறிப்பிடும் என்று குறிப்பிட்டார். நிலம், உழைப்பு, மூலதனம் ஆகிய மூன்று காரணிகளும் செல்வ உற்பததிக்கு உதவும் காரணிகள் என்று அவர் குறிப்பிட்டார்.

**செல்வ விளைவு:** விலை நிலையிலும், வட்டி விகிதங்களிலும் தோன்றிய சரிவின் காரணமாக மொத்தச் செலவில் தோனறும் அதிகரிப்பைச் செல்வ விளைவு என்பர். செனிவாவில (Geneva) 1941-ஆம் ஆணடில வெளியிடப்பட்ட 'செழிபபும் மந்தமும்' (Prosperisy and Depression) என்ற தம் நூலில் கேபர்லர் (G. Haberler)எனபவர் செலவ விளைவு என்ற கருத்தை விளககினார். விலைகள் குறையும் போது செல்வத்தின் உணமை மதிப்பு அதிகரிககும். செல்வத்தைப் பெற்றிருப்பவர்கள் விலை உயாவுக் காலங்களில அதிக அளவில் செலவுகளைச் செய்ய இயலும் என்பதால் மொத்தச் செலவு அதிகரித்து முழு வேலை நிலையை நோக்கிப் பொருளாதாரச் சமநிலை செல்லும் போக்குத் தோன்றும் என்பதை இக்கருத்தின் மூலம் விளக்கினார். இதனை உணமை இருப்பு விளைவு என்றும், பிகுவிளைவு(Pigou Effect) என்றும் குறிப்பிடுவர்.

கோட்பாடு அளவில் செல்வவிளைவு என்னும் இக்கருத்துச் சரியானதாக இருப்பதாகவும், எணணிக்கை அடிப்படையில் அமைநத (Empirical) ஆய்வுகளின் அடிப்படையில காணும்போது வலுவற்ற தொன்றாக இருப்பதாகவும் பல பொருளாதார அறிஞர்கள், குறிப்பிடுகினறனர். என.எஸ்.பா.

**துணை நூல்கள்:**

**Alexander Gray**, The Development of Economic Doctrine, Longmans, London, 1963.

**Alfred W.Stonier and Douglas** C, Hague, A Text Book of Economic Theory, Longmans, London, 1963.

***செல்வ வரி:*** அரசின் செலவுகளை ஈடு செய்வதற்காக எவ்விதமான நேரடியான பலனையும் எதிர்பாராமல் அரசுக்கு மக்களால் செலுத்தப் பெறும் தொகை வரியாகும். கூட்டரசு அமைப்பில்(Federal Set Up) மத்திய அரசு, மாநில அரசுகள், உள்ளூர் அரசுகள் என்ற பல அமைப்புகள் இருப்பது இயல்பு. இந்தியாவில் உள்ள அரசுகள் நேர்முக வரி, மறைமுக

வரி எனப் பலவிதமான வரிகளை விதித்து வருகின்றன. அவற்றுள மத்திய அரசு விதித்துப் பெறும் நேர்முக வரிகளில் ஒன்று செலவவரி (Wealth Tax).

இந்தியாவில் சொத்துகள் மற்றும் மூலதனப பற்று வரவுகள் (Capital Transactions) ஆகியவற்றில் இறந்தோர் சொத்து வரி (Estate Duty) எனப்படும் சொத்து வரி, செலவ வரி, நன்கொடை வரி (Gift Tax) என மூவகை வரிகள் விதிக்கப்பெறுகின்றன

வரிகளை விதிக்கும்போது வரி விதிகளை அடிப் படையாகக் கொள்வது வழக்கம். அவ்வகை அடிப் படைக் கொள்கைகளில் ஒன்று சமத்துவக கொளகை (Principle of Equity) ஆகும். அதாவது, வரியின் அளவு அவரவர் வரிதாங்கும் திறனின் (Tax Bearing Capacity) அடிப்படையில அமைதல் வேண்டுமெனபது கொள்கை. அந்த அடிப்படையில் ஒருவா தம் வருமானத்தை மட்டும் கருத்தில் கொள்ளாது அவர்தம் செல்வ இருப்பையும் கருத்தில் கொள்வது பயனுள்ளதாக இருக்குமென்ற அடிப்படையில் செல்வ வரி விதிக்கப்பெறுகிறது.

செல்வ வரிக்கு ஆதரவாகவும் எதிராகவும் பல கருத்துகள் கூறப்பெறுகின்றன.

**ஆதரவான கருத்துகள்: சமத்துவ விதி:** வரிவிதிப பில் சமததுவ விதியின் அடிப்படையில செலவ வரி அமைந்துள்ளது. ஒருவரின் நலன் அவரது வருமானத்தை மட்டுமல்லாமல அவர் பெறறிருக்கும் சொத்துகளையும் சார்ந்தே இருக்கிறது. சொத்துகளின் மதிப்புகளும் உயர்ந்துகொண்டே செலகினறன. எனவே அசசொத்துகளின் மீது வரிவிதிப்பது நேர்மையே.

**வரி தாங்கும் திறன்:** சொத்துகளை வைததிருப் போர் செல்வர்களே. அச் சொத்துகளிலிருந்து அவர்கள் பலவகையான வருமானங்களைப் பெற வாய்ப புகள் உணடு. எனவே, அவர்தம் வரிதாங்கும் திறனும் மிகுதியாக இருப்பதற்கான வாய்ப்புகளும் மிகுதியே. இநத அடிப்படையில செல்வத்தின் மீது வரிவிதித் தல நேர்மையே.

**துணையான பொருளாதார விளைவுகள்:** இது ஒரு நேர்முக வரியாகவும் வளர்விகித வரி வகையானதாகவும் இருப்பதால இதன்மூலம் பெருமளவில் நிதியைப் பெறும் வாய்ப்பு அரசுக்கு உண்டு. அதன்மூலம் துணையான பொருளாதார விளைவுகளைத் தோற்றுவிக்கும் வாய்ப்புகளும உணடு.

**நிருவாக எளிமை:** பொதுவாக வருமான வரி அலுவலர்களே செல்வ வரியையும் விதித்துப் பெறுகின்றனர். இரண்டையும் ஒருங்கே செயற் படுத்தும் போது, ஏமாற்றுவேலைகளும் மறைத்தலகளும் குறைய வாய்ப்புண்டு.

**மூலவளங்களைச் சேர்த்தல்:** வளர்விகித வரியாக இருப்பதால் இவ்வரியின மூலம் விரைவான பொருளாதார வளர்ச்சிக்குத் தேவையான மிகுந்த நிதி மூலவளங்களைச் சேர்க்க, இவ்வரி துணைநிற்கும் வாய்ப்புகள் மிகுதியாக உணடு.

**முதலீட்டினைப் பெருக்குதல்:** செல்வ வரிக்கு உள்ளாகும் செல்வர்களில் பெரும்பானமையினா அச் செலவங்களை விற்றுப் பணமாக்கி வரியைச செலுத்துவதிலலை. மாறாகத் தம் வருமானத்திலிருந்தே வரியைச் செலுத்துகின்றனர். அதாவது, நுகர்வுக்காகப் பயனபட்டிருக்கத்தக்க செல்வத்தின ஒருபகுதி செலவ வரியாக அரசிடம் வந்து சேர்ந்து முதலீடுகளுக்காகப் பயன்படுகிறது எனலாம். எனவே, செல்வவரிக்கு முதலீட்டைப் பெருக்கம் வாய்ப்புணடு.

**செல்வ வருமான ஏற்றத்தாழ்வைக் குறைக்க உதவுதல்:** செலவம ஒரு சிலரிடமே குவிந்துவிடுதல நனறன்று. குறிப்பாக மக்களாட்சியில் சமுதாய நீதியுடன் கூடிய பொருளாதார வளர்சசியைப் பெற விருமபும் சூழ்நிலையில ஒருசிலரிடம் செல்வம் குவிதல விருமபத்தக்கதன்று. எனவே, வளர்விகித முறையில விதிககப்பெறும் இச் செல்வவரியால் சமுதாயததில் உள்ள செலவ, வருமான ஏற்றத்தாழ்வுகள குறைவதற்கான வாய்ப்புகளுணடு.

**அரசின் பங்கு:** வளரும் பொருளாதாரஙகளில பல லாயிரங் கோடிக் கணக்கான உருபாய்கள் செலவில் ஏற்படுத்தப்படும் சமுதாயப் பொருளாதாரக கட்டமைப்புகளினால் (Social and Economic Overheads) பெரும்பயன பெறுபவர்களில் பெரும்பான்மையோர் செல்வர்களே. அரசு ஏற்படுத்தித் தரும் இவ்வாய்ப்புகளைப் பயன்படுததி நிறைநத செல்வததை விரைந்து ஈட்டுபவர்கள் பலருணடு. எனவே, அவர்களின் செலவத்தில் அரசுக்கும் பஙகுண்டு என்பதைக் காட்டச செல்வ வரி விதிக்கப்படலாம்.

**எதிரான கருத்துகள்: நேர்மையற்றது:** செல்வத்திலிருந்து பெறும் வருமானத்திற்கு வரி விதித்து, அச் செல்வத்திற்கும் வரி விதித்தல நேர்மையாகாது. மேலும், எல்லாச் செல்வங்களும் வருமானத்தை ஈட்டித் தருபவைகளாக இருக்க வேணடுமென்ற நியதியுமில்லை.

**மூலதனத் திரட்சிக்கு எதிரானது:** தனியார் வச முள்ள நிதி மூல வளங்கள வளர்விகித அடிப்படையில் அரசால் பெற்றுக்கொள்ளப்படுவதால்தனியார் துறை யின் சேமிப்புக் குறைந்து அதன் வழியாகத் தனியார் துறை மூலதனக் குவிப்பு குறைவதற்கான வாய்ப்பு களுண்டு.

**நிருவாக இடர்கள்:** செல்வத்தை வைத்திருப்பவர் கள் செல்வ வரி விதிப்பு இருப்பதன காரணமாக அச் செல்வத்தை மறைகக முயலுவர்; மதிப்பைக குறைத்துத் தகவல் தர முயலுவர். செலவத்தின் மதிப்பு இடத்திற்கு இடமும காலத்திற்குக காலமும் மாறிக கொணடேயிருப்பதால் செல்வத்தை மதிபபிடு வதும் எளிதனறு.

**இந்தியாவில்:** இந்தியாவில் வரிச் சீரமைப்புகள் எவ்வாறு இருக்கவேண்டுமென்று ஆராய்ந்து அறிக்கை அளித்த ஆங்கிலப்பேராசிரியா கால்டார் (Prof.Kal dor) பல பரிந்துரைகளைக் குறிப்பிட்டார், அவற்றில் ஒன்று செல்வ வரி விதிக்கலாம் என்பதாகும். சமத்து வம (Equity), பொருளாதார விளைவுகள (Econo mic Effects), நிருவாகத திறன (Administrative Efficiency) ஆகிய அடிப்படைகளில் செல்வ வரியைப் பேராசிரியர் கால்டார் பரிந்துரைத்தார். அதன்படி 1957-இல் அன்றைய நிதியமைச்சா டி.டி. கிருட்டிண மாச்சாரி செல்வ வரியைப் புகுத்தினார்

தனி ஆள் (Individuals), இந்துக் கூடடுக் குடும் பத்தின் தலைவர் (Kartha of Undivided Hindu Family), நிறுவனங்கள (Companies) ஆகியவைகளின நிகரச் சொத்துகளின் மீது ஆணடுதோறும விதிக்கத தக்கதொரு வளர்விகித வரிமுறையைச சோந்த நேர் முக வரியாகச் செல்வ வரி புகுத்தப்பட்டது ஆனால

அட்டவணை எண். 1.

இந்தியாவில் தனிஆள், இந்துக் கூட்டுக் குடும்பத்திற்கான செல்வவரி விகிதங்கள (விழுக்காடு அளவுகள)

| உருபாய் | 1972-73 | 75-76 | 76-77 | 77-78 | 78-79 | 79-80 |
|---|---|---|---|---|---|---|
| முதல் உரு. 1,00,000 வரை | இல்லை | இல்லை | இல்லை | இலலை | இல்லை | இல்லை |
| உரு. 1,00,001 முதல் உரு. 2,50,000 வரை | 1.0 | 1 0 | 0.5 | 0.5 | 0.5 | 0.5 |
| உரு. 2,50.001 முதல் உரு. 5,00,000 வரை | 1.0 | 1.0 | 0.5 | 1 0 | 1.0 | 1.0 |
| உரு. 5,00,001 முதல் உரு. 10,00,000 வரை | 2.0 | 2.0 | 1.5 | 2.0 | 2 0 | 2 0 |
| உரு. 10,00,001 முதல் உரு. 15,00,000 வரை | 1.0 | 3.0 | 2.2 | 2.5 | 3.5 | 3.0 |
| உரு. 15,00,000க்கும் அதிகமாக. | 8.0 | 8.0 | 2.2 | 3.5 | 3.5 | 3.0 |

1960-ஆம் ஆண்டு முதல் நெருக்கமாக வைத்திருக்கப் படும் நிறுவனங்களின் (Closely Held Companies) (பொதுமக்கள பெருமளவில் ஆர்வம் காட்டாத உள்நாட்டுத் தொழில் நிறுவனங்கள் நெருக்கமாக வைத்திருக்கப்படும் நிறுவனஙகள எனப்படுகின்றன.) குறிப்பிட்ட ஒரு சில நிகாச் சொத்துகள் நீங்க லாகப் பிறவகை நிறுவனச் சொத்துகள் இவ்வரி விதிப்பிலிருந்து விலக்கப்பட்டன.

பேராசிரியர் காலடார் பரிந்துரைத்ததற்கு மாறாக, நிறுவனங்களின் சொத்துகள் வரிவிலக்குப் பெற்றன. வரி விகிதங்கள் மென்மையாக உள்ளன எனறும், வரி விலக்குகள் தாராளமாக்கப்பட்டிருக் கின்றன என்றும் குறிப்பிடப்படுகிறது.

தொடர்ந்துவரும்அட்டவணை(ப.463)இநதியாவில் செல்வ வரி விகிதங்களில் 1979-80வரை ஏற்படுத்தப் பட்ட மாற்றங்களைக் காட்டுகிறது.

வரவு செலவுத் திட்டத்தில் (Budget) 1980-81 -ஆம் ஆண்டு குறைந்த அளவு வரிவிலக்கு வரம்பு உரு. 1,50,000 ஆக உயர்த்தப்பட்டது. தொடக்க கால முதல் இருந்துவந்த வரிவிலக்கு வரம்புகளும் அதிகரிக்சப்பட்டன. வரவு செலவுத் திட்டத்தில் 1984-85-ஆம் ஆண்டு குறிப்பிட்ட வகை வங்கி வைப்பு கள் (Bank Deposits) நிறுவனப் பங்குகள் (Company Shares) ஆகியவற்றிலுள்ள சொத்துகளுக்கான வரி விலக்கு வரம்பு உரு. 1,65,000-இலிருநது உரு 2,65,000 -ஆக அதிகரிக்கப்பட்டது. அதைப்போல வரி செலுத்துபவரின் சொந்த 'வீட்டின மதிப்பிற்கான வரிவிலக்கு வரமபும் உரு. 1,00,000-இலிருந்து உரு 2,00,000-ஆக அதிகரிக்கப்பட்டது.

வரவு செலவுத் திட்டத்தில் 1985-86-ஆம் ஆணடு குறைந்த அளவு வரிவிலக்கு வரம்பின அளவு உரு. 1,50,000-இலிருந்து உரு 2,50,000-ஆக அதிகரிக் கப்பட்டது. உரு. 2,50,000 முதல் உரு. 10,00,000 வரையுள்ள அடுக்கிற்கு (Slab) வரிவிகிதம் 0.5 விழுக்காடாகவும், உரு.10,00,000 முதல் உரு.20,00,000 வரையுளள அடுக்கிறகு 1 விழுக்காடாகவும், உரு. 20,00,000க்கும் அதிகமுளள அடுக்கிற்கு 2 விழுக்கா டாகவும் வரிவிகிதங்கள் மாற்றியமைக்கப்பட்டன. வரி செலுத்தும் ஆளின் சொந்த வீடு, 'யூனிட் டிரஸ்ட் ஆப் இநதியாவின் யூனிட்டுகள்' (Units of Unit Trust of India), நாட்டுச்சேமிப்புத் திட்டத்தில் (National Savings Scheme) முதலிடப்படும செல்வம் போன்ற குறிப்பிட்ட பிற வகை நிதிச் சொத்துகள் (Financial Assets) போன்றவைகளுககான வரிவிலக்கு வரம்பு உரு.5,00,000-ஆக அதிகரிக்கப்பட்டது.

வேளாண்மைக்குப் பயன்படும் நிலங்களையும் இவ்வரி விதிப்பிற்கு உள்ளடக்க 1969-ஆம் ஆண்டு முதல் முயற்சிகள மேற்கொள்ளப்பட்டன. இவற்றின் மூலம் பெறப்படும் வருவாயை மாநிலங்களுக்கு மானியமாகக் (Grants-in-Aid) கொடுத்துவிடவும் முடிவு செய்யப்பட்டது. ஆனால் இதன் தொடர்பாக ஏற்பட்ட பல தொல்லைகளையும் பயனற்ற நடவடிக் கைகளையும் கருத்திற் கொண்டு 1980-81-ஆம் ஆண்டு முதல் தேயிலை, காபபி, ஏலக்காய், இரப்பர்த் தோட்ட நிலங்கள் போன்ற ஒருசிலவகைச் சொத்து கள் நீஙகலாகப் பிறவகை வேளாண்மை நிலங்கள மீதான செல்வ வரி முழுவதும் நீக்கப்பட்டுவிட்டன.

தராதரமாகப் பார்க்கும்போது செல்வ வரியால் அரசு பெறும் வருவாய் பெருமளவில் இல்லை என்ற கருத்தும் பலரால சுட்டிக் காட்டப்படுகிறது.

என்.எஸ்.பா,

**துணை நூல்கள்:**

**Palkivala, N.A**, The Union Budget, Forum of Free Enterprises., Bombay, 1986-87.

**Saxena, R.C.,** and **Mathur, P.C.,** Public Finance. K. Nath and Company, Meerut, 1986.

**Tyagi, B.P.,** Public Finance, Jai Prakash Nath Publications, Meerut, 1985.

செல்வ வருமானப் பங்கீடு: பயன்பாட்டைப் படைத்தல் உற்பத்தி. இவ்வுற்பத்தி நிகழ நிலம், உழைப்பு, மூலதனம், அமைப்பு என்ற நான்கு காரணி கள் பயன்படுகின்றன. இக் காரணிகளின் கூட்டு உழைப்பால பெறப்படும் மொத்தச செல்வம் ஆண்டு தோறும் கணக்கிடப்பட்டுநாட்டு, வருமானம் அல்லது தேசிய வருமானம் (National Income) எனப்படுகிறது. தேசிய வருமானத்தை மேற்குறிப்பிட்ட காரணிகளின உரிமையாளர்கள் என்ற அடிப்படையில் நிலக்கிழார் களும், உழைப்பாளர்களும் மூலதனக்காரர்களும் தொழில முனைவோரும் அவரவர் பணித் திறன் களின் அடிப்படையில் பகிர்ந்து கொள்வர். இதுபகிர்வு என்றும் சார்பு பகிர்வு (Functional distribution) என்றும் குறிப்பிடப்படுகிறது. எந்த அடிபபடையில செல்வம் இப்பிரிவினரிடையே பகிாந்தளிக்கப்படுகிறது என்பதற்கான பல்வேறு காரணஙகள் அறிஞர் பெரு மக்களால் விளககப்பட்டிருக்கினறன.

பொதுவாக, செல்வமும் வருமானமும் சமுதா யத்தில் உள்ள மக்களிடையே ஏறத்தாழச் சமமான அளவில் இருப்பின் மக்களின் பொருளாதாரத் திற னும் சமமாக அமையப் பெற்று அவர்களிடையே

ஒற்றுமையும் நல்லிணக்கமும் காணப்படும் என்பர் பலர். ஆனால், நடைமுறை வாழ்வில ஒருசில பொருளாதார அமைப்புகளைக் கொண்டுள்ள நாடுகளில் ஏறத்தாழச் சமமான செல்வ வருமானப் பங்கீடு இருப்பதையும், மற்றச் சில பொருளாதார அமைப்புகளைக் கொண்டுள்ள நாடுகளில் செலவ வருமானப் பங்கீடு சமச் சீரற்ற தன்மையுடையதாக இருப்பதையும் காண முடிகிறது.

செல்வ வருமானப் பங்கீடு முற்றிலும் நிறைவானதாகவும் முற்றிலும் சமமானதாகவும் இருப்பின், அதனை உண்மையான செல்வ வருமானப் பங்கீடு (Absolutely equal distribution of income and wealth) என்று குறிப்பிடலாம். ஆனால், இந்நிலையை நடைமுறையில் காண்பது அரிது. ஒரே நாட்டில் உள்ள பல பிரிவு மக்களின் பணிநிலைகள், அவர்கள் வாழும் நிலப் பகுதிகளின் தன்மைகள் போனற பல காரணிகளின அடிப்படையில் அவர்களுடைய செல்வ வருமான நிலைகளில் சமச் சீரற்ற தன்மை இருந்தாலும், மொத்தமாகப் பார்க்கும் போது, எல்லா மக்களும் ஒரே வகையான செல்வ வருமான நிலையையும் பொருளாதாரத் திறனையும் உடையவர்களாக இருக்கும நிலையைத் தராதரமான செலவ வருமானப் பங்கீடு என்று குறிப்பிடலாம். இநநிலையைத் தான் சமமான செல்வ வருமானப் பங்கீடு என்பர்.

**சமதரும அமைப்பும் செல்வ வருமானப் பங்கீடும்:** சமதரும அமைப்புகளைக் கொணட பொருளாதாரங்களில் செல்வம் எல்லாம் பொது உடைமையாககப்பட்டிருப்பதாலும், மக்கள் அவரவர் தம் தனி விருப்பு வெறுப்புகளுக்குச் சிறப்பிடம் தாராமல் பொது விருப்பு வெறுப்புகளுக்கே சிறப்பிடம் தருகின்ற நிலை இருப்பதாலும், அரசின் வலுவான கட்டுப்பாடுகளும் விதி முறைகளும் நடைமுறையில் இருப்பதாலும், ஏறத்தாழ எலலோரும் சமமான செல்வ வருமான நிலைகளைப் பெற்றிருக்க வேண்டும் என்ற கொள்கையை அரசு கையாளுவதாலும், ஏறத்தாழச் சமமான செல்வ வருமானப் பங்கீடு காணப்படுகிறது. தஙகளால் இயன்றதை நாட்டுக்குச் செய்ய வேண்டும்; தங்களுக்குத் தேவையானதை மட்டும் பெற்றுக் கொளள வேண்டும் என்ற கொள்கையை இந் நாடுகளில் உள்ள மக்கள் பயன்படுத்துவதாகச் சொல்லப்படுகிறது. அதனால், தாம் மட்டும், செல்வச் செழிப்பில் வாழவும் பிறர் நலிவடைந்த வாழ்க்கை வாழவும் இம் மக்கள் விரும்ப மாட்டார்கள் என்றும சொல்லப்படுகிறது. எனவே, பயிற்சியும் தேர்ச்சியும் மிக்க பொறியியல் நிபுணராக இருந்தாலும், மருத்துவ வல்லுநராக இருந்தாலும், பேராசிரியராக இருந்தாலும் சாதாரணப் பணி என்று சொல்லப்படும் துப்புரவுத தொழிலாளியாக இருநதாலும் அவரவர் நிலைக்கேற்ப அவரவர் பணியை ஆற்றிவிட்டு அவரவாக்குத் தேவையானதை மட்டும் பெற்றுக் கொளளும் நிலையை இப் பொருளாதாரங்களில் காணலாம் என்றும், எனவே, சீரானதாகவும், மிகுதியான அளவில் மாற்றங்கள இல்லாததாகவும் உள்ள சமமான செலவ வருமானப் பஙகீட்டை இந்நாடுகளில் காணலாம் என்றும் பலர் குறிப்பிடுகின்றனர் ஆனால், சமதரும நாடுகளில நிலவும் செலவ வருமானப் பஙகீட்டு முறையினால் மக்கள உண்மையில மன நிறைவுடன் இருக்கிறார்கள் என்ற கருத்தை ஏறறுக கொள்ள முடியாது என்றும், ஒருசில பிரிவு மககள மிக உயர்நத வாழ்க்கைத் தரத்தையும் பிற பிரிவினர் மிகவும் எளிய வாழ்க்கைத் தரத்தையும் அனுபவித்து வருகிறார்கள என்றும் சிலா குறிப்பிடுகிறார்கள் திறன் மிகுநதவருக்கும் திறன குறைந்தவருக்கும் ஒரே வருமானம் என்றிருப்பதையும் முயற்சி மிக்கவர்களுக்கும் முயற்சி குறைநதவர்களுக்கும் முயற்சியே இலலாதவாகளுக்கும் ஒரே வருமான நிலை எனறிருப்பின் அது ஊககததையும் உற்சாகத்தையும் முயற்சியையும கெடுககும் என்பதையும இவர்கள் சுட்டிக்காட்டுகினறனர். மொத்தத்தில் சமதரும நாடுகளில கூட, கொளகையளவில தான் சமமான செலவ வருமானப் பங்கீட்டைக் காண முடியுமே தவிர உணமையில் அநத நிலை இல்லை என்று சமதருமக் கருத்தை எதிர்ப்பவர்கள குறிப்பிடுகிறார்கள்.

**முதலாளித்துவ அமைபபும் செல்வ வருமானப் பங்கீடும்:** முதலாளித்துவப் பொருளாதாரத்தில தனியார் துறைக்குச் சிறப்பிடம் தரப்படுகிறது. தனியுடைமை வழககில் இருக்கும் இந நாடுகளில் மக்களின் பொருளாதார நடவடிககைகளில அரசின தலையீடு இலலாமல் அல்லது மிகக குறைவான அளவில இருக்கும். பணடங்கள், பணிகள உற்பத்தியிலும் பகிர்விலும மக்கள் அவரவர் விருப்பு வெறுப்புகளுக்கேற்பச் செயற்படும் நிலை இருக்கும் இத்தகைய நாடுகளில செல்வம மிககோா சமுதாயத்தில் மிகுந்த மதிப்பையும் மரியாதையையும் பெறுகின்ற காரணத்தால் செலவததை மேன்மேலும் பல மடங்காகப் பெருக்கிப் பயனடையும் நோக்கில மக்களின் அன்றாடப் பொருளாதார நடவடிக்கைகள் அமைகின்றன. எனவே, திறமையுடையவர்கள வசதிகளையும் வாய்ப்புகளையும் சிறப்புறப் பயன்படுத்தி மேன்மேலும் செல்வர்களாகும் நிலையும், திறமையும் வசதியும் வாய்ப்பும் குறைந்தவர்கள் கீழ் மட்டத்திலேயே இருக்கும் நிலையும் காணப்படுகின்றன. செல்வம் பெற்றிருப்போருககுக் கிடைககும் சமுதாய

மதிப்பையும் பெருமையையும் கண்டு தாமும் எப்படி யாவது செல்வத்தைச் சேர்க்க வேண்டும் என்று குறுக்கு வழியில் செல்வத்தைச் சேர்க்கும் முயற்சியில் ஈடுபடுவோரும், பிறர் உழைப்பின் பயன்களைச் சுரண்டுவோரும், ஏமாற்று வேலைகளிலும், ஊழல் நடவடிக்கைகளில் ஈடுபடுவோரும் இப் பொருளா தாரங்களில் நாள்தோறும் பெருகி வருகின்ற நிலையைக்காண முடிகிறது இதனால், செல்வ வருமானப் பங்கீடு சீரற்றதாக இருப்பதோடு செல்வம் பெற்றிருப்போருக்கும், செலவம் இல்லாதோருக்கும் இடையேயான இடைவெளியும் பெருகிக் கொண்டே செல்கிறது. பல வகையான மூலதனச்சாதனங்களைத் தங்களின் தனி உடைமையாககிக் கொணடு பெருமளவு வருமானத்தை அவற்றின் மூலம் அடைநது கொண்டு, செல்வ வருமான ஆறறலைப் பயன்படுத்தி கொண்டு, அரசுகளையும் ஆட்டிப் படைககும் வல்லமை பெற்ற சிலரும் இவ் வசதிகள் இல்லாமல் வறுமையில் வாடும் பலரும் இப் பொருளாதாரங்களில் இருப்பர்.

**இரட்டைப் பொருளாதாரம்** (Dualistic Economy) இந்தியா போன்ற வளரும் நாடுகளில் உளள பொருளாதார அமைப்பின் விளைவாக இரட்டை நிலை காணப்படுகிறது. பொருளாதார மேம்பாடு அடைந்திருக்கும் நாடுகளில உள்ளவர்களின் வாழ்க்கைத் தரத்தைப் போன்று மிக உயர்நத வாழ்க்கைத் தரத்தை அனுபவித்து வரும் செல்வா கள் ஒரு புறமும், வறுமைச் சுழலில் சிககித் தவிக்கும் மக்கள் ஒருபுறமும் என இரணடு வகை வாழ்க்கை நிலைகளும் ஒரே நேரத்தில ஒரே நாட்டில் நிலவு வதை இரட்டை நிலை என்பர். செல்வ வருமானப் பங்கீடு சமச் சீரற்ற நிலையில் இருப்பதால தான இந்நிலை தோனறுகிறது.

**செல்வ வருமானப் பங்கீடும் மூலதனத் திரட்சியும்.** செல்வமும் வருமானமும் சீராகப் பகிரப்படுமானால் அந் நிலையில் சேமிப்பு மிகுதியாவதறகும், அச் சேமிப்புகள் திரட்டப் பெற்று மூலதனத திரட்சி தோனறுவதற்கும் வாய்ப்புகள் மிகவும் குறைவு என்று சிலர் குறிப்பிடுவா. சமுதாயததில் செல்வம் மிக்கோரின சேமிப்பு நாட்டம் (Propensity to Save) மிகுதியாக இருக்குமாதலால் செலவ வருமானப் பங்கீடு சீரறறு இருககும்போது செல்வர் சிலராகவும் செல்வம் அற்றோர் பலராகவும் இருப் பராதலால் சேமிபபும் மூலதனத் திரட்சியும மிகு தியாக இருக்கும என்று இவர்கள் கருதுகின்றனர். அதாவது, செல்வ வருமானப் பங்கீடு சீரறறிருக்கும் நாடுகளில் விரைவான பொருளாதார வளர்ச்சிககுத் தேவையான மூலதனத்தைப் பெருமளவில் திரட்ட வாய்ப்புகள் மிகுதி எனபது கருத்து. இவர்தம் கருத்துக்கு மாறாக, சமுதாய நீதியுடன் (Social Justice) கூடிய பொருளாதார வளர்ச்சியைப் பெறச் சமச்சீரான செல்வ வருமானப் பங்கீடே சிறந்த தென வாதிடுவோரும் உண்டு.

**இந்தியாவின் செல்வ வருமானப் பங்கீடு:** வளரும் நாடுகளில் ஒன்றான இந்தியாவில் செல்வ வருமானப் பங்கீடு சீரற்ற நிலையில் இருப்பதைப் பல ஆய்வுகள் விளக்கியுள்ளன. ஓசா, (Ojha) பட்டு (Bhatt), இரணதேவ் (Ranadive), அகமது (Ahmed), பாட்டாச்சாரியா (Bhattacharya), ஐயங்கார் (Iyengar), முகர்ஜி (Mukerjee) ஆகியோர் பல ஆய்வுகளை இத் துறையில் மேறகொணடு பல உண்மைகளை வெளி யிட்டுளளனர் மேலும இந்திய இருப்பு வங்கியும் (Reserve Bank of India) கைகோள பொருளியல் ஆய்வுககான தேசிய குழு (NCAER-National Council for Applied Economic Besearch) போன்ற அமைப் புகளும் இத்துறையில் பல ஆய்வுகளை மேற்கொணடு பல உணமைகளை வெளியிட்டுளளன. இவவாய்வு களின் முடிவுகளை மொத்தமாகப் பார்க்கும்போது, 1960-1965 ஆண்டுகளில் இநதியாவின் மொத்த வரு மானத்தில 50 விழுக்காடு அளவைச் சமுதாயத்தில பணககாரர்களாக உயர்நிலையில உள்ள ஏறததாழ 10 விழுக்காடு மக்கள அடைநதிருந்தனர் எனபதை யும், சமுதாயத்தின் அடிமட்டத்தில் உள்ள ஏறத்தாழ 20 விழுக்காடு மககள் மொத்த வருமானத்தில் ஏறத்தாழ 7.5 சதவீத அளவையே பெற்றிருந்தனர் என்பதையும காண முடிகிறது. கிராமஙகளிலும் நகரங்களிலும் வாழ்வோரிடையேயும் இத்தகைய சமச் சீரற்ற செல்வ வருமானப் பங்கீட்டு இயல்பைக் காண முடிகிறது. எனவே தான இனறும ஏறத்தாழப் பாதி அளவு மக்கள் வறுமைக கோட்டிற்குக் கீழே வாழுமநிலை காணப்படுகிறது.

**சமச்சீரின்மைக்குக் காரணங்கள்:** இந்தியாவில் செல்வ வருமானப் பங்கீடு சமச் சீரற்ற நிலையில் இருப்பதற்குக் கீழ்வரும் பல காரணங்கள் குறிப்பிடப் படுகின்றன.

1. **பரவி நிற்கும் வறுமை.** பெரும்பான்மையானோர் வறிய நிலையில் வாழவதால் அவர்தம் வருமானம் நுகர்வு, வாழ்க்கைத் தரம் போன்றவை கீழ்மட்டத்தில் தொடர்ந்து இருந்து வருகின்றன. இதனால முன னேறும் வாய்ப்புகளும் வசதிகளும் அவர்களுககுக் கிடைப்பதில்லை. ஆனால் ஒருசிலர் செல்வ நிலையில் வாழ்வதால் அவர்தம் வருமானம நுகர்வு, வாழ்க் கைத் தரம் மட்டுமலலாமல், மேன்மேலும் முன் னேறும் வாய்ப்புகளும் வசதிகளும் அவர்களுக்கு எளி தாகக் கிடைககினறன.

**2. மிகக் குறைவான பொருளாதார வளர்ச்சி:** தேசிய வருமானமும், தனிஆள் வருமானமும் தொடர்ந்து அதிகரித்துச் செல்லும் நிலையைப் பொருளாதார வளர்சசி என்பர். இவ் வளர்ச்சி வேகம் இந்தியாவில் மெதுவானதாகவே உள்ளது. இதற்குப் பல காரணங்கள் உண்டு என்றாலும் வளர்சசி வேகம் குறைவாக இருப்பதால் சமுதாயத்தின் அடிமட்டத் தில் உள்ளவாகள் விரைவாக உயர முடியாமல் இருக் கும் நிலை காணப்படுகிறது.

**3. பொருளாதார வளர்ச்சியின் இயல்பு:** இந்தியா வின்பொருளாதாரத் திட்டஙகள் யாவும் சமச் சீரான செல்வ வருமானப் பஙகீட்டை வலியுறுத்திக் குறிப் பிட்டாலும், நடைமுறையில் திட்டஙகளின் பயன் களையெல்லாம் சமுதாயத்தின் ஒருசில பிரிவினர்தாம் அடைந்து வருகின்றனர். எனவே, இத்தகைய ஒருசில பிரிவினரிடம் தான் திட்டமிட்ட வளர்ச்சியின் பயனாகச் செல்வமும் செல்வாக்கும் பல்கிப் பெருகு கின்றன. பிற பிரிவினர்களின் வாழ்க்கை நிலைகளில் கணிசமான முன்னேற்றம் இல்லை.

**4. வரி ஏய்ப்பு:** சமுதாயத்தின மேல மட்டத்தில் இருபபவர்களில் சிலரும், மேனிலைநடுத்தரப் பிரி வினரில் சிலரும் பல வழிகளில் வரி ஏய்பபு முறை களைக் கையாளுவதைப் பல ஆய்வு அறிக்கைகள சுட்டிக் காட்டுகினறன. நேர்முக வரிகளிலிருந்து தப் பித்துக் கொளளும் இப பிரிவினரின் போக்கு ஒரு புறமும், மறைமுக வரிகளின் சுமைகளால் துனபுறும் ஏழைகளின் போக்கு ஒருபுறமும் காணப்படுவது சமசசீரற்ற செல்வ வருமானப் பஙகீட்டு நிலைக்கான் காரணமாகக் குறிப்பிடப்படுகிறது.

**5. உற்பத்திச் சாதனங்களின் சமச்சீரற்ற பங்கீடு.** வருமானத்தை மேனமேலும் பெருக்குவதற்கு உதவும் உற்பத்திச சாதனங்களின் பங்கீடு சமுதாயத்தின் பல பிரிவு மக்களிடையே சமமான அளவுகளில் இலலை உற்பத்திச் சாதனங்கள் தனியாா உடைமையாக இருந்து பயன்படும் பொருளாதாரங்களில் செல்வ வருமானப் பங்கீட்டு முறை சமச் சீரற்றதாகத்தான இருக்க முடியும என்பதைத் தண்டேகா (Dandekar), இராத்து(Rath) போன்றோர் வலியுறுத்திக் குறிப்பிட் டுள்ளனா.

**6. மூலதனச் செறிவுள்ள தொழில் நுட்பம்** (Capıta -intensıve Techonology) தனியார் துறைப பொரு ளாதாரங்களில் மூலதனச் செறிவுளள தொழில் நுட்ப நிலைகள் தொடர்ந்து பயன்படுத்தப்படும்போது பல் வகைத் தொழிலாளர்கள் வேலையில்லாமல் இருககத் தக்க நிலையும் வருமானத்தை இழக்கத்தக்க நிலை யும் தோன்ற வாய்ப்புகள உணடு. இதுவும் சமச் சீரற்ற செல்வ வருமானப் பஙகீட்டை மேன மேலும் முனைப்பாக்குகிறது.

**7. வேலையின்மையும் குறைவேலையும்** (Un-employment and Underemployment) பல்லாணடு களாகத் திட்டமிட்ட முயற்சிகளை மேற்கொணடும இந்தியப் பொருளாதாரத்தில வேலையின்மையின் அளவும் குறைவேலை அளவும் குறையவில்லை எனப தோடு, அதிகரிததும் வருகிறது என்று பல ஆய்வு அறிக்கைகள் குறிப்பிடுகினறன.

**8. குறைவான உற்பத்தித் திறன்:** குறைவான உற்பத்தித் திறன், சமச்சீரறற செல்வ வருமானப் பஙகீட்டிற்கான காரணமாகவும், சமச்சீரறற செல்வ வருமானப் பஙகீட்டின் விளைவாகவும் இருக்கிறது.

**9. மக்கட் பெருக்கம** திட்டமிட்ட பல முயற்சி களால் இநதியாவில் மக்கட் பெருக்க விகிதத்தை ஓரளவுக்குக் கட்டுப்படுத்த முடிந்திருக்கிறது. எனவே, பெருகி வரும் மககட் பெருக்கத்தினால் ஏறபடும் பல சிக்கல்களுள் ஒன்றாக, சமச் சீரறற செல்வ வருமா னப் பங்கீடும் தொடர்ந்து இருந்து வருகிறது.

**10. பண வீக்கம்:** திட்டமிட்ட பொருளாதார வளர்ச்சிக் காலத்தில் விலைகள் பல மடஙகு பெருகி வருகின்றன. விலை உயாவுக் காலஙகளில செல்வர் களும் உற்பத்தியாளர்களும் வாணிகர்களும் மேன் மேலும் செலவர்களாக மாறுவா. மாத ஊதியம் பெறும் நடுத்தரப் பிரிவினர், நிலையான ஊதியம் பெறும் பல்வகைத் தொழிலாளர்கள, சிறிய நில உடைமையாளர்கள, நிலமில்லா வேளாணமைத் தொழிலாளர்கள் போன்ற பல்வகைப் பிரிவினரின் வருமானம் செல்வர்களுக்கு மாறிச் செல்லும் போக்கு நிலவுவதால் மேனமேலும் ஏழைகளாக மாறுவர்.

**சமச்சீரற்ற பங்கீட்டைக் குறைத்தல்:** பல்வகைக் காரணங்களால் சமச்சீரற்ற செல்வ வருமானப் பங்கீடு தொடர்ந்து இருந்து வந்தாலும், இந்நிலை யைத் தவிர்ப்பதற்காகத் தொடர்சசியான முயறசி களும் மேற்கொள்ளப்பட்டு வருகினறன. அரசின் நிதிக் கொள்கை, வரிக்கொள்கை, வருமானக் கொள்கை, விலைக் கொள்கை, மானியக கொளகை போன்ற பல்வேறு கொள்கைகளும் சமச் சீரற்ற செல்வ வருமானப் பங்கீட்டைக் குறைப்பதையே நோக்கமாகக் கொண்டு செயறபடுத்தப்பட்டு வரு கின்றன. நிலச் சீர்திருத்தங்கள், வேலைப் பெருக்கத் திட்டங்கள், சமுதாயப் பாதுகாப்புத் திட்டங்கள் வறுமை ஒழிப்புத் திட்டங்கள் போன்ற பல்வகைத் திட்டங்கள் யாவும், சமுதாயத்தின் அடிமட்டத்தில் உள்ளவர்களின் வருமானம், சொத்து, வேலை நிலை

ஆகியவற்றை உயர்த்துவதை அடிப்படை நோக்க மாகக் கொண்டு செயற்படுத்தப்பட்டு வருகின்றன.

என்.எஸ்.பா.

**துணை நூல்:**

Thingan, M.L., The Economics of Development and Planning, Vikas Publishing House Pvt. Ltd., New Delhi, 1978.

*செல்வாக்காளர் குற்றம்*: செல்வாக்காளர் குற்றமென்பது சமூகத்தில் உயர்பிரிவினர் தங்கள அலுவல் அல்லது தொழில் புரியுங்கால், தங்களது அலுவல், செல்வாக்கு அல்லது தொழிலால் செய்யும் சமூகவிரோதச் செயல்களாகும். செல்வாக்காளர் குற்றமெனும் கோட்பாடு, பேராசிரியர் சதர்லண்டு என்பார் அமெரிக்கச் சமூகவியல் கழகத்தில் 1939-ஆம் ஆண்டு அது குறித்த ஒரு கட்டுரையை வழங்கிய பின்பே தனக்கென ஒருதனி இடத்தைப் பெற்றது. பன்னெடு நாள்களாக இச் சமூக விரோதச் செயல்கள் வாணிகத்தின் ஒரு இன்றியமையாப் பிரிவாக இருந்துவருகிறது.

செல்வாக்காளர் குற்றம் குறித்துப் பல்வேறு குற்றவியல் அறிஞர்கள் 1939-ஆம் ஆண்டிற்கு முன்னரே இவ்வுலகிற்கு உணர்த்தினர். ஆனால், அவர்கள தங்கள் காலங்களில் இவ்வகைக் குற்றத்திற்கு வெவ்வேறு பெயர்கள் இட்டனர். காயர் என்பார் இதனைப் பொது நலக குற்றஙகள் (Public Welfare Offences) என்றார். பின்னர் வந்த அறிஞர் பெருமக்கள் ஒழுஙகுமுறைப்படுத்தும் குற்றங்கள் (Regulatory Offences) எனவும், விதிவிலக்கிற்கு இடந்தராத குற்றங்கள் எனவும் (Offences of Streliability), சட்ட நுணுக்கஞ் சார்நத குற்றங்கள் (Technical Offences) எனவும் குறிப்பிட்டனர். பேராசிரியர் ஆலபர்ட்டு மோரிசு என்பார் கி.பி. 1872-ஆம் ஆண்டு இது குறித்துக் குற்றங்களை அடக்குதல பற்றிய பன்னாட்டுக் கருத்தரஙகில் ஒரு கட்டுரையைப் படித்தார். மக்ரெக்கர் என்றி, தயாரிப்பாளர் மற்றும் வீட்டு மனை விற்பனையாளர்களின் ஒழுங்கீனங்களைக் கண்டித்தார். தொழிலாளர் சச்சரவு, வாரியங்களின சிக்கல்கள குறித்த பாடநூல்களும் இச் செயலகளைக் கணடித்தன.

குற்றவியல் தத்துவத்தில் செல்வாக்காளர் குற்றத்தையும் சேர்த்திடல் வேணடும் என்று முதலில் கூறியவர் பேராசிரியர் சதாலணடு.

**இலக்கணம்:** சமூகத்தில் செல்வாக்கும் தகுதியும், உடையவர்களும் உயர்நத அலுவல புரிபவர்களும் தங்கள் தொழில் அல்லது செல்வாக்கு உள்ள காலத்தில் புரியும் குற்றம் செல்வாக்காளர் குற்றம் எனப்படும். சமூகத்தில இவ்வகையினருக்குச் சாதாரண மக்களைவிட உயர்ந்த இடம் பொருளாதார நிலையில் இருப்பதால் இவர்கள் செல்வாக்கு உள்ளவர்களாகக் கருதப்படுகிறார்கள. பேராசிரியர் சதர்லண்டு இவ்வகைக் குற்றங்கள் சாதாரணகுற்றங்களை விட ஆபத்தானவை அல்லது இடருடையவை என்றார். செல்வாக்காளர் குற்றத்தில் நிதி இழப்பு அதிகமாகும்; பொது ஒழுக்கத்திற்கு மிகுதியாகக் கேடு விளையும்.

கொள்ளை என்பது சாதாரண குற்றம் (Ordinary Crime). இதைப் புரிவதன் மூலம் குற்றவாளிக்குச் சராசரியாக ஒரு கொள்ளைக்கு 100 உரூபாய் கிடைககலாம், ஐம்பதாயிரம், இலட்சம் ரூபாய் கிடைக்கும் கொள்ளைகள சமூகத்தில எப்போதோ ஒரு வேளைதான் நடைபெறுகிறது. ஆனால், ஒரு கையாடல் மூலம் குற்றவாளி பல கோடிக் கணக்கான உரூபாய் பெற வாய்ப்புள்ளது

செல்வாக்காளர் ஏற்றம் புரிவதன் மூலம் பொது ஒழுக்கத்திற்குப் பங்கம் விளைவிக்கப்படுகின்றது. இதனால் சமூகத்தில் ஒருவர் மற்றொருவரை நமபுவதில்லை. அரசு அலுவலகங்களுக்குச் சென்றால் கையூட்டுக் கொடுப்பதன் மூலமே சானறிதழ பெற இயலும் என்ற மனநிலை மக்களிடையே ஏற்படும். இவ்வாறான ஒழுக்கச் சீர்கேடு நிதி இழப்பை விட வெறுக்கத் தக்கது.

**குற்றத்தின் வகைகள:**

1. கடனீட்டுப் பத்திர விற்பனை மற்றும் முதலீடு செய்வதாக வாணிகத்தில் மோசடி.

2. உணவு மற்றும் மருந்தில கலப்படம செய்தல. தவறான வழிகாட்டும் விளம்பரங்கள்

3. மருத்துவத் தொழிலில் ஒழுங்கீனம்: எடுத்துக் காட்டாகச் சட்ட முரணான வகையில் போதைப் பொருள்கள் விற்பனை செய்தல், கருச்சிதைவுக்கு சட்ட முரணான வகையில் உதவி புரிதல், குற்றவாளிகளுக்குச் சட்ட முரணான வகையில் உதவி புரிதல, விபத்து வழக்குகளில் தவறான அறிக்கைகளும் சான்றுகளும் தருதல், போலி நிபுணர்களாகச் செயற்படுதல், தேவையில்லாமல் மருத்துவ உதவி அளித்தல், தொழிற் போட்டியில கட்டுப்பாடுகள் விதித்தல் முதலியன.

4. வழக்கறிஞர் தொழிலில் ஒழுங்கீனம், நிறுவனங்கள் சட்ட முரணான செயல்கள் புரிய உதவி புரிதல்.

5. போட்டியைத் தவிர்க்கும் பொருட்டு அல்லது விலையை உயர்த்துவதற்காகப் பொறுப்பாண்மை, வணிக மன்றங்களின் கூட்டமைப்பு அல்லது கூட்டணி அல்லது ஒருங்கிணைப்புக் குழு ஏற்படுத்துதல்.

6. பொது அலுவலர்கள் கையூட்டு மற்றும சுரண்டல் புரிதல்.

**இலக்கணத்தின் மதிப்பீடு:** 1. பல்வேறு நாடுகளில செல்வாக்காளர் குற்றங்கள நீதிமன்றங்களில் விசாரணை செய்யப்படுவதில்லை. அவை தீர்ப்பாயங்களிலும், ஆணைக் குழுக்களிலும் விசாரணை செய்து முடிவு செய்யப்படுகின்றன. இக் குழுக்களுக்குத் தண்டனை வழங்கும் அதிகாரம் இல்லை. தண்டனை நீதிமன்றங்களால் மட்டுமே வழங்கப்படும். ஒருவர் நீதிமன்றத்தால் தண்டிக்கப்பட்டால்தான் அவரைக் குற்றவாளி எனக் கூறுதல் வேண்டும் எனக் குற்றவியல் அறிஞர்களில் ஒரு சாரார் கூறுவர்.

2. செல்வாக்காளர் குற்றங்களை நிருவாகவியல் முடிவுக்கு விடுதல் கூடாது. அவ்வாறு விடுவதால் ஒரு நிருவாகி தாம் எதைக் குற்றமென நினைக்கின்றாரோ அதனைக் குற்றமெனத் தீர்வு செய்வதற்குத் துணிவார். அது குறறவியற் சட்டத்தின் அடிப்படைக் கருத்தான 'குற்றமென்பது தெளிவாகச சட்டத்தில் குறிக்கப்படுதல் வேண்டும்' என்னும் கொள்கைக்கு மாறுபாடுடையது. 3. விசாரணைக் காலததில குற்ற நடைமுறைச் சட்டத்திலுள்ள விதிமுறைகள் பின்பற்றப்படுதல வேண்டும். குற்றம் சாட்டப்பட்டவருக்குப் பல்வகையான உரிமைகளும் பாதுகாப்பும உள்ளன. குற்றம் சாட்டப்பட்டவர் நிருவாக ஆணைக் குழுவால் விசாரணை செய்யப்படுங்கால் அவருக்குப் இப்பாதுகாப்புரிமைகள் கிடைப்பதில்லை. சாதாரண குறறவியல் நீதிமனறங்களைப் பொறுத்தவரை புலன் விசாரணையைக் காவலதுறையினரே மேற்கொளவர். இத்துறையினர் நீதிமன்றங்களின் கீழ்ப் பணியாற்றுவதில்லை. ஆனால் நிருவாகவியல் ஆயஙகளைப் பொறுத்தவரை அதற்கெனத் தனிப் புலன் விசாரணை அமைப்பு அதன் கீழ இயங்கும். ஆயமே புலன் விசாரணையை நெறிப்படுத்தும். வழக்கையும் விசாரணை செய்து முடிவு செய்யும் இம் முறையால் குற்றம் சாட்டப்பட்டவரின் உரிமைகள் பாதிக்கப் படுகின்றன எனக் குற்றவியல் அறிஞர்களில ஒரு சாரார் கூறுவர். 4. வழககைச் சான்றுகள் மூலம் மெய்ப்பித்தலின் அளவு குற்றவியல் நீதிமன்றங்களிலும், நிருவாக ஆயங்களிலும் மாறுபடுகின்றது. குற்றவியல் நீதிமன்றங்களில் வழக்குநடை பெறுங்கால் குற்றவாளிதான் அககுற்றததைச் செய்தாரென ஐயத்திற்கிடமின்றி மெய்ப்பித்தல் குற்றம் சாட்டுபவரைச் சார்ந்தது. ஆனால், நிருவாக ஆயங்களில மெய்ப்பித்தலின் அளவு உரிமையியல் நீதிமன்றங் களில பின்பற்றப்படும அளவினதே ஆகும். சான்றுகள் இருப்பின் குற்றம் சாட்டப்பட்டவர் தான் அக் குற்றத்தைச் செய்திருப்பார் என்னும் முடிவுக்கு வரலாம். எனவே, குறறம் சாட்டப்பட்டவருக்குச் சாதாரண நீதிமனறங்கள மூலம் கிடைககும் உரிமைகள இதில கிடைப்பதில்லை. 5. குறறவியல அறிஞர் சிலர் செல்வாக்காளர் குறறத்தைக குற்றமெனக் கூறுதல கூடாது என்பர். ஏனெனில குறறவாளிகள் தங்களைக குற்றவாளிகள் எனக் கருதுவதில்லை. சில வேளைகளில சமூகம் கூட அவர்களைக் குற்றவாளி எனக கருதுவதிலலை. எடுத்துக்காட்டாகப போர்க் காலங்களில் அவசியப பணடங்கள, குறித்த சட்டங்கள கடுமையாககபபட்டு நிறைவேறறப்படும். அககாலங்களில் அவசியப் பணடங்கள கிடைக்காமற் போகலாம். ஒருவா அப்பணடஙகளைப் பதுககி வைதது விறறால் அவரைச் சமூக விரோதி என்றோ செல்வாக்குடைய குறறவாளி எனறோ சமூகம் கூறுவதில்லை. அவரும் தன்னைக் குறறவாளி எனக் கருதுவதில்லை.

**குற்றத்தின வளர்ச்சி:** சாதாரண குற்றங்கள சாதாரண மனிதாகளால் வறுமையாலோ உளநோயாலோ சூழநிலைகளாலோ புரியப்படுகின்றன. ஆனால, செலவாக்காளர் குற்றங்கள பண ஆசையால செலவர்களால செயயப்படுகினறன. இவை மட்டுமன்றி வணிகம் மற்றும் சொத்துககளை வாங்குதல குறித்து பல மாற்றங்கள ஏற்பட்டுள்ளன. மககள தங்கள செல்வத்தைப் பல வழிகளில முதலீடு செய்ய விரும்புகின்றனர். உணர முடியாத சொத்துகள் அதிகம் புழக்கத்தில் உள்ளன. குறறவாளிகள் இது குறித்த குறறங்களைச் செய்து எளிதில பொருளீட்டித் தப்பித்து விட வாய்ப்புக்கள அதிகம் உளளன.

முதல மற்றும் இரண்டாம் உலகப்போர்களும செலவாக்காளர் குறறங்களின வளர்ச்சிககுத் துணை நின்றன. போர்க்கால விதிமுறைகள் பல இயறறப்பட்டன. அவை மட்டுமல்ல. இரண்டாம் உலகப் போருக்குப் பிறகு இந்தியா சுதநதிர நாடாகியது. அவசியப் பொருளகளை உற்பத்தி செய்வதிலும், பெருக்குவதிலும் மற்றும் வழங்குவதிலும் அரசு, பணிகள் நிறைய ஆறற வேண்டிய நிலைமை உண்டாயிற்று. அரசின் கட்டுப்பாடுகள் செல்வாக்காளர் குற்றங்கள் பெருகி வளம்பெற வழி செய்தன. சதந்திரததிற்குப் பிறகு செலவாககாளர் குற்றங்கள் பெருகின. சுதந்

திரத்திற்குப் பிறகு செல்வாக்காளர் குற்றங்கள் குறித்துப் பல சட்டங்கள இயற்றபபட்டன. அவறறுள் சில பின்வருவன: 1. மத்திய ஆயத் தீர்வைச் சட்டம், 2. அன்னியச செலாவணி ஒழுங்குபடுத்தும் சட்டம், 3. ஏற்றுமதி மற்றும் இறக்குமதிச சட்டம், 4. கையூட்டுத தடுப்புச சட்டம் (இலஞ்ச ஒழிப்புச் சட்டம்), 5. உணவுக கலப்படத் தடுப்புச சட்டம், 6. இனறியமையாப் பண்டங்களசட்டம், 7. நிறுவனங்கள் சட்டம், 8. வருமானவரிச் சட்டம், 9. சுங்கத் தீர்வைச சட்டம், 10. செலவ வரிச சட்டம், 11. கொடை வரிசசட்டம்.

**சட்டங்களும் நிறைவேற்றும் முறைகளும்**· சாதாரணக் குற்றஙகளைவிடச் செலவாககாளா குறறங்கள இடருடையவை. ஆனால், அநேக செலவாக்காளர் குற்றங்கள் தணடிககபபடாமல் விடபபடுகின்றன· அதற்கான காரணங்கள யாவை? பேராசிரியர் சதர்லண்டு, மூனறு காரணங்களைக கூறுகிறார்· அவையாவன:

1. செல்வாக்குடைய குற்றவாளிகளின் உயர் சமூகப் பொருளாதாரச் சமுதாயப் படிநிலை.
2. சட்டம் வழங்கும் நிவாரண முறைகள்.
3. செல்வாக்காளர் குற்றம் குறித்துப் பொது மக்களிடம் விழிப்புணர்ச்சியின்மை.

சாதாரணக் குற்றங்களைப் பொறுத்த வரையில் குற்றவாளிகள உடனடியாகக கைது செய்யப்பட்டு விசாரணை செய்யப்பட்டுத் தணடிக்கப்படுகினறனர். ஆனால, செலவாககாளர் குறறஙகளைப் பொறுத்த வரையில் குற்றவியற் றுறையின் அஙகங்கள் அவவாறு செயற்படுவதிலலை. செலவாக்காளர், நீதிபதி, அரசு வழககறிஞர், காவல துறையினர் அனைவரும் சமுதாயததின மேலநிலையில உளளவர்கள். அவர்கள் அனைவரும் ஒரே வகுபபினா. அதனால் குற்றவியற் றுறை அலுவலர்களின் செயல முறைகள் வேறுபடுகினறன. செல்வாக்குடைய குற்றவாளிகள் சாதாரணக் குற்றவாளிகளை விட அதிகத் திறன் பெறறவர்கள். சட்டத்தின் கண்களிலிருந்து எவவாறு தபபுவது எனற முறையை முன்னரே முடிவு செய்த பினனர்த் தான் குற்றம் செய்ய முறபடுகின்றனர்.

பயன்படுத்துவோர், முதலீடு செய்வோர், பொது மக்கள் முதலானோர் ஒன்று சேருவதிலலை. சட்டத்தில அவர்களுக்குப் போதிய நுட்பஅறிவு இலலாமையால் தங்களையும் அவர்களால் காப்பாற்றிக கொள்ள முடியவில்லை. இவை மட்டுமன்றி ஒரு சில குற்றங்களைச் சாதாரண கணகளால உணர்தல் இயலாது. குற்றம்புரிந்த ஒரு சில ஆணடுகளுக்குப் பினனரே வெளிப்படும் குற்றஙகளும் உளளன.

ஒரு சில வேளைகளில் செல்வாக்காளர் குற்றங்கள் புரிவதற்குப் பொதுமக்களும் காரணமாக இருக்கிறார்கள். எடுத்துக் காட்டாக வெளிநாட்டுப் பொருள்களை எடுத்துக் கொண்டால் அப் பொருளகளுக்குத் தேவை அதிகமாக இருப்பதினாலேயே கடத்தல் தொழில் தங்கு தடையின்றி நடைபெறுகின்றது வேறுசில எடுத்துக்காட்டுகள் கறுப்புச் சந்தை, பொது அலுவலர்களுக்குக் கையூட்டு வழங்குதல் போன்றவையாகும்.

தண்டனைகளைப் பொறுத்த வரையில் சாதாரண குற்றங்களுக்குக் கொடுரமான தண்டனைகள் வழங்கப்படுகின்றன. எ.கா. தூககுத் தணடனை, ஆயுள தணடனை, சிறைத் தண்டனை, தணடம், பொருள் இழப்பு முதலியன. ஆனால் ஆபதது வாய்ந்த செலவாககாளர் குற்றஙகளுக்குச் சாதாரணத் தண்டனைகளே வழங்கப்படுகின்றன. எ கா செயலகளைச் செய்யாமலிருக்க ஆணை பிறப்பித்தல் (Cease and desist orders), கரும்பட்டியலில் சேர்த்தல் (Black listing the offenders). இவ்வாறான தண்டனைகளால் குற்றங்கள பெருகுமே தவிரக குறைவதில்லை

**நீதி மன்றங்கள்:** நீதிமன்றங்கள் செலவாக்குடைய குற்றவாளிகளுககுச் சலுகைகள காட்டியே வருகினறன. அவர்களைத தணடிப்பதறகுப் பதிலாகச் செயல்களைச் செய்யாமலிருககும ஆணைகள் பிறபபிககினறன. இததணடனைகள மேறகூறியபடி சாதாரண குற்றவாளிகளுககு வழங்கபபடுவதில்லை. ஆனால, இப்போது செலவாக்குடைய குறறவாளிகளைப் பொறுத்தவரை நீதிமனறஙகளின் நிலையில் பெருத்த மாறுதல் ஏற்பட்டுள்ளது.

அமெரிககாவில் 1959 வரை, குற்றவாளிகள குற்றத்தை நீதிமன்றத்தின் முன் ஒத்துக கொணடால சிறைத் தணடனை வழஙகப்படவிலலை. நானகு வணிகர்கள் மேல பொறுப்பாணமைககு எதிராக 1959-ஆம்ஆண்டு வழககுத் தொடுக்கப்பட்டுக்குற்றத்தை ஒபபுக கொணட நிலையில சிறைத் தணடனை வழஙகப்பட்டது. இதே போனறு 44 பங்கமைப்பு உயர் அதிகாரிகளுககு 1961-ஆம ஆண்டும் சிறைத் தணடனை வழஙகபபட்டது.

இந்தியாவைப் பொறுத்தவரை, கீழவிசாரணை நீதி மன்றஙகள் செல்வாககாளர் குற்றத்தின் தனமையை அறியாமல் சாதாரண தணடனைகள் வழங்குகினறன.

இநதிய சட்ட ஆணைக்குழு தன் 47-ஆம் அறிககையில் இதைப் பற்றி விவாதிததது, கீழ் நீதிமனறங்கள, செல்வாக்காளர் குற்றத்தின தன்மை, அதனால

நாட்டின் பொருளாதார வீழ்ச்சி முதலியனவற்றை உணர்ந்து தண்டனை விதித்தல் வேண்டும். புலன் விசாரணை அமைப்பு, அரசு வழக்கறிஞர் முதலானோர் இவற்றை உணர்ந்து செயற்படுதல் வேண்டும் எனவும் ஆணைக்குழு கூறியது. இந்திய உச்ச நீதி மன்றமும் பல்வேறு வழக்குகளில் இவ்வகைக் குற்றங்களுக்கு அடையாளத் தண்டனைகள் வழங்கப்படுதல் கூடாதெனவும், குற்றம் மறுமுறை நிகழாமலிருக்கவும், சமுதாயத்தைப் பாதுகாக்கவும் கடுந்தண்டனைகள் வழங்கப்படல் வேண்டும் எனவும் கூறியது.

**வழக்கறிஞர் தொழில்:** வழக்கறிஞர் ஒருவர் நீதி மன்றத்திற்கும், கட்சிக்காரருக்கம், எதிர்த் தரப்பினருக்கம் ஆற்ற வேண்டிய கடமைகள் பல உணடு. ஆனால், இத்தொழிலில் நேர்மையாக விளங்கினால் பொருளீட்டவோ, புகழீட்டவோ முடியாது என்ற நிலை உள்ளது. இடைத் தரகர்களை நியமித்தல், கட்சிக்காரரின பணத்தைக் கையாடல் செய்தல், குற்றவாளிகளுக்குக் குற்றம் புரிய உதவுதல் முதலியன தடை செய்யப்பட்டுள்ளன. ஆயினும், பெரும்பாலான வழக்கறிஞர்கள் தஙகள் தொழிலின் ஒரு பகுதியாக இவற்றைச் செயற்படுத்தி வருகின்றனர்.

கட்சிக்காரரின் அறியாமையைப் பயன்படுத்தி அவரை ஏமாற்றுதல் கூடாது. தங்களுக்கு ஏதாவது தீங்கு ஏற்படுமாயின் பொது மக்கள் சட்டப்பேராயத்தில்(Bar Council) முறையிடலாம். இதைப்பொது மக்கள் அறிய வழியில்லை. எனவே, வழக்கறிஞர்கள் அதனைத் தமக்குச் சாதகமாகப் பயன்படுத்திக் கொள்கின்றனர். இதனால், வழக்கறிஞர் தொழிலின் செல்வாக்குக் குறைந்து கொண்டு வருகின்றது.

**மருத்துவத் தொழில்:** மருத்துவத் தொழில் புரியும் ஒரு சிலர் குற்றங்களைச் செய்ய அஞ்சுவதில்லை. இத்தொழில் புரிவோர் செய்யும் சில குற்றங்கள் கருச்சிதைவு, பொய் மருத்துவச் சான்றிதழ்கள் வழங்குதல், தேவையில்லாமல் நெடுங்காலத்திற்கு மருத்துவ உதவி அளித்தல் முதலியன. மேலும், தங்கள் மருத்துவப் பிரிவுக்குச் சம்பந்தமில்லாத மருந்துகளை எழுதித் தருதல், குற்றவாளிகளுக்குத் துணை புரிதல், கட்டணத்தைப் பிரித்தல் முதலியனவும் சாதாரணமாக நடைபெற்று வருகின்றன.

**அரசியல் ஊழல்கள்:** அரசு ஊழியர்களின் இலஞ்ச ஊழல்களை விட அமைச்சர்கள் மற்றும் அரசியல் வாதிகளால் புரியப்படும் இலஞ்ச ஊழல்கள் ஆபத்தானவை. இவை பொது மக்களுக்கு எளிதில் புலப்படும் தன்மை வாய்ந்தவை. அரசியல் வாதிகள் அவர்களின் உறவினர்கள் செல்வாக்குள்ள போதே தகுந்தபடி சம்பாதித்துக் கொள்கின்றனர். சந்தானம் குழு இந்நிலையைப் பற்றி விவாதித்தது. அரசு அலுவலர்களுக்கு நடத்தை நெறிமுறைகள் பல உள்ளன. ஆனால், அமைச்சர்கள், சட்டமன்ற உறுப்பினர்கள், அரசியல் கட்சியினர் முதலானோருக்கு நடத்தை நெறிமுறைகள் வகுக்கப்படவில்லை எனக் கூறியது.

மீ.அ.

**செலடன் மட்கலன்** சீனர், கொரியர், சியாமியர் பயன்படுத்திய அழகும் வனப்பும் மிக்க மட்கலன்களாகும். பளபளப்புமிக்க நேர்த்தியான இம் மட்கலன்கள் பசுமை, நீலம், சாம்பல், பொன்பழுப்பு ஆகிய நிறங்களைக் கொண்டு ஒப்பனை மிகுநது காணப்படும். செலடன் (Celadon) ஓர் உயர்வகை மட்கலன் ஆகும். இது ஒருவகை உயர் களிமணணால் ஆக்கப்படுவது. இக்களிமண்ணுடன் இரும்பைச் சேர்த்துச் செய்வர். மட்கலன்களை மெருகூட்டுவதற்கு முன்பே இரும்பைச் சேர்த்துச் சூளையில இடுவர். அதனால், இரும்பு களிமண்ணுடன் ஒனறாகக் கலந்து அழகிய நிறத்தை உண்டாக்கும். கீழைநாடுகளில் செலடன் மட்கலன் மிகப் பழங்காலத்தில் இருந்தே பயன்படுத்தப்பட்டது. மேற்கு நாடுகளில் சிறிது காலம் கடந்தே இதனைப் பயன்படுத்தினர். இம்மட்கலன்கள் இந்தியா, பாரசீகம், எகிப்து போன்ற நாடுகளுக்கு ஏற்றுமதி செய்யப்பட்டன. அவற்றைத் தாங்கு (T'ang), சங்கு (Sung), மிங்கு (Mıng) மரபின் அரசர்கள் வெளிநாடுகளுக்கு ஏற்று



செலடன் மட்கலன

மதி செய்தனர். அழகுமிக்க தன்மையால் இம்மட்கலனை வெளிநாட்டினர் பெரிதும் விரும்பினர். மேலும் இம்மட்கலனில் நஞ்சு கலந்த உணவுப் பொருளை வைத்தால் மட்கலனின் நிறம் மாறிவிடும் என்ற மரபுக் கதையாலும் இதனை மக்கள் மிகுதியாகப் பயன்படுத்த விரும்பினர். இந்தியாவிற்கு இம்மட்கலன்கள சீனாவிலிருந்து இறக்குமதி ஆயின. இவை கேரளாவில் சேரமான் பரம்பு என்ற இடத்திலும் தமிழகத்தில் காஞ்சிபுரம், உறையூர் பெரிய பட்டினம் போன்ற இடங்களிலும் கிடைத்துள்ளன.

ஆன் மரபு (Han dynasty) அரசர்கள் யூயிக்கு (Yueh)எனப்படும் ஒருவகைச் செலடன் மட்கலனைச் செய்தனர். சுங்கு மரபினர் பொன், பழுப்பு நிறம், பச்சை நிறம் ஆகிய நிறங்களில் இம்மட்கலன்களைச் செய்தனர். அவர்கள் காலத்தில் அம்மட்கலன் உலூங்-சுவான் (Lung-Chuan) என்ற இடத்தில் செய்யப்பட்டது. ஐரோப்பிய நாடுகளுக்கு கி.பி. 14-ஆம் நூற்றாண்டில் இம்மட்கலன் புழக்கத்திற்கு வந்தது. கிண்ணங்கள், சாடிகள், தட்டுகள் போன்றவை செலடன் மட்கலன்களுள் குறிப்பிடத்தக்கவை. செலடன் மட்கலன்கள் பளபளப்புமிக்க நிறங்களையும் தடித்த பக்கத்தையும் உடையவை. இம்மட்கலன்களின்மீது பூ, இலை வேலைப்பாடுகள் காணப்படும்.

கொரிய செலடன் மட்கலன்கள் நீலமும் பச்சையும் கலந்த அமைப்புடையவை. இவை சுரைக்குடுக்கைப் போன்றோ முலாம்பழ அமைப்பிலோ காணப்படும்.சியாமிய செலடனும் சீனச் செலடன் வகையை ஒத்தது. சப்பானியர்களும் செலடன் மட்கலன்களைப் பயன்படுத்தினர். செலடன் மட்கலனைப் போன்றே மட்கலன்கள் சப்பானில் செடோ(Seto) என்ற இடத்தில் செய்யப்பட்டன. செலடன் மட்கலன்கள் சப்பானில் கி.பி. 17-ஆம் நூற்றாண்டில் அரிடா (Arita) என்ற இடத்தில் செய்யப்பட்டன. இன்று செலடன் மட்கலன்கள் பாங்காகில் செய்யப்படுகின்றன. இத்தொழில இப்பகுதி மக்களின் குடிசைத் தொழிலாக உள்ளது.
சு.இரா.

## செலவிடத் தக்க தனியாள் வருமானம்:

நாட்டு வருமானம் பொருளாதார வளர்ச்சியோடு இணைந்ததாகும். நாட்டு வருமானத்தைப் பற்றி மார்சல் (Marshall), பிகு (Pigou), பிசர் (Fisher) போன்ற பொருளியல் அறிஞர்கள் பொருள் வரையறைகளையும், விளக்கங்களையும் அளித்துள்ளனர். நாட்டின் இயற்கை வளங்களின் மீது மூலதனமும் உழைப்பும் சேர்ந்து ஆண்டுதோறும் பொருள் உற்பத்தி செய்கின்றன. இவற்றின் மொத்த மதிப்பு நாட்டு வருமானம் என்று குறிப்பிடப்படும். பொருளாதார சக்திகள் உருவாக்கும் வருமானங்கள் நாட்டு வருமானத்தில் அடங்கும்.

நாட்டு வருமானத்தைக் கணக்கிடும்போது சில கருத்துகளை மனங்கொள்ளவேண்டும். தனியாள் செலவிடத் தக்க வருமானம் (Personal Disposable Income), தனியாள சேமிப்பு போன்றவை இவற்றில் அடங்கும். இவை மூன்றாம் தேசிய வருவாய்க் கணக்கெடுப்பில முக்கிய பங்கு வகிக்கின்றன.

தனியாள் வருமானம் என்பது நாட்டிலுள்ள தனிமனிதராலும், குடும்பத்தினராலும் பல்வேறு வகைகளில் கிடைக்கும் வருமானமாகும். நாட்டு வருமானத்தின் பலவேறு காரணிகளால் ஓர் ஆண்டில் கிடைக்கும் மொத்த வருமானத்தின் எல்லாப் பகுதிகளும் இத்தனியாள் வருமானத்தில அடங்கா. பல துறைகளின் வருமானத்தைக் கழித்தல அவசியமாகிறது. நிறுவனத்தின் இலாபத்தில் நிறுவன வரியைக்கழித்து விட்டுத்தான் இலாபத்தின் எஞ்சிய பகுதியை நிறுவனம் பங்குதாரர்களுக்கு அளிக்கிறது. இலாபத்தில் ஒரு பகுதியை நிறுவனம் தக்க வைத்துக் கொள்கிறது. பணியில் ஈடுபட்டிருக்கும் அரசாங்கப் பணியாளர்கள், தொழிலாளர்கள ஆகியோரின் வருமானத்திலும் பல கழிவுகள் செய்யப்படுகின்றன. மாத ஊதியத்தில் சிக்கன நிதி (Provident fund),சமூகப் பாதுகாப்பு நிதி (Social Security Contribution) போன்றவைகளுக்காக ஊதியத்தில் பிடித்துக் கொண்டு பணிபுரிவோர்களுக்கு மீதிப் பணம் தரப்படுகிறது. இந்த மீதிப் பணம்தான் தனியாள் வருமானம் (Personal Income) என்று குறிக்கப்படுகிறது.

தனியாள் வருமானம் நாட்டிலுள்ள குடும்பங்களின் வாங்கும் சக்தியை அளவிடுவதற்குப் பயன்படுகிறது. அது முழுமையும் தனி மனிதனுக்கோ குடும்பத்தினருக்கோ முழு அளவில் நுகர்வதற்குக் கிடைப்பதில்லை. காரணம், தனியாரும், குடும்பத்தினரும் வருமானத்தின் ஒரு பகுதியை வருமான வரியாகச செலுத்தி விடுகின்றனர். வரி செலுத்தியபின தனி மனிதர்களுக்குக் கிடைக்கும் வருமானமே செலவிடத் தக்க தனியாள் வருமானம் எனப்படும். இந்தத் தனியாள் வருமானம் நுகர்வுக்காகப் பயன்படுத்தப்படுகிறது.

செலவிடத் தக்க தனியாள் வருமானம = தனியாள் வருமானம் (Personal Income) — தனியாள வருமானவரிகள்(Personal Income Taxes).

மேலும், செலவிடத் தக்க தனியாள் வருமானம் முழுவதுமாக நுகர்ச்சியில் எல்லோராலும் பயன்படுத்தப்படுவதில்லை. பெரும்பாலானோர் செலவிடத் தக்க வருமானம் போக மீதியைச் சேமிக்கிறார்கள்,

செலவிடத் தக்க தனியாள் வருமானம் = நுகர்ச்சி (Consumption) + சேமிப்பு (Saving)

செலவிடத் தக்க தனியாள் வருமானத்தைத் தனியார் வருமானத்துடன் ஒப்பிட்டு, வருமான வரியின் பணச் சுமையைக் (Money burden) கணடுபிடிககலாம். எனவே, பொருளாதார ஆய்விற்கு இது பெருமளவில் பயன்படக் கூடிய கருத்துபபடிவம் ஆகும். இந்தியாவில் செலவிடத் தக்க தனியாள் வருமானத்தைக் கண்டுபிடிப்பதில் பல சிக்கல்கள் உள்ளன.

தேசிய மாதிரி ஆய்வு நிறுவனம் பல்வேறு ஆய்வுகளின் மூலம் தேசிய வருமானத்தைப் பற்றிய புளளி விவரங்களைச் சேகரித்துத் தருகிறது. இநதியா போன்ற வருமான ஏற்றத் தாழ்வுளள நாடுகளில் செலவிடத் தக்க தனியாள் வருமானம் குறைவாகவே உள்ளது எனலாம் இந்தியாவில் 76 விழுக்காட்டு மக்கள கிராமப்புறங்களில் வாழ்கிறார்கள். கிராமப்புறத்தில் பெரும்பாலானோர் வறுமைக் கோட்டிற்குககீழ் வாழ்கிறார்கள். மேலும், கிராமப் புறங்களில் வாழ்கின்ற செல்வர்கள் தனியாள் வருமான வரியைச் செலுத்தத் தவறுவதால் கிராமப்புறத்தில் செலவிடத் தக்க தனியாள வருமானத்தைக் கணககிடுவதும் அரிதாக உள்ளது.

பணித் துறையில் (Service Sector) பணிபுரியும் அலுவலர்கள், பெரும் தொழிற்சாலைகளில் பணியாற்றும் தொழிலாளர்கள போன்றோரின் தனியாள் வருமானத்தையும், செலவிடத்தக்க தனியாள் வருமானத்தையும் கணக்கிடலாம். இந்த வருமானப் பகுதியினர் பெரும்பாலும் நகரஙகளிலும் பெருநகரங்களிலும் வாழ்கின்றனர். மு.நா.

**துணை நூல்கள்:**

**நடராசன்,பா.,** இந்தியப் பொருளியல், திருநெல்வேலி, தென்னிந்திய சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழக லிமிடெட், திருநெல்வேலி, 1962

Edward Shapiro, Macro Economic Analysis, Second Ed, Harcourt, Brace and World Inc., New York, 1970.

**செலவு-நன்மைப் பகுத்தாய்வு.** செலவு-நனமைப் பகுத்தாய்வு, பொருளாதாரம் முழுவதை அல்லது குறிப்பிட்ட ஒரு திட்டத்தை மதிப்பிடப் பயன்படுத்தப்படும் ஒரு நுட்பவினை (Technique) முறையாகும். இருபதாம் நூற்றாணடின் தொடக்க காலத்தில இவ்வாய்வு முறை செயற்பட ஆரம்பிததது. இது, ஒரு நாட்டுச் கொள்கைகளினால் விளையும் சமுதாய நன்மை தீமைகள என்ன என்று ஆய்வதற்குப் பயனபடுவதோடு, பணத்தை அளவிடும் சாதனமாகக் கொணடு நன்மை, தீமைகளை மதிப்பிடவும் உதவுகிறது. எடுத்துக்காட்டாகப் பேருந்துச் சாலை ஒன்று அமைக்க வேண்டுமென்றால் சாலை அமைக்கவும், அதனைப் பாதுகாககவும் செலவுகள் உள்ளன. பின் சாலையில் ஓடும் ஊர்திகளின் இரைச்சல், அவறறால் ஏற்படும் விபத்துகள், அவை வெளியேற்றும் கழிவுப் புகையினால் வாயுமண்டலம் பாதிக்கப்படுவது போன்ற குறைகளும் செலவினத்தைச் சாரும். ஏனென்றால், இவை நேராகவோ மறைமுகமாகவோ சமுதாயத்தைப் பாதித்து, அதனால் மக்களுக்குச் செலவுகள் அதிகரிக்கின றன. இவை சமுதாயச செலவுகள் (Social Cost) எனப்படுகினறன. சாலையினால் நன்மைகள் பல மக்களுக்குக் கிடைக்கின்றன. எடுத்துக்காட்டாக, சாலையில் ஊர்திகள ஓட, மக்கள் அவற்றில் பயணம் செய்வதினால் பயண நேரம் குறைவதுடன், பயணமும் வசதி நிறைநததாயும இருக்கிறது இத்தகைய நன்மைகளைச் செலவுகளோடு ஒப்பிட்டு, நனமைகள் அதிகமாக இருநதால பேருந்து அமைத்தது பயனுள்ளதெனறு முடிவு செய்யலாம். சமுதாயச் செலவுகளை 'எதிரமறை நன்மைகள் (Negative Benefits) என்றும், சமுதாயம் பெறும் நன்மைகளை 'எதிர்மறைச் செலவுகள்' (Negative Costs) என்றும் குறிப்பிடுகின்றனர்.

இங்கு, 'செலவு', 'நன்மை' என்று குறிப்பிடும்போது 'சமுதாய', 'பொது' என்ற அடைமொழிகள் முக்கியமானவை. எடுத்துக்காட்டாக, பயணியர் விடுதி ஒன்று தனியார் ஒருவரால் கட்டப்பட்டுப் பயணிகளிடம் அவர் வாடகை வாங்கும் போது, வருமானததிலிருநது செலவுகளையெல்லாம் அடைத்துப் பின் அதற்கு மேல் போதிய ஆதாயத்தையும் எதிர்பார்க்கிறார். அடுக்கு மாடிக கட்டிடமாகிய அது சுற்றுப்புறத்தில் இடைஞ்சலை அளிககிறது; பல சமுதாயத் தீமைகளையும், தடைகளையும் அளிக்கிறது. அவை சமுதாயச் செலவுகள். அவற்றைப் பற்றித் தனிப்பட்டவர் எனற முறையில் அவர் கவனம் செலுத்தமாட்டார். அவருககு ஆதாயம் அளிக்கும் முதலீடு என்பதுதான் முக்கியம். மற்றவர்களுக்கு ஏற்படும் இடைஞ்சல்கள், தீமைகளைப் பற்றி அவர் பொருட்படுத்த மாட்டார.

பொது முதலீடுகளில் சமுதாய நன்மை-தீமைக் கண்ணோட்டம் கட்டாயம் இருககும். தனியார் முதலீட்டிலும் சிறிது 'பொது நலக' கண்ணோட்டம் இருக்கலாம்.

பொதுவாக, செலவு-நன்மைப் பகுத்தாய்வின்படி முதலீட்டின் விளைவாகிய எல்லா ஆதாய இழப்பு

களும் சமுதாயக் கண்ணோட்டத்தில் சீர்தூக்கிப் பார்க்கப்படுகின்றன. ஆனால், இந்தச் சமுதாயக் கண ணோட்டத்தில் பல சிக்கலகளும உளளன. சமுதாயம் என்பது தனியார் பலரால ஆன ஒரு கூட்டு; சமு தாய நன்மை, தீமை எனறு சொல்லும்போது, அது குறிப்பிட்ட நாடு, காலத்திற்கு உரியது. பொதுவாக, காலத்திற்கு அப்பாற்பட்ட நன்மை, தீமை கிடை யாது. எனவே, இன்றைய சமுதாயச் சூழ்நிலை, பிற் கால சமுதாயத்திற்கும் பொருந்து மென்று திட்ட வட்டமாய் சொலலமுடியாது. ஆதலால, இன்றைய சூழ்நிலையை வைத்துப் பிற்காலத்தவரை மதிபபீடு செய்தால் அது மக்களாட்சி முறைககு முற்றிலும் புறம்பானதாக இருக்கும்.

**தோற்றம்:** ஆக்க நலப் பொருளாதாரக் கொள்கை தான் (Welfare Economics) செலவு-நன்மைப் பகுத் தாய்வுக்கு அடிப்படை என்று சொல்லுவதுணடு. ஆக்க நலப் பொருளாதாரக் கொள்கை கி.பி.19-ஆம நூற்றாணடைச் சார்நததாயினும், செயல்முறையில செலவு-நன்மைப் பகுத்தாய்வு 1930-க்குப் பிறகுதான் ஆராயப்பட்டது. அமெரிக்காவின் வெள்ளக கட்டுப் பாட்டுச் சட்டத்தில் 1936-இல் நன்மைகளைச செல வோடு ஒப்பிட்டுப் பார்க்கும் பழககம் நுழைககப்பட் டது. பொது முதலீடுகளில், சமுதாயக் கணணோட் டமும் நெருங்கி இணையவேணடுமென்பது தெளிவாக் கப்பட்டது. எனினும், 'நன்மை' என்றால எனன என் பது, 1950-க்கு மேல அரசின் திட்டங்களில இப்பகுத் தாய்வைப் பயன்படுத்தும்போது மேலுமமேலும் தெளிவாக்கப்பட்டது. அதனபின் பல நூல்கள வெளி யிடப்பட்டன. செலவுநன்மைப் பகுத்தாயவுக்கு 1958-ஆம் ஆண்டு திருப்பு முனை என்று சொலலவேண்டும். எக்சுடெயின் (Eckstein), மக்கீன் (Mckeen), கிருட்டில்லா (Krutilla) முதலிய பொருளியலார் தங்கள ஆய்வு நூல்களில் இம்முறையைக் கையாண்டு அதன் செயல் முறையையும், விளைவுகளையும் தெளிவுபடுத்தினர். இந்நூல்களெல்லாம் பொது முதலீட்டினால் நிகழக கூடிய நிகர நன்மைகளைப் பற்றிய ஆயவுகள். மாசு (Maass A.) எனபவர் 1962-இல 'நீர் வளங்களின் அமைப்புத் திட்டம்' (Design of Water Resource Systems) என்ற நூலில் செலவு-நனமைப் பகுத்தாய்வு முறை நீர் வளர்ச்சித் திட்டத்திற்கு எவ்வாறு பயனுள்ளது என்பதைத் தெளிவாக விளக்கினார். பலரால் எழுதப்பட்ட கட்டுரைகளைக் கொணட இந்நூல் செலவு-நன்மைப் பகுத்தாய்வு முறைக்கு மூலநூல் என்று இன்றும் கருதப்படுகிறது.

இங்கிலாந்தில் இம்முறை 1967-இல் பின்பற்றப் பட்டது. இந்தியா போன்ற வளர்ச்சி குன்றிய நாடு களில், நீர் மின்சாரத் திட்டங்கள், நீர்ப் பங்கீட்டுத் திட்டங்கள், நீர்ப் பாசனங்கள், ஆற்று நீர்ப் பங் கீட்டு முறை, அணைக்கட்டுகள போனற பொதுநலத திட்டங்களின் விளைவுகளை மதிப்பீடு செய்வதற் கேற்ற ஆய்வுக் கருவியாக இப்பகுத்தாய்வு பயன் படுத்தப்படுகிறது.

இவ்வாய்வின் அடிப்படைக் கொளகை என்ன வென்றால், பொதுத் திட்டஙகளின் மொத்த நன மைகள் செலவுகளுக்கு மேல் கூடுதலாக இருக்க வேண்டும். பல திட்டங்களுள ஒன்றைத தேர்ந் தெடுக்க வேண்டுமென்றால், செலவுக்கு மேலே கூடு தல் நன்மைகளைத் தரும் திட்டமே தேர்ந்தெடுக்கப் பட வேணடும்.

**சமுதாயச் செலவுகளையும் நன்மைகளையும் முறைப்படுத்துதல்:** முதலீட்டின சமுதாயச் செலவு களை நேர்முக, மறைமுகச் செலவுகள எனறும், சமுதாய நன்மைகளை நேர்முக, மறைமுக நன்மை கள் எனவும் பிரித்துக் கூறுவதுணடு. உற்பததிக் காரணிகளைப் பயன்படுத்தி ஏறபடும் செலவுகள் நேர்முகச செலவுகள்' (Direct Costs), இது 'பிற வாய்ப்புச் செலவு' (Opportunity Cost) கொள் கையை அடிப்படையாகக் கொணடது. 'பிற வாய்ப் புச் செலவு' என்பது ஒரு திட்டம் தேர்ந்தெடுக்கப படும்போது, கைவிடப்படும் மறறொரு திட்டத்தின் இறுதிநிலை உற்பத்தியைக் (Marginal Product) குறிக்கும். காரணிகளின அளிபபில் பறறாக்குறை இருப்பதால் சில காரணிகள் மட்டுமே திட்ட உற்பத் திக்குப் பயன்படுத்தபபடுகின்றன. கைவிடபபடும உற பத்திக் காரணியின் இறுதிநிலை உற்பத்தியின மதிப் புத்தான் 'பிற வாய்ப்புச் செலவு' (Opportunity Cost) எனப்படுகிறது.

பிற வாய்ப்புச் செலவை மதிப்பிடும்போது, உற பத்திச் செய்முறை (Production Process) யிலுள்ள இணை மூலப் பொருள்களை (Complementary Resources) விட்டுவிட வேண்டும். அரியகாரணியை (Scarce Factor) நாட்டுவளர்ச்சித் திட்டஙகளுக்குப் பயன்படுத்தும்போது, அதன் இறுதிநிலைச செலவு (Marginal Cost) உச்சநிலை வரை (Maximum Level) பயன்படுத்தப் படவேண்டும். மற்ற உற்பத்திக் காரணிகளுக்கேற்ப இணை மூலப் பொருளகளில்லா மையால், வாய்ப்பு வழிச் செலவு மிகக் குறைவாகவே இருக்கும். பல வளர்ச்சி குனறிய நாடுகளில் சில மூலப் பொருள்கள் பயன்படுத்தப்படுவதில்லை. இவ வாறு பயன்படுத்தப்படாத அல்லது குறைந்த அளவு பயன்படுத்தப்படும் மக்களையோ, மூலப் பொருள

களையோ உற்பத்தியில் நுழைக்கும்போது, அவற்றால் வரக்கூடிய முதலீட்டின் நேர்முகச் சமுதாயச் செலவுகள் மிகக் குறைவாக இருக்கும். சில பொருள்கள், பணிகளைப் பொறுத்தவரை, அளிப்புக்கு மிக அதிகமாகவே நுகர்வு ஏற்படுவதுண்டு. தேவைகளுக்கு ஏற்ற அளிப்பு இல்லாததனால், அளிப்பில் பற்றாக்குறை (Scarcity) ஏற்படுகிறது. எனவே, அப்பொருளின் சந்தை விலையைக் கொண்டு அதன் தட்டுப்பாட்டு நிலையை அளவிட இயலாது. ஆதலால், அப்பொருளின் வாய்ப்பு வழிச் செலவோடு தேவையான தொகையைச் சேர்த்துச் சமுதாயச் செலவை மதிப்பிட வேண்டும். அதாவது,

$$\text{ச.செ.} = \text{வா.வ.செ.} \times \frac{\text{ப.வீ.}}{\text{ஈ.வீ.}}$$

அதாவது, ச.செ.=(உற்பத்தியில்) சமுதாயச் செலவு.

வா.வ.செ. =வாய்ப்பு வழிச்செலவு

ப.வீ. =பயன்பாட்டு வீதம்

ஈ.வீ. =ஈடு செய் வீதம்.

மேலேயுள்ள சமன்தொடரில் ப.வீ=ஈ.வீ.யாக இருந்தால் சமுதாயச் செலவு ஈடுசெய் செலவுககுச் சமமாக இருக்கும். மாறாக, ப-வீ., ஈ.வீ குக் கூடுதலாக இருந்தால், சமுதாயச செலவு வாய்ப்பு வழிச் செலவுக்கு அதிகமாகவே இருக்கும். அதுபோல ப வீ. ஈடுசெய் வீதத்திற்குக் குறைவாக இருந்தால், வாய்ப்பு வழிச் செலவு, சமுதாயச் செலவுக்கு அதிகமாகவே இருக்கும்.

**மறைமுகச் சமுதாயச் செலவுகள்:** உற்பத்திக், காரணிகளைப் பயன்படுத்துவதில் மாற்றங்களை நுழைக்கும்போது மறைமுகச் சமுதாயச் செலவுகள் தோன்றுகின்றன. எடுத்துக்காட்டாக, அமைதியான சிறு ஊரகத்தில் பொது நிறுவனம் ஒன்று அமைக்கப்பட்டால், ஊரகம் படிப்படியாக நகரமாக மாறுகிறது. இம்மாற்றத்தினால், அவ்விடத்தில் பல தீமைகளும் நுழைகின்றன. குறிப்பாக சுகாதார நிலை பாதிக்கப்படுகிறது; நல வாழ்வுக்கான ஊரகச் சுற்றுப்புறம், சாக்கடையும் குப்பையும் நிறைந்ததாக மாறுகிறது. இப் புது நகரத்தின் தீய விளைவுகள் 'மறைமுகச் செலவு'களில் அடங்கும். அதேபோல அழகும் அமைதியும் நலவாழ்வும் நிலவிய ஊரில் தொழிற்சாலை தொடங்கப்படுகிறது. எடுத்துக்காட்டாக இரசாயனத் தொழிற்சாலை, ஒருசில ஆண்டுகளில் அவவிடத்தில் தொழிலாளி முதலாளி,கைகலப்பு கட்சிப்போட்டி, தொழிற்சாலைக் கழிவினால் குடிநீர், வேளாண்மை நீர் கெட்டுப்போய் மக்களின் நலமும், வேளாண்மையும் பாதிக்கப்படுவது; தொழிற்சாலையினால் சுற்றுப்புற விண்மணடலம் பாதிக்கப்பட்டு, மக்கள் அதிகமாக நோய்வாய்ப்படுவது போனறவைகளெல்லாம் மறைமுகச் சமுதாயச் செலவுகளில அடங்கும். இவ்விளைவுகளை நேரடியாக அளந்து கூறமுடியாது. பாதிக்கப்பட்டவர்களின் செலவுகள், வசதிக் குறைவுகள், வாழ்ககைச் சீர்குலைவுகள் ஆகியவற்றுடன் ஒப்பிட்டுக பார்த்து மதிப்பிட வேண்டும்.

மேலும், செலவுகளைத் திட்டச்செலவுகள, இணைந்த (Associated) செலவுகள் என்றும் பிரிக்கலாம்.ஐந்தாண்டுத் திட்டத்தில் தொழிற்சாலையோ, அணைக்கட்டோ கட்டும்போது முன்னேற்பாட்டுக்கான செலவுகள், கட்டடச் செலவுகள், பற்பல முதலீடுகள், வேலையாளகள் கூலி, தேவைப் பொருள்களின் விலை, வாடகை போன்ற செலவுகளும், பின் இவை இயங்குவதற்கான செலவுகளும் உள்ளன. இவைகளெலலாம் திட்டச் செலவுகள் எனப்படும். இவைகளுக்கு அப்பால், ஆனால, இவைகளோடு இணைந்த செலவுகளும் உள்ளன. எடுத்துக்காட்டாக, தொழிற்சாலைககும அணைக்கட்டுக்கும் காவல் அமைப்பது, சாலைகள அமைப்பது, மரங்கள் நடுவது போன்றவை இணைந்த செலவுகளாகும்.

**நன்மைகள்:** 'நன்மைகள்' என்று செலவு-நன்மைப் பகுத்தாய்வு முறையில் குறிக்கப்படுவது திட்டத்தின் விளைவாக நாட்டுக்குக் கிடைக்கும் கூடுதல் வருமானமாகும். மக்களின வருமான முனனேற்றத்திற்கு ஏற்றாற்போல, ஒரு திட்டத்தின வழியே கிடைக்கும் நன்மைகளை மதிப்பிடலாம். வருமான உயர்வையும், முன்னேற்றத்தையும் அவர்களின் பொருள் உற்பத்தி, நுகர்ச்சி ஆகியவறறின் விரிவைக் கொணடு மதிப்பிடமுடியும். நனமைகளை உண்மையான, பெயரளவு (Real and Nominal) நன்மைகளெனறும் நேர்முக, மறைமுக (Direct and Indirect) நன்மைகளென்றும் பிரிக்கலாம்.

பொதுவாக நன்மைகள் என்று சொல்லும்போது உண்மையான நனமைகளேயே அவை குறிக்கும். பெயரளவு நன்மைகளுக்கு முக்கியத்துவம அளிப்பதில்லை. குந்தா அணைக்கட்டுத் திட்டத்தால் ஆயிரககணக்கான ஏக்கர் நிலங்களுக்கு நீர்ப்பாசன வசதி கிடைக்கிறது. பாசன விவசாயிகளிடம் பாசன முன்னேற்ற வரி ஒன்றை அரசாங்கம் சுமத்தினால், நீர்ப்பாசன வசதி நன்மைகளெலலாம் வரிகளாக அரசாங்கக் கருவூலத்தை நிறைக்கும்; சில சூழ்நிலைகளில் உபரி (Net) வருமானமே இல்லாமல போய் விடலாம். மாறாக அணை கட்டியபின் நீர்ப்பாசனம் வளமளிக்க, விவசாயிகளின் உற்பத்தி பெருக, பல

புறச்சிக்கனங்கள் தோன்றி உண்மையான வருமானம் பெருகும்போது (குறைந்த வரி கொடுத்தாலும்) உண்மையான நன்மைகள் தோன்றுகினறன.

**நேர்முகச் சமுதாய நன்மைகள்:** ஐந்தாண்டுத் திட்டத்தில் மதுரையில் சர்க்கரைத் தொழிற்சாலை ஒனறு தொடங்கப்பட்டால், அதிலிருந்து உற்பத்தியாகும் சர்க்கரையும், வெல்லப்பாகும், நேர்முகச்சமுதாய நன்மைகள். சர்க்கரை அங்காடிக்குக் கொணடு வரப்பட்டு, அச்சூழ்நிலையில் விற்பனை செய்யப்படும் போது, அப்பொருளுக்காக எதிர்பார்க்கப்படும் விலையை வைத்து நேர்முகச் சமுதாய நன்மைகளை மதிப்பிடலாம். வாய்ப்பு வழிச் செலவை நேர்முகச் சமுதாயச் செலவின் வழியாகச் சரிப்படுத்துவது போல, பொருளின் சந்தை விலையோடு போதுமான வீதத்தைக் கூட்டி மிகைப்படுத்தினால் நேர்முகச் சமுதாய நன்மைகளை மதிப்பிட முடியும். கூட்ட வேண்டிய வீதம் பொருளுக்குப் பொருள வரையறுக்கப்பட வேண்டும்.

நடைமுறையில் தொழிற்சாலைகள் ஒன்றுக்கொன்று தொடர்புள்ளவைகளாயும், சார்புள்ளவைகளாயும் இருப்பதால், நாட்டு வருமான வளர்ச்சியில் குறிப்பிட்ட நிறுவனத்தின் பங்கு என்ன என்று வரையறுத்துக் கூற இயலாது. எனினும், இறுதிநிலை உற்பத்தியின் கட்டணங்களை, வரிகளை, ஊக்க உதவித் தொகையை மாற்றித் திருத்தியமைப்பதாலும் இதைச் சாதிக்கலாம். அதற்கேற்ற சமன் தொடர்பு பின்வருமாறு:

$$ச.ந. = எ.ச.வி. \times \frac{எ.நு.வீ.}{எ.உ.வீ.}$$

அதாவது

ச.ந. = சமுதாய நன்மைகள்

எ.ச.வி.= எதிர்பார்க்கப்பட்ட சந்தை விலை.

எ.நு வீ.= எதிர்பார்க்கப்பட்ட நுகர்ச்சி வீதம்.

எ.உ.வீ.= எதிர்பார்க்கப்பட்ட உற்பத்தி வீதம்.

எதிர்பார்க்கப்பட்ட நுகர்ச்சி வீதம், எதிர்பார்க்கப்பட்டஉற்பத்திவீதத்திற்குச் சமமாக இருந்தால், சமுதாய நன்மைகள் உற்பததிப் பொருளின் இறுதிநிலை விலைக்குச் சமமாகச் சார்ந்து இயங்கும். கிடைப பருமை நிலை உயரும்போது (எ.நு வீ.>எ.உ.வீ.) சமுதாய நன்மை மதிப்பு உயரும். அதேபோல, கிடைப் பருமை நிலை குறையும்போது (எ உ.வீ. > எ.நு. வீ.), சமுதாய நன்மைகளின் மதிப்பும் குறையும்.

**மறைமுகச் சமுதாய நன்மைகள்:** திட்ட உற்பத்தி, பணிகள் ஆகியவற்றின் நேர்முக விளைவுகளை ஒட்டிக் கிடைக்கக் கூடியவற்றை மறைமுக நன்மைகள் என்று சொல்லுவதுண்டு. எடுத்துக்காட்டாகப் பன்நோக்கு நதிப் பள்ளத்தாக்குத் திட்டங்களினால் சில மறைமுக நன்மைகள அலலது பக்க விளைவுகள் எற்படுவதுணடு. இவை நேர்முக விளைவுகளையொட்டி வரக்கூடியவை. இவற்றைத் துணை அலலது இரண்டாந்தர நன்மைகள் என்றும் சொல்வதுண்டு. எடுத்துக்காட்டாகப் பக்ராநங்கல் திட்டத்தின் நோமுக நன்மைகள நீர்ப்பாசனமும், மின்சார உற்பததியுமாகும். அதேவேளையில் இத்திட்டத்தினால் ஆயிரக்கணக்கான மக்களுக்குவேலைவாய்ப்பு கிடைத்தது; பின் இங்கு தொடர் வண்டிப் பாதை அமைத்து தொடர் வண்டி நிலையம் வந்தது, திட்டத்தில் பணி புரிந்தவர்களுக்காக ஒரு நகரம் உருவானது; அதையொட்டிப் பேருந்துச்சாலைகள் அமைக்கப்பட்டன;இவைபோலப் பலநிறுவனங்கள் தோன்றின; இறுதியாக, அணையையொட்டிப் பூங்கா ஒன்று நிறுவப்பட்டு அது சுற்றுலாப் பயணிகளுக்கு எற்ற இடமாகவும் அமைக்கப்பட்டது. இவைகளெல்லாம் மறைமுக நன்மைகள் அல்லது பக்க விளைவுகள என்று கூறப்படுகின்றன.

**தெளிவான, தெளிவாய்த் தெரியாத (Tangible and Intangible) அல்லது தொட்டறியக் கூடிய, தொட்டறியக் கூடாத நன்மைகள்:** திட்டத்திலிருந்து நேராக வரக் கூடிய நன்மைகளைத் தொட்டறியக் கூடிய நன்மைகளென்றும், தொட்டறியககூடாத நன்மைகளென்றும் பிரிக்கலாம். நனமைகளைப் பண அளவைககொண்டு மதிப்பீடு செய்ய முடியுமென்றால் அவை தொட்டறியககூடிய நன்மைகளாகும். எடுத்துக்காட்டாக வைகை அணைத் திட்டத்தினால மதுரை வட்டாரத்தில் நீர்ப்பாசனத்தில் முன்னேற்றம். இது அளவிடக்கூடிய நன்மைகள். மாறாக அணைக்குச் சுற்றுப்புறத்தில் மரம், செடி, கொடிகள் வளர்சசி, பூங்காவின அழகிய தோற்றம், மக்களுககு இந்தத் திட்டம் அளிககும் இனிமை போன்றவைகளை அளந்து கூறமுடியாது; விறபனை செய்ய முடியாது. எனவே, அவை தொட்டறியககூடாத நன்மைகளுள் அடங்குகின்றன.

செலவு-நன்மைப் பகுத்தாய்வில் மொத்த நேர்முக நன்மைகள் மதிப்பிடப்பட்டு அவை மொத்த நோமுகச் செலவுகளோடு ஒப்பிடப்படுகின்றன. ஒப்பிடும்போது, நன்மைகள் செலவுகளைவிட அதிகமாக இருந்தால் திட்டத்தைச் செயற்படுத்தலாம். இல்லையென்றால் கைவிட வேண்டும். இநத ஒனறு திரணட நேர்முகச் செலவுகளையும், நன்மைகளையும் பெறுவதற்கு உற்பத்திப் பொருளகள, பணிகளின் புளளிவிவ

ரங்களைச் சேகரிக்க வேண்டும். 2) நுகர்வுப் பொருள கள் பணிகள் ஆகியவற்றையும் சேகரிதது மதிப்பிட வேண்டும். 3) இப்பொருளகள, பணிகளின் பண மதிப்பைப் பணவீக்கம் பணவாட்டம் போனறபொரு ளாதாரப் போக்கோடும், நிலவும் விலையோடும் இணைத்துப் பொருதத வேணடும். இறுதியாக, ஆண டின் செலவுகளை மதிப்பிடும்போது முதலீட்டுச் சொத்துகளின நீடிப்பு, தேய்மானம் (Depreciation) ஆகியன சேர்க்கப்பட வேணடும். அதேபோல நன்மை களை மதிப்பிடுமபோதும் மொத்த நன்மைகள் எலலாம் சேர்க்கப்பட வேணடும.

இப் பகுத்தாய்வின் வழியாக இன்றைய, வருங் கால நன்மைகளை மதிப்பிடும்போதும், செலவுகளை வரையறுததுக் கூறுமபோதும் பல சிக்கல்களும் குறை பாடுகளும் உள்ளன.

**அ) செலவுகளை மதிப்பிடுவதில் உள்ள இக்கட்டு கள்:** செலவுகள எனறால் முனனேற்ற முறைகளைத தேர்நதெடுததல் (Choice of Techniques), இட அமைபபு (Location), காரணிப பணிகளின விலை போனறவை இடம் பெறுகின்றன. ஆனால், வளர்சசி குன்றிய நாடுகளில் உறபததிக் காரணிகள போனறவைகளின சநதை விலையை வைதது வளங் களைப பங்கீடு செயவது (Allocation of Resources) உகநததனறு. காரணம, இநநாடுகளின பொருளா தாரங்களில அடிப்படைச சமநிலையினமை நிலவு கிறது. எடுத்துக்காட்டாக நிலவும் கூலிவீதம மிகக் குறைவானது; மறைநதுளள வேலையினமை அதிகம; நிலவுமவட்டிவீதத்திறகேறற முதலீட்டுப பணமினமை யும் நிலவுகிறது, அயற செலாவணி மாறற வீதததிற் கேறறபடியனறி, அயற செலாவணி குறைவாகவே கிடைககிறது. உழைபபு அஙகாடியில, சமநிலைக் கூலி மட்டததைவிட அங்காடிக் கூலி மிகக குறை வாக உளளது; பண அஙகாடியில், சமநிலை வட்டி வீதத்தைவிட, அஙகாடி வட்டி மிக அதிகமாக இருக கிறது; இவவிடாபபாடுகளை விலககுவதறகாகச சாயல விலைமுறையைக (Shadow Prices) கையாளுவ துணடு. அதாவது, இச சாயலவிலை, உறபததிக காரணிகளின இயலபான மதிபபை ஓரளவு எதி ரொலிககினறது எனபது பொதுவான கருதது. 'சாயல விலை'யைப் போனறவை 'சாயற் செலவுகள'. சமுதா யததிறகுப் பயனதரும நிறுவனஙகளின் உணமைச் செலவை இநதச செலவு எதிரொலிககும். இககாலப் பொருளியலார் பலர் நாட்டின திட்டபபடி அமைக கபபடும நிறுவனஙகளையும், பணிகளையும் மதிப்பிட இநதச 'சாயல விலை', 'சாயற் செலவு' முறைப் ளையே பெரிதும் பயனபடுத்துகிறார்கள.

**ஆ) நன்மைகளை மதிப்பிடுவதிலுள்ள இடர்ப்பாடு கள்:** செலவுகளை விட, நன்மைகளை மதிபபிடுவதில் சிக்கல்கள் பல உள்ளன. முக்கியமாக, புதுத்தொழிற சாலை ஒன்று அமைக்க, அதன் உற்பத்திப பொருளின எதிர்கால விலை, அதற்குள்ள தேவைகள், அளிப்பு ஆகியன உறுதியற்றவை. அகப், புறச் சிக்கனங்களை அளவிடுவதும் கடினமானது. புறசசிககனஙகள் இருந தால் உறபததிப் பொருள்கள் சராசரி செலவை விடுத்து (Average Cost) இறுதிநிலைச் செலவின (Marginal Cost) அடிப்படையில விற்கபபடுகினறன அதனால், வருமானததில பற்றாககுறைஏறபடும். இப் பற்றாக்குறையைச் சரிப்படுத்த, நுகர்வோர் மேல வரிவிதிகக வேணடியிருக்கும். எனவே, நாட்டின வரவு-செலவுத் திட்டம என்றுமே தெளிவற்றதாக இருக்கும். அரசின புளளிவிவரஙகள என்றுமே மிகைப படுத்தபபட்டது என்பது யாவரும் அறிநதது.

மற்றும், கணக்கெடுக்கும்போது ஒரு புளளி விவரத்தை வரவிலும், செலவிலும் பதிவுசெயவது தவறு. இந்த இரட்டைப் பதிவுகள (DoubleCounting) அரசுப் புளளிப் பதிவேடுகளில நுழைந்திருப்பதை ஒருவரும் மறுககமுடியாது. எனவே, 'சாயற் செலவு', 'சாயல் விலை' எல்லாத் திட்டங்களுக்கும் பயன படாது. உழைப்புச் செறிநத, குறுகிய காலத்தில உற்பத்திப் பயனளிக்கவலல குறைநத முதலீடுளள, வெளிநாட்டு உதவி குறைநத அல்லது முற்றிலுமே இல்லாத திட்டங்களுக்கு மட்டுமே பயனுளளதெனறு கருதப்படுகிறது.

**இ) வளர்ச்சி குன்றிய நாடுகளும் செலவு-நன்மைப் பகுத்தாய்வும்:** செலவு-நன்மைப் பகுத் தாய்வு முறையை வளர்த்தவர்கள மார்கோலிசு (Margolis), எக்சுடெயின (Eckstein), மக்கீன (Mckeen) என்ற பொருளியல மேதைகளாவர். அவர்கள் உருவாக்கியது அமெரிக்கா போனற வளர்சசியடைந்த நாடுகளுக்கேற்றதாகும். அந்நாடு களில பொருளாதாரம உறுதியுள்ளது; நிலையான வளர்ச்சியினைக் கொண்டது; உற்பததிக் காரணிகள தடையினறி இயங்க வசதியானது; பொருளகளின விலையில் அடிக்கடி மாறறங்கள ஏற்படுவதிலலை. இதே சூழ்நிலை வளர்ச்சி குன்றிய நாடுகளிடம் கிடைப்பதில்லை. எனவே, இம்முறை வளாசசிகுன்றிய நாடுகளுக்கு அதிகப் பயனுள்ளதாகக் கருதமுடியாது.

எனினும், பேராசிரியர் டி.ஆர். காட்கில் (Gadgil T.R.), மகாராட்டிர மாவட்டத்திலுள்ள கோதாவரி, பிராவாரா எனற கால்வாய்த் திட்டங் களின விளைவுகளை இம்முறை கொணடு மதிபபீடு செய்துள்ளார். அதேபோலச் சோவானி, நீலகநது என்ற பொருளியலார் கிராக்கூடு அணைக்கட்டையும், பால்சிதசிங்கு என்பவர் சாருதா கால்வாய்த் திட்டத் தையும், பேராசிரியா கே.என. ராசு பகராநங்கல்

அணைக்கட்டையும் இந்த ஆய்வுமுறை கொணடு மதிப்பீடு செய்துள்ளார்கள்.

ஆனால், இவர்கள் அனைவருக்கும் புள்ளிவிவரங் களைச் சேகரிப்பதிலும், செலவுகளை மதிப்பிடுவ திலும் பல இடர்ப்பபாடுகள தோன்றின. புள்ளி விவரங் களைப் பொறுத்தவரை சிக்கன விளைவுகளைப் பிரிப் பதற்கு ஏற்ற கருவிகள இன்னும் நாட்டில் வளர்ச்சி யடையவில்லை. சமுதாய ச்சூழ்நிலையினால் நேர்முக, மறைமுக விளைவுகளையும் தொட்டறியும், தொட்ட றிய முடியாத விளைவுகளையும் பிரிப்பது மிகக் கடின மாகவே இருக்கிறது செலவுகளைப் பொறுத்தமட்டில் நிலையற்ற விலைவாசிகளும், மூலப் பொருளகளின் தட்டுப்பாடுகளும், அயற செலாவணித் தட்டுப்பாடு போன்ற சிக்கல்களினால் செலவுகளைச் சரிவர மதிப்பிட முடிவதில்லை. பல திட்டங்கள் இந்தியா வில மதிப்பிடபபட்டாலும், அதற்கேற்ற கருவிகளும் செயலாற்று நிறுவனஙகளும் நம்மிடையே இன்னும் வளர்ச்சியடையவில்லை.

இந்தியாவைப் பொறுத்தவரை செலவு-நன்மைப் பகுத்தாய்வு முறை அதிகப் பயனுள்ள கருவியே. ஆனால், அதன் பயனபாடு இனனும் வளர்சசியடைய வில்லை. வளர்ச்சிக்கேறற சூழ்நிலை இன்னும் நாட் டில் உருவாகவில்லை. மா.செ.

**துணை நூல்கள்:**

Millard, R., Public Expenditure Economics, McGraw Hill, London, 1971.

Mishan, E.J., Cost-Benefit Analysis, Allen and Unwin, London, 1971.

Pearce, D.W., Cost-Benefit Analysis, Macmillan Studies in Economics, Macmillan Press Ltd., London, 1971.

Peters, G.H., Cost-Benefit Analysis and Public Expenditure, Eaton Papers, No.8, Institute of Economic Affairs, London, 1966.

*செலவுவரி:* மக்கள் தம் வருமானத்தை நுகர்வுக் காகச் செலவழிக்கலாம் அல்லது சேமிக்கலாம் அல்லது ஒரு பகுதியைச் செலவழித்துப் பிற பகுதியைச் சேமிக் கலாம். தனி நபரின் அல்லது இந்துக் கூட்டுக் குடும்பத் தலைவரின் மொத்த நுகர்வுச் செலவுச் தொகையில் அரசு அனுமதித்த அளவு நீங்கலாக உள்ள பகுதித் தொகையின்மீது வரி விதிக்கப்படும்போது, அது செலவு வரி (Expenditure Tax) எனப்படுகிறது

இச் செலவு வரிக்குத் தொன்மைப் பொருளா தார அறிஞர்களின் ஆதரவு பரவலாக இருந்தது. ஆப்சு (Hobbs), சான் இசுடுவர்ட்டு மில்(John Stuart Mill) போன்றோர் ஆதரவான கருத்துகளைத் தெரி வித்துள்ளனர். கோட்பாட்டளவில் ஏற்புடையதாக இருப்பினும் நடைமுறைச் சிக்கல்கள் பல உள எனப பேராசிரியா ஆல்பிரடு மாாசல் (Prof. Alfred Marshall) இவ்வரியைப் பற்றிக குறிப்பிடும்போது தம் கருத்தைத் தெரிவித்துள்ளார். செலவு வரிக்கு ஆதர வாகவும் எதிராகவும் பல கருத்துகள நிலவுகின்றன.

**ஆதரவான கருத்துகள்:** வரிதாங்கும் திறன் அடிப் படையில் வரியின் அளவு அமைதல் வேண்டுமென்பது வரிக் கொள்கைகளில் ஒன்று. ஒருவரின் வரி தாங்கும் திறனை மதிப்பிட அவரது வருமானத்தை அளவை யாகக் கொள்வது நடைமுறையிலுள்ளதொரு பழக் கம். ஆனால், வருமானத்தை மட்டும் சரியானதொரு அளவையாகக் கொள்ள இயலாது என்ற கருத்தும் வலுவாக உள்ளது. வருமானத் தோற்றுவாய்களின் இயல்புகள் ஓரேமாதிரி இருப்பதிலலை என்பதால் எல்லாவிதமான வருமானஙகளையும் சமமானதாகக் கருத இயலாது. மேலும் வருமான வரி அமைப்பில் நுகர்வுக்காகப் பயன்படுத்தப்படும் வருமானத்தையும் சேமிப்பிற்காகப் பயன்படுத்தப்படும் வருமானத்தையும் வேறுபடுத்தும் வாய்ப்புகள் குறைவு எனபதால் வரு மான வரியால் சேமிப்பும் அதன்வழியாக மூலதனத் திரட்சியும் கேடுற வாய்பபுகள் உணடு. மேலும், வரு மான வரியில் ஏமாற்றுதல், மறைத்தல் போன்ற விரும்பத்தகாத நிகழ்சசிகளுககான வாய்ப்புகளுமுணடு. எனவே, செலவு வரி மிகவும் பயனுள்ளதாகவும் பொருத்தமாகவும் இருக்குமென்று குறிபபிடப்படு கிறது.

செலவைத் துல்லியமாக நிருணயித்துவிடலாம்; கணக்கிடுவதும் எளிது.

நுகர்வுச் செலவுகளுக்கு வளர்விகித அடிப் படையில் வரிகள் விதிக்கபபெறும்போது, நுகர்வின் அளவிலுள்ள ஏற்றத்தாழ்வுகளைக் குறைப்பதற்கு அவை பயன்படும்.

நுகர்வுச் செலவுகளுக்கு முனைப்பாக வரிகள் விதிக்கப்பெறும்போது நுகர்வுச் செலவு அளவு குறை வதற்கும் அதன்மூலம் சேமிப்பும் மூலதனத் திரட் சியும் மிகுதியாவதற்கும் வாய்ப்புகள் தோன்று கின்றன. மூலதனப் பற்றாக்குறை மிகுதியாகவுள்ள வளரும் பொருளாதாரங்களில மூலதனத் திரட்சிக்கு இது ஓர் இன்றியமையாத தோற்றுவாயாகப் பயன் படும் வாய்ப்புகள் மிகுதி.

முதலீட்டிற்குத் தேவையான நிதித் தோற்று வாயான சேமிப்பின் அளவும், முதலீட்டின் பயனால் தோன்றும் நிகர வருமானத்தின் அளவும் வருமான வரியால் கேடுறலாம். ஆனால், செலவு வரி முத லீட்டு அளவையும், முதலீட்டின் விளைவாகத் தோன்றும் நிகர வருவாயின் அளவையும் கேடுறச் செய்யாது.

பணவீக்க நிலைமை இருக்கும்போது செலவு வரி, செலவுகளைக் குறைப்பதற்கும் அதன்மூலம் பண வீக்க நிலைமை மென்மேலும் விரிவடையாமல் தடுப் பதற்கும் பயன்படுகிறது.

வருமானத்தைப் பெற்றுத் தருபவர்களாலும் சேமிப்பவர்களாலும் சமுதாயம் பயன்பெறுகிறது என்றும், செலவழிப்பவர்களால் சமுதாயத்திற்கு இழப் புத்தான் ஏற்படுகிறது என்றும், எனவே செலவு வரி நேர்மையானதே என்றும் ஒரு கருத்து குறிப்பிடப் படுகிறது. ஆனால், இக்கருத்து சரியானதன்று. நுகர்வுதான் பொருளாதார நடவடிக்கைகள் எல்லா வற்றிற்கும் அடிப்படையானது என்றும், ஒருவரின் நுகர்வுச் செலவு மற்றவரின் வருமானமாகிறது என்றும குறிப்பிட்டு, இக்கருத்தைப் பலர் மறுத் துரைத்துள்ளனர். செலவு வரிக்கு எதிரான பல விவாதங்களும் உண்டு.

சேமிப்பதற்காகவும் செலவிடுவதுண்டு. கையில் உரொக்கமாக வைததிருப்பதைக் காட்டிலும் பொரு ளாக வைத்துக்கொணடால் தேவைப்படும் போது பொருளை விற்றுப பணமாக்கிக் கொள்ளலாம் என்று கருதும மக்களின் போக்கையும் நடைமுறையில காணலாம். எனவே, செலவுக்கு வரிவிதித்தல் நன்றன்று என்பது குறிப்பிடப்படுகிறது.

ஒவ்வொருவரும் அவரவர் செலவுகளைப் பற்றிய கணக்குகளை வைத்திருககவேணடிய அவசியம் இருப் பதால இதுவொரு சுமைமிக்க வரி அமைப்பாகும. மேலும், ஒவ்வொருவரும் அவரவர் விருப்பு வெறுப்பு களுக்கேற்பப் பலவிதமான செலவுகளைச் செய்வது இயல்பு. எல்லாச் செலவுகளையும் யாவரும் அறியும வண்ணம் தெரிவிக்கவேண்டுமென்று கட்டாயப்படுத் தும்போது மனிதனின் அந்தரங்க அடிப்படை இரகசி யங்கள் அம்பலமாகிவிடலாம் என்பதாலும், அதிகாரி களின் தொல்லைகளும் மிகுதியாகிவிடலாம் என் பதாலும் இவ்வரி அமைப்பு விரும்பத் தககதில்லை என்றும் குறிப்பிடப்படுகிறது.

நிருவகிப்பதிலும் பல இடர்கள் தோன்றலாம்; அந்தரங்க வாழ்க்கை பற்றிய பல விரும்பத்தகாத விசாரணைகள தோன்றிவிடலாமெனற அடிப்படை யிலும் இவ்வரி அமைப்பைப் பலர் விரும்புவதில்லை.

சேமிப்பை மிகுதிப்படுத்த இவ்வரி உதவும் என் பதையும் ஒருசிலா குறிப்பிட்ட எநத அளவுக்கு இது சேமிப்பைத் தூண்டிவிடும் என்பதைத துலலியமாகக் கணக்கிட இயலாது என்பதையும சுட்டிக்காட்டியுள் ளனா.

பொருளாதாா மந்தநிலை நிலவும் காலஙகளில நிலைமை மேலும் கேடுறுவதற்குச செலவு வரி துணைசெய்துவிடும்.

**இந்தியாவில் செலவு வரி.** ஆடம்பரச் செலவு களைக குறைக்க உதவவும், சேமிபபை அதிகரிக்கவும் உதவுமெனற கருததுகளின அடிபபடையில் 1957-ஆம் ஆணடில் அப்போது மத்திய அரசில் நிதி அமைச் சராக இருநத டி.டி. கிருட்டிணமாசசாரி இநதியா வில இவவரியைப புகுததினார்.

வரி செலுத்தியபின் நிகர ஆணடு வருவாயாக உரூ. 36,000மும் அதற்கு அதிகமாகவும் உளளவர் களின் நுகர்வுச் செலவுகளினமீது செலவு வரி விதிக் கப்பட்டது. தனி நபாகளுக்கு இவ் வரிவிலககு வரமபு உரூ. 30,000 ஆகவும, இநதுக் கூட்டுக் குடும் பத்தின் தலைவா, அவா மனைவி, அவர் மக்கள் ஆகியோருக்கு ஒவ்வொருவருககும் உரூ. 3,000 ஆக வும மொததமாக உரூ. 30,000ககு அதிகப்படாமலும் வரிவிலககு வரம்பு நிருணயிககப்பட்டது. வரியின அளவு வரி விதிக்கத்தக்க செலவின்மீது 10விழுக்காடு முதல் 100விழுக்காடு வரை வளர்விகித முறையில் நிருணயிக்கப்பட்டது.

செலவு வரி 1957-இல் புகுத்தப்பட்டபோது சொல்லப்பட்ட நோக்கஙகள் நிறைவேறவில்லை என் பதைச் சுட்டிககாட்டி இவ்வரியால் மத்திய அரசு பெற்ற வருவாயின் அளவும் மிகவும் குறைவாகவே இருநததையும் சுடடிக்காட்டி 1962-இல் மத்திய அரசினநிதி அமைசசராக இருநத மொரார்சி தேசாய்(Morarji Desai) இவ்வரியை நீக்கிவிட்டார்.

வரி விகிதங்கள 1957-இல் புகுத்தப்பட்டபோது இருநததைக் காட்டிலும் குறைவானவைகளாக்கப் பட்டு 1964-ஆம் ஆணடில் இவ்வரியை இநதிய அரசு மீண்டும் புகுததியது. வரிவிலககு வரம்பின குறைந்த அளவுத தொகையாக உரூ. 36,000/-ஐ நிருணயித்து அதற்கு மேலான நுகர்வுச் செலவின் மீதான வரி விகிதங்களைத தொடக்கநிலையில் 5விழுக்காடாக வும் உரூ.84,000/-க்கும மிஞ்சிய வரி விதிக்கத்தக்க செலவுகளுக்கான விகிதத்தை 20விழுக்காடாகவும்

மாற்றி வரிவிகிதங்களை 5முதல 20விழுககாடு வரை என அமைத்தனர். ஆனால, இவ்வரி விதிப்பினால் தோனறிய நிருவாகப் பளு, வரி செலுததுவோருக்கு ஏற்பட்ட தொல்லைகள, துயரங்கள் ஆகியவை களோடு ஒப்பிடும்போது வரியினால அரசு பெற்ற வருமானத்தின் அளவு மிகவும் குறைவானதாக இருபபதைச் சுட்டிககாட்டி 1965-ஆம் ஆணடு ஏப்பிரல் திங்கள் முதல நாள் முதல் மீணடும் இவவரி நீக்கப்பட்டது. என.எஸ்.பா.

**துணைநூல்கள்:**

Saxena R.C and Mathru P.C., Public Finance, K.Nath and Co., Meerut, 1986.

Tyagi P.P., Public Finance, Jai Prakash Nath Publications, Meerut, 1985.

***செலாவணி ஆவணங்கள்:*** சாதாரணப் பொருளகள போல் மாறறியளிக்கக் கூடிய வாணிக ஆவணங்கள செலாவணி ஆவணங்கள் எனப்படும். இவை பற்றிச்செலாவணி ஆவணங்கள சட்டம(1881) தெளிவாகக் கூறுகிறது. இது இநதியா முழுமைக்கும் செல்லுபடியாகும். வட்டார மொழியில வழஙகும் இதேபோன்ற ஆவணங்களின (உணடியல போன்றவை) புழககத்தை இது தடை செய்யவில்லை.

செலாவணி ஆவணங்கள் என்ற சொற்றொடருக் குப் 'பணமாக மாற்றத்தக்க, அல்லது ஒருவரிட மிருந்து மற்றொருவருக்குப் பணத்திற்கு மாறாகக் கை மாறிச் செலலத்தக்க ஆவணம்' எனப் பொருள கூற லாம். சில வாணிக ஆவணங்கள், கடனுறுதிச் சீட்டு, மாற்றுச்சீட்டு, காசோலை முதலானவை அனைத்தும் செலாவணி ஆவணங்கள. செலாவணி ஆவணஙகள எழுத்து மூலம் பணம்பெற்ற உறுதிமொழியாகவோ (கடனுறுதிச் சீட்டு) அல்லது பணம் செலுத்த வேணடும் ஆணையாகவோ (மாற்றுச சீட்டு, காசோலை) இருக்கின்றன. இவை தொழில் புரிபவர்க கிடையே பரிமாற்றமான கணக்குகளைத் தீர்க்கவும், பாதுகாப்பான முறையில் பணத்தைக் கொண்டு செல லவும் பயன்படுகின்றன.

ஒரு செலாவணி ஆவணம் என்பது, அதிலிருக்கும் உரிமைப் பொருளை (Property) உணமையிலும, மதிப்புக்காகவும் பெற்றுக் கொண்ட ஒருவர், அதை அளித்தவருக்கு அதன் உரிமை மூலத்தில் எவ்விதக் குறைபாடு இருப்பினும், அதிலிருக்கும் உரிமைப் பொருளை அடையும் பத்திரமாகும்.

வாணிக வழக்காற்றாலும், சட்டப்படியும் ஏற்றுக கொள்ளப்பட்ட, மேலெழுத்தாலோ, வழங்கலாலோ மாற்றியளிக்கத்தக்க, அ) அந்நேரத்தில் அதனைப் பெற்றிருபபவர் தம் பெயரிலேயே வழக்குத் தொடரும் உரிமையுடனும், ஆ) அதனை யாரிட மிருந்து பெற்றாரோ அவருக்கு அதன் மீதிருக்கும் உரிமை மூலத்தில் எவ்வித குறைபாடிருப்பினும், சரி ஒப்புரவு (Equity) இருப்பினும், அதன் உரிமைப் பொருள் மாறிச் செலலும் பத்திரமே செலாவணி ஆவணம் எனப்படும்.

செலாவணி ஆவணங்கள் சட்டம் (1881) பிரிவு 13 (1) மூலம், 'செலாவணி ஆவணம் என்பது ஆணையின் பேரிலோ, கொணர்பவர்க்கோ செலுத்தத் தக்க கடனுறுதிச்சீட்டு (Promisory Note), மாற்றுச் சீட்டு (Bills of Exchange), காசோலை (Cheque) எனப் பொருள்படும் என்று வரையறைத்துள்ளது. இதன்மூலம் இம்மூன்று ஆவணங்கள் மட்டுமே செலா வணி ஆவணங்கள் என்று பொருள்படுகிறது. ஆயினும், இவ்வாவணத்துக்கான குணங்கள் பிற பத்திரஙகளுக கிருந்தால் அவையும் செலாவணி ஆவணஙகளே. சட் டத்தாலும், வாணிகச்சமூகத்தாலும் ஏற்றுக்கொளளப் பட்ட செலாவணி ஆவணங்கள் பினவருமாறு: அ) மாற்றுச்சீட்டு, ஆ) கடனுறுதிச் சீட்டு, இ) காசோலை, ஈ) கருவூலச் சீட்டு, உ) அரசின் கடனுறுதிப் பத்திரம், ஊ) பஙகாதாய ஆணைச் சீட்டு (Dividend warrant) எ) பங்காணைச் சீட்டு (Share warrant), ஏ) கொணர் பவர் கடனீட்டுப்பத்திரம் (Bearer Debenture), ஐ) உண்டியல்கள் (Hundis).

சில ஆவணங்கள ஓரளவு செலாவணித் தன்மை உடையவை. அவை பின்வருமாறு: அ) கப்பல இரசீது (Bill of Lading), ஆ) துறைமுக ஆணைச் சீட்டு (Dock warrant), இ) வரவுச் சான்று மடல் (Letter of Credit), ஈ) தொடர்வண்டி இரசீது (Railway Receipt).

இவை மேலெழுதலாலும், வழங்கலாலும் மாற்றத்தக்கவையாயினும், மாற்றம் பெறுபவர் மாற்றித தந்தவர் பெற்றிருந்ததைவிட அதிக உரிமை மூலம் பெறமுடியாது.

**செலாவணி ஆவணத்தின் சிறப்புப் பண்புகள்: 1)** உரிமைப்பொருள: செலாவணி ஆவணம் ஒன்றை வைத்திருப்பவர் அதிலிருக்கும் உரிமைப்பொருளின் உரிமையாளராவார். அது உடைமையை மட்டுமன்றி உரிமைப்பொருளையும் மாற்றத்தக்கது. 2) எளிதில் மாற்றத்தக்கது: இதனை ஒருவருக்கொருவர் மாற்றம் செய்வது எளிது. மேலெழுதியும் வழங்கல் செய்தும் இவற்றை எளிதில் மாற்றலாம். கொணர்பவர் ஆவணமாயின் வழங்கல் மட்டுமே சொந்த

உரிமையை மாற்றிவிடும் 3) உரிமைமூலம் மாற்றம் செய்பவரின் உரிமை மூலத்தில் எவ்வித குறைபாடிருப்பினும் முறைப்படி வைததிருப்பவர் அதைவிடச் சிறந்த உரிமை மூலம் பெறுகிறார். 4) உரிமைகள் (Rights): முறைப்படி வைத்திருப்பவர் தம் பெயரிலேயே இவ்வாவணத்தின் அடிபபடையில வழக்குரைக்கலாம்.

5) **துணிபுகள்** (Presumption)· சில குறிப்பிட்ட சட்டத் துணிபுகள் இதற்குண்டு. அவை பின் வருமாறு:

அ) மறுபயன்: ஒரு செலாவணி ஆவணம் மறுபயன் பெற்றபின் எழுதப்படுகினறது, உருவாககப்படுகினறது, ஏறகப்படுகினறது, மேலெழுதப்படுகினறது, மாற்றியளிக்கப்படுகிறது எனத் துணிபு செய்யப்படும்.

ஆ) தேதி: தேதியைத் தாங்கியிருக்கும் மாற்றுமுறையாவணம் அந்தத் தேதியில எழுதப்பட்டது அல்லது உருவாக்கபபட்டது எனக் கொள்ளபபடும்.

இ) ஏற்புநேரம: ஒரு செலாவணி ஆவணம் அதன தவணை முதிர்வு நாளுக்கு முன்னர் ஏற்பு செய்யப்பட்டதாகக் கொளளப்படும்.

ஈ) மாற்றல்: ஒரு செலாவணி ஆவணத்தின ஒவ்வொரு மாற்றலும தவணை முதிர்வு நாளுக்கு முன்னர் நிகழ்ந்திருப்பதாகக் கொளளபபடும்.

உ) மேலெழுத்து வரிசை: ஒரு செலாவணி ஆவணத்தில எந்த வரிசையில மேலெழுத்துகள் காணப்படுகின்றனவோ அந்த வரிசையிலேயே செய்யப் பட்டிருப்பதாகக் கொள்ளப்படும்.

ஊ) முத்திரை, கையொப்பம்: இழந்துவிட்ட அல்லது அழிந்துவிட்ட மாற்றுமுறை ஆவணம முறையாக முததிரையிடப்பட்டு, கையொப்பமிடப்பட்டிருந்ததாகத் துணிபு செய்யப்படும்.

எ) முறையாக வைத்திருப்பவர்: செலாவணி ஆவணத்தை வைத்திருபபவர் அதை முறையாக வைத்திருபபதாகத் துணிபு செய்யப்படும்.

ஏ) மறுத்துரைச் சான்று (Proof of Protest): மதிப்பு மறுககப்பட்ட செலாவணி ஆவணத்தின மீதான வழக்கில், மறுத்துரைச் சான்றின்பால, நீதிமன்றம் ஏறக மறுததால் அல்லது செலுத்த மறுத்தால், மதிப்பு மறுககப் பட்டதாகத் துணிபு செய்யப்படும். மறுத்துரை முதல் தோற்றத்திலேயே மதிப்பு மறுக்கப்பட்டதாகக் கொளளப்படும். ரெ.சீ.

## செலாவணி மதிப்புக் குறைப்பு·

செலாவணி மதிப்புக குறைப்பு (Devaluvation) எனபது பொன், வெளளி அல்லது அனனியச் செலாவணி மதிப்பைப் பொறுத்த மட்டில தன் செலாவணி மதிப்பை ஒரு நாடு வேண்டுமென்றே குறைப்பது ஆகும்.

பிரிட்டன் 1931-ஆம் ஆணடு தன 'பவுன் இசுடர்லிங்'கின் மதிபபைக் குறைத்தது. வேறு சில நாடுகளும் பிரிட்டனைப் பினபற்றிததம செலாவணி மதிப்பை அப்போது குறைத்தன. மீணடும் 1949-ஆம் ஆணடு பிரிட்டன தன செலாவணி மதிப்பைக குறைத்தது. அந நாட்டைப் பினபற்றி இநதியா, ஆசுததிரேலியா, பாமா, இலங்கை, தெனனாப்பிரிக்கா, தெனமார்ககு, நெதாலாந்து, பினலாநது, ஐசுலாந்து, நார்வே, எகிப்து, கிரீசு ஆகிய நாடுகளும் அவ்வாணடு தம செலாவணி மதிபபைக குறைத்தன. பிரெஞ்சு நாட்டில் 1957 மறறும 1958-ஆம் ஆணடுகளிலும், யுகோசுலாவியாவில 1952 மற்றும் 1965ஆம ஆண்டுகளிலும், இந்தியாவில 1966-ஆம் ஆணடிலும செலாவணி மதிப்புக் குறைககப்பட்டது. பிரிட்டன 1967-ஆம் ஆணடு தன செலாவணி மதிப்பை மீணடும் குறைத்தது.

இந்தியா 1966-ஆம் ஆண்டு தன் செலாவணி மதிப்பைக் குறைப்பதறகு முன ஒரு உரூபாயின் மதிப்பு 0.186621 கிராம் தஙகததின் மதிபபிறகு இணையாக இருந்தது. செலாவணி மதிப்பு குறைககபபட்டபின, அது 0.118516 கிராம் ஆகக குறைந்தது. பிரிட்டன் நாட்டுச் செலாவணியில ஒரு உரூபாயின் மதிபபு 18 பென்சுக்குச் சமம் எனற நிலைமாறி 11 பெனசுககுச சமம் என்ற நிலை ஏற்பட்டது. அதாவது, ஒரு 'பவுன் இசுடர்லிங்'கின் (Pound Sterling) மதிப்பு உரூ 13.33க்குச் சமம் என இருந்தது உரூ. 21 ஆக உயாந்தது. அமெரிககச் செலாவணியில, 1உருபாய் ஏறத்தாழ 21 அமெரிக்க செணடுக்குச் சமம என இருந்தது மாறி, 13.33 செணடுக்குச் சமம் என்ற நிலை உணடாயிற்று. அதாவது, ஒரு அமெரிகக தாலரின் (Dollar) மதிபபு ஏறத்தாழ உரூ.4.76 என இருந்தது உரூ. 7.50ஆக உயர்ந்தது. இவ்வாறு, உரூபாய் மதிப்பு 36.5 சதவீதம் குறைக்கப்பட்டதன காரணமாக அன்னியச் செலாவணியின விலை ஏறத்தாழ 157 சதவீதம் உயர்ந்தது.

ஒரு நாட்டில் விலைவாசியும் தொழிலாளர் ஊதியமும் மிக உயர்கையில் சில பண்டஙகளின் உற்பத்தி பாதிக்கப்படுகிறது. மற்றும் சில பொருள்களின உற்பத்திச் செலவு பெருகிப் பிற நாடுகளோடு போட்டியிட இயலாத நிலை ஏற்படுகிறது. இதன் விளைவாக

ஏறபடும ஏற்றுமதி வீழ்ச்சிக்கு ஏற்ப இறக்குமதியைக் குறைக்க இயலாதபோது அந்நாட்டின செலுத்து நிலைச் சமன்பாட்டில் (Balance of Payments) பற்றாக் குறை உணடாகிறது. நாட்பட்ட பற்றாக்குறையினால ஒரு நாட்டின் பொருளாதார அமைப்பு நலிவுறும். இத்தகைய சிக்கலுக்குத் தீர்வு காணும் நோக்கததுடனேயே செலாவணி மதிப்பு குறைக்கப்படுகிறது. ஒரு நாட்டின் ஏற்றுமதிப் பொருள்களின் விலையை, அபபொருள்களை இறககுமதி செய்யும் நாட்டுச செலாவணியைப் பொறுத்தமட்டில் குறைபபதும் அதே நேரத்தில அநநாட்டில் இறக்குமதியாகும் பொருளகளின விலையை அதிகரிக்கச் செய்வதும் செலாவணி மதிப்புக் குறைப்பின வாயிலாகச சாத்தியமாகிறது ஏறறுமதி மற்றும் இறக்குமதி ஆகியவற்றின் தேவை ஓரளவு நெகிழச்சி படைத்ததாக விளஙகுமேயாகில் அந்த நாட்டின ஏறறுமதி வருவாய் பெருகும், இறக்குமதிச் செலவு சுருஙகும். இதன் காரணமாக, அந்த நாட்டின வாணிபம் சமநிலை பெறறு அதன் செலுத்து நிலைச் சமனபாடும் சீரடையும். அத்துடன, ஏற்றுமதி பெருகியதின விளைவாக அந்நாட்டுப் பொருளியலமைப்பு வளர்ச்சியுற்றுப் பணவீக்கத்திறகு (Inflation) இடமளிககாதபடி வட்டி வீதம் அதிகரிப்பதற்குரிய வாய்ப்பைத் தோறறுவிககுமேயாகில், மேலுமம கூடுதல் பயனும் அந் நாட்டுககுக் கிடைக்கக்கூடும். அந்நாட்டினுள் அயல்நாட்டு மூலதனவரத்துப் பெருகும், அந்நாட்டிலிருநது மூலதன வெளியேறறம குறையும்.

வளர்ச்சி பெறும் (Developing Countries) நாடுகளுக்குச் செலாவணி மதிப்புக் குறைப்பினால் பயன் ஏதும் விளைவதில்லை. ஏனெனில், செலாவணி மதிப்பைக் குறைத்த போதிலுங் கூட முனனர் இறக்குமதி செய்த அதே பொருளகளையே அவை தொடர்ந்து இறககுமதி செய்கின்றன. அதே நேரத்தில், அந் நாடுகளால் தமது ஏற்றுமதியையும் பெருக்கிக கொளள முடிவதில்லை.

வளர்ச்சி பெற்ற நாடுகளுள் (Developed Countries) சில உணவு மறறும் மூலப் பொருள்களைப் பொறுத்த மட்டில் அயல்நாடுகளை நம்பியவையாக இருக்கக்கூடும். இவவகை நாடுகளுக்கும் செலாவணி மதிப்புக் குறைப்பின வாயிலாகப் பயன்ஏதும் விளைவதில்லை.

பொதுவாக, ஒரு நாட்டின் செலுத்து நிலையில் தோனறும சமநிலையின்மை அதன் பொருளியலமைப்பின் அமைப்புச் சார்ந்த அடிப்படைக் குறைபாடுகளினால் ஏற்பட்டதாக இருப்பின் செலாவணி மதிப்புக் குறைப்பினால் அந்நாட்டுக்கு எவ்வகைப் பயனும் விளையாது.

செலாவணி மதிப்பைக் குறைப்பது இறக்குமதிப் பொருள்கள் மீது வரி விதித்தலை ஒத்ததாகும். எடுத்துக்காட்டாக, ரூபாயின மதிப்பு 36.5 சதவீதம் குறைக்கப்படும் போது இறக்குமதிப் பொருளகளுக்கு முன்பு ரூபாய் 100 கொடுக்கப் பெற்றால் செலாவணி மதிப்புக் குறைப்பிற்குப் பிறகு ரூபாய் 157 கொடுக்க வேண்டிவரும். இறக்குமதி வரி 57 சதவீதம் உயர்த்தப் பெற்றால் ஏற்படக் கூடிய பயன் இதனால் விளையும், இதன் காரணமாக, செலாவணி மதிப்புக் குறைக்கப்படும் போது ஏற்கெனவே விதிக்கப்பட்டிருக்கும் இறககுமதி வரிகள குறைக்கப் பெறும்.

இதுபோன்று, செலாவணி மதிப்புக் குறைப்பு, ஏற்றுமதியைப் பெருககுதற்குச் சலுகை அளிப்பதற்குச் சமமாகும். எடுத்துககாட்டாக, இந்தியச் செலாவணிமதிப்பு 36.5 சதவீதம் குறைந்த நிலையில் முனபு 100 டாலர் கொடுத்து வாஙகிய இந்தியப் பொருளை செலாவணி மதிப்புக குறைப்பிறகுப்பின் 63.5 டாலருக்கே வாங்கி விடலாம் தொழிலாளர்கள ஊதியத்தையோ வரியையோ குறைப்பதன் மூலம் விலையைக குறைகக இயலாதபோது செலாவணி மதிப்புக் குறைப்பு ஏற்றுமதிப் பொருள்களை அயல்நாட்டினருக்கு மலிவாகத் தோன்றச் செய்து ஏற்றுமதியை ஊக்குவிக்க உதவுகிறது.

செலாவணி மதிப்புக்குறைப்பின் விளைவுகள சில வரையறைகளுக்கு உட்பட்டவை.

ஒரு நாடு தனது செலாவணி மதிப்பைக குறைக்கும் போது பிற நாடுகளும் தத்தம் செலாவணி மதிப்பைப் போட்டி போட்டுக் கொண்டு குறைகக நேர்நதால் அந்நாடு எதிர்பார்த்த பயன்கள அதறகுக் கிட்டாது போகலாம்.

செலாவணி மதிப்புக் குறைக்கப்பட்டதைத் தொடர்ந்து ஒரு நாட்டின ஏற்றுமதியாளர் தம் பொருள்களின் விலைகளை உயர்த்துவார்களேயாகில ஏற்றுமதி பெருகாது. செலாவணி மதிப்புக குறைப்பின் நோக்கமும் நிறைவேறாது.

செலாவணி மதிப்புக குறைப்பு அடிக்கடி மேற்கொள்ளப்படுமேயானால் அசசெலாவணியின்பால் அயல்நாட்டினர் கொணடிருக்கும் நமபிககை சிதையும். அடுத்துவரும் செலாவணி மதிப்புக குறைப்பினால் விலைகள் மேலும் குறையக கூடும் என எதிர்பார்த்துப் பொருள்கள் வாங்குவதை அவர்கள் தளளிவைக்கக்கூடும். இதனால் ஏற்றுமதி பாதிப்புறும.

செலாவணி மதிப்பைக குறைபபதனால ஒரு நாட்டின செலுத்துநிலைச் சமன்பாட்டில் காணப்பெறும்

பற்றாக் குறையை நிரந்தரமாகக் களைந்திட இயலாது. செலாவணி மதிப்புக் குறைப்பின விளைவுகள சில காலத்திற்குக பின் செயலிழந்து போய்விடக் கூடுமாதலால் செலுத்து நிலைச் சமன்பாட்டுச் சிக்கல்களுக்கு மீண்டும் தீர்வு காண வேண்டிய அவசியம் அந்நாட்டிற்கு ஏற்படலாம்.

செலுத்துநிலைச் சமன்பாட்டில் ஏற்படும் பறறாக் குறையைக களைய உதவும் அனைத்து வழிமுறைகளையும் கையாண்ட பின்னரும் போதிய பயன விளையாது போனாலேயே செலாவணி மதிப்புக் குறைப்பு பயன்படுத்தல் வேணடும். எனவே, இந்நாளில் பன்னாட்டு நாணய நிதி (International Monetary Fund) செலாவணி மதிப்புக் குறைப்பைப் பொறுத்த மட்டில் தனது உறுப்பு நாடுகளுக்குச சில கட்டுப்பாடுகளை வகுத்துள்ளது. அந்நாடுகளயாவும் அந்நிறுவனத்திடம் தம் செலாவணி மதிப்பைக பதிவு செய்துள்ளன. தம் செலாவணி மதிப்பைப் பொன் அலலது அமெரிக்கத் தாலரின் மதிப்பிலஅறிவித்துளள அந்நாடுகள்அநநிறுவனத்தின் ஒப்புதலினறி தம் செலாவணி மதிப்பை 10 சதவீதத்திறகு அதிகமாகக குறைககலாகாது என விதிககபபட்டுளளது.

சிவ.இரா.

**செலாவணி மிகை மதிப்பீடு**: பனனாட்டு வாணிகத்தில் பங்கு பெறும் ஒவ்வொரு நாடும் அது ஏற்றுமதி செய்யும் பொருள்களின் விலையை அதன சொந்தச் செலாவணியிலேயே பெற விருமபுகிறது. எனவே, பொருள்களை இறக்குமதி செய்யும் ஒரு நாடு அந்த இறககுமதிப் பொருளின் விலையைக கொடுக்கும் பொருட்டு அதனுடையசெலாவணியைப் பொருள்கள் ஏற்றுமதி செய்த நாட்டின் செலாவணியாக மாற்ற வேணடிய அவசியம் எழுகிறது. இவ்வாறு செலாவணிகளை மாற்றித தரும பணியைப் பெரிய வங்கிகள் செய்கின்றன. இவை அனனியச் செலாவணி மாறறு அங்காடி (Foreign Exchange Market) என குறிப்பிடப்படுகினறன. அனனியச செலாவணி மாற்று அங்காடியில் பல நாட்டுச் செலாவணிகள் பரிமாற்றம் செய்யப்படுகினறன. இவை ஒன்றோடொனறு எநத வீதத்தில் மாறறப் பெறுகின்றனவோ அதனைச் செலாவணி மாறறு வீதம் (Rate of Exchange) எனக் குறிப்பிடுவர்.

பொருள்களை இறக்குமதி செய்வோர் வெளிநாடுகளில் முதலீடு செய்வோர் ஆகியோர் மூலம் அனனியச் செலாவணிக்குரிய தேவை எழுகிறது. பொருள்களை ஏற்றுமதி செய்வோர் மூலதனத்தை இறக்குமதி செய்வோர் ஆகியோர் வாயிலாக அதன் அளிப்பு எற்படுகிறது. அனனியச செலாவணியின் தேவை மற்றும் அளிப்பில் மாறுதல்கள் ஏற்பட்டால் அவை செலாவணி மாற்று விதத்தைப் பாதிக்கின்றன. அளிப்பு மாறாது தேவை கூடினால் மாற்று வீதம் உயருகிறது. தேவை மாறாது அளிப்புக் கூடினால மாற்றுவீதம் குறைகிறது.

பொதுவாக, செலாவணி மாற்று வீதம செலாவணி மாற்று அங்காடியில் உண்டாகும் தேவை மற்றும் அளிப்பு ஆகியவற்றின் தடையிலா இயக்க அடிப்படையில் தீர்மானிக்கப் பெறும். இவவாறு தீர்மானிக்கப் பெறும் செலாவணி மாற்று வீதம் சமநிலை மாற்று வீதம் (Equilibrium rate of exchange) எனப்படும் சில சமயங்களில், செலாவணி மாற்று வீதம் தேவை மற்றும் அளிப்பு ஆகியவற்றின் தடையிலா இயக்கத்தின் விளைவாகத் தீர்மானிக்கப்படுவதற்கு மாறாக அரசு சில நடவடிக்கைகளை மேற கொண்டு அதனைச சமநிலை மாறறு வீதத்தை விட உயர்வாகவோ தாழ்வாகவோ தீர்மானிக்கலாம். மேலும், செலாவணி மாற்று வீதத்தில் ஏற்படும் ஏறறத் தாழ்வுகளைத் தவிர்க்கும் நோக்கத்துடனும் அரசு உரிய நடவடிக்கைகளை மேற் கொளளலாம். செலாவணி மாறறு வீதத்தைச் சமநிலை மாற்று வீதத்திலிருந்து மாறுபட்ட நிலையில் நிறுவுவதறகு அரசு மேற்கொள்ளும் நடவடிக்கைகள செலாவணிக் கட்டுப்பாடு (Exchange Control) எனப்படும.

செலாவணி மாற்று வீதம் அரசுத் தலையீட்டினால் சமநிலை மாற்று வீதத்தை விட உயர் மட்டத்தில் நிறுவப் பெற்றால் அது செலாவணி மிகை மதிப்பீடு (Over valuation) எனப்படும்; கீழ்மட்டத்தில் நிறுவப்பட்டால் அது செலாவணிக் குறை மதிப்பீடு (Under valuation) எனப்படும்.

சமநிலை மாற்று வீதம் 1 உரூபாய்க்கு 13 அமெரிக்கச் சென்ட்டு என இருப்பதாக வைத்துக் கொளளலாம். அநநிலையில், செலாவணி மாற்று வீதம் 1 உரூபாய்க்கு 25 சென்ட்டு என அமையுமாறு நடவடிக்கைகள் மேறகொள்ளப்பட்டால இநதிய உரூபாயின் மதிப்பு குறிபபிடத் தக்க வகையில் உயரும். இது செலாவணி மிகை மதிப்பீடு ஆகும். செலாவணி மாற்று வீதம் 1 உரூபாய்க்கு 10 செனட்டு என அமையுமாறு நடவடிக்கைகள எடுக்கப்பட்டால் இநதிய உரூபாயின் மதிப்புக்குறையும.இது செலாவணிக்குறை மதிப்பீடு ஆகும்.

செலாவணி மாற்றுக் கட்டுப்பாட்டின் நோக்கம் பெரும்பாலும் செலாவணியை மிகையாக மதிப்பிடுவதாகவே இருந்து வந்துள்ளது. உண்மையில், செனற சில ஆண்டுகள வரை இது ஒன்றே செலாவணி மாற்றுக் கட்டுப்பாட்டின் நோக்கமாக இருந்தது.

வெளி நாடுகளிலிருந்து பெருமளவு பொருளை இறக்குமதி செய்ய வேணடிய நிலை ஒரு நாட்டிற்குத்

திடீரென ஏற்படுகிறபோது அந்நாடு தனது செலாவணியை மிகையாக மதிப்பிடக் கூடும். 1 உரூபாய் என்பது 25 அமெரிக்கச் சென்டுக்குச் சமம் என்ற புதிய மாற்று வீதம் அமையும் போது அமெரிக்கப் பொருள்களை முன்னர் இருந்ததைக் காட்டிலும் மலிவான விலையில் வாங்க இயலும். முன்னர் 1 உரூபாயைக் கொடுத்து 13 சென்ட்டு பெறுமதிப்புள்ள பொருள்தான் வாங்க முடிந்ததெனில், அதே 1 உரூபாய்க்கு 25 சென்ட்டு மதிப்புள்ள பொருளை மிகை மதிப்பீட்டின் பின் வாங்குதல் இயலும். எனவே, செலாவணி மிகை மதிப்பீட்டினால் இறக்குமதி பெருகும்.

பிற நாடுகளிலிருந்து வாங்கிய மிகுதியான கடனை அன்னியச் செலாவணியில் திருப்பிச் செலுத்தவேண்டிய நிலையில் உள்ள நாடுகளும் செலாவணி மிகை மதிப்பீட்டை மேற்கொள்ளக் கூடும். 1 உரூபாயைக் கொடுத்து 13 சென்ட்டு கடனைத் திருப்பிச் செலுத்திய நிலை மாறி அதே 1 உரூபாயை அளித்து 25 சென்ட்டு கடனைக் கொடுக்க முடிகிறதெனில் அதன் காரணம் செலாவணி மிகை மதிப்பீடுதான். முதல் உலகப் பெரும் போருக்குப் பின் செருமனி, ஆசுத்திரியா, அங்கேரி போன்ற பல ஐரோப்பிய நாடுகள் தம் அன்னியக்கடன சுமையைக் குறைப்பதற்குத் தமது செலாவணியை மிகை மதிப்பீடு செய்தன.

மிகக் கடுமையான பண வீக்கத்தால் அல்லலுற்ற ஒரு நாட்டு மக்கள் தமது கடந்தகாலக் கசப்பான அனுபவம் காரணமாகத் தமது செலாவணியின் அனனிய மதிப்பு அதன் நிறுவப் பெற்ற நிலையிலிருந்து சற்றே சரிவதைக் கூட ஏற்றுக் கொள்ள மாட்டார்கள். தமது செலாவணி மதிப்பில ஏற்படும் சின்னஞ்சிறு சரிவுகூட பணவீக்கத்தில் போய் முடியலாம் என அஞ்சி அதன் நிறுவப் பெற்ற மதிப்பு மிகை மதிப்பாக ஆனபோதிலும் அதனை நீடிப்பதுவே பண வீக்கத்திலிருந்து தம்மைப் பாதுகாக்கும் வழி என அவர்கள் கருதுகின்றனர். முதல் உலகப் பெரும் போரின் போதும் அதன் பின்னரும் பல ஐரோப்பிய நாடுகளில் மக்களின் இத்தகு மனநிலை செலாவணி மிகை மதிபபீட்டிறகுப் பெரிதும் காரணமாயிற்று.

செலாவணி மிகை மதிப்பீட்டின் விளைவாக இறக்குமதி ஊக்குவிக்கப்படுவதும் ஏற்றுமதி பாதிக்கப்படுவதும் இயல்பு. இதனால் செலுத்து நிலைச் சமன்பாட்டில் சமநிலையின்மை (Disequilibrium) உணடாகலாம். முதல் உலகப் பெரும் போர் முடிவுற்றபின் 1925-ஆம் ஆண்டு மே மாதம் இங்கிலாந்து பொன் திட்டத்தை (Gold Standard) மீண்டும் ஏற்றபோது அந்நாளில் நிதி அமைச்சராக இருந்த வின்சுடன் சர்ச்சில் ‘பவுன் இசுடர்லிங்’கின் மாற்று வீதம் போருக்கு முந்திய மாறறு வீதத்திற்கு இணையாக இருக்க வேண்டும் என்ற பசையற்ற வாதத்துடன் அதனை 1 பவுன் என்பது 4.8665 தாலருக்குச் சமம் என்ற வீதத்தில் நிறுவினார். உணமையில், போர் நிகழ்ந்த காலத்திலும் அதன் பின்னரும் இங்கிலாந்தில் விலைகள் 10 சதவீதம் உயர்ந்திருந்தமையால் ‘பவுன இசுடர்லிங்’கின் மதிப்பு 10 சதவீதம் வீழ்ச்சியுற்றிருந்தது. அந்நிலையில் இங்கிலாந்தின் செலாவணி மாறறு வீதத்தை இப்போதைய பவுன் இசுடர்லிஙகின் மதிப்பின் அடிப்படையில் 10 சதவீதம் குறைவாகவே நிறுவியிருக்க வேண்டும். ஆனால், அவ்வாறு செய்வது இங்கிலாந்திற்கு மிகப்பெரிய இழுக்கு என அவர் எண்ணினார். இதனால் இங்கிலாந்தின செலாவணி 10 சதவீதம் மிகை மதிப்புப் பெறறதாயிற்று. இதன்காரணமாக இங்கிலாநது இறக்குமதி பெருகியது; ஏறறுமதி மிக மிகச் சுருங்கியது. ஏற்றுமதியை ஊக்குவிக்க வேண்டுமெனில் விலைகளை 10 சதவீதம் குறைகக வேணடியிருநதது. இதற்காகத் தொழிலாளரின் ஊதியத்தை 10 சதவீதம் குறைகக வேண்டியிருநதது. ஆனால், இவ்வாறு குறைப்பதற்குரிய வாய்ப்பு எள்ளளவும் இல்லாது போகவே இஙகிலாந்தின் செலுத்து நிலைச் சமன்பாட்டில் காணப் பெறற சமநிலையின்மை மேலும் மேலும் விரிவடைந்தது. இதற்குத் தீர்வு காண முடியாது போனதால் இஙகிலாநது பொன் திட்டத்தை இறுதியாகத் துறநதது. அதனபின் அநநாடு பொன் திட்டத்திற்குத் திரும்பவே இல்லை. செலாவணி மிகை மதிப்பீட்டுக் கொளகையே பொன் திட்டத்தை அழிக்க முழு முதற்காரணமாக அமைந்தது.

செலாவணி மிகை மதிப்பீடு ஏற்றுமதியை மட்டுப்படுத்தி இறக்குமதியை ஊககுவிப்பதனால தொழில் முயற்சி, விலை, ஊதியம் ஆகியவற்றைப் பொறுத்த மட்டில் மந்தநிலையைத் தோற்றுவிக்கிறது. மேலும், தற்சார்புள்ள ஒரு நாட்டை விட அயல்நாட்டுவாணிகத்தைச் சார்ந்து நிற்கும் ஒரு நாட்டை இது பெரிதும் பாதிக்கும். எனவே, செலாவணி மிகை மதிப்பீடு குறுகிய காலத்திற்கே பயன் அளிப்பதாகும். தொடர்ந்து கடைப்பிடிக்கப்படுமேயாகில பொருளாதார மந்த நிலையை உருவாக்கவே அதுவழி கோலும். சிவ.இரா.

**செலிக்மேன், சார்லசு கேப்ரியல்** (கி.பி. 1873-1940) ஆங்கிலேய மானிடவியலின் முன்னோடி அறிஞர்கள் ஒருவர்; மெலனீசியா, சிரீலங்கா முதலான தீவுகளிலும் சூடான நாட்டிலும் குறிப்பிடத்தக்க களப்பணிகளை மேற்கொணடு மானிடவியல் கொளகைசார் ஆய்வுகளுக்குப் புதிய விளக்கங்

கொடுத்தவர். செலிக்மேன் (Charles Gabriel Selig man) இலண்டனில் 1873-ஆம் ஆண்டு பிறந்தார்.

இலண்டனில் புனித பால் (Saint Paul) பள்ளியில பயின்று புனித தாமசு மருத்துவமனையில் மருத்துவப் பயிற்சி பெற்றார். ஆனால், மானிடவியல் துறையே இவரைப் பெரிதும் கவர்ந்தது. அதனால், மருத்துவத் துறையை விடுத்து கி.பி.1898-இல் நியூகினிக்கும் ஆகத் திரேலியாவுக்கும் (Australia) இடையிலான தாரசு நீர்ச்சந்திப் (Torres Strait)பகுதியில் புத்தாய்வு மேற் கொண்ட குழுவில் சேர்ந்தார். பின்னர் இங்கிலாந்து திரும்பியதும் மருத்துவ ஆராய்ச்சியில் மீண்டும் ஈடு பட்டார். மானிடவியலில இவர் கொண்டிருந்த ஆர் வம் தணியாததால் மீண்டும் 1904-இல் நியூகினிக்குப் பயணமானார். அங்கு வாழ்ந்த மக்களின இனம், சமுதாயமும், பண்பாடு அடிப்படையிலான கூறுகளைத் தனித்தனியே பிரித்து, அதன்மூலம் அவர்களை வகைப்படுத்த முயனறார். அதன் விளைவாக எழுதப் பட்டதே ஆங்கிலேய நியூகினியிலுள்ள மெலனீசியர் கள (The Melanisians of the British New Guinea, 1910) என்னும் நூல். புகழ்பெற்ற ஆங்கிலேய மானிடவியலாரான மாலினோசுக்கி (Malinowski) பிற்காலத்தில் அங்குக் களப்பணி மேற்கொளவதற்கு அந்நூல் பெரிதும் உதவியாக இருந்தது.

செலிக்மேன் 1904-இல் பிரண்டா சலாமன் (Brenda Z. Salaman) என்பவரைத் திருமணம் செய்து கொணடார். பின்னர் இருவரும் சோந்து இலங்கையில 1907 முதல் 1908 வரை வெத்தர்களைப் (Veddas) பற்றி ஆய்வு செய்தனர். அதனை வெத்தா (Veddas, 1911) என்னும் தலைப்பில நூலாக வெளி யிட்டார். அதற்குப் பின்னர், சூடானில் (1909-10, 1911-12) ஆப்பிரிக்கா மக்களிடையே களப்பணி மேற் கொண்டார் முதல் உலகப்போரின் போது பேரரசு இராணுவ மருத்துவக் குழுவில் (Royal Army Medi)-cal corps) பணியாற்றியபோது, பிராய்டின் (Freud) கொள்கைகளை மானிடவியல் ஆய்வுகளுக்கு எவ்வாறு பொருத்தம் பெறச் செய்யலாம் என ஆராய்ந்தார். பல்வேறு பண்பாட்டினரிடையே பொதுவாகக் காணப்பட்ட கனவுகளைப் பற்றி அறிந்தார். நனவிலி மனத்தில் தோன்றும் கனவுகளின் வெளிப்பாட்டின மூலம் சில உளவியல்சார் மானிடவியல் ஆய்வுகளை மேற்கொள்ள முடியும் எனக்கருதினார். உளப் பகுப் பியலுக்கும் மானிடவியலுக்கும் இடையே உளள தொடர்புகளை முதன் முதலில் விளக்கிக் காட்டிய வர் இவரே.

இலண்டன் பொருளியல் பள்ளியில் விரிவுரையாள ராக 1910-ஆம் ஆண்டு நியமனம் பெற்றார். இங் குப் பகுதிநேரப் பேராசிரியராகவும் (1913-1934) பின் னர் ஏல் (Yale)பல்கலைக் கழகத்தில் (1938) மதிப்புறு பேராசிரியராகவும்பணியாற்றினார். இவர் நூல்களுள் குறிப்பிடத்தகக சில: ஆபிரிக்க இனங்கள் (Race of Africa, 1930), நைல் ஆற்றுச் சூடானின் கிறித்த வரல்லாத பழங்குடிகள் (Pagan Tribes of the Nilotic Sudan, 1932)எகிப்தும் நீக்கிரோ ஆப்பிரிக்காவும் (Egy pt and Negro Africa, 1934) முதலியன. செலிக்மேன் ஆச்சுபோர்டில் 1940-ஆம் ஆண்டு காலமானார். சீ.ப.

***செலுத்து வங்கியர்,*** காசோலைக்கான பணத் தைச் செலுத்தும் வங்கியரைக் குறிககும். ஒரு காசோ லையை (Cheque) வாடிக்கையாளர் எந்த வங்கிக் கிளையில் கணக்கு வைத்துள்ளாரோ அங்கு அதைத் தரவேண்டும். எந்த வங்கி மீது அது விடுக்கப்பட்டுள் ளதோ அந்த வங்கி அக்காசோலைக்குப் பணம் தர வேண்டும். அந்த வங்கிக்குச் செலுத்து வங்கி என்பது பெயர். ஒரு காசோலைக்குப் பணம் தரும்பொழுது செலுத்து வங்கியர் (Paying Banker) நியாயமான கவனமுடனும் அக்கறையுடனும் சுறுசுறுப்பாகவும் இயங்கவேணடும் அவர் தவறுதலாக ஒரு காசோ லைக்குப் பணம்கொடுக்க மறுத்து விட்டால், வாடிக் கையாளருக்கு இழப்பீடு வழஙகவேண்டும். குறைபா டான காசோலைக்கு அவர் வேலைநெருக்கடியில் பணம் கொடுத்துவிட்டால் வாடிக்கையாளர் கணக் கில் பற்றுச் செய்ய முடியாது. எனவே, இவ்வங்கிய ரின் நிலை இடர்ப்பாட்டுக்குரியது (Risk). எனவே, ஒரு காசோலைக்குப் பணம் தரும்போது வங்கியர் மிகவும் கவனமுடன் இருக்கவேணடும்.

ஏரு காசோலைக்குப் பணம் செலுத்துவதற்கு முன்னர் செலுத்து வங்கியர் எச்சரிக்கையாகக கையாளவேண்டிய நடவடிக்கைகளாவன: 1) அவர் அக்காசோலை சாதாரணக் காசோலையா அல்லது கீறலிட்ட (Crossed) காசோலையா என்று பார்க்க வேணடும். சாதாரணக் காசோலையாக இருந்தால் பணத்தைக் கொடுத்துவிடலாம். கீறலிட்டதாக இருந்தால் ஒரு வங்கி மூலம்தான் பணம் செலுத்த முடியும். அதுவும் சிறப்புக் கீறல் (Specially Crossed) உடையதாக இருந்தால் எந்த வங்கியின் பெயர் அதில் எழுதப்பட்டிருக்கிறதோ அந்த வங்கி மூலம்தான் பணம் பெற முடியும். 'பணம பெறுபவர் க/கு' (A/C payee) 'செலாவணித் தன்மை அற்றது' (Not Nego tiable) என்றிருந்தால் செலுத்து வங்கி அதைப்பற் றிக் கவலைப்பட வேணடியதில்லை. அவை பணத் தைப் பெறும் வங்கியருக்கு இடப்பட்ட ஆணையா கும். கீறல் விதிகளுக்குப் புறம்பாகப் பணம் செலுத் தப்பட்டால் விடுநருக்கும் (Drawer) உண்மையான உரிமையாளருக்கும் வங்கிதான் பொறுப்பாக வேண் டும். முறைப்படி பணம் செலுத்தியதாகக் கொள்ள

முடியாது. 2)கணக்கு வைத்துள்ள கிளை மீதுதான் காசோலை விடுக்கப்பட்டுள்ளதா என்று அவர் பார்க்க வேண்டும். 3) வங்கி வேலை நாள்களில் வேலை நேரத்தில் காசோலை தரப்பட்டதா என்று பார்க்க வேண்டும். விடுமுறை நாள்களில் பணம் தரக்கூடாது. வேலை நாளகளில வேலை நேரம் அறற நேரத்தில் பணம் தரக்கூடாது. அவ்வாறு செலுத்தினால் அது முறைப்படி பணம் செலுத்திய தாகக் கொளளமுடியாது. 4)காசோலை கிழிந்து பல பகுதிகளாகக் காணப்பட்டாலோ நீக்கம் (Cancel) செய்யப்பட்டிருந்தாலோ பணம் தரமுடியாது. அவ்வாறுள்ள காசோலையை விடுநர் உறுதி செய்து கையெழுத்திட்டு அனுப்ப வேணடும்.

எனவே, செலுத்து வங்கியர் பணம் செலுத்துவ தற்கு முன்னர்க் காசோலை உரியமுறையில உளளதா என்று கவனிக்க வேண்டும். சட்ட முறையான தேவை களை அது கொண்டிருக்க வேணடும். காசோலையில் எத்தகைய கட்டுப்பாடுகளும் இருககக்கூடாது. காசோ லையில தேதி எழுதப்பட்டுளளதா எனறு பார்க்க வேணடும். தேதி எழுதவிலலை யென்றால அது செல் லாது. முன் தேதி (Anti Dated) யிட்டதாக இருநதால் பணம் செலுத்தும்போது, அத்தேதி வந்துவிட்டால் பணம் செலுத்தலாம். பின தேதி (Post Dated) குறிப்பிடப்பட்டிருந்தால் அந்த தேதியில பணம் செலுத்தலாம். தொகை எழுததாலும் எண்ணாலும் எழுதப்பட்டு அது ஒத்திருகக வேணடும். தொகை எணணால் மட்டும் இருந்தால் 'தொகையை எழுததில் எழுதுக' என்று எழுதித் திருப்பி அனுப்பிடலாம். ஆனால், எழுத்தால் மட்டும தொகை எழுதியிருந் தால் பணம் தந்திடலாம். எழுத்திற்கும் எணணிற்கும் வேறுபாடிருந்தால் 'எணணும எழுத்தும் மாறுபடு கிறது' (Words and Figure Differ) என எழுதிக் காசோலையை மறுத்திடலாம் அல்லது எழுததில காணும் தொகையைத் தந்திடலாம் அலலது சிறிய தொகையைக் கொடுத்திடலாம்.

முக்கிய திருத்தம் இருந்தால் 'திருத்தத் திற்கு விடுநர் உறுதிபபாடு தேவை' (Alteration Requires Drawers's Confirmation) எனறு எழுதித் திருப்பி அனுப்பிட வேணடும். திருத்தம் வெளியில தெரியாம லிருநது செலுத்தபபட்டால் அது முறைப்படிச செலுத்தியதாகக் கொளளப்படும். வாடிக்கையாளரின் கணக்கில் பணம் இல்லையென்றால காசோலையைத் திருப்பி அனுப்பிவிடலாம். ஆனால், வங்கி அவருடைய கணக்கை நனறாக ஆராயவேணடும். வங்கி மேல் அதிகப்பற்று (Over Draft) ஏற்பாடு இருந்தால் அதையும் எடுத்துக்கொளள வேணடும். கணக்கிலிருக் கும் தொகையை யாருக்கும் தெரிவிக்கக் கூடாது. தொகையில் ஒரு பகுதி மட்டும் செலுத்தக் கூடாது.

வாடிக்கையாளரின் மாதிரிக் கையெழுத்தோடு கா சோலையில் உள்ள கையெழுத்தை ஒப்பிட வேண்டும். அவ்வாறு பார்க்காமல் ஒரு பொய்க் கையெழுத் திற்குப் பணம் செலுத்திவிட்டால், அதை முறையாகக் கொடுத்த பணமாகக்கொளள முடியாது. சட்டமுறை யான பாதுகாப்பை அவர் அடைய முடியாது. திறமை யாகப்போடப்பட்ட பொய்க கையெழுத்தைத தெரிந்து கொள்ளாமல் பணம் செலுத்திவிட்டால் கூட அவர் தான் பொறுபபாகிறார். ஆனால, பொய்க் கையெ ழுத்துப் போடுவது வாடிக்கையாளரின் நடததை என்று தெரியவந்தால் வங்கி பொறுப்பாகாது.

காசோலையில் காணப்படும் புறக்குறிப்பை அல லது மேலெழுதுவதை (Endorsement) ஒழுங்காகக் கவனித்துக்கொண்டு வரவேணடும். கையொப்பமிடு பவர் செயல விளைவு புறக்குறிப்பிடு (Per Pro Endorsement) கையெழுத்திட்டவருக்குப் போதிய அதிகாரம் இருக்கிறதா இல்லையா என கவனிக்கவேணடும். அவவாறு செயயத தவறினால் புறக்கணிபபு விளை விற்கு அவர் ஆளாவார். வெற்றுப் புறக்குறிப்பாடு (Blank Endorsement) ஆணையிடும் காசோலை, கொணர்பவர் காசோலையாக மாறிவிடும். எனவே காசோலையின் புறக்குறிப்பை வற்புறுத்த வேணடிய தேவையில்லை. பணம் பெறுபவர் காசோலையைக கொணடு செலலாத நிலையில் ஆணையிடும் காசோ லைக்குப் புறக்குறிப்புத் தேவைப்படுகிறது.

எடுத்துக்காட்டாக 'அண்ணாமலைப் பல்கலைக கழகம் அலலது ஆணை' (Annamalai University or Order) எனறு எழுதப்பட்ட காசோலை துணை வேநதா அல்லது பதிவாளரால புறககுறிப்பு செய்யப பட வேணடும். புறககுறிப்பை மை அல்லது எழுது கோலால் எழுதிடலாம். போதிய அதிகாரம் இருந்தால் 'இரப்பர் முத்திரை' பயனபடுத்திடலாம். அச்சடிதத புறக் குறிப்புகள ஏற்கப்படமாட்டா. பணம் பெறு பவர் அல்லது புறக்குறிப்பு செய்யப்பட்டவர் (Endorsee) ஆகியவர்களின கையெழுத்துதான் அதில இருக்கவேணடும். சுருக்குக் கையெழுததோ, புனை பெயரோ எழுதப்படக் கூடாது. திருமணமான பெண புறக்குறிப்பு செய்தால அவர் பெயர்முன் திருமதி (Mrs.) என்ற சொல்லைப் பயன்படுத்தலாம். படிப் பறிவு இல்லாதவர்கள தஙகள் இடது கைப பெருவிரல முத்திரையைத் தக்க சாட்சியுடன இடலாம். சாட்சி யின முகவரியும் எழுதப்படவேணடும.

இயக்குநர், மேலாளர், செயலாளர் ஆகியவர் களின் புறக்குறிப்பை வங்கி ஏற்றிடும். ஆனால், கணக்கர், காசுக் கணக்கர் (Cashier) போன்றோர் களின புறக்குறிப்பை ஏற்காது. துறைமுகப் பொறுப

புறுதி நிறுவனம் (Port Trust), நகராட்சி போன்ற பொதுத்துறை நிறுவனங்கள் புறக்குறிப்புச் செய்திடும் போது அதன் அதிகாரி தன்னுடைய வேலை நிலையையும் எழுதிக் கையெழுத்திட வேண்டும். இறந்தவர்களுக்குச் செலுத்தப்படும் காசோலையில் அவர்களின் வாரிசுரிமையாளர்கள் புறக்குறிப்புச் செய்யவேண்டும்.

**சட்டமுறையான பாதுகாப்பு:** ஒரு ஆணையிடு காசோலைக்கான பணம் பெறுபவருக்குப் புறக்குறிப்புச் செய்யப்பட்டால் விடுத்தவருக்கோ எழுதப்பட்டவருக்கோ (Drawee) முறைப்படியாகப் பணம் செலுத்தப் படுகிறது என்று மாற்றுமுறையாவணச் சட்டம் (Negotiable Instruments Act) கூறுகிறது. எனவே, செலுத்து வங்கியர் சட்டப் பாதுகாப்பு (Statutory Protection) பெற்றிடத் தேவையான கட்டுப்பாடுகளாவன: 1) ஆணையிடு காசோலைக்கு வங்கி, பணம் செலுத்தியிருக்க வேண்டும். 2) அத்தகைய காசோலை பணம் பெறுபவரால் அல்லது அவர் அதிகாரம் பெற்றவரால் புறக்குறிப்புச் செய்யப்பட வேண்டும். 3) செலுத்துதல் முறைப்படி செலுத்துதலாக இருக்கவேண்டும்.

**முறைப்படி செலுத்துதல்:** ஒரு மாற்றுச் சீட்டில் எழுதப்பட்டுள்ளவரை அல்லது ஏற்பவரைப் பொறுத்த மட்டில் அவர் எழுதுபவருக்குத் தரவேண்டிய பணம் முழுவதும் கொடுத்துக் கணக்குத் தீர்த்தலுக்கு இது மிகவும் தேவை. முறைப்படி செலுத்துவதைப் (Payment in Due Course) பின்பற்ற முறையாவணத்தில் எழுதப்பட்டுள்ள கட்டுப்பாடுகளின்படி நடக்கவேண்டும். குறைந்த தொகையோ அல்லது மிகையான தொகையோ செலுத்தக்கூடாது. தவணைத் தேதிக்கு முன்னரும் பணம் செலுத்தக் கூடாது. மாற்றுச் சீட்டின் மீது பொறுப்புள்ள ஒருவரால் நன்னம்பிக்கையுடனும் புறக்கணிப்பில்லாமலும் பணம் செலுத்தப்பட வேண்டும். எவரிடம் பணம் செலுத்தப்படுகிறதோ அவரிடம் முறையாவணம் இருக்கவேண்டும். பணம் பெறுபவருக்கு உரிமையில்லை என்று நம்புவதற்கு அடிப்படை காணப்படக்கூடாது. பொய்க் கையெழுத்துள்ள மாற்று முறையாவணங்களை விடுத்துப் பிற ஆவணங்களில் முறைப்படிச் செலுத்துதல் ஏற்பட்டால் அப்பொழுது அது முழுதும் மதிப்பற்றதாகிவிட்டதாகக் கொள்ள வேண்டும்.

**முறைப்படி உடையவர்;** உரிமை மாற்றம் செய்தவரின் உரிமையில் உள்ள குறைகளையும் பொருட்படுத்தாமல் செலுத்தப்பட வேண்டிய தவணைத் தேதிக்கு முன்னர் மறுபயன் கருதி, எவரொருவர் ஒரு மாற்றுமுறையாவணத்தைப் பெறுகிறாரோ அவர் தான் முறைப்படி உடையவர் (Holder in Due Course) ஆவார். இந்தியச் சட்டத்தின் கீழ அவர் முறையாவணத்தின் மேலெழுதப்பட்டவராகவும் (Endorsee) பெறுபவராகவும் (Payee) இருக்கலாம். ஆனால் ஆங்கிலச் சட்டத்தில அவ்வாறிருக்க முடியாது.

**காசோலைக்குப் பணம்தர மறுத்தல்:** 1) விடுக்கப்பட்ட காசோலைக்குப் பணம் தரவேண்டாமென்று வாடிக்கையாளர் மாற்றுக் கட்டளை (Counter) பிறப்பித்தபோதும், 2) ஒரு வாடிக்கையாளர் இறந்த அறிவிப்புப் பெற்றபோதும், 3) ஒரு வாடிக்கையாளர் நொடிந்துவிட்டார் (Insolvent) என்ற அறிவிப்புப் பெற்றபோதும், 4) ஒரு வாடிக்கையாளர் மனச் சமநிலை இழந்துவிட்டார் (Insanity) என்ற அறிவிப்புப் பெற்றபோதும், 5) நீதிமன்ற முடக்காணை (Garnishee Order) பெற்றபோதும் 6) வங்கியிலிருக்கும் பணத்தை வேறொருவருக்கு மாற்றித் தந்த (Assign ment) போதும், 7) நம்புறுதிக் கணக்கில் (Trust Account நம்புறுதிக்கு முறிவு ஏற்பட்டபோதும், 8) காசோலை கொண்டு வருபவருக்கு உரிமையில்லாத போதும், அல்லது குறைபாடான உரிமையுள்ளபோதும் ஒரு செலுத்து வங்கியர் தம்மிடம் கொடுக்கப்பட்ட காசோலைக்குப் பணம் தர மறுத்திடலாம்.

இவ்வாறு செலுத்து வங்கியரின் பணிகள் பல வகைப் பொறுப்புகள் நிறைந்தனவாக முன்னெச்சரிக்கை எடுக்கவேண்டிய நிலையில் காணப்படுகின்றன.

கே.என.இரா.

*செலெபீசு* கிழக்கு இந்தோனேசியாவில் உள்ள மிகப் பெரிய தீவு. செலெபீசு (Celebes) தீவுக்குச் சூலவேசி (Soolawase) என்று மற்றொரு பெயருண்டு. இதன் பரப்பு 229, 108 ச.கி மீ. இதன் மக்களதொகை 10,409,533 (1980). இந்தோனேசியாவின ஒரு மாகாணமாகிய இப்பகுதியில நான்கு தொகுதிகள் உள்ளன. அவையாவன: சூலவேசி உத்தரம் (Sulawesi Utara), சூலவேசி தெங்கா (Sulawesi Tengah), சூலவெசி செலாத்தன (Sulawesi Selatan), சூலவேசி தெங்கரா (Sulawesi Tenggara). இங்குளள சிறப்பான நகரங்கள்: மெனாடோ (Menado), பாலு (Palu) உசுங்பதங்கு (Ujung Padang), கேந்தரி (Kendari) முதலியனவாம். இத்தீவை, போர்னியோவிலிருந்து மகசர் (Makasar) கடற்கால் பிரிகிறது. நிலப்பகுதியில் பல மலைகளும் எரிமலைகளும் உள்ளன. இங்குள்ள காடுகளில் புதுவகையான கிளிகள் காணப்படுகின்றன. முதலைகள் இங்கு மிகுதி. இப்பகுதியிலிருந்து பெறப்படும் மரத்துண்டுகள் ஏற்றுமதி செய்யப்படுகின்றன. இங்கு விளையும் தாதுப்பொருள்களில் முக்கியமாக நிக்கல், தங்கம், வைரம், கந்தகம், இரும்பு முதலியன

குறிப்பிடத் தக்கவை. கொப்பரைத் தேங்காய், தானியங்கள், அரிசி, புகையிலை, வாசனைத் திரவியங்கள் முதலியனவும் இங்கு உற்பத்தியாகின்றன.

இத்தீவுக்கு முதலில் கி.பி. 1512-இல் போர்ச்சுகீசியர் சென்றனர். பிறகு கி.பி.17-ஆம் நூற்றாண்டில் அங்குச் சென்ற தச்சுக்காரர் (Dutch) போர்த்துக்கீசியரை விரட்டிவிட்டு, உள்நாட்டு மக்களுடன்போர் நடத்தித் தம் ஆதிக்கத்தை நிறுவினர். உள்நாட்டினருக்கும் தச்சுக்காரருக்கும் இடையே கி.பி. 1666 முதல் 1669 வரை நடந்த போருக்கு மகசர் (Makasar) போர் என்பது பெயர். இரண்டாம் உலகப் போருக்குப் பிறகு, அயலவர் ஆதிக்கம் அத்தீவில் முடிவுறுறுப் புதிதாக அமைந்த இந்தோனீசியக் குடியரசின் 10 மாகாணங்களுள் செலெபீசுத் தீவும் ஒன்றாகியது. அம்மாறுதல் 1950-ஆம் ஆண்டில் நிகழ்ந்தது. செலெபீசுத்தீவு நான்கு பிரிவுகளாகப் பிரிக்கப்பட்டது. இதன் வடக்கில் உள்ள கடலுக்குச் செலெபீசுக் கடல் என்ற பெயர் அமைந்துள்ளது. தெ. பா.

**செவ்ரே உடன்படிக்கை:** முதல் உலகப் போருக்குப்பின் வெற்றிகண்ட நேசநாடுகள், தோல்வியுற்ற துருக்கியுடன் 1920-ஆம் ஆண்டு இவ்வுடன்படிக்கையைச் செய்து கொண்டன. கீழ்க்கண்ட கூறுகளை இது கொண்டிருந்தது. 1) துருக்கி, ஆசியா மைனர், திரேசு, ஏட்ரியா நோபிள், கலிபோலி ஆகிய பகுதிகளைக் கிரேக்கத்திற்குக் கொடுத்துவிட வேண்டும். 2) எகிப்து, சூடான், சைப்பிரசு, மொராக்கோ, துனீசு ஆகிய பகுதிகளில் துருக்கி தான் கொண்டிருந்த உரிமைகளை விட்டுவிட வேண்டும். 3) அரேபியா, மெசபடோமியா, சிரியா, பாலசுத்தீனம் ஆகிய பகுதிகளில் துருக்கியின் ஆதிக்கம் நீக்கப்பட வேண்டும். 4) துருக்கியப்படை 50,000 வீரர்களை மட்டும் உடையதாகக் குறைக்கப்பட வேண்டும். 5) பிரான்சு, சிரியாவின் காப்பு நாடாகவும், பிரிட்டன் மெசபடோமியா பாலசுத்தீனம் ஆகிய பகுதிகளின் காப்பு நாடாகவும் அறிவிக்கப்பட வேண்டும். 6) அந்நாட்டின் விமானப் படை வெற்றி பெற்ற நேச நாடுகள்பால் ஒப்படைக்கப்படல் வேண்டும். 7) கான்சுடாண்டிநோபிள், அலெக்சாந்திரியா ஆகிய துறை முகப்பகுதிகள் அனைத்து நாடுகளின் கட்டுப்பாட்டில் வைக்கப்பட வேண்டும்

ஆனால், செவ்ரே (Sevres) உடன்படிக்கையைத் துருக்கியில் அப்போது முசுதபா கமால் பாசாவின் தலைமையில் செயற்பட்ட துருக்கிய தேசியக் கட்சியினர் கடுமையாக எதிர்த்ததால், இவ்வுடன்படிக்கை நடைமுறைப்படுத்தப்படவில்லை. ஆயினும், இந் நிகழ்ச்சியின் பின்விளைவாக, 1923-ஆம் ஆண்டு துருக்கி, நேச நாடுகளோடு இலாசேன் உடன்படிக்கையைச் செய்துகொள்ள வேண்டியதாயிற்று. அதன்படி துருக்கி கீழக்கண்ட செயல்களை ஏற்க நேரிட்டது: 1) சிமிர்னா, கான்சுடாண்டிநோபிள், கிழக்குத் திரேசு ஆகிய பகுதிகளில் துருக்கியின் இறைமை ஏற்கப்பட்டது. 2) அராபியப் பகுதியில் துருக்கியின் ஆதிக்கம் பறிக்கப்பட்டது. 3) சிரியாவுக்குப் பிரான்சும், மெசபடோமியா மற்றும் பாலசுத்தீனம் ஆகியவற்றுக்கு பிரிட்டனும் காப்பு நாடுகளாக்கப்பட்டன. 4) தார்டெனெல்சு நீர்ச்சந்தி வழியாக அனைத்து நாடுகளின் கப்பல்களும் செல்ல அனுமதிக்கப்பட்டன. இதன் மூலம் செவ்ரே உடன்படிக்கையின் முக்கிய கூறுகள் மீண்டும் நிலைநாட்டப்பட்டன மா.கா.

**செவ்வப்ப நாயக்கர்** (கி.பி.1532-1563) தஞ்சை நாயக்க மரபினைத் தோற்றுவித்தவர். திம்மப்ப நாயக்கருக்கும் பையாம்பிகாவிற்கும் மகனாகப் பிறந்தவர் சின்னசெவ்வர். இவர் தளவாய் செவ்வப்ப நாயக்கர், அடப்பம் சின்ன செவ்வப்ப நாயக்கர், வீர செவ்வப்ப பூபதி, திம்மப்ப சின்ன செவ்வநிருபதி, கர்நாடக சிம்மாசன காரிய துரியர், தஞ்சை செவ்வப்ப பூபதி முதலான பெயர்களால் கல்வெட்டுகளிலும் இலக்கியங்களிலும் குறிக்கப்பெறுகிறார். விசயநகரப் பேரரசர் அச்சுத ராயரின் கொழுந்தியார் மூர்த்தியாம்பாளின் கணவரான இவர், கி.பி. 1532-இல் அச்சுதராயரால் தஞ்சை நாயக்க அரசின் முதல்வராக அமர்த்தப்பட்டார். இவர் 21 ஆண்டுகள் தஞ்சைப் பகுதியை ஆண்டு, தெலுங்கு, தமிழ் இலக்கிய வளர்ச்சிக்குப் பாடுபட்டார்; சமயத் துறையில் சமரசக் கொள்கையைப் பின்பற்றினார். பல திருக்கோயில்களைப் புதுப்பித்து அறக்கொடைகள் அளித்தார்.

இவர் சோழமண்டலம், தொண்டை மண்டலத்தின் தென்பகுதிகள் ஆகியவற்றை ஆட்சி புரிந்து வந்தார். மதுரை, செஞ்சி நாயக்கர்களைக் காட்டிலும், இவர் விசயநகரப் பேரரசருக்கு மிகவும் உதவியாகவும் உண்மையாகவும் நடந்துகொண்டார். தஞ்சை மண்டல ஆட்சி தனியாகத் தொடங்கப்பட்ட நிலையில், அச்சுதராயரே உடனிருந்து, நிருவாக வசதிக்காக, செவ்வப்பரிடமிருந்து திருச்சிராப்பள்ளி மதுரை மண்டலத்திற்கும், மதுரை நாயக்கர் விசுவநாதரிடமிருந்த வல்லம், தஞ்சை மண்டலத்திற்கும் மாற்றப்பட உதவினார். இவர், பேரரசின் தளபதிகள் இராமராயர், விட்டலதேவராயர் ஆகியோர் கி.பி. 1545-இல் திருவனந்தபுரம் உதய மார்த்தாண்டவர்மாவின் மீது படையெடுத்தபோது, படையுதவியும் பிற உதவிகளும் புரிந்தார். புகழ்மிக்க

தலைக்கோட்டைப் போரிலும் இவர் பேரரசுக்கு உதவினார் போலும்.

பக்திமானாகிய இவர் கோயில் குளங்களையும், பிற குளங்களையும் செப்பனிட்டார். தஞ்சையில உள்ள சிவகங்கைக் குளத்திற்குச் செவ்வப்பனேரி எனப் பெயரிட்டார். சிவகங்கைக் கோட்டையையும் பழுது பார்த்தார் திருவண்ணாமலை அருணாசலநாதர் கோயில பதினொரு நிலைப் (அடுக்கு) பெருங்கோபுரத்தைக் கட்டுவித்தார். விருத்தாசலம், காஞ்சிபுரம் கோயிற் சுற்று மதில்களைக் கட்டினார்; திருப்பதி, சிவசைலம் கோயில விமானங்களுக்குப் பொன வேய்ந்து புகழ்பெற்றார். காவிரியின் இருமருங்கும இருநத பல சைவ, வைணவ கோயிலகளுககுப் பல திருப்பணிகள் புரிந்தார். பிற மதத்தினருக்கும் பல சலுகைகள் அளிததார், மாத்துவ சமயக் குரு விசயேந்திர தீர்த்த சிரீபதிக்குச் சிற்றூர் ஒனறினைத் தானமாக வழங்கினார். தஞ்சைச் சூரியனார் கோயிலில் வாழ்நது வந்த சிவாக்கிர யோகியார் திருவீழிமிலையில தஙக விரும்பியதால், அங்கோர் மடங் கட்டிக் கொடுத்தார். தஞசைத் தரணியைச் சோந்த மூவலூர் எனனுமிடத்தில் அமைந்துளள கோயில திருப்பணிக்காக, செவ்வப்பர் பத்து வேலி நிலம தானமளிததார். இவர் கி.பி. 1549-இல பிராமணாகளுக்கு உணவளிக்கவும், சந்நியாசிகளை உபசரிப்ப தறகும் நிலதானம் செய்தார்.

நாகபபட்டினத்தில் குடியேற்றங்களை ஏறபடுத்திய போர்த்துகீசியருககுத தக்க பாதுகாப்பு அளித்ததுடன், அவர்கள வாணிகம புரியவும் அனுமதியளித தார்.

இவரது ஆட்சிககாலத்தில இலககியம் நனகு வளர்ந்தது. கிரியாதீபிகை, சைவ சநநியாச பதததி எனனும் வடமொழிச் சமய நூலை இயற்றிய சிவாக்கிர யோகிகள செவ்வப்பரால் ஆதரிககப் பட்டார். சிவாககிர யோகியார் இயற்றிய சிவநெறிப் பிரகாசம என்ற தமிழ்நூல் கி.பி. 1545-இல் இவரது அவையில அரஙகேற்றப்பட்டது. இவரது ஆட்சியின இறுதிப் பகுதியில் பன்மொழிப்புலவரும் அரச தந்திரியுமான கோவிந்த தீட்சிதர் இவருக்கு அமைச்சராக அமர்த் தபபட்டார். தீட்சிதர்பல நூலகளை இயற்றியுளளார். இவரது ஆட்சிககாலத்தில சரசுவதிமகால நூலகம் சிறப்புற்றது.

தன் மகன அச்சுதப்ப நாயக்கருக்குச் செவ்வப்பர் கி பி. 1563-இல் இளவரசுப் பட்டம் கட்டி, ஆட்சியில் ஈடுபடுத்தி, தனது இறுதிக்காலம் வரையில இறைபணியில் ஈடுபட்டார். கி.பி. 1580-இல் காலமான இவருடைய திருவுருவச் சிலைகள் தஞ்சைப் பெரிய கோயிலில் அம்மன்கோயில் முனபும், தஞ்சை வேங்கடரமணசாமி கோயிலிலும் உளவெனபர்.

அச்சுதப்பருக்கு அடைக்காய் தரும் பணிசெய்து அடப்பம் என்னும் பட்டம் பெற்ற இவர், ஒரு மண்டலத்தின் அதிபதியாக உயர்த்தப்பட்டதிலிருந்து இவர் திறமையை நன்கு அறியலாம் மதுரை மண்டலத்திலிருந்து பிரிநத தஞ்சைமணடலம், எல்லாத் துறைகளிலும் மேம்பட்டு விளங்கச் செவ்வப்ப நாயக்கர் அரும்பாடுபட்டார். விசய விலாசம், இராசகோபால விலாசம் ஆகியன இவரது பெருமையைப் பேசுகினறன. சுதந்திர தஞ்சை நாயக்கர் அரசைத் தோற்றுவித்த பெருமைக்குரியவர் இவரே என்று தஞ்சாவூர் ஆந்திர ராசுலு சரித்திரம் முதலிய நூலகள் இவரைப பாராட்டுகின்றன. ம இ.

**துணை நூல்கள்:**

**Subramanian.**, N, History of Tamil Nadu (A.D. 1565-1956) Koodal Publishers, Madurai, 1982
**Vriddhagirisan**, V., The Nayaks of Tanjore, Annamalai University, 1942.

*செவ்வைச் சூடுவார்*: பாகவதம், வேதவியாசரால் இயற்றப் பெற்றது. அதனைத் தமிழிற் பாடியோர் இருவர். ஒருவர் செவ்வைச் சூடுவார்; மற்றொருவர் அருளாளதாசர். செவ்வைச் சூடுவார் இயற்றிய நூல் சிரீபாகவத புராணம் என்றும் இதிகாச பாகவதம் என்றும் வழங்கப்பெறுகிறது.

செவ்வைச்சூடுவார் பாண்டிய நாட்டில் மதுரைக்கு வடககே வைகைக் கரையிலுள்ள வேமபற்றூரில் பிறந்தவர்; அந்தண மரபினர். இவரியற்றிய பாகவத நூலின் சிறப்பு நோக்கி, வேத வியாசரே செவ்வைச் சூடுவாராகத் தோனறிப் பாடினார் எனறு ஒரு தனிப்பாடல் கூறும்.

தமிழில் பாகவதம் பாடியவர் செவ்வைச்சூடுவார் அலலர்; ஆரியபப புலவரே என்னும்கருத்தை மறுத்து, வேம்பற்றூராரே பாடினார் எனறு ரா. ராகவையஙகார் வலியுறுத்தி விளககியுள்ளார்

வேம்பற்றூரில் செவவைச்சூடுவார் மட்டுமன்றி, தத்துவராயர், ஈசான முனிவர், சிரீபட்டர், பெருமாளையர், கவி குஞ்சரமையர். முத்துவேங்கடசுப்பையர் போன்ற அறிஞர் பெருமக்கள தோன்றியுள்ளனர்.

வடமொழியிலுள்ள இதிகாச பாகவதம் 18,000 சுலோகங்களைக் கொணடது. செவ்வைச்சூடுவார்

இயற்றிய பாகவதம் 15 சந்தங்களையும் 155 உட்பிரிவு களையும் 4973பாடல்களையும்கொண்டுள்ளது. கடவுள் வாழ்த்துப் பகுதியை விரித்துப்பாடாமல் ஐந்து பாடல் கள் அளவில் பாடியுள்ளார். அவை திருமால் வணக்கம், கலைமகள் வணக்கம், சுகமுனிவர் வணக்கம், நூற் பெருமை, அவையடக்கம் முதலியவையாகும். பொது வாகக் கடவுள் வாழ்த்துப் பகுதியை அடுத்து அமை யும் பாயிரம் நூலின் இறுதியில் இடம்பெற்றுள்ளது.

'இந்த நூலின் இசைத்ததென் காரணம் என்னில் அந்தமாதி மற்றும் இடையினும் ஞானமாம் அதனால் சிந்தை சேரும் வெந்துயர் தவிர்ந்திட இது தெரித் தான்' என்று படைப்பின் புண்ணியப் பயனைக் கூறி யுள்ளார்.

செவ்வைச்சூடுவார் காலம் கி.பி. 16-ஆம் நூற் றாண்டின் முற்பகுதியாகும். இவர் சிறந்த வைணவர். திருமாலைப் பற்றி வரும் இடங்களில் திருமாலின் குணங்களையும் பெருமைகளையும் பத்திச் சுவை படப் பாடுவார். பரசுராமன் தலயாத்திரை சென்ற போது தமிழ்நாட்டின் ஊடே சென்றாரெனப் பாடு வார். அதனைக் கூறும் 'தெண்டிரை நிலத்தொரு திலக மாகிய, தண்டமிழ் நாட்டகம் சார்ந்திட் டானரோ' என்னும் பகுதி, செவ்வைச்சூடுவார் மொழிப் பற்றும் நாட்டுப்பற்றும் மிக்கவர் என்பதை விளக்குகின்றது.

நூலின் இறுதியில் நூல் கற்போருக்கு வாழ்த்துக் கூறி முடித்துள்ளார். செவ்வைச் சூடுவார் பாடிய பாகவதத்தின் செம்மைப் பதிப்பு டாக்டர் உ.வே. சாமிநாதையர் குறிப்புரையுடன், அவர் புதல்வர் கல்யாண சுந்தரமையரால் வெளிவந்துள்ளது. அ.வி

*செறுசேரி நம்பூதிரி:* இவர் மலையாள மொழிக் கவிஞர்களுள் ஒருவர். இவர்தம் பெற்றோர், காலம் முதலியன பற்றி அறிவதற்குத் தெளிவான சான்றுகள் கிடைக்கவில்லை. வடகேரளத்தில் இருந்த கோலத்திரி என்னும் பகுதியின் குறுநில மன்னராக விளங்கிய உதயவர்மனது ஆத்தான கவிஞராக விளங்கியவர் என்பதனை இவர்தம் காவியத்திலிருந்து அறியமுடிகிறது. மலையாள இலக்கிய வரலாற்றின் ஆசிரியர் பரமேசுவரன் நாயர், இவரது காலம் கி.பி. 15-ஆம் நூற்றாண்டு என்று குறிப்பிட்டுள்ளார். மலை யாள மொழியில் 'கிருட்டிண பாட்டு' அல்லது 'கிருட்டிண காதா' எனப்படும் காவியத்தை இவர் இயற்றியுள்ளார். இவரை ஆதரித்த உதயவர்மனின் விருப்பத்தை ஏற்று இக்காவியம் பாடப்பட்டது என் றும், அவன் மனைவியான அரசி அக்காவியம் பாடு வதற்கான சந்தத்தை அமைத்துத் தந்தார் எனறும் கூறுகினறனர்.

இவருடைய காவிய நடையில் புதிய இயல்புகள் நன்கு புலப்படுகின்றன. மலையாள மொழியில் மணிப் பிரவாளச் செல்வாக்கு மிக்க காலத்தில் இவர் வாழ்ந்தவராயினும் அதன் ஆதிக்கத்திற்கு ஆட்பட வில்லை என்பது குறிப்பிடத்தக்கது. தம் காப்பியத் திற்குக் கருவாகக் கிருட்டிணன் கதையைத் தேர்ந் தெடுத்ததாலும், அதனால், ஆரியப் பண்பாட்டோடு தொடர்புடைய கருத்துகளைக் கூறவேண்டியிருந்த தாலும், காப்பியத்தில் ஓரளவு வடமொழிச் சார்பு தவிர்க்க இயலாததாக அமைந்தது. இவரே வட மொழிப் புலமையும், புராண இதிகாசத் தோய்வும் மிக்கவராக இருந்தும், தம் காப்பியத்தைக் கேரள மக்களுக்காக, நடைமுறை மலையாளத்தில் சிறந்த கவிதைகளில் இயற்றியுள்ளார்.

இக்கால மலையாளக் கவிதை இயல்புகள் பல உருவாவதற்கு வித்திட்டவர் இவராவார். இவரது 'கிருட்டிண காதா' காப்பியம் ஆற்றொழுக்கான நடை, எளிமை, வீறுடைமை முதலிய பண்புகள் பெற்று விளங்குகிறது. பொருள் செறிந்த அணி நலம் மிக்க இவர்தம் காப்பியத்தில் தெளிவின்மை இல்லை என்பது குறிப்பிடத்தக்கது. சொற்சிலம்பம் ஆடுவதில் நாட்டங்கொள்ளாத இவரது காப்பியத் தில் சொற்சித்திரங்கள் அழகுற அமைந்து விளங்கு கின்றன. இவர்தம் காப்பியத்தில் கண்ணனை நம்பூதி ரிக் குடும்பத்தில் பிறந்தவராகவே வருணித்துள்ளார். கோகுலம் பற்றி இவர் வருணித்துள்ளன, கேரளப் பகுதியில் நிகழும் பருவ காலங்களின் வருணனை களாகவே உள்ளன. நுட்பமான நகைச்சுவை காவி யத்தில் உரிய இடங்களில் திகழ்கிறது. இவர் தம் காவி யத்தில், வடமொழி, தமிழ்மொழிச் சொற்களைக் குறைவாகவே கையாண்டுள்ளார். அ.மா.ப.

*செறுமர்:* செறுமர்கள் அல்லது செறுமக்கள் என்போர் கேரள நாட்டைச் சேர்ந்த பழங்குடிகளுள் ஒருவகையினர். வட மலபார் மாவட்டத்தில் இவர்கள் புலையர் எனவும் வழங்கப்படுகிறார்கள். இவர்களுள் கணக்கன், புலச்செருமன், ஏராளன், கூடான், உரோ வன் என்னும் உட்பிரிவுகள் உண்டு. ஆளன், பறம்பன் என்னும் உட்பிரிவினர்களும் சில பகுதிகளில் வாழ் கின்றனர்.

செறுமர் என்னும் சொல் சேரமக்கள் என்பதன் மரூஉ என்றும், இதன் பொருள் சேரநாட்டின் பழங் குடிகள என்றும் ஒரு சாரார் கருதுவர். மற்றொரு சாரார் செறிய (சிறிய) மக்கள் என்பதே செறுமன் என மருவிற்று என்பர். இதன் பொருள் சிறிய, தாழ்ந்த அல்லது காப்பாற்றப்பட வேண்டிய மக்கள் என்பதாகும். புலையன் என்னும் சொல் தீட்டு என்

பதனின்றும் பெறப்படுகிறது என்பர். சிலர், செறுமர் என்னும் பெயர் இப்பிரிவினரின் சிறிய உடற்கட்டைக் குறிக்கிறது அல்லது செறை (சிறு அணைக் கட்டு-சிறை) அல்லது தாழ்ந்த நெல்வயல் என்பதனைக் குறிக்கிறது என்பர். உலோகன் என்பவர், சேர நாடு என்னும் பெயர் இச் செறுமர்களின் நாடு எனப் பொருள்படும் எனவும், சேரமான் பெருமாள் என்னும் பெயர் இவர்களுடைய அரசரின் பெயரையே குறிப்பிடும் எனவும் கருதுகிறார்.

செறுமர்களுள் 39 பிரிவுகள் இருப்பதாகக் கூறுவர். இப்பிரிவினருள் தமகுள்ளேயே மணம் புரிந்து கொள்ளும் அகமண (Endogamy) முறையினரும் தம் சாதியைத் தவிர்த்துப் பிற பிரிவினரையே மணக்கும் புறமண (Exogamy) முறையினரும் உள்ளனர். பெரும்பாலும் உழவுத்தொழில்கூலிகளாகப் பணிபுரியும் இவர்களில் சில பகுதியினர் பாய், கூடைகள் முடையும் பணிகளும் செய்கின்றனர்.

பண்டை நாடுகளில் சேர நாட்டின் பல பகுதிகளைத் தாம் ஆட்சி புரிந்ததாகப் புலையர்களிடையே ஒரு வாய்வழிக் கதை நிலவுகிறது. புலையரசர்கள் வழிவந்த ஆய்க்கரை எசமானன் என்பவரை வடக்கு மலையாளத்தைச் சேர்ந்த புலையர்கள் தங்கள் தலைவராகக் கருதி மரியாதை செய்கின்றனர். திருவனந்தபுரத்தில் வெள்ளிக குளக்கரையில் அமைந்த புலையனார் கோட்டை என்னும் ஒன்றில் புலையரசர் ஒருவர் ஆட்சி புரிந்ததாகக் கதை உணடு.

திருவனந்தபுரம் பத்மநாபசுவாமி வழிபாடு ஒரு புலையனோடு நெருங்கிய தொடர்புடையது. அனநதன் காட்டில் தன் கணவனோடு வாழ்ந்துவந்த புலப்பெண் ஒருத்தி ஒருநாள் ஒரு குழந்தையின் அழுகைச் சத்தத்தைக் கேட்டாள். வியப்பு மேலிடடு அவவிடதிற்குச் சென்றவள், பாம்பு ஒன்றினால் பாதுகாக்கப்பட்டுக் கிடந்த ஒரு குழநதையைக் கணடாள். அதனை எடுத்துப் பாலூட்டி வளர்த்தாள். பாம்பு பாதுகாத்தமையினால அக்குழந்தை, தெய்வத் தன்மையுடைதாகக் கருதப்பட்டது. இவ்வியப்புச் செய்தியைப் கேள்வியுற்ற திருவனந்தபுரம் அரசர் அக்குழந்தை கண்டெடுக்கப்பட்ட இடத்தில் பத்மநாப சுவாமிக்கு ஒரு கோவில் கட்டினார்.

செறுமர்களில் ஒரு பிரிவினர் இறையர் எனப் படுவர். இவர்கள் புலையரைக் காட்டிலும் சற்று உயர்ந்த சமூக மதிப்பு உடையவர்கள். தங்கள் எசமானரின் வீட்டின் இறை (இறைவானம்) வரை இவர்கள் வர அனுமதிக்கப்படுவார்கள். ஆனால் புலையரோ எவரையும் பார்த்தாலோ அணுகினாலோ தீட்டு ஏற்பட்டுவிடுமாம். இவர்களை நிலத்தோடு கட்டுண்ட அடிமைகளாகக் கருதி விற்பதும் வாங்குவதுமான வழக்கம் ஆங்கில ஆட்சியாளராலும், வழக்குரை மனறங்களாலும் தடை செய்யப்பட்டது. இம்முறை கி.பி. 1862-ஆம் ஆண்டில் அடிமை முறை சட்டப்படி, தடை செய்யப்பட்டபோதிலும் மறைமுகமாக இப்பழக்கம் கேரளத்தில் அதனபின்னும் நீடித்து வந்துள்ளது. அடிமைகளை 'வள்ளி' ஆள் ('வள்ளி'- அடிமைக்குக் கொடுக்கப்படும் நெல்) என்னும் பெயரால் வழங்குதல் இன்றும் நீடிக்கிறது என்பார் மானிடவியல் அறிஞர் அனந்தகிருட்டிணன.

உயர் சாதியினரைக் காணும் செறுமர் ஒருவர் 30 அடிக்கு அப்பால் நிற்கவேண்டும். அதற்குமேல் செறுமர் ஒருவா நெருங்கிவிட்டால் உயர் சாதியார் தீட்டுக் கழிப்பதற்காகக் குளிக்கவேண்டும். பிராமணர் வாழும் கிராமததையோ அவர்களின கோவிலையோ குளத்தையோ செறுமர்கள நெருங்கக்கூடாது. நெருங்கிவிட்டால் தீட்டுக் கழிக்கப்பட வேணடும். பொது நடைப்பாதையிலும் உயர் சாதியாரை எதிர்ப்படும் செறுமன உடனே விலகிச் சென்று, சேறு சகதியானாலும் அதன்மீது தான் நடந்து செல்லவேண்டும். செறுமர்கள கடைத்தெருக்களில் நுழையக்கூடாது.

செறுமர்களில் ஒரு பிரிவினரான புலையர், பிராமணர்களிடமிருந்து 90 அடியும், நாயர்களிடமிருந்து 64 அடியும் விலகி நிற்கவேணடும். ஆனால் புலைச செறுமர், பறையா, நாயாடி, உல்லாடன் ஆகியோரைக் காணும்போது 90 அடியோ, 64 அடியோ விலகி நிறகாது, சறறுத்தள்ளி நிற்பர்.

செறுமர்கள் நில உடைமையாளர்களாலும், எசமானர்களாலும் வேளாணமைக் கருவிகளாகவே கருதப்பட்டனர் என்பார் கோபாலபணிக்கர். ஆண்டு முழுவதும் செறுமர்கள் நிலத்தில் உழைக்க வேண்டும். அவர்கள் குடியிருக்க ஒதுக்கிடமும் அன்றாடக் கூலி நெல்லும நில உடைமையாளரால் வழங்கப்படும். கூலியில் பெரும்பகுதியைச் செறுமர்கள குடிப்பதற்கே செலவிட்டுவிடுகிறார்கள எனகிறார் பணிக்கர். ஆண்டுக்கு ஒரு முறை பண்டிகைக் காலங்களில் செறுமர்களுக்கு ஓரிரு நாள்கள் விடுமுறை கிடைக்கும்.

செறுமர்களின் உறைவிடம் சாலை அல்லது குடிசை எனப்படும். இவர்களின திருமணச் சடங்கில் மணமகனின் உடன்பிறந்தாள முக்கிய பங்கு பெறுகிறாள். பெண் பருவம் அடைந்தவுடன் தனிக்குடிசையில் ஒதுக்கி வைககப்படுவாள். பருவச்சடங்கிற்கு 'வல்லோன்' எனப்படும் சாதித் தலைவர்களில் ஐவரும்,

அவர்களுடைய கரையைச் (குழு) சேர்ந்தவர்களும் அழைக்கப்படுவார்கள், பறையன ஒருவன் பறை முழக்கு, வாச்சியம் ஆகியவற்றுக்கு இசைய ஒரு மணி நேரம் மலைப்பாட்டுப் பாடுவான். ஏழு தேங்காய் களை உடைத்து அவற்றின் நீரைச் சொரிந்தபின் தண்ணீரால் நீராட்டி ஏழுநாள தனியிடத்தில் இருத்தி அதன் முடிவில் எண்ணெய்க் குளிப்பு முடித்து, புத்தாடை அணிவித்து ஒப்பனைகள் செய்து உறவு முறையாருக்கு விருந்தளித்த பின் பருவமடைந்த பெண்ணை மீண்டும் தம் உறைவிடந்திற்கு அழைத் துச் செல்வர். இது வள்ளுவப் புலையர்களிடம் காணப்படும் சடங்காகும். தந்தை வழியில் பெண் கொள்ளலாமேயனறித் தாய் வழியில் பெண் கொள்ளு தல் கூடாது எனச்செறுமர்களிடையே தடை செய் யப்பட்டுள்ளது.

புலையர்களின் தலைவன் ஒவ்வொரு கரைக்கும் (குழு) வள்ளுவன என்னும் பூசாரியை நியமிப்பான். ஒவவொரு திருமணத்திலும் புலையர்கள் வள்ளுவ ருக்கு ஐந்து வெற்றிலை, ஒரு பாக்கு, இரணடு புகையிலை, நாற்பத்தொன்பது சக்கரம் ஆகியவற் றைக் கொடுக்கவேணடும்.

நீண்ட குடை, ஐந்து வண்ணக்குடை, தொடி, நீண்ட தங்கக் காது வளையம், அடைப்பைப் பெட்டி ஆகிய பெருமைக்குரிய ஐந்து சின்னங்களை வள்ளுவர் வைத்துக்கொளளலாம். முக்காலியில் அமர்தல், சமக் காள விரிப்பில் அமர்தல், சடங்குகளில் மேளம் கொட்டுதல் முதலியன அவர்களுடைய சிறப்பு உரிமை களாகும்.

மகர மாதத்தில் (தை) ஒரு சனிக்கிழமையன்று நாட்டின் பல பகுதிகளிலிருந்தும் சாசுதான்கோட்டை யில் புலையர் குழுமி விழா எடுப்பார்கள. செறுமர் கள கோல்களி, வடடக்களி, தட்டின்மேல் களி என் னும் விளையாட்டுகளில் விரும்பி ஈடுபடுவார்கள்.

'சாவர்' என வழங்கப்படும் இறந்துபட்ட முன் னோர்களின் ஆவியைப் புலையர் வணஙகுவர். புலை யர் இறநதோரைப் புதைக்கும் பழக்கம் உடையவர். காதுகுத்தல் இவர்களிடையே ஒரு சிறப்பு நிகழ்ச்சி யாகக் கொணடாடப்படும். கோ.ச

**சென்சியாங்கு** சீனாவில் கியாங்சு மாநிலத் தில் உள்ள ஒரு நகரம். சென்சியாங்கு (Chen-Chiang or Chin-Kiang) துறைமுகம் யாங்டீசுயாங்கு ஆறும் பெரிய கால்வாயும் கலக்குமிடத்தில் உள்ளது. இது சிறப்பான ஒரு வாணிகத்தலம். இங்குத் தொழிலகள் பல உள்ளன. பட்டு, திராட்சை. ஊறுகாய் வகை கள் முதலியன மிகுதியாகக் கிடைக்கின்றன. காகி தம் தொடர்பான பொருள்களும், மருந்து வகைகளும் இயந்திரக் கருவிகளும், பெருமளவில் உற்பத்தி செய்யப்படுகின்றன.

சென்சியாங்கு கி பி. 12-ஆம் நூற்றாண்டில் 'சங்' மரபு ஆட்சியிலேயே அறியப்பட்டிருக்கின்றது. பின்னர் வந்த 'மிங்' 'மஞ்ச' குலங்களின் ஆட்சியிலும் இது செழித்தோங்கியது.

தைப்பிங் கலகக்காரர்கள் கி.பி. 1857-இல் இங் குப் பல சேதங்கள் விளைவித்தனர். அயல்நாட்டு வாணிபத்திற்காக இது கி பி. 1859-இல் திறந்துவிடப் பட்டது. ஆங்கிலேயரின் மேலாண்மை இங்கு 1927-ஆம்ஆணடு வரை நிலவியது. பிறகு சீனாவுக்குத் திரும்பவும் அளிக்கப்பட்டது. தெ.பா.

**சென்டார்** என்பது பாதியளவு மனித உட லமைப்பையும் பாதி யளவுகுதிரை உடலமைப்பை யும் பெற்ற ஓர் உயிரினம். இவ்வகை உயிரினம் கிரேக் கத் தொன்மவியலில் கூறப்பட்டுள்ளது. சென்டார் (Centaur) இனத்தவர்கள் கிரீசின் (Greece)வடக் குப் பகுதியில் தெசாலி (Thesaly), அர்காடியா (Arcadia) ஆகிய மலைப்பகுதிகளில் வாழ்ந்தனர். இவர்கள் காட்டுமிராண்டித்தனமாகவும் சட்டத்திற்கு உட்படாதவர்களாகவும் இருந்தனர்.

சென்டார் இனத்தவரின் அண்டைய பகுதியில் வாழ்ந்த இலப்பிதது (Lapith) மக்களின் அரச குடும



சென்டார்

பத்தில் நடந்த திருமண விருந்தின்போது குடி போதையிலிருந்த சென்டார் ஒருவன் மணமகளைத் தாக்கிவிட்டான். அதனைத் தொடர்ந்து நடந்த போரில் இலப்பித்துகள் சென்டார்களைத் தோற் கடித்தனர். இப்போரின் சில முக்கிய நிகழ்ச்சிகள் ஒலிம்பியாவில் உள்ள கோயிலில் சித்திரிக்கப்பட்டுள் ளன.

இவர்களின் தோற்றம் பற்றிவழங்கப்படும் தொன் மக் கதைப்படி, மலைப் பகுதிகளில் வாழ்ந்த காட்டு மிராண்டிகளும் காட்டுப் பகுதிகளைச் சேர்ந்த விலங் குத் தன்மையுடைய ஆண்களும்கலப்புற்றுப்பாதியளவு மனிதத் தன்மையும் பாதியளவு விலங்குத் தன்மை யும் கொண்ட தோற்றத்தைப் பெற்றனர். தொடக்க காலச் சித்திரங்களில் இவ்வினத்தின் தோற்றத்தைக் காணமுடிகிறது. மனிதன் முன் பக்கமும் குதிரையின் உடல், பின்னங்கால்கள் முதலாயின பின்பக்கமும் இருக்குமாறு இந்த உருவம் வரையப்பட்டுள்ளது. இவர்கள் காட்டு மரங்களின் கிளைகளைக் கொணடு சண்டையிட்டமை சித்திரங்களால அறியக் கிடக் கிறது. சீ.ப.

**சென்டினலியர்**: அந்தமான் தலைநகரமான போர்ட்பிளேரிலிருந்து வடமேற்கே சற்றேறக்குறைய முப்பது கி. மீ தூரத்தில் ஐம்பத்தெட்டு ச.கி.மீ களைக் கொண்டது வடக்குச் செனடினல் (North Sentenel) தீவு. இந்தத் தீவில் வாழும் முது பழங்குடியினரே சென்டினலியர் (Sentenelese). இவா கள் அந்தமானில் வாழும் நீக்ரிட்டோ (Negrito) பழங் குடிகளுள் ஓரினத்தவர்.

சென்டினலியரோடு முதன்முதலில் கி.பி. 1867-ஆம் ஆண்டு அம்பிரே (Humfray) என்பவர் தொடர்பு கொண்டார். பிறகு கி.பி. 1886-இல் போர்ட்மன் (M.V. Portman) என்பவர் அவர்களுடன் தொடர்பு கொள்ளப்பெருமுயற்சி செய்தாா. ஆனால முடிய வில்லை. அவரைப் போன்றே போனிங்டன் (Bonig-ton) என்ற ஆங்கிலேயரும் 1926-ஆம் ஆண்டு சென் டினலியரைச் சந்திக்க மேறகொண்ட முயற்சி வீணா யிற்று. சிப்ரியானி (Cipriani) என்னும் இத்தாலிய நாட்டு மானிடவியலறிஞர் இவாகளை ஆராய 1954-ஆம் ஆண்டு மேற்கொண்ட முயற்சியும் தோல வியடைந்தது. அதன் பிறகு 1967-ஆம் ஆண்டு அநத மான் அரசாங்கத்தினர் ஒரு குழு அமைத்து சென்டி னல் தீவிற்குச் செல்ல முயனறனர். ஆனால் அந்த முயற்சியும் தோல்வியைத்தான் கண்டது. அந்தமான பழங்குடி நல அமைப்பு (Andaman Adim Janjati Vikas Samiti) 1976-ஆம் ஆண்டு முதற் கொண்டு சென்டினலியர்களுடன் நட்புக்கொள்ளப்பெரும் முயற் சிகள் எடுத்து வருகிறது. இன்று வரை சென்டினலியர் பற்றிய (சரியான செய்திகள் தகுந்த சான்றுகளுடன கிடைக்க வில்லை)

சென்டினலியர் மக்கள தொகையைப் பற்றி இதுவரை அரசாங்கத்தாரால ஊகித்துத்தான் கூறப் பட்டுள்ளது. குடித்தொகைக் கணக்கெடுப்பின்படி 1911, 1921 ஆம் ஆண்டுகளில 117 எனவும், 1931 இல் 50 என்றும் ஊகிக்கப்பட்டுள்ளது. அதற்கடுத் தடுத்து வரும் கணக்கெடுப்புகளில் சென்டினலியர்கள பற்றி ஏதும கூறப்படவில்லை.

சென்டினலியப பழங்குடிகள தோற்றத்திலும் உடல அமைப்பிலும் ஓங்கி, சாரவாப் பழங்குடிகளை ஒத்து இருக்கின்றனர். இவர்கள் காட்டில் கிடைக்கும் மரப்பட்டைகள் பெரிய இலைகள போன்றவற்றை ஆடையாக அணிகின்றனர். ஆண்கள் தங்கள் இடுப் புப் பகுதிக்கு மேலே சுமார் முக்கால் அடி அகலம் கொண்ட மரப்பட்டையை அணிந்துள்ளார்கள். பெண் கள் இனக்குறியை மட்டும் மறைக்குமளவிற்கு அணி கின்றனர்.

வாழ்க்கை முறைகளைப் பற்றிச்சில கருத்துகள் கிடைத்துள்ளன. இவர்கள் சாரவர்கள போன்று சமுதாயக்கூடார வாழ்க்கையின்றித்தனித்தனிக்குடிசை களைக் கட்டிப்பகுதிக் குழுக்களாக வாழ்கிறார்கள். ஒவ்வொரு குழுவும் சற்றேறக்குறைய 15 முதல் 20 குடிசைகளையோ குடும்பங்களையோ கொணடது என்று கூறபபடுகிறது.

சென்டினலியர்கள் வேட்டையில திறமை மிகக வர்கள். அவர்கள் காட்டில் கிடைக்கும் மிருகங்களை வில், அம்பு ஆகியவற்றால் கொன்று உணவாக உட் கொள்கின்றனர். இதனுடன் காட்டில கிடைக்கும் கிழக்கு, கனிவகைகளையும் உண்கின்றனர். கடலில் கிடைக்கும் பலவகை மீன்கள், ஆமைகள் ஆகிய வற்றை அம்பு கொண்டு பிடித்து உணகினறனர்.

அரசின் நலத்திட்டங்கள் இன்று சென்டினலியரை வெளி உலகத்தாருடன் பழக்குவதிலும் அவாகளை மேம்படுத்துவதிலும் உதவி வருகின்றன. து.வெ.

**சென் பௌத்தம்**: புத்தமதம் இந்தியாவெங்கினும் பரவியது. தெற்கே இலங்கையிலும் ,கிழக்கே பாமா, தாய்லாந்து, கம்போடியாவிலும், வடக்கே திபெத்து, சீனா, சப்பான் ஆகிய நாடுகளிலும் மேற்கே மைய ஆசியாவிலும் பரவியது. இலங்கை, பர்மா, கம்போ டியா, தாய்லாந்து முதலிய இடங்களில் பரவியபௌத் தம் ஈனயானம் (Hinayana) அல்லது தேரவாதம் எனப்பட்டது. திபேத்து, சீனா, சப்பான் முதலிய

இடங்களில் பரவிய பௌத்தம் மகாயானம் என வழங்கப்பட்டது. திபெத்தில வழங்கிய பௌத்தம் இரினியின் மாபா (Rnyınmapa) எனப்பட்டது. சீனா வில் சான்(Chan) பௌத்தம் எனப்பட்டது. சான் என்பது வடமொழியில் தியானம் (Dhyana) எனப் பொருள்படும். சப்பானில் சென் பௌத்தம் (Zen Buddhism) எனப்பட்டது. பேராசிரியர் உசுட்டன் சுமித்து (Huston Smith) சென் பௌத்தம் கீழ்நாடு களில் புனிதமான ஆன்மிகம் எனக் கருதப்பட்டது என்று கூறுகிறார்.

சென் பௌத்தம் தியானத்தில் கவனம் செலுத் தியது. கொள்கைகளிலும் சடங்குகளிலும் வணக்கத் திலும் கவனம் செலுத்தவில்லை. மேலான ஆன்மிக அநுபவம் (Enlightenment) பெற வேணடுமென்றால் மொழிக் கட்டுப்பாடு, பகுத்தறிவினால் ஏற்படும் தடை முதலியவைகளை மீற வேண்டும் என அது கூறியது. புனிதமான நூல்கள் சென் பௌத்தத்தில் பல இருந் தாலும், ஆன்மிக ஞானம் நூல்களைப் படிப்பதனால் கிடைப்பதில்லை. பூக்களை வைத்துச்செய்த (The Flower Sermon) பௌத்தரின் சொற்பொழிவு சென் கொள்கையைத் தெளிவாகக்காட்டியது. ஒரு சமயம் புத்தரை அவருடைய சீடர்கள் மலை மேலிருக்கும் பொழுது சூழ்ந்து கொண்டார்கள். அப்பொழுது புத் தர் ஒன்றுமே பேசவில்லை. ஒரு தங்கத் தாமரைப் பூவை முகத்தின் முன்னே வைத்து ஒரு மணி நேரம் தியானம் செய்து கொணடே நின்று கொண்டிருந்தார். யாருக்குமே ஒன்றும் புரியவில்லை. ஆனால், மகா காசியபா (Maha Kasyapa) என்பவர் புத்தரிடம் சென்று, அதுவே சிறந்த முறை என்று கூறினார். உடனே அவரைத்தனது வாரிசாகத் தேர்ந்தெடுத்தார். தியானத்திலமர்ந்த புத்தர் முன்னே இருந்த தடைகள் எல்லாம் நீங்கின. மகா காசியப்பா விளக்கின் ஒளி யைக் கண்டார். சென் பௌத்தம் கூறுவதென்ன வெனில் ஆன்மிக ஞானமானது திடீரென்று ஒருவருக் குக் கிட்டும். ஆனால் இதிலிருந்து அதற்குத் தயாராக இருக்க வேண்டாம் எனறு கூறவில்லை. நீண்டகாலப் பயிற்சி தேவை. மனதை அமைதிப்படுத்த ஒழுக்கம் தேவை. பகுத்தறிவினைப் பயன்படுத்த வேண்டாம். எந்த விதமான,வெளியே உள்ள சக்தியினாலும் அது ஏற்படுவதன்று; திடீரென்று ஏற்படும். ஒரு மனிதன் மொழி, பகுத்தறிவு முதலியவைகளினால் ஏற்படும் தடைகளைக் கடந்து செல்வானேயானால், அவனுக்கு உள்ளுணர்வு(Intution) ஏற்பட்டு, உண்மை திடீரெனப் புலப்படும். சென் ஆசிரியர்கள் நீண்ட காலப் பயிற்சி தேவை என்று கூறுகின்றனர். அதற்கு மூன்று நிலை கள் தேவை. அவை தியானம், கோன் (Koan), குருவை நேர்காணல் ஆகியவையாகும். கடைசியில் உண்டாவது சதோரி (Satori) அதாவது ஆன்மிக உணர்வு (Realisation).

கோன் என்றால் ஒரு சிக்கல் அல்லது கேள்வி களால் திகைக்க வைத்தல் (Muddle)என்று பொருள். குரு சீடர்களிடம் பின்வரும் கேள்விகள் கேட்பார். உங்கள் மூதாதையர்கள் பிறக்குமுன், அவர்கள் முகம் எப்படியிருந்தது? ஒரு கை தட்டினால் என்ன ஓசை கேட்கும்? கேள்விகள சரியல்ல என்று கூறுதல் சரியான விடையாகாது. சரியான விடை கிடைப்ப தற்குப் பகுத்தறிவு பயன்படாது. உள்ளுணர்வு தேவை. உள்ளுணர்வு ஏற்பட்டவுடன் 'மனிதன் மற்ற உயிர்களுடன் உள்ள ஒன்றிய தன்மையை உணர்ந்து இன்பம் அனுபவிக்கிறான். இத்தகைய அனுபவத் துடன் நின்றுவிடாமல், அன்றாட வாழ்க்கையுடன் தொடர்பு படுத்திக் கொள்ள வேணடும். இந்த உலகில் இருந்தாலும், இங்கேயுள்ள இன்ப துன்பங் களினால் பாதிக்கப்படாமல் இருக்கவேண்டும். வெற் றியோ தோல்வியோ அவர்களை உணர்விழக்கச் செய்யாது. கீதையில் கூறப்படும் இசுதிதப்பிரகஞன் (Sthita Prajna) அல்லது திரிகுணாதீதன் (Triguna tita) போல இருக்க வேண்டும், அமெரிக்க இளைஞர் கள் சென் பௌத்தக் கொளகைகளில் பெரிதும் ஈடு பட்டிருக்கிறார்கள். இரா.கோ.

**துணை நூல்:**

Suda. J.P., Religion in India - A Study of their Evental Unity., Sterling Publishers Pvt. Ltd., New Delhi,1978.

**சென்னமல்லையர்** கி.பி. 18-ஆம் நூற் றாண்டில் வாழ்ந்த தமிழ்ப் புலவர். இவா தமிழ் நாட்டிலுள்ள சிதம்பரத்தில் பச்சைகநதையர் மடத் தில் வாழ்ந்தார். இவர் வீரசைவர் மரபில் தோன்றிய வர்.சிதம்பரத்தில் வாழ்ந்து வந்த நாளில் சிவ சிவ வெண்பா என்னும் நூலை இயற்றியுள்ளார். அந நூல் வெண்பா யாப்பிலமைந்து ஒவவொரு வெண்பா வும் சிவசிவ என விளித்துப் பாடப்பட்டுளளதால அவ்வாறு பெயர்பெற்றது என்பர். அந்நூல் 133 வெணபாக்களைக் கொணடுள்ளது. ஒவ்வொரு வெண் பாவும் குறள் கருத்தொன்றையும அதை விளக்கும் கதையொன்றின் சுருக்கத்தையும் கொணடு விளங்கு கின்றது. அதாவது திருககுறளிலுளள 133 அதிகாரங் களிலிருந்தும் ஒவ்வொரு குறளைத தேர்ந்து வெண பாவின் முன்னிரணடடிகளில கூறியும், பின்னிரண டடிகளில் அதனை விளக்கும் ஒரு கதையைச் சுருக்கி எடுத்துக்காட்டாகக் கூறியும் வெணபாக்கள் அமைந் துள்ளன.அது பயில்வோருக்கு இனிமை பயபபதாக உள்ளது. வீ.சே.

**சென்னிமலை:** தென்னிந்தியாவில் தமிழ் நாட்டில் பெரியார் மாவட்டத்தில் பெருந்துறை

வட்டத்தில் இவ்வூர் அமைந்துள்ளது. இது பெருந்துறையிலிருந்து தெற்கே 8 கி. மீ. தொலைவில் உள்ளது. சென்னிமலை என்ற சிறப்புமிகு மலையின் பெயரே இவ்வூருக்கும் ஆயிற்று. அந்த மலையின் உச்சியில் சுப்பிரமணியர் கோயில் ஒன்று உள்ளது பெரியார் மாவட்டத்திலுள்ள மிகச் சிறந்த ஆலயங்களில் இதுவும் ஒன்று. இந்தத் தொன்மை வாய்ந்த ஆலயத்திற்கு அனைத்து மாவட்டங்களிலிருந்தும் பல்லாயிரக் கணக்கான மக்கள் வருகை தருகிறார்கள். அவர்களில் குறிப்பிடத்தக்கவர்கள் வேளாளர் ஆவர். இங்கு ஆண்டுதோறும் தைத் திங்களில் தேர்த் திருவிழா வெகு சிறப்பாக நடைபெறும்.

சென்னிமலையின் மக்கள்தொகை 11,357 (1981). இக்கணககில் 10,997 இந்துக்களும். 247 இசுலாம் சமயத்தைச் சார்ந்தவர்களும், 113 கிறித்தவர்களும் அடங்குவர்.

தமிழநாட்டுப் புகழ்மிகு நெசவு மையங்களான கோயம்புத்தூர், ஒண்டிப்புதூர், பவானி, சிவகிரி, சத்தியமங்கலம், தர்மாபுரம், புளியம்பட்டி, சலத்தூர், குண்டலம் ஆகியவற்றோடு ஒத்த அளவு சிறப்பினைச் சென்னிமலையும் பெறறுள்ளது. அழகுமிகு வண்ணப்புடவைகளை உற்பத்திச் செய்வதில் நெகமம், சலத்தூர், பலவாடி, மலையாண்டிப் பட்டினம், பவானி, காங்கேயம், குண்டலம், மந்திரிப் பாளையம், பெரியபாளையம், அம்மாபாளையம், சிவகிரி ஆகிய மையங்களோடு போட்டியிடும் அளவுக்கு சென்னிமலை உயர்வு பெற்று விளங்குகிறது.

ஆக்கிராவைப் போன்று பஞ்சாலான தரை விரிப்புகளையும் செயற்கைப் பட்டுகளையும் இவ்வூர் நெசவாளிகள உற்பத்தி செய்கினறனர். செனனிமலையில் நெய்யப்பட்ட துணிகளின்மீது வேலைப்பாடு மிகுந்த சித்திரஙகளை அச்சடிககும் வேலையும் நடைபெறுகிறது.

சென்னிமலை படுக்கை விரிப்பு செய்வதில் உலகப் புகழ் பெற்றது. இங்கே தயாரிக்கபபடுகிற படுக்கை விரிப்புகள் மேலை நாட்டவரின கவனத்தை ஈர்ப்பதால், தமிழ் நாட்டிலிருந்து படுக்கை விரிப்புகளை அயல்நாடுகளுக்கு ஏறறுமதி செய்வதின் மூலம் அநநியச் செலாவணியும் தமிழ்நாட்டிற்குக் கிடைககின்றது. சென்னிமலை நெசவாளர்களின் கூட்டுறவு உற்பத்தி மற்றும் விற்பனைச சங்கம தமிழ்நாட்டிலேயே ஓர் எடுத்துக்காட்டாக விளங்குகிறது. இச் சங்கத்தின் தலைவராக நெடுங்காலமாகப் பணியாற்றி சென்னிமலையின் புகழை நாடறியச் செய்தவர் எம்.பி. நாச்சிமுத்து முதலியார்.

பண்டைய நாள்களில் சென்னிமலைப் பகுதிகளில் கனிமப் பொருள்கள் மிகுதியாகக் கிடைத்ததற்கும் இரும்பைத் தனியாகப் பிரித்தெடுக்கும் தொழில் நடைபெற்றதற்கும சான்றுகள் உளளன.

பொன். சு.

**சென்னை:** தமிழநாட்டின் தலைநகரம் சென்னை ஆகும். இது கிழக்குக் கடற்கரையில் அமைந்துள்ளது. இது கிழக்கே வங்காள விரிகுடாவையும், மற்ற மூன்று திக்குகளிலும் செங்கற்பட்டு மாவட்டத்தையும் எல்லைகளாகப் பெற்றுள்ளது. இது இநதியாவின் நான்காம் பெரிய நகரமாகும். இந்நகரினபரப்பளவுசுமார் 130 ச.கி.மீ. மக்கள்தொகை 32,76,622 (1981). இவர்களில் இந்துக்கள் 2,764.286 பேர்களும், இசுலாமியர் 265,881 பேர்களும், கிறித்தவர்கள் 220,211 பேர்களும், சமணர்கள் 22,812 பேர்களும் பௌத்தர்கள 317 பேர்களும், சீக்கியர்கள், 1278 பேர்களும், மற்ற சமயத்தவர்கள் 1623 பேர்கள, எந்தச் சமயப்பதிவும் அல்லாதார் 214 பேர்களும் உள்ளனர்.

இநநகர் கி பி. 1639-ஆம் ஆண்டில் உருவாக்கபபட்டது. சுமார் 370 ஆணடுககு முன்னர் இன்று உயர்நீதிமன்றக் கட்டடம் உள்ள இடத்தில் சென்னக் கேசவர் கோயில் ஒன்று இருநதது. இக்கோயிலைச் சுற்றிலும் ஒரு குப்பம் இருந்தது அதற்கு சென்னக்

கேசவபுரம் என்பது பெயர். ஆங்கிலேயர் வருகை தந்தபோது அவர்கள் புனித சார்சு கோட்டையைக் கட்டுவதற்கு அய்யப்பன், வேங்கடப்பன் ஆகியோர் இடம் அளித்தனர். எனவே, அவர்களின் தந்தை சென்னப்ப நாய்க்கன் என்பவரின் நினைவாகக் கோட்டையின் வடக்கே உள்ள ஊர் 'சென்னப்பட்டினம்' என்று குறிக்கப்பட்டது. சென்னப்பட்டினத்திற்குத் தெற்கே உள்ள ஊர் ஆங்கிலேயர்களின் வருகைக்கு முன்னரே 'மதராசு' என்று வழங்கப்பட்டது. இநத இரண்டு பட்டினங்களையும் ஆங்கிலேயர்கள் ஒன்று சேர்த்து 'மதராசுப்பட்டினம்' என்ற பெயராலும், தமிழர்கள் 'சென்னைப் பட்டினம்' என்ற பெயராலும் குறிக்கத் தொடங்கினர்.

சென்னையில் ஐரோப்பியர் குடியேற்றம் தொடங்கிய பின்னரே இந்நகரில பல்வேறு துறைகளில் வளர்ச்சி தொடங்கியது. இசுலாமிய ஆட்சியின கீழ் 16-ஆம் நூற்றாண்டு வரையில்இருந்த செனனை, பின்னர் அடுத்த இரண்டு நூற்றாண்டுகளில் ஐரோபபியவல்லரசுகளின் மேலாண்மைப்போட்டியின் போர்க்களமாக மாறியது. முதன்முதலில் சென்னைக்கு வந்த போர்ச்சுக்கீசியர் கி.பி. 1504-ஆம் ஆண்டிலேயே சாந்தோம் என்ற குடியிருப்பை நிருமாணித்தனர். பின்னர்ப் சென்னை நகரம் கி.பி. 1746-ஆம் ஆண்டில் பிரெஞ்சுக்காரர் வயமாயிற்று. ஆனால், கி.பி. 1749-ஆம் ஆண்டிலிருந்து இநநகர் ஆங்கிலேயர்களின் கோட்டையாயிற்று. இது 19-ஆம் நூற்றாண்டின் தொடக்க காலத்தில் ஆங்கிலேயர்களின் முழுஆளுமையின் கீழ் வந்தது. இந்தியா விடுதலை பெற்றபோது (1947), சென்னையும் பிறமாவட்டங்களும் சேர்நது சென்னை மாநிலமாக உருவெடுத்தது.

இந்தியாவிலேயே முதல் கிறித்தவக்கோயிலும், முதல் மருத்துவமனையும், முதல பொழுதுபோக்கு நிலையமும், முதல் நகராட்சியும் சென்னையிலதான தோன்றின. கூவம், அடையாறு எனற ஆறுகளும், பக்கிங்காம் கால்வாயும் சென்னையின் நடுவில ஓடுகின்றன. சென்னையில சார்சு நகர் (George Town), இராயபுரம், வணணாரப்பேட்டை, தண்டையார்ப் பேட்டை, பெரம்பூர், புரசைவாக்கம், வேப்பேரி, கீழ்ப் பாக்கம், எழும்பூர், திருவல்லிக்கேணி, இராயப் பேட்டை, தியாகராயநகர், நுங்கம்பாக்கம், மயிலாப்பூர், கோடம்பாக்கம், சைதாப்பேட்டை, சேத்துப் பட்டு, அமைந்தகரை, அணணாநகர், அண்ணாமலை நகர், காந்திநகர், இநதிராநகர், அசோக் நகர், கே.கே.நகர் முதலிய சிறப்புமிகு பகுதிகள் உள்ளன.

சென்னைக் கடற்கரை உலகத்திலேயே இரண்டாவது நீண்ட அழகிய உல்லாசக் கடற்கரையாகும். இக் கடற்கரை வடக்கே துறைமுகத்திலிருந்து தெறகே அடையாறு வரை சுமார் 10 கி.மீ. நீளமுள்ளது. இதில் சாந்தோம் வரையிலுள்ள பகுதி 'மெரினா' எனப்படும். உயர்நீதிமனறம், சட்டக்கல்லூரி, புனித சார்சு கோட்டை, சென்னைப் பல்கலைக்கழகம், மாநிலக் கல்லூரி, பொதுப்பணித்துறை, இராணி மேரிக் கல்லூரி, அனைத்து இந்திய வானொலி நிலையம், காவல் துறைத் தலைமை அலுவலகம், சாந்தோம் கிறித்தவக் கோயில், பிரமஞான சபையின் உலகத் தலைமை நிலையம் ஆகியவைகளுக்குரிய கட்டடங்களும், உலகத்திலேயே மிகப் பெரிய ஆலமரமும் இக்கடற்கரையை ஒட்டியே உள்ளன.

சென்னையில் இருபெரும் இருப்புப்பாதை நிலையங்கள் உளளன. அவற்றில எழும்பூரிலிருந்து செஙகற்பட்டு, விழுப்புரம், திருச்சி வழியாகத் தெற்கே செல்லும் பாதையும், மத்திய நிலையததிலிருநது (Central) விசாகப்பட்டினம் வழியாக வடக்கேயும், அரக்கோணம் வழியாக மேற்கேயும் செல்லும் பாதைகளும் உள்ளன. பன்னாட்டு விமான தளம் ஒன்று மீனம்பாக்கத்திலும், உள்நாட்டு விமான தளம் மற்றொனறு திரிசூலத்திலும் உள்ளன. சென்னையிலுளள துறைமுகம் செயற்கையானது. இது கி.பி. 1876-ஆம் ஆணடில் கட்டி முடிக்கப்பட்டது. இத்துறைமுகத்தை கி.பி. 1881-ஆம் ஆணடில் கடுமையான புயல தாக்கியது. எனவே, மீணடும் துறைமுகம் புதுப்பிககப்பட்டது. இத்துறைமுகத்தில நிலக்கரி, கற்கரி, தாது எணணெய், உலோகஙகள, உரம், காகிதம், இயநதிர உதிரிகள், இருப்புப்பாதைச்சாமானகள் போன்றவை இறககுமதியாகினறன. தோல், பஞ்சு, காய்கறி, எணணெய் வித்துகள், புகையிலை, புண்ணாக்கு போன்றவை ஏற்றுமதியாகினறன.

சென்னையில் மிகப் பழமை வாய்ந்த சென்னைப பல்கலைக்கழகமும் அண்ணா பலகலைக் கழகமும், சுமார் 40 கல்லூரிகளும், அரசு பொருட்காட்சிச் சாலையும், கனனிமாரா நூல் நிலையமும், ஆளுநர் அரண்மனையும், குதிரைப் பந்தயத் திடலும் உள்ளன. இவையன்றி, பஞ்சாலைகள, இயநதிரத் தொழிற்சாலைகள், தோல் பதனிடும் தொழிற் சாலைகள, மற்றும் இரும்புப் பெட்டித் தொழிற சாலை, திரைப்படத் தொழிற்சாலைகள ஆகியவைகளும் உள்ளன. பிரம்பு வேலை, நெசவு, மீன்பிடித்தல் போன்ற தொழில்களையும் செனனை மக்கள் மேற்கொணடுள்ளனர்.

சென்னையில் ஈர வெப்பநிலை நிலவுகிறது. மேத் திங்களில் வெப்பம் மிகுதியாகவும், சனவரித் திங்களில் குளிர் மிகுதியாகவும் காணப்படுகிறது. ஆணடில் சராசரி 50 அங்குல மழையைச் செனனை நகரம் பெறுகின்றது. இதில் மூன்றில் இரண்டு பகுதி வட

கிழக்குப் பருவ காலத்தில் அக்டோபர் முதல் சனவரி வரை பெய்கிறது. கோடையில் பிற்பகலில் குளிர்ந்த கடற்காற்று வீசுவதால் வெப்பத்தின் கொடுமை குறைகிறது.

சென்னையில் திருவலலிக்கேணி பாாத்தசாரதி கோயிலும், பூஙகா நகர் (Park Town) கந்தசாமி கோயிலும், கோடம்பாக்கம் வடபழனி கோயிலும், திருவொற்றியூர்வடிவுடையம்மன்கோயிலும் உளளன.

பொன்.சு.

## சென்னை அரசு அருங்காட்சியகம்

அனைத்து மாநில அரசு அருங்காட்சியகங்களைக் காட்டிலும பழமை வாய்ந்தது. இவ்வருங்காட்சியகம சென்னை இலககியக் கழகத்தின (Madras Literary Society) முயற்சியால் கி பி.1851-ஆம் ஆண்டில் தோற்றுவிக்கப்பட்டது. இக்கழகம் அளித்த கனிமப் பொருள்களின் தொகுப்புததான் இவ்வருஙகாட்சிய கத்தின் முதல் சேகரிப்பாகத் திகழந்தது. சார்சன் எட்வர்டு பால்பர் (Jorson Edward Balfor) என்பவர் இவ்வருங் காட்சியகத்தின் முதல் அதிகாரியாக அமர்த்தப்பட்டார். கலை, இயற்கையியல் தொடா பாகப் பெருமளவில் பொருள்களைச் சேகரிக்கும் பல் நோக்கு அருங்காட்சியகமாக இதை உருவாககியவர் அவரே.

இவ்வருங்காட்சியகத்தில் கலை, தொல்பொருளி யல், படிமங்கள், ஓவியங்கள், மானிடவியல், இனக்குழு ஒப்பாய்வியல் (Ethnology), கிராமியக் கலைகள், உலோகக் கைவினைப் பொருள்கள், போர்க கருவி கள், நாணயவியல், அஞ்சல் முத்திரைகள், விலங்கியல், தாவரவியல், புவியியல் ஆகிய பிரிகளைக் கொண்ட கூடங்கள் உள்ளன. இவ்வருங்காட்சியகக் கூடங்களை ஐந்து கட்டடங்களாக அமைந்துள்ளன. அவை: 1. புது இணைப்புக் கட்டடம், 2. முகப்புக் கட்டடம், 3. படிமக் கூடம், 4. தேசியகலைக்கூடம், 5. வளர் கலைக் கூடம்.

புனித சார்சு கோட்டையிலுள்ள ஒரு கட்டடத் தில் கி பி.1851-ஆம் ஆண்டில் நிறுவப்பட்ட இவ்வருங் காட்சியகம் கி பி.1854-ஆம் ஆண்டில் எழுமபூரில இப்போதுள்ள இடத்திற்கு மாற்றப்பட்டுப் படிப் படியாக வளர்ச்சியடைந்துள்ளது. இவ்வருங்காட்சியக முகப்புக் கட்டடத்தில் ஒரு விரிவாக்கம் ,கி.பி. 1874 -ஆம் ஆண்டுசெய்யப்பட்டது. அடுத்ததாக 1939-ஆம் ஆண்டில் சிற்பக்கூடம், சிந்து சமவெளிக்கூடம் ஆகி யவை அடங்கிய நிலையான புதிய இணைபபுக் கட்டடமொன்றும் கட்டப்பட்டது. பின்னர் 1951-ஆம ஆண்டில தேசிய கலைக்கூடம் எழில்மிக்க கட்டடத தில் அமைக்கப்பட்டது. இக்கட்டடம் ஏறக்குறைய 40 ஆண்டுகளுக்கு முன், பழங்கலைகளை, கைவினைப்



முகப்புக் கட்டடம்

பொருள்கள் முதலானவற்றின் மறு மலர்ச்சிக்காக ஏற் படுத்தப்பட்ட நிறுவனத்திற்காகக் கட்டப்பட்ட தாகும். சென்னையிலுள்ள அழகிய கட்டடங்களில் இதுவும் ஒன்றாய்த் திகழ்கிறது. பறவைகள் கூடம், வேதிஇயல் பாதுகாப்பு ஆய்வுக்கூடம், படிமக்கூடம், ஆகியவை 1963-ஆம் ஆண்டில் தொடங்கப்பட்டன. புதியதாகக் கட்டப்பட்ட கட்டடத்தில் வளர்கலைக் கூடம் 1984-ஆம் ஆண்டில் நிறுவப்பட்டது. மேலும் சிறுவர் அருங்காட்சியகம் ஒன்றும் அதற்கெனக் கட்டப்பட்டுள்ள கட்டடங்களில் விரைவில் தொடங் கப்படவுள்ளது.

புதிய இணைப்புக்கட்டடம் பார்வையார்களுக்கு நுழைவாயிலாக அமைந்துள்ளது. இதில் முக்கிய மாக, தொல்பொருளியல், இயற்கையியல் கூடங்கள் அமைந்துள்ளன. கால வரிசைப்படி தேர்ந்தெடுக் கப்பட்ட சிற்பங்களைக் கொண்ட சிற்பக் கூட மானது இநதியக் கற்சிற்பங்களின் வளர்ச்சியினைக் கல்வெட்டுகள் வழி எடுத்துக் கூறுகிறது. திருச்சி மாவட்டத்திலுள்ள திருச்சென்னம் பூண்டியைச் சேர்ந்த சோழர் காலத்து அர்த்தநாரீசுவரர், பெச- வாட ாவைச் சார்ந்த சாளுக்கியர் காலத்துக் கணே சர், ஏமாவதியை ஆண்ட நுளம்பர் காலத்து நடரா சர், ஒய்சாளர் காலத்தைச் சார்நத நுண்ணிய வேலைப்பாடுடைய வாசற்கால், மேற்கு வங்கத்தைச் சார்ந்த நியமத்பூரின் உமாமகேசுவரர், பெசாவரின் காந்தார காலத்தைச் சார்ந்த புத்தர், ஒரிசா மாநிலப் புவனேசுவரத்தின் நடனமாடும் மஙகை ஆகியவை கற்சிற்பங்களுள் சிறப்பான சிற்பங்களாகும்.

தமிழ, பிராமி, சமசுகிருத மொழிகளைக் கொண்ட கலவெட்டுகள் கூடத்தின் ஒரு பகுதியில வைக்கப்பட்டுள்ளன. இதன் கடைசிப் பகுதியில் சிந்து சமவெளி நாகரிகத்தை விளக்கும் பொருள் கள் அமைக்கப்பட்டுளளன. இதனையடுத்துக் கோவில் கட்டடக் கலையின் அடிப்படைக் கூறுகளை விளக்கும் கூடம் உள்ளது. இதனைத் தொடர்ந்து புகழ்பெற்ற அமராவதிச் சிற்பக்கூடம் அமைந்துள ளது. விசயவாடாவின் அருகில பாழ்பட்ட நிலையி லிருந்த அமராவதித் தூபியின் அழகுமிகு சிற்பங்கள் இக்கூடத்தில் உளளன. தென்னிந்தியாவில் கி.மு. 200-ஆம் ஆண்டு முதல் கி.பி. 250-ஆம் ஆணடு வரை வளர்ச்சியடைந்த பௌத்தக் கலையின் சிறப்பை விளக்கும் வகையில் இச்சிற்பங்கள் அமைந் துள்ளன. இக்காட்சிக் கூடத்தில புகழ்வாய்ந்த நளகிரி யானையை அடக்குதல், அரசவை, தூபியின் மாதிரி வடிவம் போனற காட்சிகளைக் கொணட பெரிய சிற பங்கள் உள்ளன. இதனை அடுத்துள்ள கூடத்தில் தனித்தன்மை வாய்ந்த சமணர்களின் கலைப்பாணி யில் அமைந்த சிற்பங்களைக் காணலாம்.

இயற்கையியல் கூடம் மிகவும் சிறப்பு வாய்ந்தது. பொது விலங்கியல் கூடத்தில உத்திரத்திலிருந்து தொங்கவிடப்பட்டுள்ள மிகப் பெரிய திமிங்கிலத்தின் எலும்புக்கூடானது பூமியில் வாழும் உயிரினங்களின் பல வகைகளை அறிமுகப்படுத்துவதாகவும், கருத் தைக் கவருவதாகவும் அமைககப்பட்டுள்ளது. இங்குப் பாலூட்டிகள், பறவைகள், மீன்கள், வெளிநாட்டு விலங்குகள், ஊர்வன முதலியவற்றிற்கான கூடங் களையும் காணலாம். ஒவ்வொரு கூடமும் உயிரினங் களின் உருவ மாதிரிகளைக் கொண்டுள்ளது. அவற் றுள் சில சுற்றுச்சூழல் காட்சிப் பெட்டிகளாகும்.

தாவரவியல் கூடம் இரு பிரிவுகளைக் கொண்டுள ளது. ஒன்று தாவரங்களின் வகைப்பாட்டினை விளக்கு கிறது. மற்றொன்று பொருளாதாரத் துறையில் தாவரங்களின் பயன்பாட்டினை விளங்குகிறது.

புவியியல் பகுதியில் பல்வேறு வகையான கவர்ச்சி மிக்க கற்களும் கனிமப் பொருள்களும் காட்சிக்கு வைக்கப்பட்டுள்ளன. அவை மனிதனுக்குப் பயன் படும் பாங்கை விளக்குகின்றன. இக்காட்சிக் கூடத் திலுள்ள பல்லாயிரம் ஆண்டுகட்கு முற்பட்ட கல புதைபடிவம் (Fosil) மக்களின் கண்கவர் காட்சிப் பொருளாகும்.

நாடுவாரியாக முறைப்படுத்தப்பட்ட ஆயிரக் கணக்கான அஞ்சல்தலைக் கூடமும் இங்குள்ளது. இக் கட்டடத்தில் ஒரு பகுதியில் சிறுவர் கூடம் அமைந்துள் ளது. இக்கூடத்தில உலகம் தோன்றிய முறை, பூமியில் உயிரினங்களின் தோற்றம், ஆதிமனிதனின் வாழ்க்கை வரலாறு, போக்குவரத்தின வளர்ச்சி, உயிரின உடல உறுப்புகளின் அமைப்பியல், மனித உடலியல் ஆகி யவை ஆர்வத்தைத் தூண்டும் மாதிரிகளில் சிறநத பின்னணியுடன் காட்சிப் பெட்டிகளில் விளக்கப் பட்டுள்ளன. தொலைப்பேசியின் இயங்கும் மாதிரியும் வண்ண ஆடைகள் தரித்த பொம்மைகளும் இக் கூடத்திற்கு மேலும் கவர்ச்சியூட்டுகின்றன.

முகப்புக் கட்டடத்தில் போர்க் கருவிகள வரலாற்றுக்கு முற்பட்ட காலம் (Pre-History), மானிடவியல், இனக்குழு ஒப்பாய்வியல், உலோகப் பாத்திரங்கள், இசைக் கருவிகள், பொம்மலாட்டப் பொம்மைகள், மரச்சிற்பங்கள் கிராமியக் கலைகள் ஆகியவற்றைக் கொண்ட காட்சிக் கூடங்கள் உள் ளன. இவ்வருங்காட்சியகம் வரலாற்றுக்கு முற்பட்ட காலத்தைச் சேர்ந்த பொருள்களின் மிகச் சிறந்த தொகு சேகரிப்பினைக் கொண்டுள்ளது. இச் சேகரிப்புக்கு முன்னோடியாகப் புருசுபுட்டு (Bruce Foote), சே.தபிள்யூ.பிரீக்சு (J.W.Breeks) அலெகசாண் டர் இரியா (Alexander Rea) போன்ற அறிஞர்கள்




இனக்குழு ஒப்பாய்வியல் கூடம்

தாங்கள் சேகரித்த பொருள்களை இவ்வருங் காட்சியகத்திற்கு அளித்தார்கள். தமிழ்நாட்டில் ஆதிச்சநல்லூர், நீலகிரி, பெரும்பையாறு முதலிய இடங்களிலிருந்து கிடைக்கப் பெற்ற மட்பாண்டங் கள், நகைகள், இரும்புக கருவிகள் முதலிய பொருள் கள் இங்குக் காட்சிக்கு வைக்கப்பட்டுள்ளன. செம் மறியாட்டின் உருவம்போல் அமைக்கப்பட்ட மண் சவப்பெட்டி ஆர்வத்தைத் தூண்டும் ஒரு காட்சிப் பொருளாகும். அரிக்கமேட்டில் கண்டெடுத்த உரோ மானியப் பானைகளின் துண்டுகளை இக்கூடத்தில் காணலாம். இக்காட்சிப் பொருள்கள் மிக இன்றியமை யாதவையாகும். ஏனெனில், இவற்றின அடிப்படை யில்தான் உரோமானியருக்கும் தென்னிந்தியருக்கும் பண்டைக் காலத்திலிருந்த தொடர்புகள் உறுதிப் படுத்தப்படுகின்றன.

இனக்குழு ஒப்பாய்வியல் கூடங்களில் தென்னிந தியப் பழங்குடிகள் பற்றிய செய்தியும் கிராமிய மக் களின் பணபாடும் அழகிய முறையில காட்சிப் படுத்தப்பட்டுள்ளன. அவர்கள் பயனபடுத்தும் பாத் திரங்கள், கருவிகள, ஆயுதங்கள், அணிகலன்கள், உறைவிடங்களின் மாதிரிகள முதலியன இங்குக் காட்சிக்கு வைக்கப்பட்டுள்ளன. இசைக்கருவிகளைக் கொண்ட கூடத்தில் பஞ்சமுகவாத்தியம், கணணாடி யால் செய்யப்பட்ட மிருதங்கம், பர்மா நாட்டு யாழ் ஆகிய அரிய இசைக்கருவிகள வைக்கப்பட்டுளளன. இதனையடுத்துள்ள உலோகக காட்சிப் பொருளகள கூடத்தில் அன்றாடம் பயன்படும் அழகிய பொருள் களாகிய விளக்குகள், பெட்டிகள், சித்திர வேலைப் பாடு கொண்ட தட்டுகள், பாக்கு வெட்டிகள் முதலானவறறின கலைத்திறனும் அழகும் விளக்கப் பட்டுள்ளன. போர்க்கருவிகள் கூடத்தில் தஞ்சா வூரைச் சேர்ந்த படைக்கலங்கள் உள்ளன.

இவ்வருங்காட்சியகத்தின் ஒரு பகுதியான படிமக் கூடம் தனிக் கட்டடத்தில் அமைந்துள்ளது. இது பழங்காலத் தபதிகள் செய்த படிமங்களைக் கொணடு சிறப்போடு விளங்குகின்றது. இப்படிமங்கள் இக்கூடத தின் அடித்தளத்திலும் மேல் தளத்திலும் சீராக, வைக்கப்பட்டுள்ளன. அடித்தளத்தில் சுவரையொட்டி அமைக்கப்பட்டுளள காட்சிப் பெட்டிகளில் வைணவ சைவப் படிமங்கள கவர்ச்சி மிகக காட்சித் தொகுப் பாக அமைநதுளளன. பல்லவர், சோழர் காலந் தொட்டு அண்மைக் காலம் வரையிலான படிமங்கள் இக்கூடத்தில் பார்வைக்கு வைக்கப்பட்டுளளன. இக் கூடத்தில் நுழைந்தவுடன் வரிசையாக வைக்கப் பட்டுளள நடராசர் படிமங்களைக் காணலாம்.

மேல் தளத்தில் ஒரு சிறிய அறையில் நாணய வியல் கூடம் அமைக்கப்பட்டுள்ளது. குறிப்பாகத் தேர்ந்தெடுக்கப்பட்ட நாணயங்கள் இந்திய வரலாற்றினை எடுத்துக்காட்டும் வகையில் அமைக்கப்பட்டுள்ளன. பேருரிமைப் பத்திரங்கள் (Magna Carta) நகலும் ஆங்கிலேயர் காலத்தின் பத்திரங்களும் காட்சியில் வைக்கப்பட்டுள்ளன.

இதற்கடுத்த கூடம் தேசிய கலைககூடமாகும். இது இநதோசாரசாசினியக் (Hindosarsanic) கட்டடப் பாணியில் கட்டப்பட்ட கட்டடத்தில் அமைந்துள்ளதாலும் சிறப்புமிக்க கலைப் பொருட்களைக் காட்சியில் கொண்டுள்ளதாலும் புகழ பெற்று விளங்குகிறது. இக்கூடம் அருங்காட்சியகங்களின் நூற்றாண்டு விழாவினையொட்டி 1951-ஆம் ஆண்டு ஏற்படுத்தப்பட்டது. இக்கலைக் கூடத்திற்குத் தேசிய கலைக்கூடம் எனப் பெயரிடப்பட்டது. அருங்காட்சியகச் சேகரிப்புகள் இந்திய நாட்டின் சிறப்பினை விளக்கும் வகையில் கலைப்பொருளகள் இங்குக் காட்சிக்கு வைக்கப்பட்டுள்ளமையால் இக்கலைக்கூடத்திற்குத் தேசிய கலைககூடம் எனப் பெயரிடப்பட்டது. இக் கூடத்தில் திருவாலங்காட்டிலிருந்து கிடைக்கப் பெற்ற உலகப் புகழ் வாய்நத நடராசர் திருமேனியும் வடக்குப் பனையூரைச் சார்ந்த அழகுமிகக இராமர், இலட்சுமணர், சீதை ஆகியோரின் படிமங்களும், தஞ்சாவூர் ஓவியங்கள், சிறிய அளவிலான ஓவியங்கள, சநதனம், தந்தம் பதிக்கப்பட்ட பேழைகள், நெட்டிச் சாமான்கள மரச் சிற்பங்கள் முதலியனவும் உள்ளன.

அருங்காட்சியக வளாகத்தில் கடைசியாக உள்ள கட்டடத்தில் வளர் கலைக்கூடம் ஏற்படுத்தப்பட்டுள்ளது. இங்கு இக்காலப் பாணியில் அமைந்த ஓவியங்களும், சிற்பங்களும் வைக்கப்பட்டுள்ளன. இதில் இராசா இரவிவர்மா, துரந்தர், செமினிராய், தேவி பிரசாத் ராய் சௌத்ரி, இரெடப்ப நாயுடு, சீனிவாசுலு, கே.சி.எசு. பணிக்கர் ஆகியோரின் சிறந்த ஓவியங்கள் இடம் பெற்றுள்ளன. இவற்றுடன் பிரதோசுதாசு குப்தா, தனபால் சானகிராம் ஆகியோரின் இக்காலப் பாணியைக் காட்டும் ஓவியங்களும் உள்ளன.

சென்னை அரசு அருங்காட்சியகத்தில கல்வித் தொடர்பான சொற்பொழிவுகள், மாநாடுகள், கண காட்சிகள், திரைப்படக் காட்சிகள் அனைத்தும் அருங்காட்சியகக் கல்விப் பணிகளின்கீழ்ச் செயற்படுகின்றன. ஓவியர்களும் சிற்பக் கலைஞர்களும் தங்கள் படைப்புகளைக் காட்சியில் வைக்கத் தனியாகக் கண்காட்சிக் கூடத்தை முதன்முதலாக அமைத்த இந்திய அருங்காட்சியகங்களுள்சென்னை அரசுஅருங்காட்சியகமும் ஒனறாகும். இக்கண்காட்சிககூடம் நூற்றாண்டுக கண்காட்சிக்கூடம் என வழங்கப்படுகிறது. இது தவிர ஏறத்தாழ நூறாண்டுப் பழமை வாய்ந்த அருஙகாட்சியகக் கலையரஙகு ஓர் அழகான கலையரங்காகும்.

இந்திய நாட்டில் முதன்முதலாக வேதியியல் பாதுகாப்பு ஆய்வுக கூடத்தை இவ்வருஙகாட்சியகந்தான ஏற்படுத்தியது. முதலில படிமங்களைப் பாதுகாககும் பணிக்கென ஏற்படுத்தப்பட்ட இது பின்னர் அருங்காட்சியகச் சேகரிப்பிலுள்ள அனைத்துப் பொருளகளையும் பாதுகாக்க வேண்டிய வசதிகளைக் கொண்டு செயறபட்டு வருகின்றது.

சென்னை அரசு அருங்காட்சியகம் மாவட்ட அருஙகாட்சியங்களுக்குத் தலைமை இயக்கமாகவும் விளக்குகிறது. மொத்தம் ஏழு மாவட்ட அருங்காட்சியகஙகள இதன் கண்காணிப்பில் உள்ளன. இதனுடைய காலம் சேகரிப்புகள், செயல்முறைகள், செய்திகள், ஆற்றல் இவற்றைக் கொணடு இவ்வருங்காட்சியகம் சிறந்த அருங்காட்சியகங்களுள ஒன்றாய் விளங்குகிறது என்று கூறலாம் என்.அ.

**சென்னை சேவா சதனம்**: சர். எம். வேங்கட சுப்பாராவும் அவர்தம் துணைவியார் ஆண்டாள் அம்மையாரும் இணைந்து உரு. 10,000 முதலீட்டுடன் 1928-ஆம் ஆண்டு செப்டம்பர்த் திஙகள 6-ஆம் நாளனறு 'சென்னை சேவா சதனத்தை' சென்னை, சேத்துப்பட்டில் தொடங்கினர். புனாவிலிருந்த சேவா சதனத்தின் கோட்பாடுகளை ஏற்று இசசேவா சதனம் இங்கே தொடங்கப்பட்டது. 8 அனாதைப் பெண்டிரைக் கொண்டு 1928-ஆம் ஆணடில் தொடங்கப்பட்ட இக்கல்வி நிலையம் 1978-ஆம் ஆண்டில் பொன்விழாவையும் கொணடாட இன்றைக்குப் பல கிளைகளைத் திறந்து, பல்லாயிரம் பேர்களின் கல்விக்கும், வாழ்க்கைக்கும் தாயகமாக விளங்குகிறது.

அனாதைப் பெண்களுக்கும், விதவைகளுக்கும் புது வாழ்க்கைப் பாதையை வகுத்துத் தந்து, மற்றப் பெண்களைப் போல அவர்களும் உலகில் வாழநது காட்ட முடியும் என்ற சிறந்த நோக்கத்தின அடிப்படையில் இச்சேவாசதனம் செயற்படுகிறது. கலவிக் கூடங்களைத் திறந்து கல்வி கற்பிப்பதிலும், இச் சமுதாயத்தில் பெணணுரிமையைப் பெறறுத் தருவதிலும், பொது அறிவு, பண்பாடு ஆகியவற்றை ஊட்டுவதிலும், நுணகல்வி, தொழிற்கல்வி போனறவற்றைப் பரப்புவதிலும், வேணடிய இடங்களில பெண்களுக்குரிய இலலங்களை நடத்துவதிலும், அனாதைப் பெண்களுக்கு நிதி உதவி மூலம் அவர்களின் தேவைகளை நிறைவேற்றுவதிலும், மருத்துவ

மனைகள், தாய்சேய் நல விடுதிகளைத் திறப்பதிலும், பெணகளிடையே சாதி சமய வேறுபாடு அற்ற ஒரு நிலையை உணடாக்குவதிலும் இச்சேவா சதனம் நாட்டங் கொணடுள்ளது.

சென்னை, சேத்துப்பட்டில இதனுடைய தலைமைச் செயலகமும், பெணகள் மேனிலைப் பள்ளியும், தாமரைத்திரு ஆணடாள் வேங்கட சுப்பாராவ் இல்லமும், அலுவலகப் பயிறசியாளர் பிரிவும், விதவைகளுக்கான அனாதை இல்லமும், குணமடைந்த மன நோயாளிகளுக்கான இல்லமும், தொழிற்கலவிப் பிரிவும், பணிபுரியும் பெணகளுக்கான விடுதிகளும், செயறபட்டு வருகினறன. இவையன்றி, ஆணடாள் எம். வேஙகட சுப்பாராவ் பெணகள் பளளி ஒனறு, மாணவிகளின இட நெருககடியைத் தவிர்கக வேண்டிக்கடந்த 1987-முதல் செயற்படுகிறது. வயது முதிர்நத பெணகளுக்கென இரண்டு மாதங்களுக்குள் தனியாக விடுதி ஒன்று திறககவும் ஏற்பாடுகள நடைபெறுகின்றன.

சென்னை சேவா சதனத்தின் கிளைகள் தாம்பரத்திலும், தியாகராய நகரிலும் உள்ளன. மேற்குத் தாம்பரத்தில் சென்னை, சேவா சதனம் மேனிலைப் பளளியும், இளங்குழந்தைகள பளளியும் நடைபெறுகின்றன. இந்த மேனிலைப் பளளியில மாணவர்களும் மாணவிகளும் இணைந்தே படிக்கிறார்கள். சென்னை தியாகராயநகரில சர் வேங்கட சுப்பாராவ் ஆணகள பள்ளியும், ஆண்கள் விடுதியும் இயங்குகின்றன.

இச்சேவா சதனத்தின் நிருவாகிகளான எம். வேங்கட சுப்பாராவ அவர்கள் 1960-ஆம் ஆணடிலும் ஆண்டாள் அம்மையார் அவர்கள் 1969-ஆம்ஆண்டிலும்இயற்கை எய்தியதால், இககல்வி நிறுவனஙகளின ஆட்சிப் பொறுப்பு ஓர் 'ஆட்சிக்குழு' விடம் ஒப்படைக்கப்பட்டு, சீரும் சிறப்புமாக நடைபெற்றுக் கொண்டு வருகிறது. பொன்.சு.

**சென்னைப் பல்கலைக் கழகத் தமிழ்ப் பேரகராதி:** ஒரு மொழியில் இன்ன சொல் இனன பொருளில் வழஙகியது அல்லது வழங்குகிறது என்னும் குறிப்பைத் தரும் அகர வரிசை நூலுக்கு அகராதி எனறு பெயர். ஒரு மொழியின அமைப்பினை அறிநது கொளள அதன் இலக்கணம் பயன படுவதுபோல் அம்மொழியின் சொல் வளத்தையும் வரலாற்று வளர்சசியையும் அறிந்துகொள்ள அதன் அகராதிகள் பயனபடுகின்றன. ஏனைய மொழிகளுக்கு உளளது போலத் தமிழமொழிக்கும் பல அகராதிகள் தோன்றின. உரிச்சொல் தொகுதிகள், நிகணடுகள் ஆகிய இருவகைப் பழந்தமிழ் வகைகளைத் தொடர்ந்து, ஐரோப்பியர் வருகையால் பெற்ற கலைநுணுக்கத்தால் தமிழில் அகராதிகள் தோன்றலாயின. இவ்வாறு தோன்றிய தமிழ் அகராதிகளுள், சென்னைப் பல கலைக் கழகத்தால உருவாக்கி வெளியிடப்பெற்ற (1936) தமிழ்ப் பேரகராதி (Tamil Lexicon) மிகவும் சிறப்புடையதாகக் கருதப்படுகிறது.

அகராதிகள் ஒருமொழி அகராதி, இருமொழி அகராதி, பனமொழி அகராதி எனப் பலவகைப்படும். தமிழ்ப் பேரகராதி எனப்படும் சென்னைப் பலகலைக் கழகத் தமிழ்ப் பேரகராதி இருமொழி அகராதியாக (தமிழ-ஆங்கிலம், தமிழ்) விளஙகுகிறது. தமிழில் கி.பி.1862-இல் வெளியான வின்சுலோ அகராதியினையும் அதறகு முன்னரும் பின்னரும் வெளிவநத நிகணடுகள, அகராதிகள ஆகியவறறையும் அடிப்படையாகக கொணடு இப்பேரகராதி உருவாக்கப்பெறறது. இப்பணி 1912-ஆம் ஆணடில் தொடங்கப்பெறறது. முதல் தொகுதி 1924-ஆம் ஆணடிலும், இறுதித் தொகுதியான ஆறாம் தொகுதி 1936-இலும பின்னிணைப்பான ஏழாம் தொகுதி 1938-இலும் வெளியிடப்பெற்று இப்பேரகராதிப பணி முடிவுற்றது. திருமறைத்திரு சாண்டுலர் (The Rev.J.S. Chandler) தொடக்கத்திலும், பேராசிரியர் எசு. வையாபுரிப பிளளை 1926 முதல் இறுதி வரையிலும் இதன ஆசிரியர்களாக இருந்து இத்திட்டததை நிறைவேற றினர்.

இப்பேரகராதியில் தமிழ்இலக்கியம், மருத்துவம், சமயம், சோதிடம், தத்துவம் போனற பழந்தமிழ்த் துறைகளோடு இக்காலத் துறைகளாக உளள அறிவியல், தொழிலநுட்பம், வானியல போனற புதுத்துறைகளைச் சேர்ந்த சொற்களும் இடம்பெற்றுளளன. மேலும் இலக்கிய வழககுச் சொற்களேயன்றி, கிளைமொழிச் சொற்களும், வட்டார வழக்குச் சொற்களும், பேச்சு வழககுச் சொற்களும் சேர்க்கப்பட்டு அவ்வவ் வழக்கிற்கான குறியீடுகளுடன் விளக்கப்பெற்றுளளன. இதுவரையில வெளிவந்த அகராதிகளுக்கு இல்லாத சிறப்பாக இதனை வல்லுநர்கள கருதுகினறனர். இவ்வாறு பரவலான மொழியாட்சியை உள்ளடக்கிய காரணத்தால இதிற் காணப்படும் சொற்களின் தொகை 1,07,715 ஆகப் பெருகியுளளது.

சொற்களுக்குப் பொருள் கூறும் முறையிலும் இப் பேரகராதி முன்னைய அகராதிகளிலும் சிறந்து நிற்கிறது.ஒவ்வொரு சொல்லின் பொருளமைப்பும் கீழ்க் காணுமாறு அமைந்துள்ளது. 1. தலைச்சொல், 2. ஆங்கில எழுத்தில் அதன் உச்சரிப்பு, 3. இல்க் கணக் குறிப்பு, 3. சொல் மூலம், 5. போன்மைச் சொற்கள் (Cognates), 6. பொருள்-ஆங்கிலம், தமிழ்,

6. ஒவ்வொரு பொருளும் பயின்று வரும் எடுத்துக் காட்டு (நூலின் பிரிவுகள் உட்பட).

இவ்வாறு சொற்களின் தொகைப் பெருக்கம், சொற்களுக்குப் பொருள் தரும் முறையின் அறிவியல் சார்ந்த பகுப்பமைப்பு ஆகிய காரணங்களால் இப் பேரகராதி ஏனைய அகராதிகளிலும் சிறந்த விளங்கு கிறது. இவ்வகைப் பேரகராதி (Lexicon) 1940-க்கு முன் இந்தியாவில் தமிழ் மொழிக்கு மட்டுமே தயாரிக்கப் பட்டது என்பது குறிப்பிடத் தக்கது. சொற்பொருள் வரலாற்றைத் தருவதிலும், சொறகளின் மூலங்களைக் கூறுவதிலும் சிற்சில பிழைகள நிகழ்நதுள்ளன எனினும், இன்றைய நிலையில் தமிழில் சிறநத அகராதியாகச் சென்னைப் பல்கலைக் கழகப் பேரக ராதியினைக் கூறலாம் அ. அ ம.

**சென்னைப்பல்கலைக்கழகம்** ஆஙகிலேயா ஆட்சிக் காலத்தில் தோற்றுவிககப்பட்ட முதல மூன்று பல்கலைக் கழகங்களுள ஒன்று. சென்னையில் உயர்கல்வியளிக்கும் நிறுவனம் தேவை என வலியு றுத்தி 70,000 பொதுமக்கள கையெழுததிட்டு அளித்த மனுவை அரசுத் தலைமை வழக்கறிஞர் சார்சு நார்டன் (George Norton) அபபோதைய சென்னை மாகாண ஆளுநர் சான் எலபின்சுடோன் பிரபுவிடம் (Lord John Elphinstone) கி.பி.11 11.1839 -இல் கொடுத்தார். இதனபின தேவையை உணர்ந்து இநதியச் சட்டசபை கி.பி.1857 செப்டம் பர் 5-ஆம் நாள் இயறறிய சட்டத்தின்படி இப் பல்கலைக்கழகம் நிறுவப்பட்டது. தொடககத்தில் இப்பல்கலைக் கழகத்தின நோக்கம் தேர்வுகள நடத்தித் தேர்ச்சி பெற்றவர்களுக்குப் பட்டஙகள் வழங்குவதாக மட்டும் இருநதது. இநதிய அரசு 1904 -இல் இயற்றிய சட்டத்தின மூலம் இப்பலகலைக் கழகம கறபித்தல், ஆராய்சசி முதலானவற்றில் ஈடுபடலாயிற்று. இதன் பின்னர்ச சேட்லர் குழு (Sadler Commission) அறிக்கை, சென்னைப் பல கலைக்கழகச் சட்டம் (1923) முதலானவறறின மூலம் இப்பல்கலைக் கழகம் கற்பிததல், ஆராய்ச்சி முதலானவற்றில் மேலும் விரிவாக்கம பெறறது. இதன பின்னரே புதுத் துறைகள் பல ஏற்பட்டன.

சென்னைப் பலகலைக் கழகம் கி.பி.1857 முதல கி.பி.1873 வரை இராசதானிக் கல்லூரியின் ஒரு பகுதி யில செயற்பட்டது. பின்னர் கி.பி.1873-ஆம் ஆணடு பேரவைக் கட்டடம் கட்டி முடிந்தபின் அஙகு மாற்றப பட்டது. இதன் பின்னர் ஏற்படுத்தபபட்ட துறை கள 1936 வரை வாடகைக் கட்டடத்தில செயற் பட்டன. பின்னர் 1936-இல் பல்கலைக்கழகக் கட்டடங்களுக்கு மாற்றப்பட்டன.



இன்று இப்பல்கலைக் கழகம் கற்பித்தல ஆராய்ச்சி, உயராய்வு, இணைப்புரிமை (Affiliation), தன்னாட்சி உரிமை (Autonomous) வழஙகுதல முத லான பணிகளை முதன்மையாகக் கொணடுள்ளது இங்கு 1914-இல்தொடஙகப்பெற்ற இநதிய வரலாறு, இந்தியப் பொருளாதாரம், ஒப்பு மொழியியல் ஆகிய மூன்று துறைகளிலிருந்து வளாந்து இன்று பல்வேறு துறைகள் செயறபடுகினறன. இந்த அனைத்துத் துறைகளும் கலை, இந்திய மொழிகளும் பிற மொழி களும் கலவியியல், சட்டம், வணிகவியல, பொறியியல், தொழில் நுட்பவியல், மருத்துவம, அறிவியல முத லானபுலங்களின்கீழ் அடங்கும்.



சென்னைப் பல்கலைக் கழகத் துறைகள் பல்வேறு இடங்களில் இயங்குகின்றன. இதன் மைய வளாகம் மெரினா கடற்கரையில் உள்ளது. இங்கு நிருவாகம், நூலகம், பேரவைக் கட்டடம், நூற்றாண்டுக் கட்டடம், சில அறிவியல், கலைத் துறைகள ஆகிய அனைத்தும் உளளன. கிண்டி வளாகத்தில் சில அறிவியல், ஆராய்சசித் துறைகளும்,மருத்துவ உயராய்வு மையம் தரமணியிலும் செயற்படுகின்றன. சட்டக் கல்லூரி, மருத்துவக் கல்லூரிகள் முதலானவை சென்னையில் வேறு இடங்களில் உள்ளன.

சென்னைப் பல்கலைக் கழகத்தில் புகுமுகப்படிப்பு இல்லை. இங்குப் பயிற்றுவிக்கப்படும் பாடங்களுள் குறிப்பிடத்தககவை: தமிழ், தெலுங்கு, கன்னடம், மலையாளம், சமசுகிருதம், இந்தி, ஆங்கிலம், அராபிய பொசிய உருது மொழிகள், வரலாறு, தொல்லியல. மானிடவியல், சமுதாயவியல், உளவியல், வணிகவியல், இந்தியப் பொருளியல், கல்வியியல், மணணியல், புவியியல், இந்திய இசை, மேலாண்மையியல், நூலகவியல், இநதியத் தத்துவவியல், தென்கிழக்கு ஆசியவியல், அரசியலும பொது நிருவாகமும், சட்டவியல, வயதுவந்தோர் கல்வியும் தொடர் கல்வியும், இதழியல் முதலான கலைத் துறைகள உள்ளன. அறிவியலில் வேதியியல், உயிர் வேதியியல், (Biochemistry), தாவரவியல், விலங்கியல், புள்ளியியல், இராணுவவியல், இயற்பியல், உயிர் இயற்பியல் (Biophysics), அணு இயற்பியல், கொள்கைசார் இயற்பியல, மனையியல், செவிலியர்கலவி முதலான துறைகள உள்ளன. இங்குத் தமிழ், ஆங்கிலம் இவை இரணடும் பயிற்று மொழிகளாகும். சில இந்திய மொழிகள, பிரெஞ்சு, செருமனி, உருசியன் முதலிய பல அயல்நாட்டு மொழிகள் முதலானவற்றில் பட்டயப் படிப்பும் (Diploma), சான்றிதழ்ப் படிப்பும் மேற்கொளள வசதிகளுள்ளன. இவ்வாறே பலவேறு பாடங்களிலும் இவ்வகைப் படிப்பினை மேற்கொளளலாம். இப்பல்கலைக் கழகம், இளநிலைப் பட்டம். முதுநிலைப் பட்டம் ஆராய்ச்சிப் பட்டம் முதலானவற்றைப் பெரும்பாலும் அனைத்துத் துறைகளிலும் வழங்குகின்றது. முதுமுனைவர் பட்டங்கள் மதிப்பியல் பட்டங்களாக வழங்கப்படுகின்றன.

சென்னைப் பல்கலைக் கழகத்தில் தாவர நோயியல், பூஞ்சையியல் பற்றிய உயராய்வு மையமும், தத்துவவியல் உயராய்வு மையமும் செயற்படுகின்றன. இராமானுசம் கணிதவியல உயராய்வு மையம் ஒன்றும் இப்பல்கலைக் கழகத்தில செயற்படுகின்றது. செனனைப் பல்கலைக் கழகத்தில் பெரும் எணணிக்கையிலான கல்லூரிகள் இணைப்புரிமை பெற்றுளளன. பல கல்லூரிகளுக்குத் தனனாட்சி உரிமை வழங்கப்பட்டுள்ளது. சென்னைப் பல்கலைக் கழகத்தின் பளுவைக் குறைக்கும் பொருட்டு இதனோடு இணைப்புரிமை பெற்றிருந்த பல கல்லூரிகளைப் பிரித்து, புதிய பல கலைக் கழகங்களைத் தோறறுவித்து, அவற்றோடு இணைக்கப்பட்டுளளன. இருப்பினும் தமிழகத்தில் ஏனைய பல்கலைக் கழகத்தைக் காட்டிலும் இப்பல் கலைக் கழகத்திடமே பெரும் எண்ணிக்கையிலான கல்லூரிகள செயற்படுகின்றன.

தமிழ் மொழி வளர்ச்சிககாக இப்பல்கலைக் கழகம் பல பணிகளைச் செய்துள்ளது. இங்கு 1913 முதல் 1936 வரை இயங்கிய தமிழ் பேரகராதித் திட்டம் மூலம் 7 தொகுதிகள வெளியிடப்பட்டன. உலகம் முழுவதிலுமுள்ளவடமொழி நூல்கள் பட்டியல் ஒனறைத் தயாரிக்கும திட்டத்தையும் 1935-இல இப பல்கலைக் கழகம மேற்கொணடது. பல அரிய வரலாற்றுச் செய்திகளைக் கொணடுள்ள மெக்கன்சி (Meckenzie) சுவடிகளைத் தொகுக்கும் திட்டம்1935 -இல் மேற்கொளளப்பட்டது.

சென்னைப் பலகலைக் கழகத்தில் சிறந்த நூலகமொன்றும், பலசோதனைக் கூடஙகளும், மருத்துவப் பயிறசிக்கான மருத்துவமனைகளும் உள்ளன. சமூக சேவை, நாட்டு நலப் பணித்திட்டம். தேசிய மாணவர் படை (NCC), விளையாட்டுகள முதலானவற்றில் மாணவர்கள ஈடுபடுவதற்கு வாய்ப்புகள் உள்ளன.

இப்பல்கலைக் கழகம் தொடங்கி 125 ஆண்டுகளைக் கடந்து விட்டதால இதன் நூறறாணடிற் கடுத்த வெள்ளிவிழா 1982-83-இல் சிறப்பாக நடைபெறறது இப்பல்கலைக் கழகததில் நெடுங்காலம் (1942-1969) துணைவேந்தராக இருநத சிறப்பு டாக்டர் ஏ. இலட்சுமணசாமி முதலியாரையே சாரும். சீ.ப.

**சென்னை மாவட்டம்**: காணக: தமிழ் நாட்டு ஆட்சிப்பிரிவுகள.

**செனபன்** ஒரு கிரேக்க எழுத்தாளர், வரலாற்றாசிரியரும் ஆவார். இவா கிரேக்க வரலாற்றாசிரியாகளான எரடோடசு (Herodotus), தூசிடைடிசு (Thucydides) ஆகியோருக்குச் சமமாக வைதது எணணப்படுகிறார். இலத்தீன் இலக்கியத்தில் செனபனுடைய (Zenophon) செல்வாககு மற்ற இருவருடைய செல்வாக்கைவிடமேம்பட்டுளளது. இவருடைய நூலகள் பல ஐரோப்பிய மொழிகளில் கி.பி. 16-ஆம் நூற்றாணடில மொழியாக்கம் செய்யப்பட்டுள்ளது. இவரை முதல பத்திரிகை ஆசிரியராகச் சிலர் கருதுகின்றனர். பத்திரிகை ஆசிரியர் போன்று இவர் தம்சொந்த பட்டறிவுகளை அப்படியே எழுதியுள்ளார். இவர் காலத்தில் வாழ்ந்துவநத

தலைவர்களைப் பற்றித் தமக்கு ஏற்பட்ட கருத்துகளை ஒளிவு மறைவின்றி வெளிப்படுத்தியுள்ளார். இவர், மக்களுடைய கவனத்தை ஈர்த்திருந்த சிக்கல்களைப்பற்றிய தம் கருத்துகளை வெளிப்படுத்தினார். தங்குதடையற்ற, எளிமையான நடையில் இவர் எழுத வல்லவர்.

கிரீசின் ஒரு பகுதியான அட்டிகா (Attica)வில் செல்வக் குடும்பத்தில் கி.மு. 431-இல் செனபன் பிறந்தார். இவருடைய வாலிபப் பருவத்தின்போது நடைபெற்றுவந்த பெலப்பனீசியப் (Peloponesian War) போரின்போது இவர் குதிரைப்படையில் சேர்ந்தார். பின்னர்ச்சாகரடிசின் சீடரானார். அப்போது ஆதன்சு நகரில் நடைபெற்றுவந்த தீவிர மக்களாட்சி முறையை வெறுத்தார். சாக்ரடிசைக் கொன்றபோது அந்த வெறுப்பு மேலும் மிகுதியாயிற்று. வலதுசாரிச் புரட்சியாளர்கள் அதிகாரத்தை கி.மு.411-404-ஆம ஆண்டுகளில் கைப்பற்றியபோது, அவர்களை ஆதரித்தார். மீண்டும் மக்களாட்சிக் கோட்பாடு நிலை நாட்டப்பட்டபோது இவர் நாட்டை விட்டு வெளியேறினார்.

நாட்டைவிட்டு நீங்கிய செனபன் சிற்றாசியாவிற்குச் சென்றார். அப்போது பாரசீக நாட்டை ஆண்டுவந்த சைரசு (Cyrus) தம் தந்தையாரின் காலத்திலேயே சிற்றாசியாவின் ஆளுநராக நியமிக்கப்பட்டிருந்தார். அவர் பேராசை கொண்டவர்; திறமையானரும். ஆவார். ஆகவே, தம் அணணனைப் பதவியிலிருந்து நீக்கிவிட்டுத் தாமே பேரரசராக வேண்டுமென்று எண்ணினார். அதனபொருட்டு 10,000 பேர் கொணட கிரேக்கக் கூலிப்படை ஒனறை உருவாக்கினார். இந்தப் படைக்கு இசுபார்ட்டாவைச் (Sparta) சார்ந்த கிலியார்க்கசு (Clearchus) வைத தலைவராக நியமித்தார். இதில் செனபனும் சேர்ந்தார். தாயகத்திலிருந்து 1,500 கி.மீ. தூரம் முனபின தெரியாத பகுதிக்கு இப்படை சென்றது. பாபிலோனியாவை நோககிச் செல்லும் வழியில் குனாசா (Gunaxa) என்னுமிடத்தில் சைரசு தோற்கடிக்கப்பட்டார். போரில் சைரசு மாண்டார். கிரேக்கப் படையின் நிலை இரங்கற்குரியதாக இருந்தது. ஆயினும், அவர்களிடமிருந்த கட்டுப்பாடு அவர்களைக் காப்பாற்றியது. ஆர்டா செர்சசு அவர்கள திரும்பிச் செல்ல அனுமதித்தார். வந்த வழியாகத் திரும்புவதறகுப் பதிலாக அவர்கள் வடக்கு நோக்கிச செல்லுமாறு கட்டளையிடப்பட்டது. திரும்பும் வழியில், கிலியார்க்கசைப் பாரசீகர்கள் சூழ்ச்சியால் கொன்றனர். அவருடைய இடத்தில் பல தளபதிகள் தேர்நதெடுக்கப்பட்டனர். அவர்களுள் செனபனும் ஒருவர். சிறந்த பேச்சாளரான செனபன தம் பேச்சுத் திறனாலும் கூர்மையான அறிவாற்றலாலும் கிரேக்க படை வீரர்களுக்குப் போதிய எழுச்சியை ஊட்டி நாகரிகமற்ற மக்கள் வாழ்ந்துவந்த, முன்பின் அறியாத நாடுகளின் வழியாக அழைத்துக்கொண்டு கருங்கடல் கரையோரம் அமைந்துள்ள திரெப்சசு (Trepezus) என்ற கிரேக்க நகரைக் கி.மு.400-இல் அடைந்தார். படையின் பாதி வீரர்கள் மட்டுமே நாடு திரும்பினர். இந்த வீரச் செயல் செனபனுக்கு புகழையும் பொருளையும் தந்தது.

கிரேக்க நாட்டை அடைந்த பின்னர், முதலில் அவர் திரேசில் (Thrace) பணியிலமர்ந்தார். பின்னர், சிற்றாசியாவில அமைக்கப்பட்டிருந்த இசுபார்ட்டா படையில் சேர்ந்தார். அச்சமயம் இவர் இசுபார்ட்டா அரசரான இரண்டாம் அசிசிலாசைச் (Agesilaus II) சந்திக்க நேர்ந்தது அசிசிலாசு அப்போது பாரசீக நாட்டிற்கெதிராக இசுபார்ட்டாவின் படையை நடத்திக்கொண்டிருந்தார். அவர் இசுபார்ட்டா திரும்பியபோது செனபனும் அந்நாட்டிற்குச் சென றார். இசுபார்ட்டாவிற்கும் ஆதன்சு உள்பட்ட பல கிரேக்க நாடுகளுக்குமிடையே கரோனியா (Coronea) என்னுமிடத்தில் நடந்த போரைச் செனபன் நேரில் கண்டார். பின்னர் அசிசிலாசு தெல்பி சென்ற போது தாமும் அவருடன் சென்றார். அங்கிருந்த அத்தீனிய உண்டியலில் அப்பலோ கடவுளுக்குத் தாம் அளிக்கவிருந்த பணத்தைப் போட்டார். அப்போது தான் அத்தீனிய அரசு இவரைத் துரோகி என்று குற்றம் சாட்டி நாட்டைவிட்டு வெளியேற்றவும் செய்தது.

பின்னர் இசுபார்ட்டாவில் இவருக்கு வீடு அமைத்துக் கொடுக்கப்பட்டது. ஒலிம்பியாவிற்கு அருகே நிலம் அளிக்கப்பட்டது. அங்குத் திருமணம் செய்துகொண்டு இன்ப வாழ்க்கையை நடத்தி இரு பிள்ளைகளுக்குத் தந்தையானார். போதிய பணமும், வேட்டையாடுவதற்குப் போதிய நேரமும் இவருக்குக் கிடைத்தன. வேட்டைப் பெண் கடவுளான அர்டிமிசுக்கு (Artemis) ஒரு கோயிலை எழுப்பினார்.

இசுபார்ட்டாவின் மேலாண்மை அழியத் தொடங்கியபிறகு இவர் கொரிந்து (Corinth) நாட்டில் அடைக்கலம் நாடினார். இசுபார்ட்டாவும் ஆதன்சும் இப்போது தீப்சு (Thedes)க்கு எதிராக ஒன்றுசேர்ந்தன. எனவே, செனபனை நாட்டைவிட்டுத் துரத்துவதற்காக நிறைவேற்றப்பட்ட முடிவு நீக்கப்பட்டது. செனபனும் கி.மு. 365-இல் நாடு திரும்பினார். தமது பழைய வாழ்க்கையை இவர் மீண்டும் மேற்கொண்டார். இவர் ஏறத்தாழ கி.மு. 350-இல் இறந்தார். சலவைக்கல்லால் செதுக்கப்பட்ட இவரது தலையின் இரண்டு படிமங்கள் இப்போது கிடைத்

துள்ளன. அவற்றைக்கொண்டு இவர் மிக அழகாக இருந்தார் என்பதை அறியலாம்.

செனபன் பல நூல்களை எழுதியுள்ளார். அவற்றுள அனபாசிசு Anabasis) அல்லது கைரு (Kyrou) குறிப்பிடத்தக்கதாகும். இதில் சைரசின் படையெடுப்பு விளக்கப்பட்டுள்ளது. இதைப் புனைபெயரில் எழுதியுள்ளார். இவருடைய பழைய நினைவுகள் இதில் கூறப்பட்டுள்ளன சாக்ரடீசிடம் இவர் கொண்டிருந்த அன்பின் காரணமாச மூன்று நூல்களை எழுதிச்சாக்ரடீசு கூறியது உணமையென நிரூபித்துக் காட்டியுள்ளார். பண்ணை நிருவாகத்தைப் பற்றிய நூல் ஒன்றும் எழுதியுள்ளார். சைரோபீடியா (Cyropaedia) என்ற வரலாற்றுப் புதினம் ஒன்றையும் படைத்துள்ளார். அரசர் பதவியைப் பற்றி ஈரோன் (Hieron) என்னும் நூலில் விவாதித்துள்ளார். தூசிடைடிசின் வரலாற்று நூலை முழுமையாக்கச் செனபன் பேருதவி செய்துளளார். தூசிடைசின் 'எல்லனிகா' என்ற வரலாற்று நூலுடன் கி மு.411 முதல் 403 வரையிலுள்ள வரலாற்றை எழுதிச் சேர்த்து அதை முற்றுப்பெறச் செய்தார். தமது சொந்த பட்டறிவுகளின் அடிப்படையில் அந்த வரலாற்றை எழுதியுள்ளார். வரலாற்று ஆசிரியருக்கு இருக்கவேணடிய ஆய்வுத்திறன் அதில் காணப்படவில்லை. மேலும், அதைத் தம் விருப்பு வெறுப்புக்கேற்ப எழுதியுள்ளார். இசுபார்ட்டாவின் அரசியலமைப்பு மற்றும் அசிசிலாசு பற்றி இரு நூல்கள எழுதியுள்ளார். அத்தீனியப் பொருளாதார அமைப்பு கி மு.355-இல் எவ்வாறிருந்தது என்பது பற்றிய நூல் ஒன்றையும் இவர் ஆக்கியுள்ளார். தி.ஆர்.இரா.

**செனிகா இந்தியர்** வட அமெரிக்க இந்தியப் பழங்குடியினருள் ஒரு தொன்மையான குடியினர். இவர்கள இரோகுவாய் (Iroquois) மொழிக் குடும்பத்தைச் சேர்நத மொழியினைப் பேசுகின்றனர்.



செனிகா குடும்பம்

பண்டைய இரோகுவாய் மொழிக் குடும்பத்தைச் சேர்ந்தபழங்குடிகளுள் மிகப்பெரும் குழுவினராகவும், பண்டைக் காலத்தில் இரோகுவாய் நாடுகளின் கூட்டமைப்பைச் சேர்ந்த நானகு முதன்மையான பழங்குடியினருள் ஒரு குடியாகவும் திகழ்ந்தனர். இந்த அமைப்பில் இவர்கள் 8 தலைவர்களைக் கொண்டிருந்தனர்.

செனிகா இந்தியர்கள் (Seneca Indians) பிற அமெரிக்க இந்தியர்களைப் போன்றே வெள்ளையர்களின் மேலாண்மைக் குட்பட்டுப் பல போர்களைச் செய்தனர். அமெரிக்கப் புரட்சியின்போது இவர்கள ஆங்கிலேயர்களுக்குத் துணையாக இருந்தனர். அதனால், அமெரிக்கப் படைகள் இவர்களின் குடியிருப்புகளை கி.பி. 1779-இல் அழிநது விட்டன. இருப்பினும் இவர்கள் கி.பி. 1789-இல் மீணடும் பெருமளவு பகுதிகளைப் பெற்று விட்டனர்.

இவர்களின் சமுதாய அமைப்புத் தாய்வழியில் அமைந்தது. தாய்வழியைச் சேர்ந்த நெருக்கமான பல குடும்பங்கள ஒன்றுசேர்ந்து நீண்ட ஒற்றை வாடை வீடுகளில் வாழ்கின்றனர். செனிகா சமுதாயம் இருபெரும் கூட்டங்களாகப் (Moiety) பிரிவுபடுகிறது. ஒவ்வொரு கூட்டததிலும் பல குலஙகள் (Clans) உளளன. ஒரு குலத்தைச் சேர்ந்தவர்கள அனைவரும் இரத்த உறவுடையவர்கள். அதனால் ஒரு குலத்தைச சேர்நதவர்கள வேற்றுக் குலத்தவரையே மணக்க வேண்டும். பெரும்பாலும் இக்கூட்ட அமைப்புகள சடங்கு முறைகளைக் கவனிக்கும் நிறுவனமாகவும் திருமண முறையை ஒழுங்குபடுத்தும் நிறுவனமாகவும் செயற் படுகின்றன. ஒவ்வொரு கூட்டமும் தனக்கென்று தலைவனைக் கொணடுளளது. ஒவவொரு கூட்டத்திறகும் உதவியாக ஆண்களைக் கொண்ட ஆலோசனைக் குழுவும் உளளது.

இவர்களின பெருளாதாரம் வேளாண்மையையும் வேட்டையாடுதலையும் அடிப்படையாகக் கொண்டது இலையுதிர் காலத்தில் ஆண்கள் பல குழுக்களாகச் சென்று விலங்குகளை வேட்டையாடிக் கொண்டு மழைக காலததிற்கு முன்னரே வந்து சேர்ந்து விடுவர். மக்காச் சோளம், காய்கறிகள முதலியவற்றை விளைவிப்பதில் பெண்களே முழுப் பொறுப்பேற்கிறார்கள். மீணடும் ஆணகள் இளவேனிற்காலத்தில் சென்று மீன்பிடித்துத் திரும்புகின்றனர். இன்று இவர்கள் வடகிழக்கு ஆகலகாமாப் (Oklahama) பகுதியில் 670 க்கும் மேற்பட்ட எணணிக்கையில் வாழ்கின்றனர். மேற்கு நியூயார்க்குப் பகுதியில் இன்றும் மூன்று நீளவீடுகள் இவர்கள பகுதியில் உள்ளன. பலர் மரபுசார்நத வாழ்க்கையை

விடுத்து நகரப் பாணியை மேறகொண்டு வருகின் றனர். பலர் கிறித்தவ சமயத்தைத் தழுவியுள்ளனர்.
சீ.ப.

*செனிகால்*: செனிகால் மேற்கு ஆப்பிரிக்காவில் ஓடுகிற ஆறுகளுள் ஒன்றாகும் பிரெஞ்சுக் கினி பீடபூமியில் காங்கு மலையின் வடக்கு இறக்கத்தில் உற்பத்தியாகி வடக்காக 1600 கி.மீ. நீளத்திற்கு ஓடி, பின்னர் வட மேற்கு நோக்கி செயின்ட்டுலூயி நகருக்கு அருகில் அட்லாண்டிக்குப பெருங் கடலில் கலக்கிறது. இவ்வாறு ஓடுகிற போக்கில் இருமருங்கி லும் ஆஙகாங்கே பஞ்சாலைகளும் பட்டு ஆலைகளும் மிகுந்த அளவில் அமைந்துள்ளன.

**செனிகால்**[2] பிரெஞ்சு கடலாதிக்கததிற்கு உட்பட்டிருநத மேற்கு ஆப்பிரிக்கா பிரிவில் அடங்கிய குடியரசு நாடுகளுள் ஒன்று செனிகால் (Senegal) ஆகும். செயின்ட்லூயி இதன் தலை நகரமாகவும் தாக்கார் (Dakar) இதன துறைமுகமாகவும் விளங்கு கின்றன. தையிசு, காவலாக்கு, சிகான்கார் ஆகியன இப்பகுதியில் அடங்கிய சிறந்த நகரங்களாகும். இதன் பரப்பளவு 2,01,375 சதுர கி.மீ. இதன் மக்கள்தொகை 3,685,000 (1968). இது தட்டையான வெப்பமிகு


செனிகால்

நிலப்பகுதியாகும். இம்மண்ணின் மைநதர்களான நீகிரோக்கள் பெரும்பான்மையினராகவும் ஐரோப் பியர்கள் சிறுபான்மையினராகவும் இங்கே வாழ் கிறார்கள்.

வடக்கே மவுரிடானியும், தெற்கே போர்ச்சுக்கீசிய கினியும், கிழக்கே சூடான் குடியரசு எல்லையும், மேற்கே அட்லாணடிக்குப் பெருங்கடலும் செனி காலுக்கு எல்லைகளாக அமைந்துள்ளன.

செனிகால், 1958-ஆம ஆண்டு முதல் பிரெஞ்சுப் பேராதிக்கத்தில் அடஙகிய ஒரு குடியரசு நாடாக விளங்கியது சூடானுடன்1959-ஆம்ஆணடில் சேர்ந்து மாலி நாடுகளின கூட்டாட்சியில் அங்கம் பெற்று, 1960-ஆம் ஆண்டில பிரெஞ்சுப் பேரரசினின்று விடுதலை பெற்று ஒரு விடுதலை நாடாக மாறியது. ஆனால், இந்தக் கூட்டாட்சி நிலைக்கவில்லை. மூனறு மாதஙகளே நீடித்தது பின்னர் ஒரு நாடாளுமன்றம் தழுவிய அரசு அமைக்கப்பட்டது. இலியோபால்பால்டு தலைமையில அரசியல் புரட்சி ஏறபட்டு ஆட்சியைக் கைப்பற்றப் பெருமுயற்சி மேற்கொள்ளப்பட்டது. அப்புரட்சிக்குக் காரணமாக இருநதவர்களைக் கைது செய்வதின் மூலம் புரட்சி ஒடுக்கப்பட்டது தவிர்க்க முடியாத நிலையில் 1963-ஆம் ஆண்டில் செனிகால சட்டப்பேரவைத் தேர்தல் நடைபெறறது. அப்போது தாக்காரில் அரசியல் குழப்பமும் கிளர்சசியும் உணடா யின. ஓட்டு எண்ணிக்கை மையங்களில இக்கலகத்தின விளைவாக 60 போ கொல்லப்பட்டனர். தேர்தல் முடிவு அறிவிப்பாளர்கள் காயப்படுத்தப்பட்டனர். இத்தேர்தலில் போட்டியிட்ட செனிகால் முன்னேற்றச் சங்கம் சட்டப்பேரவைக்கான 80 இடங்களையும் கைப்பற்றி ஆட்சியை அமைத்தது.

செனிகால் குடியரசில செனிகால், காம்பியா, காசமான்சு, சலூம் ஆகிய ஆறுகள பாய்வதால் இந்நாடு மிக்க நீர்வளமும், நிலவளமும் பெற்றதாக உள்ளது. வேர்க்கடலை அளவுக்கு மிஞ்சி இங்குப் பயிரிடப்படுவதால் அக்கடலையும் எண்ணெயும் அயல்நாட்டு ஏற்றுமதிப் பொருள்களாக உள்ளன. இவையன்றி நெல், மக்காச்சோளம், பனைமரப் பொருட்கள், கோந்து மற்றும் சிறுதானிய வகைகளும் கிடைககின்றன. நெசவுத்தொழில், எண்ணெய் ஆட்டும் தொழில், செங்கல வேலைத் தொழில ஆகியவை இங்கு வாழ்பவர்களுக்கு முக்கியத் தொழில் களாகும. எனினும் இயந்திரப் பொருட்கள், உணவுப் பொருட்கள், துணிவகைகள், பேருந்து எண்ணெய் ஆகியவறறைப் பிற நாடுகளிலிருந்து இறக்குமதிப் பொருட்களாகப் பெறுகின்றனர் பொன். சு.

*செனெக்கா* (கி.மு. 4-கி.பி. 65): உலூசியசு அன்னேயசு செனெக்கா (Lucius Annaeus Senecal) என்ற பண்டைய உரோமானியத் தத்துவ ஆசிரிய ரும், அரசியலறிஞருமான செனெக்கா என்பவர் பண்டைய உரோமானியச் செல்வந்தர் குடும்பத்தில் பிறந்தார். இவர் இசுபெயினில் (Spain) கொர்டோ பாவில வாழ்ந்தார். உரோமில் இவர் சில அரசாங் கப் பதவிகளை ஏற்றுப் பேரரசருடைய மகன் நீரோ (Nero) சிறுவனாக இருக்கும் போது அவனுக்கு ஆசிரியராக இருந்தார். பேரரசர் நீரோவுக்கு ஒரு

நல்லமைச்சராக அமைந்து குடிகளுக்கு இரக்கம் காட்டுமாறு செய்தார். ஆயினும், அரசருடைய கட்டுப்பாடற்ற வாழ்க்கைக்குப் பொருள் தேவைப் பட்டதனாலும், பொதுவாக அரசருடைய வஞ்சக மான போக்கின் காரணமாகவும், செனக்கா தம் பொருளைத் துறந்துவிட்டு, உரோமுககருகிலுள்ள சிற்றூரில் ஒதுங்கி, எளிய வாழ்க்கை நடத்தினார். ஆயினும், இவர் ஒரு சூழ்ச்சியாளராகக் குற்றம் சாட்டப்பட்டு, மரண தண்டனை கொடுக்கப்பட் டார்.

இவர் பல நல்ல நூல்களை எழுதியுள்ளார். மன அமைதி, சீற்றமென்னும் தீயபண்பு முதலியன பற்றி 20 உரையாடல் நூல்களை எழுதினார். உலூசிலிய சுக்குக் கடிதங்கள் (Letters to Lucilius) என்ற தலைப்பில் 20 கடிதங்கள் எழுதினார். இவருடைய கடிதங்களிலிருந்து இவருடைய உண்மையையும், நீதியையும் இரக்க உணர்வையும் அறியலாம். சிலர் இவரை ஒரு கிறித்தவரென்றேகருதி னர். இவர் புனித பாலுக்கு எழுதியதாகக் கூறப் படும் 24 போலிக் கடிதங்களும் இருக்கின்றன.

**அரசியற் கருத்துகள்:** சிசரோவைப் போல செனெக்காகவும் இன்பதுன்ப நடுநிலைக் கொள்கை யில (Stoicism) நம்பிக்கை உடையவர். இயற்கை யானது காரண காரிய அறிவுக்குப் பொருததமாக வும், நன்மை அளிப்பதாகவும் இருக்கிறது என்ற கொள்கையை செனெக்கா ஏற்றுக்கொண்டிருந்தா லும், அக்கொள்கைக்குத் தொடக்கக் காலததிலிருந்த சில கடுமையான எதிர்ப்புகளை அதிலிருந்து நீக்கித் திருத்தி அமைத்தார். இவருடைய காலத்தில் உரோ மானிய அரசாங்கம் வலிமையற்றுப் போயிற்று; கை யூட்டு முதலிய ஊழல்களும் மலிந்தன. சட்டத்தினாட்சி என்ற நல்ல பண்பு மறைந்து, எதேச்சாதிகார ஆட்சி தோன்றும் அறிகுறி தோன்றிற்று. உரோமானிய சமூக, அரசியல் வாழ்வும் பல குறைபாடுகளுக்கு உட்பட்டுத் தேய்வடையலாயிற்று. இந்நிலை மாறி நல்ல முறைக்கு உரோமானியச் சமூகம் திருந்தி வரு மென்ற நம்பிக்கையை இழந்து, கவலையோடு செனெக்கா இருந்தார். இச்சூழ்நிலையைக கண்டு செனெக்கா, எந்த ஓர் ஆட்சிமுறையும் நல்லதாகவோ, தீயதாகவோ இருத்தல் கூடுமென்றும், ஆட்சி வகைகளுக்கிடையேயுள்ள வேறுபாடுகள முக்கியமல்ல வென்றும் கூறினார்.

அரசாங்கத்தில் எந்தப் பதவியையும் ஏற்காமல் எவரும் சமூகப்பணி செய்தல் கூடும். ஒருவர் தம் நல்ல எண்ணத்தின் வாயிலாக மனித இனத்துக்கே ஆசிரிய ராக ஆட்சியாளரை விட உயர்ந்த செல்வாக்குள்ள நிலையைப் பெறுதல் இயலும். செனெக்கா பேரர சர் மார்க்கசு அரேலியசைப் போல (Marcus Aurelius) இன்பதுன்ப நடுநிலைக் கொள்கையை ஒரு சமயக் கொள்கையினளவுக்கு உயர்த்தினார். அறிவாளி கள் மனநிறைவுடன் வாழ்பவரென்று கருதினார். இவர் சமத்துவம், தொண்டு முதலியவற்றை வலியுறுத்தி இவ்வுலகத்தாருக்கு அமைதியும் மன உறுதியும் உண்டாகுமாறு பாடுபட் டார். அன்றியும் மனிதனுக்கு ஆன்மிக வாழ்வைப் பற்றிய நல்ல எண்ணமும இருத்தல் வேண்டும் என் றார். மனித உடம்பானது ஆன்மாவை மறைத்து, இருளிலாழ்த்தி, அதனைக் கட்டுப்படுத்தி வைக்கிறது; ஆன்மா உடம்பின் தசையினின்றும் விடுபடுதற்காக தொடர்ச்சியாகப் போராடுகிறது என்று செனெக்கா கூறினார். ஆன்மிக அமைதியிலே மனித னுக்கு நாட்டம் வளர வளர, அதன் விளைவாக சமயநெறிக்கு உயர்வு ஏற்பட்டது. சமய வாழ்வின் குறிக்கோள்கள் ஒரு நிறுவன வடிவம் பெற்றன. இத்தகைய நிறுவனமாகக் கிறித்தவத் திருச்சபை உருவாயிற்று. செனெக்கா கூறிய இரு நாடுகளுள் ஒன்று குடிமை அரசு; மற்றொன்று மனித சமுதாயம் (Human Society). இது கிறித்தவர்கள் கூறிய இரு நாட்டுக் கருத்தை ஒத்திருக்கிறது.

செனெக்காவின் தத்துவம் சமய உணர்வு கலந்த ஒன்று ஆகும். அத்தத்துவத்தின் விளைவாக, 'நிலவுல கில் உள்ள அரசுதான் மனிதனுடைய முழுமையான வளர்ச்சியைக் காட்டும் நிறுவனமாகும்' என்ற பண் டைக்காலக் கருத்து மறைந்தது. மேலும், மனிதன் தீவினை (Sin) செய்யும் இயல்புடையவன் என்றும் இவர் கருதினார். மனிதன் தன் தீய இயல்பினின்றும் விடுபட்டு, உய்திபெறுதற்குத் (Salvation) தொடர்ந்து முயலவேண்டும்.

பதினெட்டாம் நூற்றாண்டில் உரூசோ கற்பனை யான ஓர் இயற்கை நிலையைக் கூறியதுபோல் (State of Nature) செனெக்காவும் மனிதனுடைய செயற்கை நாகரிகம் தோன்றுதற்கு முற்பட்ட காலத் தில் ஓர் இயற்கை நிலை இருந்ததென்றும், அது ஒரு பொற்காலமென்றும் கூறுகிறார். அந்தப் பொற் காலத்தில் மனிதர் எளிய வாழ்க்கை வாழ்ந்து, மகிழ்ச்சியாகவும் கபடின்றியும் இருந்தனர். மனித னுடைய பேராசையைத் தூண்டும் தனியார் சொத்து முறை அன்று தோன்றவில்லை. பொருள் பற்று என்பது வளர வளர மனிதரின் பண்டைய தூய நிலை மறைந்தது. பொருள்பற்று இன்றித் தூய வாழ்க்கை நிலையிலிருக்கும் வரை, அவர்களுக்கு அர சாங்கமோ சட்டமோ தேவை இல்லை. அவர்கள் தாமாகவே கீழ்ப்படிந்து நடந்தனர். அவர்கள் எப்

பொழுது பொருள்களைத் தங்களுடையவை என்று உரிமை கூறினார்களோ, அப்பொழுதே அவர்களை ஆட்சி செய்தோரும் கொடுங்கோலராயினர். தீய பண்புகளை ஒடுக்குவதற்குச் சட்டமும், வன்முறையும் தேவைப்பட்டன.

தீய இயல்புடைய மனிதனுக்குத் தனியாருடைமை என்பது பயனுள்ள நிறுவனமாகவும், வற்புறுத்தலால் நிலைநிறுத்தப்படுகிற சட்டமும இன்றியமையாதனவாகவும் இருக்கின்றன. நகரரசு ஒன்றுதான் மனிதனுடைய சிந்தனை ஆற்றல்களை முழுமையாக வளர்ப்பதற்கு உதவும் கருவி என்றும், இவ்வகையில் நாகரிக வாழ்வுக்கு நகரரசு இனறியமையாததெனறும் கூறிய அரிசுட்டாட்டலின் கருத்தும மனிதனுடைய தீய இயல்புக்குத் தேவையான ஒரு மருந்தாகவே அரசாங்கம் இருக்கிறதென்று கூறிய செனெக்காவின் கருத்தும் ஒன்றுக்கொன்று மாறாக இருக்கின்றன. செனெக்காவும் சிசரோவைப்போல் குடிமை நிலையை வலியுறுத்தாமல், மனித சமத்துவமென்னும் கருத்தையே வலியுறுத்தினார். பா.கு.

துணை நூல்கள்:

**Goulton, G.G.,** Studies in Mediaeval Thought, London, 1940.

**Hyde, Walter H,** Paganism to Christianity in the Roman Empire, Philadelphia, 1946.

**சே** சகரத்திற்கும் ஏகாரத்திற்கும் உரிய குறிப்புகளைப் பார்க்கவும். செகரத்திருக் கூறப்பட்டவை யாவும்இதற்குப்பொருந்தும். புள்ளி இடப்பட்டால் செகரமாகவும் புள்ளி இல்லையானால் நெடிலாகவும் கொள்ளவேண்டும். புள்ளியிடும் வழக்கம் கல்வெட்டிலும் ஏடுகளிலும் பெரும்பான்மையாக இன்மையால் மொழி அறிவைக் கொண்டே படிக்க வேண்டும். சில கல்வெட்டுகளில் இவ்வழக்கம் உள்ளதை செகரத்திற்கு கொடுக்கப்பட்ட குறிப்பிலிருந்து அறிநது கொள்ளவும்.

கே.ஜி.கி.

சேக்கிழார் சைவத் திருமுறை பன்னிரண்டனுள் இறுதித் திருமுறையாக விளங்கும் திருத்தொண்டர் புராணம் என்னும் பெரியபுராணத்தை இயற்றிய புலவர். இவர் தொண்டை மண்டலத்துப் புலியூர்க் கோட்டத்திலுள்ள குன்றத்தூரில் வேளாண் மரபில் சேக்கிழார் குடியில் பிறந்தார். இவரது இயற்பெயர் அருண்மொழித் தேவர் என்பது. இவர் தம் இளவலின் பெயர் பாலறாவாயர். இவர், தம் தொண்டினால் தாம் தோன்றிய குடியின் சிறப்பினை விளங்கச் செய்தமையால் பிற்காலத்தில் 'சேக்கிழார்' எனக் குடிப் பெயராலேயே வழங்கப்பெற்றார்.

இளமையில் சீரிய கல்வியும், ஒழுக்கமும் சிறந்து விளங்கிய இவரது சிறப்புணர்ந்த அனபாய சோழன் இவரை வரவழைத்துத் தம் முதலமைச்சராகப் பணியமர்த்தினான. முதலமைச்சராய் இவர் ஆற்றிய பணியின் சிறப்பினை அறிந்த மன்னன் 'உத்தம சோழப் பல்லவன்' என்னும் சிறப்புப் பட்டம் நல்கிப் பாராட்டினான்.

மன்னன் சமண காப்பியமான சிந்தாமணியின் சுவையில் ஈடுபட்டிருப்பதனை அறிந்த சேக்கிழார் அதனை மாற்றிச் சைவத்தின் பாலும் சைவ அடியார்கள் பாலும் ஈடுபாடு கொளளச் செய்தார் என்று ஒரு வரலாறு கூறப்படுகிறது. அதனை உடன்படாதவர்களும் உளர். அரசன் வேண்டுகோளின்படி இவர் சைவ அடியார்களின் வரலாற்றைப் புராணமாகப் பாட முற்பட்டுத் தில்லையை அடைந்து இறையருள் வேண்டி நிற்க, 'உலகெலாம்' என்றோர் அசரீரி கேட்டு அதனை இறைவன அடியெடுத்துக் கொடுத்ததாக ஏற்று மகிழ்ந்து அத்தொடரையே, தொடக்கமாகக் கொணடு புராணத்தைப் பாடி, இறுதியில் அத்தொடரைக் கொணடே நிறைவு செய்துள்ளார். அது 'திருத்தொண்டர் புராணம்' என்னும் பெயரில் அமைந்தது.

சேக்கிழாரின் திருத்தொண்டர் புராணம் பாடி முடிக்கப் பெற்ற பின்னர், அது தில்லைத் திருக்கோயில ஆயிரக்கால் மண்டபத்தே அரங்கேற்றப் பெற்றது. அப்புராணம் பாடிய சிறப்பால் மன்னன், 'தொணடர் சீர பரவுவார்' என்னும் சிறப்புப் பட்டத்தைச் சேக்கிழாருக்கு நல்கிப் பெருமைப்படுத்தினான். அதன் பின்னர்ச் சேக்கிழார் அமைச்சர் பொறுப்பின் நீங்கித் தில்லையிலேயே இருந்து தொண்டு புரிந்துவரவும் அம்மன்னன் ஏற்பாடுகள செய்தான்.

சுந்தரமூர்த்தி சுவாமிகளின் திருத்தொண்டத் தொகையையும், நம்பியாண்டார் நம்பிகள் இயற்றிய திருத்தொண்டர் திருவந்தாதியையும் அடிப்படையாகக் கொண்டே சேக்கிழார் தம் புராணத்தை இயற்றியுள்ளார். சேக்கிழார் தாம் பெற்ற கல்வி, உலகியலறிவு ஆகியவற்றின துணையோடு தமிழகத்திற்கு அப்பாலும் விளங்கிய சைவ அடியார்களின் வரலாறுகளை, இலக்கியங்கள், கல்வெட்டுகள், வரலாற்றேடுகள், சாத்திர நூல்கள், தோத்திர நூல்கள் போன்ற பல்துறைச் சான்றுகளின் அடிப்படையில்

தம் புராணத்தைப் படைத்துள்ளார். தம் நூலுள் இவர் அடியார்களின் வரலாற்றினைப் பக்திச் சுவை மல்கப் பாடியுள்ளமையால் மகாவித்துவான் மீனாட்சி சுந்தரம் பிள்ளை 'பக்திச் சுவை நனி சொட்டச் சொட்டப் பாடிய கவி வலவ' என்று இவரைச் சிறப் பித்துப் போற்றியுள்ளார். சேக்கிழார், அனபாயன் என்னும் சிறப்புப் பெயர் கொணட இரணடாம குலோத்துங்கன் (கி.பி.1133-1150) காலத்தவர் என் பது ஆய்வாளர்களின் முடிவாகும். அதனால் இவர் காலம் கி.பி 12-ஆம் நூற்றாண்டு என்பது தெளிவா கிறது. இவர் கி.பி 12-ஆம் நூற்றாண்டிற்கு முற்பட்ட வர் எனக் கருதுவாருமுளர்.

இவர் இயற்றிய திருத்தொண்டர் புராணம், தோத்திரப் பாடல்களின் இனிமையையும், சாத்திரப் பனுவலகளின சாரத்தையும் கொணடு, இறைப்பற்றில் முனைந்து வாழ்ந்து சிறந்த அடியார்கள் வரலாறு கூறும் வரலாறறுக் காப்பியமாகிறது. மக்களிடையே சமய நம்பிககை எழுப்புதல், சமய உணர்வினை வெளிப்படுத்தக் கையாள வேணடிய வழிபாட்டு நெறிமுறைகளை எடுத்துரைத்தல், நெறிமுறைகளுககு அடிப்படையான தததுவங்களைப் பரவலாகச் சுட் டிச செல்லுதல என்ற மூனறு பெரும பண்புகளைக் கொணடிலங்குவன சமயஞ்சாா இலக்கியங்கள. சேக கிழார் எழுதிய தெய்வமாக கதையோ இம்முப்பெரும் பண்புகளையும் வாழவில் கடைப்பிடிதது வாழ்ந்த அடியார்களுக்கு அதனால் ஏற்பட்ட பாதிப்புகளை யும், எதிர்விளைவுகளையும், அவற்றை இறைவன மீது கொண்ட அனபு என்ற அறபுதப் பணபு ஒனறாலேயே வென்று நிமிர்நது இறையருள பெற்ற புராதன வரலாற்று நிகழ்வுகளையும் எடுத்துரைககும் சிறப் பினால, பெரியவர்களின புராணம் எனனும் பொருள தரும் பெரியபுராணமாக நிலைபெறறுத் திகழ் கிறது.

இவரது காப்பியம், சைவ நெறி நின்று இறைத் தொணடாற்றிய அடியார் திருககூட்டத்தில், அறு பத்து மூனறு தனியடியாாகளுடைய சீாமை களையும், பொதுநிலை அமைபபில பரந்துபட்ட பார்வையில் சமயப் பொதுமை காணும் வகையில அமையும் ஒன்பது தொகையடியார்களின் பணபுகளை யும் பரக்கப் பேசுவதாக உளளது.

சைவ நெறியில் ஆண், பெண் என்ற இன வேறு பாடு, அந்தணா, பிறர் என்ற சாதி வேறுபாடு, எழை, செல்வர் என்ற பொருளியல் வேறுபாடு, இளமை, மூப்பு, உயர்ந்தோன், தாழ்ந்தோன் எனற இன்ன பிற வேறுபாகள் எல்லாம் களையப்பெற்று, 'எல்லாக் குலத்தில் உள்ளோரும் மேவ அன்பர் தாமுமுடன் சேவித்து அணைதல்' என்பதே உணமை என உணர்ந்த வகையில், இறைவன் திருமுன் சமயங் கடந்த சமுதாய ஒருமைப்பாட்டினை நிலைநாட்டிய வர் சேக்கிழார். ஆகையால்தான் ஆடை தூய்மை செய்யும் தொழிலுடைய திருக்குறிப்புத் தொணடர் தொடங்கி அரசர் வரையில் ஒருமையால் உலகை வெல்லும், தரம் மிக்க அன்பர் திருக்கூட்டத்தினைச் சேக்கிழாரின் பெரியபுராணத்தில் காண முடிகிறது.

இவர், இலக்கிய நெறிமைகளைப் பெரிதும் பின் பற்றிப் பக்திச் சுவை நனி சொட்டப் பாடுதறகு இனிய எளிய தமிழ் நடையை மேற்கொண்டு, இரணடு காண்டங்களையும் 13 சருக்கங்களையும் கொணட 4286 செய்யுட்களால் தம் இலககியத்தைப் படைத்துள்ளார்.

மனிதன் இருவகையில் நிறைவு பெறுவான். செயற்கரும் செயலாற்றிப பெறும் செயல நிறைவு ஒனறு, இறையியல் வழிநின்று, உளமுகமாய் திருவருள சித்திக்கப்பெற்று அடையும் ஆன்ம நினைவு மற் றொன்று மனித சமுதாயத்திறகு வலிமை தருவது ஆன்ம நிறைவே. ஆன்ம நிறைவிற்கான வழிநடைப் பயணமே வாழ்வு. தனிமனிதன > மனிதன் > சமூகம் > உலகம் > பரம்பொருள் என்ற அமைப்பில அமையும் இவ்வாழ்வியல் குறிக்கோளை அன்பர்தம் வாழ்வு வழி மக்களுககு எடுததுரைத்துள்ளார் சேக் கிழார்.

தி. லீ.

**சேக்கிழார் புராணம்** என்பது, பெரிய புரா ணம் எனப்படும் திருத்தொணடர் புராணத்தைப் பாடியருளிய சேக்கிழாரின வரலாற்றோடு திருத் தொணடர்புராண வரலாற்றையும் சேர்த்துக் கூறும் செய்யுள்நூல். இந்நூலின் சிறப்புப் பாயிரத்தால இதனைப் பாடியவர் மெய்கண்ட தேவர் மாணாக் கருள ஒருவராகிய உமாபதி தேவநாயனார் என்பது விளங்குகிறது. இவர் கொறறவன் குடி என்னும ஊரினர் என்பது கொறறவன குடி உமாபதி தேவர் எனப் பண்டார சாத்திரங்களில் வரும வழககால அறியலாகும். இவர் சைவ சமயத்துள் சந்தான குர வருள் ஒருவராக விளங்குபவர். சைவ சித்தாந்த சாத்திர நூல்கள பதினான்கனுள் எட்டு நூல்களை அருளிய பெருமை இவருக்குண்டு, அவை, 'சித்தாந்த அட்டகம்' எனப் போறறப்படுகின்றன.

பெரிய புராணத்தின் சிறப்பினை எண்ணி, அத னைப் பாடியருளிய சேககிழாரின் பெருமையை உலகம் அறிநது போற்றவேண்டுமென்னும் பெருவிருப்பத்தால் அவர் இநநூலைச் செய்துள்ளார். இப்புராணம், 103 திருவிருத்தங்களால் அமைந்துள்ளது. யாவும் சேக் கிழார் நடையை ஒட்டி நயம்படத் திகழ்கின்றன.

இதன்கண் சேக்கிழாரின் குடிமரபு, நாடு, ஊர், அவருடன் பிறந்தார், மன்னராற் பெற்ற சிறப்பு, புராணம் பாடக் காரணம், பாடிய முறை, புராணச் சிறப்பு, சேக்கிழாரின அருட் புலமைத்திறம், அரங்கேறிய வரலாறு, சான்றோர் பாராட்டிப் போற்றிய சிறப்பு, அதனைப் பயிலவோர் எய்தும் பயன் ஆகியவை மிகத் தெளிவாகவும் சுருக்கமாகவும் அமைந்துள்ளன.

தொண்டைநாட்டுப் புலியூர்க் கோட்டத்தில் விளங்கும் குன்றை வளநாட்டுக் குன்றத்தூரில், சேக்கிழார் மரபில் பெரிய புராண ஆசிரியர் தோனறினார் என்றும், சேக்கிழார் என்பது குலமரபுப் பெயர் என்றும், அவரது பிள்ளைப்பெயர் அருணமொழித் தேவர் என்றும், அவருடன் பிறந்த இளவல் பாலறாவாயர் என்றும் இப்புராணம் கூறுகினறது.

வேளாண் குடியின பெருமையினைப் பலபட விரித்துக் கூறி நாயனமார் அறுபத்து மூவருள் பதின்மூவர் வேளாளர் குடியில் தோன்றியவர் என்றும் புகழ்ந்துரைக்கிறது.வேளாளர் தம் வாய்மைச சிறப்பினைப் பழையனூர் நீலியின வரலாற்றால் புலப்படுத்துகிறது. அவவகைச் சிறப்பு நோககிச் சோழமனனன் அருண்மொழித் தேவர்க்குச் செங்கோல் ஓச்சும் தலைமையும் உத்தமசோழப் பல்லவன் என்னும பட்டமும் அளித்துப் பேணிக்கொண்டான் என்கிறது.

சீவகசிந்தாமணி போன்ற காப்பியங்களைக் கேட்டுப் பொழுது போக்கி வரும் மனனவன் நிலைக்கிரங்கி இருமைக்கும் பயனளிக்க வல்லது சிவ கதையே என மனனவறகு அறிவுறுத்தியபோது, மன்னன் சிவனடியார்கள தம் சிறப்பையும் திருத்தொண்டின் மேனமையையும் விளககிப் பெரியதொரு காப்பியம் பாடியருளுமாறு வேண்டிக்கொள்ள, சேக்கிழார் இறைவன் திருவருளை நாட, இறைவன் 'உலகெலாம்' என அடியெடுத்துக் கொடுக்க, அதனைப் பற்றுக்கோடாகக் கொணடு அவனருளாலே பெரிய புராணத்தைச் சேக்கிழார் பாடியருளினார் என்ற வரலாற்றினை இந்நூல் கூறுகிறது. சேக்கிழார் நம்பியாரூரரின திருத்தொண்டத் தொகையையும், நம்பியாணடார் நம்பிகளின் திருத்தொண்டர் திருவந்தாதியையும் முதனூலாகக் கொண்டு 4253 திருவிருத்தஙகளால் 13 சருக்கங்களும் இரணடு காணடங்களுமாகத் திருத்தொணடர் புராணத்தைப் பாடியருளினார் எனறும் கூறுகிறது.

வளவர்கோன், சேக்கிழாரையும் பெரிய புராணத்தையும் யானைமேல் அமர்த்தி நகர் வலஞ் செய்வித்து நூலை அரங்கேற்றித் தொண்டர்சீர் பரவுவார் என்னும் பட்டத்தையளித்துப் போற்றி வணங்கினான் என்றும், அது பன்னிரண்டாம் திருமுறையாக ஏற்றுப் போற்றப்பெறுகிறது என்றும் இப்புராணம் கூறுகிறது. பாலறாவாயர் குன்றத்தூரில் சேக்கிழார் பெயரால் ஓர் திருக்குளந் தொட்டுப் பல திருப்பணிகளைச் செய்து மகிழ்ந்தார்.

**சேக்சுபியர் வில்லியம் (கி.பி. 1564-1616):** சிறந்த நாடகாசிரியர் என்று கருதப்படுகின்ற சேக்சுபியர் கி.பி. 1564-ஆம் ஆண்டு இசுட்ராட்போர்டு அப்பான்-ஏவன் (Stratford-upon Avon) என்னும் இடத்தில் பிறநதார். அவர் நாடகாசிரியராகவும் நடிகராகவும் கவிஞராகவும் திகழ்ந்தார். அவரது இளமைக்காலம் அவர் பிறந்த ஊரிலேயே கழிந்தது. அங்கிருந்த இலக்கணப் பளளியில் அவர் இலத்தீன் மொழி பயின்றிருக்க வேண்டும். பதினெட்டாம் வயதிலே ஆன் காதவே (Anne Hathaway) என்ற உள்ளூர்ப் பெணணை மணந்தார். அவர்களுககுச் சுசானா என்ற மகளும் (Susanna) ஆம்னெட்டு, சூடித்து (Hamnet, Judith) என்ற இரட்டைக குழந்தைகளும் பிறந்தனர். அவர் தம் ஒரே மகனான ஆம்னெட்டு தனது பதினோராம் வயதில் இறந்தான். சேக்சுபியர் தமது இருபதாம் வயதிலிருந்தே நாடகங்கள் மூலம் புகழும் செல்வமும் சேர்க்கலானார். இலண்டன் மாநகரில் சேம்பர்லின் பிரபு குழுவின (The Lord Chamberlain's Company) உறுப்பினராக அழியாப் புகழ் வாய்ந்த நாடகங்கள் எழுதி மேடையேற்றினார். இறுதிக் காலத்தில் தம் ஊர் சேர்ந்து, அங்குச சில ஆண்டுகள் வாழ்ந்து கி.பி. 1616-இல் உயிர் நீத்தார். இவை தாம் இவரது வாழ்க்கையைப் பற்றியறிந்த செய்திகளாம். ஆனால், பின்னால் அவரைப்பற்றிய சில கட்டுக் கதைகளும் உண்மை நிகழ்ச்சிகளோடு சேர்க்கப்படலாயின.

அவர்தம் நாடகங்கள் எந்த வரிசையில எழுதப்பட்டன என்று உறுதியாகச் சொல்லவியலாது. முதலில் அடங்காப் பெணணை வழிப்படுத்தல் (The Taming of the Shrew- 1593/94 ), காதல் உழைப்பின் தோல்வி (Love's Labour's Lost - 1594/95 ) எனபன போன்ற இன்பியல் நாடகங்களை எழுதினார். இங்கிலாந்து மனனர்களின் வாழ்வை அடிப்படையாகக் கொண்ட என்றி VI (Henry VI -1589/92 ), இரிச்சர்டு III (Richard III- 1592/93 ) போன்ற வரலாற்று நாடகங்களும், முதல் துன்பியல் நாடகமான உரோமியோவும் சூலியத்தும் (Romeo and Juliet -1594/95 ) விரைவில் அரஙகேறின. இம்முதல் நாடகங்

கள் எல்லாம் அவர் காலத்து நாடக மரபையொட்டி எழுதப்பட்டவை. பாத்திரப் படைப்பிலும் ஆங்கில மொழியைக் கையாளும் முறையிலும், கடன் வாங்கிய கதைக்கருவைச் செம்மைப் படுத்தலிலும் விரைந்து பயிற்சி பெறலானார். தொடக்ககால நாடகங்களில சிறிது அளவுக்கு மீறிய சொற்சிலம்பங்களையும் கதை நிகழ்ச்சிகளில ஓரளவுக்குச் செயற்கைத் தன்மையையும் காணலாம்.

இரண்டாம் கட்டத்தில் வெனிசு நகரத்து வணிகன் (The Merchant of Venice 1596/97 ), பன்னிரண்டாம் இரவு(Twelfth Night- 1600/02 ), நீ விரும்பியது போல (As you Like it- 1598/1600 ), சூலியசு சீசர் (Julius Caesar- 1599/1600 ) முதலான நாடகங்கள் எழுதபபட்டன. இனபியல் நாடகங்களில் காதலும் காதலுக்கு ஏற்படும் இடையூறுகளும் வியக்கத்தக்க வகையில் சித்திரிக்கப்படுகின்றன. வரலாற்று நாடகங்கள், பதவிப் போரை மையமாகக் கொண்டு, வரலாற்று நிகழ்ச்சிகள், பாத்திரஙகள் ஆகியவற்றோடு சேக்சுபியரின் கற்பனையில் உருவானவற்றையும் கொணடு உயிரோட்டமுள்ள இலககியப் படைப்புகளாகத் திகழ்கின்றன.

மூன்றாம் கட்டத்தில் அவர் தம் துன்பியல நாடகங்களைப் படைத்தார். அவை அவாது கலைத் திறனுக்கு அழியாத சான்றுகள். இவற்றுள ஆமலெட்டு (Hamlet- 1600/01 ) ஒதெல்லோ(Othello -1604/05 ), இலியர் அரசன் (King Lear- 1605/06 ), மேக்பெத்து (Macbeth- 1605-06 ) ஆகியவை பெரும் பெயர்க்குரியவை. இவை ஒவ்வொன்றும் நாடகத் தலைவனின் குறைபாடு எவ்வாறு அவனும் அவனைச் சுற்றியுளளவரும் அழிவதற்குக காரணமாகிறது எனபதைப் படிப்பாரும் பார்ப்பவர்களும் வியப்புறும் வண்ணம் விளக்குகின்றது. இவற்றில் சேக்சுபியரின் ஒப்புயர்வற்ற உளவியல் அறிவைத் தெளிவாகக் காணலாம. துணிநது ஒரு முடிவுககு வரவியலாமல தவிக்கினற ஆம்லெட்டு,தேவையற்ற சந்தேகவுணர்வால அலைபபுண்டு மனைவியைக கொல்லுகினற ஒதெலலோ, குழந்தை போன்ற பிடிவாத குணமும் வெறும் பாராட்டில் மயஙகக் கூடிய தன்மையும் கொண்ட இலியர் அரசன், பேராசையால உந்தப்பட்டு மனசசாட்சியை மதியாது நல்லோர்களைக் கொனறு குவிக்கும் மேக்பெத்து ஆகியோரின் மனநிலைகள உள்ளத்தை உருக்கும் வண்ணம் படம் பிடிக்கப்பட்டுள்ளன. இந்நாடகங்களின் கதைக் கருத்துகள் செம்மையான முறையில் பின்னப்பட்டுக கற்றோரும் மறறோரும் கழிபேருவகை கொள்ளத்தக்க மொழியில் சொலலப்படுகின்றன. இவற்றில் ஆழ்ந்த தத்துவக் கருத்துகளும் வாழ்க்கைக்குத் தேவையான நெறி முறைகளும் பரந்து கிடக்கக் காணலாம்.

இறுதிக் கட்டத்தில் எழுதப்பட்ட அவர்தம் நாடகங்களில் துன்பியல் நாடகம், இன்பியல் நாடகம், புனைவியல் கதை ஆகியவற்றின் கூறுகளெல்லாம் இணைக்கப்பட்டுள்ளன. அவற்றைத் துன்பியல்-இனபியல் நாடகங்கள் (TragicComedies) என்றும், புனைவியல் இலக்கியங்கள் (Romances) எனறும் கூறுவர். கார்காலக் கதை (The Winter's Tale -1610/11 ), பெரிக்லீசு (Pericles -1606-08 ), சிம்பலின் (Cymbelin 1608-10),புயல் (The Tempest- 1611-12 ) ஆகியவை இவ்வினத்தைச் சார்ந்தவை. நாடகம் முழுவதும துனபம் அனுபவிக்கும் நல்ல உளளங்கள இறுதியில் இன்ப வாழ்வு எய்துவதை நம்பமுடியாத சில நிகழ்ச்சிகளோடு சேர்த்துக் கலைப் படைப்புகளாகத் தரப்பட்டுள்ளன. குற்றம் புரிந்தவர்கள வருநதித் திருந்துவதையும், தீமை செய்தார யாவரும் உளமார மன்னிக்கப்படுவதையும், பிரிந்த உறவினர்கள கூடுவதையும், பகைவர்கள தோழமை கொளவதையும இந நாடகங்களில் காணலாம்

சேக்சுபியர் தம் நாடக உத்திகளைப் பலரிடமிருந்து பயின்று தமதாக்கிக் கொணடார். கதைக்கருக்கள் யாவுமே மற்றையோரிடமிருநது கடனாகப் பெற்றவையாயினும், அவைகளுக்கு அவர் புது மெருகும் ஆழநத பொருளும் தந்தார். அவரது நாடக ஆற்றல் மூன்றுவித மரபுகளுக்குக் கடன் பட்டதாகும். ஆங்கில மொழியின இடைக்காலத்தில (The Middle Ages) எழுதப்பட்ட நீதி நாடகங்கள் (Miracle's Moralities, Interludes), கிரேக்க, இலத்தீன மொழிகளில அச்சிலசு (Aeschylus), யூரிபிடீசு (Euripides), சோபாக்கிளீசு (Sophocles), செனெகா (Seneca) ஆகியோர் எழுதிய துனபியல் நாடகஙகள், அரிசுடோபெனிசு, பிளாடசு முதலியோர் எழுதிய இன்பியல நாடகங்கள், ஆங்கிலததில் அவருக்கு முன் கிதது (Kyd), மாாலோ (Marlowe) ஆகியோர் எழுதிய துன்பியல் நாடகங்கள், இலிலி (Lyly), பீல் (Peele), கிரீன் (Greene) ஆகியோரின் இனபியல் நாடகஙகள் ஆகியவறறிலிருநது அவர் கற்ற பாடங்கள பலப்பல. அவற்றிலிருந்து கொளளவேணடிய வற்றைக் கொணடு, தள்ளவேணடியவற்றைத் தள்ளித் தமக்கென ஒரு மரபை யேற்படுத்திக் கொணடார் சேக்சுபியர்.

மனித வாழ்வின் பல கூறுகளையும ஆழ்நது நோக்கி, அவற்றைப் பற்றித் தெளிவாகச் சிந்தித்து, அரிய கவிதை நடையில தமது கருத்துகளை அவர் வெளியிட்டதே அவரது வெற்றிககுக் காரணங

களாகும். அவரது மேதைதமைபற்றிக் குறிப்பிடும்கோல ரிட்சு (Coleridge)இதனைத் தெளிவாக்குகிறார். ஆங் கிலக் கவிதையுலக மனனனான மில்ட்டன் தற்சார் புடைய (Subjective) நூல்களைப் படைத்தாரென் றால், சேக்சுபியர் தற்சார்பற்ற (Objective) நாட கங்களை உருவாக்கும் கற்பனையாற்றலைப் பெற்றி ருந்தார். அவர்தம் நாடகங்களிலிருந்து அவர் அரசி யல், மதம், சமுதாயம் பற்றி அவரது காலத்துக் கொளகைகளில் எவற்றை ஆதரித்தார் என்பதை அறிவது கடினமாகும். எந்தக் கோட்பாடாயினும், அதன் நிறைகுறைகளைத் தெளிவாக உணர்நது அழுத்தமாகப் படம் பிடித்துக் காட்டினார். மனித னுடைய குறைகள் தவிர்க்க முடியாதவையெனறும், தவறுகள மன்னிக்கப்பட வேண்டியவை யென்றும், மனித வாழ்வு வாழ்வாங்கு வாழப்பட வேணடிய தொனறேயன்றி வெறுத்து ஒதுக்கப்பட வேண்டிய தன்றென்றும் நாடகங்களில் தெளிவாக்கினார்.

தமது காலத்தில் வாழ்ந்த பிரபுக்கள, நடுத்தரக் குடும்பத்தார், கீழ்நிலையிலுள்ளோர், கற்றார், கல்லாதார் ஆகிய எல்லாரையும் கவரும் வண்ணம நாடதங்களை எழுதினார். அவர்கள் விரும்பிப் பார்ப் பனவற்றைத் தநததோடு அமையாது,அவர்கள எதிர் பாராதவறறையும், தெரிந்து கொள்ள வேண்டிய வற்றையும் இணைத்தார். காதல், வீரம், திருமணம், கொலை, சிறிது தரக் குறைவான நகைச்சுவை ஆகிய வற்றின் மூலம் அவர்களை மகிழ்ச்சிக் கடலில் ஆழ்த் தினாரேனும், உயர்ந்த கவிதை, பொருளுடைய தத்துவம், அரிய உண்மைகள் ஆகியவறறையும் சேர்த்துப் புதிய சாதனைகளைப் படைததார். தமது காலத்தில் மெதுவாக ஏற்பட்டு வநத நாடக மேடை (Stage) வளர்ச்சியை உரிய முறையில பயனபடுத்திக் கொணடு, காலத்திற்கேற்ப, ஆனால, காலத்தால் அழியாத நாடகங்களை அரங்கேறறினார்.

அவர் எழுதிய 'வீனசும் அடொனிசும்' (Venus and Adonis), 'உலுக்ரீசின் கற்பழிப்பு' (The Rape of Lucrece), 'போனிகசும் கடலாமையும்' (The Phoenix and the Turtle)ஆகிய கவிதைகளும் 154 ஈரேழ வரிப் பாக்களும் (Sonnets) பெருமைக்குரியவையே. அவர் தம் நாடகங்களில காணப்படும் கற்பனை ஆற்றலை இக்கவிதைகளிலும் காணலாம. அவரது செயயுள் தொடரில நுண்ணிய கருத்துகளை எளிய, இனிய, அன்றாட வாழ்வில் காணுகினற பொருளகளை உருக்காட்சிகளாக்கி, யாவரும் வியககும் வணணம் கவிதையாகத் தருகிறார். தோற்றமும் உணமையும், காலமும் காலவரம்பற்ற தன்மையும், அழகும் அதன் அழியும் தன்மையும், நட்பும் அதன் சிறப்பும்,இளமை யும் அதன் பெருமையும், வாழ்வின் மேன்மையும் அவலமும் ஆகிய பொருள்களைக பற்றியெல்லாம் மக்களைச் சிந்திக்க வைககிறார்.

சேக்சுபியரின் படைப்புகளைப் பற்றிக் கடந்த 400 ஆணடுகளில் எழுதப்பட்ட திறனாய்வுக் கட்டு ரைகளும் நூலகளும் எண்ணிலடங்காதவையாகும். அவர்தம் நூல்களின் நயத்தைப் புதிய புதிய கோணங்களிலிருந்து வெவ்வேறு தலைமுறையினர் தத்தமது நிலைக்கேற்பஆராய்ந்துள்ளனர்.அளவிறந்த திறனாய்வாளர்களுக்குத் தொடர்ந்து, தோணடத் தோண்ட விலைமதிப்பற்ற பொருள்களை அளிதது வரும் பெரும் சுரங்கமாக அவர்தம் நூல்கள் இருந்து வருவது அவற்றின் தரத்திற்கு அழியாத சான்றாகும்.

ப.ம.

**சேகனாப் புலவர்**: இசுலாமியத் தமிழப் புல வர்களுள் ஒருவர். சேகனாப் புலவர் எனப் பெற்ற, 'செய்கு அப்துல் காதிர் நயினார் லெப்பை ஆலிம் புலவர்' காயல்பட்டினத்தில் பிறந்தவர். இவர் தந்தையார் பெயர் அசீபு முகம்மது லெப்பை என்ப தாகும். சேகனாப் புலவர் அரபி, பாரசி, வடமொழி ஆகிய மொழிகளில் பயிற்சி மிகுந்தவர். இவர் தம வாழ்வின் பிற்பகுதியைச் சென்னையில் கழித்தார். இசிரி 1263-இல இவர் இயற்கை எய்தியதும், குணங் குடி மசுத்தானசாகிபு சமாதி அருகே இப்புலவர் உடலும் நல்லடக்கம் செய்யப்பட்டது.

தந்தை செய்து வந்த இரத்தின வணிகத்தை மேறகொணடிருந்தாலும் இவர் தமிழன்னைக்குக காப்பிய இலககியங்கள் ஆக்கி அளித்தார். சாகூல அமீது ஆண்டகையின வரலாறறைக 'காரணப் புரா ணம' எனும் பெயரில காப்பியம் ஆக்கினார். முகை தீன ஆண்டகையின் முழு வரலாற்றை 'குதபு நாய கம்'எனும் பெயரால் காவியமாக்கினார் நபி இபுரா கிம் வரலாற்றைத் 'திருமணி மாலை' எனும் பெய ரால் விருத்தப்பாக்களில் விரித்துரைத்தார். அவை வெளிவந்ததும் சேகனாப்புலவரின் பெருமையும் வாக் கின் வன்மையும் கற்றோர்க்கும் மற்றோர்க்கும் புலப்படலாயின.

இவர் இயற்றிய 'கோத்திரமாலை' 149 செய்யுள களைக கொணடது. இவரது 'சொர்கக நீதி'எனனும் நூல் 33 வணணப்பாக்களால ஆனது. இறைவனிடம் நன்மக்கட்பேற்றினை வேணடுவதாக இவர் பாடிய இருபது பாடல்களைக் கொண்ட நூல் பூபானைக் கண்ணிகள்.

இவரது நாகையந்தாதி என்னுஞ் சிற்றிலக்கியம் சொல்லணிகள் பொருந்தியதாகும். நாகபந்தம், அட்ட நாக பந்தம், இரதபந்தம், கமலபந்தம் முதலாய சித்

திரக் கவிகளும் இயற்றியுள்ளார். இவரது அசு (Hai) பயணத்தின்போது இயற்றப்பட்ட சிற்றிலக்கியம் 'மக்காக் கலம்பகம்' ஆகும். இப்பயணத்திற்குப்பின இவர் இயற்றியது 'புத்சுசாம' என்னும் புராணம ஆகும். இக்காப்பியம் 6786 பாடலகளைக் கொண டது. நபி நாயகமே அதன் பாட்டுடைத் தலை வர்.

சீறாப்புராணததைச் செப்பனிட்டுப் பதிப்பித்த வர் இவரே. இவருடைய கடிதங்கள் யாவும் கவிமடல் களே. தரும சபாஅத்து மாலை, அக்குமேல முனா சத்து போன்ற நூல்களையும் தந்த இசுலாமியத தமிழ்ப்புலவர் சேகனா ஆவார். பி.தெ.

**சேசாசல ஐயர், டி. என்.** 20-ஆம் நூற் றாணடில் வாழ்நத தமிழறிஞர். இவர் கி.பி. 1891-ஆம் ஆண்டு சென்னைப் புரசைப்பாக்கத்தில் பிறநத வர்; நன்கு பயின்று பி.ஏ., பி.எல்., பட்டம் பெற றார் தாம் படித்த கல்விககேறற தொழிலாகிய வழக்குரைஞர் தொழிலில் நாட்டம் இலலாது தமிழ் மொழியினபால மிகுநத ஆர்வம் காட்டினார். தமிழ இலக்கண இலக்கியங்களைப படித்தார். மாணவா களுக்குக் கலவி கற்பிக்க 1913-இல இரவுப் பளளி யொன்றைச சென்னைப் புரசைப் பாககத்தில ஏற படுத்தினார். அது, ஏழை மாணவாகள கலவி கறக ஏதுவாயிறறு. அப்பளளி தொடர்நது வளர்சசி பெற றுச் சென்னையின பல பகுதிகளிலும் கிளைகள் பல கொணடு விளங்கியது. அப் பளளிகளில தமிழ இலக கண இலக்கியங்களைத் தக்கவர்களைக் கொணடு. கற்பிக்க ஏறபாடு செய்தார். இவர் மாணவாகளுக குத் தெளிவாகப் போதிக்கும் ஆசிரியராகவும் நகைச சுவையுடன பேசும் சொற்பொழிவாளராகவும் விளங கினார். இவர் சென்னையில உளள 'ஒய்.எம்.சி.ஏ', கட்டிடததில் 'கலாநிலைய இரவுக் கலலூரி' ஒனறை யும் தொடங்கி நடத்தினார்.

தமிழ்ப் பற்று மிக்க இவர் 1928-இல் 'கலாநிலை யம்' என்ற இலக்கிய இதழை வார வெளியீடாகத் தொடங்கிப் பல ஆணடுகள் நடத்தினார். அதில இவர் எழுதிய தலையஙகங்கள தமிழும் ஆஙகிலமும் கற்ற சான்றோர்கள் படித்து மகிழும வணணம் இருந்தன. அவ்விதழில் 'ஏமாங்கத நாட்டு இளவரசன' என்ற புதினத்தையும் கம்பராமாயண விளக்கத்தை யும் தொடர்ந்து எழுதினார். சேக்சுபியர் எழுதிய 'சூலியசு சீசர்','புயல்' (Tempest) ஆகிய இரு நாடகத் தையும் மொழி பெயர்த்து அதில் எழுதி வநதார். மேலுமிவர் சூளாமணி, நளவெணபா ஆகிய இரு நூல்களுக்கு உரை எழுதியும் வெளியிட்டுள்ளார் இவர் 1938-இல் காலமானார். வீ.சே.

**சேட்சென்னி நலங்கிள்ளி**: இவன் சோழன நலங்கிள்ளி என்றும் தேர்வணகிளளி என்றும் புட் பகை எனறும் சுட்டப்பெறுவன் என்பர் உ.வே.சா. ஆனால், வையாபுரிப்பிள்ளை இவனைச் சோழன நலங்கிளளியின் வேறானவன் எனறு கருதுவதால் இவனைப் பாடியபுலவரென உறையூா முதுகண்ணன் சாத்தனாரையும் ஆலத்தூர் கிழாரையுமே குறிப்பர். சோழன் நலஙகிளளியைப் பாடிய கோவூர் கிழாரை இவர் சுட்டவிலலை.

சேட்செனனி நலஙகிள்ளி எனனும் பெயர் உறை யூர் முதுகண்ணன சாததனார் பாடிய புறப்பாட்டி லும் (27) ஆலத்தூர் கிழார் பாடிய புறபபாட்டிலும (225) அமைந்துளளது. மன்னர் சிலர் நலஙகிளளி சேட்சென்னி, இளஞ்சேட்சென்னி எனப் பெயர் பெற்றுத் திகழ்நதமை புறநானூற்றால் அறியக் கிடக கின்றது.

உறையூர் முதுகண்ணன் சாத்தனார், 'சிறந்த குடி யிற் பிறந்து அரசாணடோர் பலருளளும் புலவா பாடும் புகழ்பெறறவர் சிலரே; புகழ வாய்ந்தவர் வலவன் ஏவா வானவூர்தி ஏறி விணணகம் செலவர் என்று கேட்டுள்ளோன்; வளர்தலும் தேய்தலும் பிறத் தலும் இறத்தலும் உடைய இவ்வுலகில வருநதி வந்தோர்ககு அருளும் வண்மைதான் வெற்றிககு மாண்பு; நீ அதனைச் செய்க' என இம்மனனனுக்கு அறிவுரை கூறினார் (புறம். 27). இவன நாட்டினர் புறஞ்சிறை மாக்கட்கு அறஙகருதிப் புய்த்தெறிநத கரும்பு அங்குளள தாமரையிதழிற பட்டுச் சிதைவ தால் அவ்வக நாடு கூத்தரின் ஆடுகளம் போல்காடசி யளித்தது எனக் கொடைவளத்தை நாட்டுவளம கூறும் வாயிலாகப் புலவர் புனைந்துள்ளார் (புறம்28) 'நலலதன் நலனும் தீயதன் தீமையும் இல்லையென போர்க்கு இனன் ஆகிலியர், நீ ஓம்பிய பொருள இசைவிளைப்பதாகுக' என்று முதுகண்ணன் சாதத னார் மேலும சில அறவுரை பகர்நதுள்ளார். புலவ ரின் அறிவுரை கேட்டு இவன் சிறந்து விளங்கினான.

ஆலத்தூர் கிழார் தம் கையறு நிலைப்பாடலில (புறம். 225) இம்மன்னனின தானைப் பெருமையை யும் வீரச் சிறப்பையும் உரைத்துள்ளார். இம்மன்ன னாகிய நலங்கிளளி வாழ்நதபோது பகையரசரின் இல் லத்தே அச்சத்தால் ஒலிக்காமல் தொங்கவிடப்பட்ட வலம்புரிச் சஙகு, இவன் இறந்தபின் பகையரசர்களின திருப்பள்ளி எழுச்சிக்கு முழங்கும்போது அவ்வொலி கேட்டுத் தாம் வருந்துவதாகப் பாடிக் கிள்ளியின வீரத்தையும் தம் அவலத்தையும் ஆலத்தூா கிழார் புலப்படுத்தியுள்ளார் (புறம்.225). (காண்க: சோழன் நலங்கிளளி) இரா.சா.

**சேட்டை:** இந்துசமயச் சிறு தெய்வங்களுள் ஒன்று சேட்டை. ஏறத்தாழ கி.பி. 7-ஆம் நூற்றாண்டு முதல் 10-ஆம் நூற்றாண்டு வரை தமிழகத்திலும், கருநாடகத்திலும் புகழுடன் திகழ்நத தாய்க கடவுளாகும். பிற்காலத்தில இத்தாய்த் தெய்வம் தன் சிறப்பினை இழந்தது.

திருப்பரங்குன்றம் குடைவரைக் கோயிலில சேட்டைக்கெனக் கருவறை உளளது. அதனைத் திறந்தால நாட்டுக்குக் கேடு உணடாகும் என்ற நம்பிக்கை நிலவுவதால், இனறு அக்கருவறை திறககப் படுவதில்லை. அதில் புடைப்புச் சிற்பமாகச் செதுக்கப் பட்டுளள சேட்டை இரு காலகளைத் தொஙகவிட்ட நிலையில் ஓர் ஆசனத்தில் அமர்ந்துளளது. சேட்டையின இடப்புறம் ஒரு பெண்ணும் வலப்புறம் மாட்டுத் தலையுடனகூடிய இளைஞனும் சுகாசனத்தில் அமாந்துளளனர். இரு பெண் தெய்வங்களும் தத்தம் வலக் கையில ஒரு மலரினை ஏந்தியிருக்க ஆணமகன் தன வலக்கையில் ஒருகுண்டாந்தடியை ஏந்தியுள்ளான்.

தமிழகத்தில் இன்று நாம் காணும் சேட்டையின உருவமே மிகத் தொன்மையான உருவம் எனலாம். இங்குள்ள கி பி. 773-ஆம் ஆண்டுக் கல்வெட்டின்படி சேட்டையின் உருவத்தையும் கோயிலையும் நிறுவிய வள் நக்கன் கொற்றி என்பாள. இவள் அப்போது ஆட்சிபுரிந்த பாண்டிய மன்னன் மாறன் சடையனின தளபதியான சாத்தன் கணபதி என்பானின மனைவி என்பதும் அககல்வெட்டால் அறியப்படுகிறது.

பாண்டியரை அடுத்துப் பல்லவரும், சோழரும் சேட்டையின் உருவங்களைச் செதுக்கினர். முதலாம் இராசராசன சேட்டைக்கெனத் தனிக்கோயில ஒன றினைப் பாசசிக்கூற்றத்து அனபனூரில (திருச்சி மாவட்டம) கட்டினான. இன்று இககோயிலை இடி பாடுகளுக்கிடையே காணலாம். ஏறத்தாழ 300 ஆணடுகள பலவேறு கோயிலகளில் புகழுடன திகழந்த சேட்டையின் சிலைகள், கோயில்களினின்றும் வெளி யேற்றப்பட்டு, இனறு அவ்வப்பகுதிகளில வாழும் பாமரமக்களால் பலவேறு பெயர்களுடன் கிராம தேவதைகளாக வணங்கப்படுகினறன.

பூர்வகரணாகமம் என்னும் வடநூல் சேட்டையின் உருவத்தை வடிப்பதற்கான விதிகளைக் கூறு கிறது. அதன்படி சேட்டையின் வலப்புறததில் உளள வன் இவள் மகன; இடபவத்திரன் (காளைமுகத் தோன்) என்ற பெயரினன்; செவ்வண்ணத்தான். இடப்புறத்திலுள்ளவள இவள மகள்; அக்கினிமாதா என்ற பெயரினள; பொன வண்ணத்தாள். போதாயன கிருகிய சூத்திரம் என்னும் வடநூல் இவளது வழிபாட்டு முறையினையும், அதனால் விளையும் நலன்களையும் விரித்துக் கூறுகிறது. இவற்றாலும், தமிழகத்தில் சேட்டைக்கெனப் பல கோயில்கள் அமைக்கப்பட்டதாலும், ஒரு காலத்தில் இத்தெய்வத் திற்கிருநத செல்வாக்குப் புலனாகிறது.

ஆனால் கி.பி. 9-ஆம நூற்றாணடில் வாழ்ந்த தொணடரடிப் பொடி ஆழ்வாா, 'பல நலன்களைத் தரும் நாராயணனை விடுத்து, இம்மூடமக்கள் சேட்டையினை வழிபடுகின்றனரே' என மூறையிடுகிறார். அதனால் அக்காலத்தில மக்களிடையே இத்தெய்வத் திற்கிருந்த செல்வாக்கும், பக்தி இயக்கத்தார் இவ வழிபாட்டினை வெறுத்ததும் தெரிகின்றன. மண்ணுலக நலன்களை ஈந்த சேட்டையினை விண்ணுலகப் பயன்களைப் புகழ்நதுரைத்த பக்தி இயக்கம் புறக் கணித்தது போலும். இதன் விளைவாகச் சேட்டை, பாற்கடலைக் கடையும்போது திருமகளுககு முன தோன்றிய மூதேவியுடன் இணைத்துப் பேசப்பட் டாள். வடமொழியில் சேட்டாதேவி என்ற சொல் லுக்கு ''முதன்மை வணக்கம் பெறத்தக்கவள்' (விநாயகருக்குச் சேட்டராசன எனப்பெயருணடு; அவர் முதல் வணககம பெறுவது யாவரும் அறிந் ததே) மூத்த தேவி எனப் பொருளகளுண்டு. எல் லோருக்கும் மூத்ததேவி, திருமகளுக்கு மட்டுமே மூத்ததேவி எனக் காட்டப்பட்டபோது மூதேவியாகி வீழ்ச்சியடையத் தொடங்கினாள். கி.பி. 10-ஆம் நூறறாண்டில் தோனறிய சேந்தன் திவாகரம், பிங்கல நிகண்டு ஆகிய நூல்களில சேட்டை மூதேவியாகவே காட்டப்படுகிறாள்.

இன்று பல்வேறு பெயர்களுடன சேட்டையினை வணங்கும் பாமர மக்களிடையே இவள் மூதேவி என்ற கருத்து நிலவவில்லை எனபது குறிப்பிடத்தக் கது.

ரா.வே.

**சேட்லர் குழு:** இங்கிலாந்திலுள்ள இலீட்சுப் பல்கலைக்கழகத்தின் துணைவேந்தராக இருந்த டாக்டர் மைககேல் சேட்லர் என்பவரின தலைமையின்கீழ், கல்கத்தாப் பல்கலைக்கழகத்தின் சிககல்களை ஆராய்வதற்கு ஒரு குழுவை 1917-இல அப் போதைய இந்திய அரசு அமைத்தது. இந்தக் குழுவின் உறுப்பினர்களாக டாக்டர் கிரிகிரி, பிலிப் பார்டாக்கு பேராசிரியா இராம்சே மூயிர், அசுடாசு முக்கர்சி, டாக்டர் சியாடின் அகமது, வங்களாத்தின் கல்வித் துறை இயக்குநர் ஆகியோர் நியமிக்கபபட்டனர்.

இந்தக் குழுவின் நோக்கம் கல்கத்தாப் பலகலைக் கழகத்தின் அப்போதைய நிலைமைகளையும் அதன் வளர்ச்சியையும் பற்றி ஆராய்ந்து ஓர் அறிக்கையை

இந்திய அரசாங்கத்திற்குக் கொடுக்கவேண்டும் என்ப தாகும்.

இக்குழு 17 மாதங்கள் கல்கத்தாப் பல்கலைக் கழகத்தின் பல்வேறு சிக்கல்களை ஆராய்ந்து 1919-ஆம் ஆண்டு தன் அறிககையைக் கொடுத்தது இந்த அறிக்கையில் இந்தியாவிலுள்ள பள்ளிக்கல்வி, கல்லூரிக் கல்வி, பல்கலைக்கழகக் கல்வி ஆகியவற் றின மேமபாட்டுத் திட்டங்கள பற்றிய13பகுதிகள் அடங்கியிருந்தன. இக்குழு பல்கலைக்கழகங்களின் சிக்கல்களை ஆராய்ந்தபோதிலும் இடைநிலைக் கல்வியின் சீர்திருத்தததையும் முதன்மையாகக் கருத வேணடுமெனறு கொளகை அடிப்படையில் பரிந்துரை செய்தது.

கல்கத்தாப் பல்கலைக்கழகத்தின பல சிக்கல களை ஆராய்நத இககுழு கீழவரும சில பரிந்துரை களைக் கூறியது

கல்கத்தாப் பலகலைக்கழகம் மிக விரிவடைந்து விட்டதால இதன கட்டுபபாட்டின் கீழுள்ள கலலூரி களின் எணணிக்கையும், மாணவர்களின எணணிக் கையும் சொலலமுடியாத அளவிற்குப பெருகிவிட் டன. ஆகவே, ஒரு தனிப் பல்கலைக்கழகம் பலவித மான சிககல்களைக் கையாளுவது மிகவும் கடினம் என இக்குழு முடிவு செய்தது. அதன் காரணமாக மூன்று பரிந்துரைகள கொடுககப்பட்டன. அ) எல லோரும் தங்கிப் பயிலும் வசதிகளைக் கொண்ட ஒரு பல்கலைக்கழகத்தை தாக்காவில் ஏற்படுத்துதல் வேண்டும். ஆ) கற்பித்தலின் உண்மையான நோக கத்தைக் கொணட இந்தப் பல்கலைக்கழகம், கலகத் தாவிலிருந்து பயிற்றுவிபபதற்கான எல்லா வளங் களையும் வசதிகளையும் எடுத்துக்கொளள வேண டும். இ) உயர் கல்வியை மேம்படுத்த வேண்டுமென்ற நோக்கத்தோடு பலகலைக்கழக மையங்களைச் சில முககியமான இடஙகளில எல்லா வசதிகளோடும தொடங்குதல் வேண்டும். அதற்காக நாட்டுப்புறங களில் கல்லூரிகளைத தொடஙகிப் பின்னா அவை களைப் பல்கலைக்கழக மையஙகளாகச செயற் படுத்த முனையவேண்டும். இக்குழு பொதுவாகப் பலகலைக்கழகங்களின் அமைப்புப் பற்றியும், உள நிருவாகங்கள பற்றியும் பல கருத்துகளை வெளியிட் டது. இதன் கருததுகளும் பிற பரிந்துரைகளும் உயர் கலவியின் வளர்ச்சிககும் மேம்பாட்டிற்கும் மிகவும் ஏற்புடையனவாகவும், எல்லோராலும் ஒப்புக்கொள ளக்கூடியனவாகவும் இருந்தன. இதன் முககியமான கருத்துகள கீழே கொடுக்கப்பட்டுளளன.

பல்கலைக்கழகத்தில் சேருவதற்கான அடிப படைத் தகுதி பளளியிறுதித தேர்வாக இல்லாமல் புகுமுகத் தேர்வாக இருக்கவேண்டும் புகுமுகக் கல்வி, பல்கலைக்கழகத்திலிருந்து விடுபட்டுத் தனியாக இயங் குதல் வேண்டும். மேலும் முதல் பட்டப்படிப்பாகிய இளஙகலை வகுப்பு மூன்று ஆண்டுகளாக்கப்பட்டு அதற்குரிய கல்வித் திட்டத்தைக் கொண்டதாக அமையவேண்டும்.

முதலாவதாக, புதுமுகப் படிப்பிற்கான கல்லூ ரிகள் தொடங்க வேணடும். இக்கல்லூரிகளில் கலை, அறிவியல், மருத்துவம், தொழிலியல், கல்வியல், வேளாண்மையியல், வணிகவியல் போன்ற பாடங் களைக் கற்பித்தல் வேண்டும்.

உயாநிலைப் பள்ளிகளுககாககவும் புகுமுகக கலவிக்காகவும் தனியான மையம் ஒன்று ஒவ்வொரு மாநிலத்திலும் அமைத்தல் வேணடும் இந்த மையம அரசாங்கம், பல்கலைக்கழகம், உயர்நிலைப் பளளி மற்றும் புகுமுகக கலலூரிகள் ஆகியவற்றின் பிரதி நிதித்துவம் கொணடதாக இருகக வேண்டும். நாட்டி லுள்ள இடைநிலைக் கல்வியை இநதமையங்கள் கண காணிகக வேணடும. மேலும் இந்த மையங்கள், கல்வித் துறையிலிருந்து விடுபட்டுச் சுதந்திரமாக இயஙகவேண் டும் எனறும் பரிநதுரைக்கப்பட்டது.

புகுமுகக் கலலூரிகளில தாய்மொழியின மூலம் கற் பித்தல வேண்டுமென்ற ஒரு மிக முககியமான பரிந துரையையும் இககுழு கூறியது. பலகலைக்கழக ஆசிரி யர்களுக்குக்கூடுதலஅதிகாரங்களை அளிதது அவா களைமாநிலக் கட்டுப்பாட்டிலிருந்து விடுபடச் செய்ய வேண்டும் எனறும் வலியுறுத்தியது. பல்கலைக்கழகங களை நிருவகிப்பதிலுள்ள கடினமான சட்டதிட்டங் களை எளிமையாக்கவேணடும் எனவும் இககுழு எடுத்துக் கூறியது.

திறமையான மாணவாகளுக்காகத் தனித்தகுதிப் (Honours) பட்டப்படிப்புகள தொடங்கப்பட வேண் டும் எனவும், இந்தப் படிப்புகள் சாதாரண பட்டப் படிப்புகளிலிருந்து மாறுபட்டு இருக்கவேணடு மென்றும் கருத்துத தெரிவித்தது.

பல்கலைக்கழகத்தின் உள் நிருவாகத்தைத் திருத்தி அமைப்பதற்கும் இக்குழு சிறநத பரிந்துரைகளைக் கொடுத்தது. அதன்படி பல்கலைக்கழகப் பேரவைக் குப் பதிலாக எலலோருக்கும் பிரதிநிதித்துவம் அளிக் கக்கூடிய 'நீதிமனற'த்தையும, ஆட்சிக் குழுவிறகுப் பதிலாக ஒரு சிறிய செயலாகக்கக் குழுவையும் (Executive Council) ஏற்படுத்துதல் வேணடுமென்று கூறியது.

பல்கலைக்கழகப் பேராசிரியர்களையும், இணைப் பேராசிரியாகளையும் நியமனம் செய்வதற்கு ஒரு

தனிக்குழு அமைத்தல் வெண்டும். இந்தக் குழுவில அந்தந்தப் பல்கலைக்கழகத்திற்கு வெளியேயிருந்து சில வல்லுநர்களையும் உறுப்பினர்களாகச் சேர்த்துக் கொள்ள வேண்டுமென்ற கருத்தையும் கூறியது. ஒவ்வொரு பல்கலைக்கழகத்திலும் பல துறைகள் தொடங்கப்பட வேண்டும்.

ஒவ்வொரு பல்கலைக்கழகத்திலும் முழு நேரச் சம்பளம் பெற்றுக் கொள்ளும் துணைவேந்தர்களை நியமித்தல் வேண்டும். இசுலாம் சமய மக்களின் பின் தங்கிய நிலைமையைக் கருத்திற்கொண்டு எல்லா விதமான கல்வி வசதிகளையும் அவர்களுக்கு அளித்தல் வேணடும். மாணவர்களின் உடல் நலத்திற்காகவும், சுகாதாரத்திற்காகவும் மாநில அளவில் உடற் கல்வி இயக்குநர் ஒருவரை நியமித்தல் அவசியம் என்றும் கூறியது. பலகலைக்கழகங்களில் கல்வியியல் துறை தொடங்க வேண்டுமெனவும், கல்வியியலைப் பட்டப்படிப்பிலும் பட்டப்படிப்பிற்கு முன்னரும் பாடமாக வைக்கவேண்டும் என்றும் கருத்து வெளியிட்டது.

பதினைந்து, பதினாறு வயது வரையிலும் உள்ள பெண் குழந்தைகளுக்குத் தனிப் பள்ளிக்கூடஙகள அமைத்தல் வேண்டுமென்றும், கல்கத்தாப் பல்கலைக் கழகம் பெண்கள் கல்விக்காக ஒரு சிறப்புக் குழுவை ஏற்படுத்தி, பெணகளின் கல்வித் தேவைகளைக கருத்திற்கொண்டு அவர்களுக்காகத் தனியாகப் பாடத்திட்டங்களை உருவாக்க வேண்டுமென்றும் இக்குழு கூறியது.

இந்தியாவிலுள்ள பல்வேறு பல்கலைககழகங்களின் செயற்பாடுகளை ஒருங்கிணைப்பதற்கும், கல்வியின் தரத்தை மேம்படுத்துவதற்கும், பல்கலைக கழகங்களுக்கிடையிலான ஓர் அமைப்பு ஏற்படுத்துதல வேண்டுமென்றும் பரிந்துரைத்தது.

பள்ளி, கல்லூரி, பல்கலைக்கழகக் கல்விகளில் வட்டார மொழி பயன்படுத்துவதைப் பற்றிய சிறந்த கருத்தை இக்குழு வெளியிட்டது. ஆங்கில மொழி மூலம் பயினற இந்திய இளைஞன் அவனது தாய் மொழியைச சரியாக எழுதவும் பேசவும் இயலாதவனாக இருப்பது இந்தியக்கல்வியின் மோசமான தன்மையைக் காட்டுகிறது. எனவே, வட்டார மொழிகளை உயர்நிலைப் பளளிகளிலும், புகுமுகக் கல்லூரிகளிலும், பல்கலைக்கழகங்களிலும் நனகு மேம்படக் கற்பிக்க வேண்டும் என்று வலியுறுத்தியது. இந்தியக் கல்வி வரலாற்றில் சேட்லர் குழுவின் பஙகு விலை மதிக்க முடியாதது என்று ஆர்தர் மேத்தியூ என்ற கல்வி வல்லுநர் கூறியுள்ளார். இரா.பா.

**துணை நூல்கள்:**

**Bhatt ,B.D. and J.C Aggarwal,** Educational Documents in India (1813-1968), Arya Book Dept, New Delhi, 1969.

**Nanda S.K.,** Indian Education and its Problems Today, Kalyani Puplishers, New Delhi, 1977.

சேடான்: இது பிரான்சு நாட்டில் மியூசு (Meuse) ஆற்றிற்கு வலக்கரையில் உளள ஒரு பட்டினம். இது இப்போது பஞ்சாலைகள மிக்கு விளங்குகிறது. இது கி பி. 1870-இல் ஒரு போர்க்களமாகவும் திகழந்தது. பிரான்சுக்கும் பிரசியாவுக்குமிடையே கி.பி. 1870-இல் நடைபெற்ற மாபெரும் போரில், பிரான்சு சேடான் போர்க் களத்தில தோல்வியுற்றது.

பிரசிய மன்னர் முதலாம் வில்லியம் பிரெஞ்சு மன்னர் 14-ஆம் லூயியைவிட வலிமை வாய்ந்தவர். அவர் பட்டத்திற்கு வந்த உடனேயே பிரசியப் படையைத் திருத்தி அமைத்தார் சில ஆண்டுகளில் அதன் வீரர்களின் எண்ணிக்கையை இரட்டிப்பாக்கினார். தம் உதவிக்கென ஆட்டோவான பிசுமார்க்கு (Ottovon Bismorck) என்ற சிறந்த அமைச்சரை நியமித்துக்கொண்டார். பிரபுக்கள் மரபில வந்தவரான பிசுமார்க்கு பல்லாண்டுகளாக மனனரையும், மன்னரின் கொளகைகளையும் பிரசிய நாடாளுமன்றததில் ஆதரித்தார். இவர் அமைச்சராவதறகு முனசெருமன சட்ட சபையில் பிரசியாவின உறுப்பினராகச் சில காலமிருந்தார். இவவளவு அரசியல் அனுபவத்துடன் கூடிய அமைச்சரை வில்லியம் நியமித்துக்கொணடதே ஓர் நல்ல அறிகுறியாகும்.

பிசுமார்க்கு ஆண்ட விதம் அவர் ஆற்றிய உரையிலிருந்து புலப்படும். 'பெரிய சிக்கல்கள், மேடைப் பேச்சுகளினாலும் அறுதிப் பெரும்பான்மை ஆதரவையுடைய தீர்மானங்களினாலும் தீர்க்கப்படுவன அல்ல, வலிமையும் போருமே அவற்றிற்கு ஏற்ற வழிகள்'.

பிசுமார்க்கு முதலில் ஆசுத்திரிய-பிரசியப் போரின் விளைவாக ஆசுத்திரியாவை நலிவடையச் செய்தார். பிரசியாவின் ஒப்பற்ற தலைமையில ஒன்றுபட்ட செருமனியை உருவாக்குவதுதான் இவரது அடிப்படைக் குறிக்கோளாக இருந்தது. இதற்குத் தடையாக இருந்தது பிரான்சு நாடு.

பிரேக்கு (Prague) ஒப்பந்தத்திற்குப் பிறகு பிசுமார்க்கு வடசெருமனிக் கூட்டமைப்பு அரசுகளின் படையைப் பிரசிய முறையில் அமைத்தார். செரு

மானிய ஒற்றுமைக்குச் செய்ய வேண்டிய இறுதிப் போரை வெற்றியுடன் முடிப்பதற்கே இப்போர் பிரான்சுடன் ஏற்பட வேண்டியிருந்தது.

வடசெருமன பேரரசு பிரெஞ்சு எல்லை வரை பரவியிருந்தது. இது பிரெஞ்சு மன்னராகிய மூன்றாம் நெப்போலியனுக்குப் பெருத்த அச்சத்தை அளித்தது. அதற்கேற்பப் பிசுமார்க்கும் பிரெஞ்சுச் செல்வாக்கை அழித்தால்தான் செருமனி வலுவடையுமென்று எண்ணினார். வலிமை வாய்ந்த பேரரசு பிரான்சின் அண்மையில் ஏற்படடிருந்ததைப் பிரெஞ்சு மக்கள் விரும்பவில்லை பிரெஞ்சு மன்னரே ஐரோப்பிய மன்னருள் சிறந்தவர் என்ற பெருமை அழிவதற்குச் செருமன் பேரரசின் தோற்றம் காரணமாக இருந்தது. ஆசுத்திரோ-சார்டீனியப் போர் ஏற்பட்டபோது தாம் நடுவுநிலை வகித்ததற்காகப பிரசியா தன் வாக்குறுதியின்படி சில நாடுகளைக் கொடுக்கும் என்று பிரெஞ்சு மன்னர் நினைத்தது பகற்கனவாக முடிந்தது. ஆனால், அதைவிடாமல் பிரெஞ்சு மன்னா தம் உறுதியைக் காக்கும்படி பிசுமார்க்கைக் கேட்டார். பிசுமார்க்கு இதற்குச் செவி சாய்க்கவில்லை. மாறாகப் பவேரியாவைப பிரான்சிற்கு எதிராகத் தூண்டினார். பிரான்சு பெல்சியத்தை விழுங்குவதற்கு திட்டம் தீட்டியிருப்பதாகப் பிசுமார்க்கு ஆங்கில அரசிடம் கூறி இங்கிலாந்தைப் பிரான்சிற்குப் பகை ஆக்கினார்.

சில நாட்களில் போர்ச் சூழல் உருவாகியது. இரு தரப்பினரும் போரை விரும்பினர். போர் ஏற்படுவதற்கு ஒரு காரணம்தான் தேவைப்பட்டது. அதை எம்சு (Ems) தந்திச் செய்தி வழங்கியது.

மக்கள் கிளர்ச்சி காரணமாக இசுபெயினை ஆண்ட இசபெல்லா அரசி முடிதுறந்தார். இசுபானிய அரியணையைப் பிரசிய மன்னரின உறவினரான இலியோபால்டுக்கு வழங்க இசுபானியர் முன்வந்தனர். அப்போது, மூன்றாம் நெப்போலியன் இவ்வேற்பாடு ஐரோப்பாவில் அமைதியைக் குலைத்துவிடும் என்று எதிர்ப்புத் தெரிவித்தார். எனினும், நெப்போலியன் மனநிறைவு அடையவில்லை. பிரசிய மன்னரிடமிருந்து இசுபானிய அரியணையைப் பெறுவதற்கு இலியோபால்டின் முயற்சியை எக்காலத்திலும் ஆதரிப்பதில்லை என்று எழுத்து மூலமாக உறுதிமொழி பெறும்படி தன் தூதராகிய பென்டெட்டுக்கு ஆணையிட்டார். எம்சில் தங்கியிருந்த மன்னர் விலலியம் அதுபோன்ற உறுதிமொழி எதையும் கொடுக்க மறுத்துவிட்டார். தனக்கும் பிரெஞ்சுத் தூதருக்கும் இடையே நடைபெற்ற உரையாடலின் விவரத்தைத் தந்தி மூலம் பிசுமார்க்குக்குத் தெரிவித்தார். பிசுமார்க்கு, எம்சுத தந்திச் செய்தியைச் சுருக்கியும் திரித்தும் செய்தித்தாள்களில வெளியிட்டார். அதனைக் கண்ணுற்ற பிரெஞ்சுக்காரர் தங்கள் தூதரைப் பிரெசிய மன்னர் அவமானப் படுததிவிட்டதாகக் குமுறினார். தங்கள மன்னரைப் பிரெஞ்சுத் தூதா அவமதித்துவிட்டதாகக கருதிக் கொதிப்படைந்தனர். உடனே பிரான்சு பிரெசியா மீதுபோா தொடுத்தது.

தென் செருமானியச சிறறரசுகள் இப்போரைத் தேசிய போராகக் கருதிப் பிரசியாவுடன் சோந்து கொணடன இப்போர் கி.பி. 1870-இல், தொடங்கிய குறுகிய காலத்தில் முடிவடைந்தது. சேடான் போரில பிரெஞ்சுப் படைமுழுவதுமதோறறுச்சரணடைநதது. இப்போரில 14,000 பேர் காயமுற்றனா. 21,000 பேர் காணவில்லை. செருமானியரால 9,000 பேர் கொல்லப்பட்டனா. இப்போரின் விளைவாக நெப்போலியன் கென்ட்டு(Kent) கிராமத்தில் கைதியானாா. சேடான் வீழ்ச்சிச் செய்தி காதுகளுக்கெட்டியதும் பிரெஞ்சு மக்கள மூன்றாம் குடியரசை நிறுவினர். மூனறாம் நெந்போலியனின் வீழ்ச்சி செருமானிய ஒற்றுமையை முறறுப்பெறச செய்தது. பிசுமார்க்கு, பிரெசிய மன்னரை வெர்சே கண்ணாடி மாளிகையில் செருமானியப் பேரரசராக முடிசூட்டினார்.

உலகப் போரின்போதும் சேடான் போர்க்கள மாகத் திகழ்ந்தது. அணமை மக்கள்தொகைக் கணக்குப்படி இதன் மக்கள்தொகை 22,998. சே.சே.

**சேணிலை உணர்வு:** ஒருவர் மனத்திலிருக்கும் எண்ணஙகள சொற்கள் மூலமாகவோ, செயகைகள் மூலமாகவோ வெளிப்படுத்தப்படாதபோதும் அந்த எணணங்களை மற்றவா உணர்நது கொள்வது சேணிலை உணர்வு (Telepathy) எனப்படும். சேணிலை உணர்வு ஏற்பட இருவரும் அருகருகில் இருக்கவேண்டியதில்லை. பல மைல்களுக்கப்பால் இருப்பவரின் எண்ணத்தைக் கூடச் சேணிலை உணர்வு மூலம அறிய முடியும்.

எல்லா மக்களும் ஐம்புலன்கள் இருப்பதை அறிவர். எனவே, கண்ணால பாாப்பது, காதால் கேட்பது, மூக்கால் முகர்வது, நாக்கால் சுவைப்பது, உடலால் தொடுவதை அறிவது முதலியவற்றை நன்கு செயற்படுத்துவர். ஆனால், மக்களுக்கு ஆறாம் புலன ஒன்றும் உண்டு என்பதைப் பலர் அறிவதில்லை. சேணிலை உணர்வே அந்த ஆறாம் புலனாகும். ஆனால், இதனை மற்றப் புலன்களைச் செயற்படுத்துவது போல மிக எளிதாகச் செயற்படுத்த முடியாது. ஒருவர் மனத்தால் மேம்பட்ட நிலையை அடைந்தால்

மட்டுமே இதனைச் செயற்படுத்த முடியும். கண், காது முதலியவற்றை ஒருவர் தம் உடலில் பார்ப்பது போல இந்த ஆறாம் புலனான சேணிலை உணர்வை உடலில் எந்தப் பாகத்திலும் காணமுடியாது. இது உள்ளே மறைந்து கிடக்கிறது. இது ஒருவர்தம் மனப் புலனாகும் (Psychic Sense). சேணிலை உணர்வு மனத்தால் ஏற்படுவதாகும். இது அதீத புலன்காட்சி (Extra-Sensor-Perception) வகையினைச் சேர்ந்த தாகும்.

சிலரிடம் சேணிலை உணர்வு நன்றாக வளர்ந்து முதிர்ச்சிபெற்ற நிலையில் இருக்கிறது. ஆனால், பல ரிடம் இது வளராமலே நின்றுவிடுகிறது. சேணிலை உணர்வு மக்களுக்கு அளிக்கப்பட்டுள்ள மிகச்சிறந்த பரிசாகும். இது ஐம்புலன்களைக் காட்டிலும் ஒருவ ருக்கு மிகுந்த பயனையளிக்க வல்லது.ஒருவர் எப்படித் தம் ஐம்புலன்களைப் பயன்படுத்தாமல் விடமாட் டாரோ அது போலவே இந்த ஆறாம் புலனான சேணிலை உணர்வையும் பயன்படுத்தாமல் விடமாட் டார். விடுவது அவருக்குப் பெரிய இழப்பாகும்.

சேணிலை உணர்வு உளச் சேணிலை உணர்வு (Mental Telepathy), உளம்சார் சேணிலை உணர்வு (Psychic Telepathy) என இருவகைப்படும். உளச் சேணிலை உணர்வில் (Mental Telepathy) ஒருவர் எண்ணங்கள் மற்றொருவரிடம் அப்படியே சென்றடை கின்றன. ஆனால், உளம்சார் சேணிலை உணர்வில் (Phychic Telepathy) தொடர்பு, சின்னங்கள் (Sym bols) மூலம் நிகழ்கிறது. இவை ஒரு பெருக்கல் குறி யாகவோ சதுரமாகவோ வாகனமாகவோ மிருகமா கவோ வார்த்தையாகவோ இருக்கலாம். இவை அடிக் கடி ஒருவர் கனவில் தோன்றலாம். ஆனால், இதன் உண்மைப்பொருள் என்னவென்பதை ஒருவர் அறிந்துகொள்ள வேண்டியது இன்றியமையாதது. எடுத்துக் காட்டாக, ஒருவர் கனவில் அடிக்கடி இர யில் தோன்றுமானால் அவர் வெளியூருக்குச் செல்லப் போவதை அது தெரியப்படுத்தலாம்.

இத்தகைய செய்திகள் ஒருவர் மனம் அமைதி யாகவும், செய்திகளை வரவேற்கும் நிலையிலும் இருக்கும்போது அவருக்குத் துல்லியமாகப் புலப்படு கின்றன. எனவேதான், தூக்கத்திலோ தியானத் திலோ இருக்கும்போது சேணிலை உணர்வு தோன்று கின்றது. உறங்குமுன் ஒருவர் தம் சிக்கல்களை உள மனத்திடம் கூறி, அதற்கு விடையைக் காட்டுமாறு வேண்டினால் கனவுகளில் அவற்றிற்குத் தக்க விடை கிடைக்கும்.

பிறர் மனத்தைப் படித்தல் (Mind Reading) சேணிலை உணர்வின் ஒரு முறையாகும். மற்றொரு வர்மனத்தில் இருப்பதையறிய எண்ணியவர் அவரது உடலையும் மனத்தையும் அமைதியாக இருத்தி (Relaxed), தம் மனத்தை அவரைப்பற்றிய எண்ணங் களில் ஆழ்த்தி, அவர் தம் நல்ல குணங்கள், நடை உடை, பாவனைகள் முதலிவற்றைக் கற்பனையில் பார்த்து, அவருடனே ஒன்றி அமைதியுடன் இருந் தால் அவரது மனத்தைப் படிக்கமுடியும்.

அருகில் இருப்பவரிடம் மாத்திரமன்றி வெகு தொலைவில் இருப்பவரது எணணங்களையும் சேணிலை உணர்வு மூலம் அறியமுடியும்.

சிலர் உளஇயக்கம் என்ற நிலையைச் சேணிலை உணர்வின் ஒருவகையாகக் குறிப்பிடுகிறார்கள். இதில மனத்தால் சில பொருள்கள் கட்டுப்படுத்தப்படுகின் றன.

தொடர்புசசேணிலை உணர்வு (Contact Telepa-thy) என்ற முறையில் ஒருவரது கைகளை மற்றவரின் கை, தலை அல்லது உடம்பின் நோயுற்ற பாகத்தின் மேல் வைத்துத் தொடுவதன்மூலம் எண்ணங்கள் செலுத்தப்படுகின்றன. இந்த முறை முக்கியமாக நோய்களை நீக்கப்பயன்படுகிறது.

**திறனாய்வு:** சேணிலை உணர்வு வெற்றியுடன் அமைய எண்ணங்கள் அனுப்புபவர், பெறுபவர் ஆகிய இவருடைய மனவெழுச்சி நிலையும் மிக முக்கியமான தாகும். அனுப்புபவர் மனவெழுச்சி தூண்டப்பட்டும், பெறுபவர் அமைதியாகவும் (Relaxed)இருக்கும்போது சேணிலை உணர்வு மிகச்சிறந்த முறையில் அமையும். அதுமட்டுமன்றி, எணணங்களைப் பெறுபவர் கனவு நிலையிலோ, மனோவசியம் செய்யப்பட்ட நிலை யிலோ இருந்தால், பொதுவான விழிப்பு நிலையில் இருப்பதைவிட நன்றாகச் சேணிலை உணர்வு செயற் படும்.

அறிவியலில் ஒரு நிகழ்ச்சி (Phenomena) பலமுறை சோதித்து மெயப்பிக்கப்பட்ட பின்பே ஒப்புக்கொள் ளப்படுகிறது. ஆனால், சேணிலை உணர்வு அது போன்று பலமுறை சோதித்து மெய்ப்பிக்கப்பட்ட முடியாத ஒரு நிகழ்வு ஆகும். சேணிலை உணர்வு மற்றும் பிறவிதமான அதீத புலன்காட்சி (ESP)ஐயத் திற்கு இடமாக இருப்பதற்குக் காரணம், இத்தகைய நிகழ்ச்சிகளை நம்பும் முறையில் நிகழ்த்திக் காட்ட முடியாததுதான். இதுபற்றி ஓர் ஆராய்ச்சியாளரின் முடிவு மற்றோர் ஆராய்ச்சியாளருடைய முடிவுடன் ஒத்துப்போவதில்லை. ஒரே ஆராய்ச்சியாளரும் சேணிலை உணர்வு பற்றி ஒருமுறை சோதனை செய்து கிடைத்த நம்பத்தக்க முடிவுகளை மறுமுறை யும்பெறுவார் என உறுதியாகக் கூறமுடியாது.எனவே,

மறுபடி செய்து மெய்ப்பிக்க முடியாத நிலை சேணிலை உணர்வின மிகப்பெரிய ஒரு குறையாகும். ஆராய்ச்சியாளர் சேணிலை உணர்வு பற்றி நம்பிக் கையோடு, நல்ல முடிவு கிடைக்குமென்ற உறுதியோடு இருக்கும்போது அவர் வெற்றி பெறுகிறார். அது பற்றி நம்பிக்கையின்றி விருப்பமில்லாமல் ஆராய்சசி செய்யும்போது அதன் முடிவு மன நிறைவளிப்ப தாக அமைவதில்லை. ஹே.ந

**துணை நூல்கள்:**

Helyn Hitchcock, The Magic of Psychograms, Parker Publishing Co, New York, 1975.

Hilgard E.R., Atkinson, R.C. and Atkinson R.L., Introduction to Psychology, Oxford and IBH Publishing Co., 1975.

**சேத்து சிங்கு (கி.பி. 1770-1780)** இவா கி.பி.18-ஆம் நூற்றாடில் காசி என்னும் வாரணாசிப் பகுதியினை ஆண்ட சிற்றரசர். சேத்து சிங்கு (Chait Singh) தந்தையின் பெயர் பல்வநதுசிங்கு என்பதாகும்.

அயோத்தி நவாபுவின் புதல்வர் கி.பி.1775-ஆம் ஆண்டில் ஆங்கிலேயருடன ஓர் உடன்படிக்கையி னைச் செய்து கொண்டிருந்தார். அவ்வுடன்படிக்கை யின்படி சேத்து சிங்கு 22½ இலட்சம் ரூபாய் ஆங்கி லேயருக்குத் திறை செலுத்திட வேணடும். முதலில் இவர் அயோத்தி நவாபுவின் திறையரசராக விளங்கி யதே இதற்குக் காரணமாகும. அப்போது தலைமை ஆளுநராகப் பணிபுரிந்துவந்த வாரன் ஏசுடிங்சு மராத் தியர்களுடனும், மைசூருடனும் போர் நிகழ்த்திக் கொண்டிருந்தார். அதற்காக அளவற்ற பொருள் அவருக்குத் தேவைப்பட்டது. போருக்குப் பொருள் திரட்ட முறையற்ற வழிகளைக் கையாண்டார். அவற்றுள் ஒன்று சேத் சிங்கிடம் 22½இலட்ச ரூபாய் திறைகேட்டதாகும். இந்த 22½இலட்சத்தையும் சேத் சிங்கு கொடுத்தார். மேலும், ஐந்து இலட்சம் ரூபாய் திறையாகச் செலுத்தும்படி சேத்து சிங்கிடம் கி.பி. 1778-ஆம் ஆண்டில் கேட்டார். அத்துடன் நிற்காமல் வாரன் எசுடிங்சு மீணடும் மீண்டும் அவரிடம் பணம் கேட்டார்.

இதற்கிடையில் கி.பி.1780-இல் வாரன்ஏசுடிங்சு சேத்துசிங்கிடம் 2000 குதிரைப் படையை அனுப்பி வைக்கும்படி ஆணையிட்டார். சேத்துசிங்கு தன இய லாமையைப் பணிவோடு தெரிவித்து, மன்றாடி 1000 ஆக எண்ணிக்கையினைக் குறைத்துக்கொள்ளும்படி, வேண்டினார். ஆனால், தலைமை ஆளுநரிடமிருந்து பதில் இல்லை, ஆயினும் 500 குதிரைப்படை, 500 காலாட்படையினைத் திரட்டிவிட்டதாக ஏசுடிங்சிற்கு இவர் தகவல் அனுப்பினார். ஆனால, ஏசுடிங்சு சேத சிங்கைக் குறைகூறி ஆணையை மீறிவிட்டதாகவும, அககுற்றத்திதைச் செயததற்காக 50 இலட்சம் ரூபாய் அபராதம் செலுத்த வேண்டும் என்றும் ஆணையிட் டார். ஏசுடிங்சு தாமே நேரில சென்று சேத்துசிங்கைக கைது செய்தார்

ஆனால், சேத்துசிங்கின் படைவீரர் இச்செய்தி கேட்டு ஆத்திரமுற்று ஆஙகிலேயரைக் கொன்றனர். ஆங்கிலேயருக்கு எதிராகக் கலகம் விளைவித்தனர். ஆங்கிலேயச சிப்பாய்களை பலரைக் கொன்றனர். ஏசுடிங்சு படைதிரட்டி வந்து கலகத்தை அடக கினார்.

சேத்துசிங்கை ஆங்கிலேயர் கைது செய்தனர். மேற்கண்ட நிகழச்சிகுத் தாம் பொறுப்பாளி அல்லர் என்று சேத்துசிங்கு வாதாடினார். ஆனால, எதுவும் பயனளித்திட வில்லை. முடிவில் சேத்துசிங்கு நாடு கடத்தப்பட்டாா. குவாலியரில அவர் அடைக்கலம் புகுந்தார்.

சேத்துசிங்கிறகுப் பதிலாக இவர்தம் உடன பிறந்தார் புதல்வர் காசியில் அரசராக முடிசூட்டப் பெற்றாா. சேத்சிஙகின உறவினரான புது அரசா 40 இலட்சம் ரூபாய் ஆங்கிலேயருககு வழஙகினாா.

ஏசுடிங்சு சேத்துசிங்கிற்கு இழைத்த கொடுமை களை ஆங்கிலேயர்களே கணடித்தனர். வாரன எசுடிங்சின் மீது நடைபெற்ற இங்கிலாந்து நாடாளு மன்ற விசாரணையின்போது, எழுபபப்பெற்றக் குற்றச் சாட்டுகளுள் ஒன்றாகச சேத்துசிங்கின விவ காரம் எழுப்பப்பெற்றது.

ஏசுடிங்சின் இப்போக்கினைக் 'கொடுங்கோன்மை யானது, அநீதியானது, அடக்குமுறைத் தன்மையது' என்று பிட்டு எடுத்துரைத்தார். ஆல்பிரட்லையால் என்பவரும் காசியில் நடைபெற்ற நிகழச்சிகளுக்கு ஏசுடிங்சு பொறுப்பு என்று கூறுகிறார். ஆனால், வின்செண்ட் சுமித்து அன்றைய நிலைமையின் அடிப் படையில் ஏசுடிங்சு செய்த செயல்கள் சரியான வையே எனறு வாதாடுகிறார். ந.க.ம.

**சேதிநாடு:** தமிழகம், சேர சோழ பாண்டிய நாடுகள் என மூவகையாகப் பகுக்கப்பெற்றுமுடியுடை மன்னர் மூவரால் ஆளப் பெற்றதனைப பண்டைய இலக்கியங்கள் உணர்த்துகின்றன. அந்நாடுகள கோனாடு, பறம்பு நாடு முதலிய சிறு பிரிவுகளாக அமைந்து, முடியுடை மன்னரைச் சார்ந்தும், சாராது தனித்தும் விளங்கிய குறுநில மன்னர்களால் ஆளப்

பட்டுவந்தமையினையும் அவ்விலக்கியங்கள் உணர்த்து கின்றன. காலப்போக்கில் சேர, சோழ, பாண்டிய நாட்டுப் பிரிவுகளோடு, தொண்டை நாடு, நடு நாடு என்ற பிரிவுகளும் தமிழகத்தில் உருவாயின. சோழ நாட்டிற்கும் தொண்டை நாட்டிற்கும் இடையிலுள்ள பகுதி நடுநாடு எனப்பட்டது. இந்த நடுநாட்டின் ஒருபகுதி சேதிநாடு எனவும் வழங்கப்பட்டது. சேதி யர் மரபினரால் ஆளப்பட்டமையின் இது சேதிநாடு எனப்பெயர் பெற்றது. இக்காலத்தில் இது தென் னார்க்காடு மாவட்டத்தைச் சேர்ந்துள்ளது.

சேதிநாட்டின் தலைநகர் திருக்கோவலூர் ஆகும். இதனைச் சேக்கிழார், 'சேதிநன்னாட்டு நீடு திருக் கோவலூர்' (மெய்ப்.1)என்று குறிப்பிட்டுள்ளார். இது தென்பெண்ணையாற்றங்கரையிலுள்ளது. இவ்வூரும் இப்பகுதியும் சங்க காலத்திலிருந்தே சிறப்புப் பெற்று வந்துள்ளது. மலாடர் என்னும் மரபினர் ஆண்டமை யால் இப்பகுதி மலாடு எனவும் கூறப்படும். மலைய மான் மரபினரால் ஆளப்பட்டமையால் அவ்வாறு கூறப்பட்டது என்பதும் ஏற்புடையதாகும். சேதி நாட்டின் தலைநகராய திருக்கோவலூர் புறநானூற் றில் கோவலூர் என்றும் (புறம்.99-13) அகநானூற் றில் கோவல் என்றும் (அகம்.35-14) கூறப்பட் டுள்ளது. சங்க காலத்தில் மலையமான் திருமுடிக்காரி போன்றாரும், சமய எழுச்சிக் காலத்தில் மெய்ப் பொருள் நாயனார் போன்றாரும் இப்பகுதியில் சிறப் புற்று விளங்கியுள்ளனர்.

வடநாட்டுப் பகுதிகளுள் ஒன்று சேதி என்ற பெயரால் வழங்கப்பட்டுள்ளது. இந்தியாவில் 56 தேசங்களுள் சேதி என்பது ஒன்று என்றும், அது இக் காலப் பிலாசுபூர், சபல்பூர் ஆகிய நகரங்களைச் சூழ்ந்து விளங்கும் பகுதி என்றும் கூறுகின்றனர். பாரதக் கதைமாந்தருள் ஒருவரான சிசுபாலனைச் 'சேதிப் பெருமான் சிசுபாலன்' என்று அந்நூல் குறிப் பிடுகிறது.

கொங்குவேளின் பெருங்கதையில் சேதிநாடு பற் றிய குறிப்புள்ளது. அங்கு, இது மிருகாவதியின் தந் தைக்குரியதாகக் குறிப்பிடப்பட்டுள்ளது. உதயணன் இந்நாட்டிற்குரியவனாக இருந்துள்ளான். அதனால் அவன் சேதியர் பெரும்பெயரண்ணல், சேதிபன் என் றும் குறிப்பிடப்பட்டுள்ளான். அந்த நாட்டினை. உத யணன், பின்னர் யூகிக்கு அளித்தான் என்றும், அங்குத் தவம் புரிதற்கு ஏற்ற அழகிய மலையுண்டென் றும் பெருங்கதை குறிப்பிடுகிறது. அ.மா.ப.

**சேதிராயர்** சைவத் திருமுறைகள் பன்னி ரண்டினுள் ஒன்பதாந் திருமுறையினைப் பாடிய சைவ அடியார்களுள் ஒருவர். இவர் சேதி நாட்டை ஆண்ட குறுநில மன்னர் குடும்பத்துள் தோன்றியவர். சேதிநாடு என்பது தென்னார்க்காடு மாவட்டத்தின் வடமேற்கே அமைந்த பகுதியாகும். நடுநாட்டைச் சார்ந்த இப்பகுதி, மலையமான் நாடு, மலாடு என்ற பெயர்களால் வழங்கப்பட்டது. சேதிநாட்டின் தலை நகர் திருக் கோவலூர் ஆகும். இது, 'சேதி நன் னாட்டு நீடு திருக்கோவலூர்' என்னும் பெரிய புராணப் பாடற் பகுதியால் தெரிகிறது. இவர் தாம் பாடிய பதிகத்தில் 'எழிற் சேதிபர் கோன்' என்று குறிப் பிட்டுள்ளமையால் இவர் சேதிநாட்டை ஆண்ட மன்னராவார் என்பது புலனாகிறது.

சேதிராயர் ஒன்பதாம் திருமுறையில், தில்லைப் பெருமாள் மீது திருவிசைப்பாப் பாடியுள்ளார். 'சேலுலாம் வயல்' எனத் தொடங்கும் அப்பதிகம் 10 பாடல்களைக் கொண்டது. மேலும் அப்பதிகம் அந்தாதித் தொடையில் அகப்பொருள் செய்தி கொண்டமைந்துள்ளது. தில்லைக் கூத்தப்பெருமான் மீது காதல் கொண்ட ஒரு தலைவி அவனைக் காண விரும்பி, அடையப் பெறாமையால் விம்மி நெட்டு யிர்த்து அழுதலையும், அவன் அணிந்த கொன்றை மாலையினை இரத்தலையும், அவன் பெயர் கூறு மாறு தான் வளர்த்த கிளியினிடம் வேண்டுவதையும், அத்தலைவனை முன்னிலைப்படுத்திக் கூறுவனவற்றை அவள் பெருட்டுத் தாய் வேண்டுவதனையும் பதிகப் பாடல்கள் அழகுறக் கூறுகின்றன. இவர் கி.பி. 11ஆம் நூற்றாண்டில் வாழ்ந்தவராவார் என்று ஆய்வாளர் கருதுகின்றனர். அ.மா.ப.

**சேதுப்பிள்ளை, இரா.பி.** தமிழின் வாழ்வுக் கும் வளத்துக்கும் தொண்டுசெய்த பெரியார்களுள் காலஞ்சென்ற பேராசிரியர் டாக்டர் இரா.பி. சேதுப் பிள்ளையும் ஒருவர். எண்ணத்தாலும், எழுத்தாலும், சொல்லாலும், செயலாலும் தமிழின் உயர்வுக்குப் பாடுபட்டவர் இப்பெரியார். இவர்தம் பேச்சாலும் எழுத்தாலும், கவரப் பெற்ற தமிழகம் இவரைச் 'சொல்லின் செல்வர்' எனச் சிறப்பித்து மகிழ்ந்தது.

இவர் 'திருநெல்வேலி'யிலுள்ள இராசவல்லிபுரம் என்ற சிற்றூரில் கி.பி.1896இல் பிறந்தார். பாளையங் கோட்டையிலும், திருநெல்வேலியிலும் கற்றுப் பின் சென்னை சேர்ந்தார். அங்குள்ள பச்சையப்பன் கல்லூரி யில் கற்று பி.ஏ. பட்டம் பெற்ற இவர் சட்டம் பயின்று வெற்றி பெற்றார்.

தமிழை நன்கு கற்றுத் தெளிய வேண்டும் என்ற ஆவல்மிகக் கொண்டார். பச்சையப்பன் கல்லூரியில் தமிழ்த்துறைத் தலைவராய்த்திகழ்ந்த திரு. செல்வக் கேசவராயர் இவர் ஆவலைப் பெருக்கினார். அப்பெரு



இரா.பி. சேதுப்பிள்ளை

மகனாரின் கூட்டுறவால், தமிழ் நூல்களை நுணுகிக் கற்றார்.

சேதுப்பிளளை, சில ஆண்டுகள நெல்லையில் வழக்கறிஞராகத் திகழ்ந்தார். எனினும், தமிழப பணி புரியவே இவரது உளளம விரும்பிறறு. தமிழகத்தின வார, மாத ஏடுகள இவரது எழுத்தோவியததிறகு முதலிடம தநதன. முப்பெரும் கவிஞரான கமபன, இளஙகோ, வளளுவா ஆகியோரின காப்பியபபணபு, நாடகததிறன், அறங்கூறும் ஆற்றல் ஆகியவற்றை விளக்கினார். பேசிலும் எழுததிலும் தமககென ஒரு தனி நடையினை வகுததுககொண்டாா. எதுகை யும் மோனையும இணைநது வரும் இவரது தமிழ நடையை மககள விரும்பி வரவேறறனர். பேராசிரியரின் புகழை உணர்நத அணணாமலைப் பல்கலைக் கழகம், தமிழ்ப்பணி புரிய அழைத்தது. அழைப்பை ஏற்ற பேராசிரியர் அங்குத தமிழபபணி புரிய இசைந்து சென்றார்.

பேராசிரியரின் தமிழப் பணிக்கு அண்ணாமலை தகுந்த இடமாக அமைநதது. அங்குப் பணியாற்றிய ஆறு ஆணடுக்காலமும் ஆயிரக்கணககான மாணவர் களுடன் பழகும் வாய்ப்புபேராசிரியருககுக் கிடைத் தது. இன்று தமிழ்ப் புலமை சானற பலர், அனறு பேராசிரியரிடம் பயின்றவர்களே 'தமிழ்நாட்டு நவ மணிகள்', 'திருவள்ளுவர் நூலநயம்', 'சிலபபதிகார விளக்கம்', 'கால்டுவெல ஐயா சரிதம்' போனற சிறந்த நூல்களைத் தமிழகத்துக்குத் தந்தார்.

இவ்வேளை, பேராசிரியரின் தமிழ்ப் பணியைச் சென்னைப் பல்கலைக் கழகம் விரும்பிற்று. பேரா சிரியரின சேவையில் தமிழகம் தழைக்கவேணடும் என்ற ஆசையில், அண்ணாமலைப் பல்கலைககழகம் விருப்புடன் அவரைச் சென்னைக்கு அனுப்பியது. இதன் மூலம் சென்னைப் பல்கலைக் கழகம் மட்டு மனறிச் சென்னை மாநகரும், செந்தமிழ நாடும் புத்தொளி பெறறன பேராசிரியரின பேச்சிலும் எழுத்திலும் இனிமை பெருகும். சென்னை மக்களுககுக் கமபனையும் இளஙகோவையும் முறையாகப் பாடம சொல்லும் பணியில் ஈடுபட்டு வெற்றி கணடாா அரசியல் அலுவலரும், நீதிமனற நடுவரும் கல்லூரி ஆசிரியரும், மாணவரும், தொழிலாளரும், இவரது இலககிய வகுபபுக்கு அணி அணியாகச சென்றனா. தமிழக் கூட்டம என்றால் ஐமபது பேரே செலவா என்ற நிலையினை மாறறி 'வெள்ளம் போல தமிழர் கூட்டம்', என்ற உயர் நிலையினைப் பேரா சிரியர் உண்டாககினார்.

ஆய்வு மாணாக்கர்கட்கு வழிகாட்டினார் பேரா சிரியா. இவரிடம் ஆராய்சசி செயது பட்டம் பெற்ற வல்லுநர் பலா, 'தமிழபபேரகராதி', 'தமிழ்அகராதி', 'கலைககளஞ்சியம்' போன்ற பெரும பணிகளில இவ ரது கைவணணமும கருததுவணணமும அமைந்திருபப தைக்காணலாம. தமிழகததின கலைககூடஙகளும, அர சியல நிலையஙகளும் இவரது ஆறறலைப பயன படுததின. அரசால நியமிககப்பட்ட பல குழுககளில் தலைமை தாங்கினார். கீழ்த் திசை மொழிகளின மாநாட்டிலும் மொழியியல கலவிக குழுவிலும் பல ஆணடுகள தலைவராகத் திகழநதார். அறிவு வளமையும், ஆராய்சசித் திறமையும அமைநத இப் பேராசிரியர் ஏறத்தாழ இருபததைந்து ஆணடுகள சென்னைப்பலகலைக் கழகத்தில் 'தமிழ் வேநதராய்'ப் பணியாற்றி 1961-இல ஓயவு பெற்றார்.

பேராசிரியர் எழுதிய 'ஊரும் பேரும' என்ற நூல் இவரது ஆயவுப் புலமைக்கு ஓர் எடுததுக் காட்டாகும. சென்னை அரசாங்கம் இந்நூலைப் பாராட்டி 500 ரூபாய் பரிசு தநதது. கிட்டததட்ட இருபத்தைந்து சிறநத நூல்களைப் பேராசிரியர் எழுதியுளளார். இவைகளில சில ஆங்கிலத்தில் உளளன. இவர் எழுதிய 'தமிழ் இன்பம' எனற நூலுக்கு மததிய அரசு 5,000 ரூபாய பரிசு தநது மகிழந்தது. பேராசிரியரின் சொலலாறறலில் திளைத்த தமிழகத்தின சார்பாகத் தருமபுர ஆதீனம் இவருககுச் 'சொல்லின் செலவர்' என்ற சிறபபுப் பட்டததினை அளித்தது. சென்னைப் பல்கலைக் கழகமோ தனது நூறறாணடு விழாவில் 'டாக்டர்' (இலக்கியப் பேரறிஞா) என்ற பட்டததினைத தந்து பெருமைப்படுததிற்று.

அறிவாற்றலும் ஆராய்ச்சிப் புலமையும் மிககு, பரிசும் பாராட்டும் பெற்ற பேராசிரியர் பண

பாட்டிலும் தலைசிறந்து விளங்கினார். உழைப்பும் நேர்மையும் இவரது இரு கண்களாகத் திகழ்நதன. தம்மை ஈனறெடுத்த சொர்ணம்மாளின் நினைவாக, அண்ணாமலைப் பல்கலைக் கழகத்துக்கு 25,000 ரூபாய் அளித்து மகிழ்ந்தார் தமிழ ஆராய்ச்சியின் வளர்சசிக்காகச் சென்னைப் பல்கலைக் கழகததுக்கு 25,000 ரூபாய் நன்கொடை நல்கினார். தம் வாழக கையில் தேடி வைத்த செல்வம், வழிவழி வந்த செல்வம், நூல்கள மூலம் இனி கிடைக்கப் போகும் வருவாய், இவை முழுவதையும திருநெல்வேலியி லுள்ள ஒரு மகப்பேற்று மருத்துவமனைக்குத் தான மாக எழுதி வைத்துள்ளார். இக்கொடை வளத்தின் பின்னணியில, பேராசிரியரின் தாய்ப்பற்றும் மொழிப பற்றும் பிறந்த நாட்டுப்பற்றும் புலனாகினறன.

தமிழகத்தின் புகழ் ஒளியாய், சொல்வேந்தராய், ஆய்வுப் புலவராய், பண்புடைச் சான்றோராய்த் திகழ்ந்த பேராசிரியரின் வெள்ளிவிழாவை, அவர் தம் இருபத்தைந்து ஆணடுத் தமிழ்ப்பணியின நினைவாக, 1961 ஏப்பிரல 13-நாள் தமிழ் மக்கள் சென்னையிலே கொண்டாடினர். வெள்ளி விழாவைக் கணட பேராசிரியர் அதன்பின் இரணடு வாரஙகளுக்குள் காலமானார். தி.அ.சொ.

**சேதுபதிகள்:** மறவர்களின் தலைவர்களான சேதுபதிகள இராமாயண காலத்திலிருந்தே புகழ் பெறறுவிளங்கிய சேதுப்பாலத்தையும் அதறகுச் செல் லும் வழியையும் காதத காவலர்களாவர். இவர்கள செம்பி நாட்டு மறவரெனக் கூறப்படுகினறனர். சேதுபதிகள் வரலாறு கிறிதது பிறப்பதற்கு நெடுங்கால திற்கு முன்னரே தொடஙகியதாகக் கூறபபடுகிறது மதுரையை கி பி.1604-இல ஆண்ட முத்துககிருட்டி ணப்ப நாயக்கா சேதுபதி மரபை மீணடும ஆட்சிககுக கொணர்ந்தார். சடைக்கத் தேவ உடையான் சேது பதி கி.பி.1605-இல் ஆட்சிககு வநதார். இராமநாத புரத்திலும் போகலூரிலும் மணணாலாகிய கோட்டை யினைக் கட்டி அஙகிருநது மனனனென அபபகுதியை ஆண்டார். வடககு வட்டகை, காளையார் கோவில, பட்டமங்கலநாடு ஆகிய கிராமங்களையும் தம ஆட்சிக்குள் கொணாந்தார். இவர் இராமேசுவரக் கோவிலுக்குத் திருபபணிகள பல செய்துள்ளார். இவரது காலத்திலிருந்துதான நாணயஙகள் அசசிடும் அதிகாரத்தைச் சேதுபதிகள் நாயககமனனரிடமிருநது பெறறதாகக் கருதபபடுகிறது.

இவருக்கு அடுத்தபடியாக ஆணடமுக்கிய மன்னர் இரண்டாம் சடைக்கத் தேவன ஆவார். இவர் மதுரை நாயககருக்குக் கப்பம் கட்ட மறுத்ததன விளை வாகத் திருமலை நாயக்கர் தம் தளபதி இராமப் பையன் தலைமையில் ஒரு படையை இவருக்கு எதி ராக அனுப்பினார். இப்போரின் தொடக்கத்தில் பல வெற்றிகளைச் சூடியபோதிலும், இறுதியில் சடைக்கன் நாயகக மனனரிடம் சரணடைந்தார். இப்போரை 'இராமப்பையன் அம்மானை' என்ற நாட்டுப்பாடல் சுவைபட விவரிககிறது. இவருககுப் பிறகு இவர் மருமகன இரகுநாத தேவன் பட்டத்திற்கு வநதார். இவர் திருமலைநாயக்கருககு ஆதரவாகச்சென்று மைசூர் மன்னரை மூக்கறுப்புப் போரில் வென்றுவஞ் சம் தீர்த்தார். இவரது வீரத்தைப் பாராட்டி யானை களையும் குதிரைகளையும பரிசாகக் கொடுத்துத் தன் பேரையும் கொள்ளுமாறு சொல்லி அவரைத் 'திரு மலை சேதுபதி' எனறழைத்தார். மதுரை மன்னர் 'அரசியின் தாலியைக் காத்த காவலன்' எனற பட்டத் தையும் வழங்கினார். அரசுச் சின்னமான தனது சிங்க முகப் பல்லக்கையும், குடையையும், தங்கததால ஆன தூக்கைச் சிலையையும் வழங்கினார். மேலும் கப்பம் கட்டும நிலையை நீக்கித் திருப்புவனம், திருச் சுளி, பள்ளிமடம் ஆகிய பகுதிகளையும் சேதுபதிக்குக் கொடுத்தார். இதற்குப் பிறகு திருமலை சேதுபதி கப்பம கட்டும் சிற்றரசா என்ற நிலை மாறிச் சுயேச்சை மனனராக ஆட்சி செய்யலானார். இவ ரது ஆட்சியில் சேதுநாடு விரிவடைந்தது. இவரது ஆட்சின்போதுதான இராமநாதபுரத்தில நவராத் திரிவிழாதொடங்கியது. இனறும் இவவிழா சிறப்பாக நடந்துவருகிறது. தஙகத்தினால பசுவைச செய்து அதைத்தகுதி வாய்ந்த பாரப்பனருக்குப் பரிசளிககும் சடஙகை இவாதான தொடஙகினார். இதற்கு 'இரணியகர்ப்பதானம்' என்பது பெயர் இதன் நினை வாக 'இரணியகர்ப்பயாசி' என்றபட்டத்தை இவர் கொணடார். இவர்தம் பினனோடிகளும் இப்பட்டத் தைக் கொணடனர். தேவைநகராதிபன், சேது மூல ரட்சக துரந்தரன, இராமநாதசுவாமி காரிய துரந்த ரன், பரத நாடக பிரவீணன, தொண்டியன், துறைக் காவலன், வைகை வளநாடன், இராமேசுவரத்தையா ஆகிய பட்டங்கள ஓர் தாமிரப்பட்டயத்தில் காணப் படுகின்றன. இவர் தெலுங்கு மொழியை அவைககள மொழி ஆக்கினார். சேதுபதிகளிலேயே இவரைத தலை சிறந்தவராகக் கருதலாம்.

இவருக்குப் பிறகு இரண்டாண்டுகள் நாட்டில குழப்ப நிலை ஏற்பட்டிருந்தது. இரகுநாத சேதுபதி என்ற கிழவன் சேதுபதி கி.பி. 1671-இல பட்டத்திற்கு வந்தார்; மறவர் நாட்டைச் சுயேசசை நாடாககினார்; தஞ்சை, மதுரைப் படைகளைத் தோற்கடித்தார்; புதுக்கோட்டை அரசை உருவாக்கினார்; இராமநாத புரம அரசுக் கடற்கரையின் முத்துக் குளிக்கும் பகுதியில் தச்சுக்காரருக்கு மீன்பிடிக்கும் உரிமையை வழங்கி அவர்களிடம் இருந்து திறையும் பெற்றார்; இராமநாதபுரத்தைத் தமது தலைநகராக்கினார்;

மக்களின் தணணீர்ப் பஞ்சத்தைத் தீர்ப்பதற்காக ஓ ஊருணியை நிருமாணித்தார். மக்களிடமிருந்து 'முகவை ஊருணி ஐயா' என்ற பட்டதகதையும் பெற்றார். பல கவினபெறு ஓவியங்களைக் கொண்ட 'இராமலிங்க விலாசம்' என்று சொல்லப்படுகின்ற ஓர் அரணமனையையும் இவர் உருவாக்கினார். தி பிரிட்டோ என்ற கிறித்தவப் பாதிரியார் ஏதோ தவிர்க்க இயலாத காரணங்களினால் கொல்லப்பட்ட போதிலும், இவர் கிறிததவர்களிடமும், முசுலீம்களிட மும் இணக்கமாகவே நடந்துகொணடார். பாதிரியார் மார்ட்டின் கி.பி. 1713-இல எழுதிய கடிதம இவரது புகழைப் பறை சாற்றுகிறது. இவர்தம் முனனோடி களின இறை பணியை இவர் தொடாநதார். திருப் புல்லணைக் கோவிலுககுப் பதினோரு கிராமஙகளை மானியமாக வழங்கினார். இவர் கி பி. 1710-இல தமது 80-வது வயதில் இறந்தார். இவருடன் இவரது நாற் பத்தேழு மனைவியரும் உடனகட்டையேறினா என்பது குறிப்பிடத்தக்கது.

இவருககுப்பின் இவருடன் பிறந்தான மகன விசய இரகுநாதன பட்டம் சூடினான். அவரது ஆட்சி இரா ணுவ முககியத்துவம் வாய்ந்தது. அவர் காலததில் எட்டு இராணுவப் பிரிவுகள் இருந்தன. பிரெஞ்சுப் பொறியாளரின உதவியுடன் இராசசிங்க மங்கலம் கமுதி, பாம்பன் ஆகிய இடங்களில கோட்டைகளைக் கட்டினார். தச்சுககாரரின உதவியுடன் ஓர் பீரஙகிப் படையையும் அவா அமைத்தார். சிவகங்கை சமத் தானம் அவர் காலத்திலதான் தோனறியது அவர் இராமநாத சுவாமியிடததில பெரும் பகதி கொண டிருநதார். இராமேசுவரத்திற்குச செல்லும் பயணி களுக்குப் பல வசதிகளைச செய்து தந்தார். தன மரு மகன் பயணிகளிடமிருந்து படகுக் காசு வசூலித்தான், என்ற குற்றததிற்காக அவனைக் கொனறார்.

சேதுபதிகளில் கி.பி 1761-1772, கி.பி.1780-1794 ஆகிய ஆண்டுகளில ஆணட முதது ராமலிங்க சேதுபதி மிக முக்கியமானவர். இவர் ஆங்கிலேயரால சென னைக்கு அகற்றப்பட்டு அஙகு கி.பி. 1795-இல சிறை யில் வைககப்பட்டா இவருக்கு பராமரிபபுச செல வுக்காக மாதம் ரூ.1000/- ஆஙகில அரசு வழஙகியது.

முத்துராமலிங்க சேதுபதி இறந்த பிறகு கி பி. 1081-இல மஙகளேசுவர நாச்சியாா முதல இராணி சேதுபதியானார், இவர் இராமநாதபுரத்தின முதல் சமீனதாரிணி எனறு சொலலப்பட்டார். இவருடைய பின்னோடிகளில் மிகச் சிறந்தவா கி.பி.1868-இல் தோனறிய பாசுகர சேதுபதியாவார். ஆஙகில ஆட்சி யில் வந்தபிறகு கூட இவரது காலத்தில பழைய புகழ் சேதுநாட்டுககுத் திரும்பியது எனலாம். விவேகாநநதர் அமெரிக்கா செல்லுவததற்கு இவர்தான் பெரிதும் காரணமாயிருந்தார் என்ற உணமை இவர் 1893-இல் எழுதிய நாட் குறிப்பிலிருந்து தெரிகிறது பாவாணரும் இசைவாணரும்பல திக்குகளிலிருநது இவரை நாடிவந்து தத்தம் திறமைகளைக் காட்டிப் பரிசுகள பல பெறறுச் சென்றுளளனர். மதுரையில நானகாம் தமிழச்சஙகம் நிறுவப் பாண்டித் துரைககு இவர் தான் பெரிதும் உத வினார். இவருடைய மனிதாபிமான செயலகள பல வாகும் இவருக்குப் பிறகு ஆட்சிககு வநத இவர் மகன் இராச இராசேசுவர சேதுபதி காலததிலும இறைபணி யும் தமிழப்பணியும் கலைப்பணியும தங்கு தடை யின்றித் தொடர்நதன. இவரும தம் தந்தையைப் போல்நாட்குறிப்பு எழுதும் பழககததைக கொணடி ருந்தார். இவர் மகன சணமுக இராசேசுவர நாக நாத சேதுபதியே கடைசி சமீன்தார்ஆக விளங்கினார். இவர் சென்னைச் சட்டமன்றத்தில 1946 முதல் 1962 வரை உறுப்பினராக இருந்தாா. இராசாசி, காமராசு ஆகியோரின் அமைசசரவைகளில 1952முதல் 1957 வரை அமைச்சராக இருந்து பல பொதுப்பணிகளை ஆறறியுளளார். கே. சே.

**சேதுபுராணம்** என்னும் நூல், துழாவூர் ஆதீ னம ஆதிகுருமூர்த்தி நிரம்ப வழகிய தேசிகரால இயற்றப்பெற்றது; இராமநாத முனிவர் என்பார் வேணடுகோளினபடி 3438 பாடலகளால் பாடப்பெற் றது சேது அணைகட்டிய வரலாறு முதல் இராமேசு வரத்திலுளள தீர்த்தச சிறப்பு வரை பல் வேறு செய்திகளைக் கூறும் சிறந்த நூலாகும்.

இராமேசுவரததிற்குத் தெற்கே 16 கி.மீ. தொலைவில் தனுக்கோடி எனனும தீர்த்த நீராடு மிடம் இருந்து புயலால் அழிந்துவிட்டது. இநத இடத்திற்குச் 'சேது' என்பது பெயர். சேது என்பது அணைக்கட்டினைக் குறிககும். இராமமூாததி இராவ ணனை வதம் செய்ய இலங்கைக்குச் செல்கையில் நளன என்ற வானரத் தசசன வானரஙகளைக கொணடு கட்டிய அணை சேது அணை இது நூறறி ரணடு யோசனை நீளமும் பத்து யோசனை அகல மும் உடையது என்றும், மூன்று நாளகளில் கட்டி முடிக்கப்பெறறது என்றும் கூறபபட்டுளளது. அவ் வணை இராமேசுவரத்திற்கும இலங்கைக்குமாக அமைத்த அணையாகும். இஙகு இராமபிரான வில் லின் நுனியால் உணடாக்கிய தீாத்தம் தனுகசோடி எனப்பெறும் என்று சேது புராணம் கூறும்.

அதன் சிறப்பினை, 'நீடுதனுக்கோடியினை நினைந்தாலும் புகழந்தாலும் நேர் கணடாலும் வீடு பெறல் எளிதாகும்' என்று சேதுபுராணம் தனுக் கோடிச்சருககம் கூறுகிறது.

இவ்வாசிரியர் இங்குள்ள தீர்த்தங்கள் போக்கும் பாவங்களை எல்லாம் தொகுத்துக் கூறுகின்றார். இதிகாசங்களில் கூறப்பெறும் பாவங்களைத் தொகுத்துக் கூறும் பகுதியை இந்நூலில் காணலாம். இராமேசுவரம் பாவ வரிசையில் கூறப்பெற்ற பாவங்கள் அனைத்தையும் போக்கும், நன்றி கொன்ற பாவத்தை மட்டும் போக்காது என்று இந்நூல் கூறுகிறது. 'எந் நன்றி கொன்றார்க்கும் உய்வுண்டாம் உய்வில்லை செய்ந்நன்றி கொன்ற மகற்கு' என்னும் திருக்குறளுக்கு விரிவுரையாக அமைந்துள்ளது.

இராமர், இலக்குமணர், அனுமார் முதலியோர் சிவபக்தனான இராவணனைக் கொன்ற பாவம் போக இங்கு இறைவனை வழிபட வந்த செய்தி, காசிக்கு இலிங்கம் கொண்டுவரச் சென்ற அனுமன் வருமுன்னரே சீதையால் அமைக்கப்பெற்ற இலிங்கத்தைப் பூசித்ததால் அனுமன் கொண்டு வந்த இலிங்கம் தனியாகப் பூசிக்கப்பெற்ற செய்தி, இராமன் பூசித்த இலிங்கமாதலால் இராமனாதர் எனப்பெற்ற செய்தி, அகத்திய முனிவர் பூசித்துப் பேறுபெற்ற செய்தி, குணாநிதி பாண்டியன் மகளாக இலக்குமி தோன்றித் திருமாலை மணந்து கொண்ட செய்தி ஆகியன இந் நூலில் விளக்கப்படுகின்றன.

உப்பூரில் வெயிலுகந்த விநாயகர் திருக் கோவிலில் தீர்த்த யாத்திரை தொடங்கி அக்கினி தீர்த்த முதலியவற்றில் நீராடுவதால் மகப்பேறு கிடைக்கும் என்ற சிறப்புச் செய்தியையும் விளக்கு கின்றது.

சு.சு.

**சேந்தங் கண்ணனார்** சங்க காலப் புலவர் களுள் ஒருவர். இவர் இயற்பெயர் கண்ணனார் என்பதாகும். இவர் பெயரில் அமைந்துள்ள சேந்தன் என்பது இவர் தந்தையார் பெயராகும். சேந்தனுக்கு மகன் என்னும் பொருளில் இவர் இவ்வாறு வழங்கப் பெற்றார். இவர் பாடியனவாக நற்றிணையில் ஒரு பாடலும்(54), அக நானூற்றில் ஒரு பாடலும் (350) உள்ளன. நெய்தல் திணையிலமைந்த நற்றிணைப் பாடல் தலைவனைக் கண்டு இன்புறாமல் நீண்ட நாட்களாக வருத்தமுறும் தலைவி, அவனிடம் சென்று தன் நிலைமையைக் கூறுமாறு நாரையை விளித்துச் சொல்வதாக அமைந்துள்ளது. அப் பாடலில் சிறுமையும் புன்மையும் உடைய மாலைக் காலம் தன்னை வருத்துவதாகச் சுற்றத்தோடு கூடிய நாரையை விளித்துக் கூறித் தலைவனிடம் சென்று நிலைமையைக் கூறுமாறு வேண்டுகின்றாள். சுற்றத்தோடு கூடிய நாரையை அழைத்துக் கூறியது, அது மறப்பினும் பெண்மைத் துயரைக் கேட்ட அதன் கிளைகள் மறக்காமல் கூறும் என்றதனால் ஆகும். அதனை, 'கிளையொடு சிறிதிருந்து கருங்கால் வெண்குருகு எனவ கேண்மதி' எனக் கூறியிருப்பது சிறப்பாக வுள்ளது.

வீ.சே.

**சேந்தம்பூதனார்**: இவர் சேந்தன் என்பவருடைய மகனாவார். சேகம்பூதனார் என்றும் இவர் பெயர் சில ஏடுகளில் காணப்படுகிறது. சேந்தங் கண்ணனார், சேந்தன் கீரனார், சேந்தன் கூத்தனார், சேந்தன கொற்றனார் என்னும் பெயர்களையுடைய வேறு புலவர்களும் சங்க காலத்தே திகழ்ந்தனர். மதுரை எழுத்தாளன் சேந்தன் பூதனாரும், சேந்தம் பூதனாரும் ஒருவரேயாவர். இவர் மதுரையில் சங்க காலத்தில் ஏடெழுதுபவராயிருந்தவர், இவர் பாடியனவாக நற்றிணையில் இரண்டும் (69, 261) குறுந்தொகையில் மூன்றும் (90,226,247) அகநானூற்றில் இரண்டும் (84,207) ஆக ஏழு பாக்கள் சங்கத் தொகை நூல்களில் உள.

ஆதித்த மண்டிலம் பகற்பொழுதைச் செய்து முடித்து மலையில் மறைய, பறவைகள் குஞ்சுகன் தங்கிய கூடு சென்று அடைய, காட்டில் கலைமான் பிணையைத் தழுவ, முல்லையரும்பு மலர, பல விடத்தும் காந்தள் மலர்ந்து புதரை அழகுபடுத்த, ஆனிரையின் கழுத்திற் கட்டிய மணி கோவலரின் குழலோசையோடு பொருந்தி மெல்லென்றிசைக்க, மாலைப்பொழுது வந்தது என்று பல நிகழ்ச்சிகளைத் தொகுத்து இப்புலவர் அப்பொழுதினைப் புனைவு செய்துள்ளார் (நற். 69).

நெருப்புப் போன்ற சிறு கண்ணையுடைய பன்றி உறங்கும்போது அதன் முதுகு மறைய முல்லை நாண்மலர் உதிர்வதையும் (அகம்.84), வேங்கை மென் சினை உதிர்க்கும் மலர் தன்மீது விழ யானை உறங்கும் என்னும் இயல்பான காட்சியையும் (குறு.247) புனைந்துள்ளார். தாழை வெண்பூ குருகென மலரும் என்பது பொருத்தமான அழகிய உவமை (குறு.226). தேன் கலந்த தீம்பாலை இன்சொல் கூறிக் கூந்தலைத் தடவி முகமலர்ந்து ஊட்டவும் உண்ணாத தலைவி, பாலை வழியில் யானை புரண்ட கூவலிடத்தே அறனிலாளனாய தலைவன் தோண்ட ஊறிய உவர் நீரை நுதல் வெயர்ப்ப வெய்துயிர்த்து உண்டனளோ என்று மகட் போக்கிய செவிலி வருந்திக் கூறுவதை அகநானூற்றுப் பாடல் (207) அழகுறச் சித்திரிக்கும். இப்புலவர் பாலைவழியில் உப்பு வணிகர் கழுதைகள். மேல் உப்புமூட்டைகளை ஏற்றிச் செல்லும் வழக்கத்தையும் குறிப்பிட்டுள்ளார் (அகம்.207). தலைமகன் சிறைப்புறமாகத் தோழி தலைவிக்குக் கூறுவாளாய் வரைவினை வற்புறுத்தியபோது மழை பொழிந்த மலையில் ஆண் குரங்கு தொட விழுந்த பலாக்

கனியை அருவி அடித்துக்கொண்டு வந்து நீருண் துறையிற் சேர்க்கும் என்னும் செய்தியை உள்ளுறை புலப்பட அமைத்துள்ளது நயம்பயக்கும்(குறு 90). அறத்திற்கு இலக்கணத்தைச் சுருக்கமாகத் தருவது போலச் சான்றோர்கள் செய்யும் வினைகள் எல்லாம் அறவினைகள்எனக் கருதப்பெறும் என்னும் கருத்தில் இப்புலவர் 'திறவோர் செய்வினைகள் அறவதாகும்' (குறுந்.247),என மொழிந்திருப்பது சிறந்ததாகும்

இரா. சா.

**சேந்தமங்கலம்.** தென்னார்க்காடு மாவட்டத்தில் கடலூர் வட்டத்தில் பணருட்டிக்கு அருகில் உள்ளதோர் ஊர். வரலாற்றுச் சிறப்பு பெற்ற இவ்வூர் பண்ருட்டியிலிருந்து 20 கி.மீ. மேற்காகக் கெடில ஆற்றின் தெனகரையில் அமைந்துள்ளது சேநதமங் கலம் முதலாம் கோப்பெருஞ் சிஙகன், இரண்டாம் கோப் பெருஞ்சிங்கன ஆகியோரது தலைநகரமாக கி பி. 13-ஆம் நூறறாண்டில் விளஙகியது. முதலாம் கோப்பெருஞ் சிஙகன் கி.பி. 1232-இல சோழ அரசரைத் தெள்ளாறு என்னும் இடத்தில் வெற்றி கொண்டு சோழ அரசன் மூன்றாம் இராசராசனையும் அவர் அமைசசர், தேவியர் ஆகியோரையும் சேநதமங் கலத்தில் சிறைவைத்தான. இதனை அறிந்த ஒய்சால மன்னர் இரணடாம் நரசிம்மன தன் தானைத் தலைவர்களைப்படையுடன் அனுப்பிவைத்துக கோப் பெருஞ் சிங்கனைத் தோற்கடித்துச் சோழ அரசரை மீட்டான். பாணடிய மன்னன் சடையவர்மன சுந்தர பாணடியன் இரண்டாம் கோப்பெருஞ்சிஙகனைச் சேந்த மங்கலத்தில் தோற்கடித்து அவ்வூரைக் கைப் பற்றினான். ஆனால், மீணடும் அதனைக் கோப் பெருஞ்சிங்கனுககே அளித்தான். இவவூரில கோப் பெருஞ்சிங்கன் அமைத்த கோட்டை, மணடபங்கள, பூங்காககள், நீா நிலைகள் ஆகியவை இனறு அழிநது காணப்படுகினறன. இவ்வூரில ஆபத்சகாயேசுவரா கோயில் ஒன்று உளளது.

சு.இரா.

**சேந்தன்:** சங்க இலக்கியஙகளால் அறியப்பெறும் ஒரு தலைவன்; மிகக வீரமும் கொடைத்தன்மையு முடையவன. இவனைப் பரணரும (குறு. 258), பெயர் தெரியாத ஒரு புலவரும் (நற். 190) தத்தம் அகப் பாடல்களில குறிப்பிட்டுச் சிறப்பித்துள்ளாாகள். 'காவிரிப் பலராடு பெருநதுறை மருதொடு பிணிதத ஏந்துகோட்டு யானைச சேநதன்' என்று பரணா குறிப்பிடுவதுகொணடு இவன், பலரும் நீராடும் வகையில அமைந்த நீர்ததுறைகளையுடைய காவிரி யால் வளம்பெறும் சோழ நாட்டில் வாழ்நதவன என்பது புலனாகிறது. இவன் யானைகள் காவிரிக் கரையிலுள்ள மருதமரஙகளில கட்டப்பட்டிருநத செய்தியினையும், பரணர் அப்பாடலில குறிப்பிட்டுள்ளார். இவன் பகைவர்களின் அரண்கள பலவற்றை வென்றவனும், வரையாது வழஙகும் இயபுல்லடையவனும் ஆவான் என்பதனை நற்றிணைப் பாடல் (190) குறிப்பிடுகிறது. இவன் தநதையின பெயர் அழிசிஎன்பதனையும், ஆாக்காடுஎன்னும் ஊர் அவனுக்குரியது என்பதனையும இருபாடல்களும் குறிப்பிட்டுளளன.

அ. மா. ப.

**சேந்தன் கீரனார்:** இவர் சஙக காலப் புலவா இவரது இயற் பெயர் கீரன் எனபதாகும். இவர் பெயரில அமைந்துளள சேந்தன் என்பது அலலங கீரனார், புல்லங்கீரனார், மூலங்கீரனார் முதலிய புலவர்கள் தந்தையார் பெயரை அடைமொழியாகப் பெறறுளளமை போல இவர் தந்தை பெயராக இருக் கலாம் என்பர். மறறும சிலர் சேந்தனாகிய கீரன் என்றும் கூறுவர். பினனர் ஆா எனனும் சிறப்பு விகுதி பெற்று இவ்வாறு வழங்கப்பெறறார். இவர் பாடிய தாக குறுந்தொகையில் ஒரே பாடல (311) இடம் பெற்றுளளது. தலைவி கூற்றாக அமைநத அப்பாடல அலர் அஞ்சிய தலைவி, தலைவன் சிறைப்புறத் தானாகத தோழிக்குச சொலவதாக அமைநதுளளது. அப்பாடலில் அலா தூற்றும் ஊராருக்கு அஞ்சி வருந்தும் தலைவி, தலைவன சிறைப்புறமாக இருப் பதை அறியாதாளபோலத் தோழியிடம்,நம தலைவன் வநதுசெலலும் தேரினை நான கண்டபோது, நடு இரவில் வெளளிய மணலிடத்தில் தாழநது வளர்நத புன்னைமரத்தில் பூக்களைக கொய்துகொணடிருநத மகளிர் பலர் பார்ததுவிட்டனர். அதனால, ஊரார் தூற்றும் பழிச் சொற்கள மிகுதியாகும் எனறு கூறி விரைவில் மணந்துகொள்ளலே நனறு என்னும் குறிப்பினைத் தந்துளளது சிறபபாகவுளளது.

வீ.சே

**சேந்தன் திவாகரம்:** இது தமிழில முதன்முத லாகத் தோனறிய நிகணடுநூல். அதனால இந்நூல ஆதி திவாகரம் எனவும் வழஙகப் பெறும் எனறு சிலரும், அபபெயர் பழைய நூல்களில யாணடும் சுட்டப் பெறாமையால், அபபெயர் இந்த நூலினைக் குறிக்காது எனறு சிலரும கூறுகினறனா.

இந்நூல் திவாகரர் எனபவரால் இயற்றப் பெறறது. அவர் திவாகர முனிவர் எனவும் வழஙகப் பெறுவார். சிவன் பெயர்களைத் தொகுததுக கூறுவதில் நூலினைத் தொடங்கினாலும் இவரைச சமண சமயத்தவராகவே கருதுகின்றனர்.

திவாகரத்தில் சாளுக்கியரைப் பேரரசர் என்றும அரட்டர் அலலது இரட்டரைக் குறுநிலத்து மன்னர் என்றும் கூறும் குறிப்புகள் உள்ளமையால இந் நூல், இராட்டிரகூடர் ஆட்சி சிறந்தோங்கிய கி.பி.8-ஆம் நூறறாண்டிற்கு முனனர்த் தோன்றிய

தாகும். இந்நூலாசிரியராகிய திவாகரர் சோழ நாட்டு அம்பர் எனனும் ஊரைச் சார்ந்தவரா வாா. இவரை ஆதரித்து நூலியற்ற ஊக்கியவர் சேந்தன என்னும் குறநில மனனர். அதனால் இந் நூல, செய்வித்தோர், செய்தோர் ஆகிய இருவர் பெயராலும 'சேந்தன திவாகரம்' என்று வழங்கப் படுகிறது

இந்நூல் பன்னிரு தொகுதியாக அமைந்துளளது. அவை தெய்வம், மககள, விலங்கு, மரம், இடம், பலபொருள், செயற்கை வடிவம், உணடி, செயல், ஓலி, ஒருசொல், பல்பொருள், பல்பொருட் கூட்டத்து ஒரு பெயர் எனனும் வகையிலமைநத பெயாகளைப் பற்றிக் கூறுகினறன.

திவாகரத்தில் ஏறத்தாழ 9500 சொற்கள பொருள்விளக்கம் செய்யபபட்டுள்ளன. அவறறுள 384 பல பொருள் ஒரு சொற்களாகும். இதனை, கி.பி.1835 -ஆம் ஆணடில தாணடவராய முதலியார் முதற் கண் வெளியிட்டார். அதில் இந்நூலின் முதற் பத்துத் தொகுதிகளும், பதிப்பாசிரியர் இயறறி யனவாகக் கருதப்படும் நூற்பாக்களும் இடம் பெற்றிருந்தன. பின்னாத் தோன்றிய பதிப்புகள் பனனிரு தொகுதிகளையும் ஒன்றாகச் சேர்ததே பதிப்பித்துளளன. அவை பினவர்ச் சேர்க்கப்பட்ட நூற்பாககளையும் நூலொடு சேர்த்தே வெளியிட் டுளளன. அ.மா.ப.

**சேந்தனார்:** சைவத் திருமுறைகள பன்னி ரண்டனுள ஒன்பதாந் திருமுறையினைப் பாடிய சைவ அடியாா பலருள் ஒருவர். சேநதன் என்பது முருக னைக் குறிக்கும் பெயாகளுள் ஒன்று. அவ்வகையி லமைந்த சேநதன், சேந்தனார் எனனும் பெயரொடு தமிழில் சில புலவர்களும், அரசர்களும இருநதுளள னர். திவாகர நிகணடினை இயற்றுவிததோனாகிய சேந்தன் சிவபததி மிககவனாகக் கூறப்பட்டாலும், திருமுறை பாடிய சேந்தனார் அவரின் வேறானவர் என்பது தெளிவு.

சேந்தனார் ஒன்பதாந் திருமுறையில் மூனறு திருவிசைப்பாப் பதிகங்களையும, திருப்பல்லாணடு எனனும் பகுதியையும் பாடியுளளார். அவை திரு வீழிமிழலை, திருவாவடுதுறை, திருவிடைககழி ஆகிய மூனறு தலஙகளுக்கும் தனித்தனிப் பதிகமும,தில்லைக் குத் திருப்பலலாணடும் ஆக அமைநதுளளன. சைவத் திருககோயில்களில மரபாகப் பாடப்பெறும் பஞ்ச புராணத்தில இதர்தம் திருப்பல்லாணடு இடம்பெறும் சிறப்புற்றுத் திகழ்கிறது.

திருவிடைக்கழிப் பதிக இறுதிப் பாடலில், 'செழுந் திரட் சோதி செப்புறைச் சேந்தேன்' என்றும், திருப்பல்லாணடின இறுதிப் பாடலில'சிவன் சீரடியார் அடிநாய் செப்புறை அந்தமில் ஆனந்தச் சேந்தன்' என்றும் தம்மைக் குறிப்பிட்டுள்ளமையால், இவர் ஊர் செப்புறை ஆகலாம் என்பது தெரிகிறது. செப் புறை என்பதனை இவர் தம் குடிப்பெயராகக் கூறுவ தும் உண்டு. இவர் பதிகத்தில் இடம்பெறும் பிடவூர் பற்றிய குறிப்பினைக் கொணடு திருவிடைக்கழிக்கு அருகிலுள்ள பிடவூரிலும் இவர் இருந்திருக்கலாம் என்று கூறுகின்றனர். 'பழைய அவிழை அனபாகிய பண்டைப் பறைச்சேநதன் கொடுக்க அதுவும் திருவ மிர்தாகியதே' என்று நம்பியாண்டார் நம்பி கூறுவத னால் இவர் நந்தனார் மரபில் வந்தவர் என்று அறிஞர் காட்டியுள்ளனர்.

இவர்தம் வரலாறு கூறுவனவாகச் சில செய்திகள மரபாகக் கூறப்பட்டு வருகின்றன. இவர், பட்டினத் தடிகளின கணக்கராக இருநதபோது அவா கட்ட ளைப்படி நிதியறையைத் திறந்து செல்வத்தையாவ ரும் கவருமாறு விடுத்தாா. அது கேட்ட அரசன் சினந்து இவரைச் சிறையிலிட்டுத் துனபுறுத்த, இவர் குடும்பத்துடன் பட்டினததடிகளைப் பணிநது வேண்ட, அவர் 'மத்தளை தயிருணடானும்' என்னும் பாடலைப் பாடச் சிவபெருமான திருவாணைபபடி, விநாயகா இவரைச் சிறைமீட்டார் எனனும் செயதி மரபாகக் கூறப்படுகிறது இவா பின்னர்த் தில்லை சென்று தம் எளிய நிலையிலும் அடியாரை உணபிக் கும் தொணடினை மேற்கொண்டார். இவர் அன் பினை வெளிப்படுத்த இறைவனே முதியவர் வேடத் தில் வந்தார். தாம் அரிதின் முயனறுழைத்துப் பெறற பொருள கொண்டு கூலம் வாங்கிக் களி அமைத்து அவருக்குப் படைத்தார். எஞ்சியதனை முதியவர் உடன் வாங்கிச் செனறுவிட்டார். நாடோறும் இரவு வழிபாட்டில் இறைவன பாதச் சிலம்பொலி கேட்கும் அரசன், அன்று கேளாது வருந்தி உறங்க, கனவில் இறைவன் தான் சேநதனாா அளித்த உணவை உண்ணச் சென்றமையால் காலந்தாழ்ந்தது என்று கூறினார். மன்னனும் மறறவரும் தில்லை மனறு சென்று கண்ட போது, அங்கு களித் துளிகள சிதறிக் கிடந்தமை அறிந்து வியந்து போற்றினர். திருவா திரை நாளன்று திருவீதிவலம் வருகையில சேற்றால் தடையுண்ட 'தேர் செல்லுமாறு பாடுக' எனறு இறைவன் சேந்தனாருக்குக் கட்டளையிட அவரும் 'மன்னுக தில்லை வளர்க நம் பத்தர்கள்' எனனும் திருப்பல்லாண்டு பாடத் திருத்தேர் வலம் வந்து நிலைநின்றது.

சேந்தனாரையும் அவர்தம் திருப்பல்லாண்டை யும் சிறப்பிக்கும் வகையில் அமைந்த இந்தச் செய்தி

களில், இறைவனுக்குக் கூழ் அருத்திய செய்தியினை நம்பியாண்டார் நம்பிகள் தம் திருப்பண்ணியர் விருத்தத்திலும் உய்யவந்த நாயனார் தம் திருக்களிறுப் படியாரிலும் குறிப்பிட்டுப் போற்றியுள்ளனர். சமய அடியவர்கள் வரலாறு பற்றியும் நூல் பற்றியும் கூறுங்கால் இறைவனொடு தொடர்பு படுத்திக் கூறப் படும் இததகைய அற்புதச் செய்திகள் பொதுவாகப் பல சமயங்களிலும் கேட்கபபடுவனவாதலின் இதனை மறுக்குமாறில்லை. மறுக்கததக்க சானறுகள் இலலை யாதலின் அவை கிடைக்கும் வரை மரபு வழிப்பட்ட இத்தகு செய்திகளை ஏற்பது தக்கதேயாகும்.

இம்மரபுச் செய்தியால் சேந்தனார் பட்டினத் தடிகளோடு தொடர்புடைமை அறியப்படுவதுபற்றி இவர்தம் காலம் பட்டினத்தடிகளின் காலமாகும் என்பதனை உய்த்துணரலாம். களியமுது உணபிதத செய்தியினைப் பகதி இலககியத்தில் முதற்கண நம்பியாண்டார் நம்பி குறிபபிட்டுள்ளமையால் இவர் அவர் காலததிற்கு முறபட்டவர் எனபது உறுதியாகிறது. இவற்றையெல்லாம் ஒருங்கு வைதது ஆராய்ந்தவர்கள் இவர் காலம் கி.பி 9-ஆம் நூற் றாண்டின் இறுதிப் பகுதி என்று குறிப்பிட்டுள்ளனா. பட்டினத்தாா இருவர் என்னும் கருத்துடையார், இவா காலம் கி பி.10-ஆம் நூற்றாணடின இடைப் பகுதி என்று கூறுகின்றனர்.

திருவீழிமிழலைப் பதிகத்தில் அங்குள்ளகோயிலை 'விணணிழி செழுஙகோயில' என்றும் இறைவனைத் 'தான் தோனறி நம்பி' என்றும் குறிப்பிட்டுள்ளார். திருவாவடுதுறைப் பதிகமும, திருவிடைககழிப் பதிகமும் அகத்துறைப் பதிகங்களாகும். அவை இரண்டும் அநதாதியாக அமைந்துளளன. திருவிடைக்கழிப் பதிகம் முருகப் பெருமான சிறப்புக் கூறுவதாக அமைந்துளளது. திருபபலலாணடு தில்லைப பெருமானுககுப் பல்லாண்டு கூறுவதாக அமைநத பதிகமாகும். இதில் 13 பாடல்கள உள்ளன. இப்பதிகம் திருவாதிரைத் திருநாளில் பாடப்பட்டது. அ.மா.ப.

***சேம்சு, பிரன்சிசு பைரன்சு,*** இவர் ஓர் அமெரிக்க அரசியல் அறிஞர். தெற்குக் கரோலினா விலுள்ள சார்ல்சுடன் எனனுமிடத்தில் கி.பி. 1879-ஆம் ஆணடு பிறந்தார். இவருடைய தந்தையார் பெயர் பிரான்சிசு. தாயாரின பெயர் எலிசபெத் பைரன்சு என்பதாகும். இவாகள் அயர்லாந்து நாட்டிலிருந்து குடி பெயர்ந்தவர்கள்.

சேம்சு பிரான்சிசு பைரன்சு (James Francis Byrons) பிறக்குமுன்னரே தந்தை இறந்துவிட்டார். தாய், ஆடை அணிகலனகளை உருவாக்கும் தொழிலில் ஈடுபட்டு இவரை வளர்த்தார். வறுமையின் விளைவினால் 14 வயதில் பள்ளிப்படிப்பை விட்டு எழுத்தர் பணியில் சேர்ந்தார். தம் 21 வயதில் வழக்கு மன்றச் சுருக்கெழுத்தராகப் பணியமர்ந்த இவர் சட்டம் பயினறு வழக்கறிஞர் ஆனார்.

தெற்குக் கரோலினா என்னுமிடத்தில் இரண்டாம் சுறறு நீதிமன்ற நீதிபதியாக ஆனார். தெற்குக் கரோலினா நடுவர்களை நீக்கிரோக்களைத் தாக்குவது குற்றமெனக் கருதிடச் செய்தார். சட்டசபைககு கி.பி. 1911 முதல் 1924 வரை ஆறுமுறை மீணடும் மீண்டும் தேர்ந்தெடுக்கப்பெற்றாா. ஆளவை மனறத்திற்கு (Senate) 1924-இல் போட்டியிட்டுத் தேர்தலில் தோல்வியடைந்துவிட்டபடியால் மீணடும் ஆறு ஆணடுகள சட்டததொழிலில புகுந்தார். பின 1930-இல மீணடும் தேர்தலில் நினறு யார் தோற்கச் செய்தாரோ அவரை வென்றாா. ஆளவை மனற உறுப்பினர் பதவியில் இடம்பெற்று 11 ஆணடுகள தொணடுசெய்தார். மீணடும் 1936-இல தோந்தெடுக்கப்பெற்றார். இவர் எப் டி. உரூசுவெல்ட்டிறகு உதவி செய்தார்.

உரூசுவெல்ட்டு மூன்றாம் முறையாகத் தேர்ந்தெடுக்கப்பட 1940-இல் உறுதுணையாக விளங்கினார். துணை அதிபர் பதவிக்குப் போட்டியிட விழைநத இவர் என்றி ஏவாலசுக்கு விட்டுககொடுத்தார். இவர் 1941 சூன் மாதததில் உசசநீதிமன்ற நீதிபதியானார். பொருளாதார நிலைப்படுத்தலுக்கு இயககுநர் என்னும் பொறுப்பினை (Director of Economic Stabilization) இவர் 1942 அகடோபரில வகித்தார்; ஆணடுக்கு ரூபாய்20,000 பெறும் உச்சநீதிமனற நீதிபதிப் பொறுப்பை விட்டுவிட்டு இப்பொறுப்பில் அமர்ந்தார்; பணவீக்கத்தைக் கட்டுப்படுத்தும்முயற்சியில் முனைந்தார்; புதிய கடன கட்டுப்பாட்டினை விதிதது இம் முயற்சியில் ஈடுபட்டார்.

உரூசுவெல்ட்டினால் போர் ஒருங்கிணைப்பு வாரியத் தலைவராக 1943 மே 28-இல் நியமிக்கப்பெற்றார். இக்குழுவில் ஆறு உறுப்பினர்கள் இருநதனர். குடியரசுத் தலைவரைத தவிர வேறு யாரும் எப்பதவியில் இருப்போரும் இவருககு ஈடாக மாட்டார்கள. இவரைத் 'துணைக குடியரசுத் தலைவர்' (Assistant President) என்று அழைத்தனர். இவர் 1945 ஏபபிரலில் பணி விலகினார். யால்டா (Yalta) மாநாடு 1945-இல் நடைபெற்றபோது உரூசுவெல்ட்டுககுத் துணையாகச் சென்றார். துணைக் குடியரசுத் தலைவர் பதவிப் போட்டியில் 1944-இல போட்டியிட விழைந்தார். ஆனால், ஆரி துருமன் (Harry Truman) தேர்வு செய்யப்பெறறார்.

உருசுவெல்ட்டின் மறைவிற்குப் பின் துருமன் 1945-இல் குடியரசுத் தலைவரானதும் இவரை 'அரசுச் செயலாளர்' பதவியில் நியமித்தார். போட்சுடாம் மாநாடு,இலண்டன் மாநாடு,மாசுக்கோ மாநாடு முதலான மாநாடுகளிலும் 1946-இல் நடைபெற்ற ஐக்கிய நாடுகளின் முதல் மாநாட்டிலும் பங்கேற்றார்.

தெற்குக் கரோலினா மாநில ஆளுநர் பதவிக்கு 1955-இல் போட்டியிட்டார். இவர் பல்வேறு நூல்களின் ஆசிரியர். 'இசுபீக்கிங் பிராங்லி' ,'வெர்சீனியா கிர்கசு' ஆகியன இவர் தம் குறிப்பிடத்தக்க நூல்கள். துருமன்1947-இல் வழங்கிய சிறப்புப் பணிபுரிந்தவர் விருது இவர் புகழுக்குப் பெருமை சேர்ப்பதாகும்.

ந.க.ம.

*சேம்சு மில்* என்பவர் செரிமி பெந்தம் என்ற ஆங்கில அரசியல் சிந்தனையாளரைப் போன்று, தத்துவ இயலான தீவிர வாதக் கோட்பாட்டை அல்லது பயன்வழிக் கொள்கையை (Utilitarianism) வகுத்தவர். இவர் இசுகாட்லாந்து (Scotland) நாட்டைச் சேர்ந்த ஒரு வரலாற்றாசிரியர்; தத்துவ ஆசிரியரும் பொருளியலாசிரியரும் ஆவர்.

சேம்சு மில் (James Mill) கி.பி.1773-இல் இசுகாட்லாந்தில் ஒரு செருப்புத் தொழிலாளியின் மகனாகப் பிறந்தார். இளமையில் இவர் தம் தாயாரின் தூண்டுதலால் சிலருடைய பொருளுதவியுடன் மாண்டிரோசு பள்ளியில் கல்வி கற்றார்; பின்னர், எடின்பரோ பல்கலைக் கழகத்தில் பயின்று, கிரேக்க மொழியில் புலவரானார். இவர் கிறித்தவ நெறியியல் பற்றிய சமயச் சொற்பொழிவுகள் ஆற்றினார். இவர் செல்வம் மிக்க ஒரு கைம்பெண்ணின் மகளை மணந்துகொண்டார். இவர்களுக்குப் பிறந்த குழந்தையே சிறந்த அரசியல் சிந்தனையாளரான சான் இசுடூவர்ட்டு மில் என்பவர் ஆவார். சேம்சு மில் கி.பி. 1806-இல் இந்திய வரலாற்றை எழுதத் தொடங்கி 12 ஆண்டுகளில் 3 தொகுதிகளாக எழுதி முடித்தார். இவர் இந்தியாவுக்கு வந்ததில்லையாயினும், அந்நூலில் இந்தியாவில் ஆங்கிலர் ஆட்சியில் உள்ள குறைபாடுகளை மிகவும் கடுமையாகத் தாக்கிக் குறிப்பிட்டிருந்தார். அந்நூல் யாவருடைய பாராட்டுதலையும் பெற்றது. இதன காரணமாகவே சேம்சு மில் இந்திய ஆட்சி அலுவலகத்தின தலைவராகவும் நியமிக்கப்பட்டார்.

இவர் கி.பி.1808-ஆம் ஆண்டு முதல், பயன்வழிக் கொள்கையை நிறுவிய செரிமி பெந்தம் என்பவருடன் தொடர்பு கொண்டு அவர் கருத்துகளைப் பல வெளியீடுகளின் வாயிலாகப் பரப்பினார். இவர் பல வார ஏடுகளுக்குக் கட்டுரைகள் எழுதியதோடு தம் நெருங்கிய நண்பரும் பொருளியல் ஆசிரியருமான தாவீது இரிக்கார்டோ(David Ricardo)என்பவரின் பொருளியலுக்குரிய தத்துவ தீவிர வாதக் கருத்துகளைத் தம் கருத்துகளுடன் இணைத்து, கி.பி.1821-இல் 'அரசியல் பொருளாதாரத்தின் அடிப்படைக் கருத்துகள்' (Elements of Political Economy)என்ற நூலைவெளியிட்டார். இதுவே, ஆங்கிலத்தில் பொருளாதாரத்தைப் பற்றி வெளிவந்த முதல் பாடநூல் ஆகும். இந்நூலில் இவர், மக்கள் தொகையைக் கட்டுப்படுத்துதற்கான சீர்திருத்தங்கள் செய்யப்படுதல் வேண்டும் என்றும், ஒரு பொருளின் மதிப்பு அல்லது விலை அதனை உற்பத்தி செய்த தொழிலையே சார்ந்துள்ளது என்றும், ஒரு நிலத்திலிருந்து அல்லது கட்டடத்திலிருந்து உழைப்பின்றிக்கிடைக்கும் வருமானம் வரி விதிப்புக்கு உட்பட்டது என்றும் கூறியுள்ளார்.

**அரசியல் கருத்து:** சேம்சு மில் கடைப் பிடித்த அரசியல் கொள்கை பெரும்பாலான மக்கள் பெருமளவு இன்பத்தைப் பெறுமாறு சட்டங்களின் வாயிலாகச் சீர்திருத்தங்களைச் செய்தல் வேண்டும் என்பதாகும். இச்சீர்திருத்தங்கள் பொருளாதாரத் துறையிலும் அரசியல் துறையிலும் செய்யப்பட்டால் பெரும்பாலான மக்களுக்குப் பெருமளவு இன்பம் கிடைக்கும். இக்கருத்தைச் சேம்சு மில், செரிமி பெந்தம்என்பாரிடமிருந்து ஏற்று விளக்கினார். சட்டத் துறையில் சீர்திருத்தம் செய்யப்படுதல் வேண்டுமாயின், உயர்குடிப் பிரபுக்களினாட்சியோ, அறிவாளிகளின் எதேச்சாதிகார ஆட்சியோ அதற்கு உகந்தது அன்று என்றும், ஆங்கிலப் பாராளுமன்றத்தில் மக்கள் யாவருக்கும் பிரதிநிதித்துவம் இருக்குமளவுக்குப் பிரதிநிதிதத்துவ முறையானது எளிமையாகவும், பரவலாகவும், தாராளமாகவும் ஆக்கப்படுதல் வேணடுமென்றும் இவர் பெநதத்தினிடம் எடுத்துக் கூறினார். பெந்தம் தாராளச் சீர்திருத்தக் கருத்துகளைச் செயற்படுத்துதறகுப் பழைமைக் கட்சியாரின் அரசியல் முறையே உகந்தது என்று முதலில எணணி இருந்தார். பின்னர் அவர் சேம்சின் தாராளக் கருத்துகளை ஏற்றதும், பெரும்பாலோரின் பெருமளவு இன்பத்தைத் தாராள அரசியல் முறைகளில் கொண்டு வருதலியலுமென்று உணர்ந்தார்.

**பொருளியல் தாராளக் கருத்து:** தத்துவ தீவிரவாதக் கொளகையாளர் வகுத்த தடையற்ற வாணிகக் கோட்பாடு (Policy of Free Trade) தாவீது இரிக்கார்டோ என்பவரிடமிருந்து பெறப்பட்டதாகும். உணவுப் பொருள்களின் மீதான காப்பு வரிகளும், கப்பல் போக்குவரத்துச் சட்டங்களும் நீக்கப்படுதல் வேண்டும். இப்பொருளாதாரச் சீர்திருத்தங்கள் செய்யப்

படுதல் வேண்டுமாயின், அதற்கு முன்னர், ஆங்கில நிலவுடைமையாளர் வகுப்பு தனி உரிமையாகச் செலுத்தி வந்த அரசியலதிகாரம் யாவருக்கும் வழங்கப்படுதல் வேண்டும். இச்சீர்திருத்தங்கள் பல சட்டங்களின் வாயிலாக இங்கிலாந்தில் கொணடு வரப்பட்ட காலத்தில், சேம்சு மில் காண்டிலாக்கு (Condillac) எல்வெசியசு (Helvetius) முதலிய பிரானசு நாட்டுச் சிந்தனையாளர்கள் கூறிய சில உளவியல் கருத்துகளை இணைத்து மனித மன அமைப்பைப் பற்றிய ஆய்வு எனனுமொரு நூலை கி.பி. 1829-இல் வெளியிட்டார். பொதுநலனைப் பெருக்குதற்காக மட்டுமே வரிவிதிப்பு அதிகாரம் சட்டமியற்றுவோரால் கையாளப்படுதல் வேணடும். வரிவிதிப்பு அதிகாரம் மூலதன வளர்ச்சிக்கு ஏற்றதாயின், அதனை அதற காகக் கையாளுதல்நன்று. சமூக நலனுக்கானச்சட்டங கள் செய்யப்படுதல வேணடுமென்று தாராளவாதி களும், அத்தகைய சட்டங்கள் செய்யப்படலாகா தென்று தொனமைப் பொருளாதாரச் சிந்தனை யாளர்களும (Classical Economists) கூறினர். தாராள வாதிகள கருத்தினபடி தொழிலாளர் நலனுக்காகத் தொழிறசாலைச் சட்டஙகள் செய்யப்பட்டுத் தொழிற் சங்கங்களை அமைத்தற்கு உரிமைகளும் அவாகளுக்கு வழங்கப்பட்டன. பழையவகுப்பு நலன் களை அடிப்படையாகக் கொணடு அமைநதிருந்த ஆங்கில அரசாஙகமுறையைச் சேமசு மில மிகவும் தாக்கினார்.

**அரசாங்க அமைப்புப் பற்றிய கருத்து:** சேம்சு மில் கூறிய அரசாஙகம்பற்றிய கருத்துகள தாமசு ஆப்சின் (Thomas Hobbs) கருததுகளைப் போன்று இருந்தன. அதிகாரப் பற்று மனிதர்களுடைய செயல்களைத் தூணடுகிறது. அந்தப் பற்றை நிறுவனங்களால் தடுக்க இயலாது. அதிகாரங்களைப் பிரித்தல், ஒன்றுக்கெதிராக மற்றொன்றைச் சமநிலையில் அமைத்தல முதலிய முறைகளும் அதிகாரப் பற்றைத் தடுத்தற்கு உதவுமெனறு மில் ஒத்துக்கொளள வில்லை. ஆட்சியாளாகளுடைய அதிகாரம் வரம்பு படுத்தப்படுதற்கு ஒரே வழி நாட்டு மக்களுடைய ஒட்டுமொத்த நலனைப் பேணுகிற ஒரு சட்ட மன்றத்தை அமைப்பதுதான். அப்போதுதான், சட்ட மன்ற உறுப்பினாகள் தங்களுடைய அதிகாரத்தைப் பொதுநலனுக்காக அன்றி வேறு எதற்கும் பயன் படுத்தமாட்டார்கள்; மேலும் ஆட்சியாளர்களுடைய அதிகாரத்தைக் கட்டுபடுத்துதற்கு நிருவாகத்தைக் கட்டுப்படுத்தும் அதிகாரத்தைச் சட்டமனறத்துக்கு அளித்தலும் வேண்டும். வயது வநதோருககு வாக் குரிமை, ஆணடுதோறும்தேர்ந்தெடுக்கப்படும் பாராளு மன்றம் முதலியவை இருந்தால் இவவாறு ஆட்சியா ளர்களுடைய அதிகாரதலதக் கட்டுப்படுத்துதல் இயலும். தொழிலாளிகள் நிறைந்த நடுத்தர வகுப் பார் வாக்குரிமை பெறுதல் வேண்டுமென்றும், இவ் வகுப்பார் தஙகட்குக் கீழ்நிலையிலுள்ள வகுப்பாரை வழிநடத்திச் செல்லும் தகுதி உடையோர் என்றும் மில் கருதினார். ஆனால், நடுத்தர வகுப்பாரும் அரசி யலதிகாரத்தைத் தம் நலனுக்காகப் பயனபடுத்து தலும் கூடுமெனறு இவர் எணணவில்லை. மனிதர்கள் தத்தம் நலன்களை நன்கு அறியவும், அவற்றை அடை யவும் ஆற்றல் பெற்றுள்ளனரெனறு மில் எணணிய ஓர் ஊகத்தினடிப்படையில்தான், வயது வந்தோர் வாக்குரிமை என்ற கருத்து அமைந்துள்ளது.

**மதிப்பீடு:** சேம்சு மில்லின் கருத்தில் அரசியல் நிறு வனங்களுக்கோ அவற்றின் வளர்ச்சிக்கோ முக்கியத் துவம் அளிக்கப்படவில்லை. மேலும் அவர் ஒரு திட்டத்தை ஆதாரமாக வைத்தே மனிதருடைய நோக்கங்களைப் பற்றியும், இயல்பைப் பற்றியும் பல ஊகங்களை வகுத்தார். தத்துவ இயலான தீவிர வாதக் கொளகையானது, இயற்கை என்பதைப் பற்றிக் குறிப்பிட்டாலும், இயற்கையை விளஙகிக் கொள்ளுதற்கு உதவியாக எந்த ஒரு கருத்துக கொள் கையையும் அது வகுககவில்லை. அககொளகையானது மனிதருடைய பயன் கருதும் இயல்பைச்சுட்டிக் காட்டு கிறதாகையால், அது செயலறிவு இயல்புடையதாக (Empirical) இருக்கிறது; ஆயினும், அது கூறும அடிப் படைக் கருத்துகளை ஆய்வு முறையின் வாயிலாகச் சோதித்தறிதறகு ஒரு வழியையும் கூறவில்லை. அது கூறும் செயலறிவுக் கருத்தானது செமமை வடிவம பெறாத புலன்வழிக் கோட்பாடாக அமைந்துள்ளது.

பா.கு.

**துணை நூல்கள்:**


**Davidson William**, Political Thought in England, The Utilitarians from Bentham to J. S. Mill, New York. 1916.

**Hearnshaw, H.J.C.**, The Social and Political Ideas of Some Representative Thinkers of the Revolutionary Era, London, 1931.


**சேம்சு முதலாம்** (கி.பி. 1566-1625) இங் கிலாந்து, இசுக்காட்லாநது நாடுகளின் மன்னராவார். இவர் கி பி. 1566-ஆம் ஆணடு எடின்பர்கு கோட்டை யில் பிறந்தார். இசுகாட்லாந்து அரசியார் மேரியும், என்றி இசுடுவர்ட்டு என்பவரும் இவரின் தாய் தந்தையராவர். மேரி அரசியார் பதவி விலகியபோது கி பி.1567-ஆம் ஆணடு சூலை மாதம் 29ஆம் நாள பதின்மூன்று மாதங்களே நிரமபிய சேம்சு, சேம்சு முதலாம் என்ற பெயரில் இசுகாட்லாந்து மன்னராக

முடி சூட்டப்பட்டார். இவர் அறிவுக்கூர்மை பெற்ற வர். இளமையில் இவருக்குச் சமயபோதனை புகட்டப்பட்டது. வாலிப வயதில் இலென்னாக்சு. கோமகன் எச்மி இசுடுவர்ட்டு, சேம்சு இசுடுவர்ட்டு ஆகிய இருவரும் இவர் கவனத்தை ஈர்த்தனர்.



முதலாம் சேம்சு

சேம்சு முதலாம் பயந்த தன்மை கொணடவர். இவர் பாடல்களையும் வேட்டையாடுதலையும் பெரி தும் விரும்பினார்; அரசு விவகாரங்களைப் புறக் கணித்தார்; தம்மைப்பற்றி உயர்ந்த கருத்துக் கொணடிருந்தார். இஙகிலாந்தோடு கி.பி.1586-இல் ஏற்படுத்தப்பட்ட பாதுகாப்புக் கழகம் கி பி.1587-இல் கடுஞ் சோதனைக்குள்ளாயிற்று. சேம்சு மனனரின் அன்னையார் இங்கிலாந்து அரசியார் எலிசபெத் தினால் கொல்லப்பட்டார். ஆயினும், சேம்சு தமக்கு இங்கிலாந்தின் அரசத் தகுதி கிடைக்காமல போய் விடும் என்று அஞ்சியதால, எவ்வித கருத்தும் தெரி விக்கவில்லை. தென்மார்ககின இரணடாம பிரடெரிக் கின் புதல்வி ஆன் என்பவரை இவர் கி.பி.1589-இல் திருமணம் செய்துகொணடார்.

சேம்சு மன்னர், மன்னரின் உச்ச அதிகாரத்தை வற்புறுத்தினார்; ஐரோப்பாவில் சமாதானத்தைப் பரப்பினார்; அமெரிக்காவில குடியேற்றப் பகுதி களைப் பரவலாககினார். இவர் நாடாளுமனறத் தோடு தொடங்கிய சச்சரவு இறுதியில் இவர் மைந்தர் முதலாம் சார்லசின் ஆட்சியில் உளநாட்டுப் போரைத் தோற்றுவித்தது. இவர் 'தெய்விக அரச உரிமைக் கோட்பாட்டில்' ஆழ்ந்த நம்பிக்கை கொண் டிருந்தார். இககோட்பாட்டினபடி தமககு அரச உயர் தகுதி கடவுளிடமிருந்து கிடைத்ததால, தாம் அவ ருக்கு மட்டுமே பொறுப்புள்ளவராயிருக்க வேண்டு மெனக் கருதினார். அதனால், சட்டத்தை மதிக்காத பிரபுக்களையும், பிரசுபிடிரிய சமயத்தவர்களையும் அடக்கத் தீர்மானித்தார்.

எலிசபெத்து அரசியார் கி.பி. 1603 மார்ச்சு 24-ஆம் நாளை இறந்தபோது சேம்சு, இங்கிலாந்து மன்னர் முதலாம் சேம்சு என்ற தகுதி பெற்றார். ஆட்சியின்போது இவர் பல நெருக்கடிகளைச் சந்திக்க நேர்ந்தது; நாட்டின் வருவாய் குன்றிற்று; பொருள்களின் விலை ஏறிறறு; நாடாளுமன்றம் வன் முறைப் போக்கைப் பின்பற்றிற்று. ஐரோப்பாக் கண் டத்தில் சமயப்போர் மூளும் சூழ்நிலை தவிர்க்க முடி யாததாகக் காணப்பட்டது. சேம்சு மன்னர் பொது வாக இக்கட்டான சூழ்நிலையை மேலும் இக்கட்டா னதாக்கும் மனப்பக்குவம் படைத்தவரானதால் நெருக்கடி மேலும் மிகுதியாயிற்று

இவர் ஆட்சியின் முதற்பகுதியில் இசுபெயின், இங்கிலாந்து நாடுகளுக்கிடையே அறிவிக்கப்படாமல நடைபெற்று வந்த போர் நடவடிக்கைகள், கி.பி. 1585 முதல நிறுத்தப்பட்டு, கி பி.1604-இல் இவ்விரு நாடுகளுக்கிடையே சமாதான உடன்படிக்கை மேற கொள்ளப்பட்டது. அதன்மூலம் இங்கிலாநதின் பொருளாதாரம் வலுப்பெறறது. தொடர்ந்து மன னர் எலிசபெத்து அரசியார் நிறுவிய சமயத்தை ஆதரிக்கலானார். மன்னரிடமிருந்து பல சலுகை களை எதிர்பார்தத கத்தோலிக்கர்கள் அதிருப்தியுற றனர். சில சமய வெறியர்கள் கி.பி. 1605-ஆம் ஆண்டு நவம்பர் 5-ஆம் நாள் நாடாளுமன்றத்திற்கு மன்னர் வரும் போது அதனை வெடிமருந்து வைத் துத் தகர்க்கத் திட்டமிட்டனர். திட்டம் வெற்றி பெறவில்லை. மேலும் மன்னருக்கும் நாடாளுமன்றத் திற்குமிடையே உறவு பாதிக்கப்பட்டது. மன்னர், தாம் நாடாளுமன்றத்தைக் காட்டிலும் தகுதி படைத்தவர் எனறும், சட்டத்திற்கு மேலானவர் என்றும் கருதலானார். ஆனால் நாடாளுமன்றம், அரசு நடவடிக்கைகளில பெரும் பங்கு பெற விழைந் தது. பொதுவாகச் சேம்சு மன்னருககு இசுகாட் லாந்து மக்களிடம் கிடைத்த நன்மதிப்பினைப் போன்று இங்கிலாந்து மக்களிடம் நன்மதிப்புக கிடைக் கவில்லை. இங்கிலாநது நாடாளுமன்ற உறுப்பினர் களின் உணர்வுகளையும் உரிமைகளையும் மன்னர் உணர்ந்து கொள்ளவில்லை. எனவே, மன்னருக்கும் நாடாளுமன்றத்திற்கும் பூசல் தோன்றிற்று.

சேம்சு மன்னர் ஆட்சியின் இரண்டாம் பகுதி வலிமையிழந்தும் தகுதி குறைந்தும் காணப்பட்டது. இவர் கி.பி. 1616-இல் வயது முதிர்ந்தவராகக் காணப்பட்டார்; உடல்நிலை குன்றிற்று. அரசின்

செயல் திறன் குறையலாயிற்று. தவறான வழிமுறைகளில் வருவாய் பெறப்பட்டது. நீதித்துறை குறைகள் மலிந்து காணப்பட்டது. சர் இலயோனெல் கிரான் பீல்டு மேற்கொண்ட நிதி, நிருவாகச் சீர்திருத்தங்கள் அப்போதைக்கு முன்னேற்றம் கண்டன. செர்மனியில் சீர்திருத்தக் கிறித்தவர்களுக்கும், கத்தோலிக்கக் கிறித்துவர்களுக்கிடையே கி.பி. 1618-இல் முப்பதாண்டுப் போர் தொடங்கியபோது சேம்சு மன்னரின் துன்பங்கள் மிகுந்தன. நாடாளுமன்றத்தை கி.பி. 1621-இல் கூட்டினார். ஆனால், மன்னருக்கு நிதி ஒதுக்கீடு அனுமதிக்கத் தவறியதால் அயல்நாட்டு நிகழச்சிகளில் இவர் வலிமையிழந்து காணப்பட்டார்.

முதலாம் சேம்சு மன்னர் கி பி. 1625 மார்ச்சு மாதம் 27-ஆம் நாள் தமக்குப் பிடித்தமான எர் போர்ட்சயரிலுள்ள தியோபால்ட்சு இல்லத்தில் காலமானார். கே.மு.

**சேம்சு, இரண்டாம் (கி.பி. 1633-1701)** இங்கிலாந்து, அயர்லாநது நாடுகளின் மன்னராவர். இலண்டன் நகரத்தில் கி.பி. 1633-ஆம் ஆணடு அக்டோபர் திங்கள 4-ஆம் நாள பிறந்தார். இவர் முதலாம் சார்லசு மன்னரின் இளைய (இரண்டாம்) மகன். தாயார், அரசியார் என்றியெட்டா மேரியா இவர் யார்க்குக் கோமகனாக கி.பி. 1643-ஆம் ஆண்டு சனவரி மாதத்தில் நியமிக்கப்பட்டார்.



இரண்டாம் சேம்சு

உள்நாட்டுப் போர் கி.பி. 1648-இல் நடைபெற்ற போது சேம்சு மன்னர் இங்கிலாந்தைவிட்டு வெளியேறுமாறு வற்புறுத்தப்பட்டார். ஆதலின், இவர் பன்னிரண்டு ஆணடுகள் இசுபானிய, பிரெஞ்சுப் படைகளில சிறப்பாகப் பணியாற்றினார். முன்னிலை மீட்சிக் காலத்தில் கி.பி. 1660-இல் மீண்டும் இங்கிலாந்திற்குத் திரும்பிவந்தார். முதலில் எட்வர்டின் புதல்வி ஆன் ஐட்டு என்பவரை மணந்தார். பின்னர் கி.பி. 1673-ஆம் ஆண்டு செப்டம்பர் முப்பதாம் நாள கத்தோலிக்க இளவரசி மேரி பெட்ரைசு என்பவரை மணந்துகொணடார். தாம், கத்தோலிக்கக் கிறித்துவப் பிரிவிற்கு மாறிவிட்டதை இவர் கி பி. 1672 வெளிப்படையாக அறிவிததார். இரண்டாம் சார்லசு கி.பி. 1685-இல் இறந்தபின்னர், இவர் அரச பதவியேற்றார்.

உள்நாட்டுப் போரின்போது (கி.பி. 1648) சேம்சு பேர்பேக்சு என்பவரால் சிறைப்படுத்தப்பட்டார். எனினும், இவர் ஆலந்திற்குத் தப்பிச் சென்று விட்டார். இவர் இங்கிலாந்தின் சமயத்தையும் சட்டங்களையும் பாதுகாப்பதென உறுதி வழஙகினார். ஆட்சியைத் தொடங்கியபோது இவர் பெருஞ் செல்வாக்குப் பெற்றிருந்தார். மன்னருக்கு எதிராக கி.பி. 1685-இல் மேனமவுத்து எனபவரால நடததப்பட்ட, சரிவரத் திட்டமிடப்படாத கிளர்ச்சி, முழுமையான தோல்வி கண்டது. சமயத்தினபால் மன்னர் கொணடிருந்த நெருங்கிய பிணைப்பு உற்சாகமானதாகும். ஆனால், அரசியல் விவகாரங்களில் மன்னரின் ஆர்வம் குன்றிக் காணப்பட்டது. இஙகிலாந்தில் சீர்திருத்தக் கிறித்தவரின் வலிமையைப் பற்றி மன்னர் தெரிநது கொள்ளாமல் இருநதார்

ஆட்சித் தொடக்க காலத்திலிருந்தே சேம்சு மன்னர் கத்தோலிககக் கிறித்துவப் பிரிவின் அதிகாரத்தை மீட்பதிலும் முழுமையான அதிகாரம் பெற்ற மன்னராவதிலும் தம் உறுதியைவெளிப்படுத்தினார். மன்னருக்கும் ஏழு சமய நிருவாகிகளுக்கு மிடையே (Bishops) ஏற்பட்ட சிக்கலில் சமய நிருவாகிகள் விசாரணைக்குப்பின் தண்டனை ஏதுமின்றி மன்னிக்கப்பட்டனர். இந்நிகழ்ச்சி மக்களிடையேயும் படைத் துறையினரிடையேயும் பெரும் வரவேற்பைப் பெற்றது. கத்தோலிக்கப் பிரிவைச் சார்ந்த சேம்சு மன்னர், தம் அரசில் கத்தோலிக்கர்களுக்குப் பெரும் சலுகைகளை வழங்கினார். அதனால் மக்களுள் பெரும்பாலோர் மன்னரிடம் கோபம் கொண்டனர். இந்நிலையில் கி.பி· 1688-ஆம் ஆண்டு சூன் மாதம் மன்னரின் மனைவியார் ஓர் ஆண்மகவை ஈன்றார். மேலும், ஒரு கத்தோலிக்கர் இங்கிலாந்தின் மன்னராவதற்குவாய்ப்புண்டுஎன்பதை உணர்ந்த மன்னாரின் எதிர்ப்பாளர்கள் ஒன்றுசேர்ந்தனர். மாணபுறு புரட்சியின் மூலம் கி.பி. 1688-ஆம் ஆண்டு சேம்சு மன்னரின் சீர்திருத்தக் கிறித்துவப் பிரிவைச் சேர்ந்த (Protestants) புதல்வியார் மேரியும், அவர் கணவரான ஆலந்தின் ஆரஞ்சு வில்லியமும் இங்கிலாந்தின் இணை ஆளுநர்களாயினர். மன்னர் பிரான்சிற்கு ஓடிச்சென்று

எஞ்சிய வாழ்நாள் பகுதியை அங்கே கழித்தார். நாடாளுமன்றம் கி பி. 1689-ஆம் ஆண்டு பிப்பிரவரி மாதம் 12-ஆம் நாள் சேம்சு இரண்டாம் மன்னர் பதவி விலகியதாக அறிவித்து, மறுநாள் அப்பதவியை வில்லியத்திற்கும் மேரிக்கும் வழங்கிற்று. சேம்சு மன்னர் கி.பி. 1689-ஆம் ஆண்டு மார்ச்சு மாதம் அயர்லாந்திற்குச் சென்றார். தப்ளின் (Dublin) நகரில் கூட்டப்பட்ட நாடாளுமன்றம் இவரை மன்னராக ஏற்றுக்கொண்டது. எனினும், இவர் படைகள் வில்லியத்தின் படைகளால் தோற்கடிக்கப்பட்டதால், சேம்சு பிரான்சிற்குத் திரும்பிச் சென்றார். இவர் புனித செர்மெய்ன் என்ற இடத்தில் கி.பி. 1701 செப்டம்பர்த்திங்கள் 5-ஆம் நாள் உயிர்நீத்தார்.

கே.மு.

**சேம்பர்லேன், ஆர்தர் நெவில்:** இருபதாம் நூற்றாண்டின் முற்பகுதியில் இங்கிலாந்து நாட்டு அரசியலில் முக்கியமான பங்கை வகித்தவர்களுள் ஒருவர் ஆர்தர் நெவில் சேம்பர்லேன் (Arthur Neville Chamberlan). இவர் கி.பி. 1869 -ஆம் ஆண்டு வார்விக்சயரில் (Warwickshire) உள்ள பர்மிங்காம் (Birmingham) நகரில் பிறந்தார். இவர்



சேம்பர்லேன்

தந்தை சோசப்பு சேம்பர்லேன், கி.பி. 19-ஆம் நூற்றாண்டின் இறுதியில் சிறந்து விளங்கிய அரசியல் வல்லுநர்களுள் ஒருவர். இவர் அமைச்சராகவும் பணியாற்றியவர். இவருடைய ஒன்றுவிட்ட உடன்பிறப்பாளர் ஆசுட்டன் சேம்பர்லேனும் அமைச்சராகப் பணியாற்றியவர்; நோபல் சமாதானப் பரிசை 1925 -ஆம் ஆண்டில் பெற்றவர்.

பகாமாவைச் (Bahama)சார்ந்த ஆணடுரோசுத் தீவில் தம் தந்தைக்குச் சொந்தமாக இருந்த சணல் தோட்டத்தைச் சேம்பர்லேன் கவனித்து வந்தார்; பின்னர்ப் பர்மிங்காமில் உள்ள உலோகத் தொழிற்சாலையை வளம்பட நடத்தி வந்தார். இவர் நகரத் தந்தையாக (Mayor) 1915-இல் பதவியேற்றார். நகர சபையின் சேமிப்பு வங்கியை 1916-இல் இவர் தொடங்கிவைத்தார். பிரிட்டனில் இத்தகைய வங்கி வேறெங்கும் அமைக்கப்படவில்லை. இவர் 1916-ஆம் ஆண்டு திசம்பர் மாதம் இலாயிடு சார்சின் தலைமையிலான முதலாம் உலகப்போர்க் கூட்டமைச்சரவை அரசின் கீழான தேசிய ஊழியத்தின் (National Service) இயக்குநராகப் பணியாற்றினார். போதிய அதிகாரமில்லை என்பதால் இவர் 1917-இல் அப்பதவியைத் துறந்தார். மக்கள் சபையில் பழைமைப் பற்றுக் கட்சியின் (கன்சர்வேட்டிவ்) உறுப்பினராக இவர் 1918-ஆம் ஆண்டு திசம்பர் மாதம் பதவியேற்றார். தலைமைத் தபால் அதிகாரியாகவும் இவர் 1922 முதல் 1923 வரை பொறுப்பேற்றார். படைவீரர்களுடைய சம்பளப் பட்டுவாடாத் தலைமை அதிகாரியாக 1923-இல் நியமிக்கப்பட்டார். அந்த ஆண்டிலேயே இவர் மக்கள் நலவாழ்வு அமைச்சராகப் பொறுப்பேற்றார். அப்பொறுப்பை இவர் 1924 முதல் 1929 வரையில், வகித்ததோடு 1931-ஆம் ஆணடிலும் மீண்டும் வகித்தார். நிதிஅமைச்சராக இவர் 1923-24 வரையிலும், 1931-37 வரையிலும் பதவி வகித்தார். அபிசீனியா நாட்டினை இத்தாலி ஆக்கிரமித்துக் கொணடபோது இத்தாலிக்கு எதிராகப் பொருளாதாரத் தடைகளை விதிக்கவேண்டுமென்று இவர் முதலில் வாதாடினார். ஆயினும், அவற்றைக் கைவிட்டுவிட வேண்டுமென்று வெளிப்படையாக அறிவித்த முதல் உயாநிலை அமைச்சரும் இவரேயாவார். பால்டுவின்னுக்குப் பிறகு 1937-ஆம் ஆண்டு இவர் பிரதமராகப் பொறுப்பேற்றார். அப்பொறுப்பை 1940-ஆம் ஆண்டு வரை வகித்திருந்தார்.

இவர் பொறுப்பு வகித்திருந்த காலத்தில் பன்னாட்டு உறவுகள் சீரழியத் தொடங்கிய காலமாக இருந்தது. அதற்குச் சற்று முன்பு இத்தாலி, அபிசீனியாவைத் தாக்கி அங்குத் தனது ஆட்சியை நிலைநிறுத்தியது. சர்வதேச சங்கம் அந்த ஆக்கிரமிப்பைத் தடுத்து நிறுத்தத் தவறிவிட்டது. செருமனியில் இட்லரின் ஆட்சி ஏற்படுத்தப்பட்டது. வெர்சே உடனபடிக்கை செருமனிக்குச் செய்த தீங்கை ஒழிக்க இட்லர் உறுதி பூண்டார். அதனோடு செருமனியின் பொருளாதார நிலை சீரடையச் செருமனியின் கிழக்கு எல்லையை உருசியாவிலுள்ள யூரல் மலைத் தொடர் வரை பரப்பவேண்டும் என்றும் அவர் கருதினார். அவர் எண்ணம் ஈடேறச் செருமனிக்கும் உருசியாவிற்கும் இடையே இருந்த சுதந்திர நாடுகளையும் உருசியாவின் ஒரு பகுதியையும் வெல்ல வேண்டியது தேவையாயிற்று. எனவே, இட்லரின் திட்டம் ஐரோப்

பிய அமைதிக்கு ஊறு விளைவிக்கக் கூடியதாக அமைந்திருந்தது. இசுபெயினில் உள்நாட்டுப் போர் நடைபெற்று வந்தது. அதில் பாசிசுட்டு இத்தாலி தீவிரமாக ஈடுபட்டிருந்தது. ஏனைய ஐரோப்பிய அரசுகள் அதில் ஈடுபட அது வழிவகுத்தது. அதன் காரணமாக ஐரோப்பிய நிலை சீரழிந்தது. இத் தகைய சூழ்நிலையில் ஐரோப்பிய சமாதானத்தை எப்பாடுபட்டாகிலும் நிலைநாட்ட வேணடுமெனறு சேம்பர்லேன் கருதினார்.

சேம்பர்லேன் முதலில் இத்தாலியையும் செருமனி யையும் பிரித்துவைக்க விருமபினார். இரு நாடுகளும் அப்போது சருவாதிகாரிகளின ஆட்சிகுட்பட்டிருந் தன. அவர்கள் நாட்டு முன்னேற்றததிற்குப் போரை சிறந்த கருவியாகக் கருதி வந்தனர். எணணத்தால் ஒன்றுபட்ட இரு நாடுகளையும் பிரிக்கச் சேமபர் லேன பல வழிகளைக் கையாணடார். அபிசீனியாவில் இத்தாலி கொணடிருந்த மேலாதிக்கத்தை இவர் ஒப்புககொண்டார். இசுபானிய நாட்டில் இத்தாலி யின் ஆதரவுபெற்ற பாசிசுட்டுகளுககும் சனநாயக வாதிகளுக்கும் நடைபெற்று வநத உள்நாட்டுப் போரில் பாசிசுட்டுச் சக்திகளுக்கு எதிராகச் சன நாயக நாடான பிரிட்டன் ஈடுபட்டால், செருமனி யின் வலையில் இத்தாலி விழுநதுவிடும் எனபதற்காகப் பிரிட்டனை அதில் ஈடுபடுத்தவிலலை. ஆனால,இவர் முயற்சி வெற்றி பெறவில்லை இறுதியில் இததாலியும் செருமனியும் உடனபாடு ஒனறைச் செயதுகொண் டன.

சேம்பர்லேனுடைய பெயர், குறையாற்றுக் கொள்கைக்கு (Policy of Appeasement) இணையாக வைத்துப் பேசப்படுகிறது. இட்லருடைய செரு மனிக்கு நியாயமான குறைகள் இருககினறன. அவற் றைப் போக்கிவிட்டால் இட்லர் போரக்கோலம் பூண மாட்டார் என்பது அககொள்கையின் அடிப்படைக் கருத்தாகும். செருமானியர்கள வசித்துவநத ஆசுத் திரியாவைச் செர்மனியிடமிருந்து பிரித்து அதனைத் தனி நாடாக அமைதது, அந்நாட்டைச் செருமனி யுடன் எக்காலத்திலும் இணைக்கக்கூடாது எனபது தேசிய கொளகைக்கு முரணாகக் காணப்பட்டது. இட்லர் அதைச் செருமனியோடு ஆசுததிரிய மகக ளின் விருப்பத்திற்கேறப இணைத்துக்கொள்வது சரி யெனத் தேசிய கொள்கையில் நம்பிககை வைத்தி ருந்தவர்கள் எண்ணினார்கள். ஆசுத்திரியாவைச் செருமனியுடன் இணைத்தபிறகு இட்லர் தம் கவனத் தைச் செக்கோசுலாவேகியா நாட்டின்மீது திசை திருப்பினார். அங்குள்ள சுடேட்டன்லாந்துப் (Sudetenland) பகுதியில் 3.5 மில்லியன் செருமனியர் கள் வசித்து வந்தனர். ஏனைய ஐரோப்பிய நாடு களில் வசித்துவந்த சிறுபான்மையினர்களைக் காட்டி லும் அவர்களுடைய நிலை மேலாக இருந்தது. கூட்டு அமைச்சரவையில் அவர்களுக்கு இடம் அளிக்கப்பட் டது. தனிப் பல்கலைக்கழகங்களும் பள்ளிகளும் ஏற் படுத்தப்பட்டிருந்தன. அரசு பதவிகள், பொதுப் பணி கள் ஆகியவற்றில் அவர்களுடைய எண்ணிக்கைக்கு ஏற்றவாறு இட ஒதுக்கீடு செய்ய அரசு முன்வந்தது. ஆனால் இட்லருடைய தூணடுதலால் அவர்கள் தன் னாட்சியை வேண்டினர். அதனால் செருமனிக்கும் செக்கோசுலோவேகியாவிற்கும்இடையிலான உறவு சீரழிந்தது. போர் ஏற்படக்கூடிய நிலை உருவாகி யது. செக்சோசுலோவேகியாவைப் பிரிட்டன் காப் பாற்ற வேணடியதற்கான உடன்படிக்கை ஏதுமில்லை என்றாலும், சேம்பர்லேன் 1938-இல ஒரு தூதுவரை அனுப்பிச் சுடேட்டன் செருமானியர்களுக்கும் செககு (Czcehs) மக்களுக்குமிடையே ஏற்பட்டிருந்த பூசலை நன்முறையில் தீர்க்க முறபட்டார். அத்தூதுவர் இரு சாராரையும் தம் அறிசகையில் குறை கூறியிருந்தார். செருமன் படையெடுப்பு 1938-ஆம் ஆண்டு,ஏறபடுவது போல் இருந்தது. பிரான்சும் உருசியாவும் செககு நாட்டிற்கு உதவவேண்டிய கட்டத்தில இருந்தமை யாலும், பிரானசிற்கு ஆதரவாகப் பிரிட்டன போரில் ஈடுபட வேண்டியதாக இருந்ததாலும் ஐரோப்பியப் போர் ஏற்பட இருந்தது. அதைத் தடுக்கச் சேம்பர் லேன் 1938-ஆம் ஆண்டு மூனறு முறை செருமனிககுச சென்று இட்லரைச் சந்தித்தார். அச்சந்திப்பின போதுசெருமானியர்கள் வாழும் சுடேட்டன்பகுதியை மட்டுமே தாம் பெற விரும்புவதாகவும் அதுவே தாம பெற விரும்பும் கடைசிப் பகுதி என்றும், வேறு மக்க ளைத் தம் நாட்டரசின்கீழ் கொண்டுவர விருப்பங் கொள்ளவில்லை என்றும், சுடேட்டன் பகுதியைப் பெற உலகப்போர் ஒனறைச சநதிககத் தாம் ஆயத்த மாக இருப்பதாகவும் இட்லர் கூறினார். இட்லரு டைய தேவையை நிறைவேற்றிவிட்டால் உலகப் போரைத் தடுத்துவிட இயலும் என்பதால் சேம்பர் லேன் அவருடன் மூனிசசு (Munich) ஒப்பந்தம் ஒன றைச்செய்துகொணடார். அதில் இத்தாலியும் பிரான சும் கையெழுத்திட்டன. சம்பந்தப்பட்ட செக்கு அரசு அதில ஈடுபடுத்தப்படவில்லை. செக்கு அரசு அந்த ஒப்பந்தத்தை ஏற்றுச் சுடேட்டன் பகுதிக்குத் தன்னாட்சி வழங்கவிலலை என்றால் பிரானசும், பிரிட்டனும் அதனுடைய நலன்களைக் காப்பது கடி னம் என்று கூறி அவ்வொப்பந்தத்தை அதனமீது திணித்தனர். மூனிச்சு உடன்பாட்டைச் செய்து கொணடபிறகு நாடு திரும்பிய சேம்பர்லேன் மக்கள ஆதரவு பெற்ற வீரராகக் காட்சியளித்தார். கௌர வத்துடன் சமாதானம் கொண்டுவந்தவர் என்று இவர் போற்றப்பட்டார்.

இந்த உடன்பாடு உலகப்போரைத் தடுத்து நிறுத்தவில்லை. இட்லருடைய நாடு பிடிக்கும் ஆசை தணியவிலலை. அதன் விளைவாக அவர் செக்கு நாட்டின் மீதும் போலந்தின் மீதும் போர் தொடுத்தார். எனவே, சேம்பர்லேனின குறையாற்றுக் கொளகை தோல்வியில் முடிந்தது. எனினும், அக்கொள்கை இங்கிலாநது போருக்கு வேண்டிய ஆயத்தங்களை மேற்கொள்ளப் போதிய காலத்தை ஏற்படுத்தித்தந்தது. நாடு திரும்பிய உடனே இவர் படைப்பெருக்கத் திட்டத்தைத் துரிதப்படுத்தினார். குறிப்பாக, அரசு விமானப் படையைப் பலப்படுத்தினார். அதிலிருந்து இட்லருடைய வாக்குறுதியை நம்ப இயலாது என்பதை இவர் உணர்ந்திருநதார் என்பது புலனாகும்.

இட்லர் சிலகாலம் கழித்துச்செக்கு நாட்டின் மீது போர் தொடுத்தபோது சேம்பர்லேன் தமது குறையாற்றுக் கொள்கையைக் கைவிட்டார். பிரான்சும் இங்கிலாந்தும் போலந்துக்கு அளித்துள்ள வாக்குறுதிகளை வெளிப்படுததினார். அதை உணர்ந்து இட்லர் போலந்து மீது படையெடுக்கமாட்டார் எனபது இவர் எண்ணம். அதையடுநது நாட்டு இளைஞர்களுக்குக் கட்டாயப் போர்ப் பயிற்சியை அமைதிக காலத்தில அளிக்கத் திட்டமிட்டார். இவ்வாறு செய்தது ஆங்கிலேயே வரலாற்றில இதுவே முதல் தடவையாகும். பிரான்சு, பிரிட்டன், உருசியா ஆகிய மூன்று நாடுகளும் ஒன்றுக்கொன்று உதவும் திட்டம் ஒன்றை உருவாக்கினார். ஆனால, உருசியாவும் செருமனியும் ஒன்றுடன மற்றொன்று போர் செய்து நாட்டைப் பறிததுக் கொள்ளாது என்ற வகையில் ஒப்பநதம் செய்துகொண்டதால் சேம்பர்லேனுடைய திட்டம் நிறைவேறவில்லை.

இட்லர் 1939-ஆம் ஆணடு செப்டம்பர் முதல் நாள் போலந்தின் மீது படையெடுத்தார். மூன்றாம் நாள் சேம்பர்லேன் தலைமையில் இஙகிலாந்து போரில் இறங்கியது. போர் அமைச்சரவையில தம் கொள்கையைக் குறை கூறிவநத சர்ச்சிலைச் சேர்த்துக்கொணடார். ஆனால்,தாராளக் கட்சியினரும் தொழிற் கட்சியினரும் அந்த அமைச்சரணியில் சேர மறுத்துவிட்டனர். நார்வேக்கு 1940-இல் அனுப்பப்பட்ட ஆஙகிலப்படை தோல்வியடைநதது. அதன பயனாகச் சேம்பர்லேன் மக்கள் சபையில பல பழைமைப் பற்றுக் கட்சி உறுப்பினர்களின் ஆதரவை இழந்தார். எனவே, இவர் தம் பதவியை விட்டுவிலகினார். அந்த நாளிலேயே பெல்சியததினமீது செருமனி படையெடுத்தது. அன்று அமைக்கப்பட்ட கூட்டமைச்சரவையில் இவர் இடம்பெற்றார். தமது அமைச்சர் பதவியை 1940-ஆம் ஆணடு துறந்தார். கட்சித் தலைமைப் பொறுப்பையும் விட்டுவிட்டார். அதே ஆணடு நவம்பரில் ஆம்சயரில் உள்ள எக்பீல்டு (Heckfield) என்னுமிடத்திற்கருகே காலமானார். தி.ஆ.இரா.

**சேமிப்பு**: வருமானத்தில் செலவு போக எஞ்சியது சேமிப்பு. பொருளியல் கண்ணோட்டத்தில் இது சிறப்பு வாய்ந்த ஒன்றாகக் கருதப்படுகிறது.

சேமிப்பை (Savings) உண்மைச் சேமிப்பு என்றும், பணச் சேமிப்பு என்றும் இருவகைப்படுத்தலாம். நிகழ்கால நுகர்விற்காகப் பயன்படுத்தப்படாத பொருள்கள், சாதனங்கள், வளங்கள் ஆகியவை உண்மைச் சேமிப்பாக இருக்கின்றன. இததகைய உண்மைச் சேமிப்பைத் தொகுப்பது அரிது. எனவே, அதனைப் பண அலகுகளின் அடிப்படையில் வெளியிடும் பொழுது பணச்சேமிப்பு எனப்படுகிறது.

பொருள்களின் விலைநிலைகள் மாறிக் கொணடேயிருக்கின்றன. நிலவுகின்ற விலை நிலையில் நிகழும் சேமிப்பு, பணச் சேமிப்பாக விளங்குகிறது. ஆணடு தோறும் நடப்பு நிலையில வெளியிடப்படும் சேமிப்புகளை விலைக் குறியீட்டுத் தொடர் எண அடிப்படையில் மாறாத விலையில் சேமிப்புகளாக மாற்றிவிட முடியும். அதாவது, பணச் சேமிப்பை உணமைச் சேமிப்பாக மாற்றவிலைக குறியீட்டு எண்கள் மிகவும் பயன்படுகின்றன.

தொகு அளவு ஆய்விற்காக நாட்டில் உளள அனைத்துப் பொருளாதார அலகுகளையும் குடும்பங்கள், தொழில் துறையில் உள்ள பதிவு செய்யப்பட்ட கழகங்கள், அரசாங்கம் என மூன்று பிரிவுகளாகப் பிரிக்கலாம். குடும்பங்களில் ஒரு குறிப்பிட்ட நோக்கத்தை நிறைவேற்றுவதற்காகச் சேமிக்கிறார்கள். நோக்கத்தை நிறைவேற்றுவதில் மிகவும் தீவிரமாக இருப்பவர்கள் தங்களுக்குப் பழககப்பட்ட வாழ்க்கை வசதிகளை இடைக்காலமாக இழக்கவும் தயாராக இருக்கிறார்கள். இஙஙனம் தங்கள வசதிகளைக் குறைத்துக் கொணடு, செலவைக் கட்டுப்படுத்திச் சேமிப்பை மிகுவிக்கிறார்கள். எனவே, குடும்பங்களில வருமானத்தை விட இலட்சியம் அல்லது நோக்கத்தில் தீவிர ஈடுபாடு சிறப்புப் பெறுகிறது. ஒருசிலர் தங்கள் முதுமைக் காலத்திற்கான பாதுகாப்பு நோக்கத்தை முககியமாகக் கருதலாம், சிலர் தங்கள் குழந்தைகளின் கல்விக்காகச் சேமிக்கலாம், சிலர் தங்கள் குழந்தைகளின் திருமணத்திற்காகச் சேமிக்கலாம், மற்றும் சிலர் சொததுகளை வாங்குவதற்காகவோ, உருவாக்குவதற்காகவோ வீடு கட்டுவதற்காகவோ, வாகனங்களை வாங்குவதற்காகவோ சேமிக்கலாம்.

குறிப்பிட்ட நோக்கத்திற்காகச் சேமிப்பவர்கள் பெரிதும் ஒப்பந்த அடிப்படையில் திகழும் 'ஒப்பந்தச் சேமிப்புகளை' விரும்புகிறார்கள் (Contractual Savings). எடுத்துக்காட்டாக, ஆயுள் ஈட்டுறுதிக் கழகத்தில் ஈட்டுறுதி செய்து கொள்ளுதல், சேம நிதியில் மாதந் தோறும் நிதி செலுத்துதல், தொடர் வைப்புத் திட்டத்தில் சேருதல், மற்றும் சீட்டு நிதி நிறுவனங்களில் உறுப்பினராகச் சேருதல முதலியன குறிப்பிடத்தக்கவை. இங்ஙனம் குடும்பங்களில் மாதச் செலவைக் குறைத்துக் கொண்டு சேமிப்பை மிகுவிக்கின்றார்கள்.

தொழில் நிறுவனங்களின் செலவில உற்பத்திககான ஆக்கச் செலவு ஒரு கூறாக மட்டுமே உள்ளது. ஈட்டும் வருவாயில் ஆக்கச் செலவு போக எஞ்சி இருப்பவை மொத்த இலாபமாகக் கருதப்படும். மொத்த இலாபத்தில் தேய்மானம், பங்கீட்டுக்கான இலாப விழுக்காடு, வரி செலுத்துல, காப்பு நிதி மற

**இந்தியாவின் மொத்தச் சேமிப்பு**

| ஆணடுகள | பொதுத துறை | தனியார் துறை | குடும்பங்களா | மொத்தச் சேமிப்பு |
|---|---|---|---|---|
| 1951-52 முதல் | 1.7 | 1.0 | 7.7 | 10.4 |
| 1955-56 | (16.3) | (9.6) | (74.1) | (100) |
| 1956-57 | 2.0 | 1.3 | 9.0 | 12.3 |
| 1960-61 | (16.3) | (10.6) | (73.1) | (100) |
| 1961-62 | 3.3 | 1.9 | 9.2 | 14.4 |
| 1965-66 | (22.9) | (13.2) | (63.9) | (100 0) |
| 1966-67 | 2.5 | 1.3 | 11.1 | 14.9 |
| 1968-69 | (16.8) | (8.7) | (74.5) | (100.0) |
| 1969-70 | 3.0 | 1.7 | 12.3 | 17.0 |
| 1973-74 | (17.6) | (10.0) | (72.4) | (100.0) |
| 1974-75 | 4.4 | 1.6 | 15.0 | 21.0 |
| 1978-79 | (21.0) | (7.6) | (71.4) | (100.0) |

**குறிப்பு:**

(1) மொத்தச் சேமிப்பு அங்காடி விலையில் நாட்டின் உள்நாட்டு உற்பத்தியின் விழுக்காடாகக் கொடுக்கப்பட்டுளளது. புள்ளி விவரங்கள் மூன்று ஆண்டு நகரும் சராசரியை அடிப்படையாகக் கொணடவை.

(2) நாட்டின் மொத்தச் சேமிப்பை 100-ஆக எடுத்துக் கொண்டு ஒவ்வொரு துறையின் பங்கினையும் அடைப்புக் குறிகளின் இடையில் காணலாம்.

**ஆதாரம்:**

இந்திய இருப்பு வங்கியின் சேமிப்புக் குழுவின் அறிக்கையிலிருந்து Report of the Working Group on Savings, Feb. 1982 (RBI), Quoted by—Ruddar Datt & KPM Sundharam-INDIAN ECONOMY, 1986, S. Chand & Co., Ltd., New Delhi-110 055 P. 243.

ம.தி.

றும் பகிர்ந்து அளிக்கப்படாத இலாபம் முதலியன அடங்கும். இவற்றுள் தேய்மானம், காப்பு நிதி, பகிர்ந்து அளிக்கப்படாத இலாபம் முதலியன தொழிற் கழகங்களின் சேமிப்பாகக் கருதப்படுகின்றன. எதிர் காலத்தில் உற்பத்தி அளவை விரிவுபடுத்தவும் நவீனமயமாக்கவும் தொழிற் கழகங்கள் தங்களுக்கு வேண்டிய நிதி வளங்களைத் தாமே திரட்டிக் கொள்கின்றன.

அரசாங்கத்தின் வரவு செலவுத் திட்டத்திலும் வருவாயைவிடக் குறைவாகச் செலவு செய்யும் பொழுது சேமிப்பு ஏற்படுகிறது. நடப்புக் கணக்கில் ஏற்படுகின்ற சேமிப்பு வருவாய் மிகுதி (Revenue Surplus) எனப்படும். நடப்புக் கணக்கைப் போலவே மூலதனக் கணக்கிலும் சேமிப்பு ஏற்படலாம். அரசுக் கடன்களைத் திருப்பிக் கொடுக்கும் காலங்களில் இங்ஙனம் மூலதன மிகுதித் தோற்றுவிக்கப்படுகிறது.

இது வரை மூன்று துறைகளிலும் தனித் தனியாகச் சேமிப்பு ஏற்படுவதற்குக் காரணங்கள் யாவை என்பது விளக்கப்பட்டன. இப்பொழுது, சேமிப்பை மொத்த அளவில் முற்றிலும் புதிய கண்ணோட்டத்தில் காண வேண்டும். பொதுவாக ஒருவரது செலவு மற்றவரது வருவாயாக விளங்குகிறது. எனவே, நாட்டின் மொத்த வருமானம் உயர வேண்டுமானால் மொத்தச் செலவு மிகுதியாக வேண்டும். எனவே, செலவுத் தொகையைக் கட்டுப்படுத்தும் எந்த நோக்கமும், எந்த நிகழ்ச்சியும் வருமானத்தைக் கட்டுப்படுத்தும் செயலாக விளங்கும். சேமிப்பை ஏற்படுத்துவதற்காகச் செலவுத் தொகையைக் குறைக்க வேண்டியிருப்பதால், சேமிப்பை மிகுவிப்பதால் வருமான வளர்ச்சி தடைப்படுகிறது என்று எண்ணுகின்றார்கள.

வருமானத்தை நீரோட்டத்திற்கு ஒப்பிடுவது மரபு. நீரின் மட்டம் வருமானமாகவும், சேர்க்கப்படும் நீரின் அளவு பல்வகைச் செலவுத் தொகையாகவும், எடுக்கப்படும் நீரின் அளவைச் சேமிப்பாகவும் கருதலாம். சேமிப்பை அதிகரிப்பதால் ஆற்றின் நீர் மட்டம் குறையும். சேமிப்பு ஒரு கசிவு சக்தியாகும் (Leakage force). வருமான ஓட்டத்திலிருந்து சேமிப்பு என்று அழைக்கப்படும் கசிவு காரணமாக வெளியேறப்படும் நீரின் அளவிற்கு ஈடாகக் கூடுதல் செலவினம், முதலீட்டுச் செலவினம், மூலதன ஆக்கச் செலவு என்ற பெயரில் கூடுதல் செலவுத் தொகையை ஏற்படுத்து வேண்டும். இத்தகைய கூடுதல் செலவினம் ஓர் உந்து சக்தியாகச் செயற்படுகிறது. எனவே, நாட்டின் வருமானம் நிலைபெற்று இருக்க வேணடுமானால் கசிவுச் சக்தியான சேமிப்பிற்கு ஈடான உந்து சக்தியான முதலீடு அமைய வேண்டும். வருமான வளர்ச்சி ஏற்பட வேண்டுமானால் நிகர அளவில் கூடுதல் முதலீடு அதிகமாக இருத்தல் அவசியம். ஆகையால் தான் வளர்ச்சிக் கோட்பாடுகளிலும், வளர்ச்சி உருப்படிவங்களிலும் (Growth Models) சேமிப்பு இன்றியமையாத ஒரு காரணியாக விளங்குகிறது

இந்தியாவில் 1951-52லிருந்து 1979 வரையிலான ஆண்டுகளின் சேமிப்பு, நாட்டின் மொத்த வருமானத்தின் விழுக்காடாகக் கொடுக்கப்பட்டுள்ளது. பொதுத் துறையின் சேமிப்பு விழுக்காடு 1.7லிருந்து 4.4 ஆக உயர்ந்துள்ளது. தனியார் துறை நிறுவனங்களின் சேமிப்பு 1951-52 முதல்1955-56 ஆகிய ஐந்து ஆண்டுகளில் 1.0 விழுக்காடாகஇருந்தது 1974-79-ல 1.6 விழுக்காடாக உயர்ந்து சென்றது. குடும்பங்களின் சேமிப்பு 7.7 விழுக்காட்டிலிருந்து 15.0 விழுக்காடாக உயர்ந்தது. அரசுத் துறை, தனியார் துறை மற்றும் குடும்பங்கள் ஆகியவற்றின் மொத்தச் சேமிப்பு நாட்டின் மொத்த வருமானத்தில் 10.4 விழுக்காட்டிலிருந்து 21.0 விழுக்காடாக அதிகரித்து உள்ளது. (காண்க: உள்நாட்டுச் சேமிப்பு) ம.தி.

**துணை நூல்கள்:**

**Locke Anderson, W.H. Ann Putallaz, and William G. Shepherd**, Economics Prentice Hall of India Ltd., New Delhi-110 001, 1986.

**Paul A. Samuelson**: Economics—International Student Edition—Mc Graw Hill, 1980.

**சேமிப்புக் கணக்குகள்**, தனி ஒருவராகவோ கூட்டாகவோ தங்கள் பெயரில், வணிக வங்கியிலோ, அஞ்சல் நிலையத்திலோ சேமிப்புக் கணக்கு ஒன்று தொடங்கி அதில் சிறு சிறு தொகையாக அல்லது மொத்தமாக ஒரு குறிப்பிட்ட காலத்திற்குச் சேமித்து வைக்கும் பழககத்தை ஊக்குவிக்கும் கருவியாகும். உலகில் வாழும் மக்கள் தங்கள் வருமானத்தினின்று ஒரு பகுதியினைச் சேமித்து வைக்கவேண்டியது இன்றியமையாததாகும். தனி ஒரு மனிதனின் சேமிப்பை ஊக்குவிக்கும் பலவகைச் சேமிப்புக் கணக்குகள் (Savings Accounts) பழக்கத்தில் இருக்கின்றன. இத்தகைய கணக்குகள், மனிதனை நோககியுள்ள இன்ப துன்பங்களை அவன் எதிர்கொண்டு மேற்கொள்ள உதவுகின்றன. வணிக வங்கியில சேமிப்புக் கணக்கு: இந்தியாவில் 1984-ஆம் ஆண்டு முடிவில் இயங்கி வரும் வங்கிகளின் எண்ணிக்கை 30,980 ஆகும். கிட்டத்தட்ட 13,000 மக்களுக்கு ஒரு வங்கி என இயங்கி வருகின்றன. கூறப்பட்ட மொத்த எண்ணிக்கையினுள் பாரத வங்கியின (State Bank of India) எண்ணிககை 31.12.85 முடிய 7,473

ஆகும் இதன் துணை வஙகிகளின் எண்ணிக்கை 31.12.85 முடிய 3,421 ஆகும். இவவங்கிகளில் தொடங் கப்பட்டுளள சேமிப்புக் கணக்கின் விவரங்கள் பட்டி யலில கொடுக்கப்பட்டுள்ளன.

பவர் அறிமுகக் கடிதம் ஒன்றை வங்கியில் கொடுக்க வேண்டும். தம் எடுத்துக்காட்டுக் கையெழுத்துகளை யும் (Speciman Signature) கொடுக்கவேணடும். அறி முகக் கடிதம், எடுத்துக்காட்டுக் கையெழுத்து,

**சேமிப்புக் கணக்கு**

| வங்கியின் பெயர் | 31.12.85 அன்று | 27.12.85 அன்று | 31.1.86 அன்று |
|---|---|---|---|
| | (உருபாய் கோடிக் கணககினில்) | | |
| பாரத வங்கி | 12,912 | 15,837 | 16,057 |
| இதன துணை வங்கிகள்: ஐதராபாது மாநில வங்கி, செய்ப்பூர், பீகார் மாநில வங்கி, இந்தூா மாநில வங்கி, திருவனந்தபுரம் மாநில வங்கி, மைசூர் மாநில வங்கி, பாட்டியாலா மாநில வங்கி, | 3,547 | 4,193 | 4,243 |
| மற்றைய வரைப்படுத்தப்பட்ட இந்திய வாணிக வங்கிகள் | 58,103 | 68,478 | 69,561 |
| சேமிப்புக் கணக்கினில் சேமிககப்பட்ட மொத்தத் தொகை: உரு | 74,562 | 88,508 | 89,861 |

**வட்டி:** ஏறத்தாழ 90ஆயிரம் கோடி உருபாய், மக்களால வணிக வங்கிகளில் தொடங்கப்பட்ட சேமிப்புக் கணக்குகளில் சேமிக்கப்பட்டுளளதைப் பட்டியல் எடுத்துரைக்கிறது. சேமிககப்பட்ட இத் தொகைக்கு வங்கியால் வட்டி அளிக்கப்படுகிறது. இவ் வட்டியைக் கணக்கிட்டிட ஒவ்வொரு மாதத்திலும் 10-ஆம் தேதியிலிருந்து அம்மாதக் கடைசிவரை உளள நாளகளில் வைக்கப்பட்டுள்ள குறைவான தொகைக்கு 5½ விழுக்காடு எனக் கொள்ளப்படும். இவ்வாறு கணக்கிடப்பட்ட வட்டித்தொகை ஒவ் வொரு ஆறு மாதத்திற்கு ஒருமுறை (சூன், திசம்பர் ஆகிய மாதங்கள்) சேமிப்புக் கணககுகளில் வரவு வைக்கப்படும். இத்தகைய கணக்கினினறு சேமிப்புக் கணககாளர் குறிப்பிட்ட தடவைதான் தன் சேமிப் புப் பணத்தை எடுததுக கொள்ளும் வாயப்பு உணடு. குறிப்பிட்ட தடவைகளை வங்கிகள் தங்கள் நடை முறை விதிகளில் கூறியுள்ளன.

**செயல்முறைகள்:** சேமிப்புக் கணக்கினைத் தொடங்க விருமபுபவர் குறைந்த அளவுத் தொகை யாக உருபாய் 5/-அல்லது உருபாய் 10/- ஐப் போட வேண்டும். இத்தகைய கணக்கைத் தொடங்க சேமிப் குறைந்த சேமிப்புத் தொகை ஆகியவற்றை வங்கி பெற்றுக்கொண்டு தனி ஒருவருக்கு அல்லது ஒரு வருக்கு மேற்பட்டவர்களுக்கு வாணிகம் அலலது கூட்டு நிறுவனத்தின் பெயரினில் சேமிப்புக் கணக் கைத் தொடஙகும்.

சேமிப்புக் கணக்கின் செயல்முறைகளுக்காகச் சேமிப்புச் செல்லு புத்தகம் (Pass Book) ஒன்றைச் சேமிப்புக் கணக்கரிடம் கொடுக்கவேண்டும். அப்புத்த கத்தில் சேமிப்பவர் வங்கியில் சேமித்த விவரம், வட்டி அளிக்கப்பட்ட குறிப்பு, பணம் எடுத்த விவரம் ஆகியன கணக்கரால் பதியப்படும். இச் செல்லு புத்தகத்துடன் சேமிப்பவருக்கு ஒருசில வங்கிகள் மட் டும் காசோலைப் புத்தகம் ஒன்றையும் கொடுக்கிறது. பொதுவாக இக் காசோலைப் புத்தக வசதி சேமிப்பவருக்குக் கொடுக்கப்படுவதிலலை. இதற்குப் பதிலாகப பணம் எடுக்க வரைதாள்களை வங்கி கொடுக்கிறது. ஆனால், பணம் எடுத்திடும் வரைதாள் கள் காசோலையினின்று மாறுபட்டதன்மைஉடையன வாகும். காசோலை ஒரு மாற்றுதலுக்குரிய உணடியல ஆகும். இது பணம் எடுத்திடும் வரைதாளகளுககுக் கிடையாது.

நடைமுறையில் தனி ஆள தொடங்கிய சேமிபபுக் கணக்கிற்கு வங்கியால் வட்டி கொடுக்கபபடுவதுணடு. ஆனால், ஒரு கூட்டுப் பங்கு நிறுமம (Joint Stock Company) அல்லது கூட்டு நிறுவனம் (Partnership) ஆகியவற்றால் தொடங்கப்பெறும் சேமிப்புக் கணக்கிற்கு வட்டி அளிககபபடுவதில்லை. சேமிப்பவர் தம் பெயருக்கு வந்த காசோலைத் தொகையினைத் தம் சேமிப்புக் கணக்கின்வழி வசூல் செய்ய முடியும். ஆனால், மற்றொருவர் பெயருக்கு விடுவிக்கப்பட்ட காசோலைகளை இச்சேமிப்புக் கணக்குகள வழியே வசூல் செய்யமுடியாது.

**அஞ்சல் நிலையச் சேமிப்புக் கணக்குகள்:** வாணிக வங்கிகளில் மிகப்பெரிய அளவில் சேமிப்புக் கணக்குகளைத் தொடங்க உதவுவது அஞ்சல் அலுவலகங்களின் சீரிய பணியாகும். இந்தியாவில ஏழை மக்கள் அதிக அளவில் உள்ளனர். இத்தகைய மக்கள் வாணிக வங்கியில் சேமிக்க இயலாது. ஆனால், இத்தகைய மக்களிடமும் சேமிப்புப் பழக்கத்தை உருவாக்க அஞ்சல் அலுவலகங்கள் உதவுகினறன. இநதியாவில 1983-84-ஆம் ஆணடு முடிய இயங்கிவரும் அஞ்சல் அலுவலகங்களின் எணணிக்கை 1,44,719 ஆகும். இவற்றின் எண்ணிக்கை சேமிப்புக் கணக்கு தொடஙக வசதியுள்ள வாணிக வங்கிகளின் எண்ணிக்கையைப் போல் ஏறத்தாழ 5மடங்கு அதிகமாகும். இயங்கும் 1,44,719 அஞ்சல் அலுவலகங்களில 1,44,000-த்தில சேமிப்புக்கணக்கை தொடங்கி இயக்கிட வசதியுணடு. சிறப்பாக 1,29,000 அஞ்சல் அலுவலகஙகள சிற்றூர்களில் இயங்கி வருகின்றன. சராசரியாக 5,100 இநதிய மக்களுக்கு, 21.87 சதுர கிலோ மீட்டருக்கு ஒரு அஞ்சல் அலுவலகம் என 1983-ஆம் ஆணடு சூலைத் திங்கள் கணக்கின்படி இயங்கி வருகினறன.

**அஞ்சல் அலுவலகங்களில் சேமிப்புக் கணக்குத்தொகை**

| ஆண்டு | சேமிப்புத்தொகை உருபாய் | வளர்ச்சி | வளர்ச்சி விழுக்காடு |
|---|---|---|---|
| 1982-83 | 11,111 கோடி | | |
| 1983-84 | 13,524 கோடி | 2,413 கோடி | 22 |

இந்த அளவில் நாடெங்கும் அமையப்பெற்றிருப்பதால் சிறறூர், நகர்வாழ் மக்கள் தங்கள சகதிக்கேற்பச் சேமிப்புக் கணக்குகளில் சேமித்து வருகின்றனர்.

**அஞ்சல் சேமிப்பு வகைகள்:** அஞ்சல் அலுவலகத்தில் சிறு சேமிப்பை ஊக்குவிக்க மத்திய அரசு, மாநில அரசு, சிறுசேமிப்புத் துறை ஆகியன மககள தம வருமானத்தில் சேமிக்கப் பலவேறு சேமிப்பு ஆவணங்கள திட்டங்கள் ஆகியவறறை உருவாக்கியுள்ளன. அவை யாவன.

**அ) கால வைப்புத் திட்டம்** (Time Deposit Scheme)· இத் திட்டத்தின்கீழ் அஞ்சலகத்தில் சேமிக்கத் தூண்டும் அதன் சிறப்பியல்புகளாவன: அளிககப்படும் வட்டிவீதம் 11. 5 விழுக்காடாகும். இசசேமிப்பு ஐந்து ஆணடுக் காலத்திற்கு வைக்கப்பட வேணடும். இதனிற் சேர்த்து வைக்கப்படும் உருபாய் ஐந்து இலட்சம் வரை சொத்து வரிவிலக்கு உண்டு. மேலும், உருபாய் 7,000 வரை பெறக்கூடிய வட்டிக்கு வருமான வரிச் சட்டம பிரிவு 80-இன்படி வரிவிலக்கு அளிக்கப்படுகிறது.

**தேசிய சேமிப்பு ஆவணம் ஆறாம், ஏழாம் வெளியீடு:** இதறகு அளிக்சப்படும் கூட்டு வட்டிவீதம் 11.5 விழுக்காடாடும். அயல்நாடுகளில் வாழும் இந்தியர்களின சேமிப்பைப் பெருக்கும்வகையில வட்டிவீதம் 13 விழுக்காடு வழங்கப்படுகிறது. சேமிப்பு முதலீட்டுத் தொகை உருபாய் ஐந்து இலட்சம் வரை சொத்து வரிவிலக்குணடு. வட்டி வருமானம் உருபாய் 7,000 வரை வருமான வரிச்சட்டம் பிரிவு 80-இன்படி வரி விலக்கு உண்டு.

**இ) 10 ஆண்டுச் சமூகப் பாதுகாப்பு ஆவணம்:** இந்த ஆவணஙகள் வழிச் சேமிக்கப்படும் பணத்திற்குக் கிடைக்கப்பெறும் வட்டி உருபாய் 7,000வரை வருமான வரிச் சட்டம் பிரிவு 80-இனபடி வரிவிலக்கு அளிக்கப்படுகிறது. சேமிப்புத் தொகைக்குக் கூட்டு வட்டி உணடு.

**ஈ) 15 ஆண்டுப் பொது வைப்பு நிதி:** ஓராணடுச் சேமிப்பு முதலீடு குறைநதது உருபாய் 100 ஆகும்

இச்சேமிப்பு நிதியில் அதிகத் தொகையாக உருபாய் 60,000வரை சேர்த்துவைக்க வசதி உண்டு. இச சேமிப்பை மொத்தமாகவோ 12தவணைகளிலோ சேமிக்க வாய்ப்பு உணடு. இச்சேமிப்பினின்று கடன் வசதியும, பகுதித திருப்பம் பெற்றிடும் வாய்ப்பும் அளிக்கபபடுகின்றன. சொந்தத் தொழில் செயய முனைவோருக்கு மிக வசதியாக இசசேமிப்புக் கணக்கு அமைந்துள்ளது. இதனினறு கிடைக்கப்பெறும வட்டிக்கு வருமான வரிவிலககு உணடு. மேலும் வாழக்கைத் துணை, பிரிக்கப்படாத இந்து குடுமபத்தின் ஆதரவில் சிறு குழநதைகள் பெயரில சேமிப்பு முதலீடு செய்யப்பட்டிருக்கும் தொகை உட்பட ஒரு ஆண்டில் சேமிக்கப்படும் உருபாய் 40,000 வரையிலும் வருமான வரி, செல்வ வரியினின்று விலக்கு உணடு.

சிறப்பான இச் சேமிப்புத் திட்டஙகள் தவிர, மேலும் அஞ்சல அலுவலகங்களில் சாதாரணச சேமிப்புக் கணக்குகள் தொடஙகவும் மககளுக்கு வாய்ப்பு அளிக்கபபட்டுள்ளது. அதறகுரிய செல்லு புததகம் சேமிப்பவருககுக் கொடுக்கப்படும் சேமிப்பவர் தம் தேவைக்குத் தொடங்கப் பெற்ற சேமிப்புக கணக்கினின்று பெற்றுககொள்ளும் உச்சவரம்புத் தொகை உருபாய் 300-இனின்று உருபாய் 500 க்கு 1-1-87 முதல் உயர்த்தப்பட்டுள்ளது. சேமிப்பவா தம் சேமிப்புத் தொகையைக காசோலையாகவும் செலுத்திட 10-6-1983 முதல் வாய்பபு அளிககப்பட்டுள்ளது. வயது அடையாதவர்மீது தொடங்கப்பட்ட சேமிப்புக் கணக்கினினறு பாதுகாவலர் பணம் எடுக்கும் வசதி 9.1.84 முதல செய்யப்பட்டுள்ளது.

மேலும், ஒருசில வாணிக வங்கிகளில தொடஙகப்பட்ட சேமிப்புக் கணக்குகளில் சேமிப்பவருக்கு ஆயுள காப்பீட்டு வசதியும் அளிக்கப்பட்டுளளது. இத்தகைய வசதியைப் பெற்றிடச் சேமிப்பவர் 18 வயது நிரம்பியவராகவும் 49 வயதுக்கு மேற்படாதவராகவும் இருக்க வேண்டும். இவ்வயதுக்கு உட்பட்ட சேமிப்பவர் பெணணாக இருப்பின ஆயுள் காப்பு வசதியுடன் கூடிய சேமிப்புக கணக்குத் தொடங்கத் தொடர்ச்சியாக வருமானம் உடையவராக இருத்தல் தேவையாகின்றது. இத்தகைய ஊக்குவிககும் செயலகள் வழியாக மக்கள வணிக வஙகிகளிலும், அஞ்சல அலுவலகஙகளிலும் சேமிப்புக் கணக்குகள தொடஙக வாய்பபுகள் பெருகி வருகின்றன. சி.பா.

**துணை நூல்கள்:**

**Grewal, T.S.**, Double Entry Book Keeping, Sultan Chand and Sons, New Delhi, 1980.

**Gupta, R.L** Advanced Accounting, Sultan Chand and Sons, New Delhi, 1984.

**சேமிப்பு-முதலீட்டுக் கோட்பாடு**: ஒவ்வொரு பொருளின் மதிப்பும் அதன விலையைச்சார்நதது. ஆனால் பணத்தின மதிப்போ பொருள்களின விலைக்கு நேர் எதிரானது. விலை மாறினால அல்லது பணத்தின மதிப்பு மாறினால் சில பொருளாதார மாற்றங்கள ஏற்படுகினறன. அதே போன்று பொருளாதார மாற்றங்களினாலும் விலை மாற்றம் ஏற்படுகிறது. எது காரணம், எது விளைவு என்பதில் பொருளாதார அறிஞர்களுககிடையே வேறுபட்ட கருததுகள் நிலவுகின்றன. ஆனால், விலையின் மாற்றத்தினால் பொருளாதார மாறறங்களும, பொருளாதார மாற்றங்களினால் விலையில் மாறறமும் ஏற்படும் என்று கொள்வதே சாலச் சிறநதது. பொருளியல அறிஞர்கள் விலையைக் கட்டுபபடுத்த விரும்பி விலை மாறறத்திற்கு அல்லது பொருளாதார மாற்றத்திறகு என்ன காரணமெனறு ஆராயலாயினா. இரவிங்கு, பிசர் போன்ற பொருளியல் அறிஞர்கள் பணத்தின் அளிப்பே விலையின் மாற்றத்திற்கு அல்லது பொருளாதார மாற்றத்திற்குக் காரணம் என்று கூறினர். இப்பொருளாதார அறிஞர்கள சேமிப்பைக் குறித்துச் சிறிதும கவலை கொளளவில்லை. சேமிப்பு ஒரு பணத்தின் மதிபபை மாற்றும் ஒரு சிறப்பான காரணி எனபதையும் அவர்கள குறிப்பிடவில்லை. ஆனால், நாளடைவில் சேமிப்பு ஒரு குறிபபிட்ட அளவிற்குமேல அல்லது கீழ் காணபபடின் அது, நாட்டில் கெடுதியையே விளைவிக்குமென்று பொருளியல் அறிஞர்கள ஒவ்வொருவராக உணரத் தொடங்கினர். முதன்முதலில சேமிப்பு, நாட்டிற்கு ஒரு சாபம் எனறு கூறிய பெருமை பெர்னார்டு டி மான்டிவிலா (Bernard De Mandeville) என்ற ஒரு மருத்துவரையே சாரும். இவர் கி.பி. 1705-ஆம் ஆணடில் தனது 'தேனீக்களின கதை அல்லது தனிஒருவர்கெட்ட எண்ணங்கள, பொது நன்மைகள்' (The Fable of the Bees, or Private Vices, Public Benefits) என்ற சிறிய வெளியீட்டில இககருததைக கூறினார். அதைத் தொடாந்து தாமசு தூக்கு (Thomas Tooke) என்பவர் கி.பி. 1844-இல தமது 'பணக் கொளகையின் ஒரு ஆய்வு' (An Enquiry into the Currency Principle) என்ற நூலில பணத்தின் அளவைப பொறுத்து விலை அமையாமல சூழ்நிலையிலிருககும் பணததின் அளவைப்பொறுததே அமையும் என்று கூறினார். இத்தகைய கருத்துகளை நட் விக்செல் (Knut Wicksell), அப்டாலியன் (Aftalion) போன்ற பொருளியல் அறிஞர்களும் கூறினர். இவ்வாறாக விலை நிருணயத்தில் பணத்தின்

மீதிருந்த சிறப்பு நாளடைவில் சேமிப்பு, முதலீடு, வருவாய், செலவு போனற பல்வேறு காரணிகளின் மீது படர்ந்தது.

சான் மோனாடு கீன்சு இத்தகைய கருத்துகளை ஒன்று சேர்த்து, ஒழுங்குபடுத்தி, விளக்கம் கொடுத்து ஒரு கோட்பாடாக 'வேலை, வட்டி, பணம் பற்றிய பொதுக்கோட்பாடு' என்ற தனது நூலில் கூறினார். வருவாய்க்கும் செலவுக்கும் சமநிலை எற்படவேண்டும் அலலது சேமிப்பிற்கும் முதலீட்டிற்கும் சமநிலை எற்படவேணடும், அப்படியென்றால்தான் பொருளாதார மாற்றங்களிலிருந்து விடுபடமுடியும் எனபது கீன்சின் கருதது. அக்கோட்பாடு வருவாய்க்கும் செலவிற்கும் சிறப்பிடம் கொடுப்பதினால் வருவாய் செலவுக் கோட்பாடு என்றும் சேமிப்புக்கும் முதலீட்டுக்கும் முககியததுவம் கொடுப்பதினால இது சேமிப்பு-முதலீட்டுக கோட்பாடு (Savings Investment Theory) என்றும் குறிக்கப்படுகிறது.

வருவாயிலும் செலவிலும் ஏற்படும் மாற்றத்தினாலேயே விலை மாற்றம் அல்லது பணத்தின் மதிப்பில் எற்படும் மாற்றம் ஏற்படுகின்றது என்று கீனசு கூறுகின்றார். வருவாயும் செலவும் ஒரே அளவாக இருககும வரை விலையும் மாறாது; வாணிக, பொருளாதார சிக்கல்களும், சுழற்சிகளும், வீழ்ச்சிகளும், ஏறபடா. ஏனென்றால், ஒருவருடைய செலவு என்பது பிறிதொருவருடைய வருவாய் ஆகும். இவ்வாறு நாட்டில் உருவாகின்ற வருவாய் அனைத்து உற்பததிக் காரணிகளின் உரிமையாளர்கள் மூலம் செலவிடப்படுகின்றது அல்லது உற்பத்தி செய்யப்பட்ட பொருளகள் அனைத்தும் விற்பனையாகின்றன. எடுத்துக்காட்டாக ஒரு நாட்டின் மொத்த வருவாய் உரு. 1,000 கோடி என்று வைத்துக்கொள்ளலாம். அதாவது, உரு 1000 கோடிககுச் சமமான பொருளகள உற்பததி செய்யப்படுகின்றன. உற்பத்திக் காரணிகளுக்கு வருமானமாக, வந்த இநத உரு. 1000 கோடியும் அந்தக் குறிப்பிட்ட காலத்தில் செலவழிக்கப்பட்டால் எவ்விதப் பொருளாதார மாறறங்களும் ஏறபடா. இதற்கு மாறாக, வருவாய்க்கும் செலவிறகும் சமநிலையின்மை ஏற்படுமாயின் பொருளாதார மாறறங்கள ஏற்படுகின்றன. மேலே கூறியபடி வருமானமாக உரு.1,000 கோடிவருகிறது. இதில உரு.900கோடியை மட்டும் செலவு செய்தால் உரு. 100கோடிககுச் சமமான பொருளகள் விற்பனையாகாமல் தேங்குகிறது. இந்நிலையில பொருளகளின விலை குறைகிறது; உற்பத்தி கேடுறுகிறது; வருமானம் குறைகிறது; தேவை குறைகிறது; இறுதியாக தொழில் மந்தம் ஏறபடுகிறது. இந்நிலைக்கு எதிர் நிலையாகச் செலவு, வருவாயைவிடக கூடினால் பொருள்களுக்கு எறபடும் தேவை, உற்பத்தி செய்யப்பட்ட பொருள்களைவிட அதிகமாகி விலை மிகுகிறது. இதனால் உற்பத்தி அதிகரிக்கிறது. இது உற்பத்திக் காரணிகளின தேவையை அதிகரிக்கச் செய்து அவற்றின் வருமானத்தைக் கூட்டி மீணடும் விலையை கூடச் செய்கிறது. இப்படிப் பொருளாதாரச் செழிபபு ஏற்பட்டுக் கடைசியில் பொருளாதாரம் உச்சநிலையை எட்டுகின்றது.

விலையின் மாற்றத்திற்குச் காரணம் அல்லது வியாபாரச் சுழற்சிக்குக் காரணம் பணத்தின அளிப்பு அன்று. வருவாயும் செலவுமே என்பதுதான் கீன்சின் மறுத்துரைக்கமுடியாக் கருத்து. சுருக்கமாகப் பொருள்களின் தேவை அளிப்பு ஆகியவற்றைப் பொறுததே பணத்தின் மதிப்பும், மாறுகின்றது என்பதுதான் இவரது வாதம். கீன்சு இவ்வாறு பணக்கோட்பாட்டையும், பொருளகளின் மதிப்பு அல்லது அளிப்புக் கோட்பாட்டையும் இணைத்துத தொன்மை அறிஞர்களின் கருத்தை மாறறினாா.

வருவாய், செலவிற்கிடையில் சமநிலையின்மை ஏற்படுவதறகான காரணஙகளைக் கீனசு ஆய்ந்து சேமிப்பும் முதலீடுமே அதற்கான காரணங்கள் எனறு கூறினார். வருவாயில் நுகர்வு போக எஞ்சுவது சேமிப்பு. சேமிப்பைத் திட்டமிட்ட சேமிப்பு எனறும செய்த சேமிபபு எனறும் வேறுபடுத்தலாம். முதலீடு என்பது எலலாவகையான பங்குகளையும, கடன பத்திரங்களையும் வாஙகுவதைக் குறிககாமல் புதிதாகத தொடஙகப்பட்ட நிறுவனஙகளின் பங்குகளையும் கடன் பத்திரங்களை வாஙகுவதையும், புதிதாக மூலதனம் இடுவதையும் குறிககும். முதலீட்டையும் திட்டமிடட முதலீடு எனறும, செயத முதலீடு என்றும் வகைப்படுத்தலாம. பொதுவாக, செயத சேமிப்பும் செய்த முதலீடும் சமமாகவே காணப்படும். மாறாகத் திட்டமிட்ட சேமிப்புககும் செய்த முதலீட்டுக்குமே சமநிலையினமை ஏறபடுகினறது. இதறகுக் கீனசு கூறும் காரணஙகளுள், முதலாவது விருப்பத்தையும் வருவாயையும் பொறுததுநுகாவு அமைகிறது. ஆனால, முதலீட்டுக் கவர்ச்சியைப் பொறுத்து முதலீடு அமைகிறது. இரணடாவதாக, இரணடு பணிகளையும் தனிததனிப பிரிவு மககள் ஆற்றுகினறனர்.

கீன்சு சேமிப்பும், முதலீடும் எப்படிச் சமமாக இருக்கிறதென்பதை ஒரு சமனபாட்டின் மூலம் விளக்குகின்றார்.

தேசிய வருமானம் (Y) = உற்பத்தி செய்யப்பட்ட பொருளகளின மதிப்பு (PQ) நுகர்வு (C) முதலீடு (I)

சேமிப்பு (S)=வருமானம் (Y)-நுகர்வு (C).

அதாவது சேமிப்பு (S) =முதலீடு (I).

கீன்சின் கருத்துப்படி மேலே கொடுக்கப்பட்ட சமன்பாட்டின் மூலம் சேமிப்பும் முதலீடும் சமமாக இருக்கின்றவரையில் வருவாயிலும் செலவிலும் மாற்றம் ஏற்படாது. ஆகவே, விலையிலும் மாற்றம் ஏற்படாது. அதற்கு மாறாகப் பொருளாதார எழுச்சி களும், பொருளாதார வீழ்ச்சிகளுமே நாட்டில் மாறி மாறி நடைபெறுகின்றன. ஏனென்றால் சேமித்த அனைத்துப் பணமும் முதலீடு செய்யப்படுவதில்லை. இல்லாவிட்டால் சேமித்த தொகையைவிட முதலீடு செய்யப்பட்ட தொகை அதிகமாக இருக்கலாம். சேமிப்பிற்கும் முதலீட்டிற்கும் வேறுபாடு ஏற்படுவது தான் பொருளாதார மாற்றங்களுக்குக் காரண மென்று கூறுகின்றார். எடுத்துக்காட்டாக ஒரு நாட் டின் மொத்த வருவாய் உரூ. 1,000 கோடி. இதில் உரூ 800கோடி நுகர்விற்காகச் செலவிடப்படுகின்றது. மீதமுள்ள உரூ. 200கோடியும் சேமிக்கப்படுகின்றது. சேமித்த தொகை உரூ.200கோடியும் முதலீடு செய்யப் பட்டால் நாட்டில் எவ்வித பொருளாதார மாற்றங் களும் ஏற்பட வாய்ப்பில்லை. ஆனால், இதற்கு மாறாகச் சில நேரங்களில், சேமித்த தொகையில் ஒரு பகுதி மட்டுமே முதலீடு செய்யப்படுகின்றது. சேமித்த தொகையில் உரூ.100கோடி மட்டும் முதலீடு செய்யப்பட்டால் உற்பத்தி செய்யப்பட்ட பொருள் களில் உரூ.100 கோடிக்குச் சமமான பொருள்கள் தேங்குகின்றன. இது பொருளாதார வீழ்ச்சி உருவாகக் காரணமாகின்றது சில நேரங் களில் முதலீடு செய்த தொகை சேமித்த தொகையை விட அதிகமாக இருக்கலாம். இதற்குக் காரணம் வங்கிப் பணச் சேமிப்பைவிட முதலீடு அதிகரித் தால் செலவு வருவாயைவிடக் கூடுகிறது. இதன விளைவுகள் பொருளாதாரச் செழிப்பு, முழு வேலை வாய்ப்பு, அதிக விலை, அதிக இலாபம் போன்றவை. கடைசியில் வாணிக உச்சநிலையை ஒரு நாடு எட்டு கின்றது.

மேற்கூறிய கருத்துகளை வரைபடங்கள் மூலமும் விளக்கலாம்.

**முதல்நிலை: சேமிப்பு = முதலீடு:** முதல்நிலையில் சேமிப்பும் முதலீடும் சமமாக இருக்கின்றன. ஆகவே மொத்த வருவாயும், மொத்தச் செலவும் சமமாகக் காணப்படுகின்றன. இந்நிலையில் உற்பத்தி செய்யப் பட்ட பொருள்களின் தேவையும் அளிப்பும் சமமாகக் காணப்படுகின்றன என்பதைக் கீழே கொடுக்கப் பட்டிருக்கிற வரைபடம் விளக்குகின்றது.

வரைபடம் 1.




இவ்வரைபடத்தில் OX அச்சு வருவாயையும OY அச்சு நுகர்வுமுதலீட்டுச் செலவையும் குறிக்குன்றன. Y=C+S என்ற 45° கோடு வருமானம், நுகாவிற்கும் சேமிப்பிற்கும் சமம் என்பதை வலியுறுத்துகின்றது. C எனற கோடு நுகர்வுச் செலவையும், C+I கோடு நுகர்வு, முதலீட்டுச் செலவுகளின் மொத்தத்தையும் குறிக்கின்றன. புள்ளி 'E' யில் C+I கோடும், Y= C+S கோடும் ஒன்றையொன்று வெட்டிக்கொள்கின றன. இது வருவாயும் செலவும் ஒரே அளவாக இருக் கின்றன அல்லது சேமிப்பும் முதலீடும் சமமாக இருக்கின்றன என்பதைக் குறிக்கின்றது. அதாவது புள்ளி 'E' யில் வருவாயும் OY செலவும் EY (அதா வது OY) முழு வேலைவாய்ப்புச் சமநிலையாகவும் அல்லது அதற்கு மாறானதாகவும் இருக்கலாம்.

**இரண்டாம் நிலை-சேமிப்பு > முதலீடு:** இரண்டா வது நிலையில் சேமிப்பு முதலீட்டைவிடக் கூடு தலாகக் காணப்படுவதால் மொத்த வருவாய் செலவைவிடக் கூடுதலாக இருக்கினறது.

வரைபடம் 2.



இவ்வரைபடத்தில் புள்ளி 'E' யில் சேமிப்பின் அளவு SE. இதில் ST மட்டுமே முதலீடு செய்யப்படு வதால் வருவாய்க்கும் செலவிற்கும் TE அளவு வித் தியாசம் ஏற்படுகின்றது இது பொருளாதார வீழ்ச் சிக்குக் காரணமாகி ஒரு புதிய சமநிலையாகி 'E'யை அடையச் செய்கின்றது. OY என்பது முழு வேலைவாய்ப்பு வருமான நிலையாக இருந்தாலும் சேமிப்பிற்கும் முதலீட்டிற்கும் சமநிலை இலலாத தனால் பொருளாதார மந்தம் ஏற்பட வழிவகுக் கின்றது.

**மூன்றாம் நிலை-சேமிப்பு<முதலீடு:** இந்நிலை யைக் கீழே கொடுக்கப்பட்ட வரைபடம் மூலம் விளக் கலாம்.

வரைபடம் 3.




மேலே உள்ள வரைபடத்தில 'E' எனற புள்ளி வருவாய் OY ஆக இருக்கின்றபோது சேமிப்பிற்கும் முதலீட்டிற்கும் எவ்வளவு வேறுபாடு காணப்படுகின றது என்பதைக் காட்டுகின்றது. OYஅல்லது YE வரு வாயில் YN அளவு நுகர்விற்கும் NE அளவு சேமிப் பிற்கும் பயன்படுத்தப்படுகின்றன. அதாவது TN அளவு கூடுதலாக முதலீடு செய்யப்படுகின்றது. இப் பொருளாதாரத்தில் இந்நிலையில் விலை, இலாபம் போன்றவை உயர்ந்து புதிய சமநிலையாகிய '$E_1$'யைப் பொருளாதாரம் அடைகிறது.

மேற்கூறிய கருத்துகள் அனைத்தும் கீழே கொடுக் கப்பட்டுள்ள நான்கு குறிப்புகளையும் தருகின்றன.

1) விலையின் மாற்றம் அல்லது பணத்தின் மதிப்பு பொருளாதார மாற்றத்தின் ஒரு பகுதியே அன்றி ஒரு தனிப்பட்ட, வேறான மாற்றமன்று. 2) விலையின் மாற்றங்களும், பெருளாதார மாற்றங் களும் வருவாய், செலவில் ஏற்படும் மாற்றங்களினா லேயே ஏற்படுகின்றன. 3) வருவாய் மாற்றமும் செலவு மாற்றமும் சேமிப்பு, முதலீடு என்பனவற்றில் ஏற்படும் மாற்றத்தினாலேயே நிகழ்கின்றன. 4) விலை மாற்றம், பணத்தின் அளிப்பைப் பொறுத்துக் காணப்படாமல் வருவாய், செலவு போன்றவற்றைப் பொறுத்தே காணப்படுகிறது. த.பீ.

**சேய்மைக் கல்வி:** சேய்மைக்கல்வி என்னும சொற்றொடர், முன்பு பல்வேறு கற்பித்தல்-கற்றல் செயல்களெனக் கருதப்பட்டவற்றைத் தொகுத்துக் குறிப்பிட இன்றைய கலவியாளர்களால் பயன்படுத் தப்படுகிறது. ஆசிரியர்-மாணாக்கர் நேருக்குநேர் சந திப்பதால் எழும் கற்பித்தல்கற்றல்- விளைவுகளைத் தவிர வேறு எல்லாக்கற்றல் - அனுபவங்களும் சேய் மைக்கல்வி (Distance Education) எனப்படுவதாகும். ஆசிரியரது உடனடி மேற்பார்வையின்றிச் சேய்மைக் கல்வி விளைவுகள் எழுகின்றனவெனினும், இதனைத் திட்டமிட்டு, நிருவகித்துச் செயற்படுத்துவதில கல்வியாளர்களது பங்கு அடிப்படையாகும். சேய்மைக் கல்வி இடம், காலம் போன்றவற்றினைக் கடநது செயற்படுவதாகும். கற்போரது சமூகம் மற்றும் பொருளாதார ஏற்றததாழ்வுகளையும் பணபாட்டு வேறுபாடுகளையும் இது கருத்தில் கொள்ளாமல் விரும்புவோர்க்கெல்லாம் கல்வி வாய்ப்புகளை உருவாக்கித் தர முற்படுகிறது. நாட்டின் எப்பகுதியில் வசித்தாலும் அங்குப் பள்ளி வசதி இல்லாமையி னால அலலதுஇருக்கும் வசதியினைப் பயன்படுத்திக் கொள்ள வாழ்க்கைநிலை தடையாக அமைவதால் முறையான கல்வியினைப் பெறவியலாதோர்க்குச் சேய்மைக் கல்வி ஓர் ஒளியினைப் பரப்புவதாகும். மலைவாழ்மக்கள், பழங்குடியினர், தொலைதூரச் சிறறூர்களில் வசிப்போர் போன்றோரது கல்விக்கு இவ்வனுகுமுறை இன்றியமையாதது இவ்வகையினர் மட்டுமனறிச் சமுதாயத்தின பிறரது கல்வி வளர்ச் சிக்கும் சேய்மைக்கல்வி, முறையான பள்ளிக் கல்வி யுடன் இணைந்து தேவைப்படுகிறது. கற்பிக்கும் மையமும் ஆசிரியர்களும் பலபோது கற்போர் வசிக்கும் இடங்களுக்குத் தொலைவில் இருக்கக்கூடும். இந்நிலைமைகளில் பல்வேறு கற்பித்தல வழிகள், சாதனங்கள் ஆகியவற்றின் துணைகொண்டு ஆசிரியரையும் கற்போரையும் சேய்மைக்கல்வி இணைக்கின்றது. சேய்மைக கல்வியில் கற்போன் பிற ருடன் சேர்ந்து ஒரு குழுவின் உறுப்பினனாகவன்றித் தனித்துக் கற்கிறான். ஆசியரையும் மாணாக்கரை யும் இணக்க அச்சிட்டபாடப் பொருள்களும் காட்சி -கேள்விப் புலன்களைப் பயன்படுத்தும் பாட நிகழ்சசி களும் கையாளப் பெறுகின்றன. சுருங்கக்கூறின், சேய் மைக் கல்வி, பள்ளியினைக் கற்போனது இல்லத்துக்கு

அழைத்துவருகிறது. மக்களாட்சித் தேவைகள் முழு அளவில் நிறைவு செய்யப்படவேண்டுமாயின். பல் வகைப்பட்ட வாழ்க்கைத் தேவைகளுள்ள மக்களுக்குக் கல்வி உதவவேண்டும். சேய்மைக் கல்வி அமைப்பில் பொதுவான பள்ளி அல்லது கல்லூரிக் கல்விப் பாடங் களில் இடம்பெறாத பலவகைப் பாடங்கள் இடம் பெறச் செய்யலாம். தொழிற பாடங்களில் பல சேய்மைக் கல்வியின் வழியே திறந்த கல்வி அமைப் புக்களால் அளிக்கப்படுகின்றன. சேய்மைக் கல்வி நெகிழ்ச்சி மிக்கதாகும். பல பாடங்களில் தனது தனித் தேவைகளுக்கேற்ப மாணாககன் சிலவற்றைத தேர்ந்தெடுககலாம். கல்வியின் எல்லாக் கட்டங் களுக்கும சேய்மைக் கல்வி பொருந்தும். தலைசிறந்த ஆசிரியர்களது கறபித்தலை நாட்டின மூலைகளில் வசிப்போர்க்கும் அளிக்கச்சேய்மைக் கல்வி உதவுகிறது.

சேய்மைக் கல்விக்கான சாதனங்களாக அச சடிக்கப்பட்ட பாடநூல்கள், வானொலி, தொலைக் காட்சி ஆகியன உள்ளன. சேய்மைக் கல்விக்கான வானொலி நிகசழ்ச்சிகள் இன்று நாட்டின் பலவேறு ஒலி பரப்பு நிலையஙகளிலிருந்து ஒலி பரப்பப்படுகினறன. இந்நிகழ்ச்சிகளில் கலவியின பல்வேறு கட்டத்தில் பயிலுவோருக்கு மட்டுமன்றி, தொழிலாளர் கலவி, ஆசிரியர் கலவி, பொது அறிவினை ஊட்டும் விடு முறைக் கல்வி போனறனவும் உளளன. விவசாயிகள் பயன்பெறும் வகையில, வேளாணமைப்பளளி நிகழசசி கள இவற்றைக் கற்றுத் தேர்ந்தோருக்குச் சான்றிதழ களையும் வழங்குகினறன. இனறு நமது நாட்டில தொலைக்காட்சி நிகழச்சிகள மக்கள தொகையில 70விழுக்காட்டினரை எட்டுகினறன.எனவே,தொலைக் காட்சி, சேய்மைக் கலவியின ஒரு வலுவான சாதன மாகப் பயனபடுததப்படுகிறது. தனிப்பட்ட கலவி நிகழ்ச்சிகளைத் தவிர, பல்கலைககழக மானியக் குழுவின் உதவியுடன அளிக்கப்படும உயர்கல்வி நிகழ்சசிகள் பல புதிய கருத்துகளையும் செயல முறைகளையும் மககளுககுத தெளிவாக அறிமுகப் படுத்துகின்றன.

நம்நாட்டின புதிய கலவிக்கொளகையின சிறப்புப் பண்புகளை ஆசிரியர்கள் உணரவும, கலவி ஏற பாட்டில இன்று புதியனவாக இடம்பெறறுளள 'மக்கள தொகைக் கல்வி', 'சூழநிலைக கலவி' மறறும் 'கணிப் பொறி பறறிய அடிப்படைக கருத்துகள', புதிய அறிவியற் கருத்துகள் ஆகியன பற்றிய விளக கங்களை ஆசிரியாகள எளிதில பெற, தேசிய கலவி ஆராய்சசி மற்றும பயிற்சி நிறுவனம் பல நிகழசசி களை நாடு தழுவிய தொலைக்காட்சி ஒலிபரப்பு களின் வழியே பரப்பி வருகிறது. சேய்மைக் கலவி யின் முழுப் பயனகளைக் கற்போர் பெற அவவப் போது கற்போர் ஆசிரியர்களிடம் நேர்முகத் தொடர்பு கொள்வது இன்றியமையாததாகும். ஐயங் களில் தெளிவு பெறவும், விளக்கங்களைக் கேட்டுப் பெறவும், நூலக வசதிகள, காட்சி கேள்வித் துணைவசதிகள் போனறவறறைப் பயன்படுத்தவும், ஆய்வக வசதிகள் தேவைப்படின் அவற்றைப் பெறவும் சேய்மைக் கல்வி அமைப்பிலும் நேர் தொடர்பு வகுப்புகள் நடுநடுவே ஏற்படுத்தப்படு கின்றன. அவற்றுக்கான கல்வி மையங்கள் நாட்டின் பல்வேறு பகுதிகளில் பரவலாக நிறுவப்பட்டு வரு கின்றன நாட்டுமக்களது கல்வி முன்னேற்றத்திற்குச் சேய்மைக்கலவி இனறியமையாத ஒரு கருவியாகச் செயறபடுவதற்கு நலலாசிரியர்களின் பொறுப்புமிகக ஒத்துழைப்பு ஒவவொரு கட்டத்திலும் தேவைப் படுவதாகும். எஸ.ச.

**'சே' யின் அங்காடி விதி** பிரெஞ்சுப் பொரு ளியல் வல்லுநர் சான் பேப்டிசுட்டு சே கி.பி. (1767-1832) எனபவரின பெயரால் குறிக்கப் படுகிறது இவர் தொனமைப் பொருளியற் கோட்பாட்டைச் சேர்நதவர். 'அளிப்பு அதறகேற்ற தேவையை உரு வாக்கும்' எனபது விதி. அதாவது, ஒவ்வோர் அளிப் பும் அதனதன தேவையை உருவாக்கும்.

**எடுகோள்கள்.**

அ) அரசின் தலையீடு அறவே இல்லை.

ஆ) சேமிப்பு முழுமையும முதலீடு செய்யப் படுகிறது. அதாவது, வருவாய்ச சுற்றோட் டத்தில் எவ்வகை ஒழுகலுமிலலை.

இ) பணப் பதுக்கலில்லை.

ஈ) பொருளாதார அமைப்பு அயல்வாணிகத் தொடாபுகள இலலாமல் 'மூடிய பொருளா தாரமாக' உள்ளது.

ஒருவர் உழைப்பது பணடங்களையும் பணிகளை யும் உறபத்தி செய்வதற்காக எனபது அடிப்படை. இதனால, ஒருவர் மன நிறைவினை அடையமுடியும். அவ்வாறனறி, 'உழைப்பு உழைப்பிற்காக' எனபது பொருளறற கருத்தாகும மேலும், ஒருவருக்குத தேவைப்படும் அனைத்துப் பண்டங்களையும் பணி களையும் அவராகவே உற்பத்தி செய்து தனனிறைவு அடைவதென்பது இயலாது. பணத்தைக் கொணடு உடனடியாகப் பிறவகைப் பணடங்களையும் , பணி களையும் பெறும் வேட்கையை நிறைவேறறுவதற்கே பணத்தை மககள பெறுகின்றனர். 'சே' யின் (John Baptist Say) கோட்பாட்டுப்படி பணம் ஒரு பண்ட மாகாது. மதிப்பு நிலைக்களனாகப் பணம் செயலாற்ற வலலது எனபதை அவர் அறியவிலலை என்றே புலனாகிறது. அதனால், பண்டத்தின் ஒவ்வொரு

வகையிலும் அமைகின்ற அளிப்பும அதற்கு ஈடான தேவையை உருவாக்கியே தீரும் என்று 'சே' கருதி னார்.

படவிளக்கம




உழைப்பாளர்கள் (குடும்பங்கள) தாஙகள பெறும் ஊதிய வருவாயில் 90 கோடி அளவிற்குப் பணடங்களையும் பணிகளையும் நிறுவனத்திடமிருந்து பெறுகினறனர். அதாவது, தங்கள் வருவாயாகிய உரூ 100 கோடியில் உரூ 90 கோடியளவிற்கு நுகர் விற்குச் செலவிடுவதாகக் கொணடால், எஞ்சிய உரூ. 10கோடி சேமிப்பாகக் கருதப்பட்டு, வங்கி மூல மாக மறுபடியும் நிறுவனத்திற்குப் போய்ச் சேருகிறது. இங்குச் சுற்று ஓட்டம முழுமை பெறுகிறது.

நுகர்வோர் விருப்பு வெறுப்புகளின் ஊசலாட்டங் காரணமாகச் சில பணடங்கள் மிகுதியாக உற்பத்தி செய்யப்படுவது இயல்பாகும். அதேசமயம் வேறுசில பண்டங்கள் பற்றாக்குறையாக அமைந்துவிடுவதும் இயல்பேயாகும். நுகர்வோருக்குச் சிறிதும் தேவை யில்லாத, பயனற்ற, தவறான பண்டங்கள் உற்பத்தி செய்யப்படுவதே இதற்குக் காரணம். எனினும், இவ் வகைப் பண்டங்களின் உற்பத்தி பொருட்படுத்து மளவிற்கு மிகுதியாக அமையாது நீணட காலத்தில பொது உற்பத்தி மிகுதி உறுதியாக அமையாது என் பது 'சே' யின் நம்பிக்கையாகும்.

**'சே' யின் விதியைப்' பிகு' (Pigou) மறுபுனைதல்:** உழைப்பாளருக்கு அவர்தம் இறுதிநிலை உறபததி யளவிற்குக் கூலி தரப்படுமானால், பொதுநிலை வேலையின்மை இல்லாதொழியும் என்பது பிகுவின கருத்தாகும். தங்குதடையற்ற பொருளாதார அமைப்பும், போட்டிச் சக்திகள் முழுமையாக இயங் கும் நிலையும் இருக்குமானால், பொருளாதாரம் முழு வேலைவாய்ப்பு நிலையில் அமைந்திருக்கும் எனபதே இதன் கருவாகும். பொதுநிலை வேலை யினமை (பருவகால வேலையினமை, மறறும் உராய்வு வேலையின்மை நீங்கலாக) அறவே இராது எனக் கொணடு 'பிகு'வின் கருத்து விளககப் படுகிறது.

வரைபடம்




இ.வ உ. என்பது இறுதிநிலை வருவாய் உறபததி யைக் குறிக்கும்.

படத்தில் X அச்சில் (படுகிடை அச்சில்) உழைப் பாளர் எண்ணிக்கையும், Y அச்சில் (நிலைக்குத்தச்சில) இறுதிநிலை வருவாய் உற்பத்தித் திறனும், கூலி அள வும் குறிப்பிடப்பட்டுள்ளன. உரூ. 10/- கூலிமட்டத் தில், 900 உழைப்பாளர்கள் வேலைவாய்ப்பைப் பெறு

கின்றனர். கூலிமட்டம் உரூ. 5/-ஆகக் குறைக்கப்படும் போது 1800 உழைப்பாளர்கள் வேலை வாய்ப்பைப் பெறுகின்றனர்.

வேலையின்மை நீண்டகாலம் தொடருமேயானால், கூலியின் இறுக்கத் தன்மையே அதற்குக் காரணமாகும். அதாவது, கூலிமட்டம் சிலவகைக் காரணங்களால் கீழ்நோக்கி நெகிழ்வடையாது இறுகியமைந்து விடுவதுமுண்டு.

இரண்டாம் உலகப்போருக்குப் பிறகு, குறைந்த பட்சக் கூலி வரையறைச் சட்டங்கள், கூட்டுப் பேர முறை, தொழிற் சங்கங்களின் தோற்றம், வேலையின் மைக காப்பீட்டு வசதிகள், அரசுத் தலையீடுபோன்ற புதிய சக்திகளின் தாக்கத்தால், உழைப்பு அங்காடி மாசுபடிந்து, தங்குதடையற்ற போட்டிச் சக்திகள் இயங்க முடியாது போயின. 'சே'யின் விதி உணர்தது பவை: அ) பொருளாதாரம் தானியங்கிச் சரிக்கட்டு தலை அடிப்படையாகக் கொணடு இயங்குதலால் உற்பத்தியாகுவன அனைத்தும் நுகரப்பட்டே தீரும் ஆ) அளிப்பு அதற்கிடான தேவையை உருவாக்குங் கால் பொதுவான மிகை உற்பத்தியோ, பொதுவான வேலையின்மையோ இராது. இ) வட்டிவீதத்தின் நெகிழ்வுத் தன்மையால சேமிப்பு முதலீட்டோடு சமநிலை அடைவது உறுதி தொன்மைப் பொருளியலாரின் கருத்துப்படி, சேமிப்பு எவ்வகைத் தடஙகலு மின்றி முழுமையாக முதலீடு செய்யப்படுவதாகும். ஈ) தங்கு தடையறற நிறைவுப்போட்டி நிகழும்பொருளாதாரத்தில வட்டிவீதத்தை ஒழுங்குபடுத்தும் அரசு நடவடிக்கை இல்லாத நிலையில், கூலிமட்டத்தைக் குறைப்பதான முயற்சியால் முழு வேலைவாய்ப்பினை அடையமுடியும் என்பது 'பிகு'வின் கருத்தாகும். உ) பணம் என்பது பரிமாற்றக் கருவியாகப் பயன்படுகிறது.

**திறனாய்வு:** கீன்சு (Keynes) என்ற பொருளிய லறிஞர் கருத்துப்படி, உயர்வடையும் வருவாய் முழுமையும் நுகர்வுப் பண்டங்கள மீதோ முதலீட்டுப் பண்டங்கள் மீதோ செலவு செய்யப்படுவதில்லை. அதாவது, வருவாயின் ஒரு பகுதி செலவு செய்யப் படாது சேமிக்கப்படுகிறது. இவ்வாறு எழும் சேமிப்பு பொருளாதாரத்தில் போதிய முதலீட்டு வாய்ப்புகள அமையாத காரணத்தால முதலீடாக மாறறப்படுவதில்லை. இந்நிலையில் சேமிப்பு, தனி மனிதாகளின் கையிருப்புச் சொத்துகளில் சென்றடையும் வாய்ப்பே மிகுதி. இதனால் தொகுதித்தேவை முழு வேலை வாய்ப்பு நிலையில் உகந்த அளவு அமையாது குறைந்தே காணப்படுவது இயல்பாகும். எனவே, வேலையின்மை தோன்றுவதைத் தவிர்க்க இயலாது.

மேலும், நுகர்வைப் பாதிக்கும் காரணிகளும், முதலீட்டைப் பாதிக்கும்காரணிகளும் கீன்சின் நெறிப் படி வெவ்வேறானவை. நுகர்வு நடப்பு வருவாயினைச் சார்ந்தமையும். மேலும், வருவாய் உயரு மளவுக்கு நுகர்வும் நடைமுறையில் உயர்வடைவதில்லை. முதலீட்டுச் செலவு, தொழில்நுட்ப வளர்ச்சியையும் மற்றும முதலீட்டுப் பண்டத்தின் இறுதிநிலை உற்பத்தித் திறனையும் சார்ந்து அமைகின்றது. எனவே, மேற்கூறிய இரு இனங்களைப் பாதிக்கும் காரணிகளிடையே எந்த ஒட்டுறவுமில்லாது அமைந் திருப்பதால், உற்பத்தி செய்த பண்டங்களுக்கு ஏற்ற சந்தையைப் பெறத்தக்க அளவிற்குத் தொகுதித் தேவை அமையாதென்று கீன்சு கருதினார். அதனால் வேலையின்மை தீர்க்கமுடியாத சிககலாகவே தொன் மையர் கோட்பாட்டில் காணப்படும்.

'சே'யின் விதியை 1929-32ஆம் ஆணடுகளில் ஏற் பட்ட உலகப்பெரு மந்தம் பொருளிழக்கச செய்து விட்டது என்பது கீன்சின கருத்தாகும். உலக மந்தத் தில் பணடஙகள மிகை நிலையில் தேஙகியிருந்தன. வேலையின்மை தலைவிரித்தாடியதால், உழைப் பாளர்கள வேலையினறி, வாஙகும திறனழிநது காணப்பட்டனர் போதிய வருவாயில்லாத காரணத் தால், அங்காடியில் இவர்களால் பணடத்திற்கான தேவையை உருவாக்க முடியவில்லை. அக்கால கட் டஙகளில் 'சே' யின் விதி மதிப்பிழந்ததாகவும் பயனற் றதாகவும் கருதபபட்டது. இவவிதி முழுவதும் நடை முறைக்கு ஒவ்வாத கருத்தாகக் கீன்சால விளக்கப் பட்டு முற்றிலும் மறுக்கப்பட்டது.

கூலிவெட்டுகையால்வேலைவாய்ப்பினைப்பெருக்க முடியுமென்ற பிகுவின் கருத்து கீன்சினால் மறுக்கப் படுகிறது. கூலிவெட்டுகை எனபது இருபுறமும் கூராக் கப்பட்ட ஆயுதம். ஒரு வழியில் உறபத்திச் செலவைக் கூலிவெட்டுகையால் குறைக்க முடியுமென்றாலும் மறுவழியில் உழைப்பாளரின் வாங்கும் திறனைக் குறைக்கவே செய்யும். கூலி வருவாய் மொத்த வரு வாயில் மிகவும் கணிசமானதாகும். எனவே, கூலியைக் குறைப்பதற்கானசெயல் பொருளாதாரப் பின்னடை வுக்கு வழிவகுக்கும்.

சேமிப்பு, இயலபாக எவவகைத் தலையீடும் இல்லாமலேயே முதலீட்டோடு சமநிலையை எய்த முடியும் என்பது 'சே'யின் கருத்தாகும். வட்டி வீதம் நெகிழ்வடைந்து சேமிப்பு-முதலீட்டுச் சம நிலையைத் தோற்றுவிககிறது. ஆனால், கீன்சின் கருத்துப்படி வருவாய் மாற்றங்களே சேமிப்பு- முதலீட்டுச் சமநிலையை ஏற்படுத்தமுடியும்.

நீண்டகாலக் கணணோட்டத்தில் இயற்றப்பட்ட 'சே'யின் கொள்கை கீனசினால் கடுமையாகத் தாக் கப்பட்டது. 'நீணடகாலத்தில் நாமெல்லாம் இறந்து

படுவோம்' என்று கீன்சு கூறுவதன்மூலம், மனித சமு தாயத்தின் சிக்கல்களைத் தீர்க்கும் பயனைக் குறுங் கால ஆய்வே பெற்றுத் தரமுடியும் என்பது தெளிவா கிறது.

விலை, கூலி மற்றும் வட்டிவீதம் நெகிழ்வடைதல், நிறைவுப் போட்டி, மூடிய பொருளாதாரம் போன்ற எண்ணற்ற எடுகோள்கள் நடைமுறை உலகிற்கு ஒவ் வாதன.

தானியங்கும், தங்குதடையற்ற பொருளாதார அமைப்பில் அரசு தலையீடு இருக்கக்கூடாது என்று 'சே' கருதினார். ஆனால், கீனசின கருத்து அரசின் ஒழுங்கமைப்பு நடவடிக்கைகளே உறுதித் தேவையைப் பெருக்கி வேலையின்மைச் சிக்கலுக்குத் தீர்வுகாணும் என்பதாகும்.

'சே'யின் கருத்துப்படி, 'சமநிலை' என்று சொல் லுமிடத்து, முழு வேலைவாய்ப்பு நிலையில் மட்டுமே சமநிலையடைதல் கூடும். வேறு எந்த வேலை வாய்ப்பு நிலையிலும் சமநிலை ஏறபடாதென்பது அவரது கருத்தாகிறது. ஆனால், எந்த வேலைவாய்ப் பிலும் பொருளாதாரச் சமநிலை ஏற்பட இயலு மென்பது கீன்சின் கருத்தாகும். எனவே, முழு வேலைவாய்ப்பிற்குக் குறைந்த வேலைவாய்ப்பு நிலை யிலும் சமநிலை ஏற்படும் என்று கீன்சு கருதுகிறார்.

'சே' யின் கொள்கைப்படி, பரிமாற்றக் கருவியாகவே பணம் பயன்படுகிறது. ஆனால், மதிப்பு நிலைக்களனாகவும் பணம் பயன்படலாம். செல்வத்தைச் சேமித்து வைக்கும் நிலைக்களனாகப் பணம் செயலாற்றவலலது. பணப் பண்டத்தை எளி தாகவும் பாதுகாப்பாகவும் எவ்வகைச் சேதாரமோ அழிவோ இன்றி நீண்டகாலத்திற்கு வைத்துக் கொள்ள முடிகின்றது. அப்பணத்தைக் கொண்டு எதிர்பார்க்கவியலாத செலவினங்களை ஏற்கவும், கடன்களைத் திருப்பிச் செலுத்தவும் முடிகிறது. இதை நியூலின் என்பவர் பணத்தின் சொத்துச் சார்பு என்று குறிப்பிடுகிறார்.

'சே'யின் கொள்கை நடைமுறைக்கு ஒவ்வாத கருத்து எனக் கீன்சு போன்ற மேலைநாட்டு அறிஞர் களால் குறிப்பிடப்பட்டாலும், இன்றைய உலகிற்கு நல்லதொரு பகுப்பாய்வுக் கருவியாகக் கொள்வதற்கு ஏற்றதாக உள்ளது எனபதை மறுப்பதற்கில்லை. 'உற்பத்தியின் மிகைப் பெருக்கம் பொருளாதாரப் பின்னடைவுக்குக் காரணமாகிறது' என்ற துன்ப நோக்காளரின் எண்ணத்தையும் கொள்கையையும் 'சே'யின் கொள்கை மறு சிந்தனைக்கு உள்ளாக்கி யிருக்கிறது.

த.ச.செ.

**துணை நூல்கள்:**


**Bhatia, H L.**, Monetary Theory, Vikas Publishing House, New Delhi, 1984.

**Gupta, R.D.**, Keynes and Post Keynesian Economics, Kalyani Publishers, New, Delhi, 1984.

**Hajela, T.N.**, History of Economic Thought, Shir Lal Agarwala and Co., Agra, 1972.

**Srivastava**, History of Economic Thought, S. Chand and Co., New Delhi, 1972.


*சேர்க்கை முறை*: உருபனகளை (Morphemes) அடிபபடை அலகுகளாகக் கொண்டு சொல்ல மைப்பில் காணப்பெறும் உருபன்களையும் அவற்றின் வருகை முறையையும் (Arrangement) விவரிக்கும் முறையே சேர்க்கை முறை (Item and Arrangement) எனப்படும்.

மொழியின் அமைப்பினை விவரிப்பதற்குப் புளும் பீல்டு, பிளாக்கு போன்ற அமைப்பு மொழியியலார் சேர்க்கை முறையினை உருவாககினர். சொல்லின அமைப்பினை விவரிக்கும் நிலையில் அதன்கண் காணப்பெறும் உருபனகளையும் அவை எத்தகைய வரிசை முறையில் (Order) அண்மை உறுப்புகளாக (Immediate Constituent) அமையப்பெற்றுள்ளன என்பதனையும்சேர்க்கைமுறை விளக்கமாகச் சுட்டும்.

சேர்க்கை முறையில் தமிழ்ப் பெயர்ச் சொற களின் அமைப்பு 'அடிச்சொல் + பால் + எண் காட் டும் உருபு + சாரியை + வேற்றுமை உருபு' (மரம் + கள் + இன் + ஆல) என விளககப்பெறும் சொல்லடுக்கு முறை, சொல்லில் காணப்பெறும் உரு பன்களையும், அவற்றின் மாற்றுருபுகளையும், அவை வருமிடங்களையும், அவறறின வரிசை முறையையும சுட்டும்.

சேர்க்கை முறையில் ஒவ்வொரு பொருட்கூறும் தனித்தனியான உருபன்களைக் கொண்டிருக்கவேண டும். எனவேதான், பன்மை வடிவத்தைக் குறிக்க ஆங்கிலத்தில இன்மை வடிவம் (Zero Marker) சில சூழல்களில் அமைக்கப்பட்டுள்ளது

புளும்பீல்டு காலத்திலும் அதன்பின்னரும் அமெ ரிக்க நாட்டில் பெரும்பானமையோரால் பினபற்றப் பட்ட இம்முறையில் பல்வேறு குறைகள் காணப்பட்ட போதிலும், இதுவே சிறந்த முறையாகவும் ஒழுங்கு படுத்தப்பட்ட முறையாகவும் கருதப்பட்டது.

ஏ.ஆ.

**துணை நூல்கள்:**

Haris, Z.S., From Morpheme to Utterance, Language, Vol, 22, 1946.

Hookett, C.F., Two Models of Grammatical Description, Readings in Linguistics I, London, 1961.

Nida, E.A., Morphology the Descriptive, Analysis of Words, Ann Arbor, 1946.

**சேர்ந்தடை உரிமை**: ஒரு சொத்துரிமை மாற்றத்தினபோது, ஒருவருககு உறுதுணையாக உருவாக்கப்பட்ட உரிமை நலம் பயனுறத் தொடஙகுவது, எப்பொழுதிலிருந்து என்று குறிப்பிடவில்லை எனிலோ, உடனடியாக எனறு வெளிப்படையாகக் குறிப்பிட்டிருந்தாலோ, தவறாது நடைபெறும் ஒனறு நிகழ்ந்தபின நிகழும் எனறு குறிப்பிட்டிருநதாலோ அந்த உரிமை சேர்ந்தடை உரிமை (Vasted Interest) எனப்படும்.

சேர்ந்தடை உரிமை பற்றிய குறிப்புகள், சொத்துரிமை மாற்றுச் சட்டம், பிரிவு 19, இந்திய வாரிசுரிமைச் சட்டம், பிரிவு 119 ஆகியவற்றில காணப்படுகின்றன.

சேர்ந்தடை உரிமை நலன் ஒன்று நிறைவுறுவதற்குப் பின்வரும் நிபந்தனைகள் நிறைவேற்றப் படுதல் வேண்டும்.

1. சேர்ந்தடை உரிமையைப் பெறுபவர் யார் என்பது குறிப்பிடப்படுதல் வேணடும்.

2. அவர் பெறவிருக்கும் அளவு நிருணயம் செய்யப்படுதல் வேண்டும்.

3. நடவாத நிகழச்சி ஒன்றை எதிர்நோக்கிய தாக அவரது உரிமை இருத்தல் கூடாது.

**சேர்ந்தடை உரிமைக்கும் வருங்கழ்வு சார்ந்த உரிமைக்கும் உள்ள வேறுபாடு**: 1. சேர்ந்தடை உரிமை, நிறைவேறறப்பட வேண்டிய ஒரு நிபந்தனையை முழுவதுமாக எதிர்நோக்கி இல்லை; ஆனால், வருநிகழ்வு சார்ந்த உரிமை (Contingent interest) நிறைவேற்றப்பட வேண்டிய ஒன்றை முழுவதுமாக நம்பி உள்ளது.

2. சேர்ந்தடை உரிமையில், சொத்தைப் பெறுதற்கு முன், உரிமை மாற்றம் பெறுபவர் இறந்து விட்ட போதிலும் சேர்ந்தடை உரிமை முடிவுறுவதில்லை; அவரது இறப்பிற்குப் பின் அவரது வாரிசுகள் அந்தச் சொத்தைப் பெறுவர். ஆனால், வருநிகழ்வு சார்ந்த உரிமையில் நிபந்தனை நிறைவேறு முன்னர், உரிமை மாற்றம் பெறுபவர் இறநது விடும் போது, உரிமை செயல்நிலைக்கு வருவதில்லை.

3. சேர்ந்தடை உரிமை, உரிமை மாற்றத் தேதியிலிருந்து செயலுக்குவரும் ஒரு நிகழ்கால உரிமையாகும்; வருநிகழ்வு சார்ந்த உரிமையோ ஓர் எதிர்கால உரிமையாகும் சேர்ந்தடை உரிமை ஒரு நிகழ்ச்சியை எதிர்நோக்கி இருக்கும்போது, அநத நிகழ்ச்சி நிச்சயம் நடைபெறும. ஆனால், வருநிகழ்வு சார்ந்த உரிமை, ஒரு நிகழ்ச்சியை எதிர்நோக்கி இருக்கும் போது, அந்நிகழ்சசி உறுதியாக நடைபெறும் என்று சொல்வதறகிலலை; அது நடைபெறலாம் அல்லது நடைபெறாமற் போகலாம். பு.வே.

**சேர்ந்து மீட்கச் செய்யும் உரிமை**: பல்வேறு அடைமானங்களை ஒன்று சேர்த்து மீட்கச் செய்யும் உரிமை, சேர்ந்து மீட்கச் செய்யும் உரிமை (Right of Consolidation of Mortgages) எனக் கூறப்படுகிறது கி.பி. 1882-ஆம் ஆண்டின் சொத்துரிமை மாற்றுச் சட்டத்தில் அடைமானங்களைச் சேர்ந்து மீட்க வேண்டும் உரிமைகள் பற்றிய வாசகங்கள் உள்ளன. சேர்ந்து மீட்கச் செய்யும் உரிமையை இரு நோக்கிலிருந்து ஆராயலாம். 1. அடைமானம் வைத்தவரின் சேர்ந்து மீட்கும் உரிமை (Mortgager's right of Consolidation), 2. அடைமானம் பெற்றவரின மீட்கும் உரிமை(Morgagee's right of Consolidation). இவை முறையே சொத்துரிமை மாற்றுச சட்டத்தின் பிரிவுகள் 61,67 ஆகியவற்றில் கூறப்பட்டுள்ளன.

**அடைமானம் வைத்தவர் சேர்ந்து மீட்கும் உரிமை**: சேர்ந்து மீட்கச் செய்யும் உரிமை என்பது, தம்மிடம் ஒருவர் பல அடைமானங்களை வைத்திருக்கும்போது, எலலா அடைமானங்களையும் ஒரே சமயத்தில் மீட்க வேண்டுமென்று அடைமானம் பெற்றவர் கோரும் உரிமையாகும். அடைமானம் பெற்றவர் அவ்வுரிமையைச் செலுத்தும் போது அடைமானம் வைத்தவர் மற்ற அடைமானங்களை மீட்காமல் ஓர் அடைமானத்தை மட்டும் மீட்க முடியாது. சேர்ந்து மீட்கும் உரிமை சென்னிங்சு (எ) சோர்டான்(கி.பி. 188) 51, L.J. ch 129 (130) என்ற வழக்கில் விரிவாக விளக்கப்பட்டுள்ளது. இந்தியாவிலும் இக்கோட்பாடு சொத்துரிமை மாற்றுச் சட்டம்இயற்றப்படுவதற்கு முன்னரே செயறபடுத்தப்பட்டு வந்தது. இங்கிலாந்தில் கி பி. 1880-ஆம்ஆண்டு மாற்றளிப்புப் சட்டத்தின் (Conveyancing Act, 1881) வாயிலாகச் சேர்ந்து மீட்கச் செய்யும் உரிமை ஒழிக்கப்பட்டு விட்டது. மாறுபட்ட ஒப்பந்தம் இது குறித்து இருந்தாலன்றி இதனைச் செயற்

படுத்த முடியாது. இநதியாவிலும் சொத்துரிமை மாற்றுச் ச்ட்டத்தின 61-ஆம் பிரிவு இவ்வுரிமையை ஏற்றுக் கொள்ளவில்லை.

61-ஆம் பிரிவு இது பற்றிக் கூறுவது: ஒருவர், இரணடு அல்லது அவற்றுக்கு மேற்பட்ட அடைமானங்களை எழுதிக் கொடுத்திருநதால், மாறுபட்ட ஒப்பந்தம் இல்லாதபோது, ஏதாவது ஓர் அடைமானத்தைத் தனியாகவோ, எவையேனும் இரணடு அல்லது அவற்றுக்கு மேற்பட்ட அடைமானஙகளைச் சேர்த்தோ மீட்கலாம். எல்லா அடைமானஙகளையும் சேர்த்தே மீட்க வேணடும் என்று அடைமானம் பெற்றவர் வலியுறுத்த முடியாது இக்கோட்பாடு இப்பிரிவின் கீழ் நீக்கப்பட்டு விட்டது.

61-ஆம் பிரிவில் கூறப்படுபவை அடைமானம் வைத்தவருக்கு உதவி செய்யும் நோக்கத்துடன் அமைந்தது. சேர்ந்து மீட்கக் கேட்கும் உரிமையை மாறுபட்ட ஒப்பந்தம் இல்லாதபோதுதான செயற்படுத்த முடியும். மாறுபட்ட ஒப்பந்தஙகளை ஏற்படுத்திக் கொளளும் சுதந்திரத்தை 11-ஆம் பிரிவு கொடுக்கிறது. ஆனால், இத்தகைய மாறுபட்ட ஒப்பந்தம தெளிவாகவும் வெளிபபடையாகவும இருக்க வேணடும். இது ஓர் அடைமான மீட்புத் தடை ஆகாது. அடைமானம் வைத்தவர் தமக்குளள உரிமையை (அதாவது பலஅடைமானங்களில் ஏதாவது ஒன்றை மீட்கும் உரிமையை) விட்டுக் கொடுத்தாலன்றி, அடைமானம் பெறறவர் அடைமானங்களைச் சேர்நது மீட்கும் உரிமையை வேண்ட முடியாது.

**அடைமானம் பெற்றவரின் சேர்ந்து மீட்கும் உரிமை:** இது சொத்துரிமை மாற்றுச் சட்டததின் 674-ஆம்பிரிவில விளக்கப்பட்டுள்ளது. இது 61-ஆம பிரிவில் கூறப்பட்டிருப்பவற்றிற்கு எதிர்ப்பகுதியாகும். 67A பிரிவின் படி, பல நாளகளில எழுதப்பட்ட பல அடைமானங்களை ஒருவரிடமிருந்து பெறறிருப்பவர், எல்லா அடைமானஙகளையும் இணைத்தே வழக்குத் தொடர வேண்டும். அவ்வாறு எலலா அடைமானங்களையும் ஒருங்கிணைத்து வழக்குத் தொடரத் தவறினால, இரணடாம் வழக்கினைத தொடர இயலாது. 67 A பிரிவும் அடைமானம் வைத்தவருக்கு உதவி புரியும் நோக்கததுடனே ஏற்படுத்தப்பட்டதாகும். இது, ஒவ்வொரு வழக்கு மூலத்திற்கும் தனியான வழககுத் தொடரப்பட வேணடும் என்ற நடைமுறை விதியையும், மீட்புரிமையும் மீட்புரிமை அடைபபும் ஒரே காலத்தவை (Right of redemption and right of foreclosure are Co-extensive) என்ற விதியையும் மீறிச் செயறபடுகினறது.

61-ஆம் பிரிவின் கீழ் அடைமானங்களைச் சேர்ந்து மீட்கும் உரிமை ஒழிக்கப்பட்டாலும், 674-ஆம் பிரிவின கீழ் அடைமானம் பெற்றவருக்கு எதிராக இது சுமத்தப்படுகிறது. சுருங்கக் கூறின் ஒருவர் ஒரு சொத்தின் மீது அல்லது வெவ்வேறு சொத்துகளின் மீது பல அடைமானஙகளை வைத்திருக்கும் போது, அடைமானம் வைததவர், அவறறைத தனித்தனியே மீட்க உரிமையுண்டு. ஆனால் அடைமானம் பெற்றவரோ அவறறின் மீது தனித்தனியே வழக்குத் தொடர முடியாது. அவற்றையெலலாம் ஒனறு சேர்த்தே வழக்குத் தொடர வேணடும். ஆ. ச.

**சேர்வராயன் மலை:** காண்க: ஏாக்காடு.

**சேரமண்டலம்** என்பது, தமிழகப் பிரிவுகளுள ஒன்றான சேரநாட்டைக் குறிக்கும். வடவேங்கடம் தென்குமரி ஆயிடைப்பட்டது எனப்படும் தமிழகம் மிகப் பழங்காலந் தொட்டே சேர சோழ பாண்டியர் என்னும் மூவேந்தர் மரபினரால் ஆளப்பட்டு வந்துள்ளது. தமிழகதது மூன்று நாடுகளின் எலலைகள மாறாமல் வரையறுக்கப்பட்டனவாக என்றும் இருந்ததில்லை. கொள்வினை கொடுபிணைத் தொடாபு கொணடிருந்தபோதிலும், மூவரும் தம்முள் பகை கொண்டு போரிட்டமை மிகுதியாகப் பேசப்படுவதால் அவர்களின் நாட்டெல்லைகளில அவ்வப்போது மாற்றங்கள் இருந்தமையினை இலககியங்களும் பிற வரலாற்றுச் சானறுகளும் உணர்த்துகின்றன.




சேரமண்டலம்

சங்க காலத்தில், மூன்று நாட்டுப்பகுதிகளும் புலம் என்ற சொல்லால் குறிப்பிடப்பட்டுள்ளன. சேரநாடு தமிழகததின் மேற்குப் பகுதியில அமைந்தமையால் அது குடபுலம் எனப்பட்டது. குணபுலம் சோழநாட்டையும், தெனபுலம் பாணடி நாட்டையும் குறித்தன.

காலப்போக்கில் இந்நாடுகளை மண்டலம் என்னும் பெயரால் வழங்கும் மரபும் தோன்றியது. சோழ மண்டலம், பாண்டி மண்டலம், தொணடை மண்டலம் எனத் தமிழகப் பகுதிகள் வழங்கப்பெற்றபோது சேரநாடு சேரமணடலம் எனப்பட்டது. உதியஞ்சேரல் என்னும் அரசனாலும் பின்னர் அவன் மரபினராலும் சேர நாட்டுப் பகுதிகள் சங்க காலத்தில் ஆளப்பட்டமையால், சேரர்கள் உதியர் என்ற பெயராலும் அவராணட சேரநாடு உதியர் நாடு என்ற பெயராலும் வழங்கும் மரபு உண்டாகியது. 'சதயநாள விழா உதியர் மண்டலம் தன்னில் வைத்தவன்' என்னும் கலிங்கத்துப் பரணித் தொடரில் இடம்பெறும் உதியர் மண்டலம் என்பது சேர நாட்டினைக குறிப்பதாக உள்ளது.

மேலைக் கடற்கரையினை ஒட்டி அமைந்த திருவாங்கூர், கொச்சி, வட, தென் மலபார், பாலக்காடு ஆகிய பகுதிகள் சேரநாட்டில் அடஙகி இருந்தன. சில காலங்களில கோயம்புத்தூர் உளளிட்ட கொஙகுப் பகுதி சேரநாட்டைச் சேர்ந்திருந்தது. திருச்சிக்கு மேற்கே அம்மாவட்டத்தில் உளள கரூர் சேரநாட்டின் தலைநகராக இருந்தமையினை இலககியஙகள காட்டுகின்றன. இக் கருததினை ஏறக மறுப்பாருமுளர். கொடுந்தமிழ்நாட்டுப் பிரிவுகள் என எணணப்படுவனவற்றில பூழிநாடு, குட நாடு, குட்டநாடு, வேணாடு, கறகா நாடு ஆகிய பகுதிகள் சேர நாட்டில் அடஙகியிருந்தன. இதனால் சேரா குடவர், குட்டுவர், பூழியர் முதலிய பெயராலும அழைக்கப்பெற்றனர். மேலும் சேரநாட்டின பகுதிகள மலைப்பகுதியாக இருந்தமையால பொறையன மலையன எனறும் அநநாட்டு மன்னன அழைககப் பட்டான்.

'வடக்குத்தலம் பழனி' எனத் தொடஙகும் ஒரு பழைய வெண்பா, சேரநாட்டின் எல்லையினைப் பழனிக்குத் தெற்கு, தென்காசி அல்லது செங் கோட்டிற்கு மேறகு, கோழிக்கோட்டிற்குக கிழககு, கடற்கரைக்கு வடக்கு எனறும் சேரநாட்டின் பரப்பு 80 காத அளவினது என்றும் கூறுகிறது. அ மா.ப.

**சேரமான் அந்துவஞ்சேரலிரும்பொறை:** இவன சங்ககாலச்சேர அரசாகளுள ஒருவன். உறையூர் ஏணிச்சேரி முடமோசியார் என்ற புலவருக்கு நணபன்; சோழன முடித்தலைக் கோப்பெருநற்கிளளி என்ற சோழ அரசனுக்குப் பகைவன். இவனுடைய தலைநகராகிய கருவூரைப் பெருநற்கிள்ளி முறறுகை யிட்டிருந்தான. அதனால, அம்முற்றுகையைத் தகர்த்தெறிய அநதுவஞ்சேரலிரும்பொறை தம் படைகளை ஆயத்தப்படுத்தினான. அப்படைகள் அணி வகுத்து நிற்கும்போது பெருநற்கிள்ளி அமர்ந்து வந்த யானை மதம் பிடித்ததனால் எதிரியின் படைக்குள் நுழைந்தது. அணி வகுப்பினைக் கணடு கொண்டிருந்த அரசன் தம் அருகிலிருநத உறையூர் ஏணிச்சேரி முடமோசியாரிடம் அவன் யார் எனக் கேட்டார். அதற்கு அப்புலவர் அவன் சோழ அரசன என்றும் அவனுடைய யானை மதம் பிடித்து யானைப் பாகனுக்கு அடங்காமல் நம் படைகுள நுழைந்து விட்டது, எனவே தனியே வந்த ஒருவனைக் கொல்லுதல் அறமன்று எனனும் கருத்துப் பட கூறினர். வீ.சே.

**சேரமான் இளங்குட்டுவன்** சங்க காலத்தில் வாழ்ந்த புலவர்களுள ஒருவர். இவர் சேர அரச மரபினைச் சேர்ந்தவர். இவர் பாடியதாக அகநானூற்றில ஒரு பாடல் (153) இடம்பெற்றுள ளது. பாலைத் திணையிலமைந்த அப்பாடல் தலைவனுடன் உடன்போக்குச் சென்ற தலைவியின் மென்மைத் தன்மையையும் அவர்கள செல்லும் பாலைநில வழியின் கொடுமையையும் செவிலித்தாய் நினைந்து கூறுவதாக அமைந்துளளது. அப்பாடலில தலைவி தம் தோழியருடன் பந்தாடும்போது சிறிது அசைந்தாலும் உடம்பு வருந் துவதாகத் துன்பப் படுவாள். அவ்வளவு மெனமைத் தன்மையுடைய தலைவி, உலர்ந்த காற்றால் அலைப்புணடு மூஙகில் கள் உராய்தலினால் ஏறபடும் வெப்பம் அஙகுள்ள பசுமையைப் போக்குமளவு நிறைநது காணப்படும் குவடுகளையும் மலைகளையும் கடந்து எவ்வாறு செல்வாளோ! அவள் மெல்லடிக்கு அவ்வழி பொருந் துவதன்று எனச் செவிலித்தாய் கூறுவதாகப் பாடியிருப்பது சிறப்பாக உளளது. வீ சே.

**சேரமான் கடலோட்டிய வேல்கெழு குட்டுவன்:** சங்க காலததில் வாழ்ந்த ஒரு சேர மன்னன். பரணர் இவனைத் தம் புறநானூற்றுப் பாடல் ஒன்றிற் சிறப்பித்துள்ளார் (புறம்.369). வாகைத் திணை, மறககள வேள்வித் துறையில் அமைந்த அப்பாடல் அவனது வீரச்சிறப்பினை அழகுறச் சித்திரிக்கின்றது. போர்க்களததை ஏர்க்கள மாகக கொணடு முற்றுருவகம் அமையப் பாடியிருத்தலால் இப்பாடல் ஏர்க்கள உருவகம் என்னும் துறையினையும சார்நததாகும என்று குறிப்பிடப்பட்டுள் ளது. இம்மன்னனின் கடல் வெற்றிச சிறப்பினை விளக்கும் வகையில் கடலோட்டிய என்னும் அடையும், வேலேநதிச் செய்யும் போர்த்திறச் சிறப்பால 'வேலகெழு' எனனும் அடையும் இவன் பெயர்க்கு, முன் அமைந்துள்ளன. இவன பெயருக்கு வெல்கெழு குட்டுவன் என்று ஒரு பாடபேதமும உள்ளது. அது,

இம்மன்னன் வெற்றிகள் பல கொண்ட சிறப்பினைச் சுட்டுவதாக அமையும். பரணர், செங்குட்டுவனைப் பதிற்றுப் பத்தின 5-ஆம் பத்தில் பாடியுள்ளார். அப் பத்தின பதிகம் செங்குட்டுவனைக் 'கடல் பிறக்கோட்டிய செங்குட்டுவன்' என்று குறிப்பிடுகிறது. பரணரின் புறநானூற்றுப் பாடல் (369) அடிக்குறிப்புச் சுட்டும் கடலோட்டிய வேல் கெழுகுட்டுவன் அல்லது வெல் கெழு குட்டுவனும், பதிற்றுப் பத்தின்5-ஆம் பதிகம் சுட்டும் 'கடலபிறக்கோட்டிய செங்குட்டுவனும் இளங்கோவடிகள் சிறப்பிக்கும் செங்குட்டுவனும ஒருவனே எனக் கொண்டுமு. இராகவையங்கார் போன றோர் ஆராய்ந்துள்ளனர். அக்கருத்தினை உடன் படாது மாறுபடுவாருமுளர். அ.மா ப.

### சேரமான் கடுங்கோ வாழியாதன்:

காண்க: செல்வக்கடுங்கோ வாழியாதன்.

### சேரமான் கணைக்காலிரும்பொறை:

இச்சேரமன்னன் கோச்சேரமான் என்றும் சேரமான என்றும் வழங்கப்பெறுவன். தொண்டியைத் தலை நகரமாகக் கொண்டு ஆட்சிபுரிந்தவன். இவனது அவைக்களத்துப் பொய்கையார் என்னும் புலவர் சிறப்புற்றுத் திகழ்ந்தார். இவன மூவனைக் கொன்று அவன் பல்லைப் பிடுங்கிக் கோட்டை வாயிற் கதவில் பதித்திருந்தான எனற செய்தியை இப்புலவர் தம் நற்றிணைப் பாடலில் (18) குறிபபிட்டுள்ளார். இச் சேரமன்னனுக்கும் சோழன் செஙகணானுககும் போர் நிகழந்தது. போா நிகழ்ந்தவிடம் குணவாயிற் கோட்டம் எனத் தமிழ் நாவலர் சரிதையும் வெண்ணிப் பறந்தலை எனப் பினனத்தூர் நாராயணசாமி ஐய ரும் திருப்போர்ப்புறம் எனப் புறநாற்னூறுப் பாடல் 74-இன் அடிககுறிப்பும் கூறுகின்றன. அப்போரில்சேர மான் குடவாயிற் கோட்டத்திற் சிறைப்பட்டான். சிறைப்பட்டபோது நீர்வேட்கை மிகுதியால் சிறைக் காவலரை நீர் கொணருமாறுகேட்க, அவர் தாழ்த்துக் கொணர்ந்தார் மான உணர்ச்சியால் இவ்வேந்தன் அந்நீரைப் பருகாது உயிர் துறந்தான். இந்நிலையில இவன் பாடிய பாட்டு புறநானூற்றில் (74) இடம் பெற்றுள்ளது. உலக அறம் கூறும் பொதுநிலையில உள்ளதால் இப்பாடலைப் பொதுவியல் திணையில் முதுமொழிக காஞ்சித் துறையில் அமைத்துளளனர்.

'குழந்தை இறந்துபிறந்தாலும் ஊன்தடி பிறந் தாலும் இவை வாளவாய்ப்பட்டு மாய்தலே சிறந்தது என்று கருதி மன்னர் அவற்றை வாளால் வெட்டி அடக்கம் செல்வர். மறமிகு குடியில் பிறந்த யான் வாட் போரில் சாவாமல் சஙகிலியால் கட்டப்பெற்ற நாய்போலப் பிணித்துத் துன்புறுத்திய சிறைக் கோட்டக் காவலரிடம் நீர்பெற்று உயிர் வாழ்தல் தீது. பகைவரிடம் உணவிரந்து உண்டு உயிர் வாழும் மக் களை இவ்வுலகத்தார்பெறா தொழிவாராக' என் னும் கருத்துப்பட இச்சேர மன்னன் அப்புறப்பாடலில் பாடியுள்ளான். இச்சேரவேந்தன் கோப்பெருஞ் சோழன், ஆரியப்படை கடந்த நெடுஞ்சேழியன் முத லிய வேந்தர்களைப் போலப் புலமை மிக்கவனாவான் என்பதனை அப்புறநானூற்றுப் பாடல் வாயிலாக அறியலாம். உயிரினும் மானத்தைப் பெரிதாக மதித் தமையை இவன் வரலாறுணர்த்தும்.

பொய்கையார் சோழனது வெற்றியைச் சிறப்பித் துக் களவழி நாற்பது என்னும் நூலைப் பாடி இச் சேரனைச் சிறைவீடு செய்தான் என்று கூறப்படு கிறது இச்செய்தியைக் 'களவழிக் கவிதை பொய்கை உரை செய்ய, உதியன் கால்வழித் தளையை வெட்டி யரசிட்ட பரிசும்' எனறு கலிங்கத்துப் பரணி கூறும். இரா.சா.

### சேரமான் கருவூர் ஏறிய ஒளவாள் கோப் பெருஞ்சேரல் இரும்பொறை:

சங்க காலச் சேர மன்னர்களுள் ஒருவன். இவன் சேரமன்னருள் இரும் பொறை மரபில் வந்தவன் என்பதும், வாட்போர் வன்மைச் சிறப்பால் ஒள்வாள் என்னும் அடை பெற்றிருக்கலாம் என்பதும், கருவூரில் அரசு கட்டில் ஏறி ஆட்சிபுரிந்தவன் என்பதும் இம்மன்னனது நெடிய பெயரால உய்த்துணரப்படுகினறன. இம்மன்னன மீது நரிவெருஉத்தலையார் பாடிய புறநானூற்றுபபாடல் (புறம். 5) பாடாணடிணையில் அமைந்துள்ளது. அது செவியறிவுறூஉ, பொருண்மொழிக் காஞ்சி ஆகிய, துறைகளுக்கும் பொருந்தத் தக்கதாய் உளளது. நரிவெருஉத்தலையார் இப்பாடல் பாடியதற்கான காரணத்தை, அப்பாடலுக்கமைநத அடிக்குறிப்புக் கூறுகிறது. அக்குறிப்பினால், புலவர் நரியும் கணடு வெருவும் தலையராக இருந்தார் என்பதும், இம மன்னனைக் கணடால் அநதத் தோற்றம் மாறி நலம் பெறுவார் என்று கூறக்கேட்டார் என்பதும், மனனரை இவர்தாம் அம்மன்னர் என்று அறியாத நிலையில் கண்டபோது, வெருவத்தக்க தோற்றம் மாறி நல்ல தாயிற்று என்பதும், அதனால் வியப்பும் மகிழ்வும் அடைந்த புலவர், 'கானக நாடனை நீயோ பெரும!' என்றுவியந்து போற்றினார் என்பதும் புலனாகின்றன, தம் காட்சியால் புலவருக்கு நலம் அளித்த நன்மை நினைந்து, 'அருளும் அன்பும் நீக்காமல வாழ்ந்து நாடுகாவலை, குழவி காப்பவர் போல மேற்கொணடு சிறப்புறுவாயாக' என்று அரசருக்குச் செவியறி வுறுத்தியது சிறப்பாக உள்ளது. அ. மா. ப.

### சேரமான் குட்டுவன் கோதை:

இவன் சங்க கால மன்னர்களுள ஒருவன். இவனது இயற்பெயர்

கோதை. இவன் குட்டநாட்டையாண்ட சேரமன்னன் ஆதலின் சேரமான் குட்டுவன் கோதை என வழங்கப் பெற்றான். கோனாட்டு எறிச்சிலூர் மாடலன் மதுரைக் குமரனார் இவனைப் பாடிய பாடல் ஒன்று புறநானூற்றில் (54) இடம்பெற்றுள்ளது. இப்புலவர் சோழன் இலவந்திகைப் பள்ளித்துஞ்சிய நலங்கிள்ளி சேட்சென்னியையும் சோழன் குராப்பள்ளித் துஞ்சிய பெருந்திருமாவளவனையும் பாடியிருத்தலின் இம் மன்னர்கள் வாழ்ந்த காலத்தே சேரமான் குட்டுவன் கோதையும் வாழ்ந்தவன் என்று கருதலாம். 'கடு மான் கோதை' என மதுரைக் குமரனாரால் சுட்டப் பெறுவது போல 'ஓங்குவாட் கோதை' (புறம். 49) எனப் பொய்கையாரால் சுட்டப்பெறுவான. சேரமன் னர் கோதை என வழங்கப்பெறுதலைக் 'கடும்பகட்டு யானை நெடுந்தேர்க்கோதை' (அகம். 93) 'ஒளிறுவேல் கோதை ஓம்பிக் காக்கும் வஞ்சி' (அகம். 263) என்னும் அகப்பாடல் அடிகளால் அறியலாம்.

இவன் இரவலர்களிடம் அன்புமொழி பேசி வானம் நாண வரையாது வழங்கியதால் அவர்கள் இவனது நாளவையில் செம்மாந்து புகுந்தனர். இவன் இங்ஙனம் காட்சிக்கெளியனாய்க் கடுஞ்சொல்லன் அல்லனாய் இரவலர்பால் நடந்துகொண்டானே யன்றிப் பகைவர்பால் நடந்துகொள்ளவில்லை. பகைத்தெழுந்த இகல் வேந்தர்க்கு, இடையன் தன் ஆட்டு நிரையுடன் புகுதற்கஞ்சும் புலியுறையும் காடு போலப் பேரச்சம் விளைப்பதனால் இம்மன்னனது நாடு புகுதற்கரிதாயிருந்தது. இச்சேர மன்னனைப் பற்றிப் பாடிய ஒரே புலவரான மாடலன் மதுரைக் குமரனார் இவனது கொடைச் சிறப்பையும் மறச் சிறப்பையும் பிற இயல்புகளையும் புறம் 49-ஆம் பாடலில் புலப்படுத்தியுள்ளார். இரா. சா.

**சேரமான்குடக்கோ நெடுஞ்சேரலாதன்:** சங்ககாலச் சேரவேந்தர்களுள் ஒருவன். சேரலாதன் நெடுஞ்சேரலாதன் என்னும் பெயரொடு விளங்கிய ஏனையோர்களினின்றும் பிரித்துணர வாய்ப்பாக இவன் பெயரில், குடக்கோ என்னும் அடை அமைந்த தாகலாம். சேரநாடு, குடநாடு, குட்டநாடு என்னும் பகுதிகளைக் கொண்டமையால அம்மன்னர்கள் குட வர், குடவர்கோ, குட்டுவர், குட்டுவர்கோ என்று வழங்கப்பெற்றனர். ஆதன் என்னும் பெயர் சேர மன்னர்களுக்கு வழங்கிய இயற்பெயர்களுள் ஒன்றா கும்.

சேரமான் குடக்கோ நெடுஞ்சேரலாதனும், சோழன் வேற் பஃறடக்கைப் பெருவிறற்கிள்ளியும் போர்புரிந்தபோது, இருவரும் போர்க்களத்தில் இறந்துபட்டனர். போரில் ஈடுபட்ட இருவேந்தரும் இறந்து பட்ட நிலையைப் பாடும் புறத்துறை தும் பைத் திணையில் தொகைநிலை எனப்படும். அத் தொகைநிலைத் துறையில் வைத்து, கழாத்தலையார் பரணர் ஆகிய இருபுலவரும், குடக்கோ நெடுஞ் சேரலாதன, பெருவிறற் கிள்ளி ஆகிய இருவரையும பாடியுள்ளனா. அப்பாடல்கள் புறநானூற்றில முறையே 62, 63-ஆம் பாடலகளாக உள்ளன அவற்றில் அந்த இருமன்னர்களின சிறப்பும். அவர் கள் ஒருங்கே வீழ்ந்துபட்ட அவலமும் நன்கு காட்டப் பட்டுள்ளன. கழாத்தலையார், இறந்த இருவருள் சேரமான் குடக்கோ நெடுஞ்சேரலாதனை மட்டிலும் சுட்டி, வாகைத் திணை, மறக்கள வேள்வித் துறை யில் மற்றுமொரு பாடல் பாடியுள்ளார். அப்பாடலில் (புறம் 368) பொருது களத்தில் வீழ்ந்துகிடக்கும் இருவருள் சேரமான் உயிர் இன்னும் நீங்கா நிலை யில் அவன் தன் கழுத்தில் அணிந்த ஆரத்தொடு கிடக்கும் காட்சியினைப் புலவா சித்திரித்துள்ளார் அவனைப் பாடிப் பரிசில் பெறவந்த பரிசிலர், யானை, குதிரை, தேர் முதலியனவெல்லாம்பாடிப் பெறமுடியாதவாறு அழிந்துபட்டிருப்பதைச் சுட்டி, அவன கழுத்தில் ஒளிரும் அரவு போன்ற ஆரததைப் பெறுவோம் என்று கூறும் பாங்கில் கழாத்தலையார சேரமானின் சிறந்த வீரமும் ஈகைத் தன்மையும் வெளிப்படுமாறு பாடலை அமைத்துள்ளார். அ.மா.ப.

**சேரமான் கோக்கோதை மார்பன்:** சங்க கால மன்னர்களுள் ஒருவன். இவனைநக்கீரர் கோதை மார்பன் எனக் குறிப்பிடுவர் (அகம். 346). கோக் கோதை மார்பன் என்னும் பெயருக்கேற்பப் பொய் கையார், கோதை மார்பிற் கோதையானும் கோதை யைப் புணர்ந்தோர் கோதையானும் (புறம். 48) என்று நயமுறப் பாடுவர். இவனை இப்புலவர் 'கானலந் தொண்டிப் பொருநன்' என்றும், 'தெறலருந் தானைப் பொறையன்' என்றும் நற்றிணை 18-இல் சுட்டியுள் ளார் இக்கோதை மார்பனின் தொண்டி நகர்வாயிற் கதவில் மூவன் என்பானது பல்லைப் பிடுங்கிப் பதித்து வைத்த செய்தி குறிப்பிடப்பட்டுள்ளது (நற். 8).

இச்சேரமானுக்குப் பாண்டியன பழையன் மாறன் பகைவன் என்றும், சோழன் கிள்ளிவளவன் நண்பன் என்றும் அறியமுடிகிறது. நக்கீரர் தம் அகநானூற்றுப் பாடல் (346) கிள்ளிவளவன் பெருந்தானையுடன் வேற்றுப்புலம் சென்று வாகை சூடி வருகையில் பழையன் மாறனை அவனது கூடல் நகரிலேயே பொருது வென்று புரவிகளையும் களிறுகளையும் கைப்பற்றினான் என்றும், அதனைக் கண்டு கோதை மார்பன் பெரிதும் மகிழ்வுற்றான் என்றும் புலப்படுத் தும். இச்சேரமன்னனைப் பொய்கையார் தம்

புறநானூற்று இருபாடல்களால் (48, 49) புகழ்ந் தேத்துவா. இவனது தொணடிநகர் மலர் மலிநது தேன மணம் கமழும் என்றும், இவன் நாட்டில் புனம் காப்பவர் தட்டையைத் தட்டினால் அயலிலுளள வயலிடத்தும் கடற்கரையிடத்தும் உள்ள பறவைகள் ஒருங்கெழுநதோடுமாறு குறிஞசி, மருதம், நெய்தல் நிலங்கள தம்முள மயஙகிககிடக்குமென்றும், அத னால இந்நாட்டுக்குரிய கோதைமார்பனை நாடன் எனறோ, ஊரன் என்றோ, சேர்ப்பன் என்றோ, தனித்துக் கூறவியலாது என்றும் பொய்கையார் குறிப்பிட்டு இவனது நாட்டுவளத்தைச் சிறப்பிப்பர். இப்புலவர் ஆற்றுப்படை முறையிற் பாடி இச்சேர னது கொடைநலத்தைப் பாராட்டுவர். இரா.சா.

**சேரமான் கோட்டம்பலத்துத் துஞ்சிய மாக்கோதை:** காணக: கோட்டம்பலத்துத்துஞ்சிய சேரமான்.

**சேரமான் தகடூர் எறிந்த பெருஞ்சேரல் இரும்பொறை:** சங்க காலத்தில் வாழந்த சேர மன்னர்களுள ஒருவன். இவனை மோசிகீரனார் என் னும் புலவர் தம் புறநானூறறுப் பாடலொன்றுள் சிறப்பித்துப் பாடியுளளார் (புறம் 50). இவன் தகடு ரின்மீது படையெடுத்துச் சென்றெய்திய வெற்றி யால், 'தகடூர் எறிந்த' என்னும் சிறப்பு அடைமொழி கொடுத்துப் பேசபபடுகின்றான். பாடாண்டிணை இயன்மொழித் துறையிலமைந்த அப்புறப்பாடல் இவனது பணபுச் சிறப்பினை விளக்குவதாக உள்ளது. ஒருகால், மோசிகீரனார் இரும்பொறையினைக் காண அரண்மனை சென்றிருந்தார். அரண்மனையிலிருந்த முரசம், மண்ணுவதற்காக வெளியே எடுத்துச் செல்லப்பட முரசு கட்டில் வறிதே இருந்தது. வழி நடையால் களைத்திருநத புலவர், முரசு கட்டிலென அறியாது அதன்மேல் அமர்ந்து உறங்கிவிட்டார். அதனைக் கணட அரசன், அச்செயலுககாக அவரைத் தண்டியாது, அவர் விழித்தெழும் வரையிலும் கவரி கொண்டு வீசுகின்றான். விழித்தெழுந்த புலவா அரசன் வீசுவதையும், தாம் செய்த தவற்றையும் கண்டு, அரசனுடைய பெரும்பணபினைப் பாராட்டிப் பாடியுள்ளாா. அரசனுடைய அந்த இயலபு அவன தமிழினிடம் கொணடிருந்த பெரு மதிப்பினை உணர்த்துவதாகும் என்னும் கருத்தில் 'மெனபூஞ சேக்கை அறியாதேறிய எனனைத் தெறுவர இரு பாற் படுக்கும் நின் வாள வாய் ஒழிந்ததை, அதூஉம் சாலுநற் றமிழ் முழுதறிதல்' என்று கூறிப் போற்றி யுள்ளார். (புறம்.50: 7-10).

பதிற்றுப் பத்தினால் அறியப் பெறும் சேரவேந் தர்களை உதியஞசேரல் மரபினர், இரும்பொறை மரபினர் என்று இரு மரபினராக வகைப்படுத்துவர். அவற்றுள் இம்மன்னன் இரும்பொறை மரபினருள் முற்பட்டவனாவான். இவனைஅரிசில்கிழார் என்பவர், பதிற்றுப்பத்தின எட்டாம் பத்திற்பாடிச் சிறப்பித துள்ளார். அப்பத்தின் பதிக ஆசிரியர் இம்மனனனை 'அருந்திறல் ஒள்ளிசைப் பெருஞ்சேரல் இரும்பொறை' என்று குறிப்பிட்டுள்ளார் (பதிற். 8-ஆம பதிகம்). இவன் அதிகமானோடு ஏனைய சோழபாணடிய மன்னர்களையும் வென்று, களம் வேட்ட சிறப்பினை யும், தகடூர் மீது படையெடுத்து வென்ற சிறப்பினை யும் பதிகம் குறிப்பிடுகிறது. இம்மன்னன் 17 ஆணடு கள் அரசு வீற்றிருந்துள்ளான். தன்மீது பாடப் பெற்ற பத்துப் பாடல்களுக்காக இவன், தானும் தன் மனைவியுமாக அரண்மனைக்கு வெளியே வந்து அங் குள்ள எல்லாவற்றையும் கொள்க என்று அரிசில் கிழாரை வேணடினான். ஒன்பது நூறாயிரம் பொன் னோடு அரசு கட்டிலையும் அவருககளித்தான். புலவர் அரசினை ஏற்க மறுத்து, அவனை வேண்டி ஆட்சி செய்யுமாறு வேண்ட அவனுக்கு அமைச்சராகத திகழ்ந்தார். அ.மா.ப.

**சேரமான் பாமுளூரெறிந்த நெய்தலங் கானல் இளஞ்சேட்சென்னி:** சங்க கால மனன ருள் ஒருவன். இவனது பெயர் இளஞ்சேட்சென்னி. இவன் வாழ்ந்த ஊர் நெய்தலங்கானல். சேரனது பாமுளூரை அழித்தமையால் சேரமான் பாமுளூ ரெறிநதநெய்தலஙகானல் இளஞ்சேட் சென்னி என னும் பெயர்பெறலாயினன. சோழன் நெய்தலங கானல் இளஞ்சேட்சென்னி பற்றிய குறிப்புப்புற நானூறு 10-ஆம் பாடலில் உணடு. புறம்.203 குறிக் கும் சேரமான் பாமுளூரெறிந்த நெய்தலங்கானல் இளஞ்சேட் செனனியும் புறம். 370, 378 குறிககும் சோழன் செருப்பாழியெறிந்த இளஞ்சேட் சென்னி யும் சோழன் நெய்தலங்கானல் இளஞசேட் செனனி யின் வேறாவர் என்பது வையாபுரிப்பிளளை கருத்து; வேறல்லர் என்பது ஔவை. துரைசாமிப்பிளளை கருத்து. நெய்தலங்கானல் இளஞசேட் சென்னியும் சேரமான் பாமுளூரெறிந்த நெய்தலங்கானல் இளஞ் சேட்சென்னியும் ஒருவரே எனபது டாக்டர். உ.வே. சாமிநாதையரின கருத்து. அகநானூற்றின் 375-ஆம் பாடல் இளம் பெருஞ்சென்னி பாழியை யழிததமை யும் வம்ப வடுகரின் பைந்தலை சவட்டியதையும் குறிப்பிடுகிறது. புறநானூற்றின் 378-ஆம் பாடல வடவடுகர் வாளோட்டியதைக் குறிப்பிட்டு இச் செயல் புரிந்தவன் சோழன் செருப்பாழியெறிந்த இளஞ்சேட்சென்னி எனபதுஅடிக்குறிப்பினால விளக கும். ஆகவே, அகநானூறு (375) கூறும் இளம் பெருஞ்சென்னியும், புறநானூறு (378) கூறும் செருப்

பாழியெறிந்த இளஞ்சேட் சென்னியும் ஒருவரே என்பது போதருகிறது.

ஊன்பொதி பசுங்குடையார் இளஞ்சேட் சென்னியின் பணபுநலங்களைப் புறநானூற்றில் (10, 203, 370, 378) விரிவாகக் கூறியுளளார். 'அவன் தென்பரதவர் மிடல சாய்ததான; வடுகரை வென றான; தன மறம் பாடிய பரிசிலர்க்கு நிறைய அணி கலன் அளித்தான். தன்னைவழிபடுபவரை விரைவில், புரிந்துகொளவான. பிறர்பழி கூறுவோரின சொலலை ஏலான்; பிறா செய்த தீமைக்கேற்பத் தணடனை யளிப்பான்: தவறிழைத்தோர் தன்னடி பணியின் சினந்தணிநதருளுவான; இரவலர்க்கு வரையாது வழங்குவான; செய்த பின்னர் இரங்கும் வினை களைச் செய்யான்'. இவ்வாறு இசசோழ மனனனின் பண்பு நலஙகள ஏத்தப்பெறுகினறன. இரா.சா.

**சேரமான் பெருஞ் சேரலாதன்:** இவன சங்ககாலச்சேர அரசன. இவன் சேரமான் பெருந் தோளாதன் எனற வேறு பெயராலும் வழஙகப் பெற்றான. இவனைக் கழாத்தலையார் எனனும் புலவா (புறம.65) புகழநது பாடியுளளார். இவன சோழன் கரிகாற் பெருவளத்தானோடு போா செய தான. அப்போரில சோழன எயத அம்பு இவன மார்பில தைதது முதுகுபபுறம் வெளிவநதது. அநத அம்பு முதுகுபபுறம தைத்ததாக எணணி மறககூறு பாட்டையுடைய இவன வடக்கிருநது உயர்விட்டான எனப் புகழநது கழாத்தலையாா பாடியுளளாா. மேலும், வெணணிககுயததியார் சோழன கரிகாற பெருவளத்தானைப் பாடிய (புறம்.66) பாடலிலும இவன் வடககிருந்த செய்தி காணப்படுகிறது. வீ.சே.

**சேரமான் பெருஞ்சோற்று உதியஞ் சேரன்:** இவனை இமய வரமபன நெடுஞ சேரலாத னின தநதை என்றும், பதிற்றுபபத்தின முத்றபத்து இவன் மீது பாடப பெற்றதாக இருககலாம் எனறும அறிஞர் கருதுவர். இரணடாம பத்தின பதிகம் 'மனனிய பெருமபுகழ் மறுவில வாய்மொழி இனனிசை முரசின உதியஞ சேரறகு வெளியன வேணமான நலலினி ஈன்ற மகன இமய வரம்பன் நெடுஞ்சேர லாதன்'என்று கூறும். உதியன, உதியஞசேரல, உதியஞ் சேரலன எனறும் இவன வழஙகப்பெறுவான. பாரதப் போரில் நூறறுவா பொருதுகளத்தொழிய, மறவர்க் குப் பெருஞ்சோறு வழங்கியதால இசசேரன் பெருஞ் சோற்றுதியன எனப் போற்றப்பட்டான். பரணர் குறிப்பிடும் நன்னன் உதியன் (அகம்.258) இவனினும் வேறாவன். முரஞ்சியூர் முடிநாகனார், மாமூலனார், கோட்டம்பலத்துத் துஞ்சிய சேரமான, இளஙகீரனார் ஆகியோர் இவனைப் பாடியுளளனர். இவன் பிற நாடு களை வெனறு தன் நாட்டை விரிவுபடுததிய செய் தியை 'நாடுகண் அகறறிய உதியஞ்சேரல்' எனறு மாமூலனார் (அகம.65) குறிப்பிடுவா. இவன நாடு பரந்துபட்டது எனபதை முரஞ்சியூர் முடிநாகனாரும் 'நின்கடற் பிறந்த ஞாயிறு பெயர்த்து நின வெணட லைப் புணரிக குட கடற் குளிககும யாணா வைப் பின் நனனாடு' எனபதனாற் குறிப்பிடுவர். இவன் நிலத்தைப் போல் பொறையையும், விசுமபைபபோல் சூழ்ச்சியையும், காற்றைப்போல் வலிமையையும், தீயைப்போல் தெறலையும், நீரைப்போல் அளியையும் உடையவன் (புறம.2). துறககம எய்திய தன் முன் னோர்க்காக உதியஞ்சேரல் பெருஞ்சோறு வழஙகிய போது கூளிச சுற்றம குழுமிய செயதியை மாமூல னார் (அகம்.233) குறிப்பர். இந்த உதியஞ்சேரலையும் பாரதப் போரில பெருஞ்சோறு வழங்கிய உதியஞ் சேரலையும் சிலர் வேறாகக கருதுவர். குழுமூரில கொடைக் கடன் ஏறற கோடாத நெஞசினையுடைய உதியனது அடுககளை போல அருவிகள ஓசையுடன மலையினின்று இறஙகும் எனறு அகநானூறு (168) இவனது கொடையைக் குறிபபிற் புகழும. உதியன வெகுண்டு சென்ற 'பேராரவாரம மிக்க போர்க்களத் தில வாசசியம் இசைப்போர் விரைந்தூதும் ஆம்பலங் குழலிசைபோலத் தலைவி வாய்விட்டழுதாள்' எனறு நற்றிணை (113) கூறும் செய்தியில இவன் வீரம் குறிப்பிடப்படுகிறது. இரா.சா.

**சேரமான் பெருமாணாயனார்:** காணக: கழறிற்றறிவார் நாயனாா.

**சேரமான் மாந்தஞ்சேரவிரும்பொறை:** சங்க காலத்தில் வாழ்ந்த சேர மனனாகளுள ஒருவன். கோசசேரமான யானைககட்சேய் மாந்தரஞ்சேர விரும்பொறை, சேரமான யானைக்கட்சேய்மாநதரஞ் சேரலிரும்பொறை, சேரமான மாந்தரஞ்சேரலிரும் பொறை எனனும் பெயர்களால் குறிபபிடப்படும் சேரமன்னன் ஒருவனே என்பது டாக்டர் உ.வே. சாமிநாதையர் கருத்து. மேலும், மாநதரன என்பது ஒரு சேரமன்னன் பெயராகும். அதனால், இவன மாந்தரன என்னும் சேரனின் மைந்தனாவான் என் றும் அவர் குறிப்பிட்டுள்ளார். இமமன்னனும், சோழன் இராசசூயம் வேட்ட பெருநற்கிள்ளியும் ஒரு கால் போர் புரிந்தனர். அப்போரில் தேர்வண மலையன் என்பான், சோழனுக்குத் துணையாகப் போரிட்டான். வடமவண்ணக்கனார் தேர்வண்மலை யனைப் பாடியுள்ளார். இச்செய்தி புறநானூற்றின் 125-ஆம் பாடல் அடிக்குறிபபில் இடம்பெற்றுளளது. காண்க: கோச்சேரமான் யானைககட்சேய் மாந்தரஞ் சேரலிருமபொறை. அ.மா.ப.

*சேரமான்மாரிவெண்கோ:* இவன் மாவணகோ எனவும் அழைக்கப்பெறுவன். இவன் சேரநாட்டை யாணடபோது பாண்டிய நாட்டைப் பாண்டியன கானப்பேர் தந்த பெருவழுதியும் சோழநாட்டைச் சோழன் இராச சூயம் வேட்ட பெருநற்கிள்ளியும் ஆண்டனர். மூவேந்தர்கள் இடஞ் சிறிது என்னும் ஊக்கந் துரப்பத் தம் நாட்டை விரிவுபடுத்தக் கருதிச் சில சமயம் தம்முட் பொருதலுமுண்டு. இநநிலை தவிர்ந்து மாரிவெண்கோவும் கானப்பேர் தந்த பெருவழுதியும் பெருநற்கிள்ளியும் ஒருங்கிருந்ததைக் கண்டு ஔவையார் பெருமகிழ்வெய்தி அவர்கட்கு அறிவுரை கூறி வாழ்த்துகினறார். இச்செய்தி புறநானூறு 367-ஆம் பாடலில் இடம்பெற்றுள்ளது. இதனைத் தவிர மாரிவெண்கோவைக் குறித்து எச்செய்தியும் காணப் பட்டிலது.

ஔவையார் மாரிவெண்கோவையும் மற்றைய வேந்தரையும் நோக்கி, 'வேநதிர், நிலவுலகம் வேந தர்க்குரியதாயினும் அவர் இறக்குங்கால் அவ்வுலகம் உடன் அழிவதில்லை. வேற்றோராயினும் நோற் றோர்க்கே அது உரியதாகும். நீவிர் இரப்போர்க்கு இன்முகத்தோடு நிறைய வழங்கி நும் வாழநாள இறுதிவரை இன்புற்று வாழ்வீராக. 'வாழச் செய்த நல்வினை அலலது ஆழுங்காலைப் புணைபிறிதில்லை' ஆகவே நன்றாறறுமின, நீவிர் விண்ணிற்றோன்றும் மீனினும் மழைததுளியினும் பலகாலம் மேம்பட்டு வாழ்க' என நிலையாமை உணர்த்தி அறன் வலியுறுத் தியுள்ளார். இரா.சா.

*சேரமான் யானைக்கட்சேய் மாந்தரஞ் சேரல் இரும்பொறை.* காணக: கோச்சேரமான் யானைக் கட்சேய் மாநதரஞ்சேரல் இரும்பொறை.

*சேரமான் வஞ்சன்:* புறநானூற்றில் அறியப் பெறும் ஓர் அரசன் சிறந்த வீரனும் வளளலுமாக விளஙகிய இம்மன்னனைத் திருத்தாமனார் எனனும் சஙகப் புலவர் பாடியுளளார். பாடாண் திணையில் கடைநிலை என்னும் துறையாக அமைந்த அவரது பாடல் (புறம். 398) இச்சேரவேநதனின் வீரச் சிறப் பையும்,கொடைச்சிறபபையும் விளக்குவதாக உளளது. இவன் பரிசிலர்கரு அவர்தம் வரிசையறிந்து நல்கிய வனும், வாய்மொழி தவறாச் சிறபபுடையவனுமா வான என்பதனை, வரிசையின் இறுத்த வாயமொழி வஞ்சன்' என்னும் தொடர் உணாததுகிறது. இவனு டைய மூதூர், புலியினம் வாழும் குகைபோல, நண பர்கள் அல்லாமல பகைவராயினார் நெருங்க முடி யாச் சிறப்புடையதாகும். இரவலர்களை விரும்பிய முகத்தனாய், உவந்தேற்றுப் புகைவிரிந்தாற் போன்ற நல்லுடை நல்கித் தேறலும் பிறவும் கொடுத்து உண ணச்செய்வான் என்று இவனது,இரவலரை ஓம்பும் திறம் சிறப்பாகப் பேசப்பட்டுள்ளது. அ.மா.ப.

*சேரமானெந்தை* சங்க காலப் புலவர்களுள் ஒருவர். இவர் சேர மரபினைச் சேர்ந்தவர். இவர் பாடியதாகக் குறுந்தொகையில் ஒரு பாடல் (22) உள்ளது. தோழி கூற்றாக அமைந்த அப்பாடல் தலைவனுடைய செலவுக் குறிப்பறிந்து ஆற்றாது வருந்தும் தலைவியைத் தோழி தேற்றுவதாக அமைந்துள்ளது. இவர் அப்பாடலில் தலைவி வேனிற் காலத்தில் கடப்ப மரத்தின் கொம்புகள்போல மணக் கும் நெற்றியையுடையள என்பதனை 'மராஅத்து வேனில் அஞ்சினை கமழும், தேமூர் ஒண்ணுதல்' எனக் குறிப்பிட்டுள்ளார். வீ.சே.

*சேரர்:* தமிழக முடியுடை வேந்தர் மூவருள் முதன்மையினராக வைத்து எண்ணப்பட்டவர்கள் சேரர்கள். தமிழ்கூறு நல்லுலகிற்கு மேற்கில் அமைந் துள்ள இன்றைய மலையாள நாடாகிய கேரளப் பகு தியில் அவர்கள் அரசோச்சினர். மலை அடுக்குகள தொடர்சசியாகப் பின்னிப் பிணைந்த பகுதி 'சேரல்' எனப்படும. அசசேரலைச் சேர்ந்த நாடு சேரல் நாடாகும். அசசேரல் நாட்டினை ஆணடவர்கள 'சேரலர்' எனப்பட்டனர். 'சேரலர்' என்ற சொல் 'சேரர்' எனவும், 'கேரளர்' எனவும் திரிந்து வழங்க லாயிற்று.

தமிழகத்தில் ஆணடுவந்த தொன்மைப் பிரிவின ரான சேரர்களைப் பற்றிப் பல சான்றுகள் கிடைத் துள்ளன. 'கேரள புத்திரர்' என அசோகரின கல் வெட்டுகள் குறிப்பிடுதலால், அவர்கள் கி.மு. மூன் றாம் நூறறாணடிற்கு முன்னரே புகழ் பெறறிருந் தனர் என்பது தெளிவு. கிறித்துவிற்குப் பின் இரண்டு அல்லது மூன்றாம் நூற்றாண்டினதெனக் கணககிடப் பட்டுள்ள புகளூர் தமிழ-பிராமிக் கல்வெட்டில் ஆதன செல் இரும்பொறை,பெருங்கடுங்கோ இளஙகடுங்கோ ஆகிய பெயர்களை உளளடக்கிய குலமுறைகாணப் படுகின்றது.எனவே,கடைச்சங்க காலத்தில சேரர்கள் சிறப்ற்றிருக்க வேண்டுமென்பது புலனாகின்றது. சேர மன்னன் பெருஞ்சோற்று உதியன் சேரலாதன் பாரதப் போரின்போது படைவீரர்களுக்குப் பேருணவு அளித்த செய்தியைப் புறநானூறு கூறுகிறது. இது அவ் வரசர் களின் தொன்மையைப் பறை சாற்றுகின்றது, பதிற் றுப்பத்து, புறநானூறு, அகநானூறு,நற்றிணை,சிலப் பதிகாரம் போன்ற தமிழ் இலக்கியங்களிலும் சேர மன்னர்களைப் பற்றிய குறிப்புகள் விரவிக் கிடக கின்றன. ஆனால், அவர்களது வரலாற்றினைச் சீராகத் தொகுத்து எழுத அவை துணைபுரியவில்லை

யாயினும், அவற்றை ஒதுக்கிட இயலாது. அவற்றின் மூலம் கடைச் சங்ககாலத்தில் சேரர்கள் மேன்மையுற்ற நிலையிலிருந்தனரென்பது நன்கு விளங்கும்.

சேரர்களது ஆட்சிப்பகுதி மலைவளம், நீர்வளம் முதலிய பல வளங்கள் நிரம்பப்பெற்றது. மேலைக் கடல் பகுதியிலுள்ள துறைமுகங்கள் வெளிநாட்டு வாணிகத்திற்குப் பேருதவியாயிருந்தமையால் சேரர்களின் பொருள்வளம் சிறப்பு மிக்கதாயிருந்தது. கொல்லி, அயிரை மற்றும் மேற்கு மலைத் தொடர்கள் சேரர்களின் ஆட்சிப்பகுதியை வளமுடையதாகச் செய்தன. பொருநை, குடவனாறு, காரியாறு, பேரியாறு போன்றவை சேரர்களின் பகுதியைச் செழிப்புடையதாகச் செய்துள்ளன.

வில் பொறித்த கொடியினையும், பனம் பூ மாலையையும் தமது அடையாளப் பொருள்களாகக் கொண்டிருந்த சேர மன்னர்களின் தலைநகர்களாக வஞ்சியும் தொண்டியும் விளங்கின. வஞ்சி என்பது உள நாட்டுத் தலைநகராகவும், தொண்டி துறைமுகத் தலைநகராகவும் இருந்தன. இவற்றுள் வஞ்சியென்பது எது என்பதுபற்றி மாறுபட்ட கருத்துகள் நிலவுகின்றன. மேலைக் கரையிலுள்ள திருவஞ்சைக்களமே வஞ்சியெனச் சிலரும், வேறுசிலரும் இன்றைய திருச்சி மாவட்டத்திலுள்ள கரூரே வஞ்சி எனக் கொள்கின்றனர். கிரேக்கப் புவியியல் வல்லுநரான தாலமி சேரர் தலைநகரைக் 'கொரூரா' என்று அழைத்ததன் மூலம் வஞ்சியென்பது கரூராகவே இருந்திருக்க வேண்டுமெனக் கொள்ளலாம்.

சேரர்கள் ஆண்டுவந்த பகுதி சேரமண்டலம் எனப்பட்டது. ஆட்சியாளர்களின் திறமை, செல்வாக்கு, வலிமை ஆகியவற்றுக்கேற்ப அவர்களது எல்லை மாறுபட்டதாயிருந்தது. பொதுவாகச் சேரர்களின் ஆட்சிப் பகுதி 12 உட்பிரிவுகளை உள்ளடக்கியதாயிருந்தது. வடக்கு மலபார் பகுதியான துளுநாடு 'பூழி' எனப்பட்டது. தென் மலபார் பகுதி 'குடம்' எனப்பட்டது. மங்களூரைக் கொண்டுள்ள கடம்பர் நாடு 'மங்கலாபுர' மாகும். பழையஙகாடி என்பது 'குளத்து நாடு' என்றழைக்கப்பட்டது. நீலகிரிக்கு மேற்கிலுள்ள 'வள்ளுவநாடு', இன்றைய கோழிக்கோடு பகுதியான 'ஏரநாடு' ஆகியவற்றுடன நெடும் படையூரான பாலக்காட்டுப் பகுதி 'கற்கா' எனவும், எர்னாகுளப் பகுதி 'குட்டநாடு' என்றும் அழைக்கப் பட்டுச்சேரர்களின்கட்டுப்பாட்டிலிருந்தன. இன்றைய கொல்லங்கோட்டுப் பகுதி 'வெங்கா நாடு' என்றும், காயாங்குளம் 'ஒட்டநாடு' என்றும், திருவிதாங்கூர்ப் பகுதி 'வேணாடு' என்றும், நாகர்கோயில் 'நாஞ்சில் நாடு' என்றும் அழைக்கப்பட்டன. இவ்வாறு பல்வேறு பகுதிகளின் ஆட்சித் தலைவர்களான சேரர்கள், சேரலர், கேரளர், உதியர், பொறையர், குடவர், குட்டுவர், ஆதவர், வானவர், பூழியர், குடக்கோ, பூழியர்கோன், கொங்கர் கோ, கொங்கன் எனப் பல பெயர்களில் வழங்கப்பெற்றனர். இப்பெயர்கள் அனைத்தும் காரணப் பெயர்களாகவே உள்ளன. இன்றைய சேரநாட்டுப் பகுதி மக்கள் மருமக்கள் தாயமுறையைப் பின்பற்றிய போதிலும், சேரமன்னர்கள் மக்கள தாயமுறையையே மேற கொண்டிருநதனர் எனப்பல ஆராய்சசியாளர்கள் தெளிவுபடக் கூறுகின்றனர்.

பதிற்றுப்பத்து என்னும நூலின் மூலம் கீழ்க் காணும் சேர மன்னர்களைப் பற்றி அறியமுடிகினறது. வஞ்சியில் ஆண்ட உதியன்சேரல் என்னும் சேர மன்னனுக்கும் வேளிர் குலததைச் சேர்ந்த வெளியன் வேண்மாள் நல்லினி என்பவளுக்கும் மகனாகப் பிறந்தவன் இமயவரம்பன் நெடுஞ்சேரலாதன். இவனது ஆட்சிக்காலம் சுமார் 58 ஆணடுகளாகும். அதாவது இவன் கி.பி. 27-க்கும் 85-க்கும் இடைப்பட்ட காலத்தில் ஆண்டிருக்க வேணடும். இவன் இமயம் வரை படையெடுத்துச சென்று வென்று திரும்பிய பெருவீரன். அஙகுத் தனது விற்கொடியைப் பறக்கவிட்டவன்; புலவரைப் போற்றிய புரவலன். இவனைப் பற்றிக் குமட்டூர்க் கணணனார் என்னும் புலவர் பாடி இன்றைய யானைமலைப் பகுதியான உம்பர் காட்டுபபகுதியில 500 ஊர்களைப் பிரமதேயமாகப் பெற்றார். இமயவரம்பன், சோழமன்னன் வேற்பஃறடக்கைப் பெருவிறறகிள்ளியுடன் போரிட்டு அவனைப் போர்க்களத்தில் கொன்று தானும் அப் போரில மடிந்தனன்.

அவனுக்குப் பின பல்யானைச் செல்கெழு குட்டுவன் 25 ஆணடுசள், அதாவது சுமார் கி.பி. 85 முதல் 110வரை அரசோச்சினான். இவனும் உதியஞ் சேரலின் மகனேயாவான். உம்பர்க்காடு, அகப்பா ஆகிய பகுதிகளைச் சேரர்களின் பகுதிகளாக்கினான. தனது ஆட்சியை உரிமைச் சுற்றத்தினருடன் பகிர்ந்து கொண்டான். அயிரை மலையிலிருந்த பெண் தெய்வத்தை இவன் வணங்கினான். பாலைக் கௌதமனாா என்னும் புலவர் இம்மன்னனைப் பாடியுளளார்.

இமயவரம்பனின் மற்றொரு மனைவியான தேவி என்பவளின் மகனாகப் பிறந்த களங்காய்க்கணணி நார்முடிச் சேரல் கி.பி. 110 முதல் 135 வரை சுமார் 25 ஆண்டுகள் ஆண்டான். பூழி நாட்டை வென்றடக்கியவன். கடம்பின் பெருவாயில் என்னுமிடத்தில் நன்னன் என்ற குறுநில மன்னனை வெற்றி

கொண்டான். புலவர்களைப் போற்றியவன். காப்பி யாற்றுக் காப்பியனார் என்னும் புலவர் இவ்வரச னைப் பாடி நாற்பது நூறாயிரம் பொற்காசுகளை யும், சேர அரசில்ஒரு பகுதியையும் பெற்றார்.

இமயவரம்பனின் சோழ மனைவியான நற் சோணை என்பாளுக்குக் கடல் பிறக்கோட்டிய செங் குட்டுவனும், அவன் இளவல் சிலப்பதிகாரம் பாடிய இளங்கோவடிகளும் பிறந்தனர். சங்ககாலச் சேர மன்னர்கள் யாவரினும் இவனே மேம்பட்ட புகழுடை யவன் இலங்கை மன்னன் கயவாகுவின் சம காலத் தினன். எனவே கி பி. 135க்கும்190க்கும் இடைப்பட்ட காலத்தில் ஆட்சி செய்திருக்க வேண்டுமென அறிஞர் கள் வலியுறுத்துகின்றனர். இப்பெரு வீரன் பத்தினித் தெய்வம் கண்ணகிக்குச் சிலை வடித்தலினபொருட்டு வடநாடு நோக்கிப் படையெடுத்தான. அங்கு நூற்று வர்கன்னர் எனபோரின் பேருதவியுடன் கனக, விசயர் களை வென்று அவர்கள் தலைமீது கல்லேற்றி வந்து சிலைவடித்து விழா எடுத்தான் இவனைப் பற்றிய, செய்திகள் சிலப்பதிகாரத்திலும்காணக் கிடக்கின்றன. இடும்பில் என்னும் இடத்தில் வேடுவரை வெற்றி கொண்ட இம்மனனன் மைசூரின் கொடுகூரையும் வென்றான். மோகூர்ப் பகுதித் தலைவன் பழையன் என்பவனின்மீது வெற்றி கொண்டு அவனது கடிமர மான வேம்பினை வேரோடு சாய்த்தான். நேரிவாயில் என்ற இடத்தில் ஒன்பது சோழ இளவரசர்கள் மீது வெற்றி கண்டான. கடம்பர்களைக் கடற்போரில் வென்றான். இதனால் கடல் பிறக்கோட்டியவன் என்ற பெயரினைப் பெற்றான். இவன் இளங்கோ வேணமாள் என்ற வேளிர்குலப் பெண்ணை மணந்த வன. இம்மன்னன எண்பேராயம், ஐம்பெருங்குழு போன்ற அரசு அதிகாரிகளின் துணையோடு நல் லாட்சி புரிந்தவன். வில்லவன் கோதை என்ற படைத் தலைவன. அழும்பில்வேள் என்னும் முதலமைச்சர், சஞ்சயன் என்ற தூதுவர் தலைவன் ஆகியோரின் துணையோடு சிறப்பாக ஆட்சி செய்தான். இவன் பாண்டியரையும், சோழாகளையும் கட்டுப்பாட்டில வைத்திருநதானென்பதை இவனுடைய இலசினை மூலமாக அறியலாம். இவன சைவ சமயத்தினனா யிருநத போதிலும் சமயப் பொறையுடைமைக கோட் பாட்டினைப் பின்பற்றினான. பௌத்த சமயத்தின ரான கூலவாணிகன் சீத்தலைச்சாத்தனார்மீது இம் மன்னன காட்டிய அன்பு இவனுடைய சமயப பொறையை விளககும். 'புரையோர் தமமொடு பொருந்த உணர்ந்த அரசர் ஏறான' செஙகுட்டுவன, வீரனாகவும் திகழ்ந்தவன்; சிறந்த கொடைத்திறம் படைத்தவன். கங்கைப் பகுதியில் படைவீட்டில் தங்கியிருககையில் தனக்குச் சமமான எடையுள்ள பொன்னைத் தானம் செய்தான். பெணடிரைப் போற்றியவன். கற்புநெறிக்குச் சிறப்பிடமளித்தவன். பரணர் என்னும் புலவர் பெருமகனார் இசசேர மன்னனைப் பாடி உம்பர்க் காட்டு வருவாயைப் பெற்றாரெனப் பதிற்றுப்பத்து மூலம் உணரலாம் ஆனால், பதிற்றுப்பத்து வேறு பல சேர மன்னர் களைப் பற்றிக் குறிப்பிட்டபோதிலும் அவர்களது தொடர்ச்சி பற்றித் திட்டவட்டமாக வரையறுக்க முடியவில்லை.

மலை ஆடுகள் சிலவற்றைத் தணடகாரணியத்துக கள்வர்களிடமிருநது கைப்பற்றிய ஆடுகோட்பாட்டுச் சேரலாதன் தனது செல்வத்தைத் தன்னைச் சேர்ந்த வர்களுடன் பகிர்ந்துகொணடான். குடநாட்டிலுள்ள ஓா ஊர் பார்பபனருக்குத் தானமாக வழங்கப்பட் டது. 'வானவரம்பன்' என்ற பட்டத்துடன் 38 ஆணடு கள் அரசுபுரிநத அம்மனனனைக் காக்கை பாடினி யார் .நச்செள்ளையார் பாடி அளவற்ற பொன்னை யும், மன்னனுக்கருகில் அமரும் உரிமையையும் பெற்றார்.

அந்துவன் என்பானுக்கும் பொறையன் பெருந் தேவி என்பவளுக்கும் பிறந்த மகனே செல்வக் கடுங்கோ வாழி ஆதன். பகைவர் பலரைப் புறமுது கிட்டோடச செய்த இவ் வீரமன்னன் வேத வேளவி கள் பல ஆற்றியவன். வைணவப் பற்றுடையவன். ஒகந்தூர் என்னுமிடத்தைத் தானமாக அளித்தான 25 ஆண்டுகள் ஆண்ட இம்மன்னன் சிக்கற்பள்ளி என்னும் ஊரில் இறநதான் பெரும் புலவர் கபிலருக்கு நூறாயிரம் காணம் பொன்னுடன் நிறைய நிலத்தையும் பரிசாகத் தந்துள்ளமையால் அம்மன்ன னின் தமிழ்ப் பற்றுடன் புலவரைப் போற்றும் பாஙு கும் புலனாகும்.

செல்வக்கடுங்கோ வாழி ஆதனுக்கும் தேவி என பவளுக்கும் பெருஞ்சேரல் இரும்பொறை எனற மகன் பிறந்தான். தன் பாட்டனாரான அந்துவன சேரல் இரும்பொறையின் வழியில் புதிய ஆட்சியைப் பின்பற்றியவன். தகடூரில் ஆட்சிபுரிநத சத்தியபுத் திரர் என்ற ஆட்சி மரபினருள ஒருவனான அதிய மான் நெடுமானஞ்சியைத் தகடூர் என்னுமிடத்தில் தோற்கடித்தான். அரிசிலகிழார், பொனமுடியாா ஆகியோர் இவ்வெற்றியைச் சிறப்பித்துப் பாடியுள்ள னர். அரிசில்கிழார் இம்மன்னனைப் புகழ்ந்து பாடின மைக்காக நூறாயிரம் பொனனுடன் அரசுரிமையை யும் பரிசிலாகப் பெற்றார். ஆனால், அனபின் மிகுதி யால் மன்னன் வழங்கிய ஆட்சியுரிமையைத் திரும்ப அவனிடமே ஈந்துவிட்டு, அமைச்சராகப் பணிபுரிந் தார். சேரன் கருவூரேறிய ஒள்வாட் கோப்பெருஞ் சேரல் இரும்பொறை எனப்பட்ட இம்மன்னன் காலத்தில் கரூர்,கைப்பற்றப்பட்டோ மீட்கப்பட்டோ

இருக்கலாம். இம்மன்னனின் பெயரிலுள்ள புகழ்ச் செய்தியால் கரூர் இம்மன்னன் காலததில் புகழ் பெற்றுச் சிறந்திருக்கலாம். இவனுக்கும் செலவக் கடுங்கோ மையூர் கிழான் மகள் வேணமாள் அந்து வன் செள்ளை என்பவளுக்கும் மகனாகப் பிறந்த வனே இளஞ்சேரல் இரும்பொறை என்பவனாவான். இவன 17 ஆணடுகள் ஆட்சி புரிந்தவன்.

பெருஞ்சேரல் இரும்பொறைக்குப் பின அரசு கட்டில் ஏறியவன குடககோ இளஞ்சேரல் இரும் பொறையாவான். சோழ, பாண்டிய மனனர்களை இவன் வெற்றி கொண்டான். விச்சி மலைத தலை வனை வென்று, அவனது ஆட்சிப பகுதிகளைக் கைப் பற்றினான். கோப்பெருஞ்சோழனை வஞ்சியில வென்றான. இளம்பழையன மாறன் என்பவனும இம் மன்னனால் வெல்லப்பட்டவர்களுள் ஒருவன். கடவுள் வழிபாட்டில் மந்திரங்களைப் பயனபடுத்துவதைத் தோற்றுவித்தவன் இவனே. வஞ்சி மாநகரில் பெருஞ் சதுக்கத்துப் பூதத்திற்கு வழிபாடு இயற்றவழி வகுத்த மனனனும் இவன்தான்.

இவ்விரு இரும்பொறைப் பிரிவின் மன்னர்களைத் தவிர யானைக்கட்சேய் மாந்தரஞ் சேரல் இரும் பொறை கணைக்கால இரும்பொறை என்ற வேறு இரு இரும்பொறை மன்னர்களும் ஆட்சி செயதுளளனர். முன்னவன் கி.பி.200 முதல் 275 வரை ஆணடிருகக வேண்டும். இவனைத் தலையாலங்கானத்துச் செரு வென்ற நெடுஞ்செழியன் தோற்கடித்தான். கூடலூர் கிழார் என்னும் புலவர் இம்மனனனைப் பாடியுள ளார் கொல்லிப் பகுதி இவனது கட்டுப்பாட்டிலிருநத தென்பது புலவர்கள் கூற்றினால் அறியப்படுகிறது. கபிலரை ஆதரித்த இம்மனனன், கூடலூர் கிழாரைக் கொணடு 'ஐஙகுறு நூறு' தொகுக்கச் செயதான்; இராசசூயம் வேட்ட பெருநற் கிள்ளியுடனும் போரிட்டான். எனவே, இரும்பொறைச் சேரலகள் போர்களில் நாட்டமுடையவர்களென்பதும் புலவர் களைப் போற்றியவர்கள் என்பதும் புலனாகும்.

கணைக்கால் இரும்பொறை என்ற மற்றொரு சேர னைக் கோச்செஙகணான் எனற சோழன கழுமலம் என்ற இடத்தில வென்று சிறைப்பிடித்தான். அவவம யம் பொய்கையார்என்னும புலவர் சோழமனனனைப் புகழ்ந்து 'களவழி நாற்பது' என்னும் நூலைப் பாடிச் சிறையிலிருநது சேரனை மீடடார். எனவே, இவனும்புலவர்களைஆதரித்தவன என்பது விளங்கும்.

இவ்வாறு, பதிற்றுப்பத்தில் பாடப்பெற்றுள்ள சேர மன்னர்களைப் பற்றிய குறிப்புகள் பல புற நானூற்றிலும் காணக் கிடக்கின்றன முரஞ்சியூர முடிநாகராயர் இரண்டாம் புறநானூற்றுப் பாடலி லும், மாமூலனார் 233-ஆம் அகநானூற்றுப் பாடலி லும் சேரமான பெருஞ்சோற்று உதியன சேரலாதன என்னும் மன்னரைப் பாடியுள்ளனர். இவனே, பாரதப்போரில் பெருஞ் சோறளித்தவன. கபிலா புறநானூற்றின எட்டு, மறறும் பதினான்காம் பாடல்களில் சேரமான கடுங்கோ வாழி ஆதனைப் பாடியுள்ளார். புறநானூற்றின் ஐம்பதாம் பாடலில் குறிக்கப்பட்டுளள தகடூரெறிந்த பெருஞ்சேரல் இரும் பொறை எனனும் மனனனே அரசுகட்டிலில அயாநது தூஙகிவிட்ட மோசிகீரனார் என்னும் புலவருககுக கவரி வீசிக் களைபபைப் போககிய பெருநதகை யாவான். சேரன் கோக்கோதைமாாபனைப் பறறிய நல்லியல்புகள புறநானூற்றின் 48,49-ஆம் பாடல களிலும, அகநானூற்றின 346-ஆம் பாட்டிலும் குறிக்கப்பட்டுள்ளன. சேரமான குட்டுவன கோதை எனற மன்னரின் வீரத்தினை மதுரைக்குமரனார் புற நானூற்றில் 54-ஆம் பாடலில் புகழ்ந்துளளார். புற நானூறறின் 62,63மறறும் 368-ஆம பாடல்கள சேரமான குடககோ நெடுஞ சேரலாதனைப் புகழந் துள்ளன. பெருவீரனும தமிழப் பறறுடையவனுமான கணைக்காலிரும்பொறை பறறி 74-ஆம் புறநானூற றுப் பாடல குறிப்பிடுகினறது. அநதுவன சேரல் இரும்பொறையை 13-ஆம் புறப்பாடலும, பாலை பாடிய பெருங்கடுங்கோ பற்றிப் பேய்மகள இள வெயினி பாடிய 11-ஆம் புறநானூறறுப் பாடலும், சேரன் பெருஞ்சேரலாதனைப் பற்றி வெணணிக குயத்தியின 65,66-ஆம் புறநானூறறுப் பாடலகளும், குடக்கோச்சேரல இரும்பொறையைப்பெருஙகுனறூர் கிழாரின் புறநானூறறின் 210,211-ஆம் பாடல்களும் குறிப்பிட்டுளளன. புறநானூற்றின 369-ஆம பாடல் கடல் பிறககோட்டிய வேலகெழு குட்டுவனைப் பறறி விளக்குகிறது. இவ்வாறு புறநானூறறுப் பாடலகள சேர மன்னர்களைப் பற்றி உணர்ததககூடிய வர லாற்றுச் சானறுகளாக அமைந்துள்ளன.

சஙக இலக்கியஙகளின் வாயிலாகப் பல சேர மன்னர்களின ஆற்றல், பெருவீரம், கொடைத்திறம், போர்களில் பெற்ற வெற்றிகள, தமிழப் பறறு, புலவர்களைப் போற்றும் பாங்கு, சமகால மனனர் களோடு அவர்கள சொணடிருந்த தொடாபு போன்ற பலவகையான செய்திகள் மேற்கண்டுளளவாறுவெளிப் படுத்தப்படுகின்றன. சேரர்களுள பல கிளைப் பிரிவு கள் இருநதன என்பதும் உணரத்தககது. தமிழகத் தில் சஙகம் மருவிய காலத்தில் களப்பிரர் என்னும் பிரிவினர் ஊடுருவினமையால் ஏற்பட்ட பாதிப்பு களால் சேரர்களும தாக்குண்டனர். அதனால், அவர் களைப் பற்றிய செய்திகள் சிறிது காலம் தென்பட

வில்லை. வைணவ ஆழவார்கள பன்னிருவருள் ஒரு வரான குலசேகர ஆழ்வார் சேர மனனர்குலத் தோன்றலாவார் எனவே, வைணவமும் அவர்களால் போற்றப்பட்டது. அதேபோல் சைவ சமயத்தினராய் கி பி. 9-ஆம் நூற்றாண்டில வாழ்நதவராகக் கொளளப்படும் சேரமான பெருமாள நாயனாரும் சேரமன்னர் மரபிலரே எனவே, பக்தி இயககம் தமிழகத்தில் வலுப் பெறறபோது சேரமன்னர்கள் சைவ, வைணவ சமயங்களுக்கு வலுவூட்டினர்.

பிறகாலச் சேரமன்னாகளுள கி.பி. 9-ஆம நூற்றாணடில் ஆட்சிபுரிநத தாணுரவி முக்கிய மானவன். அவன வழித்தோன்றலான பாசுகர ரவி வர்மனும் சிறபபுடைய சேரமன்னருள ஒருவனே. ஏறத்தாழ 13-ஆம் நூற்றாணடில் ஆட்சிபுரிநத இரவி வர்மன் குலசேகரன, சேரர் ஆட்சிபபிரிவினருள பிற காலத்தில் புகழ்பெற்றிருந்தான் அவனுககுபபின கி.பி.14-ஆம் நூற்றாணடில விசயநகரஆட்சியாளர்கள சேரர்களின் ஆட்சிப் பகுதியைக் கட்டுப்படுததினர்.

சேரநாட்டில் பிறகாலத்தில ஆட்சிசெய்துவநத பிற அரசுப் பிரிவினரும் தமமைச் சேரர்களின் வழித் றலகள எனக் கூறிக்கொள்வதன மூலம சேரர்களின சிறப்பியல்புகள் வெளியாகினறன. மா கா

**சேரன்செங்குட்டுவன்**: சங்ககால மன்னாகளுள தலைசிறந்தவனாகச் சேரன் செங்குட்டுவன் விளங கினான். இவன கருவூரைத தலைநகராகக் கொணடு 55 ஆண்டுகள சிறபபுடன ஆட்சி புரிநதான். சிறந்த வீரனான இவன் பல போாகளில் ஈடுபட்டு வாகை சூடினான. அவற்றுள குறிப்பிடத்தக்கது இவனது வட இந்தியப்படையெடுப்பாகும். கறபுடைத்தெய்வம கண்ணகிககுக் கோயில் எடுததுப் பெரும்புகழ் பெற றான்.

**சான்றுகள்**: இவனது வரலாறறை அறிநதுகொள் ளப் பயனபடும் இலக்கியச் சான்றுகள் பதிறறுப் பத்தும் (பரணர் பாடிய ஐந்தாம் பத்து) சிலபபதி காரமும்(வஞ்சிக் காணடம்) ஆகும். மேலும், மணி மேகலையும், புறநானூறறில் 36-ஆம் பாடலும், மறறும் சில சஙகச் செய்யுட்களும் உதவியாக உள ளன. அணமையில் கருவூருக்கு அருகிலுளள புகளூரில கண்டெடுக்கப்பட்ட கலவெட்டு ஒன்று இவனது மரபு வழியைக் காட்டுகின்றது.

**காலம்**: இப்பேரரசனின் ஆட்சிக் காலத்தைச் சரியாகக் கணக்கிடச சான்றுகள் இல்லை. எனினும், ஈழநாட்டை கி பி. 113 முதல் 125 வரை ஆட்சிபுரிந்த கயவாகு மன்னன் இவனுடைய சமகாலத்தவன் என் பதால இவன் கி பி. இரணடாம் நூற்றாண்டில் வாழ்ந்தவன எனக் கொளளலாம்.

**பிறப்பு**: செஙகுட்டுவன, சேரமன்னன் இமய வரம்பன் நெடுஞ்சேரலாதனுக்கும், சோழன் மணக் கிள்ளியின் மகள நறசோணைக்கும் மகனாய்ப் பிறந்தான் ஐம்பெருங்காபபியஙகளுள ஒன்றான சிலப்பதிகாரத்தை இயற்றிய இளங்கோவடிகள இவன் தம்பி. இமயவரம்பன் நெடுஞ்சேரலாதனுக்குத் தன மற்றொரு மனைவியான வேளாவிக் கோமானான பதுமனின் மகள் மூலம் களங்காய்க்கணணி நார்முடிச சேரல், ஆடுகோட்பாட்டுச் சேரலாதன் எனற இரு குமரர்கள இருந்தனர். அவர்களுள களஙகாய்க்கணணி நார்முடிச்சேரல் அரசு கட்டிலேறி 25 ஆணடுகள ஆட்சி புரிநதான் அதன் பினனரே செஙகுட்டுவன் சேர மன்னனானான. இவன கோப்பெருந்தேவியாக இளஙகோவேணமாள் விளஙகினாள.

**வெற்றிகள: கொடுகூர்ப் போர்**: இப்பேரசன கொங்கா செஙகளத்தே நடநத போரில் தன்னை எதிர்த்த கொங்கர், சோழர், பாண்டியா ஆகி யோரை வென்றான் என இளஙகோவடிகள் குறிப் பிடுகின்றார்

**பழையன்**: பாணடிய மனனனின படைத தளபதி யான பழையன மோகூர் எனற ஊருக்கு உரியவன. அவன் பகைவனான அறுகை என்பான் செங்குட்டுவ னின் நண்பன். எனவே, சேரமன்னன் தனனுடைய நண்பனுக்கு உதவி செய்யப் பழையனுடன் போர் தொடுத்தான். அப்போரில் பழையனையும், அவனுக்கு உதவியாக வநத சோழ, பாணடியரையும், வேளிரை யும வாகைசூடி, அவனுடைய காவல் மரமான வேம் பினைத் துண்டு துண்டுகளாக வெட்டினான்.

**வாயில் போர்**: வாயில் என்னுமிடத்தில் நடந்த போரில் இவன் சோழ அரசுரிமைக்காகப் போராடிய சோழ இளவரசர் ஒனபது பேரை அழித்தான். இது உறையூருக்கு அருகிலுள்ள நேரிவாயில் என்ற இட மெனச் சிலப்பதிகார அரும்பதவுரைககாரர் குறிப் பிடுகின்றாா. தன்மைத்துனனுக்குஎதிராக அரசுரிமை வேண்டி எழுந்த அவர்களை அடக்கவே இப்போரைச் செஙகுட்டுவன மேறகொண்டான் எனச் சிலப்பதி காரம் கூறும்.

**வியலூர்**: இம்மன்னன் கடற்கரையிலுள்ள விய லூரை வெனறான எனத் தெரிகிறது. இவ்வூரின் தலைவன் நன்னன் என மாமூலனார் (அகம். 97) குறிப்பிடுகின்றார்.

**கடற் போர்**: இவன் 'கடல பிறக்கோட்டிய செங் குட்டுவன்' எனக் குறிப்பிடப்படுவதால் (அகம். 212,

(பதிற்றுப். 45, 46, 48) கடற் போரிலும் வெற்றி பெற்றிருக்க வேண்டுமென்பது கருதப்படுகின்றது.

**வடஇந்தியப் படையெடுப்பு:** இப்பேரரசரின வட இந்தியப் படையெடுப்பைப் பற்றிச் சிலப்பதிகாரம் விரிவாகக் குறிப்பிடுகின்றது. 32 மாதஙகளாக நடந்த இப்படையெடுப்புப் பற்றிக் கால்கோட் காதையில் விரிவாகக் காணலாம். தமிழக மன்னர்களை இழித துரைத்த வடநாட்டரசன பாலகுமரனுடைய மக்க ளான கனக, விசயரைத் தண்டிப்பதும், கணணகி சிலைக்கு இமயத்திலிருந்து கல் கொண்டு வருவதும இப்படையெடுப்பின் நோக்கங்களாகும். அதனைத தொடங்குவதற்கு முன்னர்ச் செங்குட்டுவன் தனனு டைய வடஇநதிய நண்பர் நூற்றுவர் கன்னருக்குச் சஞ்சயனைத தூது அனுப்பினான. பெரும்படையுடன் சென்று, கங்கையின் தென்கரையை அடைந்து, நூற்றுவர் கன்னர் அளித்த மரக்கலங்கள் மூலம் ஆற் றைக் கடந்து, அதன் வடகரையை அடைந்தான். பின்னர் வடக்கு நோக்கிச் சென்று கனக, விசயரை யும், அவர்களுக்குத் துணையாக வந்த உத்தரன, விசித்திரன், உருத்திரன், பைரவன், சித்திரன், சிங கன, தனுத்திரன், சிவேதன் முதலான வட இநதிய அரசர்களையும தோற்கடித்தான். வில்லவன்கோதை என்பவன் தலைமையில தன் படையை இமயத் திற்கு அனுப்பிக் கண்ணகி சிலைக்குக் கல் கொணர்ந்து அதனைக் கங்கையில் நீராட்டி எடுத்துக் கொணடு தன்னாடு திரும்பினான். வஞ்சிமாநகரில கண்ண கிக்குக் கோயில் கட்டி விழா எடுத்தான. அதில ஈழ வேந்தன கயவாகு கலந்து கொண்டான்.

**சமயம்:** செங்குட்டுவன் சைவ சமயத்தைச் சேர்ந் தவன. அவன் தனது வட இந்தியப் படையெடுப்பை மேற்கொளவதற்கு முன கருவூர்ப் பசுபதி கோயிலி லிருந்து சிவபெருமானின் திருவடிகளைப் பெறறுத் தன் சிரமேற் கொணடான் என இளங்கோவடிகள குறிப்பிடுகிறார். எனினும், இவன் சமயக் காழ்ப் பினறி வைணவ, பௌத்த, சமண சமயததவரையும் ஆதரித்தான்.

**நிருவாகம்:** நாட்டு நிருவாகத்தில் அம்மன்னனுக்கு ஆலோசனைகூற ஐம்பெருஙகுழு, எணபேராயம என னும் இரு அவைகள இருநதன. மேலும, கரும வினை ஞர் (நிருவாக அலுவலர்), கணக்கியல் வினைஞர் (வருவாய்த்துறை அலுவலர்), தரும வினைஞர் (அறக்கட்டளைஅலுவலர்), தநதிர வினைஞர் (படைத் தலைவர்கள்), பெருஙகணி (காலககணிகன்) ஆகி யோரும் உதவியாக இருநதனர்.

**படை:** இப்பேரரசன் ஒரு பெரும் படையைப் பெற்றிருக்க வேணடுமெனினும் அதன் அளவு தெரிய வில்லை. இவனுடைய வடஇந்தியப் படையெடுப்பின் பொழுது இவனுடன் சென்ற பிறவறறைக் கொண்டு அப்படை மிகப் பெரிதாக இருந்திருக்க வேண்டுமெனக கருதலாம் இவனுடன் 100 தேர்கள், 500 யானைகள 10,000 குதிரைகள், 20,000 பண்டஙகள் ஏற்றப்பட்ட வணடிகள், 102 நாடக மகளிர், 208 குயிலுவா (வாத்தியக்காரர்) 100 நகைவேழம்பர் சென்றனர் என்று தெரிகிறது. போர் முடிந்ததும் வீரர்களுக்குப் பரிசுகள் வழஙகப்பட்டன. போரில காயமடைந தோருக்கும், இறநதவர்களின் மககளுக்கும், மற்றும் சிலருக்கும் பொன்னாலான வாகைப் பூக்கள வழங்கப் பட்டன.

**மதிப்பீடு:** பணடைய தமிழகததில புகழ் பெற்றுத் திகழ்ந்த மன்னர்களுள் செஙகுட்டுவன் ஒருவன ஆவான். இவன் சிறந்த வெற்றி வீரனாகவும், கலை களின் புரவலனாகவும, சைவ சமய ஆதரவாளனாக வும் விளஙகினான். இவனுடைய ஆட்சிக் காலததில தமிழகத்தில அமைதியும் வளமும் நிறைந்திருநதன.

சி.இரெ.

**துணை நூல்கள்:**

**இராகவையங்கார், மு.,** சேரன செங்குட்டுவன, பழனி யப்பா பிரதர்சு, திருச்சி, 1947.

**கோவிந்தன், கா.,** புலவர்-சஙககால அரசாவரிசை-தொகுதி க-சைவ சித்தாந்த நூற்பதிப்புக்கழகம், திருநெல்வேலி, 1955

**சேரி:** நகரஙகளில் ஏழைகள வசிககினற ஒதுக குப்புறப் பகுதி சேரி எனப்படுகிறது. ஆனால, இநதி யாவைப் பொறுத்தமட்டில கிராமங்களில் தாழ்த் தப்பட்ட சாதியினர் வசிககின்ற பகுதிகளும் சேரிகள (Slums) என்றே சொல்லப்படுகின்றன.

சேரிகள், நகர மககள்தொகையில் ஒரு கணிச மான பகுதியினரைக்கொண்டிருந்தபோதிலும அவை மிகச் சுகாதாரக குறைவான நிலையில் இருக் கின்றன. அவற்றின் குடிசைகள் மோசமான நிலையில இருக்கின்றன. ஒவவொன்றும் சராசரி 26.6 சதுர மீட்டரிலிருந்து 35 ச.மீ வரைதான் இருக்கின்றன. அவற்றில சராசரியாக 5.2 பேர்கள வசிககின்றனர். பெரும்பாலும் அவை, ஓர் அறை கொணடவையா கவே இருக்கின்றன. அநதக் குடிசைகளில் புகை போகவோ காற்று உளளே வரவோ எந்த வழியும் இருக்காது. மேலும் அவை காற்றோட்டமிலலா மலும், வெளிச்சமில்லாமலும் இருக்கினறன. அதனால், அவை சுகாதாரம் இலலாமலும் இருட்டா கவும் இருப்பதோடு கதவுகள இன்றிக் கித்தான பை அல்லது தட்டியால அடைக்கப்பட்டிருக்கும். சுவர்கள்

மண்ணால் அல்லது மூங்கில் தட்டியால் அல்லது கற்களால் அமைந்திருக்கின்றன. கூரை ஓலையாலோ 'கோரைப் புல்லாலோ தகரத்தாலோ பெரிய சதுர மான கற்பலகைகளாலோ வேயப்பட்டுத் தாழ்வாக அமைக்கப்பட்டிருக்கும்.

அருவருப்பாக இருக்கின்றன. எனவேதான், சேரிகளை ஒழிக்கும் திட்டங்கள் அரசாங்கத்தினால் நடை முறைப்படுத்தப்படுகின்றன.

சேரிகள் எனப்படும் குடிசைப் பகுதிகள் ஆசிய



நகர்ப்புறச்சேரி

இவ்வாறான குடிசைகள் நிறைந்து சேரிகள் நெருக்கமாக அமைந்திருக்கும். இங்குக் கழிவுநீர் செல் வதற்குச் சாக்கடை வசதிகள் கிடையாது. குப்பை கூளங்கள் போடுவதற்கு எந்த ஏற்பாடும் இருப்ப தில்லை. அதனால் குப்பை கூளங்கள் சிதறி எங்கும் சுத்தமின்றி இருக்கும். குடிசைகளுக்குப் போகச் சாலை வசதியோ தெருவோ கிடையாது. குடிநீர் வசதிகள் இருப்பதில்லை. தெரு விளக்குகளும் இரா. கழிவறைகளோ குளியலறைகளோ இரா. எனவே சேரியைச் சுற்றியுள்ள பகுதிகள் சுகாதாரமற்று, அசுத் தமாக நாற்றமெடுத்து இருக்கின்றன.

இவ்வாறு மனிதர்கள் குடியிருப்பதற்குத் தகுதி யற்ற சேரிகள், சுகாதாரமின்றி, அசுத்தமாக,

ஆப்பிரிக்க, தென்அமெரிக்க நாடுகளிலுள்ள நகரங் களின் சுற்றுப்புறங்களிலும் உட் பகுதிகளிலும் மிகுதி யாகக் காணப்படுகின்றன. இந்தியாவில் ஏறக்குறைய 1400 சேரிகள் உள்ளன (1981). இவற்றில் மொத்தம் 6 மிலியன் குடிசைகள் இருப்பனவாகக் கணக்கிடப்பட் டுள்ளது. மேலும், இந்தியாவில் நகரங்களின் மொத்த மக்கள்தொகையில் 20 விழுக்காட்டினர் சேரிகளில் தான் வாழ்கின்றனர். இந்திய அரசின் நகர, நாட்டுத் திட்ட நிறுவனம் (Town and Country Planning Organization) சேரிகளில் வாழ்வோரின் எண்ணிக்கை 1985-இல் 33.1 மிலியனாக இருந்ததாகவும், இது 1990-இல் 52.2 மிலியனாக உயரக்கூடும் எனவும் மதிப்பிட்டுள்ளது.



கிராமப்புறச் சேரி

கிராமங்களிலிருந்து நகரங்களுக்கு மிகுதியானோர் தொடர்ந்து இடம் பெயர்வதால் (Migration) நகரங்களில் மக்கள்தொகை மிகுதியாகிறது. நகரங்களில ஏற்படும் மக்கள்தொகைப் பெருக்கத்தினால் குடிசைகளும் சேரிகளும் நாளுக்குநாள் பெருகிககொண்டே வருகின்றன. நகரங்களில் போதிய வாடகையும் முன் பணமும் கொடுத்துத் தங்குவதற்கு வசதிகள் இல்லாததால் திறந்தவெளி இடங்கள், புறம்போக்கு நிலங்கள், பிறருக்கு உரிமையாக இருந்தும் அவர்களால் பயன்படுத்தப்படாத வெற்றிடங்கள் போன்றவைகளில் முறையின்றித் தங்கள் விருப்பப்படி குடிசைகளைக் கட்டி வாழுகிறார்கள். எனவே, இங்குள்ள குடிசைகள பொதுவாகச் சிறியனவாகவும் நெருக்கமாகவும் கூரை வேய்ப்பட்டனவாகவும் உள்ளன. மேலும் நடைபாதை, குடிதணணீர், மின்சாரம், சாக்கடை போன்ற அடிப்படை வசதிகளுள் எவையுமின்றி உள்ளன.

இந்தியாவில் இக்குடிசைப் பகுதிகளை அகற்றும் திட்டம் முதல் ஐந்தாண்டுத் திட்டத்தில் திட்டப்பட்டு, 1956 மே திங்களில் குடிசைப் பகுதி அகற்றுதல் அல்லது மேம்படுத்துதல் என்ற திட்டம் (Slum Clearance Improvement Scheme) செயலுககுக் கொணடுவரபபட்டது. குடிசைப் பகுதிகளை அகற்றி அங்கு வாழ்வோருக்கு மிகக்குறைநத வாடகையில (மாதத்திற்கு உரூ. 10 அல்லது 15) நலல வசதியான வீடுகளைக் கட்டித் தரும் பொருட்டு தமிழ்நாடு அரசும் 1971-இல் 'குடிசை மாற்று வாரியம்' என்ற துறையினை நிறுவியது. மேலும் அனைத்து மாநிலங்களும், குடிசை வாழவோர் நலனுக்காகப் பல திட்டங்களைத் தீட்டிச் செயற்படுத்தி வருகின்றன. இத் திட்டத்திற கரக மத்திய அரசு, மாநில அரசுகளுக்கு நிதியுதவி செய்து நிறைவேற்றி வைககிறது. அரசாங்கம் தவிர்த்துப் பல பொது நிறுவனங்களும் சேரிவாழ் மக்களின நலனில் அக்கறைகொண்டு உதவி வருகினறன.

சேரிகள் நகரங்களில் மட்டுமன்றிக் கிராமஙகளிலும் உள்ளன. ஆனால், இவைகளிலுளள குடிசைகள் மிக அதிகமாகப் பாழடைந்து ஒரு சில மட்டுமே பயன்படத் தக்கதாக உள்ளன. நகரங்களிலுள்ள சேரிகளைக் காட்டிலும் இங்கு ஏழ்மை, நம்பிக்கையின்மை ஆகியவை நிறைந்து காணப்படுகின்றன. அரசின் கவனமும் நகரைக் காட்டிலும் கிராமங்களி

லுள்ள சேரிகள்மீது மிகக்குறைந்த அளவிலேயே செலுத்தப்படுகிறது. பூ.த.

**சேலம் மாவட்டம்**: காண்க; தமிழ்நாட்டு ஆட்சிப்பிரிவுகள.

**சேன் ஆறு**: இது சேன் ஆறு என்றும், 'சீன்' (Seine)ஆறு என்றும் சொலலப்படும். இது ஐரோப் பாவில மிக முக்கியமானதும்,பிரான்சு நாட்டின் மிகச் சிறப்பானதுமான ஓர் ஆறாகும். தான்யூபு, வால்கா, தேம்சு ஆறுகள் அங்கேரி, உருசியா, இஙகிலாந்து நாடுகளைச் செழிப்பாக்குவது போன்றே சேன் ஆறும் பிரான்சை வளம் கொழிககச் செய்கிறது இந்த ஆறு பர்கண்டிப் (Burgundy) பகுதியில், அதாவது பிரான சின் கிழக்கேயும், பிரெஞ்சுகாம்டே (Frenchecomte) எனனும பகுதியின மேற்கேயும் அமைநதுள்ள இலாங்குடெக்கு (Longuedeck) என்னும் பீடபூமியில், உற்பத்தியாகி மேற்காக ஓடி, பாரிசு நகரைப் பிரஞ் சுத் தீவு (Isle of France) என்று கூறுமாறு செய்து ஆவ்ரே (Havre) என்னுமிடத்தில் ஆங்கிலக் கால வாயில் (English channel) கலக்கிறது. கழிமுகத்தி லிருந்து இநத ஆறு நாட்டின் உளளே 576 கி.மீ. வரையில போக்குவரத்திற்குப் பயன்படுகிறது. ஆப் (Aube), மார்ன் (Marne), ஆயிசு (Oise), யோன் (Youne), யூரே (Yure) முதலியன இதனுடன் கலக் கும் ஆறுகளாகும்.

சேன் ஆறு மொத்தத்தில் 780 கி மீ. நீளம் உடை யது. இதன் துணை ஆறுகளால் பிரான்சின் பகுதிகள் வடிகால் பகுதிகளாக அமைந்துள்ளன. சாம்பெய்ன் (Champagne), பிக்கார்டி (Piccardy), ஆர்ட்டாய் (Artois) போன்ற வளம் கொழிக்கும் பகுதிகள் இத னுள் அடங்கும். மிகுதியான உள்நாட்டுப் போக்குவரத் திற்குப் பயன்படுகிறது. சேன் ஆறு மிகஅதிகமாகவள மடையச செயயுமபிரான்சின் மையப்பகுதி 'பிரெஞ்சுத் தீவு' (Isle of France) எனறே சொலலப்படுகிறது.

தாசலசு (Tasalus) மலைப்பகுதியில் இந்தச் சேன் ஆறு கடல் மட்டத்திறகு மேல 471 மீ. உயரத்தில் பர்கண்டிப் பகுதியில எழுநது, கராடில்லன் (Cradillon) என்னும் சுண்ணாம்புக்கல் மலைப்பகு தியை அடையும்போது சிற்றோடையாகவே மாறி விடுகிறது. போர்க்காய்ன (Bourgogne) பகுதியி லிருந்து மேற்கே புறப்பட்டுத் திராய்சு (Troyes) நக ருக்கு வடக்கே சேமபெய்ன் பகுதியில் நுழையும் போது ஆபு, உரோமில்லி (Romilly) ஆறுகள் சேன நதியுடன் கலக்கின்றன. இதனாலேயே திராய்சு, உரோமில்லி வரலாற்றுப் புகழ் மிக்க நகரங்களாகத் திகழ்கின்றன. இதற்கு இடப்புறத்தில் யோன் துணை ஆறு இதனுடன் இணைகிறது. மீண்டும் மேலூன் (Melun), கார்பெல் (Corbell) பகுதியின் வழியாகத் தலைநகராகிய பாரிசு நோக்கிப் பாயும்போதுதான பாரிசு நகரைப் பெரும் உள்நாட்டுத் துறைமுகமாக மாற்றிவிடுகிறது. உரூவென், சேன் ஆற்றின் சிறந்த துறைமுகமாகக கருதப்படுகிறது. கடற்கரையிலிருந்து 363 கி.மீ. தொலைவில் அமைந்துள்ள பாரிசு (Paris) நகரம் இந்தச் சேன் ஆற்றின் நீரோட்டத்தைச் சுற்றிய படியே அமைக்கப்பட்டிருப்பதால் எளிதில் ஆற்று வெள்ளம் ஏற்பட்டு நகருக்குள் நுழைய முடிவ தில்லை. சேன் ஆறு பிரான்சின் மிகவும் சீரான, தடையிலலாத, போக்குவரத்துக்கு இயற்கையாக அமைந்துள்ள சிறப்பான ஆறாகும்.

மழைக் காலங்களில் இவ்வாற்றினால் ஏற்படும் வெள்ளப் பெருக்கால் பெரிய இடையூறு ஒன்றும் ஏற் பட்டுவிடுவதில்லை. சில சமயங்களில் ஏற்படும் வெள்ளப் பெருக்கைத் தடுப்பதற்காகவும், கோடைக் காலத்தின் நீர்த் தேவையைக் கருத்தில் கொண்டும், இதன் யோன், மார்ன துணை நதிகளின் அருகே பெரும் நீர்த் தேக்கங்களைக் கட்டியுள்ளனர். திராய்சு நகரிலும் 1960-ஆம் ஆணடு முதல் இம்மாதிரி யான நீர்த் தேககங்களை எழுப்பியுள்ளனர்.

சேன் ஆற்றின் மூலம் பாரிசு நகருக்குள் கட்டடச் சாமான்களும் பெருமளவில் பொருள்களும் எடுத்துச செல்லப்படுகின்றன. இவ்வாற்றின வழியாக 1960 -ஆம் ஆண்டில் மட்டும் 40,000,000 கண்டி (Tons) எடைப் பொருள்கள் பாரிசு நகருக்குள கொண்டு செல்லப்பட்டன. எச்.அ.

**சேனர்கள்**: பேரரசர் அர்சவர்த்தனரின் (Harsha Vardhan) மறைவுக்குப் பிறகு வட இந்தியாவில் அரசியல் சூழலில் குழப்பமே நிலவியது. ஏறத்தாழ 5 நூற்றாண்டுகளுக்கு, (கி பி. 647 முதல்) வட இந்தி யாவில் பலவேறு பகுதிகளில் பல்வேறு மரபுகளின் ஆட்சி தழைத்தோங்கி இருந்தது. வலிமையான மைய அரசு இல்லாததால், மாகாணங்களில் சிறறர சர்கள் ஆட்சிபுரியத் தொடஙகினர். பொதுவாக அக் காலத்தை இராசபுத்திரர்களின் காலம் என்று குறிப பர். அக்காலத்தில வங்காளத்தில முக்கியமாக (Sena Dynsty), இரண்டு மரபுகள் ஆட்சிபுரிந்தன அவற் றுள் ஒன்றுதான் சேனமரபு; மற்றொன்று பாலமரபு. அங்குப் பௌத்த மதத்தைச் சார்நத பாலமரபு மன் னர்கள் ஆண்டுவந்தனர். சேன மன்னர்களால் பாலர் களின் ஆட்சியும் அகற்றப்பட்டது; இரண்டு நூற் றாண்டுகளுக்கு மேலாகத் தழைத்தோங்கியிருந்த பௌத்த மதமும் வங்காளத்திலிருந்து அகற்றப்பட் டது. இந்து மதத்திற்குப் புத்துயிர் அளிக்கப்பட்டது.

சேன மன்னர்கள் பார்ப்பனர்கள். அவர்கள் ஆட்சிப் பொறுப்பை ஏற்றதால் சத்திரியர்கள் எனக் கருதப்பட்டனர். அவர்தம் மூதாதையர் கருநாடகப் பகுதியில வாழ்ந்திருக்கவேணடுமெனக் கருதப்படுவ தால, அவர்கள கருநாடகப பார்ப்பனாகள எனறும சொல்லப்பட்டனர்.

சுமந்த சேனா என்ற அரசனே இம்மரபின் முதல் மன்னனாகக் கருதப்படுகிறான. இவன வங்கா ளத்தில் 'இராதாபுரம்' என்னும் பகுதியை ஆட்சி புரிநதானெனக் கருதப்படுகிறது இவனையடுத்து வநத ஏமந்தசேனா (Hemanta Sena) எனனும மனனனும் தன் ஆளுகையை உறுதிப்படுத்திக 'காலசூரி' (Kalachuri) மன்னனான காணன் எனபானுடன் போா தொடுத்து வெற்றிகொணடு, தனநாட்டை வலிமை யுடையதாக்கினான் எனறும், அதனாலேயே இவனு டைய வழித்தோனறலான விசயசேனன் போனறோா ஆட்சிபுரிய முடிந்தது எனறும் அறிஞா கருதுகின்ற னா.

விசயசேனன் (Vijaya Sena) கி.பி. 1095-ஆம் ஆண்டு முதல கி.பி 1158-ஆம் ஆண்டுவரை ஆட்சி புரிந்ததானெனத் தெரிகிறது. விசயசேனன மிகச் சிறந்த இராசதந்திரியாகக கருதபபட்டான. இவன் ஊக்கமுடையவனாகவும் உறுதிபடைததவனாகவும திகழந்தான. அதனாலேயே தன சிற்றரசைப் பேரர சாக மாறறிய பெருமை விசயசேனனுககு இருநதது எனலாம. இவன் 'சூர' மரபைச் சார்ந்த இளவரசி விலாசதேவி (Vilasa Devi) எனபவளைத திருமணம செய்துகொணடான.

அடுதது இவன் கலிங்க மன்னனான அனந்தவர் மன் எனபானுடன் அரசியல் உடனபாடு செய்து கொண்டான. இராமபாலன் என்ற (Rama Pala) பால மன்னன இறநதுவிடவே, வங்கம் வலிமை குன்றிவிட்டதால, அதனை வெறறிகொளளும் முயற சியில் ஈடுபட்டான். தனனைச சூழநதுள்ள கோட்டா தேவி (Kota Devi), கௌசாம்பி (Kosambi) நாடு களை எளிதில வெற்றிகொணடான. கஙகை நதி நெடுக அமைந்திருநத நாடுகளை முறியடிகக நதி யோரமாகவே படைகளை நடத்திச் சென்றான. கன்னோசியின அரசன கோவிந்த சந்திரனை முறி யடித்தான; மிதிலையின் (Mithila) மன்னன நாரா யணதேவன (Narayana Devan) எனபவனையும் தோற் கடித்தான்; கௌணடா (Kaunda) என்னும் நாட்டை முறறுகையிட்டான்; மதனபாலா என்னும் மனனனை மகதத்திற்கு விரட்டியடித்தான்; கீழ்வங்கத்தின் மன் னன் போசவர்மனை மகதத்திற்கு விரட்டியடித்தான; முன்பு உடன்படிக்கை செய்துகொணடிருந்த அனந்த வர்மன் இறநததும், அவன் மகன் இராகவன் என்ப வனைத் தோற்கடித்துக் கலிங்கத்தைத் தம் நாட்டு டன் இணைத்துக் கொணடான்.

மேற்கே பீகார் முதல கிழக்கே அசாம் வரையில சேனனின் பேரரசு பரவியிருந்தது இவன தன் நாட் டில் அமைதியையும் வளத்தையும் பெருக்கிப புகழு டன் 60 ஆணடுகளுககு மேலாக ஆட்சிபுரிநதான. விசயசேனன் ஒரு சிவ பக்தன. இராசசாகி (Rajashahi) மாவட்டத்தில் சிவனுக்காக ஒரு பெருங் கோயிலை எழுப்பினான. உம்பாதித்தாரா (Umpatidhara) எனனும் பெரும் புலவன் இப்பேரரசனின அவையை அலங்கரித்தான. மேலும், தியோபாரா பிரசசுதி (Deopara Prasasti) என்னும் கீர்த்திமாலையை இவன் இயறறியுளளான். இது விசயசேனனைப் பற்றிய மெய்க்கீர்த்தியாகும்

வலலாள சேனன் (Vallana Sena) (கி.பி.1158-1178) விசயசேனனின மகனாவான. வலலாள சேனா அல்லது பல்லாள சேனா எனறு சொல்லபபட்ட இவன மீணடும் மிதிலைநாடு தம் பிடியிலிருந்து நழுவிவிடாமல பாதுகாத்துககொணடான. வட பீகார்ப்பகுதிகளை வெனறாலும பொதுவாக வல் லாளன் ஆட்சி அமைதியாகவே இருந்தது.

**இலக்குமணசேனன் (கி பி. 1178-1205):** இவன தனது முதுமையில ஆட்சிப் பொறுபபை ஏறறான். அபபோது இவனுககு 60 வயது. எனினும், போா வீரமும், நுணணறிவும், அரசியல அறிவும் நனறா கவே மிளிர்நதன. இதற்கு முனபே தன தந்தையுட னும் பாட்டனாருடனும போர்க்களங்களில் கலநது கொணடு பயிறசியும அனுபவமும திறனும் பெறறிருந் தானெனக் கூறப்படுகிறது. பழுத்த அனுபவம காரண மாகப் புகழ்பெற்ற சமயுக்தாவின் (Samyukta) தந் தையான செயசசந்திரன எனனும் கன்னோசியின (Kanoji) மனனனைஇவன எளிதில தோறகடித்தான; வாரணாசி, அலகாபாது வரை படையெடுத்துச் சென்றான. காலசூரி (Kalachuri) மனனர்கள் இவனை எதிர்த்தனா. இவன் அவர்களையும் முறியடித் தான். பீகாரின பெருமபகுதி இவனது ஆட்சிக்கு உட் பட்டிருந்தது.

இவனது வயது முதிர்ச்சி காரணமாக இவனுக் குட்பட்டிருந்த குறுநில மனனர்களும் இவனுககெதி ராகப் போர்க்கொடி உயர்ததினர். தலைநகரான நாதியாவின (Nadia) மீதும் நாட்டின மீதும் மேற்கே யிருந்து முகம்மது பக்தியார் கிலசி (Muhammad Bakhtiar Khilji) தாக்குதலைத் தொடுக்கவே, இலககு மணசேனன் நாட்டின் கிழக்குப் பகுதியில புகலிடம் பெற்றான். இவன் கி.பி.1205-ஆம் ஆண்டில தனது 87-ஆம் வயதில் இறந்தான்.

இலக்குமணசேனனுக்குப் பின் விசுவரூப சேனன் (Viswarupa Sena)14 ஆண்டுகள் ஆட்சிபுரிந்தான் பின்னர் இவன் தம்பி கேசவ சேனன் (Kesava Sena) கி.பி. 1219, முதல் 26 ஆண்டுகள் ஆட்சி புரிந்தான் என்றாலும் சேன மன்னர்களின் பழைய பொலிவும் புகழும் மறைந்தனவென்றே கூறவேண்டும். காலப் போக்கில பீகார், வங்காள மாகாணங்கள் இசுலாமி யர்களின் ஆட்சிக்கு உட்படலாயின.

வட இந்திய வரலாற்றில் சேன மன்னர்களின் பெருமை பௌத்த மதத்தை அழித்துவிட்டு, அவ் விடத்தில் வங்காள, பீகார் மாகாணங்களில மீண்டும் இந்து மதத்திற்குப் புத்துயிர் அளித்ததேயாகும். சேனர்கள் பொதுவாக சைவ மதத்தை ஆதரித்தனர். வல்லான சேனனும், இலக்குமண சேனனும் மட்டுமே வைணவ மதத்தை ஆதரித்தனர். இலக்குமண சேனன் பெரும் புலவர்களை ஆதரித்தான்.

பொதுவாகச் சேன மன்னர்கள் குறுகிய காலமே ஆட்சி புரிந்தாலும், தம் அரசின் விரிவாக்கத்திற்கும் இந்து மதத்திற்கும் சிறப்பான தொண்டாற்றினர் என்பதை மறுத்தல் இயலாது. எச்.அ.

**சேனாவரையர்** தொல்காப்பிய உரையாசிரி யர்களுள் ஒருவர். இவர் தொல்காப்பியச் சொல்லதி காரத்திற்கு மட்டும் உரை வரைந்துள்ளார். சேனா வரையர் என்பது சேனை+அரையர் என்னும் இரு சொற் புணர்ப்பாகிப் படைத்தலைவர் என்ற பொருள் பயந்து, காரணக் குறியாய் நிற்கின்றது. தொல்காப் பிய உரையாசிரியருக்கு வழங்கும் இப்பெயர் இயற் பெயரா அன்றிக் காரணப்பெயரா என்று துணிவதில இடர்ப்பாடுளது. 'கிளையெண்குழூஉ' எனத் தொடங் கும் நன்னூல் (275) நூற்பாவுரையில், மயிலைநாதர் சிறப்பாற் பெறும் பெயருக்கு, 'ஆசிரியன், படைத் தலைவன் சேனாவரையன்' எனக் காட்டுகிறார். இத னால் சேனாவரையன் என்னும் பெயர் படைத் தலைமைபற்றிப் பெறும் சிறப்புப் பெயராதல் விளங்கு கிறது. அன்றியும், 'அரையன் ஆண்டானான சேனா வரையன்' (S.i.i.V. பக்.154), 'திருவள்ளூர்ச் சேனா வரையனாயின தத்தன்'(T.A.S.Vol III பக்.75)'சேனா வரையர் ஆயின அழகப்பிரான் இடைக்கரை யாழ் வான்' (458 of 1929-30) என வருங் கல்வெட்டுத் தொடர்களால் இப்பெயர் சிறப்புப் பெயராகவே அமைந்துள்ளமை புலனாகிறது எனினும், 'புதுக்குடி யூரினரான சேனாவரையர்' (467 of 1929-30) என்றும், 'ஆற்றூர்ச் சேனாவரையன்' (465 of1929-30) என்றும் வருங் கல்வெட்டுத் தொடர்களால் இப் பெயர் இயற்பெயராதலுங் கூடுமோ எனவும் ஐயுற லாம். தொல்காப்பிய உரையாசிரியருக்கு அமைந்த சேனாவரையர் என்ற பெயர் எவ்வகையிலமைந்த தாயினும், படைத்தலைமை பூண்டானொருவன தமிழ்த் தலைமை பூணடு நின்றமை தமிழுக்குப் புதியதாகாமையின், காரணப் பெயராகவே அமைந் தெனக் கோடலில் இழுக்கொன்றுமில்லை. வட மொழி வல்லுநராய் அம்மொழியிலக்கணக் கொள் கைகளில் பற்றுக் கொணட இவ்வுரையாசிரியர் பெயர் சேனை+அரையர்=சேனாவரையர் என வடமொழிப் புணர்ச்சி கொண்டமைந்திருப்பது குறிப்பிடத்தக்கது

இவ்வுரையாசிரியர் வாழ்ந்த ஊரைப் பற்றி உணர்தற்குத் தெளிவான அகச் சான்றுகள் கிடைத் தில. இவர் தம்முரையிற காட்டிய சில தொடர் களைக் கொண்டும், இவர் பெயரோடொத்த கல் வெட்டுத் தொடர்களைக் கொண்டும் ஒருவாறு அறிஞர்கள் ஆய்ந்துரைத்தனர்

'எல்லாரு மென்னும்' நூற்பாவில் (சொல்.164) 'பெண்மையடுத்த மகனென் கிளவி' என்பதனை விளக் குங்கால் கூறிய, 'புறத்துப்போய் விளையாடும் பேதைப் பருவத்துப் பெண்மகளை மாறோகத்தார் இக்காலத்தும் பெண்மகன் என்று வழங்குப' என்னும் பகுதியாகும். மாறோகம் என்பது கொற்கை சூழ்ந்த நாட்டுப் பெயராகும் மேலும் திசைச் சொற்கு மேற் கோள் காட்டுங்கால், 'தென்பாண்டி நாட்டார் ஆ, எருமை என்பவற்றைப் பெற்றமென்றும், தம்மாமி என்பதனைத் தந்துவை என்றும் வழங்குப' எனக் கூறியதையும் காட்டி, இவர் தென்பாண்டி நாட்டு மாறோகத்தார் எனக் கருத இடமுண்டெனவுரைத் தார். இவரைச் சோழ நாட்டவர் என்று கூறினாரு முளர்.

உரைமுகப்பில் சேனாவரையர் உரைத்ததாகக் கருதப்படும் கடவுள் வாழ்த்தினால், பிள்ளையார வழிபாடு தமிழகத்தில் தோன்றி வளர்ந்த பின்னர் இவர் வாழ்ந்தார் எனக் கொள்ளலாம். கிளவியாக்க முதல் நூற்பா விளக்கத்தில் 'ஆயிரு' என்னுந் தொடர் விளக்கமாக, 'வரையறையின்மையின் ஈண்டு யகரம் உடம்படு மெய்யாயிற்று' என்று குறிப்பிடு கிறார். தொல்காப்பியம் உடம்படு மெய்க்கு வரை யறை கூறாது நிற்க, 'இ ஈ ஐ வழி யவ்வும்' எனற நன்னூல் வரையறயினை நினைந்து இப்பகுதி கூறப் பட்டதாகத் தோன்றலின் இவர் நன்னூலாருக்குப் பிற்பட்டவராகலாம்.

மேலும் 'வினை எஞ்சு கிளவியும் வேறுபல் குறிய' என்ற எச்சவியல் நூற்பா விளக்க வுரையில், நச்சினார்க்கினியர், '.... இவ்விலக்கணத்தினது நுண்மையை உணர்தலாற்றாப் பின்னுளளோர்

முற்றே எச்சம் ஆகலும் உரித்தே எனச் சூத்திரஞ் செய்தார். அவர் கருத்தைப் பற்றிச் சேனாவரைய ரும் முற்றெச்சம் என்றார்' எனக் குறிப்பிடுகிறார். பின்னுள்ளோர் என இங்கு நச்சினார்க்கினியர் சுட்டு வது, 'வினைமுற்றே வினை எச்சமாகலும், குறிப்பு, முற்று ஈரெச்சமாகலுமுளவே' (நன்.351) என வுரைத்த நன்னூலாரை என்பது எளிதில் உணரலாம்.

உரிச்சொல்லிற்கு விளக்கந் தருங்கால் சேனா வரையர், 'பெருமபான்மையும் செய்யுட்குரிய வாய் வருதலின் உரிச்சொல்லாயிற்றென்பாருமுளர்' என்று கூறுவது, 'பல்வகைப் பண்பும் பகர் பெயராகி, ஒரு குணம்பல்குணம் தழுவிப் பெயர்வினை, ஒருவா செய்யுட்குரியன உரிச்சொல்' என்ற நன்னூற் கருத்தினை உட்கொணடதாகவே தோனறுகின்றது.

இளம்பூரணர் கருத்து நன்னூலுள் இடம்பெற வும், நன்னூற் கருத்துட் சில சேனாவரையரால மறுக்கப்படுவதையும் காண, சேனாவரையர் நன் னூலாருக்குப் பிற்பட்டவர் என்ற கருத்துவலியுறு கின்றது. 'அவைதாம் அம்மாம்' எனனும் (தொல. சொல்.202) நூற்பா விளக்கத்தில் பேராசிரியர் பூவராகம் பிள்ளை '..... அன்றி இவர்காலத்தில் (நனனூல்) வழக்குப் பயிற்சி பெறவிலலை என்று கொள்ள இடமாகின்றது' என்றுரைத்த குறிப்பு இக்கருத்திற்கு அரண் செய்கின்றது. எனவே, சேனா வரையர் காலம் நன்னூலார்காலத்தினை ஒட்டிய தாக, அல்லது சிறிது பிற்பட்டதாகக் கொள்ளலாம. அக்காலம் கி.பி. 13-ஆம் நூற்றாணடின முற்பகுதி யாகும்.

கிடைக்கும் பதிப்புகள் அனைத்திலும், உரைத் தொடக்கத்தில் வாழ்த்தாகத் 'தன்தோள் நானகின்', 'ஆதியிற்றமிழநூல', 'தவளத் தாமரை', 'சந்தனப் பொதியத்தடவரை' எனத் தொடங்கும் செய்யுள் கள் காணப்படுகின்றன. அவற்றில் விநாயகர், மாதொருபாகன், கலைமகள், அகத்திய முனிவர் ஆகியோர் வாழ்த்தப்படுகின்றனர். இதனால் இவர் சைவ சமயத்தவர் எனறு கருத இடமுணடு. மேலும், 'பெருவிறலமரர்க்கு வெனறிதந்த' (புறம்), 'பனனிரு கையும் பாற்படஇயற்றி' (முருகு) 'குன்று தோறாட லும் '(முருகு)' 'ஒணகுழை ஒன்று ஒல்கி எருத் தலைப்ப' 'ஆடியகூத்தன்' என உரையில் காட்டப் படும் தொடர்கள் கொண்டும் இவர் சைவ சமயத் தவர் என்பது தெளியலாம்.

சேனாவரையர் வடமொழியிலும் தமிழிலும் நிறைந்த புலமை வாய்ந்தவர். சிவஞானமுனிவா தம் தொல்காப்பியச் சூத்திரவிருத்தியில், 'வடநூற்கடலை நிலைகண்டுணர்ந்த சேனாவரையர் எழுத்ததிகாரத் திற்கு உரை செய்தாராயின் இன்னோரன்னபொருள னைத்தும் தோன்ற ஆசிரியர் கருத்துணர்ந்துரைப்பர்' எனக் கூறியவாற்றால் இவருடைய புலமையும் பெரு மையும் நன்கு புலனாகும். தம்முரையில் இவர் காட்டிச் செல்லும் இலக்கிய மேற்கோள்கள் இவரு டைய ஆழ்ந்தகன்ற தமிழிலக்கியப் பயிற்சியினை வெளிப்படுத்துகினறன.

உரை கூறுங்கால நூறபாக்களின் கருத்துரைத் துப் பொழிப்புரை கூறி, சொற்றெளிவு செய்துமேற் கோளை காட்டி விளககந் தந்து முடிததல் இவர் கொணட முறையாகும். இவர் மேற்கொண்ட நடை, செறிவும் தெளிவுங் கொண்டு தேனென இனிக்குந் தன்மையது. மாற்றாா கூறும உரை ஆசிரியர் கருத் திற்கு மாறுபட்டதெனக் கருதுங்கால தக்கவாறு ஏதுவும எடுத்துக்காட்டும் தந்து மறுத்துரைப்பர். மறுத்து நிறுவுங் கருத்தினை உடனபடாதவர்களும் தருக்க நெறி பிறழாது நின்று மறுத்துரைக்கும உரை யிலும் முறையிலும் ஈடுபட்டே நிறபர்

சேனாவரையர் தமக்கு முந்திய உரையாளரான இளம் பூரணரைப் பலவிடங்களில மறுத்தும், ஏற்றும் உரை கூறியுள்ளார். மறுக்குங்கால் அவாபால தாம் கொணட மதிப்பு இழுக்குறா வண்ணம உரைப்பர். இளம்பூரணரைப் பெயர் குறிக்காது, யாணடும் உரையாசிரியர் என்றே உரைத்துப் போதல் அவர் பாற் கொணட மதிப்பைப் புலப்படுத்தும். அவருரை முறறிலும் பொருந்தாதெனக காணுமிடததுக் காரணங்காட்டி 'அவ்வுரை போலியுரை என்க' என்றும், 'உரையன்மையறிக' எனறும உரைததுச் செல்வார். சேனாவரையர் தொலகாப்பியச் சொல்லதி காரத்திற் மட்டுமே உரை வரைந்து போயினார். ஏனைய பகுதிக்கும் இவர் உரை எழுதியிருந்தால் ..' என்று எண்ணி ஏங்கியவர்களும் உளளனர். நச்சினார்க் கினியரைப் போல இவரும பணடை இலககியங்கட்கு உரை எழுதியிருநதால் அது ஒப்பற்ற இலக்கியக் கருவூலமாகவே திகழ்ந்திருக்கும். இவர், பண்டைப் பனுவல்களைச சுவைப்பதிலும் சுவைத்து நயங்காண டலிலும் கண்டுகாட்டலிலும் வல்லவர் என்பதை, 'குறித்தோன் கூற்றம் தெரித்து மொழிகிளவி' (55) என்னும் நூற்பாவுரையில் 'ஒலலேங்குவளை' எனற செய்யுட் பகுதியின் விளக்கமாகப் 'புதல்வற் பயந்த பூங்குழன் மடந்தை பரத்தையிற் பிரிந்து வந்த கிழ வனோடு புலந்துரைக்கின்றாளாகலிற் குவளை புலால் நாறுதற்கு அவன தவற்றொடு கூடிய அவள் காரண மென்பதூஉம், எருக்கஙகணணி நறிதாதற்கு மகிழ் நன் செய்த துனி கூர் வெப்பம் முகிழ்நகை முகத் தாற்றணிக்கும் புதல்வன் மேல் ஒருகாலைக் கொரு கால் பெருகுமன்பு காரணமென்பதூஉம் பெறப்படு

தலின வழுவாகா தெனபது' எனக் கூறியதிலிருந்து அறியலாம். இவ்வரிகள் இவர்தம் தமிழ்நடையழகினைக் காட்டி நிற்கினறன.

இவர் தம்முரையில் ஆங்காங்கு காட்டிச் செலலும் குறிப்புகளாலும், மேற்கோளகளாலும் இவர் காலத்திய மரபுகள், பழக்க வழக்கங்கள சில புலனாகின்றன. தட்டுப்புடைக்கண் வந்தான் என்பது ஒரு வகை விளையாட்டென்பதும், பட்டிபுத்திரர், கங்கை மாத்திரர் (சூ.165) என்பன விளையாடுங் குழுவினர் பகுதி படுஙகாற் கொள்ளும் பெயாகள என்பதும் தெரிகினறன. மாறோகத்தார் பேதைப் பருவத்துப் பெணணைப் பெணமகன் எனறும் (164), தென் பாணடி நாட்டார் ஆ, எருமை என்பனவற்றைப் பெற்றமென்றும், தம்மாமி என்பதனைத் தந்துவை என்றும் வழஙகுவார்கள எனவும் அறிகிறோம். 'கடுக் கலந்தகைபிழி, எணணெய் பெற்றமையால் மயிர்நல்ல வாயின' எனனும் மேறகோளால, கடுக்காய்த் தூள் கலந்த கரிசலாங்கணணிச் சாறும், நல்லெணணெயும் கூடிய கலவை நரையினை நீக்கும் மருந்தாய்த் திகழு மாற்றை அறியலாம்.

சேனாவரையர் வடநூல் வலலாராய் அம்மொழியிலக்கண இலக்கியத் துறைமுழகித் திளைத்து நின்ற வராதலின தொல்காப்பியத்திறகு உரை காணுங் கால பலவிடங்களில, வடநூல மரபினையும் முடிபினையும் கருத்திறகொணடு அவற்றைத் தொலகாப்பியர் கருத்தாக அமைத்துக் காட்டிச் செல்வர். அதனால், பெரும்பாலும் தமிழநெறி தழுவி உரை வகுத்துச சென்ற இளம்பூரணர் போன்றாரைப் பலவிடங்களில் மறுததுரைத்தார். இதுபற்றியே நச்சினார்க்கினியர் போனற பினவந்த உரையாசிரியர்களால் இவர் கருத்துட் பல மறுத்துரைகப் பெறறன.

வடமொழியிலும் அதன் கருததுகளிலும் இவர் கொண்ட ஆர்வம் பல தமிழ்ச் சொற்களையும வட சொல்லாக்கிக் காட்டியது. நீர் எனனுஞ் சொல் தமிழ்ச் சொல் என்பது மொழிநூலறிஞரின் கருத்தாகும், அப்பொருளைக் குறிக்க அவவொரு சொலலே தமிழில் வழஙகப்படுகிறது என்பதை உணர்ந்தும் சேனாவரையர் நீா என்பது ஆரியச் சிதைவு எனக் குறிப்பிடுகிறார் (398). மேலும் தம்உரையில் 'வட நூலார் இதனை நேயம் என்ப' (55) என்றும், வட நூலார் தாது என்ப (415) என்றும் ஆங்காங்குக் காட்டிச் செலகிறார்.

இத்தகைய கருத்துகள் ஒரோ வழிக் காணப்படினும் தொல்காப்பிய உரைகளுள் சேனாவரையமே சாலச் சிறந்ததாகும் என்பது அறிஞர்கள முடிபு. ஒரு நூலின ஒரு பகுதிக்கே உரை வரைந்தும் சேனாவரையர் பெரும் புகழ் பெற்று விளங்குவது அவரது பெருமையைச் சுட்டி நிறகிறது. அ.மா.ப.

**சேனை முதலியார்:** பரமபதத்திலிருக்கும் 'விட்டுணு' எனப்படும் பரம்பொருளுக்கு என்றும கூட இருந்து குற்றேவல் செய்யும் கணககறற நித்தியசூரிகள உளளனரென வேதங்களும், பாஞ்சராத்திரம், வைகாநசம் எனும் வைணவ ஆகமங்களும் கூறுகின்றன. அந்த நித்தியசூரிகளுக்குத் தலைவராயிருப்பவர் 'விசுவக் சேனர்' என்று சொல்லப்படுகிறார். தமிழில் வைணவ ஆசிரியர்கள் இவரைச் 'சேனை முதலியார்' என்று குறிப்பிடுவர். முறகூறிய ஆகமங்களை ஆதாரமாகக் கொண்டு இவ்வாசாரியர்கள் சேனை முதலியாரைப் பற்றிப் பல செய்திகளைத் தங்கள் நூல்களில் குறிப்பிடுவர்.

சிரீராமானுசருக்கு ஆசாரியர்களுடைய ஆசாரியரான 'யாமுனாசாரயர்' என்னும் திருநாமமுடைய ஆளவந்தார், தமது 'தோத்திர இரத்தினம்' என்னும் துதி நூலின் 42-ஆம் சுலோகத்தில சேனை முதலியாரைப் பற்றிப் பேசும்போது 'திருமாலுடைய உணடு மிகுந்த (சேட) உணவை உணபார்; திருமால் உலகை நிருவகிக்கும் பொறுப்பை இவரிடம் விட்டுவைப்பாா; இவ்விடயத்தில் இனியவரான இவர் சொன்னபடியே திருமால் திருவுள்ளம் பறறுவோர்' எனறு இவரது பெருமையைக் கூறுகிறார். சிரீராமனுசரும் தமது 'சிரீவைகுண்டகத்யம்' என்னும் நூலில 'திருமால் உலகை நிருவகிக்கும் பொறுப்பு முழுவதையும் விசுவக்சேனரிடம் விட்டுவைப்பார்; அவரும் தன் ஆணையாலே உலகைப் படைத்தல், அளித்தல், அழித்தல் முதலான காரியங்களைச் செய்வார்' எனறு அருளிச் செய்கிறார்.

சிரீராமானுசருக்குப்பின் திருவரங்கத்தில் சமயத் தலைமைப் பொறுப்பை ஏற்றிருந்த சிரீபராசரபட்டரும் தமது 'சிரீரங்கராசத்தவம்' என்னும் துதி நூலில் முதல் சதசத்தில், 50,51,52 ஆகிய மூனறு சுலோகஙகளில் இவரது பெருமையைப் பேசுகிறார். 'திருமாலைத் திருமகளோடு திருவிளையாடல் செய்யும்படியாகத் திருவனந்தாழவானாகிற படுக்கையில் அமர்ந்திருக்கச் செய்து, உலகனைத்தையும் நியமிககும் அதிகாரத்தை எப்போதும் தம் திருவிரல் முத்திரை கொண்டே நடத்துகின்றவர் சேனை முதலியார். இவர் பத்தினியான சூத்திரவதி, திருமகளுக்குத் திருவடிக் குற்றேவல செய்பவள். இவர் தம் முக்கிய சேவகர்களான கசானனர் (யானை முகமுடையவர்), சிங்கமுகர், சயத்சேனர், காலாகவர் என்னும் நான்கு நித்தியசூரிகளும் அடியார்களின் இடையூறுகளைப் போக்குகிறார்கள்' என்பது அந்த சுலோகங்

களின் திரண்ட பொருள். இதை அடிப்படையாகக் கொண்டே வைணவர்கள் வைதிகச் சடங்குகளைத் தொடங்கும்போது, 'சுக்லாம்பரதரம் விட்டுணும்' என்னும் சுலோகத்தாலே பரம்பொருளான விட்டுணுவை வணங்கிய பின்பு, 'யானை முகத்தான் முதலான எவருடைய பல சேவகர்கள் இடையூறுகளை எப்போதும் போக்குகிறார்களோ அத்தகைய விசுவக் சேனரை வணங்குகிறேன்' என்னும் பொருள உள்ள சுலோகத்தாலே சேனை முதலியாரை வணங்கு கிறார்கள்.

எஸ்.கி.

**ஸை** ச கரத்திற்கும் ஐகாரத்திற்கும் கொடுக்கப்பட்ட குறிப்புக் களைப் பார்க்க.

எலலா மெய்யெழுத்துகளுககும் பொருததுமாறே ச கரத்திற்கும் இடப் புறமாக இரு கோடுகள இழுக்கப்பட்டன. மதுரை மாவட்டம் முத்துப் பட்டியில் இவ்வடிவம காணப்படுகின்றது.

இந்த இரணடு கோடுகளும செகரத்துக்குக கூறப்பட்டது போலவே வளைவுகளாக மாறி இனறைய உருவத்தை அடைந்தன. இரண்டு வளைவு களும் தனித்தனியாகவும் இணைததும எழுதப்பட்டன. வட்டெழுததிலும அவ்வாறே. ... . ... ...

கே.ஜி.கே.

**சைகைகள்,** குழந்தைகளின் பேச்சு வளர்சசியில் முதல்நிலை வகைகளுள் ஒருவகையாகும். மற்றையன அழுதல் அல்லது ஓசை எழுப்புதல், மழலை என்பன வாகும். பிறந்த சில மாதங்களுக்குக் குழவி பயன் படுத்தும் பேசசுக்கு முன்நிலைத தொடர்புவழி அழுகையாகும். மழலை உண்மையான பேச்சுககு முன்னோடியாகவும் அடிப்படையாகவும் அமைகிறது. சைகைகள் (Gestures) பேச்சுக்குப் பதிலாகக குழவிப் பருவத்தினர் பயன்படுத்தும் தொடர்பு சாதனமா கும. குழந்தை சில சொற்களைப் பயன்படுத்த அறிந் திருந்தும், சைகைகளேயே தொடர்நது பயன்படுத்து கிறது. தனது முதல் சொற்றொடருக்குக் குழந்தை சொற்களோடு சைகையையும் பயன்படுத்துகிறது. தாய் தன்னை வாரி அணைத்திட வேண்டும் என்ப தைக் குழந்தை புன்னகை முகததோடு, கைகள இரண்டையும் நீட்டி ஓடிவருவதன் மூலம் உணர்த்து கிறது. அதுபோன்றே உணவு வேண்டாம் என்பதனை உணவுப்பாத்திரத்தைத் தள்ளி உதைப்பதன்மூலம் தெரிவிக்கிறது. சைகைகள் உளச்சிகிச்சை முறையிலும், உளப் போராட்டங்களை அறிய முயலும் வழிகாட்டு தல் உளவியலிலும் முக்கிய பங்கினை வகிக்கின்றன. சொல்லால் விளங்கவைக்கமுடியாதஉணர்வுகளையும் செய்திகளையும் சைகைகள் மூலம் வெளிக்காட்டிட முடிகிறது. 'அடுத்தது காட்டும் பளிங்கு போல் நெஞ் சம், கடுததது காட்டும் முகம்' என்பதற்கிணங்கச் சைகைகள, வாய்ச்சொற்களைவிட மேலான கருத்து களைப் புலப்படுத்துகின்றன. ஜி.இரா.

**சைத்தியம்:** பௌத்த மதத்தினர் புததரை வழிபடும் கோயில் சைததியம் எனப்படும். இந்தியா வில் சைத்திய மணடபங்கள் மகாயான புததமதம் தோன்றியபின் வளர்ச்சியடைந்தன. இவை பௌத்த துறவிகள் தங்கும் விகாரைகளுக்கு அருகிலேயே அமைக்கப்பட்டன. இசசைத்தியங்களில பொதுமக் களும் வந்து வணங்குவர். சைத்தியத்தின் (Chaitya) உள்ளே பல சிறு அறைகளும், மணடபததின் இறுதியில் தூபியும் காணப்படும், ஒவ்வொரு சிறு அறையிலும் புத்தரின் படிமம் காணப்படும். சைத்தி யம் பொதுவாக இலாட வடிவ அமைப்புடையது சைத்தியங்கள் அசநதா, பாசா, எல்லோரா, ஔரங்கா பாது போன்ற இடங்களில் உளளன.

அரசர் அல்லது அறவோர் இறந்த பிறகு அவரு டைய சாம்பலின்மீது மணணைக் குவித்து வணங்கு வது பணடைய மக்களின் வழக்கம். இக்குவியல் வட மொழியில் 'சைத்தியம்' எனக கூறப்படும். இவ்வழக் கம் சமணர்களிடமும் பௌத்தர்களிடமும் மிகுந்து காணப்பட்டது. பௌத்தர்கள் மண்குவியலுக்குப் பதி



சைத்தியம்-அமைப்பு கார்லே சைத்தியம்

லாகக் கல்லைக் கொண்டு கும்மட்ட அமைப்பில் கட்டினர். இவை இலாட வடிவமான மண்டபங்களின் உட்பகுதியின் இறுதியில் அமைக்கப்பட்டன.

மிகத்தொன்மையான சைத்தியம் செவ்வக வடிவத்தைக் கொண்டு விளங்கியது. சூனார் (Junnar) என்ற இடத்தில் இவ்வடிவச் சைத்தியம் உள்ளது. சைத்தியத்தின் உள்ளே வரிசையாகத் தூண்களும் காணப்படும். சைத்தியத்தின் உள்ளே வெளிச்சம் படும் வகையில் சைத்தியக் குகைகளின் நுழைவாயில்களின் மேல் இலாட வடிவத்தில் சன்னல்கள் அமைப்பும் காணப்படுகிறது. சு.இரா.

**சைதனியர்**: வேதாந்தக் கருத்து முறைகளுள் அசிந்திய பேதா பேதத்தைப் (Achintyabhedabheda) பரப்பியவர் சைதனியர். இவர் செகந்நாத மிசுரா (Jagannatha Misra) சசிதேவி (Saci Devi) என்பவர்களுக்கு கி.பி. 1487-இல் நவத்விபா (Navadvipa) என்னுமிடத்தில் பிறந்தார். இவர் பிறந்த காலத்தில், சீனிவாச பண்டிதர், சிரீராம பண்டிதர், சந்திரசேகரர், முராரிகுப்தா போன்ற வைணவப் பெரியார்கள் வாழ்ந்த காரணத்தினால் சைதனியரும் வைணவ சமயத்திற்குத் தன்னை உரித்தாக்கிக் கொண்டு அதற்கு ஒரு புதிய உருவத்தைக் கொடுத்தார்.

சைதனியர் சிறுவயதில்ஒருசமசுகிருதப் பள்ளியில் சேர்ந்து படித்தார், வீட்டில் புராணங்களையும் சிரீமத்-பாகவதம் போன்றவைகளையும் கற்றறிந்தார். இவர், தம் சிறுவயதிலிருந்தே பக்திப் பாடல்களில் நாட்டம் கொண்டு விளங்கினார். இவர் தம்மைக் கிருட்டிணனுடன் ஒன்று படுத்திக் கொள்வதில் பெரும் ஆர்வம் காட்டினார். சைதனியருடைய முதல் மனைவி இலட்சுமிதேவி பாம்பு கடித்து இறந்ததனால் விட்டுணுபிரியா என்பவரை மறுமணம் புரிந்து கொண்டார். சைதனியருடைய தந்தை இறந்தபிறகு அவருக்குச் சடங்குகள் செய்யக் கயாவிற்குச் சென்றார். அங்கு அவர் பரமானந்தபுரி, ஈசுவரபுரி கோபாலபுரி போன்றவர்களைச் சந்தித்தார். ஈசுவர புரியின் வேண்டு கோட்கிணங்க இவ்வுலகைத் துறக்க முடிவு செய்தார்.

கிருட்டிணதாச கவிராசா, தம் சைதனிய-சரிதம்ரிதா (Caitanya-Caritamrta) என்னும் வங்காள நூலில் சைதனியருடைய வாழ்க்கையை மூன்று பிரிவுகளாகப் பிரித்துள்ளார். முதல் பகுதி, சைதனியருடைய முதல் 24 ஆண்டுக்கால வாழ்க்கையைப் பற்றியதாகும். இவர் தம் 24-ஆம் வயதில் இவ்வுலக வாழ்க்கையைத் துறந்தார். இரண்டாம் பகுதி அடுத்த 6 ஆண்டுக்கால வாழ்க்கையாகும். இந்த 6 ஆண்டுக் காலத்தை இவர் புனித யாத்திரையில் செலவிட்டார். கடைசிப் பகுதி அவர் வாழ்ந்த மீதமுள்ள 18 ஆண்டுகளாகும். இதில் 6 ஆண்டுகள் இவர் பக்திப் போதனையில் கழித்தார். மீதமுள்ள 12 ஆண்டுகள் ஆன்மிக பரவசத்திலும், கிருட்டிணனின் பிரிவுத் துயரிலும் கழித்து கி.பி. 1533-இல இறந்தார்.

சைதனியரது ஆன்மிக வாழ்விலே குருவாக அமைந்தவர்கள் தீட்சா குருவும் சந்நியாச குருவும் ஆவார்கள். அவர்கள் மாத்துவர்களே (Madhvaites). சைதனியரே தாம் மாத்துவப் பிரிவைச் சார்ந்தவரென்றும், அவரது துவைத (Dwaita) நிலையினைத் தம் போதனைகளில் மேற் கொள்வதாகவும் கூறுகிறார். ஆனால், தசமூலசுலோக விளக்கங்களின்படி பார்த்தால் இவர் தத்துவம் ஒருவகை பேதாபேதம்

(Bhedabheda) அல்லது வேறுபாட்டில் வேறு பாடின்மை (Identity-in-difference) என்பதாகும். சைதனியர் மாத்துவர் போல் எனறுமுள்ள வேறு பாட்டை மட்டுமன்றி எனறுமுள்ள வேற்றுமையின் மையையும் வற்புறுத்துகிறார். இந்த வேறுபாட்டில் வேறுபாடின்மை என்னும் தத்துவம் அளவை நெறி யிலே அறிவிற்கு எளிதில் புரிவதாக இல்லை எனவே. இதை மாத்துவருடைய கொள்கையிலிருந்து வேறு படுத்தி அசிந்திய பேதாபேதம் அல்லது ஒருவகைக் கருத்தியல் ஒருமைக் கொள்கை(Idealistic Monism) என்றே கொளள வேணடும்.

சைதனியர், வைணவக் கருத்து முறைகளினபடி, உலக உண்மையை ஏற்று, மாயாவாததகை மறுக் கிறார். சங்கரர் தாராத ஒரு சிறப்பினை ஈசுவர னுக்குத் தருகிறார். சங்கரர் நிர்க்குணப் பிரமத்தையே (Nirguna Brahman) முதற் பொருளாகக் கருதி, அதற்கு அடுத்த நிலையைத் தான் சகுண பிரமத் திற்குக்(Saguna Brahman)கொடுககிறார். ஆனால் சைதனியர்கள, உலக உண்மையினை நம்புகின்ற காரணத்தினால் நிர்க்குணப் பிரமத்தை ஈசுவரனுக்கு அடுத்தநிலையில் வைத்துள்ளனர். இரணடாவதாகச் சைதனியர், நிம்பார்க்கர், வல்லபர் ஆகியோர்களைப போல கிருட்டிணனை இறைவனாகவும், இராதையை அவனது ஆற்றலாகவும கருதுகிறார். இவவாறுகருது வதில் சைதனியர்கள இராமானுசர், மாத்துவர் ஆகி யோரிடமிருநது வேறுபடுகிறார்கள. நாராயணனை இறைவனாகவும், இலட்சுமியை அவனது ஆறறலா கவும் கொளகின்றனர். இவவாறு இறைவனையும் அவனது ஆற்றலையும் சேர்த்து இலட்சுமி நாராயண னாகவும், அவன வைகுந்தத்தில் ஆட்சி புரிவதா கவும் கருதி வழிபாடு செய்வது தொலைவிலிருந்தே நிகழும் வழிபாடாகும். இந்தத் தொலைவழிபாட்டி னால் இறைவனோடு மனிதன மிகவும் நெருக்கமாக உறவு கொளவதற்கு வாய்ப்பில்லை. ஆனால் இறை வனை இராதாகிருட்டிணனாகக் கருதுவதில, மனி தனுக்கும் இறைவனுககும் நெருங்கிய தொடர்பு ஏற்பட வாய்ப்புள்ளது. இறைவனைத் தோழனா கவும், குழந்தையாகவும், நாயகனாகவும் வெவவேறு உறவு நிலைகளிலே நுகரலாம். சைதனியர், வல்லபா போன்றவர்கள இலட்சுமி நாராயணனின பொம்மை யைவணங்குவதைவிட இறைவனது இனிமையை நுகர் வதையே உயர்ந்ததாகக் கருதுகினறனர்.

சைதனியரின் கருத்துப்படி அரி எனபவர்தான் முழுமுதற் பொருள். அரியின பொருட் சார்பற்ற உருவத்தைச் சூழநதுள்ள ஒளிவட்டம், சங்கரரது நிர்க்குணப் பிரமமாகும். அரியின் ஒரு பகுதியே ஆன் மாவாகும். நிறைந்த அழகு(Perfect beauty), நிறைந்த மாட்சி(Perfect Majesty), நிறைந்த ஆற்றல் (perfect strength), நிறைந்தபுகழ் (perfect glory), நிறைந்த அறிவு (perfect intelligence) முழுத்துறவு (perfect detachment) ஆகியவற்றின ஒருமைப பாடே அரியாகும். இநதப் பணபுகளெல்லாம் வேறு பட்டனவாகத் தோனறினாலும் அவைகளுக்கும் இறைவனுக்கும் எந்தவித வேறுபாடும் இல்லை. இறைவனது சொரூபத்திற்கும் அவனது பலவகை ஆற்றல்களுக்கும் உள்ள உறவு சிநதிக்க வொண் ணாத ஒன்றாகும். இதைச் சிந்திக்க வொண்ணாத பேதாபேதம் என்று கூறலாம். உபநிடதங்களில சொல்லப்பட்டுள்ள மூன்று விதமான வேறுபாடு களுக்கும் அதாவது ஒரு படித்தான வேறுபாடு (Homogeneous distinction),பலவேறான முரண் கூறு கள் கொணட வேறுபாடு (Heterogeneous distinction), உள்வேறுபாடு (Internal distinction) ஆகியவைகளுக்கு அப்பாற்பட்டு நிற்கிறான் இறை வன். இறைவன் தனனுடைய ஆறறலின் வாயிலாக இவ்வுலகமாகவும், சிற்றுயிர்களாகவும் வெளிப்பட்டுத் தோன்றுகிறான். அவன இநத உலகத்தின் நிமிதத காரணமாகவும (efficient cause) முதற்காரண மாகவும் (Material cause) விளங்குகிறான.

இறைவன் தன்னுடைய சுயரூபலட்சணத்தில (suarupa shakti) மூன்று விதமான ஆறறல்களாக வெளிப்பட்டுத தோனறுகின்றான். அவை சந்தி நீ (sandhini), சம்விதது (samvit), இலாதினி (Hiladini) என்பனவாகும். சந்திநீ என்பது உண்மை (sator Existence); சம்விதது என்பது உணர்வு (Chitor know ledge); இலாதினி என்பது ஆனந்தம் (Bliss). இந்த மூன்று இயல்புகளும் இறைவனுடைய அந்தரங்க சொருப சகதி எனப்படும். இறைவன தன்னுடைய தடத்த லட்சணம், (Tatastha shakti) அல்லது சீவ சக்தியின் மூலம் சிற்றுயிர்களைப் படைககிறான். அவனுடைய வெளிப்படை ஆற்றலான மாயா சகதி யின் மூலம் வெளி உலகத்தைப் படைக்கிறான. சங்கரரும் அவரைப் பின்பற்றுவோரும் இறை வனின் இந்தச் சக்திகளெல்லாம் பொய்த்தோற்றங்கள் எனக் கொள்கிறார்கள. ஆனால் சைதனியருககும் அவருடைய கருத்து முறைக்கும், சித் சக்தி, சீவசக்தி, மாயா சக்தி போன்றவைகள பொய்த் தோற்றங்கள் அல்ல.

ஆன்மா என்பது பரம்பொருள் தன்னுடைய சீவ சக்தியின் மூலம ஓர் எல்லைக்குட்பட்ட நிலையில் விளஙகுவதாகும். சைதனியரின் கருத்துப்படி ஆன மாக்கள் எணணற்றவை. எவ்வாறு ஒளிக்கதிர்கள சூரியனிடமிருந்து தோற்றம் பெறுகின்றனவோ அவ் வாறு எண்ணற்ற ஆன்மாக்கள் தெய்வ ஆற்ற லினின்றும் தோற்றம் பெறுகின்றன. அவ்வாறு தோற்றம் பெறுகினற ஆன்மாக்கள் முற்றிலுமாக

இறைவனையே சார்ந்துள்ளன. இறைவன் உண்மை நிலையில் எல்லையற்றவனாக, எங்கும் நிறைந்தவனாக விளங்குகிறான் ஆன்மாவாக விளங்கும் பொழுது எல்லைக் குட்படுகிறான்; கட்டுறுகிறான். மாயா சக்தியின் மயக்குகளால் சிதைவுறுகின்ற நிலையில், உள்ளார்ந்த இறைவனது ஆன்மிக உண்மையோடு ஆன்மா கொள்ளுகின்ற உறவினாலே, மாயையின் மயக்குகளினின்று விடுதலை பெற முடியும். இவ்வாறு விடுதலை பெற்ற நிலையிலுங்கூட ஆன்மாக்கள் தனித்தே (Distinct) விளங்குகின்றன என்பது சைதனியரின் கருத்தாகும்.

ஆன்மாக்கள் இறைவனிடமிருந்து ஒருவிதத்தில் வேறுபட்டும் மற்றொரு விதத்தில் வேறுபடாமலும் விளங்குகின்றன. இறைவனது ஆன்மிக உண்மையை ஆன்மாக்கள் பெற்று விளங்கும்போது வேறுபடுவதில்லை. ஆன்மாக்கள் இறைவனது உணமைத் தன்மையைச் 'சிறிதளவே பெற்று விளங்கும்போது வேறுபட்டு மாயையினால் அடக்கியாளப்படுகிறது. இறைவனது மாயா சக்தி இருவேறு வழிகளில் செயற்படுகிறது. 1. மாயை முதனமையாக விளங்கும் போது பொருள் உலகின தோற்றத்திற்குக் காரணமாகிறது, 2.மாயை அவித்தையாக விளங்கும்போது ஆன்மாவை அறியாமைகளுள் மூழ்கச் செய்து அதன் உண்மைத் தன்மையை மறக்கச் செய்கிறது. இவ்வாறு ஆன்மா அதன் உண்மைத் தன்மையை மறந்து ஓர் எல்லைக்குட்படும் போது, துன்பமும் ஏமாற்றமும் ஏற்படுகின்றன. இந்த உலகம் இறைவனுடைய மாயா சக்தியின் விளைவு என்றாலும அது பொய்த் தோற்றமன்று இந்த உலகம், ஆன்மா தன்னுடைய உண்மை நிலையினை உணர்ந்து, தெய்விக வழி நின்று உய்வதற்கு வாய்ப்பான பயிற்சிக் களமாக விளங்குகிறது.

சைதனியரும், அவரைப் பின்பற்றுவோரும் தெய்விக நெறியினை ஆனமாக்களது உணமை நெறியெனக் கொளகின்றனர். ஆனமாக்கள் பக்தி நெறி நின்று தங்களை முற்றிலும இறைவனிடத்தில் ஒப்படைத்துக் கொணடு அதன் வாயிலாகத் தங்கள உண்மைத்தன்மையை அறிதலே தெய்விக நெறியாகும். இநத நிலைதான் பகதியின உன்னத நிலையாகும். இநத உயரிய பக்தி நிலையைத்தான் இராகாத்மிக பக்தி (Ragatmıka bhakti) என்பர். இந்த இராகாத்மிக பக்தியின் உசசநிலை மகாபாவம் (Mahabhavam) ஆகும். இது ஆன்மாவிடத்து, இராதை, கிருட்டிணன் ஆகியோரிடையே தோன்றும் தெய்விக அன்பினைக் குறிப்பதாகும். எனவே, முக்தி என்பது கிருட்டிணனுடைய முடிவிலலாத அன பினை ஆன்மாக்கள் அனுபவிப்பதே ஆகும், சி.இ.

**துணை நூல்கள்:**

Mahadevan. T.M P., Outlines of Hinduism, Chetana Limited,Bombay, 1960.

Radhakrishnan, S, Indian philosophy, George Allen and Unwin, London, 1971.

***சைதாப்பேட்டை:*** தமிழ்நாட்டின் செங்கை மாவட்டத்தில் அமைந்துள்ள ஒரு வட்டம். குடத்தலை ஆறு, கூவம், அடையாறு ஆகியன இங்குப் பாய்கின்றன. சென்னை மாநகருக்குக் குடிநீர் வழங்கும் புழலேரி இஙகு உள்ளது. தொழிற் செறிவுள்ள பகுதியான கிணடி, பன்னாட்டு விமான நிலையம் உள்ள மீனம்பாககம், வரலாற்றுச் சிறப்புடைய பல்லாவரம் மற்றும் பரங்கிமலை, என்புருக்கிநோய் மருத்துவ நிலையம் உள்ள தாம்பரம் ஆகியவற்றை இது உட்கொணடுள்ளது. இப்பகுதியில் காமராசர் நினைவாலயம், குதிரைப் பநதைய மைதானம், உடற்பயிற்சி ஆசிரியர் கலலூரி, ஆசிரியர் பயிற்சி கல்லூரி மற்றும் பொறியியல் கலலூரி. ஆகியன உளளன. தேசிய நெடுஞ்சாலையானது இப் பகுதிகளின் வழியே ஊடுருவிச் செல்கினறது. சைதாப் பேட்டை இதன் தலைமையிடமாகும். மா.கா.

***சைபீரியா*** ஐக்கிய சோவியத்துச் சமவுடைமைக் குடியரசின் ஆசியப் பகுதியில் உள்ள பெரும் நிலப்பிரிவு. வடக்கு ஆசியாவில் மூனறில் ஒரு பாகம் சைபீரியா (Sıberıa) என்று கூறலாம். மேற்கில் யூரல் மலைத்தொடரிலிருந்து, கிழக்கில பசிபிக்குமாக் கடலின் ஓரமாக உள்ள மலைத்தொடர்கள வரை இது பரவியுளளது. வடககில் இலாப்டேவும் (Laptev) கிழக்கில சயன் மலைத்தொடரும உளளன. தெற்கில் மங்கோலிய மக்கட்குடியரசு வரையிலும் இது பரவியுள்ளது. சோவியததின் தூரக்கிழக்குப் பகுதி சைபீரியாவின் ஒரு பாகமாகக் கருதப்பட்டபோதிலும் வட்டாரத் திட்டங்களைப் பொறுத்தவரை, சோவியததுக் குடியரசு அப்பகுதியைத் தனிதத முறையில தான கண்காணிககிறது. சைபீரியாவின மொத்தப் பரப்பு 7,511,000 ச.கி.மீ. மக்கள தொகை 29,820,000 (1970). சைபீரியாவின ஆட்சிப் பிரிவுகளாவன: யாகூட்டு (Yakut), பூர்யட்டு (Buryat), தூவா (Tuva), ஆல்தாய் (Altai), கிரேசுநோயார்சுக்கு கிரேசு(Krasnoyarsk Krays).

சைபீரிய மக்களில் பெரும்பான்மையினர் உருசியரும் உக்ரேனியரும் ஆவர். உருசிய இனத்தைச் சேராத சில மக்களும் இங்கு வாழ்கின்றனர். கிறித்தவ



சைபீரியா அமைவிடம்

சமயத்துடன், இசுலாமியமும் திபெத்திய பௌத்த சமயமும் இங்குக் கடைப்பிடிக்கப்படுகின்றன.

சைபீரியப் பெண்கள்

**வரலாறு:** வரலாற்றுக் காலத்தில், ஊணர், மங்கோலியர், மஞ்சுக்கள் முதலிய நாடோடிக் கூட்டத்தினர் இங்குத் தங்கிப் பல நாடுகளைத் தாக்கினர். மங கோலியப் பேரரசு கி.பி. 15-ஆம் நூற்றாண்டின் இடைப்பகுதியில் சிதைவுற்றபின், சைபீரியாவில் அமைந்த சிபிர் தாதர் கனேட்டு (Sibir Tatar Khanate) அரசை கி.பி.1598-இல் உருசியா வென்று கைப்பற்றிக் கொண்டது. தொடர்ந்து, மேற்குச் சைபீரியா முழுவதையும் கி பி. 15-ஆம் நூற்றாண்டில் உருசியா தன்வசப்படுத்தியது. சைபீரியா உருசியப் பேரரசின் குடியேற்றப் பகுதியாயிற்று. இராணுவ ஆளுநர்கள மூலம் உருசியப் பேரரசர் இக்குடியேற்றத்தை ஆணடு வந்தார். ஆளுநர்கள் சைபீரிய மக்களிடமிருநது கப்பம் பெற்றுக் கொண்டு அம்மக களின் பழக்கவழக்கங்களில் தலையிடாமல் இருந தனர். உருசிய அரசியலாரின தண்டனைக்குட்பட்ட பலர், சைபீரியாவிற்கு நாடுகடத்தப்பட்டு வந்தனர். உருசியாவைத் தூரக் கிழககுடன் இணைக்கும நீண்ட இருப்புப்பாதை (Trans Siberian Railroad) சைபீரியா வழியாகச் செல்வதால், அது அமைக்கப்பட்ட காலத் திலிருந்து (கி.பி.1892முதல 1905வரை) சைபீரியாவின் சிறப்பு மிகுதியாயிற்று. அதனால் மேலும மேலும் உருசியர் சைபீரியாவுககுச் சென்று தஙகலாயினர்

உருசிய உளநாட்டுப் போராக் காலத்தில் (1918-1920) செம் படையினரை எதிாத்த வெணபடையினர் (White Forces) சைபீரியாவைத் தமது முக்கிய கேந்திர பகுதியாகக் கொணடு போரிட்டனர். ஆனால், பொதுவுடைமைக் கட்சியினர் அவர் களைத் தோற்கடித்துவிட்டதால் 1920முதலசைபீரியா முழுவதிலும் புதிய உருசியப் பொதுவுடைமை ஆட்சி ஏற்பட்டது. அதன்பிறகு, சைபீரியாவின் பொருளா தார வளர்ச்சி பன்மடஙகுப் பெருகியது. தொழில் கள் பல தோன்றின. இரணடாம் உலகப் போருககுப் பிறகு, தென்மேற்குச் சைபீரியா தொழில் துறையில் மிக விரைவாக முன்னேறியது. சைபீரியா கி.பி. 1170 -இல் தனது இயற்கை வளங்களைப் பெருககிக்கொள வதற்காகவும், அவற்றின் மூலம பலதொழிலகளை வளர்ப்பதற்காகவும், அமெரிக்கா, சப்பான், மேற்கு ஐரோப்பா முதலிய நாடுகளின் மூலதன உதவியைச் சோவியத்து அரசு நாடியதும் ஈண்டுக் குறிப்பிடத தககது.

தெ.பா.

**சைமன் ஆல்சுபுரூக்கு சர் சான்:** (கி.பி. 1873-1954) எண்பது வயது வரை புகழுடன் வாழ்ந்த சர்சான் சைமன் ஆல்சுபுரூக்கு (Sir John Simon Alsbrook) என்னும் ஆங்கில அரசியல் அறிஞர் சுருக்க மாகச் 'சைமன்' என்றே குறிப்பிடப்பட்டார். இநதிய வரலாற்றில் இடம் பெற்றுள்ள 1927-ஆம் ஆணடில் நியமிக்கப்பட்ட 'சைமன் குழுவின்' (Simon Commission) தலைவர் இவர்தான்.

இங்கிலாந்தின் அரசியல் வல்லுநரான இவர் கி.பி. 1873-ஆம் ஆண்டில் மான்செசுட்டரில் (Manchester) பிறந்தார். ஆக்சுபோர்டு பல்கலைக் கழகத்தில் பயின்று பட்டம் பெற்றார். மாவழக்கறிஞர் (Barrister) பட்டத்தை இவர் கி.பி 1899-இல் பெற்று வழக்கறிஞரானார். திறமை, ஆற்றல் காரணமாக அரசுத் தலைமை வழக்குரைஞர் (Solicitor-General)

பதவியைப் பெற்றார்; பின்னர் அரசியலிலும் நுழைந் தார். 1906-ஆம் ஆண்டில் நடந்த தேர்தலில் தாராள வாதக் (Liberal) கட்சியின் சார்பாக ஆங்கிலச்சட்டத் தலைமைப்பணி முதல்வராகவும் பாராளுமன்றத்தின் உறுப்பினராகவும் முதன் முதலாகத் தேர்ந்தெடுக்கப் பட்டார். இங்கிலாந்தின 1913-ஆம் ஆணடில ஆங்கிலச் சட்டத் தலைமைப் பணி முதல்வராக (Attorney-General) நியமிக்கப்பட்டார்.

முதல உலகப் போர் கி.பி. 1914-இல் தொடங் கியது. அப்போது இஙகிலாந்தின் பாராளுமன்றத்தில் கட்டாய இராணுவ சேவையை (Conseription) வறபுறுத்திச சட்ட மசோதா ஒன்று நிறைவேற்றப் பட்டது. இது சான் சைமனுக்குப் பிடிக்கவிலலை. தம் சட்டத் தலைமைப்பணி முதல்வா பதவியை 1916-ஆம் ஆண்டில் துறந்தார். ஆனால, 1917-ஆம் ஆண்டில் தாம் விரும்பியே புதிதாக ஏற்படுத்தப்பட்டிருந்த இங்கிலாந்தின் விமானப்படையில் சேர்ந்து கொண்டார். அடுத்த ஆணடே விமானப்படைப் பதவியையும் உதறித்தள்ளிவிட்டு, அப்போது நடை பெற்ற ஆங்கிலப் பாராளுமன்றத் தேர்தலில போட்டி யிட்டுத் தோல்வியையே கணடார். ஆனால், அதறகுப் பிறகு நான்கு ஆணடுகள் காத்திருந்து 1922-ஆம் ஆணடில் நடைபெறற தேர்தலில வெற்றி பெற்றுப் பாராளுமன்றத்திற்கு உறுப்பினராகத் தேர்ந்தெடுக் கப்பட்டார்.

இந்திய அரசியல் சூழ்நிலையில் 1925-27 ஆணடு களில் பெரியதோர் மாற்றமும் குழப்பமும் காணப் பட்டு வந்தன. அப்போது இங்கிலாந்தில பர்க்கன்எட் பிரபு (Lord Birkenhead) இந்திய அரசின் செயலா ளராகப் (Secretary of State for India) பதவி வகித் திருந்தார். இங்கிலாந்து அரசாங்கத்தின் அமைச சரவை 1927-ஆம் ஆணடு சூலை 20-ஆம் நாளில் இந்திய அரசியல சூழ்நிலையைக் கண்டறிய, ஒரு மேலாணமைக்குழு நியமிப்பது என முடிவு செய்தது. இதற்குச் சர் சான் சைமன் ஆல்சுபுரூக்கையே தலை வராக நியமித்தது. இதற்கு இரண்டு காரணங்கள் இருந்தன. ஒன்று, 1926-ஆம் ஆண்டில் இங்கிலாந்தில் நடைபெற்ற பொது வேலை நிறுத்தத்தின் போது மக்கள் சபையின் தாராள வாதக கட்சியைச் சார்ந்த சிறப்பு உறுப்பினர் என்ற முறையில் இவரது முழு முயற்சியினால் வேலை நிறுத்தம் நினறது. மற்றொனறு சைமன் சிறந்த சிறப்பு அரசியல் சட்ட அமைப்பு வழக் கறிஞர் (Constitutional Jurist). மேலும் இந்தியாவில இருந்த மிதவாதிகளிடமிருநது சைமனின் தலைமைக்கு எதிர்ப்பு இருக்காது என்றும் நம்பபப்பட்டது.

சைமன் தலைமையில் அமைக்கப்பட்ட குழுவில சைமனையும் சேர்த்து மொத்தம் 7 உறுப்பினர் இருந் தனர். மற்றைய ஆறு உறுப்பினர்கள் 1) பரன்காம் (Burnham)என்பவர் இந்தியாவின்பலபகுதிகளை அறிந் திருந்தவர். 2)இசுட்ரத்கோனா(Stratheona)என்பவர் பிரபுக்கள் சபையிலிருந்து ஆளுங்கட்சித் தலைவர் என் பதால் நியமிக்கப்பட்டார். 3) இலேன்பாக்சு (Lane-Fox) அரசப் பேராளர் இர்வினின் நியமிப்பாளர்; பேராளர். 4) கடோகன் (Cadogan) பொதுமக்கள் சபையின் நடுவரின் (Speaker) பேராளர். 5) அப் போது பொதுமக்கள் சபையின் சாதாரண உறுப் பினராகவும் பிறகு இந்தியா சுதந்திரம் அடைந்த பொழுது இங்கிலாந்தின் பிரதமராகவும் இருந்த அட்லி பிரபு (Lord Clement Attlee). 6) தொழிற் கட்சியின் மற்றொரு பேராளரான ஆர்ட்சார்ன் (Hartshorn). இந்த 6 உறுப்பினர்களும் தலைவராகிய சைமனும் அடங்கிய 7 உறுப்பினர்குழுவில்இருநதனர். இந்தக் குழுவில் ஓர் இந்தியர்கூட உறுப்பினராக நிய மிக்கப்படாதது குறிப்பிடத்தக்கதும் வருந்தத் தக்கது மாகும். இதனாலேயே எதிர்ப்புத் தோனறியது.

சைமன் குழு நியமிக்கபபட்டதை அறிந்ததுமே அகில இந்தியத் தேசிய காஙகிரசு, அகில இநதிய முசு லீகுக் கழகம், அகில இந்திய முறபோக்குக் குழு, ஆலைகள் உரிமையாளர்கள சங்கம், இநது மகாசபை உட்பட அனைத்துக் கட்சிகளும் எதிாத்தன. தலைவர்களான தேசபகதூா சப்ரூ, முகமமதலி சின்னா, அன்னி பெசண்டு, சர் அப்துல் இரகீம், சர் அல் இமாம், சிவசாமி அய்யர், சமனலால செதல்வாடு (Chimanlal Setalvad),தின்சா ஆகியோர் அரசப் பேராளருக்கும் இநதிய அரசாங்கச் செயலாள ருககும் தம் எதிர்ப்பைத் தெரிவித்துச் சைமன குழு எதிர்ப்பு நடக்கும் என்று 1927-ஆம் ஆணடிலேயே எழுதினார்கள் என டாக்டர் தாராசந்து தமது 'இந்தியாவில் சுதந்திர இயக்கத்தின வரலாறு' என்ற நூலில் குறிப்பிடுகிறார்.

சைமன் குழு இந்தியாவிற்கு இரண்டு தடவை வந்து சென்றது. முதல் தடவை 1928-ஆம் ஆணடில் பிப்பிரவரி 3-ஆம் நாள பம்பாயை வந்தடைந்தது. அது 31.3.1928 வரை இந்தியாவில தங்கியிருந்தது. இரண டாம் தடவை அவ்வாண்டு அக்டோபர் மாதம் 11-ஆம் தேதி வநது இந்தியாவின் பல நகரங்களுக்குச் சென்றது, சென்னை, இலாகூர், கராச்சி, பெசாவர், தில்லி, இலக்னோ, பாட்னா, கல்கத்தா, சில்லாங்கு, இரங்கூன், மீண்டும் சென்னை, நாக்பூர் எனறு 21.3.1929 வரை பல நகரங்களுக்குச் சென்றது. சைமன குழு, எதிர்ப்புக் கூட்டங்களையே கண்டது. இநது, முசுலீம், கிறித்தவர்கள் அனைவரும் வேறுபாடினறி எதிர்த்தனர். அப்போதுதான், இலசபதிராய், நேரு வின் தாயார் சொரூப இராணியார், சவகர்லால்

நேரு, கோவிந்த வல்லப பந்து போன்ற பெருந தலைவர்கள போலீசுத் தடியடிக்கு ஆளாயினர்.

சர் சான் சைமன் தம் குழு அறிக்கையை 1930-ஆம் ஆண்டு கொடுத்தது. இவா ஆங்கில அரசுக்கு ஆற்றிய தொணடு காரணமாக 1931-ஆம் ஆண்டிலேயேவெளி நாட்டு அமைசசராகப்பதவி நியமனம் பெறறார். அப்பதவியில் 1935-ஆம் ஆண்டு முடிய 5 ஆண்டுகள் இருந்தார். அதன் பிறகு 1937-ஆம் ஆண்டு வரை இவர் இரண்டு ஆண்டுகள் உளநாட்டுஅமைச்சராகவும் (Home Secretary) பணியாற்றினாா. இவர் 1937-ஆம் ஆண்டிலிருந்து3ஆண்டுகள நிதியமைச்சராகவும் (Chancellor of Exchequer) பணியாற்றினார். இதற்கிடையில் 1939-ஆம் ஆணடிலேயே உலகப்போா (இரணடாம்) தொடங்கியது. இவர் 1940-ஆம் ஆணடில் சட்டம், நிதி மந்திரியாகவும் (Lord Chancellor) நியமிக்கப்பட்டார். ஐந்து ஆண்டுகளுககு இவர் இப்பதவியை வகித்தார். தாராளவாதக கடசியில் நுழைநத சர்சான் சைமன் மெல்ல மெல்ல தம் அரசியல கோட்பாடுகளை சற்று மாற்றிக் கொண்டார் என்றே கூறவேண்டும். இறுதியாக 1952-ஆம் ஆணடில் தம் சுயசரிதையையும் வெளியிட்டாா. 1954-ஆம் ஆண்டில் சர் சான் சைமன் ஆல்சுபுருககு இறந்தார்.

எச்.அ.

**சைமன் குழு:** இநதிய விடுதலை இயகக வரலாற்றில், இந்தியத் தேசிய காங்கிரசு விரும்பிய முழு விடுதலையை ஆங்கில அரசாங்கம் அளிககாமல், அவ்வப்போது சிறிது சிறிதாகச் சில அரசியல் உரிமைகளை இநதியர்களுக்கு வழங்கிப் பல சட்டங்களைச் செய்தது. அவற்றுள் ஒன்று, 1919-ஆம் ஆண்டின் இந்திய அரசாஙகச சட்டம் எவ்வாறு நடைமுறையில் செயற்பட்டு வருகிறதென்பதை அறியும் பொருட்டு ஆங்கில அரசாங்கத்தால் 1927-ஆம் ஆணடில் நிறுவப்பட்ட ஓர் ஆய்வுக் குழுவாகும். இதுவே இநதிய அரசியலமைப்புச சட்டக்குழு(Indian Statutory Commission) எனப்படும். இது சைமன் பிரபுவின தலைமையில் அமைக்கப்பட்ட குழுவாகையால் சைமன் குழு (Simon Commission) எனப்பட்டது. இந்திய அரசாங்கச் சட்டம் (1919), ஓரளவு தோந்தெடுக்கப்பட்ட கீழவையும், மேலவையும் கொண்ட ஒரு சட்டமன்றம் உருவாகவும, பல அதிகாரங்களை அரசப்பேராளரிடம்(Viceroy)குவித்தும், ஒரு நடுவண அரசாங்கத்தை நிறுவியும், ஆங்கில ஆட்சிக்கு உட்பட்ட இந்திய மாகாணங்களில கல்வி, சுகாதாரம், பொதுப்பணி, உள்ளாட்சி முதலிய துறைகளைச் சட்டமன்றத்துக்குப் பொறுப்புள்ள இந்திய அமைச்சர்களுக்கு மாற்றியும், நிதி, சட்டம், காவல் முதலிய முக்கிய துறைகளை ஆளுநருக்குப் பொறுப்புள்ள நிருவாகக் குழு உறுப்பினர்களுககு ஒதுக்கியும் ஓர் இரட்டை ஆட்சியை நிறுவி, உள்ளூராட்சி மன்றங்களில் முழுவதும் தேர்ந்தெடுக்கப்பட்ட இந்திய உறுப்பினர்களே இருக்கவும் வழி செய்தது. இவ்வரசியலமைப்புச் சீர்திருத்தம், கனடா, ஆசுத்திரேலியா போனற தன்னாட்சிக் குடியேற்ற நாடுகளைப போன்ற தனனாட்சி நிலையையும் (Dominion Status), முழு மாகாணத் தன்னாட்சியையும் (Provincial Autonomy) இந்தியாவுக்கு வேண்டி நின்ற இந்தியக் காங்கிரசுக்குப பெரும் ஏமாற்றத்தை அளித்தது. மேலும், 1919-ஆம்ஆண்டுப்பஞ்சாபுப் படுகொலையும் அடக்குமுறைச் சட்டங்களும் செயலகளும் அரசப்பேராளரின் அதிகாரக் குவிப்பும், தேசிய உணர்வுடையோர் சீற்றமும் எதிாப்பும் கொளளுமாறு செய்தன. காநதியடிகளின தலைமையில் காஙகிரசு, சட்ட மறுப்பு இயக்கத்தை நடததிறறு. நிதி ஒதுககீடு இல்லாமல் மாகாண அரசாங்கம் செயற்படமுடிய விலலையாகையாலும், நிதித்துறை மாகாண ஆங்கில ஆளுநருக்குப் பொறுப்புளள நிருவாகக் குழு உறுப்பினருக்கு ஒதுக்கப்பட்டிருந்ததனாலும், இரட்டையாட்சி மிகவும் இகழ்ச்சிக்குரியதாக வெறுக்கப்பட்டது. காங்கிரசு 1919-ஆம் ஆண்டு சீர்திருத்தங்களைச் செயற்படுத்துவதறகு ஆஙகில அரசாங்கத்தோடு ஒத்துழைக்க மறுத்தது. மேற்கூறிய அரசாங்கச. சட்டம்-பிரிவு 84, நடைமுறைககு வந்த 10 ஆணடுகளில் (அதாவது 1929-இல்) அது நடைமுறையில் செயற்படும் வகையைப் பற்றி ஆராய்நது அறிக்கை பெறப் பாராளுமன்றம ஒரு குழுவை அமர்தத வேண்டுமென்று கூறிற்று. ஆங்கிலப் பழைமைப் பற்றாளர் கட்சி அரசாங்கத்தின் தலைமை அமைச்சா பால்டுவின், தமக்குப்பின் 1929-இல் உறுதியாக ஆட்சிக்கு வரப்போகிற தொழிற்கட்சி அரசாஙகம் மேறபடி ஆய்வுக் குழுவை அமர்த்துதல் கூடாதென்னும் தீய நோக்கததுடன, அப்பொழுது இந்திய நடுவண் சட்டமன்றத்தில நுழைநது இந்திய அரசாங்கததைக் கடுமையாக எதிர்த்து வந்த சுயராச்சியக்கட்சி உறுப்பினர்களிடையே (Swarajat Party) பிளவை உணடாக்கும் பொருட்டு, மேற்பாடி சட்டப் பிரிவைத் திருத்தி, இரணடாணடிற்கு முன்னதாகவே, 1927-நவம்பரில் ஏழு ஆங்கிலேய உறுப்பினர்களையுடைய ஓராய்வுக் குழுவைப் பாராளுமன்றம் அமர்தத வழி செய்தார். இவ்வெழுவருள மூவர் ஆளும் பழைமைப் பற்றாளர் கட்சியையும், இரணடுபேர் முற்போககுக கட்சியையும் (Liberal Party), இரணடுபேர் தொழிற்கட்சியையும் (Labour Party) சேர்ந்தவராவர். முற்போக்குக்கட்சி, தொழிற்கட்சி ஆகியவற்றின். உறுப்பினர்கள் இந்தியருடைய அரசியலுணர்வை மதிப்பவர்கள்; ஆனால் கட்சி அப்படிடையில் இவர்களைச் சிறுபான்மையில் சேர்த்தும், பழமையைப்

போற்றி விட்டுக் கொடுக்கும் இயல்பில்லாத பழமைப் பற்றாளர் கட்சியினரைப் பெரும்பான்மையாகச் சேர்த்தும் ஆய்வுக் குழுவை அமைத்த பால்டுவினின் (Stanley Baldwin) சூழ்ச்சியைக் காங்கிரசு நன்றாகப் புரிந்து கொண்டு ஓர் இந்தியரைக் கூடக் குழுவில் சேர்க்காத ஆங்கில அரசாங்கத்தின் கொள்கையைக் கண்டித்தது. மேலும், சென்னை மாநாடு (1927) ஆங்கிலக் கொள்கையைத் தாக்கியும், சைமன்குழுவைப் புறக்கணித்தும், குழு இந்தியாவிற்குள் வரும் நாளில் ஆர்ப்பாட்டங்களை நடத்துமாறு இந்திய மக்களைக் கேட்டுக் கொண்டும், நடுவண், மாகாணச் சட்ட மன்றங்களில் உள்ள அலுவலரல்லாத இந்திய உறுப்பினர்கள் குழுவின் முன்வந்து அரசியல் சீர்திருத்தம் பற்றித் தங்களுடைய கருத்துகளைத் தெரிவிக்காமல் அதைப் புறக்கணித்தல் வேண்டுமென்றும் கேட்டுக் கொண்டு தீர்மானங்களை நிறைவேற்றியது. ஆங்கில இந்திய உறுப்பினர்களைச் சமநிலையில் கொண்ட ஓராய்வுக் குழுவை அமர்த்தினாலொழியச் சைமன் குழுவிடத்துத் தாங்கள் புதிய அரசியல் சீர்திருத்தத் திட்டங்களை எடுத்துக் கூறப்போவதில்லை என்று கூறி, அந்த ஆண்டிலேயே (1927-இல்) மிதவாதிகளும், தீவிரவாதிகளும், அனைத்திந்தியத் தலைவர்களும் கூட்டறிக்கை விடுத்தனர். ஆகையால், 1928-ஆம் ஆண்டு பிப்பிரவரி 28-ஆம் நாள் சைமன் குழு பம்பாயில் வந்திறங்கியபோது அன்று நகர் முழுவதும் வேலை நிறுத்தம் (அர்த்தால்) செய்து கறுப்புக் கொடிகாட்டிக் கிளர்ச்சி செய்து, 'சைமனே, திரும்பிப்போ' என்ற கூக்குரலும் ஒலிக்கச் செய்தது.

இலாகூரில் அமைதியாகக் கிளர்ச்சி நடத்திய காங்கிரசுத் தலைவர் இலாலாலசபதிராயை நெஞ்சில் தடியால் ஓராங்கிலக் காவல் அலுவலர் தாக்க, அவர் நெஞ்சுவலியால் சிறிது நாட்களில் இறந்தார்; அவரைத் தாக்கிய ஆங்கில அலுவலர் பின்னர் மறைவாகச் சுட்டுக் கொல்லப்பட்டார். பஞ்சாபுச் சட்டமன்றத்தில் பகவத் சிங்கு, பி.கே தத்து முதலியோர் வீசிய இரு குண்டுகள் வெடித்தன. இந்த நிலையிலும், இந்தியச் செயலர் பேர்க்கென்கெட்டுப் பிரபு ஆணவத்துடன் குழு அமைப்புச் சரியென்று கூறி, இந்தியாவுக்கு ஏற்ற ஆரரசியலமைப்பை வரைந்து பாராளுமன்றத்துக்கு அளிக்குமாறு இந்தியத் தலைவர்களுக்கு ஓரறைகூவல் விடுத்தார். இந்த அறைகூவலைப் பம்பாயில் 1927-இல் கூடிய காங்கிரசு, துணிவுடன் ஏற்று, எல்லா அரசியல் கட்சித் தலைவர்களையும், நடுவண், மாகாணச் சட்டமன்றங்களிலுள்ள தேர்ந்தெடுக்கப்பட்ட உறுப்பினர்களையும் கலந்து கொண்டு ஓரரசியலமைப்பை வரையுமாறு தனது செயற் குழுவுக்கு ஆணை விடுத்து ஒரு தீர்மானம் செய்தது. செயற்குழு மோதிலால் நேருவைத் (சவகர்லாலின் தந்தை) தலைவராகக் கொண்டு அனைத்துக்கட்சி மாநாடு கூட்டிக் கலந்து கொண்டு, ஓரரசியலமைப்பை வரைந்தளித்தது அதன் சிறப்பியல்புகள்: நடுவிலும் மாகாணங்களிலும் முழுப் பொறுப்பாட்சி அரசாங்கங்கள்; மாகாணங்களுக்கு எண்ணிக்கையிடப்பட்ட அதிகாரங்களும் இந்திய அரசாங்கத்துக்கு எஞ்சியவையும்; நடுவில் மாகாணச சட்ட மன்றங்களால் தேர்ந்தெடுக்கப்பட்ட 200 உறுப்பினர்களைக் கொண்ட ஓர் ஆளவையும் 500 தேர்ந்தெடுக்கப்பட்ட சார்பாளர் மன்றமும்; விகிதாசாரப் பிரதிநிதி முறை, ஒற்றை மாற்றுவாக்கு, வயது வந்தோருக்கு வாக்குரிமை முதலியவை; கூட்டு வகுப்பினடிப்படையிலமைந்த தேர்தல் தொகுதிகள் (Joint Communal Electoral Constituencies); மக்கள் எண்ணிக்கை அடிப்படையில் தொகுதிகளமைப்பு; நடுவில அரசரால் அமர்த்தப்பட்டு, இந்திய வருமானங்களிலிருந்து ஊதியம் பெற்றுச் சட்ட மன்றத்துக்குப் பொறுப்புள்ள ஒரு நிருவாகக் குழுவின் ஆலோசனைப்படி ஆளும் ஓர் அரசப் பேராளர்; பிரிட்டனில் உள்ளது போல் ஒரு தலைமை அமைச்சரும் நிருவாகக் குழுவும்; மாகாணங்களிலும் இதே போன்ற அமைப்பு; தலைமை நீதிபதியும் துணை நீதிபதிகளும் உடைய தலைமை நீதிமன்றம்; குடிமை அடிப்படை உரிமைகள் (உயிர் வாழும் உரிமை, சொத்து, பேச்சு, குடியாட்சி உரிமைகள், சட்டத்தின் முன் சமநிலை-தீண்டாமை ஒழிப்பு, வேலை பெற உரிமை), உரிமைகளைக் காக்கப் பாராளுமன்றம் சட்டம் செய்ய அதிகாரம்; இந்தியாவுக்கு மற்றக் குடியேற்ற நாடுகளை ஒத்த நிலை: இதனைக் காங்கிரசு ஏற்றது.

இதற்கிடையில எம்.ஏ. சின்னா தலைமையில் முசுலிம் கழகம் (Muslim League) தில்லியில 1920-இல் கூடிக் கீழ் வரும் தனது 14 குறிப்புகளை (Fourteen-Points) நிறைவேற்றிற்று. அவை இந்தியாவுக்குக் கூட்டாட்சி அரசியலமைப்பு; மாகாணங்களுக்கு எஞ்சிய அதிகாரம்; மாகாணங்களுக்குத் தன்னாட்சி; சிறுபான்மையோருக்குப் போதிய பாதுகாப்புடன் பிரதிநிதித்துவமுடைய தேர்ந்தெடுக்கப்பட்ட நடுவண், மாகாணச் சட்டமன்றங்கள், நடுவண் சட்ட மன்றத்தில் 1/3 இடம் முசுலிம் சார்பாளர்களுக்கு; வகுப்பு அடிப்படையில் சார்பாளர் பதவி என்பது தனித் தொகுதி வடிவத்தில் இருத்தல்; முசுலிம் பெரும்பான்மை நிலை பஞ்சாபு, வங்காளம், வடமேற்கு எல்லை மாகாணங்களில் மாற்றப்படாதவாறு தொகுதி மாறுதல்கள்; யாவருக்கும் முழுச் சமய உரிமை; ஒரு மன்ற உறுப்பினருள் ஒரு வகுப்பினருள் 3/4 பங்கு மசோதாவை எதிர்த்தால அது சட்டமாகாது; வடமேற்கெல்லை மாகாணம், பலுசித்தானில்

மற்ற மாகாணங்களைப் போலச் சீர்திருத்தங்கள், முசுலிம் பண்பாடு, கல்வி, மொழி சமயம், குடிமைச் சட்டங்கள் (Personal Laws) முதலியவற்றுக்குத் தக்க பாதுகாப்புடன் கூடிய அரசியலமைப்பு; நடுவண், மாகாண அரசாங்கங்களில் 1/3 பங்கு முசுலிம் அமைச்சர்கள்; மாநிலங்களின் ஒப்புதலுடன் கூட்டாட்சி அரசியலமைப்பில் மாறுதல்கள் செய்தல் ஆகியனவாம்.

இந்திய அரசியலமைப்புச் சட்டச்குழு 1928 பிப்பிரவரி 28 முதல், அந்த ஆண்டு மார்ச்சு 31 வரை ஒரு தடவையும், 1928 அக்டோபர் 11 முதல், 1929 ஏப்பிரல் 13 வரை இரண்டாம் தடவையும் இந்தியா வந்து சென்றது. இங்கிலாந்தில் தொழிறகட்சி அரசாங்கம் 1929-இல் தேர்தலில் வெலல, இராம் சேமாக்டனால்டு தலைமை அமைச்சர் ஆனார். அரசப் பேராளர் இர்வின் பிரபு இஙகிலாந்துக்கு 4 மாத விடுப்பில் போய், ஆங்கில அரசாங்கத்தைக் கலந்து பேசிவிட்டுத் திரும்பி வந்து, சைமன் பிரபு கேட்டுக்கொண்டவாறு அக்குழுவின் அறிக்கையை ஆங்கில இநதியா, இநதிய அரசாங்கச் சார்பாளாகள் கலந்து கொள்ளும் ஒரு மாநாட்டில் ஆராய்ந்து சீர்திருத்தங்களுக்குரிய திட்டங்களைப் பாராளு மன்றத்துக்கு அளிக்கும் என்று ஓரறிக்கை வெளியிட்டார். ஆனால், இநதியாவுக்குக் குடியேற்ற நாட்டு நிலை வழுங்காதவரை தான் மாநாட்டில் பஙகேற்கப் போவதிலலை என்று காங்கிரசு உறுதியாகக் கூறி, முழு விடுதலை (பூரண சுயராச்சியம்) அடைதலே இந்தியாவின் அரசியல் குறிக்கோளாகும் என்று 1929-இல் தனது இலாகூர்த் தீர்மானத்தில் வெளியிட்டது.

சைமன் குழுவின் அறிக்கை 1930, மே. 27-ஆம் நாள் வெளியிடப்பட்டது. காங்கிரசும் தனது இலாகூர்த்தீர்மானத்தைச் செயற் படுத்தும் பொருட்டுச் சட்டமறுப்பு இயக்கத்தை நடத்துமாறு காநதியடிகளைக் கேட்டுக் கொள்ளக் காந்தியடிகளும் 78 தொணடர்களுடன் தமது சபர்மதி குடிலிலிருந்து புறப்பட்டுக் கடற்கரைக்குச் சென்று, அரசாஙகத்தின் உடன்பாடின்றி உப்பு விளைவிக்கலானார்; இந்த உப்புச் சத்தியாக்கிரகம் அயல் நாட்டுப் பொருள்களை அறவே புறக்கணிக்கும் எழுச்சியாகத் தோன்றிற்று. அரசாங்கம் அடக்குமுறையில் சட்டங்களைக் கையாண்டு, காந்தியடிகளைச் சிறையிலிட்டது, இந்தச் சூழ்நிலையிலதான் சைமன் குழுவின் அறிக்கையை ஆராய்வதற்காகக் காங்கிரசு கலந்து கொளளாத முதலாவது வட்ட மேசை மாநாடு (First Session of the Round Table Conference) இலணடனில் கூடிற்று.

சைமன் குழு தனது அறிக்கையின் முதற் பகுதியில் (Volume I) அப்போது (1929-இல்) 1919-ஆம் ஆண்டு இந்திய அரசாங்கச் சட்டத்தினபடி நடைபெற்ற நடுவண், மாகாண அரசாஙகஙகளின் அமைப்பையும் அதிகாரங்களையும் பணிகளையும் கூறி, மாவட்ட ஆட்சியரிடம் (District Collector) எவ்வாறு அதிகாரங்களும் பணிகளும் பொறுப்புகளும் குவிக்கப்பட்டிருந்தன என்று விரித்துரைத்து, இந்தியாவில் மிகவும் அதிகாரக் குவிப்பைக்கொண்ட ஓர் ஆட்சி இயங்குவதறகு மாவட்ட ஆட்சியர் பதவி எவ்வாறு இன்றியமையாதது என்றும் சுட்டிக்காட்டிற்று. அப்போதைய மாவட்ட ஆடசியர் பதவிக்கு இருந்த அதிகாரங்களும் பணிகளும் பொறுப்புகளும, பெருமையும் ஏறக்குறைய இப்போதும் இருக்கிறபடியாலும், அத்தகைய பதவியின் வரலாற்றையும் பொறுபபுகளையும் சைமன குழுவினறிகைகை விரித்துரைக்கிற படியாலும், அந்த அறிகைகயின் முதற்பகுதி இக்கால மாவட்ட ஆட்சியை ஆய்வு செய்யும் ஆராய்சசி மாணவர்களுக்கு மிகவும் பயனுளள ஓர் ஆதார நூலாகக் கொள்ளப்படுகிறது. சைமன குழு தனது அறிக்கையின் முதற் பகுதியில் (Vol.I) மாவட்ட ஆட்சியரின்பதவி அதிகாரங்களையும் பொறுப்புகளையும் பின்வருமாறு கூறுகிறது

இவரே மாவட்டத்தில் சட்டமும் ஒழுங்கும் நிலைபெறுவதற்கு முதல் பொறுப்புடைய முக்கிய நிருவாக அதிகாரியாவர்; மாவட்டத்தில் குற்றஇயல் சட்டம் செயற்படுத்தப்படுவதற்கும் இவரே பொறுப்பு; இந்த நோக்கத்துககாக மாவட்டக் காவற்படை (Police Force) முழுவதும் இவருடைய ஆணைக்கு அடங்கி இருக்கிறது. நிருவாகத் துறையும் நீதித்துறையும் பிரிக்கப்படாமல் இருக்கும் மாவட்டங்களில் மாவட்ட ஆட்சியரே நீதிஅலுவலா (Magistrate) என்ற நிலையில் மாவட்டங்களிலுளள கீழ்நிலை நீதிமன்றங்களனைத்தையும் மேற்பார்வை செய்கிறார். மாவட்ட ஆட்சியர் (Collector) என்ற நிலையில்இவர் மாவட்டத்திலுள்ள வரி வருமானத் துறை அமைப்பின் தலைவராக இருககிறார். இவ்விரு தகுதிகளும் மாவட்ட ஆட்சியருக்குப் பொதுமக்கள் முனனே ஓர் உயரிய நிலையையும் மிகுந்த செல்வாக்கையும் அளிககின்றன. 'நிலையான நிலவரி ஏற்பாடு (Permanent land revenue settlement) இல்லாத பகுதிகளில் மாவட்ட ஆடசியர் தமக்குக் கீழுள்ள அலுவலர்வழியாகத் தமதாளுகைக்குட்பட்ட ஒவ்வொரு அங்குல நிலத்தோடும் தொடர்பு கொளள இயலும். இந்தப் பதவியானது முதலில் தனிப்பட்ட நோக்கமாகிய நிலவரி தண்டுதல், அமைதி காத்தல் முதலியவை

களை நிறைவேற்றுகிறது. ஆயினும் இப்பதவி மற்றப் பணிகளோடு நெருக்கமாகப் பிணைக்கப்பட்டும் உறுதியாக நிலை பெற்றும் மக்களயாவராலும் நன்றாக உணரப்பட்டும் வந்துள்ளகாரணத்தால், இது மேறகூறிய பொறுப்புகளை நிறைவேற்றும் நேரத்திலேயே, மற்றப் பெருமளவு பணிகளையும் திறம்படவும் எளிதாகவும் நிறைவேற்றுகிறது. இப்பதவி ஆவணப் பதிவு (Registration), நிலங்களை மாற்றுதல், பிரித்தல், கடனுக்குள்ளான பெரும் நிலங்களை மேலாணமை செய்தல், வேளாண் தொழிலாளருக்குக் கடன் வசதி தருதல், எல்லாவற்றுக்கும் மேலாக பஞ்ச அல்லது வறட்சி உதவி அளித்தல் முதலிய பணிகளைச் செய்கிறது. இவர் மக்களுடைய தலையாய தொழிலாக உள்ள வேளாண்மையையும் அது தருகின்ற நிலவரிவருமானத்தையும்கட்டுப்படுததி ஆளுகின்ற காரணத்தினால். பொதுவான ஆட்சி அதிகாரியாகவும் (The General Administration Staff) செயலாற்றுதல் இயல்பே ஆகும் .. . .வேறு பலவகையான வல்லுநர்களையுடைய பணியாளர்களெல்லாம் தத்தமக்குரிய சிறு அலுவலராகிய துணையோடிருக்கிறார்களென்பது உண்மையே ஆயினும், பல்வேறு தரங்களில் மாவட்ட ஆட்சி அதிகாரி மற்றெல்லா ஆட்சித்துறைச் செயல்களிலுமுள்ள கொள்கையை உருவாக்கும் நிலையிலுள்ளார். மேலும், மாவட்ட ஆட்சித்துறை ஒவ்வொன்றின் செயலுக்கும் இவர் பின் அணியாக இருந்து, தமது ஆதரவை வழஙகி, தேவைப்பட்டால் வல்லுநர் பணிக்கும் (Specialized Service) மக்களுக்குமிடையே நல்லிணக்கம் ஏற்படுத்தவும் செய்கிறார்' (குழு அறிககை, முதற் பகுதி.).

குழு தனது அறிக்கையின் முதற் பகுதியில் நடைமுறையிலுள்ள ஆட்சிப் பதவிகளையும் அவற்றின் தேவையையும் குறிப்பிட்டுவிட்டு, இரண்டாம் பகுதியில் தனது அரசியல் சீர்திருத்தப் பரிந்துரைகளைக் கூறுகிறது:

**1. அனைத்திந்தியக் கூட்டாட்சி·** இந்தியாவின் அரசியலமைப்பு வளர்ச்சியின் இறுதி நோக்கம் அனைத்திநதியக் கூட்டாட்சி ஏற்படுதலே; எவ்வாறெனில் பரப்பளவிலும் மக்கள் தொகையிலும் அரசியலமைப்பு வளர்சசியிலும் பல்வேறு வகைப்பட்ட 600க்கும் மேற்பட்ட இந்திய அரசுகளையும, ஆங்கிலேயே மாகாணங்களையும் தன்னுரிமையை இழக்காமல ஒன்றாக இணைப்பதற்குரிய ஒரே வழி, கூட்டாட்சி அரசியலமைப்பு(Federal Constitution) ஒனறுதான்

**2. இரட்டையாட்சிநீக்கமும், மாகாணத் தன்னாட்சி முறையும்:** பழைய 1919-ஆம் ஆண்டு இநதிய அரசாஙகச் சட்டத்தில் கொணடு வரப்பட்ட மாகாண இரட்டையாட்சி நீக்கப்பட்டு, எலலா நிருவாகத் துறைகளும்ஒரே வகைக்கட்டுப்பாட்டிலிருத்தல வேணடும். எதிர்காலத்தில ஒவ்வொரு மாகாணமும இயன்ற அளவு தனது எலலைககுள தானே அதிகாரியாக இருத்தல் வேண்டுமென்பது எங்களுடைய நோக்கமாகும (அறிக்கை, பகுதி II பத்திகள் 27,45) அத்தகைய தன்னாட்சியுடைய மாகாணமே தாங்கள் பரிந்துரை செயயும் ஒரு கூட்டாட்சி அமைப்புக்கு உறுதியான ஓரடிப்படையாக அமையும். அத்தகைய மாகாண ஆட்சி ஆங்கிலேயே அமைசசரவையைப் (Cabinet) போன்றே இருத்தல் வேணடுமென்ற கட்டாயமில்லை; அதில சட்டமனறத்துக்குத் தேர்ந்தெடுககப் படாத செயலறிவு பெற்ற ஆங்கிலேய இந்திய அதிகாரிகளும் இருக்கலாம ஆளுநரே அமைசசர்களை அமர்த்தி, துறைகளைப் பிரித்தளித்து, அமைசசரவைக் கூட்டஙகளுக்குத் தலைமை தாஙகுதல் வேணடும் மாகாணப் பாதுகாப்பையும், அமைதியையும் நிலைநிறுத்தற்கும், சமூகத்தில ஒரு பிரிவினரால் மற்றப்பிரிவினர் பாதிப்பிற்குளளாகாதவாறு தடுததற்கும் ஆளுநர் அமைச்சரவையின ஆலோசனையைப் பெறாமலே ஆணை விடுததற்கு அதிகாரம் பெற்றிருத்தல் வேணடும். மேலும், மாகாணத்தில் நெருக்கடிகால நிலை தோன்றியுளளதாக (Emergency) ஆளுநர் கருதினால், அப்போது அவர் அரசப் பேராளரின் மேலாணமைககு உடபட்டுத் தாமும், தமதமைச்சரவையும் செலுத்தி வந்த அதிகாரஙகளையும், பொறுப்புகளையும் தாம் ஒருவரே கையாளுதற்கு அதிகாரம் உடையவர் ஆவர். (அறிககை, பகுதி IIபத்திகள் 44,65). சட்டமனறததால் மறுககப் படும் நிதி ஒதுக்கீடுகளை வழங்குதற்கும், மாகாண நலனை முன்னிட்டு அதற்கு உதவும ஒரு சட்டத்தை, சட்டமன்றத்தின் ஒப்புதல் இலலாமலே, சானறளிககும் தனது அதிகாரத்தின வாயிலாக மட்டுமே (Power of Certification) சட்டமாக ஆக்குதற்கும் ஆளுநருக்கு அதிகாரம் இருததல் வேணடும். (அறிக்கை, பகுதி II பததி 86). அமைச்சரவை கூட்டுப் பொறுப்புடன்தான் இருத்தல் (Joint Responsibility) வேணடும்; பிரிககப்பட்ட பொறுப்புமுறை நடைமுறைக்கு ஒத்துவராது.

**3. வாக்குரிமை, பிரதிநிதித்துவம்.** மாகாணச சட்டமனறஙகளும், வாக்குரிமையும் விரிவாக்கப்படுதல் வேண்டும். சட்டமனறத்தில் அதிகாரிகள் உறுப்பினராதல் கூடாது; அதில் அமர்த்தப்பட்ட உறுப்பினர் எணணிக்கை மொத்தத்தில் 10 சதவிகிதத்துக்கு மேலிருததல் கூடாது. இநது-முசுலிம் நல்லிணக்கம் ஏற்படாவிட்டால், இப்போதுள்ள வகுப்பினடிப் படைத் தொகுதிகளும் (Communal Electorates)

முசுலிம்கள் சிறுபான்மையராயுள்ள 6 மாகாணங்களில் அவர்களுக்கு கூடுதலுரிமையும் (Weightage) வழங்கலாம். கூடுதலுரிமை இருககுமளவும், பஞ்சாபிலும், வங்காளத்திலும அமமககள் தொகை வளர்ச்சிக்கு ஏற்ப அவர்களுக்குக் கூடுதலிடங்கள் இருத்தல் கூடாது. சீக்கியருக்கும் இது போலவே கூடுதலுரிமை வழங்கப்படுதல் வேண்டும். சென்னை மாகாணத்தில் பிராமணரல்லாதாருக்குச் செய்யப்பட்டிருந்த ஒதுக்கீடுகள் (Reservations) நீக்கப்பட்டு, மராட்டியப் பகுதியில் அது நீடிக்கப்படுதல் வேணடும். தாழ்த்தப் பட்ட வகுப்பாருக்கு (Depressed Classes) 8 மாகாணங்களில் முசுலிமலலாத வாக்காளர் தொகுதிகளில் சட்டமன்ற இட ஒதுக்கீடு செய்யப்படுதல் வேண்டும், அவர்களுக்குத் தனித் தொகுதிகளில் இட ஒதுககீடு கூடாது (பகுதி பத்திகள் 69,71,72,75,76,).

4. **சட்டமன்ற அதிகாரங்கள்:** பழைய 1919-ஆம் ஆணடு இநதிய அரசாங்கத்தில நடுவண, மாகாணச் சட்டமன்றங்களுககிடையே பிரிககப்பட்ட சட்டமனற அதிகாரங்கள் மாற்றமின்றி இருக்கலாம்; அதிலுள்ள படி சட்டமன்றம் நிறைவேறறும மசோதாக்களை அதற்கே திருப்பி விடவும், அரசப் பேராளரின் பார்வைக்கு விடுக்கவும், ஆளுநருக்குத் தொடர்ந்து அதிகாரம் இருத்தல் வேண்டும. நிதி மசோதாககளில் வாககெடுப்புக்கு உட்பட்ட, உட்படாத செலவினங்கள் என்ற பாகுபாடும், (Votable, Non-Votable items of Expenditure), சட்ட மன்றத்தால் மறுககப் பட்ட செலவினங்களுக்குப் பணம் ஒதுக்கவும் ஆளுநருக்கு அதிகாரம் இருத்தல் வேண்டும். (பகுதி II பத்திகள் 96,97).

5. **மறு ஆய்வு அதிகாரம்:** புதிய அரசியலமைப்புச் சட்டம் நடைமுறைக்கு வந்து 10 ஆணடுகள் சென்றபின் வாக்காளா தொகுதிகளின் எணணிககை, உறுப்பினர் எண்ணிக்கை, தொகுதி எலலை முதலியவைகளை மாற்றி அமைத்தறகாக மறு ஆய்வு செய்யும் அதிகாரம் மாகாணச் சட்டமன்றஙகளுககு உண்டு. அது வாக்குரிமையிலும, தேர்தல முறையிலும் மாற்றம் செய்யலாம. அது ஏதேனுமொரு சமூகப் பிரிவினருக்கு இப்போதுளள பிரதிநிதித்துவ உரிமைகளை மாற்றுதற்காகக் கொணடுவரும் மசோதா சட்ட மன றத்தில் 2/3 பங்கினர் ஆதரவையும், குறிப்பிட்ட அந்தச் சமூகத்தைச் சேர்ந்த உறுப்பினருள் 2/3 பங்கினருடைய ஆதரவையும் பெற்றாலதான் அது செல்லுபடி ஆகும்.

6. **மாகாணங்கள் பிரிக்கப்படுதல்:** இந்திய அரசாங்கத்தின் ஆட்சியிலிருந்த பர்மா ஒரு தனி நாடாகப் பிரிக்கப்படுதல் வேணடும். சிந்துவையும். ஒரிசாவையும் தனி மாகாணங்களாக ஆக்க வேண்டும் என்னுங் கருத்து வல்லுநர் ஆய்வுக்கு விடப்படுதல்வேண்டும். வடமேற்கு எல்லைமாகாணத்துக்கு ஒரு தனிச் சட்டமன்றமும், அதற்கு நடுவண் சட்டமனறத்தில கூடுதல் பிரதிநிதித்துவமும் இருத்தல் வேணடும்,

7. **நடுவண் அரசாங்கம்:** கூட்டாட்சி அடிப்படையில் ஒரு கூட்டாட்சிச் சட்டமன்றம் (Federal Assembly) அமைககப்பட்டு, அதில் ஆங்கிலேய மாகாணஙகளுக்கு மட்டும இடைக்காலமாகப் பிரதிநிதிததுவம் இருத்தல வேணடும. இநதிய அரசுகள (Indian States) அதில் சேரும்போது, அவற்றின் பிரதிநிதிகள் சேர்ககப் படுதல் வேண்டும். அதன உறுப்பினர் மாகாணச் சட்டமன்றஙகளால மறைமுகமாக விகிதாசாரப் பிரதிநிதிததுவ முறையில் தேர்நதெடுக்கப்படவும், சட்டமன்ற இடங்கள மாகாண மக்கள் தொகை அடிப்படையில பஙகிடப்படவும் வேண்டும். மேலவை, 1919-ஆம் ஆண்டு இந்திய அரசாங்கச் சட்டததில் கூறப்பட்டது போல தொடர்ந்து இருக்கவும், அதில் தேர்ந்தெடுககப்பட்ட, அமாத்தபபட்ட உறுப்பினர் எண்ணிககை முன்பு போலவே இருக்கவும் வேணடும். கீழவையின் காலம் 5 ஆணடாகவும், மேலவையின காலம் 9 ஆண்டாகவுமிருத்தல் வேணடும். அவற்றின அதிகாரங்களும். அரசப் பேராளருககுத தம் சான றிதழ் மூலமாக எதனையும் சட்டமாக வெளியிடும் அதிகாரமும், பண மசோதாககளின மீது அவருககுளள அதிகாரமும் 1919-ஆம் ஆணடு இநதிய அரசாங்கச் சட்டத்தில் கூறப்பட்டபடியே தொடர்ந்து இருத்தல் வேண்டும். அரசப் பேராளர் அரசாஙகத்தின தலைவராகப் பெயரளவில் மட்டுமன்றி நடைமுறையிலும் (In Practice)அதிகாரத்தைக கையாளுதல வேணடும். இந்தப் பரிந்துரை கனடா முதலிய தன்னாட்சிக் (குடியேற்ற நாடுகளின் அரசப் பேராளரின் நிலைககு முற்றிலும் மாறானது) (பகுதி II பத்திகள் 135,140-1)

8. **நடுவண் நிருவாகக் குழு:** நடுவண் நிருவாகக் குழுவினமைப்பில் (Central Executive Council) மாற்றம் ஏதும் செய்யப்படவில்லை; மாகாண ஆளுநர்களுக்கு ஒதுககிவைக்கப்பட்ட அதிகாரங்களை (Reservce Powers) அவர்கள் கையாளும்போது, அவர்களுக்கு இந்திய அரசாங்கம் ஆதரவளித்தல் வேண்டும். ஒன்றுக்கொன்று வேறுபட்ட பலவகையான அமைப்புகளையுடைய ஒரு பரந்த துணைக்கணடத்தின நடுவண் நிருவாகக் குழுவின் மீது சுமத்தப் பட்ட பெரிய பொறுப்புகளை நிறைவேற்றுவதற்கு அரசாங்கத்துக்கு அதிகாரங்கள் இருத்தல்வேண்டுமாகையால், நடுவண் நிருவாகக் குழுவில ஒற்றுமை அல்லது ஒருமைத்தன்மை(Unity) கட்டாயமாக இருத்தல் வேண்டும். எனவே, இரட்டை ஆட்சி முறை

கூடாது. அரசப் பேராளருக்கே தம் நிருவாகக் குழு உறுப்பினரைத் தேர்ந்தெடுத்தமர்த்தும் அதிகாரம் இருத்தல் வேண்டும். இந்தியப் படைத்தலைவருச்குச் சட்டமன்றத்திலோ நிருவாகக் குழுவிலோ உறுப்பினர் பதவி இருத்தலாகாது. கூட்டாட்சிச் சட்டமன்றத்தில் உள்ள தேர்ந்தெடுக்கப்பட்ட உறுப்பினர்களை நடுவண் நிருவாகக் குழுவில சேர்க்கலாம். மாகாண உயர்நீதிமன்றச் செலவுகள் நடுவண நிதியில் சாட்டப் படுதல் (Charged) வேணடும். அனைத்திந்தியக் குடிமைப் (Civil) பணித்துறைக்கும், காவல் பணித் துறைக்கும் அதிகாரிகளை ஆட்சேர்க்கும் பொறுப்பு இந்தியச் செயலாளரால் தொடர்ந்து மேற்கொள்ளப் படுதல் வேண்டும் (பத்திகள 170,173,231,290).

9. **மாகாண நிதி அமைப்பு** (Creation of Provincial Fund). பழைய சட்டததின்படி மாகாணங்களுக்கு ஒதுக்கப்பட்ட வருமான ஆதாரங்கள் போதாதவை. ஆகையால், மாகாணங்களுக்குப் போதிய வருமான ஆதாரங்கள அவற்றின் தன்னுரிமை (Autonomy) தகர்க்கப்படாதவாறு ஒதுக்கப்படுதல் வேண்டும். நடுவண் சட்டமன்றத்தால் விதிக்கப்பட்டு, வாங்கப் படுகிற வரி இனங்களிலிருந்து மாகாண நிதிக்கு நிதி அளிக்கப்பட வேண்டும். (பத்தி 163). இவ்வாறு சைமன் குழு ஒரு பெரிய அறிக்கையை இரு பகுதி களில் (Volumes) வரைந்து, ஒரு கூட்டாட்சி அரசாங் கம் இந்தியாவுக்கு அமைத்தற்குத் தொடக்கம் செய்யலாமென்று பரிந்துரைத்தது

**மதிப்பீடு:** இவ்வாறு பரிந்துரைகளைச் செயத குழுவில் ஓர் இந்தியர் கூட இல்லாமல் அது அமைக்கப் பட்டதென்பது ஒரு குறைதான். அது இந்தியாவுக்கு ஆங்கிலேய அமைப்பைப் போன்றதொரு பாராளு மன்ற அரசாங்கமுறை ஏற்றதன்று என்று எண்ணி, நடுவண் அரசாங்கத்தின் பொறுப்பாட்சியை அது பரிந்துரை செய்யவில்லை என்பதும் மற்றொரு குறை தான். அரசப் பேராளருக்குப் பழையபடி அதிகாரக் குவிப்பு அளிக்கப்பட்டதும், மாகாணத்தில் ஒரு புறம் தன்னாட்சியைப் (பொறுப்பாட்சியை) பரிந்துரை செய்து, மறுபுறம் ஆளுநருக்குத் தனிப்பட்ட அதிகாரங்களை அளித்த குழுவின் நோக்கம் பாராட்டத்தக்கதாக இல்லை. ஏ.பி. கீத்து (A.B. Kaith) என்ற ஆசிரியர் 'குழுவின் அறிக்கையை முழுக்க முழுக்க இந்தியர் புறக்கணித்தது அறிவற்ற செயலென்றும், அவர்கள் அதை ஏற்றுக்கொண்டிருந் தால் மாகாணப் பொறுப்பாட்சி விரைவில் நிறுவப் பட்டிருக்கும்' என்றும் கூறுகிறார். ஆனால், ஆசிரியர் கீத்து கூறும் கருத்து, ஒரஞ்சாராத, நடுநிலைமை உடையதன்று. குழுவின் அறிக்கையை ஆய்வு செய் வதில் முதலாம் வட்டமேசை மாநாட்டுக் கூட்டத் தில் ஒருமித்த கருத்து ஏற்பட வில்லை. மேலும் காங்கிரசு கலநது கொளளாத அம்மாநாட்டில எக் கருத்தும் உண்மை நிலையை எடுத்துக்காட்டா தென்று தெளிவாக உணரப்பட்டது. இந்திய அரசர் கள் கூட்டாட்சித் திட்டத்துக்கு ஆதரவளித்தனர்.

அரசப்பேராளர் இர்வினும் காநதியடிகளும் 1931 மார்ச்சில் செய்து கொண்ட ஓர் ஒப்பந்தத்தின்படி, சட்ட மறுப்பு இயக்கம் நிறுத்தி வைக்கப்பட்டது, காந்தியடிகள் விடுவிக்கப்பட்டு, அவ்வாண்டு செப் டம்பா - திசம்பரில் நடைபெற இருந்த இரண் டாம் வட்டமேசை மாநாட்டில காங்கிரசின் ஒரே சரர்பாளராக அவா கலந்துகொள்ளுதல் வேண்டு மென்றும் ஏற்பாடாயிற்று. இரண்டாம் வட்ட மேசை மாநாட்டில காந்தி ஒருவர் மட்டுமே இந்திய விடுதலை உரிமையை வலியுறுத்தினார்; மற்ற உறுப்பினர்களிடையே வகுப்புவாரி பறறிய கேள் வியில் ஒருமித்த கருத்து ஏற்படவில்லை. இந்தியா வுக்குத் திரும்பிய காந்தியடிகள் மீண்டும் சட்டமறுப்பு இயக்கத்தைத் தொடங்கி நடத்த, இந்தியாவின புதிய அரசப்பேராளர் வில்லிங்டன் பிரபு அவரைச சிறைப்படுத்திக் காஙகிரசையும் அடக்கினார். ஒடுக்கப்பட்ட சாதியாருக்குத் தனித் தொகுதி அளித்து பிரிட்டானியத் தலைமை அமைச்சா 1932, ஆகசுட்டில் ஓரறிக்கையை வெளியிட, இந்துக் களிடையே அது பிளவை ஏற்படுத்துவதாகவும், ஒடுக் கப்பட்ட சாதியாரும் இந்துக்களே எனறும் கூறிக் காந்தியடிகள், அதை எதிர்த்துச் சாகும்வரை உண்ணாநோன்பிருக்க முடிவு செய்தார். கொந்தளிப் பிலாழ்ந்த நாட்டை அமைதிப்படுத்துவதற்காக ஒடுக்கப்பட்ட சாதியினரின் சார்பாளராகிய டாக்டர் அம்பேத்கர் 1932 செப்டம்பரில் காநதியடிகளுடன் செய்து கொண்ட பூனா ஒப்பந்தத்தின் வழியாக, ஒடுக்கப்பட்டோருக்குப் பொதுத் தேர்தல் தொகுதி களில் இடங்கள் ஒதுக்கப்படுவதற்கு ஒப்புக கொண டார். காந்தியடிகள் 1934-ஆம் ஆண்டு காங்கிரசி லிருந்து விலகினார். வட்டமேசை மாநாட்டின் மூன் றாம் கூட்டம் 1932-நவம்பர், திசம்பரில் காஙகிரசு கலந்து கொள்ளாமலே நடைபெற்றது. பிரிட்டானியப் பாராளுமன்றம் பல குறைபாடுகளையுடைய சைமன் குழுவின் பரிந்துரைகளை ஆதாரமாகக கொண்டு, இந்தியநடுவண் அரசாங்கத்தை அதிகாரக் குவிப்புடன் ஏற்படுத்தியும்; மாகாணப் பொறுபபாட்சியை ஏற்படுத் தியும், பெருமளவு அதிகாரமுடைய ஆளுநர்களை அமர்த்தியும், 1935-ஆம் ஆண்டு இந்திய அரசாங்கச் சட்டத்தை நிறைவேற்றியது. பா.கு.

**துணை நூல்கள்:**

Keith, A.B., A Constitutional History of India, 1600 -1935, Methuen, 1938

The Goverment of India Act, Govt of India Publication, 1935.

**சையது அகமது கான் (கி.பி. 1817-கி.பி. 1898)** அலிகார் முசுலீம் பல்கலைக் கழகம் தோன்றுவதற்குக் காரணமாயிருந்த கல்வியாளர். இவரது கல்வித் தொண்டுக்காக இவர் 'இந்தியாவின் பெரும் மூதறிஞர்' (The Grand Old Man of India) எனப் பெயர் பெற்றார். இசுலாமிய சமுதாய மக்களின் தலைவராகக் கி.பி 19-ஆம் நூற்றாண்டின் பிற்பகுதியில் போற்றப்பட்டவர். சையது அகமது கான் (Sayyid Ahmad Khan) கி.பி. 1817-ஆம் ஆண்டு தில்லியில் பிறந்தார். இவர் குடும்பம் இறை பக்தியிலும் கல்வியிலும் சிறந்து விளங்கியது. இவர் குடும்பத்தினர் மொகலாயர்களின் (Moguls) காலத்தில் பெரும் பதவிகளைப் பெற்றுப் பெருமையடைந்திருந்தனர். இவர் தந்தை வழிப் பாட்டனாரான சையது சவாது அலி கான் (Syed Jawad Ali Khan), இரண்டாம் ஆலம்கீர் (Alamgir II) காலத்தில் படைத்தளபதியாக இருந்தவர். இவரது தாய்வழிப் பாட்டனார் இரண்டாம் அக்பருக்கு (Akbar II) முதலமைச்சராக இருந்தவர்.

சையது அகமதுகானின் தந்தையின் பெயர், சையது முகமது தகீ (Syed Mohamed Taqi). இவர் சமயத்தின்மேல் மிகுந்த பற்றுக் கொண்டவராயிருந்தார். தம் தந்தையைப் போல் சையது அகமது கானும் சமயப் பற்றுடையவராக இருந்தார். சையது அகமது கான் முறையாகப் பள்ளி சென்று கற்றதில்லை. எனினும், இவருக்குக் கல்வி அறிவினை ஊட்டியவர் இவர் அன்னையார் ஆவார். சையது அகமது கானின் தந்தை கி.பி. 1836-இல் இறந்தார்.



சையதுஅகமது கான்

சையது அகமது கான், தம் தந்தை இறந்த மறு ஆண்டான கி.பி. 1837-இல் ஆங்கிலேய அரசின் நீதிமன்றத்தில் பணியாளராகச் சேர்ந்தார். தம் உழைப்பு, ஆர்வம், நேர்மை, திறமை ஆகியவற்றால் விரைவிலேயே துணை நீதிபதியாகப் (Sub Judge) பதவி உயர்வு பெற்றார். பின்னர்த் தனிப் படிப்பின் (Private Study) மூலம் தம் கல்வியறிவை மேம்படுத்திக் கொண்டார். தாமே மேற்கொண்ட தனிப்பட்ட ஆய்வின் அடிப்படையில் இவர் முதன் முதலில் கி.பி.1844-இல் 'உயர்ந்த மனிதர்களின் எச்சங்கள்' (The Traces of the Great) என்னும் நூலை உருது மொழியில் எழுதி வெளியிட்டார். அதில் தில்லி நகரின் அழிவு, அந்நகரில் வாழ்ந்த சான்றோர்களின் வரலாறு பற்றி எழுதியிருந்தார். பின்னர் இந்நூல் பிரெஞ்சு மொழியில் மொழி பெயர்க்கப்பட்டது.

கி.பி.1857-இல் நடந்த இந்தியச் சிப்பாய்க் கலகத்தின் (Indian Mutiny) போது, இங்கிலாந்தைச் சேர்ந்த ஆடவர், மகளிர், குழந்தைகள் ஆகியோரின் உயிரைக் காப்பாற்றுவதற்குச் சையது அகமதுகான் காரணமாயிருந்தார். இந்தியச் சிப்பாய்க் கலக நிகழ்ச்சிகள் சையது அகமது கானின் நெஞ்சில் ஆழமாகப் பதிந்து விட்டன. அதற்கான காரணங்களை ஆராய்வதில் ஈடுபட்ட சையது அகமது கான், கி.பி.1858-இல் 'இந்தியக் கலகத்தின் காரணங்கள்' (The Causes of Indian Revolt) என்னும் நூலை உருது மொழியில் எழுதினார். இந்நூல் பின்னர் ஆங்கிலத்தில் மொழி பெயர்க்கப்பட்டது. இந்நூலில் அனைத்துச் சமுதாய, அரசியல் சிக்கல்களுக்கும் கல்வியால் மட்டுமே தீர்வு காண முடியும் என எழுதினார்.

சையது அகமது கான் கி.பி. 1869-இல் இங்கிலாந்து சென்று அங்குள்ள உயர்கல்வி முறைகளைக் கண்டறிந்தார். இந்தியாவுக்கு கி.பி. 1870-இல் திரும்பிய சையது அகமது கான் மேலைநாட்டுக் கல்வி முறைகளுடன் காசிபூரில் (Ghazipur) கல்லூரி ஒன்றை ஏற்படுத்தினார். இக்கல்லூரியின் வெற்றியால் அலிகாரில் (Aligarh) கி.பி.1875-இல் 'ஆங்கிலோ-கீழ்த்திசைக் கல்லூரி' (Anglo Oriental College) ஒன்றை நிறுவினார். இக்கல்லூரியே பின்னர் 1920-இல் அலிகார் முசுலீம் பல்கலைக்கழகமாக (Aligarh Muslim University) வளர்ந்தது.

சையது அகமது கான் கி.பி.1876-இல் அரசுப் பணியிலிருந்து ஓய்வு பெற்றார். பின்னர் இந்தியச் சட்டப்பேரவையில் (India's Legislative Council) சில காலம் இருந்தார். அலிகாரில் கி.பி. 1898-ஆம் ஆண்டு இறந்தார். சையது அகமது கான், தாம் இறக்கும் காலம் வரையில், முகமதியர் கல்வி

மாநாடு (Mohammedean Educational Confnrence) எனனும் மாநாட்டை ஆண்டுதோறும இந்தியாவின் முககிய நகரஙகளில கூட்டி, முசுலிம மக்கள புதிய கலவி கற்கவேண்டிய தேவையையும், அதனால விளைநதிடும் நனமைகளையும் வலியுறுத்திப பேசி வந்தார். எஸ்.த.

**துணைநூல**

Rushbrook Williams, L.F. (Ed.), Great Men of India, Gian Publishing House, Delhi, 1985.

***சையது சகோதரர்கள்***: இநதிய நாட்டு வரலாற்றில் மன்னரைப் படைப்போா (King Makers) எனப் பெயா பெற்ற சையது குல சகோ தரர்களான அபதுலலாகான் (Abdullah Khan), உசேன் அலி (Hussain Ali) ஆகிய இருவரும் ஔரங் கசீபு படையில சிறந்த தளபதிகளாகத் திகழந்தவர் கள பிறகு அப்துலலா கான அலகாபாதின ஆளுந ராகவும், உசேன அலி பாடனாவின் ஆளுநராகவும் நியமிககப்பட்டார்கள். இவர்கள இருவரும சியா (Shia) பிரிவைச சார்ந்த இநதிய இசுலாமியராவர். எனவே, இவர்களைச சுன்னி இசுலாமியப் பிரிவினர் வெறுததனர் ஔரஙகசீபு இறநத பிறகு வாரிசுரி மைப் போரில் வெற்றிபெற்ற பகதூர்சா, சிகநதாசா விற்குப் பிறகு, பருககியார் (Farrukshiyar-1713-1720) என்பவரைச் சையது சகோதரர்கள (Sayyad Brothers) அரசராக்கினர். பருககியாரின காலததில அப்துல்லா கான, வசீராகவும் (Wazir), உசேன அலி தலைமைத் தளபதியாகவும் (Commander-in-Chief) நியமனம் பெற்றனர் சையது சகோரர்கள், பேரரசின நிரு வாகததில் பெரும் பங்குகொணடு அனைதது அதி காரஙகளையும் கைப்பற்றி, அரசரைக் கைப்பாவை யாக்கினர் மேலும, இவாகள் சிசியா (Jizya), யாத திரிகர் வரி (Pligrim Tax) ஆகியவற்றை நீககினா. சையது சகோதரர்களின பிடியில் இருந்து தம்மை விடுவித்துக்கொள்ள பருக்சியார், பல வழிகளில் முயனறார். அவர்களுககெதிராக மிா சும்லா (Mir Jumla) என்ற துரானியப் பிரபு பருக்சியாருக்கு உத வினார். சையது சகோதரர்களுக்கு எதிரானவா களை உயர்நத பதவியில் அமர்ததினார். அபதுலலா கான் தொழுதுகொணடிருக்கும்போது அவரைக் கொலவதற்கான முயற்சிகள கி.பி. 1718 ஆகசுட்டில தோற்றன. தம் சகோதரர் அப்துலலாகானுக்கு எதி ராகப் பேரரசர் பல நடவடிக்கைகளில் ஈடுபட்டிருப்ப தைக் கேளவியுற்று உசேன அலி மராட்டியக் கூலிப் படையொன்றுடன தக்காணத்தில இருநது திலலி திரும்பினார். சையது சகோதரர்கள் பருககியாரின சதியால் எரிச்சலுற்று அவரைப் பதவியிலிருநது விலக்கி விட்டு, அரியணையிலிருந்து கீழே இழுத்து, கிரீடத தையும் காலணிகளையும் கழற்றிவிட்டுக கடுமையாக அடித்துபபட்டினி போட்டுக குருடாக்கி, நஞ்சிட்டுக கழுததை நெறித்து கி பி. 1719-இல கொனறனர்.

பருககியாருக்குப்பின கி.பி 1719-ஆம் ஆணடு இரபி உத தாராசாத்து (Rafi-Ud-Darajat) என்பவ ரைச் சையது சகோதரர்கள பேரரசராககினா. இருபது வயதான அப்பேரரசரின பெயரில சையது சகோதரர்கள் நிருவாகததை நடததி வநதனா. திறமையற்ற அவரையும் சில திங்களுககுள பதவி நீக்கினர்.

இரபி உத தாராசாத்துக்குபபின இரபி-உத் தௌலா (Rafi-Uddaula or Shahjahan II) சையது சகோதரர்களால அரசராக்கப்பட்டாா. அவரையும பொம்மை அரசராக்கி அவாகளே ஆட்சியை நடததி னர். நானகு மாத ஆட்சிககுப்பின் அவர் இறநது விட்டார்.

பின்னர்ச் சையது சகோதரர்கள, முகமது சாவை (Muhamed Shah) கி.பி. 1719-இல் அரசராககினா. இவர் காலததில் மராட்டியா, ஐதராபாது நிசாம ஆகியவர்களின செலவாக்கு உயாநதிருந்தது. முகமது சா பதவியேறறதும சையது சகோதராகள தமமைக் கொடுமை படுத்துவதாகவும், பேரரசின் கருவூலததை கவாநதுவிட்டதாகவும், அவர்களை ஒழிக்கத் தமககு உதவும்படியும் நிசாமிற்குப கடிதம் ஒனறை எழுதி னார். அப்துலலா கானைத் திலலியில விட்டுவிட்டு உசேன அலி படையுடன் நிசாமைக சநதிககத தாமே புறப்பட்டார். பேரரசரும், அவர் தாயாரும ஐதர் பெகு (Haidar Beg) எனற வீரனைப் பதேப்பூர சிகரியில படை முகாமில உளள உசேன அலியை மனு கொடுப்பதுபோல அருகில சென்று கொலை செயய ஏறபாடு செய்திருநதனர். அவனும் அவ்வாறே, ஒரு மனுவை அவரிடம் கொடுப்பதுபோல அருகில செனறு உசேன அலியை 1720-ஆம் ஆணடு கொனறு விட்டான். முகமது சா, சையது சகோதராகளுள் ஒருவரான உசேன அலியைக் கொனறுவிட்டதை எணணி மிகவும மகிழ்நதார். பேரரசர், ஐதர்பெகுக கும் மற்றச் சதியாளர்களுக்கும பெரும் பரிசுகள தந்து கௌரவிததார்.

பேரரசர் முகமது சா, சையது அப்துல்லா கானு டன் போரிட இனறியமையாமை ஏற்படும என்று எண்ணி விரைவில ஒரு பெரும்படையை உருவாககி னார். தில்லிக்கருகில கி.பி. 1720-ஆம ஆணடு சையது படைக்கும், பேரரசரின படைக்கும் மோதல் ஏறபட்ட தில பேரரசரின் படை வெறறி பெறறது. அபதுல்லா கான் கைது செய்யப்பட்டுச் சிறையில அடைககப்பட்

டார். இரண்டு ஆண்டுகளுக்குப்பின் அதாவது கி.பி. 1722-இல் நஞ்சிடப்பட்டுக கொலை செய்யப்பட்டார். இவவாறாக இநதிய வரலாற்றில் மன்னனைப் படைப்போர் எனப் பெயர் பெற்ற சையது சகோதரர் களைப்பேரரசர் முகமது சா, ஐதாரபாது நிசாமின் உதவி கொணடு முறியடித்தார். டி கை.

**சையது முகைதீன் கவிராயரின்** மூதாதையர் அரபு நாட்டவர் ஆவர்;கோட்டாற்றில்குடியேறித் திருநெல்வேலி, பாளையங்கோட்டை, மேலப்பாளையம் பகுதிகளில வாழ்ந்து தமிழ்ககவிகள் பல இயற்றினர். நபிகள் நாயகம் காலத்தில் வாழ்ந்த கஃப்புப் புலவர் வசை பாடுவதில் வல்லவராகத் திகழ்ந்தார்; நபி பெருமான்மீது ‘பானத் சூஆத்’ எனத தொடங்கும் அறுபத்துமூன்று இசைப்பாக்களை இயற்றி நபியின் ஆசியைப் பெற்றார்.அவாதம் வழித தோனறல்களுள்ஒருவரே சையது முகைதீன் கவிராயர் ஆவார்.

வாசனைப் பொருள் வாணிகம் தொடர்பாக அரபு நாட்டிலிருந்து இந்தியாவிற்கு வந்த கஃப்புப் புலவரின் குடும்பத்தினர் நாகர்கோயிலில உளள கோட்டாற்றுப் பகுதியில் குடியேறினர். இக்குடும்பத்தைச் சேர்ந்த முகம்மது உசைன புலவரின மகனாரே சையது முகைதீன் கவிராயர். கவிராயர் அரபு மொழியும், மலையாளமும் கற்ற தமிழ்ப் புலவராவார். இவர் சேரநாடு நீங்கிப் பாண்டி நாடு வநதாா.

திருநெல்வேலி நகரிலுள்ள செங்குந்தர் தெரு மக்கள் இக்கவிராயரின் புலமைத்திறத்தைச் சோதிகக விரும்பி மஞ்சணத்தி மரத்தைத் தம பாவால் பாடிப் பிளக்கப் பணிததனர் எனறும், இவரும் அவவாறு செய்து தம் அருட்டிறத்தைப் புலப்படுததினார் எனறும் கூறுகினறனர். பாளையஙகோட்டைச் சிறைச்சாலைக் கைதிக்காகத் தம்மைப் பணயம் வைத்து, ஆட்சியாளர்முன விருத்தப்பாப் பாடித் தம்மை விடுவித்துககொணடார்.

மேலப்பாளையத்தில் இவருக்குத் திருமணம் நிகழ்நதது. இஙகுத்தான் இவா முகைதீன் ஆணடவர் பிள்ளைத்தமிழ், திருப்புகழ் ஆகியன பாடினார். நபிகள்மீது 38 பாக்களாலான ‘மாணிக்கமாலை’ எனும் நூலை இயற்றினார். இவரை அடக்கம் செய்த இடம் மேலப்பாளையம் பெரிய குத்பா பளளியில் உளளது. இவர்தம் மக்கள் அறுவரும் அரும்பெரும் புலவர்களாகவே விளங்கினர். நபி நாயகத்துடனிருநத கஃப்புப் புலவரின வழித்தோனறலாக அரபு நாட்டிலிருந்து தமிழகம் வந்து, திருநெல்வேலியில் இசுலாமியப் புலவராக விளங்கித் தமிழ் இலக்கியத்திற்கு இசுலாமிய சமயச் சார்பான சிற்றிலககியங்கள் தந்தார் இக் கவிராயர். பி.தெ.

**சைரசு**: இவர் பாரசீக மன்னர்; அக்கேமினித்து மரபைச் சேர்நதவர்; பாரசீகப் பேரரசை உருவாககிய இவர் இரணடாம் சைரசு எனறும் சொல்லப்படுகின்றார். இவர் கி.மு. 559 முதல் 530-ஆம் ஆண்டு வரை ஆட்சிபுரிந்தார். இவர் தந்தையார் முதலாம் கேம்பீசசு ஆவார். இவர் தாயார் மந்தனே ஆவார். வரலாற்றின் தந்தை என்று கருதப்படுகினற எரடோட்டசு எனபவா இவரது மரபுபற்றி நன்கு எழுதியுளளார். அதனோடு பழைய ஏறபாட்டிலும, கிரேக்க வரலாறறாசிரியர்களின் குறிப்புகளிலும் இவரைப் பற்றிய செய்திகள் உளளன.

சைரசு கி.மு. 559-ஆம் ஆண்டில் ஒன்பதாம் பகுதியின் மன்னராகப் பொறுபபேற்றார். இவர் தம்மை எதிர்த்த அசுடாயசசு எனபவரை கி.மு. 550-ஆம் ஆணடில் தோற்கடித்து அவரது பகுதியான எகபடனாவைப் பிடித்துக் கொணடார். தைகிரிசு ஆற்றுக்கு கிழக்கே உள்ள முரட்டு இனத்தவர்களை அடக்கினார்; பின்னர், மாசிடோனியாப் பக்கம் திரும்பி அதன் மன்னரையும் கொன்றார், மெடியா, சார்டிசு ஆகிய பகுதிகளையும் வென்றாா. இலிடியாவின் மன்னர் குரோச்சு எனபவரும் சைரசுடன நடைபெற்ற போரில கொல்லப்பட்டார். அதன பினனர் மகாசைரசு மேறகு ஆசியாவின் தன்னிகரில்லாத தலைரானார். சிறிய ஆசியாவின மேற்குப் பகுதியும், பிற பகுதிகளும் இவரது படையினரால் பேரரசின் கீழ்க் கொணடு வரப்பட்டன. அவர்களது பேராற்றலாலும், போராற்றலாலும் அயோனியர்கள, கரியர்கள, இலிசியர்கள் போன்றவர்கள் அடக்கப்பட்டார்கள. இலிடியாவில (Lydia) ஏற்பட்ட கலககமும் ஒடுக்கப்பட்டது. சௌபன் என்பாரின கூறறுப்படி பெரும்பிரிசசியா, கப்படோசியா ஆகியனவும் சைரசால் வெல்லப்பட்டன என்பது புலனாகிறது. இவர் அரேபியர்களையும் தம் ஆதிககத்தினகீழ்க கொணடு வநதார்.

மாமன்னர் சைரசு கி.மு. 540-ஆம் ஆண்டில பாபிலோனியாவைத் தாக்கிப் பல மாநிலங்களைக் கைப்பற்றினார். அந்த ஆண்டு அக்டோபர் திஙகளில் இவர்தம் பெருமைமிகு தளபதியான கோபர்யாசு எனபவர் எவ்விதப் போரும் புரியாமல் எதிர்ப்பு ஏதுமில்லாமல் பாபிலோனியாவில் உலா வந்தார்.

நமீபானிடசு என்பாரின் தீங்கான ஆட்சியிலிருந்து மக்களைச் சைரசு விடுவித்தார் என்பதை இங்கு நோக்குதல் வேண்டும். இவரே தம்முடைய நூலில் அதைக் குறிப்பிட்டுள்ளார். இவா ‘மக்களை விடுவித்தவர்’ எனற பெயரையும் பெற்றுளளார். பாபிலோனியாவில் தம் அதிகாரத்தையும் ஆட்சியினையும்

நிலைநாட்டியதோடு அங்குத் தம் ஆளுநர் ஒருவரையும் பதவியில் அமர்த்தினார். முன்னரே, அங்குப் பணிபுரிந்து வந்த அலுவலர்கள் பலரையும் அவரவர்களின் பணிகளில் இருக்கும்படி செய்தார். இவர்பாபிலோனியாவின் சமயத்திற்கு மதிப்பும் மரியாதையும் அளித்தார். இவர் பல பொதுநலப் பணிகளில் ஈடுபாடு காட்டினார். அங்கிருந்த பல கோவில்களைப் புதுப்பித்தார். அங்கிருந்த பல சிலைகளைப் போற்றிப் பாதுகாக்க ஏற்பாடு செய்தார். இவர் 'அசரா', 'சூசா' போன்ற பகுதிகளின் தெய்வச் சிலைகளைப் பாதுகாப்பாகத் திருப்பி அனுப்பினார்; யூதர்களைப் பாலத்தீனத்திற்குப் பாதுகாப்பாக அனுப்ப ஏற்பாடு செய்தார். இவற்றைத் தவிர இவர் செய்த மிக முக்கிய பணி செருசலத்தில் அமைந்திருந்த கோவிலைப் புதுப்பித்தமையேயாகும்.

ஈரானின் வடக்கு, கிழக்குப் பகுதிகளையும் மாமன்னர் சைரசு வென்றார் என்பது நனகு புலனாகிறது. இவர் கீழைநாடுகள் மீது படையெடுத்த போது கொல்லப்பட்டார் என்பது வரலாற்றாசிரியர்களின் கருத்தாகும். அது கி.மு. 530-இல் நடைபெற்றதாகும்.

சைரசு மாமன்னர் ஒரு சிறந்த நிருவாகி, ஒரு மாவீரர், பேராற்றல் மிக்கவர். இவர் ஒரு பேரரசை உருவாக்கினார். அது சிந்து, சாக்சாரட்சுப் பகுதிகளை உள்ளடக்கி ஈசியன் வரையிலும், எகிப்தின் எல்லை வரையிலும் பரவியிருந்தது. நா.செ.

**சைரசு, இளையவர்:** இவர் பாரசீக மன்னர் இரண்டாம் தேரியசு (Darius) என்பவரின் மகனாவார். இவர்தம் தந்தை கி.மு. 423-ஆம் ஆண்டில் பாரசீக மன்னராகப் பொறுப்பேற்றார். சைரசு (Cyrus) அதன் பின்னர்ப் பிறந்தார் என்று வரலாற்றுச் சான்றுகள் பகர்கின்றன. இவர்தம் தாயார் பேரிசாடிசு (Parysatis) என்பவர். இரண்டாம் தேரியசு தனது அலசிபியாடிசு (Alcibiades) வெற்றிகுப்பின் ஏதன்சு மீதான போரைத் தொடர்ந்து நடத்தினார். அதுமட்டுமன்றி, அவர் இசுபார்ட்டாவின் (Sparta) மக்களுக்குத் தம் ஆதரவினை நல்கினார். அதன்பின் சைரசின் தாயார் அவருக்கு இலிடியாவின் (Lydia) ஆளுநர் பதவியினை அளிக்கும்படி வேண்டினார். இலியாவுடன் பாரசீகமும் (Persia) கப்படோசியாவும் (Capadochia) அப்போது இணைந்திருந்து பெரும்பகுதியாக விளங்கியது. அவர் சிறிய ஆசியாவில் (Asia Minor) பாரசீகப் படைக்குத் தளபதியாகப் பொறுப்பேற்று நடாத்திச் சென்றார். அப்போது இசுபார்ட்டாவின் தளபதியான இலைசாண்டர் (Lysander) என்பவர் சைரசின் நன்மதிப்பைப் பெற்று விளங்கி வந்தார்.

இலைசாண்டர் என்பவர் கி.மு. 406-ஆம் ஆண்டில் அர்சநுசேங்கு (Arsanusang) என்ற இடத்தில் ஏதன்சை முறியடித்தார். அதன் விளைவாக அவர் இசுபார்ட்டாவில்பெரும்பதவியில்அமர்த்தப்பட்டார். அப்பகுதியின் படைத்தளபதியாகவும் அவர் விளங்கினார். சைரசின் தந்தையார் கி.மு. 405-ஆம் ஆண்டில் மரணப்படுக்கையில் இருந்தபோது, அவர் இலைசாண்டருக்குச் சில வருவாய் தரும் பகுதிகளையும் அளித்தார். அப்போது தான் இலைசாண்டர் ஏகிசுபொடாமி (Agispotami) என்ற போரில் வெற்றி பெற்றார்.

இச்சூழ்நிலையில் ஆட்சியுரிமை குறித்துச் சில சதித் திட்டங்கள் நடைபெற்றன. ஆட்சியைப்பிடிக்கச் சைரசு பெருமுயற்சி செய்தார். சைரசுக்கும் திசா பெர்னசு (Tissa Pharnas) என்பவருக்கும் சண்டை ஏற்பட்டது. அதற்குக் காரணம் அயோனிய (Ionia) நகரங்களைக் கைப்பற்ற வேண்டும் என்பதே ஆகும். கிரேக்கக் கூலிப்படைக்கு நன்கு பயிற்சி கொடுத்துக் வைத்துக்கொள்ளச்சைரசுக்கு இசுபார்ட்டாவின் உதவி நன்கு கிட்டியது. அதுமட்டுமன்றி அவருக்கு உதவி செய்யும் முகத்தான் கிளியர்கசு (Cleorchus) என்பவரும், மேலோன் (Melone) என்பவரும், திரேசு (Thrace), தெசாலே (Thessaly) ஆகிய பகுதிகளில் முறையே பெரும்படைகளையும் உருவாக்கினார்.

கி.மு. 401-ஆம் ஆண்டில் சைரசு, ஆர்ட்டா செர்சசு (Arta-Serxes) என்பவர் மீது படையெடுத்தார். அப்படையெடுப்பு, சார்டிசு (Sardis) என்ற இடத்திலிருந்து தொடங்கப்பட்டது என்று வரலாற்றாசிரியர்களகுறிப்பிட்டுள்ளனர். அவருடன்மேலோன், கிளியர்கசு ஆகிய தளபதிகள் இணைந்து தாக்குதலுக்கு உதவி புரிந்தார்கள். அவருக்கும் ஆர்ட்டா செர்சசு என்பவருக்கும் கடுமையான மோதல் ஏற்பட்டது. அவர் அப்போரில் தமக்கு எவ்வித எதிர்ப்பும் இன்றிப் பாபிலோனியா (Bablionia) வரை சென்றார். அதன் பின் குனாக்சா (Cunaxa) என்ற இடத்தில் நடைபெற்ற திசாபெர்னசு உடனான போரில் சைரசு கொல்லப்பட்டார். சைரசின் படைத் தளபதிகள் நயவஞ்சகமாகத் திசாபெர்னசால் பிடிக்கப்பட்டனர். எனவே, கிரேக்கப் படைகள் கருங்கடல் நோக்கிச் சென்றன.

இளைய சைரசு ஒரு மாவீரர்; இவர் வலிவும் பொலிவும் பெற்றவர்; சிறந்த மனஉறுதி படைத்தவர்; இவரது வீரத்தினைக் கிரேக்கப்படைகள் வாயாரப் புகழ்ந்துள்ளன. மேலும், இவர் திறமையாளர். செனபசு (Cenophus) என்பவர் இவரைப் பற்றி சிறப்பாக எழுதியுள்ளார். தெ.பா

*சைரனயிக்கா* ஆப்பிரிக்காவின் வடக்குக் கடற்கரையில் ஐக்கிய இலிபியாவின் மாநிலமாக அமைந்துள்ளது சைரனயிக்கா (Cyrenaica) 8,55,370 ச.கி.மீ. பரப்பளவு கொண்டது. மக்கள்தொகை ஏறக்குறைய 4,00,000 ஆகும்.

**இயற்கை அமைப்புகள்:** சைரனயிக்கா கடற்கரைப் பிரதேசமாக அமைந்துள்ளது. ஏறக்குறைய 1200 அடி உயரமுள்ள மார்மரிக்கன் மலைகள் (Marmarican Hills) கிழக்குத் திசையில் உள்ளன. இது கிழக்கிலும் வடகிழக்கிலும் பாலைவனமாகவும், மிகவும் தாழ்வான நிலப் பகுதியாகவும் உள்ளது; தென் திசையில் பாலைவனமும் சலு (Jalu) அல்குப்ரா (Al Kufrah) மாவட்டங்கள் அடங்கிய மணற் பிரதேசமும் ஆகும். சில பகுதிகள் காடுகளாகவும் உள்ளன. இங்கு ஆண்டுக்கு 16-இலிருந்து 20 அங்குல மழையே பொழிகிறது. ஏழாண்டுகளுக்கு ஒருமுறை பஞ்சம் ஏற்பட்டதாக வரலாறு கூறுகிறது.

**வரலாறு:** சைரனயிக்காவின் வடபகுதி மாவட்டம் யூகபெரிடிசு (Euhesperides), பார்சு (Barce), சைரீனே (Cyrene), அப்போலோனியா (Appollonia), அர்சினோ (Arsinoe) ஆகிய நகரங்களைக் கொண்டு பெண்டோபோலிசு (Pentopolis) எனப்படுகிறது. இந் நகரங்கள கிரேக்கர்களால் அமைக்கப்பட்டன. இவைகளில் மிகவும் தொன்மையானது சைரினி நகரமாகும். இது கி.மு. 630-இல் அமைக்கப்பட்டது. இப்போது பார்சு தவிர மற்ற நகரங்கள் அல்சலால் அல் அக்தர் எனப்படுகிறது.

கி.மு. 2-ஆம் நூற்றாண்டில் தாலமிகள் (Ptolemies) சைரனயிக்காவை ஆண்ட காலத்தில் இங்குக் கிரேக்கத்துக்கும் கார்தேசுக்குமிடையில வணிகப் போட்டி இருந்தது. சைரனயிக்காவையும் மற்ற வட ஆப்பிரிக்கப் பகுதிகளையும் தாலமிகளிடமிருந்து கி.மு. 67-இல் உரோமப் பேரரசு கைப்பற்றியது. சைரினி, பார்சு நகரஙகள் கி.பி.115-116-இல் ஏற்பட்ட யூதர்களின் கலகத்தினால் சேதப்படுத்தப்பட்டன. தாலமிசு (Ptolemis) நகரம் கி.பி. 3-ஆம் நூற்றாண டில் சைரனயிககாவின தலைநகரமாகியது. அப்போலோனியா கி.பி. 6-ஆம் நூற்றாண்டில் ஆளுநரின் இருப்பிடமாகியது. அரேபியர்கள் சைரனயிக்காவை கி.பி. 7-ஆம் நூற்றாண்டில் கைப்பற்றினர். பிறகு இது உதுமானியப் பேரரசின் வசமாகியது. இரணடாம் முகமது திரிபோலியின் மீதும் சைரனயிக்காவின் மீதும் நேரடி ஆட்சியை ஏற்படுத்தினார். ஆனால், கி.பி.19-ஆம் நூற்றாண்டின் மத்தியில் துருக்கியர்களின் பிடிதளர்நததால சைரனயிக்காவை முகம்மது பின் அலி தம் செனுசிக்குத் தலைநகராகக் கொண்டார்.

முதலாம் உலகப்போருக்குப் பிறகு சைரனயிக்காவின கடற்கரை நகரங்களான பெங்காசி, தர்னா, தோப்ரக்கு ஆகியவற்றை இத்தாலியர்கள் கைப்பறறினார்கள். செனுசி (Senusi) முசுலீம்களை எதிர்த்து 1931-இல் நடந்த இத்தாலியப் படையெடுப்பு வெற்றியாக அமைந்ததால் அவர்களுடைய கிளர்சசித் தலைவர் உமர் அல் முக்தரைத் தூக்கிலிட்டது. இத்தாலியக் குடியேற்ற நாட்டு ஆதிக்கம் ஏற்படுத்தியபின், 1934-இல் நடந்த போரின் காரணமாகச் சைரனயிக்காவின் மக்கள்தொகை பாதியாகக் குறைந்தது.

இரண்டாம் உலகப்போரினபோது சைரனயிக்கா முதலில் ஆங்கிலேயர்களுக்கும் இத்தாலியாகளுக்கும் போர்க்களமாகவும், இரண்டாவதாக ஆங்கிலேயர்களுக்கும், இத்தாலி, செருமனி கூட்டுப்படைகளுக்கும் போர்க்களமாகவும் ஆயிற்று. இவ்வாறு சைரனயிக்கா படைதாக்குதலுக்கு உட்பட்டது. சைரனயிக்காவில் 1942-இல் இத்தாலி ஆதிக்கம் முடிந்து ஆஙகிலேயர்கள் குடியேறியபோது சைரனயிக்காவின் மக்கள் தொகையில் 93 விழுக்காடு அரபு மொழி பேசும் முசுலிம்களே இருந்தனா.

முகமது இதிரிசுக்கு (Mohammed Idris)1946-இல் அமீர் பட்டம் கொடுககப்பட்டாலும், 1951 வரை அவரை ஐக்கிய இலிபியாவின மன்னராகக் கருத வில்லை. 20 ஆணடு ஒப்பந்தத்தின் விளைவாக ஆஙகிலேய அரசாஙகம், சைரனயிககாவில் தன் பாதுகாப்பு அமைப்புகளை ஏற்படுத்த அனுமதிக்கப்பட்டது.

வேளாண்மையும், பிராணிகள் வளாப்பும் சைரனயிக்கா மக்களின் தொழில்களாகும் பார்லி, பேரீச்சை, சாமை போன்றவை தெற்கு மாவட்டங்களின விளை பொருள்களாகும். சிறுதொழிற் பொருளகள் எகிப்து, கிரீசு, மால்ட்டா ஆகிய நாடுகளுக்கு அனுப்பப்படுகின்றன.

எல்லா நகரங்களும் துனிசு, அல்சூர்சு, எகிப்து ஆகியவற்றுடன் சாலை மூலம் இணைக்கப்பட்டுள ளன. பெங்காஸியிலும் தோப்ரககிலும் விமானத் தளங்கள் உள்ளன. தி.கை.

**துணை நூல்:**

Ansell, M.O., and Al-Arif. I.M. The Libyan Revolution London, 1972.

*சைரீனே* இலிபியாவிலுள்ள தொன்மையான கிரேக்கக் குடியிருப்பு நகரமாகும். சைரீனே(Cyrene) நகரம் கி.மு. 631-இல் ஈசியப் பகுதியிலிருநது குடியேறியவர்களால் நிருமாணிக்கப்பட்டது. இவர்களின் தலைவரான பட்டுசு (Battus)என்பவர் இதன முதல்

அரசரானார். அவர் பட்டியட்சு (Battiads) மரபைத் தோற்றுவித்தார். இந்நகரை அவருக்குப் பினவந்த அரசர்கள கி மு. 440 முடிய ஆட்சி செய்தனா. அவர் களது ஆட்சியில் இந்நகரம் பொருளாதார வளர்சசி யும் சிறப்பும் அடைந்தது. பாரசீகப் படையெடுப்பால கி.மு. 525-இல் சிறிது காலம் இந்நகரம் பாரசீகர் களின் ஆதிககத்தை ஏறறுக் கொணடது. இலககியச் சிறப்பு வாயநத கிரேகக உரோமானியர் காலததில இந்நகரம் கலைகளின நகரமாக விளஙகியது. மருத் துவப்பளளியினாலும், புவியியலறிஞர் எரடோசுதினசு (Eratosthenes), தத்துவ அறிஞர் அரிசுட்டிப்பசு (Aristippus) போன்றோர் தோன்றியதாலும் இவவூா புகழ் பெறறது உரோமானியர்கள இந்நகரைத் தங களது ஆதிககததின கீழ கி மு. 67-இல கொணடு வந்து கிரீட்டுடன இணைத்தனா. இவாகளுக்கு எதிராக, இப்பகுதி யூதர்கள கலகம செய்தனா, அதனால் உரோ மானியர்கள ஆதிக்கம சிறிதுசிறிதாக அழிந்தது. அராபியாகள் இதனை கி.பி. 642-இல கைப்பறறி அழித்தனா.



சைரினே அப்பாலோ கோயில்

இந்நகரம் இன்று மார்சா சூசாவிலிருநது (Marsa Susah) 13 கி.மீ. தொலைவில் உள்ளது இப்பகுதியில் 3 இடங்களில் அகழாய்வுகள் மேற்கொள்ளப்பட்டன. அகழாய்வுகளில் பல கோயிலகளின் அழிபாடுகள கணடுபிடிக்கப்பட்டன. அவறறுள் குறிப்பிடத்தககது அப்பாலோ கோயிலாகும்: மேலும் இஙகுத் தோரியக் கோயில்களும் கி.பி. 2-ஆம் நூறறாணடைச் சார்ந்த அழகான வீடு ஒனறும் கணடுபிடிக்கப்பட்டன.

சு இரா.

**சைல்டு, வேர் கோர்டான்** வரலாற்றுக் காலத்திற்கு முற்பட்ட கால வரலாறறை (Pre-history) ஆய்வு செய்து புகழ்பெற்ற தொல்லியல் அறிஞர். ஐரோப்பியர் தொல்லியல், வரலாறறுககு முறபட்ட கால வரலாறு ஆகியவற்றைப் பல சிறப்பு மிக்க நூல்களின் மூலம் உலகிற்கு அறிவித்தவா. சைலடு, வேர் கோர்டான் (Childe, vere Gordon) ஆசுத்திரேலியாவில நியூசௌத்வேல்சு மாநிலத்தில் உள்ள சிட்னியில் கி பி 1892-ஆம ஆணடு பிறந்தார். இவர் தந்தை மதபோதகராக விளஙகினார். சைலடு தம் பள்ளிக் கலவியை இங்கிலாந்து திருச்சபை இலக் கணப் பள்ளியிலும், மேறபடிப்பைச் சிட்னிப் பலகலைக் கழத்திலும் படிதது முடித்தார். ஆராய்ச்சிப் பட்டத் திற்காக இவருககு ஆககுபோர்டு பலகலைககழகம் உதவிதொகை வழங்கியது. இவருடைய ஆயவு 'கிரீசின வரலாற்றுக்கு முற்பட்டகால வரலாறறில் இநதோ ஐரோப்பியக் கூறுபாடுகள' என்ற தலைப் பில அமைந்தது.



வேர் கோர்டான், சைல்டு

பின்னர் இவர் ஆசுத்திரேலியாவிற்குச சென்று அரசியலில் ஈடுபட்டார். இவருககு 1921-இல் குவின சுலாந்துப பலகலைககழகம் பணி அளிக்க முன் வநதது. அதனைச் சைலடு ஏற்றுப் பணியில சேரு வதறகு முனபே இவர் மார்க்சிய தத்துவக் கொள்கையை உடையவர் எனக் கருதி நியமனம் மறுககப்பட்டது. ஆறு மாதஙகளுக்குபபின் சைல்டு ஐரோப்பாவிறகுச் செனறார். ஐரோப்பாவில பல் வேறு நாடுகளுககுச் செனற பின் இறுதியில இலணட னில் குடியேறினார்.

சைல்டு 1927-ஆம் ஆண்டு ஐரோப்பிய நாகரி கததின விடியல (The Dawn of European Civilization) என்ற நூலை வெளியிட்டார். எடின்பாகு பல் கலைக் கழகத்தில் வரலாற்றுக்கு முறபட்ட தொல

வியல் துறைப் பேராசிரியராக இவர் நியமனம் பெற்றார் இசுகாட்லாந்து (Scotland) அயாலாந்துப் பகுதிகளில் இவர் பல அகழாய்வுகளை மேற் கொண்டார் இவரது அகழாய்வுகளுள் குறிப்பிடத் தக்கவை ஆர்கனிப் (orkney) பகுதியில் உள்ள சாக்ரா பிராய (Skara Brae) என்ற இடத்தில் 1935,1940,1946 ஆகிய ஆண்டுகளில் மேற்கொண்ட அகழாய்வுகளாகும். இது புதியகற்காலப் பகுதி யாகும். ஆர்வர்டு பலகலைக் கழகம் இவருக்குச் சிறப்புப் பட்டம் வழங்கியது. பென்சில்வேனியாப் பல்கலைக் கழகத்தில் முனைவர் பட்டம் 1937-இல் இவருக்கு வழங்கப்பட்டது. இவர் இலண்டன் தொல் வியல் நிறுவனத்தின் இயக்குநராக 1945-ஆம் ஆண்டு நியமிக்கப்பட்டார்.

இவர் 1957 வரை இங்கிலாந்தில் இருந்தார். பின்னர் ஆசுத்திரேலியா சென்று அங்கு அவ் வாண்டே உயிர் நீத்தார். இவர் தம் ஆய்வுகளில் மார்க்சிய கோட்பாட்டைப் புகுத்தி வெற்றி கண்டார். மனிதனின் வரலாற்றை இக்கோட்பாட்டின் மூலமே தெளிவாக அறிதல் இயலும் என இவர் கருதினார். கருத்துகளைக் குறைநிறைகளின் அடிப்படையில் ஆய்வதே சிறந்தது என இவர் கூறினார். இவருடைய வெளியீடுகளில் குறிப்பிடத் தக்கவை வரலாற்றில் நிகழ்ந்ததென்ன (What happened in History?), ஐரோப்பிய நாகரிகத்தின் விடியல் (The Dawn of European Civiliztaion), இசுகாட்லாந்தின் வரலாற்றுக்கு முற்பட்ட காலம் (The Pre-history of Scotland) ஐரோப்பியச் சமூகத்தின் வரலாற்றுக்கு முற்பட்ட காலம் (The Pre-history of European Society) போன்றவை ஆகும். சு.இரா.

**சைலேந்திரர்**: மலாயா, சாவா, சுமத்திரா ஆகியவற்றின் இணைப்பில் உருவானதுதான் சைலேந்திரப் பேரரசு ஆகும். அப்பேரரசு பற்றியும், அதை ஆண்டு வந்த மன்னர்கள் பற்றியும் தெளிவாக எடுத்துக் காட்டுபவை அங்குள்ள கல்வெட்டுகளும், புத்த சமய நூல்களும் ஆகும். சைலேந்திர மன்னர்கள் எல்லோரும் புத்த சமயத்தைச் சார்ந்தவர்கள் என்று உறுதியாகக் கூறும் அளவிற்குச் சான்றுகள் கிடைத்துள்ளன.

சோழப் பேரரசுக்கும் சைலேந்திரப் பேரரசுக்கும் இடையே கி.பி. 11-ஆம் நூற்றாண்டில் பெரும் கடலாதிக்கப் போட்டி நடைபெற்றது. அப்போட்டியில் சோழப் பேரரசு அரிய வெற்றியினைப் பெற்றது. எனினும் போர் தொடர்ந்து நடைபெற்றது.

பொதுவாகச் சைலேந்திர மரபு மன்னர்கள் வீரமும் தீரமும் ஒருங்கே பெற்று விளங்கினர். இதில் சைலேந்திரா என்பவர் சிறந்த வீரராகத் திகழ்ந்ததோடு மட்டுமல்லாமல் புத்த சமயத்தைப் பெரிதும் போற்றியவராகவும் விளங்கியுள்ளார். இவரது ஆட்சிக்காலத்தில் மக்கள் பல்வளமும் நலமும் பெற்று வாழ்ந்து வந்தனர். 'மன்னன் எவ்வழிகுடிகள் அவ்வழி' என்ற நன்மொழிக்கு ஏற்ப இவர் ஆட்சி புரிந்து வந்தார். 'குடிதழ்இக் கோலோச்சும்' மன்னராக இவர் விளங்கினார். சைலேந்திரர் கல்வியாளராகவும் பழமையில் பற்றுக் கொண்டவராகவும் விளங்கினார்.

சைலேந்திர மன்னர்கள் புகழ்மிகு இந்தியப் பல்கலைக் கழகமான நாளந்தாப் பல்கலைக் கழகத்துடனும், தமிழகத்திலுள்ள நாகப்பட்டினத்துடனும் நல்ல தொடர்பினைப் பெற்றிருந்தனர். இத் தொடர்பின் விளைவாக அவர்கள் புத்த சமயத்தில் மகாயானப் பிரிவினைச் சேர்ந்தவர்கள் என்பது தெளிவாகிறது. அச்சமயம் வளர அவர்கள் ஆக்கமும் ஊக்கமும் அளித்து வந்தனர். சாவாவில் கி.பி.2-ஆம் நூற்றாண்டில் இந்து சமயம் மிகச் செல்வாக்குப் பெற்றிருந்தது என்பதில் எட்டுணையும் ஐயமில்லை. பாகியான தமது தாயகம் திரும்பும்போது சாவாவில் ஐந்து மாத காலம் தங்கியிருந்தார். அப்போது இந்து சமயமே பெரிதும் செல்வாக்குப் பெற்று விளங்கியது என்று அவர் குறிப்பிடுகின்றார். அத்துடன் சைலேந்திரா பற்றிய விரிவான செய்திகளையும் தந்துள்ளார். அவரது குறிப்புகளிலிருந்து இவர் எத்தகைய சீரிய முறையில் சமய நோக்கினைக் கொண்டிருந்தார் என்பது தெரிகிறது.

சைலேந்திர அரச மரபினர் சீரோடும் சிறப்போடும் ஆட்சி நடத்தி வந்தனர். அவரது ஆட்சிக் காலத்துக்குப் பின் சஞ்சயன் என்பவர் மீண்டும் ஆட்சிப் பொறுப்பினை ஏற்றார். நா.செ.

**சைவசித்தாந்தம்**: சைவ சித்தாந்தம் தமிழ் நாட்டிற்குரிய சமயம் என்றும், திராவிட மக்கள் மிகவும் போற்றுகின்ற சமயம் என்றும், டாக்டர். சி யு. போப்பு (Dr. G.U. Pope) கூறியிருக்கிறார். சமணர்களையும் பௌத்தர்களையும் வாதில் வென்று சைவ சமயாச்சாரியர்கள் சைவத்தைத் தமிழ்நாட்டில் வளரச் செய்தார்கள். சைவம் கி.பி. 6-ஆம் நூற்றாண்டு முதல் தழைத்தோங்கியது சமய குரவர்களாகிய அப்பர், சம்பந்தர், சுந்தரர், மாணிக்கவாசகர் ஆகியோர் தேவாரத் திருவாசகப் பாடல்களால் மக்களைப் பெரிதும் கவர்ந்தனர் மெய்கண்டார் சிவஞான போதம் என்னும் அரிய நூலை இயற்றினார். அருள் நந்தி சிவாச்சாரியார் சிவஞானசித்தியார் என்னும்

நூலை இயற்றினார். தமிழில் பதினான்கு சித்தாந்த சாத்திரங்கள் தோன்றின.

சைவ சித்தாந்தம் மூன்று பெரிய உண்மைகளை உலகுக்கு எடுத்துக் காட்டியது. அவையாவன பதி பசு, பாசம என்பன. பதி என்றால் கடவுள்; பசு என்றால் ஆன்மா; பாசம் எனறால் ஆணவம், கன்மம், மாயை என்ற மும்மலங்கள. இம்மலங்கள் ஆன்மாவைச் சுற்றி இருப்பதால ஆன்மா அறி யாமையில் மூழ்கிக் கிடககிறது. இம்மலங்கள நீங்கப் பெற்றவுடன், அறியாமை நீங்கி, இறைவன் திருவடி யைச்சேர்கிறது என்று சித்தாந்திகள் கருதுகின்றனர்.

இறைவனைச் சிவன் என்று சித்தாந்திகள் கூறுகின்றனர். அவன் முழுதற் கடவுள். அவனுக்கு நிகர் யாருமில்லை. அவன் குணமற்றவன்; சத்துவ இராசத, தாமச குணங்களால் பாதிக்கப்படாதவன். அவனுக்கு எட்டுவித குணங்கள் உண்டு என்று சித் தாந்திகள் கூறுகின்றனர். தானே இயங்குகிறவன். புனிதமானவன், எலலாம் அறிந்தவன, எங்கும் நிறைந்தவன், சிறந்த வல்லமையுடையவன், எல்லை யில்லா அருளுடையவன், எல்லையில்லா இன்பமுடை யவன், மறைததல் தொழில் செய்கிறவன் என்றெல் லாம் கூறுவர்.

பசு என்றால் ஆனமா. பசுவின் தன்மை சார்ந்த தன் வண்ணமாதல் எனறு சித்தாந்திகள் கூறுகின்ற னர். ஆகாயத்திலிருந்து விழுகினற நீர் எந்தப் பூமி யில் விழுகிறதோ, அதன் தனமையை அடைகிறது. அது போலவே ஆன்மா, எநத உடலைச சார்நதிருக் கிறதோ, அதன தனமையை அடைகிறது. ஆனமாக் கள பல உளளன. அவைகளுக்கு ஞானம், இச்சை, கிரியை என்ற செயல்கள் உணடு. ஆணவம், கன்மம், மாயை என்ற மலங்களினால் பாதிக்கப்பட்டு, அறி வும் பலமும் குனறிய நிலையில் காணப்படுகின்றன. இறைவன், ஆன்மாக்கள் நல்ல நிலையில் செயறபட்டு முக்தி நிலை அடையவேணடுமெனற எண்ணத்தால் உலகினை மாயையிலிருந்து படைக்கினறான. எப்படி ஒரு நடிகருக்கு நடிப்பதற்காக மேடை தேவையோ, அதுபோலவே ஆன்மாக்கள் செயறபடுவதற்கு உலகம் தேவை. அதனதன் செயலுக்குத் தகுந்தபடி பயன கிடைக்கின்றது. நல்லன செயதால் நல்ல பலனையும், தீயன செய்தால் தீய பயனையும் ஆன்மாக்கள் அடை யும். ஆணவம் அழிய அழிய ஆனமா இறைத்தனமை அடைகிறது. பிறகு இறைவன அருளினால முக்தி நிலை அடைகிறது. பாசம ஆணவம், கனமம், மாயை என மூவகைப்படும். ஆணவமலம் ஆன்மாவின் இரு ளுக்குக் காரணமாக அமைகிறது. ஆணவம் ஆனமா வோடு பிறக்கும் பொழுதே அமைந்திருக்கிறது என்று சைவசித்தாந்திகள் கூறுகின்றனர். கன்மம் ஆன் மாவை உலகத்தோடு பிணைக்கிறது அதனை ஆன்மா அனுபவித்துத்தான் தீர்க்கவேண்டும். மாயை யிலிருந்துதான் இறைவன் உலகினைப் படைக் கிறான். மாயையானது சுத்தமாயை, அசுத்தமாயை, பிரகிருதிமாயை எனறு மூன்று வகைப்படும். தொடக கத்திலுள்ளது சுத்தமாயை எனப்படும். இரணடாம் மாயை மலத்தோடும், கருமத்தோடும் சேர்ந்து காணப்படும் அது இன்பத்தினையும் துன்பத்தினை யும் குறையுடைய அறிவினையும் கொடுக்கும். அதி லிருநது வருகின்ற உலகம் அசுத்த உலகம எனபபடும். மூன்றாம் மாயை பிரகிருதி மாயை எனப்படும். ஆன்மா மாயையின் மூலமாக அறிவு பெறுகிறது. ஆனால், அது பாச அறிவு எனப்படும. இறைவனைப் பற்றிய அறிவோ, ஆன்மாவின தன்மையைப் பறறிய அறிவோ பெற முடியாது. பிரளயம் அல்லது அழிவுக் காலத்தில் ஆனமா ஆணவத்தில் சிககுணடு கிடக் கிறது. அதனால பல பிறவிகள அமைகினறன.

ஆன்மா முத்தியடையவதற்குரிய சாதனங்கள சரியை, கிரியை யோகம், ஞானம் என்பனவாம். சரியை என்பது இறைவனுக்குத் தொணடு செய்தல். கைகளினாலும, தோத்திரப்பாடல்களினாலும், மனத் தாலும் இறைவனை வணங்குதலும், இறைவனை எண்ணுதலும், அவன் புகழ் பேசுதலும், நலல காரி யங்களைச் செய்தலும் சரியையில் அடங்கும். இத னைத் தாசமார்க்கம் என்றுகூறுவர். ஆன்மா தன்னை இறைவனின் பணியாளனாகக் கருதுகிறது. கோயிலைச் சுத்தம் செய்தல், மாலைகள் தொடுத்து இறைவ னுக்கு அணிவித்தல், அடியார்களுக்கு அனனம் அளித்தல், திருவிளககேற்றுதல், நநதவனம் அமைத் தல் முதலியன சரியையாகும் அப்பர் இநத மார்க் கத்தைக கடைப்பிடித்தார்.

கிரியை மார்க்கம் இறைவனை வணங்குதல். ஆன்மா தன்னை இறைவனின் மகனாகவும், இறை வனைத் தந்தையாகவும கருதி, ஒருமகன தநதைக்கு என்ன காரியங்களெல்லாம் செய்வானோ, அவற்றை யெல்லாம் இறைவனுக்குச் செய்தல். இந்த மார்ககத் தில் ஆன்மா இறைவனை மிகவும் நெருங்குகிறது. இறைவனைப் புகை, மஞ்சனம் முதலியவறறுடன்அருச் சித்து, சோறு படைத்து நாடோறும் வணங்குதல். சம் பந்தர் இந்த மார்க்கத்தைக் கடைப்பிடித்தார்.

யோக மார்க்கம் என்பது சகமார்ககம் எனப்படும் இறைவனை ஒரு நண்பனாகக் கருதி வழிபடல், மனிதனை உலகப் பொருள்களிலிருந்து விடுவிததல் இறைவனை எப்பொழுதும் நினைத்துத் தியானம் செய் தல். இந்த மார்க்கத்தினால் இறைவனுடைய குணங்

கள் யாவும் ஆன்மாவிற்கமையும். சுந்தரர் இந்த மார்க்கத்தைக் கடைப்பிடித்தார். எட்டுவிதபடிகள இந்த மாாக்கத்திட ணடு அவையாவன இயமம் (நற்குணங்கள் அடைதல), நியமம் (நற்செயல்களைச் செய்தல், ஆசனம் (பலவிதகலைகள்), பிராணாயாமம் (மூசசை அடக்குதல்), பிரத்தியாகாரம் (புலன்களையும மனத்தினையும் அலையாமல் பாதுகாத்தல்), தாரணை (மனத்தை இறைவன்பாற் செலுத்துதல்), தியானம் (இறைவனோடு தொடர்பு கொளளுதல்), சமாதி (இறை அநுபவம் பெறுதல்) ஆகியவையாம்.

ஆன்மா இறைவனோடு தொடர்பு கொண்டு, பூர்ண ஞானம் பெறுதல். அதனால் கிடைக்கிற இன்பம சொற்களால் விவரிக்க முடியாது. இதனைச் சன்மார்க்கம் என்று கூறலாம். மாணிக்கவாசகர் இதனைக் கடைப்பிடித்தார். மேற்கூறிய மார்க்கங்கள் அனைத்தும், தனிததனியாகக் கூறப்பட்டாலும், ஒன்று மற்றொன்றிற்கு வழிகாட்டியாக அமையும் என்றும், அந்த மாாக்கஙகளை, அரும்பு, மலர், காய், கனி என்றும் தாயுமானவர் கூறுகிறாா.

ஆன்மா தானே முயன்று முக்தியடையாது என்றும், கடைசியில் இறைவன் அருளால்தான் முக்தியடைய முடியும் என்றும் சித்தாந்திகள் கருதுகின்றனர். ஆனமாக்கள தங்களுடைய முயற்சியினால் முக்தியடையப்பாடுபடவேண்டும். பிறகு இறைவன் அருள்கூர்ந்து, குருவாய் வந்து தீட்சை அளித்து முக்திநிலை அருளுவான என்பது சைவசித்தாநதிகள் கருத்து. ஆன்மாவின் தகுதிக்கேற்ப இறைவன் தீட்சை அளிப்பான். சரியை மார்ககத்தில் புகுமுன் அளிக்கப்படுகிற தீட்சைக்குச் சமய தீட்சை என்று பெயர். பிறகு இறைவன் பார்வையாலும் (Nayana), தொடுவதினாலும் (Sparsa) மனத்தினாலும் (Manasa) தீட்சை அளிப்பான். இடையிடையே இறைவன் ஆன்மாவிற்குத் தரிசனமும் அளிப்பான், சரியை மார்க்கம் நிறைவு பெற்றவுடன் மேலும் தீட்சை அளிப்பான். இதற்கு விசேட தீட்சை என்று பெயர். ஆன்மாவிற்கு ஆன்மிக சக்தி இதனால் ஏற்படுகிறது. அதனைக் கொண்டு ஆன்மா சரியை மார்க்கத்தில் செயற்படுகிறது. சரியை, கிரியை, யோகம் என்ற மூன்று மார்க்கங்கள் கடந்தபிறகு ஆன்மாவானது மனப்பக்குவம் அடைகிறது இன்பத்தையும் துன்பத்தையும் சமமாகப் பார்க்கும் நிலை ஏற்படுகிறது. இது இருவினை ஒப்பு என்று கூறப்படும். பிறகு மலங்கள் ஆன்மாவை விட்டு மெதுவாக அகன்றுவிடும். அதன் பிறகு இறைவனுடைய சக்தி ஆன்மாவை வந்து சேரும். இதனை அருள் இறங்கும் நிலை என்று கூறலாம். எப்படி மருத்துவன் காயம் நன்றாகப் பழுத்தவுடன் அறுவைச் சிகிச்சை செய்து குணப்படுத்துகிறானோ அது போலவே இறைவனும் ஆன்மாக்களைப் பக்குவமடையச் செய்து, அவற்றைச் சார்ந்த மலங்களையும் அகற்றுகிறான். ஆணவம் நன்றாக அகன்றவுடன் சற்குரு நிருவாண தீட்சை அளிக்கிறான். ஆன்மா ஞான மார்க்கத்தை அடைகிறது. ஆன்மாவானது தன்னை இறைவனின் வாழ்க்கைத் துணையாகக் கருதுகிறது. இறைவன் ஆன்மாவிற்குப் பெரிய உணமைகளை வலியுறுத்துகிறான். இதனைச் சிரவணம், மனனம், நிதித்தியாசனம் என்று கூறுவர். உண்மையென்னவெனில் உலகம் மாயையிலிருந்து தோன்றியது. ஆன்மா புலன்கள், மனம் முதலியவற்றிற்கு அப்பாற்பட்டது. அது இறைவனோடு அன்பினால் பிணைக்கப்பட்டிருக்கிறது. எல்லாவிதமான ஐயங்களும் தெளிந்தவுடன, இறைவனைப் பறறிய உண்மையான அறிவு ஆன்மாவிற்கு உண்டாகிறது. மேலான அறிவு வேதஙகளிலிருந்து கிடைக்கிறது. அத்தகைய அறிவை ஒருவன தன் வாழக்கையின் அநுபவத்தில் உணருகிறான். அத்தகைய அறிவை நாடுகிறவன் இறைவனை வெளியிலும் தன்னுளளேயும் காண்கிறான். தன்னுடைய உண்மையான தன்மையை இறை எண்ணத்திற்கு உரிமைப் படுத்துகிறான. அப்படி தன்னை இறைவனிடம் ஒப்படைக்குமபொழுது எல்லையில்லாத இனபம் அடைகிறான். அந்த நிலை சாயுச்சியம் என்று கூறப்படுகிறது. இரா.கோ.

**துணை நூல்கள்:**


**Bhandarkar. R G.**, Vaishnavism, Saivism and Minor Religious Sects, Strasbourg, 1913.

**Devasenapathi**, Saiva Siddhanta, University of Madras, Madras, 1974.

**Maraimalai Adigal.**, the Saiva Siddhanta as a Philosophy of Practical Knowledge, The South India Saiva Siddhanta works Publishing Society, Madras, 1966.

**Paranjothi, V.**, Saiva Siddhanta, London, 1954.


**சைன்-உல்-அபிதின்** (கி.பி.1420-1470): வடஇந்தியாவில் தில்லிச் சுலதான்களின் வீழச்சிக்குப் பிறகு, காசுமீரம் சுதந்திர நாடாயிற்று. காசுமீரச் சுல்தான்களுள் சிறநதவராக விளஙகியவர் சைன-உல-அபிதின் (Zain-Ul-Abidin). இவர் கி.பி.1420-இல ஆட்சிக்கு வநதார். இவரைச் சில வரலாறறறிஞர்கள் பேரரசர் அக்பருககு ஒப்பிடுகின்றனர். இவரது ஆட்சியின்கீழக் காசுமீரத்தின் எல்லைகள் விரிவடைநதன. காசுமீரம் செலவச செழிப்புடன விளங்கியது.

**வெற்றிகள்:** சைன்-உல-அபிதின் காலத்தில சோனராசாவினால் எழுதப்பட்ட 'இராசதரஙகிணி'

யின் இரண்டாம் பாகத்தில் இவருடைய வெற்றிகள் குறிப்பிடப்பட்டுள்ளன. இவர் காந்தாரம், சிந்து, மதுரா, இராசபுரிமீது மேலரசுரிமை (Suzerainty) பெற்றிருந்தார். இவர் உதயாண்டபுர அரசனைப் பலமுறை தோற்கடித்தார். போட்டோ தேசத்திலுள்ள (Bhottadesa) கோக்காப் பகுதியையும் வென்றார். சிந்து நதியின் மேலுள்ள சாயா (Saya) என்ற பகுதியை வென்று, தங்கத்தாலான புத்தரின் சிலையை யவனர்களிடமிருந்து மீட்டார். சசுரத்து என்ற கோக்கர் தலைவன் சைன-உல்-அபிதினுக்குப் போர்க் காலங்களில் உதவியாக இருந்தான். எனவே, பஞ்சாபைச் சசுரத்து தாக்கிக் கைப்பற்றியபோது அபிதின் அவனுக்கு உதவினார் என்று வரலாற்றறிஞர் நிசாமுதீன் கூறுகிறார்.

தில்லிச் சுல்தானை ஆதரித்து வந்த சம்மு அரசன் இராசபீமனைச் சசுரத்துத்தோற்கடித்தானெனஇசுலாமியச் செய்திக் கோவை(Muslim Chronicle)கூறுகிறது. சைன்-உல்-அபிதின் தம்மையும் தில்லி அரசபதவிக்கு வாரிசு என்று கருதியதால், சசுரத்துக்கு அடைக்கலம் தந்ததோடு தில்லிச் சுல்தானை ஒழிக்கவும் முனைந்தார்.

**சாதனைகள்:** சைன்-உல்-அபிதின் கற்றறிந்தவர். இவர் பாரசீகம், சமசுகிருதம், திபெத்து ஆகிய மொழிகளில் புலமை பெற்றிருந்தார். பல சிறந்த பாரசீக, அரேபிய நூல்களை மொழி பெயர்த்தார். மேலும், மகாபாரதத்தையும், இராசதரங்கிணியையும் அரேபிய மொழியில் மொழி பெயர்த்தார்.

இவர் பல புதிய நகரங்களையும், பாலங்களையும் பாசனக் கால்வாய்களையும் அமைத்தார்; வேளாண் மக்களுக்குப் பெரும் வரிக்குறைப்பு அளித்தார். எவ்வளவு பெரிய சிக்கலான வழக்குகளுக்கும் திறம்பட நீதி வழங்கினார். மேலும், வணிகர்கள் பொருள்களைப் பதுக்கி வைக்கக் கூடாதென்றும், அவர்கள் சிறிதளவு இலாபத்துடன் பொருள்களை விற்பனை செய்ய வேண்டும் என்றும், பொருள்களின் விலையைச் செப்புத் தகட்டில் பொறித்து எல்லா நகரங்களிலும் மக்களின் பார்வையில்வைக்க வேண்டும் என்றும் ஆணை பிறப்பித்தார். 'எப்போதாவது' திருட்டு கொள்ளை நடந்தால கிராமத்தலைவரைத (Headman) தண்டித்துக் குற்றங்கள் நிகழாவண்ணம் பார்த்துக் கொண்டார்.

தம்முடைய முன்னோர்கள் இந்துக்களுக்குச் செய்த கொடுமைகளை சைன்-உல்-அபிதின் தம் ஆட்சிக் காலத்தில் தவிர்த்தார். வெளியேற்றப்பட்ட பிராமணர்களைச் சைன்-உல்-அபிதின் அரசவைக்குத் திரும்ப அழைத்தார். இந்துக்கள் கோயில்கள் கட்டுவதற்கும் ஒவ்வொருவரும் தம்முடைய கடவுளை வழிபடவும் அனுமதி வழங்கினார். முன்பிருந்த அரசர்களால் நிறுத்தி வைக்கப்பட்டிருந்த அறிஞர்களின் உதவிப்பணத்தை இவர் மீண்டும் வழங்கினார்.

பசுவைக்கொலை செய்தல், இறைச்சி உண்ணுதல் போன்றவற்றைச் சட்டத்தினால் தடை செய்தார். மேலும், இவ்வரசர் பிராமணர்களை இந்து சாத்திரப்படி வாழ்க்கை நடத்தவேண்டும் எனப்பணித்தார்.

இந்தியாவின் அறிவார்ந்த அரசர்களுள் சைன்-உல்-அபிதின் ஒருவராக விளங்கினார். இந்து இசுலாமியப் புலவர்களும், மதகுருமார்களும் இவரது அரண்மனையை அலங்கரித்தார்கள். இவர் இசையிலும் மற்றக் கலைகளிலும் மிகவும் நாட்டம் கொண்டிருந்தார்.

இவ்வரசரது புகழ் காசுமீரத்துக்கு வெளியேயும் பரவியது. பக்குலுல லோடி, முகமது லோடி, சௌராட்டிர அரசர் மண்டலிகா, குவாலியர் அரசர் ஆகியோர் இவ்வரசருடன் நட்புறவு கொண்டிருந்தனர். மேலும், மெக்கா, எகிப்து, குராசான் நாட்டரசர்களும் இவருடன் நட்புறவு கொண்டிருந்தனர்.

சைன்-உல்-அபிதின் 50 ஆண்டுகள் செம்மையாக ஆட்சி புரிந்தார். காசுமீரத்தின் சிறந்த அரசராக விளங்கிய இவர் கி.பி. 1470-இல் இறந்தார். டி.கை.

## சொ

ச கரத்திற்கும் ஒ கரத்திற்கும் உரிய குறிப்புகளைப்பார்க்க.

செ என்ற எழுத்தின் உருவத்திலும் சா என்ற எழுத்தின் உருவத்திலும் எ, ஆ என்ற இரு உயிா ஒலிகளைக் குறித்துக் கொடுக்கப்பட்ட குறிப்புகளே இச் 'சொ' என்ற எழுத்திற்கும் பொருந்தும். இந்த இரணடு உயிர் எழுத்துகள சகர மெய்யோடு கலந்து எ கரம் எழுத்துக்கு முன னாலும், ஆ காரம பின்னாலும் ஒருமித்த முறையிலேயே வளர்ந்து வந்தன. முதலில் சகர எழுத்தோடு எகரமும் ஆகாரமும் தலைக்கட்டுடன் இணைக்கப்பட்டே எழுதப்பட்டன. இவ்வுருவம் பெரும்பாலும் அகப்படவில்லை. .. .. ..

முதலாம் இராசஇராச சோழன் காலத்தில் தோனறிய கல்வெட்டு களில முதன் முறையாக இந்த எகர ஆகார உருவங்கள் தனித்தும் வளர்ந்தும் காணப்படுகினறன. ... ...

சகரத்தின் வளர்சசியை ஒட்டியே இவையும் வளர்ந்து தனித்து எழுதப்பட்டன. .. .. ...

வட்டெழுத்தில இறுதி வரை தனித்து எழுதப்படாமல் இணைந்து காணப்படுகிறது. எகரக் குறியும் ஆகாரமும் தமிழ் எழுத்தில இருப்பதைப் போலவே காணப்படுகின்றன. ... .. ..

எகர உயிரெழுத்துக்கும் எகர உயிர் மெய்க்கும் இடப்பட்ட புள்ளி இந்த எழுத்துக்கும் உண்டு. எ, செ என்ற எழுத்துகளுக்குக் கொடுக்கப்பட்ட எடுத்துக்காட்டுகளே இதற்கும் பொருந்தும். ... ..

கே. ஜி. கி.

**சொக்கநாதப்பிள்ளை, பலபட்டடை** கி. பி. 18-ஆம் நூற்றாண்டில் வாழ்ந்த தமிழ்ப் புலவர்களுள் ஒருவர். இவர் மதுரையைச் சேர்ந்தவர். இவர் தம் தந்தையார் பெயர் சொக்கலிங்கம் பிள்ளை. இவர் முன்னோர்கள் மதுரை மன்னரிடம் பலபட்டடைக் கணக்கு என்னும் தொழில் புரிந்தோராவர். பலபட்டடை என்பது பல பணடங்களுள்ள அறை என்று பொருள். இவர் மரபினர் இத்தொழில் செய்து வந்ததன் காரணமாக அவர்களின் பெயர்களோடு பலபட்டடை எனனும் அடைசேர்த்து வழங்கப் பெற்றது. அவ்வகையால் இவர் பலபட்டடை சொக்கநாதப்பிள்ளை என வழங்கப் பெற்றார். இவர் சொக்கநாதப்புலவர், சொக்கநாதக்கவிராயர் ஆகிய வேறு பெயர்களாலும் வழங்கப்பட்டார். இவர் மதுரையில் கோயில் கொணடுள்ள சொக்கநாதப் பெருமான்மீதும் அங்கயற் கணணம்மை மீதும் அன்பு

கொண்டு பல தனிப்பாடல்களால் அவர்களை வாழ்த்திப்பாடியுள்ளார். இவர் பொருளாழமும் சுவையும் அமையப் பாடல் இயற்றும் திறமை மிக்க வர்.

இவர் மதுரை யமகவந்தாதி, மதுரை மும்மணிக் கோவை, தேவையுலா, அழகர் கிள்ளைவிடுதூது, பத்மகிரிநாதர் தென்றல் விடுதூது முதலிய நூல்களை இயற்றியுள்ளார். மதுரை மும்மணிக்கோவை என்னும் நூல் சொக்கநாதக் கடவுளைத் தலைவராகக்கொண்டு பாடப்பட்டதாகும். அந்நூல் சொல்லணியும் பொருள ணியும் நிறைந்து சிறப்பாக உள்ளது. தேவையுலா இராமேசுவரத்தில் கோயில் கொண்டுள்ள சிவபெரு மான் மேல் பாடப்பெற்றதாகும் (தேவை-இராமேசு வரம்) அந்நூலில் இராமேசுவரம் கோயிலுக்குத் திருப் பணிசெய்தவர்களைக் குறிப்பிடுகிறார் அவ்வரிசையில் இரகுநாதசேதுபதியைக் குறிப்பிட்டுச் செல்கிறார். அழ கர்கிள்ளை விடுதூது என்பது திருமாலிருஞ் சோலைத் திருமால் மீது பாடப்பட்டதாகும். சைவரான இவர் அந்நூலைப் பாடியிருப்பதனால் பிற சமயத் தையும் மதிக்கும் இயல்புடையவர் என்பது விளங்கும். அதில் கிளியின் பல பெயர்களையும் கூறிப் பாராட்டு வது சிறப்பாக அமைந்துள்ளது தூது விடப்பெறும் கிளியின் பெருமை, அழகர் சிறப்பு ஆகியன அதில் சிறப்பாகக் கூறப்பட்டுள்ளன. பத்மகிரிநாதர்தென்றல் விடுதூது என்னும் நூல் திண்டுக்கல் எனப்படும் பதம கிரியில் கோயில் கொண்டுள்ள சிவபெருமான் மீது பாடப்பட்டதாகும். அந்நூலில் தென்றலுக்கும் தமிழுக்குமுள்ள தொடர்பு காற்றைப் பற்றிய பல செய்திகள் முதலியன சிறப்பாகக் கூறப்பட்டுள்ளன. இவர் காலத்தில் கன்னிவாடியில் வாழ்ந்த நரசிங்க நாயகர் மேல் வளமடல் ஒன்று பாடியதற்காக அவரால் ஆதரிக்கப் பெற்றுச் சிறப்புடன் வாழ்ந்தார். வீ. சே.

***சொக்கநாதப்புலவர்***, சைவ சமயத்தைப் போற்றித் தனிப்பாடல் இயற்றிய கவிஞர். 'எல்லப்பன் அம்மையப்பன் திருவேங்கடராமன்' என்னுஞ் செய் யுளை இயற்றியுள்ளார். கிருட்டிணப்ப நாயக்கர் (கி.பி 1653)காலத்தில் விளங்கிய திருவேங்கட நாதை யர் காலத்தவர் இவர் என்பர். தனிப் பாடல் திரட் டில் இவர் பாடியனவாக நாற்பது பாடல்கள் தொகுக் கப் பட்டுள்ளன.

இவர் கறுப்பன் என்னும் தொண்டை நாட்டுவள்ள லைப் புகழ்ந்து பாடியுள்ளார். 'நகைச்சுவைபடப்பாட வல்ல இவர் தம் பாடல்களில் சிலேடை நயமுண்டு. மடல் என்னுந் துறையில் பாடல் யாத்துள்ளார். வடமலை யப்ப வள்ளலைப் பாடியிருப்பதால் இவர் அவ்வள்ளல் காலத்திற்குப்பின் வாழ்ந்தவராவார். திருவேரகம் முருகன்மீது இவர் பாடிய 'வெங்காயம் சுக்கானால்' எனத் தொடங்கும் பாடல் தத்துவக் கருத்துடையது. பி.தெ.

***சொக்கப்பநாவலர்*** கி.பி.18-ஆம் நூற்றாண் டில் வாழ்ந்த தமிழ் புலவர்களுள் ஒருவர். இவர் தொண்டை நாட்டில் உள்ள குன்றத்தூரில் கூடலூர் கிழார் மரபில் தோன்றியவர் என்பதும், இவர் தந்தையார் சர்க்கரை என்னும் பெயருடையவர் என்ப தும் இவர் இயற்றிய திருவெள்ளூர்ப் புராணப் பாயி ரப் பகுதியால் தெரியவருகின்றன. திருவெள்ளூர்ப் புராணப்பாயிரப் பகுதியிலுள்ள 'கூடல் கிழார் கோத்திரத்தில் தொண்டை நாடன் குன்றத்தூர்ச சர்க்கரைக் குமரன் ஆனோன், ஆடல்புனை கங்கை குலன் சொக்கநாதன் அட்டாவதானன்' என்னும் தொடரால் இப் புலவருக்குச் சொக்கநாதன் என்ற பெயர் இருந்தமை தெரிகிறது. இவர் பொய்யா மொழிப் புலவரால் எழுதப்பெற்ற தஞ்சை வாணன் கோவை என்னும் நூலுக்குஉரை எழுதியுள்ளார் இவர் அந்நூலுக்கு எழுதிய உரையில் களவியல் நிகழ்ச்சி களுக்கு நாள் வரையறை செய்துள்ளது குறிப்பிடத் தக்க ஒன்றாகும். வீ.சே.

***சொக்கலிங்கம்-இராய***: 'தமிழ்க் கடல்' என்ற பட்டப் பெயராலும் 'இராய சொ' என்னும் சுருக்கப் பெயராலும் நனகு அறியப்பெற்றுத் திகழ்ந்த இராய சொக்கலிங்கம் கி.பி. 1898-இல் சொ. இராயப்பச் செட்டியார்-அழகம்மை ஆச்சி ஆகியோர் தம் தலைமகனாகப் பிறந்தார். இவர் நாட்டுக் கோட்டைத் தனவணிக மரபினர். இளமையில் தக்க ஆசிரியர்களிடம் கல்வி பயின்ற இராய சொ. தம் ஆசிரியர்களை மறவாது போற்றி வந்தார். இவர் 1918-இல் திருமிகு உமையாள் ஆச்சியைத் திருமணம் புரிந்து கொண்டார், சொ. முருகப்பா போன்றோர் தொடர்புடன் காரைக்குடியில் இந்து மதாபிமான சங்கம் அமைத்தார். மகாகவி பாரதியார் நேரில் வருகைதந்து வாழ்த்துக் கவி பாடிய பெருமை பெற்ற தனிச்சிறப்புடைய அச்சங்கம், இன்றும் சிறப்புறத் தொண்டாற்றிவருகிறது பாரதியாருடன் நெருங்கிப் பழகும் பேறுபெற்றவர் இராய. சொ.

சமூக அன்பர்கள் பலருடன் இணைந்து 'தன வைசிய ஊழியர் சங்கம்' கண்டவர் இராய. சொ. அச்சங்கத்தின் சார்பில் 'தனவைசிய ஊழியன்' என்ற பெயரில் ஒரு பத்திரிகையினைத் தொடங்கி நடத் தினார் இராய. சொ. அப்பத்திரிக்கையை 'ஊழியன்' என்ற பெயரில் ஏறத்தாழ இருபது ஆண்டுகள் நடத்தினார்.



இராய. சொக்கலிங்கம்

இராய. சொக்கலிங்கம் சிறந்த தேசபக்தர்; சட்ட மறுபபு இயக்கத்தில் சேர்ந்து 1932-இல் ஓா ஆணடுச சிறைத் தணடனை அடைந்தார். இவர் வ.வே.சு ஐய்யர், வ.உ.சி., சுப்பிரமணிய சிவா முதலியோருடன நெருங்கிப் பழகும் வாய்ப்பினைப் பெற்றார்.

காந்தியடிகள் 1934-ஆம் ஆணடு தமிழகத்திற்கு வந்தபோது இவர் தம் இல்லத்திற்கு வந்து விருந் துண்டு சென்றதை இராய. சொ. எப்போதும் பெரு மையுடன் நினைவு கூர்வார்.

காரைக்குடி நகரசபைத் தலைவராக மூன்றாணடு கள் பணியாற்றிய இவர் பர்மா, மலாயா, இலங்கை சுமத்திரா, இநதோனேசியா முதலிய இடங்களுக்குச் சுற்றுப் பயணம் செய்து சொற்பெருக்காறறியுளளாா. காரைக்குடி இந்து மதாபிமான சங்கத்தார் 1958-ஆம் ஆணடில் இவரது மணிவிழாவைச சிறப்பாகக் கொணடாடித் தமிழ்க்கடல் என்னும் பட்டம் சூட்டி மகிழ்நதனர் இரங்கூன் நகரத்தார் 'சிவமணி' என்னும பட்டம் சூட்டினர். சமயநிறுவனங்கள் இவருககுச் 'சிவம்பெருக்கும் சீலர்' 'வணகவி வள்ளல' என்ற பட்டங்களைச் சூட்டிச் சிறப்புச் செய்தன.

சைவ, வைணவத் தலஙகளுக்குச் சென்று இறை வனை வழிபடும் இயல்பினர் இராய. சொ. சைவத் திருமுறைகளில் கொண்டிருந்த ஈடுபாட்டினைப்போல் வைணவத் திருபபாசுரங்களிலும் பெரும ஈடுபாடு கொண்டிருந்தார்.

இராய. சொ. அழகப்பா கல்லூரித் தமிழ் ஆராய்ச்சித் துறையின் மதிப்புறு தலைவராக இருந்து, 'கம்பனும் சிவனும்', 'வில்லியும் சிவனும்', 'காந்திக் கவிதை' ஆகிய ஆய்வு நூல்களை எழுதி வெளி யிட்டார்.

இவர் காவேரி, குற்றால வளம், நாம் ஆாக்கும குடியல்லோம், காதற் கடிதங்களா, இன்பம் எது என்ற உரைநடை நூல்களை எழுதியுள்ளார். அனறியும் காந்தி பிளளைத் தமிழ், தாலாட்டும் கும்மியும், புதுமைப்பாக்கள், பெண நிலைக் கண்டனச் செய்யுட் கள் ஆகிய கவிதை நூல்களையும் இவர் படைத் துளளார்.

இவா 1974-இல் காரைக்குடியில் காலமானார். அ.வி.

**சொக்கலிங்கம், தி ச.,** தென காசியில, கி.பி.1899ஆம் ஆணடு பிறநதவர். இவர் இநதிய விடுதலைப் போராட்டத்தில பங்கு பெற்றுச் சிறை யில் இருநதவர். தமிழ, ஆங்கிலம் ஆகிய இரு மொழிகளிலும் பயிற்சியுடையவர்; சிறந்த பததிரிகை ஆசிரியர். கட்டுரை, புதினம், சிறுகதை, நாடகம் மொழி பெயர்ப்பு நூல்கள ஆகியவற்றைத் தமிழில தந்துள்ளார். இவர்தம் தநதை தென்காசி மடத் துக்கடை சங்கரலிங்கம் பிளளையாவார்.

குற்றால அருவியில் குளிக்க அயலவர் ஆட்சியின் போது விதிக்கப்பட்டிருந்த கட்டுப்பாட்டைப் போ ராடிஇவர்தகர்த் தெறிநதார்; தென காசியில் கள்ளுக் கடை ஒழிப்பு போராட்டம நடத்தி வெற்றி கண டார். தமது கைப்பொருளைக் கொடுத்து, மறறவர் களின தேசத் தொணடுககு உதவி செய்துள்ளார். நாட்டுத் தொண்டில ஈடுபட்ட இவர் திருமணமே செய்துகொளளவில்லை.

தமிழ் இலக்கிய மறுமலர்சசிக்கு வித்திட்டவர்கள வரிசையில் சொககலிஙகமும் ஒருவர். இவர் 1959-இல் தமிழ் எழுத்தாளர் சங்கததாரிடமிருந்து கேடயத்தைப் பெற்றார். பத்திரிகைகளில் துணை யாசிரியராகவும் ஆசிரியராகவும் இவர் விளங்கிய போது எழுதிய தலையங்கங்கள் இவரைச் சிறநத அரசியல் எழுத்தாளர் ஆக்கின. இவர், நவசக்தி, தினமணி, தினசரி நாளிதழ்களில் வரலாறு படைத் தவர். இவர் 1928-இல் 'பாய் பரமானந்தன' எனறு தமிழில் ஒரு புதினத்தை எழுதினார். மேலுமிவர் 1936-இல் சவகர்லால் நேரு, சுபாசு சந்திர போசு ஆகிய இரு பெருந்தலைவர்களின் வாழக்கை வரலாற்றைத் தமிழில எழுதினார். 'அல்லி விசயம்' என்ற சிறுகதையை 1956-இல் படைத்தார். 'எனது முதல் சந்திப்பு' என்பது இவரது கடடுரை நூலா கும். இலியோ தால்சுடாயின் 'போரும அமைதியும்' என்ற நூலை மூனறு பாகங்களாகத் தமிழில் மொழி பெயர்த்துள்ளார். 'சீயல்' என்ற புனை பெயரில் 'இராவணதாச விலாசம்' என்ற நாடகத்தை நகைச்சுவைபடத் தினமணி ஆணடு மலரில எழுதி யுள்ளார். தமிழ் இலக்கிய உலகிற்குப் புதினம, நாடகம், சிறுகதை, கட்டுரை,மொழிபெயர்ப்பு நூல

கள் நல்கினாராதலின் இவர் ஓர் இலக்கிய எழுத்தாளராகவும் திகழ்ந்தார்.

கம்பீரமான தோற்றமுடைய இவர் இந்திய விடுதலைப் போராட்டக் காலத்தில் பத்திரிகைத் தலையங்கங்கள் வழியாகத் தமிழ் நாட்டு மக்களுக்கு விடுதலை உணர்வையும் வீரத்தையும் ஊட்டினார். தினமணி ஆசிரியராகப் பணியாற்றிய இவர் 1944-இல் தினசரி என்ற பெயரில் சொந்த நாளேடு ஒன்றைத் தொடங்கி நடத்தினார். இவர் 1955-இல் காமராசர் சரித்திரத்தை எழுதினார்; 'தமிழ்நாடு, 'காந்தி' ஆகிய வாரப் பத்திரிகைகளில் பொறுப்பாசிரியராகப் பணியாற்றினார்.

பளளிப் படிப்பில் ஆறாம் வகுப்புவரை படித்திருந்தாலும் இவர் தாமே முயன்று பயின்று ஆங்கிலத்திலுள்ள இலக்கியம். பொருளியல், அரசியல் நூல்களைக் கற்றார். இவர் தென்காசித் தொகுதியில் 1937-இல் காஙகிரசு வேட்பாளராக நின்று வெற்றி பெற்றார்.

தமிழ்ச் சிறுகதை இலக்கிய வரலாற்றின விடிவெள்ளியாக விளங்கிய 'மணிககொடி' எனும் இலட்சியப் பத்திரிகையைத தொடங்கிய மூவருள் ஒருவா தி ச சொக்கலிங்கம். இவரது தமிழ்நடை வீறுமிக்க தமிழ் நடையாக விளங்கியது இவர் இலக்கிய மறுமலர்சசி வட்டத்தை நிறுவினார்; புத்திலக்கிய வளாச்சிக்கு வழிகாட்டினார்; இலகக்யத் திருட்டுகளை அம்பலப்படுத்தினார்; பாரதியின கருததுகளைப் பரப்பினார்; வசன கவிதை, சிறுகதை உததிகள, ஓரங்க நாடகங்கள், நிழல சிததிரஙகள், இலக்கிய ஆராய்ச்சி, இலக்கிய வடிவங்கள ஆகியவை பற்றிய விவாதங்களில ஈடுபட்டார். இவர் 1941-இல தனி மனிதர் சத்தியாக்கிரகப் போராட்டத்தில முன்னணியில் நின்று சிறை சென்றார்.

இவர் தமிழ் எழுத்தாளர் சங்கத்தை உருவாகினாா. தமிழ்ப் பத்திரிகைகளில், கூடார்ததப் படங்களை அறிமுகப் படுத்தியதால இவருடைய பத்திரிகைப் பணியை ஆங்கில இதழகள் பாராட்டின. இவரது மேடைப் பேசசில் நகைசசுவை மிளிரும். இவர் பத்திரிக்கை ஆசிரியராகவும் சமூக ஊழியராகவும விளங்கினாா. பி.தெ.

**சொட்டை நம்பிகள்**: இவர் ஆளவந்தார் மகன். வைணவ சம்பிரதாயத்தில வரும் எழுபத்து நான்கு சிம்மாசனாதிபதிகளுள் இவரும் ஒருவர். நம்மாழ்வார் அருளிய திருவாய்மொழிக்குத் தனியன்கள் பாடியவர்களுள் ஒருவர். இவர் சடகோபராகிய நம்மாழ்வார் அவதரித்த திருக்குருகூரை நாளும் நினைத்தலும் புகழ்தலும் செய்யும் திருமாலடியார்களைத் தவிரப் பிறர் எவரையும் வணங்காதவர்; சடகோபரைத் தம் தந்தையாகப் பாவித்து மகிழ்ந்தவர்; அவர்தம் திருவடிகளையே அழியாச் செல்வமாகக் கருதும் மாண்பினர். இவர் பாடிய திருவாய்மொழித் தனியன் 'மனத்தாலும் வாயாலும்' என்று தொடங்கும் நா. பா.

**சொத்தழிப்பு**: பொது மக்களுக்கு அலலது தனிப்பட்ட ஒருவருக்கு முறையற்ற வகையில் இழப்பு அலலது தீங்கு இழைககும் உட்கருத்துடன், அலலது அவ்வகைத் தீங்கு நேரிடலாம் என்று அறிநது, சொத்து எதையேனும அழிப்பது; அல்லது அதன மதிப்பை அல்லது பயனைக குன்றச் செய்வது; அல்லது அசசொத்தை ஊறுபடுத்தும் வகையில, அச்சொததைக் கெடுபபது அலலது மாறுதல் செயவது அல்லது மாற்றி அமைப்பது சொததழிப்பு (Mischief)எனப்படும்.

எ-டு: 1. 'க'-விற்குத் தீங்கிழைக்க வேண்டுமென்ற உட்கருத்துடன, 'எ' 'க'-விற்குச் சொநதமான மதிப்புமிக்க ஆவணமொன்றைத் தம்மிச்சையாகத் தீயிட்டுக கொளுத்திவிடுகிறார். 'எ' சொத்தழிப்புக் குற்றம் இழைத்தவராவார்.

2. 'த' 'ந'-விறகு இழப்பு ஏற்படுத்தும் உட்கருத்துடன், 'ந'-விற்குச் சொநதமான பனிமனையில (Ice House) நீரைப் புகுத்திப் பனிக்கட்டிகளை உருகச் செயகிறார். 'த' சொததழிப்புக் குற்றம் இழைததவராவார்.

3. 'ம'-விறகுச் சொந்தமான கணையாழியை'ச' 'ம' விற்கு இழப்பு ஏற்படுத்தும் உட்கருத்துடன், தம்மிசசையாக ஆற்றில எறிகிறார். 'ச' சொததழிப்புக குற்றம் இழைத்தவராவார்.

4. 'சி' க்கு 'உ'-இடமிருந்து வரவேண்டிய கடன பாக்கிக்காக, 'சி' 'உ'-வின சொத்தை எடுததுக் கொள்ளவிருககிறார். இச் சூழ்நிலையில், 'சி' அச்சொத்தை எடுததுககொளவதைத் தடுதது, அவருக்கு இழப்பை ஏறபடுத்தும் எண்ணத்தில 'உ' தம் உடைமைகளை அழிககிறார். 'உ' சொததழிப்புக் குற்றம் இழைத்தவராவார்.

5. காப்புறுதி செய்தவர்களுக்கு இழப்பு ஏற்படுத்தும் உட்கருத்துடன காப்புறுதி செய்யப்பட்ட கப்பலைத் தம்மிச்சையாகக் கைவிடுவது, சொத்தழிப்புக் குறறமாகும்.

6. கப்பல் ஒன்றின அடைமானத்தின்பேரில் கடன் கொடுததிருககும் 'மு' விற்கு, 'ப' நேர்மை

யறற முறையில் இழப்பு ஏற்படுத்தும் உட்கருத்துடன் அக்கப்பலைக் கைவிட்டுவிடுவது, சொத்தழிப்புக் குற்றமாகும்.

7. 'ஏ',-க்கும் 'ஐ'க்கும் சொந்தமான குதிரை ஒன்றை, 'ஏ' 'ஐ'-க்கு இழப்பு ஏற்படுத்தும் உட்கருத்துடன் சுட்டுக் கொன்றுவிடுகிறார். 'ஏ' சொத்தழிப்புக் குற்றம் இழைத்தவராவார்.

8. 'ஓ' என்பவரது பயிருக்குச் சேதத்தை விளைவிக்கும் உட்கருத்துடன் அவர் பயிர் நன்கு விளையக்கூடும் என்று அறிந்து, 'ஔ' 'ஓ' - க்குச் சொந்தமான நிலத்தில் தம் கால்நடைகளை நுழைய விடுகிறார். 'ஔ' சொத்தழிப்புக் குற்றம் இழைத்தவராவார்.

**தண்டனை**: சொத்தழிப்புச் செய்கின்ற எவரும் மூன்று திங்கள் வரை நீடிக்கக் கூடிய ஒரு கால அளவுக்குச் சிறை அல்லது தண்டத்தொகை அல்லது அவை இரண்டும் விதிக்கப்பட்டுத்தண்டிக்கப்படுவார்.

சொத்தழிப்புக் குற்றம் செய்து, அதனால் ஐம்பது ரூபாய் அல்லது மேற்பட்ட அளவுக்குச் சேதத்தை விளைவிக்கிற எவரும், இரண்டாண்டுகள் வரை நீடிக்கக்கூடிய ஒரு கால அளவுக்குச் சிறை அல்லது தண்டத்தொகை; அல்லது அவை இரண்டும் விதிக்கப்பட்டுத் தண்டிக்கப்படுவார்.

பத்து உரூபாய் அல்லது மேற்பட்ட மதிப்புள்ள விலங்கு அல்லது விலங்குகளைக் கொன்றோ நஞ்சிட்டோ ஊனமாக்கியோ பயனற்றதாகச் செய்தோ சொத்தழிப்புச் செய்யும் எவரும், இரண்டாண்டுகள் வரை நீடிக்கக்கூடிய ஒரு கால அளவுக்குச் சிறை அல்லது தண்டத்தொகை அல்லது அவை இரண்டும் விதிக்கப்பட்டுத் தண்டிக்கப்படுவார்.

எந்தப் பெறுமானமேனும் உடைய யானை, ஒட்டகம், குதிரை, கோவேறு கழுதை, எருமை, காளை, பசு அல்லது எருது எதையும், அல்லது ஐம்பது உரூபாயும் அதற்கு மேற்பட்ட பெறுமானமுள்ளதுமான வேறு விலங்கு எதையும் கொன்றோ நஞ்சிட்டோ ஊனமாக்கியோ பயனற்றதாகச் செய்தோ சொத்தழிப்புச் செய்கிற எவரும், ஐந்தாண்டுகள் வரை நீடிக்கக்கூடிய ஒரு கால அளவுக்குச் சிறை அல்லது தண்டத்தொகை அல்லது அவை இரண்டும் விதிக்கப்பட்டுத் தண்டிக்கப்படுவார்.

நீர்ப்பாசன அமைப்புகளுக்குக் கேடு செய்தல், அல்லது நீரின் போக்கைச் சட்டவிரோதமாகத் திருப்பிவிடும் வகையில் சொத்தழிப்புக் குற்றம் இழைக்கின்ற எவரும், ஐந்தாண்டுகள் வரை நீடிக்கக் கூடிய ஒரு கால அளவுக்குச் சிறை அல்லது தண்டத் தொகை அல்லது அவை இரண்டும் விதிக்கப்பட்டுத் தண்டிக்கப்படுவார்.

போக்குவரத்துக்குரிய பொதுசசாலை, பாலம், ஆறு, வாய்க்கால் எதையும் கடக்க முடியாதபடி கேடு செய்யும் வகையில் சொத்தழிப்புக் குற்றம் இழைக்கின்ற எவரும், ஐந்தாண்டுகள வரை நீடிக்கக் கூடிய ஒரு அளவுக்குச் சிறை அல்லது தண்டத் தொகை அல்லது அவை இரண்டும் விதிக்கப்பட்டுத் தண்டிக்கப்படுவார்.

பொதுக் கழிவுநீருக்குச் சேதம் ஏற்படுத்தும் வகையில், அதனை வெள்ளப்பெருக்கெடுத்து ஓடச் செய்தல அல்லது அதன் ஓட்டத்தைத் தடுத்தல் மூலம் சொத்தழிப்புக் குற்றம் இழைக்கின்ற எவரும், ஐந்தாண்டுகள் வரை நீடிக்கக்கூடியஒருகால அளவுக்குச் சிறை அல்லது தண்டத்தொகை அல்லது அவை இரண்டும் விதிக்கப்பட்டுத் தண்டிக்கப்படுவார்.

கலங்கரை விளக்கம் அல்லது கடற்குறியாகப் பயன்படுத்தப்படுகிற வேறு விளக்கு, மிதவை அல்லது வேறு பொருள் எதனையும் அழிப்பது, நகர்த்துவது, பயன்குன்றச் செய்வது போனற ஏதேனும ஒரு செய்கையால், சொத்தழிப்புக் குற்றம் இழைககினற எவரும், ஏழாண்டுகள வரை நீடிக்கக கூடிய ஒரு கால அளவுக்குச் சிறை அல்லது தணடத்தொகை அல்லது அவை இரண்டும் விதிக்கப்பட்டுத் தண்டிக்கப்படுவார்.

ஒரு பொது ஊழியரது அதிகாரத்தால் நாட்டப்பட்ட நிலக்குறியை அழித்தல் அலலது நகர்த்துதல் அல்லது அதன் பயன்பாட்டைக் குறைத்தல் மூலம் சொத்தழிப்புக் குற்றம் இழைக்கினற எவரும், ஓராண்டு வரை நீடிக்கக்கூடிய ஒரு கால அளவுக்குச் சிறை அல்லது தணடத்தொகை அல்லது அவை இரண்டும் விதிக்கப்பட்டுத் தண்டிக்கப்படுவார்.

எந்தச் சொத்திற்காவது நூறு உரூபாய் அல்லது மேற்பட்ட வகையில், சொத்து வேளாணமை மகசூல தொடர்புடையதாய்இருக்கும்போது, பத்து உரூபாய் அல்லது மேற்பட்ட வகையில் தீயால் அல்லது வெடிபொருள் எதனாலும் சேதத்தை விளைவிக்கும் உட்கருத்துடன், சொத்தழிப்புக் குற்றம் இழைக்கின்ற எவரும், பத்து ஆண்டுகள் வரை நீடிக்கக்கூடிய ஒரு கால அளவுக்குச் சிறைத் தண்டனை விதிக்கப்பட்டுத் தண்டிக்கப்படுவார்; மேலும் அவரைச் சிறைத் தண்டனையுடன் தண்டத்தொகை செலுத்துமாறும் விதிக்கலாம்.

வழிபாட்டிடம் அல்லது மக்கள் வசிக்கும் ஓர் இடம் அல்லது உடைமைகளைப் பாதுகாப்பாக வைப்பதற்குப் பயன்படுத்தப்படும் சாதாரண ஓர் இடம் எதற்கும் தீயினால் அல்லது வெடிபொருள எதனாலும் அழிவை விளைவிக்கும் உட்கருத்துடன், சொத்தழிப்புக் குற்றம் இழைக்கின்ற எவரும், பத்து ஆண்டுகள் வரை நீடிக்கக்கூடிய ஒரு கால அளவுக் குச் சிறைத்தண்டனை விதிக்கப்பட்டுத் தண்டிக்கப் படுவார். மேலும் அவரைச் சிறைத்தணடனையுடன் தண்டத் தொகை செலுத்துமாறும் செய்யலாம்.

மேல் தளமுள்ள கலம் எதையும் அல்லது இருபது கண்டி (Ton) அல்லது மேற்பட்ட சுமை கொள்ளும் கலம் எதையும் அழிக்கும் அல்லது பாதுகாப்பற்ற தாகச் செய்யும் உட்கருத்துடன், சொத்தழிப்புக் குற்றம்இழைக்கின்ற எவரும், பத்து ஆண்டுகள வரை நீடிக்கக்கூடிய ஒரு கால அளவுக்குச் சிறைத் தண் டனை விதிக்கப்பட்டுத் தணடிக்கப்படுவார். மேலும் அவரைத் தண்டத்தொகை செலுத்துமாறும் செய்ய லாம். இதே குற்றத்தைக் குற்றவாளி தீ அல்லது வெடிபொருளால் செய்திருக்கும்போது, அல்லது செய்ய முயற்சிசெய்திருக்கும்போது, ஆயுட்காலச் சிறை அல்லது பத்தாண்டுகள் வரை சிறைத் தண்டனை விதிக்கப்பட்டுத் தண்டிக்கப்படுவார். மேலும் அவரைத் தண்டத்தொகை செலுத்துமாறும் செய்யலாம்.

ஒரு கலத்திலுள்ள பொருளைத் திருடுதல் அல்லது நேர்மையற்ற வழியில் கையாடல் செய்யும் உட்கருத்துடன் தரைதட்ட வைக்கின்ற எவரும், பத்து ஆண்டுகள் வரை நீடிக்கக்கூடிய ஒரு கால அளவுக்குச் சிறைத் தண்டனை விதிக்கப்பட்டுத் தண்டிக்கப்படுவார். மேலும் அவரைத் தண்டத் தொகை செலுத்துமாறும் செய்யலாம்.

எவருக்கேனும் மரணம் அல்லது காயம் அல்லது சட்டத்திற்குப் புறம்பான தடை எதையும் விளைத்த லுக்காக முன்னேற்பாடு அல்லது அதற்கான அச்சத்தை விளைவித்து, பிறகு சொத்தழிப்புக் குற்றத்தை இழைக்கின்ற எவரும், ஐந்தாண்டுகள் வரை நீடிக்கக் கூடிய ஒரு கால அளவுக்குச் சிறைத் தண்டனை விதிக்கப்பட்டுத் தண்டிக்கப்படுவர். மேலும் அவரைத் தண்டத்தொகை செலுத்துமாறும் செய்யலாம். பு.வே.

**சொத்து:** சொத்து என்பது ஒருவர் முழுமை யாகத் தாமே உரிமை கொண்டிருக்க கூடிய ஒன்று. அது பேரத்திற்கும் விற்பனைக்கும் உட்பட்டது. அது வணிக நற்பெயர், வாணிகக் குறிகள் மற்றும் ஆக்கப் பொருள் உரிமை, ஏட்டு நிலுவைகள் ஆகியவற்றைப் பயன்படுத்தும் உரிமங்கள் வாங்குவதற்கான விருப் புரிமை, காப்புரிமை மற்றும் ஓர்ஒப்பந்தத்தின் கீழான மற்ற உரிமைகள் ஆகியவற்றை உள்ளடக்கும் என்ப தாக ஆல்சுபரியின் இங்கிலாந்து நாட்டுச் சட்டங் களில் சொத்திற்கு விளக்கம் தரப்பட்டுள்ளது.

சொத்து என்பது மூன்று வகைப் பண்புகளை உள்ளடக்குவதாகும். ஒரு பொருள் சொத்தென அமைய வேண்டுமெனில் அது குறித்துக் குறிப்பிட்ட உரிமை இருக்க வேண்டும்.

சொத்துரிமை மாற்றுச் சட்டம் (கி பி 1882- Transfer of Property Act, 1882) ஆள்களிடையே யான சொத்துகளின் மாற்றங்களைப் பற்றிய பொதுக் கோட்பாடுகளையும், விற்பனை, அடை மானம், குத்தகை, பரிமாற்றம், கொடை, தொடர் தகு பாத்தியங்கள் போன்ற குறித்த வகை உரிமை மாற்றங்களைப் பற்றிய விதிகளையும் எடுத்துரைக் கும் சட்டம். இச்சட்டத்தில் 'சொத்து' என்ற சொல் விளக்கப்படவில்லை சொத்து என்பது பரந்த பொருள் தரும்படி பயன்படுத்தப்பட்டிருக்கிறது. ஒருவர் கொண்டிருக்கக் கூடிய எவ்வகை நலங்களை யும் இது உள்ளடக்கும். எனவே, ஒருவரது உடைமை யில் இருக்கின்ற பொருளை மட்டும் அது குறிக்கா மல், அப் பொருளின் மீது அவர் கொண்டிருக்கும் கட்டுப்பாட்டினை, அல்லது ஒரு முழு உரிமை அல்லது அரைகுறை உடைமைக்கான உரிமையைக் குறிகும் வகையில் இது பொருள் படுகின்றது இதன் படி, அடைமான மீட்சியுரிமை (Right of redemption) தொடர்தகு பாத்தியம், எஞ்சுரிமை, பதிப்புரிமை, வாணிகக் குறி முதலியன சொத்து எனக் கருதப் படும்.

சொத்தினை உடைமையுரிமையுடன் (Absolute Ownership) குழப்பிக் கொள்ளக் கூடாது. உடைமை யுரிமை என்பது பல்வகை உரிமைகளின் குவிப்பாகும். பல்வேறு உரிமைகளையும், நலன்களையும் அது ஒருங்கே கொண்டுள்ளது. அது பல்வேறு ஆள்களிட மும் இருக்கலாம். ஒரு சொத்துரிமை மாற்றம் என்பது ஒருவர் முழுமையை அல்லதுஅதிலுள்ள ஏதாவதொரு உரிமையை அல்லது முழுவுடைமையை அல்லது நலன்களை மாற்றுவதாகும். எனவே, சொத்து என்பது ஒருவர் தமதாக்கிச் சொந்தமாக்கிக்கொள்ளக கூடிய எத்தகைய நலன்களையும் குறிக்கக் கூடிய சொல்லாகவே பொதுவாகப் பயன்படுத்தப் படுகின் றது.

சொத்தின் வகைகள் பொதுவாக பின்வருமாறு அசையாச் சொத்து (Immovable Property), அசை

யும் சொத்து (Movable Property) எனவும், தொட்டுணரத் தக்க சொத்து (Tangible Property) தொட்டுணர முடியாச் சொத்து (Intangible Property) எனவும், பருப்பொருள் சொத்து (Corporeal Property) நுண்பொருள் சொத்து (Incorporeal Property) எனவும் பிரிக்கப்படும். ஆங்கிலச் சட்டத்தில் சொத்து, நிலவுடைமைச் சொதது, இயங்குடைமைச் சொத்து (Real and Personal Property) எனப் பகுக்கப்படுகின்றது.

'அசையாச் சொத்து' என்பது 'நிலம்', நிலந்தரும் பயன்கள, நிலத்தோடு நிலையாகப் பொருத்தப்பட்ட பொருள்கள் ஆகியவற்றை உளளடக்கும் என்பதாகப் பொது விளக்கச் சட்டத்தில் விளக்கப்பட்டுள்ளது. இந்தியப் பதிவுச் சட்டத்தில மேலும் அதிக விளக்கம் தரப்பட்டுள்ளது. இதன்படி அசையாச் சொத்து என்பது நிலம், கட்டடங்கள், மரபு வழிப்படிகள், வழி, ஒளி, தோணித்துறை, மீன்பிடித்தல் முதலிய வற்றிற்கான உரிமைகள், நிலந்தரும் பயன்கள், நிலத்தோடு பொருத்தப் பட்டிருப்பவைகளுடன், நிலையாகப் பதிக்கப்பட்ட பொருள் ஆகியவற்றை உள்ளடக்கும். ஆனால் நிற்கும் வெட்டு மரம் (Standing Tree), வளரும் பயிர் அல்லது புல் ஆகிய வற்றை உள்ளடக்காது அசையாச் சொத்தினைத் தவிர்த்து மீதி இருப்பவை அசையும் சொத்தாகும்.

தொட்டுணரும், தொட்டுணர முடியா அசையாச் சொத்துக்களின் வேறுபாடு ஆங்கிலச் சட்டத்திலுளள 'பருப் பொருள் மரபுரிமைச் சொத்து (Corporal hereditament) நுண்பொருள் மரபுரிமைச் சொத்துக்கள் (Incorporeal hereditament) என்பவற்றின் வேறுபாட்டினைப் போன்றது. தோஃபாம் (Topham) என்னும் நூலாசிரியர், 'பருப் பொருள் மரபுரிமைச் சொத்து என்பது உடைமையிலுள்ள நிலத்திலுள்ள ஒரு நலன் ஆகும். அதாவது, உடைமையிலுள்ள நிலத்தினைத் துய்ப்பதற்கு அப்போதுள்ள ஓர் உரிமையாகும். ஒரு நுண்பொருள் மரபுரிமைச் சொத்து என்பது, மற்றொருவரின் உடைமையிலுள்ள நிலத்தின் மேலுள்ள ஓர் உரிமையாகும். அது உடைமைக்கான எதிர்கால உரிமையாகவும் இருக்கலாம் அல்லது மற்றொருவரின் உடைமையிலுள்ள நிலத்தினை ஒரு தனி நோக்கத்திற்காகப் பயன்படுத்தும் உரிமையாகவும் இருக்கலாம்' என்று கூறியுளளார். நிலம், நிலத்தோடு நிலையாகச் சேர்ந்து நிற்கும் பொருள்கள், அவற்றுடன் நிலையாகப் பொருத்தப்பட்ட பொருள்கள் ஆகியவை தொடு உணர்ச்சியால் உணரக்கூடியவை. எனவே, அவை தொட்டுணரும் அசையாச் சொத்து ஆகும். ஆனால், நிலந்தரும் பயன்கள தொட்டுணர முடியாதவையாக இருக்கலாம். நிலத்திலுள்ள ஒரு பிரிக்கப்படாத பங்கு, ஒரு தொட்டுணரும் அசையாச் சொத்தாகும். ஏனெனில் உரிமையாளரிடம் கூட்டு மற்றும் நேரடி உடைமையிலிருக்கின்றது. ஆனால், ஒரு வசதியுரிமை அல்லது மீன் பிடிக்கும் உரிமை போன்றவை தொட்டுணர முடியாத அசையாச் சொத்தாகும். ஏனெனில் இந்த உரிமைகள் வேறொருவரின் சொத்தின் மீதும் செலுத்தப்படுகின்றன. மேலும் தொட்டுணர முடியாதவை ஆகும்.

சொத்தினைக் கீழ்க் காணுமாறும் வகைப்படுத்தலாம். 1) கணகளுக்குப் புலப்படும் பருப்பொருள்கள் (Corporeal Property); பணம், நகை, கால்நடைகள் போன்ற சொத்துகளையும் நிலம், வீடு, போன்ற அசையாச் சொத்துகளையுமஇவை உளளடக்கும். 2) கண்களுக்குப் புலப்படாத ஆனால், சட்டத்தினால் ஏற்றுக் கொள்ளப்பட்ட நுண்பொருள் சொத்துக்கள் (Incorporeal Property); அது வாணிக நற்பெயர் (Good will), புனை பொருள் ஆக்குரிமை, வாணிகக் குறி (Trade mark), அடைமான மீட்புரிமை போன்றவற்றை உள்ளடக்கும்.

சொத்து என்பது அதனைச் சுதந்திரமாகப் பயன்படுத்துதலையும் நுகர்தலையும், மற்றும் அதனை மாற்றுவதற்கான உரிமைகளையும் கொண்டுளளது. அதனை, ஒருவர் அழிக்கவோ தஙக வைத்துக் கொள்ளவோ மாற்றவோ செய்யலாம். விற்பனை, இறங்குரிமை, எதிர் அனுபோகம், கொடை போன்ற வற்றின் மூலம் பெறலாம்.

இந்திய அரசமைப்புச் சட்டத்தின் 19 (1) (f)-இன்படி சொத்து என்பது, அறிகுறி அடையாளங்கள் அல்லது சொத்தியல் உரிமைகள் (Proprietary Rights) ஆகிய சிறப்பியல்புகள் கொண்ட, ஏறறுக் கொளளப்பட்ட எல்லாவகை நலங்களையும் உளளடக்கும். இப்போது அரசமைப்புச் சட்டத்தின் கீழ்ச் சொத்திற்கான உரிமை, அடிப்படை உரிமையன்று.

சொத்துரிமை நான்கு வழிகளில் பிறக்கின்றது. அவையாவன: 1) உடைமை (Possession), 2) நீளுடைமை (Prescription) 3) உடன்பாடு (Agreement) 4) இறங்குரிமை (Inheritance).

சொத்தினைப் பாதுகாக்க மூன்று விதிகள் பின்பற்றப்படுகின்றன. அவையாவன: 1) எவரும் மற்றவரின் சொத்தினைப் பறிப்பது அல்லது அதனை நுகருவதை இடையூறு செய்வது கூடாது. 2) அடுத்தவருக்கு ஊறு விளைவிககா வண்ணம், ஒவ்வொருவரும் தங்கள் சொந்த சொத்துகளை அக்கறையுடன் கவனிததுக் கொள்ள வேண்டும். 3. அண்டையரின் சொத்திற்கு

இழப்பு ஏற்படா வண்ணம் எல்லோரும் தங்கள சொத்தினைப் பயன்படுததுதல் வேண்டும். ஆ.ச

**சொத்துகளைச் சரிபார்த்தல்**: இருபபு நிலைக் குறிபபில் காணப்படும சொத்துகளையும், பொறுப்புகளையும் தணிக்கையாளர் அவசியம் சரி பார்கக வேண்டும். காரணம கொள் முதல் செய்யப் பட்ட சொத்து விற்கப்பட்டிருககலாம்; அலலது அடைமானம் வைககப்பட்டிருக்கலாம். எனவே கணக்கு தயாரித்த நாளனறு சொத்துகள உளள படியே இருககினறனவா என்று பார்ப்பது அவசிய மாகும். நேரில் செனறு பார்ததோ சொத்துரிமையை மதிப்பீடு செய்தோ அனைதது விவரஙகளும் முறை யாக அமைந்துளளனவா என உறுதி செய்வதுதான் சரி பாாத்தலாகும்.

இதில் தணிககையாளர் கீழ்க்காணுபவைகளைச செய்ய வேணடும. பேரேட்டுக் கணககுகளை இருபபு நிலைக் குறிபபுடன ஒப்பிட வேணடும். இருப்பு நிலைக் குறிபபில் காணபபடும் சொத்துகள உணமை யிலேயே இருக்கினறனவா என்று சரி பார்க்க வேண டும். நிறுவனத்தின தொழிலுக்காகச் சொதது வாங் கப்பட்டதா என்று பார்க்க வேணடும். சொததுகளின மதிப்புச் சரியாகச் செய்யபபட்டுளளதா எனறு கவ னிக்க வேணடும சொததுரிமை யார்மீதுள்ளது எனப பார்க்க வேணடும சொத்துகள் பற்றுப் பொறுபபு அல்லது அடைமானம வைககப்படடுள்ளனவா எனப் பார்கக வேண்டும். இயன்ற வரை இருப்பு நிலைக் குறிப்பு நாளனறு சொததுகளைப் பாாவையிட வேண டும். நடைமுறைச் சொததுகளை அவசியம பார்வை யிட வேணடும. பணம, பிணையஙகள போனறவை களை ஒரே சமயத்தில பாாவையிடுவது அவசியம். காரணம இவைகளை மீணடும காட்டி ஏமாறறுவ தைத் தடுகக வேணடும். சொத்துகள மீது விலலங் கங்கள் உணடா இல்லையா என்று அறிய மூல உரிமை ஆவணஙகளை வாங்கிப் பார்க்க வேணடும். அப்பத்திரம வஙகி அலலது வழக்கறிஞாகளிமிருந தாலும அவர்களிடம செனறு வில்லஙகம் உணடா இல்லையா என்பதற்குச் சானறிதழ் ஒன்று வாஙக வேண்டும். இறுதியாகத் தணிக்கையாளர் இவ் வேலைக்கு நிறுவன அலுவலர்களைப் பயனபடுத்தக் கூடாது.

ஒரு இருப்பு நிலைக் குறிப்பில் பல வகையான சொத்துகள உள்ளன. அவைகள் அனைத்தையும் இங்கு விவரிக்க இயலாது. எனவே, சில முக்கிய சொத்துகளின சரிபார்த்தல் மட்டும் இங்குக் கொடுக் கப்பட்டுள்ளது.

**தொழிற் பொறிகள்**: இயன்ற வரை தணிக்கை யாளா தொழிற் சாலைக்குச் சென்று தொழிற் பொறிகளையும் இயந்திரங்களையும் சரிபார்க்க வேணடும். அவற்றின் மதிப்பு கணக்கேட்டில் இருப்பு நிலைக் குறிப்பில உள்ளது போல் உளளதா எனறும் பாாக்க வேண்டும். தொழிற் பொறிப் பதிவேடு ஒனறு தொடங்கி, அதில் இவற்றின் விவரம் குறிக்கப்பட வேணடும். புதிய இயந்திரம் கொளமுதல் செயயப் பட்டிருந்தால் அல்லது விற்கப்பட்டிருநதால் அதைச் சரக்குப் பட்டியல், ஒப்பந்தம், பற்றுசசீட்டு போன்ற வைகளோடு ஒப்பிட்டுப் பார்க்க வேணடும். இவவாறு செய்யும்போது ஏற்படும் இலாப-நட்டங்கள் கணக் கில் காட்டபபட்டுள்ளனவா என்று தணிக்கையாளர் பார்க்க வேணடும்.

**நிலமும் கட்டடமும்**: தணிக்கையாளர் இவை களின மூல உரிமை ஆவணங்களைப் பார்த்து யார் பேரில் உள்ளது என்று சரி பார்கக வேணடும. இவைகளின் சொத்துரிமை செலலத் தக்கது எனச் சட்ட ஆலோசகரிடமிருநது சான்றிதழ பெறவேண டும். தணிக்கையாணடில் கூடுதல் சொத்து கொள முதல் செய்யப்பட்டிருநதாலும் அல்லது விற்கப்பட்டி ருந்தாலும் அவைகளின் இலாபம் அல்லது நட்டம் கணக்கில் காட்டப்பட்டுளளதா என்று பார்க்க வேண டும. நிலமும் கட்டடமும் அடைமானம் வைக்கப்படு டிருந்தால் அடைமானம் பெற்றவரிடமிருந்து மூல உரிமை ஆவணம் அவரிடம் உளளதாகச சான்றிதழ் பெறவேணடும். கட்டிடும் கட்டடம்பாதிநிலையிலிருந தால்அதன்பறறு இருப்பைப் பொறியாளர் சான்றிதழ, ஒப்பந்தக்காரரின பற்றுசசீட்டு போனறவைகளைக் கொணடு எவ்வளவு செலுத்தப்பட்டுள்ளது எனறு சரி பார்கக வேணடும. இவைகள் வாடகைககு அலலது குத்தகைக்கு எடுக்கப்பட்டிருந்தால அதன ஆவணங களைப் படித்துச செலுத்தப்பட வேணடிய தொகை எவ்வளவு எனறு பார்கக வேணடும். குத்தகைக்கு எடுக்கப்பட்ட சொத்தில் ஒரு பகுதி உள-வாடகைககு விடபபட்டிருந்தால அந்த ஒப்பந்தத்தையும் பரி சீலிக்க வேணடும். கட்டடத்தை வாடகைக்கு எடுத் திருந்தால வாடகை செலுத்திய கடைசிப் பற்றுச் சீட்டைச் சரிபார்க்க வேணடும்.

**மனையணிகள்**: சரக்கு விலைப்பட்டியல் துணைக் கொணடு தணிககையாளர் இவற்றைச் சரிபாாக்க வேணடும். வணடிச் சத்தம்,தூக்குக் கூலி போனறவை களை இக் கணக்கில் பற்று வைக்க வேணடும். நடப் பாண்டில் செய்யப்பட்ட கொள் முதல், விற்பனை போன்றவைகளையும், மனையணிகள களவு போகா மலிருக்கத் தக்க ஏற்பாடு செய்யப்பட்டிருக்கிறதா என்பதையும் கவனிக்க வேண்டும். ஒவ்வொரு பொரு

ளும் எண்ணப்படவேண்டும். உடைந்து விட்ட அல்லது பயனற்ற பொருள்கள் கணக்கிலிருந்து பொறுப்பு வாய்ந்த அதிகாரியால் நீக்கப்பட்டுள்ளனவா என்று பார்க்க வேண்டும்.

**பதிப்புரிமை**: பதிப்புரிமை என்றால் புத்தகம் அல்லது நூல்களை வெளியிடும் முற்றுரிமையாகும். நூலாசிரியர் வாழ்நாள் முழுதும், இறந்து 50 ஆண்டுகள் வரையும் இது செல்லுபடியாகும். இதற்குரிய ஆவணங்களைப் பார்த்துப்பதிப்புரிமை நிபந்தனைகளையும், செலுத்தப்பட்ட பணத்தையும் தணிக்கையாளர் சரிபார்க்க வேண்டும்.

**காப்புரிமை, வணிகக் குறி**: இவை வழங்கப்பட்டிருக்கும் ஆவணங்களைத் தணிக்கையாளர் பார்வையிட வேண்டும். இவைகள் வேறொருவரிடமிருந்து வாங்கப்பட்டிருந்தால் உரிமைமாற்ற ஆவணம் வாடிக்கையாளரின் அல்லது கட்சியரின் பெயரில் மாற்றம் செய்யப்பட்டுப் பதிவு செய்யப்பட்டுள்ளதா என்று பார்க்க வேண்டும். ஒருவர் பல காப்புரிமைகளையும், வணிகக் குறிகளையும் பெற்றிருந்தால் அவைகளை வரிசைப்படுத்தி அவைகளின் விவரம், பதிவு எண், பதிவு செய்யப்பட்ட நாள் போன்றவைகளைக் காட்டும் பட்டியல் ஒன்றைத் தயார் செய்யவேண்டும். புதுப்பிக்கும் ஆண்டுக் கட்டணம் கால வரம்பிற்குள் செலுத்தப்பட்டுள்ளதா என்று பார்க்க வேண்டும். மேலும், அக்கட்டணத்தை நடைமுறைச் செலவாகக் கொள்ள வேண்டும். அவைகள் புதுப்பிக்கப் படாமல் காலாவதியான பின்னரும் அனுமதிக்கப்பட்டிருந்தால் அதற்கு இயக்குநர் அவைத் தீர்மானம் உள்ளதா என்று பார்க்க வேண்டும்.

**ஏட்டுக் கடன்கள்**: இருப்பு நிலைக் குறிப்பில் பற்பல கடனாளிகள் என்று இவைகள் காட்டப்படுகின்றன. இவைகளைப் பெறக் கூடியவைகளா என்றும், ஐயக் கடன்களுக்குப் போதிய ஒதுக்குச் செய்யப்பட்டுள்ளதா என்றும் தணிக்கையாளர் பார்க்க வேண்டும். பிணையம் உள்ள கடன்கள் நல்ல கடன்கள் என்றும், அவ்வாறு பிணையம் இல்லாமல் இருப்பவை வாரா-ஐயக் கடன்கள் என்றும் சொல்லப்படுகின்றன. இவைகளிலிருந்து ஒதுக்குக் கழிக்கப்பட வேண்டும். இயக்குநர்கள் தனியாகவோ மற்றவர்களுடன் சேர்ந்து கூட்டாகவோ தர வேண்டிய கடன்களைத் தனியாகக் காட்டவேண்டும். ஒரே மேலாண்மையுள்ள பிற நிறுமக் கடன்களை அவை உண்மையான கடன்களா என்று தணிக்கையாளர் பரிசோதனை செய்யவேண்டும்.

**வணிக நற்பெயர்**: வணிக நற்பெயர் கண்களுக்குத் தெரியாத, ஆனால் நிறுமத்தின் மதிப்பைக் காட்டும், சொத்தாகும். இதன் விலை அறிந்துகொள்ள, வாங்கல் ஒப்பந்தத்தை அல்லது கூட்டாண்மை ஆவணத்தைத் தணிக்கையாளர் பரிசீலிக்க வேண்டும். வணிக நற்பெயர் (Good Will) சரியான முறையில் கணக்கிடப் பட்டுள்ளதா என்று பார்க்க வேண்டும். நிறுமக் கணக்கேடுகளில் இதன் மதிப்பைக் கூடுதலாக்கி எழுதுவதைத் தணிக்கையாளர் அனுமதிக்கக்கூடாது.

இதே போல் பிற சொத்துகளாகிய உதிரிக் கருவிகள் (Loose Tools), சரக்கிருப்பு (Stock-in-Trade), கடன்கள் (Loans), வரவுக்குரிய மாற்றுச் சீட்டு (Bills receivable), முதலீடுகள் (Investments), கையிலுள்ள பணம் (Cash in hand), வங்கியிலுள்ள பணம் (Cash at Bank) போன்றவற்றையும் தணிக்கையாளர் சரி பார்க்க வேண்டும். இவ்வாறு சரிபார்க்கத் தவறினால் அதனால் நிறுமத்திற்கு ஏற்படும் நட்டத்திற்கு அவர் பொறுப்பாளியாகிறார். கே.என்.இரா.

**துணை நூல்கள்:**

**Spicer and Pegler**, Practical Auditing, H.F.L. Publications, London, 1983.

**Tandon, B.N**, A Hand book of Practical Auditing, S. Chand and Co., New Delhi, 1976.

*சொத்துகளை மதிப்பிடல்*: ஒரு நிறுவனத்தின் உண்மையான நிதி நிலையை, இருப்பு நிலைக் குறிப்புக் காட்ட வேண்டும் என்பதே மதிப்பீடு செய்வதன் நோக்கமாகும். ஆனால், இருப்பு நிலைக் குறிப்பு ஒரு நிறுவனத்திலுள்ள சொத்துகளின் மதிப்பை மதிப்பிட்டுக் காட்டவேண்டும்.

1. **தொழிற்பொறியும் இயந்திரமும்**: தேய்மானத்திற்கும், வழக்கொழிதலுக்கும் (Obsolescence)போதுமான அளவு ஒதுக்கீடு செய்ய வேண்டும். தேய்மானம் போக, அடக்க விலைக்கு மதிப்பிட வேண்டும். இயந்திரங்களின் உழைப்புக் காலத்தைக் கணக்கிட்டுத் தேய்மானத்தை அக்கால அளவிற்குப் பரப்பி, கால முடிவில் மீதமுள்ள மதிப்புக்கு, அவற்றின் மதிப்பு எழுதவேண்டும். இயந்திரங்கள் வாடகைக் கொள்முதல் அல்லது தவணை முறையில் வாங்கப்பட்டிருந்தால் இயந்திரத்தின் அடக்க விலையின் மீது தேய்மானம் கணக்கிடப்பட வேண்டும்.

2. **மனை அணிமுதலியன**: மனை அணிகள் (Furniture), பதிபொருள்கள் (Fittings) போன்றவை அதிக அளவுக்குத் தேய்வு அடையும். அலுவலகங்களை விடத் திரையரங்கு, உணவு விடுதிகள் போன்றவைகளில் பெருமளவுத் தேய்மானம் ஏற்படுகிறது. அத

னால் அத்தேய்மானம் கணக்கிடப்பட வேண்டும் பதி பொருள்களுக்குக் கழி மதிப்புக் (Scrap Value) கிடையாது

**3. நிலமும் கட்டடமும்:** தேய்மானம் நிலத்திற்குக் கிடையாது. அதன் மதிப்பு வாங்கிய விலையாகக் காட்டப்பட வேண்டும். எனவே, நிலத்திற்கும் கட்டடத் திற்கும் தனித்தனியாகக் கணக்கு வைக்கப்பட வேண் டும்.

கட்டடத்தின் மதிப்பை, அடக்க விலையிலிருந்து தேய்மானத்தைக் கழித்து வரும் தொகையாகக் கொள்ள வேண்டும். மூலதனச் செலவு ஏதாவது செய்யப்பட்டிருந்தால் அதையும் கட்டடத்தின் மதிப் பில் சேர்த்துக் கொள்ள வேண்டும். நிலம், கட்டடம் போன்ற சொத்தை விற்காவிடில் அவற்றின் மதிப் பைக் கூட்டி எழுதக் கூடாது. சொத்தின் மதிப்பை உயர்த்திக் காட்ட விரும்பினால் அத்தொகையை மூலதனக் காப்புக்கு (Capital Reserve) வரவு வைத்து இருப்புநிலைக் குறிப்பில் காட்ட வேண்டும். கட்டடம் பழுது பார்க்கப்பட்டிருந்தால் நடைமுறைச் செலவு என்றும், கட்டிடம் விரிவாக்கப்பட்டால் மூலதனச் செலவு என்றும் எழுத வேண்டும்.

**4. காப்புரிமை:** காப்புரிமை 16 ஆண்டுகளுக்குச் சட்டப்படி அளிக்கப்படுகிறது. எனவே காப்புரிமையை (Patents) அதற்குள் எடுத்துவிட வேண்டும். ஆயுட் கால முழுவதும் காப்புரிமையைத் தொடர்ந்து மதிப் பீடு செய்ய வேண்டும். எக்காரணத்தை முன்னிட்டும் காப்புரிமையின மதிப்பை உயர்த்தி எழுதக் கூடாது.

**5. பதிப்புரிமை:** பதிப்புரிமையின் காலம், ஆசிரியரின ஆயுட்காலம் வரையிலும அதற்குப் பிறகு 50 ஆணடு வரையிலும் நீடிக்கும. இருப்பு நிலைக குறிபபு நாளன்று பதிப்புரிமையின (Copy right) மதிப்பைத திரும்பவும் மதிப்பிடல் வேண்டும். ஏனெனில, நாள் கள் செல்லச் செல்ல மதிப்புக் குறைந்து விடுகிறது. விற்பனையாகாத நிலையில், அதன் மதிப்பைக கணக் கிலிருந்து எடுத்துவிட வேண்டும்.

**வாணிக இருப்புச் சரக்கு:** இருப்புச் சரக்கு நிலை யான சொத்து அன்று. மறு விற்பனை செய்யப்படும சொத்தாக இது விளங்குகின்றது. இச் சொத்துகளை அடக்கவிலை அல்லது சந்தை விலை ஆகியவற்றில் எது குறைவானதோ அவ்விலையின்படி மதிப்பிட வேண்டும். நட்டத்திற்குத்தொகை ஒதுக்க வேண்டும். ஆனால், இலாபம் ஈட்டுமுன் அது கிடைத்ததாகக் கணக்கு எழுத முடியாது. சரக்கின விலை வீழ்ச்சியுற் றால், அதன்படி சரக்கு மதிப்பீடு செய்யப்படவேண் டும். இருப்புச் சரக்கு (Stock) மிதக்கும் சொத்து. எனவே, அதை விற்றுக் கிடைக்கக் கூடிய தொகையை அதன் மதிப்பாகக் கொள்ள வேண்டும்.

**உந்து வண்டிகள்:** அடக்க விலையிலிருந்து தக்க அளவு தேய்மானம் கழித்து இருப்பு நிலைக் குறிப் பில் மதிப்பை எழுத வேண்டும். பழுது பார்த்தல போன்ற செலவுகளை நடைமுறைச் செலவாகக் கொள்ள வேண்டும். வாகனங்களை விற்கும் போதும் வேண்டாமென்று ஒதுக்கும் போதும் ஏற்பட்ட இலாப நட்டம், கணக்கில் கொணடு வரப்பட்டிருக்கிறதா என்று பார்க்க வேண்டும்.

**முதலீடுகள்:** பொறுப்புரிமை, நிறுவனத்தின அமைப்பு முறை ஏடு, செயல்முறை விதிகளைப் பொறுத்து முதலீடுகளின் மதிப்பு நிரந்தரமாகக் குறைந்து போனாலும் அதைப் பொருட்படுத்தாது அடக்கவிலைக்கு முதலீடுகள (Investments) மதிப்பிடப் பட வேணடும். முதலீடுகளை மிதக்கும் சொத்தாக அல்லது நடப்புச் சொத்தாகக் கொண்டிருந்தால அவற்றை அடக்கவிலை அல்லது சந்தை விலை ஆகிய வற்றில் எது குறைவானதோ அநத விலைக்கு மதிப் பிட வேணடும். முதலீடுகள அடக்கவிலைக்கு மதிப் பீடு செய்யப்பட்டுப் பிறகு அவற்றின் விலை நிரந்தர மாகக் குறைந்து போனால தேய்மானத்திற்கு வகை செய்தல வேண்டும். சந்தை விலை நிரந்தரமாகக் குறைந்த பின்னும் இருப்பு நிலைக் குறிப்பில் முதலிடு களின அடக்கவிலை மட்டுமே குறிக்கப்பட்டிருந்தால் இருப்புநிலைக் குறிப்பில் அவற்றின் நடப்பு நிலை யினைக் குறிப்பு (Note) மூலம் காட்ட வேண்டும்.

**அடக்க விலை:** அடக்கவிலை என்பதில் மூன்று கூறுகள் அடங்கியுள்ளன. அவை 1) மறு விற்பனை செய்யப்படும் பொருட்டுக் கொள்முதல் செய்யப் பட்ட சரக்கின் மீதான நேரடிச் செலவுகள், 2) கொளமுதல் செய்யப்பட்ட சரக்கினை இப்பொழு துள்ள உருவிலும் இடத்திலும் கொணடு வந்து சேர்க்க ஆன பிற நேரடிச் செலவுகள், 3) தொழி லைப் பொறுத்து மேற்செலவுகளில் நடைமுறைச் செலவாக எழுதப்படாது ஒதுககப்பட்ட பகுதி ஏதா வது இருப்பின் அப்பகுதிச் செலவு.

**அடக்கவிலை கணக்கிடும் முறை:** அடக்கவிலையைக் கணக்கிடப் பல முறைகள் உளளன. அவற்றுள் முக்கிய மான சிலமுறைகள கீழே தரப்பட்டுள்ளன.

**1. சராசரி அடக்க விலை:** இம்முறையில், ஆண்டு முழுவதும் கொளமுதல் செய்யப்பட்ட சரக்கு களில் அப்போதைய சராசரி விலையைக் கணக்கிட்டு அத்துடன் தொடக்க இருப்புச் சரக்கைக் கூட்டி விற் பனையைக் கழிக்க வேண்டும்.

**2. அலகு அடக்கவிலை (அ)உள்ள விலை:** ஒவ்வொரு பொருள் அல்லது பொருள் தொகுப்பு அல்லது சரக்குக் கட்டு அதனதன் தனி விலைப்படி மதிப்பிடப்படும். இந்த முறையை அதிக அளவு சரக்கிருப்பு இருககுமிடத்திலும், முடிவுறாப் பொருளாக இருக்குமிடத்திலும் பின்பற்ற இயலாது.

**3. திட்ட அடக்க விலை:** முனனரே தீாமானிக கபபட்ட தனி அலகு விலைப்படி (Cost per Unit) இருப்புச் சரககு மதிபபிடப்படுகிறது.

**4. முதல் உள் முதல் வெளி முறை:** முதல் உள முதல் வெளிமுறை அல்லது மு.உ.மு.வெ முறை (First in First out Method) என்பது முதலில் கொள முதல் செய்யப்பட்ட அல்லது பயனபடுத்தப்பட்ட இருப்புச் சரக்கு, கடைசியில வாங்கப்பட்ட சரக்கு என்ற அடிப்படையில் கணக்கிடுவது ஆகும்.

**5. கடைசி உள்முதல் வெளிமுறை:** சரக்கு இருப்பு முழுவதும முதலில கொளமுதல் செய்யபபட்ட விலைக்கு மதிப்பிடப் படுவது கடைசி உள்முதல் வெளி முறை (Last in First Method) அல்லது க.உ.மு.வெ. முறை எனப்படும். கடைசியில கொளமுதல் செயயப் பட்ட சரக்கு முதலில் விறகப்பட்டது எனறும், விற் பனையாகாது கிடக்கும இருப்பு முதன் முதலில் கொளமுதல் செய்யப்பட்டது என்றும் இம்முறையில் கருதப்படுகிறது.

**6. சரிக்கட்டப்பட்ட விற்பனை விலை:** சில்லறை வாணிகத்தில் இருப்புச் சரக்கு சரிக்கட்டப்பட்ட விறபனை விலை முறைப்படி பெருமளவில் மதிப் பிடப்படுகிறது. விற்கும் விலைக்கு இருப்புச் சரக்கு முதலில் மதிப்பிடப்பட்டு, பின்னர் அச்சரக்கின் மீதான இயல்பான மொதத இலாப இடைவெளிக்கு (Gross Profit Margin) ஈடான தொகை கழிக்கப்படு கிறது. மீதமுளள தொகையே இருப்புச சரககின மதிப்பாகும்.

**அடிப்படை இருப்பு முறை:** இந்த முறையின் படி எப்பொழுதும் குறிப்பிட்ட குறும அளவு இருப்பு வைத்திருக்கப்பட வேண்டும். ஆண்டுக்கு ஆணடு நிருணயிககப்படும் இயல்பான இருப்பின அளவு குறிப்பிட்ட விலைக்கு மதிப்பிடபபடுகிறது. குறும இருப்புக்குக் கூடுதலாக இருக்கும் சரக்கு அடகக விலை அல்லது சந்தைவிலை இவற்றில் எது குறை வானதோ அவ்விலைக்கு மதிப்பிடப்படும்.

**பொறுக்கி எடுப்பு முறை:** இம் முறையில் இருப்புச் சரக்கு ஒவ்வொன்றையும் தனித் தனியாக எடுத்து அதன் அடக்க விலை அல்லது சந்தை விலை இவற் றில் எது குறைவானதோ அவ் விலைக்கு மதிப்பிட வேணடும்.

**சொத்துகளின் சந்தை விலை.** சந்தை விலையைக் கீழ்க்காணும் இரு கோணங்களில் கணக்கிடலாம்.

**(1) மாற்று வைப்பு மதிப்பு:** இருப்பு நிலைக் குறிப்பு நாளனறு இருப்பாகவுள்ள சரக்கை வாங்கத் தேவைப்படும் தொகை அதன மாற்று வைப்பு மதிப் பாகும். அடக்கவிலையைக காட்டிலும் குறைவாக இருக்கும்போது மட்டுமே இவ்வகை மதிப்பீட்டு முறை கடைப்பிடிக்கப்படும்.

**(2) சந்தை மதிப்பு அல்லது நிகர விற்பனை மதிப்பு:** இருப்புச் சரககை விற்று, விற்பனையின் போது ஆன செலவைக் கழிதது மீதி வரும தொகை, 'சநதை மதிப்பு' எனப்படும்.

பலவகைச் சரககுகளை மதிப்பிடக் கீழ்க்காணும் முறைகள் பயன்படுத்தப்படுகின்றன.

**மூலப் பொருள்கள்:** மூலப் பொருள் என்பது சரக்கை உற்பத்தி செய்வதற்குப் பயனபடுத்தப்படும் பொருள ஆகும். இதை வாங்கிய விலை, வணடிச்சத் தம், வரி முதலியவற்றைச் சேர்த்து ஆலைககுப பொருளைக் கொண்டு வரும செலவு உட்பட அடக்க விலையெனக் கணக்கிடப்படுகிறது. சந்தை விலையை விட அதிகமான விலைக்கு மதிப்பிடக் கூடாது.

**பகுதி முடிவுற்ற சரக்குகள்:** இச் சரககுகள் தயாரித்து முடிவுறாத நிலையில் அடக்க விலைககு மதிப்பிடப்படுகின்றன. அடக்கவிலை என்பது மூலப் பொருள் விலையுடன் நேரடிச் செலவுகளும், குறிப் பிட்ட விழுக்காட்டுத் தயாரிப்புச் செலவுகளும் கூட்டப் பட்டுக் கிடைக்கும் தொகையாகும்.

**முடிவுற்ற சரக்குகள்:** இவ்வித சரக்குகள் கொள் முதல் செய்யப்பட்டிருந்தால் அவற்றை அடக்க விலைக்கு மதிப்பிட வேணடும். நிறுவனத்தில் தயாரிக்கப்பட்ட சரக்காக இருந்தால் அதன் அடக்க விலை அல்லது சந்தை விலை இரண்டில் எது குறை வானதோ அவ்விலைக்கு மதிப்பிடவேணடும்.

**அனுப்பீட்டின் மேல் சரக்கு:** பொறுப்பின் பேரில் முகவருக்கு (Consignee) சரக்கு அனுப்பும்போது இருப்பு நிலைக் குறிப்பு நாளன்று சரக்கு விற்காமல் தேங்கி விடலாம். சரக்கின் பட்டியல் விலையுடன் சத்தம், சுங்கவரி முதலிய செலவுகளையும் சேர்த்து

மதிப்பிட வேண்டும். அனுப்பீடு செய்பவர் விற்கும் விலையை மட்டும் குறிதது அனுப்பினால் சரக்கை மதிப்பிடும் போது தணிக்கையாளர் தக்க சரிக்கட்டு களைச் செய்ய வேண்டும்.

**வாணிக நற்பெயர்:** வாணிக நற்பெயர் என்பது கண்ணுக்குத் தெரியாத ஒரு சொத்தாகும். வாணிக நற்பெயரை மதிப்பீடு செய்வதற்கு மூன்று முறைகள் உள்ளன.

**1. கடந்த இலாபம் வாங்கும் முறை:** இம் முறையில், மதிப்பீடு செய்யும ஆணடுககு முன் ஐந்து ஆணடுகள் கிடைத்த இலாபத்தைக் கூட்டிச் சராசரி கணக்கிட வேணடும். கடந்த ஆண்டுகளில் செயற்பட்டு வந்ததின் பயன எதிர் காலத்தில் எத்தனை ஆணடுகளுக்குக் கிடைக்கக் கூடும் என்று கணக்கிட வேணடும். இந்த எணணிக்கையைச் சராசரியால் பெருக்கி வரும் தொகையே வாணிக நற்பெயர் என மதிப்பிடப்படுகிறது.

**2. எதிர்காலத்தில் கிடைத்து வரக்கூடிய இலாபத்தை மூலதனமாக்கல்:** கடந்த காலத்தில் நிறுவனம் ஈட்டிய சராசரி இலாபத்தைக் கணக்கிட்டு எதிர் காலத்தில் எவ்வளவு சராசரி நிகர இலாபம் ஈட்டப்படலாம் என்று மதிப்பீடு செய்யவேணடும். முதலீட்டின் பேரில் எவ்வளவு சதவீதம் ஆதாயம் கிடைக்கிறது என்பதை ஒட்டி நிகர இலாபத்திலிருந்து புலனாகும் சொத்துகளின் நிகர இலாபம் மூலதனமாக்கம் செய்யப்படுகிறது. இவ்வாறு மூலதனமாக்கப்பட்ட நிகர மதிப்பைக் கழித்தால கிடைக்கும் தொகையே வாணிக நற்பெயர் என மதிப்பிடப்படுகிறது.

**3. எதிர்கால மிகை இலாபத்தை வாங்குதல்:** தொழிலொன்றில், மூலதனம், உழைப்பு ஆகியவற்றிற்கு அளவான ஒரு ஊதியம் ஒதுக்கப்பட்ட பின் மீதமுள்ள இலாபப் பகுதி 'மிகை இலாபம்' (Super Profits) எனப்படும். மிகை இலாபத்தைக் கணக்கிட்டு எத்தனை ஆண்டுகளுக்குக் கிடைக்கும் என மதிப்பிட வேண்டும். மிகை இலாபத்தை அந்த ஆணடுகளின் எணணிக்கையைக் கொணடு பெருககி வரும் தொகை வாணிக நற்பெயர் என மதிப்பிடப் படுகிறது.

முதலீடு செய்ய விரும்புபவர்கள் தகவலறிக்கையில் காட்டப்படும் நற்பெயரைச் சரியானது என்று நம்பிவிட வாய்ப்பு இருக்கிறது. எனவே, உள்ளபடியே மதிப்பீடு சரியாகச் செய்யப்பட்டதா என்று தணிக்கையாளர் பரிசீலனை செய்ய வேண்டும்.

கே.என்.இரா.

**துணை நூல்கள்:**

**Depaula, F.R.M.,** Principles of Auditing, Pitman & Sons, London, 1966.

**Spicer and Pegler-H.F.L.** Publications, London, 1967.

*சொத்துவரி* இது எல்லா நாடுகளிலும் விதிக்கப்படுகிறது. சொத்து வரி(Property Tax) எனபது சொத்து வைத்திருப்பவர்கள மீது அரசால் விதிக்கப்படும் வரியாகும். சனநாயக அரசுகள தோன்றி நல அரசுகளாக கி.பி.19-ஆம் நூற்றாணடில மாறத தொடஙகின. அரசும் அதன் உறுப்புகளும் பல அடிப்படைப் பணிகளை மக்களுக்குச் செய்ய வருவாய் தேவை. எனவே, இதறகாகப் பல வரிகள விதிக்கப்பட்டன. கி.பி 1800-ஆம் ஆணடில் இங்கிலாந்து நாட்டின ஆட்சிக்குப்பட்ட குடியேற்றநாடுகளில் பொதுச சொத்து வரி (General Peoperty Tax) என்ற வரியை விதிக்கத் தொடங்கினார்கள. இத்தகைய சொத்து வரி, பின்பு 'மக்களாட்சியின் தொட்டில்' எனக்கூறப்படுகின்ற உள்ளாட்சி அரசு (Local Government) வரியாக எல்லா நாடுகளிலும் விதிக்கப்பட்டது

சொத்து வரி உள்ளாட்சி அமைப்புகளுககு வருவாய் தரும் ஒரு சிறந்த வரியாகக் கருதப்பட்டது. அமெரிக்க நாட்டில் சொத்துவரி, உள்ளாட்சி அரசுகளால் பெருமளவில் விதிக்கப்படுகிறது. ஆசிய நாடுகளிலும் சொத்துவரி நீண்ட காலமாக அரசால விதிக்கப்பட்டு வரும் வரியாகும். இந்தோனேசியா, சிங்கப்பூர், இலாவோசு போனற நாடுகளில் மததிய அரசால் இவ்வரி விதிக்கப்பட்டாலும், இவ் வரியின் மூலம் கிடைக்கும் வருவாயை உள்ளாட்சி அமைப்புகளே பெறுகின்றன. உலகிலேயே முதன முதலாக கி.பி.1793-இல் தான் சொத்து வரி விதிக்கப்பட்டது.

திருமதி ஊர்சுலா கிக்சு (Mrs. Ursula Hicks) என்ற பொருளியல மேதை இவ்வரியின் சிறப்பியல்புகளை விளக்கியுள்ளார். இது நேர்முக வரி என்றும், நாட்டின் அடிப்படையாக அமைந்துள்ள உள்ளாட்சி அமைப்புகளுக்குப் பயன்படக் கூடிய வரி என்றும் கூறியுள்ளார். மேலும் இவ்வரி நிலத்தின் மீதும், கட்டடத்தின் மீதும் விதிக்கப்படுவதால் வரி ஏய்ப்புச் செய்வது கடினமானதாகும். சொத்து வரி உள்ளாட்சி அரசுகளால் அப்பகுதி மக்களுக்கே செலவிடப்படுகிறது. எனவே இது மக்களால் வரவேற்கப்படும் வரி எனவும் திருமதி கிக்சு குறிப்பிட்டுள்ளார்.

சொத்து வரியின் மூலம் இங்கிலாந்து, அயர்லாந்து, அமெரிக்கா போன்ற நாடுகளில் தேசிய

வருமானத்தில் 4 விழுக்காடு அளவிறகு வருவாய் கிடைக்கிறது. தென்மார்க்கு, ஆசுத்திரேலியா, பெல்சியம், சப்பான போன்ற நாடுகளில இவ்வரியின் மூலம் தேசிய வருமானத்தில் 1 முதல் 2 விழுக்காடு வரை வருவாய் கிடைக்கிறது.

அமெரிக்க நாட்டில் 1980 ஆம் ஆண்டின் புள்ளி விவரப்படி உள்ளாட்சி அரசுகளுக்கு வரும் வரி வருவாயில் 74 விழுக்காடு சொத்து வரியால் வருவதாகும். இந்தியாவில், இவ்வரி உள்ளாட்சி அமைப்புகளால் விதிக்கப்படுகிறது. இவ்வரியின் மூலம் பெரு நகரஙகளில் உளள மாநகராட்சிகள் பெருமளவு வருவாயைப் பெருகின்றன.

சொத்து வரி கட்டடங்களின் மீது விதிக்கப்படும் போது பல முறைகள் கடைப்பிடிககப்படுகின்றன. சொந்த உபயோகத்தற்காக வைத்திருக்கும் வீடுகள் மீது குறைந்த அளவில் வரி விதிக்கப்படுகிறது. ஆனால், வாடகைக்காக விடப்படும் வீடுகள் மீது அதிகமான வரியை விதிக்கிறார்கள. வணிக நிறுவனங்களுக்காகப பயன்படும் கட்டடங்களுக்கு அதிக அளவில வரி விதிக்கப்படுகிறது. சொத்து வரி விதிப்பைப் பற்றிப்பல குறைகள கூறப்படுகின்றன. நகரங்களில் இருக்கும் பல பகுதிகளில் வரி விதிக்கப்படும் போது வரியின் விகிதம் மாறுகிறது. அதே போனறு இநதியாவில் உள்ள பல்வேறு நகரங்களிலும் விதிக்கப்படும் முறை ஒரே சீரான முறையில் அமையவில்லை. வீட்டு வாடகை ஒழுங்குச் சட்டம் (Rent Control Act 1949) 1949-ஆம் ஆண்டு சென்னை நகரில் மாநில அரசால் நடைமுறைககுக் கொண்டு வரபபட்டது. இச்சட்டத்தில் பிறகு பல சீர்திருத்தங்களும் கொணடு வரப்பட்டன. இச்சட்டத்தின கீழ் வரும் வீடுகளுக்குக் குறைந்த வாடகை வசூலிக்கப்படுவதால், சென்னை மாநகராட்சிக்குச் சொத்து வரியின் மூலம் பெறப்படும் வருவாய் குறைந்தது.

சொத்து வரியால் பெரு நகரங்களில் வரியைக் குறைந்த அளவுக்கு விதித்து அதன் மூலம் வரி ஏய்ப்பு மேற்கொள்ளப்படுவதற்கு வழிகள் உள்ளன. மேலும், வாடகை வீட்டில் குடியிருப்பவர்கள் வீட்டின் உரிமையாளர்களுக்குக் கட்டுப்பட்டு இருப்பதால் உணமையான வாடகையை அவர்கள் வெளிப்படுத்துவதில்லை. மேலும் வரி நிருணயிப்போர் ஊழலில் ஈடுபடுவதால் இவ்வரியின் மூலம் கிடைக்கும் வருவாய் பெருமளவு குறைகிறது.

சொத்து வரியைச் சீரமைத்து, ஒருங்கிணைத்து முற்போக்குத் தன்மையில் அமைக்க வேண்டும் என்று பல பொருளியல் அறிஞர்கள் கருத்துகளைக் கூறி வருகின்றனர். அரசியல் காரணங்களாலும் இவ்வரியை உள்ளாட்சி அமைப்புகள் சரியான முறையில விதிப்பதில்லை. சொத்து வரி வருமான வரியைப் போனறு பல்வேறு வருமான நிலைகளில் (Slabs) விதிக்கப்படுகின்றது. குறைந்த வருமானம் தரும் சொத்துகளுக்கு வரிச் சலுகைகள் அளிக்கப்படலாம் என்பது ஒரு கருத்தாகும். மேல் நிலை வருமானத்தைச் சொத்தின் மூலம் பெறுபவருக்கு வரி விதிப்பைச் சீரமைக்க வேணடுமென்ற கருத்தும் இருந்து வருகிறது. மாநில அரசுகளுக்கு வணிக வரி (Commercial Tax) எவ்வாறு உள்ளதோ, அதே போல் உள்ளாட்சி அமைப்புகளுக்குச் சொத்து வரி அதிக வருவாய் தரும் வரியாக அமைந்துள்ளது.

இவ் வரி விதிப்பில் பல குறைபாடுகள் இருப்பினும் இவ்வரியை அறவே விட்டு விடும நோககம எந்த அரசிற்கும் இல்லை என்பதும் உண்மையாகும். இந்தியாவில் வரிச் சீரமைப்பிற்காகப் பல்வேறு வல்லுநர் குழுக்கள் அமைக்கப்பட்டன. மத்திய அரசு நேர்முக வரிச்சீர்திருத்தக் குழுவையும் (Direct Tax Reforms Committee) பல்வேறு கால கட்டங்களில் அமைத்து, பல பரிந்துரைகளை அதன் மூலம் ஏற்று வரிச் சட்டங்களாக மாற்றி அமைத்து வருகிறது. மறைமுக வரி சீரமைக்க எல்.கே. சா குழு (L.K. Jha Committee) அமைக்கப்பட்டு அதன் மூலமும் பல பரிந்துரைகளை அரசு பெற்றுளளது. ஆனால், உள்ளாட்சி வரிகளைப் பற்றிச் சீரமைக்க எந்தக் குழுவும் அண்மைக் காலத்தில் நியமிக்கப்படவில்லை. எட்டாம் நிதிக் குழுவின் (Eighth Finance Commission) அறிக்கையிலும் உள்ளாட்சி நிதியைப் பறறி ஆய்வு செய்யப்பட வேண்டுமென வலியுறுத்திக் கூறப்பட்டுள்ளது. மு. நா.

**சொரூபானந்தர்,** இற்றைக்கு நானூறு ஆண்டுகளுககு முன் சொரூபானந்தர் நடுநாட்டிலுள்ள வீரைமாநகரில் தோன்றினார். இவர் வைதிகப் பார்ப்பன குலத்தைச் சேர்ந்தவர். சிலர் இவரை மாத்துவப் பார்ப்பனகுலம் என்றும் கருதுகின்றனர். இவருடைய உடன்பிறந்தாள் புதல்வரே தத்துவராயர். இவர்கள் இருவருக்கும் உரிய இயற்பெயர் தெரியவில்லை. ஆன்மசொரூபத்தை ஆராய்பவர், தத்துவங்களை ஆராய்பவர் எனனும் காரணம் பற்றிய பெயர்களாகவே அவர்களுடைய பெயர்கள் அமைந்துள்ளன.

அம்மான் சொரூபானந்தரும் மருமகன் தத்துவராயரும் ஒருங்கே தென்மொழி வடமொழிகளில் சிறந்த பயிற்சி பெற்றனர்; துறவு மனப்பான்மையுற்றனர். இருவரும் சற்குருநாதனை நாடிச் செல்

லலாயினர். அப்பொழுது யாருக்கு முதலில் சற்குருவின் அனுக்கிரகம் கிடைக்கிறதோ அவர் மற்றவர்க்குக் குருவாதல் வேண்டும் என்றும் உறுதிகொண்டனர்.

பின்னர் இருவரும் ஒரே திசையில் செல்லாமல வெவ்வேறு திசைகளில் சென்று தேடவேண்டும் என்று துணிந்தனர். சொரூபானந்தர் தெற்கிலும் தத்துவராயர் வடக்கிலும் சென்றனர். தெற்கே சென்ற சொரூபானந்தர் திருப்பைஞ்ஞீலி என்னும் சிவதலத்தையும் திருவெள்ளறை என்னும் திருமால் திருப்பதியையும் தன்னிடத்தே கொண்ட கோவத்தம் என்னும் ஊரைச் சார்ந்தார். அங்கே உள்ளாரிடம் மகான் எவரேனும் உளரோ என உசாவினார். அவர்கள் ஊர்ப்புறத்தே நாணற்புதரில் யோகநிட்டையிலிருக்கும் துறவியைப் பற்றிக் கூறினர். அப்பெரியார் திருவாரூர் சிவப்பிரகாசர் என்னும் ஞானியாவார். சொரூபானந்தர் குருநாதர் நிட்டை கூடியிருக்கும் நாணற்புதரை அடுத்து அவர் வரவை எதிர் நோக்கியிருந்தார். சிவப்பிரகாசர் வெளிவந்தபோது அவர் தம் திருப்பாதங்களில் விழுந்து தமக்கு ஞானோபதேசம் செய்தருள வேண்டும் என்று வேண்டினார். இவருடைய தீவிர பக்குவ நிலையைச் சிவப்பிரகாசர் நோக்கி இவருக்கு ஞானோபதேசம் செய்தார். ஞானோபதேசம் பெற்ற சொரூபானந்தரும் அங்கே சகச நிட்டை கூடியிருந்தார்.

வடதிசையிலே ஞானாசாரியரை நாடிச் சென்ற தத்துவராயருக்குக் குருதரிசனம் கிட்டாமையால் அவர் தென்திசை நோக்கி வந்தார். கோவத்தத்தில் ஞானோபதேசம் பெற்று நிட்டை கூடியிருந்த தம் அம்மான் சொரூபானந்தரை வந்தடைந்தார். முன்பே தீர்மானித்தபடி தத்துவராயர் சொரூபானந்தரிடம் ஞானோபதேசம் பெற்று அவருக்கு அணுக்கத் தொண்டராயிருந்து வந்தார். வேதாந்த பரமான நூல்களை அவர்கள் ஆராய்ந்து வந்தனர். தமிழில் கவிபாடும் பெரும்புலமை வாய்ந்தவராய்த் தத்துவராயர் திகழ்ந்தார்.

சொரூபானந்தர் தோத்திர சாத்திர நூல்களிலிருந்து பாடல்கள் பலவற்றைத் திரட்டித் தம்முடைய குருநாதர் சிவப்பிரகாசர் பெயரால் 'சிவப்பிரகாசப் பெருந்திரட்டு' என்னும் பெருநூலை ஆக்கினார். தமது சீடர் தத்துவராயரிடம் மாறுகொண்டவர்போல் காட்டவே பிழைபொறுத்துத் தம்மை ஆட்கொள்ள வேண்டுமென்று சொரூபானந்தர்மேல் அவா பாடிய தோத்திர நூல்கள் பல. திருத்தாலாட்டு, பிள்ளைத் திருநாமம், வெண்பாவந்தாதி, கலித்துறையந்தாதி, சின்னப்பூ வெண்பா, தசாங்கம், இரட்டைமணிமாலை, மும்மணிக்கோவை, நான்மணிமாலை, கலிப்பா, ஞான வினோதன் கலம்பகம், உலா, சிலேடை உலா, நெஞ்சுவிடுதூது, கலிமடல், அஞ்ஞவதைப்பரணி, மோகவதைப்பரணி, அமிர்தசாரம் என்னும் பதினெட்டு நூலகளும் தத்துவராயர் அடங்கல் முறை என்னும் பெயரால் அச்சில் வந்துள்ளன. இப்பதினெட்டும் சொரூபானந்தர்மீது பாடப் பெற்றனவாம். இவை தவிரப் பாடுதுறை என்னும் நூலில் சொரூபானந்தர் மீதும் பரம குருவாகிய சிவப்பிரகாசர் மீதும் பல்வேறு வகையான பிரபந்தங்களை யாத்துள்ளார் தத்துவராயர்.

மேலும் சொரூபானந்த சுவாமிகள போற்றி மாலை, சொரூபானந்த சுவாமிகள் புகழ்ச்சிமாலை, சிவப்பிரகாச சுவாமிகள் திருவருட்கழல் மாலை, சிவப்பிரகாச சுவாமிகள் நாமசங்கீர்த்தனம் என்றிவ்வாறு 138 பிரபந்தங்களை உள்ளடக்கியது தத்துவராயரின் பாடுதுறை. சொரூபானந்தரின் புகழைத் தத்துவராயரின் அடஙகல் முறையையும் பாடுதுறையையும் கற்பார் நன்குணர்தல் கூடும். மு.ச.

**சொல் மறதி நோய்:** மனித மூளை இயற்கையிலேயே மிகவும் நுட்பமான பகுதிகளைத் தன்னகத்தே கொண்டுள்ள சிறந்த உறுப்பு ஆகும். ஒரு குண்டூசி முனையின் அளவு மூளையில் பாதிக்கப்பட்டாலும் மனிதனின் நடவடிக்கை, செயல் திறன் ஆகியவற்றில் பெருத்த மாற்றங்கள் ஏற்பட வாய்ப்பு உண்டு.

மூளையின் ஒவ்வொரு பகுதிக்கும் தனித்தனியே சிறப்பு வாய்ந்த தன்மைகள் உண்டு. எடுத்துக்காட்டாக, பார்வை (Vision), அறிவுத்திறன் (Intelligence) நினைவாற்றல் (Memory) என்று ஒவ்வொரு செயலுக்கும் தனிப்பகுதிகள் உள்ளன. இவற்றுள் ஏதாவது ஒரு பகுதி பாதிக்கப்பட்டாலும் அதற்கான செயல் திறன் பாதிக்கப்படலாம் அல்லது செயலற்றே போகலாம்.

இவ்வாறு பாதிக்கப்படும் திறன்களுள் பார்வையால் பெறப்பட்டு (Visual-receptive) எழுதப்பட்ட மொழியை அறிந்து கொள்ளும் திறனும் ஒன்றாகும். இத்திறன் இழப்பையே சொல்புலப்படா அல்லது சொல்மறதி நோய் (Alexia)என்று நரம்பியல் நோய் நிபுணர்கள் குறிப்பிடுகிறார்கள். இவ்வாறு ஏற்படும் குறைபாட்டைச் சொல்மறைவு அல்லது சொற்பெயராமை (Word Blindness) என்று எளிய முறையிற் குறிப்பிடலாம்.

சொல்மறதி நோய், மூளையின் எப்பகுதி பாதிக்கப்படுவதால் ஏற்படுகிறது என்பதைக்காணவேண்டும்.

மூளையில் உள்ள பககமடல (Parietal lobe) பொட்டுமடல் (Temporal lobe) ஆகிய பகுதிகள பாதிக்கப்படுவதால் இந்நோய் ஏற்படுகிறது. இதன் விளைவு குறிப்பாக மொழித் (Language) தொடர்பு பட்டதாக அமைகிறது. மொழித் தொடர் புடையது எனறு சொல்லும்போது, பார்வை (எழுதப்பட்ட சொற்களை அறிதல்) கேட்டல் (பேசும் சொற்களைப் புரிந்து கொள்ளல்) என்பவற்றோடு பேசுதல, எழுதுதல் ஆகியவற்றிற்கான இயக்கச் செயலும் அடங்கும்

சொல் மறதி நோய் உடையவரிடம் எழுதப்பட்ட அல்லது அச்சடிக்கப்பட்ட ஒன்று அல்லது அதற்கு மேற்பட்ட சொற்களைக் காண்பித்தால் எழுத்துகளைத் தனித்தனியே சொல்வார். ஆனால் அவ்வெழுத்துகளைச் சேர்த்து அல்லது கூட்டிப் பொருள் பொதிந்த ஒரு சொல்லாக உச்சரிக்க அல்லது படித்துக் காட்ட இயலாது. ஒரு பொருளைக் காண்பித்து அதன் பெயரை சொல்லும் படி கேட்டால், பொருளின் பெயரை மனத்தளவில் தெரிந்திருந்தாலும் உச்சரித்துச் சரியாகச் சொல்ல இயலாத நிலையும் (சொற் பெயராமை) ஏற்படலாம். மேலும், சில வேளைகளில் நிறங்களைப் பார்த்துப் பெயர் தெரிந்த நிலையிலும், பெயர்களை உச்சரிக்க முடியாத தன்மையும் சொல் மறதிநோயில் ஏற்படுவதுணடு.

இத்தகைய பாதிப்புக்கு உள்ளானவர்கள் எண்களைப் படிக்கும் திறனைப் பெற்றிருந்தாலும் எழுத்துகளையோ சொற்களையோ படிக்கும் திறனை இழந்திருப்பர். ஆர்.ப.

**துணை நூல்:**

**Kevin. W. Walsh,** Neuropsychology, Churchill Livingstone, New York, 1978.

***சொல்லகத்தியம்:*** இக்காலத்தில் இறந்துபட்ட தமிழ்நூல்களுள் ஒன்று. இதனைச் சிலப்பதிகார அரும்பதஉரையாசிரியர் தம் உரையில் குறிப்பிட்டுள்ளார். கடற்கரைச் சோலையில் மாதவியின் பாடலால் ஊடல் கொண்ட கோவலன் அவனைவிட்டுப் பிரிய, வீடெய்திய மாதவி மறுநாள் தன் மாளிகையின் வேனிற் பள்ளி ஏறி, வீணையேந்தி மதுரகீதம் பாடியதனை இளங்கோவடிகள் காட்டுகின்றார். மதுரகீதம் பாடினாள் என்னும் தொடரை விளக்கும் அரும்பத உரையாசிரியர், அவள் முதலில் கண்டத்தால் பாடி, அப்பண்ணையே யாழில் இசைத்தாள் என்று குறிப்பிட்டுள்ளார். முதலிற் கண்டத்தாற் பாடிப் பின் அதனையே கருவியில் இசைக்கும் இசையது சிறப்பினை, அவர், சொல்லகத்தியம் என்னும் நூலிலிருந்து ஒரு சூத்திரத்தை மேற்கோள் காட்டி விளக்கியுள்ளார். அதனால் சொல்லகத்தியம், இசைஇலக்கணம் கூறும் ஒரு நூல் என்பதும், அது சூத்திரயாப்பில் அமைந்தது என்பதும் தெளிவாகின்றன. தமிழ் வரலாறறில் முத்தமிழுக்கும் உரிய நூலாக அகத்தியம் என்னும் பெயரில் ஒருநூலினை அகத்தியர் எழுதினார் என்பது ஏற்றுக் கொள்ளப்பட்ட மரபுவழிப் பட்ட உண்மையாகும். அகத்தியருக்குளள சிறப்பினால் பிற்காலத்தில, மருத்துவம் முதலிய பிறதுறை நூலகளும் அவர் பெயரால தோன்றியுள்ளன. அவ்வகையில் அரும்பத உரையாசிரியருக்கு முன்னர்ச் சூத்திர யாப்பிலமைந்த இசையிலக்கண நூல் ஒனறு அகத்தியர் பெயரால் இருந்துளளது என்பது அவவுரையினால் புலனாகிறது. அ.மா.ப

***சொல்லடுக்கு முறை*** சொற்களை அடிப்படை அலகுகளாகக் கொணடு சொல்லடுக்குகளின (Paradigm) வாயிலாக மொழியின் சொல்லியல் நுட்பங்களைத் தெளிவுபடுத்தும் முறையே சொலலடுக்கு முறை (Word and Paradigm) எனப்படும்

தனித்து வழங்கும் அடிச்சொல்லும் அவ்வடிச் சொல்லுடன் சொல்திரிபு உருபுகளை (Inflectional Affixes) இணைப்பதன் வாயிலாகக் கிடைக்கப் பெறும் சொற்களும் சேர்ந்த தொகுதியே சொலலடுக்கு எனப்படும். சொல்லடுக்குகளின் அடிப்படையின் இலக்கணப் பிரிவுகளை ஏற்படுத்த முடியும்.

'மரம்', 'மரங்கள்' என்னும் இரண்டு சொற்களும் ஒரே சொல்லடுக்கில் அமையும் சொற்கள். இவற்றின் அகராதிப் பொருளில் (Lexical Meaning) எவ்வித வேறுபாடும் இல்லை. ஆனால் இவறறிடையே இலக்கணப் பொருளில (Grammatical Meaning) வேறுபாடு காணப்படுகிறது. 'மரம்' ஒருமையையும், 'மரங்கள்' பன்மையையும் குறிக்கின்றன.

ஈண்டுக் குறிப்பிடப்பெற்றுள்ள சொல்லடுக்கில 'மரம்' என்னும் வடிவமே அடிப்படை வாய்பாட்டு வடிவமாகக் (Cannonical Form) கருதப்படும். ஒரு சொல்லடுக்கினை முற்றிலும் குறிக்க வாய்பாட்டு வடிவம் பயன்படுத்தப்படும். சொல்லடுக்கில் வாய்பாட்டு வடிவம் தவிர்ந்த பிற சொல்வடிவங்கள சொல்திரிபு வடிவங்கள் (Inflected Form) எனப்படும. சொல்லடுக்கில் சில சொல் திரிபு வடிவங்கள் இல்லாதிருக்குமாயின் அச்சொல்லடுக்குக் குறையுடைச் சொல்லடுக்கு (Defective Paradigm) எனப்பெறும்.

ஒரு சொல்லடுக்கில் காணப்பெறும் சொற்கள் ஒட்டுகள் சேர்த்தல் (Affixation), மாற்றீடு (Replace

ment), இரட்டிப்பு (Reduplication), முழுமாற்றம் (Suppletion), வெற்றுமாறறம் (Zero Change) என்னும் சொலலியல் நடைமுறைகளால் வேறுபடுதலுணடு.

தமிழில் பெரும்பான்மையான சொல்லடுக்கில் காணப்பெறும் சொற்கள விகுதிகள் எனனும் ஒட்டுகளை அடிச்சொறகளோடு இணைப்பதன வாயிலாக வேறுபடுகினறன.

சொலலடுக்கு முறையின் வாயிலாகச் சொல்லியல் நுட்பங்களைத தெளிவுபடுத்துதல் இயலும். சான்றாக 'அம்' ஈற்றுப் பெயர்கள் வேறறுமை உருபினை ஏற்றுவரும் நிலையில் 'அத்துச் சாரியை பெறறு, பிற சொற்களின்று வேறுபட்டமைவதனைக் கீழக்காணும் சொல்லடுககின வாயிலாக விளக்கலாம்.

பணம்

| | |
|---|---|
| பணத்தை | பணம — அத்து — ஐ |
| பணத்தால் | பணம் — அத்து — ஆல |
| பணத்தொடு | பணம் — அத்து — ஒடு |
| பணத்துக்கு | பணம் — அத்து — கு |
| பணத்திலிருந்து | பணம — அதது — இல்லிருநது |
| பணத்தது | பணம் — அத்து — அது |
| பணத்தில் | பணம் — அத்து — இல |
| பணமே | பணம் — ஏ |

சொறகளில் காணப்பெறும் பல்வேறு இலக்கணக கூறுகளைச் சொல்லியல்-தொடரியல் அடிபபடையில் பகுத்து அவற்றை விளக்கிச் சொல்லும்முறை கிரீக்கு, இலத்தீன் மரபிலக்கணக்காரர்களால் பெரிதும்கையாளப்பட்டுளளது. அமைபபு மொழியியலின் தோற்றத்திற்கு முன்னர் எழுதப்பெற்ற பெரும்பானமையான இலக்கணங்களில் சொல்லடுக்கு முறையே பின்பற்றப்பட்டு வந்துள்ளமையைக் காணலாம்.

தமிழ் இலக்கண நூல்களிலும் சொல்லடுக்கு முறை பின்பற்றப்பட்டுள்ளது. இவவிலக்கண நூல்கள் வாய்பாட்டின் வாயிலாக வினையெசசங்களையும் பெயரெச்சங்களையும் விவரித்தலும் சொல்லடுக்கு முறையின் பாற்பட்டதெனலாம். ஏ.ஆ.

**துணை நூல்கள்:**


**Bloomfield, L.**, Language, New York, 1933.

**Elson, B, and Pickett, V.**, An Introduction to Morphology and Syntax, California, 1962.


**சொல்லாக்கம்**: மொழியாகிய கருவி மக்கள் கருத்தை வெளிப்படுத்துவது. இது முதலில் சொற்றொடர் வடிவத்தில் தோனறியது. காலஞ் செல்லச் செல்ல அவறறைக் கூறுபடுத்திச் சொல்லாகவும், உருபனாகவும் (Morpheme), ஒலியனாகவும் (Phoneme) கணடார்கள். இன்றைய நிலையில் முதன்மையான புலப்பாட்டுக் கருவி ஒலிவடிவம் ஆகும். இதனை விளக்குவது சொற்பிறப்பியல் (Etymology or Word-Formation) ஆகும். ஆயினும் ஒரு மொழியில் வழங்கும் சொற்களே அம்மொழிபேசும் மக்களின நாகரிகத்துக்கும் அறிவுவளர்சசிக்கும் அடிப்படையாக அமைகின்றன. எனவேதான் சொற்கள உண்டாகும் முறையும் உணடாக்கும் முறையும் சிறப்புக் கூறாகக் கருதப்படுகிறது. அதுவே சொலலாக்கம் (Word Formation) ஆகும்.

உருபன் என்பது குறைநதபட்ச பொருள் உடையது. இது தமிழ் இலக்கணங்கூறும் பகாப்பதம் ஆகும். உருபனே தனிச்சொல்லாவது உணடு. எ.டு. மலை, பல், ஒனறுககு மேற்பட்ட உருபன்கள் சேர்ந்து சொல் ஆவதும் உணடு. படி என்ற ஒரு வினை உருபனோடு ப்பு என்ற ஒட்டுச் சேர்ந்து படிப்பு என்று ஆவதும் ஒரு சொல்.

சொல் இணைப்பு நிலையில தொடராகிப் பின மொழியாகி வளம் பெருக, இந்நிலையில் அறிவும் கலையும் பெருக, அனைத்து வாழ்க்கைக் கூறுகளையும் தெரிவிக்க, புரிந்துகொள்ள, நாளும் சொற்கள் பிறக்கினறன அலலது ஆக்கம் பெறுகின்றன. இதததைய சொல்லாக்கம் பலவேறு வகையாக விரிவடையும். உருபன்களைச் சேர்த்துச் சொலலாக்கும்போது எப்படிப்பட்ட சொற்களையும் அகராதியில கொடுப்பதில்லை. எனவே, சொல்லாக்கத்தில இலக்கணக் கூறுகளை உணர்த்துவனவற்றைப் பெரும்பான்மையும் நீக்கிவிட்டு ஏனைய சொல்லாக்கங்களே அகராதியில் கொடுக்கப்படும். அவற்றை அகராதியன் அல்லது அகராதிச் சொல் (Lexeme) என்று கூறுவர்.

காலம், இடம், பால் வேற்றுமை என்னும் வகையில் ஓர் அடிச்சொல்லிலிருந்து பல்வேறு வகையான இலக்கணக் கூறுபாட்டுச் சொற்கள தோனறுகின்றன. எ-டு. 'கல்' எனனும் அடிச்சொல்லிலிருந்து காலம், இடம், பால (எண) வேற்றுமைக் கூறுகளை உணர்த்திப் பல்வேறு சொல் வடிவங்கள் பிறக்கின்றன என்பதனைக் கீழ்வருவன காட்டும்:

கற்றான், கற்கிறான், கற்பான், கற்றாய், கற்றேன், கற்றாள், கற்றார் இவ்வாறு ஒவ்வொரு அடியாகவும் பலப்பல சொல் வடிவங்களை (Word-forms) அமைத்துக் கொள்ளலாம். இவை அந்த மொழியின்

இலக்கணத்தின் கூறாகக் கருதப்படுவதால இலக்கண ஆராய்ச்சியின ஒரு பகுதியாக அமையும்.

இவை தவிர, இரு சொல் அல்லது இரணடு அடிச சொல் (பலவுமாம்) இணைநது தொகைநிலையாக (Compounds) வந்து, வெவ்வேறு பொருளுணர்த்தி வெவ்வேறு அகராதிச் சொல்லாக வருவனவும் மொழி யியல் வழக்காகும். எ-டு வெற்றிலை, பச்சிலை, கல் லறை, சுடுகாடு, கட்டில், ஒட்டடை முதலியன. இவை போல இணைவு நிலையில் பிறிதோர் பொருள் தரு வனவன்றி, இணைவு நிலைப்பொருளையே தந்து பிறக்கும் தொகைச் சொற்கள் பேரளவின. எல்லா மொழிகளிலும் இவ்வாறான கூட்டுநிலைச் சொற்கள் பிறப்பது மொழி மரபாகும். எ-டு. கறிக்காய், மாமரம், பழச்சுவை, மட்குடம், நாய்வால், காய்கனி என்பன அவை

ஆகவே, வேர் அலலது அடிச்சொல்லின் தனி நிலையில், அதனோடு பிற இணைந்த நிலையில், அடிச்சொல் இரண்டு பலவாக இணைந்த நிலையில் சொற்கள் பிறப்பது மொழி வழக்காகும்.

தொகைச் சொற்கள் மொழிகளுக்குத் தக்கவாறு வெவ்வேறு வகைப்பட்டுச் சொல்லாகும். தமிழில் வேற்றுமை, பண்பு, வினை, உவமை, உம்மை அன்மொழித் தொகையாகக் கூட்டுச்சொல்லாகும்.

சொற்களின் முதலெழுத்துகளை இணைத்துச் சொல்லாக்கம் (Acronyms) செய்வதுமுண்டு.
எ-டு: சா • விசுவநாதன்

புதியனவாகும் சொலலாக்கமும் பலவுள. அவை களின் அடிச்சொற்களில் புதிதாக ஒரு விகுதி சேர்த்து அமைப்பது ஒருமுறை. எ-டு; வேட்பாளர். தேய்ப் பாளர்.

சொல்லை நெருக்குநேர் மொழி பெயர்த்தும் புதிய சொற்கள் படைப்பது உண்டு. எ-டு: நீர் வீழ்ச்சி, தொலைபேசி.

கடன் வாங்கல் நிலையில் பிறமொழிச் சொற் கள் பயன்படுத்தப்பட்டுத்தாய் மொழிச்சொல்லோடு கலந்து ஒன்றாதலுமாம். எ-டு: காரணம், காரியம்.

சில கூட்டத்தாரால் உருவாகும் சொற்கள் குழூஉக் குறி. எ-டு: கம்பி (சிறை); சுறுப்பு (சாராயம்); வெள்ளை (கள்); காளைக்கொம்பு (இரண்டு) முதலியன.

குழந்தைகள் ஒலியொப்புமை கருதிச் சொல் லாக்கம் செய்வதுமாம். பூனை > மியா; நாய்>வள் ஆ > இம்பா முதலியன.

இவ்வாறாக மக்களிடையே நாகரிகமும் கலையும் பெருகப் பெருக மொழியில் சொற்கள் புதியனவாகப் பல்வேறு வகைகளில் உருவாகிப் பெருகுகின்றன. இன்று பல அறிவியல் துறை வளர்ந்து வருவதால் அறிவியல் கருத்துகளைத் தெரிவிக்க கலைச் சொல் லாக்கம் என்பது தனி ஆய்வுத் துறையாக வளர்ந் துள்ளது. எஸ்.சு.

*சொல்லிலக்கணம்*: மக்கள் பேசும் மொழி கிளவிகளால் (Utterance) ஆகியது. தொடர்களால் அல்லது சொற்றொடர்களால (Sentences) ஆகியது எனினுமாம். இத்தகைய சொற்றொடர்கள அவற் றின் உள்ளுறுப்புகளின் தொடர்ச்சியாகும். சில ஒழுங்குகளுக்கு உடபட்ட ஒலியாலும், பொருளாலு மாகிய, உறுப்புகளின் தொடர்ச்சியே, சொற்றொட ராம்; மொழியுமாம்.

சொற்றொடர் (Sentence) சொற்களின (Words) தொடர்ச்சி என்பதனை அதன் பெயரே உணர்த்து கின்றது. சொல் என்பது எழுத்துகளின் தொடர்சசி யென மரபு வழி இலக்கணங்கள் (Traditional Grammar) குறிப்பிடினும், அது உருபனால் (Morpheme) அல்லது அவற்றின் தொடர்ச்சியால் (Sequence) அல்லது கூட்டமைப்பால் (Construction) ஆக்கப் பட்டதென மொழியியல் கூறும். இத்தகைய உருபன், ஒலியன்களால் (Phonemes) அல்லது எழுத்தொலிக் கூறுகளால் ஆக்கப்பட்டது. எனவே,ஒலியன், உருபன், சொல், சொற்றொடர் ஆகிய நான்கு கூறுகளைக் கொண்டதே மொழி, ஒலியனும் உருபனும் தொட ரும் ஆகிய முக்கூறு கொண்டதே மொழியெனவு மாம். இத்தகைய கூறுகளின் தொடர்ச்சியே மொழி யாயினும், வழங்கிவரும் சிலபல ஒழுங்குகளுக்கு (Arrangement) உட்பட்டே தொடருமியல்பினது மொழி. மொழியுறுப்புகளின் தொடர்ச்சியில் காணும் ஒழுங்குமுறையே, இலக்கணம். ஒலியன் நீங்கிய எஞ் சிய உறுப்புகளின் தொடர்முறையே சிறப்பாக இலக் கணம் எனப்படும்.

இவற்றுள், ஒலியன் என்பது பொருளற்ற ஒலிக் கூறு ஆயினும், தனித்தும் தொடர்நதும் நினறு பொருளைத்தர உதவுவது. இதுவே, ஓர் மொழியின் அடிப்படைக் கூறு. இதனால் ஆக்கப்பட்ட உருபன், சொல், சொற்றொடர் ஆகிய மூன்றும் பொருள் தருவன. பொருளே, மொழியின் உயர்நிலையாதலி னால் பொருள் தரும் இம்முக்கூறுகளும் தனிநிலைச் சிறப்படைகின்றன. இவற்றுள் சொல் என்பது, உருபன், சொற்றொடர் ஆகிய இரண்டின் இடைப் பட்டு நின்று உருபனோடும் சொற்றொடரோடும் இயைபுறுகின்றது. சொற்றொடரின் உறுப்பு சொல்

லாயினும், (Word) அது தனியோர் உருபனாகவும், உருபன்களின் தொடர்ச்சி அல்லது கூட்டாகவும் இருவகைப்பட்டு நிற்கும். இத்தகைய சொல் பகுக்கப படும் உருபனால ஆக்கப்படுவது மட்டுமன்றி, மிகை பகுப்புக் கூறாகிய (Supra segmental element) இன்னோசையையும் (Intonation) ஒலியழுத்தத்தினையும் (Stress), புணர்நிலைக் கூற்றையும், (Juncture) பெற்றிருப்பதுமாகும். எனவே, தொடரின் கூறாகிய சொல, உருபனால அமைவது, உருபனின் ஒழுங்குக்கு உட்பட்ட, இயைபுபட்ட தொடர் முறையே இலக்கணம் எனினுமாம். முறைப்பட்ட ஒலியனாலாக்கப்பட்ட உருபனின் தொடர் நிலையே, மொழி எனலுமாம்.

உருபன் என்பது மொழியின் மிகசசிறிய பொருட்கூறாகும். இதனை மேலும் பகுப்பின் பொருளற்ற ஒலிக்கூறுகளே அமையுமனறிப் பொருட்கூறுகள அமையா. எனவே, ஓர் உருபன, மீண்டும் பொருட்கூறு படப்பகுக்க முடியாத, தனித்த ஓர் பொருளுடைய ஒலிக்கூறாகும். இது, தனியொலியாகவும், ஒலி சிலவற்றின் தொடர் அல்லது கூட்டாகவும் அமைந்திருக்கும் இத்தகைய உருபனின் ஒலிவடிவு புணர்நிலைக்கேற்றவாறு சிறிது திரிந்துமிருக்கும். புணர்நிலை அல்லது சூழ்நிலையால் ஒலிவடிவு திரிந்திருப்பினும், திரிநத வடிவங்களனைத்தும் ஒரே பொருளைத் தர, திரிவடிவங்கள யாவும் ஓர் உருபனின் சூழ்நிலையால் தோன்றிய மாற்றுருபுகள் (Allomorphs) எனப்படும். உருபன்கள் யாவும மாற்றுருபுகளைப் பெறும் என்பதில்லையாகி, ஒருருபே அல்லது ஓர் வடிவேயுடையதாகியும் வரும்.

1. கல் + வட்டு > கல்வட்டு - கல-
2. கல் + குடம் > கற்குடம் - கற்-
3. கல் + முனை > கன்முனை - கன்-
4. கல் + தீது > கஃறீது - கஃ-

எனக் கல், கற், கன், கஃ - என்பன முறையே இடை (உயிரும்) வலி, மெலி, அல்வழியில தகரம் எனபன வாகிய ஒலியன்கள் (Phonemes) தொடர்ந்து வர ஒரு பொருள் தந்தே ஒலிநிலையில மாறறுரு அலலது மாற்றுருபுகள் (Allomorphs) ஆயின. இவ்வாறு புணர்மொழிச் சூழ்நிலையால் வேறுபட்ட வடிவஙக ளாயினும் இயல்பான நிலையில, மொழிமரபின வழி இவைநான்கிற்கும் அடிப்படையாகத் தனி நின றொலிப்பது 'கல' எனுமசொலலாகும். இது, இந்நான கிற்றிறகும் அடியாகிய உருபன (Basic Morpheme) ஆகும். வரும் ஒலியனால் மாற்றுருவடைந்தமையின் இவ்வகை மாற்றுருபுகள ஒலியனால் கட்டுண்ட (Phonemically Conditioned) மாற்றுருபுகளாகும்.

மாறாக,

முன + இல் > முன்றில் - முனற்(று)-

தேன் + இறால் > தேத்திறால் - தேத் (த்)-

என முறையே இல், இறால் என்னும உருபன் அல்லது சொற்கள வருமபோது முன்ற(று), தேத்(த்)- எனும் உருபாக மாறியதால், இனனோரன்ன ஒலி மாற்றங்கள் உருபனால் கட்டுண்ட (Morphemically Conditioned) மாற்றுருபுகளாகும்.

இவ்வாறாக உருபனுக்கு (Morphemes) தொடர் நிலை அல்லது புணர்நிலைச் சூழ்நிலையால் உருபொலிவடிவத்திரிபு (Morphophonemic change) ஏற்படினும், ஒருபொருள் தரும் பல்வேறு உருபொலிவடிவுடைய ஒருருபனே (Morpheme) என்க. பொருள் தரும் உருபனுக்கும், அதன கூறாகிய ஒலியனுக்கும் உள்ள இயைபு, திரிபுகளைக் குறிததுக் கூறும் பகுதி சொற புணரியல் (Morphophonrmics) எனபபடும். பொருள் மாறறமின்றி ஒலிவடிவு திரியும் உருபன் களைக் கொண்டு சொற்கள ஆக்கப்படுகின்றன.

ஒருருபனே ஓர் சொல்லாதலும், இரண்டு முதலிய உருபன்கள் கூடியமைந்து ஓர் சொலலாதலும் (Composite form) என சொற்கள் இருவகையினவாகும். இவ்விருவகையும் மொழியில் இலக்கண வடிவஙகளாகும். இவை தவிரச் சொல்லில இவற்றின மிகையான இன்னோசை ஒலியழுத்தம் ஆகியவை போன்றனவும் இலக்கணவடிவஙகள் அல்லது கூறுகளாகும்.

எ-டு. 1. கல-ஒருருபனுடைய சொல் (Morpheme word)

2. கற்கள்-ஈருருபன்களுடைய கூட்டு வடிவச் சொல் (Composite form)

3. 'கற்கள் ↓-ஈருருபன்களும்,

'’', '↓', முறையே ஒலியழுததமும், இன்னோசையும் கொண்ட கூட்டுவடிவச் சொல். (Composite form with supra segmental elements or morphemes)

'கற்'கள் ↓ என்பதில், கல என்னும் உருபன் அல்லது சொல் மொழியில் தனித்து நினறு இயங்கும் ஆற்றலுடையது. எனவே, இதுபோன்ற தனித்தியங்கும் ஆற்றலுடைய உருபன்கள அல்லது சொற்கள் தனி நிலையுடையன (Free forms). கள, எனனும பன்மைப் பொருளுணர்த்தும் உருபன், ஒலியழுத்தம், இன்னோசை முதலியன தாமே தனித்தியங்கும் ஆற்றலின்றிக் 'கல்' என்பது போன்ற தனித்தியங்கும்

ஆற்றலுடையனவற்றைச் சார்ந்து அல்லது இணைந்தன்றி வாராத உருபன்கள் ஒட்டுருபன்கள் (Bound Morphemes or Forms) எனறு பெயர்பெறும். இத்தகைய இருவகையாலும் அமைந்தவையே அனைத்துச் சொற்களும். எனவே, சொல்லின் அல்லது உருபனின தனிநிலை ஒட்டுநிலை என்பன அவற்றின் ஓர் வகை இலக்கணக் கூறுகளேயாகும்.

ஒட்டுகள் (Affixes) வேர் அல்லது அடிச்சொல்லின் முனனொட்டு அலலது முற்சேர்க்கை பின்னொட்டு அல்லது பிற்சேர்க்கை இடையொட்டு அல்லது இடைச்சேர்க்கை என மூவகைப்படும். இவற்றுள் பின்னொட்டுகளே பெரும்பான்மை இடையொட்டு, மிகச் சிறுபான்மை. அதுவும் சில மொழிகளிலேயே. மிகையொட்டுகள் பாகுபாட்டியல்புக்கு அப்பாற்பட்டன.

1. கொன்னூர் — கொன்
   Prefix — Pre முன்னொட்டு

2. கற்கள்-கள்
   Boys-s பினனொட்டு

3. Men-'e'-பன்மையுணர்த்தும் உருபு, ஈணடு இடையொட்டு. பொதுவாக, மொழிகளின் சொற்கள் தனியுருபனுடையன (Simple Stems), கூட்டுருபனுடையன (Derived stems or Derivatives) என இருவகையாகும். கல-, கற்கள்-, என்பன போன்றன முறையே அவற்றிற்கு எடுத்துக்காட்டுகளாகும். மேலும், உருபன்கள் இணைந்து சொல்லாவதற்கு இடங்கொடுத்து நிற்கும் சொலவடிவங்கள், அடிச்சொற்கள (Stems) எனப்படும். தனியோர் உருபனே நின்று, பிறசேர்நதும் சொல்லாக இடங்கொடுக்கும். இரணடோ அவறறின் மேற்பட்டோ இணைநது நின்று பிற சேர்ந்தும சொல்லாக இடங்கொடுக்கும். இவ்விருவகையாக அடிச்சொற்கள் அமைந்து சொற்களாவதும். இவற்றோடு பிற இணைநது சொலலாவதுமாகும், இவ்வாறாக அடிச்சொலலாவதறகாகும் இணைப்பு உருபன்கள அனைத்தும் சொல்லாகுவுருபன்கள் (Derivative morphemes) எனப்படும். இத்தகைய உருபனகளைக் கொண்டே மொழியின சொற்கள ஆகக்கப்பெறுகின்றன. இததகைய அடிச்சொற்கள் அல்லது சொற்களே மொழியின் அகரமுதலிகளில காணப்படுவன. அன்றியும், இவற்றை அடியாகக் கொணடே பெயர், வினை முதலிய இலக்கணககூறுகளும் (Parts of speech) வரையறை செய்யப்படுகின்றன.

ஓர் சொல்லின் வேர்ச் சொல் பிற சேர இடங்கொடுக்கும் நிலையில் அது அடிச்சொல்லாகும். ஓர் சொல்லின் வேர்ச்சொல் ஒன்றேயாகும். அதுவும் முதலில நிற்கும் கூறுடையது ஆயினும், பிறசேர, அதுவே அடிசசொல்லாகி மீணடும் பிற சேரச்சேர அச்சேர்க்கையோடு அடிச்சொல்லாகுவதுமாகும்

எ-டு கல்-வேர்ச்சொல்

கற்கள்-என்பதில் 'கல' (கற்)-என்பது அடிச்சொல். 'கற்களை' என்பதில் 'கற்கள்' என்பது அடிச சொல் என்க.

திராவிட மொழிகளில் வேர்ச்சொற்கள் குறில் அல்லது நெடிலாகிய ஓருயிர் கொண்டே வரும் இதன் முன், பின் மெய்யிருப்பதும், இல்லையாவதுமாகும்.

(மெய்+உயிர்+(மெய்)

(கு/நெ)

(c) + V/V + (c)

இது திராவிட மொழியின வேர்ச்சொல்லின அமைப்பியலாகும். வேர்ச்சொல்லும் தனிநின்று சொலலாகும். பலவகையில் இவ்வாறமையும் சொற்களுக்கு மரபு நிலையான பொருள உண்டு. இத்தகைய பொருளைக் (Iexical meaning) கூறும் சொற்களின் அடைவுகளே அகரமுதலிகள். இயலபாக இத்தகைய பொருள தரும் சொறகள் (Idioms) தனியுருபன்களன்றி உருபன்களின் கூட்டு (Composite form) ஆயினும், தனியுருபன்களும் மரபுநிலைப் பொருள்தரும் சொற்கள ஆகின்றன. எனவே, மரபுநிலைப் பொருள் தரும் தனியுருபன்களும், அவற்றின் கூட்டு வடிவங்களும் மரபுநிலைப் பொருள் தரும் சொற்களாகி மொழியின் தொடராக்க (Utterances) உறுப்புக்களாகின்றன. எனவே, குறிப்பிடப்பட்ட சொற்கள் யாவும் சொற்றொடரின் உறுப்புகளாகும்.

சொற்களுக்கு மரபு நிலைப் பொருள் தவிர இலக்கணப் பொருள்களும் (Grammatical meaning) பெயர், வினை என்பன போலவுள்ளன.

சொற்றொடரின் உறுப்புகளாகிய சொற்கள் யாவும் அவற்றிற்குரிய இடைவெளிகளுக்கு இடையே தனித்து நிறபன (Isolability). இவ்வாறு சொற்றொடரின் தனி நிற்கும் சொற்கள் ஒவ்வொன்றும் இலக்கணப் பொருள் தரும் ஒவ்வோர் இலக்கண வடிவமும் ஆகும். இவ்வாறாகிய சொல்லின தனிநிலை இலக்கண வடிவம் சொல நிலை இலக்கணவடிவமாகும் (Lexeme). மாறாக இரணடு முதலியவாகத் தொடர்ந்து வந்து ஓரிலக்கணக் கூறாகுமாயின் அது தொடர்நிலை இலக்கணவடிவமாகும் (Nonce form).

எ-டு. மரம் என்பது இயக்கம் இல்லாதது என்பதில், மரம், என்பது, இயக்கம், இல்லாதது ஆகிய நானகும் சொல்நிலை இலக்கணவடிவங்களாகும் (Lexemes).

மரம் என்பது, இயக்கம் இல்லாதது, மரம் என் பது இயக்கம் இல்லாதது எனும் மூன்றும் தொடர் நிலை இலக்கண வடிவஙகள் (Nonce forms).

இன்னோசை முதலியனவும் தனிச்சொல் நிலை இலக்கண வடிவங்களே ஆகும் (Lexemes).

உருபன்களும், அவற்றின் கூட்டுகளுமாகிய சொற் களுக்கு அதனதன் அமைவு நிலையில் (Formal)இலக கணஙகாண்பதும், அது ஒவ்வொன்றும் தொடரில் பிற சொல்லோடு இயையும் இயைபு நிலையால (Functional) இலக்கணங்காணபதும் என ஒரு சொல் லின் இலக்கணத்தை இருவகையிலும் காணலாகும்.

சொல்லின் மரபுநிலைப் பொருளும் (Idiomatic or Lexical meaning) சொலலின் இலககணப் பொரு ளைப் (Grammatical meaning) புலப்படுததிச சொல லிலக்கணஙகாண உதவுவதாகும்

ஒவ்வொரு மொழியின் அமைப்பு நிலைக்குத் தக்க வாறு சொல்லிலககணஙகள சிறிது வேறுபாட்டைப் பெறறிருப்பினும் உலகமொழிகள அனைத்திலும சில ஒறறுமைக் கூறுகளும (Universalities) உள. பெயர் (Noun),வினை (Verb)முதலிய சொறகளும்,பெயரில் வேற்றுமையும (Case) வினையில் காலமும (Tense) உலகமொழிகள பலவற்றில் உளளன. இவைபோனறு பல ஒப்புமையுடைய இலக்கணக் கூறுகளை உலக மொழிகள பெரும்பான்மையவற்றுள காணவியலும்.

பெரிதும் சொற்றொடரில பெயரும, வினையும் சிறப்புடைய இலககணக கூறுகள. ஏனைய சொற்கள யாவும் அவற்றை விளக்க, அவறறைத் தொடாந்து வருவனவாகும். பெயர், வினை முதனிலைசசொற் களாகவும், ஏனைய அவற்றின துணைநிலைச சொற் களாகவும் வரும் இத்தகைய பெயர், வினை ஆககத் திற்கும், அவற்றின இலககணக கூறுகளைப் புலப் படுத்துவதற்கும், பெயர், வினையாகிய முதனிலை யோடு இணைந்து செயற்படுவன, துணைச்சொற்கள அலலது இடைசசொறகள (Bound forms or clitics or Non-root morphemes) எனப்படும். சொலலின் இலக்கணத்தை உணர்ததுவதற்கு இவறறின பங்கு மிகப் பெரிதாகும். சொற்றொடரிலக்கணத் திலும் இவற்றின பங்கு மிகபபெரிது.

பெயர், வினை, பகர்பெயர்கள் (Pronouns), பெயரடை (Adjective), வினையடை (Adverb), முன்வேற்றுமைக்குறி (Pre-position) இணைப்புச் சொல் முதலிய பலவேறாகச் சொற்களை, இலக்கண வடிவங்களாகக் காண்பது போன்ற பல முறைகள் உலக மொழிச் சொல்லிலக்கணத்தில் காணப்படுகின் றன. தனி நினற பெயர் அல்லது வினை இனனோசை (Intonation) போன்ற இலக்கணக் கூறுபாட்டோடு சொற்றொடராவதும் மொழியின் இயல்பாகும். சொற்றொடரில் பெயர், வினையை விளக்கவும், வினை, பெயரை விளக்கவுமாக இணைந்து செயற் படும். வேற்றுமை, பெயருககும் வினைககும் அலலது முடிக்குஞ்சொல்லிற்குமுள்ள இயைபினை உறுதிப் படுத்துகின்றது. சொற்றொடரில் பெயருக்கும் வினைக்கும் பல இலக்கண இயைபுகள் வேணடப்படு கினறன. இல்லையேல் இலக்கணமிலலதாகக் (Ungrammatical) கருதப்படும் எனவே, பெயர், வினையாகிய இரணடு சொல்லிலககணஙகளும் மிகக சிறப்பினைப் பெறுகின்றன

பெயர், வினைச்சொற்களே உலக மொழிகளில் பெரிதும் பல இலக்கணக கூறுகளை உணாத்துகின றன. உயர்திணை (Rational), அஃறிணை(Irrational), உயிருள்ளன, உயிரிலலன, எண, பால், இடம், வேற்றுமை, காலம், மறை முதலிய இலக்கணக் கூறு களை யுணர்த்துவன, பெயரும் வினையுமாகிய சொற் களே. அவற்றுள்ளும, பெயர், வினையாகிய முதனிலை அலலது முதற் சொல்லோடிணைந்த துணைச்சொறகள அலலது இடைச்சொற்களே குறிப் பிடப்பட்ட இலக்கணக கூறுகளைப் பெரிதும் உணர்த்துகின்றன. ஆக, இலக்கணக் கூறுபாடுகளைப் பெரிதும் பெயர், வினைச்சொற்கள் உணர்ததுகின் றன அல்லது அவற்றுளளமைநத துணைச்சொறகள் உணர்த்துகின்றன.

காட்டாக, பொன்னன—எனனும் பெயர்ச்சொல் உயர்திணை, ஆணபால், படர்க்கை எனனும் இலக கணக் கூறுடையது

பொன (ன்)+அ+ன்—என்பதில துணைச்சொல லாகிய அகரம் படர்க்கையிடம், 'ன' கரம், ஆண் பால்; எனவே. உயர்திணை ஒருமை எண்ணுமாம்.

சென்றான் — என்னும் வினைச்சொல் உயர் திணை, ஆண்பால், படர்ககை, இறநதகாலம் என் னும் இலககணக் கூறுகளையுடையது.

செல் (ன) + ற் + ஆ + ன் — என்பதில் துணைசசொலலாகிய 'ஆ' காரம் படர்க்கையிடம்; னகரம், ஆண்பால்; எனவே உயர்திணை ஒருமையு மாம். 'ற' கரம் இறந்த காலம்,

நீரில் — நில்லற்க — என்பதில நீர்+இல் - என 'இல்' - வேற்றுமையினையும், நில்+அல் (ற்) + க -என 'அல்' மறையினையும் உணர்த்துகின்றன. இவ் வாறே பிறவுமாம்.

ஆங்கிலத்தில,

Boy-Boys - எனபதில் 'S' என்னும் துணைச் சொல் (Bound form) பன்மை எண்ணை உணர்த்துகின்றது, பெய ரில.

Man-Men - என்பதில் 'e' பனமை எணணை யுணர்த்துகினறது, பெயரில்.

Say-Said - என்பதில் 'd' இறந்த காலத்தை யுணர்த்துகின்றது. வினையில்.

Run-Ran - என்பதில் 'a' இறந்த காலத்தை உணர்த்துகின்றது வினையில்.

ஆயின், He, Boy ஆண்பால, படர்ககை, ஒருமை என்னும் இலககணக் கூறுகளைப் பெயர்களே உணர்த்துகின்றன.

She, Girl - பெணபால், படர்ககை, ஒருமை யென்னும் இலக்கணக் கூறுகளைப் பெயர்களே உணர்த்துகினறன.

திராவிட மொழிகளில் எதிர்மறைப் பொருளை அ, ஆ-துணைச் சொலலாகவும், அல், இல—முதல் சொலலாகவும் துணைச்சொல்லாகவும் வினையில் நின்றுணர்த்தும். எனவே, வினையாலணையும் பெயரிலுமாம்.

ஆங்கிலத்தில், எதிர்மறைப்பொருளை, N, No, Not, Non, Un முதலியன உணர்த்திவருகின்றன.

Eg. None - N (No) + One
Neither - Nor - N + either, N + or
Nothing - No + thing
Nobody - No
Not doing - Not
Non-linear - Non
Unequal - Un-
Impossible
Inadequate
Irresponsible

என்பன பிற.

வடமொழியிலும், ந, நி,அந் முதலியன மறைப் பொருளில் வருவன. (எ.டு)நாத்தி,நிசப்தம், அநேகம்.

திராவிட மொழிகளில் வேற்றுமை உருபு யாவும பெயரின்பின் (Postposition) வர, ஆங்கிலத்தில் முன (Preposition) வரும்.

எ-டு நூலில்-இல்

In the Book - In

By, with, to, for, from, of, in, on — முதலி யன ஆங்கிலத்தில பெயரின்முன் தனித்து நின்று வேற்றுமைப் பொருளுணர்த்துவன.

இவ்வாறு சொல்லிலககணங்கள் மொழிக்கு மொழி உணர்த்தும் முறையில் வேறுபடினும் உணாத்தும் இலக்கணக் கூறுகளில் ஒற்றுமை காணபதியல்பு.

திராவிட மொழிகள பலவற்றிலும் 'ன' கரம்ஆண பாலை, 'ள' கரம், 'இ' கரம பெண்பாலை,'ர' கரம் பலர்பாலை, 'த' கரம ஒனறன்பாலை, 'அ' கரம், 'வ' கரம் 'கள்' பலவின்பாலை உணர்த்துகின்றன, பெயர், வினையில். இவற்றிலிருந்து திரிநத வடிவங் கள பிறபல. இவ்வாறாகிய பால் காட்டும் இறுதி நிலையே (Gender Terminal) ஒருமை, பனமை எணகளையும், உயர்திணை அஃறிணையாகிய திணை களையும் உணர்த்துகின்றன.

எ-டு. அவன் -ன்- ஆண், ஒருமை, உயர்திணை
அவள், தோழி -ள், இ - பெண், ஒருமை, உயர்திணை

அவா -ர்- பலர், பன்மை, உயர்திணை

அது -து- ஒன்று, ஒருமை, அஃறிணை

பல, அவ், ஆக்கள் - அ, வ், கள் - பல,பன்மை, அஃறிணை

ஏன்/யான், ஏம்/யாம் } தன்மை
ஈன்/நீன், ஈம்/நீம், நீமிர் > நீவிர் > நீயிர் > நீர் } முன்னிலை
தான், தாம் } படர்க்கை

எனும் இடப்பெயர்கள் பெயராய் இடத்தையுணர்த்த இவற்றின் கூறுகள வினையிறுதியில வந்து இடத்தை

யுணர்த்துகின்றன. வந்தேன், வந்தேம் - ஏன், ஏம் - தன்மை. குறிப்பிடப்பட்ட பெயர்களும், அவற்றின் திரிந்த வடிவங்களுமே திராவிட மொழியில் இடத்தை யுணர்த்திவருகின்றன. இவற்றின் இறுதி 'ன' கரம் ஒருமையினையும், 'ம' கரம், பன்மையினையும் உணர்த்துவன.

திராவிட மொழிகளில் 'த' கரம், 'இ' அலலது 'இன்' இறந்த காலத்தையுணர்ததுவன.

எ-டு பார்த்தான் - த்+ஆ+ன்-த்
ஓடினான் - இன்+ஆ+ன்-இன்
உம், ம், ப், வ், க் முதலியன எதிர் காலத்தை உணர்த்துவன.

எ-டு. உண்ணும்-உம்
என்மர்-ம்
என்பா-ப்
ஆய்வர்-வ்
உண்கு-கு(க்)

நிகழ்காலம் இன்று, நின்று முதலிய நிகழ்வு குறிக்கும் சில துணைச்சொல் கொணடு உணர்த்தப்படுகின்றது. அ,இ,உ,ஆ,ஈ,ஊ, என்பன சுட்டுப் பொருள் தரச் சொல் முதலில் வருகின்றன. திராவிட மொழிகளில். எ,ஏ,யா ஆ,ஓ என்பன முதலில், இறுதியில் வந்து வினாப் பொருளைத் தருகினறன, அம்மொழிகளில்.

எ-டு. அங்கு, ஆங்கு-அ, ஆ-சுட்டு.
எவன், யாவன்-ஏ, யா-வினா.

பால், (திணை, எண்), வேற்றுமை, காலம் வினையில் இடம் இவை முதலாகிய இலக்கணக் கூறுகள் திராவிட மொழியில் பெயர், வினையிலுள்ள துணைச்சொற்களாலேயே (Bound Forms) உணர்த்தப்படுகின்றன.

பெயர்கள பலவாறு வகைசெய்யப்பெற்றும் இலக கணப் பொருளை, இலக்கணக் கூறுகளை உணர்தது வது சொல்லிலக்கணமரபாகும். பொருள் ஒருவகையாகிய பகர் பெயர்களே (Pronouns) பலவகை பெறறு இலக்கணமுணர்த்துவனவாம்.

எ-டு.

| | |
|---|---|
| 1. இடப்பெயர் -யான், நீ | (Personal Pronouns) -I, You. |
| 2. சுட்டுப்பெயர் -அவன், அவள் | (Demonstrative Pronouns) - He, She |
| 3. வினாப்பெயர் -யாவன், யாவள், யாவர் | (Interrogative Pronouns) -Who? |
| 4. எண்ணுப்பெயர் -ஒன்று, இரண்டு | (Numeral Pronouns) -One, Two. |
| 5 வரையறையில் பெயர் -சில, பல | (Indefinite Pronouns) -Some, many |
| 6. முற்றுப்பெயர் -எல்லாம் | (Inclusive Pronouns) -All |
| 7. எதிர்மறைப்பெயர் -இல்லது | (Negative Pronouns) -Nothing |
| இவ்வாறு பல. | |

வினை, குறிப்பு (Appellative Verb), முற்றுக்கள (Finites) இவறறின் பெயர், வினை கொணடு முடியும் எசசஙகள தனவினை, பிறவினை செய்வினை செயப்பாட்டுவினை முதலிய பிறவுமாம.வினைவகை, வினையடியாகத் தோன்றும் பெயர் (Participial Nouns) என்பதும் ஓாவகை முற்றுப்பெயராம்.

தன்மை, முன்னிலை, படர்க்கை என்னும் மூவகை முற்றும் ஒருமை, பன்மையாக இறுதிநிலை (Terminals) கொணடே அல்லது துணைச்சொல (Bound forms) கொணடே வகைசெய்யப் பெறுகின்றன. வியங்கோள வினை (Optative Verb) இறுதி நிலையில் அவ்வினையாகினறது.

பெயரெசச, வினையெச்சங்களும், இறுதியால் அவ்வவ் விலககணக்கூறடைகின்றன.

வினையடி கொணடவினை முற்றின் இறுதிநிலை பெற்றுப் பெயர் அல்லது பணபு அல்லது எதிர்மறை அடிச்சொல்கொளளின் அது குறிப்பு வினையாகும் இலக்கணத்தது.

பிறவினை, படுவினையும் துணைச்சொல்லால் (Bound forms) இலக்கணப் படுவனவேயாம்.

சொல்வகையால், சொல்லில் காணும் அடிச்சொல், அதனோடு சேர்கும் துணைச்சொல் அல்லது இடைச்சொல் (Bound forms or clitics) இயல்பால் சொலலிலக்கணஙகள் வரையறை செய்யப்படுகினறன. இவ்வாறாகிய பெயர், வினை, இடைச்சொற்கள சொற்றொடரில் பிறசொல்லோடு இயையும் நிலையிலும் சொல்லிலக்கணம் உணர்த்தப்படும்.

சொற்கள், சிறப்பாகப் பெயர் நிலையில் ஒட்டித தொகைச்சொல்லாகி ஓர் சொல்லிலக்கண வடிவம்

பெறுதலுமாகும். இதன்வகை பலவாக இலக்கணங் கூறப்பெறும்.

எ-டு. யானைக்கொம்பு

இது, இருசொல்லிணைந்து ஓர் பெயராக ஒலிப்பினும் தொகை நிலைத் தொடர் மொழியாகக் (Phrasal compound) கருதப்படும். இதுபோன்று அடிச்சொல் தொகை (Stem compound) வேர்ச்சொல் தொகை (Root compound) என்பனவுமாம்.

ஒருசொல்லாயினும் அடுக்கிவர அடுக்குத்தொடர் (Repettive Phrase) ஆகின்றது. எ-டு புலி புலி.

இதுபோன்று இடைவெளியின்றித் தொகுந்து இரட்டைக் கிளவியாக (Repetitive Compound) ஒரு சொல்லியல்பாய் வருதலுமுண்டு.
எ-டு. குறுகுறுத்தல்.

இவை, ஒருசொல் நிலைப்படினும் தொடர்நிலைப் படுவனவுமாம்.

தொகைநிலையாகத் தொடர்நிலைப்படுவன, சொல்லிலக்கண வடிவத் தொடரே எங்க. சொல்லிலக்கணத்தில் இதற்கிது பின்வரவேண்டும் என்ற முறையும் ஓர் இலக்கணக் கூறாகும். இவ்வகைச் சொல்லிலக்கணக் கூறுகள் பிறவும் பல உள. சி.சு.

**துணை நூல்கள்:**

Caldwell, Robert, Comparative Grammar of the Dravidian languages, Gian Publications, 1981.

Gleason Jr.H A., An Introduction to Descriptive Linguistics, Oxford and IBH Pub. Co., 1970.

Hockett, Charles, F., A couse in Modern Linguistics, Oxford and IBH Pub. Co., 1970.

**சொல்லுதல் சொல்லும் பிறழ்நிலை:** சொல்லுதல் சொல்லும் பிறழ்நிலையாகிய உளப்பிணி உடையவர்கள் ஒருசிலரிடம் சொற்களைப் பேசும் நடத்தையில் (Verbal behaviour) தாறுமாறான போக்குகள் ஏற்படுகின்றன. இவர்கள் தொடர்பில்லாத வகையில் பேசுவர். இப்படிப்பட்ட பிறழ்வான பேச்சுத் தன்மை உளப்பிணிகளுள் ஒன்றான உணர்ச்சிவிண்டநிலை (Schizophrenia) அல்லது உளச்சிதைவு என்ற நோயில் மிகுதியாகக் காணப்படும்.

உணர்ச்சி விண்ட நிலை நோய்க்கு ஆட்பட்டவர் அருகிலிருக்கும் ஒருவர் பேசும் சொற்களையோ வாக்கியத்தையோ அப்படியே சொல்லிக் கொண்டிருப்பர். இதனையே சொல்லுதல் சொல்லும் பிறழ்நிலை (Echolalia) என்பர். உணர்ச்சி விண்ட நிலை நோய் வகையில் ஒரு பிரிவினரான தன்னியக்கு உளச்சிதைவு (Catatonic Schizophrenia) நோயாளிகளிடம் இத்தன்மை மிகுதியாகக் காணப்படும். நோயாளி தன்னுடைய சிந்தனை ஓட்டத்தில் விடாத ஒரு தொடர்பினை ஏற்படுத்திக் கொள்ளக் கையாளும் ஒரு முயற்சியே இத்தகைய செயலாகும் என்று அறிஞர்கள் கருதுகிறார்கள்.

இப்பிறழ்வு நிலையுடைய நோயாளி சில நேரங்களில் அவரிடம் கேட்கப்படும் வினாக்களில் உள்ள சொற்களையே மறுபடி மறுபடி சொல்லிப் பதில் சொல்லும் நிலை ஏற்படலாம். நோயாளி தன்னுடன் பேசிப் பேட்டி காண்பவருடன் வலுவான இணக்கப் போக்கைப் பாதுகாத்துக் கொள்ள விரும்புகிறார் என்பதனை இது புலப்படுத்துகிறது. மேலும், புதிய மொழி ஒன்றைக் ஏற்றுக் கொள்பவர் போன்றும் நோயாளி நடந்து கொள்வார். ஆர்.ப.

**சொல்வகைப் பாகுபாடு:** காட்சிப் பொருளும் கருத்துப் பொருளும் உள்பொருளும் இல்பொருளும் எனப்படும் பொருள்களை உணர்த்தும் குறியீடுகளை மொழி என்றும், அம்மொழிகள் தனியாகவோ இணைந்தோ தொடர்ந்தோ கருத்துகளைத் தெரிவிக்க ஆக்கமுறும்போது அவற்றைச் சொல் என்றும் வழங்குதல் தொன்னூலோர் மரபு. இடைக்காலத்தே அவ்வரையறை தளர்ந்து மொழி, சொல் இரண்டும் ஒரு பொருளுடையவை போல வழங்கி வருவனவாயின.

யாதானும் ஒரு பொருளின் தன்மையையோ செயலையோ, நிலைமையையோ விளக்க எழும் ஒரு சொல்லோ சொற்றொடரோ எவ்வெப்பொருளை எவ்வெக் கூறுகளான் விளக்குகின்றன என்பதை ஆராய்ந்து பகுத்துக் கொண்ட முறைமையே சொற்பாகுபாடாகும். இது எல்லா மொழிக்கும் பொதுவானதோரிலக்கண மரபாகும்.

தமிழ் நூலார் சொற் பாகுபாட்டினை இருதிறமாகப் பகுத்துள்ளனர். ஒன்று இலக்கண வகைப் பாகுபாடு; மற்றொன்று இலக்கிய வகைப் பாகுபாடு. அவற்றுள் இலக்கண வகைப் பாகுபாடு இருவகைப் படும். ஒன்று பொருட்பாகுபாடு. பிறிதொன்று சொற்பாகுபாடு. அவற்றுள் பொருட்பகுப்பு உயர்திணைச்சொல் அஃறிணைச் சொல் என இரு தொகுதியாக நின்று ஆடூஉவறி சொல், மகடூஉவறி சொல், பல்லோறியுஞ்சொல், ஒன்றறிசொல், பலவறி சொல்

என ஐந்து கூறாக விரியும். இவற்றைப் பிற்கால நூல கள் ஆண்பாற்சொல, பெண்பாற் சொல், பலர்பாற சொல், ஒன்றன்பாற் சொல், பலவின்பாற் சொல் என வழங்கும். இப்பிரிவுகட்கு அடிப்படை இலக்கண வகைச் சொறகளுள பொருளைச் சுட்டி நிறகும் முதனிலைப் பெயர்களொடு கூடிவரும் இறுதி(விகுதி) இடைச்சொற்களேயாகும். அவை பெருமபான்மையும் படர்க்கை முற்றுவினைச் சொல்லாகவே இருக்கும பெயர்ச சொற்களுள தெளிவாகப் பால்காட்டாதன வெலலாம் இருதிணைக்கும் பொதுவாக நிற்கும். அவறறைப் பொதுப்பெயர் அல்லது விரவுபபெயர் என்று கூறுவர். அவை ஆணமைப் பெயர், பெணமை பெயர், ஒருமைப் பெயர், பனமைப பெயர், முறைப் பெயர், முனனிலைபபெயர் என வகைப்பட்டு வரும் தனமைப பெயர்கள் உயர் திணைக்கே உரியவை எனபது தொல்காப்பிய மரபு பிற்கால நூலகள இரு திணைக்கும் பொதுவெனக் கூறும். இவை தவிர மா, மரம், யானை, குதிரை என வரும் அஃறிணை இயற்பெயர்கள் யாவும் அஃறிணை இருபாற்கும் இருதிணைக்கண்ணும் உளள ஆணபால் பெணபால களுக்கும் பொதுவாக வரும் விரவுப் பெயாகளாகும் (தொல்-சொல்-பெயரியல் சூ-6, 20. 22. 28).வினைச் சொற்களுள் தெளிவாகப் பாலகாட்டாதனவெல லாம் இருதிணைப் பொதுவினை அல்லது விரவு வினைச் சொற்களாகும் (தொல்-சொல-வினையியல 5,25).

இலக்கண வகைச் சொற்கள் பெயர்ச்சொல், வினைச்சொல, இடைச்சொல், உரிசசொல் என நான்காகும். அவறறுள் பெயர்ச்சொறகள், பொருட் பெயர், இடப்பெயர், காலப்பெயர், பணபுப்பெயர். சினைப்பெயர், தொழிறபெயர் என ஆறாக விரியும். எண்ணுப்பெயர், பொருட்பெயருள் அடங்கும். இவை யாவும் வெளிப்படைப்பெயர், குறிப்புப பெயர் என இரு திறனாக வரும். குறிப்புப் பெயருள் குறிப்பிடத்தக்கது ஆகுபெயர்.

எல்லாச் சொறகளும காரணமுடையனவே என்பது தொன்நூலாா கொளகை. பிறகாலநூல கள் வடமொழிக கொளகையை ஒட்டி இடுகுறிப் பெயர், காரணப்பெயர் என இரணடாகக கொள ளும். பெயர்ச்சொற்கள எழுவாய வேற்றுமை முதல விளிவேற்றுமை ஈறான எட்டு வகை வேற்றுமை களை அடையும்.

வினைச் சொற்கள் தெரிநிலை வினை, குறிப்பு வினை என இரு திறப்படும். தொழிற் பெயாகளின் அடியாகக காலமுணர்த்தும் இடைசசொற்களொடு வருவனவெல்லாம் தெரிநிலை வினையாகும். தொழிற் சொல்லலலாத ஏனைய பெயர்களின் அடிப படையில் உடைமைத் தனமையையும் இடத தன மையையும் ஒபபுமையையும் பண்புப பொருளையும கொணடு காலததைக் குறிப்பாக உணாத்தி வருவன வெல்லாம் குறிபபு வினைகளாகும். வினைச சொற களைக் காலம்,இடம், பால முதலியவறறை வைத்துப பலவாக எணணிக கூறுவர். வினைசசொறகளபால் உணாததும் இறுதிநிலைகள் (விகுதி) இன்றி நிற்பின அவை எசசவினை எனப்படும. வினை முற்று இறுதி குறைநது நிறபது வினையெச்சம் என்றும, பெயாத் தனமை பெறற வினைமுறறு (வினையாலணையும பெயா) இறுதி குறைநது நிற்பது பெயரெச்சம் எனறும வழங்கப்பெறும். பிறகால நூலகள வினை கொணடு முடிபவை வினையெசசம எனறும, பெயா கொணடு முடிபவை பெயரெசசம் எனறும் கூறும, பெயர்பபொருள எணவகை வேற்றுமையுறுதறகு வினைகளே காரணமாகும்

இடைச்சொற்கள எனபவை பெயாசசொல வினைச் சொற்களில அவற்றிற்கு உறுப்பாகவும, பெயர் வினைகளைச சார்ந்து தனித்தும வரும; தனிதது நின்று பொருள தரமாட்டா. இடைச சொற்கள, சாரியையாக நிறபன, வேற்றுமையுருபாக வருவன, காலமுணர்த்துவன, இசை நிறையாக வருவன. அசை நிலையாக நிறபன, தததம குறிப பிற் பொருளுணர்த்தி வருவன, உவம உருபாக வருவன என ஏழுவகைப்படும். அவறறுள் முதலன மூனறும் பெயாவினைகளின் பொருளை வேறுபடுத்த வரும் சாரியைகள சொற்புணர்ச்சிக்கும் சொலலாக் கத்திறகும் துணைபுரிய வரும். அடுதத இரண்டும் சொல்லுறுப்பாகவும் தனித்தும பொருளினறி வரும். தத்தங் குறிப்பிற் பொருள் செய்யும் இடைச்சொற கள பெயர்வினைகளைச் சார்ந்து தனிப் பொருள உணர்த்தி வரும. அவற்றுள் சில பெயர்ததன்மையும் வினைத்தனமையும ஊறறு வரும். அவ்விடங்களில அவை பெயராகவும், வினையாகவும கொள்ளப்படும். உவம உருபிடைச சொற்கள் வினைத் தன்மையுற்று முற்றாகவும் எசசமாகவும் நின்று ஒபபுபபொருள உணர்ததி வரும் (தொல்-சொல்-இடையியல 1, 2. உவமயியல் 11-17). வணடின கால (இன்) இரு மொழிப் புணர்ச்சியில் சாரியை. கண்டனன (அன) ஒருமொழியாக்கத்திற் சாரியை. சித்திரையாற கொண்டான் (ஆன) சித்திரைக்குக் கொணடான் (இக்கு) இவை பொருள் நிலைக்குதவியாக வநதன. சித்திரை என்பது ஆனசாரியையால விணமீன் என்ப தும் இக்குச் சாரியையால் சிததிரை எனபது திஙகள என்பதும் உணரப்படும். பாாத்தான் (த்) உணடான் (ட்) உணகினறான (கின்று) உண்பான (ப்) இவ வினைச் சொறகளுள த், ட் இறநத காலத்தையும

கின்று நிகழ்காலத்தையும் ப எதிர்காலததையும் உணர்த்தி நினறன. சாத்தனைக் கணடான் ஐ செயப்படுபொருளை உணர்த்தி வேற்றுமை உருபாக நின்றது அது மற்று அவலங் கொள்ளாது. 'மற்று' அசைநிலையாக நின்றது.'ஏன இததொத்தன'. ஏன இசைநிறையாக நின்றது. கூரியதோர் வாள் மன். மன ஒழியிசைப் பொருள் குறித்து நின் றது. கணணனும் வந்தான். உம் எச்சப பொருள குறிதது வந்தது. புலியனனமறவன். அன்ன என்பது உவம உருபாக ஒப்புப பொருள் உணர்த்தி நின்றது. பிறன், மறறையான் என்பவை இடைசசொல்லடியாக வந்த பெயர்ச் சொற்கள.

உரிச் சொற்கள என்பவை எல்லாச் சொற்களுக கும் முதனிலை (பகுதி)யாகத் தோனறிப் பெயரும் வினையுமாக வரும. பெயர்-வினைகளுக்கு முதனிலை யாகாமல் பெயர்ப பொருளையும் வினைப பொருளை யும் சிறப்பிக்க அடையாக வந்து தம் பொருளை உணர்த்தி நிற்குமிடதது அவை உரிச சொற்கள எனப் படும். உரிச்சொற்கள் சில இடங்களில் பெயர்ப் போலியாயும வினைப் போலியாயும் வரும். அப் பொழுது அவை பெயர்ச் சொலலாகவும் வினைச் சொல்லாகவும் கொளளப்படும்.

குழக்கன்று-குழ உரிசசொல். குழவி-உரிச்சொல் லடியாகப் பிறந்த பெயர். கருவி வானம். கருவி உரிச்சொல. இது போன்றவை பெயர்-வினையாக மாறாமல் அடையாகவே வரும்.

இலக்கிய வகைச் சொற்கள நான்கனுள் இயற் சொல் என்பது கற்றார் கலலார் யாவர்க்கும்பொருள விளங்க வழக்குச் சொல்லாக நிற்கும் திரிசொல் என் பது பெரும்பான்மையும் கற்றார்க்கே பொருள் விளங்கச் செய்யுள் வழக்குச் செல்லாக நிற்கும் பல பொருளைக குறிக்கும். ஒரு சொல் பல பொருளைக் குறிக்கும், பல சொல ஒரு பொருளையும் குறிக்கும் சொற்கள் எல்லாம் திரி சொலலாகும். திசைச் சொல் என்பது ஒவ்வொரு நில எலலைக்குள அவ்வநநிலத தார்க்குரிய வழக்காகிப் பிறநிலத்துள்ளார்க்குவேறாகி வரும். இதனை வட்டார வழக்கு என்பார் சிலர். வடசொல் என்பது தமிழில் வழங்கும் வட சொற்கள் வடமொழி ஒலியின்றித் தமிழ எழுத்தொலிகளால் அமைநதுநிற்கும். ஆரியச் சொல் சிதைந்து தமிழ் எழுத்துகளால் அமைவனவும் வடசொல்லாகும். வடசொல்லாவது ஆரியத்தோடொக்கும் தமிழ்ச சொல் என்பார் இளம்பூரணர்.

'வடசொற் கிளவிவட எழுத்தொரீஇ,எழுத்தொடு புணர்ந்த சொல்லாகும்மே'என்பது தொல்காப்பியம். இதன்கண எழுத்தென்பதை ஒலிவடிவாகக் கருதாமல் பலர் வரிவடிவாகக கருதியதே கருத்து வேறுபாட் டிற்குக் காரணமாகும

எனவே, தமிழச சொற்களின் வகைகள் பதின் மூன்றாகவும் அவறறின் விரிகள பலவாகவும் உள ளமையறியலாம. ச.பா

**சொல்வடிவியல்:** மொழியின இலக்கண அமைப்பினைச (Grammatical System) சொல்வடிவி யல் (Morphology), தொடரியல் (Syntax) என இரு பெரும பிரிவுகளாகப் பகுததல இயலும் ஒரு மொழி யிலுள்ள அனைத்து உருபன்களையும் அவறறின வருகை முறையையும் விளக்கும் பகுதியேசொல்வடிவி யல எனப்படும். குறிப்பாக இது சொறகளின் வடிவ அமைப்பினைப் பறறிப் பேசும் பகுதியாகும்

சொல்வடிவியல,தொடரியல் ஆகியற்றுக்கிடையே மயக்கம் (Overlapping) காணப்படுவதால இவ்வி ரணடையும் முற்றிலும் தனித்தனியே பிரிததறிதல் இயலாதென அமைப்பு மொழியியலார் கருதுகினற னர்.

மொழியில பொருள தரும் மிகசசிறிய குறியீட்டு வடிவமே உருபன (Morpheme) எனப்படும். பொது வாக உருபனகள் ஒன்று அலலது ஒனறிறகுமேற்பட்ட ஒலியனகளைக (Phonemes) கொணடிருககும். ஒரு மொழியிலுள்ள உருபனகளைக் கண்டறிவதன் வாயி லாக அம்மொழியைப் புரிநது கொளளலாம்.

**உருபுகளைப் பகுத்தறிதல்:** ஒரு மொழியிலுள்ள வாக்கியத்தில அமையப் பெறறுள்ள உருபுகளைப் பகுத்தறிவதன் வாயிலாக அனைத்து உருபனகளையும் கணடறிய முடியும். உருபுகளைப் பகுததறிதலின பொருட்டு வாககியத்திலுள்ள பொருள் தரும் ஒரு பகுதியினைப் பிரிததெடுத்து அபபகுதி, மொழியில பிற இடங்களில அதே பொருளில் வருகினறதா எனபதனை முதலில் கணடறிய வேணடும். அங்ஙனம் வருமாயின அப்பகுதியினை ஓர் இலககண வடிவம் எனலாம். தமிழில 'பழஙகள்', 'மரம்' என்பன அதே பொருளில பல இடஙகளில் வழஙகப் பெறுவதால் இவற்றை இலக்கண வடிவங்களாகக் கொள்ளலாம்.

இதனை அடுத்த நிலையில் இலக்கண வடிவத் தினை மேலும்பொருள தரும் வடிவங்களாசப் பகுக்க முடியுமா எனவும், பகுக்க முடியுமாயின் இலக்கண வடிவத்தினைப்பகுப்பதால கிடைக்கப் பெறும பகுதி கள்மொழியில் எல்லா இடங்களிலும்ஒரே பொருளில் வழஙகப் பெறுகின்றனவா எனவும், இப்பகுதிகள் சுட்டும்பொருளின் சேர்க்கை இலக்கணவடிவம் சுட்டும் பொருளுக்கு இணையாக வருகின்றதா எனவும் ஒப் பிட்டுக் கணடறிய வேணடும்.

இலக்கண வடிவத்தினை மேலும் பொருள் தரும் வடிவங்களாகப் பிரிக்க முடியாத நிலையில அவவிலக கண வடிவத்தினை ஓர் உருபாகக் கருதலாம். 'மரம்' எனனும் இலக்கண வடிவம மேலும் பொருள தரும் வடிவங்களாகப் பிரிக்கமுடியாது அமைவதால அது ஓர் உருபாகச கருதபபடும்.

இலக்கண வடிவத்தினைப் பொருள் தரும் வடி வங்களாகப் பிரிகக இயலுமாயின அவ்விலக்கண வடிவம கூட்டு வடிவம் எனப்படும். கூட்டு வடிவத் தின பகுதிகள அனைததுச் சூழலகளிலும் அதே பொருளில வருகினறனவா எனபதனை மேலும் கணடறிய வேணடும்

'பழஙகள' எனபதனைப் 'பழம்', 'கள' எனப பகுக்க இயலவதால் இதனைக் கூட்டுவடிவமாகப கருதலாம். 'பழம்', 'கள' எனபன அனைத்துச சூழல் களிலும் பொருளில் மாற்றமினறி அமைவதாலும மேலும் பொருள தரும் வடிவஙகளாகப பிரிகக முடியாததாலும இவை தனித்தனி வடிவஙகளாகப் பிரிக்க முடியாததாலும இவை தனிததனி உருபு களாகக் கருதப்படுகினறன. இங்ஙனம் ஒவவொரு இலக்கண வடிவங்களையும் பிற வடிவஙகளோடு ஒப்பிட்டு மொழியிலுளள அனைத்து உருபுகளையும் பகுத்துக்காண முடியும். உருபுகளைப் பகுததுக் கணட பினனரே உருபனகளையும் மாற்றுருபுகளையும் கண் டறிதல இயலும.

**உருபு, மாற்றுருபு, உருபன்:** உருபனகளைக கணடறியும் முயறசியில முதலில பகுத்துக் காணப் பெறுவது உருபுதான் (Morph). மொழியிலுள்ள பொருள தரும் மிகச் சிறிய வடிவங்கள் உருபுகள எனப்படும். இவவுருபுகளைச் சுட்டும் வகையில் அமைக்கப்பெறும் குறியீட்டு வடிவங்களே உருபனகள் எனப்படும். ஒவவொரு உருபனும் ஒனறு அலலது ஒன்றிறகு மேற்பட்ட உருபுகளைக கொண்டமையும.

ஓர் உருபனுககு ஒன்றிற்கு மேற்பட்ட உருபுகள் அமையும் நிலையில் அவவுருபுகள மாற்றுருபுகள் (Allomorphs) எனச்சுட்டபபெறும் உருபனின தனித் தனி வருகை உருபெனவும, ஓர் உருபனின வெவ வேறு வடிவங்களை மாற்றுருபுகள எனவும் குறிப பிடலாம்.

தமிழில 'வாய்' என்ற உருபனுக்கு 'வாய்' என்ற ஒரே மாற்றுருபுதான் உணடு. ஆனால் 'கல' எனற உருபனுக்கு 'கற' ,கல்' எனனும் இரணடு மாற்றுருபு கள உண்டு. இரண்டு உருபுகள வேறறுநிலை வழககில் (Contast) வரும்பொழுது அவை ஓர் உருபனின மாற்றுருபுகளாகக் கருதப்படுவதில்லை. 'பழங்கள்' 'மரங்கள்' என்பதில் 'பழம்', 'மரம்' என்பன வேறறு நிலை வழக்கில் வருவதால் இவ்விரணடும் வெவவேறு உருபன்களின் மாறறுருபுகளாகக் கருதப்படும்.

'கற்குடம்', 'கல் வீடு' எனபதில ஒரே பொரு ளைத் தரும் 'கற்', 'கல்' என்னும் உருபுகள் துணை நிலை வழக்கில (Complementary distribution) வரு கின்றமையாலஇவ்விரணடும ஒரே உருபனின மாறறுரு புகளாகக் கருதப்படும. ஈணடுக் 'கற' என்னும மாற்றுருபு வலலொலிக்கு முனனரும், 'கல' எனனும மாற்றுருபு அரையுயிருககு (Semi vowel)முனனரும வந்து துணைநிலை வழககில அமையபபெறறுளளன சில சூழலகளில் மாறறுருபுகள் உறழசசியில (Free variation) வருவதுணடு

உருபனகளைக் கண்டறியும நிலையில முதன் முதலில பொருள் தரும் மிகச் சிறிய வடிவம் உரு பெனவும, இவவுருபினைக குறிககும் வகையில் அமைக்கப்பெறும் குறியீட்டு வடிவம் உருபன எனவும், உருபனுககுரிய உருபு மாறறுருபு எனவும் சுட்டப் பெறும. உருபனுக்கு ஒன்றிற்கு மேற்பட்ட மாறறுரு புகள அமையும் நிலையில இவ்வுருபுகள் ஒனறு வரு மிடததில் பிறிதொனறு வாராது துணைநிலை வழக்கில் அமையும்.

ஒரே பொருளைச் சுட்டி வடிவால வேறுபட்டமை யும் மாற்றுருபுகளின வடிவ வேறுபாடடிற்கு ஒலி யனோ உருபனோ சூழலாக அமையலாம. ஓர் உருபனுக்கு ஒன்றிற்கு மேற்பட்ட மாற்றுருபுகள் இருககும் நிலையில ஒனறை அடிப்படை வடிவமாக (Basic form) எடுத்துக கொண்டு மற்றவற்றை அடிப்படை வடிவத்திலிருந்து வருவித்துககாடடுதல் வேணடும். மாற்றுருபுகளை எளிமையாகவும், சுருக்க மாகவும் விளககப் பயனபடும் வடிவததையே அடிப் படை வடிவாகத் தெரிவு செய்தல வேணடும.

ஓர் உருபனின மாறறுருபுகளை நிருணயிக்கும் போது பல்வேறு ஒலிமாறறங்களைப் பயனபடுத் தலாம். இயல்பு மாற்றம் (Atomatic Alternation), இயல்பில்லா மாற்றம் (Non-Automatic Alternation), முறை மாற்றம (Regular Alternation), முறையிலலா மாறறம் (Irregular Alternation), ஒரினமாதல (Assimilation), வேறினமாதல் (Dissimilation) போனற மாற்றங்கள காரணமாக ஓர் உருபனுககுப் பல்வேறு மாறறுருபுகள அமைய இடமுண்டு (காணக: உருபொலியனியல அமைபபு).

**உருபன்களைக் கண்டறிதல்.** நைடா என்னும் மொழியியல் அறிஞர் மொழியின்கண காணப்பெறும்

உருபன்களைக் கண்டறிய ஆறு கொள்கைகளைக் குறிப்பிடுகின்றார்.

அனைத்துச் சூழல்களிலும ஒரே பொருளைச சுட்டும் முழுதொதத ஒலியன் வடிவுடைய உருபுகள எல்லாம் ஒரே உருபனாகக் கருதப்படும். 'கணகள்', 'வீடுகள', 'வேர்கள', என்பனவற்றில வரும் 'கள' எனனும் பனமைக் குறியீடு வடிவாலும் பொருளாலும் ஒத்திருப்பதால் ஒரே உருபனாகக் கருதப்படுகினறது.

வடிவால வேறுபட்டுப் பொருளால் ஒதது வருகினற உருபுகளின வடிவ வேறுபாட்டினை உருபன் களின் சூழ்நிலையால் விளக்கப்பெறும் நிலையில அவ்வுருபுகளை ஒரே உருபனைச சாா நதவைகளாகக் கருதலாம். 'வா'-, 'வரு'-, 'வ-' ஆகிய மூன்றும ஒரே பொருளைக் குறிக்கும் நிலையில் இவற்றின வடிவ வேறுபாட்டினை உருபன்களின சூழலால் விளக்குதல இயலும். 'வ-' என்னும் உருபு இறந்தகால உரு பனுக்கு முனனரும் (வ-நத்-ஆர்), 'வரு-' என்னும் உருபு நிகழகால உருபனுக்கு முன்னரும் (வரு-கிறு-ஆர),எதிர்கால உருபனுககு முனனரும் (வரு-வ-ஆர) வருகினறது 'வா-' என்னும உருபு இவை அலலாச் சூழலில் வருகின்றது. இஙஙனம் உருபன்களின சூழ நிலையால் வடிவ வேறுபாட்டையும உருபுகளையும ஒரே உருபனைச் சார்ந்தனவாகக கருதலாம்.

பொருளாலும் வடிவாலும் வேறுபட்டு வரும் உருபுகளில வெளிப் படையான வடிவ வேறுபாடும் உருவிலாக் கட்டமைப்பும் முறையே இருப்பின் வெளிப்படையான வடிவ வேறுபாட்டினை ஓர் உருபனாகக் கருதலாம். ஆஙகிலத்தில feet / fiyt / என்னும் பன்மை வடிவத்தில பன்மையைக் குறிக்கும குறியீடு இல்லை. கட்டமைப்புக் கருதி ஈணடு இன்மை வடிவமே (Zero form) பன்மையைக் குறிககின்றது எனக் கொள்ளுதல் வேணடும். எனினும் / fiyt / என்பதன் ஒருமை வடிவமாகிய foot / fut / எனபதற்கு / fiyt / என்பதற்கு மிடையே காணப்படும் வடிவ வேற்றுமையினைப் புறக்கணித்தல் இயலாது. இநத வடிவ வேறுபாட்டையும் (u > iy) ஓா உருபனாகக் கருதலாம். தமிழில் பெறு, பேறு என்பவற்றுக்கிடையே காணப்பெறும வடிவ வேறுபாட்டையும் இததகைய உருபனாகக் கருத இடமுண்டு.

தொடர்பில்லாத பொருளையுடைய பல பொருள் ஒருசொல்லை வெவ்வேறு உருபனாகவும் தொடர்புடைப் பொருளுடைய பல பொருள ஒரு சொல்லை ஒரே உருபனாகவும் கருதுதல் வேணடும். 'படி' என்னும் சொல் வாயிற்படி எனனும் பொருளை யும் கற்றல என்னும் பொருளையும் குறிக்கும் நிலையில் இவறறை இரு வேறு உருபன்களாகக் கொளளுதல் வேணடும். 'அடி' என்னும் சொல அடி என்னும் பெயராகவும், அடித்தல் என்னும் வினையாகவும் செயறபடும் நிலையில அவற்றிடையே காணப்பெறும் பொருள் தொடர்பு காரணமாக அவற்றை ஓா உருபனுககுள அடக்குதல் வேணடும்.

தனிதது வரும் உருபுகளையும, உருபுகள இணைநது வரும நிலையில அவ்விணைப்பில ஓர் உருபு தனிதது, அல்லது பிற உருபுகளுடன இணைந்து வரும் நிலையில அவ்வுருபுகளையும் தனிததனி உருபனகளாகக் கருதுதல வேணடும். 'பாா' (நீ பாா) 'கேள'(நீ கேள) போல்வன தனிதது வருவதால அவை தனிததனி உருபனகளாகும. 'வாழக்கை', 'சேர்கை' எனபனவறறில வரும் 'கை' என்னும் உருபு தனித்து வாரா நிலையிலும் 'வாழ', 'சேர்' என்பன தனித்து வருவதால இது தனி உருபனாகக் கருதபபடுகினறன. ஆனால 'கை' என்னும உருபோடு இணைவன எலலாம தனிதது வரவேண்டுமெனபதில்லை.

சில உருபுகள ஒரே இணைபபில தான் வரும். 'பிள்ளைத் தாய்சசி' எனபதில் வரும் 'தாயசசி' இந்த இணைபபில மட்டுமே வருகினறது. ஆனால, 'பிளளை' என்பது தனித்தும் பிற இணைபபிலும் வருவதால் 'தாய்சசி' என்பது ஓர் உருபனாகக கருதப்படுகினறது. மேலும் இவ்வுருபன் ஒரே ஒரு இணைப்பில மட்டும் வருவதால இது ஓரிட வருகை உருபன் (Unique morpheme) எனப்படும.

**உருபன் வகைகள:** மொழியின் கண்ணுளள அனைதது உருபனகளையும் அவறறின உளளமைப்பு, பிற உருபன்களோடு அவை கொணடுள்ள தொடாபு ஆகிய அடிப்படைகளில பலவேறு வகையினவாக வகைப்படுத்துதல் இயலும் (காணக: உருபன் வகை கள்)

**சொல் வகைகள்.** மொழியின சொறகளில காணப்பெறும் அனைத்து உருபன்களையும அடி உருபன்கள் (Stem morphemes) எனவும், அடி அல உருபன்கள (Non-stem morphemes) எனவும இரண் டாகப் பகுககலாம். ஒரு மொழியிலுள்ள அடி உரு பன்களை சொல்திரிபுப் பண்பு (Inflectional behaviour)அடிப்படையிலும தொடரியல் பணபு (Syntactical behaviour) அடிப்படையிலும் பாகுபாடு செயவதே சொல்வகைப் பாகுபாடு (Parts of speech Classification) எனப்படும்.

தமிழில் வேறறுமை உருபாகிய சொல்திரிபு உருபுகளை (Inflectional affixes) ஏறறுவரும் அடி உருபன் பெயர் எனவும், கால இடைநிலைகளாகிய

சொல்திரிபு உருபுகளை ஏற்றுவரும் அடி உருபன் வினை எனவும், சொல்திரிபு உருபுகளை ஏற்காமல் பெயரைச் சிறப்பித்துவரும் அடி உருபன் பெயரடை எனவும், சொல்திரிபு உருபுகளை ஏற்காமல் வினையைச சிறப்பித்து வரும் அடி உருபன வினையடை எனவும், தொடர்நிலையில் அமையும் சொல் வேறுபாட்டு உருபன்களை ஏற்காத அடி உருபன் (Uninflected stem) ஒருநிலைச் சொல் (Particle) எனவும் ஐந்து வகையான சொலவகைகள் காணபடுகின்றன.

**சொல்வடிவியல் செயற்பாடுகள்:** சொல்வடிவியல செயறபாடுகளாகிய ஆக்கம (Derivation), திரிபு (Inflection) ஆகியவற்றின அடிபபடையில் சொல் வடிவியல் சொல்லாக்கச் சொல்வடிவியல (Derivational morphology) எனவும், சொல திரிபுச் சொல் வடிவியல (Inflectional morphology) எனவும் இரு வகையாகப் பாகுபாடு செய்யப்பெறும்.

அடிச்சொல்லுக்குள்ளே மாற்றம் நிகழ்வதன வாயிலாகவும் (பாடு > பட்டு), அடிச்சொல்லுடன் சொலலாக்க உருபினை (Derivational affix) இணைப்பதன் வாயிலாகவும் (செய் +கை), அடிச்சொல்லுடன் பிறிதோர் அடிசசொலலை இணைப்பதன வாயிலாகவும் (பொன+ குடம சொல்லாக்கம் நிகழப்பெறுகினறது.

அடிச்சொல்லுடன் சொல்திரிபு உருபினை இணைப்பதன் வாயிலாகச் (கல்+ஐ) சொலதிரிபு ஏற்படுகின்றது. சொல்திரிபு வாக்கியத்தில் காணப் பெறும் சொற்களுக்கிடையேயுள்ள தொடரியல உறவினைப் புலப்படுத்தி நிற்கும்

**இலக்கணக் கூறுகள்:** இலக்கணப் பொருளைச சுட்டி, அகராதிப்பொருள் தரும் அடி உருபன்களின் பொருளைச் சிறப்பித்து நிற்கும் உருபன்களே இலக கணக் கூறுகள் (Grammatical categories) எனபபடும். இலக்கணககூறுகளை அவற்றின் பயன் அடிப்படையில பொதுவகை இலக்கணக் கூறு எனவும், சிறப்பு வகை இலக்கணக்கூறு எனவும் இரண்டாகப் பகுக்கலாம். சிறப்பு வகை இலக்கணக்கூறு பொதுவகை இலக் கணக் கூறின் ஓர் அங்கமாக அமையப்பெறும்

**உருபன் வரன்முறை.** உருபன்கள் சொல்லமைப்பில் ஒன்றையடுத்து மற்றொன்று அமையும் முறையே உருபன்களின் வரன்முறை எனப்படும். அனைத்து மொழிகளிலுள்ள சொல்லமைப்புகளில் உருபன்கள சொலலாக்கம், சொல்திரிபு என்னும் இரு முறைகளில் அமைகின்றன. இவ்விரு முறைகளும் சொல்லமைப் பினைப் புரிந்துகொள்வதற்கு மட்டுமன்றி இலக்கண விதிமுறைகளையும் அவ்விதி முறைகளில் பயன்படும் சொல்வகைகள், இலக்கணக் கூறுகள் போன்ற வற்றைப் புரிந்துகொள்ளவும் பயனபடுகின்றன.

சொல்லமைப்பில் உருபன்கள் ஒரு குறிப்பிட்ட வரிசை முறையில்தான் அமையப்பெறும். தமிழில பெயர்ச்சொற்களைப் பொறுத்த மட்டிலும் அடிச் சொல்லுடன் எண, பால் ஆகியவற்றைக் குறிக்கும் உருபுகள இணையப் பெற்றும் (மரம்+கள்),வினைச் சொற்களைப் பொறுத்த மட்டிலும் அடிச்சொல் லுடன் கால இடைநிலைகள் அல்லது எதிர்மறை இடைநிலைகள, இடக்குறியீடுகள், எண, பால குறியீடுகள் ஆகியன இணையப்பெறும்(வ-ந்த்-ஆ-ன்; வார்-ஆ-ன்) அமையப்பெறும். தமிழில் பெரும்பாலும் ஒருநிலைச்சொற்கள் சொல்முடிப்பு உருபன்களாகச் (Word closing morphemes) செயற்படுகின்றன.

உருபனகளின் மாற்றுருபுகளை விவரிக்கும் முறை யில் விதிமுறை (Item and process), சேர்க்கை முறை (Item and arrangement), சொல்லடுக்கு முறை (Word and paradigm) ஆகிய முறைகள கையாளப்பெறும்.

**விதிமுறை:** ஓர் உருபனுக்குப் பல்வேறு மாற்றுரு புகள் இருக்கும் நிலையில் அவற்றுள் ஒன்றினை அடிப் படையாகக் கொண்டு ஏனையவற்றைப் பல விதி களால் அடிப்படை வடிவத்திலிருந்து வருவிப்பதே விதிமுறையின் அடிப்படையாகும்.

விதிமுறையில் இறந்தகால உருபுகளாகிய 'த்', 'ட்', 'ற்', ஆகியவற்றைத் தனித்தனி உருபுகளாகக் கருதாமல் 'த்' என்பதனை அடிப்படை வடிவமாகக் கொண்டு அதிலிருந்து'ட்','ற்'ஆகியவற்றை உருவாக்கி (ண்+த்>ண்ட்; ன்+த்>ன்ற்) விளக்கப்பெறும். இம் முறையில் ஒட்டுகளை இணைத்தல் (Affixation), இரட்டிப்பு (Reduplication), மாற்றம் (Modification) போன்ற பல்வேறு செயல்முறைகள் பயன்படுத்தப் பெறும். உருபன்களை ஆராயும் முறையில் விதி முறையே பழமையானது.

**சேர்க்கைமுறை:** சொல்லின் அமைப்பினை விவரிக் கும் நிலையில் அதன்கண் காணப்பெறும் உருபன் களையும் அவை எத்தகைய வரிசைமுறையில் அண்மை யுறுப்புகளாக (Immediate Constituents) அமையப் பெற்றுள்ளன என்பதனையும் சேர்க்கைமுறை விளக் கும்.

சேர்க்கை முறையில் தமிழ் வினைச்சொற்கள அடிசசொல் - காலம்/எதிர்மறை - இடம் - எண்-பால் (பார்-த்-ஆ-ன்) என்ற வரிசைமுறையில் விளக்கப் பெறும். இம்முறையில் ஒவ்வொரு பொருட்கூறும்

தனித்தனியான உருபன்களைக் கொண்டிருக்க வேண்டும். எனவேதான் பொருட்கூறுகளைக் குறிக்க உருபன்கள் இல்லாத நிலையில இன்மை வடிவம் (வார்-ஆ-ன்) அமைக்கப்பெறும

**சொல்லடுக்கு முறை.** சொற்களை அடிப்படை அலகுகளாகக் கொண்டு, சொல்லடுக்குகளின (Paradigm வாயிலாகச் சொல்லியல் நுட்பங்களைத் தெளிவுபடுத முறையே சொல்லடுக்கு முறை எனப்படும். 'மரம்', 'மரங்கள்' என்னும் இரண்டு சொற்களும் ஒரே சொல்லடுக்கில அமையும சொற்கள இச்சொல் லடுக்கில் 'மரம்' என்னும் வடிவமே அடிப்படை வாய்பாட்டு வடிவமாகக் கருதப்படும. சொல்லடுக்கில வாய்பாட்டு வடிவம் தவிர்நத பிற சொலவடிவங்கள் சொலதிரிபு வடிவங்கள் எனப்படும். தமிழில பெரும்பான்மையான சொல்லடுக்கில காணப்பெறும் சொற்கள் விகுதிகளாகிய ஒட்டுகளை அடிச்சொறக ளோடு இணைப்பதன வாயிலாக வேறுபட்டமை கின்றன ஏ.ஆ.

**துணை நூல்கள்:**


**Bloomfield,L.**, Language, New York, 1933.

**Gleason,A.H**, An Introduction to Descriptive Linguistics, New York, 1955.

**Mathews,P.H.**, Morphology, Cambridge University Press, London, 1974.

**Nida,E.A.**, Morphology, the descriptive Analysis of words, Michigan University press, Michigan, 1949.

**Israel,M.**, The Treatment of Morphology in Tolkappiyam Madurai University, Madurai,. 1973.


***சொலூட்ரியன் தொழிற்கூடம்***, தென் மேறகுப் பிரான்சில நிலவிய பழங்கற்காலத் தொழிற்கூடமாகும். கடைப் பழங்கற்கால மனிதன் இப்பகுதியில் நேர்த்தியான கற்கருவிகளைச் செய்து பயன் படுததினான். அவர்கள் பலவகையான கருவிகளைப் பயன்படுத்தினர். அலகுகள், துளைப்பான் (Borers) போனற கருவிகள குறிப்பிடததக்கவை. சொலூட்ரியன் தொழிற்கூடம (Solutrean Industry) மிகக குறைந்த காலமே இப்பகுதியில் இருநதது. அலகுகள புன்னை இலை வடிவததைக கொணடு விளஙகின. சொலூட்ரியன் தொழிலநுட்பக கருவிகள முதலில ஒருமுக வெட்டுப் பகுதியைக் கொணடு விளங்கின. இடைக்காலச் சொலூட்ரியன் கருவிகளுள புன்னை இலை வடிவ அலகுகளே முக்கிய இடத்தைப் பெறறிருநதன. பின்னர் இவை இருமுக வெட்டுப் பகுதிகள் கொணட கருவிகளாகச செய்யப்பட்டன. எலும்பினால செய்யப்பட்ட கருவிகளும் மரத்தால செயயப்பட்ட கருவிகளும் இத்தொழிலநுட்பத்தில குறிப்பிடத் தககவை. எலும்பு ஊசிகள ஆடைகளைத் தைககப் பயன்படுததப்பட்டன. இத்தொழிறகூட மக்கள புடைப்புச சிறபஙகளைச் செதுக்கினர், குகைச் சுவாகளிலும் கற்பலகைகளிலும் ஓவியங களைத் தீட்டினர். பல கருவிகள வணணக கற்களாலும் மணிக் கலவகைகளாலும் செய்யப்பட்டன. சொலூட்ரியன் தொழிலநுட்பம் பிரானசில் தோன்றியதே என்று ஒருசிலரும பிரானசிற்குக் குடியேறிய புதிய மக்களால் தோறறுவிககப்படடதே எனறு வேறு சிலரும் கூறுகினறனர். சொலூட்ரியன தொழில்நுட்பத்தை அடுத்துப் பெரிகோாடியன், ஆரிக்னேசியன் (Perigordian and Aurignacian) தொழிலநுட்பங்கள் தோனறின. இவற்றை அடுத்து மெகதலேனியன் (Magdalenian) தொழிலநுட்பம் தோன்றியது. சு.இரா.

**சோ** ச கரத்திற்கும் ஓ காரத்திற்கும் உரிய குறிப்புகளைப் பார்க்கவும்.

சொ காரத்திற்குக் கொடுக்கப்பட்ட உருவ வரலாறு இதற்கும் பொருந்தும். ... .. . ...

புள்ளி இடப்படவில்லை. புள்ளி இடும் வழக்கத்தை ஒழுஙகாகப் பயிலாததால் மொழி அறிவை ஒட்டியே இது வாசித்து அறியப்பட வேண டியிருக்கிறது. .. .. ... ...

கெ, செ, கே, சே என்ற எழுத்துகளுக்குக் கொடுக்கப்பட்ட குறிப்பு களைப் பார்க்கவும். வீரமாமுனிவர் நெடிலுக்கு உரிய மேல் வளைவை அளித்தார் என்பது சொல்லப்படுகிறது. .. .

கே.ஜி.கி.

**சோக்கு நீர்வீழ்ச்சி**, கருநாடக மாநிலத்தில் உள்ளதொரு நீர்வீழ்ச்சி. இது கெருசோப்பா நீர் வீழ்ச்சி (Gersoppa Falls) என்றும் கூறப்படும். சோக்கு நீர்வீழச்சி (Jog Falls) சாராவதி (Sharavati) ஆற்றின் நீர்வீழ்ச்சியாகும். இது உத்தா கண்ணாடு (Ottar Kannad) மாவட்டத்தின் அனாவர் (Honavar) என்ற இடத்திலுள்ள ஆற்றின் முகத்துவாரத்திலிருந்து 29 கி.மீ.நீளமுள்ளது. இநநீரவீழ்ச்சி மலை உச்சியிலிருந்து 253 மீ. நீர் வீழசசியாக வீழ்கிறது. இநநீர்வீழ்ச்சி நான்கு பிரிவுகளாக விழுகிறது. ஒவ்வொன்றும் இராசா, உரோரர் (Roarer), இராணி, இராக்கட்டு (Rocket) எனக் கூறப்படுகிறது. இநநீர்வீழ்சசி விழுகினற அழகை ஆற்றின் இருமருங்கிலும் கட்டப் பட்டுள்ள வீடுகளிலிருநது சுற்றுலாப் பயணிகள் காண கின்றனர். சோக்கு நீர்வீழ்ச்சியில் நீர் மின்சக்தி எடுக்கும் முயற்சிகள நடநது வருகினறன. சு.இரா.



சோக்கு நீர்வீழ்ச்சி

**சோகன் பாணி** சப்பானில் தொடக்க கியன காலத்தில் கி பி. 794 முதல கி.பி. 897 முடியச் சிற்பக் கலையில் பின்பற்றப்பட்ட பாணியாகும். பௌத்த மதச் சிறபங்கள் இக்காலத்தில் சோகன் பாணியைப் (Jogan Style) பின்பற்றிச் செதுக்கப்பட்டன. புத்தரின் சிற்பங்கள் மிக்க வனப்புடன் இக்காலத்தில் செய்யப் பட்டன. இப்பாணியில் புத்தரின் சிற்பங்கள் வட்ட வடிவமான முகத்துடனும் தளதளப்பான மார்புகளு டனும் தடித்த உதடுகளுடனும் அகன்ற மூக்குடனும் கண்களுடனும் காணப்பட்டன. மரசசிற்பங்கள இக் காலத்தில மிகுதியாகச் செய்யப்பட்டன.

சோகன் பாணிச் சிற்பங்களில் அலை அலையான அணிவகைகள் செதுக்கப்பட்டன. அதனால் ஆடைகள் மடிப்பு மடிப்பாகக் காணப்படுகின்றன. மடிப்புகளுக்கு இடைப்பட்ட பகுதி மிக ஆழமாகக் காணப்படுகிறது. இப்பாணி ஆப்கானிசுத்தானத்தில் பாமியன என்ற இடத்தில் உள்ள புத்தரின் சிற்பத்திலும் காணப்படு கிறது



சோகன்பாணி மரச்சிற்பம்

இக்கலைப் பாணியைப் பௌத்தமதப் புனிதப் பயணிகள சப்பானுக்குக் கொண்டு சென்றிருக்கவேண் டும். இக்கலைப்பாணி பௌததக் கடவுளர்களின் சிற்பங்களில மட்டும் அல்லாமல சிந்தோ (Shinto) கடவுளர்களின் சிற்பங்களிலும் காணபடுகிறது.

சு.இரா.

**சோகாக்பூர்,** மத்திய பிரதேச மாநிலத்தில உளளதோர் ஊர். இது முன்பு இரேவா (Rewa) சிற்றரசுப் பகுதியில இருந்தது. இது கோயிற் கட்ட டக்கலைச் சிறப்புப் பெற்ற ஊராகும். இங்குள்ள ஐகேயர் கோயில் வீரட்டேசுவரன் எனக் கூறப்படும் சிவனுக்குரியது. சோகாக்பூர் (Sohagpur) ஐகேயர் கோயிலின் கூரை கூம்பு வடிவமானது. இக்கோயில் சந்தேலர், சௌகான், பரமார அரசர் ஆகியோரின் பேராதரவைப் பெற்றுத் திகழ்ந்தது. இக்கோயிலின் சிற்பங்கள் மிக அழகானவை. கசுராகோவின் இளங் காதலர் சிற்பங்கள் போன்று இக்கோயிலிலும் அவ்வகைச் சிற்பங்கள் அழகாகச் செதுக்கப்பட் டுள்ளன. கோயிலின் மாடக்குழிகளில் பல கைகளைக் கொண்ட சிவனுடைய நடனச் சிற்பம் ஒன்று மிக நேர்த்தியாகச் செதுக்கப்பட்டுள்ளது. இச்சிற்பத்தின் அருகில் அமர்ந்த நிலையிலுள்ள பார்வதியின் சிற்பம் உள்ளது. மணப்பெண்ணை அலங்கரிக்கும் சிற்பமும்



வீரட்டேசுவரன் கோயில்

கண்ணாடியைப் பார்த்து முகப்பூச்சுப் பூசும் பெண் ணின் சிற்பமும், காலில் பட்ட முள்ளை எடுக்கும் சிற்பமும் இங்குள்ள சிற்பங்களுள் மிக நேர்த்தி யானவை.

சு.இரா.

**சோகா—சாம்பில்** ஈலாமியர்களின் தொன் மையான ஊர். இது சூசாவிற்கு அருகில் உள்ளது. முற்காலத்தில் இது தூர்உண்டசி (Duruntashi) எனக்கூறப்பட்டது. இப்பொழுது ஈரானில் குசிசுத் தான் (Khusistan) பகுதியில் சோகா-சாம்பில்(Choga -zambil) அமைந்துள்ளது. ஈலாமியர்களின தொன் மைச் சின்னங்கள் இவ்வூரில் உள்ளன. இவை கி.மு. 1500க்கும் கி.மு.1000க்கும் இடைப்பட்ட காலத்தவை. இங்கு ஈலாமிய அரசர் உண்டாசு-கால் (Untash-Gal)



சோகா சாம்பில்

என்பவர் மிகப்பெரிய சிக்குரத்துக் (Ziggurat) கட்டடத்தைக் கட்டினார். இதனுடன் கோயில்களும் அரண்மனைகளும் இவ்வரசால இயக்கக்கட்டப்பட்டன. சிக்குரத்தின் அழிபாடுகள் இன்றளவும் இங்கு உள்ளன. இது 102 மீ. சதுரப் பக்கங்களையும் 24 மீ. உயரத்தையும் கொண்டு உள்ளது. இதன் உயரம் இன்று உள்ளதைவிட இன்னும் ஒரு மடங்கு உயரமானதாக முன்பு இருந்திருக்க வேண்டும். இச்சிதைவுற்ற கட்டடங்களுடன் இங்குப் பல தொன்மைப் பொருள்களும் ஈலாமிய முத்திரைகளும் கிடைத்தன. சு இரா

**சோங்காய்,** மேற்கு ஆப்பிரிக்காவில மாலிப (Mali) பகுதியில் நைசர் (Niger) ஆற்றங்கரையில வாழும் தொன்மைக் குடியினராவர். இப்பகுதி இலாக் தீபோ (Lac Debo) எனனும் இடத்திலிருந்து தொடங்கி, நைசீரியாவில் சொக்கோத்தோ (Sokoto) ஆற்று முகத்துவாரம் வரை பரவியுள்ளது. சோங்காய் (Songhai) மக்களினத்தவர்கள காகேசிய(Caucasoid) இனப் பண்புகளைக் கொண்ட கலப்பின நீக்கிரோக்களாக உள்ளனர். இவர்களுள் பல இனக் குழுவினர்கள் உள்ளனர். இக்குழுக்களுள் செர்மா (Zerma) என்போரே முதன்மையானவர்கள். சோங்காய் மக்களினத்தவர்கள் பேசுவது சோங்காய் என்னும் மொழியாகும்.

சமுதாயக் கட்டமைப்பு இவர்களிடையே விரிவானது. உயர்குலக் குழுவினர், பொதுக்குடிகள், கலைத் தொழிலாளர்கள், அடிமைகள் முதலானோர் முதன்மையான வகுப்பினர்களாக உள்ளனர். இவர்களிடையே பலமனைவி முறைத் திருமணம் (Polygyny) வழக்கிலுள்ளது. பெற்றோரின் ஒத்த பாலுடைய உடன்பிறந்தாரின் மக்களுடன் திருமணம் நடைபெறுகிறது. இவர்கள் குடும்ப அமைப்பும் மரபுரிமையும் தந்தை வழியில (Patrilineal) வருவதாகும். இவர்கள் சூன் முதல் நவம்பர் வரையிலான மழைக் காலத்தில் பயறு வகைகளை மிகுதியாக விளைவிக்கின்றனர்; குறைந்த அளவில் கால்நடைகளை வளர்க்கின்றனர். மீன்பிடித்தலும் இவர்களின் தொழில்களுள் அடங்கும். இரும்பு, மரம், தோல, மண் முதலானவற்றை அடிப்படையாகக் கொண்ட, கைத்தொழிற் கலைஞர்கள் ஒவ்வொருவரும் தனித் தனி வகுப்பைச் சேர்ந்தவர்கள். இவர்கள் வாழும் பகுதி நடு ஆப்பிரிக்காவையும் மேற்கு ஆப்பிரிக்காவையும் இணைக்கும் பகுதியாக விளங்குவதால் இங்கு இவர்கள் சாலையோர வாணிகத்தில் மிகுதியாக ஈடுபட்டுள்ளனர். இன்றைய இளைஞர்களுள் பெரும்பாலானோர் பிழைப்பிற்காகக் கானா நாட்டுப் பகுதிக்குச் சென்றுவிடுகின்றனர். சீ.ப.

**சோசபு போனபார்ட்டு (கி.பி. 1768-1844),** கார்லோ மரியா போனபார்ட்டுக்கும் இலிட்டிசா இரமாலினோவுக்கும் கார்டே (Corte) என்னுமிடத்தில் கி.பி. 1768, சனவரி 7-ஆம் நாள் மகனாகப் பிறந்தார். இவர் பிரஞ்சுப் பேரரசர் நெப்போலியனுக்கு மூத்த சகோதரர். போனபார்ட்டு இவர்களுடைய குடும்பப் பெயர். சோசப் கார்தேவில பள்ளிக் கல்வி பெற்றபிறகு பிரான்சில உள்ள ஆட்டம் (Autom) என்ற இடத்தில் கல்லூரிக் கல்வி பெற்றார். பிறகு பைசா (Pisa) நகருக்குச் சட்டம் பயிலச் சென்றார். இவர், தன் சகோதரர்களைப் போலப் பிரஞ்சுக் குடியரசுக் கட்சியைத் தழுவினார். பிறகு பிரான்சில் மார்சேல்சு (Marseilles) என்னும் நகரில வேலை நிமித்தமாகத் தங்கினார். அந்நகரில பெரும்வணிகரின்மகள் சூலி கிளாரியை (Julie Clary) மணந்தார். சோசபு கி.பி. 1795-இல கார்சிகாவைத் திரும்பப் பெறுவதற்குச் செனிவாவிற்குத் தூது சென்றார். கி.பி. 1796-இல் நெப்போலியனுடைய இத்தாலியப் படையெடுப்பில பெரும் பணியாற்றினார். கார்சிகாவைக் கைப்பற்ற பிரான்சுப் படையெடுப்பின்போது பிரஞ்சுக் குடியரசின் உயர்ஆணையர் மெலிடோ (A.F.MiotdeMelito) என்பவருக்குப் பேருதவியாக இருந்தார். கார்சிகாவைக் கைப்பற்றியபின அதை மாற்றியமைக்கவும் திட்டம் வகுத்தார். பர்மாவுக்கும், உரோமுக்கும் (Rome) கி.பி. 1797-இல் அமைச்சராக நியமிக்கப்பட்டார். நெப்போலியன இவரை உரோமில் புரட்சி இயக்கங்களை ஆதரிக்கச் செய்தார். அதனால் வத்திகனுக்கும் (Vatican) பிரான்சுக்கும் கசப்புணர்வு ஏற்பட்டது. உரோமிலுள்ள பிரான்சு தூதுவர் அலுவலகத்திற்கு முன்பாக கி.பி. 1797-இல் ஏற்பட்ட கலகத்தில் பிரான்சின் தளபதி (Leonard Duplot) இறந்தார். பிறகு சோசபு பாரீசுக்குத் திரும்பி ஐநூற்றுவர் குழுவில் (Council of Five Hundred) இடம் பெற்றார்.

சோசபு, நெப்போலியன் பிரான்சின் பேரரசராவதற்குச் சளைக்காமல் உழைத்தார். ஆசுத்திரியாவுடன் ஓர் ஒப்பந்தம் கி.பி. 1801-இல் செய்தார். சோசப்பும் மாரட்டும் பிரான்சின் பிரதிநிதிகளாக ஆங்கிலத் தூதுவர் காரன்வாலிசு பிரபுவுடன் பேச்சுவார்த்தை நடத்தி அமியன்சு (Treaty of Amiens) உடன்படிக்கையைச் செய்தனர். பிரஞ்சுப்பேரரசை ஒருங்கிணைப்பதில் நெப்போலியனுக்குச் சோசபு பேருதவியாக இருந்தார். இதற்கிடையில் சோசபு பிரஞ்சு அரியணைக்குச் சொந்தம் கொண்டாடவே நெப்போலியன் சோசப்பை இலம்பார்டியின (Lambardy) மன்னராக்கினார்.

நெப்போலியன் கி.பி. 1805-இல் செருமனியி லிருந்தபோது சோசபு பிரான்சின இடைக்காலத் தலைவராக இருந்தார். போர்போன மரபினை (Bourbon Dynasty) வெளியேற்ற கி.பி. 1806-இல நேப்பிள்சுக்கு (Naples) அனுப்பப்பட்டார். நெப்போலி யன் ஆணைப்படி (Decree) சோசபு நேபிள்சின் அரச ராக அறிவிக்கப்பட்டார்.

நெப்போலியன் கி.பி. 1808-இல் சோசப்பை இசுபெயின் அரசனாக நியமிததார். தலைநகர் மேட்ரிடில் (Madrid) தஙகி 5 ஆண்டுகள் ஆட்சி புரிந தார். ஆங்கிலேயர் கி.பி. 1813-இல் இசுபெயினைக் (Spain) கைப்பற்றியதால அதனைவிட்டு வெளியேறி னார். ஆங்கிலேயர்கள கி.பி. 1814-இல் பிரான்சைத் தோற்கடித்து நெப்போலியனைக் காவலில வைத்த போது சோசபு செய்த பணி குறிப்பிடத்தக்கது. நெப் போலியன் சரணடைந்தபின், அவருடைய மகளைப் பிரான்சு மன்னராக்க வேணடும் என்று கி.பி. 1830 -இல் வாதாடினார். பிறகு இங்கிலாந்து, செனிவா வுக்குப் பயணம் செய்து பிளாரன்சில நிலையாகத் தங்கினார். அங்கு கி.பி. 1842-இல் இறநதார்.

தி.கை.

**சோசுவா, இரெய்னால்டுசு** கி.பி. 1723 முதல 1792 வரை வாழந்த ஆஙகில ஓவியர். இவர் இஙகி லாந்து நாட்டு ஓவியர்களுள் தலைசிறந்தவர்; மனிதர் களைச சித்திரமாகத் தீட்டுவதில் சிறந்தவர். இவர், தம் காலத்திய அறிவுத் துறை வல்லுநர்களை ஓவிய மாகத் தீட்டியுளளார். டாக்டர் சாமுவேல் சானசன் என்ற எழுத்தாளர், எட்வர்டு கிப்பன என்னும் வர லாற்றாசிரியர், தாவீது காரிக்கு எனற நடிகர், எட்மண்டு பர்க்கு என்னும அரசியல்வாதி போன் றோரின் உருவப்படஙகளை இவர் வரைந்துள்ளார். புகழ்மிக்க அபபடைப்புகளுடன பெண்களின உருவங் களையும் இவர் தீட்டினார். திருமதி சிடானசு, நெல்லி ஓ' பிரெய்ன் போன்ற பெணகளின உருவ ஓவியங்கள இவர் படைப்புகளுள சிகரமெனக் கொளளலாம்

இவர் கி.பி. 1723-இல் பிளிம்டன பட்டினததில பிறந்தார். இளமை முதலே இவர் ஓவியஙகள தீட்டு வதில் ஆர்வங் காட்டினார். பினபு இத்தாலிய நாட்டிற்குச் சென்றபோது இத்தாலிய மறுமலாச்சி யாளர்களின படைப்புகளால் கவரப்பட்டுத் தமது சமகாலத்திய ஓவியர்களைவிடத் தோச்சியுடையவ ராக விளங்கினார். தம் 30-ஆம் வயது முதல் இலண்டன் மாநகரில் வாழத் தொடங்கி கி.பி. 1792 -இல் தமது மரணம் வரை அஙகே தங்கியிருந்து தம் கலைப் படைப்புகளை உருவாககினார்.

'அரசுமுறைககழகம்' (Royal Academy) என்னும் கழகத்தை கி.பி.1768-இல் தோற்றுவித்துச் சிறப்புப் பெற்றார். அதற்கு இவருக்கு 'மாவீரன்' (Knight) என்ற பட்டம் வழங்கப்பட்டது. அதன் தலைவர் என்ற முறையில் ஓவியர்கள் தீட்டும் முறைகளைப் பற்றி இவர் அவ்வப்போது எடுத்தியம்பிய கருத்துகள் பின்னர்த் தொகுக்கப்பட்டுப் புத்தகமாக வெளியிடப் பட்டன.

தம் பிறகால வாழ்வில் இவர் செவிட்டுத் தன் மைக்கு இலக்கான போதிலும இலணடன கழகத் துடன் தொடர்பு கொண்டு புகழுடன் திகழந்தார். சானசன் (Johnson), பாசுவெல் (Boswell), கோலடு சுமித்து (Goldsmith), செரியன் ஆகியோர் தொடர்பு கொணடிருந்த இலக்கியக் கழகத்துடனும் இவர் தொடர்பு கொணடிருந்தா. மிகச் சிறநத ஓவிய மேதையாகத திகழ்ந்த இரெயினால்ட்சு தம்மை ஒரு மாணவராகவே கருதி இறுதிக் காலம் வரை புதுமை களைக் காண முயற்சி செய்தார்.

இவருடைய படைப்புகளை இன்றும் ஆங்கில தேசிய கலைக்கூடம், வாலாசின் சேகரிப்புகள ஆகிய வற்றில காணலாம். மா.கா.

**சோடசோபசாரம்:** சோடசம் என்பது பதினாறு என்னும் எண்ணையும், உபசாரம் என்பது உபசரித்தல், வழிபடுதல முதலியவற்றையும் குறிக் கும். எனவே, சோடசோபசாரம் எனனும தொடர், இறைவழிபாட்டில் மேற்கொள்ளப்பெறும் 16 வகை உபசாரஙகளைக் குறிப்பதாக உள்ளது. தமிழகதது லுள்ள சைவ, வைணவத் திருக்கோயில்கள அவவ வற்றுக்குரிய ஆகமங்களின் அடிப்படையில் அமைக்கப் பட்டனவாதலின், அஙகு நடைபெறும் பூசை முறைகள் - வழிபாட்டு முறைகள - ஆகம நெறி வழியே நடைபெறுகினறன.

தன்னலங்கருதி இல்லஙகளிலும் பிறவிடங்களி லும் தனித்த முறையில ஆன்மார்த்தமாகச் செய்யப் படும் வழிபாட்டிலும், உலக நலங்கருதித் திருக் கோயில்களில் பரார்த்தமாகச் செய்யப்படும் வழி பாட்டிலும், பதினாறு வகையினதான 'சோடசோப சார வழிபாட்டு முறை' மேற்கொள்ளப்பெறும், இவ் வகையில் நிகழும் வழிபாடு நிறைவான வழிபாடு எனக கொள்ளப்படுகிறது.

பூசையில் சோடசோபசாரக் கிரியைகள் மேற் கொளளப்படுங்கால் ஒவ்வொரு கிரியையின்போதும், சைவ நெறிப்படி சிவபெருமானுக்காயின், சிவசம்பந்த மான மந்திரங்களையும், திருமாலுக்காயின் திருமால சம்பந்தமான மந்திரங்களையும் உச்சரித்து வழிபடு

வர். மலர் முதலியன இடும்போது பொதுவாக வழி பாட்டிற்குரிய மலர்களோடு, சிவன் திருமால் ஆகி யோருக்கு உரிய சிறப்பான மலர்களும் கொள்ளப் படும்.

பதினாறு உபசாரங்களை நிரல்படுத்திக் கூறும் நூல்கள் பலவற்றிலும் சிற்சில மாறுபாடுகள் காணப் படுகின்றன. இரண்டொன்று வரிசை மாறியும் கூறப் பட்டுள்ளன. எனினும் பொதுவான அமைப்பு முறை யில் மாற்றம் இருக்கவில்லை. பூசைக்கு இன்றியமை யாதன மந்திரம், தந்திரம், கிரியை, பாவனை ஆகி யனவாகும். பூசை புரிவோர், ஆகமநெறி நின்று, மந்திரங்களை ஓதிக் கிரியை செய்யுங்கால் அதற்குரிய பாவனையோடு செயற்பட வேண்டும்.

சிவாகம முறையில் சோடசோபசார பூசையில் மேற்கொள்ளப்பெறும் கிரியைகள் வருமாறு: 1) ஆவாகனம் - முறைப்படி உபதேசம் செய்யப்பெற் றோர், சிவபரம்பொருளை மந்திர வடிவமான சதாசிவமூர்த்தியாக இலிங்கத் திருமேனியினிடத்தே விளங்கித் தோன்றச் செய்தல்; 2) தாபனம்-மந்திரங் கூறி, திருவருள், இலிங்கத் திருமேனியில் இருந்து அருள்புரியப் பத்தியொடு பாவித்தல்; 3) சந்நி தானம்-மந்திரங்கள் கூறி ஞான ஒளியாய்த் திகழும் மூர்த்தியிடம், பூசை செய்வோர் அறிவு நிறைந்து நிற்க, சிவத்தின் அருள் நிறைந்து நிற்கச் செய் தல்; 4) சன்னிரோதனம். மந்திரங் கூறி, எப்போதும் அருள்புரிந்த வண்ணம் இருக்க வேண்டும் என்று வேண்டித் திருவருட் பெருக்கில் மூழ்கி நிலைத்து, இறைவனுக்கு நல்வரவு கூறுதல்; 5) அவகுண்டனம் -மந்திரம் கூறி, குறிப்பிட்ட கை முத்திரையோடு, சிவத்திற்கு மும்முறை சுற்றுதல்; 6) தேனுமுத்திரை - கைவிரல்களால் நான்கு காம்போடு அமையும் பசுவின் மடிபோலக் காட்டுவது தேனு முத்திரை. அதனால் மந்திரங் கூறி, ஆன்ம அறிவு பேரானந்த மயமான சிவத்தோடு கலந்திருக்கச் செய்தல்; 7) பாத்தியம்-மந்திரங் கூறிப் பாத்திரத்தில் வைத்த தீர்த்தத்தினைப் பாதங்களிலும், புயங்களிலும் விடு தல், 8) ஆசமனீயம்-மணப்பொருள் கலந்த தீர்த்தத் தைப் பாத்திரத்தில் இட்டு, மந்திரங்கூறித் திருமுகங் களில் ஆசமனீயம் கொடுக்கவேண்டும். 9) ஆர்க்கியம் எள் நெல் முதலிய பொருள்கள் இட்ட பாத்திரத் தில் 'நீரை ஊற்றிப் பூசித்து வைத்து, மந்திரங் கூறிச் சிவத்தின் திருமுடியில் விடுதல்; 10) புட்பதானம்- அறுகு, சண்பகம் முதலியமலர்களை அட்சதையுடன் சேர்த்து மந்திரங் கூறி, சிவத்திடம் சேர்ப்பித்தல்; 11) தூபம், 12) தீபம்-உரிய மந்திரங் கூறி நறும்புகை யையும், தீபத்தையும் காட்டுதல்; 13) நைவேத்தி யம்-பலவிதமான திருவமுதுப் பொருள்களைப் படைத்தல், 14) பானீயம்-பருகும் நீர் அளித்தல் 15) செப சமர்ப்பணம்-உருத்திராட்ச மணி கொண்டு, உரிய மந்திரங்களால் செபித்தல், 16) ஆரத்தி-தீபங் களைச் சுற்றுதல்; கற்பூர தீபம் காட்டல்.

வழிபாட்டினை வைணவர்கள் திருவாராதனம் என்பர். திருவாராதனத்தில் பின்வரும் 16 வகைக் கிரியைகள் இடம்பெறும். ஆவாகனம், தாபனம், சன்னிதானம் சன்னிரோதனம், தேனுமுத்திரை, பாத்தியம், ஆசமனீயம், அர்க்கியம், இசுநபனம், பானீயம், புட்பதானம், தூபம், தீபம், நைவேத் தியம், அவகுண்டனம், செபசமர்ப்பணம்

உபசாரங்களைச் செய்யுங்கால், ஒவ்வொரு கிரியையின் போதும், அவ்வவற்றிற்குரிய மந்திரங் களைக் கூறுவதும், உடலுறுப்புகளால் அவ்வற்றிற் குரிய முத்திரைகளைக் காட்டுவதும், சிந்தனையை அந்த அந்தக் கிரியையின்பால் செலுத்தி இருப்பதும் இன்றியமையாதனவாகும்.

சில அகராதிகள் இந்தச் சோடசோபசாரக் கிரியைகளின் பெயர்களைத் தமிழ்ப்படுத்தி அகர வரிசையில் கொடுத்துள்ளன. அவற்றுள் ஒருமுறை வருமாறு: 'அடைக்காய் அளித்தல் அமுதமேந்தல ஆசமன நீர் அளித்தல், ஆடை சார்த்தல், கருப்பூர தீபமேந்தல, காலகழு நீர்தரல், கைகழுநீர்தரல, தவிசளித்தல், தேய்வை பூசுதல், நறும்புகை காட்டல, நீராட்டல், மஞ்சளரிசி தூவல, மந்திர மலரால் அருச் சித்தல, மலர் சார்த்தல், முப்புரி நூல் தரல, விளக் கிடல. உபசாரக் கிரியைகளைப் பெருக்கி 32 முத லாகக் கொள்ளுவதும் உண்டு.

பதினாறு வகை உபசாரங்களில், நைவேத்தியம முதலியன பிருதுவி தொடர்பாகவும், பாத்தியம முதலியன அப்புத் தொடர்பாகவும், தீபம் முதலியன தேயுத் தொடர்பாகவும், தூபம் முதலியன வாயுத் தொடர்பாகவும் மணியொலி, பாட்டு முதலியன ஆகாயத் தொடர்பாகவும் அமைகின்றன. அனைத் தும் ஐம்பூதத் தொடர்பினவாக அமைவதால், சோடசோபசாரத்தைச் சுருக்கமாகப் 'பஞ்சோப சாரம்' என்று கூறும் மரபுள்ளது.

தீபக் கிரியையில் பதினாறு வகைகள் கொள்ளப் படுகின்றன. அவை தூபம், தீபம், மகாதீபம், நாக தீபம், விருடதீபம், புருடதீபம், பூரண கும்ப தீபம், ஐந்து தட்டுத் தீபம், நட்சத்திர தீபம், மேருதீபம், கற்பூர தீபம், மகா நீராஞ்சனம் முதலியனவாகும்.

சோடசோபசார பூசையில், தீப உபசாரத்திற்குப் பின்னர், கண்ணாடி காட்டல், குடைபிடித்தல்

சாமரம் வீசுதல், விசிறிபால் விசுறுதல் மயில் பீலி விசிறிகாட்டல், வெள்ளாடையால் விசிறுதல், முதலி யன நிகழும். இறுதியில் வடமொழி, தமிழ்த் துதிப் பாடல்கள் ஓதப்பெறும். அ.மா.ப.

**சோணாட்டுப் பூஞ்சாற்றூர்ப் பார்ப் பான் கௌணியன் விண்ணந்தாயன்** சங்க காலத்தில் வாழ்ந்த ஓர் அந்தணர்; வள்ளல்களுள் ஒருவருமாவார். இவர் இயற்பெயர் விண்ணந்தாயன் என்பது. இவர்தம் நெடிய பெயரிலமைந்துள்ள பார்ப்பான் கௌணியன் என்னும் பெயர்கள் இவ் வள்ளல் பிறந்த அந்தண குலத்தையும், கௌண் டின்னிய கோத்திரத்தையும் உணர்த்துவனவாக உள்ளன. வள்ளலின் ஊர் சோழநாட்டிலுள்ள பூஞ்சாற்றூர். அவ்வூர் முடிகொணடான் ஆற்றங் கரையில் அமைந்தது.அவ்வூர் பூஞ்சிற்றூர் என்று சில ஏடுகளில் குறிக்கப்பட்டுள்ளது.

விண்ணந்தாயன் வேதக்கல்வி கேள்வி நிறைந் தவர். வேத நெறி தவறாமல வேள்விகள பல செய் தவர். அதனோடு தம்மை நாடிவநதோர்க்கு உவந் தீயும் வள்ளலாகவும் விளங்கினார். அதனால, ஆவூர் மூலங்கிழார் தம் புறநானூற்றுப் பாடல் ஒன்றில் (புறம்.166) இவரைச சிறபபித்துப் பாடியுளளார். வாகைத் திணை, பார்ப்பன வாகைத் துறையிலமைநத அப்பாடல், இப்பாாப்பன வள்ளலின வைதிக மரபுச் சிறப்பையும், மனைவியர் துணைபுரிய வேள்வி செய்த சிறப்பையும், விருநதேறறுப் போற்றிய சிறப்பையும் சுட்டி வாழ்த்துகிறது. இவவள்ளல ஆற்றிய வேள்விச் சிறப்பையும், அதனால் எய்திய புகழையும, 'நீர் நாண நெய் வழங்கியும், எணணாணப் பலவேட்டும், மண்ணாணப் புகழ் பரப்பியும்' என்னும் பகுதி நயம் பட விளக்குகிறது (புறம்.166:21-23). அ.மா.ப.

**சோணாட்டு முகையலூர்ச் சிறுகருந் தும்பியார்** சங்க காலப் புலவர். இவர் பாடியன வாகப் புறநாநூற்றில் இரணடு பாடலகள்(181, 265) காணப்படுகின்றன. திருக்குறளைப் போற்றிப் பாடப் பட்டுள்ள திருவளளுவ மாலையில் இவா பெயரால் ஒரு வெணபா(17) காணப்படுகிறது. திருவள்ளுவ மாலை வெண்பாக்கள் சங்க காலப் புலவர் பெயர் கொண்டுபிற்காலத்தவரால பாடப்பட்டவை எனனும் கருத்தும் உள்ளது. இப்புலவா பெயர் 'சோணாடு' என்னும் அடைமொழியின்றியும் பாட வேறுபாடாகக் காணப்படுகிறது.

இப்புலவர் பெயர் கொண்டு இவர் சோழநாட்டு முகையலூர் என்னும் ஊரினர் என ஊகிககலாம். இவ்வூர் இடைக்காலத்தில் 'மொகலாறு' என வழங்கி இப்போது 'மொகலார்' என வழஙகும் ஊராகும் என்பர். பாடலில் இடம்பெற்றுள்ள தொடர் முதலிய வற்றால் சங்ககாலப் புலவர் பெயர்கள் சில குறிக்கப் பட்டுள்ளன. அவை போன்றே தும்பியின் சிறுவடி வத்தையும், கருநிறத்தையும் பாடிச் சிறுகருந்தும் பியார் என இவர் பெயர் பெற்றார் எனக் கூறுவா ரும் உள்ளனர். இதற்கு இவர் பாடியனவாகக் கிடைத் துளள பாடல்களில் அகச் சானறில்லை. இவர், வல்லார் கிழான் பண்ணன் என்பவனின் கொடை, வீரம் ஆகியவற்றைப் பாடியுள்ளார் (புறம்.181).

இப்புலவர் பாடிய கையறுநிலைப் பாட்டு (புறம் 265) யாருடைய மறைவு குறித்துப் பாடப் பட்டதென்று தெரியவில்லை. அப்பாடல் தலைவ னோடு, பரிசிலர்க்குரிய செல்வமும்-அவன் துணையால் வென்ற-வேந்தரின் வெற்றியும் செனறுவிட்டன என இவர் பாடியுள்ளார். அப்பாடலும் வலலார் கிழான் பணணனைக் குறித்ததாகலாம். பா.ம.

**சோத்பூர்ப் பல்கலைக் கழகம்** இராசசுத் தான் மாநிலத்தில் தொடங்கப்பட்ட இரண்டாம் பல்கலைக் கழகம். இது 1962-இல் தொடங்கப் பட்டது. சோத்பூர் (Jodhpur) நகர ஆளுகைக்குள் இருந்த நான்கு கல்லூரிகளைக் கொண்டு நிறுவப் பட்ட இப்பல்கலைக் கழகம் விரைந்து வளர்ந்து வருகிறது.

சோத்பூர்ப்பல்கலைக் கழகம்(Jodhpur University) கல்லூரிகளுக்கு இணைப்புரிமை தருதல், கற்பித்தல், உயராய்வு செய்தல் முதலான பணிகளை முதன் மையாகக் கொணடுளளது. இப்பல்கலைக் கழகத்தில் இலச்சூ நினைவு அறிவியல் கல்லூரியும் (Lachoo Memorial College of Science), மகேசு ஆசிரியர் கல்லூரியும் (Mahesh Teachers College), ஓங்கார்மால் சோமானி வணிகவியல் கல்லூரியும் (Onkarmal Somani College of Commerce) இணைப்புரிமை பெற்ற கல்லூரிகளாகும். கமலா நேரு பல்கலைக் கழகம் அறிவியல் கல்லூரி (Kamala Nehru University College for Science)என்ற ஒரு கல்லூரி மட்டும் உறுப்புக் கல்லூரியாக (Constituent) உள்ளது. இங்குக் கலை, வணிகவியல், சட்டம், சமுதாய அறிவியல், பொறியியல் ஆகிய புலங்கள் உள்ளன. இவற்றின் கீழ் பல துறைகள் செயற்படுகின்றன.

இராசசுத்தான் மாநிலத்தில் இரண்டாவது முக்கிய நகரமாகச் சோத்பூர் இருப்பதால் இப்பல் கலைக் கழகத்தில் புதிய துறைகள பல ஏற்படுத்தப் பட்டுள்ளன. இங்குப் புகுமுகக் கல்வி (Pre- Univer

sity Course) இல்லை. இளம்பட்டப் படிப்பு, முது நிலைப் பட்டப் படிப்பு, ஆராய்ச்சிப் படிப்பு முதலான வற்றைப் பெற வசதியுண்டு. இளம் பட்டப்படிப்பு 3ஆண்டுகளும், முதுநிலைப் பட்டப் படிப்பு 2 ஆண்டு களுமாகும். இங்கு முனைவர் முதுமுனைவர் முதலான ஆராய்ச்சிப் பட்டங்கள் பெற வசதியுண்டு முதுமுனை வர் பட்டங்கள் சிறப்புத் தகுதி பெற்றோருக்கும வழங்கப்படுகின்றன. இந்தி, ஆங்கிலம் ஆகிய இரண்டு மொழிகளும் பயிறறு மொழிகளாகும்.

முழுநேரப் படிப்பில் சேர்ந்து படிக்க இயலாமல போவோர் தனிப்பட்ட முறையில (Private Study) கற்க வாய்ப்புளளது இவ்வாறே குறுகிய காலப் பட்டயப் படிப்புகளையும் (Diplomas), இப்பல்கலைக் கழகம் வழஙகுகிறது. இதில, உழைப்பாளர் சட்டங் கள், பல்வேறு தொழில் நுட்பப் பாடங்கள, வேளாண வேதியியல், தோட்டம் அமைத்தலும் நகர் அழகு படுத்தலும், இராசசுத்தான் மொழி முதலானவை யும் அடங்கும்.

இப்பல்கலைக்கழகம் மாணவாகளுக்கும் ஆசிரி யர்களுக்கும் பல வசதிகளைச் செய்துள்ளது. 5 ஆணடு பணிபுரிநத ஆசிரியர்கள் முழுச் சம்பளத்துடன் உயர்கல்வி பெற விடுப்பு வழங்கப்படுகிறது. வறுமை யில்வாழும் மாணவர்களுக்குக் கலவிக் கட்டணச் சலுகை உள்ளது. சிறந்த நூலகமும், தங்கும்விடுதி யும் மாணவர்களுக்குப் பெரிதும் பயன்படுகின்றன.

சி.ப.

**சோதனை அமைப்பு**: ஒரு சோதனையை அமைக்கும்போது பல கூறுகளைக் கவனத்தில் கொளளவேண்டும். அவை சோதனையின தன்மை, வகை, குறிக்கோள், பயன் போனறவையாகும. இவற் றின் பின்னணியில் உளவியற் கொளகைகள் சிறபபான பங்கு வகிக்கின்றன.

ஒரு சோதனையை எவ்வாறு அமைப்பது என் பது பற்றிப் பல அறிஞர்கள் குறிப்புகள் வரைநதுள்ள னர். அவர்களுள் அட்கினசு, கிலபோர்டு, இலேசி, இலிண்ட்குவிசுட்டு, இசுடுயிட்டு, திராவர்சு எனபவர் கள் குறிப்பிடத் தகுந்தவர் ஆவர். பொதுமககளுக் குப் பணிபுரியும் அலுவல்களில் சோதனைகளின் பயன் களை வலியுறுத்தி அட்கின்சு எழுதியுள்ளார். ஒரு சோதனையில் பயனபடுத்தக்கூடிய வாக்கியங்களை எவவாறு எழுதுவது, அவற்றை எவ்வாறு தொகுப் பது எனபது பற்றி ஆசுடே, மோசியர், மெயர்சு, பிரைசு போன்றோர் எழுதியுள்ளனர். துணைக்கருவி களைப் பயன்படுத்திச் செய்யும் சோதனைகள் பற்றி இலிணட்குவிசுட்டு என்பார் எழுதியுள்ளார். மெல் டன் என்பாரும் இதுபற்றியே எழுதியுள்ளார். கிப்சன என்பார் அசையும் படங்கள் சோதனை பற்றி ஒரு நூல் வெளியிட்டுள்ளார்

ஒரு சோதனை இரண்டு காரணங்கள்பற்றி உரு வாக்கப்படுகின்றது. ஒருவரின ஆளுமையின சிறப்பு கள், பணபு அல்லது திறமையினை அளந்திடுவது ஒரு காரணம். ஒரு சூழலில் ஒருவரின் செய்திறனை மதிப் பீடு செய்வது மற்றொரு காரணம. தனியாள வேற்று மைத் தொடர்பான ஒரு பொருள பதிந்த, சிறப் பான உளவியற் காரணியை இனங்கண்டு அளவீடு செய்தலில்தான மேலே சொன்ன முதலவகைச சோதனையின்வெற்றி இருககிறது. இதற்குக கார ணிக் கொளகையும் காரணிப் பகுப்பாயவும் ஒரு நல்ல பகுத்தறிவான அணுகுமுறையினைத் தருகினறன. ஒரு காரணியும் அதன் பினனணியிலுள்ள உளவியல் தன்மையும இனங் கண்டுகொளளப்பட்டு உறுதிப் படுத்தப்பட்டுவிட்டால் பின்னர் அதே காரணியை அளவீடு செய்வதற்கான மறறச சோதனைகளை உருவாக்கிடுதல் எளிது

செயலதிறனில் உளளடஙகிய பொதுக்காரணிகள் பற்றிய ஓர் அனுபவ அறிவு, தனியாள் மதிப்பீட்டுச் சோதனைகளுக்கு மிகவும் பயனபடும். இதறகு ஒவ வொருவனும் தனது பணியில் உண்மையில் என் னென்ன செயகின்றான் என்பதனை நேரடியாக அறிய வேண்டும். இதனை அனுமானிப்பதறகுப் பிளனகான (Flanagon) என்பவர் பாகுபாடு நிகழவு கள் (Critical Incidents) என்னும் வழிமுறையினைக் கூறியுளளார். அதன்படி, உயர்ந்த பதவிகளில உள ளோர் வெற்றி அலலது தோல்விக்கு இட்டுசசெலலு நடத்தைகளைக் கூறுமாறு கேட்பதாகும். வெறறி தோல்விக்கான பொது நடத்தைகளைக் கண்டறிநது அவற்றிற்கான பணபுகளின் உளவியல் தன்மைகளை அறிந்திடவேணடும்.

சோதனைவழி அணுகுமுறையினை மட்டுமே சார்ந்திருக்க வேண்டிய காலமும் உண்டு. இதற்கு எடுத்துக்காட்டாக இரண்டாம் உலகப்போரின் போது விமானப்படை உளவியலாளர்களால்உருவாக்கப்பட்ட வாழ்வுமுறைச் செய்திச சோதனையினைக் கூறலாம். சோதனைவழி அணுகுமுறை சிறப்பான, பயனுள்ள, எளிய முடிவுகளைத் தருகின்ற அதேநேரத்தில சில கடுமையான குறைகளையும் கொணடிருக்கிறது.

**சோதனை முன்சோதிப்பு**: ஒரு புதிய சோதனை யினை உருவாக்கியவுடன் அதனைச் சோதித்துப் பார்த்திடுதல் மிகவும் இன்றியமையாத ஒன்று. அப் படிச் சோதிக்கும்போது பொருட்பகுப்பிற்கு (Item

Analysis) வேண்டிய விவரங்கள் கிடைக்கின்றன. சோதனையில பின்பற்ற வேண்டியவழிமுறைகளிலும் அதன் அமைப்பிலுள்ள குறைகள் தெரியவருகின்றன. சோதனையைச் செய்து முடித்திட ஆகும் கால அள வும், சோதனையின நீளமும் கணக்கிட்டு அமைத் திடலாம். கான்ராடு என்பவர் சோதனையின அமைப் பில் மூன்று நிலைகளைக கூறியுள்ளார். அவர் கூற் றுப்படி முதல்நிலை என்பது, அச் சோதனையினை அமைப்பாளரே நூறு தேர்வாளர்களிடம் கொடுத்து அவர்களிடமிருநது பெற்ற விடைகளிலிருநது சோத னையிலுள்ள ஒட்டுமொத்தமான குறைகளைக் கண டறியப் பயன்படுவது. இரண்டாம் நிலை பொருட பகுப்பாய்விற்கானது இச் சோதனையினை நானூறு தோவாளர்களுககு அளித்தல வேணடும. இறுதியாக மூனறாம் நிலையில் இதுவரை கவனியாமல விட்டுப் போன சிறுசிறு குறைகளும், சோதனையின நம்பகத் தன்மையும் முடிவு செய்யப்படுகின்றன. ஆனால், இந்நிலைகளை ஒரு சடங்காகப் பினபற்ற வேணடிய திலலை.

**பொருட் பகுப்பு:** இருவகையான செய்திகளைப பொருட்பகுப்பு மக்களுககு அளிக்கிறது.அது பொருட் சிக்கலின் அளவையினையும், ஏறபுடைமைக் குறியீட் டினையும் உணர்ததுகின்றது. ஏற்புடைமைக குறி யீடானது ஒரு காரணி எந்த அளவு அளவீடு செய் கிறது அல்லது ஒரு காரணியை எவ்வாறு மற்றவற்றி லிருநது வேறுபடுததுகிறது அல்லது ஒரு புறக்கார ணியை எவ்வாறு வருமுன் கண்டுரைககிறது என்ப தனைச சொலவதாகும. சோதனையிலுள்ள ஒவ் வொரு கூறிலும் எத்தனை பேர் தேர்சசிபெறுகின்ற னர் அலலது ஒரு கூறு மற்றொரு புறக் காரணியோடு ஒத்தமைதல் அலலது ஒருகூறு மொத்தக் கூறுகளுடன் ஒத்தமைதல் என்னும் வழிகளில் ஏற்புடைமை தீர்மானிக்கப்படுகிறது. இவற்றில் பினசொல்லப் பட்ட இரு வழிகளும் அதிகஅளவில பயனபடுத்தப் படுவதில்லை

இவ்வாறு பொருட்பகுப்பு வழியாகப் பெறப் படும் செய்தி, சோதனை அமைப்பாளர் சோதனை யின் கூறுகளைத் தீர்மானிததிட உதவுகிறது. முத லில் பெருமளவில் சோதனைக் கூறுகளைத் தேர்வு செய்துகொண்டு, அவற்றிலிருநது சிறப்பான பொருட்செறிவு மிக்க கூறுகளை ஆய்ந்து தீர்மானித் திட வேண்டும். சோதனையிலுள்ள கூறுகளின மொத்த மதிப்பீட்டெண், அச்சோதனையின ஒவ வொரு கூறின் தனமையினையும் சார்ந்திருக்கினறது.

**பொருட் பகுப்பிற்குத் தயார்படுத்தல்:** பொருட்பகுப் பின் பயனும் தொடக்கநிலைச் சோதனையின் வெற் றியும் அச்சோதனை அமைப்பாளரைப் பொறுத்த தாகும். இறுதிசசோதனையில் இருககவேண்டிய கூறு களே தொடக்கநிலைச் சோதனையிலும் இருக்க வேண்டும் இறுதிசசோதனையில் இருக்கவேணடிய கூறுகளின், ஐம்பது விழுக்காடு அதிகமான கூறுகளு டன் தொடக்கநிலைச் சோதனையைத் தொடங்க வேண்டும்.

திறனாய்வுச் சோதனைகட்கு மட்டுமே பொருட் பகுப்புச் செய்திடல் சிறப்பு. பொருட்பகுப்பின் பொருட்டுச் செய்யப்படும் சோதனையின் போது தேர்வாளர்களுககுத் தேவையான கால அளவினை நல்கிடவேணடும். அப்போதுதான் அவர்கள் எல் லாக் கூறுகளையும் செய்திட முயற்சிசெய்வர். சோத னையின கூறுகள அனைததும் பல்வேறு வகைகளில் பலவேறு தேர்வாளாக்ளுக்கு வழங்கப்பட வேணடும்.

அடைவுச சோதனையின் மிகுதியாக் நாட்டச் சோதனைகள (Aptitude Tests) பொருட்பகுப்பிற்கு உட்படுத்தப்பட வேணடும். அடைவுச் சோதனையின கூறுகள ஒரு வல்லுநரின் ஒப்புதலைப் பெறவேண்டு மானால், சோதனையின முழு நம்பகத்தனமை இரு வகைச் சோதனைகளுக்கும் வேணடும. இறுதிப் படிவ மானது எதிர்பார்தத அளவு தரமானதாக இல்லை யெனில் மீணடும் இரண்டாம் முறையாகப் பொருட் பகுப்புச் செய்யப்படலாம்.

**பொருட்சிக்கலின் அளவைகள்:** சோதனையிலுள்ள ஒவ்வொரு கூறுககும் சரியாக விடையளிப்பவர்களின் விழுக்காடு அடிப்படையில் பொருட் சிக்கல் நிருணயிக் கப் படுகிறது. சோதனையின் எநதவொரு கூறும் (வினா அலலது வாககியம்) மிக எளிதானதாகவோ மிகச சிக்கலானதாகவோ இருத்தல் கூடாது.பொருட் சிககலின அளவு (Indices of Item Difficulty)Bஎன்ற எழுத்தினால குறிக்கப்படுகிறது. இது ஒரு சராசரி அடைவு எண்ணும், சாரசரிச் சிக்கல் அளவையுமாகும்.

**ஏற்புடைமை அளவைகள்:** சோதனையின ஒரு கூறு அச் சோதனையின் மொத்த அடைவு எணணு டன் கொணடுளள உறவு, அக்கூறின் ஏறபுடைமை (Item Validity) எனப்படும். அதனைக் கணககிடு வதில் நான்கு முறைகள் உள்ளன. முதலாம் முறை, சோதனையின் ஒரு கூறினைத் தேர்ச்சிபெறுவது தேர்ச்சியாளரின் திறமை ஓகைவு (Ogive) எனற வரைப்படத் தத்துவ அடிப்படையிலானது என்னும் அனுமானத்தின் மேலெழுந்ததாகும். இரண்டாம் முறை, ஒரு கூறு எப்படியெல்லாம் பிற காரணி களை வேறுபடுத்தும் தன்மையானது எனபது பற்றிய தாகும். மூன்றாம்முறை, ஒரு கூறு மற்றொரு புறக் காரணியுடன் கொண்டுள்ள ஒட்டுறவைப் பொறுத்த

தாகும். நான்காம் முறை, பரவற்படி ஆய்வின் (Analysis of Variance) அடிப்படையிலானதாகும்.

பெர்கூசன் என்பார் மாறாத தூண்டல்கள் (Constant Stimuli) அடிப்படையில் கூறுகளை உள அளவை வழியாகச் செம்மைப்படுத்தும் ஒருமுறை யினை அறிமுகம் செய்துள்ளார். பல்வேறு குழுக்களி டையே வேறுபடுத்தும் அளவைமுறையினை இலாசே தந்துள்ளார். இதுடி (D) முறை எனப்படும். இலோ வின்சர் ஒன்று போலிருத்தல் அளவை என்னும் முறையினைக் கூறியுள்ளார்.

ஏற்புடைமை அளவையைக் காட்டிலும் பொருட் சிக்கல் அளவைகள் சிறப்பானவை. குறிப்பாகக் குழு வின் எண்ணிக்கை ஐம்பதிற்கும் குறைவாக இருக்கும் போது பொருட் சிக்கல் அளவை நல்ல முடிவுகளைத் தருகின்றது என்பது கிப்பான், கார்டர் என்ற இரு வரின் கருத்தாகும். சோதனைக் கூறுகளின் உறுதி அசசோதனையினை எத்தகையவர்கள் விடையளிக் கின்றனர் என்பதைக் சார்ந்துள்ளது.

மேலே சொன்ன முறைகளெல்லாம் செயல் திறன் சோதனைகளுக்குரியவையாகும். அவற்றைத் தக்கவாறு மாற்றியமைத்து வேகச் சோதனைகளுக் கும் பல்விடைக் கூறுகள் சோதனைகளுக்கும் பயன் படுத்தலாம்.

ஒரு சோதனைக்கான கூறுகளைத் தேர்வுசெய் வது எப்படி? மிகுதியான நம்பகத் தன்மையும் ஏற் புடைமையும் உள்ள கூறுகள் சிறப்பானவை. சோத னையின் மொத்த அடைவுஎண் அடிப்படையிலும், கூறுகளை அவற்றின் சிக்கல் தன்மையின் அடிப்படை யிலும் வரிசைப்படுத்தி அமைத்தும், கூறுகளை மாற்றி யமைத்தும் தேர்வு செய்யலாம். செய்திகள் மிகுதி யாகக் கிடைக்கும் போது ஒரேதன்மையான இரு இணைச் சோதனைகளை உருவாக்கவும் செய்யலாம்.

சோதனையின் மொத்த அடைவு எண்களின் ஏற்புடைமையினை மிகுதியாக்க இரு வழிகள் உள் ளன. இரு சோதனைகளின கூறுகளைக் குறிப்பிட்ட விகிதத்தில்-எந்த அளவு இருக்கவேண்டுமோ அந்த அளவு சேர்த்து ஏற்புடைமையினை மிகுதியாக்கலாம். ஒரு தனிப்பட்ட சோதனையின் ஏற்புடைமையினை மிகுதியாக்க, அச் சோதனையின் ஒவ்வொரு கூறும் ஒரு புறக் காரணியுடன மிகுதியாகவும், சோதனை யின் மற்றக் கூறுகளுடன் குறைவாகவும் ஒட்டுறவு கொண்டிருக்க வேணடும்.

எதிர்மறைப் பொருட்பாகுபாடு (Negative Item Analysis) முறையினைப் பயன்படுத்தியும் சோதனை யின ஒரே சீரான தன்மையினை மிகுதிப்படுத்தலாம். வெவ்வேறான இரு சோதனைகள் ஒரு பொதுக் காரணியை அளவிடும்போது இரு சோதனைகளுககு மிடையேயான ஒட்டுறவு மிகக் குறைவாக இருக்க வேண்டும். இதறகு மற்றொரு சோதனைக்கூறுடன் குறைந்த ஒட்டுறவு கொணடுள்ள சோதனைக கூறு களைத் தேர்நதெடுககலாம்.

**கணிப்பீட்டுச் சிக்கல்கள்:** மூனறு பெரும் சிக்கல் கள கணிபபீட்டில உள்ளன. முதலாவது, சோதனைக் கூறுகளுக்கான விடைகளுக்கு ஒரு மதிப்பினைத் தரு வது பறறியதாகும். இரணடாவது, கணிப்பீட்டுச் சூததிரஙகள. மூன்றாவது, விடைகளில் காணப்படும ஒத்துப்போதல் தன்மையாகும்.

**மதிப்புக் கணிப்பீடுகள்:** பல கூறுகளை உள்ளடக கிய சோதனை, பலவேறு துணைச் சோதனை களைக கொணட ஒரு சோதனையாகக் கருதப்படும். அத்தகைய சோதனையின் பகுதிகளை எநத அளவு வேண்டுமோ அந்த அளவிறகுச சேர்த்து அச் சோத னையின் கூட்டு அடைவு எணணின் ஏற்புடைமையை மிகுதிப்படுத்தலாம் இதற்குப் பலமுனை ஒட்டுறவுக கொள்கை நன்கு பொருந்தும்.

**கணிப்புச் சூத்திரங்கள்:** சோதனைக கூறுகளின் சரியான விடைகளுக்கு ஒரு மதிப்பினையும், தவறான வினாக்களுக்கு ஒருமதிப்பினையும் அளித்து அவை இரணடின் மொத்தத் தன்மையினை அறிவது கணிப் புச் சூத்திரஙகள் எனப்படும். விடை அளிக்காது விட் டுப்போன கூறுகளுக்கும், முயற்சி செய்யாமல விட்டுப் போன கூறுகளுக்கும்கூட ஒரு மதிப்பினை வழங் குவதுண்டு வேகச் சோதனைகளில அனுமானமாகவும், அவசரமாகவும் விடைகள் அளிககப்படுவது உணடு. இவை சரியான விடைகளின் எணணிக்கையை உயர்த் துவன. எனவே, அவற்றை ஒதுக்கிட வேணடும். அதற்கான திருத்தும் சூத்திரம் ஒன்று உளளது. நிகழ் தகவு குறைகளைத் திருத்திட உதவும் சூத்திரங்கள் காரண காரியக் கணிப்புச் சூத்திரங்கள் (Apriori Scoring Formula) எனப்படும் ஏறபுடைமையினை மிகுதிப்படுத்த உதவும் சூத்திரங்கள் சோதனைக் கணிப்புச் சூத்திரஙகள் எனப்படும். கி.இரா.

**துணை நூல்கள்:**

D' Amato, M.R., Experimental Psychology, Mc Graw Hill Book Co, Newyork, 1970.

Freeman, F.S., Theory and Practice of Psychological Testing, Oxford and IBH Publishing Co., New Delhi, 1963.

Guilford, J.P., Psychometric Methods, (2nd Ed )Tata -Mc Graw Hill Publishing Co, Ltd , Bombay, 1954.

Nunually J.C., Psychometric Theory, Mc Graw Hill Book Co, New York, 1967.

சோதனை ஆணை ஒரு கட்டடததில நுழைந்து, குறித்த பொருளகளையோ ஆவணங் களையோ கைப்பற்றுதற்கும்; குறிப்பிட்ட ஒருவரை மற்றொருவர் சட்ட முரணாகத தடுத்து வைத்திருக் கும்போது அவரைத் தேடிக் கொணர்தற்கும் குறிப் பிட்ட ஒருவருக்கு அதிகாரமளித்து, குற்றத்துறை நடுவர் இடும் ஆணை சோதனை ஆணை (Search Warrant) எனப்படும்.

**சோதனை ஆணையை எப்போது பிறப்பிக்கலாம்.** குற்றவியல நடைமுறைச் சட்டம், பிரிவு 91-இனபடி, புலனாய்வு, பரிசீலனை, விசாரணை அல்லது வேறு நடவடிக்கையின பொருட்டு, ஆவணம் அலலது வேறு பொருள எதையும், நீதிமனறம் தாக்கல் செயய வேணடி ஒருவரைப் பணித்திருந்து, அதை அவா தாக்கல செயயாதபோது; அல்லது,

குற்றவியல் நடைமுறைச் சட்டம், பிரிவு 92 (1)- இன்படி, அஞ்சலக அல்லது தந்தித்துறை அலுவல ரின் பாதுகாப்பிலுளள ஆவணம், அஞ்சல்-கட்டு அல லது பொருள் எதையும் ஒரு மாவட்ட நடுவர் அல் லது தலைமை நீதிததுறை நடுவர் அலலது அமர்வு நீதிமன்றம் அல்லது உயர்நீதிமன்றம் புலனாய்வு, பரிசீலனை. விசாரணை அல்லது வேறு நடவடிககை யின் பொருட்டுத் தேவைப்படுகிறதெனறு வேணடி யிருந்து, அதை அலுவலர் ஒப்படைக்காத போது; அல்லது அதை அவர் தாக்கல் செய்யமாட்டார், அல லது விரும்பார் என்று நம்புவதற்குக் காரணமிருக்கும் போது; அல்லது,

அத்தகைய ஆவணம் அல்லது பொருள் எவரி டத்தில் உளளது என்று நீதிமன்றத்திறகுத் தெரியா திருக்கும்போது நீதிமனறம் சோதனை ஆணை மூலம் ஒருவருக்குக் கட்டளையிட்டு அப்பொருளைக் கொணர்விக்கச் செய்யும்.

சோதனை ஆணையில் குறிப்பிட்டனுப்பப்படுவர் அந்த ஆணைக்கும மற்றும் குற்றவியல் நடைமுறைச் சட்டத்தில் குறிப்பிடப்படும் விதிகளுக்கும் ஏறபச் சோதனையை மேற்கொள்வார். நீதிமன்றம் தாம் பொருத்தமெனக் கருதுகின்ற வகையில் குறிப்பிட்ட இடம் அலலது பகுதியைச சோதனையிட ஆணை பிறப்பிக்கும்.

அஞ்சலக அல்லது தந்தித்துறை அலுவலரிடத்தி லுள்ள ஓர் ஆவணம், அஞ்சல்கட்டு அல்லது வேறு பொருளைத் தேடுவதற்கான ஆணையை ஒரு மாவட்ட நடுவர் அல்லது தலைமை நீதித்துறை நடு வர் மட்டுமே பிறப்பிக்க முடியும்.

**திருட்டுப் பொருள், பொய்யாவணங்கள் முதலி யவை இருப்பதாக ஐயுறப்படும் இடத்தைச் சோதனை இடுதல்:** எந்த இடமேனும் திருட்டுப் பொருள்; அல் லது மறுப்புக்கிடமான பொருள் (Objectionable Article) களான, 1) கள்ளநாணயம்; 2) உலோக அடை யாள வில்லைகள் சட்டம், 1889 (Metal Tokens Act, 1889-1 of 1889-)-ஐ மீறிச் செய்யப்பட்ட உலோகத் துண்டுகள்; அல்லது சுங்கச் சட்டம், 1962 (52 of 1962 - Customs Act, 1962, 52 of 1962) பிரிவு 11- இன் படி அவ்வப்போது நடைமுறையிலுள்ள அறி விப்பு எதையும் மீறி இந்தியாவிற்குள் கொணடுவரப் பட்ட உலோகத்துணடுகள்; 3) கள்ள உருபாத்தாள் கள்ள அஞ்சல் தலைகள்; 4) பொய்யாவணஙகள் 5) போலி முத்திரைகள்; 6) இந்தியத் தண்டனைச் சட்டம, பிரிவு292-இல் குறிப்பிடப்பட்டுள்ள ஆபாசப் பொருள்கள்; 7) இவற்றை (1 முதல் 6 வரையில்) உற் பத்தி செய்வதற்கான கருவிகள் அல்லது பொருள் கள் எதையும் வைப்பதற்கு அல்லது விற்பனை செய் வதற்கு அலலது உணடாக்குவதற்குப் பயன்படுத்தப் படுகிறது என்று ஒரு மாவட்ட நடுவர் அல்லது உட் கோட்ட நடுவர் அல்லது முதல் வகுப்பு நடுவர் எவருக்கும் தெரியவருகின்றபோது, அவர், காவலர் தகுதிக்கு மேல் நிலையிலுள்ள காவல் அலுவலர் ஒருவருக்குச் சோதனை ஆணை மூலம் அதிகார மளித்து, அத்தகைய பொருள் இருக்கும் இடத்தில் புகுநது, அந்தப் பொருளைக் கைப்பற்றக் கட்டளை யிடலாம்.

**நூல்கள், செய்தித்தாள்கள், காலமுறை இதழ்கள் ஆகியவைகளைக் கைப்பற்றுவதற்குச் சோதனை ஆணை இடுதல்:** இந்தியத் தணடனைச் சட்டம் பிரிவு 124-அ-இன்படி அரசுக்கு எதிராகப் பகைமூட் டல்; பிரிவு 153-அ-இன்படி சமயம், இனம், பிறந்த கம், உறைவிடம், மொழி முதலியவை காரணமாக வெவ்வேறு வகுப்புகளிடையே பகைமையை வளர்த் தல் மற்றும் ஒற்றுமை நிலவுவதற்குக் குந்தகமான செய்கைகளைச் செய்தல்; பிரிவு 153-ஆ-இன்படி தேசிய ஒருமைப்பாட்டிற்குக் குந்தகமான பழிச்சாட் டுகள், அறைதல்கள் செய்தல்; பிரிவு 292-இன்படி ஆபாச நூல்கள் முதலியனவற்றை விற்பனை செய் தல்; பிரிவு 292-இன்படி இளைஞர்களுக்கு ஆபாசப பொருள்களை விற்பனை செய்தல்; பிரிவு 295-அ- இனபடி குறிப்பிட்ட வகுப்பினரின் சமயம், அல்லது

சமய நம்பிக்கைகளைப் பழித்துரைத்தல், அவர்களின் சமய உணர்வுகளைப் புண்படுத்தல் தொடர்பான செய்திகளை உட்கருத்துடன் வெளியிடும், ஏதேனும் செய்தித்தாள் அல்லது நூல்; அல்லது ஆவணம் எதுவும் ஒரு குறிப்பிட்ட இடத்தில் இருப்பதாக நீதிமன்றத்திற்குத் தெரிய வருமிடத்து, அது அவற்றைக் கைப்பற்றுவதற்காகத் துணை ஆய்வாளர் தகுதிக்குக் குறையாத காவல் அலுவலர் ஒருவருக்குக் கட்டளை வழங்கி அவற்றைக் கைப்பற்றும்.

**சட்டவிரோதமாகக் கட்டுப்படுத்தப்பட்டவரைத் தேடிக் கொணருதற்குச் சோதனை ஆணை:** ஒருவர் மற்றொருவரால் சட்டத்திற்கு முரணான வகையில் அடைத்து வைக்கப்பட்டிருக்கும் போது, ஒரு மாவட்ட நடுவர் அல்லது உட்கோட்ட நடுவர் அல்லது முதல் வகுப்பு நடுவர், அவரை அடைத்து வைத்திருக்கும் நபரிடமிருந்து அவரை மீட்டுக் கொணர்வதற்குக் குறிப்பிட்ட ஒருவருக்கு அதிகாரமளித்துச் சோதனை ஆணையைப் பிறப்பிக்கலாம்

**சோதனை ஆணையை நிறைவேற்ற இடத்திற்குரியவர் வசதி செய்து தருதல் வேண்டும்:** ஒரு வீடு அல்லது இடத்தைச் சோதனை இடுதல் வேண்டும் என்று, அந்த இடத்திற்கு உரியவரை, சோதனை ஆணையை நிறைவேற்றுபவர் வேண்டும்போது, அவர் அதற்கு அனுமதியளித்து போதிய வசதியைச் செய்து தருதல் வேண்டும். அவர் அங்ஙனம் வசதி எதையும் செய்து தராதபோது சோதனை ஆணையை நிறை வேற்ற அதிகாரம் வழங்கப் பெற்றவர், அந்த வீடு அல்லது இடத்தின் முன் கதவு அல்லது சன்னல் எதையும் உடைத்து உள்ளே போகலாம்.

**ஆட்களைச் சோதனையிடுதல்:** ஒரு வீடு அல்லது இடத்தில்; அல்லது அதன் சுற்றுப் புறத்தில் எந்தப் பொருள்களுக்காகச் சோதனை இடவேண்டுமோ, அந்தப் பொருள் எதையும் ஒருவர் தம் உடம்பில் மறைத்து வைத்திருக்கிறாரென்று சோதனை ஆணையை நிறைவேற்ற அதிகாரம் அளிக்கப்பட்டவருக்கு ஐயம் ஏற்பட்டால் அவர் குறிப்பிட்ட ஒருவரைச் சோதனை இடலாம். குறிப்பிட்ட அந்த ஆள் பெண்ணாக இருக்கும் நிலையில், அவரை ஒரு பெண்ணைக் கொண்டே சோதனை இடுதல் வேண்டும்.

**சோதனை ஆணையை நிறை வேற்றுவகையில் நடைமுறை:** ஓர் இடத்தைச் சோதனையிடும் அலுவலர் அல்லது வேறு ஒருவர், அச் சோதனையின் போது, அந்தப் பகுதியைச் சார்ந்த மதிப்புமிக்க இருவரைச் சான்றாளராகக் கொண்டு சோதனை இடுதல் வேண்டும். அப்பகுதியில் தகுதி மிக்க சான்றாளர் இல்லாத நிலையில், வேறொரு பகுதியைச் சார்ந்த சான்றாளர்களைக் கொண்டு, அந்த இடத்தைச் சோதனை இடுதல் வேண்டும். சோதனையில் சான்றாளராக வர மறுக்கின்ற எவரும் இந்தியத் தண்டனைச் சட்டம், பிரிவு 187-இன் கீழ்த் தண்டிக்கப் படுவர். பு.வே.

**சோதனை உருவரை:** சோதனை உருவரை என்பது, ஓர் ஆய்வைப் பற்றிய திட்டம், அமைப்பு, திறமுறை ஆகிய மூன்றும் சேர்ந்து ஆய்வு வினாவிற்கு எவ்வாறு தகுந்த விடை கண்டுபிடிப்பது, ஆய்வில் தோன்றும் மாறுபாடுகளை (Variance) எவ்வாறு கட்டுப்படுத்துவது என்ற இரு நோக்கங்களைக் கொண்டதாகும். அதாவது ஓர் ஆய்வை எவ்வாறு நடத்த வேண்டும் என்று பொதுவாகத் திட்டம் வகுத்துப் பின்னர் ஆய்வில் படிக்க இருக்கும் மாறுமியல்புகளை (Variables) ஓர் உருவில் அமைத்து, அதில் அவை எவ்வாறு ஒன்றுக்கொன்று தொடர்புடையனவாக இருக்கின்றன என்று சோதனையாளர் தமது கருத்தைப் படம் மூலம் வெளிப்படுத்த வேண்டும். இறுதியாக இங்ஙனம் வடிவமைத்த ஆய்வுத் திட்டத்தை எவ்வாறு செயல் முறையில் பயன்படுத்தி ஆய்விற்கு வேண்டிய விவரங்களைச் சேகரித்து அவற்றைப் பகுக்க (Analyze) வேண்டும் என்று முறைப்படுத்திக் கொள்ள வேண்டும். சுருங்கக் கூறின், உருவரை (Design) என்பது விவரங்களின் (Data) ஒழுங்கு முறையைக் குறிப்பதாகும். எல்லாச் சோதனை உருவரைகளின் அடிப்படை நோக்கம் இயற்கையில் நடப்பனவற்றை நன்கு கட்டுப்படுத்திய பலநிலைகளில் கூராய்வு செய்ய வேண்டும் என்பதாகும்.

**சோதனை உருவரையின் முக்கிய இரு நோக்கங்கள்:** சோதனை உருவரையின் முதல் நோக்கம் ஆய்வாளரை ஆய்வு வினாவிற்கு ஏற்றதாகவும் எல்லோராலும் அறியக் கூடிய புறப்பொருள் தன்மை உடையதாகவும் (Objective) நுட்பமாகவும் (Accurate) சிக்கனமாகவும் (Economical) விடையளிக்க இயலச் செய்வதாகும். ஒவ்வோர் ஆய்வுத் திட்டமும், ஆழ்ந்து ஆராய்ந்து ஒரு குறிப்பிட்ட எண்ணத்துடன் உருவாக்கப்பட்டு ஆய்வு வினாவிற்குச் செயலாராய்ச்சித் திறமான சான்றுடன (Empirical evidence) விடை அளிக்குமாறு நிறைவேற்றப்படுகிறது. சோதனை உருவரை ஆய்வாளருக்கு எதைக் கூராய்வு செய்வது, எவ்வாறு கூராய்வு செய்வது, கூராய்வின் அளவுக் கூறுகளை எவ்வாறு பகுப்பது என்பன போன்றவற்றைத் தெளியப்படுத்துகிறது. நிறைவான உருவரை எவ்வளவு கூராய்வுகள் செய்ய வேண்டும், எந்த மாறுமியல்புகள் ஆய்வாளரின் நேரடிக் கட்டுப்பாட்டிற்குட்பட்டவை, எந்த மாறுமியல்புகள் ஆய்

வாளரின் கட்டுப்பாட்டிற்கு அப்பாற்பட்டவை என்பதைத் தெரிவிக்கும்.

சோதனை உருவரையின் இரண்டாம் முக்கிய நோக்கமாவது மாறுபாடுகளைக் கட்டுப்படுத்துதல் ஆகும். மாறுபாடுகளை மூன்று வகையாகப் பிரிக்கலாம்(Kerlinger, 1983) அவையாவன: ஒழுங்கு முறையான மாறுபாடு(Systematic variance), அயலான அல்லது புறம்பான மாறுபாடு(Extraneous variance), ஒழுங்கீன அல்லது பிழையான மாறுபாடு (Error variance) இம் மூன்று வித மாறுபாடுகளை உறுப்புகளாகக் கொண்ட புள்ளி விவரக் கோட்பாட்டின் அடிப்படையில் ஒவ்வொரு சோதனை உருவரையும் அமைந்துள்ளது. அந்தக் கோட்பாடு: அ) ஒழுங்கு முறையான மாறுபாட்டைப் பெரிதாக்க வேண்டும (Maximize systematic variance). ஆ) அயலான மாறுபாட்டைக் கட்டுப்படுத்த வேண்டும் (Control extraneous variance)இ) ஒழுங்கீன மாறுபாட்டைச் சிறிதாக்க வேண்டும் (Minimize error variance).

ஒழுங்கு முறையான மாறுபாட்டைப் பெரிதாக்குதல் என்பது, ஆய்வாளர் எதைப் பற்றி அறிய வேண்டுமோ அந்தக் கூறினை(Factor) ஒரு குழுவில (சோதனை குழு-Experimental group)மிக அதிகமாகவும்,மற்றொரு குழுவில்(கட்டுப்பாட்டுக் குழு -Control group) மிகக குறைவாகவும் (முடிந்தால் அந்தக் கூறு இல்லாமலே செய்வதும்) இருக்கச் செய்து, இவ்விரு குழுக்களும் எவ்வாறு மாறுபடுகின்றன என்று நோக்குவது ஆகும் எடுத்துக் காட்டாகப் பரிசில் கற்றலின் வேகத்தை எவ்வாறு பாதிக்கிறது என்று அறிய விரும்பினால், ஒரு குழுவிற்குக் கற்றலின் போது பரிசளித்தும் மற்றொரு குழுவிற்குக் கற்றலின்போது பரிசளிக்காமலும் இருந்து இவ்விரு குழுக்களும் கற்றலின் வேகத்தில் வேறுபடுகிறார்களா எனப் பார்ப்பதாகும். இதில் பரிசில் ஒரு சுயேச்சை மாறுமியல்பாகும்(Independent variable)கற்றலின் வேகம் ஒரு சார்ந்துள்ள மாறுமியல்பாகும் (Dependent variable). கற்றலின் வேகம் பரிசு பெறும் அளவைப் பொறுத்து உள்ளதா என்று அறியப் பரிசிலை ஒரு குழுவிற்கு மட்டும் கொடுத்து மற்றொரு குழுவிற்குப் பரிசில் தராமல் இவ்விரு குழுக்களையும் பெரிதாக வெவ்வேறாக மாற்றி அமைத்து இவ்விரு குழுக்களும் அதே போலக் கற்பதிலும் உண்மையாக மாறுபடுகிறார்களா என்று பார்க்க வேண்டும். ஒழுங்கான மாறுபாட்டைப் பெரிதாக்க வேண்டுமெனில், சோதனைக் குழுவிற்கும் கட்டுப்பாட்டுக் குழுவிற்கும் இடையே உள்ள வேறு-பாட்டைப் (சுயேச்சை மாறுமியல்பைப் பொறுத்த வரை) பெரிதாக்க வேண்டும். சுயேச்சை மாறுமியல்பை எந்த அளவிற்கு வெவ்வேறு அளவுகளில் மாறுபடுத்த முடியுமோ அந்த அளவிற்கு, ஒழுங்கு முறையான மாறுபாடு, சார்ந்துள்ள மாறுமியல்பில் காண முடியும் என ஆராய்ச்சி வல்லுநர்களகருதுகிறார்கள்.

ஆய்விற்குப் புறம்பான மாறுமியல்புகளைக் குறைத்தோ அகற்றியோ ஆய்வினைச் செய்தால், ஒழுங்கீனமான மாறுபாடுகள் ஓரளவு குறையும். ஆய்விற்கும் புறம்பான மாறுபாடுகளைக் கட்டுப்படுத்தப் பொதுவாக ஐந்து முறைகள் உள்ளன. அவை 1. அகற்றுதல்(Elimination),2.தற்செயல் முறை(Random method),3 இணைத்தல் அல்லது இணையாக்குதல் (Matching),4. ஆய்வு உருவரையில் புகுத்திப்படித்தல் (Building it into the research design and studying its effect), 5. புள்ளியல் கட்டுப்பாடு(Staitsitcal control) என்பனவாம்(Kerlinger, 1983).

பரிசுக்கும் கற்றலின் வேகத்திற்கும் தொடர்பு உள்ளதா என்று ஆய்வு நடத்திப் பார்க்கும்போது அறிவுத்திறன் கற்றலின வேகத்தைப் பாதிக்கும் என ஆய்வாளர் கருதினால், அறிவுத்திறன் எனற மாறுமியல்பை அகற்றி, பரிசுக்கும் கற்றலின் வேகத்திற்கும் இடையே இருக்கும் தொடர்பைச் சோதிபபார். அகற்றுதல் எனறால எந்த மாறுமியல்பு ஆய்விறகு அயலாக இருக்கும் எனக் கருதப்படுகிறதோ அதை ஒரு குறிப்பிட்ட அளவு எல்லைக்குள் (Range) வைத்துக் கொண்டு கட்டுப்படுத்த வேண்டும். முன்னர்க் கொடுத்துள்ள எடுத்துக் காட்டில் சொல்லப்பட்டிருக்கும் அறிவுத திறனையே எடுத்துக கொளளும போது அறிவுத் திறன் ஈவு (Intelligence Quotiont) 90 முதல் 110 வரை உள்ளவர்களை மட்டும் எடுத்துக் கொண்டு அவர்களுடைய கற்றலின் வேகததைப் பரிசுடன் தொடர்பு படுத்திப் பார்ப்பது ஆகும். அகற்றுதல் முறை மூலம் சோதிக்கப்படுபவாகள ஆய்விற்கு அயலான மாறுமியல்புகளைப் பொறுத்த வரை ஒரே சீராக (Homogeneous) அமைவர். அகற்றுதல் முறைக்கு ஆய்வாளர் முதலில் ஆய்விற்குப் புறம்பான மாறுமியல்புகளை உறுதிப்படுததி, பிறகு அவற்றை அகற்ற வேணடும். அங்ஙனம் உறுதி செய்ய முடியாவிடில் இரண்டாம் முறையான தற்செயல் முறையைக் கையாள வேண்டும்.

தற்செயல் முறையில் சோதிக்கப் படுபவர்களுள் ஒவ்வொருவரும் சோதனைக் குழுவில இடம் பெறச் சமவாய்ப்பு உடையவராகின்றனர். தற்செயல் முறையை மூன்று நிலைகளில் கடைப்பிடிக்கலாம். முதல் நிலையாவது சோதிக்கப்படுபவர்களை மொத்தத் தொகையிலிருந்து தோந்தெடுப்பது. இரணடாம் நிலையாவது தேர்ந்தெடுக்கப்பட்டவர்களை வெவ்வேறு குழுக்களில் ஒதுக்குவது. மூன்றாம்

நிலையாவது குழுக்களுக்குச் சோதனைச் செயல் தொடர்பு முறைகளை ஒதுக்குவது.

தற்செயல் முறை பொதுவாக எவ்விதக் குறிக் கோளும் ஒழுங்குமின்றி, இங்கொன்று அங்கொன்று எனத் தேர்ந்தெடுக்கும் முறையைக் கையாளுவதால், பிழையான மாறுபாடுகள் இருக்கும். ஏனெனில் பிழையான மாறுபாடுகள் ஒருமுறை ஆய்வின் விளைவை மேனோக்கி இழுக்கும் அல்லது கீழ் நோக்கித் தள்ளும் அல்லது வலப்புறம் நோக்கிச் செல்லும் அல்லது இடப்புறம் நோக்கிப் போகும். ஆய்விற்குப் புறம்பான மாறுமியல்புகளைச் செவ்வனே கட்டுப் படுத்தாமல் இருந்தால், பிழையான மாறுபாடுகள் இவ்வாறு எவ்வித ஒழுங்குமின்றி முன்னும் பின்னும் மேலும் கீழும் சென்று, ஆய்வின் முடிவை நிலை குலைக்கச் செய்யும். பிழை மாறுபாடு போல தற்செயல் முறையும் எவ்வித ஒழுங்குமின்றிக் கையாளப்படுவதால் பிழை மாறுபாட்டிற்கு அது எதிர்ப்புச் செயற்படும் (Counteraction). அதாவது இரண்டு எதிர்மறை அழுத்தங்கள் (Negative forces) ஒன்றோடு ஒன்று தாக்கும் போது நேர் நிலையை (Positive) உண்டு பண்ணும் என்ற கருத்தின்படி தற் செயல் முறையினால் ஏற்படும் மாறுபாடுகளும் பிழை மாறுபாடுகளும் ஒன்றை ஒன்று பாதித்துச் செயல் எதிர்செயல் (Interact) உண்டு பண்ணி, ஆய்வின் அடித்தளத்தை நேர்நிலைப்படுத்தும். தற்செயல் முறைக்குத்தான் இம் முக்கியமான நற்பண்பு உள்ள தால் ஆய்வாளர்கள் இம்முறையை மிகச் சிறந்ததாக எண்ணி எங்கெல்லாம் பயன்படுத்த முடியுமோ அங் கெல்லாம் பயன்படுத்தி ஆய்வின் முடிவை எவ்வித ஐயமும் இன்றித் தெளிவாகத் தெரிவிக்கலாம் என் கின்றனர்.

இணையாக்குதல் முறைகளைப் பயன்படுத்த வேண்டுமானால், அகற்றுதல் முறையைப் போன்று முதலில் அயலான மாறுமியல்புகளை உறுதிப்படுத் திய பின்னர், வெவ்வேறு குழுக்களில் உள்ள சோதிக் கப்படுபவர்களை அயலான மாறுமியல்புகளினால் இணைக்கவேண்டும். அறிவுத்திறன், வயது, சமூகப் பொருளாதார நிலை (Socio-Economic status) போன்றவற்றை இணையாக்குதல் முறை மூலம் கட்டுப்படுத்த வேண்டுமேயானால், அவற்றை முதலில் உறுதிப்படுத்தி, முதல் குழுவில் உள்ள வரும் இரண்டாம் குழுவில் உள்ள மற்றொரு வரும் மேலே குறிப்பிடப்பட்டுள்ள கூறுகளில் சமமாக இருக்கச் செய்து நடத்தப்படும் சோதனையில், அவர்கள் செயல் (Performance) எவ்வாறு உள்ளது என்று ஒப்பிட்டுப் பார்க்க வேண்டும். இணையாக்குதல் முறை மூலம் ஆய்வின் அயலான மாறுபாடு களைச் செவ்வனே கட்டுப்படுத்த முடிந்தாலும் இறுதியில், சேகரித்த விவரங்களைப் பகுக்கும் போது விழிப்புடன் இருக்க வேண்டும். ஏனெனில் இணை யாக்குதலினால் தொடர்பொற்றுமை அல்லது அன் னியோன்யவிகிதம் (Correlation) அதிகமாகக் காணப் படும். எனவே, அத்தொடர்பொற்றுமையை நீக்கிய பின்பு ஒப்பிடுதல் செய்ய வேண்டும். இந்தப் புள்ளி யியல் சோதனை முறைக்கு உடன் மாறுபாடு பகுத் தல் (Analysis of convariance) என்று பெயர்.

நான்காம் முறை ஆய்விற்கு அயலாகத் தோன்றி னாலும் அம்மாறுமியல்புகளைச் சோதனை உரு வரையில் பொருத்தி அவற்றிற்குத் தனித்தனி அறை அமைத்து, சார்ந்த மாறுமியல்புடன் அவை கொண் டிருக்கும் தொடர்பை அறிவது ஆகும். அதனால், அவற்றின் அயலான மாறுபாடு ஆய்வின் முக்கிய முடிவைப் பாதிக்காமல் இருக்கச் செய்யலாம். எடுத் துக்காட்டாக, பரிசும் கற்றலின் வேகமும் ஒன்றோ டொன்று தொடர்புடையனவா என்று ஆராயும் போது அறிவுத்திறன் ஓர் அயலான மாறுமியல் பாகும். எனவே அதனுடைய அயலான மாறுபாட் டைத் தடுக்க, அதற்குச் சோதனை உருவரையில் ஓர் இடம் கொடுத்து அம்மாறுபாட்டைக் கட்டுப் படுத்தலாம். அதைப் பின்வரும் வரைபடம் விளக்கு கிறது.

அறிவுத் திறன் ஈவு

| | <90 | 90-110 | >110 |
|---|---|---|---|
| பரிசு பெறுவது | | கற்றலின் வேகம் | |
| பரிசு பெறாதது | | | |

பரிசும் மற்றும் அறிவுத் திறன் = இரு சுயேச்சை மாறுமியல்புகள்

கற்றலின் வேகம் = சார்ந்துள்ள மாறுமியல்பு

பரிசு பெறுவது = கற்றலின் போது பரிசு பெறும் ஆட்படுவோர் குழு

பரிசு பெறாதது = கற்றலின் போது பரிசு பெறாத ஆட்படுவோர் குழு

மேலே விவரிக்கப்பட்டுள்ள நான்கு முறைகளும் ஓர் ஆய்வில் கையாள முடியாமற் போனால், புள்ளியியல் கட்டுப்பாட்டின் (Statistical Control) மூலந்தான் அயலான மாறுபாடுகளைக் குறைக்க முடியும். அதாவது ஒரு தலையான அன்னியோன்ய விகிதம் (Partial Correlation) மூலம் அயல மாறுபாடுகளைக் குறைக்கலாம். எடுத்துக்காட்டாகப் பரிசும், கற்றலின் வேகமும் ஆகிய இரண்டிற்குமுள்ள தொடர்பை அறிய வேண்டின் அறிவுத்திறன் குறுக்கே நிற்கலாம். எனவே, அறிவுத்திறனை ஒரு தலையான அன்யோன்ய விகித முறையைப் பயன்படுத்தி ஒதுக்கி விட்டு, பரிசிற்கும் கற்றலின் வேகத்திற்கும் இடையேயுள்ள தொடர்பை அறியலாம்.

இந்த ஐந்து முறைகளைக் கொண்டு அயலான மாறுபாடுகளைக் கட்டுப்படுத்தினாலும் சிலமுறை பிழையான மாறுபாடுகள் குறுக்கிட்டு ஆய்வின் முடிவைத் தடம் புரளச் செய்கின்றன. அதற்கு இன்னும் பல காரணங்கள் உண்டு. அவையாவன. 1. சோதனையில் பயன்படுத்தப்படும் கருவிகளின் தகுதியாற்றல் (Validity) அல்லது முரணபடாமை (Reliability) மிகக் குறைவாக இருத்தல், 2. சோதனை செய்முறை (Test Procedure) தவறுதலாக இருத்தல், 3. சோதிக்கப்படுவார்களின் உடல், உளநிலைகள் சோதனை செய்யும் போது சரியில்லாமல் இருத்தல்.

இவை எல்லாம் சேர்ந்தோ தனித்தோ பிழையான மாறுபாடுகளை உண்டு பண்ணி ஆய்வின் முடிவைப் பாதிக்கலாம். ஆகையால் சரியான முடிவுக்கு வர ஆய்வாளர்கள் பல புள்ளியியல் படுத்தல் முறைகளைப் பயன்படுத்துகின்றனர். அம்முறைகளில் பொதுவாகப் பகுதியில் (Numerator) ஒழுங்கு முறையான மாறுபாட்டையும் தொகுதியில் (Denominator) பிழையான மாறுபாட்டையும் வைத்து, அவற்றின் ஈவு (Ratio) கணக்கிடப்படுகின்றன. அந்த ஈவை வைத்துக் கொண்டு ஆய்வு வினாவிற்குக் கொள்கை அளவில் (Hypothetical level) கொடுக்கப்பட்டிருக்கும் விடை ஏற்றுக் கொள்ளலாமா மறுக்கலாமா என்னும் எண்ணத்தில் உள்ளனர்.

**நிறைவற்ற - நிறைவான சோதனை உருவரைகள்:** நிறைவற்ற சோதனை உருவரைகள் மேலே விளக்கப்பட்டுள்ள மூன்று முக்கிய வகையான மாறுபாடுகளைக் கொண்ட புள்ளியியல் கோட்பாட்டைச் சரிவரக் கவனிக்காமல் வரையப்பட்ட உருவரைகளாகும். எடுத்துக்காட்டாக நடத்தைப் பயிற்சி ஒருவரின் நடத்தையை மாற்றி அமைத்ததா என அறிய ஒரே ஒரு குழுவை வைத்துக் கொண்டு அக்குழுவிற்குப் பயிற்சி அளித்து, பயிற்சிக்கு முன்பும் பின்பும் நடத்தையில் மாற்றம் ஏதேனும் இருக்கிறதா எனப் பார்த்தால் போதாது இதைச் சரி செய்யக் குறைந்தது இன்னொரு குழுவைச் (கட்டுப்பாட்டுக் குழு) சேர்த்துக் கொண்டு அக்குழுவிற்குப் பயிற்சி ஏதும் அளிக்காமல், பயிற்சிக் குழுவுடன் (சோதனை குழு) சோதித்துப் பார்ப்பது ஓரளவு சரி என்றாலும் முழுமையாக நடத்தை மாற்றத்திற்குக் காரணம் பயிற்சி என ஒத்துக் கொள்ள முடியாது. வளர்ச்சியின் காரணமாகவோ மீண்டும் மீண்டும் அளப்பதன் காரணமாகவோ குறிப்பிட்ட சில அயலான மாறுமியல்புகளின் (History of the Presence of Extraneour Variables) நடத்தையில் மாற்றம் ஏற்பட்டிருக்கலாம். எனவே, குறைந்த அளவு இரு குழுக்களைச் சோதனை உருவரையில் வைத்து ஒப்பிட்டுப் பார்ப்பது நலம் சாலமன் (Solomon) என்பவர் மொத்தம் நான்கு குழுக்களைத் தமது சோதனை உருவரையில் புகுத்தி 'முன்பு-பின்பு சோதனை உருவரையை' ('Pre - Post - Test Design') வலுப்படுத்துகிறார். சாலமனின் உருவரையில் ஒரு சோதனைக் குழுவும் மூன்று கட்டுப்பாட்டுக் குழுவும் உள்ளன. சோதனைக் குழு முதல் கட்டுப்பாட்டுக் குழுவுடன் வேறுபடுவது போல், இரண்டாம் கட்டுப்பாட்டுக் குழு மூன்றாம் கட்டுப்பாட்டுக் குழுவுடன் வேறுபட்டால், ஆய்வின் முடிவு திட்டவட்டமாக, எவ்வித முரணபாடும் இன்றி ஆய்வுக் கொள்கையை (Research Hypothesis) ஏற்றுக் கொள்ளலாம். இம் மூன்றுவித சோதனை உருவரைகளைக் கீழ்வரும் வரைபடங்கள் காட்டுகின்றன.

**நிறைவற்ற சோதனை உருவரை**

$$\frac{\text{மு}_{\text{அ}} \quad \text{ப} \quad \text{பி}_{\text{ஆ}}}{}$$

மு$_{\text{அ}}$ = பயிற்சிக்கு முன்பு செய்த சோதனை அளவு

ப = பயிற்சி

ப$_{\text{ஆ}}$ = பயிற்சிக்குப் பின்பு செய்த சோதனை அளவு

**நிறைவான சோதனை உருவரைகள்**

(1) சோதனைக் குழு = மு$_{\text{அ}}$ ப பி$_{\text{ஆ}}$

கட்டுப்பாட்டுக் குழு = மு$_{\text{அ}}$ -ப பி$_{\text{ஆ}}$ =

-ப = பயிற்சி இன்மை

(2) சாலமனின் சோதனை உருவரை

சோதனைக் குழு = மு அ ப பி ஆ

---

கட்டுப்பாட்டுக் குழு1 = மு அ -ப பி ஆ

---

கட்டுப்பாட்டுக் குழு2 = ப பி ஆ

---

கட்டுப்பாட்டுக் குழு3 = -ப பி ஆ

இக்காலத்தில் முன்பு-பின்பு-சோதனை உருவரை மட்டும் அன்றிப் பல கூறு கொண்ட உருவரை (Factorial Design), இலத்தின் சதுர உருவரை (Latin Square Design) கால நீளவட்ட உருவரை (Longitudinal Time Design) அன்னியோன்ய விகிதக் குழுக்கள் உருவரை (Correlated Groups Design) போன்றவைகளும் பயன்படுத்தப்படுகின்றன. இவை அனைத்தும் நிறைவான சோதனை உருவரைகளைச் சார்ந்தவை ஆகும். வ தே.சா.

**துணை நூல்கள்:**

**Kerlinger, F.N.,** Foundations of Behavioral Research, Surject Publications, Delhi, 1983.

**Mcguigan. F.J.,** Experimental Psychology: A Methodological Approach, Prentice-Hall, Inc. New Jersey, 1978.

***சோதனை உளவியல்***: உளவியலின் பிரிவுகளில் சோதனை உளவியல் மிகவும் முக்கியமான தொன்றாகும். அது உளவியலுக்கே முதுகெலும்பாக அமைந்திருக்கிறது. ஏனெனில் உள்ளத்தைப் பற்றிய உண்மைகளைக் குறிப்பாக உள்ளத்தில் இருக்கும் புரியாத புதிர்களை யாவரும் அறியுமாறு வெளிக் கொணரும் முறைகளைப் பற்றி அறியச் சோதனை உளவியல் பயனுள்ளதாக இருக்கிறது. சுருங்கக் கூறின் சோதனை உளவியல் என்பது செயலாய்வு அல்லது சோதனை முறைகளைப் (Experimental Method) பயன்படுத்தி உளநடவடிக்கைகளைக் (Mental Activities) கற்றறிதல் பற்றியதாகும்.

**சோதனை உளவியல் வரலாற்றுப் பின்னணி:** உளவியல் வரலாறறைக் காண்போமேயானால் முதலில் நமக்குத் தோன்றுவது, படிப்படியாக நூலியல் முறையைப் (Empirical Method) பயன்படுத்தி உளநடவடிக்கை விவரங்களைச் சேகரிப்பதாகும். பெரும்பான்மையான உளவியல் வல்லுநர்கள் சரி பார்க்கக் கூடிய கூராய்வுகளை (Observations) அணுகினார்களே தவிர உள்ளுணர்வையோ (Intution) புகழ் படைதத அதிகாரிகளின் சட்டங்களையோ சார்ந்து அவர்கள் தத்தம் கொள்கைகளை நிலை நாட்டவில்லை.

புதிய அறிவியல் தோற்றததிறகுமுன, தத்துவ வல்லுநர்களே அறிவைப் பறறிய விவரங்களைச் சேகரித்து விளக்கங்களைக் கொடுத்து வந்தனர். பின்னர் அவர்கள் தாங்கள் சேகரித்த விவரங்களை ஒழுங்காக வகைப்படுத்தினர். வகைப்படுத்திய விவரங்களை நாளடைவில் பல சிறப்புக் கூறுகளாக (Specialities) வகுத்து அவற்றை வளர்க்கலாயினர். இயற்கைத் தத்துவம் (Natural Philosophy) என்ற பிரிவில் இயறபியல (Physics), வேதியியல்(Chemistry) போன்றவை அடங்கின. உளத் தத்துவம் (Mental Philosophy)என்ற சிறப்புப் பிரிவில உள இயலையும், அறத் தத்துவம் (Moral Philosophy) என்பதில் பல தரப்பட்ட சமூக இயலைச் சார்நத பொருளகளையும விவாதித்தனர். இங்ஙனம தத்துவம், பல இககால அறிவுத் துறைகளுககுத் தாயாகத் திகழ்ந்தது. இயற பியல், வேதியியல், உடற்கூற்றியல் (Physiology) வல்லுநர்கள முதன முதலாகச் சோதனைகள மூலம் தத்தம் கொளகைகளை உறுதிப்படுத்தினர். கசுதவு பெகனர் (Gustow Fechner, 1801-1887) எனபவர் கி.பி. 1860-ஆம் ஆணடு எழுதிய அடிப்படை உள நோய் மருத்துவம் (Elementeder Psychophysik)என்ற நூல்தான் சோதனை உளஇயல் தோற்றத்திற்கு மூலகாரணமாக அமைந்தது. இந்த நூல புலன் பட்டறிவை (Sensory experience) அளக்கும் முறைகளைப் பற்றியதாகும். வில்கெல்ம் உணடு(Wilhelm Wundt, 1832-1920) என்பவர் செர்மனியில் கி. பி. 1879-ஆம் ஆண்டு இலைப்சிகு (Leipzig) பல்கலைக் கழகததில் முதல் உளவியல் சோதனைக் கூடத்தை நிறுவினார். ஆதலின் அவர் சோதனை உளவியலின தந்தை எனப்படுகிறார். ஆனால் சிலர், வில்லியம் சேம்சு (William James) என்ற அமெரிக்க உளவியல வல்லுநர் ஆர்வர்டில் (Harvard) அதற்கு முன்பிருநதே சோதனைக் கூடத்தை நிறுவி உளஇயல் சோதனைகளை நடத்தி வநததாகக் கருதுகினறனர். எனினும், அமெரிக்காவில முதலில ஒழுஙகு முறைப்படியான உளவியல் சோதனைக்கூடம் கி. பி. 1883 இல் சான்சு ஆர்சின்சு பலகலைக் கழகத்தில் நிறுவப்பட்டதாகும். ஆய்வாளர் இவ்வாறு உளவியல் சோதனைக்கூடங் களை உருவாக்கிப் பலதரப்பட்ட சூழ்நிலைகளில் சோதனை உளவியலை வளர்த்து வருகின்றனர்,

**சோதனை உளவியலில் பயன்படுத்தப்படும் சொற்களும் குறியீடுகளும்:** உளவியற் சோதனைகளில மிகவும் முககிய பங்கு வகிப்பது உயிரி (Organism) என்பதாகும். அதற்கு 'உ' ('O') என்ற குறியீடு தரப்படுகிறது. இந்த உயிரி தான் சோதிககப்படுவதாக (Subject) விளங்குவது. முதலில் மிருகங்கள் சோதனைகளுக்குப் பயனபடுத்தப்பட்டன. ஏனெனில் நடத்தைக்குப் பொதுவாக, அடிப்படையாக அமைவது நரம்பு மண்டலம் (Nervous System) ஆகும். மிருகங்களின நரம்பு அமைபபு மனிதனின் நரம்பு அமைப்பை விட எளிதாக இருப்பதால நரம்பு-நடத்தைத் தொடர்பைச் சிககலில்லாமல் புரிந்து கொள்ளலாம். மேலும் சோதனைகளில், குறிப்பாக நரம்பு-நடத்தைத் தொடர்பைப் பற்றிப் படிக்கும்போது சிலமுறை ஆபத்து நேரிடக்கூடிய முறைகளைப் பயன்படுத்துவதால மிருகங்களையே சோதனைகளுக்குள்ளாக்கினர். எடுத்துக் காட்டாக மூளையில் குறிப்பிட்ட இடங்களில் நைவுப் புணகளை (Lesions) உண்டாக்கி அதனால நடத்தையில் ஏதேனும் பாதிப்பு ஏற்படுகிறதா என்று பார்ப்பது ஒருமுறை ஆகும். எனினும் பின்வந்த சோதனை உளவியல் வலலுநர்கள் (Experimental Psychologists) மிருகங்களைச் சோதனை செய்து அந்தக் கண்டுபிடிப்பை மனிதனுக்குப் பொதுப்பட அமைததுச் சொல்வது (Generalization) தகாது என்கின்றனர். ஏனெனில்மனிதனின நடத்தை பலபகுதிகள் கொண்ட சிக்கலான ஒன்று. ஆதலால் மிருகங்களைச சோதனைகளுக்குப்பயன்படுத்தும்முறை மிகவும் சரியற்றதாகும்.

சோதனைகளில் பயன்படுத்தப்படும் தூணடல்களுக்குத் (Stimuli) 'தூ' என்ற குறியீடும் தூண்டலினால் ஏற்படும் விளைவிற்குத் துலஙகல் எதிர் (Response) என்றும் அதற்குத் 'து' ('R') என்ற குறியீடும் வழங்கப்படுகின்றன. தூண்டல் என்பது புலனகளில் ஏதேனும் ஒன்றின் மூலம் உயிரியைத் துாணடுகின்ற ஆற்றலாகும். சோதனையாளருக்குச் 'சோ' என்ற குறியீடு வழங்கப்படுகிறது.

சுருங்கக் கூறின் உளவியல் சோதனைகள் தூ-உ-து (S-O-R) எனற அடிப்படையில் பொதுவாக அமைந்துள்ளன. அதாவது சோதனையாளர் ஏதேனும் ஒரு தூண்டலை உயிரியின் மீது செலுத்தினால் அதற்கு உயிரி எவ்வகையான துலங்கலைத் தருகிறது என்று பார்ப்பதாகும். உயிரியின்துலஙகல், தூண்டலை மட்டும் பொறுத்து அமையாமல், முன் நிகழ்ந்த மாறுமியல்புகளைப் (Antecedent Variables) பொறுத்தும் அமையலாம். இவை 'மு-மாறுமியல்புகள்' ('A-Variables') என்ற குறியீட்டினால் குறிக்கப்படும்.

**சோதனைகளின் வகைகளும் உளவியற் சோதனைகளில் பயன்படுத்தப்படும் சில முக்கிய துணைக்கருவிகளும்:** பொதுவாக உளவியற் சோதனைகளை இரு வகைகளாகப் பிரிக்கலாம். அவையாவன: 1) அளவுக்குரிய சோதனைகள் (Quantitative Experiments), 2. பணபுக்குரிய சோதனைகள் (Qualitative Experiments). ஒவ்வோர் உளவியற் சோதனையும் குறிப்பிட்ட உளச்சார்பான நடவடிக்கையை நுட்பமாக அளக்க வேண்டும் என்ற நோக்கத்துடன் நடத்தப்படுவதால அச் சோதனை பெரும்பாலும் அளவுக்குரியசோதனையாகக் கருதப்படும். இருந்தாலும் அத்தகைய அளவுககுரிய சோதனைகளுககு அடிப்படையாக இருப்பது அறிய விரும்பும் உளநடவடிக்கையின் பணபாகும். எடுததுக்காட்டாக வலிமை பெருக்கபபட்ட நிலையுடன் (Reinforcement) கற்பதை வலிமை பெருக்கப் படாத (Without Reinforcement) நிலையுடன் ஒப்பிட்டுப் பார்ப்போமாயின் இவ்விரணடு நிலைகளும் மாறுபட்டுக்காணப்படுகினறன. இதில், வலிமை பெருக்கப் பட்ட நிலை என்பது ஒரு வித பணபைக் குறிக்கும். அது போலவே, சோதிக்கப்படுபவரின் துலங்கல்களைக் (Subject's Response) காணும் போது அவையும் பல வகைகளாகவும் பல அளவுகளிலும்வேறுபட்டிருக்கலாம். எடுத்துக்காட்டாக, உள்ள இரு பொருள்களுள் ஒன்றை விருமபலாம்; மற்றொனறை விரும்பாமல் இருக்கலாம். விருப்பு-வெறுப்பு என்பவை, முதலில் வகையைக் குறிக்கின்றன. இன்னும் உற்றுநோக்கின், விருப்பம் எனில் எந்த அளவு விருப்பம் என்றும்,அதே போல வெறுப்பு எனில எநத அளவு வெறுப்பு என்றும் அறியலாம். இஙஙனம் ஒவ்வோர் உளவியற் சோதனையிலும் உளவியல் வலலுநர்கள் பண்பு, அளவு எனனும் இரு கூறுகளை நோக்குகின்றனர். இவ்விரண்டில் இக்கால உளவியல் வலலுநர்கள்,உள-நடவடிக்கைகளைத் துல்லியமாக அளகக வேண்டும்; அவ்வாறு அளப்பதால உளவியலும் மற்ற இயல் நூல்களைப் (Sciences) போனறு ஒழுஙகு முறையில கொளகைகளை (Theories) வகுக்க முடியும் என்ற நோக்கத்துடன் செயற்படுவதால் அளவுக்குரிய சோதனைகளுக்கே மிகுந்த சிறப்புக் கொடுத்து வருகின்றனர். ஆனால், இதைச் சில உளவியல் வலலுநர்கள கண்டிககின்றனர். ஏனெனில் உளவியல் இன்னும் இளமையாக இருப்பதால் ஒவ்வோர் உளநடவடிக்கையையும் அளப்பதறகேற்றவாறு சுருக்கி விடககூடாது. அங்ஙனம் சுருக்கி விட்டால், பலவித அடிப்படை உள அமிசங்கள் மறைந்து விடும் என்று கருதுகின்றனர். வேதியியலிலும் பண்பாராய்சசியை (Qualitative Analysis) முதலில செய்து விட்டுப் பின்னர் அளவாராய்ச்சி (Quantiative Analysis) செய்வது போல், சோதனை உளவியலிலும் முதலில் பண்புக்குரிய சோதனைகளைச் செய்து பார்த்த பின் அவற்றை எவ்வாறு அளவிட வேண்டும் என்று அறிய முயல வேண்டும். இவ்வாறு செய்தால் சோதனை உள

வியலின் அடிப்படை இன்னும் உறுதியாகும் என உளவியல் வல்லுநர்கள் கருதுகின்றனர்.

உளவியற் சோதனைகளில் பயன்படுத்தப்படும் துணைக் கருவிகளைச் சுருக்கமாக இரு வகைகளாகப் பிரிககலாம். அவை காகிதம் - எழுதுகோல் மட்டும் பயன்படுததுவது, கருவிகளைப் பயனபடுதது வது எனபவையாகும. முதல் வகையைச் சார்ந்தவை, பெரும்பான்மையான ஆளுமை (Personality), நுண ணறிவு (Intelligence) முதலியவறறை அளக்கும் சோதனைகளாகும் பற்பல உளநடவடிக்கை அமிசங் களைப் படிப்பதற்கு வெவ்வேறு கருவிகள பயன படுத்தப்படுகின்றன. எடுத்துககாட்டாகப் புலன உணர்வுகளைப் (Sensation) பற்றிப் படிக்க ஒலிமானி (Audiometer), புலன உணர்வு மானி (Aesthesiometer) போன்றவையும், கறறல மற்றும் நினைவு முதலியவற்றைப் படிக்க நினைவுப் பெட்டியும் (Memory drum), எதிர்வினை காலத்தை (Reaction Time) அறியக் காலமானி (Chrnoscope) போனற கருவிகளும், அறிவுத் திறனை அளககச் சில சமயங களில் செயற் சோதனைகளும் (Performance tests) பயன்படுததப்படுகினறன.

**சோதனையாளரின் முக்கிய பணிகள்:** சோதனை யாளரின் பணிகள் பற்பல. அவறறுள் இன்றியமையா நான்கு பணிகள் பினவருவன: 1.தாம அறிய வேண டிய காரணக் கூற்றினை (Causative Factor) முறை யாக மாறுபடுத்துவது; 2) சூழநிலையைக கட்டுப் படுத்துவது; 3) முறையாக மாறுபடுத்துவதால விளைவுகள் ஏதேனும் ஏற்படுகின்றனவா எனக் கூாந்து பார்ப்பது; 4) காரணம்-விளைவு (Cause-Effect) ஆகிய இரணடும் ஒனறுக்கொனறு எப்பொழு தும் தொடர்புடையனவாக இருககின்றனவா எனறு அடிக்கடி சரி பார்ப்பது முதலியவை ஆகும்.

இயற்கைப் பரப்பில் எங்கெஙகோ போய் அலை யாது வேணடியவற்றை, வேணடிய இடத்தே வேண்டிய போது வேண்டிய கட்டுத்திட்டச சூழ நிலைகளில் காணுதற்கு இபபோதைய சோதனை உளவியல் வழி வகுத்திருக்கிறது. உளவியற்சோதனை களைப் பல்வேறு துறைகளிலும் உளவியல வல்லுநா கள் பயன்படுத்திப் பார்த்து அவை நல்ல முறையிலும் வெற்றியுடனும் செயற்படுவதைக் காணகினறனர். தொழில, கல்வி, மருத்துவம் போனற பல துறைகளில் உளவியற் சோதனைகளின பயன் நனகு உணரப்பட்டு வருகிறது. இங்ஙனம் பல துறைகளில் உளவியற் சோதனைகள் பயனளிப்பதற்கு முககிய காரணமாக இருப்பது சோதனை உளவியலாகும். வ.தே.சா.

**துணை நூல்கள்.**

Morgan, C.T. and King, R.A., (1971) Introduction to Psychology, Tata McGraw-Hill Book Co., Bombay, 1971.

Woodworth, R.S. and Schlos Berg, H., Experimental Psychology, Oxford and IBH Publishing Co., New Delhi, 1971.

*சோதனை ஏற்புடைமை:* ஒரு சோதனைக் கருவி அல்லது அளவுகோல் அல்லது சோதனையில பயன்படுத்தப்படும் வினாத் தாள்கள எந்தக் காரணத் திற்காகப் பயன்பட வேணடுமோ அதற்காக மட்டும் பயன்பட வேணடும். எடுத்துக்காட்டாக ஒருவரு டைய ஆளுமையைக் கண்டறியப் பயனபடும் வினாத் தாள் அலலது சோதனை, ஆளுமையை அளக்க வேணடுமே தவிர நுணணறிவை (Intelligence) அளப் பதாக அமையக்கூடாது. அவ்வாறே சோதனை எதனை அளவிட அமைந்ததோ அதனை மட்டுமே அளவீடு செய்வதாக அமைவது சோதனை ஏற்பு டைமை(Test Validity) எனப்படும்.

சோதனைககு உட்பட்ட கருத்துகள், நிகழ்வுகள் ஆகியவற்றைக் கண்டறிவதற்காகப் பண்புக்கூறுகள் பயன்படுத்தும் அளவுகோல அல்லது முறையில் இருந் தால் அந்தச் சோதனை கருத்துச் சோதனை ஏறபு டைமை (Content Validity) கொணடதாகச்சொல்லப் படும் சோதனைக்குட்பட்ட சோதனையில் விடை கிடைக்குமளவு அமைந்த அமைப்பை அதற்கு உட் படாத அமைப்பிலிருந்து வேறுபடுத்த முடிந்தால் அது வெளிச்சோதனை ஏற்புடைமையாகும் (External Validity). ஓர் அறிவியல் ஆராய்ச்சியில் (Research) பயன்படும் அளவுகோல் (Instrument) அதுபோன்ற மற்ற அளவுகோலுடன் ஒத்துப்போகுமானால் அது சார்பு கொணட சோதனை ஏற்புடைமை (Concurrent Validity) எனப்படும். ஒருவன் எந்த ஒரு முடிவை எண்ணி ஓர் அளவுகோலைப் பயன்படுத்து கிறானோ அதுவே சோதனை முடிவில் அவனுக்குக் கிடைக்கும் முடிவாக அமைந்தால் அது கருத்துச் சோதனை (Construct Validity) ஏற்புடைமையாகும். ஓர் அளவுகோலில ஒரே கருத்துகளை உறுதி செய்யும் பண்புக் கூறுகள ஒன்றுக்கொன்று மிகுதியும் தொடர்பு (High Correlation) உளளதாக அமைந் தால் அதுவே ஒனறுசேரும் சோதனை ஏற்புடைமை (Convergent Validity) என்று கூறப்படும். அதுபோல வெவ்வேறு கருத்துகளை வெளிககொணரும் வினாக் கள் அல்லது கூறுகள் ஒன்றுக்கொன்று குறைவான தொடர்புடையவையாக அமைந்தால் அதுவே பகுத்

தறியும் சோதனை ஏறபுடைமை (Discriminant Validity) என்பதாகும்

ஒரு மனநோய் அலலது உடலநோயை விளக்கு வதற்கு மனிதன பயனபடுத்தும் முறை, கருவி, அளவு கோல் ஆகியவை அந்த நோய்ககு மட்டும் பொருந் தக்கூடியதாக இருககவேணடும். அதற்கு 'விரிவு சோதனை ஏறபுடைமை' (Descriptive Validity) என்று பெயர். அது சரியாக அமையவிலலையெனில் மனிதன் நிசசயமாக எந்த நோய் பற்றி விளக்கு கிறான் எனறு சொலல இயலாது. அது சரியாக அமைந்தால் ஒரு நோயை அலலது கருததை அலலது பொருளைப பறறி ஒருவர் கூறுவது மறறவருககும் எளிதில புரியும். அதை நிருணயிக்க முதலில சோதனை புரிநதவர் அலலாமல வேறொருவர் முனனவா விளக கிய ஒன்றில அந்தக் குறிப்பிட்ட பொருளின் கூறுகள எலலாம் ஒருங்கே, ஒழுங்காக அமைநதுளளனவா எனறு சரிசெயது பார்த்துக கொள்ளலாம். எடுததுக் காட்டாக, நினைவாற்றல் எநத அளவு இருக்கிறது எனபதை இருவரிடையே ஆராயநது தீர்மானிககும போது அந்த இருவரிடமும ஒரே அளவு நினைவாற றல குறைவாக இருப்பது புலப்படலாம். ஆனால, இந்த ஒரு கணடுபிடிப்பை வைத்து இருவருக்கும் ஒரே நோய் எனறு கூற முடியாது ஏனெனில நினை வாற்றல குறைவாகப் பல நோய்களில இருப்பதுணடு. ஆதலின நினைவாற்றலை அளக்கும் கருவி, அநத அறிகுறி (Symbols) ஒன்றுக்கு மட்டும் சோதனை ஏறபுடைமை கொணடதாக அமையுமேயலலாமல் நினைவாற்றல் பாதிப்பு ஏறபடும் எல்லா நோய்களை யும் அறியும் அளவுகோலாக அமையாது.

சில சமயங்களில் எதிர்கால நிகழ்ச்சிகளை அளக கும் வண்ணம் சில ஆராய்ச்சிக் கருவிகள அமைவ துண்டு. எடுத்துக்காட்டாக மழை அளவு ஒரு நிலைக் குக் கீழ் போனால், எந்த அளவு பிற்காலத்தில் தண்ணீர் கிடைப்பது அரிதாகும் எனபதை ஒன்றின்மூலம் ஆராயமுடிந்தால், அதற்கு 'முன்சொல லும் சோதனை ஏற்புடைமை' (Predictive Validity) எனப் பெயரிடலாம். அதுபோலவே ஒருவரது ஆளு மையை அளந்து இன்று கூறினால, பினபு எதிர் காலத்தில் அவர் குணாதிசயஙகள, நடவடிககைகள எவ்வாறு அமையுமென்று மனிதனால சரியாகக் கணிக்கமுடியுமானால், முதலில் அவன் ஆளுமையைக் கண்டறியப் பயன்படுததும் கருவி முன்னிலைச் சோதனை ஏற்புடைமையுடையது எனறு தெளிவாகக் கூறமுடியும். ஒரு வேலையில் சேரும்போது அவ வேலையில ஒருவருக்குத் திறமை, ஆர்வம் இருக் கிறதா என்பதைக் கணடறிய ஓர் அளவுகோலைப் பயன்படுத்தி, அவ்வேலைக்கு அவர் தகுதியானவர் எனத் தீர்மானிக்கினறனர் பினபு அவர் வேலையில் தாம் தகுதிபடைத்தவர் என்பதை வெளிக்காட்டி னால முதலில் கொடுத்த சோதனை 'முன்னிலைச சோதனை ஏற்புடைமை' உடையதாக அமைந்தது என்பதில் ஐயமில்லை. அதுபோலவே ஒரு மருத்துவ முறை, குறிப்பிட்ட நோயாளிகளுககுப பயனபடுமா, பயன்படாதா எனபதை அறிவதற்கும இச்சோதனை ஏற்புடைமை பயன்படும் எடுத்துக்காட்டாக ஆளுமை பாதிபபடைநதவாகள, குறிப்பாகச் சமூக விரோத மனப்பாஙகுடன் கூடிய ஆளுமை கொணடவர்கள பிற்காலத்தில சிறை செலவதற்கான வாயபபு மிக வுடையர் என ஒருவன் நினைதது, அதுவே உணமை யாகுமானால அதுவும ஒருவித முன்னிலைச்சோதனை ஏற்புடைமையாகும்.

அதுபோலவே ஒருவர் மனச்சோர்வு நோயால (Depression) பீடிககப்பட்டிருப்பதைக கணடறிய மருத்துவர் ஓர் அளவுகோலைப் பயன்படுத்தி அவா நினைத்தது சரியென நினைககிறார். பினனா வேறொருவர் அநத மனநோயாளியைச் சோதிததுத் தம நடைமுறைச் சோதனையால் (Clinical Judgement) அநத முடிவுக்கே வருகிறார் என்று வைததுக் கொணடால. அப்போது, முதலில கொடுக்கபபட்ட அளவுகோல் (Questionnaire or Some other instrument) பின்னர்ச் சோதித்தவரின் மனநலக் கணிப்பு (Clinical Mental Evaluation) ஆகிய இரணடும் சாாநத சோதனை ஏறபுடைமை கொணடதாகச் சொலல லாம்.

இவ்வாறு 'சோதனை ஏற்புடைமை' எனபது ஆராயச்சிகளிலும் அறிவியல், பொருளாதார, சமூகக் கண்டுபிடிப்புகளிலும் மிகவும் பயனுள்ளதாகும்.

ஒருவர் சொல்வதை அறிவியல் அறிவோடு மற்றவர்கள உணருவது எனபது இந்த ஏற்புடைமை யில ஒரு செயலாகும். மேலும், மககள பார்ப்பவை களையும நடக்கும் நிகழ்சசிகளையும் அறிவியல் நோக்கத்தோடு எவ்வாறு வரனமுறைப்படுத்த முடியும் (Control) என்பதும் அதன் மறறொரு செயலாகும். மனிதனால் உடனுககுடன் எளிதில பல அறிவியல் உணமைகளை உணர்ந்துகொள்ளச் 'சோதனை ஏற் புடைமை' தேவைப்படுகிறது. ஆனால, சோதனை ஏற்புடைமையில் சில குறைபாடுகளும் உளளன. ஒரு காலகட்டத்தில், ஒரு குறிப்பிட்ட மக்களிடையே செய்த சோதனை, அதன் விளைவாக மககளுக்குக கிடைத்த விளக்கங்கள் மறறொரு கால கட்டத்தி லும் வேறுபட்ட மக்கள் சமுதாயத்திலும் உணமை யாக இருக்கும் என்று கருதமுடியாது. ஆதலின அவ்வப்போது சோதனை ஏற்புடைமை உடையதாக

உளளதா என்பதைத் தீர்மானித்து, மீண்டும் பரி சோதனை செய்தபின்பே முடிவுக்கு வரவேண்டும்.

மேலும சோதனை ஏற்புடைமையுடன் கூடியவை நம்பத் தகுந்தவைகளாக இருக்கின்றனவா எனபதை நிருணயிப்பது இனறியமையாதது. ஏனெனில் நம்பத் தகுந்தவை, சோதனை ஏறபுடைமை உடையதாக அமைய வேணடும் என்பதில்லை. ஆனால், நம்பத் தகாதவை சோதனையில ஏற்புடைமை அற்றுப் போகும் என்பதில ஐயமிலலை. ந.மா.

*சோதனைச் சீராய்வு*: மிகப்பெரிய நிறுவனங் களின் எல்லா நடவடிக்கைகளையும் சரிபார்ப்பது ஒரு தணிக்கையாளரால இயலாத செயல் மேலும் தணிக்கையைக் குறுகிய காலத்தில் முடிப்பது இய லாது. இச் சூழ்நிலையில் விரிவான சான்றாயவு (Voucher) செய்வதைக் குறைத்திடத் தணிக்கையா ளர் சோதனைச் சீராய்வைக (Test Check) கையாள லாம். எந்த அளவிற்கு இதனைக் கையாளலாம் என பது நிறுவனத்தின கணக்கு வைப்பு முறையையும், அகக் கட்டுப்பாடு (Internal control) முறையையும் பொறுத்துள்ளது வேலைப் பளுவைக் குறைத்துக் கொள்வதால் தணிக்கையாளர் தம் பொறுப்பினைக் குறைத்துக் கொளள முடியாது. எனவே, இம்முறை யைக் கையாளவதற்கு முன் இதனால் ஏற்படும இன் னல்களை மனத்தில கொள்ள வேணடும்.

சோதனைச் சீராய்வு செய்வதற்கு முன் தணிக் கையாளா தேர்நதெடுக்கும் மாதிரி இனங்கள் மொத்த இனங்களின் தனமையைக் கொணடதாக இருக்க வேணடும். தம் நெடுங்காலப் பட்டறிவை அடிப்படையாக வைத்துக் கொணடு இம மாதிரி இனங்களைத் தணிக்கையாளர் தேர்நதெடுக்க வேண் டும். மாதிரி இனத்திலுள்ள ஒவவொரு நடவடிக்கை யையும் மிகவும உன்னிப்பாக இவா கவனிகக வேணடும். ஏதாவது பிழையிருந்தாலும், கணக்கு வைப்பு முறை சரியாக பினபற்றபபடாவிட்டா லும், உண்மை நிலையை அறிய வேணடும. மோசடி ஏதாவது நடந்திருந்தால அது பறறித் தம் கட்சி யரைக் (Client) கலந்தாலோசித்து அதற்கு முடிவு கட்டிவிட்டுத்தான, அவர் மேற்கொணடு தணிக்கை யைத் தொடரவேணடும்.

சோதனைச் சீராய்வு, கணக்கேடுகள சரியாக உள்ளனவா என்று சோதிக்க உதவுகிறது. தணிக்கை யாளர் குறுகிய காலததில அவர் பணியைச் செய்து முடிக்க இது பயனபடுகிறது. பிழைகளும, மோசடி களும் கண்டுபிடிகக முடியாமல் போகும் வாயப்பு ஒன்றுதான் இமமுறையின் குறைபாடாகும். ஆனால், தணிக்கை முடிநத பினனர் அவை கண்டுபிடிக்கப்பட் டால் புறக்கணிப்புக் குற்றத்திற்கு தணிக்கையாளர் பொறுப்பேறக வேண்டும். கே.என் இரா.

**துணை நூல்கள்:**

ஆளுடைய பிள்ளை, கு தணிக்கை முறை, தமிழ நாட்டுப் பாடநூல் நிறுவனம், சென்னை, 1976.

Spicer and Pegler, Practical Auditing, H F.L. Publication, London, 1978.

*சோதனைத் தரங்கள்*: மக்களின் அறிவாற் றலையும், செய்திறனையும், உணர்நிலையையும் அளந்தறியச் சோதனைகளைப் பயனபடுத்துகிறார் கள். சோதிக்கப்படும் அறிவாறறலில், செயதிறனில் அல்லது உணர்நிலையில சோதனைக்கு உட்படுததப் படுவோர் எவ்வளவு கொணடுளளார் எனச் சோதனை மூலம் அளந்து, அந்த அளவையை ஓர் எண்ணால் குறிப்பிடுவா. மாணவர்கடகுத் தரப்படும் மதிப்பெணகள இவ்வாறமைவனவே.

தரஙகள என்ற சொல்லுக்கு இருபொருள்வழக்கு கள உணடு. இவவளவு இருத்தல் வேணடும, இவ் வாறு இருத்தல் வேண்டும் எனத் தேவை, விருப்பம், குறிககோள், உயாகோட்பாடு எனபனவறறுள் ஒன றின் அடிப்படையிலோ பலவறறின அடிபபடையிலோ முடிவு செய்யாப்படுவன எதிாபார்ககப்படும் அல்லது தேவைப்படும் தரங்கள் (Standard norms) எனப்படும். ஆணடுத்தோவில் வெற்றி பெற்று அடுத்த வகுப்பிற்குச் செல்ல 40 விழுக்காடு மதிபபெண பெற வேணடும். என முனனரே முடிவு செயதிருபபோமாயின அது தேர்வில வெறறிபெறத தேவைபபடும் தரம். போர்ப் படை வீரனாக இவ்வளவு உயரம் தேவை எனக் குறிப்பிடுவோமாயின் அது தேவைப்படும் தரம். சோதனை மூலம் கண்டறியப்படும் ஓர் அளவை (ஒரு மாணவனின் மதிப்பெண அல்லது ஒருவரின் உயரம்) இத் தேவைபபடும் தரத்தினை ஒட்டி அமையலாம், அதிகமிருக்கலாம் அலலது குறைவாயிருக்கலாம். சோதனை அளவைகளை, இவ்வாறு முன் கூட்டியே முடிவு செய்யப்பட்ட தரஙகளை ஒட்டி விளக்குவர். இத்தரங்கள் இல்லாதபோது அளவைகள் சரியான விளக்கம் பெறுவதில்லை.

இவ்வாறு தரங்களை, தேவை, விருப்பம் போன் றவற்றின அடிப்படையில முன்கூட்டியே முடிவு செய் யாது, சோதனை அளவைகளின் அடிப்படையிலேயே, சோதனைக்குட்படுத்தப்பட்டோர் சோதனை செய் யப்படும் பொருளை (அறிவு, திறன், உணர்வு போன் றவறறை) கொணடுளள நிலையிலேயே தரங்களைக் கணக்கிடுவதும் உண்டு. இவ்வகைத் தரஙகளைப் புள்

ளியியல் தரங்கள் (Statistical Norms) எனலாம். இத தரங்கள சோதனை அளவைகளைக் கொணடே கணக்கிடப்படுவன. சோதனையில ஒருவர் பெறும் அளவையை இத்தரங்களின அடிப்படையில் விளகக லாம் சோதனை அளவைகள தமமளவில சிறககப் பொருள தருவனவலல; கணககிடப்படும் புளளியியல் அளவைகளோடு பொருததிப பார்க்கும்போது அவை பொருளுடையனவாகினறன.

சோதனை அளவைகளை வைததே கணிக்கப் பெறும் இவ்வகைச் சோதனைத் தரங்கள மூவகை களில பயனபடுகின்றன. சோதனை எந்த ஒரு குழு வினருககு என ஏற்பட்டதோ அக்குழுவுள், சோதிக கப்படும் ஒருவர் எநத இடம் பெறுகினறார் எனக் காணவும், அக்குழுவுள் அடங்கிய உட்குழுககள எவ் வாறு வேறுபடுகினறன எனக காணவும, சோதனை பற்றிய விவரஙகளைத் தெரிந்து கொளளவும் சோத னைத் தரங்கள் பயன்படுகினறன. சோதனைத் தரங் கள பலவகைப்படும்.

குழு முழுமைக்குமான மொத்த சராசரி, உட் குழுககளுக்கான தனிததனி சராசரிகள் ஆகியவை ஒரு வகைத் தரஙகள. குறிப்பிட்ட ஓர் அளவையை (ஒரு மாணவனின மதிப்பெண்ணை) இச்சராசரிகளை ஒட்டி விளக்கலாம். சராசரிக்கு மேலோ கீழோ ஓர் அளவை இருக்கிறது எனனும் பொழுது அவ்வள வைககு ஒரு பொருள உணடாகினறது. அவ்வாறனறி ஒரு மாணவனின் மதிப்பெண 52 எனனுமபோது, அவ்வளவை தனித்து நினறு சிறப்பாய்ப் பொருளே தும் உணர்த்துவதிலலை. சோதனைத் தரஙகளில பெரிதும் வழக்கில் உள்ளன நூற்றுமானத் தரங்களே (Percentile Norms). நூறறு மானத் தரம எனபது குறிப்பிட்ட அளவைக்குக் கீழே, மொத்த அளவை களின பரவலில் எத்தனை விழுககாடு அளவைகள உளளன என்பதைக் குறிப்பதாகும். எழுபதாவது நூற்று மானத் தரம் (70th Percentile Rank) அநத அளவைக்குக் கீழே, மொத்தத்தில் எழுபது விழுக்காடு அளவைகள உளளன என்பதைக் காட்டும். ஒரு மாண வனின அளவை எழுபதாவது நூற்றுமானத் தரத் திற்குச் சரியாகுமானால், மொத்த மாணவர் குழு வில் எழுபது விழுக்காடு மாணவர்கள இம்மாண வனின அளவைக்குக் (மதிப்பெண்ணுக்கு) கீழான அளவைகள் பெற்றுள்ளனர் எனப்பொருளபடும. கரு தப்படும் குழுவினையொட்டி ஒரே அளவை வேறு வேறு நூற்றுமானத் தரங்களாகலாம். எடுத்துக்காட் டாக 150 செ.மீ. உயரம் என்ற அளவை, எட்டு வயதுககுழுவினரையொட்டி 80-ஆம்நூற்றுமானத் தர மாகவும், பத்து வயதுக்குழுவினரையொட்டி 60ஆம் நூற்றுமானத் தரமாகவும், பதினைந்து வயதுக குழு வினரையொட்டி 20-ஆம நூற்றுமானமாகவும் அமை யலாம்.

கருதப்படும குழுவின் சராசரியின் அடிப்படையில் நாட்டுத் தரம், வேறு வேறு இடங்களுக்கான தரஙகள (நகர்ப்புறத் தரம், நாட்டுப்புறத்தரம்), பிரிவினருக்கான தரங்கள் (ஆணகள தரம, பெணகள தரம்), வயதுத் தரஙகள், வகுப்புத் தரஙகள எனப் பலவகைச் சோதனைத் தரங்கள் கணககிடப்படுகின றன. பல்வேறு நாடுகளில் இடை நிலைப் பளளிகளில் பயில்வோரின் கணிதத் தேர்ச்சியை அளக்கும் சோத னைககு நாட்டுத் தரஙகள (அமெரிககத் தரம், சப் பானியத்தரம், இநதியத்தரம) கணககிடலாம். ஆங கில மொழி அறிவில பததாம் வகுப்பு மாணவாக் கான சோதனைககு நகர்ப்புறத தரம், நாட்டுப்புறத் தரம் காணலாம். நுணணறிவுச் சோதனைகடகு வயதுத் தரஙகள் பொருத்தமுடையன. குறிபபிட்ட ஒரு பாடததிற்கான அடைவுச சோதனைககு வகுப் புத் தரஙகள கணககிடலாம. இசசோதனைக்கான ஆறாம் வகுபபுத் தரம், எட்டாம் வகுப்புத் தரம், பத்தாம் வகுப்புத் தரம் எனத் தரங்களைக் காண லாம். படித்துணரும் ஆறறலை அளததறகான சோதனைகட்கு வகுப்புததரஙகள கணககிடுவர். நுண்ணறிவு ஈவு (Intelligence Quotient), அடைவு ஈவு (Accomplishment Quotient) போனற ஈவுகளும் தரங்களே.

சோதனைத் தரஙகள ஒருவர் அலலது ஒரு குழு வினரின் அளவைகளை மொத்தககுழுவின் அலலது உட்குழுககளின் அளவைகளோடு ஒப்பிட்டுப் பொருள காண உதவுகின்றன. தரஙகளிலலாச சோதனையின அளவைகள் விளககம பெறுவதிலலை; பொருள சிறப் பதுவுமிலலை. பி.எஸ்.பா.

**சோதனை நம்பகம்** உளவியலில் பல்வேறு வகைச் சோதனைகள் உளளன. ஒருவரின் ஆளு மையை அறியவும், நுண்ணறிவினை அளவிடவும்,ஆர் வங்கள, மனப்பான்மைகள், உளப்பிணிகள போனற பலவேறு பண்பு நலனகளை அறிந்திடவும் சோத னைகள் பல உளளன. இத்தகைய சோதனைகள் நம்பகத்தன்மை கொணடனவாகவும், நோமைத தன்மை உள்ளனவாகவும் இருக்கவேணடும். நம்பகம என்பது ஒரு சோதனையின முடிவு பல்வேறு சமயத் திலும் ஒரேதன்மையதாகவும், யார் செய்தாலும், ஒரே தன்மையதாகவும் இருகக வேணடும். சோத னையின் எல்லாப் பகுதிகளும் சோதனையால் எதனை அளவிட எண்ணுகிறோமோ அதனை அள விடுவதாக இருககவேணடும். சானறாக, ஓர் ஆளுமைச் சோதனையில ஒருவர் அக முகத்தவர் எனறு அறியட்

படுமாயின் அவரை வேறு ஒருவர் அச்சோதனையால் அளவிடும்போதும் அவர் அக முகத்தவர் என்ற முடிவு தெரியவேண்டும். காலத்தாலோ அளவிடுபவா மாற்றத்தாலோ முடிவு மாறிவிடக் கூடாது. இத்தன்மை சோதனை நம்பகம் (Test Reliability)எனப்படுகிறது

சோதனை நம்பகத்தை இருவழிகளில கணககிட முடியும். ஒன்று, சோதனையை முதல் பாதி, கடைசிப் பாதி என இருபிரிவாகப் பிரித்துக்காணுதல் அலலது சோதனையிலுள்ள கேளவிகளைஒறறைபபடை வரிசையில ஒரு தொகுதியாகவும், இரட்டைப்படை வரிசையில் மற்றொரு தொகுதியாகவும் பிரித்து, இவ்விரண்டிற்குமுள்ள இடைத் தொடர்பினைக் கணககிட்டு நமபகத்தின அளவினைக காணுதல் மறறொனறு. முதலில சோதனையைக் கொடுதது அதன்மூலமாகக் கிடைக்கும் முடிவினை வைத்துக கொளவது. பின்னர்ச் சிறிது காலம் கழித்து அநதச் சோதனையையே முன்பு கொடுத்தவர்களுககே கொடுதது முடிவைத தெரிநதுகொணடு, முன்னர் கணட முடிவிறகும, பினனர்க் கண்ட முடிவிறகுமுள்ள இடைத்தொடர்பினை அறிவதாகும் இடைத் தொடர்புக்கெழு அதிகமாக இருப்பின் மிகுநத நம்பகம் உடையது என அறியமுடியும்.

ஜி இரா.

**சோதிடவியல்** :வான மணடலமும் அம் மணடலப் பொருளகளும் காலத்தைக் கணிக்கப் பயன்படுவதுடன, காலத்தில் நிகழவனவற்றையும் கணிப்பதற்குப் பயன்படும் அறிகுறிகளாகும் என்று கருதிக் காலக் கணியர்கள் சில விதிமுறைகளை வகுத்தனர். அவை வானவியல் கணிதம வரை அறிவியலாகவும், வாழக்கை நிகழ்ச்சி என்னும் பலனைக் கணித்துரைக்கும்போது அறிவியலை ஒத்தும் உள்ளன.

எதிர்காலத்தை அறியும் பல துறைகளில் ஒனறான சோதிடவியல் பல நாடுகளில் பழங்காலத்திலேயே தோன்றி வளர்ந்துள்ளது. பிரிட்டன் காட்சிச் சாலையில் வைககப்பட்டுளள நினிவா, மற்றும பாபிலோனியச் சோதிடர்களின் சாசனத் தகடுகளில் சில ஐயாயிரம் ஆண்டுகட்கு முற்பட்டவை. மேல் நாடுகளில் சேத்து (Seth-கி.மு. 3769) எனபவரே முதல சோதிடராகக் கருதப்படுகிறார். அவரே இராசி மணடலத்தை 12 சம அளவாகப் பிரித்தார்.

மெசபடோமியா நாட்டுச் சாலதியர்களின வானவியல அறிவும், கிரேக்கர்களின வடிவக் கணித உத்தியும் இணைநது சோதிடவியலை வளர்த்துவநதுள்ளன. தாந்தேயும் தாமசு அகினசும் கி.பி. 13-ஆம நூறறாண்டில கிறித்தவத் தத்துவத்தில சோதிடத்தை ஏற்றுக்கொணடனா. சீனாவில் கி.பி. 27-இல வாங் கங்கு என்பவா சீனச் சோதிடததை நெறிப்படுத்தினார். புத்தர் காலத்து இநதியாவில் சோதிடம விலக்கி வைக்கப்பட்டிருநதாலும், திபெத்தில புத்த மடங்களில் 'காலச் சக்கரத் தசை' எனனும் சோதிட முறை வழிவழியாகப பினபற்றப்பட்டது.

இந்தியாவில் கி.மு. ஆயிரததில் 27 நட்சத்திரம என்னும் முறை பின்பறறப்பட்டது. கி.மு. முதல்




சோதிடம்

| மீனம் | மேடம் | இடபம் | மிதுனம் |
|---|---|---|---|
| கும்பம் | இராசிகள் 12 | | கடகம் |
| மகரம் | | | சிம்மம் |
| தனுசு | விருச்சிகம் | துலாம் | கன்னி |

சோதிடம்

நூற்றாண்டில் 'யவனர் சோதிடம்' இந்தியாவிற்கு வந்தது, கி.பி. 5-ஆம நூற்றாண்டிலிருந்தே நட்சத்திரமான ஆண்டினைப் (Sidereal Year) பஞ்சாங்கத்தில குறித்துவந்தனர்.

சூரியன், பிரமன், வேதவியாசர், பராசரர், அத்திரி, உரோமகர், வசிட்டர், மகரிசி, சௌனசர், யவனா, சௌனகர், மநு, பிருகு, சனகர், ஆங்கீரசர், காசிபர், கார்க்கியர், நாரதர் என்னும் பதினெண்மர் சோதிடத்தின முதனூல் ஆசிரியர்கள் என்றும, இவர்கள இயற்றிய மொத்தச் சுலோகங்கள நானகு இலட்சத்து ஐம்பதினாயிரம் என்றும் 'சாதக அலங்கார'த்தின பாயிரம் பகர்கிறது.

துருவன, சயமுனி, கர்க்கர், வியாசர், சததியாசசாரியாா, மணித்தர் எனபோர் வரிசையில் சோதிட மரபு வநததெனறு சி.சி. இராசன குறிப்பிடுகிறார். சததியாச்சாரியாரை வராகமிகிரரும, வராகமிகிரரைக கலியாணவாமாவின 'சாராவளி' என்னும சோதிட நூலும போற்றுவதாகக கடலங்குடி நடேசனார் குறிப்பிடுகிறார்.

விககிரமாதித்தன் அவைக்களச சோதிடரான வராக மிகிரரே இந்தியச் சோதிடததைக கட்டமைத்துக் கொடுததவா எனலாம். வராகமிகிரர் தமது 'பிருகத் சம்கிதை'யில வேறு தேசத்தாரால் மேடம முதல மீனம் வரையுள்ள பன்னிரணடு இராசிகட்கு இடப்பட்ட பெயரைத் தாமும ஏற்றுககொளவதாகக கூறியுள்ளார். பிருகத சாதகம, பிருகத் யாததிரை, பிருகத் விவாகம, பிருகத் சம்கிதை, பஞ்ச சித்தாந்திகா, இலகு சாதகம எனபன வராகமிகிரர் எழுதிய நூலகளாகும். வராக மிகிரரின நூல்களுககுச 'சிரிபதி பட்டாசசாரியாா' எழுதிய விளககவுரைதான 'சிரிபதி பத்ததி' எனப்படும். இநது தெயவப்பெயர்களும வருணப் பகுப்புகளும சிரிபதி முறையில சோககப் பெற்றுள்ளமையால, 'இநது முறைச சோதிடம்' என்று பெயரிடப் பெற்றுள்ளது.

விக்கிரமாதித்தன் தலைநகரான உச்சயினியிலிருநது பழங்காலத்தில இநதியச சோதிடர்கள பஞ்சாங்கம் கணித்தனர் எனபது தெரிகிறது. சங்க இலககியங்களிலும் தமிழ்க காப்பியங்களிலும் வானவியல் மற்றும் சோதிடவியல பற்றிய செய்திகள வருகின்றன. கணியன் பூங்குன்றனார் சங்ககாலச் சோதிடர் என்று கருதப்படுகிறார். ஆனால, தமிழகத்தில கணிககப் பட்டமுதற பஞ்சாங்கம் எது, முதற சோதிட நூல எது என்றறிய இயலவில்லை.

வடமொழியிலுள்ள சோதிட மூல நூல்களையும, வழி நூல்களையும், விரிவுரை நூலகளையும் மூல நூல்களாகக் கொண்டு தமிழில் பல சோதிட நூல்கள இயற்றப்பட்டுள்ளன என்பதை அந்த நூல்களின பாயிரததாலும், வடமொழிக் கலைச சொற்களாலும் அறியலாம். தமிழ்ச் சோதிடநூல்களில் தலைசிறந்த நூல் 'சாதக அலங்காரம்' (கி.பி. 1667) எனலாம். இதுதவிரச சாதக சிந்தாமணி, குமாரசுவாமியம், நாரதர் சோதிடம், காக்கேயர் சோதிடம், மாணிக்கக் கணித சோதிட முருகசேகரம், நநதி வாககியம், வராகர் ஓராசாத்திரம், பூாவப் பராசரியம், அகத்தியர் காண்டம் முதலிய நூல்களும் குறிப்பிடத்தக்கன.

பிறநதநேரச் சோதிடம் (சென்ன சோதிடம்-Natal Astrology), மருத்துவச் சோதிடம், முகூர்த்தச் சோதிடம், பிரசுனச சோதிடம், கேபல சோதிடம், உலகநிலைச் சோதிடம, அரசியல் நிலைச் சோதிடம், வானிலைக் கணிப்பு என்று பல பிரிவுகளை உடையது சோதிடவியல. இவற்றுள் 'பிறந்த நேரச சோதிடம' எனபதுதான் வரையறுககப்பட்ட விதிமுறைகளை உடையதாகவும், நாடறிந்த கலையாகவும் திகழ்கின்றது. இந்தச் சோதிடம தமிழகத்தில நாட்டுப் பஞ்சாங்க முறை, மரபு இந்து முறை, மேற்கத்திய முறை, கிருட்டிணமூர்ததி பததி முறை என்று நாலவகைக் கணிதமுறைகளாக நிலவுகின்றது.

வானவியற் கணிதப்படி கணித்தியற்றப் பெறும் பஞ்சாஙகத்தையும் பாவக அட்டவணையினையும் பயனபடுத்திததான் சோதிடக் கணிதம் செய்திட இயலும். பஞசாஙகக் கணிதம் இரு வகைப்படும். வான மணடலத்தில செங்கிழககு நோமேற்காகச் செல்லும் பிரபஞ்ச மத்திய இரேகை (Right Ascension Method) யின வழியே கணிப்பது வாககியக் கணிதப் பஞ்சாங்கமாகும் பிரபஞ்ச மத்திய இரேகையினை வெட்டிக்கொண்டு வடகிழக்கு, தென்மேற்காகச் சாய்வாகச் செல்கின்ற சூரியனது வருடாநதரப் பாதை (Ecliptic) யின் வழியே (Oblique Ascension Method) கணிப்பது திருக்கணிதப் பஞ்சாங்கமாகும்.

வாக்கியக கணிதமும் திருக்கணிதமும் கணித முறையினால் வேறுபடுவதால், இருவகைப் பஞ்சாங்கத்திலும் கிரக இருப்பு நிலைகள சற்று வேறுபடும். சில சோதிடர்கள வாககியக் கணித முறைப்படிப் பலன் கூறுவர். ஆனால, சூரியனது ஆண்டுமுறைப் பாதையின் வழியே பிரபஞ்சத் தீர்க்கரேகை அளக்கப்பட்டுக் கிரக தூரம் கணிக்கப படுவதாலும், மேடம் முதல் மீனம் வரையுள்ள இராசி மணடலம் சூரியனை ஆண்டுமுறைப் பாதையின இருபுறமும ஒனபது பாகையளவு பரவி நிற்பதாலும் பிறந்தநேரச் சோதிடம் கணிப்பதற்குத் திருககணிதப பஞ்சாங்கமே ஏற்றதாகும்.

சோதிடக் கணிதம் தேதி வரையறை, கிழமை வரையறை, நேர வரையறை, சூரிய உதய, மறைவு நேரங்கள, இராசிமானப் பிரமாணம், கிரக இருப்பு நிலை, பாவக தூரம், ஊரின் அட்சாம்சம், தீர்க்காம் சம் முதலியவறறைக் கொண்டு செய்யபபெறுகினறது.

இநத உலக வாழ்க்கை முதன்முதல் அமை கின்ற மூச்சில் தொடங்குவதால், பிறந்த குழந்தை முதல் மூச்சு இழுத்த நேரததையே சோதிடவியலில் இலககினக் கணிதத்திற்குரிய பிறந்த நேரமாகக் கொளளல் வேணடும் (இது முதல் அழுகுரலால் அறி யப்படும் எனலாம்). இதுவே பழங்காலத்துச் சோதிட வியலாரான சத்தியாச்சாரியாருக்கும் உடன்பாடா கும்.

இராசி மண்டல வட்டத்தின் 360 பாகைகளில் (360×60=) 21600 நிமிட தூரப் புளளிகள உளளன. ஒரு நாளின் 60 நாழிகைக்கு 21.600 பிராணன(மூச்சு) இழுப்பதாக இந்து முறைக் கால வாய்பாடு கணித் துளளது. நாளதோறும் இராசி மண்டலம் பூமியைச் சுற்றி வரும்போது கிழக்குத் தொடுவானத்தைச் சந்திக்கும் புளளிக்கு 'இலக்கினம்' என்பது பெயர்.

சூர்யமான சராசரி நேரம், கிரீன்விச்சு சராசரி நேரம், இநதியப் பொது நேரம், உள்ளூர்ச் சராசரி நேரம், நட்சத்திர ஓரை நேரம், சூரிய உதயாதி நாழிகை, முக்குணவேளை எனப் பலவகையில் சோதிடக் கணிதம் செய்யப்பெறும்.

சோதிடக் கணிதம் செய்தபின் பலவேறு படி நிலைகளைக் கருத்தில்கொணடு சோதிடப் பலன்கள கணிக்கப்பெறுகினறன. கிரகநிலை அமைப்பு, கிரக ஆதிபத்தியம், பிறந்த இலக்கினம், சந்திர இலக்கினம், கிரகம் நின்ற நட்சத்திர அதிபதி, கிரகத் தன்மை, கிரக உறவு, கிரகச் சேர்க்கை, கிரகப் பார்வை, கிரக வலிமை, உபக்கிரகங்கள், தியாச்சியம் என்னும் நச்சு நேரம், சட்வர்க்க அமைப்பு, அமிர்த பாகை நச்சுப்பாகை, மரணப் பாகை, தசாபுத்தி, கோட் சாரப் பலன், கோசார வேளை, முக்குண வேளை, பொதுப்பலன், விதிவிலக்காகிய சிறப்புப் பலன் முத லான பலவேறு அம்சங்கள் கருத்தில் கொள்ளப்பெற் றுச் சோதிடப் பலன் கணிப்பு செய்யப்பெறும்.

வான மண்டலம் வட்டமாக இருந்தாலும், பல் வேறு கணித வசதிகளின் பொருட்டுச் சாதகச் சக் கரம் சதுரமாக வரையப் பெறுகின்றது. மேடம் முதல் மீனம் வரையுள்ள பன்னிரண்டு இராசிகள் சாதகச் சக்கரத்தில் தென்னிந்தியாவில் வலச் சாரி யாகவும், வட இந்தியாவில் இடச் சாரியாகவும் எண் ணப்படுகிறன. சோதிடப் பலன் கூறுவதற்கு இராசிச் சககரம் பொதுவானது; பாவகச் சககரம் சிறப் பானது இந்தியாவில் பரவலாக நட்சததிரத் திசை முறை என்னும் விம்சோத்தரி தசாபுத்தி முறைபபடி பலன் கூறப்பெறுகின்றது. சில இடஙகளில் காலச் சக கரத் தசை முறை பின்பற்றப்படுகிறது.

மேடம், இடபம், மிதுனம், கடகம், சிம்மம், கனனி, துலாம், விருச்சிகம், தனுசு, மகரம், கும்பம், மீனம் என்னும் 12 இராசிகளும் சூரியன், சந்திரன, செவ்வாய், புதன், வியாழன, சுககிரன், சனி, உரேனசு (Uranus), நெபிதியூன்(Neptune), புளூட்டோ (Pluto) என்னும் கிரகங்களும இராகு, கேது என்னும் நிழற் கிரகங்களும குளிகன், காலன, அர்த் தப்பிரகரன, எமகண்டன், தூமன், பரிவேடன், இந திரதனுசு, தூமகேது, வியதிபாதன எனனும் உபகிர கஙகளும், இன்னும் பலவகை நேரங்களும் ஒன்றோ டொன்று உறழநது கோடிக்கணககான மனிதர்களின பல்வேறு வாழ்க்கையமைப்பினை ஏற்படுத்திக் கொடுக்கின்றன எனபது சோதிடவியலின கருதது.

இந்து முறைச் சோதிடத்தில் 1)நிராயன இராசி மணடலமும் பாவக மத்திய இசுபுட முறையும் பின பற்றப் பெறுகின்றன. 2) பிறநத நேரத்திறகு வரை யப்பெறுகின்ற கிரகநிலைப் படம் ஒனறே பிறநதது முதல் இறுதி வரை பலன்சொல்லப் போதுமானது. 3)27 நட்சத்திரம்-108 பாதம் உளளன. 4) வக்கிர மானகிரகம் வலிமையானது 5) உரேனசு, நெபிதி யூன, புளூட்டோ எனனும் புதுக் கிரகங்கள சேர்ககப் பெறவிலலை. 6) இராகு, கேதுவுக்குப் பலனுணடு. 7) குளிகாதியர் முதலிய உபகிரகஙகட்குப் பலனுணடு. 8) சூரியன் அசுப கிரகம் எனறு கொளளப்பெறுகிறது. 9) திசாபுத்தி முறையில் பலன் சொல்லப்பெறும. 10) கோசாரப் பலன் கூறச சந்திரன் நின்ற இராசியைக கொள்வர்.

மேனாட்டு முறைச் சோதிடத்தில 1) சாயன இராசி மண்டலமும் பாவக ஆரம்ப இசுபுட முறை யும் பின்பற்றப்பெறுகின்றன. 2) பிறநதநாள முதல ஒவ்வொரு நாளிலும மாறுகினற கிரக அமைப்பு ஒவ் வோராணடின பலனைச் செய்யும். 2) ஆணடுககு 36 விண்மீன ஒளிபெறுதல் (Decan Stars) எனனும் முறை உள்ளது. 4) வக்கிரமான கிரகம் வலிமையற் றது. 5) உரேனசு, நெபிதியூன, புளூட்டோ எனனும் புதுக் கிரகங்கட்குப் பலனுணடு. 6)இராகு, கேதுவுக் குப் பலனில்லை. 7) குளிகாதியர் முதலிய உபகிரகம் இல்லை. 8) சூரியன் சுபகிரகமாகும். 9) ஓராண்டின் பொதுப் பலனாகக் கூறப்பெறும். 10). கோசாரப் பலன் கூறச் சூரியன் நின்ற இராசியைக் கொள்வர்.

தனிநிலை ஆய்வு செய்து (Case Study) பாரக்கும் போது, பழம்பெரும் சோதிட நூல் கூறும் பலனகள் உணமைபோலத தோன்றுகினறன. பரிணாமக் கொளகை, மற்றும் இயக்கவியல் பொருளமுதல் வாதம் இவற்றைக் கருததிற்கொள்ளும்போது சோதிடவியலுக்கு அறிவியற் காரணம் உரைக்க இயலவில்லை. எனவே, சோதிடவியல் ஆனமிகப் புதிரியல (Spiritual Mysticism) எனனுமம பிரிவில சோககப் பெறறுளளது. பொன்.பா.

**சோதிடக் கூறுகள்:** வானில் பலவேறு வீதிகளும் அவ்வீதிகளில் பனனிரண்டு இராசிகளும் அமைநதுள் ளன.அவை மேடம், இடபம், மிதுனம், கடகம், சிம்மம், கன்னி, துலாம், விரிச்சிகம், தனுசு, மகரம், கும்பம், மீனம் எனபன. இவ்விராசிகளில கிரகங்களின் இயக்கங்களை வரையறை செய்துளளனர். அவ்வாறு வரையறை செய்யப்பட்ட இயககங்களை அறிவதறகு ஏற்பப் பன்னிரணடு கட்டஙகளாகச் சோதிட நூலார் வகுத்து அமைத்துளளனர். அப்பன்னிரணடு கட்டங்களும் முன்னூற்று அறுபது பாகைகளாகக் கொளளுதல் வேணடும். ஒவவொரு கட்டமும் முப்பது பாகைகள (Degrees) கொணடது சூரியன் ஒரு நாளைக்கு ஒரு பாகை செலபவர். ஒருகட்டத்தை முப்பது நாள்களில் கடப்பார். மேடம முதலாக மீனம்ஈறாகஉள்ளபனனிரண்டு இராசிகளையும் முனனூற்று அறுபது நாள்களில் கடக்கிறான். மேடத்தில் இயங்குகினற முபபது நாள்களும் சித்திரை எனறு அழைககப்படும. இவவாறே மற்றைய மாதஙகளையும் கணக்கிடுதல வேணடும். சந்திரன் ஒரு இராசியை இரண்டேகால் நாள்களில் கடக்கிறான். புதன், சுக்கிரன், செவ்வாய் போன்ற கிரகஙகள் சில வேறுபாடோடு கூடிய நிலையில் முப்பத்தைந்து முதல் நாற்பத்தைந்து வரையிலான நாள்களில் கடக்கக் கூடிய இயல்பின. குரு (வியாழன்) ஓர் இராசியைக் கடப்பதற்கு ஓராண்டு காலமாகும். பனனிரணடு இராசிகளையும் கடப்பதற்குப் பன்னிரண்டு ஆண்டுகளாகும். இதனை ஒரு வியாழ வட்டம்என்று கூறுவர். குரு சிம்ம இராசியில் மக நட்சத்திரத்தில கூடுகின்ற காலம் மகாமகம் எனப்படும். பன்னிரண்டு ஆணடுகளுக்கு ஒரு முறை வருகின்ற அந்நாளினை மகாமகம் எனக்கொண்டு மக்கள் கொண்டாடுவர். சனி ஓர் இராசியைக் கடப்பதற்த இரணடரை ஆண்டுக்காலமாகும். பன்னிரணடு இராசிகளையும் கடப்பதற்கு முப்பது ஆணடுகளாகும். சனி வட்டம் முப்பது ஆணடு என்பதால் 'முப்பது ஆண்டு வாழ்ந்தவனும் இல்லை, முப்பது ஆண்டு வீழ்ந்தவனும் இல்லை' என்ற பழமொழி எழுந்தது. இராகு, கேது என்ற இரணடும் சாயாக் கிரகங்கள் எனப்படும். சாயை என்பதற்கு நிழல் என்பது பொருள. பூமியின் நிழலையே சாயா கிரகங்கள எனக கூறினர். இந்நிழல் சூரியனிலும் சந்திரனிலும் பாதிப்பு ஏற்படுத்துவதைக காணலாம். மற்றைய கிரகங்களிலிருந்து இவ்விரு சாயாக் கிரகங்களின இயக்கம் மாறுபட்டதாகும். மற்றையவெல்லாம் இடமிருந்து வலமாகச் சுறறினால் இவை இரண்டும் வலமிடமாகச் சுற்றும். ஒவ்வொரு இராசியையும் கடப்பதற்கு இவறறிறகு ஒன்றரை ஆணடுக் காலமாகும். இராகுவும் கேதுவும் எபபொழுதும் ஏழுக்கு ஏழாகவே இருக்கும்.

ஒவ்வொரு கிரகத்திற்கும் உரிய இராசிகள் இவையெனவகுத்துககூறியுளளனர். சிமமம் சூரியனுக்கும, சந்திரன் கடகத்திற்கும் உரிய இராசிகளாகும். மிதுனமும் கனனியும் புதனுககுரியவை. இடபமும் துலாமும் சுக்கிரனுக்குரியவை, மேடமும் விரிசசிகமும் செவ்வாய்க் குரியவை. தனுசும் மீனமும் குருவுக்குரியவை மகரமும் கும்பமும் சனிககு உரியவை. இராகு, கேதுகளுக்குச் சொநத வீடு என்பதில்லை. உரிய இராசிகளைச் சொந்த வீடு எனக குறிபபிடுவர். அவ்வக் கிரகஙகளுககுரிய இராசிகளில் அவ்வக் கிரகங்கள் இருக்குமானால் ஆட்சியாக இருககின்றன என்று கூறுவது வழககம்.

கிரகங்கள் பூமிக்கு அருகில் வரும்பொழுது அவற்றின் முழுமையான ஆற்றலை வெளிப்படுத்தும். சூரியன் மேடத்தில இருக்குங்கால் உச்சநிலை பெறுகிறது. எனவே, சூரியனுக்கு மேட இராசி உச்சவீடு எனப்படும். ஏழாமிடம் என்பது ஒவ்வொன்றுக்கும் எதிரிடையான இடமாகும். மேடத்திற்கு ஏழாமிடம் துலாம். சூரியனுக்கு நீச்சவீடு ஆகும். மேடம் என்பது சித்திரையும் துலாம் என்பது ஐப்பசியும் ஆகும்என்பது அனைவரும் அறிந்ததே. இக்கால எல்லைகளில் சூரிய வெப்பத்தின் தன்மைகளை அறிந்தே உச்ச நீச்ச வீடுகளை வகுத்துள்ளனர். சந்திரனுக்கு இடபம் உச்சம்; விரிச்சிகம் நீச்சம். புதனுக்கு கன்னி உச்சம்; மீனம் நீச்சம். சுக்கிரனுக்கு மீனம் உச்சம்; கன்னி நீச்சம். செவ்வாய்க்கு மகரம் உச்சம்; கடகம் நீச்சம். குருவிற்குக் கடகம் உச்சம்; மகரம் நீச்சம். சனிக்குத் துலாம் உச்சம், மேடம் நீச்சம். இராகுவிற்கு இடபத்தையும் கேதுவிற்கு விருச்சிகத்தையும் உச்சமாகக் கூறுவோரும் உளர்.

உலகம் நான்கு நிமிடங்களுக்கு ஒரு பாகை அளவு (Degree) இயக்கம் உடையது. பன்னிரணடு இராசிகளையும் அவ்வகையில இருபத்து நானகு மணி நேரத்தில் கடக்கிறது ஓர் இராசியைக் கடப்பதற்கு இதற்குச் சற்றொப்ப இரணடு மணி நேரம் ஆகிறது. எந்த ஓர் இராசியில சூரியன் சஞ்சரிக்கின்றதோ அந்த இராசியே ஒவ்வொரு நாளும் கிழக்கே உதிக்கின்றது. உதிக்கினற இராசியிலிருந்து ஒரு குழந்தை பிறக்கின்ற

நேரத்தை வைத்து கணித்து அமைக்கப் படுகின்ற நிலை இலக்கினம் எனப்படும். பிறக்கின்ற நாளில் சந்திரன் சஞ்சாரம் எந்த நட்சத்திரத்தில் இருக்கின்றதோ அந்த நட்சத்திரத்திற்குரிய இராசி எனப்படும்.

ஒவ்வோர் இராசியும் இரண்டேகால் நட்சத்திரங்களை உள்ளடக்கியது. அவ்வகையில் பன்னிரண்டு இராசிகளிலும் அசுவினி முதலாக இரேவதி ஈறாக இருபத்தேழு நட்சத்திரங்கள் உள்ளன. ஒவ்வொரு நட்சத்திரமும் நான்கு பாதங்களை உடையது. இருபத்தேழு நட்சத்திரங்களும் நூற்றெட்டுப் பாதங்களைக் கொண்டவை. எனவே, நூற்றெட்டு என்னும் எண்ணிக்கையை இறை வழிபாட்டிற்குரியதாகப் பெரியோர்கள் கொண்டுள்ளனர்.

ஒவ்வொரு கிரகத்திற்கும் தசை காலம் இவ்வளவு என்று அறுதியிட்டுள்ளனர். சூரியனுக்கு ஆறாண்டுகள், சந்திரனுக்கு பத்தாண்டுகள், செவ்வாய்க்கு ஏழாண்டுகள். இராகுவிற்குப் பதினெட்டு ஆண்டுகள், குருவிற்குப் பதினாறு ஆண்டுகள், சனிக்குப் பத்தொன்பது ஆண்டுகள், புதனுக்குப் பதினேழு ஆண்டுகள். கேதுவுக்கு ஏழாண்டுகள், சுக்கிரனுக்கு இருபது ஆண்டுகள் என வரையறை செய்துள்ளனர். ஒவ்வொரு கிரகத்திற்கும் மும்மூன்று நட்சத்திரங்கள் உரியவை. கார்த்திகை, உத்திரம், உத்திராடம் என்ற மூன்றும் சூரியனுக்குரியவை. பிறக்கும் காலத்தில் என்ன நட்சத்திரம் உள்ளதோ அந்த நட்சத்திரத்தின் நான்கு பாதங்களையும் சென்றதையும் இருப்பையும் கணக்கிட்டு அந்த கிரகங்களுக்குரிய தசைகளில் செல் நாழிகையை ஆண்டு அளவில் கழித்து இருப்பைத் தொடக்க தசையாகக் குறித்திருப்பார்கள். இது தசை என்றும் புத்தி என்றும் அந்தரம் என்றும் சூக்கும அந்தரம் என்றும் நவ கோள்களுக்கும் வகுத்து அமைக்கப்பட்டுள்ளன.

மனித மூளையில் எந்தெந்தப் பகுதிகள் எந்தெந்தக் கிரகங்களால் ஆளப்படுகின்றன என்று வகுத்துள்ளனர். இவை வாழ்க்கையில் பாதிப்பை ஏற்படுத்துவதற்கு காரணமாகின்றன. மணநிகழ்ச்சி, விதை விதைத்தல், மனைகோலுதல் போன்ற நல்ல செயல்களைத் தொடங்குவதற்கு நாளும் நேரமும்பார்த்துச் செய்தல் என்பது சோதிடத்தின் ஒரு கூறாகும். மணமகளுக்கும் மணமகனுக்கும் அவர்களின் சாதகங்களை இணைத்துப் பொருத்தம் பார்த்து மணம் முடிப்பதையும் வழக்கமாகக் கொண்டு உள்ளனர். சு.சா.

**சோதிடத்தில் நாண்மீன்கள்:** நட்சத்திரம், தாரகை, விண்மீன் ஆகிய சொற்கள் நாண்மீனைக் குறிப்பவையே. சோதிடக் கலையில் நாண்மீனுக்கு மிக்க சிறப்பு அளிக்கப்பட்டுள்ளது ஒரு குழந்தை பிறந்த நாளுக்குரிய நாண்மீனைக் கொண்டு அக்குழந்தையின் சிறப்பியல்புகளையும் அதன் எதிர்காலம் பற்றி ஓரளவும் கூறவியலும். திருமணம் உறுதி செய்ய ஆண், பெண் ஆகிய இருவருடைய நாண்மீன்களையும் வைத்துத் திருமணப் பொருத்தம் பார்க்கப்படுகிறது. தொழில் தொடங்க, வீடுகட்ட, கல்விப் பயிற்சி தொடங்க இன்னும் இவை போன்ற செயல்களைச் செய்ய ஏற்ற நாண்மீன்கள் பார்க்கப்பட்டு நிகழ்ச்சிகள் நடத்தப்பெறுகின்றன.

நாண்மீன்கள் 27 எனக் கணக்கிட்டுள்ளனர். வானத்தில் இவற்றுக்குரிய இடங்களும் குறிப்பிடப் பட்டுள்ளன. நாண்மீன்கள் வானில் காணப்படும் தோற்றத்தைக் கொண்டே அவற்றிற்குப் பெயர்கள் கொடுக்கப்பட்டுள்ளன. அவையாவன: 1) அசுவனி-குதிரைத்தலை, 2) பரணி-அடுப்பு, 3) கார்த்திகை-தீக்கதிர் (சுவாலை); 4) உரோகினி-சக்கரம்; 5) மிருகசீரிடம்-மானதலை; தேங்காய்க்கண், 6) திருவாதிரைதீக்கொள்ளி; 7) புனர்பூசம்-ஓடம்; 8) பூசம்-புடலம்பூ; 9)ஆயிலயம்-சக்கரம, 10) மகம்-நுகத்தடி; 11) பூரம்-கட்டில்கால்கள்; 12) உத்திரம்-யானைத் தந்தம், கட்டில்கால், 13) அசுத்தம்-கைத்தலம; 14) சித்திரை-முத்து: 15) சுவாதி-பவளம்; 16) விசாகம்-தோரண வாயில்; 17) அனுசம-கையிறபிடித்தகுடை; 18) கேட்டை-ஈட்டி: 19) மூலம்-பாயும் சிங்கம்; 20) பூராடம்-இரட்டைச்சதுரம், 21) உத்திராடம்-கட்டில் கால், முக்கோணம்; 22) திருவோணம்-மூன்றரை அடி; 23) அவிட்டம்-மத்தளம்: 24) சதயம-வட்டம்; 25) பூரட்டாதி-கட்டில்கால்; 26) உத்திரட்டாதி-கட்டில் கால்; 27)இரேவதி-மீன்.

நாண்மீன்கள் இருபத்தேழிற்கும் கணம், விலங்கு பறவை, அதிதேவதை(உரிய தெய்வம்), மரம, இரச்சு, பெயர், எழுத்து ஆகியவை குறிக்கப்பட்டுள்ளன. இவை பெரும்பாலும் திருமணப் பொருத்தம் பார்க்கப்பயன்படுகின்றன. நாண்மீன் தெரியாதவர்களுக்குப் பெயர் எழுத்தை வைத்து நாண்மீனைக்கண்டு பிடித்து அவர்களுக்குக் கோட்சார பலன் முதலியவை சொல்லப்படுகின்றன. நாண்மீன்களைக் கொண்டு ஒருவருடைய வாழ்க்கையில் குறிப்பிட்ட காலத்தில் நிகழக்கூடிய சிறப்பு நிகழ்ச்சிகளையும் கூறலாம்.

ஒவ்வொரு நாண்மீனுக்கும் நேராக, வடக்கிலோ தெற்கிலோ சந்திரன் வரும் நாளில் அந்தக் குறிப்பிட்ட நாண்மீனின் காலம் நடைபெறும் இவ்வாறு சந்திரன் 27 நாண்மீன்களையும் கடந்து தான் நின்ற தொடக்க எல்லைக்கு வர 29 நாள்கள் ஆகும். 27 நாண்மீன்களையும் நான்கு பாதங்களாகக்கினால் (பிரிவுகளாக

கினால்) 108 பாதங்கள் வரும். இப்பாதங்களை, 12 இராசி வீட்டிலும் இராசி ஒனறுக்கு 9 பாதம் வீதம் வைத்துக் கணககிடப்படுகிறது. இககணககின்படி அசுவனி, பரணி, கார்த்திகை ஒருபாதம் ஆகியவை மேட இராசியிலும், காாத்திகை 3 பாதங்கள், உரோகிணி, மிருகசீரிடம் 2 பாதஙகள இடப இராசியிலும், மிருகசீரீடம் 2 பாதங்கள திருவாதிரை, புனர்பூசம் 3 பாதங்கள், மிதுன இராசியிலும், புனர்பூசம் ஒருபாதம், பூசம், ஆயில்யம், கடக இராசியிலும மகம், பூரம், உத்திரம் ஒரு பாதம், சிமம இராசியிலும், சித்திரை 2 பாதஙகள், சுவாதி, விசாகம் 3 பாதங்கள துலா இராசியிலும், விசாகம் ஒரு பாதம் அனுடம், கேட்டை, விருசசிக இராசியிலும், மூலம், பூராடம், உத்திராடம் ஒரு பாதம் தனுர் இராசியிலும், உத்திராடம் 3 பாதங்கள், திருவோணம், அவிட்டம் 2 பாதங்கள் மகர இராசியிலும, அவிட்டம் 2 பாதங்கள, சதயம், பூரட்டாதி 3 பாதங்கள கும்ப இராசியிலும், பூரட்டாதி ஒரு பாதம், உத்திரட்டாதி, இரேவதி மீன இராசியிலும் அமைகினறன.

ஒவ்வொரு நாணமீனுக்கும் ஆதிபத்தியம் உடைய கோள்கள் (தலைமை ஏறகும் கோள்கள்) உணடு. அவையாவன: அசுவனி, மகம், மூலம் ஆகியவற்றுக்குக் கேது; பரணி, பூரம், பூராடம்-சுககிரன்; காாத்திகை, உத்திரம், உததிராடம்-சூரியன; உரோகிணிஅசுத்தம், திருவோணம்-சந்திரன; மிருகசீரிடம், சிததிரை, அவிட்டம்-செவ்வாய்; திருவாதிரை, சுவாதி, சதயம்-இராகு; புனர்பூசம், விசாகம், பூரட்டாதி-குரு; பூசம்,அனுடம்,உத்திரட்டாதி-சனி; ஆயில்யம், கேட்டை, இரேவதி-புதன, ஒவ்வொரு நாண்மீனிலும் செய்யத்தகும் நற்செயல்கள் இவை என்பனவற்றிற்குக் குறிப்புகள் உள்ளன.

ஒருவர் பிறந்த நாளில் இருந்த நாண்மீனைக் கொண்டு அவருடைய சிறப்பியல்புகள் பற்றிக் கூறலாம். எடுத்துக் காட்டாக, ஒவ்வொரு நாண்மீனுக்கும் ஒரு சிறப்பியல்பு மட்டும் கீழே குறிக்கப்பட்டுளளது. அசுவனி-செய்தொழில் தவறினறிச் செய்வான்; பரணி-தாய்தந்தையருக்கினியன்; கார்த்திகை-அற்ப நித்திரையோன்; உரோகிணி-அன்னதானஞ் செய்வான்; மிருகசீரிடம்-உட்கருத்தை வெளி விடான்; திருவாதிரை-புகழுடையான்; புனர்பூசம்-சொல் வல்லான்; பூசம்-ஒழுக்கமுள்ளவன்; ஆயில்யம்-பகையை விரும்புவோன்; மகம்-பலதிசைகளிலும் செல்ல விரும்புவோன; பூரம்-வருந்திப் பொருளீட்டு வோன்; உத்திரம்-வஞ்சகமின்றிப் பேசுவோன்; அசுதம்-வீரன்; சித்திரை-இனியையாகப் பேசுவான்; சுவாதி-எல்லோரையும் விரும்புவான்; விசாகம்-நீதிமான்; அனுடம்-நற்பண்புடையோன்; கேட்டை-பிறரைக் காப்பான; மூலம்-பக்திமான்; பூராடம்-உயர்பதவி வகிப்போன்; உத்திராடம்-உடல் வலிமையுடையோன்; திருவோணம்-தக்க கல்வியுடையவன்; அவிட்டம் நெறியான தொழில் செய்வோன்; சதயம்-வெகுணடசொற் பொறாதவன்; பூரட்டாதி-வழக்குரைப்போன்; உத்திரட்டாதி-நீராடல் விரும்புவோன்; இரேவதி-பிறர்சொல் கேட்போன். செ இரெ.செ.

**துணை நூல்கள்:**

**நடேசனார்**, கடலங்குடி, பிருகத்சாதகம், கடலங்குடி இல்லம், சென்னை, 1984.

**Rajan, C.G.**, Satyacharaneeyam (Introduction), Giri Trading Agency, Madras, 1181.

**சோதிபுரி** இராசசுத்தான் மாநிலத்தில் சோதிபுரி (Jothpur) மாவட்டத்தின் தலைநகரம். சோதிபுரியை கி.பி.1451-இல் இராசோதா என்னும் இராசபுத்திர அரசர் உருவாக்கினார். சோதிபுரிச் சிறறரசின் தலைநகரமாக இது விளங்கியது. இநநகரின் ஒரு பகுதி கி. பி.18-ஆம் நூறறாணடில் கட்டப்பட்ட மதில்களால் சூழப்பட்டுள்ளது. இங்குள்ள கோட்டையில் அரணமனை ஒனறும் அருங்காட்சியகமும் உள்ளன. இந்நகரின் வடக்கில் கி பி.4-ஆம் நூற்றாண்டில் சிறநது விளங்கிய நகரமான மாணடோர் (Mandor)நகரின அழிபாடுகள் காணப்படுகினறன மாணடோர், மார்வார்சிற்றரசின் தலைநகரமாக விளங்கியது.

சோதிபுரி நகரம் சாலை, இருப்புப் பாதைகளால் பிறநகரங்களுடன் இணைக்கப்பட்டுள்ளது. இந்நகரம் விளைபொருள்களின விற்பனை நகரமாக உளளது. இந்நகரில பருத்தி ஆலைகளும் எந்திரக் கருவிகள் செய்யும் தொழிற்சாலைகளும் மிதிவண்டி செய்யும் தொழிற சாலையும் உள்ளன. கைவினைப் பொருள்களுக்கு இந்நகரம் புகழ் பெற்றது. கணணாடி



சோதிபுரி

வளையல்கள், தந்தப் பொருள்கள், வண்ண ஆடைகள், தோலபொருள்கள், கலவேலைப்பாட்டுப் பொருளகள போனற கைவினைப் பொருள்கள இஙகு விற்பனை செய்யப்படுகினறன. இநநகரம் இராசசுத்தான் மாநிலத்தின இரணடாம் பெரிய நகரமாக விளங்குகிறது இராசசுத்தான மாநில உயர் நீதிமனறம் இந்நகரில தான் உளளது. இந்நகரில் விமானபபடைக கலலூரியும விமான வழிததடமும் உள்ளன. இங்குளள சோதிபுரிப பலகலைக கழகம் 1162-ஆம ஆணடு தோற்றுவிக்கப்பட்டது. மருத்துவக் கல்லூரி ஒனறும் இநநகரில் உளளது சோதிபுரி நகரின மககளதொகை 506345 (1981).

சோதிபுரி மாவட்டம் 22,860 ச கி.மீ பரப்பளவை உடையது. இம்மாவட்டம் உயர்ந்த மணற குனறுகளையுடைய மாவட்டம் ஆகும். இம்மாவட்டததின வடக்கிலும் வடமேற்கிலும் தார் பாலைவனம் உள்ளது. இம்மாவட்டததில உலூனி ஆறு பாய்கிறது. இது மாவட்டததின தெனபகுதியின் வேளாணமைககுப் பயன்படுகிறது. தினைப் பயிர்கள, பருப்பு வகைகள், எணணெயவிததுக்கள, சோளம் போன்றவை இ[illegible]வட்டததில விளைகின்றன. சிறிதளவு பருத்தியும் கோதுமையும் விளைவிக்கபபடுகினறன. தாதுப்பொருளகள் சிறிதளவு கிடைககினறன. கால்நடை வளர்ப்பு மாவட்டத்தின பல பகுதிகளில் நடைபெறுகிறது.

பண்டைய சோதிபுரிச் சிற்றரசு இனறைய சோதிபுரி, நாகர் மாவட்டங்களை உள்ளடக்கி இருநதது. இச்சிற்றரசு கி.பி. 1222-ஆம் ஆண்டு தோற்றுவிககப்பட்டது. இதனுடைய புகழ் இராவ மாலதியோ (Rao Maldeo) காலத்தில் (கி.பி. 1532-கி பி. 1569) உச்சநிலையை அடைநதது. இவர் அக்பருடன் உடன்படிக்கை செய்துகொண்டு மொகலாயாகளுடன் நட்பை வளர்த்தார். ஔரங்கசீபு கி பி. 1677-இல் மார்வார் சிற்றரசின்மீது படையெடுத்து அதனை வென்று அங்கு வசித்த மக்களை இசுலாம் சமயத்திற்கு மாற்றினார். முசுலீமகளின் படையெடுப்பைத் தடுக்கச் சோதிபுரி, செய்ப்பூர், உதயப்பூர் ஆகிய சிற்றரசுகள தங்களுக்குள் உடன்படிக்கை ஒன்றைச் செய்துகொண்டன. சோதிபுரி, செய்ப்பூர் சிற்றரசர்கள் உதயப்பூருடன திருமண உறவையும் வளாத்துக் கொண்டனர். உதயப்பூா அரசிகளுக்குப் பிறககும் குழந்தைகளே இவவிரு சிறறரசுகளின் அரச வாரிசாக ஆகவேணடும்எனஉதயப்பூர் சிற்றரசு கேட்டுககொணடது. இதனால் மூன்று சிற்றரசுகளுக்கும் கருத்து வேறுபாடுகள நிலவின. இதனைப் பயன்படுத்தி மராத்தியர்கள் தங்களின் ஆதிக்கத்தை இப்பகுதிகளில் செலுத்தத் தொடங்கினா.சோதிபுரி கி.பி. 1818-ஆம் ஆண்டு ஆங்கிலேயர்களின் வசம் வநதது. இராசசுத்தான மாநிலததுடன் இது 1949-ஆம் ஆண்டு இணைககப்பட்டது. மாவட்டத்தின் மக்களதொகை 16,67,791(1981). சு இரா.

**சோபன் ஹேவர் ஆர்தர்** என்பவர் சோர்வு மனப்பானமையுடைய (Pessimism) தத்துவ ஞானி. இவர் ஏகலின் முழுமையான கருத்துக் கொளகையை எதிாத்தார். சோபன் ஓவா கி.பி. 1788-ஆம ஆணடு பிப்பிரவரி 22-ஆம் நாள ஏயினரிசசு பிளாரிசு சோபபன் ஓவா (Heinrich Floris Schopenhauer) எனபவருக்கும சோகானனா (Sohanna) எனற அமமையாருககும பிறநதார். இவர்



சோபன் ஓவர்

நாகரிகப் பண்புடைய கல்வி கற்றார்; பிறகு ஒரு தொழிற் கலவிக் கூடததில படித்தார்; அஙகே மிகவும் அடக்கமான குணங்களை வளர்த்துக் கொண்டாா. இவா பெறறோர்களுடன் கி.பி. 1803-ஆம் ஆண்டு பெல்சியம, இஙகிலாநது, பிரான்சு, சுவிட்சர்லாநது முதலிய இடஙகளுக்குச் சென்றாா. தௌலசானிலுள்ள (Taulson) சிறைச்சாலையும் பிரானசு நாட்டிலுளள அடிமைகள் வாழவும் சோபன ஓவருககு (Chopenhauer) ஒரு சோாவு மனப்பானமையை ஏறபடுத்தின. இவர் தந்தை இறந்தவுடன இவர் வாழ்க்கையில் ஒரு திருப்பம் ஏற்பட்டது. இவர் கி.பி. 1809-ஆம் ஆணடு காட்டினசென் பல்கலைக் கழகத்தில் (University of Gottinsen) மருத்துவம் படித்தார். அதன பிறகு இவர் பிளேட்டோ, காணடு (Kant) முதலானவர்களைப் பறறித தெரிநது கொணடார். பிறகு செனாப் (Sena) பல்கலைக்கழகத்தில் தத்துவததில் டாக்டர் பட்டம் பெற்றார். பிறகு பிரடிரிக்குமேசர் (Friedrich Mager) இவருக்கு

வேதாந்தத் தத்துவத்தை அறிமுகப்படுத்தினார். பிறகு உபநிடதங்களும், பிளேட்டோ, காணட்டு ஆகியோர் கொள்கைகளும் சேர்ந்த ஓர் அடிப்படையில் இவருடைய தத்துவ அமைப்பை ஏற்படுத்தினார். சோபன் ஓவர் உலகம் தம்முடைய விளக்கவுரை என்று கூறுவார். இவருடைய நான்கு நூல்களுள் இரண்டு நூல்கள் விருப்பாற்றலை (Will) விளக்குவன. மற்ற இரண்டு நூல்களும் அழகுக் கலையையும், அறஇயலையும் மிகுதியாகக் கூறி விருப்பாற்றலின் மறுத்தலையும் விளக்கி விடுதலையைப் பற்றிககூறு கினறன. மேலும் இந்நூல்கள் உலகில் காணப்படும் சோர்வு மனப்பான்மையை (Pessimism) விளக்கு கின்றன. கலைகள் விருப்பாற்றலின் சேவையிலிருந்து அப்போதைக்கு விடுதலை அளிககின்றன. உணமை யான விடுதலை அகங்காரத்திலிருந்துவிடுபடும் பொழுதுதான் ஏற்படுகிறது. சோபன் ஓவர் (Scho penhauer) தம் பேராசிரியர் பதவியைத் துறந்து துறவியாக வாழ்ந்தார். பிளேட்டோ, அரிசுடாட்டில், செனக்கா, பிரஞ்சு நாட்டு அறவியல் வல்லுநர்கள் முதலியவர்களை இவர் பின்பற்றினார் எனறு கூற லாம். உணமையே வெல்லும் என்றும், அது நீணடநாள் நிலைத்து நிறகும் என்றும் இவர் கூறினார். இவர், கி பி.1836-ஆம் ஆணடு இயற்கையின் விருப்பாற்றல் (On the Will in Nature) என்னும் ஆய்வுக கட்டுரையை வெளியிட்டார். இவர் பெணகளைப் பற்றியும், கல்வி பற்றியும் மிகப் பல கட்டுரைகளை வெளி யிட்டார். இவருக்கு உலகப் புகழ் உண்டாயிற்று. பானிலும் (Bonn), பிரெசுலாவிலும் (Breslau) இவருடைய தத்துவத்தைப் பற்றி விரிவுரைகள் செய்தார் கள். இவருடைய கட்டுரைகள் ஆறுபெரிய தொகுதி களாக வெளியிடப்பட்டன.

மனிதர்கள் மற்றப் பொருள்களைப போல், விருப் பாற்றலின வெளிப்பாடாவர். உலகில் நல்ல மனிதர் களும் தீய மனிதர்களும் உளளனர். இரக்கமுள்ள மனிதன், தன்னைப் போல் பிறரையும் காணபான். சோபன் ஓவர் அடிக்கடி தததுவமசி மகாவாக்கி யத்தைப் பற்றிக் குறிப்பிடுவார். எஙகும் பரவியுள்ள தோற்றத்தின் அடிப்படையில் காணப்படும் புலன கடந்த நுண்பொருள்களின ஒன்று சேர்நத தன்மை யைக் குறிப்பிடும் பொழுது, மேற்கூறிய மகாவாக்கியம் பொருத்தமாக அமைகிறது. இந்திய நாட்டு அறிஞர் களைப் போல் இவர் மனித வாழ்வில் துன்பம் இருப் பதையும், உலகம் மாயையினாலான தோற்ற முடையது என்பதையும் கூறுவார். இவர் கருத்துபபடி தத்துவத்தின் முடிவு அமைதி என்பதாகும்.

மனிதத் தன்மையைப் பற்றிக் கூறும் பொழுது, புத்தியின் செயலைக் குறிப்பிடுகிறார். மனிதனுடைய செயல்கள் யாவும், பகுத்தறிவின் அடிப்படையில் அமைகின்றன. மேலும், மனிதன் தன் செயல்களை அடக்கியாள முடியும். தத்துவஞானிகள் இத்தகைய கருத்துகளை கூறியிருக்கிறார்கள். மனிதனுடைய விருப்பாற்றல் புல காலங்களில் வெளிப்படும். சில சமயங்களில் மனிதனுடைய விருப்பாற்றலின்படி நடக் கின்ற செயல்கள் மனிதனின நடத்தையை நிருணயிப்ப தில்லை. மனிதன் தன்னுடைய விருப்பாற்றலினபடி செயல்களில் ஈடுபடுகிறான். சில நேரங்களில அவன் நிலையற்ற (Unconscious) மனத்திலிருந்து எழுகினற எண்ணங்களின்படி செயற்படுகிறான். மனிதன் மறக்க நினைகின்ற நிகழ்சசிகள் உணர்சசி நிலையற்ற மனத் தில் சென்று அடஙகி விடுகின்றன. பிறகு மனிதனை அறியாமல அவை வெளிப்படுகின்றன. பிராய்டு (Freud) என்பவர் சோபன் ஓவர் கூறிய பால் வேறுபாடு சார்ந்ததன்மையை பால் உணாச்சி யின் உந்துதல் (Libido) என்று கூறுகிறார். பால் வேறுபாடு சார்ந்த தன்மை விருப்பாற்றலின் வெளிப் பாட்டில் சிறப்பான அம்சமாகும். மனிதனுடைய உணர்வைத் தவிர்த்து, மற்றைய செயல்களெலலாம் பால் வேறுபாடு சார்நத தனமையின அடிப்படையில் தான எழுகின்றன. மேலும், அத்தகைய தனமை தீமையையும் துன்பத்தையும் தரும். மேலும் அது ஒரு பேய் போல் குழப்பத்தை உணடுபணணுகிறது. அது திருப்தி அடையவும் செய்யாது. விருப்பாறறலின் முடிவு துன்பம் என்று கூறினார்.

சோபன் ஓவர் கலைக்குச் சிறப்பிடம் அளித் திருக்கிறார். ஒரு கலைஞனின் ஆறறல் செயலில் இலலை என்றும், ஆழ்ந்த சிந்தனையில் அடங்கியிருக் கின்றதென்றும் கூறினார். இரா. கோ.

துணை நூல்கள்:

Copleston F.C., Schopenhauer, Philosopher of pessimism, London, 1946.

Israel Knon,, the Aesthetic theories of Kant, Hegel and Schopenhauer, New York, 1936.

O'Cornor,D J.Ed., A Critical History of Western Philosophy, New York, 1964.

**சோபோக்கிளிசு.** புகழ்மிக்க பண்டைய அதீனியத் துன்பியல் நாடகாசிரியர் மூவருள் ஒருவர் சோபோக்கிளிசு (Sophocles). இவர் தம் துனபியல் நாடகங்களில் தம் காலத்திய சட்டத்துக்கும், இறை வனின் சட்டத்துக்கும் இடையேயிருந்த முரண பாட்டை எடுத்துக் காட்டுகிறார். இவர் கி.மு. 496-இல் ஏதென்சில் ஒரு செல்வர் மகனாகப்



சோபோக்கிளிசு

பிறந்தார். மிக்க அழகும் நல்லியலபுகளும் உடல் உறுதியும் பெற்றிருந்த இவர் முதலில் பாடல்களை எழுதியும் பாடியும் புகழ்பெற்றார்; பின்னர்ப் பல துன்பியல் நாடகங்களை (Tragedies) எழுதிப் புகழ் பெற்றார். மற்ற இரு புகழ்மிகக துன்பியல் நாடகாசிரியர்களான எசுக்கைலசு, ஊரிப்பிடிசு ஆகியோரைவிட இவருடைய நாடகங்கள் அதீனியர்களால பெரிதும பாராட்டப்பட்டன. இவர் பல தடவை பரிசுகள் பெற்றார். இவர் சில அரசாங்கப் பதவிகளை ஏதென்சில் ஏற்றிருந்தார். எனினும், இவர் வாழநாள முழுவதும் இலககியக் கலைவளர்ச்சியில் ஈடுபட்டார். இவர் வரலாற்றுப் பேராசிரியராகிய எரடோட்டசின (Herodotus) நெருங்கிய நணபராவர். இவாதம் நாடகங்களில் கையாளும் இனிய சொற்களின காரண மாக, 'அட்டிக்காவின் தேனீ' (Attic Bee) என அன்புடன் குறிப்பிடப்பட்டார்.

**அரசியற் கருத்துகள்:** சோபோக்கிளிசு பண்டைய அதீனிய அரசியற் கருத்துகளைப் பற்றி விரிவாகக கூறாவிடினும், அவர் எழுதிய நாடக நிகழ்ச்சிகள், அதீனிய சமூக, அரசியல வழககங்களையும், கருத்து களையும் எடுததுக்காட்ட வல்லவை. நகரரசின் உறுப்பினர்களாக அலலது குடியாட்களாக இருப்பவா யாவரும் பங்கு கொளளும் நகரரசின் வாழ்வில் ஓர் ஒழுங்கு இருக்கிறது. மாறுதலடைந்து கொணடிருக்கும் பல அமைப்புகளுககுப் பின்னால் மாறுதலடையாத 'இயற்கை' (Nature) ஒன்று உள்ளது. இயறகையின் சட்டங்கள் மாறுதலடையாமல் இருக்கினறன. அறிவென்பது மனித முயற்சியின விளைவே ஆகும். சூழ்நிலை மாறுதலகளுககிடையே எனறுமுள இயற்கையின் சட்டம இருககிறது. மனிதருள சிலர் ஒரு வகையாகவும், மற்றும் சிலர் வேறுவகையாகவும் ஏன் செயற்படுகின்றனரென்றும், அவர்களுடைய செயல் முறைகளுள சில ஏன மதிப்புக்குகந்தவையாகவும், நல்லனவாகவும் கருதப்பட, சில வகையான செயல் முறைகள் தாழ்ச்சியும் தீங்குமுடையனவாகவும் கருதப்படுகின்றன என்றும் கேட்டு அதனை விளக்க வல்ல ஏதோ ஒரு சட்டம் இருக்கிறது என்றும் இவர் கருதினார்.

சோபோக்கிளிசு இயற்கைககும் வழக்கத்துக்குமுள்ள முரண்பாட்டையும் விளக்கினாா. இயற்கை என்னும் உயர்தரச் சட்டத்தை ஆதாரமாக வைததுச் சமூகச் சட்டங்களையும் வழக்கஙகளையும் மீறியோர், கலகம் செய்பவராகக் கருதப்பட்டனா. மனிதர் செய்யும் தவறுகள அவர்களுடைய வீழ்ச்சியை உருவாக்குகின்றன. ஒருவனுடைய தற்பெருமை, அவனுக்கு இம்மை வாழ்விலேயே தீயவை விளைவிக்குமாகையால், அது ஒரு தீவினையே (Sin) ஆகும் என்று இவர் கருதினார். பா. சூ.

**துணை நூல்கள்:**


**Barker, Ernest.,** Greek Political Theory: Plato and His Predecessors, London, 1951.

**Sinclair, T.A.,** A History of Greek Political Thought, London, 1952.


***சோம்பன்*** - நிககோபார்த் தீவுகளில வாழும் ஒரு முதுபழங்குடியினர். இவாகள் நிக்கோபார்த் தீவுகளின் தெனகோடியில உளள பெரிய நிக்கோபாாத (Great Nicobar) தீவில வாழ்கின்றனர். நிக்கோபாரிகள (Micobarese) என்னும மற்றொரு பழங்குடி இனத்தவர்களும் இத்தீவில் வாழகின்றனர். 1981-ஆம்ஆண்டுக் குடிமதிபபினபடி சற்றேறககுறைய 800 ச.கி.மீ. பரப்பளவில் ஏறக்குறைய 217 சோம்பன் பழங்குடியினர் வாழ்ந்து வருகின்றனர்.

சோம்பன பழங்குடியினர் வடகிழக்குக் கடலோரப் பகுதிகளிலும் காட்டுப் பகுதிகளிலும் வசிக்கிறார்கள். காட்டுப் பகுதியில் வாழும் சோம்பன் குதியால (Guthial) எனவும், கடலோரப் பகுதிகளில் வாழும் சோம்பன் மோவாசு (Mowas) எனவும் கூறப்படுகின்றனர். இப்பிரிவினர்கள் எப்பொழுதும் வறறா நதிக்கரையில் தங்கள் முதன்மையான குடியிருப்புகளை அமைத்துக் கொள்கிறார்கள். பெரிய நிக்கோபாரிலுள்ள ஒவ்வோர் ஆறும் பல சோம்பன் குடியிருப்புகளைக் கொண்டவைகளாக உளளது.

சோம்பன் பழங்குடியினர் மங்கோலிய இனத்தைச் சேர்ந்தவர்கள். நிக்கோபாரிகள் (Nicobarese) சோமபன் ஆகிய இரு பழஙகுடியினரும் பணபாடு, இனப் பணபுகள் முதலானவற்றில ஒனறுபட்டுள்ளனரெனக கூறுகினறனர். ஆனால் சோம்பன் மொழி நிக்கோ-பாரிகளிடமிருநது முற்றிலும் வேறுபட்டுள்ளது.

சோம்பனுடன் தொடர்பு கொண்ட தொடக்க காலத்தவர் பாதிரி ரோசன் (Pastor Rosen) என்னும் தெனமார்க்குச சமயப் பரப்பாளராவர். இவர் கி.பி.1831-இல்சோம்பன் பழங்குடிகளைச் சநதித் தாரெனக் கூறப்படுகிறது. அதன்பின பல ஐரோப் பியர்கள் சோம்பன பழங்குடியினரைப் பற்றிய செய்தி களைச் சேகரித்துள்ளனர். இவர்களைப் பற்றிச் செய்திகள் சேகரித்த அனைவரும் தம்மீது சோம்பன் பிரிவினர் வெறுப்பையும் தாக்குதலையும் காட்டின ரெனக் குறிப்புகள் எழுதியுள்ளனர்.

போடன் கிளாசு (Boden Kloss) என்ற ஆய் வாளரின் கணிப்புப்படி 1901-ஆம் ஆண்டில்300 முதல் 400 சோம்பன்கள் மட்டுமே தனித்தனிக் குடியிருப்பு களில் வசித்து வந்தனர். 1931-ஆம் ஆண்டு அந்தமான் நிக்கோபார் மக்கள் கணக்கெடுப்புக் குறிப்பில் இவர் களின எணணிக்கை பற்றிப் போனிங்டன(Bonington) குறிப்பிட்டுள்ளார். இதுவரை கிடைத்த குறிப்பு களைக் காணும்போது இவர்களின் எணணிக்கை பல வகையாக மாறியுள்ளது. அதாவது 1901-ஆம் ஆண்டில் 348 எனவும், 1911, 1921 ஆகிய ஆணடு களில் 375 எனவும், 1931-ஆம் ஆண்டு 200 எனவும், 1951-இல் 20 எனவும், 1961-இல் 71 எனவும், 1971-இல் 92 எனவும், 1981-இல் 217 எனவும் மதிப்பிடப் பட்டது. சரியாக மதிப்பீடு செய்யாததற்கும் இவர் களைப பற்றி அறிந்து கொள்ள இயலாமைககும் இவர்கள் கொண்டுள்ள கூச்சம், பயம், ஓடி மறைதல் போன்ற சுபாவமே முதன்மையான காரணங் களாகும்.

பழங்காலந்தொட்டே சோம்பன் மக்கள், தங்க ளுக்கு வேணடிய ஆடை அணிகலனகளைத் தாங்களே செய்து பயன்படுததி வநதுள்ளனர். முற்காலத்தில் இவர்கள் இலைகள், மரப்பட்டைகள போன்றவற்றை உடையாகவும் ஒருவகை மரவளையத்தைக் காதணி யர்கவும் அணிந்தனர். நாகரிக உலகத் தொடா பிற்குப் பிறகு சோம்பன குடியினர் வெளியாரைப் போன்றே உடைகளை அணியத் தொடங்கியுள்ளனர்.

சோம்பன் குடியினர் பல குழுககளாக வாழ் கின்றனர். இவர்கள் பருவக் காலங்களுக்கு ஏற்ற வாறு வெவ்வேறு இடங்களுக்கு இடமபெயர்நது வாழ்நது வருகிறார்கள். இவர்கள் எப்பொழுதும குழுவாகவே இடம்பெயாந்து செல்வர். ஒவ்வொரு குழுவினரும் தங்களுக்கென்று ஓர் எல்லையை அமைத்துத் தங்களுக்கு வேண்டிய உணவுப் பொருள் களை ஈட்டுகினறனர். சோம்பன் வீடுகள் மரத்தூண களால் நிறுத்தப்பட்ட சுமார் 8 முதல் 10 அடி உயரமுள்ள பந்தல் போனறவை. இக்குடிசைகளுக்குப் பாக்குமரங்கள கூரையாக அமைகினறன.

இவர்கள் கிழங்குவகைகள், கனிவகைகள், பாக்கு வாழை போன்றவைகளைக் காட்டுப் பகுதிகளில் பயிர் செய்கின்றனர். சோம்பனின் உணவில் மாமி சம் மிகுதியாக இடம் பெறுகிறது. காட்டில் கிடைக் கும் பன்றி, குரஙகு, முதலை, தவளை, பறவை வகைகள், சில பாம்பு வகைகள், உடும்புகள், ஆறு களில் கிடைக்கும் மீன் வகைகள ஆகியவற்றையும் உணகின்றனர். உணவுப் பொருள்களை ஒருவகை மரப்பட்டையினால் செய்யப்பட்ட பாத்திரம் கொணடு நன்றாக வேகவைத்து உண்கின்றனர்.

சோம்பன் பழங்குடியினர் எப்போதும் காடுகளை யும் ஆறுகளையும் நம்பி வாழ்கின்றனர். பண்ட மாற்று முறை மூலம் தஙகளுக்கு வேண்டியவறறை நிக்கோபாரிகளிடமும் குடியேற்ற மக்களிடமும் மாற்றிக் கொள்கின்றனர். ஆனால், அணமைக் காலங் களில் இவர்கள் கூட்டுறவுச் சங்கங்கள் மூலம் பயனடைந்து வருகின்றனர். தேன், எலுமிச்சைப் பழம் ஆகியவற்றைக் கொடுத்துத் தங்களுக்கு வேணடிய புகையிலை, இரும்புத் துணடுகள், கத்தி முதலான வற்றைப் பெறுகினறனர். நீண்ட மூங்கில் அலலது மரத்தண்டுகளின் முனையில் இணைக்கப்பட்ட அம்பை யும் கத்தியையும் கொண்டு வேட்டையாடுகின்றனர்.

சோம்பன் குடியினர் கைத்தொழிலிலும் திறமை வாய்ந்தவர்கள. பெரிய நிக்கோபாரில் ஓடும் ஆறு களில் செல்லும் அமைப்புடைய சிறிய படகுகளைச் செய்வதில் இவர்கள் வல்லவர்கள். இந்தப் படகுகள் குடைந்து செய்யப்படும்(Dug-out Canoe) வகையைச் சேர்ந்தவை. கூடைகள முடைதலில் இவர்கள் பெரிதும் ஈடுபட்டுள்ளனர். பெண்கள்தாம் இதில் மிகுதியாக ஈடுபடுகின்றனர். இந்தக் கூடைகள் உணவுப் பொருளகளைப் பாதுகாக்கவும், கிழங்கு, கனிவகைகள் போன்றவற்றைக் சேகரிக்கவும் பயன் படுத்தப்படுகின்றன.

அந்தமான், நிக்கோபார் அரசாங்கம் 1976-ஆம் ஆண்டு முதல் இந்தத் தீவுகளில் வாழும் பழங்குடி மக்களுக்கு இலவச உணவுப் பொருள்களை வழங்கி வருகிறது. அதனுடன் சோம்பன் பழங்குடிகளுக்கு மருத்துவ வசதியும் அளிக்கிறது. அதைக் கவனிக்கச் சமூக சேவையாளர்களும் உள்ளனர். அரசு பெருந்-தோட்டங்களை அமைத்துக் கொடுத்துள்ளது. சோம் பன் பழங்குடிகள் இரண்டு மரத்துண்டுகள் கொண்டு கடைதல் (Drilling) மூலமும் இரண்டு மூங்கில் துண்டுகளை உராய்தல் மூலமும் நெருப்பு உண்டாக்கு கிறார்கள.

குழுவாக வாழும் சோம்பன் குடிகளில் சில வேளையில் பல குழுவினர் சேர்ந்து வாழ்கின்றனர்.

பொதுவாகச் சோம்பன் குடியினர் தங்கள் வாழ்க்கைத் துணைகளைத் தத்தம் குழுவிற்குள் தேர்ந்தெடுத்துக் கொள்கின்றனர். திருமணத்தில் ஆண், பெண இரு பாலாருக்கும் வயது வரம்பு கிடையாது. ஆனால சோம்பன் திருமண முறை பற்றிப்பிற குறிப்புகள் கிடைக்கவில்லை. ஒவ்வொரு குடும்பமும் கணவன், மனைவி இவர்களின திருமணமாகாத குழந்தைகள் முதலானவர்களைக் கொணடதாக உள்ளது. து.வெ.

**சோமசுந்தர கவிராயர்** கி.பி. 18-ஆம் நூற்றாண்டில வாழ்ந்த தமிழ்ப் புலவர்களுள் ஒருவர். இவர் இராமநாதபுரத்தில் பிறந்தவர். இவர் தநதை யார் பெயர் நெல்லையப்பர். இவர் சோமசுந்தரு, சோமசுந்தர குருசாமி, சோமசுந்தரம்பிள்ளை ஆகிய வேறு பெயர்களாலும் வழங்கப்பெற்றார். சிவஞான முனிவரின் மாணவரான இவர் அட்டாவதானம் சரவணப்பெருமாள கவிராயருக்கு ஆசிரியராக விளங்கி யுள்ளார். பெருந்தொகை 1792-ஆம் பாடலில் உள்ள, ‘நெல்லையப்பன் மைந்தன் பார்பெறுங் குணஞான சோமசுந்தர குரு பதாம்புயம் பரவுதாசன்... ...... சரவணப்பெருமாள்’ என்னும் தொடர் மேற்கூறிய செய்தியின உணமையினை உணர்த்துகின்றது. மேலும் பெருந்தொகையில் இடம்பெற்றுளள 1781, 1789, 1795, 1797-ஆம் பாடல்களில் உள்ள குறிப்புகளும் அதனை வலியுறுத்துவனவாக அமைந்துள்ளன. இவர் திருக்கழுக்குன்றக் கோவை என்னும் நூலினை இயற்றியுள்ளார். வீ.சே.

**சோமசுந்தர தேசிகர்**, கு. 20-ஆம் நூற்றாண்டில் வாழ்ந்த தமிழ்ப் புலவர். இவர் தஞ்சாவூர் மாவட்டத்தைச் சேர்ந்தவர். பெற்றோர் குருசாமி தேசிகர், செல்லத்தம்மாள. இலக்கண விளக்க ஆசிரி யர் திருவாரூர் வைத்தியநாத நாவலர் மரபில் வநத இவர் இளமை முதலே நன்கு பயினறாா. தொடர்நது கல்வியில் நாட்டம கொணடு படித்து பி.ஓ.எல பட்டம் பெற்றார். வடமொழிப் பயிற்சியும் இவருக்கு இருந் தது. திருவையாறு, முசிரி முதலிய இடங்களில் தமிழாசிரியராகப் பணிபுரிந்துளளார். சென்னைப் பல்கலைக் கழகத்தில் கல்வெட்டாராய்சசி மாண வராக இருந்தார். சென்னைப் பல்கலைக கழகம், மேற்கொணட அகராதிக் குழுப் புலவர்களுள் இவரும் ஒருவராக இருந்து சிறப்பாகச் செயலாற்றினார். இவர் கமலைஞானப் பிரகாசா, நரவாகனதகத சரிதம், தமிழ்ப் புலவர் வரலாறு முதலிய நூலகளை எழுதியுள்ளார். பிரபுலிங்க லீலை என்னும் நூலுக்குக் குறிப்புரை எழுதி வெளியிட்டார். இவர் தசகாரியம், குறுந்தொகைமூலம், சோழமணடல சதகம, திருவா ரூர்ப் பள்ளு, இலககண விளக்கம் பொருளதிகாரம், பஞ்சாக்கர மாலை முதலிய நூல்களைப் பதிப்பித்து வெளியிட்டுள்ளார். வீ.சே.

**சோமசுந்தர நாயகர்** கி.பி. 19-ஆம் நூற்றாண்டில் வாழந்த தமிழ்ப் புலவர்களுள் ஒருவர். இவர் செனனையில் உள்ள சூளைப் பகுதியில் இராமலிங்க நாயகருக்கும் அம்மணி அம்மையாருக்கும் 16.8.1846-இல் மகனாகத் தோன்றினார். இவருக்குப் பெற்றோர் சூட்டிய பெயர் அரங்கசாமி என்பதாகும் இவருடன் பிறந்தோர் திருவேங்கடசாமி நாயகர், நாதமுனி நாயகர், வரதராச நாயகர், தாயாரம்மை ஆகியோராவா. இவர் மனைவி பெயர் சிவஞானம் என்பதாகும். இவர்களுக்குப் பெண் மக்கள் மூவரும் ஆண்மகன் ஒருவரும் இருந்தனர்.



சோமசுந்தர நாயகர்

இவர் தமிழ், ஆங்கிலம், தெலுங்கு, வடமொழி ஆகிய நான்கு மொழிகளிலும் தேர்ச்சி பெற்றிருந் தார். அச்சுதாநந்தர் என்பவரிடம் கைவல்ய நவநீ தம், ஞானவாசிட்டம், பிரபோத சந்திரோதயம் என்னும் மெய்ஞ்ஞான விளக்கம், பிரபுலிங்க லீலை முதலிய நூலகளைக் கற்றார். இவருடைய ஆசிரியர் இவர்தம் இளமைப் பெயரான அரஙகசாமி என நிருந்ததைச் சோமசுந்தர நாயகா எனப் பெயர் மாற்றி அமைத்தார். இவர் வேதாந்த நூல்களைக் கறறதோடு தாமே தமிழ் இலக்கண இலக்கியஙு களையும் கற்றார் வேதாந்த சிததாந்த நூலகளின் உயர்வு தாழவைக கணடு சித்தாநதக் கொளகையே சிறந்தது என எடுத்துக்காட்டித தம் ஆசிரியருககும் சித்தாநதத்தில் பற்றுணடாகுமாறு செய்தாா.

இவர் நகராண்மைக் கழகத்தில் சிலகாலம் எழுத்தராகப் பணியாற்றினார். சொற்பொழிவாற்றுவதிலும் வல்லவராக விளங்கிய இவர் சைவசித்தாந்தத்தின் கொள்கையைப் பல இடங்களில் சொற்பொழிவுகள் மூலம் பரப்பினார். அந்நாளில் வேதாசலம் என்னும் பெயரோடு விளங்கிய மறைமலையடிகள் இவரது சொற்பொழிவைக் கேட்டுச் சித்தாந்தத்தின்பால் ஈர்க்கப்பட்டு நேரிலும் இவரிடம் பாடம் கேட்டுத் தெளிந்தார். இவர்தம் சொற்பொழிவைக் கேட்ட சேதுபதி மன்னர் 'வைதிக சைவசித்தாந்த சண்ட மாருதம்' என்னும் பட்டத்தினையும், திருவாவடுதுறை ஆதினத் தலைவர் 'பரசமய கோளரி' என்னும் சிறப்புப் பெயரையும் இவருக்கு வழங்கிச் சிறப்பித்தனர்.

இவர் சித்தாந்த ஞானபோதம், சித்தாந்த உந்தியார், சித்தாந்த சேகரம், அசம்பிரதாய நிராசநம், ஆராரியப் பிரபாவம், பிராமதத்துவ தீபிகையினது ஆபாச விளக்கம், ஆஞ்சநேய ராம வைபவங்கள், சுரேச விசயபங்கம், சமரச ஞானதீபம், சன்மார்க்க போதவெண்பா, சிவகிரி பதிற்றுப்பத்தந்தாதி, சிவ வாக்கியத் தெளிவுரை, சிவநாமாவளி, சைவசூளாமணி, ஞானபேத விளக்கம், ஞாபேதத் துணிவு பரம பதபிங்க வினாவிடை முதலிய நூல்களை இயற்றியுள்ளார். இவர் 1901 இல் காலமானார். வீ.சே.

**சோமசுந்தரப் புலவர், நவாலியூர்:** இவர் இலங்கையில் வாழ்ந்த 20-ஆம் நூற்றாண்டுத் தமிழ்ப் புலவர்களுள் ஒருவர். இவர் யாழ்ப்பாணத்திற்கு அண்மையிலுள்ள நவாலி என்னும் ஊரில் கதிர்காமனாருக்கும் இலக்குமியம்மைக்கும் கி.பி.1880-ஆம் ஆண்டு மகனாகப் பிறந்தார். கல்வியில் ஆர்வம் கொண்ட இவர் மானிப்பாய் அருணாசல ஆசிரியர், இவர்தம் உறவினரான இராமலிங்க ஆசிரியர் ஆகியோரிடம் தமிழையும் ஆங்கிலத்தையும் பயின்றார்; கல்வியில் சிறந்து விளங்கிய தம் தந்தையாரிடமும் கற்றார். வடமொழிக் கல்வியும் பெற்ற இவர் பள்ளியொன்றைத் தொடங்கி மாணவர்களுக்குக் கல்வி கற்பிக்க முற்பட்டார். அவ்வகையில் தம் நண்பரான வட்டுக்கோட்டை சின்னத்துரை என்பவரின் துணையுடன் கி.பி.1899-ஆம் ஆண்டில் ஆங்கிலப் பள்ளியைத் தொடங்கினார். அதன் வாயிலாகத் தமிழும் சைவ சமயமும் சிறந்து விளங்கப் பாடுபட்டார்.

இவர் இளம் வயதிலேயே பாடல் இயற்றும் திறம்பெற்றார். எனவே, இவரை வரகவி என்ற பெயராலும் வழங்கினர். இவர்தம் பாடல்கள் எளிமையும் பக்திச் செறிவும் அமைந்து சிந்தனையைத் தூண்டுவதாக அமைந்துள்ளன. காந்தியடிகளின் கருத்துகளும் இவர்தம் பாடல்களில் ஆங்காங்கே காணப்படும். இவர் இயற்றியவற்றுள் தனிப் பாடலாகவும், சிறுவர்கேற்ற வகையிலும் உள்ள பாடல்கள் சிலவற்றைத் தொகுத்துச் 'சிறுவர் செந்தமிழ்' என்னும் நூலாக வெளியிட்டனர். மேலும் இவர் நாமகள் புகழ்மாலை, கந்தவனநாதன நான்மணிமாலை, விநாயகர் பாமாலை, கதிரைச் சிலேடை வெண்பா, இலங்கைவளம், மருதனஞ்சலோட்டம் முதலிய நூல்களை இயற்றியுள்ளார் இறுதியில் கூறப்பட்ட இரு நூல்களும் இவர் இலங்கையினது வளம், அது சுதந்திரமடைந்த செய்தி ஆகியவற்றை நினைந்து மகிழ்ச்சியடைந்து பாடியனவாகும். இவர் சைவ சித்தாந்தக் கருத்துகளை அமைத்து உயிரிளங்குமரன் என்னும் நாடகத்தையும் உருவாக்கினார்

மெய்ப் பொருளாராய்ச்சியில ஈடுபட்ட இவருக்குப் பெங்களூரிலிருந்து சித்தரொருவர் இவர்தம் இல்லம் வந்து உபதேசம் புரிந்தார். இவர் 1953-ஆம் ஆண்டில் காலமானார். வீ.சே.

**சோமசுந்தர பாரதியார், ச.:** இவர், இன்றைய சிதம்பரனார் மாவட்டத்தைச் சார்ந்த எட்டையபுரத்தில் பிறந்தார். பெற்றோர் சுப்பிரமணிய நாயகர் என்னும் எட்டப்ப பிள்ளை-முத்தம்மாள் ஆவார் இவர் 1879-இல் பிறந்தார். இவர்தம் இயற்பெயர் 'சத்தியானந்த சோமசுந்தரன்'. இதுவே பின்னர்ச் ச.சோ. பாரதியார் என்றாயிற்று மனைவியர், இருவர்: மீனாட்சி, வசுமதி அம்மாள் பாரதி.



சோமசுந்தர பாரதி

எட்டையபுரத்தில் தொடக்கக் கல்விபெற்ற இவர் நெல்லையில் உயர்நிலைப் பள்ளிக் கல்வியும் கல்லூரிக் கல்வியும் பெற்றார். சென்னைக் கிறித்தவக் கல்லூரியில் இளங்கலை பயின்று, சட்டக் கல்லூரியில் படித்து, 1905-இல், சட்டத் தேர்வில் வெற்றிபெற்றார். இவர் 1913-இல் தமிழ் முதுகலைத் தேர்வெழுதி வெற்றி பெற்றார்.

இவர் சென்னையில, அரசினர் வருவாய்த் துறையில் எழுத்தராகச் சில காலம் பணிபுரிந்தார். தூத்துககுடி சென்று, 1905 முதல் 1920 வரை, வழககறிஞர் பணியைச் செய்துவந்தார். பின்னர் மதுரைக கருகில் உள்ள பசுமலையில தங்கி வழக்கறிஞா தொழிலைத் தொடர்ந்து மேற்கொண்டார். அப்போது அணணாமலையரசர் வேண்டுகோட்கிணங்க, அணணாமலைப் பல்கலைக கழகத்தின தமிழ்த் துறைத் தலைமைப் பொறுப்போறறு 1933 முதல 1938 வரை 5 ஆணடுகள் திறமபடப் பணி புரிந்தார்.

இவர் தூத்துககுடியிலிருந்தபோது, வ.உ. சிதம்பரனாரோடு சோந்து நாட்டு விடுதலைக்காகப் பாடுபட்டார். வ.உ.சி. தொடங்கிய கபபற் கழகததின செயலாளராகவும் இருநதாா. அக்காலத்தே, நாட்டு மக்கட்குத் தேசிய உணர்வை ஊட்டியவாகளுள் ச.சோ. பாரதியாரும் ஒருவர். காநதியடிகளை முதன் முதல் தூததுககுடிககு வரவழைத்த பெருமை இவருக்குணடு. பின்னர் அணணாமலைப பல்கலைக் கழகத்தில் இருந்த போது, காநதியடிகளை ஆஙகும் வரவழைத்து, அவரது இயக்கத்திறகு நிதியளிபபுக கொடுககவும் துணைநினறாா.

தேசியகவி சுப்பிரமணிய பாரதியாரும் இவரும் எட்டையபுரததில பிறநது ஒனறாககவே கலவி கறறவர் கள். 'சோமு' எனறும 'சுப்பு' எனறும் ஒருவர்க்கொருவர் செல்லமாக அழைததுககொளவர். நெலலையில இவவிருவரும் படிததுககொணடிருநதபோது தான் வெணபாப புனையும் போட்டியில யாழப பாணத் தமிழ்ப் புலவரால் பாராட்டப்பெற்றனா; 'பாரதி' என்னும் பட்டமும பெறறனர். சுபபிரமணிய பாரதியார் வாழ்ந்த காலத்திலேயே அவருடைய பெருமைகளைப் பலரும் அறியும்படி செய்தவர் ச.சோ. பாரதியாரே!

சென்னைக் கிறித்தவக் கல்லூரியில் இவர் பயின்ற காலத்து, இவருக்குத் தமிழப் பேராசிரியர்களாக விளங்கியவர்கள் மறைமலையடிகளாரும் பரிதிமாற கலைஞருமாவர். தமிழுலகில் இவருக்கு நணபராக வாய்த்தவர்கள் திரு.வி.க., உ.வே.சாமிநாதய்யர் போனறோராவர். அண்ணாமலைப் பல்கலைககழகத்தில் ஆராய்ச்சித் துறை தோன்றுதற்கு முதனமுதல பாடுபட்டவர் இவரே.

ச.சோ. பாரதியார் சிறந்த பேச்சாற்றலும் எழுத்தாற்றலும் ஒருங்கே கைவரப்பெற்றவர். தமிழில் மட்டுமன்றி ஆஙகிலத்திலும் பேச வல்லவர். மதுரைத் தமிழ்ச் சங்கத்தின் செயலர் பொறுப்பும், இவருககுக் கொடுக்கப்பட்டிருந்தது (1932-33).

இவரெழுதிய ஆராய்ச்சிக் கட்டுரைகள் 80ககு மேற்பட்டவை. எழுதிய நூல்களுள் குறிப்பிடததக்கன திருவள்ளுவர், தசரதன் குறையும் கைகேயி நிறையும, சேரர் தாயமுறை, சேரர் பேரூர், மாரிவாயில், தொல காப்பியப் பொருட்படலப் புத்துரைகள் ஆகியன. இவற்றுள திருவள்ளுவர், சேரர் தாயமுறை, சேரா பேரூர் என்பன இவராலேயே ஆஙகிலத்திலும எழுதப் பெற்றுளளன. பண்டைத் தமிழ் உரையாசிரியருள் ஒருவராக வைத்தெணணத்தக்கவர் இவர் என்று கூறுமளவுக்கு இவரெழுதிய 'தொல்காப்பியப் பொருட்படலப் புத்துரை' அமைந்துள்ளது.

அக்காலத்து அரசியலமேடைகளிற்கூட ஆஙகிலத திலேயே பேசி வந்தனர். ஆனால, ச.சோ. பாரதியாரோ தமிழிற் பேசித் தமிழ் மக்கட்குநாட்டுணாச சியை ஊட்டினார். தமிழகத்தில் 1937-இல் 'கட்டாய இந்தி' கொணடுவரப்பட்டபோது, அபபோது முதலமைச்சராக இருந்த பெருமைமிகு ச. இராச கோபாலாச்சாரியாரை எதிாததுப் பெருங கிளர்சசி செய்தார்.

நெல்லையில பயின்றபோதே 'பாரதியார் என்னும் பட்டம் பெற்றாா. மும்முறை இலஙகை சென்றுவந்தார். மூன்றாம முறை சென்றபோது, ஈழநாட்டுத் தமிழ்ப் புலவர் மனறம, இவருக்கு 'நாவலர்' எனும் பட்டத்தை (30.12.1944) நலகியது. மதுரைத் திருவள்ளுவர் கழகம 1954-இல, 'கணக்காயர்' எனனும் பட்டம் வழஙகியது. அணணாமலைப் பலகலைக் கழகம வெள்ளி விழாக கொணடாட்டத் தினபோது, 'டாக்டர்' (D.Litt.) என்னும பட்ட மளிததுப் போற்றியது.

இவர் 1959-இல் பசுமலையில உளள தம் இல்லத்தில் காலமானார். ச.சா

**சோமசுந்தரனார், பொ. வே., (பெருமழைப் புலவர்)** 20-ஆம் நூற்றாணடில் வாழ்ந்த தமிழப் புலவர். இவா தஞ்சாவூர் மாவட்டத்திலுள்ள மேலைப் பெருமழை என்னும் ஊரில 1909-ஆம் ஆண்டு பிறந்தார். தந்தையார் பெயர் வேலுத் தேவர் எனபதாகும். இவர் முதலில் திணணைப் பள்ளிக் கூடத்தில் கலவி கற்றார். இவர்தம் தந்தையார் இவரைத் தாம் செய்த உழவுத்தொழிலில் ஈடுபடுத்தினார். ஆனால், இவரது உளளம் உழவுத் தொழிலில் ஈடுபடாமல் கல்வி கற்க விரும்பியது. இவர்தம் திண்ணைப் பள்ளி ஆசிரியர் தமிழ் இலக்கியங்களில் ஆர்வமுடையராதலால இவரும் அவரைப்போலவே தமிழ் நூலகளை ஆாவமுடன

கற்றார். இவா சிறு வயதில் வறுமையில் துன்பப் பட்டார். அத் துன்பத்திலேயும் அணணாமலைப் பல்கலைக் கழகத்தில் சோந்து அங்குககொடுத்த பண உதவியைக் கொண்டு கற்றார். அனைத்துத் தேர்வுகளிலும் முதல் வகுப்பில் தேர்சசி பெற்றார்.



சோமசுநதரனார், பொ. வே.

இவர் தம் மாமன் மகளாகிய மீனாம்பாள் என்ற பெணணைத் திருமணம்செய்து கொணடார். இவருக்கு இரணடு ஆண மக்களும் ஒரு பெண் மகவும் பிறந்தனர். ஒரு முறை தம ஆசிரியரான பணடித மணி கதிரேசஞ் செட்டியாரைச் சந்திக்கச சென்ற போது திருவாசகத் திருச்சதக உரையை எழுத வருமாறு பணித்தார். அதற்கு ஊதியமாக மாதமொன்றுக்கு உரு.40/- கொடுப்பதாகக்கூறினார். அவரிடம் இருந்து உரை எழுதிய பயிற்சியே பிற் காலத்தில் இவர் உரையாசிரியராக ஆவதற்குக் காரணமாக அமைந்தது.

இவர் சஙக நூல்கள் பலவற்றிற்கு உரை எழுதியுள்ளார். அவற்றைத் தெனனிநதிய சைவசித் தாந்த நூறபதிப்புக் கழகம வெளியிட்டுள்ளது. இவர் எழுதிய விளக்கவுரை நூல்கள பின்வருவன. பத்துப்பாட்டு, மணிமேகலை, சிலப்பதிகாரம், அக நானூறு, பெருஙகதை, உதயணகுமார காவியம், ஐங்குறுநூறு, புறப்பொருள் வெண்பாமாலை, கல்லா டம், பட்டினத்தார் பாடல் பிற்பகுதி. பரிபாடல், குறுந்தொகை, நற்றிணை, ஐந்திணையெழுபது, சீவக சிந்தாமணி, கலித்தொகை, திருக்கோவையார். இவர் தாம் எழுதிய விளக்கவுரைப் பகுதிகளில் நசசினார்க்கினியர், பேராசிரியர் முதலிய பழைய உரையாசிரியர்கள கருத்துகளைப் பாராட்டியும் தக்க காரணங்கள காட்டி மறுத்தும் எழுதியுளளார். இவர் செய்யுள் இயறறுவதிலும் வல்லவராகத் திகழ்ந் தார் இவர் செங்கோல், மானனீகை முதலிய் நாடக நூல்களையும் எழுதியுளளார். இவர் 1972- இல் காலமானார்.

வீ. சே.

**சோமநாதபுரம்** கருநாடக மாநிலத்தில் உள்ள தோர் ஊர். இவவூர் கோயிற் கட்டடககலைச் சிறப்புப்



சோமநாதபுரம் கேசவன் கோயில்

பெற்றது. சிரீரங்கப்பட்டணத்திலிருந்து 32கி.மீ. தொலைவில் உள்ள இந்நகரத்தில் ஒய்சாள அரசர்கள் கட்டிய கோயில் உள்ளது. இக்கோயில் பல நுண்ணிய வேலைப்பாடுகளைக் கொண்டு திகழ்கிறது. நட்சத்திர வடிவத் தரை அமைப்பில் மேடை அமைத்து அதன் மீது எழுப்பப்பட்டுள்ள இக்கோயிலின் சிற்பங்கள் அழகு மிக்கவை. அன்னம், யானைச் சிற்பங்கள் ஆகியவை மிக அழகாகச் செதுக்கப்பட்டுள்ளன. இக்கோயிலின் மூலவர் கேசவன் எனப்படுகிறார். மூன்று கருவறைகளைப் பெற்று விளங்கும் இக்கோயில் முத்தோக் கோயிலாகும். மற்றொரு கருவறையில் வேணு கோபாலர் உள்ளார். கருவறைகளின் நடுவில் முன் மண்டபம் தூண்களுடன் உள்ளது இக்கோயில் வழ வழப்பாக நன்கு தேய்க்கப்பட்ட கருங்கற்களால் கட்டப்பட்டது.

**சோமநாதபுரம்**[2] குசராத்து மாநிலத்தில் சுனாகத்து மாவட்டத்தில் உள்ள தொரு தொன்மையான நகரம். இந் நகரம் பதான் சோம்நாத்து (Patan Somnath) எனவும் கூறப்படும். இவ்வூரில் சோமநாதரின் ஆலயம் உள்ளது. இக்கோயிலில் கசினிமுகம்மது கி.பி.1024-25 ஆம் ஆண்டுகளில் சூறையாடிப் பொருள்களை எடுத்துக்கொண்டு சென்றார். மீண்டும் இக்கோயில் கி பி 1169-இல் புதுப்பிக்கப்பட்டது. இக்கோயில். கி.பி 13-ஆம் நூற்றாண்டில் மறு படியும் முசுலீம்களின். தாக்குதலுக்கு உள்ளானது. பலமுறை அழிக்கப்பட்ட தாயினும் மீண்டும் மீண்டும் இக்கோயில் புதுப்பிக்கப் பட்டு விளங்கியது. இக்கோயிலை 1951-ஆம் ஆண்டு



சோம்நாதபுரக்கோயில்

மீண்டும் புதுப்பித்தனர். இவ்வூரைப் பற்றி மகா பாரதத்தில் குறிப்புகள் உள்ளன. இவ்வூரில் அகழாய்வுகளும் நடத்தப்பட்டன. இவ்வூர் சோம்நாத்து (Somnath) என்றும் கூறப்படும். சு.இரா.

***சோமநாதன் மடம்:*** இது திருவண்ணாமலைக்கு அருகிலுள்ள புத்தூர் என்னும் ஊரில் இருந்ததாக அறியப்படும் ஒரு சைவ மடமாகும். அவ்வூர் இப்பொழுது வடார்க்காடு மாவட்டம் ஆரணி வட்டத்தைச் சார்ந்துள்ளதாகக் கூறப்படுகிறது. அவ்வூர் சிவாச்சாரியார்கள் மிகுந்து வாழ்ந்த ஊர் எனவும் தெரிகிறது. பிற்காலத்தே சோழர் பாண்டியர் முதலியோர்க்கு ஆசாரியராக விளங்கும் சிறப்புப் பெற்ற கோளகி மடம், பிட்சாவிருத்தி மடம் ஆகியவற்றின் சந்தான குரவர்களுள் சிலர் புத்தூரில் வாழ்ந்த சிவாசாரியார்களாக இருந்துள்ளனர். அங்குத் தோன்றிய சிவாசாரியார்களுள் சோமநாதன் என்பவர் சிறப்புற்று விளங்கினார். பலருக்கும் ஆசாரியராக இருந்தமையால் சோமநாத சீயர் எனவும் அவர் வழங்கப் பெற்றார். இக்காலத்தே, குறிப்பாக வைணவத் துறவியர்க்கு வழங்கப்பெறும் சீயர் என்னும் சிறப்புப் பெயர் அக்காலத்தில் சைவ சமயத்தைச் சேர்ந்த சிவாசாரியார் போன்ற சிலருக்கும் வழங்கப்பட்டமையினைக் கல்வெட்டுகள் குறிப்பிடுகின்றன.

சிறந்த ஒழுக்கசீலராயும் ஆசாரிய நிலை எய்தியவராயும் விளங்கிய சோமநாத சீயரின் சிறப்பினை உணர்ந்து அவர்பால் ஈடுபாடு கொண்ட விசயநகர மன்னர் கி.பி.1370-ஆம் ஆண்டில், புத்தூரிலுள்ள திருக்கோயிலையும், மடத்தையும் சோமநாதரின் பொறுப்பில் விடுத்தார். அதனால், சோமநாதர் தலைமையில் தொண்டு புரிந்த மடம் சோமநாதன் மடம் எனப்பட்டது. மன்னர், சோமநாதருக்கு மடத்தின் பொறுப்பினை அளித்த செய்தி, அவ்வூர்க் கோயிலின் மதிற்சுவரில் பொறிக்கப்பட்டுள்ளது. அக் கல்வெட்டுப் பகுதி, அதனை 'இந்தத் திருக்கோயில் மடாதிபத்தியக் காணியாட்சியுடைய அம்மையப்பரான சோமநாத சீயர்க்கு' என்பதாகும்.

சோமநாதரின் சிறப்பினையும் அவர் பொறுப்பிலிருந்த திருமடத்தின் சிறப்பினையும் உணர்ந்திருந்த அருணகிரிநாதர் அவற்றைத்தம் திருப்புகழில் சிறப்பித்துள்ளார். அருணகிரியார் சிறப்பித்த சான்றோர் இருவருள் சோமநாதன் ஒருவர், மற்றொருவர் கவிசைச் சேவகன் எனப்படுவார். சோமநாதன் மடத்தைப் பற்றி, அருணகிரிநாதர் தம் திருப்புகழில், 'அரிவை ஒரு பாகரான, அருணகிரிநாதர் பூசை, அடைவு தவறாது பேணும் அறிவாளன், அமணர் குல காலனாகும் அரிய தவராசராசன், அவனிபுகழ் சோமநாதன் மடம் மேவும் .முருக' என்று குறிப்பிட்டுள்ளார். இப்பகுதியினால், சோமநாதன் சிறந்த சிவபக்தராக விளங்கி நாளும் அருணகிரிப் பெருமானுக்கு முறையாகப் பூசை செய்து வந்தவர் என்பதும், சைவ சமய ஈடுபாடு மிக்க அவர்சமண சமயத்திற்கு எதிரி

யாக விளங்கிச்சமணர்கள் குலைவுறுமாறு செய்தார் எனபதும்,அவர் துறவியாக விளங்கிய தவராசச் செம் மலாகத் திகழ்ந்தார் என்பதும் அறியப்படுகின்றன. மேலும், சைவ சமயத் திருமடமான சோமநாதன் மடத்தில முருகன் சந்நிதி இருந்தது என்பதும, அங குள்ள முருகனைக் குறித்தே அருணகிரியார் இத்திருப் புகழ்ப்பகுதியில் குறிப்பிட்டுள்ளார் என்பதும் புலனா கின்றன. 'அம்மையப்பரான சோமநாத சீயர்' எனறு கல்வெட்டுக் குறிப்பதனால் அவருக்கு அம்மையப்பர் என்ற பெயரும் இருந்துள்ளமை தெரிகிறது. வீர பொக்கண்ணர், புத்தூர் மடத்துப் பொறுப்பைச் சோமநாதருக்கு கி.பி. 1370-ஆம் ஆண்டில் வழஙகி யிருப்பதால், சோமநாதர் காலம் கி.பி.14-ஆம் நூற்றாண்டின் பிற்பகுதி எனபது புலனாகிறது. அக் காலத்தை அடுத்து கி பி.15-ஆம் நூற்றாணடில் முற் பகுதியில் திகழ்ந்த அருணகிரிநாதர் அவரையும், அவர் பெயர் தாங்கிய சோமநாதன மடத்தின் சிறப் பையும் நன்கறிந்தே அவரைத் தம திருப்புகழில் சிறப் பித்துப் பாடியுள்ளார். அ. மா. ப.

**சோமபாலெம்**: ஆந்திரப் பிரதேசத்தில் சித் தூர் மாவட்டத்தில் முதனப்பள்ளி வட்டத்தில உள்ள தோர் ஊர். இவ்வூர் கட்டடக்கலைச் சிறப்புப் பெற் றது. இங்குள்ள சென்னகேசுவர் கோயில ஊரின மேற்குத் திசையில் உளள ஒரு சிறு குனறின் அடி வாரத்தில் உள்ளது. இக்கோயில கருவறை அந்தரா ளம், முகமணடபம், மகாமணடபம் ஆகியவற்றைக் கொண்டுளளது. இதனைச் சுற்றி மதிற்சுவர் ஒனறு உள்ளது. இவற்றைத் தவிர இங்குப் பல சிறு கோயில் களும் உளளன. கோயிலின் நுழைவாயிலில கோபுரம் ஒன்றும் உள்ளது. கருவறையின மேல் உள்ள விமா னம் ஒற்றைத் தளவிமானமாகும். இது விசயநகரப் பேரரசுக் காலக் கோயிலாகும். விமானம் வேசர வகைப் பாணி விமானமாகும். கோயிலின தூணகள யாவும் விசயநகர காலத்தைச் சார்ந்த பெருந் தூண் களாகும். இக்கோயிலின் வடக்குப் பக்கத்தில் அம்மன் கோயில் உள்ளது. இவ்விரு கோயில்களும் கிழக்கு நோக்கியவாறு கட்டப்பட்டுள்ளன. கோயில் மூலவர் சென்னகேசவா எனப்படுகிறார். இக்கோயிலின் வெளியே நீண்ட விளக்குக் கல் தூண ஒனறு உள்ளது. இக்கோயிலின் கல்யாண மண்டபத்தில பல அழகிய சிறப வேலைப்பாடுகள் உள்ளன. மணடபக் கூரைகளில் ஓவியங்கள் பல அழிந்து காணப்படு கின்றன. சு.இரா.

**சோமபானம்** சோமா என்னும் செடி யிலிருந்து தயாரிக்கப்படுவது. வேத காலத்தில் ஆரியர் இதைத் தெய்வத்திற்கு விரும்பி அளித்தனர். சோமப் பூண்டின் சாற்றைவடித்து அதனுடன் பாலையும் நீரையும் கலந்து, தெய்வத்திற்குப் படையல் செய்தது போக எஞ்சியதை, வேதகால குருமார் அருந்தினர். இப் போதைநீர் அருந்தியவர்களுக்கு உள்ளக் கிளர்ச்சியையும் ஒருவித மயக்கத்தையும் தரவல்லது. இப் போதைப்பொருளுடன் ஒரு தேவதையும் இணைக்கப்பட்டிருந்தது. அத்தேவதைக்குச் சோமா என்பது பெயர். செடி, புல், பூணடு முதலியவற்றை இயக்கும் தன்மை பெற்றதாக இது கருதப்பட்டது. மேலும, இத தேவதை நோய்களைத் தீர்த்துச் செல் வத்தைப் பெருக்கும் தன்மையது என்றும் மக்கள் கருதினா. இந்த வழிபாட்டு முறைக்கும் ஓமம் செய தல எனற பணடைய ஈரானியரின் சமயக் கோட் பாட்டு முறைக்கும் ஒற்றுமை இருப்பது இங்குக் குறிப்பிடத்தக்கது. தெ.பா.

**சோமலெ**: சோம. இலக்குமணன் செட்டி யார் என்பது இவர்தம் முழுப்பெயர்; 'சோமலெ' என்பது புனைபெயர். சோமலெ கி.பி. 1920-இல் பசும்பொன் முத்துராமலிங்கம் மாவட்டத்திலுள்ள நெற்குப்பையில் பிறந்தார். இவர் தந்தையார் பெயர் சோமசுந்தரம் செட்டியார். சோமலெ தமிழில பதினைந்துக்கு மேற்பட்ட உரைநடை நூல்களை எழுதியுள்ளார்.



சோமலெ

தமிழ, ஆங்கில மொழிகளைத் திறம்படப் பேசவும் எழுதவும் வல்ல சோமலெ பி.ஏ. பட்டம் பெற்றவர். இவர் உரிமை உணர்வும் கருத்துகளை வெளிப்படையாகக்கூறும் இயல்புமுடையவர். அத னால் எங்கும் இவர் நீண்ட நாள்கள் பணியில இருககவில்லை. இவர் அண்ணாமலைப் பல்கலைக் கழ கத்தில், இரணடாணடுகள, மக்கள் தொடர்பு அலு வலராகப் பணியாற்றினார்.

'சிவசேத்திர விளக்கம்' என்ற திருத்தலங்கள பற்றிய நூலைச் சோமலெயின் பாட்டனார் பெரிய கருப்பஞ் செட்டியார் எழுதினார். அவர் வழிவந்த சோமலெ அவரைப் போலப் பல்வேறு மாவட்டக் கருப்பொருள் நூல்களையும், பயண நூலகளையும், இலக்கிய வரலாற்று நூல்களையும் எழுதியுள்ளார். இவர் எழுதிய 'வளருந்தமிழ்' இருபதாம் நூற் றாண்டில் தமிழ் பல்துறைகளில் வளர்ந்துள்ளதை விளக்குவதாகும் பண்டிதமணி மு. கதிரேசஞ் செட்டி யார், முதலமைச்சர் ஓமந்தூர் இராமசாமி ரெட்டியார் ஆகியோர் வரலாற்றையும் இவர் திறம்பட நூல் களாக எழுதியுள்ளார்.

தமிழ்நாட்டு வரலாறு விளக்கம் பெற வட்டார வரலாறுகள எழுதப்படவேண்டும் என்பது இவர் கருத்து. அதனால் மாவட்டஙகள் பற்றிய நூல்களை எழுதினார். இவர் எழுதிய மாவட்ட வரிசை நூல் களுள் ஒவ்வொன்றும், மாவட்டங்களின் இயற்கை அமைப்பு, வளம், வணிகச் சிறப்பு, மககள் பணபாடு, வரலாற்றுச் செய்தி, சமயத் தொடர்பு, இலக்கியப் பணி போன்றவற்றை உணர்த்துகினறன. இவர் மாவட்டங்களிலுள்ள ஊர்கள் பற்றிய செய்திகளை ஒன்றியங்கள் வாரியாகத் தந்துள்ளார். இவர் எழுதிய எட்டு மாவட்டங்கள் பற்றிய நூல்களில் 'மதுரை மாவட்டம்' பற்றிய நூல் மிக விரிவானது.

சோமலெ, உலக நாடுகள் பலவற்றிற்குப் பயணம் செய்திருக்கிறார். அந்த அனுபவஙகளைச் சுவையான பயண இலக்கியமாக எழுதித் தந்திருக்கிறார். உலக நாடுகள பற்றியும் நூல்கள வெளியிட்டிருக்கிறார். சிறந்த எழுத்தாளரான இவர் தொகுப்பாசிரியரா கவும் பதிப்பாசிரியராகவும் விளங்கினார். திரு வண்ணாமலை, இராமேசுவரம் திருக்கோயில் திருக் குட நீராட்டு விழா மலர்கள், இவர்தம் பதிப்புத் திறனை உணர்த்துவன.

சென்னைச் சுற்றுப் பயணிகள் மாதக கையேடான 'அலோ மெட்ராசு' (Hallo Madras) என்ற இதழை வடிவமைத்துத் தொடங்கி நடத்தியவர் சோமலெ. தமிழில் பயண இலக்கியங்களை வளர்த்த பெருமை யில் இவருக்குப் பங்குண்டு.

கூரிய மதியும் உசாவி அறியும் ஆர்வமும் நிரம்பப் படைத்த இவர் எளிய வாழ்வு வாழ்ந்தார். நாள தொறும் நூற்றுக்கணக்கான நண்பர்களுக்குக் கடிதம் எழுதும் பழக்கம் உடையவர். நகைச்சுவையொடு கிண்டல் செய்து யாருக்கும் புரியும் வண்ணம் எதை யும் எழுதுவது இவரியற்கை.

நாட்டுக்கோட்டை நகரத்தார் மரபைச் சார்ந்த சோமலெ, தம் மரபுப் புலவரான பாடுவார் முத்தப்ப செட்டியாருக்குக் கீழச்சிவல்பட்டியில் கோட்டம் அமைக்கும் பணியிலும் அவர் நூல்களை வெளியிடும் பணியிலும் ஈடுபட்டிருந்தார். அது நிறைவேறுமுன் 4.11.86-இல் சென்னையில் அறுபத்தைந்தாம் வயதில் காலமானார். தெ சொ.

**சோமன் பண்பாடு** சப்பானில் நிலவிய வரலாற்றுக்கு முற்பட்டகாலத் தொன்மைப் பண் பாடு. சோமன் பணபாட்டு (Jomon culture) மட்கலன கள் புகழ்பெற்றவை. இப்பணபாடு புதிய கறகாலப் பணபாட்டைச் சார்ந்தது. இப்பண்பாடு சப்பானில் உள்ள ஒக்கய்டோ (Hokkaido) தீவில் பலவேறு இடங்களில இருந்தது. சப்பானின கிழக்குப் பகுதி களில் இப்பணபாட்டு மககள் பெருமளவில வாழந் தனர். சோமன பணபாட்டு மட்கலன்களில இழை வேலைப்பாடுகள் காணப்பட்டன. சோமன் பண பாட்டு மக்கள சிறுகுழுக்களாக உள்நாட்டில் ஓடிய ஆறுகளின் கரைகளிலும் கடற்கரைப் பகுதிகளிலும் குழிவீடுகள் அமைத்து வாழந்தனர். இவாகள் வேட்டையாடுதல், மீனபிடித்தல போன்ற தொழில களை மேற்கொண்டனர். இக்காலத்தில நடத்தப் பட்ட அகழாய்வுகளின் மூலம் இம்மககள் வேளாண்மை செய்யும் முயற்சியில் ஈடுபட்டிருந தனர் எனத் தெரிய வருகிறது.



சோமன் மண்தாழி

சோமன் பண்பாட்டு மட்கலன்கள் மிதமான வெப்பத்தால் சுடப்பட்ட, சுத்தம் செய்யப்படாத களிமணணால் ஆனவை. இவை சக்கரத்தால் செய் யப்படவில்லை, திரிதிரியான இழை அமைப்பு மட் கலன்களின் மேல் காணப்படுகிறது. இம்மக்களால எளிய அமைப்புடைய சாடிகளும், கிண்ணங்களும்

முதனமுதலில் செயயப்பட்டன பின்னர்வந்த சோமன் மக்கள் செய்த மட்கலனகளில் பல்வேறு அணிவேலைப் பாடுகள காணப்படுகின்றன. இவற்றில் வளமையைக் காட்டும் சின்னங்களும் கலைநுணுக்கஙகளும் காணப் படுகின்றன. கற்கருவிகளும எலும்புக் கருவிகளும மரத்தால ஆன விலகளும் சோமன் பணபாடு நிலவிய இடஙகளில் கிடைத்துளளன. சோமன பண்பாட்டின் தோறறம் பற்றிப் பலவேறு கருத்துகள் நிலவுகின்றன. இதுபோன்ற பண்பாடு ஆசியாவின வடகிழக்கிலும் அமெரிக்காவிலும் கணடுபிடிக்கப்பட்டுள்ளது. சு இரா.

**சோமாசி மாற நாயனார்:** இவர் பெரிய புராணம் சிறப்பிக்கும் நாயன்மார்களுள் ஒருவர். தஞ்சை மாவட்டத்திலுளள பேரளத்தை அடுத்திருக்கும் பூந்தோட்டம் புகைவண்டி நிலையததிற்கு அருகே உள்ள அம்பர் என்னும் ஊரில், வேதம் பயிலும் மறையவர் குலத்தில் இவர் பிறந்தார. இவரது இயற் பெயர் மாறன் எனபதாகும. சோமாசி என்பது சிறப் பால பெற்ற அடைமொழியாகும். சிவாகமஙகளில் கூறியுள்ள முறை தவறாது சிவ வேளவிகளை நடத்தும் அநதணர்கள சோமயாசி என்னும் சிறப்புப் பெயரால் வழங்கப்பெறுவர். சோமயாசி எனனும் சிறப்புப் பெயர் சோமாசி என்று மருவி, மாறன் எனனும் இயறபெயரோடு கூடிச் சோமாசி மாறன் எனறாகி, இந்த நாயனாரின் பெயராக அமைந்துள்ளது.

இவர் சிவனடியார் யாரேனும் வந்தால அவரை உவந் தேற்றுப் பாதம் பணிந்து அமுதூட்டிப் போற்றும் பணியினோடு, சிவ வேள்விகளை விதிப்படி நடத்தும் பணியினையும் மேற்கொணடு வாழ்ந்தார். சிவனடியாரைப் போற்றிச் சிவவேள்வி புரிந்து வாழ் வதால் அமையும் வாழ்க்கைத் திறம் ஈசன் மலர்க் கழலிணை ஏத்துதலேயாகும் என்னும் கோட்பாட்டினைக் கொண்டவராக விளங்கினார். சிவனடியார் எத்தன்மையராயினும், ஈசனுக்கன்பராகிய அவரே நம்மை ஆளுடையவராவார் எனக் கொண்டு போற்றி ஒழுகிவந்தார். சிவபெருமான் திருநாமமாகிய திருவைந்தெழுத்தினை நாளும் தவறாது ஓதுவதனை நாட் கடமையாகக் கொணடிருந்தார்.

இவர் சுந்தரமூர்த்தி சுவாமிகள்பால் பேரன்பு கொண்டு, அவரோடு உடன் இருக்க விரும்பித் திருவாரூருக்குச் சென்றார். சென்று அவரை நாளும் வழிபட்டு வாழ்வதனை வாழ்வு நெறியாகக் கொண்டார். அச்சிறப்பினால் இவர் சிவலோகத்தில் இனபம் துய்த்து விளஙகும் பேற்றினை எய்தினார். இவரைச் சுந்தரமூர்த்தி சுவாமிகள் 'அம்பரான் சோமாசி மாறனுக்கும் அடியேன' என்று போற்றியுள்ளார். சோமாசி மாறனாகிய அம்பர் அந்தணன் வேதப் பொருளையும் திருவைநதெழுத்தையும் அனறி வேறொன்றும் மொழியான் என்றும், அவன் பரவை கேள்வனாகிய வன்தொண்டனுக்குத் துணைவனாவான் என்றும் கூறி நம்பியாண்டார் நம்பி போற்றுகின்றார். சோமாசி மாறா இயறறிய வேள்வி ஒன்றில சிவனும் பார்வதியும், கீழக் குலத்தவர் வடிவில வந்து அவி ஏற்றனர் என்னும் செயதி அப்பர்த்தல மான்மியத்தில் கூறப்பட்டுள்ளது். அ மா.ப.

**சோமாசுகந்தர்:** சிவன்-உமை-முருகன் ஆகிய மூன்று தெய்வங்களும், தநதை-தாய்-குழந்தை எனறு குடும்பமாகத் தோன்றும் தெய்வத் திருவடிவம். சோமாசுகநதர் என்பது வடமொழிச் சொல(சோமன் =சிவன், உமா=பார்வதி, கந்தர்=முருகன்) ஆகும். சிவாலயத் திருவிழாக்களில் சோமாசுகந்தர் திருவுருவமே தேர்களிலும்,வாகனங்களிலும் திருவீதிகளில் உலாவாக எடுத்துச் செல்லப் படுகிறது. இத்திருவுருவைச் சிவன்கோயிலில்,கருவறையின பினபகுதித திருச சுற்றில், கிழக்கு நோக்கிய மணடபத்தில காணலாம்.



சோமாசுகந்தர்-பல்லவர் காலம்-மாமல்லபுரம்

வலப்புறம் சிவனும், இடப்புறம் உமையும் அமர்ந் திருக்க இவர்களுக்கிடையில் கந்தன் சிறு குழநதை யாக நினறோ அமர்ந்தோ நடனமாடிய நிலையிலோ காணப்படுவான். கந்தன உமையின மடி மீது காணப்படுவதுமுண்டு 'ஏலவார் குழல் இறைவிககும், எம்பிரான் தனக்கும் பாலன் ஆகிய குமரவேல் நடுவுறும் பான்மை' என்று கந்தபுராணம இத்திருக்



சோமாசுகந்தர்-சோழர்காலம்-தஞ்சாவூர்க் கலைககூடம்

கோலத்தைச் சொலகிறது. சில்பரத்தினம் முதலிய சிறப நூல்களும் சோமாசுகந்தர் அமைப்பைக் கூறு கினறன இத்திருக்கோலத்தில் பொதுவாகச் சிவனும உமையும் முறையே தங்கள் வல இடக கால்களைத் தொங்கவிட்டு, இட வலக் கால்களை மடித்து; ஒரே அல்லது தனித்தனி நீண்ட சதுரத்தாமரை-இருக் யில் அமர்ந்திருப்பர். சிவபெருமான் நான்கு கைகள உடையவராகப் பின் கைகளில், மான், மழு ஆகிய வற்றைக் கொணடும் முன்னிரு கைகளில காததல, அருளல் அல்லது பிறமுத்திரைகளைக் காட்டியும விளங்குவார். இவரது முடி சடைமுடியாக இருக்கும். இவர் இடைக் கச்சை, முப்புரிநூல், வயிற்றுக கட்டு ஆகியவை அணிந்திருப்பார். காதுகள் சுருள ஓலை மகரம் ஆகியவற்றைக குண்டலங்களாகக் கொணடோ நீண்டு வளர்ந்த செவிகளாகவோ விளங்கும். இவர் நெற்றிக கண உடையவராயிருப்பார். உமை வலக் கரத்தில் மலர் ஏந்தியம் தலையில் கரண்ட முடி அணிந்தும், அதனைச் சிரச்சக்கரம் அணி செய்யவும் விளங்குவார். மார்புக் கச்சை இல்லாது, இடை யாடை கணுக்கால் வரை அணிந்து இருப்பார். கந்தன் ஆடையேதும் இல்லாது கரண்டமுடி சூடிக் கைகளில் மலர்பிடித்தோ, காத்தல், அருளல் முத்திரைகள் காட்டியோ பழம் ஏந்தியோ விளஙகுவான்; நடுவில நினறோ அமர்நதோ தாய்-தந்தையர் மடியில் விளை யாடும் சிறு குழந்தையாகவோ காணப்படுவான்.

இத்திருவுருவம் தமிழநாட்டில் மட்டிலுமே மிகுதியாகக காணப்படுகிறது. பலலவமன்னன் இராச சிம்மன, பரமேசுவர பல்லவனின் மகன். எனவே, தன்னைச் சிவபெருமானின் குழந்தை குகனாகக் கருதிச் சிவனருகில், உமை மடியில், விளையாடும் குழநதை குகனாக, குகைக்கோயிலகளில் இவ்வுருவை வடிவமைத்தான் என்று அவனிசுந்தரி கதைச் செய்யுளை மேற்கோள் காட்டிக் கருத்துத் தெரிவித துள்ளனர். சிவ வழிபாடு(சைவம்), சக்தி வழிபாடு (சாக்தம்), முருகவழிபாடு (கௌமாரம்) ஆகியவற்றை ஒருங்கிணைத்துப் பல்லவர் காலக் கட்டத்தில தோற்றுவிக்கப்பட்ட வடிவம் சோமாசுகந்தர் வடி வம் என்றும் கருதுகினறனர்.

சோமாசுகந்தர் உருவம் செம்பு அல்லது பஞ்ச லோகத்தில் செய்யப்பட்டே பெரும்பகுதி காணப் படினும், கற்சிலைகளும் மரச் சிற்பங்களும் ஓவியங களும் தமிழகததில் பல இடங்களில் உளளன. பல்ல வர், பாண்டியர் காலத்தில (கி.பி 600-900) கருவறை உட்சுவர்களில கொற்றவை, திருமால், முருகன் போன்ற தெய்வங்களைப் புடைப்புச் சிற்பங்களாகக் காட்டியவாகள சிவனைக் கருவறை நடுவில இலிங்க மாகக் காட்டியதோடு சுவரிலும்-சிவன்-உமை-முருக னாகக் (சோமாசுகந்தராக) காட்ட முனைநதனர். இவ்விதம் சுவரில காட்டப்பட்ட சோமாசுகந்தர்



சோமாசுகந்தர்-பாணடியர் காலம்-கருங்குயில்நாதன்பேட்டை

உருவங்களே தமிழ்நாட்டில் தொன்மையானவை, இவ்விதம் சுவரில் காட்டப்பட்ட சோமாசுகந்தர் உருவங்களே மாமல்லபுரத்தில் தர்மராசரதம், மகிடா சுரமர்த்தினி குகை, கடற்கரைக் கோயில்,



சோமாசுகந்தர்-நீடுர்-சோழர்காலம்

சாளுவன்குப்பம் குடைவறை ஆகிய இடங்களிலும், காஞ்சிபுரம் கைலாச நாதர் கோயில், ஏகாம்பர நாதர் கோயில், திருக்கழுக்குன்றம் மலைமீதுள்ள கோயில் ஆகிய இடங்களிலும் காணலாம். இவவிடங் சளில் சோமாசுகந்தருக்குப் பணிவிடை புரிபவர் களாகத் திருமாலும் நான்முகனும் கவரிவீசியும் வெண்குடைபிடித்தும் காட்டப்பட்டுள்ளனர். காஞசிக் கைலாசநாதர் கோயிலின திருச்சுற்றுச்சுவர் ஒட்டிய சிறு சிறு கோயில்கள் அனைத்திலும் இந்தச் சோமா சுகந்தர் திருவுருவம் எழில்வாய்ந்த பல்லவர் ஓவிய மாக இன்றும் காணப்படுகிறது.

பாண்டியர் குடைவரைக் கோயிலான திருப்பரங் குன்றத்தில் சிவனுக்கான கருவறைச் சுவரில் இலிங் கத்தின் பின்னதாகச் சோமாசுகந்தர் திருவுருவம் வடிக்கப்பட்டுள்ளது.

சோழர் காலத்திலும் (கி.பி. 900-1250) அதன் பின்னும் சோமாசுகந்தரைக் கருவறையில் கலலில வடிக்கும் வழக்கு இல்லாது போயிற்று. ஆனால், செப்புத் திருமேனியாக வடிக்கும் வழக்கு மிகுதியும் பெருகியது. பல்லவர் காலத்தில் கருவறையில் கற் சிலையாய் மிகச் சிறப்பாய்க் கானப்பட்ட இவ்வுருவ வழிபாடு,சோழர் காலத்தில் வீதி உலா எடுத்துச் சென்று, செப்புத் திருமேனியாக வழிபடும்

வழிபாடாகச் சிறப்புற்றது. இதன் தொடக்கம் பல்லவர் கால இறுதிக கட்டமாகும்

சோமாசுகந்தர் மரச்சிறபஙகன எறக்குறைய 400, 500 ஆணடுகளுக்கு முற்பட்டவையாகும். தேர் களிலும், கோயிற் கதவுகளிலும தமிழகததின தென பகுதியில் கோயில வாயில் அலஙகாரஙகளிலும சோமாசுகந்தர் திருவுருவம் இன்று மரச்சிறபங் களாகக் காட்சியளிக்கிறது. சு.இரா.

**துணைநூல்கள்:**


**இராமசாமி, மே சு ,** தமிழ்நாட்டுச் செப்புத் திருமேனி கள், தமிழ்நாடு அரசு தொலபொருள் ஆய்வுத் துறை, செனனை, 1976.

**GobinathaRao, T A.,**Elements of Hindu Iconography Vol II Part I,Indological Book House, Varnasi and Delhi, 1971.

**Srinivasan,K.R,** Cave temples of Pallavas, Archaeo logical Survey of India,Delhi, 1964.


**சோமாலியா:** கிழக்கு ஆப்பிரிக்காவில உள்ள ஒரு குடியாட்சி நாடு. பழஙகாலத்தில் சோமாலியா, 'கடவுளின் நாடு' எனச சொலலப்பட்டது. அது எகிப் திய அரசர்களின் இருப்பிடமாக நமபப்பட்டது. சுவைமிருந்த பாலும், நறுமணம் மிகக தைலமும கொடுத்து விருந்தினரை உபசரிககும் வழக்கம அஙகு இருந்ததால, அநநாடு சோமாலியா எனப்பட்டது. சோமல் என்ற சொல் பால என்னும் பொருள் படும். சோமாலி மொழிபேசும் இவர்கள் இசுலாமிய சமயத்தைச சேர்நதவர்கள். இநநாடு 6,37,657 ச கி.மீ. பரப்பளவு கொண்டது மக்கள்தொகை 3,652,000. சோமாலி மொழி தவிர இம் மக்கள் இத்தாலி, ஆஙகிலம், அராபிக்கு மொழிகளும் பேசு வர். சோமாலி மொழிக்கெனத் தனி வரிவடிவம் இல்லை. ஆனால், 1974-ஆம் ஆண்டு கண்டு பிடிக்கப் பட்ட எழுத்துமுறைசோமாலிய மொழியின் இலககிய வளர்ச்சிககுப் பெரிதும் பயனபடுகிறது,

வறண்ட நிலத்தை மிகுதியாகக் கொண்ட இந் நாடு பஞ்சத்தினாலும், வறட்சியினாலும் பெரிதும பாதிக்கப்பட்ட ஒன்றாகும். நாட்டின் நிலபபகுதியில நான்கில் ஒரு பங்கு பாலைவனமாக உள்ளது. ஒரு சில தாதுப் பொருள்கள் கிடைககினறன. பெரும் ஆலைத்தொழில்கள் குறைவாகவே உளளன. பஞ் சாலைகளும், தோல் தொழிற்சாலைகளும், கரும பாலைகளும் மிகுதியாக உளளன. கடுமையான வாழ்க்கையை அறைகூவலாக ஏற்று மக்கள் உழைத்து வாழ்கின்றனர். தொடக்கத்தில் நாடோடி வாழக்கை வாழ்நத சோமாலியர் ஆடு, மாடு, ஒட்ட கம் போன்ற விலஙகுகளை வளர்ததனர்; பினனா நிலையாக வாழத் தலைப்பட்டனர்; கலவி வளாசசி குனறியிருந்தாலும் நாளடைவில் அதில் நாட்டம கொளளத் தொடங்கினர். இந்நாட்டில புகைவணடிப் போக்குவரத்து குறைநத அளவே அமைந்துள்ளது. எனவே, சாலைகளையும் வானவழிகளையும் மககள




சோமாலியா



மொகாடிசியோ நகரம்

பெரிதும் நம்பியுள்ளனர். இங்கு விளையும முக்கிய பயிர்கள் வாழை, கரும்பு, தானிய வகைகள், கடலை பருத்தி ஆகியவை.

கிரேக்க வரலாற்றாசிரியரான எரடோட்டசு சோமாலியரைப் பற்றியும் அவர்களின் நாகரிகத்தைப் பற்றியும் எழுதியுள்ளார். நாட்டின் இக்காலத் தலை நகராகவும், மிகப்பெரிய பட்டணமாகவும், துறைமுக மாகவும் விளங்கும் 'மொகாடிசியோ' (Mogadiscio) பழங்காலத்திலேயே சிறப்புப் பெற்றிருந்தது. வடக்கே 'பெர்பெரா'வும் (Berpera), தெற்கே 'கிசுமாயு'வும் (Kismayu) முக்கிய நகரங்கள். சோமாலியாவைக் கைப்பற்றுவதில் பல நாட்டினரும் ஆர்வம் காட்டி னர். முதலில் போர்ச்சுகீசியரும், பின் சான்சிபாரி லிருந்து வந்த அரேபியரும்கூடச் சோமாலியாவின் கட லோரப் பகுதிகளைச் சிலகாலம் ஆண்டனர். பின்னர் கி.பி. 1884-ஆம் ஆண்டு சோமாலியாவின் வட பகுதியை ஆண்டவர்களோடு, ஆங்கிலேயர் ஓர் ஒப் பந்தம் செய்துகொண்டு ஒரு குறிப்பிட்ட பகுதியைத் தங்கள் ஆளுகைக்குக் கொண்டு வந்தனர். அதுவே, கி.பி. 1887-ஆம் ஆண்டு முதல் ஆங்கிலேயச் சோமாலி லாந்து எனக் கூறப்பட்டது. எத்தியோப்பியப் பகுதியில சோமாலியருக்கிருந்த மேய்ச்சலஉரிமை கி.பி. 1897 -ஆம் ஆண்டு ஒப்பந்தத்தால் வரையறுக்கப்பட்டது. சோமாலியாவில ஆங்கிலேயருக்கு இருந்த உரிமையை எதிர்த்துச் சோமாலியர் முகமது அப்துல்லா ஆசன் என்பவர் தலைமையில 20 ஆண்டுகள் போராடினர். அவர், 1920-ஆம் ஆண்டு இறந்த பின்பே, ஆங்கிலேய ரால் சோமாலியாவின்மீது முழு ஆதிக்கம் செலுத்த முடிந்தது. இரண்டாம் உலகப் போரின்போது, 1940 -ஆம் ஆண்டு, ஓர் இத்தாலியப் படை இப்பகுதியின் மேல் படை எடுத்தது. ஆனால, போரில அச்சுநாடுகள் தோற்கடிக்கப்பட்டதால், சோமாலியா விடுபட்டு ஐ நா.வின் பாதுகாப்பிற்குட்பட்டது. ஒரு குறிப்பிட்ட பகுதி 1954-ஆம் ஆண்டு எத்தியோப்பியருக்குக் கொடுக்கப்பட்டது. அதனால், சோமாலியரிடமிருந்து எதிர்ப்புத் தோன்றியது. பல போராட்டங்களுக்குப் பின் 1960-ஆம் ஆண்டு சூன் 26-ஆம் நாள இந்நாடு சுதந்திரம் பெற்றது. சூலை முதல் நாள் இதனுடன இத்தாலிய சோமாலிலாந்தும் இணைக்கப்பட்டு, இக்காலத்திய சோமாலியா என்ற நாடு உருவாகியது. பாராளுமன்ற அமைப்பைக் கொண்ட புதிய அரசிய லமைப்பு எழுதப்பட்டது. அந்நாட்டின் குடியரசுத் தலைவரான அப்துர் ரசித் அலிசெர்மார்க்கு 1969-ஆம் ஆண்டு படுகொலை செய்யப்பட்டபோது, இராணு வத்தினர் இரத்தம் சிந்தாமல் ஆட்சியைக் கைப்பற்றி னர். சோமாலியா ஒரு சமவுடைமை நாடாக அறிவிக் கப்பட்டது. நாட்டை ஆளத் தலைமைப் புரட்சிக் குழு (Supreme Revolutionary Council) அமைக்கப் பட்டது. பின், 1976-ஆம் ஆண்டு இக்குழுவின் அதி காரங்கள் யாவும் சமவுடைமைப் புரட்சிக் கட்சிக்கு மாற்றப்பட்டு இன்று மக்கள் குடியரசாக விளங்கு கிறது. படைத்துறைப் பணித்தலைவர் சையத் பார்ரி குடியரசுத் தலைவரானார். சோவியத்து ஒன்றியத்துடன் நட்புறவு ஏற்பட்டது. ஆனால், 1977 -ஆம ஆண்டு நவம்பர் மாதம் எத்தியோப்பியாவிற்கு எதிராக ஏற்பட்ட ஒகடன் (Ogaden) போரினால இவ் வுறவு முறிந்தது. வேறு எந்நாட்டிடமிருந்தும் இராணுவ உதவி கிடைக்காததால், ஒகடன போரி லிருந்து சோமாலியா விலகிக் கொண்டது. அமெரிக்க ஐக்கிய நாடுகள் 1980-ஆம் ஆண்டு சோமாலியாவின் இராணுவத் தொடர்புகளில் ஆர்வம் காட்டியது. ஆயினும் எத்தியோப்பியாவிற்கும், சோமாலியாவிற் கும் இடையே ஏற்பட்ட போரினாலும், கொரில லாத் தாக்குதலினாலும் பாதிக்கப்பட்ட எல்லைப்புற மக்கள பல அவதிக்குள்ளாகி, அகதிகளாகத் திரும்பி, சோமாலியாவின பொருளாதாரத்திற்குப் பெரும் அறைகூவலாக அமைந்தனர். 1960-ஆம் ஆண்டுமுதல் இராணுவத்திற்காகப் பெருந்தொகை செலவழிக்கப் பட்டது. வெளிநாட்டு உதவியுடன் சையத்பார்ரியின அரசாங்கம் மக்களின கல்வி, பொருளாதார மேம் பாட்டிற்காகப் பெரிதும் பாடுபட்டது. வி.பா.

**சோமேசுவரன், முதலாம் (கி.பி. 1042-1068):** தென்னிந்திய வரலாற்றில் கல்யாணிச சாளுக் கிய மரபின் புகழமிக்க மன்னன இரண்டாம் செய சிம்மனின (கி.பி. 1015-1042) மகனான இவன், தன தந்தைக்குப்பின் அரியணை ஏறினான். இவன் ஆகவ மல்லன், திரைலோக்கியமல்லன-முதலான சிறப்புப் பெயர்களைப் பூண்டிருந்தான். சாளுக்கியரின் தலை நகரத்தை மானியகடகத்திலிருந்து கல்யாணிக்கு மாற்றியவன் இவனே. இராசாதிராசன், இராசேந்தி ரன், முதலாம் வீரராசேந்திரன ஆகிய பிற்காலச் சோழ வேந்தர்களின் சமகாலத்தவனான இவன், சோழர்களுடன் தீராப்பகைமை கொண்டிருந்தான். இவன் கலிங்கர்,மகதர்,கேரளர், பாஞ்சாலர்,நேபாளர் ஆகியோருடனும் போரிட்டாரெனக் கல்வெட்டுகள் கூறுகின்றன. இவ்வேந்தனுடைய கல்வெட்டுகள் கி.பி. 1042 முதல் 1068 முடியக் காணப்படுவதால, இவன் கி.பி. 1068 வரை ஆண்டான் என்பது புலனாகிறது.

முதலாம் சோமேசுவரன் முடிசூடிக்கொண்ட போழ்து, போத்தலகெரே (Pottalakere)மாநிலத்தை ஆட்சி புரிந்து வந்தான். இவன் வேங்கிச் சாளுக்கிய ரின் அரசியலில தலையிட்டதால், சோழருடன் போரிட வேண்டிய சூழல் உருவாயிற்று. இவன்

வேங்கியைக் கைப்பற்றியபோது, வேங்கியின் சார் பாகச் சோழர் படைசோமேசுவரனுடன் மோதியது. முதலாம் இராசேந்திர சோழனின் படைத்தலைவன் சாளுக்கியப் படையுடன் களிதிண்டி எனனுமிடத்தில் போரிட்டான். இராசேந்திரனுக்குப் பின்னர்ச் சோழ அரியணையேறிய இராசாதிராசன் தொடர்ந்து போரை நடத்திச் சாளுக்கியரைத் 'தானியகடகம்' என்னுமிடத்தில் வெற்றி கொணடான். கொளளிப் பாக்கை (Kulpak)என்னும் கோட்டை தீக்கிரையாக் கப்பட்டது; மேற்கு எல்லையில் கம்பிலி அரண்மனை, கல்யாணி நகரம் ஆகியனவும் சோழரால அழிவிறகு உள்ளாயின.

தோல்வியைக்கண்டு மனம் தளராத சோமேசு வரன், கி.பி. 1050 அளவில் தன் நாட்டிலிருந்து சோழர் படையை விரட்டியதுடன், வேங்கி மனன னைத் தன்னடிபபடுத்திக் காஞ்சி வரையில், தன் வெற்றிப்படையை அனுப்பினான். சோழர் படையும் சாளுககியப் படையும் கொப்பத்தில (1052) சநதித் துக் கடும் போர் புரிந்தன. போரில் இராசாதிராசன கொல்லப்பட்டான். ஆனால, சோழரே வெற்றி பெற்றார். மனம் தளராத சோமேசுவரன், மீண்டும் சோழர் படையைக் கூடல் சங்கமததில (கிருட்டிணா துங்கபத்திரை ஆறுகள் கூடுமிடம்) சந்திததுப் போர் புரியும்படி அறை கூவல் விட்டுவிட்டுப் போர்க்களத் திற்கு வரவிலலை. சோழரை வெற்றிகொள்ளத் தன படைகளைப் புதுப்பித்த சாளுக்கிய வேநதன், நோயின் கொடுமை தாங்கவியலாது, 1068-இல் துங்கபத்திரை ஆற்றில் குருவத்தி என்னுமிடத்தில் விழுந்திறந்தான்.

தென்முகப் படையெழுச்சியில் இவன் தோல்வி கண்டபோதிலும், வடஇந்தியப் படையெழுச்சியில பல வெற்றிகளைப் பெற்றான். பரமார போசனை கி.பி. 1055-இல் வெனற இவன, திரிபுரிவேந்தன் காலச்சூரிலட்சுமி கார்னரையும் (Lakshmi-Karner of Tripuri) முறியடித்தான். கொங்கணம், சக்கரகூடா- ஆகியனவற்றை வெற்றிகொளவதில, காகதீய முத லாம் புரோளன் இவனுக்குத் துணைபுரிந்தான். சோமேசுவரனது மேலாணமை சாளுக்கிய அரசிற்கு வெளியே, இனறைய மத்திய பிரதேசத்தின் தெறகு மாவட்டங்கள், கோசலம், கலிங்கம ஆகியவற்றிலும் பரவியது. மைலாயதேவி என்னும் பேரழகி இவனது பெருமை மிக்க அரசியாவாள். இரண்டாம் சோமேசு வரன், ஆறாம் விககிரமாதித்தன், மூன்றாம் செயசிம் மன் ஆகிய மூவரும் இவன மக்களாவர்.

நல்லாட்சியாளனான இவன், அரச குடும்பத்தி னர் பலரைப் பல மாநிலங்களின் ஆளுநர்களாக நிய மித்துத் தனக்கு உதவி புரியச் செய்தான். எடுத்துக் காட்டாக பனவாசி 12000-த்தின் நிருவாகம் தன் மனைவி மைலாய தேவியிடமும், பெலவலா 3,000, புரிகெரே 300 ஆகியவற்றின் நிருவாகம் தன் மகன் இரண்டாம் சோமேசுவரனிடமும், கஙக பாடி 96000-த்தின் நிருவாகம் தன் இரணடாம் மகன் ஆறாம் விக்கிரமாதித்தியனிடமும் விடப்பட்டிருந்தன. கல்யாணிச் சாளுக்கிய மரபின் புகழ்பூத்த வேந்தருள முதலாம் சோமேசுவரனும ஒருவன ஆவான். இவன் கலயாணி நகரத்தை (கல்யாணபுரம்) அழகுபடுத்தி னான்.

**சோமேசுவரன், இரணடாம்** (கி.பி. 1068-1076): இவன் முதலாம் சோமேசுவரனுக்குப்பின் சாளுககிய அரியணை ஏறினான். சோமேசுவரனின் மூத்த மக னான இவன், ஓர் வலிமையற்ற மன்னன். தன் ஆட்சி யின் தொடக்கத்தில் தனனாட்டின மீது படை யெடுத்து வந்த சோழர் படையை இவன் தடுத்து நிறுத்தியதாகப் பெருமை பேசிக் கொள்கிறான. ஆனால், சோழர் சாசனங்கள், சோழர்படை சாளுககி யரைக் கம்பிலியில் முறியடித்ததாகக் கூறுகின்றன. இவன் தம்பி விக்கிரமாதித்தன் சாளுக்கியச் சிற்றர சர்களைத் தன் பக்கம்சேர்த்துக கொணடு, அண்ணனை வீழ்த்தும் பணியில் முனைந்து செயற் பட்டான். சோமேசுவரனோ முதலாம் குலோத்துங்க சோழனின நட்புறவுபெற்று, விக்கிரமாதித்தனை நங்கிலி என்னுமிடத்தில் முறியடித்தான். இருப்பினும் இறுதியாகச் சோமேசுவரன் விக்கிரமாதித்தனால் கைது செய்யப்பட்டான. விச்கிரமாதித்தன்கி பி. 1076 -இல் வேந்தனானான. பில்கணரின் விகரமாங்கதேவ சரிதமும், விக்கிரமாதித்தன் சோமேசுவரனை வென்ற செய்தியை உறுதி செயகிறது.

வடஇந்தியப் போர்களிலும் சோமேசுவரன் தோல்வியே கணடான். குசரத்தின் கர்ணனுடன் இணைந்து செயசிம்மனை (பரமார போசனுக்குப்பின் அரியணையேறியவன்) வெற்றி கொண்டபோதிலும், இவனது வெற்றி நீடிக்கவிலலை. சிறிது காலத்திற் குள் பரமார உதயாதித்தியன் சகமனர்களுடன் (Chahamanas) கூட்டுச் சேர்ந்து, சோமேசுவரனை வென்று, மாளவத்தினின்றும் துரத்தினான்

புவனிகமல்லன் என்னும் சிறப்புப் பெயர் பூண்ட சோமேசுவரன் சிறந்த பக்திமான்; சிவபக்தன். திறமையற்ற இவன குறுகிய காலமே ஆட்சிபுரிந் தான். இவனது ஆட்சிக் காலத்தில் உள்நாட்டுக்

குழப்பம் நீடித்தது. இவன் தம்பியரே இவனை வீழ்த்தும் பணியில் ஈடுபட்டனர்.

**சோமேசுவரன், மூன்றாம்** (கி.பி. 1126-1138): இவன் தன் தந்தை ஆறாம விக்கிரமாதித்தனை (கி.பி. 1076-1126)அடுத்துச் சாளுக்கிய அரியணையில் அமர்ந்தவன். இவனது ஆட்சிக் காலத்தில் அமைதி நிலவியது. கலை, கல்வி ஓங்கின. இவ்வேந்தனே சிறந்த கல்விமானாக விளங்கினான்.

இவ்வேந்தனது ஆட்சிக் காலத்தில் ஒய்சாள (Hoysala) விட்டுணுவர்த்தனன், சாளுக்கியரின் மேலாண்மையிலிருந்து விடுதலை பெறக் கிளர்ச்சி செய்தான். ஆனால் இக்கிளர்ச்சி அடக்கப்பட்டது. விக்கிரமசோழன் வேங்கியில் சோழரது ஆதிக் கத்தை மீண்டும் நிறுவினான். சிறந்த அறிஞனான இவன், அபிலாசிதார்த்த சிந்தாமணி அல்லது மன சொல்லசா (Abhilashitartha Chintamani or Manasollasa) என்னும் வடமொழி (Sanskrit) நூலை இயற்றிப் புகழ் பெற்றான். கலைக் களஞ்சியம் போன்ற அந்நூல் ஆட்சியை எவ்வாறு கைப்பற்றுவது, அதனை எப்படிக் காப்பது, அரசியல் அதிகாரத்தை எவ்வாறு துய்ப்பது முதலானவற்றை விளக்குவதுடன் சோமேசுவரனின் அரசியல்திறன், நீதி, நிருவாகம், மருத்துவம், சோதிடம், தருக்கம், ஆயுதங்கள், யானை ஆகியவற்றில் அவன் கொண்டிருந்த ஆற்றலை விளக்குவதாகவும் அமைந்துள்ளது. அமைதி காத்து, நல்லாட்சியை மேற்கொண்ட இவன்சர்வச்னா (Sarvajna) எனவும் போற்றப் பெறுகிறான். இவன் மாபெரும் சாதனையாளனாக விளங்காவிடினும் கல்வி வளர்ச்சிக்குப் பாடுபட்டான்.

**சோமேசுவரன் நான்காம்** (கி.பி 1184-1200): இவன் வீழ்சசியுற்ற மேலைச் சாளுக்கிய அரசை மீண்டும் நிறுவியவன். மூன்றாம் தைலப்பனின் மக னான இவன் மாவீரன்; மூன்றாம் சோமேசுவர னின் மக்களான இரண்டாம் சகதேகமல்லன் (கி.பி. 1138-1151), மூன்றாம் தைலப்பன் (கி.பி. 1151-1163) மூனறாம் சுசதேகமல்லன் (கி.பி. 1163-1183), ஆகி யோரின் ஆட்சிக் காலங்களில், வீழ்ச்சிப் பாதையை நோக்கி விரைந்து சென்ற சாளுக்கிய அரசை மீண் டும் நிறுத்தியவன். கல்யாணிச் சாளுககிய மரபின் கடைசி வேந்தனும் இவனே.

மூன்றாம் தைலப்பனின் ஆட்சிக் காலத்திலேயே சாளுக்கிய அரசு வீழ்ந்தது. சாளுக்கிய அரசில், அமைச்சனாகப் பணிபுரிந்த காலசூரி பிச்சலா (Bijjala) என்பான், தன் அதிகாரத்தைப் பெருக்கிக் கொண்டு, சாளுக்கியச் சிற்றரசாகளின் துணையுடன், தைலப்பனை வெனறு அவனைப் பனவாசிக்குத் துரத்தி விட்டுக கல்யாணி நகரத்தைக் கைப்பற்றி கி.பி. 1076-இல் விடுதலை வேந்தனாகத் தன்னைப் பறைசாற்றிக் கொண்டான். இந்நிலையில் கி.பி.1163 அளவில் தைலப்பனும் இறந்து விட்டான். பிகசலாவின் ஆட்சிக் காலத்தில் கைப்பற்றப்பட்ட சாளுக்கிய அர சினை, அவனுடைய வழியினர் கி.பி.1183 வரையில் அரசாண்டு வந்தனர். இந்நிலையில் முகிலைக் கிழித்து வெளிக் கிளம்பும் முழுமதிபோல், நான்காம் சோமேசுவரன் எழுச்சி பெற்று, சாளுக்கிய அரசின் சில சிற்றரசர்களின் உதவியால், சாளுக்கிய அரசை மீண்டும் கைப்பற்றினான. இவ்வகையில் இவன் பாணடிய மன்னனான வீரபாணடியனுக்கு (கி.பி. 946-966) ஒப்புமை கூறத்தக்கவனாவான்.

இவ்வேந்தனது கல்வெட்டுகள் கி.பி.1189 முடியக் கிடைததுளளன. இவனது ஆட்சியும் நெடிதுநாள் நீடிக்கவில்லை. சாளுக்கிய நாட்டின் வடபகுதியைத் தேவகிரி யாதவர்களும், தென்பகுதியைத் துவார சமுத்திரத்தின போசளரும் கைப்பற்றிக் கொணட னர். எனவே, சாளுக்கிய அரசு வீழ்ந்தது. வீரபாண்டி யனின் ஆட்சிக்காலத்திலேயே பாண்டிய அரசு அழிந் தது போன்று, நான்காம் சோமேசுவரனின் ஆட்சிக் காலத்திலேயே சாளுக்கிய அரசும் மறைந்தது ம.இ.

**துணை நூல்கள்:**

**Srinivasamurthy, R.** and **Ramakrishnan, K.R.** History of Karnataka, S.Chand and Company, New Delhi, 1982.

**Venkata Ramanappa, M.N.,** Outlines of South Indian History, Vikas Publishing House, New Delhi, 1976.

*சோர்காத்து*: அசாம் மாநிலத்தில் சிப்சாகர் மாவட்டத்தின தலைநகரம் சோர்காத்து (Jorhat). இது பிரமபுத்திரா துணையாற்றின்கரையில் அமைந் துள்ளது. இந்நகரம் முக்கியவாணிக நகரமாகவும் பல் வேறு நகரங்களுடன் தொடர்பு கொண்ட நகரமாக வும் விளங்கி வருகிறது. சோர்காத்து நகரம் அணி கலன்கள் செய்யும் தொழிலுக்குப் புகழ்பெற்ற நகரமாகும். அசாம் வேளாண்மைக் கல்லூரி இந் நகரத்தில் உள்ளது. அகோம் (Ahom) அரசின் தலை நகரமாக இந்நகரம் கி.பி. 18-ஆம் நூற்றாண்டில் இருந்தது. இந்நகரத்தின் மக்கள் தொகை 70,674 (1981). சு.இரா.

*சோர்(சர்) சான்*, இந்தியாவின் தலைமை ஆளு நராக கி.பி. 1793 முதல் 1798 வரை பதவி வகிதத வர். இவர் கி.பி. 1751-இல் இலண்டன் நகரில் பிறந்

தார். தந்தை சோர் தாமசு (Shore Thomas); தாயார் தோரதி (Dorathy). இவர் ஆரோ (Harrow) பல் கலைக் கழகத்தில் கல்வி பயின்றார். கிழக்கிந்திய வணிகக் குழுவில் கி பி. 1768-ஆம் ஆணடு எழுத்தர் பதவி பெற்றார். வருவாய்த் துறையில் கி.பி. 1770-இல் உதவியாளராக்கபபட்டார். இவர் தம் பொறுப்பு களைத் திறம்படச் செய்தார். பாரசீக மொழியி லிருந்த இந்தியப் பதிவேடுகளைப் பாாவையிடப் பார சீக மொழியினைப் பயினறார். வருவாய்த துறையில் கி.பி. 1772-இல உதவித் தலைவராகவும், 1775 முதல 1780 வரையிலும் கல்கததா வருவாய்த் துறைக் குழுவின் உறுப்பினராகவும், தாக்காவில் வருவாய் ஆணையராகவும் நியமிககப்பட்டார். சார்லாட்டு கார்னிசு எனற நடுத்தரக குடும்பததினைச சேர்நத பெண்ணை கி.பி. 1786-இல் மணம் புரிந்தாா. ஆணடு தோறும் நிலவரி மதிப்பிடும் திட்டம் கி.பி. 1790 வரை இருந்துவநதது. அதனை மாற்ற எணணிய காரனவாலிசு பிரபு இவரை வருவாயத் துறையின் தலைவராக நியமிததார். சா சான சோரின (Sir John Shore) ஆராயச்சியின் பயனாகப் பததாணடு களுக்கு ஒரே சீரான நிலத்தீாவை கி.பி. 1789-இல நிருணயிக்கப்பட்டது. இவரது முயற்சியால் 1793-இல நிலையான நிலவரித திட்டம் (Permanent-Settlement) ஏறபடுத்தப்பட்டது.

காரன்வாலிசு ஓய்வுபெற்றபோது இவர் தலைமை ஆளுநராக நியமிககபபட்டாா. இவருடைய திறமை யிலும் நேர்மையிலும் மற்றவர்கள கொணட நம் பிக்கை வீணபோகாமல நடநதுகொணடார். 'தலை யிடாக் கொளகையை' கி பி. 1784-இல இயறறப் பட்ட பிட்டு இந்தியச் சட்டம் (Pitt India Act) வலி யுறுத்தியது. பல இந்தியப் போர்கள வணிகக குழு அதிகாரிகளின் இலட்சியத்தின விளைவுகளே என நம்பப்பட்டதாலும், இந்தியாவில் ஆதிக்கச சமநிலை ஏற்பட்டால அமைதி நிலவும் என்பதாலும், இந்தி யாவில் ஆங்கிலக் குடியேற்றங்களுக்குப் பிற ஐரோப் பிய அரசுகளால் ஏற்படக்கூடிய இடர்ப்பாடுகள் நீங்கியமையாலும் தலையிடாக் 'கொளகை' பின் பற்றப்பட்டது. சோர் பதவியேற்றபோது ஆஙகிலக் கிழக்கிந்திய வணிகக்குழுவின் இநதிய ஆட்சி எவ்வித இடுக்கணுமின்றி இருநதது.

மேலும், மிகவும் வலிமைவாய்ந்த படையும் ஆங்கிலேயர் வசம் இருந்தது. இவர் காலத்தில் மைசூரில் திப்பு சுல்தானும், மகாராட்டிரத்தில பீசு வாககளும் (Peshwas), ஐதராபாதில் நிசாமும் வலிமை மிக்கவர்களாக இருந்தனர். நிசாமுக்கும் மராட்டியர்களுக்கும் போர் ஏற்படும் நிலை உரு வான போது நிசாம் ஆங்கிலேயர் உதவியை நாடி னார். சோரின் தலையிடாக் கொள்கை நிசாமுக்கு மனநிறைவளிக்கவில்லை. காரன்வாலிசால் நிசா முக்கு அளிக்கப்பட்ட எல்லா வாக்குறுதிகளையும் ஏற்கச் சோர் மறுத்தார். நிசாம் இரெய்மாண்டு எனற பிரெஞ்சு அதிகாரியைத் தம் படைகளுக்குப் பயிறசி யளிக்க அமர்ததினார். அயோத்தியில் சோரின் தலை யீடு வெற்றிபெறறது. நவாபு அசாபு-உத்-தௌலா கி.பி. 1797-இல் மறைந்ததால், அவர் மகன் வாசிர் அலி நவாபு ஆக்கப்பட்டார். சோர் அவரை நீககி விட்டுச் சாதார் அலி எனபவரை நவாபு ஆக்கி உடன்பாடு கணடார். அலகாபாதுக் கோட்டையும, ஆணடுக்கு 76 இலட்ச உருபாயும் பெற்றார்.

சோர், இலக்கிய ஆர்வம் கொணடவர். பாரசீக மொழியில் வல்லுநரான இவர். தம் ஓய்வுநேரங்களில் பாரசீக நூல்களை ஆங்கிலத்தில் மொழிபெயர்த் தார். வடமொழி வேதாந்த நூலகளையும் மொழி பெயர்த்தார்.

அகவிலைப் படிகளைக் காரன்வாலிசு குறைத்து விட்டமையால் வணிகக்குழு அதிகாரிகள சீறறமுறற னர். சோரின் ஆட்சிக்காலத்தில் பல எதிரபபுகள் கிளம்பின. அதனால், சோா திருப்பி அழைக்கப்பட் டார். நாடு திரும்பிய இவர் கி பி. 1798-இல ஐரிசு சபையின உறுப்பினராக்கப்பட்டார்; முதனமை ஆட்சிக் குழு (Privy Council) உறுப்பினராகவும், இநதியக் கட்டுப்பாட்டுக் குழு உறுப்பினராகவும் கி.பி. 1807 முதல் இருந்தார்; விவிலியக் குழுவின முதல் தலைவராகப் பணிபுரிநதார். சோர் கி பி. 1834-ஆம் ஆண்டு மறைந்தார். பெ.சி.

**துணை நூல்கள்:**


**Allan J., Sir T. Wolseley Haig, Dodwell H.H.**, The Cambridge Shorter History of India, S. Chand & Co. New Delhi, 1979.

**Chhabra G.S**, Advanced Study in the history of Modern India Vol. I. Sterling Publishers (Pvt) Ltd., New Delhi, 1971.


**சோர்வே** மகாராட்டிர மாநிலத்தில் அகமது நகா மாவட்டத்தில சங்கம்னர் (Sangamnar) வட்டத்தில் உள்ளதோர் ஊர். இது தொல்லியல் சிறப்புப் பெற் றது. சோர்வே விற்கு (Jorwe) வடக்கில் பிரவாரா ஆறு ஓடுகிறது சோாவேயின தொன்மையைத் தக்கா ணக் கல்லூரித் தொலலியல் துறையினர் அகழாய் வுகள் செய்து வெளிப்படுத்தினர். கி பி.11-ஆம் நூற் றாண்டைய யாதவ 'மரபுக் கல்வெட்டு ஒனறு இவ் வூரைச் சும்யாரவி கிராமம் (Jumyarave grama) எனக்

குறிப்பிடுகிறது. சோர்வேயில் நுண்ணிய கற்கருவிகளும் (Microlitnes) கிடைத்துள்ளன. இங்கு நடந்த அகழாய்வில் கண்டுபிடிக்கப்பட்ட பண்பாட்டுக் கூறுகளைக் கொண்டு இது சோர்வேப் பணபாடு (Jorwe culture) எனக் கூறப்படுகிறது. இப்பண்பாட்டில் வண்ணம் தீட்டப்பட்ட மட்கலன்களும சிறிதளவு செப்புப் பொருள்களும் ஆறு கைக்கோடரிகளும் கிடைத்துள்ளன. சோரவேப்பணபாடு வரலாறறுக்கு முற்பட்ட காலத்தைச் சார்ந்த செப்புக் காலப் பணபாடாகும்.



சோர்வேவில் கிடைத்த மட்கலன்

சோர்வே மட்கலன்கள் உளளூரில் கிடைதத களிமண்ணால் செய்யப்பட்டவை. சோர்வே மட்கலன்கள் வணணம தீட்டப்பட்டுக் காணப்பட்டன. சோர்வே மட்கலன்களில் கிண்ணங்கள், சாடிகள் போன்றவை குறிப்பிடத்தக்கவையாகும். சு.இரா.

**சோரர்கள்:** காண்க: சவரர்

**சோலன்** என்பவர் பண்டைய கிரேக்கத்தில் ஏதென்சு நகரரசில் வாழ்ந்த ஆக்க இயலபுடைய அரசியலறிஞர் ஆவர். இவர் ஒரு கவிஞரும் ஆவர். இவர் ஆதென்சு நகரரசுககுச் செய்த பல்வேறு சீர்திருத்தங்கள பிறகாலத்தில பல அரசியலமைப்புச் சீர்திருத்தங்களுக்கு வழிகாட்டியாக இருநதன.

சோலன் (Solon) ஓர் அதீனிய உயர்குடியில் கி.மு.638-இல் பிறந்தாரெனக் கருதப்படுகிறது. இவர் வாணிகம் செய்யும் நோக்கத்துடன் பல நாடுகளுக்குப் பயணங்கள் செய்தார். இவர் கி.மு.600-இல் ஏதெனசுக்கும் மெகாராவுக்குமிடையே சாலமிசுப் பகுதிக்காகப் போர் நேர்ந்தபோது, ஊக்கமின்றியிருந்த அதீனியருக்குக் கடமையுணர்வில் ஆர்வமூட்டிக்கவிதை எழுதினார். இவருடைய நாட்டுப் பற்றையும், ஆக்கத் திறனையும் கண்டு வியந்த ஆதீனியர்கள் கி மு.594-இல முககிய நிருவாக அதிகாரியாக இவரை அமர்த்தினர். இவர் தம் ஆட்சிக்காலத்தில் பல பொருளாதாரச சீரதிருத்தங்களையும், அரசியலமைப்புச் சீர்திருததங்களையும் நிறைவேற்றி, எதிரகாலத்தில அதீனிய அரசாங்கம் ஒரு முழு வளர்சசியுடைய குடியாட்சி அரசாங்கமாக வளருவதற்கு அடிப்படை அமைத்துக் கொடுத்தார். பல சீர்திருத்தஙகளைச் செய்தபின் இவர் தம் பதவிக் காலம் முடிவடைந்ததும், ஏதெனசிலிருந்து புறப்பட்டு 10 ஆணடுகளுககு எகிப்து, சைப்ரசு, சிறிய ஆசியா முதலிய நாடுகளுக்குப் பயணம்செய்தார். தாம் சென்ற நாடுகளைப் பற்றித் தம் கவிதைகளில் இவர் குறிப்பிட்டுளளார். இவர் ஏதென்சுக்குத் திருமபி வந்தபோது, அதீனியககுடிகள பல கட்சிகளாகப் பிரிநது பூசலிட்டுக் கொண்டிருநதனர். அபபூசல்களுக்கு ஓர் முடிவாகக் குடிமக்கள பிசிசுட்டிரேட்டசு (Pisistratus) என்பாரின் தலைமையில கி பி. 1561-இல் ஓர் எதேசசாதிகார ஆட்சியை நிறுவினர். மககள் உரிமையிலும் சுதநதிரக் குடியாட்சி அரசாங்கத்திலும் பற்றுடைய சோலன பிசிசுட்டிரேட்டசின எதேச்சாதிகார ஆட்சி நிறுவப்படுதல் கூடாது என்று உறுதியாக எதிர்த்தார்.

**சமூகக் குழப்பங்கள்:** சோலன் ஏதென்சின் முக்கிய அதிகாரியாகப் பதவி ஏற்றபோது, அங்கு உயர்குடிப் பிரபுக்களுக்கு எதிராகக் கீழவகுப்பாா கலகம் செய்தனர். கீழ்வகுப்பினர் ஏழைகளாகையால், அவாகளசெலவம மிக்க உயர்குடிப் பிரபுக்களிடம்பெரும் கடன்சுமையால் பிணிக்கப்பட்டிருந்தனர். உயா குடிப்பிரபுககள் நாட்டு மன்றங்களில் உறுப்பினராகவும் உயரிய அலுவலர்களாகவும் விளங்கினர். அவர்கள், பொருள் வசதி உடையவர்களாதலால் தங்களுடைய சிறு பணணைகளையும், தங்களையும் அடைமானமாக வைத்துக் கீழ் வகுப்பார் கடன் வாஙகினர் கடனைத் திருப்பிச் செலுத்த இயலாத ஏழைக் குடியானவர்கள நிலஙகளைப் பிரபுக்களிடம் இழந்ததுமன்றி, அவர்களிடததில் நில அடிமைகளாகவும் (Serfs) வேலைசெய்து பிழைக்க வேண்டிய அவல நிலையிலிருந்தனர். ஏழைக் குடியானவருடைய நிலஙகளில் நிறுத்தப்பட்ட தூண்களெல்லாம் அவை பிரபுக்களுக்கு அடைமானமாக்கப் பட்டதைக் காட்டின. இந்த அவல நிலை திரேக்கோ (Draco) என்பவருடைய சீதிருத்தஙகளால் மேலும் கடுமையாயிற்று. ஏழை மக்களுடைய கடன் சுமையை

ஒழித்தலும், நாட்டின் சட்டத்திலுள்ள கடுமையான பகுதிகளை நீக்கி, மனித இயல்புக்கு ஏற்றதாகச் செய்தலுமே சோலனின் முதல் நோக்கமாயின.

ஆட்களையும், நிலங்களையும் பிணையமாக வைத்து, மக்கள்மீது ஏற்றப் பட்டிருந்த கடன் சுமைகளைச் சோலன் ஒருசட்டத்தின்மூலம் அகற்றி எறிந்தார். இதன் விளைவாக நில அடிமை முறையும் அடிமை வகுப்பும் ஒழிந்தன. ஆட்களையும், நிலங்களையும் அடைமானமாக வைத்து வழங்கப்பட்டிருந்த கடன்கள் தள்ளுபடி செய்யப்பட்டன. அடைமான நிலங்கள் அவற்றின் உரிமையாளருக்கு மீட்கப்பட்டன. அடிமைகளாக விற்கப்பட்டவரெல்லாம், சுதந்திரக் குடிமக்களாக ஒப்புக்கொள்ளப்பட்டனர். மேலும், எதிர்காலத்தில் ஆளை அடைமானமாக வைத்துக் கடன்கள் வாங்கலாகாது என்று ஒரு சட்டத்தின் வழியாகச் சோலன் தடுத்தார். தனியார் தமக்கு உரிமையாக வைத்துக் கொள்ளக்கூடிய நிலத்தின் அளவையும் சட்டத்தின் வாயிலாக வரையறை செய்தார் இக்கடன் தள்ளுபடிச் சட்டங்கள் அளவிற் பெரிய அதீனிய நடுத்தர வகுப்பாருக்குக் குடிமை உரிமைகளை மீட்டுக் கொடுத்த நல்ல சீர்திருத்தங்களாகும்.

ஏதென்சில் தொழிலும் வாணிகமும் வளம் பெறுதற்காகச் சோலன் சில சீர்திருத்தங்களையும் கொண்டு வந்தார். மற்ற அரசுகளில் பழக்கத்திலிருந்து வந்த எடைகள், படிகள் ஆகியவற்றின் தரத்துக்கு ஒப்ப ஏதென்சிலுள்ள எடைகளும் படிகளும் இருக்குமாறு செய்தார் முன்பு குடியுரிமை இல்லாமலிருந்து வந்த தொழிலாளருக்கு அதீனிய அரசின் குடியுரிமை அளித்தார். வேளாண்மையில் ஈடுபட்டோருக்கு மாற்று வேலை வாய்ப்பு இருக்கும் பொருட்டு, ஒலிவை எண்ணெயைத் தவிர வேறெந்த வேளாண்மைப் பொருளும் வேற்றுநாட்டுக்கு ஏற்றுமதி செய்யப்படுதல் கூடாதென்று தடுத்தார்.

சோலன் செய்த மற்றொரு முக்கிய சீர்திருத்தம், கி.மு.ஏழாம் நூற்றாண்டில் ஏதென்சில் திரேக்கோ வரைந்த சட்டமுறைகளை மாற்றியதே ஆகும். திரேக்கோவின் கடுமையான குற்றச் சட்டங்களுக்கு மாறாக, கொலைக் குற்றத்தைத் தவிர, மற்றக் குற்றங்களுக்கு மனித இரக்க உணர்வுடன் கூடிய நல்ல சட்டங்களைச் சோலன் இயற்றிச் செயற்படுத்தினார்.

பெற்றோர் குழந்தைகளுக்குச் செய்யவேண்டிய கடமைகளை வலியுறுத்தியும், குழந்தைகள் பெரியோரானதும் செய்யவேண்டிய கடமைகளை வலியுறுத்தியும் சோலன் சட்டங்கள் செய்தார்.  பா.சு.

**துணை நூல்கள்:**

Fuller. Edmund, Plutarch's. Lives of the Noble Greeks, Delhi. 1968.

Barker, Ernest, Greek Political Theory: Plato and His Predecessors, London, 1951.

*சோலா. எமிலி* (கி. பி. 1840-1902): எமில எட்வர்ட் சார்லசு அந்தோனிசோலா கி.பி. 1840-ஆம் ஆண்டு பிரான்சின தலைநகரான பாரிசில் பிறந்தார். பிரான்சிசுகோ சோபலா என்ற இததாலியரும், எமிலி ஆபர்ட்டு என்ற பிரெஞ்சுப் பெணமணியும் இவர் பெற்றோராவர். சிறந்த கட்டடப் பொறியாளரான பிரான்சிசுகோ பிரெஞ்சுப் பிரதமரான அடால்பு தையர்சின் ஆணையின்படி, கி.பி. 1842-இல் தென பிரான்சிற்கு ஓர் நீர்ப்பாசனத் திட்டத்தைச் செயற் படுத்தும் பணியில் ஈடுபட்டார். இவர் கி.பி.1847-இல் இறந்த பிறகு, இவர் மனைவியும், மகனும், பாரிசுகுத் திரும்பினர்.

கல்வியில பெருநாட்டமுடையவராகச் சோலா திகழவில்லை. இவர் கி.பி. 1859-இல் தம் பட்டப் படிப்பில் தோல்வியுறறார். பல இடங்களிலும் (கி.பி. 1859 முதல் 1861 வரை) வேலை தேடி அலைந்தார். தமது உடைகளைக்கூட விற்று உண்ண வேணடிய நிலை ஏற்பட்டது. அக்காலத்தில் இவருக்கு ஏற்பட்ட அனுபவங்கள், இவருக்குப் பிற்காலத்தில், சிறந்த புதினங்களை எழுத உதவின. இறுதியில ஒரு கப்பல குழுவில் எழுத்தராக அமர்ந்தார். ஆனால், அவ் வேலை இவருக்குச் சிறிதும் பிடிக்கவிலலை. அதை விட்டுவிட்டு கி.பி.1862-இல் ஆசசெட்டு (Hachette) என்பவர் நடத்தி வந்த புத்தக வெளியீட்டகத்தில் எழுத்தராகச் சேர்ந்தார். அங்கு இவருக்கு எழுதும் சூழ்நிலை கிடைத்தது. முதலில் கவிதை எழுதத் தொடங்கிய இவர் பின் கதைகளும், புதினங்களும் எழுதினார். மனிதனின் பரிணாம வளர்ச்சி, காதலின் பரிணாம வளர்ச்சி ஆகியவை புரட்சிகரமான கருத்துகளைக் கொண்டவையாக இருந்ததால், ஆச்செட்டு அவற்றை வெளியிட மறுத்தார்; சோலாவைச் சிறு கதைகள் எழுதுமாறு ஊக்குவித்தார். சோலா முதற் சிறுகதைத் தொகுப்பு கி.பி. 1864-ஆம் ஆணடு வெளியாயிற்று. இவர் கி.பி.1865-இல் சுயசரிதை வடிவில் வெளியிட்ட புத்தகம் போலீசாரின் கவனத்தை ஈர்த்தது. அதனால் தமக்கும் தம் நிறுவனத்திற்கும் ஆபத்து விளையும் என்று கருதிய ஆச்செட்டு சோலாவை எழுதுவதையாவது தம் நிறுவனத்தின் வேலை செய்வதையாவது விட்டுவிட வேண்டும் என்றார். எனவே, தம் வேலையை விட்டு

விலகிய சோலா கி.பி. 1866 முதல் முழு நேரமும் எழுதுவதையே தொழிலாகக் கொண்டார்.

அறிவியலும் இயற்கைத் தத்துவமும் இணைந்த புரட்சிகரமான புதினங்களான 'தெரிசாராகுன்', 'வெட்கம்' என்பவை முறையே கி பி.1867, 1868-ஆம் ஆண்டுகளில் வெளியிடப்பட்டன. இவர் கி பி. 1870-ஆம் ஆண்டு எமலே என்ற கேப்ரியல் எலினார் அலெக்சாண்டரின் மகளை மணந்தார். தாயையும் மனைவியையும் காப்பாற்ற வேணடிய ஒரே ஆண மகனாக இருந்ததால், பிரெஞ்சு அரசாங்கம் பிராங்கோ-பிரசியப் போரில் ஈடுபடுவதிலிருந்து இவருக்கு விலக்கு அளித்தது. இவர் கி.பி 1871 முதல் 1876 வரை ஒவ்வோர் ஆண்டும் ஒவ்வொரு புதினம் வெளியிட்டார். இவர் வெளியிட்ட' குடிகாரன' (Drunkard-கி.பி.1877) என்ற புதினம் இவருககுப் புகழைத் தேடித்தந்தது. பிரான்சின் மிகச் சிறநத எழுத்தாளராக இவர் கருதப்பட்டார். அடுதத 16 ஆண்டுகளில் மேலும் 13 புதினங்களை எழுதினார்.

பரிசோதனைக் கூடங்களில் அறிவியல பரிசோ தனைகள் நடத்துவதுபோல, மனித குணஙகளும், பலவீனங்களும்கூட பரிசோதனைக் குட்படுத்தபபட்டு அறியப்பட வேண்டியவை எனச சோலா கருதினார. மனிதகுணம் பரம்பரையை அடிப்படையாகக் கொண்டது என்றும், மூதாதையரிடமிருநது அவர்தம் சந்ததியர் நோய்களைப் பெறுவதுபோலத தீயகுணங் களையும் பெற வாய்ப்பு உண்டு என்று உறுதியாக நம் பினார். அவற்றிலிருந்து தப்புவது கடினம் எனினும், அதைப் புரிந்து கொண்டால் கல்வி, மருத்துவம் ஆகியவற்றின் துணையோடு, மனித இயல்பை முழுமைப்படுத்த முடியும் எனறார். இத்தத்துவத்தை அடிப்படையாகக் கொண்டே பல கதைகள எழுதி னார். மூன்றாம் நெப்போலியன் பதவி ஏற்றது முதல் செடான் போரில் கி.பி.1870-ஆம் ஆண்டு செப்டம்பர் முதல் நாள் தோல்வியுற்றது வரையிலு மான நிகழ்ச்சிகளைத் தொகுத்து எழுதினார். இங் வாறு அறிவியலும், இயற்கை வாதமும் கலநத இவர்தம் கருத்துகளுக்குப் பெரும் எதிர்ப்பும் ஏற் பட்டது. பிரான்சில் சில சிறந்த ஓவியர்களைப் பாராட்டி எழுதினார். அவர்களைத் தம் கதாபாத் திரங்களாகவும் சித்திரித்தார். தம்மைப் பற்றி ஏற் பட்ட மாறுபட்ட கருத்துகளால் சோலா பாதிக்கப் படவில்லை. மாறாகத் தமக்கும் தம்நூலகளுக் கும் கிடைத்த விளம்பரமாகக் கருதினார். இலக் கவர்ச்சியையும், உடலுறவையுமே பின் னணியாகக் கொண்ட கதைகளை எழுதுபவர் என்று இவர் கருதப்பட்டார். இவர் கி.பி. 1887-ஆம் ஆண்டு எழுதிய பூமி (Earth) என்ற புதி னத்திற்குப் பெரும் எதிர்ப்பு ஏற்பட்டது. அதைத் தொடர்நது கி.பி. 1888-ஆம் ஆணடு தம்மைவிட 30 வயது குறைந்த ரூன ரொசாரோ என்ற பெண் ணுடன் தொடர்பு ஏற்பட்டது. அவள் மூலம் கி.பி. 1889-இல் ஒரு பெண் குழந்தைக்கும் 1891-இல் ஓர் ஆண குழந்தைக்கும் தந்தையானார். குழந் தையே பெறாத அவரது முதல் மனைவிக்கு இது பெருத்த அவமானத்தையும் துயரத்தையும் அளித்த போதிலும், சோலா இறந்தபின் அக்குழந்தைகளைச் சட்டபூர்வமாக ஏற்றுக் கொணடார்.

பிரெஞ்சு அரசாங்கம் யூதர்கள் மீது தன் வெறுப் பைக் காட்டத் தொடங்கியது. பிரெஞ்சு இராணுவ அதிகாரியான திரேபசு (Dreyfus) என்ற யூதர் மீது அரசத் துரோகக குற்றம் சாட்டப் பட்டது. விசா ரணை 12 ஆண்டுகள் நடைபெற்றது, சோலா அவ ரைக் குற்றமற்றவர் எனக கருதியதால், அவரை ஆதரித்தும், அரசாங்கத்தைக் கணடித்தும் எழுதி னார். எனவே, அரசாங்கம் இவரைக் குற்றவாளியாக் கியது. சோலா தண்டனையிலிருந்து தப்ப இங்கிலாந் திற்கு ஓடினார். அங்கு இவரது கதைகளை ஆஙகிலத் தில் வெளியிட்டவரான எனறி விசெடெலலி (Henry Vizetelly) என்பவர் ஆதரவில் வாழ்ந்தார். பின் பிரெஞ்சு அரசு, திரேபசு மீதான வழக்கின் தீர்ப்பில மாற்றம் செய்வதை அறிந்து, மீண்டும் பிரானசிற்கு வந்தார்.

இவர் 1902-ஆம் ஆண்டு கோடைக் காலத்தை மெடானில் கழித்துவிட்டுப் பாரிசு திரும்பினார். ஆனால், அன்று இரவு இவரது படுக்கை அறையில் பெருந் தீ விபத்து ஏறபட்டு உயிர் துறந்தார். இவரது மனைவி மட்டும் உயிர் தப்பினார். தீ விபத்தின் காரணம் தெரியவில்லை எனினும், இவரது அரசியல் பகைவர்களாலேயே இந்த விபத்து ஏற்பட்டிருகக வேண்டும் எனப் பலரும் கருதினர். இவரது இறுதிச் சடங்கு மிகச் சிறப்பாக நடைபெற்றது. பிரான்சின் மிகச் சிறந்தவர்களுக்காக என ஒதுக்கப்பட்டுள்ள இடத்தில இவரது நினைவுச் சின்னம் இடம்பெற்றது. ஆயினும், 19 முறை போட்டியிட்ட போதும்கூட, உடலுறவு பற்றி எழுதிய எழுத்தாளர் என்ற கார ணத்தால், பிரான்சின் மிகச் சிறந்த பிரெஞ்சு கலைக் கூடத்தில் இவருக்கு அங்கத்தினர் தகுதி மறுக்கப் பட்டது. இவர் பிரான்சில் கி.பி. 19-ஆம் நூற்றாண டின் தொடக்கத்திலிருந்து வந்த பழைய நடையை மாற்றி, அறிவியலுக்கும், இயற்கைக் தத்துவத்திற் கும் சிறப்பளிக்கக்கூடிய வகையில் புரட்சிகரமான கதைகள் எழுதும் ஒரு புதிய முறையைத் தோற்று வித்தார். இவர்தம் நூல்கள் ஆங்கிலத்திலும், பல்வேறு மொழிகளிலும் மொழி பெயர்ப்புச் செய்யப்பட்டுள

ளன. இவரது வாழ்க்கை வரலாற்றையும், பலர் எழுதியுள்ளனா. இவர்தம் நூல்கள பல அறிஞர் களால ஆய்வு செய்யப்பட்டுள்ளன. வி.பா

**சோலார்ப் பேட்டை:** தமிழ்நாட்டில வட ஆரக்காடு மாவட்டத்தில திருப்பத்தூர் வட்டத்தில் உளளதோர் ஊர். இவ்வூர் சென்னை பெங்களூர் இருப்புப்பாதையில் முக்கிய சந்திப்பு நிலையமாக உளளது இஙகிருந்து பெஙகளூருக்கும் திருவனநத புரம், கொச்சி, கோயம்புத்தூருக்கும் இருப்புப்பாதை வணடிகள் பிரிந்து செலகினறன. திருப்பத்தூர், வேலூாப் பெருஞ்சாலையில் திருப்பத்தூரிலிருந்து 16 கி.மீ தொலைவில கிழககாக அமைநதுளள இவ் வூருக்குத் தெறகில் நீண்ட மலைகள் அமைந்துளளன. அம்மலைகளுள குறிப்பிடத்தக்கது ஏலகிரி மலை யாகும். ஏலகிரி மலை அடிவாரத்தில் சிறந்த வேளாண் தொழில நடைபெறுகிறது. சோலார் பேட்டை தொடர்வணடிச் சந்திப்பில் தொடர் வண்டி இயந்திரங்களைப் பழுதுபார்க்கும் சிறு தொழிற்கூடம் ஒன்று உளளது. இவ்வூர் முன்பு சோலைகள நிறைந்த ஊராக இருந்ததால சோலை யார் பேட்டை எனக் கூறப்பட்டு இப்பொழுது மருவிச் சோலாாப்பேட்டையானதாகக (Jolarpet) கூறுவர். ஊரின் மக்கள் தொகை 21,603. சு.இரா.

**சோலோ இனம்:** இந்த இனத்தவர் தென அமெரிக்காவில பெரு(Peru), பொலிவியா நாடுகளில் வாழும் தொன்மைககுடியினராவர். சோலோவினர் (Cholos)அமெரிகக இந்திய வழிவந்தவர்கள் என்றோ இசுபானியர்கள் (Spanish) வழிவந்தவர்கள் என்றோ கூறுமளவிறகுத் தனிப் பணபுகளைப் பெறறிருக்க விலலை. இவ்விரு நாட்டினத்தவாகளின கலப்பி னால் உண்டானவர்களாய்க் கருதப்படுகினறனர்.

பெரு, பொலிவியா முதலான பகுதிகளுக்கு இசு பானியர்கள் கி பி. 16-ஆம் நூற்றாணடில் வந்தனர். அவர்கள் இங்குக் குடியேறியபோது சோலோ இனத் தவர்கள இன்காப்(Inca) பேரரசின கட்டுப்பாட்டிற் குள் இருநதனா. அககாலத்தில் இவர்கள் மிகச் சிறநத நாகரிகததைக் கொண்டிருந்தனர். ஆனல், இசுபானி யர்களின குடியேற்றத்திறகுப பிறகு சோலோ இனத் தவர்களின பகுதிகள இசுபானியாகளால் கைபபற்றப் பட்டன. அதனைத் தொடர்ந்து கத்தோலிக்கச் சமயம் விரைந்து பரவியது. சோலோ இனத்தவர் களின் தொன்மையான சமய நெறிகளும் பிற அமெரிக்க இந்தியர்களின சமய நெறிகளும் இணையத் தொடஙகின. சோலோ இனத்தவருள ஒருசிலர் இசுபானிய மொழியையும் கறறுக்கொணடனர். ஆதிக்கம் பெறறஇசுபானியர்கள திணைககுடிகளைப்


சோலோ பெண்

(Natives) பலவழிகளில் அடக்குமுறை செய்யத் தொடஙகினர்.

இன்று பொலிவியாவில் அமெரிக்க இந்தியர் களின் எணணிக்கை மிகுதியாகும. தென அமெரிக்கா வில உள்ள எந்த ஒரு நாட்டைக்காட்டிலும் பொலி வியாவில அமெரிகக இந்தியர் மிகுந்த எண்ணிக்கை யில் உள்ளனர் பொலிவியா நாட்டில் 65 விழுக்காடு இந்தியர்களும் 30 விழுக்காடு சோலோ இனததவர் களும், பெரு நாட்டில் 50விழுக்காடு இந்தியர்களும், 35விழுக்காடு சோலோ இநதியர்களும் உளளனர். இக்காலச் சோலோ இனத்தவர்கள இசுபானிய மொழியையும் தங்களின சொந்த மொழியான குவச் சுவா(Quachua)மொழியையும் பேசுகினறனர்.

சோலோ இனத்தவர்களின் சமுதாய, பொருளா தார வாழ்க்கையில் இசுபானியர்களின தாககம் மிகுதியாக உள்ளது. இசுபானியர்கள் இப்பகுதியில் அமைத்த இலா பாசு (La Paz) என்னும் தலைநகரம்

12,000 அடிகளுக்கு மேலான மலையுச்சியில் அமைக்கப்பட்டது. இது உலகத்திலேயே மிக உயரமான இடத்தில் அமைக்கப்பட்ட தலைநகரமாகும். இசுபானியர்கள், காடுகள் மிகுதியான சமவெளிப் பகுதிகளை மிகுதியாக ஆதிக்கப்படுத்திக்கொள்ளாமல் கடல்சார்ந்த பகுதிகளில் வணிகத் தளங்களை அமைத்துக்கொண்டு கடல்வழி வாணிகங்களையே பெரும்பான்மையாக நம்பியிருந்தனர். இந்நிலையில் இசுபானியர்களின் ஆதிக்கம் மிகுந்த வணிகப் பொருளாதாரத்திற்கும் இந்தியர்களின் எளிமையான பொருளாதாரத்திற்கும் இடைப்பட்ட நிலையில் சோலோ இனத்தவரின் பொருளாதாரம் அமைந்திருந்தது. இன்று குடியேற்ற அரசுகளின் ஆதிக்கம் இல்லாததாலும் நகர்மயமாக்கத்தினாலும் பொலிவியாவின் பொருளாதாரமும் சோலோ மக்களின் பொருளாதாரமும் பெருமளவு வளர்ச்சியடைந்துள்ளன. பெரும்பான்மையோர் வாணிகம் செய்கின்றனர். இவர்கள் தாம் செய்துவந்த கூலித்தொழிலையும் எடுபிடி வேலைகளையும் விட்டுவிட்டனர். இவர்களைப் போன்றே அமெரிக்க இந்தியர்கள் பலரும் உணவுத் தானிய வாணிகம் செய்வதில் ஈடுபட்டுள்ளனர். இவர்கள் தங்களை நகர இந்தியர்கள் என்று தனிமைப்படுத்திக் கூறிக்கொள்கின்றனர்.

சோலோ சமய நம்பிக்கைகள் பெரும்பாலும் அமெரிக்க இந்திய மக்களின் நம்பிக்கைகளை ஒத்துள்ளன எனலாம். இவர்கள் பச்சம்மா அல்லது பூமித்தாய் என்னும் கடவுளை முதன்மையாக வணங்குகின்றனர். ஒவ்வொரு வியாழக்கிழமை நண்பகலிலும் மக்கள் எல்கால்வாரியோ (El Calvario) என்னும் இடத்திலுள்ள பச்சம்மாவை வழிபடுகின்றனர். வழிபாட்டினை யாத்திரி (Yatiri) என்னும் பூசாரி நடத்துகிறார். சாம்பிராணி இட்டுத் தூபங்காட்டுதல் இவர்களிடையேயுள்ள முதன்மையான வழக்கமாக உள்ளது.

உடல்நலக் குறைவிற்குத் தீய ஆவிகளே காரணமென இவர்கள் நம்புகின்றனர். இவற்றைத் தீர்ப்பதற்கு ஒருசில வேளையில் சூனிய மருத்துவர்கள் அழைக்கப்படுகின்றனர். பெரும்பாலான நோய்களுக்கு மூலிகை மருந்துகளும் கனிம வகைகளும் பயன்படுத்தப்படுகின்றன. ஆண்டிஸ் பகுதிகளில் உள்ள நகரங்களில் ஒவ்வொரு கடைவீதியிலும் நாட்டு மருந்து வகைகள் விற்கப்படுகின்றன. இவ்வகை மருந்துகளில் அமெரிக்க இந்திய மக்கள் மிகுந்த நம்பிக்கை கொண்டுள்ளனர்.

பொலிவியா, பெரு ஆகிய நாடுகளில் மேட்டு நிலப் பகுதியில் வாழும் சோலோ இனத்தவர்கள் பசியை அடக்கக் கோகோ இலையை உண்கின்றனர். இவர்கள் மிகுதியான அளவில் குடிக்கின்றனர். கல்வித் துறையில் வளம்பெறாத இவர்கள் இன்று தங்கள் குழந்தைகளைப் பள்ளிக்கு அனுப்பி வைக்கின்றனர். ஒருசிலர் அரசின் உயர்பதவிகளிலும் தொழிற்றுறையில் ஓங்கிய நிலையிலும் உள்ளனர். சீ.ப.

**சோவியத்து உருசியா:** காண்க: உருசியா.

**சோவியத்துப் பொருளாதாரம்:** பொருளாதார வளர்ச்சி பெற்றிருக்கும் நாடுகளுள் ஒன்றாகச் சோவியத்து உருசியா விளங்குகிறது. உருசியாவின் அறிவியல், பொருளாதார முன்னேற்றங்கள் உலக நாடுகளில் கவர்ச்சிமிக்க ஒன்றாகக் காணப்படுகின்றது. உருசியாவின் வரலாற்று, பொருளாதார மாற்றங்களில் ஒரு திருப்பு முனையை ஏற்படுத்தியவர் இலெனின் ஆவார்.

இலெனின் கி.பி. 1895-இல் மேற்கொண்ட முயற்சியினால் மார்க்சிய அமைப்புகள் பண்ணை அடிமை முறையை எதிர்த்துத் தொழிலாளர்களின் விடுதலைக்காகப் போராடும் சங்கத்துடன் (League of Struggle for the emancipation of working Class) இணைந்து தொழிலாளர் இயக்கத்தைச் சமநிலைக் கொள்கையின் அடிப்படையில் இயங்கச் செய்தன.

இலெனின் அன்றிருந்த உருசியாவுக்கும், உலகுக்கும் ஏற்றவாறு மார்க்சியக் கோட்பாடுகளை மாற்றியமைத்தார். முதலாளித்துவம் வளர்ச்சி பெற்ற சமுதாயத்துக்கே மார்க்சியம் ஏற்றதாக இருந்தது. ஆனால், உருசியாவில் முதலாளித்துவம் பின்தங்கிய நிலையிலிருந்தது. முதலாளித்துவ நாடுகளின் பொருளாதாரம் முதலாளிகளின் கையிலிருந்தது. பல முதலாளிகள் பல்வேறு தொழில்களைத் தொடங்கினர். போதிய ஆதாயம் கிடைக்காத காரணத்தால் மூலதனம் வெளிநாடுகளுக்கு இடம் பெயரலாயிற்று. அதன்காரணமாக முதலாளிகள் பலமான போட்டிகளையும் பூசல்களையும் வளர்த்தனர்.

உருசியாவில் 1903-இல் சமநிலைச் சனநாயகத் தொழிலாளர் கட்சி (Social-Democratic Labour Party) ஏற்பட்டது. அதன்பின்பு உருசியாவில் 1905-இல் நடந்த பொது வேலைநிறுத்தத்தைத் தொடர்ந்து தொழிலாளர்கள் இரு பிரிவினராகப் பிரிந்தனர். இந்நிலையில் பொருளாதாரத் துறையைப் பின்பற்றி மிதவாதத்தை நாடிக் கடுமையான கட்சிக் கட்டுப்பாடு கூடாது என்ற கருத்தைச் சிறுபான்மையினரே ஆதரித்ததால் அப்பிரிவை மென்சுவிக்குகள் (Menshiviks) என்றும், இலெனினைப் பின்பற்றித் தீவிரவாத, புரட்சிகரமான போக்கை விரும்பியவர்கள் பெரும்பான்மையாக இருந்ததால் அவர்கள் போல்

சுவிக்குகள் (Bolshiviks) என்றும் சொல்லப்பட்டனர். இந்தப் பிரிவினரின் கருத்துகள மார்க்சியக் கோட்பாடுகளின் அடிப்படையில் பிறந்ததால், இதுவே பினபு உருசியப் புரட்சி என்றும், போல்சுவிக்குப் புரட்சி எனறும் அழைக்கப்படுகிறது. அதனை இலெனின் ஏற்று நடத்தியதால் அவர் சோவியத்துச் சமுதாயத்தின் தந்தை எனப் புகழப் பெற்றார்.

முதல் உலகப்போரைத் தொடர்ந்து உருசியாவில் 1917-ஆம் ஆணடு, பிப்பிரவரிப் புரட்சிக்குப்பின், கெரனசுகி (Kerensky) யின் தலைமையில் 1917 மார்ச்சில் ஓர் இடைக்கால அரசு அமைக்கப்பட்டது. உலகப்போருக்குத்தேவையான பொருள்களைச சேர்ப்பது அதன் முதல் வேலையாக இருந்தது. இநநிலையைச் சமாளிக்க அரசு உணவுப் பொருள் வணிகத்தைத் தனதாக்கி, தனிப்பட்ட வணிகர்கள் அதில் தலையிடாமல் தடுத்து, தானியத்தின் விலையைத் தானே வரையறுத்தது. அவ்விலையில் தங்கள் உபரி தானியங்களை எல்லாம் அரசிடம் ஒப்படைக்க வேண்டுமென்று வேளாண்மையினர் வற்புறுத்தப் பட்டனர். இம்முடிவை ஒப்புக் கொளளாமல மக்கள் வெகுண்டு இலெனின் தலைமையில் புரட்சியில் ஈடுபட முனைந்தனர். இலெனின் இடதுசாரி சமூகப் புரட்சிக் கட்சியினருடன் (Left Social Revolutionary Party) ஒரு கூட்டணியை (Smytchka) அமைத்து திராட்சுகி (Trotsky), இசுடாலின (Stalin) ஆகியோரின் துணைகொணடு மக்களைத் திரட்டி அப்பொழுது ஆட்சியிலிருந்த கொடுங்கோல் மன்னன், சார் (Tsar) ஒழியவேண்டுமென்றும், 'உழவனுக்கே நிலம் சொந்தம்' என்றும் பறை சாற்றினர். ஊரகச் சோவியத்துகளின் நடவடிக்கைகளால் பல நிலப் பிரபுக்கள் நிலங்களைப் பறிகொடுத்தனர். எங்கும் வேலைநிறுத்தம். இந்நிலையில் போல்சுவிக்குகள, கிரெம்லினைத் தாக்கினர். புரட்சி எங்கும் காட்டுத் தீப் போல் பரவி, அரசாங்கம் தோலவியுற்று, சாரின் (Tsar) ஆட்சி முடிவுற்றது. போல்சுவிக்குகள் ஆட்சியைக் கைப்பற்றினர். இதுதான் 'நவம்பர் புரட்சி' (November Revolution) என்றழைக்கப்படும் சோவியத்து ஆட்சியை ஏற்படுத்திய புரட்சியாகும்.

இப்புரட்சிக்குப் பிறகு சோவியத்துக் குடியரசுகள பல உருவாயின. அவை யாவும் ஒன்றுசேர்ந்து அக, புற விரோதங்களை முறியடித்து, உள்நாட்டுக கலகத்திற்குப் பிறகு பொருளாதார அமைப்பைச் சீர்செய்தன. சோவியத்து முதல் மாநாடு 1922-ஆம் ஆண்டு மாசுகோவில் கூடிச்சோவியத்துச்சமநிலைக் குடியரசுகளின் ஒனறியம் (Union of Soviet Socialist Republics)அமைப்பதற்கு முடிவெடுத்தது. இவ்வொன்றியத்தின் மக்கள அமைச்சரவைக் குழு இலெனின் தலைமையின் கீழ் அமைக்கப்பட்டது. பின் உற்பத்திக் காரணிகள் யாவும் நாட்டுடைமையாக்கப்பட்டுப் பொருளாதார நிருவாகம் அரசின் கைக்கு மாற்றப் பெற்று உற்பத்தி, பங்கீடு ஆகியவற்றின் அரசின் கட்டுப்பாடு மிகுந்தது. அரசு 1918 சூன் முதல்1921 மார்ச்சு முடியப்பின்பற்றிய கொள்கை'போர்க்காலப் பொதுவுடைமை' (War Communism) எனப்பட்டது.

அக்காலத்தில் எல்லாப் பொருள்களும் பற்றாக் குறையாக இருநதன. மூலப் பொருள்களும், எரி பொருள்களும் போதுமான அளவு கிடைக்காததால் 1920-இல் தொழில் உற்பத்தி போருக்கு முந்திய உற்பத்தியைவிடக் குறைந்திருந்தது. இந்நிலையில் செலவம் பங்கிடப்படாமல் வறுமையும், பட்டினியுமே பங்கிடப்பட்டன. அரசாங்கத்தின வரவைவிட செலவு மிகுந்து பற்றாக்குறை பெருகிவந்தது. இதனை ஈடு கட்டும்வணணம் அரசு, காகிதப்பணம் வெளியிட்ட தனால் பணத்தின் மதிபபு மிகக் கீழான நிலையை யடைந்தது.

எனவே, போர்க்காலப் பொதுவுடைமையைச் செயற்படுத்தப் பலவேறு திட்டங்கள் கொணடுவரப் பட்டன. அவற்றுள, நாட்டுடைமையாக்குதல் தலையாயது. அதற்கான இரு முக்கிய காரணஙகளாவன, 1) முதலாளிகள, பிரபுக்கள கையிலிருக்கும் பொருள வளத்தைக் கைப்பற்றுவது; 2) உள்நாட்டுப் போரைத் திறமையாக நடத்த உற்பததியைத் தொழிலாளர்கள கட்டுப் பாட்டிற்குள கொணடுவருவது. செருமனி உருசியாவிலுள்ள தன் சொந்தத் தொழில்களை நாட்டுமையாக்குவதிலிருந்து விதிவிலக்களிக்கக் கோரும் என்ற வதந்தி இருந்ததால் அரசு விரைவில் நாட்டுடைமையாக்கும் திட்டத்தைச் செயற்படுத்தியது. பொது நாட்டுடைமையாக்கும் ஆணை (Decree of General Nationalisation) 1918-இல் வெளியிடப்பெற்றது. இதன்படி 1 மில்லியன் உரூபிள மூலதனத்திற்குமேல் கொண்டிருந்த அனைத்துப் பெரிய நிறுவனங்களும் நாட்டுடைமையாக்கப்பட்டன. ஐந்து ஆள்களுக்கு மேல் பணிசெய்யும் எல்லாக் கைத் தொழிற் கூடங்களும் நாட்டுடைமையாக்கப்பட்டன.

தலைமைப் பொருளாதாரக் குழு, நாட்டின் தொழில்களை இணைத்து உற்பத்தியை நெறிப்படுத்தியது. இதன்படி தொழில்கள் மூன்றாகப் பகுககப் பட்டுப் பெருந் தொழில்களைக் கிளாவ்கி (Glavki) நிருவகித்தது. நாட்டு அங்காடிக்குப் பொருள்களை உற்பத்தி செய்யும் நடுத்தரத் தொழில்களின நிருவாகம் கிளாவ்கியின் கட்டளைப்படி செயற்பட மாநிலப் பொருளாதாரக் குழுக்கள் அமைக்கப்

பட்டன. தொழிற்றுறையுடன் பிற பொருளாதாரத் துறைகளை இணைக்கத் தொழிலாளர் பாதுகாப்புக் குழு நிறுவப்பட்டது. எதிர்பார்த்த வகையில் உற்பத்தி பெருகாததால் இன்றியமையாத தொழில்களை அதிர்ச்சித் தொழில்கள் (Shock Industries) என்று பிரித்து அவற்றை அரசின் நேரடிக் கவனத்தில் வைத்தனர்.

வேளாண்மை நிலம் நாட்டுடைமையாக்கப்பட்ட தால் பெரிய பண்ணைகளின் எண்ணிக்கை குறைந்தது. போருக்குமுன் 25 விழுக்காடு மட்டும் சாகுபடி உற்பத்தியில் வேளாண்மையினருக்கு வழங்கப்பட்டது. பெரிய பண்ணைகளின் எண்ணிக்கை குறைந்ததால் அங்காடிக்கு வரும் உபரி தானியத்தின் அளவும் குறைந்து பதுக்கலும், கள்ளச் சந்தையும் வளர்ச்சி யடைந்தன.

உணவுப் பொருள்களையும் மூலப் பொருள்களை யும் வேளாண்மையினரிடமிருந்து கொள்முதல் செய் யும் பொறுப்பு, அளிப்பு அமைச்சரவை (Commissariat of Supplies) யிடம் இருந்தது. வேளாண்மைப் பண்டங்களை மூன்று வகைகளாகப் பிரித்துள்ளனர். 1) கட்டாயக் கொள்முதல், 2) அரசிடம் மட்டுமே விற்கக்கூடிய பொருள்கள், 3) யாரிடமும் பரிமாற்றம் செய்யக்கூடிய பொருள்கள் என்பவை அப்பிரிவுகளா கும்.

அரசு, ஆங்காங்கே சோவியத்துச் சமுதாயங் களையும், சோவியத்துப் பண்ணைகளையும் (Soviet Communes and Soviet Farms) அமைத்தது. இப் பண்ணைகளில் ஓய்வுபெற்ற இராணுவ வீரர்களும், நகரங்களில் வேலையற்றிருப்போரும் சேவை செய் தனர். பொதுச் சந்தைகள் ஒழிக்கப்பட்டு அரசு நடத்திய கடைகள், வேளாண்மைக் கூட்டுறவுச் சங்கங்கள், தொழிற் கூட்டுறவுச் சங்கங்கள் இவற்றின் மூலம் பெரும்பாலும் பொருள்கள் பங்கீடு செய்யப் பெற்றன. பண்டமாற்று முறையிலேயே கொடுக்கல் வாங்கல் நடைபெற்றது. பணம் ஒரு இடையீட்டுக் கருவியாகப் பயன்படுத்தப்படுவது குறைந்தது. வேளாண்மை அமைச்சரவையும், அளிப்பு அமைச்சர வையும் இணைந்து பொருள்களை வாங்கிப் பிரித்துப் பங்கிட்டு வேளாண்மையினருக்கு விளைபொருள் களுக்கு ஈடாக நுகர்பொருள்கள் அளிக்கப்பட்டன.

போர்க்காலப் பொதுவுடைமையில் கூட்டுறவுச் சங்கங்களெல்லாம் அரசின் ஆணைப்படி இயங்க வேண்டிய நிலை ஏற்பட்டது. அரசியல் அதிகாரங் களைச் செயற்படுத்துவதில் தொழிலாளர்களின் கை ஓங்கியது. இலெனின் பலவகைகளிலும் பொருளாதாரம் தொழிலாளர்களின் கட்டுப்பாட்டிற்குள் வர நடவடிக் கைகள் எடுத்தும் போர்க்காலப் பொதுவுடைமைத் திட்டங்கள் எதிர்பார்த்த முடிவுகளைத் தரவில்லை. பண்டமாற்று முறை வலுப்பெற்றது. இந்நிலையில் 1921-இல் புதுப் பொருளாதாரக் கொள்கை (New Economic Policy, 1921-27), ஏற்றுக்கொள்ளப்பட்டது.

சீர்குலைந்த பொருளாதாரத்தை மாற்றியமைக் கத் திட்டமிட்டு முன்னேறுவதே தக்க பலனைத் தரு மென்று எண்ணிப் 'புதுப் பொருளாதாரக் கொள் கை'யை இலெனின் செயற்படுத்த முற்பட்டார். இதனை 'அரசின் முதலாளித்துவம்' என்றும், 'மாற் றுக் காலக் கணிப்பு முறை' (Transitional Mixed System) என்றும் குறிப்பிட்டார். அலெக்சாண்டர் பெய்கோவ் (Alexander Baykov) புதுப் பொருளா தாரக் கொள்கையைப் பொருளாதாரத்தின் பகுதி களுக்குத் திட்டமிட முயல்கின்ற சமநிலையின் இயல் புகளையும், போட்டி முதலாளித்துவத்தின் நிறுவ னங்களையும் கொண்ட இரட்டை முறை என்று விளக்கினார். இவ்வமைப்பைக் கொண்டுவந்ததற்கு மூன்று நோக்கங்கள் இருந்தன 1) உற்பத்தியை எப்படிப் பெருக்குவது, 2) தொழிலாளர்கள், வேளாண்மக்கள் மனத்திலிருந்து கசப்பை நீக்கி அரசியல் நெருக்கடி ஏதும் ஏற்படாமல் தடுப்பது, 3) எல்லா அடிப்படை உற்பத்திக் காரணிகளையும் அரசின் கையில் வைத்துக் கொண்டு சமநிலைச் சமுதாயத்திற்கான அடித் தளத்தை உருவாக்குவது என்பவை அந்நோக்கங் களாகும்.

மேற்கூறிய அமைப்பை நடைமுறைப்படுத்தப் பல சீரமைப்புகள் செயற்பட்டன. வேளாண்மை, அரசின் கட்டாயக் கொள்முதலின் காரணமாகவும், உள்நாட்டுப் போர்களாலும் சீர்குலைந்திருந்தது. தேவையான உணவை மக்களுக்கு அளிக்க வேண்டிய கடமையை அரசு உணர்ந்து வேளாண் மாந்தர் மீது சுமத்தப்பட்ட கட்டுப்பாடுகளைத் தளர்த்திச் சுதந் திரம் வழங்கியது. இதனால், 1925-இல் சாகுபடி நிலத் தின் அளவு போருக்கு முந்திய நிலையை எட்டியது. கட்டாயக் கொள்முதல் நீக்கப்பட்டு வரி, விளை பொருளாக வாங்கப்பட்டது. வரியானது வேளாண் குடும்பத்தினர் எண்ணிக்கை, சாகுபடி செய்த நிலத் தின் அளவு, விளைச்சல், சொத்தின் மதிப்பு ஆகிய வற்றை அடிப்படையாக வைத்து விதிக்கப் பட்டது. ஏழை வேளாண்மையினர் வரிவிலக்குச் சலுகைகள் பெற்றனர். விளைபொருளில் 1923-இல் பல வரிகள் செலுத்துவதற்குப் பதிலாக ஒரே வேளாண்மை வரிமுறையைக் கொண்டுவந்தனர். பணச்சீர்திருத்தம் 1924-இல் ஏற்பட்டபிறகு வரியைப் பண்டமாகவே செலுத்த அனுமதிக்கப்பட்டனர். இலெனின் 1924 சனவரியில் இறந்தது புதிய சோவியத்து அரசுக்குப் பெரும் இழப்பாயிற்று. அவர் நினைவாகப் பெட்ட

ரோகிராடு நகரத்தை இலெனின்கிராடு எனப் பெயர் மாற்றிவைத்தனர். சோவியத்து மக்கள் இலெனின் விருப்பத்திற் கேற்பச் சமநிலைச் சமுதாயம் அமைப்பதில் ஈடுப்பட்டனர். சமநிலை நோக்கில் 1925-இல் பெரிய வேளாண்மையினரைப் பாதிக்கும் வணணம் வளர்வீத வேளாண்மை வரியை விதித்தனர். ஏழை வேளாண்மையினரை ஊக்குவிக்கும் வண்ணம் கூட்டுறவு முறைகள் பின்பற்றப்பட்டன. ஆனால், வேளாண்மைச் சாகுபடி முறைகளில் பெரிய மாறுதல் ஏதும் ஏற்படவில்லை.

அரசு, கூட்டுப் பண்ணைகளை அமைப்பதற்குக் கூட்டுறவுச் சங்கங்களின் மூலம் உதவி அளித்தது. அரசும் கூட்டுப் பண்ணைகளை (Collective Farms) அமைத்தது. சமுதாயப் பண்ணைகள் (Communes), கூட்டுறவுத் தொழிற்சங்கங்கள் (Actels)வேளாணமை மன்றங்கள் ஆகியன 1925-இல் காணப்பட்டன. கடன் வழங்குவதில் கூட்டுப் பணணைகளுக்கு முதலிடம் கொடுக்கப்பட்டது. இருந்தும், போருககுப்பின் வேளாணமைப் பொருள்களின அளவு சுருங்கி எதிர் பார்த்த அளவு சந்தைக்குத் தானியம் வராததால், அரசு கூட்டுப் பணணைகள், அரசுப் பண்ணைகள் தானியத் தொழிற்சாலைகள் ஆகியவற்றை வலுப்படுத்தி அவற்றின் மூலம் உற்பத்தியைப் பெருக்க முற்பட்டது.

சமநிலைக் கொள்கையைச் செயற்படுத்த வலுவான தொழில், அடிப்படைத் தேவை என்பதனை உணர்ந்து தொழில் வளர்ச்சியில தனியாருக்கு வாய்ப்பளிக்க வேண்டுமென்று எண்ணி, பொருளாதாரத்தைக் கட்டுப்படுத்தும் உயர்நிலைத் தொழில்களை அரசு வைத்துக்கொணடு சிறு தொழிலகளைத் தனியார் கையில் விட முடிவு செய்யப்பட்டது. ஆனால், தனியார் நிறுவனங்கள எதிர் பார்த்த பலனைத் தரவில்லை. குவிதல் முறையில் அமைந்திருந்த தொழில் நிருவாகத்தைப் பரவலாக மாற்றியமைத்தனர். வெசங்கா (Vesenka) எனப்படும் தலைமைப் பொருளாதாரக் குழுவின் கட்டுபாட்டுக்குள எல்லா வகைத் தொழில்களும் கொண்டு வரப்பட்டன. இன்றியமையாப் பெருந் தொழில்களைத் தலைமைப் பொருளாதாரக்குழு தனநேரடிப் பொறுப்பில ஏற்றுக் கொண்டு பிறதொழில் நிறுவனங்களை நிருவகிக்கப் பொறுப்பாட்சி அறக்குழுக்களை (Trusts) அரசு நிறுவியது.

பொறுப்பாட்சிக் குழுக்கள் இரு வகையாகப் பிரிக்கப்பட்டிருநதன. அவை: 1) ஒரேவகைப் பணடங்களை உற்பத்தி செய்யும் நிறுவனங்கள்-செஙகுத்து இணைப்பு (Vertical Combination), 2) ஒரேமாதிரி நிறுவனங்களைக் கொண்ட படுக்கைக் கோட்டிணைப்பு (Horizontal Combination). பிற ஒன்றியப் பொறுப்பாட்சிக் குழுக்கள (Trusts of the Union), குடியரசுகளின் பொறுப்பாட்சிக் குழுக்கள (Trusts of the Republic) ஆகியன குறிப்பிட்ட பகுதிகளுக்கான பொறுப்பாட்சிக் குழுககளாகும். ஆயவுக் குழுவும், தணிக்கைக் குழுவும் பொறுப்பாட்சிக் குழுக்களின் அலுவல்களைச் சரிபார்த்தன. ஒவ்வொரு பொறுப்பாட்சிக் குழுவுககும் தனி நிதியுரிமை வழங்கப்பெற்றது. அரசின வங்கி (State Bank) மறுபடியும் அமைந்தபொழுது 1921-இல் தொழில நிறுவனங்களுக்கு நிதியுதவி கிடைத்தது. தனி நிருவாகம் ஏற்பட்டவுடன பெரும்பாலான நிறுவனஙகள் தஙகள் பொருள்களை விரைநது விற்கப் பல இடஙகளில் விற்பனை நிலையங்களை அமைததன.

கனரகத் தொழிலகள 1920-25வரை புத்துயிர் பெறறன. தொழில உற்பத்தி ஆணடுதோறும 41 விழுக்காடு வேகத்தில் கூடியது. போககுவரதது வசதிகளும் பெருகின.

உள்நாட்டு வாணிகத்தில் பழைய அங்காடி மீணடும் உயிர்பெற்றதால வேளாணமையும் தொழிலும் மறுமலர்ச்சியடைநதன. அவற்றிற்கு வாணிகச சுதந்திரம வழஙகினர். அதன் விளைவாக, உளநாட்டு வாணிகத்தில தனிவணிகர்கள (Nepman) தலைதூக்கினர் இவர்கள் மொத்த வாணிகத்திலும, சில்லறை வாணிகத்திலும் பங்குகொள்ளும் உரிமை பெறறனா. அரசும் கூட்டுறவுத் துறையும் மொத்த வாணிகததில ஈடுபட்டன.

**கத்தரிப் போக்கு:** மேற்கணட சூழ்நிலையில் விலைவாசிகளில குழப்பமிகக ஏற்றத்தாழவுகள் தோனறலாயின. வேளாணமைப் பொருளகளுக்கும், ஆலைப் பொருள்களுக்குமிடையே சமநிலை மதிப்பு (Parity) ஏற்படுத்துவது வேளாணமையினர்-தொழிலாளி ஒற்றுமைககு இனறியமையாததாக இருந்தது. கததரிப் போக்கைத் தவிர்ப்பதற்குப் பின்பற்றப்பட்ட முறைகளைக் குறிதது உருசியத் தலைவர்களிடம மிகவும் வேறுபாடான கருத்துகள காணப்பட்டன. தொழில் வளர்சசியும், வேளாணமை வளர்சசியும் ஒன்றுக்கொன்று முரண்படாமல் நடககவேண்டுமெனபது பற்றி ஆராயவேண்டிய தேவையும் நிலவியது.

உருசியாவில் பஞ்சம், குளிர், வேலையின்மை பணவீக்கம் போன்ற சிககல்கள் ஒருபுறமிருக்க வெளிநாட்டவின படையெடுப்பு மறறொரு பககம எழுந்தது. அப்படிப்பட்ட நிலையிலுஙகூட சோவியதது நாடு தன் பொருளாதார முனனேற்றத்திறகாக ஐந்தாணடுத் திட்டங்களை வகுததது. இது பொருளாதார வரலாற்றில் புரட்சிமிகக ஒனறாக அமைந்தது.

மின்சக்தியை நாடு முழுவதும் பரப்புவதன் மூலமாகத் தான் நாட்டைத் தொழில்மயமாக்க முடியுமென்று இலெனின் கருதி ஓர் ஒருங்கிணைந்த திட்டத்தை ஏற்படுத்தினார். அதனைச் செயற்படுத்த 1920-இல் 'கோயில்ரோ' (Coelro) எனப்படும் 'மின்மயமாககுவதற்கான அரசின் குழு' ஒன்றை நிறுவினார். நாடெங்கும் 10,15 ஆண்டுகளில் 30 மின்சக்தி நிலையஙகளை அமைக்கத் திட்டமிடப்பட்டது இது ஐந்தாண்டுத் திட்டங்களுக்கு முன்னோடியாகத் திகழ்ந்தது.

மக்கள பேராளர்களைக் கொண்ட முதன்மைச் சோவியத்து (Supreme Soviet) ஓர் அரசியலமைப்பாகும். இது நாட்டின் அரசியல், பொருளாதார முன்னேற்றத்தைச செயற்படுத்தும் ஒரு குழுவாக அமைந்து, நாட்டு மக்களின தேவைகளை நிறைவேற்றி வருகிறது. முதன்மைக் குழு ஆணடிற்கு இருமுறை கூடி உள்நாட்டு, வெளிநாட்டு நடவடிக்கைகள குறித்து முடிவெடுத்துச் சோவியத்து நாட்டின் பொருளாதார, சமுதாயத் திட்டங்களை நிறைவேற்றுகிறது. பொருளாதாரத் துறைகளை ஆராய்ந்து அவற்றை இணைக்கினற பணியைச் செய்ய 'காசுபிளான்' (Gosplan) என்ற அரசின் திட்டக் குழு (State Planning Commission) 1922, பிப்பிரவரித் திங்களில் அமைககப்பட்டது.

திட்டங்கள் 1928-ஆம் ஆணடு முதல் சமநிலை அமைப்பை ஏற்படுததும் நோக்கத்துடன் செயலாக்கப் பட்டன. முதல் ஐநதாணடுத் திட்டம், 1928-ஆம் ஆண்டு வகுக்கப்பட்டது; 1500 புதிய தொழில் நிறுவனங்கள நிறுவப்பட்டன. புதிய நிலக்கரி, இரும்பு, எஃகு போன்ற கனிவளங்கள யூரல், சைபீரியா போன்ற பகுதிகளில் தோண்டியெடுக்கப்பட்டன. மேலும் எந்திரக் கலப்பை, வானவூர்திகள், உந்து வண்டிகள, நீராவி எந்திரஙகள், பண்ணைக்கருவிகள போன்ற சாதன உற்பத்தி முயற்சிகள் மேற்கொள்ளப் பட்டன. புதிய நகரங்கள், தொழிலாளர் குடியிருப்புகள் போன்றவை நாடு முழுவதும் உருவாக்கபபட்டன. வேலையின்மையும் தீர்தது வைக்கப்பட்டது.

கூட்டுப் பண்ணைகளை எந்திரமயமாகக எந்திரக் கலப்பை நிலையங்களை (Machine Tractor Stations) நிறுவினர். முதல் ஐந்தாண்டுத் திட்டம் குறிககோள்களை நிறைவேற்றிக் குறிப்பிட்ட கால எல்லைக்கு முன்னரே முடிந்துவிட்டது. இரணடாம் ஐந்தாண்டுத் திட்டம் (1933-37) சோவியத்துப் பொருளாதாரத்தை அமெரிக்க ஐக்கிய நாட்டுப் பொருளாதார நிலைக்கு அடுத்தாற்போல் தொழில்மயமாக்குவதற்குத் தேவையான திட்டங்களை உருவாககியது. தொழில்மயமாக்கியதுடன் கூட்டுப்பணணை வேளாண்மையிலும் சிறக்க வைத்தது. புதிய தொழில் முயறசிகள் உருவாக்கப்பட்டு நீப்பர் (Dnieper) நீர்வீழ்ச்சி மின்சக்தி முழுவதுமாகப் பயன்படுத்தப்பட்டது. நாட்டின் முன்னேற்றத்தில் மிகப் பெரிய மாற்றங்கள் கொண்டுவரப்பட்டு, தொழிலுற்பத்தியில் 1937-ஆம் ஆண்டு ஐரோப்பாவில் முதல் நாடாகத் திகழ்ந்தது.

இரண்டாம் திட்டக்காலத்தில் உலகச் சூழ்நிலையில் பெரும் மாறுதல்கள் ஏற்பட்டன. இட்லரின் துணைகொண்டு செருமனி போர்க்கொடி உயாத்தியதால், உருசியா பாதுகாப்பு நடவடிக்கையில் தனிக் கவனம் செலுத்த வேண்டியதாயிறறு.

மூன்றாம் ஐந்தாண்டுத்திட்டம் 1938 முதல் 1942 வரை செயற்பட்டது. செருமானியத் தாக்குதலால் 1941-இல் இத்திட்டம் கைவிடப்பட்டது. இரசாயனத் திட்டம் மூலம் இரசாயனத் தொழில் வளர்ச்சிக்கு வழி வகுத்தனர். தொழில்களைப் பரவலாக அமைக்கும் போக்கு ஏற்பட்டது. தொழிலாளர் உற்பத்தித் திறன் உயர்ந்தது. கூட்டுப் பண்ணைகள் தொடர்ந்து வலுவடைந்தன.

இரணடாம் உலகப்போர் (1941-45) மூணடபொழுது நாசி செருமனி (Nazi Germany) 1941-இல் உருசியாவைத் தாக்கியது. உருசிய மக்கள் இதனைப் பெரிய தேசியப் போராகக் கருதி எழுச்சியோடு ஈடுபட்டனர். செருமனியும் சப்பானும் 1945, மே ஆகஸ்ட்டுத் திங்களில் சரணடைந்ததால் போர் நின்றது.

செருமனி உருசியாவைவிட வலிமை பெற்றிருந்தது. அதனால் எந்திரக் கலப்பைகள், எந்திரங்கள் முதலியன செய்த தொழிற்சாலைகளை உடனடியாகப் போர்க் கருவிகள செய்யும் நிறுவனங்களாக மாற்றினர். இசுடாலின் தலைமையின்கீழ்த் தேசியப் பாதுகாப்புக் குழு (State Defence Committee) அமைக்கப்பெற்றது. இக்குழு போர்த்தளவாடங்களை உற்பத்தி செய்தது. மேலும், ஒவ்வொரு பொருள உற்பத்தியையும் ஓர் அமைச்சர் கவனித்தார். இப்போரினால பாதுகாப்புச் செலவு பெருகி, காகிதப் பணத்தின் அளவு உயர்த்தப்பட்டது. உருசியா வெற்றிபெற்ற போதிலும் இழப்பு குறிப்பிடத்தக்க அளவிலிருநதது. உருசியா மறுவாழ்வுப் பணியில் விரைந்து ஈடுபடலாயிற்று.

நான்காம் ஐந்தாண்டுத் திட்டம் (1946-50) போரால் சீர்குலைந்த சோவியத்துப் பொருளாதாரத்தைச் செப்பனிட்டு வளர்ச்சியைக்காண 1946-இல் தொடங்கப்பெற்றது. இத்திட்டமும் கனரகத தொழில்களுக்கே முதலிடம் கொடுக்க வேண்டியதாயிற்று. அழிந்துபட்ட தொழில்களையும், கருவி

களையும் உற்பத்தி செய்வதே திட்டத்தின் முக்கிய வேலையாக இருந்தது. இதற்கிடையில் 1946-இல் ஏற்பட்ட வறட்சி காரணமாக வேளாணமை கடுமை யாகப் பாதிக்கப்பட்டது. அத் துறையில் 1947-இல் மீண்டும் மறுமலர்சசி தொடங்கி உணவுப் பணட களின் உற்பத்தி ஓரளவு உயர்ந்ததால் பங்கீட்டு முறை மறைந்தது. பிற துறைகளில் நலல முன னேற்றம் காணப்பட்டது.

ஐநதாம் ஐந்தாண்டுத் திட்டம் (1951-55) முநதிய திட்டத்தையொட்டிய மேலான நம்பிக்கையோடு வகுக்கப்பட்டது. தொழிலுற்பத்தியை 70 விழுக்காடு உயர்த்தத் திட்டமிட்டு கட்டாய முறைகளுக்குப் பதிலாகப் பொருளாதாரச சலுகைகள புகுததப் பட்டன. பல நீர்வழிப் பாதைகளை இணைக்கும் வண்ணம் இலெனின்-வோல்கா-தான் (Lenin-Volga -Don Ship Canal) கப்பல் கால்வாய் நீட்டிக்கப் பட்டது.

ஆறாம் ஐந்தாண்டுத் திட்டம் (1956-60), 1956-இல் செயற்படத் தொடங்கியது. பொறியியல் தொழில்கள ஆக்கம் பெறறன. நுகர்பொருள்களின் உற்பத்தியில் தனிக் கவனம் செலுத்தியதால் தானிய உற்பத்தி பெருகியது. சமுதாயக் காப்பீட்டுத் திட்டங் கள் செயற்பட்டன. பல காரணங்களினால் ஆறாம் திட்டம் முடிவடையாமலே ஏழாண்டுத் திட்டம் செயற்பட்டது.

ஏழாம் ஐந்தாண்டுத் திட்டம் (1959-65) ஏழாண்டுத் திட்டமாகச் செயலாக்கப்பட்டது பொது வுடைமைப் பொருளாதாரத்தைச் செயற்படுத்தப் புதிய திட்டம் செயலாக்கப்பட்டது. நில வளனைப் பெருக்க 1966-இல் பத்தாண்டுத் திட்டம் ஒன்றைத் தீட்டினர். இருப்புப்பாதை,கால்வாய் போக்குவரத்து கள் குறிப்பிடத்தக்க வகையில் முன்னேற்றம் காட்டின. தொழிலாளர் காப்பீட்டுத் திட்டங்கள் பெருகின.

எட்டாம் ஐந்தாண்டுத் திட்டத்தில் (1966-70) நாட்டின் தொழில், வேளாணமை வளர்ச்சியைப்பரந்த அறிவியல், தொழில்நுணுக்க அடிப்படையில் செயற் படுத்த முயற்சிகள் மேற்கொள்ளப்பட்டன. ஒவ்வொரு பொருளுக்கும் தனிக் குறியீட்டிலக்கம் நிருணயித்த னர். நிலவளத்தைப் பெருக்க,தொழிலாளர் உற்பத்தித் திறன் உயர, பல துறைகளும் வளர்ச்சி பெறத் திட்ட மிடப்பட்டது. உருசியப் புரட்சியின் 50-ஆம் ஆணடு விழா 1967-ஆம் ஆண்டு சிறப்பாகக் கொண்டாடப் பட்டது.

ஒன்பதாம் ஐந்தாண்டுத் திட்டம் (1971-75) தேசிய, கூட்டுறவு முதலீட்டை 526.3 மிலியன் உருபி ளாக உயர்த்தியது.

பத்தாம் ஐந்தாண்டுத் திட்டம் 1976-இல் செய லாக்கப்பட்டது. மொத்த உறபத்தியில 39 விழுக்காடு தொழிலாளர் தொழில், கட்டுமானப் பணிகளில ஈடுபட்டுள்ளனர். வேளாணமையில் 20 விழுக்காடும், பிற பணிகளில் 41 விழுக்காடும் தொழிலாளர் இருந்தனர்.

பதினோறாம் ஐந்தாண்டுத் திட்டம (1981-85) 1981-இல் தொடஙகியது. ஏறக்குறைய 1000 புதிய தொழில் முயறசிகள் உருவாககப்பட்டன. எரி பொருள, எரிசகதி போனறவை விரிவாக உறபத்தி யில் ஈடுபடுத்தப்பட்டன.

பன்னிரணடாம் ஐநதாணடுத திட்டம 1986-இல் தொடங்கியது. இத திட்டக் காலததில் (1986-90) தொழிலுற்பததியில் புரடசி ஏற்படுத்தவும், தொழி லாளா உற்பத்தியில் மாற்றம் ஏறபடுத்தவும், உற பத்திச் செலவைக் குறைக்கவும், உறபததித் தரத்தை மேம்படுததவும திட்டமிடப்பட்டது. நாடுகளுடன வாணிகத் தொடர்பை விரிவாக்கவும் தீாமானிக்கப் பட்டது.

**இப்போதைய நிலை·** சோவியத்து நாட்டு உறபத்தி மதிப்பு 1979-ஆம ஆணடிலிருந்து 10,000,00 மிலியன உருபிளாக (Rubles) உள்ளது. அதன் 70 ஆணடு வரலாற்றில் சோவியத்து நாடு தொழில்மயமாககப் பட்ட நாடுகளில் ஒன்றாகத் திகழ்வதறகு அநநாட்டு மக்களின் ஒத்துழைப்பு காரணம் எனபதில ஐய மிலலை. இன்று உலகத் தொழிலுற்பத்தியில ஐநதில் ஒரு பாகம் சோவியத்து நாட்டுடையதாகும் அறி வியல, தொழில்நுட்ப வளர்சசிக்குத தேவையான மினசாரம், எணணெய், இரசாயனம், பொறியியல், உலோக உற்பத்தி போனறவை மிக விரைவில வளர்ச்சியடைகின்றன.

சோவியத்துப் பொருளாதாரம், உலகின் விஞ் ஞானம், தொழில நுட்பம் போன்றவற்றில் அதிக மான முனனேற்றம் கணடுள்ளது. அவற்றை மேம் படுத்தக்கூடிய வளஙகள உருசியாவில் அதிகமாகவே உள்ளன. ஆராய்சசி, வளர்சசித் திட்டஙகள் பல ஆயிரக்கணக்கான மையங்களில் நாடெஙகும் நடை பெறுகின்றன. அணு, பொறியியல, விணவெளி ஆராய்ச்சி போன்ற துறைகளைச் சமாதானமான முறையில் செயற்படுத்துகின்றது. உலகின முதல் அணுச் சோதனை நிலையம 1957-இல் சோவியத்து நாட்டில் நிறுவப்பட்டது. சோவியத்துக் குடிமகன உலகில முதன்முதலாக 1961-இல் விண்வெளியில

பறக்கும் வாய்ப்பைப் பெற்றான். முதன்முதலாக செயற்கைக் கோள் (Artificial Satellite) ஒன்று 1957 -இல் விணவெளியில் செலுத்தப்பட்டது. சோவியத் துத் தானியங்கி விணவெளி அமைப்புகள் 1982-இல் சுக்கிரக் கோளில இறங்கின.

தொழிலாளர் உறபத்தித் திறன் சோவியத்து நாட்டில் உயர்ந்து கொணடே செலகிறது. அது 1940 -ஆம் ஆண்டு இருந்ததைவிட 11 மடஙகு அதிகரித துளளது. நாட்டின மொத்த வளர்சசியில் 1985-இல 95 விழுக்காடு தொழிலுறபததியும், தொழிலாளர் உறபததித திறனும் உளளன. உலகின வாணிகததில் 145 நாடுகளுடன சோவியத்து நாடு தொடாபு கொணடுளளது. சமநிலை நாடுகளாகிய பலகேரியா, சியூபா, செககோசுலேவியா, செருமன சனநாயகக் குடியரசு (G.D.R), அஙகேரி, மங்கோலியா, போலநது, உருமேனியா, சோவியதது நாடு, வியட்நாம் போனற நாடுகள் சோநது ஒனறுகொனறு உதவும் பொரு ளாதாரக குழு (Council for Mutual Economic Assistance-C.M.E.A.) ஒன்றை 1949-இல அமைத துளளன. இதில சோவியதது நாடு பெரும் பஙகேற கிறது. இககுழுவினைச சோநத நாடுகளுடன சோவி யத்து நாடு பாதிககுமேல வாணிகததொடாபு கொணடுளளது. இதனபடிச் சமநிலைக் கொளகை யினடிப்படையில சமுதாய, பொருளாதார உரிமை யுடன இந்நாடுகள தஙகள பணடஙகளையும், பண பாடுகளையும் பகிாநது கொளளுகினறன. இதனபடி பலநோக்குடைய வாணிக உடன்பாடுகளை மேற் கொளளுகிறது. இம்முறைப்படி தஙகளுடைய தேவை களை முறறிலும நிறைவேறறிக கொளளுகினறன. எரிபொருள, எரிசகதி ஆகிய தேவைகளை ஐரோப் பியக் குழு அஙகததினாகளுககுக் குழாய் மூலம் வழஙகுகிறது. இதைப்போலவே பல அணுசக்தி நிலை யஙகளை ஆஙகாங்கே அநநாடுகளில் ஏறபடுததியுள ளது. உலகின் அறிவியல், தொழில்நுட்பக கணடுபிடிப்பு களில 40 விழுக்காடு இநத நாடுகளில பயனபடுகி றது. பின்லாநது, மெகசிகோ, இராககு, கயானா கூட்டுறவுக் குடியரசு, நிகராகுவா போனற நாடுகள இக்குழுவுடன உடனபடிக்கை செய்துள்ளன.

சோவியத்து நாடு வளர்நதுவரும் நாடுகளுடன் கொணடிருக்கும் தொடர்பு நீணடகால உடனபாடுக ளாகும். 80 வளர்ந்துவரும் நாடுகளுடன் வாணிபத் தொடர்பு கொண்டுளளது. 65 வளர்ந்துவரும் நாடு களுடன் பொருளாதார, தொழிலநுட்பத் தொடாபு ஏறபடுத்தியுள்ளது. சோவியத்துப் பொருளாதார உதவி, வளரும் நாடுகளின் சுதந்திரத்தை உறுதிப் படுத்தவும் அளிக்கப்படுகிறது.

சோவியத்து நாட்டின் இறக்குமதிகள் பெரும் பாலும் சமூக உற்பத்தி, நுகர்வு போன்ற துறைகளை முன்னேற்றுவதற்காகப் பயன்படுகின்றன. எடுத்துக் காட்டாக இறக்குமதி செய்யப்படும் கனரக இயந் திரங்கள், உற்பத்திக் கருவிகள பெரும்பாலும் நாட் டின் தொழிலுற்பத்தியை விரிவுப்படுத்தவும், வளரச் செய்யவும், உணவு உறபத்தித் தொழிலை நவீனப் படுத்தவும் பயன்படுகின்றன. நாட்டின் ஏற்றுமதிகள் அதிகமாக உயர்ந்துள்ளன. அவற்றில் பெரும்பாலும் அணுசக்தி, மினசக்தி போன்றவற்றை உற்பத்தி செய்வதற்குரிய கனரக இயந்திரங்களும், துல்லிய மான நுண்கருவிகளும், எந்திரக்கலப்பை, இரும்பு ஊது உருக்காலைகள் (Blast Furnace) ஆகியவை யும் அடங்கும். மொத்த சோவியத்து ஏற்றுமதியில் 1984-இல் 12.5 விழுக்காடு தொழிலுற்பத்திககுத் தேவையான கனரக இயந்திரங்களும் மறறத் தொழிற் கருவிகளுமாகும். சமததுவ நாடுகள் 72.8 விழுக்காடு சோவியத்துப் பண்டஙகளை, பெரும் பாலும் தொழிலுற்பததிக்கான பொறியியல் சாத னங்களை இறக்குமதி செய்கின்றன. கனிவளங்கள், உலோகஙகள, இரசாயன உற்பததிகள், மரம், மரத் தளவாடங்கள போன்ற ஏற்றுமதிகள பெரும்பாலான இடத்தைப்பெறுக்கின்றன. இவைதவிர நுகர் பொருள் களாகிய வானொலிப் பெட்டிகள், குளிர்சாதனப் பெட்டிகள், கைக் கெடிகாரஙகள், சைக்கிளகள், சிறிய பயணி உந்துகள போனறவையும் ஏற்றுமதி செயயப் படுகின்றன. பணடங்களன்றித்தனனுடையத்தொழில நுட்பம் போனறவற்றைப் பிற நாடுகளுடன் பகிர்நதுகொள்கிறது.

வளரும் நாடுகளிலிருந்து இரப்பர், நீண்ட இழைப் பருத்தி, காப்பி, கோகோ போன்ற பணடங்கள வாணிகத்தின மூலம், சோவியத்து நாட்டு இறக்குமதி யில் இடம்பெறுகின்றன. பணடங்களன்றி உயர்கல்வி அளிப்பதற்கும் உடன்பாடுகள மேற்கொளளப்பட்டுள ளன. பிற வளரும் நாடுகளும், சோவியத்து நாடும் இணைநது மூனறாம் உலக நாடுகளின் ஒத்துழைப் புடன் சில முக்கிய தொழிலுற்பத்தியைத் தொடங்கி யுள்ளன. இநதியாவுடன் இணைந்து அலசீரியா, இரான், நைசீரியா போனற நாடுகளில இரும்பு எஃ குத் தொழிற்சாலைகள கட்டியுளளனர். இதனால் உலக அங்காடியில இந்தியாவின் பங்கு சிறப்புற விளங்குகிறது; இந்தியாவின் முழுமையான உறபத்தித் திறனைப் பயனபடுத்துகின்றனர். பிரேசில (Brazil) நாடும் சோவியத்து நாட்டுடன இணைந்து இலத்தீன் அமெரிக்கா, ஆப்பிரிககா போன்ற இடங்களில் தொழிற்சாலைகள அமைப்பதற்குரிய வழிமுறைகளை ஆராய்வதற்கு ஆர்வம் காட்டியுள்ளது. அவற்றில் ஒன்று வாய்க்கால-குடைவழி (Canal-Tunnel) கட்டு

வதாகும். அதன்மூலம் வறண்ட பாலைவனப் பகுதிகள் பெரு (Peru) வோடு இணைக்கப்பட்டு, அந்தப் பகுதியிலுள்ள விளைநிலங்களுக்கு நீர்ப்பாசன வசதி கிடைக்கும் வழிகள ஏற்படுத்தப்படும்.

வாணிகம், பொருளாதார, தொழில்நுட்ப, அறிவியல் நடவடிக்கைகளை ஒருங்கிணைப்பதற்குச் சோவியத்து அரசும். வளரும் நாடுகளும் தங்களுக்கிடையே பொருளாதார, அறிவியல், தொழில்நுட்ப அடிப்படையில் ஒற்றுமையைக் கையாளுகின்றன. சோவியத்து நாட்டின் உறவை வளர்ந்துவரும் நாடுகளாகிய அல்சீரியா, எத்தியோப்பியா, மெக்சிகோ, பெரு, இந்தியா, அங்கோலா, ஆப்கானிசுத்தானம், இராக்கு, இலிபியா, மடகாசுகர், சிரியா, ஏமன ஆகியவை ஏற்றுக்கொணடு வாணிகத் தொழிலநுட்ப வளர்ச்சிக்குத் துணைசெய்கின்றன.

மேலை நாடுகளுடன் சோவியத்து நாடு கொணடிருந்த தொடர்பு பெரும் மாறுதலுக்குட்பட்டுள்ளது. சோவியத்து நாட்டில் அலுமினியத் தொழிற்சாலை அமைப்பதற்குப் பிரான்சு உதவி செய்துள்ளது. இத்தாலி, பிரிட்டன் போன்ற நாடுகளும் பெரும்பானமையான இரசாயனத் தொழிற சாலையை அமைப்பதற்குத தேவையான தொழில நுட்பங்களைக் கொடுத்து உதவியுள்ளன. அதைப் போன்றே கூட்டரசு மக்களாட்சிசெருமனி,செயறகை நூல்கள (Synthetic Yarn) தயாரிப்பதற்கும், சுவீடன காகிதச் தொழிற்சாலை அமைப்பதற்கும் உதவி நலகியுள்ளன. இப்படிப்பட்ட தொழில் உடனபாடுகள (Co-operation) நீண்டகால உறவையும், பன்னாட்டு வேலைப் பகுப்பையும் பயன்படுத்துவதற்கு உதவுமென்று கொளளப்படுகிறது. பின்லாநது, ஆசுத்திரியா பிரான்சு போன்ற நாடுகள சோவியத்து நாட்டில் பல முனை உறபத்தியைத் தொடங்குவதறகு ஒப்புதல தெரிவித்துள்ளன.

சோவியத்து நாடு தொடர்ந்து பொருளாதார தொழில்நுட்ப, அறிவியல் துறைகளில் பிற நாடுகளுடன் சேர்நது செயறபடுவதற்கு முனவநதுளளது.

க.சொ.

**துணை நூல்கள்:**

**Desai, S.S.M.**, Economic Systems, Himalaya Publishing House, Bombay, 1982.

**Konstantin Tarnovsky**, Illustrated History of the U S.S.R., A brief Outline, Novosti Press Agency · Publishing House, 1982.

**Roger Munting**, The Economic Development of the U.S.S.R. Croom Helm Ltd., London, 1982.

**Urban, G R., (Ed)** Communist Reformation, Maurice Temple Smith Ltd., Great Britain, 1979.

**Vinod Mehta**, The Soviet and the Chinese Economy: A comparative Study, Sterling Publishers Pvt. Ltd , New Delhi, 1981.

***சோழகர்:*** இவர்கள் கோவை மாவட்ட எல்லையிலும், கொள்ளேகாலம் ஊரைச்சுற்றிய காடுகளிலும், அவற்றையடுத்த மலை உச்சிகளிலும், கருநாடக, கேரள மாநிலங்களிலும் வாழ்கிறார்கள். மூங்கில்களை வில் வடிவில் வளைத்து இரு முனைகளையும் தரையில் ஊன்றி, வாழை இலைகளால் வேயப்பட்ட குடிசைகள் இவர்களின இருப்பிடங்கள் ஆகும். இவர்கள் பேசுவது கன்னடத்தின ஒரு கிளை மொழியாகும்.

சோழகர் (Sholagar) தங்கள் முன்னோாகளைப் பற்றிக் கீழ்வரும் வரலாற்றைக் கூறுகிறார்கள். முன்னொரு காலத்தில் 'கெட்டசாலா' குனறுகளில் காரையன், மாதேசுவரன (அல்லது வில்லையன்) என்னும் இரு உடன்பிறந்தோர் வாழ்நது வந்தாாகள். ஊராளிகளும்,சோழர்களும் காரையனின்வழிவநதவர்கள்; சிவாசாரிகள் (இலிங்காயத்துகள்) மாதேசுவரன் வழிவந்தவர்கள். இவவுடன்பிறந்தோர் இருவரையும் சவனன் எனனும் அரக்கன ஒருவன் அடிமைப்படுத்திக் காரையனை மாடுமேய்க்க நியமித்தான். தனக்குக் கீழ்ப்படியாத மாதேசுவரனைச் சிறையில் அடைத்துக் கொடுமைகள் பல செய்தான. ஒருநாள் அரக்கன மாதேசுவரனைத் தனக்குச் செருப்புத் தைத்துக் கொடுக்கச் சொன்னான. மாதேசுவரன் தனனை விடுதலை செய்தால் சில நாட்களுக்குள நலல செருப்புத் தைத்துக் கொடுப்பதாகக் கூறினான். சவனன் ஒப்புக்கொணடு அவனை விடுதலை செய்தான். மாதேசுவரன் தன் தெய்வமாகிய கிருட்டிண மூர்த்தியின ஆலோசனைப்படி மெழுகினால அழகான செருப்புகளைச் செய்தான. அடுத்து ஒரு பெரிய பாறையில் நெருப்பு மூட்டி பாறையைக் கொதிக்கச செய்தான். சவனனிடம் சென்று செருப்புகளைக் கொடுத்தான். அவற்றின் அழகையும் அமைப்பையும் கண்டு அரக்கன் மிகவும் மகிழ்ந்தான். மாதேசுவரன அவனைச் செருப்புகளை அணிநது கொணடு பாறையின மேல் நடக்குமாறு வேணடினான். அரக்கன் அவ்வாறே செய்ததும் செருப்புகள உருகின. அரக்கன் சூடான பாறையில் விழுந்தான். விழும் பொழுது அவன் மாதேசுவரனை இறுகப் பற்றிக கொணடு கழுத்தை நெறித்துக் கொல்ல முயன்றான். அதற்குள கிருட்டிணமூர்த்தி எலலாத் தெய்வங்களையும் அங்கு வரவழைத்திருந்தார். ஒவ்வொரு

தெய்வமும் கிருட்டிணமூர்த்தியின் வேண்டுகோளுக்கு இணங்கிச் சவனனின தலையில்ஒரு கல்லை வீசின கிருட்டிணமூர்த்தி மாதேசுவரனை அரககனின் பிடியி லிருந்து விடுவித்தார். தெய்வங்கள் அனைவரும் சவன னின் உடல்மீது குதித்து அவனை நசுக்கின. அந்த நேரத்தில் சவனனின் மந்தையை மேய்த்துக் கொண்டி ருந்த காரையன் அங்கு வந்து சேர்ந்தான். அரககனைக் கொல்லும் முன் மாதேசவரன் தன்னைக் கலந்து ஆலோசிக்கவில்லை என்பதற்காக அவன்மீது கோபம் கொணடான்; தன வாளை உருவி மாதேசுவரனைக் கொல்ல முற்பட்டான். உயிருக்கு அஞ்சிய மாதேசு வரன் தப்பி ஓடினான். கிருட்டிணமூர்த்தியின் உதவி யால் அவன் கொத்ரிபோலி என்னும் மலையிலிருந்து, உருகமலை, எககரை மலை, முனிக்கனல மலை முதலானவற்றைக் கடந்து இறுதியில மாதேசுவரன் மலைக்குச் சென்று ஒரு எலி வளையில் ஒளிந்து கொண்டான. உடனே காரையன் இடையர்கள் பலரை வரவழைத்து எலி வளையின் நுழை வாயி லில் கிடை போடச் செயதான். கிடைக கழிவு களின் நாற்றத்தால் மூச்சுத்திணறிய மாதேசுவரன வெளியில வநது காரையனிடம் சரணடைந்தான். கோபம் தணிந்த காரையன் அவனை மனனிததுத் தனக்குப் பூசைகள் செய்ய வேண்டும்என்றும் பணித தான்.மாதேசுவரன் அதற்கு உடன்பட்டான். இன்று வரை பூசைகள் இந்தக கிரமத்திலேயேநடை பெற்று வருகின்றன.

சோழகர் சமூகத்தில் சலிகிரி, தேனேறு, பெல லேரி, சூரியன், ஆலேறு என்னும் ஐந்து பிரிவுகள் உளளன. இப்பிரிவினர் புறமண முறையைப் (Exogamous marriage) பின்பற்றுகினறனர்.

பன்னிரண்டு என்னும் எண் சோழாகளால் மிக வும் போற்றப்படுகிறது. குழந்தை பிறந்த 12-ஆம் நாள் குலப் பெரியவர்களில 12 பேர் குழந்தையை வாழ்த்த அழைக்கப்படுவார்கள திருமணங்களில் மணப்பெண்ணை அழைத்துவர மணமகனின் உறவு முறையார் பன்னிருவர் செல்வர். மணப்பந்தலில் 12 கால்கள் நடப்படும். இறந்தவரை எடுததுச் செல லும் பாடை 12 மூங்கில் கழிகளால் கட்டப்படும். பன்னிரண்டு நாட்களுக்குத் துக்கம் மேற்கொளவர்.

இவர்களிடையே ஏற்படும் சிக்கல்கள எசமானன, பட்டக்காரன, குலப் பெரியவர்கள சிலர் உள்ளிட்ட குழு ஆகியோரால் தீர்த்து வைக்கப்படும். எசமானன் சலிகிரிப் பிரிவையும், பட்டககாரன் தேனேறுப் பிரிவையும், சலவாதி சூரியப் பிரிவையும் சேர்ந்தவ ராக இருத்தல் வேண்டும். சலவாதி ஊர் வேலையா ளாவான்.

பெண் பருவம் அடைந்ததும் ஐந்து நாட்களுக் குத் தனிக்குடிசையில் தங்கவேணடும் பின்னர் நீராடி வீடு திரும்புமபோது பெணணின் தாய் மாமன் அவளுக்குப் புதிய ஆடை, வெற்றிலை பாக்கு, வாழைப்பழம் ஆகியவற்றைக் கொடுக்க வேண்டும்.

சோழகரின் நிலையான உணவு கேப்பைக் கூழும், கூவைக் கிழங்கும் ஆகும். இத்துடன் வேட்டையாடிய விலங்குகளையும் பறவைகளையும் அவாகள் உண் பார்கள். கிளிகளைச் சோழகர்கள் தங்கள் குழந்தை களாகக் கருதுவதால் அவற்றை உண்பதில்லை. காட்டு விளைபொருள்களாகிய சாதிக்காய், வேம் பாடம்பட்டை, ஆவாரம்பட்டை, புளி, கோந்து, சீயக்காய் ஆகியவற்றோடு தேன், மான்கொம்பு ஆகியவற்றையும் விற்கிறார்கள. இவர்கள் காட்டு விலங்குகளின அடிச்சுவட்டைக கண்டு பின்தொடர்நது சென்றுகாண்பதில் வல்லவர்கள். வனததுறையினருககு யானைகளைப் பிடித்துக் கொடுப்பதன் மூலம் இவர் களுக்குக் குறைந்த அளவில் வருவாய் கிடைக்கிறது

கருநாடக மாநிலத்தில சோழகர்கள் பிலிகிரி ரங்கம் மலைக் காடுகளில் வாழ்கிறாாகள். இவர்கள சிறிய நிலப்பகுதிகளில் தோண்டு கழிகளைக் கொண்டு வேளாணமை செய்கிறாாகள. இவர்களின் சிறப் புத் தெய்வம் பிலிகிரிரஙகசாமி. இவர்களும் காரை யனைத் தங்கள குல தெய்வமாக வழிபடுகிறார்கள.

இறந்தவர்களை இடப்புறமாகத் தெறகே தலை வைத்துப் படுத்த நிலையில் புதைப்பார்கள். வீடு திரும்பியதும் விளக்கேற்றி அனைவரும் வணங்குவார் கள. உயிர்நீத்த இடத்தில சிறிது கேழ்வரகுக் கஞ்சி யும், தணணீரும் வைக்கப்படும். நான்காம் நாள் இறநதவரின ஆன்மா அமைதி அடையும் பொருட்டு ஓர் ஆடு பலியிடப்படும். கோ.ச.

**சோழநாட்டுப் பிடவூர்கிழார் மகன் பெருஞ்சாத்தன்:** சோழ நாட்டிலுள்ள பிடவூரில வாழ்ந்த வேளாண் மக்களின் குடிமுதல்வனான பிடவூர்கிழான் என்பவனின் மகன பெருஞ்சாத்தனா வான். இவன் அறப்பெயர்ச் சாத்தன் எனக் கொடை கருதிப் புகழப் பெற்றான். நெடுங்கை வேண் மான் எனறும் இவன் சுட்டப் பெறுவான். இவனை மதுரை நக்கீரர் தம் புறநானூற்றுப் பாடலில் (395) சிறப பித்துப் பாடியுளளார். இப்பாடலில் முதற்கண பிடவூர் வளம் கூறப்படுகிறது. 'மென் புலத்தை உழுத உழவர் வன்புலத்தில் பகடுகளை மேயவிட்டு முயற்கறியும் வாளை மீனும் பழஞ்சோற்றுடன் உண்டு மலரணிந்து பறையாற் பறவை ஓப்பிக் கள்ளுணடு மகிழ்வர். ஒருபக்கம் கானக் கோழியும்

நீர்க்கோழியும் கூவும். உழவ மகளிர் கிளி கடியும் போது சேற்றில் இரைதேடும் புள்ளினம் இரிந்தோ டும் நல்ல விளைபுலங்கள சூழ்ந்தது' என்று பிடவூர் பற்றிக் கூறி அது உறையூரின் கிழக்கே உளளது என்று கூறுவர்.

இப்பாடலில் பெருஞ்சாத்தன் பரிசிலரை வர வேற்று விருந்தோம்பிய முறை நன்கு சித்திரிக்கப் பட்டுள்ளது. தடாரிப் பறையறைநது மாலைப் பொழுதில் கிணைஞன் வாயிற்கடையில் நின்ற போது சிறிதும்காலந் தாழ்க்காது மிகுதியாகப் பேசா மல் அரிய அணிகலனகளை அளிததான். பின் தன மனைவியைக் காட்டி 'இவனை என்போற போற் றுக' என்று முகமலர்நது கூறினான். அவன் விருந தோம்பிய முறையையும் இஙஙனம் கூறியதையும் எண்ணிப் பெருஞ்சாத்தனை அனறிலிருந்து மறவேன; பிறரை நினைததிலேன் எனறு நனறியுணர்வுடன மதுரை நக்கீரர் கிணைஞர் கூற்றாகப் பாடியுளளார். உலகு வெம்மையில் வெமபினும் வானத்தில எரி தோன்றினும் விண்மீன் புகையினும் வளஞ்சுரந்து வாழத்துமாறு இரவலர்க்குத் தம் நிலை கருதாது பெரிதும் வழங்குவான் என அவனது தாளாணமை கூறி அதனை வாழ்த்துகிறார் மதுரை நக்கீரர்.

இரா.சா.

**சோழநாடு:** முற்காலத்தே சேர சோழ பாண்டியர் எனனும் மூவேந்தர் தமிழகத்தை ஆணட குறிப்பு தொல்காப்பியத்திலும் காணப்படுகிறது. 'வண்புகழ் மூவர் தணபொழில் வரைப்பு' எனனுந் தொடர் இதனை அறிவிக்கும். சோழவேநதர் ஆணட நாடு சோழநாடு எனப்பட்டது. 'போந்தை, வேம்பே




சோழநாடு

- ஆரென வருஉம் மாபெருந் தானையர் மலைந்த பூவும்' என்னும் தொல்காப்பிய அடியில் சோழருக் குரிய அடையாளப்பூவாகிய ஆத்தி சுட்டப்பட்டுள் ளது.

சோழநாடு சோழமணடலம் எனவும் அழைக்கப் பெறும். இது பொதுவாகச் சேலம் மாவட்டத்தில் தோனறித தென்னார்க்காடு மாவட்டத்தில் ஓடும் வட வெள்ளாற்றுக்கும் தஞ்சை மாவட்டத்தின தெற்கிற் பாயும் தென் வெள்ளாற்றுககும் இடையி லுளள வளமான நாடாகும். கோட்டைக் கரை திருசசி மாவட்டத்தில குளித்தலை வட்டத்தில் இருந்ததென்பர். எனவே இக்காலத் திருச்சி, தஞ்சா வூர் மாவட்டங்களும தெனனாரக்காடு மாவட்டத தின் ஒருபகுதியும் அடங்கிய நிலப்பரப்பே பண்டைய சோழநாடு எனனலாம். வடக்கு மேற்கு எல்லைகள காலத்துககுக் காலம் மாறியதுண்டு. வற்றாத காவிரி யாலும் அதன் துணையாறுகளாலும் நீர்வளம் பெறும் இந்நாடு காவிரிநாடு, பொன்னிநாடு எனவும் வழங்கப்பெறும். நீரவளம் நிலவளம் உடைய இந் நாட்டில் நெல்விளைவு மிகுதியாகக கிடைததமை யின, இந்நாட்டை எல்லா நாட்டினரும் பாராட்டி னர். 'சோழவளநாடு சோறுடைத்து' என ஔவையா ராலும் ஏத்தப்பெற்றது.

உறையூர், காவிரிப்பூம்பட்டினம், தஞ்சாவூர், கங்கை கொண்ட சோழபுரம், பழையாறை முதலிய நகரங்கள சோழநாட்டின் தலைநகரங்களாகத் திகழ்ந்தன. உறையூரும் காவிரிப்பூம்பட்டினமும் சஙக காலச் சோழரின தலைநகரங்கள. பழையாறை தஞ்சை, கங்கைகொண்ட சோழபுரம் பிற்காலச் சோழர் தலைநகரஙகள். பட்டினப்பாலை சோழர் தலைநகராயிருந்த புகாரின் சிறப்பினை உணர்த்தும். கிளளிவளவன், கோப்பெருசோழன், திருமாவளவன் முதலிய சஙக காலச் சோழர்களைப் பற்றிச் சஙக இலக்கியங்களால் அறியலாம். அசோகர் கல்வெட்டு சோழரைப் பற்றிக் குறிப்பிடுவதும் அவர்தம் தொன மையை உணர்த்தும். சோழர்கள கிரேகக உரோம நாடுகளுடனும் வணிகத் தொடர்பு கொண்டிருந்த னர். களப்பிரர் காலத்தில் சோழர் ஆட்சி குனறிப் பல்லவராட்சி தலையெடுத்தது. பின் பிற்காலச் சோழர் சோழநாட்டைச் சிறப்புடன் ஆண்டனர். அவர்கள் காலத்தில் பல திருக்கோயில்கள எழுப்பப் பெற்றன. சமய இலக்கியங்கள தோன்றின. மக்கள் நலமுற வாழ்ந்தனர். பின்அயலவர் படையெடுப்பால் சோழநாடு சிறப்புக் குன்றியது. இரா.சா.

**சோழமண்டல சதகம்:** இந்நூல் முந்நூறு ஆண்டுகளுக்கு முன்னர்த் தோன்றிய சிற்றிலக்கிய

மாகும். சோழமண்டலத்தின் பெருமைகளைப் பாடுவது இதன் நோக்கமாகும். மராட்டிய மனனர் ஏக்கோசியின் மைந்தர் சகாசியின் காலத்தில் (கி பி. 1686-கி.பி. 1710) தஞ்சைப் பகுதியிலுள்ள திருத்துறைப் பூண்டிக்கு வடக்கிலுள்ள வேளூரின்கண வாழ்ந்த ஆத்துமநாத தேசிகா இதன் ஆசிரியராவார். இந்நூலின சிறப்புப்பாயிரம் இவரைக் 'காளை ஆத்ம நாதன்' எனறு குறிப்பிடுதல் கொண்டு, இவரைக காளையார் அல்லது நந்திகேசுவரர் கோத்திரத்தின ராகக்கருதுவர் அறிஞர். மன்னர் சகாசி இப்புலவர் பிரான் வேணடுகோளின்படி பகலில் தீவட்டி கொளளும் உரிமையளித்தார்.

புலவரின் பெற்றோர் இன்னார் என அறியச் சான்றில்லை. இந்நூல் சித்தாய் மூர் என்னும் ஊர்த் தலைவன் நளளாறு வைததியலிங்க மகிபன் மகன அருணாசல வேளின்' வேணடுகோள்படி இயற்றப் பட்டதென்றும், அத்தலத்தில் குடி கொண்ட, பொன் வைத்தவர் திரு முன்னர் அரங்கேற்றப்பட்டது என்றும் அறிய முடிகின்றது. இத் தலைவனை இநநூலின செய்யுள (100) அருணாசலராயன் என்று பாராட்டுகிறது.

காப்பும் அவையடக்கமும் உட்பட இநநூலில 105 செய்யுட்கள் உள்ளன. சுநதரமூர்த்தி சுவாமிகள, உபமன்னியர், சங்கப்புலவோர், கமபர், பொய்யா மொழியார், ஔவையார், முதலிய சானறோர் மொழியைப் பினபற்றித் தாம் சோழ மணடலததின் பெருமைகளைக் கூறுவதாக ஆசிரியர் குறிப்பிட்டுளளார்.

இதில் திருநீல நக்கர், மானக்கஞ்சாறா, இளையான்குடி மாறர், அரிவாட்டாய நாயனாா, ஏயர் கோன், கலிக்காம நாயனார், கோட்புலி நாயனார் முதலான சைவ நாயனார்கள் பாராட்டப்படுகினறனர்.

சோழ மன்னன் ஒருவனுடைய நீர் வேட்கையினைத் தணிக்கக் கருப்பஞ்சாறு அளித்த கருப்புடையான், தன் தோட்டத்திலகாய்த்த ஒவவொரு சுரைக் காயையும் அககினிபுரியீசருக்குக் காணிக்கையாக்கிய கஞ்சனூரான், சுரைக்குடையான், திருக்கணப்புரத்தி லிருநது கொண்டு சமயத் தொண்டாற்றிய முனைய தரையன், வெண்ணை நல்லூர்ச் சடையப்ப வள்ளல், களந்தை வாழ் குடி தாங்கி, கருணாகரத் தொணடைமான் முதலான பல தலைவாகளும் பாராட்டப்படுகின்றனர்.

புலவர் பெருமக்களுள் புத்தமித்திரர், இரட்டைப் புலவர், ஒட்டக் கூத்தர், வைத்தியநாத தேசிகர், ஔவையார், பட்டினத்தடிகள், சத்திமுற்றப் புலவர் முதலானோர் சோழ நாட்டின் பெருமையை வளர்த்தோராய்ப் பாராட்டப்படுகின்றனர்.

இச்சதகத்தில் சோழியர், காணியாளர், முதன் மையாா, கார்காத்தார் ஆகிய பிரிவினர் பாராட்டப் பட்டுள்ளனர் என அறிய முடிகின்றது. இந்நூலின் 13-ஆம் செய்யுள் கரிகாலன் வடபுலத்திலிருந்த ஐந்து மடாதிபதிகளைக் கொணடு வந்து இஙகே ஐந்து மடஙகளை நிறுவினான என்று குறிப்பிடுகிறது. 48-ஆம் செய்யுள் சோழியர் குடிப் பெண்டிரின புகழ் பாடுகிறது. அவர்கள் ஆண சித்திரம் வரைவதிலர் என்றும, ஆற்று வெள்ளம் கடவார் என்றும் குறித்துள்ளது. இதில் கூறப்படும் பல கதைகள இனறு வழக்கில் காணப்படுவதில்லை. இந்நூல் கி பி. 1916-ஆம் ஆண்டில் திருவாரூர், சோமசுந்தரதேசிகரால் பதிப்பிககப்பட்டுள்ளது. அ.த.

**சோழர்:** தமிழ்நாட்டைச் சிறப்புற ஆட்சி செய்த சோழர்களைச் சங்க காலச் சோழர், விசயாலயன் வழிவந்த சோழர், சாளுக்கியச் சோழர் என மூன்று வகையினராகப் பிரிக்கலாம். எணணற்ற கல்வெட்டுகள், செப்புப் பட்டயங்கள், இலக்கியங்கள், நாணயங்கள், கோயில்கள் மற்றும் மாளிகைகள் போன்ற நினைவுச் சின்னங்கள், அயலநாட்டினர் குறிப்புகள் ஆகியன சோழர்களைப் பற்றி அறிந்து கொள்ள உதவும் சானறுகளாக உள்ளன.




சோழப் பேரரசு

சங்க இலக்கியங்கள் சங்ககாலச் சோழர்களைப் பற்றிக் கூறுகின்றன. உறையூர் புகார் ஆகியன அவர்களின் தலைநகர்களாக விளங்கின. சங்ககாலச் சோழ மன்னர்களுள் ஒப்பற்றவனாகத் திகழ்ந்தவன் கரிகாலன். அகநானூறு, புறநானூறு ஆகிய நூல்களில் வரும் சில பாடல்களும் பொருநராற்றுப் படை, பட்டினப்பாலை ஆகிய நூல்களும் அவனைப் பற்றிய செய்திகளை வெளிப்படுத்துகின்றன. பழமொழி நானூறு, சிலப்பதிகாரம், கலிங்கத்துப்பரணி, மூவருலா போன்ற இலக்கியங்களிலும் இம்மன்னனைப் பற்றிய குறிப்புகள் உள்ளன. இம்மன்னனைத் தவிர குளமுற்றத்துத் துஞ்சிய கிள்ளிவளவன், நலங்கிள்ளி, இராசசூயம் வேட்ட பெருநற்கிள்ளி, குராப் பள்ளித் துஞ்சிய பெருந்திருமாவளவன், கோப்பெருஞ்சோழன், கோச்செங்கட்சோழன் ஆகியோர் சங்ககாலச் சோழ மன்னர்களுள் முக்கியமானவர்கள். அவர்கள் இரவலர்களின் புரவலர்களாயிருந்தனர். பொருள் வளமும், பகுதி வளமும், மேம்பட்ட துணை நின்றனர். வரிகள், கப்பம், நன்கொடை, காணிக்கை முதலியன அரசின் வருவாய்களாயிருந்தன. நீதி தழைத்தது. உழவுத்தொழில் உயர்நிலையிலிருந்தது. தொழில்கள், உள்நாட்டு மற்றும் வெளிநாட்டு வாணிகம் மேம்பட்டிருந்தன. பண்டமாற்று முறை வழக்கிலிருந்தது. எண்ணற்ற தெய்வங்களுக்குச் சிறப்பான வழிபாடுகள் ஆற்றப்பட்டன. எண்ணிறந்த விழாக்களும் கொண்டாடப்பட்டன. மக்களுள் தொழில்களினடிப்படையில் பிரிவுகள் காணப்பட்டன களவு, கற்புமுறைத்திருமணங்கள் இருந்தன.

சங்கம் மருவிய காலமான கி.பி. 3-ஆம் நூற்றாண்டு முதல் பின்னடைந்துவிட்ட சோழர் பின்னர் 9-ஆம் நூற்றாண்டின் இடைப்பகுதியில் விசயாலயன் காலம் முதல் மீண்டும் புத்துயிர் பெற்றனர். அவ்வாறு படிப்படியாகச் சிறப்படைந்த அவர்கள் 'ஆதிக்கச் சோழர்கள்' (Imperial Cholas) என குறிக்கப்படுகின்றனர். அவர்கள் 'இராசகேசரி', 'பரகேசரி' ஆகிய பட்டங்களை மாறிமாறிப் புனைந்து கொண்டனர்.

விசயாலயன் என்பவன் (கி.பி. 849-881) பழையாறைப் பகுதியின் குறுநில மன்னராயிருந்த முத்தரையரை வென்று, தஞ்சையைத் தனது தலைநகராக ஆக்கிச் சோழர்களின் புத்தெழுச்சிக்கு வித்திட்டான். வெற்றிவீரனான இம்மன்னன் விசயாலயச் சோழீச்சுரம் என்ற கற்றளியை நார்த்தாமலைக்குத் தெற்கில் அமைத்துக் கட்டடக் கலைப் பணிக்கும் வழிகோலினான். அவன் மகன் முதலாம் ஆதித்த சோழன் (கி.பி. 887-907) இராசகேசரி பட்டத்துடன், கோதண்ட இராமன் என்ற பெயரிலும் ஆட்சி புரிந்தான். தொண்டை மண்டலம், கொங்கு மண்டலம் ஆகியவற்றின் பல பகுதிகள் சோழர்களின் கட்டுப்பாட்டின்கீழ்க் கொண்டு வரப்பட்டன. இவனது ஆட்சிக் காலத்தில்தான் தமிழக வரலாற்றில் ஒரு திருப்பு முனையாக விளங்கிய திருப்புறம்பியம் போர் கி.பி. 885-இல் நடைபெற்றது. இளங்கோப்பச்சி, திரிபுவன மாதேவி வயிரியக்கன் என்ற இருவரும் அவன் மனைவியர். அவனுக்குப்பின் கி.பி. 907 முதல் 955 வரை பரகேசரி முதலாம் பராந்தகன் சோழ மன்னனாக ஆண்டான் மதுரை,ஈழம் ஆகியவற்றை வென்று 'மதுரையும் ஈழமும் கொண்ட கோப்பரகேசரி' என்ற பட்டம் பெற்றான். வீரசோழன் என்பதும் அவனது சிறப்புப் பெயர்களுள் ஒன்று. குஞ்சரமல்லன், பண்டித வத்சலன் என்ற விருதுப் பெயர்களையும் கொண்டிருந்தான். இவன் காலத்தில் கி.பி. 948-இல் நிகழ்ந்த தக்கோலப் போர் முக்கியமானதாகும். இப்போரில் இராசாதித்த சோழன் என்ற சோழ இளவரசன் உயிரிழந்தான். எனவே, சோழர்கள் எழுச்சியில் ஒரு தேக்கநிலை தென்படலாயிற்று. இராசகேசரி கண்டராதித்தன் (கி.பி 955-957) மீண்டும் சோழர்களை வலுப்படுத்த முனைந்தான். செம்பியன் மாதேவி என்பாள் அவன் மனைவி அவனுக்குப்பின் அரிகேசரி அரிஞ்சயன் கி.பி. 957-இல் ஆட்சியேற்று அவ்வாண்டிலேயே இயற்கை எய்தினான். அவனுக்குப்பின் அவனுக்கும் வைதும்பராயர் குலத்து இளவரசியான கல்யாணி என்பாளுக்கும் பிறந்த இரண்டாம் பராந்தகன் அரியணையேறினான். சுந்தர சோழன் எனப்பட்ட அவனுக்கு தேவியம்மன், வானவன்மாதேவி என்ற இரு மனைவியரிருந்தனர். பின்னவள் மூலமாக ஆதித்த கரிகாலன், அருண்மொழி வர்மன் என்ற புதல்வர்களும் குந்தவை என்ற மகளும் பிறந்தனர் இவனுக்குப் பின் கி.பி. 970 முதல் 985வரை கண்டராதித்தனின் மகன் மதுராந்தகன் உத்தமசோழன் என்னும் பெயரில் சோழ மன்னனானான். பரகேசரி பட்டமுடையவன் இவனுக்குத் தென்னவன்மாதேவி, வானவன்மாதேவி, கிழானடிகள், திரிபுவனமாதேவி போன்ற பல மனைவியரிருந்தனர். தொண்டை நாடு, திருமுனைப்பாடி நாடு ஆகியன இவன் வசமாயின. அமைதியும் செழிப்பும் இவன் காலத்தில் மேலோங்கிக் காணப்பட்டன. எண்ணற்ற கற்றளிகள் இவனுடைய ஆட்சியின்போது எழுப்பப்பட்டன. இவனைத் தொடர்ந்து கி.பி. 985 முதல் கி.பி. 1014 வரை அருண்மொழிவர்மன் ஆட்சிப் பொறுப்பேற்றான். இவனே இராசராசசோழன் எனப்பட்டவன். தஞ்சைப் பெரிய கோயிலை எடுப்பித்தவன் இவனே சேரர், பாண்டியர், ஈழ நாட்டவர் ஆகியோரை வென்று 'மும்முடிச் சோழன்' என்ற பெயரைப் பெற்றவன். விழிஞம், காந்தளூர், கொல்லம், கங்கபாடி, நொளம்பபாடி, தடிகைபாடி ஆகிய இடங்களில்

வென்றும், கங்கர்களை வென்றும், மேலைச் சாளுக்கியாகளை வெற்றி கண்டும், மாலத் தீவினை வென்றும் சோழப் பேரரசினை விரிவாக்கம செய்தான. சமயப் பொறையுடையவன, செயங் கொண்டவன், சோழேந்திர சிம்மன், நிகரிலிச சோழன, சோழ மாரத்தாணடன, நித்தியவிநோதன், பாண்டியகுலா சனி,பண்டிதவத்சலன ஆகியன இவனது விருதுப் பெயர்களுள் சிலவாகும். சிவபாத சேகரன எனப்பட்ட இவன காலத்தில சோழநாடு அளக்கப்பட்டது முக்கிய நிகழ்ச்சியாகும. இராசகேசரி பட்டம் பெற்றிருந்த இவனுக்குப்பின் கி பி. 1014 முதல் 1044 வரை மதுராந்தகன் எனபபட்ட பரகேசரி முதலாம் இராசேந்திரன் சோழப் பேரரசரானான். பெருவீரன வடபுலப் படையெடுப்பு இவன் காலத்தில் முக்கியமான செயலாகும். கங்கைகொண்ட சோழபுரம் என்ற நகரினை உருவாக்கி அதனைச் சிறப்பு நகராகினான். கடாரம் கொண்டவன் இவனே. இவன் காலத்தில் சோழர் பெருமை கடல் கடந்தும விரிவடைந்தது. எணணிறநத கல்வெட்டுகள் இவனது புகழினைப் பறைசாற்றுகின்றன. இவனது மூத்த புதலவன் முதலாம் இராசாதிராசன் கி.பி 1044 முதல் 1054 வரை ஆண்டவன் கொப்பம் என்ற இடத்தில் நடந்த போரில் சாளுக்கிய மன்னன் சோமேசுவரனால கொல்லப்பட்டமையால் 'யானை மேல் துஞ்சியவர்' எனற பட்டம் பெறறான். இவனைத் தொடர்ந்து இரண்டாம் இராசேந்திரன(கி.பி. 1054 முதல் 1063 வரை), வீர இராசேநதிரன் (கி பி. 1063 முதல் 1070 வரை). அதி இராசேந்திரன் (கி.பி. 1070) ஆகியோா அரசோச்சினர்.

கி.பி. 1070கருப் பின் 'சுங்கம் தவிர்த்த சோழன்' எனப்பட்ட முதலாம் குலோத்துங்கன் ஆட்சி ஏற்றான். முதலாம் இராசேந்திரனின் மகள் அங்கமமா தேவிக்கும் கீழைச் சாளுக்கிய மனனன் இராசஇராச நரேநதிரன் என்பவனுக்கும் பிறந்தவன். அதி இராசேநதிரனுக்கு வாரிசினமையால் சோழரின ஆட்சிதனை ஏற்றுகொண்ட குலோத்துங்கன் காலம் முதல் சோழர்கள 'சாளுக்கியச் சோழர்' எனப்பட்டனர். இவனது ஆட்சி 1120வரை சுமார் அரை நூற்றாண்டிற்கு நீடித்தது. சீனத் தூதுக் குழுவொனறு 1077-இல் இம்மன்னனைச் சந்தித்ததாகக் கூறுவா. இவனது புகழினை எணணற்ற கல்வெட்டுகள எடுத்தியம்புகின்றன. மேலைச் சாளுக்கியருடன் போரிட்ட இவன் ஈழ நாட்டுடன் போரிட்டு அங்கிருந்த சோழப் பகுதியை இழகக வேண்டியவனானான். வாணிகப் பெருக்கத்திற்காகச் சுங்கவரியைத் தவிர்த்தமையால் 'சுங்கம் தவிர்த்த சோழன்' எனப்பட்டான இவன 1086, 1110 ஆகிய ஆணடுகளில் நிலங்களைப் பிரித்து அளநதான. 'சர்வலோகாசரயன்', 'விட்டுணுவர்தத னன்', 'குலசேகரன்', 'திருநீற்றுச் சோழன்' என்ற பெயர்களையும் உடையவன். விக்கிரமசோழன் (கி பி. 1120-1135), இரணடாம குலோத்துங்கன் (1136-1150), இரண்டாம் இராசராசன (கி.பி. 1150-1163), இரண்டாம் இராசாதிராசன (1163-1178), மூன்றாம் குலோத்துங்கன (1178-1218) ஆகியோர் தொடாந்து அரசோச்சினர். இவர்களது ஆட்சியினபோதே சோழர் படிப்படியாகச் செல்வாக்கிழக்கலாயினர். 1218 முதல் 1256 வரை அரசாண்ட மூன்றாம் இராசராசன் காலத்தில பாணடியரும் ஒய்சாளருமே சோழ மண்ணில் செல்வாக்குப் பெற்றனர். இவனது மைந்தன மூனறாம் இராசேந்திரனின் (1256-1279) காலத்திற்குப்பின சோழர் ஆட்சி முடிவுற்றதெனலாம்.

சோழர் முடியுடை வேநதர்கள. ஆட்சியுரிமை பரம்பரை உரிமையுடையதாயிருந்தது. மனனர்கள கடமையுணர்வு, மதிநுட்பம், திறமை, துணிவு, கல்வியறிவு நிரம்பப் பெற்றிருந்தனர். தனிப்பட்ட பலதுறைகளை நிறுவி அவற்றின் உதவியுடன் நலலாட்சிஅமைத்தனர். சோழராட்சி ஒரு கூட்டாட்சி (Federal State) மையம் நோக்கிய அவர்களது ஆட்சி ஒளிசான்ற, பயனுள்ள ஒன்றாகத் திகழ்நதது. மன்னரின் அதிகாரங்கள விரிவானவையாயிருநதன. பெருந்தரம், சிறுதரம் போன்ற பலதரப்பட்ட அதிகாரிகள் இருநதனர். நீதித்துறை செவ்வனே இயங்கிற்று. நிலவரி, தறிஇறை, நாடுகாவல், பாடிகாவல், நீர்ப்பாட்டம் போன்ற வரிகளுடன் திறைப் பொருள்கள், கப்பம் ஆகியனவும் முக்கிய வருவாய்களாகும். அரசியலில 'குரு' என்ற அரச குருவின் செல்வாக்கு மிகுநதிருந்தது. மக்களிடமும் அரசர்களிடமும் முன்னோர் வழிபாடு காணப்பட்டது. நால்வகைப் படை அமைப்புடன் கப்பற்படையும் இருநதது. வேளைக்காரப் படை என்பது அரசின் மெய்க்காவல் படை. வலங்கை இடங்கை என்ற பிரிவுகள் அடிப்படையில சாதிகள் இயங்கின. மன்னர் நீதியின் நீரூற்றாயிருந்தார். கிராமப் பஞ்சாயத்துக்கள், நீதிமனற அதிகாரிகள் இருந்தனர். சோழர்களின் உள்ளாட்சி முறையைப் பற்றி முதலாம் பராந்தகன் காலத்தில் கி.பி. 919,921 ஆகிய ஆண்டுகளில் வெளியிடப்பட்ட உத்திரமேரூர்க் கல்வெட்டுகள் உணர்த்துகினறன. கிராம சுயாட்சி நிலவியது. பல வாரியஙகளுடன் பஞ்சாயத்துகள் இயங்கின. குடவோலை முறையில் குறிப்பிட்ட தகுதிகளுடையவர்கள் பஞசாயத்து உறுப்பினர்களாயிருந்தனர். கணக்குகள் அவ்வப்போது தணிக்கை செய்யப்பட்டு சரிபார்க்கப்பட்டன. அக்கம், கழஞ்சு, மஞ்சாடி, காசு, பழங்காசு, மாடை போன்ற நாணயங்கள வழக்கிலிருந்தன.

மக்கள் தம்மை அலங்கரித்துக்கொள்வதில் பெரு விருப்பம் காட்டினர். ஒப்பனைக் கலை மேம்பட்டிருந்தது. இசைக்கலை சிறந்திருந்தது. மக்களிடையே பலதாரமணம் காணப்படவில்லை. சமயச் சார்பான மூடப்பழக்க வழக்கங்கள் நிலவின. ஆட்டுச்சண்டை, கோழிச்சண்டை, யானைப் பந்தயம், மற்போர், குதிரைப் பந்தயம் போன்றவை பொழுதுபோக்குகளாகும். மணிக்கிராமத்தார், களஞ்சியார், நெகிலி, தம்மவாணிகர், நானாதேசத்திசையாயிரத்து ஐநூற்றுவர் போன்ற வணிகக் குழுமங்கள் சோழர்களிடம் செல்வாக்குப் பெற்றிருந்தன. கலவித்துறை மேம்பட்டிருந்தது. திண்ணைப் பள்ளிகள், கோயில் பள்ளிகள், தேவாரப் பாடசாலைகள் இருந்தன. ஆகம விதிகள், வேதங்கள், பக்தி இலக்கியங்கள் போதிக்கப்பட்டன. மன்னர்களின் மெய்க்கீர்த்திகள் அவர்களது புலமைக்குச் சான்று பகர்கின்றன. சைவத் திருமுறைகளை நம்பியாண்டார் நம்பி தொகுத்தார். திருவுந்தியார், திருக்களிற்றுப்படியார், பெரியபுராணம், சூடாமணி, வீரசோழியம், கல்லாடம், கலிங்கத்துப் பரணி, மூவருலா, நளவெண்பா, கம்பராமாயணம், கந்தபுராணம் போன்றவை அவர்கள் காலத்தில் எழுந்த முக்கிய தமிழிலக்கியப்படைப்புகளாகும். பிங்கல நிகண்டு போன்ற அகராதிகளும் எழுந்தன.

ஆகம முறைப்படி சிற்ப வேலைப்பாடுகள் நிறைந்த எண்ணற்ற கோயில்கள் எழுப்பப்பட்டன. சமயப் பொறையுடன் சமய நெறிகளும் வளர்க்கப்பட்டன. சமயச் சடங்குகள், விழாக்கள் ஆகியன செல்வாக்குப் பெற்றன. சைவமும் வைணவமும் தழைத்தோங்கின. பண்பாட்டுத் தொடர்புகளால் தமிழ்ப்பண்பாடு சோழர் காலத்தில் மேம்பாடுற்றது. ஓவியக்கலை உயர்வெய்தியது. தமிழகத்தில் ஆட்சி செய்த பல்லவ, பாண்டிய மன்னர்களுடன் ஒப்பிட்டு நோக்கினால் தஞ்சைத் தரணியில் அரசோச்சிய சோழர்களின் பெருமை உயர்வானது. மா.கா.

**சோழர் ஊராட்சி** இது சோழர் காலத்திய ஆட்சிமுறையின் சிறப்புக் கூறுபாடாகும். இது இக்காலத்திய தலசுய ஆட்சி முறையினை (Local Self Government) ஒத்ததாகும். சோழர் காலக் கிராம ஆட்சியில்தான், மக்களால்மக்களுக்காக நிறுவப்பட்ட மக்களாட்சியைக் காண முடிகிறது. இம்முறை தமிழகத்தில் தொன்று தொட்டு நிலவி வந்தமுறை, என்பது இங்கு நினைவு கூரத்தக்கது. முதலாம் பராந்தக சோழனின் உத்தரமேரூர்க் கல்வெட்டில் சோழர் ஊராட்சி பற்றி விரிவாகக் கூறப்பட்டுள்ளது.

சோழப் பெருமன்னர்கள், தமது ஆணையின்கீழ் வாழும் மக்கள், ஆட்சித்துறையில் தேர்ச்சி பெறவும் ஊரின் தேவைகளைப் நிறைவு செய்துகொள்ளவும், ஊர்கள் தோறும் சபைகளை நிறுவியிருந்தனர். அக்காலத்தில் ஒவ்வொரு ஊரும் பல குடும்புகளாக (Ward) பகுக்கப்பட்டிருந்தது. ஒவ்வொரு குடும்பிற்கும் ஓர் உறுப்பினர் மட்டும் பிரதிநிதியாகத் தேர்ந்தெடுக்கப்பட்டனர். ஊர்ச்சபை உறுப்பினர்களின் எண்ணிக்கை, அவ்வூரின் மக்கள்தொகை அளவைப் பொறுத்திருந்தது. எடுத்துக்காட்டாக, செங்கற்பட்டு மாவட்டத்திலுள்ள உத்திரமேரூரில் 30 குடும்புகளும், முத்தரையர் தலைநகராகத் திகழ்ந்த செந்தலையில் (தஞ்சை மாவட்டம்) 60 குடும்புகளும் இருந்தன. தேர்ந்தெடுக்கப்பட்ட உறுப்பினர்கள், 'பெருமக்கள்' எனவும் 'வாரியப் பெருமக்கள்' எனவும், 'ஆளுங்கணத்தார்' எனவும், குறிக்கப்பட்டனர். வாரியப் பெருமக்களாகத் தேர்நதெடுக்கப் படுவோருக்குத் தகுதிகள் நிருணயிக்கப்பட்டன. காணிக்கடன்செலுத்து தற்கேற்ற கால்வேலி நிலமும், சொந்த மனையும் உடையவராய், மறைகளையும் ஆகமங்களையும் நன்கு கற்றவராய், முப்பத்தைந்து வயதிற்கு மேற்பட்டு, எழுபத்தைந்து வயதிற்கு உட்பட்டவராய், மூன்றாண்டுகட்கு உட்பட்டு நிறைவேற்றுக் கழகத்திலும் (நிருவாக சபை) உறுப்பினராக இருந்திராதவராய், இருப்பவரே ஊர்ச்சபைக்குத் தேர்ந்தெடுக்கத் தகுதி பெற்றவராவார்.

சபை உறுப்பினராக இருந்து கணக்கு காட்டாதிருந்தவரும், பஞ்சமாபாதகங்கள் புரிந்தவரும், பிறன்மனை நயந்தோரும், கிராமக் குற்றப் பதிவுப் புத்தகத்தில் பதிவு செய்யப்பட்டவரும், இவர்களது நெருங்கிய உறவினர்களும் சபை உறுப்பினர்களாகத் தேர்ந்தெடுக்கப்படத் தகுதி அற்றவர்கள் ஆவர்.

அங்கத்தினர்கள் ஆண்டுதோறும் குடவோலை முறைப்படி தேர்ந்தெடுக்கப்பட்டனர். தேர்தல் நாளன்று அரசு அதிகாரி ஒருவரும், பொதுமக்களும் பொதுவிடத்தில் குழுமினர். பின்னர்க் குடும்பிற்குரிய வேட்பாளர்களின் பெயர் எழுதப்பட்ட ஓலைத் துண்டுகள் குடத்தில் இடப்பட்டு, சிறுவன் ஒருவனைக் கொண்டு, ஒரு துண்டு எடுப்பர். அந்தப்பெயர் வாசித்து காண்பிக்கப்பட்டு, தேர்ந்தெடுக்கப்பட்டதாக அறிவிக்கப்பட்டது. இவ்வாறு எல்லாக் குடும்புகளுக்குரிய உறுப்பினரும் தேர்ந்தெடுக்கப்பட்டனர். இவர்கள் உறுப்பினர்களாகப் பதவியேற்றுத் தமது கடமைகளைச் செவ்வனே நிறைவேற்றினர்.

ஊரவை பல வாரியங்களாகப் பிரிந்து செயல்பட்டது. அவற்றுள் தோட்ட வாரியம், ஏரி வாரியம், நியாய வாரியம், பொன் வாரியம், தரும வாரியம், கணக்கு வாரியம், கலிங்கு வாரியம், தடிவழி வாரியம் ஆகியன குறிப்பிடத்தக்கவையாகும். வாரியங்களின் செயற்பாடுகளை

மேற்பார்வையிட, கிராமக் காரிய வாரியம் ஒன்றும் இருந்தது, இதில் தேர்ச்சியும், பட்டறிவும் மிக்க 12 உறுப்பினர்கள் அங்கம் வகித்தனர். சுருங்கக் கூறின் ஒரு காரிய நிறைவேற்றுக் கழகம் (Exective body) போன்று இது செயற்பட்டது, இதன் ஆணைகளை நிறைவேற்றச் சில பணியாட்களும் இருந்தனர்.இவர்களுள் 'கரணத்தான்' குறிப்பிடத்தக்கவன் ஆவான். கணக்குகளை எழுவது இவனது பணியாகும், சபையின் உறுப்பினர் ஊதியமின்றி ஓராண்டு பதவி வகிப்பர். இவர்கள் ஏதேனும் குறறம் புரிந்தால், உடனடியாகப் பதவியைவிட்டு நீக்கப்பெறுவர். ஊர்ச்சபை அதற்கென கட்டப்பட்ட மாளிகையில் கூடும். மாளிகை இல்லாத ஊர்களில கோயில் மண்டபத்திலும், மரத்தடியிலும் சபை கூடும்.

சோழரின ஊராட்சிமுறை அயல்நாட்டு அறிஞர்களின் பாராட்டுக்களைப் பெற்றுள்ளது. க.ம.

***சோழன் இராசசூயம் வேட்ட பெருநற்கிள்ளி*** சங்க காலத்தில் ஆணட சோழமன்னாகளுள் ஒருவன். கிள்ளி என்னும் பெயர், 'பெரிய நல்ல' எனப் பொருள்படும் 'பெருநல்' என்னும் அடையொடு சேர்ந்து, 'பெருநற்கிள்ளி' என்று இம்மன்னன் பெயராக அமைநதுள்ளது. இந்த அடைமொழி கிள்ளியின் பணபினையும் அதனால் இவன் ஆட்சியில் மக்கள் எய்திய பயனையும் உணர்த்துவதாக உள்ளது அரசர்கள் செய்தற்குரிய இராசசூயம் எனனும் பெருவேளவியினைச் செயத சிறபபுத் தோனற இமமன்னன இராசசூயம் வேட்ட பெருநற்கிள்ளி எனறு வழஙகப் பட்டுள்ளான். இமமனனனைப் பாணடரங்கணணனார், உலோச்சனார், வடமவண்ணக்கன பெருஞ்சாத்தனார் ஆகிய புலவர்களதம் புறநானூற்றுப பாடல்களில் பாடிச் சிறப்பிததுளளனர். பாணடரங் கண்ணனார் இவனது வீரச் சிறப்பினை, விளஙகுங் கால் இவனை முருகனோடு உவமித்து, 'முருகற் சீற்றத்து உருகெழுகுரிசில்' (புறம். 16;12) எனறு குறிப்பிட்டுள்ளார். இமமன்னன், 'பிறர்ககு உவமம் தான் அல்லது, தனககு உவமம் பிறாஇல' என்னுமாறு (புறம்.377:10,11) விளஙகிய தனமையினை உலோச்சனார் தம் புறநானூறறுப்பாடலில் விளககியுளளார். ஒருகால் இம்மனனனும், சேரமான மாரி வெணகோ, பாண்டியன கானப்பேர் தந்த உக்கிரப் பெருவழுதி ஆகியோரும் நட்பினராய் ஒன்று கூடியிருந்த அரிய காட்சியினைக் கணட ஔவையார்'வாழ தல் வேண்டும் இவண் வரைந்தவைகல்,வாழச் செய்த நல்வினை அல்லது, ஆழுங்காலை புணைபிறிதில்லை' என்று அறிவுரை நல்கி வாழ்த்தினார். ஒருகால் இம் மன்னன் சேரமான் மாந்தரஞ்சேரல் இரும்பொறையொடு மாறு கொண்டு போரிடநேர்ந்தது. அப்போது தேர்வண் மலையன் என்பான் இம்மன்னனுக்குத் துணையாக அமைந்தான். இச்செய்தியினை, வடம வண்ணக்கன் பெருஞ்சாத்தனார் பாடிய புறநானூற்றுப் பாடலின் (புறம்.125) அடிக்குறிப்பினால் அறிய முடிகிறது. அ.மா.ப.

***சோழன் இலவந்திகைப் பள்ளித்துஞ்சிய நலங்கிள்ளி சேட்சென்னி:*** சங்க காலத்தில் வாழ்ந்த சோழமன்னர்களுள் ஒருவன். கிள்ளி, சென்னி என்பன பொதுவாகச் சோழமன்னனைக் குறிக்கும் பெயர்களாகும். சேட்சென்னி என வழஙகியவர்களுள் இன்னார் என்றுணர்த்தும் வகையில் நலங்கிள்ளி சேட்சென்னி என்று இம்மன்னன் குறிப்பிடப் பட்டான். இலவந்திகைப் பளளி என்னுமிடத்தில் இவன் இறந்துபட்டமையால் அவ்விளக்கந் தோன்றவும், ஒரே பெயருடைய பிறரிற் பிரித்துணரவும் வாய்ப்பாக 'இலவந்திகைப்பளளித்துஞ்சிய' என்னும் அடைமொழி சேர்த்து இம்மன்னன கூறப்டுகிறான். 'குளமுற்றத்துத் துஞ்சிய' 'குராப்பள்ளித் துஞ்சிய' என்று ஒரு மனனன இறந்த இடப் பெயரினைச் சேர்த்து அம்மன்னனைக் குறிப்பிடும் வழக்கம் சங்க காலத்தில் இருந்துள்ளது. இலவந்திகைப் பள்ளி என்பதற்கு, காலேகப்பள்ளி என்னும் 'பாடபேதம் இருப்பதாக டாக்டர் உ.வே. சாமிநாதையர் குறிப்பிட்டுள்ளார்.

இலவந்திகை என்பது நீராவி சூழ்ந்த வயந்தச் சோலை, யந்திரவாவி என்று பொருள்படுவ்தால், யந்திரவாவி பொருத்தப் பெற்று நீராவி சூழ்ந்து விளங்கும் இனிய வசந்த சோலையுள் அரசன் அரசியர் மகிழ்ந்து இனபுற வாய்ப்பாக அமைக்கப்பட்ட இடம் இலவந்திகைப் பள்ளி என்று கூறப்பட்டது போலும். சோழமன்னன் ஒருவனும், பாண்டிய மன்னன ஒருவனும் இலவந்திப் பள்ளித் துஞசிய என்னும் அடையொடு காணப்படுகின்றமையால் இரு நாடுகளிலும் இப்பெயரில் இலவந்திகைப் பளளிகள அமைந்திருத்தல் வேண்டும் என்பதும், அவ்விடங் களில் இறந்த மனனனை அப்பெயரால் குறிப்பிட்டனர் என்பதும் உயத்துணருமாறுள்ளன.

நலங்கிளளி சேட் செனனியைக் கோனாட்டு எறிச்சலூர் மாடலன் மதுரைக் குமரனார் என்னும் புலவர் தம் புறநானூற்றுப் பாடலில் சிறப்பித்துள் ளார் (புறம்.61). வாகைத்திணை, அரச வாகைத் துறையில் அமைந்த அப்பாடல் இம்மன்னனின் நாட்டுவளத்தையும் வீரச்சிறப்பினையும் சித்திரிக்கின றது. அ.மா.ப.

**சோழன் உருவப்பஃறேர் இளஞ்சேட் சென்னி** சங்க காலச்சோழ மன்னர்களுள ஒருவன்; பெருவீரனும் வளளலுமாகத் திகழ்ந்தவன். உருவப் பல்தேர் எனனும் அடைமொழி இவன பெற்றிருந்த தேர்ப்படை மாட்சி கூறுவதாக அமைந்ததாகலாம். இம்மன்னனைப் பரணரும் பெருங்குன்னர் கிழாரும் தம் புறநானூற்றுப் பாடல்களில் (புறம்.4,266) சிறப் பித்துப் பாடியுளளார். இம்மனனனால சினந்து அழிக்கப்பெற்ற பகைவர் நாட்டு மக்கள், உண வின்றி வருந்தும் தாயில்லாக் குழவிகள போலத் துனபுறுவர் என்பததனைத் 'தாயில் தூவாக் குழவி போல, ஓவாதுகூஉம் நின உடற்றியோர் நாடே' என்னும் அடிகளில் பரணர் குறிப்பிட்டுளளார் (புறம்.4:18,19). பாடாண்டினை பரிசில் கடா நிலை யில் இம்மனனனைச் சிறப்பித்த பெருங்குன்றூர் கிழார், விருந்தினரைக்கணடு ஒளிந்து கொள்ளுமாறு செய்யும் வறுமை வாழ்வினை, 'விருந்து கணடொ ளிக்கும் திருந்தா வாழ்க்கை' என்னும் தொடரால் (புறம்.266.11) சுட்டியுளளார். இம்மன்னன கரிகாற பெருவளத்தான் தநதை என்பதும, அழுந்தூர் வேளிடை மகட் கொண்டவன் என்பதும் நச்சினார்க் கினியரின் தொல்காப்பிய உரையில் (தொல்.அகத். நூ.30,நச்.) அறியப்படுகினறன. இம்மன்னனை 'உருவப்பஃறேர் இளையோன' எனறு பொருநராற் றுப்படை குறிப்பிடுகிறது. அ.மா.ப.

**சோழன் குராப்பள்ளித் துஞ்சிய கிள்ளி வளவன்** சங்க காலச் சோழ வேந்தர்களுள் ஒரு வன். கிள்ளி, வளவன் என்னும் பெயர்கள் தனித் தனியே சோழமனனரைப் பொதுவாகக குறிப்பனவா கும். அவை நலஙகிள்ளி, திருமாவளவன் என அடை யடுத்து ஒரு குறிப்பிட்ட சோழமனனனை உணாத்து வதுண்டு. கிள்ளிவளவன் என இரணடும் சேர்ந்து, இம்மன்னனை உணர்த்தும் பெயராக அமைந்துள் ளது. குராப்பள்ளித் துஞ்சிய என்னும் அடைமொழி, இம்மன்னன் குராப்பள்ளி என்னுமிடத்தில் இறந்த வன் என்னும் செயதியை உணர்த்துகிறது. அதுவே, கிள்ளிவளவன் எனப் பெயரிய மற்றையோரிடமிருந்து இம்மன்னனை, வேறு படுத்துணரவும் வாய்ப்பாக அமைகிறது. கோவூர் கிழார் இம்மன்னனைத் தம் புறநானூறறுப் பாடல் ஒன்றில் சிறப்பிததுள்ளார் (புறம.373). வாகைத் திணையிலமைந்த அப்பாடல் இம்மன்னன், கருவூரினைப் போரில் வென்ற சிறப் பினைப் பாடுகிறது. இடையிடையே சிதைந்துள்ள அப்பாடல் இம்மன்னன போரிட்ட களத்தின அஞ் சத்தக்க காட்சியினை நன்கு சித்திரிக்கின்றது.
அ.மா.ப.

**சோழன் குராப்பள்ளித் துஞ்சிய பெருந் திருமாவளவன்** சங்க காலத்துச் சோழமன்னர் களுள் ஒருவன். திருமாவளவன் என்பது இவன் பெய ராகும். திருமாவளவன் எனப் பெயரிய ஏனையோரி னும் வேறுபடுத்துணர இவன் 'பெருந்திருமாவளவன்' எனப்பட்டான். இவன் குராப்பளளி எனனுமிடத்தில் இறந்தவனாதலால அதனை உணர்த்தும் வகையில் 'குராப்பள்ளித் துஞ்சிய' என்னும் அடை மொழி சேர்த்தும் வழங்கப்பெற்றான். பாண்டியன் வெள்ளி யம்பலத்துத் துஞ்சிய பெருவழுதி இவனுக்கு நண் பனாவான். ஒரு சமயம், நட்பினராய இவ்விரு வேந் தர்களும் ஒருங்கிருந்தபோது, அக்காட்சி கண்டு வியந்து மகிழ்ந்த புலவர் காவிரிப்பூம்பட்டினத்துக் காரிக் கண்ணனார் 'இன்றே போல்க நும் புணர்ச்சி, வென்று வென்று, அடுகளத் துயர்க நும் வேலே' என்று வாழ்த்தியுள்ளார் (புறம் 58:28.29). பாடாண் டினை உடனிலைத் துறையிலமைந்த பாடலில, இரு வரையும் அவர்தம் பெருமை பிறங்கச் சுட்டி விளித்து, 'நலல போலவும் நயவ போலவும், தொல்லோர் சென்ற நெறிய போலவும், காதல நெஞ்சின் நும் இடைபுகற்கலமரும், ஏதில்மாக்கள் பொதுமொழி கொள்ளாது இன்றே போல்க' என்று கூறும் அறி வுரை, நட்பரசுகளுக்கிடையே நிலவ வேண்டிய நல் லுறவின் அடிப்படையினை விளக்குவதாக உள்ளது. உறையூர் மருத்துவன் தாமோதரனார் பாடாண் டிணை குடைமஙகலத் துறையில் இம்மன்னனைச் சிறப்பித்துள்ளார். கோனாட்டு எறிசசலூர் மாடலன் மதுரைக் குமரனார் ஒருகால் இம்மன்னனிடம், பரி சில் வேணடிச் சென்றபோது பரிசில நீட்டிக்க, அத னைப் பெறாது தன் கருத்தினை ஒரு பாடலாகப் பாடிச் சென்றார். அப்பாடல் புறநானூற்றில் 167-ஆம் பாடலாக அமைந்துள்ளது. அ மா.ப.

**சோழன் குளமுற்றத்துத் துஞ்சிய கிள்ளிவளவன்**: காணக: குளமுற்றத்துத் துஞ்சிய கிளளிவளவன்.

**சோழன் செங்கணான்**: சங்க காலச் சோழ மன்னர்களுள் ஒருவனாகிய இவன். கணைக்காலிரும் பொறையோடு போர்புரிந்து, அம்மன்னனைக் கைப் பற்றிச் சிறையிலிட்டான். சோழமன்னனின் குட வாயிர் கோட்டத்தே சிறைவைக்கப்பட்ட சேரன், நீர் வேட்கை மிக்குச சிறைக்காவலரிடம் உண்ணுநீர் கேட்டான். அவர்கள் காலந் தாழ்த்தித் தரக் கண்ட சேரன், அந்நீரை வாங்கிக் கையிற் கொண்டு அருந்தா மல் வைத்து, ஒருபாடலைப்பாடி இறந்தான். இச் செய்தி கணைக்காலிரும்பொறை பாடிய புறநானூற் றுப் பாடலின் (புறம். 74) அடிக்குறிப்பில் தெளி வுறக் குறிப்பிடப்பட்டுள்ளது. களவழி நாற்பதென் னும் நூல் இம்மன்னன் மீது பொய்கையாரால் பாடப் பட்டது என்பதும் அந்நூலைப் பாடி அதன் பரிசாகப் பொய்கையார் கணைக்காலிரும் பொறையினுக்குச்

சிறைநீக்கம் பெற்றார் என்பதும் பிற்கால ஆசிரியர்களால் கூறப்பட்டுள்ளன. பெரிய புராணம் சிறப்பிக்கும் நாயன்மார்களுள் ஒருவரான கோச்செங்கட் சோழன் என்பாரும், இம்மன்னனும் ஒருவராவர் என்று கொள்வாருமுளர். சங்க இலக்கியத்தில் இடம் பெற்ற இம்மன்னனும் சமய இலக்கியத்தில் இடம் பெற்ற கோச் செங்கட்சோழனும் வெவ்வேறானவர் என்று கொள்வதே தக்கது என ஆய்வாளர்கள் காட்டியுள்ளனர். பொய்கையாரால் பாடப் பெற்ற களவழி நாற்பது நூலை ஏற்றுச் சோழமனனன் சேரமானைச் சிறையினின்றும் விடுதலை செய்தான் என்னும் செய்தியினைக் 'களவழிக் கவிதை பொய்கை உரை செய்ய உதியன கால்வழித் தளையை, வெட்டியரசிட்டவன்' என்னும் கலிங்கத்துப் பரணித் தாழிசை குறிப்பிடுகிறது. அ.மா.ப.

***சோழன் செருப்பாழி எறிந்த இளஞ்சேட் சென்னி:*** இவன் இளம்பெருஞ் செனனி என்றும் குறிக்கப்பெறுவன்(அகம். 375). பாழிநகரைத் தமக்கிடமாகக் கொணடு பொருத, வடுகரைத் தம் படைவலியால் அழித்துப் பாழியைச் சிதைத்தொழித்தமையால் இவன் சோழன் செருப்பாழி எறிநத இளஞ்சேட் சென்னி என்றுகுறிக்கப்பெற்றான். இச்செய்தியை இடையன் சேநதன கொற்றனார் தம் அகம் 375-ஆம் பாடலில் குறித்துளளார். சோழன் நெய்தலங்கானல் இளஞ்சேட் சென்னி, சோழன உருவப்பஃறேர் இளஞ்சேட் சென்னி, சேரமான் பாமுளூரெறிந்த நெய்தலங்கானல் இளஞ்சேட் சென்னி என்று இளஞ்சேட் சென்னி என்ற பெயர் அடையடுத்து வழங்கப் பெற்றுள்ளன.

இவனைப் பற்றி ஊன்பொதி பசுங்குடையார் புறநானூற்றில் இருபாக்கள்(370, 378) பாடியுளளார். போர்க்களம் பாடும் பொருநன் கூற்றில் வைத்து அவன் பொருத போர்க்களம் புனையப் பெற்றுள்ளது. இவன் தென்பரதவர் மிடல் சாய்த்து வட வடுகரைப் புறங்கண்ட் மாவீரனாவான்.

இவன் பரிசில் குழாத்திற்கு அரிய அணிகலன்களைநிறைய வழங்கினான். அவற்றை அணியுமுறை அறியாது அக்குழாத்தினர் விரலிற் போடுவதைச் செவியிலும் செவியிலிடுவதை விரலிலும் இடுப்பிலணிவதைக் கழுத்திலும் கழுத்திற் பூணுவதை இடையிலுமாக மாற்றிப் பிறர் நகைககுமாறு அணிந்து கொணடனர். இச்செயலுக்கு இராமனுடனிருந்த சீதையை இராவணன் எடுத்துச் சென்றபோது அவள கீழே விட்ட அணிகலன்களைக் குரங்குக் கூட்டம் அணியுமுறை தெரியாமல் தம்முறுப்புகளில் மாற்றி அணிந்து கொண்டதை உவமை காட்டி இச்சோழ மன்னனது கொடைநலத்தை ஊன்பொதி பசுங்கொடையார் சுவைபடப் புனைவர் (புறம். 378). இசசெய்தி இராமாயணத்திற் காணப்படாத புதிய ஒன்றாகும். இரா.சா.

***சோழன் நல்லுருத்திரன்:*** உருத்திரன் எனனும் பெயர் 'நல்' என்னும் அடைபெற்று நல்லுருத்திரன் என வந்துள்ளது. அந்துவன் என்னும் பெயர் 'நல்' என்னும் அடைபெற்று நல்லநதுவன் என வழங்குதல் காணலாம். இவர் தெய்வப் பெயர் பெற்ற சங்கப் புலவராவர். உருத்திரனாா எனனும் வேறொரு புலவர் காணப்பெறுகிறார். இவர் பாடிய பாடல் குறுநதொகையில் 274-ஆக இடம்பெற்றுள்ளது. முலலைக்கலி பாடிய நல்லுருத்திரனும் புறம் 190 பாடிய சோழன் நல்லுருத்திரனும் ஒருவரே என்பது உ.வே.சா. கருத்து(புறம். பாடினோர் வரலாறு). ஆனால் முல்லைக்கலியில் ஆசிரியர் பெயர் சோழன் என்னும் பெயரின்றி நல்லுருத்திரனார் என்றே காணப்படுதலின இவனை அப்புலவரின வேறாகவே கருதுவர் வையாபுரிப்பிள்ளை.

பாண்டியன் அறிவுடை நம்பி, கடலுள் மாய்நத இளம் பெருவழுதி, தொண்டைமான் இளந்திரையன முதலிய மன்னர்களைப் போலவே இவனும் புலவனாகத் திகழ்ந்துள்ளான. அவர்கள் பாக்களைப் போலவே இவன் பாடலும் முழுதும் அறங்கூறுவதாய் உள்ளது. இவர் பாடிய ஒரே பாடல் புறம் 190 ஆகும்.

நட்புக் குறித்த விழுமிய கருத்தை இப்பாடல் உணர்த்துகிறது. வயலில் நன்கு விளைந்த கதிரை நறுக்கித் தம் வளையில் கொணடு சேர்க்கும் எலி போன்று குறுக்கு வழியில் பொருளீட்டும் சிறு முயற்சியராய்த் தம் செல்வத்தை இறுகப்பிடிக்கும ஊக்கமில்லா நட்பு இல்லாதொழிக என்றும் தான தாக்கிய பன்றி இடப்பக்கத்தே வீழ அன்று உணணாது மறுநாள் களிற்றைத் தாக்கி வலப்பக்கத்தே வீழ்த்தும் புலி போன்ற மெலிவில்லாத ஊக்கமிக்க உரனுடையாளர் நட்பு இயைவதாகுக என்றும் இவர் பாடல் கூறும். இரா.சா.

***சோழன் நலங்கிள்ளி:*** இவன் சேட்சென்னி நலங்கிள்ளி, தேர்வண் கிள்ளி, புட்பகை என்று வழங்கப் பெறுவன். உறையூர் முதுகண்ணன் சாத்தனார், ஆலத்தூர்கிழார் ஆகிய புலவர்கள் இவனைப் பாடியுள்ளனர். பாண்டிய நாட்டிலிருந்த ஏழு அரசர்களை அழித்துக் கைக்கொண்டு தன் புலி இலச்சினையைப் பொறித்தான். தன் தாயத்தார் பகைத்தமையான் ஆவூரையும் உறையூரையும் முற்றுகையிட்டான். நெடுங்கிள்ளியுடன் ஏற்பட்ட பகையைக் கோவூர்

கிழார் முன்னின்று போக்கி அமைதிப்படுத்தினார். இம்மன்னனின் மறச்சிறப்பும் அறச்சிறப்பும கோவூர் கிழாரால் பாராட்டப் பெற்றுள்ளன. சேர பாணடியாகளுடைய வெணகுடைகள் பிற்பட இசசோழனது வெண்குடை ஓங்கி விளஙகியது என்றும் இவனது படை வலம் வருமெனக் கருதி அஞ்சி வருந்தி வடபுல மன்னாகளை துயிலாதிருந்தனர் என்றும் பெண்மையின் மகளிர்க்கு வணஙகினும் ஆடவரைப் பிணிக்கும் பீடு கெழு நெடுந்தகை என்றும் தம் பாடலில் கோவூர் கிழாா இம்மன்னனது மறச் சிறப்புணர்த்துவர்.

சோழநாடு இம்மன்னவன் கருத்துப்படியே பயன் படுமாதலால், இவன் விறலியர் பூவிலை பெறுக என்று தன் ஆட்சிக்குட்பட்ட மதுரையையும் சுற்றத் தின் உணவிற்காக வஞ்சியையும் தருகுவன என்றும் ஊன்சாற்ற மலையால் பாணகடும்பு அருத்துவான் என்றும் இரப்போர் வேறிடம் சென்று இரவாதபடி மிகுதியாக வழங்குவான் என்றும் தன் பகை கடிதல் அன்றியும் சேர்ந்தோர் பசிப்பகை கடிதலும் வல்லன என்றும் கோவூர் கிழார் கூறியிருத்தல் கொணடு இவனது கொடைச் சிறப்பை அறியலாம்.

இவன் கடற்படை கொண்டு பெரும்பொருள் ஈட்டினான். மேலும் நலங்கிளளியைப் பாடிய பொரு நர்கள் பிறரைப் பாடிப் பொருள் பெறுதலை விரும பார் என்றும் கடைக்கங்குலில் பலர் துஞ்சவும் தான் துஞ்சாது நின்று கிணைஞன் எழுப்பிய கிணைக் குரல் கேட்டு அவனுக்கு உடை, உண்டி, வீறுசால் நண்கலம் முதலிய அளித்து உவந்தவன் என்றும் நலங்கிள்ளியின் கொடை பாராட்டப்பெறும்.

இவன் அரசப் புலவனாவான். இவன் பாடிய இருபாடல்கள் புறநானூற்றில் உள்ளன (73, 75) என உள்ளம் எள்ளிய மடவோனை யானைக்காலில அகப் பட்ட மூங்கில் முளைபோலச் சிதைததொழிக்காவி டில் 'தீதில் நெஞ்சத்துக் காதல கொளளாப் பல்லிரும் கூந்தல் மகளிர் ஒல்லா முயக்கிடைக் குழைக என் தாரே'என வஞ்சினம் கூறுவதால் இவனது கற்பின் சிறப்பை உணரலாம் அரசச் செல்வத்தை ஆணமை யில்லாத சிறியோன் பெற்றால் கனமாகத் தோன்றும்; ஆனால் ஊக்கமுடையஉயர்ந்தோன்பெற்றால் நொய் தாகத் தோன்றும் என்று கூறும் இவனது அறமொழி இவனது தாளாணமையையும் ஊக்கத்தையும் புலப் படுத்தும். இரா சா.

**சோழன் நெய்தலங்கானல் இளஞ்சேட் சென்னி**: சங்க காலத்தில் வாழ்ந்த ஒரு சோழமன் னன். இளஞ்சேட்சென்னி என்னும் பெயருடைய பிற அரசரின் வேறுணர நெயதலங்கானல் என்னும் அடை மொழி சேர்த்து வழங்கப்பெற்றுள்ளான். நெய்தலங் கானல் இம்மன்னன் ஊராகும். நெய்தலங்கானல் என்பதற்கு நெய்தலங்காலை என்னுமொரு பாடபேத மிருப்பதைச் சுட்டி,அவ்வூர் நெய்தலங்காலை என்றும் வழங்கப்பட்டிருக்கலாம் என்று டாக்டர் உ.வே. சாமி நாதையர் கருதுகின்றார். நெய்தலங்கானல் என்பது சோழ நாட்டுக் கடற்கரைப பகுதியிலமைந்த ஒரூரா கும் இம்மன்னனை ஊனபொதி பசுங்குடையார் என்னும் புலவர் தமது புறநானூற்றுப் பாடலில் (புறம். 10) சிறப்பித்துப் பாடியுள்ளார். பாடாண் டிணை, செவியறிவுடைத் துறையிலமைந்துள்ள அப் பாடலில் இம்மன்னனை 'நெய்தலஙகானல் நெடி யோய்' எனறு விளித்துள்ளார். பாட்டினில பாடபேத மின்றி 'நெய்தலங்கானல' என்றே வந்திருப்பதனால் அப்பெயர் வடிவமே இம்மன்னன் ஊர்ப் பெயரின சரியான வடிவமாகும் என்று கொளவது நேரிது. வழி படுவோரை விரைந்தறிதல், பிறர்பழி கூறுவோர் சொறகேளாமை, தீமைசெய்தோரைத் தககவாறு ஒறுத்தல், மீணடு வந்து வழிபட்டால் மன்னித்தல் முதலிய இம்மனனனின் அருஙகுணஙகளைப் புலவர் பாடலில் நன்கு எடுத்துக்காட்டியுள்ளார். அ.மா.ப.

**சோழன்போர்வைக்கோப் பெருநற்கிள்ளி**: இவன் ஒரு சோழ அரசன். இவன் சோழன் முடித்தலைக் கோப்பெருநற்கிள்ளியினின்றும் வேறு படுத்தி அறிய இவ்வாறு வழஙகப்பெற்றான. இவன தந்தையின் பெயர் தித்தன். இவன் போர் செய்வதில் வல்லவன். இவனைச் சாத்தந்தை யார் (புறம். 80, 82), பெருங்கோழிநாய்கன் மகள் நக்கண்ணையார் (புறம். 83-85) 'ஆகிய புலவர்கள் புகழ்ந்து பாடியுள்ளனர். இவன் தன் தந்தையிடம வெறுப்புற்றுத் தனியே ஆமூரில் தங்கியிருந்தான். அப்போது வறுமையால வாடியிருந்தான். அக்காலத் தில ஆமூா மலலனோடு போர் ஏற்பட்டு அதில் வெற்றியும் பெற்றான். சாத்தநதையாா ஆமூர் மல்ல னோடு போர் செய்த காட்சியைக் கூறும் போது நன்கு பசியையுடைய யானை மூஙகிலைத் தின்றறகு முயலுவதைப் போலவும் ஊரின்கண நடக்கும் விழா விற்குச் சென்று உதவுவதற்கும் தன மனைவி மகப் பேறு காலத்தில் அருகிருந்து உதவுவதற்கும் வேண்டி, மாலையில் ஞாயிறு வீழ்ந்த பொழுதில் கட்டிலை முடையும் புலையனுடைய கைபோல விரைந்து செயற்பட்டான் என்று கூறியுள்ளார். பெருங்கோழி நாய்கன் மகள் நக்கண்ணையார் இவனுடைய வீரத்தை அறிநது இவன்மீது காதல் கொண்டார். அவ்வாறு காதல கொண்ட நிலையில் இவனைப் புகழ்ந்து பாடியுள்ளமை மிகவும சுவை பயப்பதாக உள்ளது. வீ.சே.

**சோழன் மணக்கிள்ளி:** இவன் சேரன் செங்குட்டுவனின தாய்வழிப்பாட்டன். சிலப்பதிகார வஞ்சிக் காணடத்திலுள்ள வாழ்த்துக் காதையின் தொடக்கத்தில் அமைந்துளள உரைப்பாட்டுமடை, செஙகுட்டுவனைக் குறிப்பிடும்போது, 'குமரியொடு வடவிமயத்தொரு மொழி வைத்துல காணட சேரலாதற்குத் திகழொளி ஞாயிற்றுச் சோழன் மகள் ஈன்ற மைந்தன்-செங்குட்டுவன்' என்று குறிப்பிடுகிறது. சிலப்பதிகாரப் பதிகததின் முதலிரு அடிகளை விளக்கும் அடியார்க்கு நல்லார் 'குமரியொடு வடவிமயத்து ஒரு மொழி வைத்து உலகாணட சேரலாதற்குத திகழொளி ஞாயிற்று ஏழ்பரி நெடுந் தேர்ச் சோழன் தன் மகள் நற்சோணை ஈனற மக்களுள முனனோன' என்று குறிப்பிட்டுள்ளார். பதிற்றுப்பத்தின் ஐந்தாம் பத்தின பதிகம் கடலபிறக்கோட்டிய செஙகுட்டுவனைக் 'குடவர்கோமான் நெடுஞசேரலாதற்குச் சோழன் மணக்கிள்ளி ஈனற மகன் .. செங்குட்டுவன்' எனறு குறிப்பிடுகிறது சிலப்பதிகாரமும், பதிற்றுப பத்தின ஐந்தாம் பததும் குறிப்பிடும் செங்குட்டுவன் ஒருவனாவான் என்பதும் பணடைச சேரா மனனர்கள ஏனைய சோழ பாண்டியரைப் போல மககள தாய முறையே கொணடிருந்தனர் என்பதும், ஆய்வாளர் பலர் ஒப்பிய செய்தியாகும் அவவகையில, உரைப் பாட்டு மடை சுட்டும் திகழொளி ஞாயிற்றுச சோழன எனபதும், அடியார்க்கு நலலார் சுடடும திகழொளி ஞாயிற்று ஏழ்பரி நெடுநதேர்ச் சோழன் எனபதும, பதிற்றுப் பத்தின் 5-ஆம் பதிகம் சுட்டும சோழன் மணக்கிளளி எனபதும் ஒருசோழனையேயாகும. அவன் மகளுக்கும் (நறசோணை-அடியார்க்கு நலலார கருததுப்படி) நெடுஞ சேரலாதனுக்கும் பிறந்தவன செஙகுட்டுவன ஆவான். அதனால சோழன மணக்கிள்ளி, ஞாயிறறுச சோழன என்னும பெயர்கள ஒருவனையே குறிப்பதாதல் வேணடும். சோழன மணக்கிள்ளி செஙகுட்டுவனின் தாய்ப்பாட்டன என னும் உறவு முறை, சேரர்க்கு மக்கள்தாய முறையில அமைநததாகும். அ.மா.ப.

**சோழன் முடித்தலைக் கோப்பெருநற்கிள்ளி:** இவன் ஒரு சோழமன்னன. சேரமான அநது வஞ்சேரலிரும்பொறை என்ற சேர அரசனுக்குப் பகைவனாவான். இவனை உறையூர் ஏணிசசேரி முடமோசியார் பாடியுள்ளார் (புறம.13). இவன் அந்து வஞ்சேரலிரும்பொறையின் தலைநகராகிய கருவூரின கண் படையெடுத்துச் சென்றான். அப்போது இவன் ஏறிச சென்ற யானை மதம் பிடித்து எதிரியின் படைக்குள் நுழைந்தது. அதனை அந்துவஞ் சேரலிரும்பொறை கணடு தம் பககத்திலிருந்த புலவரிடம் வினவ, அதற்குப் புலவர் புலித்தோலால் செய்யப்பட்ட ஆடையைக் கவசவாக அணிநத இவன் எதிரியின் அம்புகள் பாய்ந்ததினால் அது சிதையுமாறு மார்பிலே பல விழுப்புணகளைப் பெற்றவன் என்பதனை புலிநிறக் கவசம் பூம்பொறி சிதைய, எய்கணை. கிழித்த பகட்டெழின் மார்பின' என இவனைச் சிறப்பித்துப் பாடியுள்ளார். வீ சே.

**சோழன் வேற்பஃறடக்கைப் பெருவிறற்கிள்ளி** சங்க காலச சோழ மனனர்களுள ஒருவன். இவன் பெயரிலமைந்த அடை மொழிகள இவனது பெருவீரத்தை உணர்ததுவனவாக உளளன. இம் மன்னனும் சேரமான் குடக்கோ நெடுஞசேரலாதனும் பகைகொணடு போரிட்டனர். போாககளத்தில இரு மனனரும் ஒருங்கே மாய்நதுபட்டனர். அந்தக காட்சியைக கணடு இரங்கிக் கழாத் தலையாரும் பாணருமு, அவவிருவரையும் பாடியுளளனர் (புறம். 62,63). தும்பைத் திணை தொகைநிலைத் துறையில் அமைந்துளள அவவிருவர்தம் புறநானூற்றுப பாடல் களும, இரு மனனர்கள் இறந்துகிடககும் காட்சியை யும், அவ்வரசர்களின் பெணடிர் அவலமுற்று வருந தும் காட்சியையும, நனகு சித்திரிததுக் காட்டு கின்றன. அவ்விரு மன்னர்களும் பொருது வீழ்ந்த அப போர்க்களத்தில, சேரமான குடக்கோ நெடுஞசேரலாதனைக கழாததலையார் தனிததுப் பாடிய புறநானூற்றுப் பாடலின (புறம்.368) அடிககுறிப்பில் இம்மனனன் சுட்டப்பெற்றுளளான். அ மா.ப.

**சோழிய ஏனாதி திருக்குட்டுவன்:** இவன, சேரநாட்டின பகுதியாகிய குட்டநாட்டு அரசர் குடியில தோனறியவன. குட்டுவன எனனும பெயரையே தனக்குச் சிறப்புப் பெயராகக் கொணடவன. குட்டுவன கோதை. செங்குட்டுவன், வேலகெழு குட்டுவன எனப் பிறரும குட்டுவன் எனனும் சிறபபுப பெயருடன் திகழ்நதமை காணலாம் திருககுட்டுவன் தொடக்கத்தில் சோழவேநதனிடம் தானைத தலைவனாயிருநது போர்த் திறமையால் சோழிய ஏனாதி எனச சிறப்புப் பட்டம் பெற்றுப் பின் சோழிய ஏனாதி திருககுட்டுவன என வழங்கப்பெற்றான எனபர் ஒளவை. துரைசாமிபபிளளை. இவனது ஊராகிய வெணகுடை பாலைக்காடு நாட்டிலுள்ளது. இவனைப் புறம் 394-இல் சோனாட்டு எறிச்சிலூர் மாடலன மதுரைக குமரனார் புகழந்து பாடியுளளார். 'வலிதுஞ்சு தடக்கை வாய்வாட் குட்டுவன' என்னுந தொடர் இவனது மறச் சிறப்பைக காட்டும். கிணைஞன் கூறறில வைத்து இவனது கொடையைப் புலவர் புகழாப் புகழ்ச்சி எனனும் அணிபடப் பாராட்டியுளளார்.

வைகறையில் ஒருகண் மாக்கிணையை முழககி இவன் தந்தையது வஞ்சித்துறைப் பாடலொனறினைப் பாட இவன் அகமலி உவகையொடு கொன்று

சினந்தணியாத புலவு நாறும் கொம்பினையுடைய வெஞ்சின வேழம் நல்கினன். அதுகண்டு அஞ்சி அதனை அவன்பால் திருப்பிவிட, அவன தான் நல்கிய பரிசில் சிறிதென எண்ணித் திருப்பி விட்டதாக நினைந்து பிறிதொரு பெருங்களிறு நல்கினான். ஆதலால் என் சுற்றம் இடருற்றாலும் அவனிடம் பரிசு பெறச் செல்லேன் எனக் கூறுமுறையில் மதுரைக் குமரனார் கிணைஞன் கூற்றில் வைத்து இவனது கொடைச்சிறப்பைப் புலப்படுத்துவர்.

இரா.சா.

**சோளநாயக்கர்** கேரளாவில் வாழும் தொன்மையான பழங்குடி மக்கள். இவர்கள் குகை மக்கள் என்றும் கூறப்படுவர். சோளநாயக்கர்கள் (Cholanaickan) கேரளாவின் மலப்புறம் (Malappuram) மாவட்டத்தில் நிலாம்பூர் பள்ளத்தாக்குகளில் மிகுதியான அளவு வாழ்கின்றனர். நிலாம்பூர் பள்ளத்தாக்கு மலப்புறம் நகரிலிருந்து 60 கி.மீ. தூரத்திலும் நிலாம்பூர் நகரிலிருந்து 30 கி. மீ. தூரத்திலும் உள்ளது. இவர்கள் வாழும் இப்பள்ளத்தாக்கு கடல் மட்டத்திலிருந்து 4000 அடி உயரமானது, மிகுதியான மழை, ஈரப்பதம் மிக்க காலநிலை, மிதமான வெப்பம் ஆகிய வானியல் சூழலுடன் மலைகள், பள்ளத்தாக்குகள், ஆறுகள், சிற்றோடைகள், காடுகள், பசும் புல்வெளிகள் முதலான புவியியற் சூழலும் இணைந்துள்ளதால் சோளநாயக்கர் வாழிடம் மிகவும் செழிப்புள்ளதாக உள்ளது.

சோள நாயக்கர் என்னும் பெயருக்குக் காடுகளின் அரசன் என இவர்கள் பொருள் கூறுவர். கேரளத்தில் பழங்குடி அல்லாத மக்கள நாயக்கர் எனனும் பெயரிலேயே அனைத்துப் பழங்குடி மக்களையும் குறிப்பிடுகின்றனர். தேன் சேகரிப்பதில் வல்லவர்களான காட்டு நாயக்கர்களை மட்டுமே பழங்குடி அல்லாதார் முதலில் தெரிந்திருந்தனர். அதனால் குகை மக்களான இவர்களை வேறுபடுத்திக் கூறச் சோளநாயக்கர்கள் என்று தொடக்க காலத்தில் குறிப்பிட்டனர். இவ்வாறே பணியப் பழங்குடிகளையும் காட்டு நாயக்கர்களையும் பழங்குடி அல்லாதார் வேறுபடுத்துவதில்லை.

சோளநாயக்கப் பழங்குடியினர் கரும்பழுப்பு நிறம் முதல் வெளிரிய பழுப்பு வரையிலான நிறமுடையவர்கள். கட்டான உடலமைப்புடையவர்கள்; குட்டையானவர்கள். தலைமயிர் கருமையானது; சுருண்டது. மூக்கடி அழுந்தியது; மூக்கிணைப்பு நடுத்தரமானது. பொதுவாக மூக்கின் வடிவம் நேரானது.

ஆண்கள் குடுப்பிலிருந்து முட்டி வரை மறைக்குமளவிற்கு ஒரு துணியை உடுத்திக்கொள்கின்றனர். பெண்கள் நான்கு கசம் முதல் ஆறு கசம் வரையிலான புடவையை மட்டுமே கட்டிக்கொள்கின்றனர். மார்புப் பகுதியை மூடவும் புடவையே பயன்படுகிறது. இலைகளையும் மரப்பட்டைகளையும் கொண்டு தங்கள் இன உறுப்புகளை மட்டும் மறைக்கும் முறை இவர்களிடையே மறைந்துவிட்டது. பெண்கள புற்களால் செய்யப்பட்ட ஒருவகை வளையல்களை விரும்பி அணிகின்றனர். புற்கள் காய்ந்த பின்பு தங்க நிறம் பெறுகின்றன. பல மாதங்கள் வரை இது நிறம் மாறாமல் உள்ளது. மூக்கிலும் புற்களால் செய்யப்பட்ட மூககணியை அணிகின்றனர். இக்காலப் பெண்களுள் பலர் கழுத்தணிகளையும், பாசி மணி வகைகளையும் அலுமினியத்தால் செய்யப்பட்ட அணிகலன்களையும் அணிகின்றனர்.

சோள நாயக்கப் பழங்குடிகள வாழும் 39,000 சதுர ஏக்கர்களில் காடுகளே மிகுந்துள்ளன. இப்பகுதியில் இவாகள் 57 குடும்பங்களாக உள்ளனர்; இன்றைய எண்ணிக்கை 205 ஆகும். இவர்களுள் ஆண்கள் 123, பெண்கள் 82 ஆகும். இவர்கள அனைவரும் 10 வட்டாரக் குழுக்களாகப் பாகுபட்டுள்ளனர்.

**அந்த வட்டாரங்கள்:** கரிம்புழா, பானப்புழா, குப்பன்மேலெ, பூச்சப்பாரா, தாளிப்புழா, கொரம்புழா, அளக்கல், அம்பிலிமேலெ, ஒலிக்காட்டோடு, மஞ்சக்கடவு முதலியன ஆகும். ஒவ்வொரு வட்டாரத்திலும் வாழும் குடும்பங்களின் எண்ணிக்கை 1 முதல் 9 வரை வேறுபட்டுள்ளது. இந்த 57 குடும்பத்தினரும கருளைப் (Karulaı) பள்ளத்தாக்குப் பகுதியிலும் சுங்கத்தாரா (Chungatnara) பகுதியிலும் வாழ்கின்றனர். கடந்த ஆறு ஆண்டுகளாக இம்மக்களின் குடிமதிப்பை நோக்கும்போது இவர்களின் எண்ணிக்கை குறைந்துகொண்டு வருகிறது.

இவர்கள் கொண்டுள்ள வட்டாரக் குழுப்பிரிவுகள் சமுதாய அமைப்பு, திருமணம், பொருளாதாரம், ஆட்சிமுறை ஆகிய அனைத்திலும் முதன்மையான பங்கு பெற்றுளளன. ஒவ்வொரு குழுவும் ஒரு குறிப்பிட்ட வட்டாரத்தில் வாழ்கினறது. அந்த வட்டாரத்தில் மட்டுமே அக்குழுவினர் பொருள் ஈட்டுகின்றனர். இந்த வட்டாரப் பகுதி சென்மம் (Tsenmam) எனக் கூறப்படுகிறது. ஒவ்வொரு சென்மமும் மலைகள, ஆறுகள, மரங்கள், பாறைகள் ஆகியவற்றால் அடையாளம் குறிக்கப்பட்டுப் பிரிக்கப்பட்டுளளது. கருளைப் பகுதியில் ஆறு சென்மங்களும் சுஙகத்தாரா பகுதியில நான்கு சென்மங்களும் உள்ளன. ஒவ்வொரு சென்மமும் சென்மக்காரன் என்னும் தலைவனைக் கொண்டுள்ளது. ஒவ்வொரு சென்மமும் மேலும் பல பிரிவுகளாகப் பிரிக்கப்படுகிறது.

இது நாடு எனச் சொல்லப்படுகிறது சென்மம், நாடு ஆகிய பாகுபாடுகள் ஒவ்வொரு குழுவினரையும் அடையாளம் கொள்ளவும் பொருளாதாரச் செயல் களை ஒழுங்குபடுத்தவும் ஏற்படுத்தப்பட்டுள்ளன. ஒரு சென்மத்தைச் சேர்ந்தவர்கள் அருகருகில் வாழ் கின்றனர். பெரும்பாலும் குகைகளே இவர்களின் வாழிடங்களாக உள்ளன.

சோளநாயக்கர்களின் பொருளாதாரம் தொன்மை நிலையிலேயே உள்ளது. இவர்களின் வாழ்க்கைப் பொருளாதாரம் வேட்டையாடுதல், உணவு சேகரித் தல், காட்டுப் பொருள்களைச் சேகரித்தல் ஆகிய வற்றை அடிப்படையாகக கொண்டது. பொருளகள் சேகரிப்பில் இவர்கள் தனி ஆள், குடும்பம், வட்டாரக் குழுவினர் என மூன்று நிலைகளில் செயற்படுகின்றனர். வேட்டையில் ஆண்கள் மட்டும் ஈடுபடுகின்றனர். கிழங்குகள், காய்கனிகள், கொட்டைவகைகள், இலை, பச்சைக்கீரை வகைகள், காட்டுப் பொருள்கள் முத லானவற்றைச் சேகரிப்பதில் ஆண், பெண் இரு பாலாரும் ஈடுபடுகின்றனர். பண்டமாற்றம் இவர் களது பொருளாதாரத்தில் முதன்மையான பங்கு வகிக்கிறது. பெரும்பாலான காட்டுப் பொருள்களை வெளியாருக்குக் கொடுத்து அதற்கு ஈடாக இரும்புப் பொருள்கள், ஆடை அணிகலன்கள, உணவுப் பொருள் கள, பணம் முதலானவற்றைப் பெறுகின்றனர். இப் போது இவர்கள் வாழும் பகுதிகளில் அரசு ஏற்படுத் தியுள்ள கிரிசன் (Girijan) கூட்டுறவுச்சங்கம் இவர்கள் சேகரிக்கும் காட்டுப் பொருளகளைப் பெற்றுக கொண்டு அவர்களின் தேவையை நிறைவு செய்கிறது.

சோளநாயக்கர்களிடையே திருமணம் குழுப்புற மண (Band Exogamy) அமைப்புடையது. ஒரு வட் டாரக் குழுவினர் தம் குழுவினரை மணந்து கொள்ளா மல் வேற்றுக் குழுவினரை மட்டுமே மணந்து கொள கின்றனர். திருமணத்திற்கு முனனர் பாலுறவு இவர் களிடையே உண்டு. ஒத்த வயதல்லாதவரிடையேயும் இத்தகைய உறவு நிலவுகிறது. தந்தை வழி அமைப் புடைய சமுதாயமாகையால் திருமணத்திற்குப் பின் மனைவியைக் கணவன் தன தந்தை வாழும் நாட்டிற்கு அழைத்து வந்து தந்தையகத்திற்கு அருகில் தனியிடம் அமைத்து வாழ்கிறான். பெரும்பாலும் தனிக் குடும்பங களேகாணப்படுகின்றன. தந்தையே குடும்பத்தின் தலை வர். மரபுரிமை ஆண் மக்கள் வழி செல்கிறது. ஒவ் வொரு குடும்பமும் ஒரு நாட்டில்எநதப் பகுதியிலிருந்து காட்டுப் பொருள்களைச் சேகரிக்கலாம் என்ற வரன் முறை மரபு வழியே செல்கிறது. திருமணததிற்குப்பின் மனைவி வீட்டிலிருந்து, தம் மருமகன் வீட்டிற்கு வரு பவர்கள் மருமகன் நாட்டில் உண்ணும் தன்மையுடைய கிழங்கு வகைகள், காய் கனிகள்முதலானவற்றைக் காட்டிலிருந்து சேகரிக்கலாம். அந்த நாட்டிலிருந்து அவர்களது சென்மத்திற்குத் திரும்பும்போது பண்ட மாற்றம் செய்யத்தக்க அளவிலான காட்டுப் பொருள களை எடுத்துச் செல்ல அனுமதிக்கப்படுவதில்லை. அதற்கு மாறாக அன்பளிப்புக் கொடுத்து அனுப்பு கின்றனர்.

சோளநாயக்கர்கள் கலைகளிலும் விளையாட்டு களிலும் ஆர்வமுடையவர்கள. அனைத்து வயதினரும் பொம்மை விளையாட்டினை விளையாடி மகிழ் கின்றனர். குறிப்பாக இளையவாகளும் பெணகளும் இதில் மிகுந்த உற்சாகத்துடன் பல மணி நேரம் விளையாடுகின்றனர். இவர்களின் சமயம் ஆவியுலக நம்பிக்கையுடையது.ஒவ்வொரு நாட்டிலும் தனித்தனி வழிபாட்டு இடங்கள உள்ளன. பல ஆவிகளையும் தெய்வங்களையும் வழிபடுகின்றனர். குறிகேட்டல், சூனியம் முதலானவற்றிலும் இவர்கள் நம்பிகைை கொண்டுளளனர். முன்னோர் வழிபாடும் இவர்களி டையே உண்டு.தீய ஆவிகளைப் போக்கச் சிறபபு வழி பாடுகளைச் செய்து பலவகையான படையல்களை இட்டுத் தெய்வங்களை வழிபடுகினறனர். பி.ஆ.

**சோளிங்கபுரம்** தமிழ்நாட்டில் வட ஆக்காடு மாவட்டத்தில் வாலாசாப்பேட்டை வட்டத்தில உள்ளதொரு நகரம். வாலாசாவிலிருந்து திருத்தணி செல்லும் சாலையில் இது உளளது. இநநகரம் தொன்மைச் சிறப்புப் பெற்றது. இது திருக்கடிகை எனவும் கூறப்பட்டது. இங்குக்கடிகை (பணடைய படிக்கும் சாலை) ஒன்று இருந்ததாகக் கூறுவர். சோழர்காலக் கோயில இவ்வூரில் உள்ளது. இது சோழீசுவரர் கோயில் எனக் கூறப்படுகிறது. இவ் இறைவனின் பெயரால் சோழலிங்கபுரம் என இவ் வூரும் முன்பு கூறப்பட்டு, இப்பொழுது மருவி சோளிங்க புரம் எனக் கூறப்படுகிறது. இஙகுள்ள குன்றின்மேல நரசிங்கப் பெருமாள் கோயில் ஒன்று உள்ளது. இக்குன்று கடிகாசலம் எனக் கூறப்படுகிறது. இக் கோயில் ஆழ்வார்களால் பாடப்பெற்ற கோயிலாகும். இங்குப்பக்தவச்சலர் கோயில் ஒன்றும் உள்ளது. இக் கோயில் விசயநகர அரசரால் கட்டப்பட்டது. இதன் அருகில் உள்ள குன்று ஒன்றில் ஆஞ்சநேயர் கோயில் ஒன்றும் உள்ளது. ஆங்கிலத் தளபதி அயர்கூட்டிற்கும் ஐதர்அலிக்கும் இந்நகரில் கி.பி. 1781-ஆம் ஆண்டு போர் நடைபெற்றது. இப்போர் வரலாற்றில் 'சோளிங்கர் போர்' எனக் குறிக்கப்பட்டுள்ளது. இப்போர் நடந்த ததன் நினைவாக இந்நகரத்தின் பேருந்து நிலையம் அருகில் நினைவுக் கட்டடம் ஒன்று உள்ளது. இப் போரில் ஐதர்அலி தோற்றார். இந்நகரத்தில் நெசவுத் தொழில் மிகுதியாக நடைபெறுகிறது. இவ்வூரில நெசவாலை ஒன்றும் சிறிய தொழிற்சாலை ஒன்றும் உள்ளது. இவ்வூரிலிருந்து சித்தூர், அரக்கோணம்,

திருத்தணி, வேலூர், வள்ளிமலை ஆகிய ஊர்களுக்குச் சாலை வசதிகள் உள்ளன. இதன மக்கள் தொகை 17,339 (1981). சு.இரா.

*சோன் இராபின்சன்:* பொருளியல் மேதை யான சோன் இராபின்சன் இங்கிலாந்து நாட்டில் 1903-ஆம் ஆண்டில பிறந்தார். இந்த அம்மையார் பொருளியல் சிந்தனையின் வளர்சசிக்கு உலக அளவில் புதிய தாக்கங்களை ஏற்படுத்தியவர். கீன்சு என்ற பொருளியல் அறிஞர் புதிய கோட்பாடுகளையும் அணுகு முறைகளையும் பொருளாதாரத் துறையில உருவாக்கியதுபோல் இவரும், கீனசுக்குப் பின் புதிய கோட்பாடுகளை உருவாக்கினார்.

கேம்பிரிட்டிசு பல்கலைக் கழகத்தில் 1931-ஆம் ஆண்டு முதல் 1971-ஆம் ஆண்டு வரை பணியாற்றிய பெருமையும் சோன் இராபினசனைச் (Joan Robinson) சாரும். 'பொருளியல் நிறைகுறைப் போட்டி' (Economics of Imperfect Competition) எனற புத்தகத்தை 1933-ஆம் ஆணடில் வெளியிட்டார். ஏறகனவே நிலைத் திருந்த பல பொருளாதாரக் கோட்பாடுகளுக்கு இப் புத்தகம் ஓர் அறைகூவலாக அமைந்தது நிறைவுப் போட்டி (Perfect Competition)யின் தன்மைகளையும, கூறுகளையும், திறனாய்வு செய்தார். பொருளியல் மேதையான மாாசலின் (Alfred Marshall) மாணவி யாகத் திகழ்ந்தாலும் தனது நுட்ப சிந்தனையால் ஆசிரியரின படைப்பில் உளள குறைகளைச் சுட்டிக காட்டினார். இப்புத்தகத்தின் மூலம் சோன இராபின சனின் பெயரும் புகழும உலக அளவில் தெரியத் தொடங்கின. இவர் அறிவு பல்கலைக்கழகப் பேராசிரி யர்கள் நடுவிலும் வெளியிலும் பெரும் விவாதத்தை உருவாக்கியது. பெரும்பாலோர் நிறைகுறைப் போட்டியின் அடிப்படைத் தன்மைகளை ஏற்றுக் கொண்டனர். மரபு வழி (Conventional approach) அணுகு முறையைத் தகர்த்ததும் இவருடைய சாதனை யாகும்.

கீன்சுப் பொருளியல் கொள்கையை நன்கு கற்றுணர்ந்தவர். கீன்சுப் பொருளாதாரத்தை ஏற்றுக் கொண்ட இளைய தலைமுறையினரில இவரும் ஒருவா ஆவார். கீனிசியப் பொருளாதார சிந்தனை யின் விளைவுகள் குறித்து புகழ்ந்துரைத்த சோன் இராபின்சன், மாாக்சியப் பொருளாதாரக் கருதது களையும் ஆய்வு செய்யத் தவறவில்லை. மார்க்சியப் பொருளாதாரம் ஓர் ஆய்வு('An Essay on Maxian Economics') என்ற புத்தகத்தை 1942-ஆம் ஆணடு வெளியிட்டார். இப்புத்தகமும் பல விவாதங்களை அறி வுலகில் எழுப்பியது. இங்கிலாந்து நாட்டில பல பொரு ளியல் அறிஞர்கள மார்க்சின் கருத்துகளை வெறுத்து ஒதுக்கினர். பலர் அக்கருத்துகளைப் படித்துப் புரிந்துகொள்ளாமல் மார்க்சியக் கருத்துகள் மீது தாக்குதல் நடத்தினர். இப்புத்தகம் வெளிவந்த பிறகு மார்க்சு எழுதிய மூலதனத்தைச் (Capital) சுருக்கமான முறையில் பலருக்குப் புரிய வைத்தார். இப்புத்தகத்தின் இரண்டாம் பதிப்புக்குச் சோன் இராபின்சன் எழுதிய முன்னுரையில் கீன்சு எப்படித் தன் புத்தகத்தை ஏற்றுக் கொண்டார் என்பதைப் பற்றி குறிப்பிட்டுள்ளார். அக்காலத்தில் கீன்சுக்கு காரல் மார்க்சு கருத்துகள் என்றாலே ஒவவாமல் இருந்தது. மைக்கேல கேலக்கி (Micheal Kalacki) என்ற போபிசு நாட்டுப் பொருளியல் மேதையைச் சந்தித்த பிறகு சோன் இராபின்சனின் அறிவியல் அணுகுமுறை (Scientific method) மேலும் உறுதிப் பட்டது. சோன் இராபின்சன் பொருளாதாரம் போன்ற சமூக இயலில் (Social Sciences) கூட அறி வியல் கண்டுபிடிப்புகளைக் கொணடுவர முடியும் என்ற கருத்தை வலியுறுத்தினார். காரல் மார்கசி னுடைய கருத்துகளில சில கினீசிய அடிபபடைக் கூறு கள இருப்பதாகச் சுட்டிக் காட்டினார். சமதாம நாடுகளில் (Socialist States) பொருளியல் வளர்ச்சி ஏற்பட்டு அங்காடி முறையின் (Market Economy) சில சிறப்பியல்புகளை அறிமுகப் படுத்த விரும்புகின் றன எனறு கூறினார். முதலாளித்துவப் பொருளா தார அமைப்புகள் (Capitalist Economies) பொருளா தாரத்தில் முழு வெற்றியடைய முடியாமல திட்ட மிட்ட பொருளாதார அமைப்பின (Planned Economy) சிறப்பியல்புகளை எடுத்துக் கொள்ள முயலு கினறன என்றும் கூறினார்.

எனவே இரு சார்பார்களும் விலைக் கோட்பாட் டின் தத்துவத்தைத் தீவிரமான முறையில மீளாய்வு செய்வது அவசியம் என்று வலியுறுத்தினார். மூலதனக் குவிப்பு (The Accumulation of Capital 1956) என்ற புத்தகம் கீனசு (Keynes), ஹெராட் (Harroad), மார்க்சு (Marx), தேவிட் ரிக்காரடோ (David Ricordo) போன்ற பொருளாதார மேதை களின் கருத்துகளை இணைத்து எதிரொலிப்பதாக அமைந்தது. இப்புத்தகம் பெரும் விவாதத்தை உரு வாக்கியது.

புதிய தொனமைப் பொருளாதார அறிஞர்களின் (Neo Classical Economists) கருத்துகளைக் கடுமை மையாகத் திறனாய்வு செய்தார். இசுட்ராபா வினுடைய (Straffa) என்ற பொருளியல மேதையின் கருத்துகளின் அடிப்படையில் மூலதனத்தைப் பறறி யிருநத பழைய கருத்துகள் அனைத்தையும் தகர்த் தெறிந்தார். மேலும் இவர் எழுப்பிய பல கேள்வி களுக்குப் புதிய தொன்மை பொருளாதார அறிஞர் களால் இன்றும் பதிலளிக்க முடியவில்லை. சோன் இராபினசன் ஒரு புரட்சி மிக்க சிந்தனையாளர்.

தான் முன் கூறிய கருத்துகளைக்கூடப் பிற்காலத்தில் தான் எழுதிய புத்தகங்களில் திறனாய்வு செய்யத் தயங்கவில்லை மூலதனக் குவிப்பு என்ற புத்தகத்தில் நிறைகுறைப் போட்டியின தன்மைகளை நிராகரித்துள்ளார்.

இவர் 1976-ஆம் ஆண்டிற்குப் பிறகு பொதுவுடைமைச் சீன நாட்டுக்குச் சென்றார் பண்பாட்டுப் புரட்சி (Cultural Revolution) என்ற புத்தகத்தை எழுதினார். வளரும் நாடுகளில் (Developing Countries) பொருளாதாரத்தின வளர்ச்சி, பண்பாட்டுக் கூறுகளுடன் இணைந்துள்ளது என்று கூறினார். சீனநாட்டில் மாசேதுங்குமுன்மொழிந்த பண்பாட்டுப் புரட்சியினை மிகவும் பாராட்டினார். இறுதிக் காலம் வரையில் அறிவுலகப் பணியினைத் தொடர்ந்து செய்தார். இவர் கேம்பிரிட்சுப் பொருளாதாரப் பள்ளியின் (Cambridge School) தலைவராக இருந்தார்.

**சோன் இராபின்சனின் நூல்கள்:** பொருளாதார ஆய்வுத் தொகுப்புகள் (Collected Economic Papers.) (3.Vol.), பொருளாதாரத்தில் முரணபாடுகள் (Economic Heresies), பொருளாதாரத் தத்துவம் (Economic Philosophy), பொருளாதாரம்: ஒரு அலங்கோலமான மூலை (Economics: An Awkward Corner). பொருளாதார வளர்ச்சிக் கட்டுரைகள்(Essays in the Theory of Economic Growth), சுதந்திரமும் இன்றியமையாமையும் (Freedom and Necessity), பொருளாதார ஆய்வில் பயிற்சி (Exercise in Economic Analysis), வேலைக்கோட்பாட்டுக்கு முன்னுரை(Introduction to the Theory of Employment), வட்டியும் மறறும் சில கட்டுரைகளும் (The rate of interest and other Essays). மு.நா.

**துணை நூல்கள்:**

**Amit Bhaduri,** Joan Robinson Portrait of an Intellectual Rebel, Economic and Political Weekly, Special Number, Bombay, 1985.

**Joan Robinson,** An Essay on Marxian Economics, Macmillan, London, 1972.

***சோன்சு, சர் வில்லியம்*** இந்தியாவில் ஆசியக் கழகம் என்னும் அமைப்பை நிறுவிய அறிஞர். சோன்சு, சர் வில்லியம் (Jones, Sir william) கி.பி. 1746-ஆம் ஆண்டு இங்கிலாந்திலுள்ள இலண்டமாநகரில் பிறந்தார். இவர் கல்கத்தா ,தலைமை நீதி மன்றத்தின் நீதிபதியாக இந்தியாவில் பணியமர்த்தப்பட்டார். கீழை நாடுகளின் வரலாற்றாய்விலும் மொழியாய்விலும் மிக்க ஈடுபாடு கொண்ட சோன்சு கி.பி 1784-ஆம் ஆணடுஆசியக் கழகத்தைக் (Asiatic Society) கல்கத்தாவில நிறுவினார். இககழகம் தொன்மைப் பொருள்களைக் கண்டுபிடித்தல, ஆசிய வரலாறு, அறிவியல் இலக்கியம் ஆகியவறறை ஆய்வு செய்தது.

சோன்சு ஆரோவில் (Harrow) கல்வி கற்றபின் ஆக்சுபோர்டு பல்கலைக் கழகக் கல்லூரியில் பட்டம் பெற்றார். இவர் 28 மொழிகளை அறிந்தவராக விளங்கினார். இவர் இலத்தீன், கிரேக்கம், எபிரேயம், அரபுமொழி, பாரசீகம், சீனம் ஆகிய மொழிகளில வல்லவராக விளஙகினார். சட்டம் பயின்ற இவர் பல நூல்களை மொழி பெயர்த்தார். இவர் கி பி. 1783-இல் கல்கத்தாவின் உயர்நீதிமனற நீதிபதியாக நியமிக்கப்பட்டார். அங்குச் சமசுகிருதத்தைக் கற்றும் இந்து, இசுலாமிய சட்டஙகளைப் பயின்றும் இந்து சட்டம் என்னும் நூலை கி.பி.1714- இல்எழுதினார். இவர் முகம்மதியர்களுக்கான சட்டம் பற்றிய நூல ஒன்றை கி பி 1792-இல் வெளியிட்டார். மொழியியல ஒப்பீட்டு அறிவியலில் இவர் ஆர்வம் காட்டினார். இவருடைய கடிதங்களைக் கார்லேணடு கேனான் (Garland Cannon) என்பவர் பதிப்பித்து 1970-இல் இரு தொகுதிகளாக வெளியிட்டுளளார். சு.இரா

***சோனிப்பட்டு:*** இது அரியானா மாநிலத்தில் உள்ளதொரு நகரம். இந்நகரம், சோனிப்பட்டு (Sonebat) மாவட்டத்தின் தலை நகரமாகவும் உள்ளது. புதுதில்லியிலிருந்து தெற்கே 33கி.மீ. தொலைவில் இது அமைந்துள்ளது. இது கி.மு 1500. -இல் ஆரியர்களின குடியிருப்புமையமாக நிலவியது. ஆரியர்கள் யமுனை நதித் கரையில் குடியேறினர். இப்பகுதி இந்நகரிலிருந்து மேற்கில் உள்ளது. மகா பாரதம் இந்நகரைச் சோனப்பிரததம் (Sonabrastha) எனக் கூறுகிறது. குருசேத்திரத்தின் ஒரு பகுதியாக இது விளஙகியது.அரியானா மாநிலத்தினமிகப்பெரும் நகரங்களுள் ஒன்றாகத் திகழும் இநநகரம், தொழிற்சாலை மிகுந்த பகுதியாகவும் உள்ளது. இந்நகரத்தில் மிதிவண்டித் தொழிற்சாலை உள்ளது. மற்றும் இங்கு தையல் எந்திரத் தொழிற்சாலை, இயநதிரப் பொருகள், நெசவு ஆலைகள், இரும்பு எஃகுத் தொழில், விரிப்புகள், கைத்தறி ஆலைகள, செம்பு பிததளைப் பொருள் தயாரிப்புப்போன்றவை நடைபெறுகின்றன. இசுலாமியர்களின் கட்டடங்கள் இந்நகரில் உள்ளன. நாசிருதின் கி பி 1272 இல் கட்டிய பள்ளிவாசல், குவாசா கிசி (Khwaja khis) கல்லறை, அழிந்த கோட்டையொன்று ஆகியவை இநநகரத்தில் உள்ளன.

சோனிப்பட்டு நகரத்தின் மக்கள்தொகை 109,369 (1981).

சோனிப்பட்டு மாவட்டம் 2, 200 ச.கி.மீ. பரப பளவுடையது. இம்மாவட்டத்தின் தெற்கில் தில்லியும் மேற்கில் உரோக்தாக்கு (Rohtak) மாவட்டமும் வடக்கில் கார்னால் (Karnal)மாவட்டமும் கிழக்கில் உத்தரப்பிரதேசமும் எல்லைகளாக உளளன. இம் மாவட்டத்தில் பஞ்சாபுச் சமவெளிப் பகுதி உள்ளது. இப்பகுதி இந்துக்களின் ஆட்சிக்குட்பட்டுப் பின்னர் இசுலாமியர்களின் ஆட்சிக்குட்பட்டிருந்தது. இம் மாவட்டத்தின் அருகில் உள்ள பானிப்பட்டுச் சமவெளியில் பாபாருக்கும் சிக்கந்தர் லோடிக்கும் இடையில் கி.பி. 1526-இல் போர் ஏற்பட்டது. அக்பருக்கும் எமுவிற்கும் கி.பி.1556-இல் நடை பெற்ற சண்டை முகலாயப் பேரரசை இந்தியாவில் நிலைநிறுத்த வித்திட்டது. அகமதுசா துரானி என்பவர் கி.பி.1761-இல் மராத்தியர்களுடன்இங்குப் போர் புரிந்தார். இம் மாவட்டத்தில் நெல், பருத்தி, கோதுமை, வாற்கோதுமை, சோளம், கரும்பு போன்றவை பயிரிடப்படுகின்றன. மாவட்டத்தின் மக்கள்தொகை 846,765 (1981). சு.இரா.

## சௌ

சௌ சகரம், ஔ, கௌ என்ற எழுத்துகளுக்கு உரிய குறிப்புகளைப் பார்க்க எகர ஔகார உயிர்மெய்க் குறிகளை ஒட்டியே இதன் உருவமும் தோன்றி வளர்ந்தது. மற்றும் சகரத்தின் வளர்ச்சியோடும் இணைந்தே வந்தது. வட்டெழுத்திலும் அவ்வாறே

கே. ஜி. கி.

*சௌந்தரியலகரி:* இந்நூல் ஆதி சங்கரரால் (கி.பி.8-ஆம் நூற்றாண்டு) எழுதப்பட்டதாகக் கருதப்படுகிறது. ஆனால், இந்நூலைப் பற்றிய குறிப்புகளும் உரை நூல்களும் கி.பி.16-ஆம் நூற்றாண்டில் தான் எழுதப்பட்டிருக்க வேண்டும் எனக் கருத இடந் தருகின்றன. எனவே, நூலாசிரியர் பற்றியும், அவரது காலத்தைப் பற்றியும் திட்டவட்டமாகக் கூற இயலவில்லை.

'சௌந்தர்யம்' என்றால் அழகு; 'லகரி' என்றால் 'அலை' என்பது பொருள். அன்னை பராசக்தியின் திருஉருவத்தையும், அடியாரிடத்தில அவள் காட்டும் எல்லையில்லாக் கருணையையும் கூறும் முறையில் அமைந்திருக்கிறது. இந்நூல் சொற்சுவையும், பொருட்சுவையும் மிக்கதும், சமசுகிருத மொழியில் எழுதப்பட்டதுமான ஓர் அரிய கவிதை நூல்; அன்னையின் அருளை எடுத்துரைக்கும் பக்தி நூல்; சிரீவித்தியா எனப்படும் வழிபாட்டு முறைக்கு உகந்ததோர் மந்திர சாத்திர நூல். இதுஆகமம், தந்தர சாத்திரம் ஆகியவற்றின் சாரங்களை உள்ளடக்கிய அரிய நூல். 100 செய்யுள்கள் கொண்ட இந்நூலினை இரண்டு பகுதிகளாகப் பிரிக்கலாம்.

முதல் 41 செய்யுள்களைக் கொண்ட 'ஆனந்த லகரி' எனப்படும் முதற் பகுதியினைச் சிவபெருமானே மனமுவந்து ஆதிசங்கரருக்கு அருளிச் செய்ததாக மரபு. மந்திர சாத்திரத்தின் அரிய கருத்துகளைத் தெளிவாக எடுத்துரைக்கிறது இப்பகுதி. முக்கியமாக சிரீவித்தியா எனப்படும் வழிபாட்டு முறையின் கருத்துகளையும், அதனைச் செயற்படுத்தும் முறையினையும் விளக்குகிறது இப்பகுதி. சிரீவித்தியா எனப்படுவது 'இறை' தத்துவத்தை அன்னை வடிவமாகக் கருதி வழிபடுவதாகும். வேத முறைப்படி வழிபாடு கடுமையாகத் தோன்றிய காலத்தில், அதனை எளிமைப்படுத்தி, அனைவரும் பின்பற்றத் தக்க முறையில் மாற்றி அமைக்கப்பட்டதே சிரீவித்தியா முறையாகும்.

'சிரீவித்தியா முறை' இரண்டு வழிகளில் பின்பற்றப்படுகிறது. 1. 'சிரீசக்கரம்,' (பின்னால் பார்க்க) அமைத்து, 'ஓம்' 'உகரீம்' 'கலீம்' போன்ற மந்திர அட்சரங்களைத் தொடர்ந்து பலமுறை உச்சரித்து அதற்குரிய முறையில் வழிபாடு நடத்துதல். இதனைச் 'சௌந்தரிய லகரியிலுள்ள' 9, 10 ஆம் செய்யுள்கள் விளக்கியுள்ளமையைக் காணலாம்.

2. இறைச் சக்தியை உடலின் பல்வேறு பாகங்களில் நின்று நிலைத்து நிற்கச் செய்து பின்னர் மேன்மேலும் உயர்ந்து உச்ச நிலையை அடையச் செய்வது. ஆழ்நிலைத் தியானத்தின் மூலம் உயிர்ச் சக்தியை இறைச்சக்தியுடன் ஒன்றுபடுத்துதல் (குறிப்பு: செய்யுள் 31).

'குண்டலினி' எனப்படும் இறைச்சக்தி மக்கள் உடலில் 'மூலாதாரம்' என்னும் பகுதியில் நீறுபூத்த நெருப்பாக வீற்றிருக்கிறது. அதனைத் தட்டியெழுப்ப வேண்டும். அவ்வாறெழுப்புதல் குறிப்பிட்ட மந்திரங்களைக் குறிப்பிட்ட முறையில் பலமுறை உச்சரிப்பதன் மூலம் இயலுவதாகிறது. பிறகு 'குண்டலினி' சுவாதிட்டானம் என்னும் பகுதியை அடைகிறது. மேன்மேலும் அதனை முன்னேறச் செய்து 'மணிபூரம்' 'அனாகதம்' 'விசுத்தி' 'ஆக்ஞா' என்ற நிலைகளைக் கடந்து சகசுராரம் என்னும் நிலையை அடையச் செய்தல் வேண்டும். இங்குத் தான் இச்சக்தி பரம்

பொருளுடன் ஒனறுபடுகிறது. அதன் விளைவாகச் சீவன், முகதிநிலை பெற்றுப் பேரானந்தத்தில் திளைக் கிறது. 'மூலாதாரம்' முதல் 'ஆக்ஞா' வரையிலான ஆறு சகதி நிலைகளைக் கற்பனை நேர்கோடுகளில் இணைத்தால் அவை ஒன்றையொன்று வெட்டிக் கொளளும் முக்கோணங்களாக அமைந்து, இறுதியில் 6 (ஆறு) முனை கொண்டு வடிவம் உருப்பெறும். இதுவே சிரீசக்கரம் எனப்படும். இதனை 9-ஆம செய் யுள் விளக்குகிறது.

சௌந்தரியலகரியின் இரண்டாம் பகுதி (செய யுள் 42 முதல் 100 வரை), அன்னை பராசக்தியின் வடிவத்தைத் தலைமுதல் பாதம் வரை வருணிக்கும் முறையில் அமைந்திருக்கிறது. இவை கவிநயமும் பக்திக்சுவையும் மிகுநது விளங்குகின்றன. எ-டு. சௌந்தரியலகரியின 57-ஆம் செய்யுள் பினவரும் அரிய கருத்துகளைக் கூறுகிறது. 'உமையவளே! நீலோற் பல மலரினை ஒத்த உன்தன் கடைக்கண் பார்வையைத் தொலைதூரத்தில் வாடும் இந்த ஏழையின மேல விழும்படி செய்யமாட்டாயா? பாகுபாடின்றி அனைவரையும் உய்விக்கும் தனமை கொணடதுஅனறோ உன்பார்வை?விலஙகுகள்வாழும் காடென்றும், அரசர்கள்வாழும் மாட மாளிகை யென்றும் வேறுபடுத்தாமல் ஒரே தனமையாகத் தானே நிலவு தன் ஒளியைப் பாய்ச்சுகிறது'.

சௌந்தரியலகரியின 75-ஆம் செய்யுளில் கீழ்க் காணும் குறிப்பொனறு காணக் கிடக்கினறது. 'அனனையே' நின் திருக்கரத்தால் அந்தத்தமிழக் குழந்தைககு ஞானப்பால ஊட்டினாய. அதன் பயனாய் அக்குழந்தை பாக்கள இயற்றும் பாங்கி னைப் பெற்றுப் பக்திச்சுவை சொட்டும் பாக்களை இயறறி அனைவரையும் வியககவைத்தானே! நின் கருணையை எனனெனபது?' இவண குறிப்பிடப் படும் 'தமிழ்க்குழந்தை' சைவ சமயத்தைப் பரப்பிய நாயன்மார்களுள் ஒருவரான திருஞானசம்பந்தப் பெருமானையே குறிககிறது என்று பல ஆராய்ச்சி யாளர்கள் கருதுகினறனர். இதன் அடிப்படையில நூலாசிரியராகக கருதப்படும் சிரீசஙகரரின் காலத்தை 8-ஆம் நூற்றாண்டு என்றும் நிருணயிக்கின்றனர்.

சௌந்தரியலகரியின ஒவ்வொரு செய்யுளுக்கும தனித்தனியாகத் தெய்விக பலன கூறப்படுகிறது. எடுத்துககாட்டாகப் பன்னிரண்டாம் செய்யுளுக்கு உரிய மந்திரம் 'ஸொ;ஸௌ;' என்பதாகும். அதற் குரிய யந்திரம்''

सौः என்றவாறு இருக்கும். இதனை நீரின் மேல்வரைந்து மேற்கூறிய மந்திரத்தை ஒரு நாளுக்கு 1000 முறை வீதம் 45 நாள்களுக்கு மனனம் செய்து வந்தால் கவிபாடும் திறம் கைகூடும் என்று நம்பப்படுகிறது.

மேற்கூறிய பெருமைகளினால சௌந்தரியலகரி மிகவும்புகழ் பெற்று விளங்கி வருகிறது.நாட்டின் பல் வேறுபாகங்களிலும் இச்செய்யுள்களை இசைப்படுத்திப் பாடி வருகின்றனர், இந்நூலுக்கு நாற்பதுக்கும் மேற் பட்ட உரைகள் எழுதப்பட்டிருககினறன, சு,இராம,

**துணை நூல்:**

Subramanian, V.K, Soundaryalahari, Motilal Banarsidass, Delhi, 1977.

*சௌமிகூல்* வடஅட்லாண்டிக்கு மாக்கடலில் உள்ள ஒரு தீவு. இதற்கும், வட அட்லாண்டிக்கு மாக்கடலில் வேறு சில தீவுகளுக்கும் ஏசோர்சு (Azores) என்பது பெயர். ஏசோர்சுத் தீவுக் கூட்டத் தில் மிகப் பெரிய தீவு சௌமிகூல் (Saomiguel). இத தீவுக் கூட்டத்தின் மக்கள் தொகையில் பாதிக்கு மேல் சௌமிகூலில் உள்ளனர். இங்குள்ள பட்டணங களுள் மிகவும் குறிப்பிடத்தககது போண்டா தால் காதா (Ponta Delgada) என்பதாகும். இதன் நீளம் சுமார் 66 கி.மீ, அகலம் 14 கி.மீ.பரப்பு 747 ச.கி.மீ.
தெ.பா.

*சௌராட்டிரப் பல்கலைக் கழகம்:* குசராத்து மாநிலத்தில் உயர் கலவியை வளர்ப்ப தற்கு ஏற்படுத்தப்பட்ட முதன்மையான பல்கலைக் கழகங்களுள் ஒனறு. இப்பலகலைக கழகத்தைத் (Saurashtra University) தோற்றுவிப்பதறகுக் குச ராத்து மாநிலக் கல்வி இயககம் 1956-இல பெரு முயற்சி மேற்கொணடது. ஆனால 1965 வரை இநத முயறசி வெற்றி பெறவிலலை. இறுதியில 1965-இல ஒப்புதல் அளிக்கப்பட்டு 1967-இல இப்பல்கலைக கழகம் தோற்றுவிக்கப்பட்டது.

இப்பல்கலைக் கழகம் கற்பித்தல, உயராய்வு, இணைப்புரிமை ஆகிய மூனறு முதன்மையான பணி களைச் செய்கிறது. இராசுகாட்டு(Rajkot)நகரில் நிறு வப்பட்ட இப்பல்கலைக்கழகம் ஆறு வருவாய் மாவட்டங்களைத் தன்ஆளுகைக்குட்படுத்திக் கொண டுள்ளது. இப்பல்கலைக் கழகத்தில் 54 இணைப்புரிமை பெற்ற கல்லூரிகளும் (Affiliated Colleges), மூனறு தகுதி பெற்ற (Recognized Institution) நிறுவனங களும் உள்ளன.

இஙகுக் கலை, வணிகவியல், கல்வியியல், மனை யியல், சட்டவியல், ஊரகவியல், அறிவியல் முதலான

புலங்கள் ஏற்படுத்தப்பட்டு அவற்றின்கீழ்ப் பல துறைகள் இயங்குகின்றன. இங்குக் கற்பிக்கப்படும் பாடங்கள்: உயிர் அறிவியல் (Bio-Science), வேதியியல், வணிகவியல், பொருளியல், கல்வியியல், குசராத்து மொழி. வரலாறு, இதழியல் (Journalism), சட்டவியல், நூலகவியல், கணிதவியல், இயற்பியல், சமுதாயவியல் முதலானவையாகும்.

சௌராட்டிரப் பல்கலைக் கழகத்தில் புகுமுகக் கல்வி (Pre-University Course) இல்லை. இங்குப் பயிற்று மொழி குசராத்து மொழி என்றாலும் இந்தியும் ஆங்கிலமும் பயன்படுத்திக் கொள்ளலாம். தேர்விற்கும் இதே நிலை கடைப்பிடிக்கப்படுகிறது. பெரும்பாலான பட்டப் படிப்புகள் பருவம் சார்ந்த தேர்வு முறையைக் (Semester) கொண்டவை.

பல துறைகளில் பட்டயப் படிப்பும் (Diploma) சான்றிதழ்ப்படிப்பும் இங்குப் பெற வசதியுண்டு. மருந்தியல, இதழியல், தொழிலாளர் சட்டம், வரிச் சட்டங்கள, மருத்துவத்தில பல்வேறு பிரிவுகள முதலானவற்றில் பட்டயத் தகுதி வழங்கப்படுகிறது. இப் பல்கலைக் கழகத்தில் சிறப்புத் தகுதிக்கான பட்டங்களும் வழங்கப்படுகின்றன.

மாணவர்கள், கல்வி, ஆராய்ச்சி இவற்றோடு பிற துறைகளான விளையாட்டு தேசிய மாணவர் படை முதலானவற்றில்ஈடுபட்டுத் தம்திறமைகளை வளர்த்துக்கொள்ள இங்குப் பல வசதிகள் உள்ளன. சீ.ப.

*சௌராட்டிர மொழி*: தமிழ்நாட்டில் பேசப்படும் மொழிகளுள சௌராட்டிர மொழியும் ஒன்று. இம் மொழியைப் பேசுபவாகள் 'சௌராட்டிரா' என்று கூறப்படுகின்றனர். இம் மொழி இநதோ-ஆரிய மொழிக் குடும்பத்தைச் சார்நதது ஆகும்.

முகம்மது கசுநாவி (Mahmud Ghaznawi) என்பவரின் படையெடுப்புக் காரணமாகச் சௌராட்டிர மக்கள்,மேற்குச சௌராட்டிரம் என்ற இடத்திலிருநது தெற்கு நோக்கி கி.பி. 11-ஆம் நூற்றாண்டிற்கும் 13-ஆம நூற்றாண்டிற்கும் இடையில் தமிழநாட்டிறகு வந்தனரெனக கருதப்படுகிறது. முதலில் இவர்கள ஆந்திராவில் தங்கினரெனவும், பிறகு கி.பி. 16-ஆம் நூற்றாண்டில் தமிழ்நாட்டுக்கு வந்து குடியமர்ந்தனரெனவும் வரலாற்று அறிஞர்கள் கருதுகின்றனர் இவர்களின் முக்கிய தொழில் நெசவு

தமிழ்நாட்டில் 1,55,392 சௌராட்டிர மக்கள் (1961) வாழ்நது வந்தனர். இம மக்கள் ஆம்பூர், ஆரணி, அம்மியப்பன், அம்மாபேட்டை, அய்யம் பேட்டை, புவனகிரி, தாராசுரம், திண்டுக்கல், காஞ்சிபுரம், கும்பகோணம், சென்னை, மேல்மங்கலம், நாமக்கல், நிலக்கோட்டை, பழனி, புதுக்கோட்டை, இராமநாதபுரம், இராசிபுரம், தஞ்சாவூர், பாளையங்கோட்டை, பரமக்குடி, பெரியகுளம், பாண்டிச்சேரி, திருச்சிராப்பள்ளி, சேலம், நாகர்கோவில், செவ்வாயப்பேட்டை, வீரவநல்லூர், வாலாசாப்பேட்டை போன்ற இடங்களிலும் கருநாடகத்தில பெஙகளூரிலும் வாழ்ந்து வருகின்றனர். இவர்களில மதுரையில் மட்டும் 51 விழுக்காடு மக்கள வசிக்கின்றனர்.

பொதுவாக, சௌராட்டிர மொழிக்கு முதன்மைப் பிரிவு (Main Group) என்றும, வடக்குப் பிரிவு (Northern Group) என்றும் இருவகைக் கிளைமொழிகள் உணடு. முதன்மைப் பிரிவு என்னும கிளைமொழி கோட்டாறு, சென்னை, வாலாசாப்பேட்டை, பெங்களூா போனற இடஙகளில் பேசப்படுகினறது. வடக்குப் பிரிவுக கிளைமொழி ஆரணி, திருப்பதி, நாராயணபுரம போன்ற இடஙகளில் பேசப்படுகினறது. வடக்குப் பிரிவுககும முதனமைப் பிரிவுககும் பேச்சு வழக்கில் வேறுபாடுணடு.

சௌராட்டிர மொழியில உயிர் ஒலியன்கள (Vowels) பதினொன்றும் மெய் ஒலியன்கள (Consonants) முப்பத்தாறும் காணப்படுகின்றன.

உயிர் ஒலியன்கள் x, e, e, i, j, a, a, o, o, u, u போன்றவை ஆகும். மெய் ஒலியனகள k, kʰ, g, gʰ, n, c, cʰ, j, jʰ, n, s, t, tʰ, d, dʰ, n, s, l, t, tʰ, d, dʰ, n, s, r, rʰ, l, lʰ, p, pʰ, b, bʰ, m, f, h, v போலவனவாகும்.

சௌராட்டிர மொழி ஒட்டுநிலை (Agglutinative) மொழி வகையைச் சார்ந்ததாகும். இம்மொழியில் ஆண பால், பெண பால், அஃறிணை எனனும் மூனறு வகையான பால (Gender) வேறுபாடும், ஒருமை பனமை எனறு இருவகையான எண (Number) வேறுபாடும் காணபபடுகின்றன. பிரதிப் பெயர்கள (Pronouns) தனமைப் பிரதிப் பெயர்கள (Personal Pronouns), சுட்டுப் பிரதிப் பெயர்கள் (Demonstrative Pronouns), வினாப் பிரதிப் பெயர்கள் (Interrogative Pronouns) எனறு பெயர்கள பாகுபாடு செயயப்படுகின்றன. வினை, வினைமுறறு, வினையெச்சம எனறு இரணடு வகையாகப் பாகுபாடு செய்யபபட்டுளளது. நிகழ்காலம், இறந்தகாலம், எதிர்காலம் எனறு காலம் மூன்றாகப் பகுக்கப்பட்டுளளது. அடைகளில் பெயரடை (Adjective), வினையடை (Adverb) என்று இருவகை உண்டு.

வாக்கிய அமைப்பு திராவிட மொழிகளைப் போன்றே எழுவாய், செயப்படுபொருள், வினை எனற வரிசையில் அமைந்துள்ளது.

சௌராட்டிரா மொழி அமைப்பின் ஒலியனியல் (Phonology) உருபனியல் (Morphology), தொடரியல் (Syntax) ஆகியவை பெரிதும் குசராத்தி மொழியை ஒத்திருக்கின்றன. இம் மொழி தமிழை விடத் தெலுங்குச் சொற்களையே பெரிதும் கடன் வாங்கியுள்ளதாகக் கருதப்படுகிறது. க ப.

**துணை நூல்கள்:**

Census of India, Government of India Publications, 1961.

Noribiko, U ida, Oral Literature of the Saurashtrans, Simant Publications, India, 1979.

***சௌரி சௌரா*** உத்தரப்பிரதேசத்தில் கோரக்பூர் மாவட்டத்தில் அமைந்துள்ள ஒரு சிற்றூர். இங்கு இந்திய வரலாற்றில் சிறப்புப் பெற்ற ஒரு நிகழ்ச்சி நடைபெற்றது. காந்தியடிகள் ஒத்துழையாமை இயக்கம் தொடங்கிய காலத்தில் (1922) சௌரி சௌராவில் (Chaurichaura) காந்தியடிகளின் உள்ளத்தைக் குலுக்கிய ஒரு நிகழ்ச்சி நடந்தது. தேசத் தொண்டர்கள் காந்தியடிகளின் கட்டளைக் கேற்ப இங்குப் பெரும் ஊர்வலம் ஒன்று நடத்தினர். இது ஒத்துழையாமை இயக்கத்தின் ஒரு பகுதியாகும். அப்போது ஊர்வலத்தில் சென்ற தொண்டர்களுக்கும் அரசாங்கக் காவலர்களுக்கும் இடையே பெரும் மோதல் ஏற்பட்டது. காவலர்கள் மக்கள்மீது மூர்க்கத்தனமாகச் சுட்டனர். கூட்டத்தைக் கலைத்துவிட்டுக் காவல நிலையம் சென்றனர். சிறிது நேரம் கழித்துக் கொதிப்படைந்த மக்கள் கூட்டம் காவலர்களைப் பழிவாங்கும் நோக்கத்துடன் காவல் நிலையத்தைத் தீயிட்டுக் கொளுத்தினர். அத்தீயில் இருபத்திரண்டு காவலர் சுருண்டு மடிந்தனர். இதனைக் கேள்விப்பட்ட காந்தியடிகள் சத்தியாக்கிரகத்தின் அடிப்படைக் கொள்கைக்கு முற்றிலும் மாறுபட்டதாக இந்நிகழ்ச்சி இருந்ததால், உடனே தம் ஒத்துழையாமை இயக்கத்தை அந்நாளிலிருந்து நிறுத்திவைத்தார். பா.இரா.

**சௌலப்பியம்**: 'உயர்வற உயர்நலம் உடையவன் யவனவன்' என்று நம்மாழ்வார் தம் திருவாய்மொழியின் தொடக்கத்தில் அருளியபடியே பரம பொருளான திருமால் கணக்கற்ற நற்குணங்களை உடையவராயிருக்கிறார். அக்குணங்கள் 1. அடியார்கள் இறைவனை அடைவதற்கு உதவுபவை. 2. அடைந்தபின் இறைவன் அடியார்களின் காரியங்களைச் செய்ய உதவுபவை என்று இருவகைப்படும். அதில் முதற்பிரிவில் 'சௌலப்பியம்' என்னும் எளிமைக் குணம் முக்கியமானதாயிருக்கும். சுலபனாய் (அடைதற்கு எளியனாய்) இருக்கும் தன்மை சௌலப்பியம் என வடமொழியில் கூறப்படுகிறது. 'எளிவரும் இயல்பினன்' என்று இக்குணத்தையுடைய இறைவனை நம்மாழ்வார் குறிப்பிடுகிறார்.

பரம், வியூகம், விபவம், அந்தர்யாமி, அர்ச்சை என்னும் இறைவனுக்குள்ள ஐந்து நிலைகளில் மிக எட்டாத பரமபதத்திலிருக்கும் பர நிலையிலும், திருப்பாற்கடல் முதலான எட்டாத இடங்களிலிருக்கும் வியூக நிலைகளிலும், யோகிகளாலேயே காணத்தக்க அந்தர்யாமி நிலையிலும் இந்தச் சௌலப்பிய குணம் வெளிப்படுவதில்லை.

இவ்வுலகிலுள்ளார்க்கு எளியனாய் இருந்த இராமன, கண்ணன் முதலான விபவாவதார நிலையில் இக்குணம் வெளிப்படுகிறது. 'எத்திறம் உரலினோடு இணைந்திருந்து ஏஙகிய எளிவே' என்று நம்மாழ்வார், கண்ணன் திருவாய்ப்பாடியில் வெண்ணெய் திருடி யசோதையால் உரலோடு கட்டுண்டு அழுத எளிமையை நினைத்தவுடன் ஆறுமாதம மயங்கிக் கிடந்தார் என்பர். அனைவர்க்கும் எளிய அர்ச்சாவதாரமே மற்ற நானகு நிலைகளைக் காட்டிலும் எளிமைக் குணத்தில் விஞ்சியது என்று ஆனறோர் கூறுவர்.

பரநிலை அண்டத்தைச் சூழ்ந்திருக்கும் ஆவரண நீர் போலவும், வியூக நிலை கண்ணுககு எட்டாத திருப்பாற்கடல் நீர் போலவும், அந்தர்யாமி நிலை சிரமப்பட்டுக் கிணறுவெட்டிய பின்பே கிடைக்கும் பூமியிலுள்ள நீர்போலவும், பாமர மக்களுடைய இறையனுபவ வேட்கையைத்தணிக்க இயலாதவையாகையால் சௌலப்பிய குணம் இல்லாதவை. விபவாவதார நிலை ஒரு காலத்தில ஓடிய காட்டாற்று நீர் போலே இக்காலத்து மக்களுடைய இறையனுபவ வேட்கையைத் தணிக்க முடியாததாகையால் அதிலும் சௌலப்பிய குணம் குறைந்தேயுள்ளது. அககாட்டாற்றில் தேங்கிய மடுக்கள் போலே எல்லாக் காலத்திலும் உள்ள அனைவரது இறையனுபவ வேட்கையைத் தணிக்க உதவும் அர்ச்சாவதாரமே சௌலப்பியமாகிற எளிமைக் குணத்தில் மிக்கது என்பது ஆன்றோர் கண்ட முடிவாகும். எஸ்.சி.

ஞ இடை நா மேல் அண்ணத்தைத் தொட்டு மூக்கின் தொடர்போடு வெளிப்படும் இவ்வொலி.

மொழிக்கு முதலில் இவ்வொலி சிறுபான்மையாகவே வழங்கி வரு கின்றது. கல்வெட்டுகளிலும் இது அரிதாகத் தான் காணப்படுகிறது.

வடமொழிச் சொற்களில் ஜ், ஞ் என்ற இரண்டும் கலந்த ஒலியாக வருமேயன்றி ஞகரம் முதலில் வருவதில்லை. வடசொல் நிகண்டுகளில் ஞகரம் மொழிக்கு முதலில் வருவதாகக் காணப்பட்டாலும் இலக்கிய வழக்கிலும் மொழிப் படைப்புகளிலும் அது முதலில காணப்படுவதில்லை. தமிழில் வடமொழிச் சொற்களாக அறியப் பட்டவையும் வடமொழியில் ஜ, ஞ இரண்டும் கலந்தனவாகத் தோன்றுகின்றன. எ-டு. ஜ்ஞானம் ஞானம். ஞாலம், ஞாயிறு, ஞிமிலி முதலிய சொற்கள தமிழில்ஞகரம்-மொழிக்கு முதலில் வருவதற்கு எடுத்துக் காட்டுகளாகும். நகரத்திற்குப் போலியாகவும் இவவெழுத்துத் தோன்றும்.

**உருவம்:** இதன் மூல வடிவம். கி.மு 3-ஆம் நூற்றாண்டிலிருந்து ஏறக் குறைய கி.பி. 4-ஆம் நூற்றாண்டு வரை இவவெழுத்து வடிவம் வழங்கி வந்திருக்கிறது.குகைக் கல்வெட்டுகளில் மாங்குளம் (மீனாட்சிபுரம்) கல்வெட்டுகளில் இது காணப்படுகிறது.

வட்டெழுத்திலும் தமிழிலும் ஒரே வடிவம் இருந்தது. இநத உருவத்தின் முதல் மாறுதல் செங்கம் வட்டத்துக் கோட்டையூர் என்னும் ஊரில கணட சோமாசிகோ திருமாறனின் 21-ஆம் ஆண்டு வட்டெழுததுக கல்வெட்டில் காணப்படுகிறது.

இந்த உருவம் கி.பி. 7-ஆம் நூற்றாண்டில் பல்லவ பரமேசுவரனின் கூரம் செப்பேட்டில் ஏறக்குறைய இன்றைய வடிவத்தைப் பெற்றுவிட்டது. கீழ்ப்பகுதியில் வளைத்து சுழியிட்டு எழுதப்பட்டதைக் காணலாம். இடைப் பட்ட உருவ மாற்றங்கள் கொண்ட கல்வெட்டுகள கிடைக்கவில்லை.

கே.ஜி.கி.

**ஞா** மற்ற எழுத்துகளுக்குக் கூறப்பட்டதைப் போலவே தலைக் கட்டிலிருந்து இழுக்கப்பட்ட கோடு நாளடைவில் தனியாகக் காலாக வழங்கி வருகிறது.

ஞ ஞா ஞா

கே.ஜி.கி.

**ஞாயிறு நடனம்** வட அமெரிக்க இந்தியச் சமவெளிப் பழங்குடிகளிடையே கி.பி. 17-ஆம் நூற்றாண்டில் மிகவும் சிறப்புப் பெற்றிருந்த சமய விழாவாகத் திகழ்ந்தது. இப்பகுதியில வாழ்ந்த ஒவ்வொரு பழங்குடி இனத்தவரும் ஆண்டிற்கொரு முறை கோடைக் காலத்தின் தொடக்கத்தில் இவ்விழாவைக் கொண்டாடி வந்தனர். இவ்விழாவினபோது ஒவ்வொரு பழங்குடியினரும் அவர்கள் விருந்தினருடன் ஒன்றுகூடி இவவுலகத்தின்மீது அவர்களுக்குள்ள நம்பிக்கையை உறுதிப்படுத்திக்கொள்வது வழக்கம். அதற்காக இவர்கள் வாய்மொழி உறுதிகள், சடங்குகள நிகழ்த்தி வணங்குதல், குறியீட்டுப் பொருள்களை வைத்து வழிபடுதல முதலானவற்றைச் செய்து வந்தனர். இவ்விழாவின் போது ஆடப்படும் சிறப்புமிக்க நடனமே ஞாயிறு நடனமாகும் (sun Dance). இது வெறும் நடனமாக மட்டுமல்லாமல ஒரு சடங்கு நிகழ்ச்சியாகவும் விழாவாகவும் நடைபெற்று வந்தது.

ஞாயிறு நடனம் அரபாகோ(Arapaho), செய்யன் (Cheyenne), ஆக்லாலா(Oglala), சியோக்சு (Sioux) முதலான பழங்குடியினரிடையே மிகவும் சிறப்புப் பெற்றிருந்தது. பிறசமவெளி மக்களும் கி.பி. 19-ஆம் நூற்றாண்டின் இறுதியில் இந்த நடன முறையுடன வட்டார வழக்குகளையும் சேர்த்து அவரவர் சமய வழிபாடுகளினபோது ஆடத் தொடங்கினர். இதனைத் தொடர்ந்து பல இனக் குழுக்களிடம் பரவிய இந் நடனத்தின் மையக் கருத்து மனித ஆற்றலுக்கு அப்பாற்பட்ட 'ஆற்றலை'ப் பெறுவதும அந்த ஆற்றலின் மீதுள்ள நம்பிக்கையை உறுதிப்படுத்துவது மாகும். அதற்காக இவர்கள் ஒரு சிறு குழுவில் சேர்ந்தோ அனைவருடனும் சேர்ந்தோ அந்த வழிபாட்டு முறையைக் கடைப்பிடிக்கின்றனர். இச்சடங்கில் புதிதாக ஒருவர் ஈடுபட்டால் அது அவருக்கு ஒரு புதிய கடுமையான அனுபவமாக இருக்கும் ஆனால், பழங்குடி மக்கள் அனைவரும் ஒரே இடத்தில் கூடி,பழங்குடிச் சமயக் குழுக்களின் தலைமையில நடத்தும் இச்சடங்கு, அவர்கள் அனைவரையும் ஒன்றுசேர்த்து அவரவரின் நன்மைக்காக வழிபடவைப்பதோடு அவர்களிடையே சமுதாயக்கட்டுப்பாட்டையும் ஒழுங்கையும் ஒற்றுமையையும் ஏற்படுத்துகிறது.

இன்று ஞாயிறு நடனத்தின் சிறப்பு பெரிதும் குறைந்துவிட்டது எனலாம். இதற்குக் காரணம் இந் நடனத்தின்போது இவர்கள் மேற்கொள்ளும் கடினமான வெறுக்கத்தக்க செயல்களேயாகும். பல நாட்கள் இரவு, பகலாக நடக்கும் இச்சடங்கின் போது இயல்பிறந்த இயற்கையின் ஆற்றலைப் பெறுவதில் தீவிரமாக ஈடுபடும ஆட்டக்காரர்கள் உணவு, நீர் எதையும் உட்கொள்ளாமல் இறுதியில தங்களின் உடல் உறுப்புகளைக் குறைத்துக்கொள்ளுதல், உடலை வருத்திக்கொள்ளுதல் முதலான செயல்களில் ஈடுபடுகின்றனர். இவ்வாறான அருவருக்கத்தக்க செயல்களைக் கட்டுப்படுத்தவேண்டும என்ற நோக்கத்தில் அமெரிக்க அரசு 1904-ஆம் ஆண்டு இந் நடனத்தைச் சட்டத்திற்குப் புறம்பானது என அறிவித்தது. இருப்பினும் சில பழங்குடியினர் அமெரிக்காவில் சூலை 4-ஆம் நாளன்று நடக்கும் விழாவின் போது ஒரு பகுதியாக இந்நடனத்தைச்சற்று மாறிய முறையில் நடத்துகின்றனர். மேலும் ஒருசில பழங்குடியினர் ஞாயிறு நடனத்தை மீண்டும் பழைய நிலையில் நடத்த முயன்று வருகின்றனர். சீ.ப.

**ஞானப்பிரகாசர் (திருவாரூர்):** இவர் கி.பி.16-ஆம் நூற்றாண்டில் வாழ்ந்தவர்; சிறந்த

சைவ சமயப் பற்றாளர். திருவொற்றியூர் ஞானப் பிரகாசர் இவரிடம் கற்றவர். நாகப்பட்டினததிறகு அண்மையில உளள திருமுருகன் திருத்தலமாகிய சிக்கல் என்னும் ஊரில் கிடைத்த கலவெட்டு ஒனறால் (கி.பி.1560) இவர் சில திருககோவில்களின மேற் பாாவையாளராகச் செயறபட்டமை அறியபபடு கிறது.

திருவாரூர்ப்பளளு, சிவானநதபோதம், திருமழு வாடிப் புராணம் முதலிய நூல்களை இவர் இயற்றி யுள்ளார். இவர்தம் சாத்திரப் புலமையும், தமிழச் செய்யுள புனையும் ஆற்றலும் பெரும் பாராட்டுக குரியவை. இவர் கமலை ஞானப்பிரகாசர், சத்திய ஞான பணடாரம ஆகிய வேறு பெயாகளாலும வழங்கப்பட்டார். இவர் தம்மிடம வரும் மாணாக கர்களுககுச் சிறநத முறையில பாடம் சொல்ல வல்ல வர் பா.ம.

**ஞானப்பிரகாசர் (திருவொற்றியூர்):** இவர் கி.பி.16-ஆம நூற்றாண்டினா; ஒழுககம் மிகக துறவி; சித்தாந்த சாத்திரங்களில் மிக்க புலமை பெற்றவர்; உரையாசிரியரும் ஆவர். இவர் இயறறிய திருவொற்றியூாப் புராணமபுலவாகளால பாராட்டப் படுவதாகும். சங்கற்ப நிராகரணம, சித்தியார் ஆகிய நூல்களுககுச் செம்பாகமான உரை கணடுளளார். இவர்தம் ஆசிரியர் திருவாரூர் ஞானப்பிரகாசா ஆவர். சைவமும தமிழும இவருக்கு இரு கண்கள் போன்றவை. பா.ம.

**ஞானப்பிரகாசர் (மதுரை):** இவர் கி.பி 15 –ஆம் நூற்றாண்டின் இடைப்பகுதியில் வாழ்ந்தவா; சைவ நூல பல உரைகணட இவர் சைவ சமயத்தில் ஆழ்ந்த பறறுள்ளவர்; சமரச நோக்குடையவர். இவர் ஒரு துறவி. இவர்தம் ஆசிரியர் சத்தியஞான பணடாரம். மதுரைச் சிவப்பிரகாசர், ஞானப்பிரகா சரிடம் கற்றவர். இவர் சித்தாந்த சாத்திரங்களில் மிக்க ஈடுபாடுடையவர். சிவபபிரகாசம் எனனும் சிறந்த நூலுககு அரிய விளக்க உரை கண்டுளளார். புதிரான சில பகுதிகள் இவரது விளககத்தால் தெளிவுபெற்றன. இவ்வுரை வெளியிடப் பெற வில்லை. மெய்கணட சாத்திரங்களுள் ஒன்றான சிவஞான சித்தியாரின ஒரு பகுதிக்கும உரை கணடார் என்பது புலப்படுகிறது. பா.ம.

**ஞானபீட விருது:** இது பாரதிய ஞானபீட இலககிய விருது எனவும் கூறப்படும் இது ஒவவோர் ஆணடும் சிறநத எழுததாளருக்கு வழங்கப்படும். இந் திய அரசியலமைப்பால ஒப்புக்கொளளப்பட்டுள்ள 15 இந்திய மொழிகளுக்கும் இது பொருந்தும். ஒரு இலட்சம் உருபாயும், தங்கமும் செமபும் கலந்த பட்டயமும் விருது பெறறவருக்கு வழங்கப்படும். மேலும, வெண்கலத்தாலான கலைமகள உருவமும அளிக்கப்படும் இது பாரதிய ஞானபீடம் (Bharatiya Jnanpith) என்ற பண்பாட்டு- இலக்கியக் கழகத்தால வழங்கப்படும் விருதாகும். இககழகம் சாநதிபிரசாத்து செயின (Shanti Prasad Jain) என்பவரால் 1954-இல நிறுவப்பட்டது.

இப்பரிசுக்குரிய சிறந்த எழுத்தாளரைத தெரிவு செய்ய ஒரு தோவுக்குழு அமைக்கப்படுகிறது. அதில சிறந்த அறிஞர்களும், எழுத்தாளர்களும் உறுபபினா களாக இருப்பார்கள. இதுவரை இவவிருது பெற்ற பெருமக்களுள வி.எசு. காண்டேகர், மகாகவி சஙகர குருப்பு, தாராசஙகர் பானாசி (Banerjee), டாக்டா கே.வி.புட்டப்பா, உமாசஙகர் சோசி (Joshi), சுமித் திரானநதன பந்து, இரகுபதி, சாகேய் பிராகு, டாக்டர் விசுவநாத சந்தியநாராயணா, விட்டுணு டே, இராம்தாரி, சிங்கு, திஙகர், டாக்டர் தாத்தாத்திரேய இராமச்சந்திர பெந்தரே, கோபிநாத மொகந்தி, அகிலன் முதலியோர் சிலராவர்.

இத்தகைய உயர்ந்த விருது ஒன்று சுதந்திர இநதியா வில் எழுத்தாளர்களுககு வழங்கப்பட வேண்டுமென்ற கருத்தை முதன முதல் வெளிபபடுத்தியவர் இந்தியா வின் முதல் குடியரசுத் தலைவர் டாக்டர். இராசேந் திரப் பிரசாத்து ஆவார். அவர் தமது விருப்பத் தினைத் தொழில் அதிபர் சிலரிடம் வெளிப்படுத் தினார். அதன விளைவாகத் தோனறியதே இந்த நிறுவனம். சா.உ.

**ஞானயோகம்:** இறைவனோடு இரண்டறக் கலத்தலே ஞானயோகமாகும். பக்தன தனனுடைய புனிதமான அனபால் இறைவனோடு கலக்க முயல் கிறான். ஞானி தன்னுடைய அறிவால் பரமபொரு ளோடு கலக்க முயல்கிறான். பக்தனுககு நம்பிக்கை அடிப்படையாக அமைவதுபோல, ஞானிக்குத் தனனம் பிக்கை அடிப்படையாக அமைகிறது. இஙகே அகங் காரத்திற்கு இடமிலலை. சாதவிகப் பணபில் வாழ கிறவனுக்கே ஞானநாட்டம ஏற்படும்.

ஞானி பரம்பொருளைத் தன உளளே தேடு கிறான். நான் யார்? என்னும் ஆராய்ச்சியில் ஈடுபடு கின்றான. இதனைத் தத்துவ விசாரம் எனபர். பொதுவாக உலகியலில் உடம்பை 'நான்' என்பர்; ஐம்புலன்களை, மனத்தை, புத்தியை நான் எனபா. ஞானியோ தன்னுடைய அறிவால், இவறறையெல லாம் 'நான்' அலலன் எனறு ஒதுககிவிட்டு, நான் எது

என்று தேடுவான். இத்தகைய தேட்டமே, ஞானியை இறைவனிடம் சேர்க்கிறது. இதனை எதிர்மறை நெறி என்று கூறினாலும், எது பரமபொருள் என்று தேடுகின்ற திறத்தால், உடன்பாட்டு நெறி என்று கூறலாம்.

ஞானயோகத்தைத் துறவுநெறி நிவாத்தி மார்க்கம் என்று கூறும் உண்மையான ஞான யோகியின் தன்மைகள் 1) மெய்ப்பொருளில் நாட்டம், 2) புலன் ஒடுக்கம், 3) மெய்ப்பொருளைத் தவிரப் பிறவற்றைப் 'பொய்ம்மை' எனக் கருதுதல், 4) முத்தியிற் பேரவா ஆகியனவாகும். திருக்குறளில் ஞானத்தை நிலையாமை, துறவு, மெய்யுணர்தல், அவாவறுத்தல் என்ற அதிகாரங்கள் விளக்குகின்றன. இங்கே நிலையாமை என்ற உணர்வு 'விவேகம்' என்ற கருத்தில் உள்ளது. துறவு என்பது புலன் ஒடுக்கம். மெய்ப்பொருளைத் தவிரப் பிறவற்றைப் பொய்ம்மை என்று கருதுவதே மெய்யுணர்தலாகும். உலக ஆசைகளை அகற்றினால் முத்தியிற் பேரவா தோன்றுமாதலால் முத்தியை அவாவறுத்தலாகக் கொள்ளலாம்.

ஞான சாதனத்தில் 1) சிரவணம் (கேட்டல்), 2) மனனம் (சிந்தித்தல்), 3) நிதித்தியாசனம் (தெளிதல்) 4) ஆத்மசாட்சாத்காரம் (நிட்டை கூடல்) என்று சில படிகளையும் பெரியோர்கள் கூறுகின்றனர். சிரவணமென்றால், வேதங்களைக் கேட்டல், உபநிடதங்களைக் கேட்டல், ஞானப் பகுதியின் முடிவாகவுள்ள மகா வாக்கியங்களைக் குரு மூலமாகத் தெரிந்து கொள்ளல் முதலியன. மனனம் என்றால் கேட்டவற்றை மனத்தில் கொண்டு வருதல். நிதித்தியாசனம் என்றால் முழுமையான தியானப் பயிற்சி. ஆத்ம சாட்சாத்காரம் என்றால் உண்மையான பரமபொருளைத் தலைக்கூடுதல்.

சித்தாந்த நூல்களும் ஞானத்தை விளக்கும்போது கேட்டல், சிந்தித்தல், தெளிதல், நிட்டை கூடல் என்றே பிரித்துக் கூறுகின்றன. மேலே கூறப்பட்ட நான்கு நெறிகளும் கடைசியில் இறைவனைச் சென்றடையத் துணைபுரிகின்றன. இரா.கோ.

**ஞானவரோதய பண்டாரம்** என்னும் புலவர், தமிழ்நாட்டில் சோழ மண்டலத்தினைச் சேர்ந்த திருச்சிக்கு அண்மையிலுள்ள வயலூரில் பிறந்த சைவத் துறவியாவார். தாமியற்றிய உபதேச காண்டத்தில், 'கருதரிய காஞ்சிவளர் கச்சியப்பக் கற்பகத், தாருவை யிறைஞ்சிக் கருதத்தில் வைப்பாம்' என்று கச்சியப்பருக்கு வாழ்த்துக் கூறுவதாலும், 'வயலூரில் எந்தைக்கு எங்கணும் புகழ உபதேசஞ் செய்து' என்ற தொடரில் அருணகிரிநாதரை 'எந்தை' எனக் குறிப்பிடுவதாலும் இப்புலவர், இவ்விரு பெருமக்களுக்கும் பிற்பட்டவர் என்று துணியலாம். இவர், அருணகிரிநாதரைத் தம் ஞானாசிரியராகக் கொண்டவர் என்றும், கச்சியப்பரிடம் கல்வி கற்றுச் சிறந்திருக்கலாம் என்றும் கருத இடமுண்டு. காளமேகப் புலவர் இப்பெரியாரையும், இவர்தம் புலமையையும் சிறப்பித்துப் பாடுதலால் இப்புலவர் காளமேகப் புலவர் காலத்தில் வாழ்ந்தவர் என்றும் (கி.பி. 15-ஆம் நூற். முற்பகுதி) அறிஞர் கருதுவர்.

தாமியற்றிய உபதேச காண்டத்தில் முருகக் கடவுளுக்கு இரு பாடல்கள் அமைத்துள்ள திறத்தாலும், 'பொங்குதமிழ் மொழியினுப தேச காண்டம் புகறியெனச் சிறிதருளும் புனிதன் செவ்வேள்' எனக் குமரக்கடவுளைத் துதியில் பாராட்டுவதாலும் 'எற்குப் பேறுநலகுங் குருபரன்' என முருகவேளை, நூலுள் சுட்டுவதாலும் இப்புலவர் சிறந்த முருகபக்தர் எனத் தெளியலாம். 'எங்குலத் தேவாகிய திருத்தணியில் வரும் சரவணன்' எனனும் பாடலடி கொண்டு முருகக் கடவுளே இவர்தம் குலதெய்வம் என்பதும் அறியக்கிடக்கிறது. முருகன் திருவருளால் இவர் கவி பாடும் திறம் பெற்றார் என்பதும், விராலிமலை முருகன் திருக்கோவில் தோற்றத்துக்கு இப்புலவரே காரணமானார் என்பதும் புதுக்கோட்டை வரலாற்று நூலில் இடம்பெறும் குறிப்புகளாம்.

கந்தபுராணத்தின் ஏழாம் காண்டமாகிய உபதேச காண்டம் இப்புலவர் இயற்றிய நூலாகும். முதல் ஆறு காண்டங்களைக் கச்சியப்ப சிவாச்சாரியார் இயற்றினார், உபதேச காண்டத்தை இவருடைய மாணவரான கோனேரியப்ப முதலியார் முதற்கண் பாடினார் என்றும், பின்னர் இரண்டாம் முறையாக அதனையே இவ்வாசிரியரும் பாடினார் என்றும் கூறுவர். எனவே, உபதேச காண்டம் இரு புலவர் பெரு மக்களால் பாடப்பட்டுள்ளதென்பது புலப்படும்.

இப்புலவர் பாடியுள்ள உபதேச காண்டத்தில் இவர் திருமுருகாற்றுப்படை, தேவாரம், சிந்தாமணி, கம்பராமாயணம் முதலிய நூல்களில் நல்ல பயிற்சியுடையவர் என்பதும், வடமொழிப் பயிற்சியொடு சாத்திர நூல்களிலும் சிறந்து விளங்கினார் என்பதும் அறியப்படுகின்றன. இவர்தம் நூலில் சந்தவகை விருத்தப்பாக்களின் ஆட்சியும், இயற்கை வருணனை மாட்சியும் ஒருங்கே அமைந்து காணப்படுகின்றன.

'ஞானவரோதய பண்டாரம் பண்ணின காண்டம் க-கருத் திருவிருத்தம் 2713' என்பது உபதேச காண்டப் பதிப்புகளில் காணப்படும் குறிப்பாதலின் உபதேச காண்டம் 2713 பாடல்களைக் கொண்டது என்பது புலனாகும். இரா செ.

**ஞானவாசிட்டம்:** இது ஒரு அத்துவைத வேதாந்த நூல். இது வசிட்ட முனிவர், இராம

பிரானுக்கு ஆனம ஞானத்தைஉபதேசித்தருளியதைப் பற்றி விளககும் நூலாகும். இந்நூலில் 2055 எளிய பாடல்கள் உள்ளன. இது ஆறு பிரகரணங்களாகப் பிரிக்கப்பட்டு நாற்பத்து மூன்று கதைகளுடையதாய் அமைந்திருககிறது. வசிட்டர் உபதேசத்திற்குப்பிறகு, இராமனுடைய திருமணம், இலஙகைப் போர், மன்ன னாகி அரசாளுதல் முதலியன நடை பெறுகினறன. வடமொழியிலிருந்து பாடல்களாக மொழிபெயர்க்கப் பட்டதாதலின் இது வழிநூல். இதன் ஆசிரியர் கவிராச பண்டிதர் மகன் வீரை ஆளவந்தார் என்பவர். வீரை பாணடி நாட்டிலுள்ள ஊர். இராமன் கல்வி கற்றபின் தீர்த்த யாததிரை சென்று திரும்பினான் உலகம் நிலையற்றது, எல்லாம் அழியும என்று அவன அறிந்துகொணடான. ஆகவே மனம் தளர்ந்தான. இராமனுக்கு உலக ஆசையினால இந்நிலை ஏற்பட வில்லை. சிறந்த வைராக்கியத்தினால் இநநிலை ஏற்பட்டது. ஆன்மாவைப் பற்றி உபதேசிததால, மனத்தெளிவு எய்தி எல்லாச் செயல்களையும் சரியாகச் செய்வான் என்று விசுவாமித்திரர் கருதி னார். ஏன, இங்ஙனம் துயருடன் காணப்படுகின்றாய் என்று விசுவாமிததிரர் இராமனைக் கேட்டார். இராமன் கூறிய பதில் மிகவும் வைராக்கியமுடைய தாகவும், கற்போர் உள்ளத்தைத் தூய்மையடையச் செய்வதாகவும், அமுதமபோலவும் அமைந்திருநதது. பிறகு விசுவாமிததிரரின் வேணடுகோளுக்கிணஙக வசிட்ட முனிவர் பல கதைகளின்மூலம் இராமனுககு ஞானோபதேசம் செய்தார் அறிவுரைகளின் பலன, இராமன சித்தந் தெளிந்தான; பிறகு ஆட்சியைத் திறமபட நடத்தினான். அந்த உபதேசத்தில் அடஙகிய ஒரு கதை: ஓர் அரசனும் அரசியும் யோகம் பயின்று, பிறகு அறிவு நூற பயிற்சியும் பெற்றனர். அரசிக்கு ஞானமுணடாயிறறு. ஞானம் கிட்டாத அரசன், மனைவி தடுத்தும் கேளாமல காட்டிற்குச் சென்று தவம் செய்தான். அரசன காட்டில கடுந்தவம் செயத ததால் மிகவும் மெலிநதுவிட்டான். அரசனை, மனைவி முனிவர் வேடத்தில் சென்று பார்த்தாள. ஆகாயத்திலிருந்து தன்னெதிர் இறங்கிய அம்முனி வரை அரசனாகிய தவசி மகிழ்ச்சியோடு வரவேறறுத் தனக்கு உபதேசம் செய்யுமாறு கேட்டான. முனிவர் எல்லாவற்றையும் விடுக என்றார். உடனே தவசி 'இந்தக் கமண்டலமும் கோவணமும்தானே' என்று கூறிக் கமண்டலத்தை உடைத்துக் கோவணத்தைக கிழித்தான. முனிவர் எல்லாம் விடவிலலையே என்றார் தவசி. உடலைக் குறிப்பிடுகின்றீர்களா என்று கூறி, மலையிலிருந்து உயிர்விடத் துணிந்தார். உடனே முனிவர் தடுத்து, 'உயிர்போனபின் என்ன பயன் அடைவாய்' எனறு கேட்டார். பிறகு அவனை நிறுத்தி, விடுவது எனபது பொருள்களை உடைத் தும் கிழித்தும் விடுவதன்று. எந்தப் பொருளையும் மனத்தால நினையாமலிருப்பதே எலலாவறறையும விடுதலாகிய தியாகமாம் என்று கூறினார். பிறகு அரசன் ஞானம் பெற்று, நாட்டிற்குச் சென்று அரசாண்டான்.

ஞானிகள் எப்படி வாழவேண்டும் என்ற முறையை வசிட்டர் இராமனுக்கு உபதேசித்தார். அந்த அறவுரைகள எல்லோரும் கடைப் பிடிக்க வேண்டிய ஒழுக்க முறையாகும். வசிட்டர் இராமனிடம், வெளியில் எல்லாச் செயலகளையும் விளையாட்டாகச் செய்து, மனததில் ஒன்றும் செய்யாதவனாக இருக்க வேணடும் எனறு கூறினார். மனத்தில் வைராககியம் விளங்கவேணடும் வெளியே கோபம் மிகுந்தவனாக விளங்கவேண்டும். ஆனால், எல்லோரையும் உறவினரா கவே கருதவேணடும் என்று வசிட்டர் இராமனுக்கு உபதேசம செய்தார். இரா.கோ.

**ஞானவெட்டி** எனனும் நூல் வைத்தியம், யோகம், வேதாந்தம் முதலிய கருத்துகளை உள்ளடக் கியதொன்றாகும். இவ்வுலகும, இவ்வுலகில் இடம் பெறும் உயிர்ப்பொருள்களும், கருத்துகளும், ஞான வொழுக்கங்களும சிவபெருமானின் தமருக ஒலி யினின்றும் பிறநதன என்னும் கருத்தைப் பிணைஞ்சுடும் வெட்டியான் பாடுவதாக அமைந்தது இநத நூலாகும்.

இந்நூல பாயிரப்பகுதி நீஙகலாக 1899 பாடல் களைக் கொண்டது. 'ஞானவெட்டி -1500' எனறும் இந்நூல் வழஙகப்படுவதால தொடக்கத்து இந்நூலுள் 1500 பாடலகள இடம்பெற்றிருக்கலாம் என்றும், பின் னர்ப் பல பாடலகள் இதனுள் சேர்ககப்பட்டிருக்கலாம் என்றும, அவ்வாறு சேர்த்த பினனரும் 1500 என்றே வழஙகப்பட்டது என்றும் கருத இடமுணடு. 'தெயவத தன்மை பொருந்திய திருவள்ளுவ நாயனார் திருவாய் மலர்நதருளிய ஞானவெட்டி-1500' என்று பதிப்பு களில் காணப்படுவதால், 'திருவள்ளுவர் பெயர் கொண்டு வாழ்ந்த பிற்காலப் புலவர்களுள ஒருவர் இந்நூலை இயறறினார் எனக் கொள்ளுதல பொருந தும். இந்நூல பெரும்பாலும் விருத்தப்பாக்களால் ஆனது. வெணபாககளும் இடையிடையே இடம் பெறுகின்றன. பாடல்தோறும் தலைவனை 'ஆணடே' என விளித்துக கூறும் போக்குக் காணப்படுகிறது.

இந்நூலின் முற்பகுதி ஆறாதார தரிசனை, ஆறா தாரவகை, இந்திரிய விவரம், வசியமுறை, ஆயுள் விருத்தி, பிறவித் துன்பம், கற்ப சாதனை, யோக சாதனை, யோக சித்தி, வாதமுறை பற்றிய கருத்து களைக் கூறுகிறது. பிறபகுதி கௌரி பாசாண சுணணம், பளிங்கு பாசாண பற்பம், சாதிலிங்கப்பற்பம், நாகப்பற்பம், சிங்கப்பற்பம் போன்ற பற்ப வகைகள்

குறிததும், குமரிலேகியம் (வானகுமரி லேகியம் காணும்-மேகாதி மேகம்தான பயந்தோடியே போங் காணும), வாலைத் திராவகம் போனற மருந்து வகைகள குறித்தும் பேசுகினறது. சித்தர் கோவையுள் 'திருவளளுவர் ஞானம்' என்னும் பெயரில வழஙகும பகுதி இநநூலிலிருந்து எடுக்கப்பட்ட 20 பாடல களைக கொணடதாகும் கமபன வம்பன்; தேவார திருவாசகம் தியக்கம் தரும்; நைடதம புனைந்துரை எனறு இநநூல் கூறுகிறது. இந்நூல் கி.பி 18-ஆம நூற்றாணடைச் சார்ந்தது எனபர். இரா.செ.

**ஞானாமிருதம்** சைவ சித்தாநத உணமை களைச் செந்தமிழில விளககும தத்துவநூல். இது, சைவ சித்தாந்தம் கூறும் சரியை, கிரியை, யோகம, ஞானம் என்னும் நானகினையும் தமிழில் விளககும் நூல்; சைவ சித்தாந்த சாததிரங்கள எனப்படும 14 மெய்கண்ட சாததிரஙகளுககுக் காலததால முற்பட்ட நூல. திருவாலீசுவரம் கோயிலில் உள்ள கலவெட்டு கள மூலம் கி.பி. 12-ஆம் நூற்றாண்டின பிற் பகுதியில தோன்றி கி.பி. 13-ஆம் நூறறாணடுத் தொடககப பகுதிவரை வாழநத வாகீச முனிவர் இநநூலாசிரியா என்பது விளஙகுகிறது. அவர் அக்காலத்துத தென னாட்டில் சிறநதிருநத கோளகி மடததைச்சாாந்தவா எனபதும் தெரிகிறது.

ஞானாமிருதத்தில் இப்போது சரியை, கிரியை, யோகப் பகுதிகள கிடைககவிலலை. சிவஞான முனிவர் தம் சிவஞான பாடிய உரையில் கிரியா பாதத் திலிருந்து ஒரு செய்யுளை எடுத்துக் காட்டியுளளார். ஒரு செய்யுளின் தலைப்பு மட்டும் ஞானாமிருத உரையில் காட்டப்பெறறுள்ளது. இவ்விரு காரணங் களையும் கொணடு நோக்கினால மறறைப் பகுதி மறைநது விட்டது எனனும் செய்தி புலனாகும். ஞானப் பகுதியில் 75 அகவலகள இப்போது கிடைத் துள்ளன.

இந்நூலைப் பாயிரம், சம்மிய ஞானம் (நிலைப் பேற்றறிவு), சம்மிய தரிசனம், பாசபந்தம், தேகாந் தரம், பாச அனாதித்துவம், பாசசசேத இயல, பதி நிசசயம், பாச மோசனம் என்னும் ஒன்பது வகை களாகப் பிரித்து 75 அகவல்களில் ஆசிரியா விளககி யுள்ளார். சிவஞான போத மாபாடிய உரையில் சிவஞான சுவாமிகள 15 இடங்களில இநநூலை மேற கோளாகக் காட்டியுள்ளார். பெருந்திரட்டு எனற நூலில் முப்பது இடங்களில உரையுடன அந்நூலா சிரியர் இநநூலைச் சேர்ததிருககிறார் எனபதன வாயிலாக இதன் பெருமையை ஊகித்து உணரலாம. இந்நூல், 1904-இல சேத்தூர் ரா. சுப்பிரமணியக கவிராயர் அவர்களால் மதுரைத் தமிழ்ச் சங்கப் பதிப்பாக முதலில வந்தது. பின்னர், ஔவை. துரை சாமிப் பிள்ளை உரையோடு 1954-இல் அண்ணா மலைப் பல்கலைக்கழகத்து வெளியீடாகவும் அம்பைச் சங்கரன உரையோடு 1984-இல் சைவசித்தாநத நூற பதிப்புக் கழக வெளியீடாகவும் வெளியிடப்பட்டது.

ஞானாமிருத 28-ஆம் அகவலில், 'அருள் ஆபர ணன் அறத்தின வேலி, பொருள் மொழி யோகம கிரியையின புணர்த்த அருளமொழி திருமொழி போலவும்' என்பதனால் ஆசிரியரின் குருநாதர் அருணமொழித் தேவர் என்னும் இயற் பெயர் பெற்ற பரமானந்த முனிவா என்பது தெரிகிறது.

அப்பாடலில் இடம் பெறும 'கோடல ஆதி' என பது அருண் மொழித தேவரின ஊர் என்று கருதப் படுகிறது. அவ்வூர் சென்னையை அடுத்துள்ள கோடம் பாக்கம ஆகுமென்று சிலர் கூறுகினறனா. வேதா ரணியத்தை அடுத்த பகுதியில அந்த ஊர் உள ளது என்றும் பிறவாறும் கூறுவாருமுளர்.

ஞானாமிருத ஆசிரியர் தென் தமிழ் நாடு சென்று சைவ சமய உணமைகளைப் பரப்பி வந்திருககிறாா. பிற்காலத்தில அவர், இயற்பெயராலன்றி ஞானா மிருத ஆசிரியர் என்னும சிறப்புப் பெயரால் குறிப் பிடப் பெறறாா. 'ஞானாமிருத ஆசிரியர் சநதானம்' எனறே வாகீச முனிவரின சீடர்கள தங்களைக கூறிக கொள்ளும் ஏறறம் உருவாகியது.

'அஞ்ஞானமாகிய கடலிலே ஆகமங்கள் என்னும மத்தை நாட்டிக் குருநாதனின உபதேசம் எனனும் கயிறறால் புததி எனனும் கையைக் கொணடு கடை யும்போது ஞானமாகிய அமிருதம் வெளிப்படுவதால இநநூலுக்கு ஞானாமிர்தம் எனபது பெயராயிற்று எனறு நூற்பெயர்க் காரணம கூறப்பட்டுளளது இநநூலை விளககும் செய்திகளுட் சில வருமாறு:

குடத்தைக கண்டதும் அதனை உண்டாககிய ஒருவன இருத்தல் வேண்டும்; அதுபோல உலகைக கணடதும அதனை உண்டாககிய ஒருவன் இருததல வேணடும்.

குயவன் குடத்தை உணடாக்குவதைப் பார்த திருப்பதாலேயே, வேறொரு குடத்தைக் காணும் போது அதனை உண்டாக்கிய ஒருவன இருக்க வேணடும் என்பது தெரிகிறது. இறைவன் எந்த உலகையும் உணடாககுவதைப் பார்க்காதபோது, இநத உலகை அவன உணடாக்கினான என எப்படிக கொளவது என்னும் உலகாயதனின் வினாவிற்குப் பினவரும விடை கூறபபட்டுள்ளது. குடம் உருவ முடையது; சில காலம சென்றதும அழிகிறது. அத னால குயவனைக் காணாதபோதும் அது உணடாக கப்பட்ட பொருள் எனபது தெளிவாகிறது. உலகம்

உருவமுடையது; உலகில் உள்ள பொருள்கள் அனைத்தும் அழிகின்றன. அதனால் அழியாத-நித்தியமாக உள்ள ஒருவன் இருந்தால்தான் அவனைக் காணா விட்டாலும் அவனால் இவ்வுலகம் தோற்றப்பட்டு அழியும் என்பதனை அறிந்துகொள்ள முடியும். அழி கின்ற பொருள்களாக இருப்பதால் அவற்றைத் தோற்றுவிக்க அழியாத ஒருவன வேண்டும்; அவன அழியாதவன் ஆதலால், அவனைத் தோற்றுவிக்க யாரும் வேண்டுவதில்லை.

அறிவுடைய ஆன்மா ஐம்பொறிகளுக்கு ஏவல செய்வதால், அதன அறிவை விளங்கவிடாமல் மறைக் கும் ஒரு பொருள் இருக்கவேணடும். அதனை இறை வன உண்டாக்க வேண்டியது இல்லை; அதனால் அதுவும் அநாதி நித்தியப் பொருளாகிறது. அதுவே, ஆணவ மலம் எனப்படுகிறது.

உலகத்துச் சடப்பொருள்கள் அனைத்தும் காரி யம். அவற்றுக்கு மூலமாகக் காரண நிலையில் ஒரு பொருள் இருக்கவேணடும். அது பலவாக இருந்தால் அழியும், அதனால் ஒரு பொருளாகத்தான் இருக்க வேண்டும். கடவுள் அதனை உணடாக்கினார் என்றால், அவரிலிருந்து அது தோன்றியிருக்க வேண்டும். அவர் சித்துப் பொருள். சித்துப் பொருள் சடத்திற்கு மூலமாக முடியாது. அதனால், மூலமாகிய சடப்பொருள் கடவுளால் உண்டாக்கப்படாமல் அநாதி நித்தியமாய் இருக்கவேண்டும். இப்பொரு ளுக்கு மாயை என்பது பெயர். கடவுள் காரியமாகிய உலகைத் தோற்றுவிக்கிறார்.

மேற் காற்றடிக்கத் திரண்ட சருகிலை, வாடைக் காற்றில் சிதறிப் போவது போல ஊழ்வினைககேற்ற வாறு கூடிப்பிரியும் உடன்பிறந்தார், சுற்றத்தார், மனைவி, மக்கள் ஆகியோரிடத்தே வைத்திருக்கும் பாசத்தை அறுத்து அகற்றல் வேண்டும்.

சிறுவன் ஒரு குறுந்தடியை நாயின்மேல் வீசினால் நாய் அக்குறுந்தடியின் மீது பாயாது. எறிந்த அச்சிறு வன்மீது பாயும். சுக துக்கங்கள் வரும்போது அவற்றைச் செய்தார் மீது விருப்பு, வெறுப்புக் கொள்ளாமல் அவை ஊழ்வினையால் வருகினறன என்பதை உணர்தல் வேண்டும். ச.க.

**ஞானியார் அடிகள்:** இவர் தமிழகத்தில் கும்பகோணத்தை அடுத்த திருநாகேச்சுரத்தில். வீரசைவ மரபில், அண்ணாமலை - பார்வதி என்ப வர்களின் மகனாக கி.பி. 1873-இல் பிறந்தார். இவரது இயற்பெயர் பழனியாண்டி.



ஞானியார் அடிகள்

திருப்பாதிரிப்புலியூரில், வீரசைவத் திருமடத்தின நான்காம் குருமூர்த்தியைக் குருவாகக் கொண்டு போற்றிவந்த அண்ணாமலை-பார்வதி தம்பதியர் தம் மகவைக் குருமூர்த்திகள் பொறுப்பில் மடாலயத் திலேயே விட்டு வந்தனர். இளமைக் காலம் முதலே நான்காம் குருமூர்த்தியின் சீடராக இருந்து, திரு மடத்தின் பொறுப்புகளையெல்லாம் கவனிதது வந்து பழனியாண்டிதம்17-ஆம் அகவையில்,திருமடத் தின் 5-ஆம் குருமூர்த்தியாக அருளாட்சிப பொறுப் பில் அமர்ந்தருளினார். திருமடாலய மரபுப்படி, சிவசண்முக மெய்ஞ்ஞான சிவாசாரிய சுவாமிகள எனப் பெயர் பெற்றார். இவர்தாம் ஞானியாரடிகள் என தமிழர்களால் போற்றிக் கொண்டாடப்பெறும் சான்றோர் ஆவர்.

52 ஆண்டுகள் குருபீடத்தில் அருளாட்சி நடாத்தி, சைவமும் தமிழும் தழைத்தோங்கச் சிவிகையூர்ந்து தமிழகம் முழுவதும் சென்று, சொற்பொழிவின் மூலமும், அணுகியிருந்து அறவுரை கூறித் திருத்து வதன் மூலமும், வேற்றுமை பாராட்டாது வந்தோர்க்கெலலாம் தமிழும் சைவமும் சார்ந்த நூல் களைப் பாடம் சொல்லுதலின் மூலமும், தமிழும் சைவமும் தழைக்கத் தொண்டு புரிந்தார்.

தமிழ், வடமொழி ஆகியவைகளை மரபு நெறி யில் நின்று நல்லாசிரியர்களிடம் பதினேழு ஆண்டு களும், தெலுங்கு மொழியை நான்கு ஆண்டுகளும் ஆங்கிலத்தை ஏழு ஆண்டுகளும் துறைபோகக் கற்ற அடிகள், பட்டி தொட்டிகளிலெல்லாம் சிவிகையூர்ந்து சென்றே தமிழையும் சைவத்தையும் பரப்பினார்.

அடிகளின் சொற்பொழிவால் ஈர்க்கப்பெற்ற பாலவநத்தம் சமீன்தார் பாண்டித்துரைத்தேவரிடம் அடிகள மதுரையில், தமிழ்ச் சங்கம் நிறுவ வேண்டு கோள் விடுத்ததால, 1901-இல் மதுரையில் மதுரைத் தமிழ்சங்கம் நிறுவப்பட்டது.

இவர், 1903-இல தம் திருமடத்துக்கு வந்த, பாண்டித்துரைத் தேவர்தம்மைக் கொண்டு, தம் திருமடத்தில் 'வாணிவிலாச சபை' என்ற சபையைத் தோற்றுவித்து வாரந்தோறும் சொற்பொழிவு செய்து வந்தார்.

தென்னார்க்காடு மாவட்ட நடுவராக இருந்த சே.எம் நலலசாமிப்பிள்ளை, மறைமலையடிகள் சதாசிவம் பிள்ளை ஆகியவர்களின் துணையுடன் சைவசித்தாந்தக் கொள்கையைப் பரப்பச் செனனை யில் இருந்து பணியாற்றும் நிறுவனமாக, சைவசித் தாந்த மகாசமாசத்தை 1905- இல் தம் திருமடத்தி லேயே தொடக்கிவைத்தார். சமாசத்தின் சார்பில் 'சிததாநதம்' இதழைத் தொடங்கி வைத்தஞானியார் அடிகளே பெரியார் ஈ.வெ.ரா. வின் 'குடியரசு' இதழையும் தொடங்கிவைத்தார்.

கரந்தையில் வாழ்ந்த வழக்கறிஞர் த.வே. உமாமகேசுவரம் பிள்ளையின் துணைக் கொணடு திருவையாற்றிலுள்ள வடமொழிக் கல்லூரியை வட மொழி தமிழ் எனற இரு மொழிக் கல்லூரியாக அமையவும், அரசர் கல்லூரி என்றபெயர் அமையவும் அருப்பாடுபட்டு முடித்த ஞானியார் அடிகள், 1933 -இல் தம் 60-ஆம் ஆண்டு நிறைவு விழாப் பேரவையில் உமாமகேசுவரம் பிளளைக்குச் 'செந்தமிழ்ப் புரவலர்' என்ற பட்டமளித்துச் சிறப்பித்தார்.

ஆதீனச் சார்பில் தொடககப்பள்ளி அமைத்த முதல் சந்நிதானம ஞானியார் அடிகளே. காலந்தவ றாமையும் காரியமாற்றலும் அடிகளின் தனிப்பண்பு. எளிமை என்பது அடிகளின பிறப்பிலேயே அமைந்த பண்பு. தாமே பல மடங்களுக்குச் சென்று மடாதி பதிகளைச் சந்தித்து ஆகக வேலைகளுககு வழி காணுமாறு தூண்டியதுண்டு. இவர் 1916-இல் மயிலம் 18-ஆம் பட்டம் சிவஞான பாலய சுவாமிகளையும் 1925-இல் பேரூர்ச்சாந்தலிங்க அடிகளையும் கண்டு தமிழ்க்கல்லூரி அமைககவும் சைவசமயம் தழைக்கவும் வழிவகை காணுமாறு செய்தார். இனறு அஙகெல லாம் தமிழ்க் கல்லூரிகள் தமிழ்த் தொணடு புரி கின்றன.

ஞானியாரடிகள் நூல் ஏதும் எழுதவில்லை. தம் முடைய குருநாதர் மேல் பாடிய குருதுதி 49 பாட்டு களும், ஞானதேசிகமாலை 23 பாட்டுகளும், திலகவதி அம்மை துதி 7 பாட்டுகளும் இன்று ஞானியாரடிகள் இயற்றியனவாகக் கிடைக்கின்றன.

திருப்பாதிரிப்புலியூர்ப் புராணம், திருப்பாதிரிப் புலியூர்த் தோத்திரக்கொத்து, அற்புதத் திருவந்தாதி, அவிநாசிநாதர் தோத்திரக்கொத்து, கந்தர்சட்டிச் சொற்பொழிவுகள், நிட்டானுபூதி சாரம் மூலமும் உரையும் ஆகியவை ஞானியாரடிகளால் பதிப்புச் செய்யப்பெற்றவை. வை.இர.

**ஞானேசுவரர்**: ஞானேசுவரா என்றும் ஞான தேவர் என்றும் குறிப்பிடப்படுமிவர் மராட்டிய மாநிலத்தில் 'ஆபேகாவ்' என்னும் ஊரில் வாழ்ந்தவர். இவர் 'பந்த்' எனப்படும் அந்தணர் குலத்தவர். தந்தை யார் பெயர் விட்டலபந்து.

விட்டலபந்து இளமையில் அந்தணர்களின் நெறிப் படி வேதஙகற்று விரக்தி மனஙகொண்டு தலயாத்திரை செய்யலானார். அப்போது 'உருக்மா' என்பவளைத் திருமணம் செய்து கொணடு இல்வாழ்க்கையிலீடுபட் டார். ஆனால், இல்லறததில் தொடர்ந்து வாழ விரும்பாமலும் தம் மனைவியிடமும் கூறாமலும் காசிக்குச் சென்று சிரிபாத சுவாமி என்பவரிடம் துறவு மேற்கொண்டார். இவர் குரு சிரிபாத சுவாமி கள் தலயாத்திரை செய்யும் சமயம், 'விட்டலபந்து' திருமணமானவர் என்பதை அறிந்து அவரை மீண்டும் இல்லறத்தில் வாழுமாறு பணித்தார். குருவின் கட்ட ளையை மேற்கொணட விட்டலபந்து தம் மனைவி உருக்மாவுடன் மீண்டும் இலவாழக்கையை மேற் கொண்டார்.

சன்னியாசம் பெற்ற பந்து மீணடும் இல்லறத்தி லீடுபட்டமையால் ஆபேகாவ. ஆலந்தி போன்ற நகரங களிலிருந்த அநதணர்கள் இவரைப் புறக்கணித்தனா. ஊர்க்கட்டுப்பாட்டால். வாழ வழியின்றி வறுமையில் வாடினார். இந்நிலையில் மைநதராக ஞானதேவா கி.பி. 1275-இல் பிறந்தார்.

ஞானதேவர் அவர் உடன்பிறந்தார் ஆகியோருக் குப் பூணூல் அணிவிக்கவும் வேதம் கற்பிக்கவும் ஆலந்தியிலுள்ள அந்தணர்கள் மறுத்தனர். ஞானே சுவரர் தம் வாழ்க்கையை எதிர் நீச்சலிலேயே தொடங்கினார்.

ஞானேசுவரரும் சகோதரர்களும் இளமைப் பரு வத்தில பிச்சையெடுத்து வாழும் நிலையை அடைந தனர். இந்த நிலையில் ஞானேசுவரர் தங்களுக்கு மறைநூல் அணிவிக்குமாறு அந்தணர்களிடம் வேணடு கோள் விடுத்தார். அப்போதெழுந்த அறிவுபூர்வ மான வாதத்தில் ஞானேசுவரர் வெற்றிபெற்றார். ஒருவன் பிறப்பினால் அல்லது வேதமநதிரங்களின் கருத்துணராமற் கத்துவதனால் மட்டும் உயர் வடைய மாட்டான் என்றும், அவன் உயர்வடைவ

தற்கு அவனது செயலே முக்கியம் என்றும் வாதிட்டார். அச்சமயம் ஒரு கழுதையை வேதங் கூறச் செய்தார். உருவத்தில் சிறியவனாயினும், அறிவிலும், பக்தியிலும் சிறந்தவன் ஞானதேவன் என்று உணரச செய்தார். இவருடைய காலத்தில் வாழ்ந்த நாமதேவர் எனனும் புலவா, 'ஞானேசுவரர் கா ஆதி' என்னும் மராட்டிய மொழிப் பக்திஇலக்கியத்தில் இவரது வாழ்க்கை வரலாற்றைத் தொகுத்துப் பாடியுளளார்.

இவர் மக்களின் அறியாமை, மூடவழக்கம் முதலியவற்றை நீக்கப் பாடுபட்டார்; பாண்டுரங்கனமீது பல அபஙகஙகளையும், பதஙகளையும் மராட்டிய மொழியில் பாடியுள்ளார். பாவார்த்த தீபிகா (Bhavartha Deepika) என்னும் பெயரில 'பகவத் கீதை'ககு உரையெழுதிப் புகழடைந்தார். இது'ஞானேசுவரி' எனறும் சொல்லப்படுகிறது. மராட்டியர்கள் இதனைப் புனித நூலாகக் கொணடு பாராயணம் செய்வர். இவர் காலத்தில தான் (கி பி.13-ஆம் நூ.) விரிவுரைகள பாடல வடிவில் வெளிவந்தன. இதற்கு இவர் எழுதிய விரிவுரையே முதல் வழிகாட்டி நூலாகும். இதனைத் தொடர்ந்து வடமொழி மறறும் பிறமொழிகளில் பல உரைகள பாடல் வடிவில எழுதும் வழக்கம ஏற்படடது. இவர் சிதது வேலைகளைக காட்டி மக்களை ஏமாறறுவதைக் கண்டித்தார். இவர் கி.பி.1307-இல் காலமானார். என்.சீ.

# ஞி, ஞா

ஞி நி என்ற எழுத்துக்குப் போலியாகவும், ஞா, நூறு என்பதில் நூவுக்கு மாற்றெழுத்தாகவும் வழங்கி வநதன.

ஞா உருவம் இரண்டாம் பல்லவ பரமேச்சுவர வர்மனின் திருவதிகைக் கல்வெட்டில் (கி.பி. 8-ஆம் நூற்றாண்டு) காணப்படுகிறது

ஞா ஞா

மற்ற வடிவங்கள் காணப்படவில்லை.

கே.ஜி.கி.

**ட** இவ்வொலி நாவின் நுனி அண்ணத்தின் முனைக்கு முன் உள்ள பகுதியை அழுத்தலால் ஏற்படுகின்றது.

இது முதலில் நேரான அரைவட்ட வடிவில எழுதப்பட்டது. இது கி.மு. 3-ஆம் நூற்றாண்டிற்கும் முன்னும, பின்பு கி.பி. 4 அல்லது 5-ஆம் நூற்றாணடு வரையும் மாற்றம் இல்லாமல் இருந்தது. ஏறக்குறைய கி.பி. 7-ஆம் நூற்றாண்டின் தொடக்கத்திலிருந்து சற்றுவளைவு நீங்கிக் கோணமாகத் தென்படுகின்றது. பல்லவ மகேந்திர வர்மனின் வல்லம் கல்வெட்டு, பரமேச்சுவர வர்மனின் கி.பி.7-ஆம் நூற்றாண்டுச் செப்பேடு ஆகியவறறில் இவ்வுருவத்தைக் காணலாம். பின் சோழன் இராசேந்திரனின் கரந்தைச செப்பேடுகளில் இதன் கீழ்ப்பகுதி நன்றாக நீண்டு காணப்படுகின்றது. முதல் குலோத்துங்கன் காலத்தில் கி.பி. 11-ஆம் நூற்றாண்டில் இன்றைய உருவத்தை அடைந்தது.

வட்டெழுத்தில் இதன் உருவம் தொடக்கத்தில் இதுவே. பிறகு கி.பி. 9-ஆம் நூற்றாண்டில் அரைவட்டம் நிலை மாறிற்று. அதுவே கடைசி வரை நின்றது.

தமிழ்மொழியில் இவவெழுத்து மொழிக்கு முதலில் வருவதில்லை. பிறமொழிகளிலிருநது அத்தகைய சொற்கள் புகுந்து வழங்கப்படும்பொழுது பெரும்பாலும் இகரம் முதலில் சேர்த்துக்கொள்ளப்படும். (எ-டு). டக்கா-இடக்கை.

**டா** தமிழில் மற்ற எழுத்துகளுக்குக் கூறப்பட்டதைப் போல் (கா-குறியைப் பார்க்க) நீண்ட கோடு தொடங்கி அதே முறையில வந்தது.

**டி-டெ-டோ-டௌ** இவற்றுள் இரண்டு எழுத்துகள் (டோ, டௌ) நீங்க மற்றவை வழக்கில் இருந்தன; மற்ற எழுத்துகளைப் போலவே வளர்ந்தன.

கே. ஜி.கி.

**ண** ட கரத்திறகு உரிய முறையில் மூக்கொலியாக வருவது இவ வொலி. இவ்வொலிக்குரிய தொன்மை எழுத்து வடிவம் கி மு 3-ஆம்நூற்றாண்டு தொடஙகி, கி பி. 2 அல்லது 3-ஆம நூறறாணடுவரை நிலவிவநதது. குகைக் கல்வெட்டுகளைப் பாாக்க. வட்டெழுததில் இவ வெழுத்தின் வடிவம் முதலில் அரச்சலூர்க் கலவெட்டில் காணப்படுகின்றது.

I

z

தமிழில இதன் வடிவம் தமிழ்நாட்டிற்கு வடக்கே வழங்கிவந்த உருவமே. இது பல்லவர் மகேந்திரன், பரமேச்சுர வர்மன் ஆகியோர் கல வெட்டுகளில கி.பி. 7-ஆம் நூற்றாண்டில் காணப்படுகிறது.

செஙகம் நடுகற்களில், அடுத்த வட்டெழுதது வடிவம் கி.பி. 8-ஆம் நூற்றாணடு வரை.. கி.பி. 9-ஆம் நூறறாணடிலிருந்து

3

3

தமிழில கி.பி. 8-ஆம் நூறறாண்டிலிருந்து இது மடடம தட்டினாற போல வளைவும சுழியுமாக எழுதப்பட்டது. இது, கி.பி. 11-ஆம் நூற் றாணடில் சோழன இராசேந்திரன காலத்துக கரந்தைச் செபபேடுகளில காணததொடங்கிற்று. இதுவே, இன்று வரை நிலைததது.

**ணா - ணை** டகரத்திறகு உரிய குறிகள் இதறகும பொருநதும்.

கே.ஜி.கி.

**த** மேல அண்ணத்தின நுனியை நாக்கு அழுத்தி வரும ஒலி இது.

முதன்முதலில் கி.மு. 3-ஆம் நூற்றாண்டில் இதன வடிவம் ⅄ என இருந்தது. இது தமிழ்நாட்டில் குகைக் கல்வெட்டுசளில் காணப்படும். பிறகு கி.பி. 2 அலலது 3-ஆம் நூற்றாணடில் அரச்சலூர்க் கல்வெடடில் கண்டபடி ஒரு மேல் கீழ கோட்டில் பிரிந்து வரும சிறு கோடு ஆக எழுதப் பட்டது. ஏறத்தாழ கி.பி. 5-ஆம் நூற்றாண்டில இதன வடிவம் மேல் கீழ கோடு நேராகி வலப்புறக கோடு வளைந்து வரத் தோன்றியது. இது செங்கம் வட்டத்துச் சோமாசி மாறன் வட்டெழுத்துக் கல்வெட்டில் தோனறிற்று. இது தமிழுக்கும் வட்டெழுத்துக்கும பொதுவானது.

அடுத்து, தமிழில் இது மேல் கீழ் கோட்டின அடியிலிருந்து வளைத்து இடப்புறம் வந்து வலப்புறக் கோட்டோடு இணைநதது. இது, கி.பி.7-ஆம் நூற்றாணடிலிருந்து பல்லவர் கலவெட்டுகளில் கிடைக்கின்றது. இதன் வளர்ச்சி ககர எழுத்தின் வளர்ச்சியைப் போல்வதாகும் (ககர எழுத்துக் குறிப்பைப் பார்க்க).

வட்டெழுத்தில் வலப்புறக்கோடு மேல் கீழ கோட்டின் அடியில தொடர்ந்து இடப்பட்டது. இருளப்பட்டிக் கலவெட்டு (செங்கம் வட்டம்) இந்த உருவத்தைக் காட்டுகின்றது. மற்றச் செங்கம் நடுகற் கலவெட்டுகள தம் நூற்றாண்டு வரை வளர்சசியைக் காட்டுகின்றன. கி.பி. 10-ஆம் நூற்றாணடில் பாணடியன பராந்தகனின் தளவாய்புரச செப்பேட்டுககுப் பிறகு இரு முனையும் கூடும் நிலை வந்தது. பிறகு கி.பி. 11-ஆம் நூற்றாண்டிலிருநது கூடிய நிலையிலேயே காணப்பட்டது. இதனைச சோழ பாண்டியர் கல்வெட்டுகளில் (தெனனிநதியக் கல்வெட்டுத் தொகுதி-14) காணலாம்.

இசை மரபில் தைவதத்தைக் குறிக்கும் ஒலியாக இந்த எழுத்து வழங்கும்.

கே.ஜி.கே.

**தக்கயாகப்பரணி**: ஒட்டக்கூத்தரால் பாடப் பட்ட இந்நூலினை 'வீரபத்திரப் பரணி' என்றும் கூறுவர். இது, 815 கண்ணிகளை உடையது. பரணி என்பது, தொண்ணூற்றாறு வகைச் சிற்றிலக்கியங் களுள ஒன்றாகும். இந்நூல், போரில் தோல்வியுற் றோருடைய பெயரால் 'தக்கயாகப் பரணி' எனறே வழங்கப்பெறுகிறது. இதிற் கூறப்படும் தககயாக வரலாறு அதனைக் கூறும் புராண வரலாறறினும மாறுபட்டுள்ளது. அவவாறே இதில் இடம்பெற்றுளள ஆளுடைய பிள்ளை வரலாறும் பெரிய புராணத் தினின்றும் மாறுபட்டுள்ளது.

தக்கன் சிவபெருமானை மதியாமல், திருமால் முதலாயினாரை முதலாகக் கொண்டு செயத வேள வியைக் காண வந்த தாட்சாயணியையும் மதிகக விலலை. அதனால் கோபங்கொண்ட சிவபெருமான, வீரபத்திரரைத் தோறறுவித்து யாகத்தை அழித்து வரக் கட்டளையிட்டாா. அவவாறே வீரபத்திரர் சென்று, தேவர்களைக கொடுமைப்படுத்தித் தககன் தலையினை வெட்டி யாகத்தை அழித்தார். இப் புராண நிகழ்ச்சியினைப் பாடுபொருளாகக் கொணடு அமைந்தது இந்நூல.

விக்கிரம சோழன் முதலான மூன்று சோழ மன்னர்களின் அவைக்களப் புலவராக விளங்கிய ஒட்டக்கூத்தர் இரண்டாம் இராசராச சோழனின (கி.பி. 12-ஆம் நூ.) வீரத்தையும் புகழையும் இந நூலில் சிறப்பாக அமைத்துப் பாடியுள்ளார். அத னால், அம்மன்னன் காலத்தில் அவனது விருப்பப்படி இது இயற்றப்பட்டது எனலாம். இநநூலை இவா இயற்றியதற்குக் காரணம், 'வீரசிங்காதன புராணத் திற் காணப்படுவது போல் இந்நூலில் இலலை காழி யொட்டக்கூத்தன் என்ற இவர்தம் பெயராலும், சீர்காழியில் கோயில் கொணடெழுந்தருளியுளள சட்டை நாதரையும் தோணியப்பரையும் பிரமபுரீ சரையும் பிறரையும் சிறப்பித்துப் பாடியுள்ளமையா லும் இவர் சீகாழிப் பதியினர் என்பது புலனாகிறது.

பழமையான 'கலிங்கத்துப் பரணி' யினின்றும் இது வேறுபட்டுளது. 'பின்னோன் வேணடும் விகற்பங கூறி' இது இயற்றப்பட்டிருக்கிறது. இந்நூல் கடவுள வாழ்த்து, கடைதிறப்பு, காடுபாடியது, தேவியைப் பாடியது, பேய்களைப் பாடியது, கோயில் பாடியது, பேய் முறையீடு, காளிக்குக் கூளி கூறியது, கூழடு தலும் இடுதலும், களங்காட்டல், வாழ்த்து என்னும 11 பிரிவுகளாக அமைந்துள்ளது.

கடவுள் வாழ்த்தில் வயிரவக் கடவுள, உமாபர மேசுவரியார், பிள்ளையார், முருகன், ஆளுடைய பிள்ளை முதலானோரை வணங்கிச சோழனுக்கு வெற்றியுண்டாக இவர் வேண்டுகின்றார். காடுபாடி யது என்னும் பகுதியில் பாலை நில வெம்மை, காளி கோயில முதலிய செய்திகளோடு வாம மார்க்கத் தாரின் செயலகள முதலியன கூறப்பட்டுள்ளன. கோயில் பாடியது என்னும் பகுதியில், காளிகோயிற் செய்திகள் கூறப்பட்டுளளன. காளிதேவி, கலைமக ளிடம் முருகக் கடவுள் திருஞான சம்பந்தராக வந்து அமணர்களை வென்று சைவத்தினை நிலைநாட்டிய வரலாற்றினைக கூறுமாறு வேணட, நாமகள், சம்பந தர் மதுரையை அடைந்தது, அவர் தங்கியிருநத மடத்திறகு அமணர்கள் தீயிட்டது, அதனால பாணடி யன வெப்பு நோயடைநதது, சம்பநதரால திருநீறி டப்பெற்று நோய் நீஙகியது, சம்பந்தா அனலவாதம, புனல் வாதம செயதது, பாணடியன கூன நிமிர்ந்தது, சமணாகள கழுவேறப் பணித்தது, சம்பநதர் தடுத தது, அவர்கள் தாமே கழுவேறியது முதலிய செய்தி கள் விரிவாகக கூறப்பட்டுளளமை குறிப்பிடத்தககது

பரமசிவன பாாவதி தேவியாரோடு சென்று போாககளம் கணடு அஙகு நிகழநதவற்றை விளககிக கூறச் சினந்தணிநத பாாவதி தேவியாா சிவபெரு மானிடம், 'அவாகளைக காக்கவேணடும்' என்று வேணடியதையும் அவர் மனமிரங்கித் தககனுககு ஆட்டுக்கிடாயத தலையை வைத்து உயிா்பெறறெழச் செய்து, வானவர்கட்கு வாழவளித்து, உரிய தகுதி களை வழங்கிய செயதிகளையும் களங்காட்டியது என்னும் பகுதி கூறுகினறது.

வாழ்த்துப் பகுதியில் ஒட்டக்கூத்தர், தமமை ஆதரித்த இராசராசன புகழைக் கூறி ஈற்றில், உறை யூா, காவிரி, அலைமகள, கலைமகள. தமிழ முதலா னோரை வாழ்த்தி நூலினை முடிக்கின்றார். இந நூலுக்குப் பழைய உரை ஒன்றுள்ளது. பாடற் பொருளை நன்குணர அவவுரை பேருதவியாக அமை கிறது. தககயாகப பரணியினை அதன் பழைய உரை யோடு டாக்டர் உ.வே. சாமிநாதையர் சிறப்பாகப பதிப்பித்துள்ளார். வீ.சொ.

**தக்கர்**: இந்நகரம் செனிகல் (Senegal) நாட டின் தலைநகரம். இங்கு 1979-ஆம் ஆணடு மக்கள தொகைக் கணக்கெடுப்பின்படி மக்களதொகை 978, 553 மிலியன் ஆகும்.

தக்கர் நகரம் (Da-Kar) வாணிகப் பயன்பாட் டிற்காகப் பிரெஞ்சுக் காரர்களால் கி.பி. 1857-ஆம் ஆண்டு உருவாக்கப்பட்டது. அதனபின் படிப்படியாக இந்நகரத்திறகுப் பல வசதிகள் செய்யப்பட்டன. இந்நகரத்திற்கு கி.பி. 1885-ஆம் ஆண்டு இருப்புப



தக்கர்

பாதை ஏற்படுத்திய பின்னரே இது சிறப்புறத் தொடங்கியது. புனித லூயி என்ற பிரெஞ்சுக் காரரால் 1902-ஆம் ஆண்டு இந்நகரம் மேற்கு ஆப் பிரிக்காவின் தலைமையிட மாக்கப்பட்டது. இரண டாம் உலகப்போரின்போது தக்கர், விச்சி (Vichy) என்பவரின் ஆளுகையின்கீழ் இருந்தது. இந்நகரின் சிறப்பை உணர்ந்த தி கால் சார்லசு (De. Galluae Charles) 1940-ஆம் ஆண்டு, செப்டம்பர் 23-ஆம் நாள் ஒரு பெரிய பிரெஞ்சுப் படையுடன முற்று கையிட்டார். ஆனால், அம்முற்றுகை பலன் அளிகக வில்லை. பிறகு 1942-ஆம் ஆண்டு அந்நகரில் நுழைந் தனர்.

தக்கர் நகரம் 1960-ஆம் ஆண்டு மாலி கூட்ட மைப்பின் தலைநகராக்கப்பட்டது. மாலி கூட்ட மைப்புக்கலைக்கப்பட்ட பின்னர்த் தக்கர் நகரம் செனிகல் நாட்டின் தலைநகராக்கப்பட்டது. இது நாட்டின் பெரிய நகரமாகவும். முக்கிய துறைமுக மாகவும் இப்போது விளங்கி வருகிறது. இந்நகரம் அட்லாண்டிக்குக் கடற்கரையின் தென் பகுதியில் இருப்பதால் மேற்கு ஐரோப்பிய நாடுகளுக்கு மிக அருகில முக்கிய துறைமுகமட்டுமல்லாது, தென் ஆப்பிரிக்க நாடுகளுக்கு வணிகத் தளமாகவும் விளங்குகிறது. அத்துடன் இந்நகரம் ஆப்பிரிக்க நாடு களுக்கு முக்கிய கடல், விமான, இருப்புப் பாதைத் தளமாகவும் விளங்குகின்றது. இந்நகரம் இப்பொழுது உலகத் தொடர்புடைய நகரமாகவும் விளஙகுகிறது.

தக்கர் நகரில் பல கண்கவர் அரண்மனை களும் மசூதிகளும் உள்ளன. 'சுதந்திரத்தலம்' (Place de Independence) என்ற இடம் ஒரு சுற்றுலா மையமாக விளங்குகிறது. இந்த இடம் இந்நகரின் மையப்பகுதியில் அமைந்துளளது.



தக்கர் நகர வீதி

இந்நகரில் பல பள்ளிக்கூடங்களும், தொழில்நுட்ப நிறுவனங்களும், பல்கலைக் கழகங்களும் உள்ளன. பாசுடியூர் (Pasteur Institute) மருத்துவ நிறுவனம் மிகப்புகழ் பெற்றதாகும். இந்நகரின் பெயரினைக கொண்ட தக்கர்ப்பல்கலைக் கழகம் ஒரு பெரிய கலைக்கூடமாகத் திகழ்கிறது. இப்பல்கலைக் கழகத் தில் ஆப்பிரிககப் பண்பாட்டினைப் படிப்பதற்கென்றே ஒரு பெரிய நிறுவனம் உளளது. இது ஆப்பிரிக்க அடிப்படைகளைப பயிலக்கூடிய நிறுவனம் என்று சொல்லப்படுகிறது. (Institute of Fundamental Afrique Noire-IFAN)

தக்கர் துறைமுகத்தில் கப்பல்-கட்டும் தொழில் சிறப்பாக நடைபெறுகிறது. இத்துறைமுகத்தில் மிகப் பெரிய எணணெய்ச் சேமிப்புக் கிடங்குகளும தானியச் சேமிப்புக் கிடங்குகளும் உள்ளன. எஸ்.ஆ.

**தக்கன்:** இவன் திருமாலின்பேரன்; பிரமனின் மகன. பிரமன் நினைத்த அளவிலேபிறந்தவன் என் றும், அவரது கட்டைவிரலிற் பிறந்தவன் என்றும் கூறுவர். இவனது மனைவி 'தரணி' யாவள். இவளி டம் பெற்ற ஆயிரம் பிளளைகளும் நாரதா உப தேசத்தால் துறவு பூண்டனர். அதனால் கோபங் கொண்ட இவன், நாரதரை நிலையினறித் திரியு மாறும் கலகக்காரனாகுமாறும் சபித்தான்.

பின், தக்கன் 'அசக்கினி'யை மணந்தான. அவளிடம் அறுபது பெண்களைப் பெற்றான். அவர்களுள், பத்துப் பெணகளைத் தருமப் பிரசாபதிக்கும், பதின் மூன்று பேர்களைக் காசிப முனிவருககும், இருபத்தேழு பேரைச் சந்திரனுக்கும், இரணடு பேரை பூதா என்பாருககும், இரணடு பேரை ஆங்கிரசு என்பாருக்கும், இரண்டு பேரைக் கிரிசு என்பாருக்கும், நான்கு பேர்களைத் தாட்சயபர் என்பாருக்கும் திருமணம் செய்துகொடுத்தான். சநதிரன் தான் மணந்த இருபத்தேழு பேர்களுள உரோகினி என்பாளிடம் மட்டும் அன்பு கொணடொழுகினான். அதனால் மற்றப் பெண்கள் தக்கனிடம் முறையிட, தக்கன், கலைகள் தேயுமாறு சந்திரனைச் சபித்தான். வருந்திய சந்திரன் சிவபெருமானைத் தஞ்சமடைந்து தேய்ந்த கலைகள் வளர வரம் பெற்றான்.

தக்கன், கடுந்தவம் புரிந்து, சிவபெருமானிடமிருந்து, பிரமன் முதலானவாகட்குத் தலைவனாக விளங்கும் பேற்றையும், பார்வதி தன் மகளாகப் பிறக்கவும் சிவன் தன் மருமகனாக வரவும் வேண்டுமென்ற வரத்தையும் பெற்றான், அவ்வாறே உமையம்மையை மகளாகப் பெற்றுத் 'தாட்சாயணி' எனற பெயரிட்டான். சிவபெருமான் அவளை மணந்து கொண்டார். கைலையில் சிவகணங்கள், தக்கனை மதியாத காரணத்தால், சிவன்மீது வெறுப்புக் கொண்டிருந்தான். சிவனை மதியாது வேள்வி செய்தான். ததிசி முனிவர், சிவனை அழைத்து முதன்மை தரவேண்டும் என்று அறிவுரை கூறியும் கேளாமல், திருமால் முதலானோரைக் கொண்டு வேள்வி நடத்தினான். வேள்வி காண வந்தாள் தாட்சாயணி. அவளையும் அவமதித்தான. கோபங்கொண்ட சிவபெருமான், வீரபத்திரரை ஏவினார். வீரபத்திரர் யாகத்தை அழித்தார்; தக்கன் தலையையும் கொய்தார், பிரமனின் வேண்டுகோளின்படி தக்கனுக்கு ஆட்டுத் தலையை வைத்துச் சிவபெருமான் உயிர் தந்தார்.

பின்னா, தக்கன் சிவபூசை செய்து சிவகணங்கட்குத் தலைவனானான். இவன் பெணகள் சிவபெருமானை வழிபட்டு நட்சத்திரங்கள் ஆகும் வரம் பெற்றனர். இவனது வேள்வி குறித்துப் பாடப்பட்டது தக்கயாகப் பரணி. இவனது வரலாறு பொதுவாகப் பல நூல்களில் கூறப்பட்டுள்ளது.

**தக்கன்[2]:** இவன் முன்பிறவியில், வல்லாள மாமன்னனுடைய தந்தையாகக் 'கல்யாணன்' என்னும் பெயரோடு பிறந்தவன். இவன் மகன் 'பிருகத்பானு' என்பவன். பின்னர். இவன் பானுதேசத்தை ஆட்சி செய்து வந்த 'வல்லவன்' என்பானுக்கும், 'கமலை' என்பாளுக்கும் மகனாகப் பிறந்தான். பிறக்கும்போதே தொழுநோயுடன் பிறந்ததால் வருத்தம் அடைந்த வல்லவன், அரசி கமலையுடன் இவனைக் காட்டிற்கு அனுப்பிவிட்டான். இவர்களிருவரும் காட்டிற்குச் சென்று கொணடிருக்கும்போது, எதிரே, 'முற்கல முனிவர்' என்னும் தவசீலர் வர, அவரது உடலின் காற்றுப்பட, இவன் தொழுநோய் நீங்கி மன்மதனைப் போல அழகுபெற்றான். பினனர் இவன், குண்டினபுரத்து மன்னன் ஆயினான்.

**தக்கன்[3]** அட்ட நாகங்களுள் ஒன்று.

**தக்கன்[4]** நவ பிரமாக்களுள ஒருவன். வீ.சொ.

***தக்காணம்:*** இந்தியாவில் நருமதை ஆற்றிற்குத் தென்பாலுள்ள முந்நீரகம் முழுவதும் பணடைக் காலத்தில் தட்சிணபதம் (Dakshinapatha) என்ற வட மொழிச் சொல்லால் குறிப்பிடப்பட்டது. அச்சொல் தட்சிணம் (Dakshina) எனச் சுருங்கிப் பின்னர்த் தக்காணம் (Deccan) என மருவியது. பிற்காலத்தில் தக்காணம் என்பது வடக்கே நருமதை நதிக்கும், தெற்கே கிருட்டிணை, துங்கபத்திரை ஆறுகளுக்கும் இடைப்பட்ட பகுதியைக் குறிக்கலாயிற்று, இதன் மேற்கில் அரபிக் கடலும், கிழக்கில் வங்கக்கடலும் எல்லைகளாக அமைந்துள்ளன. இன்றைய மகாராட்டிர மாநிலம், மத்தியபிரதேசத்தின ஒரு பகுதி, ஒரிசா, கருநாடக, ஆந்திர மாநிலங்கள, கோவா, தாத்திரா, நாகர்வேலி ஆகியவை இதில் அடங்கும். இப்பகுதியில் பல்வேறு அரசுகளும், அரச மரபுகளும் தோன்றித் தங்களுடைய பண்பாட்டை விட்டுச் சென்றுள்ளமையால் இது வரலாற்றுச் சிறப்புமிக்கதாக விளங்குகின்றது.

**நிலவியல் அமைப்பு:** தக்காணத்தின் வட எல்லையாக உள்ள விந்திய மலைத் தொடரும், நருமதை தபதி ஆறுகளும், சாத்பூரா, மகாதேவ, மைக்கலா மலைத்தொடர்களும் இந்தியாவை இருபெரும் பிரிவுகளாகப் பிரிக்கின்றன. வடக்கிலிருந்து இவ்விரட்டை அரண்களைத் தாண்டி ஆசீர்கர்ரிலும்,சபல்பூருக்கும் அருகிலுமுள்ள கணவாய்களின் வழியாகத்தான் நுழையமுடியுமாகையால், பண்டைக் காலத்தில இந்தியாவின் மீது படையெடுத்துவந்த அயல்நாட்டினர் இப்பகுதிக்குள் நுழையவில்லை.

இதன் நடுப்பகுதியிலுள்ள மேட்டு நிலத்தில் மகாராட்டிர கருநாடக, ஆந்திர மாநிலங்கள் அமைந்துள்ளன. மகாராட்டிரம் மேற்குமலைத் தொடரின் மறுபக்கத்தில் அமைந்துள்ளதால் இங்கு மழை மிகக் குறைவாக, ஆண்டிற்கு 508-762 மி.மீ. வரை பெய்



தக்காணம்

கின்றது. எனவே, இப்பகுதியில் நெலசாகுபடி குறை வென்றாலும் பருத்தி, சோளம், கம்பு, கேழ்வரகு, எண்ணெய் வித்துகள் ஆகியவை மிகுதியாகப பயிரிடப் படுகின்றன. இங்குள்ள முக்கிய நகரங்கள் அகமது நகர். அவுரங்காபாது, கோலாப்பூர், நாகபுரி, புனே, சோலாப்பூர் ஆகியவாம்.

கருநாடக மேட்டுநிலப்பகுதி 455-இலிருந்து 760மீ. வரை (1500-2000 அடி) உயரம் உள்ளது. அது தெற்கே செல்லச்செல்ல 915-இலிருந்து 1220 மீ. வரை (3000-4000 அடி) உயர்ந்துகொணடே செல் கிறது. இங்குள்ள அடர்ந்த காடுகளில் சந்தனம், தேக்கு முதலிய மரங்கள் நிறைந்திருப்பதுடன் காப் பிக் கொட்டையும் பயிரிடப்படுகிறது. இப்பகுதியில் துங்கா, பத்திரா, பெணணையாறு, சித்திராவதி, காவிரி முதலிய ஆறுகள் பாய்வதால் இது நீர்வளம் நிறைந்து,நெல், கரும்பு, தேங்காய், பருத்தி ஆகி யவை விளைவிக்கப்படுகின்றன. இம்மாநிலம் பட்டு உறபத்திக்குப் புகழ் பெற்றது. மைசூர், பெங்களூர், தார்வார், ஊப்ளி, பீசப்பூர் ஆகியவை இப்பகுதி யிலுள்ள முக்கிய நகரங்களாகும்.

ஆந்திராவின் மேட்டு நிலப்பகுதியில் தெலுங்கா னாவும், கர்நூல், கடப்பை, அனந்தப்பூர், பெல்லாரி மாவட்டங்களும் அடங்கும். இங்கு நெல், கரும்பு, பருத்தி, நிலக்கடலை, பருப்பு வகைகள் ஆகியவை பயிரிடப்படுகின்றன. ஐதராபாது இப்பகுதியில் சிறந்த நகரமாகும்.

தக்காணத்தின் மேற்கிலுள்ள மேற்கு மலைத் தொடர்கள் மிக உயர்ந்து, தொடர்ச்சியாக உள்ளன. இவைதபதி ஆற்றில் தொடங்கி நீலகிரி மலையில் கிழக்கு மலைத்தொடருடன் கூடும். இதன் மிக உயர்ந்த சிகரமான தொட்டபெட்டா 2670 மீ. (8760 அடி) உயரம் உளளது. இங்கிருந்து மேற்குக் கடற்கரையை அடையத் திரிம்பக்கு, தால், பிம்பிரி, போரா அல்லது கண்டலா, அமபாக கணவாய்களின் வழியாகத்தான் செல்ல வேண்டும். இம்மலைத் தொடருக்கும் அரபிக் கடலுக்கும் இடைப்பட்ட பகுதியில் கொங்கணமும் கோவாவும் உள்ளன. தபதி ஆற்றிலிருந்து கோவா வரையிலுளள இக்கடற்கரைப் பகுதி கொங்கணம் எனப்படும். இது 530 கி மீ. நீள மும், 48 முதல் 80 கி.மீ. வரை அகலமும் உடையது. இப்பகுதியில் பம்பாய் முக்கிய நகரமும் துறைமுகமு மாகும். பீசப்பூரின் ஒரு பகுதியான கோவா, போர்ச்சு கீசியரின் குடியேற்றமாகவிருந்து 1961-ஆம் ஆணடு இந்திய ஒன்றியத்துடன் இணைக்கப்பட்டது. இதன் பரப்பளவு 3282 ச.கி.மீ. ஆகும். இயற்கையெழில நிறைந்த இது உல்லாசப் பயணிகளைக் கவர்வதாக உளளது.

நடுத் தக்காண மேட்டுநிலப்பகுதிக்குக் கிழக்கே ஒரிசாவும், கிழக்கு மலைத் தொடரும், ஆந்திரக் கடற்கரையும் அமைநதுளளன. ஒரிசாவில் வாழும் மக்கள திராவிட மொழிகளோடு தொடர்பு இலலாத ஒரியா (Oriya) மொழியைப பேசுவதால் அவர்கள் மாறுபட்டுள்ளனர். இங்குப்பைத்திராணி, பிராமணி, மகாநதி முதலிய ஆறுகள் பாய்வதால் இது செழிப் பாக உள்ளது. பணடைக்காலத்தில் கலிஙகநாடு எனப் பட்ட இப்பகுதியில் புவனேசுவரம், பூரி, கோனாரக்கு ஆகியவை குறிப்பிடத்தகக இடங்களாகும். கிழக்கு மலைத் தொடரானது மேற்கு மலைத் தொடரைப் போல் அவ்வளவு உயரமாகவோ தொடர்ச்சி யாகவோ இல்லை. இதில் ஒரிசா மலைகள், பாசுடர் குன்றுகள், கடப்பா மலைத் தொடர் ஆகியவை அடங்கியுள்ளன. இம்மலைத்தொடருக்கும் வங்காள விரிகுடாவிற்கும் இடையிலுள்ள ஆந்திரக் கடற் கரைப்பகுதி மகாநதி, கிருட்டிணா, கோதாவரி முதலிய ஆறுகள் பாய்வதால் மிகவும் செழிப்பாக உள்ளது. இங்குள்ள விசாகப்பட்டினமும் மசூலிப் பட்டினமும் சிறந்த துறைமுகங்களாகும்.

**பேரரசுகள்:** தக்காணத்தில் பல அரசுகள் தோன்றி வளர்ந்து வீழ்ச்சியுற்றன. பண்டைக் காலத்தில் இப்பகுதியைச் சாதவாகனப் பேரரசர்கள் கி.மு. 230 முதல் கி.பி. 225 வரை, நாலரை நூற் றாண்டுகள் ஆட்சி புரிந்தனர். அப்பேரரசு அழிந்த பொழுது வாகாடகர்கள், ஆபிரர்கள், இக்குவாகுகள,

பிருகத்துபாலாயனர்கள், போதிகள் ஆகியோர் தங்கள் ஆட்சியை ஏற்படுத்தினர். பின்னர்ச் சாளுக்கியர் வாதாபியைத் தலைநகராகக் கொண்டு கி.பி. 543 முதல் 753 வரை சிறப்பாக ஆட்சி புரிந்தனர். இராட்டிரகூடர்கள் கி.பி. 753 முதல் 973 வரை மானியகேடத்திலிருந்து ஆட்சி நடத்தினர். சாளுக்கியரில் ஒரு பிரிவினர் கிழக்கு ஆந்திரப் பகுதியில் கீழைச் சாளுக்கியர் என்னும் பெயரில் ஐந்து நூற்றாண்டுகள் ஆதிக்கம் செலுத்தி வந்தனர். இராட்டிரகூட அரசு மறைந்ததும் மேலைச் சாளுக்கியரின் ஆட்சி கி.பி. 973 தொடங்கி 1200 வரை நீடித்தது. அப்பொழுது ஒய்சாளர்கள் (கி.பி. 1006-1346), யாதவர்கள் (கி.பி. 1187-1318), காகதியர்கள் (கி.பி. 1000-1326) ஆகியோர் ஆட்சி செய்தனர்.

இப்பகுதியைப் பாமினி சுல்தான்கள் கி.பி. 1347 முதல் 1482 வரை ஆட்சி புரிந்தனர். அதன் பின்னர், இது அகமதுநகர், பீசப்பூர், கோலகொண்டா, பீடார், பீரார் என்னும் ஐந்து சுலதானியங்களாகப் பிரிந்தது. அப்பொழுது தெற்கில் விசயநகரப்பேரரசு தோன்றிப் புகழுடன், செல்வச் செழிப்புடன் விளங்கியது. அவுரங்கசீபின் ஆட்சிக் காலத்தில் தக்காணம் முழுதும் மொகலாயப் பேரரசுடன் இணைக்கப்பட்டு அதனுடைய ஒரு சுபாவாக ஆயிற்று. அப்பொழுது மராட்டிய நாட்டில் சத்திரபதி சிவாசி ஒரு பேரரசை நிறுவினார். மொகலாயப் பேரரசின் வீழ்ச்சிக்குப் பின்னர்த் தக்காணசுபா விடுதலை பெற்று ஐதராபாது நிசாம் மரபினரால் ஆளப்பட்டது. பிறபகுதிகள் ஆங்கிலக் கிழக்கிந்திய வாணிகக் குழுவின் ஆதிக்கத்திற்கு உட்பட்டன.

**கலைகள்:** பல்வேறு அரசர்களின் ஆட்சியில் இப்பகுதியில் கட்டடக்கலை, சிற்பக்கலை ஓவியக்கலை ஆகியவற்றுடன் பிறகலைகளும் சிறந்து விளங்கின. சாதவாகனர்கள் வடமேற்குத் தக்காணத்தில் நாசிக்கு, நானாகாட்டு, அசந்தா, கார்லே, கன்கரி முதலிய இடங்களில் குடைவரைக் கோயில்களை ஏற்படுத்தினர். அவர்கள் கிழக்குத் தக்காணத்தில் பட்டிபொரலு, குடிவாடி, அமராவதி, கண்டசால, நாகார்சுனகொண்டா, கோலி ஆகிய இடங்களில் எண்ணிறந்த புத்தகோயில்களையும் (சைத்தியங்களையும்) மடங்களையும் (விகாரங்களையும்) கட்டினர். இவற்றில் சிற்பங்களும் ஓவியங்களும் சிறப்பாக அமைக்கப்பட்டுள்ளன. இராட்டிரகூட அரசரான முதலாம் கிருட்டிணன் எல்லோராவிலுள்ள புகழமிக்க கைலாசநாதர் கோயிலை ஏற்படுத்தினார். இதற்கு அருகிலுள்ள குடவரைக் கோயில்களிலும் ஓவியங்கள் தீட்டப்பட்டுள்ளன. பம்பாய்க்கு அருகிலுள்ள எலிபெண்டாத்தீவில் உள்ள குடவரைக் கோயில்களில் அழகிய சிற்பங்கள் செதுக்கப்பட்டுள்ளன. கிருட்டிணதேவராயரால்கட்டப்பட்ட கசராகோகோயிலும், விட்டலசுவாமி கோயிலும், விசயநகரப் பேரரசின கட்டடக் கலைக்கு எடுத்துக்காட்டுகளாக அமைந்துள்ளன. மைசூரில்சிரவணபெல்கோலாவிலுள்ள கோமதீசுரரின் உருவச்சிலை கங்கர்களின் சிற்பக்கலையை விளக்குகிறது. அளபேடு, பேலூர், சோமநாதபுரம் ஆகியவிடங்களில் ஒய்சாளர்கள் மிக அழகிய சிற்பவேலைப்பாடுகளுடன் கூடிய கருங்கற்கோயில்களை அமைத்துள்ளனர். ஒரிசாவிலுள்ள கொனாரக்கில் முதலாம நரசிமமனால் கட்டப்பட்டுள்ள சூரியக் கடவுளின் கோயில் உலகப் புகழ் பெற்றதாகும். சி.இரெ.

**துணை நூல்கள்:**


**Bhandarkar R,G.**, - Early History of the Dekkan Down to the Mahomedan Conquest, Asian Education Services, New Delhi. 1979.

**Chopra, P.N.**, and others - History of South India Vol, I-Ancient Periods, S. Chand & Company Ltd,. New Delhi, 1979.

**Majumdar, R.C.**, and others - An advanced History of India, MacMillan and Co., Ltd., London, 1970.


**தக்குர்:** மத்திய இந்தியப் பகுதிகளில் வாழும் குற்றவாளிப் பழங்குடிகளுள் ஓரினத்தவரே தக்குர் பழங்குடியினர். இன்று இவர்கள் முன்னாளைய குற்றவாளிப் பழங்குடிகளாகக் (Ex-Criminal Tribe) கருதப்படுகின்றனர். கொலைத் தொழிலையும் திருட்டுத் தொழிலையும் பெரும்பான்மையோர் கைவிட்டு விட்டாலும் இவர்களுள் சில பிரிவினர் இத் தொழிலைக் கைவிடாமல் உள்ளனர்.

மத்திய பிரதேசம், உத்தரப்பிரதேசம் முதலான மாநிலங்களில் இவர்கள் மிகுதியாக உள்ளனர். இவர்கள் தங்களைத் தக்குகள் (Thugs) என்றும், தக்குர் (Thakur) என்றும் கூறிக்கொள்வர். ஒரு பிரிவினர் கோரண்டா அல்லது கோயண்டா (Goranda or Goyanda) என்றும் கூறப்படுவர்.

தக்குர் இனத்தவர்கள் ஒரு தனி இனமாக இல்லை. இவர்களின் மூதாதையர்கள் பல்வேறு சாதிப் பிரிவுகளைச் சேர்ந்தவர்கள் என்றும், குற்றத் தொழிலை மேற்கொண்ட பல்வேறு இனத்தவர்களும் பின்னர் ஒன்று சேர்ந்தனர் என்றும், இவர்கள் தங்களின் மரபுவழியைப் பற்றிக் கூறுவர். இவர்களுள் ஒரு பிரிவினர் முகமதிய இனத்தவர்களாகவும் மற்

றொரு பிரிவினர் இந்துக்களாக மாறியவர்களாகவும் காணப்படுகின்றனர். முகமதியப் பிரிவைச் சேர்ந்த வர்கள பாயிசு (Bhais), பர்கோட்டி (Bargote), கச்சுனி (Kachuni), அத்தர் (Hattar), காரு (Garru), தண்டல் (Thandal), இராத்தூர் (Rathur) ஆகிய ஏழு குலத்தவர்களாகப் பாகுபடுகின்றனர். இநதுககளைச் சேர்நதோர் கஞ்சார் (Kanjar) என்றும், பெரியாசு (Berias) என்றும் இருவகையாக உளளனர் இவா களைப் பற்றி எல்லோராக் குகைகளிலும் சிததிரிககப் பட்டுள்ளதெனக் கூறுவர். அங்குள்ள சில ஓவியஙகள் கழுத்தை நெறித்துக கொல்லும் செயலையும், சிலர் இறந்தவரை இடுகாட்டில் புதைககும் செயலையும் சித்திரிப்பதாக உள்ளமை இவர்களின் செயல்களையே என்று கூறுவர்.

குற்றவியல் பழங்குடிகளாக வாழந்த இவர்கள பெரும்பாலும் கொலைக் குற்றங்களைச் செய்துவந் தனர். தேசிய நெடுஞ்சாலைகளில் செல்வோரிடம் பல நுணுக்கஙகளைக கொணடு வழிமறித்து அவர் களிடமுளள பொருளகளைக் கொளளையடிப்பதே இவர்களின் முக்கிய தொழில், பெரும்பாலும் பொருள் உளளோா என ஐயப்படும் ஒருவா சாலை யில் செல்லும்போது அழகிய பெண்களை அனுப்பித் தாம் தனியாக வந்துவிட்டதாகவும் சிறு உதவி செய்யவேண்டுமென்றும் கெஞ்சி உரையாடிககொண்டு ஒதுக்குப் புறமாக நிற்கும் நேரத்தில், ஆணகள அவர் களைக் கழுத்தை நெறித்துக் கொல்வர்; வேறுபல முறைகளிலும் பயணிகளைக் கொனறு கொளளை யடிப்பர்.

குற்றச் செயலை மேறகொள்ளும்போது இவர் கள் தனியாகவோ பலர் ஒன்றுசேர்ந்து குழுவாகவோ செலவர். புதிய புதிய இடஙகளுக்குச் செல்லும்போது பொதுமக்களுடன் பழகவேண்டிய நிலையில ஆயுதங கள் அனைத்தையும் மறைவிடஙகளில் வைத்துவிட்டு நலலவர்கள் போல் நடிப்பர். தாங்கள் வேளாண குடியினர் எனவும், வணிகர்கள் எனவும் கூறிக் கொண்டு நல்லவர்கள்போல் நடிப்பர்.

குற்றச்செயல் புரியும் பழங்குடிகளான பதக்குகள் (Badbaks), சான்சியாக்கள் (Sansias), பிற இந்தியக் குற்றவாளிப்பழங்குடிகள்,இத்தாலிநாட்டுபபண்டிட்டி (Banditti) ஆகியோரைப் போன்றே தக்குர் பழங் குடிகளும் மிகவும் சமயப் பற்றுடையவர்கள; மூட நம் பிக்கை உடையவர்கள்; வழிப்போக்காகளைக் கொன்று அவர்களிடமுளள பொருள்களைக கொள் ளையடிக்கும் தொழிலைத் தெய்வமே இவர்களுக்குச் கொடுத்ததாக எண்ணுகின்றனர். இதனால், கொலையாளர்களின் ஆவியோ கொலைத் தொழி லின் மூலம் ஏற்படும் பாவமோ இவர்களைச் சேருவ தில்லை என நம்புகின்றனர்.

காளியை இவர்கள முதன்மையாக வழிபடுகின்ற னர். முகமதிய உட்பிரிவினர்கள் பாத்திமாவின் மறு வடிவமே காளி என நம்பிக் காளியை வழிபடுகினற றனர். வழிப்போக்கர்களைக கழுத்தை நெறிததுக் கொன்று அவர்களிடமிருந்து பொருள்களை வெறறி யுடன் கொள்ளையடிததபின் ஒவ்வொரு முறையும் ஒருவகைச் சடங்கைச் செய்கின்றனர். இச்சடங்கின் போது ஒருவகை இனிப்பினைக் கடவுளுககு இட்டு எஞ்சியதைக் குழுத தலைவனும மற்றவாகளும் உண பர் இந்த இனிப்பினைத் தவறாமல் அனைவரும் வீணாக்காமல் உணண வேண்டுமென்பது மரபுவழி யிலான நம்பிக்கை.

இவர்கள செய்யும் சடஙகுகளுள மற்றுமொரு குறிபபிடத்தகக சடஙகு புதுக் கோடரியை வணங்கு தலாகும கொலபவர்களை அருகில் உடன புதைகக வேண்டும் என்ற முறையை இவர்கள கொணடிருந் ததால் ஒருவகைக் கோடரியைக் கொல்லனிடம் செய்து அதனைக் காளியிடம் வைத்து சிறப்புச் சடங்கு நடததி நல்லநேரத்தில பயன்படுத்துவர். கொலைச் செயலில் இவர்கள் பயன்படுத்தும் ஒரே கருவி கோடரி மட்டுமேயாகும்.

மக்களுள் ஒருசிலரைக் கொலவதோ அவர்களிட மிருநது கொள்ளையடிப்பதோ தவறு என எணணிய வர்கள் தககுர்கள். அத்தகையோரில் பெண்கள், மத குருமார்கள் முதலானோர் முக்கியமானவர்கள.

ஆங்கிலேய ஆட்சிககாலத்தில் மிகக் கொடூர மான செயல்களைச் செய்து வந்த இவர்களை இனங் கண்டு இவர்களைக் குற்றவியல் பழஙகுடிகள (Criminal Tribes) என அறிவித்து இவர்களைக் கடுமை யாகத் தண்டிக்கச் சட்டமியற்றப்பட்டது. அதன் பின் இவர்களை நல்வழிப்படுத்த வேண்டி இரட்சணியப் படையினை (Salvation Army) இதில் ஈடுபடுத்தினர். அப் படையினரின் அயராத முயற்சியின பலனாய் இவர்கள் தங்கள் தொழில்களை மாற்றிக்கொள்ள முற்பட்டனர். இருப்பினும் சுதந்திரத்திற்குப் பின் இந்திய அரசு இவர்களை மேம்படுத்தக் காவல் படை யினரின் நேரடிப் பார்வையில் இருக்கும்படி செய்து கண்காணிக்கததக்க பழங்குடிகள (Notified Tribes) பட்டியலில் சேர்த்தது. அரசின கடுமையான தண டனை முறையாலும் பிற தொழில்களில் ஈடுபட்டு வாழமுடியும் என்ற நம்பிக்கை வந்ததாலும் இவர்கள கொலைத் தொழிலைப் பெருமளவு விட்டுவிட்டனர். அதன்பிறகு இவர்களை அரசு கண்காணிக்கத்தக்க

வர்கள் பட்டியலிலிருந்து நீக்கப்பட்ட பழங்குடிகள் (Denotified Tribes) என அறிவித்தது. அதன்பின்னர் இவர்களின் போக்கு மேம்படவே இவர்களை முன்னாள குற்றவாளிப் பழங்குடிகள (Ex-criminal Tribes) என்று அறிவித்தது. இன்று இவர்கள் கூடை முடைதல், கூலி வேலைசெய்தல், காவலர்களாகப் பணிசெய்தல், வேட்டையாடுதல், காட்டுப் பொருள் களைச சேகரித்தல் முதலான பல தொழில்களைச செய்துவருகின்றனர். இருப்பினும் எபபோதாவது ஒருசில வேளைகளில் கொள்ளைத் தொழில்களிலும் ஈடுபடுகின்றனா.

சீ.ப.

**தக்கோட்டா இந்தியர்,** வட அமெரிக்கவில் வாழும் தொன்மையான செவவிந்திய இனத்தவர்களுள் குறிப்பிடத்தக்கவர்கள். வட அமெரிக்காவில் வாழும் சமவெளி இந்தியாகளுள் இவர்களும் ஒரு பிரிவினர். சமவெளி இந்தியர்கள் (Plains Indians) அனைவரும் ஆறு முக்கியமான மொழிப் பிரிவுகளாகப் பிரிக்கப்படுவர். அவற்றுள் முதன்மையானது அல்கானகியன் (Algonkian) மொழிப் பிரிவாகும். இதற்கடுத்து இரணடாம் முக்கிய பிரிவு சியோக்சு (Sioux) என்பதாகும் இதனுள் எட்டுப் பிரிவுகள உள்ளன. அவற்றுள ஒன்றே தக்கோட்டா (Dakota) இந்தியர்களின் மொழியாகும். இவர்கள் மொழியில் தக்கோட்டா என்பதன் பொருள 'கூட்டாளிகள்' என்பதாகும்.


தக்கோட்டா இந்தியர்

தககோட்டா இந்தியர்கள நெப்ரசுக்கா (Nepraska), மாணடனா பகுதிகளுக்கும் கனடா நாட்டிற்கும் இடைப்பட்ட பகுதிகளில் பரவி வாழகின்றனர். இவர்கள வாழும் பகுதி பொதுவாக வட தககோட்டாப் பகுதி, தென் தககோட்டாப் பகுதி என இரணடாகப் பிரிக்கப்படும். இப்பழங்குடிகள் வாழும் பகுதிகளில சியோகசு மொழி பேசாத பழங்குடிகளான செய்யன் (Cheyenne), பாவனீ (Pawnee), கொமனசசு (Comanches) முதலானவர்களும் வாழ்கின்றனர். இப் பழங்குடிகளுககும் தககோட்டா இந்தியர்களுக்கும் இடையே அவவபபோது மற்றவர் களின நிலப்பரப்பைக கைப்பற்றச் சணடைகள நடந்தன. அமெரிக்க இநதியர்களின் வரலாற்றைக காணும்போது தக்கோட்டா இந்தியாகள பெரும் பாலும் அவர்கள் நிலப்பரப்பினைப பெருமளவு இழக்கவில்லை எனலாம். இவாகளுக்கும் சியோக்சு பழங்குடிகளுககும் தொடாநது சச்சரவுகள் இருநது வந்தன. தக்கோட்டா மொழியில் சியோகசு எனப தற்குப் பாம்பு எனறு பொருளுண்டு எனறும், ஆகவே இவ்விருவரும் எதிரிகளாகவே வாழநது வநதனர் எனறும் கூறுவர்.

சியோகசு மொழிப்பிரிவில் தககோட்டாவினா மிகவும் வலிமையுடனும் செல்வாக்குடனும் திகழநதனர். ஏழு பிரிவுகளாகப் பிரிந்திருநத இவர்கள ஏழு படைகள் எனச சிறப்பாக மற்றப பழங்குடியினரால குறிககபபட்டனர். அரசியல் நிலையில ஏழு குழுக்களாக இருந்தாலும இன்றைய சமுதாய அமைப்பில இவர்கள பல குழுக்களாகப் (Bands) பிரிநதுள்ளனா. ஒருசில குழுவினா மேலும் பல உட் குழுவினராகப பிரிந்து காணப்படுகின்றனர்.

சமவெளி இந்தியர்களைப் போனறே தக்கோட்டா இநதியர்களும் பொதுவான ஒரு பணபாட்டைக் கொணடிருந்தாலும ஒவவொரு உட்குழுவினரும் தனித்தனியான பழக்க வழக்கங்களைக் கொணடுள்ளனர். அவர்களின அன்றாட வாழவில குதிரையும் எருமையும் முதலிடம் பெறுகின்றன. இம்மக்கள் குதிரையின் பயன்பாட்டினை கி.பி.1740-ஆம் ஆண்டளவில் அறிந்தது முதலே இவாகளது வாழ்வில் அது முதன்மையான இடத்தைப் பெற்றது குறிப்பாக வேட்டையாடுவதிலும், சண்டைகளின் போதும் குதிரையின் பயன் மிகுதியாக உள்ளதை உணர்ந்தனர். தக்கோட்டா இந்தியர்களின் பல குழுக்களுள தெட்டான் (Teton) எனப்படும் குழுவினரே

குதிரைகளை மற்றக் குழுவினர்களுக்கு வணிகம் செய்து வருகின்றனர். ஆண்டுதோறும் சேமசு (James) ஆற்றங்கரையில் நடைபெறும் சந்தையில் குதிரைகள் பெருமளவில விற்கபபடுகின்றன. தககோட்டா இளை ஞர்கள 5 வயது முதற்கொண்டே குதிரைகளில செல்லப் பழகிக் கொளகினறனர்.

தக்கோடடாவினரின பொருளாதாரம வேட்டையை முதனமையாகக கொணடது. குதிரைகளைப் பயன்படுத்தியதன் பின்னர் இவர்கள தேவை யான அளவிற்கு வேட்டையாட முடிந்தது. அதனால வேளாணமையைக கைவிட்டனர். காட்டெருமை களை இவர்கள விரும்பி வேட்டையாடுகினறனா இனறும் வேட்டையில பழைய முறைகளைக் கையாளு கின்றனர். காட்டெருமைகளுக்கு முன் மான வேடமணிநது அவற்றைக கவர்ச்சி செய்து குழி யில் தளளுவதும், எருமைகளைச் சுறறி நெருப பிட்டு அவற்றைப் பிடிப்பதும், குதிரைகளில் சென்று துரத்தி அம்பால குத்தி இறககச் செய்வதும் அவா களின மரபு முறைகளில் சில. பெரும்பாலும் இறுதி யில் குறிப்பிட்ட முறையின் மூலம் வேட்டையாடு கின்றனர்.

காட்டெருமை வேட்டை மூலம உணவுத தேவையை மட்டுமன்றி உடை, கூடாரப் போாவை, மழைக்காக அணியும மேறசடடை., காலுறை, கயிறு, படகு கட்டும சட்டஙகள, குழநதைகள விளையாடும கிலுகிலுப்பைகள முதலான பலவேறு பொருளகளை யும் செயதுகொளகினறனா. வேட்டையாடபபட்ட எருமையைக் கொனறவா மட்டுமனறி ஒரு குழுவைச சார்ந்த அனைவரும பகிர்ந்துகொளகினறனா. மிகுதி யாக உளள இறைசசியை நெடு நாடகளுககுப் பயன படுமாறு பதப்படுததி வைததுககொள்கினறனர்.

தக்கோட்டாவினர் ஒரே குழுவிறகுள மணநது கொணடாலும் இரத்த உறவினாகளை மணநது கொளவதில்லை. இனறைய இளைஞாகளவேறறுக குழுவினரையும மணநதுகொள்கின்றனர். செலவம மிகுநதவர்கள ஒன்றுககும மேறபட்டபெணகளை மணக்க அனுமதிககப்படுகினறனர். இப்பெணகள அனைவரும் உடன்பிறந்தவாகளாகவும இருக்கலாம். இவர்களிடையே செலவமும் தகுதியும் குதிரையின் எண்ணிககையைப் பொறுத்ததாகும்.

ஒரு குழுவிற்குள் உளள ஒருவா தம் நிலையை உயர்த்திக்கொள்ள இரண்டு முறைகளைக் கையாளு கினறார். ஒரு முறையினபடி ஒருவர் அவரது குழு விலிருந்து நான்கைந்து நாட்கள பிரிந்து தலைமுதல உச்சங்கால் வரை எருமைத தோலால போர்த்திக் கொண்டு இயல்நிலை கடந்த நிலைக்குச் சென்று கனவுகளையும குறிசொலலும் முறையையும் செய்து பார்க்கவேணடும். இவரது கணிப்புகள உணமையா கும்போது இவர் அவரது குழுவினுளபோற்றத்தக்க வராகக் கருதப்படுகிறார். இரணடாம் முறைப்படி, ஒருவர் வீரச செயலகளைச் செய்து தம் நிலையை உயர்த்திக்கொளளலாம்.

இவர்களிடையே எழும முரணபாடுகளைத தீர்ப் பதில் ஞாயிறு நடனம் (Sun Dance) பெரும் பங்கு வகிக்கிறது. அமெரிக்க இந்தியப் பழங்குடிகளுள பலர் இந்நடனத்தைக் கொணடுளளனர். இதற்கு இப்பெயர் வரக் காரணம தக்கோட்டாவினா ஆடும் முறையிலிருந்து தோன்றியதாகவும இருககலா மென்பர் ஒருசில இனககுழுவியலார். இநநடனத்தின போது இவர்கள வானத்தைப் பார்ததவாறே ஆடு கினறனா ஆணடிறகொரு முறை நடைபெறும இந நடனத்தினபோது அனைவரும் தவறாமல கலந்து கொளகினறனா. ஒருசில குழுக்களுள இநநடனத்தில பங்குபெற வாராதவாகள தணடிக்கப்படுவர் ஆடு களத்தின் நடுவில் ஒரு தூண நடப்பட்டு அதற்குப பல சடஙகுகள செய்து அதில ஒரு கயிறறைக் கட்டி மறுமுனையை ஒரு இரும்புக் கமபியால உடலில கட்டிக கொளவா. அவரது சதை கிழியும்வரை ஆடிக் கொணடேயிருப்பர். இவவாறு செய்யுமபோது ஏற் படும் வேதனையும் வெளிவரும இரத்தமும ஆவிகளை மனநிறை வடையச் செய்யும் எனறும், மக்களிடையே ஒற்றுமை உணர்வு ஏற்படும் எனறும் நமபுகினறனர்.

தககோட்டா இநதியாகளின பண்பாடு மாறி வருகினறது. அணடைப் பணபாடுகளின் தாக்கம் பெருமளவு இவர்களின வாழக்கைப பாங்கை மாற்றி யுள்ளது தொனமை அமெரிககத் திருச்சபைகள தக்கோட்டாவினரின் மரபுவழியிலான நம்பிககை களைக் கிறித்தவ நெறிகளுடன் இணைத்து அம்மக் களைக் கிறிததவ சமயத்தோடு இணைக்க முயன்று வருகினறன அமெரிக்க அரசு பழங்குடி மக்களின நலன்களைக காப்பாற்றுவதில் மிகுந்த கவனம செலுத்தி வருகின்றது அவர்கள் மொழியிலேயே தொடக்கப் பள்ளிகளை அரசு நடத்துகிறது. சீ ப.

**தக்கோலம்** தமிழ நாட்டில வடார்க்காடு மாவட்டம் அரககோணம் வடடத்தில் அமைந்துள்ள ஓரூர். வரலாற்றுச் சிறப்புடையது இது காஞ்சிபுரத் திலிருந்து 15 கி மீ தொலைவிலும் அரக்கோணத திலிருநது 10 கி.மீ. தொலைவிலும் இவ்வூர் உளளது. மலேசியாவிலும் தக்கோலம எனற ஓர் ஊரை பண்டைத் தமிழர்கள் உருவாககியுள்ளனர். அது தலைத் தக்கோலம் எனறு கூறப்படுகிறது இநநகர் கி.பி 2 ஆம் நூற்றாண்டிலிருநததாகத் தாலமி

என்ற நிலவியல் ஆய்வாளர் கூறுகின்றார். எனவே, தமிழ் நாட்டிலுள்ள இந்தத் தக்கோலம் அதற்கு முன்பிருந்தே சிறப்புப் பெற்று விளங்கியுள்ளது என்று கருதுகின்றனர். பழங்கற்காலக் கருவிகள் இப்பகுதியில் கிடைத்துள்ளன.

இங்கு கி.பி.-949 இல் நடைபெறற ஒரு போருக்குத் தக்கோலப் போர் என்பது பெயர். இராட்டிரகூட மன்னன மூன்றாம் கிருட்டிணன் கி.பி. 940-இல் அரசனானான். இவன் சோழ நாட்டைக் கைப்பற்ற கி.பி. 949 இல் சோழநாட்டின் மேல் படையெடுத்தான, அப்பொழுது கங்க மன்ன னாக இருந்த இரண்டாம் பூதுகனும் பெரும்படை யுடன் இராட்டிரகூட மன்னனுக்கு உதவினான். சோழ நாட்டை ஆணட முதலாம் பராந்தகனின் முதல் மகன் இராசாதித்தன இவாகளை எதிர்த்துப போர் செய்தான. தக்கோலத்தில இரணடு படை களும் மோதிக் கொண்டன. இருபக்கத்திலும் பல்லா யிரம் வீரர்கள் உயிர் துறந்தனர். இநநிலையில கங்க மனனனாகிய இரண்டாம் பூதுகன் விடுதத அம்பொன்று யானையின மேலிருந்து போர் புரிந்து கொணடிருந்த அரசகுமாரனாகிய இராசாதிததன மார்பில் தைத்தது. இதனால் அரசகுமாரனாகிய இராசாதித்தன் விண்ணுலகை அடைந்தான. இராசாதித்தனை 'யானை மேற்றுஞ்சிய தேவர்' எனறு குறிப்பிடுவதால் இவன் யானை மேல வீறறி ருந்தபோது உயிர் துறந்திருக்க வேணடும் எனபது தெரிகின்றது இதனால் இராட்டிரகூட மனனன வெற்றியை எய்தினான்.

தக்கோலத்தில் மூன்று பழமை வாய்ந்த கோயில் கள உள்ளன. திருமாலின் கோயில் ஒனறு இடிபாடுக ளுடன் காணப்படுகிறது. இககோயிலிலுளள கல் வெட்டில் 'இராசராச திருநாராயண விண்ணகர் என்று இக்கோயிலின் பெயர் குறிக்கப்படுகிறது. இது முதலாம் இராசராசனின பெயராக இருப்பதால இவனால் இக்கோயில் கட்டப்பட்டிருக்க வேணடும என்று கருதப்படுகின்றது. பாலீசுவரர் எனற பெயரில் சிவன கோயில் ஒனறு உளளது. இதில் மூன்று கல்வெட்டுகள காணப்படுகின்றன. முதலாம் இராசேந்திரன், விககிரமசோழன், இரண்டாம் இராசேந்திரன ஆகியோரின் கலவெட்டுகள் அவை. இரண்டாவது, சிவன் கோயில் இறைவனுக்குத் திருவூறல் மகாதேவர் என்றும், சலநாதீசுவரர் எனறும் இரணடு பெயர்கள் காணப்படுகினறன. விசயநகர மன்னர்களின் காலத்தில் இக்கோயில் 'நந்திதீர்த்தம்' என்று பெயர் பெற்றுள்ளது. இக் கோயில், வரலாற்றில் முக்கியமான இடத்தைப் பெற் றுள்ளது. இங்கு கி பி. 9-ஆம் நூற்றாண்டிலிருந்து கி.பி. 15-ஆம் நூற்றாண்டு வரை கல்வெட்டுகள் பொறிக்கப்பட்டுள்ளன. இக்கோயில் முதலில கங்க நாட்டிலிருந்ததாகவும் பிற்காலத்தில் இங்கு மாறறப் பட்டதாகவும் கூறப்படுகின்றது. இராசகேசரியின் கல் வெட்டுகளில் கங்க அரசன் இரண்டாம் பிருதிவிபதி இக்கோயிலுக்கு வழங்கிய தானங்கள் கலவெட்டில் பொறிக்கப்பட்டிருக்கின்றன. இஙகுள்ள பழமையான கல்வெட்டு ஒன்றில் 'கோவிமலாதித்தியா' என்ற பெயர் காணப்படுகின்றது. இவன் பாண வமிசத்தைச சார்ந்த அரசனாக இருக்கலாம். முதலாம் ஆதித்த னின் கல்வெட்டுகளும காணப்படுகின்றன.

முதலாம் இராசராசனின் காலத்தில் தக்கோலம் சத்திரிய சிகாமணிபுரம் என்றும், முதலாம் இராசாதி ராசன் காலததில் இரட்டைபாடி கொணடபுரம் என் றும், முதலாம் குலோத்துங்கனின் காலத்தில வல்லப புரம், குலோத்துங்க சோழபுரம் எனறும இவ்வாறு சோழர்கள காலத்தில் மாறிமாறிப் பெயர் பெற்றுள் ளது. விசயநகர அரசர்களின் காலத்தில் 'வடமுடி கொணட சோழபுரம்' என்ற பெயர் வழக்கிலிருந் துள்ளது.

இக்கோயிலின் கருவறை, அர்தத மணடபம், கும்பஞ்சரம், யாளிவரிகள, கூடு, தேவகோட்டச் சிற் பஙகள் ஆகியன முற்காலச் சோழர்களின் கலைக்கு ஓர் எடுத்துக்காட்டாக அமைந்துள்ளன. தி.சு.

**தகடூர்:** கடையெழுவள்ளலகளுள் ஒருவனும், சஙகப்புலவர் அவ்வையாருக்கு உண்டாரை நெடுநாள் வாழவைக்கும் அரும் நெல்லிக்கனியை ஈந்தவனுமான அதியமான் நெடுமான் அஞ்சியின் தலைநகர் தகடூர் ஆகும். தகடூர் நாடு எனப்பட்ட இந்நாட்டை அதியன மரபினர், தகடூரைத் தலைநகராகக் கொணடு ஆண்டு வந்தனர். பதிற்றுப்பத்திலும் இவ்வூர் தகடூர் எனறே குறிப்பிடப்படுகினறது. இனறைய தருமபுரி மாவட் டத்தின தலைநகராக விளங்கும் தருமபுரியே பண்டைய தகடூர் ஆகும் பழங்காலததில் இது தகடை, தகட்டூர், தகடாபுரி எனப் பலபெயர்களால் வழங்கப்பட்டது. தகடு என்னும் சொல்லுக்குப் 'பூவின புற இதழ்' என்னுமோர் பொருள் உணடாகையால அகவிதழைப் பாதுகாக்கும் புறவிதழ் போன்ற மதிலை யுடைய ஊரென்னும் பொருள்பட இதற்குத் தகடூர் என்ற பெயர் இடப்பட்டது என்பர். மற்றும், தகடு என்பது உயரமினறித் தகடாக அமைந்த மலையைக் குறிக்குமாதலின் அத்தகைய மலையைச் சார்ந்த ஊராதலின் அது இப்பெயர் பெற்றது எனவும் கூறுவர். மலையை அடுத்துள்ள ஊர் ஆகையால் இது முல்லை நில வளத்தைப் பெற்றிருந்ததுடன, வயல களும் நிறைந்திருந்தது.

பதிற்றுப்பத்தில எட்டாம்பத்தின் பாட்டுடைத் தலைவனான பெருஞ்சேரல் இரும்பொறை எனற சேரமன்னன் தகடூரை அழித்தான் என்று தெரி கிறது. இவன் பெற்றுள்ள 'தகடூர் எறிந்த' (பெருஞ் சேரல் இரும்பொறை) என்ற விருதிலிருந்து அது புலப் படும். இவவெற்றியினைப் போற்றுவதே 'தகடூர் யாத்திரை' என்னும் நூலாகும். குலோத்துங்கச் சோழன் காலத்தில இவ்வூர் சோழ நாட்டிற்கு உட் பட்டிருந்தது எனத் தெரிகின்றது. பல்லவ மன்னன் கோப்பெருஞ்சிங்கனுடைய அரசியல் தலைவருள் ஒரு வனான வீரசேகரக் காடவராயன் தகடூர்மீது படை யெடுத்துச் சென்று அதனை முற்றிலும் அழித்தான் என அறியப்படுகிறது. அதன பின்னரே இவ்வூர் தரும புரி எனப் பெயாபெற்றிருத்தல் வேண்டும். சி.இரெ.

**தகடூர் யாத்திரை:** அழிந்து போன தமிழ் நூல்களுள் ஒன்று. இந்நூலின் சில செய்யுட்கள் புறத் திரட்டு நூலினாலும், தொல்காப்பியம், தக்கயாகப் பரணி முதலிய நூல்களின் பழைய உரைகளாலும் அறியப்படுகின்றன. இது, அதியமானுக்குரிய 'தகடூர்' மீது சேரமான் பெருஞ்சேரலிரும்பொறை படை யெடுத்துச் சென்ற வரலாற்றினைக் கூறும் நூல். 'தகடூர் மாலை' எனப் புறத்திரட்டுப் பிரதிகளின சில இடங்களில் இந் நூல் குறிக்கப் பெறும். இதனை இயற்றிய ஆசிரியர் பெயரும் வரலாறும் அறிதற்கு இயலவில்லை.

'தகடூர்' என்பது, இக் காலம் தருமபுரி மாவட்டத் தலைநகராகிய தருமபுரி என்னும்நகரினைக் குறிகும். இதனைக் கருநாடகப் பகுதியில் உள்ள ஓர் ஊர் என்று சிலர் குறிப்பிட்டுள்ளனர். பதிற்றுப்பத்தில் அரிசில் கிழாரால் சிறப்பிக்கப் பெறும், தகடூர் எறிந்த சேர மான் பெருஞ் சேரலிரும்பொறை, அதியமானுக்கு அண்ணன் ஆவன் என்னும் செய்தி, புறத்திரட்டில் இடம் பெற்றுள்ள, 'காலவெகுளிப் பொறையர்கோன் நும்பியைச் சாலுந் துணையுங் கழறி' என்னும் வெண பாவினால் (புறத்திரட்டு: 776) பெறப்படுகிறது. இதனால், தகடூர் யாத்திரையும், பாரதம் போல அண்ணன் தம்பியரிடையே நிகழ்ந்த போர் வரலாற் றினைக் கூறும் நூலாகும் என்று அறிஞர்கள் கருது கின்றனர்.

உரைநடை மிகுந்தும், செய்யுள் எண்ணிக்கையில் குறைந்தும் இந்நூல் அமைந்தது என்னும் செய்தி 'பாட்டிடை வைத்த குறிப்பினானும்' என்னும் நூற் பாவிற்குப் பேராசிரியர் 'பாட்டுவருவது சிறுபான்மை யாகலின் அவை, தகடூர் யாத்திரை போல்வன' என்று குறிப்பிட்டுள்ளமையால் (தொல்.பொருள்.485. உரை) புலனாகிறது. மேலும், இவ்வரலாற்று நூலின் நிகழ்ச்சி அது நிகழ்ந்த காலத்தன்றிப் பிற்காலத்தே நூலாக்கப் பட்டது என்ற குறிப்பும் அவ்வுரைப் பகுதி யில் காணப்படுகிறது.

இந்நூலில் அமைந்த செய்யுளகள் வெண்பாவும், ஆசிரியப் பாவுமாகும். தொல்காப்பியப் பொருளதிகார நச்சினார்க்கினியர் உரையிலும்(தொல் பொருள: 63, 67,68, 72. 79 உரை), தக்கயாகப் பரணி உரையிலும் (தக்க. 641 உரை) இந்நூலின் செய்யுள்கள் எடுத் தாளப்பட்டுள்ளன.

யாத்திரை என்னும் வடசொல்லிற்குப் படை யெடுத்துச செல்லல் எனபது பொருள. அரசர்க் குரியனவாகக் கூறப்படும் நட்பாக்கல், பகையாக்கல் போர்மேற்சேறல, இருத்தல்,பிரித்தல், கூட்டல் ஆகிய பண்புகளுள போரமேற்சேறல் என்னும் பண்பின அடிப் படையில் இந்நூல் அமைந்துள்ளது.

அவையடக்கம், நீத்தார் பெருமை, ஈகை, செங் கோன்மை, சொல்வன்மை, தூது, நாடு, புல்லறி வாண்மை, நிரைகோடல், நிரைமீட்சி, பகைவயிற் சேறல், பாசறை, வஞ்சினம், படைச் செருககு எயில்காத்தல், தானைமறம், குதிரை மறம், மூதின் மறம், இரங்கல் ஆகிய புறததிரட்டின புறத்துறை பற்றி அமைந்துளள அதிகாரங்களில் நாற்பத்து நான்கு செய்யுள்கள் இந்நூலிலிருந்து இணைக்கப்பட்டுள்ளன. இத்திரட்டு நூலில் இடம் பெறாத மூன்று பாடல்கள் தொல்காப்பிய நசசினார்க்கினியருரையில் காணப் படுகின்றன. வீ. சொ.

**தகர்த்தெறி கொள்கை:** உருவ வழி பாட்டிற்கு எதிராக கி.பி.8,9-ஆம் நூற்றாண்டுகளில தோன்றிய இயக்கமேதகர்த்தெறி கொள்கை இயக்கம் (Iconoclasm) ஆகும். உரோமானியப் பேரரசர்கள் இவ்வியக்கத்தைத் தொடங்குவதற்குமுன் தமாசுகசில் காலிபாக்கள் (Khalıfs at Damascus) கிறித்தவர் களுக்கு எதிராக இவ்வியக்கத்தைத் தொடங்கியிருந் தனர். உருவ வழிபாட்டில் நம்பிக்கை கொண்ட சிலர் கி.பி.8-ஆம் நூற்றாணடில் கடவுளின உருவங்களைப் பொடி செய்து தண்ணீரில் கலந்து அதை மந்திரசக்தி கொண்ட மருந்தாக அருந்தினர். இதுபோன்ற மூடப் பழக்கவழக்கங்களால் ஆத்திரமடைந்த மூன்றாம் இலி யோ என்னும் உரோமானியப் பேரரசன் (Leo III, A.D.716-741) கோவில்களில் உள்ள கடவுளின் உரு வங்களை எல்லாம் தகர்த்தெறியும்படிதன் படைவீரர் களுக்கு உத்தரவிட்டான். தகர்த்தெறி கொள்கைக்கு (Iconoclastic Movement) வித்திட்டவனே இம் மா மன்னன் தான். அவன் உத்தரவுப்படி நாட்டில் உள்ள கடவுளின் உருவங்கள் எல்லாம் தகர்த் தெறியப்

பட்டன. அதனோடு நிற்காது உருவ வழிபாட்டிற்கு ஆதரவளித்த பாதிரிகள், துறவிகள சன்னியாசிகள் ஆகியோரையெல்லாம் சித்திரவதை செய்து கொன்று குவித்தான். அதனால் போப்பாண்டவருக்கும் மன்ன னுக்கும் மோதல் ஏற்பட்டது. கடவுள் சம்பந்தமான உருவங்கள், படங்கள, சின்னங்கள் ஆகியவற்றைப் போப்பாண்டவர் வைத்திருக்கக் கூடாது என்று ஆணை பிறப்பித்தான். போப்பாண்டவர் மறுக்கவே அவர் மீது தேசத்துரோகக் குற்றம் சுமத்தினான்.

இச் சமயத்தில் உருவ வழிபாட்டிற்கு ஆதரவளித் தவர் தூய யோவான் தமாசீன (St. John Damascene, A.D.675-749) ஆவர். அவர் எழுதிய நூலின் வாயிலாகச் சடப்பொருள் கடவுளின் ஆவியைத் தாஙகியிருப்பதால், சடப்பொருளினால் ஆன உருவங களின் மூலம் தெய்விக சக்தியுடன தொடாபு கொள்ள முடியும எனறு போதித்தார். நான்காம் இலியோசக்கர வர்த்தி (Leo IV-A D.775-780) உருவ வழிபாட்டின ருக்குக் கொடுமை செயயவில்லை. அதற்குக காரணம் மகாராணி ஐரென் (Empress Irent) ஆவா். ஆனால உருவ வழிபாட்டுக்காரர்களைக் கொடுமைப் படுத்து தல் மீணடும் ஐந்தாம் இலியோ (Leo V, A.D.813-820), இரணடாம் மைக்கேல (Michael 11. A D.820-829), தியோபிலசு (Theophilus, A.D.829-842) ஆகியோர் களின் ஆட்சிக் காலத்தில தொடர்ந்தது

தகர்த்தெறி கொள்கை இயக்கம் பல உயிர களைப் பலி கொண்டாலும் மூடப்பழக்க வழக்கங் களை முழுமையாக அகற்றியது. அரசு பாதிரியார் களின் ஆதிக்கத்திலிருந்து விடுபட்டுச சுதந்திரமாக இயங்க முடிந்தது. அ.அ.ரா.

**துணை நூல்:**

Martin, Edward J., A History of the Iconoclastic Controversy, New York, 1930.

**தகவமைதல்:** மனிதர் ஒருவருக்கொருவர் அருகில் வசிப்பதால மட்டுமே சமூக வாழ்க்கை அமை யாது. பலவகைக் குழுக்களைச் சேர்ந்த மனிதர்கள் ஒருவரோடொருவர் கலநது பேசி உறவாடி, பல செயல்களில் அலலது பல சமூக இடைவினைச் செயற் பாடுகளில் ஈடுபடுமபொழுதுதான் சமூக வாழ்வு தொடங்குகிறது. இச் சமூக இடைவினைகள் பொது வாகக் கூட்டுறவு (Co-operation), போட்டி (Competition), சண்டை (Conflict), தகவமைதல் (Accommodation), தன்மயமாதல் (Assimilation) முதலிய வடிவங்களில் நடைபெறுகின்றன. ஒரு நிலையான சூழ்நிலையானது எப்பொழுதும் இவற்றில் ஒன்றுக்கு மேற்பட்ட செயற்பாங்குகளைக் கொண்டிருக்கும்.

குறிப்பிட்ட சூழ்நிலைக்கேற்றவாறு தன்னை மாற்றிக்கொள்ளும் தன்மை தகவமைதல் (Accommodation) எனப்படும் இது மனிதர்கள் தாங்களாகவே முயற்சி எடுத்துத் தங்களுக்குள்ளாகவே போட்டியை யும் சண்டையையும் தவிர்க்கக் கையாளும் வழிமுறை யாகும். இம் முறையால் அவர்கள் ஒருவருக்கொரு வர் பழியையும் பகையையும் வளர்த்து அழிநது போவதிலிருந்து தங்களைக் காப்பாற்றிக் கொள்கின் றனர்.

மனிதன் எப்பொழுதும தன்னைச் சுற்றியுள்ள வர்களுடன் சணடையிட்டுக் கொணடிருக்க இயலாது. பிறருடன ஒத்துச் செல்ல இயலாத சூழநிலையிலும பொறுததுக்கொளளுதல் தகவமைதலுககு வழிவகுக கும். இது ஓரளவு நடைமுறைக்கு ஒததுவருகினற வழியாகும். சூழ்நிலைக்கேற்ப இந்த ஏறபாடு பலன் அளிக்கக்கூடும். சில வேளைகளில் இரு பிரிவினரி டையே போட்டி, சண்டை ஆகியவற்றைத் தவிர்த் துப் பின்னர் இருவருக்கிடையேயும் வேறுபாடுகள் மறைந்து நல்லதொரு புதிய தொடர்பு ஏற்பட வழி வகுக்கலாம்.

**தகவமைதல் முறைகள் (அ)வடிவங்கள்:** தகவமை தல செயற்பாங்கை மனிதனுடைய வாழக்கையின். ஒவ்வொரு நிலையிலும் காணலாம். ஒவ்வொரு மனி தனும வெவ்வேறு சூழ்நிலைகளில பிறக்கிறான இருப்பினும் சூழ்நிலைக்குத் தகுந்தாற்போல தனனை மாற்றிககொணடு செயறபடுகின்றான். அதாவது சமூ கத்திலுள்ள வாழ்க்கைமுறை, பொருளாதார வளர்ச்சி, புதிய கணடுபிடிப்புகள ஆகியவற்றின மாற்றத்திற்கேற்ப நடக்கிறான். தகவமைதல் தனி மனிதர்களுக்கும், குழுவினருக்கும் இடையே ஏற்பட்ட சண்டைகள் ஒய்ந்து இணக்கமான தன்மை ஏற்படும சூழ்நிலையைக் குறிக்கிறது. இவ்வாறான சணடைக் குழுவினருக்கிடையே ஏற்படும் இச் சமரச இணககத் தையே (Compromise) தகவமைதல் எனச் சமூகவியல் அறிஞர்கள் கூறுகினறனர். ஆனால் பார்க்கு (Park), சம்னர் (Sumner) முதலிய அறிஞாகள தகவமை தலை 'விரோத மனப்பான்மையுள்ள கூட்டுறவு' (Antagonistic Co-operation) என்றே கூறுகின்றனர். இவவாறு தகவமைதல் பல வேறுபட்ட வழிகளிலும் வடிவங்களிலும் இருப்பினும் பினவருவன மிகமுக்கிய மானவையாகக் கருதப்படுகின்றன.

**1) கட்டாயப்படுத்தல்.** தனி மனிதர்கள அல்லது குழுவினர் தங்களுடைய உடல் பலத்தால் அலலது மற்றச் சக்திகளால் பிறரை வற்புறுத்தும்போது வேறு வழியின்றித் தோல்வியுற்றவர்களிடம் தகவமைதல் ஏற்படுகிறது. கட்டாயப்படுததல் (Coercion) இரு வகைகளில் ஏற்படுகிறது. 1) நேரடியாகப் பலத்

தைப் பிரயோகிப்பது. 2) உள்ளத்தில் மறைமுகமாகப் பலத்தைப் பிரயோகிப்பது. ஒரு முதலாளி தன் தொழிலாளியைக் கட்டாயப்படுத்துதல் நேரிடையாகக் கட்டாயப்படுத்தும் செயலுக்கு எடுத்துக்காட்டாகும். சிறுபான்மை மாநிலங்களில் பலவந்தமாகக் குறிப்பிட்ட மொழிக் கொள்கையைத் திணித்தல் மறைமுகமாகக் கட்டாயப்படுத்தும் செயலுக்கு எடுத்துக்காட்டாகும்.

**2) சமரச இணக்கம்:** சமமான பலம் வாய்ந்த இரு குழுக்கள் ஒருவருக்கொருவர் சில சலுகைகளைப் பெற்றுக்கொண்டும், சிலவற்றை விட்டுக்கொடுத்தும் அமைதிக்காக இணங்கிப்போகும்போது தகவமைதல் ஏற்படுகிறது. சமரச இணக்க (Compromise) முறையில் இரு குழுவினரும் பேசிப் பிணக்கைத் தீர்த்துக் கொள்ள வாய்ப்புண்டு. மேலும், நியாயத்திற்குக் கட்டுப்பட்டு ஒருவருக்கொருவர் விட்டுக்கொடுக்க முன்வருகின்றனர். உணர்ச்சி வசப்படாமல பிறருடைய நிலையில் தன்னை நிறுத்திப் பார்த்து ஒரு சமாதான உடன்பாட்டுக்கு வழிவகுக்கும் முறை இதுவாகும். நிருவாகத்தினருக்கும் தொழிலாளர்களுக்கும் இடையிலான தகராறுகள இரு தரப்பினரிடையேயும் ஏற்படுகின்ற நியாய உணர்வு காரணமாகத்தீருவது இதற்கு எடுத்துக்காட்டாகும்

**3) நடுவர் தீர்ப்புக்கு விடுதலும் இணக்கப்படுத்தலும்:** நடுவர் தீர்ப்புக்கு விடுதல் (Arbitration) என்ற முறையில் இரு குழுவினரிடையே சண்டை ஏற்படும்போது மூன்றாமவர் அல்லது குழுவினரின் தலையீட்டால் தகவமைதல் ஏற்படும். மூன்றாம் குழுவினரின் முடிவிற்கு, சண்டையிடும் இரு குழுவினரும் கட்டுப்பட வேண்டும். சண்டையிடும் இரு குழுவினரும் தங்களுக்குள் நல்லதொரு முடிவைக் காணவியலாத நிலையில் ஒரு நடுவரைக் கொண்டு தீர்வு காண்பது நடுவர் தீர்ப்பு எனப்படும். அரசாங்கமோ, பலம் பொருந்திய ஓர் அமைப்போ நடுவரைச் சூழ்நிலைக்குத் தக்கவாறு நியமிக்கக் கூடும். இரு குழுவினரும் அவர் ஆலோசனையை ஏற்றுக்கொள்ளலாம். பொதுவாக இம்முறை தொழிற்றுறைத் தகராறுகளில் அதிகமாகப் பயன் படுத்தப்படுகின்றன.

இணக்கப்படுத்தல் (Conciliation) என்ற முறையில் மூன்றாம் குழு (நடுவர் குழு) எந்தவித முடிவோ, கட்டாயமோ செய்வதில்லை. சண்டையைத் தவிர்ப்பதற்குச் சில கருத்தேற்றங்களை (Suggestions) மட்டுமே முன்வைக்கிறது. இக் கருத்தேற்றங்களை ஏற்பதும் மறுப்பதும் சண்டையிடும் இரு குழுக்களின் விருப்பத்தைப் பொறுத்ததாகும். இம்முறை தொழிலாளிகளின் குறைகளைத் தீர்ப்பதற்கு உதவியாக இருக்கிறது.

**4) சகிப்புத்தன்மை:** இம் முறையில் சாதாரண ஏற்பாடு எதுவும் இல்லை. அடிப்படையான வேறுபாடுகள் தீர்த்து வைக்கப்படுவதில்லை. இங்கு வெளிப்படையான சண்டை தவிர்க்கப்படுகிறது. இதில் இரு குழுவினரும் ஒருவரையொருவர் தங்கள் நிலையைப் புரிந்துகொண்டு ஒருவர் மற்றவரின் நோக்கத்தை அறிந்து, வேறுபாடுகளைப் பொறுமையாகப் பொறுத்துச் செல்கின்றனர். பகை உணர்வு கொண்ட இரு சாதி அல்லது மதத்தினரிடையே இன்று வளர்ந்து வரும் ஒருவிதமான சகிப்புத்தன்மை (Tolerance) இதற்கு எடுத்துக் காட்டாகும்.

**5) கருத்து மாற்றம்:** எதிர்க் குழுவினரின் கொள்கைகள், கருததுகள சரியென்று கருதும்போது ஒரு குழுவினர் தங்கள் கொள்கைகளையும் கருத்தையும் மாற்றிக்கொண்டு எதிர்க் குழுவினருடன் சேர்ந்து விடுவது கருத்து மாற்றம் (Conversion) எனப்படும். அரசியல், மதம் ஆகிய துறைகளில் அடிக்கடி ஏற்படுகின்ற மாறுதலை இதற்கு எடுத்துக்காட்டாகச் சொல்லலாம்

**6) அறிவார்ந்த விளக்கம்:** தன்னை நியாயப்படுத்துவதற்கான சமாதானக் காரணங்களைக் கூறுவது, அறிவார்ந்த விளக்கத்தின் (Rationalization) மூலம் தகவமைதல் ஏற்படச்செய்தல் ஆகும். அதாவது தன்னிடமுள்ள உண்மையான குறைகளை ஒத்துக் கொள்வதற்கு மாறாக தன்னுடைய நடத்தைக்கான காரணங்களை விளக்கிநியாயமென நிரூபித்தல் இதுவாகும். தனி மனிதன் மட்டுமன்றி அனைத்துக் குழுவினரும் தங்களுடைய செயலை நியாயமெனக் காட்டவே முயற்சிசெய்கின்றனர். எடுத்துக்காட்டாக நேசநாடுகள் செருமனியை அழிக்கத் திட்டம் வகுத்ததாலேயேதான் இரண்டாம் உலகப்போரைத் தொடங்க நேரிட்டது எனச் செருமனி தன்னை நியாயப்படுத்துகிறது. அதுபோலவே அமெரிக்காவும் எதேச்சாதிகார (Facism) அரசுகளிடமிருந்து உலகத்தை விடுவிப்பதற்காகவே போரில பங்குகொண்டதாகக் காரணம் கூறுகிறது.

**7)மேல்நிலை, கீழ்நிலை:** சமூகத்திலுள்ள மேல்நிலை (Superordination), கீழ்நிலை (Subordination) என்ற அடிப்படையிலே பொதுவாகத் தகவமைதல் அமைகிறது. அனைத்துச் சமூகத்திலுமுள்ள நிலையமைப்புகளில் இதுபோன்ற தகவமைதலே ஏற்படுகிறது. எடுத்துககாட்டாக ஒரு குடும்பத்தில பெற்றோர்கள், குழந்தைகள் ஆகியோருக்கிடையிலான உறவுகள் இந்த அடிப்படையிலேயே அமைகின்றன. இவ்வாறே சமூகம் அல்லது பொருளாதார உறவுகள் இந்தமேல் நிலை, கீழ்நிலை அடிப்படையிலேயே அமைகின்றன.

மக்களாட்சிச் சமூகத்தில்கூட தலைவர்கள், தொண்டர்கள் என்ற இந்த உயர்வு-தாழவு வேறுபாடு உள்ளது. ஆணையிடுபவன், கீழ்ப்படிபவன் என்ற இந்த வேறுபாட்டின் மூலமே அதிகமான தகவமைதல் சமூகத்தின் அனைத்து அமைப்புகளிலும் ஏற்படுகின்றன.

இவவாறான தகவமைதல் இன்றி எந்தச் சமூகமும் இருக்க இயலாது. இதுவே பல சணடை சச்சரவுகள், தகராறு, கலகம், வன்முறை போன்றவற்றைத் தீர்க்கவும், சமூக ஒழுங்கு (Social Order) ஏறபடவும் வழிவகுககிறது. மேலும், இக்காலச் சமூகத்திற்குத் தகவமைதல ஓர் இன்றியமையாத செயலாகும். செய்தி, கல்வி, அரசியல, சட்டம், பண்பாடு, சாதி, இனம், மதம், நீதிமனறம், காவலதுறை முதலிய அமைப்புகள் தகவமைதல செயற்பாஙகில் முககிய பஙகு வகிககின்றன. பூ.த.

துணை நூல்கள்:

Cohen, Bruce J., Theory and Problems of Introduction to Sociology, McGrow Hill Book Company, New York, 1979.

Popeno, David., Sociology, Prentice-Hall, Inc., Englewood Cliffs, New Jersey, 1977.

**தகவமைப்பு**: மனிதர்களும் உயிரினங்களும் சுற்றுச்சூழலின் தனமைக்கேற்பத் தகவமைந்து வாழும் முறையே தகவமைப்பு (Adaptation) ஆகும். மனிதர்கள் தங்கள் வாழ்வின் நிலைபேறுடைமைககாகப பல நிலைகளில் தகவமைந்து செயற்படுகினறனர். இதில் உடலமைப்பால் தகவமைவதும் பணபாட்டளவில தகவமைவதும் முதன்மையான கூறுகளாகும். சில இனத்தவர்கள் எளிதில தகவமையும் போககையும் சிலர் எளிதில் தகவமையாப் போக்கையும் கொண்டுள்ளனர். காலப்போக்கில இவ்வகை நிகழ்வினால் மனிதர்கள தங்களின வாழ்க்கையமைப்பை முற்றிலுமாக மாற்றியமைத்துக் கொண்டுள்ள நிலையையும் காணமுடிகிறது. தகவமைதல என்னும் நிகழ்வு தொடர்ச்சியான இயக்கத்தைக் கொண்டுள்ளதால் மக்களும் அதனோடு தொடர்ந்து செயற்பட வேண்டியுள்ளது. தகவமைப்பு என்னும் சொல் பரந்த பொருள் கொணடது. குறிப்பாகப் பண்பாட்டு மானிடவியலாரும் தொல்லியலாரும் பண்பாட்டுத் தகவமைப்பு எனக் குறிப்பிடுவர். ஏனெனில, மனித இனத்தவர்கள் தொடர்ந்து வேற்று இனத்தவர்களின தொழில்நுட்பத்தோடு தொடர்பு கொண்டுள்ளதால் அந்த இனத்தவரின் செல்வாக்கினைப் பெறறு மாறி வருகின்றனர். உடல்சார் மானிடவியலாரும் (Physical Anthropologists) பிற உயிரியலாரும் வேறொரு பொருளில் குறிப்பிடுவர். சுற்றுச் சூழலிற்கேற்ப மனிதர்கள் தகவமைந்து செயற்பட வேணடியுள்ளதால் அவர்களின் உடலமைப்பில் பல மாறுதலகளை ஏற்படுத்திக் கொள்கினறனா. இதை உயிரியல்சார் தகவமைப்பு (Biological Adaptation) எனக்குறிப்பிடுவா.

அனைத்து உயிரினங்களிலும் மனிதர்களே தகவமையும் பணபினை மிகுதியாகக கொணடுள்ளனர் எனலாம். இவர்கள, பனிப்பகுதிகளான வடதுருவத்திலிருநது வெப்ப மணடலப் பகுதி வரை அனைதது காலநிலையிலும் வாழும் தனமையைப் பெறறுள்ளனர். ஆனால், தாவரவினஙகளோ பிற விலஙகினங்களோ இவவாறான தகவமையும் தனமையைப் பெற்றிருக்கவில்லை. எடுததுக்காட்டாக மூஙகில், கொசு முதலானவை உலகின அனைத்துப் பகுதிகளிலும் காணப்படவில்லை. இதற்குக காரணம் அவறறின உடலமைப்பாகும்.

ஓர் உயிரினம் சுற்றுசசூழலுடன் தகவமையாத போது அவை இறந்துவிடுகினறன. பல ஊழிக்காலத்திற்கு முன்னர் வாழ்ந்த சில விலஙகினஙகளும் தாவரவினங்களும் இனறு இலலை. காலப்போககில் புதிதுபுதிதாக உணடான நில அமைப்போடு ஒட்டி வாழ இயலாததால் முழுவதுமாக அறறுப்போயின. எடுத்துக்காட்டாகப் பல இலட்சக்கணக்கான ஆணடுகளுக்கு முன்னர்வாழந்த ஒருவகை இராட்சதஊர்வன இனம் (Dinosur)முழுவதுமாக அற்றுப்போய்விட்டது அதற்குக் காரணம அவை வாழ்ந்த காலததிய புவியமைப்பு மாறிவிட்டதால காலநிலையும் உணவு அளவும் மாறிவிட்டன. இநத மாறிய சூழலிறகேற்ப அவவினம் தகவமைய முடியாததால் அழிநதுபோயின.

வாழும் உயிரினங்கள் இரண்டுமுறையில் தகவமைந்து செயற படுகின்றன. ஒரு மக்களினம முழுவதுமாகப் படிமலர்ச்சி (Evolution) நிகழ்வின் மூலம் பல தலைமுறைகளாகச் செயற்பட்டுத் தேவையான மாறறங்களை ஏற்படுத்திககொளளுதல் ஒரு முறையாகும். வாழும் காலத்திற்குள் தனி ஒருவர் மட்டும் நடததை முறையை மாறறிககொணடோ உடலமைப்பில மாற்றம் செய்துகொண்டோ வாழும் நிலை மற்றொரு முறையாகும்.

**உயிரினம் மொத்தமாகப் படிமலர்ச்சியடைதல்:** வாலில்லாக குரங்கிலிருந்து (Ape) தோனறிய மனிதர்கள இன்று பல இனங்களாகக் காணப்படுகின்றனர். ஆனால, இவர்கள் அனைவரும் ஒரே சிறப்பினத்தைச் (Species) சேர்ந்தவர்கள. ஒரே மூதாதையரைக் கொண்டவர்கள். இருப்பினும் உடலமைப்பாலும் பண்பாட்டின் தன்மையாலும் மக்கள் பிரிந்து காணப்படுகினறனர். புவிப் பரப்பிற்கேற்ப மககளிடையே

மாறுதல்கள் உள்ளன. அதன் அடிப்படையிலேயே மானிடவியலார் உலகிலுள்ள அனைத்து மக்களையும் ஒன்பது புவிசார் இனங்களாகப் பிரித்துள்ளனர். அவை: பாலினீசியர், அமெரிக்க இந்தியர், ஐரோப்பியர், ஆப்பிரிக்கர், ஆசியர், இந்தியர், மைக்ரோனீசியர் (Micronesians), மெலனீசியர் (Melanesians) ஆசுத்திரேலியர் (Australians). இந்த ஒன்பது இனத்தவர்களும் உடலமைப்பிலும் வாழ்க்கைப் பாணியிலும் தனித் தன்மைகளைக் கொண்டுள்ளனர். காண்க: இனங்கள், மனிதர்.

ஒரு மக்களினம் மொத்தமாகத் தகவமையும் பாங்கு இயற்கைத் தேர்வு (Natural Selection), உடனடி மாற்றம் (Mutation) ஆகிய இரண்டு நிகழ்வுகளின் மூலம் நடை பெறுகிறது. இயற்கைத் தேர்வு என்பது தகுதியன வாழ்தல் (Survival of the Fittest) அடிப்படையிலானது. வாழும் சூழலில் ஏற்புடைய கூறுகளைமேலும் மேலும் தேர்ந்தெடுப்பதன் மூலம் பிற இனங்களைக் காட்டிலும் வாழவதற்கான திறன மிகுதியாகிறது. இவ்வகையான தேர்வு பல தலைமுறைகளாகத் தொடரும்போது உயிரினத்தின் கடந்தகால அமைப்பு நீணட இடைவெளிக்குப் பின் மாற்றமடைந்ததாகக் காணப்படும். பிற இனங்களுடன் போட்டியிட்டுத் தகவமையாத உயிரினங்கள் வாழும் தகுதியைக் குறைத்துக் கொளகின்றன. இதனால், இறுதியில் அழிந்து போகவேண்டிய நிலையும் ஏற்படும்.

உடனடி நிகழ்வு என்பது மரபணுவில் (Gene) ஏற்படும் திடீர் மாற்றமாகும். இவ்வகை மாற்றம் உடலமைப்பிலோ அது இயங்கும் முறையிலோ நடத்தை முறையிலோ மாற்றத்தை ஏற்படுத்தும். இவ்வகை மாற்றம் அந்த உயிரியின் தகவமைப்பிற்கு ஏற்றதாகவும் ஏற்பற்ற முறையினதாகவும் அமையலாம். இன்று அறிஞர்கள் உடனடி நிகழ்வின் மூலம் பல அரிய செயல்களைச் செய்கின்றனர். புதிய புதிய கலப்பினங்கள தோற்றுவிப்பதற்கு உடனடி நிகழ்வே முக்கிய பங்கு வகிக்கிறது. மனித இனத்தையும் மேம்படுத்த முயறசிகள மேற்கொள்ளப்பட்டன. இதன்மூலம் சிறந்த உயிரியல் பண்புகளைக் கொணட மக்களை உருவாககும் இன மேம்பாட்டியல் (Engenics) பணி தொடரப்பட்டு வெற்றியடையாமல் போய்விட்டது. எனினும், அந்த முயற்சி தொடர்கின்றது.

**தனி ஒருவர் மட்டும் தகவமைதல்:** இது ஒருவன இவ்வகைத் தகவமைப்பு மூலம் புதிய சூழலிற்கேற்ப மாற்றத்தை ஏற்படுத்திக்கொண்டு வாழ முற்படுதல் ஆகும். இது ஒரு குறுகிய காலத் தகவமைப்பு என்றும் கூறலாம் இது பெரும்பாலும் கால நிலை, புவியமைப்பு, வெப்பம் முதலானவற்றை அடிப்படையாகக் கொண்டது. எடுத்துக்காட்டாக ஒரு நாட்டைச் சேர்ந்த விளையாட்டு வீரர்கள் உலகில் வேறொரு பகுதிக்குச்சென்று போட்டியில் கலந்து கொள்ளும்போதுசிறிது காலத்திற்கு முன்னரே அங்குச் சென்றுவிடுவர். ஏனெனில் அங்குள்ள புதிய சூழலில் தங்களைத் தகவமைத்துக்கொள்ள வேண்டியுளளது. இவ்வகைத் தகவமைப்பு சூழ்நிலைக்கு இணக்கமாதல் (Acclimatization) எனக் கூறப்படும். இவ்வகைத் தகவமைப்பில் பெறப்படும் பண்புகள் ஒருவர், அவராகவே பெறுதலாகும் (Acquired Characteristics). இவை மரபுவழியில் ஏற்படா.

இவ்வகைத் தகவமைப்பு புலனுணர்வு (Sensitivity) மூலம் ஏற்படுவதாகும். புலனுணர்வானது புறச்சூழலில் உள்ளவற்றை உணர்ந்து எதிர்வினை புரியும் தன்மையைக் குறிக்கும். இதில் நரம்பு மண்டலமே (Nervous System) பெரும்பாலும் முதலிடம் பெறுகிறது. மனிதர்கள் மிகவும் வளர்ச்சிபெற்ற நரம்பு மணடலத்தைக் கொண்டுள்ளதால் மற்ற உயிரினங்களைக் காட்டிலும் பல நிலைகளில் தகவமையும தன்மையைக் கொண்டுள்ளனர். மனிதர்கள் அலலாத பிற உயிரினங்கள ஒவ்வொன்றும் வெவ்வேறு வகையான புலனுணாவையும் சுறறுச் சூழலுடன் எதிர்வினை புரியும் தன்மையையும் கொண்டுளளதால் தகவமையும் தன்மையிலும் வேறுபடுகின்றன.

மனிதர்கள் வெவ்வேறான சூழலில் கொண்டுள்ள தகவமைப்பையறியப் பின்வரும் தலைப்புகளில காணவேண்டும்.

**உயரம் மிகுந்த இடங்களில் தகவமைப்பு:** சமநிலப்பகுதிகளில் வாழாமல் மலையும் மலைசார்நத மேட்டு நிலப்பகுதிகளில் உள்ள மக்கள் உயரமிகுநத இடங்களில் (Altitude) வாழ்கின்றனர். இவர்களின் எண்ணிக்கை சற்றேறக்குறைய 25 மிலலியனகளாகும். அதாவது 100-இல் ஒருவர் என்ற எண்ணிக்கைக்கும் குறைவாகவே உள்ளனர் எனலாம். இவர்களின் முக்கிய சிக்கல் அழுத்தமற்ற காற்று மண்டலத்தில் (Thin Air) வசிப்பதேயாகும். இன்றுவரையிலான மனிதக் கண்டுபிடிப்புகளினால் இசசிக்கலைத் தீர்க்க இயலாமல் உள்ளது. இருப்பினும் பெரிய புட்டிகளில் உயிர்க்காற்றை (Oxygen) அடைத்தும் பிற மருத்துவ முறைகளாலும் மலைவாசிகளின் நோய்களைத் தீர்க்கமுடிகிறது. பொதுவாக உயரமிகுந்த இடங்களில் தோன்றும் மனவழுத்தங்களைப் (Mental Stress) போக்க மக்கள் மதுவையும் கோகோவையும் அருந்துகின்றனர். மது உடலின் வெப்பத்தை

அதிகரிக்கிறது; கோகோஇரத்தநாளத்தைச் சுருக்குவ தால உடலின் வெப்பம் வெளியேறுவது குறை கிறது.

கடல் மட்டத்திலிருந்து ஒருவர் 4,000மீ உயரம் வரை சென்றால் உடலமைப்பில் பெரும் மாறுதல்கள உண்டாகும். ஒருசிலர் தந்துகி வெடிப்பினால் இறகக வும் நேரிடும். இநத உயரத்திற்குச் செல்வோர்அனுப விக்கும் பொதுவான சிககல்கள வேகமாக மூசசுவிடு தல், நாடி விரைந்து துடித்தல், உடலளவிலும் மன அளவிலும் சோர்வு ஏற்படுதல, நிம்மதியற்ற தூக்கம் தலைவலி, சீரணக் குறைவு, உடல் எடை குறைதல் முதலானவையாகும். ஆனால், இச்சூழலில் ஒருவா சிலநாட்கள் தஙகியபின் ஒரு குறைந்தபட்ச தக வமைபபு (Short run adaptation) ஏற்படும். முக்கிய மான தகவமைப்பு இரத்தச் சிவப்பணுககளின் எண ணிக்கை மிகுதியாவதாகும்.இருப்பினும்உடலினசிக்கல கள் பெருமளவு குறைவதற்கு வாய்ப்பில்லை.

மலைப்பகுதிகளுக்குக் குடியேறி வாழும மக்கள ஓரளவு தகவமைந்து காணப்படுவா. இவாகளிடையே யும் குறை பிறப்புகள், பிறநத குழநதைகள மிகுதி யாக இறத்தல் முதலான சிககல்கள காணப்படும. இப்பகுதிகளிலேயே பிறநது வாழும் மக்கள் மட்டுமே குறைந்த சிக்கலகளுடன வாழ்வா. மலைப்பகுதி மக்கள் மிகுந்த அளவில மூச்சுவிட வேணடியிருப்ப தால் சமநில மக்களைக் காட்டிலும் அகனற மார்ப கத்தையும், கொள்ளளவில் பெரிய நுரையீரலையும் கொணடிருப்பர். உயிர்வாயுவை உடலின பல பாகங களுக்கும் அனுப்பும் வலப்பகக இதயம் (Right Ventricle) சிறிது பெரிதாகக் காணப்படும உயர மிகுந்த மக்கள் மூன்று முககிய நிகழவுகளை அனுப விக்க வேணடியுள்ளது. அவை:1) உடலின இயககத் தில இடைக்காலமாகவும் உடனடியாகவும் மாறறம் ஏற்படும. 2) வளருமபோது உடலில மாறறங்கள ஏற படும். 3) மக்களதொகையின மரபணுச சேர்மத்தில் (Gene Pool) மாற்றஙகள் ஏற்படும்.

**குளிர் பகுதிகளில தகவமைப்பு:** வடதுருவ மக்கள் இவ்வகைத தகவமைப்பிற்குச் சிறந்த எடுததுக் காட்டாவர். இம் மக்களின் தகவமைப்புப் பணபுகள் உயரமிகுந்த பகுதிகளில் வாழும் மக்களிடமிருந்து வேறுபட்டதாகும். குளிர்பகுதி மக்கள் பொதுவாகக் குட்டையானவர்கள. ஆனால, உடலின் எடை மிகுதியானவர்களாய் இருப்பர். குட்டையாய் இருப்பதால் உடலின் புறப்பரப்பு குறைந்துவிடு கிறது. வேறுசில உடற்பணபுகளும இம் மக்க ளிடையே காணப்படுகின்றன.கை, கால் விரல்கள குட்டையாக உள்ளன. மூக்கு மிகவும் குறுகியுள்ளது. இதனால் உடலிலுள்ள வெப்பம் வெளியேறும் அள வும் குறைந்து விடுகிறது. இது குளிர்பகுதித் தக வமைப்புகளுள் முக்கியமானதாகக் காணப்படுகிறது. இது தவிர்த்து உறைவிடம், உடை, உணவுப்பழக்கம், எரிபொருள் முதலான பல்வேறு முறையிலும் நனகு தகவமைநது கொள்கின்றனர். வடதுருவப் பகுதிகளில வாழும் எசுகிமோக்கள் (Eskimos) மேற்கூறிய அனைத்து நிலைகளிலும் சிறந்த முறையில் தக வமைந்து வாழ்கிறார்கள். இவர்களின் 'இக்லூ' (Igloo) வீடுகள் பலவகையான பனிக்கட்டிகளால கட்டப்படுகினறன. குறுகிய வாசலையுடைய நீணட வீடுகள் வெப்பத்தைக் காக்கும் முறையில உள்ளன. விலங்குத் தோல்களால் செய்யப்பட்ட இவர்களின் உடைகள் உடலின் வெப்பத்தைக் காத்துக குளிரின கொடுமையை விலக்குகிறது. இவர்கள் எரிபொரு ளாகப் பயன்படுத்தும் ஒருவகை மெழுகு சீரான வெப்பத்தைக் கொடுத்து வீட்டில் எப்போதும் வெப் பத்தை நிலைபெறச் செய்கிறது. காண்க: இக்லூ எசுக்கிமோக்கள்

குளிர்பகுதித தகவமைப்புப் பண்புகளை உயர மிகுந்த மலைபபகுதிகளில வாழும் மக்கள கொண் டிருக்க வேணடியதாகிறது உயரம் செல்லச் செல்ல வெப்பத்தின அளவும் குறைவதால குளிா மிகுதி யாகிறது. வட துருவ மககளின தகவமைப்புப பணபு களை அப்படியே கொணடிராவிட்டாலும் அதன சாயல் மலைப்பகுதி மக்களிடமும் காணப்படும.

**வெப்பப் பகுதிகளில் தகவமைப்பு:** இவவகைப் பகுதிகளில் வாழும மக்கள இரணடு வகையான வெப்ப நிலைகளில வாழகின்றனர். ஒனறு, காற்றில ஈரப்பதம் மிகுநத வெப்ப நிலை (Humid Heat), மற்றொன்று, காறறில் ஈரப்பதமற்ற மிக வறணட வெப்பநிலை (Dry Heat). வெப்பநிலை மிகுந்த உச்சம்பெற்ற நிலையிலோ ஈரப்பதம் மிகுந்த வெப பம் மிகுநதுள்ள நிலையிலோ சூரிய வெப்பம் அளவு கடந்த நிலையிலோ ஒருவர் கடினமாக வேலை செய்யும்போது அவரது உடல், 'வெப்பத்தின் கொடு மையால் பாதிக்கப்படும ஆனால், இவ்வகைச் சூழ லில தொடர்ந்து ஒருவர் ஒரு வார காலத்திறகுப் பணி புரியுமபோது அச் சூழலுடன ஓரளவு இணக்க மாகிவிடுகிறார்

குளிர் பகுதிகளில வாழும் மக்கள வெப்பத்தைப் பாதுகாப்பதற்காகப் பல முறைகளில் தகவமைநது கொள்கின்றனர். ஆனால்,இதற்கு எதிர்மாறாக வெப் பப் பகுதி மககள மிகுதியான வெப்பத்தை எவவாறு வெளியேற்றமுடியுமோ அம்முறைகளில் தகவமைந்து கொள்கின்றனர். இவர்களின தகவமைப்பில உட லமைப்பு, தோல் நிறம், இரத்த ஓட்டம் முதலானவை முதன்மையான பஙகு பெற்றுள்ளன. மெலிந்த உட



எசுகிமோ



ஆப்பிரிக்க மக்கள்

லும், நீணட கை, கால்களும் மிகுந்த புற உடற் பரப்பும் வெப்பத்தை வெளியேறறுவதற்கு ஏற்ற தாகும். இதனாலேயே வெப்பப்பகுதி மக்கள குளிர்ப் பகுதி மக்களைப் போன்று தடிததும் குட்டையாகவும் இருப்பதில்லை. தோலின் நிறம் சூரிய வெப்பத்தி னின்று உடலைப் பாதுகாக்கிறது. நில நடுக்கோட்டுப் பகுதியினைச் சார்ந்துளள மெலனீசியா, ஆசுத்திரே லியா, தென் இநதியா, ஆப்பிரிக்கா முதலான பகுதி களில் வாழும் மக்கள பொதுவாகக் கரும்பழுப்பு முதல் கருமை நிறத் தோல் வரை பெற்றுள்ளனர். கரும் பழுப்பு அல்லது கருமைநிறத் தோல் ஏன் வெப்பப் பகுதிக்கு ஏற்றதாக உளளது என்பது பற்றிப்பல கொளகைகள் நிலவுகின்றன கருமை நிறத தோல் சூரிய ஒளியிலுளள புற ஊதா ஒளியை மிகுதி யாகக் (Ultra Violet Light) ஏறபதில்லையாதலால தோற் புற்றுநோய் ஏறபடாமல தடுக்கிறது. அதோடு கருமை நிறத்தோல் சூரிய ஒளியிலிருந்து உற்பத்தி செய்யப்படும் வைட்டமின 'D'யைக் கட்டுப்படுதது கிறது. இதனால் மிகுதியான வைட்டமின 'D'யிலி ருந்து உணடாகும் நசசுத்தனமை ஏறபடாமல் காக கப்படுகிறது.

உடலின வெப்பத்தைக் குறைப்பதில வியர்வை வெளியேற்றம் (Sweating) முக்கிய பங்கு பெறு கிறது. வியர்த்தல மூலம் புறத் தோல குளுமைப படுத்தப்பட்டு அதன்மூலம் உடலின் வெப்பம் வெளி யேறி உடலைச் சுற்றியுள்ள காற்றுடன் கலந்துவிடு கிறது. இதறகு ஏறறாற்போல் புறததோலுககடியில இரத்த ஓட்டம் மிகுதியாக இருக்கும். இதனால், இரத்தத்திலுளள நீரைத் தோலுக்குக கொடுக்க முடியும். பாலைவனப் பகுதிகளில ஒரு மணி நேரத் தில் நிகழும் வியர்த்தல் மூலம் ஒருவரின் உடல் நீரில் நான்கில ஒரு பகுதி இழப்பு ஏறபடலாம். அதோடு தோல திசுக்களிலுள்ள நீரின் அளவு குறைத லும், இரத்தத்திலுள்ள உப்புச்சத்து (Sodium) குறை தலும் ஏற்படலாம். மிகவும் கடுமையான வெப்பக காலத்தில் தொடாநது மூன்று மணிநேரம் வியர்த் தால் உடலின் உப்புச்சத்து பெரும்பான்மை வெளி யேறிவிடும் ஆபத்தும், அதனால் இறக்கும் ஆபத்தும் ஏற்படலாம்.

வியர்த்தல் மூலம் உடலின் வெப்பத்தை வெளி யேற்றும் முறை அனைத்து உயிரினங்களுககும் உளள பொதுவானமுறை. ஒவவொரு மனிதரும் சற்றேறக குறைய 1.6 மில்லியன வியர்வைச் சுரப்பிகளைக் (Sweating Glands) கொண்டுள்ளனர். விலங்கினங் களுள மனிதனைக்காட்டிலும் மிகுதியான வியர்வைச் சுரப்பிகளைக் கொணட விலங்கு இல்லை எனலாம்

பாலை நில மக்கள் பண்பாட்டளவிலும் பல தக வமைப்புகளை ஏற்படுத்திக் கொண்டுள்ளனர். பொது வாக அம்மக்கள் இறுக்கமற்ற ஆடைகளை அணிந்து உடலுக்கும் காற்று மண்டலத்திற்கும் நல்ல தொடர்பை ஏற்படுத்திக்கொள்கின்றனர். ஆப்பிரிக்கப் பாலைப் பகுதி மக்கள் அணியும் காலணி (Foot-Wear) காலின விளிம்பிலிருந்து அனைத்துப் பக்கங்களிலும் ஒரு அங்குலம் வெளியே நீட்டிக் கொணடுள்ளவாறு அணிகின்றனர். இது தரையி லிருந்து வெளிப்படும் வெப்பத்திலிருந்து கால்களைப பாதுகாககிறது. இவ்வாறு பல தகவமைப்புப் பண்பு களை வெப்பப் பகுதி மக்கள் ஏற்படுத்திக் கொண் டுள்ளனர்.

**உணவுத் தகவமைப்பு:** மக்களின் அடிப்படைத் தேவைகளான உணவு, உடை, உறைவிடம், இனப் பெருக்கம் ஆகிய நான்கும் அனைத்துப் பண்பாட்டின ருக்கும் பொதுவானது என்றாலும் எவற்றை உண் பது, எவற்றை உடுப்பது, எவ்வாறான உறை விடத்தை ஏறபடுத்திக்கொள்வது, எவருடன் உறவு கொள்வது முதலான அனைத்தும் அந்தந்தப் பண பாட்டினரால அறுதியிடப்படுகின்றன. உணவு முறையை மட்டும் ஆராய்ந்து பார்த்தால், அது பண பாட்டால் அறுதியிடப்படுகின்றது எனறாலும் அம் மக்களின் சூழலிறகேற்பத் தகவமைநத போக்கையே காட்டுவதாக அமையும். அத் தகவமைப்பு இரண்டு காரணிகளை அடிப்படையாகக் கொணடுளளது. முத லாவது சுற்றுச சூழலில் கிடைக்கும் பொருளகளின அளவைப் பொறுததது, இரணடாவது அவை எவ வாறு பயன்படுத்தபபடுகினறன எனபதைப் பொறுத் தது. இவற்றில பயன்படுததப்படும் முறை பணபாட் டால் அறுதியிடப்படுகிறது. எந்தஒரு பகுதியிலும் அங்குக் கிடைக்கும் உணவு வளத்தை முழுமையாகப் பயனபடுத்தும் நிலையை மக்களை கொண்டிருகக வில்லை. அந்தந்தப் பண்பாடு ஏற்றுக் கொணட தொழிலநுட்பத்தின் மூலம் ஒரு பகுதி வளததை மட்டுமே பயன்படுத்துகினறனர். இத்தனமை மனிதப் படிமலர்ச்சியில் முக்கிய பங்கு பெறறுள்ளது. கடநத ஒரு மிலியன் ஆணடுகளாக மனித உணவுப் பழககத் தில் விலங்கு உணவு இன்றியமையாததாக இருந்து வருகிறது. இககால வேட்டையாடி உணவுசேகரிக்கும பழஙகுடிகளின உணவுமுறையை உற்றுநோக்கினால் அவாகள் பயனபடுத்தும் உணவுப் பொருளகளின் ஆற்றலகளுள் (Calories) மூன்றில் ஒரு பங்கு விலங்கு உணவின மூலம் கிடைக்கிறது என்பது தெரியும்.

பத்தாயிரம் ஆணடுகளுக்கு முன்னர்த் தொடங் கிய வேளாண புரட்சியினால் மக்கள் உணவுப் பொருள்களை விளைவித்து மிகுதியான அளவில் தாவர வளங்களைப் பயன்படுத்தத் தொடங்கினர். அதன்மூலம் ஒரே இடத்தில் நிலையான வாழ்க்கை யும் நகரங்களும் ஏற்பட்டன. அதோடு மக்களுக்குத் தொற்று நோய்களும் பெருகின. அதிலிருந்து இன்று வரை ஒவ்வொருவகையான புவிச் சூழலிலும் மக்கள் பலமுறைகளில் தாவர, விலங்கு உணவுகளைப் பயன் படுத்தத் தொடங்கிவிட்டனர். இவர்களுககுள் பல மாறுபாடுகள் உளளன. அதறகுக் காரணம் தகவ மைப்புப் பண்புகளாகும்.

உணவுத் தகவமைப்பிற்கு மரபுப் பணபுகளின் தகவமைப்பும் (Genetic Adaptation) காரணமாக அமைகிறது. இத் தன்மையினைச் சில இனக் குழு வினர் பசும்பாலை ஒதுக்குவதற்கான காரணத்தின் மூலம் அறியலாம். பாலிலுள்ள முக்கிய பொருள் ஒருவகைச் சர்க்கரைச் சத்தாகும் (Lactose). அச் சத்துப்பொருள் உடலில ஒருவகை நொதிப்பியால் (Enzyme) சீரணிக்கப்படுகிறது. சில இனத்தவர் களிடையே இளங் குழநதைகளும், வளர்ந்த குழந்தை களும் இதனை எளிதாகச் சீரணித்துக்கொள்வா. ஆனால், நானகு வயதிறகுப் பின் இச் சத்துப்பொரு ளைச் சீரணிக்கும் நொதிப்பியைப் போதிய அளவு உற்பத்தி செய்யாமல் மரபணு தடுத்துவிடுகிறது. இதனால், நான்கு வயதிற்குப் பின் மிகுதியாகப் பாலை உட்கொணடால் அசீரணக் கோளாறு உண் டாகி வயிற்றுப்போக்கு முதலான நோயினை உண் டாக்கிவிடுகிறது. பாலிலுள்ள இவ்வகைச் சத்துப் பொருளை ஏறறுக்கொள்வதில ஒவ்வா நிலையைப் பல ஆப்பிரிக்க ஆசிய இனத்தவர்கள் கொணடுள்ள னர்.

பாலிலுள்ள சாக்கரைப் பொருளைச் சீரணிப்ப தில் சில குழுவினர் நன்கு தகவமைந்தும் சில குழுவினர் தகவமையாமலும் இருப்பதற்கான காரணங்கள் பெரும் ஆய்விற்குரியனவாய் உள ளன. ஐரோப்பியர்களை பாலை உட்கொள்வதில் ஒவ்வாத் தன்மையைக் கொண்டிருக்கவில்லை. அவர் களுள் ஒரு பகுதியினர் நடுக்கிழக்கு நாட்டு (Middle East) மக்களின் வழி வந்தவர்கள். அவர்கள அக காலத்தில் ஆயர் வாழ்க்கையைக் கொண்டிருந்த தால் பால பொருள்களை மிகுதியாக உண்டனர். அதனால், அப்பொருளைச் சீரணிக்கும் நொதிப்பை மரபணு ஏற்படுத்தியிருந்தது. அப்பண்பு மரபுவழி யில் இன்றும் உளளதாகச் சில அறிஞர்கள கருதுகின் றனர். ஆப்பிரிக்கப் பழங்குடிகளுள் ஆயர் குடிகளான புலானி, துட்சி (Tutsi) முதலானோர் ஒவ்வாத் தன் மையைக் குறைவாகவே கொண்டுள்ளனர். ஆனால், ஆயர் வாழ்க்கை மேற்கொள்ளாமல் வேட்டையாடி, காட்டுப்பொருள்களைச் சேகரிதத பழங்குடிகள் தாங்

கள ஈன்ற குழநதைக்கு மிகக்குறைநத காலமே பாலூட்டி இருக்கமுடிந்தது. இடைவெளி விடாமல் குழந்தை பெற்றுக்கொண்டதால் ஒவவொரு குழந் தையும் குறைந்த அளவு பாலையேகுடிக்கமுடிந்தது. வளரும் காலத்தில் அவர்கள பாலை உணவில் சேர்த் துக்கொள்ளாததால் அதற்கான சீரண நொதிப்பும் சுரக்கவில்லை என அறிஞாகள் சிலர் கூறுவர்.

ஒரு சமுதாயத்தின் உணவுத் தகவமைப்பு அச்சமு தாயத்தின் பண்பாட்டுச் சூழலோடு நெருங்கிய தொடர்புடையது என்பது மேற்கண்ட எடுத்துக் காட்டுகளின் மூலம் அறியப்படும். இவ்வாறே பாலை நில மக்கள், கடறகரைப் பகுதிகளில் வாழும் மக்கள், மலைசார்ந்த பகுதிகளில் வாழும் மக்கள், வடதுருவ மக்கள், வெபபமணடலப் பகுதிகளில் வாழும் மக்கள் ஆகியோர் அவரவர் சுற்றுச்சூழலிற்கேற்பப பல தக வமைப்புப் பணபுகளைக் கொண்டுள்ளனர்.

**நெகிழ்வுத்தன்மை:** மேற்கண்ட அனைத்துத் தகவமைப்புகளும் இரண்டு வகைகளில் உள்ளதைக் காணலாம். ஒன்று தகவமைப்பானது ஒரு தலை முறையில் ஏற்பட்டுப் பின் அது மரபுவழியில் தொடர்ந்து செல்கிறது. இவ்வாறு மரபுவழியில் செல்லும்போது பின்வரும் தலைமுறைகளில் ஒருசில மாற்றங்களை மட்டும் ஏற்படுத்திக்கொண்டு அதன் வாழ்க்கையமைப்பை நிலைநிறுத்திக்கொள்கிறது. இரணடு, மரபுவழியில் ஒரு இனத்தின் தகவமைப்புப் பண்புகள் கொணடு செலலப்பட வேண்டிய நிலை ஏற்படுவதில்லை. ஏனெனில், ஒரு குறிப்பிட்ட இனத் தவர் சில காலங்களுக்கு மட்டுமே ஒரு குறிப்பிட்ட இடத்தில் இருக்க வேணடியுள்ளதால் அந்தக் குறிப் பிட்ட காலத்திற்கு மட்டும் ஒரு குறுகிய காலச் சூழ் நிலை இணக்கப்பாடு (Acclimatization) ஏற்படுத்திக் கொண்டு செயறபடுகின்றனர். தகவமைப்பு நிகழ்வு களில் மூன்றாவது வகையான தகவலைமப்பும் நிகழ் கிறது. அதை நெகிழ்வுத்தன்மை (Plasticity) எனக் குறிப்பிடுவர். இது மேற்கூறிய இரண்டு வகைகளுக் கும் இடைப்பட்டதாகும்.

நெகிழ்வுத்தன்மை மூலம் ஓர் இனத்தவர் ஒரு பகுதியிலிருநது புதிய பகுதிக்குக் குடியேறி வாழும் போது புதிய சூழலிற்கேற்ப அவரது உடல் வளர்ச்சியில் மாற்றஙகள் ஏற்பட்டு அவை அவரை நன்கு தக வமைக்கச் செய்கின்றன. இது ஓர் இடைக்காலத் தகவமைப்பாகவோ குறுகியகாலத் தகவமைப்பா கவோ இல்லாமல் வாழும் காலம் முழுமையும் அப் பண்புகளை நிலைபெறச் செய்கிறது. அமெரிக்காவில் மெக்சிகோ பகுதிக்குக் குடியேறிய வேற்றுநிலப் பகுதி மக்களை ஆய்வுசெய்த மானிடவியலார் அவர்களின் பழைய பண்புகளில் ஏற்பட்ட மாற்றங்களை ஆராய்நதபோது, அம்மாற்றங்கள் மாறும் நிலப்பரப் பிற்கு ஏற்ப உடலின் எடை, உயரம், உறுப்பமைப்பு கள் முதலானவற்றில் மாற்றங்கள் ஏறபட்டு மக்களை அப்பகுதியின் உயிரப் பணபாட்டுக் காரணிகளோடு (Biocultural Factors) ஒருங்கிணைந்தும் தகவமைந் தும் வாழ வகைசெய்கின்றன என்பது புலனாயது.

சீ.ப.

**துணை நூல்கள்:**

**Bodley, John H.,** Anthropology and Contemporary Human Problems, Cummings Publishing Co. Menlo Park, California, 1976.

**Damon, Albert (ed.)** Physiological Anthropology, Oxford University Press. Newyork, 1975.

**Moran, Emilio F.,** Human Adaptability; An Introduction to Ecological Anthropology, Westview, Press, Colorodo, 1979.

**Stini William A.,** Ecology and Human Adaptation, W.C. Brown Company, Iowa, 1975.

***தகவல் தேர்ந்தறிவிப்புப் பணி***: தனிப்பட்ட ஒருவருக்கோ, குழுவிறகோ அண்மைக்காலத் தகவல் களைத் தொகுத்தளித்தல் அல்லது ஒரு குறிப்பிட்ட துறையில் தேவையான தகவல்களைத் தேவையான நேரத்தில் தருவதைத 'தகவல் தேர்ந்தறிவித்தல பணி' (Selective Dissemination of Information) என்று சொல்லுகின்றனர். இது கணிப்பொறி (Computer) மூலம் நடைபெறுகிறது. கணிப்பொறி இல்லாவிடினும் மனித சக்தியின் மூலமாகவும் இப் பணியைச் சிறப்பாகச் செய்யலாம்.

இப்பணியானது ஒவ்வொரு வாசகருக்கும் தனிப் பட்ட முறையில் சரியான செய்திகளை ஒனறுதிரட்டி அளிப்பதற்காகவே ஏற்படுத்தப்பட்டிருக்கிறது. ஆய் வுத் தொடர்புடைய கருத்துப்பொருள, செய்திகள், நூலகத்திற்கு வரும் நூல்கள, காலமுறை இதழ் கள், தொடர் வெளியீடுகள் மற்றும் ஆவணஙகளி லிருந்து தொகுக்கப்படுகின்றன. இவ்வித ஆவணங் களின் தொகுப்பு ஆவணங்ககளின் குறிப்பேடு (Document Profile) எனபபடும். தனிபபட்ட முறையில் ஒவ்வொரு வாசகருக்கும் ஆய்வாளருக்கும் வேண்டிய செய்திக் குறிபபுகளைக் கொண்டு வாசகர் குறிப்பேடு (Users, Profile) தயாரிக்கப்படுகிறது. அக் குறிப்பேட்டில் ஒவ்வொரு வாசகருககும ஒரு தாள கொடுக்கபபட்டு அவருக்கு வேணடிய செய்திக் குறிப்புச் சொலலைத் தலைப்பாக வைத்து வாசகர் குறிப்பேடு தயாரிக்கப்படுகிறது. முறையான இடை வெளியில் அதாவது பதினான்கு நாளகளுக்கு ஒரு

முறை இவ்விரு தொகுப்புகளையும் ஒப்பிட்டுத் தேவையான செய்திகள் வாசகருக்குத்தேர்ந்தெடுத்து அளிககப்படுகின்றன. இப்பணியில் வாசகரும் தமக்கு வேண்டிய புதிய செய்திகளையோ, மாற்றங்களையோ இணைக்கச் சொன்னால அத்தகைய யோசனைகளை ஏற்று, அவ்வாசகர் தாளில் தக்க மாற்றம் செய்து எதிர்காலச் சேவைக்குக் கொடுக்கலாம். இம்முறையில் வாசகருடைய கருத்தும், ஆலோசனையும் பெற்று, வாசகர் குறிப்பேட்டுக் கோப்பைத் தக்கமுறையில் வைத்துக்கொள்ள முடிவதால் இப்பணி வாசகராலும் ஆய்வாளராலும் மிகவும்விரும்பப்படுகிறது. இவ்விதப் பணியைப் பல்கலைக் கழகம், ஆய்வு நிலையங்கள, ஆய்வு வளர்ச்சி மையங்கள ஆகியவற்றிலுள்ள நூலகங்களில் காணலாம். மு.இரா.

**துணை நூல்கள்:**

**Ravichandra Rao, (K)**, Library Automation: DRTC Refresher Seminar-14, DRTC Indian Statistical Institute, Bangalore, 1983.

**Thomas (Kiana M)**, The Effective Reference Librarian, Academic Press, Newyork, 1981.

**தகவலறிக்கை.** தனி நிறுமம் நிறும அமைப்புச் சான்றிதழ் பெற்றவுடன் தொழிலைத் தொடங்கலாம். ஆனால், பொது நிறுமம் தொழிலைத் தொடங்குவதற்கு முன் மேலும் சில சட்டச் சடங்குகளைச் செய்து முடிக்கவேண்டும். அவற்றில் ஒன்று தகவலறிக்கை (Prospectus) தயாரித்து வெளியிடுவதாகும். ஒரு பொது நிறுமத்தின் வைப்புத் தொகையையோ பங்கையோ கடனீட்டுப் பத்திரத்தையோ பொது மக்கள் வாஙக அவாகளுக்கு நிறுமம்விடும் ஓர் அழைப்பே தகவலறிக்கையாகும். இது ஒரு சிறறேடு அறிக்கை அலலது ஒரு விளம்பரம் போன்று தோன்றும். ஒரு தனி நிறுமம் தகவலறிக்கை வெளியிட வேண்டிய அவசியமில்லை. காரணம் அதன பங்குகள பொதுமக்களுக்கு வழங்கப்படுவதில்லை. ஆனால், ஒரு பொது நிறுமம் அவசியம் ஒரு தகவலறிக்கையைப் பதிவாளரிடம் அளிக்க வேணடும். இல்லாவிடில் பங்குகளை ஒதுக்கீடு செய்யமுடியாது. அதனால் தொழிலைத் தொடங்கவும் முடியாது.

ஒவ்வொரு தகவலறிக்கையும தேதியிடப்பட வேண்டும். பொது மக்களுக்கு வெளியிடுவதற்குமுன எல்லா இயக்குநர்களும் கையெழுத்திட்ட அதன் ஒரு படியைப் பதிவாளரிடம் தாக்கல செய்யவேண்டும். அவ்வாறு தாக்கல் செய்த 90 நாள்களுக்குள் தகவலறிக்கை வெளியிடப்பட வேண்டும். தகவலறிக்கையில் குறிப்பிட வேண்டிய செய்திகள: 1) நிறுமத்தின் முக்கிய நோக்கங்கள், 2) அமைப்பு முறை ஏட்டிலுள்ள செய்திகளின் சுருக்கம், 3) பங்குகள், அவைகளின் வகைகள், எண்ணிக்கை, 4) இயக்குநர்களின் தகுதிப் பங்களவு, 5) குறைநத அளவுப் பஙகெடுபபு 6) வெளியிடப்படும் மீட்பு, முன்னுரிமைப பங்குகள பற்றிய செய்திகள், 7) நிறுமததின நிருவாகமுறை, 8) இயக்குநர், மேலாண்மை இயக்குநர் போன்றவர்களின் ஊதியம், 9) தொடக்கச செலவுகள் பற்றிய விவரம், 10) ஒப்புறுதியாளர் (Underwriter) பெயர், முகவரி, ஒப்புறுதிக கழிவு போன்ற விவரங்கள, 11) முன்னரே இயஙகிவரும் தொழிலை நிறுமம் ஏறறு நடத்துவதாக இருநதால் கடந்த 5 ஆண்டுகளில் இத தொழில் நடந்துவநத விவரஙகளைக் கொணட அறிக்கை, 12) நிறுமத்தின் கூட்டங்களுக்கு உறுப்பினர்கள் வருகை தருதல், அவற்றில பேசுதல் அல்லது வாக்களித்தல் பறறிய விவரஙகள, 13) நிறுமத்தைத தோற்றுவிப்பதிலோ தகவலறிக்கை தேதியிலிருநது இரு ஆணடுகளுக்குள் அது வாஙகிய அல்லது வாஙக எண்ணியுள்ள சொத்தில் இயக்குநா அல்லது தோற்றுவிப்பாளர் (Promotor) போன்றோாகளுக்குளள அக்கறை, 14) பங்குவெளியீட்டிலிருநது கிடைககும் தொகையிலிருந்து முழுதும் அலலது ஒருபகுதி செலுத்தி வாஙகப்பட்ட சொத்துகள, 15) தொடககச்செலவிற்கென நிறுமம்செலுத்தவேணடிய தொகை, 16) நிறுமம் கடனவாஙகிய வகையில் திருப்பிச செலுத்தவேணடிய தொகை, நடைமுதல், 17) பிற செலவுகள்-அவைகளின் தன்மை, தேவை-மதிப்பீடு போன்றவை, 18) பங்கெடுப்புப் பட்டியலகள, திறக்கப்படும் நேரம், 19) நிறுமத்தின் பங்குகள அல்லது கடனீட்டுப் பத்திரஙகளை வாங்கிட யாருக்காவது முன்னுரிமை தந்திருநதால அது பறறிய விவரம், 20) நிறுமத்தின தணிக்கையாளர்களின் பெயரும், முகவரியும்-அவர்கள் தயாரித்துளள இலாப-நட்டக் கணக்கு, இருப்புநிலைக் குறிப்பு ஆகியவற்றைப் பார்வையிட நியாயமான இடம்-காலம் போன்றவை.

**தகவலறிக்கையில் காணப்படும் பொய்யுரைக்கான பொறுப்பு:** தகவலறிக்கையில் பொய்யுரை (Misrepresentation) இருந்தாலும் அல்லது முக்கியமான கூற்று விடுபட்டோ மறைக்கப்பட்டோ இருந்தாலும அதறகு உரிமையியல் பொறுப்பும் (Civil Liability), குறறவியல பொறுப்பும் (Criminal Liability) உணடு. உரிமையியல் பொறுப்புப் பற்றி நிறுமச சட்டத்தின் 62-ஆம் பிரிவும், குற்றவியல பொறுப்புப்பற்றி 56,63-ஆம் பிரிவுகளும் கூறுகின்றன. மேலும பொதுச் சட்டத்தில் காணப்படும் மோசடிக்கும் இதனால் ஆளாக வேணடிவரும.

**உரிமையியல் பொறுப்பு:** தகவலறிக்கையில் உண்மைக்கு மாறான கூற்று இருந்து அதை நம்பிப் பங்குகளையும், கடனீட்டுப் பத்திரங்களையும் வாங்கி இழப்படைந்தவர்கள் இழப்பீடு கோரும் உரிமையையும், பங்கு வாங்குவதற்குத் தாங்கள் செய்து கொண்ட ஒப்பந்தங்களை மறுதளிக்கும் உரிமையையும் பெறுகிறார்கள். இதற்காக இரணடு நிபந்தனைகளை அவர் பெற்றிருககவேணடும். பொயயுரை பொருண்மை (Fact) பற்றியதாக இருக்கவேணடும். அதாவது சட்டம் பற்றியதாக இருக்கக்கூடாது. பரிகாரம் பெறுவதற்கு எடுக்கப்படும் நடவடிக்கைகள் நியாயமான காலத்திற்குள் எடுக்கப்பட வேணடும். இயக்குநர்கள் தோறறுவிப்பாளர், தகவலறிக்கையை வெளியிட அனுமதித்தவர்கள ஆகியோர் இப்பொறுப்பிற்கு உரியவராவார்கள. ஆனால், தக்க காரணம் காட்டினால் இவர்கள் இப்பொறுப்பிலிருந்து தப்ப வழியுண்டு இவர்களுள் ஒருவர் இழப்பீட்டுத் தொகை முழுவதையும் செலுத்த நேர்ந்தால் மற்றவர்களிடமிருந்து அவரவர்கள செலுத்தவேண்டிய தொகையை வசூலித்துக்கொள்ளலாம்.

தகவலறிக்கையில் ஒரு வல்லுநரின் கூற்று அல்லது சான்றிதழ் தோன்றுவதற்கு அவர் இசைவு தந்திருந்தால் அவற்றில் பொய் இருந்தாலதான் அவர் பொறுப்பாளியாவார். சில சூழ்நிலைகளில் அவரும் இப்பொறுப்பைத் தவிர்க்கலாம.

**குற்றவியல் பொறுப்பு:** ஒரு தகவலறிக்கையில் பொய்யுரை இருந்தால் அதைத் தயாரித்த ஒவ்வொருவருக்கும் இரணடாணடு சிறைவாசமும், உரூ. 5000/-அபராதமும் விதிக்கப்படும். ஆனால், அவ்வுரையினை முக்கிய உரையல்ல என்று நிரூபித்தாலும் அச்செய்தி உண்மையானதாக இருக்கவேணடுமென்று அவர்கள் உண்மையிலே நம்பினதற்குத் தகுந்த ஆதாரம் காணப்பட்டாலும் அவர்கள் இப்பொறுப்பிலிருந்து விடுதலையடைகின்றனர். மோசடி செய்திடும் நோக்கத்தில் செய்திகள் இருந்தால், பங்கு வாங்குவோருக்கு ஏற்படும் இழப்பையும் அவர்கள் ஏற்க வேண்டும். தணிக்கையாளாகள், வங்கியர்கள் வல்லுநர்கள் போன்றோர்களுக்கு இக்குற்ற இயல்பில் பொறுப்பில்லை மோசடிக்கு 5 ஆண்டுகள் சிறைவாசமும் உரூ.10,000/- அபராதமும் விதிக்கப்படும்.

**தகவலறிக்கைக்கு மாறான அறிக்கை:** நிறுமம் தனக்கு வேண்டிய பங்கு முதலை உற்றார், உறவினர், நண்பர்களிடமிருந்தே திரட்டிவிடுமேயானால் பொதுமக்களிடமிருந்து திரட்டவேண்டிய அவசியமில்லை. எனவே, தகவலறிக்கைக்கு மாறான இவ்வறிக்கை (Statement in Lieu of Prospectus)யைத் தயாரித்துப் பதிவாளரிடமும் தாக்கல் செய்யவேண்டும். இதிலும் உண்மையான செய்திகளை மட்டுமே குறிப்பிட வேண்டும். எல்லா இயக்குநர்களும் இதில் கையெழுத்திட வேண்டும். பங்கு ஒதுக்கீடு செய்வதற்கு முன்னர்க் குறைந்தது மூன்று நாட்களுக்கு முன் இதைப் பதிவாளரிடம் தாக்கல செய்யவேண்டும். இவ்வாறு தாக்கல் செய்யாமல் செய்யப்படும் பங்கு ஒதுக்கீடு செல்லாது. இச்சட்டத்தின் மூன்றாவது அட்டவணையின் பகுதி ஒன்று, இரணடில் அடங்கியுள்ள செய்திகளைத் தன்னகத்தே கொணடுள்ளது. தகவலறிககையின் உள்ளடக்கமும் இதன் உள்ளடக்கமும் ஒன்றுதான்.

**தகவலறிக்கையின் முக்கியத்துவம்:** நிறுமங்களின் பங்குகளை, கடன் பத்திரங்களை வாங்குவதா வேண்டாமா எனறு பொதுமக்கள் முடிவு எடுத்திடத் தகவலறிக்கை அடிப்படையாக விளங்குகிறது. எனவே, இது தன்னிடம் உள்ளசெய்திகளைக் குறைக்காமலும் மறைக்காமலும் தரவேணடும். இச்செய்திகளை வைத்து முதலீடு செய்ய விழைபவர்கள் நிறுமத்தின தொழில இயல்பு, இயக்குநர்கள் ஈடுபாடு, முதல் திட்டம், தணிக்கையாளா, சட்ட நிபுணர், தரகர், பங்குதாரர்களுக்குள்ள பாதுகாப்புப் போன்றவற்றை ஆராய்ந்து பின்னர் முதலீடு செய்வது பற்றிமுடிவு எடுக்க வேண்டும். ஆனால், நம் நாட்டு முதலீட்டாளர்களுக்கு இந்த ஆய்வு செய்யும் திறமை அவ்வளவாக இல்லை. எனவே, அவர்கள் இத்துறையில் வல்லுநர்களான முதலீட்டு முகமையகங்கள, தரகர் வங்கிகள் போன்றவற்றின் உதவியை நாடுகின்றனர்.

போதுமான நிதி வசதியற்ற நிறுமங்களும், மோசடி எண்ணங்கொண்ட நிறுமங்களும் தோன்றாமலிருப்பதற்காக அரசு நிறுமச் சட்டத்தின் கீழும் ஏனைய சட்டங்களின் கீழும் தக்க கட்டுப்பாடுகள் விதித்துள்ளது. அதன் விளைவாக இப்பொழுது தகவலறிக்கைகள் பொதுமக்களால் மட்டுமல்லாமல் அவர்களின் நலனுக்காக நிறுமப் பதிவாளர், முதல் வெளியீட்டுக் கட்டுப்பாட்டு அலுவலர் (Controller of Capital Issue), பங்குமாற்று நிலையங்கள் (Stock Exchange) போனற அமைப்புகளாலும் ஆய்வு செய்யப்படும் நிலை தோன்றியிருப்பது வரவேறகத் தக்கதும் பாராட்டத்தக்கதுமாகும். கே.என் இரா.

**தகவுக் கல்வி:** ஒரு சமுதாயம் தான் உயர்வாகக் கருதும் தகவுகளைத் தனது அடுத்தடுத்த தலைமுறையினருக்கு வழங்க வேண்டுமென்பதை முக்கியமானதாகக் கருதுகிறது. இத்தகைய தகவுகள் அச்சமுதாயத்தில் கல்விக் கூறுகளாக அமைகின்றன. ஆகவே, தகவுகளும் கல்வியும் ஒன்றோடொன்று

பின்னிப் பிணைந்தவை. சமுதாயம் வரையறுத்த விழைவுகளும் இலக்குகளும் தகவுகளாகின்றன.

இந்தியாவில் தொன்மைக் காலந்தொட்டு அறம், பொருள், இன்பம், வீடு என்னும் நால்வகைப் பேருண்மைகள் வற்புறுத்தப்படுவது கண்கூடு. அற முறைத்தகவு-அறம் எனவும், பொருளாதாரத் தகவு -பொருள் எனவும் உளவியல்-தகவு-இன்பம் எனவும், ஆன்மிகத்தகவு-வீடு எனவும் குறிக்கப்பெறும். அறம் அனைத்திற்கும் அடிப்படை. வாழ்வு எவ்வாறு அமைய வேண்டும் என்பதில் இந்தியச் சமய அமைப்புகள் காட்டும் கல்வித்தகவுகள் சிறப்பானவை. உண்மை, அறிவு, இன்பம் என்னும் மூன்று தகவுகளும் சத்தியம், ஞானம், ஆனந்தம் எனவும் அழைக்கப்படும். வேத உபநிடதங்கள் வற்புறுத்துவதும் இவற்றையே எனலாம். பகவத் கீதையில் மனிதருள் நால்வகை உண்டென்பது கூறப்படுகிறது. கவலையால் பீடிக்கப் பட்டவன், உண்மையைத் தேடுபவன், சுயநலம் உடையவன், ஞானி என்ற அப்பகுப்பும், செய்யும் தொழிலே தெய்வம், தன்னை மறந்து கடமை செய்க என்ற கோட்பாடுகளும் அக்காலக் கல்வி எத்தகைய தகவுகளைக் கொண்டிருந்தது என்பதைக் காட்டும்.

இந்தியச் சமயங்களுள் உலகாயதக் கோட்பாடான சாருவாக சமயம் இவ்வுலக இன்பம் ஒன்றையே பெருந்தகவாகக் கருதியது. மிகுதியான இன்பமும் மிகக் குறைந்த துன்பமும் கொண்ட வாழ்வு முறையை அச்சமயம் காட்டியது. 'பொருளும் இன்பமும் மட்டுமே' என்ற இச்சமயத்தினா சிலர், அறத்தைச் சமூக அமைப்பின் அடிப்படையாகக் கொண்டனர்.

சமண சமயக் கல்வியில் உலகப்பற்றிலிருந்து விடுதலை பெறுவது உயர் இலக்காக இருந்தது. நன்னம்பிக்கை, நல்லறிவு, நன்னடத்தை என்ற மும்மணிகளும், துன்பம் செய்யாமை பொய்யாமை, திருடாமை, புலனடக்கம், பற்றின்மை என்ற ஐந்து உறுதி மொழிகளும் இச்சமயக் கல்வியில் இடம் பெற்றன.

பௌத்த சமயக் கல்வியில் துன்பம், துன்பத்தின் காரணம், துன்பத் துடைப்புக்கு ஏதுக்கள், துன்ப நீக்கவழிகள் என்னும் நான்கு உண்மைகள் வற்புறுத்தப்பட்டன. துன்பம் நீங்க நல்ல எண்ணம், நல்ல மனப்பான்மை,நல்லமுடிபு,நல்லபேச்சு, நன்னடத்தை, நல்வாழ்வு, நன்முயற்சி, நல்லதியானம் என்னும் எண் வகை வழிகள் தகவுகளாக அமைந்தன.

வேதாந்த சமயக் கல்வியில் வீடுபேறு என்னும் மோட்சத்திற்கு அறமே அடிப்படை எனக் கூறினர். எண்வகை யோகங்கள் இதில் இடம் பெற்றன. கரும யோகம், ஞானயோகம், பக்தியோகம், இராச யோகம் என்பனவும் விளக்கப்பட்டன

மேனாட்டுக் கல்விக் கொள்கைகளில் முழுமையான தகவுகளும் (Absolute Values) செயல்முறைப் பயன் நாட்டமுடைய தகவுகளும் (Materalistic Values) இடம் பெறுகின்றன. புறப்பண்பு சார்ந்த (Extrinsic) தகவுகள்,அகப்பண்புகள் சார்ந்த (Intrinsic) தகவுகள் எனவும் பகுக்கப்படுகின்றன.

மேலை நாட்டுத் தத்துவ ஞானிகளும் கல்வியில் உயர் தகவுகளை வரையறுத்துள்ளனர். பிளேட்டோவின் கருத்துக் கொள்கையும், அரிசடாட்டிலின் புறக் கருத்துக் கொள்கையும், பெர்க்கிலியின் அகவிழிக் கருத்துக் கொள்கையும், காண்டின் தோற்றத் தன்மைக் கொள்கையும், ஏகலின் முழுமைக் கொள்கையும் அறக்கோட்பாட்டை மையமாகக் கொண்டவை. தன்னை உணர்தல் என்னும் உயர் தகவினையுடைய கருத்தியல் கொள்கையில் (Idealism) இவை இடம் பெறுகின்றன. இதில் ஆன்மிக உணர்வு பெறுதலே கல்வியின் குறிக்கோளாகும்.

செயல்முறைக் கொள்கை அல்லது புறஉண்மைக் கொள்கையில் (Realism) புறச்சூழலைப் புரிந்து கொள்ளத் தேவையான அறிவும் திறன்களும் பெறுதல் வற்புறுத்தப்படும். புற உலகின் செயல் முறைக்குத் தக அமைந்து மூத்தோர் வகுத்த நடைமுறைகளுக்கேற்ப ஒழுகுதல் வேண்டும் என்பர். வாழ்வுத் தத்துவம் கல்வித்தத்துவம் இரண்டுமே மனிதன், சூழ்நிலை இவற்றின் அடிப்படையிலேயே உருவாகின்றன இலக்கியப் படிப்பினை வற்புறுத்தும் மனிதநேய புற உண்மைக்கொள்கையும் (Humanistic Realism) சமுதாயத்தில் சிறந்து வாழ்வதற்குரிய கல்வி முறையைக் கூறும் சமூகப் புற உண்மைக் கொள்கையும் (Social Realism) அறிவியல் முறைகளைக் கையாண்டு தாமாகவே புதியன காணலை வற்புறுத்தும் புல உண்மைக் கொள்கையும் (Sense Realism) இவற்றில்இடம்பெறும்.

இயற்கைக் கொள்கை (Naturalism),இயற்கையே உண்மைப் பொருள் எனவும், உண்மை அறிவு புலன்களின் வழியே தான் கிட்டும் எனவும், அனைத்து வகை அறிவிற்கும் அறிவியலே ஆதாரம் எனவும் கூறும். தன் வெளிப்பாடு (Self Expression), தன் முழுமையடைதல் (Self Actualisation) இதன் உயர் தகவுகளாகும். மனித இன மேம்பாட்டினை விரைவில் அடையப் பெறுதலே கல்வியின் குறிக்கோள் என்பர்.

மனித நேயக் கொள்கையில் (Humanism), மனித இயல்பும், மனிதநேயமும் அடிப்படையாகும். மரபு வழி வந்த பரந்தகல்வி மனப்பான்மையுடன் ஆன்மிக உணர்வையும் குழந்தையின் சுய வெளிப்பாட்டினையும் இணைத்துக் காணும் கொள்கை இது. அறப்பண்புகள் அறிவு வளர்ச்சியின் மேம்பாட்டின் மூலம் அமையும் எனபது இதன கருத்து.

மாற்றமே உலகத்தின் சாரம். முழுமையான உண்மை, நிலையான உண்மை என்பன காண முடியாதவை. சிந்தனையைக் காட்டிலும் செயலே முதன்மையானது. அந்தந்தச் சூழ்நிலைகளுக்கும் காலத்திறகும் பொருந்தக் கூடிய, மாறக் கூடிய தகவுகள் உள்ளன. கல்வி எனபது ஒரு கருவியே, அது முடிவன்று. தனது அனுபவ விளைவாகவே மனிதனின் வளர்ச்சியும் முன்னேற்றமும் அமையும்.

நிகழ்நிலை இருத்தல் கொள்கை (Existentialism) மனிதன் தானே எலலாச் செயல்களுக்கும் பொறுப்பு எனக் கூறுகின்றது. தன் செயல்களின் கூட்டு விளைவாகவே மனிதன் திகழ்கிறான என்றும் கூறும். தனியாள் தனித்தன்மை பெற்ற முழுவளர்ச்சியும், தனிமனித சுதந்திரமும் இதில் வற்புறுத்தப்படும். இன்றியமையாக் கொள்கையினபடி (Essentialism) உலகில நிலைத்த ஒழுங்குக்குப் பயிறசியளிப்பதே கல்வி எனறு கூறுவர்.

முற்போக்குக் கொள்கை (Progressivism) பணபாட்டு முனைப்பினமைக்குப் பயிற்சியளித்தலே கல்வி என்று பேசும். மாணவனின் முழுமை தழுவிய வளர்ச்சியே குறிக்கோள். எதைக் கறபது என்பதைவிட எப்படிக் கற்பது என்பதே இதில் சிறப்பிடம் பெறுகிறது.

மாற்று அமைப்புக் கொள்கை (Reconstructionism) கூட்டுச் சமுதாயத்தைக் காட்டும். எதிர் காலத் தொலை நோக்கும், சமூக நிறைவுத் தன்மையும் கொணட பன்னாட்டுணர்வுத் தகவுகள் இதில் இடம் பெறுகின்றன.

அண்மைக் காலத்தில் வாழ்நத இந்தியசசிந்தனையாளர்களுள சுவாமி விவேகானநதர், இரவீந்திர நாத தாகூர், அரவிந்தர், மகாத்மா காநதியடிகள் போன்றோர் கல்வித் தகவுகளைச சிந்தித்துள்ளனர். ஆன்மிக வழியில் மக்களுக்குத் தொணடாற்றித் தன் முயற்சியில் வாழ்தல் என்ற வேதாந்த சமதருமத்தைச் சுவாமி விவேகானந்தர் கூறினார். காநதியடிகள் தமது ஆதாரக் கலவித் திட்டத்தில் சததியத்தின் பேராற்றல், எல்லையில்லாத் தனனம்பிக்கை, உழைப்பு மனப்பான்மை, கட்டுப்பாடு ஆகியவற்றைத் தகவுகளாகக் காட்டினார். பரந்த உலக மனப்பான்மை பெறுதலே தாகூரின் குறிக்கோள். விலங்கினின்றும் மனிதன் வளர்ச்சியடைந்தது போலவே மனிதனின்றும் உயர் மனிதன் வளர்சசியடைவான். அப்பொழுது கடவுளுடைய அரசு இப்பூலகில் அமையும்; அமைதியும் முன்னேற்றமும் ஆனந்தமும் கிடைக்கும் என்று அரவிந்தர் காட்டும் அகணட அறிவியல் கொள்கையில் முழுயோகம் வற்புறுத்தப் படும்.

இன்று உலகில் சமயச் சார்புடைய அரசு, சமயச் சார்பற்ற அரசு, பொது உடைமை அரசு என்று நாடுகள் தத்தமக்குரிய அரசு முறைகளை ஏற்றுள ளன. அந்நாடுகளில் அமையும் கல்வி முறையில் அதற்குரிய தகவுகள் இடம் பெறும். தனிமனித வளர்ச்சி எல்லாவற்றிற்கும் பொதுவானதாகும். தனிமனித நல்வாழவிற்கும் தேசிய ஒருமைப்பாட்டிற்கும், பன்னாட்டுணர்வுக்கும் ஏற்ற கல்வியே உயர்வுடையதாகும். சே.கி.

துணை நூல்கள்:

**Brubacher J.S.**, Modern Philosophy of Education, Bombay, 1969.

**Chaplia, Mand**, Philosophies of Higher Education, London, 1977.

**Seethuramu A.S.**, Philosophy of Education, New Delhi, 1978.

**Wingo M. G.**, Philosophies of Education, New Delhi, 1975.

**தகாநிலை வற்புறுத்தல்:** ஒரு முறையான ஒப்பந்தத்திற்கு இரணடு தரப்பினர் தேவை. அவர்கள் பித்துப்பிடித்தவர்களாகவோ இளவர்களாகவோ இருக்கக்கூடாது. இரு தரப்பினரும் மனம் ஒப்பி ஒரு பொருள் குறித்துக் கட்டாயம், வற்புறுத்தல், வலுக்கட்டாயம், திரித்துக்கூறல், மோசடி ஏதும் இல்லாமல் விருப்பத்தோடும் சுதந்திர உணர்வுடனும் ஒப்பந்தத்தில் ஈடுபட வேணடும். வற்புறுத்தும் காரணமாக ஏற்படும் ஒப்பந்தம் செல்லாது.

தகாநிலை ஒப்பந்தம் குறித்து ஒப்பந்தச் சட்டத்தின் பிரிவு 16 கூறுகிறது. ஒரு தரப்பினர் தம் செல்வாக்கினைப் பயன்படுத்தி, மறுதரப்பினரின சுதந்திர உணர்வினைக் கட்டுப்படுத்தக்கூடிய ஆற்றல் பெற்றவராய் இருப்பின், அவர்கள் இருவரிடையே ஏற்படும் ஒப்பந்தம், செல்லத்தக்க ஒப்பந்தம அன்று. எடுத்துக்காட்டாகத் தந்தை-மகன், ஆசிரியர்-மாணவன், மதகுரு-சீடன

மருத்துவர்-நோயாளி, வழக்கறிஞர்-கட்சிக்காரர் ஆகியோரிடையே ஏற்படும் ஒப்பந்தங்களைக் தகா நிலை ஒப்பந்தங்கள் என்று கூறுவர். காரணம், ஒப்பந் தத்தில் ஒருவர் செல்வாக்குள்ள உயர்ந்த நிலையி லும், மற்றொருவர் சாதாரண நிலையிலும் இருப் பதைக் காணலாம். இருவரிடையே உள்ள உறவு தெய்விகத் தன்மை பெற்றதில்லையாயினும் மறை முகமான உறவு (Fiduciary) இருப்பதால், ஒருவர் அடுத்தவர் சொல்லின் சட்டுப்பாட்டுக்குள் கட்டுப் பட்டு நிற்பதைக் காணலாம். ஒருவர் மற்றொரு வரை மனோதத்துவ முறையில் வசியம் செய்து ஒப்பந்தத்தில ஈடுபடுத்துவாரேயானால் அத்தகைய ஒப்பந்தம் செல்லுமா என்பதற்குச் சட்டத்தில் பதில் இல்லை.

தகாநிலை வற்புறுத்தல் என்பது மோசடி எனப தின் ஒரு கூறு என்று பல சட்டவல்லுநர்கள்கருத்துத் தெரிவிக்கின்றனர். ஏனெனில், மேலாண்மை செலுத் தக்கூடிய ஒருவர் மற்றொருவரிடம் ஒப்பந்தம் ஏற் படுத்திக் கொள்கின்றார் என்றால் எப்படித் தரப் பினர்களிடையே சமத்துவம் பொருந்திய சுதநதிர மான இசைவு (Fair Free Consent) இருகக இயலும்? எனவே, ஒப்பந்தம், வலுக்கட்டாயம, பய உணர்வு, தலைக்குனிவு, குற்ற உணர்வு, தாழ்வு மனப்பானமை முதலியவைகளின் பயனாய் ஏற்படுவதும் உணடு. எடுத்துக்காட்டாக, வேலை கொடுக்கும் முதலாளிக கும் வேலை பெற்றுக் கொள்ளும் வேலைககாரனுக் கும் இடையே ஏற்படும் ஒப்பந்தம் எப்படிச் சமநிலை ஒப்பந்தமாக இருக்க முடியும்? ஒருவர் உயாந்த நிலையிலும், மறறொருவர் தாழ்ந்த நிலையிலும் அல்லவா இருக்கின்றார்கள். எனவே, இங்குத தகா நிலை வற்புறுத்தல் இருநததாகக் கொள்ள இட முண்டு. (Mohoob Khan Vs Hakim Abdul Rahim AIR 1964 Raj 254).

இது போன்ற தகாநிலை வற்புறுத்தல் பல்வேறு நிலைகளில் எழலாம். அ என்பவர் ஆ என்பவரின நம்பிக்கைக்குப் பாத்திரமாக விளங்குகிறார். அ என பவர் தம் அறிவு, ஆற்றல் முதலியவைகளைத் தம் பொருட்டு மட்டுமே செலவிடுகிறார் என்று ஆ நம்பு கின்றார். அதுபோலவே அ செய்து வருகிறாா. இப் படியாக ஆ சுதந்திரமாகச் சிந்திக்கும் தன்மையைக் கைவிட்டு அ சொல்வதை அப்படியே முழுவதும் நம்பிச் செயற்படுகின்றார். ஓர் ஒப்பநதத்தில் அ என் பவர் ஆ உடன் ஈடுபடுகின்றார். அப்போது அ தம் முடைய நலனில் மட்டுமே அக்கறை கொண்டு செயற்படுகிறார். எப்போதும் போல் தம்முடைய நலன் குறித்தே அ செயற்படுகிறார் என்ற நம்பிக்கை யுடன் இருக்கிறார். ஆனால் அ அப்படிச் செயற்பட வில்லை என்று ஆ பின்னர் அறிகின்றார். அ மீதுதாம் வைத்த நம்பிக்கை வீண் போயிற்றே; அவர் தம்மை ஏமாற்றிவிட்டாரோ; நம்பிக்கை துரோகம் செய்து விட்டாரே என்று ஆ இங்கு நினைத்தால் அந்தஒப்பந தம் செல்லாது. (Lord Rings down in Smith Vs Key (1859) 7HLC 750.)

தகாநிலை வற்புறுத்தலின் மீது எழும் ஒப்பந்தங் கள் எல்லாம் தவிர்தகு ஒப்பநதஙகள் ஆகும். வில்லியம்சு எதிர் இரேலெக்சு (Williams Vs Baylex 1866 LR. 1. HL 200) எனற வழக்கில், மகன தம் தந்தையின கையொப்பத்தினை மோசடியாகப் போட்டு உறுதிமொழிப் பத்திரங்கள் (Promisory Notes) எழுதி அதனை வங்கி ஒன்றில் கொடுத்துப் பணம் அடிக்கடி பெறறுக் கொண்டாா். அது பற்றிய உணமை தெரிய வந்ததும் வங்கியின் மேலாளர் மகன் மீது வழக்குத் தொடுத்து அவரை நாடு கடத்தப் போவதாகத் தந்தையைப் பயமுறுத்தினார். தநதை பயந்தார், பணிந்தார். தம் சொத்துக்களின் பத்திரங் களை வங்கியில் அடைமானம் வைத்து நிலைமையைச் சமாளித்தார். பின்னர் வங்கி தம்மைப் பயமுறுத்தித் தம் சொத்துக்களின் பத்திரஙகளை அடைமானமாகப் பெற்றது என்று வழக்குத் தொடுத்தார் வழக்கினை விசாரித்த பிரபுக்கள சபை (House of Lords) ஒப் பநதம் தவிர்தகு ஒப்பந்தம் என்று கருத்துத் தெரி வித்தது.

ஒருவர் மற்றொருவர் மீது உணமையில் அதிகாரம் பெற்றிருக்க வேணடுமா அல்லது பெற்றுள்ளது போல் தோன்றினாலும் போதுமா? என்பதற்கு இரண்டினையும் சட்டம் கணக்கில் கொள்ளும் என்று கூறுவர். எடுத்துக்காட்டாக வரு மானவரி அதிகாரி, வருமானம் கணிக்கப்படுபவர் ஆகியவர்க்கு இடையே உள்ள உறவும், குற்றம் சுமத் தப்பட்டவர் காவலர் (Police) ஆகியவரிடையே உள்ள உறவும் பாதிக்கப்பட்ட உறவு என்றும், அதிகாரத் திடையே எழுந்த உறவு என்றும் கொளளுதல் நலம் பயக்கும். எனவே, இங்கெலலாம் தகாநிலை வற் புறுத்தம் இருந்ததாக் கூறலாம்.

நம்பிக்கையின் பயனாய் ஏற்படும் உறவுகள் பல விதங்களில் ஏற்படும். பொதுவாக எங்கெல்லாம் நம்பிக்கையும் நம்பிக்கைப் பொறுப்பு உரிமையும் (Trust) இருக்கின்றனவோ அங்கெல்லாம் நம்பிககை யின் பயனாய் ஏற்படும் உறவுகள் ஏற்பட வாய்ப்பு கள் உண்டு. எடுத்துக்காட்டாக வழக்கறிஞர்-கட்சிக்காரர்,பொறுப்புரிமை அமைப்பாளர்-பொறுப்பு உரிமையின் பயனை நுகர்பவர் ஆகியோரிடையே

உள்ள உறவினை மறைமுகமான உறவு (Fiduciary Relation) எனறு சொல்லலாம்.

மன வருத்தமெனும் பாரத்தைச் சுமப்பவர்கள (Persons in mental distress) பிறர் சொலலும் சில குறிப்புகளுக்கு அடிமை ஆகிவிடுகிறார்கள். அவர்களிடம் மிகவும் எளிதாக ஒப்பநதம் ஒன்றிற்குச் சமமதம் (Consent) பெற்று விடலாம் என்று கூறுவர். இப்படி மனவருத்தத்தில் மூழ்கி இருப்பவர்களிடம் செய்து கொளளும் ஒப்பந்தம் தவிர்தகு ஒப்பநதம் ஆகிறது. எடுத்துக்காட்டாக இராணி அன்னபூரணி எதிர் சாமிநாதன் (1910 34 Mad.7) என்ற வழக்கில் இப்பெண தன்னுடைய உரிமைகள சிலவற்றை நிலை நாட்டிக் கொளள வழக்கொன்று தொடுக்க வேணடி இருந்தது. இவள் ஒருகைம்பெண், இவளுக்கு வழககின் காரணமாகப்பணம் மிகுந்த தேவைாக இருந்தது. கடன் கொடுக்கக் கூடியவரிடம் பணம் கடனாகப் பெறச் சென்றாள. அவரோ 100 சதவீதம் வட்டி கொடுப்பதறகுச்சம்மதம் கொடுத்தால் கேட்ட கடன் தொகையினைக் கொடுப்பதாக வாக்குக கொடுத்தார் நெருக்கடியான பணத்தேவையின் பொருட்டு இப்பெண் அந்த நிபநதனைக்கு உட்பட்டு, கடனாளருடன் ஒப்பந்தம ஒன்றில் ஈடுபட்டாள். பின்னாளில் இது குறித்து வழக்கு முடிந்தபோது, இப்பெண் தாங்கொணா மனத்துயரில் மூழ்கி இருந்தனள். எனவே, கடனாளர் இவளை எளிதாகத் தம்முடைய குறிப்புக்கு இணஙக வைத்து, இசைவுடன் ஒப்பந்தத்தில் ஈடுபடுதத முடிந்தது எனறு கூறி வட்டித் தொகையை 24 சதவீதமாகக் குறைத்தது.

சட்டப்படியாக ஒருவர் வலுக்கட்டாயமாக ஒப்பந்தத்தில் ஈடுபட வேண்டும் என்றால் அதனைத் தகாநிலை ஒப்பந்தம் என்று கூறக் கூடாது. எடுத்துக்காட்டாக ஆந்திரா கரும்பு நிறுவனம் எதிர் ஆந்திரப் பிரதேசம் (Andhra Sugar Ltd Vs State of A.P.) (A.R 1968 S.C. 599) கரும்பினைப் பயிர் செய்து விளைவிப்பவர்கள் அதனைக் குறிப்பிட்டவரிடம் விற்கவோ, அதனைக் குறிப்பிட்டவர் மட்டுமே வாங்கவோ வேண்டும் என்று அரசியல் மற்றும் சமுதாயச் சூழ்நிலை காரணமாகச் சட்டம் திட்டப்பட்டு இருப்பின் அதன் படியே தான் அரசு நடக்கும். இதனைச் சட்டப்படியான தகாநிலை ஒப்பந்தம் என்று உச்ச நீதிமன்றம் கூறியது. இவ்வழக்கில் கரும்பு விளைவிப்பவர் எல்லோரும் சர்க்கரை ஆலைக்கும் கரும்பினை விற்பதற்குச் சுதந்திரம் பெற்று இருந்தார். ஆனால் கரும்பு விலைக்குக் கொடுக்கப்பட்ட முனைவினைச் சர்க்கரை ஆலை ஏற்றுக்கொண்டே ஆக வேணடும் என்ற கட்டாயம் சட்டப்படி இருந்தது. இருப்பினும் இது சுதந்திர ஒப்பந்தமே என்று சட்டக் கண்ணோட்டம் சொல்லும் என்று உசச நீதிமன்றம் கூறியது.

தகாநிலை ஒப்பந்தம் என்ற அடிப்படைக் காரணம் காட்டி ஒப்பந்தம் செல்லாது, அல்லது தவிர்தகு ஒப்பந்தம் எனறு வாதாடி வழக்கில் வெற்றி பெற, வாதி இரண்டு முககியக் கூறுகளை மெய்ப்பித்தல் தேவை. 1. ஒப்பந்தத்தின் மறு தரப்பினர் தம்முடைய எண்ணத்திற்குத் தன்னை ஈர்ப்பித்தார், தன்னால் சுதந்திரமாக அபபோது செயற்பட இயல வில்லை, அவருடைய வலுவான எண்ண அலைகளில் இருந்து தான மீள முடியவில்லை என்பதனையும், 2. அத்தகைய வலுவான மேலாண்மை நிலைமையை ஒப்பந்தம் ஏற்படும்போது அவர் பயன்படுத்தினார் என்பதனையும் வாதி மெய்ப்பிக்க வேண்டும.

சில சமயஙகளில நீதிமன்றங்கள் தகாநிலை வற்புறுத்தம் இருந்ததாக அனுமானம்(Presumption) கொள்ளலாம். இலஙகாசயர் கடன் நிறுவனம் எதிர் பிளேக்கு (Lancashire Loans Ltd Vs Black (1934 (1) K.B. 380) என்ற வழககில் 'அ' என்பவர் தக்க வயது (Major)பெண்ணை மணநது கொணடார். அப்பெண் தம் தாய்க்குப் பிணையப் பததிரம் ஒன்று வரைந்து கொடுத்தார். வழககினை விசாரித்த எல.செ. இசுகுருட்டன் (Scrutton L.J.) எனற நீதிபதி தாயின் தகாநிலை வற்புறுத்தல், பிணையப் பத்திரத்தில் அப்பெண் ஈடுபடக் காரணமாய இருநதது எனறு கூறினார். இதனை அனுமானித்தலுக்கு எடுத்துக் காட்டாகக் கூறலாம். பின்வரும சமயஙகளில தகாநிலை வற்புறுத்தம் இருந்ததாகக் கொளளலாம். எடுத்துக்காட்டாக, 1. 'அ' என்பவர் தம் தம்பி மகன் 'ஆ' என்பவனுக்குப் பணம் செலவுக்குக் கொடுத்து வருகின்றார். 'ஆ' பெரியவன் (Major) ஆனதும் கொடுத்த பணத்தினை விட மிகுதியான தொகைக் குப் பத்திரம் (Bond) ஒன்றினை எழுதி வாஙகிக் கொள்கின்றார். இங்குத் தகாநிலை வற்புறுத்தல் இருந்ததாகக்கூறலாம். 2.'அ' என்னும் மருத்துவர்'ஆ' எனனும் முதியவா ஒருவருக்கு வைத்தியம் செய்து வருகினறார், தான் செய்த மருத்துவச் சேவைககாகப் பெரும் தொகையினை (செய்த சேவைக்கு ஒவ்வாத முறையில்) ஒப்பநதம் வாயிலாகப் பெறுகிறார் என்றால் இஙகே தகாநிலை வற்புறுத்தல் இருந்ததாகக் கூறலாம், 3. 'அ' என்பவர் தம் ஊரில் உள்ள 'ஆ' என்னும் வட்டிக்குக் கடன் கொடுப்பவரிடம் அடிக்கடி கடன் பெறுகிறார். புதிய கடன் ஒன்று பெற முயலும் போது 'ஆ' நடைமுறைக்குப் பொருந்தி வாராத நிபந்தனை ஒன்றினை இட்டு அதனை 'அ' நிறைவு செய்ய வேண்டும் என்று கூறுகின்றார் என்றால் அங்குத் தகாநிலை ஒப்பந்தம் ஏற்பட்ட

தாக கூறவியலாது.. நிபந்தனை நடைமுறைக்கு ஒத்துவாராது. எனவே, அது தகாநிலை வற்புறுத் தலுக்குச சமமானது என்பதனை 'அ' மெய்ப்பிக்க வேண்டும்.

படுதாக்கள் (Pardanashin Women) போட்டி ருக்கும் பெணகளிடம் சட்டம் சறறுத் தளர்த்தப் பட்டுள்ளது போன்றே தோன்றுகின்றது. ஏனெனில அவர்களுக்கு உலகப் போக்கும வழக்கும் தெரியாது என்று நீதிமன்றம் நினைக்கிறது. எடுத்துக் காட்டாக முன்சி பசுலூர்ரகீம் எதிர் சும் சுனிசாபேகம் (Moonshee Buzloor Rahem Vs Sheum Soonina Begum (1867M.I.A. 551 P.C) என்ற வழககில விதவை ஒருத்தி மறுமணம் புரிந்து கொணடாள். தன்னுடைய புதிய கணவனுக்குச் சில அரசு மதிப்புச் சானறிதழ கள் (Valuable Government Papers) சிலவறறில மேலெழுத்து (Endorse) இட்டுக் கொடுத்தாள். பினனாளில் தன்னிடம் இருநது அவை தகாநிலை வறபுறுத்தல காரணமாகப் பெறபபட்டன எனறு கூறி வழக்கிட்டாள. வழககில் அவள கணவன் தான மதிபபுச சானறிதழ்களுககுச் சமமான உணமை யாகவே மறுபயன கொடுததததாகக் கூறினான. எனினும் நீதிமன்றம இராமனின மனைவி சீதையா யினும ஐயததிறகு அப்பாற்பட்டு இருக்க வேணடும் என்பது போல, கணவனே ஆயினும், ஏறபட்ட ஒப் பந்தம நல்லெணணத்தின (Bonafide) பயனால் விளைந்த ஒப்பநதம் எனபதனை ஐயமற மெய்ப்பிக்க வேணடும் எனறு கூறியது.

ஒப்பந்தம் பல வழிகளில் செலலாமற போகலாம். பல சமயங்களில தவிர்தகு ஒபபநதஙகள ஆகலாம். தவிர்தகு ஒப்பநதம் ஏறபடத் தகாநிலை வற்புறுததல எவ்வாறு காரணம் ஆகிறது எனபது மேலே விளககப் பட்டுளளது. தி ஆ.இ.

**தகாப்புணர்ச்சி:** இரத்த உறவுடையோருடன ஏற்படும் பாலுறவே தகாபபுணர்சசி எனப்படும். எடுத்துக்காட்டாகத் தந்தைககும மகளுககும், தாயுக் கும் மகனுக்கும, சகோதரனுக்கும் சகோதரிக்கும் இடையே ஏறபடும பாலுறவை இது குறிககும். தகாப்புணர்ச்சி என்பதற்கு ஒவ்வொரு பணபாடும தனி வரையறையைக் கொணடுளளது. சில திராவிட சமுதாயங்களில் சொந்த சகோதரியின் மகளைத் திருமணம் செய்துகொளளும் முறையைத தகாப் புணர்ச்சி (Incest) எனப் பிற சமுதாயத்தினர் எண்ணலாம். அவ்வாறே இசுலாமியச சமுதாயத் தினர் தந்தையின சகோதரரின மகளைத் திருமணம செய்துகொளவதும் தகாப்புணர்ச்சி எனக் கருதப படலாம். இந்த எண்ணம் தவறானது. ஏனெனில் தகாப்புணர்ச்சியின் எல்லை ஒவ்வொரு பண்பாட்டி லும் அதன் உறவுமுறையைப் பொறுத்தும், சமுதாய அமைப்பைப் பொறுத்தும் வரையறுக்கப்படுகிறது. எனினும், மிக நெருங்கிய இரத்த உறவினர்களான தாய், மகன; தந்தை, மகள்; சகோதரன், சகோதரி முதலானோரிடம் ஏற்படும் உறவினை அனைத்துப் பணபாட்டினரும் தகாப்புணர்ச்சி என்பர்.

**ஆதிக்குடிகளிடையே தகாப்புணர்ச்சி** பிறசமு தாயங்களில் உள்ளது போன்றே ஆதிக் குடி களிடையேயும் இரத்தவழி உறவினர்கள யாவர் எனபதற்கான அமைப்பு காணப்படுகிறது இது பெரும்பாலும் கால்வழி (Lineage) அமைப்பாகவோ குல (Clan) அமைப்பாகவோ இருக்கலாம். இக் குழுவைச் சேர்ந்தவர்கள அனைவரும் இரதத உறவுடையவர்கள் என்பதால் அவர்களுடன் மண உறவோ, பாலுறவோ கொள்வது தகாப்புணர்சசி யாகும் பெரும்பாலான பழங்குடிகள் அவர்கள் குலத் தவர்சள தெரிந்த மூதாதையரிட மிருந்தோ, தாவரங களிலிருந்தோ, விலங்கிலிருந்தோ தோன்றினர் என நம்புவதால் அப்பொருள்கள அவர்களின் குலக்குறியாக (Totem) உள்ளன. இதனால, குலக்குறி மணஉறவை நெறிப்படுத்துவதையும் முதனமையாகக கொணடுள் ளது. ஒரு குலத்தைச் சேர்ந்தவாகளுடன் உடலுறவு கொளளக்கூடாது என்ற முறை குலக்குறி விலககா கவும் (Totemic Taboo) தகாப் புணாச்சி விலககின் (Incest Taboo) அடிப்படையாகவும் உள்ளது.

ஆதிக் குடிகளிடையே தகாப்புணாசசியில் ஈடு படுபவர்களைத் தெய்வமே தணடிக்கும் என்றும் அவ் வாறு ஈடுபடுபவர்கள பல துன்பங்களை அடைய நேரிடும் எனறும் நம்புகினறனர்.

மெலனீசியா (Melenesia) ஆதிககுடிகளுள ஒரு பையன் இரத்த உறவுடையோரிடம் எவவித உறவும் கொள்ளககூடாது என்பதற்காக வயது வந்தவுடன இளையவர் கூடங்களில் சேர்த்துவிடுவர். அங்கேயே அவன் உண்ணுதல், உறங்குதல் அனைத்தையும் செய்துகொளள வேண்டும். எப்போதாவது வீட்டிற் குச் செல்ல அனுமதிக்கப்படுவதுண்டு இப் பழங்குடி களிடையே சகோதரன் சகோதரி உறவு மிகக் கடுமை யான விதிகளால் நெறிப்படுத்தப்பட்டுளளது. ஒருவன் தன் சகோதரியைப் பார்க்க நேர்ந்தால் அவள் அந்த இடத்தைவிட்டு ஓடி மறைந்துவிட வேணடும். இரு வரும் ஒருவாபின் ஒருவர் செலலக்கூடாது. ஒருவரின பாதச் சுவடுகளை அடையாளங் கண்டுகொண்டால் தொடர்ந்து அந்தப் பாதையில் செல்வதை அவர்கள தவிர்க்கவேண்டும். எக்காரணத்தைக் கொணடும்

அவன், அவள் பெயரை உச்சரிக்கக்கூடாது. சில பொதுச்சொற்கள் அவளது பெயரின் ஒரு பகுதியைக் குறிப்பதாக இருப்பின் அதையும் அவன் எந்தக் சூழ லிலும் சொல்லக்கூடாது. இத்தகைய விலக்குகள் பூப் புச்சடங்கில் (Puberty Ceremony) தொடங்கி வாழ்க்கை முழுவதும் கடைப்பிடிக்கப்பட வேண்டும். மகனுக்கும் தாய்க்கும் இடையிலான இடைவெளி மகன் வளர வளர மிகுதியாகின்றது. இதேபோன்ற வழக்கம் நியூகாலடோனியாவிலும் (New Caladonia) காணப்படுகின்றது.

நியூபிரிட்டனில் (New Britain) காசெல்லா (Gazella) தீபகற்பத்தில் உள்ள பழங்குடிகளிடையே ஒரு சகோதரி அவளது திருமணத்திற்கு பிறகு அவ ளது சகோதரனோடு எந்தக் காரணத்தைக் கொண் டும் பேச்சுவார்த்தை வைத்துக்கொளளக் கூடாது. அவள் சகோதரனின் பெயரை எந்தச் சூழலிலும் உச் சரிக்கக் கூடாது.

சுமத்ராவில் வசிக்கும் பாட்டாசு (Battas) எனும் மக்களிடையே விலக்கப்பட வேண்டியவர்களாகப் பல நெருங்கிய உறவினர்கள் அடங்குவர். எடுத்துக்காட் டாக ஒரு மாலை நேர விருந்துக்கு ஒரு சகோதரன், தன் சகோதரிக்குப் பாதுகாப்பாகக் கூடச்சென்று வந்தான் என்பதை ஒரு பாட்டா அதிர்ச்சியுடன நோக்குவான். பாட்டா சகோதரனும் சகோதரியும் பிறர் நடுவில் ஒன்றாக இருப்பதைக்கூட ஒரு மாதிரி யாக நினைத்துக்கொளளுவர். ஒருவர் வீட்டுக்குள் வந்தால் இன்னொருவர் வீட்டைவிட்டுச் சென்று விடுவர். மேலும் தந்தையும் மகளுமோ அல்லது தாயும் மகனுமோ எக்காரணங் கொண்டும் தனியாக வீட்டில் இருக்கமாட்டார்களா. பாட்டாக்கள் இத் தகைய கட்டுப்பாட்டு விதிகள் மிகவும் தேவை யானவை என எணணுகிறார்கள். இந்தியாவில் பெரும்பாலும் அனைத்துப் பழங்குடிகளிடையேயும் தகாப்புணர்ச்சி விலக்குக்காணப்படுகிறது.

தகாப்புணர்ச்சியில் ஈடுபடுவோருக்குப் பல்வேறு தண்டனைகள் தரப்படுகின்றன. இவற்றுள் சமூகத் தள்ளிவைப்பு, மரண தணடனை, சிறை வைத்தல், காயடித்தல் (Castration) முதலானவை குறிப்பிடத் தக்கவை. ஆசுத்திரேலியப் பழங்குடிகளிடையே தகாப்புணர்ச்சிக் குற்றத்திற்கு மரண தணடனை விதிக்கப்படுகின்றது. நியூசவுத்வேல்சு ஆதிக் குடிகளி டையே தகாப்புணர்ச்சியில் ஈடுபடும் ஆண உடனடி யாகக் கொல்லப்படுகின்றான்; பெண மிக கடுமையாக அடிக்கப்படுகின்றாள் அல்லது அம்புகள் எய்யப்பட்டுத் துன்புறுத்தப்படுகிறாள். தமிழ்நாட்டில் ஏறத்தாழ எல்லாப் பழங்குடிகளிடையேயும் தகாப்புணர்ச்சி விலக்கு நிலவுகிறது.

**இக்காலச் சமுதாயங்களில் தகாப்புணர்ச்சி:** இக் காலச் சமுதாயங்களில் தகாப்புணர்ச்சி விலக்கை மீறுவோருக்கு எதிரான சட்டங்கள் வலுவிழந்து காணப்படுகின்றன. பல உயர்குடிக் குடும்பங்கள் தகாப்புணர்ச்சி விலக்கிலிருந்து விதிவிலக்களித்துத் தனிச்சலுகை பெற்றிருந்தனர். பணடைய பெரு, உரோமானிய அரச குடிகளில் தகாப்புணர்ச்சி அனும திக்கப்பட்டுள்ளது. பண்டைய ஈரானில் உயர்குடி மக்க ளிடையே மட்டுமன்றி எல்லா மக்களிடையேயும் பொதுவாகத் தகாப்புணர்ச்சி ஏற்றுக்கொள்ளப் பட்டதற்கான சான்றுகள உள்ளன. சினிராசு (Cinyras) அவன், மகள் மைர்யாவுடனும் (Myrha) சாம்பைசெசு (Cambyses) தன் இரு சகோதரிகளுட னும் கொணட தகாபபுணர்ச்சி பெரிதும் பேசப் பெற்றதாகும். இசுலோனெசுவைச் (Slonenes) சார்ந்த கிரால்சு மட்சாசு (Kralj Majtjas) எனும் மத்தியாசு அரசன் (King Mathias) அவன் சகோதரி அலென் சிகா (Alenıca) வைத் திருமணம் புரிந்து கொண் டான். மன்னனான ஆர்தருக்கும் அவனது சகோதரிக கும் பிறந்த மகன்தான் மாட்ரடு (Modred).

பண்டைய எகிப்து மன்னர்களிடையேயும், அவாய் அரச குடிகளிலேயும் தகாப்புணர்ச்சி உறவுகள் இருந்ததை வரலாறு குறிப்பிடுகின்றது. மேலும் சில வரலாற்றுக் குறிப்புகளின்படி மார்கசு ஆண்டனியசு அவன் சகோதரி பாசுடினுடனும் (Baustlne), கார கல்லா தனது வளர்ப்புத்தாய் சூலியா (Julıa)வுடனும் இத்தாலியின் மன்னன் நீரோ (Nero) தனது தாயா ருடனும், காலி கூலா தனது சகோதரிகளுடனும் உடலுறவு கொண்டிருநதனர். இக்காலத்திலும் ஆங் காங்கு தகாப்புணர்ச்சிகள் நடைபெற்று வருவதைச் செய்தித்தாள்களின் மூலம் அறிய முடிகிறது.

உலகில் பெரும்பாலும் எல்லா நாடுகளிலும் தகாப்புணர்ச்சிக்கெதிராக மிகவும் கடுமையான சட் டங்கள் நிறைவேற்றப்பட்டுள்ளன. இந்தியக் குற்ற வியல் சட்டம் சில பிரிவுகளைத் தகாப்புணர்ச்சியில் ஈடுபடுவோரைத் தண்டிப்பதற்காக நிறைவேற்றியிருக் கிறது. வேறுசில நாடுகளில் தகாப்புணர்ச்சிக்கு எதி ரான சட்டங்கள் எவ்வாறு அமைந்திருககின்றன என் பது கீழே தரப்பட்டுள்ளது.

கடந்த நூற்றாண்டுகளில் இங்கிலாந்தில் தகாப் புணர்ச்சியில் ஈடுபட்டோருக்கு மரணதண்டனை கொடுக்கப்பட்டுள்ளது. தகாப்புணர்சசிக்கு எதிரான சட்டங்கள் ஆங்கில நாட்டுத் திருச்சபை மரபு நூலில் குறிப்பிடப்பட்டுள்ளன. இங்கிலாநதில் 1908,1956 ஆகிய ஆண்டுகளில் பாலுறவுக் குற்றவியல் சட்டம் (Sexual Offences Act,1956) விரிவான முறையில்

நிறைவேற்றப்பட்டுப் பல தண்டனைகள் வழங்கப் பட்டு வருகின்றன.

தகாப்புணர்ச்சியைத் தணடிக்கும் சட்டஙகள் அமெரிக்க ஐக்கிய நாடுகளின் வெவ்வேறு மாநிலங் களிலும வெவ்வேறு நிலையில் செயற்படுத்தப்படுகின றன. பல மாநிலங்களில் ஒரே குடுமபத்தாருடனும் பெற்றோரின் நேர் உடன்பிறந்தாரின் பிள்ளைகளுக் கிடையேயுமான (First Cousins) உறவுகள தகாப் புணர்ச்சி எனக கருதப்பட்டுத் தண்டனை அளிக்கப் படுகின்றது. இச்சட்டம் எவரொருவருடன் உறவு கொளவது தகாப்புணர்ச்சி என்பதை வரையறை செய்துள்ளது

**தகாப்புணர்ச்சிக்கோட்பாடுகள்:** தகாப்புணர்சசி பற்றிப்பல அறிஞர்கள் பலவேறு வகையான கோட் பாடுகளைக் கூறியுள்ளனர். இவர்களுள பிராய்டு (Freud), வெசுடர்மார்க்கு (Westermark), செலிக மன் (Seligman), மாலினோவுசுக்கி (Malinowski) முதலானோர் குறிப்பிடத்தககவர்கள.

பிராய்டு தகாப்புணர்ச்சியை 'ஈடிப்பசு' சிக்கல (Oedipus Complex), எதிர்மறைசசிக்கல (Electra Complex) முதலான கருத்தீடுகளைக்கொண்டு விளக் குகின்றார். அவரதுகருத்துப்பம பெற்றோாகளிடமும் அவர்களின் மக்களிடமும் சூழ்நிலை உளளுணர்சசிக் கூறுகள அடங்கிக் கிடக்கினறன ஆணகுழந்தைகள ஒருகுறிப்பிட்டவயதில் தாயாரிடம் மிகுந்த பறறுடன் காணப்படுவர். அதே நேரத்தில் தந்தையிடம் பறறற் றுக் காணப்படுவர். அதேபோலப்பெண குழந்தைகள் ஒரு குறிப்பிட்ட வயதுக்குப்பின தந்தையிடமபறறு க கொணடு தாயிடம் பற்றற்றுக காணப்படுவர். இங குப் பறறு எனபது பாலசார்நததும் உளளார்நதது மான ஓர் அகமனப்பிணைப்பு ஆகும். பறறு எனபது அன்பையோ பாசத்தையோ இங்குக் குறிககாது. இப் பிணைப்பின்மூலம்ஒருசில வேளையில் தகாப்புணாச்சி ஏறபடுகிறது. தாயின மீதானமகனின் தகாப்புணர்சசி விருப்பத்தை எதிர்ககும் தகப்பனை அடக்குமுறைத் தநதையாகக் காணகிறார் பிராய்டு தநதையின எதிர்ப்பினமூலம் மகனுடைய தகாப்புணர்ச்சி அடக்கி வைக்கப்படுகிறது. மேலும், தநதையின் எதிர்ப்புச் சக்தி மகனின விருப்பத்திற்கு எதிராக அவனை வீட்டைவிட்டே துரத்துகிறது. இப்படிப்பட்ட சக்தி களின இயக்கம் ஆதிக்குடிகளின் சமூகத்தில் வேர் விட்டதாகக் கூறப்படுகினறது. மேலும்,பல பெண் களைத் தன்னகத்தே வைததிருக்கும் தந்தை தனது வீட்டைவிட்டுத் தனது சுயசக்தியைப் பயனபடுததித் தன் ஆண் மக்களைத் துரத்திவிடுகிறார். பிராய்டின இத்தகைய விளககஙகள் நிரூபிக்கபபடவில்லையாத லால் இக் கோட்பாட்டை ஏற்றுக்கொள்ள இயல வில்லை.

பிராய்டின் கோட்பாட்டைப் பெணவழிச் சமூகத் தில ஏறறுககொளவதறகில்லை எனபார்மாலினோவு சுக்கி இவர்ஆய்வுசெயத சமூகங்களில, குடும்பங்களில் அதிக அதிகாரம் வாய்ந்தவராகத் தாயின சகோதரன இருககிறார். எனவே, இத்தகைய சமுதாயஙகளில் மகனை எதிர்த்துத் துரததிடத் தந்தைககு வாய்ப் பேது என வினவுகின்றார் மாலினோவுசுக்கி.

தகாப்புணர்ச்சி உயிரியல் முறைப்படி மரபுப பணபுகளுக்கு ஊறு விளைவிக்கின்றது எனறும் மனிதனின் உள மனத்திலேயே தகாப்புணாச்சி பற்றிய வெறுப்பு இருககிறதெனறும் வெசுடர்மார்க்கு கூறு கிறார். ஒரு குடுமபத்தின உறுப்பினர்களுக்கிடையே பிறந்தது முதல நிலவும் நெருங்கிய தொடர்பு தகாப் புணர்ச்சிக்கு எதிரான எண்ணத்தை அவர்களிடையே ஏற்படுத்துகின்றது என்பார் ஆனால், இவர்தம் கருத்துகள அறிஞர்களால மறுககப்படுகின்றன.

முதலாவதாக உட்குழு மணஉறவு முறை உயிரியல் அளவில் கேடு விளைவிககினறதா இல்லையா எனபதை ஆதிக்குடிகள அறிந்துளளனரா என்பது கேளவிககுரியது. இரண்டாவதாகச் சகோத ரர்களுக்கும், சகோதரிகளுககும் இடையே குழந்தைப் பருவம் முதல் உளள தொடர்பு பாலுறவு வெறுப் பினை உணடாககுகினறது எனபதற்குச் சானறுகள இலலை இதனாலேயே பெரும்பாலான சமுதாயங களில சகோதரனுக்கும, சகோதரிககும் இடையே பாலுறவு வெறுப்பைச சிறு குழந்தைப்பருவம் முதற் கொணடே ஏறபடுததுகினறனர். சில சமுதாயங்களில சகோதரனுககும சகோதரிககும இடையே மிகக கடுமையான விலக்கைக குழந்தைப் பருவததில உரு வாக்கி வாழககை முழுவதும கடைப்பிடிககச செய் கின்றனா. இதனால, வெசுடர்மார்க்கின் கருதது லுள்ள குறைபாட்டை அறியலாம.

செலிக்மன எனனும் அம்மையார் தனது விளக் கத்திற்குப்பிராய்டைப் போன்று, குடுமப உறவை அடிப்படையாகக கொளளுகினறார். தந்தை தம் பாலுரிமைகளை (Sexual Rights) மகன் தனது தாயாரிடம் ஏற்படுத்திக்கொளளாமலும், தாய் தந்தையின் மீதான தன் பாலுறவு உரிமைகளைத் தன் மகள ஏற்படுத்திக்கொள்ளாமலும் விழிப்பாக உளளனர் எனபார் செலிகமன. பெற்றோர்கள தங்கள் எதிர்ப்பால் குழநதைகளிடம் தகாப்புணாச்சி கொள்ளுவதைத் தடுததுக் கொள்வதைப் போன்றே தாஙகள ஈனற ஆண-பெண குழந்தைகளும் அவர்

களுக்குள் தகாப்புணர்ச்சி கொள்ளாமல் தடை செய்யப்படுகின்றனர்

மேற்கூறப்பட்ட அனைத்துக் கோட்பாடுகளும் ஒருவர் பிறந்த குடும்பத்தின் உறுப்பினர்களின் மன நிலையையும், பெற்றோர்களையும்,குழந்தைகளையும் மையமாகக் கொண்டுள்ளன. இது பலவேறு சமுதாயங் களில் பரவலாகக் காணப்படுகிறது. ஏனெனில் ஒருவர் பிறந்து வளரும் குடும்பம் (Biological Family) இல் லாத சூழலில் தகாப்புணர்ச்சி விலக்கு காணப்பட வில்லை.

பெரும்பாலான சமுதாயங்களில் தகாப்புணர்ச்சி காணப் படாததற்குக் காரணம் சமூக அமைப்பும் சமூகத்தின் இயல்பான ஒழுங்கும் . (Order) ஆகும். இந்த ஒழுங்கின் அடிப்படையிலேயே ஒரு சமுதாயம் பல புறமணக் குழுக்களாகப் (Exogamous Groups) பகுக்கப்பட்டு ஒரு குழுவினர் வேறொரு குழுவினருடன் மண உறவு கொள்கின்றனர்.

இக்கருத்தை இலெவி-இசுட்ராசு (Levi-Strauss) சிறப்பாகச் சுட்டிக்காட்டுகிறார். அனைத்துப் பண பாட்டிலும் சகோதரன் - சகோதரிபால் உறவின் மையை ஆராய்ந்த இவர் மனித மனத்தின் நனவிலிச் சூழலையும் நனவுச் சூழலையும் ஆழ்ந்து பார்த்தால் பின்வரும் கருத்து வெளிப்படும் என்றார்.ஒருவன் ஒன்று கொடுத்தால் இன்னொன்று பெறவேண்டும் என்ற பரிமாற்ற விதி (Principle of Reciprocity) மனித மனத்தின் அடிப்படையிலான ஓர் அமைப்பு முறையாகும். இவர் கூற்றுப்படி இரு குழுக்கள் பெண்களைத் தமக்கிடையில் மாற்றிக் கொள்வதன் மூலம்தான் சகோதரன்-சகோதரி பாலுறவின்மை நிலவத்தொடங்கியது என்பார். இலெவிசுட்ராசு தகாப்புணர்ச்சி விலக்கை ஓர் அனைத் துலக நிகழ்வாகக் காண்கிறார். இவர் தகாப்புணர்ச்சி பற்றி முன்கூறப்பட்ட கோட்பாடுகளைப் புறக்கணித்து உறவுமுறை அமைப்பின் இயல்பையும் அவை செயற் படும் விதத்தையும் ஆய்கின்றார். அவரது கூற்றுப்படி பிற குடும்பங்களுடன் ஒருவன் தொடர்பை ஏற்படுத் திக்கொள்ள வேண்டுமானால் ஏதாவது கொடுக்க வேண்டும். இரத்த உறவுடைய ஒரு பெண்ணைக் கொடுத்து வேறொரு குடும்பத்திலிருந்து பெண்ணைப் பெறவேண்டும் என்பதாகும். ஆ.செ.

**தகாவட்டி**: நிலம் (Land), உழைப்பு (Labour) மூலதனம் (Capital), அமைப்பு(Organization), என பன பயன்பாட்டைப் (Utility) படைப்பதற்கான உற்பத்திக் காரணிகள். இக்காரணிகள், ஆற்றும் பணிகளுக்கென முறையே வாரம் (Rent), கூலி (Wages), வட்டி (Interest), இலாபம் (Profit) என்ற ஊதியங்களைப் பெறுகின்றன. மூலதனத் தைப் பயன்படுத்திப் பயன் பெறுவதால் மூலதனச் சொந்தக்காரர்கள் பெறும் ஊதியம் வட்டி. இது இக்காலக் கருத்து.

மோசசு (Moses), அரிசுடாடில் (Aristotle) மற் றும் பல கிரேக்கத் தத்துவ ஞானிகளின் கருத்து களின் அடிப்படையில் கடனுக்கு வட்டி வாங்குவது தவறு என்ற கருத்து இடைக் காலத்தில் நிலவியதால் வட்டியையே தகாவட்டி (Usury) என்று குறிப்பிட்ட னர். அக்காலத்தில் செல்வச் செழிப்பில் இருந்தவர் களிடமிருந்து ஒருசில இழப்புகளுக்கும், இடையூறு களுக்கும் உட்பட்டோர் மறுவாழ்வு பெறக் கடன் வாங்கினார்கள் கடன்களைக் கொடுத்த வர்கள் செல்வமிக்கவர்களாகவும், கடன்களைப் பெற்றவர்கள் இழப்புகளை அடைந்தவர்களாக வும் இருந்த காரணத்தால் கடன் பெற்றோ ரிடமிருந்து கடனுக்காக வட்டி என்ற ஒரு தொகை யைப் பெறுவது நேர்மையற்றது என்ற கருத்து மிக வலுவாக வழக்கில் இருந்து வந்தது.

இக் கருத்தின் அடிப்படையில் கி.பி. 16-ஆம் நூற்றாண்டில் ரூ.100/-க்கு ரூ.5/-என்ற 5 விழுக்காடு அளவுக்கும் கூடுதலாக வட்டியைப் பெற்றால் அது தகாவட்டி என்றும், எனவே அதனைத் தடை செய்ய வேண்டும் என்றும் குறிப்பிட்டுத் தகாவட்டி யைப் பெறுவதைத் தடைசெய்யும் பல தகாவட்டித் தடைச் சட்டங்கள் (Usury laws) இயற்றப்பட்டன. இங்கிலாந்தில் பேரரசர் எட்டாம் என்றி (Henry VIII) காலந்தொட்டுப்பல தகாவட்டிச் சட்டங்கள் இயற்றப்பட்டன. நாட்டில் மைய வங்கி (Central Bank) தோன்றி, பணக் கொள்கைகளை (Monetary Policies) நிறைவேற்றுவதற்காக வங்கி வீதம் (Bank rate) எனப்படும் மையவங்கியில் உண்டியல் மறு கடன் கழிவுவிகிதம்(Rediscounting rates of bills by CentralBank) பயன்படத் தொடங்கிய பிறகும் கி.பி. 1854-ஆம் ஆண்டுவரைத் தகாவட்டிச் சட்டங்கள் நடைமுறையில் பயன்பட்டு வந்தன.

இக்காலத்தில் இழப்புகளை ஈடு செய்யப் பல காப்பீட்டுக் கழகங்கள் (Insurance Companies) தோன்றி விட்டன. நெருப்பு, நீர், இடைக்காலமான கதவடைப்பு, தொழிலாளர் வேலை நிறுத்தம், கல கங்கள் போன்ற பல காரணங்களால் ஏற்படத்தக்க இடர்களினால் தோன்றும் இழப்புகளிலிருந்து காத்துக் கொள்வது எளிதாகி விட்டது. மேலும் செல்வம் மிக்கவர்கள் மட்டுமே கடன் கொடுக்கிறார்கள்; வறிய நிலையிலும், இழப்புகளை அடைந்தவர்கள் மட் டுமே கடன் பெறுகிறார்கள் என்ற நிலையும் முற்றி லும் மாற்றமடைந்து விட்டது. வாணிக வங்கிகள்

குறைந்த வட்டிக்குப் பணத்தைக் கடனாகப் பெற்று கூடுதல் வட்டிக்குப் பணத்தைக் கடனாகக் கொடுத்துச் செயறபடுவது இயல்பென ஏற்றுகொள்ளப்பட்டிருக்கிறது.

வட்டி ஏன் கொடுக்கப்பட வேண்டும், வட்டி விகிதம் எவ்வாறு தீர்மானிக்கப்படுகிறது என்பதைப் பற்றிய பல கோட்பாடுகள் பொருளாதாரப் பகுத்தாய்வில் விளக்கப்படுகின்றன. உற்பத்தித் திறன உடைய மூலதனததைப் பயனபடுத்துவதற்காக வட்டி செலுத்தப்படுவது முறையே என்று குறிப்பிடுவது இயற்கை வாதிகளின் (Physiocrats) உற்பத்தித திறன கோட்பாடு (Productivity theory of interest). மூலதனத்தைப் பெறச சேமிப்பு நிகழ்தல் வேண்டும்: சேமிப்பு நிகழ நுகர்வைத் தவிர்கக வேணடும். இவ்விடரை மேறகொளபவர்களுக்கு வட்டி எனற ஊதியம் கொடுக்கப்பட வேண்டும் என்று குறிப்பிடுவதுதுய்ப்புத் தவிர்ப்புக் கோட்பாடு(Abstinence theory of interest). துய்ப்பைத் தவிாத்தாலும் தவிர்க்கா விட்டாலும் மூலதனத்தைக் கடனாகக் கொடுதது விட்டு அது திருமபி வரும்வரை காத்திருப்பதால் காத்திருத்தல் பணியை மேற்கொளபவர்களுக்கு வட்டி என்ற ஊதியம் கொடுக்கப்பட வேணடும் எனறு குறிப்பிடுவது மார்சலின (Marshall) காத்திருத்தல் கோட்பாடு (Waiting theory of interest). கடனைக கொடுப்பதன மூலம நிகழ்காலத்தில் கிடைக்கத் தக்கவறறை விட்டுக் கொடுப்பதாலஇப் பணிக்குவட்டிகொடுககப்பட வேணடும் என்று குறிப்பிடுவது பாம பரவர்க்கின (Bohm Bawerk) காலக்கழிவுக் கோட்பாடு (Agiotheory). கடனைக் கொடுத்து விட்டு எதிர்காலத்திற்காகப் பொறுமையுடன காத்திருககும் பணிக்கென வட்டி கொடுக்கப்பட வேண்டும் எனறு குறிப்பிடுவது பிசரின (Fisher) கால விருப்பக் கோட்பாடு (Time Preference Theory). கடன நிதியின தேவை,அளிப்பு ஆகிய வற்றிறகேற்ப வட்டியின் அளவு அமைகிறது எனறு குறிப்பிடுவது கடன் நிதிக் கோட்பாடு(Loanable funds theory). பணத்தை உரொக்கமாக வைத்திருப்பதால் பெறத்தக்க நீர்மை விருப்பத்தை (Liquidity preference) விட்டுக் கொடுபபதற்காகக் கொடுக்கப்படுவது கீன்சின் (Keynes)நீர்மை விருப்பக் கோட்பாடு (Liquidity preference theory of interest). தொனமைப் பொருளாதாரக் கருத்தினரின் உணமைக் கோட்பாட்டையும் (Real theory), பணக் கோட்பாட்டையும் (Monetary theory) சேர்த்து ஒருங்கிணைத்தது கிகசு-என்சனின் (Hicks-Hansen) இனறைய கோட்பாடு.

இக்காலப் பொருளாதார அமைப்பில் பண அளவை மாற்றியமைப்பதன் மூலம் பணவீக்க (Inflationary), பணவாட்ட (Deflationary) நிலைகளைச் சரிசெய்ய மைய வங்கிகள் வட்டி விகிதத்தைச் சிறப்பானதொரு கருவியாகப் பயன்படுத்துகின்றன.

இந்தியாவிலும் பிற குறை வளர்ச்சியுடைய நாடுகளிலும் மக்களின பணத் தேவை மிகுதியாகும்போது நாட்டின் பொருளாதார நிலைகளாலும், மக்களின் சமுதாய, பொருளாதார, கல்வி நிலைகளாலும் உந்தப்படும் பலர் கட்டமைப்புத் துறையில் (Organised sector) உள்ள நிறுவனங்களைத் தவிர்த்துத் தனிப்பட்ட முறையில் இலேவாதேவி வணிகர்களிடமும், தனிப்பட்டவர்களிடமும் அவரவர் தேவைக்கேற்பக் கடன்களைப் பெறுகின்றபோது தேவையின் அடிப்படையில் மிகுதியான வட்டி விகிதத்தின் அடிப்படையில் மிகு வட்டியைச் செலுத்துவது இயல்பாக உள்ளது. இதுவும் தகா வட்டியே. இத் தகா வட்டியைத் தவிர்க்கவும, தகா வட்டிக்குக் கடன கொடுத்து வாணிகம் செய்பவர்களின நடவடிக்கைகளைக் கடுப்பட்டுத்தவும், முறைப்படுத்தவும் அரசுகளும், மைய வங்கிகளும் பல நடவடிக்கைகளை மேற்கொணடுவருகின்றன. என்.எஸ்.பா.

**தகிட்டி:** பசுபிக்குமாககடலின் தெற்குப் பகுதியில் உள்ள தீவுக் கூட்டத்தில் ஒன்று. தகிட்டி (Tahiti)தீவின் பரப்பு 1042 ச. கி. மீ; மக்கள் தொகை 95,604 (1877). இதன் தலைநகர் பப்பீட்டி (Papeete). மலைப்பாங்கான இபபகுதியிலிருந்து சர்ககரை, கொப்பரைத் தேங்காய், முத்துச சிப்பி முதலியவை ஏற்று



தகிட்டி

மதியாகின்றன. இத்தீவில உள்ள துறைமுகம் மிகவும் அழகானது. இததிவு கி. பி. 1843-இலிருந்து பிரான்சு நாட்டின் பாதுகாப்புக்கு உட்பட்டிருந்தது. பிறகு கி பி 1880-82-இலிருநது இது பிரான்சுடன இணைக்கப் பெற்றது. பிரெஞ்சுக குடியேற்றத் தீவுகளில் முதன்மை யானது இது.

வரலாறு: பாலினீசியர் (Polynisians) கி.பி. 14-ஆம் நூற்றாணடில் இத்தீவில் குடியேறினர். இத்தீவை முதலில கணடுபிடித்தவர் சாமுவல் வாலிசு என்னும் ஓர் ஆங்கில மாலுமி. சேம்சு குக்கும் இங்கு வருகை தந்தார். பிரெஞ்சு ஆட்சி இங்கு ஏறபட்டபின் 1946-இல் இங்கு உள்ள உளநாட்டு மக்கள யாவரும் பிரெஞ்சுக் குடியுரிமை பெற்றனர். தெ.பா.

**தகுசட்டமுறை:** ஒவ்வொருவரின் தன்னிலை உரிமைகளைச் செயற்படுத்துதற்கும், காத்தற்கும் சட்ட இயலில் விதிக்கப்பட்டுளள விதிகளுககும் கொள்கைகளுக்கும் இணங்கப பின்பற்றப்படும் சட்ட நடவடிக்கைகளுக்குத் தகுசட்டமுறை (Due Process of Law) என்று பெயர். அரசாங்கம் சட்டததினால் தனககளிக்கப்பட்டுள்ள அதிகாரங்களைக் கையாளும் போது, தனி ஆள் உரிமைகளின் பாதுகாப்புக்காக விதிக்கப் பட்டுளள காப்புக்களுக்கிணங்கவே (Safeguards), அவ்வதிகாரங்களைக் கையாளுதல் வேணடு மென்பது இதன் பொருளாகும்.

**இக்கருத்தின் தோற்றம்:** சட்டப்படியான தீர்ப்புக்கு விடப்பட்ட எந்த ஒருகேளவிக்கும் பொருநது மாறு கையாளப்படுகின்ற ஒழுஙகான, சாதாரணச் செயல விதி எனற கருத்தையே தகுசட்டமுறை (அல்லது தகக சட்டமுறை) எனற தொடர் உணாத்து கிறது. தகு சட்டமுறை என்பது ஆங்கிலப் பொதுச் சட்டத்திலிருந்தும், ஆங்கில அரசியலமைப்பு வரலாற்றிலிருந்தும் தோன்றிய ஒரு கருத்தாகும். இநதக் கருத்து முதனமுதலில் தெளிவாகக் கூறப்பட்டது கி.பி. 1215-இல் ஆங்கில அரசர் சான் எனபவரால் ஒப்புக் கொளளப்பட்ட மாபெரும் பட்டயத்தில தான (Magna Carta). இப்பட்டயததின் 39-ஆம் பிரிவு, 'எநத ஒரு சுதந்திரக் குடிமகனும தனது பிரபுக்களுடைய சட்டப் படியான தீர்ப்பின வழியாகவோ அல்லது நாட்டின் சட்டத்தின் வழியாகவோ அல்லாமல் சிறைபிடிக்கப் படுதலோ நாடு கடத்தப்படுதலோ வேறெவவகையா கவும் அழிக்கப்படுதலோ கூடாது' என்று கூறுகிறது. இதன பொருள சட்டப்படியாக அல்லாமல் அரசாங்க அதிகாரி தன் விருப்பத்தின்படி ஒருவரை எவ்வகைத் தணடனைக்கும் உட்படுத்தலாகாது என்பதே ஆகும் மாபெரும் பட்டயத்துக்குப் பிறபட்ட காலத்தில் செய்யப்பட்ட ஒவ்வொரு ஆங்கிலச் சட்டத்திலும், 'பிரபுக்களின் சட்டப்படியான தீர்ப்பு', 'நாட்டின் சட்டங்கள்' என்று குறிப்பிடப்படும் தொடர்கள்' தகக சட்டமுறை என்ற பொருளிலேயே கையாளப்படு கின்றன.

**ஐக்கிய அமெரிக்கக் கூட்டாட்சி அரசியலமைப்பில் இக்கருத்து** ஆங்கிலஅரசியலமைப்பிலுளள சட்டத்தின் தலைமை (Rule of law) என்ற கருத்தும், தனி ஆள் சுதந்திர உரிமை என்ற கருத்தும் ஐக்கிய அமெரிக்க நாட்டின் அரசியலமைப்புச் சட்டத்தை வரைந் தோருக்கு வழிகாட்டிகளாக இருந்தன, அவர்கள் ஆங்கில அரசியலமைப்புச் சட்டத்திலிருந்த தகு சட்ட முறை எனற கருத்தையும் ஏறறுக கொண்டு, அதனைத் தங்களுடைய அரசியலமைப்புச் சட்டத் திலும் இணைத்தனர். அதன் விளைவாக கி.பி.1791-இல் அநநாட்டின் அரசியலமைப்புக்குச் செய்யப்பட்ட 5-ஆம் திருத்தத்தினபடி, 'எந்த ஓர் ஆளும் தகுசட்ட முறையினால் அல்லாமல் உயிர், உரிமை உடைமை இழப்புக்கு உள்ளாக மாட்டார்'. இத்திருத்தத்துக்கு அமெரிககக் கூட்டாட்சி மாநிலங்கள் உட்பட்டவை அல்ல எனறு கூறப்பட்டது. ஆனால் கி.பி.1868-இல் செய்யப்பட்ட 14-ஆம் திருத்ததின்படி கூட்டாட்சி நீதிமன்றஙகள விடுககும் தகு சட்டமுறை ஆணைகள மாநில அரசாங்கங்களின சட்டச்செயல முறைகளைக கட்டுப்படுத்தக் கூடியவை.

**பொதுநலச் சட்டங்களும் தகுசட்டமுறையும்:** தகு சட்டமுறை என்பது பொருள்முறைச் சட்டங்களுக கும், செயல்முறைச் சட்டஙகளுக்கும் எவ்வாறு பொருந்துமெனறு பலகாலமாகத்தலைமை நீதிமனறத் தில் ஆய்வு செய்யபபட்டது. இறுதியில ஒரு சட்டம் பொதுநலனை நிலைநிறுத்தவலலதென்றும, அதன பொருட்டுக் கையாளப்படும் வழிகளும் அல்லது முறை களும் நியாயமான பொதுநலனுககுகந்தவையென்றும் இருக்குமானால, அநதச் சட்டம் தகுசட்டமுறையின நிலையைப் பெற்றிருப்பதாகக் கருதப்பட்டது. ஒரு சட்டம், பயணம் செய்யும் உரிமையையோ தோதல் களில் வாக்களிக்கும் உரிமையையோ இதைப் போனற தொரு ஆதார உரிமையையோஒழுஙகுபடுத்துமாயின், அப்பொழுது அந்தக சட்டமானது கடுமையான நீதி மன்ற ஆய்வுக்கு உட்படுத்தப்படுகிறது; இநதக் கடுமை யான நீதிமனற ஆய்வுககுக் கட்டாய நலச சோதனை (Compelling interest test) எனறு பெயா. ஏதேனு மொரு பொருளாதாரச் சட்டம பொது நன்மையை விளைவிக்கக கூடியதென்று தெளிவாக அரசாஙகம் எடுத்துக்காட்டுமானால், அச்சட்டம் தகுசட்ட முறைக்கு ஏற்றதே என்று ஒப்புக்கொள்ளப்படுகிறது.

**தகுசட்டமுறையும், கூட்டாட்சி, மாநிலநீதிமன்றங் களும்:** மாநிலங்கள் கட்டாயமாகப் பினபற்ற

வேண்டிய தகுசட்டமுறைககான செயலமுறைப் பாதுகாப்புகளை அவை பின்பற்றுமாறு தலைமை நீதிமன்றம் அவற்றை மேற்பார்வை செய்கிறது மாநில நீதிமன்றங்களில் கையாளப்படும் குற்றவியல் தீர்ப்புமுறையைத் தலைமை நீதிமன்றம் (Supreme Court) ஆய்வு செய்கிறது. சில சமயங்களில அது மாநில உரிமை இயல் நடவடிக்கைகளை யும்,ஆட்சி இயல நடவடிக்கைகளையும் மேற்பார்வை செய்கிறது. இவ்வாறு அது மேற்பார்வை செய் தல மாநில உரிமைகளைப் பாதிக்கும் செயலாகு மென்று, அரசியலமைப்புக்குச் செய்யப்பட்ட முதல் 10 அரசியலமைபபுத் திருத்தங்களும் மாநிலச் செயல முறைகளுக்கும் கூட்டாட்சி அரசாங்கத்தின செயல் முறைகளுக்கும் பொருந்துமென்றும் கூறப்பட்டன உரிமைகள் மசோதாவிலுள்ள சட்டப்பிரிவுகளெல லாம் மாநிலஙகளைக் கட்டுப்படுத்தக கூடியவை என்றும் சில நீதிபதிகளால கூறப்படுகிறது. இவவாறு இருந்தாலதான மாநிலஙகளின செயல்களைப் பரி சீலனை செய்தறகு ஒரு விருபபு வெறுப்பற்ற ஆதாரம் (An objective basis) கிடைக்குமென்று அவர்கள கருதினர். இப்போது உரிமைகள் மசோதாவில் கூறப் பட்டவை எல்லாம, ஆதாரமானவை எனக கருதப படும் நீதிபற்றிய விதிகளின் பாகங்களாகக் கருதப்படு கின்றன பா.சூ.

**தகோம்பா**, கானா நாட்டில் வாழும் மிகத் தொன்மையான பழங்குடியினர். இவர்கள வோல்டா (Volta) ஏரிக்கு வடக்கிலும், மேல்வோல்டா (Upper Volta) பகுதிககுத் தெறகிலும பரந்து விரிநதுள்ள பெரும் நிலப்பகுதிகளில் வாழ்கின்றனா. இபபகுதி பெரும்பாலும் மடிப்பு நிலஙகளையும் சிறு குனறு களையும் கொணடது. தகோம்பா (Dagompa) பழங் குடியினர் இன்று 2,00,000க்கும மேற்பட்ட எண்ணிக கையில் வாழ்கின்றனா இவாகள பேசும் மொழி தாகபேன் (Dagbane). இவர்கள் நீக்கிரோ இனத தைச் சேர்நதவர்கள். நடுத்தர உயரம, மிகவும சுருணட மயிர், தடித்த உதடுகள, உயர்நத நெற்றி. அகன்ற முகம், கருமபழுப்பு நிறத் தோல, உடலிலும் முகத்திலும் மிகக் குறைந்த அளவு மயிர் முதலாயின இவாகளை அடையாளங் காட்டும.



தகோம்பாப பெண்கள்

பிற ஆப்பிரிக்கப் பழங்குடிகளைப் போன்றே தகோம்பாவினரும் வெள்ளையர்களின ஆதிக்கத்திற்கு உட்பட்டு மிகவும் கொடுமைப் படுத்தப்பட்டுளளனர். இவர்களின வரலாறு மிக நீண்டது, தகோம்பாவி னர் தஙகளுக்கென்ற அரசு அமைப்பிலான (Kingdom) ஆட்சிமுறையைக் கொண்டிருந்தனர். இவர்களின் அண்டைப் பழங்குடியினருடன் அவவப்போது போரிட்டுத் தங்கள் பகுதியை விரிவுபடுத்தியோ இழந்தோ வாழ்ந்து கொண்டிருந்தனர். ஆனால் கி.பி.18-ஆம் நூற்றாண்டின் இடைக்காலததில் அசாந்தி(Ashanti) பழங்குடியினரின செல்வாக்கு மிகுந்துவிட்டதால் தகோம்பாவினரை அடக்கி ஆள முற்பட்டனர். அதன் விளைவாகத் தகோம்பாவினர் அசாந்திப் பழங்குடியினருக்கு 500 அடிமைகளையும், 200 பசுக்களையும், 400 ஆடுகளையும் ஆண்டுதோறும் கொடுத்து வநதனர். அதற்குப்பின ஓர் ஆண்டின் கொடை 2000 அடிமைகள வரை உயர்ந்துவிட்டது. அதனால், தகோம்பாவினர் சிறுபான்மைப் பழங்குடி களை அடிமைகளாகப் பிடிக்கத் தொடங்கினர்.



தகோம்பாச் சிறுவன்

ஐரோப்பியர்களின் வருகையைத் தொடர்நது தகோம்பாவினருக்கு முழுவதுமாகத் துன்பஙகள ஏற் பட்டன. முதலில் பிரெஞ்சுப் படையினரால் தாக்கப் பட்டுப் பின்னர்ச் செருமானியராலும் (Germans) ஆங் கிலேயராலும் தாக்கப்பட்டனர். அதனால, இவர் களின் பெரும்பகுதியை இழந்தனர். கானாவின் விடு தலைக்குப் பினபு தகோம்பாவினர் மீண்டும் தங்கள் நிலையை அடைநதனர் எனலாம்.

இவர்களின் பொருளாதாரம் வேளாண்மையை யும் கால்நடைகளையும் பெரிதும் சார்ந்துள்ளது. தொடக்க காலத்தில் இவர்கள் தினை வகைகளை யும் சோள வகைகளையும் பயிரிட்டு வந்த னர். தொல்லியல் ஆய்வுகளின்படி இப்பயிர் வகை கள் இப்பகுதியில் 5000 ஆண்டுகளுக்கு முன்னரே பயிரிடப்பட்டு வந்துள்ளன எனத் தெரிகிறது. இம்மக்கள் தொன்மை எகிப்தியர் பயிரிட்டு வந்த வெங்காயம், பூசணி, பயிர் வகைகளமுதலானவற்றை அவர்களிடமிருந்து பயிரிடக கற்றுக்கொண்டனர். அவவாறே தென்கிழக்கு ஆசியாவிலிருந்து 2000 ஆணடுகளுக்கு முன்பே வாழை, நெல், வள்ளிகிழங்கு வகைகள் முதலான பயிர்வகைகள் ஆப்பிரிக்கப் பகுதி களுக்குப் பரவியுள்ளன. ஐரோப்பியர்களின் தொடர் புக்குப் பின் மக்காசசோளம், உருளைக்கிழங்கு, பட் டாணி, மிளகு, புகையிலை முதலான பயிரகளைப் பயிரிடக் கற்றுககொண்டனர். தகோம்பா மக்கள் இவ்வனைத்துப் பயிர்களையும் விளைவித்து மிகுதி யானவற்றைச் சநதைகளில் விற்கின்றனர்.

மீன்பிடித்தல், வேட்டையாடுதல், காட்டுப் பொருள்களைச் சேகரித்தல முதலானவை இவர்களின் துணைத்தொழிலகள். கால்நடைகளை இறைச்சிக் காகவும் வணிகத்திறகாகவும் வளர்க்கின்றனர். வெள ளாடு, செம்மறி ஆடு, நாய், கோழி முதலானவற்றை உணவிற்காக வளாக்கின்றனா. இவர்கள் குதிரை களையும், கழுதைகளையும் எவ்வித எதிர்பார்ப்பு மின்றி வளர்க்கினறனர்.

தகோமபாவினர் குடியிருப்புகள் ஒவ்வொன்றி லும் ஒரு சில கால்வழியினரே (Lineage) பெரும் பான்மையினராக உள்ளனர். அதனால், ஒருவர் திரு மணம் செய்துகொளள வேண்டுமாயின் அடுதத கால் வழியினரிடமிருந்து மணத் துணையைப பெறவேண டும். அதன்மூலம் ஒரு குடியிருப்பைச் சேரநதவர் அடுத்த குடியிருப்பில் உளளவரோடு மட்டுமே மணம செய்துகொள்ள முடியும். ஒருவன் ஒன்றுக்கும் மேற் பட்ட பெண்களை மணந்துகொளளலாம். மூத்த மனைவி தன்குடும்பவேலைகளைக் கவனிக்கவேணடித தன் கணவனுக்கு மேலுமொரு திருமணததை நடத்தி வைக்கிறாள். திருமணத்திற்குப் பின் இரணடு மனைவி களையும் நனகு கவனிக்காவிட்டால் கவனிககப் படாதவர் வேறொரு ஆடவனை விரும்பி மணந்து கொள்வார். இவாகளிடையே மண விலக்கு, விதவை மணம் முதலானவற்றிற்குத் தடையில்லை.

இவர்களின் அரசியலமைப்பு மிகவும் விரிவானது. பண்டைக் காலத்தில் அரச முறையில ஆட்சி செய்த போது அரசரும் அவருக்குத் துணையாகப் பழங்குடி அரசியல் குழுக்களும் (Tribal Council) அவர்களுக் குக்கீழ் குடியிருப்புத் தலைவர்களும் பணிபுரிந்தனர். ஐரோப்பியர்களின் வருகையினால் அழிவுற்ற அந்த

அமைப்பின்படி இப்போது ஒவ்வொரு பகுதிக்கும் 'நா' (Na) எனக் கூறப்படும் பழங்குடித் தலைவன் அனைத்து நடவடிக்கைகளையும் கவனித்துக்கொள்ளுகிறான். பழைய அரச முறையில் வெவ்வேறு குழுக்களில் இடம் பெறும் தலைவர்கள் பணிமூப்பு அடிப்படையில் தகுதி உயர்வு பெறும்அமைப்புமிகவும் குறிப்பிடத்தக்க முறையைக் கொண்டதாகும். 'தின்தனா' (Tindana) எனப்படும் புனித சமயத் தலைவரே தேர்ந்தெடுக்கப்பட்ட அனைவருக்கும் பதவிப் பிரமாணம் செய்து வைக்கிறார். சிலர் பகலில் நியமனம் பெறுவர். இரவில் பணியேற்போர் ஒரு குறிப்பிட்ட நிலைக்கு மேல் பணி உயர்வு பெறமுடியாது.

'தின்தனா' எனப்படுவோர் பூமியின் உரிமையாளர் (Owner of the Earth) எனக் கூறப்படுகிறார். அதோடு இவரே பூமிக் கடவுளைப் போற்றிக் காத்து வருபவர் என்றும் கருதப்படுகிறார். இத்தகுதியைப் பெற்றிருப்பவர்கள் அவரவர் குடியிருப்புகளுக்கு முதன் முதலில் குடியேறிய மூத்த ஆடவராகஇருக்கின்றனர். இவர்கள் சமுதாயத்தில் இத்தகுதியைப் பெற்றிருப்பவர்கள் மிகுந்த செல்வாக்குடையவர்களாகவும் அதிகாரங்களைக் கொண்டவர்களாகவும் உள்ளனர். ஒவ்வொரு தின்தனாவும் அவருடைய பகுதியிலுள்ள நிலங்களை அவருடைய கால்வழியினருக்குப் பிரித்துக் கொடுக்கும் உரிமையுண்டு இவரின் அனுமதிபெற்ற பின்னரே ஒருவர் பூமிக் கடவுளுக்கு வழிபாடு செய்து நிலத்தை உழுது பயிரிடவேண்டும். அவரவர் பயிரிடும் நிலத்தின் புனிதத் தன்மையை அவரவரே பாதுகாக்க வேண்டுமென்பது இவர்களின் மரபு. ஒருவர் பகைவனைக் கொல்லுதல், தகாப்புணர்ச்சியால் விளையும் சண்டையில் இரத்தம் சிந்துதல் முதலான நிகழ்ச்சிகளால் பூமி இரத்தக்கறை படிந்தால் பூமியின் புனிதத்தன்மையை மீண்டும் ஏற்படுத்தச் சில குறிப்பிட்ட சடங்குகள் நடத்தவேண்டுமெனத் தின்தனா ஆணையிடுவார். அவ்வாறே, இறந்த ஒருவரைப் புதைக்கும் முன்பும் தின்தனாவின் அனுமதியைப் பெற வேண்டும். இசுலாம், கிறித்துவச் சமய நெறிகளின் வளர்ச்சி இவர்களிடையே மாற்றங்களை ஏற்படுத்தியுள்ளது. இருப்பினும் இவர்களின் தொன்மையான மரபுநெறிகள் இன்றும் இவர்களிடையே சிதையாமல் உள்ளன. சீ.ப.

**தகோமியர்:** மேற்கு ஆப்பிரிக்க நாடான பெனின் (Benin) நாட்டில் வாழும் பழங்குடி இனத்தவர்களுள் அரசியல் செல்வாக்குப் பெற்றவர்கள் தகோமியர் (Dahomey) ஆவர். பெனின் என்று இப்போது சொல்லப்படும் இப்பகுதி முன்னாளில் தகோமி என்றே வழங்கப்பெற்றது.

தகோமி நாட்டின் கடந்தகால வரலாற்றில் தகோமியப் பழங்குடியினர் பெரும்பங்கு பெற்றிருந்தனர். இப்போது இவர்கள் தகோமிய நாட்டின் கடற்கரைப் பகுதி முதல, வறண்ட வடபகுதி வரை பல பகுதிகளில் வாழ்கின்றனர். தொடக்கக்காலத்தில் வேட்டையாடி உணவு சேகரிக்கும் தொழிலை நம்பி வாழ்ந்துவந்தனர். இப்போது தோட்டப் பயிர்களை விளைவிக்கின்றனர், பொருளாதாரத்தில் பின்தங்கியிருந்தாலும் படை வலிமையில் இவர்கள் வலிமை பெற்றிருந்தனர். இதற்குக் காரணம் இவர்களின் அண்டைப் பகுதிகளில் வாழும் ஒருபா (Yoruba) பழங்குடிகளுடனும், குடியேற்ற வெள்ளையர்களின் ஆதிக்கத்துடனும் எதிர்த்துப் போராடவேண்டிய சூழலில் இருந்ததேயாகும்.

ஐரோப்பிய வணிகர்கள் கி.பி. 17-ஆம் நூற்றாண்டு முதலே தகோமி நிலப் பகுதிகளை உரிமையாக்கிக்கொள்ள முயன்றனர் இதனைத்தொடர்ந்து பிரஞ்சு, ஆங்கிலேயக் குடியேற்ற மக்களும் பழங்குடிகளின் பகுதிகளைக் கைப்பற்றுவதற்கு முயற்சி செய்தனர். தகோமியர் இதனைக் கடுமையாக எதிர்க்க வேண்டிய நிலையில் தொடர்ந்து போராடிவந்தனர்.

ஐரோப்பியர்களின் வருகைக்குப் பின்னர்த் தகோமியர்களின் பொருளாதாரம் ஓரளவு மாற்றம் பெற்றது அண்டைப் பழங்குடிகளோடு போரிட்டு. அவர்களை அடிமைப்படுத்தி, அவர்களை ஐரோப்பியர்களிடம் ஒப்படைத்து, அவர்களுக்கு வேண்டிய பொருள்களைப் பெற்றுவந்தனர். அதனால், அடிமைகளை விற்கும் முறை மிகுதியானது. அதனால், ஒருபாப் பழங்குடிகளுக்கும் தகோமியருக்கும் அவ்வப்போது சண்டைகள் மூண்டன.

தகோமியச் சமுதாயம் பல குலங்களாகப் (Clans) பாகுபட்டுள்ளது. இவர்கள் வேற்றுக் குலத்தவரை மணந்துகொள்ளும் முறையைக் கொண்டுள்ளனர். பொதுவாகப் பலமனைவி முறையைப் (Polygyny)பின்பற்றுகின்றனர். ஒவ்வொரு குடியிருப்புக்கும் சமூகச் சிக்கல்களைத் தீர்க்க மூப்பன் ஒருவன் உள்ளான். பல குடியிருப்புகளைச் சேர்ந்த மூப்பன்களுக்குத் தலைவர் ஒருவர் உள்ளார். இத்தலைவரின் பணி பழங்குடிகள் விளைவிக்கும் உணவுப் பொருள்களை மறுபங்கீடு (Redistribution) செய்தலாகும். உணவுப் பொருள்களை அறுவடை செய்த பின்னர் அனைவரும் தலைவனிடம் ஒப்படைக்கவேண்டும். அவர் ஒவ்வொரு குலத்திற்கும் மறுபங்கீடு செய்வார்.

தகோமியர் ஆவியுலக நம்பிக்கை கொண்டவர்கள்; முன்னோர் வழிபாட்டையும் கொண்டுள்ளனர்.

இறநதபின் முனனோர்களின ஆவி தகோமி சமூகத திற்குப் பல நன்மைகள செய்ய வேண்டுமெனப் பல சடங்குகளை ஆண்டுதோறும் செய்கினறனா.

சீ.ப.

**தங்க உற்பத்தி**: மனிதன கிட்டத்தட்ட 7000 ஆண்டுகளாக உலோகங்களைப பயனபடுததி வரு கிறான மனிதனின் உலோகக கணடுபிடிபபுகளுள சிறப்பானது தஙகம். பின்னர்த்தான் வெள்ளீயம், காரீயம் (led), செம்பு, இவற்றை பிரிததெடுககக கறறுக் கொணடான் அதன் பினனர் வெணகலம் போனற கலப்பு உலோகப் பொருளகளைத் தயாரிக கவும் கறறான தொடக்கக் காலத்தில் உலோகம எடுக்கும் சுரஙகத் தொழில் சிறிய அளவிலேயே நடந தது பினனர் அடிமைத் தொழிலாளாகளுககும், கைதிகளுககும் வேலை அளிக்கும் முகமாகச சுரங்கத் தொழில பேரளவில மேறகொளளபபட்டது. நிலத தின் கீழேயுளள கனிவளஙகளைக கணடுபிடித்தல் ஒரு தொழிலாகவே நடைபெறறது. தொழிலும், நாகரிக வளாசசியும் கனி வளங்களின தேவையைப் பெருக் கின இதன் விளைவாக நிலத்தில மிக ஆழமான இடத்தில் படிந்துள்ள இயறகை உலோகங்களும் விலை உயர்நதவையாக ஆயின.



தஙக உற்பத்தி

அதனால் கவர்சசி மிக்க தஙகத்தின இருப்பு, ஆயிரக்கணக்கான ஆண்டுகளாகச் செல்வத்தின் அடை யாளமாகக் கருதபபட்டு வருகிறது.

இன்றளவும தஙகத்தின மதிபபுக் குறையாமல் கூடி வருவதற்குக் காரணம், இதை உருககிப்பல பொருள களையும ஆபரணஙகளையும செய்யஇயலும் என்பதே. தஙகம் மாறறு மதிபபு உடையதாகவும விளஙகுகிறது. மேலும், தனது பறறாககுறைத் தனமையால காலம் காலமாக இதன்மதிப்பு இன்றும் பெருகிக் கொணடே வருகிறது இடைக் காலத்தில தான் இரசவாத (Aleh emy) அறிவியல மூலம செயறகையான முறையில தங கததைச் செய்வதறகான முயறசிகள மேற்கொளளப பட்டன புதிய அறிவியல வாதிகள் சிலா இரசவாதத தினரின் கனவுகளை நனவாக்குவதில வெற்றி கண டுளளனர். கடல் நீரிலிருந்து தஙகத்தைப் பிரிததெடுக் கவும, காரீயம் (Lead) பாதரசம் (Mercury) இவறறி லிருந்து தஙகததைச செய்யவும் இவர்களால் இயலும. ஆனால, வாணிக முறையில் உற்பத்தி செய்யும தங்கம் பூமியிலிருந்தே பெறபபடுகிறது. இது அழகிய மஞ்சள நிறமும், மிருதுத தன்மையும கொணடது. ஒரு குறிப் பிட்ட ஆழத்தில் தோணடியெடுககப்படும இவ வுலோகத் தாதுக்கள் முதலில தூளாககப்பட்டுப் பினனர் மிருதுவான பொடியாக ஆக்கப்படுகிறது. இது கடினத் தன்மை கொணடது. மின முலாம் பூசும் முறையின் மூலம உலோகங்களின் மீது படியக கூடியது

தஙகத்தை எந்த உருவ அமைப்பாகவும் மாற்ற லாம். மிக மெல்லிய கம்பியாக நீட்டவும, தகடாக அடிக்கவும் இவ்வுலோகம் பயனபடும். நகையாக. மாற்ற வேணடுமானால் மற்ற ஓர் உலோகத்துடன் கலகக வேணடும். தங்க உலோகக கலப்பு காரட்டு களில் அளவிடபபடுகிறது 24 காரட்டுத் தங்கமே தூய தஙகமாகக கொள்ளப்படுகிறது. 18 காரட்டுத் தஙகம என்பது 18 பஙகு சுத்த தங்கத்தையும் 6 பஙகு மற்ற உலோகஙகளையும் குறிக்கும்

தூய தஙகம் 1064.43° பா. யில் உருகும் தன்மை யும் 2807° பா. யில் கொதிக்கும் தன்மையும கொணடது. இது 167.967 அணு எடையையும், அணு எண் 79 ஐயும் கொணடதாகும் நீரகம் பாசிகம உள்ளடங்கியதிலும் வெடியம் சார் அமிலத்திலும் இது உருகும் காரச்சைனடு கரைசலகளிலும் (Solution) இது உருகக் கூடியது.



சுரங்கப் பணி

பல நூற்றாண்டுகளாக ஏறத்தாழ எல்லாத் தாதுப் பொருள்களுமே வண்டல மணணிலிருந்தும பிற விளைச்சல்களிலிருந்தும் பெறப்பட்டன. நிலத்தின் மேல்பரப்புக்கு அருகில் புறவிளைச்சல் இருக்கும். வண்டல்மண் படிமானஙகள் ஆற்றுப்படுகைக் கரைகளின் மீதான நீரின் அசைவில் ஏற்படுவதாகும். ஆறுகள் நாளடைவில் மணலை மட்டுமல்லாமல் பாறைகளுக்குக் கீழேயுள்ள நீரையும் ஓரளவு அடித்துச் சென்று விடுகின்றன. இவ்வாறு செல்கையில் இவை தங்கம் படிந்துள்ள (Gold bearing) அல்லது வெள்ளீயம் தாங்கிய பாறைகளைக் கடந்து செல்லும்போது இவவுலோகங்களின் படிமானங்கள் ஏற்பட்டு இவ்வாறு சேரும் கம்பிகள் நில மட்டத்தை அடைகின்றன.

தங்கம் கிடைப்பது பாறை அமைப்புகளிலிருந்தும், வண்டல் . படிமானங்களிலிருந்துந்தான். வணடல் படிமானங்கள என்பவை கப்பி, மணல், களிமண் ஆகியவற்றுடன தங்க உலோகத் துணுக்குகள் கலந்த திரட்சியாகும். ஆசுத்திரேலியாவில தான் இத்தகைய வண்டல் படிமானஙகள மிகுந்துள்ளன. ஆனால், தங்கம் கிடைகக்கும் பாறை அமைப்பைப் போல் இவ வண்டல்கள் இப்போது மிகுந்த சிறப்பினைப் பெறவில்லை.

நிலக்கரியைப் போன்றே தஙகமும் வெட்டியெடுக்கப் படுகிறது. பாறையில் காணப்படும் வேறு நிறமான கோட்டின் திசையைப் பினபற்றி நிலம் தோண்டப்பட்டுத் தங்கம் வெட்டியெடுக்கப்படுகிறது. தங்கச் சுரஙகத் தொழில முக்கிய தொழிலாக வளாச்சி பெற்றுள்ளதுடன் தங்க உற்பத்தி செய்யும் அனைத்து நாடுகளிலும் அது கவனத்தோடு மேற்பார்வை செய்யப்படுகிறது. கலப்பிலலாத தூய நிலையில தங்கத்தைப் பெ:ற இயலாது. தஙகம் பெரும் பாலும் வெளளியுடன் கலக்கப்படுகிறது. இந்தியாவில் தங்க உறபத்தியில் 40% தஙகச சுரஙகங்களிலிருந்தே பெறப்படுகிறது. உலகில் தஙக உற்பததி செய்யும் முக்கிய நாடுகள தென ஆப்பிரிக்கா, உருசியா, கனடா, அமெரிக்க ஐக்கிய நாடுகள் ஆகியன வாம். நிறைந்த அளவிலான தங்க நிலம் தென் ஆப்பிரிக்காவில் உள்ளது.

தங்கத்தைப் பெறும் முறைகளில இரண்டு வகை உள்ளன. 1) தூய்மை செயயபபடாத உலோகத்தைப் பெறுவது, 2. உலோகததிலிருந்து தங்கத்தைப் பிரித்தெடுப்பது, பெரும்பாலான சுரஙகங்களில் இந்த இரண்டுசெயல் முறைகளும் மேற்கொளளப்படுகினறன. ஆனால, நிலத்தினகீழே சுரங்கத் தொழிலில உலோகத் தாது வெட்டியெடுககபபட்டு, பின்னர் ஆலைகளுக்கு அனுப்பப்பட்டு அஙகுத் தங்கம் தனியே பிரித்தெடுககப்படுகிறது.

மனிதன் சுரஙகத் தொழிலை கி.மு.7000-இல தான் மேற்கொண்டான. சுரங்கத் தொழில் நாட்டைக்



சுரங்கப் பணியில் தானியங்கும் கருவி

செல்வமுடையதாகவும் சக்தி வாய்ந்ததாகவும் ஆக்கக் கூடியது என்பதை முதலில் உணர்ந்தவர்கள் பண்டைய உரோமானியர்களே. வணிகர்கள் விலை மதிப்புள்ள கற்களையும் உலோகங்களையும் வாணிகம் செய்து உரோம் நாட்டிற்கு மிகுந்த செலவத்தை ஈட்டித் தந்தனர். உரோமானியர்கள் தாங்கள் கைப்பற்றும் சுரங்கங்கள் அனைத்தையும் தங்கள் வசமாக்கிக் கொண்டனர்.

உரோமானிய ஆட்சி கி.பி.400-இல் முடிவு அடைந்தது. வெள்ளியும், இரும்பும், பிறகனிப் பொருள்களும் ஐரோப்பாவிலும் செருமனியிலும் பிரான்சிலும் கி.பி. 1400-இல் தோண்டியெடுக்கப்பட்டன. அமெரிக்காவில் கி.பி.1700-இல் சுரங்கத் தொழில் மேற்கொள்ளப்பட்டது. பின்னர் ஆய்வாளர்கள் காரீயம், துத்தநாகம் போன்றவற்றை மிசிசிப்பி நதிப் பள்ளத்தாக்கில் தோண்டியெடுத்தனர். மனிதன் கி.பி. 1880-இடையில் தன்சில்வேனியாவில் மிகுந்த அளவு நிலக்கரிதோணடியெடுத்தான். அதே நேரத்தில் ஆயிரக்கணக்கான மக்கள் கலிபோர்னியோவுக்குத் தங்கம் தோணடியெடுக்கும் நம்பிக்கையோடு விரைந்தனர். தங்கத்திற்கான விரைவே காரீயம், வெள்ளி முதலான பயன்தரும் தாதுப் பொருள்களைக் கண்டு பிடிக்க உதவியது.

விஞ்ஞானிகள் வாயுவிலிருந்தும், நிலமட்டத்தின் கீழிலிருந்து எழும் திரவத்திலிருந்தும் தங்கம பெறப்படுவதாக நம்புகின்றனர். கடல் நீரிலிருநதும் தங்கம் பெற முடியும் எனக் கருதப்படுகிறது. விஞ்ஞானிகள் இது குறித்த வழிகளை ஆராய்நது வருகின்றனர். வி.எ.

**தங்கக் கட்டுப்பாடு** இந்திய அரசாங்கம் தன் தேவைக்குத் தங்கத்தை திரட்டிக் கொளவதின் மூலம், தன் நாட்டில் தங்கத்தின் தேவையை நிறைவு செய்யவும், அந்நியச் செலாவணித் தட்டுப்பாட்டைப் போக்கவும் தங்கக கடத்தலை ஒழிக்கவும், தங்கக் கட்டுப்பாட்டை (Gold Control) 1963-ஆம் ஆணடு நடைமுறைப்படுத்தியது. தங்கக்கட்டுப்பாடு ஆணையைப் பரிசீலனை செய்வதற்கென 1963-ஆம் ஆண்டு செப்டம்பர் 5-ஆம் நாளன்று ஒரு குழு (நிதியமைச்சரின் வேண்டுகோளுக்கிணங்க) நியமிககப்பட்டது. அக்குழுவின் பணியானது-1. தஙகக் கட்டுப்பாட்டுச்சட்டத்தின்செய ற்பாட்டைப் பரிசீலனைசெய்வது, 2. தங்கக் கட்டுப்பாட்டை முன்னேற்றுவதற்கும் எளிமைப்படுத்துவதற்குமான வழிகளைப் பரிந்துரைப்பது ஆகும். இந் நோக்கங்களின் அடிப்படையில் தங்கக் கட்டுப்பாடு பற்றிய பொதுவான மதிப்பீடு, பொறகொல்லர்களின் சிக்கல்கள், தஙகக்கட்டுப்பாட்டு நிருவாகம், செயல்முறை ஆகியவற்றை ஆய்ந்து இககுழு கீழ்க்காணும் பரிந்துரைகளை அளித்தது.

**பொது மதிப்பீடு:** கடத்தலைக் குறைப்பதை மைய நோக்கமாகக் கொண்ட தங்கக் கட்டுப்பாட்டுச் சட்டம் அதில் ஓரளவுக்கு வெற்றி பெற்றுள்ளது. எனினும், மக்கள் ஆதரவு முழுமையாக இல்லாத நிலையில் தங்கக் கட்டுப்பாட்டுக் கொள்கையைச் சிறப்பாகச் செயற்படுத்த இயலாது என்பதையும் இக்குழு குறிப்பிட்டது. இககுழுவின் கருத்துப்படி, தங்கக்கோட்பாட்டிற்கு அரசியல் ஆதரவு முழுமையாக இல்லாதது, ஆயிரக்கணக்கிலுள்ள சிறிய பொற்கொல்லர்களின் நியாயமான வேண்டுகோள் செவிமடுக்கப் படாதது, சிறப்பாகவும் சம அளவிலும் இக் கட்டுப்பாட்டைச் செயற்படுத்துவதற்குரிய அமைப்பு இல்லாதது ஆகியவையெல்லாம் தஙகக் கட்டுப்பாட்டின் குறிக்கோள்களுக்கு எதிரான காரணிகளாக அமைந்தன.

**பொற்கொல்லர்களின் சிக்கல்:** வேலையற்ற பொற் கொல்லர்களுடைய சிக்கலைத் தீாக்க உடனடியாக நடவடிக்கை எடுக்க வேண்டும். நாட்டிலுள்ள அனைத்துப் பொறகொல்லர்களுக்கும் 14 காரட்டுத் தங்கத்தை அளிக்கத் தங்கத்தை இறக்குமதி செய்வது அல்லது அரசு ஏற்கெனவே தன்னிடம் உள்ள தங்க இருப்பில் ஒரு பகுதியை இதறகாக ஒதுக்குவது நீண்ட காலத்திறகுப் பயனளிக்காது. அரசு இவ்வாறு செய்வதால கடத்தலுக்கு முற்றுப்புள்ளியும் ஏற்படாது. ஆயிரக்கணக்காக உள்ள பொற்கொலலர்களுக்குச் சிறிதளவு தங்கத்தை ஒதுக்குவது எந்தப் பலனையும் அளிக்காது.

நீண்ட காலத் தங்கக் கோட்பாட்டில் 14 காரட்டு முறை முக்கிய அமிசமாகும். ஏற்கெனவே உள்ள நகைகளை மீண்டும் மாற்றிச் செய்வதில் மட்டும் 14 காரட்டுக்கு மேல் அனுமதிக்கலாம் என்ற அரசின் கருத்தை இக்குழு ஆதரிக்கவில்லை. இவ்வாறு செய்வது மீணடும் கடத்தலுக்கே வழிவகுக்கும் என்றும், தங்கத்திற்கான தேவையும் கூடிவிடும் என்றும் இக்குழு தனது அறிக்கையில் தெரிவித்தது. ஆனால், தங்கக் கட்டுப்பாட்டினால் வேலை இழக்கும் பொற்கொல்லர்களுக்கு மறுவாழ்வு அளிக்கும் திட்டத்தைச் செயற்படுத்த நாளாகும் என்பதால் மேற்படி அறிக்கை மறுபரிசீலனை செய்யப்பட்டது. குழுவின் தலைவரும் மற்ற உறுப்பினர்களும் கூடிச் சில முடிவுகளை எடுத்தனர். இக்குழுவின் கருத்துப்படி, தனிப்பட்டுப் பொற்கொல்லர் தொழிலில் ஈடுபட்டுள்ளவர் நிறைய உள்ளனர். 14 காரட்டு நகைகள் மட்டும் செய்ய அனுமதிக்கப்படுவதாலேயே அவர்கள் வேலை வாய்ப்புப் பெருகிவிடாது. காரணம்: 14 காரட்டுத் தங்கமும் இறக்குமதி செய்ய வேண்டிய நிலை (இதனால் ஏற்படும் அந்நியச் செலாவணிச் செலவு). பொற்கொல்லர் மறுவாழ்வுத திட்டங்கள், எதிர்பார்க்கும் விளைவை ஏற்படுத்த நீண்டகாலம் ஆகும் என்பதையும் வேலை இழக்கும் பொற்கொல்லர்களின் நிலையையும் கருத்திற் கொண்டு கீழ்க்காணும் முடிவுகள் எடுக்கப்பட்டன. குறிப்பிட்ட காலம் வரை, ஏற்கெனவே உள்ள நகைகளை மாற்றிச் செய்வதற்கு மட்டும் 14 காரட்டுக்கு மேல், ஆனால் அந்த நகைகளின் காரட்டு அளவுக்கு மிகாமல அனுமதிக்கலாம். இச்சலுகை தனிப்பட்டுப் பொற்கொல்லர் தொழிலில் ஈடுபட்டுள்ளவர்களுக்கு மட்டுமே பொருந்தும். இதற்குரிய கணக்குகளை அவர்கள் வைத்திருக்க வேண்டும். புதிதாகத் தங்கம் வழங்கப்பட மாட்டாது. தங்க நகை இருப்புக்கு உச்சவரம்பு கொணர நடவடிக்கை எடுக்கவேணடும்.

**அனுமதி வசதிகளின் விரிவாக்கம்:** 1 சுயதொழில அல்லாத பிற பொற்கொல்லாகளுக்கு 14 காரட்டுத் தங்கமே வழங்கப்பட வேண்டும். 14 காரட்டிலேயே அவர்கள் நகைகள் செய்ய அனுமதிக்க வேண்டும் என்ற திட்டத்தை இக்குழு ஏற்றுக் கொண்டது. இதன் மூலம் பொற்கொல்லர் வேலையிழப்புச சிக்கல் தீர்க்கப்படும் என்றும் கருதப்பட்டது.

2. சுய வேலையில் உள்ள சிறிய பொறகொல்லர்களுக்குக் குறைந்த கட்டண அடிப்படையில ஓராணடுக் காலத்திற்குச் சிறப்பு உரிமம் வழஙகப்பட வேண்டும். இந்த உரிமம் பெற்றவர்கள் குறிப்பிட்ட அளவு 14 காரட்டுத் தஙகத்தை எப்போதும் கையில் வைத்திருக்கலாம்.

3. பொது உரிமம் அல்லது சிறப்பு உரிமம் பெறாத எவரும் தங்கம் சம்பந்தப்பட்ட தொழிலில் ஈடுபடக்கூடாது

4. மறுவாழவுத் திட்டத்தை ஏற்றுக்கொளளும் வேளையில் சிறப்பு உரிமம் நீக்கிவிடப்பெறும்.

**பொற்கொல்லர் மறுவாழ்வு.** பொற்கொல்லர் மறுவாழ்வுக்கான திட்டப்பணிகள மைய அளவில் தொடங்கப்பட்டாலும் அதைச் செயலாக்குவது மாநிலங்களின் பொறுப்பில் இருக்கும். மாநிலங்களின் ஆலோசனையுடன் மைய அரசு ஒட்டுமொத்த மறுவாழ்வுத் திட்டத்தைத் தயாரிக்கும். ஆக்கபூர்வமான காரணங்களுக்குக் கடனளிப்பது இதில் முக்கிய அமிசமாக இருக்கும். முடிந்த மட்டும் பொற்கொல்லர்களின் இருப்பிடங்களுக்கருகிலேயே இத்திட்டம் செயற்படும் முயற்சி மேற்கொள்ளப்படும்.

மேற்கண்ட நடவடிக்கைகள் வெற்றிகரமாகச் செயற்பட இரண்டு கருத்துகளை இவ்வறிக்கை சிறப்பானவையாகக் கருதியது: 1)அரசு தங்கக் கோட்

பாட்டுக் கொள்கையைத் திறம்படச் செயறபடுத்துவது இதற்கு அடிப்படை வலுவாக இருக்கும் என்ற நம்பிக்கையை ஏற்படுத்துவது;கொள்கையைத் தெளிவாக அறிவிப்பது; 2) வேலையிழக்கும் பொற்கொல்லர்களுக்கான மறுவாழ்வுத் திட்டத்தை அரசு உண்மையாகவும் தாராளமாகவும் விரைவாகவும் செயற்படுத்துவது. (இவ்வாறு செய்வதன் மூலம் மட்டுமே தங்கக் கட்டுப்பாட்டிற்கு எதிரான மன நிறைவின்மையைப் போக்க முடியும்).

**தங்கக் கட்டுப்பாட்டு நிருவாகம்:** தங்கக் கட்டுப்பாட்டு நிருவாகம் குறித்தான குழுவின் பரிந்துரைகளாவன: 1) தங்கக் கட்டுப்பாட்டின் விளைவாக ஏற்படும் பணிகளை நான்கு வகையாகப் பிரிக்கலாம்: (i) நிருவாகம் (கொள்கை, செயல்முறை அனுமதி வழங்குதல், பரிசீலனை செய்தல் முதலிய), (ii) செயலாக்கம் (வழங்கப்பட்ட உரிமத்தை ஆய்வு செய்தல் பறிமுதல், தண்டனை முதலியன). (iii) முன்னாள் பொற்கொல்லருக்கு மறுவாழ்வு அளித்தல், (iv) தங்கத்திற்கான மக்களின் தேவையை விளம்பரங்கள் மூலம் குறைக்கத் தூண்டுதல்.

(2) தங்கக் கட்டுப்பாட்டுப பணி நிருவாகத்தை, தங்கக்கட்டுப்பாட்டுநிருவாகிஒருவரைப் பணியமர்த்தி அவரிடம் ஒப்படைக்க வேண்டும். இவருக்கும் மக்களுக்கும் இடையே ஒரு பாலமாக விளங்கும் வகையில் ஆலோசனைக் குழு இருக்க வேண்டும்.

(3) தங்கக் கட்டுப்பாட்டுப் பணிகளைச் செயலாக்கும் வழிமுறைகளைத் தயாரித்து அரசின் அனுமதிக்கு இந்த நிருவாகி அனுப்ப வேண்டும். பிற நிருவாகப் பணிகளை மற்ற அலுவலரின் உதவியுடன் கவனித்தல் வேண்டும்.

(4) தங்கம் சம்பந்தப்பட்ட களப்பணி மற்றும் செயலாக்கத்தின் பொறுப்பு, மையத் தீர்வைத் துறையிடம் (Excise department) இருக்கவேண்டும்.

(5) மைய வருவாய்க் குழுவின் கூடுதல் உறுப்பினராக இந்த நிருவாகி இருக்க வேணடும்.

(6) இந் நிருவாகி எதிர்கொள்ளும் சிக்கல்களில் உதவி செய்யவும், வழிகாட்டவும் மாநில அளவில் ஒருங்கிணைப்புக் குழு ஒன்றும், மைய அளவில செயலாளர் குழு ஒன்றும் இருக்க வேண்டும்.

(7) மைய அரசின் கோட்பாட்டின் வரம்பிற்குட்பட்ட நிலையில் பொற்கொல்லர் மறுவாழ்வுத்திட்டம் மாநிலங்கள் மூலம் செயற்படுத்தப்பட வேணடும்.

(8) தங்கத்திற்கான மக்களின் தேவையைக் குறைக்கத் தூண்டும் பொறுப்பு, விளம்பரம் ஆகியவை தகவல மற்றும் ஒலிபரப்புத் துறையின் பொறுப்பில் விடப்பட வேண்டும்.

தங்கக் கட்டுப்பாட்டின் செயல்முறையைப் பொறுத்த வகையில் இக்குழு பல பரிந்துரைகளை அளித்துளளது.

(1) தங்கக் கட்டுப்பாட்டு விதியை மீறுபவர்களைக் கண்டுபிடித்துச் சட்ட வழியாகத் தக்க தணடனை வழங்குதல் (பிரிவு 4).

(2) தங்கக் கட்டுப்பாடு வருவதற்கு முன்பிருந்தே தஙகச் சுத்திகரிப்புத் தொழிலில் சட்டப்படி ஈடுபட்டிருந்தவர்களுக்கு, அவர்கள மீணடும் உரிமத்திற்கு விண்ணப்பிப்பார்களானால சில கட்டுப்பாடுகளின் அடிப்படையில உரிமம் வழங்குதல்.

(3) சுத்திகரிப்புப் பணியில் தனியாருக்கு உரிமம் வழங்குவதில் அரசு எச்சரிக்கையுடன் இருக்க வேண்டும். நீண்ட காலத்திற்கு இப்பணி அரசின பொறுப்பிலேயே அமையச் செய்தல வேண்டும.

(4) உரிமம் வழஙகப்பட்டவர்களிடமிருந்து கணக்குகளைப் பெற வேண்டும். உரிமத்தை முறையாகப் பயன்படுத்தாதவர்களுககுத் தண்டனை வழங்குதல் (பிரிவு 6).

(5) தொழில முறையில தங்கம் தேவைப்படுபவர்களைக் கருத்திற கொணடு, பதிலீட்டுப் பொருளகளைக் கண்டுபிடிகக ஊககம் தரலாம் தகுந்த நிதியியல் நடவடிக்கை மூலம், பதிலீட்டுப பொருள்களைப் பயன்படுத்துவோரை ஊககப்படுத்துதல்.

**கிராமக் கடன் மீதான தங்கக கட்டுப்பாட்டின் விளைவு:** 'தங்கக் கட்டுப்பாட்டை ஈடுசெய்வதற்கான நடவடிக்கைகள்: இவை குறித்தான குழுவின் பரிந்துரைகள்:

(1) வங்கிக் கடனைப் பொறுத்தவரை, நகைக் கெதிராக வங்கி கடன் தருவது நீண்டகாலத்திற்குத் தவிர்க்கப்பட வேண்டும் என்ற கொள்கையை மாற்ற வேண்டியதில்லை. கடனளிக்கும் தொகையை முடிவு செய்யத் தங்க நகைகளை மதிப்பிடுவதைத் தொடர்புடைய வணிக வங்கிகளே அங்காடி நிலவரம் பொறுத்து முடிவு செய்து கொள்ளலாம்.

(2) தங்கக் கட்டுப்பாட்டின் விளைவாக எங்கெல்லாம் கிராமக் கடன் குறைந்து விட்டதோ அங்கெல்லாம் பிற வழிகள் மூலம் கடனளிக்கத் தனிப்பட்ட நடவடிக்கைகள் எடுக்கலாம்.

(3) நகை அடைமானத் தரகர்களிடம் மீட்கப் படாத நகைகள் இருந்தால் அவற்றை சட்டப்படி,

அங்கீகரிக்கப்பட்ட ஏலதாரர்கள் மூலம் மட்டுமே விற்க முடியும். மாவட்ட நீதிபதிகளின் முன்னிலையில் நகைகள ஏலம் விட வகை செய்ய வேண்டும்.

தங்கக் கட்டுப்பாட்டை ஈடு செய்யும் நடவடிக்கை யாக,

(1) தங்க அணிகலன்களுக்கு நிகரான பொருள் களை உற்பத்தி செய்யும் வகையில் முதலீடுகளை மேற் கொள்ளல்,

(2) தங்கம் தவிர மற்ற முதலீடுகளுக்கான கடன் பெறத், தேவையான வசதிகளை மிகுந்த அளவில் ஏற் படுத்துதல்,

(3) கிராமப்பகுதிகளில காப்பீடு செய்யும் பழக் கத்தைமக்களிடையே பரப்புதல்செய்யப்பட வேண்டும்.

இப்போது 'இந்தியப் பாதுகாப்பு விதிகளின' ஓர் அங்கமாகச் செயற்பட்டுவரும் தங்கக்கட்டுப்பாடு நாள டைவில் தனிப்பட்ட வகையில நிலையான சட்ட அடிப்படையைப் பெற வேண்டும். பொற்கொல்லர் மறுவாழ்வுச் சிக்கல் தீர்க்கப்படத் தகுந்த நேரத்தில் இதனைச் செய்யு வேண்டியது மிகவும் இன்றியமை யாதது. வி.எ.

**தங்கச் சுரங்கங்கள்:** ஓர் இடத்தில் பொன் கிடைப்பது பெரும்பாலும் எதிர்பாராத செயலா கவே கண்டுபிடிக்கப்படுகிறது. இக்காலத்தில் புதிய அறிவியல் முறைகளில் நில நூல் வல்லுநாகள் ஓர் இடத்தில் பூமிக்கு அடியில் பொன் இருக் கிறதா இல்லையா என்பதைக் கண்டுபிடிக்கிறார்கள். அவ்வாறு தேர்ந்தெடுக்கப்பட்ட இடங்களில் கிடைக் கக்கூடிய பொன் தாதுக்களின் அளவைப் பொறுத்து சுரங்கத்தின் பரப்பளவு உறுதி செய்து கொள்ளப்படு கிறது. தங்கச் சுரங்கம் தோண்டுவதும், பொன் எடுப் பதும் கடினமான வேலைகளாதலால், நீணட காலம் பயன்தரக்கூடிய, பொன் தாது நிறைந்துள்ள சிறந்த இடங்களே தங்கச சுரங்கம் (Gold mine) அமைக்கத் தேர்ந்தெடுக்கப்படுகின்றன.

சுரங்கம் அமைக்கத் தேர்ந்தெடுக்கப்பட்ட இடம் பல பகுதிகளாகப் பகுக்கப்பட்டு, ஒவ்வொரு பகுதிக் கும் சுரங்க வேலைக் காலத்தில் சுரங்கத் தொழிலா ளர்களுக்குத் தேவையான காற்று, நீர், வெளிச்சம் ஆகியவற்றிற்கும், தொழிலாளர்களுக்குத் தேவை யான பாதுகாப்பிற்கும் ஏற்பாடு செய்யப்படுகிறது. சுரங்கத்தினுள்ளும் வெளியிலும் தேவையான பாதை களும் மற்றச் சாதனங்களும் அமைக்கப்படுகின்றன.



தங்கச் சுரங்கம்

மேற்கண்ட ஏற்பாட்டு வேலைகள் செய்யப்பட்ட பிறகு பொன் தாதுக்களைச் சுரங்கத்திலிருந்து வெட்டி எடுக்கும் வேலை தொடஙகப்படுகிறது. சிக் கனமான முறையில் மிக அதிக பொன் தாதுப் பொருளை வெளிக் கொணர்வதே நோக்கம். கீழே பூமிக்கடியில் சுரங்கம் தோண்டப்படும் பாதை முழு தும் கனிப்பொருள், சிறு சிறு வண்டிகளும், உருளை களும் அமைக்கப்பட்டு அதன் வழியாக ஓரிடத்திலிருந்து மற்ற இடஙகளுக்கு அனுப்பப்படுகிறது. கடத்தும் பட்டை(Conveyer belt)என்ற கருவியும் பயன்படுத்தப் படுகிறது. அதன் வழியாகச் சுரஙகத்தின் உள் ளிருந்து அனுப்பப்படும் கனி வளமானது, பூமியின் உள்ளிருந்து ஏறத்தாழ 5 மீ சுற்றளவுள்ள பூமியின் துளை வழியாக வெளியே சமதளத்திற்கு கொண்டுவரப்படுகினறது. பொன்தாதுநிறைந்த கூண்டு கள் இழுத்து வெளிக்கொணரப்படுகின்றன. பின்னர் அத்தாதுப் பொருள தொடர் வணடிகள் (Wagons), இயந்திரங்கள் (Engines)வழியாகத் தங்கம் தூய்மைப் படுத்தும் இடத்திற்கு எடுத்துச் செல்லப்படுகிறது.

சுரங்கம் தோண்டும்போது, போதிய காற் றோட்ட வசதி இல்லையேல் பெரும் இடர்களும், உயிரிழப்புகளும் நேரலாம். பூமியைக குடையும் போது வெளிப்படும் நீரை அப்புறப்படுத்துவதும் மிக முக்கியவேலையாகும்தொடக்கக்காலத்தில் எகிப்தியர் களும் உரோமானியர்களும்சுரங்க வேலையின் போது வெளிப்படும் நீரை அகற்றப் பல முறைகளைக் கையாணடுள்ளனர். ஆனால், பின்னர்ச் சேம்சுவாட்டு கண்டுபிடித்த நீராவிப் பம்பு உறிஞ்சிக்குழாய் (Steam pump) இச்சிக்கலைத் தீர்த்துள்ளது.

தங்கச் சுரங்கம் போன்ற சுரங்கங்களில் வேலை செய்வது பழங்காலத்தில் இழிதொழிலாகவும், குற்ற வாளிகளுக்குக் கொடுக்கப்படும் தண்டனையாகவும இருந்து வந்தது. சுரங்கத் தொழிலாளர்களின் வாழ்க்கை முறையும், வாழ்க்கைத் தரமும், தொடக்கக்காலத்தில் வேதனையானதாகவும் வருந்தத் தக்கதாகவும் இருந்தன. பின்னர்ப் பல்வேறு இயந்திர சாதனங்களின் கணடுபிடிப்பாலும், உல கெங்கிலும் தொழிலாளர்களிடையே ஏற்பட்ட தொழிற்சங்கங்களினாலும இன்று சுரஙகத் தொழிலா ளர் வாழக்கை நிலை பலமடங்கு முனனேறியுளளது பல அரசாங்கங்கள் பல்வேறு சுரஙகச் சட்டங்களை இயற்றித் தங்கச் சுரங்கஙகளில் வேலை செய்வோர்க் குப் பாதுகாப்பு வழங்கி வருகிறது. உலகிலேயே குளிர் சாதனவசதி தென் ஆப்பிரிக்காவிலுள்ள தங்கச் சுரங்கத்தில் பொருத்தப்பட்டுள்ளது. பொறி இயல் வல்லுநர்கள இனறு சுரங்கத் தொழிலை ஓரளவு



சுரஙகப் பணியில் மதிப்பாய்வு

அறிவியல் முறையில் அமைத்துக் கொடுத்திருக்கி றார்கள்.

உலகப்பொன் உற்பத்தியில் ஏறத்தாழ 56% தென் ஆப்பிரிக்காவில் இருந்து கிடைக்கிறது. உருசியாவில் இருந்து 25 விழுக்காடும் கனடா, அமெரிக்கா, ஆசுத்திரேலியா ஆகிய இடங்களில் இருந்து ஓரளவும் பொன் கிடைக்கிறது. வி.எ.

**தங்கச் செலாவணிக் கோட்பாடு**: கடந்த காலத்தில் தங்க நாணயத் திட்டம் பேராக்கம் பெற்றிருந்தது. பல நாடுகள் இத்திட்டத்தை கி.பி. 1871-ஆம் ஆண்டிலிருந்து 1931-ஆம் ஆண்டு வரை வெவ்வேறு வடிவங்களில் மேற்கொண்டிருந்தன.

தங்க நாணயத் திட்டத்தின்படி, தங்க நாணயங்கள் புழக்கத்தில் இருப்பதுடன், அடையாள நாணயங்களைப் பொன்னாகவோ பொன் நாணயங்களாகவோ மாற்றிக் கொள்ளவும் முடியும். எனவே, இத்திட்டத்தின் மீது மக்களுக்கு முழு நம்பிக்கை இருந்தது. மேலும், தங்கப் பெயர்ச்சி முறையால் அயல் நாட்டுச் செலாவணி வீதம் நிலையாக இருந்தது. எனினும், இது ஒரு ஆடம்பரத் திட்டமாகும். முழு மதிப்புடைய தங்க நாணயங்கள் புழக்கத்தில் இருப்பதால், போதுமான அளவு தங்கத்தைக் கையிருப்பாகக் கொண்டுள்ள பணக்கார நாடுகளே இத்திட்டத்தை மேற்கொள்ள முடிந்தது. குறைந்த அளவு தங்கத்தைக் கையிருப்பாகக் கொண்டுள்ள வறிய நாடுகள் இத்திட்டத்தை மேற்கொள்ள இயலவில்லை. எனவே, வறிய நாடுகளும் மேற்கொள்ளக் கூடிய விதத்தில், தங்க நாணயத் திட்டத்தின் நன்மைகள் யாவற்றையும் உள்ளடக்கிய திட்டம் ஒன்று உருவானது. இதைத் தங்கக் கட்டித்திட்டம் (Gold Bullion Standard) என்றனர்.

ஒரு நாட்டின் செலாவணியானது, தங்க நாணயத் திட்டத்தை மேற்கொண்டுள்ள மற்றொரு நாட்டின் செலாவணியோடு இணைக்கப்படும் போது தங்க மாற்றுத் திட்டம் எனப்படுகின்றது. இதில் தங்க மாற்றுத் திட்டத்தைப் பின்பற்றும் நாட்டின் செலாவணியை நேரடியாகத் தங்கமாகமாற்ற முடியாது. எடுத்துக் காட்டாக இந்தியாவில், இத்திட்டம் கி.பி.1893-ஆம் ஆண்டு முதல் 1926-ஆம் ஆண்டு வரை நடைமுறையில் இருந்தது. இந்திய உரூபாயானது பிரிட்டனின் பவுன் இசுடெர்லிங்கோடு இணைக்கப் பெற்றிருந்தது. அப்போது உரூபாயை நேரடியாகத் தங்கமாக மாற்றமுடியாது. ஆனால், தங்கநாணயத் திட்டத்திற்குட்பட்ட பவுன் இசுடெர்லிங்காக மாற்ற முடியும்.

இவ்வாறு, தங்க மாற்றுத் திட்டத்தை மேற்கொண்டுள்ள நாட்டில் அடையாளப் பணங்களும், காகிதப் பணங்களுமே புழக்கத்திலிருக்கும். உள்நாட்டில், செலாவணியைத் தங்கமாகப் பண அதிகாரியிடம் மாற்றிக் கொள்ள முடியாது. ஆனால், அயல நாட்டு வாணிகத்தை ஒட்டிப் பிற நாட்டவருக்குக் கொடுக்க வேண்டிய பணத்தைச் செலுத்துவதற்கு அரசு தங்கத்தை அல்லது அயல் நாட்டுச் செலாவணியை ஏற்பாடு செய்து தரும். இதற்காக, அயல்நாட்டில் தேவையான அளவு இருப்புகளை வைத்திருக்கும்.

ஆலந்து முதன்முதலில் கி.பி.1871-ஆம் ஆண்டு தங்கமாற்றுத் திட்டத்தை மேற்கொண்டது. உருசியா கி.பி.1892 ஆம் ஆண்டு இத்திட்டத்தை மேற்கொண்டது. இத்திட்டமானது வறிய நாடுகளில், குறிப்பாகப் பணக்கார நாடுகளின் குடியேற்ற நாடுகளில் குறிப்பிடத்தக்க இடம் பெற்றது. உள்நாட்டில் தங்க நாணயங்கள் புழக்கத்தில் இல்லாததால் இது மிகவும் சிக்கனமான திட்டமாகும். மேலும், தங்கத்தைப் பயன்படுத்தாமலே தங்க நாணயத் திட்டத்தின் நன்மைகள் யாவும் கிடைத்தன. இத்துடன் அயல்நாட்டு வங்கியில் உள்ள இருப்புகளுக்கு வட்டியும் கிட்டியது. மொத்தத்தில், வறிய நாடுகளுக்கு இது ஓர் அரியகொடையாக அமைந்தது.

இத்திட்டத்தில் பல குறைபாடுகளும் உள்ளன. இத்திட்டம் தானாக இயங்கக் கூடியதன்று. இதன் இயக்கத்திற்கு அரசாங்கத்தின் தலையீடு மிகவும் இன்றியமையாததாகும். மேலும், இத்திட்டத்தின்படி பலவேறு காப்பிருப்புகளை வைத்திருக்க வேண்டியுள்ளது. எனவே, இத்திட்டம் தங்க நாணயத் திட்டத்தைப் போல் செயற்பட எளிமையாக இல்லாமல் சிக்கலாக உள்ளது. மேலும், பொன் திட்டமுடைய நாட்டில் ஏற்படும் பொருளாதாரச் சிக்கல்களால் பொன் மாற்றுத் திட்டமுடைய நாடுகளும் கேடுறும். மேலும், போர்க்காலம் போன்ற நெருக்கடிக் காலங்களில் நாடுகள் அவற்றின் தொடர்புகளைத் துண்டித்துக் கொண்டால் மிகுந்த பொருளாதாரக் குழப்பம் ஏற்படும். மொத்தத்தில் பணக்கார நாடுகளின் குடியேற்ற நாடுகளில் இத்திட்டம் வெற்றியுடன் செயற்பட்டது. கே.தெ.

**தங்க நாணயத் திட்டம்**: ஒரு நாட்டின் பண மதிப்பைக் குறிப்பிட்ட தங்கத்தின் எடையால் அளவிடவும், உள் நாட்டிலும், வெளி நாட்டிலும் அப்பண மதிப்புக்கு ஈடான தங்கத்தை எளிதில்

மாற்றிக் கொள்ளவும், தடையற்ற தங்க ஏற்றுமதி இறக்குமதிக்கு வகை செய்யும் திட்டமே தங்க நாணயத் திட்டம் (Gold standard) எனப்படுகிறது.

தங்க நாணயத் திட்டம் உள்நாட்டு அளவிலும் பன்னாட்டு அளவிலும் இரு முக்கியமான பணிகளைச் செய்கிறது. உள் நாட்டு அளவில், அந்நாட்டின் பண அளவைக் கட்டுப்படுத்துகிறது. பன்னாட்டு அளவில, பன்னாட்டு மாற்று விகித மதிப்பை (Exchange rate) வரையறுப்பதோடு, அதை நிலையாக வைத்திருக்கவும் வழி செய்கிறது. இத்திட்டத்தினால் ஒவ்வொரு நாடும் தங்கள நாட்டின் மொத்தப் பண மதிப்புக்கு நிகரான குறைந்த அளவு தங்கத்தை இருப்பில வைத்திருக்க வேண்டும். இதனால் பணஅளவு கட்டுப்படுத்தப்படுவதுடன், பொது மக்கள் தாங்கள் வைத்துள்ள பணத்தின்மீது நம்பிக்கை வைக்கவும், விலைவாசியைக் கட்டுப்படுத்தவும் இது உதவுகிறது. இது பன்னாட்டு வாணிகத்தை எளிதாக்கவும், அயல்நாட்டுச் செலுத்து நிலையைச் (Balance of payment) சமநிலையில் வைத்திருக்கவும், பன்னாட்டுப் பொருள்களுக்கான விலையை நிருணயிக்கவும் உதவுகிறது.

தஙக நாணயத் திட்டத்தை ஏற்றுக் கொள்கிற நாடுகள் சில விதிகளை மேற் கொள்ள வேண்டும். தடையற்ற தங்க ஏற்றுமதி, இறக்குமதி, பன்னாட்டு மாற்று விகிதத்தைச் சமநிலையில் வைத்திருத்தல், பன்னாட்டுக் கூட்டுறவுக்கேற்கும் பணக்கொளகையால் (Monetary Policy) தடையற்ற வாணிகத்திற்கு வகை செய்தல் போன்ற விதிமுறைகளை ஏற்றுக் கொள்ளுதல் வேண்டும்.

தங்க நாணயத் திட்டம் பல நிறை, குறைகளைத் தன்னகத்தே கொண்டுள்ளது.

**நிறைகள்:** பன்னாட்டு மாற்று விகிதத்தை வரையறுக்கவும், அதை நிலையாக வைத்திருக்கவும், பன்னாட்டு முதலீடுகளுக்கு வகை செய்யவும், உளநாட்டு, பன்னாட்டு விலை வாசியைக் கட்டுப்படுத்தவும், பணவீக்கத்தையும், பணவாட்டத்தையும் தவிர்க்கவும், பணக்கொள்கையில் அரசு தன் கடமையை உணர்ந்து செயற்படவும் உதவுகிறது. மேலும், இது பணமதிப்புக்கும், தங்க இருப்புக்கும் இடைப்பட்ட இடைவெளியைத் தானாகவே சரிசெய்து கொளகிறது.

**குறைகள்:** பன்னாட்டு மாற்று விகிதமும், விலை விகிதமும் சமயங்களில் முரண்படக் கூடியனவாயுள்ளன. தடையற்ற தங்க ஏற்றுமதி, இறக்குமதிக் கொள்கையால் ஒரு நாட்டின் பொருளாதார மந்தம் ஏனைய நாடுகளுக்கும் பரவி விடுகிறது. ஒரு நாட்டின் சுதந்திரமான பணக்கொள்கையைக் கெடுக்கிறது. தங்க இருப்புக் குறைவாகவுள்ள நாடு பணவாட்டத்தாலும், கூடுதலாகவுள்ள நாடு பணவீக்கத்தாலும் கேடுறுகின்றன. வளர்ந்து வரும் பொருளாதார அமைப்பினைக் கொண்ட நாடுகளுக்கு இத்திட்டம் பயனளிப்பதில்லை. பயனாக மேலும் 1930-இல் ஏற்பட்ட உலகப் பெருமந்தத்தில (Great depression) இத்திட்டத்தால் பல நாடுகள் கடுமையாகக் கேடுற்றன. நெருக்கடி தாங்க முடியாத நாடுகள் ஒன்றன்பின் ஒன்றாக இத்திட்டத்தைக் கைவிட்டன. செருமனி 1931-சூலையிலும் இங்கிலாந்து செப்டம்பரிலும் இத்திட்டத்தைக் கைவிட்டதைத் தொடர்ந்து பல நாடுகளும் அவற்றைப் பின்பற்றின. ஐக்கிய அமெரிக்காவும் தங்க நாணயத் திட்டத்தை 1933-ஏப்பிரலில் கைவிட்டது.

**காகிதப் பணத் திட்டத்தில் தங்கத்தின் பங்கு:** தங்க நாணயத் திட்டம் கைவிடப்பட்டாலும், இன்றும் பன்னாட்டுப் பணத் திட்டத்தில் தங்கம் முக்கிய பங்கு வகிக்கிறது. பன்னாட்டு நிதி நிறுவனம் (International Monetary Fund) தன்னுடைய உறுப்பு நாடுகளின் பணத்தின் மதிப்பை நிலையாக வைத்திருக்கப் பொறுப்பேற்றுள்ளது. எனவே, அனைதது நாடுகளும் தங்கள் பணத்தின் மதிப்பை அமெரிக்கத் தாலரோடு அல்லது தங்கத்தோடு ஒப்பிட்டுக் கூற வேண்டும். இம்முறையினாலேயே ஒரு நாட்டின் பண மதிப்பு நிருணயிக்கப்படுகிறது. இந்தியாவில் காகிதப் பணத்திட்டத்தின் (Paper Currency) அடிப்படையாக 200 கோடி இருப்பு (115 கோடி தங்கமும், 85 கோடி வெளிநாட்டு நாணயமும்) இருக்க வேண்டுமென்று இந்திய மைய வங்கி (Reserve Bank of India) வரையறுத்துள்ளது. எனவே, மஞ்சள உலோகத்தின் (Yellow Metal) பெருமை உலக அரங்கிலோ உள்நாட்டு அளவிலோ குறையவில்லை. இன்றும் தங்கம் ஒரு சிறப்பான, பாதுகாப்பான மூலதனமாக உலக மக்களால் ஒப்புக்கொள்ளப்பட்டுள்ளது. ந.து.

**துணை நூல்கள்:**

Bhatia, H.L., Vani Educational Books, New Delhi, 1985.

Sethi, T.T., Monetary Economics, S. Chand & Co., Ltd., New Delhi, 1981.

Sundram K.P.M., Money, Banking and International Trade, Sultan Chand & Sons, New Delhi, 1980.

**தங்கனிகா ஏரி:** மைய ஆப்பிரிக்காவின் கிழக்குப் பகுதியிலுள்ள தங்கனிகா ஏரி (Tanganyika

Lake) உலகிலேயே மிகப் பெரிய ஏரியாகும். இதனைக் குடிநீருக்குப் பயன்படுத்தலாம். எனினும், சிறிது உப்பாக உள்ளது. இதன் நீளம் 676 கி மீ. அகலம் 48 கி. மீ. முதல் 72 கி.மீ. வரை இருக்கின்றது. உருசியாவிலுள்ள பைகால் ஏரிக்கு அடுத்த நிலையில், 1435 மீ. ஆழமுள்ள இது உலகில் இரண்டாம் இடத்தைப் பெற்றுள்ளது இதனுடைய பரப்பளவு 32,893 ச.கி.மீ. ஆகும்.



தங்கனிகா ஏரி

**அமைப்பு:** இந்த ஏரி தங்கனிகா நாட்டிற்கும் காங்கோ (பழைய பெல்சியன் காங்கோ) நாட்டிற்கும் இடையே பெரிய பிளவுப் பள்ளத்தாக்கில் (The Great Rift Valley) அமைந்துள்ளது. இதன் வடக்கே புருண்டியும் (Burundi), தெற்கே சாம்பியாவும் (Zambia) கிழக்கே தான்சானியாவும் (Tanzania) மேற்கே சயரும் (Zaire) எல்லைகளாக உள்ளன. இதனுடைய கரையோரப் பகுதிகள் 1962-இல் புதிதாக விடுதலை பெற்ற நாடுகளான தங்கனிகா, புருண்டி, காங்கோ, உரொடீசியா ஆகிய நாடுகளால் பங்கிடப்பட்டன. இந்த ஏரியில் மலகரசி (Malagarasi), உருசிசி (Ruzizi), கலம்போ (Kalambo) முதலிய ஆறுகள் கலக்கின்றன. இவ்வேரி நீர் உலுக்குகா (Lukuga) ஆறுமூலம் காங்கோ நதிக்கு அனுப்பப் படுகிறது. இது வேளாண்மைக்கு மிகுந்த அளவில் பயன்படுத்தப்படவில்லை. உலகிலேயே மிகப் பெரிய நீர்வீழ்ச்சிகளுள் ஒன்று இங்கு உள்ளது. அதன் உயரம் 213 மீ. இவ்வேரியின் நீளத்தை நீராவிப் படகின் மூலம் நான்கு நாள்களில் கடக்கலாம் என்றாலும் வறட்சிக் காலங்களிலும், காற்று மிக வேகமாக வீசும் நேரங்களிலும் இதில் பயணம் செய்ய இயலாது.

**பயன்கள்:** ஐரோப்பியரின் வருகைக்கு முன்னர் இந்த ஏரியின் குறுக்கே மேற்கிலிருந்து கிழக்கு நோக்கிப் போக்குவரத்து குறிப்பிடத்தக்க அளவிற்கு இருந்து வந்தது. எவ்வேதான் இன்றும் இதன் கிழக்கு எல்லையில் வாழ்ந்து வரும் மக்கள் தாங்கள் காங்கோப் பகுதியிலிருந்து வந்ததாகக் குறிப்பிடுகின்றனர். அடிமை வணிகம் தொடங்கிய பின்னர் இதன் இரு மருங்கிலும் இருந்த கிராமங்கள் முற்றிலும் அழிந்து போயின.

மேற்கு ஆப்பிரிக்காவில் சிறப்பாக வளரும் எண்ணெய்ப்பனை இதன் கரைகளில் நிறைய உள்ளது. இங்குள்ள அடர்ந்த காடுகளில் விலை மதிப்புள்ள மரங்கள் பெருமளவு வளர்ந்துள்ளன. கரையோரப் பகுதிகளில் அரிசியும், பிற உணவுத் தானியங்களும் விளைவிக்கப்படுகின்றன. பலவகை மீன்கள் இவ்வேரியில் கிடைப்பதால் மீன்பிடிக்கும் தொழிலும் ஓரளவு நடைபெறுகின்றது. இங்கு நீர் யானைகளும், முதலைகளும், பலவகைப் பறவைகளும் மிகுந்து காணப்படுகின்றன. தங்கனிகாவில் கிகோமாவிற்கு (Kigoma) வடக்கிலும், தெற்கிலும் உள்ள மலைகளில் சிம்பன்சி (Chimpanzee) குரங்குகள் உள்ளன. சி இரெ.

**தங்கால் ஆத்திரேயன் செங்கண்ணனார்:** இவர் சங்க காலப் புலவர்களுள் ஒருவர். இவர் பாடல்கள் அகநானூற்றிலும் நற்றிணையிலும் இடம் பெற்றுள்ளன. செங்கண்ணனார் போன்று வேறு சிலரும் இப்பெயரில் உளராதலின், அவரின் இவர் வேறானவர் என்பது தெரிய, அவர்தம் ஊரையும் குலத்தையும் கூட்டித் தங்கால் ஆத்திரேயன் செங்கண்ணனார் என்று வழங்கப் பெற்றார்.

தங்கால் என்பது ஊரின் பெயர். இவ்வூர் திருத்தண்காலென இக்காலத்தே வழங்கப்பெறுகின்றது. இது சிரீவில்லிபுத்தூருக்கு அருகில் அமைந்த திருமால் திருப்பதி. ஆத்திரேயன் என்பது மரபுப் பெயராக அமைந்து, ஆத்திரேய கோத்திரத்திற் பிறந்தவர் என்பதைக் குறிக்கின்றது. எனவே, இவர் அந்தண மரபினராதல் தெளிவு. செங்கண்ணனாரென்பது இவரது இயற்பெயர்.

இப்புலவர் பாடிய பாடலொன்று நற்றிணையில் 386-ஆம் பாடலாக அமைந்துள்ளது. குறிஞ்சித் திணையில் அமைந்த அப்பாடல் தலைமகளின் எண்ணத்தையும் குறிப்பையும் அறியாமல் தோழி தலைமகனுக்கு வாயில் நேர்ந்த திறத்தைத் துறையாகக் கொண்டு விளங்குவது. சிறு கண் பெருஞ்சினப்பன்றி கானவர் விதைத்த ஏனற் கதிர்களைத் தின்று வேங்கைக்கும் அஞ்சாது மலைச்சாரலில் துஞ்சும் என்ற உள்ளுறை மிக்க நயம் வாய்ந்தது. ஏனற் கதிர்களை மேய்ந்த பன்றி போன்று, இத் தலைமகனும் பரத்தையர்பால் பெருக இன்பந்துய்த்து உலகம் கூறும் இகழ்வுரைக்கும் அஞ்சாது தலைவியின் முன்றிலின்கண் காத்துக் கிடக்கின்றான் என்னும் உள்ளுறைப் பொருள் நினைந்து இன்புறற்கு உரியது. க.கோ.

**தங்கால் பொற்கொல்லன் வெண்ணாகனார்:** எட்டுத்தொகை நூல்கள் சிலவற்றில் இவருடைய பாடல்கள் சில காணபபடுவதால், இவர் சஙக காலப் புலவர் ஆவார். பொற்கொல்லன எனற மையான் இவர் கம்மாளரென்பது பெறப்படும் என றும், ஊர் ஆத்திரேயன செஙகணணனார் எனனும புலவரது ஊராகிய திருததங்காலே எனறும் கூறுகின்றனர்.

தங்கால் என்னும் ஊரில் பொற்கொல்லன் வெண்ணாகனார், முடக்கொறறனார், முடக்கொல்லனார், பொற்கொற்றனார், பூட்கொல்லனார், பூட்கோவலனார் எனும் பெயர்களில் பலா வாழ்ந்திருக்கினறனர். அவர்கள் பாடிய பாடல்களா அகம், புறம், நற்றிணை, குறுந்தொகை முதலான பல தொகை நூல்களில் இடம்பெற்றுளளன. ஆயின், இவர்கள் யாவரும் பல பெயர்களைத் தாங்கிய ஒருவரா அன்றிப் அப்பெயர்களைத் தாஙகிய பலரா என்பது ஆராயத்தக்கது.

அபிதான சிந்தாமணியின் கூற்றுப்படியும், நற்றிணை நூலுக்குப் பின்னத்தூர் நாராயணசாமி ஐயர், சோமசுநதரனாா ஆகியோர் விளக்கவுரை எழுதிய கழகப் பதிப்பில் காணப்பெறும பாடினோர் வரலாற்றுக் குறிப்புப்படியும் இவர்கள யாவரும் தஙகால் பொற்கொலலன் வெணணாகனார் என்ற ஒருவரேயாகலாம் எனக் கொளளவேண்டியுளளது. மேலும் வெண்ணாகனார் என்ற ஒருவா பாடிய பாடல்களே சங்க நூல்கள் பலவற்றிலும் வெவ்வேறு பெயர்களில் இடம்பெற்றுளளன எனக் கொள்ள வேண்டியுமுள்ளது. இக்கருத்து மேலும் ஆராயத்தக்க ஒன்றாகும்.

'பொற்கொல்லன் எனபது பூட்கொல்லனென றும், பூட்கொற்றனெனறும் பிறழ எழுதப்பட்டுளளது. ஏடெழுதுவோரால் நோநத வழு இது. பூட்கொல்லனென்பது பொருள பொருந்தாமையால் பூட்கோவலன (பூணகட்டிய தடிக் கொம்புடையவன) எனத் திருத்தப்பட்டது போலும். பூடகொற்றனை முடக்கொற்றனென்று திருத்தவுமாயிறறு' எனறு குறிப்பிடும் அபிதான சிந்தாமணி இம்மாற்றங்கட்கு ஏடெழுதுவோரைக் குற்றப்படுத்துகினறது.

பொதுவாக, ஏடெழுதுவோர் பொற்கொறறனாரைப் பொற்கொல்லனார் என்றோ, பூட்கொல்லனார் என்றோ சிறு அளவில் குற்றங்களைச் செய்ய வாய்ப்புண்டு. ஆயின் பொற்கொற்றனாரை முடக்கொற்றனார் என்று எழுத வாய்ப்பில்லை. அப்படியே எழுதியிருப்பினும் தக்க பெரியோர் திருத்தம் செய்யாமல் விட்டிருக்கவும் மாட்டார். இததகையவற்றை ஏடெழுதுவோர் செய்த பிழைகள் என்று கருதுதற்கில்லை. எனவே, ஒரே ஊரில் பிறந்த பல புலவர்கள், பல பெயர்களில் பல்வேறு பாடலகளைப் பாடியுள்ளனர் என்றும், அவர்களின் பாடல்கள் தொகை நூல்களில் இடம்பெற்றுள்ளன என்றும் கொள்ளுதல் நலம்.

தங்கால பொற்கொல்லன் வெண்ணாகனார் குறிஞ்சியையும் பாலையையும் பாடுவதில் வல்லவர். நற்றிணையில் காணப்பெறும் 313-ஆம் பாடல் இவரால் பாடப்பெற்றுள்ளது. இத்துடன் குறுந்தொகையில ஒன்றும் அகத்திலிரண்டும் புறத்திலொன்றுமாக ஐந்து பாடலகள் இவரால் பாடப்பெற்றவை என்று ஔவை துரைசாமிப் பிள்ளை கூறுவார். சு.கோ.

**தங்கால் பொற்கொல்லனார்:** சங்ககாலத் தமிழ்ப் புலவர்களுள தங்கால் பொறகொல்லனாரும ஒருவர். இவர் தஙகால் என்னும் ஊரினர். இவ்வூர் பாணடி நாட்டில் இக்காலத்தே திருத்தண்காலென வழங்கும்; திருமால் திருத்தலங்களுள ஒன்று. இளங்கோவடிகள் இதனைத் 'தடம்புனற் கழனித்தங்கால' எனச் சிறப்பிததுப் பேசுவார். (சிலமபு- மதுரைக்கா -23-118) 'இராசராசப் பாண்டிநாட்டு மதுராந்தக வளநாட்டுக் கருநீலக்குடி நாட்டுத் திருத்தங்கால்' என்று கல்வெட்டொன்று இதனைச் சிறப்பிக்கின்றது. மேலும், இவ்வூரிலுளள மடமொன்றில மாறவர்மன் சுந்தர பாண்டியன் காலத்தில் பாரதமும் இராமாயணமும் படிக்க ஏற்பாடு செய்யப்பட்டிருநததென்பர். எனவே, கலவி வளமும் நிலவளமும் பொருள்வளமும் நிறைந்த ஊராகத் திகழந்தது இவ்வூர் எனலாம்.

இவ்வூர் ஆத்திரேயன் செங்கண்ணனார், பொற்கொலலன், வெண்ணாகனார் போனற பல புலவர்களா தோன்றிய சிறப்பினைப் பெற்றது. இத்தகைய ஊரில தோன்றிய பொற்கொலலனாா பாடிய பாடல்கள புறநானூற்றில 326-ஆம் பாடலாகவும் அகநானூற்றில 108-ஆம் பாடலாகவும் அமைநதுளளன.

இவர் பாடிய புறநானூற்றுப் பாடல வாகைத் திணையில் மூதினமுல்லைத் துறையிலமைந்த பாடலாகும். அப்பாடலில ஊரின் சிறப்பும், மறக்குடி மகள் ஒருத்தியின் மற மாண்பும், செயல்திறனும், விருந்தினர்ப்பேணும் பண்பும் அவள் கணவனின் மறப் புகழும் கொடைத்திறனும் கூறபபடுகின்றன.

குறிஞ்சித் திணையில், 'தலைமகன் சிறைப் புறத்தானாகத் தலை மகட்குக் சொல்லுவாளாய்த் தோழி சொல்லியது' என்னும் துறையிலமைந்த

அகநானூற்றுப் பாடல் இனிய உவமைகளையும் அரிய பொருளையும் கொண்டு விளங்குகிறது.

புணர்ந்தோரின் புன்கணமையைத் தீர்த்தருளல அறிவுடையோர்க்கு என்றும் உரியது என்ற அரிய கருத்து இப்பாடலின்கண விளக்கப்படுகிறது சு.கோ.

**தசகாரியம்** என்பது உயிர் உலகத் துனபங் களிலிருந்து விடுபட்டு இறைவனோடு இரண்டறக கலந்து இன்புற்றிருக்க மேற்கொள்ளும பத்துச் செயல்முறைகளாம். சைவசித்தாந்தம் விளக்கும் இந்தத் தசகாரியம் தத்துவ ரூபம், தத்துவ தரிசனம், தத்துவ சுத்தி, ஆன்ம ரூபம், ஆன்ம தரிசனம், ஆன்ம சுத்தி, சிவ ரூபம், சிவ தரிசனம், சிவ யோகம், சிவ போகம் என்னும் பத்தினையும் குறிக்கும்

மக்கள் பல்வேறு நிலையினர். உலக ஆசையில உழனறு கணக்கற்ற துன்பஙகளால் துயர் உறுவோர் ஒருவகையினர். மறறொரு சாரார் துன்பந்துடைக்கும் வழியாது என எண்ணி உலக இயல்பு பற்றியும் (பாசம்) அதில் வாழகின்ற உயிர்களின் தன்மை(பசு) பற்றியும் நூல்கள் வாயிலாயும் தக்க ஆசிரியர்கள் வாயிலாயும் கேட்டுச் சிந்தித்துத் தெளிவுபெறுவர். அப்பால் இறைவன் (பதி) இயல்பு பறறித தெரிநது சிந்தித்துத் தெளிவுபெற்று நிட்டைகூடிச் சிவானந் தத்தில் ஆழ்ந்திருப்பர். இவ்விரண்டாம் பகுதியினர் மேற்கொளளும் செயல்முறைகளே தசகாரியமாகும்.

தத்துவஙகள மணமுதல நாதம் ஈறாக முப்பத் தாறு என்று சைவசித்தாந்த நூல்கள் கூறும். இத் தத்துவங்கள் உயிரொடு கூடிய வழி நிகழும் செயற் பாட்டைப் பற்றி அறிதல் தத்துவரூபம். இத் தத்து வங்களைப் பறறிப் பலவாறு ஆராய்ந்து இவை உயிருணர்வு இன்றிச் செயற்படாத சடம் என உணர் தல் தத்துவதரிசனம். பின்னர், இதததுவஙகள் யாவும் மாயையில் தோன்றி நின்று செயற்பட்டுப்பின் அதனிடமே ஒடுஙகும் தன்மையன எனும் உணமையை உணர்தல் தத்துவ சுததி.

அப்பால் ஆன்மாவைப் பற்றி நூல்கள கூறுவன யாவை என்று எண்ண வாய்ப்பு ஏற்படுகிறது. 'மனனி யதானே முதல் என நிற்றல் மாசு உயிர்ககுரு' எனும் தணிகைப்புராணக் கூற்றுப்படி தானே எல்லாம் என உயிர் நினைத்து நிற்றல ஆன்ம ரூபம். பின் உயிர் தன்னைப் பற்றி நீள நினைந்து ஆராய்ந்து தனக்கு வேறாக இருந்து இறையருள உணர்த்துகிறது எனத் தெரிதல் ஆன்ம தரிசனம் இறுதியாக ஆன்மா தன்னைப் பற்றித் தெளிந்த அறிவைப் பெறுகிறது. 'என் செயலாவது யாதொன்றுமில்லை, எல்லாம் உன் செயலே' என்னும் உணர்வில் அழுந்துதல் ஆன்ம சுததி.

ஆன்மசுத்தியால் எல்லாம் இறைவனால் நிகழ் வன, தன்னால் ஒன்றும் இயலாது என்ற நிலை ஏற் பட்டபின் நான், எனது என்னும் செருககுகள் கூடா என்னும் உண்மையைத் தெரிந்து உயிர் பக்குவமடை கிறது. அப்பால் இறைவனைப் பற்றிய நாட்டத்தை உயிர்மேற்கொள்கிறது. இறைவனைப் பற்றியும் அவன் பெருமை பற்றியும் கேட்டு அவனே முதல்வன் என்பதை உணர்கிறது. இது சிவரூபம். இவ்வாறு இறைவன் பறறிய உணமைகளைத் தெரிந்ததும் எல் லாம் அவனருளே கண்ணாகக காணும் நிலை பெறு தலே சிவதரிசனம். அந்நிலை பெற்றதும் இறையருள கிட்டி உயிர் சீவபோதம் கெட்டுச் சிவபோதம் பெறறு அவனருளில் தோய்ந்திருத்தலே சிவயோகம்.

இவ்வாறு இறையருளில் தோய்நத உயிர் பெறும் பலன் சிவானந்தமாகும். இதையே பேரானந்தப் பெருவாழ்வு என்று பல நூல்களும் கூறுகினறன இதனால, உயிர் இறைவனோடு ஒனறுமாகாமல வேறும் ஆகாமல் அவனுடன் பொருந்தியும் பொருந் தாமலும் இல்லாமல் ஞான மயமாய் சிவஞானத்துள அழுநதிச் சிவததை உணரும் உணமைஞானம் கைவரப்பெற்றுப் பேரின்பத்துள் அழுந்துதலே சிவ யோகம். இதனால் உயிர் இறையினபத்ததை துய்க்க மேற்கொள்ளும் படிமுறைகள் பதது என்றும், அவையே தசகாரியம் என்றும் பெறப்படும். இரா.ச.

**தசகாரியம்[2]:** சைவ சித்தாந்தம் கூறும், தத்துவ ரூபம், தத்துவ தரிசனம், தத்துவ சுத்தி, ஆன்மரூபம், ஆன்ம தரிசனம், ஆன்ம சுத்தி, சிவரூபம், சிவ தரிசனம், சிவ யோகம், சிவபோகம் எனனும் பததினை யும் பற்றித் 'தசகாரியம' என்னும் பெயரிலேயே பிற் காலத்தில சில நூலகள் தோன்றின. சைவ சித்தாந்த சாத்திரச் செய்திகளைக் கூறும் அந்நூலகளில் சில, திருவாவடு துறை ஆதீனத்து அறிஞர்கள் செய்த சைவ சித்தாந்த நூற்றொகுப்பாகிய 'பண்டார சாத்திரம்' எனப் பெயரிய பதினான்கு நூல் தொகுப்பில இடம் பெற்றுள்ளன.

திருவாவடுதுறை ஆதீனத்தைச் சார்ந்த அம்பல வாண தேசிகர் ஒரு தசகாரியம் இயற்றியுள்ளார். அது, அவ்வாதீனத் தொகுப்பாகிய 'பண்டார சாத்திரம்' என்பதனுள் ஒரு நூலாகத் திகழ்கிறது. முற்கூறிய தத்துவரூபம் முதலிய பத்தினையும் இந் நூல் தெளிவாக விளக்குகிறது. கடவுள் வணக்கப் பாடலோடு 55 செய்யுள்கள் இதன்கண் உள. ஈசான தேசிகர் என்னும் சுவாமிநாத தேசிகர் என்பவரும்

தட்சிணாமூர்த்தி தேசிகரும் தனித்தனி தசகாரியம் இயற்றியுள்ளனர் எனத் தெரிகிறது.

மேலும், கி.பி. 15-ஆம் நூற்றாண்டினைச சேர்ந் தவராகக கருதப் பெறும் களந்தை ஞானப் பிரகா சரும் ஒரு 'தசகாரியம்' இயற்றியுள்ளார். நூல் முழுதும் கிடைக்கவில்லையாயினும், கிடைத்த வரையிலான நூலிறகுப் பல பதிப்புகள் வெளி வந் துளளன. இந் நூல் பாயிரம், இலககணப் பகுதி, குரு பூசை, ஞானதீக்கை ஆகிய பகுதிகளுக்குப் பினனர்த் தத்துவரூபம் தொடங்கிப் பத்துச் செய்திகளையும் கூறுகிறது. ஞானப்பிரகாசரின் ஆசிரியர் சததிய ஞானியாவார். இந்நூற பாடல் சிலவற்றை வெள்ளி யம்பலவாணர் தம் முத்தி நிச்சய உரையில எடுததுக் காட்டியுள்ளார். இச செய்தியினைப் பேராசிரியர் மு.அருணாசலம் தம் இலக்கிய வரலாற்றிற் குறிப் பிட்டுள்ளார். (த இ.வ. 15 நூ.ப.167). மேலும் சிலர் இப்பெயரில் தனி நூல்கள எழுதியுள்ளனரெனபது தெரிகிறது.

தசகாரியச் செய்திகள, சிவஞானசித்தியார், சைவ சித்தாநதக் கட்டளை போன்ற சில சைவசாத திர நூல்களிலும்; உரைகளிலும் பலவேறு கோணங் களில விளக்கப் பெற்றுள்ளன. வேதாந்தியாகக் கருதப் பெறும் சிவஞான வள்ளல், தாம் இயற்றிய பதி பசு பாசு விளக்கம என்னும் நூலில் மூன்று செய்யுள்களிலும், உபதேச மாலை என்னும் நூலின் பத்துச் செய்யுள்களிலும் தசகாரியம் பற்றி விளக்கி யுள்ளார். அ.மா.ப.

**தசகுமாரசரிதம்**: இது தண்டி எனபவரால் எழுதப்பெற்ற ஒரு சமசுகிருதக் காவியமாகும். சமசு கிருத உரைநடை வேத, உபநிடதங்கள் காலத்தில் தான் முதன் முதலில் தோன்றியது. தணடி, பாணர் ஆகியோர் கி.பி. 6,7-ஆம் நூற்றாணடுகளில இதே முறையைப் பின்பறறி உரைநடையை எழுதினர். ஆனால், இவர்களுடைய முறை முந்தைய முறையை விடக் கடுமையானதாகும்.

தண்டி என்பவர் எழுதிய தசகுமாரசரிதம் பதது இளவரசர்களின் கதைகளைக் கூறுகிறது. இக்கதைகள உயிரோவியம் போலப் பாமரமக்களின் வாழ்ககை நிகழ்ச்சிகளை எடுத்துக காட்டுகினறன.

இந்நூலில பணடைய சமுதாயத்தின தாழந்த நிலையையும் இளவரசர்களின் வீரச்செயல்களையும் இவர்களுக்கும் குடியானவர்களுக்குமிடையே இருந்த உறவையும் விளக்கிக் காட்டுகிறது. மலைவாழ் மக்களைப் பற்றியும், வணிகரைப் பற்றியும் இது தெளிவாகக் கூறுகிறது.

இந்திய சமுதாயம் கி.பி.6-ஆம் நூற்றாண்டில் ஊழலுக்கு முதனமையிடம கொடுத்ததைப் பற்றியும் இந்நூல் கூறுகிறது. பத்து இளவரசர்களின் தலைவன் ஒரு அரசனாகவும், ஏனைய ஒன்பது இளவரசர்களும் தங்களது வீரச் செயலகளை ஒருவருக்கொருவர் பகிர்ந்து கொண்டும், போட்டி போட்டுக் கொணடும் சொல்லும் பாங்கு அழகாகவும், நகைச்சுவையுடனும் உள்ளது. இக்காவியம் மகாபாரதத்திற்கு ஒப்பாகக் கருதப்படுகிறது. வரலாற்றறிஞர்கள் பயன்படுத்தும் இலக்கியச்சானறுகளுள் இதுவும் ஒன்று. கே.சே.

**தசரதன்** என்பவன் கோசல நாட்டை அயோத தியிலிருந்து அரசாணட சூரிய குலவழிவந்த பேரரசன். இவன் அறிவு, அருள, அறன, சாலபு, வலிமை, கொடை, நீதி போனற அரசர்க்கமைவுடையவெல லாம் பெற்றவன். அரசர்கள் என்போர் இயறறும யாகங்கள எல்லாவற்றையும் செய்துமுடித்தவன. உலகவர்க்குத் தாய்போல அன்பும், தவம்போல பயனும், மகன்போல் இமமை மறுமைப் பேறும், மருந்துபோல் துன்பநீககமும்,அறிவுபோல் உதவுந்தன மையும் உடையனாய் வாழ்நதவன. தன்கண போந்து இரந்தார்க்கு இரந்தன கொடுத்தும் நுணணுணாவி னர்ககுவரம்புடையனாய் வீரர்கட்கு எல்லை காட்டிய வனாய் திருநலம் அனைத்தும் துய்த்தவனாய் வாழ்ந்த வன். உலக உயிர்கள் அனைததிறகும் உறையுளாய அறுபதினாயிரம் ஆணடுகள் வாழ்ந்தவன்.

வேட்டையாடப் போந்து யானை எனக கருதி முனிவன் மகனைக் கொன்று அதன்வழிப் புத்திர சோகத்தால் உயிர்விடும் ஒரு சாபம் பெற்றவன். மகப் பேறில்லாக்குறைக்கு வருந்தித் தன் குலகுரு வசிட்டனிடம் கூற அவர், தேவர்களும தெய்வஙகளும் முறையிட்டபோது பரம்பொருள் திருமால் புரிய வேணடிய காத்தற்றொழிலை முடிக்கத் தயரதனுககு மகனாகப் பிறக்கப் போவதாகக கூறிய சொல நினைந்து, மகவேள்வி செய்யக்கூற, அவனும் கலைக் கோட்டு முனிவன் வழி வேள்வி செய்ய, அவ்வேளவி யில் தோன்றிய சுதைநிகர் பிணடத்தை மனைவியர் மூவாக்கும் பகுத்தளித்து இராம பரத இலககுவ சத துருக்கனர்களை ஈன்றவன்.

மக்களோடு மகிழ்ந்திருக்கும் நாளில விசுவாமித் திர முனிவன் நிருதர்களினின்றும் தன் வேள்வி காக்கும்பொருட்டுஇராமனைத் துணையாக அனுப்பக் கேட்ட போது உயிர் பிரிந்தாங்கு இராமனை அனுப பியவன். இராமன் சிவதனுசை நாண பூட்டியபோது ஒடித்தான் என்று கேட்டு உவந்து, சீதைக்கும இராம னுக்கும் நிகழந்த திருமணத்திற்குச் சென‌று கண்டு களிததவன். பரசுராமன் இராமன சிவதனுசை ஒடித்த

தைக்காரணமாக்கித் தன குலப் பகையைப் புதுப்பித்துப் போந்து இராமனைப் போருக்கழைத்தபோது நடுங்கிப் பரசுராமனை வழிபட்டவன. இராமன் பரசுராமனை வென்றான் என்பதறிந்து, கண்டு மகிழ்ந்தவன. இராமனுக்கு முடிபுனையக் கருதி அமைச்சரவை கூட்டிக் கருத்தவாவி அவாதம் உடன்பாடு கேட்டுப் பெற்றுப்பின் பல தேயத்தரசர் அவைகூட்டி, அவர்தம் உடனபாடு பெறறதும் இடர் ஒனறு கழிந்ததாகக் கருதிக் களி கொண்டு இராமனை அரசர்களிடம கையடையாக்கியவன். இராமனை அழைத்துத் தான தரும் அரசியலை பெரும் பாரம் எனனாது ஏற்றுக் கொளவது எனபது இம்மை மறுமை பயக்கவலல உததம மகனைப்பெற்றதால் வரும் பயன் எனறும், தான் பெற்ற மூப்புக் காரணமாகவும தவமென்னும் 'தன கருமம்' செயற்குப்போவதற்காக என்றும் கூறித்தான தன் அரசியலை இராமன்ஏற்றுக கொளவதாகக் கூறும் வரக்கொடை வேணடுவதாகவும் கூறி அரசினை ஏற்க வைததவன். அவனே கூனியும் கைகேயியும் சூழ்நது இராமன் காடேகவும, பரதன் நாடாளவும் முடிவு செய ததைக் கைகேயி தயரதனிடம் வரமாகக்கேட்டபோது துனுக்குற்றவன். தான் இராமனுக்கு அளித்த அரசை அவனிடமே இல்லை எனறுகூறக கூறியவன. கைகேயி பெற்ற வரத்தால் இராமன் காடேகாது தகைககஅருமபாடு பட்டவன. பிடிவாதமாக இருநத கைகேயியைத் திருத்தப் பெணகளுககுளள அறங்கள் பல வற்றைக் கூறியவன். அவள கேளாதபோது அவளைக் கொல்லத் துணிந்து பெணகொலை புரிதற்கஞ்சி விடுத்தவன. இராமன் காடேகா வகையில் வசிட்டன வழி முனைந்தும் அது பயனளிக்காதபோது கைகேயியை மனைவி அல்லள் என்றும்,பரதன் தனககு மகன்அல்லன் என்றும் கூறியதோடு அவன் தனககு இறுதிக்கடன ஆற்றவும் தகுதியறறவன என்றும் கூறியவன்.கோசலையிடம் தான் பெற்றிருந்த சாப வரலாறு கூறித் தான் இறப்பது உறுதி என்று கூறியவன.

இராவணவதை, முடித்தபின் சீதையை மீட்டு அவள் கற்புநெறியை மெய்ப்பித்துக் காட்ட எரிபுகச் செய்தபோது, சிவபிரான் துறக்கத்திலுளள தயரதனை அழைத்து இராமனைத் தெருட்டிச் சீதையை ஏற்குமாறு செய்யச் சொல்லப் பூதலம போந்தவன். தயரதனை ஆண்டு இராமன் வணங்க இராமனை மார்புறத் தழுவி அன்று கைகேயி கொண்ட வரமென்னும் வேல் நெஞ்சுறுத்தி நின்றது, இராமன் மார்பில் உள்ள காந்த மணியால் பறிப்புணடதென்று கூறித் தன்னைததேவர் தொழும் காட்சியை இராமனுக்குக் காட்டி மகிழ்ந்தவன். தன்னை வணங்கிய சீதையை நோக்கித் தன் மகன் எரிபுகச் சொன்னதை மனத்துக் கொண்டு சினவாதிருக்க வேண்டியவன். இலக்குவனைத் தன்னைத்தானே தழுவியதுபோல் கண்ணீர் ததும்பத் தழுவி இந்திரசித்தனை வென்று அறம் நிறுத்தியதைக கூறிப் பாராட்டியவன. தயரதன் மகிழ்ச்சிப் பெருககில் இராமனை நோக்கி இருவரங்கள் கேட்கச் சொன்னபோது தயரதனால் மனைவி அலலள என்று அனறு புறக்கணிக்கபபெற்றவள் தனக்கு மீணடும் தாயாகுமாறும், மகன் அல்லன் என்று துறககப்பெற்ற பரதன தம்பியாகுமாறும் வரம் கேட்க, கைகேயியின பால் தனககிருந்த சினம் நீஙகவில்லை என்று கூறி வரமளிதது மீண்டும் வானகம் புககவன. கு. தி.

**தசலி-ன்-அசர்** தென அலஜீரியாவில் உள்ள ஒரு பகுதி. இஙகு வரலாறறுக் காலததிறகு முற்பட்ட பாறை ஓவியஙகள் கி.பி. 19-ஆம் நூறறாணடில் கணடுபிடிககப்பட்டன. சகாராப பகுதியின நடுவில மேட்டு நிலத்தைக் கொண்டு விளங்கும தசலி-ன-அசரில் (Tassılı-n-Ajjer) உயாநத மலைகள காணப் படுகின்றன. அம்மலைகளின் பக்கபபாறைகளில வரலாறறுககு முறபட்ட கால ஓவியங்களா காணப்படுகினறன. இவ்வோவியஙகளின காலத்தைச சரியாக அறிஞாகளால் கணிகக இயலவில்லை. இங்குள்ள பாறை ஓவியஙகள் மூனறு வகையாகப பிரிககப்பட்டுள ளன. அப்பிரிவுகளா அவ்வோவியஙகளின் கலை அமைப்பை வைத்தே பிரிக்கப்பட்டுள்ளன. முதற் பிரிவு ஓவியங்களா கருநீல வெளிககோடுகளா வரையப்பட்டுத் தொன்மையான எழுத்துப் போன்ற அமைபபில அதன உட்பகுதியில் வணணம் பூசப்பட்டுத் தீட்டப்பட்டுள ளன. பெரும்பாலான ஓவியஙகளில் விலஙகுகளும



தசலி-ன-அசர்

மனிதர்களும் காணப்படுகினறனர். வடிவியல் (Geometic) முறையில் இவ்வோவியங்கள் வரையப்பட்டுள்ளமை இங்குக் குறிப்பிடத்தக்கது. இரணடாம் பிரிவு ஓவியங்களில் மனிதர், விலங்குகள் ஆகியவையே பெரும்பாலும் தீட்டப்பட்டுள்ளன. இயற்கையான அமைப்பையுடைய இவ்வோவியங்களில கால்நடைகள ஓடுகின்ற காட்சியும், கால்நடையை மேய்க்கும் மனிதர்கள் கையில் வில்லுடன் இருககின்ற காட்சியும் காணப்படுகின்றன. மூன்றாம் பிரிவு ஓவியங்கள் கன வடிவ அமைப்பு ஓவியங்களாகும். இதில் ஓவியங்களின் பல்வேறு கூறுகள ஒருங்கே காட்டப்பட்டுள்ளன. வெளிறிய நிறத்தையும் கறுத்த வண்ணத்தையும் கொண்டு ஓவியங்களைப் பிரித்துத் தீட்டியுள்ளனர். இம்மூன்றாம் பிரிவு ஓவியங்களில் முதன்முதலாகச் சக்கரம் ஒன்று வரையப்பட்டுள்ளது. சில கற்சிலைகளும் இங்குக்கிடைத்துள்ளன. சு. இரா.

**தசாங்கத்தயல்**: தசம், அங்கம் என்ற இரண்டு சொற்களும் சேர்ந்து உருவான தொடர் 'தசாங்கம்' என்பதாகும். மன்னன் ஒருவனுக்குரிய மலை, ஆறு, நாடு, ஊர், மாலை, குதிரை, களிறு, கொடி, முரசு, செங்கோல போன்ற பத்து உறுப்புகளைப் பாடுவது தசாங்கப்பத்து எனப்படும். தசாங்கத்தயல், தசாங்க வருணனை, சின்னப்பூ எனப்படும் இலக்கிய வகையாகும். பாடல் எண்ணிக்கை வேறுபாட்டாலும் யாப்பு வேறுபாட்டாலும் தசாங்கமே இவ்வாறு பல்வகைப் பெயர்களைப் பெற்றுள்ளது.

தசாங்கங்கள் எவை என்பதில் பாட்டியல்கள வேறுபடுகினறன. வெண்பாப் பாட்டியல் பெயரை நீக்கிச் செங்கோலையும், இலக்கண விளக்கம் பெயரை விடுத்து ஆணையையும் கூறுகின்றன. எவையேனும் பத்து உறுப்புகளைப் பாடுவது தசாங்கப்பத்து ஆகும். இவ்வகைத்தோன்றிய பின இதனை யொட்டித் தோன்றியது தசாங்கத்தயல். தசாங்கப்பத்து, வெண்பா யாப்பில் அமையும். தசாங்கத்தயல், பதினானகு சீர் ஆசிரிய விருத்தத்தாலோ ஆசிரியப்பாவாலோ பாடப்பெறும். இங்குயாப்புத்தான வேறுபடுகிறது. இவ்வேறுபாட்டால் தனிப்பெயர் பெற்றுப் புதிய வகையாகியிருக்கிறது, தசாங்கத்தயல.

தசாங்கப் பத்தையும் தசாங்கத்தயலையும் அடுத தடுத்துக் கூறும் முதல் பாட்டியல் நூல் முத்து வீரியம் ஆகும். இவ்விரண்டையும் பிரபந்த தீபிகை சுட்டுகிறது. தசாங்கப் பத்துக்குப் புறம்பானது என்ற பொருளில 'தசாஙகத்தயல்' எனற தொடர் உள்ளது. ஈணடு யாப்பு மாறுபாடே புறம்பாகும், வெண்பாவுக்கு அடுத்த பாடல், ஆசிரியப்பா. எனவே, ஆசிரியப்பாவால் பாடும் நூலைத் 'தசாங்கத்தயல்' என்றனர் தசாங்கத்தகவல் என்பது தசாங்கத்தயல் என்று மருவிற்று என்பாரும் உளர்.

நவநீதப் பாட்டியல் உரை (காரிகை 52) 'தசாங்கத்தியல்' என்று ஒருநூல் வகையைச் சுட்டுகிறது இதன் கருத்து, தசாங்கத்தின் இயல்பினது என்பதாம். தசாங்கத்தயல் என்பதையே ஏடுபெயர்த்தெழுதினோர் இவ்வாறு எழுதினர் போலும். எவவாறாயினும் இவ்விலககிய வகையைப் புலவர்கள் பாடிலர். தெ. சொ.

**தசாங்கப்பத்து**: இது தொண்ணூற்றாறு வகைச் சிற்றிலக்கியங்களுள் ஒன்றாகும் தசாங்கம் என்ற வடமொழித் தொடர் அரசுக்குரிய பத்து உறுப்புகளைக் குறிக்கும். அவற்றைப் பாடும் சிறறிலக்கிய வகைகள் தசாங்கப்பத்து, தசாங்கத்தயல், தசாங்க வருணனை, சின்னப்பூ என்பனவாம்.

மலை, ஆறு, நாடு, ஊர், பறை, குதிரை, களிறு, தார். பெயர், கொடி ஆகியன தசாஙகங்கள் என்று பன்னிருபாட்டியல் குறிக்கின்றது. வெணபாப்பாட்டியல் 'பெயரை' நீக்கிச் 'செங்கோலை'க் கூறுவதுடன், தசாங்கத்தை நச்செழுத்து வாராமல் நேரிசை வெண்பாவால் பாடவேணடும் எனறு உரைக்கின்றது. இலக்கண விளக்கப் பாட்டியல் 'பெயரை' நீக்கி 'ஆணை'யைப் பாடுக எனறு விதிக்கும். ஆயினும், எவையேனும் பத்து உறுப்பைத் தசாஙகத்தில பாடவேண்டும் என்பது விதி.

தொல்காப்பியம் மன்னர்க்குரிய குடை, வாள் போன்றவற்றைப் பாடத் துறை வகுத்தது. பதிற்றுப் பத்தும் புறநானூறும் மன்னர்க்குரிய குடை, செஙகோல், முரசு, படை போன்றவற்றைப் புகழ்கினறன. முடியாட்சியில் மனனரைப் பாடுமாறு அவர்களுக்குகுரிய அரசுறுப்புகளையும் புலவாகள பாடினர். உலா, மடல் போன்றவற்றில் தசாஙகங்கள இடைமடுத்துப் பாடப்பட்டன. பிற்காலத்தில் தூது, காதல் போன்ற இலக்கிய வகைகளிலும் இமமரபு பரவியது.

தசாஙகங்களை ஓரிலக்கியததுக்குள இடைமடுததுப்பாடும் போக்கு, தனிநூலாகப் பாடத் தூணடிறறு. எனவே, புலவர்கள பத்து உறுப்புகளைத் தனித் தனியே பத்து நேரிசை வெணபாக்களால் பாடினர். அது 'தசாஙகப்பதது' என்னும் புதிய இலககிய வகையாகத் தமிழில் அமைநதது.

மன்னர்க்குப் பாடும் தசாங்கத்தைத் 'திருத்தசாஙகம்' என்னும் பெயரில் மாணிக்கவாசகர் சிவபெருமகனுக்குப் பாடினார், அதுவே, தசாஙகப்பத்து வகையில் முதல் நூல், அதில 'களிற்றை' நீககிப்

'படையை' மாணிக்கவாசகர் பாடியுள்ளார். தத்து வராயர் 'தசாங்க வெணபா' என்றும், வண்ணச் சரபம் தண்டபாணி சுவாமிகள் 'தசாஙக வகுப்பு' என்றும் பாடியுள்ளனர். தசாஙகத்தை வெணபா யாப்பால் பாடித் தசாங்க வெண்பா என்றும், வகுபபு என்னும் வண்ணப்பாவால் பாடித் தசாஙக வகுப்பு என்றும் பெயரிட்டனர். யாபபு வேறுபாட்டால் இப் பெயர்கள எழுந்தன தெ.சொ.

**தசுக்கனி**: இது வட இத்தாலியிலுள்ள ஒரு மாநிலம். இது இத்தாலிய மொழியில், தொசுகானா' என்று கூறப்படுகிறது. தசுக்கனி (Tuscany) என்ற பெயர் கி.மு.1000-இல் வாழ்ந்த எட்ரசுகன (Etruscans) இனத்தினரால் சூட்டப்பட்ட பெயரா கும். தசசியா என்ற சொல் கி.பி.3-ஆம் நூற றாணடில் உரோமானியப் பேரரசர்களால அதிகார பூர்வமாக ஏற்றுககொளளப்பட்டது. இது கி.பி 6-ஆம் நூற்றாணடில் பார்பேரிய இனததவரான இலம்பாடி களின உலூக்காவில் தலைமைப் பீடமாக இருநதது. இது (கி.பி.774-இல்) பிராங்குகளின் ஆட்சியின கீழக் கொணரப்பட்டது. இதுஅந்தோணியர்க்கும் கீழ் கி.பி. 11-ஆம் நூற்றாணடில் வந்தது. நாளடைவில நடு இத்தாலியில் ஒரு முககியமான மாநில மாகத் திகழத் தொடஙகியது. மடில்டா இறந்த பிறகு கி.பி. 1115-இல் தசுக்கனி தன்னிச்சையாக இயங்கத் தொடங்கியது. ஆனால், முன்பிருந்த ஒற்றுமை உணர்வை இது இழநதது எனலாம்.

இதனுடைய பணபாடும் பொருளாதாரமும் கி.பி.11-ஆம் நூற்றாணடில் சிதைந்தன. பிரெஞ்சு நாட்டினர், தசுக்கனி மன்னரான மூன்றாம் பெர்டி னாணடை ஓட்டிவிட்டு கி.பி. 18-ஆம் நூற்றாணடின் பிற்பகுதியில் அதைத் தங்களது ஆதிககத்தின கீழ்க் கொணர்ந்தனர். நெப்போலியன் போனபார்ட்டு கி.பி. 1801-இல் தசுககனிப்பேரரசை நிறுவினாா். அத னால் 1808-இல் இதைத் தமது பேரரசுடன் இணைத் துக்கொணடாா. இதைத் தம் சகோதரியான எலிகா விடம கி.பி. 1809-இல் ஒப்படைத்தார். நெப்போலி யனின் வீழசசிக்குப் பிறகு மூன்றாம் பெர்டினாணடு மீணடும் கி.பி. 1814-இல தசுககனி மன்னரானார்.


தசுக்கனி

இவர் காலத்திலும், இவருககுப் பிறகு ஆணட இவர் மகன் இரணடாம் இலியோபால்டு காலத திலும், தசுககனி முனனேறியது. அனைத்து ஐரோப் பிய நாடுகளிலும் புரட்சிக் கருத்துகள் மின்னல் வேகத்தில் பரவும்போது மன்னா இலியோபாலடு 1848-இல்தசுக்கனியில் ஓர் அரசியல அமைப்புச் சட்டத் தைக கொணர்ந்தார். ஆனால், புரட்சியாளர்களின இடைவிடாத போராட்டததின் விளைவாக அவர் இதைக குடியரசு நாடாக ஆககி, உயிாபிழைக்க நாட்டிலிருந்து தப்பி ஓடினாா. ஆனால, ஆசுத்திரியர் களின் உறுதுணையுடன் இலியோபாலடு நாடு திரும்பிப் பல தசுககனியரின ஆதரவை இழந்தார்.

பியன்மாணடிற்கும் ஆசுத்திரியாவிறகு மிடையே கி.பி 1859-இல் போர் நடந்த போது இலியோபாலடு கலந்துகொளள மறுத்ததின விளைவாக அவரை எதிர்த்து மக்கள் கிளர்ச்சி செய்து அவரை நாட்டை விட்டே விரட்டினர். பிறகு மக்கள் ஆதரவு பெற்ற அரசு ஏற்பட்டது. தசுக்கனி கி.பி. 1861-இல் புதிய இத்தாலியுடன இணைந்து.

தசுக்கனி ஒரு வளமான நாடாகும். இங்கே காய் கறிகளும் பழஙகளும் பெருமளவில் உறபத்தி ஆகின் றன. கால்நடை, குதிரைகள, பன்றிகள, கோழிப் பண்ணை ஆகியவற்றிற்குப் பெயாபெற்றது தசுககனி. இந்நாட்டிலுள்ள பணணை முறை 'மெச்சாத்திரியா' எனப்படும். இது பொதுவுடைமைக கொளகையில் ஒரு வகையாகும்.

இப்பண்ணை முறை, 1966-இல ஏறபட்ட கடும்புய லாலும் வெள்ளத்தாலும் மிகவும் பாதிககப்பட்டது. இங்கே சில முககிய ஆறுகள் ஓடுகின்றன. சுற்றுலா மையங்களும் உள்ளன. இரும்பு, எஃகு, கப்பலகட்டும் தொழில், சலவைக்கல் தொழில் ஆகியவறறில் இந நாடு சிறந்து விளங்குகிறது. பிளாரன்சு நகரம் ஓர் சுற்றுலா, பண்பாட்டு மையமாகத் திகழகிறது. இம் மலைப்பாங்கான இடம் பருத்தி, பஞ்சாலைகளுக்கும், கண்ணாடி, உரத்தொழிலகளுககும் புகழ்பெற்றது. இந்நாட்டில் கிடைககும் மது உலகப் புகழ் வாய்ந் தது. பழைய் எட்ரூரியாவின் பெரும் பகுதியை புதிய தசுக்கனி கொண்டிருக்கிறது. இந்நாட்டின் மக்கள் தொகை 3,578,581 (1976). பிளாரன்சு இதன் தலைநகராகும். கே.சே.

*தஞ்சாக்கூர்*: தஞ்சைவாணன கோவையின் பாட்டுடைத் தலைவன் தஞ்சைவாணன. அவன் ஊர் தஞ்சாக்கூராகும். இது பாண்டிய நாட்டின் ஒரு பகுதியாக இருந்த மாறை நாட்டைச சோந்தது. அந்நாடு பொருநை எனப்படும் தாமிர வருணி யாற்றின் கரையில உள்ள கொற்கை, வல்லம், தஞ்சாக்கூர், மல்லை என்னும் ஊர்களை உள்ளடக் கிய பகுதி என்பர்.

தஞ்சாக்கூர் வாய்க்கால, கால்வாய், சோலை, வயல் ஆகியவற்றால் சூழப்பட்ட வளமுடைய தென்றும, வளமான தெருக்களையும் மாட மாளிகை களையும் உடையதென்றும் தஞ்சைவாணன் கோவை யால் அறிப்படும்.

தஞ்சாக்கூர் 'தஞ்சை' எனவும் வழஙகும். அப் பெயரே வாணனொடு சேர்ந்து தஞ்சை வாணன் என்னும் பெயரைத் தந்தது. கோவையின் முதல் பாட்டு 'வெள்ளை அன்னம் செநநெல் வயலே தடம பொய்கை சூழ் தஞ்சை' என்கிறது

இத்தஞ்சை இராமநாதபுர மாவட்டத்தைச் சேர்ந்தது என்றும் கூறுவர். அதற்குத் தக 'வைவை சூழ் தஞ்சை' (59,203) என்றும், 'முத்தும் துகிரும் இரங்கும் தரங்க முகநதெறிந்து தததுங கரைவையை சூழ் தஞ்சை' (26) எனறும் கோவை விரிவாகக் கூறு கினறது. இரா.இ.

*தஞ்சாவூர்*: தென்னிந்தியாவின நெற்களஞ்சியம் என்று போற்றப்படுகின்ற தஞ்சாவூர் பழமபெருமை வாய்ந்த நகரங்களுள ஒனறாகும். தஞ்சாவூரின பெயர்க் காரணத்தை வடமொழியில உள்ள 'வராக மான்மியம்' எனனும் நூல் விவரிககினறது. சமீவனப் பகுதியில் தஞ்சாசுரன என்னும அரக்கன எலலோரை யும் துன்புறுத்தி வந்தான். இப்பகுதியில கோயில கொணடுளள ஆனந்தவல்லி, சக்தி உருவம் எடுத்துத் தஞ்சாசுரனைப் போரில் வென்று கொனறாள. இத தருணத்தில் அவன் இருந்த பகுதி தஞ்சாசுரன் எனற பெயரால் 'தஞ்சாபுரி' என்று வழங்கியதாகக் கூறப் படுகின்றது. தஞ்சாபுரியே மருவித்தஞ்சாவூர் ஆனது. 'தண்செய்' எனற சொல்லின் மருவு வடிவமே தஞ்சா வூர் என்பர். 'தண்செய்' எனபதற்கு குளிர்ந்த அழகிய சோலை, வயல நிறைந்த பகுதி என்று பொருள் கொள்வாரும் உளர்.

திருச்சி உச்சிப்பிள்ளையார் மலைக் கோயிலில உள்ள கல்வெட்டில் தஞ்சையைப் பற்றிய குறிப்பு வருகின்றது. இதனுடைய காலம் கி.பி.6,7-ஆம் நூற்றாண்டுகள் என்று கூறுகின்றனர். கி.பி.7-ஆம் நூற்றாண்டில் வாழ்ந்த அப்பரடிகள் தஞ்சையை பற்றிப் புகழ்ந்து பாடி உள்ளார். எனவே, இந்நகர் கி பி.6-ஆம் நூற்றாண்டில் இருநதே சிறப்புற்று விளங்கி இருககின்றது. என்பது தெளிவு. கி.பி.7-ஆம் நூற்றாணடிற்குப் பின்னர் 9-ஆம் நூற்றாண்டு வரைத்தஞ்சை முததரையர்களின ஆட்சியின கீழ் வந்தது. முத்தரையர்கள் தங்களைத் 'தஞ்சைக்கோன என்று செநதலைக் கல்வெட்டுகளில் கூறிக் கொள்கின் றனர். தஞ்சையில அகழி, கோட்டை, அரண்மனை போன்ற பகுதிகள் முத்தரையர்களின் காலத்தில் எடுககப்பட்டன என்பதை வலலத்தில் நடைபெற்ற அகழாய்வினைக் கொணடு ஆய்வாளர்கள் உறுதிப படுத்துகினறனர். எனவேதான் தஞ்சை குபேரபுரி, அழகாபுரி, விசயாபுரி என்றெல்லாம் கூறப்பட்டுள ளது என்பதைக் கல்வெட்டுகளின வாயிலாக அறிய முடிகினறது.

தஞ்சாவூரை முத்தரையர்களிடமிருநது விசயா லய சோழன கி.பி 846-இல் கைப்பற்றினான என பதைத் திருவாலங்காட்டுச் செப்பேடு கூறுகின்றது. அதற்குப்பின்னர், சுமார் 400 ஆணடுகள சோழர் களின் ஆதிக்கத்தின் கீழத் தஞ்சை இருநதது. விசயாலய சோழன் தஞ்சையைத் தலைநக ராக மாற்றி அமைத்தான். விசயாலயன் வெற்றி யின் அடையாளமாக நிசும்பசூதினிககுக் கோயில் எடுத்தான. இக்கோயில எது என்பதில் ஆய் வாளர்களிடையே கருதது வேறுபாடுகள் காணப் படுகின்றன. முதலாம் இராசராசனின் காலத தில் தஞ்சை பெரிய நகரமாக வளர்ச்சி பெற் றது புகழவாயந்த பிரகதீசுவரா கோயிலை அவன் கட்டிமுடித்தான். இக்கோயிலின் எழிலும் சிற் பங்களின் வனப்பும் புகழ்வாய்ந்தனவாகும். இக் கோயிலின் உட்பகுதியில உள்ள ஓவியஙகள அழ குடன் விளங்குகின்றன. முதலாம இராசராசனின காலத்தில பல புதிய தெருக்கள, பேரஙகாடிகள, வேளங்கள் போன்றவை புதிதாக ஏறபடுத்தப்பட் டன. இத்தஞ்சை மாநகர் சோழர்களின் காலத்தில் உள்ளாலை, புறம்படி எனற இரு பகுதிகளாகப் பிரிக்கப்பட்டிருந்தது. உளளாலை என்பது அரச குடும் பத்தினர் வாழந்த பகுதிகளாகும் புறமபடி, கடைகள மற்றும் பொதுமக்கள வாழந்த பகுதியாக இருந்தது.

சோழர் காலத்தில் அரணமனைப் பகுதிகள மிகுதியான அளவில் புதிதாக எழுப்பப்பட்டிருந்தன என்பதைக கல்வெட்டுகளின் வாயிலாக அறிய முடிகின்றது தஞ்சையைச சுற்றி அகழியும், மதிலும் மதிற்சுவரும் நலல முறையில பராமரிக்கப்பட்டு வந துள்ளன. இப்போதும அந்த அகழியின ஒரு பகுதி யைக் காணலாம். இநத அகழியின ஒரு பகுதியில் தான இப்போதைய பேருந்து நிலையம் இயங்கி வரு



தஞ்சைப் பெரியகோயில்

கினறது. மற்றப் பகுதிகள் அபபடியே இடிபாடுகளு டன் காணப்படுகினறன. மற்ற மதிற் பகுதிகளும் இடி பாடுகளுடன் கருநதட்டானகுடிக்கு அருகில் அகழியை ஒட்டிச சில இடஙகளில் இடிந்த நிலையில காணப்படு கினறன. இவவூருக்கு இரணடு வாயிலகள இருந்தன எனத் தெரிய வருகினறது. தஞ்சையில் இருந்த மதில பற்றி இஞ்சிசூழ தஞ்சை எனறும், மாமதில தஞ்சை எனறும் இலககியஙகள கூறுகினறன. மதிலின் எட்டுத திசைகளிலும் காவல் தெய்வங்களுககுக கோயில்கள இருந்தன இத்தகைய சிறப்புடன விளஙகிய தஞ்சை யில சோழாகளின அரணமனைப் பகுதிகள எனறு கூறுவதற்கு இபபோது எதுவும இல்லை. பிறகாலச சோழர்களின ஆட்சிப்பரபபு மிகுதியாக இருந்த தாலும், வலிமை அற்ற அரசர்கள ஆட்சியை மேற் கொணடதாலும், பாணடியர்கள சோழர்களின் மீது படையெடுத்து கி.பி. 1219-இல் சோழநாட்டைக்கைப பற்றினர். முதலாம் மாறவர்மன சுந்தர பாணடியனின கலவெட்டில 'தஞ்சையையும் உறையூரையும் செந தணல்கொளுத்தி' என்றும், மாடமாளிகை, கூடகோபு ரங்கள், மணிமண்டபங்கள் பல இடிததனர் எனறும வருகின்றன. எனவே, தஞ்சையை முழுமையாகப் பாண்டியர்கள் அழித்து விட்டனர் எனபது தெளிவா கின்றது. இப்பகுதிகளைக் கண்டறியும் பொருட்டுத் தமிழ்நாடு தொலபொருள் ஆயவுத் துறையினர் குருமபன்மேடு எனற இடத்திலும், தஞசைத் தமிழ்ப் பல்கலைக கழகத்தின கல்வெட்டுத் துறையினர் தஞ்சைக்கு அருகில உள்ள வல்லம் என்னும் இடத் திலும் அகழாயவு மேறகொண்டனர். இநத அகழாய வில சோழா காலத்திய கூரை ஓடுகளும செஙகறகள போன்ற தொல் பொருளகளும கணடெடுககபபட் டன குறும்பன மேடு சோழா காலத்தில சிறப்புற்று இருந்தது என்பதும் தெளிவாகின்றது

சோழாகளின ஆதிக்கத்திற்குபபின் தஞ்சை பாண்டியாகளின் கீழ் வந்தது பினனர் விசயநகர மன்னர்கள் தஞ்சையைக் கைப்பற்றினர். விசயநகர மன்னனான அச்சுதராயனிடமிருநது தஞ்சாவூரைச் சீதனமாகச் செவப்ப நாயக்கன பெற்றான். தஞ்சா வூர்ச் சிவகங்கைப் பூஙகாவை உள்ளடக்கிய கோட்டை யைக் கட்டியவன செவப்ப நாயக்கன. இது 'சிறிய கோட்டை' என்று கூறப்படுகின்றது. இஙகுளள குளம 'செவப்ப நாயக்கன் குளம்' என வழங்குகிறது. அரு கில் உளள ஏரியும் இவனால எடுக்கப்பட்டது. ஏரியின மேற்குப் பககத்தில் ஒரு மணடபம் நாயக்கர்காலத் தில் கட்டப்பட்டது. இதனைக் 'கழுவேற்று மணட பம்' என்று மககள் இன்றும் சொல்கினறனர். தஞ்சை நாயக்க மனனனான விசயராகவ நாயக்கன 'இரகு நாத நாய்கக அப்யுதயமு' எனறநூலை எழுதியுள



அரண்மனை

ளான். இது தஞ்சை அரணமனையைப் பற்றிய முழு விவரத்தினையும் எடுத்து இயம்புகின்றது

நாயக்க மன்னர்களுக்குப் பின்னர் மராட்டிய மன்னர்கள் தஞ்சையைக கைப்பற்றினர். ஏகோசி என்னும் வெங்கோசி மன்னனே தஞ்சையில் மராட்டியர் ஆட்சிக்கு வித்திட்டவனாவான். மராட்டிய மன்னர்கள் சுமார் பன்னிருவர் தஞ்சையை ஆணடனர். தஞ்சை நாயக்கர் காலத்தில் எழுப்பப்பட்ட அரண மனைப் பகுதிகளே இப்போது காணப்படுகின்ற அரண்மனைப் பகுதிகளாகும். தஞ்சை அரண மனையில் அரசவை, அரசர்கள அதிகாரிகள வாழ்விடம், அந்தப்புரம், ஆயுதகோபுரம், கந்தக கோபுரம், மணிமணடபம், நாயக்கர் திருவோலக்க (தர்பார்) மண்டபம், சரசுவதி மகால் நூல் நிலையம், சங்கீத மண்டபம், ஏழு அடுககு மாளிகை, மராட்டிய தர்பார் மண்டபம், குதிரை யானை இலாயங்கள, சுதை உருவங்களுடன் கூடிய இருட்டறைப் பகுதிகள் போன்றவை இப்போது காணப்படும் அரண மனைப் பகுதிகளுள முக்கியமானவை ஆகும்.

அரண்மனையின் தெற்குப்புற வாயிலில் நுழைந் தால் இலக்குமி விலாசம், அச்சுதரங்க கூடம், மதன கோபால விலாசம் ஆகியவை இருந்தனவாகக் கூறப் படுகின்றன. தஞ்சைக் கலைக்கூடத்தில் நுழைந்தால் மேற்குப்புறமுளளது நாயக்கர் தர்பார் மண்டபம ஆகும். இது விசய ரகுநாத நாயக்கனால் கட்டப் பட்டதாகும். 'சீஇராம சௌதம்' எனறும் 'இராமன் மாளிகை' என்றும் இதற்குப் பெயர்கள் காணப்படு கின்றன. இதனுடைய மேற்குச் சுவரில் இராமனின பட்டாபிடேகச் சுதை உருவங்கள வடிக்கப்பட்டுளளன. இராமபிரானும், சீதாதேவியும் அமர்ந்திருக்க அருகில் அனுமனும் காட்டப்பட்டுள்ளான். இங்குளள பெரிய கருங்கல்லில் பொன் வேலைப்பாடுகள செய்யப்பட்டுப் பட்டாபிடேகம் நடைபெற்றுளளது. மணடபத்தின் நடுப் பகுதியில் படிகளுடன் கூடிய மேடையும் அதன மேல் உள்ள ஒரு பெரிய கல்லின மேல் சலவைக்கல் லால் செய்யப்பட்ட மராட்டிய மன்னன் இரண்டாம் சரபோசியின் சிலையும் காணப்படுகின்றன விதானப் பகுதியில் ஆங்கிலேயர்களின் வண்ண ஓவியங்கள தீட்டப்பட்டுள்ளன. மேலும் தஞ்சைப் பகுதியில் இருந்து கொண்டுவரப்பட்ட செப்புத்திருமேனிகள காட்சிப் பொருளாக உள்ளன. நடராசர், சோமாசு கந்தர், திரிபுராந்தகர், திருமால், முருகன், அப்பர் போன்றோர் சிலைகள் குறிப்பிடத்தக்கவையாகும்.

நாயக்கர் திருவோலக்க மண்டபத்திற்கு மேற்குப் பகுதியில் உள்ளது வழிபாட்டு மணடபமாகும். இதன் எதிரில கோயில் விமானம் போனறு காணப்படு கின்ற அமைப்புடையது 'ஆயுத கோபுரம்'. இங்குத் இராணுவ தளவாடங்கள வைக்கப்பட்டிருந்ததனால் இப்பெயர் ஏற்பட்டது. ஒன்பது அடுககுகள் கொணட இந்தக் கோபுரத்தில ஏறப படிக் கட்டுகள உள்ளன. மேலே எண்பட்டை வடிவச் சிகரமும செப்புககலச மும் காணபபடுகின்றன.

கலைக்கூடத்தின் அருகில் அமைந்துள்ள உயரமான மண்டபம, 'மாடமாளிகை'என்றும் 'தொள்ளைககாது மண்டபம்' என்றும் கூறப்படுகினறது இது ஏழுஅடுககு களைக் கொணடதாக விளஙகுகினறது. இதன மேற பகுதியில சதுரமாகக் கட்டப்பட்டிருந்த பகுதியில மணி ஒனறு வைக்கப்பட்டிருநததாகவும கூறப்படு கின்றது. மணி இருநத காரணததால 'மணிமணடபம' எனற பெயர் வழஙகிவந்தது. இது இப்போது தமிழ் நாடு அரசு தொலபொருள ஆய்வுத் துறையின கீழ இருக்கின்றது.



தஞ்சாவூா கலைக்கூடம்

கலைக்கூடத்தின எதிரில் உள்ள கட்டடப் பகுதி 'சங்கீத மகால்' ஆகும். இது செவப்ப நாயககனால கட்டப்பட்டதாகக் கூறப்படுகினறது நீணட சதுர அமைப்புடைய இம்மண்டபத்தில பலவகையான இசை நிகழ்சசிகள நடைபெற்றன. இசை நிகழச்சி களைக் கேட்கும்போது எதிரொலி வாராமல இருக்க இங்கிருந்த தொட்டிபோனற பகுதியில தணணீர் நிரப்பி வைத்திருநததாகக் கூறப்படுகினறது. மேல பகுதியில இருநதும கீழ்ப்பகுதியில இருந்தும் பார்ப்ப தற்கு ஏதுவாக இக்கட்டடம் அமைககப்பட்டிருப்பது நாயக்க மன்னர்களின் கட்டடக்கலைககு ஒரு சிறந்த எடுத்துக்காட்டாகும் இதனை நாடகசாலை எனறு கூறுவர்

கலைக்கூடத்திற்கு அருகில உள்ள சரசுவதி மகால் நூல நிலையம் உலகப்புகழ வாய்ந்தது. உலகி லேயே மிகுதியான ஓலைச்சுவடிகளைக கொணடுள்ள நூலகம் இதுவாகும் நாயக்க, மராட்டிய மனனா களின் காலஙகளில மேலும் விரிவடைந்துள்ளது இரகு நாத நாயககனின் ஆட்சிக் காலததில தமிழ், தெலுங்கு, கிரந்தம, நாகரி, கனனடம், வடமொழிச் சுவடிகள ஆகியவை இடம் பெற்றன இரணடாம சரபோசி மன்னனால் சேகரிககப்பட்ட ஆங்கிலம, இலத்தீன், கிரேககம், பிரஞ்சு, இததாலி ஆகிய மொழி நூல்கள இந்நூல்நிலையததில வைககப்பட் டுள்ளன மற்றும் இலககியம, தத்துவம, இசை, மருத்துவம், அறிவியல, தாவரவியல, தொடர்பான மராட்டியச் சுவடிகளும், பலவகையான புகைப்படங் களும் சேகரிக்கப்பட்டுள்ளன.

மராட்டியர் திருவோலகக மணடபம சரசுவதி மகால நூல நிலையத்திறகு அருகில அமைநதுள்ளது. இது மராட்டிய மன்னன 'சகாசி' எனபவனால் கட்டப்பட்டதாகும் இமமணட பத்தின்முனபகுதியில மரத்தூணகளும் உட்பகுதியில் கருஙகல், சுதை ஆகியவறறால் எழுப்பபபட்ட தூண களும் உள்ளன, சுவர்ப்பகுதிகளிலும், விதானப் பகுதி களிலும் ஓவியஙகள் தீட்டப்பட்டுக கணணாடிகள பதிக்கப்பட்டுக காணப்படுகினறன தமிழநாடு தொல் பொருள ஆயவுத் துறையின கீழ உள்ள இநதத் திரு வோலக்க மணடபத்தின் ஓவியஙகள இத்துறையின ரால் சுத்தம் செய்யப்படடு வருகின்றன. இதில பிற கால நாயக்கர் ஓவியங்கள் காணபபடுகின்றன. இம் மண்டபத்தின மத்திய பகுதியில 'செருவாணி' ஆடை. அணிந்து (நீணட ஆடை) ஊஞசல் ஆசனத்தில கம் பீரமாக அமர்நதிருப்பது போனறு மராட்டிய மனனன் சிவாசியின ஓவியம் வரையபபட்டுள்ளது குறிப்பிடத்தக்க ஒனறாகும், மேலும் முருகன, பண்டரிபுரப் பாணடுரஙகன் திருவுருவம், பள்ளி கொணட பெருமாள, வேணுகோபாலா போன்ற

ஓவியங்களும் தீட்டப்பட்டுள்ளன. இங்குச சுரங்கப் பாதை ஒன்று இருப்பதும் கண்டறியப்பட்டுள்ளது.

மராட்டியர் திருவோலக்க மண்டபத்தின வட கிழக்குப் பகுதியில் இருட்டறைகள உள்ளன இந்த இருட்டறைகளில் சுதை உருவங்களும். ஓவியங்களும் உள்ளன. விநாயகா, நடராசர், பிரமன், பைரவர், உலகளந்தபெருமாள் போன றவை குறிப்பிடத்தக்க உருவங்களாகும். இரணடாம் சரபோசி காசிக்குச் சென்று வந்ததன் நினைவாக ஏழடுக்கு மாளிகையைக் கட்டினான. தஞ்சை அரண மனைக் கட்டடப்பகுதிகளுள் இதுவே மிகவும் உயர மானது. அரண்மனை மேல இருநதே எலலாப் பகுதி களையும் பார்க்க இயலும்.இது இப்பொழுது இடிபாடு களுடன் காணப்படுகின்றது. மராட்டியர் காலததில தஞ்சைக் கோட்டை 'கருடன் கோட்டை' என்று கூறப்பட்டது. இக்கோட்டையின் அமைப்பு, கருடனு டைய சிறகில் அரண்மனையும், கோட்டைகளும உள ளடங்கியனபோல் இருந்ததாம். எனவே, இபபெயர் பெற்றது. மதிற்சுவர் அகலமாக இருந்தது.

அரண்மனையில் காளிகோயிலும், ஆஞ்சநேயர் கோயிலும் சிறப்புடையன. இவற்றுடன் மராட்டிய இளவரசாகள் இப்போது வாழ்நது வருகின்ற பகுதி களும் அரண்மனைப் பகுதியைச் சார்ந்தனவாகும் அரணமனைப் பகுதியில் சுமார் 32 அரசு அலுவலகங் கள் இயங்கி வருகின்றன. மேலும் தஞ்சைத தமிழ்ப் பல்கலைக்கழக அருங்காட்சியகம், இராசராசன அருங்காட்சியகம், மராட்டியர் (தர்பார்) அருஙகாட்சி யகம் ஆகியவைகளும் இயஙகி வருகின்றன. அரண மனைப் பகுதிகள தமிழ்நாடு அரசு தொல பொருள் ஆய்வுத்துறையினரால் பராமரிக்கப்பட்டு வருகின றன.

தஞ்சாவூர், மாவட்டத் தலைநகரமாகவும் இயங்கி வருகின்றது இந்நகரில் நெற் கிடங்குகள பல உள்ளன. தஞ்சாவூரில மருத்துவக் கல்லூரி ஒன் றும், இரண்டு கலலூரிகளும் உள்ளன. மேலும் இங்குத் தமிழ்ப் பல்கலைக் கழகம ஒன்று 1981-இல தொடங்கப்பட்டு, இயங்கி வருவது பெருஞ் சிறப்புக குரியது. இந்நகரின் மக்களதொகை 1,83,464 (1981).

தி.சு.

**தஞ்சாவூர் மாவட்டம்**: காணக: தமிழ்நாட்டு ஆட்சிப் பிரிவுகள

**தஞ்சைவாணன்:** தஞசை என்னும் ஊரில வாழ்ந்தவன் தஞ்சைவாணன் எனப்பட்டான். இவன் ஊர் தஞ்சாக்கூர் எனப்படும். தஞ்சைவாணன் கோவையின் பாட்டுடைத்தலைவன இத்தஞசை வாணனே இவன நாடு மாறைநாடு எனப்படுகிறது அது பாணடிய நாட்டின ஒரு பகுதியாகும்

பாணடிய வேநதன் படைத்தலைவனாகவும, அமைச்சனாகவும் விளங்கியவன் இத்தஞ்சைவாணன. இவன சந்திரவாணன எனக் கோவையில பலட டச் சுட்டப்படுவான். (42,48,207,227), சந்திரன் எனபா னுக்கு மகனாகிய வாணன என்பது இப்பெயரின் விரிவு எனச் சிலர் கருதுவர். இவன் 'வரோதயன்' எனவும் சொல்லப்படுவான்.

'மதுரத் தமிழ் தெரி வாணன' (217) 'மதுராபுரித் தமிழ தேர் வாணன' (177) எனபவறறால் இவனது தமிழத் தேர்ச்சி நனகு விளங்கும. இவன மனைவி யாரும் தமிழ்த தோச்சி மிக்கவராக விளங்கினாா. கோவைப் பாடலைத் தாமே அரங்கேற்றச செயது ஒவ்வொரு பாடலுக்கும் ஒவ்வொரு தஙகத் தேங் காய் வழஙகினார் என்ற செய்தி வழக்கிலுளளது

இவன் சிறந்த கொடையாளன என்பதும, வாய்மையாளன எனபதும் வெறறிச் சிறப்பும் மானச் சிறப்பும் உடையவன எனபதும் கோவையால் நனகு விளங்குகின்றன. இவன காலம கி.பி. 12-ஆம் நூற றாணடாகும்.

இரா.இ.

**தஞ்சைவாணன் கோவை**: பொயயா மொழிப் புலவர் என்பவரால் தஞசைவாணன்மேல பாடபபட்ட கோவைநூல தஞ்சைவாணன கோவை யாகும். புகழ்மிக்குப் பெருவழககாக உளள கோவை நூல்களுள் குறிப்பிடத்தக்கது இந்நூல்.

பழமையான அகப்பொருள் துறைகளை ஓர் ஒழுஙகுபட அமைத்துப் பாடப்படுவதொரு வகை நூல் கோவை. இது கட்டளைக் கலித்துறை எனனும் பாவகையால அமைந்தது. இத்தஞசைவாணன் கோவை 425 பாடல்களையுடையது.

முழுமையாக இலககணம் தழுவிச் செய்யபபட டது இககோவை எனபது நாற்கவிராச நமபியகப் பொருள் வகுத்துளள அகத்துறைகள 425ககும் கூடாமல் குறையாமல் 425 துறைகளை இநநூல கொணடுள்ளமையால் விளங்கும். இதனால, அவ் விலக்கண நூல் முழுமைக்கும் இககோவைப் பாடல் கள் எடுத்துக்காட்டாக ஆளப்படட பெருமை யுடையதாயிறறு.

இக்கோவையைப் பாடிய புலவர் பொய்யா மொழியார் சோழநாட்டைச் சோந்த துறையூரில பிறந்தவர் என்பா. இவர் பாடிய தனிப்பாடலகள் பல. இவரைப் பற்றிய வரலாறு தமிழ் நாவலா சரிதையில் விரிவாக உள்ளது. இவர் காலம் தஞ்சை

வாணன் காலமாகிய கி.பி. 12-ஆம் நூற்றாண்டாண டாகும்

தஞ்சைவாணன் கோவை களவியல், வரைவியல், கற்பியல் என மூன்றியல்களையுடையது. கைக்கிளை என்பது முதலாகப் பொருள வயிற்பிரிவு என்பது இறுதியாக 33 உட்பிரிவுகளையுடையது. இந்நூற்குத் தொண்டை மணடலத்தைச சார்ந்த குன்றத் தூரினராகிய சொக்கப்ப நாவலர் எனபார். அருமை யான விளககவுரை வரைந்துள்ளாா. யாழ்ப்பாணம் வைத்தியலிங்கம்பிளளை என்பாரும் இதற்குச் சிறந் ததோர் உரை எழுதியுளளார்.

தஞ்சைவாணன் கோவை 'புயலே' எனத் தொடங்கி அப்புயலின் மற்றொரு பெயராகிய 'கார் முகிலே' என்பதால் முடிகின்றது. கைம்மாறு கருதா மல் கடப்பாடு செய்யும் மழையின் சிறப்பே வான் சிறப்பு எனப்படும். அவவான்போல கொடை வழங் கிய வள்ளல் தஞ்சைவாணனைப் பாட்டுடைத் தலை வனாகக் கொண்டு பாடிய நூல் என்பதை விளக்கும் நன்றியறிதற் சான்றே இவ்வாறு விளங்குகிறது எனலாம்.

வாணனைப் 'புயல வாணன்' என்றும் (17), 'செம்பொன், தரும் பாரி வாணன' என்றும் (37), 'தருகற்பகமன்ன சந்திரவாணன்' எனறும் (42) இவர் கூறுவதால் அவ்வளளலின கொடைத்திறம் விளங்கும். மல்லை என்னும் இடத்தில் நிகழ்ந்த போரில் அவன் வென்ற வெற்றியையும், மலைநாடு கொணட வழுதி கணபோல் அவன் விளங்கும் மாட்சியையும், பகைவர் யானைகளைக் கப்பமாகக் கொணடு வரும் காட்சி யையும் புலவர் ஆங்காங்குத் தெரிவிக்கிறார்.

பகைவர்ககு மகத்தில் சனியன்னவனாக வாணன் விளங்குவதைக் குறிப்பது (48) புலவர்தம் கணியப் புலமையை விளககும். இந்நூற் கிளவித்தலைவனை 'நுகத்தில் பகலனையான்' என்பது அவனது சான றாணமையை விளக்கும். சொற்சுவை பொருட்சுவை சிறந்த நூல் தஞ்சைவாணன கோவை எனச் சுருங்க உரைக்கலாம். இரா.இ.

**தட்சசீலம்** பாகிசுத்தானில் பெசாவர் மாவட் டத்திலுள்ளதோர் ஊர். இன்று தாக்சிலா (Taxila) என்று கூறப்படுகிறது. இது மிகப் பழமையும் பெருமை யும் வாய்ந்த தொன்னகரமாகும். தட்சசீல நகரைப் பற்றிய குறிப்புகள் மகாபாரதத்திலும், புத்த சாதகக் கதைகளிலும் காணப்படுகின்றன. மகாபாரதத்தின் படிதட்சகன் என்னும் நாகம் இவவூரை அமைத்ததாம். இத் தட்சகன அர்ச்சுனனின (பஞ்சபாண்டவருள் மூன்றாமவன்) பேரனான பரீட்சித்து அரசனைத்



தட்சசீலம்

தீண்டிக் கொன்றதாகவும் அதற்காக அந்நாகத்தைப் பழி தீர்த்திடும்பொருட்டுப் பரீட்சித்தின் மகனான சனமேயசன் தட்சசீலத்தின்மீது படையெடுத்து அந் நசரைக் கைப்பற்றியதாகவும் கூறப்படுகின்றது.

தட்சசீலம் கி.மு. 6-ஆம் நூற்றாண்டில் காந்தா ரத்தின் (இன்றைய பாகிசுத்தானிலுள்ள பெசாவர், இராவல்பிண்டி மாநிலங்கள்) தலைநகராயிற்று. அப்போது காந்தாரம் வட இந்தியாவில் நிலவிய புகழ்மிக்க பதினாறு மகா சனபதங்களுள் ஒன்றாகும். அதே நூற்றாண்டில் சைரசு என்னும் பாரசீகப் பேரரசன் காந்தாரததைககைப்பற்றினான். அதுமுதல் தட்சசிலம் பெருநகரமாக உருவாகியது எனப் புதை பொருள் ஆய்வுகள்மூலம் அறியப்படுகிறது. மிகவிரை வில் இந்நகர் அன்றைய பாரதத்தின் தலைசிறந்த வாணிக மையமாகவும், கல்வி மையமாகவும் திகழலா யிற்று.

அலெக்சாணடர் கி.பி. 327-இல் இந்தியாமீது படையெடுத்தபோது தட்சசிலத்தில் அம்பி எனனும் அரசன ஆண்டுவநதான். இந்தியாவில் அலெகசாண் டர் தங்கிய முதல் பெருநகர் தட்சசிலமே. எனவே உலக வரலாற்றில் மேலை நாகரிகமும கீழை நாகரி கமும் இங்குத்தான் முதன்முதலாகச் சந்தித்துக் கொண்டன எனபர். அலெக்சாண்டர் தம்முடன் பல வரலாற்றாசிரியர்களையும், உயிரியல் வல்லுநர்களை யும் கூட்டிவந்தார் அறிவுத்தேட்டம் மிக்க அவர்கள தட்சசிலப் பல்கலைக்கழகத்தையும் அதன் உயர்ந்த

கல்வி நிலையையும் போற்றியுள்ளனர் அவர்கள் 'இங்குப் பலநாட்டு அரசகுமாரர்களும், அந்தணச் சிறுவர்களும் மூன்று வேதங்களையும் 18 வகைச் சாத்திரங்களையும் கற்கின்றனர்' எனக் குறித்துள ளனர்.

அசோகனின் தந்தையான பிந்துசாரன் (கி.மு. 301-273) மௌரியப் பேரரசை விரிவாக்கியபோது காந்தாரத்தைத் தன் பேரரசுடன் இணைத்துக் கொண்டு, தட்சசீலத்தில் தனது ஆளுநர் ஒருவரை நியமித்தான். அங்கு நிகழ்ந்த கலகத்தை ஒடுக்கும் பொருட்டுப் பிந்துசாரன் தன் மகனான அசோகனை அங்கு அனுப்பினான். அசோகன் (கி மு. 273-232) பேரரசனான பின்னும் அங்குக கலகங்கள் நீடித்தன எனவே, அவற்றை ஒடுக்க அசோகன் தன் மகனான குணாளனை அங்கு அனுப்பினான். அக் கலகஙகளுக் கான காரணங்கள் தெரியவில்லை.

'வலுவான மைய ஆட்சியைக் கொணடிருநத மௌரியப் பேரரசு தலைநகரான பாடலிபுத்திரத்தை யும், 1600 கி.மீ.க்கும் அதிக தொலைவிலுள்ள தட்ச சிலத்தையும் ஒரு நீண்ட பெருஞ்சாலையை அமைத்து இணைத்தது' என மூத்த பிளினி எனனும் உரோ மானிய அறிஞர் குறிக்கிறார். இநநெடுஞ்சாலை அசோகன் காலத்தில சிரியாவுக்கும் பாடலிபுத்திரத் திற்கும் இடையே சிறந்த வாணிகத் தொடர்பினை ஏற்படுத்தியது (தட்சசீலத்திற்கும் சிரியாவுக்கு மிடையே நெடுஞ்சாலை ஒன்று முனனமேயே இருந்து வந்தது).

தட்சசீலத்தை கி. மு. 2-ஆம் நூற்றாண்டில் தலைநகராய்க் கொண்டு காந்தாரத்தைக் கிரேக்கர் கள் ஆட்சிபுரிந்தனர். இவர்களை இந்தோ கிரேக்கர் என்பர். பின்னர்த் தட்சசீலம் குசாணர் (கி.மு. முதல் நூற்றாண்டிலிருந்து-கி.பி. 2-ஆம் நூற்றாண்டு வரை)வசமாகியது. காந்தாரக் கலை எனப் போற்றப் படும் கட்டட, சிற்பக் கலைகள பெருநிலை பெற்றன.

**தட்சசீலப் பல்கலைக்கழகம்:** புத்தர் வாழ்ந்த கி.மு. 6-ஆம் நூற்றாண்டிலேயே இப்பல்கலைக்கழகம் பெரும்புகழ் பெற்றிருந்தது. இதன் கல்விநிலை பற்றிய பல அரிய செய்திகளைச் சாதகக கதைகள் வாயிலாகவும், கிரேக்க மூலங்கள வாயிலாகவும் அறி யலாம். அவற்றின்படி கோசலம், இலிச்சாவி, மல்லர் முதலிய நாட்டு அரசகுமாரர்கள் இங்குப் பயின்றனர். இங்கு வேதங்கள், இதிகாசங்கள், கணிதம், மருத் துவம், பல்வேறு தத்துவ நூல்கள், அரச நீதிகள், போர்ப் பயிற்சிகள், பாம்புகள் பற்றிய அறிவியல், மாயசால வித்தைகள் முதலியன அவ்வத் துறைகளில் புகழ்பெற்ற பேராசிரியர்களைக் கொண்டு கற்பிக்கப பட்டன. இஙகு இடம்பெறுவது எளிதன்று. கடுமை யான நுழைவுத் தேர்விற்குப் பின்பே மாணவர்கள் சேர்த்துககொள்ளப்பட்டனர். நுழைவுக் கட்டணம் 1000 பொற்காசுகள். ஆசிரியரின் இல்லத்தில் தஙகி, பணிவிடைகள் புரிந்து (குருகுல முறைப்படி) கல்விகற கும் முறை இருந்தது. இங்குச சிறந்த ஒழுக்கம் நிலவி யது. ஒழுக்கம் தவறியவர்கள அரசகுமாரர்களேயாயி னும் கடுமையாகத் தண்டிக்கபபட்டனர். இதில் பிரம் படிகளும்அடங்கும். கல்வி, ஒழுக்கத்தில் சிறந்த மாண வர்களுக்குப் பலவித பரிசுகள் அளிக்கப்பட்டன பேராசிரியருக்கு மகள் இருப்பின் இத்தகைய சிறந்த மாணவனுக்கு மணம முடித்துத் தந்தனர். அதுவே சிறந்தபரிசு எனப் போற்றப்பட்டது. இங்கிருந்த ஆசிரி யர்களுககும் மாணவர்களுக்கும் சமுதாயத்தில்பெரு மதிப்பு இருந்தது. ஊர்த் தலைவர் முக்கியமான நாள்களில இவர்களுக்கு விருந்திட்டுப் பெருமை கொள்வார். இங்குப் புனர்வசு அத்திரேயர் என்ற புகழ்மிக்க மருத்துவப் பேராசிரியர் இருந்தார். இவரி டம்தான பிம்பிசாரன (கி.மு. 525-500) காலததுப் புகழ்மிக்க மருத்துவரான சீவகன் பயிற்சிபெற்றார். இவர் புத்தரது மருத்துவருமாவார். இப் பல்கலைக் கழகத்தில் சுமார் 500 மாணவாகள் சிற்பக்கலை பயினறனர் எனச் சாதககங்கள் கூறுகின்றன. பாணி னியும் கௌடிலியரும் இங்குப் பயினறிருககலாம் என்பர்.

தட்சசிலம் வழியாகச் சிரியா போன்ற நாடுகளுக குப் பருத்தி, பட்டாடைகள, சந்தனம், நவரத்தினங் கள் ஆகியவை ஏற்றுமதியாயின. தோல் பொருள்கள இறக்குமதி செய்யப்பட்டன. இவவூர்ச் சந்தையில ஆண்டுதோறும் பருவப்பெணகள் ஏலத்தில் விற்கப்பட் டனர் என்றும், அப்பெண்களை வாஙகுபவர் அவர்களை உரியஆடவருக்கு மணமுடிக்க வேணடுமேயன்றி விபசா ரத்தில ஈடுபடுத்தத் தடையிருந்தது என்றும் மெகசு தனீசு குறிப்பிடுகிறார். இத்தகைய பழக்கம் பாவேரு (பாபிலோன்) நாட்டிலும் இருந்ததாகச் சாதகக் கதை கூறும்; எரோடோட்டசு என்னும் கிரேகக ஆசிரியரும் குறிப்பிடுவர். எனவே, இப்பழக்கம் அங்கிருந்து தட்ச சீலத்திற்கு வந்திருக்கலாம் என அறிஞர்கள கருதுகின றனர். இரா.வே.

**தட்சிணாமூர்த்தி:** சிவபெருமானுக்குப் பல வடிவங்கள் உள்ளன. அவற்றுள் ஒன்று தட்சிணா மூர்த்தி வடிவம். தட்சிணாமூர்த்தி வடிவத்தில் நான்கு வகையான சிற்பங்கள கிடைக்கின்றன. அவை 1) வியாக்கியான தட்சிணாமூர்த்தி, 2) ஞான தட்சிணா மூர்த்தி, 3) யோக தட்சிணாமூர்த்தி, 4) வீணாதர தட்சிணாமூர்த்தி என்பனவாகும்.



தட்சிணாமூர்த்தி

தமிழ் இலக்கியஙகள தட்சிணாமூர்த்திலயத் 'தென்முகக் கடவுள்' எனககுறிக்கின்றன. சிவன கோயிலின கருவறையின் தெற்குப் பகுதியில் உளள மாடக்குழியில் (தேவ கோடடத்தில) தட்சிணா மூர்த்திசசிற்பம் பொதுவாக இடம்பெறும். அத்துடன் தென்முகமாக அமைந்திருக்கினற காரணத்தால தென்முகக் கடவுள் என்றும், இவர் பெயர் பெற்றுள ளார் சிலப்பதிகாரம் இவரை 'ஆல் அமர் செலவன' என்றும் புறநானூறு 'ஆலமர் கடவுள்' என்றும் குறிப் பிடுகின்றன. 'ஆலமர் செல்வன் பெயர் கொணடு வளர்ந்தோன (சிறுவன்) மற்றவர்களை வாதத்தில் வென்றான்' என்று சிலப்பதிகாரம் கூறும். தேவாரப் பாடல்கள் பாடப்பட்ட காலங்களில் தட்சிணாமூர்த்தி வழிபாடு பெரும்அளவில் காணப்பட்டுள்ளது. சுந்தரர் தேவாரத்தில் 'ஆல் நிழல் கீழிருநது அருளபுரியும் செல்வன்' எனறு குறிப்பிடப்பட்டுளளது. இக்காலத் தில்பலவகையான தட்சிணாமூர்த்திகள வழிபாட்டில் இருந்தமை அறிய முடிகிறது.

வியாக்கியான தட்சிணாமூர்த்தி உருவம் மிகுந்த அளவில் கோயிலகளில காணப்படுகின்றது. இவர் கோயிலின் தேவகோட்டத்தில் அமர்ந்தநிலையில் காட்டப்படுவார். இமயமலையில் ஆலமரத்தின்கீழ்ப் புலித்தோலின் மேல் அல்லது பதுமாசனத்தில் இவர் அமர்ந்துள்ளாரென ஆகமங்கள கூறுகின்றன. இவரு டைய வலக்கால் தொங்கியபடியும், இடக்கால் மடக்கி வலக்காலின் மேல் வைக்கப்பட்டிருக்கும் நிலை யிலும், தொங்கவிடப்பட்ட காலின்கீழ் முயலகன் இன்றியும் சில முயலகனுடனும் காட்டப்படுவதுண்டு. பொதுவாக இவர் நான்கு கைகளுடன் காணப்படு வார். முன் வலக் கையில் ஞான முத்திரை தொடை மேல் காணப்படும். பின் வலக் கையில் அட்சமாலை யும், இடக் கையில் நெருப்பு அல்லது பாம்பும் காணப் படும். சில சிற்பங்களில் புத்தகம், நெருப்பு, மலர் ஆகியனவும் காட்டப்படுவதுண்டு. உடம்பில் எந்தவித மான வளைவும் காணப்படாது. தலை அலங்காரம் சடாபாரம், சடாபந்தம், சடாமண்டலம், சடா மகுடம் போன்றவைகளில் ஏதேனும் ஒன்றாக அலங் கரிக்கப்பட்டிருக்கும். தலையில் சந்திரன், கபாலம், கங்கை ஆகியவற்றை அணிந்திருப்பார். கங்கை சிவந்த முகத்துடன் காணப்படும். பூணூலும், காது களில் குண்டலமும், சங்கபத்திரா ஆகியனவும் இவா அணிந்திருப்பார். உருத்திராட்ச மாலையைக் கழுத் தில் அணிந்துள்ளவாறும் இவருடைய பார்வை மூக்கின் நுனி மேல அமைந்திருக்குமாறும் காட்டப்பட்டிருக் கும்



தட்சிணாமூர்த்தி

வியாககியான தட்சிணாமூர்த்தியைச் சுற்றி முனிவர்கள இருப்பர். சிவபெருமான், சாத்திரங் களின் உணமைப் பொருளை முனிவர்களுக்கு எடுத் துரைக்கும் முறையிலும், அதை முனிவர்கள கவன மாகக் கேட்கும் முறையிலும் இச் சிற்பம் வடிக்கப் பட்டிருக்கும். முனிவர்கள் பெயர், எண்ணிக்கை ஆகியவற்றில் கருத்து வேறுபாடுகள காணப்படுகின றன காமிகாகமம் இவர்கள் ஏழு முனிவர்கள் என்று கூறுகிறது. அவர்களுள் ஐந்து முனிவர்களின் பெயர்கள் மட்டுமே கூறப்பட்டுள்ளன. இவர்கள்

கௌசிகர், காசிபர், பாரத்துவாசர், அத்திரி, கௌதமர் ஆகிய முனிவர்கள் ஆவர் காரணாகமம் என்னும் நூலில் அகத்தியர், புலத்தியர், விசுவாமித்திரர், ஆங்கிராசர் ஆகிய நான்கு முனிவர்களின பெயர்கள மட்டும் கூறப்பட்டுள்ளது. அம்சுமத்து பேதாகமத்தில ஏழு முனிவாகள் இருப்பதாகக் குறிப்பிடப்பட்டுள் ளது. அவர்கள் நாரதர், சமதக்கினி, வசிட்டர், பிருகு, பாரத்துவாசர், சங்கரர், அகத்தியர் ஆகியோ ராவர். முனிவர்கள் சடாமகுடம், உருத்திராட்ச மாலை, பூணூல் ஆகியவறறுடன் காணப்படுவர். இவர்கள் உடல் முழுவதும் திருநீறு பூசியிருபபா. இவர் கள் தட்சிணாமூர்ததியின நெஞ்சிற்குக் கீழ்ப்பகுதி யிலும் இரண்டு பகுதிகளிலும் காட்டப்படுவாாகள், முனிவர்களைக் காட்டும்போது இருவர் ஒரு பகுதியி லும் மூன்று பேர் எதிர் பகுதியிலும் காணப்படுவர், அலலது இரு பகுதிகளில் இருவர் அல்லதுமூனறு முனி வர்கள், ஒரு பகுதியில நான்கு பேர் எனக் காட்டப் படுவா. தட்சிணாமூர்த்திச் சிற்பத்தினருகில் தேவர் களும் கின்னரர்களும் காட்டப்படுவர்.

தட்சிணாமூர்த்தி கையிலுள்ள புத்தகம் அறிவை யும், அட்சமாலை தவத்தையும் குறிக்கினறன. அமர்ந்துள்ள வியாக்கியான தட்சிணாமூர்த்தியின் கீழ் மான்களும் விலஙகுகளும் காணப்படுகின்றன. காட்டிலுள்ள விலங்குகளும் இவருடைய உபதேசத் தைக் கேட்பதுபோல் இச்சிற்பஙகள் அமைந்திருக் கின்றன. ஞான தட்சிணாமூர்த்திக்கும் வியாககியான தட்சிணாமூர்த்திக்கும் மிகுந்த வேறுபாடுகள் இல்லை. இவர் வியாககியான தட்சிணாமூர்த்தியைப் போல அமர்ந்து நானகு கைகளுடன் காணப்படுவார். பின இரு கைகளில் அட்ச மாலையும் நீலோற் பல மலரும் காணப்படுகின்றன. முன்னிரு கைகளில் வலககை யால் ஞானமுத்திரையும் இடக்கையால் அபயம் அல்லது தண்டமுத்திரையும் இவர் காட்டுவார்.

யோக தட்சிணாமூர்த்தி சிற்பஙகள் மூன்று வகைகளில் காணப்படுகின்றன. முதல் வகையில் கால்கள் இரண்டும் மடக்கிச சுவசுதிக (Swastika) அமைப்புப்போனறு காணப்படும். நான்கு கரங்களில் முன் வலக்கை மார்புக்கு அருகில் யோக முத்திரை யிலும் இடக்கை யோகியைப் போல் தொடை மேலும் வைக்கப்பட்டிருக்கும். பின்னிரு கைகளில் அட்சமாலையும் தாமரை மலரும் காணப்படும். சடா பாரம் தோள்களினமேல இருக்கும். யோக தட்சிணா மூர்த்தியைச் சுற்றிலும் முனிவர்கள் காட்டப்படுவர். இரண்டாம் வகையில் இவரது இடககால் மடஙகி உட்குடிகாசனத்தில் இவர் காணப்படுவார். இடக் கால், உடம்பு ஆகியவற்றைச் சுற்றி யோகபட்டம காணப்படும்; வலக் கால் தொங்கவிடப்பட்டிருக்கும். நான்கு கைகளுள் முன் இடக்கை மடக்கப்பட்டிருக்



தட்சிணாமூர்ததி

கும் காலினமேல் நீட்டியபடி வைக்கப்பட்டிருக்கும். மற்றவை முன்வகையைச் சார்நதிருக்கும். மூனறாம் யோக தட்சிணாமூர்ததியின் உருவம் கால் மடக்கி வைத்தவாறு காணப்படும். இரு கால்களும் குத்துக கால்கள் இட்டிருக்க யோகபட்டம், இக்கால் உடம்பு ஆகியவறறைச்சுற்றிக் காணப்படும. நான்கு கைகளுள முனனிரு கைகள காலகளின்மேல வைககப்பட்டிருக் கும். பின்னிரு கைகளில் அட்சமாலையும், கமணடல மும் இருக்தம். சடாமணடிலமும் அதில சந்திரன், ஊமத்தம்பூ ஆகியன அமைநதும் காணப்படும்

இசைக்கு ஆசானாகிய வீணாதர தட்சிணா மூர்த்தி கான தட்சிணாமூாத்தி எனறும சொலலப் படுவார். இநத வீணாதர தட்சிணாமூர்த்தி அமர்ந்த நிலையிலும், நின்ற நிலையிலும் காட்டப்படுவாா. அமர்ந்த நிலையிலுளள தட்சிணாமூர்த்திச சிறபங்கள முற்காலத்தில அமைக்கப்பட்டவை. இநதச் சிறபங்கள பொதுவாக விமானம், கோபுரம் ஆகியவற்றில காணப்படும். நினற நிலையில உள்ள வீணாதர தட்சிணாமூர்த்தியே மிகுந்த அளவில இனறு கிடைக்கின்றன. இவர் சடாமகுடம் அணிந்திருப்பாா. நான்கு கைகளுள முன்னிரு கைகளில் ஒரு கைகீழேயும மற்றொரு கை மேலேயும் காட்டப்படும். வீணை யைப் பிடித்து மீட்டுவதுபோல இக் கைகள அமைந திருக்கும். பின்னிரு கைகளில் மான, மழு ஆகிய வற்றை இவர் பெறறிருப்பார். தி சு.

**தட்சிணாமூர்த்தி தேசிகர்:** மெய்கண்ட பரம்பரையில வந்த மூவலூர் நமச்சிவாய மூர்த்திகள என்பார் திருவாவடுதுறை ஆதீன மரபைத் தோற்று வித்தார். இவ்வாதீனப் பரம்பரையில சின்னப் பட்டத்தில் இருந்த ஒருவர் தட்சிணாமூர்த்தி தேசிகர் என்பார். இவர் காலம் கி.பி 15-ஆம் நூற்றாண்டு

• பண்டார சாத்திரங்கள் பதினான்கு. இவை திருவாவடுதுறை ஆதீன வழி முறையினரால் பாடப் பட்டவை அவை அதிசயமாலை, உபதேச வெண்பா, உபாய நிட்டை வெண்பா, சன்மார்க்க சித்தியார், சித்தாந்த சிகாமணி, சித்தாந்தப் பஃறொடை, சிவாக்கிரமத்தெளிவு, தசகாரியம, நமசசிவாயமாலை, நிட்டைவிளக்கம,உபதேசப் பஃறொடை, தசகாரியம், பஞ்சாக்கரப்பஃறொடை, தசகாரியம் எனபன, இவற்றுள தட்சிணாமூர்த்தி தேசிகர் உபதேசபபஃறொடை, முதல்தசகாரியம் என்னும் இரண்டு நூல்களையும் இயற்றினார். இறுதித தசகாரியம் சாமிநாத தேசிகர் என்பவரால இயற்றப்பட்டது தசகாரியம் தொடர் பாக இன்னும் பலரும் நூல்கள் செய்துளர். தத்து வரூபம், தத்துவ தரிசனம், தத்துவ சுத்தி, ஆன்மரூபம ஆன்மதரிசனம், ஆனமசுததி, சிவரூபம், சிவதரிசனம், சிவயோகம், சிவபோகம் எனபவை தசகாரியஙகளாம

இரா.இ.

**தடுக்கப்பட்ட கணக்குகள்:** அந்நியச செலாவணிச்சந்தையில், உள் நாட்டுப் பணப் புழக்கத்தைக் குறைவு படுத்துவதின் மூலம், செலாவணிக கட்டுப்பாட்டை அரசு ஏற்படுத்துகிறது. செலாவணிக் கட்டுப்பாட்டைப் பல்வேறு முறைகளில அரசு செயற படுத்துகிறது. அவைகளுள, தடுக்கப்பட்ட கணக்குகள என்ற முறை மிகவும் குறிப்பிடத்தக்கதாகும்.

இநதிய மைய வங்கியின் அனுமதியுடன, இநதியாவில் ஏதாவது ஒரு வங்கியில் கணக்குத் தொடங்கப்படலாம். ஆனால,அக்கணக்கில செலுத்தப்பட்ட தொகையை இநதிய மைய வங்கியின முன் அனுமதியினறிப் பெறமுடியாது. மேலும், இநதிய அரசின் அந்நியச் செலாவணிக் கொள்கைகளுக்கு மாறாக, அத் தொகையைப் பயன்படுத்தக்கூடாது. அவ்வகைக கணக்குகள் 'தடுக்கப்பட்ட கணக்குகள்' (Blocked Accounts) எனப்படும்.

அயல் நாட்டில் வாழும் இந்தியர்கள், இந்தியாவில் உள்ள வங்கியில் அயல்நாட்டுப் பணத்தைச் செலுத்தி மேற்கண்ட வகைக் கணக்கைத் தொடங்கலாம். ஆனால், அக்கணக்கிலிருந்து அந்நியச் செலாவணியை இந்தியாவில் வாழும் இந்தியர் எவரும் பெற முடியாது.ஆனால்,ஒரு சில சூழ்நிலையில் இந்திய மைய வங்கி இவ்விதியைத் தளர்த்தி ஆணை பிறப்பிக்கலாம். எனவே,அயல் நாட்டில் வாழும் இந்தியர்கள், தாங்கள். ஈட்டியமூலதன நிதியைத் 'தடுக்கப்பட்டகணக்குகளில்' செலுத்தலாம் மேலும் 1947-ஆம் ஆணடு அந்நியச் செலாவணிக் கட்டுப்பாட்டுச் சட்டம்'-கணக்குகளை மேற்கண்டவாறு தடுப்பதற்கு இந்தியமைய வங்கிக்கு அதிகாரம அளித்துள்ளது.

அயல நாடுகளுக்கு இடம் மாறிவிடும் இந்தியர்களின் சொத்துககள், பிணையங்கள ஆகியவற்றைத் தடுக்கப்பட்ட கணக்குகளில் செலுத்திடுமாறு வணிக வங்கிகளுக்கு, இந்தியமைய வங்கி ஆணை பிறப்பிக்கும. மேலும் அக்கணக்குகளில் முடக்கப்பட்டுள்ள முதலீடுகளின மீதான வருவாயை எவவாறு பகிர்வு செய்தல வேண்டும் எனவும் வணிகவஙகிகளுககு இந்திய மைய வங்கி அவவப்போது தகவல் அளிக கினறது.

உரிய உரிமம் வழங்கபபட்ட அந்நியச செலாவணி வணிகாகள எவரும் தடுககப்பட்டகணககுகளை நிருவகிக்க அனுமதிககப் படுகினறனர். மேலும, வஙகிகளும் தடுக்கப்பட்ட கணக்குகளைத் தொடஙகி நிருவகிக்க அனுமதிககப் படுகினறன. எடுததுககாட்டாக இந்திய மாநில வஙகியைக் கூறலாம்.

இந்திய மைய வங்கி, தனிப்பட்ட தடுககப்பட்ட கணக்குகள தொடா்பான சில விதிமுறைகளை அவ்வப்போது வழங்குகிறது. அவையான: 1) **வரவுகள்:** பின் வரும் நடவடிக்கைகள சட்டமுறைக்குட்படாத வைகளாகும்: அ) பங்குகளின் மீதான இலாப ஈவு, வைப்புநிதிகள், பிணையஙகள் ஆகியவைகளின் மீதான வட்டி; ஆ) இந்தியமைய வங்கியின் அனுமதியுடன வாடிக்கையாளா பஙகு, பிணையஙகள. விற்பனை ஆகியவைகளின் மூலம் பெறற வருவாய, இ) வாடிக்கையாளரின் முதிர்வடைந்த ஆயுள காப்புறுதி ஆவணத்தின் மீதான வருவாய, ஈ) வாடிக்கையாளா திரும்பப் பெற்ற வருமான வரி; உ) இநதிய 'யூனிட்டிரசுட்டு' நிறுவனத்தின யூனிட்டுகளை விற்றதின் மூலம் கிடைத்த வருவாய். மேறகண்ட வரவுகளை இநதிய மைய வங்கியின் அனுமதியினறி தடுககப்பட்ட கணக்குகளில பதியலாம். ஆனால, மேற்கண்டவைகளைந தவிர மற்ற நடவடிககைகளை, இநதியமைய வங்கியின அனுமதியுடன மட்டுமே வரவு வைககலாம்.

2) **பற்றுகள்** அ) வங்கிக் கட்டணங்கள சட்டப் படியான அறிக்கையில அடங்கா. ஆனால் பின்வருபவை சட்ட நடவடிககைக்கு உட்பட்டவையாகும். ஆ) தரும காரியங்களுககும், இந்தியாவின் பாதுகாப்பு நிதிக்கும் அளிக்கபபட்ட தொகைகள், இ) வாடிக்கையாளருக்கு வழஙகப்பட்ட சொததுகளின மீதான வருவாய, வட்டி, இலாப ஈவு முதலியன; இ) இந்தியாவிற்கு வருகைபுரிந்த வாடிக்கையாளரின் குடும்பத்திற்கு ஏற்பட்ட செலவுத் தொகைகள; ஈ) வாடிக

கையாளரின் ஆயுள் காப்பீட்டுறுதி ஆவணத்தின் மீதான தவணைத் தொகையைச் செலுத்தியது; உ) அனுமதிக்கப்பட்ட முதலீடுகளுககான தொகை செலுத்தப்பட்டது ஆகியவை.

மேற்கண்ட செலவுகளைத் தவிர மறற வகைச் செலவினங்களுக்கு, இந்திய மைய வங்கியின் முன அனுமதி தேவை. ஆனால், மேற்கணட நிபந்தனை கள் பின் வருபவைகளுக்குப் பொருந்தா.

உரு 50,000 க்கும் குறைவாகஇருப்பையுடைய தடுக்கப்பட்ட கணக்குகள்; இந்தியமைய வஙகியின் அனுமதியுடன், அயல்நாட்டில வாழும் இநதியரால மேற்கொள்ளப்பட்ட, இந்தியாவிற்கு வந்துசென்ற தற்கான விமானக் கட்டணங்கள. நா.பெ.சீ.

**தடுப்புக் காவல்**: ஒருவரைக் கைது செய்து காவலில் வைப்பதன் குறிக்கோள தணடனை கொடுப்பதாகவோ,தடுப்புக்காவலில் வைப்பதாகவோ இருக்கலாம். ஒருவர் மீது குற்றம் சுமததப்பட்டு, அது மெய்க்கப்படுமானால் அவர் குற்றவாளியாகக கருதப்படுகிறார். அப்பொழுது அவர் சிறைத் தண் டனை கொடுக்கப்பட்டுக் காவலில் வைக்கப்படலாம். இது தண்டனை மூலமாகச் சிறைக் காவலில் வைத தல் எனப்படும். ஒருவா மீது குற்றம் சுமத்தப்படுவ தற்கு முன்னரே, அவர் குற்றம் செய்வதிலிருநது தடுக்கப்படும பொருட்டு அவரைக் கைது செய்து காவலில் வைக்கப்படுதல் என்பதே தடுபபுக் காவல் முகமாகச் சிறை வைத்தல் (Preventive Detention) எனப்படும்.

இந்திய அரசு அமைப்புச் சட்டம் எல்லா உரிமை களையும் கொடுத்திருந்தாலும், சில நாடுகளில காண முடியாத தடுப்புக் காவல் சட்டம் செய்யவும் நாடாளு மன்றத்திற்கு உரிமை வழங்கியுள்ளது. இது குறித்த ஏ.கே கோபாலன் எதிர் சென்னை மாநிலம் (A.K. Gopalan Vs State of Madras (AIR 1950 Sc 27) என்ற வழக்கு புதிய 'மைல்' கல்லாக நின்று வழிகாட்டு கிறது. இவ்வழக்கில் கனியா (Kania), தாசு (Das) என்ற நீதிபதிகள் தடுப்புக்காவல் பற்றிச் சட்டம இயற்ற, அரசியலமைப்புச் சட்டம் பிரிவு 22 அதி காரம் வழங்கவில்லை என்று கருத்துத் தெரிவித்தார் கள. அரசியலமைப்புச் சட்டத்தில் இடம் பெற்றுள்ள (i) ஏழாம் அட்டவணை (VII Schedule) பட்டியல் ஒன்றில் (List I) ஒன்பதாவதாக (Entry 9) அமைந் துள்ளவற்றையும், (ii) பட்டியல் மூன்றில் (List III) மூன்றாவதாக அமைந்துள்ளவற்றையும் (iii) அரசிய லமைப்புச் சட்டம் பிரிவு 246 ஐயும் ஒருசேர வாசித் துப்பார்த்தால் தடுப்புக் காவல் பற்றிச் சட்டம் இயற்ற அதிகாரம் எங்கு இருந்து பெறப்படுகிறது என்பது நன்கு விளங்கும். முதலாவதாகச் சொல்லப் பட்டவற்றிலிருந்து (i) வெளி விவகாரங்கள் (Foreign Affairs) (ii) இநதியப் பாதுகாப்பு (Security of India)ஆகியவைகளை மனத்திற்கொணடு பாராளு மன்றம் தடுப்புக் காவல் சட்டம் தீட்டலாம் என்றும், இரணடாவதாகக் கூறப்பட்டவைகளி லிருந்து பாராளுமனறமும் சட்டமன்றமும் தடுப்புக் காவல் சட்டம்இயற்றலாம் எனறும் அறியலாம். இப படிச் சட்டம் இயற்றுவது,1.மாநிலத்தின பாதுகாப்புக் குறித்தும்(State Security),2.பொது மக்களின் அமைதி குறித்தும் (Maintenance of Public Order) 3. பொது மக்களுக்கு மிகவும் தேவையானவைகளை வழங்குவது குறித்தும். சேவை செயவது குறித்தும் (Maintenance of the Supplies and Services Essential to the Community) இருக்கலாம். இந்திய அரசுச்சட்டமும் (Government of India Act 1935) தடுப்புக் காவல் சட்டம் இயற்றுவதறகு அதிகாரம் வழங்கியது ஆனால், அது நெருக்கடி காலஙகளில் மட்டுமே (During Emergency) நடைமுறையில இருககும். பிற சமயஙகளில் நடை முறையில் இச்சட்டம் இராது. ஆனால், இநதியா வில் தடுப்புக் காவல் சட்டம் எப்போதும் நடை முறையில் இருந்து கொண்டே இருககிறது. எனினும், தடுப்புக் காவலில் வைக்கப்படும ஒருவருககு சட்டம் பாதுகாப்புக் கொடுக்கிறது அவை பிரிவு 22 (4), (5), (6), (7)-இல கூறப்பட்டுளளன. இச் சட்டப் பிரிவு களின்படி பின்வரும் பாதுகாப்புகள உள்ளன.

1. **கால வரையறை**. எவவளவு காலத்திற்கு ஒரு வரைத் தடுப்புக் காவலில வைக்கலாம் எனபதனை, அறிவுரைக் குழுவிற்கு (Advisory Board) விடுதல் வேண்டும். அரசமைப்புச் சட்டம் பிரிவு 22 (4) இது பற்றி விரிவாகக் கூறுகிறது. இதன்படி ஒருவரை, மூன்று மாதங்களுககு மட்டுமே தடுப்புக் காவல் சட்டப்படி சிறையில் வைக்க முடியும். இநதக்காலத தினை நீடிக்க வேணடுமானால், அறிவுரைக் குழு அறிவுறுத்த வேணடும் அறிவுரைக் குழுவில் அமரு பவர்கள், உயர் நீதிமன்ற நீதிபதிகளாகவோ, அதற்குச சமமான தகுதி உள்ளவர்களாகவோ இருத் தல் வேண்டும். பிரிவு 22-இன உட்பிரிவு 4, 1978-இல திருத்தியமைக்கப்பட்டது (Constitution Amendment, Act, 1978). இதன்படி தடுப்புக் காவலில் ஒருவரை எடுத்த எடுப்பில இரண்டு மாதம் மட்டுமே சிறையில வைக்க முடியும். அறிவுரைககுழு, நடுவண் அரசைப் (Central Government) பொறுத்த வரையில், தலைமை உயர் நீதிமன்றத் தலைமை நீதிபதியாலும், மாநில அரசுகளைப்பொறுத்தவரையில அந்தந்த மாநில அரசு களின் தலைமை நீதிபதிகளாலும் அமைக்கப்படவேண டும். அறிவுரைக்குழு ஒருவரைத் தடுப்புக் காவல் சட் டப்படி எவ்வளவுகாலம் சிறையில் வைக்கலாம் எனப

தனை அறிவுறுத்திய பின்னர், அதனை அரசு ஏற்று உறுதிப்படுத்தித்தவறாது செயற்படுத்த வேண்டும் எனபதனை டி.எசு.இரே எதிர் மேற்கு வங்காள மாநிலம் (D.S. Ray Vs State of West Bengal (AIR 1972 S. 1924) என்ற வழக்கில் உச்ச நீதிமன்றம் இடித்துரைத்தது.

இந்திய அரசியலமைப்புச் சட்டம பிரிவு 22 உட்பிரிவு 7-இன்படி, ஒருவரை எவ்வளவு காலம் அதிக பட்சமாகத் தடுபபுக் காவலில வைக்கலாம் எனபதனை அறுதியிட்டுச் சொல்லவும், அதற்கு எத்தகைய நடைமுறைகளை அறிவுரைக் குழு கடைப்பிடிக்க வேண்டும் என்று சொல்லவும் இந்தியாவில் பாராளுமன்றம் அதிகாரம் பெற்றுள்ளது.

**தடுப்புக்காவலில் வைக்கப்படக்காரணங்கள:** ஒருவர் தடுப்புக்காவலில வைகககப்பட்டால், ஏன் அவர் அவவாறு வைக்கப்படுகின்றார் எனபதற்குரிய காரணஙகளைக கைது செய்யப்பட்டுக் காவலில வைக்கப்படுபவருக்குத் தெரிவிக்க வேண்டும். இது குறிதது அரசியல் அமைபபுச் சட்டம் பிரிவு 22-இன் உட்பிரிவு 5கூறுகிறது. அப்படிக் கூறுவது பொது நலனிற்கு (Public interest) எதிரானது என்று தடுப்புக் காவலில் வைப்பதற்காகக் கைது செய்யும் அதிகாரி நினைப்பாரேயானால், கைது செய்யப்படுபவருக்குக் காரணங்களைத் தெரிவிக்க வேணடாம் என்று உட்பிரிவு 6 கூறுகிறது. மற்ற நேரஙகளில கைது செய்யப்பட்டவருககுக் அவரைத் தடுபபுக் காவலில் கைது செய்ததற்கான காரணங்களைத் தெரிவிக்க வேணடியது அவசியம். மேலும், அக் காரணஙகளை எழுத்து வடிவில் தெரிவிக்கும் போதும் அவை கைதிக்குப் புரியும் மொழியில் அல்லது கைதிககுத் தெரிநத மொழியில் இருப்பது நலம்.

**விளக்கிச் சொல்ல வாய்ப்பு:** கைது செய்யப்பட்டவருக்குத் தம் நிலையை விளககிச சொல்லத் தேவையான வாய்பபு, எவ்வளவு விரைவாக மாநில அரசினால் கொடுக்கப்பட முடியுமோ அவவளவு விரைவாகக் கொடுக்கப்படுதல நன்று என்று அரசமைபபுச் சட்டப் பிரிவு 22-இன் உட்பிரிவு 5 கூறுகிறது. தடுப்புக் காவலில் கைது செய்யப்பட்டவரின் தந்நிலை விளக்கம் போதுமான காலத்திற்குள் பெறப்பட்ட பின்னரும் கைது செய்யப்பட்டதற்கும, அந்த நிலையிலேயே காலம கடத்தப்படுவதற்கும் அரசினால போதுமான விளக்கம் கொடுக்கப்படவில்லை என்றால், தடுப்புக் காவலில் சிறையில வைத்தது சட்டப் புறம்பானது ஆகும். கைதி கொடுத்த விளக்கத்தினைக் கருத்தில் கொண்டு சிறையில் இருந்து விடுவிக்கச் செய்யப்பட்ட காலதாமதம் தேவையானதா, தேவையற்றதா என்பதைத் தெரிந்து கருத்துத் தெரிவிக்க ஒவவொரு வழக்கின பொருண்மைகளையும் நீதிமன்றம் சீர்தூக்கிப்பார்த்து ஆராயும்.

தடுப்பு ஊசியே மருந்தாகி விடாது. தடுப்பு ஊசியே வினையம் ஆகி விடுவதும் உண்டு. மருத்துவர்கள் எப்படி 'நோய் நாடி அதன் முதல் நாடி' மருத்துவம்செய்கிறார்களோ, அதுபோல் அரசு தக்க நடவடிக்கை எடுத்துக் குற்றம் நடை பெறாதிருக்க மாற்று நடவடிக்ககளை மேற்கொளள வேணடும. சிறைச் சாலையே குற்றங்கள் அடைக்காக்கப்படும்இடம் என்றும், சாதாரணக் குற்றவாளியாகச் சிறைக்குச் செலபவன் கொடும் குற்றவாளியாகத் (Hardened Criminal) திரும்பி வருவான் என்றும் குற்றவியல (Criminologists) தத்துவ அறிஞர்கள் கூறுவர். எனவே, தடுப்புக் காவலில வைக்காமலேயே திருதத முடியுமா எனபதை அரசு ஆராய வேண்டும். தி.ஆ இ.

**தடுப்புரிமை:** என்பது ஏதேனுமொரு முடிபை அலலது செயலை மறுப்பதற்கு அலலது தள்ளுபடி செய்தற்கு இருக்கும் உரிமையை அல்லது அதிகாரத்தைக் குறிப்பிடுகிறது. தடுப்புரிமை என்பது (Veto) அரசாங்க அமைப்புகளிலும், பல பன்னாட்டுக் கழகங்களிலும், முககியமாக ஐக்கிய நாடுகள் நிறுவனத்தின் ஓர் உறுப்பாகிய பாதுகாப்புச் சபையின அமைபபிலும் சேர்க்கப்பட்டுள்ளது.

**அரசாங்க அமைப்புகளில் தடுப்புரிமை அதிகாரம்:** பணடைக்கால அரசாங்க அமைப்புகளில் சில அதிகாரிகளிடம் தடுப்புரிமை அதிகாரம் வழங்கப்பட்டிருந்தது, அவ்வதிகாரத்தைக் கொடுத்ததன் நோக்கம் அதன் வாயிலாக மற்ற அதிகாரியோ, மன்றமோ விடுக்கும் ஆணையை அல்லது செய்யும் முடிவை நிறைவேற்றாதபடி சில காலத்துக்காகவாவது தடுத்து வைத்து, அவ்வாணையினால் பாதிக்கப்படுபவர் அக் காலத்தில் மேலதிகாரிக்கு மேல் முறையீடு செய்து கொளளுதற்கு வாய்ப்பிருக்குமபடி செய்யவேணடும் எனபதுதான. பண்டைய உரோமானியக் குடியரசின் அரசாங்கத்தில் உயர் நிருவாக அதிகாரிகள் விடுக்கும் எநத ஆணையையும் நிறைவேற்றாதபடி தடுத்தற்குத் தடுப்புரிமை அதிகாரம் தீர்ப்பாயர்கள எனப்படும (Tribunes) வேறுசில அதிகாரிகளிடம் வழங்கப்பட்டிருந்தது. அந்தத தடுப்புரிமையைக கையாண்டு அவ்வதிகாரிகள் நிருவாக அதிகாரியின எதேச்சாதிகார ஆணையினினறும் குடிமக்களுடைய உரிமையைக் காப்பாற்றுதல இயலும். அரசாங்கம் நிருவாக அதிகாரிகளின் செயல்களினால் எதேசசாதிகாரமாகவும், கொடுங் கோலாட்சியாகவும் மாறிவிடாமல் தடுக்கும் பொருட்டே இவ்வாறு தடை மற்றும் சமன் கோட்பாட்டில் (Principle of Checks and Balances) பண

டைய உரோமானியக் குடியரசின் அரசாங்கம் அமைக்கப்பட்டிருந்தது.

அமெரிக்க நாட்டின் அரசியலமைப்புச் சட்டம அதிகாரப் பிரிவினைக் கோட்பாட்டினடிப்படையிலும், தடை மற்றும் சமன் கோட்பாட்டினடிப்படையிலும் அமைக்கப்பட்டிருக்கிறது. கூட்டாட்சிச் சட்டமன்றம் நிறைவேற்றும் சட்டங்களுக்கு அவை தம் ஒப்புதலுக் காகக் கொடுக்கப்பட்ட நாளிலிருந்து, ஞாயிறு நீங்க லாக, 10 நாட்கள்வரை ஒப்புதலளிக்க மறுத்துக் குடி யரசுத் தலைவர் தடுப்புரிமையைக் கையாளுதல்கூடும். இதற்கு அப்போதைய தடுப்புரிமை (Suspensive Veto) என்பது பெயர். இதுஉயர்தர நிருவாக அதிகாரியாகிய குடியரசுத் தலைவரால் கையாளப்படுகிறபடியால இது நிருவாகத்தின் தடுப்புரிமை (Executive Veto) எனப்படும். இதுபோலவே நிருவாக அதிகாரி செய் யும் அயல்நாட்டு ஒப்பந்தங்களுக்குச் சட்டமன்றத்தின மேலவை (Senate) மூன்றில் இரண்டுபங்கு உறுப்பின ருடைய ஒப்புதலை அளிக்கமறுத்துத் தடுப்புரிமையைக் கையாளுதல் கூடும். இவ்வகைத் தடுப்புரிமைக் குச் சட்டமன்றத் தடுப்புரிமை (Legislative Veto) என பது பெயர். சட்டமன்றம் நிறைவேற்றும் சட்டங் களும், நிருவாக அதிகாரி விடுக்கும் ஆணைகளும் அரசியலமைப்புச் சட்டத்துக்குப் புறம்பானவை என்று கூறித் தலைமை நீதிமன்றம் தீர்ப்பளித்தல் கூடும். இது நீதிமன்றத் தடுப்புரிமை (Judicial Veto or Review) எனப்படும்.

**ஐக்கிய நாடுகள் சபையில் தடுப்புரிமை:** இரண் டாம் உலகப் போருக்குப்பின் தோன்றிய பன்னாட் டுச் சங்கமான ஐக்கிய நாடுகள் சபையில பன்னாட்டு அமைதியையும், பாதுகாப்பையும் நிலைநிறுத்தும பணி அதனுடைய நிருவாக உறுப்பாகிய பாதுகாப்புச சபையிடம் அளிக்கப்பட்டது. அச்சபை நிறுவப் பட்டபோது அதில் ஐந்து வல்லரசுகளான பிரிட்டன பிரான்சு, சோவியத்து உருசியா, ஐக்கிய அமெரிக்க நாடு, சீனா (முதலில் தேசிய சீனாவும், பின்னர் மக்கள் சீனக் குடியரசும் இருந்தன) முதலியவை களைச் சேர்த்து 11 உறுப்புநாடுகள இருந்தன. பின்னர் 15 உறுப்பு நாடுகள் சேர்க்கப்பட்டுள்ளன. ஐந்து வல்லரசுகளும் எப்போதும் உறுப்பினர்கள்; மீதி 10 உறுப்பு நாடுகளும் பொதுமன்றத்தால இரண்டாண்டுக் காலத்துக்குத் தேர்நதெடுக்கப்படுகின் றன. நிலையான 5 உறுப்பினர்களுக்கும் மற்ற உறுப் பினர்களுக்குமிடையேயுள்ள வேறுபாடு உறுப்பினரு டைய பதவிக் காலத்தைப் பற்றி மட்டுமல்லாமல், உலக அமைதி, பாதுகாப்பு முதலியவற்றில் நிலை யான உறுப்பினர்களுக்குக் கூடுதல் அதிகாரம் இருத் தலாகும். இதுவே 5 நிலையான உறுப்பு நாடுகளுக் கும் ஐக்கிய நாடுகள் சபையின் பட்டயத்தின் 27-ஆம் பிரிவின்படி அளிக்கப்பட்டுள்ள தடுப்புரிமை அதிகாரம் (Veto power) ஆகும்.

இத்தடுப்புரிமை அதிகாரத்தைப் பயன்படுத்திச் சோவியத்து உருசியா, அமெரிக்கா நாடு கொண்டு வந்த பாதுகாப்புப் பற்றிய தீர்மானங்களைத் தடுத்து நிறுத்தி வைத்தும், அமெரிக்க நாடு, அதுபோலவே சோவியத்து நாட்டின் தீர்மானங்களைத் தடுத்து நிறுத்தி வைத்தும் ஐக்கிய நாடுகள் சபையைத் திற மாகச் செயற்பட இயலாதபடி செய்துவிட்டன. பெர்லின் முற்றுகை, மேற்காசியப்போர், வியட்நாம போர், சீனாவின் நிலை முதலிய கேள்விகள் பாது காப்புச் சபையின் தீர்ப்புக்கு எடுத்துக்கொள்ளப்பட்ட போதெல்லாம் சோவியத்து உருசியாவும், அமெரிக்க நாடும் ஒன்றுக்கெதிராக ஒன்று தடுப்புரிமையைக் கையாண்டது. மற்றெல்லா உறுப்பு நாடுகளின ஆதரவு இருந்தாலும், இவ்விரண்டு வல்லரசுகளும் தம்முள் ஒத்துப் போகாத காரணத்தால, நலபல முடிவுகள் உடனடியாக எடுக்கப்பட முடியாமற் போயின. எந்தப் பாதுகாப்பும் அமைதி நடவடிக்கை யும் இவ்விரு வல்லரசுகளின் ஆதரவைச் சார்ந்தே செயற்படுத்தப்பட வேண்டும் என்ற நோக்கத்தில தான இந்தத் தடுப்புரிமை அதிகாரம் அளிக்கப்பட் டது. பா.சு.

**தடையிலா வாணிகம்:** பன்னாட்டு வாணி கத்தில் ஒரு நாடு இன்னொரு நாட்டுக்கு ஏற்றுமதி அல்லது இறக்குமதி செய்யப்படும பொருள்களின மீது எவ்விதத் தடையோ, கட்டுப்பாடோ இல்லாமல நடைபெறும் வாணிகம் தடையிலா வாணிகம் (Free Trade) என்று குறிப்பிடப்படுகிறது. இத்தகைய வாணிகத்தைத் தொன்மைப் பொருளியலறிஞர்கள பெரிதும் ஊக்கப்படுத்தினர். தொன்மைப் பொருளிய லறிஞர்களின கருத்துப்படி எவ்வாறு தனிமனிதப் பொருளாதாரச் சுதந்திரத்தில் அரசின தலையீடு விரும்பப்படுவதில்லையோ, அதே போன்று பன னாட்டு வாணிகத்திலும், அரசின தலையீடு வாணிகச சுதந்திரத்துக்கு இடையூறாக இருக்கும் என்று நம்பி னார்கள். இக் கொள்கை காப்புக கொள்கைக்கு (Protectionism) நேர் எதிரானது.

பன்னாட்டு வாணிகம், பங்கு கொள்கின்ற நாடு களனைத்திற்கும் நன்மை பயக்கிறது. பன்னாட்டு வாணிகம உள் நாட்டில் தயாரிக்க முடியாத அல்லது தயாரிப்புச் செலவு மிகுதியாயுள்ள பொருள்களை வாங்கி நுகர உதவி செய்கிறது. மேலும், இதனால ஒரு நாடு தன பொருள்களை உள்நாட்டில் மட்டுமல லாமல வெளிநாட்டிலும் விற்று, அதன பொருளுக்கு நல்ல விலையும் கிடைக்கப் பெறுகிறது. பன்னாட்டு வாணிகம் மேற்சொன்ன பொதுவான நன்மை

களோடு சிலகுறிப்பிடத் தக்க நன்மைகளும் உணடாக வாய்ப்பளிக்கிறது.

பன்னாட்டு வாணிகத்தில் பொருளகள், விலைக் காரணிகள் எல்லாப் பகுதிகளிலும் சமமாக இருககும். பன்னாட்டு வாணிகம் சிறப்புச் செயறபாட்டை (Specialization) ஊக்குவிக்கிறது. பிறநாட்டிலிருந்து குறைந்த விலையில் இறக்குமதி செய்து கொள்ளத் தக்க சில பொருள்களை ஒருநாடு சொந்தமாக உற்பத்தி செய்யத் தொடங்கினால், உற்பத்திச் செலவு கூடுவதற்கும் வாய்ப்புண்டு. அந்நிலையில், சொந்த உற்பத்தியைவிட இறக்குமதியே நன்மைபயக்கும். இவ்வாறு செயவதால் ஒவ்வொரு நாடும் குறிப்பிட்ட சில துறைகளில் தனித்திறமையும், சிறப்பும் அடைய முடியும். அல்றியும் சிறப்புச் செயற்பாட்டினால் எல்லா உற்பத்திக் காரணிகளும் முழுமையாகப் பயன் படுத்தப்படுகின்றன, இதோடு, சிறப்புச் செயற்பாடு புதிய இயந்திரக் கருவிகளை அறிமுகம் செய்வதால் உற்பத்தி பெருகுவதோடு கூடுதல் செய்பொருள ஆக்கமும், தேசிய வருமானமும், உயர்ந்த வாழ்க்கைத் தரமும் கிட்டுகின்றன. பன்னாட்டு வாணிகம் ஒரு நாட்டுக்கு எதிராகவோ, சார்பாகவோ உள்ள வேறு பாட்டைத் தடுப்பதால், உலக நாடுகளனைத்திற்கும் உற்பத்திககுத் தேவையான மூலப் பொருள்கள் கிடைக்க வழி வகுக்கிறது. மேலும், பன்னாட்டுப் பொருள் வாணிகம் கடன்பட்ட நாட்டிலிருந்து கடன் கொடுத்த நாட்டுக்குப் பணவழியாக கடன் செலுத தாமல் பண்டங்கள் ஏற்றுமதி வாயிலாக வாணிகம் நடத்த முடிகிறது. பொதுவாகக் கடன் வாங்கின நாடு கள் தாம் கடன்பட்ட நாடுகளுக்குச் செலுத்த வேண டிய தொகையைப் பொருள்களாக ஏற்றுமதி செய்கின் றன. மேற்கூறிய காரணங்களுக்காகத் தொன்மைப் பொருளியலறிஞர்களில் சுமித்திலிருந்து (Smith) எல் லாப் பொருளியல் அறிஞர்களும் தடையிலா வாணி கத்தைப் பரிந்துரைத்தனர். தடையிலா வாணிகத்தி னால் பொருளாதார வளங்களை முழுமையாகப் பயன் படுத்துவதன்மூலம் சிறப்புச் செயற்பாட்டு நன்மை பெருகுவதோடு, பொருளாதார நலமும் பெருகும் என்று கூறினார்கள். ஆனால், இக் கருத்தை எதிர்த்துத் தடையிலா வாணிகத்தினால் ஏற்படும் தீமைகளாகக் கீழ்க்காணும் காரணங்களையும் பொருளியலறிஞர்கள விளக்கியுள்ளனர்.

**பன்னாட்டு வாணிகத்தினால் ஏற்படும் தீமைகள்;** 1) நிகழ்காலத்துக்காக எதிர்கால மூல வளங்கள் தியா கம் செய்யப்படுகின்றன. எடுத்துக்காட்டாக, ஒரு நாடு தன் கனிவளங்களைப்பன்னாட்டு வாணிகத்தின் இலாபத்தைமட்டும் கருத்தில் கொண்டு ஏற்றுமதி செய்வதினால், பிற்காலத்தில் உள்நாட்டுத் தொழில் வளர்ச்சிமுன்னேற்றத்திற்குக் கனிவளங்கள் தேவைப் படும் பொழுது அதன் பற்றாக் குறையினால் தடங்கல் அல்லது இடையூறு ஏற்படுகிறது. 2) பன் னாட்டு வாணிகத்தில், மக்கள் அந்நிய நாட்டுப் பொருள்களை மலிவு விலையில் பெற்றுக் கொள் வதனால் உள்நாட்டுத் தொழில்கள் கேடுறுகின்றன. எடுத்துக்காட்டாக,இநதியாவின் கைவினைப்பொருள் கள், குறிப்பாக பஞ்சு நெசவுத் தொழில் தடை யிலாத, கட்டுப்படுத்தாத ஆங்கிலேய நெசவு இறக்கு மதியினால் மிகவும் சீரழிந்துவிட்டது. 3) பனனாட்டு வாணிகம், பொருள்களின் சிறப்புச செயற்பாட்டு உற்பத்திக்கு வழி வகுப்பதால் நாட்டின் ஏற்றத்தாழ் வுள்ள வளர்சசிக்கு உறுதுணையாகிறது. 4) பன னாட்டு வாணிகம் நாட்டுக்கு நாடு சார்புடைய தாக்குவதால், ஒரு நாட்டில் ஏற்படக்கூடிய வாணிக மந்தம் மற்ற நாடுகளுககும் பரவ வாய்ப்பு ஏற்படு கின்றது. எடுத்துக்காட்டாக, 1929-ஆம் ஆண்டில் அமெரிக்காவில ஏற்பட்ட விலை இறக்கம், அதன் வாணிகத் தொடர்பினால் எல்லா உலக நாடுகளுக் கும் பரவியது. அமெரிக்காவின் விலையும், வருமான மும் குறையும் பொழுது, அநநியப் பொருள்களுக கான அதன் தேவையும் குறைகிறது. அதனால் அந்நிய நாட்டு விலையும் வருமானமும்குறைகின்றன. 5) கடைசியாக, ஒரு நாடு இன்னொரு நாட்டைச் சார்ந்திருப்பது போர்க் காலங்களில் பெரும் கேட்டினை விளைவிக்கிறது.

எனவே,இக்காலத்தில் பன்னாட்டு வாணிகம் பல வகைகளில் கட்டுப்படுத்தப்படுகிறது. அவற்றில் முத லாவதாக, வெளிநாட்டிலிருந்து இறக்குமதி செய்யும் பொருள்களின்மீது சரக்குவரி விதிப்பது (Tariff or Duty) மிகத் தொன்மையானதும், மிகுந்த அளவு பழக்கத்தில் இருப்பதுமாகிய இம்முறை இறக்குமதி யைக் குறைக்கும் பொருட்டு விதிக்கப்படுகிறது. இது ஒரு முனை வரி (Uni-linear or Single Column Tariff), பழைமையான சரக்கு வரிமுறை (Connventional Tariff) எனப பலதரப்படும்.

**அளவுத் தடுப்பு முறை:** பன்னாட்டு வாணிகத்தில் அளவுத் தடுப்பு முறையை (Quantitative restrictions) இரண்டாவது வகையாகச் சொல்லலாம். ஒரு குறிப் பிட்ட காலத்தில் இறக்குமதி செய்யக்கூடிய சில பொருள்களின் அளவை நேரடியாகக் குறைப்பது. பொதுவாக நாடுகள் வெளிப்பொருள் வாணிக உரிமம்(Licensing), பங்கு (Quota) போன்ற அளவுத் தடுப்பு முறைகளைப் பயன்படுத்தி இறக்குமதி செய்யக் கூடிய பொருள்களின் அளவைக் குறைப்பத னால், அந்நியப் போட்டியைக் குறைப்பதுடன், அந்நியச் செலாவணி இருப்பை மேற்குறிப்பிட்ட இறக்குமதிக் குறைப்பில் பலப்படுத்துகிறது. இரண்

டாம் உலகப் போருக்குப் பின்பு பங்கு முறை எல்லா நாடுகளிலும் காணப்படுகிறது.

**மாற்று விகிதத் தடுப்பு முறை:** உலகப் பெருமந தத்தின பொழுது மாறறு விகிதத் தடுப்பு முறை (Exchange restrictions) பன்னாட்டு வாணிகததில முக்கியத் தடுப்பு முறையாகப் பினபற்றபபட்டது. உலகப் பெருமநதத்தின (1930) விளைவாகப பல நாடுகளின் அந்நியசசெலாவணி இருபபில் தட்டுப்பாடு ஏற்பட்டதால், அந்நியச் செலாவணி கொடுக்கல, வாங்கல்களைக் கட்டுப்படுத்த வேணடிய தேவை ஏறபட்டது. இதுவே பினபு இறக்குமதியைக் கட்டுப படுததச்சிறந்த முறையாக ஏறறுக்கொளளப்பட்டது. இம்முறை அந்நியச் செலாவணி இருப்பைப் (Foreign exchange reserves) பாதுகாக்கிறது. இம மாறறு விகிதத் தடுப்பு முறையில இறககுமதி செய்யப்படும பொருள்கள அதன முதகியததுவத்துக்கேறப வகைப் படுத்தப்படுகின்றன இதுபெரும்பாலும் அரசியல் கருவியாகப பயன்படுத்தப படுவதால, பொதுவாக நாட்டின் உற்பத்தியையும், வாணிகத்தையும் குலைப் பதுடன், அரசார்ந்த ஊழலுக்கும், மனம் போன போககுக்கும் வழிவகுககும என்று கருதப்படுகிறது

அநநிய நாட்டு வாணிகக் கொள்கையில, தடுக கும் வேறு முறைகளுள பலவகை மாற்று விகித மதிப்பு (Multiple exchange rate) (இவற்றுள், பலவித பொருள்களுக்கு, பல மாறறு விகிதஙகள போடப படும்), சுகாதாரம், ஒழுஙகு என்னும் அடிப்படைக் காரணங்கள (ஆரோககியம், நலததின அடிப்படை யில் இறக்குமதிப் பொருள்களைத் தடுபபது), இறககு மதி உபரி வரி (Import sur-taxes), இறககுமதி வரி விதிக்கும் பொருளகளின் மீதுசிறப்பு வரி), இறக்கு மதியுடன் இணைந்த கொள்முதல் கட்டுத் திட்டங்கள (Linked Purchase regulations), ஒவ்வொரு இறககு மதியின் பொழுதும் உள்நாட்டுப் பொருளகளை எந்த அளவுக்கு வாங்குவது என்பன போன்றவை அடங்கும்.

சில பொது விதிகள மேற்கததிய தொழில நாடுகளில் பன்னாட்டு வாணிகத்தில் கட்டுப பாட்டை, தடுப்பைச் செலுத்த வேண்டியகட்டாயத் தைத் தெளிவுபடுத்த வழிகாட்டியாக இருக்கின்றன. முதலில், உலக நாடுகளுக்கிடையே ஏறபட்ட போர் அடிக்கடி பாதுகாப்பைத் தூணடியது. போர் பொது வாக வருவாய்த் தேவையை அதிகப்படுத்தும். வரு மான நோக்கோடு இறக்குமதிப் பொருள்களின் மீது விதிக்கப்படும் வரியானது (Tariff) தற்செயலாக உள்நாட்டுப்பொருள்களுக்குப்பாதுகாப்புப்பயன்பாட் டைக் கொடுக்கிறது. போரானது தொழில் பொருள் களுக்கான தேவையைத் திடீரென்று உயர்த்துவது ஆகும். போர் முடிந்தபின்பு, இறக்குமதி வரியானது தேவை வீழ்சசியிலிருந்து சரிக்கட்ட விதிககப்படுகிறது மேலும், போரானது நாட்டின் இறககுமதியை வெட்டு வதன் மூலம் அது இயற்கையான பாதுகாப்பை வளர்ச்சியின் தொடக்கநிலைத் தொழிற் சாலை களுக்குக் கொடுககிறது. அதுவே போா முடிந்த பினபு இறக்குமதிவரி விதிபபின மூலம காப்புக் கொள் கையைப் பலப்படுத்துகிறது தடைசியாகப் போர்க் காலங்களில வெளி வரவுகள் துணடிககபபடுவதால தேவையான பொருள்களை உள்நாட்டிலேயே உற் பத்தி செய்யச் சிறப்பு நடவடிகககைகளை அரசு மேற்கொளளும். போர் முடிநத பினபு இத தொழிற் சாலைகள வேலை வாய்ப்பையும், மூலதன மதிப்பை யும, போர்க்கால நடவடிககையாகப் பாதுகாப்பைப் பற்றிய உணர்வைத தூணடக் கூடிய வகையில் தொடரப்படுகின்றன இத்தகைய பாதுகாபபு வரலாற்றை உடைய இங்கிலாந்து, பிரான்சு, அமெரிக்கா, ஆசுதிரேலியா நாடுகள் இநதப் பொது விதியை உறுதிபபடுத்துகினறன.

அமெரிககா, இங்கிலாநது நாட்டின் போட்டியி லிருந்து தன்னைக் காப்பாறறிக் கொளள கி.பி.1812-ஆம் ஆணடு போரின விளைவுக்குப் பிறகு பாதுகாப்பு முறை ஏற்பட்டாலும், மிகுந்த பாதுகாப்புத் தேவை எழுந்தது, அமெரிக்க நாட்டின உளநாட்டுப போரின போதுதான மேலும், போரின போது நாட்டின் வருமானம மிகவும் குறைந்து விடுவதால, பன்னாட்டு வாணிக வரியும், சுஙக வரியும் வருவாயைக் கொடுக்கும் முக்கிய வாயில்களாக அமைகினறன. தாசிக்கு (Taussig, 1888) எனபவர் வருவாய்த் தேவை போர் முடிந்த பிறகு குறைந்த போதிலும், வாணிக வரி குறைக்கப்படுவதிலலை என்கிறார்.

இன்னொரு பொது விதியானது மநதத்தின (Depression) விளைவு பறறிக கூறுவது. சுழல மந்த மானாலும், நீணட கால மந்தமானாலும, சில குறிப்பிட்ட பொருள்களின விலையில ஏற்பட்ட வீழ்ச்சி தன்னிச்சையாகச சில சிறப்பு வரிகளால் பாது காப்புப் பயனை மிகுதிப்படுததும். பிரிவு சார்ந்த வருமான வீழ்சசியிலிருநது தடுக்கக் காப்புக் கொள்கை உதவுகிறது. இது இயற்கையானது ஏனென்றால் ஒரு நாட்டில் தொழில் பொருள் தேவை குறையும் பொழுது அந்நாட்டு வாணிகக் கொளகை யானது அந்நியப் போட்டியைக் குறைக்கவோ அல்லது விலக்கவோ வேணடும். இத்தகைய பாது காப்பு மறுமலர்ச்சி கி.பி. 19-ஆம் நூற்றாண்டின் பிற்பகுதியில் பிரான்சு, செருமனியில் ஏற்பட்டதற்குக் காரணம் பெரும்பாலும் கி.பி. 1873-1879-ஆம்

ஆண்டில் ஏற்பட்ட மந்தத்தின் காரணமும், ஆசியாவிலிருந்தும், புதுஉலக நாடுகளிலிருந்தும் புதிதாக வந்த வரவினால் நீடித்த விவசாய விலை வீழ்ச்சியும் ஆகும். உலகப் பெரு மந்தத் திற்குப் (1930) பின்தான் பன்னாட்டுக் காப்புக் கொள்கை உலகெங்கும் பரவலாகக் கடைப்பிடிக்கப் பட்டது. குறிப்பாக இங்கிலாந்தில் கி.பி.1860 முதல் 1920-ஆம் ஆண்டு வரைக்கும் தடையிலா வாணிகம் நீடித்துப் பின்பு 1931-ஆம் ஆண்டில்தான் அரசின் வாணிகப் பாதுகாப்புக் கொடுத்தல் தொடங்கியது. இவ்விரணடு பொது விதிகளுக்கும் எதிர் மாறாக அமைதியும், பெருஞ்செல்வமும் பொதுவாகத் தடையில்லா வாணிகத்தை ஊக்கப்படுத்தும். நீடித்த செல்வச் செழிப்பில், தொழிற்றுறைக்கு வாணிகப் பாதுகாப்பின் அவசியம் குறைவதுடன், எதிர் காலத் தில் அந்நிய நாட்டுப் போட்டிக்கு எதிராக வாணிகத் தடைகளைச் சுமப்படுத்த வேண்டிய அவசியம் குறைந்துமிருக்கும். எப்படி 'இருந்தபோதிலும், இப் பொது விதிகளிரண்டும் பன்னாட்டு வாணிக வரி விதிப்பின் கொள்கையில ஏற்படும் மாறுதல்களை விவரிக்கவில்லை.

உலக நாடுகள் 1960-ஆம் ஆண்டு சில வாணிகக் கொள்கைகளை வகுத்துச் செயற்படுத்தின. தொழிற் செறிவு அற்ற நாடுகள் பன்னாட்டு வாணிக வரியை வருவாய்க்காக விதிக்கிறதே தவிரப் பாதுகாப்பிற்காக அன்று.

பன்னாட்டு வாணிகப் பொருள்களின் மேல் விதிக்கப்படும் வரிகள், இறக்குமதி வரியானாலும், ஏற்றுமதி வரியானாலும் பலமாற்று விகித (Exchange rate system)அமைப்பு முறையின் இலாபமாக இருந்தா லும் அவை ஒரு அரசுக்கு அதிகமாக வருவாய் வளத் தைக் கொடுக்கின்றன. ஓரளவு தொழிற்செறிவு பெற்ற அல்லது அண்மையில் தொழில் வளர்ச்சியடைந்த நாடுகளில் குறிப்பாக கனடா, ஆசுத்திரேலியா, இந்தியா, பிரேசில, அர்செணடைனாவிலும் வேறு இறக்குமதிக் கட்டுப்பாடுகள் பெரும்பாலும் பாது காப்பு நிமித்தமாகவும் தயாரிப்புத் தொழிற்சாலை களைப் பேணும் பொருட்டும் போடப்பட்டது. இத்தகைய நாடுகளில், பன்னாட்டு வாணிகத் தொழில் பாதுகாப்பு, பொருளாதாரக் கொள்கைகளில் மிக முக்கியத்துவம் வாய்ந்ததாக மட்டுமல்லாமல் விவா தத்துக்குரிய தலைப்பாகவும் விளங்குகிறது. கா.தி.இ.

**துணை நூல்கள்:**

Ellsworth, P.T., International Economy, Macmillan Co., New York, 1969.

Kindle berger, C.P., International Economy, Richard D Irwin INC., Homewood, 1973.

Mundell, R.A, International Economics, Macmillan Co., New York, 1968.

**தடை வளைப்பு:** 'தடை வளைப்பு' என்பது ஒரு போர்க்கால நடவடிக்கை ஆகும். போரில் ஈடுபட்டிருக்கும் ஒரு நாடு தன் எதிரி நாட்டின் கடற் கரைக்கோ அல்லது அநநாட்டின் ஒருபகுதிக்கோ செல் கின்ற அயல்நாட்டுக் கப்பல்களை அங்கு நுழைய விடாமல் தடுப்பது தடை வளைப்புப் (Blockade) எனப்படும். ஆகாய விமானங்கள் கூட இது போனற தடைவளைப்புக்கு உட்படுத்தப்படுவது உண்டு.

'தடை வளைப்பு' என்பது போரின் ஓர் அங்கமாக விளங்குவதால், இது பன்னாட்டுச் சட்டத்திற்கு இணங்க நடத்தப்பட வேண்டிய ஒன்றாகும். தடை வளைப்பின் போது 'தடை வளைப்பு'ப் பகுதிக்குள் அத்துமீறி வரும் கப்பல்கள் 'தடை வளைப்பு' அறி விக்கும் நாட்டினால் பிடித்துக் கொள்ளப்படும். பின்னர்க் கப்பல்கள கடல்திரை ஆயத்தின் விசார ணைக்கு உட்படுத்தப்படும்.

பாரிசு அறுதியீட்டின்படி (கி பி.1856-ஆம் ஆணடு) தடைவளைப்பின் விளைவை வைத்தே அது மற்ற நாடுகளைக் கட்டுப்படுத்துமா என்பதைத் தீர்மானிக்க முடியும். எவவித விளைவையும் ஏற்படுத்தாத தடை வளைப்பு ஒரு தடை வளைப்பாகவே கருதப்பட மாட்டாது. எனவே, இது போன்ற தடை வளைப்புகள் எந்த நாட்டுக் கப்பல்களையும் கட்டுப்படுத்தாது.

தடை வளைப்புச் செய்கின்ற நாடு, தடை வளைப்பு நிகழும் காலம் மற்றும் இடம் போன்ற வற்றை முன்கூட்டியே அறிவிக்க வேண்டியது அதன் கடமையாகும். அவ்வாறான அறிவிப்பைத் தொடர்ந்தே போரில் நடுநிலை வகிக்கும் நாடுகளின் கப்பல்கள் தம் நடவடிக்கைகளைத் தீர்மானிக்கும்.

பொதுவாகத் தடை வளைப்பு என்ற சொல் போர்க்காலத் தடை வளைப்பையே குறித்து நின்றா லும் அமைதிக் காலத்திலும் தடைவளைப்பு நிலவுவது உணடு. பிரான்சு, இங்கிலாந்து, உருசியா ஆகிய மூன்று நாடுகளும் கி.பி. 1827-ஆம் ஆண்டு கிரேக்கக் கடற் கரையில் நிகழ்த்திய 'அமைதியான தடை வளைப்பு' (Pacific Blockade) துருக்கியிடமிருந்து கிரேக்க நாடு விடுதலை பெற வழிவகுத்தது. இதுபோல அமைதி யான தடை வளைப்பில் போர்க்காரணம் இருப்ப தில்லையாதலால் எந்த நாட்டின மீது தடை வளைப்புச் செய்யப்படுகிறதோ அந்த நாட்டின்

கபபலகள் மட்டுமே தடை வளைபபுக்கு உட்படுத்தப படுகின்றன.

பொதுவாக, தடைவளைபபுச் செய்யும நாடு போர்நிலை அறிவித்த பிறகே நடுவுநிலை வகிககும். நாடுகள் தடைவளைப்பிலிருநது விலக்குக கோர முடியும். அமைதியான தடை வளைபபின் போது போர் நிலை எதுவும் அறிவிக்கத தேவையில்லை யாதலால நடுநிலை நாடுகள் எதுவும் இதிலிருந்து விலக்குக கோர முடியாது.

இக்காலத்தில், ஒரு நாட்டின பாதுகாபபினைக கருத்திற் கொணடு அந்த நாடு தன அண்டை நாட்டுககுச் செல்கினற புதிய இராணுவத் தளவாடங் களைத் தடுத்து நிறுத்துவதற்குக் கூட இமமுறை யினைக் கையாளுகிறது. அமெரிக்க நாடு கியூபாவுககுச சென்று கொணடிருந்த ஏவுகணைகள தாங்கிய கபபல களைத் தடுத்து நிறுத்தியதைக்கூட சில பன்னாட்டுச் சட்ட அறிஞர்கள 'அமைதியான தடை வளைபபு' எனவே வருணித்தனர். ம.கா.

**தண்டகம்:** வட மொழி இலககியஙகள பத்தியம் என்றும் கத்தியம் என்றும் இரணடு வகையாகப் பகுக்கப்பெறும. அவற்றுள் அடிகளைப் (பதம்) பெற்றிருப்பது பததியம, அடி வரையரையினறி வருவது கததியம் (உரைநடை).

பிற்காலத்தில், பத்தியம் இயற்றிய கவிஞர்கள கத்தியம் வரையத் தொடங்கினர். பத்தியம பாடிப் பாடி'நாத தழும்பேறிய கவிஞர்கள் வரைந்த கத்தியத்திலும் எதுகைகளும் மோனைகளும் தாமாக வந்து அமையலாயின. இஙஙனம் கவிதைப் பண புடன் புனையப்பெற்ற கததியத்தைத் (உரைநடை) தண்டகம் என்றனர். தணடகத்தைப் பலமுறை பயினற இலக்கணப் புலவர்கள தணடகத்திறகுத தனி இலககணம வகுத்தனர். இப் பெருமககள இலக கியம் கணடே இலக்கணம் அமைத்தனர். அவ்விலக கணம் பழைய புலமையின் சாயலாகவும் புதிய புலமைக்கு வழிகாட்டியாகவும் அமைந்தது. தணடகத திற்கு இலக்கணம் வடித்த பின தணடகமும கத்திய மும் தனித்தனியாக இயஙகலாயின.

வட மொழியில் உளள விருததஙகள அடிகள ஒவ் வொன்றிலும் 26எழுததுகள வரை இருககலாம். தண டகத்திற்கு இநத வரையறையிலலை. வட மொழியில 3எழுத்துகள கொண்டது ஒரு கணமாகும். அடிகள தோறும் 27,30,33,36 எனற முறையில் கணஙகள அதிகமாகிக் கொணடே போனால அது தணடகம் ஆகும். வட மொழியில் உளள தண்டகஙகளுள (காளிதாசன இயற்றியதாகக கூறப்பெறும்) சியா மளா தணடகம் பழமையானது.

வட மொழியில உளள தண்டகமும், கத்தியமும் மிகுதியும் கௌட நெறியையே பின்பறறுவன; சொற செறிவுடையன ஆனாலும், தண்டகம நடையால் கத்தியத்தைவிடப பெருமை பெற்றுவிட்டது.

கவிதாாககி சிம்மம என்று இலககிய உலகம பாராட்டும் வேதாநத தேசிகர், தாம் இயற்றிய மகாவீர வைபவத்தைக் கததியம என்றும், கருட னைப் புகழநது வரைந்த தோத்திரததைத் தணட கம் என்றும் கூறிககொணடார் வேதாநத தேசிகா கருட தண்டகததில் ஒவவோர் அடியிலும் 36 கணம் அமைத்தாா. அதனால அநநூலில ஒவவோரடியிலும் 108 எழுததுகளைக காணலாம. இவா தமிழநாட்ட வர் ஆகையால மற்றைய தணடகததிற் காணப் பெறாத அடி வரையறையை அமைததார் என்று சிலா கூறுவா. இது ஆராயதற்குரியது.

வீரசோழிய ஆசிரியா வடமொழி மரபைத தமிழில சேர்க்க வேணடும் என்னும் விருப்புடையவர் அதனால, வட மொழிக்கேயுரிய காயத்திரி அனுட்டுப்பு முதலிய விருததத்தை எடுத்துக்காட்டு களுடன் தமிழுககு அறிமுகபபடுததினார். விருத்த வகைகளை அமைதத பூரிப்பால் தமிழாகளுக்குத் தணடகத்திறகு இலக்கணம கூறி அதற்கேறப ஒரு தணடகததையும் அமைத்தாா. இபபுலவர் கூறும் தண்டக இலக்கணம் இப்போது உணாதறகு அரிதாக வுளளது. தண்டகத்திற்குக் குறியீடுகளைக் கூறி அதனை விளக்கவிலலை. அப்புலவர் வாழநத காலத் தில அது எளிதாக இருந்தது போலும்.

ஆசிரியர் 'தணடகம் ஐந்து குறி பெறும்' என்றும, அவை 1) நேரசை, 2) நிரையசை, 3) 'வலலொற்றுப் புளளி, 4) இடையொறறு வட்டம், 5)விலகு' என்றும் குறித்தாா. மேலும் அவா இக்குறியீடுகள் வரி வடிவத் திற் காட்டப்பெறா ஊகித்து உணரவேணடும் என்றும் இவை குறி பெறுகையும் ஒழிகையும் உசசா ரணத்தில் கண்டுகொள்க என்றும் குறித்தார்.

இப்புலவர் காட்டிய தணடகத்தில நான்கு அடி கள் உளளன. நானகு அடிகளும் எதுகையும். மோனை யும் பெறறுளளன.

'கொற்றத் தொஙகலசிங் காசனம்
ஒற்றைச் சங்குவெண சாய்மரை
குத்துப் பநதாமுன தாவிய
முத்துப் பநதிமுன் தானமகிழ்' இபபகுதி அத்

தணடகத்தின் நான்கில ஒரு பகுதி. இத் தணடகத தில் உள்ள ஒவவொரு அடியையும துணடம் என்பா. 'இத் தண்டகத்தின் இறுதியில் முனசொனன தணட கம் 16 துணடத்தால வநதன இக்கடடளை பிழைப பின தணடகப் போலியாம்' எனறு வரைகினறார் ஆசிரியர். இதனால் தணடகம போலவே தணடகப போலியும் இருநததெனபது புலனாகிறது

வேதாநத தேசிகர் தமிழிலும் சில தணடகம பாடினார் ஆனால், அது வடமொழித் தணடகம போற் செறிவாயிலலை. அதனால், பிற்காலப் புலவா கள் அப்பாடலகளை விருததம் என்றனா. வீரசோழிய இலக்கணபபடி அவை தணடகமே வேதாநத தேசிகர் பாடல் 16 துணடங்கள பெற்று வீரசோழிய இலக கணப்பட அமைந்துள்ளது தணடகம துணடத்தினபின் காய்சசீர் பெற்றுத் திருப்புகழாக மலாநதது. தணட கம்பெற்ற குழநதையாகிய திருப்புகழும், காவடிச சிநதும தமிழமொழியின வெறறிக கொடிகள.

எஸ்.கே.ரா

**தண்டக மாலை:** இது தொண்ணூறறாறு வகைச் சிற்றிலககியஙகளுள ஒனறு வீரசோழியம் சந்தப் பாடல்கள்ளத் தணடகம எனறு சுட்டும (வீரசோழியம்-யாப்பு 25,34,35). தணடகம எனபது ஆரியச செயயுள வகை. தணடகம நான்கு கட்டளை முதலாக வரும். பிறகாலச சோழராட்சியில தோனறி வளர்ந்த சந்தப் பாக்களின அடித்தளததை இஙகுக் காண முடிகினறது தணடகச செயயுளகளான அமைந்த நூல் தணடகமாலையாகும். ஆனால, இநத வகையிலமைநத நூலகள இப்போது தமிழில் இலலை.

முத்து வீரியம், பிரபந்த தீபிகை, பிரபத்த தீபம் எனற மூன்றும் 'தண்டகமாலை'யைக் குறிககினறன. சதுரகராதியும் தொனனூல விளககவுரையும இந நூலைச் சுட்டுகினறன. ஆனால், இவையெலலாம இம்மாலையைத் தணடக யாபபால் பாடவேணடும எனறு விதித்தில. 'தணடகமாலை வெணபா யாபபில் முந்நூறு பாடுவதாம' எனறு முதது வீரியம் (யாபபு 107) உரைககினறது. வெணபாக்களின தொகுபபால தணடகமாலை அமைநதமையான இதனை 'வெண புணர்சசி மாலை' எனறும 'புணர்சசிமாலை' எனறும புலவர்கள் வழங்குகினறனர். தணடகமாலை, இனன பொருளைததான் பாட வேண்டும எனறும பாட்டி யல நூல்கள் வரையறுத்தில.

இருபதாம் நூற்றாணடில் ஏ.டி. இராமலிஙகம் பிளளை பாடிய 'திருசசெந்தூர்த் தணடகமாலை' (1917) 300 நேரிசை வெணபாக்களையுடையது. தணடகமாலை என்ற பெயரான் வழங்கும் தமிழ் நூல்களின் எண்ணிக்கை மிகக் குறைவேயாம்.

தெ சொ.

**தண்டகன்:** இவன புராணஙகளில குறிக்கப்பட் டுளள மன்னன் இவன் தந்தை இட்சுவாகு. இவன தொண்டை நாடு சென்று காஞசிபுரத்தில் பெரு மாளை வழிபட்டான. இவன் சுக்கிரன மகள அரசயை யிடம், அவள விருப்பத்திற்கு மாறாகத் தகாத முறை யில் நடநது கொணடான். இவனது ஒழுக்கக் கேட்டி னால் இவனது நாட்டில் கலமாரி பெய்தது. அதனால் நாடு காடாகியது. அதுவே, தணடகாரணியம் எனப பெயர்பெறறது. தணடகன் ஆண்ட நாடு தணடகம அது காடாதனால ஆரணியம் எனப்பட்டது. இவனது நாட்டின எலலைகள வடககே விநதிய மலையும தெறகே குமரி ஆறுமஎனபதுகூறப்படுகிறது. இது தக காண பீடபூமி எனவும் வழஙகப்படுகிறது. சா.உ

**தண்டபாணி சுவாமிகள்:** திருநெல்வேலியில சைவ வேளாளா குலததில் செந்தினாயகர், பேசசு முத்தம்மை ஆகியோர்ககு கி.பி 1839-ஆம் ஆண்டில மகனாகப் பிறந்தவர் தணடபாணி சுவாமிகள. சஙகர லிஙகம எனற பெயரை இவருககுப் பெறறோா சூட் டினர். இளமையிலேயே கலவியில சிறநது விளஙகிய இவா கவிதை பாடும் ஆற்றலுடையவராயத் திகழந தாா. இவர் தந்தைககு நணபராகிய சீதாராம நாயுடு இவருக்கு விநாயகா, திருமகள மநதிரஙகள, ஆறெழுதது மந்திரம ஆகியவற்றை ஓதினார். செபிக் கும் முறையையும கறபிததாா. வேலவழிபாட்டில மிகுநத ஈடுபாடு கொண்டாா. காவியுடையும் கௌ பீனமும் தரித்து வளளியூர் மலையில துறவு மேற கொணடாா.

முருகப்பெருமான தமககுக காட்சி கொடுகக வேணடும எனறு பலநாட்கள தவம் இருநதார். தம் வேணடுகோள நிறைவேறாததைப் பொறுத்துக் கொள்ள முடியாத இவர் மலைமீது ஏறி உச்சியிலி ருந்து உருணடதாகவும், எனினும் தமது உடலில ஒரு பழுதும் உண்டாகவிலலை எனபதாகவும் குறிப்பிடு கின்றார். சமயபேதஙகளில் நம்பிககையில்லாத இவர் தமது மேனி முழுதும் திருநீறு பூசிககொணடதுடன ஒரு தோளில் தென்கலை நாமத்தையும் மற்றொரு தோளில வடகலை நாமத்தையும இட்டுக கொண டார். துளசி அக்கமணி மாலைகள் அணிநதிருந்தாா. சூரியன், சிவன, அம்பிகை, திருமால், கணபதி, முருகன ஆகிய ஆறு சமயக் கடவுளர் மீதும் நூலகள இயற்றியுள்ளார். சமயஙகடநது விளஙகும் பரம பொருளையும் போற்றிப் பாடியுள்ளார்.

திருப்புகழ்ச் சந்தத்துடன கூடிய பாடலகள் பல பாடியமையால் திருப்புகழ்ச் சுவாமிகள எனவும

வண்ணப்பாக்களை மிக எளிய முறையில் பல அரிய குறிப்புகளை அமைத்துப் பாடியமையால வணணச் சரபம எனவும், முருகனின அடிமையாகத் தம்மைக் கருதிக்கொணடு வாழ்நதமையால் முருகதாசா என வும், மேனி முழுதும் திருநீற்றை அணிநது கொணட வராய், இலங்கோடு, கௌபீனம், காவியுடை ஆகிய வற்றுடன கூடிய தோற்றம் உடையவராய்க காட்சி யளித்தமையால் தணடபாணி சுவாமிகள எனவும இவர் மிகுந்த மரியாதையுடன் மக்களால் அழைக்கப் பெற்றார். ஓயாமாரி, திருவுருவாளன, கரடகொம் பன போன்ற பெயர்களையும் இவர் பெற்றிருந்தார்.

மனவெளி நிட்டையிலும், உறக்கத்திலும அருங காட்சிகளைப பெற்று வந்தார். தாமே வரைந்த ஓவிய வடிவ முருகனை வழிபட்டு வந்தார். அளவிடற கரிய தமிழ்ப் பாக்களைப் பாடும் திறனை ஓவிய முருகன் தமக்கு வழஙகியதாகக கூறுகினறார். தாம் பாடிய கவிதைகளைப் பனையோலைச் சுவடியில் எழுதியும் வைததார்.

அருளியல், சீவ கருணை, தமிழ்ப் பணபு, சமூகம், சமயம் ஆகியவற்றில மக்கள சிறப்புறறு வாழ வேண டும் எனற எணணம் உடையவராய், இறைவன் திரு வருளை வேண்டி முறையீடு செய்யும் இயல்பினராய வாழ்நதார். பறறனைததையும் துறநத தண்டபாணி சுவாமிகள இறைபபற்றுடன தமிழ்பபற்றும் மிக்கவ ராய் விளங்கினார். வடமொழி தாய் எனறால் வண தமிழ் தந்தை என்பார் இவர்.

சீவகாருணய ஒழுக்கத்தைத் தமது சீரிய கொள் கையாகக் கொணடு வாழ்ந்தவர் தண்டபாணி சுவாமிகள். இவர், சமரச சனமார்க்க நெறியையும் கொல்லாமையாகிய அறத்தையும் வற்புறுத்திய சான் றோராகிய வடலூர் வள்ளலார் இராமலிங்க சுவாமி களுடன் பலமுறை கலநது பேசித் தோழமை கொண்டு வாழ்ந்த பெரியாராவார்.

பழனி மலை இடும்பன, திருவெற்றியூர்க் காளி, கோலியனூர் மாரியம்மை ஆகிய தெய்வங்கட்குச் செய்யப் பெற்ற கொலைப் பூசையைக் கணடித்தது டன் அதைத் தடுத்து நிறுத்தவும் பாடுபட்டார். முற் றிலும் பசுவதை தடைப்படுத்தப்பட்டபினனரே தாம் முத்தி பெறவேண்டும் என்று விரும்பியவர் சுவாமிகள். பசுவதைத தடுப்புக் கொள்கையை வலி யுறுத்தும் நோக்குடன், ஆங்கிலியர் அந்தாதி, என்னும் நூலை இயற்றினார். அந்நூல் சுவாமிகளின் அருட் பண்பிற்குச் சான்றாகத் திகழ்கிறது.

தண்டபாணி சுவாமிகள் ஆன்மிக நெறி பற்றிய பாடல்களைப் பாடியதுடன் அரசியல, சமுதாய சீர் திருத்தம் ஆகியவை குறித்தும் பாடி உள்ளனர். 'அன்னியராட்சி அகல வேண்டும். இந்தியாவுக்கு விடுதலை வாங்கித்தரவல்ல ஒரு வீரனை, அருளாளனை, அறிஞனை, சித்தனை விரைவில் தோற்றுவித்து எஙகள இன்னலை நீக்கவேண்டும்' என இறைவனை இவர் வேணடுவது குறிப்பிடத்தக்கது, விதவை மணததிறகு இவர் ஆதரவளிப்பதனை இவா தம் மொழிகளின மூலம் அறியலாம்.

தமிழ் மொழியின் இலக்கிய வளத்தைப் பெருக் கிய பெருமை தணடபாணி சுவாமிகளுக்கு உண்டு. அறுவகை இலக்கணம், வணணத்தியலப் முதலிய இலககண நூல்கள, அலங்கார நூல்கள, சாத்திர நூல்கள், அந்தாதி நூல்கள், சித்திரக்கவி நூலகள், பிள்ளைத் தமிழ் நூலகள், கௌமார விசயம், போனற விசய நூல்கள, சதக நூல்கள், குருபரத்துவம் என னும் தன வாழ்க்கை வரலாற்று நூல், புலவர் புராணம் என்னும் தமிழ்ப் புலவர் வாழ்க்கை வர லாற்று நூல், முசுகுந்த நாடகம, கீர்த்தனைகள், வண்ணப்பா, வாகடநூல், அனுபூதி நூல்கள, பஞ்ச ரத்தினம் எனற வகையில நூலகள, ஆயிரம் பாடல களைக் கொணட திலலைத் திருவாயிரம், பழனித் திருவாயிரம் ஆகிய நூல்கள், கோவை நூலகள், மாலை நூல்கள, சத்திய வாசகம் என்னும் உரை நடை நூல் ஆகியவை இவர் படைப்புகள் ஆகும் தண்டபாணி சுவாமிகளின் பரந்துபட்ட தமிழறிவு, இலக்கணப்புலமை, இயல், இசை, நாடகம் ஆகிய முத்தமிழ்ப் படைப்பாற்றல ஆகியவற்றை இப்படைப் புகள் புலப்படுத்துகின்றன.

'கவிதை வந்தபின் பார்த்து உவப்பது எனறன வழக்கம் உலகீரே' எனவும், 'என் மனதில் ஒன றெண்ணி என்கை மற்றொரு வணணம் எழுதிடும் இயற்கை' எனவும், இவர் மொழிவது வரமபிலலாமல பாக்கள் பல வடிக்கும் வல்லமை பெற்றவர் எனபதைக காட்டுகிறது. இவரது கனவில் முருகன் தோனறி. 'அருணகிரியின் மறுபிறப்பு நீ' என்று கூறியதாகக் குறிப்பிடுகின்றார். முருகக் கடவுளின் வேண்டுகோட் கிணங்க அருணகிரிநாதர் சரிதம் என்ற நூலைப படைத்துள்ளார். வடமொழியில் பாடப் பெற்ற திரு ஆமாத்தூர்த் தலபுராணத்தை ஆயிரம் பைந தமிழ்ப் பாடல்களில் மொழிபெயர்த்துள்ளார். இவ்வரிய பணி இவரது இருமொழிப் புலமையைப் புலப்படுத்துகிறது இவர், கி.பி. 19-ஆம் நூற்றாண் டில் வாழ்ந்த பெருங் கவிஞர்களுள் எண்ணிக்கை யிலும், வகைமைகளிலும் மிகுதியான பாடல்களைப் பாடியவர் என்ற சிறப்புடையவர். இவர் இயற்றிய

பாடல்கள் இப்போது ஐம்பதாயிரத்திற்கும் மேல் உள்ளன. முருகக் கடவுள் தமது எழுத்தாணிககுச் 'சர்வ சாதாரணி' எனறு பெயர் சூட்டியதாகப் பெரு மிதத்துடன இவர் குறிப்பிடுகினறார்.

இவரிடம் ஆறெழுத்து அருமறையையும், இலக கிய இலக்கணப்பாடலகளையும கேட்டு வந்த அரு ளாளர்கள், புலவர்கள் பலராவர். பலதிருக்கோயில களுக்குச் சென்று வழிபாடு செய்தபின் மூவர் தேவாரத் திருப்பதிகம் பாடப பெற்றதும் நடு நாட்டுத் திருத்தலமாக விளங்குவதுமாகிய திருவா மாத்தூரில பத்தாண்டுகள் எலலை தாண்டா உறுதியுடன் தவம இயற்றிய இவர் கி.பி. 1878ல காலமானார். திருவாமாத்தூரில இவரால் நிறுவப் பெறற மடம் இப்போது கௌமார மடாலயம் என்ற பெயரில் இயங்கி வருகிறது. இர கி.

**தண்டபாணி தேசிகர், எம்.எம்:** இவர் தஞசை மாவட்டத்தில் உளள திருச்செங்காட்டங் குடி எனனும் ஊருககு அருகே உளள பூவனூர் என் னும் சிற்றூரில 1908-ஆம ஆண்டு பிறந்தவர்.அதனால், 'பூவனூர்த் தம்பி' என்றே பலராலும் அழைக்கப் பட்டார்.

இவர்தம் தந்தையார் முததையா தேசிகர், பரம்பரை வழக்கப்படி திருமுறை ஓதுவதில் சிறநத வித்தகராய் விளங்கினார். தமது குலப்பெருமை ஓங்க இவரே தண்டபாணி தேசிகருக்கு இளம் வயது முதலே திருமுறைப் பாடல்கவைக் கசடறக் கற்பித்து வந்தார். இவர் தாயார் பாப்பம்மாள.

இறையருளும், இனிமையான குரலும், இயறகை யான இசை ஞானமும் பெற்ற தணடபாணி தேசிகா சிறுவயதிலேயே தேவார திருவாசகப் பாடலகளைப் பாடுவதில் வல்லவர் ஆனாா.

இவர், இளம் வயதிலேயே தம் தாய் தநதையரை இழந்தார்; வறுமையில் வாடினார். பத்து வயதுச் சிறுவனாக இருக்கும்போதேதேவாரப் பாடலகளைப் பாடிப் பெற்ற பொருளைக கொண்டு தான் வாழ்க்கை நடத்த வேணடும் எனற சூழ்நிலை ஏற்பட்டது.

இவரது குரல வளம் அனைவரையும் ஈர்த்தது; இசை ஞானம் எல்லாரையும் வியக்க வைத்தது மதுரைத் தேவாரப் பாடசாலையில் இவர் பல ஆண்டுகள் தேவார ஆசிரியராகப் பணி புரிந்தார். அஙகே இவருக்கும் மதுரை மாரியப்ப சுவாமியொடு நெருங்கிய தொடர்பு ஏறபட்டது. அதன் காரண மாகத் திரைப்படத் துறையில் நுழையும் வாய்ப்பு ஏற்பட்டது. மணியான சாரரீம், தெளிவான தமிழ் உச்சரிப்பு, எடுப்பான தோற்றம் உணர்ச்சி மிக்க பேச்சு ஆகியவை இவர் திரைப்படத் துறையில் வெற்றி பெறுவதற்குக் காரணஙகள ஆயின.

பட்டினத்தார், வல்லாள மகாராசா, நந்தனாா ஆகிய திரைப படஙகளில் முக்கிய பாத்திரமேற்று நடித்தார். பகதி உணர்வு மிகுந்த, இவர் பாடிய, திரைப்படப் பாடல்களைக் கேட்டவர்கள் உள்ளம உருகி நின்றனர். இவரது பாட்டுத் திறம பல பாடல் களுக்கு நிலையான புகழைத் தந்தது எனறால மிகை யாகாது. 'தாமரை பூத்த தடாகமடி', 'நல்ல சமயமடா', 'பாட்டுக்கொரு புலவன் பாரதியடா', 'வெணணிலாவும் வானும போலே' 'துன்பம் நேர்கை யில், முதலிய பாடலகள எல்லோரையும் எப்போதும் முணுமுணுககச் செய்தன

திருமுறை இசையில் நல்ல புகழ் பெற்று விளங கிய போதும் கருநாடக இசையில் சிறந்த பயிற்சியை மேற்கொணடார். நாதசுர வித்துவான் சத்தியாப பிள்ளையிடமும் 'வயலின' வித்தகர் கும்பகோணம் இராசமாணிக்கம் பிளளையிடமும் இசை நுட்பங் களைக் கற்றுத் தெளிந்தார். அரிய இராகங்களைப் பாடுவதிலும் வல்லவராய் விளங்கினார் தேசிகர்.

செட்டி நாட்டரசர் இராசா சர். முத்தையாச் செட்டியார் அவர்கள் இவரது தமிழிசைப் பணியைப் பெரிதும் போற்றியவராவர். இவர், அண்ணாமலைப் பலகலைக்கழக இசைக்கல்லூரியின் முதல்வராகப் பதினாறு ஆண்டுகள் பணியாற்றியுள்ளார். தமிழ் இசைச் சங்கம் ஆண்டுதோறும் நடத்தி வநத பண ஆராய்ச்சிக் கூட்டத்தில் தவறாது பங்குகொண்டு இசை ஆராய்ச்சி செய்து அரும்பணி ஆற்றினார்

புதுமை புகுத்த வேண்டும்; பொருள சிதையா மல் பாட வேண்டும்; பொருளுக்கேற்ற பண்களில் பாடலை அமைத்தல் வேண்டும்; சொல்லிலும், பணணிலும் பிழையில்லாப் பயிற்சி வேண்டும் எனனும் கருத்துகளில் தம் சீரிய சிநதனையினைச் செலுத்தி வந்தவர் தேசிகர்.

கல்லைப் பிசைந்து கனியாக்கும் செந்தமிழ்ப் பாடல்கள் அரங்குகளில் 'துக்கடா' போன்று பாடப பெறுவது கண்டு மனம் பொறாதவராய்த் தமிழ்ப் பாடல்களையும் ஆலாபனம், நிரவல், கல்பனாசுரம் ஆகியவற்றோடு பாடிப் பெரும் புரட்சி செய்தார்,

தமிழ்ப் பாடல்களை இவ்வளவு விரிவாகப் பாட முடியுமா என வினா எழுப்பியோர்க்கு விடை யளிக்கும் முகத்தான் கவிகுஞ்சர பாரதியார், வேத

நாயகம் பிள்ளை, அச்சுததாசர், மு. அருணாசலம் பிள்ளை, திரிகூடராசப்பக் கவிராயர், சுத்தானந்த பாரதியார், ஔவை சு துரைசாமிப் பிள்ளை, பாரதி தாசன், இராகவ இராமாநுசதாசர், இராம. சுப்பிர மணியஞ் செட்டியார், பெரிய சாமித் தூரன், கு.சா. கிருட்டிண மூர்த்தி, நாரயணக் கவிராயர் ஆகியோர் பாடல்களுக்குச் சுரதாளக்குறிப்போடுஇசையமைத்து 'தமிழிசைப் பாடல்கள்' என்ற நூலாக வெளியிடச் செயதார். அவை இக்காலத்தே பெரும்பாலான இசைக் கலைஞர்களால் பின்பற்றப்படுகின்றன.

தமிழில் பேரார்வம் கொணட தேசிகர் தமிழில் பெரும்புலமை பெற்றவராகவும் திகழ்ந்தார். 'உன்னை யன்றி உற்றதுணை' 'கடவுளை மறவாதே', 'சின மடையாதே' போன்ற பல பாடலகளைத் தாமே இயற்றி அவற்றை இசையரங்குகளில் பாடி வந்தார். தாமியற்றிய 52 தமிழ்ப் பாடல்களுக்கும் சுரதாளம் இசையமைத்து 'இசைத தமிழ்ப் பாமாலை' என்ற நூலாக வெளியிட்டார். தருமபுர ஆதீன இசைப்புல வராகவும், திருவாவடுதுறை ஆதீன முதனமை இசைப் புலவராகவும் திகழ்ந்தார்.

இசையரசு, தேவாரமணி, சங்கீதசாகித்திய சிரோ மணி, சங்கீத கலாசிகாமணி, சங்கீத சாம்ராட், தனித் தமிழ் இசைமணி, தமிழிசை வேந்தர், பண்டு இசைப் புலவர்கோன், திருமுறைக் காலநிதி, இசைப் பேரறிஞர் ஆகியவை இவர் பெற்ற பட்டங்கள்.

இவர் 1973-ஆம் ஆண்டு காலமானார். சமுதா யச் சிந்தனைகளையும், தேசபக்தியினையும், இறை உணர்வினையும், இசை மூலம் பரப்பிய இவர் தொண்டு என்றும் தமிழ் கூறும் நல்லுலகம் நினைவு கூர்தற்குரியதாகும். ஏ.சு.

**தண்டபாணிப் பிள்ளை, நாகை:** இவர் சோழ நாட்டைச் சேர்ந்த புலவர். நாகப்பட்டினத்தில கி.பி. 1891-ஆம் ஆணடு பிறந்தார். அங்குள்ள 'வெசு லியன் மிசன்' கல்லூரியில், 'மெட்ரிகுலேசன்' வரை பயின்றார். மறைமலையடிகளிடம் தமிழ்க் கல்வி கற்றார். இவர் புதினஆசிரியர்; உரையாசிரியர்; நூல் வெளியீட்டாளர். சதா நந்தர், ஏகம்பஞ்சந்தம், கலா சுந்தரி, மாயாவதி முதலிய புதினங்களை எழுதியுள் ளார். இவர் திருக்குறளில் அறத்துப்பாலுக்கு மட்டும் உரை கண்டவர்; திருக்கருவைப் பதிற்றுப் பத்தந் தாதி என்னும் நூலுக்கும் உரை செய்துள்ளார். பவா னந்தம் பிள்ளை கழகத்தில் புலவராக இருந்தபோது யாப்பருங்கல விருத்தி, இறையனாரகப் பொருள், தொல்காப்பியப் பொருளதிகாரம் முதலிய நூல்களை வெளியிட்டுள்ளார். கௌதம புத்தர் வாழ்க்கை வர லாற்றையும் எளிய நடையில் எழுதியுள்ளார். இரங் கூன், பினாங்கு முதலிய இடங்களுக்குச்சென்று வந்த அயல்நாட்டு அனுபவமும் இவருக்குண்டு இவர் 1922-ஆம் ஆண்டு மறைந்தார். சா உ.

**தண்டலையார் சதகம்:** படிக்காசுப்புலவ ரால் பாடப்பெற்ற இந்நூல் பழமொழி விளக்கம் என வும் படும். பொதுவாக ஒரே யாப்பில் அமைநத நூறு பாடல்களைக் கொண்ட நூல் சதகம் எனப் பெறும். இத் தணடலையார் சதகம் நூற்று மூன்று அறுசீர் ஆசிரிய விருத்தப் பாடல்களைக் கொண்டுள் ளது. காப்புச் செய்யுள் இரண்டும், அதனையடுத்து அவையடக்கச் செய்யுள ஒன்றும் நூலின் முற்பகுதியில் உள்ளன. காப்புச் செய்யுளில் பழமொழி விளக்கம் என்று இந்நூலைப் புலவர் குறிப்பிடுகிறார். சுருக்கமா கவும் விரைவாகவும் மொழியப் பெறும் பழமொழி யின் உட்பொருளை அனைவரும் நனகுபுரிந்து கொள வதற்கேற்ற வகையில் அப்பழ மொழிகளை விளக்கும் நோக்குடன் இந்நூல் அமைக்கப்பட்டுளளது. எளிய நடையில ஆறறொழுக்காகப் பாடலகள் அமைந்துள ளன. நகைச்சுவையூட்டும் பாக்கள் இநநூலில் இடம் பெற்றுள்ளன. பொருத்தமான நிகழ்வுகளில நினைக் சப் படுவதும், உடன் மொழியப்படுவதுமான பழ மொழி ஒவ்வொரு பாடலின்ஈற்றடியிலும அமைக்கப் பட்டுள்ளது. மறற மூனறடிகளிலும் பழமொழியை விளக்கும் கதைகள், அன்றாட வாழ்வியற் செய்திகள ஆகியவை இடம் பெறுகின்றன. திருக்குறள், ஆத்தி சூடி போன்ற நீதி நூல்களில உள்ள பாடலக்ளுக்கு விளக்கம் தருவனவாகவும் சில பாடல்கள் இந்நூலில உள்ளன.

தண்டலை நீளநெறியராகிய சிவபெருமானை விளித்துக் கூறும் பாடல்கள உளளன. இறையனபின் திறத்தையும இறைவனுடன ஆசிரியர் கொணடுளள தோழமைப் பண்பினையும் தெரிவிப்பனவாக இப் பாடல்கள் அமைந்துள்ளன. வினா-விடை என்ற பாங்கிலும் சில பாடல்கள் உள்ளன. தண்டலையகர் எழுநதருளிய வளநாட்டின்கண் வாழும் மக்களின் மலைவளம், நிலவளம், நீரவளம் ஆகியவற்றைப்புகழ் கின்ற வகையில் இப் பாடல்கள் உள்ளன.

செய்ந்நன்றியறிதல், விருந்தோம்பல், ஈகை, அழுக்காறாமை, அருளுடைமை, தவவொழுக்கம், தெய்வச் செயல, ஊழ்வினை, செல்வச் சிறப்பு மூத லியன பற்றிய பழமொழிகள் இதில் விளக்கப் பெற் றுள்ளன.

இறையுணர்வும் அறவுணர்வும் ஒன்றோ டொன்று கலந்த நிலையில் பாடல்கள் இந்நூலில் விளங்குகின்றன. இந்நூலின் பாக்கள், மக்களின் அன்றாட வாழ்வியல் அனுபவங்களை உருக்காட்சி

களாகப் படைக்கப் பெற்று, அரிய நீதிக் கருத்துக் களை எளிய மொழி நடையில சொல்லாட்சித் திற னுடன் கூறுவனவாக அமைந்துள்ளன. பாடல்கள் எதுகை மோனைகளுடன் அமைந்து இனிமை பயக்கின் றன. ஆசிரியரின் உலகியல் அனுபவம், சமுதாய உணர்வு, பன்னூற் பயிற்சி, தத்துவ உணர்வு நகைச் சுவைத் திறன முதலியவற்றைத் தணடலையார் சத கம் விளக்குகிறது. இர.கி.

**தண்டனை (கல்வி):** தண்டனையின் நோக் கம், இயல்பு பற்றி ஆய்வாளரிடம் கருத்து ஒற்றுமை யில்லை. ஒருவனை இடருக்குள்ளாக்கி அவனது நடத் தையில ஒரு திட்டமிட்ட மாற்றத்தை ஏற்படுத்த முயலுவதே தண்டனை என இரெட்டில் குறிபபிடு கின்றார். உருசோ, தனது இயற்கைப் பலன் கோட் பாட்டில் ஒரு குழந்தை தவறிழைக்கும்போது தணடித் தல் கூடாது எனறும், அக்குழந்தையானது தனது தவ றான நடத்தையால் ஏற்படும் பலனை அனுபவிகக விட்டுவிட வேண்டும் என்றும் பரிந்துரைககினறார். மனித நேயக் கொள்கையினரான மாணடிசோரி அம்மையார், பிராய்பல் ஆகியோர் பளளியில் ஒழுங்கை நிலையாட்டத் தண்டனை தேவையிலலை என்றே கருதுகின்றனர். மக்கரன் கோ, பிழை செய் வோருக்குக் கூட்டாணமையின் தரங்களை நிறைவு செய்யாமல் அவற்றைக் கைவிட்டதை உணர்த்துதலே சிறந்த தண்டனை என்று குறிப்பிடுகினறார். தாரிண்டைக்கு, தனது விளைவு விதியில் ஒரு குறிப் பிட்ட தீயசெயலுடன் தொடர்புடைய தணடனை யானது அச்செயலை மறுபடி செய்யவேணடுமென்ற மனச்சார்பினைப் பலவீனப்படுத்தும என்று கூறு கினறார். இசுகின்னர், உடன்பாட்டு வலுபபடுத்து பவற்றை நீக்கி வெறுப்பூட்டும் தூணடலை அளிப் பதே தண்டனை என வரையறுக்கின்றார். சாலொ மோன், தணடனை எனபது ஒரு துலங்கல் என்றும், தனிமனிதன் அதை விலக்க அல்லது அதனினறும் விடுபட முயல்கிறான் எனறும் கூறுகினறார். உள வியலறிஞரான பிராய்டு, தண்டனையைப் பற்றிக குறிப்பிடும்போது அது புற அதிர்சசிப் புணணை (Trauma) ஏற்படுத்துகின்றது எனச் சாடுகின்றார்.

**தண்டனையளிப்பதன் நோக்கங்கள்:** 1) விருமபத் தகாத நடத்தையை நிறுத்தியோ, விரும்பத்தக்க நடத்தையைத் தூண்டியோ நடத்தையில் உடனடி யான நடத்தை மாற்றத்தைத தணடனை ஏற்படுத்த வல்லது. பள்ளிகளில் நடத்தை மாற்றத்தை ஏற் படுத்த ஆசிரியர் பலதரப்பட்டது.தண்டனை முறை களைக் கையாளுகின்றார். அது தடுமாற்றத்தை ஏற் படுத்தும் கருததுக் குறிப்பாகவோ, வலுக்கட்டாய மாகப் பள்ளியில் நேரங்கடந்து தங்கவைத்தலாகவோ (Detention) இருக்கலாம். 2) தண்டனையானது அச்சமூட்டிச் செயலூக்கம் கொடுகக (Deterence) வல்லது. பள்ளிகளில் தண்டனை உண்டு என்பதே ஒழுக்கக்கேட்டுத் தொடக்கத்தை அல்லது நிகழ் வுறலைத் தடைசெய்கின்றது. 3) ஒரு நிறுவனத்தின் நோக்கங்களை நிறைவேற்ற உதவுகின்றது. 4) முற் காலத்தில தண்டனை ஒரு வஞ்சத் தீர்விற்காக (Retribution) அளிக்கப்பட்டது. அதன்மூலம் நீதி நிலைநாட்டப்படுவதோடு, பாதிக்கப்பட்டவர்கள தம் உரிமையை நிறுவவும், தீய செயலின விளைவு கள் சீர்படுத்தப்படவும் முடிந்தன. எடுத்துக்காட்டாக ஒரு மாணவன் உடன் மாணவனின் பொருளைத் திருடினால் திருடியவற்றைத் திருப்பியளிப்போடு வேறுசில இறுதி விளைவுகளையும் அனுபவிக்க வேண டும். 5) தணடனையானது தீங்கு செய்தவரைத் தூய்மைப்படுத்தவும் (Detergent) அளிக்கப்படுகிறது. தண்டனையின் மூலம் தான் இழைத்த குற்றங்களுக் குக் கழுவாய் தேடிக்கொளவதால் பாவ நீககம் அடைகினறான். 6) தண்டனை, தணடிக்கப்பட்ட துலங்கலை இடைக்காலமாகவோ முழுமையாகவோ அரைகுறையாகவோ அடக்கப் பயன்படுகிறது. 7) தணடனை, கற்றலில் ஒரு சிறந்த ஊக்கி யாகவும் பயன்படுகிறது. பரிசுப்பயிற்சி (Reward Training)யின் போது உடனபாட்டு வலுப்படுத்துபவையோடு (Positive Reinforcers) தணடனை முறை துலஙகலையும வலுப்படுத்துகிறது. பரிசு மட்டும் அளிப்பதைவிடப் பரிசையும் தண்டனையையும் சேர்த்து அளிககும் போது (Restitution) வலுவான துலங்கலகள ஏற்படு கின்றன. 8) தண்டனையை ஆக்க நிலைப்பட்ட தூண்டலாக (Conditional Stimulus) வும பயன்படுத் தலாம்.

**தண்டனையின் வடிவங்கள்:** தண்டனையின் வடி வங்கள் எண்ணக்குலைவை (Frustration) ஏற்படுத்து பவையாகவோ, வேதனை (Pain) அளிப்பவையா கவோ இருக்கலாம். உரிமைகளைக் கவர்ந்துகொள் ளும்போது எணணக்குலைவு ஏற்படுகிறது. வேதனை, மனஉளைவை (Discomfort) ஏற்படுத்துகின்றது. முன்பு உலகமெங்குமுள்ள பள்ளிகளில் கசையடி (Corperal Punishment) போன்ற உடல்சார்நத தண டனைகளும், ஏளனம் போன்ற வசவுகளுமே தண்ட னைகளாக அளிக்கப்பட்டு வந்தன. இன்றைய கலவி யாளர் பெரும்பாலும் மாணவரை உரியநேரங் கடந்து தங்கவைத்தல், மாணவர்களின் சிறப்புரிமை களைப் (பள்ளிக் குழுக்களில் அங்கத்தினர், விளை யாட்டு, சுற்றுலா போனறவற்றின கலந்துகொளளல்) பறித்தல் போன்ற எண்ணக்குலைவை ஏற்படுத்தும் தண்டனைகளையே பயன்படுத்துகின்றனர்.

**தண்டனையின் குறைபாடுகள்:** தண்டனையின விளைவுகள் நிகசயமானவையல்ல. தண்டனை ஆசிரியர், பள்ளி, சமூகம் ஆகியவற்றின்மேல் தவறான மனப்பானமையையும், வெறுப்புணர்ச்சியையும் தோற்றுவிக்கும். எடுத்துக்காட்டாகப் பள்ளியிலிருந்து நீக்கம செய்தல், மதிப்பெணகளைக் குறைத்தல், அதிக அளவு வகுப்பு வேலை, வீட்டு வேலையளித்தல் போன்றன பள்ளி வேலை வெறுக்கத் தக்கது எனற எண்ணத்தை ஏற்படுத்தும். தண்டனைகள, மாணவர்கள் தொடர்நது கற்பதறகே இடையூறு செய்ய வல்லவை. தண்டனை, மாணவர்களின் தன்மானத்தைக் குறைக்கும். ஒரு மாணவன் குறிப்பிட்ட ஒரு தவறுககாகத் தண்டிக்கப்படுவதைப் பார்க்கும் பிற மாணவரும் அந்நிகழ்ச்சியால் பாதிக்கப்படுகினறனர் என்ற அலைவிளைவுக் (Ripple Effect) கருத்து சில சமயஙகளில் ஆசிரியர் விரும்பும்வகையிலும், சிலசமயங்களில் விரும்பாத வகையிலும் எழககூடும. தண்டனைப் பயம் ஆசிரியருக்கும் மாணவருககுமிடையேயுளள உறவைப் பாதிககிறது தண்டனை குழந்தைகளின மன வளர்ச்சிக்கு ஊறு விளைவிக்கின்றது. தண்டனைகளின் தரம்பற்றி முடிவு எடுபபது மிகக் கடினம். எளிய தண்டனை என ஆசிரியர் நினைப்பது மாணவருக்கு மிகக் கடினமானதாகத் தோனறக்கூடும. எடுத்துக்காட்டாக விரிவுரையாக அளிக்கப்படும் தண்டனை, குறைகண்டுபிடித்தல போன்றவை சாட்டையடியை விடக் குழந்தையின் மன வளர்சசியில இடையூறை விளைவிக்கின்றன. தண்டிக்கப்பட்ட குழந்தைகளின் பின்நிலைமை முன்னிருந்த நிலைமையைவிட சீர்கேடடைவதையும் பார்க்கலாம். கல்வியின் குறிக்கோள், பயத்தினின்று விடுதலை எனறே இருததல் வேண்டும. கீழ்ப்படியாமைக்குத் தண்டித்தல் என்பது ஆசிரியர் தம்மை முழுமுதற் கடவுளாகப் பாவித்துத் தீர்ப்பளித்தலேயாகும். தன் கட்டுப்பாடுடைய குழந்தைக்குத் தணடனையே தேவையில்லை வல்லாணமை நிருவாகமுடைய பள்ளிகளில் பயிலும் குழநதைகளின தற்கட்டுப்பாடு வளர்ச்சி அடைவதைத் தணடனை தடுக்கின்றது.

**தண்டனையின் புலன்காட்சி:** மாணவனின் தண்டணை பற்றிய புலன்காட்சி தணடனையின் பயனை நிருணயிக்கின்றது. எடுத்துக்காட்டாக மாணவர் சிலர் தமக்களிக்கப்படும தண்டனைகளைப் பரிசாகவே கருதுகின்றனர். பள்ளிக்கு மட்டம் போடும் ஒருவனை (Truant) இடைக்காலமாக நீக்கம் செய்யும் போது அவனுக்கு வேதனையோ எணணக் குலைவோ ஏறபடுவதிலலை. ஏனெனில் அம்மாணவன் பளளியை, தவிர்க்கவேண்டிய, மகிழ்வளிககாத ஒன்றாகவே கருதியுள்ளான். ஒருவனது நடத்தை முன்னேறும் வரை வகுப்புச் செயல்களிலிருநது நீக்கம் செய்தலைச் சில மாணவர் வரவேறகக கூடிய இடை ஓய்வளித்தலாகவே (Welcome Respite) கருதுகின்றனர். வகுப்புக்கு வாராமையைப் பயனுள்ளது (எடுத்துக்காட்டாகத் தன நண்பர்களுடன திரைப்படம் பார்க்கச் செல்லுதல்) எனறு கருதும் ஒரு மாணவனுக்குத் தணடனையாகப பளளியில் நேரங் கடந்து தங்கவைத்தல என்ற சட்டக் கட்டுப்பாட்டை விடவகுப்புக்குவாராமை முக்கியத்துவத்தில மேம்படுகிறது. தணடனை பற்றிய புலன்காட்சி மாணவனின வயது, பால், தணடிப்பவருக்கும் அவனுக்குமிடையே யுள்ள தொடர்பு ஆகிய பல காரணங்களைப் பொறுத்தது.

**தண்டனையும் சட்டமும்:** 'பிரம்பைக் கையாளாதவன தன் மகனைப் பகைக்கிறான' என்பது சாலமன அரசரின கூறறு. அனறு ஆசிரியர்கள மாற்றுப் பெறறோர்களாகவே கருதப்பட்டு வந்தமையால் மாணவர்களைத் தணடிகக ஆசிரியர்களுககு அதிக அளவில உரிமை அளிககப்பட்டது. ஆனால இன்றோ, பல நாடுகள குழந்தைகளின உரிமைகளைப் பாதுகாக்கச் சட்டங்கள இயற்றியுள்ளன. மாணவரைத் தணடித்தல என்ற நீதிமுறைமை விவாதத்திற குரிய ஒன்றாக உள்ளது. குற்றவாளிகளைத் தணடித்தலுககும், வகுப்பில் ஒழுங்கை நிலைநாட்டுதலுககுமிடையே பெருத்த வேறுபாடு உள்ளது என ஆயவாளா கருதுகினறனர். பளளிகளிலுள்ள பெரும்பான்மையான நடத்தைச சிககல்கள கற்பித்தலில தரககுறைவு, பொருநதாத கலவி ஏற்பாடு, ஆசிரியரின தீரப்பளித்தலில் நெறி பிறழ்ச்சி ஆகியவறறாலேயே ஏறபடுகின்றன. தண்டனை முறைகள் பண்பாட்டிற்கேற்ப வேறுபடுகின்றன. கசையடி போன்ற உடல சாரநத தணடனைகளைப் பல நாடுகள கணடிக்கினறன. வகுப்பைத் துபபுரவு செய்தல முதலியன சில பள்ளிகளில தணடனையாக அளிக்கப்படுகினறன. வேறுசில பளளிகளில அது கல்விச செயலகளுள ஒரு பகுதியாகவே அமைகிறது.

பல கல்வியியலாளாகள் தணடனையை விரும்பத்தகாத ஒரு சொல்லாக இன்று கருதுகினறனர். ஆசிரியர் தம் குறைகளை மறைக்கும் பாதுகாப்பு அரணாகத் தண்டனையைப் பயனபடுத்தலாகாது. தணடனையை முழுவதுமாகத் தவிர்த்தல் கூடாது. தண்டனையைவிட உடன்பாட்டு வலுப்படுத்துபவையே சிறந்ததென்ற இசுகின்னரின் கூற்றும் தண்டனை புற அதிர்ச்சிப்புணணை ஏற்படுததுமென்ற உளநலப் பகுப்பாய்வாளர் பிராய்டின கருத்தும சில சூழல்களிலேயே பொருந்தும். தணடனையைக் கல்வியில் ஒரு ஊககியாகவும, மாணவர்களிடையே விரும்

பத்தக்க மாற்றங்களை ஏற்படுத்தி ஒழுங்கை நிலை நாட்டும் ஒன்றாகவும் பயன்படுத்தலாம் என்பதில் சிறிதேனும் ஐயமில்லை. சா.வி.

**தண்டனைக் கோட்பாடு:** தண்டனை என்ற சொல் ஒரு குற்றவாளிக்கு அரசு கொடுக்கும் தண்டனையையும் குழந்தைகளுக்குப் பெற்றோர்கள் கொடுக்கின்ற தண்டனையையும் குறிக்கும். பொதுவாகக் கூறுமிடத்து தண்டனை மகிழ்ச்சியளிக்கக் கூடியதன்று. எப்பொழுதும் குற்றவாளியே தண்டனைக்குரியவன். சட்டப்படி குற்றவாளி தண்டனையடைகிறான். தத்துவக் கண்ணோட்டத்தில் பார்க்குமிடத்துத் தண்டனை அளிப்பதன் நோக்கம் மனிதன் குற்றங்கள் செய்யாமலிருப்பதற்காக என்று கூறுகின்றனர். குற்றம் செய்கிறவனைத் தண்டிக்காமல் இருந்தால் குற்றங்கள் மிகுதியாகும். ஆகவே, ஒரு குற்றவாளி தண்டனை அனுபவிக்கின்றதை மற்றவர்கள் பார்க்கும் போது குற்றச்செயலைச்செய்ய அஞ்சுவர். அதனால் குற்றம் குறையும்.

தண்டனைக் கோட்பாட்டில், பழிவாங்குதல் (Retributive), சீர்திருத்தல் (Reformative), முன் கூட்டியே தடுத்தல் (Deterrent) என்று மூன்று வித கொள்கைகள் காணப்படுகின்றன. பழிவாங்கும் கொள்கையாவது ஒருவன் ஒரு கன்னத்தில் அடித்தால், அடித்தவனை உடனே அவன் கன்னத்தில் அடிக்கும்படி சொல்வதாகும். இது சரியன்று என அறவியல் தத்துவ ஞானிகள் கூறுகிறார்கள். இத்தகைய செயல் மேலும் மேலும் குற்றம் புரிவதைத் தூண்டுமேயன்றித் தடுத்து நிறுத்தாது. தண்டனை அளிப்பதன் நோக்கத்தையே கெடுத்துவிடும். மனத்தில் பழிவாங்கும் எண்ணம் வளர்ந்து கொண்டேவரும். சிலர் நன்மை செய்கிறவனுக்கு நலமும், தீமை செய்கிறவனுக்குத் தீமையும் அளிப்பதே நல்லது என்று கருதுகின்றனர். ஈவிங்கு (Ewing) என்பவர் எல்லோருள்ளத்திலும் சட்டத்தை மீறுகிறவன் தண்டிக்கப்படுவான் என்ற எண்ணம் எப்பொழுதும் இருந்து கொண்டேயிருப்பதற்குத் தண்டனை தேவை என்கிறார். சட்டத்தை மக்கள் மதிக்க வேண்டுமானால் தண்டனை இன்றியமையாதது. ஆயினும் குற்றமற்றவன் தண்டிக்கப்படக் கூடாது. சில வேளைகளில் ஒரு குற்றமும் செய்யாதவனும் தண்டிக்கப்படுகிறான். குற்றம் செய்கின்றவன் தப்பித்து விடுகின்றான். ஆகையினால், மேற்கூறிய கொள்கையில் சில குறைபாடுகள் காணப்படுகின்றன. குற்றத்திற்கேற்பத் தண்டனை அமைய வேண்டும். சிறிய குற்றம் செய்தவனுக்குப் பெரிய தண்டனையும், பெரிய குற்றம் செய்தவனுக்குச் சிறிய தண்டனையும் அமையக் கூடாது.

பதினெட்டு வயதிற்குட்பட்டவர்கள் குற்றம் செய்தால் தண்டனை குறையும். பதினெட்டு வயதிற்கு மேற்பட்டவர்கள் குற்றம் செய்தால் உறுதியாகத் தண்டிக்கப்படுவார்கள். பயன் வழிக் கொள்கையினர் கூறும் தண்டனைக் கொள்கை பயன் தர வல்லது. குற்றங்களைக் கண்டித்துத் தடுத்து நிறுத்துதல் வேண்டும். அப்பொழுதுதான் குற்றங்கள் குறையும்; களவு செய்கிறவன் சொத்தைப் பறி முதல் செய்து விடலாம்; கொலை செய்தவனைத் தூக்கிலிடலாம்.

தடுத்தல் கொள்கை பின்வருமாறு விளக்கப்படுகிறது. பயன்வழிக் கொள்கையினர் குற்றம் செய்கின்றவனைக் கடுமையாகத் தண்டிப்பதன் மூலம் பிறரை அத்தகைய குற்றங்கள் செய்யாமல் தடுக்கலாம் என்று கூறுகின்றனர். பயன்வழிக் கொள்கையினர் சிறிய குற்றங்களுக்குப் பெரிய தண்டனை வழங்குவதை எல்லோரும் குறை கூறுகின்றனர். குற்றம் செய்தால் தண்டனை கிடைக்கும் என அஞ்சுவதனால் குற்றம் செய்வது குறையும்.

சில சூழ்நிலைகளில் தவிர்க்க முடியாமல் சிலர் குற்றம் புரிகின்றனர். ஒரு பித்துப் பிடித்தவன் குற்றம் செய்கிறான். அவனுக்குத் தான் செய்வது குற்றம் என்பது தெரியாது. அதனால் அது குற்றமாகாது. ஆனால், சிலர் குற்றம், என்று தெரிந்தே குற்றம்புரிகின்றனர். அவர்களால் குற்றம் செய்வதைத் தவிர்க்க முடியவில்லை இயல்பினால் உந்தப்பட்டுச் சிலர் குற்றம் புரிகின்றனர். இவர்களைத் தண்டிப்பதைவிட படிப்பித்துச் சீர்திருத்துவது மேலாகும். இவர்கள் மருத்துவமனைகளுக்குப் போகவேண்டியவர்கள்.

சிலர் சீர்திருத்தல் கொள்கையில் நாட்டமுடையவராக யிருக்கின்றனர். குற்றவாளிகளைத் திருத்த வேண்டும். ஏனென்றால் சீர்திருத்தக் கொள்கையின்படி குற்றவாளி தன்னைச் சமுதாயம் எவ்வாறு மதிக்கிறது என்பதனைக் கண்டு தன்னை மாற்றிக் கொள்ள முடியும்படி செய்யவேண்டும். அப்படி நினையாவிட்டால் சீர்திருத்தம் இயலாது.

தண்டனைக் கொள்கையானது சீர்திருத்தம் செய்கின்ற தன்மை உடையதா என்று ஆராய வேண்டும். குற்றவாளி குற்றங்களை உணர்ந்தால் சீர்திருந்த வாய்ப்பு உண்டு. தடுத்தல் கொள்கையானது (Deterrent theory Punishment) எல்லா விதக் குற்றங்களுக்கும் பொருத்தமானதா என்று அறிய வேண்டும். பலர் குற்றங்களினால் அடைகின்ற தண்டனைகளைப் பற்றிச் சிந்திக்காமல் குற்றம் புரிகின்றனர். சிலர் குற்றங்களைத் திரும்பத்திரும்பத் தண்டனை அனுபவித்த போது செய்து கொண்டேயிருக்கின்றனர். குற்றவாளிகள் சிலர் கடுந்தண்டனை கிடைக்கும் என்று

அறிந்தவுடன் கடத்தல் தொழிலைக் கைவிடுகின்றனர். கற்பழித்தலும், கொள்ளையடித்தலுமான பெருங்குற்றங்களைச் செய்ய அஞ்சுகின்றனர்.

இரா.கோ.

**துணை நூல்கள்:**


Bradley, F.H., Ethical Studies, London. 1876.

Ewing, A.C., The Morality of Punishment London, 1929.


**தண்டனைத் தணிப்பு:** நீதிமன்றத்தால உயர்ந்த அளவு தண்டனைவிதிக்கப்பட்டிருந்து அதனை உரிய அரசு (Appropriate Government) குறைவான அளவு தண்டனையாக மாற்றித் தணித்தல் தண்டனைத் தணிப்பு (Commutation of Sentence) எனப்படும். இதனைக் குறித்த விதிமுறைகள இந்தியத் தண்டனைச் சட்டத்தின் 54, 55 மற்றும் 55-அ பிரிவுகளிலும் இந்தியக் குற்றவியல் நடைமுறைச் சட்டத்தின் 433 ஆம் பிரிவிலும் கூறப்பட்டுள்ளன.

உரிய அரசு நீதிமன்றத்தால் வழஙகப்பட்ட தண்டனையை இந்தியக் குற்றவியல் சட்டத்தின் 432 ஆம் பிரிவின் கீழ் அப்போதைக்கு நிறுத்தி வைகலாம். அல்லது அத்தண்டனையைக் குறைத்திடலாம். தீர்ப்புத் தண்டனை (Conviction) அளித்தல் என்பது நீதிமுறைப் பணி. அதனை நிறைவேற்றும் பொருட்டு உரிய அரசு தணடனையைக் குறைத்தோ, தணித்தோ வேறெந்த வகையிலும் மாற்றியோ அமைக்கலாம். ஆனால், தீர்ப்புத் தண்டனையையே மாற்றிடுதல் இயலாது. உரிய அரசு தண்டனையை அப்போதைக்கு நிறுத்தி வைத்தல் அல்லது தணித்தல நீதிமன்றம் விதித்த தணடனையை மாற்றிமைத்தல் இயலாது. நீதி மன்றத்தின் அதிகாரத்தில் குறுககிடுதல் கூடாது. உரிய அரசு தண்டனையைத் தள்ளுபடி செய்தல் விடுதலைத் தீர்ப்பு (Acquittal) அன்று. தடனை விதிக்கப்பட்டவர் அவ்வேளையிலும் தணடனையை எதிர்த்து மேல்முறையீடு செய்யலாம். அது போன்றே உரிய அரசு தண்டனையைத் தணித்தலும விடுதலைத் தீர்ப்பு அன்று. தண்டனையைத் தணிக்கும்போது உரிய அரசு சில குறிப்பிட்ட நிபந்தனைகளுடன் தணிக்கலாம்.

உரிய அரசு குற்றவாளியின் இசைவு இல்லாமலேயே அ) மரண தண்டனையை, இந்தியத் தண்டனைச் சட்டத்தில் கூறப்பட்டுள்ள எந்தவிதத் தண்டனையாகவும் 2) ஆயுட் சிறைத் தண்டனையைப் பதினான்கு ஆண்டிற்கு மிகைப்படாத சிறைத் தணடனை அல்லது தண்டத் தெகையாகவும்; 3) கடுங்காவல் தண்டனையை, அவருக்குக் குறிப்பிட்ட எவ்வித கால எல்லைக்குள்ளும் விதிக்கக் கூடிய மெய்க்காவல் தண்டனையாகவும்: 4) மெய்க்காவல் தணடனையைத் தணடத்தொகையாகவும் மாற்றலாம்

உரிய அரசுக்கு மேற்கணட அதிகாரங்கள் இந்தியக்குறறவியல நடைமுறைச் சட்டத்தின் 433 ஆம் பிரிவின் கீழ்த் தரப்பட்டுள்ளன.

இந்தியத் தணடனைச் சட்டத்தின் 51-ஆம் பிரிவு மரண தண்டனை விதிக்கப்பட்டிருக்கும் ஒவ்வொரு வழக்கிலும், உரிய அரசு, குற்றவாளியின இசைவு இல்லாமலேயே அத்தணடனையைப் பதினான்கு ஆண்டுகளுக்கு மிகைப்படாத சிறைத் தண்டனைகளுள் எந்த ஒருவகைத் தணடனையாகவும், அதாவது கடுங்காவல் தணடனையாகவோ மெய்க்காவல் தண்டனையாகவோ மாற்றலாம் எனக் கூறுகிறது.

உரிய அரசு எனபது இந்திய ஒன்றிய நிருவாக அதிகாரத் தொடர்பான ஒரு பொருணமை குறித்த சட்டம் எதற்கும் எதிரான ஒரு குறறத்திற்காகத் தொடுக்கப்பட்ட வழக்குகளில் நடுவண அரசு ஆகும். மாநிலத்தின் நிருவாக அதிகாரத் தொடர்பான ஒரு பொருண்மை குறித்த சட்டம் எதற்கும் எதிரான ஒரு குறறத்திற்காகத் தொடுக்கப்படும் வழக்குகளில் உரிய அரசு மாநில அரசு ஆகும்.

உரிய அரசுக்கு மேற்கணட பிரிவுகளில் வழங்கப்பட்டிருக்கும் அதிகாரங்கள் விருப்பத் தேர்வு அதிகாரங்களாகும். அவற்றை உரிய அரசு நன்முறையில் பயன்படுத்துதல் வேண்டும். அதிகாரங்களை அரசியலுக்காகப் பழிவாங்கும் பொருட்டுப் பயன்படுத்துதல் கூடாது. அது போன்றே தன் கட்சிக்காரருக்கு ஆதரவாகவும் பயன்படுத்துதல் கூடாது.

உரிய அரசு ஒரு குறிப்பிட்ட சாதி, இனம் அல்லது பிரிவைச் சேர்ந்த தண்டனையடைந்தவர்களுக்குத் தணடனையைக் குறைத்தாலோ தணித்தாலோ பாதிக்கப்பட்ட வேறு இனத்தினர் அல்லது சாதியினர் இந்திய அரசியலமைப்புச் சட்டத்தின் 15 ஆம் பிரிவின் கீழ் வழங்கப்பட்டுளள அடிப்படை உரிமையை நாடலாம். ஏனெனில் அவ்வாறு நாடுதல் உரிய அரசியல் அமைப்புச் சட்டத்தால் வழங்கப்பட்டுள்ள உரிமைகளுக்கு உட்பட்டதாகும். விருப்பத் தேர்வு அதிகாரத்தை ஒரு குறிப்பிட்ட பிரிவினருக்கு ஆதரவாகவும் மற்றையோருக்கு எதிராகவும் பயனபடுத்துதல் கூடாது.

தண்டிக்கப்பட்டவருக்கு ஆயுட் சிறைத் தண்டனை வழங்கப்பட்டிருக்குமாயின் அவர் அத் தண்டனையை, உரிய அரசு குறைத்தாலன்றித் தம்

ஆயுள் முழுவதும் சிறையிலிருந்து தண்டனையை அனுபவித்தல் வேண்டும். தண்டனையைத் தணிக்கும் பொருட்டுக் கொடுக்கப்பட்ட விண்ணப்பங்களைக் காலந்தாழ்த்தாமல் முடிவு செய்தல் நிருவாக ஆட்சித் துறையின் கடமையாகும். நிருவாக ஆட்சித் துறை தனக்குத் தானே விதிகளை வகுத்துக் கொண்டு கூடிய மட்டும் விணணப்பம் கொடுக்கப்பட்ட நாளிலிருந்து மூன்று மாதஙகளுக்குள் முடிவு செய்தல் வேணடும் என இந்திய உசச நீதிமனறம் ஒரு தீர்ப்பில் கூறியுள்ளது. (சேர் சிங்கு எ. பஞ்சாபு அரசு - 1983). காலந்தாழ்த்துவது நீதி நன்முறையில் வழங்குவதற்கு எதிரானது. விண்ணப்பதாரருககுத் துன்பத்தை தருவது; காலந்தாழ்த்துவதால நீதிமன்றத்தின்பால் மக்களுக்குள்ள நம்பிக்கை குறைந்து விடும்.

தண்டனையைத் தணிக்கும் பொருடடு முடிவு மேற்கொள்ளும்போது உரிய அரசு தண்டனை வழங்கிய நீதிமன்றத்தின கருத்தினைக் கேட்கலாம். எல்லா வழக்குகளிலும் நீதிமன்றததின் கருத்தினை உரிய அரசு நாட வேண்டியதிலலை. அவ்வாறு நீதிமனறம் அளிக்கும் கருத்துகள உரிய அரசினைக் கட்டுப்படுத்துவன அல்ல. நடைமுறையில் ஒரு சில சூழ்நிலைகளில் மட்டுமே உரிய அரசு நீதிமன்றத்தின கருத்தினை நாடுகிறது. மீ.அ.

**தண்டனைத் தீர்ப்பு**: குற்றம் சாட்டப்பட்டவர் குற்றம்புரிந்தவரென நீதிமன்றம் தீர்வு செய்து கூறுதல் தணடனைத் தீர்ப்பு எனப்படும். குற்றம் சாட்டப்பட்டவர் குற்றம் செய்தாரா இல்லையா என்பதை முடிவு செய்வது குற்றவியல் நீதிமன்றங்களின் தலையாய கடமை ஆகும். குற்றம் சாட்டப்பட்டவர்தாம் குற்றத்தைச் செய்தார் என ஐயத்திற்கிடமின்றிமெய்ப்பிததல் அரசு அல்லது குற்றம் சுமததுபவரின் கடமையாகும். இக்கடமையை நிறைவேற்றினால்தான் குற்றவியல் நீதிமன்றம் தண்டனைத் தீர்ப்பைவழங்கும். கடமையைக் குற்றம் சுமத்துபவர் நிறைவேற்றாதபோது அல்லது குற்றம் சாட்டப்பட்டவர் குற்றம்செய்திருப்பாரா என்பதில் ஐயம் ஏதாவது இருக்கும்போது அது குற்றம் சாட்டப்பட்டவருக்குப் பயன்படுத்தப்பட்டு குற்றவியல் நீதிமன்றத்தால் விடுதலைத் தீர்ப்பு வழஙகபபடும். குறறம் சாட்டப்பட்டவர் குற்றம் புரிநதாரென மெய்ப்பிக்கப்படும வரையில் அவர் மாசற்றவர் என்றே துணிபு கொளளப்படும்.

ஒருவர் குற்றம் செய்தார் என நீதிமன்றம் முடிவு செய்யும் போது அல்லது அவர்தாம் 'நான் குற்றஞ் செய்தேன்' என ஒப்புக்கொண்ட போது நீதிமனறம் தணடனைத் தீர்ப்பு வழங்கும்.

இளஞ்சிறார்கள் அல்லது சிறுவர்கள் குற்றம் செய்தார்களெனத் தீர்மானிக்கப்பட்ட வேளையில் தணடனைத் தீர்ப்பு வழங்கப்படுவதில்லை அவர்களைக் குற்றம் சாட்டப்பட்டவர்கள் (Accused)எனக் கூறுதல் கூடாது. தவறுசெய்தோர் (Deliquent)எனறே கூறுதல் வேணடும். அவர்களைச் சாதாரண நீதி மன்றங்களில் விசாரணை செய்தல் கூடாது. அவர்கள் ஏன் தவிர்க்கப்பட வேண்டிய செயல்களைச் செய்தார்கள் என்பதைச் சிறுவர் நீதிமன்றங்கள தாம் ஆராய்தல் வேண்டும் சிறுவர்களுக்குத் தண்டனை வழங்கப்படுவதில்லை. மாறாகப் பயிற்சியும் பராமரிப்புமே அவர்களுக்கு வழங்கப்படுகின்றன. குற்றம் சாட்டப்பட்டவாகளை விடுவித்தல் (Discharge) தண்டனைத் தீர்ப்பாகாது. அதுபோன்றே குறறம் சாட்டப்பட்டவர்களை நீதிமன்றக் காவலிலோ காவல்துறைக் காவலிலோ வைத்தல தண்டனைத் தீர்ப்பாகாது. நீதிமன்ற நடவடிக்கைகள் தணடனைத் தீர்ப்பு நிலைக்கு வநத நிலையில் தணடனைத் தீர்ப்பு வழங்காமல் நீதிமன்றம் குறறம் சாட்டப்பட்டவரின் வயது, குணம், அவர் குற்றம் செய்த சூழநிலைகள், அவருடைய மனநிலை மற்றும உடலநிலை முதலியவற்றைக் கருத்திற் கொணடு நனனடத்தைக் கணகாணிப்பில் அலலது மன்னிப்பளித்து விடுதலை செய்யலாம்.

ஒருவருக்குத் தண்டனைத் தீர்ப்பை எதிர்த்து மேன் முறையீடு செய்யும் உரிமை உண்டு. மாநகரக் குற்றவியல் நீதிமன்றம் அல்லதுஉதவிக் குற்ற விசாரணை அமர்வு நீதிமன்றம் அல்லது முதலவகுப்பு அல்லது இரண்டாம் வகுப்புக் குற்றவியல நீதிமன்றம் தணடனை அளித்தபோது அல்லது நன்னடத்தைக் கண்காணிப்பில ஒருவர் விடுவிக்கப்படும்போது அவர் சில நிபந்தனைகளுக்குட்பட்டு மாவட்டக் குற்ற விசாரணை அமர்வு நீதிமன்றததில் மேன் முறையீடு செய்யலாம்.

குற்ற விசாரணையின் போது மாவட்ட அமர்வு நீதிமன்றத்தால் அலலது கூடுதல் மாவட்ட அமர்வு நீதிமன்றத்தால் அல்லது வேறெந்த நீதிமன்றத்தால ஏழாணடிற்கு மேல்சிறைத் தண்டனை வழங்கப்பட்டிருக்குமாயின் அத்தண்டனைத் தீாப்பை எதிர்த்து உயர் நீதிமன்றத்தில் மேன் முறையீடு செய்யலாம்.

அசாதாரண முதலேற்பு அதிகார வரம்பைப பயன்படுத்திக் குற்றவிசாரணை செய்து ஒருவருககு உயர்நீதிமன்றம் தணடனைத் தீர்ப்பு வழங்குமாயின், இந்திய உச்ச நீதிமன்றத்திற்கு மேன்முறையீடு செய்யலாம்.

மாவட்ட அமர்வு நீதிமன்றம் விடுதலைத் தீர்ப்பு வழங்கிய வழக்குகளை மேல்முறையீட்டால்

உயர்நீதிமன்றம்விசாரணை செய்து, குற்றம சாட்டப் பட்டவருக்கு மரண தணடனை அலலது ஆயுட்காலச் சிறைத் தணடனை அல்லது பத்து ஆணடு அல்லது அதற்கு மேலான காலச் சிறைத் தணடனை வழங்கு மாயின், அத்தண்டனைத் தீர்ப்பை எதிர்த்து இந்திய உசச நீதிமனறத்திற்கு மேன்முறையீடு செயயலாம்.

கீழ் நீதிமனறஙகளில் விசாரணைககுட்பட்ட வழக் குகளை உயர்நீதிமனறம் தன் அதிகார வரம்பிறகுள் எடுத்துக் கொணடு, அககுறற விசாரணையில் குறறம் சாட்டப்பட்டவருககு மரண தணடனையை உயாநீதி மன்றம் வழஙகினால, அத்தீர்ப்புத் தணடனையை எதிர்த்து மேன்முறையீடு செய்யலாம்.

ஒருவர் ஒரு குற்றம் செய்தார் எனக் குறறம் சாட்டப்பட்டுககுற்ற விசாரணை செய்த வேளையில், குற்றப் பொருணமைகள மெய்ப்பிககப்பட்ட பினனர், சாட்டப்பட்ட குற்றத்தினின்று சிறிய குறறமே செய் தார் என மெய்பபிககப்படுகினற வேளையில் அச சிறிய குற்றததிற்காகக் குற்றம் சாட்டப்படவிலலை யாயினும் தண்டனைத் தீாபபு வழங்கிடலாம்.

சில வழக்குகளை மாவட்ட அமர்வு நீதிமன்றம மட்டுமே வழக்கு விசாரணை செய்யலாம். அபபோது குற்றச்சாட்த்து புனையப்பட்டிருப்பின குறறம் சாட் டப்பட்டவாமேல சுமத்தும் குற்றங்களை விளக்கிச் சொல்லுதல் வேணடும். குற்றம் சாட்டப்பட்டவா குற்றசசாட்டு ஏற்புரை கூறலாம் நீதிபதி அதனைப் பதிவு செய்து தம விருப்பத் தேர்வு அதிகாரத்தைப் பயன்படுத்தித் தண்டனைத் தீர்ப்பை வழஙகலாம். நீதிபதி தணடனை குறித்துக் குற்றவாளியிடம் கேளவிகள் கேட்ட பின்னாச் சரியான தணடனை வ்ழங்கிட வேணடும்.

அவ்வாறே குற்றவியல நீதிபதிகள பெருஙகுறற வழககுகளை விசாரணை செய்யுஙகால குறறம் சாட்டப்பபடடவா குற்றச்சாட்டு ஏற்புரை கூறலாம. அப்போதும் குறறவியல நீதிபதி அதனைப் பதிவு செய்து தம் விருப்பத் தேர்வு அதிகாரததைப் பயன படுத்தித் தணடனைத் தீாப்பு வழங்கலாம்.

மேற்குறிப்பிட்டவாறே அழைப்பாணை வழககு களிலும் குற்றம் சாட்டப்பட்டவர் குற்றசசாட்டு ஏற புரை கூறியபின் குறறவியல் நீதிபதி குற்றம சாட்டப் பட்டவரின் சொற்களை அவ்வாறே பதிவு செய்து தம் விருப்பத் தேர்வைப் பயன்படுத்தித் தணடனைத் தீர்ப்பு வழங்கலாம்.

சிறு வழக்குகளில் அழைப்பாணை அனுப்பிய பின் குற்றம் சாட்டப்பட்டவர் குற்ற ஏற்புரை கூற விரும பினால் அவர் நீதிபதிக்கு அவ்வாறு குற்ற ஏற்புரை கூற விரும்புவதாக ஒரு கடிதத்தில் எழுதி, தண்டத் தொகையையும் அக்கடிதத்தையும் அஞ்சல் மூல மாகவோ அல்லது வேறு ஒருவர் மூலமாகவோ அனுப் பலாம். நீதிபதி தம் விருப்பத் தேர்வைப் பயன் படுததிக் குற்றம் சாட்டப்பட்டவருககு எதிராகத் தணடனைத் தீர்ப்பை வழங்கலாம். வழககுரைகக வழக்கறிஞரைக் குற்றம் சாட்டபபட்டவர் அமர்த்த லாம். அப்போது வழக்கறிஞர் குறறம் சாட்டப்பட்ட வருககு மாறாகக குற்ற ஏறபுரை கூறினால் நீதிபதி அதனைப் பதிவு செயது குற்றம் சாட்டப்பட்டவருக் குத் தணடனைத் தீர்ப்பு வழஙகலாம்.

மேலும், ஒருவர் ஒரு குற்றம் செய்திருந்து அதற காகத் தகுதியான நீதிமனறத்தால தணடிககப்பட்டி ருப்பின் அக்குற்றத்திறகாக அத்தணடனைத தீாப்பு நடப்பிலிருககையில, மறுபடியும் அவரைக குற்றவிசா ரணை செய்தலோ தணடிததலோ கூடாது

சொத்துக்கெதிரான குறறங்கள மறறும அரசு வரிவிலலைகள மற்றும் நாணயங்களுக்கு எதிரான குற்றங்கள் முதல தடவை செய்து அதற்காக எவருக கேனும் தணடனைத தீர்ப்பு வழஙகபபட்ட பினனா அவைபோனற குறறங்களை மறுபடியும் செய்தால, அககுற்றவாளிக்கு விதிககப்படும் தணடனையின அள வைக் குற்றவியல நீதிபதி உயர்த்தலாம். மீ.அ

**தண்டி:** காவியாதர்சம் எனனும் வடமொழி அணி இலககண நூல இயற்றிய ஆசிரியா பெயர் தண்டி என்பதாகும். இப்பெயருடையார் பலர் இருந் தனர் என்பது வரலாறறால் விளங்குகிறது.

போசன் என்னும் அரசா் தம் அவைககளப் புல வருள் ஒருவர் தணடி என்றும், அவரே காவியாதர்சம எனனும நூலை இயற்றியவர் எனறும் கூறுவர். அந் நூலைத் தமிழாக்கிய தணடியாசிரியர் சோழன அவைப்புலவராக இருந்தவர் என்பதும், நாடக ஆசி ரியர் எனபதும், வட மொழியுணர்நத தமிழ்நூற் புலவர் என்பதும், அம்பிகாபதியின் மைந்தர் எனப தும், சோழன் அவையில இந்நூல் அரங்கேறறமாகியது எனபதும் அதன் சிறப்புப பாயிரச் செய்யுளால புலப் படுகின்றன.

தண்டியாசிரியர் சோழனைப் பறறிப் பல பாடல களை பாடியுளளார். அவறறுள அனபாயன எனனும் சோழனை ஆறு இடங்களில குறிக்கிறார். அவவன பாயன் என்பான இரணடாம் குலோததுஙகன ஆகலின், அவன் காலமாகிய, கி.பி. 12-ஆம் நூற் றாணடே இவர் காலமுமாம்.

சிந்தையுள நிறைந்து இனபம் பயப்பவற்றுள் ஒன்று 'மலரிவரும் கூத்தன்தன் வாக்கு' எனறு (43)

இவர் கூறுவதால் ஒட்டக்கூத்தர்மேல் இவர் கொண்டிருந்த அன்பு புலப்படும் இரா.இ.

*தண்டியடிகள் நாயனார்.* இவர் பெரிய புராணம் போற்றிச் சிறப்பிக்கும் அறுபத்து மூன்று சைவ நாயன்மார்களுள் ஒருவர். திருவாரூரில் தோன்றிய இச்சிவனடியார் ஒரு பிறவிக் குருடராவார். நமசிவாய என்னும் திருவைந்தெழுத்தினை ஓதித் திருவாரூர்ப் பெருமான் திருக்கோயிலையும அங்குள்ள தேவாசிரிய மணடபத்தையும் வலம் வந்து தொழும் தொணடினைத் தம் நாட்கடமையாகக் கொண்டொழுகினார். சிவன் கோவிலின் மேற்குப் பக்கத்தில் இருந்த தீர்த்தக் குளக்கரையில அமணர்கள் பாழிகள் அமைத்துக் கொண்டமையால் குளப் பரப்பு சுருங்கியதனை அறிந்த தண்டி அக்குளத்தை ஆழப்படுத்த விருமபி அம்முயற்சியில் ஈடுபட்டார். இவர் குருடராதலின் குழி தோண்டுமிடமும் மணணைக் கொண்டு செனறு கொட்டுமிடமும் அறிவதற்காக இடையே கம்புகளை நட்டு அவற்றைக் கயிற்றால் பிணித்தார். தோண்டிய மண்ணைச சுமநது கயிற்றின் துணையொடு வழிநடந்து கொண்டு சென்று கொட்டும் பணியைத் தொடர்ந்து செய்து வந்தார். அதனை அறிந்த அமணர் அத்தொணடினைச் செய்யவொட்டாது தடுத்தனர். அமணர்களுககும் தண்டிக்கும் வாக்கு வாதம் முற்றித் தணடியிடம உங்கள தெய்வ அருளால் நீ கண்பார்வை பெறறால், நாங்கள் இநத ஊரை விட்டே அகல்கிறோம் என்று கூறி, அவர் அமைத்திருந்த கம்புகளையும் கயிறுகளையும் அகற்றிவிட்டனர். அதனால், வருந்திய தணடி, திருக்கோயில் முன்பு சென்று 'அமணர்கள் எமக்கு அவமானஞ் செய்தமையால் நைகின்றேன். அவமானம் தீர்த்தருள வேணடும்' என்று வேணடினார். இறைவன், உறங்கிய தண்டியின் கனவில் தோன்றி, 'அன்பனே அஞ்சற்க அமணர்கள் கண்விழித்தபோது பார்வை இழநததனை உணர்வார்கள்' என்று கூறியதோடு, அரசன் கனவிலும் தோன்றி, அமணர் தண்டிக்குச் செய்ததனை உரைத்து, அவர் தொணடினை முற்றுவிக்க அறிவித்தார்.

விழித்த அரசன் அடியவரை நாடிவந்து செய்திகளைத் கூறத் தண்டியும் தாம் அமணரோடு நிகழ்த்திய உரையாடலையும் நிகழ்ச்சியையும் கூறினார். அரசன் அமணர்களை அழைத்து வினவ, அவர்களும் தாம் கூறியதனை ஏற்றுக்கொணடனர். இறையருளால் தாம் கண் பெறுவதையும், கொடுமை புரிந்த அமணர்கள் பார்வை இழத்தலையும் நினைத்துத் தண்டி, திருவைந்தெழுத்தோதிக் குளத்தில் முகிழுனார். முழுகி எழுந்த தண்டி பார்வை பெற்று மகிழவும் அமணர்கள் பார்வை இழந்து வருந்தவும் கணட மன்னன் 'பழுது செய்த அமண்கெட்டது' என்று கூறினான் தாம் ஒட்டிக் கூறியதற்கேற்ப அமணர்கள் திருவாரூரை விட்டுச் செனறனர். அமணர்கள் அல்லற்பட்டு அகன்றபின், குளஞ் சுருங்க அமைக்கப்பட்டிருந்த பாழிகளையும் பள்ளிகளையும் நீக்கிக் குளத்திற்குக் கரையமைத்து அதனை ஆழப்படுத்தினர். தண்டி அடிகள் திருக்குளப் பணியை நிறைவுசெய்து, இறைவனைத் திருவைந்தெழுத்தால் நாளும் போற்றும் தொணடினைத் தொடர்ந்து செய்து, இறுதியில இறைவன அடியடைந்தார்.

தண்டியடிகள் பிறவிக் குருடாயிருந்தும் திருவருளால் உள்ளொளி மிகப் பெற்று, ஞானக் கண் உடையராய் விளஙகினார் என்னும் கருத்தில் சுந்தரா இவரைக் குறிப்பிடும் போது, 'நாட்டம் மிகுதண்டி' என்று கூறியுள்ளார் (திருத்தொண்டத். 5). நம்பியாண்டார் நம்பி இவர் சிறப்பினைத் தம் திருத்தொண்டர் திரு அந்தாதியில் 'கண்ணார் மணி ஒன்றும் இன்றி' என்னும் பாடலில் சிறப்பித்துள்ளாா (திருத்தொணடர் திருவந்தாதி. 87). அ மா.ப.

*தண்டியலங்காரம்:* எழுத்து சொல் பொருள் யாப்பு அணி என்னும் தமிழ் இலக்கணம் ஐந்தனுள் ஐந்தாவதாகிய அணி இலக்கணம் பற்றிக் கூறும் நூல் தண்டியலங்காரமாகும். தண்டி என்பவரால் செய்யப்பட்டமையாலும், அணியிலக்கணம் பற்றியது ஆகலானும் இப்பெயர் பெற்றது.

தண்டி என்னும் ஆசிரியர் வடமொழியில் இயறறிய காவியா தர்சம் என்னும் நூலைத் தமிழில பெயர்த்துத தண்டியலஙகாரம் எனப் பெயா சூட்டிய தமிழ்நூல ஆசிரியர் பெயரும் தண்டி என்பதேயாம். ஆதலால், முதல்நூல் வழிநூல் ஆசிரியர்களின் பெயர் பொருந்த அமைந்த நூலாக இந்நூல் விளஙகுகினறது. இதிலுள்ள நூற்பாக்கள் 123 ஆகும்.

தண்டியலஙகாரம் பொதுவணியியல், பொருளணியியல், சொல்லணியியல் என்னும் மூன்று பகுதிகளையுடையது. பொதுவணி இயலில் செய்யுள வகைகள், அவற்றின் இலக்கணம், வைதருப்பம், கௌடம் என்னும் இருவகை நெறிகளின் இயல்பு ஆகியவை கூறப்பட்டுள.

சொல்லணி இயலில 35 அணிகள் கூறப்பட்டுள. பொருளணி இயலில் மடக்கு வகைகள், சித்திர கவி வகைகள், வழுக்கள், வழுவமைதிகள், மலைவுகள் என்பவை விரிக்கப்பட்டுள.

தண்டியாசிரியர் தாம் கூறும் இலக்கணத்திற்குத் தக்க எடுத்துக்காட்டுகளை முன்னோர் நூல்களில்

இருந்து காட்டுகிறார் வடமொழித் தணடிநூல் எடுத்துக்காட்டையும் தமிழில் தருகிறார். தாமாகப் புதிது படைத்துங் காட்டுகிறார். பொதுவணி யியல் பொருளணியியல் இரண்டன் தொடக்கத் திலும் கலைமகள் வணக்கம் பாடியுள்ளார். பொருள் வேற்றுமைக்குச் செஙகதிரையும் செந்தமிழையும் இணைத்துகாட்டும் 'ஓஙகலிடைவந்து' என்னும் பாட்டு இவர்தம் தமிழ்ப் பற்றைப் புலப்படுத்தும்.

தணடியலங்காரத்திற்குப் பழையவுரை ஒனறுணடு. அதனை இயற்றியவர் சுப்பிரமணிய தேசிகா. அதனை முதற்கண் கி பி. 1857-இல் தில்லையம்பூர் சநதிர சேகர பண்டிதர் பதிப்பித்தார். சுன்னாகம் அ குமார சுவாமிப்புலவர் இயற்றிய புத்துரை 1903-இல் வெளி வந்தது. இரா.இ.

**தணிக்கை:** 'தணிக்கை' (Audit) எனற சொல லிற்குக் 'கேட்டல்' என்பது பொருளாகும. பழங காலத்தில் கணக்குகளைச் சரி பார்க்க நியமிக்கப்பட்ட ஒருவர் அவற்றை எழுதியவர்களை அழைத்துத் தேவையான விளக்கங்களை கேட்டுக்கொள்வார். இவ்வாறு கணக்குப் பற்றிய விளக்கஙகளை கேட்டுக கொண்டவரே "தணிக்கையர்' (Auditor) எனக் கூறப் பட்டார். இவர் செய்யும் தணிக்கை, தணிககையியல் எனப்படும். தணிக்கை, புலனாய்வி (Investigation) லிருந்தும் அகச்சீராய்வு (Internal Check),அகக்கட்டுப் பாடு ஆகியவற்றி (Internal Control) லிருந்தும வேறு பட்டதாகும்.

சுபைசரும் பெக்லரும் (Spicer&Pagler) என்ப வர்கள் தணிக்கையியலுக்கு இலக்கணம் தந்துள்ளனர் 'தமக்குத் தரப்பட்ட விளக்கஙகளின்படியும் கிடைத்த செய்திகளின்படியும், ஏடுகள் காட்டியபடியும் இருப்பு நிலைக் குறிப்பு தொழிலின் உணமையான மற்றும் நேர்மையான நிலையை அறிவிக்கும் வகையில் முறை யாகத் தயாரிக்கப்பட்டுளளதா என்றும், இலாப நட்டக் கணக்கு குறிப்பிட்ட நிதிக்காலத்தில் ஏற் பட்ட இலாபம் அல்லது நட்டத்தை உண்மையாக வும், நேர்மையாகவும் அறிவிக்கின்றதா என்றும் தணிக்கையாளர்கள முழுமையாக அறியத் தொழி லின் ஏடுகள், கணக்குகள், ஆதாரச் சீட்டுகள முதலிய வற்றைப் பரிசீலனை செய்வதே தணிக்கையியலாகும்.

தணிக்கையின் முதன்மை நோக்கம் குறிப்பிட்ட நிறுவனத்தின் கணக்குகளை உணமையாகவும் நியாய மானதாகவும் இருக்கின்றனவா என்பதைக் கண்டறிந்து அதன் நிதி நிலை அறிக்கை முறையாக எழுதப்பட்டு உண்மையான கூற்றாக இருக்கின்றதா என்பதை ஒத்திட்டுப் பார்ப்பதாகும். பிழைகளைக் கண்டுபிடித் தலும் மோசடிகளைக் கண்டுபிடித்தலும் தடுத்தலும் தணிக்கையின் துணை நோக்கங்களாகும்.

நிறுவன அமைப்பு முறையின் அடிப்படையில் தணிக்கையைச் சட்டமுறைத் தணிக்கை (Statutory Audit) அல்லது கட்டாயத் தணிக்கை (Compulsory Audit) என்றும், தனி நிறுவனத் தணிக்கை (Private Audit) அலலது விருப்பத் தணிககை (Voluntary Audit) என்றும், அகத் தணிக்கை என்றும் (Internal Audit) வேறுபடுத்தலாம். காலத்தை அடிப்படை யாகக் கொண்டு தொடா தணிககை (Continuous Audit) என்றும, ஆண்டுத் தணிக்கை அல்லது இறுதித் தணிக்கை என்றும் இடைக்காலத் தணிககை (Interim Audit) என்றும்வகைப்படுத்தலாம். மேலும, அடக்கச் செலவுத் தணிக்கை (Cost Audit) என்றும், மேலாணமைத தணிக்கை (Management Audit)என் றும், சிறப்புத் தணிக்கை (Special Audit) எனறும் பிரிக்கலாம்.

**அடககச் செலவுத்தணிக்கை:** நிறுவனத்தின் அடக்கச் செலவு ஆவணஙகளைப் பரிசீலனை செய்வது இலாபமஇருக்கின்றதா என்பதையும் அடக்கச செல வுத்திட்டம் செயற்படுத்தப்பட்டுள்ளதா என்பதனை யும் பரிசீலனை செய்வது இத்தணிக்கை முறையில அடங்குகின்றது இநதிய நிறுவனச் சட்டப்படி, மத்திய அரசு உற்பத்தி செய்தல, பதப்படுத்துதல், சுரங்கத் தொழில் போன்ற 29 வகைப்பட்ட பலவேறு தொழில்களுககு அடக்கச் செலவுத்தணிக்கை மேற் கொள்ளுமாறு உத்தரவு இடப்பட்டுள்ளது. இந்நிறு வனங்கள் அடக்கவிலைக் கணக்குகளை ஒழுஙகாகப் பராமரித்து வருகினறனவா என்று கணடறிநது அக் கணக்குகளைச்சரிபார்ப்பதே இத்தணிககையின் சிறப்பு அமிசமாகும். இததணிக்கையில அடக்கவிலைத தணிககையாளர் தணிக்கையின முழுப்பொறுப்பை ஏற்கின்றனா.

**மேலாண்மைத் தணிக்கை.** மேலாண்மைத் தணிக கையில் நிறுவனத்தின் மேலாண்மை தொடர்பான எல்லாக் கூறுகளும் பரிசோதிக்கப்படுகின்றன. தணிக்கையாளர் மேலாணமைத் தொடர்பான திட் டம் அமைப்பு ஒருங்கிணைப்பு மற்றும் கட்டுப்பாடு போன்றவற்றைப் பரிசீலனை செய்து தணிக்கை செய் கின்றார். மேலாண்மைத் தணிக்கை கட்டாயமான தன்று.

**தணிக்கையாளர் நியமனம்:** ஒவ்வொரு நிறுமமும் தனது ஒவ்வோர் ஆண்டுப் பொதுக் கூட்டத்திலும் தணிக்கையாளரை அல்லது தணிக்கையாளர்களைப் பணியமர்த்த வேண்டுமென்று சட்டத்தில் கூறப்பட்

டுள்ளதால் பொதுவாசத் தணிக்கையாளர்கள் ஒவ்வோர் ஆண்டுப் பொதுக் கூட்டத்திலும் பங்குதாரர்களால் நியமிக்கப்படுவார்கள். பதவியிலிருந்து ஒய்வு பெறும் தணிக்கையாளராயிருந்தாலொழிய அவ்வாறு நியமனம் செய்யப்பட்ட ஒவ்வொரு தணிக்கையாளருக்கும் நியமனம் செய்யப்பட்ட தேதியிலிருநது ஏழு நாள்களுக்குள் அவரவர்களின் நியமனம் பற்றித் தெரிவிக்கவேணடும். நியமனம் பற்றிய செய்தி கிடைத்த 30 நாளுக்குள் தமது நியமனத்தின் ஏற்பை அல்லது மறுப்பைப் பதிவாளருக்குத் தணிககையாளர் அறிவிக்கவேணடும். மேலும், இயகுநர்கள் அவை தமது அதிகாரத்தைப் பயன்படுத்தி நிறுமத்தின் முதல தணிக்கையாளரை நியமிக்கத்தவறினால் பங்குதாரர்களே ஆண்டுப் பொதுக்கூட்டத்தில் அத் தணிக்கையாளரை நியமிக்கலாம். தணிக்கையாளரின் பதவி விலகலினால் ஏற்படும் காலியிடத்தையும் ஆண்டுப் பொதுக்கூட்டத்தில் பஙகுதாரர்களே நியமிக்கலாம். பதவிக்காலம் முடிவுறும் தணிக்கையாளர் மறு நியமனத்திற்குத் தகுதியற்றவராக இருந்தால், அல்லது மீண்டும் தணிக்கையாளராக இருக்கத் தமககு விருப்பமில்லையென்று எழுத்து மூலமாகத் தெரிவித்திருந்தால் அல்லது நிறுமம் வேறொருவரை நியமிககத் தீர்மானித்திருந்தால் அல்லது வேறொருவரை நியமிக்கத் தீர்மானம் இயற்ற வேணடுமென்று நிறுமத்திற்கு அறிவிப்புச் செய்யப்பட்டிருந்தாலொழிய அவரையே மறுநியமனம் செய்யவேணடும்.

ஓர் ஆண்டுப் பொதுக்கூட்டத்தில் தணிக்கையாளர்கள் எவரேனும் நியமனமோ மறுநியமனமோ செய்யப்படாவிடில், அத்தேதியிலிருந்து ஏழு நாள்களுக்குள் மத்திய அரசினர்க்கு அது பற்றித் தெரிவித்தல் வேண்டும். அதன்பேரில் மத்திய அரசே தனது அதிகாரத்தைப் பயன்படுதது அந்த நிறுமதுக்குத் தணிககையாளரை நியமிக்கலாம். மத்திய அரசினர்க்குத் தெரிவிக்கத் தவறினால் நிறுமமும் மற்றும் அத் தவறுதலுக்கு உடந்தையாயிருந்த நிறுமத்தின் ஒவ்வோர் அதிகாரியும் ரூ 500 வரை அபராதம் செலுத்தவேணடும்.

**தணிக்கையாளரின் தனித் தகுதிகள்:** சாசனக் கணக்கர்களின் சட்டம் (Chartered Accountants Act) 1949-இனபடி சாசனக் கணக்கராகத் தகுதிபெற்ற தனி நபரையே நிறுமத்தின் தணிககையாளராக நியமிக்க முடியும். இசசட்டத்தின் பிரிவு 22இலும் நிறுமச சட்டத்தின் (Companies Act) பிரிவு 225(3) இலும தணிக்கையாளரின் சில தகுதியினமைகள பினவருமாறு கொடுக்கப்பட்டுள்ளன:

1. பின்வருபவர்கள் ஒரு நிறுமததின் தணிக்கையாளராக இருக்கத் தகுதியற்றவர்களாவார்கள்:

அ) ஒரு கூட்டமைப்பு; ஆ) நிறுமத்தின் ஓர் ஊழியர் அல்லது அதிகாரி; இ) நிறுமத்தின் ஊழியரிடத்தில் அல்லது அதிகாரியிடததில் வேலை பார்க்கும் ஊழியர் அல்லது அவர்களின கூட்டாளி; ஈ) நிறுமத்திற்கு ரூ. 1000/-க்கு மேற்பட்ட தொகைக்குக் கடனபட்டவர் அல்லது அத்தகைய கடனுக்கு உத்தரவாதம் அளித்தவர்; உ) நிறுமத்திற்கு நிருவாக முகவராக அல்லது செயலர் கருவூலராக இருக்கும் நிலையத்தின் கூட்டாளி, அல்லது இயக்குநர்; ஊ) நிறுமத்தின் நிருவாக முகவராக அல்லது செயலர்- கருவூலராக இருக்கும் நிறுமத்தின ஒப்பிய முதலில் 5%க்கு மேற்பட்ட பங்குகளுக்கு உடையவரான இயக்குநர் அல்லது உறுப்பினர்.

ஒரு கூட்ட நிறுவனத்திலுள்ள பங்காளிகள் அனைவரும் சாசனக் கணக்கர்களாகத் தகுதி பெற்றிருந்தால் அந் நிறுவனத்தையே நிறுமத்தின் தணிக்கையாளராக நியமிக்கலாம்; அதன கூட்டாளி ஒருவரே அந் நிறுவனத்தின் பெயரில் நிறுமத்தின் தணிக்கையாளராகப் பணிபுரியலாம். அந்நிறுமத்தின தணிக்கையாளர் அறிக்கையில் அவரே கையெழுத்திடலாம்.

2. பிடிப்பு நிறுமம் அல்லது துணைநிறுமம் தணிக்கையாளராக இருக்க மேலே கூறப்பட்டுளளவாறு தகுதியை இழந்துவிட்ட எவரையும் இந்நிறுமத்தின் தணிக்கையாளராக நியமிககக் கூடாது. சக துணை நிறுமத்தின் தணிக்கையாளா ஒருவர் நியமனத்திற்கான தகுதியிழப்பைப் பெற்றிருந்தாலும் இந்தக் கட்டுப்பாடு செல்லும். தமதுநியமனத்திற்குப்பின்னர்த் தணிக்கையாளரொருவர் மேற்கூறிய தகுதியின்மைகளில் ஏதாவதொன்றுக்கு ஆளாக நேர்ந்தால் பதவி முற்றுப்பெறும்.

**தணிக்கையாளரின் உரிமையும் கடமையும்:** ஒவ்வொரு நிறுமத்தின் தணிக்கையாளர்க்கும் பின்வரும் உரிமைகளுண்டு:

1) வேலை நேரங்களில் நிறுமத்தில் எல்லாக் கணக்குகள, ஏடுகள் மற்றும் ஆதாரச் சீட்டுகள் ஆகியவற்றையும் பார்வையிடுதல், 2) தம் தொழிற் கடமைகளை நிறைவேற்றவேண்டிய தேவையான விவரங்களையும் விளக்கங்களையும் நிறுமத்தின் இயக்குநர்களிடமிருந்தும் அதிகாரிகளிடமிருந்தும் பெறுதல்; 3) எந்தப் பொதுக்கூட்டத்திற்கான அறிவிப்பைப் பெறவும், கூட்டத்தில் கலந்துகொள்ளவும் மற்றும் நிறுமத்தின் தணிக்கையாளர் என்ற முறையில் தமக்குத்தொடர்புள்ள அலுவல்களைப் பற்றிக்கூட்டத்தில் பேசுதல்; 4) தம்மை விலக்கும் பொருட்டு அல்லது தம் இடத்தில் மற்றவரை நியமிக்கும்

பொருட்டுப் பொதுக்கூட்டத்தில் நிறைவேற்றப்பட விருக்கும் தீர்மானத்திற்கான அறிவிப்புக் கிடைத்ததும் பொதுக்கூட்டத்தில் கலந்துகொண்டு தம் கூற்றை எடுத்துரைத்தல்; 5) செய்த வேலைக்காக ஊதியம் பெறுதல்; 6) தமக்குப் பற்றுரிமையில்லையாயினும் சேரவேண்டிய ஊதியத்திற்காகத் தணிக்கை சம்பந்த மாகத் தம்மிடமுள்ள நிறுமத்தின் ஏடுகளையும் சொத்துகளையும் தயாரித்த கணக்குத் தாள்களையும் பிணையமாக வைத்துக்கொள்ளுதல்.

**சட்டபூர்வமான கடமைகள்** அ) நிறுமச்சட்டத்தில் கூறப்பட்டுள்ளபடி ஒவ்வொரு தணிக்கையாளரும் தம் பதவிக் காலத்தில் தாம் ஆய்வு செய்த நிறுமத்தின் கணக்குகள், பொதுக்கூட்டத்தின் முன்னர் வைக்கவுள்ள இருப்பு நிலைக் குறிப்பு, இலாப நட்டக் கணக்கு அதனுடன் சேர்க்கப்பட வேண்டிய பத்திரங்கள் ஆகியவற்றைப் பற்றி நிறுமத்தின் உறுப்பினர்களுக்கு அறிக்கை தயாரித்து வெளியிட வேண்டியது கடமையாகும். தமது கருத்துப்படி அல்லது தமக்குத் தெரிந்தவரையில் அல்லது தம்மிடத்தில் கொடுத்த விவரங்கள் மற்றும் விளக்கங்களின்படி, தக்க கணக்கேடுகள் வைக்கப்பட்டிருந்தனவா எனபதும், மேற்சொன்ன கணக்குகள் சட்டத்தில் கூறப்பட்டுள்ளவாறு தேவையான விவரங்களைக் கொடுக்கின்றனவா என்பதும், நிறுமச் செயல்களின் உண்மையான நிதிநிலைமையை வெளிப்படுத்துகின்றனவா என்பதும் பற்றித் தணிக்கையாளர் தமது அறிக்கையில் கூறவேண்டும். ஆ) மேலும், தணிக்கை செய்வதற்குத் தேவையான விவரங்களும் விளக்கங்களும் தமது அறிவிற்குக் கிட்டிய வரையில் தமக்குக் கிடைக்கப் பெற்றனவா என்றும், தாம் சென்று பார்க்காத கிளைகளிலிருந்து சரியான கணக்கேடுகள் வைக்கப்பட்டுத் தணிக்கைக்காக விவரத் தாக்கல்கள் பெற்றுக்கொள்ளப்பட்டனவா என்றும், பிரிவு 288(3) (சி)-இன் படி நிறுமத்தின் தணிக்கையாளரல்லாத பிற தணிக்கையாளரால் தணிக்கை செய்யப்பட்ட கிளை அலுவலகத்தின் கணக்குகள் பற்றி அறிக்கைகள் தமக்கு அனுப்பிவைக்கப்பட்டனவா என்றும், இருப்பு நிலைக் குறிப்பும் மற்றும் இலாப நட்டக் கணக்கும் கணக்கேடுகளுடன் ஒத்திருக்கின்றனவா என்றும், நிறுமத்தின் தணிக்கையாளர் தமது அறிக்கையில் குறிப்பிடவேண்டும். இருப்பு நிலைக் குறிப்பு, இலாப நட்டக் கணக்கு ஆகியவை களைப்பற்றிய தம் அறிக்கையை உறுப்பினருக்கு அளிக்கும் கூட்டத்திற்குச் சொல்லவேண்டும். இ) பங்கொதுக்கல் தொடர்பாகப் பெற்றுக்கொண்ட பணத்தைப் பற்றியும் மூலதனக் கணக்கில் வரவு செலவு பற்றியும் சட்ட முறைக் கூட்ட அறிக்கையில் தணிக்கையாளர் உறுதி கூற வேண்டும். ஈ) பிரிவு 56-இல் கூறப்பட்டுள்ள காரணத்திற்காக நிறுமத்தின் சொத்து-பொறுப்புகள் மற்றும் இலாப நட்டங்களின் விரைத்தாள்களினைப் பற்றி உறுதி கூறவேண்டும். உ) தயாரிப்பு நிறுமம், உற்பத்திநிறுமம், சுரங்கத் தொழில்நிறுமம் ஆகியவற்றின் கணக்குகளைத் தணிக்கை செய்து சரியான கலையைக் கண்டறியவும் மையஅரசுத் தணிக்கையாளர்களை நியமிக்கலாம்; நிறுமத்தின் விவகாரங்களைப் பற்றி ஆய்வு செய்ய மைய அரசினால் நியமிக்கப்பட்ட ஆயவாளருக்கு நிறுமத்தின் தணிக்கையாளர் உதவிபுரியலாம். ஊ) நிறும நிருவாகத்தின் பேரில் மற்றும் இயக்குநர்களின்பேரில் தொடரப்பட்டிருக்கும் வழக்கு சம்பந்தமாக மைய அரசுக்கு அனைத்து உதவிபுரிவதும் தணிக்கையாளரின் கடமையாகும். எ) நிறுமத்தின் ஏடுகள் ஏதேனும் தம்மிடமிருந்தால அந் நிறுமத்தைக் கலைக்கும் பொழுது அவற்றைக் கலைப்பாளரிடம் கொடுத்துவிடவேண்டும். ஏ) நிறுமத்தின் சொத்துகளைப் பார்வையிட்டுப், பாதுகாப்பாக வைத்திருக்கப்படுகின்றனவா என்றும் சரிபார்க்க வேண்டும்.

**தணிக்கையாளரின் பொறுப்புகள்:** இயக்குநர்கள் கொடுத்த கணக்குகளைத் தணிக்கை செய்து அதனைப் பற்றிப் பங்குதாரர்களுக்குத் தெரியப்படுத்துவதே தணிக்கையாளரின் இன்றியமையாப் பொறுப்பாவதால் தணிக்கையாளரைப் பங்குதாரர்களின் பதிலாள் எனலாம். நிறுமத்தின் அதிகாரியைத் தணிக்கையாளராக நியமிக்கக்கூடாதென நிறுமச் சட்டத்தில் கூறப்பட்டிருந்தாலும், நிறுமத்தின கலைப்பு நடவடிக்கைகளுக்காகத் தணிக்கையாளரை நிறுமத்தின் அதிகாரியெனக் கருத வேண்டும். அதாவது தணிக்கையாளரின் சட்டத்தை மீறிய செயல் அல்லது கடமையிலிருந்து தவறிய குற்றத்திற்காக நிறுமம் அவரிடமிருந்து இழப்பீடு வசூலிக்க வழக்குத் தொடரலாம். அறிக்கையைச் சட்டத்தில் குறிப்பிட்டபடி தயாரிக்கத் தவறினால் அபராதத் தண்டனைக்காளாவார். நீதிபதி உலோப்சு பிரபு (Lopes L.J) 'தி கிங்சுடன நூற்பாலை' (The Kingstan Cotton Mills Co., (1896)2. Ch. 288) வழக்கில் 'தணிக்கையாளர் வேட்டை நாயல்லர்; காவல் நாயே' என்று கூறியிருந்தபோதிலும் அவர் ஐயத்திற்குரிய சூழ்நிலைகளைத் துருவி ஆராய்ந்து தம் முடிவை இயக்குநரவையோருக்குத் தெரிவிக்க வேண்டியவர் என்பது எதிர்பார்க்கப்படுகிறது.

நீதிபதி இலிண்டுலே பிரபு (Lindley L.J.) கூறியுள்ளபடி நிறுமத்தின் வணிகம் அறிவுக்குப் பொருத்தமான அல்லது இலாபகரமான முறையில் நடத்தப்படுகின்றதா இல்லையா என்றும், இலாப ஈவுகள் முறைமையான வழியில் அறிவிக்கப்பட்டனவா

இல்லையா என்றும் தணிக்கையாளர் ஆராய வேண்டியதில்லை.

பங்குதாரர்களும் இயக்குநர்களும் அது பற்றி என்ன என்ன செய்யவேண்டுமென்று அவர்களுக்கு அறிவுரை கூறவேண்டியது தணிக்கையாளரின் கடமையும் அன்று (London and General Bank (1895)2. Ch. 673). பி.ச.

***தணிகைப் புராணம்:*** திருத்தணிகை மலையில் கோயில் கொண்டுள்ள முருகக் கடவுளின் திருவருட் செயல்களை விளக்கும் வகையில் எழுந்தது இந்நூல். இது கி.பி. 18-ஆம் நூற்றாண்டில் வாழ்ந்த கச்சியப்ப முனிவரால் இயற்றப்பட்டது.

இப்புராணம், 3161 செய்யுட்களில் திருநாட்டுப் படலம், திருநகரப் படலம், நைமிசப் படலம், புராண வரலாற்றுப் படலம், விராட்டகாசப் படலம், குமரேசப் படலம், பிரமன் சிருட்டி பெறு படலம், நந்நியுபதேசப் படலம், அகத்தியனருள பெறுபடலம், சீபரிபூரணநாமப் படலம், பிரமன் அருள் பெறுபடலம், நாரணன் அருள்பெறு படலம், இந்திரன் அருள பெறு படலம், நாகமருள் பெறுபடலம், இராமனருள் பெறு படலம், களவுப் படலம், வள்ளி நாயகி திருமணப் படலம், விடையருள் படலம, நாரதன் அருள்பெறுபடலம் ஆகிய 19 படலங்களைக் கொண்டு இலங்குகின்றது.

புராண மரபிற்கேற்ப நைமிசாரணியத்து இருடிகளைப் பார்த்துச் சூத முனிவர் கூறுவதைப் போன்றே இப்புராணமும் தொடங்குகிறது. ஆயின் முழுமையாகப் புராணக் கருத்துகளையே கூறாது, மேலும் பல்வேறு வகையான கருத்துகளைக் கூறுவது இப்புராணத்தின் சிறப்பாகும்.

இத் தணிகைப் புராணத்தைக் கா. நமச்சிவாய முதலியார் முதன் முதலாகப் பதிப்பித்தார். பினனர்ச் சைவசித்தாந்த நூற் பதிப்புக் கழகமும், திருவாவடுதுறை ஆதீனமும் பதிப்பித்தன. இவற்றுள் சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகத்தின் பதிப்பு உரையோடு கூடிய திருந்திய பதிப்பாக வெளிவந்துள்ளது.

மேற்சொன்ன படலஙகளைக் கொணடு அமைக்பெற்ற தணிகைப் புராணத்தின் சில படலங்கள் தனித்தனிக் கருத்துகளை முழுமையாகக் கூறுவனவாக அமைந்துள்ளன. களவுப்படலம் தொல்காப்பிய அகத்திணைக் கூறுகளையும், சீபரிபூரண நாமப் படலம் தொல்காப்பியப் புறத்திணைக் கூறுகளையும், திருத்தணிகை முருகன் நந்திக்கு உபதேசிக்கும் முகமாக அமைகின்ற நந்தி உபதேசப்படலம் மெய்கண்ட சாத்திரங்கள் பதினான்கின் சாறாகி மெய்ப்பொருள் கருத்துகளையும் விளக்குகின்றன. களவுப் படலத்தைக் கோவை இலக்கணமாகிய கட்டளைக் கலித்துறையில் பாடியுள்ள திறம் பாராட்டுதற்குரியது. மேற்சொன்ன படலங்களை நூலிலிருந்து பிரித்து எடுத்து அவற்றைத் தனித்தனி நூல்களாக்கவும் இயலும். இவ்வாறு பல்வேறு நூல்களை இணைத்துப் பொதிந்து தணிகைப் புராணம் என்னும் நூலாக ஆக்கிய திறம் கச்சியப்ப முனிவருக்குரியது.

தணிகைப் புராணத்தின் களவுப் படலமும், வள்ளி நாயகி திருமணப்படலமும் களவு, கற்பு ஆகிய அகப் பொருள கருத்துகளைக் கூறுகின்றன. குறிப்பாகக், களவுப்படலம் தொல்காப்பியம் கூறுகின்ற களவு இலக்கணததை அடியொற்றியும் பிற்காலத்தே தோன்றிய கோவை அமைப்பைப் பொருந்தியும் அமைந்து காணப்படுகிறது. களவு மணத்தின் சிறப்புக் கருதியே களவுப் படலத்தைத் தாம் அமைத்திருப்பதாகக் கச்சியப்ப முனிவரும் கூறுவர்.643 செய்யுட்களைக் கொண்டுள்ள இப்படலத்துள வள்ளியின் பிறப்பும், நாரதர் வள்ளியின அழகினைக கூறுவதும், முருகன் வள்ளியினைக் கண்ணுவதற்கான குறிப்பும், முருகன் வள்ளி ஆகியோரின் களவொழுககமும், பின்னர் வரைவு வேணடுதலும் போன்ற களவுக்குரிய நிகழ்ச்சிகள் முறைபடக் கூறப்படுகின்றன. மேலும், 'புகுமுகம் புரிதல்' முதலாகிய களவிற்கே உரிய மெய்ப்பாடுகள பலவற்றையும் எடுத்தியம்புகின்றது.

மரபுவழி இலக்கணங்களுக்கேற்பத் தம்புராணத்தையும் அமைக்க வேண்டும் என்ற கச்சியப்ப முனிவரின் அவா களவுப் படலத்தின் வழி வெளிப்பட்டது போன்று சிரீபரிபூரண நாமப் படலத்திலும் வெளிப்படுகின்றது. இப்படலம் முருகனுக்கும் சூரனுக்கும் இடையே நிகழ்ந்த போர் நிகழ்ச்சிகளை விரித்துரைப்பது. சூரனும் அவன் தம்பி பதுமனும் பல்லூழிக காலம் முருகனை நோக்கித் தவமிருந்து அவனது ஊர்தியாகவும் கொடியாகவும் ஆக நோற்ற நோன்பின் பயன் அப்போரின் முடிவில் கூறப்படுகிறது. அப்போரில் சூரபதுமாகளை அழித்த முருகனின் ஆற்றலும், அவர் தோற்றமைக்கு அருளிய அருள் திறமும், முருகக் கடவுள் எய்திய புகழும் அதன்கண விளக்கப்படுகின்றன. இத்தகைய சிறப்புகளைக கூறும் அப்படலத்தைத் தொல்காப்பியப் புறப பொருள் கருத்துகளை அடியொற்றியும் புறப் பொருள் வெண்பாமாலை காட்டும் சில துறைகளை மேற்கொண்டும் கச்சியப்ப முனிவர் அமைத் துள்ளார் என்பது நோக்கத்தக்கது. தாம் சார்ந்த சைவ சமயத்தைப் பரப்பியவர் கச்சியப்ப முனிவர்.

அகத்தியன் அருள் பெறும் படலத்துள் விதிவழிப் பூசனை, சமய ஒழுக்கம், வழிபாட்டு முறை, தங்கடவுள் போற்றும் திறம், சரியை, கிரியை, யோகம், ஞானம் எனும் சமய நெறிகள், அடியவர்களைப் போற்றும் பாங்கு முதலியனவும் ஓதல், ஓதுவித்தல் ஆகியவற்றின் திறமும், ஆசிரியா மாணாக்கரின இலக்கணமும், மண்டபம் கோயிலெடுத்தல் முதலிய வற்றின் சிறப்பும், தானங்கள் வழிபாடாற்றுதல், இறையுருச் சமைத்தல் ஆகியவற்றின் சிறபபுகளும் பேசப்படுகின்றன.

சாத்திர நூல்களுக்குப் பின் கந்தபுராணம், காஞ்சிப் புராணம், தணிகைப் புராணம் முதலியன மெய்ப் பொருட்கருத்துகளை உலகிற்கு உணர்த்த எழுந்தவை. இவற்றுள்ளும் தணிகைப புராணம் தனித்தன்மை வாயநதது. ஏனைய இரண்டும் இக் கருத்துகளைப் புராணத்துள் பரவலாகப் பேசியிருக்க தணிகைப் புராணம் மட்டும் அக்கருததுகளைப் பரவலாகவும், தனிப்படலத்துள்ளும் நந்திக்கு உபதே சிக்கும் முகமாவும் விளக்கி நிற்கினறது. சிபரிபூரண நாமப்படலம் அகச் சமயங்கள், சித்தாநத சைவம், உள்பொருள்கள், பதி உணமை, சத்தியின செயல, மாயை, பசு உண்மை, பாச உண்மை, அவத்தைகள், பாச நீக்கம், தீக்கை வகைகள, சீவன் முக்தர் நிலை முதலியவற்றையெல்லாம் விளக்குகின்றது.

இந்நூல் முழுவதும் உவமை அணியின் செல்வாக் குப் பெற்றுத் திகழ்கின்றது. மேலும், தன்மை, சிலேடை, உருவகம், உயாவு நவிற்சி, தற்குறிப்பேற்றம் வேற்றுப் பொருள் வைப்பு, பரிவருத்தனை போனற பல அணிகளின் கொள்கலமாகவும் விளங்குகின்றது.

கலித்தொகை போன்ற சங்க நூல்களின் செல் வாக்கும் திருக்குறள் போன்ற நீதிநூலகளின் செல வாக்கும், சிந்தாமணி கம்பராமாயணம் போன்ற காப் பியங்களின் செல்வாக்கும், பெரிய புராணம், கந்த புராணம், திருவிளையாடற் புராணம், காஞ்சிப், புராணம் போன்ற புராண நூல்களின் செல்வாகும் மெய்கண்ட சாத்திரங்களின் செல்வாக்கும் இந் நூலுள் மிகுதியும் காணப்படுகின்றன. சு.கோ

**தணிகையுலா:** திருத்தணிகை முருகனைப் பாட்டுடைத் தலைவனாகக் கொண்டு பாடப்பட்ட நூல் இவ்வுலாவாகும். இது திருத்தணிகைச் சந்நிதி முறை என்னும் தொகுதி நூலகளுள் எட்டாவதாக விளங்குகிறது. இந்நூலினைப் பாடிய கந்தப்பையர் என்பார் வீர சைவர்; சிவஞான முனிவரின் மாணவ ராய கச்சியப்பரின் மாணவர். பனுனூலாசிரியர்களாக விளங்கிய விசாகப் பெருமாளையர் சரவணப் பெரு மாளையர் ஆகியோரின் தந்தை. இவர் காலம் கி.பி. 18-ஆம் நூற்றாண்டு.

தணிகையுலா 647 கணணிகளையுடையது. அதன இறுதிக் கண்ணியின் இறுதியடி 'உலவாச் சேய் வந் தான உலா' என்பது. முருகனைப் பற்றிய புராண வரலாறு, அவன் உலாச்சிறப்பு, இசைக்கருவிகளின முழக்கம், உடன்வரும் திருக்கூட்டத்தார், உலாக் கண்ட எழுபருவ மகளிரின் செயல்கள் ஆகிய இவற்றை முறையே கூறுகின்றது. முருகப பெருமா னின் உலா ஆதலால் அருணகிரியாா, நக்கீரனார், பொய்யாமொழிப்புலவர் ஆகியோரும் திருவுலாக கூட்டத்துடன் வருவதாகப் பாடியுள்ளார் இந் நூலாசிரியர். இரா.இ.

**தத்தர், இரமேசு சந்திர** (கி.பி.1848-1909) என்பார் வங்காள மாநிலத்தில கல்கத்தா மாநகரில் வாழ்ந்த பெரியார்; நிருவாகத் துறையிலும், இலக்கியத் துறையிலும் சிறந்தவராய்த் திகழந்தவர், கி.பி 19-ஆம் நூற்றாணடில் வாழ்ந்தவர்.

இரமேசு சந்திர தத்தர்(Romesh Chandra Dutt) கி.பி.1848-ஆம் ஆண்டு இசான சந்திர தத்தர் (Ishan Chandra Dutt) என்பாரின் மகனாகக கல்கத்தாவில் பிறந்தார். இவர்தம் குடும்பத்தைச் சார்ந்தவர்கள் முன்னரே கல்வி, இலக்கியம் போனற துறைகளில பெரும் சாதனை படைத்திருநதவாகள. இவருடைய சிறியதந்தையார் இரசமய தத்தர் (Rasamay Dutt) கல்கத்தாவில் பணியாற்றிய வடமொழிக் கல்லூரியின முதல் முதல்வராவார். மறறொரு சிறியதநதையார் சோசி சநதிர தத்தா (Shoshee Chandra Dutt) ஆங கில மொழியில் சிறந்த எழுத்தாளர் என்று புகழ பெற்றவர். பிறிதொரு நெருஙகிய உறவினரான செல்வி தோரு தத்தர் (Miss Doru Dutt) ஆங்கில மொழியிலும் பிரெஞ்சு மொழியிலும கவிதை புனைந்து சிறப்புப் பெயர் பெற்றவர்.

இரமேசு சந்திர தத்தர் தம் பிள்ளைப் பருவத தைக் கல்கத்தாவிலும், மாவட்டங்களிலும் செயற பட்ட வங்காளமொழிப் பள்ளிகளில் கற்றுத்தேர்ந தார். கல்கத்தாவிலிருந்த அரே பள்ளியில் (Hare School) கி.பி 1861-ஆம் ஆணடில் சேர்ந்து கல்கத்தாப் பல்கலைக் கழக நுழைவுத் தேர்வில் தேறினார். தம 16-ஆம் வயதில் மதங்கினி போசு(Mantangini Bose) என்பாரைத் தத்தர் மணந்து கொணடார். மாநிலக் கல்லூரியில் மாணவராகிப் பலகலைக்கழகத்தின் முதல் தேர்வில (First Arts) பல்கலைக கழகத் திலேயே இரணடாம் மாணவராக வெற்றிபெற்ற தத்தருக்கு உதவிப் பொருளும் கிட்டியது. இளங கலைப்பட்ட வகுப்பு மாணவராகப் படிததுக் கொண டிருந்தபோதே இவருக்கு மேல்கல்வி கற்க இங்கிலாந்து செல்லும வாய்ப்புக் கிடைத்தது. இந்திய ஆட்சிப் பணி (I.C.S.) தேர்வில் இரமேசு சந்திர தத்தர்

வெற்றி பெற்றார். இந்தியா திரும்பும் முன்னரே இவரை வழக்குரைஞர் மன்றம் (Bar Association) ஏற்றுக் கொண்டது.

தத்தருக்கு இந்திய ஆட்சிப் பணித்துறையில் பெரும் பொறுப்புகள் காத்திருந்தன. உதவி நீதிபதியாக அலிப்பூரில் இவர் தம் வாழ்க்கையைத் தொடங்கினார். பத்தாண்டுகளுக்குள் படிப்படியாக முன்னேறி மாவட்ட ஆட்சித் தலைவராகப் பொறுப் பேற்ற முதல் இந்தியராகத் தத்தர் கருதப்படுகிறார். பின்னர்ப் பர்த்துவான (Burdwan) கோட்டத்தின் ஆணையராகப் பதவியேற்றார். தத்தர் தம் 49-ஆம் வயதில் இந்திய ஆட்சிப் பணியிலிருநது ஓய்வு பெற றார். இவருடைய பணியை அரசுப் பிரதிநிதியாக இருந்த வெள்ளைக்காரர்களும் துணை ஆளுநர்களும் போற்றிப் பாராட்டினர்.

இந்திய ஆட்சிப் பணியிலிருந்து ஓய்வு பெறற பின்னரே இரமேசு சந்திர தத்தரின் வாழ்வு புதிய துறைகளில் ஈடுபாடு கொண்டு மிளிரலாயிற்று. பொது வாழ்விலும் எழுத்துக் கலையிலும் இவர் சிறப்புப் பெறலானார். அரசுப் பணியில் செயலாற் றிய காலத்திலேயே இவர் பேச்சாற்றல் மிக்கவர் எனப் புகழ்பெற்றிருந்தார். தமக்கே சொநதமான கருத்துகளை ஒருவருக்கும் அஞ்சாது எடுத்தியம்பும் ஆற்றல் இவரிடம் இருந்தது. இந்தியாவின் வறுமைக் கான காரணங்களையோ நிருவாகத் துறைத் தொடர்பான சிக்கல்களையோ இவர் அரசுக் கெதிராகவே எழுதியும் பேசியும் வந்தார் எனபது குறிப் பிடத்தக்கது. எடுத்துகாட்டாக இல்பர்ட்டு மசோதா (Ilbert Bill) குறித்து இவர் கருத்து அரசின கொள் கைக்கு எதிரானதேயாகும். தத்தர் கி.பி.1899-ஆம் ஆண்டில் அரசியலில் தீவிரப் பங்கு கொண்டு இந்தியத் தேசிய காஙகிரசுக் கட்சியின தலைவரானார். அக்கட்சியின் கொள்கை கோட்பாடுகளை ஆணிததர மாக எடுத்துரைக்கும் வல்லவராகக் கருதப்பட்டார்.

இந்திய ஆட்சிச்பணியிலிருந்து ஓய்வுபெற்ற சிறிது காலத்திற்குள் தத்தர் இலண்டன் பலகலைக்கழகத் தில் இந்திய வரலாற்றுத் துறையில் விரிவுரையாள ராகச் சேர்ந்தார். ஆனால், 1904-இல் தத்தர் இந் தியா திரும்பி, பரோடா சமத்தானத்தின் (State of Baroda) வருவாய்த் துறை அமைச்சராக மூன் றாண்டுக் காலம் பணியாற்றினார். பின்னர் நிருவாகத் துறையைப் பன்முகபபடுத்தி உருவாக்கப் பெற்ற குழுமத்தின் உறுப்பினராக (Member of Decentralization Commission)1908-இல் பொறுப்பேற்றார். அத்தருணத்தில் தத்தர் பொருளாதாரம், பொருளாதார வரலாறு, பண்டைய இந்தியப் பண்பாடு போன்ற துறைகள் குறித்து ஆழ்ந்த கருத்துகளைக் கொண்ட நூல்களையும், வங்காளமொழியில் உயர்ந்த புதினங்களையும் உருவாக்கிப் புகழ்பெற்றார்.

தத்தர் பல நூல்களை எழுதியவர். 'வங்காளக் குடியானவர்கள்'(Peasantry of Bengal)என்னும் இவர் எழுதிய நூல் உழவர்களின் பொருளாதாரச் சிக்கல் களைப் பற்றிய முதல் நூலாகும் (1875). 'இந்தியப் பஞ்சங்கள்' (Famines in India) என்னும் நூல் தத்த ரின் பொருளாதாரக் கட்டுரைகளின் விரிவாக்கமாகும். (1900).

மேற்கூறிய நூல்களைத் தவிர பிற நூல்கள் சிலவற்றையும் தத்தர் எழுதிப் புகழ்பெற்றார். அவற் றுள் ஒன்று'கி.பி.1757 முதல் 1837 வரை இந்தியாவில் ஆங்கில ஆட்சியின் தொடக்கம்' (India Under Early British Rule, 1757-1837) என்னும் நூலாகும். இது 1901-இல் வெளியாயிற்று. அடுத்த ஆண்டில் இவர் எழுதிய பிறிதொரு நூல் 'விக்டோரியா இராணியார் காலத்து இந்தியப்பொருளாதார வரலாறு'(Economic History of India in the Victorian age)என்பதாகும. இவ்விரு நூல்களும் தக்க வரலாற்றுச் சான்றுகளுடன் எழுதப் பெற்றவையாகும். இந்நூல்களைப்படிப்போர் கி.பி.19ஆம் நூற்றாணடின் இந்தியப் பொருளா தாரச் சிக்கல்களை உணரலாம்.

இந்திய வரலாறு, பண்பாடு ஆகியவற்றில் தத்த ருக்கு ஆழ்ந்த புலமை இருந்தது. இந்திய ஆட்சிப் பணியில் பணியாற்றிய காலத்திலேயே 'இந்திய வர லாறு' என்னும் பாடநூலை இவர் எழுதியிருந்தார். எனினும், இவர் கி.பி.1899-ஆம் ஆண்டில் 'பண்டைய இந்தியப் பண்பாட்டு வரலாறு' (History of Civilizationin-Ancient India) எனனும் நூலை வெளியிட் டார். இது மூன்று தொகுதிகளைக் கொண்டது. மகாபாரதம், இராமாயணம், வடமொழி நூல்களுள் ஒரு சில ஆகியவற்றை இவர் ஆங்கில மொழியில் மொழி பெயர்த்தார். இருக்குவேதத்தையும், ஏனைய பழம்பெரும் நூல்களையும் தத்தர் வங்காளத் தில் மொழியாக்கம் செய்தார். இராசபுத்திரர்களின் வரலாற்றுச் சிறப்பையும் மராத்தியர்கள் மாண்பு மிகு வரலாற்றையும் இவர் எழுதினார். இவர் எழுதிய சமூகப் புதினங்கள் பழமையைச் சாடி, புத்து லகக் கருத்துகளைக் கொணடு மிளிர்ந்தன.

'இந்திய நாணயச் செலாவணி' (Indian Currency) பற்றி இவர் எழுதிய குறிப்புகள் குறிப்பிடத்தக்கவை. 'இங்கிலாந்தும் இந்தியாவும்' (England and India) என்னும் நூலை இவர் கி.பி.1897-இல் வெளியிட்டார். இந்நூல் கி.பி. 19-ஆம் நூற்றாண்டில் நிருவாகத்

துறைச் சிக்கல்களைப் படம்பிடித்துக் காட்டும் சீரிய ஆய்வு நூலாகும். எண்ணற்ற கட்டுரைகள், தலைமை யேற்று ஆற்றிய சொற்பொழிவுக்கட்டுரைகள், ஆயவுக் கட்டுரைகள் மேலும் பல சிறு நூல்கள போன்ற வற்றை இவர் எழுதியுள்ளார். இரமேசு சந்திர தத்தர் 1909-ஆம் ஆண்டில் தம் 61-ஆம் வயதில் காலமானார்.

இரா.அ.

**தத்தாத்திரேயப் பாட்டியல்:** இப்பெய ரால் ஒரு பாட்டியல் இருந்ததை அறிஞர் உ. வே. சாமிநாத ஐயரவர்கள் வழியே அறிந்து கொள்ள இயலும். அவர்கள் விருத்தப்பாக்களால அமைந்த இந்நூலைச் செங்கணம் விருத்தாசல ரெட்டியார் அவர்கள வீட்டில் பார்த்திருக்கிறார்கள்; பாடம் கேட்டிருக்கிறார்கள். படி எடுத்து வைத்துக் கொள்ள வில்லை. நூலும்பின்னர்க்கிடைக்கவில்லை. இப்பாட்டி யல் குறித்து அவர்கள் 'என்சரிதம்' 'சங்கத் தமிழும் பிற்காலத் தமிழும்,' என்னும் நூல்களில் குறிப்பிட் டுள்ளார்கள. உ.வே.சா. நூல் நிலைய வெளி யீடாக வெளிப்பட்ட நவநீதப் பாட்டியலிலும் அக் குறிப்புகள் இடம்பெற்றுள.

இரா.இ.

**தத்தாத்திரேயர்** என்பார் ஒரு முனிவர். இவர் தந்தையார் அத்திரி முனிவர். திருமாலை நோக்கி அத்திரி முனிவர் தவம் செய்ய, அவர் காட்சி தந்து தம்மை அவருக்குத் தத்தம் செய்தபடியால் அவர் மகன் தத்தாதிரேயர் எனப்பட்டார் என்பது வரலாறு.

தத்தாத்திரேயர் திருமாலின் பிறப்பு எனபபடு வார். இவர் அநசூயை வயிற்றில் பிறந்து, அறிதுயி லில் இருக்கவேணடும் என விரும்பினார். ஆனால், ஏனைய முனிவர்களின் புதல்வர்கள் இவரைத் தனித் திருக்கவிடாமல் தொடர்ந்தனர். அதனால, அவர் களைவிட்டு நீருள் மறைந்து நெடுங்காலம் தவம் செய்து பின்னர் வெளிப்பட்டார். அப்பொழுது அச சிறுவர்கள் விடாது தொடர்ந்தனர்.

முனிவர் தத்தாத்திரேயர் முனிபுதல்வர்கள் தம்மைத் தொடராது இருப்பதற்காக ஐம்பெரும் பாவங்களையும் செய்யும் தீயவர் போலக் காட்டினார். அதனைக் கண்ட முனிபுதல்வர்கள் முனிவரை விட்டு நீங்கினர். அதன்பின் தம் விருப்பம்போல் அறிதுயிலில் நெடுங்காலம் இருந்தார்.

தேவர்களுக்கும் சம்பராசுரனுக்கும் போர் உண்டாக, தேவர்கள் முனிவரை அடைந்து உதவு மாறு வேண்டினர். 'எம் கண்முன் உங்களை அசுரர் கள் வருத்தும்போது அவர்கள் அழிவார்கள்' என்றார்.

சம்பராசுரன் முதலியோர் தேவர்களை அழிக்க வர, அவர்கள தத்தாத்திரேயர் இருப்பிடத்திற்கு வந்து மறைந்துகொணடனர். சம்பராசுரன் முதலி யோர் முனிவரின் இருப்பிடத்திற்கு வந்து, திருமக ளுக்கு ஒப்பாகிய அவர் மனைவியை எடுத்துத் தலை மேல் வைத்துக்கொண்டு சென றனர். திருமகள் அனன தேவியார் அவர்களிடமிருந்து மறைந்தார். 'அவர் அசுரர்களிட மிருந்து மறைநது விட்டமையால் உங்களிடம் அசுரர்கள தோற்பர்' என்றார் முனிவா. அப்படியே தேவர்கள் வெற்றிபெற அசுரர்கள தோற்றனர். இவர் பிறப்பை 'வித்தைசேர் தத்தாத் திரையனாய் விணணவர் போற்ற அத்திரிக்கு நன்மக னென உதித்து' என்கிறது பாகவதபுராணம் (முதற் கந்தம், மாயவனமிசாவதாரம் உரைத்த அத்தி யாயம், 26).

இரா.இ.

**தத்துவ இயல் அரசுக் கோட்பாடு:** எகல் கூறிய முழுவல்லமையுள்ள அரசுக் கோட்பாட்டை ஆப்அவுசு (Hobhouse) என்ற ஆங்கிலச சமூக இயலாசிரியர் ஆய்வு செய்து, அதிலுள்ள தாராள இயல்புக்கு மாறான இயல்புகளைச் சுட்டிக்காட்டி, தாராள இயல்புகளுக்கேற்ப எகலின கோட்பாட்டை அமைத்த வடிவமே தத்துவ இயல் அரசுக் கோட்பாடு (Metaphysical Theory of the State) எனப்படும்.

**ஆப்அவுசு வகுத்த கோட்பாடு,** தத்துவ இயல அரசுக் கோட்பாடாகும் இவருடைய கருத்தினபடி சமூக வளர்சசி எனபது, சமூகக் கூட்டுறவு (Social Cooperation) எனற பகுத்தறிவுக்குகந்த குறிக்கோளை நாடியே செல்லுகிறது. சமூகச் சீர் திருத்தங்கள் செய்யப்படுதற்கு முழுவல்லமையும், வரமபற்ற ஆற்றலுமுடைய அரசாங்கம் இருத்தல் வேணடு மென்ற கட்டாயம் இல்லை. தாராள இயல்புடைய அரசாங்க முறையிலும்சமூகச்சீர்திருத்தஙகள் செய்யப் படுதல்கூடும். மனித அறிவு வளர்ச்சியும் சமூக வளர்ச்சி யும் ஒன்றையொன்று சார்ந்துள்ளன. சமூக நிறுவனங களின வடிவத்தை ஆக்குதலில், பொருளியல் நாகரி கத்துக்குச் (Material Culture) சிறப்பான பங்கு இருக் கிறது. எர்பெர்ட்டு இசுபென்சர் (Herbert Spencer) என்பவர் ஓர் இயந்திர வகையில் சமூகத் துறையில் பரிணாம வளர்சசி ஏற்படுகிறதென்று கூறினார். இக் கருத்தை ஆப்அவுசு மாற்றி, சமூகத்தில் ஏற்படும் தவறுகளைத் திருத்துதற்கு மனிதருடைய உள்ளார்ந்த ஒழுக்க இயலான தலையீடுகள் ஏற்படுகின்றன என்று கூறினார்.

ஆப்அவுசு கூறிய தத்துவ இயலான கோட்பாடு பல சிந்தனையாளர்களால் குறையுடையது எனக் கூறப்பட்டாலும், அவர் கூறிய தாராள ஒழுக்க இயல

கருத்துகளுக்கு மதிப்பு இருக்கிறது. வரம்பற்ற சுதந்திரக் கருத்துகளுக்கு நடைமுறையில் உள்ள வரம்புகளை எடுத்துக்காட்டித் தாராள அரசியற் கருத்துகளை இக்காலச் சூழ்நிலைகளுக்கேற்ப மாற்றி அமைத்தார். அதுபோலவே எகலின் முழுவல்லமை அரசுக் கோட்பாட்டையும் இவர் மாற்றியமைத்தார்.

பா. சூ.

*தத்துவங்கள்:* 'தத்துவம்' என்னும் சொல் 'அதன் மெய்த்தன்மை' என்னும் பொருளைத் தருவ தாகும். சில இடங்களில் அச்சொல் கருவி என்னும் பொருளையும் தரும். சைவ சித்தாந்தத்தில் முப்பத் தாறு தத்துவங்கள் கொள்ளப்படுகின்றன.

உலகத் தோற்றத்திற்கு மூலகாரணமாய் இருப் பது மாயை என்னும் பொருள். உலகில் காணப்படும் மண், நீர், தீ முதலிய பொருள்களைப் பகுத்துக் கொண்டே சென்றால், அவை பல நுணுகிய நிலை களை அடைந்து, முடிவில் ஒரு பேராற்றலாக மாறும். இவ்வறிவியல் கருத்தை ஒட்டியேதான் சைவசித் தாந்தம் 'எல்லாச் சடப்பொருள்களின் ஆற்றல்களும் திரண்ட மூலம் மாயை' எனறும், 'அதனின்றும் உலகச் சடப்பொருள்கள் தோன்றி நின்று பின்னர் அதனுளளே ஒடுங்கும்' என்றும் கூறுகிறது. உலகில் காணப்படும் சடப்பொருள்களையே மூலம் என்று கூறமுடியாது. ஏனெனில், அவையனைததும் காலப் போக்கில் அழிகின்றன. அழிகின்ற பொருள்களுக்கு மூலமாய்-அழியாமல் நித்தியமாய் ஒரு பொருள் இருக்கவேண்டும். அதுவே மாயை எனனும் பொரு ளாகும்.

மாயை அறிவற்றதாக இருப்பதால், அது தானா கவே உலகைத் தோற்றுவித்திருக்க முடியாது. பேரறி வுப் பொருளாகிய கடவுள்தான் உயிர்களுக்கு அறிவு விளங்கும்பொருட்டு மாயையிலிருந்து இவவுலகத்தை யும் உடல்களையும் தோற்றுவித்திருக்கவேணடும். கடவுள் தம் திருவருள் சக்தியை மாயையின் ஒரு பகுதியில் மிகவும் முனைக்கும்படி செய்கிறார். அப் பகுதி சுத்த மாயை எனப்படுகிறது. அடுத்து மற் றொரு பகுதியில் தம் திருவருள் சக்தியைக் குறை வாக முனைக்கும்படி செய்கிறார். அப்பகுதி அசுத்த மாயை எனப் பெயர் பெறுகிறது. மற்றொரு பகுதி யில் தம் திருவருள் சக்தியை மிகமிகக் குறைவாக முனைக்கச் செய்கிறார். அப்பகுதி பிரகிருதி மாயை எனப் பெயர் பெறுகிறது. இவ்வாறு மாயை முப்பத் தாறு தத்துவங்களாக நின்றுமூவகை உயிர்களுக்கும் உலகாகவும், உடலாகவும் பயன்படுகிறது.

சைவ சமயம் ஒன்றே முப்பத்தாறு தத்துவங் களைக் கூறுகிறது. ஏனைய சமயங்களில் பெரும் பாலானவை இருபத்துநான்கு தத்துவங்களையே கூறு கின்றன. சில சமயங்கள் ஒன்றிரண்டு தத்துவங் களைக் கூடுதலாகக் குறிப்பிட்டாலும் முப்பத்தாறு என்ற அளவுக்குச் செல்லவில்லை.

பூதங்கள் ஐந்து, தன்மாத்திரைகள் ஐந்து, ஞானேந்திரியங்கள் ஐந்து, கன்மேந்திரியங்கள் ஐந்து, அந்தக்கரணம் நான்கு ஆக ஆன்ம தத்துவம் இருபத்து நான்கு. வித்தியா தத்துவங்கள் ஏழு, சிவதத்துவங கள் ஐந்து ஆகிய இவற்றுடன் ஆன்ம தத்துவங்களா கிய இருபத்து நான்கு தத்துவங்களையும் சேர்க்கத் தத்துவங்கள் முப்பத்தாறு ஆகும்.

**பூதங்கள் ஐந்து:** நிலம், நீர், தீ, காற்று, வான் ஆகிய ஐந்து பூதங்களும் யாவர்க்கும் புலனாகின்றன. நிலம்,நீர் முதலியவை மக்களுக்குத் தெரிந்த அளவிலும் பார்க்க விரிந்தும் கிடக்கின்றன. சந்திர மண்டலத்தி லும் மண் இருப்பதாக அறியககிடக்கிறது. மண் தத்துவம் பூமியாக உயிர்களைத் தாங்கிக் கொண டிருக்கிறது. கல், மலை முதலியவையும், இரும்பு, வெள்ளி, ஈயம், தங்கம் முதலியவையும் மண் தத்து வத்தைச் சார்ந்தவை ஆகும்.

கடல்நீர், ஊற்றுநீர், மழைநீர், ஆற்றுநீர் முதலி யவையும் பல்வேறு வகைத் திரவங்களும் நீர்த்தத்து வத்தைச் சார்ந்தவை ஆகும். மின் ஆற்றல், பலவேறு வகை ஒளிகள் ஆகியவை தீத்தத்துவத்தைச் சார்ந் தவை ஆகும். பிராண வாயு முதலிய எல்லா வாயுக் களும் காற்றுத்தத்துவத்தைச் சார்ந்தவை. பொருள் களினூடே உள்ள இடைவெளிகளும் மேலே காணப் படும் பெருவெளியும் ஆகாய தத்துவத்தைச சார்ந் தவை.

**தன்மாத்திரைகள் ஐந்து:** நிலம், நீர், நெருப்பு முத லிய பூதங்கள் தூலமாக யாவர்க்கும் புலனாகின்றன. எந்த ஒரு தூலப் பொருளுக்கும சூக்கும நிலை இருந்தே தீரும். ஐம்பூதங்களுக்கும் உளள சூக்கும நிலைகளே தன்மாத்திரை எனப்படும். மண் தத்து வத்திற்குச் சூக்கும நிலை நாற்றத் தன்மாத்திரை ஆகும். நீர்த் தத்துவத்திற்குச் சூக்குமநிலை சுவை தன் மாத்திரை ஆகும். தீ என்னும் பூதத்துக்குச் சூக்கும நிலை 'ஒளி' ஆகும். காற்று என்னும் பூதத்திற்குச் சூக்கும நிலை, பரிசம் (ஊறு) என்னும் தனமாத் திரை ஆகும். ஆகாயம் என்னும் பூதத்துக்குச் சூக்கும நிலை ஒலித் தன்மாத்திரை ஆகும். எனவே, மண், நீர், தீ, காற்று, ஆகாயம்என்னும் ஐம்பூதங்களுக்கும் முறையே நாற்றம், சுவை, ஒளி, ஊறு, ஒலி என்பன தன்மாத்திரைகளாக விளஙகுகின்றன.

'தனமாத்திரை' என்றால் தன் அளவில் குணங கள் வெளிப்படாமல் நிற்பது என்பது பொருள். சைவசித்தாந்தததில் குணங்களின் தொகுதி பொருள எனக் கூறப்படும் தன்மாத்திரைகள் அனைத்தும் குணங்களின் தொகுதிஆதலால அவை பொருளகளா கின்றன.

இடம் கொடுத்தலாகிய தொழில் குணத்தையும் வல்லோசை, மெல்லோசை முதலிய ஓசைகளாகிய பண்புகளையும் உளளடக்கிப் பொதுமையில் ஓசை மாத்திரையாய்ச் சூககுமமாய் நிற்பது ஒலித் தன் மாத்திரை ஆகும். ஓசையோடு கூடத் தட்பம், வெப் பம் முதலிய குணங்களை உளளடக்கி நிற்பது ஊறுத் தன்மாத்திரை ஆகும். ஓசை, தட்பம், வெப்பம் முத லியவற்றோடு வெண்மை, செமமை முதலிய குணங் களையும் உள்ளடக்கி நிற்பது ஒளித் தனமாத்திரை ஆகும்.

ஓசை, தடபவெப்பம், வெண்மை, செம்மை முதலியவற்றோடு கூடத் தித்திபபு, புளிப்பு முதலிய வற்றை உளளடக்கி நிற்பது சுவைத் தன்மாத்திரை ஆகும். ஓசை, தட்பவெப்பம, வெணமை, செம்மை, தித்திப்பு, புளிப்பு முதலியவறறோடு கூட நறுநாற றம், தீநாறறம் முதலிய நாறறஙகளை உளளடககி நிறபது நாற்றத் தன்மாத்திரை ஆகும்.

**ஞானேந்திரியங்கள் (அறிகருவிகள்).** காது, தோல், கண, நாக்கு, மூக்கு என்னும் ஐநதும் ஞானேநதிரியத் தத்துவங்களாகும். இவை உடலின கண் உள்ள கருவிகளாகும். இவற்றை அறிகருவிகள என்று தமிழ் நூலார் கூறுவர். இநத ஐந்து கருவி களும் முறையே ஓசை, ஊறு, ஒளி, சுவை, நாறறம் என்னும் ஐந்தையும் உயிர் அறிவதறகுக் கருவியாகப் பயன்படும்

காது ஒலியைக் கேட்கிறது. தோல் ஊற்றுணாவை அறிகிறது. கண் பொருளகளைக் காணகிறது. நாக்கு சுவையை அறிகிறது. மூக்கு மணத்தை நுகர்கிறது. காது, தோல், கண் முதலிய உடலமைப்புகளை வெளிப்பொறிகள் என்றும், அவை அறிகின்றன வற்றைப் புலன்கள் என்றும் கூறலாம். பொறிகள் தாமே புலன்களை அறியமாட்டா. இப்பொறிகளின் வேறாய் இவற்றைச் செலுததி நிறகும உள் இந் திரியங்கள் அல்லது புலன்கள் ஐந்து உணடு. அவறறை ஞானேந்திரிய தத்துவங்கள் எனச் சொலவதுணடு. ஆனால், அவ்விந்திரியங்கள் செயறபட இப்பொறிகளும் நன்னிலையில் இருக்க வேண்டுமாதலால், இரணடை யும் சேர்த்தே ஞானேந்திரியங்கள் எனக் கொள்ள வேண்டும். மேலும் மனம் சேர்ந்தால் இப்பொறிகள் சிறப்பு வகையாகப் பொருளகளை அறியும். மனம் சேராவிட்டால பொதுவகையாக அறியும்.

**கன்மேந்திரியங்கள (தொழிற் கருவிகள்):** வாய, கால், கை, எருவாய், கருவாய் ஆகிய ஐந்தும் கன் மேந்திரியம் எனப்படும். இவற்றைத் தொழிற் கருவி கள எனத் தமிழ நூலார் கூறுவா. இக் கருவிகள உயிர் தொழிற்படுவதற்குப் பயன்படும் வாய பேசும். கால் நடக்கும். கை கொடுக்கும், வாஙகும். கை இந்திரியம் உடலின் மற்றப் பாகங்களிலும் விரவி நிற்கும். கண இமைத்தல், புருவம் நெறித்தல முதலியன கை இந்திரியத்தின தொழிறபாடாகவே கொளளப்படும். எருவாய் கழிவுப் பொருளைக் கழிக் கும். கருவாய் இனப்பெருக்கம் செய்யும்.

நாக்கு சுவை அறிவதால் ஞானேநதிரியமா யிற்று. அதுவே பேசுதலாகிய தொழிலைச செய்வதால் கன்மேந்திரியமும் ஆயிற்று. நாக்கு வாயாகிய இடை வெளி இலலாது பேச முடியாதாகையால் அது கன் மேந்திரியமாகக் குறிப்பிடப்படுமபோது வாய் என்று சொல்லப்படுகிறது ஞானேந்திரியங்களாகிய செவி, தோல, கண், நாக்கு, மூககு, ஆகியவற்றையும் சோததிரம், துவக்கு, சட்சு, சிகுவை, ஆக்கிராணம எனறு வட நூலாா சொலவா. இவற்றின புலன களைச சத்தம், பரிசம், உருபம், இரசம், கந்தம் எனபர். கன்மேந்திரியங்களை வாக்கு, பாதம், பாணி, பாயு, உபத்தம் என்றும், அவற்றின தொழிறபாடுகளை வசனம், கமனம், தானம், விசர்க்கம், ஆனந்தம என் றும் வடமொழியில சொலவர்.

**அந்தக் கரணம் நான்கு:** மனம், புத்தி, சிததம், அகங்காரம் ஆகிய நான்கும் அந்தக் கரணத் தத்து வங்களாகும். அந்தர்+கரணம் என்பது அந்தக் கரணம் என்று சோந்து உள்கருவி என்னும் பொரு ளைத் தரும.

ஞானேந்திரியம், கன்மேந்திரியம் ஆகியவை உட லின் வெளியே கணணால் பார்க்கும்படியாக அமைய, உட்கரணம் கண்ணால் பார்க்க இயலாமலுள்ளது. ஆனால் கருத்தால் உணரும்படியாக மைந்துளளது. ஒரு பொருளைப் பாாக்கும்போது இதுவோ அதுவோ எனனும் ஐயம் எழுகிறது. பார்த்த பொருளைக கண்டு 'இன்னது என அறிய முயல்வேன்' என்னும ஓர் எழுச்சி தோன்றுகிறது இந்த எழுசசி அகங்கார தத்துவம் எனபபடும். ஒருவர் ஒரு செயலைச் செய்ய எணணி அப்புறம் செய்யாமல் விட்டுவிட்டாரானால் அவர் அகங்கார தத்துவம் வலிமையாக இல்லை என் பது பொருள். முனைப்போடு செயலாற்றத் துணிவது அகங்கார தத்துவத்தின் தொழிற்பாடா கும்.

ஒரு பழத்தைப் பழம் என எவ்வாறு காண்பது? அகங்கார தத்துவம் எழுச்சியை உண்டாக்க, அப்போது பழத்திலிருந்து வரும் ஒளிக்கதிர்கள் கண்ணை அடைகின்றன. ஒளிக்கதிர்கள் கண்ணை அடைவதை மனம் பற்றும். அகங்காரம், மனம் ஆகிய தத்துவங்களின் தொழிற்பாட்டால், சங்கற்ப விகற்பம் செய்யும்போது (அதாவது இதுவோ அதுவோ என்று ஐயப்படும்போது), புத்தி தத்துவம் பழம் என்று நிச்சயிக்கும். புத்தி தத்துவம் பொருளை நிச்சயிப்தற்கு, அது இன்ன பொருள் என்று அறியச் சித்தத்தின் செயற்பாடு தேவைப்படுகிறது. சித்தம் என்பது நினைவுகளின் தொகுப்பு. பார்க்கப் படும்பொருள என்ன எனபது சித்தத்திடம் கேட்கப்பட, சித்தம் இன்ன பொருள் இப்படியிருக்கும் என்று நினைவிலிருந்து தெரிவிக்க, அப்போது ஆன்மா புத்தி தத்துவத்தின் மூலம் நிச்சயிக்கும். இதுவரை கண்ட இருபத்து நான்கு தத்துவங்களும் ஆன்ம தத்துவங்கள எனப்படும். இறைவன் சீகண்டருத்திரர் வாயிலாகப் பிரகிருதி மாயையில் இருந்து இவற்றைத் தோற்றுவிப்பர்.

குண தத்துவததில் உள்ள சத்துவ குணம், இராசத குணம், தாமத குணம் ஆகிய மூனறும் ஆன்ம தத்துவம் இருபத்து நான்கிலும் கலந்திருக்கும். உலகம் முக்குண மயம் என்று சொல்லப்படும். எடுத்துக்காட்டாகக் காற்று மென்மையாக வீசும் போது சததுவ குணத்தோடு அது கலந்து நிறகிறது எனக் கொளள வேணடும். சணட மாருதமாக வீசும்போது இராசத குணத்தோடு அது கலந்து நிற்கிறது எனக் கொள்ள வேணடும். காற்றே வீசாமல புழுக்கமாக இருக்கும்போது தாமத குணத்தோடு அது கலந்து நிற்கிறது எனக் கொளளவேண்டும். இவ்வாறு ஒவ்வொரு தத்துவததிலும் அவ்வப்போது காணப்படும் குண நிலையை வைதது இன்ன குணம் மிகுந்திருக்கிறது என அறியலாம்.

**அசுத்த மாயா கருவிகள்:** காலம், நியதி, கலை, வித்தை, அராகம், புருடன், மாயை என அசுத்த மாயாதத்துவங்கள் ஏழாகும். இவற்றை வித்தியா தத்துவங்கள் என்றும் சொலலலாம். இறுதியாக உளள மாயை, காலம் நியதி முதலிய தத்துவஙகளுககுத் தாயாக விளஙகுவதால அதனைக் காரணமாக வைத்து ஏனையவறறைக் காரியமாகக் கொணடு சாத்திரங்கள் விளக்கும். அதனால்தான் அவை காரியத்துள் சேர்க்கப்படாமல் இறுதியில் தனியே வைக்கப்பட்டுள்ளன.

**காலம்:** காலம் கணணால் காண இயலாவிடினும் நேற்று, இன்று, நாளை என மூவகையாக உணரப்படுகிறது. இவை இறந்த காலம், நிகழ்காலம், எதிர் காலம் என்றும் சொல்லப்படுகின்றன.

**நியதி:** நியதித் தத்துவம் அவரவர் செய்த வினையை அவரவரே அனுபவிக்கும்படி செய்வதோடு எவ்வாறு அனுபவிக்கவேண்டும் என்பதையும் வரையறுக்கும். இன்ன வினைக்கு இன்ன பயன் என்பதை நியதித்தத்துவத்தைக் கொணடுதான் இறைவனின் திருவருட் சக்தி நிருணயம் செய்கிறது.

**கலை:** முதல் முதல் ஆன்மா எவ்வித இயக்கமுமின்றி ஆணவமலத்துள் கிடக்கும்போது இறைவன் 'கலை' எனனும் கருவியைப் படைத்து ஆன்மாவுக்கு அளிக்கிறான். அக்கருவி ஆன்மாவின கிரியா சததியை எழுபபுகிறது. கலை என்பதற்கு நீக்குதல், செலுத்துதல் என்னும் இருபொருள்கள் உணடு. ஆன்மாவின் கிரியா சத்தியை மறைத்திருநத ஆணவ மலத்தைச் சிறிது நீக்கி அதனைச் செலுத்துதல் 'கலை' யின் தொழிலாகும்.

**வித்தை.** கலையால கிரியா சக்தி விளங்கப் பெற்ற ஆனமா வித்தை எனனும் கருவியால் ஞான சகதி விளஙகப்பெறுகிறது. வித்தை புத்தி தத்துவத்திற்கு உட்கருவியாய் விளங்குகிறது.

**அராகம்:** அராகம என்றால் விருப்பம் எனறு பொருள. ஆன்மாவின இசசா சகதியை அராக தத்துவம் எழுப்புகிறது. மனம் ஆசைப்படும் கருவியாதலால் அராக தத்துவம் மனத்திற்கு உட்கருவியாக விளஙகுகிறது.

காலம், நியதி, கலை, வித்தை, அராகம் என்ற ஐந்து தத்துவஙகளும், ஐந்து சட்டைகளைப் போல் மனிதனுக்கு அமையும் நிலையில் ஆன்மா புருட தத்துவம் என்னும் பெயர் பெறுகிறது. நுகாவோனாகும தன்மையில நுகரப்படும் பொருளாக உளளது. வித்தியா தத்துவத்தின் இறுதியில் உளள மாயை என்பது.

ஆன்மதத்துவங்களை இயக்கும் சிவதத்துவம் உடலில் தசைமடண்லத்தைஇயககும் நரம்பு மணடலம் போனறுள்ளது. இத்தத்துவம் சிவம், சக்தி, சாதாக்கியம்,ஈசுரம் ஆகிய அனைத்தையும் இயக்கும்.

ச.க.

**தத்துவநாதர்** என்பவரைச் 'சீகாழித தத்துவ நாதர்' எனவும் கூறுவர். இவர், துகளறு போதம் இயற்றிய சீகாழிச சிற்றம்பல நாடிகளின் மாணவர். மெய்கண்ட சாத்திரம பதினான்கனுள் ஒன்றாய இருபா இருபதுக்கு ஒரு சிறநத உரை எழுதியிருக்கிறார். 'இருபா இருபது உரை எழுதினோன் . சிற்றம்பல நாடி தாள் பணிவோன் சண்பை நகர

தத்துவநாதன்' என்னும் பழஞ்செய்யுட்பகுதி யிலிருந்து இவவுண்மைகள் நன்கு விளஙகும். இவர் காலம் சிற்றம்பல நாடிகள் காலத்தை ஒட்டியதா தலின் கி பி.1350-75 ஆகவிருக்கலாம் என ஆராய்ச்சி யாளர் கருதுகின்றனா

பதினான்கு சாத்திரங்களுள ஒன்றாய உணமை நெறி விளக்கம் என்னும் நூலையும் இத்தத்துவ நாதரே இயற்றினார் எனச் சிலர் கூறுவர். ஆனால இதுகாறும் வெளிவந்த பதிப்புகள் எல்லாவறறிலும உமாபதி சிவாசாரியாரே சித்தாந்த நூல்கள் எட்டு இயற்றினார் எனறும், அவை 'சித்தாநத அட்டகம்' என்று கருதப்படுமெனறும், அவ்வட்டகத்துள ஒன்று உணமை நெறி விளக்கம் என்றும் காணப்படுகின்ற மையை யாவரும் உணர்வர்.

இத்தத்துவ நாதர் இருபா இருபதுக்கு எழுதிய உரை காலத்தால் மிகவும் பழமையான உரையாகும். இவ்வுரைக்கு முன்னரே இந்நூலுக்கு ஒரு பழைய உரை இருந்திருக்க வேண்டுமென்பது இவர் உரை யிலிருந்து தெரிகிறது. தத்துவநாதர் தம் உரையில, முன்னோர் இயற்றிய பல சாத்திர நூல்களிலிருந்து மேற்கோள்களபலகொடுத்திருக்கிறார். அநநூல்களுள சில இப்போது கிடைக்கவில்லை அதனால, பழைய நூல்களின் பெயர்கள சிலவற்றை அறிந்து கொளள வும் இவா உரை துணை செய்கிறது. இரா.ச

**தத்துவப் பிரகாசம்:** தத்துவப்பிரகாசம் என்னும் நூல் சீகாழித் தத்துவப் பிரகாசரால இயற்றப் பெற்றது. இநநூலாசிரியா சீகாழிச் சிற்றம் பல நாடிகளின் மாணவர்; இவர் காலம் கி.பி 14-ஆம் நூற்றாணடு, இந்நூலுக்கு இவர் மாணவரே உரை செய்திருக்கிறார். தத்துவம் என்பது தத்துவம் (பாசம்), ஆன்மா, சிவன் எனனும் மூன்று பொருள் களையும் குறிக்கும். ஆகவே, இமமுப்பொருள்களை யும் விளக்கவல்லது இந்நூல எனபது தெளிவாம்; மேலும் சரியை, கிரியை, யோகம், ஞானம பற்றி விளக்கிக் கூறவல்ல சிறந்த நூலாகவும் திகழகிறது. இந்நூலில் 338 திருவிருத்தங்கள் உள்ளன. முதல 304 பாக்கள் எண்சீர்க்கழி நெடிலடி ஆசிரிய விருத்தங் களாகவும் எஞ்சியவை அறுசீர்க்கழி நெடிலடி விருத்தங்களாகவுமுள்ளன. இறுதியாக நூற்சிறப்புப் பாயிரம் என ஒரு செய்யுளை உரையாசிரியர் பாடிச் சேர்த்திருக்கிறார். முதலாவது பாயிரத்தில் கடவுள வாழ்த்துச் செய்யுளகளும் அவையடக்கமுமாக எட்டுச் செய்யுளகள உள்ளன. இரண்டாவது அளவை எனும பகுதியில் 9 பாடல்களில் 7 அளவைகளைப் பறறிக் குறிப்பிடுகிறார். பின்னர், பதி இலக்கணம் 19 பாடல்களிலும்,பசு இலககணம் 5 பாடலகளிலும்,பாச இலக்கணம் 16 பாடல்களிலும் கூறப் பெறுகின்றன. பின் பொதுவிதி என சரியையிற்சரியை, சரியையிற கிரியை, சரியையில் யோகம, சரியையில் ஞானம், கிரியையில் சரியை, கிரியையில் கிரியை, கிரியையில் யோகம், கிரியையில் ஞானம், யோகத்தில் சரியை, யோகத்தில் கிரியை, யோகத்தில் யோகம், யோகத் தில் ஞானம்,ஞானத்தில் சரியை, ஞானத்தில் கிரியை, ஞானத்தில் யோகம், ஞானத்தில் ஞானம் என 16 பிரிவுகளைப் பற்றி 111 பாடல்களில் விளக்கியுளளாா். அக்கினி காரியம், போசனவிதி, நிவேதன விதி, தீககை விதி, ஆசாரியின் இலக்கணம், சீடன இலக் கணம், பூசை விதிகள், பல்வகைப் பட்ட தீககை முறைகள, அபிடேக விதி, அந்தியேட்டி விதிகள் முதலியன வெல்லாம் கிரியைப் பகுதிகளில மிகவும் சிறப்பாக விளக்கம பெற்றுள்ளன. அடுதது ஞானத்தில ஞானப் பகுதியில மேலும் 74 பாடல்களில பலவேறு வகையான சமயக் கொளகைகளையும் அவற்றிற் குரிய மறுப்புகளையும் காணலாம். பினனர் 30 அவ தாரம் சொலலப் பெறுகிறது. அவறறில் சீவன முத்தி நிலையில் இருக்கும் ஆன்மா அந்நிலையில் நினறு வழுவிய காலத்து மீணடும் அநநிலைகருச செலலத் தலைப்படுஙகால் முப்பொருள்களின் உணமை நிலையை உணர்ந்து மேல் நோககிச் செல்லும நெறியில் உள்ள30 படிமுறைகள் சொல்லப் பெறுகினறன. இவை சுத்தாவத்தையில் நிகழ்வுறும். பின நிட்டை வகை கள கூறப பெறுகினறன. ஞானி ஞான நிட்டை யிலிருக்கும் நிலையும கூறப் பெறுகிறது. அவருக்கு வினைப்பயன் ஏறாது. ஆதலின் சிவயோகத்து அழுந்துதலால பாச நீக்கம் கிட்டும பாசம் நீங்குவ தால மலம் நீங்கிச் சிவப்பேறு சித்திக்கும. இறுதி யாகச் சீவன் முத்தி நிலையும் குருலிங்க சங்கம வழி பாடும் கூறுவதுடன இந்நூல் முடிகினறது. இந்நூல் நந்தியருள நூல, சிவஞான போதம, சிவஞான சித் தியார், சிவப்பிரகாசம், ஆகம நூல்கள் என்பவற் றையே முதனூல்களாகக் கொணடு அவற்றின் வழி நூலாக விளஙகுகின்றது. சந்தான ஆசாரியர்களுக்குப் பின்னா ஏற்பட்ட சிறந்த சைவ சித்தாந்த சாத்திர நூலகளுள் தலையிடத்தை பெறும் தகுதி வாய்ந்த வறறுள இந்நூலும ஒன்று என்பது தெளிவு. 'தனனை அறிவிககும் தற்போதம் மாற்று விக்கும் அனன அருள் ஆனந்தம் ஆற்றுவிக்கும மன்னிய சீர்த் தத்துவப்ரகாசனியல சணபையார் கோன் உரைத்த தத்துவப்ர காச நூல் தான்' என்னும் நூற் சிறப்புப் பாயிரமே இநநூலின் பெருமையை நன்கு விளக்க வல்லதாயுளது. இரா.ச.

**தத்துவப் பிரகாசர்:** இவர் சீர்காழிச் சிற்றம் பல நாடிகளின் மாணவர். தத்துவப் பிரகாசம் என் னும் ஒரு சிறந்த சாத்திர நூல் இயற்றியவர். தத்துவப் பிரகாசர் எனனும் பெயர் வாய்ந்தவர்கள

நால்வர் இருந்தனர் என்றும் அவர்களுள் தத்துவப் பிரகாசம் இயற்றியவரைக் காழித் தத்துவப் பிரகாசர் என்று அழைக்கும் மரபுண்டு என்றும் நூல்கள் வாயிலாய் அறிய முடிகின்றது.

தத்துவப் பிரகாசம் என்னும நூல் சரியை, கிரியை, யோகம், ஞானம் என்னும் நான்கு பாதங்களையும் விளக்கிக் கூறுகிறது. மேலும், சரியையில் சரியை, சரியையில் கிரியை, சரியையில் யோகம், சரியையில் ஞானம் என்றவாறு ஒவ்வொன்றும் நன் நான்கு பாதங்களாகப் பிரிக்கப்பட்டு 16 உட்பாதங் களையுடையதாய் 337 திருவிருத்தங்களைக் கொண்டதாய் விளங்குகிறது. பரசமய உட்சமய பேதங்கள் 48 என்பதனையும் சித்தாந்த பேதம் 8 என்பதின் விளக்கங்களையும் இந்நூலில் காணலாம். சரியை, கிரியை, யோக பாதங்களை விளக்கிக் கூறும் தமிழ் நூல்களுள இது சிறந்த இடத்தைப் பெற்றுளது. யோகப் பிரிவில் 108 ஆசனங்கள் பற்றியும் 108 வகை பிராணா யாமங்கள பற்றியும் விளக்கங்கள் காணப்படுகின்றன. 'தத்துவங்கட்கும் ஆன்மாவுக்கும் சிவனுக்கும் தத்துவம் என்ற பெயராதலால் நூலின் பெயர் தத்துவப் பிரகாசம் ஆயிற்று' என்று இநநூலின் உரையாசிரியர் குறிப்பிட்டிருப்பது மிகவும் உணரத் தக்கது.

தத்துவப் பிரகாசரின் மாணாக்கரே இந்நூலுக்கு உரை இயற்றியிருக்கிறார் என்று ஆராய்ச்சியாளர் கருதுகின்றனர். இந் நூலைத் தவிர 'துகளறு போதக் கட்டளை' என்னும் நூலையும் தத்துவப் பிரகாசரே இயற்றினார் எனறும் தெரிகிறது. இவ்வாசிரியர் காலம் கி.பி. 14 ஆம் நூற்றாணடின் இறுதி என அறிஞர்கள் குறிப்பிடுகினறனர். இரா.ச.

**தத்துவ போதகர்:** தமிழ் உரைநடையின தந்தை, கீழ்திசை மொழிகளைக் கற்றறிந்த முதல் ஐரோப்பியர் எனவெல்லாம் பாராட்டப் பெறும் தத்துவ போதகரது இயற்பெயர் இராபர்ட்-டி- நோபிலி (Robert De Nobili) ஆகும். இத்தாலி நாட்டில் கி.பி. 1577 ஆம் ஆணடில் தோன்றியவா. கி.பி. 1596 -ஆம் ஆண்டில் குருமடத்தில் சேர்ந்தார். கி பி. 1603 -இல் சேசு சபைக் குருவாகத் திருநிலைப் படுத்தபபட்டார். தம் திருமறைப் பணிக்குரிய களமாக இந்தியா வைத் தேர்ந்த கி.பி. 1605-ஆம் ஆண்டு மே 20-ஆம நாள் கோவாவை அடைந்தார். அஙகிருந்து கொச சிக்கு வந்து கன்னியாகுமரி வழியாகக் கிழக்குக் கடற்கரையை அடைந்தார். பினனர் மதுரைககு வநது அதனைத் தம் பணித்தளமாக ஆக்கிக் கொண்டார்.

கிறித்தவ மறைபரப்புப் பணியில் புதிய முறையைக் கொணர முறபட்டார். சமய வழிபாடு நாட்டுப் பண்பாட்டியலுக்கு ஏற்றதாக அமையவேணடும் என எண்ணிச் செயற்பட்டார். தமிழக மரபிற்கொபபக் கிறித்தவ வழிபாட்டு முறைகளை மாற்றிக் கொள வதே பிறரைத் தம் சமயத்தைத்தழுவச் செய்வதற்குரிய வழி எனக் கண்டார்.

தமக்கென உரிய உடைகளைக் களைந்துவிட்டு இந்தியத் துறவியர்போல் தோன்றினார். கையிலே கோல், கமணடலம், மார்பிலே ஐம்புரி நூல், தலையிலே குடுமி, காலிலே பாதக் குறடு, நெற்றியிலே சந்தனமும் திருநீறுமாகக காட்சியளித்தார். இவ் வகை மாற்றத்திற்கு அவர் தம் மேலாண்மையர் முதலில் எதிர்ப்புகள் தெரிவித்தாலும் இறுதியாக அவர் போக்கில் அவரை விட்டுவிட்டனர். வீரமா முனிவர் போன்றோர் தமிழ் மரபிறகு ஏறறாற போன்று தம்மை மாற்றிக் கொள்ள இவரே முனனோடி.

திருச்சி, தஞ்சை, சேலம், சத்தியமங்கலம் ஆகிய இடங்கட்குச் சென்று பணியாற்றியுள்ளார். இருமுறை ஆட்சியாளரால் சிறைத்தணடனை பெற்றுளளார். முதிர்ந்த வயதில் கண்ணொளி குன்றியது. யாழ்ப் பாணத்திற்கு அனுப்பிவைக்கப்பட்டார். பின்னர் மைலாப்பூருக்கு வந்து எட்டாணடுகள் வாழந்தார். இவர் கி.பி. 1656-இல் மறைநதார்.

தம் சமயக் கொள்கைகளை விளககியுரைத்தல, பிற சமயக் கொள்கைகளை மறுத்துரைத்தல் என்னும் இரு முறைகளை மேற்கொண்டு இவர் நூல் களைப் படைத்துள்ளார். அவற்றுள் ஞானோபதேச காண்டம், ஆத்தும நிருணயம், புனாசென்ம ஆட்சேபம், தூடண திக்காரம், நித்திய சீவன சல்லாபம், கடவுள நிருணயம், ஞானோபதேசக் குறிப்பிடம், சின்னக் குறிப்பிடம், பிரசங்கங்கள், தேவ மாதா சரித்திரம், சேசுநாதர் சரித்திரம் ஆகியவை அச்சில் வந்துள்ளன. ஞானதீபிகை, ஞானசஙசேபம், பேதகப் பரீட்சை, விசுவாச சல்லாபம், உபதேச சல்லாபம், பத்துச்சல்லாபம், சிலுவையின் விசேட சல்லாபம், மநதிர மாலை எனனும் இவாதம படைப்புகள் கிடைத்தில. வட மொழியிலும், தெலுங்கிலும சிறந்த புலமை பெற்று அவற்றிலும் சில நூல்களைப் படைத்திருப்பதாகத தெரிகிறது சூ.இ.

**தத்துவமசி:** சாந்தோக்கிய உபநிடதத்தில் 'தத்துவமசி' எனற பரதத்துவத்தை விளக்கும் ஒரு மகாவாக்கியம் காணப்படுகிறது. உத்தாலக முனிவா தம் மகன் சுவேதகேதுவிற்கு இதை உபதேசித்தார். ஆதியில், இரண்டற்ற நிலையில சத்து எனபதே இருந்தது. 'நான் பலவாக வேண்டும்' என அது எணணிற்று. சத்திலிருந்து நெருப்பும், நெருப்பிலிருநது நீரும், அதிலிருந்து உணவும் தோன்றின. இவை பல

வேறு வகையில் ஒன்று சேர்ந்து நாம, உருபமான இவ்வுலகைத் தோற்றுவித்தன. மனம், பிராணன், வாக்கு முதல் எல்லாச் சடப்பொருள்களும், உயிர்களும் சத்திலிருந்தே தோன்றின. உறங்கும்போது உயிர்கள் அடங்கிச் சத்திற்கே திரும்புகின்றன. இவ்வாறு ஒன்றான பரம்பொருளே பலவற்றின் அடிப்படையாகவும், மூலமாயும் உள்ளது எனக் கூறிய உத்தாலகர், இறுதியில் சுவேதகேதுவை விளித்து, 'ச ஆத்மா தத்துவமசி (நீ அதுவாக இருக்கிறாய்) என்றார்.

தத்துவமசி என்னும் இச்சொல்லை தத், த்வம், அசி என்று பகுத்து, தத் என்னும் பதம் படைத்தவனான மாயையுடன் கூடிய கடவுளைக் குறிப்பதாகவும், த்வம், உடலுடன் கூடிய சீவனைக் குறிப்பதாகவும் ஆதி சங்கரர் விளக்கியுள்ளார். பிரம்மம் சத்தியமானது, உலகம் மாயையானது. சீவன் பிரம்மம் அன்றி வேறல்லன் என்பது சங்கரரின் கூற்று. வியவகார நிலையில் சீவனும் அவனைப் படைத்த கடவுளும் ஒன்றெனக் கருதமுடியாது. சீவன், உபாதிகளை நீக்கினால், தத் அல்லது அந்த என்னும் பதம் மாயையுடன் கூடிய கடவுளின் அடிப்படையான பிரம்மத்தைக் குறிக்கிறது. எவ்வாறு கயிறு பாம்பாகத் தோன்றுகிறதோ அவ்வாறு பிரம்மம் சீவனாகத் தோன்றுகிறது. தூரத்திலுள்ளதைக் குறிக்கும் சொல்லான 'தத்' அருகிலுள்ளதைக் குறிக்கும் த்வம் என்ற சொல்லுடன் ஐக்கியப்படுத்தப்பட்டு இரண்டற்ற பரம்பொருளான பிரம்மத்தை விளக்குகிறது என்பது சங்கரரின் கூற்று.

இராமானுசரின் விசிட்டாத் துவைதத்தில், 'தத்' என்பது கடவுளைக் குறிக்கும். 'த்வம்' என்பது சத்து (உயிர்கள்), சடம் (பிரகிருதி) ஆகியவற்றை உடலாகக் கொண்ட உயிரான கடவுள். எனப் பொருள்படும். கடவுள் ஒன்றே, அவர் அந்தர்யாமியாக உள்ளேயுமிருக்கிறார். வெளியிலுமிருக்கிறார் என இராமானுசர் தத்துவமசி எனும் மகாவாக்கியத்தின் பொருளை, விளக்குகிறார்.

மத்துவர், 'ச ஆத்மா தத்துவமசி' என்பதை ச ஆத்மா அதத்துவமசி எனப்பகுத்து கடவுளும் சீவனும் ஒன்றல்ல, வேறு என்று துவைத வாதத்தை விளக்குகிறார். இ.வி.ச.

**தத்துவராயர்:** இவர் கி.பி.15-ஆம் நூற்றாண்டின் பிற்பகுதியில் வாழ்ந்து வேதாந்த பரமாகத் தமிழில் பலநூல்களை இயற்றியவர். வைதிக சைவ பிராமண குலத்தினர். சொரூபானந்தர் தத்துவராயர் ஆகிய இருவரும் அம்மான் மருமகன் முறையினர். இருவரும் தக்க குருவை நாடிப் புறப்பட்டனர். பல காலம் முயன்றும் தக்கவர் கிடைக்கவில்லை. ஆதலின், இருவரும் பிரிந்து வெவ்வேறு திசை நோக்கிச் சென்றர். தென்பால் வந்த சொரூபானந்தருக்குத் திருப்பைஞ்ஞீலி அருகிலுள்ள கோவர்த்தம் என்னும் ஊரில் சிவப்பிரகாச சுவாமிகள் என்ற சைவ சித்தாந்தி தக்க குருவாகக் கிடைத்தார். அவரிடம் ஞானோபதேசம் பெற்று அங்கேயே நிட்டையிலிருந்தார். வடக்கே பிரிந்து சென்ற தத்துவராயர் திரும்பித் தெற்கே வந்தார். சொரூபானந்தரைக் கண்டு அவரையே குருவாகக் கொண்டார். தத்துவராயர் பாடுவதில் வல்லவர். ஆதலின், சொரூபானந்தர் தத்துவராயரைக் கொண்டு பல நூல்கள் தமிழுலகுக்குக் கிடைக்க வழி செய்தார். தத்துவராயர் அடங்கன் முறை என்பன 18 நூல்கள் அடங்கியவை. அவை வேதாந்தக் கொள்கையுடையவை. அவை யாவன. 1. திருத்தாலாட்டு, 2. பிள்ளைத் திருநாமம், 3. வெண்பா அந்தாதி, 4. கலித்துறை அந்தாதி, 5. சின்னப் பூ வெண்பா, 6. தசாங்கம், 7. இரட்டை மணிமாலை, 8. மும்மணிக்கோவை, 9. நான்மணி மாலை, 10. கலிப்பா, 11. ஞான விநோதன் கலம்பகம், 12. உலா, 13. சிலேடை யுலா, 14. நெஞ்சு விடுதூது, 15. கலிமடல், 16. அஞ்ஞவதைப் பரணி, 17. மோகவதைப் பரணி, 18. அமிர்த சாரம் என்பனவாம்.

மேலும் சிவப்பிரகாச வெண்பா, தத்துவாமிர்தம் என்னும் இரு நூல்களையும் இயற்றியுள்ளார். தம் குருநாதர் சொரூபானந்தர் மீது 138 தலைப்புகளில் 1140 பாடல்களைக் கொண்ட தத்துவராயர் பாடுதுறை என்னும் நூலையும் பாடியிருக்கிறார். மேலும், ஈசுரகீதை, பிரமகீதை, சசிவன்ன போதம் என்னும் மொழி பெயர்ப்பு நூல்களும் பெருந்திரட்டு, குறுந்திரட்டு என்னும் திரட்டு நூல்களும் தத்துவராயரால் செய்யப்பட்டவை. வேதாந்தக் கொள்கையைப் பரப்ப இவர் நூல்கள் மிகவும் இன்றியமையாதனவாய் இருக்கின்றன. கடைசியாக இவர் சிதம்பரத்திற்கும் விருத்தாசலத்திற்கும் இடையிலுள்ள எறும்பூரில் ஆடி மாதம் சனிக்கிழமை சதய நட்சத்திரத்தில் பிரதமை திதியில் சமாதியானார். இரா.ச.

**தத்துவ வரலாறு:** 'தத்துவம்' என்னும் சொல் 'ஒன்றின் மெய்த்தன்மை' என்னும் பொருளைத் தரும். 'அது என்னும் சுட்டுச் சொல் சமயந்தோறும் வேறு வேறு பொருளைக் குறிக்கும். ஆகவே தத்துவம் என்னும் குறியீடு பொருள்களின் தன்மையை ஆராய்ந்து மெய்ம்மையினை நிலைநாட்டும் அறிவுக்கலையைக் குறிக்கும். இச்சொற்கு இணையாக மெய்ப்பொருள், சமயக் கணக்கு என்ற குறியீடுகள் தமிழ் இலக்கியங்களில் காணப்படுகின்றன.

இந்தியாவில் தொன்மையிலிருந்தே தத்துவ நெறி தழைத்திருந்தது. வேதத்தின் முதல் பகுதியில் தத்துவத்தின் கூறுகள காணப்பட, வேதாந்தமாகிய வேதத்தின் இறுதிப் பகுதியாகிய உபநிடதங்களில் தத்துவம் செழித்திருந்தது. இந்தியாவில் தத்துவமும் சமயமும் பிரிக்க இயலாத் தொடர்போடு தோன்றி வளர்ந்து வருகிறது எனலாம். கடோப நிடதத்தில் யமனுக்கும் நசிகேதனுக்கும் நடக்கும் உரையாடல், தத்துவத்தின் தோற்றம், வளர்சசிபற்றிக் குறிப்பாகக் கூறுகிறது எனலாம். யமன் நசிகேதனைத் தம் இடத்தில் மூனறு நாள்கள காக்க வைத்ததால் மூன்று வரங்கள் நசிகேதனுக்குக் கொடுக்கிறார். முதல் வரம் தன் தந்தையின் நலத்துக்காகக் கேட்டு, அடுத்த வரங்களை அழியா உண்மையின் இயல்பை அறிந்துகொள்ளப் பயன்படுத்துகிறான். யமன் நசிகேதனுக்கு அழியா உண்மையை அறிவதற்குப் பதிலாக உலகத்தில் கிடைக்கும் பல்வகை இன்பங்களைப் பெறுமாறு தெரிவிக்கிறான். நசிகேதன் வைராக்கியத்தோடு உலக இன்பங்களை மறுத்து, அழியா உண்மையை மட்டுமே தனக்கு அறிவுறுதத வேண்டும் என்று பணிவுடன் வேணடுகிறான். தத்துவத்தை அல்லது மெய்ப் பொருளை ஒருவன் அறிய வேண்டுமாயின் நிலையாத இன்பஙகளைத துறத்தல் மூலம் பெற இயலும் என்பதை இந்நிகழ்சசிநசிகேதன் மூலம் மக்களுக்கு அறிவிக்கிறது. மேலும் செம்பொருள் மூலம் அழியா வாழ்வு பெறல் (சிரேயசு-the Good), அவ்வப்போது கிடைக்கும் இன்பம் பெறல் (பிரேயசு-the Pleasant) பற்றி உபநிடதத்தில் வரும் செய்தியும் இவ்வுண்மையை நினைவூட்டுகிறது. உபநிடதங்கள், பிரம்ம சூத்திரம், பகவத்கீதை என்னும் அடிப்படை நூல்களில் இவ்வாறு வளர்ந்த மெய்ப்பொருள், நாயன்மார் காலத்தில முதன்மை பெறுகிறது. இறைவன் தத்துவஙகளாகவும் (மூலப் பொருள்களாகவும்), அவற்றைக் கடந்தவனாகவும், தத்துவங்களை அறிந்த அடியார்களால் தொழப்படுபவனாகவும் திகழ்கின்றான் என்பதைத் 'தத்துவங்கள் ஆனான் தனனை' (609), 'தாயவன்காண் உலகுக்கோர் தன்னொப்பில்லாத் தத்துவன்காண் உத்தமன் காண்' (481) 'தத்துவத்து அடியார் தொழும் பெம்மான் திறம்' (989) எனவரும் அப்பர்பாடலகள் தெளிவுறுத்தும். இந்திய நாட்டில் தோன்றிய தத்துவ வளர்சசியைக் காட்சிப் பொருள் உண்மைநெறி (Realism), கருத்துப் பொருள் உண்மை நெறி (Idealism), ஒருபொருள் உண்மைநெறி (Monism) என மூவகையில் வைத்து விளக்கலாம்

**காட்சிப்பொருள் உண்மைநெறி:** மக்கள் வாழும் உலகின் தோற்றமும் அமைப்பும் குறித்தும், இவ்வுலகில் வாழும் உயிர்கள குறித்தும், உலகு, உயிர்கட்கு அப்பால் உள்ள பொருள் பற்றியும் இந்தியநாட்டுத்தத்துவஙகள் ஆய்ந்துள்ளன. முதலில் இம்முயறசியில் ஈடுபட்ட சாஙகிய தத்துவம், மூலப் பகுதி, புருடன என்னும் இரணடு பொருள்கள் என்றுமுள்ள தத்துவங்கள் (மெய்ப்பொருள்கள்) என்று கொண்டது. அவற்றை யாரும் உண்டாக்கவில்லை. மூலப்பகுதி (பிரகிருதி) என்னும் விதைத் தத்துவத்திலிருந்து முளைத்தது உளக்கூறு, உடற்கூறுகளையுடைய உலகு என்றும், இவ்விரு கூறுகளும் ஆன்மாக்களை ஆதாரமாகக் கொண்டுள்ளன என்றும் சாங்கியர் நம்பினர். 'இவ்வாறு உள்ள பிரகிருதியின் தத்துவங்கள் தான் அல்லன் என்னும் மெய்யுணர்வு தலைப்பட்டு, அவற்றின் நீங்கிக்கொள்ளும் பயிற்சி, வீடு பேற்றினைப் பயக்கும் என்றனர் சாங்கியர். பிரகிருதியினின்றும் நீங்கிய புருடனின் நிலைதான் வீடு பேறு. பதஞ்சலிவகுத்த யோகம்சேச்சுர சாங்கியம் எனப்படும். சேச்சுர சாங்கியம்-ஈசுவரன் உளன் என்னும் கொள்கையுடையது.

சேச்சுர சாங்கியம், வைணவம் என்பவை அடுத்தடுத்து வருகின்றன. இக்கொள்கைகளின் படி உலகு, உயிர்கட்கு மேலாக, இறைவன் என்னும் பூரணப் பொருளாகிய தத்துவம் உண்டு. உலகினின்றும் தனித்துக் கொள்வது வீடு பேறு எனச் சாங்கியர் கொண்டனர், தனித்துக்கொணட உயிர் இறைவனிடம் கலத்தல்தான் வீடுபேறு என்று வைணவர் துணிந்தனர். இவற்றை அடுத்து, சிந்தாந்த சைவர்கள் உலகு என்பது முப்பத்தாறு தத்துவங்களின் உள்ளடக்கம் என்றனர். உயிர்களின் ஆணவ மலத்தினை அவித்தற்பொருட்டுப்பிரகிருதியாகிய மூல தத்துவத்தினின்றும் (முதற் காரணம்) தன் சக்தியைத் துணைக் காரணமாகவும், தானே நிமித்த காரணனாகவும் நின்று, எண்ண அளவானே படைத்தல், காத்தல், அழித்தல், மறைத்தல், அருளல் என்னும் உயிர்கட்குப் போரின்பத்தினைப் பரம்பொருள் அளிககிறான் எனச் சைவ சித்தாந்தம் செப்புகிறது.

சாங்கியரைப் போல முற்கால நியாய வைசேடிகரும் இறைவனைக் கொள்ளாமல் பொருள்களை ஏழாகப் பிரித்து விளக்கினர். இங்ஙனம் கூறப்பெற்ற சாங்கியர், யோகர், வைணவர், சைவர் நியாய வைசேடிகர் என்னும் தத்துவ வாதியர் உலகினைப் பொய் என்றோ கற்பனை என்றோ கருதிலர். இவர்கள் கூறிய பொருள்கள எலலாம் மெய் என்று கொண்டதாலும், உலகம் உள்பொருளிலிருந்து தோன்றியது என்று கொண்டதாலும் இவர்கள் காட்சிப்பொருள் உண்மை வாதிகள் (Realists) எனப்படுவர். சமணர்களும் இறை உணமை கொள்ளாத

பொருளுண்மை வாதிகளே. தேர வாத பௌத்தருள் ஒரு சாரார் புறஉலகினையும், அதன் பகுதிகளாகிய தருமங்களின் இருப்பினையும் உள்பொருளாகக் கொள்வதால இவர்களும் காட்சிப் பொருள் முதல் வாதிகளே.

**கருத்துப்பொருள உண்மை நெறி:** பௌத்தர்கள் உலகப் பொருள்களை எல்லாம் தாதுக்கள் அல்லது தருமங்கள் எனப்படும் கூறுகளில் அடக்கி, உருவம், வேதனை, சஞ்சை, சம்சுகாரம், விஞ்ஞானம் என ஐந்து கந்தங்களாக விளக்குவர். யோகாசாரர்கள் உள்ளத்தின் விரிவுதான் உலகாகக் காட்சியளிக்கிறது என்றும், உள்ளமாகிய விஞ்ஞானக் கந்தமே மெய்ப் பொருள் என்றும் கருதினர். ஆகவே இவர்களைக் கருத்து முதல் வாதிகள என்பர்.

**ஒரு பொருள் உண்மை நெறி:** மண்ணினின்றும் தோன்றிய பாண்டங்கள் மணணின் வேறாகாதவாறு போல, ஈசுவர தத்துவத்தினின்று தோனறிய உலகும், அதில் பலவாகக் காட்சி தரும் உயிர்களும் ஈசுவர னின் வேறல்ல என்பர் வேதாந்திகள். அவிச்சை காரணமாக இவற்றை இரண்டாகவும், இரண்டின் மிக்கதாகவும் காண்கினறனர். மிக மேலான ஞானம கிட்டியதும் எல்லாப் பொருளும் ஈசுர சொரூபமே என்னும் பேருணமை புலப்படும். இவ்வுணர்வு தோனறுவதுதான் வீடுபேறு. இவ்வகையில இந்தியா வில் காட்சிப் பொருள உணமை நெறி, கருத்துப் பொருள் உணமை நெறி, ஒருபொருள் உணமை நெறி என்னும் மூவகையில் தத்துவம் விளக்கம் பெறு சிறது.

மேல்நாட்டில் தத்துவம 'ஞானத்தை அறியும் நாட்டம்' எனனும் வகையில சாகரட்டீசு, பிளேட்டோ, அரிசுடாட்டில எனனும் தத்துவ மேதைகள மூலம் தோன்றியது. சாக்ரட்டீசின கருத்துகள அவர் மாண வர் பிளேட்டோவின் மூலம் கிடைககின்றன. கி மு.407-இல் சாக்ரட்டீசைப் பிளேட்டோ சந்தித்து, சாக்ரட் டீசைப் பினபறறுகிறார். கிரேக்க தத்துவம் கிரேகக சமயத் தத்துவத்திலிருந்து தோனறியது என்று தத்துவ வரலாறு (A History of Philosophy) என்னும நூலில் பிராங் திலலி (Frank Thilly) என்னும் ஆசிரியா விளக்கு கிறார். கிரேகக சமயத்துக்கும் ததுவத்துக்கும நெருங்கிய தொடர்பு உணடு. கிரேக்க சமயத்தின் இரு பகுதிகள ஓமர் (Homer) என்னும கவி விளக்குவது போனறு முதற் பகுதி தெய்வங்கள் மனித நலததில் நாட்டமுடையவர்களாகக் காட்டப் பெறுதல், இரண டாம பகுதி கி.மு. 6-ஆம் நூற்றாண்டில் ஏற்பட்ட கிரேக்க சமயததின புனா எழுச்சி ஆகியவை ஆகும்.

சீயசு (Zeus) எனனும் தெய்வம் கிரேக்க தெய் வங்களுள் முதன்மையானதாக வளர்சசி பெறுதல் கிரேக்கத் தத்துவத்திற்கும் சமயததுககும் உள்ள உற வின் வெளிப்பாடாக விளங்குகிறது. ஓமர் இலக்கியத்தில் பிற தெய்வஙகளைப் போன்று சீயசும் விதிக்குட் படுவதாக விளககப்படுகிறது. சில நூறறாண்டுகளுக் குப் பிறகு ஆசிலசு (Acshylus) எழுதிய நாடகங்களில் விதி என்பதே சீயசு தெய்வததின் எணணத்தின் வெளிப்பாடாக வருகிறது. இது இந்தியத்தத்துவததில வினை என்பது தனிப்பட்ட தத்துவமாகச சிலர் கொள்கைகளில் தோனறி, சைவம் போன்ற சமயங் களில் கடவுள் உயிருக்கு உதவி செய்யும் வழியாக வளர்ச்சியடைவதற்கு ஒத்து உள்ளது ஒலிம்பிக்குத் தெயவங்களில் காணப்படும சமயக் கொளகையும் தத்துவத்தால் செழிப்புப் பெறுகிறது. ஓமர் இலக்கி யத்தில் தெய்வங்கள் விதிக்குட்பட்டவை எனனும கருத்து, முதல் கிரேக்க தத்துவத்தின் தன்மையை நிருணயிககிறது. சீயசு எனனும் தெயவம் பற்றிய கொள்கை, பிளேட்டோ, அரிசுடாட்டில் ஆகியவர் களின் ஒரு தெய்வக் கடவுள் கொள்கைக்கு வழி வகுக்கிறது எனலாம்.

மேலை நாட்டுத் தத்துவத்துக்குக் கிரேக்க தத்துவமும் எபிரேயக் கருததுகளும் (Hebrew) அடிப் படையாக அமைகின்றன. பழைய ஏற்பாடு எனக் கிறித்தவாகளால் கருதப்படும் எபிரேய பைபிள் (Hebrew Bible) யூத, கிறித்தவ, இசுலாம் ' ஆகிய மூன்று சமயங்களுககும் அடிப்படை நூலாக வேதம் போலக் கொள்ளப்படுகிறது. பழைய ஏற்பாடு இந்து சமயத்தவர்களது வேதம் போல உள்ளது. இந்து சமயப் பிரிவான சைவர்க்கு வேதததின வெளிப்பாடு 12 திருமுறைகள், 14 சித்தாந்த சாத்திரங்கள ஆகிய தமிழ் நூல்களில் காணப்படும் கருத்துகளில் நிறை வடைகிறது எனலாம். இதே போன்ற மற்றொரு இந்து சமயப் பிரிவினரான வைணவர்கட்கு வேதத்தின் வெளிப்பாடு ஆழ்வார்கள, இராமானுசர் போன்ற ஆசாரியர் அருளிய நூலகளில நிறைவுறுகிறது. ஆயி னும் சைவா, வைணவர் ஆகிய இருவர்க்கும் வேதம் பொதுவான வெளிப்பாடு. இவ்வகையில இவ்வேதம் போன்று, பழைய ஏற்பாட்டின் விளககமாகவும் நிறைவாகவும் இயேசுவைப் பற்றி விளக்கும் புதிய ஏற்பாடு, அமைகிறது என்பர். இசுலாமியர் இதே பழைய ஏற்பாட்டின் நிறைவாக அமைவது கடவு ளின் இறுதித் தூதரான முகமது நபிக்குக் குர்ஆன் மூலம் வெளிப்பட்ட சமய அனுபவம் ஆகும் என்பர். இவ்வகையில் 'மேல்நாட்டுத் தத்துவத்தில் பழைய ஏற்பாடு யூத, கிறித்தவ, இசுலாம் சமயங்களுக்கும் அடிப்படை நூலாக அமைகிறது. ஆயினும், பழைய ஏற்பாட்டின் விளக்கமாக இம் முச்சமயத்தினரும்

தங்கள் தங்கள் சமய நூல்களையும் பழைய ஏற்பாட்டுடன் கொள்வர்.

மேலை நாட்டுத தத்துவத்தைக் கிரேக்க தத்துவம், இடைக்காலத் தத்துவம்,இக்கால தத்துவம் என மூன்று வகையாக அமைக்கலாம், கிரேக்கத் தத்துவத்தில் சாக்ரட்டீசு, அவர்மாணவர் பிளேட்டோ, அரிசுடாட்டில் ஆகியோருடன் பிதகோரசு, எபிகூரசு முதலியவர்களையும் கருதலாம். அறிவுத் துறைகளின் பல்வகைப் பிரிவுகளுக்கும் அரிசுடாட்டில் முன்னோடியாகக் கருதப்படுகிறார். இடைக்காலத் தத்துவத்தில் கிறித்தவமதம் தேவாலயக் குருமார்களால் வளர்க்கப்படுகிறது. அகசுதீன், தீமையின் தோற்றம், மனிதனுடைய சுயாதீனத்தின் தனமை வரலாற்றின் தத்துவம் ஆகியவை பற்றி விளக்குகிறார். ஆன்செல்ம் (St. Anselm)இறைவன் இருப்புக்கான காரணங்களை ஆய்வு செய்கிறார். இறைவன் இருப்பை அறிவு பூர்வமாக விளக்குவதில மனிதனின் பகுத்தறிவை எந்த அளவுக்குப் பயன்படுத்தலாம் என்பதில் கிறித்தவககுருமார்களிடை வேற்றுமை காணப்படுகிறது. தாமசு அக்குவீனசு (St. Thomas Aqvinas) அரிசுடாட்டிலின் தததுவத்தைப் பின்பற்றிக் கிறித்துவ மதக் கொள்கைகளைப் பகுத்தறிவுக் கேற்ப விளக்குகின்றார்.

இக்காலதததுவம் என்னும் பகுதியில் ஐரோப்பாவில் மறுமலர்சசியை ஒட்டி எழுந்த அறிவு வழிக் கொள்கை, அனுபவ வழிககொள்கை, இவ்விரு கொள்கைகளையும் இணைக்கும் காண்டின தத்துவ ஆய்வுக் கொள்கை என்பவைகளைக் குறிக்கலாம். ஐரோப்பாவில் இடைக்காலத்தில் ஆணைக்கு எதிராக எழுந்த மறுமலர்ச்சிக் கொள்கை, கிரேக்க தத்துவ வாதிகளான பிளேட்டோ, அரிசுடாட்டில் என்னும் இவர்களின் அடிச் சுவட்டைப் பின்பற்றித் தத்துவத்தைப் பகுத்தறிவுககேற்ப விளக்க வேண்டும் என்று வற்புறுத்தியது பிரான்சிக பேகன் (Francis Bacon) விஞ்ஞானத்தில் சீர்திருத்தத்தை ஏற்படுத்தித் தொகுப்பு வழி முறைக்கு (Inductive Method) அதாவது தனித்தனியே ஆய்ந்த தனியன்களிடமிருந்து பொதுவான உணமைக்குச் செல்லும் முறைக்குச்சிறப்பு அளித்தார்.தேகார்ட்டே(Descartes), இசுபினோசா (Spinoza), இலைபினிட்சு (Leibnitz) என்னும் தத்துவ வாதிகள் அறிவைப் பெறுவதில் மூளையின் முக்கிய பகுதியை வற்புறுத்தினர். குழநதை அறிவுடன் பிறப்பதனாலேயே உண்மைகளை உணர்ந்து கொள்ளமுடிகிறது என்னும் அறிவுக்கு முக்கியத்துவம் கொடுக்கும் முறைக்கு முன்னுரிமை அளித்தனர். தத்துவததில் தெளிவான, மறுக்க இயலாத உண்மைகளை - கணக்கில் வற்புறுத்துவது போன்ற உண்மைகளைத் தத்துவத்தில் வற்புறுத்திய தேகார்ட்டே இக்காலத் தத்துவத்தின் தந்தை என்று கருதப்படுகிறார் இசுபினோசா தேகார்ட்டேயின் தத்துவப் பகுதிக்குமேலும்சிறப்புக்கொடுத்து விளக்குகிறார். இலைபினிட்சு என்னும் தத்துவவாதி பகுப்புக்கணக்கியல்(Calculus)என்னும் கணித இயலுக்கு வித்திட்டுத் தத்துவத்தை விஞ்ஞானத்துடன் இணைத்து விளக்குகிறார். சான் லாககு (John Locke)அறிவைப் பெறுவதில் அனுபவத்துக்கு உள்ள தொன்மையை விளக்குகிறார். குழந்தையின் மனம் பிறக்கும்போது ஒன்றும் எழுதாக்கற்பலகை போல உள்ளது. குழந்தை தன் அனுபவத்தின் மூலமாகவே எல்லாவற்றையும் அறிகிறது. சார்சு பார்க்லி (George Berkeley), தாவீது கியூம் (David Hume) ஆகிய இவர்கள் சான் லாக்கு ஆரம்பித்துவைத்த அனுபவ வழிக் கொள்கையின் தவிர்க்க இயலாத தர்க்க முறைகளுக்கு மக்களை அழைத்துச் செலகிறார்கள். இம்மானுவல் காண்ட்டு இவவிரு கொள்கைகளில் உள்ள நன்மையான உடன்பாட்டுப் பகுதிகளை இணைத்துப் புதிய தருக்க முறையைத் தத்துவத்தில் தோற்றுவிக்கிறார்.

காண்ட்டின் கொள்கைப்படி அறிவு, அனுபவத்தின் மூலம் தோன்றுகிறது. இவ்வகையில் காண்ட்டு சான் லாக்கின் கொள்கையோடு ஒத்துப்போகிறார். ஆயினும் அறிவின் உணமைத் தன்மையை அறிவதற்கு அனுபவம் மட்டும் போதாது. அறிவின் உண்மைத் தன்மையை அறிய அனுபவத்திற்கு முற்பட்ட அறிவு முறையே மக்களுககு உதவுகிறது. இவ்வகையில் காண்ட்டு அறிவுக்கொள்கை அனுபவக்கொள்கை என்னும் இரண்டின் உடன்பாட்டுக் கூறுகளைஇணைத்துத தருக்க முறை மூலம் ஒரு பெரிய உண்மையை விளக்குகிறார். இது கோபர்நிகசு என்பார நிகழத்திய கண்டுபிடிப்புப் போன்ற பாதிப்பைத் தத்துவத்தில் ஏற்படுத்தியுள்ளது என்பர்.

**இந்தியாவில் தத்துவத்தின் இன்றைய நிலை:** நியாயம், வைசேடிகம், சாங்கியம், யோகம், பூருவ மீமாஞ்சை, உத்தரமீமாஞ்சை எனனும் அறுவகைத் தரிசனங்களுள் சைவம், வைணவம், சங்கரர் விளக்கும் அத்துவிதக கொள்கை என்பவை இப்போது உயிர்ப்புடன் இருந்து வரும் கொள்கைகளாகும். இரவீந்திர நாததாகூர், அரவிந்தர்,டாக்டா இராதாகிருட்டிணன் முதலியோர் இன்றைய தத்துவ வாதிகளில சிறநதவராகக் கருதப் படுகின்றனர். காந்தியடிகள 'கடவுள் உண்மை வடிவானவர்' என்பதை விட, 'உணமையே கடவுள் வடிவம்' என்பதே சிறந்தது என்று விளக்குகிறார். ஏனெனில் கடவுள் என்பதை ஒருவர் மறுக்க இயலும். உண்மை என்பதை நாத்திகவாதி கூட மறுக்க முடியாது. ஆகவே, நாத்திகவாதிக்கும் அடிப்படையாக உள்ள உண்மையே தத்துவத்தின் இருப்பிடம் என்று அவர் கூறுகிறார்.

**மேல்நாட்டில் தத்துவத்தின் இன்றைய நிலை:** காண்ட்டின் தத்துவத்தையொட்டிச் செருமனியில் தோன்றிய எகல் (Hegel) என்னும் ஞானி உளளது சிறத்தல்என்பதைவிளக்கும் கூர்தல் அறத்தை விளக்கு கிறார். கருத்து, அதற்கு எதிரான கருத்து, பிறகு இவ் விரு கருத்துகளும் இணைந்து தோன்றும் இசைவான கருத்து என்னும் இவ்வகையில் கருத்துகள் வளர்சசி யடைகின்றன என்னும் முறையில் எகலின் தத்துவம் அமைகிறது. எகல் ஆன்மிகக் கருத்துகளுக்குக் கொடுத்த விளக்கத்தைக் காரல் மார்க்சு (Karl Marx) என்னும் அறிஞர், உலகப் பொருளாதார நிகழ்ச்சி களுக்குப் பயன்படுத்தி, உலகின் ஒரு முக்கிய பொருளா தார அமைப்பாக விளங்கும் பொதுவுடைமைகககு அடிகோலினார்.

இன்றைய மேலநாட்டுத் தத்துவத்தின் இரு முககிய பகுதிகளாக உள்ளவை 'இருததல் கோட் பாடு', அறிவியல் சார்ந்த புலன வழி அறிவு ஏற்புக் கொள்கை என்பவை ஆகும். மனிதன் தன செயல உரிமையைத் துணிந்து முடிவு செய்யும் திறனால் நிலை நாட்டிக் கொள்ளவேணடும். மனிதன வாழ்வு அப்பொழுதுதான பயனுள்ளதாகும். இததனிமனித சுதந்திரத்தை எந்தப் பொது அமைப்பிலும் மறைநது போகும்படி செய்வதை அனுமதிக்க முடியாது என்று கேர்ககாடு (Keirke Gard), கைடகர் (Heidegger) சீன் பால் (Jean Paul), சார்ட்ரே (Sartre) ஆகி யோர் விளக்கினர். இவ்விளக்கம் தான தததுவத்தின் உயிர்நாடி. அனுபவ பூர்வமாக விளக்க இயலாததை யெல்லாம் தத்துவக் கொள்கையாகக் கொள்ளக் கூடாது என வற்புறுத்தும் குழுவில் தலைசிறந்தவர் விட்கன்சுட்டீன் (Wittgenstein) ஆவர். ஆனால், இப்போது இவர்களுடைய செல்வாக்குக் குறைந்து கடவுள், மனிதன, உலகம் பற்றிய கருத்துகளை நிரலபட அறிந்து, அறிந்தவாறு நடப்பதுதான் தத்துவம் என்னும் கொள்கை மீணடும் மெலலத் தோன்றத் தொடங்கியுள்ளது எனலாம். ச.க.

**ததீசி:** 'அன்பிலார் எல்லாம் தமக்குரியர் அன் புடையார் என்பும் உரியர் பிறர்க்கு' என்னும் திருக் குறளின் பிற்பகுதியை விளக்கத்தக்க (72) எடுத்துக் காட்டாகச் சொல்லப்படுபவர் இம்முனிவர்.

இவர் தந்தையார் அதர்வமுனிவர். இவர் தாயார் சாந்திதேவியார். தவப்பெருமைமிக்க முனிவர் களுள் ஒருவராக இவர் சொல்லப்படுகின்றார்.

தேவர்களும் அசுரர்களும் பாற்கடலைக் கடையச் செல்லும் போது அவர்கள் வைத்திருந்த படைக்கலங் களை இவரிடம் ஒப்படைத்துச் சென்றனர் என்றும், அவர்கள் நெடுங்காலமாக அப்படைக்கலங்களைத் திரும்பப் பெறுவதற்கு வாராமையால், அவற்றைப் பாது காப்பாக வைக்கக் கருதி அவற்றையெல்லாம் விழுங்கி முதுகெலும்போடு இணைத்துக் கொண்டார் என்றும், விருத்திராசுரனைக் கொல்வதற்கு வலிமையான படைக்கலம் செய்ய வேணடி இவரிடம் வந்து இரந்து வேணடிய இந்திரனுக்குத் தம் முதுகெலும்பை விருப் புடன் வழங்கினார் என்றும், அதனைப் படைக்கல மாக்கி இந்திரன விருத்திராசுரனை வென்றான என்றும் ஒரு கதை வழங்குகின்றது. மறறும் இந்திரன் ஒருகால் இவர்மேல் விடுத்த சக்கரப் படையை மழுஙக வைத்தார் எனபதாகவும், தக்கன் சிவபெருமானை மதியாமல் வேள்வி செய்தபோது அவனுக்கு நல்லுரை கூற அவன் கேளாமையால 'சாபம்' இட்டார் என்ப தாகவும் சில கதைகளும வழங்குகின்றன. இரா.இ.

**தந்திரம்:** தநதிரம என்ற சொல்லுக்குச் சாத் திரம் என்பது பொருள். ஆகமம் எனற வழிபாட்டுத் துறைக்கும் இப்பெயர் உண்டு. சிறிய அளவில இறை வனுடைய உருவததை உலோகம், மரம் முதலியவை களால் செய்து அவைகளைப் பூசிக்கலாம் என்று தநதிரம் கூறுகிறது. இவ்வடிவத்தைப் பூசிப்பதற்குக் கோயில்களைக கட்ட வேண்டும். இம்முறைகளைத் தநதிரங்கள் வகுத்து உரைக்கின்றன. வடிவஙகளைக் கோயில்களில் இயங்கும்படி செய்வதற்குத் தக்க முறையில் தீட்சை பெற வேணடும். அவர்கள தாம் தீட்சை பெற்றுப் பூசனை செய்யலாம. இறைவனின் வடிவம் நிலை பெறற பிறகு நாடோறும் பூசனை செய்ய வேணடும். ஒவ்வொரு மாதமும் குறிப்பிட்ட நாள்களில் தக்க முறையில் உற்சவங்களை நடத்த வேண்டும்.

சாக்தம், சைவம், வைணவம் என்று தந்திரங்கள் மூன்று வகைகளாகப் - பிரிககப்பட்டுள்ளன. இவை முறையே சக்தி, சிவன், விட்டுணு என்ற தெய்வங் களைப் பற்றித் தோன்றியவை. ஒவ்வொனறிலும் வழிபாட்டு வழிகள் பலவாகக் காணப்படுகின்றன.

வேதஙகளை ஓதுவதற்கு உபநயனம் என்ற சம்சு காரத்தைப் பெறாத ஆண்களும் பெண்களும தாங் களே வழி பாட்டைச்செய்வதற்குத் தகுதியற்றவர்கள. ஆண் பெண் என்ற வேறுபாடின்றித் தீட்சை பெற்றுப்பூசனை செய்யலாம் என்று தந்திரஙகள் கூறுகின்றன வி.வ.

**தந்திவர்மன்:** (கி.பி. 796-847) காஞ்சிப் பல்ல வர்களுள் ஒருவனான பல்லவமல்லன் என்ற இரண டாம் நந்திவர்மன (கி.பி. 731-796) என்பவனின மகனே தநதிவர்மன். இராட்டிரகூட அரசை நிறுவிய தந்தி துர்க்கனின மகள் இரேவா என்பவளுக்கும்

இரண்டாம் நந்திவர்மனுக்கும் மகனாகப் பிறந்தவன் தந்திவாமன். இரண்டாம் நந்திவர்மனுக்குப் பிறகு தந்திவாமன (கி.பி.796-847)பல்லவ மன்னனானான். ஆனால், இராட்டிரகூட நாட்டு மன்னன் மூன்றாம் கோவிந்தன் எனபவன், பல்லவ மன்னன் தந்திவா மனைப போரில் தோற்கடித்து, அவனது தலைநகர் காஞ்சியைக் கைப்பற்றிக் கொண்டான. அதன்பிறகு பல்லவ நாடு இராட்டிரகூட நாட்டிற்குக் கப்பம் கட்டிவந்தது. நந்திவர்மனுக்குப்பிறகு அவன் மகன் மூன்றாம் நந்திவர்மன் பல்லவ மன்னனானான்.

அ.க.

*தந்து மாறன்* என்பான் பாண்டி வேந்தர் ஆணைக்குட்பட்ட தலைவர்களுள் ஒருவன என்றும், பாண்டிய மன்னர்களின் கீழ பணியாற்றியவர்களுள் ஒருவன என்றும் இருவேறுபட்ட செய்திகள் உள. மாறன் என்னும் சிறப்புப் பெயா பாண்டியர்க்கே உரியதாயினும் அவர்களையடுத்து மிக்க அணுக்கமாய் இருப்பவர்க்கும உரியதென்பதும் தெளிவாம். மன்னர் களிடம் நெருங்கியிருந்து பணியாற்றியமையால் பெருஞ்சிறப்புப் பெற்ற இவன் மன்னர்களைப் போன்றே கொடைத் திறத்திலும் வீரத்திலும் சிறந்து நின்று பலருக்கும் உதவுகின்ற அருள் உள்ளத்தனாய் விளங்கினான்.

இவனது நீண்ட புகழைச் சங்க வருணரென்னும் நாகரியர் புறநானூறு 360-ஆம் பாடலில் சிறப் பித்துப் பாடுகின்றார். இப்புலவா பெயரின் பிற்பகுதி ஆய்விற்குரிய ஒன்றாகும். நாகரையர், நாகாரியார் என்று வெவ்வேறு நிலையில வெவ்வேறு நூல்கள் குறிப்பிடுகினறன. ஆயின் பெயரின் முற்பகுதியில் 'சங்க வருணர்' என்றே எல்லா நூல்களும் குறிப்பிடு வதால் ஒரு புலவரையே பலரும் பல்வேறு நிலைகளில குறிப்பிடுகின்றனர் என்பது போதரும்.

இனி, இத்தந்து மாறனைச சங்க வருணர் புறநா னூற்றில் சிறப்பித்துப் பேசுவது நோக்குதற்குரியது. சிறு சினத்தையுடையோரும் சானறோர் சொற் களைக் கேட்போரும் பெருங்கொடை வழங்கு வோரும் நல்லுணவினைப் பிறர்க்குப் படைப்போரும் இன்சொல்லுடையோரும் நறசெயலைச் செய்வோரும் ஆகிய இன்னோரெல்லாம் உலகு நிலையாமையை நன்குணர்ந்து நாட்டையாண்டனர். அவரோ மிகச சிலர். அதனையுணராது ஆண்ட மன்னர் பலராவர். நீயோ எனின், அச்சிலருள் ஒருவனாய் இருத்தல் வேண்டும் எனத் தன அவாவினை அத்தந்துமாற னுக்கு அறிவுறுத்தும் முகமாய்ச் சொல்லுகின்றார். இப்புலவர் இவனை இவ்வாறு பாராட்டுவதால், இவன நல்லொழுக்கம மிக்கவன் என்பதும், சான் றோர் வாக்கில் ஈடுபாடும் மரியாதையும் மிக்கவன என்பதும் மிகுந்த செல்வத்தால் நற்புகழை ஈட்டிக் கொண்டவன் என்பதும் புலனாகின்றன.

சு.கோ.

*தந்தை உரு* ஒருவர் வாழ்வில் ஒரு வளர்ப் புத் தந்தை அல்லது தந்தையின பொறுப்பை ஏற்ற மற்றொருவா உணமையான தந்தையின செயல்களைப் பொறுப்பேற்று எடுத்துக்கொள்வ துண்டு. அவ்வாறு எடுத்து கொள்வதைத் 'தந்தை உரு'(Father-Figurel/Father Image) என்பர். மற்றும் ஒருவர் தம் தந்தையைப் பின்பற்றித் தம்முடைய நடத்தையை அமைத்துக் கொள்ள எண்ணுவதைப் போலவே, அவர் முககியமானவராகக் கருதும் ஒருவரைத் தம் தந்தையின் இடததில் மனத்தில இருத்தி அவருடைய நடததையைப் பின்பற்ற முயலு வதுணடு. இதனையும் தந்தை உரு எனலாம். இது ஒருவர் குறிப்பிட்ட சிலரோடு கொண்டுள்ள அளவுக்கு மீறிய ஈடுபாட்டைக் குறிக்கும். எடுத்துக்காட்டாக ஒரு மாணவா ஓர் ஆசிரியரையோ ஒரு தொழிலாளி ஒரு மேலாளரையோ தம் தந்தையை ஒத்தவராக மதித்தொழுகலைக் காணலாம். குரங்குகளைப் பயன்படுத்தி நடத்தப்பட்ட சில ஆய்வுகளில் குரங்குக் குட்டிகள் கம்பியாலான மிருதுவான பொம்மை களைத் தம் தாயை ஒத்த உருவமாக ஏற்றுக் கொண்டன. தம் தந்தை இல்லாத நிலையிலோ, தம் தந்தை தம்மால மதித்துப் பினபற்றி நடக்கத்தக்க நடத்தையை உடையவராக இல்லாவிட்டாலோ, வேறொருவருடைய நடத்தை பின்பற்றி நடக்கத் தக்கவாறு சிறந்திருப்பதாலோ வேறொருவரைத் தம் தந்தை-உருவாகக் கொணடு செயற்பட ஒரு வரைத் தூண்டலாம். இத்தகைய தந்தை உருவை முன்மாதிரியாகக் கொண்டு அதையொத்துத் தம் நடத்தையும் அமைய ஒருவர் தீவிரமாக முயலலாம். இதுகுறித்து ஆராய்ந்து கூறியவர் பிராயடு என்பவர் ஆவார்.

வே.க.

*தந்தைத் தலைமை*: முன் வரலாற்றுக்கால மனிதர் முதனமுதல் சிறு குழுக்களாகவும், கூட்ட மாகவும் சேர்நது வாழ முற்பட்டதுமுதல் இன்று வரை மனித சமுதாயம் பல நிலைகளில் படிமலர்ச்சி யடைந்துள்ளது. ஒவ்வொரு நிலையிலும் சமுதாய அமைப்பும் (Social System), அதன் உட்கூறாக விளங்கும் குடும்ப முறையும் மாறறம் பெற்று வளர்சசியடைந்துள்ளன. அவ்வகையான வளர்ச்சி நிலைகளுள் ஒன்றே தந்தைத் தலைமை (Patriarchy) முறையாகும். அவ்வகையான சமுதாய அமைப்பில் குடும்பத்தின் அனைத்து அதிகாரமும் தநதையிடமோ மூத்த ஆண் ஒருவரிடமோ இருக்கும்.

பண்பாட்டுப் படிமலர்ச்சி பற்றி கி.பி. 19-ஆம் நூற்றாண்டு மானிடவியலார் மிக விரிவாக ஆராய்ந்

தனர். அவர்களுள் குறிப்பிடத்தக்கவர்கள் உலூவி என்றி மார்கனும் (Lewis Henry Morgan), என்றி மெய்னியும் (Henry Maine) ஆவர். அவர்களின் படி மலர்ச்சிக் கொள்கைப்படி பண்பாடு பல நிலைகளில் வளர்ச்சியடைந்துள்ளது. அதனுள் ஒன்றே தந்தைத் தலைமை. மெய்னியின் கருத்துப்படி தொடக்கக் காலச் சமுதாயங்களில் அனைத்து வகையான தகுதி அல்லது உறவு தந்தைவழி உறவுமுறையிலிருந்தே (Patrilineal Kinship System) தோன்றியது. தந்தைத் தலைமை முறையில் ஒரு குடும்பத்தின் தந்தை அல்லது மூத்த ஆண் அவரது குடும்பத்தினரையும் அவரது குடும்பத்தைச் சேர்ந்த குடும்பத்தினரையும் (Members of Extended Family) வழிநடத்தும் பொறுப்பைப் பெற்றிருந்தார்.

மார்கன், தம் படிமலர்ச்சிக் கருத்துகளை உருவாக்குவதற்கு எழுத்தறிவில்லாச் சமுதாயங்கள் பலவற்றிடமிருந்து தரவுகளைப் பெற்றார். ஆனால், மெய்னியின் கருத்துகள் தொன்மைக் கிரேக்க, உரோமானிய ஆவணங்களிலிருந்து பெறப்பட்ட செய்திகளை அடிப்படையாகக் கொண்டவை. ஆனால், பிற்கால மானிடவியலார் இக்கருத்துகளை ஐயத்திற்குரியதாக்கினர். இவர்களின் கருத்துப்படி தந்தை வழிச் சமூகத்திலகூட முழு அதிகாரமும் தந்தையிடமோ தனி ஆண் ஒருவரிடமோ இருப்பது அரிதாக உள்ளது. ஆகவே, கொள்கையளவில் இவ்வகைச் சமுதாய வகையைக் குறிப்பிடும் வழக்குச் சமுதாய அறிவியல் அறிஞர்களிடையே குறைந்துவிட்டது. சீ.ப.

*தந்தைமை நிலை ஒப்புகை*: ஒரு குழந்தை தனது முறை மணப்பிறப்புக் குழந்தைதான் எனத் தந்தையினால் விளம்பப்படுவது முகமமதியச் சட்டத்தில் தந்தைமை நிலை ஒப்புகை (Acknowledgment of Paternity) எனப்படும். இது முறையிலா மணப்பிறப்புக் குழந்தையை முறைமணப் பிறப்பாக்கும் செயல் முறையன்று. உண்மையில் முகம்மதியச் சட்டம் அவ்வாறு முறைப்படுத்துதலை ஏற்கவில்லை.

பெரும்பாலான சட்டவியல்களில் தாய்மை நிலை என்பது ஒரு தாய்க்கும் குழந்தைக்குமிடையேயான இயற்கை உறவாகும். தந்தைமை நிலை என்பது ஒரு தந்தைக்கும் குழந்தைக்கும் இடையேயான சட்ட உறவாகும் சட்டப்படி நிகழ்ந்த திருமணங்கள் வாயிலாகப் பிறந்த குழந்தையே முறைமணப்பிறப்புக் குழந்தையாகும். ஒரு குழந்தையின் தந்தைமையை நிலைநாட்ட அக்குழந்தை, பெற்றோர்களிடையேயான ஒரு முறையான அல்லது ஓர் ஒழுங்கற்ற திருமணத்தின் வாயிலாகப் பிறந்த குழந்தை என மெய்ப்பிக்க வேண்டும். அவ்வாறான ஒரு திருமணம் குறித்த நேரடிச் சான்று இல்லாத நிலையில் அது i) (ஒரு திருமணத்திற்கான தடைகள் ஏதும் இல்லாத) ஒரு தொடர்ச்சியான உடனுறைதல், ii) அவ்வாறான திருமணத்தில் பிறந்த குழந்தையை, முறை மணப்பிறப்புக் குழந்தையாகத் தந்தையினால் ஒப்புக்கொள்ளுதல் ஆகியவற்றின் மூலமாக அனுமானிக்கப்படும். முகம்மதிய சட்டத்தின்கீழ்த் திருமணங்களில் சடங்குகள் ஏதும் இல்லையாதலால் திருமணம் குறித்துச் சான்று எப்போதும் இருக்கும் என்று கூறமுடியாது. நேரடிச்சான்று இல்லாத போழது மறைமுகச்சான்றே போதும். ஒரு மகனுக்கு ஆதரவான முறை மணப்பிறப்பு ஒப்புகை, ஒருவகையான மறைமுகச் சான்று எனக் கொள்ளலாம்.

சட்டத்தில இரண்டு வகையான நோ மரபு வழி உறவுகள் உண்டு அவை, இயற்கைத் தந்தை மற்றும தத்தெடுத்த தந்தை. தத்தெடுப்பு முறை உரோமானியச் சட்டத்திலும் இந்துச் சட்டத்திலும ஏற்றுக் கொள்ளப்பட்டது. ஆனால்,முகம்மதியச் சட்டத்தில இது ஏற்றுக் கொள்ளப்படவில்லை. ஆனால, தந்தைமை ஒப்புகை, ஒரு தந்தை,குழந்தைக்கு முறைமணப் பிறப்புத் தகுநிலை அளிக்கும தனித்தன்மை கொண்டது.

இனி தந்தைமை ஒப்புகை பற்றிய சட்டக் கோட்பாட்டினை நோக்கவேண்டும். ஒரு குழந்தையின் தந்தைமையை அதாவது அக்குழந்தையின தந்தையிடமிருந்து முறைமணப்பிறப்புக் கால்வழியை ஒரு திருமணத்தை நிலைநாட்டி, கருவின் போதோ அல்லது பிறப்பின் போதோ மெய்ப்பிக்க இயலா நிலையில இறங்குரிமைக்காக, அத்தகைய திருமணத்தையும் முறைமணப்பிறப்புக் கால்வழியையும் நிலைநாட்டுவதற்காக 'ஒப்புகையை' ஒருமுறையாக முகம்மதியச் சட்டம் ஏற்றுக் கொண்டுள்ளது.

முறை மணப்பிறப்பு விளைவினை ஏற்படுத்தும் முகம்மதியச் சட்டத்தின் தந்தைமை ஒப்புகையானது, குழந்தையின் முறைமணப் பிறப்பானது நன்கு மெய்ப்பிக்கப்பட்டு நிலை நிறுத்தப்பட்டதற்குப் பொருந்தாது. இக்கோட்பாடானது, திருமணம் பற்றிய பொருண்மை அல்லது குழந்தையின் மணப்பிறப்பு மெய்ப்பிக்கப்படா வழக்குகளை மட்டுமே குறித்ததாகும்; இல்லையென மெய்ப்பிக்கப்பட்டவற்றிற்கு அன்று.முறைமணப்பிறப்புக் குறித்து உறுதியற்ற வழக்குகளுக்கே இது பொருந்தும். மெய்ப்பிக்கப்பட்டு அல்லது மெய்ப்பிக்கப்படாமல் இருக்கும் தெளிவற்ற, உறுதியற்ற நிலைக்கே இது பொருந்தும்.

ஏற்பளிக்கப்பட்ட குழந்தை மகனாக அல்லது மகளாக இருக்கலாம். தந்தைமை ஒப்புகைக் கோட்பாடு வெறும் சான்றியல் சட்டத்தின விதி

யன்று; இறங்குரிமை சட்டத்தின் நிலைமுறைச் சட்டப் பகுதியாகும்.

ஓர் ஒப்புகை வெளிப்படையாக இருக்க வேண்டிய தில்லை. ஒருவர் மற்றொருவரை வழக்கமாக வெளிப்படையாகத் தம் குழந்தையென, அதாவது ஒருமுறை மணப்பிறப்புக் குழந்தையென நடத்திவரும் நடத்தையிலிருந்தும் கூட அனுமானிக்கலாம்.

தந்தைமை ஒப்புகைக்கான நிபந்தனைகள்: ஓர் ஒப்பளிப்பானது முறையானதாக, பயனுறுதியுடைய தாக இருக்க வேண்டுமெனில், பின்வரும் நிபந்தனை கள் நிறைவேற்றப்பட வேண்டும்.

1. குழந்தையினுடைய தந்தைமை ஐயத்திற்கு இடமளிப்பதாக இருத்தல் வேண்டும். குழந்தை முறையிலா மணப்பிறப்புக் குறித்து உறுதியற்ற நிலை இருத்தல் வேண்டும். ஏனெனில் முறையிலா மணப் பிறப்பு என்று நன்கு தெரிந்த வழக்குகளில் முறை மணப்பிறப்பாக ஒப்புகை அளிக்க முடியாது.

2. ஒப்புகையானது, அடுத்தவரைத் தம் மகன் என ஏற்றுக் கொள்வதுமன்றி அவரைத் தம் முறை மணப்பிறப்பு மகன் என ஏற்றுக்கொள்வதாகவும் இருத்தல் வேண்டும். முறைமணப் பிறப்பு தகு நிலையை அளிக்கவேண்டும் என்ற எண்ணம் இல் லாத வெறும் தற்செயலான (Casual) ஒப்புகை போதாது. அத்தகைய தகுநிலையை அளிக்க வேண் டும் என்ற எண்ணம் வெளிப்பட வேண்டும்.

3. சூழ்நிலைகள் தந்தைமை ஒப்புகையை மறுத் துக்கூறக்கூடியதாக இருத்தல் கூடாது. மேலும் தந்தை யின் அத்தகைய ஒப்புகை ஒரு சாத்தியக் கூறாகவும், பயன் விளையத் தக்கதாகவும் இருத்தல் வேண்டும். தந்தைக்கும் தாய்க்கும்இடையேயான திருமணம் சாத் தியப்படக் கூடியதாகவும் அமைந்திருக்க வேணடும்.

4. தரப்பினரின் வயதானது தந்தை, மகன் என்று கூறக் கூடியதாக இருத்தல் வேண்டும். ஒப் புகை அளிப்பவர் ஒப்புகை பெறுவரை விடக் குறைந் தது $12\frac{1}{2}$ ஆண்டுகள் மூத்தவராக இருக்க வேண்டும்.

5. ஒப்புகை பெறுபவர் பிறர்மனைப் புணர்ச்சி, தகாப்புணர்ச்சி, முறையற்ற புணர்ச்சியில் பிறந்தவ ராக இருத்தல் கூடாது. அவர் பிறந்தபோது அவர் தாய் சட்டப்படியான மனைவியாக இருக்கக் கூடிய தகுதியற்றவராக இருக்கக்கூடாது. அல்லது அப் போது ஒப்புகை அளிப்பவரால் மணமுறிவு பெற்றவ ராக இருந்து மறுமணம் செய்து கொள்வதற்கான சட்டத்தடை நீக்கப்படாமல்இருக்கக்கூடாது.அல்லது ஒப்புகை அளிப்பவருக்குத் தடைசெய்யப்பட்ட உறவு முறையில் இருப்பதாக இருத்தல் கூடாது. திருமணம் இல்லையென மெய்ப்பிக்கப்பட்டிருந்தால், குழந்தை முறையற்றபுணர்ச்சியில் பிறந்தவராக கருதப்படுவார்.

6. ஒப்புகை பெறும் குழந்தை மற்றொருவரின் குழந்தையாக இருந்திடல் கூடாது.

7. அடுத்து ஒப்புகை பெறும் குழந்தை ஒப்பு கையை மறுத்தல் கூடாது.

மேற்கண்ட நிபந்தனைகள் நிறைவேற்றப்படின் தந்தைமை ஒப்புகை முறையானதாகவும் பயனுடைய தாகவும் இருக்கும்.

ஒரு முறை ஒப்புகை தந்தையினால் அளிக்கப்பட் டால் பின்னால் அதனை நீக்கம் செய்ய முடியாது.

**ஒப்புகையின் விளைவுகள்:** ஓர் ஒப்புகையானது முறை மணப்பிறப்பு மகன் குறித்து இருந்து அவ்வா றான உறவுமுறை பொருண்மையிலும் சட்டத்திலும் சாத்தியப்படக்கூடியதாக இருப்பின், ஒப்புகை அளிப்ப வருக்கும் ஒப்புகை பெறுபவரின் தாய்க்கும் இடையே யான திருமணம் தொடர்பான அனுமானத்தை எழுப்பும். ஒப்புகை அளிப்பவரும் ஒப்புகை பெறுப வரும் ஒருவருக்கொருவர் மற்றொருவர் குறித்து இறங்குரிமைக்கான உரிமைபெறுபவர். (அதுமட்டு மன்றி ஒப்புகை அளிப்பவரும், ஒப்புகை பெறுபவரின தாயும் ஒருவருக்கொருவர் மற்றொருவர் குறித்து இறங்குரிமைக்கான உரிமையும் பெறுவர்.) ஆ.ச.

**தந்தையாட்சிக் குடும்பம்:** குடும்ப நிரு வாக அமைப்புமுறையில் உள்ள வேறுபாடுகளைப் பொறுத்துக் குடும்பம், தந்தையாட்சிக் குடும்பம் (Patriarchal Family), தாயாட்சிக் குடும்பம்(Matri-archal Family) என இருவகைப்படுகிறது. ஒரு குடும் பத்தின் தலைமைப் பொறுப்பும், நிருவகிக்கும் அதிகா ரமும் தந்தையிடம் அமைந்திருந்தால் அக் குடும்பம் தந்தையாட்சிக் குடும்பம் எனப்படும். இது நாகரிக மடைந்த சமூகத்தில் மட்டுமன்றிப் பிரபுக்களாட்சிச் சமூகத்திலும் காணப்படுகிற பண்டைய வழக்கமாகும். பழைய ஏற்பாடும் (Old Testament).ஆபிரகாம் Abra ham), சேகபு (Jacob) போன்றவர்களிடையே தந்தை யாட்சிக் குடும்ப முறையே பின்பற்றப்பட்டதாகக் கூறுகிறது.

பொதுவாகத் தந்தையாட்சிக் குடும்பம் தந்தை தாய்க் குடும்பமாகவும் (Patrilineal Family)அமையும். அத்தகைய குடும்பத்தில் சொத்துரிமை தந்தையிட மிருந்து ஆண்மக்களுக்குப் போவதும்தந்தை வழியில் குலமுறை தொடருவதும் நிகழும்.

தந்தையாட்சிக் குடும்பத்தில் ஓர் ஆண் அனைத்து அதிகாரங்களையும் உடைய குடும்பத் தலைவராக இருப்பார். அவரே குடும்பத்தின் உடைமைகள், அதிகாரம் ஆகியவற்றிற்கு உரிமையாளராகவும், நிருவாகியாகவும் இருப்பார். அக குடும்பத்திலுள்ள பிற உறுப்பினர்கள் அனைவரும் அவருடைய ஆணைக்குக் கட்டுப்பட்டவர்களாவர். அவரே குடும்பத்தின் சமயச் சடங்குகளை முன்னின்று நடத்துவார்.

எபிரேயர்கள்(Hebrews), கிரேக்கர்கள், உரோமானியர்கள், இந்தியாவிலுள்ள ஆரியர்கள் முதலானோரிடையே தந்தையாட்சிக் குடும்ப முறையே பின்பற்றப்படுகிறது. எபிரேய இன மக்களில மூத்த ஆண் மகனே தன்னைச் சார்ந்தவர்களிடம் அனைத்து அதிகாரங்களையும் செலுத்துபவராக இருககிறார். உரோமில் (Rome) குலத் தலைவரே அனைத்துக் குடும்பச் சொத்துகளுக்கும் முழு உரிமையாளர் ஆவார். இவரே குடும்பத்தின் சட்டப்படியான பிரதிநிதியாகவும் அவரைச் சார்ந்த மக்களின் தலைவராகவும் திகழுகிறார். பிற உறுப்பினர்களுக்கு எவ்விதமான உரிமையும் இருப்பதில்லை. அவரால் தம்முடைய குழந்தையைத் தண்டிக்கவோ பிறருக்கு விற்கவோ கொல்லவோகூட முடியும் எனச் சிட்சினிக்கு (Sidginick) என்ற அறிஞர் கூறுகிறார். இதுபோன்றே பண்டைய பாலசுதீனியர்கள தங்கள் பெணமக்களைப் பிறருக்கு அடிமையாக விற்று வந்துள்ளனர்.

இந்தியாவில் தந்தையாட்சிக் குடும்ப முறையே வேத காலங்களில் பின்பற்றப்பட்டுளளது. அப்பொழுது ஒரு குடும்பத்தில் தந்தையே தன்னுடைய மனைவி, குழந்தைகள் ஆகியோர்மீது முழு அதிகாரம் செலுத்தியுள்ளார். மனைவி, குழந்தைகள் ஆகியோர் எந்தவிதமான சொத்துகளுக்கும் உரிமையாளராக இருக்கவியலாது. கொள்கை அடிப்படையில் முழு உதவியாளர் பொறுப்பு அவருடைய மனைவியைச் சாரும். ஆனால், சட்டத்தின முன்னர் அவள் தன்னுடைய கணவனுக்கு மேலாகவோ எதிராகவோ செயற்பட முடியாது. இந்து தருமப்படி இந்தியப் பெண் ஒவ்வொருத்தியும் அவளுடைய கணவன் விருப்பப்படியே நடக்க வேண்டும். திருமணத்திற்கு முன்னர்த் தந்தைக்கும், திருமணத்திற்குப் பின்னா கணவருக்கும், விதவை நிலையில் மகனுக்கும் கீழப் படிந்து நடப்பது பெணகளின் கடமையாகும். ஆனால, அண்மைக் காலமாக நவீனமயமாதல், நகரமயமாதல் போன்றவற்றால் இந்தியப் பெண்களிடையே இந் நிலை மாறியுள்ளது. இருப்பினும் மத நம்பிக்கையுள்ள குடும்பங்களிலும், கிராமப்புறங்களிலும் ஆண்களின் ஆதிக்கமே இன்றும் இருந்துவருகிறது. இந் நடத்தை முறையே ஏதென்சு, சீனா போன்ற நாடுகளிலும் பினபற்றப்பட்டு வருகிறது.

**தந்தையாட்சிக் குடும்பத்தின் சிறப்புக் கூறுகள்:** 1) குடும்ப நிருவாகம் தந்தையின் பொறுப்பில் இருககும். 2) தந்தையே குடும்பச சொத்துகளுக்கு உரிமையாளர் ஆவார். 3) தந்தையின் மூலமே குலமுறை கூறப்படும். 4) தந்தையின் சொத்தைக் குழந்தைகள உரிமைமுறையில அடையமுடியும். 5)கூட்டுக் குடும்பமாக இருப்பின் மக்கள் திருமணத்திற்குப் பினனர்த் தந்தையுடனேயே இருப்பர். காணக: குடும்பம்

பூ.த.

***தந்தை வழியினர்***: ஒருவர் இன்னொருவருககு ஆண் உறவு முறையில் சொந்தம் என்றால் அதனைத் தந்தை வழி என்பர். அதாவது, இரண்டு பேர் ஆண வழி உறவு முறை கொணடாடினால் அவ்வுறவு முறையினைத் தந்தை வழி என்பர். எடுத்துககாட்டாக, இநது வமிசத்தில் மகனின் மகன் தந்தையின தந்தைக்கு, தந்தை வழி உறவினன் ஆவான். கீழ்க் காணும் எடுத்துக்காட்டில முதலவரும் நானகாமவரும தந்தை வழியினர்.

| தந்தைக்குத் தந்தை | தநதை | மகன் | மகனின மகன் |
|---|---|---|---|
| 1 | 2 | 3 | 4 |

இதுபோலவே, சகோதரர்களின் மக்கள் தந்தை வழியினர் எனப்படுவர். எடுத்துக்காட்டு, கீழே காண்க.




சகோதரர் 1 க்கும் சகோதரர் 2 க்கும் ஒரே தந்தை, எனவே சகோதரா 1 க்கும் சகோதரர் 2க்கும் பிறக்கும் மக்கள தந்தை வழியினர்; தந்தை வழி உறவு முறையினர் ஆவர்.
அதுபோலவே



B என்பவருக்கு G என்பவர் சிறறப்பாவின் பேரன். இவர்கள் இருவருக்கும் உள்ள உறவு தந்தை வழி உறவு ஆகும். இவர்களைத் தநதை வழியினர் என்பர். இங்கே முககியமாகக் கவனிக்க வேண்டியது என்ன வென்றால் இடையிலே பெண் உறவு முறை வருவது கூடாது. இங்கே B என்பவரோ G என்பவரோ தத்து எடுதது இருந்தால் கூட இதே உறவு முறை தான் நீடித்திருக்கும். மேலும் தந்தையின் சகோதரி தந்தைவழியினர் ஆவார். எடுத்துக்காட்டாக:




D என்பவர், C என்பவரின் தந்தையின் சகோதரி (அதாவது அத்தை) தந்தை வழியினர் ஆவார். இங்கே தந்தை வழிதான் உறவு கொண்டாடப்படு கிறது என்பதைக் காண்க. அது போலவே தந்தை யின் மகள் அதாவது அக்காவோ, தங்கையோ, ஒரு வனுக்குத் தந்தை வழி உறவினர் ஆவார். மேலும் மருமகள எனப்படுபவள் தந்தை வழி உறவினர் ஆவார். ஏனெனில் அவள் மகனின் மனைவி என்றும், ஆணவழி உறவு என்றும் கொளளலாம்.




எனவே, மருமகள் எனப்படுபவள் தந்தை வழியினர் ஆவார்.

தந்தை வழியினர் எப்போது இறந்தவர்களின் சொத்தில் உரிமை கொண்டாட முடியும் என்றால், ஒன்று, இறந்தவர்கள் தங்கள் சொத்து குறித்து எவ் விதமான பத்திரமோ உயிலோ எழுதி வைககாமல் இறந்திருக்க வேண்டும்: இரணடு - அவருக்கு முதல் வகுப்பு வாரிசு மற்றும் இரண்டாம் வகுப்பு வாரிசு இருக்கக் கூடாது. தநதை வழியினர் பற்றி இந்து இறங்குரிமைச் சட்டம் (Hindu Succession Act) பிரிவு 3, 8, 12, 13 ஆகியவை கூறுகின்றன. தந்தை வழி உறவினர்களில் யாராவது ஒருவர் இருப்பினும், தாய்வழி உறவினர்கள் எவ்வளவுதான் நெருங்கிய உறவு கொண்டிருந்தாலும் அவர்களுக்கு இறந்தவரின் சொத்தில் பங்கு கேட்க உரிமையில்லை.

மேலும் தந்தை வழி உறவு முறையினரை மூன்று வகையாகப் பிரிக்கின்றனர். 1) இறங்கு வாரிசு (Descending Line) 2) ஏறு வாரிசு (Ascending Line) 3) சம வாரிசு (Collateral Line). இறங்கு வாரிசு - இறங்கு உரிமை வாரிசு என்னும் போது, ஒரு மனி தனின் குழந்தைகளும், குழநதைகளின் குழந்தைகளும் ஆவர். ஏறுவாரிசு - ஏறு வாரிசு என்னும்போது தந்தை, தாயின் தந்தை, தந்தையின தந்தையின் தந்தை ஆகியவர்களைக் குறிககும். சம வாரிசு - என்னும் போது, சகோதரன, சகோதரி, தந்தையின் சகோதரன, தந்தையின் சகோதரி, தந்தையின் தந்தையின் சகோதரர் மற்றும் சகோதரி, அவர்களின் குழந்தைகள் அநதக் குழந்தைகளின குழந்தைகள் ஆகியோரைக குறிக்கும்.

வாரிசு உரிமை என்னும் போது இறஙகு உரிமை வாரிசுகளையே தேர்ந்து எடுக்க வேணடும். எடுத்துக் காட்டாக, இறந்து போனவர் மகன் என்று வைத்துக கொணடால, அவரின் தந்தையைக் கொளளாது இறந்தவரின் மகனையே சொத்தின வாரிசு எனறு கொள்ள வேணடும். ஏறு உரிமை வாரிசுகளைவிட இறங்கு உரிமை வாரிசுகளையே, சொத்துக்கு வாரி சர்க ஏறறுக் கொள்ள வேணடும். அதே போல் வாரிசு உரிமை யாருக்கு என்று நிருணயம் செய்யும் போது சம உரிமை வாரிசுகளைவிட ஏறுஉரிமை வாரிசுகளை வாரிசுகளாக ஏறறுக் கொளள வேணடும். ஒரே வழி யில, எடுத்துக்காட்டாக, தந்தைவழி, அல்லது தாய் வழி இருவர் வாரிசு உரிமையைக் கொண்டாடும் போது அவர்களில் யார் இறந்தவருக்கு நெருஙகிய உறவின் முறையினரோ அவரே வாரிசு உரிமை உடையவர் என்று கருதபபடுவார். தி.ஆ.இ.

**தப்தி**: இந்த ஆறு மத்திய பிரதேசத்திலுள்ள மகாதேவ குன்றுகளிலிருந்து தோன்றித் தெற்கே சாத்பூராக் குன்றுகளின வழியாக ஓடி மேற்குப்புற மாகச் செல்லுகின்றது. இதன் நீளம் 640 கி.மீ. இது மிகப் பழைமை வாய்ந்த ஆறாகும். இது சூரத்திற்கு அருகில் அரேபியன் கடலில் சென்று கலக்கிறது. பலராமர் இவ்வாற்றில் நீராடியுள்ளார் என்று புராணமும் கூறுகிறது. இவ்வாற்றைப் பறறிப் பாக வத புராணமும், பதும புராணமும், விட்டுணு புரா ணமும் கூறுகின்றன. இந்திய ஆறுகளுள் நருமதை, தப்தி ஆறுகள் மட்டும் தான் அரபிக் கடலில் கலக் கின்றன என்பது குறிப்பிடத்தக்கது. மேற்கு மலைத் தொடர்ச்சி தப்தி ஆறறுப் பகுதியிலிருந்து தொடங்கு கிறது. இந்த ஆறு மத்திய பிரதேசம், மகாராட்டிரம் குசராத்து மாநிலங்கள் வழியாக ஓடி இம்மாநிலங் களுக்குத் தேவையான மின் சக்தியைக் கொடுக்கிறது.

யுகாய் (Ukai) என்ற இடத்தில் நீர்மின் சக்தியும் கக்கிரபாரா என்றஇடத்தில் அணைக்கட்டும் உள்ளன. இந்த ஆறு தபி (Tapi) என்றும் சொல்லப்படுகிறது.
கே.சே.

**தப்பிரின் பிரபு:** இந்தியாவில் அரசப் பேராள ராகப் பதவி வகித்த ஆங்கிலேய அரசியல் அறிஞர். தப்பிரின (Dufferin) இங்கிலாந்தில் கி.பி. 1826-இல் பிறந்து தம் தந்தைக்குப் பிறகு கி.பி. 1841-இல் பிரபு (Lord) பட்டம் பெறறார்; ஆங்கில ஆதிக்கத் திற்கு உட்பட்டிருந்த இந்திய அலுவல்களைக கண் காணிக்கும் இந்திய உதவிச் செயலாளராக கி.பி. 1864 முதல 1866 வரை பதவி வகித்தார். பிறகு கனடா நாட்டுக்குத் தலைமை ஆளுநராக அனுப்பப் பெற்றார். தொடர்ந்து, உருசியாவுககும் பிறகு துருக்கிக்கும் அரசியல் தூதராகவும் நியமனம் பெற்றார். எகிப்து நாட்டில் ஆளுநராகவும் பணியாற் றினார். இவ்வாறு பல்வேறு நாடுகளில் அனுபவம் பெற்றபின, கி.பி. 1884-இல இவா இந்தியத் தலைமை ஆளுநராக இநநாட்டுககு வந்தார். அக்காலததில் இந்தியாவின் அயல்நாட்டுச் செய்திகளில் பல முககிய சிக்கலகள இருந்து வந்தன. அவறறைச் சமாளிக்க இவரே தக்கவர் என்பது நம்பப்பட்டது. சிறந்த அரசியல் தந்திரிக்குத் தேவையான பிறரை ஈர்க்கும் தோறறப் பொலிவும் சொல்வனமையும் ஆற்றலும் இவரிடம் இருநதன.



தப்பிரின்பிரபு

**உள்நாட்டுக் கொள்கை:** இவர் ஆட்சிக் காலத்தில் கி.பி. 1885-இல் இநதியத் தேசிய காங்கிரசு அவை தோன்றியது. இது தோன்றுவதற்குத் தப்பிரின உதவி யளித்தார். மேலும் இவருடைய முற்போக்கு எண்ணங்களின் விளைவாக, கி.பி.1892-ஆம் ஆண்டு இந்திய ஆலோசனைக் குழுக்கள் சட்டம் கொண்டு வரப் பெற்றது. ஆங்கிலப் பேரரசி விக்டோரியாவின் ஆட்சியின் அறுபதாம் ஆண்டு வைர விழா, கி.பி. 1887-இல் தப்பிரினின் தலைமையின் கீழ்ச் சிறப்பாக கொண்டாடப் பெற்றது.

**வெளிநாட்டு உறவு:** உருசியர், ஆப்கானிசுத்தானத் துக்குரிய இடத்தைக் கைப்பற்றிக் கொணடதால் இந்தியாவுக்கு வடமேற்கு எல்லையாக இருந்த ஆப்கானிசுத்தானத்தின் அமைதி, இந்தியாவுக்கு மிக இன்றியமையாததாக இருநதது. ஆங்கிலேயருககும உருசியருக்கும் போர் ஏற்படக்கூடிய சூழநிலை ஏற்பட்டது. தப்பிரின் பிரபு, ஆப்கானிய அமீர் அப்துல்இரகுமானை, இராவலபிணடி என்னுமிடத்தில் சந்தித்துக் கலந்துபேசி, ஆப்கானிசுததானத்திற்கும் உருசியாவிறகுமிடையே போர் ஏற்படாவணணம் தடுத்ததுடன், ஆங்கில-உருசியப் போர் மூளக்கூடிய அபாயத்தையும் போக்கினார். அப்துல் இரகு மானை, ஆங்கிலேயரின நணபனாக உறுதிசெய்த சேவை தப்பிரினுக்கு உரியது.

**பர்மாச் சிககல்:** ஆங்கிலேய இந்தியாவுக்கும பாமா நாட்டுக்குமிடையே பகைமை நீடித்து வநதது. அதன் காரணமாக இஙகிலாந்து இரணடு பர்மியப் போர்களை முனபே நடத்தியிருந்தது. தப்பிரின் ஆட்சிக் காலத்தில் மீணடும் பர்மிய அரசு ஆங்கிலே யருக்கு இடையூறுகள் அளித்ததாலும், பிரெஞ்சுக் காரருடன நலவுறவு கொணடு ஆங்கிலேயரை எதிர்த்ததாலும், தப்பிரின் மூனறாம் பர்மாப் போரை நடத்தினார். வடபர்மாமீது கி.பி. 1885-இல் ஆங்கிலேயப் படை தாக்குதல் நடத்தியது. தொடாநது ஆஙகிலக் கப்பறபடை பாமியத் துறைமுகமான மாணடலேக்கு அண்மையில் சென றது. வேறுவழி யின்றிப் பர்மிய மன்னன் தீபா ஆங்கிலேயரிடம் சரணடைந்தான. வட பர்மா ஆங்கிலேயராட்சியின கீழ் வந்தது.

இவ்வாறு பல அரிய சாதனைகளைப் புரிந்த தப்பிரின், கி.பி. 1888-ஆம் ஆண்டில் பதவிவிட்டு நீஙகித் தம்தாய் நாட்டுக்குத் திரும்பினார். தெ.பா.

**தப்பெண்ணங்கள்:** பிறரைப் பற்றியோ பிற குழுக்களைப் பறறியோ உணமை நிலையை அறியாமல் அவசரப்பட்டு ஒரு முடிவுக்கு வருவதால், ஏற்படுபவை தப்பெணணங்கள எனப்படும். தபபெண ணம் (Prejudice) என்ற சொல் 'விசாரணை செய்யு முன்பே தீர்ப்பளித்தல்' என்ற பொருளைக் குறித்து வரும் ஓர் இலத்தீன் சொல்லிலிருந்து பிறந்தது. இது பொதுவாகப் பிறருக்கு எதிரிடையாகத் தோன்றும் மனப் போக்காகும். இது பிறருககெதி ரான முறையில சிந்திக்கவும், செயற்படவும் மக்களைக் கட்டுப்படுத்தும் மனநிலையாகும் என

நியூகோம்பு (New Comp) என்ற அறிஞர் கூறுகிறார். தப்பெண்ணங்கள் உண்மையான முடிவுகளல்ல. திரித்துக் கூறப்படுகின்ற ஒருபுறச் சார்புற்ற தீர்ப்புகளாகும். இத்தகைய தப்பெண்ணங்கள் தன்னலங் கருதியோ, தம் குழு நலத்தின் அடிப்படையிலோ உருவாகின்றன. இவற்றிற்கு ஆதாரமாக வலுவுள்ள மனவெழுச்சிகளும், விருப்பு வெறுப்புகளும் காணப்படும். அதனால்தான் ஒருவன் கொண்டுள்ள தப்பெண்ணங்களைப் பிறர் குறை கூறுவார்களாயின் அவன் பெருஞ்சினம் கொள்கிறான்.

தப்பெண்ணங்களால் உந்தப்பட்ட மனிதன் தன் கருத்துகளில் பீடிவாதமுள்ளவனாக இருப்பான். அவனுடன் வாதிட்டு அவனை நலவழிப்படுத்துதல் கடினமாகும். வெறுப்பின் அடிப்படையில் எழுந்த தப்பெண்ணங்கள் குழுக்களிடையே பகையுணர்வை உண்டாக்கி ஒன்றிலிருந்து மற்றவைகளைப் பிரித்து ஒதுக்குகின்றன. பிறரிடம் அச்சம்கொள்ளச் செய்து அவர்களைக் கூட்டாக வெறுக்கவும் செய்கின்றன பிறர் வெளிக் குழுக்களாகக் கருதப்படுகின்றனர். மனிதருக்கும் கீழ்ப்பட்டவர்களாகச் சிலநேரம் அவர்கள் எணணப்படுவர். பொதுவாகப் பல தப்பெண்ணங்கள் ஒரு சமுதாயத்தில் பரவலாகப் பெரும்பான்மையான உறுப்பினர்களிடத்திலும் காணப்படும். அதனால் தப்பெண்ணங்களை ஒவ்வோர் உறுப்பினனும சிநதனையின்றி ஏற்றுக் கொளகிறான். இநதத் தபபெண்ணங்களைப் பிறர் கொண்டிருப்பது, தன தப்பெண்ணங்களின் உண்மைக்குச் சான்று என்று ஒவ்வோர் உறுப்பினனும் எண்ணி மேலும் தீவிரமாக இவற்றைப் பற்றிக்கொள்கிறான்.

இந்தத் தப்பெண்ணங்களைத் தப்பெணணங்கள் என்று எவரும் பொதுவாக ஒப்புக்கொள்ளமாட்டார்கள். இவற்றிற்கு அடிப்படைகளாகச் சில காரணங்களைக் கற்பித்துக் கூறுவர். இத் தப்பெண்ணங்களுக்கு ஆதரவு தரக்கூடிய சில நிகழச்சிகளையும் கூறுவர். தமக்குப் பிடிக்காத ஒருவரோ, ஒரு குழுவோ செய்த நல்ல செயல்களை மறநது, நட்பு முறைப்படாத சில செயல்களை மட்டும் மறக்காமல் நினைவில் வைத்திருப்பர். அவற்றின விளைவாக அவர்தம் தப்பெணணங்கள் அவரிடம் நிலைத்துவிடும்.

**வகைகள்:** தப்பெண்ண்ங்கள் பொதுவாக ஐந்து வகைப்படும். அவை பிற இனங்களைப் பற்றியவை, பிற சமயங்களைப் பற்றியவை, பிற வகுப்புகளைப் பற்றியவை, வேறு அரசியல் கட்சிகளைப் பற்றியவை, அறிவியல் பற்றியவை என்பன. இந்தியாவில் மொழி சார்ந்த தப்பெண்ணங்களும் காணப்படுகின்றன.

நகர்ப்புறங்களில் வளரும் குழந்தைகளிடமுள்ள தப்பெண்ணங்களுக்கும் கிராமப்புறங்களில் வளரும் குழந்தைகளின் தப்பெண்ணங்களுக்குமிடையே சில வேற்றுமைகள் காணப்படுகினறன. பொதுவாக நகரக் குழந்தைகளிடம் பொருளாதாரம், அரசியல், மொழி ஆகியன சார்ந்த தப்பெண்ணங்களே மிகுந்த அளவில் காணப்படும். ஆனால் கிராமக் குழந்தைகளிடையே சாதி சமயத் தப்பெண்ணங்கள் மிகுந்திருக்கும்.

தப்பெண்ணங்கள் பிறவியிலேயே ஏற்படுபவையல்ல. குழந்தை பிறந்த பின்னர் நிகழும் வாழ்க்கை அனுபவங்களிலிருந்தும் அவை ஏற்படுவனவாகும். குழந்தைகளிடம் இளமையில் சில இயற்கை வெறுப்புகள் காணப்படலாம். நிறத்திலோ மொழியிலோ உடல் அமைப்பிலோ தம்மிடமிருந்து மாறுபட்ட பிறரிடமிருந்து சில குழந்தைகள் ஒதுங்கிக்கொள்ளக் கூடும். இவற்றைக் கவனிக்காமல விட்டுவிட்டால் இவைபோன்ற நடத்தைகள் தாமாகவே வெகு விரைவில் மறைந்துவிடும். ஆனால், சமுதாயத்திலுள்ள வயது முதிர்ந்தோர் இத்தகைய வெறுப்புகளையும், தப்பெண்ணங்களையும் தூண்டியும், அதிகரிக்கச் செய்து வருகின்றனர். பூ.த.

**துணை நூல்:**

Light, Donald and Suzanne, Keller Sociology, Alfred A.Knopf. Inc., New York, 1975.

**தப்லா பழங்குடிகள்,** அருணாசலப் பிரதேசத்திலும் பிற வடகிழக்கு எல்லைப்புற மாநிலங்களிலும் (NEFA) வாழ்கின்றனர். இம்மக்கள் தங்களை நிசாங்கு அல்லது நிசி என்றும் கூறிக்கொள்வர். இவர்கள் வாழும் மலைப்பகுதிகள இமயதின் அடிவாரத்தில் உள்ளதால் மிகுதியான அளவில் மழை பெறுகின்றன. இம்மலைகள் 4,000 முதல் 14,000 அடி உயரம் உள்ளவை. சில சிகரங்கள் ஆண்டின் பெரும் பகுதி பனியால் மூடப்பட்டுள்ளன. காடுகள் அடர்ந்த இயற்கைச் சூழலில் பல நூற்றாண்டுகளாகத் தப்லாப் பழங்குடியினர் தங்களது தனிப்பட்ட பண்பாட்டைக் காத்து வருகின்றனர்.

தப்லாவினர் (Dafla) இமயமலைப் பகுதிகளிலிருந்து இப்போது வாழும் பகுதிக்கு வந்தவர்களாகக் கருதப்படுகின்றனர். இவர்களின் தொன்மைக் கதைப்படி அபோ-தெனி (Abo-Teni) எனும் மூதாதைகளிடமிருந்து சுலாங்கு, அப்பாதானி (Apa-tani), மீரி, பாங்ரசு போன்ற பல பழங்குடி மக்களுடன் நிசாங்கு எனப்படும் தப்லாக்களும் தோனறினர் என்பது கூறப்படுகிறது. தப்லாக்கள் கொள்ளை

படித்தல், மக்களைப் பிடித்துச்சென்று அடிமைகளாக் குதல். ஆகியவற்றில் ஈடுபட்டுவந்தனர். இவர்கள் தங்களருகில் வாழும் பிற இனமக்களைக் கொள்ளை யடித்தனர் என அவுரங்கசீபின் அவையில் வர லாற்றுக் குறிப்பாசிரியராக இருந்த கசிவா என்பவர் குறிப்பிட்டுள்ளார்.

இவர்களின் கிராமங்கள் 25 முதல் 30 வீடுகளை யும் சுமார் 500 மக்களையும் கொண்டுள்ளன. வீடு கள் தரைமட்டத்திலிருந்து சில அடிகள் உயரத்தில் கம்பங்களின்மேல் மூங்கிலால் நீண்ட வடிவில் கட்டப் படுகின்றன. வீட்டினுள் வாழும் குடும்பங்களின் எண்ணிக்கைகேற்ப 5 முதல் 6 மீ. அகலமும், 46 மீ. வரை நீளமும் கொண்டுள்ளன. ஒரே வீட்டில் ஒன்றுக்கும் மேற்பட்ட குடும்பங்கள் வாழ்கின்றன. சில வீடுகளில பத்துக்கும் மேற்பட்ட குடும் பங்கள் உள்ளன. ஒவ்வொரு குடும்பத்துக்கும் சமை யல் தனித்தனியே செய்துகொள்ளப்படுகிறது. சமைப்பதற்காகவும் தங்குவதற்காகவும் வரிசை யாக ஒவ்வொரு குடும்பத்திற்கும் இடம் ஒதுக்கப் பட்டுள்ளது. தப்லாக்களின் குடியிருப்புகளில் வீடுகள் தனித்தனியாக இடைவெளி விட்டுக் கட்டப்படு வதால் தெரு அமைப்பு இல்லை. இளைஞர் மன்றங் கள், மந்தை, பொதுக்கூடங்கள் போன்றவை அமைக் கும் வழக்கம் இம்மக்களிடையே இல்லை. வீடுகளைச் சிறிய ஒற்றையடிப் பாதைகள் இணைக்கின்றன. கிராமங்கள் தூய்மைக் குறைவாகக் காணப்படு கின்றன. வீடுகளுக்கு அடியிலுள்ள இடத்தில் எருமை களும் பன்றிகளும் தங்குகின்றன.



தப்லா வீடு

தப்லா பழங்குடியினர் மங்கோலியர்கள். மஞ்சள் நிறத் தோல், கண்களின் இமைப் புழை (Palpebral Fissure), முகத்தில் குறைந்த அளவு மயிர், தலையில் சொறசொறப்பான மயிர் முதலானவை இவர்களின் உடற் பண்புகளாகும். ஆடவர்களின் கொண்டை அமைப்பு குறிப்பிடத் தக்கது. இவர்கள் தங்கள் தலை முடியைச் சடையாகப் பின்னி நெற்றியில் கொண்டை முடிகின்றனர். இக் கொண்டையைப் 'போடம் (Podum) என்று குறிப்பிடுகின்றனர். தலையில் மூங்கில் நாரி னால் செய்யப்பட்ட தொப்பி அணிகின்றனர் இதில் இருவாய்க் குருவியின் (Horn Bill) நீண்ட இறகுகளைச் செருகி அழகுபடுத்துகின்றனர். ஆடவர் கள் இரண்டு துணிகளை முழங்காலகள் முதல் தோள்கள் வரை சுற்றி நெஞ்சுக்கு முனபாக முடித்து கொள்கின்றனர். இடுப்பைச் சுற்றி மூங்கில் நாரா லான கச்சுகளை அணிகின்றனர். கைகளில் மூங்கில் நார் வளையல்களை அணிகின்றனர். பெண்கள் இடுப் பில் ஒரு பாவாடையையும், உடலை மூடி வலத் தோளில் முடிச்சிட்டு ஒரு கருப்புத் துணியையும் அணி கின்றனர். இருபாலரும் மூங்கில் காதோலைகளையும், கழுத்தில் பாசிகளையும், பித்தளைச் சங்கிலிகளையும், மணிகளையும் அணிகின்றனர். பெணகள வட்ட வடி விலான உலோகத் தட்டுகளை இணைதது அமைக்கப் பட்டுள்ள கச்சை இடையில் அணிகின்றனர். சிறுவர் கள் பெரும்பாலும் ஆடையின்றிக் காணப்படுகின்றனர். பச்சை குத்திக்கொள்ளும் பழக்கம் இம்மக்களிடம் இல்லை.

இடம்விட்டு இடம்பெயரும் முறையில் பயிர் செய் கின்றனர். நிலத்தைத் தேர்ந்தெடுத்துப் புதர்களை யும் மரங்களையும் வெட்டி உலர்த்தித் தீயிட்டுப் பயன்படுத்துகின்றனர், மூன்றாண்டுகள் இநநிலத்தில் பயிரிடுகின்றனர். அதன்பின் வேறிடத்தில் நிலம் ஆயத்தம் செய்யப்படுகிறது. நெல், மக்காச்சோளம், சிறு தானியங்கள், சர்க்கரைவள்ளிக்கிழங்கு, காய்கறி கள் போன்றவற்றைப் பயிரிடுகின்றனர். சாம்பலும் எருமைச் சாணமுமே உரமாகின்றன. இயற்கை வளமும் ஆண்டுக்கு 200 முதல் 250 செ.மீ. வரை பெய்யும் மழையும் இவர்களது பயிர்த்தொழிலுக்குத்



தப்லா ஆடவர்கள்

துணை செய்கின்றன. பயிர்களை அழிக்கும் காட்டு விலங்குகளின் நடமாட்டத்தைக் கவனிக்க நிலங்களில் உயரமான பரண்களை அமைக்கின்றனர். எருமை களையும் பன்றிகளையும் செல்வமாக மதிப்பதால் மிகுந்த அளவில் வளர்க்கின்றனர். பசுக்களும் ஆடு களும் இறைச்சிக்காகக் குறைந்த அளவில் வளர்க்கப் படுகின்றன. பலியிடுவதற்காகக் கோழிகளும் வளர்க் கப்படுகின்றன.

தப்லாககள் மிகச்சிறந்த வேட்டைக்காரர்கள் வில்லும் அம்பும் இல்லாத ஒருவரை இவர்களுள் காணமுடியாது. விலங்குகளின் காலடிச் சுவடுகளைப் பார்த்து அவற்றின் போக்கையும் இருப்பிடத்தையும் அறிந்துகொளளும் திறமை படைத்தவர்கள். தனியா கவும் குழுக்களாகவும் சென்று வேட்டையாடுகின் றனர். புலி, மான், கரடி போன்ற விலங்குகளை வேட்டையாடுவதுடன் பொறிகளை வைத்து அணில், எலி, பறவைகள் ஆகியவற்றையும் பிடிக்கின்றனர்.

மீன் பிடிப்பதற்குப் பல பாரம்பரிய முறை களைக கையாளுகின்றனர். ஓடைகளின் குறுக்காக அணைகளைக் கட்டி அணையின் ஒரு ஓரத்தில் மட்டும் மூங்கில் குழாய் வழியாக நீர் வெளிவருமாறு செய்கின்றனர். நீரை எதிர்த்து வரும் மீன்கள் அணை யின் சுவரில் மோதி மேலும் செல்ல வழிதேடி மூங்கில் குழாயினுள் நுழைய முயலுமபோது நீரின விசையால் வெளியே தள்ளப்படுகின்றன. அப்போது அவற்றைத் தப்லாக்கள் எளிதில் பிடிக்கின்றனர். பெரிய மீன்களை முதலில் ஒரு தடியால் அடித்து அதன்பின்பு பிடிக்கின்றனர். ஆழம் குறைவான ஓடைப் பள்ளங்களில் ஒருவகையான நச்சு மரத்தின் சாற்றைக் கலந்து மீன்களை மயக்கமுறச் செய்து பிடிக்கின்றனர்.

தப்லாக்கள் மூங்கில் பொருள்களினால் அன்றாட வாழ்க்கைக்குத் தேவையான பல பொருள்களைச் செய்கின்றனர். தண்ணீர்க் குடுவைகள், கரண்டிகள், தொப்பிகள், பாய்கள், அம்புகள, ஈட்டிகள், பைகள தட்டுகள், விசிறிகள் போன்றவை அவற்றுள் சில. வெள்ளி, பித்தளை அணிகலன்களையும் வில், அம்பு ஆகியவற்றின் உலோக முனைகளையும், புகைக்கும் குழாய் போன்றவற்றையும் செய்கின்றனர். மட் பாண்டங்கள் பெண்களால் செய்யப்படுகின்றன.

திருமணங்கள் பெற்றோர்களால ஏற்பாடு செய்யப் படுகினறன. பெண்ணுக்குப் பரிசமாக எருமைகளைக் கொடுக்கின்றனர். குறிப்பிட்ட ஒரு நாளில பையனின் பெற்றோரும் உறவினரும் பரிசத்திற்கான எருமை களையும் பிற பரிசுப் பொருள்களையும் எடுத்துச் சென்று பெண வீட்டில் வழஙகுகின்றனர். அங்கு அனைவருக்கும் சிறப்பான விருந்து அளிக்கப்படுகிறது. அதன்பின்பு பெணணையும், மாப்பிளளையையும புத்தாடைகளால் அலங்கரித்து மாப்பிள்ளையின வீட்டுக்கு அழைத்துச் செல்கின்றனர். திருமணததிற் கென்று வேறு சிறப்பான சடங்குகள இல்லை. மண மக்கள் இருவர் மட்டும் ஏற்பாடு செய்துகொளளும் திருமண முறை மிக அரிதாக உள்ளது. அவ்வாறு நடைபெற்றாலும் பெண்வீட்டார் தேடிவநது பரிசத் தைப் பெறுவார்கள. பரிசம் கொடுக்கபபடாவிட் டால் பெணணை வற்புறுததி வீட்டுக்கு அழைத்துச் சென்றுவிடுவார்கள்.

தப்லாக்கள் பல மனைவிகளுடன் வாழ்கின்றனர் ஒவ்வொரு மனைவிக்கும் தனியான வீடு அல்லது இடம் ஒதுக்கப்படுகிறது, ஒவ்வொரு மனைவிக்கும் நிலம் தனித்தனியாக உளளது. இருப்பினும் உரிமை கள் தந்தை வழியிலேயே உள்ளன.

கருவுற்ற காலத்தில் பெண்கள் கிரகணங்களைப் பார்க்கக்கூடாது எனும் தடை இந்திய நாட்டின் பல இனமக்களிடம் உள்ளது. தப்லாக்களிடம் இத்தடை இல்லை. மகப்பேறு நேரத்தில ஏதேனும் சிக்கல்கள் நேர்ந்தால் ஆவிகளுக்குப் பலி கொடுக்கப்படுகிறது.

குழந்தை பிறநததற்கு அடுத்த நாளில் சமயத் தலைவனால் குழந்தைக்குத் தந்தை வழியுள்ள பெயர் சூட்டப்படுகிறது. குழந்தை பெறும்போது தாய் இறந்துவிட்டால் அக்குழந்தை கேடு விளைவிக்கும் தன்மை உடையதா இல்லையா என்பதற்குக் குறி பார்த்துக் கேடு விளைவிப்பதாக இருந்தால் இறந்து போன தாயுடன் அக்குழந்தையை உயிருடன் புதைக்கும் வழக்கம் இம்மக்களிடம் இருநதுவந்தது. இப் பழக்கம் இப்போது இலலை. குழந்தைகளைத் தாய்மார்கள் தங்களது அன்றாடப் பணிகளின்போதும் முதுகிலேயே கட்டிக்கொள்கின்றனர்.

தப்லா மக்களிடம் பழங்குடி நிருவாக அமைப்பு எதுவும் குறிப்பிடும்படி இல்லை. சில கிராமங்களில 'கவோபுரா' (Gaobura) எனப் பெயர் பெறும் கிராமத் தலைவன் இருந்தபோதிலும் விவாதங்களில் முடிவெடுக்கும் அதிகாரம் அவருக்கில்லை. குற்றங்களை விசாரிப்பதற்கான பொது மன்றங்களும் இல்லை. சண்டை சச்சரவுகளில் பழிக்குப் பழி என்ற அடிப்படையிலேயே முடிவு காணப்பட்டு வந்தது. இதன் விளைவாகவே இளைத்தோரை அடிமைப்படுத்தும் வழக்கமும் இம்மக்களிடையே அண்மைக்காலம் வரையில் இருந்துவந்தது.

அனி துய்னி (Ane Duini) என்று கூறப்படும் தாய்த் தெய்வத்தை வழிபடுகினறனர். அனி துய்னியின் அன்பும் ஆசியும் இல்லாமல் இவ்வுலகில் எதையும் அடையமுடியாது; குழந்தைகளைக் கொடுப்பதும் காப்பதும் அவளே; அவள் அருளாலேயே பயிர்கள் விளைகினறன; எருமைகளையும், பன்றிகளையும் பிற செல்வங்களையும் அவளே வழங்குகிறாள என நம்புகின்றனர். தப்லாக்களின் பண்டிகைகளின் போதும் திருமணம் போன்ற விழாக்களின்போதும் அவர்கள் பாடும் பாடல்களில் அனி துய்னி போற்றப் படுகிறாள்.

'வியூ'க்கள் என்று கூறப்படும் பல கடவுளகளையும் தப்லாக்கள் வழிபடுகின்றனர். இநத வியூக்கள மனிதர்களை நோய்க்கும் வித்துபக்கும் உள்ளாக்கி வேட்டையாடிக் கொல்வதாக நம்புவதால் அவ்வப் போது வியூக்களுக்குப் பலி கொடுக்கினறனர். இவை தவிர 'ஓரம்' என்றுசொல்லப்படும் மூதாதையர்களின் ஆவிகளையும் வழிபடுகின்றனர். ஒவ்வொரு முறை உணணும்போதும் ஓரம்களுக்குச் சிறிது நீரும் உணவும் படைக்கின்றனர்.

வடகிழக்கு எல்லைப்பகுதியில் வாழும் பிற பழங்குடி மக்களைப் போல் தப்லாக்களும் மகிழ்ச்சியான காலங்களில் நடனம் ஆடுகின்றனா. திருமண விழாக்களில் பெண்கள கைகளை இடுப்பில் வைத்துக் கொண்டும், கைகளைத் தட்டிக்கொண்டும், முழங்கால்களை வளைத்தும் ஆடும் நடனம் நெர்டெம் (Nerdem) எனப்படுகிறது. ஆடவர்கள வெட்டுக் கத்திகளைக் கைகளில் பிடித்துக்கொண்டு வட்டமாகவும், அரை வட்டமாகவும் நின்று ராப்சோடம் (Rop-So-Dem) எனும் நடனம் ஆடுகினறனர். ஆடவர் மட்டுமே பங்கேற்கும் மற்றுமொரு நடனம் பியா யோ டம் (Bhiya-Yo-Dem) எனப்படுகிறது.

இந்திய விடுதலைக்குப் பின் தப்லாக்கள வாழும் பகுதிகளில் செயற்படுத்தப்பட்ட சாலைவசதி, பொதுத்தொடர்பு, வேலைவாய்ப்பு, மருத்துவம், கல்வி போன்ற நல்வழித் திட்டங்களின பயனாக இம்மக்களின் பொருளாதாரம் உயர்ந்துளளது. நெடுங்காலமாக இம்மக்களிடம் இருந்து வந்த அணடை மக்களைக் கொளளையடித்தல், அடிமைப் படுத்துதல் போன்ற பழக்கஙகள் அறவே அகற்றப்பட்டன. வேளாண்மையிலும் புதிய முறைகள மேற்கொள்ளப்படுகின்றன. இப் புதிய மாற்றங்களுடன் தங்களது பழைமையான பணபாட்டையும் தப்லாக்கள் கட்டிக் காத்து வருகின்றனர். ப.இரா.

**தப்ளின்:** அயர்லாந்துக்குடியரசின தலைநகராகவும், அயர்லாநதிலுள்ள மிகப் பெரிய நகரமாகவும், அயர்லாந்தின் சமுதாய, பொருளாதார, வணிக, கல்வி முதலியவற்றின் இருப்பிடமாகவும் விளங்குவது தப்ளின் நகரம் ஆகும். இந்நகரம் அயர்லாந்தின் கிழக்குக் கடற்கரைப் பகுதியின் நடுவில் உள்ளது. இந்நகரின் கிழககே அயர்லாநது கடல் (Irish Sea) உளளது. அயர்லாந்தில் உள்ள லிபீ (Liffey) ஆற்றின




தப்ளின் அமைவிடம்

கடறபகுதிககும், இந்நகரின் தெற்கே அமைந்துள்ள குனறுகளுக்கும் வடககில் உள்ள சமவெளிப பகுதிக் கும் செல்லமுடியும். இவ்வமைப்பினால இந்நகரம் பல அழகான இயற்கைக்காட்சிகள் கொண்டு அமைந்துள் ளது. இஙகு உளள பினிக்கிசு பூங்கா (Phoenix Park) 1, 760 ஏக்கர் நிலப்பரப்பைக் கொண்டு உலகிலேயே



தப்ளின்

பெரிய பூஙகாவாக உள்ளது. மக்கள்தொகை 525,882 (1981). பரப்பு 11, 499 எக்டார்கள்.

இந்நகரத்தில் கி.பி. 9-ஆம் நூற்றாண்டின் தொடக்கத்தில் குடியேறிய வைககிஙகு மாலுமிகள் இந்நகரத்தை உருவாக்கினர். இதனைத் துறைமுக மாகவும் பயன்படுததினர். இந்நகரை காலிக்கு(Galic) மொழியில் தப்ளின (Dub-Linn)என்ற பெயரால் வழங்கினர். தப் என்பது கருமை எனவும் 'ளின்' என்பது நீர்க்குளம் எனவும் பொருள் தரும். இலிபீ (Liffey) நதியின் நீர் கருமை நிறம் கொணடதாக இருந்ததால் இப்பெயர் பெற்றது. நார்மன் வீரர்கள இந்நகரை கி.பி.1170-இல் கைப்பற்றினர். பின்னர் இநநகரம் அயர்லாந்தின் தலைநகராக மாறியது. இங்குப் புனித பெட்ரிக்கு ஆலயம் (St.Petrick Cathedral)கி.பி. 1190 -இல் கட்டப்படடது. தப்ளினில் கி.பி. 1200 வாககில தப்ளின காப்பரண் (Dublin Castle)மாளிகை கட்டப் பட்டது. அன்றிருந்து இம்மாளிகை அயர்லாந்தில் பிரிட்டனின் ஆட்சிமையமாக விளங்கியது. தப்ளின் கி பி. 18-ஆம் நூற்றாண்டு முதல் பெரும் வளர்ச்சி யடைந்தது. அப்போதுதான், இங்குப் பல மாளிகை களும் வீதிகளும் கப்பல் துறைகளும் கட்டப்பட்டன. அயர்லாந்தில் கி.பி.1916-ஆம் ஆண்டு நடைபெற்ற ஈசுட்டர் கலகப் புரட்சி (Easter Rebellion) தப்ளின் நகரில்தான் தொடங்கியது அன்றிருந்து அயர்லாந் தின் சுதநதிரப் போராட்டம் தொடங்கியது. அயர்




தப்ளின் ஓ கானல் சாலை

லாந்து கி.பி. 1921-ஆம் ஆண்டு பிரிட்டனின் ஆதிக்கத்திலிருந்து விடுபட்டு விடுதலை அடைந்தது.

இத்தகைய வரலாற்றுப் பின்னணியுடைய தப்ளின் நகரில் பல வரலாற்றுப் புகழ்மிக்க மாளிகைகளும், அயர்லாந்தின் வரலாற்றுப் புகழ் பெற்றவர்களின் சிலைகளும், நினைவுச் சின்னங்களும் இந்நகரின் பல தெருக்களில் உள்ளன. பிரபு ஒரேசியோ நெல்சன் (Lord Horatio Nelson) என்பவரின் சிலை ஓகானல் (O' connel) என்னும் சாலையின் நடுவில் உள்ளது. இச்சாலையே ஐரோப்பாவிலுள்ள மிக அகலமான சாலையாகும். தப்ளினில் உள்ள இலின் சுடர் மாளிகை (Linsterhouse) கி.பி. 1700-இல் கட்டப்பட்டது. இம்மாளிகையில தான், இப்போது அயர்லாந்துக் குடியரசின் பேராளர்கள் அவை (Irish House of Deputies) அமைந்துள்ளது.

இந்நகரில் கி.பி. 1591-இல ஆங்கில அரசி முதலாம் எலிசபெத்து விடுத்த சாசனம் (Charter) மூலம் தொடங்கப்பட்ட திரினிட்டி கல்லூரி(Trinity College) இன்றைய தப்ளின் பல்கலைக் கழகமாக உள்ளது. இப்பல்கலைக் கழகத்திற்கு, ஆங்கில அரசர் முதலாம் சேம்சு தந்த சொத்துககளில் இருந்து வரும் வருவாய், இன்றும் பல்கலைக் கழகத்திற்கு உதவியாக உள்ளது. இப்பலகலைக் கழகத்தில் கலை, அறிவியல், வேளாணமை, இறைமையியல் முதலிய துறைகள் உள்ளன. ஆண்டிற்குச் சராசரியாக 2,300 மாணவர்கள் பயில்கின்றனர். இங்கு உள்ள தேசிய பல்கலைக் கழகத்தின் கீழ் கி.பி. 1854-இல் தொடங்கப்பட்ட தப்ளின் கல்லூரி உள்ளது.

தப்ளின் துறைமுகம் மூலமாக, வணிகத்தொடர்பு, குறிப்பாகப் பிரிட்டனுடன் நிரம்ப உள்ளது. இங்கிருந்து மாப் பண்டங்கள (Biscuits) பதனிடப்பட்ட உணவுகள். ஆடைகள், இரும்புப் பொருளகள, காகிதம், பதனிடப்பட்ட தேயிலை. வீரியமிக்க பானங்கள் முதலியன ஏற்றுமதி செய்யப்படுகின்றன. பு.எ.மோ.

**தபகாத்து-இ-அக்குபரீ** என்பது இந்தியாவின் இடைக்கால வரலாற்று நூலாகும். இந்த நூலை இயற்றியவர் நிசாம் உத்தின அகமது என்பவர். இந்நூல் எழுதப்படுவதற்கு அப்பாசுகான் என்பவர் எழுதிய வரலாற்றுக் குறிப்புகளே பெரிதும் பயன்பட்டன. ஏறகெனவே புகழ்பெற்ற முசுலீம் வரலாற்றறிஞர்களாகிய அபுல்பாசல, அப்பாசுகான் ஆகியவர்களை விட, நடுநிலையோடு, விருப்பு வெறுப்பின்றி வரலாற்றைப் படைத்ததில் நிசாம் உத்தின் அகமது சிறந்து விளங்குகிறார்.

உலுக்கான் என்று சொல்லப்பட்ட முகமது பின் துக்ளக்கு தன் தந்தை சுல்தான் கியாசுதீன துகளக்கைக் கொலைசெய்துவிட்டு ஆட்சியைக கைப்பற்றிக் கொணட செயலை இது தெளிவாகக் குறிப்பிடுகின்றது.

தபகாத்து-இ-அக்குபரீ கி.பி. 14-ஆம் நூறறாணடின வங்க நாட்டு வரலாற்றை அறிவதறகும பெரிதும உதவுகிறது. வங்கநாடு கி பி. 1205-ஆம் ஆணடிலிருந்து முகமதியர்களின் ஆட்சியின் கீழ இருந்து வந்தது, ஆனால், சிக்கந்தர் சாவின் (1358-89) ஆடசிக்குப்பிறகு இந்துக்களின் கை ஓங்கி, கணேசன் எனற இந்து மன்னர் ஏழாண்டுகளுக்கு வங்கததை ஆணடார். இந்தச் செய்தியைத் தெளிவாக தபகாதது-இ-அக்குபரீ (Tabaqat-i-Akbarı) தருகிறது.

பாமனியின் பெயர்க் காரணம் பற்றியும் தபகாத்து-இ-அக்குபரீ குறிப்பிட்டுள்ளது. ஈசுபநதியார் என்பவரின் மகனாகிய மாவீரன பாமன் எனபவரின வழித்தோன்றலாக அந்த அரசின் முதல் மனனன அசன் விளங்கியதால், பாமனி எனற பெயர் அநத அரசிற்கு ஏற்பட்டது என்று இந்நூல கூறுகிறது. பாமனி அரசின் புகழ்பெற்ற அமைசசராக விளஙகிய வர் மாமூதுகாவான் (கி.பி. 1411-1481) இவர் தம நண்பர் முல்லா அபதுல் கரீம் என்பவர் 'மாசிா-இ-மாமூத சாகி' என்ற நூலில் குசராத்தின் வரலாற்றை எழுதியுள்ளார். இந்நூல், தமக்குப் பேருதவியாக இருநதது என்று தபகாத்து-இ-அக்குபரீ' என்ற நூலின ஆசிரியர் நிசாம் உத்தின் அகமது கூறியுள்ளார். அ.க.

**தபகாத்து-இ-நாசரீ** என்பது ஒரு வரலாற்று நூலாகும். இந்நூல் தொடக்கக்காலம் முதல கி.பி. 1260 வரையிலுள்ள இந்தியாவின் பொது வரலாற்றைத் தருகிறது என்றாலும், இந்தியாவின் இடைக்கால வரலாற்றிறகு இநநூல் நலல சானறுகளைத் தருவதாக அமைந்துளளது. இந்நூலின் ஆசிரியர் மின்னாசு-இ-சிராசு என்பவராவார். இவர் கி பி. 1193-இல பிறநதவர். இந்நூல் ஆங்கில மொழியிலும் பெயர்க்கப்பட்டுளளது.

இந்திய இசுலாமிய அரசுகளின வரலாற்றை எழுதிய புகழ்பெற்ற வரலாற்றறிஞர் சியா உத்தீன பரானி ஆவர். இவர் கி.பி. 1358-ஆம் ஆண்டு தமது புகழ்பெற்ற 'தாரீக்-இ-பிரோசு சாகி' எனற வரலாறறு நூலை, 'தபகாத்து-இ-நாசரீ' எவவிடத்தில தனது வரலாற்றை முடித்துக்கொள்கிறதோ அந்த இடத்திலிருந்து தொடங்கியிருக்கிறார்.

இங்கிலாநது நாட்டிலுளள பிரிட்டிசு மியூசியத்தில, தபகாத்து-இ-நாசரீயின (Tabaqat-i-Nasırı)

கையெழுத்துப் படி ஒன்று உள்ளது. அதில், ஒரு பகுதியாக நான்கு பக்க அளவில் முகமது பின் துக்ளக்கின் சுயசரிதை இடம்பெற்றுள்ளது என்பதை எம். அபீபு என்பவர் கண்டறிந்துள்ளார்.

வங்க நாட்டில் முகமதிய மன்னர்கள் கட்டிய மசூதிகள், கலலூரிகள், விடுதிகள், பிரமாண்டமான கட்டடங்கள் ஆகிய கட்டுமானப் பணிகளைப் பற்றி இந்நூல விரிவான தகவல்களைத் தருகிறது. அதனோடு, தில்லியைத் தலைநகராகக் கொண்டு ஆட்சி செய்த அடிமை வமிசத்தின் அரசி இராசியா (கி.பி. 1236-1240) என்பவளின் ஆட்சிச் சிறப்புகளைப் பற்றியும் இந்நூல் நல்ல தகவல்களைத் தருகின்றது.

இந்நூலாசிரியர் தில்லிச் சுல்தான் நாசிர் உத்தின் மகமூதுசாவின் (கி.பி. 1246-1265) அவைக்களப் புலவராக விளங்கியவர்; பகீர் உத்தீன் நானக்கீ என்ற புகழ்பெற்ற கவிஞரின் சமகாலத்தவராவார்.

அ.க.

**தபோய்:** குசராத்து மாநிலத்தில் உள்ளதோர் ஊர். சாளுக்கியர் காலத்தைச் சார்ந்த கோட்டை ஒன்று இவ்வூரில் உள்ளது. இவ்வூர் பரோடா நகருக்கு மிக அருகில் உள்ளது. சாளுக்கியர்கள் கட்டிய கோட்டைச் சுவர்கள இன்று அழிந்த நிலையில் காணப்படுகின்றன. இச் சுவர்கள் இந்நகரைச் சுற்றிக கட்டப்பட்டுள்ளன. இச்சுவர்களின் அணி வேலைப்பாடுகள் மிகுதியாகக் காணப்படுகின்றன. இக் கோட்டை மதில் கி.பி. 13-ஆம் நூற்றாண்டைச் சார்ந்தது. இது விசாலதேவர் என்னும் அரசர் காலத்தில் கட்டப்பட்டது. வாசுத்துபால சரிதம் என்னும் நூலில வாசுத்துபாலரின் சகோதரன் தேசபாலர் (Tejahpala) என்னும் அமைச்சர் எதிரிகளின் படையெடுப்பினின்று நகரைக் காக்க இவ்வரணைக் கட்டினார். இக்கோட்டையில் 4 நுழைவாயில்கள் உள்ளன. இவை மிக நேர்த்தியான முறையில அமைக்கப்பட்டுள்ளன. இந்நுழைவாயில்களுக்குள் கிழக்கில் உள்ள வைர நுழைவாயில் (Diamond gate) புகழ்பெற்றது. வடக்கிலுள்ள நுழைவாயில மோதி நுழைவாயில் என்றும், தெற்கில் உள்ளது நந்தோது அல்லது சந்தோது (Nandod or Chandod) என்றும்,மேற்கில் உள்ளது பரோடா நுழைவாயில் என்றும் கூறப்படுகின்றன. மரவேலைப்பாடு அமைப்புப் போன்று இந்நுழைவாயில்கள் காட்சியளிக்கின்றன. இராமயண,மகாபாரதக்கதை நிகழ்ச்சிகளும், சுவருடன்கூடிய தூண்களும்தோரணங்களும் இந்நுழைவாயில்களில் காணப்படுகின்றன. சுக்கிரீவன் வாலி சண்டை, நடனமாடும்சிவன், பைரவர், தேவி, நரசிம்மர், திருவிக்கிரமர், நரசிம்மர் முதலானோர் போன்ற



பரோடா பல்கலைக்கழகம்

சிற்பங்கள் இங்குக்காணப்படுகின்றன. இங்குள்ள நுழைவாயிலைப் போன்ற நுழைவாயில்கள் குமிலி, ஞனகார் போன்ற இடங்களிலும் உள்ளன. நுழைவாயில்களின் தோரணங்கள் காண்பவரின் கருத்தைக் கவரும் வகையில் அமைக்கப்பட்டுள்ளன. சு.இரா.

**தம்பார்ட்டன் ஓக்சு திட்டம்** என்பது அமெரிக்காவின் தலைநகர் வாசிங்டனில் உள்ள தம்பார்ட்டன் ஓக்சு (Dumbarton Oaks) என்னும் மாளிகையில் கி.பி.1944-இல் ஒரு பன்னாட்டு மாநாடு கூடித் தயாரித்த அமைதித் திட்டம். இரண்டாம் உலகப்போர் முடிவதற்கு முன்னரே உலகில் நிலையான அமைதி ஏற்படுவதற்கு முயற்சிகள் செய்யப்பட்டன. தம்பார்ட்டன் ஓக்சில் 1944-இல் கூடிய அரசியல் தலைவர்கள் அமைதிககான பல கருத்துகளை விவாதித்தனர். அவர்கள் வகுத்த திட்டம் ஐக்கிய நாடுகள் சபை ஏற்பட வழிவகுத்தது. இந்த உலகப் பேரவையின் ஆவணம் இறுதிவடிவம் பெற்ற மாளிகை குறிப்பிடத்தக்க வரலாற்றுச் சிறப்புப் பெறறுள்ளது. அமெரிக்கா, உருசியா, பிரிட்டன், சீனா ஆகிய நாடுகளின் பேராளர்கள் இந்த மாளிகையில் தயாரித்த திட்டம் சில திருத்தங்களுடன் 1945-இல் சான்பிரான்சிசுகோவில் 50 நாடுகளின் பேராளர்களால் கையெழுத்திடப்பட்டது. இதன் விளைவாக ஐக்கிய நாடுகள் சபை உருவாகியது.

தெ.பா.

**தம்மபதம்** புத்தபிரானின் சிந்தனைச் சாரமாகத் திகழ்வது தம்மபதம் என்னும் பாலி நூலாகும். இந்நூல் திரிபிடகங்களில் ஒன்றாகிய சுத்த பிடகத்தின் ஐந்தாம் பாகமாகிய குத்தக நிகாயத்தில் இரண்டாம் நூலாகத் தொகுக்கப்பெற்றுள்ளது. தம்ம என்ற பாலிச் சொல்லிற்கு ஒழுங்கு, விதி, அறம் எனப் பல பொருள்கள் உள்ளன. பதம் என்பது பாதை, மார்க்கம், உபாயம், சொல், பாடல் என்று பொருள்படும். எனவே, தம்மபதம் என்பது அறப் பாதை என்றும், மக்கள் பின்பற்றுதற்குரிய நெறி முறைகளையும் நீதிகளையும் எடுத்துரைக்கும் அற நூல் என்றும் உணரலாம். பதம் என்ற சொல் பகுதி, பிரிவு என்ற பொருளையும் தருதலின், தம்மபதம் என்பது தம்மத்தின் பகுதி எனவும் கொள்ளப்படும். அறத்துப்பால் என்ற சொற்பொருளும் இங்கு இணைத்து நோக்கத்தக்கது.

தம்மபதம் ஈராயிரம் ஆண்டுகளுக்கு முன்பே திபெத்து, சீனம் முதலிய அயல்மொழிகளில் மொழி பெயர்க்கப்பெற்ற சிறப்புக்கு உரியது. இக்காலத்திலும் ஆங்கிலம் முதலிய பல மொழிகளில் இந்நூல் மொழிபெயர்க்கப்பெற்றுள்ளது. புத்தகோசர் கி.பி. 5-ஆம் நூற்றாண்டில் இந்நூலுக்கு வரைந்துள்ள பேருரையினால், இதன்கண் அடங்கியுள்ள பாடல்கள் எழுதுவதற்குரிய சூழலும், இவற்றுக்குரிய மரபுவழி விளக்கங்களும் பிறவும் தெரிந்துகொள்ள முடிகிறது.

இந்நூலில் 26 அதிகாரங்களும் 423 பாடல்களும் உள்ளன. ஒவ்வோர் அதிகாரமும் வக்கம் (வருக்கம்) என்று வழங்கப்பெறும். யமக(இரட்டைப் பாடல்கள்) வக்கம், அப்பமாத (ஊக்கம் உடைமை) வக்கம், சித்தவக்கம் என்பன முதல் பிரமாண வக்கம் முடிய இப்பகுதிகள் அமைந்துள்ளன.

புத்தர்பிரான் நடைமுறையில் காணப்படும் பொருள்களையே உவமைகளாகக் கொண்டு அரிய பெரிய உண்மைகளையும் அறங்களையும் புகட்டியிருத்தலை இந்நூலில் காணலாம். மனச்சுகாதாரத்தினை அவரளவிற்குயாரும் வலியுறுத்திக் கூறவில்லை. நன்றாக வேயப்பெறாத கூரை வீட்டிற்குள் மழைநீர் பொத்துக்கொண்டு கொட்டுதல்போல், பண்படுத்தப் படாத மனத்திற்குள்தான் தீய எண்ணங்கள் நுழைய முடியும் என்கிறார் (13). மனத்தைப் பண்படுத்தும் தற்பயிற்சிதான் புத்தர் காட்டியநெறி. தாய், தந்தை, சுற்றம் முதலிய யாராலும் ஆற்றமுடியாத நன்மைகளைப் பண்பட்ட மனம் நமக்கு வழங்கும் என்பது அவர் போதனை (43).

புலனடக்கத்தைப் புத்தர் புகட்டினார். 'தீவினைகளைச் செய்யாதே; நல்வினைகளைப்புரிந்திடுக; சித்தம் சுத்தமாக இருக்கட்டும். இதுவே புத்தரின் அறிவுரை' என்று தம்மபதப்பாடல் ஒன்று கூறுகிறது. (183)

சிற்றினம் சேராமையினையும், பெரியாரைத் துணைக் கோடலையும் தம்மபதம் வலியுறுத்துகிறது. வாழ்நாள் முழுவதும் அறிவாளியுடன் இருந்தாலும் மூடன் உண்மை அறிவைப் பெறாமைக்கு, எந்நேரமும் சாற்றில் கிடந்தாலும் அதன் சுவையினைக் கரண்டி அறிய முடியாமையினை எடுத்துக் காட்டுகிறார். நாக்கு, சாற்றின் சுவையினைப் பட்டதும் உணர்தல்போல், நல்லோன் பெரியாருடன் ஒரு கணப் பொழுது பழகினாலும் உண்மை ஞானத்தை அடைகிறான் என்கிறார் (65) இடித்துரைக்கும் நண்பர்களைச் செல்வப் புதையல் மறைந்திருக்கும் இடத்தினைச் சுட்டிக்காட்டும் சீலர் என்று பாராட்டி அவருடன் நட்புக்கொள்க என்கிறார் (76). தட்டான் உலோகத்தில் உள்ள களிம்பினைப் போக்குதல்போல், ஒவ்வொரு கணப்பொழுதும் தம்மைச் சார்ந்துள்ள களங்கத்தினைச் சிறிது சிறிதாக நீக்குதற்கு முயல வேண்டும். (243). சொல்லிய வண்ணம் செயற்படுவோரின் பயன்தரும் சொற்கள் வனப்புடைய வண்ண மலர் வாசனையும் பெற்றாற்போல் சிறப்புடையவை (52). பொருளற்ற சொற்களினால் தொடுக்கப் பெற்ற ஆயிரக் கணக்கான பாடல்களைவிட, கேட்ட மாத்திரத்தில் மன அமைதியை அளிக்கும் பொருள் பொதிந்த ஒரு பாடல் மேலானது (101).' இவை புத்தரின் பொன்மொழிகளுள் சில.

ஆசையை அழித்தவன் எல்லாத் துன்பங்களையும் வென்றவன் ஆகிறான் (354). உடல்நலத்தைப் பேணுவதின் அவசியத்தையும் புத்தர் சுட்டியுள்ளார் (204). இளமைக் காலத்திலேயே ஒழுக்க நெறியில் வாழாதவரும், செல்வத்தைத் தேடாதவரும் துன்புறுவர் என்கிறார் (155-6). தன்னை வென்றவனே மகா வீரன் (103).

இந்நூலின் முடிவில், பண்பாட்டினாலும் ஒழுக்கத்தினாலும் கல்வியாலும் அனைவருமே அந்தணராக உயரமுடியும் என்று புத்தர்பிரான் நல்வழி காட்டியுள்ளார்.

சோ.ந.க.

**தம்மபாலர்** (கி.பி.528-560) புகழ் வாய்ந்த பழமைமிக்க நாளந்தாப் பல்கலைக்கழகத்தின் குலபதியாகப் (துணைவேந்தர்) பணிபுரிந்த பன்னாட்டுப் புகழ்பெற்றவர். மகாயான புத்த சமயத்தில் பெரு நம்பிக்கை கொண்டு அதன் கோட்பாடுகளைப் பரப்பியவர்; வாதிடுவதில் வல்லவர்; சொற்போரில் பல புறச் சமயத்தாரை வென்றி கண்டவர்.

இவர் தமிழகத்தில் உளள காஞ்சிபுரத்தைச சேர்ந தவர்; ஓர் அமைச்சரின புதல்வர். இளமைக் காலத் திலேயே பல உயர்ந்த நூல்களைக் கற்றுப் பௌத்த சமயக் கோட்பாடுகளில் பெரிதும் ஈடுபாடு கொண டார். இவர் தந்தையார் இவருக்குத் திருமணம் முடிக்கவிருநத சமயத்தில இவர் துறவு மேற்கொணடு காஞ்சியை விட்டு வெளியேறிபீகார் மாநிலத்திலுள்ள கயாவிலிருந்து 80 கி.மீ. தொலைவிலுள்ள இராசகிரி (Rajgir) என்னுமிடத்திற்கு அருகிலுள்ள நாளந்தாப் பல்கலைக்கழகத்திற்குச் சென்றுவிட்டார். அனறு நாளந்தாப் பல்கலைக்கழகம், மகாயானம் சார்நத கலவிமையமாக விளங்கிற்று. இவர் தொடக்கத்தில் புகழ்பெற்ற பௌத்த சமய தருக்க நூலாசிரியரான திக்நாகர் (தின்னாகர்) என்பாரிடம் இலக்கணம், தருககம் முதலானவற்றைப் பயினறு, நாளந்தாவிலும் சிலகாலம் கல்வி பெற்றரர். கௌசாம்பி என்னும இடத்தில் பௌத்த சமயத் துறவிகளுக்கும்பிற சமயத் தாருக்கும் சொற்போர் ஒன்று நடந்தது. அதில பௌத்த துறவிகள தோற்றுப்போயினர்.இநநிலையில் இவர் தனித்து நின்று பிற சமயத்தாரை வாதில் வெற்றிகண்டு புகழ் கொணடார். பின்னர்த் தோற்ற எதிரிச் சமயத்தாரையும் கௌசாம்பி வேந்தனையும் இவர் பௌத்த சமயத்திற்கு மாற்றினார். அதன் விளைவாக இவரது புகழ் எங்கும் பரவியது. மற் றொரு முறை இவர், பௌத்தர்களை ஏழு நாள் நிகழந்த சொற்போரில் வென்று மகாயான பௌத்த சமயத்தின் கொள்கைகளை நிலைநாட்டினார்.

பெரும் புகழ்பெற்ற இவர் நாளந்தாப் பல்கலைக் கழகத்தில் பேராசிரியராகப் பணிபுரிந்தார்;பினனாத் குலபதியாகவும்(துணைவேநதர்) அப்பலகலைக்கழகத் தில் அமர்த்தப்பட்டார்.இவர் புத்தசமய நுணபொருள கோட்பாட்டியல் (Metaphysics), தருககம் (Logic) ஆகியவற்றில சிறந்த எழுத்தாளராகவும் விரிவுரை யாளராகவும் திகழ்ந்தார். மகாயான புத்த சமயத் தில் கற்றுத்துறை போகிய மேதையாக இவர் விளங் கினார். வஙகாளத்தைச் சேர்ந்தவரும், இவருக்குப் பின்னர் நாளந்தாப் பல்கலைக்கழகத்தின் துணை வேந்தராகவும் பதவியேறற சீலபததிரர் (கி.பி. 585-640) இவர்தம் தலைமாணாக்கர் ஆவார். தரும பாலர் சுமத்திராவிற்குச் சென்று அங்கு மகாயான பௌத்த சமயக் கருத்துகளைப் பற்றி விரிவுரை நிகழ்த்தினார். இவர் போன்ற மேதைகளின் முயற்சி யால் புத்தசமயம் சாவா, சுமத்திராவில் தழைத் தோங்கி வளரத் தொடங்கியது எனக் கூறலாம்.

பேரறிஞராகவும், சிறந்த கல்வியாளராகவும், வாதத் திறமையில் வல்லவராகவும், பௌத்த சமயக் காவலராகவும் விளங்கிய தருமபாலர் தமது 32-ஆம் வயதில் காலமானார். இவர்தம் பெருமையும புகழும் பல நாடுகளில் பரவின. நாளந்தாப் பல கலைக்கழகம் இவரால் பெருமைபெற்றது. ம.இ

**தமயந்தி** கறபிற் சிறந்த பெண்மணியாகப் போற்றப்படுபவள். வடமொழி வியாசபாரதத்தின் ஆரணியபருவத்தில் இடம் பெறும் 'நளோபாக்கியா நம்' எனனும் பகுதியில் இவள் வரலாறு சொல்லப் படுகிறது. கௌரவர்களோடு சூதாடித் தோற்ற தருமனைத் தேற்றுமுகமாக வியாசர் நளன்-தமயந்தி வரலாற்றைச் சொல்வதாகப் பாரதத்தில் இக்கதை அமைந்துள்ளது. தமயந்தி, தமந முனிவரின் அரு ளால் விதருப்ப மன்னன் வீமன் மகளாகப் பிறநத வள். இவள தனது சுயம்வரத்தில் நிடதநாட்டு மன் னன் நளன் என்பானை மாலையிட்டு மணந்தாள். அம்மன்னன் அன்னப் பறவையின் உதவியால் தம யந்தியைப் பற்றி முன்னமே அறிந்து அவள்மேல் காதல் கொண்டிருந்தவனாவான். சனியின் கொடுமை யால் நளன் புட்கரன் என்பானிடம் சூதில் தன நாட்டை வைத்திழந்தான். அதனபின் தன் பிளளை களை வீமனிடம் விட்டுவிட்டுத் தமயந்தியோடு கொடிய வனம் புகுந்தான். கொடிய காட்டில் தம யந்தி வருந்துவது கண்டு, ஓர் இரவில் அவளைத் தனியே விட்டுப் பிரிந்தான். உறக்கம் நீங்கி எழுந்த தமயந்தி தன் கணவன நளனைக் காணாது வருந்திப் புலம்பினாள. மலைப்பாம்பு ஒன்று அவளை விழுங கப் பற்றியபோது வேடனொருவன் அப்பாம்பைக் கொன்று, தமயந்தியை அடைய விரும்பினான். தமயநதி அவ்வேடனைச் சினங்கொண்டு நோக்க, அவள்தன் கற்பின் திணமையால அவன் தீக்கிரையா னான. பின்பு வணிகனொருவன் உதவியால் சேதி நாடு சேர்ந்து, அங்கிருந்து விதருப்ப நாடு சென்று தன் தந்தை வீமனுடன் தங்கியிருந்தாள். பினபு இரணடாம் சுயம்வரம் நடத்துவதாகப் பொய்யாக அறிவித்து, உருமாறியிருந்த நளனை வரவழைத்து, உண்மை வடிவம் பெறச் செய்தயைால்தமயநதி தன் கணவனை அடைந்தாள்.நளன் தன் மனைவி மக் களுடன் தன் நாடு சென்று புட்கரனுடன் மீணடும் சூதாடி நாட்டை வென்று கற்பின கனலியாம் தமயந்தி யோடு நல்லறம் நடத்தினான்.

நளன் வரலாற்றைத் தமிழில் 'நளவெண்பா' என்ற காப்பியமாய்ப் பாடிய புகழேந்திப் புலவர் தமயந்தியை 'வீமன் குலத்துக்கோர் மெய்த்தீபம்' எனப் போற்றுகிறார். பிற்காலப் புலவர்களுள் அதி வீரராமபாண்டியர் 'நைடதம்' என்ற பெயரில் நளன் தமயந்தி கதையை இன்பச்சுவை ததும்பப் பாடியுள ளார்.

ச.செ.

**தமனி மண்டபம்** என்பது ஐக்கிய அமெரிக்க நாட்டில் நியூயார்க்கு வட்டத்தில் நடைபெறும் தேர்தல்களில் நியூயார்க்கு மாநிலப் பேராளர்களின் வாக்குகளைப் பெறுதற்காக வேலைசெய்கிற குடியாட்சிக் கட்சியின் குழு (Democratic Party Committee of New York County) ஆகும். இது ஐக்கிய அமெரிக்க நாட்டில் மிகவும் முக்கியமான அரசியற் குழு ஆகும்.

இக்குழு கி.பி. 1789-இல் தமனிக் கழகம் (Society of Tammany) என்ற பெயரில் ஒரு சிறு குழுவாகத் தொடங்கப்பட்டது. பின்னர், கி.பி. 1825 இலிருந்து, இது நியூயார்க்கு வட்டத்தின் (மான் காட்டன்- Manhattan)குடியாட்சிக் கட்சியின அலுவல்துறை அமைப்பாக ஆயிற்று இந்தக கழகம் கி.பி. 19-ஆம் நூற்றாண்டில் பல தடவைகளில ஊழல முறைகளைப் பின்பற்றியது. ஆயினும் இது, அப்பொழுது ஐரோப்பாவிலிருந்து அமெரிக்க நாட்டுக்குக் குடிபெயர்ந்தோரின் நலவாழவுக்குப்பேருதவி செய்து, அதற்கு ஈடாக அமெரிக்காவுக்குக் குடிபெயர்நத ஐரோப்பியர்களுடைய வாக்குகளைத் திரட்டிப் பெற்றது.

நியூயார்க்கு மாநிலத்தில் நியூயார்க்கு வட்டத்தைத் தவிரப் பிராங்சு, குயின், கிஙகு, இரிச்மணடு எனனும் பெயர்களில் வேறு நான்கு வட்டங்கள் (Counties) உள்ளன. ஒவ்வொரு வட்டத்திலும் வாக்காளர்களை அணுகி வாக்குகளைப் பெறும் பொருட்டுக் குடியாட்சிக் கட்சிக் குழுக்கள் அமைக்கப்பட்டுள்ளன. ஆயினும், நியூயார்க்கு வட்டத்திற்கு அமைக்கப்பட்ட குடியாட்சிக் கட்சிக்குழுவே மிகவும் முக்கியமான குழு ஆகும். இதுவே தமனி மண்டபம் (Tammany Hall) என்று சொல்லப்படுகிறது. இக்குழு ஐக்கிய அமெரிக்க அரசாஙகத்தின் தலைவரைத் தேர்ந்தெடுப்பதற்காக நடைபெறும் தேர்தல்களில், குடியாட்சிக் கட்சியினால் நிறுத்தப்படும் வேட்பாளருக்குச் சார்பாகத் தீவிரமாக வேலை செய்கிறது. பா.கு.

**தமாங்கு** எனப்படுவோர் நேப்பாள மலைப் பகுதிகளில் வாழும் ஓர் இனக் குழுவினர். இவர்கள் நேப்பாளத்தின் வடகிழக்கிலும், வடக்கிலும், காட்மண்டுப் பள்ளத்தாக்கின் கிழக்குப் பகுதியிலும் வாழ்கின்றனர். தமாஙகு (Tamang)மக்களின் எணணிக்கை ஏறக்குறைய 6,00,000 ஆகும். இவர்கள் திபேத்திய-பர்மிய மொழிக் குடும்பத்தைச் சேர்ந்த மொழியைப் பேசுகின்றனர். இவர்கள் புத்த சமய நெறிகளைப் பின்பற்றுகின்றனர். இவர்களுள் பெரும்பாலானோர் வேளாண் தொழிலையும் கூலி வேலையையும் செய்து வாழ்கின்றனர். ஒரு பிரிவினர் பிற நேப்பாள இனத்தவர்களுடன் சேர்ந்து முன்னைய இநதிய இராணுவத்திலும், இந்தியாவை ஆண்ட ஆங்கிலேயர் படையிலும் போர் வீரர்களாகப் பணியாற்றினர். மக்கள் இவர்களைக் கூர்க்க (Gurka) வீரர்கள் எனச் சிறப்பாகக் குறிப்பிடுவர்.

இவர்கள் தந்தைவழிச் சமூகத்தினர். பல தந்தைவழிக் குலத்தவர்களாகப் பாகுபடும் இவர்கள பிற இனத்தவர்களான நீவார்(Newar), குருங்கு(Gurung), மகர் (Mager) முதலானவர்களுடன் மணம் செய்து கொளளும் முறையைக் கொண்டுள்ளனா. சீ.ப.

**தமாசுகசு, முதலாம்** (கி.பி. 304-384) போப்பாண்டவராக இருந்தவா. உரோமாரிபுரியில் கி.பி. 304-இல் பிறந்த இவர் நீண்டகாலம் பாதிரியாராக இருந்தபின் கி.பி. 366 முதல் கி.பி. 384 வரை போப்பாண்டவராகப் பணியாற்றினார்; சமய எதிர்ப்பாளர்களை ஒடுககினார்; இவரது பதவிககாலத்தில் உரோம்நாட்டின புகழை உயர்த்தினார். புனித செரோம் (St. Jerome) இவர்தம் செயலராகவும், நெருங்கிய அறிவுரையாளராகவும், உற்ற நண்பராகவும் இருந்தார். இவரது உறுதுணையுடன் விவலிய நூலின இலத்தீன் மொழிபெயர்ப்பு திருத்தி மீணடும் எழுதப்பட்டது. இவர் பதவிககாலத்தில் இலத்தீன் மொழி திருச்சபை மொழியாக ஆக்கப்பட்டது. இவர் பல திருச்சபைகளைக் கட்டினார்; பழைய திருச்சபைகளைப் புதுப்பித்தார்; உரோமானிய நாட்டின் எல்லையிலிருக்கின்ற சவ அறைகளையும் பழுதுபார்த்தார்; போரில் உயிர்நீத்த வீரர்களின சிலைகளைப் போற்றினார். இவர் கி.பி. 380-இல இறந்தார்.

**தமாசுகசு, இரண்டாம்:** பவேரியா நாட்டைச் சேர்ந்த இவர் கி.பி. 1048-இல் போப்பாண்டவராகத் தேர்ந்தெடுக்கப்பட்டார். அதற்கு முன்னர் இவர் பிரிக்சனின் (Brixen) ஆயராகப் பணியாற்றினார். செருமானியப் பேரரசர் மூன்றாம் என்றி இவரை இரணடாம் கிளமண்டிற்குப் பிறகு ஆயராக நியமித்தார். போப்புப் பதவிக்குக் கடுமையாகப் போட்டியிருந்த காலம் அது. பேரரசர் என்றியின் ஆதரவு தாமசுகசுக்கு இருந்ததால் கி.பி. 1048-இல் இவருக்குப் போப்புப் பதவி கிடைத்தது. ஆனால,இப் பதவியில் 23 நாள்கள்தான இருக்கமுடிந்தது. குளிர் காய்ச்சல் காரணமாக இவர் 1048-ஆம் ஆணடு ஆகசுட்டு 9-ஆம் நாள் இறந்தார். கே.சே.

**தமாசுகசு (நகர்);** சிரியா நாட்டின தலைநகரமாகிய தமாசுகசு (Tamascus) அந்நாட்டின் தென

மேற்குப் பகுதியில் அமைந்துள்ளது. சிரியா நாடு மையக் கிழக்கு அல்லது மேற்கு ஆசியா என்று கூறப்படும அரபு நாடுகளுள் ஒன்றாகும். தமாசுகசு உலகின் மிகப் பழமையான நகரங்களுள் ஒன்று தொன்றுதொட்டு இங்கு மக்கள் வாழ்ந்து வருகிறார்கள். இந்த நகரம் பராடா (Farada) ஆற்றின் கரையில் அமைந்துள்ளது. இது இலெபனான்




தமாசுகசு அமைவிடம்

நாட்டின் தலைநகரான பெய்ரூட்டிலிருந்து சுமார் 85 கி.மீ. தொலைவில் அமைந்துள்ளது. இந்நகரை 'கிழக்கின் முத்து' என்றும் 'மெக்காவின் வாயில்' என்றும் 'நினைவுத் தூணகளின் நகரம்' என்றும் குறிப்பிடுகிறார்கள். இந்நகரை மூன்று திசைகளில் மலைகள் சூழ்ந்துள்ளன. இந்த மலைகளினின்றும் புறப்படும் பராடா நதியும் அதன் துணை நதிகளும் சமவெளியில் பாய்ந்து அதனைச் செழிப்பாக்குகின்றன. இவ்வூரின் தட்பவெப்பநிலை சற்று வறண்டது. இங்குப் பலவகையான பழங்களும், தானியங்களும், காய்கறிகளும் விளைகின்றன. அவற்றில் ஆப்ரி காட்டு என்ற பழம் குறிப்பிடத்தக்கது. இந்நகரைச் சுற்றிப் பழத்தோட்டங்களும் மசூதிகளும் மற்றும் பல பொதுக்கட்டிடங்களும் அமைநது ஓர் அழகிய தோற்றத்தைக் கொடுக்கின்றன. நகரம் பல பகுதிகளாகப் பிரிக்கப்பட்டுள்ளது. அவற்றில் குடியானவர் கிறித்தவர்கள், குர்தி இனத்தவர்கள் (Khurds) ஐரோப்பியர்கள் முதலியோர் வாழ்கின்றனர். இந்த நகரில் பெரும்பான்மையாக இருப்பவர்கள அரேபிய முசுலீம்கள் ஆவர். கிறித்தவ மதத்தைத் தழுவிய அராபியர் சிறுபான்மையினராக உள்ளனர். இந்நகரில முதலில் வாழ்ந்த யூதர்கள் 1948-ஆம் ஆண்டிற்குப் பின் இசுரேல் நாட்டிற்குக் குடிபெயர்ந்தனர். இங்கு வாழ்ந்துவரும் குர்தில்கள், அல்சீரியர்கள்,



பெரியமசூதி—தமாசுகசு

பாரசீகர்கள், அபிசினியர்கள், துருக்கியர்கள், ஆப்பிரிக்கர்கள் ஆகியோர் சேர்ந்து ஒருகலப்புப் பண்பாட்டை (Cosmopolitan) ஏற்படுத்தியுள்ளனர். இந்நகரின் 1975-ஆம் ஆண்டின் மக்கள் தொகைக் கணக்கெடுப்பின்படி மொத்த மக்கள் தொகை 1,042,000 ஆகும்.

**பொருளாதாரம்:** வாணிகத்தைப் பொறுத்த வரையில் தமாசுகசு மிக உயர்ந்த நிலையில் இருந்து வருகிறது. இந்நகர் உலகின் பிறபகுதிகளுடன் நிலம், நீர் மற்றும் ஆகாயப்பாதைகளால் இணைக்கப்பட்டு ஒரு புதிய நகரமாகக் காட்சியளிக்கிறது. தானியங்கள், மாவுப்பொருளகள், பட்டு, பருத்தி ஆடைகள், மரச்சாமான்கள், ஆப்ரிகாட்டு போன்ற பழவகைகள் இந்நகரின் தலைமையான ஏற்றுமதிப் பொருள்களாகும். இங்குக் கைவினைப் பொருள்கள், நகைகள், சரிகை வேலைப்பாட்டுடன் கூடிய துணிகள், சிமிண்டு, பதப்படுத்தப்பட்ட உணவுப் பொருளகள், மேசை நாற்காலிகள், கண்ணாடிப் பொருள்கள், போன்றவை தயாரிக்கபபடுகின்றன. இங்குத் தங்கம் மற்றும் வெள்ளி நகைகள் செய்யும் தொழிற்சாலைகளும் உண்டு. அத்தர் போன்ற வாசனைத்

திரவியங்கள் இங்கிருந்து ஏற்றுமதிச் செய்யப்படு கின்றன.

**நகரின் வரலாறு:** தமாசுகசு நகரம் வரலாற்று முறையில் எப்போது தோன்றியது என்பதை அறிய முடியவில்லை. இருப்பினும் இது ஒரு மிகப் பழமை யான நகரம் என்பதற்கான தொல்பொருட் சான்று கள் கிடைத்துள்ளன. இந்நகரம் தன் நீண்ட வர லாற்றுப் பாதையில் பல அரசர்களால் கைப்பற்றப் பட்டுள்ளது. இசுரேல் நாட்டு அரசர் தாவீது (David) முதலாக அசீரியர்கள், சால்டியர்கள், பார சிகர்கள் மற்றும் மாவீரன் அலெக்சாண்டர் வரை இந்நகரைக் கைப்பற்றி ஆட்சி செய்திருக்கிறார்கள். இப்படையெடுப்புகளின் விளைவாகத் தமாசுகசு நகரம் பல பண்பாடுகளின் செல்வாக்கிற்கு உட்பட்டுப் பின்னர் அவற்றைத் தன் மயமாக்கிக்கொண்டது. கிரேக்கர்களை அடுத்து அது கி.மு. 64-இல் உரோ மானியர் வசம் வந்தது. உரோமானியர்களின்கீழ் தமாசுகசு ஒரு நல்ல வாணிகத் தலமாக விளங்கியது. உரோம் அரசர்கள் இந்நகரில் பல வளைவுகளை யும் கோட்டைகளையும் எழுப்பினர். தமாசு கசில் முதலில் கிறித்தவ மதம் பரவியது. இந் நகர் உரோமானியரின் ஆட்சிக்குப் பின்னர்ப் பைசாண் டியப் பேரரசின் ஆட்சியின்கீழ் வந்தது. இசுலாமிய அரபியர்களால் இந்நகர் கி.பி.639-இல் கைப்பற்றப் பட்டது. சிறிது காலத்திற்குப்பின் இந்நகரைச் சிரியா முசுலீம்கள் அராபியரிடமிருந்து கைப்பற்றினர். இதனால் தமாசுகசு புகழின் உச்சிக்குச் சென்றது. பின்னர் கி.பி.661 இல் உமையதுகள் வம்சத்தினரின் (Ummayids) தலைநகராக விளங்கியது. இவர் களுக்குப் பின்னர் ஆட்சிக்கு வந்த அபாசிட்டு வம்சத் தினர் தங்களது தலைநகரைப் பாக்தாதுக்குமாற்றி னார்கள். அதனால் தமாசுகசு ஒரு மாநிலத் தலை நகராக மதிப்பில் குறைந்தது. மீண்டும் சிலுவைப் போர்க் காலத்தில் இது சிறப்புப்பெற்றது. மங்கோலி யரின் படையெடுப்பின்போது தமாசுகசு சிரியாவின் தலைநகராக விளங்கியது. பின்னர் கி.பி.1516-இல் ஆட்டோமன்துருக்கியர்களால் கைப்பற்றப்பட்டு 1918 வரை அவர்களால் ஆளப்பட்டது. முதல் உலகப் போரின்போது ஆங்கிலேயரும் அராபியரும் இணைந்து இந்நகரைக் கைப்பற்றினர். சில நாள்களுக்கு 1920-இல் இது சுதந்திர அரசாட்சியின் கீழ் இருந்து பின்னர்ச் சர்வ தேச சங்கத்தின் (League of Nations) காப்பு நாடாக (Mandatory state) அறிவிக்கப்பட்டுப் பிரெஞ்சுக்காரர்களால் ஆளப்பட்டது. இரண்டாம் உலகப் போரையடுத்துத் தமாசுகசு சுதந்திர சிரியா குடியரசின் தலைநகராக ஆனது.

**வரலாற்றுச் சின்னங்கள்:** தமாசுகசு நகரம் தொன்மையான பல வரலாற்றுச் சின்னங்களைத் தன்னகத்தே கொண்டுள்ளது. முந்நூற்றுக்கு மேற் பட்ட மசூதிகளையும், மதரசா என்று சொல்லப் படும் மையக்காலப் பள்ளிக் கூடங்களையும், குளிய லறைகளையும், நீர் ஊற்றுகளையும், வரலாற்றுப் புகழ் பெற்ற வாயில்களையும் மற்றும் கோட்டை கொத்தளங்களையும் கொண்டு இந்நகர் திகழ்கிறது. இவற்றுள் கி.பி.8-ஆம் நூற்றாண்டில் காலிமாலிக்கு என்பவரால கட்டப்பட்ட உமையட்டு மசூதி அல்லது பெரிய மசூதி பழஞ் சிறப்பு வாய்ந்ததாகும். இதன் மையக் கட்டப் பகுதி 36 மீ. உயரம் உள்ளது. மெக் காவிற்குப் புனிதப்பயணம் செய்பவர்கள் இந்த மசூதி யின் வாயிலாகப் புறப்படுவதால் இதனை 'மெக் காவின் வாயில்' என்று சொல்லுகிறார்கள். மேலும் நகரின் குறுக்கே கிழக்கு மேற்காக அமைந்துள்ள நீண்ட நெடிய தெரு ஒன்று மக்கள் கவனத்தை நன்கு கவரக்கூடிய ஒன்றாகும். இவற்றைத்தவிரச் சலாதீன கல்லறை, சுலைமான் மசூதி, புனித பாலின் திருச் சபை ஆகியவை தமாசுகசின் கட்டடக் கலைக்குச் சான்று பகருகின்றன. மேலும் இங்குக் காணப்படு கின்ற அண்மைக்காலக் கட்டடங்களான மருத்துவ மனைகள், வானொலி மற்றும் தொலைக்காட்சி நிலை யங்கள், 1924-இல நிறுவப்பட்ட தமாசுகசு பல்கலைக் கழக வளாகம் மற்றும் அரேபிய சங்கக் கட்டடம் போன்றவை இந்நகரை ஒரு புதிய நகரமாக மாற்றி யுள்ளன.

எம்.க.

**தமிழ்:** காண்க: 'திராவிடமொழிகள்'

**தமிழ் எழுத்தாளர் சங்கம், சென்னை:** வாள் முனையைக் காட்டிலும் வல்லமை மிக்கது எழுத்தாணி. எழுதத் தெரிந்தோர் அனைவருமே எழுத்தாளராகார். எழுத்தாளர், தமது நோக்கால் பிறரிடமிருந்து வேறுபட்டு நிற்கின்றனர். மாபெரும் சமுதாய மாற்றத்தையே உருவாக்கக் கூடிய ஆற்றல் அவர் எழுத்துக்கு உண்டு. ஔவையார் தமது பாடலால, ஒரு போரையே தடுத்து நிறுத்தியமை எழுத்தின் ஆற்றலை இனிதே விளக்கும்.

பண்டைக் காலத்தே இலக்கிய - இலக்கணப் புலவர்கள் ஒன்றுகூடிச் சங்கம் அமைத்திருந்தனர். மூன்று சங்கங்கள் பல்லாண்டுகள் நிலைபெற்று விளங்கியதை இறையனார் களவியலுரை உணர்த்தும். அச்சங்கங்கள் புலவர் நலனைக் கருதியன அல்ல. சிறந்த நூல்களைத் தேர்ந்து தெளிதலே அவற்றின் பணி. புலமையும் வறுமையும் என்றுமே இணை பிரியாதவை. எனினும், அன்று அவர்களுக்குப் பொருள்களை வரையாது நல்கும் புரவலர் மிக்கிருந் தனர். இன்றோ, அத்தகு புரவலர் யாருமிலர்.

ஆற்றல்மிக்க எழுத்தாளா வறுமையில் வாடுகின் றனர்; தம் படைப்புகளை வெளியிட வழியினறித் தவிககின்றனர். சிறந்த படைப்புகளை ஆய்நது கூறும் அமைப்பின்மையால் தகுதியறற எழுததுகள் தலைமை பெறுகின்றன. இத்தகைய சூழலில், எழுத்தாளர் துயரஙகள் நீங்கவும், அவர்தம் குறை களை அரசாங்கத்திறகு எடுத்துக் கூறவும், சிறநத படைப்புகள் தோன்றவும், தகுதியான எழுத்துகள் தலைமை பெறவும் ஓர்அமைப்புத் தேவை என்பதைத் தமிழ் கூறு நல்லுலகம உணர்ந்தது.

தமிழ் எழுத்தாளா பலரையும் ஒன்று சேர்த்து ஓா அமைப்பை நிறுவும் முயற்சி ஐமபது ஆண்டுகட்கு முன்பே தொடஙகிறது. பலமுறை மாநாடுகளும் பேச்சு வார்த்தைகளும்நடந்தன. அவை மாநாட்டுப் பேசசுகளுடனும் தீர்மானங்களுடனுமே நினறன. எழுத்தாளர்களின பண்பு நலன்களே இம்முயற்சிகுத் தடைக் கற்களாயின. எழுத்தாளர்கள் அவிழதது விட்ட நெலலிக்காய் மூட்டை போன்றவர்கள் எனறும, அவர்கள் தமக்குள ஒன்றுகூடி ஒறறுமை யாசச் செயற்படமாட்டார்கள் என்றும் பொதுவாகக் குறை சொல்லப்படுவதுண்டு. அவர்கள் சுதநதிர மாகச் சிந்திகும் ஆற்றலும், தம்முடைய படைப்பைப் பற்றிய உயர்ந்த எண்ணமும் இயல்பாகவே உடைய வர்கள்; எளிதில் உணர்சசி வயப்படக் கூடியவாகள, பொது நலனுக்காக விட்டுக் கொடுத்துச் செயற் படும் மனப்பாங்கு இல்லாதவர்கள் என்றெல்லாம விமரிசிககப்படுவர். இத்தகைய எழுத்தாளர்களை ஒன்றிணைக்கும் முயற்சியில் பலரும் ஈடுபட்டனர்.

**சங்கத்தின் தோற்றம்:** நீண்டகால முயற்சிக்குப் பின் கல்கி ஆசிரியர் ரா. கிருட்டிணமூர்த்தி தமிழ் எழுத்தாளர் சங்கத்தை முதலில் தோற்றுவித்தார். இச்சங்கம் 1946-ஆம ஆணடு சென்னையில் நிறுவப் பெற்று, 1952-இல் முறைப்படி பதிவு செயயப் பட்டது. இக்கழகத்தின் முதல் மாநாடு 1953-ஆம் ஆண்டு திரு வி. கலியாணசுந்தரனார் தலைமையில நடந்தது இச்சங்கம் தமிழகம் மட்டுமன்றி, இந்தியா, இலங்கை, மலேசியா ஆகிய பகுதிகளில வாழும தமிழ் எழுத்தாளர்களையும் உறுப்பினராகக் கொண்டது.

கல்கி ஆசிரியரால் தோற்றுவிக்கப்பட்ட இச் சங்கம் நாளுக்கு நாள வளாநது கொண்டே வந்தது பெரிய எழுத்தாளர்கள் தொடங்கிப் புதிய எழுத் தாளர்கள வரை உறுப்பினர்களின் எணணிககை மிகுதியாயிற்று. காலப்போக்கில் எழுத்தாளர்களே யன்றிப் பதிப்பாளர்களும், மொழிபெயர்ப்பாளர் களும் உறுப்பினர்களாக ஏற்றுக்கொள்ளப்பட்டனர். எனினும், இச்சங்கத்தில் உறுப்பினராகச் சேருவோர் ஒரு நூலேனும் வெளியிட்டிருத்தல் வேணடும் என் னும் வரையறை இருந்தது. இதில் 1952-இல் 171 ஆக இருந்த உறுப்பினர் தொகை 1956-இல 365 ஆகிப் பின் வந்த ஆணடுகளில் பல்கிப் பெருகியது.

கல்கி ஆசிரியர், தமது திறமையால் சஙகத்தைச் சிதறுண்டுபோகாமல் காப்பாற்றினாராயினும், எழுத் தாளர்களின் நலனுக்காக ஒன்றுபட்டுச் செயற்படும் நிலை முழுமையாக ஏற்படவில்லை. தேவன என்பவர் தலைமையில் 1956-இல் சங்கச் செயலராகப் பதவியேற்ற அழ. வள்ளியப்பா 1966-இல் தலை வராக ஓயவு பெறும் வரை (1956-1966) பத்தாண்டு களுக்கு மேலாகச் சங்கத்தைக் கட்டி வளாத்தார். அனைத்து எழுத்தாளர்களையும் ஒன்றுபடுத்திச் செயற்படச் செய்தார்.

**நோக்கங்கள்:** இசசங்கத்தின் நோக்கங்களாவன: எழுத்தாளர் உரிமையைப் பாதுகாத்தல். நல்ல இலக் கியங்கள் உருவாக உழைத்தல். தமிழ் அறிஞர்களைப் பாராட்டுதல. மாநாடுகள் கருத்தரங்குகள் வாயிலாக எழுத்தாளர்களை ஊக்குவித்தல்.

**பணிகள்:** தமிழ எழுத்தாளர் சங்கம் துடிப்பான தொரு நிறுவனமாக விளங்கியது. தென்னிந்தியா விலேயே முன்னோடியான பணபாட்டு நிறுவனங களுள இசசஙகமும் ஒன்றாகத் திகழ்ந்தது. தமிழ் வளர்ச்சிக்கும் எழுத்தாளர் நலனுக்கும் இச்சங்கம் பல பணிகளை மேற்கொண்டது. ஒவவோராண்டும் இச்சங்கத்தின் மாநாடு ஒரு விழாவாகவே கொண டாடப்பட்டது இது 1954-ஆம ஆணடு தொடங்கி, ஆணடுதோறும் தமிழ்ப் பேரறிஞர் இருவருக்குக் கேடயங்கள வழங்கிப் பாராட்டியது. அழ. வளளி யப்பாவின் முயற்சியால் 1957 முதல தமிழ் இலக்கியங்களைப் பிற மொழிகளில அறிமுகம் செய்த அறிஞர் இருவாக்கு ஆண்டுதோறும் பதக்கம் அளித்துப் பாராட்டும் பணியையும் மேற்கொணடது.

இலக்கியச் சிக்கல்கள் தொடர்பான விவாதங்களும் கருத்துப் பரிமாற்றங்களும் அவவப்போது நிகழ்த்தப் பெற்றன. எழுததாளர்களின நோக்கில் மொழி மற்றும் பண்பாட்டினைப் பாதிக்கின்ற சிக்கல்கள அரசாஙகத்திற்கு எடுத்துச சொல்லப்பட்டன. எழுத் தாளர்களுக்கான சிறுகதை மற்றும் கட்டுரைப் போட் டிகளை எழுத்தாளர் சங்கம் நடத்தியது. அன்றியும் நூல் வெளியீட்டு விழாக்கள பல சஙகததின் சார்பில் நடத்தப் பெற்றன. இச்சங்கம எழுத்தாளர்களுக்கும் அவர்தம் குடும்பஙகட்கும் நிதி திரட்டித தநது உதவி யுளளது. தமிழக அரசின் புத்தக வெளியீட்டுக் குழு

விலும், தமிழ் ஆராய்ச்சி, மற்றும் வளர்ச்சிக் கழகத்திலும் இச்சங்கம அங்கம் வகிததது. மேலும், தென்னிந்திய மொழிப் புத்தக அறககட்டளை,சாகிததியக் கழகம் முதலான பல புத்தக நிறுவனங்களுடன இச்சங்கம் நெருங்கிய தொடர்பு கொண்டது.

**வெளியீடு:** தமிழ் எழுத்தாளர் சங்கத்தின் சார்பில் 1954 முதல் 'பாரதி' எனனும மலர் வெளியிடப் பெற்றது. தொடக்கத்தில் இரண்டு மாதங்கட்கு ஒரு முறை வெளிவந்த இம்மலருக்கு வெ சாமிநாதசாமா ஆசிரியராக இருந்தார். அழ. வள்ளியப்பா 1956-இல் ஆசிரியராகப் பொறுப்பேறறு மாத இதழாக வெளிக கொணர்ந்தார். அதுவரை சங்கததின அறிககை ஏடாக விளங்கிய அம்மலர், பலவேறு சுவையான பகுதிகளைக கொண்ட இதழாக வெளிவரலாயிற்று. அழ. வளளியப்பா இதழில பல மாற்றங்கள செய்த தோடு, அதனை உறுப்பினர்கட்கு அனுப்புதறகு அஞ்சல கட்டணச் சலுகையையும் பெறறுத்தநதார்.

**சங்கத் தலைமை:** கலகி ரா. கிருட்டிணமூர்த்தி, கே. சந்திரசேகரன, வெ. சாமிநாத சர்மா சோமலெ, அழ. வள்ளியப்பா, அகிலன் முதலியோர் இச்சங்கத்தில் தலைவர்களாகப் பொறுபபேறறுத் திறமபட வழி நடத்தினர். இசசங்கத்தின அலுவலகம் சென னைத் திருவல்லிக்கேணியில் இருந்தது.

1946 தொடங்கி 1967 வரை தொடர்நது இயங கிய தமிழ் எழுத்தாளா சஙகம் 1968-இல் தலைமைப் பதவியின பொருட்டு நேர்நத குழபபத்தால் முடிவுற்றது.

வெ.தெ.மா.

**தமிழ்க்கலை மன்றம், சென்னை:** தொனமைச் சிறப்புமிக்க தமிழ மொழியின் கலை, இலககிய, பண்பாட்டுச் சிறப்புகளை உலகறியச் செயயும் நோக்கில தோற்றுவிக்கப்பட்ட அமைப்பே தமிழ்க கலை மன்றம். இதனைத் தோறறுவித்தவர் தவததிரு சேவியர் தனிநாயக அடிகள ஆவாா.

தனிநாயக அடிகளார் தமிழ்ப் பண்பாட்டை உலகறியச செய்ய ஆர்வங் கொண்டார். அடிகளாரின முயற்சியில் தூத்துக்குடியைச் சார்ந்த பால நாடார் என்னும் வழக்குரைஞரின் ஆதரவுடன் 1952-ஆம் ஆணடு 'தமிழ்ப் பண்பாடு' (Tamil Culture) எனனும் முத்திங்கள் இதழ் தொடங்கப பெற்றது. தமிழ்மொழி, வரலாறு, கலை, இலககியம் ஆகியன பற்றிய அரிய ஆராய்ச்சிக் கட்டுரைகள் வெளியிடப் பெறறன. எனினும், தமிழின் பெருமைகளைப் பரபபுதறகு ஓர் அமைப்புத் தேவை என உணரப் பெற்று, அதற்கான முயறசிகளும மேற்கொள்ளப்பட்டன. அடிகளாரின் இம்முயற்சிக்கு ஏ. சுப்பையாபிள்ளை ஆதரவளிக்க முனவநதார்.

சுப்பையா பிள்ளையின் இலலததில் 1954-ஆம் நாள் நடைபெற்ற தமிழறிஞர் கூட்டத்தில் தமிழ்க்கலை மன்றம் உருப்பெற்றது. மன்றத்தின் தலைமைப் புரவலராகச் சுப்பையா பிள்ளை விளங்கத்,தனிநாயக அடிகள் இணைப்புரவலரானார்.

**நோக்கங்கள்:** தமிழ்மொழி, அதன் இலக்கண இலக்கியம், தமிழக் கலைகள், அதன் அறிவியல் நூலகள் ஆகியவற்றை நன்கு பயில ஊக்கப்படுத்தவும், வளர்க்கவும், பெருக்கவும் துணையாகத் தமிழரின அறிவுக் களஞ்சியங்களைத் திரட்டுதல

தமிழறிஞா பலரையும், நிறுவனஙகளையும் தொடர்புபடுத்துதல, தமிழ மொழியின பெருமைக குரிய இயல்புகள கெடாத வணணம் காப்பாறற வேணடிய வழிகளை வகுத்தல் ஆகியன இம்மன்றத தின நோக்கங்களாம்.

**பணிகள்:** தமிழ்க்கலை மனறம் தன் நோக்கங்களை நிறைவேற்றுதற்குப் பலவேறு குறிககோள்களை வகுத்து விரிவான பணிகளை மேற்கொணடது.

தமிழ்மொழியின் அமைப்பு, இயலபு, தொன்மை ஆகிய பெருமைகளைத் தமிழ் மக்களுக்கும, உலகினர்க்கும் விரிவாக அறிவிததல்.

தமிழமொழி, இலக்கியம், அறிவியல நூல்கள் முதலியன குறித்து அறிவியல முறையில் செய்யும் ஆராயச்சியை ஓம்புதல்

தமிழ் அகராதி, இலக்கணம, பழந்தமிழ் இலக்கியங்கள், இக்காலப படைப்புகள, நடனம், நாடகம், இசை, அறிவியல் ஆகிய ஒவ்வொரு துறையிலும் அவ்வத்துறைகளில் தலைசிறந்த அறிஞர்களை இயக்குநராகக் கொணட கல்விக் குழுககளை அமைத்தல; வரலாற்றாய்வு, மொழியியல் ஆய்வு, தமிழ வெளியீடுகள. ஆங்கில மொழி மற்றும் பிறமொழி வெளியீடு முதலியவறறுககும் தனித்தனித் துறைகளை அமைத்தல். இக்குறிககோள்கள வகுக்கப் பெறறுப் பணிகளுக்கான திட்டங்கள் அமைககப் பெற்றன.

மன்றத்தின் குறிக்கோளை நிறைவேற்ற உதவும நூல்கள், அறிககைகள், இதழகள முதலியவறறை மன்றமே வெளியிடுவதோடு, பிற வெளியீடுகளை ஊக்குவித்தறகும் சிறநத மொழி பெயர்ப்புகள உருவாவதறகும் மனறம் ஆவன செய்தல.

மன்றத்தின நடவடிக்கைகளைப் பொதுமககள உடனுக்குடன அறியும்படி செயதல. பலவேறு துறை

களிலும் உண்மையான ஆராய்ச்சி மேற்கொள்ளும் அறிஞர்கட்கு மன்றம் ஆதரவு நல்குதல்.

மன்றத்தின் குறிக்கோளுக்கும் வளர்ச்சிக்கும் உதவக்கூடிய வகையில் பயன் தரத்தக்க அசையாச் சொத்துக்களை வாங்குதல், விற்றல், வைத்துக் கொள்ளுதல் இவை போன்ற பிற நடவடிக்கைகளை மன்றம் மேற்கொள்ளுதல்.

தமிழ்க்கலை மன்றம், பிற சங்கங்களைப் போலாது உயர்ந்த கல்வி நிறுவனமாகவே திகழச் செய்தல். இம்மன்றம் அரசியல், சமயம் இவை போன்ற பிற அமைப்புகள் எவற்றையும் சாராது தனித்தியங்கும். தன்னுடைய ஒவ்வொரு செயலிலும் மிகுந்த முயற்சியுடன் நன்கு உழைத்துத் தன் தகுதியைத் தங்க வைத்துக் கொள்ளுதல்.

மன்றத்தின் பணிகளாக இத்தகைய மேலான செயல் திட்டங்கள் வகுக்கப் பெற்றுத் தமிழ்க்கலை மன்றம் செம்மையாக நடைபெற்றது.

**உறுப்பினர்:** மன்றம் தொடங்கியபோது, அதன் சட்ட திட்டங்களுக்கு உட்பட்டு நடப்பதாகக் கையொப்பமிட்டவர்களே முதல் உறுப்பினராகக் கொள்ளப்பட்டனர். மன்றத்தின் நோக்கத்திற்கும் வளர்ச்சிக்கும் பொருள் நிலையால் உதவக்கூடிய நிலையில் உள்ளவர்களாகவும், மன்றத்தின் சட்ட திட்டங்கட்கு உட்படுபவர்களாகவும் ஆட்சிக் குழுவால் கருதப்படுபவர்களே உறுப்பினராகத் தகுதியுடையர். அத்தகையோர் மன்றத்தின் சட்ட திட்டங்களின்படி உறுப்பினர்களால் தேர்ந்தெடுக்கப் பெறுவர். மாணவர் கழகங்கள் நீங்கலாக ஏனைய கழகங்கள் ஆட்சிக் குழுவின் ஒப்புதல் பெற்று மன்றத்துடன் இணைந்து கொள்ளலாம். இதன் ஆட்சிக்குழு தமிழ்ப் பண்பாட்டின் எத்துறையிலாவது சிறந்து விளங்குபவர்களையும் தமிழ் மன்றத்திற்குத் தொண்டு புரிபவர்களையும் தமிழ்க்கலை மன்றத் தோழராக ஏற்றுக் கொள்ளும்.

மேற்சொன்ன விதிகளில் அடங்காத மாணவர் கழகத்தினர், பிற அமைப்பினர் போன்றோர் மன்றத்தின் சார்பு உறுப்பினராகச் சேர்த்துக் கொள்ளப் பெற்றனர், எனினும், அவர்களுக்கு வாக்குரிமை கிடையாது.

**ஆட்சிக்குழு:** மன்றத்தின் தலைவர், துணைத் தலைவர்கள, மதிப்புறு செயலாளர்கள், பொருளாளர்கள் ஆகியோர் ஆட்சிக்குழுவில் அடங்குவர். தலைவர் ஒருவரே; துணைத் தலைவர் ஐவருக்கு மேற்படாமலும், மதிப்புறு செயலர் மூவருக்கு மேற்படாமலும், மதிப்புறு பொருளாளர் மூவருக்கு மேற்படாமலும்இருப்பர், ஆண்டிற்கொரு செயற்குழுக் கூட்டம் கூடி, ஆட்சிக்குழு உறுப்பினரைத் தேர்ந்தெடுக்கும்.

மன்றத்தில்ஆண்டுதோறும் மார்ச்சு 31-ஆம் நாள் ஆண்டு இறுதியாகக் கொள்ளப்பட்டது. ஆகசுட்டு 31-ஆம் நாளுக்குள் ஆண்டுப் பொதுக்கூட்டம் நடத்தப் பெறுதல் வேணடும் என்பது விதி, அதனபடி முதல் ஆண்டுப் பொதுக்கூட்டம் 1955-இல் இலயோலாக் கல்லூரியில் நடைபெற்றது.

**மன்ற வெளியீடு:** தூத்துக்குடியினின்று அறிஞர் பால் நாடார் ஆதரவில் வெளிவந்த 'தமிழ்ப்பண்பாடு(Tamil Calture)1955-ஆம் ஆண்டு முதல மன்றத்தின் வெளியீடாகவே சென்னையிலிருந்து வெளிவரலாயிற்று. தனிநாயக அடிகளே தொடர்ந்து அதன் பதிப்பாசிரியராக விளங்கினார். மன்ற வெளியீடாக ஆன பின்பு, அதனுடைய பககங்களைப் போன்றே, அதன் தமிழ்மொழி, கலை, பண்பாட்டுப் பார்வைகளும் ஆராய்ச்சிகளும் விரிந்தன. மன்ற நிகழ்ச்சிகளும் அதனோடு தொடர்புடைய பிற நிறுவனங்களின் செய்திகளும், நூல் மதிப்புரைகளும் தமிழறிஞர்கள் மறைவுக்கு இரஙகல் செய்திகளும் இவ்விதழ்களில் இடம்பெற்றன. இவ்வாறு சிறந்த முறையில் 1952 முதல் வெளிவந்த இம்முத்திங்களிதழ் 1967-இல் நின்றுவிட்டது.

தமிழ்க்கலை மன்றத்தை மீண்டும் தொடர்ந்து நடத்துவதென இலயோலாக் கல்லூரியின் தமிழ்ப் பேராசிரியர்கள உறுதி கொணடனர். தமிழ்க்கலை மன்றம் 1974 முதல் மீண்டும் இயஙகலாயிற்று. மனற வெளியீடாக 1954 முதல் 1966 வரை 50 இதழ்கள் வெளிவந்தன. அவ்வாறே தொடர்ந்து வெளியீடுகளைப் பதிப்பிக்க அவர்கள் முயன்றனர். முத்திங்கள் இதழான 'தமிழ்ப்பண்பாடு' எனும் இதழைத் தொடர்ந்து வெளியிட இயலாத சூழ்நிலையில் ஆண்டுக்கு இரு ஆராய்ச்சி நூலகள் வெளியிடுவதென முடிவு செய்தனர். அதன்படி முதலில் ஓரிரணடு ஆண்டுகள் ஆண்டுக்கு இரு ஆய்வு நூல்கள் என்றாங்குத் தொடர்ந்து வெளிவந்தன. பிறகு இடைவிட்டு அவை வெளிவரலாயின. தொடர்ந்து, தமிழ்ப் பண்பாடு எத்தகையது என்பது பற்றி ஆய்வு நூல் வெளியிடத் திட்டமிடப் பெற்றுளளது.

தமிழ்க்கலை மன்றத்தின் சார்பில் ஆண்டுதோறும் கல்லூரி மாணவர்களுக்குத் தமிழ்த் தேர்வு நடத்தி, ஐம்பது மதிப்பெண்களுக்குமேல் பெறுபவர்களுக்குச் சான்றிதழ் வழஙகத் திட்டமிடப் பெற்று, முதலில் சோதனை முறையாக இவ்வாணடு 1988 மார்சசுத் திங்களில் இலயோலாக் கல்லூரி மாணவர்களுக்கு மட்டும் நடைபெற உள்ளது.

இப்போது மன்றத்தில் உருபாய் 10,000 வைப்பு நிதியாகச் சேர்ந்துள்ளது. இன்று இம்மன்றத்தின் அலுவலகம் இலயோலாக் கல்லூரி மாணவர் விடுதி அறை ஒன்றில இயங்கி வருகின்றது. வெ.தெ.மா.

*தமிழ்ச் சங்கங்கள்*: பாணடிய நாட்டின் தலை நகரங்களாகிய தென்மதுரை, கபாடபுரம், மதுரை ஆகியவற்றில் விளங்கிய முச்சங்கங்கள் பற்றிச் செவி வழிச் செய்தியாகவும் இலக்கிய வழியாகவும் இடைக் காலக் கலவெட்டு, செப்பேடுகள் வழியாகவும் அறிய லாம். இவற்றின் காலம் பறறியும் உண்மைபற்றியும் கருத்து வேறுபாடுகளிருப்பினும், இத்தகையதோர் அமைப்பிருந்தமையை மறுத்தல் முற்றிலும் இயலாத தாக இருககிறது.

வச்சிரநந்தி என்ற சமண முனிவரால் கி பி. 5 ஆம நூற்றாண்டளவில் அமைக்கப்பட்ட சமணத் தமிழ்ச் சங்கம் ஒன்றும் நிலவி வந்துளது. மதுரையில கி.பி. 1901-இல் பாண்டித்துரைத் தேவரவர்கள் பாஸ்கர சேதுபதி மனனரின் துணையுடன் நிறுவியது நான்காம் தமிழ்ச் சங்கம். அச்சங்கத் தோற்றத்திற்குச் சிலகாலம் முன்னரும் பின்னருமாகத் தமிழகத்தில் தோன்றிய இக்காலத் தமிழ்ச் சஙகங்கள் பலவாகும். அவற்றுள் குறிப்பிடத்தக்கன கோவைத் தமிழ்ச்சங்கம், சென்னை யில் தோன்றிய தென்னாட்டுத் தமிழ்ச்சங்கம் என் பனவும், கரந்தைத் தமிழ்ச்சங்கம், நெல்லைத் தென்னிந்தியத் தமிழ்ச் சஙகம் என்பனவும் ஆம். மற்றும் தமிழகச் சிற்றூர் பேரூர்களிலும் தமிழர் வாழும் இந்தியப் பெரு நகரஙகளிலும் பிற நாடுகளி லும் தமிழ்ச் சஙகஙகள் தோன்றியமை குறிப்பிடற் பாலதாகும்.

**முச்சங்கங்கள்:** முன்னைய சங்கங்கள் பற்றி, சங்கப் பாடல்களில் சில அகச்சான்றுகள் உய்த்துணரு மாறு காணப்படுகின்றன. அப்பரடிகளே (கி.பி. 7-ஆம் நூ.) முதன் முதலாக, 'நன்பாட்டுப் புலவனாய்ச் சங்கம் ஏறி, நற்கனகக் கிழி தருமிக்கு அருளினோன் காண்' என்று சங்கம் பற்றித் தெளிவாகக் குறிப்பிடு கின்றார். 'சங்கத் தமிழ் மாலை' எனப் பக்திப்பாசுரங் களில் தமிழ் புகழப்படுகிறது. மூன்றாம் இராசசிம்ம பாண்டியன், கி.பி. 916 இல் அளித்த சின்னமனூர்ச் செப்பேட்டில், 'தலையாலங் கானத்தில் தன்னொக்கும் இரு வேந்தரைக் கொலைவாளில் தலைதுமித்துக் குறைத்தலையின கூத்தொழித்தும் மகாபாரதம் தமிழ்ப்படுத்தும் மதுராபுரிச் சங்கம்வைத்தும்' எனற அடிகளில் பாண்டியர்கள் சங்கம் வைத்துத் தமிழ் வளர்த்த செய்தி நன்கு குறிப்பிடப்படுகிறது. சங்கப் பாடல்களிலும் இத்தலையாலங் கானத்துச் செரு வென்ற நெடுஞ்செழியனே 'தொல்லாணை நல் லாசிரியர், புணர் கூட்டுண்ட தலைவனாகக்' குறிக்கப் படுதல் இங்கு ஒப்புநோக்கற்பாலது. இச்சங்கம் பற்றிய விரிவான செய்திகளைத் தருவது இறை யனாரகப் பொருளுரையாகும். அப்பகுதி வருமாறு: 'தலைச் சங்கம் இடைச்சங்கம் கடைச்சங்கம் என மூன்று சங்கம் இரீஇயினார் பாண்டியர். அவருள் தலைசசங்கம் இருந்தார் அகத்தியனாரும் திரிபுர மெரித்த விரிசடைக் கடவுளும் குன்றெறிந்த முருக வேளும் முரஞ்சியூர் முடி நாகராயரும் நிதியின் கிழ வனும் என இத்தொடக்கத்தார் ஐஞ்நூற்று நாற்பத்து ஒன்பதின்மர் என்ப. அவருளளிட்டு நாலாயிரத்து நானூற்று நாற்பத்தொன்பதின்மா பாடினார் என்ப. அவர்களால் பாடப்பட்டன எத்துணையோ, பரி பாடலும் முதுநாரையும் முதுகுருகும் களரியா விரை யும் என இத்தொடக்கத்தன. அவர் நாலாயிரத்து நானூற்று நாற்பதிற்றியாண்டு சங்கமிருந்தார் என்பது. அவர்களைச் சங்கமிரீஇயினார் காய்சின வழுதி முதலாகக் கடுஙகோன் ஈறாக எண்பத் தொன்பதின்மர் என்ப. அவருள் கவியரங்கேறினார் எழுவர் பாணடியர் என்ப. அவர் சங்கமிருந்து தமிழா ராய்ந்தது கடலகொள்ளப்பட்ட மதுரை எனப. அவர்க்கு நூல் அகத்தியம் என்ப'.

'இனி இடைச்சங்கமிருந்தார் அகத்தியனாரும் தொல்காப்பியனாரும் இருந்தையூர்க் கருங்கோழி மோசியும் வெள்ளூர்க் காப்பியனும் சிறுபாணடரங் கனும் திரையன் மாறனும் துவரைக் கோமானும் கீரந்தையும் என இத்தொடக்கத்தார் ஐம்பத் தொன பதின்மர் என்ப. அவருளளிட்டு மூவாயிரத்து எழுநூற றுவர் பாடினார் என்ப. அவர்களால பாடப்பட்டன கலியும் குருகும் வெண்டாளியும் வியாழமாலை அக வலும் என இத் தொடக்கத்தன எனப. அவர்க்கு நூல் அகத்தியமும் தொல்காப்பியமும் மரபுராணமும் இசை நுணுக்கமும் பூதபுராணமும் என இவை. அவர் மூவாயிரத்து எழுநூற்றியாணடு சங்கமிருந்தார் என்ப. அவரைச் சங்கம இரீஇயினார் வெணதேர்ச் செழியன் முதலாக முடத்திருமாறன் ஈறாக ஐம்பத் தொன்பதினமர் என்ப. அவருள கவியரஙகேறினார் ஐவர் என்ப. அவர் சங்கமிருந்து தமிழாராய்ந்தது கபாடபுரத்து என்ப. அக்காலத்துப் போலும் பாண்டிய நாட்டைக் கடல் கொணடது'.

'இனிக் கடைச்சங்கமிருந்து தமிழாராய்ந்தார் சிறு மேதாவியாரும் சேந்தம்பூதனாரும் அறிவுடையரனா ரும் பெருங்குனறூர் கிழாரும் இளந்திருமாறனும் மதுரை ஆசிரியர் நல்லந்துவனாரும் மதுரை மருதன் இளநாகனாரும் கணக்காயர் மகனார் நக்கீரனாரும் என இத்தொடக்கத்தார் நாற்பத்தொன்பதின்மர் என்ப. அவருள்ளிட்டு நானூற்று நாற்பத் தொன்

தின்மர் பாடினார் என்ப. அவர்களால் பாடப் பட்டன நெடுந்தொகை நானூறும் குறுந்தொகை நானூறும் நற்றிணை நானூறும் புறநானூறும் ஐங்குறு நூறும் பதிற்றுப்பத்தும் நூற்றைம்பது கலியும் எழுபது பரிபாடலும் கூத்தும் வரியும் சிற்றிசையும் பேரிசையும் என்று இத்தொடக்கத்தன. அவர்க்கு நூல் அகத்தியமும் தொல்காப்பியமும் என்ப. அவர் சங்கமிருந்து தமிழாராய்ந்தது ஆயிரத்து எண்ணூற்று ஐம்பதிற்றியாண்டு என்ப. அவர்களைச் சங்கம் இரீஇயினார் கடல்கொள்ளப்பட்டுப் போந்திருந்த முடத்திருமாறன் முதலாக உக் கிரப் பெருவழுதி ஈறாக நாற்பத்தொன்பதின்மர் என்ப. அவருட் கவியரங்கேறினார் மூவர் என்ப. அவர் சங்கமிருந்து தமிழாராய்ந்தது உத்தர மதுரை என்ப'. (முதற் சூத்திர முன்னுரை)

**சங்க உண்மை பற்றிய சான்றோர் கருத்துகள்:** பேராசிரியர் கே.என். சிவராசபிள்ளை, பேராசிரியர் பி.டி. சீனிவாசையங்கார், பேராசிரியர் எசு. வையா புரிப்பிள்ளை போல்வார் இவ்வுரைச் செய்திகள யாவும் மிகவும் கற்பனை கலந்து, நம்பவொண்ணாத னவாக இருத்தலைக் காட்டிச் சங்கம் என ஒன்று இருந்திருத்தல் இயலாதென விவாதித்தனர்.பின்னர்ப் பேராசிரியர்கள் சு. வையாபுரிப்பிள்ளை, கே.என். நீலகண்டசாத்திரியார் போன்ற அறிஞர்கள் கடைச் சங்கம் ஒன்று இருந்திருத்தல் கூடுமென்றும், முன் னைய சங்கங்களைப் பற்றியும் அவற்றில் கடவுளர் களே தலைமை தாங்கியதைப் பற்றியும் வருகின்ற செய்திகள் யாவும் நம்புதற்கியலாதவை என்றும் எழுதிச் சென்றனர்.

இறையனாரகப் பொருளுரை பத்துத் தலை முறையாகச் செவிவழியே கேட்கப்பட்டு, இறுதியில் எழுதப்பட்டதென்று அவ்வுரையிலேயே குறிப்புளது. ஒருசில ஆண்டுகளிலேயே, உண்மைச் செய்திதான் இங்ஙனம் கற்பனை உருப்பெற்றுவிட்டதெனக், கொள்ளவேண்டும். இதில் வரும் கடவுளர் பற்றிய, கதைகளையும், ஆணடுக் கணக்குகளையும், புலவர் எண்ணிக்கைகளையும் இஙஙனம் கதையாக வளர்ந்த தன்மையுடையன என நோக்கவேண்டுமே தவிர, அப்படியே உண்மையெனக் கொண்டு, அவற்றின் அடிப்படையையே ஒட்டுமொத்தமாக மறுத்தல் இய லாது; கூடாது என இனறு ஆய்வாளர் கருதுகினற னர்.

**பாண்டியரும் தமிழும்:** பாண்டியரிடம், தம் அவை யில் தமிழ்ப்புலவர் குழுவை வைத்து, இலக்கியத்தைப் பேணும் மரபு தொன்றுதொட்டு இருந்து வநதுளது. அவரிடம் மட்டுமன்றிச் சேர, சோழ, வேந்தர்களிட மும் குறுநில மன்னர்களிடமும் இம் மரபு திகழ்ந்தது. ஆயினும், தெற்கே கடல்கோள்களால் இருமுறை நிலம் கடல் கொள்ளப்பட்டதால், பாண்டியர்க்குத் தங்கள் செல்வமும் தமிழ் நூல்களும் கடலாற் கொள்ளப்பட்டது பெருங் கவலையை உண்டாக்கி யது. அதனால் தமிழைக் காக்கும் எணணமும் தமிழ் இலக்கியம், இலக்கணம், கலை ஆகிய செல்வங்களைப் பேணுகிற கடமையும் அவ்வேந்தர்க்குப் பிறரினும் மிகுதியாக வாய்த்தன. பாண்டியரோடு தமிழுக் கேற்பட்ட உறவு பிறரினும் மேம்பட்டுத் தோன்றக் காரணம், இக்கடல்கோளகளும் அவற்றால் ஏற்பட்ட அவர்தம் பெருமுயற்சிகளுமேயாம். கடல்கோள் ஏற் பட்டதைக் கலித்தொகையிலும் (104), சிலப்பதி காரத்திலும் (11-19,20) வரும் குறிப்புகளால் அறிய லாம்.

மதுரைக் காஞ்சியும பனம்பாரனார் பாயிரமும் சுட்டும் நிலந்தருதிருவின் நெடியோன், இங்ஙனம் இழந்த நிலத்தை மீட்டுப் பெற முயன்றவனாதல் வேண்டும். அவனே 'தொல்லாணை நலலாசிரியா புணர்கூட்டுண்டவன்' எனப்படுதலால் தொல்காப் பியத்தை அரங்கேற்றியவனும் சங்கம் கண்டவனும் அவனேயாதல் கூடும்.

தமிழ்நிலைபெறற...... மதுரை (சிறுபாண். 66,67), தமிழ் கெழு கூடல் (புறம் 58), தமிழ மதுரை (மணி.25-131), தமிழ்வையை (பரி-6) என அன்றுமுதல இன்றுவரை தமிழுடன் பாணடி யனும் மதுரையும் வையையும் தொடர்புபடுத்திப் பேசப்படுதலால் இத்தொடர்பின ஆழத்தை உணர லாம்.

'சங்கம்' என்ற சொல, மதுரையில் சமண சங்கம் தோன்றியபின் செல்வாக்குப் பெற்றது. அதற்குமுன தமிழ்ச் சங்கங்கள கூடல், புணர், புணர்ப்பு, அவையம், துறை, தொகை முதலிய அழகிய தமிழ்ப் பெயர்களால் சுட்டப்பட்டன. மதுரை என்பதுப் 'திருமருதமுன்துறை' யாக விளங் கியதன் வழிப்பட்ட பெயரேயாம்.

**அவையங்களே சங்கங்களாகும்** தமிழ்மொழியில் இலக்கிய நூல்களை ஆக்கி அரங்கேற்றவும் அவற் றைப் படைத்த புலவர்களுக்குச் சிறப்புச் செய்யவும் அக்கால அரசர்கள் ஆர்வம் கொண்டிருந்தனா. பாணர், பொருநர், கூத்தர்களுக்குச் செய்யப்பட்ட சிறப்புகள் போலவே புலவர்களுக்கும் அவர்களைப் பெருமைப்படுத்தும் முறைமைகள பல பின்பற்றப் பட்டன. இதனால், தொன்மைமிக்க காலத்தில், வேந் தர்களின அரண்மனைகளே இலக்கியம் வளரும் அவை

யங்களாகச் செயற்பட்டன. மன்னன் தன் அவை யத்தை நீதி நேர்மையுடன் அரசாட்சி செய்வதற்காக மட்டுமின்றி, கலை பண்பாடுகளின் கொள்கலனான இலக்கிய நூல்களையும் மற்றும் இலக்கண, பிறதுறை நூல்களையும் கேட்கவும், பாராட்டவும் பரிசு தரவும் பயன்படுத்திக் கொண்டான். கால வளர்ச்சியில் இலக்கிய ஆர்வம் மிக்க மன்னர்களின் அரச அவையங்கள் தமிழ் வளர்க்கும் சங்கங்கள் போல் உருவாயின.

தொல்காப்பியப் பனம்பாரனார் பாயிரம் இதற்குத் தக்கதொரு சான்றாகும். 'நிலந்தருதிருவிற் பாண்டியன், 'அவையம்' தொல்காப்பியம் அரங்கேறிய இடமாகும். அறங்கரை நாவின் நான்மறை முற்றிய அதங்கோட்டாசான்' அங்குத் தலைமை தாங்கி, நூலரங்கேற்றத்தைக் கேட்டுத் திறனாய்ந்து, நூலின் சிறப்பைப் போற்றி, ஏற்புடையதென வேந்தன் முன் ஒப்புதலளித்தார். தொல்காப்பியரும் தம் நூலை அதங் கோட்டாசானுக்கும் அவையப் புலவருக்கும் 'அரில்தபத் தெரிநது' தம் நூல் குற்றங் குறைகளின் நீஙகிய செவ்விய நூலென மெய்ப்பித்தார். இந்நிலந்தருதிருவிற் பாண்டியனின் அவையம் பற்றிய குறிப்பு மதுரைக் காஞ்சியிலும் வருகிறது.

மாங்குடி மருதனார் மதுரைககாஞ்சியில் (761-763) தலையாலஙகானத்துச் செருவெனற பாணடியன் நெடுஞ்செழியனை அவன் முன்னோனாகிய இந் நிலந்தரு திருவிற் பாண்டியனைப் போலத் தொல் லாணை நல்லாசிரியர்களைக் கூட்டி, புணர்ப்பில் (சங்கத்தில்) புது நூல்களைக் கேட்டு நுகர்ந்து அத்தகைய புகழ்சால் சிறப்போடு வாழ்க என்கிறார். இங்குப் 'புணர்' என்பது புலவர்களை அவையாகக் கூட்டி, எலலோரும் ஒருஙகிருந்து, இலக்கிய இன்பம் நுகர்தலாகும் 'தொல்லாணை நல்லாசிரியர்' என மதுரைக் காஞ்சியிலும் 'தொல்காப்பியன்' எனப் பாயிரத்திலும் வரும் தொடர்களிடையேயுள்ள ஒற்றுமையும் சிந்திக்கத் தக்கதேயாம். பழமையான நூல்களில ஆணைசெலுத்தும் புலமையுடைய நல்ல ஆசிரியர் என வரும் தொடர், தொல்காப்பியர் எனற பெயருக்கு விளக்கம் போலவும் உளது. அம் முன்னோனாகிய பாணடியனிடம் புலவர்களை அழைத்துப் 'புணர் கூட்டுண்ணும்' மரபு இருந்தது போலவே, அவன் வழிவந்த தலையாலங்கானத்துச் செருவென்ற பாண்டியன் நெடுஞ்செழியனிடமும் புலவரவை கூட்டுவித்து இலக்கிய இன்பம் நுகரும் பாங்கு இருந்தது. இதனை, அப் பாண்டியன் நெடுஞ் செழியனின் புறநானூற்றுப் பாடலால் (72) அறியலாம்.

புறநானூற்றுப் பாடலால் (புறம், 72) புலவர்கள் குழுவுக்கு மாங்குடி மருதன் தலைவன் என்பது புலனாகின்றது. இப்புலவர்கள் நெடுஞ்செழியன் அவையத்திருந்து அவன் நிலவரையையும் அவனையும் பாடினர் என்பதும் அப்பாடல் தொடர்களால் உறுதிப்படுத்தப் படுகின்றது. இவற்றால் அன்று அரசர்தம் அவையங்கள் புதுநூல்கள் அரங்கேறுமிடங்களாக விளங்கின எனவும் அங்கு மன்னரும் புலவர்களும் அமர்ந்து அந்நூல்களைக் கேட்டுச் சிறந்த இலக்கிய இன்பம் நுகர்ந்தனர் எனவும், புலவர்களுள் ஒருவர் தலைவரெனப் போற்றப்பெற்றார் எனவும், அங்ஙனம் புலவர்கள் குழுமிப் பாடுதலை மன்னர்கள் பெறற்கரும் பேறாகக் கருதிப் போற்றினர் எனவும் இன்னோரன்ன செய்திகள் பல உய்த்துணரத் தக்கன ஆகின்றன.

**கூட்டுண்ணலும் புதிதுண்ணலும்:** மதுரைக் காஞ்சியில் 'கூட்டுண்ட' எனவரும் தொடர்போலவே, கலித்தொகையில் கூட்டுணணுதல் பறறியும் புதி துணணுதல' பற்றியும் குறிபபுகள் காணபபடுகின றன. கூடியிருந்து நூற்பயன் கொள்ளுதலையும் இலக்கிய இனபம் நுகர்தலையும் குறிக்கும் இத்தொடர்கள யாவும் மிகத் தொன்மையுடையனவாய்த் தோற்றுவதுடன, இச்சமுதாய மரபுகளும் தொனமை மிககன வாய்க் காணப்படுகின்றன. 'நிலனநாவில திரிதரூஉம் நீணமாடக் கூடலார், புலனநாவில் பிறநதசொல புதிதுண்ணும் பொழுதன்றோ சுடரிழாய நமக்கவர் வருதும் எனறு உரைத்தவுரை' (கலி.35).

'அவர் நமக்கு வருவேம் என்று உரைத்த காலம நிலத்திலுள்ளார் நாவிலே வழங்கும் நீணட மாடங் களையுடைய மதுரையிலுள்ளார், அறிவினையுடைய சான்றோர் நாவில் பிறந்த கவிகளின் புதுமையைக் கொணடாடும் இவ இளவேனிற்கால மலலவோ? என்பது நச்சினார்க்கினியரின் விளக்கம்.

ஆண்டுதோறும் சித்திரை வைகாசியாகிய இளவேனிற் காலத்தில் மதுரையில மக்கள் கூடி, அறிவுடையோர் நாவினால் ஒலித்துப்பாடி அரங்கேறும் புதிய கவிகளைக் கேட்டு மகிழ்வர் என்பது இதனால் உறுதிப்படுகிறது, கலிப்பாடல 68-இல், அமைச்சரைப் போன்று அறிவுரை கூற வல்லவர்களால், பொல்லாச் சொற்களைக் கேளாது நீக்கிய தம் செவிகளையே செய்யாகக் கொண்டு, முன்னைய சான்றோர்களின் கவிகளையே நீராகப் பாய்ச்சி, தம் அறிவாகிய நாவினாலே உழுது சொல்லேருழவர்கள் புதியது படைப்பர். அப் புதுமொழியாகிய நூலை இலக்கியத்தைக் கூடியிருந்துகேட்டு அனுபவிக்கும் மதில சூழ்ந்த நீர்வளம் மிக்க ஊரன் என மதுரையை ஆளும் பாண்டியன் போற்றப்படுகிறான். முன்பு பாலைக் கலியில கூறிய செய்தியை ஒத்தே இம்மருதக் கலிக்

கருத்தும் காணப்படுகிறது. மக்கள் கூடிப்புதிய நூல்க ளின் அரங்கேற்றத்தைக் கேட்டு மகிழ்ந்தமை பற்றிய இச் செய்தி, மதுரையில் 'அவையங்கள்' இருந்த மையை மெய்ப்பிக்கிறது.

இதுகாறும் கூறிய செய்திகளால் பாண்டிய மன்னர்களின் அவையங்கள் தமிழ்ச் சங்கங்களாகச் செயற்பட்டமையும், தமிழ்ச் சங்கம் என்ற அமைப் பைப் பாண்டியர்கள் தோற்றுவித்துப் புதிய நூல் களை அரங்கேற்றச் செய்து. தாமும் மக்களும் குடி யிருந்து கேட்டு மகிழ்ந்தனர் என்பதும் நன்கு பெறப் படும்.

**நிலத்தருதிருவின்நெடியோனுக்குப்பின்பு :** முன்பு பாண்டிய நாட்டைக் கடல்கொண்டதாக, அதற்கு ஈடாகநிலங்கைக் கொண்டு ஆண்ட நெடியோன் புகழைப் பாடும் பாடல்கள் பலவாகும். திருவிளை யாடற்புராணம் போல்வனவும் அம்மன்னன் புகழைப் புராணமாகப் புனைந்துவிரிக்கும். தொல்காப்பியத்தை அரங்கேற்றியவன் அம் மன்னனே. 'அவனைப் போல வாழ்க' என்றே மாங்குடிமருதனார் நெடுஞ்செழி யனை வாழ்த்துகின்றார். மக்களுக்காக நிலத்தை மீட்டு, நல்கியதுடன், இலக்கிய இலக்கணங்களையும் மீட்டுத் தந்த பெருமை இவனுக்கு உண்டு என்பது மேற்கூறிய சான்றுகளால் விளங்குகிறது. எனவே, இம் மன்னனுக்கு முன்னர், தமிழகவேந்தர், குறுநில மன் னர்கள் ஆகிய அனைவரின் அரச அவையங்களும் தமிழ் வளரும் இடமாக விளங்கினவெனினும் இம் மன்னன், இயற்கையதாற்றலால் கடலால் கொள்ளப் பட்ட நிலப்பகுதியை ஈடுசெய்யும்முயற்சியுடையனாக இருந்ததுபோல் ஏனைய இலக்கிய மீட்சிக்கும் காரணனாய், தன் அவையத்தைப் பிற வேந்தர்தம் அவையங்கள் அனைத்திலும் மேலாக உயர்த்தித் தமிழைக் காக்கும் நிலையமாக மாற்றினன் எனக் கருத இடம் உண்டாகிறது.

**நிலந்தரு திருவிற் பாண்டியன் முதல் நெடுஞ்செழி யன் காலம் வரை:** தலையாலங்கானத்துச் செருவென்ற நெடுஞ்செழியன் தன் முன்னோனாகிய நிலந்தருதிரு விற் பாண்டியன்போலத் தொல்லாணை நல்லாசிரிய ரைப் போற்றிப்'புணர் கூட்டுண்டான்' என்பதால், நெடுங்காலமாக இவ்வழக்கம் இருந்தமை பெறப்படும்.

இந்நீண்ட காலப்பகுதியில் தோன்றிய நூல்கள் பலவாதல் வேண்டும். எனினும் அவற்றுள் பத்துப் பாட்டு, எட்டுத்தொகை, தொல்காப்பியம், திருக் குறள், இரட்டைக் காப்பியம் என்பனவே பெரிதும் சங்க கால நூல்களாகக் கருதப்படுகின்றன. அவற்றுள்ளும் தொல்காப்பியம் இலக்கண நூலா கவும் 'பத்துப்பாட்டு, எட்டுத்தொகை இலக்கிய மாகவும் திருககுறள் நீதிநூலாகவும் சிலம்பும் மேகலையும் காப்பியங்களாகவும் விளங்குகின்றன. 'சங்க இலக்கியம்' எனக்கொண்டு ஆராய்வார் பத்துப்பாட்டு எட்டுத் தொகையை மட்டுமே மைய மாகக் கொண்டு, ஏனையவற்றை அவற்றோடு சார்த்தி ஆராய்தல ஒரு மரபாகிறது.

**சங்க காலம்:** இன்று சங்க காலம் என்பது, இந்நூல்கள் தோன்றிய காலமேயாகும். கடைச் சங்கம் கி.பி.250-க்கு முற்பட்டதென்பதும் கி.மு.1000 தொடங்கி இச்சங்கங்கள் நடைபெற்றுத் தொல் காப்பியம் முதலிய நூல்கள் தோனறின என்பதும் இன்று பெரிதும் ஏற்கப்படும் கருத்துகளாகும்.

பல்லவரைப் பற்றியோ, களப்பிரரைப் பற்றியோ ஒரு பாடல் கூடக் குறிக்காமையால், சங்க இலக்கியம் அம்மன்னர்கள் காலத்துக்கு முற்பட்டதென்பது தெளிவு. அப்பல்லவ மரபினர் கி.பி. 3-ஆம் நூற் றாண்டினிடையில், தமிழகத்தின் வடபகுதியைக் கைப்பற்றிக் காஞ்சியைத் தலைநகராகக் கொணடு ஆளத் தலைப்பட்டனர்.

பாரதப் போரைப் பற்றிய குறிப்பு சங்கப் பாடல்களில் இடம் பெற்றுள்ளது. இந்திய அரச பரம்பரையினருள் காலத்தால் முற்பட்டவர்களாகிய நந்தர்களைப் பற்றியும் அவர்களுடைய பாடலி புத்திரத்தைப் பற்றியும் மௌரியரின் தென்திசை நோக்கிய படையெடுப்புப் பற்றியும் சங்கப் பாடல் களில் குறிப்புகள் உள்ளன (அகம்.69,251,265,281, புறம்.175, குறு.75). சிலப்பதிகாரத்தில் வரும் இலங்கை மன்னன் கயவாகு பற்றிய குறிப்பும் கருதத் தக்கது. யவனர் பற்றிய குறிப்புகள் சங்கப் பாடல்களில் காணப்படுகினறன. தொல்பொருள் அகழ்வாராய்ச்சி மூலம் கண்டு பிடிக்கப்பட்டவற் றிற்கும் வெளிநாட்டுப் பயணிகள குறிப்பிடும் செய்திகட்கும் சங்கப் பாடல்கள் இவ்வகையில் சுட்டு வனவற்றிற்கும் ஒற்றுமைகாணப்படுதலை வரவாற்றா சிரியர்கள் விளக்கியுள்ளனர். எனவே, சங்க காலம் என்பது, ஏறத்தாழக்கிறித்து காலப் பகுதியை ஒத்த தும், அதற்கு முற்பட்டதுமாகும் எனபது துணிபு.

**சமணர் தமிழ்ச் சங்கம்**· மதுரையில் கி.பி.470-இல் ஒரு சமண சங்கம் நிறுவப்பட்டது. தேவனோ என்ப வரிடமிருந்து பெறப்பட்ட' திகம்பர தரிசன சாரம்' என்ற கி.பி.9-ஆம் நூற்றாணடைச் சேர்ந்த நூலில் இச்சங்கம் பற்றிக் குறிக்கப்பட்டுள்ளது, சிரீபூசியபா தரின் மாணவராகிய வச்சிரநந்தி என்பார் தென் னாட்டு மதுரையில் திராவிட சங்கம் என்ற இதை, விக்கிரம மன்னன் இறந்தபிறகு தோற்றுவித்தார் என்ற குறிப்பு அதில் காணப்படுகிறது. இச்சங்கம

சமண சமய மெய்யியலைப் பரப்பவே தோற்றுவிக்கப் பட்டதெனினும், அக்கோட்பாடுகளைத் தமிழ் மொழி வழியாகப் பரப்பியதாலும் நீதிநூல்களையும் காப்பியங்களையும் பிற இலக்கண இலக்கிய நூல் களையும் வெளியிட்டுப் பரப்பியதாலும் தமிழ்ச்சங்கம் என்றே புகழ் பெறலாயிற்று. அதன் காரணமாகவே முன்பிருந்தஅவையங்களும் சங்கம் என்ற பெயரால் சுட்டப்பட்டு மக்களிடையே சமணருக்கும் முன்பு தமிழ் வளர்த்த பெருமைகள் உண்டு என்று பறை சாற்றப்பட்டது. இதனால்தான் முன்பிருந்த அவை யங்களும் சங்கம் என்றே குறிககப்பட்டு, வரலாற்றி லும் இலக்கியத்திலும் வழஙகலாயின என அறிதல் வேணடும். இவ்வாறு அறியக் கூடாமல், 'சங்கம்' என்ற சொல்தானும தமிழில்லையே என விவாதிப் பது முறையாகாது.

**நான்காம் தமிழ்ச்சங்கம்:** இருபதாம் நூற்றாண டின் தொடக்கத்தில், முன்புபோலத் தமிழுக்குச் சங்கம் ஒன்று காணவேண்டிய நிலை உணரப்பட்டது. சேதுபதி மனனரின் அமைச்சராகிய பொன்னுச்சாமித் தேவரின் தவமகனார் பாண்டித்துரைத் தேவர் மதுரையில் தங்கிய காலததில், அஙகுத் திருக்குறள், கம்பராமாயணம் போன்ற நூல்கள யாரிடமும் கிடைத்தில. அவற்றுள ஓர் ஐயம் தீர்க்க விரும்பிய அவர், பலர் வீடுகட்கும் ஆளனுபபி, அவை எஙகுமே இல்லை என்பதை அறிநதார். தமிழ் நூற் பயிற்சி அத்துணை அருகிபபோயிருந்தமையை உணாநத அப் பெருமகனார், தம் அருமைத் தோழரும் சேதுபதி மன்னருமாகிய பாசுகர சேதுபதி அவர்களின் ஆதர வைப் பெற்றுத் தமிழ்ச் சங்கத்தை நிறுவினார். இங் ஙனம்1901-ஆம் ஆண்டு நிறுவப்பெற்ற 'மதுரைத் தமிழ்ச் சங்கம்' சேதுபதி செந்தமிழ்க் கலாசாலை, பாண்டியன் புததகசாலை, நூலாராய்ச்சிச் சாலை முதலியவற்றுடன் தனிக் கட்டடங்களில் செயற்படுவ தாயிற்று. தமிழ்ச் சங்க முத்திராசாலை என்ற அச்சக மும் தொடஙகப்பெற்றது. செந்தமிழ் என்ற இதழ் 1903-இல் தோன்றி, ஆராய்ச்சியின் வளர்ச்சிக்குப் பெரிதும் உதவுவதாயிறறு. அக்காலத்து வாழந்த பெரும்புலவர்கள் பலரும் இச்சங்கத்தில் தொடர்பு கொண்டு தமிழப்பணியாறறினர். திரு நாரயண ஐயங்கார், மு. இராகவ ஐயங்கார், சாமி ஐயங் கார், சுந்தரேசுவர ஐயர், சிவகாமி ஆண்டாா போன்ற பாணடித்துரையாரின் அவைக்களப் புலவர் கள் குறிப்பிடத் தக்கவர்களாவர். மற்றும் இரா. இராகவையங்கார்,வை.மு.சடகோபராமானுசாச்சாரி யார், உ.வே. சாமிநாதையர், பரிதிமாற்கலைஞர் சோழவந்தான் அரசன் சண்முகனார், திருமயிலை சண்முகம்பிள்ளை, பின்னத்தூர் நாராயணசாமி ஐயர் போன்ற பலரும் தமிழ்ச்சங்கத் தொடக்க விழாவிற்கு வந்திருந்ததுடன் அதன் வளர்ச்சியிலும் பங்கு கொண்டனர். சே.ரா. சுப்பிரமணியக் கவி ராயர், சே.ரா. அருணாசலக் கவிராயர், சே.ரா. கந்தசாமிக் கவிராயர் போல்வாரும் மற்றும் பலரும் சங்கப் பணிகளில் பங்கு கொண்டனர். காலப்போக் கில் தமிழ் அறிஞர்கள் அனைவரும் ஈடுபாடுகொண்ட நிறுவனமாக இத்தமிழ்ச் சங்கம் திகழ்ந்தது.

**பிற தமிழ்ச் சங்கங்கள்:** அறிஞர் திருச்சிற்றம் பலனாரால் தோற்றுவிக்கப்பட்டது கோவைத் தமிழ்ச் சங்கம். மதுரைத் தமிழ்ச் சங்கத்திற்கு முற் பட்டதெனினும், இது கோவையின் ஒருபகுதி அளவி லேயே பணியாற்றியது. மதுரைச சஙகம் தோன்றிய பதினைந்தாண்டுகளுக்குப் பின், கோவை கிழார் இராமச்சந்திரனார், சிவக்கவிமணி சி.கே. சுப்பிர மணியனார் ஆகியோா முயற்சியால் கோவைத் தமிழ்ச்சங்கம் மறுமலர்ச்சி பெற்றுப் பணியாற்றியது.

மதுரைச் சங்கத்திற்கு முற்பட்ட, மற்றொன்று, சென்னையில் கி.பி. 1890-இல் தோன்றியது 'தென னாட்டுத் தமிழ்ச் சங்கம்'எனபதாகும். அதுவே, பாண டித்துரைத் தேவரின் சஙகத்திற்குமுன்னோடியானது எனக் குறிப்பிடுவர். இச்சஙகம் சென்னை, தொண்டை மண்டலம் பள்ளியில் தொடங்கப்பட்டது. தலைவர். சோமசுந்தரம் செட்டியார், செயலர், டி. பாலசுந்தர முதலியார், உறுப்பினர், இராவுபகதூர்பூணடி அரஙக நாத முதலியார், பி.வி. விசயரங்க முதலியார், சேச கிரி சாத்திரியார், சி.வை. தாமோதரம் பிள்ளை, இராவுபகதூர் இராமசாமி முதலியார், எம். வீர ராகவாச்சாரியார். இச்சங்கம் மிகச் சிறந்த நோக்கங் களுடன் தோற்றுவிக்கப்பட்டதெனினும், செயற் பாடின்றி அமைந்தது. இச்சங்கததைஒட்டி கி.பி.1899-இல்'திராவிட பாசா சங்கம்' என ஒன்றும்தோற்றுவிக் கப்பட்டு, ஆட்சிக்குழு அமைக்கப்பட்டு,நோக்கஙகளும் வகுக்கப்பட்டன. ஆயினும் பின்னர்த் தோன்றிய, பாண்டித்துரையாரின் சஙகம் போல் அது செயற் படவில்லை.

மதுரைத் தமிழ்ச் சங்கம் வகுத்த வழியில் தோன்றியது கரந்தைத் தமிழ்ச் சங்கம். இச்சங் கத்தைத்தமிழவேள் உமாமகேசுவரனாரும், ந.மு. வேங்கடசாமி நாட்டாரும், கரந்தைக் கவியரசு வேங்கடாசலம்பிள்ளையும் மற்றும் பெரும் புலவர் களும் புரவலர்களும் 1919-இல் தோற்றுவித்து வளர்த்தனர். 1921-இல் தோன்றிய நெல்லைத் தென்னிந்தியத் தமிழ்ச் சங்கமும் குறிக்கத் தக்க தாகும். தமிழக அரசு அறிவித்துள்ள 'உலகத் தமிழ்ச் சங்கம்' மதுரையில் அமைந்து, பணியாறறும் என அறிவிக்கப்பட்டுள்ளது. இராம.பெ.

**தமிழ்நாட்டு ஆட்சிப்பிரிவுகள்:** தமிழ்நாடு நிருவாக வசதிக்காகப் பல மாவட்டங்களாகப் பிரிக்கப்பட்டுள்ளது. மாவட்ட நிருவாகத்தை மாவட்ட ஆட்சித் தலைவர் கவனிப்பார். தமிழ்நாட்டில் இருபது மாவட்டங்கள உள்ளன. இம்மாவட்டங்கள பல கோட்டங்களாகவும் வட்டங்களாகவும் பிரிக்கப்பட்டுள்ளன. கோட்டங்கள் துணை ஆட்சியாளராலும், வட்டங்கள வட்டாட்சியாளர்களாலும் கவனிக்கப்பட்டு வருகின்றன. இம்மாவட்டங்கள் பல சிற்றூர்களைத் தம்மகத்தே கொணடு இயங்கிவருகின்றன. தமிழ் நாட்டின் மாவட்டங்களைப் பற்றி விரிவாக இக்கட்டுரை கூறுகின்றது.

**அண்ணா மாவட்டம்:** தமிழ்நாடு அரசு 1985-ஆம் ஆண்டு நிருவாக வசதிக்காகவும் தமிழகத்தின் முதலமைச்சராக விளங்கிய சி.என். அணணாதுரையின் நினைவாகவும் அவரது பெயரால் மதுரை ம்ாவட்டத்தைப் பிரித்துப் புதியதாக அமைத்த மாவட்டம் அண்ணா மாவட்டம் ஆகும்.

**எல்லைகள்.** இம்மாவட்டத்தின் எலலைகளாக வடக்கே பெரியார் மாவட்டமும், கிழக்கே திருசசி மாவட்டமும், மேற்கே கேரள மாநிலமும் கோயம்புத்தூர் மாவட்டமும் உள்ளன. மாவட்டத்தின் தலைநகரம் திண்டுக்கல. இம் மாவட்டம் ஆறு வட்டங்களைக் கொண்டுள்ளது. அவை திண்டுக்கல், நத்தம், நிலக்கோட்டை, பழனி, வேடசந்தூர். கொடைக்கானல் ஆகியவை வட்டங்களாகும். நிருவாக வசதிக்காக




அண்ணா மாவட்டம்

மூன்று கோட்டங்களாக இவை பிரிக்கப்பட்டுள்ளன. திண்டுக்கல், பழனி, கொடைக்கானல் ஆகியவை அக் கோட்டங்களாகும். மாவட்டத்தின் பரப்பளவு 5835.61. சதுர. கி.மீ.

**நிலமும் தட்பவெப்பமும்:** இம்மாவட்டத்தின பெரும்பகுதி அழகுமிகக மலைப்பகுதிகளை உடையது மேற்குத் தொடர்ச்சி மலையின் பெரும் பிரிவான பழனிமலை இரு பிரிவுகளைக்கொண்டது. மேல் பழனி மலை, கீழ்ப் பழனிமலை எனஅவை கூறப்படுகின்றன. இம்மலையின் உயர்ந்த சிகரம் வெம்படிச்சோலை, இளமரக்காடு மலை என்னும் பெயரை பெற்றது. இது 8,218 அடி உயரமுடையது. இம்மாவட்டத்தில உளள கொடைக்கானல் இயற்கை அழகுடைய மலைகளை உடையது. கேரள எல்லையில் இம் மாவட்டம் அமைந்துள்ளமையால் மேற்குத் தொடர்ச்சி மலையின் மிதமான தட்பவெப்ப நிலையைப பெற்று நல்ல மழைப் பொழிவையும் பெற்று விளங்குகின்றது. இம் மாவட்டததில் ஐயம்பாளையம் ஆறு, பம்பாறு, மஞ்சளாறு, மருதாநதி, பன்றியாறு, குடகனாறு, வரதமாநதி, குதிரையாறு போன்ற ஆறுகள் பாய்கின்றன. பெரும்பாலான ஆறுகள பழனி மலைத் தொடரில் தோன்றுகின்றன. மலைத்தொடர்ப் பகுதிகளில் காட்டு வளமும் நிறைநதுள்ளது. இம்மாவட்டம் தென்மேற்கு வடகிழக்கு ஆகிய இரு பருவக்காற்றுகளால் மழையைப் பெறுகின்றது.

**வேளாண்மை:** வேளாண்மைக்கு ஏற்ற நீர்ப் பாசனத் திட்டங்களை இம்மாவட்டம் கொண்டு விளங்குகிறது. வரதமா நதி நீர்த்திட்டம் மூலம் ஆயக்குடி, பழனி வட்டங்களும், மஞ்சளாறு நீர்த்திட்டத்தின் மூலம் தேவதானம்பட்டி, பெரியகுளம் வட்டங்களும், குடகனாறு நீர்த்திட்டம் மூலம் அழகாபுரி, வேடசந்தூர் வட்டங்களும் பயன்பெறுகின்றன. இம் மாவட்டத்தில நெல, புகையிலை, வெற்றிலை, கரும்பு, காய்கறிகள், எள, நிலக்கடலை போன்றவை பயிரிடப்படுகின்றன. நத்தம், கோடைக்கானல் பகுதியில் பல்வகைப் பழங்கள் பயிராகின்றன. கோக்கோ, காபி போன்ற தோட்டப் பயிர்கள் கோடைக்கானல் பகுதியில் பயிரிடப்படுகின்றன. வேடசந்தூர் புகையிலை விளைச்சலில் முன்னணியில் நிற்கின்றது.

**கனிப்பொருள்கள்:** பழனிமலைத் தொடர்ப்பகுதியில் கோடைககானலிலிருந்து 30 கி.மீ. தொலைவில அலுமினிய மண்வகை (Bauxıt) கண்டுபிடிக்கப்பட்டுள்ளது. வேடசந்தூர்ப் பகுதியில் பல்வகை மணிக்கற்கள் கணடுபிடிக்கப்பட்டுள்ளன.

**தொழில்கள்:** புதியதாகத் தோன்றிய மாவட்டமாதலால் தொழிலின் வளர்ச்சி சிறிது சிறிதாக மாவட்டத்தில் முன்னேற்றமடைநது வருகின்றது.

திணடுக்கல் பூட்டு தயாரிக்கும் தொழிலில் புகழ பெற்றது. இரும்புப் பெட்டிகள பெருமளவில் இங்குத் தயாரிக்கப்படுகின்றன. திண்டுக்கல்லில புகையிலைத் தொழிற்சாலையும், சுருட்டுத தொழிற்சாலைகளும் உள்ளன. நெசவாலைகள பல திண்டுககல, பழனி ஆகிய பகுதியில் உள்ளன. திணடுக்கல் பகுதியைச் சுற்றித் தோல்பதனிடும் தொழில் சிறபபாக நடைபெற்று வருகின்றது. பழனியில் தமிழ்நாடு அரசின சிறுதொழில் நிறுவனத்தின் கிளை ஒனறு (Tansi) இயங்கிவருகிறது. கோடைககானலில் மரததூளிலிருந்து பலகைகள், அட்டைகள செய்யும் தொழிற்சாலையும் மூலிகை மருந்துகள் தயாரிககும் தொழிற்சாலைகளும் உள்ளன. நிலககோட்டை வட்டத்தில இரசாயனப் பொருள் உற்பத்தித தொழிற்சாலை ஒன்று இலைகளைக் கொணடு இராசாயனப் பொருள்களைத் தயாரித்து வருகின்றது.

**மக்கள்:** இம்மாவட்டத்தில் வேளாண் தொழில் புரியும் இநது சமூகத்தினரும், கிறித்தவர்களும இசுலாமியர்களும் ஒற்றுமையுடன் வாழ்ந்து வருகின்றனர். பழனி மலைத தொடரில் புலையர், பளியர், முதுவா என்னும் மலையினத்தவர்கள வாழ்நது வருகின்றனர். இம்மாவட்டத்தின் மக்கள் தொகை 1,564,448. (1985)

**போக்குவரத்து:** மாவடடத்தின தலைநகரான திண்டுககல்லில இருந்து பலவேறு நகரங்களுசகும் பேருந்துகள் செல்கினறன. இம்மாவட்டத்தின சாலைப் போக்குவரத்தை இராணி மங்கம்மாள போக்குவரதது நிறுவனம் கவனித்து வருகினறது. இமமாவட்டத்தில் மீட்டா அளவு இருபபுபபாதை அமைந்துள்ளது. திணடுக்கல்லில இருநது பொளளாச்சி, மதுரை போனற நகரங்களுககு தொடர் வண்டிகள் செல்லுகினறன. கரூர்-திண்டுககல் அகல இருப்புப்பாதை அமைக்கப்பட்டு உளளது.

**கல்வி:** இம்மாவட்டத்தில் தொடக்கப் பள்ளிகளும், உயர்நிலைப் பளளிகளும மேலநிலைப் பள்ளிகளும் மாணவர்களுக்குக் கல்வி கறபிககினறன. திண்டுக்கல் பழனி போன்ற நகரங்களில் கலலூரிகள உள்ளன. இம்மாவட்டத்தில் உள்ள கோடைககானலில் பெண்களுக்கென அன்னை தெரசா மகளிர் பல்கலைக் கழகம இயஙகி வருகின்றது.

**நகரங்கள்:** இம்மாவட்டத்தின் தலைநகரமான திண்டுக்கல மக்கள தொகை நெருககமான நகரமாகும். விசயநகர ஆட்சியில் திணடுக்கல் சீமையின் தலைநகரமாக இது விளங்கியது. இங்கு ஒரு கோட்டை உள்ளது. திண்டுக்கல் குறைநத அளவான வெப்பநிலையைக் கொண்ட நகரமாகும். இங்குள்ள மலையின் பெயரால் திண்டுக்கல் என்ற பெயரை இது பெற்றது. இம்மலை மீது கோயிலொன்றும் உளளது. வாணிக நகரமாகவும் இது விளங்குகின்றது. திணடுக்கல்லைச் சுறறிப் பல ஊர்கள் உள்ளன. மாவட்டத்தின் பிறிதொரு நகரம் வேடசநதூர் ஆகும். இவ்வூரில குடகனாறு பாய்கின்றது. இது பெரியார் மாவட்டத்தின் எலலையில உளளது. இவ்வூர் வெங்காயம், புகையிலை ஆகியவற்றிற்குப புகழ்பெற்றது இஙகு வசித்த வேடர்களின் சந்தை கூடியதால வேடசநதையூர் எனற பெயர் ஏற்பட்டு வேடசந்தூர் எனத திரிநததாகக் கூறுவர். இவவூரில் ஒரு இடிந்த கோட்டை உளளது முருகனின ஆறுபடைவீடுகளுள் ஒன்று பழனியாகும். இநநகரைச சுற்றிப்பலமலைகளும் ஆறுகளும், குன்றுகளும் உளளன. புராணச சிறப்புப் பெறற பழனியின் பழம் பெயா திருஆவினனகுடி ஆகும. இது முறகாலத்தில் வையாபுரி எனவும் கூறப்பட்டது பழனிமலை மீது விளங்கும முருகனை வழிபடுவதறகு இநநகரத்திறகு இந்துககள தினமும மிகக எணணிககையில் வருகை புரிகினறனா. தமிழநாட்டின் சிறநத கோடை வாழ்விடமான கோடைககானல நகரம இமமாவட்டத்தில அமைநதுளளது. இஙகு அழகிய ஏரி ஒனறு உளளது. சுற்றுலாப பயணிகள இமமலையின அழகைக் காணவும கோடையில தஙகவும பெருமளவில் வருகினறனா.

**வரலாறு:** மதுரைப் பாணடியாகளின ஆட்சிககுட்பட்டும் பிற்காலப் பாணடியர்களின ஆட்சிக்குட்பட்டும், கி.பி. 14-ஆம் நூற்றாண்டில் இசுலாமியர் ஆட்சிககுட்பட்டும விளஙகிய இம்மாவட்டம பினனா விசயநகரப் பேரரசு, பாணடியர், நாயக்கர்கள் போன்றோர் ஆட்சிக்குட்பட்டு விளஙகியது. இம் மாவட்டத்தின ஒரு பகுதியாக 18 பாளையங்களைக கொண்ட திணடுககல சீமை விளஙகியது. ஆர்க்காட்டு நவாபு சந்தாசாகிபு இமமாவட்டத்தின தலைநகரான திணடுககல்லை கி.பி 1763-இல் கைப்பற்றினான. பின்னா, மைசூர்ப் பகுதியின தளபதிவேங்கடன இந் நகரை கி.பி. 1742-ஆம் ஆணடு கைப்பற்றினான். ஐதர் அலி கி பி. 1755-ஆம் ஆண்டு திணடுகலலைக கைப்பற்றி அதனைப் படைத் தளமாக மாற்றினான். இது கி.பி. 18-ஆம நூற்றாணடிலிருந்து ஆஙகிலேயரின ஆட்சிககு ட்டு விளஙகியது. இம்மாவட்டம் மதுரை மாவட்டததின ஒரு பகுதியாக விளஙகி 1985-ஆம் ஆணடு தனித்த மாவட்டமாக இயங்கி வருகின்றது.

**இராமநாதபுரம் மாவட்டம்:** இது பழமையும் சிறப்பும் வாய்ந்த மாவட்டம. இம்மாவட்டம் முன்பு 18 வட்டங்களைக் கொணடு விளங்கி வந்தது. நிருவாக வசதிக்காகவும் பிற வளாச்சிகள விரைவாக நடைபெறுவதறகாகவும் 1984-ஆம ஆணடு இம்மாவட்டம்

மூன்று மாவட்டங்களாகப பிரிககப்பட்டது. மூனறு மாவடடங்களுள இராமநாதபுரம் மாவட்டம இராம நாதபுரத்தைத் தலைநகரமாகக கொணடு இப பொழுது இயங்கி வருகிறது

**எல்லைகள:** இராமநாதபுரம மாவட்டத்தின வடக் கில பசுமபொன முததுராமலிங்கம், புதுக்கோட்டை மாவட்டஙகளும் கிழககில் வஙகாள விரிகுடாவும தெறகில மன்னார வளைகுடாவும், திருநெலவேலி மாவட்டமும் மேறகில காமராசா மாவட்டமும அமைநதுள்ளன. மாவட்டத்தின பரபபளவு 4,221 ச கி.மீ இம்மாவட்டம் ஆறு வட்டஙகளைக கொணடு விளஙகுகிறது அவறறுள இராமநாதபுரமும், பரமக குடியும நகராட்சிகளாகும். இமமாவட்டததில பதி னொரு ஊராட்சி ஒன்றியங்களும் 8 பேரூராட்சிகளும உள்ளன.




இராமநாதபுரம் மாவட்டம

**நிலமும் தட்பவெப்பமும்:** இராமநாதபுரம் மாவட் டம் தமிழநாட்டின பினதஙகிய மாவட்டஙகளுள ஒனறாகும். இம்மாவட்டமே தமிழகததின கடறகரை யின் பாதி அளவு நீண்ட கடறகரையைக் கொணடு விளஙகுகிறது. இம்மாவட்டம் செம்மண சேறறு நிலத்தையும, பருத்தி விளைவதற்கேற்ற கரிசல மண ணையும், கடறகரைப பகுதிகளில மணல வெளிகளை யும் கொணடு விளஙகுகிறது. இம்மாவட்டம நிலத தடிநீர் பறறாககுறை, பருவமழை இல்லாமை ஆகிய வறறால தொடர்நது வறட்சியால் பாதிக்கப்பட்ட மாவட்டமாக இருநது வருகிறது. மாவட்டததில ஆணடிற்குச் சராசரியாக 819 மி மீ. மழை பெய்கிறது. தென்மேற்கு, வடகிழக்குப பருவக் காற்றுகளின மூலம் இம்மாவடடம் மழையைப் பெறுகினறது இம்மாவட் டத்தில 29,746 எகடேர் பரப்பளவில் காடுகள் பரவி யுள்ளன. இம்மாவட்டம் வைகையாறறால சிறிதளவு வளம பெறுகிறது. வைகை ஆறறின துணை ஆறு கிருதமால் நதி இமமாவடடத்தில் ஓடுகிறது.

**வேளாணமை.** வறடசியின காரணமாக இம் மாவடடம் வேளாணமையில பெரிதும் பாதிக்கப்பட் டுள்ளது. வைகை ஆறறின மூலம பாசன வசதி செயயபபடடுளளது இமமாவடடததில நெல, சோளம், கமபு, கேழ்வரகு, பருததி, நிலககடலை போனறவை பயிரிடபபடுகின்றன. கால்நடை வளர்ப் பும் வேளாணமைத தொழிலுடன் நடைபெறுகின றது

**கனிப் பொருளகள** இமமாவடடத்தில காரீயகம் (Graphite) எனற கனிப்பொருளும், சுணணாம்பும் கிடைககின்றன.

**தொழில்கள்:** தொழில் வளர்சசியும் இம்மாவட டத்தில் பினதஙகிய நிலையில உள்ளது. மீன்பிடிக் கும் தொழிலும நெசவுத் தொழிலும் இம்மாவடடத் தில நடைபெற்று வருகின்றன. இமமாவட்டத்தில 24 ஆலைகள உளளன. இமமாவட்டத்தில் காகித ஆலைகள் இரணடு செயற்பட்டு வருகின்றன. தொழில் வளம் பெருக இம்மாவட்டத்திறகு அரசு போதிய உதவிகளையும் திட்டஙகளையும் வகுத்துளளது.

**மககள்.** இமமாவட்டததில முககுலத்தோர் எனப் படும் களளர், மறவர், அகமபடியர் குல மக்களும் தெலுஙகு பேசுகின்ற மக்களும், இசுலாமியரும செட்டியார், சௌராட்டிரர் போன்றோரும வாழ கின்றனர். எல்லாச சமயததவரும் ஒறறுமையுடன இஙகு வாழகினறனர். கடறகரை ஓரப் பேரூர்களிலும் சிற்றூர்களிலும் இசுலாமியர் மிகுதியாக வாழ்கின்ற னர். மிகப பழஙகாலததிலிருந்து வாணிபத்தில இவா கள் ஈடுபட்டு வந்துளளனா சிறித்தவாகளும இம்மா வடடததில வாழநது வருகின்றனர். மககளதொகை 10,21,774 (1981)

**போக்குவரத்து:** மாவட்டததின தலைநகரமான இராமநாதபுரததிலிருநது பலவேறு நகரஙகளுக்கும பேருந்து வசதிகள செய்யபபடடுளளன. இம்மாவட் டததில தொடா வணடிப் போக்குவரத்தும் நடை பெறறு வருகின்றது. இராமேசுவரத்திறகுத் தொடர் வண்டிப் பாதை உளளது. வஙகாள விரிகுடாக கடற்கரைச் சிறறூர்களில் மீனவர்கள் படகுகளையும் இயந்திரப் படகுகளையும பயன படுத்துகின்றனர். வட்டாரப் போக்குவரத்து மையஙகள, இராமநாத புரம்,திருவாடானை,இராசசிங்கமங்கலமாகியஆா.எசு

மங்கலம், முதுகுளத்தூர் போன்ற ஊர்களில் உள்ளன. இராமேசுவரம தமிழகத்தின சிறிய துறைமுகமாக விளங்குகிறது. இம்மாவட்டத்தில் 49-ஆம் எணணால குறிப்பிடப்படும் தேசிய நெடுஞ்சாலை அமைந்துள்ளது.

**நகரங்கள்.** இம்மாவட்டத்தின் தலைநகரமான இராமநாதபுரம் வரலாற்றுச் சிறப்புமிக்க ஊராகும். சேதுவேந்தர்களுள் மிகவும் சிறப்புற்று விளங்கிய கிழவன் சேதுபதியின் ஆட்சியில் இராமநாதபுரம் கோட்டை சேதுநாட்டின் தலைநகராக மாறறம் பெற்று விளங்கியது இக்கோட்டையின் உட்புறத்தில் அரசரது இருக்கைக்கு ஏற்ற மாளிகைகள் அமைக்கப்பட்டன. அவறறில் ஒன்றுதான் இராமலிங்க விலாசம் அரணமனை. சேதுபதிகளின அவைக்களமாகவும், ஆடம்பர இல்லமாகவும் பயன்படுத்தபபட்ட காரணத்தினால இந்த மாளிகையின் உடபுறம் வணண ஓவியங்களால் அழகுபடுத்தப்பட்டது. தஞசை மன்னருக்கும் சேதுபதிக்கும் நடந்த போரைச் சித்திரிக்கும் ஓவியம், ஆடற்கலையை மனனர் கணடுகளிக்கும் ஓவியங்கள், இராமாயணம், பகவத்கீதை ஆகியவற்றை விளக்கும் காட்சிகளும் இராமலிங்க விலாசத்தில் இடம் பெற்றுள்ளன. இம்மாளிகை கலைககூடமாக மட்டுமல்லாது கலைஞர்களும், புலவர்களும் தங்களது திறனுககுத் தக்க பரிசில பெறும் முத்திரைக் கூடமாகவும் விளஙகி வநதுள்ளது. ஆஙகிலேயருககுப் பணிநது வாழவிரும்பாத பாளையக்காராகளை ஓரணியில் திரட்டி வந்த கட்ட பொம்மு இந்த மாளிகையிலதான் கி.பி.1798-இலமாவட்ட ஆட்சியர் சாக்சனைச் சந்தித்தா.கட்டபொம்முவின் இரணடாணடுப் போராட்டமே இஙகிருந்துதான் தொடஙகியது எனறு சொலலப்படுகிறது. இநத அரணமனையைத தமிழக அரசின தொல்பொருள ஆய்வுத் துறையினர் தங்கள் பொறுப்பில் ஏற்றுக் காத்து வருகின்றனர்.

**இராமேசுவரத் தீவு:** இம்மாவட்டத்தில வஙகாள விரிகுடாவில அமைந்துள்ள இராமேசுவரத் தீவு இராமகாவியத்தில் இடம் பெற்றுள்ளது இந்திய நாட்டின் திருத்தலஙகளுள சிறப்புப் பெற்று விளங்குகிறது. இங்குள்ள திருக்கோயில புகழ் மிககதாகும். இராமர் இலங்கைக்குச்சென்று இராவணனுடன போரிடுவதற்கு முன் இராமேசுவரத்தில சிவனை வழிபட்டதாக ஒரு கதை கூறுகிறது. அருளமிகு இராமநாதசுவாமி திருக்கோயிலுள்ள மூனறாம் திருசசுற்று உலகப் புகழ் பெற்றது. கிழக்கு மேற்காக 230மீ. நீளமும் தெற்கு வடக்காக 145 மீ. நீளமும் கொணட நீள்சதுர வடிவில 1740 அழகான கற்றூண்கள் நிறுத்தி அழகுற அமைக்கப்பட்டுள்ளது. இராமர் பாதமும் மற்றும் கோதணடராமர் கோவிலும் இங்கு உள்ளன. இராவணனுடைய தம்பி வீடணன் இராமரிடம் தஞ்சம் புகுநத இடம் கோதணடராமர் கோவில் எனக் கூறப்பட்டு வருகிறது. மனித இனத்தின் ஆதிதந்தையாக இசுலாமியர்களால அழைக்கப்பட்டு வரும் ஆதம் நபியின் மக்களான ஆபில், காபில் ஆகிய இருவரை அடக்கம் செய்த இடங்களும் இராமேசுவரம் தொடர்வணடி நிலையத்திற்கு அணமையில் அமைந்துள்ளன. இராமேசுவரம் இராமநாதபுரத்திலிருந்து 55 கி.மீ. தொலைவில உள்ளது.

திருப்புலலாணி பாணடிய நாட்டில் உளள 18 வைணவத் திருப்பதிகளுள நான்காவதாகும் இது 'தருப்பசயனம்' என்று அழைக்கப்படுகிறது. திருப்புல்லாணி இராமநாதபுரத்திலிருந்து 14 கி.மீ. தொலைவில் அமைந்துளளது. இங்குளள ஆதிசெகநநாதப் பெருமாள் திருககோயில் சேதுபதிகளால கட்டப்பட்டது இது 72 சதுாயுகங்களுக்குமுன் தோனறிய தலம் என்று கூறப்படுகிறது. அதன காரணமாக இங்கு எழுந்தருளியுளள பெருமாளுககுச் செகந்நாதன் என்கின்ற திருநாமம ஏறபட்டது எனறு வைதிகர் கூறுகிறாாகள். இத்தலம் இராமபிரான் ஆதி செகந்நாதப பெருமாளை வணங்கி அவரால் கொடுக்கப்பட்ட வில்லைப பெற்று இராவணனை வென்று சீதாபிராட்டியை மீட்க அருள புரியப்பெற்ற புணணியத்தலம. வானர சேனையுடன கடலைக் கடக்க உதவுமாறு வருண பகவானைக குறித்து இராமபிரான் தருப்பைபுல் மீது தவம் இருநததால தருப்பசயனம என்ற பெயர் இவ்வூருககு ஏறபட்டது

சேதுக்கரை திருப்புலலாணியில இருந்து 4 கி.மீ. தொலைவில உளளது இராமேசுவரம வரும பகதர்கள் சேதுக்கரையில நீராடினால்தான தஙகளுடைய புனிதப்பயணம் நிறைவு பெறுவதாக ஒருநம்பிக்கை இந்துச்களிடம் உளளது இஙகு ஆஞ்சநேயர் கோயில் ஒனறு உள்ளது. மேலும் இராமபிரான் இலங்கை செலலச் சேதுக்கரையிலிருநது அமைத்த அணையின அடையாளத்தை இங்கு இனறும் பாாககலாம்.

**கீழ்க்கரை:** இராமநாதபுரத்திலிருந்து 15 கி.மீ. தொலைவில உள்ளது. வளளல் சீதக்காதி பிறநத இடமாக இது கருதப்படுகிறது 'செத்தும் கொடுத்தான் சீதக்காதி' என்று வள்ளல் சீதக்காதி பறறிக் கூறப்படுகிறது. அவருடைய கல்லறை இந்துக்கள கோவில் வடிவில் அமைக்கப்பட்டுள்ளது.

இராமநாதபுரத்திலிருந்து 24 கி.மீ. தொலைவில் அமைந்துளள ஏர்வாடியில அரேபியா நாட்டிலிருந்து வந்த இசுலாமிய மதகுருககளில் முரசொலி இப்ராகிம் மகன நலல இபராகிம் ஒலியுல்லா

தம் பாட்டனார் தம் கனவில் கூறியபடி அனைத்துச் செல்வங்களையும் துறந்து கிளியூரை விட்டு இசுலாம் மதத்தைப் பரப்பப பௌத்திரமாணிக்க பட்டணம் வந்தார் எனறும், அங்கு மெழுகுவர்த்தியும் ஊதுபத்தியும் தாமாக எரிந்து மணம் பரப்பிக் கொண்டிருந்ததைக் கணட நல்ல இப்ராகிம் அங்குத் தம் பாட்டனாருக்குக் கலலறை எழுப்பினார் என்றும், தாம் பிறந்து வளர்ந்த தலத்தின் நினைவாக அவ்விடத்திற்கு யர்பத்து என்று பெயர் சூட்டினார் என்றும், பின்னர் அச்சொல் மருவி ஏர்வாடி என்றும் அழைக்கப்பட்டு வருகிறது எனறும் கூறப்படுகிறது. முத்துவிசயரகுநாத சேதுபதியின் மாமனார் சேதுபதி அவர்களின் கடுமையான நோய் இப்ராகிம் செய்த பாத்தியாவினால் குணம் அடைத்ததாக ஒரு நம்பிக்கை நிலவுகிறது.

இராமநாதபுரம் மாவட்டத்திலுள்ள புனித தலங்களுள் மிகப் பழமை வாய்ந்த சிவத்தலம் திரு உத்தரகோசமங்கை ஆகும். இது இராமநாதபுரத்திலிருந்து 17 கி.மீ. தொலைவிலுள்ளது. இத்திருக்கோயிலிலுள்ள சுவாமி மங்களநாதர் என்றும், அம்மன் மங்களேசுவரி அம்மன் என்றும் அழைக்கப்படுகின்றனர். இக்கோவிலில் மரகத நடராசர் சிலை உளளது.

தேவிப்பட்டினம் இராமநாதபுரத்திலிருந்து 15 கி.மீ. தொலைவில் அமைந்துள்ளது. இராமபிரான் சீதாபிராட்டியை மீட்டு இலங்கை நோக்கி வருங்கால் இங்கு நவக்கிரக பிரதிட்டை செய்து பூசை செய்ததாக ஒரு புராணக் கதை கூறுகிறது. இங்கு ஒரு சிவன் கோவில் உள்ளது. சுவாமி திலகேசுவரர் என்றும், அம்மன் உலகநாயகி அம்மன் என்றும் அழைக்கப்படுகின்றனர்.

**திருவாடானை:** இராமநாதபுரத்திலிருந்து 34 கி.மீ. தொலைவில் அமைந்துள்ளது. இந்துககளின் புண்ணிய இடங்களில் இது எட்டாம் தலமாகும். தேவாரப் பாடல் பெற்ற இத்திருத்தலம் அருணகிரிநாத சுவாமிகளாலும் பாடப்பட்டுள்ளது. வருண பகவான் புதல்வர் வாருணி, ஒரு காலத்தில் புட்பத்திரை என்ற நதிக்கரையில் தவம் செய்து கொணடிருந்த துருவாச மகரிசியை மதியாது ஆணவமாக இருந்ததால் முனிவர், அவரை ஆட்டுத் தலையுடனும் யானை உடலுடனும் துயருறச் செய்தார் என்றும், வாருணியும் 12 ஆண்டுச் சாபத்தை அனுபவித்துப் பின்னர்ப் பாரிசாதவனம் வந்து ஆதி இரெத்தினேசுவரரை வணங்கப் பழைய சுந்தரவடிவம் அடைந்த காரணத்தால் இத்தலத்திற்கு 'ஆடானை' என்றும் இறைவற்கு 'ஆடானைநாதர்' என்றும் காரணப் பெயர் வரலாயிற்று என்றும் புராணம் கூறுகிறது.

**தீர்த்தாண்டதானம்:** பாண்டிய நாட்டில் புகழ் பெற்ற பதினான்கு புண்ணியத் தலங்களில் இரண்டாம் தலமாகும். இது இராமநாதபுரத்திலிருந்து 61 கி.மீ. தொலைவிலும், தொண்டியிலிருந்து 14 கி.மீ. தொலைவிலும் உள்ளது. இங்குள்ள கோவிலில் உள்ள சுவாமி சர்வதீர்த்தஈசுவரர் என்றும் அம்மன் பெரிய நாயகி அம்மன் என்றும் அழைக்கப்படுகின்றனர். இங்குள்ள வருண தீர்ததத்தில் நீராடினால் நோய்கள் தீரும் என்னும் ஒரு நம்பிக்கை நிலவுகிறது. தீர்த்தாண்டதானம் அயல் நாட்டு வாணிகத்தலமாக கி.பி.1269-ஆம் ஆணடுக்காலத்தில் விளங்கியது.

**உப்பூர்:** இராமநாதபுரத்திலிருந்து 30 கி.மீ. தொலைவில் உள்ள உப்பூரில் வெயிலுகந்த விநாயகர் கோவில் உளளது. இராமபிரான் இலங்கை நோக்கிச் செல்லும் போது இராவணனை வெல்ல இங்குள்ளவிநாயகரை வணங்கியதாகக் கூறப்படுகிறது. முற் காலத்தில் இவ்வூர் 'இலவனபுரம்' எனறு அழைக்கபபட்டு வந்துளளது. 'இலவனம்' என்றால் உப்பு என்றும் 'புரம்' என்றால் ஊர் என்றும் பொருள் படும். பின்னர் உப்பூர் என்று அழைக்கப்படலாயிறறு.

இராமநாதபுரம் மாவட்டத்தின் வடகோடி எல்லையில் உள்ளது, ஓரியூர் என்னும் கிராமம். இதனைத்திட்டை என்றும் அழைப்பா. இங்குப்புனித அருளானந்தர் தேவாலயம் உள்ளது. சேதுபதியின் அரசவையில் இருந்த தடியத்தேவர் தீராத நோயினால் அவதிப்பட்டார் என்றும், புனித அருளானநதரின் மகிமையால் குணம் அடைந்தார் எனறும் கூறப்படுகிறது.

இராமநாதபுரத்திலிருந்து 30 கி.மீ. தொலைவில் உள்ள நயினார் கோவில் நாகலிங்கப்பெருமாள திருக்கோவில் உளளது. முகமதியர் ஆதிக்கக் காலத்தில் முல்லாசாகிபு என்பவர் தம் ஒரே மகளான ஊமைப் பெணணோடு இத்தலத்திற்கு வருகை தந்தார் என்றும், அப்பொழுது நாகலிங்கப் பெருமானின் அருளால் அந்தப் பெண் முதன்முதலாக வாய் திறந்து 'அல்லா நயினார் ஆணடவர்' எனறு பேசினார் என்றும் அதுகணடு மனம் மகிழ்ந்த முல்லாசாகிப் 'தீரேநயினார்' 'நிசம் தெரிநதேன்' என்று புகழ்ந்து கூறினார் என்றும் கூறப்படுகிறது. இதன் காரணமாக நாகநாதர் கோவில் நயினார் கோவில் என்று வழங்கப்படலாயிறறு, என்னும் கருத்து நிலவுகிறது.

இம்மாவட்டத்தில காஞ்சிரஙகுளம் என்னும் இடத்தில் பறவைகள் சரணாலயம் உளளது. இது இராமநாதபுரத்திலிருந்து 35 கி.மீ. தொலைவிலும் முதுகுளத்தூரிலிருந்து 4 கி.மீ. தொலைவிலும் அமைந்

துள்ளது. இங்கு ஆண்டுதோறும் ஜூன் மாதம் முதல் பிப்ரவரி மாதம் வரை மழைக் காலங்களில் பலவகையான பறவைகள் அதிக அளவில் வருகின்றன. அவற்றில் சில கூடிகடா, நாரை, செங்கால் நாரை, வெள்ளை மடையான், தாரா, சிறகி முதலியன. வேட்டக்குடி என்ற ஊரிலும் பறவைகள் வருகின்றன. இம்மாவட்டத்தில் உள்ள மண்டபத்தில் கடல்வாழ் உயிரினங்கள் பற்றிய காட்சியகம் உள்ளது.

இராமேசுவரமும் பாம்பன், மண்டபம் பகுதிகளும் முன்பு பாறைகளால் இணைக்கப்பட்டிருந்தன. புயலின் காரணமாக இவை பிரிக்கப்பட்டது. பாம்பன் பகுதியில் முத்துக்குளிக்கும் தொழில் சேதுபதிகளின் காலத்தில் நடைபெற்றது. இம்மாவட்டத்திலுள்ள பரமக்குடியில் நெசவுத் தொழில் சிறந்து விளங்குகிறது.

**வரலாறு:** இம்மாவட்டம் நீண்டதொரு வரலாற்றைக் கொண்டு விளங்குகிறது. முற்காலப் பாண்டியர்களுக்குப் பின்பாண்டிய நாட்டின் பகுதியாக விளங்கிச் சோழர்கள் பாண்டியர்களின் ஆட்சிக்குட்பட்டு விளங்கிய இம்மாவட்டம் நாயக்கர் ஆட்சிக்குட்பட்டும், ஆர்க்காட்டு நவாபுகளின் ஆட்சிக்குட்பட்டும், பின்னர் ஆங்கிலேயர் ஆட்சிக்குட்பட்டும் இருந்தது. இப்பகுதி சேதுபதிகளின் தன்னாட்சி பெற்ற பகுதியாக விளங்கின. அவர்கள் ஆங்கிலேயருக்குக் கப்பம் செலுத்தி வந்தனர். அவர்களுள் குறிப்பிடத்தக்கவர்கள் இரகுநாத சேதுபதி, கிழவன் சேதுபதி, விசயஇரகுநாத சேதுபதி போன்றோர் ஆவர். நாட்டு விடுதலைக்காக இம்மாவட்டத்தில் பலர் பெரிதும் பாடுபட்டனர். நாடு விடுதலை அடைந்தபின் மிகப் பெரிய மாவட்டமாக விளங்கிய இராமநாதபுரம் மாவட்டம் நிருவாக வசதிக்காக மூன்று மாவட்டங்களாப் பிரிக்கப்பட்டுத் தனித்த மாவட்டங்களாக இயங்கிவருகின்றன.

**கன்னியாகுமரி மாவட்டம்**, தமிழகத்தின் தென் கோடியில் உள்ள மாவட்டம். குமரியம்மனின் பெயரால் இம்மாவட்டம் கன்னியாகுமரி எனக் கூறப்படுகிறது.

**எல்லைகள்:** இம்மாட்டத்தின் எல்லைகளாகக் கிழக்கில் வங்காளவிரிகுடாவும், மேற்கில் அரபிக்கடலும், கேரளமும், தெற்கில் இந்தியப் பெருங்கடலும், வடக்கிலும் தென்கிழக்கிலும் திருநெல்வேலி, சிதம்பரனார் மாவட்டங்களும் அமைந்துள்ளன. இம்மாவட்டத்தின் பரப்பளவு 1,684 சதுர கி.மீ. ஆகும். இம்மாவட்டத்தில் விளவங்கோடு, கல்குளம், தோவாளை, அகத்தீசுவரம் ஆகிய வட்டங்கள் உள்ளன. இம்மாவட்டத்தின் தலைநகரம் நாகர்கோவில் ஆகும்.




கன்னியாகுமரி மாவட்டம்

**இயற்கையமைப்பு:** கன்னியாகுமரி மாவட்டம் மூன்று பக்கங்களில் கடற்கரையினைக் கொண்டுள்ளது. கடற்கரைப் பகுதிகளில் மணற்பாங்கான நிலப்பகுதியைக் கொண்டுள்ள இம்மாவட்டம் கடினமான மணற்பாறைகளையும் கொண்டுள்ளது. கடற்கரையின் நீளத்தில் 68 கி.மீ. வேளாண்மைக்கு ஏற்ற மண்வளத்தையும் இம்மாவட்டம் கொண்டுள்ளது. பரப்பளவில் சிறிதாகவிளங்கினும் இம்மாவட்டத்தில் காடுகள் மிகுதியாக உள்ளன. காடுகளின் மொத்தப் பரப்பளவு 449 சதுர கி.மீ. ஆகும். மேற்குத் தொடர்ச்சி மலையின்அடிவாரத்தில் உள்ள இம்மாவட்டத்தின் வடக்கிலும்கிழக்கிலும் சில மலைகள் உள்ளன. இம்மாவட்டத்தில் கல்குளம் வட்டத்தில் தான் மலைகள் பெருமளவில் உள்ளன. கன்னியாகுமரி மாவட்டத்தில் சிற்றாறுகளே காணப்படுகின்றன. பரளையாறு என்னும் ஆறு தோவாளை வட்டத்தில் மகேந்திர கிரி மலைக்கு வடக்கில் உற்பத்தியாகிறது. திருவட்டாறு என்னுமிடத்தில் கோதையாறு இதனுடன் கலந்து தாம்பிரபரணி என்னும் பெயருடன் கல்குளம் விளவங்கோடு வட்டங்கள் வழியாகச்சென்று தேங்காய்ப்பட்டினம் என்னும் இடத்தில் கடலுடன் கலக்கிறது. இம்மாவட்டத்தில் பேச்சிப்பாறை, பெருஞ்சாணி, முக்கூடல் போன்ற ஏரிகள் உள்ளன. இம்மாவட்டத்தின் பருவநிலை மிதமானது ஆகும். இங்குக் கோடைக்காலம் மார்ச்சு முதல் ஜூன் முடிய உள்ளது. அக்டோபர் முதல் மார்ச்சு முடிய மழைக் காலம் உள்ளது. இம்மாவட்டம் வடகிழக்குப் பருவக்

காற்றாலும் தென மேற்குப் பருவக்காற்றாலும் மழையைப் பெறுகின்றது. நீலகிரி மாவட்டத்திற்கு அடுத்து அதிக அளவு மழை இம்மாவட்டத்தில் பொழிகின்றது. கோடைக்காலத்தில் வெப்பம் குறைநத மாவட்டமாக இது திகழ்கிறது. ஆணடிற்கு 10 மாதங்கள் இம்மாவட்டத்தில் மழை பெய்யும்.

**வேளாண்மை:** வேளாண்மையில் சிறந்து விளங் கும் இம்மாவட்டத்தில் நெல் சோளம், உளுந்து, மரவளளிக் கிழங்கு, மா, பலா, வாழை, முந்திரி, இரப்பர், தென்னை, பனை, தேயிலை, காபி, மிளகு, பாக்கு, புகையிலை, கரும்பு, பருத்தி போன்றவை பயிரிடப்படுகின்றன. நெல் உற்பத்தியில் இம்மாவட் டத்திலுள்ள நாஞ்சில் பகுதி சிறந்து விளங்குகிறது. பொட்டல் பலா, சூரங்குடி மா இவை பழவகை களில் புகழ் பெறறவை. காய்கறிகளும் இம்மாவட் டத்தில் பயிரிடப்படுகின்றன. இம்மாவட்டம் இரப்பர் மரங்களுக்கு ஏற்ற மண்வளத்தைப் பெறறுளளது. பால்குளம், மகேந்திரகிரி, அசம்புமலை காரிமணி, பாலமூர், வேளிமலை, முககம்பாலா, குதிரைக்குடி, நியூகம்பாடி, வைகுணடம், தேவகிரி, மாரிதி ஆகிய இடங்களில் இரப்பர்த தோட்டங்கள உள ளன. கடற்கரைப் பகுதிகளில் தேய்காய் பயிரிடப்படு கின்றது. தோவாளை கலகுளம், வட்டஙகளில் தேயிலைப் பயிராகிறது. விளவங்கோட்டுப் பகுதி மிள கிற்குப் புகழ் பெற்றது. கால்நடைகளும தற்காலத்தில பெருகியுள்ளன. இம்மாவட்டத்தின்காடுகளில விலங்கு கள் பல காணப்படுகின்றன. வேளாண்மைக்கு ஏற்ற பாசனத் திட்டஙகள செயற்பட்டு வருகின்றன. பாணடியன் அணை, பெருஞ்சாணி அணை, கோதை யாறு அணை போன்ற அணைகள இம்மாவட்டத்தில உள்ளன.

**கனிப்பொருள்கள்:** மாவட்டத்தின் கடற்கரைப் பகுதி மணலில் உலோகக் கலப்புளள மணல் காணப் படுகினறது. 'இல்மனைட்' என்னும் கனிப்பொருளும் கரும் பொனமம (Titanium), மணல், சுண்ணாம்பு போன்றபொருள்களும்இம்மாவட்டத்தில் கிடைக்கின றன.

**தொழில்கள்:** வேளாண்மையே முதன்மைத் தொழிலாக உளள இம் மாவட்டம் தோட்டத் தொழில்களையும் கடல சார்ந்த தொழிலகளையும் கொணடுவிளங்குகிறது. மீனபிடித்தல், உப்பு உற்பத்தி, இரப்பர்த்தொழில், கயிறு திரித்தல, பனைத்தொழில் எண்ணெய் ஆட்டுதல் போனற தொழில்களசிறநது விளங்குகின்றன. இரப்பர் உறபத்தியில் இம் மாவட்டம் முதன்மை பெற்று விளங்குகிறது. குளச்சல், தேங காய்ப்பட்டினம், மணக்குடி, கோவளம், இலீபுரம், மார்த்தாணடம் போனற சிறிய துறைமுகஙகள இம்மாவட்டத்தில் உள்ளன. இத்துறைமுகஙகளி லிருந்து படகுகளில் சரக்குகள் தூத்துக்குடிக்கு அனுப் பப்பட்டு வெளிநாடுகளுக்கு ஏற்றுமதி செய்யப்படு கின்றன.

**மக்கள்:** மக்கள் தொகை பெருகிவரும் இம் மாவட்டத்தில் பல வகைசசமூக மக்களும் வாழ்கின் றனர். இவர்களுள் நாஞ்சில் நாட்டு வேளாளர், யாதவர், நம்பியார், நாடார், பரதவர் ஆகியோர் குறிப்பிடத்தக்கவர்கள. கேரளத்தைச் சார்ந்த மலை யாளிகளும் மலையாள மக்களும் இம்மாவட்டத்தில் வசிக்கின்றனர். மலையினமக்கள கனியல், பெருஞ் சாணி, பேச்சிப்பாறை, வெளளாம்பி, கூவைக்கல், ஐந்துகாணி ஆகிய பகுதிகளில் வாழ்கினறனர். நாடார் கள் இந்துக்களாகவும் கிறித்தவர்களாகவும் உளள னர். மீனபிடிக்கும் தொழில் செய்யும் பரதவர் களிலும் கிறித்தவ சமயத்தைச் சார்ந்துள்ள பரத வர்கள் வாழ்கின்றனர். தாழ்த்தப்பட்ட இனமக்க ளும் இஙகுள்ளனர். இம்மாவட்டத்தின் மக்கள தொகை 1,423,399. (1981).

**போக்குவரத்து:** அரசுப் பேருந்துகளும் தனியார் பேருந்துகளும் இம் மாவட்டத்தில் சாலைப் போக்கு வரத்தைக் கவனித்து வருகின்றன. நாகர் கோயிலில் இருந்து தமிழகத்தின் பலவேறு பகுதிகளுக்கும் பேருந்து வசதி உளளது. தமிழ்நாடு அரசுபேருந்துத் தொழிற்கூடம் ஒன்று நாகர்கோயிலுக்கு அருகே உள்ளது கேரள அரசாஙகமும் பேருநதுகளை இம் மாவட்டத்தில செயற்படுத்தியுள்ளது. நேசமணிப் போக்குவரத்துக கழகம் இம்மாவட்டததின் அரசு நிறுவனமாகும. இம்மாவட்டத்தில இரணடு தேசிய நெடுஞ்சாலைகள் உள்ளன. கன்னியாகுமரி-திருவனந்த புரம் இருப்புப்பாதையும் கன்னியாகுமரி திருநெல வேலி சந்திப்பு இருப்புப்பாதையும் இம்மாவட்டத் தில் உள்ளன. நாகர்கோயில் சந்திப்பு மையமாகும். இம்மாவட்டத்தில் விமான வழித்தடம் இல்லை. எனினும் திருவனந்தபுரம் விமான தளம் இம்மாவ்ட் டத்தின் அருகில் உளளது. படகுப் போக்குவரத்து கன்னியாகுமரியில் நடைபெறுகினறன.

**நகரங்கள்:** இம்மாவட்டத்தின் தலைநகரமான நாகர்கோயில், திருநெல்வேலியிலிருந்து 80 கி.மீ. தொலைவிலும் கன்னியாகுமரியிலிருந்து 20 கி.மீ. தொலைவிலும் அமைந்துள்ளது. இந்நகரம் கோட் டாறு என்று முனபு கூறப்பட்டது. கிறித்தவத் தேவாலயங்களையும் கல்விக் கூடங்களையும் இந் நகரம் பெற்றுள்ளது. இது ஒரு வணிக நகரமாகவும் அரச அலுவலகங்கள் நிறைந்த நகரமாகவும் உள்ளது. கன்னியாகுமரி ஒரு சுற்றுலாத் தலமாகும். இங்கு ஆதவன் தோன்றுவதையும் மறைவதையும் காணச்

சுற்றுலாப் பயணிகள் பெருமளவில் வருகினறனர். கன்னியாகுமரிக்கு அருகில உள்ள பாறைக்கு கி பி 1892-ஆம் ஆண்டு விவேகானந்தர் வருகை புரிந்தார். காந்தியடிகள் நினைவாகக் கடலோரத்தில் காநதி மண்டபம் ஒன்று உள்ளது. விவேகானநதர் பாறை நினைவுச் சின்னமும், கன்னியாகுமரிக் கோயிலும் குமரி முனையில் உள்ளன. இந்நகரங்களைத் தவிர அகத்தீசு வரம், அழகிய பாணடிபுரம், ஆரல்வாய்மொழி, இடலாககுடி, சூளூர், குளச்சல், குழித்துறை, கொலலங கோடு, கோட்டாறு, தக்கலை, தோவாளை, தேங் காய்ப்பட்டினம், புத்தேரி, பூதப்பாணடி, மார்த் தாணடம், முட்டம், மருங்கூர், சுசீந்திரம் போன்ற ஊர்களும் இம்மாவட்டத்தில் உள்ளன.

**கல்வி:** கனனியாகுமரி மாவடடம் கல்வி வளர்சசி யில் பெரிதும் முனனேற்றம் கண்ட மாவட்டமாகும. கல்வியறிவில் இம்மாவட்டம் தமிழகத்தில் முதலிடம் பெற்ற மாவட்டமாக விளஙகுகிறது. இம்மாவட்டத் தில் பல உயர்நிலை மேல்நிலைக் கலவிக்கூடஙகளும் கல்லூரிகளும் உளளன. நாகர்கோவிலில கிறித்தவக் கல்லூரி ஒன்று முதன் முதலில் தொடஙகப்பட்டது. இந்நகரத்தில் மேலும் பல கல்லூரிகள உள்ளன. மாவட்டத்தின் முக்கிய நகரங்களில் கல்லூரிகள பல உள்ளன. ஆசிரியர் பயிற்சிக் கூடங்களும் தொழிற் கல்வி நிறுவனங்களும் இம்மாவட்டத்தில் உள்ளன.

**வரலாறு:** இந்தியாவின் தென எல்லையாக விளங் கும் இம்மாவட்டம் பண்டைத் தமிழகத்தின தென் எல்லையாக விளங்கி வந்துள்ளது. சங்க நூல்களில் இப்பகுதியின் சிறப்புக் கூறப்பட்டுள்ளது. முற்காலப் பாண்டியர்கள் இப்பகுதியை ஆண்டு வந்தனர். பாண டியர் ஆட்சிக்குப்பின் இப்பகுதி மூன்றாகப் பிரிந்தது. கன்னியாகுமரியும் அதன் சுற்றுப்புறமும சேர்ந்த பகுதி புறத்தாய நாடு எனவும், அகத்தீசுவரம் தோவாளைப்பகுதிகள் நாஞ்சில் நாடு எனவும், கல் குளம் விளவங்கோடு பகுதி வேணாடு எனவும் பெயர் பெற்றன. வேணாட்டின் தலைநகர் பத்மனாபபுரம் ஆகும். பின்னர் இது திருவனந்தபுரமானது. மார்த் தாண்டவர்மன் எனபவர் கி.பி. 1729-இல் வேணாட் டில் அரசராகி அவர்தம் மரபினர் இருநூறு ஆண்டு கள இப்பகுதியில் ஆட்சி செலுத்தினர். திருவிதாங் கூர்ச் சீமையின்கீழ் இப்பகுதி பல வளங்களைப் பெற்றது. கன்னியாகுமரியும், நாஞ்சில்நாடும் பல வேறு வளங்களைப பெற்றிருந்தமையால் இவை அடிக்கடி பாண்டியர், பிற்காலச் சோழர், நாயககர், திப்புசுல்தான் போன்றோரின் படையெடுப்புகளுக்கு உள்ளாகின. திருவிதாங்கூர் அரசர் ஆட்சியின்கீழ் விளங்கிய இம்மாவட்டம் இந்தியா சுதந்திரம் அடைந்தபின்னும் திருவிதாங்கூர் சமசுதானமாகத் தனித்தே நின்றது. இருப்பினும் அவ்வாண்டே இந் திய ஒனறியத்துடன் இது இணைக்கப்பட்டது. ஐக் கியப் பகுதியின் உறுப்புப் பகுதியாகவிளங்கிய இது திருவிதாங்கூர் அரசருக்கு அரசப் பிரமுகர் பதவி அளித்தது. தமிழ் பேசும் மக்களும் மலையாளம் பேசும் மக்களும் இப்பகுதியில இருந்தனர். மொழி வழி மாநிலம் உருவாக்கம் பெறுவதறகு முன்பே திருவிதாங்கூர்த் தமிழரியககம் 1945-இலிருந்து 1955-ஆம் ஆணடு வரை தொடர்ந்து போராட்டங களை நடத்தியது. அதன விளைவாக நாஞ்சில நாடும் அதனுடன் இணைநத பிற தமிழ்ப் பகுதிகளும் கன் னியாகுமரி மாவட்டம் என்னும் பெயரில் 1956-ஆம் ஆண்டு தமிழ்நாட்டோடு இணைக்கப்பட்டன.

**காமராசர் மாவட்டம**, பெருந்தலைவா 'பாரத ரத்னா' காமராசர் பிறநத ஊரான விருதுநகரைத தலைமையகமாகக் கொணடு, அவரது பெயரால இயஙகிவரும் மாவட்டம். இராமநாதபுரம மாவட் டத்திலிருந்து பிரிததுப்புதியதாக இது தோற்றுவிக்கப் பட்டது.

**எலலைகள:** இம்மாவட்டத்தின் எலலைகளாக வடககில் மதுரை மாவட்டமும் கிழககில் பசும்பொன முத்துராமலிஙகம் இராமநாதபுரம் மாவட்டஙகளும தெறகில் திருநெல்வேலி மாவட்டமும் மேற்கில் கேரள மாநிலமும் அமைந்துளளன. மாவட்டத்தின் பரப்பளவு 4,222 சதுர கி.மீ. இம்மாவட்டத்தின தலைநகரமாக விருதுநகர் செயறபட்டு வருகினறது காமராசர் மாவட்டம் ஆறு வட்டங்களாகப் பிரிககப பட்டுள்ளது. அவை அருபபுக் கோட்டை, திருசசுழி, விருதுநகர், சாத்தூர், சிரீவில்லிபுத்தூா, இராச பாளையம் ஆகியன ஆகும்.

**நிலமும் தட்ப வெப்பமும்:** கரும்பும் நெல்லும் வளருவதற்கான மணவளத்தையும் பருத்தி வளர் வதற்கான கரிசல நிலப்பகுதியையும், மற்றும் சுண் ணாம்பு நிலப்பகுதியினையும் இம்மாவடடம பெற் றுள்ளது. மேற்குத் தொடர்சசி மலை இமமாவட் டத்தில் பரவிக கிடக்கினறது. வறட்சி மிகுநதுள்ள இம்மாவட்டத்தில் பல காட்டாறுகள ஓடுகின்றன. இம்மாவட்டத்தில வைப்பாறு, அருசசுனாநதி, கௌசிக ஆறு, குண்டாறு, கிருதமால் ஆறு ஆகிய ஆறுகள் ஓடுகின்றன. இவ்வாறுகள மழைககாலத்தில் தான் நீரினைப் பெறும. இம்மாவட்டத்தில ஆணடிற் குச் சராசரி 987 மி.மீ. மழை பெய்கின்றது.

**வேளாண்மை:** மழையை நம்பி வேளாணமைத் தொழில் நடைபெறும் மாவட்டஙகளுள இதுவும் ஒன்று. இம்மாவட்டத்தில் சிற்றூர்களின் குறுக்கே 83 சிறு அணைகள கட்டபபட்டுள்ளன. இம்மாவட் டத்தில 2,11,428 எக்டேர் நிலப்பரப்பில வேளாண்




காமராசர் மாவட்டம்

மைத் தொழில் நடைபெற்று வருகின்றது. நெல், கரும்பு, பருத்தி, எண்ணெய்வித்துகள், கம்பு, சோளம், சூரியகாந்தி, மிளகாய் போன்றவை இம்மாவட்டத்தில் பயிரிடப்படும் பயிர்களாகும். ஆற்றுப் பாசனத்தைத் தவிர்த்துக் கிணற்றுப் பாசனம் இம்மாவட்டத்தில் காணப்படுகின்றது. பல நீர்ப்பாசனத் திட்டங்கள் மூலமும் வேளாண்மை சிறக்க வழிவகை செய்யப் பட்டுள்ளது. மேற்குத் தொடர்ச்சிமலை பரவியுள்ள சிரீவில்லிபுத்தூர்ப் பகுதியில் பழப் பண்ணைகள் உள்ளன. இப்பண்ணைகளில் மா, கொய்யா கன்று கள் பயிர் செய்யப்பட்டுள்ளன. கால்நடைகள் மூலம் பால்வளமும் இம்மாவட்டத்தில் பெருகியுள்ளது.

சிமிண்டுத் தொழில் வளர்ச்சிக்குத் தேவையான சுண்ணாம்புக்கல் இம்மாவட்டத்தில் பெருமளவில் கிடைக்கின்றது.

**தொழில்கள்:** வேளாண்மைக்கு அடுத்த நிலையில் இம்மாவட்டத்தில் பல சிறு தொழில்கள் சிறப்புற அமைந்துள்ளன. இம்மாவட்டத்தில் சாத்தூர் வட்டத்தில் உள்ள சிவகாசி, வெப்பக்கோட்டை ஊர்களில் 2500-க்கும் மேற்பட்ட தீப்பெட்டி, பட்டாசுத் தொழிற்சாலைகளும், வண்ண அச்சுத் தொழிற் சாலைகளும், மைநிரப்பி முள் (Pen Nib) தயா ரிப்பு நிறுவனங்களும் உள்ளன. உலகச் சந்தை யில் சிவகாசி பட்டாசுகள் முதலிடம் பெறுகின்றன. ஆசியாவிலேயே தீப்பெட்டி உற்பத்தியில் சிவகாசி முன்னணி வகிக்கிறது. இவ்வூரில் மட்டும் ஏறக்குறைய 225 தீப்பெட்டித் தொழிற்சாலைகள் உள்ளன. இங்கு இரண்டு இலட்சத்திற்கும் மேற்பட்ட தொழிலா ளர்கள் வேலை செய்கின்றனர். இவ்வூரில் 175-க்கும் மேற்பட்ட பட்டாசுத் தொழிற்சாலைகள் உள்ளன. இப்பட்டாசுகள் வெளிநாடுகளுக்கும் ஏற்றுமதி ஆகின்றன. இவ்வூரில் 200-க்கும் மேற்பட்ட வண்ண அச்சுக் கூடங்கள் உள்ளன. இம்மாவட்டத்தில் உள்ள இராசபாளையத்தில் நூற்பு ஆலைகள் பல உளளன. பருத்தி அறைவை ஆலைகள், பஞ்சு ஆலைகள், பல உள்ளன. இரசாயனப் பொருள் உற்பத்திக் கூடமும் இவ்வூரில் உள்ளன. இம்மாவட்டத்தில் நெசவுத் தொழில் பரவலாக காணப்படுகின்றது. கைத்தறிநெசவு தொழிற்சாலைகள் பல அருப்புக்கோட்டையில் உள் ளன. மாவட்டத்தின் தலைநகரமான விருதுநகர் ஒரு வாணிக நகரமாகும். இங்கு எண்ணெய் ஆலை கள் பல உள்ளன. இம்மாவட்டத்தில் ஆலங் குளம் என்ற இடத்தில் அரசு சார்பில் சிமிண்டுத் தொழிற்சாலை ஒன்று உள்ளது. சிரீவில்லிபுத்தூர் அருகில் இரும்புப் பொருள்கள் தயாரிக்கும் தொழிற் சாலை ஒன்று உள்ளது. இம்மாவட்டத்தில் பட்டுநூல் உற்பத்தி சிறப்புற நடைபெறுகின்றது. பட்டு நூல் உற்பத்திச் சாலை ஒன்று சிரீவில்லிபுத்தூர் வட்டத் தில் உள்ளது.

**மக்கள்:** இம்மாவட்டத்தின் மக்கள்தொகை 1,340,907(1981).ஆண்கள் 669,772;பெண்கள் 671,135. இம்மாவட்டத்தில் இந்து சமயத்தைச் சார்ந்த பல இன மக்களும், கிறித்தவர்களும், இசுலாமியர்களும் வாழ்கின்றனர். ஆதிதிராவிடர்களும் பனியர்கள் என்ற இனத்தவரும் இம்மாவட்டத்தில் உள்ளனர். இம்மாவட்டம் பல்வேறு அரசியல் தலைவர்களையும் புகழ்பெற்றவர்களையும் ஈன்றுள்ளது. இம்மாவட் டத்திலுள்ள விருதுநகரில் தான் காமராசர் பிறந்தார். இம்மாவட்டத்தில் பெரியாழ்வார், ஆண்டாள், இரமணமகரிசி ஆகிய சமயப் பெரியோர்கள் தோன்றி னர். தமிழகத்தின் முன்னாள் முதல்வரான திரு குமாரசாமி இராசா இம்மாவட்டத்தில் தான் பிறந் தார்.

**போக்குவரத்து:** இம்மாவட்டத்தின் முக்கிய நகரங் களுக்கும் சிற்றூர்களுக்கும் சாலை வசதிகள் உள்ளன. தொடர்வண்டி இருப்புப்பாதைகள் மூலம் முக்கிய நகரங்கள் இணைக்கப்பட்டுள்ளன. அரசுப்பேருந்து களும் தனியார் பேருந்துகளும் சாலைப் போக்கு வரத்தை விரைவுபடுத்தி வருகின்றன. மாவட்டத்தின் தலைநகரமான விருதுநகரிலிருந்து பல்வேறு நகரங் களுக்குப் பேருந்து வசதிகள் உள்ளன.

**நகரங்கள்:** மாவட்டத்தின் தலைநகரமான் விருதுநகர் முக்கிய வாணிக நகரமாகும். இங்கு எண்

ணெய் உற்பத்தி ஆலைகள் பல உள்ளன. இந்நகரில் காமராசர் பிறந்த வீடு நினைவாலயமாக அமைக்கப் பட்டுள்ளது. இம்மாவட்டத்தில் பல தொழிற்சாலை நகரங்களும் முக்கிய நகரங்களாக உள்ளன. சிவகாசி, சாத்தூர், அருப்புக்கோட்டை, இராசபாளையம், சிரீவில்லிபுத்தூர் போன்ற நகரங்கள் அவற்றுள் குறிப்பிடத்தக்கவை. இம்மாவட்டத்தில் பரவியுள்ள மேற்குத் தொடர்ச்சி மலையின் அடிப்பகுதியில் உள்ள பிளவக்கல் அணை ஒரு சுற்றுலாத் தலமாகும். இங்கு நாள்தோறும் சுற்றுலாப் பயணிகள் வருகைபுரிகின்ற னர். இங்கு நீச்சல்குளம், விலங்குகள சரணாலயம், ஓய்வு விடுதி, மீன்காட்சியகம் போன்றவை உள்ளன. விருதுநகரிலிருந்து இவ்வூர் 58 கி மீ. தொலைவில் உள்ளது. இம்மாவட்டத்தில் சிரீ ஆண்டாள பிறந்த ஊரான சிரீவில்லிபுத்தூர் புகழபெற்ற கோயில் உள்ள ஊராகும். இவ்வூரில் உள்ள கோபுரமே தமிழக அரசின் சின்னமாக விளங்கி வருகின்றது. தமிழகத் தின் மிக உயர்ந்த கோபுரங்களுள் இது ஒன்றாகும். இங்கு ஒவ்வொரு ஆண்டும் நடைபெறும் தேர்த் திரு விழா புகழ்பெற்றது. அருள்மிகு சீனிவாசப் பெருமாள திருத்தலம் இம்மாவட்டத்தின் புகழ்பெற்ற திருத்தல மாக விளங்குகின்றது.

**கல்வி:** இம்மாவட்டத்தில் ஏழு கல்விச் சரகங்கள் செயற்பட்டு வருகின்றன. தொடக்கப்பள்ளிகளையும். நடுநிலைப் பள்ளிகளையும்உயர் நிலைப்பள்ளிகளையும் இக்கல்விச் சரகங்கள் கவனித்து வருகின்றன. இதன் மேற்பார்வையில் 32 மேல்நிலைப் பள்ளிகள் இம்மா வட்டத்தில் உள்ளன. ஆசிரியர் பயிற்சி நிறுவனங்களும் இம்மாவட்டத்தில் இயங்கி வருகின்றன. இங்கு முக்கிய நகரங்களில் கல்லூரிகள் உள்ளன. ஆண்கள் கல்லூரிகள் ஆறும், பெண்கள் கல்லூரி இரணடும செயற்பட்டு வருகின்றன. இங்குத் தொழில்நுட்பக் கல்லூரி இரண் டும் தொழில்நுட்பப்பள்ளி ஒனறும் இயங்கி வரு கின்றன.

**வரலாறு:** இராமநாதபுர மாவட்டத்துடன் இணைந்து அதன் வரலாற்றையே கொண்டிருந்த இம்மாவட்டம் சமயப் பெரியார்களையும் அரசியல் பெருந் தலைவர்களையும் பெற்றுத்தந்த மாவட்ட மாகும். நிருவாக வசதிக்காகவும் பெருந்தலைவரும், முன்னாள் தமிழக முதலமைச்சருமான காமரா சரின் நினைவாக அவரது பெயரால் தமிழக அரசு புதியதாக இதைத் தோற்றுவித்தது. இம்மாவடத்தில் பல்வேறு ஆக்கபபணிகள் வளர்சசியுற்று வருகின்றன.

**கோயம்புத்தூர் மாவட்டம்:** தமிழ் நாட்டின் தொழில் வளர்ச்சியடைந்த மாவட்டங்களுள் ஒன்று கோயம்புத்தூர் மாவட்டம். முன்பு, இன்றைய பெரி யார் மாவட்டத்தையும் இது உளளடககி இருந்தது. நிருவாக வசதிக்காக இம் மாவட்டத்தின் கிழக்குப் பகுதி பெரியார் மாவட்டமாக உருவாக்கப்பட்டது மேற்குப் பகுதி கோயம்புத்தூர் மாவட்டம் என்னும் பெயராலேயே வழங்கி வருகின்றது.

**எல்லைகள்:** நிலப்பகுதிகளையே இம் மாவட்டம் நான்கு பக்கங்களிலும் எல்லைகளாகக் கொண்டு விளங்கி வருகின்றது. இம்மாவட்டத்தின் வடக்கில நீலகிரி பெரியார் மாவட்டங்களும், கிழக்கில பெரி யார் திருச்சிராப்பள்ளி அண்ணா மாவட்டங்களும் மேற்கில் கேரளமும், எல்லைகளாக விளங்குகின்றன. இம்மாவட்டம் கோயம்புத்தூர், பொள்ளாசசி, உடு மலைப் பேட்டை, பல்லடம் அவினாசி ஆகிய வட்டங் களைக் கொண்டு விளங்குகிறது மாவட்டத்தின தலைநகரம் கோயம்புத்தூர் ஆகும். இது தமிழ் நாட்டின் மூன்றாவது மாநகராட்சியாக விளங்கி வருகின்றது. மாவட்டத்தின் பரப்பளவு 7,469.ச.கி.மீ



**நிலமும் தட்பவெப்பமும்:** கோயம்புத்தூர் மாவட் டத்தின் மேற்குப் பகுதி மேட்டுப்பாஙகான நிலத்தைக் கொண்டுள்ளது. கிழக்கே செல்லச் செல்ல நிலம் தாழ்ந்து காணப்படுகிறது. இம்மாவட்டத்தைச சுற்றி மலைத்தொடர்கள் உள்ளன. மேற்குத் தொடாசசி மலை இம்மாவட்டத்தில் பரவியுள்ளது. இது கேரளா விற்கு எல்லையாகவும் அமைந்துள்ளது. வெள்ளியங் கிரி, போலுவான்பட்டி ஆனைமலை போன்ற பகுதி களில் இம்மலைத்தொடர் செல்கிறது. பொள்ளாச்சி

வட்டத்தில் பாலக்காடு கணவாய் உள்ளது. இம்மா வட்டத்தில் நொய்யல், பவானி, குந்தாறு, மோயாறு, அமராவதி, ஆழியாறு, சோழியாறு, பரம்பிக்குளம், சாலக்குடி போன்ற ஆறுகள் ஓடுகின்றன. இம்மாவட்டம் பருத்தி விளைவதற்கேற்ற கரிசல் மணவளத்தைப் பெற்றுள்ளது. செம்மண், கறுப்புமண வளததையும் பெற்றுள்ளது. மாவட்டத்தின் பெரும்பகுதிகளில் காடுகளும் உள்ளன. காடுகளில் பலவகை மரஙகளும், விலஙகினஙகளும் உள்ளன. குறிப்பாக ஆனைமலைப் பகுதியில் யானைகள் மிகுதி சில இடஙகளில் புலிகளும் உளளன. சிறுத்தைப்புலி, காட்டு ஓநாய் போன்ற விலங்கினஙகளும் இம்மாவட்டத்தின் காட்டுப் பகுதியில உள்ளன. கோயம்புத்தூர் மாவட்டம் மிதமான வெப்பநிலையைக் கொணடு விளஙகும் மாவட்டமாகும். தென்மேற்குப் பருவக் காற்றாலும் வடகிழக்குப் பருவக்காற்றாலும் இம்மாவட்டம் மழையைப் பெறுகின்றது. சனவரி, பிப்ரவரி மாதஙகளில் மிகுந்த வெப்பமற்ற நல்ல தட்பவெப்பநிலையை இம்மாவட்டம் பெற்றுளளது.

**வேளாண்மை:** கோயம்புத்தூர் மாவட்டம் வணிகப்பயிர்களுக்குப் புகழ் பெற்றது. பருத்தி, எண்ணெய் வித்துகள, கருமபு, நறுமணப் பொருள்கள் புகையிலை, மஞ்சள் போன்றவை இம்மாவட்டததில் பயிரிடப்படுகின்றன. இவற்றுள் பருத்தி இமமாவட்டத்தில் பெருமளவு பயிரிடப்படுகிறது. இது இம்மா வட்டத்தில் பருத்தி ஆலைவளர்சசிக்குப்பெருமளவில உதவி புரிந்து வருகின்றது. உணவுப் பயிர்களான சோளம், கமபு தானிய வகைகளும் இம்மாட்டததில் பயிரிடப்படுகின்றது. இம்மாவட்டம் காலநடை வளர்ப்பிலும் சிறநத இடததை வகிக்கிறது. காஙகேயம் காளைகள் புகழ் பெற்றவை. உயர்ரக ஆவினங்களும் மாவட்டப் பொருளாதார வளர்சசிககுப் பெரிதும் உதவுகின்றன. ஆறுகளின் மூலமும், கிணறுகள், கால்வாய் மூலமும் நீாப்பாசன வசதி செய்யப் பட்டுள்ளது.

**கனிப்பொருள்கள்;** இம்மாவட்டத்தில சுண்ணாம்பு, பல்வகை கற்கள, காககாய்ப்பொன் (Mica), இரும்பு போன்றவை கிடைக்கும் கனிப் பொருள்களாகும்.

**தொழில்கள்:** தொழில் வளர்ச்சியில மிகச் சிறந்த இடத்தை இம்மாவட்டம் பெற்றுளளது. தெனனிநதியாவின் மான்செசுட்டர் என்று கோயம்புத்தூர் குறிபபிடப்படும் அளவிற்குப் பருத்தி ஆலைகள் இம் மாவட்டத்தில் நிறைந்துளளன. மதுக்கரையில் சிமிண்ட்டுத் தொழிற்சாலை ஒன்று உள்ளது. மேட்டுப் பாளையம், திருப்பூர், கோயம்புத்தூா போன்ற நகரஙகளில் ஆலைகள மிகுதி. இயந்திரப் பொருளகள், மின்சாரக் கருவிகள் உந்துவண்டிகள், கணணாடி உற்பத்தி, புகையிலைத் தொழிற்சாலைகள் போன்றவை இம்மாவட்டத்தில் சிறந்து விளங்குகின்றன. அமராவதியில் கரும்பு ஆலை உளளது. மரவிழைப்பட்டு (Rayon) என்னும் நூல் உற்பத்தித் தொழிற் சாலை தமிழநாட்டில் முதன்முதலில கோயம்புத்தூரில் நிறுவப்பட்டது. பல்வகைமணிக் கற்கள உற்பத்தியும் வீட்டிற்குத் தேவையான இயந்திரப் பொருள்கள் உற்பத்தியும் இம்மாவட்டத்தில் சிறந்து விளஙகிவரும் தொழில்களாகும். இவற றைத் தவிர பொத்தானகள் செய்யும தொழிற சாலை, முகம்வழிக்கப்பயன்படும் அலகுகள (Blade) செய்யும் தொழிற்சாலை போன்றவைகளும், கூடை முடைதல், படுக்கை விரிப்புகள் தயாரித்தல போன்ற தொழில்களும் இமமாட்டத்தில நடைபெறுகின்றன.

**மக்கள:** இம்மாவட்டததில் வேளாண்மைத் தொழில் செய்யும் வேளாளககவுண்டர் என்னும மரபினர் மிகுதியாக வாழ்கின்றனர். தெலுஙகு மொழி பேசும் கம்மா நாயுடு இனத்தவரும், வன்னியரும். ஒக்கலிகர், வேட்டுவ கவுணடர், குறும்பக்கவுணடர், இரெட்டியார், மலைவேளாளர், அந்தணர், கனனட மொழி பேசும் அந்தணர், கைக்கோளர், ஆச்சாரி, தாழ்த்தபபட்டோர் ஆகியோரும் வாழந்து வருகின் றனர். மக்கள் தொகை, 3,060,184. (1981).

**கல்வி;** இம்மாட்டம் கல்வி வளர்ச்சியில் சிறப்புப் பெற்ற ஒரு மாவட்டமாக உள்ளது. கோயம்புத்தூரில வேளாணமைப பல்கலைக் கழகமும், பாரதியார் பல கலைக் கழகமும் உள்ளன. பல கலலூரிகளும், பொறியியல் சட்டக்கல்லூரிகளும், தொழில் நுட்பக கல்லூரிகளும், மேல்நிலை உயர்நிலைப் பளளிகளும் உள்ளன. தொடககப் பாடசாலைகளும் உயர் நிலைப் பள்ளிக கூடங்களும் மாவட்டத்தின் பலவேறு ஊர்களிலும் செயறபடுகினறன. கோயமபுததூரில பல பெணகள கல்லூரிகள உள்ளன.

**போக்குவரத்து:** இம்மாவட்டம் போக்குவரத் திற்கு ஏறற நல்ல சாலைகளைப் பெற்றுளளது. தேசிய நெடுஞ்சாலைகளும், மாநிலச சாலைகளும், நகரச சாலைகளும் இமமாவட்டத்தில் சிறநத முறையில் பராமரிககப்பட்டுள்ளன. சாலைப் போக்கு வரத்தைச் சிறந்த முறையில் சேரனபோககு வரத்துக்கழகம் என்னும் அரசு நிறுவனம நடத்தி வருகின்றது. தனியார் பேருந்துகளும் மாவட்டததில் இயங்குகினறன. மாவட்டத் தலைநகரமான கோயம்புத்தூரில் இருந்து மாவட்டத்தின் நகரங் களுக்கும் சிற்றூர்கள பிற நகரங்களுக்கும் பேருந்துகள செல்கின்றன. இம்மாவட்டத்தில் சென்னைக்கு அடுத்த நிலையில் பல்வகை உந்து வண்டிகள் மிகுதியாகப் பயன்படுத்தப்பட்டு வருகின்றது. மாவட்டத்

தின் வழியாகக் கேரளாவிற்குச் செலலும் அகல இருப்புப்பாதை செல்கிறது. கோயம்புத்தூர், திருப்பூர், சூலூர் போன்றவை குறிப்பிடத்தக்க இருப்புப்பாதை நிலையங்களாகும்.இதுகோயம்புத்தூரிலிருநதுமேட்டுப் பாளையம் வழியாக நீலகிரி செல்லும். மற்றொரு அகல இருப்புப் பாதை இம்மாவட்டத்தில் செல் கிறது. மீட்டர் அளவு இருப்புப்பாதை பொள்ளாச்சி வழியாக திண்டுக்கல், மதுரை, பாலக்காடு ஆகிய பகுதிகளுக்குச் செல்கிறது. மாவட்டத்தின் தலைநகர மான கோயம்புத்தூரில் வான்வழி நிலையம் ஒன்றும் உள்ளது. இங்கிருந்து வானூர்திகள சென்னை, பெங்களூர், கொச்சி, திருவனந்தபுரம் போன்ற நகரங்களுக்குச் செல்கின்றன. கோயம்புத்தூரில் வானொலி நிலையம் ஒன்று இயங்கி வருகின்றது. பல செய்தித் தாள்களும் மாவட்டத்தில் பிரசுரிக்கப் படுகின்றன.

**நகரங்கள்:** மாவட்டத்தின் தலைநகரமான கோயமபுத்தூர் நகரம் தொழிற்சாலைகள மிகுந்த நகரமாகும். இது ஒரு வட்டத்தின் தலைநகரமாகவும் செயறபடுகிறது. இம்மாவட்டத்தில் உள்ள அவினாசி நகரம் வரலாற்றுச் சிறப்புமிகக நகரமாகும். இலக் கியங்களில் திருப்புகலியூர் என்று கூறப்படும் இந் நகரத்தில் உள்ள சிவன் கோயிலில் அவினாசீசுவரா என்ற பெயருடன் சிவன் விளங்குகிறார். இக்கோயி லின் சுவர்களில் பல கல்வெட்டுகள் உள்ளன. இந நகரம் தட்சிண காசி என்றும் கூறப்படுகிறது. இவ் வட்டத்தில் அன்னூர், காரமடை, மொண்டிப்பாளை யம், திருமுருகன் பூண்டி, சேவூர் போன்ற ஊர்கள் உள்ளன. இம்மாவட்டத்தில உள்ள மயிலேறிப் பாளையம் கோயம்புத்தூரில் இருந்து 18 கி.மீ. தொலைவில் உள்ளது. மருதமலை முருகன உறையும் தலமாகும். பேரூர் என்னும் நகரம் கோயம்புத்தூரின் அருகில் உள்ள நகரமாகும். இது மேல் சிதம்பரம் என்றும் கூறப்படும். இங்குள்ள கோயில் கொங்கு நாட்டின் ஏழு சிவத் தலங்களுள் ஒன்றாகும். சிங்க நல்லூர், துடியலூர், வெள்ளலூர், தாராபுரம், காங் கயம், மூத்தூர், பாடியூர், பாளையங்கோட்டை, பல் லடம், பொள்ளாச்சி, உடுமலைப்பேட்டை முதலியன மாவட்டத்தில் உளள குறிப்பிடத்தக்க ஊாகளாகும்.

**வரலாறு:** கொங்கு நாட்டின் ஒரு பகுதியாக விளங்கும் கோயம்புத்தூர் மாவட்டம் நீண்டதொரு வரலாற்றை உடையது. இம்மாவட்டத்திலதொன்மைக் கால வரலாற்றுச் சின்னஙகள் பல உள்ளன. பெருஙகற்காலச் சின்னங்கள் மிகுதியாக மாவட்டம் முழுவதும் பரவலாகக் காணப்படுகிறது. சங்ககாலத் தில் இப்பகுதி சேரர்களின் ஆட்சியின் கீழ் இயங்கி வந்தது. இராட்டிரகூடர் இப்பகுதியை கி.பி. 5-ஆம் நூற்றாண்டில் கைப்பற்றினர். அவர்களின் தலை நகரம் இன்றைய தாராபுரத்தில் அமைந்திருநதது. அவர்களுக்குப்பின் கஙகர்களும், சோழர்களும் பின் னர் மீண்டும் இராட்டிரகூடர்களும் இப்பகுதியை ஆண்டனர். இராசஇராசசோழன் காலத்தில் இப் பகுதி மீண்டும் சோழர்களின் ஆளுமைக்கு உட் பட்டுப் பாண்டியர், ஒய்சாளர், முகம்மதியர், விசய நகரப் பேரரசு ஆகியோர் ஆட்சிக்கும் இடமாகியது. இப்பகுதி கி.பி 16-ஆம் நூற்றாண்டில் மதுரை நாயக்கர்களின் கீழ் வந்தது அவர்களை அடுத்து ஐதர்அலி, திப்புசுல்தான் ஆளுமையில இபபகுதி விளஙகிப் பின்னா ஆஙகிலேயர்களிடம் நாடு விடு தலைபெறும் வரை இருநததுவந்தது. ஆஙகிலேயர்கள காலத்தில் இம்மாவட்டம உருவாககப்பட்டது கோயம்புததூா மாவட்டததிலிருந்து கி.பி 1801-ஆம் ஆண்டு சேலம் பிரிககப்பட்டது. விடுதலை பெற்றபின் பல்வேறு மாறறஙகளைப் பெறறு இறுதியாகத் தனித்ததொரு மாவட்டமாக இனறு விளஙகி வரு கிறது.

**சிதம்பரனார் மாவட்டம்:** இது தமிழநாட்டின் இரு பதாம் மாவட்டம் கப்பலோட்டிய தமிழர் வ.உ. சிதம்பரனார் நினைவாக இம்மாவட்டம் 1986-ஆம ஆண்டு தமிழக அரசால அமைக்கப்பட்டது. திருநெல் வேலி மாவட்டத்தைஇருபிரிவுகளாகப்பிரித்துநிருவாக வசதிக்காவும், வ உ.சியின நினைவாகவும் இம்மாவட் டம் அமைக்கப்பட்டது இம்மாவட்டத்தின் தலைநக ரம் தூத்துக்குடி.

**எல்லைகள்:** இம்மாவட்டத்தின் வடக்கே இராம நாதபுரம், காமராசர் மாவட்டங்களும் தெறகே கன்னியாகுமரி மாவட்டமும் மேற்கே திருநெல்வேலி மாவட்டமும் கிழக்கே வங்காள விரிகுடாவும் எலலை களாக அமைந்துள்ளன. இம்மாவட்டத்தின் பரப் பளவு 4635.1 ச.கி.மீ. ஆகும். இம்மாவட்டம் 7 வட்டங் களைக் கொணடது. அவை தூத்துக்குடி, சிரீவை குண்டம், திருசசெந்தூர், சாத்தானகுளம், கோவில பட்டி, ஓட்டப்பிடாரம, விளாத்திகுளம் ஆகியவை யாகும்.

**நிலமும் தட்பவெப்பமும்:** இம்மாவட்டம் தமிழ் நாட்டின் கடலோர மாவட்டமாகும். இம்மாவட்டம் தனியாகப் பிரிக்கப் படுவதற்கு முன்பே தமிழ் இலக்கி யங்களில் குறிப்பிடப்படுகின்ற மருதம் முல்லை நெய் தல் பாலை ஆகிய ஐவகைச் சிறபபுகளையும் பெற்றிருக்கிறது. இம்மாவட்டத்தின் மேற்கு எல்லை யில் மேற்குத் தொடர்ச்சிமலை செல்கிறது. இம்மா வட்டததில் மலைகள் குறைவு. திருச்செந்தூர், சிரீவைகுண்டம் ஆகிய பகுதிகளில் 'தேர்' எனப்படும் மணற்குனறுகள் காணப்படுகினறன. இத்தேர்கள்




தோற்றம், உயரம் ஆகியவற்றில் வேறுபாடுகள் கொண்டவை. இவ்வகைத் தேர்களைத் தமிழ்நாட்டின் பிற பகுதிகளில் காண இயலாது. இத்தேர்ப் பகுதிகளில் வரலாற்றுக்கு முற்பட்ட கால மனிதனின் நுண்ணிய கற்கருவிகள் பல தொல்லியல் அறிஞர்களால் கண்டுபிடிக்கப்பட்டுள்ளன. பருத்தி விளையக் கூடிய கரிசல் நிலத்தை இம்மாவட்டம் பெற்றுத் திகழ்கிறது. இம்மாவட்டத்தில் காடுகள் குறைவு. இம்மாவட்டத்தில் கோவில்பட்டி வட்டத்தில் மழை மிகக் குறைவு. தூத்துக்குடியில் ஆண்டிற்கு 625மி.மீ. மழையும் சாத்தான் குளத்தில் ஆண்டிற்கு 700மி.மீ. மழையும் பெய்கிறது. பிற வட்டங்களில் குறைந்த அளவே மழை பெய்கிறது. இம்மாவட்டத்தில உற்பத்தியாகும் ஆறுகள் இல்லையெனினும் இம்மாவட்டத்தின் வழியாகப் பாய்ந்து கடலில் கலக்கும் ஆறுகள் பல உள்ளன. அவறறுள் முதன்மையானது தாமிரபரணி ஆகும். இவ்வாற்றால் சிரீவைகுணடம், திருச்செந்தூர் ஆகிய பகுதிகள் வளத்தினைப் பெறுகின்றன. இவ்வாற்றை அடுத்து மணிமுத்தாறு, சம்பு நதி, கருணை ஆறு, பச்சை ஆறு, சிற்றாறு, கோதணடராமநதி, நம்பியாறு, வைப்பாறு போன்ற ஆறுகளும் இம்மாவட்டத்தில் ஓடுகின்றன. இவ்வாறுகளால் சிரீவைகுண்டம், கோவில்பட்டி, விளாத்திகுளம் போன்ற வட்டஙகள் வளம் பெறுகின்றன.

**வேளாண்மை:** இம்மாவட்டம் தாமிரபரணி எனப்படும் பொருனை ஆற்றின் வளத்தால் வேளாண்மையில் சிறந்து விளங்குகின்றது. இம்மாவட்டத்தில் கோவில்பட்டி, சிரீவைகுண்டம் வட்டங்களில் பருத்தி, மிளகாய் போன்ற வணிகப் பயிர்கள பெரிதும உற்பத்தியாகின்றன. இநதியாவிலேயே மிக அதிக அளவு பருத்தி விளையும் பகுதியாகக் கோவில்பட்டி விளங்குகின்றது. திருச்செநதூர்ப்பகுதியில் முந்திரியும், மணிமுத்தாறு அணைக்கட்டுக்கு அப்பால் உள்ள மலைப்பகுதியில் தேயிலை, காப்பி, இரப்பர், ஏலக்காய் ஆகியவையும் விளைகின்றன. மற்றும் சோளம், உளுந்து, வெங்காயம் போன்றனவும் பயிரிடப்படுகின்றன. இம்மாவட்டம் பதநீர் உற்பத்தியில் சிறந்து விளங்குகிறது. மாவட்டத்தின் கடற்கரைப் பகுதியில் பனை மரங்கள் மிகுதி. இதனால் பனையிலிருந்து வெல்லக்கட்டி, உற்பத்தியும் கருப்புக்கட்டி உற்பத்தியும் உடன்குடி, குலசேகரப்பட்டணம், திசையன்விளை ஆகிய ஊர்களில் நடைபெறுகின்றன. வேளாணமை சிறக்க ஆறுகளின் குறுக்கே அணைகள் கட்டபபட்டுள்ளன. இம்மாவட்டத்தில் சிரீவைகுண்டம், மணிமுத்தாறு அணையில் இருந்து நீர் பெறப்படுகிறது.

**கனிப்பொருள்:** கனிக்கல் (Gypsum), மணல், காரீயகம் (Graphnite), எரியகி (Phosphate) போன்ற தாதுப் பொருள்கள் இங்குக்கிடைக்கின்றன.

**தொழில்கள்:** இம்மாவட்டம் தொழில் வளர்ச்சியில் பின்தங்கிய மாவட்டமாக இருந்துவருகிறது, இம்மாவட்டத்தில் முத்துக்குளித்தல், மீன்பிடித்தல், மட்பாண்டஙகள் செய்தல், பாய்பின்னுதல், உப்புக் காய்ச்சுதல், கைத்தறி நெசவு ஆகியவை சிறப்பிடம் பெறும் வழிவழித் தொழில்களாக விளங்கி வருகின்றன. கோவில்பட்டி வட்டத்தில் தீப்பெட்டித் தொழில் பெருமளவில் பரவிவருகின்றது. சிரீவைகுணடம் கோயில்பட்டி வட்டங்களில் பருத்தி அரைக்கும் இயந்திரங்களும் இயங்கி வருகின்றன. பீடி சுற்றும் தொழிலில் இம்மாவட்டம் முனனேற்றம் கணடுளளது கடலோரப பகுதிகளில் மீனகள் பெருமளவில் பிடிக்கப்பட்டு வெளிநாடுகளுக்கு ஏற்றுமதியாகின்றன. இம்மாவட்டத்தில் பல ஆலைகள உளளன. தூத்துக்குடி, கோவில்பட்டி நாசரேத்து ஆகிய ஊர்களில பருத்தி ஆலைகள் உளளன. தூத்துக்குடியில் பல வேதியியல தொழிற்சாலைகளும் இயங்கி வருகின்றன.

**மக்கள்:** இம்மாவட்டத்தில் அனைத்து மதத்தைச் சேர்ந்த மக்களும் வாழ்கின்றனர். சைவப்பிள்ளை, கோட்டைப் பிள்ளை, பிராமணர், இரெட்டியார், நாடார், கிறித்தவர், இசுலாமியர் முதலியோர் இம் மாவட்டத்தில் வாழ்கின்றனர். இவர்களைத் தவிரக் கடற்கரைப் பகுதிகளில் பரதவர்களும் இம்மாவட்டத்தில் உள்ளனர். இம்மாவட்டத்தின் மக்கள் தொகை 1,350,581 (1981).

**போக்குவரத்து:** மாவட்டத்தின் தலைநகரமான தூத்துக்குடியிலிருந்து மாவட்டத்தின பிற பகுதிகளுக்கும் நாட்டின் பிற நகரஙகளுக்கும் சாலைகள் செல்கின்றன. இம்மாவட்டத்தில் தூத்துக்குடி-மதுரை சாலையும், தூத்துக்குடி-திருச்செந்தூர் சாலையும், தூத்துக்குடி-கன்னியாகுமரி சாலையும் முக்கிய நெடுஞ் சாலைகளாகும். அரசுப் பேருந்துகளும் தனியார் பேருந்துகளும் மாவட்டத்தில ஓடுகின்றன. இம்மாவட்டம் கடலோர மாவட்டம் ஆதலால்தூத்துக்குடித் துறைமுகம் மிகச் சிறந்த முறையில் செயற்படுகின்றது. வெளிநாடுகளிலிருந்தும் இந்தியாவின் பிற பகுதிகளிலிருந்தும் பொருள்கள் ஏற்றுமதி இறக்குமதி செய்யப்படுகின்றன. கிழக்குக் கடற்கரைப்பகுதியில் சென்னைக்கு அடுத்து மிகப் பெரிய துறைமுகமாகத் தூத்துக்குடி விளஙகுகின்றது. இலஙகையில் இருந்து வரும் கப்பல்கள் தூத்துக்குடியை அடைகின்றன. இம் மாவட்டத்தில் மணியாச்சி, தூத்துக்குடித் தொடர் வண்டிப்பாதை மிகக் குறைந்த தொலைவே போடப் பட்டுள்ளது. இமமாவட்டத்தில் தூத்துக்குடி-மதுரை தூத்துக்குடி-உப்பளம், தூத்துகுடி-கடற்கரை, மணியாச்சி-திருநெல்வேலி, திருச்செநதூா-திருநெல்வேலி ஆகிய தொடர் வணடிப் பாதைகள் செயற்பட்டு வருகின்றன.

**முக்கிய நகரங்கள்:** இம்மாவட்டத்தின் தலைநகரமான தூத்துக்குடி வரலாற்றுச் சிறப்பு பெற்ற நகரமாகும். தமிழ்நாட்டின் வாயிலாக விளங்கும் தூததுக்குடி சிறந்த துறைமுகமாக வளர்ச்சி பெற்று வருகிறது. இத்துறைமுகப் பட்டினம் மதுரைக்குக் கிழக்கே 150 கி.மீ. தொலைவில அமைந்துளளது. இந்நகரம் முத்துக்குளித்தலுக்குப் பெயர் பெற்ற நகரமாக விளங்கிவருகிறது. எனவே, வெளிநாட்டினர் பலர் இந்நகருக்கு வந்தனர். இந்நகருக்கு கி.பி. 1532-இல் போர்த்துக்கீசியர் வந்தனர். பின்னா, தசசுக்காரர்கள கி.பி. 1658-ஆம் ஆண்டு இதனைக் கைப்பற்றினர். பிரஞ்சுக்காரர்கள, சப்பானியர், ஆங்கிலேயர்கள் ஆகியோரும் இந்நகருக்குவந்தனர். ஆங்கிலேயர்களின மேலாண்மையில் இந்நகரம பெருவளர்ச்சியடைந்தது. தூத்துக்குடி மேலூர், கீழூர் எனனும் இருபிரிவுகளைக் கொண்டது. தூத்துக்குடித் துறைமுகம் ஒரு இயற்கைத் துறைமுகம் ஆகும். இது மன்னார் வளைகுடா அருகில் அமைந்துள்ளது. இஙகு முத்துககுளிககும் தொழில் செப்டம்பர் முதல் மே முடிய நடைபெறுகிறது. இம்மாவட்டத்தின் பிறிதொரு முக்கியநகரம் கோவில்பட்டி ஆகும். கோவிலபட்டி தூத்துக்குடியிலிருந்து 32 கி.மீ. தொலைவில் உள்ளது. இநநகரம் சிறந்த தொழில் நகரமாக விளங்கி வருகின்றது. எட்டப்பன் என்னும் குறுநில மன்னன் பெயரால் ஏற்படுத்தப்பட்ட எட்டையபுரம் என்னும் ஊர் கோவில்பட்டிக்கு அடுதத பெரிய ஊராகும். எட்டையபுரம் வரலாற்றுச் சிறப்புடைய ஊராகும். இம் மாவட்டத்தில் ஆற்றூர், ஆலநதலை, ஆறுமுகநேரி, ஆழ்வார் திருநகரி, ஆதிச்சநல்லூர், ஆறுமுகமங்கலம், அடைக்கலாபுரம், இளம்புவனம். ஈரால், ஈராச்சி, ஏரல், காயல், உடன்குடி, குலசேகரப்பட்டினம், கொற்கை, கயத்தாறு, ஒட்டப்பிடாரம், சாயர்புரம், திருச்செந்தூர், விளாத்திகுளம், பாஞ்சாலங்குறிச்சி, மணியாச்சி, நாசரேதது போன்ற முக்கிய நகரஙகளும் உள்ளன. இவற்றுள ஆதிச்சநல்லூர், நாசரேத்து, சாயர்புரம் ஆகியவை தொலலியல் சிறப்புப் பெற்ற ஊர்களாகும். காயல், கொற்றை, குலசேகரப் பட்டினம் போன்றவை பண்டைத் தமிழகத்தின் மிகச் சிறந்த துறைமுகப் பட்டணங்களாக விளங்கியவை. பாஞ்சாலங்குறிச்சி. மனியாச்சி, கயத்தாறு போன றவை ஆங்கிலேயர் ஆட்சிக் காலத்தில வரலாற்றுச சிறப்பிடம் பெற்றவை. கயத்தாறு என்னும் இடத்தில்தான் வீரபாண்டியக்கட்டபொம்மன் தூக்கிலிடப் பட்டான். மனியாச்சி தொடர்வணடி நிலையத்தில் வாஞ்சி நாதன் எனபவர் ஆசுதுரை எனனும் ஆங்கிலேயரைச் சுட்டுக கொன்று வரலாற்றில் நீஙகாத இடம் பெற்றார். திருச்செந்தூர் தமிழ்நாட்டின் தலைசிறந்த முருகன் கோயில்களுள் ஒன்றாகும். இக்கோயில் கடற்கரை ஓரத்தில் அமைநதுள்ளது. இவ்வூருக்கு நாள்தோறும் சுற்றுலாப் பயணிகள வருகை புரிகின்றனர். இம்மாவட்டத்தில் உளள கழுகு மலை, சிற்பச் சிறப்புப் பெற்ற இடம் ஆகும். இஙகுளள வெட்டுவான் கோயில் கட்டிடக்கலைக்குப் புகழ்பெற்றது.

**கல்வி:** இம்மாவட்டத்தில் படித்தவர்களின் எண்ணிக்கை 757, 530 (1981) மாவட்டத்தின் முக்கிய நகரங்களில் கலைக் கல்லூரிகளும், தொழிற் கலலூரிகளும், பொறியியல் கல்லூரி ஒன்றும் வேளாண்மைக் கல்லூரிகளும் உள்ளன. சிற்றூர்களிலும் நகரங்கள்லும் தொடக்கப்பள்ளிகளும் உயர்நிலைப் பள்ளிகளும் உள்ளன. இம்மாவட்டத்தின மீன்துறைக் கல்லூரி ஒன்றும் செயற்பட்டு வருகின்றது. இம்மாவட்டம் கலைகளுக்கும் புகழ்பெற்றது. இசைக் கலைஞர்கள் பலர் இம்மாவட்டத்தில வாழ்ந்தனர். 'நையாண்டி மேளம்' என்னும் கலை இம்மாவட்டத்தில் சிறநது வளர்ந்துள்ளது வாய்ப்பாட்டு வில்லுப்பாட்டுபோன்ற கலைகளும் இம்மாவட்டத்தில வளர்சசி பெற்று வருகின்றன.

**வரலாறு:** இம்மாவட்டம் பண்டைக் காலத்தில் இருந்து பல்வேறு அரசு மரபுகளின் ஆட்சிக்குட்பட்டிருந்தது. சங்க காலத்தில் பாண்டியரின் ஆட்சிக்குட்பட்டு இருந்த இம்மாவட்டம் அவர்களுக்கு முன்பு நாகர்கள் எனப்படும் வீர உணர்வுமிக்க மரபினரின்

ஆட்சியின்கீழ் இருந்தது. பாண்டியர்களின் காலத்தில் இரண்டாவது தலைநகரமாகவும் துறைமுகமாகவும் கொற்கை விளஙகி வந்தது. நாயக்கர் ஆட்சிக் காலத் தில்பல பாளையங்களாகப்பிரிக்கப்பட்டது. அவற்றைக் கண்காணித்தவர்கள் பாளையக்காரர்கள் எனப் பட்டனர். இம்மாவட்டத்தில் கி.பி.18-ஆம் நூற்றாண் டில் நவாபுகளின் ஆட்சி ஏற்பட்டது. இருப்பினும் அவர் களின் மேலாண்மையின்கீழ் நாயக்கர் வழிவந்தோர் ஆட்சியைக் கண்காணித்தனர். பின்னர்ப் போர்ச்சுக் கீசியர், தசசுக்காரர்கள் தூத்துக்குடியில் தங்களின் ஆளுமையைச் செலுத்தினர். அக்காலத்தில் பாளை யக்காரர்கள் பிரெஞ்சுக்காரர்களுடன் தொடர்பு கொண்டு ஆங்கிலேய மேலாணமையை எதிர்க்கத் தொடங்கினர். ஆங்கிலேயர்கள் திருநெல்வேலியைக் கைப்பற்றியதைப் பாளையக்காரர்கள கலகம் செய்து முறியடிக்க முயன்றனர். இவர்களுக்குச் சநதாசாகிபு படைகளைக் கொடுத்து உதவினார். திருவிதாங்கூர் மன்னரும் பாளையக்காரர்களுக்குப் பேருதவி புரிந் தார். இருப்பினும் கி.பி.1764-ஆம் ஆண்டு பாளையங கோட்டையை ஆங்கிலேயர்கள கைப்பறறினர். ஆங்கிலேயர்களுக்குக் கப்பம் செலுத்தப்பல முறை பாளையக்காரர்கள மறுத்துக் கலகம் செய்தனர். இக்கால கட்டத்தில் ஆங்கிலேயருக்குக் கட்ட பொம்மனின் வீரம் ஒரு பெரும் இககட்டாக அமைந் தது. கட்டபொம்மனைச் சாக்சன் என்னும் ஆஙகில ஆட்சியர் அழைத்துப் பேச்சுவார்த்தை நடத்தினார். அந்நேரத்தில் ஏற்பட்ட சில குழப்ப நிலை பாளை யக்காரர்கள் கட்டபொம்மனுடன் நட்புறவை முறி யடிக்கச் செய்தது. இறுதியில் கட்டபொம்மன் கயத் தாறு என்னுமிடத்தில் தூக்கிலிடப்பட்டான். இம் மாவட்டம் முழுமையும் பின்னர் ஆங்கிலேயரின் கீழ் வந்தது. இம்மாவட்டம் திருநெல்வேலி மாவட்டமாக 1910-ஆம் ஆண்டு சீரமைக்கப்பட்டது. இவ்வாண்டி லேயே இராமநாதபுரம் மாவட்டம் உணடாக்கப்பட் டது. திருநெல்வேலி மாவட்டத்தின் வடபகுதியில் இருந்த சாத்தூர், சிரீவில்லிபுத்தூர் வட்டங்கள் இராம நாதபுரம் மாவட்டத்தில் சேர்க்கப்பட்டன. கன்னியா குமரி 1956 -ஆம் ஆண்டு தமிழகத்துடன் இணைநத பொழுது செங்கோட்டையும் அதனைச் சார்நத சிற்றூர்களும் நெலலை மாவட்டத்தில் இணைந்தன. இறுதியாக 1986-ஆம் ஆண்டு திருநெலவேலி மாவட்டம் இரண்டு பிரிவாகப் பிரிக்கப்பட்டுத் திரு நெல்வேலி, கட்டபொம்மன மாவட்டம் என்றும் சிதம்பரனார் மாவட்டம் என்றும் பெயரிடப்பெற்றன.

**செங்கற்பட்டு மாவட்டம்** தமிழ்நாட்டின் வடக்கு மாவட்டங்களுள் ஒன்று செங்கற்பட்டு, செங்கழு நீர்ப்பட்டு என்ற சொல்லின் திரிபாகும். பல் வளமும் பெற்ற இம்மாவட்டம் தமிழகத்தின் தலை நகரான சென்னைக்கு அருகிலுள்ளது.

**எல்லைகள்:** செங்கற்பட்டு மாவட்டம் வடக்கில் ஆந்திர மாநிலத்தையும், தெற்கில் தென்னார்க்காடு மாவட்டத்தையும், கிழக்கில் வங்காளவிரிகுடா வையும், மேற்கில் வடார்க்காடு, சித்தூர் (ஆந்திரா) மாவட்டங்களையும் எல்லைகளாகக் கொண்டுள்ளது. இம்மாவட்டத்தின் பரப்பளவு 8, 171 சதுர கி.மீ. ஆகும். இம்மாவட்டம் 8 வட்டங்களாக நிருவாக வசதிக்காகப் பிரிக்கப்பட்டுள்ளது. இவை மதுராந தகம், செங்கற்பட்டு, காஞ்சிபுரம், சைதாப்பேட்டை, சிரீபெரும் புதூர், திருவள்ளூர், பொன்னேரி, திருத் தணிகை ஆகியவையாகும். செங்கற்பட்டு மாவட்டத் தின் தலைநகரம் காஞ்சிபுரம் ஆகும்.




செங்கற்பட்டு மாவட்டம்.

**நிலமும் தட்பவெப்பமும்:** வேளாண்மைக்கு உகந்த நில அமைப்பைப் பெற்றுள்ள இம்மாவட்டத்தின் கிழக்கில் கடற்கரை அமைந்துள்ளது. ஆங்காங்கே மேட்டுப் பாங்கான நிலங்களையும், சிறு குன்றுகளை யும் பெற்று இம்மாவட்டம் திகழ்கிறது. வேளாண மைக்கேற்ப நீர்ப்பாசன வசதிகளையும் பெற்றுள்ளது. இம்மாவட்டத்தில் ஏரிகள் மிகுதியாக உள்ளமையால இது ஏரி மாவட்டம் என்ற பெயரையும் பெற் றுள்ளது. இங்கு ஆண்டிற்கு ஏறத்தாழ 1187 மி.மீ. மழை பெய்கிறது. பருவக் காற்றுகளால் இம்மா வட்டம் பெரிதும் மழையைப் பெறுகிறது. இங்குள்ள பாலாற்றுப் படுகை, விளைச்சலுக்கேற்ற விளை நிலத்தைப் பெற்றுத் திகழ்கிறது. இம்மாவட்டத்தில் பல ஆறுகள் பாய்கின்றன. அவற்றுள் குறிப்பிடத் தக்கது பாலாறே ஆகும். இது நந்திமலையில் தோன்றி இம்மாவட்டத்தில் புதுப் பட்டினத்திற்கருகில்

கடலில் கலக்கிறது. பாலாற்றைத்தவிர கோர்த்தலையாறு, ஆரணியாறு, கூவம், அடையாறு, வேகவதி, கம்பையாறு, கிளியாறு, கல்லாறு போன்ற சிறு ஆறுகளும் பாய்கின்றன. பாலாற்றின் கரையில் பல பழமைமிக்க நகரங்களும் கோட்டைகளும் உள்ளன. இம்மாவட்டத்தில் செம்பரம்பாக்கம் ஏரி, உத்தர மேரூர் ஏரி, சோழவரம் ஏரி, புழல் ஏரி, மதுராந்தகம் ஏரி போன்ற ஏரிகள் உள்ளன.

இம்மாவட்டத்தில காடு வளர்ப்புத் திட்டம் சிறப்பாகச் செயற்பட்டு வருகிறது. காடுகளில் தைல மரங்கள் (Eucalyptus), முந்திரி மரங்கள் ஆகியன வளர்க்கப்படுகின்றன.

**வேளாண்மை:** நீர்வளம் மிக்க பல பகுதிகளைக் கொண்ட இம்மாவட்டத்தில் வேளாணமை சிறந்த தொழிலாக நடைபெறுகிறது. ஏரிகளும், குன்றுகளும் ஆற்றுக் கால்வாய்களும் வேளாணமைக்குப் பயனபடுகின்றன. பூணடி என்னும் இடததில் நீரத்தேக்கம் ஒன்றுள்ளது. இஙகுப் பாசன ஆய்வு மையமும் செயற்பட்டு வருகிறது. இம்மாவட்டத்தில 55,689 நீர்ப்பாசனக் கிணறுகளும் 63 கால்வாய்களும் உளளன. இம்மாவட்டத்தில உழவுத்தொழிலில் ஏறத்தாழ 10,000 மக்கள ஈடுபட்டுளளனர். இம்மாவட்டததில நெல், கேழவரகு, சோளம், கம்பு, நிலக்கடலை போன்றவை பயிரிடப்படுகின்றன. நெல பயிரிடுதல மிகுதியாக நடைபெறுகின்றது. கடற்கரைப் பகுதிகளில் தென்னையும், பிற பகுதிகளில் மாந்தோட்டங்களும் காணபபடுகின்றன. இம்மாவட்டத்தில் கனிப் பொருள்கள் வளம் குறைவு.

**தொழில்கள்:** இம்மாவட்டத்தின் அருகில் தமிழகத்தின் தலைநகரம் இருப்பதால தொழிற்சாலைகள மிகுந்த அளவில இஙகுள்ளன. பல்வேறு நகரங்களுக்கும் எளிதாகச் செல்லக்கூடிய வகையில் இம்மாவட்டம் அமைந்துள்ளமையால தொழில்வளர்சசியில் பெரிதும் முன்னேறியுள்ளது. இந்தியாவிலுள்ளஎண்ணெய்சுத்திகரிப்பு ஆலைகளில் ஒன்பதாவது எண்ணெய்ச் சுத்திகரிப்பு ஆலை இம் மாவட்டத்திலுள்ள மணலியில் தொடங்கப்பட்டுள்ளது. பெருங்களத்தூர், எண்ணூர் ஆகிய இடங்களில் உந்துவண்டிகள் தயாரிப்புத் தொழிற்சாலையும், வண்டிகளின் இயந்திரத் தயாரிப்பும் நடைபெற்று வருகின்றன. சென்னையை அடுதத பல்லாவரத்தில் மின்சாரச் சாதனங்கள் தயாரிக்கும் நிறுவனமும், பிற சிறு தொழிற்சாலைகளும் உள்ளன. படாளம் என்னும் இடத்தில சர்ககரை ஆலையும், அம்பத்தூர், எண்ணூர், ஆவடி, பட்டாபிராம், வணடலூர், மணலி ஆகிய இடங்களில் பல பெரிய தொழிற்சாலைகளும உள்ளன. அம்பத்தூர், கிணடி போன்றவை தொழிற்பேட்டை நகரங்களாகும். அம்பத்தூரில் இரு சக்கர வண்டிகள், இயந்திரப் பொருள்கள் போன்றவை தயாரிக்கப்படுகின்றன. ஆவடியில் மைய அரசின் போர்த் தளவாடங்கள் தயாரிப்பு நிறுவனம் ஒனறுள்ளது. குறிப்பாக இங்கு மிகுந்த சக்திவாயநத இயங்கும் பீரஙகிப் படை வண்டிகள (Tanks) தயாரிக்கப்படுகினறன. எணணூரில அனல் மின்னாக்க நிலையமும், திருத்தணியில் நூற்பாலையும், மாதவரத்தில் பால்பண்ணைத் தொழிலும, குரோம்பேட்டையில தோல் தொழிலகமும் உள்ளன. மணலியில் உரத் தொழிற்சாலை ஒனறு உளளது. கல்பாக்கத்தில் அணுமின நிலையம் ஒன்று நடுவண அரசின் பொறுபபில் இயஙகி வருகிறது. இப்பெருந தொழில்களைத் தவிர இம்மாவட்டத்தில பல சிறு தொழில்களும் வளர்ச்சி பெற்று வருகின்றன. மகாபலிபுரத்தில் சிற்பங்கள் வடிக்கப் படுகின்றன. காஞ்சிபுரம் பட்டு, சுருட்டு உற்பத்திக்குப் பெயர் பெற்றது. நந்தம்பாக்கத்தில ஊசி மருநது தயாரிப்பு ஆலை உளளது. இம்மாவட்டம் வீடுகள கட்டும் செஙகல் அறுக்கும் தொழிலுக்கும். நெசவுத தொழிலுக்கும் பெயாபெற்று விளஙகுகிறது இங்கு மேலும் பல சிறு தொழிற்சாலைகள் உளளன. மீன் பிடித்தல, உப்பு விளைச்சல போனறவை கடற்கரைப் பகுதிகளில் நடைபெறுகினறன.

**மக்கள்:** இமமாவட்டத்தின் மக்கள் தொகை, 3,616,508(1981). இஙகுத் தமிழ்மொழி பேசும மககளும் தெலுஙகு மொழி பேசும் மககளும் பரவலாக உளளனா. வன்னியர், வேளாளர், கம்மா, ரெட்டி, கவரை போன்ற சாதியினா வேளாணமையை முதன்மையாகக கொணடு வாழ்கின்றனர். திருத்தணி, பொனனேரி பகுதிகளில் தெலுங்கு மொழி பேசுவோா மிகுதியாக வாழகினறனர். இம்மாவட்டத்திலுள்ள தொணடை மணடலத் துளுவ வேளாளர் உயர்நிலையை அடைந்தும, நிலக்கிழார்களாகவும் காணப்படுகின்றனா. நெசவுததொழில் புரியும் செங்குநத மரபினரும் இபபகுதியில் வாழ்ந்து வருகின்றனர் இவர்களைத் தவிர அந்தணர், செட்டியாா, கிறித்தவர், இசுலாமியர் ஆகியோரும் பரவலாகக் காணப்படுகின்றனர். கடற்கரையோரப் பகுதிகளில் மீனவர்கள் வாழ்கின்றனர். இமமாவட்டம முன்னேறி வருகின்ற மாவட்டமாக விளங்குவதால் பெணகளும் ஆணகளுககு நிகராகப பலவேறு அலுவலகங்களிலும், தொழிற்கூடங்களிலும் பணிபுரிகினறனர். இம்மாவட்டத்தில வெளி மாநிலங்களிலிருந்து குடியேறிய மக்களும வாழந்து வருகின்றனர். இஙகுச் சைவம், வைணவம் முதலிய சமயங்கள் தழைத்தோங்கின. காஞ்சி காமகோடி பீடம் காஞ்சிபுரத்தில உளளது. பல்வேறு அறிஞர்களையும் இம்மாவட்டம் ஈன்றுளளது.

**போக்குவரத்து** இம்மாவட்டம் போக்குவரத்தில் தன்னிறைவுப் பெற்றுள்ளது இங்கு, 2880 கி.மீ. நீளத்திறகுச் சாலை வசதிகள் செய்யப்பட்டுள்ளன. இம்மாவட்டத்தின் வழியாகவே சென்னைக்குச் செல்ல வேணடியுள்ளதால் சாலைப் பராமரிப்பு சிறந்த முறையிலுள்ளது. சென்னை - கல்கத்தா, சென்னை-பம்பாய், சென்னை-பெங்களூர், சென்னை-திண்டுக்கல் ஆகிய தேசிய நெடுஞ்சாலைகள இம் மாவட்டத்தின் வழியாகவே செலகின்றன. பட்டுக் கோட்டை அழகிரி போக்குவரத்துக் கழகம், பல்லவன் போக்குவரத்துக் கழகம் ஆகியவை இம் மாவட்டத்தில செயற்படும் அரசு நிறுவனப் போககு வரத்துக் கழகங்களாகும். இம்மாவட்டம் அகலத் தொடர்வண்டிப் பாதை, குறுகிய தொடர்வண்டிப் பாதை ஆகியவற்றைப் பெற்றுத் திகழ்கிறது. இவ்விரு பாதைகளிலும் மினசாரத் தொடர்வண்டிகள செல் கின்றன. இருப்புப் பாதைகள் அமைந்துளள முககிய நகரங்கள் செஙகறபட்டு, காஞ்சிபுரம், வாலாசா பாத்து, திருவளளூா, கும்மிடிப்பூணடி போனறவை யாகும். சென்னை விமான நிலையம் இம் மாவட்டத்தில் உள்ள மீனம்பாக்கம் என்ற இடத்தில் அமைநதுள்ளது. இங்கிருந்து இந்தியாவின பிற பகுதிகளுக்கும், உலகின் முக்கிய நாடுகளுக்கும் செலல முடியும.

**நகரங்கள்:** இம்மாவட்டத்தின தலைநகரம் காஞ்சிபுரம் ஆகும். இது பழமையும் சிறப்பும் பெற்றது. பலலவர்கள தலைநகரமாக விளங்கியது; வேகவதி ஆற்றின கரையில அமைநதுள்ளது. காஞசி புரம் பட்டு, உலகப் புகழ்பெற்றது. இந்நகரம் சினன காஞ்சிபுரம், பெரிய காஞ்சிபுரம் ஆகிய பிரிவுகளைக் கொணடது. இஙகுக் கோயில்கள் மிகுந்து காணப் படுகினறன. கருஙகுழி என்னும் ஊர் செஙகற் பட்டுக்குத் தெற்கே 24 கி.மீ. தொலைவில் உளளது. இது கி.பி.1825-ஆம் ஆணடு வரை இம்மாவட்டத்தின தலைநகரமாய் விளஙகி வந்தது. செங்கறபட்டு நகரம், தென் நகரங்களுக்குச் சென்னையிலிருநது செல்லும் வழியில் அமைந்துள்ளது. இங்குளள ஆயிரங்கால் மணடபச்சிற்பங்கள அழகு வாய்ந்தவை. காஞ்சியிலிருந்து 27 கி.மீ. தொலைவில அமைநதுள்ள உத்தரமேரூர் கல்வெட்டுச் சிறப்பும், கோயிற்சிறப்பும் மிக்க ஊராகும். திருப்பெரும்புதூர், சென்னை - பெங்களூர் சாலையில அமைந்துள்ள ஊர். இவ் வூரில் தொழிற்சாலைகள பல உள்ளன. சதுரங்கப் பட்டினம் இம்மாவட்டத்தின் கடற்கரையில் அமைந் துளள ஊராகும். இஙகுத் தச்சுக்காராகள் கட்டிய கோட்டை உள்ளது. இப்பகுதியில் வாழை மரங்கள் மிகுதியாக உள்ளன. சேக்கிழார் பிறந்த ஊரான குன்றத்தூர் தொல்லியல் சிறப்புமிக்க ஊராகும். சென்னை-விழுப்புரம் சாலையிலமைந்துள்ள தாம்பரம், இந்திய விமானப்படைத் தளம் உள்ள ஊராகவும், தொழில்வளர்ச்சி பெற்ற ஊராகவும் விளங்கி வருகிறது செனனையிலிருந்து மின்சாரத் தொடர் வணடிகள் இவ்வூருக்கு அடிக்கடி செல்கின்றன. இதனை அடுத்து வடக்கிலுள்ள பல்லாவரம், பல்லவர் காலத்தில சிறப்பு பெற்ற ஊராக இருந்தது. இங்குள்ள மலைமீது ஒரு குடைவரைக் கோயில் உளளது. இங்குத் தோல் பதனிடும் தொழிறசாலை களும், இராணுவ இருப்பும் உள்ளன. செனனை - பெங்களூர்ச்சாலையில் அமைந்துள்ள மற்றொரு ஊர் பூவிருந்தவல்லி என்பதாகும். இங்கு ஆங்கிலேயரின் படைத்தளம் இருந்தது. இன்று இவ்வூா பூந்தமல்லி என்று கூறப்படுகிறது. இவ்வூரைச சுற்றி அழகிய வயலவெளிகள் உளளன. காஞ்சியிலிருநது 13 கி.மீ. தொலைவில் வாலாசாபாதது என்னும் ஊர் உள்ளது. இது பாலாற்றங்கரையில் அமைந்துள்ள ஊராகும். இங்கு ஆஙகில இராணுவ அதிகாரிகள பலர் வாழ்ந் தனர். பலலாவரத்திறகு வெகு அருகில் உள்ள ஊர் பரங்கிமலை ஆகும். இப்பகுதியில் கிறித்தவர்கள் மிகுதியாக வாழ்கினறனர். புனித தாமசு என்பவர் இங்குத் தங்கி கிறித்துவ சமயத்தைப் பரப்பினார். இஙகுள்ள குன்றின் மீது கிறித்துவத் தேவாலயம உளளது இவ்வூரிலேயே புனித தாமசின கல்லறையும் உள்ளது. பரங்கிமலையை அடுத்துள்ள நந்தம் பாக்கத்தில் நடுவண அரசின் மருத்துவ அறுவை மருத்துவக் கருவிகள் தயாரிக்கும் தொழிற்சாலை உள்ளது. சென்னை-விழுப்புரம் சாலையில் அமைந துள்ள மதுராந்தகம், மேலமருவத்தூர் போனற ஊர் களும் இம்மாவட்டத்தின் சிறப்பான ஊர்களேயாகும். இங்குச சுற்றுலாப் பயணிகளைக் கவரும் வணணம் பல புகழ பெற்ற ஊர்கள் உள்ளன. முருகனின் ஆறு படை வீடுகளுள் ஒன்றான திருததணிகையும இம் மாவட்டத்தில் உள்ளது. இமமாவட்டத்திலுள்ள திருக்கழுகுனறம் தொனமையான கோயில் உள்ள ஊராகும. பல்லவர்களின் துறைமுக நகரமாக விளங்கிய கடறகரைப் பட்டினம், மாமல்லபுரம் ஆகும். இங்கு நாளதோறும் வெளிநாட்டுப் பயணிகள் வரு கினறனர். இஙகுள்ள பல்லவாகளின சிற்பங்கள உலகப் புகழ்பெறறவை. இம்மாவட்டத்தில் உள்ள திருவாலஙகாடு, ஆடலவல்லானின் சபைகளுள் ஒன றான இரத்தின சபையைப் பெற்ற ஊராகும். இமமா வட்டத்திலுளள வேடந்தாஙகல், பறவைகளின் சரணாலயமாக உளளது. இம்மாவட்டத்தின் கடற் கரைப்பகுதியில் அமைக்கப்பட்டுள்ள தங்கக கடற் கரை (Golden Beach) சுறறுலாப் பயணிகளின் மனதைக் கவரும் பகுதியாகும்.

**கல்வி:** இம்மாவட்டம் கல்வி வளம்பெற்ற சிறந்த மாவட்டமாக உளளது. இம்மாவட்டத்தில்

பல புகழ்பெற்ற கல்வி நிறுவனங்கள் உள்ளன. தாம்பரம், காஞ்சிபுரம், மீனம்பாக்கம், பட்டாபிராம் போன்ற இடங்களில் கலைக் கல்லூரிகளும், மதுராந்தகம், திருப்பெரும்புதூர் ஆகிய இடங்களில வடமொழிக் கல்லூரிகளும் உள்ளன. பல தொழிற்கல்விச் சலைகளும் இம்மாவட்டத்திலுள்ளன. மருத்துவக் கல்லூரி ஒன்று செங்கற்பட்டில் உள்ளது. மகாபலி புரத்தில் சிற்பக கல்லூரியும், சைதாப்பேட்டையில் ஆசிரியப் பயிறசிக் கல்லூரியும் உள்ளன.

**வரலாறு:** செங்கற்பட்டு மாவட்டம் பழமையும், சிறப்பும் வாய்நத மாவட்டஙகளுள ஒன்று. இம்மாவட்டத்தின் வடபகுதி வட்டமான திருவள்ளூர்ப் பகுதியில் வரலாறறுக்கு முற்பட்ட காலத்தைச சார்ந்த பழஙக கற்கருவிகள பெருமளவில் கண்டுபிடிக்கப்பட்டுள்ளன. இது தொலலியல அறிஞாகளால 'சென்னைத் தொழிற்கூடம்' (Madrs Industry) என்று கூறப்படுகிறது. இம்மாவட்டத்தில் பலலாவரத்தில முதன்முதலாகப புதிய கற்காலக (Neoliths) கைக் கோடரி கணடுபிடிக்கப்பட்டது. பெருங கற்காலச் சினனங்கள் (Megaliths)பல மாவட்டத்தின் பல்வேறு பகுதிகளில காணப்படுகின்றன. இவற்றுள குறிப்பிடத் தக்கவை குன்றத்தூர், அமிாதமஙகலம், ஆனூர் ஆகிய இடஙகளில் உள்ளவையாகும். வரலாறறுக் காலத்தில இப்பகுதி தொண்டை நாடு எனப்பட்டது. தொண்டை மண்டலம் 24 கோட்டங்களாகப் பிரிக் கப்பட்டிருநதது. இப்பகுதியில் பல்லவ அரசர் சிவ கந்தவர்மன் கி.பி. 4-ஆம் நூற்றாணடின் தொடக் கத்தில் காஞ்சியைத் தலைநகரமாகக் கொண்டு ஆட்சிசெயதார். பல்லவ அரசர்களுள மகேந்திர வர்மன், முதலாம் நரசிம்மவர்மன், முதலாம் பரமே சுவரவர்மன், இராசசிம்மன், நநதிவர்மன் போன்ற அரசர்கள் மிகச்சிறந்த அரசர்களாவர். அவர்களின் துறைமுக நகரமாக மாமல்லபுரம் விளங்கியது. பல்லவர்களின் காலத்தில் இப்பகுதியில் அனைத்துச் சமயங்களும் தமிழ், தெலுங்கு, வடமொழி ஆகியனவும், பல்வேறு கலைகளும் வளர்ச்சியடைந்தன. பல்லவர்கள் கட்டடக் கலைக்குப் பெரிதும் ஆதரவு நல்கினர். பல்லவ மரபின் இறுதிக்காலத்தில் பாண்டியர்களின் தலையீடு ஏற்பட்டது. இப்பகுதியில் சிறிது காலம் இராட்டிரகூடர் ஆட்சி ஏற்பட்டது.

இப்பகுதியைப் பின்னர்ச் சோழர்களும், காகதீயாகளும் கைப்பற்றினா. கோல்கொணடா சுல்தான்கள், தென்கிழக்கு இந்தியா முழுவதையும் கைப்பற்றியபோது செங்கற்பட்டுப் பகுதியும் அவர்கள் கீழ் வந்தது. ஆங்கிலேயர்களுக்கும் பிரஞ்சுக் காரர்களுக்கும் இடையில் ஏற்பட்ட மேலாணமைப் போர்களால் இப்பகுதி பெரிதும் பாதிக்கப்பட்டது. ஆர்க்காட்டு நவாப்பிற்குட்பட்ட பகுதியாக விளங்கிய இம்மாவட்டம் ஆங்கிலேயாகளுக்குக் கி.பி.1764-இல் நிரநதரமாக அளிக்கப்பட்டது இப்பகுதியை ஆங்கிலேயர்கள் 15 ஆண்டுகளுக்குக் குததகையாகப் பெற்றனர். மைசூர் அரசர் திப்பு சுல்தான் இப்பகுதியின்மீது இரு முறை போர் தொடுத்தார். இப்பகுதியில வரி வசூல் பெறும் உரிமையையும் ஆங்கிலேயர் ஆர்க்காட்டு நவாப்பிடமிருந்து பெற்றனர். இப பகுதியில் தச்சுக்காரர்களின ஆளுமையிலிருந்த பழவேற்காடும் கி பி. 1825-இல ஆஙகிலேயருக்குச் உரிமையானது.

செஙகற்பட்டுப் பகுதியை ஆங்கிலேயர்கள பெறற பொழுது சததியவேடு, பழவேற்காடு பகுதிகள் தனித்திருந்தன. வட ஆாககாடு மாவட்டத்தில் இருந்த சில பகுதிகள செஙகறபட்டு மாவட்டத்துடன இணைக்கப்பட்டன. தென்னார்க்காடு மாவட்டத்தின சில பகுதிகளும் இமமாவட்டத்துடன இணைநதன. திருத்தணி பகுதி ஆந்திராவிடமிருநது பெறறப்பட்டது. இம்மாவட்டத்தின எலலை கி.பி 1960-ஆம் ஆண்டுதான் வரையறுக்கப்பட்டது

**சென்னை மாவட்டம்:** தமிழகத்தின் தலைநகரமாக விளங்கும் சென்னையும் அதன சுற்றுப்புறப் பகுதிகளும் சென்னை மாவட்டமாக விளஙகிவருகினறது. சென்னைமாநகர் அதனைச சுறறி உள்ள பல வட்டங்கள் இம்மாவட்டத்தில் அடஙகும் இநதியாவின் பெருநகரங்களுள் நான்காவதாகச் சென்னை விளங்கி வருகிறது.

**எல்லைகள்:** செனனை மாவட்டத்தின தெறகிலும் மேற்கிலும வடக்கிலும் செஙகறபட்டு மாவட்டம



சென்னை மாவட்டம்

சூழ்ந்துள்ளது. இதன் கிழக்கெல்லையாக நீணட அழகிய கடற்கரையைக் கொணடு வங்காள விரிகுடா உளளது. இம்மாவட்டத்தின் பரப்பளவு 128 ச.கி.மீ. ஆகும்.

சென்னை மாவட்டத்தின்மேற்கு,வடக்கு,கிழக்குப் பகுதிகள செம்மண் நிலப் பகுதியினைக் கொண்டு விளங்குகின்றது இம்மாவட்டத்தின் தெற்கு, தென் மேற்கு எல்லையில் சிறு சிறு குன்றுகள் உள்ளன. உலகின் மிக அழகான கடற்கரைகளுள் இரண்டாவ தாகச் சென்னைக் கடற்கரை விளங்குகிறது. இம் மாவட்டத்தில் அடையாறு, கூவம் போன்ற ஆறுகள் பாய்ந்து வங்காள விரிகுடாவில் கலக்கின்றது. பககிங் காம் கால்வாய் இம்மாவட்டத்தில் வெட்டப்பட்டுள் ளது. ஆறுகளில் மழைக் காலஙகளில் மட்டுமே நீர் பெருகி ஓடும். சென்னை நகரின் கழிவு நீரே பெரும் பாலும் இவ்வாறுகளில் ஓடுகின்றன. கூவத்தைத் தூய்மைப்படுத்தும் திட்டத்தை அரசு செயற்படுத்தி வருகின்றது இம்மாவட்டத்திற்குக்குடிநீர் வழஙகப்பல வேறு திட்டஙகளை அரசு தீட்டி வருகின்றது. மழை பொய்க்கும் காலங்களில் இம்மாவட்டத்தில் வறட்சி மிகுதி. மழைக் காலஙகளில் பெரு வெளளத்தால் பல தாழ்நில இடங்கள் அழிவதும் உண்டு

**தொழில்கள்** இம்மாவட்டத்தில வேளாண்மையை விட தொழிற்சாலைகளே மிகுதியாக உளளன. பல்வேறு அரசு அலுவலகஙகளிலும் தனியார்நிறுவனங களிலும் தொழிற்சாலைகளிலும் பணியாளர்களும தொழிலாளர்களும் உயர் அலுவலர்களும் பணிபுரி கின்றனர். வேளாண்மை, மாவட்டத்தின் எல்லைப் பகுதியில் நடைபெறுகின்றது. நெல் அப்பகுதியில் பயி ராகின்றது. கால்நடை வளர்ப்பும் குறைந்த அளவே காணப்படுகின்றது. இம்மாவட்டத்தில் கனிவளம் இல்லை. இருப்பினும் தலைநகரமாக விளங்குவதால் இந்தியாவின் தொழில் நகரங்களுள் மிகச் சிறந்த இடத்தை இம்மாவட்டம் பெற்றுளளது. இம்மாவட் டத்தில் உள்ள பெரம்பூரில் தொடர்வண்டிப் பெட்டிகள் செய்யும் நடுவணரசின் தொழிற்கூடம் உள்ளது. இம்மாவட்டத்தில இயந்திர ஊர்திகள் தயாரிக்கும் தொழிற்கூடஙகளும், தொலைக்காட்சி மின்சாரக் கருவிகள் செய்யும் தொழிற்கூடங்களும் உள்ளன. திரைப்படங்களைத் தயாரிக்கும் பல நிறு வனஙகள் இம்மாவட்டத்தில் உள்ளன. இவற்றால் அரசுக்குக் கணிசமான வருவாய் கிடைக்கின்றது. இம்மாவட்டத்தில்தான் முதன்முதலாகத் தமிழகத் தில் பருத்தி ஆலை ஒன்று பெரம்பூரில் நிறுவப்பட் டது. இது கி.பி 1878-ஆம் ஆண்டு பக்கிங்காம் ஆலை எனனும் பெயரில் தொடங்கப்பட்டது. மேலும், கி.பி. 1883-ஆம் ஆணடு இரண்டாம் ஆலை ஒன்று கருநாடக ஆலை என்னும் பெயரில் தொடங் கப்பட்டது: இப்பொழுது இவை இரண்டும் இணைந்து பின்னி நிறுவனம் எனக் கூறப்படுகிறது. நடுவண் அரசின் தொலை அச்சடிப்பான் (Tele Printers) நிறு வனம் ஒன்று கிண்டியில் உள்ளது. தோல் ஆய்வு நிறுவனங்களும், தோல் பொருள் விற்பனையும் இம் மாவட்டத்தில் சிறப்புற நடைபெறுகின்றது. தோலி னால் ஆன காலணிகளை வடிவமைக்க ஆய்வு நிறு வனம் ஒன்று அடையாறு தோல் ஆராய்ச்சி நிறுவ னத்தில் செயற்பட்டு வருகின்றது. சென்னை'பேசின்' பாலம் பகுதியில் அனல்மின் நிலையம் ஒன்று செயற் பட்டு வருகிறது. இது 1986-இல் மூடப்பட்டது. கடற் கரைப் பகுதியில் மீன்பிடிக்கும் தொழில் மிகச் சிறப் பாக இம்மாவட்டத்தில் நடைபெறுகின்றது: சென்னை தமிழகத்தின் தலைசிறநத செயற்கைத் துறைமுகம் ஆகும். இங்கிருந்து பல்வேறு நாடுகளுக குப் பொருள்கள் ஏற்றுமதி செய்யப்படுகின்றன; இறக்குமதியும் செய்யப்படுகின்றன. இத்துறைமுகம் கி.பி. 1890 இல் நிருமாணிக்கப்பட்டது. சென்னை மாவட்டத்தில் பல சிறு தொழிலகளும் நடைபெற்று வருகின்றன. பல அரசு அலுவலகஙகள,வெளிநாட்டுத் தூதரகங்கள், கல்லூரிகள், பல்கலைக் கழகங்கள, நூலகங்கள், திரையரங்குகள, திரைப்படத் தயாரிப்பு நிறுவனங்கள் ஆகியவற்றில் பல இலட்சம் தொழி லாளர்கள் பணிபுரிந்து வருகின்றனர். இம்மாவட்டத் தில் பல செய்தித்தாளகள், வார இதழ்கள், இருவார இதழ்கள், மாத இதழ்கள முதலியவறறை அச்சடிக் கும் நிறுவனங்கள் பல உள்ளன.

**மக்கள்:** இம்மாவட்டத்தின் மக்கள்தொகை 3,276 622 (1981). இந்தியாவில், மிகுந்த மக்கள் தொகை கொண்ட நகரங்களுள் இதுவும் ஒன்று. இம்மாவட்டத்தில் பல மொழி பேசும் மக்கள் வாழ் கின்றனர். பல்வேறு மாநில மக்களும், பல்வேறு நாட்டு மக்களும் வாழும் மாவட்டமாக இது விளங்கு கிறது. தமிழர்கள், தெலுங்கர், கேரள மக்கள, கருநாடக மக்கள், மற்றும் பல மாநிலங்கள மக்கள் ஒருங்கிணைந்து ஒற்றுமையுடன் வாழ்கின்றனர்.

**போக்குவரத்து:** இம்மாவட்டத்தில் மிகுநத அள வில் சாலை வசதிகள் செய்யப்பட்டுள்ளன. தமிழக அரசு பல்லவன் போக்குவரத்துக் கழகப் பேருந்து களை இம்மாவட்டத்தில் சிறப்புடன் செயற்படுத்தி வருகின்றது. இந்தியாவின் வேறு எந்த நகரத்திலும் இல்லாத அளவிற்குப் பேருந்துகள் சிறப்பான முறை யில் பராமரிக்கப்பட்டு வருகின்றன. புறநகர்ப் பகுதி களுக்கும் பேருந்து வசதிகள் செய்யப்பட்டுளளன. பல்வேறு பகுதிகளில் பேருந்துகளின் நிலையஙகளும்

பனிமனைகளும் உள்ளன. பல்வேறு நகரங்களுக்குச் செல்லத் திருவள்ளுவர் போக்குவரத்துக் கழகம் விரைவுப் பேருந்துகளைப் பாரிசு முனையிலிருந்து இயக்கி வருகின்றது. இம்மாவட்டம் அகல இருப்புப் பாதை நிலையங்களையும் குறுகிய இருப்புப் பாதை நிலையங்களையும் கொண்டுள்ளது. சென்னை மத்திய நிலையம்(Central),எழும்பூர்,கடற்கரை,தண்டையார் பேட்டை, பேசின் பாலம், பெரம்பூர், வில்லிவாக்கம், நுங்கம்பாக்கம், தியாகராய நகர் போன்றவை முக்கிய இருப்புப்பாதை நிலையங்களாகும். இம் மாவட்டத்தின் தென்னகக் குறுகிய இருப்புப்பாதை எழும்பூரில் முடிவடைகிறது. தமிழகத்தின் தெற்கு மாவட்ட நகரங்களுக்கு இங்கிருந்து செல்லலாம். மின்சார இருப்புப்பாதை விரைவு வண்டிகள் பெரு மளவில் இம்மாவட்டத்தில் இயங்கி வருகின்றன. அகலஇருப்புப் பாதை தொடக்க நிலையம் சென்னை மத்திய (Central) இருப்புப் பாதை நிலையத்தில் அமைந்துள்ளது. இங்கிருந்து தில்லி, பம்பாய், கல் கத்தா, பெங்களூர், அகமதாபாது, ஐதராபாது, கொச்சி, திருவனந்தபுரம், காட்பாடி, சேலம், ஈரோடு, கோயம்புத்தூர் ஆகிய பகுதிகளுக்குச் செல்லலாம். திரிசூலம், மீனம்பாக்கம் விமான நிலையங்கள் வான்வெளிப் போக்குவரத்தை நடத்தி வருகின் றது. இங்குப் பன்னாட்டுப் போக்குவரத்து நடை பெற்று வருகின்றது. கப்பல்போக்குவரத்து சென்னை துறைமுகப் பகுதியில் நடைபெறுகின்றது. பல்வேறு நாடுகளுக்குப் பொருள்கள் இதன் வாயிலாக ஏற்று மதி செய்யப்படுகின்றன.

**முக்கிய இடங்களும் சிறப்புகளும:** சென்னை மாவட்டம் பல சிறப்பான ஊர்களைத் தன்னகத்தே கொண்டுள்ளது. சென்னை மாவட்டத்தின் முக்கிய பகுதியாக விளங்கும் பாரிமுனை துறைமுகம் அருகில வடக்குப் பகுதியில் அமைந்துள்ளது. இங்கு உயர்நீதி மன்றங்களும் சட்டக்கல்லூரியும் பழைய கலங்கரை விளக்கமும் ஆங்கிலேயர் ஆட்சிக்காலக் கட்டடங் களும் துறைமுக அலுவலகங்களும் வங்கிகளும் பேரங் காடிகளும் உள்ளன. இப்பகுதியில் வெளியூர்ப் பேருந் துகளும் உள்ளூர் நகரப் பேருந்துகளும் நிற்கும் நிலை யங்கள் உள்ளன. இதன் வடக்கில் உள்ள பகுதி 'சார்சு நகரம்' (George Town) என்று கூறப்படு கிறது. இதற்கடுத்த பகுதி தண்டையார்பேட்டை ஆகும். சார்சு நகரப் பகுதியிலும் தண்டையார்ப் பேட்டையிலும் பல்பொருள் அங்காடிகளும் அரசு அலுவலகங்களும் உள்ளன. பாரிமுனைப்பகுதி, மக்கள் நெருக்கம் அடர்த்தியான பகுதியாகும். இங்குள்ள பூக்கடை, கொத்தவால்சாவடி ஆகிய இடஙகள் பூக்கள், பழங்கள், காய்கறி விற்பனைகளுப் புகழ் பெற்றவை. பாரிமுனையின் தெற்குப் பகுதியில் ஆங்கிலேயர்கள் கி.பி. 1653-இல் கட்டிய புனித சார்சு கோட்டை, கடற்கரையை ஒட்டி அமைந்துள் ளது. இஙகுள்ள கிறித்தவ தேவாலயம் மிகப் பழமை யானது. இது கி.பி. 1678-இல் கட்டப்பட்டது. இத் தேவாலயத்தில் தான் ஆங்கில ஆட்சியைத் தமிழகத் தில் நிறுவிய இராபர்ட்டு கிளைவின் திருமணமும் நடந்தது. ஆங்கிலேயர் காலத்தில் சென்னை நகரம் மிகுந்த வளர்ச்சியை அடைந்தது. இவர்கள் காலத் தில்தான் பழைய கலங்கரை விளக்கமும் உயர்நீதி மன்றமும் பாரிசுமுனைப் பகுதியில் கட்டப்பட்டது. பாரி முனைக்கு மேற்காக மத்திய இருப்புப் பாதைச் சந்திப்பு நிலையம் உள்ளது. தென்னக இருப்புப் பாதையின் தலைமையகமாக இது செயற் பட்டு வருகின்றது. இதனை அடுத்துப் புகழ் பெற்றது மூர் அங்காடி. இது ஒரு தீ விபத்தில் இன்று அழிந்துபட்டுள்ளது. வேப்பேரி, சூளை, வியாசர்பாடி, புரசைவாக்கம், பெரம்பூர், அயன்புரம், கீழ்ப்பாக்கம், அமைந்தகரை, அண்ணாநகர், அரும் பாக்கம், எழும்பூர், திருவல்லிக்கேணி, மயிலாப்பூர், இராயப்பேட்டை, அண்ணாசாலை, தியாகராயநகர், அடையாறு, கோடம்பாக்கம், தேனாம்பேட்டை, கோட்டூர், கிண்டி, நுங்கம்பாக்கம் போன்றவை இம் மாவட்டத்தில உள்ள முக்கிய பகுதிகளாகும். சென்னை புனித சார்சு கோட்டையில் தமிழக அர சின் தலைமைச் செயலகமும், சட்டமன்றமும் இயங்குகினறன. இக்கோட்டையில் இராணுவ அலு வலகங்களும் அருங்காட்சியகமும் உள்ளன.

சென்னை மாவட்டத்தில் உள்ள மயிலாப்பூர் பழமைச் சிறப்பு வாய்ந்த பகுதியாகும். இங்குக் கபா லீசுவரர் கோயில் உள்ளது. பாடல் பெற்ற தலமாக இது விளங்கி வருகிறது. உலகம் போற்றும் திருக் குறள் நூலினை இயற்றிய திருவள்ளுவர் மயி லாப்பூரில் பிறந்தவர் என்று கருதப்படுகிறது. இங்குக் கிறித்தவத் தேவாலயம் சாந்தோம் என்ற இடத்தில் உள்ளது. இத்தேவாலயம் கி.பி. 1504-இல் கட்டப் பட்டு கி.பி. 1893-இல் புதுப்பிக்கப்பட்டது.

வைணவத்தலம் உள்ள திருவல்லிக்கேணி, கடற் கரையை ஒட்டி அமைந்துள்ள பகுதியாகும். இங்குப் பல்லவர் காலத்திய பார்த்தசாரதி கோயில் உள்ளது. இப்பகுதியில் இளைஞர்கள் தங்கிப் படிக்கும் விடுதி கள் பெருமளவில் உள்ளன. நுங்கம்பாக்கம், எழும்பூர் பகுதிகளும் பழமைச் சிறப்பு வாய்ந்தவைகளாகும். எழும்பூர் தென்னக இருப்புப்பாதையின் குறுகிய இருப்புப்பாதை சந்திப்பு நிலையமாகும். இங்கு மருத்துவமனைகளும், அருங்காட்சியகமும் உள்ளன. சென்னைக் கடற்கரைச் சாலை மிக அழகான சாலை யாகும். இங்குப் பல அரசு நிறுவனங்களும் கல்விக்

கூடங்களும் சென்னைப் பல்கலைக் கழகமும் காவல் துறை அலுவலகங்களும்,வானொலி, தொலைக்காட்சி நிலையங்களும்,புதிய கலங்கரை விளககமும் உள்ளன. கடற்கரையை ஒட்டித் தமிழகத்தில் பல்துறைச் சிறப் புப் பெற்ற அறிஞர்களுக்கும் பெருமக்களுக்கும் சிலை கள் பூங்காக்களில் வைக்கப்பட்டுள்ளன. இபபகுதியில் நீச்சல்குளமும் மீன்காட்சியகமும் உள்ளன. சென்னை அண்ணாசாலை பல்வேறு அங்காடிகள் மிகுந்த பகுதி யாகும். இச்சாலை மிகுந்த அகலமுடையது. கிண்டிப் பகுதியில் கல்வி நிறுவனங்களும் அண்ணா பல்கலைக் கழகமும், பாம்புப்பண்ணையும் ஆளுநர் மாளிகையும் அரசியல் தலைவர்களின் நினைவாலயங்களும் உள ளன. இங்குள்ள பாம்புப்பண்ணை சுற்றுலாப் பயணி களைக் கவரும் வகையில் அமைக்கப்பட்டுள்ளது. அடையாறு பகுதியில் மிகப் பெரிய ஆலமரமும், பிரமஞான சபையும் உள்ளன.

**கல்வி:** இம்மாவட்டத்தில் கல்விக் கூடங்கள் மிகுதி. இங்கு உளள சென்னைப் பல்கலைக் கழகம் பழமையான பல்கலைக் கழகம் ஆகும். தமிழ்நாட்டின் முதல் பல்கலைக் கழகமாக கி.பி. 1857-ஆம் ஆண்டில் ஆங்கிலேயர் ஆட்சிக் காலத்தில் தொடங்கப்பட்டது. இதனைச் சார்ந்து பல கல்லூரிகள் இயங்கி வருகின் றன. இதன் அருகில் உள்ள மாநிலக் கல்லூரி, இந்தி யாவின் பழமையான கல்லூரிகளுள ஒன்றாகும். இம்மாவட்டத்தில் பெண்கள், ஆண்கள,, கல்லூரிகள் பல உள்ளன, இஙகு அமைந்துள்ள அண்ணா தொழில்நுட்பக் பல்கலைக் கழகம், தொழில் நுட்பக் கல்வியைச் செயற்படுத்தி வருகின்றது, பல்வேறு அறி வியல் தொழில் கல்லூரிகள் அடையாறு பகுதியிலும், கிண்டியிலும் இயங்கிவருகின்றன. இசைக் கல்லூரி, திரைப்படத் துறைக் கல்லூரி போன்றவை இம் மாவட்டத்தில் இயங்கிவருகின்றன, இங்கு மருத்துவக் கல்லூரிகளும் அவை சார்ந்த பல்துறை மருத்துவப் பிரிவுகளும், கல்லூரிகளும் இயங்கி வருகின்றன.

**வரலாறு:** தொன்மையான வரலாற்றை இம் மாவட்டம் கொண்டிலங்குகிறது. இம்மாவட்டத்தின் பகுதிகளான மயிலாப்பூர், நுங்கம்பாக்கம் ஆகிய பகுதிகள் கல்வெட்டுகளில் குறிக்கப்பட்டுள்ளன. அதற்கு முன்பே சங்க காலத்தில் இப்பகுதி தொண்டை மண்டலத்தின் ஒரு பகுதியாக இருநதது. தொண்டை மண்டலத்தின் இருபத்தி நான்கு கோட்டங்களில் மணவிற் கோட்டத்தில் மாவட் டத்தின் சில பகுதிகள் அடங்கியிருந்தன. திரையர் ஆட்சிக்கு உட்பட்டுப் பின்னர், சங்க காலச் சோழர், பல்லவர், பிற்காலச் சோழர், விசயநகரப் பேரரசின் ஆட்சி ஆகியவற்றிற்கு உட்பட்டு இப்பகுதி விளங் கியது. விசய நகரப் பேரரசிற்கு உட்பட்ட சந்திரகிரி அரசுவழிவந்த அரசனின் கீழ்ப்பூவிருந்தவல்லியிலிருந்து ஆட்சி செய்த தாமல வேங்கடபதி நாயக்கன் என் பவன சென்னைக் கடற்கரையை ஒட்டி அமைந்த மத ராசு, சென்னைக்குப்பம், ஆர்குப்பம், மேலுப்பட்டு ஆகிய பகுதிகளை ஆங்கிலேயர்களுக்கு விற்றான். அதன் மூலம் சென்னையில் ஆங்கிலேயர் ஆட்சி ஏற் படுத்தப்பட்டது. அது முதல்சுதந்திரம் அடையும்வரை சிறப்புற இருந்து இன்று சென்னை தமிழகத்தின் தலைநகரமாகச் செயற்பட்டு வருகின்றது.

**சேலம் மாவட்டம்:** பணடைய கொங்கு நாட்டின் ஒரு பகுதியே இன்றைய சேலம் மாவட்டம் ஆகும். சேலம் மாவட்டம் சிறந்த இயற்கை வளஙகளையும் காவிரியின் வளத்தையும் பெற்ற மாவட்டம் ஆகும்.

**எல்லைகள்:** இம்மாவட்டம் நான்கு பக்கஙகளி லும் நிலத்தை எலலையாகக் கொணடுள்ளது. மாவட்டத்தின் வடக்கில் தருமபுரி மாவட்டமும் கிழக்கில் வட ஆர்க்காடு, தென்னார்க்காடு மாவட் டங்களும் தெற்கில திருச்சிராப்பள்ளி மாவட்டமும் மேற்கில் பெரியார் மாவட்டமும் அமைநதுள் ளன. இம்மாவட்டம் 9வட்டங்களைக் கொணடது. இதன் பரப்பளவு 8650 ச.கி.மீ. மாவட்டத்தின் தலைநகரம் சேலம் ஆகும்.இம்மாவட்டத்தில் உள்ள வட்டங்கள் சேலம், இராசிபுரம், நாமக்கல், திருச் செங்கோடு, சங்ககிரி, மேட்டூர் ஓமலூர், ஏர்க்காடு ஆத்தூர் ஆகியனவாகும்.




சேலம் மாவட்டம்

**நிலமும் தட்பவெப்பமும்:** இம்மாவட்டம் மலைத் தொடர்களையும் பள்ளத்தாக்குகளையும் கொண்ட பகுதி ஆகும். இங்குள்ள மலைகளுள் சேர்வராயன்மலை கல்வராயன்மலை, பச்சைமலை, கொல்லிமலை, ஏர்க்காடு மலை, திருச்செங்கோடு மலை, நைனா மலை, கபில மலை ஆகிய மலைகள் சிறப்பானவை. இம்மலைச் சரிவுகளில் காடுகள் மிகுதி. நாமக்கல், இராசிபுரம், ஆத்தூர் வட்டங்களில் பரவியுள்ள மலைகள் தால்காட்டு மலைகள் எனப்படுகின்றன. மலைகளைஅடுத்து ஆங்காங்கே குன்றுகளும் மேட்டுப் பகுதிகளும் இம்மாவட்டத்தில் காணப்படுகின்றன. திருச்செங்கோடு வட்டத்தின் தென்மேற்குப் பகுதியும் நாமக்கல் வட்டத்தின் தெற்குப் பகுதியும் சமவெளிகளைக் கொண்டுள்ளன. இம்மாவட்டத்தில் செம்மண் வளமும் கரிசல்மண் வளமும் காணப்படுகின்றன. சேலம் மாவட்டம்,காவிரி அதன் துணையாறுகளான திருமணி முத்தாறு, சரபங்க ஆறு ஆகியவற்றாலும் வசிட்ட நதி, சுவேத நதி ஆகியவற்றாலும் வளம்பெறுகின்றது. இம்மாவட்டத்தில் பருவக் காற்றுகளால் குறைந்த அளவே மழை பெய்கிறது. தமிழ்நாட்டின் வறண்ட மாவட்டங்களுள் இதுவும் ஒன்றாகும். சேலம் மாவட்டத்தின் மலைப்பகுதிகளில் குளிரும் சமவெளிப் பகுதிகளில் வெப்பமும் காணப்படுகின்றன. திசம்பர்-பிப்பிரவரி முடிய இம்மாவட்டத்தில் பனிக் காலமாகும். இக்காலத்தில் பகலில் வெப்பமிருப்பதால் இரவில் மிக்க குளிர் காணப்படும். மார்ச்சு முதல் சூன் முடிய கோடைக்காலமாகும். சூனிலிருந்து செப்டம்பர் மாதம் வரை இம்மாவட்டத்தில் தென் மேற்குப் பருவக் காற்றின் மூலம் மழை பெய்கின்றது. வடகிழக்குப் பருவக்காற்றால் இம் மாவட்டம் அக்டோபர் முதல் திசம்பர் முடிய மழை பெறுகின்றது. இங்கு ஆண்டிற்கு ஏறக்குறைய 8402 மி.மீ.அளவு மழை பெய்கின்றது. ஏர்க்காட்டில் ஆண்டுக்கு 1636.மிமீ. அளவு மழை பெய்கின்றது. அதிக அளவுமழை ஆத்தூர் வட்டத்தில்தான் பெய்கின்றது.

**வேளாண்மை:** இம்மாவட்டத்தின் வேளாண்மை ஆறுகள், கால்வாய்கள், ஏரிகள், குளங்கள், கிணறுகள் ஆகியவற்றின் மூலம் நடைபெறுகின்றது. இங்குள்ள மேட்டூர் அணை தமிழகத்தின் மிகச்சிறந்த அணையாக விளங்குகிறது. இவ்வணையிலிருந்து திருச்செஙகோடு, சங்ககிரி வட்டங்கள் நீரைப் பெறுகின்றன. மேட்டூர் மேற்குக் கரை கிழக்குக் கரைக்கால்வாய்த் திட்டங்கள் மூலம் மாவட்ட நிலங்கள் பாசன வசதி பெற்றுள்ளன. இம் மாவட்டத்தில் கிணற்றுப் பாசனமே பெரும் அளவில் நடைபெறுகின்றது.நெல், கரும்பு, வாழை, மரவள்ளிக் கிழங்கு, சோளம், கம்பு, நிலக்கடலை, கேழ்வரகு, பருத்தி, வெற்றிலை ஆகியவை இங்குப் பயிரிடப்படுகின்றன. மலைப்பகுதிகளில் ஆப்பிள், ஆரஞ்சு, திராட்சை, காப்பி, ஏலம், இலவங்கம் ஆகியவையும் பயிரிடப்படுகின்றன. இம்மாவட்டம் மாம்பழங்களுக்குப் பெயர் பெற்றது.

**கனிப்பொருள்கள்:** தமிழகத்தின் கனிப்பொருள்கள் கிடைக்கும் மாவட்டங்களில் முதன்மையான மாவட்டம் இதுவேயாகும். இம்மாவட்டத்தில் உள்ள கஞ்ச மலை, தீர்த்தமலை, கொல்லிமலைப் பகுதிகள இரும்பும், சேர்வராயன் மலைப்பகுதியில் அலுமினியமும், அலுமினிய மணவகைகளும் கிடைக்கின்றன. இந்தியாவிலேயே முதல தரமான உலோகத்தனிமம் (Magnesite) என்னும் தாது இம்மாவட்டத்தில் கிடைக்கின்றது. மறறும் இம்மா வட்டத்தில் சுண்ணாம்புக்கல், கல்நார், அப்பிரகம், இரும்புக் குரும ஈருபிரகை (Chromite), சிவிகா போன்ற கனிப்பொருள்களும் கிடைக்கின்றன.

**தொழில்கள்:** உழவுத் தொழிலுக்கு அடுத்தபடியாக இம்மாவட்டம் நெசவுத் தொழிலில் சிறந்து விளங்குகிறது. சேலம் நெசவுத் தொழிலுக்குப் புகழ் பெற்றது. தமிழகத்தில மிகுதியாகக் கைத்தறிகள் உள்ள மாவட்டம் சேலமே ஆகும். இம்மாவட்டத்தில் பருத்தி ஆடைகள், சேலம், புதுப்பாளையம், வெண்ணந்தூர், ஆட்டையாம்பட்டி, தாரமங்கலம், ஆகிய இடங்களில் பெருமளவில் நெய்யப்படுகின்றன. சேலம் நகரில் உள்ள அம்மாப்பேட்டை பருத்தி ஆடைகளுக்குப் புகழபெற்றது. இம்மாவட்டத்தில் பெருந் தொழிற்சாலைகள் பல உள்ளன. மோகனூரில் சர்க்கரை ஆலையும் பள்ளிபாளையத்தில் காகிதத் தொழிற்சாலையும், சேலம், ஆத்தூர், திருச்செங் கோடு, குமாரபாளையம், மேட்டூர் ஆகிய இடங்களில் பெரிய நூற்பு ஆலைகளும் உள்ளன. சேலத்தில் இரும்பு வெட்டி எடுக்கப்படுகிறது. இங்கு இரும்பு உருக்கு ஆலை ஒன்று நிறுவும் பணி நடைபெறுகிறது. சங்ககிரி என்னும் இடத்தில சிமிண்டுத் தொழிற் சாலையும் மேட்டூரில் இரசாயனப் பொருள தொழிற்சாலை, அலுமினியத் தொழிற்சாலை, முலாம் பூசும் தொழிற்சாலை, சந்தன எண்ணெய்த் தொழிற்சாலை, வனகபதி தொழிற்சாலை முதலியனவும் உள்ளன. இந்தியாவிலேயே பெரும் அளவில் சவ்வரிசி இம்மாவட்டத்தில்தான் தயாரிக்கப்படுகின்றது. இப்பெரும் தொழிற்சாலைகளைத் தவிர்த்துப் பல சிறு தொழில்களும் இம்மாவட்டத்தில் சிறப்பாக நடைபெறுகின்றன. கால்நடை வளர்த்தல், பால் பண்ணைகள், கோழி வளர்ப்பு ஆகியன இம்மாவட்டத்தில் சிறந்து விளங்குகின்றன. காடுகளின் மூலம் கிடைக்கும் மூலப்பொருள்களிலிருந்து பல சிறு தொழில்கள் நடைபெறுகின்றன.

**மக்கள்:** இம்மாவட்டத்தில் வேளாளரும், வன்னியருமே பெருந்தொகையினராக வாழ்கின்றனர். வேளாளர்கள், வெள்ளாளக் கவுண்டர் எனக் கூறப்படுகின்றனர். வன்னியர்கள், படையாச்சிக்கவுண்டர்கள் எனக் கூறப்படுகிறார்கள். துளுவ வேளாளர், கன்னடம் பேசும் மக்கள், செங்குந்தர், நாயக்கர் போன்ற இன மக்களும் ஆதிதிராவிடர்களும், மலைப் பகுதிகளில மலைவாழ் பழங்குடிகளும் இம்மாவட்டத்தில் வசிக்கின்றனர். இம்மாவட்டத்தின்மக்கள்தொகை 3,441,717 (1981). மக்கள் நெருக்கம் மிகுதியாகவுள்ள மாவட்டங்களுள் இது ஒன்றாகும்.

**போக்குவரத்து:** மாவட்டத்தின் தலைநகரமான சேலம் ஒரு முக்கிய போக்குவரத்து மையமாகும். இம் மாவட்டத்தில் உள்ள சிற்றூர்களுக்குக் கூடப் போதிய சாலை வசதிகள் செய்யப்பட்டுளளன. சேலத்திலிருந்து சென்னை, திருவனந்தபுரம், மைசூர், பாண்டிச்சேரி, திருச்சி, தஞ்சை, மதுரை, திருநெல்வேலி கன்னியாகுமரி போன்ற நெடுந்தொலைவு நகரங்களுக்குப் பேருந்துகள் செல்கின்றன. இம்மாவட்டத்தின் வழியாகக் காசி கன்னியாகுமரி தேசியத் நெடுஞ்சாலை செல்கிறது. சேர்வராயன் மலைப்பகுதிகள ஏர்க்காடு, கொல்லிமலைப் பகுதிகள் ஆகியவற்றிலும் சாலை வசதிகள் உள்ளன. இம்மாவட்டத்தில் அண்ணா போக்குவரத்துக் கழகம் என்ற அரசு நிறுவனம் சாலைப் போக்குவரத்தைக் கவனித்து வருகின்றது. இம்மாவட்டத்தில் உள்ள சேலம் இருப்புப்பாதை சந்திப்பு மிக முக்கிய மையமாகும். இந்தியாவின் நீண்ட இருப்புப்பாதை மேடையை (Platform) இந் நிலையம் பெற்றுள்ளது. சென்னையிலிருந்து சேலத்திற்கு அகல இருப்புப்பாதை செல்கிறது. சேலத்திற்கும் பெங்களூருக்குமிடையே குறுகிய இருப்புப்பாதை இப்பொழுது போடப்பட்டுள்ளது. சேலத்திலிருந்து மேட்டூருக்கு அகல இருப்புப்பாதையும், கடலூருக்குக் குறுகிய இருப்புப்பாதையும் செல்கின்றன. இம் மாவட்ட ஆறுகளில் படகுகளிலும் பரிசில்களிலும் போக்குவரத்து நடைபெறுகிறது.

**நகரங்கள்:** மாவட்டத்தின் தலைநகரமான சேலம் தமிழகத்தின் நான்காம் பெருநகரமாகும். இந் நகரம் வாணிகத்திற்கும் நெசவிற்கும் புகழ்பெற்றது. இந்நகரில் செவ்வாய்க்கிழமைதோறும் சந்தை கூடும். இந்நகரில் திரைப்பட அரங்குகள் மிகுதியாக உள்ளன. இம்மாவட்டத்தின் இரண்டாம் பெரிய நகரம் நாமக்கல் ஆகும். இது சேலம் திருச்சி நெடுஞ்சாலையில் அமைந்துள்ளது. இங்குள்ள கோட்டையில் ஆஞ்சநேயரின் 6.மீ. உயரச் சிலை புகழ்பெற்றது. இந்நகரில் கோழிப் பண்ணைகள் மிகுதி. வசிட்டா நதிக் கரையில் அமைந்துள்ள ஆத்தூர் நெல் வாணிகத்திற்குப் புகழ்பெற்றது. இந்நகரில் சவ்வரிசி உற்பத்தித் தொழிற்கூடங்கள் பல உள்ளன. இராசிபுரம் நகரம் கால்நடைகளுக்குப் புகழ்பெற்ற நகரமாகும். மேட்டூர் நகரம் காவிரி நீர்த்தேககமும், சுரங்க மின நிலையமும், தொழிற்கூடங்களும் உள்ள நகரமாகும். இம்மாவட்டத்தில் உள்ள திருச்செங்கோடு பாடல் பெற்ற தலமாகும். தாரமங்கலம் சிற்பங்களுக்குப் புகழ்பெற்ற ஊராகும். இம்மாவட்டம் பல சுற்றுலா நகரங்களையும் கொண்டு விளங்குகிறது. மேட்டூர் நீர்த்தேக்கத்தைக் காண நாடோறும்சுற்றுலாப் பயணிகள் பலர் வருகின்றனர். கோடை வாழிடங்களுள் ஒன்றான ஏர்க்காடு பல பூஙகாக்கள் நிறைந்த இடமாகும். இக்கோடை வாழிடம் பல இயற்கை அழகுகளைப் பெற்றுத் திகழ்கிறது. சங்ககிரி, நாமகிரிப் பேட்டை, பள்ளிபாளையம், பனமரத்துப்பட்டி, மோகனூர் போன்றவை பிற ஊர்களாகும்.

**கல்வி:** இம்மாவட்டத்தில் தொடக்கப் பள்ளிகள், நடுத்தரப் பள்ளிகள், உயர்நிலைப் பள்ளிகள், மேல் நிலைப் பள்ளிகள், கலைக்கல்லூரிகள் பொறியியற் கல்லூரி, தொழிற் நுட்பக் கல்லூரிகள் ஆகியன உள்ளன. சேலம் நகரில் பல கல்லூரிகள் உள்ளன. இந்நகரில் உள்ள சாரதா மகளிர் கல்லூரி புகழ்பெற்ற கல்லூரியாகும். ஏர்க்காட்டில் ஆங்கிலப் பள்ளிகள் உள்ளன. ஆசிரியர் பயிற்சிப் பள்ளிகளும் பல இம்மாவட்டத்தில் உள்ளன.

**வரலாறு:** சேலம் மாவட்டத்தில் புதிய கற்காலக் கருவிகள் பல கிடைத்துள்ளன. பெருங்கற்காலப் பண்பாட்டுக் கூறுகளும் காணப்படும் இம்மாவட்டத்தில் சங்க காலத்தை அடுத்துப் பல்லவர்களின் ஆட்சிக்குட்பட்டு விளங்கியது. சங்க நூல்களில் கூறப்படும் நடு கற்கள் பல இம்மாவட்டத்தில் கண்டுபிடிக்கப் பட்டுள்ளன. இவை கி.பி. 5-ஆம் நூற்றாண்டுக்குப் பிற்பட்டவையாகும். பல்லவர் ஆட்சிக்குப் பின் இம் மாவட்டம் சோழர் ஆட்சிக்குட்பட்டது. பாண்டியர்களின் கல்வெட்டுகளும் இம்மாவட்டத்தில் கிடைத்துள்ளன. நாயக்கர், விசயநகரப் பேரரசு ஆகியோர் ஆட்சிக்குட்பட்டுப் பின்னர் ஆங்கிலேயரின் ஆட்சிக் காலத்தில் இம்மாவட்டம் சுதந்திரப்போராட்டத்தில் முக்கிய பங்கு பெற்றது. இம்மாவட்ட ஓசூரில் பிறந்த இராசாசி சுதந்திர இந்தியாவின் முதல் தலைமை ஆளுநராக விளஙகினார். இந்தியா சுதந்திரம் பெற்றபின் இம்மாவட்டம் பல முன்னேற்றங்களைக் கண்டுள்ளது.

**தஞ்சாவூர் மாவட்டம்:** தமிழ்நாட்டின் நெற்களஞ்சியம் எனச் சிறப்பித்துக் கூறப்படும் தஞ்சாவூர் மாவட்டம் பழமையும் வரலாற்றுச் சிறப்பும் கொண்டு, கலைகளின் பிறப்பிடமாக விளங்கும்

மாவட்டமாகும். இம்மாவட்டத்தின் பரப்பளவு 9735 ச. கி.மீ. தலைநகரம் தஞ்சாவூர் ஆகும்.

**எல்லைகள்:** தஞ்சாவூர் மாவட்டத்தின் வடக்கில் தென்னார்க்காடு,திருச்சி மாவட்டங்களும், தெற்கில் புதுக்கோட்டை, இராமநாதபுரம், மாவட்டங்களும்,மேறகில் திருச்சிராப்பளளி மாவட்டமும், கிழக்கில் வங்கக கடலும் எல்லைகளாக உள்ளன. இம் மாவட்டம் ஆறு வட்டங்களாகப் பிரிக்கப்பட்டுள்ளது. அவையாவன: தஞ்சாவூர், கும்பகோணம், மயிலாடுதுறை, நாகப்பட்டினம், மனனார்குடி, பட்டுகோட்டை.




தஞ்சாவூர் மாவட்டம்

**நிலமும் தட்பவெப்பமும்:** தஞ்சை மாவட்டம் மலைகளற்ற, காடுகளற்ற பகுதியாகும். காவிரியின் கழிமுகப் பகுதியையும் மேட்டுப்பகுதியையும் இம் மாவட்டம் கொண்டுள்ளது. காவிரி ஏற்படுத்தியுள்ள சமவெளிப்பகுதி விளைச்சலுக்குப் பெரிதும் உதவுகிறது. தெற்கில் கடற்கரைப் பகுதியைக் கொண்டிலங்கும் இம்மாவட்டம் தமிழகத்தின் முக்கிய துறைமுகமாக விளங்கும் நாகப்பட்டினத்தைக் கொண்டுள்ளது. இத்துறைமுகத்தைத் தவிர இம் மாவட்டம் திருமுல்லைவாயில் தரங்கம்பாடி. கோடிக்கரை போன்ற துறைமுகங்களையும் கொண்டு விளங்குகிறது. இம்மாவட்டத்தின் காவிரிப் படுகைப் பகுதி வளமான மணவளத்தைப் பெற்றுத் திகழ்கிறது. மேட்டுப் பகுதியில் கால்வாய்கள் மூலம் பாசனங்கள் நடைபெறுகின்றன. இம்மாவட்டம் வடகிழக்குப் பருவக் காற்றின் மூலம் மிகுந்த மழையைப் பெறுகிறது கடற்கரைப் பகுதிகளில மழை மிகுதியாகப் பெய்கிறது. இங்கு ஆண்டிற்கு 111.37 மி.மீ. மழை பெய்கின்றது. அக்டோபர் நவம்பர் மாதங்களில் பெருமளவில் இங்கு மழை பெய்கின்றது. கோடைக் காலததில் இம்மாவட்டத்தில் நீர்வறண்டு விடும் அளவிற்கு வெப்பம் உள்ளது. கோடைக்காலத்தில் இம்மாவட்டத்தின் மிகுந்த அளவு வெப்பம் 36 6° செ. குறைந்த அளவு 32.5° செ. குளிர்காலத்தில் அதிகஅளவு வெப்பம் 23.5° வெப்பம் குறைந்த அளவு வெப்பம் 22.8°. திசம்பர் சனவரி மாதங்களில் குளிர் மிகுதி.

இம்மாவட்டத்தின் முதன்மையான ஆறு காவிரி ஆகும். இது குடகு நாட்டில் தோன்றி மைசூர் சேலம், பெரியார், திருச்சி மாவட்டஙகள் வழியாகத் தஞ்சை மாவட்டத்தில ஊடுருவிக் கொளளிடம் என்னும் கிளையாறாகப் பிரிந்தும், மேலும் பல்வேறு கிளையாறுகளாகப் பிரிநதும் வங்கக் கடலில் கலக்கிறது. இதன் கிளையாறுகள் வெண்ணாறு, வெட்டாறு, குடமுருட்டி, அரிசிலாறு, பாமணி ஆறு, கோரை ஆறு, வீரசோழனாறு, வடவாறு, திருமலைராயனாறு முதலிய ஆறுகளாகும்.

**வேளாண்மை.** வேளாணமை உறபத்தியில பணடுதொட்டுச சிறப்புற்று விளஙகும் இம்மாவட்டம் தமிழகத்தில் நெலவிளைச்சலில முதலிடம் பெற்றுவிளஙகுகிறது. இம்மாவட்டத்தில் 633,964 எக்டர் பரப்பளவில் நெல் பயிராகிறது. இம்மாவட்டத்தில் வாழை, கரும்பு, தென்னை, பருத்தி கேழ்வரகு, கம்பு, சோளம், பயறு வகைகள, நிலககடலை, மிளகாய், மூங்கில் போன்றவையும் பயிரிடப்படுகின்றன. இம்மாவட்டத்தின் வளமற்ற பகுதிகளில் முந்திரிக் காடுகள் வளாக்கப்படுகின்றன. வேளாணமை நிலங்களுக்குக் காவிரியில் இருந்து பல காலவாயகள் வெட்டப்பட்டுளளன. கலலணையில் நீரைத்தேககிப் பல்வேறு ஆறுகள் மூலம் நீர் பாய்ச்சப்படுகிறது.

**கனிப்பொருள்கள்:** இம்மாவட்டத்தில இக்காலத்தில் நிலஎணணெய் காவிரிப் படுகைகளில் நன்னிலம் வட்டத்தில் நரிமணம், மன்னார்குடி வட்டத்தில் கோவில்களப்பால் ஆகிய சிற்றூர்களில் கணடுபிடிக்கப்பட்டு நாள்தோறும் நிலஎண்ணெய் எடுக்கப்பட்டு வருகின்றது.

**தொழில்கள்;** இம்மாவட்டம் கைவினைப் பொருளகளுக்குப் புகழ்பெற்றது. நெசவுத் தொழிலில் குறிப்பாகப் பட்டு நெசவில் சிறப்பிடம் பெற்று இது விளங்குகிறது. உலோகப்பொருள் தயாரிப்பிலும்

தலைசிறந்து விளங்குகிறது. தஞ்சாவூர்த்தலையாட்டிப் பொம்மை, தஞ்சாவூர்த் தட்டு, பட்டுப்புடவைகள் முதலியன வெளிநாட்டுப் பயணிகளின் மனத்தைக் கவர்பவையாகும். கலைகளின் பெருமையை எடுத் தியம்பும் இம்மாவட்டத்தில் சிற்ப வேலைப்பாடும் சிறந்து விளங்குகிறது. உலோகப் பாத்திரங்கள். விளக் குகள் போன்றவை கும்பகோணத்தில் செய்யப்படு கின்றன. இசையினைத் தொன்றுதொட்டுப் பரப்பி வரும் இம்மாவட்டம் வீணை தயாரிப்பில் முதலிடம் பெற்று விளங்குகிறது. இம்மாவட்டத்தில் பட்டு நெசவு திருபுவனம், தஞ்சாவூர், கும்பகோணம், கூறை நாடு போன்ற நகரங்களில் நடைபெறுகின்றது. இம்மாவட்டத்தின் பல்வேறு பகுதிகளில் கூட்டுறவு பட்டுநெசவாலைகள் பல உள்ளன.

இம்மாவட்டத்தில் பல சிறுதொழில்கள் தனியா ரால் நடத்தப்படுகின்றன. சவர்க்காரம் (Soap) தயாரித்தல். பித்தளைப் பாத்திரம் தயாரித்தல், மெழுகு தயாரித்தல், அச்சுத் தொழில், சீவல் பாக்கு தயாரித்தல் போன்ற சிறுதொழில்களும் நடைபெறு கின்றன. இம்மாவட்டத்தின் கடற்கரைப் பகுதி களான வேதாரணியம், கோடிக்கரை, அதிராம் பட்டினம், தம்பிக்கோட்டை முதலிய இடங்களில் உப்பளங்கள் கட்டி உப்பு உற்பத்தி செய்யப்படு கின்றது. அதிராம்பட்டினத்தில் இரசாயன உப்பு உற் பத்தித் தொழிற்சாலை ஒன்று உள்ளது. தென்னை வளம் பெருகி உள்ள இம்மாவட்டம் தென்னை யிலிருந்துபெறப்படும் கயிற்றுத்தொழிற்சாலைகளைப் பெற்று விளங்குகிறது பட்டுக்கோட்டையில் கையால் செய்யப்படும் காகிதத் தொழிற்சாலையும் உளளது. மாவட்டத்தின் கடற்கரைப் பகுதியில் மீன்பிடிக்கும் தொழில் சிறந்து விளங்குகிறது. இம்மாவட்டத்தில் கரும்பு ஆலைகள் வடபாதிமங்கலம், குருங்குளம், மயிலாடுதுறை ஆகிய இடங்களில் உளளன. புதிய அரிசி ஆலைகள் அம்மன்பேட்டை, திருநாகேசுவரம், திருவாரூர், மன்னார்குடி, மயிலாடுதுறை, எருக்கூர். பட்டுக்கோட்டை, திருத்துறைப்பூண்டி ஆகிய இடங் களில் உள்ளன. இம்மாவட்டத்தின் தலைநகரமான தஞ்சாவூரில் நூலாலை ஒன்றும் உள்ளாடை தயா ரிப்பு நிறுவனமும் உள்ளன.

**மக்கள்:** தஞ்சாவூர் மாவட்டத்தின் மக்கள் தொகை 4,063,545 (1981). இம்மாவட்டத்தில் வேளாணமையை அடிப்படையாகக் கொண்டு வாழும் மக்கள் வெள்ளாளர் எனப்படுகின்றனர். முக்குலத் தோர் எனப்படும் கள்ளர், மறவர், அகம்படியர் மக் களும் பல பிரிவினர்களாக வாழ்கின்றனர். இவர்கள் தேவர், பிள்ளை, வாண்டையார், கண்டியர் போன்ற பல்வேறு பிரிவினராக உள்ளனர். இவர்களைத் தவிர



தஞ்சாவூர் கலைக்கூடம்

பார்ப்பனர்களும் இம்மாவட்டத்தில் மிகுதியாக வசிக் கின்றனர். அய்யம் பேட்டை, பாபநாசம், முத்துப் பேட்டை, அதிராம்பட்டினம், மல்லிப்பட்டினம், நாகப்பட்டினம் ஆகிய இடங்களில் இசுலாமியர்கள் மிகுதியாக வாழ்கின்றனர். கிறித்தவர்களும் மாவட் டத்தின்பல்வேறு நகரங்களில் வசிக்கின்றனர். மராட் டியர், சௌராட்டிரர் போன்ற இனமக்கள் சிற்சில இடங்களில் வசிக்கின்றனர்.

**போக்குவரத்து:** இம்மாவட்டம் சாலைகளாலும் தொடர்வண்டிப் பாதையாலும் தமிழ்நாட்டின் பல் வேறு நகரங்களுடன் இணைகின்றது. சோழன் போக்குவரத்துக் கழகம் என்னும் அரசு நிறுவனம் இங்குச் செயற்படுகிறது. சிற்றூர்களுக்கும் மாவட் டத்தின் பிற நகரங்களுக்கும் இப்பேருந்துகள் செல் கின்றன. தனியார் பேருந்துகளும் இம்மாவட்டத்தில் செயற்படுகின்றன. இம்மாவட்டத்தின் தலைநகரான தஞ்சையிலிருந்து சென்னை, திருச்சி, ஈரோடு, கரூர், கோயம்புத்தூர், மதுரை, விழுப்புரம், கடலூர் ஆகிய தமிழ்நாட்டின் முக்கிய நகரங்களுக்குப் பேருந்துகள் செல்கின்றன. கும்பகோணத்திலிருந்து வேலூர், திருப்பதி போன்ற நகரங்களுக்குப் பேருந்துகள் செல் கின்றன. இம்மாவட்டத்தில் உள்ள மயிலாடுதுறை, கும்பகோணம், தஞ்சாவூர், திருவாரூர் வழியாகத் தொடர்வண்டிப் பாதை செல்கிறது. இவற்றுள் மயி லாடுதுறை, தஞ்சாவூர், திருவாரூர் முக்கிய சந் திப்பு நிலையங்களாகும். இதன் தலைநகரான தஞ்சா வூரிலிருந்து சென்னைக்கு இப்போது வானூர்தியிற் செல்லும் வசதி உள்ளது.

**நகரங்கள்:** தஞ்சை மாவட்டம் சுற்றுலா மையங்களுக்குப் புகழ்பெற்ற நகரமாகும். இங்குச் சோழர் காலக் கோயில்கள் மிகுதியாக உள்ளன. தஞ்சாவூர், வெளிநாட்டுச் சுற்றுலாப் பயணிகளின் மனதைக் கவரும் ஒரு முக்கிய சுற்றுலா மையமாகும் இவ்வூரில் சோழப் பேரரசர் முதலாம் இராசராசன் கட்டிய பெரிய கோயில் உலகப் புகழ்பெற்றதாகும் இம் மாவட்டம் பல்வேறு சிறப்புகளைத் தன்னகத்தே கொண்டு விளங்குகிறது. திருவையாறு என்னும் ஊர் திருக்கோயிலுக்கும் இசைக்கும் புகழ்வாய்ந்தது. தியாகராசசுவாமிகளின் சமாதி இங்குள்ளது. அறுபடை வீடுகளுள் ஒன்றான சுவாமிமலையில் முருகன் கோவில் உள்ளது. இது திருவையாறு, கும்பகோணம் சாலையில் அமைந்துள்ளது இம்மாவட்டத்தின் முக்கிய வாணிக நகரம் கும்பகோணம் ஆகும். இவ்வூர் கோயில்களுக்குச் சிறப்புப் பெற்றது. 12 ஆண்டுகளுக்கு ஒருமுறை இவ்வூரில் மகாமகம் நடைபெறும், கும்பகோணத்திற்கு அருகில் உள்ள தாராசுரம் என்னும் ஊர் கோயிற்சிற்பக்கலைக்கும் பழமைக்கும் புகழ்பெற்றது. நாயன்மார்களுக்குக் கடவுள் காட்சி யளித்ததாகக் கூறப்படும் பாடல் பெற்றதிருக்கோயில்கள் பல நன்னிலம் பகுதியில் உள்ளன. திருவாரூர் இம்மாவட்டத்தின் பிறிதொரு முக்கிய நகரமாகும். இவ்வூரின் தேர் தமிழ்நாட்டில் புகழ்பெற்றது. இங்குள்ள தியாகராச சுவாமி திருக்கோயில் பழைமையும் புகழும் வாய்ந்தது. நாகப்பட்டினம் அருகில் உள்ள வேளாங்கண்ணி கிறித்தவர்களுக்குப் புனித தலமாக விளங்குகிறது. இங்குக் கடற்கரையின் அருகில் அமைந்துள்ள தேவாலயத்திற்குத் தமிழ்நாட்டின் பல்வேறு பகுதிகளில் இருந்தும் மக்கள் வருகை புரிகின்றனர். நாகப்பட்டினம் இம்மாவட்டத்தின் சிறந்த துறைமுகமாக விளங்குகிறது. இவ்வூருக்கு வடக்கில் உள்ள நாகூர் இசுலாமியரின் புனித தலமாகும். இங்குள்ள தர்கா மிகப்பெரிய தர்காவாகும். வேதாரணியம் என்னும் ஊர் பறவைகளின் சரணாலயமாக விளங்கும் ஊராகும். இங்கு இராமரின் பாதச் சின்னம் உள்ளது. மேலும், இம்மாவட்டத்திலுள்ள மன்னார்குடி, பட்டுக்கோட்டை போன்ற நகரங்களும் புகழ்பெற்றவை. பட்டுக்கோட்டையில் மனோரா எனக் கூறப்படும் அழகுமிக்க கட்டடம் உள்ளது. தஞ்சை மாவட்டம், சிற்பக் கலைக்கும், இசை, நாட்டியம், நாடகம் ஆகிய கலைகளுக்கும் புகழ்பெற்றது. இம்மாவட்டத்தில் பேராவூரணி, திருத்துறைப் பூண்டி, நீடாமங்கலம், பாபநாசம், குடவாசல், பொறையாறு, சீர்காழி போன்ற பிற முக்கிய ஊர்களும் உள்ளன. சோழர்களின் துறைமுக நகரமாக விளங்கிய காவிரிப்பூம்பட்டினம் சுற்றுலாப் பயணிகளின் கண்ணையும் கருத்தையும் கவரும் வகையில் அழகு செய்யப்பட்டுள்ளது.

**கல்வி:** இம்மாவட்டம் தொன்றுதொட்டுப் பண்பாட்டிலும் கல்வியிலும் சிறந்து விளங்கும் மாவட்டமாக உள்ளது. தமிழ் வளர்க்கச் சோழர்களும் பின் வந்த மராட்டியர்களும் அரும்பாடுபட்டனர். மராட்டிய மன்னர் சரபோசி அமைத்த சரசுவதி மகால் நூல்நிலையம் தஞ்சாவூரில் உள்ளது. இங்குப் பழமைமிக்க அரிய சுவடிகளும், ஓவியங்களும் காகிதச் சுவடிகளும் உள்ளன. இம்மாவட்டத்தில் உள்ள திருவாவடுதுறை மடாலயத்தினர் சைவசமயச் சார்புடைய நூல்களை ஆய்ந்து அச்சிட்டுவருகின்றனர். இம் மடாலயத்தில் உ.வே.சா., மகாவித்துவான் மீனாட்சி சுந்தரம் பிள்ளை போன்றோர் தமிழ்ப்பணி ஆற்றி உள்ளனர். தருமபுர மடாலயமும் இம்மாவட்டத்தில் தான் உள்ளது. இங்கு ஒரு தமிழ்க் கல்லூரி இயங்கி வருகின்றது. திருப்பனந்தாள் மடத்தினரும் தமிழ்ப் பணி செய்துவருகின்றனர். தஞ்சையை அடுத்துள்ள கருந்திட்டைக்குடி (கரந்தை)யில் தமிழ்ச்சங்கம் ஒன்று இயங்கி வருகின்றது. தஞ்சாவூரில் 1981-ஆம் ஆண்டில் தமிழ்ப் பல்கலைக் கழகம் நிறுவப்பட்டது. தமிழின உயர் ஆய்வு மையமாக இது விளங்குகிறது. இம்மாவட்டத்தில் பல தனியார் கல்லூரிகளும், அரசினர் கலைக் கல்லூரிகளும் உள்ளன. தஞ்சாவூரில் மருத்துவக் கல்லூரி ஒன்றும் உள்ளது திருவையாற்றில் இசைக்கல்லூரியும், வல்லம் என்னும் ஊரில் பெண்கள் தொழிற்நுட்பக் கல்லூரியும் உள்ளன. கலைக் கல்லூரிகள் பல தஞ்சாவூர், கரந்தை, பூம்புகார், கும்பகோணம், மயிலாடுதுறை, திருவாரூர், பொறையார், பூண்டி ஆகிய இடங்களில் உள்ளன.

**வரலாறு:** இம்மாவட்டம் தொன்மையான வரலாற்றைக் கொண்ட மாவட்டமாகும். இம் மாவட்டத்தில் பாயும் காவிரியைப் பற்றிப் பல இலக்கியங்கள் அழகாக எடுத்தியம்புகின்றன. ஐம் பெருங் காப்பியங்களுள் ஒன்றான சிலப்பதிகாரம் காவிரிப்பூம்பட்டினத்தை அழகுற வருணிக்கின்றது. கம்பர் இம்மாவட்டத்தில் உள்ள தேரழுந்தூர் என்னும் ஊரினர் ஆவார். பல்லவர்களின் ஆட்சிக்குட் பட்டிருந்த இப்பகுதியை விசயாலய சோழன் கி.பி. 850-இல் கைப்பற்றிச் சோழர் ஆட்சியை ஏற்படுத்தினான். சோழப் பேரரசர்களின் காலத்தில் தஞ்சாவூர், கங்கைகொண்ட சோழபுரம் ஆகியன தலை நகரங்களாக விளங்கின. முதலாம் இராசராசன் தஞ்சையில் 'தட்சிணமேரு' எனப்படும் தஞ்சைப் பிரகதீசுவரர் ஆலயத்தை உலகம் வியக்கும் வண்ணம் கட்டினான். அவனுக்குப் பின் வந்த அவன் மகன் இராசேந்திர சோழன் கங்கைவரை படையெடுத்துச் சென்றான். தலைநகரைக் கங்கை கொண்ட சோழ புரத்திற்கு மாற்றினான். சோழர்கள் ஆட்சிக்குப்பின் பிற்காலப் பாண்டியர்களின் ஆட்சி இப்பகுதியில்தான்



தமிழகச் சிற்றூர்



நீலகிரிக் குடியிருப்பு



வேளாண் நிலம்


சம்மு காசுமீர்
இமாசலப் பிரதேசம்
பஞ்சாபு
அரியானா
உத்திரப் பிரதேசம்
இராசசுத்தான்
குசராத்து
மத்தியப் பிரதேசம்
பீகார்
மேற்கு வங்கம்
ஒரிசா
மகாராட்டிரம்
ஆந்திரப் பிரதேசம்
கோவா
கருநாடகம்
கேரளம்
தமிழ்நாடு
சென்னை
பாண்டிச்சேரி
அரபிக்கடல்
வங்காள விரிகுடா
இந்தியப்பெருங்கடல்
அருணாசலப் பிரதேசம்
அசாம்
நாகாலாந்து
மேகாலயா
மணிப்பூர்
திரிபுரா
மிசோராம்

ஏற்பட்டது. பாண்டியனுக்குப்பின் சிறிது காலம் முக மதியர்களின ஆட்சிக்குட்பட்டிருந்த இப்பகுதி விசய நகரப்பேரரசுக் காலத்தில் நாயக்கர்களின ஆட்சிக்குட் படடது நாயக்கர்கள் காலத்தில செவ்வப்பன் எனப வர் தஞ்சை ஆட்சியைக்கவனித்து வந்தார். அவருக குப்பின் சேவப்ப நாயககன், இரகுநாத நாயக்கர் ஆகி யோரால இப்பகுதி ஆளப்பட்டது. மராட்டியர்களின் ஆதிக்கம் கி.பி 1675-இல் இப்பகுதியில் ஏற்பட்டது. சிவாசியின் மகன் வெஙகாசி இப்பகுதியில மராட்டியர் ஆதிக்கத்தை ஏற்படுத்தினார். ஆங்கிலேயர்கள் பிரெஞ்சுச் காரர்ஆகியோரின் இநதிய ஊடுருலால இப் பகுதியை ஆணடுவநத மராட்டியர்கள் ஆங்கிலேய ரின் ஆதிக்கத்திற்குட்பட்டவராயினர். ஆஙகிலேயரின் ஆட்சிக்குட்பட்டபகுதியாகத் தஞ்சாவூர்கி பி.1799இல் இருந்தது. தஞ்சை மராட்டிய மன்னருக்கு வாரிசு இல்லாததால் கி.பி. 1841-இல தஞ்சாவூர்க் கோட டையின் ஒரு பகுதியை ஆங்கிலேயர் கைப்பற்றினர். அன்று முதல் 1947 வரை இப்பகுதி ஆஙகிலேயரின் ஆதிக்கத்தின் கீழ் இருந்தது. 1947-இல் இந்தியா சுதந்திரம் பெற்றபின் இம்மாவட்டம் வளாசசி பலவற்றைக் கணடு விளங்கிவருகின்றது

**தருமபுரி மாவட்டம்:** இம்மாவட்டம் 1965-ஆம் ஆண்டு சேலம் மாவடடத்திலிருந்து பிரிக்கப்பட்டுத் தனி மாவட்டமாக இயங்கி வருகிறது. இநதியா சுதந்திரம பெற்ற பின்னர்த் தமிழ்நாட்டில் புதிதாகத் தோற்றுவிக்கப்பட்ட முதல் மாவட்டம் இதுவே ஆகும்.

**எல்லைகள்:** தருமபுரி மாவட்டத்திற்கு வடககில கருநாடகம், ஆந்திரப்பகுதிகளும், கிழக்கில் வடஆர்க் காடு தென் ஆர்க்காடு மாவட்டங்களும் தெற்கில் சேலம்மாவட்டமும், மேற்கில பெரியார் மாவட்டமும் கருநாடக மாநிலமும எல்லைகளாக அமைநதுள்ளன. இம்மாவட்டம் தமிழ்நாட்டின் வடமேற்கு மூலையில அமைந்துள்ளது இம்மாவட்டத்தில் தருமபுரி, ஓசூர், பாலக்காடு, தேனகனிக்கோட்டை, கிருட்டிணகிரி, ஊத்தங்கரை, அரூர், பென்னாகரம் ஆகிய எட்டு வட்டங்கள உள்ளன. மாவட்டத்தின் தலைநகரம் தருமபுரி. மாவட்டததின் பரப்பளவு 9633 சகி.மீ. ஆகும்.

**நிலமும் தட்பவெப்பமும்:** இம்மாவட்டத்தில் மலை களும் காடுகளும் நிறைந்துள்ளன. மாவட்டத்தின் வடபகுதி கடல் மட்டத்திலிருந்து 3,000 அடி உயரம் உடையது; தென்பகுதி 1300 அடி உயரம் உடையது. எனவே, இம்மாவட்டத்தின் நிலப்பகுதி ஏற்றத்தாழ்வு கள் மிக்கனவாகக் காணப்படுகின்றது. இம்மாவட்டத் தில் சவ்வாது மலை, சேர்வராயன்மலை, சித்தேரி, வட்டமலை போன்ற மலைத்தொடர்கள் உளளன.




தருமபுரி மாவட்டம்

பல்வகைப் பாறைகளை இம்மாவட்டம் கொண்டுள ளது. இம்மாவட்டத்தில் காவிரி, தென்பெணணை, வாணி, சின்னாறு போனற ஆறுகள் உள்ளன தர்மபுரி மாவட்டத்தில் ஆண்டிற்குச் சராசரியாக 845மி. மீ. மழை பெய்கிறது. தருமபுரி மாவட்டம் வறணட நிலப் பகுதியைக கொணடுள்ள மாவட்டமாகும்.

**வேளாண்மை:** தருமபுரி மாவட்டம வேளாண்மை மாவட்டமாக விளங்குகிறது. கம்பு, வாழை, கேழ வரகு, சோளம், நெல், நிலக்கடலை, பருததி, கரும்பு. திராட்சை, மா போனறவைபயன படுபொருளகள பயிரிடப்படுகின்றன. கிணறுகள், ஏரிகள மூலமாகப் பாசன வசதிகள் செயயப்பட்டுள்ளன. கிருட்டிணகிரி அணைககட்டு, சிற்றாறுகளின் நீாதேககங்கள ஆகிய வற்றின் மூலமாகப் பாசன வசதிகள செய்யப பட்டுள்ளன. காடுகளும் இம்மாவட்டத்தில் உள்ளன. கால் நடைகள மூலமும் உழவாகளுக்கு வருவாய் கிடைக்கின்றது.

**கனிப்பொருளகள.** தருமபுரி மாவட்டத்தில திப் பம்பட்டி, சினனம்பட்டி ஆகிய இடங்களில சுணணாம் புக்கல படிகஙகள காணப்படுகினறன. தீர்த்தமலைப் பகுதியில் இரும்புககனி கிடைக்கின்றது. கருப்புப் பளிங்குக்கல வகை இமமாவட்டத்தில் பெருமளவில் உள்ளன. இவை வெட்டி யெடுக்கப்பட்டு அயல்நாடு களுக்கு ஏற்றுமதி செய்யப்படுகின்றன.

**தொழில்கள்:** இம்மாவட்டத்திலுள்ள ஒசூர் கிருட்டிணகிரி, பாகலூர், நல்லம்பள்ளி ஆகிய இடங்களில் பட்டுத் தொழில் சிறந்த முறையில் நடைபெறுகின்றது. ஒசூரில் பெரிய தொழிற்பேட்டை உள்ளது. இங்குப் பல்வேறு தொழிற்சாலைகள் அண்மைக் காலத்தில் நிறுவப்பட்டுள்ளன. இருசக்கர இயந்திர வண்டிகள் இங்குப் பெருமளவில் செய்யப்படுகின்றன. இந்நகருக்கு அருகில் உள்ள இராமநகர் என்ற இடத்தில் மின்சார மற்றும் மின்னணுப் பொருள் உற்பத்தித் தொழிற்சாலை உள்ளது. தருமபுரி மாவட்டம் பின் தங்கிய மாவட்டமாதலால் பல்வேறு தொழிற்சாலைகள் நிறுவ அரசு ஊக்கம் அளித்து வருகின்றது.

**மக்கள்:** இம்மாவட்டத்தில் பல்வேறு இன மக்கள் வாழ்கின்றனர். அவர்களுள் 60 சதவிகிதத்தினர் தமிழும், 25 சதவிகிதத்தினர் தெலுங்கும், 10 சதவிகிதத்தினர் கன்னடமும் 3 சதவிகிதத்தினர் உருதும் எஞ்சியோர் பிறமொழிகளும் பேசுகின்றனர். இம்மாவட்டத்தில் உள்ள ஊர்கள் பல பிறமொழிக் கலப்புப் பெயர்களால் கூறப்படுகின்றன. அல்லி (Halli) ஒசா (Hosa) அலே (Halae) எனப் பல ஊர்களின் பெயர்கள் முடிவுறுகின்றன அரூர் வட்டத்தில் இலம்பாடிகள் என்ற மலைவாழ் மக்கள் வாழ்கின்றனர். இவர்கள் இராசசுத்தானியக் கிளைமொழியைப் பேசுகின்றனர். இம்மாவட்டத்தின் மக்கள்தொகை 1,997,060(1981).

இம்மாவட்டத்தில் மூதறிஞர் இராசாசி ஒசூர் வட்டத்தில் தொரப்பள்ளி என்னும் ஊரில் பிறந்தார். இம்மாவட்டத்து மக்களுள் பலர் இராணுவத்தில் பணியாற்றி வருகின்றனர்.

**போக்குவரத்து:** இம்மாவட்டத்தில் அன்னை சத்தியா போக்குவரத்துக்கழகம் என்றஅரசு நிறுவனம் இயங்கி வருகின்றது. இதன் தலைமையகம் தருமபுரி ஆகும். மாவட்டத் தலைநகரமான தருமபுரியிலிருந்து மாவட்டத்தின் பிற நகரங்களுக்கும் சிற்றூர்களுக்கும் சாலை வசதிகள் செய்யப்பட்டுள்ளன. சென்னையிலிருந்து சேலம் செல்லும் அகல இருப்புப் பாதை மாவட்டத்தின் வழியாகச் செல்கிறது பெங்களூரிலிருந்து சேலம் செல்லும் குறுகிய இருப்புப் பாதையும் உள்ளது.

**நகரங்கள்:** இம்மாவட்டத்தின் தலைநகரம் தருமபுரி. இது வரலாற்றுச் சிறப்புமிக்க ஊராகும். இது ஒரு வட்டமாகவும் செயற்படுகிறது. இந்நகரத்தில் கி.பி. 8-ஆம் நூற்றாண்டில் தோன்றிய மல்லிகார்ச்சுன சுவாமி கோவில் உள்ளது. நுளம்பர்களின் சிற்ப வேலைப்பாடுகளைக் கொண்டுள்ள இக்கோயிலில் நுளம்பர் கல்வெட்டுகள் பல உள்ளன. இவ்வூரில் அரிய நாத சுவாமி கோயிலும் சமண சமய எச்சங்களும் உள்ளன. இங்குத் தாமசு மன்றோ என்பவர் வாழ்நது வந்தார். தருமபுரியிலிருந்து சேலம் செல்லும் பாதையில் 10 கி.மீ. தொலைவில் அதியமான் கோட்டை என்ற ஊர் உள்ளது. இது கடையெழு வள்ளலான அதியமான நெடுமானஞ்சியின் தலைநகராக விளங்கிய ஊர். இவவூரில் அகழாய்வுகளும் செய்யப்பட்டுள்ளன. பாப்பாரப்பட்டியில் சுதந்திரப் போராட்ட வீரர் சுப்பிரமணிய சிவா வாழ்ந்தார், அவரது சமாதி இவ்வூரில் உள்ளது தீர்த்தமலை என்னும் ஊர் கட்டடக் கலைச் சிறப்புப் பெற்றது. இம்மாவட்டத்தில் உள்ள பிறிதொரு முக்கிய நகரம் கிருட்டிணகிரி ஆகும் இங்கு மைசூர்ப் போர்களின் பொழுது கட்டப்பட்ட கோட்டை ஒன்று உள்ளது இந்நகரம் இராணுவத்தளமாகவும் அக்காலத்தில் விளங்கியது இம்மாவட்டத்தில் உள்ள ஒசூர் நகரம் பெங்களூருக்கு அண்மையில் உள்ள தொழில் நகரமாகும். இங்குப் பல தொழிற்சாலைகள் உள்ளன இம்மாவட்டத்தின் சிறந்த சுற்றுலா இடமாக ஒகேனக்கல் விளங்குகிறது இது தமிழ்நாட்டின் அழகிய நீர்வீழ்ச்சிகளுள் ஒன்று. காவிரியாறு பாறைகளின் நடுவில் ஊடுருவிச் செல்வது கண்கொள்ளாக் காட்சியாகும். இவ்வூர் தருமபுரியிலிருந்து 46 கி.மீ தொலைவில் அமைந்துள்ளது இங்குத் தங்குவதற்கான வசதிகள் செய்யப்பட்டுள்ளன இவ்வூர் அருகில் உள்ள ஊட்டமலையில் முதலைப் பண்ணையொன்று அமைந்துள்ளது இம்மாவட்டத்தில் உள்ள மல்லப்பாடி மகாராசாக் கடை ஆகிய இடங்களில் வரலாற்றுக் காலத்திற்கு முற்பட்ட ஓவியங்கள் கண்டுபிடிக்கப்பட்டுள்ளன. இம்மாவட்டத்தில் ஊத்தங்கரை, காவிரிப் பட்டினம், பாலகோடு, பொன்னாகரம் தெங்கனிக்கோட்டை முதலிய ஊர்களும் உள்ளன.

**கல்வி:** இம்மாவட்டம் கல்வி வளர்ச்சியில் மிகவும் பின்தங்கி உள்ளது. இங்குப் படித்தவர்கள் 28 விழுக்காட்டினரே ஆவர். மாவட்டத்தின் தலைநகரமான தருமபுரியில் கல்லூரிகள் உள்ளன. மாவட்டத்தின் பிற நகரங்களிலும் தொடக்கப் பள்ளிகளும் உயர்நிலைப் பள்ளிகளும் மேல்நிலைப் பள்ளிகளும் கல்லூரிகளும் உள்ளன.

**வரலாறு:** இம்மாவட்டம் தொன்மையான வரலாற்றை உடையது. வரலாற்றுக் காலத்திற்கு முற்பட்ட ஓவியங்கள், புதிய கற்காலக் கைக்கோடரிகள் பல இம்மாவட்டத்தின் பல்வேறு இடங்களில் கண்டுபிடிக்கப்பட்டுள்ளன. இம்மாவட்டத்தில் கண்டுபிடிக்கப்பட்டுள்ள ஓடு கற்களும், புலிக்குத்திக் கற்களும், நவகண்டக் கற்களும், கல்வெட்டுகளும், இம்மாவட்டத்தின் தொன்மை வரலாற்றைச் சிறப்புறக் கூறும் சான்றுகளாகும். 'அதிகமான் பெருவழிக் கற்

களும் இம்மாவட்டத்தில் கண்டுபிடிக்கப்பட்டுள்ளன சங்க காலத்தில் தகடூரைத் தலைநகரமாகக் கொண்டு ஆட்சிபுரிந்த அதியமான்கள இப்பகுதியில் பல்லாண் டுகள் சிறப்பான ஆட்சியை அமைத்தனர். இப்பகுதி, அதிகமான்களை அடுத்து கி.பி.6-ஆம் நூற்றாணடளவில் பல்லவர்களின் ஆட்சிக்குட்பட்டது. நுளம்பர், பாணர், கங்கர் முதலான பல்லவச் சிற் றரசர்களின் கீழ்ச் சிறப்புற விளங்கிய இப்பகுதியைச் சோழப் பேரரசர் முதலாம் இராசராசன் வென்று சோழ ஆட்சியை ஏற்படுத்தினார். இப்பகுதி கி.பி.13 -ஆம் நூற்றாண்டு வரை சோழப்பேரரசின் ஆதிக்கத் திற்குட்பட்டிருந்தது. மூன்றாம் குலோத்துங்க சோழனின் சிற்றரசனாக விளங்கிய விடுகாதழகிய பெருமாள என்பவன இப்பகுதியைச் சிறப்பாக ஆணடதுடன் அரூர் வட்டம் கம்பைய நல்லூரில் கோயில் ஒன்றையும் கட்டினான். இப்பகுதி பின்னர் ஒய்சளர் களின் ஆட்சிக்குட்பட்டது. ஒய்சள அரசர் வீரராம நாதன் கிருட்டிணகிரி வட்டத்திலுளள குந்தானியில் தலைநகரை நிறுவி அங்குக் குந்தீசுவரர் ஆலயத்தைக கட்டினான். ஒய்சாளருக்குப் பின விசயநகரப்பேரரசு மைசூர் உடையார்கள், திப்புசுல்தான், ஆங்கிலேயர் ஆகியோரின ஆட்சிக்குட்பட்ட இப்பகுதி, சுதந்திரம் பெற்றபின் மாவட்டமாகப்பிரிக்கப்பட்டு மாவட்ட ஆட்சித் தலைவரின் கீழ இயங்கி வருகிறது.

**திருச்சிராப்பள்ளி மாவட்டம்** தமிழ்நாட்டின் நடுவில் அமைந்துள்ள மாவட்டம். இம்மாவட்டத்தின் வழியாகக் காவிரி ஆறு ஓடி மாவட்டத்தை வளம் கொழிக்கச் செய்கிறது.

**எல்லைகள்:** திருச்சிராப்பள்ளி மாவட்டத்தைச் சுற்றிலும் நிலப் பகுதிகளே எல்லைகளாக உளளன. இம்மாவட்டத்தின் வடக்கில் பெரியார், சேலம், தென ஆர்க்காடு மாவட்டஙகளும் கிழக்கில் தஞ்சாவூர் மாவட்டமும், தெற்கில் புதுக்கோட்டை இராம நாதபுரம், மதுரை, அண்ணா மாவட்டங்களும் மேற்கில் கோயம்புத்தூர் மாவட்டமும் எல்லை களாக உளளன. இம் மாவட்டத்தின் பரப்பளவு 11,095 ச.கி.மீ. ஆகும்.

**நிலமும் தட்பவெப்பமும்:** இம்மாவட்டம் பெரம் பலூர், முசிறிப் பகுதியில் பச்சை மலைப்பகுதியைக் கொண்டு விளங்குகிறது. காவிரியின் இருபக்கங்களி லும் வளம் கொழிக்கும் சமவெளியினையும் பெற்றுத் திகழ்கிறது. இம்மாவட்டத்தில் உள்ள பசசைமலைச் சிகரத்தின் அதிக அளவு உயரம் ஏறக்குறைய (கடல் மட்டத்திலிருந்து) 1,130 மீட்டராகும். கரூர் வட்டம் சமவெளியையும் தெற்கில் அரங்கமலைப்பகுதியையும் கொண்டு விளங்குகிறது. குளித்தலைப் பகுதியில்




திருசசிராப்பளளி மாவட்டம்

தொப்பசாமிமலை, வெள்ளிமலை ஆகிய மலைகளை யும், உடையார்பாளையம் இலால்குடி வட்டங் களில் சமமான நிலப்பகுதியையும் கொணடு விளங்கு கிறது. இம்மாவட்டத்தில் காவிரியே முதன்மை யான ஆறாகும். இதற்கு, அமராவதி, ஐயாறு நந்தியாறு, வெள்ளாறு, நொய்யல் போன்ற துணை யாறுகள் உள்ளன. இம்மாவட்டத்தில் செம்மண நிலப்பகுதியும் கரிசல் நிலப்பகுதியும் காணப்படுகிறது. களிமண் வகை ஆங்காங்கே பரவியுள்ளது. வேளாண் மைக்கு ஏற்ற நிலப்பகுதிகள் முசிறி, இலால்குடி, திருச்சிராப்பள்ளி, குளித்தலை, கரூர்ப் பகுதிகள் ஆகியவை கரூா வட்டத்தின சிலபகுதிகளும் பெரம்பலூர் வட்டமும் வறட்சிமிக்க பகுதிகளாகும்.

இம்மாவட்டம் அதிக அளவு தட்பவெப்பநிலை யைப் பெற்றுத் திகழ்கின்ற மாவட்டங்களுள ஒன்று. ஈரப்பதம் குறைந்த அளவே உள்ளது. இம்மாவட்டத் தில் குளிர்காலம் திசம்பர் முதல் பிப்பிரவரி முடியவுள்ள காலமாகும். கோடைக்காலம் மார்ச்சு முதல் மே வரையும், மழைக்காலம் செப்டமபர் முதல நவம்பர் வரையும் உளளன. தென்மேற்குப் பருவக்காற்றா லும் வடகிழக்குப் பருவக்காற்றாலும் இது மழையைப் பெறுகின்றது.

**வேளாண்மை:** இம்மாவட்டம் ஆறுகளின் மூல மாக வேளாண்மைக்கு நீர்ப்பாசன வசதியைப் பெற் றுள்ளது. ஆறுகளிலிருந்து கால்வாய்களை மூலம் நிலங் களுக்கு நீர்ப்பாசன வசதி செய்யப்பட்டுள்ளது. இம் மாவட்டத்தில் காவிரி ஆற்றின கால்வாய்கள் மூலம் முசிறி, உடையார்பாளையம், இலால்குடி, குளித்

தலை, திருச்சிராப்பள்ளி ஆகிய வட்டங்கள் பயன் பெறுகின்றன. கரூர் வட்டத்தில் அமராவதி ஆறு வேளாண்மைக்குப் பயன்படுகின்றது. கிணற்றுப் பாசனம் மூலமும் வேளாணமை நடைபெறுகின்றது. நெல், கரும்பு, வாழை, சோளம், கம்பு, புகையிலை நிலக்கடலை, பருத்தி போனறவை மாவட்டத்தின் முக்கிய விளைபொருள்களாகும். மலைப்பகுதிகளில் பழவகைகளும் காடுகளில் மூங்கில்கள் போனறவை யும் உறபததியாகின்றன.

**கனிப் பொருள்கள்:** குறிப்பிடத்தக்க அளவிற்கு இம்மாவட்டத்தில் கனிப்பொருள்கள் கிடைக்க வில்லை. சிமிணடுத் தொழிலுககுத் தேவையான கனிக்கல்லும் (Gypsum) சுணணாம்பும தாலமியா புரப் பகுதியில் கிடைக்கின்றன.

**தொழில்கள்** இம்மாவட்டத்தில் தொழிற்சாலை கள் பெரிதும் வளர்சசியடைநதுள்ளன. பலவேறு தொழில்கள் இம்மாவட்டத்தில் நடைபெறுகினறன. திருச்சி நகரம்தொழிலகளின் முக்கிய இடத்தை வகிக் கின்றது இங்கு நடுவணஅரசினகொதிகலன் தயாரிப்புத் தொழிற்சாலை திருவரம்பூர் என்னும் இடததிற்கு அருகில இயங்கிவருகின்றது. திருசசிராப்பளளியில இருப்புப்பாதை வண்டிகளின் தொழிற்கூடம் ஒன்றும் துப்பாக்கித் தொழிற்சாலையும் உள்ளன. இம் மாவட்டத்தில் தால்மியாபுரம், கரூர், அரியலூர் ஆகிய நகரங்களில் சிமிணடுத் தொழிற்சாலைகளும் உளளன. சர்க்கரை ஆலைகள பேட்டைவாய்த்தலை, காட்டூர் போன்ற ஊர்களில் உளளன. இம்மாவட்டத் தில் கரூர், குளித்தலை, திருச்சிராப்பளளி நகரங களில் நெசவாலைகள செயற்பட்டு வருகினறன அரிசி ஆலைகளும், மாவு அரைக்கும் ஆலைகளும் ஆங்காங்கே உளளன. திருசசிராப்பளளி நகரைச் சுற்றிலும் சிறுதொழில் நிறுவனங்கள் வளர்ச்சி அடைந்து வருகின்றன. கரூர் நகர் பேருந்துகளுக்கு உடலமைப்புக் கட்டும் தொழிலுக்குப் புகழ்பெற்றது. புகளூர் என்ற இடத்தில் தமிழ்நாடு அரசின் காகிதத் தொழிற்சாலை செயற்பட்டு வருகின்றது.இரசாயனத் தொழிலகளும், தோல்பதனிடும் தொழில்களும் மாவட்டத்தில் ஆங்காஙகே நடைபெற்று வருகின் றன. பாய்முடைதல், கம்பளிப் போர்வை தயாரித் தல் பிறகுடிசைத் தொழில்கள ஆகியவை மாவட்டத் தின் பொருளாதாரத்தை மேம்படுத்துகின்றன.

**மக்கள்:** இம்மாவட்டத்தில் வேளாண்மைத் தொழில் புரியும் வேளாளர், வன்னியர், கொங்கு, வேளாளர், அம்பலக்காரர், முக்குலத்தோர், ஊராளி கள், இரெட்டியார், நாட்டுக்கோட்டைச் செட்டியார் கள், கிறித்தவர்கள், முசுலீம்கள், தாழ்த்தப்பட்ட மக்கள், மலையினத்தவர்போன்ற மககள வாழ்ந்து வருகின்றனர். பசசைமலைப் பகுதியில் மலையாளி களும் பெரம்பலூர்ப் பகுதியில இருளர்களும் வாழநது வருகினறனர். மாவட்டத்தின மக்கள தொகை 36,12,320 (1981)

**கல்வி.** கல்வி வள்ர்சசியில் இம்மாவட்டம் சிறநது விளஙகுகிறது திருசசி நகரில்பல கலைக் கலலூரிகள உள்ளன. பொறியியல கல்லூரியும் சட்டக கலலூரி யும் இந்நகரில் இயங்கி வருகின்றன. திருச்சிநகரில் பாரதிதாசன பல்கலைக் கழகம இயங்கி வருகின்றது. இப்பல்கலைக கழகத்தின் பல்வேறு கல்லூரிகள மாவட்டததின் பல நகரஙகளில இயஙகி வருகினறன. தொடக்கப்பாடசாலைகளும், உயா நிலைப்பள்ளி, மேல்நிலைப்பள்ளிகளும் பல ஊர்களில் கல்வியைக் கற் பிக்கின்றன.

**போக்குவரத்து** தமிழ்நாட்டின் நடுவில் திருசசி ராப்பளளி அமைந்துளளதால் போக்குவரத்து சிறந்த முன்னேற்றத்தைப் பெறறுளளது. குறுகிய இருப்புப் பாதை சென்னையிலிருநது திருசசிராப்பளளி வழியா கத் தென்னக நகரங்களுக்குச் செல்கிறது. அகல இருப்புப்பாதை ஈரோட்டிற்குத் திருச்சியிலிருந்து செல்கிறது. சாலைப் போககுவரத்தில் தமிழ்நாடு அரசிற்குச் சொந்தமான தீரன் சின்னமலை போககு வரத்துக் கழகம் செயற்பட்டு வருகின்றது. பலவேறு நகரங்களுக்கும் திருச்சியிலிருந்து தொடர்சசியாகப பேருந்துகள் உளளன. திருச்சியில் வானொலி நிலை யம் ஒன்று இயங்கி வருகின்றது. திருச்சியில் வானூர்தி நிலையம் ஒன்றும் செயறபட்டு வருகின்றது. இங்கி ருந்து தமிழ்நாட்டின பிறநகரஙகளுககும் பிற மாநிலங களுக்கும் வானூர்திகள செல்கின்றன. சில செய்தித் தாள்கள் திருச்சியிலிருந்து வெளியிடப்படுகின்றன.

**நகரங்கள்:** மாவட்டத்தின் தலைநகரமான திருச்சி வரலாற்றுப் புகழ் பெறற நகரமாகும். முககிய போக்குவரத்து நகரமாகவும் இது செயறபடுகின் றது. தொழிற்சாலைகள மிகுதியான நகரமாக இது விளங்குகிறது. கரூர் நகரம் சஙக காலச சேரர்களின தலைநகரமாக விளங்கியது. இது திருச்சி-ஈரோடு சாலையில் அமைந்துள்ளது. பெரம்பலூர், முசிறி, குளித்தலை, திருவரங்கம் போன்றவை மாவடடத்தின் முக்கிய நகரங்கள் ஆகும். இமமாவட்டத்தில தஞ்சை மாவட்டத்திற்கு அடுத்துக் கோயில்கள் நிறைந்து உள்ளன. திருச்சிராப்பள்ளி, திருவானைக்கா, திருவரங்கம், குமாரவயலூர், கடம்பர்கோயில், தான் தோன்றிமலை, சமயபுரம் போன்ற ஊர்கள் கோயில களால், புகழ்பெற்றவை. திருச்சி உச்சிப்பிள்ளையார் கோயில் சிறப்புப்பெற்றது.

**வரலாறு:** வரலாறறில் திருச்சிராப்பள்ளி மாவட்டம் முக்கிய இடத்தை வகிக்கிறது. சங்க காலத்தில் சோழர்களின் தலைநகரமாக விளங்கிய உறையூர். இப்பொழுது திருச்சியின் ஒரு பகுதியாக விளங்குகிறது. கரிகாலச் சோழன் இந்நகரின்கண் இருந்து ஆட்சி புரிந்தான். சோழர்களுக்குப் பின் சேராகளின் கீழ் இப்பகுதி சில காலம் இருந்தது. இம்மாவட்டத்தில உளள கரூர் நகரம் சேரர்களின் தலைநகரமாக விளங்கியது. பிற்காலச் சோழர்கள் காலத்தில் தஞ்சாவூர் தலைநகரமாகி இப்பகுதிகள் அவர்களின் ஆட்சிக்கு உட்பட்டு விளங்கி வந்தன. பாணடியர்களும் பின்னர் முசுலீம்களும் இப்பகுதியைத் தங்களின ஆதிக்கத்தினகீழ்க் கொண்டுவந்தனர். விசுவநாதர் என்னும் நாயக்கர் காலத்தில் கி.பி. 16-ஆம் நூறறாண்டில திருச்சி மாவட்டம் முழுமையும் நாயககர் ஆட்சிக்குட்பட்டது. ஆஙகிலேயருககும் மைசூர் அரசர்களுக்கும் நடந்த போர்களில இப்பகுதி முக்கிய பஙகு கொண்டது. மராட்டியர்கள திருச்சியின்மீது படையெடுத்துச சந்தாசாகிபின் இரணடு சகோதரா களையும கொனறதுடன் சநதாசாகிப்பைச் சிறை பிடிக்கவும் செய்தனர். மூராரிராவ் குட்டி என்பவா திருச்சியின் ஆளுநராக நியமிக்கப்பட்டார். இக் காலத தில் சந்தாசாகிப்பிற்குப் பிரெஞ்சுக்காரர்களும், ஆர்க்காடு நவாபின் மகனான முகமது அலிககு ஆஙகிலேயர்களும் உதவி புரிந்தனர். இவர்கள பல் வேறு போர்களில் ஈடுபட்டனர். இறுதியில ஆஙகிலேயர்கள் ஆதிக்கத்தில் திருச்சி பலவேறு நிகழ்ச்சிகளைக் கணடது. ஆங்கிலேயர் ஆதிக்கத்தினகீழ் வந்த பின் இப்பகுதி மாவட்டமாக செயற்படத் தொடங்கியது. சுதந்திரம் பெற்றபின் தனித்த மாவட்டமாகச் செயறபட்டு வருகினறது.

**திருநெல்வேலி கட்டபொம்மன் மாவட்டம்:** பொருநை ஆற்றின் வளத்தையும், தொன்மைப்புகழையும் பெற்று விளங்கும் மாவட்டம். திரு என்னும சிறப்புப் பெயரைப் பெற்று விளங்கும் இம்மாவட்டம் சீமை என்றும் கூறப்படும். திருநெல்வேலி என்பதற்கு ஒரு கதை கூறப்படுகிறது. சிவபெருமான் வழிபாட்டிற்காக உலர்த்தி வைக்கப்பட்டிருந்த நெல் ஊர் முழுவதும் பெய்த மழையால் நனையாமல் காக்க சிவனே வேலி அமைத்தார் எனபதற்காக இவ்விடம் திருநெல்வேலி எனப் பெயர்பெற்றது என்பது அக் கதை. இது நெல்லை மாவட்டம் என்றும் கூறப்படும். திருநெல்வேலிமாவட்டம் இரண்டாகப் பிரிக்கப்பட்டுத் திருநெல்வேலிகட்டபொம்மன் மாவட்டம் என்றும் சிதம்பரனார் மாவட்டம் எனறும் பெயரிடப்பட்டது.

**எல்லைகள்:** திருநெல்வேலி கட்டபொம்மன் மாவட்டம் வடக்கே இராமநாதபுரம் காமராசர் மாவட்டங்களையும், கிழக்கே சிதம்பரனார் மாவட்டத்தையும், தெற்கேகன்னியாகுமரி மாவட்டத்தையும், மேறகே மேற்குத தொடர்ச்சி மலையையும் எல்லைகளாகக கொணடுள்ளது. இம்மாவட்டத்தின் பரப்பளவு 6646 கி.மீ. ஆகும். இம்மாவட்டம நிருவாக வசதிக்காக 1986-ஆம் ஆண்டு இரண்டாகப் பிரிக்கப்பட்டது. இம்மாவட்டம் திருநெலவேலி, பாளையங கோட்டை, சங்கரன்கோயில், அம்பாசமுத்திரம், நாங்குநேரி, இராதாபுரம், தென்காசி, வீரகேரளம் புதூர், செங்கோட்டை, சிவகிரி ஆகிய வட்டஙகளைக் கொண்டுளளது. மாவட்டத் தலைநகர் திருநெல்வேலி.



பச்சைமலைக் குனறு

**நிலமும் தட்பவெப்பமும்:** இமமாவட்டத்தின் மேற்கு எல்லையான மேற்குத் தொடர்ச்சிமலை இம்மாவட்டத்தையும கேராளவையும் பிரிக்கிறது. இம்மலைத் தொடரின் நீளம் 160 கி மீ. ஆகும். இது தென்காசி வரை வளைந்தும் அங்கிருந்து பாபநாசம் வரை நேராகவும்பின்னர்த்தென்கிழக்கே வளைந்தும் ஓடிக் கன்னியாகுமரிக்கு 15 கி.மீ. தொலைவு வரை நீண டுள்ளது. இம்மலைத் தொடரில பல கணவாய்கள் உள்ளன. இம்மாவட்டத்தில் அழகுமிக்கமலைகள் பல உளளன. இவற்றினூடே சமவெளிகளும் பளளத் தாக்குகளும் உள்ளன. சிவகிரிமலை, அகத்தியமலை, ஐந்தலைப் பொதிகை ஆகியன இம்மாவட்டத்தின் மலைகளாகும். சமவெளிகள் நெல்லை மாவட்டத்தின் மேற்குத் தொடர்ச்சி அடிவாரம் முதல் கிழக்குப் பகுதி முழுமையும் பரவியுள்ளன. குற்றாலப் பகுதி மேடுபள்ளஙகள் பாறைகள் நிறைந்த பகுதியாகும். தாமிரபரணி ஆற்றுப் பகுதி வளமான பகுதியாகும். சங்கரன்கோவில், அம்பாசமுத்திரம், நெல்லை வட்

டம் ஆகியவற்றில் உயர்ந்த மேட்டுப் பகுதி காணப்படுகிறது. இம்மாவட்டத்தில் மணற்குன்றுகளும் கரிசல் நிலப் பகுதிகளும் காணப்படுகின்றன. இம்மாவட்டத்தில், தனித்த சிறப்பானதொரு பகுதி 'தேரிகள்' எனப்படும் பகுதியாகும். இவை செம்மணற் பகுதி. இது வேறு மாவட்டங்களில் காணப்படவில்லை.

இம்மாவட்டத்தில் பல ஆறுகள் ஓடுகின்றன. இவை மேற்குத் தொடர்ச்சி மலையில் உருவாகும் ஆறுகளாகும். இம்மாவட்டத்தின் ஆறுகளுள் புகழ் மிக்க ஆறு தாமிரபரணி ஆகும். இது பொதிகை மலையில் பேயாறு, உள்ளாறு, பாம்பாறு, களரியாறு, சோலையாறு ஆகிய சிற்றாறுகளாகத் தோன்றுகிறது. புன்னைக்காயல் என்னுமிடத்தில் வங்கக் கடலில் கலக்கிறது. இம்மாவட்டம் இவ்வாற்றினால் மிகுந்த வளத்தைப் பெறுகின்றது. இம்மாவட்டத்தில் பல சிற்றாறுகளும் உள்ளன. அவை மணிமுத்தாறு, சம்பு நதி, கருணை ஆறு, பச்சை ஆறு, சிற்றாறு, கோதண்டராம ஆறு, நம்பியாறு, வைப்பாறு, தீர்த்தக்கரைஆறு, செந்தூரணியாறு, பொங்குமலைஆறு, கருமேனிஆறு, அனுமன்நதி, வாலமலையாறு, கோட்டைமலையாறு போன்றவையாகும். இம்மாவட்டத்தில் உள்ள குற்றால நீர்வீழ்ச்சி குற்றாலத்தின் குன்றுகளில் பல நீர்வீழ்ச்சியாக ஓடிவிழுந்து அனுமன் நதியில் சேருகின்றது. திருநெல்வேலி கட்டபொம்மன் மாவட்டம் ஆண்டிற்கு 990 மி.மீ. மழை பெறுகின்றது. நாங்குநேரி, சங்கரன்கோவில் வட்டங்கள் குறைந்த அளவு மழையைப் பெறுகின்றன. திருநெல்வேலி கட்டபொம்மன் மாவட்டத்தில் மலைப்பகுதியில் மழை மிகுதி. இம்மாவட்டத்தின் காடுகள் பெரும்பாலும் மலைப்பகுதிகளில் காணப்படுகின்றன. இப்போது காடுகள் வளர்ச்சியோடு தோட்ட வளர்ச்சியும் இங்கு மிகுந்துள்ளது. பாபநாசம் காடுகளில் புலிகள் காணப்படுகின்றன. இங்குப் புலிகள் புகலிடம் ஒன்று அமைக்கப்பட்டுள்ளது.

**வேளாண்மை:** இம்மாவட்டத்தின் நடுவில் ஓடும் தாமிரபரணியால் இம்மாவட்டம் மிகுந்த வளம் பெறுகிறது. ஆற்று நீர் வேளாண்மைக்குப் பயன்படுத்தக் கூடியதாகப் பல அணைகளும் இங்குக் கட்டுப்பட்டுள்ளன. அவை மணிமுத்தாறு, பாபநாசம் அணைகள், சிரிமூலப்பேரி அணை, இராமாநதித்திட்டம், கருணைத் திட்டம் போன்றவையாகும். இம்மாவட்டத்தின் திருநெல்வேலி, அம்பாசமுத்திரம் வட்டங்களில் நெல்லும், சங்கரன்கோவில் வட்டத்தில் பருத்தியும் மிளகாயும் பெருமளவில் விளைகின்றன. மேலும் இம்மாவட்டத்தில் புன்செய்ப் பயிர்களான உளுந்து, சோளம் போன்றனவும் தோட்டப்பயிர்களான காப்பி, இரப்பர், ஏலக்காய் போன்றனவும் உற்பத்தியாகின்றன. இங்குப் பனைமரங்கள் செழித்து வளர்கின்றன. காடுகளில் உயர் வகை மரங்களும் காணப்படுகின்றன.

**கனிப்பொருள்கள்:** இம்மாவட்டத்தில் சிமிண்டு தயாரிக்கப் பயன்படும் சுண்ணாம்புக்கல்லும், மணல், அப்பிரகம், காரீயகம் போன்ற தாதுப்பொருள்களும் கிடைக்கின்றன.

**தொழில்கள்:** வேளாண்மைக்கு அடுத்து இம்மாவட்டத்தில் நெசவுத் தொழில் சிறந்து விளங்குகின்றது. இம்மாவட்டத்தில் நெசவு ஆலைகள் விக்கிரமசிங்கபுரம், சங்கரன்கோவில், தச்சநல்லூர், வீரவநல்லூர், செங்கோட்டை, தாளையூத்து, நாங்குனேரி போன்ற ஊர்களில் உள்ளன. இந்தியா சிமிண்டுத் தொழிற்சாலை தாளையூத்து என்ற இடத்தில் உள்ளது. இங்குள்ள சூளை இந்தியாவிலேயே மிகப்பெரிய சூளையாகும். சங்கரன்கோயிலில் தாவர எண்ணெய் (Vanaspathi) தொழிற்சாலை ஒன்று உள்ளது. மேலும் இம்மாவட்டத்தில் தீப்பெட்டித் தொழிற்சாலைகளும், மூட்டைப்பூச்சி ஒழிப்பு மருந்து நிறுவனங்களும், பனைப் பொருள்கள் தயாரிப்பு நிறுவனங்களும், பருத்தி அரைக்கும் ஆலைகளும் உள்ளன.

**மக்கள்.** பிள்ளைமார், முக்குலத்தோர், செங்குந்தர், பரதவர், பார்ப்பனர் முதலியபலவேறு சமூகத்தினரும் இம்மாவட்டத்தில் வசிக்கின்றனர். மீன்பிடிக்கும் தொழிலை மேற்கொண்டுள்ள பரதவருள் பெரும்பாலோர் கிறித்தவ சமயத்தைச் சார்ந்துள்ளனர். இம்மாவட்டத்தில் இசுலாமியர் சிறிய அளவில் வாழ்கின்றனர். காணியர், பலியர், பளிஞர் போன்ற மலை வாழ் மக்களும் வாழ்கின்றனர்.

**போக்குவரத்து:** இம்மாவட்டம் நல்ல சாலை வசதிகளைப் பெற்றுத் திகழ்கிறது. இராணி மங்கம்மாள் காலத்தில் பலசாலைகள் இங்கு அமைக்கப்பட்டன. ஆங்காங்கே ஆறுகளின் குறுக்கே பாலங்கள் அமைக்கப்பட்டுள்ளன. மாவட்டத்தின் தலைநகரமான திருநெல்வேலியிலிருந்து பல நகரங்களுக்குப் பேருந்துகள் செல்லுகின்றன.

இம்மாவட்டத்தின் தொடர்வண்டி நிலையங்களில் திருநெல்வேலி, தென்காசி, முக்கிய சந்திப்பு நிலையங்களாகும். இங்கு நாங்குநேரி வட்டம் தவிரப் பிற வட்டங்களில் தொடர்வண்டிப் பாதை உள்ளது. மீட்டர் அளவு இருப்புப்பாதையே இப்பகுதியில் போடப்பட்டுள்ளது. இங்கு வானொலி நிலையம் ஒன்றும் உள்ளது.

**நகரங்கள்:** இம்மாவட்டத்தின் தலைநகரமான திருநெல்வேலி நகரம் தமிழகத்தின் புகழ்வாய்ந்த

நகரங்களுள் ஒன்றாகும். தாமிரபரணியின் வடகரையில் அமைந்துள்ள இந்நகரத்தையும் பாளையங்கோட்டையையும் கி.பி.1844-இல் கட்டப்பட்ட பாலம் ஒன்று இணைக்கின்றது. இந்நகரில் சைவ வேளாளர்கள் மிகுதியான வாழ்கின்றனர். இந்நகரம் தமிழ் வளர்ச்சிக்குச் சிறந்த தொண்டாற்றியுள்ளது. இந்நகரில் மதுரை திரவியம் தாயுமானவர் இந்துக் கலலூரி உள்ளது. திருநெல்வேலி நகருக்கு அருகில் பாளையங்கோட்டை உள்ளது. இந்நகரில் கல்வி நிலையங்கள் பல உள்ளன. நாயக்கர் காலத்தில் இங்குச் சேனை இருந்தமையால் இது பாளையங்கோட்டை எனப்பட்டது. முக்கூடல் என்று முன்பு கூறப்பட்ட சீவலப்பேரி திருநெல்வேலியிலிருந்து 17 கி.மீ. தொலைவில் உள்ள ஊராகும். கல்வெட்டுகளிலும் இலக்கியங்களிலும் இவ்வூர் திருமாலிருஞ்சோலை எனக் குறிக்கப்பட்டுள்ளது. நெல்லையிலிருந்து வடக்காக 3 கி.மீ. தொலைவில அமைந்துள்ள ஊர் தச்சநல்லூராகும். இம்மாவட்டத்தில் தாளையூத்து, தென்காசி, அம்பாசமுத்திரம், கடையம், ஆழ்வார் குறிச்சி, அரியநாயகிபுரம், சேரன்மாதேவி, சிவபுரி, செங்கோட்டை, சங்கரநயினார்கோயில், கரிவலம்வந்தநல்லூர், திருமலைபுரம், பனையூர், நாங்குநேரி, கல்லிடைக்குறிச்சி, பத்தமடை; கடையநல்லூர், சொக்கம்பட்டி, குற்றாலம் போன்ற சிறப்பான ஊர்களும் உளளன. இம்மாவட்டத்தில். உளள குற்றாலம் ஒரு சிறந்த சுற்றுலாத்தலமாகும். இங்குச் சுற்றுலாப் பயணிகள் தங்க வசதிகள் உள்ளன. இவ்வருவியில் குளித்தால் பிணிநீங்கும் எனக்கூறப்படுகிறது. குற்றால அருவி இலக்கியங்களில் புகழ்ந்து கூறப்படுகிறது.

**கல்வி:** இம்மாவட்டம் கல்வி வளர்ச்சியில் முன்னேறி உள்ளது. முக்கிய நகரங்களில் கலலூரிகள் இயங்கி வருகின்றன. இம்மாவட்டத்தில் உள்ள பாளையங்கோட்டையில் பல கல்வி நிலையங்கள் உள்ளன. எனவே, இதனைச் 'சிறிய ஆக்சுபோர்டு' என்று கூறுவர். அறிஞர் பலர் இம்மாவட்டத்தில் தோன்றி மாவட்டத்திற்குப் புகழ் சேர்த்துள்ளனர்.

**வரலாறு:** இம்மாவட்டம் தொல்லியல் சிறப்பும் வரலாற்றுச் சிறப்பும் மிக்க ஊராகும் இம்மாவட்டததின் பல இடங்களில் நுண்ணிய கற்கருவிகளும் முதுமக்கள தாழிகளும் உரோமானிய நாணயங்களும் கிடைத்துள்ளன. இம்மாவட்டத்தைச் சார்ந்த ஆதிச்சநல்லூர் அகழாய்வு சிறப்புப் பெற்ற ஒன்றாகும். பாண்டியர் ஆட்சிக்குட்பட்டுப் பின்னர் இப்பகுதி நீண்டகாலம் அவர்கள் ஆட்சியிலிருந்து, பின்பு சோழர்களின் ஆட்சிக்குட்பட்டது. சோழர் ஆட்சி நலிவுறத் தொடங்கியபின் கி.பி.13-ஆம் நூற்றாணடில் பிற்காலப் பாணடியர் ஆட்சியின்கீழ் இப்பகுதி வந்தது. பாண்டியர்கள் காலத்தில் இசுலாமியர் ஆதிக்கம் சிறிது சிறிதாக இப்பகுதியில் ஏற்பட்டது. மாலிக்காபூர் படையெடுப்பின் விளைவாகப் பாணடியர் ஆட்சி சீர்குலையத் தொடங்கியது. சேராகளும் சில காலம் இப்பகுதியில் ஆதிக்கம் செலுத்தினர். விசயநகரப் பேரரசுக் காலத்தில் திருநெல்வேலிப் பகுதி தெலுங்குத் தளபதிகளின்கீழ் வந்தது. சேரர்கள் கி.பி.15-ம் நூற்றாண்டில் இப்பகுதியைப் படையெடுத்துத் தாக்கிப் பெரும் பகுதிகளைக் கைப்பற்றினர். ஐரோப்பியர் வருகை கி.பி.16-ஆம நூற்றாணடில் இப்பகுதியில் ஏற்பட்டது. இக்காலத்தில் பாளையக்காரர்கள் கலகம் இங்கு ஏற்பட்டது. இக்கலகங்கள் சிவகங்கை, நாங்குநேரி போன்ற பகுதிகளில் ஏற்பட்டன. திருநெல்வேலி மாவட்டத்தில் இக்கலகங்களை அடக்கி ஆங்கிலேயர் அதனைத் தஙகளின் ஆட்சிக்குக் கொண்டு வந்தனர். இந்தியா விடுதலை அடையும் வரை ஆங்கிலேயர் ஆட்சிக்குட்பட்டு இம்மாவட்டம் விளங்கியது.

**தென்னார்க்காடு மாவட்டம்:** ஆர்க்காட்டு நவாபுகள் ஆண்ட பகுதிக்கு அருகில் ஓடிய பாலாற்றுக்குத் தெற்கில் இருந்த பகுதியை ஆங்கிலேயர்கள் தென் ஆர்க்காடு என்று குறிப்பிட்டனர். முதன் முதலாக ஆங்கிலேயர்களால் அமைக்கப்பட்ட மாவட்டம் தென்னார்க்காடு மாவட்டமே ஆகும்.

**எல்லைகள்:** இம்மாவட்டத்தின் எல்லைகளாக வடக்கில் செங்கற்பட்டு வடார்க்காடு மாவட்டங்களும், தெற்கில் தஞ்சாவூர், திருச்சிராப்பள்ளி மாவட்டங்களும், மேற்கில் சேலம், வடஆர்க்காடு மாவட்டங்களும், கிழக்கில் வங்காள விரிகுடாவும் அமைந்துளளன. இம்மாவட்டத்தின் பரபபளவு 10,898 ச.கி.மீ. ஆகும். தென்னார்க்காடு மாவட்டம் 12 வட்டங்களை உளளடக்கி உள்ளது. அவை கடலூர், சிதம்பரம், காட்டுமன்னார் கோயில், பண்ருட்டி, உளுந்தூர்ப்பேட்டை, திட்டகுடி, விருத்தாசலம், கள்ளக்குறிச்சி, செஞ்சி, திண்டிவனம், திருக்கோயிலூர், விழுப்புரம் ஆகியவையாம். இம்மாவட்டத்தின் தலைநகரம் கடலூர் ஆகும்.

**நிலமும் தட்பவெப்பமும்:** வேளாணமை வளமிக்க நிலப்பகுதியை இம்மாவட்டம் பெற்றுள்ளது. மலைகளையும் காடுகளையும் வயல்வெளிகளையும், கரிசல் மண பகுதியையும், கிழக்கில் கடற்கரையையும் பெற்றுள்ளதாக இம்மாவட்டம் அமைந்துள்ளது. களிமண் பகுதிகளும் இஙகுள்ளன. இம்மாவட்டத்தில் கள்ளக்குறிச்சி வட்டத்தில்தான் மிகுந்த மலைகள் உள்ளன. இங்குக் காடுகளும் மிகுதி. இப்பகுதியில் கல்வராயன்



தென்னார்க்காடு மாவட்டம்

மலை உள்ளது.' இது வளமுடைய மலையாகும். இம்மலைப்பகுதியில் தேக்கு, சந்தனம், கடுக்காய் மூங்கில், முந்திரி போன்றவை வளருகின்றன. இம் மலைப் பகுதியில் ஏலம், இலவங்கம், காப்பி போன்ற வற்றையும் பயிரிட முடியும். திருக்கோவலூர் வட்டத் திலும் சிறு சிறு குன்றுகள் உள்ளன. இங்குள்ள முள்ளூர்மலை சங்க நூல்களில் சிறப்பித்துக் கூறப் படுகிறது. கடலூர் வட்டத்தில் கேப்பர்மலை என்னும் செங்கல்மலை உள்ளது. இம்மலை வண்டிப்பாளையம் மலை என்றும் கூறப்படுகிறது. இப்பகுதியில் இருந்த பிரான்சிசு கேப்பா என்னும் ஆங்கிலேயா கி.பி.1796, இல் இம்மலையின் ஒரு பகுதியில் மாளிகை ஒன்றைக் கட்டினார். அதுமுதல் இது கேப்பர்மலை எனக் கூறப்படுகிறது. கல்வராயன் மலையின் தொடர்ச்சி செஞ்சிப் பகுதியில் செல்கின்றது. செஞ்சி வட்டத்தின் எல்லையாக இது அமைந்துள்ளது. இது செஞ்சி மலை எனக் கூறப்படுகிறது இங்கும் அடர்ந்த காடுகள் உள்ளன.

இம்மாவட்டத்தில் கெடில நதி பெண்ணையாறு சங்கராபரணி, பரவனாறு, கொள்ளிடம், துரிஞ்சிலாறு, செஞ்சியாறு முதலான ஆறுகள் ஓடுகின்றன. இம் மாவட்டத்தில் முகலாறு அணை. புத்தனேந்தல் அணை, திருவதிகை அணை, வர்ணமாதேவி அணை, திருவகீந்திரபுரம் அணை, வீடூர் அணை ஆகிய அணைகள் கட்டப்பட்டுள்ளன. இம்மாவட்டத்தில் பல ஏரிகளும் உள்ளன. அவற்றுள் குறிப்பிடத் தக்கது வீராணம் ஏரியாகும். வெலிங்டன் நீர்த் தேக்கம் இம்மாவட்டத்தில்தான் உள்ளது. தென்னார்க்காடு மாவட்டம் ஆண்டுக்குச் சராசரி 1270 மி மீ மழை பெய்கின்றது. கடற்கரையை ஒட்டியுள்ள கடலூர் வட்டத்தில்தான் ஆண்டுக்குச் சராசரி 2000 மி மீ மழை பெறுகின்றது வடகிழக்குப் பருவக் காற்றால் தான மிக்க மழையைப் பெறுகின்றது செப்டம்பர், அக்டோபர், நவம்பர் மாதங்கள் இம் மாவட்டத்தின் மழைக் காலமாகும் திசம்பர் முதல் பிப்பிரவரி முடிய உள்ள காலம் பனிக்காலம் ஆகும். மார்ச்சு முதல் சூன் முடியக் கோடைக்காலம் ஆகும்

**வேளாண்மை:** நிலக்கடலை விளைச்சலில் இம்மா நிலம் நிறைவு எய்தி உள்ளது. இம்மாவட்டத்தில் நெல், கரும்பு, கேழ்வரகு, முந்திரி, கம்பு, எள் சோளம், துவரை, வரகு, சாமை, பருத்தி முதலியவை பயிரிடப்படுகின்றன. இம்மாவட்டம் வேளாண்மை யில் சிறந்து விளங்கும் மாவட்டமாகத் திகழ்கிறது. வேளாண்மைக்கு ஏற்ற ஆற்றுநீர் வளத்தையும், ஏரிகள் கிணற்றுப்பாசன வளத்தையும் இம்மாவட்டம் பெற்றுள்ளது. நெல் இம்மாவட்டத்தில் 3,20,365 எக்டேர் பரப்பளவிலும், நிலக்கடலை 1,47,114 எக்டேர் பரப்பளவிலும் பயிராகின்றன. இதனால் வேளாண்மை சார்ந்த பிறதொழில்களும் இம்மாவட் டத்தில் வளர்ச்சி அடைந்துள்ளன.

**கனிப்பொருள்கள்:** இம்மாவட்டத்தில் சுண்ணாம் புக் கல் மிகுதியாகக் கிடைக்கின்றது. உயர் வகைக் களிமண் காடாம்புலியூருக்கு வடக்கிலும், பண்ருட்டி கடலூர் ஆகியவற்றை அடுத்த பகுதிகளிலும் கிடைக் கின்றது பணிக்கன்குப்பம் என்ற இடத்தில் பீங்கான் செய்யப் பயன்படும் வெள்ளைக் களிமண் கிடைக் கின்றது. மாமண்டூர்ப் பகுதியில் துத்தநாகம், ஈயம், செம்புப் படிவங்கள் இருப்பது கண்டுபிடிக்கப்பட் டுள்ளது. இம்மாவட்டத்தில் உள்ள புவனகிரி என்னும் இடத்தில் இப்போது மண்எண்ணெய் கண்டுபிடிக்கப் பட்டுள்ளது.

**தொழில்கள்:** தொழில் வளர்ச்சியில் பின்தங்கிய மாவட்டமாக விளங்கிவந்த இம்மாவட்டம் இப் பொழுது வளர்ச்சி அடைந்து வருகின்றது இம்மாவட் டத்தில் கிடைக்கும் கனிப்பொருள்களின் அடிப்படை யில் பல்வேறு தொழிற்சாலைகள் வளர்ந்து வருகின் றன. வேளாண்மை சார்ந்த தொழிற்கூடங்களும் இங்கு உள்ளன. நெய்வேலியில் 600 மெகாவாட்டு மின்சாரம் உற்பத்தி செய்யப்படுகிறது. இதன் மூலம் இம்மாவட்டத் தொழில் வளர்ச்சிக்கு 17 விழுக்காடு மின்சாரம் கிடைக்கிறது. சிறுதொழில் வளர்ச்சி நிலை யங்கள் மூலம் தொழிற்பேட்டைகள் இம்மாவட்டத் தில் தொடங்கப்பட்டுள்ளன. கடலூர்-சிதம்பரம் சாலையில் 'சிறுதொழில் வளர்ச்சி' நிறுவனத்

தொழிற்சாலைகள் அமைக்கப்பட்டுப் பல்வேறு தொழிலகள நடைபெறுகின்றன. இம்மாவட்டததில நெய்வேலி, கடலூர், பணருட்டி, திணடிவனம்,காட்டு மன்னாாகோயில, வானூர், செஞ்சி, உளுந்தூரப் பேட்டை ஆகிய இடங்களில் கனிமங்கள சார்ந்த தொழிற கூடங்கள உள்ளன. மின்சாரக் கருவிகள் தயாரிககும் நிறுவனம் வடலூரில் உள்ளது. சிதம்பரம் கள்ளக்குறிச்சி, விக்கிரவாண்டி ஆகிய இடஙகளில் நூலாலைகளும், காடாம்புலியூர் எனற இடததில் சாராயம் காய்ச்சும் தொழிலும், வாசனைத் திரவியங்கள், உணவுத் திண்பணடங்கள, இனிப்புப்பணடஙகள் தயாரிக்கும் தொழிறசாலைகளும் இம்மாவட்டத்தில உளளன. நெலலிக்குப்பம, பெரிய செவலை, முண்டியமபாக்கம் ஆகிய இடஙகளில் சர்க்கரை உறபத்தியும் கடலூரில் உரம் தயாரிக்கும் நிறுவனமும், வடகுத்து என்ற இடத்தில காகித உற்பத்தியும் உள்ளன. இவற்றைத் தவிரச் சிறறூர்களில பல சிறு தொழில்கள நடைபெறுகின்றன. இம்மாவட்டம் கடற்கரைப் பகுதியைப் பெற்றுத் திகழ்வதால கடறசாாந்த தொழில்கள் பல நடைபெறுகின்றன. மீன்பிடித்தல், உப்புத் தயாரித்தல் போனற தொழிலகள் மேம்பாடு கணடுள்ளன. கடலூர் இம்மாவட்டத்தில் உளள முக்கிய நடுத்தரத் துறைமுகம் ஆகும். இத்துறைமுகத்தில இருந்து இரும்புக கனிமம்,எரிபடிவம ஆகியவை ஏற்றுமதி செய்யப்படுகினறன. கந்தகமும், உரமும்,உணவுத் தானியமும் இறக்குமதி செய்யப்படுகின்றன. பரங்கிப் பேட்டை இம்மாவட்டத்தின் சிறு துறைமுகமாகும்.

**மக்கள்:** இம்மாவட்டம் பல்வேறு சமூக மக்களைக் கொண்டிருக்கிறது. இம்மாவட்டத்தில் தாழ்த்தப்பட்டோரும், வன்னியர்களும் பெருமளவில் வாழகின்றனர். இவர்களின் தொழில் வேளாணமையாகும். இசுலாமியாகளும் கிறித்தவர்களும் பரவலாக இமமாவட்டத்தில் வாழ்கின்றனர். செஙகுந்தர், செட்டியார், மீனவர், யாதவர், இரெட்டியார், நாயுடு, நைனார், முதலியார், தீட்சிதர், பார்ப்பனர் போனறோரும் இம்மாவட்டத்தில் மிகுதியாக வசிககின்றனர். இம்மாவட்டத்தில பிறமாநிலங்களிலிருந்து மார்வாடிகள் குடியேறி வாழ்ந்து வருகினறனர். இம்மாவட்டத்தின் மக்கள தொகை 4,201,869 (1981) ஆகும்.

இம்மாவட்டம் பல்வேறு தலைவாகளையும, அறிஞர்களையும் பெற்றுத் தநதுளளது. தமிழகததில முதல் முதலமைச்சராக விளஙகிய ஓமந்தூர் பி.இராமசாமி ரெட்டியார் இமமாட்டத்தில திணடிவனம் வட்டத்தில பிறந்தவர்; சுதந்திரப் போராட்டஙகளில் பங்கு பெற்றவர்.

**போக்குவரத்து'** இம்மாவட்டத்தில்சாலை வசதிகள் பெருகியுள்ளன. தந்தை பெரியார் போக்குவரத்துக கழகம் இம்மாவட்டத்தில் அரசு பேருந்துகளைச செயறபடுத்தி வருகின்றது. இம்மாவட்டம் தென் மாவட்டஙகளுக்குச செல்லும வழியில் உளளதால், திண்டிவனம், விழுப்புரம்,பண்ருட்டி போன்றஊர்களில் தமிழகத்தின் பலவேறு இடங்களுக்கும் பேருந்து வசதிகள செய்யப்பட்டுள்ளன.அரசு நிறுவனத்தைத தவிரத் தனியார் பேருநதுகளும் சாலைப் போக்குவரத்தில ஈடுபட்டுள்ளன. தென்னார்ககாடு மாவட்டத்தில ஏறக்குறைய 386 கி மீ. தொலைவிற்கு இருப்புப் பாதைகள் செலகினறன. செஞசி, கள்ளக்குறிசசி வட்டங்களைத்தவிரப் பிற வட்டஙகளில் இருப்புப்பாதை, செல்கிறது. செனனை - விழுப்புரம், விழுப்புரம் - பாணடிச்சேரி, கடலூர் - விருததாசலம், விருத்தாசலம்-சேலம் ஆகிய வழிகளில் தொடர் வணடிகள செல்கின்றன இம்மாவட்டததில் உள்ள விழுப்புரம் சந்திப்பு நிலையம் ஒரு முக்கிய தொடர்வணடி நிலையமாகச் செயற்படுகிறது. குறுகிய இருப்புப் பாதையே இம்மாவட்டத்தில் உளளது. இமமாவட்டத்தில் உளள கடற்கரையின் நீளம் 105 கி.மீ ஆகும். கடலூர் துறைமுகப் பட்டினத்தில் சரக்குக கப்பல்கள நிறகினறன பரங்கிப்பேட்டையில் படகுப் போக்குவரத்து நடைபெறுகிறது.

**நகரங்கள்:** இம்மாவட்டத்தின தலைநகரமாக விளங்கும் கடலூர் ஆங்கிலேயர்களின ஆட்சிக் காலத்தில் தமிழகத்தின தலைநகரமாக விளங்கியது. இங்குப் புனித தாவீது கோட்டை ஒன்று உள்ளது. இதனைப் பலமுறை பிரெஞ்சுக காரர்கள் தாக்கினா. கெடிலக் கரையில் அமைந்துள்ள கடலூர் பாடல் பெற்ற ஊராகும். மாவட்டத்தின தலைமை அலுவலகங்கள் இவ்வூரில செயறபடுகின்றன. இநநகரம் பலமுறை புயலால் பாதிககப்பட்டுள்ளது இஙகுளள பல சாலைகள் ஆங்கிலேயர்களின் பெயரையே பெற்றுளளன. இந்நகருக்கு அருகில் 'கடலூா முதுநகர்த துறைமுகப்பகுதி' உளளது. இங்கு இசுலாமியர் மிகுதியாக வசிக்கினறனர்.

ஆடலவல்லான் சிறப்புப்பெற்றசிதம்பரம இம்மாவட்டத்தின் முக்கிய நகரங்களுள் ஒனறு. சிதம்பரம் தொனமைக் காலத்தில இருந்தே புகழவாய்ந்த நகரமாக விளங்குகிறது. இந்நகரம் ஒரு சுற்றுலா மையமாகவும் இன்று விளங்குகிறது

சென்னை-திருச்சி சாலையில் அமைந்துள்ள விழுப்புரம் வணிக நகரங்களுள ஒன்று. இங்கு வனசுபதி தயாரிக்கும் தொழிற்சாலை ஒன்று உள்ளது. திண்டிவனம் நகரமும் செனனை செல்லும் சாலையில் அமைந்துள்ள ஒருநகரம். இங்கு அரிசிஆலைகள் பல உள்ளன. புளிய மரங்கள நிறைந்த பகுதி ஆதலால

திண்டிவனம் எனப் பெயர்பெற்றது. பண்ருட்டிப் பகுதி தொழில் வளர்ச்சியிலும் வணிக வளர்ச்சியிலும் புகழ்பெற்றது. இவ்வூர் பலாப்பழத்திற்குப் புகழ் பெற்றது. இங்கு முந்திரி உற்பத்தித் தொழில் நடைபெறுகின்றது. இம்மாவட்டத்தின் காட்டுவளம் கள்ளக்குறிச்சியில்தான் உள்ளது. இவற்றைத்தவிரத் திருநாவலூர், புவனகிரி, மேல்மலையனூர், பெண்ணாடம், வழுதாவூர், உளுந்தூர்ப்பேட்டை, திருவெண்ணெய்நல்லூர், திருக்கோவிலூர், மேலைச்சேரி போன்ற ஊர்களும் இம்மாவட்டத்தில் உள்ளன. பிச்சாவரம் ஒரு சுற்றுலாத் தலமாக உள்ளது.

இம்மாவட்டத்தில் தொழில் வளம் பெருகியுள்ள நகரமாக நெய்வேலி உள்ளது. தஞ்சை-சென்னைச் சாலையில் அமைந்துள்ள இவ்வூர் கி.பி. 19-ஆம் நூற்றாண்டில் பழுப்பு நிலக்கரிப் படிவங்கள் இருந்தமை கண்டுபிடிக்கப்பட்டன. பின்னர் இங்குச் சுரங்கங்கள் அமைக்கப்பட்டது. இது ஒரு திறந்தவெளிச் சுரங்கமாகும். இந்நிலக்கரி கண்டுபிடிப்பின் விளைவாக இந்நகரம் இன்று இந்தியாவின் தொழில் நகரங்களுள் ஒரு சிறந்த நகரமாக விளங்கி வருகிறது. நெய்வேலி நகரியம் சுரங்கப் பணியாளர்களின் வீடுகளைப் பெற்று அழகான முறையில் அமைக்கப்பட்டுள்ளது.

இம்மாவட்டத்தில் உள்ள செஞ்சி நகரம் பழமையும், வரலாற்றுச் சிறப்பும் பெற்ற ஊராகும். இங்கு மலைகளின் மீது அமைந்துள்ள கோட்டைகள் சுற்றுலாப் பயணிகளின் மனத்தை ஈர்ப்பவை. இப்பகுதியில் இன்றும் செஞ்சி தேசிங்கு இராசாவின் கதை கூறப்பட்டு வருகிறது.

**கல்வி:** இம்மாவட்டத்தில் உள்ள சிதம்பரத்தில் புகழ்பெற்ற அண்ணாமலைப் பல்கலைக் கழகம் உள்ளது. இப்பகுதி அண்ணாமலைநகர் என்று கூறப்படுகிறது. இப்பல்கலைக் கழகத்தில் அனைத்துத் துறைகளும் உள்ளன. இம்மாவட்டத்தில் கடலூர் விழுப்புரம், திண்டிவனம், விருத்தாசலம், நெய்வேலி ஆகிய இடங்களில் கலைக் கல்லூரிகள் உள்ளன. மயிலம் என்ற இடத்தில் தமிழ்க் கல்லூரி ஒன்று இயங்குகிறது. தொடக்கப் பள்ளிகளும், உயர்நிலைப் பள்ளிகளும், மேல்நிலைப் பள்ளிகளும் இம்மாவட்டம் முழுவதும் செயலாற்றி வருகின்றன.

**வரலாறு:** சங்க காலத்தில் இம்மாவட்டப் பகுதியிலுள்ள மலைநாடு, மலைய மானாடு என்று கூறப்பட்டது. இதற்கு நடுநாடு, திருமுனைப்பாடி நாடு, சேதி நாடு, மகதநாடு, சகந்நாதநாடு என்ற பெயர்களும் இருந்தன. கெடிலக்கரைப் பகுதியில் சங்க காலத்திலேயே சிறந்த அரசுகள் இருந்தன. மலையமான் திருமுடிக்காரி திருக்கோவலூரைத் தலைநகரமாகக் கொண்டு இப்பகுதியை ஆட்சி செய்து வந்தான். இப்பகுதியில் உள்ள மலைகளில் வரலாற்றுக் காலத்திற்கு முற்பட்ட ஓவியங்கள் பல கண்டுபிடிக்கப்பட்டுள்ளன. இப்பகுதியில் உள்ள சம்பை என்ற இடத்தில் அதியமான் கல்வெட்டு கண்டுபிடிக்கப்பட்டுள்ளது. இப்பகுதியில் அதியமான் வழி வந்தோர்களும் தொடர்பு கொண்டிருந்தமை இதன் மூலம் விளங்குகிறது. சங்க காலத்திற்குப் பின் பல்லவர் ஆண்டனர். அடுத்துச் சோழர்களின் ஆட்சிக்குட்பட்ட இப்பகுதி, கி.பி. 13-ஆம் நூற்றாண்டில் கோப்பெருஞ் சிங்கன் ஆட்சிக்குட்பட்டது. இவன் சேந்தமங்கலத்தைத் தலைநகரமாகக் கொண்டு ஆட்சிபுரிந்தான். இம்மன்னனே சோழ அரசன் மூன்றாம் இராசராசனைத் தோற்கடித்துச் சேந்தமங்கலத்தில் சிறையிலிட்டான். இவன் காடவராய குல மரபைச் சேர்ந்தவன். இவனுக்குப் பிறகு வாணர மரபின் ஆட்சி இப்பகுதியில் ஏற்பட்டது. இம்மரபின் சிறந்த அரசன் ஆற்றூர் என்னும் ஊரைத் தலைநகராகக் கொண்டு ஆட்சி செய்த ஏகம்பவாணன் ஆவான். சில காலங்கள் ஆர்க்காட்டு நவாபுகளின் ஆதிக்கத்தில் இம்மாவட்டத்தின் ஒரு பகுதியாகிய செஞ்சி விளங்கியது. இப்பகுதியைத் தேசிங்கு இராசா என்பவன் ஆர்க்காட்டு நவாபுகளின்கீழ் ஆட்சி செய்து வந்தான் எனக் கூறப்படுகிறது. இப்பகுதியை மராட்டிய வீரர் சிவாசியும் தாக்கி வெற்றி பெற்றார். தென்னார்க்காடு மாவட்டத்தின் தலைநகரமான கடலூர் ஆங்கிலேயரின் ஆதிக்கத்தின் கீழ் வந்தது. இங்கு அவர்கள் ஒரு கோட்டையையும் கட்டினர். அருகிலிருந்த பாண்டிச்சேரியை எளிதில் தாக்க ஆங்கிலேயர்களுக்குக் கடலூர் ஒரு சிறந்த தளமாக விளங்கியது. இக்காலத்தில் ஆங்கிலேயப் பகுதிகளின் தலைநகரமாகக் கடலூர் விளங்கியது. பன்முறை ஆங்கிலேயர்களுக்கும் பிரெஞ்சுக்காரர்களுக்கும் இடையில் இங்குப் போர் நடந்தது.

ஆங்கில ஆதிக்கத்தை எதிர்த்து இம்மாவட்ட மக்கள் பலர் சுதந்திரப் போராட்டத்தில் குதித்தனர். இம்மாவட்டத்திற்கு 1927-ஆம் ஆண்டு காந்தியடிகள் வருகை புரிந்தார். இம்மாவட்டத்தின் அரசியல் தலைவர்கள் பலர் உப்புச் சத்தியாக்கிரகம், கள்ளுக்கடை மறியல் ஆகியவற்றில் பங்கு கொண்டு சிறைச்சாலைக்குச் சென்றனர். இம்மாவட்டத்திற்குச் சவகர்லால்நேரு 1935-ஆம் ஆண்டு வருகைபுரிந்தார். இந்தியா 1947-ஆம் ஆண்டு சுதந்திரம் அடைந்த பொழுது ஆங்கிலேயர்களால் நிருமாணிக்கப்பட்ட இம்மாவட்டம் தமிழகத்தின் ஒரு மாவட்டமாக மாறியது.

**நீலகிரி மாவட்டம்:** தமிழ் நாட்டு மலைப்பகுதியில் அமைந்த ஒரு மாவட்டம். ஆங்கிலேயர் ஆட்சிக்

காலத்தில் சிறப்புப் பெறத் தொடங்கிய இம்மாவட்டப்பகுதி படிப்படியாக வளர்ந்து கி.பி. 1865 க்குப் பிறகு பெருவளர்ச்சி கண்டது. நீலகிரியில் செறிந்து வளர்ந்துள்ள செடிகளும் மரங்களின் தோற்றமும் சூரிய ஒளியில் பார்ப்பதற்கு நீல நிறமாகக் காட்சியளிக்கும். எனவே, இப்பகுதி நீலகிரி எனப்பட்டது; நீலமலை என்பது பொருள். சிலர் இராமாயணத்தில் இராமனின் படைத்தளபதிகளுள் ஒருவனாக விளங்கிய நீலன் என்பவன் வாழ்ந்த பகுதி ஆதலால், இப்பகுதி நீலகிரி எனக் கூறப்படுகிறது என்றும் கூறுகின்றனர்.

**எல்லைகள்:** இம்மாவட்டம் மூன்று பண்பாடுகள் சந்திக்கும் மாவட்டமாக அமைந்துள்ளது. இம்மாவட்டத்தின் வடக்கு எல்லையாகக் கருநாடகமும் மேற்கு எல்லையாகக் கேரளமும் தெற்கு எல்லையாகக கோயம்புத்தூர் மாவட்டமும் கிழக்கு எல்லையாகப் பெரியார் மாவட்டமும் உள்ளன. இம்மாவட்டம் 2,549 ச.கி.மீ. பரப்பளவுடையது. நீலகிரி மாவட்டம் நான்கு வட்டங்களைக் கொண்டுள்ளது. உதகமண்டலம், கூனூர், கூடலூர், கோத்தகிரி என்பவை அவ்வட்டங்களாகும் .இம்மாவட்டத்தின் தலைநகரம் உதகமண்டலம்.




நீலகிரி மாவட்டம்

**நிலமும் நீட்பவெட்பமும்:** இயற்கை எழிலின் உறைவிடமாக விளங்கும் இம்மாவட்டம் உயர்ந்த மலைச் சிகரங்களையும் மிகத் தாழ்ந்த பள்ளத்தாக்குகளையும் கொண்டுள்ளது. இயற்கையமைப்பின்படி இம் மாவட்டத்தை இரண்டு பிரிவுகளாகப் பிரிக்கலாம். அவை நீலகிரிச் சமவெளி, தென்கிழக்கு வயநாடு என்பனவாகும். நீலகிரிச் சமவெளி கிழக்கு மேற்குத் தொடர்ச்சி மலைகள் இணையும் இடத்தில் 50 கி.மீ நீளமும் 40 கி.மீ. அகலமும் கொண்டு பரந்து கிடக்கும் சமவெளியாகும். இது கடல் மட்டத்திலிருந்து 2230 மீ. உயரமுடையது. இச்சமவெளிக்குக் கீழ் உளள தாழ் நிலமே தென்கிழக்கு வயநாடு எனப்படுகிறது. இதனைத் தொட்டபெட்டா மலை இரண்டாகப் பிரிக்கிறது. இமமலைச் சிகரத்தின் உயரம் 2885 மீ. ஆகும். உதகமண்டலத்திலிருந்து 8. கி.மீ. தொலைவில் உளள இச்சிகரத்தின் அருகில் பல சிகரங்கள் உளளன. இம்மாவட்டத்தின் சிகரங்களுக்கிடையில் நிலப்பகுதிகளும் காட்டாறுகளும் காணப்படுகின்றன. ஆஙகாஙகே நீர்வீழ்ச்சிகளையும் கொண்டு இவை விளங்குகின்றன இம்மாவட்டம் காட்டுவளம் மிக்கதாகும். இம்மாவட்டத்தில் உள்ள மலைகளும் காடுகளும் அருவிகளும ஏரிகளும் கண்களுக்கு விருந்தளிப்பவை. நீர்வளத்தில் சிறந்து விளங்கும் இம்மாவட்டம் ஆயிரக்கணக்கில் பல ஓடைகளைப் பெற்றும் ஏரிகளைப் பெறறும் விளஙகுகின்றது. இம் மாவட்டத்தில் பல சிறு ஆறுகள் உளளன. அவற்றுள் குறிப்பிடத்தக்கவை சிகூர் ஆறு, சாந்தி நல்லா ஆறு, பைக்காராநதி, மோயாறு போன்றவையாகும். கல்கட்டி நீர்வீழ்ச்சி, புனித காதரின் நீர்வீழ்ச்சி, காட்டேரி நீர்வீழ்ச்சி போன்ற நீர் வீழ்ச்சிகளும் இம்மாவட்டத்தில் உள்ளன. இவ்வாறுகள் பல மோயாறு பவானி ஆற்றுடன் கலந்து இறுதியில் காவிரியில் சேருகின்றன. இம்மாவட்டத்தில் உள்ள காட்டேரி நீர்வீழ்ச்சி,குந்தா, பைக்காரா போன்ற இடங்களில் நீர்மின்சக்தி எடுக்கப்படுகிறது.

இம்மாவட்டத்தில் தென் மேற்குப் பருவக்காற்றின் மூலம் ஜூன் முதல் செப்டம்பர் முடிய மழை பெய்கிறது. மாவட்டத்தின் மேற்குப் பகுதியே மிக்க மழையைப் பெறுகின்றது. நீலகிரி மாவட்டம் மலைகள் நிறைந்த மாவட்டமாதலால் இடத்திற்கு இடம் மழையின் அளவு மாறுபடுகிறது. தென்மேற்குப் பருவக்காற்றினால் மிக்க மழை பெறும் சிற்றூர் தேவாலா ஆகும். இங்கு ஆண்டிற்கு 390 செ.மீ. மழை பெய்கிறது. நடுவட்டம் என்னும் பகுதியில் 260 செ.மீ., மழையும் கூடலூரில் 225 செ.மீ. மழையும் பெய்கிறது. இம்மாவட்டத்தில் வடகிழக்குப் பருவக்காற்றால் அக்டோபர் முதல் திசம்பர் முடிய மழை பெய்கிறது. இப்பருவக்காற்றால் அதிக அளவாக 75 செ.மீ. மழையினை இம்மாவட்டம் பெறுகிறது. சனவரி முதல் மார்ச்சு முடிய இம்மாவட்டம் வறட்சியாக இருக்கும்; ஏப்பிரல், மே மாதங்களில் சிறிதளவு மழையைப் பெறுகிறது.

**வேளாண்மை:** நீலகிரி மாவட்டத்தில் பருவ நிலைக்கு ஏற்றவாறும் நிலத்தின் அமைப்புக்குத் தக்க வாறும் வேளாண்மை நடைபெறுகினறது. இங்குள்ள மொத்த நிலம் 6,28,000 ஏக்கரில காடுகள் 3,50,000 ஏககர் உள்ளன. வேளாண்மை 40,000 ஏக்கர் நிலப் பரப்பில் நடைபெறுகிறது. இம்மாவட்டத்தில் கிணறு களோ குளங்களோ, நீர்ப்பாசனக் கால்வாய்களோ இல்லை. சில ஊற்றுக் காலவாய்கள் மூலமும் பருவ மழைமூலமும் வேளாண் தொழில் நடைபெறுகின் றது, இம்மாவட்டத்தில் நெல், கேழ்வரகு, சாமை கோதுமை, பார்லி, உருளைக்கிழங்கு, காய்கறிகள், காப்பி, தேயிலை, சினகோனா போன்றவை பயிரிடப் படுகின்றன. இம்மாவட்டக காடுகளில் தைலமரம் (Eucalyptas), தேக்கு, இரப்பர், சவுக்கு, பழ வகைகள் மூலிகைகள். ஏலம், சாதிக்காய், கிராம்பு போன்ற, வாசனைப பொருள்களும் விளைகின்றன. காடுகளை வளர்க்க வனத்துறையும், அரசும் பாடுபட்டு வருகின் றன பழ இனங்களைப் பெருமளவில் வளர்க்கப் பழ இன ஆராய்ச்சி மையம், பர்லியார், களளார், கூனூர், போனற இடஙகளில் உள்ளன.

இம்மாவட்டம் கால்நடைச் செலவம் மிக்க மாவட்டமாகும். இம்மாவட்டத்தில் வாழும் பழங குடிகள் கால்நடைகளை வளர்க்கின்றனர். அவர்களுள் தோடர்கள் 'எருமைகளின் நண்பர்கள்' என்றே கூறப் பெறுகின்றனர். இம்மாவட்டத்தில ஆட்டுப் பண்ணைகளும் கோழிப் பணணைகளும் உளளன. கம்பளி உரோமம் மிகுந்த அளவில் கொடுக்கும் நீலகிரிச செம்மறி ஆடுகள இம்மாவட்டததில் பெரு மளவில் வளர்ககப்படுகின்றன. பழஙகுடியினர் பன்றி களையும் வளர்க்கின்றனர்.

**தொழில்கள்:** நீலகிரி மாவட்டத்தில் தேயிலைத் தோட்டங்களில் பெரும்பாலோர் வேலை செய்கின் றனர். 'சின்கோனா' பயிரிடும் பகுதியிலும் தோட்டத் தொழிலாளர்கள் பணிபுரிகின்றனர். இம்மாவட்டத் தில் 'கொயினா' மருந்து உற்பத்திச் சாலைகளுள்ளன. வீடடில் பட்டை உற்பத்தி, தைல (Eucalyptas) எண் ணெய் உற்பத்தி போன்ற தொழில்கள் நடைபெறு கின்றன. உதகையிலிருநது 8 கி.மீ. தொலைவில் கேத்தி என்னும் இடத்தில் ஊசிகள, கொக்கிகள் தயாரிக்கும் நிறுவனமும், அரவங்காட்டில் வெடி மருந்து தொழிற்சாலையும், இந்துசுத்தான் படச்சுருள தொழிற்சாலையும் உள்ளன. தமிழ்நாட்டின் மிகப் பெரிய வெடிமருந்துத் தொழிற்கூடம் இங்குள்ளது. இவற்றைத் தவிரப் பல கூட்டுறவு நிறுவனங்கள் இம்மாவட்டத்தில் சிறு தொழிற்சாலைகளையும் வேளாண்மை சார்ந்த தொழில்களையும் ஊக்குவித்து வருகின்றன.

**மக்கள்:** இம்மாவட்டத்தில் மலைவாழ் பழங்குடி கள் மிகுதியாக வாழ்கின்றனர். தொதவர், படகா, கோதவர், பனியர், நாயக்கர், குறும்பர், இருளர் கசவர் போன்ற பழங்குடிகள வாழகின்றனர். இவர் களுள் மிகவும் தொன்மைமிக்க பழங்குடியினர் தொத வர் ஆவர். இவர்கள் வாழும் இடங்கள 'மநது' எனபபடுகிறது உதகமந்து என்ற ஊர்ப்பெயர் இவர் கள் குடியிருக்கும் பகுதியாகும். சிற்சில குடும்பங களாக இணைந்து வாழும் இவர்கள் வாழும் பகுதி ஒவ்வொன்றும் 10 அல்லது 12 வீடுகளையே கொண டுள்ளது. படகர் இனப்பிரிவில் இலிங்னுர், உடையாா, சிவாச்சாரியா போனற பல பிரிவுகள உள்ளன. இவர்கள் முனனேற்றம் அடைந்த மக்களாக விளஙகு கின்றனர். இவர்கள் இப்பொழுது வாழும் பகுதி நாக்குபெட்டா (நான்கு மலை) எனப்படுகிறது. இம் மாவட்டத்தின் உயர்ந்த சிகரமான தொட்டபெட்டா இவாகள மொழிப் பெயரே ஆகும் படகர்கள மொழி கன்னட மொழிக் கலப்புடையது. இவர்கள மொழிக்கும் குடகு மொழிக்கும் நெருஙகிய தொடர் புண்டு உதகையில் ஏழு பகுதிகளில் கோதவர் என னும் பழங்குடியினர் வாழுகின்றன்ர். உதகைக்கு மிக அருகில வாழும் மற்றொரு பழங்குடியினர் பனியர் ஆவர். இவர்கள் கூலிவேலை செய்து வாழ்கினறனர் குறும்பர்கள் முள்ளுக்குறும்பர், பெட்டகுறும்பா தேனுகுறும்பர், ஊராளி குறும்பர், ஆறுகுறும்பர் அல்லது பால் குறும்பர் என ஐந்து பெரும் பிரிவு களாக உள்ளனர். இம்மாவட்டததின் மககள்தொகை 6,301,167 ஆகும்(1981) ஒரு ச.கி.மீ-க்கு 247 பேர் வீதம் வாழ்கின்றனா.

**போக்குவரத்து:** இம்மாவட்டத்தின் தலைநகர மான உதகமண்டலத்திலிருந்து கள்ளிக்கோட்டை, மைசூர் முதலிய பிற மாநில நகரஙகளுக்கும் தமிழ நாட்டு நகரஙகளுககும் சென்று வரச் சாலை வசதிகள உள்ளன. அஙகுப் பேருந்து வழிச் செல்லலாம். இம மாவட்டத்தில் சேரன் போக்குவரத்துக் கழகம் என் னும் அரசுப் பேருந்து நிறுவனம் போக்குவரத்தைக் கவனித்து வருகின்றது. இஙகு மேட்டுபபாளையத்தி லிருந்து உதகமண்டலத்திற்கு 46 கி மீ. தொலைவிற்கு இருப்பு பாதை போடப்பட்டுளளது. மலையின மேல தொடர்வண்டி செல்வது கண்கொள்ளாக் காட்சியாகும். இம்மாவட்டத்தில் 11 இருபபுப் பாதை நிலையங்கள உள்ளன.

**நகரங்கள்:** இம்மாவட்டத்தில் சுற்றுலாப் பயணிகள் காண வேணடிய பல்வேறு நகரங்களும் இடங்களும் உள்ளன. மாவட்டத்தின் தலைநகரமான உதகமணடலம் சுற்றுலாப் பயணிகள் தங்கப் பல்வேறு வசதிகளைப் பெற்றுத் திகழ்கிறது. இது கோடை

வாழிடமாகும். இவ்வூர் எல்கருமலை, தொட்ட பெட்டா முதலிய சிகரஙகளால் சூழப்பட்டது. இங்குள்ள ஏரி அதன் அருகிலுள்ள ஓபர்ட்டுப் பூஙகா, தாவரவியல் பூங்கா, விளையாட்டரஙகு போனறவை பயணிகளின் மனத்தில மகிழ்ச்சியூட்டக்கூடியவை. இம் மாவட்டத்தில் உதகை செலலும் சாலையில் கூனூரி லிருந்து 5 கி.மீ. தொலைவில் அரவஙகாடு எனனும் ஊர் உள்ளது. இது ஒரு தொழிற்சாலை நகரமாகும். இம்மாவட்டத்தில் உள்ள கூனூர் ஒரு நகராட்சி மையமாகும். இது நீலகிரி மாவட்டத்தின் இரண்டாம பெரிய நகரமாக விளங்குகிறது இவ்வூருக்கு அடுத்த பளளத்தாக்கில் வெலிங்டன் இந்திய இராணுவப் பயிற்சித் தளம் உள்ளது. இவ்வூர் மிதமான குளிர்ச்சி யையும் பயிர்கள் விளைவதற்கேற்ற தட்பவெப்ப நிலையையும் பெற்றுத் திகழ்கிறது. இங்குக் கூனூர் பெட்டா என்னும் சிகரம் உள்ளது. இச்சிகரத்திற்கு வடக்கே அழகான சிம்சு பூஙகா ஒனறுள்ளது. இஙகுள்ள இலேம்பசு பாறை, சிமாட்டி கானில்சீட்டு, மனமகிழ் மன்றம், நூலநிலையம், தேவாலயஙகள முதலியன சுற்றுலாப் பயணிகளைக கவருகின்றன. கூனூரிலிருந்து 20 கி.மீ. தொலைவில அமைந்துளள ஊர் கோத்தகிரி ஆகும். இம்மாவட்டத்தின் பெரிய நகரஙகளுள இதுவும் ஒனறு. இங்குத் தேயிலையும, காப்பியும் பெருமளவில் பயிரிடபபடுகின்றன. இம் மாவட்டத்தில வனவிலஙகுகள் சரணாலயம் முதுமலை என்னும் இடத்தில் உளளது. கூடலூர் வட்டத்தின் தலைநகரமாக விளஙகும் கூடலூா நீலகிரி மாவட்டத்தின முக்கிய சாலைகள கூடும் ஊராகும். இஙகு ஞாயிற்றுககிழமை நடைபெறும்சந்தை புகழபெறறது. இம்மாவட்டத்தில சுற்றுலாப் பயணிகள் காணவேண்டிய இடங்கள் பல. அவற்றுள குறிப்பிடத்தக்கவை தாவரவியல் தோட்டம், ஏரி, தொட்டபெட்டா, முக்குருட்டி சிகரம், பைக்காரா அணை, கூனூர், கோத்தகிரி போன்ற பகுதிகளாகும்.

**கல்வி:** இங்குக் கிறித்தவர்கள் மிகுதியாக வாழ்வதால் இம்மாவட்டம் கல்வி வளர்ச்சியில் சிறப்பிடம் பெற்றுளளது. உதகை, கூனூர் வட்டஙகளில் படித்தவர் எணணிக்கை மிகுதி. இம்மாவட்டத்தில் ஆஙகில வழிக கல்விக் கூடஙகள் பல புகழ்பெற்று விளஙகுகின்றன. ஆசிரியர் பயிற்சிப் பள்ளிகளும் கலைக் கல்லூரி ஒன்றும் இம்மாவட்டத்தில் உளளன. பழஙகுடிகள் ஆய்வு மையம் ஒன்றைத் தமிழ்ப் பல்கலைக் கழகம் இஙகு நிறுவியுள்ளது

**வரலாறு:** இம்மாவட்டத்தின் தொன்மை வரலாறு குறித்துத் தெளிவாகத் தெரியவில்லை. இம் மாவட்டத்தின் வயநாடு பகுதி கி.பி. 10-ஆம் நூற்றாணடில் கங்க மரபின் கீழ் விளங்கி வந்தது. கடம்பர்கள் கி.பி. 10-ஆம் நூற்றாண்டின் இறுதியிலும் 12-ஆம் நூற்றாணடின் தொடக்கத்திலும் கங்கர்களைத் தோற்கடித்தனர். அப்பொழுது வயநாடு பகுதி இரு பகுதிகளாகப் பிரிககப்பட்டுக் கடம்பர்கள் வசிகரும் நீலகிரிப் பகுதிகள சில இருந்தன. ஒய்சாளர்களின் அமைச்சராக விளஙகிய பெருமாள் தேவ தன்னாயகா என்பவன் நீலகிரி கொண்டான் எனனும் பட்டத்தோடு இப்பகுதியை கி.பி. 1318 வரை ஆட்சி செய்தான். விசயநகர ஆட்சியினகீழ் இப்பகுதி கி.பி. 16-ஆம் நூற்றாண்டின் முற்பகுதியில் வந்தது விசய நகரப் பேரரசு அழிந்தபின் மைசூா அரசர்களின் கீழ உம்மட்டூர் உடையார்கள வயநாட்டுப் பகுதியை ஆணடனர். அதனை அடுத்து ஆஙகிலேயரின் வரவால் இபபகுதி வளர்ச்சியும் செலவாக்கும் பெற்றது இருப்பினும் ஐதா அலி, திபபுசுல்தான் போனறோர் இபபகுதியில் ஆங்கிலேயர் ஆதிக்கத்தை எதிர்ததனர். மூனறாம் மைசூர்ப் போருககுப்பின வயநாட்டுப்பகுதியைக கேரள நாட்டு அரசர் சொந்தம் கொணடாடினாா. அதனால ஏற்பட்ட போரில ஆஙகிலேயா பலர் கொல்லப்பட்டனர் கேரளவர்மா என்ற அரசர் இறந்த பின்னரே இப்பகுதியை முழுவதுமாக ஆஙகிலேயர் கைப்பற்ற முடிநதது. செனனை ஆளுநராக இருநத சுசிங்டன் கி.பி 1829-இல உதகைக்கு வருகை புரிந்தாா. அவரது காலததில உதகை வளர்ச்சி அடைந்தது. சேம்சு தாமசு என்னும் கோவை மாவட்ட ஆட்சித தலைவர் கி.பி.1830-இல் நீலகிரி மாவட்டத்தின் மலைபபகுதிகளை மலபாருடன் இணைத்தார். தனி ஆட்சியர் தகுதியை இம்மாவட்டம் கி.பி.1868-ஆம் ஆண்டு பெற்றது. பினனர் கி.பி. 1873-இல ஆக்டர்லோனி பளளத்தாக்கு, வயநாடு பகுதியின் தெனகிழக்குப் பகுதிகள் போன்றவை இம் மாவட்டததுடன இணைக்கப்பட்டன. சுதந்திரத் திற்குப்பின பலவேறு வசதிகளைப் பெற்றுள்ள இம் மாவட்டம் மூனறு சட்டசபைத் தொகுதிகளைப பெறறு விளஙகுகிறது.

**பசும்பொன் முத்துராமலிங்கம் மாவட்டம்,** இது இராமநாதபுரம மாவட்டத்திலிருந்து பிரிநத மாவட்டம. பசும்பொன் முத்துராமலிங்கத் தேவர் பெயரில அமைக்கப்பட வேணடும் என்ற நோக்கில இம் மாவட்டத்திறகு இப்பெயர் கொடுக்கப்பட்டது. இம்மாவட்டம் பல்வேறு சிறப்புகளை உடையது. 'யாதும் ஊரே யாவரும் கேளிர்' எனற கோட்பாட்டை உலகிற்கு அளித்த கனியன் பூங்குனறனார் பிறந்த மகிபாலன்பட்டி இம்மாவட்டத்தைச் சார்நததே.

**எல்லைகள்:** இம்மாவட்டத்தின் வடககில் புதுக் கோட்டை மாவட்டமும் தெற்கில் இராமநாதபுரம் மாவட்டமும், மேற்கில் மதுரை, காமராசர் மாவட்டஙகளும் கிழக்கில் இராமநாதபுரம் மாவட்டமும் எல்லைகளாக அமைந்துளளன. இம்மாவட்டத்தின்



படகப் பெண்கள் தேயிலை பறித்தல்-நீலகிரி



தோடர் பெண்கள் -நீலகிரி



தஞ்சை மருத்துவக் கல்லூரி



படகு கட்டுதல்-கடலூர்



தஞ்சைக் கலைத்தட்டு



சப்தமாதர்—தாராசுரம்



மதுரை மீனாட்சி கோயில்



கல்லணை



முதுமலை யானைகள்



ஏர் உழுதல்

பரப்பளவு 4136.81 ச.கி.மீ. இம்மாவட்டம் சிவகஙகை, இளையான்குடி, மானாமதுரை, தேவகோட்டை, காரைக்குடி, திருபபததூர் என ஆறு வட்டங்களாக பிரிக்கப்பட்டுள்ளது. மாவட்டத்தின் தலைமையகம் சிவகங்கையில் உளளது.

**நிலமும் தட்பவெப்பமும:** இம்மாவட்டம் கனி வளம் மிக்க மாவட்டமாக இனறு விளங்கி வருகிறது. சிமிண்டுத் தயாரிக்கப் பயன்படும் சுணணாம்புககல் பகுதிகளும் மஞ்சள் காவி நிறக் களிமண, வெள்ளைக் களிமண் ஆகியவையும் இம்மாவட்டத்தில பரவியுள்ளன. மலைப்பகுதிகளையும் கொண்டுளள இம மாவட்டத்தில் திருப்பத்தூர் வட்டம் பூலாங்குறிச்சிப பகுதி ஆகியவற்றில் 40 ச.கி.மீ. அளவிற்குப் பாறைகள உள்ளன. இப்பகுதியில் வழுக்குப் பாறைகள் அதிகம். இம்மாவட்டத்தின் மணவளம் வட்டத திற்கு வட்டம் மாறுபடுகிறது.சில இடங்களில் அமிலச் சத்து மிகுந்த மணவளமும் சில இடங்கள செம்மண் நிலங்களும் கரிசல்மண பகுதிகளும் கொணடனவாக உள்ளன. இம்மாவட்டம் வறட்சிமிக்க பகுதியாகும். ஆண்டிற்குச் சில இடங்களில் 15 செ.மீ. மழையும் சில இடங்களில் 52. செ.மீ. மழையும் இம்மாவட்டம் பெறுகிறது. காட்டுவளம் குறைந்த பகுதியாதலால் மழை குறைவாகவே பெய்கிறது. இம்மாவட்டத்தில பாயும் ஆறுகள் வேளாணமைக்குப் பயன்படுகின்றன. சிவகங்கை வட்டம்,வைகை ஆற்றாலும் பெரியாறறுக் கால்வாயாலும் வளம் பெறுகிறது. இவ்வட்டத்தில் சருகணி என்ற ஆறு சிறு குன்றில் தோன்றி வங்கக் கடலில் கலக்கின்றது. மானாமதுரைப் பகுதியும் வைகையாற்றால் செழிப்புற்றுள்ளது. வரிசலையாறு, பாலாறு, மணிமுததாறு, குணடாறு, உபபாறு போன்ற ஆறுகளும் இம்மாவட்டத்தில் உளளன. இம்மாவட்டத்தில காட்டுவளம் குறைவாகவிருப் பினும் காடுகள 18,291 எகடேர் நிலப்பரப்பளவில பரவியுள்ளன.

**வேளாண்மை:** இம்மாவட்டம் வேளாணமை வளாசசியில பின்தங்கி உளளது. மழை அளவு குறைவின் காரணமாக மழைபெயயும் காலங்களில மட்டுமே வேளாணதொழில் நடைபெறுகிறது பல்வேறு இடங்களில் கிணற்றுப் பாசனம நடைபெறுகிறது. இம்மாவட்டததின் மொததநிலப்பரபபில 1,27,571 எகடேர் பரபபளவில வேளாணமை செயயபபடுகிறது. நெல, கரும்பு, கேழவரகு, நிலககடலை, பருத்தி, மல்லி, மிளகாய், வரகு போனறவை இம்மாவட்டத தில் பயிரிடபபடுகினறன. இம்மாவட்டததில வேளாணமைககாக ஏரிகளும் குளங்களும வெட்டப் பட்டுளளன. வேளாண தொழிலபுரிவோா காலநடைகளையும் வளர்ககினறனா.

**கனிப்பொருளகள்:** இம்மாவட்டத்தில இப் பொழுது கனிபபொருள்கள கிடைக்கும் இடங்கள் கணடு பிடிக்கப்பட்டு வருகினறன. வணணஙகள தயாரிக்கபபயன்படும் மஞ்சள காவி களிமண சிவகஙகைப பகுதியில் மிகுநத அளவு கிடைக்கிறது. சிமிணடு தயாரிககப் பயனபடும் சுணணாம்புககல மாவட்டத தின பலவேறு பகுதிகளில் கிடைக்கிறது. தேவகோட்டைப் பகுதியில் நில எணணெய இருப்பதாக தொடக்க ஆய்வுகள நடைபெற்று வருகின்றன. காரைக்குடிககு அருகே உயாரக பழுப்பு நிலககரி கணடுபிடிக்கபபட்டுத் திட்டம் கைவிடபபட்டுள்ளது.

**தொழிலகள:** மாவட்ட மக்களின் முதன்மைத தொழில் வேளாணமை ஆகும். கால்நடைச் செலவங களும் பொருளாதார உயாவிற்கு ஓரளவு வழிவகுத் துளளன. விலங்கின உற்பத்தியில உயர்வகைக் கால நடைகள இம்மாவட்டத்தில உளளன. தமிழக அரசே கால்நடைப் பண்ணை ஒன்றை இம்மாவட்டத் தில் தொடங்கி உள்ளது. தொழிற்சாலைகளில் பின் தங்கிய மாவட்டமாக இது விளங்கி வருகிறது. நெசவுத்தொழில இம்மாவட்டததில் நடைபெறறு வரு கிறது.காளையார்கோவில்,மானாமதுரை, சிலைமான போன்ற ஊாகளில் ஆலைகள உளளன. இம்மாவட்டத்தில் பல கூட்டுறவுத தொழில்கள நடைபெறுகினறன. கதர்கிராமத் தொழில் வளர்ச்சி இம்மாவட்டத் தில் பரவலாக உள்ளது. தமிழ்நாடு அரசு தொழில வளர்ச்சிக் கழகமும் புதிய தொழில்கள பலவற்றை இம்மாவட்டத்தில் தொடங்கியுளளது. காரைக்குடியில் பால் பதனிடும் தொழில் சிறப்புற அமைந்துள் ளது. இரு சக்கர இயந்திர வாகனஊர்தித் தொழிற்

சாலை ஒன்றை 'இராயல் என்பீல்டு' நிறுவனத்தார் சிங்கம்புணரியில் அமைத்துள்ளனர். இங்குத் தமிழ் நாடு காரீயகக் கனிமத் தொழிற்சாலை (Graphite Factory) ஒன்று நடைபெற்று வருகிறது.

**மக்கள்:** இம்மாவட்டத்தில் முக்குலத்தோர், செட்டியார், சௌராட்டிரர், நாடார் முதலிய இனத்தவர் வாழ்கின்றனர், இசுலாமியரும் கிறித்தவர்களும் உள்ளனர். இவர்கள் பல்வேறு தொழில்களில் ஈடுபட்டுள்ளனர். இம்மாவட்டத்தில் பல்வேறு அறிஞர்கள் தோன்றிச் சிறப்புப் பெற்று விளங்கியுள்ளனர்.இம் மாவட்டத்தில் ஆண்களைவிடப் பெண்கள் மிகுதி. மக்கள்தொகை 972,656(1981).

**போக்குவரத்து:** இம்மாவட்டம் சாலைகளால் பிற நகரங்களுடன் தொடர்புபடுத்தப்பட்டுள்ளது. இங்கு 115 கி.மீ. நீளம் இருப்புப்பாதை செல்கிறது. மருது பாண்டியர் போக்குவரத்துக் கழகமும் பிற தனியார் நிறுவனங்களும் மாவட்டப் போக்குவரவைச் செம்மை செய்கின்றன. மருது பாண்டியர் போக்குவரத்துக் கழகம் தமிழ்நாட்டின் பல்வேறு பகுதிகளுக்கும் பேருந்துகளை விட்டுள்ளது. தொடர் வண்டிப் பாதை செட்டிநாடு, காரைக்குடி, சிவகங்கை வழியாகத் திருச்சி-மானாமதுரை தொடர் வண்டிப் பாதையும் கண்டனூர் புதுவயல் வழியாகக் காரைக்கடி-அறந்தாங்கிப் பாதையும் செல்கின்றன.

**நகரங்கள்:** இம்மாவட்டத்தில் குன்றக்குடி, தாயமங்கலம், கொல்லங்குடி, மாடப்புறம், பிரான்மலை, பிள்ளையார்பட்டி, இளையான்குடி முதலியன சுற்றுலா மையங்களாக விளங்குகின்றன. திருப்பத்தூர் அருகில் உள்ள கொல்லுகுடிபுட்டி பறவைகளின் சரணாலயமாக விளங்குகிறது. தேவகோட்டை காரைக்குடி, திருப்பத்தூர், சிவகங்கை, இளையான்குடி, காளையார் கோவில்,மானாமதுரை போன்றவை இம் மாவட்டத்தின் முக்கிய நகரங்களாகும். சிவகங்கை நகரம் மாவட்டத்தின் தலைநகரமாக விளங்கி வருகிறது. இங்குக்கௌளரிமகால் என்னும் பழைய அரண்மனை ஒன்று உள்ளது. இந்நகரில் அரசு அலுவலகங்களும் கல்லூரியும் உள்ளன.

காளையார் கோவில் மதுரையிலிருந்து 61 கி.மீ தொலைவில் உள்ள நகரமாகும். இங்குப் பாண்டியர் கோட்டை என்னும் அழிந்த கோட்டை ஒன்று உள்ளது. திருப்புத்தூர் ஒரு வட்டத்தின் தலைநகரமாகும். இவ்வூரைத் திருப்பத்தூர் என்றும் கூறுகின்றனர். வாணிக வளர்ச்சி பெற்ற இவ்வூர் பல சிற்றூர்களைச் சுற்றிலும் கொண்டுள்ளது. இவ்வூரின் வழியாகப் பல நகரங்களுக்குச் சாலைகள் செல்கின்றன. தேவகோட்டையில் அரசு அலுவலகங்களும் நீதிமன்றங்களும் உள்ளன. தேவ கோட்டையில் நகரத்தார் இன மக்கள் பெருமளவில் வசிக்கின்றனர். இங்கு ஒரு கல்லூரி உள்ளது. காரைக்குடி ஒரு தொடர்வண்டி நிலையச் சந்திப்பாகும். இது மிகப் பெரிய நகரமாகும். இங்கு அழகப்பா பல்கலைக் கழகம் அமைக்கப்பட்டுள்ளது.

**கல்வி:** இம்மாவட்டத்தில் காரைக்குடியில் பல்கலைக் கழகம் ஒன்று நிறுவப்பட்டுள்ளது. மாவட்டத்தின் முக்கிய நகரங்களில் கலைக் கல்லூரிகளும் பல்தொழில் கல்லூரிகளும் உயர் நிலைப்பள்ளிகளும் மேல்நிலைப் பள்ளிகளும் உள்ளன. அழகப்பச் செட்டியார் இம்மாவட்டத்தின் கல்வி வளர்ச்சிக்குப் பெரிதும் ஊக்கமளித்தார். காரைக்குடியில் உள்ள அழகப்பா பல்கலைக் கழகம் துறைகள் பலவற்றைக் கொண்டு விளங்கி வருகிறது. சிவகங்கை, திருப்பத்தூர், பள்ளத்தூர், தேவகோட்டை காரைக்குடி, நைனார்புரம் போன்ற இடங்களில் கலைக் கல்லூரிகள் உள்ளன. இம்மாவட்டத்தில் பல பொறியியற் கல்லூரிகளும் உள்ளன. நடுவணரசின் மின் வேதியல் ஆராய்ச்சி நிறுவனம் ஒன்று காரைக்குடியில் உள்ளது.

**வரலாறு:** முற்காலப் பாண்டியர்களின் வரலாற்றில் சிறப்புப் பெற்று விளங்கிய இராமநாதபுரம் மாவட்டத்தின் ஒரு பகுதியே இன்றைய பசும்பொன் முத்துராமலிங்க மாவட்டமாகும். இம்மாவட்டத்தில் பல புகழ்வாய்ந்த கல்வெட்டுகள் கண்டுபிடிக்கப்பட்டுள்ளன. பாண்டியர்களின் கல்வெட்டுகளும் சோழர்களின் கல்வெட்டுகளும் இம்மாவட்டத்தின் பல்வேறு பகுதிகளில் கிடைத்துள்ளதிலிருந்து இப்பகுதி பாண்டியர், சோழர் ஆதிக்கத்தின் கீழ் இருந்தமை அறியவருகிறது. இப்பகுதி கி.பி.1331க்குப்பின் மதுரையைத் தலைநகரமாகக் கொண்ட இசுலாமியர் ஆட்சிக்குட்பட்டது. பின்னர் நாயக்கர்களும் சேதுபதிகளும் இப்பகுதியை ஆட்சி செய்தனர். சேதுபதிகளின் ஆட்சிக்குப்பின் மீண்டும் இசுலாமியரின் ஆட்சியின் கீழ் இப்பகுதி வந்தது.கருநாடக நவாபு முகம்மது அலி, இராமநாதபுரம் சிவகங்கைப் பகுதியைக் கைப்பற்றி 8ஆண்டுகள் ஆட்சி புரிந்தான். ஆங்கிலேயர் ஆட்சியின் கீழ் இது ஒரு குறுநில மன்னன் ஆட்சியாக (ஜமீன்)ஆக்கப்பட்டது. சிவகங்கைப் பகுதியைச் சின்னமருது பெரிய மருது போன்றோர் ஆட்சிப்புரிந்து வந்தனர். இவர்கள் ஆங்கிலேயருக்கு எதிராக, வீரபாண்டியக் கட்டபொம்மனுக்கு உதவியாகக் காளையர் கோவிலில் வீரமுடன் போரிட்டனர். இவர்களுக்குப் பின் ஆங்கிலேயரின் கட்டுப்பாட்டில் வந்த இப்பகுதி, கி.பி.19-ஆம் நூற்றாண்டில் விசயஇரகுநாதகௌரி வல்லபதேவர் ஆட்சியின் கீழ்க் கொண்டுவரப்பட்டது. ஆங்கிலேயர்கள் ஆட்சியில் இப்பகுதி பல வட்டங்களாகப் பிரிக்கப்பட்டு நிருவாகம் சீர்செய்யப்பட்டது. சுதந்திரத்திற்குப்பின் இராமநாதபுரம் மாவட்டத்தின் ஒரு பகுதி

யாக விளஙகிய இது 1956-இல் ஆறு வட்டங்களைக் கொண்ட தனிமாவட்டமாகப் பிரிக்கப்பட்டது

**புதுக்கோட்டை மாவட்டம்:** தொண்டைமான் மரபில் தோன்றிய இரகுநாதர் என்பவரால் கி பி. 17-ஆம் நூற்றாண்டின் இறுதியில் புதிய கோட்டை ஒன்று கட்டப்பட்டது. இது புதுக்கோட்டை எனப் பெயரிடப்பட்டது புதுக்கோட்டை நகரின் பெய ரால் இம்மாவட்டமும் புதுக்கோட்டை மாவட்டம் எனக் கூறப்படுகிறது.

**எல்லைகள்:** புதுக்கோட்டை மாவட்டத்தின் வடமேற்கில் திருச்சிராப்பள்ளி மாவட்டமும் வட கிழக்கில் தஞ்சை மாவட்டமும் தெற்கில் இராமநாத புரம், காமராசர் மாவட்டங்களும் மேற்கில் மதுரை மாவட்டமும் கிழக்கில் வங்காள விரிகுடாவும் எலலை களாக உள்ளன. இம்மாவட்டத்தின் பரப்பளவு 4,650 ச.கி.மீ. இது திருமயம், ஆலங்குடி, அறந் தாங்கி, கொளத்தூர், புதுககோட்டை, ஆவுடையார் கோயில் ஆகிய வட்டங்களைக கொணடது.




**நிலமும் தட்பவெப்பமும்:** இம்மாவட்டம் பாறை கள் மிகுந்த நிலப்பகுதியையும் சமவெளிப பகுதியை யும் கொண்டு விளஙகுகிறது. பாறைப் பகுதிகள வேளாணமைக்கு ஏறறவை அல்ல. இப்பகுதிகளில காடுகள் மிகுதி. சமவெளிப்பகுதியில் வேளாண்மை சிறப்பாக நடைபெறுகின்றது. மலைகளையும் இம் மாவட்டம் கொணடுள்ளது. இங்கு வெள்ளாறு, பாம் பாறு, அக்கினி ஆறு, அம்புலி ஆறு, கோரையாறு, குணடாறு, கோவலனாறு, நரசிங்க காவேரி ஆகிய ஆறுகள் உள்ளன. இம்மாவட்டம் மலைவளத்தைப் பெற்றுள்ளமையால் பல ஊர்கள் மலைகளின் பெய ரால் கூறப்படுகின்றன. இக்குனறுகள் செஙகுத்தா னவை. இம்மாவட்டத்தில் பல மலைகள வரலாற் றுப் புகழ் பெற்றவை. பிரான்மலை, நார்த்தாமலை, ஆளுருட்டிமலை, சேவலூர்மலை, அன்னவாசல்மலை, பூரம்மலை, செவலை மலை, கொன்னாட்டு மலை, செம்பட்டு மலை, விராலிமலை, குடுமியான்மலை, போன்றவை இம்மாவட்டத்தின் குறிப்பிடத்தக்கமலை களாகும். இம்மாவட்டத்தின் சமவெளிப் பகுதி மலைப்பகுதியிலிருந்து கிழக்காகச் சரிவடைந்து காணப்படுகிறது. இம்மாவட்டம் செவவல் என் னும் சிவப்புமணல் மிகுநத நிலத்தையும் கரிசல் மண பகுதியையும் கொண்டுள்ளது

இம்மாவட்டத்தில் மார்ச்சு முதல் மே வரை கோடைக் காலம். சூன் முதல் செப்டமபர் முடிய தென்மேற்குப் பருவக் காற்று இம்மாவட்டத்தில வீசுகிறது. அக்டோபா, நவம்பர் மாதங்களில மழை பெய்கின்றது. திசம்பர் முதல் குளிர் காலமாகும். கோடைக்காலத்தில் இங்கு மிகுந்த அளவு 37° செ. வெப்பமும், குறைந்த அளவு 26° செ. வெப்பமும் காணப்படுகிறது. கிழக்கு வட்டஙகளில் கடற காற்றால் வெப்பம் சிறிதளவு குறைந்து காணபபடும்.

**வேளாண்மை:** இம்மாவட்டம் வேளாண்மையில் மிகவும் பின்தங்கிய நிலையில் உள்ளது. வேளாண மைககு ஏற்றவாறு ஆறுகள், குளங்கள், ஏரிகள், கிணறுகள் பயன்படுகினறன. இம்மாவட்டத்தில குளங்கள் மிகுதியாக வேளாணமைக்குப் பயன்படு கின்றன. ஆறுகளின் குறுக்கே ஆங்காஙகே அணைகள கட்டப்பட்டுள்ளன. வெள்ளாற்றில குடுமியா மலைக்கருகில் ஓர் அணை கட்டப்பட்டுள்ளது. பாம பாற்றின் குறுக்கே நெடுங்குடி எனனும் ஊருக்கு அருகே ஓர் அணை கட்டப்பட்டுளளது. இவை வேளாண்மைக்குப் பயன்படுகின்றன. இங்கு நெல், வரகு, தானியப் பயிர்கள, வேர்க்கடலை, சோளம, கம்பு, கேழ்வரகு போன்றவை பயிரிடப்படுகின்றன. தோட்டப் பயிர்களாகப் புகையிலை, மிளகாய், வாழை, மா, பலா போன்றவையும் பயிராகின்றன. இம் மாவட்டத்தில காடுகளும் மிகுதி. எனவே, பல வேறு பறவை இனங்களும் பாம்பு இனஙகளும பிற விலங்கினஙகளும் காணப்படுகின்றன. இங்குப் பனை மரங்கள் மிகுதி.

**கனிப பொருள்கள்:** பாறைகள் மிக்க மாவட்ட மான புதுக்கோட்டை மாவட்டத்தில் காவிமண், உறுதிப்பாறை, கங்கர், படிகக்கல், வெள்ளைக் களி மண், அப்பிரகம், காநதக்கல் போன்றவை கிடைக் கின்றன.

**தொழில்கள்:** புதுக்கோட்டை மாவட்டம் கைத் தொழில் வளர்ச்சி பெற்ற மாவட்டமாகும். பட்டு

நெசவு, சாயம் தோய்த்தல், வாசனைப பொருள் உற்பத்தி, இசைக்கருவிகள் செய்தல், கல் உடைத்தல், மரவேலைப்பாடு, பனை மரப் பொருள உறபத்தி போன்றவை இம்மாவட்டத்தில் நடைபெறுகின்றன சிற்பத் தொழிலும் மரத் தச்சு வேலையும் மூங்கிலால் பொருள்கள் செய்தலும் இம்மாவட்டத்தில சிறந்த முறையில் நடைபெறுகின்றது. இம்மாவட்டத்தில் பல சிறு தொழிற் கூடங்களும் உள்ளன. பாம்புத் தோல் உற்பத்தியில் சிறப்பான இடத்தை இது பெறு கின்றது. இங்குக் கடற்கரைப் பகுதியில் மீனபிடி தொழில் நடைபெறுகினறது. மீனைப் பதப்படுத்தி வெளிநாடுகளுக்கும் ஏறறுமதி செய்கின்றனர். இப பகுதியில் உளள ஏரிகளிலும் குளஙகளிலும் மீன்வளாப்பு நடைபெறுகின்றது. அம்மாபட்டினம என்னும் ஊரில படகு கட்டும் தொழில் நடைபெறுகின்றது.

**மக்கள்:** இம்மாவட்டத்தில் முக்குலத்தோர், நாட்டுக்கோட்டை நகரத்தார், முத்தரையர். அந்த ணர்கள். கம்மாளர், யாதவர், இடையர்கள், சௌராட்டிரர், நாயுடு, கைக்கோளர், குறும்பர், மருத்துவர், வன்னியர் முதலிய பல இனமக்களும் வாழ் கின்றனர். இசுலாமியர்கள, கிறித்தவர்கள் முதலிய பல சமயத்தவரும வாழகின்றனர். இம்மாவட்டத்தின் மக கள தொகை 1,156,813 (1981) ஆண்களைவிட பெண் களின் தொகை இஙகு அதிகமாகும். இப்பகுதியைச் சேர்ந்த நாட்டுக் கோட்டை நகரத்தார் பலர் சிறந்த கல்விமான்களாவர். தமிழ் வளர்ச்சிக்கு அவர்கள் அருந்தொண்டாறறி உள்ளனர்.

**போக்குவரத்து:** இம்மாவட்டத்தின் வழியாக மதுரை, இராமநாதபுரம் போன்ற தென் நகரங் களுககுச் சாலைகள செலகின்றன. சிறிய ஊர்களுக் கும் சாலை வசதிகளும், போக்குவரத்து வணடி வசதி யும் உள்ளன. இம்மாவட்டத்தில் திருசசி-புதுக கோட்டைத் தொடர்வண்டிப் பாதை 1929-ஆம் ஆண்டு அமைக்கப்பட்டது. அறந்தாஙகி, புதுக் கோட்டை ஆகியவை முககிய தொடர்வணடி நிலை யங்களாகும். இம்மாவட்டத்தில் 12 தொடர்வணடி நிலையங்கள உள்ளன.

**நகரங்கள:** இம்மாவட்டம் பரப்பளவில் சிறிய மாவட்டமாக இருப்பினும் வரலாற்றுப் புகழ்பெற்ற பல சிறந்த நகரஙகளைக கொண்டு விளங்குகிறது. மாவட்டத்தின் தலைநகரமான புதுக்கோட்டை இதன் மையப் பகுதியில் அமைந்துள்ளது. இந் நகரத்தின் நடுவில் கோட்டை ஒன்று உளளது. இக்கோட்டை வரலாற்றுப் புகழ பெற்றது. கோட்டைக்கு நடுவில் பழைய அரண்மனையும கோயிலும், கொலு மண்டபமும காணப்படு கின்றன. கோட்டையின் நாற்புறமும் பெரிய வீதிகள் அமைக்கப்பட்டுள்ளன. இந்நகரம் மக்கள் நெருக்கம் மிகுந்துள்ள நகரமாகும். இந்நகரின் தென்மேற்கில் தொண்டைமான் அரசா கட்டிய நவீன அரண்மனை உளளது இஙகு ஆஙகிலேயர் வந்து தங்குவர். இந் நகரில் உள்ள அரண்மனை, அலுவலகக் கட்டிடங்கள மிக அழகு வாய்ந்தவை. இது இப்பொழுது ஆட்சியர் அலுவலகமாகச் செயறபட்டு வருகிறது. புதுக கோட்டையைச் சுற்றிப் பல ஊர்கள் உள்ளன. ஆதனககோட்டை என்னும் ஊர் தஞ்சாவூர்-புதுக் கோட்டைச் சாலையில் அமைநதுள்ள ஊராகும். இவ வூரின் வழியாகத்தான் ஐதர்அலியின் படைகள் சென்றன. இம்மாட்டத்தில் உளள சிறப்பான ஊா கள் அம்புக்கோயில, ஆவுடையாாகோயில், ஆலூர் கீழ்நிலை, கொடும்பாளூர், விராலிமலை, திருவரங குளம், திருமயம், தேனிமலை, சித்தனனவாசல, திருக்கட்டளை, மலையப்பட்டி, நாாத்தாமலை, குடுமியா மலை போன்றவை ஆகும்.

இம்மாவட்டம் சுற்றுலாப் பயணிகளைக் கவரும பல்வேறு இடங்களையும் பெற்றுளளது. அவறறுள குறிப்பிடத்தக்கவை சிததன்னவாசல. இஙகுளள குடைவரைகளில் வரலாற்றுக் கால ஓவியஙகள உள்ளன. திருமயத்தில கோயிலகள் உளளன. சோழ அரசர்களுள் முதல அரசரான விசயாலய சோழன் கடடிய கோயில்கள நார்த்தாமலை என்னும் இடத் தில் உளளன. இது கட்டடக கலைச் சிறப்புப பெற்றது. குடுமியாமலை கோயில சிற்பஙகளுக்கும் கோயிலகளுக்கும் புகழ் பெற்ற ஊராகும். கொடும் பாளூர் மூவர் கோயில் வரலாற்றுச் சிறப்புமிகக தாகும.

**கல்வி** புதுககோட்டை நகரில் இராசா அரசுக கலைக் கல்லூரியும், அரசு பெணகள கலைக் கல்லூரி யும், ஆசிரியர் பயிற்சிக் கல்லூரியும் உளளன. தொழிற் நுணுக்கக் கலவி நிலையம் ஒன்றும் இந்நகரில உளளது முக்கிய நகரஙகளில் கல்லூரிகள பல உள்ளன. மாட்டூர் எனனும் இடத்தில் அகதிகள் கல்விக்கூடம ஒன்று உளளது.

**வரலாறு:** நீண்டதொரு பழமையான வரலாற்றை இம்மாவட்டம கொண்டு விளஙகுகிறது. இம்மாவட்டம் தொலலியல சிறப்புப் பெற்ற மாவடடமாகும். கல் வெட்டுகளையும், பழைய நகரஙகளையும் பெருங்கற காலச் சின்னங்களையும், ஓவியங்களையும் கோயில் களையும் கொணடு இம்மாவட்டம் விளங்குகிறது. சேர, சோழ பாண்டியாகளின் ஆதிக்கத்திற்கு உட் பட்டுப் பின்பு கானாடு, கோனாடு வேளாளர்களின பொறுபபில் இயங்கிவந்த இம்மாவடடம் கள்ளர், மறவர் ஆகியோரின் வருகைக்குட்பட்டது. பிற் காலச் சோழர்கள் பாணடியர்கள் ஆட்சிக்குட்பட்டு விளங்கிய இம்மாவட்டப்பகுதிகள் மதுரை முசுலீம்

களுக்குப்பின், இருக்குவேளிர், முத்தரையர், விசய நகரப் பேரரசு ஆகியோர் காலத்தில சிறந்து விளங்கி யது தொணடைமான் மரபினர் இப்பகுதியைத் தங்க ளின் ஆட்சிக்குட்படுத்தினா. கானாடு இரகுநாத தொணடைமான் கி.பி. 18-ஆம நூற்றாண்டின் தொடக்கத்தில ஆதிக்கம் செலுததினான். பினபு கோனாடு நமன தொணடைமான் ஆதிக்கத்திலும வந்தது. தொணடைமான் அரசர்கள ஆஙகிலேயருக குப் பல வழிகளில் உதவி புரிந்தனர். விசயரகுநாத தொணடைமான திருசசிமீது படையெடுத்துத திப்புசுலதானை முறியடித்தார். தொண்டைமான் காலத்தில நீதி, நிருவாகம் ஆகியன இப்பகுதியில சிறந்து விளங்கின. விசயரகுநாதருக்குப் பின் ஆஙகில அரசாஙகம் புதுககோட்டையை நேரிடையாக ஆளும வாய்ப்பைப பெற்றது இம்மாவட்டததில் கி.பி 1880 முதல் கி.பி. 1895 வரை தொடர்ச்சியாகப பஞ்சங்கள் பல ஏறபட்டு மக்களும் காலநடைகளும் இறக்க நேர்ந் தன. ஆங்கில ஆதிககத்திறகுட்பட்டு ஆட்சி செய்த மாாத்தாண்டத்தொண்டைமான் ஐரோபபாவிற்குச் சுற்றுப் பயணத்தை மேற்கொணடாா. முதல உலகப போரின் பொழுது ஆஙகிலேயருக்கு உதவியாகப் படைகளும் பணமும புதுக்கோட்டை சமசுதானத் தால் கொடுககப்படடது புதுக்கோடடை நிருவா கத்தைக் கவனிக்க ஆங்கில அரசு 1929, 1931-ஆம ஆணடுகளில் குழுக்களை நியமித்தது. மகாதமா காந்தியடிகள் இமமாவட்டத்திறகு 1921-இல் வருகை புரிந்துள்ளார். இம்மாவட்டத்தினைச சாாந்த சததிய மூர்ததி சுதந்திரப போராட்டத்தில் பங்கு பெறறவர். புதுக்கோட்டை சமசுதானத்தில 1924-ஆம் ஆணடு தோதல் நடந்தது. சட்டமேலசபை ஒன்று உருவாக கப்பட்டது. மீண்டும 1927-இல ஒரு தேர்தல் நடந் தது. இபபகுதிக்கு மீணடும். காந்தியடிகள் 1927-இல வருகைபுரிந்தார். சமசுதானத்தின பட்டத்து இளவர சராக இராசகோபாலத்தொணடைமான் பட்டம் சூட்டபபட்டார். இவர் அலெகசாணடர் தொடன காம் எனபவரை நிருவாகத்தை கவனிப்பதறகாக நியமித்தார். இரண்டாம் உலகப் போரின்போதும் புதுக்கோட்டை சமசுதானம் பல உதவிகளை ஆங்கிலேயருக்கு நல்கியது. இந்தியா சுதந்திரம் பெறும் பொழுது புதுககோட்டை தனித்தே இருந்தது சர் தார் வல்லபாய படேலின் கொள்கையின்படி 1948 -ஆம் ஆண்டு அது சுதநதிர இந்தியாவுடன இணைக கப்பட்டது. திருச்சி மாவட்டத்தினின்று 1974-ஆம் ஆணடு பிரிக்கப்பட்டுப் புதுககோட்டை மாவட்டமாக இது விளங்கிவருகின்றது.

**பெரியார் மாவட்டம்:** இம்மாவட்டம் பெரியார் ஈ.வே. இராமசாமி அவர்களின் பெயரால் அமைக்கப் பட்டது. இம்மாவட்டத்தின் பரப்பளவு 8169.2 ச.கி.மீ. ஆகும். பெரியார் மாவட்டத்தின் தலைநகரம் ஈரோடு.

**எல்லைகள்:** இம்மாவட்டத்தின்கிழககில தருமபுரி திருச்சி, சேலம் மாவட்டங்களும, மேற்கில் கோயம் புத்தூர், நீலகிரி மாவட்டஙகளும், தெற்கில் மதுரை மாவட்டமும், வடக்கில் கருநாடக மாநிலமும் எல்லைகளாக அமைந்துள்ளன இம்மாவட்டத்தின் நான்கு பக்கஙகளிலும் நிலஙகளே எலலைகளாக அமைந்துளளன. பெரியார் மாவட்டம் ஏழு வட்டங களைக் கொணடு விளஙகுகிறது. ஈரோடு, பெருந் துறை, தாராபுரம், காங்கேயம், பவானி, கோபிச் செட்டிப்பாளையம், சத்தியமஙகலம் ஆகியவை இம் மாவட்டத்தின் வட்டங்களாகும.




பெரியாா மாவட்டம்

**நிலமும் தட்பவெப்பமும்:** இம்மாவட்டம் மணல் கலந்த செம்மண் நிலப்பகுதியையும் செங்களிமண நிலப்பகுதியையும் கொணடுள்ளது கீழ் பவானி, பரம்பிக்குளம, மேட்டூர்க் கால்வாய்ப் பாசனப் பகுதி களில் மணல்கலந்த செம்மண் நிலங்களும, பிறபகுதியில் களிமண் செங்களி நிலப் பகுதியும் உளளன. தட்டப் பளளி, அரக்கன் கோட்டை காளிஙகராயன் போன்ற நீர்வளமிகக பகுதிகளில் களிமண் நிலப்பகுதி காணப்படு கிறது. கரிசல்மண வகை தாராபுரம், குனபம் போனற பகுதிகளில உள்ளன. இம்மாவட்டத்தில தாளவாடிமலை, தல்லமலை, செனனிமலை, பருவாச்சி மலை, திம்பமலை, தவளகிரிமலை, பூனாட்சிமலை, பவளமலை, பனனாரிமலை, அந்தியூாமலை, வட்ட மலை அரசனனாமலை, திணடல்மலை, மலைப் பாளையம் மலை, எழுமாத்தூர் மலை, எட்டிமலை அருகுமலை, அறச்சலூர் மலை, சிவகிரி மலை

விசயகிரி மலை, ஊராட்சிக் கேட்ட மலை போன்ற மலைகள் உள்ளன. மாவட்டத்தின் வடக்கில் கருநாடகப்பீடபூமியின் தொடர்ச்சி காணப்படுகிறது இப் பகுதியில் உள்ள மலைகள் 900 மீ முதல் 1700மீ. வரை உயரமுடையது.

பெரியார் மாவட்டத்தில் காவிரி, பவானி, நொய் யல், அமராவதி போன்ற ஆறுகள் ஓடுகின்றன. காவிரியின் துணை ஆறுகளாக மேற்குறிப்பிட்ட பிற ஆறுகள் விளங்குகின்றன. இவற்றைத்தவிர சித்தாறு, குரங்கனாறு போன்ற ஆறுகளும் காவிரியின் துணை ஆறுகளாகும். பவானி ஆற்றில் பாய்கரை, கல்லாறு, மோயாறு போன்ற சிற்றாறுகளும், நொய்யலாற் றுக்குக் காஞ்சி, நீலிப்பள்ளம், நள்ளாறு போன்ற சிற் றாறுகளும் உள்ளன. இந்த ஆறுகள அனைத்தும் மாவட்டத்தில கிழக்கு நோக்கியே ஓடுகின்றன. இம் மாவட்டத்தின் கிழக்கு எல்லையாகச் சேலம் மாவட் டத்தைப்பிரிக்கும் ஆறாகக் காவிரி விளங்குகிறது.

இம்மாவட்டத்தில் ஆண்டிற்கு 70 செ.மீ மழை பெய்கிறது. தென் மேற்குப் பருவக் காற்றாலும் வட கிழக்குப் பருவக் காற்றாலும் இம்மாவட்டம் மழையைப் பெறுகிறது. தென்மேற்குப் பருவமழை ஆகசுட்டு, செப்டம்பர், அக்டோபர் மாதங்களிலும், வடகிழக்குப் பருவமழை சூன், சூலை மாதங்களிலும் இம்மாவட்டத்தில் பெய்கிறது. தென்மேற்குப் பருவக் காற்றால்தான் இம்மாவட்டம் அதிக மழையைப் பெறுகிறது. பெரியார் மாவட்டத்தில சத்தியமஙகலம், பவானி வட்டங்கள அதிக மழையைப் பெறு கின்றன. கோபிச்செட்டிப்பாளையம், ஈரோடு ஆகிய வட்டங்கள் சுமாரான மழையும், பெருந்துறை, தாரா புரம் வட்டங்கள குறைந்த அளவு மழையும் பெறு கின்றன. பெரியார் மாவட்டத்தில் கோடைககாலத் தில் வெயில் கடுமையாகவும், குளிர் காலத்தில் குளிர் அதிகமாகவும் உள்ளன. கோடைக்கால அதிக அளவு வெப்பம் 37° செ.கி. குறைந்த அளவு 32° செ.கி. குளிர்காலத்தில் வெப்பநிலை 22° செ.கி. குறைந்த அளவு வெப்பம் 16° செ கி. ஆகும். மார்ச்சு மாதம் முதல் சூலை மாதம் முடியக கோடைக்காலம்; திசம் பர் முதல் பிப்பிரவரி முடியக் குளிர்காலம்.

**வேளாண்மை:** இம்மாவட்டத்தில் முக்கிய தொழில் பயிர்த்தொழில் ஆகும். இப்பகுதி கோபிச் செட்டிப்பாளையம் வேளாணபிரிவு, ஈரோடு வேளாண பிரிவு என இரண்டு பிரிவுகளாகப் பிரிக்கப் பட்டு வேளாண்மைக்கு ஊக்கம் அளிக்கப்பட்டு வரு கின்றது. நிலத்திற்குத்தேவையான நீர்வளத்திற்காகப் பல கால்வாய்கள் இங்கு வெட்டப்பட்டுள்ளன. இவற்றைத்தவிர கிணறுகளும் உள்ளன. இம்மாவட் டத்தில் அரக்கன்கோட்டை வாய்க்கால், தடப்பள்ளி வாய்க்கால், பவானிசாகர் வாய்க்கால், மேட்டூர் மேற்குக்கரைக் கால்வாய், கீழ்பவானி திட்டம், காளிங்கராயன் கால்வாய், உப்பாறு நீர்த்தேக்கம் போன்றவை பாசனத்திற்குப் பயன்படுகின்றன. நெல், சோளம், கேழ்வரகு, பருத்தி, வேர்க்கடலை, வாழை, கரும்பு, கம்பு, வெங்காயம், வெற்றிலை, மஞ்சள், பயறு வகைகள் போன்றவை பயிரிடப்படு கின்றன. விளைபொருள்களை விற்பனை செய்ய வாரந்தோறும் முக்கிய ஊர்களில் சந்தைகள் கூடு கின்றன.

**கனிப்பொருள்கள்:** பெரியார் மாவட்டத்தில் இரும்பு, தங்கம், மணிக்கற்கள் வகைகள் கருங்கல போன்றவை கிடைக்கின்றன

**தொழில்கள்:** தலைநகரமாக விளங்கும் ஈரோடு பெரியதொரு வணிக நகரமாகும். இங்குக் கைத்தறித் துணி, மஞ்சள், புகையிலை, பருத்தி ஆகியவை விறகப் படுகின்றன. இம்மாவட்டத்தின் முக்கிய தொழில் நெசவுத் தொழிலாகும், இது தாராபுரம், பெருந் துறை, ஈரோடு, பவானி, அந்தியூர், சென்னிமலை ஆகிய இடஙகளில பெருமளவில் நடைபெறுகிறது. செனனிமலை, பவானி ஆகிய ஊர்கள் படுக்கை விரிப் புகளுக்கும் போர்வைகளுக்கும் புகழ்பெற்றவை. இம மாவட்டததில் பட்டு உறபத்தியும், பாத்திரஙகள் உற் பத்தி செய்யும் தொழிலும் நடைபெறுகினறன. எண ணெய், தோல், புகையிலைத் தொழிலகளும் நடை பெறுகின்றன. சித்தோடு, சத்திநகர், பெருநதுறை, கவந்தப்பாடி ஆகிய இடஙகளில சர்க்கரை ஆலைகள் உளளன. கால்நடை வளர்ப்பும் இஙகு மிகுதியாக உள ளது பவானிசாகர் அணை, உப்பாறு அணை, ஆகிய இடங்களில் மீன்பிடிக்கும் தொழில் நடைபெறுகிறது. இம்மாவட்டம் தொழிற்சாலைகளுக்குத் தேவையான மின் நிலையங்களைப் பெற்றுத் திகழ்கின்றது.

இம்மாவட்டத்தில் உளள காடுகளிலிருந்து சந் தனம், தேக்கு, மூங்கில், வேஙகை, கருங்காலி, மருது போன்ற மரவகைகள் கிடைக்கினறன. தமிழ்நாட் டின வனககோட்டங்களில் பெரியார் மாவட்ட வனக் கோட்டமே மிகப் பெரியதாகும். இதன் பரப்பளவு 2000 கி.மீ. தமிழ்நாட்டுச் சநதன மரங்களில் மூன்றில் ஒரு பகுதி மரங்கள் இம்மாவட்டத்தில் வளருகின்றன. சத்தியமஙகலத்தில் தமிழ்நாட்டு அரசின சநதன மரக் கிடங்கு ஒன்று உள்ளது. இம்மாவட்டத்தில் உளள காடுகளில் வனவிலங்குகளும் மிக்குள்ளன. தல்லமலைப் பகுதிகளில் புலி, காட்டெருமை, முளளம் பன்றி, மான்கள் உள்ளன. யானைகள் பவானிசாகர், தெங்கமராடா, மேயாறு, பன்னாரிப் பகுதிகளில் உள்ளன. காடுகளிலிருந்து குங்கிலியம்

அரக்கு, தேன், கடுக்காய் போன்ற பொருள்கள் கிடைக்கின்றன.

**மக்கள்:** இம்மாவட்டத்தின் மக்கள்தொகை 20,68,462(1981) ஆகும் இவர்களுள் பெணகளின் தொகை ஆண்களைவிடச் சிறிது குறைவாக உள்ளது மாவட்ட மக்கள் தொகையில் ஆணகள் 44 விழுக் காடும் பெண்கள் 18 விழுக்காடும் கல்வியறிவுடைய வர்களாக உள்ளனர் பெருந்துறை, பவானி வட்டங் களில் மக்கள்தொகை அளவாகவும், ஈரோட்டில் மக்கள்தொகை அதிகமாகவும், சத்தியமங்கலம், கோபிச் செட்டிப்பாளையம், தாராபுரம் ஆகிய இடங்களில் குறைவாகவும் இருந்து வருகிறது இம்மாவட்டத் தில் ச.கி மீ ககு 220 பேர்கள வீதம் மக்கள வசிக் கின்றனர் இங்கு வேளாள மரபினர் மிகுதியாக வசிக் கின்றனர். இவர்கள் கொங்கு வேளாளர் எனபபடு கின்றனர். வேட்டுவர் எனப்படும குடிகளும் இம் கின்றனர். வேட்டுவர் எனப்படும குடிகளும் இம் மாவட்டத்தில் வசிக்கின்றனர். மற்றும் இங்கே இந் துக்கள் அல்லாத பிற சமயத்தவரும் வாழ்கின்ற னர். மாவட்டத்தின் மலைப்பகுதிகளில் மலைவாழ் பழங்குடிகளும் காணப்படுகின்றனர்.

**போக்குவரத்து:** பெரியார் மாவட்டம முக்கிய சாலைகளாலும் இருப்புப் பாதைகளாலும் இணைக் கப்பட்டுள்ளது. இம்மாவட்டத்தின் தலைநகரமான ஈரோட்டிலிருந்து பிறமாவட்டங்களுக்கும் பிற மாநில நகரங்களுக்கும் பேருந்துகளும் தொடர்வண்டிகளும் செல்கின்றன. ஈரோட்டிலிருந்து பவானி, சிததோடு, விசயமஙகலம் வழியாகத் தேசிய நெடுஞ்சாலை ஒன்று கருநாடக மாநிலத்தை அடைகிறது. தாராபுரம், கோபி, பெருந்துறை, காங்கேயம், கரூர், திருச்சி, கோயம்புத்தூர், சேலம், பொள்ளாச்சி போன்ற தமிழ்நாட்டின் முக்கிய நகரங்களுக்குச் சாலைகள செல்கின்றன. பெரியார் மாவட்டத்தின் வழியாக இருப்புப்பாதை 75 கி மீ நீளம் செல்கிறது. இம் மாவட்டத்தின தலைநகரமான ஈரோடு முககிய சந் திப்பு மையமாகும். சென்னையிலிருந்து செல்லும் அகன்ற இருப்புப்பாதை ஈரோடு கோயம்புத்தூர் வழியாகக் கேரள மாநில நகரங்களுக்குச் செல்கின்றது. பிறிதொரு பிரிவு ஈரோட்டிலிருந்து திருச்சி சந்திப் பிற்குச் செல்கின்றது காவிரியாற்றின் பல்வேறு இடங்களில் படகுப்போக்குவரத்தும் நடைபெறுகிறது. இம்மாவட்டத்தில் இயங்கும் சீவாப் போககுவரத்துக் கழகம் ஒரு சிறந்த போக்குவரத்துக் கழகமாக விளங்குகிறது.

**நகரங்கள்:** இம்மாவட்டத்தில் இருபது ஊராட்சி ஒன்றியங்கள் உள்ளன. அவற்றுள் ஐந்து நகராட்சி களும் 15 நகரங்களும் உள்ளன. இந்நகரங்களுள குறிப்பிடத்தக்கவை ஈரோடு, சத்தியமங்கலம், கோபிச் செட்டிப்பாளையம், பவானி, தாராபுரம் முதலியன வாகும். சிவன்மலை, சென்னிமலை, முதலிய பல புண்ணியத்தலஙகளும் இங்குள்ளன ஈரோடு நகரத்தில் உளள தொன்மீச்சுரககோயில், சத்தியமங்கலத்தில உளள பண்ணாரியமமன் திருக்கோயில் போன்றவை புகழ்பெற்ற தலஙகளாகும். இந்துக்கோயில்களை அடுத்து ஈரோட்டிலும் பிற ஊர்களிலும் கிறித்தவர் தேவாலயஙகளும் முகமதியர் மசூதிகளும் உள்ளன.

**கல்வி:** இம்மாவட்டத்தில பல கலைக் கல்லூரி களும், தொழிற் நுட்பக் கல்லூரிகளும, பளளிகளும் உளளன. ஈரோட்டில் அரபு மொழிக கல்லூரி ஒன் றும் உள்ளது.

**வரலாறு:** பழங்காலத் தமிழநாட்டின ஒரு பிரி வாக விளங்கிய கொங்கு நாட்டின் ஒரு பகுதியே இன்றைய பெரியார் மாவட்டம் ஆகும். கொங்கு மண்டல சதகம் என்னும் நூலிலும் பிற தனிப் பாடல்களிலும் கொஙகின் எல்லைகளும் பிறசெய்தி களும் கூறப்பட்டுளளன. இது கொங்குமணடலம் என றும், கொங்கு என்றும், கொங்கம் எனறும் கூறப்பட் டது. இககொஙகு நாடு 24 நாட்டுப் பிரிவுகளாகப் பிரிக் கப்பட்டிருக்கிறது. அவறறுள் இன்றைய பெரியாா மாவட்டம் சில பிரிவுகளைக கொண்டுள்ளது. இப் பகுதியில் கொங்கர் என்னும் குடிமரபினர் வாழ்ந்து வந்தமையால் கொங்கு எனப் பெயர் ஏற்பட்டது என்பர். சங்ககாலத்திற்குப்பின், கங்க மன்னர்களும் அவர்களை அடுத்துச் சோழர், பாணடியர் , போன றோரும் இப்பகுதியில் ஆடசி செலுத்தினர். பாண்டியர் காலத்தில் பட்டககாரர் சிறப்புற்று விளஙகினர். இது கி பி. 13- ஆம் நூற்றாணடில ஒய்சாளர் ஆட்சிக்குட்பட்டுப் பினனர் விசயநகரப் பேரரசிற்குட்பட்டும, மைசூா உடையார்கள் ஆதிக்கததிற்கு உட்பட்டும் இருந்தது. மைசூரை ஆட்சி செய்த ஐதா அலி, திபபுசுல்தான காலத்தில இப்பகுதி மைசூரின் ஒருபகுதியாக விளங்கியது. இவர்களுக்குப் பின், ஆங்கிலேயர் தமிழ்நாட்டில தங்களது ஆதிக்கததை ஏறபடுத்தினர் இம்மாவட்ட மும் ஆஙகிலேயரின வசம் மைசூர்ப போரின் விளை வாக வந்தது.

ஆங்கிலேயர்கள் நிருவாக வசதிக்காக இப்பகுதியை இரு பிரிவுகளாகப் பிரித்தனர். கோவை மாவட்டம் இரண்டு பகுதிகளாகப் பிரிக்கப்பட்டு, வடபகுதி சேலம் பகுதிகளுடன் இணைக்கப்பட்டது. இதன் தலைநகர மாகப் பவானி விளங்கியது. கோவையின் தென்பகுதி யின் தலைநகரமாகத்தாராபுரம் விளங்கியது. பின்னர் 1804-ஆம் ஆணடு கோயம்புத்தூரைத் தலைநகரமாகக கொண்ட கோயம்புத்தூர் மாவட்டமும், சேலத்தைத தலைநகரமாகக் கொண்ட சேலம் மாவட்டமும் உருவா யின. இப் பகுதி கோயம்புத்தூர் மாவட்டத்தில் அடங் கியது. பின்னர், 1979-ஆம் ஆண்டு, இம்மாவட்டத்தின

தலை நகரமான ஈரோட்டில் பிறந்த ஈ.வெ. இராமசாமிப் பெரியார் அவர்களின் நினைவாகப் பெரியார் மாவட்டம் எனப் பெயர் சூட்டப்பட்டுத் தனித்த தொரு மாவட்டமாக விளங்கி வருகிறது.

**மதுரை மாவட்டம்:** பண்டையத் தமிழ்நாட்டு நாகரிகத்தின் நிலைக்களனாக விளங்குகிறது. மதுரையைத் தலைநகராகக் கொண்டு இயங்கி வரும் மாவட்டம்.

**எல்லைகள்:** இம்மாவட்டத்தின் வடக்கில் அண்ணா மாவட்டமும், கிழக்கில் பசும்பொன் முத்துராமலிங்கம் மாவட்டமும், தெற்கில் காமராசர் மாவட்டமும், மேற்கில் கேரளமும் அமைந்துள்ளன. இம்மாவட்டத்தில் மதுரை தெற்கு, மதுரை வடக்கு மேலூர், வாடிப்பட்டி, உசிலம்பட்டி, திருமங்கலம், பெரியகுளம், உத்தமபாளையம் ஆகிய 8 வட்டங்கள் உள்ளன. இம்மாவட்டத்தின் பரப்பளவு 6,558,43 ச.கி.மீ.



கொல்லிமலை மலையாளிப்பழங்குடி

**நிலமும் தட்பவெப்பமும்:** வைகையின் வளத்தையும் பல மலைத்தொடர்களையும் குன்றுகளையும் இம்மாவட்டம் கொண்டிலங்குகிறது. இம்மாவட்டத்தில் யானைமலை, பசுமலை, நாகமலை, சிம்மக்கல், துவரிமான், சிலைமான், அழகர்மலை, எலியார்பத்தி போன்ற மலைகள் உள்ளன. வளமான விளைச்சல் நிலப்பகுதிகளையும் இம்மாவட்டம் கொண்டுள்ளது. இங்குப் பாயும் முக்கிய ஆறு, வைகை ஆறு. இந்தஆற்றுடன் பல கிளை ஆறுகள் கலக்கின்றன. இது தென் மேற்கு வடக்கிழக்கு ஆகிய இருபருவக் காற்றுகளால் மழையைப் பெறுகிறது. இங்கு ஆண்டிற்கு 90. செ.மீ. மழை பெய்கின்றது. இது காட்டு வளமும் உடையது. காடுகளில் தேக்கு, சந்தனம், மூங்கில் முதலிய மரங்கள் வளர்கின்றன.

**வேளாண்மை:** வேளாண்மைத் தொழில் இம்மாவட்டத்தில் சிறப்பாக நடைபெறுகிறது. இங்கு நெல், புகையிலை, வெற்றிலை, நிலக்கடலை, பருத்தி, கரும்பு, சூரியகாந்தி, எள் போன்றவை பயிரிடப்படுகின்றன. பல்வேறு வகைப் பழ இனங்களும் காய்கறிகளும் இங்குப் பயிராகின்றன.

**கனிப் பொருள்கள்:** இம்மாவட்டத்தில் அலுமினிய மண்வகை, காரீயம் (Graphite), பல்வகை இரத்தினக் கற்கள், பளிங்கு போன்ற கனிமங்கள் கிடைக்கின்றன. நத்தம் வட்டத்தில் தங்கப் படிமங்கள் கண்டு பிடிக்கப்பட்டுள்ளன. கண்ணாம்புக் கல்லும் இங்குக் கிடைக்கின்றது.

**தொழில்கள்:** இம்மாவட்டத்தில் ஆலைகள் பல உள்ளன. மதுரை ஆலை (Madura Mills), மீனாட்சி ஆலை, மகாலட்சுமி ஆலை குறிப்பிடத்தக்கவை. மதுரையைச் சுற்றிப் பல ஆலைகள் உள்ளன. பருத்தி விதை எண்ணெய் ஆலைகள், பருத்தி அரைக்கும் ஆலைகள் ஆகியனவும் இம்மாவட்டத்தில் உள்ளன பாண்டியராசபுரத்தில் மதுரை சர்க்கரை ஆலையும், அலங்காநல்லூர் அருகே ஒரு சர்க்கரை ஆலையும் உள்ளன. திருமங்கலம் அருகே மேற்குச் செருமனி நாட்டுத் தொழில்நுட்ப உதவியுடன் உலோகத் தூள் குழுமம் அலிமினியத்தூளைத் தயார் செய்கின்றது. இரசாயனத் தொழிற்சாலைகளும், பல சிறு தொழிற்சாலைகளும் இப்பகுதியில், உள்ளன. மேலூர் செல்லும் சாலையில் தொழிற்பேட்டை ஒன்று உள்ளது.

**மக்கள்:** இம்மாவட்டத்தில் பல்வேறு சமயத்தினரும் வாழ்கின்றனர். சைவமும், வைணவமும், சமணமும் முற்காலத்தில் இப்பகுதியில் தழைத்தோங்கின. இம்மாவட்டத்தின் வளர்ச்சிக்குப் பல்வேறு வகுப்பினரும் பாடுபட்டுள்ளனர். இந்துக்கள், இசுலாமியர், கிறித்தவர் முதலிய பல சமயத்தவர் வாழ்கின்றனர். யாதவர், நாடார், நகரத்தார், சௌராட்டிரர், வேளாளர், பார்ப்பனர் ஆதிதிராவிடர், நாயுடு முதலிய பல்வேறு சாதியினர் வாழ்கின்றனர். பளியர், முதுவர் போன்ற மலைவாழ் மக்களும் வாழ்கின்றனர். இம் மாவட்டத்தின் மக்கள் தொகை 29,71,449 (1981).

**போக்குவரத்து:** இம்மாவட்டத்தின் தலைநகரமான மதுரை போக்குவரத்து வசதி மிக்கதாக உள்ளது. மதுரையின் வழியாகத் தென் மாவட்ட நகரங்களுக்குப் பேருந்துகள் செல்கின்றன. மதுரையிலிருந்து பிற மாநில நகரங்களுக்கும், திருச்சி,

சென்னை, தஞ்சாவூர், கோயம்புத்தூர், ஈரோடு. கன்னியாகுமரி, கோடைக்கானல் போன்ற நகரங்களுக்கும், மாவட்ட நகரங்களுக்கும் பேருந்துகள் செல்கின்றன. மதுரை மாவட்டத்தில சாலைப் போக்குவரத்தைப் பாண்டியன் போக்குவரத்து நிறுவனம் கவனித்து வருகின்றது. இம்மாவட்டததில் தொடர் வண்டிப் பாதை 310 கி மீ தொலைவிறகுப் போடப்பட்டுள்ளது. இது குறுகிய இருப்புப்பாதையாகும். மதுரை முக்கிய சந்திப்பு நிலையமாகச் செயற்படுகிறது. மதுரையில் இருப்புப்பாதைக் கோட்ட அலுவலகம் உள்ளது இங்கு விமான நிலையம் ஒன்றும் செயறபட்டு வருகின்றது. இது அருப்புக்கோட்டை சாலையில் உளளது. மதுரையிலிருந்து பல செய்தித் தாள்கள வெளிவருகின்றன. இங்கு ஒரு வானொலி நிலையமும் நிறுவப்பட்டுள்ளது

**கல்வி:** இம்மாவட்டத்தின் தலைநகரமான மதுரையில் மதுரை காமராசர் பல்கலைக் கழகம் இயங்கி வருகின்றது. இப்பல்கலைக் கழகத்துடன இணைககப்பட்ட பல கலலூரிகள் பலவேறு நகரங்களில் உள்ளன இம்மாவட்டத்தில் தொடக்கப் பாடசாலைகளும், உயா நிலைப் பள்ளிகளும், மேல்நிலைப் பள்ளிகளும், தொழில நுட்பக் கலலூரிகளும், பளளிகளும் உள்ளன. கல்லூரிக் கல்வித துணை இயக்குநர் அலுவலகம் இங்குச செயற்படுகின்றது. மதுரை காமராசர் பல்கலைக் கழகத்தில் பல்வேறு துறைகள் உள்ளன. இமமாவட்டத்தில் ஐந்தாம உலகத் தமிழ் மசநாடு 1981-ஆம் ஆணடு நடத்தப்பட்டது. இம் மாவட்டத்தில் ஆசிரியர் பயிற்சிக் கல்லூரிகளும், சட்டக் கல்லூரி, மருத்துவக்கல்லூரி. வேளாணமைக் கல்லூரி, பொறியியற் கல்லூரி ஆகியனவும் உள்ளன. மதுரை நகரில் பல கலைக்கல்லூரிகள் உள்ளன. இம்மாவடடத்திலுள்ள காந்திகிராமத்தில் காந்திகிராமப் பல்கலைக் கழகம் உளளது.

**நகரங்கள்:** தலைநகரமான மதுரை பழைமையும் சிறப்பும் வாய்ந்த நகரமாகும். பாண்டியர்களின் தலைநகரமாக விளங்கிய மதுரை பலவேறு கலைகளையும் சிறப்புகளையும் பெற்றுத் திகழகிறது. தமிழ் நாட்டின் இரண்டாம் மாநகராட்சியாக இது செயற்படுகின்றது. இங்குள்ள மதுரை மீனாட்சி அம்மன கோயில் புகழ் பெற்றது. இக்கோயில் பாண்டியர்களின் சிற்பக் கட்டடக் கலைக்குச் சிறந்த எடுத்துக்காட்டாக விளங்கி வருகின்றது. மதுரையில பல்வேறு கோயில்களும் பல சுற்றுலாவிடங்களும் உள்ளன, இந் நகரம் சிறந்த வாணிக நகரமும் ஆகும். இம்மாவட்டத்தில்ஆனைமலை, நரசிங்கம், திருமேரூர், கொடிக்குளம், ஒத்தக்கடை, மாங்குளம், மீனாட்சிபுரம், சிறுவலை, புதுப்பட்டி, பொதும்பு, விளாங்குடி, திருப்பரங்குன்றம், அவனியாபுரம், கொடிமங்கலம், மேலூர், அழகர்கோயில், கொட்டாம்பட்டி, நத்தம், உசிலம்பட்டி, சேடப்பட்டி, செல்லம்பட்டி, திருமங்கலம், நிலக்கோட்டை போன்ற ஊர்கள் உள்ளன இம் மாவட்டத்தில் உள்ள சுருளி அருவி, கும்பக்கரை அருவி, மஞ்சளாறு முதலியவை சிறந்த சுற்றுலா மையஙகளாக உள்ளன.

**வரலாறு:** சங்ககாலப் பாண்டியர்களின் தலைநகரமாக விளங்கிய சிறப்புடையது மதுரை. இம்மாவட்டத்தில் வரலாற்றுக்கு மூற்பட்ட காலச் சினனஙகளும், புதிய கற்காலக் கருவிகளும் பல்வேறு இடங்களில் கிடைத்துள்ளன. பலவேறு குன்றுகளில இயற்கையான குகைகள் பல கண்டுபிடிக்கப்பட்டுளளன. இவற்றுள் தொன்மை வாய்ந்த பிராமி வடிவக் கல்வெட்டுகள் பல அறிஞர்களால் கணடுபிடிக்கப்பட்டுள்ளன. தமிழ்ச்சங்கம் வளர்ந்த நகரம் மதுரை பிற்காலப் பாணடியர், இசுலாமியர், நாயக்கர், ஆங்கிலேயர் முதலியோரின ஆட்சிகளுக்கு உட்பட்டு விளங்கிய இம்மாவட்டம் விடுதலைப் போரில் பெரிதும் பங்கு கொண்ட ஒன்றாகும். இம்மாவட்டத்தின் தலைநகரமான மதுரையில் அரசு நிறுவனங்கள பல உள்ளன. மாவட்ட ஆட்சித் தலைவர் அலுவலகமும் இங்கு உள்ளது.

**வடஆர்க்காடு மாவட்டம்:** தமிழ்நாட்டின் வடக்கில் அமைந்துள்ள மாவட்டம் ஆர்க்காடு பகுதியில செல்லும் பாலாற்றின் வடக்குப் பகுதி வடஆர்க்காடு என்றும் அதன் தெற்கே உளள பகுதி தெனஆர்க்காடு என்றும் ஆங்கிலேயர் அழைத்தனர். அப்பெயரே நிலைத்து நின்றுவிட்டது.



சிறுதொழில்

**எல்லைகள்:** வடஆர்க்காடு மாவட்டத்தின் வடக்கில் ஆந்திர மாநிலமும் கிழக்கில் செங்கற்பட்டும் தென்ஆர்க்காடும், மேற்கில் தருமபுரி மாவட்டமும் ஆந்திரமும் எல்லைகளாக அமைந்துள்ளன. இம் மாவட்டம் பரப்பளவில் இன்று பெரிய மாவட்டமாக விளங்கி வருகின்றது. மாவட்டத்தின் தலைநகர் வேலூர் ஆகும். இம்மாவட்டத்தில் அரக்கோணம், வாலாசாப்பேட்டை, குடியாத்தம், வாணியம்பாடி, திருப்பத்தூர், வேலூர், ஆரணி, செய்யாறு, வந்தவாசி, போளூர், செங்கம், திருவண்ணாமலை, ஆர்க்காடு ஆகிய வட்டங்கள் உள்ளன. இம்மாவட்டத்தின் பரப்பளவு12,268 ச.கி.மீ. ஆகும்.

**நிலமும் தட்பவெப்பமும்:** இம்மாவட்டம் கரடுமுரடான மலைப்பகுதிகளையும் பாலாற்றுச் சமவெளிப் பகுதிளையும் கொண்டிலங்குகிறது. மேற்குப்பகுதியில் மைசூர்ப் பீடபூமி பரவியுள்ளது. தொடர்ச்சியான மலைகளையும் சிறு குன்றுகளையும் இம்மாவட்டம் கொண்டு விளங்குகிறது. மாவட்டத்தின் மேற்கிலும் வடக்கிலும் மலைகள் நிறைந்துள்ளன. கிழக்கிலும் தெற்கிலும் வறண்ட பகுதிகளும் சிறு குன்றுகளும் உள்ளன. இது செழுமையான மண் வளத்தைப் பெற்றுள்ளது. மலைகளுக்கு இடையில் பல கணவாய்களும் இங்கு உள்ளன. வடக்கில் சைனகுண்டா கணவாய் ஆந்திராவிற்குச் செல்ல உதவுகிறது. இம் மாவட்டத்தில் பரவியுள்ள சவ்வாது மலைத்தொடர் 3000 அடி உயரமுடையது. இம்மலைத்தொடர் ஆம்பூர், வாணியம்பாடி பகுதிகளில் சமவெளிகளைக் கொண்டுள்ளது. வேலூர் வரை வரும் இம்மலைத் தொடர் இப்பகுதியில் உயரம் குறைந்து கொண்டே செல்கிறது. இம்மலைத் தொடரில் காடுகள் மிகுதி. இம்மாவட்டத்தில் பாலாறு, பெண்ணையாறு, செய்யாறு, பொன்னியாறு, கோர்த்தலையாறு, கௌண்டின்யா ஆறு, அகரம் ஆறு போன்றவை பாய்கின்றன. இவற்றுள் பாலாறு மிகப் பெரிய ஆறாகும். இது மாவட்டத்தின் பல்வேறு வட்டங்களின் குறுக்காகப் பாய்ந்து மேற்கு கிழக்காக ஓடி வங்கக் கடலை அடைகிறது. பாலாறு நந்தி துர்க்கம் என்ற இடத்தில் தோன்றி வாணியம்பாடிப் பகுதியிலும் ஆம்பூர், குடியாத்தம், ஆர்க்காட்டுப் பகுதியிலும் செல்கிறது இவ்வாற்றில் மழைக்காலங்களில் மட்டுமே நீர் ஓடும். சவ்வாது மலையில் தோன்றும் செய்யாறு, மாவட்டத்தின் தெற்குப் பகுதியில் ஓடிப் பாலாற்றுடன் இணைகின்றது. பாலாற்றின் துணையாறான பொன்னியாறு ஆந்திர மாநிலத்தில் சந்திரகிரியில் தோன்றி ஆர்க்காடு அருகில் பாலாற்றுடன் கலக்கிறது. பாலாற்றின் துணையாறுகளான கொட்டாறு, கௌண்டின்யா ஆறு முறையே ஆம்பூர், குடியாத்தம் பகுதியில் பாலாற்றுடன் இணைகின்றன. இம்மாவட்டத்தில் ஏரிகளும் கிணறுகளும் மிகுதியாக உள்ளன. செங்கற்பட்டுக்கு அடுத்த நிலையில் ஏரிகள் இம் மாவட்டத்தில் அதிகமாக உள்ளன. அவற்றுள் மாமண்டூர் ஏரியும் காவேரிப்பாக்கம் ஏரியும் குறிப்பிடத்தக்கவை. இம்மாவட்டத்தின் பீடபூமிப் பகுதியில் வெப்பம் மிகுதி. மலைப்பகுதிகளில் குளிர் காலத்தில் குளிர் மிகுதியாகக் காணப்படுகின்றது. இம் மாவட்டத்தில் அக்டோபர் நவம்பர் மாதங்களில் மழை மிகுதியாக உள்ளது. இங்கு உள்ள காடுகளில் கருங்காலி, சந்தனம், வேம்பு, மா, கருவேலம், வில்வம் போன்ற மர வகைகள் காணப்படுகின்றன. சவ்வாது மலைப் பகுதியில் கரடி, மான் வகைகள், காட்டுப் பன்றி, காட்டு நாய் போன்றவைஉள்ளன.

**வேளாண்மை:** இம்மாவட்டத்தில் நெல் விளைச்சல் கணிசமான அளவு உயர்ந்துள்ளது. இம்மாவட்டத்தில் ஏரிப்பாசனமும் கிணற்றுப் பாசனமும் வேளாண்மை வளர்ச்சிக்கு வழி வகுத்துள்ளன. மாவட்டத்தில் கிணற்றுப்பாசனமே பெரும் அளவில் காணப்படுகிறது. இம்மாவட்ட சாத்தனூர் அணை சிறிதளவு வேளாண்மைக்கு உதவி புரிகிறது. இம் மாவட்டம் தமிழ்நாட்டின் நிலக்கடலை உற்பத்தியில் முதலிடம் பெற்று விளங்குகிறது. இங்குக் கரும்பு, வாழை, வெற்றிலை, பழவகைகள், பூ வகைகள் தென்னை, பனை, சோளம், கம்பு, மக்காச்சோளம் போன்றவை பயிரிடப்படுகின்றன. கால்நடைகளின் வளர்ப்பும் கணிசமான அளவு இங்குக் காணப்படுகிறது.

**தொழில்கள்:** இம்மாவட்டத்தில் குறிப்பிடத்தக்க கனிப்பொருள்கள் கிடைக்கவில்லை. எனினும், தொழில் வளர்ச்சியில் இது பெரிதும் முன்னேறி வருகின்றது. தோல் பதனிடும் தொழிலும் தோல் பொருள்கள் உற்பத்தித் தொழிலும் இம்மாவட்டத்தில் சிறந்து விளங்குகின்றன. இங்கு வாணியம்பாடி, ஆம்பூர், வேலூர், இராணிப்பேட்டை போன்ற இடங்களில் தோல் பதனிடும் தொழிற்சாலைகளும் தோல் பொருள் தயாரிப்பு நிறுவனங்களும் பெருமளவில் உள்ளன. தீப்பெட்டித் தொழிற்சாலைகள் பல சிறு சிறு சிற்றூர்களிலும், குடியாத்தம் ஆம்பூர், வேலூர்ப் பகுதிகளிலும்பெருகியுள்ளன.தீப்பெட்டித் தொழிலில் குடியாத்தம் நகரம் சிறந்துள்ளது. இம்மாவட்டத்தில் நெசவுத் தொழிலும் வளர்ச்சியடைந்துள்ளன. மாவட்டத்தில் ஆரணி, பட்டு உற்பத்தியில் சிறந்து விளங்குகிறது. குடியாத்தம், ஆரணி, சோளிங்கபுரம், வாலாசாபேட்டை ஆகிய இடங்களில் நெசவுத் தொழில் மிகுந்துள்ளன. இம்மாவட்டத்தில் நடுவண் அரசின் தொழில் நிறுவனம்(BHEL) காட்பாடிக்கு அருகில் முகந்தராயபுரம் என்னும் இடத்தில் உள்ளது. இதன் அருகில்உள்ள இராணிப்பேட்டையில் பல

தொழிற்சாலைகள உள்ளன. உரத்தொழிற்சாலையும், வெள்ளைக் களிமண்ணால் செய்யப்படும் பீங்கான் பொருளகள் செய்யும் தொழிற்சாலைகளும், பல சிறு தொழிற்சாலைகளும் உள்ளன. தமிழக அரசின் வெடிமருந்துத் தொழிற்சாலை ஒன்று காட்பாடியில் அண்மையில் நிறுவப்பட்டது இம்மாவட்டத்தின் காடுகளில் இருந்து கிடைக்கும் பொருளகளால் மாவட்ட வருவாய்மிகுந்துள்ளது. சந்தன எண்ணெய் தயாரிப்பு நிலையம் ஒன்று திருப்பத்தூரில் உள்ளது. அரக்கோணத்தில் இரும்புத் தொழிற்சாலை ஒன்று இயங்கி வருகின்றது.

மாவட்டத்தின கூட்டுறவு சர்க்கரை ஆலைகள் பல உள்ளன. திருவலம் என்ற ஊரில் வேலூர்ச் சர்க்கரை ஆலையும், ஆம்பூரில்'ஆம்பூர்க் கூட்டுறவுச் சர்க்கரை ஆலையும் உள்ளன. மேல்பட்டி என்ற இடத்தில் தனியார் சர்க்கரை ஆலை ஒன்று இயங்கி வருகினறது. திருபத்தூரில் செங்கல்வராயன் ஆலை ஒன்றும் உளளது. பல சிறு பட்டறைகள் வேலூரில் உள்ளன. மாவட்டத்தின் காடுகளிலிருந்து அரக்கு, கடுக்காய், தேன், மரப்பொருள்கள் போன்றவை கிடைக்கின்றன.

**மக்கள்:** இம்மாவட்டத்தின் மக்கள் தொகை 44,14,324 (1981) பல்வேறு இன மக்களும் இங்கு வாழ்ந்து வருகின்றனர். அவர்களுள் குறிப்பிடத்தகக வர்கள் முதலியார் எனப்படும் வேளாளர்கள் ஆவர். இவர்களுள் பல பிரிவுகள் உள்ளனர். அகமுடையார் எனனும் பிரிவு இம்மாவட்டத்தின் வேளாளர்களில் மிகுதியாகக் காணபபடுகின்றனர். பூந்தமல்லி வேளாளர் கொண்டைகட்டி வேளாளர் போன றோரும் இம்மாவட்டத்தில் உள்ளனர். செங்குந்த முதலியார், கவுண்டாகள் எனப்படும் வன்னிய குல சத்திரிய மரபினரும் கிறித்தவர்களும் தெலுங்கு மொழிபேசும் மககளும் இசுலாமியர்களும் பெருமள வில் வாழ்கின்றனர். மலைப்பகுதிகளில் மலையாளி, இலம்பாடி இன மக்களும் வாழ்கின்றனர். ஆதிதிரா விட மக்களும், குறும்பர்களும் இங்குக் காணப்படு கின்றனர். சமணர்கள் இமமாவட்டத்தில் வந்தவாசி செய்யாறு பகுதியில பெருமளவில் வாழ்கின்றனர். இம்மாவட்டத்தில் உளள சிற்றூர்களில் மாரியம்மன, கங்கையம்மன் கோயில் வழிபாடு புகழ் பெற்றவை யாகும்.

**போக்குவரத்து:** வட ஆர்க்காடு மாவட்டம் போக்குவரத்து வசதிகளை மிகுதியாகப் பெற்றுள்ளது. இம்மாவட்டத்தின் தலைநகரமான வேலூரிலிருந்து மாவட்டத்தின் முக்கிய நகரங்களுக்கும் சிற்றூர்களுக் கும் மாநிலத்தின் பிற நகரங்களுக்கும் பிற மாநிலங் களுக்கும் பேருந்துகள் செல்கின்றன. இம்மாவட்டத் தின் சாலைப் போக்குவரத்தைப் பட்டுக்கோட்டை அழகிரி போக்குவரத்துக் கழகம் என்னும் அரசு நிறு வனம் கவனித்து வருகின்றது. வேலூரிலிருந்து ஆம் பூர், திருப்பத்தூர், கிருட்டிணகிரி, தருமபுரி, சேலம், ஈரோடு, பெங்களூர், நகரங்களுககும், சென்னை, கடலூர், விழுப்புரம், சிதம்பரம், பாண்டிச்சேரி, கும்பகோணம், சித்தூர், திருப்பதி போன்ற இடங் களுக்கும் பேருந்துகள் செல்கின்றன. இம்மாவட்டத் தின் வழியாக அகல இருப்புப்பாதையும்,மீட்டர் அளவு இருப்புப்பாதையும் செல்கின்றன. இம்மாவட்டத்தில் தான் தமிழ்நாட்டின் அதிகமான தொடர்வண்டிச் சந்திப்பு நிலையங்கள் உள்ளன. அரக்கோணம், காட் பாடி, சோலார்பேட்டை ஆகியவை முக்கிய சந்திப்பு நிலையங்களாகும். அரக்கோணத்திலிருந்து சென்னை, பம்பாய் அகல இருப்புப்பாதையும் சென்னை பெங்க ளூர் - திருவனந்தபுரம் இருப்புப்பாதையும் செங்கற் பட்டு மீட்டர் அளவு இருப்புப்பாதையும் பிரிகின்றன. காட்பாடி சந்திப்பிலிருந்து திருப்பதி, விழுப்புரம், இருப்புப்பாதை பிரிகிறது.சோலார்பேட்டை சந்திப்பு நிலையத்திலிருந்து பெங்களூர் செல்லும் பாதையும திருவனந்தபுரம் செல்லும் பாதையும் பிரிகின்றன. இம்மாவட்டத்தில் குடியாத்தம், ஆம்பூர், வாணியம் பாடி, வாலாசாப்பேட்டை, திருப்பத்தூர், வேலூர், திருவண்ணாமலை, போளூர் ஆகிய முக்கிய இருப்பு பாதை நிலையங்கள் உள்ளன. இஙகு விமான நிலை யம் ஒன்று வேலூருக்கு அருகில் அப்துலலாபுரம் என்ற இடத்தில் உள்ளது. இது அவசர காலங்களில மட்டுமே பயன்பாட்டில் உளளது.

**நகரங்கள்:** இம்மாவட்டத்தின் தலைநகரமான வேலூர் வரலாற்றுச் சிறப்பு மிக்க நகரமாகும். இஙகு விசயநகரப் பேரரசுக்குப் பிறபட்ட காலத்தில் கட்டப் பட்ட கோட்டை ஒன்று உள்ளது. வேலூரிலதான முதல் சுதந்திரப் போர் நடத்தப்பட்டது. இது வரலாற றில் வேலூர்ச் சிப்பாய்க் கலகம் எனக் கூறப்படுகிறது. வேலூரில் உள்ளகோட்டை அகழிகளால் சூழப்பட் டது. இதனுள் அழகிய மண்டபங்கள உள்ளன. இவை ஐதர்அலி மண்டபம், திப்புசுல்தான் மண்டபம், எனக் கூறப்படுகின்றன. ஆங்கிலேயர்களின் பாசறையாக இக்கோட்டை முன்பு இருந்தது. இப்பொழுது அரசு அலுவலகங்களும், மாவட்ட ஆட்சியாளர் அலுவலக மும், காவலர் பயிற்சிக் கூடங்களும், காவல்துறை அலுவலகங்களும் உள்ளன. இக்கோட்டையினுள் உள்ள சலகண்டேசுவரர் ஆலயம் நீண்ட நாட்கள் வழிபாடு அற்றிருந்து இப்பொழுது வழிபாட்டிற்குப் பயன்படுத்தப்பட்டுவருகிறதுவேலூர் நகரத்தில்ஆசியா வின் பெரிய மருத்துவமனைகளுள் ஒன்றான கிறித்துவ மருத்துவக்கல்லூரி மருத்துவமனை உள்ளது. இந்நக ரம் ஒரு வாணிக நகரமும் ஆகும். இம்மாவட்டத்தில் உள்ள குடியாத்தம் நகரம் கங்கை அம்மன் திருவிழா

விற்குப் புகழ்பெற்றது. இந்நகரம் கௌண்டின்யமகா நதிக்கரையில் அமைந்துள்ளது. இவ்வூரில் நெசவுத் தொழிலும் தீப்பெட்டி தயாரிக்கும் தொழிலும் சிறப்பாக நடைபெறுகின்றன. இங்கு இரண்டு நூற்பாலைகள் உள்ளன. திருப்பத்தூர், ஆம்பூர், வாணியம்பாடி நகரங்கள் தோல் தொழிலில் வளர்ச்சி பெற்று வரும் நகரங்களாகும். திருப்பத்தூர் இம்மாவட்டத்தின் மேற்கில் உள்ள முக்கிய நகரம் ஆகும். ஆம்பூர், வாணியம்பாடி பகுதியில் கணிசமான அளவு இசுலாமியர்கள் வாழ்கின்றனர். ஆரணி, திருவண்ணாமலை, போளூர், படவேடு, ஆர்க்காடு, வாலாசா, இராணிப் பேட்டை, செய்யாறு, சோளிங்கபுரம், வந்தவாசி, வாலாசாப் பேட்டை, அரக்கோணம், காவேரிப்பாக்கம் போன்றவை இம்மாவட்டத்தில் உள்ள முக்கிய நகரங்களாகும். ஆர்க்காடு, ஆர்க்காட்டு நவாபுகளின் தலைநகராக இயங்கி வந்தது. இங்குப் பழமையான கோட்டை ஒன்று உள்ளது. சோளிங்கபுரம் கோயில்களுக்குப் புகழ்பெற்றது. இங்கு ஆங்கிலேயர்கள் நடத்தியப் போர் சோளிங்கா போர் எனக் கூறப்படுகிறது இம்மாவட்டத்தில் உள்ள வள்ளிமலை முருகன் சிறப்புப் பெற்ற ஊராகும். திருவண்ணாமலை கோயிலுக்குப் புகழ்பெற்ற ஊர். இங்கு ஒவ்வொரு ஆண்டும் நடக்கும் கார்த்திகைத் தீபத் திருவிழா புகழ் பெற்றது.

**கல்வி:** இம்மாவட்டத்தில் வேலூர், விசாரம், குடியாத்தம், காட்பாடி, ஆம்பூர், வாணியம்பாடி, திருப்பத்தூர், வாலாசாபேட்டை, திருவண்ணாமலை, செய்யாறு ஆகிய ஊர்களில் கலைக் கல்லூரிகள் உள்ளன. குடியாத்தம், வேலூர், காட்பாடி ஆகிய இடங்களில் தொழில்நுட்பக் கல்லூரிகளும் உள்ளன. மேலும் ஆசிரியர் பயிற்சிக் கல்லூரியும், பள்ளிகளும் மாவட்டத்தில் உள்ளன. மேல்நிலைக் கல்விக்கூடங்கள் உயர்நிலைப் பள்ளிகள், தொடக்கப் பாடசாலைகள், சிற்றூர்களிலும் பேரூர்களிலும் உள்ளன. இம் மாவட்டத்தின் தலைநகரமான வேலூரில் காவலர் பயிற்சிப் பள்ளி உள்ளது. இங்குள்ள வேலூர்ச் சிறைச்சாலை பழமைப் புகழ்மிக்கது. செவிலியர் பள்ளிகளும் மருத்துவக் கல்லூரி ஒன்றும் வேலூரில் செயற்பட்டு வருகின்றன.

**வரலாறு:** பழமையான பண்பாட்டைக்கொண்டது வடஆர்க்காடு மாவட்டம் ஆகும். இம்மாவட்டம் கருநாடகம், ஆந்திரம் ஆகிய பண்பாட்டு மையங்களின் சந்திப்பு மாவட்டமாகவும் நிலவியல் அடிப்படையில் அமைந்துள்ளது. இம்மாவட்டத்தில் பழங்கற்காலக் கருவிகள் பல அரக்கோணம் பகுதியில் கிடைத்துள்ளன. புதிய கற்காலக் கருவிகள் மாவட்டத்தின் பழமைக்குச் சான்று பகர்கின்றன. சங்ககாலத்தில் செங்கம் பகுதி சிறப்புற்று விளங்கியது. இது செங்கண்மா எனக் கூறப்பட்டது. இங்கு நடு கற்கள் பல கிடைத்துள்ளன. ஆண்டிப்பட்டி என்ற இடத்தில் சங்கக் காசுப்புதையல் கிடைத்துள்ளன. இம்மாவட்டத்தில் குறும்பர்கள் குடியேறி வாழத் தலைப்பட்டனர். பல்லவர்களின் ஆட்சிக்குட்பட்ட இப்பகுதியில் சமணர்கள் கணிசமான அளவில் வாழ்ந்து வந்தனர். பல்லவர்களின் குகைக்கோயில் பல மாவட்டத்தின் பல்வேறு பகுதிகளில் உள்ளன. பல்லவர்களின் வீழ்ச்சிக்குப்பின் இப்பகுதியில் சோழர்கள் ஆட்சி ஏற்பட்டது. இக்காலத்தில் வேளாளர் மரபினர் தமிழகத்தின் மேற்கிலும், தெற்கிலும் இருந்து இப்பகுதியில் குடியேறினர். இம்மாவட்டத்தின் சிலபகுதிகள் பாணர் கங்கர் ஆட்சிக்குட்பட்டன. பின்னர் விசயநகரப் பேரரசிற்கும், முகம்மதியர் ஆட்சிக்கும் இம்மாவட்டம் உட்பட்டது. சந்திரகிரி சிற்றரசுக்கு உட்பட்ட இப்பகுதியில் மராட்டியர்களின் ஆதிக்கம் ஏற்பட்டு ஆங்கிலேயர்களின் ஆட்சிக்குட்பட்ட பகுதியாகக் கருநாடக நவாபின் ஆட்சியின்கீழ் இயங்கி வந்தது. இவர்களின் தலைநகரம் ஆர்க்காடு ஆகும். ஆங்கிலேயர் ஆட்சியில் இம்மாவட்டத்தின் பல்வேறு பகுதிளும் முதன்மை பெற்றது. வேலூர், சோளிங்கர், ஆம்பூர், ஆர்க்காடு, ஆரணி, வந்தவாசி போன்ற இடங்கள் ஆங்கிலேயரின் போர்க்களங்களாக மாறின. இராபர்ட்டு கிளைவின்வெற்றிக்கு அடிகோலியது ஆர்க்காட்டுப் படையெடுப்பே. கிளைவு ஆர்க்காட்டினை கி.பி. 1751-ஆம் ஆண்டு கைப்பற்றினார். கருநாடகப் போரின் முக்கிய தளமாக விளங்கியது ஆம்பூர் ஆகும். இப்போர் கி.பி. 1749-ஆம் ஆண்டு நடைபெற்றது. காவேரிப்பாக்கம் என்ற இடத்தில் ஆங்கிலேயர்களுக்கும் ஆர்க்காடு நவாபிற்கும் இடையில் போர் ஏற்பட்டது. முகம்மது அலி என்பவர் ஆர்க்காட்டின் நவாபானார். ஆங்கிலேயரின் ஆட்சியில் வேலூர் படைத் தளமாக விளங்கி வந்தது. சுதந்திரப் போருக்குப்பின் இம்மாவட்டம் சிறந்து விளங்கி வருகிறது. சு.இரா.

**துணை நூல்கள்:**

'அகில இந்தியச் சுற்றுலாவும் தொழில் பொருட் காட்சியும்', சென்னை, கையேடு, தமிழ்நாடு அரசு, 1985.

மாவட்ட மக்கள் தொடர்பு அலுவலகக் குறிப்புகள், 1988.

Census of India, 1981.

**Crowther, Geoff, India - A Travel Survival Kit, Lonely Planet Publications Victoria, Australia, 1981.**

**Statistical Handbook of Tamilnadu, Department of Satistics, Madras, 1985.**

*தமிழ்நாடு*, இந்திய முந்நீரகப் பகுதியின் தெற்கில் அமைநதுளள மாநிலம். இது தமிழகம் என்றும் கூறப்படும். தமிழ் மொழி பேசும் மககள் வாழும் பகுதியாதலால் இது தமிழநாடு எனப் பெயர் பெற்றது. தமிழ்நாடு, இந்திய மாநிலங்களின் பரப் பளவின அடிப்படையில பதினோராம் மாநிலமாகத் திகழகிறது. இம்மாநிலத்தின் பரப்பளவு 1,30,058 ச.கி.மீ. வங்காள விரிகுடாவில் உள்ள இராமேசுவர மும் அதனைச சுறறியுளள 10 தீவுகளும் இம்மா நிலத்துடன் இணைந்துளளன தமிழ்நாடு 8° வட அட்சரேகையிலிருந்து 13° வட அட்சரேகை வரையி லும், 78° கிழக்குத் தீர்க்கரேகையிலிருந்து 80° கிழக்குத் தீர்க்கரேகை வரையிலும் பரவியுள்ளது. தமிழ்நாட்டின் தலைநகரம் சென்னை.

**எல்லைகள்:** இம்மாநிலத்தின் எல்லைகளாக வடக் கில் ஆந்திரப்பிரதேசம், கருநாடகம் ஆகிய மாநிலங் களும், தெற்கில் இநதுமாககடலும், கிழக்கில் வங்காள விரிகுடாவும், மேற்கில் கருநாடகம் கேரளம் ஆகிய மாநிலங்களும் அமைநதுளளன. இம்மாநிலத்தின் கிழக்குப் பகுதியில் அமைந்துள்ள பாண்டிச்சேரி காரைக்கால் ஆகிய பகுதிகள் நடுவணரசின் நேரடி ஆட்சிக்குட்பட்ட பகுதிகளாகும்.

**நில அமைப்பு:** தமிழ்நாட்டை நில அமைப்பால் கிழக்கில் கடற்கரைச் சமவெளி என்றும், வடக்கிலும் மேற்கிலும் மலைத்தொடர்ப் பகுதி என்றும், இரணடா கப்பிரிக்கலாம். கடற்கரைச சமவெளியை மூன்று துணைப்பிரிவுகளாகப் பிரிக்கலாம். அவையாவன: (அ) கடற்கரைச் சமவெளியில் அமைந்துள்ள சென்னை, செங்கற்பட்டு, தென்ஆர்க்காடு, வடஆர்க் காடு ஆகிய மாவட்டங்கள், (ஆ) வண்டல் மண் படிநத காவிரி ஆற்றின கழிமுகப் பகுதி, (இ) மதுரை, இராமநாதபுரம், காமராசர், அண்ணா, பசும்பொன் முத்துராமலிங்கம், கன்னியாகுமரி, திருநெல்வேலி கட்டபொம்மன ஆகிய மாவட்டங்கள் அடங்கிய வறண்ட தெற்குச் சமவெளி. கிழக்குக் கடறகரை ஏறக்குறைய 1000 கி.மீ. நீளமுடையது. இது உலகத் தின் அழகிய கடற்கரைகளுள் ஒன்றாகும்.

தமிழகத்தின் மேற்கில் தொடர்ச்சியாக மலைகள் படர்ந்துள்ளன. அவை மேற்கே 80 கி.மீ. தொலை விலிருந்து 160 கி.மீ தொலைவு வரை வடக்குத் தெற்காகப் பரவிச் செல்கின்றன. இம்மலைத் தொடர் கரடுமுருடான பாறைகளைக் கொண்டு செங்குத் தான பல மலைகளைப் பெற்றுத் திகழ்கிறது. அம் மலைத் தொடர்ச்சியுடன் கிழக்கிலிருந்து செல்லும் மலைத்தொடர் நீலகிரியில் ஒன்றாக இணைகிறது. மேற்குத் தொடர்ச்சி மலையில் ஆனைமலை, பழனி மலை, ஏலக்காய்மலை, அகத்திய மலை ஆகியவை உள்ளன. வடக்காகச் செல்லும் கிழக்குத் தொடர்ச்சி மலை, ஒரிசா மாநிலத்தில் தொடங்கித் தென்மேற் காகக் கஞ்சம் (Ganjam) மாவட்டம் வழியாக இடைப்பட்ட பல்வேறு மாவட்டங்களில் பரவிச் சென்று நீலகிரியில் இணைகிறது கிழக்கித் தொடர்ச்சி மலை எனக் கூறப்படும் இம்மலைத் தொடரில் சவ் வாது மலை, சேர்வராயன் மலை, கல்ராயன் மலை, கொல்லிமலை, பச்சைமலை ஆகியன உளளன. கிழக்கித் தொடர்ச்சி மலை தொடர்ச்சியாகச் செல்லாமல் ஆங்காங்கே தொடர்பற்றுக காணப்படு கிறது. ஆனால், மேற்குத் தொடர்ச்சிமலை ஒரு பெருஞ் சுவரைப் போல் தொடர்ச்சியாகச் செல்கிறது. எனினும், மேற்குத் தொடர்ச்சி மலைகளில் கோயம் புத்தூர் மாவட்டப் பகுதியில் கேரள மாநில எல்லைப் பகுதியில் பாலக்காட்டுக் கணவாய் உளளது. இது 25 கி.மீ. அகலமுடையது. கேரளா மாநில எல்லைப் பகுதியில் செங்கோட்டைக்கு அருகில ஆரியங் காவுக் கணவாயும், கன்னியாகுமரி மாவட்டத்தில் ஆரம் பொழிக் கணவாயும் இம்மலைத் தொடரில் உள்ள பிற கணவாய்களாகும்.

தமிழ்நாட்டில் பல கோடை வாழ்விடங்கள் உளளன. கோடைக் காலத்தில இவ்வாழ்விடங்களுக்கு உள்நாட்டுச் சுற்றுலாப் பயணிகள், வெளிநாட்டார், செல்வர்கள் போன்றோர் சென்று தங்குவர். தமிழ கத்தின் கோடை வாழ்விடங்கள உதகமணடலம், கோடைக்கானல், கூனூர், கோத்தகிரி, ஏர்க்காடு, ஏலகிரி போன்றவை ஆகும். இவற்றுள் முக்கியமா னவை உதகமண்டலமும், கோடைக்கானலும் ஆகும்

**ஆறுகள்:** தமிழ்நாட்டில் பாயும் ஆறுகள் யாவும் மேற்குத் தொர்டச்சி மலைகளில் தோன்றிக் கிழக் காகப் பாய்ந்து வங்கக் கடலில் கலக்கின்றன. பெரும் பாலான ஆறுகளில் மழைக் காலத்தில்தான் 'நீர்ப் போக்குக் காணப்படுகிறது. இம்மாநிலததில் பாலாறு, பெணணையாறு, காவிரி, வைகை, தாமிரபருணி, வைப்பாறு போன்ற முக்கிய ஆறுகள் பாய்கின்றன. இவை தவிர, கோதையாறு, பழையாறு போனற ஆறுகளும் தமிழ்நாட்டில் ஓடுகின்றன. இவ்வாறுகளுள காவிரி ஆறே இம்மாநிலத்தில் பாயும் மிக நீளமான ஆறாகும். இதன் நீளம் 760 கி.மீ. ஆகும். இது கரு நாடக மாநிலத்தில் குடகில் தோன்றித்தமிழ்நாட்டில தஞ்சாவூர் மாவட்டத்தில் காவிரிப் பூம்பட்டினத்திற்கு அருகில வங்கக்கடலில் கலக்கிறது.

தமிழ்நாட்டில் பாயும் ஆறுகள பல நீர்வீழ்ச்சி களைக்கொண்டுள்ளன. காவிரியாற்றின் நீர்வீழ்ச்சி தருமபுரி மாவட்டத்தில் ஒகெனேக்கல்லில் உளளது. தாமிரபருணியின் துணையாறான சிற்றாறு திருநெல் வேலி மாவட்டத்தில் குற்றால நீர்வீழ்ச்சியை




சிரீ சாரங்கபாணி கோயில்–கும்ப கோணம்

உருவாக்கியுள்ளது. கலியான தீர்த்தம் என்னும் நீர் வீழ்ச்சி பாபநாசம் அருகில் உளளது. மேலும் குமபக் கரை நீர்வீழ்ச்சி, திருபபரப்பு நீர்வீழ்ச்சி போனற பல சிறு நீர்வீழ்சசிகளும தமிழநாட்டில் உளளன.

**ஏரிகள்** தமிழ்நாட்டின வடக்கு மாவட்டங்களில ஏரிகள் மிகுதி. செஙகற்பட்டு மாவட்டம் ஏரிகளின மாவட்டம் என்று கூறப்படுகிறது. இம்மாவட்டத்தில மதுராந்தகம் ஏரி, செம்பரம்பாக்கம ஏரி, செங்கற் பட்டு ஏரி, புழலஏரி ஆகிய பெரிய ஏரிகள் உளளன. வடார்க்காடு மாவட்டத்தில் உள்ள காவேரிப்பாககம் ஏரி இம்மாவட்டத்தின் மிகப்பெரிய ஏரியாகும். தென் னாக்காடு மாவட்டத்தில உள்ள வீராணம் ஏரியும் தமிழ்நாட்டின முக்கிய ஏரியாகும். தமிழ்நாட்டின் பாசனமுறைகளுள ஏரிப்பாசனமும் ஒன்றாகும்.

**மண் அமைப்பு:** தமிழ்நாட்டு ஆறுகளின் படுகை களில் வண்டல் மண் காணப்படுகிறது காவிரி தஞ்சா வூர் மாவட்டத்தில் வணடல் படிந்த படுகை களை ஏற்படுத்தி இம்மாவட்டத்தை வளம் கொழிககச் செய்துளளது. களிமண நில அமைப்பும், மணற்பாஙகானபகுதியும், தாதுக்கள கலந்த செந்நிறக் கப்பிக்கல்லும், பருத்தி விளையக்கூடிய கரிசல மண் பகுதியும் இம்மாநிலம் பெற்றுத் திகழகிறது. கரிசல் மண் சேலம, பெரியாா, கோயம்புததூர், தென் மாவட்டங்கள ஆகியவற்றில் காணப்படுகிறது.

**தட்ப வெப்பம்:** தமிழநாடு நிலநடுக்கோட்டிற்கு அருகில் இருப்பதால் ஒரு வெப்பமண்டலப் பகுதியாக உள்ளது கோடைக்காலத்தில் இம்மாநிலத்தில் 109° பாரன்கீட்டு(43°செ.கி.) வெப்பமும், குளிர் காலத்தில் 64°பா.கீ(25°செ.கி.) வெப்பமும் உளளது. அதிக அளவு வெப்பம் கோடைக்காலமான ஏப்பிரல முதல சூன் வரையிலும், குறைந்தஅளவு வெப்பம் குளிர்காலு மான திசம்பர் முதல் சனவரி முடியவும் உள்ளன. தமிழநாடு தென்மேற்குப் பருவக காற்றாலும், வட கிழக்குப்பருவக் காற்றாலும் மழையைப் பெறுகிறது. இம்மாநிலத்தில் தென்மேற்குப் பருவக் காற்றால் சூன், சூலை, ஆகசுட்டு, செப்டம்பர், ஆகிய மாதங களிலும் வடகிழககுப் பருவக் காற்றால் அக்டோபர் நவம்பர், திசம்பர் ஆகிய மாதங்களிலும் மழை பெய் கிறது. தென்மேறகுப் பருவக காற்றைவிட வட கிழக்குப் பருவக் காற்றால்தான் இம்மாநிலத்தில அதிக மழை பெய்கிறது. இம்மாநிலம ஆணடிற்கு 25 அங்குலம் முதல் 75 அஙகுலம் வரை மழை பெறு கிறது.

**காடுகள்:** இம்மாநிலத்தில் மொத்தப் பரப் பளவில் 17.22 விழுக்காடு காடுகள பரவியுளளன. மேற்குத் தொடர்ச்சி மலைத் தொடர்ச் சரிவுகளி லும் வடக்கில் பரவியுள்ள கிழக்குத் தொடர்ச்சி மலைச் சரிவுகளிலும் காடுகள் மிகுதியாகக் காணப படுகின்றன. மூங்கில்கள், சந்தன மரங்கள, பிரம்பு, இரப்பர், தேக்கு, காகிதம் செய்யப் பயன்படும் மர வகைகள் போன்றவை இக்காடுகளில் வளரும் முக்கிய மரங்களாகும். இவை தமிழ்நாட்டின் பொருளாதார வளர்ச்சிக்குப் பெரிதும் உதவிபுரிகின்றன. மாநில அரசும் காடுகளின் தேவையை உணர்ந்து காடுகளைக் காப்பதில் முனைப்புடன செயறபட்டு வருகிறது. இக காடுகளின் மொத்தப் பரப்பளவில் ஒதுக்குக் காடு கள், ஒதுக்கு நிலங்கள், வகைப்படுத்தாத நிலங்கள ஆகியவை அடங்கும். இக்காடுகளிலிருந்து விறகு, புளி, கடுக்காய், தோல் பதனிடும் பொருள்கள ஆகி யவையும்கிடைக்கின்றன இககாடுகளைத் தவிர்த்துச் சமூக நலக் காடுகள் அமைப்பதிலும மாநில அரசு முயன்று வெற்றி பெற்றுள்ளது.

**விலங்குகள:** தமிழநாட்டுக் காடுகளில கணிசமான அளவு வனவிலங்குகள இனம் பெருக வனவிலங்குச் சரணாலயஙகள உளளன. இப்பொழுது தமிழகத்தில் 12 வனவிலங்குச் சரணாலயங்கள உளளன. முதுமலை, வேடந்தாங்கல் போனறவை முககிய வனவிலங்குச் சரணாலயங்கள ஆகும். இவற்றைத் தவிர ஏனைய இடங்களில் இயற்கையான சூழலில் வனவிலஙகுகள தன்னிச்சையாக வாழ்கின்றன. புலி, யானை, மான், கரடி, குரஙகுகள், காட்டெருமை, பாம்பு வகை, பல விதமான பறவைகள போன்றவை தமிழ்நாட்டுக் காடுகளில் காணப்படும் உயிரினங்கள் ஆகும். தென் கிழக்கு ஆசிய நாடுகளிலேயே மிகப் பெரிய உயிரியல பூஙகாவை வண்டலூாஎன்னும் இடததில் 1980-ஆம் ஆண்டு 510 எகடேர் (Hectare) நிலப்பரப்பில் தமிழ நாடு அரசு அமைத்து வனவிலங்குகளைப் பாதுகாக்க முயற்சி எடுத்து வருகிறது.

**மக்கள்:** இம்மாநிலத்தின் மககள்தொகை 48,408,077 (1981). இது இந்தியாவின்மொத்த மக்கள தொகை யில் 14 விழுக்காடு ஆகும். இவர்களுள ஆணகள 2.5 கோடி, பெண்கள 2.3 கோடி மாநிலத்தின் முக்கிய நகரங்களில் மககள தொகை மிகுதியாக உளளது. இமமாநிலத்தில் 1 ச.கி மீ. இடததில் 372 பேர் வசிக் கின்றனர். இம்மக்கள, நடுத்தர உயரமும, கறுப்பு, பழுப்பு நிற உடல் அமைப்புமபெற்றுளளனர். இவர் களைத் திராவிட இன மககள என மானிடவியலார் பகுத்துளளனா. ஆனால், தமிழ்நாட்டு மக்கள தமிழர் கள் எனக் கூறப்படுவா. இவாகள பேசும் மொழி தொன்மையான தமிழ மொழி ஆகும். இம்மாநிலத் தில் தமிழைத் தாய்மொழியாகக் கொண்டவர்கள 85 விழுக்காட்டினர் ஆவர். தெலுங்கு, கன்னடம், மலையாளம், உருது, குசராததி, இந்தி, மராத்தி ஆகிய மொழிகளைத் தாய்மொழியாகக் கொணட மக்களும் வாழ்கின்றனர். மாநில அரசின் அலுவலக மொழியாகத் தமிழ் விளங்குறது. ஆங்கிலமும்

படித்த மக்களால் பேசப்பட்டு வருகிறது. தமிழ்நாட்டில் படகர், தோடர்,இலம்பாடிகள, இருளர், காடர், மலையாளிகள், புலையர், குறும்பர். கோத்தா போன்ற பழங்குடிகளும் வாழ்கின்றனர்.

தமிழ்நாட்டில் பெரும்பாலான மக்கள் நகரங்களில் வசிப்பினும், சிற்றூர்களே மிகப் பெரும் அளவில் உள்ளன. பெரும்பாலான வேளாண மக்கள சிற்றூர்களில் வசிக்கினறனர். தலைநகரமான சென்னையில்தான் மககள் தொகை மிகுதியாக உளளது. அதறகடுத்த நிலையில் மதுரை, கோயம்புத்தூர், திருசசிராப்பள்ளி ஆகிய நகரங்கள் விளங்குகினறன.

தமிழர் பிற நாடுகளிலும, இநதியாவின் பிற மாநிலங்களிலும் கணிசமான அளவில வாழ்கின்றனர். தமிழநாட்டைத் தவிர்த்து உலக நாடுகளில் வாழும் தமிழர்களின் எணணிககை 60 இலட்சம் ஆகும். பிற நாடுகளில் வாழும் தமிழர்களின எண்ணிக்கையைவிட இலஙகையில் வாழும் தமிழர்களின் எண்ணிக்கை பெரிதாகும் இலங்கையின் மொத்த மக்கள தொகையில் 25 விழுக்காட்டினர் தமிழ்மொழியைத் தாய் மொழியாகக் கொண்டவர்களாவா. மலேசியா, சிங்கப்பூர், மொரீசியசு, பிசித் (Fiji) தீவுகள, பர்மா தாயலாந்து, மடகாசுகர், தென ஆப்பிரிககா, பிரிட்டன், அமெரிக்கா, உருசியா போன்ற நாடுகளிலும் தமிழர்கள வாழ்கின்றனர். தமிழா அணடை மாநிலங்களான கருநாடகம், ஆநதிரம், கேரளம் மகாராட்டிரம், பாண்டிச்சேரி, திலலி போன்ற மாநிலங்களிலும் வசிக்கின்றனர்.

**சமயம்**: தமிழ்நாட்டில் இந்துக்களே பெரும்பான்மையாக வசிக்கின்றனர். இம்மாநிலத்தில் மிகத் தொன்மைக் காலத்திலிருந்தே சைவமும் வைணவமும் தழைத்தோங்கின. இநது சமயத்தின் இரு கண்களான சைவமும் வைணவமும் வளரத் தமிழ்நாட்டின் அரசர்களும், சமயப பெரியார்களும் பாடுபட்டனர். முற்காலத்தில் தமிழகத்தில் சைவம், வைணவம் ஆகியவற்றோடு சமணமும் பௌத்தமும் வளர்ச்சியடைந்ததை வரலாறு கூறுகிறது. இன்றைய தமிழநாட்டில் இந்துக்களே பெரும்பானமையானவர்களாக உள்ளனர். கிறித்தவம், இசுலாம், சமணம் முதலிய சமயத்தைச் சார்நதவர்களும் இம்மாநிலத்தில் வசிக்கின்றனர். இந்துக்கள 89.12 விழுக்காடும், கிறித்தவர்கள் 5.75 விழுக்காடும், இசுலாமியர் 5.11 விழுக்காடும் பிற சமயத்தவர் 0.02 விழுக்காடும் இங்கு வாழ்கின்றனா. இந்துக்கள், கிறித்தவர்கள், இசுலாமியர் ஆகியோர் தமிழநாட்டின் எல்லா மாவட்டங்களிலும் வாழ்கின்றனர். சமணர்கள வடார்க்காடு, தென்னார்க்காடு, சென்னை மாவட்டம் ஆகியவற்றில் மட்டும் வசிக்கின்றனர். இந்திய அரசியல் அமைப்புச் சட்டம் சமயச சார்பற்ற ஆட்சி முறையை மக்களுக்கு அளித்துள்ளமையால, எல்லாச் சமயததவரும் சமமாகவும் சகிப்புத் தன்மையுடனும் ஒற்றுமையாக இம்மாநிலத்தில் வாழ்கின்றனா.

இநது சமயம் வளரத் தமிழகத்தில் சைவ சமயப் பெரியார்கள் அறுபத்துமூவரும், வைணவப் பெரியார்கள் பன்னிருவரும் பாடுபட்டனர். தமிழ்நாடு பழைமை வாய்ந்த கோயில்களுக்குப் புகழ்பெற்றது. சைவ வைணவக் கோயில்கள் ஒவ்வோர் ஊரிலும் காணப்படும். சிவனுக்கும் திருமாலுக்கும் பல கோயில்கள் தமிழகத்தில் உள்ளன. இந்து சமயத்தின இவ்விரு முககிய கடவுளரை அடுத்துத் தமிழகம் முருகன் தலங்களுககுப் புகழ்பெற்றது. முருகனின் அறுபடை வீடுகள் தமிழகத்தில் உளளன. மேலும் பல இந்து தெய்வங்களுக்குக் கோயிலகள் பல தமிழகத்தில் உளளன. பல சிறு கிராம தேவதைகளையும் இந்துக்கள வழிபடுகின்றனர். தமிழர்கள் உழவர் திருநாள், தீபாவளி, ஆடித்திருவிழா போன்ற பல திருவிழாக்களைக் கொணடாடுகின்றனா. இந்து சமய வளர்சசிக்குத தமிழகத்தில் பல சமய மடங்களும் உள்ளன. காஞ்சி காமகோடிபீடம் இந்து சமயத்தின முதன்மையகமாகும். சைவமடஙகளும் வைணவ மடஙகளும் தமிழகத்தின பல பகுதிகளில் உள்ளன.

கிறித்தவர்களுக்கான தேவாலயங்கள் தமிழ்நாட்டின பல ஊர்களில உளளன. கிறித்தவ சமயம் தமிழநாட்டில பரவ முக்கிய பங்கு வகிததவர்கள் மேலைநாட்டு அறிஞர்கள ஆவர். அவர்களுள குறிப்பிடத் தக்கவர்கள் நொபிலி பாதிரியாா, சீகன் பாலகு, சுவாட்சு பாதிரியார், வீரமாமுனிவர், கால்டுவெல் போன்றோர் ஆவர். தமிழ்நாட்டில முக்கிய கிறிததவ ஆலயஙகள வேளாங்கணணி ஆலயம், சென்னையிலுளள சாந்தோம் ஆலயம், தரஙகம்பாடி ஆலயம், திருச்சி தூய வளனார் ஆலயம் போன்றவை ஆகும்.

இசுலாமிய சமயமும் தமிழ்நாட்டில் பரவலாகக் காணப்படுகிறது. இசுலாமிய சமயம் தமிழகத்தில் வளரக் காரணமாக இருநத பெரியோர்களுள குறிப்பிடத்தக்கவர் அசரத் நத்தர் வலி. எனபவர். இவர் கி.பி. 10-ஆம் நூறறாணடில் திருச்சி நகரில தம் சமயப் பணியைத் தொடஙகினாா இவரைத் தவிரக் காசி சையது, தாசுதீன், சையது சாகுல் அமீது போன்ற பெரியோர்களும் இசசமயம் வளரப் பாடுபட்டனர். இச்சமயத்திற்கான பெரிய பள்ளிவாசல் சென்னை திருவல்லிக்கேணியில உள்ளது. நாகூர் தர்கா இசுலாமியர்களின் புனித ஆலயமாகக் கருதப் படுகிறது.

**பொருளாதாரம், வேளாண்மை**: தமிழ்நாட்டின பொருளாதாரத்தின் முதுகெலும்பாக வேளாண்

மையே விளங்குகிறது. தமிழ்நாட்டு மக்களில் பெருங் பகுதியினர் வேளாண் தொழிலில் ஈடுபட்டுள்ளனர். வேளாண்மைத் தொழிலுக்கு ஏற்ற வகையில் நீர்ப் பாசனத் திட்டங்கள் பல, அரசால் முனைப்புடன் செயற்படுத்தப்பட்டன. ஏரிப்பாசனம், கிணற்றுப் பாசனம், ஆற்றுப்பாசனம் போன்றவை மாநிலத்தில் காணப்படும் பாசன முறைகள் ஆகும். தமிழ்நாட்டின் முக்கிய உணவுப்பயிர் நெல் ஆகும். தஞ்சாவூர் மாவட்டத்தில் நெல் பெருமளவில் பயிரிடப்படுகிறது. எனவே, இம்மாவட்டம் தமிழ்நாட்டின் நெற்களஞ்சியம் எனக் கூறப்படுகிறது. செங்கற்பட்டு, தென்னார்க்காடு, மதுரை, திருநெல்வேலி ஆகிய மாவட்டங்களிலும் நெல் விளைச்சல் மிகுதியாகக் காணப்படுகிறது, வடார்க்காடு மாவட்டம் வேர்க்கடலை உற்பத்தியில் முதலிடம் பெற்றுத் திகழ்கிறது. இம் மாநிலத்தில் கரும்பு, கேழ்வரகு, கம்பு, சோளம் மக்காச்சோளம், மிளகாய், வாழை, சிறு தானியங்கள், பயறு வகைகள், பருத்தி போன்றவை பயிரிடப்படுகின்றன. காப்பி, தேயிலை, இரப்பர் ஆகியவை தமிழ்நாட்டுப் பொருளாதார வளர்ச்சிக்கு உதவிபுரிகின்றன. தமிழ்நாட்டு மலைகளில் ஏலக்காயும் பிற நறுமணப் பொருள்களும் பயிராகின்றன.

**கால்நடைகள்**: பசு, ஆடு, கோழி வளர்ப்பிலும் தமிழகத்தின் பொருளாதாரம் உயர்ந்துள்ளது. வெளி நாடுகளிலிருந்து உயர்ரகப் பசுக்கள் பெறப்பட்டுக் கால்நடை வளர்ப்புத் தமிழகத்தில் வளர்ச்சி பெற்று வருகிறது. பால் உற்பத்தியும் முட்டை உற்பத்தியும் சிற்றூர்களில் சிறப்பாக நடைபெறுகின்றன. முட்டை உற்பத்தியில் தமிழகம் 1986-87இல் 2067.16 மிலியனாக உயர்ந்துள்ளது. பல ஆடு வளர்ப்புச் சங்கங்கள் மூலம் ஆடுகள் வளர்க்கப்படுகின்றன. கால்நடைகள் வளர்ச்சியுறவும் நோய்களைத் தடுக்கவும் கால்நடை மருத்துவ மனைகள் தமிழ் நாட்டில் தொடங்கப் பட்டுள்ளன. பால், முட்டை, இறைச்சி மற்றும் கம்பளிபோன்றவை தமிழ்நாட்டின் முக்கியகால்நடை உற்பத்திப் பொருள்களாகும்,

**தாதுப்பொருள்கள்**: தமிழ்நாட்டில் பழுப்புநிலக்கரி, பெட்ரோலியம், இயற்கை வாயு, இரும்புத்தாது, அலுமினியத் தாதுப் பொருள், கனிக்கல் (Gypsum), சுண்ணாம்பு, வெளிம உயிரகை (Magnisite), போன்றவை கிடைக்கின்றன. இந்தியாவில் பழுப்பு நிலக்கரி உற்பத்தியில் தமிழ்நாடே முதலிடம் பெறுகிறது. நெய்வேலியில் பழுப்பு நிலக்கரிச் சுரங்கம் உள்ளது. பழுப்பு நிலக்கரி செயங்கொண்டம், கங்கை கொண்ட சோழபுரம் ஆகிய பகுதிகளில் இப்பொழுது கண்டு பிடிக்கப்பட்டுள்ளது. சேலம் மாவட்டத்தில் இரும்புத் தாதும் அலுமினியத்தாதும் சுண்ணாம்பும்கிடைக்கின்றன. பெட்ரோலியம், இயற்கை வாயு ஆகியவை தஞ்சாவூர் மாவட்டத்திலும் தென்னார்க்காடு மாவட்டத்திலும் கிடைக்கின்றன.

**தொழில்கள்**: தமிழ்நாடு தொழில் வளர்ச்சியில் சிறந்த முன்னேற்றம் அடைந்துள்ளது. சிறு தொழில் களும் பெரிய தொழிற்சாலைகளும் தமிழகத்தில் உள்ளன. தமிழகத்தில் நடைபெறும் முக்கிய தொழில்களுள் குறிப்பிடத்தக்கவை நெசவுத் தொழில், சிமிண்டுத் தொழில், இரும்பு எஃகுத் தொழில், சர்க்கரைத் தொழில், காகிதம் செய்யும் தொழில், இரசாயன உர உற்பத்தி ஆகியவையாகும். தமிழ் நாட்டில்பருத்தி ஆலைகள் 303 உள்ளன. தென்னிந்தியாவில் தமிழ்நாட்டில்தான் பருத்தி ஆலைகள் மிகுதி. இம்மாநிலத்தில் சிமிண்டு உற்பத்தி செய்யும் தொழிற்சாலைகள் 8 உள்ளன.

நடுவணரசின் தொழிற்சாலைகள் பல தமிழ் நாட்டில் உள்ளன. சென்னை பெரம்பூரில் தொடர் வண்டிப் பெட்டிகள் தயாரிக்கும் தொழிற்சாலையும், நுங்கம்பாக்கத்தில்அறுவைச்சிகிச்சைக் கருவிகள் செய்யும் தொழிற்சாலையும், கிண்டியில் தொலை அச்சடிப்பான் (Teleprinters) தொழிற்சாலையும், உதக மண்டலத்தில் ஒளிப்படச்சுருள் தொழிற்சாலையும், திருச்சி, இராணிப்பேட்டை ஆகிய நகரங்களில் உயர் அழுத்த கொதிகலன் தொழிற்சாலையும் (BHEL), ஆவடியில் பீரங்கிப்படைவண்டிகள் செய்யும் தொழிற் சாலையும், திருச்சியில் துப்பாக்கித் தொழிற்சாலையும், மணலியில் எண்ணெய்ச் சுத்திகரிப்பு ஆலையும், சேலத்தில் எஃகு ஆலையும் தமிழ்நாட்டில் உள்ள நடுவணரசின் முக்கிய தொழிற்சாலைகள் ஆகும்.

மேலும், இம்மாநிலத்தில் பேருந்துகள், மிதி வண்டி, இயந்திரச்சிறு உந்து வண்டிகள் அமைக்கும் தொழிற்சாலைகளும், இரசாயனப் பொருள்கள் அலுமினியம் தயாரித்தல் போன்ற தொழிற் சாலைகளும் உள்ளன. அம்பத்தூர், எண்ணூர், இராணிப்பேட்டை, ஒசூர், திருச்சி போன்ற இடங்களில் தொழிற்பேட்டைகள் உள்ளன. மீன்பிடித்தல் தொழிலில் இம்மாநிலம் இரண்டாம் இடத்தில் உள்ளது. தமிழ்நாட்டில் சென்னை, தூத்துக்குடி, கடலூர், நாகப்பட்டினம், இராமேசுவரம், பாம்பன், கீழக்கரை, கன்னியாகுமரி, குளச்சல் ஆகிய இடங்களில் துறைமுகங்கள் உள்ளன. முத்துக்குளித்தல் தொழிலும் தமிழ்நாட்டின் தொன்மையான தொழிலாகும். பட்டாசு, தீப்பெட்டித் தொழிற்சாலைகள், தோல் பதனிடுதல், திரைப்படத் தொழில் போன்றவை பிற தொழில்களாகும்.

கைவினைப் பொருள்களுக்குத் தமிழகம் சிறப்புப் பெற்றது. பருத்தி பட்டுநெசவு, உலோகச்சிலை வார்ப்பு, தோல்பொருள்கள், பிரம்பு, காகிதப்

பொருள்கள செய்தல், செம்பு, பித்தளை ஆகியவற்றால் பொருள்கள் செய்தல், மரச்செதுக்கு வேலை, ஓலைப் பின்னல் போன்றவை வெளிநாட்டவரின் மனத்தைக் கவரும் வகையில் தயாரிக்கப்படுகின்றன.

தொழில்கள் வளரவும், வேளாண்மை செழிக்கவும் தமிழ்நாட்டில், ஆறுகளின் குறுக்கே அணைகள் கட்டி நீர் மின்சக்தி எடுக்கப்படுகிறது. அணைகள், வேளாண்மைக்குப் பயன்படுகின்றன. தமிழ்நாட்டில் மேட்டூர் அணை, பவானி சாகர் அணை, அமராவதி அணை, மணிமுத்தாறு அணை, வைகை அணை, மஞ்சளாறு அணை, பேச்சிப்பாறை அணை, பெருஞ்சாணி அணை, கிருட்டிணகிரி அணை, வீடுர் அணை, கல்லணை ஆகிய அணைகள் உள்ளன. இவ்வணைகள் நீர்ப்பாசனத்திற்குப் பெரிதும் உதவிபுரிகின்றன.

தமிழ்நாட்டின் பொருளாதார வளர்ச்சியில் மின்சாரம் பெரும்பங்கு வகிக்கின்றது. தமிழ்நாட்டில் 18 நீர் மின் நிலையங்கள் உள்ளன. தமிழ்நாட்டின் முதல் நீர் மின் நிலையம் பைக்காரா நீர்மின் நிலையம் ஆகும். நீர்மின் நிலையங்களைத தவிரத் தமிழகத்தில் பேசின் பாலம், எண்ணூர், தூத்துக்குடி, நெய்வேலி ஆகிய இடஙகளில் அனல் மின் நிலையங்கள் உள்ளன. இம்மாநிலத்தில் கல்பாக்கம் என்னும் இடத்தில் அணு மின் சக்தி நிலையம் 1983-ஆம் ஆண்டு முதல் செயற்பட்டு வருகிறது.

தமிழ்நாட்டின் பொருளாதார வளர்ச்சியையும் சேமிப்பையும் ஊக்குவிக்கும் வகையில் நடுவணரசின் பல்வேறு வங்கிகள் செயற்படுகின்றன. இவ்வங்கிகள் புதியதாகத் தொழிற்சாலைகளைமாநிலத்தில் ஏற்படுத்தியும் சிறு தொழில்களுக்கும் வேளாண் தொழில்களுக்கும் பண உதவி அளித்தும் பொருளாதாரத்தை மேம்பாடு அடையச் செய்துள்ளன. இவ்வஙகிகளைத் தவிரக் கூட்டுறவு வங்கிகளும் மக்களுக்குப் பயன்படும் வகையில் பல்வேறு சிற்றூர்களிலும் நகரஙகளிலும் அமைக்கப்பட்டுள்ளன.

**போக்குவரத்து:** இம்மாநிலம் போக்குவரத்தில் சிறந்த முன்னேற்றம் கண்டுள்ள மாநிலமாகும். தமிழ்நாட்டில் தேசிய நெடுஞ்சாலைகளும் மாநில நெடுஞ்சாலைகளும் மாவட்டச் சாலைகளும், ஊராட்சிச் சாலைகளும் உள்ளன. தேசிய நெடுஞ்சாலைகள் நடுவணரசின் பாதுகாப்பிலும், பிற சாலைகள் மாநிலத்தின் பொறுப்பிலும் உள்ளன. இம்மாநிலத்தில் உள்ள தேசியநெடுஞ்சாலைகளின்மொத்த தொலைவு 1852 கி.மீ. ஆகும். பிற மாநிலங்களை இச்சாலைகள் இணைக்கின்றன. இம்மாநிலத்தில் உள்ள தேசிய நெடுஞ்சாலைகளில் மிக நீண்ட சாலை கன்னியாகுமரியிலிருந்து காசி செல்லும் தேசிய நெடுஞ்சாலையாகும். மாநில நெடுஞ்சாலைகள் மாநிலத்தின் முக்கிய நகரங்களை இணைக்கின்றன. மாநில நெடுஞ்சாலைகளில் மிகவும் நீண்டசாலை நாகப்பட்டினம்-கூடலூர் சாலையாகும். தமிழ்நாட்டில் தமிழக அரசால் செயற்படுத்தப்படும் போக்குவரத்துக் கழகங்கள பதினைந்து உள்ளன. மாநில அரசின் பேருந்துகளின் எண்ணிக்கை பதினோராயிரம் ஆகும். இவை மாவட்ட அளவில் பிரிக்கப்பட்டுச் சிற்றூர்கள். நகரங்கள முக்கிய நகரங்கள் ஆகியவற்றிற்குச் செல்கின்றன. தமிழ்நாட்டில் 1973 வரை தனியார் பேருந்துப் போக்குவரத்து பெருமளவில் செயற்பட்டுவநதது. அவை சிறிது சிறிதாகக் குறைக்கப்பட்டுத் தமிழக அரசே பேருந்துக் கழகங்களை ஏற்படுத்தி மக்களின் பயன்பாட்டை நிறைவு செய்துள்ளது. தனியார் துறையின் பேருந்துகள் குறிப்பிட்ட தொலைவிற்குச் செல்ல அனுமதி வழங்கப்பட்டுள்ளது. இவை 120 கி.மீ. குறைவான வழித்தடங்களில் செல்லவே அனுமதி அளிக்கப்பட்டுள்ளன. மாவட்ட அளவில் செயற்படும் பேருந்துக் கழகங்களைத் தவிரத் தமிழ்நாடு முழுவதும் உள்ள முக்கிய நகரங்களுக்குச் செல்லத் திருவள்ளுவர் போக்குவரத்துக் கழகம் 1980-ஆம் ஆண்டு தொடங்கப்பட்டது. அதைத் தவிரச் சுற்றுலாப் பயணிகளுக்கெனத் தமிழ்நாடு சுற்றுலா வாரியமும் பேருந்துகளை விட்டுள்ளது. நகரங்களுக்கும் சிற்றூர்களுக்கும் இடையில் நகரப் பேருந்து வசதிகள இக்காலத்தில் செய்யப்பட்டுள்ளன. சென்னைப் பெருநகர்ப் பகுதியில் பல்லவன் போக்குவரத்துக் கழகம் என்னும் பெருநகரப் பேருந்துகள் ஓடுகின்றன.

இம்மாநிலத்தில் நடுவணரசின் கீழ் இயங்கும் இருப்புப்பாதைப் போக்குவரத்து பிற மாநிலஙகளுடன் தமிழ்நாட்டை இணைப்பதுடன் மாநிலத்தின் முக்கிய நகரஙகளையும் இணைக்கிறது. இந்தியாவில் உள்ள இருப்புப்பாதைப் பிரிவுகளில தெற்குப் பிரிவின் (Sothern Railway) தலைநகரமாகச் சென்னை விளங்குகிறது. தென்னக இருப்புப்பாதையின் நீளம் 3887 கி.மீ. ஆகும் சென்னையிலிருந்து தில்லி, பெங்களூர், திருவனந்தபுரம், பம்பாய், கொச்சி, ஐதராபாது, கல்கத்தா, காசி ஆகிய பிற மாநில நகரங்களுக்கு அகல இருப்புப்பாதை செலகிறது. சென்னை அரக்கோணம் வழியாகச் சோலார்ப்பேட்டை வரை செல்லும் அகல இருப்புப்பாதை மின்சக்தியால் இயங்குகிறது. இதேபோன்று சென்னை எழும்பூரிலிருந்து தெற்கிலுள்ள தமிழ் நாட்டு நகரங்களுக்குச் செல்லும் மீட்டர் அளவு இருப்புப்பாதை விழுப்புரம் வரை மின்சாரத்தால் இயங்குகிறது. சென்னை - கும்மிடிப்பூண்டி இருப்புப்பாதையும் சென்னை பம்பாய் செல்லும் இருப்புப்பாதையில், திருத்தணிகை வரை செல்லும் இருப்புப்பாதையும் மின்சாரத்தால் இயங்குவனவாகும். மிகக் குறுகிய இருப்புப்

பாதை வண்டிகள் மேட்டுப்பாளையும்-உதகமண்டலம் வழியில் செல்கின்றன.

இம்மாநிலம் பிற மாநிலத் தலைநகரங்களுடனும் வெளிநாடுகளுடனும் முக்கிய விமான வழித்தடங்கள மூலம் இணைந்துள்ளது. இந்தியாவில் உளள விமான நிலையங்களில் சென்னை மீனம்பாக்கம் விமான நிலையம் முக்கிய இடத்தை வகிக்கிறது. இங்குப் பன்னாட்டு வருகைக்கெனவும், உள்நாட்டு வருகைக்கெனவும் தனித்தனி நிலையம் இப்பொழுது செயற்பட்டு வருகிறது. தமிழ்நாட்டின் உள்ளூர் விமான நிலையங்களிலிருந்து மதுரை, கோயம் புத்தூர், திருச்சி, தஞ்சாவூர், நெய்வேலி ஆகிய நகரங்களில் உள்ளன. சென்னையிலிருந்து தில்லி பம்பாய், கல்கத்தா, ஐதராபாது, திருப்பதி விசா கப்பட்டினம், பெங்களூர், கொச்சி, திருவனந்தபுரம், அகமதாபாது ஆகிய இந்திய நகரங்களுக்கும், கொழும்பு, சிங்கப்பூர், அபுதாபி போன்ற நாடுகளுக்கும் விமானங்கள் செல்கின்றன.

இம்மாநிலத்தில் உள்ள துறைமுகஙகளில் இருந்து பெரும்பாலும் சரக்குகளே ஏற்றிச் செல்லப்படுகின்றன. சென்னைத் துறைமுகம் ஒரு செயற்கைத் துறைமுகம் ஆகும். இங்குப் பயணிகள் செல்லும் கப்பல்களும் இயங்குகின்றன. தமிழ்நாடு அரசிற்குச் சொந்தமான மூன்று கப்பல்களும் சரக்குகளை ஏற்றி வரப் பயன்படுகின்றன. கன்னியாகுமரியில் உள்ள விவேகானந்தர் பாறை நினைவுச் சின்னத்திற்குப் படகுப் போக்குவரத்துச் செயற்பட்டு வருகிறது.

**செய்தித்தொடர்பு:** இம்மாநிலத்தில் சென்னை, திருச்சி, திருநெல்வேலி, கோயம்புத்தூர், மதுரை, நாகர்கோவில ஆகிய நகரங்களில் வானொலி நிலையங்கள் இயங்குகின்றன. இந்நிலையங்கள் மக்களுக்குச் செய்திகள், பயனுள்ள நிகழ்ச்சிகள், பொழுதுபோக்கு ஆகியவற்றை ஒலிபரப்பும் நிலையஙகளாகச் செயற்படுகின்றன. இவை மைய அரசின் அதிகாரத்தின்கீழ் இயங்குகின்றன. இம்மாநிலத்தில் சென்னையில் தொலைக்காட்சி நிலையம் ஒன்று 1975-ஆம் ஆண்டு அமைக்கப்பட்டது. மாநிலத்தின் பிற நகரஙகளில தொலைக்காட்சி அஞ்சல் நிலையஙகள பல ஏற்படுத்தப்பட்டுள்ளன. அவற்றுள் குறிப்பிடத்தக்கது தென் மாவட்டங்களில் ஒளிக்காட்சி தெளிவாகத் தெரியக் கொடைக்கானலில் ஏற்படுத்தப்பட்டுள்ள தொலைக்காட்சி அஞ்சல் நிலையம் ஆகும்.

தமிழ்நாட்டின் அஞ்சல், தந்தி, தொலைபேசி நிருவாகத்தை மைய அரசே கவனித்து வருகிறது. இந்தியாவின் பிறபகுதிகளுக்கும் பிறநாடுகளுக்கும் இம்மாநிலத்தில் இருந்து தொடர்புகொள்ளப் புதிய வசதிகள் செய்யப்பட்டுள்ளன.

**செய்தித்தாள்கள்:** தமிழ்நாட்டில் 1979-ஆம் ஆண்டு முடிய 778 செய்தித்தாள்கள் தமிழில் வெளியாயின. செய்தித்தாள்களில் நாளிதழ்கள், வார இதழ்கள், மாதம் இருமுறை வெளியிடப்படும் இதழ்கள், மாத இதழ்கள் போன்றவை அடங்கும். நாடோறும் நடைபெறும் உலக நிகழ்ச்சிகளை மக்கள் எளிதில் அறியும் வண்ணம் இச்செய்தித் தாள்கள் செய்கின்றன. செய்தித் தாள்கள மாநிலத்தின் முக்கிய நகரங்களில் அச்சாகின்றன. தமிழ் நாளிதழ்களைத் தவிர ஆஙகில நாளிதழ்களும் தமிழநாட்டில் வெளியிடப்படுகின்றன.

**அரசு:** மாநில அரசின் ஆட்சித் தலைவராக ஆளுநர் விளஙகுகிறார். மாநில ஆளுநரை இந்தியக் குடியரசுத் தலைவர் நியமிக்கிறார். இம்மாநிலச் சட்டமன்றம் கீழ்ச்சபையை மட்டும் கொணடு உள்ளது. இந்திய அரசியல் சட்டப்படி தமிழ்நாட்டில் உள்ள 21 வயது அடைந்த ஆண் பெண் அனைவரும் தஙகளுக்கு விருப்பமான சட்ட மன்ற உறுப்பினரைத் தேர்ந்தெடுத்து அனுப்பும் உரிமையைப் பெற்றுளளனர். இந்தியா முழுவதற்குமான பாராளுமன்றத்திற்கும் மாநிலத்திற்கான சட்டமன்றத்திற்கும் உறுப்பினர்களை ஐந்து ஆணடுகளுக்கு ஒரு முறை தேர்ந்தெடுபபதற்கெனத் தேர்தல்கள நடைபெறும். தமிழ் நாட்டில் 234 சட்டமன்றத் தொகுதிகளும், 39 பாராளுமன்றத் தொகுதிகளும் உள்ளன. தேர்தல்களில் பெரும்பான்மையான இடங்கள பெறும் அரசியல் கட்சி அமைச்சரவையை அமைககும். இவ்வமைச்சரவையின் தலைவராக முதலமைச்சர் விளஙகுவார்.

தமிழ்நாடு 20 மாவட்டங்களாகப் பிரிக்கப்பட்டு, ஒவ்வொரு மாவட்டமும் பல கோட்டஙகளாகவும் வட்டங்களாகவும் ஒன்றியங்களாகவும் பிரிக்கப்பட்டுள்ளது. ஒவ்வொரு மாவட்டத்தின் நிருவாகப் பொறுப்பையும் மாவட்ட ஆட்சித் தலைவா கவனிப்பார். தமிழ்நாட்டில 52 கோட்டஙகளும் 166 வட்டங்களும் உள்ளன. ஒவ்வொரு கோட்டமும் ஒரு உதவி மாவட்ட ஆட்சியாளர் அல்லது துணை மாவட்ட ஆட்சியாளரின மேற்பாாவையில செயற்படுகிறது. வட்டங்களின் நிருவாகப் பொறுப்பை வட்ட ஆட்சியாளர் கவனிப்பார். ஒவ்வொரு வட்டமும் பல உள்வட்டஙகளாகவும் ஒன்றியஙகள சிற்றூர்களாகவும் பிரிக்கப்பட்டுள்ளன. உள்வட்டத்தின் நிருவாகம் வருவாய் ஆய்வாளரிடமும், சிற்றூர்களின் நிருவாகம் சிற்றூர் நிருவாக அதிகாரியின் (Village Administrative Officer) மேற்பார்வையிலும் உள்ளன. மக்களாட்சியின் அடிப்படையில் ஒவ்வொரு ஊரின் ஆட்சிப் பொறுப்பும் தல ஆட்சிமுறையில் செம்மைப்படுத்தப் படுகிறது. சிற்றூர் ஊராட்சி, ஊராட்சி ஒன்றியம், நகராட்சி, மாநகராட்சி ஆகியவை தமிழ்நாட்டின் உள்ளாட்சியைக் கவனித்து

வருகின்றன. இவை மக்களின சுகாதாரம், மின்வசதி, சாலை அமைப்பு,கல்வி வசதி ஆகியவற்றைக் கவனிக், கின்றன. இம்மனறங்களுக்கான உறுப்பினர்களை மக்களே தேர்நதெடுப்பர். இத்தேர்தல்களும் சட்ட மன்ற, பாராளுமன்றத் தேர்தலகளைப் போல் நடை பெறும். ஆனால், உள்ளாட்சித் தேர்தல்களுக்கு வாக் களிக்கும் உரிமை 18 வயதாகத் தமிழ்நாடு அரசு குறைத்துள்ளது. தமிழ்நாட்டில் 3 மாநகராட்சிகளும், 98 நகராட்சிகளும், 607 பேரூராட்சிகளும், 374 ஊராட்சி ஒன்றியங்களும், 12,582 ஊராட்சிகளும் உள்ளன.

**நீதி.** மாநிலததின் தலைமை நீதிமனறம் சென் னையில உளளது. தமிழ நாட்டில சொத்து சம்பந்த மான உரிமை வழக்குகளையும் ஒப்பந்த விவகாரங களையுமை விசாரிக்க மாவட்ட அளவில் உரிமை இயல் நீதிமன்றஙகள் உளளன. உரிமை இயல் நீதிமன்றங களில் கீழ்நிலை அளவில் உளள நீதிமன்றம் மாவட்ட உரிமை இயல் நடுவர் நீதிமனறம் (District Munsiff Courts) எனக கூறப்படுகிறது. இவை வட்ட மையங் களில் செயற்படுகின்றன, இம மன்றத்திற்கு மேற் பட்ட நீதிமனறஙகள் மாவட்டக கோட்டஙகளில உள்ள துணை நீதிமனறங்கள்(Sub-Divisional Magistrates Court) ஆகும். இதற்கும் மேல் நிலையில் உள்ள நீதிமன்றம் மாவட்ட நீதி மன்றமாகும் (District of Sessions Courts).இவற்றிற் கெல்லாம் உயர்ந்த நிலையில் உயர் நீதி மனறம் (High court) செயற்படு கிறது.

சட்டம் ஒழுங்கைப் பாதுகாக்கத் தமிழநாட்டில காவல் துறை செயற்பட்டு வருகிறது. இம்மாநிலத் தில் காவல் துறையில் 63,974 பணியாளர்கள் பணி புரிகின்றனர். இமமாநிலத்தில, 989 காவல் நிலையங் களும் 189 புறக் காவல் நிலையங்களும் உள்ளன. காவலர்கள சட்டம் ஒழுங்கு ஆகியவற்றை நிலை நிறுத்தவும், குற்ற நடவடிக்கைகளைத் தடுக்கவும், போகவகுரத்து நனமுறையிற் செயற்படவும துணை செய்கினறனர். இத்துறை வளர்நது வரும் அறிவிய லுககு ஏற்பபல புதிய முறைகளைப் புகுத்திக் குற்றங களைக் கண்டுபிடித்து வருகிறது. இம்மாநிலத்தில பெண்களும் காவலர்களாகப் பணியமர்த்தப்பட்டுள ளனர்.

தீயணைப்புத் துறை, சிறைத் துறை போன்றவை யும் மாநில அரசின் கண்காணிபபில உள்ள பிற துறைகளாகும். தமிழநாட்டில் உளள தீயணைபபுத் துறை தீயை அணைபபதோடு, அவசர மீட்புப் பணி களுக்கும் நோயாளிகளுக்கும், விபத்துக்குளளானவர் களுக்கும் உதவுகினற வகையிலும் செயறபடுகினறது.

தமிழ்நாட்டில் உள்ள வட்ட மையங்களில் துணைச் சிறைச் சாலைகளும் (Sub Jail) மாவட்டங் களில மத்திய சிறைச்சாலைகளும் உள்ளன. குறற வாளிகள் விசாரிக்கப்பட்டுக் கைதிகளாக இச்சிறைச் சாலைகளில் அடைக்கப்படுகினறனர். தமிழ்நாட்டில் 8 மத்திய சிறைச் சாலைகள் உள்ளன. சிறுவர்களுக் கான இளம் குற்றவாளிகள் சீர்திருத்தப் பள்ளிகளும் இம்மாநிலத்தில் செயற்படுகின்றன. பெண்களுக்கான சிறைச்சாலை ஒன்றும் தமிழநாட்டில் உளளது. சிறைச்சாலைகள் பொதுவாகக் குற்றவாளிகளைத் திருத்தும் மையஙகளாக இக்காலத்தில் செயற்பட்டு வருகின்றன.

**சுகாதாரம்:** மக்களின் சுகாதாரத்தைக் கவனிக்கச் சிற்றூர்களில் தொடககச் சுகாதார நிலையங்களை யும், நடமாடும் சுகாதாரக் குழுக்களையும் மாநில அரசு இயக்கி வருகிறது. இவற்றைத தவிர மருந்தகஙகளும் மருத்துவமனைகளும் நகரங்களில் உள்ளன. குடும்ப நலத் திட்டம், மலேரியா, அம்மை, தொழுநோய், இளம்பிள்ளைவாதம், காசநோய் ஆகிய நோய்கள் வாராமல் தடுத்தல் போனற சுகாதார நடவடிக்கைகளைச் சுகாதார மையங்கள கவனிக்கினறன. கழிவுநீர்ச் சுத்திகரிப்பு, சுறறுப் புறங்களைத் தூய்மையாக வைத்திருத்தல போன்ற மக்கள் நலச் செயல்களையும் கவனித்து வரும பணியை மாநில அரசு செயது வருகிறது. தமிழ் நாட்டில் பிறப்பு விகிதம் 18.32 விழுக்காடாகவும் இறப்பு விகிதம் 5.86 விழுக்காடாகவும் உள்ளன.

**சமூக நலம்:** மாநிலத்தின் மக்களுக்காகப் பல முனனோடித் திட்டஙகளைத் தமிழ்நாடு அரசு செயற்படுத்தி வருகிறது. பிற்படுத்தப்பட்டோர் நல வாழ்வு, ஆதி திராவிடர் நலவாழ்வு, ஒருங்கிணைந்த ஊட்டசசத்து, மகளிர் மேம்பாடு, தொழிலாளர் நலம், வீட்டு வசதி, காவலர் குடியிருப்பு, ஆதரவற்ற முதியோர் உதவித் தொகை, நலிவடைந்தோர் தன்னிறைவுத் திட்டம், குடியிருப்பு வசதி, வேலை யற்ற பட்டதாரிகளுக்கு உதவித் தொகை, தமிழ் வளர்ச்சி போன்றவற்றை மாநில அரசு நடைமுறைப் படுத்தி வருகிறது.

**கல்வி:** தமிழ்நாட்டில் எழுதப்படிக்கத் தெரிந்த வர்களின் எணணிக்கை 22,637,659(1981) ஆகும். இது மொத்த மாநிலத்தின் மக்கள் தொகையில் 46.76 விழுக்காடு ஆகும். தமிழ்நாடு கல்வியில் மூன்றாம் இடத்தைப் பெற்றுள்ளது. தமிழ்நாட்டில் நடுத்தரப் பள்ளிகளும் உயர்நிலைப் பள்ளிகளும் கல்லூரிகளும் பல்கலைக்கழகங்களும் உளளன. இம் மாநிலத்தில் வயது வந்தோர் கல்வித் திட்டமும் செயற்படுகிறது. மாணவர்களுக்கு இலவசச் சீருடை

அளித்தல், இலவசப் புத்தகம் அளித்தல் குழந்தைகள் சத்துணவுத் திட்டம் போன்ற திட்டங்கள் சிறப்பாக நடைபெறுகின்றன. மேல்நிலைப் பள்ளிகள் ஏற்படுத்தப்பட்டுச் சிற்றூர் மாணவர்களும் கல்வி கற்கும் நிலை இக்காலத்தில் ஏற்படுத்தப்பட்டுள்ளது. மேல்நிலைப்பள்ளிகளில் தொழிற்கல்வி கற்பிக்கப் படுகிறது. இவற்றைத் தவிரத் தனியாகத் தொழிற் கல்விக் கூடங்களும், மருத்துவக் கல்லூரிகளும் இம் மாநிலத்தில் செயற்படுகின்றன. இம்மாநிலத்தில் ஆசிரியர் பயிற்சிக் கல்லூரிகளும் உள்ளன. தமிழ் நாட்டில் பதினொரு பல்கலைக் கழகங்களும் உள்ளன. அவற்றுள் தொழிற் நுட்பக் கல்விக்காக அண்ணா தொழில் நுட்பப் பல்கலைக் கழகமும், தமிழுக்கெனத் தமிழ்ப்பல்கலைக்கழகமும், பெண்களுக்கென அன்னை தெரசாப்பல்கலைக்கழகமும் தொடங்கப்பட்டுள்ளன. தொழிற்நுட்பக் கல்வியில் புதிய பாடத்திட்டங்கள் புகுத்தப்பட்டுள்ளன. வளர்ந்து வரும் அறிவியலுக்கு ஏற்ப மாணவர்களை உருவாக்க மாநில அரசு தொழிற்நுட்பக் கல்விக்கு முதலிடம் அளித்து வருகிறது. இம்மாநிலத்தில் இரு மொழித் திட்டப் படி மாணவர்களுக்குத் தமிழ் அல்லது மற்றத்தாய் மொழி, ஆங்கிலம் ஆகியவற்றில் பாடங்கள் நடத்தப் படுகின்றன.

தமிழ்நாட்டின் கல்வி வளர்ச்சிக்கு நூலகங்களும் பெரும்பங்கு வகிக்கின்றன. தமிழ் நாட்டின் மிகப்பெரிய நூல் நிலையம் கன்னிமாரா நூலகம் ஆகும். மாவட்டத் தலைநகரங்களிலும் வட்டத் தலைநகரங்களிலும் சிற்றூர்களிலும் நூலகங்கள் உள்ளன. இவற்றைத் தவிரக் கல்லூரிகள், பள்ளிகள், பல்கலைக் கழகங்கம் ஆகியவற்றிலும் நூலகங்கள் இயங்குகின்றன. இந்தியாவிலேயே மிகப் பெரிய ஆவணக் காப்பகங்களில் ஒன்று சென்னையிலுள்ளது. இது வரலாறு, பொருளாதாரம் போன்ற துறைகளில் ஆய்வு செய்யும் வல்லுநர்களுக்குப் பேருதவியாக உளது.

கலைகளின் பிறப்பிடமாகத் தமிழ்நாடு திகழ்கிறது. தமிழ்நாடு பரத நாட்டியம் என்னும் நடனத்திற்குப் புகழ் பெற்றது. கோயில்களின் மாநிலம் எனக் கூறப்படும் தமிழ்நாட்டில் ஆயிரக்கணக்கான கோயில்கள் உள்ளன. இவை இந்துசமய அறநிலைய ஆட்சித் துறையின்பாதுகாப்பில்உள்ளன.தமிழ்நாட்டில் காஞ்சிபுரம், சிதம்பரம், மதுரை, தஞ்சாவூர், திருவண்ணாமலை போன்ற நகரங்கள் கோயில்களுக்குப் புகழ் பெற்றவை. சிற்பக் கலை வளர்ச்சிக்கு எனச்சிற்பக் கல்லூரி ஒன்றும் தமிழ்நாட்டில் உள்ளது. கலைகளின் பிறப்பிடமாகத் திகழும் தமிழ்நாட்டில் மைய அரசின் தென்னகப் பண்பாட்டு மையம் திருவையாற்றில் தொடங்கப்பட்டுள்ளது. தமிழ்நாடு திரைப்படக் கலையிலும் முன்னோடியாகத் திகழ்கிறது. இம் மாநிலத்தின் அனைத்துச் சிற்றூர்களிலும் கிராமக் கலைகள் இன்றளவும் அழியாமல் உள்ளன.

**சுற்றுலா:** தமிழ்நாடு சுற்றுலா வளர்ச்சியில் பெரிதும் முன்னேறி வருகிறது. இதன் வாயிலாக மாநிலத்தின் பொருளாதாரமும் உயர்ந்துள்ளது. தமிழ் நாடு அரசு சுற்றுலா வளர்ச்சிக் கழகத்தை ஏற்படுத்திச் சுற்றுலாப் பயணிகளுக்குத் தக்க உதவிகளைச் செய்து வருகிறது. சென்னை, சிதம்பரம், தஞ்சாவூர், மதுரை, இராமேசுவரம், கன்னியாகுமரி, மாமல்லபுரம், கோடைக்கானல், உதகமண்டலம், திருச்சி, ஒகெனக்கல், வேடநதாங்கல், ஏர்க்காடு, பூம்புகார் போன்ற நகரங்கள் முக்கிய சுற்றுலா நகரங்களாக விளங்குகின்றன. சு.இரா.

**வரலாறு:** பண்டைய தமிழகத்தின் வடவெல்லை திருவேங்கடமலையென்றும், தெற்கெல்லை கன்னியாகுமரி என்றும் குறிப்பிடுதலைக் காணலாம். ஆனால் கடைக் சங்க காலத்திற்கு முற்பட்ட தமிழகம் வடக்கிலும், தெற்கிலும் மேலும் பரந்து கிடந்தது என அறிகிறோம். கடைச்சங்க காலத்தில் இற்றைய ஆந்திரம், கருநாடகம்,கேரளம் ஆகியுவற்றின் பெரும் பகுதிகள் தமிழகமாக இருந்ததென்பதையும், தெற்கே இற்றைய கன்னியாகுமரிக்கும் வெகுதொலைவுவரை நிலப்பரப்பு இருந்ததென்பதையும், முப்புறமும்நீரால் சூழ்ந்திருந்ததென்பதையும் அறியலாம்.

**தமிழ் நிலத் தொன்மையின் பெருமை:** தமிழக வரலாறு தொன்மை மிக்கது. அதன் மக்கள் மறப் பண்பாளர்களாகத் தோன்றினர்; அவர்களே முதன்முதல் தோன்றிய மூத்தகுடியினர் என்று தமிழ்நூல்கள் கூறும்.

இக்கூற்றை இற்றைய நிலவியல், கடலியல், உயிரியல் ஆராய்ச்சியாளர்கள் மெய்ப்பித்துள்ளனர். கடல்கொண்ட 'குமரிக்கண்டம்' பழந்தமிழ் நாடென்றும், கடலுள் மூழ்கி எஞ்சி நிற்கும் சிறுபகுதியே இற்றைய தமிழகமென்றும்அறிவியலார் மெய்ப்பித்துள்ளனர்.

தென்னகம், நிலநடுக்கோட்டிற்கு மிக அண்மையிலிருப்பதால் அதன் தட்ப, வெப்ப நிலை உயிரினம் தோன்ற ஏதுவாக அமைந்தது. எனவே, முதல் மனிதன் இங்குத்தான் தோன்றினான் என்பர். இங்குள்ள மலைகளும், ஆறுகளும் இமயமலையும், கங்கை, யமுனை ஆறுகளும், உலகில் பிற மலைகளும், ஆறுகளும் தோன்றுவதற்கு முன்பாகவே தோன்றியவை என்பதும் அறிவியலார் கருத்து. தமிழகத்தி

லுள்ள கஞ்சன்மலை, பல்லாவரம் முதலிய இடங்களி லுள்ள பாறை உலகப பாறைகளுககெல்லாம் வயதில் முதிர்ந்தவை என அறிவியல் ஆய்வு மெய்ப்பித்துள் ளது. எனவே, தமிழக நிலப்பரப்பின் தொன்மையை என்று தோன்றியதென அறுதியிட்டுக்கூற இயல வில்லை.

**கற்காலம்:** தமிழ்நாட்டில் கற்காலத்தைச் சார்ந்த கருவிகள் பலவேறுபகுதிகளில் கணடுபிடிக்கப் பட்டுள்ளன. பழங்கற்காலக்கருவிகளும்புதிய கற்காலக் கருவிகளும்தமிழகத்தில பெருமளவில கிடைத்துள்ளமை தமிழகத்தின பழமையை அறிய உதவுகிறது. நுண்ணிய கற்காலக் கருவிகளும் தமிழகத்தின தெறகு மாவட் டங்களில கிடைததுளளன. தொல் பழஙகாலத்தில் தமிழகத்தில வாழ்நத மக்கள பெருங் கற்குழிகளில் பிணங்களைப் புதைககும் வழக்கமுடையவர்கள். இக் குழிகளில அவாகள பயன்படுத்திய பலவகை இரும்புக கருவிகளும், மணபாண்டஙகளும் காணப்படுகினறன. இதுபோனற சவககுழிகள உலகின் பலபகுதிகளிலும், குறிப்பாக மேற்கு ஆசிய நாடுகள், வடஆப்பிரிக்கா முதலிய இடஙகளிலும் காணப்படுகினறன. அவற்றின் தொன்மையைப் போலவே இவை காணப்பெறுவதா லும் தமிழக நாகரிகத்தின தொன்மையை உய்த்துணர லாம். இறறைய ஆய்வாளர்கள 'சிந்துவெளி நாகரி கம் தமிழர் நாகரிகமே' எனக் கூறுகினறனர். இத னால், தமிழரின் தொனமை நாகரிகம மேலும்வலுப் படுகிறது.

வரலாற்றுக்கு முந்திய காலம் தொட்டு இன்று வரை இந்தியத துணைக்கணடத்தில் பல்வேறு இன மக்கள ஆணடு, அவர்களின நாகரிகச சுவடுகளைத் பதித்துச் செனறுளளனர். அதனால், இந்திய நாகரி கத்தில பலவேறு இனததவரின தாக்கம காணப்படு கிறது. ஆயினும், தமிழர் நாகரிகம் கன்னித் தன்மை யுடன் காணப்படுகிறது. இதற்குக் காரணம் அந்நிலப் பரப்பின் இயற்கையமைப்பேயாகும். அதன எல்லை கள காப்பரணகளாய் அமைநது, கறை படாமல் காததனவெனலாம்.

கிறித்தவ ஆணடுமானத்திற்கு முனபும், தொடக்கத்திலும், தென்னகம் போந்த அயலகப் பயணிகள் இந்நாட்டின் கடல் வளத்தையும் நில வளத்தையும், மக்களின் மனவளத்தையும் பலப்பட பேசியுள்ளதை நோக்கும்போதும், இவர்கள அன்றைய கிரேக்க, உரோமானிய நாடுகளுடனும் தொலைதூரக் கீழைநாடுகளுடனும் கொணடிருந்த அரசியல், வணி கத் தொடர்புகளை அறியும்போதும் இவர்கள் பெற்றிருந்த நாகரிகத்தையும் பண்பாட்டையும் நன் கறியலாம்.

**சங்ககாலம்:** முதல், இடை, கடையென முச் சங்கங்கள் இருந்தனவாக இறையனார் களவியல் உரை கூறுகிறது. முதல் இரண்டு சங்கங்களைப் பற்றிக் கருத்து வேறுபாடு மிகுதியும் காணப்படு கிறது. கடைச்சங்கம் நின்று நிலவியது உறுதியாகத் தெரிகிறது.

அக்கடைசசங்க காலத்தைத் தோராயமாக கி.மு. 3-ஆம் நூற்றாண்டிலிருந்து கி.பி. 3-ஆம் நூற் றாணடுக்குட்பட்ட காலமாகக் கூறலாம். சஙக இலக கியஙகளில் காணப்பெறும் சொல்லாட்சி, பொரு ளாட்சிமுதலியவற்றைக் கொண்டும், சேரன செங்குட் டுவன், இலங்கை மன்னன் முதலாம் கயவாகு (கி.பி. 171-190) முதலியோரின சமகாலத்தைக் கொணடும், உரோமப் பேரரசன அகஸ்தஸ பாண்டியரோடு கொண்டிருந்த தொடர்பைக் கொணடும், மற்றும் தாலமி, இஸ்டிராபோ (Strabo) முதலியோரின குறிப்புகளைக் கொணடும், இருக்குவேதம், இராமா யணம், மகாபாரதம் முதலிய நூல்களில் வரும் குறிப்புகளைக கொணடும் சஙக காலம் கி.மு. 3 -ஆம் நூற்றாண்டிற்கும்முற்பட்டதெனக் கொள்ள லாம். மௌரிய அரசன் பிந்துசாரன (கி.மு. 300-272) தமிழகத்தின்மீது படையெடுத்ததை அகமும், புறமும் தெளிவாகக கூறுவதைக் கொணடும, அசோகனின (கி.மு. 272-236) கல்வெட்டுகளில சேர, சோழ, பாணடிய சத்திய புத்திரரின ஆட்சி தெளிவாகக் காணப்படுவதைக் கொண்டும் சங்க காலம் கி.மு. 300 -க்கும் முற்பட்டதென அறியலாம்.

ஆனால், கி.பி. 3-ஆம் நூற்றாணடுக்குப் பின் ஆண்ட களப்பிரர், பல்லவர்கள பற்றிச் சங்க இலக் கியஙகளில் குறிப்புகள் இல்லை. எனவே, கி.பி. 3 -ஆம் நூற்றாண்டிற்கும் முற்பட்டது, சங்ககாலம் எனக்கொள்ளலாம்.

**சங்ககால அரசியல் வரலாறு:** சஙககாலத்தில தோராயமாக 300 முடியுடை வேந்தாகளும், 120 குறு நில மன்னர்களும் ஆணடதாகக் கூறலாம். இலக்கியச் சான்றுகளைக் கொணடு அவர்களுடைய வரலாற்றை அறுபடாமல் எழுதமுடியவிலலை. அரசப் பதவி தந்தைக்குப்பின மூத்த மகன் அரசுக்கு வரவேண்டு மென்ற மரபுப்படி இருநதது. ஓர் அரசனுக்குப் பல மனைவியரும், பல மக்களும் இருப்பினும், அவர்களுள மூத்தமகனே அரசாளும் உரிமை பெற்றிருந்தான. மூத்தவன் ஆளும்போது இளையவர்கள் பிற பகுதி களுக்கு இளவரசர்களாக அமர்த்தப்பெற்றனர். பெண்கள் அரசாண்டதாகச்சங்ககாலச் சான்றுகளில் காணவில்லை. சேர, சோழ, பாண்டிய முடியுடை வேந்தர்களுககும், குறுநில மனனர்களுக்கும், இளவர

சர்களுக்கும், தானைத் தலைவர்களுக்கும் அவரவர் ஆளும் நாட்டுப் பகுதிகளுக்கேற்ப விருதுப் பெயர் களிருந்தன. சோழரும், பாண்டியரும் முறையே தங்களைச் சூரிய குலத்தவர், சந்திரகுலத்தவரென அழைத்துக் கொண்டனர்.

**அரசவை:** அரசனுக்கு முடிசூட்டுவிழா நடக்கும் போது மூத்தோர் அவையினரும், பிற அறிஞர் பெரு மக்களும் கூடி அவனை ஏற்பதாய் ஒப்புவர். அரசனும் அறவழி நடந்து, மக்களைக் காப்பதாய் உறுதியளிப் பான். அமைச்சர்கள், புலவர்கள், மற்றும் சான்றோரின் அறிவுரைகளைக் கேட்டு அரசன் ஆளத் தொடங்கு வான். அன்றாடம் அரசவைக்கு வந்து, மக்களை நேரில் கண்டு அவர்களுக்கு நீதி வழங்குவான். விருந் தினரையும் தூதுவர்களையும் வரவேற்பான். தமிழறி ஞர்களைத் தம்மோடு அமர்த்திப் பெருமைப்படுத்து வான்.

**ஐம்பெருங்குழுவும் எண்பேராயமும்:** சங்க இலக் கியச் சான்றுகளில் அன்றைய அரசனுக்குத் துணை புரிய ஐம்பெருங்குழுவும் எண்பரோயமும் இருந்தனவா கச் சான்றில்லை. ஆனால் கி.பி. 7-ஆம் நூற்றாண்டி லெழுந்ததாகக் கருதப்படும் திவாகர நிகண்டு என்னும் நூலில் இவை குறிப்பிடப்படுகின்றன. அமைச்சர், புரோகிதர், தானைத் தலைவர், தூதுவர், சாரணர் ஆகிய ஐவரும் ஐம்பெருங்குழுவிலும், கரணத்தியலவர், கருமவிதிகள், கனகச்சுற்றம், கடை காப்பாளர், நகரமாந்தர், படைத்தலைவர், யானைவீரர், குதிரைவீரர் ஆகிய எண்மரும் எண் பேராயத்திலுமிருந்தனராகத்திவாகர நிகண்டு குறிப் பிடுகிறது. இக்குழுக்களின் பணிகளைச் சங்ககாலத்தில் அமைச்சரும், தூதுவரும், ஒற்றர்களும் செய்தனர்.

**படை:** அக்காலத்தில் படையற்ற அரசன் நிலை யற்ற குமிழியாகவே காணப்பெற்றான். யானை, குதிரை, தேர், காலாள் ஆகிய நால்வகைப் படைகள் ஒவ்வோர் அரசரிடமும் இருந்தன. படை, கொடி, அரியணை, வாள், கவரி, முரசு அரசின் உறுப் புகளாயிருந்தன. பெருவேந்தரிடம் கடற்படையிருந் தது. தமிழ் மறவர் எவரும் படையில் சேரலாம். வட இந்தியாவிலிருந்ததைப்போல் சத்திரியர் மட்டுமே போர் வீரராக இருக்க வேண்டும் என்ற மரபு இங்கில்லை. அரசருக்கென்று மெய்க்கப்பாளர் இருந்தனர். நாட்டை அயலவரிடமிருந்து காப்பதும், அரசனுக்குச் செஞ்சோற்றுக் கடனாற்றுவதும், போரில் மரண்டால் துறக்கம் எய்தலாம் என்று நம்புவதும் அக்காலத் தமிழ் மறவர்கள் கொண்ட கொள்கைகள். அவர்களுக்கு வேண்டிய உணவு, உடை, ஊதியத்தை அரசன் வழங்கினான். வீரர் களைப் போற்றிப் பரிசுகள் வழங்கினான். பல விருது களை வழங்கினான். போரில் மீட்டுக் கொண்ட பொருளில் வீரர்களுக்குப் பெரும் பங்குண்டு. வெற்றிக்குப்பின் விழாவும், பெருஞ்சோறுமிட்டு துணங்கைக் கூத்தாடுவான். வீரமகனைப் பெறுவதே தமது கடமை எனக் கொண்ட மறக்குலப் பெண் களும் வீரத் தாய்மார்களாக வாழ்ந்தனர். வேல், வாள், கோல் முதலிய தாக்கும் படைகளையும், கேடயம், கவசம் (மெய்ப்பை) முதலிய காக்கும் படைகளையும் வீரர்கள் கொண்டிருந்தனர்.

**போர் முறை:** போருக்குச் செல்வதற்குமுன் வீரர் கள் நல்ல நாளில் படைக் கருவிகளைத் தூய்மைப் படுத்திப் பூச்சூடிக்காலக்கணக்கர் குறித்த நேரத்தில், போருக்குப் புறப்படுவர். படைக்கலன்களுடன் வெண்ணிறச் சீருடையணிந்து முரசங்கள் முழங்க அணிவகுப்பு நடத்துவர். தங்களின் படையெடுப்பை முன்கூட்டியே பகை அரசனுக்கு அறிவிப்பர். மூப் படைந்தோர், குழந்தைகள், ஊனமுற்றோர், இயலா தோர், பெண்டிர், பசு, பார்ப்பனர், நன்மக்கள் முதலி யோரை ஒதுங்கிக்கொள்ளச் செய்வர். மறவன் மறவனோடு மட்டுமே போரிடுவது என்பது சங்ககால வீரப்பண்பு. படைவீரர்கள் படம், குப்பாயம், மெய்ப்பை, வட்டுடை முதலிய ஆடைகளை அணிவர்.

போர் முனைக்குச் செல்லும் அணிவகுப்பில் தானைத் தலைவர்களும், அரசர்களும் யானை மீதமர்ந்து அம்பாரிமேல் கொடிகள் பறக்கக்கம்பீரமா கச் செல்வர். மெய்க்காப்பாளர்கள் அவர்களைச் சூழ்ந்து செல்வர். வீரர்கள் பின்தொடர்வர்.

போர் பெரும்பாலும் கோடைக்காலத்தில் சம தளத்தில் நடக்கும். எல்லைக்கோடுகளை அமைத்துக் கொண்டு, குறிப்பிட்ட நேரத்தில் போர் தொடங் கும். படையெடுப்புக்கு அறிகுறியாகக் கால் நடை கவர்தல் நிகழும்.

புறமுதுகிட்டு ஓடுவோர், ஆடையிழந்து நிற் போர், மேய்ச்சல் நிலத்தில் வாழ்வோர், நீரிடை நிற்போர், படைக்கலமின்றியிருப்போர், புண்பட் டோர், பெண் ஆடை அணிந்தோர், பெண்டிர், குழந் தைகள் ஆகியோரை எதிர்த்துப் போரிடக் கூடா தென்பது சங்ககாலப் போர்ப்பண்பு. போர்க்களத்தில் புண்பட்டு மாள்வதையே வீரர் பெரும் பேறாகக் கொண்டனர்.

**முறை வழங்குதல்:** சங்க கால அரசர்கள் நீதி யின் தலைவர்கள். அவர்களின் கொலுமண்டபமே நீதிமன்றமாய் விளங்கியது. நீதி நூல்களின்படியே தீர்ப்பு வழங்குவர். ஆயினும், அறிஞர்களின் அறவுரை களையும், தங்களின் மனச்சாட்சியையும் கொண்டு அரசன் நீதி வழங்குவான். இறைவனைச் சாட்சியிட்டு

வழக்குள் ஊசாவப்படும், சாட்சிகள் நேரடியாக ஊசாவப்படுவர். பொய்ச் சாட்சி கூறுவோருக்குத் தண்டனையுண்டு. பாம்புக் குடத்தில் கைவிடும்படி செய்து குற்றவாளியை அறிதலும் உண்டு.

கொடுக்கல், வாங்கல், உடன்படிக்கை, ஒப்பந்தம் முதலான பொருளியல் குற்றங்களும், அரசுடைமைகளுக்கு அழிவுதேடல், பார்ப்பானைக் கொல்லுதல், பசுமடியறுத்தல், கருக்கலைப்பு, மாதர் உயிர்க்கொலை முதலிய கொடிய குற்றங்களும் அக்காலத்தில் நிகழ்ந்தன. பொருளியல் குற்றங்களுக்குத் தண்டமும், இழப்பீடாகப் பொருளும் கொடுத்தலும் உண்டு. கொடிய குற்றங்களுக்குக் கொலைத் தண்டனை வழங்கப்பட்டது. தலையை வெட்டுதல், யானைக் காலிலிட்டுத் தலையை இடறச்செய்து கொல்லுதல் முதலியன கொலைத் தண்டனையாகும் பிறன் மனைவியை விழைதல், பிறன் கணவனை விழைதல் ஆகிய குற்றங்களுக்கு உறுப்புகளைச் சிதைக்கும் தண்டனையுண்டு. திருட்டுக் குற்றங்களுக்குச் சிறைத் தண்டனையும் தண்டமும் உண்டு. கப்பலில் துடுப்புத் தள்ளுதல், கோயிலுக்கு விளக்கேற்றுதல், பொதுப்பணிகளைச் செய்தல் முதலிய தண்டனைகளும், பொன், யானை, குதிரை, மாடு, ஆடு முதலியவற்றை இழப்பீடாக அளிக்கும் தண்டனையும் உண்டு.

குற்றவாளிகள் சிறைத் தண்டனைக்குள்ளானால் அவர்களை அடைத்து வைக்கச் சங்க காலத்தில் நிலையான சிறைகளிருந்தன. சிறையில் கொடிய குற்றவாளிகளைச் சங்கிலியால் பிணித்து வைப்பர். அவர்களுக்குக் குடிக்க நீர் கொடுக்காமலும், உணவு கொடுக்காமலும் சித்திரவதை செய்வதுமுண்டு. ஆயினும், பெரும்பாலான குற்றவாளிகள் நோயாளிகளைப் போல அன்பாகவே சிறையில் நடத்தப்பெற்றனர். அரசன் நீதி தவறாது ஆட்சிபுரிந்தான்.

**நாட்டாட்சி:** சங்க காலத் தமிழ் நிலம் சேர, சோழ, பாண்டியர் என்னும் மூவேந்தர்களாலும், மற்ற அரசர்களாலும் ஆளப்பட்டது. மக்களாட்சியோ, மகளிர் ஆட்சியோ சங்க காலத்தில் இல்லை. வேந்தர்கள் தங்கள் கோநகரங்களிலிருந்து ஆண்டனர். நாடு பல மண்டலங்களாகப் பிரிக்கப்பட்டிருந்தது. அம்மண்டலங்களை (கோட்டங்கள்) இளவரசர் ஆண்டனர். சில பகுதிகளைக் குறுநில மன்னர்களும், தானைத் தலைவர்களும் வேந்தனின் மேலாணையை ஏற்று ஆண்டனர்.

**நகராட்சி:** வணிக நகரங்கள், கோட்டத் தலைநகரங்கள், அரசரின் கோநகரம், இளவரசர், படைத் தலைவர் ஆகியோரின் நகரங்களில் உயர்ந்த மாளிகைகள் இருந்தன. மன்னர்களின் கோநகரங்கள் தாமரை வடிவிலும், நீள் சதுர வடிவிலும் அமைந்திருந்தன இவை மிளைக்காடு (காவற்காடு), அகழிகள், புறமதில்கள், அகமதில்கள் முதலியவற்றால் சூழப்பட்டு, வீரர்களால் பாதுகாக்கப்பட்டன. உட்கோட்டை வலிவானது. விண்ணுற ஓங்கிநின்ற மதில்களின் மேல் பந்தும், பாவையும், சிலம்பும், தழையும் அழகுறப் பொறிக்கப்பட்டன. உட்புறம் துளைகளிட்ட விற்பொறி, குரங்குப்பொறி, கவண்பொறி, அடுப்புப் பொறி, யானைப்பொறி, கழுகுப் பொறி, புதை கதவு, தூண்டிற்பொறி, தொடக்குப் பொறி, கவைப்பொறி, ஐயவித்துலாம், சிரற்பொறி, பன்றிப்பொறி, முரசுப் பொறி முதலிய தாக்கும் படைகள் கோட்டையில் பொருத்தப்பட்டிருக்கும்.

கோட்டையின் வாயில்கள் போர் வீரர்கள் யானையின் மீதமர்ந்து கொடிகளையேந்தி உட்செல்லும் அளவுக்கு அகன்றும் உயர்ந்துமிருக்கும். கோட்டைக் கதவுகளின் மீது மூவேந்தரின் சின்னங்களான வில், புலி, கயல் பொறிக்கப்பட்டிருக்கும். நகரங்களையும், குறிப்பாக அரண்மனைகளையும், கோட்டைகளையும், பராமரிக்கத் தனிஅலுவலர்களும், ஆட்சியாளர்களும் இருப்பர். அரசர் வதியும் அரண்மனை 'கோயில்' எனப்பட்டது.

துறைமுகப் பட்டினங்களைப் பராமரிக்கவும் காக்கவும் அந்நகரங்களுக்குத் தனிக் காவலர்களும் ஆட்சியாளர்களும் அமர்த்தப்பட்டனர். கோநகரான மதுரையிலும் வீதிகாவலர்களும், இரவுக் காவலர்களும், மக்கள் கூட்டத்தை ஒழுங்குபடுத்தக் குதிரை மீதமர்ந்த வீரர்களுமிருந்தனர்.

**ஊராட்சி:** சங்க காலத்தில் ஊராட்சித் தனித்தியங்கியதென்பதைத் தெளிவாக அறியலாம். நகர மன்றங்களைப் போலவே, ஊர்மன்றங்களிருந்தன. இவை மன்றம், பொதியில், அம்பலம், அவை என்னும் பெயர்களால் அறியப்பட்டன. பொதுவாக மன்றம் மரத்தடியிலும் குளக்கரையிலும் கூடியது. பொதியில் என்பதை 'பொது + இல்' என்று கொண்டு பொதுவாக மக்கள் கூடும் அம்பலம் என்றும் கூறுவர். எனவே, ஊர் மன்றத்திற்கெனத் தனியாகக் கட்டடமிருந்ததையும் அறியலாம்.

இம்மன்றங்களில், மூத்தோரும், ஒழுக்கமும், கல்வி கேள்வியுமுடையவரும் ஊர்வழக்குகளைத் தீர்த்தனர்; ஊரில் ஒழுக்கம், இறைநெறி, கல்வி இவற்றை வளர்த்தனர். அரசு இம்மன்றச் செயல்களில் தலையிடுவதில்லை. இம்மன்ற உறுப்பினர்களை மக்கள் தேர்ந்தெடுத்தனரென்பதற்குச் சான்றில்லை.

ஊராட்சியின்கீழ்ப் பலபகுதிகளிருந்தன. ஒவ்வொரு பகுதியும் சேரி எனப்பட்டது. பறைச்சேரி பார்ப்பனச்சேரி, இடைச்சேரி, பாணர்சேரி முதலி

யன அப்பகுதிகளாகும். சேர்ந்து வாழ்ந்த இடம் சேரி ஆகும். இக்காலத்தில் சேரி என்பது குறிப்பிட்ட இனத்தார் மட்டுமே வாழும் பகுதியைக் குறிக்கும். ஆயினும், இவற்றில் வாழ்ந்த மக்கள் எத்தகைய வேறுபாடுமின்றி ஊர் மன்றங்களால் ஆளப்பட்டனர்.

**வருவாய்:** பல வகை வரிகளும், தண்டங்களும் போரில் கிடைக்கும் கொண்டிப் பொருளும், திறை யும் அரசின் வருவாய்களாகும். நிலவரி ஆறிலொரு பங்கு ஆகும் வரித்தள்ளுபடியும் உண்டு. வணிகவரி, ஏற்றுமதி இறக்குமதிப் பொருள்களின் மீதிலானவரி கள், அன்பளிப்பாக வரும் வருவாய்கள் முதலியன அரசின் ஆட்சிச் செலவுக்குப் பயன்பட்டன. வாரிசு இல்லாமல் இறப்போரின் சொத்துகளும், உரிமை யாளரற்ற சொத்துகளும் அரசுக்குச் சொந்தமாகும்.

**அளவைகள்:** நீட்டல், முகத்தல், எடுத்தல், எண்ணல் ஆகிய அளவை முறைகள் சங்க காலத்தில் இருந்தன. கழற்சிக்காய் (கழங்கு) எடை அளவாகக் கொள்ளப்பட்டது. தொள்ளாயிரம், ஆயிரம், நூறாயி ரம், வெள்ளம், ஆம்பல், தாமரை முதலிய எண்ணுப் பெயர்களும், காணி, முந்திரி, கால், அரைக்கால் முதலிய பின்னங்களும் வழக்கிலிருந்தன. சுன்னத்தை (O)க்குறிக்க 'பாழ்' என்ற சொல் பயன்பட்டது. மா,வேலி என்பன நிலத்தின் அளவைக் குறித்தன. 'அம்பணம்' என்பது முகத்தலளவையாகும் (ஒரு மரக்கால் அளவு ஆகலாம்). தங்கத்தைக் 'கா' (பொன்) என்றனர். இதைத் துலாக்கோலில் நிறுத்துக் கணக்கிட்டனர். கா, பொன் முதலியன பொன்னின் எடையைக் குறித்தன. இவை பொற் காசுகளாகவுமிருக்கலாம். 'தாடி' என்பது எடையின் கடைசி அளவாகும்.

எனவே, சங்க காலத்தில் பண்டமாற்று முறைக் கும் மேற்பட்ட காசு வழக்கத்திலிருந்ததை அறியும் போது அவர்களின் முதிர்ந்த நாகரிகத்தை அறிய லாம். இன்று கிடைக்கும் உரோமாபுரிக் காசுகள் சங்க கால வாணிபம் பெற்றிருந்த அயலகத் தொடர்பை யும் பொருளாதார விரிவாக்கத்தையும் உணர்த்து கின்றன.

**சங்ககாலமன்னர்கள்: சேரர்:** கேரளமே சங்க காலத்துச் சேர நாடாகும். சேரர்-சேரலர்-கேரளரா யினர். கடல் சேர்ந்த நாடு சேர்ப்பு அல்லது சேர்ப்பு நாடு எனப்படும். அதன் தலைவன் 'சேர்ப்பன்' ஆவான். அயலவர் சேரலர், கேரளரென்றனர். மலை சூழ்ந்த நாடு மலைநாடு எனப்படும். அயலவர் மலை வாரம்-மலபார் என்றழைத்தனர். ஆக, அது செந் தமிழ் நாடேயாகும். 'கேரளமான்மியம்' என்ற நூலும், 'கேரள உற்பத்தி' என்ற நூலும் கேரளம் தமிழ் நிலமன்று என்றும், கேரளர் தமிழர் அல்லர் என்றும்சுட்டிவடபுலம்,வடமொழிச்சார்புடையதாகக் கூறுவதை வரலாற்றடிப்படையில் ஏற்பதற்கில்லை.

சேர நாட்டையாண்டவர் 'சேரர்' எனப்பட்ட னர். இந்நாடு முதலில் பன்னிரண்டு பிரிவுகளாய்ப் பிரிக்கப்பட்டிருந்தது. பின்னர்க்குடநாடு, குட்டநாடு கருக்காநாடு, பூழிநாடு, பொறைநாடு முதலியன வாகப் பிரிவுண்டன. குட்டநாட்டையாண்டவன் 'குட்டுவன்' என்றும், குட நாட்டை ஆண்டவன் 'குடக்கோ' என்றும், பொறை நாட்டை ஆண்ட வன் 'பொறையன்' என்றும் அழைக்கப்பட்டனர். இவற்றில் அரசிளங்குமரர் ஆட்சிக்கு அமர்ந்தனர். கொண்கான நாட்டையும், புன்னாட்டையும் ஆண்ட வர் சேரர் குடியைச் சேர்ந்த நன்னன் மரபினரா வர். தகடூர் நாட்டை ஆண்டவர் வேளிர் தலைவ ரான அதியமான்கள் ஆவர். இவர்களும் சேரர் குடி யினரே. இவர்களைத் தவிரப் பல சிற்றரசர்களும், குறுநில மன்னர்களும் ஆண்டனர். அரசர்குடியில் எவன் மூத்தவனோ அவனே வேந்தனாக வருவான்.

சேர வேந்தர்களுக்குச் சேரலர், சேரல், சேர மான் என்பன பொதுப் பெயர்கள், வானவரம்பன், வானவன், குட்டுவன், குடக்கோ, பொறையன், இரும்பொறையன், கடுங்கோ, கோதை முதலியன சிறப்புப் பெயர்களாகும். சேர மன்னர்களின் வர லாற்றை அறியும்போது உதியன் குடும்பம், பொறை யன் குடும்பம் எனப் பிரித்து அறிவர். சங்க காலச் சேர மன்னர்களுக்கு 'வானவரம்பன்', 'இமய வரம் பன்' என்ற விருதுப் பெயர்கள் மாறி மாறிவரும்.

**(அ) உதியன் குடும்பம் (மூத்த கால்வழி):** இக் குடும்பத்தைச் சேர்ந்த முக்கியமானவர் எழுவர். அவர்களுக்கு மேற்கூறிய விருதுப்பெயர்கள் மாறி மாறி வரும். பெருஞ்சோற்று உதியன் சேரலாதன் (வானவரம்பன்) என்பான் சேரமன்னர்களில் முதல் வனாகக் காணப்படுகிறான். இவன் பாரதப் போரின் போது படைகளுக்குப் பெருஞ்சோறு வழங்கி னானென அகமும், புறமும், சிலம்பும் கூறும். இவனே பத்துப்பாட்டில் முதல் பத்தின் பாட்டுடைத் தலைவ னாகலாம். இவன் காலத்தில் கொங்கு நாடும் தொண்டை நாடும் சேரநாட்டுடன் இணைத்து ஆளப்பட்டிருக்கலாம்.

இவனுக்குப் பின் இவன் மகன் இமயவரம்பன் நெடுஞ்சேரலாதன் அரசு கட்டிலேறினான். அரபிக் கடலில்கடற் கொள்ளையிலீடு பட்டிருந்த கடம் பரை வென்று அவர்களின் காவல் மரமான கடம்பு மரத்தை வெட்டி, அதன் அடிப்பாகத்தைக் கொண்டு தனக்குப் போர் முரசைச் செய்து கொண்டான். இப்போரில் கடம்பருக்குதவியாயவனர்களைக் கைது செய்து தன் நாட்டிற்குக் கொண்டு வந்தான்

அடுத்து, வடபுலத்தின் மீது போர்தொடுத்து இமயம் வரை சென்று, இமயத்தில் தனது விற்கொடியைப் பொறித்து மீண்டான். இமயத்தைத் தனது வட வெல்லையாகக் கொண்டதால் இமயவரம்பன் என்னும் விருதுப் பெயர் பெற்றான். சோழ வேந்தன் பஃறடக்கைப் பெருங்கிள்ளியுடன் இவன்போரில் ஈடுபட்டபோது தன்மார்பில் வேல் பாய்ந்து மாண்டான். இதே போரில் அச்சோழனும் மாண்டான். சேரலாதனைப் பற்றிக் குமட்டூர்க் கண்ணனார் பாடிய பதிற்றுப்பத்தின் இரண்டாம் பத்து இவனது புகழை விளக்குகிறது.

இமயவரம்பன் நெடுஞ்சேரலாதனுக்குப் பின் அவன் தம்பி பல்யானைச் செங்கெழு குட்டுவன் அரசு கட்டிலேறினான். பல யானைகளைத் தன் படையிலுடையனாதலால் 'பல்யானை' என்னும் சிறப்புப் பெயர் பெற்றான். இவன் பூழியிலிருந்து ஆண்டதால் 'பூழியர்கோ' எனனும் சிறபபுப் பெயரும் பெற்றான். இருபத்தைந்து ஆண்டுகள ஆண்ட இவன் தன்னைப் பாடிய பாலைக் கௌதமன் என்ற பார்ப்பனப் புலவரைப் பத்து வேள்விகளைச் செய்து மகிழ்வித்தான்.

இவனுக்குப்பின் இமயவரம்பன் நெடுஞ்சேரலாதனின் மூத்த மகன் களங்காய்க்கண்ணி நார்முடிச் சேரல் (வானவரம்பன்) சேர மன்னனாக முடி சூட்டிக் கொணடான். இவன் சேரலாதனின் இரண்டாம் மனைவி வேண்மாளின் புதல்வன். இவன் முடிசூடியபோது தன் முன்னோர் மணிமுடி பகைவா கையிலிருந்ததால் களங்காய் களால் கண்ணியும், நாரால் முடியும் செய்து அணிந்ததால் 'களங்காய்க் கண்ணி நார்முடிச்சேரல்' என்னும் பெயர் பெற்றான். வெற்றி வீரனாகிய இவன் சோழன் மணக்கிள்ளியைக் குராபபள்ளி என்னும் இடத்தில் தோறகடித்துக் கொன்று நேரிமலையைக் கைப்பற்றினான்.

இவனுக்குப் பின் சேரலாதனின் மூத்த மனைவியின் மகன் கடல்பிறக்கோட்டிய செங்குட்டுவன் (இமயவரம்பன்) அரசு கட்டிலேறினான். இவன தாயாரின் பெயர் நற்சோணை. இவள் சோழன் மணக்கிள்ளியின் மகளாவாள். செங்குட்டுவனின் தம்பி சிலப்பதிகார ஆசிரியர் இளங்கோ அடிகளாவார். இவனைக் குட்டுவன், செஙகுட்டுவன், மணிக்குட்டுவன் என்றெல்லாம் குறிப்பிடுவர். குட்டநாட்டிற்குத் தலைவனாய் இருந்ததால் குட்டுவனென்ற பெயரும், சிவந்தமேனியனானதால் செங்குட்டுவனென்ற பெயரும், கடற்போரில் சிறந்து விளங்கியதால் கடல் பிறக் கோட்டியவன் என்ற அடையும் சேர்ந்து 'கடல்பிறக் கோட்டிய செங்குட்டுவன்' என அழைக்கப்படுகிறான். இவனை ஐந்தாம்பத்தின் பாட்டுடைத் தலைவனாகப் பாடிய புலவர் பரணர்.

இவன் தன் அன்னை நற்சோணையுடன் வட புலத்திற்குப் புனிதப் பயணம் சென்றபோது தன்னை எதிர்த்த ஆரிய அரசர்களை வெற்றி கண்டான். இதுவே, இவனுடைய கன்னிப் போராகும்.பின்னர்க் கொங்கு மன்னர்களைத் தோற்கடித்து அவர்களைத் திறைசெலுத்தச் செய்தான். கடற்கொள்ளைக்காரர்களான கடம்பரை வென்று 'கடல்பிறக்கோட்டிய செங்குட்டுவன்' என்னும் விருது பெற்றான். பாண்டியனின் தானைத் தலைவனும் மோகூர் நாட்டுக் குறுநில மன்னனுமான பழையனை வீழ்த்தி அவனுடைய காவல் மரமான வேப்பமரத்தை வெட்டித் தனது போர் முரசைச் செய்தான். தன் தாய்மாமன் காரியாற்றுத் துஞ்சிய நெடுங்கிள்ளியின் மகன் இராசசூயம் வேட்ட பெரு நற்கிளளிக்கு உதவியாக, சோழர் ஒன்பதின்மரை வென்று அவனுக்கு நேரிவாயில் என்னுமிடத்தில் பட்டம் சூட்டினான். தனது 50-ஆம் வயதில், ஏறத்தாழ கி.பி 150-இல் கண்ணகிக்குச் சிலையெடுக்க இமயம் சென்ற போது, எதிர்த்தஆரிய அரசர்களை வென்று வஞ்சிக்கருகிலுள்ள கொடுங் கலூரில் கண்ணகிக்குக் கோயில் கட்டிச் சிலை சமைத்தான். கடைசியாக, சோழருடன் பொருது வாகை சூடிய செங்குட்டுவன் 55 ஆணடுகள வாழ்ந்து உயிர் நீத்தான்.

செஙகுட்டுவனுக்குப் பின் ஆடுகோட்பாட்டுச சேரலாதன் அரசு கட்டிலேறினான். இவன் இமய வரம்பன நெடுஞ்சேரலாதனின் இரண்டாம் மனைவியான வேண்மாளின் இளைய மகனாவான். இவன அணணன் களங்காய்க்கணணி நார்முடிசசேரல். தன் தந்தையின காலத்திலும் தமையன் காலத்திலும், செங்குட்டுவன் காலத்திலும் முபபத்தெட்டு ஆண்டுகள தனித்தாணடான. வட ஆரிய நாட்டின் மீது படையெடுத்து வென்றான். அங்கிருந்து 'வருடை' என்னும் ஒருவகை வெள்ளாடுகளையும் கபிலை நிறப் பசுக்களையும் கொணடுவந்து தொண்டியிலிருந்த பார்ப்பனருக்குத் தலைக்கொரு ஊரும்,ஆடும், பசுவும் தானமாகக் கொடுத்தான். இதனால் இவன் 'ஆடு கோட்பாட்டுச் சேரலாதன்' எனனும் சிறப்புப் பெயரால் அறியப்படுகிறான். இவன் ஆறாம் பத்தின பாட்டுடைத் தலைவன. இவனைப் பாடிய காக்கை பாடினியார் நசசெளளையாருககு ஒன்பது காப் பொன்னும், நூறாயிரம் காணமும் (பணமும்) கொடுத்து அத்தாணி மண்டபத்தில் உயர்ந்த இருக்கையில் தன் அருகில் இருக்கச் செய்து பெருமைப் படுத்தினான். மூத்த கால்வழியின் கடைசிப் பெரு வேந்தன் குட்டுவன் சேரல் (கோககோதைமார்பன்)

ஆவான். இவனுககுப் பின் சேர நாட்டில் பெரு வேந்தரில்லை.

**(ஆ) பொறையன் குடும்பம் (இளைய கால்வழி).** கொங்கு நாட்டுச் சேரனாகிய முதலாம் அந்து வன் சேரல் இரும்பொறை இக்குடும்பத்து முதலரசன ஆவான். இவனுக்குப்பின் இரண்டாம் அந்துவன் சேரல இரும்பொறை என்பவன் கருவூரிலிருந்து ஆண் டான். இவனே கொஙகு நாட்டில் நிலையான ஆட்சியை அமைத்தான்: இவனுக்குப் பின் இவன் மகன் செல்வக் கடுஙகோவாழியாதன் ஆண்டான். இவன் பொறையன் குடும்பதது பெருமையை உயரச் செய்தவன். இவன் வெற்றிவீரன். தன்னைப்பாடிய கபிலரெனும் புலவருக்கு நூறாயிரம் காணம் பண மும், நன்றா என்னும் குன்றின் மீது ஏறி நின்று தன் கண்ணில்பட்ட இடமெலலாவற்றையும் தானமாக அளித்தான். இவன் கபிலர் பாடிய ஏழாம் பத்தின் பாட்டுடைத் தலைவன். கபிலரின் கட்டளைப்படி இவன் பல வேள்விகளைச் செய்தான். இவன் குடி மக்கட்கன்றிப் பிறர் யாருக்கும் அஞ்சான; சொல தவறான; தமிழை வளர்த்தான்.

செலவக் கடுஙகோ வாழியாதனுககுப் பின் அவன் மகன் பெருஞ்சேரல் இரும்பொறை அரசு கட்டிலேறி னான. இவன தகடூர் எனற இடத்தில் நடந்தபோரில் சோழ, பாணடியரைத் தோற்கடித்தான். அவர் களுக்குத் துணைநின்ற வல்வில்ஓரி, அதிகமான் அஞ்சி யும் தோற்றனர். எனவே இவனுக்குத் 'தகடூர் எறிந் தவன' என்ற பெயருண்டு. இப்போரைப் புகழ்ந்து 'தகடூர் யாத்திரை' எனனும் வீரகாவியம் எழுந்தது. பினனர் வல்விலஓரியைக் கொல்லிக கூற்றத்தில் (நாமக்கல்) மாய்த்து அதனைக் கைப்பற்றினான அதையும் தகடூரையும் சேர நாட்டுடன இணைத்து அவவிரு நாடுகளுக்குமிடையிலுள்ள மலைமீது தனது படைவீட்டை அமைத்து ஆண்டான். இம்மலை இன் னும் இவன்பெயரால் சேர் அரையன் மலை (சேர்வ ராயன் மலை) எனக் குறிக்கப்படுகிறது.

இவன் தமிழ் மொழிமீதும், தமிழ்ப் புலவர் மீதும் வரம்பு கடந்த பற்றுளளவன். இவன் எட்டாம் பத்தின் தலைவன். பாடிய புலவர் அரிசில் கிழார். பதிற்றுப்பத்தின் ஒன்பதாம் பத்தின் தலைவன் இளஞ்சேரல் இரும்பொறை. இவன் தகடூர் எறிந்த பெருஞ்சேரல் இரும்பொறையின் தம்பி மகன். இவனே ஒன்பதாம் பத்தின் பாட்டுடைத் தலைவன். இதனைப் பாடியவர் பெருஙகுன்றூர் கிழார். கொங்கு நாட்டின் பல பகுதிகளை வென்று, தன் நாட்டுடன் புன்னாட்டையும் இணைத்துக் கொண் டான். விச்சி என்னும் மலைநாட்டையாண்ட விச்சிக் கோவையும், அவனுக்குத் துணை நின்றகோப் பெருஞ்சோழனையும், இளம்பழையன் மாறன் என்ற பாணடியனையும் வென்று அந்நாட்டைக் கைப்பற்றி னான். கழுமலம் என்ற இடத்தைத் தாக்கித் தன் தானைத் தலைவன் கணையனைச் சிறைப்பிடித்துச் செனறசோழன் பெரும்பூண சென்னியைத் தோற்க டித்து, கழுமலத்தையும கணையனையும மீட்டான்.

யானைக் கட்சேய் மாந்தரஞ்சேரல் இரும் பொறை என்பான் இளஞ்சேரலுக்குப்பின் ஆண டான். இவன் சோழன் பெருநற்கிள்ளியிடமும், பாண்டியன் தலையாலஙகானத்துச் செருவென்ற நெடுஞ்செழியனிடமும் தோற்றான். இவன் இறக்கு முன் வானத்து விணமீன் எரிநது விழுந்ததைக் கணட கூடலூர் கிழார் என்னும் புலவர் நாளையும், கோளை யும் கணக்கிட்டு 'ஏழாம் நாள் இம்மன்னன் இறப் பான்' எனக் கூறினார். அதன்படியே இறந்தான். (புறம் 229: 1-12).

கணைக்கால் இரும்பொறை என்பவனே சஙக காலத்தில் கொங்கு நாட்டையாண்ட பொறையன் குடும்பத்துக் கடைசி அரசனாவான். இவன ஒரு புல வனுமாவான். இவனது பாடல் (புறம் 74) இவனது வரலாற்றை விளக்குகிறது. சோழன் செங்கணானு டன் பொருது தோற்றுச் சிறை பிடிக்கப்பட்டான. சிறையில் வேட்கைக்கு நீர் மறுக்கப்பட்டதால் மனமுடைந்து மாண்டானென்றும் கூறுவர். இத னைப் பிற சான்றுகளைக் கொணடு மறுப்பாரும் உளர். இவனுக்குப் பின் சேர நாட்டைக் களப்பிரர் கைப்பற்றினர். ஆயினும் கி.பி. 700 வரை சேரர் கால்வழியினர் அங்குமிங்குமாக ஒரு சிலர் ஆண்ட னர் எனலாம்.

**சங்க காலச் சோழவேந்தர்கள்:** சங்க காலச் சோழ நாடு கீழைக்கரையோரமாகப் பரவியிருந்தது. கிழக்கே குணகடலும், மேறகே கொஙகு நாடும் வடக்கே தென்பெண்ணையாறும், தெறகே பாண்டி நாடும் இதன் எல்லைகளாயிருந்தன. சேர, பாண்டிய நாடுகளைப் போலவே சோழநாடும் என்று தோன் றியதெனக் கூறமுடியாத பழமையுடையது. இக்காலத் தில் சோழ நாட்டையாண்ட சோழர்கள் ஒன்பது குடியினராகப் பிரிந்து தங்களுக்குள்ளும் சேர, பாண டியரோடும் போரிட்டுக் கொண்டிருந்ததால தலை சிறந்த சோழ வேந்தர்களைச் சங்ககாலம் ஈன்றிட வில்லை. மேலும், கிடைத்துளள சங்க இலக்கியம் களைக் கொணடு இதனையாண்டவரின் பட்டியலை வரன்முறையோடு தொகுத்துரைக்க முடியவிலலை. ஆயினும், ஓரளவு அவர்களைப் பற்றிய செய்திகளை இலக்கியம் கண்டவாறு கூறலாம். திட்டவட்டமாகத் தெரியாத சோழர் வரலாற்றைச் சிலர் 'புராண காலச் சோழர்' என்று கூறி அழைக்கின்றனர். இது ஏற்புடையதன்று.

சங்க இலக்கியத்தில் சிதறுண்டு காணப்பெறும் செய்தித் துணுக்குகளைக் கொண்டு, கரிகாற் சோழனுக்கு முற்பட்ட சோழர்களைப் பற்றிக் கூறலாம். நாவாய் ஓட்டிய சோழன் என்பவன் பருவக் காற்றின் திசைமாற்றத்தை நன்கறிந்து பெருங்கடல்களையும் கடந்து தன் நாவாய்ப் படைகளைச் செலுத்தி வெற்றி கண்டான். இவை தவிர அவனைப் பற்றி வேறெதும் அறியமுடியவில்லை. தித்தன் வெளியன் என்ற சோழன் உறையூரிலிருந்து ஆண்டான். பூம்புகார் இவன் காலத்தில் சிறந்து விளங்கியது. தன் பிறந்த நாளைத் தன் கோட்டைக்குள் கொண்டாடும்போது எழுப்பிய கிணைப்பறை ஒலியைக் கேட்ட பகையரசர்களான வானனும் கட்டியும் போர்ப்பறையெனப் பயந்து ஓடினர். இவனுக்கு ஐயையென்ற மகளும், போர்வைக்கோ என்ற மகனும் இருந்தனர். தித்தனுக்குப் பின் போர்வைக்கோ அரசனானான். போர் என்ற ஊரிலிருந்த பழையன் மாறன் என்பவனை வென்று அவ்வூரைத் தன் நாட்டுடன் இணைத்துக் கொண்டான். இவன் தோராயமாக கி.பி. முதல் நூற்றாண்டைச் சேர்ந்தவனாவான்அடுத்து அறியப்படுபவன் சோழன் மணக்கிள்ளியாவான். இவன் மகள் நற்சோணை என்பவளைச் சேரன் நெடுஞ் சேரலாதன் மணந்தான். மணக்கிள்ளி கி.பி. முதல் நூற்றாண்டின் பிற்பகுதியில் வாழ்ந்திருக்கலாம்.

**கரிகால் பெருவளத்தான்:** இவன் உருவப்பஃறேர் இளஞ்சேட்சென்னி என்பானின் மகனாவான். தொண்டை நாட்டில் காடுகொன்று நாடாக்கி வளம் கண்டதால் இவன் 'மாவளவன்' எனப்பட்டான். இவன் அரசு கட்டிலேற இடையூறுகள் பலவிருந்தன அவற்றைத் தாண்டி, பட்டமேற்று, நீதி தவறாது ஆண்டு, புலவர்களைப்போற்றிக் காத்தான். தன்னைப் பாடிய புலவர் கடியலூர் உருத்திரங் கண்ணனாருக்குப் பதினாறு இலக்கம் பொன்னைப் பரிசளித்தான். உறையூரில் அவர் நினைவாகப் பதினாறுகால் மண்டபமொன்றைக் கட்டினான்.

தான் அரசு கட்டிலேறாதபடி தடுத்த ஒன்பது தாயாதிகளை வாகைப் பறந்தலைப் போரில் தோற்கடித்தான். வெண்ணியென்ற ஊரில் நடந்த போரில் சேரன் பெருஞ்சேரலாதனையும், பாண்டியனொருவனையும் பதினொருவேளிரையும் ஒருங்கே தோல்வியுறச் செய்தான். வடபுலத்தின் மீது படையெடுத்துச் சென்று இமயத்தில் தன் புலிச் சின்னத்தைப் பொறித்து மீண்டான். வச்சிரநாட்டு வேந்தன் கொடுத்த முத்தாலான கொற்றப்பந்தலையும், மகத நாட்டு மன்னன் கொடுத்த பட்டிமண்டபத்தையும், அவந்தி நாட்டு அரசன் கொடுத்ததோரண வாயிலையும் திறையாகப் பெற்று வந்து சோழர் அரண்மனையைச் சித்திரித்தானெச் சிலம்பு கூறும். இவனுடைய அவையில்தான் மாதவியின் அரங்கேற்றம் நடந்ததாகச் சிலர் கூறுவர்.

கரிகாலன் இலங்கைமீது படையெடுத்து அங்கிருந்து 12,000 ஆட்களைச் சிறைசெய்து கொண்டு வந்து காவிரிக்குக் குறுக்கே அணைகட்டினான் என்பர். இவன் சிறைபடுத்திய செய்தி பிற்கால நூலான 'இராசாவளி'யில் காணப்படுகிறது. இச்செய்தி மகாவமிசத்தில் இல்லை. இவன் உறையூர்க்கோட்டையை வலுப்படுத்தினான். இளையவனான இவனிடம் நீதி கேட்கவந்த இரு முதியவரின் தயக்கமறிந்து முதியவன்போல் வேடமிட்டு நீதி வழங்கினான்.

காவிரியில் கல்லணையைக் கட்டிய கரிகாலன் பல கால்வாய்களை வெட்டி வளத்தைப் பெருக்கினான். இன்றும் சிறப்போடு நிறைகும் வெண்ணாறு அவன் வெட்டிய மிகப்பெரிய காலவாயாகும். தமிழையும், தமிழ் இசையையும் வளர்த்த இவன் காலத்தில் புத்தமும், சமணமும் சச்சரவின்றி வளர்ந்தன.

**முதலாம கிள்ளிவளவன் (நெடுமுடிக்கிள்ளி):** இவன் கரிகாலனுக்குப் பின் அரசுகட்டிலேறினான். தொண்டை மண்டலத்து வாணாதிராயர் அரசகுல இளவரசி சீர்த்தி என்பவளை மணந்து உதயகுமரன் என்ற மகனைப் பெற்றான். இம்மகன்தான் மணிமேகலையைக் காதலித்துக் கொலையுண்டவனாவான். தொண்டை நாட்டைத் தன் தம்பி 'இளங்கிள்ளியை ஆளச் செய்தான். அவன் அதனைக் காஞ்சியிலிருந்து ஆண்டான். இவன் தூரக்கிழக்கு நாடுகளுடன் தொடர்பு கொண்டிருந்ததையும், இவன் காலத்தில் பெரும்புயலால் பூம்புகார் மூழ்கியதையும் மணிமேகலைக் காப்பியம் தெரிவிக்கிறது. இவன் காரியாற்றங்கரையில் துஞ்சினானன். இவன காலம் கி.பி. 150ஆக இருக்கலாம்.

**கோப்பெருஞ்சோழன்:** கிள்ளிவளவனுக்குப்பின அரசுகட்டிலேறியவன் கோப்பெருஞ்சோழன். இவனுக்கு நலங்கிள்ளி, நெடுங்கிள்ளி என்ற இரு மக்களிருந்தனர். இவர்கள் இவன்மீது காழ்ப்புணர்ச்சி கொண்டு தாக்க முற்பட்டபோது, இவன மனம் வருந்தி வடக்கிருந்து உயிர் நீத்தான். இவனைக் காணாமலே இவன் மீது நட்புக் கொண்ட பிசிர் என்னும் ஊரிலிருந்த ஆந்தையாரும் இவனருகில அமர்ந்து வடக்கிருந்து உயிர் நீத்தார்.

**சேட்சென்னி (நலங்கிள்ளி), இளஞ்சேட்சென்னி (இளங்கிள்ளி):** இவ்விருவரும் கோப்பெருஞ் சோழனின மக்கள். அரசுரிமைப் பூசலுக்குப்பின் இவ்விருவரும் முறையே உறையூரையும், ஆவூரையும் கோநகராகக் கொண்டு ஆண்டனர். சோணாடு முழுவதையும்

நலங்கிள்ளி ஆண்டான். இளங்கிள்ளி துளுவ நாட்டுப் பாழியூரை வென்று, 'செருப்பாழிஎறிந்த இளஞ்சேட் சென்னி' என்னும் விருதுபெற்றான். நலங்கிள்ளி காரி யாற்றங்கரையில் துஞ்சினான்.

**பெரும்பூட் சென்னி:** இவன் அழும்பில் முதலிய ஊர்களை ஆண்டான். இவன் தன் தானைத் தலை வனையனுப்பிக் கொங்கு நாட்டுச் சேரன் இளஞ் சேரல் இரும்பொறையின் கீழிருந்த புன்னாட்டின்மீது படையெடுக்கச் செய்தான். சேரனுக்குத் துணையாக ஐவர் போரில் கலந்து கொண்டு பழையனைப் போர்க்களத்திலேயே கொன்றனர். பெரும்பூட் சென்னி பழிவாங்கும் நோக்கத்துடன் சேரருக்குச் சொந்தமான கழுமலத்தைக் கைப்பற்றி, அதனைக் காத்து நின்ற தானைத் தலைவன் கணையன என் பானைக் சிறை செய்து கொன்றான். இதனையறிந்த இரும்பொறை கழுமலத்தில் சோழப்படைகளைத் தோற்கடித்து ஓடச்செய்தான். தங்கள படைக்கலங் களைப் போர்க்களத்திலேயே போட்டுவிட்டுச்சோழப் படைவீரர் ஓடிவிட்டனர். இவையே இவனைப் பற்றி யறியும் செய்திகளாகும்'

**இரண்டாம் கிள்ளி வளவன்:** இவனைச் சோழன் குளமுற்றுத்துத் துஞ்சிய கிள்ளி வளவன் என்றும் அழைப்பர். இவன் உறையூரைக் கோநகராகக்கொண்டு ஆண்டவன். இவன் முள்ளூர் மன்னன் மலையமானி டம் பகைமை கொண்டு அவனுடைய இரு குழந்தை களையும் கவர்ந்து வந்து யானைக் காலில் இடறச் செய்யும்போது கோவூர்கிழார் என்னும் புலவர் அறி வுரை கூறித்தடுத்தார். பாண்டியன் கோதைமார்பன் மீது படையெடுத்த இவனைப் பாண்டியப் படைத் தலைவன் பழையன் மாறன் கூடலுக்கருகில் தோற் கடித்தான். இவன் காலம் கி.பி. 2-ஆம் நூற் றாண்டின் இறுதியாகவும், 3-ஆம் நூற்றாண்டின் தொடக்கமாகவும் இருக்கலாம். இவன் குராப்பள்ளி யில் (குளமுற்றம்) துஞ்சியதால் சோழன் குராப்பள் ளித் துஞ்சிய கிள்ளி வளவன் என அறியப்படுகிறான். இவனுக்குப்பின் இராசசூயம்வேட்ட பெருநற்கிள்ளி ஆண்டான்.

**சோழன் செங்கணான்:** சங்க காலச் சோழர்கள் வரிசையில் கடைசியாக அறியப்படும் அரசன் இவனே யாவான். இவன் சேரன் கணைக்கால் இரும்பொறை யைப் போர் என்னுமிடத்தில் தோற்கடித்துத் தன் சிறையிலடைத்தான். சிறையில் வேட்கை கொண்டு நீர்கேட்ட அச்சேரனைச் சிறைக்காவலர் இழிவாக நடத்தியதால் மானம் தாங்காது மாண்டுபோனான் என்று புறநானூறுகூறுகிறது. தோராயமாக 25 ஆண் டுகள் ஆண்ட செங்கணான் சிறந்த சிவனடியானா வான். காவிரியின் இருமருங்கிலும் 70மாடக்கோயில் களைச் சிவபெருமானுக்குக் கட்டியவனாவான். இவன் திருமாலுக்கும் கோயிலெடுத்தான். இவன் தோராய மாக கி.பி.225-இல் இறந்தான். இவனுக்குப்பின் களப்பிரர் தமிழகத்தைக் கைப்பற்றிச் சங்க காலத் திற்கு முற்றுப்புள்ளி வைத்தனர்.

**சங்ககாலப் பாண்டிய வேந்தர்கள்: சங்க காலப் பாண்டிய நாடு:** சங்கம் என்றவுடன் நினைவுக்கு வருவது தமிழ்கெழு கூடலான மதுரையும், அம் மதுரையைக்கோநகராகக் கொண்டாண்ட பாணடிய மன்னர்களுமேயாவர். தமிழகத்தின் தென் பகுதியில் மேற்கிலும் கிழக்கிலும், தெற்கிலும், கடலால் சூழப் பட்ட நாடு பாண்டிய நாடு. சங்க காலத்தில் இலங் கைக்கும் பாண்டிய நாட்டிற்குமிடையே கடல் அமைந் திருந்தது. தாலமியினாலும், பெரிப்புளுசு என்றநூலி லும் இது அறியப்பட்டுள்ளது. தமிழ் இலக்கியங்கள் இதனைக் 'கொற்கைக் கடல்' அல்லது 'கொற்கைக் குடாக்கடல்' என்று குறிப்பிடுகிறன தாம்பிரபருணி யாறு இக்கடலில் கலந்தது. இவ்யாறு கலக்குமிடத் தில் கொற்கைத் துறைமுகமிருந்தது.இத்துறை முத்து களுக்குப புகழ்பெற்றது இன்று அக்கடலும். அந்தஆறுமஇல்லை. அத்துறை முகமும் கி.பி.10-ஆம் நூற்றாணடில் தூர்ந்து போயிற்று தோராயமாக 500 ஆண்டுகட்டு முன்பு பெரும்புயலால் கடல் பொங்கி அரிப்பு ஏற்பட்டதால் இராமேசுவரமும் தனித் தீவாகியது. பல ஆயிரம் ஆண்டுகட்கு முன்பு இலங்கையும் இவ்வாறே பாணடிய நாட்டிலிருந்து பிரிந்தது. இதைப்போலவே, தென்பாண்டி நாடு கட லுள் மூழ்கச் சங்ககாலப் பாண்டிய நாடு எஞ்சியது.

**பாண்டிய நாட்டின் தொன்மை:** உலகத்தின் மிகத் தொன்மையான பகுதி பாண்டியநாடு என்றும், இங் குத்தான் முதல் மனிதன் தோன்றினான் என்றும் கூறப்பட்டது 'தீபவமிசம்' (கி.மு.4.நூ) இலங்கையின் முதல் சிங்கள மன்னனான விசய குமாரன் என்பவன் பாண்டியன் மகளை மணந்ததோடு, தன்தோழர்களை யும்பாண்டிய நாட்டுப் பெண்கள 700பேரை மணக்கச் செய்தானென்று கூறுகிறது. விசயகுமாரன் ஆண்டு தோறும் பாண்டியனுக்கு உயர்ந்த முத்துகளையும், பிறபொருள்களையும் பரிசாக அளித்தானென்றும், பாண்டியன் பல பரிவாரங்களையும், பதினெட்டு வகைத் தொழிலாளர்களையும் இலங்கைக்கு அனுப்பி, அதை நாகரிக நாடாக்கினானென்றும் கூறுகிறது. மெகசுத்தனிசு பாண்டிய நாட்டை ஒரு பெண் ஆண்டதாகக் குறிப்பிட்டான். அசோகன் தன் கல் வெட்டில் மூவேந்தர்களைப் பற்றிக் குறிப்பிடு கிறான் கி.மு. 278-இல் உருவான திராவிடர் கூட் டணியைக் கலிங்க நாட்டுக்காரவேலனின் (கி.மு 176-163) அத்திக்கும்பாக் குகைக் கல்வெட்டு 'திரமிள சங்ககேதம்' என்றும், அதை அவன் கி.மு. 165-இல்

தோற்கடித்ததைப் பற்றியும் குறிப்பிடுகிறது. இன்று முள்ள சங்க காலப் பாண்டியரின் பிராமிக் கல்வெட்டு களினாலும் பாண்டியரின் தொன்மையை அறிய லாம்.

**பண்டைய பாண்டியர் முடத்திருமாறன்** கடல கொண்ட தென்மதுரையிலிருந்து ஆண்ட அரசர் களின் கடைசியரசனென இறையனார் அகபபொரு ளுரை கூறுகிறது. இவனை அடுத்து ஆண்ட அரசர் களின் பெயர்கள் தெரியவில்லை. தமிழக பிராமிக் கல்வெட்டுகளில் மிகவும் பழமையானது கழுகுமலைக் (மாங்குளம்) கல்வெட்டு இதில் முதலாம் பாண்டியன நெடுஞ்செழியன் பெயர் காணப்படுகிறது. அவன் தன் ஆசான் நந்திக்கு இக்குடைவரையையும், கற் படுக்கைகளையும சமைத்த செய்தியைத் தவிர வேறு அரசியல் செய்திகள் இல்லை. இவனுக்கு முன்னும் பின்னும் ஆண்டவர் பெயர்களை அறியமுடிய வில்லை. புறநானூறு ஒன்பதாம் பாடலில் 'நெடி யோன்' என்பவன் குறிப்பிடப்படுகிறான. இவன பஃறுளியாற்றை வெட்டி நீர்பபாசன வசதி செய் தான். முந்நீர் விழா (வருணன் விழா) எடுத்தா னெனற செய்தியும் இப்பாடலில் காணப்படுகிறது. பஃறுளி ஆறு கி.மு. முதலாம் நூற்றாணடில கடல் கோளால் அழிந்துபட்டதென்பதிலிருநது அதறகும முற்பட்ட காலத்தவன் இவன் என்பதை அறியலாம். இவனது அவையிலதான தொல்காபபியம அரஙகேற் றப்பட்டதாக உரையாசிரியர் நசசினார்க்கினியர் கூறுகிறார். மதுரைக் காஞ்சியும் (60-61) இவனை 'நெடியோன்' எனறே குறிப்பிடுகிறது. ஆயினும, இவனது இயற்பெயர் வடிமபலமபநினற பாணடியன என்பதாகும். அடுத்துக் காணப்படும் பாணடியன பல்யாகசாலை முதுகுடுமிப பெருவழுதி என்பவனா வான். இவன் பல வேளவிகளைச் செய்ததோடு, வேதியருககுப் பல வேளவிச் சாலைகளையும் அமைத் துக் கொடுத்ததாக நச்சினார்ககினியர் கூறுவர் (தொல். பாயிரஉரை). இவன் பலநாடுகளை வென்று அந்நாடுகளிலிருந்த நகரங்களை அழித்துக கழுதை களைக் கட்டி ஏர் உழுதானென்றும், அந்நாடுகளில கிடைத்த கொண்டிப்பொருள்களைப் புலவருககும், வறியவருக்கும் வாரி வழங்கினானென்றும் புறம்(15) கூறும். மதுரைக் காஞ்சியிலும் இவன் புகழ் பேசப் படுகிறது (759-63). கி பி. 8-ஆம் நூற்றாணடி லெழுந்த வேள்விக் குடிச் செப்பேட்டிலும் (வரி: 31-39) இவன் புகழ் பேசப்படுகிறது. இச்செப்பேடு பாண்டியாதிராசன் என இவனை விளிககிறது.

அடுத்து, பாண்டியன் பெருவழுதி, இளம்பெரு வழுதி, ஒல்லையூர் தந்த பூதப்பாண்டியன், பசும் பூண்பாணடியன் முதலிய அரசர்களின் பெயர்களை யும்அவர்கள் பற்றிய சிறு சிறு துணுக்குச் செய்திகளை யும் சங்க இலக்கியங்கள் தெரிவிககின்றன.

**ஆரியப்படைகடந்த நெடுஞ்செழியன்:** ஏறததாழ கி.பி. 2-ஆம் நூற்றாண்டினிடைப் பகுதியில் அர சாணட இவன் வடபுலததிலிருநத ஆரிய இனமான 'யவுதேயா' என்ற கூட்டத்தார் தெனபுலத்தினமீது படையெடுத்தபோது அவாகளைப் போரில புறமுது கிடச் செய்ததால் இவன 'ஆரியப்படைகடநத நெடுஞ செழியன்' என்று குறிபபிடப்படுகிறான. இவன் கற் றறிந்த அறிஞன் கல்வியின பயனை இவன புற நானூற்று 183-ஆம பாடலில் கூறியிருப்பதைக் காணலாம். ஆயினும, ஆட்சிப பொறுப்பைத் தன ஊழியரிடமே விட்டுவிட்டுப பொறுபபின்றிக் கிடந் தான. ஒருசமயம வார்த்திகன் என்ற பார்ப்பனனு டைய மகனொருவன திருடியதாக ஊழியர் கூறினர். அதைத்தீர ஊசாவாமலேயே அமமகனைச் சிறையிடச் செய்தான். அவன் தாய் கொற்றவை கோயிலில் முறையிட, அககோயில கதவு தானாகவே மூடிக் கொண்டது தன் தவற்றை உணர்நத நெடுஞசெழி யன் அவனை விடுவிதது, கழுவாயாக நிலஙகளை அவனுக்களித்தான் இதைப் போலத்தான் கோவல னையும் ஊசாவாமலேயே பொற்கொல்லன்பேச்சைக கேட்டுக்கொலைத் தணடனை விதித்தான பின் தன தவறறை உணர்ந்து அரியணையிலேயே உயிரைவிட் டான. கோவலன் அநீதியாகக் கொலலப்பட்ட செய்தி கேட்ட பொதுமக்கள கொதித்தெழுந்து மது ரையை எரித்தனர். இதையே கண்ணகி எரிததாகக கூறுவர். இவன இறநத காலம் தோராயமாக, கி பி. 180 ஆகலாம.

**பாண்டியன் நன்மாறன்:** இவனது இயற்பெயர் வெற்றிவேல செழியன் எனபதாகும. மேற்கூறிய நெடுஞ்செழியன திடீரென இறநததும் கொறகைப் பட்டினத்தில இளவரசனாக இருந்தவன 'பாணடியன் நன்மாறன' எனற பெயருடன முடிசூடிக கொண டான். கண்ணகியின வழககை ஊசாவி, கோவலனின கொலைககுக் காரணமாயிருந்த பொற்கொல்லர் களின் தலைகளை வெட்டும்படி தண்டனையிட் டான். இவன் இலவந்திகைப் பள்ளி எனனும் மாளி கைச் சோலையில் துஞசியதால சாத்தினார், இவ னைச் 'சித்திரமாடத்தில் துஞ்சியவன்' என விளிக் கிறார்.

**தலையாங்கானத்துச் செருவென்ற நெடுஞ்செழியன்:** நன்மாறனுககுப்பின் அரசுகட்டிலேறிய இவன மாங் குடிமருதனாரிடம் முறைப்படித் தமிழ் கற்ற நூலறி புலவனாவான். தன்னை எதிர்த்த சோழ, சேர வேந் தர்களையும், அவர்களுக்குத் துணை நின்ற மற்ற

ஐந்து அரசர்களையும் தலையாலங்கானம் என்னும் ஊரில் நடந்த போரில் வெற்றி கண்டதால் இவன் இப்பெயர் பெற்றான். இவனை இவனுடைய ஆசான் மாங்குடி மருதனார் 'மதுரைக் காஞ்சி'யில் புகழ்ந்து பாடியுள்ளார். நெடுநல் வாடைக்கும் இவனே பாட்டுடைத் தலைவன்.

தலையாலங்கானத்துப் போருக்குப் பின்னும் இவன் பல வெற்றிகளைப் பெற்றான். கொங்குநாடு, சோழ நாடு, சேரநாடுகளிலும் இவன் வெற்றிமுரசு கொட்டினான். இவன் ஆண்ட காலத்தைச் சரியாகக் கணிக்க முடியவில்லை.

**கானப்பேர் எயில்கடந்த உக்கிரப்பெருவழுதி:** சங்க காலப் பாண்டியரில் கடைசியாக அறியப்படுபவன் இவனேயாவான். சோழநாட்டுக் கோட்டையான 'கானப்பேர் எயில்' என்பதனை வென்றதால் இவன் அத்தகைய பட்டம் பெற்றான். சிறந்த புலவனுமான இவன் கடைச்சங்கப் புலவர் நாற்பத்தொன்பதின்மருள் ஒருவனாக வீற்றிருந்தான்; புறநானூற்றையும், நற்றிணையையும் தொகுத்தான். இவனுடைய காலம் கி.பி. 3-ஆம் நூற்றாண்டு எனலாம். இவனுக்குப் பின் பாண்டிய நாட்டைக் களப்பிரர் கைப்பற்றி கி.பி. 6-ஆம் நூற்றாண்டு வரை ஆண்டனர். மீண்டும் பாண்டியர் எழுச்சி பெற்று கி.பி. 7-ஆம் நூற்றாண்டில் ஆட்சியைக் கைப்பற்றினர்.

**குறுநில மன்னர்கள்:** சங்க காலத்தில் சேர, சோழ, பாண்டிய, கொங்கு, துளு, தொண்டை (அருவா) முதலிய நாடுகள் காணப்படுகின்றன. சேரர்கள் சேர நாட்டிலும், கொங்கு நாட்டிலும் ஆண்டதால் படிப்பதற்கு வசதியாக இரண்டாகப் பிரித்துக் கூறப்பட்டது. இதைப்போலவே, மற்ற முடியுடை வேந்தர்களும் துளு நாட்டிலும் ஆண்டுள்ளனர். இவ்வாறு நோக்கும்போது யார், யார் எந்தெந்த நாட்டை, எவ்வெப்பொழுது ஆண்டனரென்று துல்லியமாகக் கூறமுடியவில்லை. இதைப்போலவே ஆங்காங்கே ஆண்ட குறுநில மன்னர் நாடுகளும், அவற்றின் எல்லைகளும் துல்லியமாக அறியப்படுமாறில்லை.

சங்க காலத்தில் ஏறக்குறைய நூற்றிருபது குறுநில மன்னர்களிருந்திருக்கலாம். கடையெழு வள்ளல்கள் யாவரும் குறுநில மன்னர்களே. அவர்கள் வேந்தர்களைப் போலவே சிறப்பும், மக்களின் நன்மதிப்பும் பெற்றவர்கள். பறம்புமலைப் பகுதியையாண்ட பாரி, மலையமான் நாட்டுமுள்ளூர்ப் பகுதியை ஆண்ட காரி, சென்னிமலைப் பகுதியை ஆண்ட ஓரி, கண்டீர மலைப்பகுதியை ஆண்ட நள்ளி, பழநிமலைப்பகுதியையாண்ட ஆய்அண்டிரன், தகடூர்ப் பகுதியை ஆண்ட அதியமான் ஆகிய எழுவரும் கொடைச் செயலிலும் வீரத்திலும் பண்பிலும் மிக்கவர்கள்.

இக்கடையெழு வள்ளல்களேயன்றி வேறு பல குறுநில மன்னர்களும் வள்ளல்களாகவே திகழ்ந்துள்ளனர். அவர்களுள் முதிரமலைப் பகுதியையாண்ட குமணன், சிறுகுடியில் வாழ்ந்த பண்ணன், ஈந்தூர்ப் பகுதியையாண்ட தோயன் மாறன், ஒய்மா நாட்டு நலலியக்கோடன, கோடைக்கானல் பகுதியையாண்ட பண்ணி, தொண்டை நாட்டு இளந்திரையன், பொதிய மலைத்திதியன, சோழநாட்டுப் பூஞ்சாற்றூரில் வாழ்ந்த விண்ணந்தாயன் (அந்தணன), வேங்கட மலைப் பகுதியை ஆண்ட ஆதனுங்கன், கரும்பனூர்ப் பகுதியை ஆண்ட கரும்பனூர்க்கிழான், ஒய்மா நாட்டு விலலியாதன், குதிரைமலைப் பகுதியை ஆண்ட பிட்டன், தருமபுத்திரன் முதலிய பல வள்ளல்களும் குறுநில மன்னர்களாவர்.

சங்க காலத் தமிழகத்தின் மேலைப்பகுதியில் தெற்கிலிருந்து வடக்குவரையிலாண்ட குறுநில மன்னர்களும் பொதிய மலையையாண்ட திதியன், மோகூர்ப்பகுதியையாண்ட பழையன் - மாறன், மைசூர்ப் பகுதியையாண்ட மையூர்கிழான், செல்லூர்ப்பகுதியையாண்ட கடலன் முதலியோர் குறிப்பிடத்தக்கோர். இவர்களைப் போலவே, தமிழகத்தின் கிழைப் பகுதியில் வடக்கிலிருந்து தெற்காக நோக்கின் வேங்கடத்தையாண்ட புல்லி, ஆர்க்காட்டையாண்ட காரியாதி, பச்சைமலையையாண்ட விச்சிக்கோ, நீடூர்ப் பகுதியையாண்ட எவ்வி, கொடும்பாளூர்ப் பகுதியையாண்ட புலிகடிமால ஆகியோர் குறிப்பிடத்தக்கோராவர்.

நன்னன் ஒரு குறுநில மன்னன. ஆனால், நன்னன் என்ற பெயரில நால்வர் இருந்தனர். கோசர் குடியைச் சேர்ந்த பாழியைத் தலைநகராக ஆண்ட நன்னன், வேளிர் குடியைச் சேர்ந்த வியலூரைத் தலைநகராகக் கொண்டு ஆண்ட நன்னன்வேண்மான, ஆய்குடியைச் சேர்ந்த பறம்புமலைப் பகுதியையாண்ட நன்னன் ஆய், செங்கண்மாப் பகுதியை (செங்கம்) ஆண்ட சேய் நன்னன் ஆகியோர் அந்நால்வர் ஆவர். தமிழகத்தின் வடக்கெல்லை ஓரமாக ஆட்சி செலுத்திய ஏறறை, சுத்தி, கஙகன், கட்டி, புன்றுறை, கணையன் எனற அறுவரும் குறுநில மன்னர்களே. இவர்கள் பாழியையாண்ட நன்னனோடு கூட்டுச்சேர்ந்து முடியுடைவேந்தர்களை எதிர்த்தனர்.

பொதுவாகக் குறுநில மன்னர்கள் மூவேந்தர்களுக்கு நண்பர்களாகவும் தானைத் தலைவர்களாகவுமிருந்தனர். தானைத் தலைவர்களுள் குறிப்பிடத்தக்கவர்கள் பாண்டியனுக்குதவிய பழையன, மாறன, நாகன், பணணி ஆகியோரும், சேரனுக்குதவிய பிட்டன், அறுகை ஆகியோரும் சிறப்பானவர்கள். சோழரின் நண்பர்களுக்கு 'ஏனாதி' என்ற பட்டப்

பெயரும் உணடு. இவர்களுள் ஏனாதி திருக்கிள்ளி, சோழிய ஏனாதிதிருக்குட்டுவன, மலையமான சோழிய ஏனாதி முதலியோர் குறிப்பிடத்தககவர்.

'கிழாா' என்னும சிறப்பு அடையுடன வாழந்த குறுநில மனனாகள் மக்களின் செலவாககைப் பெறற வர்கள. ஆலூர்கிழார், கருவூாகிழார், கூடலூர் கிழார், கோவூர் கிழார், செலலூா கிழார் முதலி யோரும், சிறுகுடி கிழான் பணணன், கருமபனூா கிழான், மையூர் கிழான் முதலியோரும குறுநில மன்னர்களே.

**இலங்கையும் தமிழகமும்.** பழங்காலமுதல் இலங கையும் தமிழகமும பல்வேறு வகைகளில் இணைந்து காணப்படுகின்றன. தமிழக அரசர் அதனைப் பல் வேறு காலஙகளில நேரடியாக ஆணடுளளனா. சிங் களர் பலரும் தமிழ் மன்னர்களின் உதவியுடன ஆண டுளளனர். ஒருகாலத்தில இலங்கை முழுவதும ஆணட சோழாகளைக் கயவாகு (கி.பி. 174-196)வெளியேற்றி ஆணடான எனபா.

**சங்ககாலத்தின் முடிவு:** ஆரியப் பணபாட்டின தாக்கமும், களப்பிரா தமிழகததைக் கைப்பற்றிய மையும் முறையே பணபாட்டு மாற்றததையும், ஆட்சி மாற்றததையும் ஏற்படுத்தின. ஏறக்குறைய கி.பி. 3-ஆம் நூற்றாண்டில் சங்கத்தின் பொற்காலம் முடிவுககுக கொணடுவரப்பட்டது.

**சங்க காலச் சமுதாயம்:** தமிழக வரலாற்றில சஙக காலத்தைப் 'பொற்காலம்' எனக் குறிப்பர். அக் காலத்தில் வாழ்ந்த மக்கள தமக்கென வாழாத்தகை மையாளர்கள். அவர்கள் ஆற்றலை வளர்த்து, அதன வழி நாட்டிற்கும், மொழிககும் வளர்சசி தநது, அற நெறி நினறு, வாழவேணடிய நெறியில வாழநதனர். அதுவே தமிழ்நெறியாயிறறு. பணடைய கிரேக கரைப் போல், அரசியல முதன்மைக் கோட்பாடோ, இவ்வுலக இன்பத்தை மட்டுமே நுகரும் கோட் பாடோ, துறககத்தையெண்ணி உலக இன்பத்தைத் துறக்கும் கோட்பாடோ இவர்களிடம காணப்பெற வில்லை.

**வாழ்க்கைமுறை:** தாம் வாழும் இடம், காலம ஆகியவறறை முதற் பொருளாகவும், உயிரினஙகளை யும் உலகப் பொருளகளையும் கருப்பொருளாகவும் கொணடதால், தமிழர் உலகியல் வாழ்க்கையை மன மார நுகர்ந்து, தாமும் வளர்ந்து, உலகையும் வளர்த்து, சிறந்ததொரு நாகரிகத்தைத தம் அடிச் சுவடாக விட்டுச் சென்றனர்.

தாம் வாழ்நத இடத்தைக் குறிஞ்சி, முல்லை, மருதம், நெய்தல, பாலை என்னும் ஐநதிணைகளாக வும்; காலத்தைக் காலை, நண்பகல், ஏற்பாடு, மாலை, யாமம், வைகறை என்னும் பொழுது களாகவும; ஆண்டு, திங்கள, வாரம், நாள், நாழிகை, நொடி என்னும் பொழுதுகளாகவும் பிரித்தனர். தட்ப, வெப்பத்திற்கேறபவும் பிரித்தனர். ஓராண்டில் சகடம் போல் சுழனறு வரக்கூடிய பருவங்களைக் கார், கூதிர், முனபனி, பின்பனி, இளவேனில், முது வேனில எனப்பெரும்பொழுதுகளாக பிரித்துக்காலத் திற்கேறப வாழ்க்கையைத் துயததனர்.

மக்கள இல்லற இனபம் காண ஆணும் பெண்ணும் கூடி வாழ்ந்தவாழவு 'அகம்' எனறும், இவ்வாழ்க் கைக்கு ஊனறுகோலாயுளள அரசியலும், பொருளீட்ட லும்,போரும் 'புறம்' எனறும் பகுக்கப்பெற்றன. வாழ்க் கைக்குப் பொருள் வேணடும; அப்பொருள் அறவழி ஈட்டப் பெறுதல வேணடும். அறமும், பொருளும கூடிய வாழ்க்கையே இன்ப வாழ்ககை. தமிழ்மக்கள் இலலறமேற்று, நல்லறம் போறறி வாழ்வாங்கு வாழ் வர். கறபும, கடமையும் ஆண், பெண் இருபாலருக்கு முண்டு. கணவன் போர்மேற்சென்று, வெறறி பெறு வான் அல்லது வீர மரணம் அடைவான. பொருள் தேட, அலலது போர் புரிய இல்லாளைப் பிரிந்து செல்லும் கணவன் குளிர் காலத்தில் திரும்பி வநது, இல்லக்கிழத்தியோடு இனபுற்றிருப்பான். இவ்வாறு ஆணும் பெணணும் கூடிவாழநத அமைபபே 'குடும பம்' ஆகும். இதில குடும்பத் தலைவன் 'கிழவன்' எனறும், தலைவி 'கிழத்தி' (மனையோள) என்றும் கூறபபெற்றனர். பல குடுமபங்கள் சேர்நது வாழ்ந்த இடம் 'சேரி' எனப்பட்டது. பல சேரிகளைக் கொணடது ஓர் 'ஊர்' எனப்படடது. இசசேரிகள தொழில வழி அறியபபட்டன தனித்தனிக குழு மனபபானமை வளர்ந்து ஊர் மனப்பானமையோடு இணைந்து, சமுதாயக கட்டுக்கோப்பும் உணடா யிற்று. வாழவிடமும் ஒருமைபபாட்டை உணடாக் கியது.

காலப் போககில் தஙகள முன்னோர்களின் காலவழியே தஙகளைப் பிரித்துக் கொணட மககள தங்களை இன்னகுடுமபத்தினர் அல்லது குலத்தின ரெனக் குறிபபிட்டுப பெருமைப்பட்டனர். குறவர் குடி, வேட்டுவர்குடி, ஆயர்குடி, கானவர்குடி, உழவர் குடி, பரதவர்குடி, நுளையர்குடி, எயினர்குடி, மறவர் குடி முதலிய எணணிறந்த குடிகள தோன்றின. 'துடியன், பாணன், பறையன, கடம்பன எனறு இந்நானகு அல்லது குடியும இல்லை' எனனும் பாடலைக் கொணடு, சங்கத் தமிழகத்தில் குடிப்பாகு பாடுகள இருந்தனவே அன்றிச் சாதிப்பாகுபாடு இல்லை எனக்கொள்ளலாம்.

**தொழில் வழிப் பெயர்கள்** துடியன், பாணன், பறை யன், கடம்பன், வணிகர், கூலவணிகர், உப்புவணிகர், எணணெய் வணிகர், பரதவர், உமணர், மாசாத்து

வணிகன் (கப்பல் வணிகன்), ஆயர், உழவர், வேளாளர், கணக்கர், கண்ணுள் வினைஞர் (ஓவியக்காரர்) சங்கறுப்போர், கம்மியர் முதலிய எண்ணிறந்த தொழில்களைச் செய்தோரைப் பற்றிய குறிப்புகள் உள்ளன.

**பார்ப்பனர் வாழ்க்கை:** வேள்விசெய்வதில் கணவன் மனைவி இருவரும் சேர்ந்தே செய்வர். தலைவன் தலைவிக்கிடையே தூது செல்வர். நிமித்தம் கூறுதல் வேந்தனுக்குத் தூது போதல் முதலியனவும் இவர்களின் தொழில். இவர்கள் பல பெண்களை மணக்கும் பழக்கமுள்ளவர்கள்; நோன்பு நோற்கும் போது காவி உடையும், கையில் முக்கோலும்வைத்திருப்பர். சங்கறுக்கும் பார்ப்பாரும் உண்டு.போர் தொடங்குமுன் பார்ப்பனரை வெளியேற்றுவர். வேள்வியின் போது பொன்னும், பூவும் தாரை வார்த்துத் தர இவர்கள் கையேந்தி வாங்குவர். மன்னர்கள் பசு, ஊர், பொன், பொருள்களைக் கொடையாக இவர்களுக்கு அளிப்பர். பூணூல் அணிவர்; உச்சிக் குடுமி வைத்திருப்பர்.

**வணிகரும் வணிகச் சந்தைகளும்:** மதுரையிலும், புகாரிலும் பல்வேறு தானியங்கள் விற்கும் வணிகத் தெருக்களிருந்தன. கள், தேறல், தோப்பி, மட்டு, மகிழ், நறவு, நனை, அரியல் முதலிய பல திறப்பட்ட, மது வகைகளை விற்போரும், அப்பம், பிட்டு, பண்ணியம், மோதகம், விசயம், அடை முதலிய உணவுப் பண்டங்களை விற்போரும், பூ, மாலை, விலைமா (மேனி மணப்பொடி), பொன், முத்து, பவழம், வைரம் முதலியன விற்போரும், பல வண்ண ஆடைகள், பூவேலையுடைய ஆடைகள், வெள்ளாடைகளெனப் பலவகை ஆடைகள் விற்போரும் ஓவியங்கள் பொம்மைகள், பின்னல்கள், விளையாட்டுப் பொருள்கள் விற்போரும் இந்நகரங்களிலிருந்தனர்.

மதுரை, புகார், மருவூர்ப்பாக்கம் முதலியவற்றில் பல்வேறு மொழிகளில் பேசும் அயல்நாட்டு வணிகர்கள் காணப்பட்டனர். இவர்கள் கடல் வழிவந்த வணிகப் பொருள்களை விற்றனர்.

காலம் கணித்தறிய முடியாதவாறு தமிழகத்தில் வாழ்ந்த கிரேக்க, பாரசீக, உரோமானிய வணிகர்கள் தனியே சேரிகளை அமைத்துக் கொண்டு வாழ்ந்தனர். அவர்கள் வாழ்ந்த சேரிகள், யவனர் சேரிகள் எனப்பட்டன. இவற்றிலும் பரதவர், பாணர் சேரிகளிலும் அரிய வணிகப் பொருள்கள் விற்கப்பட்டன.

பொதுவாகச் சங்ககாலத் தமிழர்கள் அரிசி உணவையே மிகுதியும் உண்டனர். வரகு, சாமை முதலிய புன்செய்த் தானிய உணவுகளையும், மீன், இறைச்சி வகைகளையும், கனி கிழங்குகளையும் உண்டனர். மிளகு, புளி, உப்பு ஆகியவை உணவில் சேர்த்துக் கொள்ளப்பட்டன. அரசரும் அரசரைச் சார்ந் தோரும் உண்ட உணவு வகைகள், தனிமனிதன் உண்ட உணவு வகைகளுக்கு வேறுபட்டன. ஐந்நில மக்கள் உணவும், கைம்பெண்டிர் உணவும், துறவிகள் உணவும், மறவர் உணவும் வேறுவேறாக இருந்தன.

வெள்ளாடு, செம்மறியாடு, மான், முயல், ஆமான், மீன், நண்டு, ஈயல், கோழி, காட்டுக்கோழி, காடை, உடும்பு முதலியவற்றின் ஊன் உணவுகளும், பாலும், பாற்பொருள்களும், பழமும், பழச்சாறுகளும் பலதரப்பட்ட சுவை நீரும், கள்ளும் உண்டனர். கள்ளுண்ணும் பழக்கம் பொதுவாக அரசன் முதல் எல்லோரிடமுமிருந்தது. இதைப்போலவே ஊன் உண்ணும் பழக்கமும் பெரும்பாலோரிடம் இருந்தது.பார்ப்பனர் சிலரும் ஊன் உண்டனர் (புறம்:111). நெய்யில் ஊனைப் பொறித்து, சோற்றையும் சேர்த்துப் பெருஞ்சோறு (விருந்து) படைக்கும் வழக்கமும், ஈயலை மோரில் ஊறவைத்துப் புளிச்சோறு சமைக்கும் பழக்கமும் உண்டு. நெல்லை இடித்து ஆண் பன்றிக்குப் போட்டு, உண்டு கொழுக்கச் செய்து அது பெண் பன்றியுடன் சேராமல் தடுத்துக் கொன்று தின்னும் பழக்கமுமுண்டு. ஊனை உப்புக் கண்டம் போட்டு உண்ணுதலும், ஊனை இரும்புக் கம்பிகளில் கோத்து நெருப்பில் வாட்டி உண்ணும் பழக்கமும் உண்டு. மாங்காய், புளியங்காய், நெல்லிக்காய் ஊறுகாய்களையும் உணவோடு கலந்துண்டனர். கள்ளுண்டோர் இத்தகையஊறுகாய்களையும், புளிச்சுவையுடைய களாப்பழம், துடரிப்பழம், நாவற்பழம் முவலியவற்றையும் தின்று, மது மயக்கத்தை மிகுதிப்படுத்துவர். அயல்நாடுகளிலிருந்து வந்த மது வகைகளையும் பனங்கள், தென்னங்கள், ஈச்சங்கள், அரிசியைப் புளித்த சோற்றுக் காடியுடன் சேர்த்துக் காய்ச்சிய சாராயம் முதலியவற்றையும் அருந்தினர்.

உணவின்றி வறியர் வாடாதிருக்க அறச் சாலைகளிருந்தன. அவர்கள் எறும்புகள் சிறு,சிறு உருண்டைகளை உருட்டிச்செல்வதைபோல, உணவை உருண்டைகளாக உருட்டி உண்டு, எறும்புகள் சாரை, சாரையாகச் செல்வதுபோல் உணவுக் கூடங்களுக்குச் சென்றனர். விழாக்காலங்களில் மறவருக்கும், புலவருக்கும், பாணருக்கும் அரசன் பெருஞ்சோறும் மதுவும் அளித்து மகிழ்ந்தான்.

**உடைகள்:** உணவு வகைகளைப் போலவே உடைகளும் நானில மக்களுக்கும், நகர மக்களுக்குமிடையே வேறுபட்டுக் காணப்பட்டன. நானிலத்தில் வாழ்ந்த மக்கள் தழை, பூ, கொடி, நார், மரப்பட்டை முதலியவற்றால் ஆன ஆடைகளை அணிந்தனர். மான்தோல் புலித் தோல்களைப் படுக்கையாகப் பயன்படுத்தினர். கம்பளி ஆடையையும் பயன்படுத்தினர். நகரமக்கள்

பஞ்சு, பட்டு,கம்பளி, கண்ணுக்குப் புலப்படாத இழைகளையுடைய மெல்லிய ஆடைகள் ஆகிய வற்றை அணிந்தனர். ஆண பெண் இருபாலாரும் பல்வகை ஆடைகளை அணிந்தனர்.

நீண்ட கொய்சகம் வைத்துப் பெண்கள புடவை அணிந்தனர். அவர்களின் பட்டுப்புடவைகளின் முந்தானையில் குஞ்சம் காணப்பட்டது. பூவேலை யுடைய ஆடைகளை அவர்கள் அணிந்தனர். ஆடை களுக்கு நறுமணமும் ஊட்டப்பட்டது. மேலாடை அணியும் வழக்கம் இருபாலாருக்குமுண்டு. பெணகள இடையில் ஆடையும் மேகலையும் அணிவர்; மார்புக் கச்சையும் அணிந்து கொளவர். புதுமணப் பெண்கள் உடலையும் முகத்தையும் புத்தாடையால் மூடி மறைத்துக் கொளவர், பல வேலைப்பாடுகளை யுடைய ஆடைகள மதுரையிலும், மிக,மிக மென்மை யான ஆடைகள் உறையூரிலும் நெய்யப்பட்டன'

ஆண்களில் மறவர் வட்டுடை அணிவர், அவர் கள் அணிநத சட்டை 'படம்', 'மெய்ப்பை' முதலிய பெயர்களைப் பெற்றது. தலைப்பாகை அணிவ தும், மேல்துண்டு போடுவதும் ஆணகளின் வழககம். ஆணும் பெண்ணும் ஒன்றுக்கு மேற்பட்ட ஆடை களை அணிநதனர். சிறிதளவே ஆடை அணிந்து ஆடையறறோர் போலவே காணப்பட்ட மக்கள் நானிலததில் வாழநதனர். திரிந்து விற்கும் வணிகா கள் காலில் செருப்புப் போட்டிருநதனர்.

**அணிகள்:** சங்கத்தமிழ் மக்கள் அணிந்த அணி கலன்கள் அணி, பூண, இழை, கலம், தொடி, குழை, வளை, முதலிய பெயர்களைப் பெற்றன. ஆணும், பெண்ணும் அணிகலன் அணிவதில் விருப்பங் கொண டிருந்தனர். அணிகள் பொனனாலும, பிற உலோகங் களாலும், மணிகளாலும, வாரை, கொடி, சங்கு முதலியவற்றாலும் செய்யப்பட்டன. மறவர் கொணர்ந்த பொன், மன்னா பகைவரிடமிருந்து கவர்ந்த பொன், மணணுக்கடியிலிருந்து எடுத்த பொன், மண்ணை அரித்து எடுத்த பொன் எனப் பொன் பலவகைப்பட்டிருந்தது. பொன வேலையி லும் பிற அணிகலன்கள செய்யும் தொழிலிலும் சிறந்தவர் இருந்தனர்.

பெண்கள் காலில் தண்டை, சிலம்பு, முதலிய வற்றையும், ஆண்கள் (மறவர்) வீரக்கழலையும் அணிநதனர். கிண்கிணியென்னும் சிறு சதங்கையைக் குழந்தைகளின் கால்களில் அணிவித்தனர். முத்து, பொன், கற்கள் பதித்த மாலை முதலியவற்றை ஆணும் பெண்ணும் கழுத்தில் அணிந்தனர். ஆணகள தோளில் தொடி, கொடி முதலியவற்றையும், கையில் கடகத்தையும் அணிந்தனர். பெண்கள் முன் கையில் தொடியையும், அதனையடுத்து வளையையும் அணிந்த னர்; பலவேறு காதணிகளை அணிந்தனர். கைவளை களில் வலம்புச் சங்கால் செய்தவளை 'வலம்புரி வளை' என்றும், அறுத்துச் செய்யப்பட்ட வளை 'எல்வளை' என்றும் சொல்லப்பட்டன. கால் விரல் கை விரல்களில் மோதிரங்கள் அணிந்தனர். இவவாறு, ஆணும் பெண்ணும் அணிந்த அணிகலன்கள் கால் முதல் தலைவரையில் காணப்பட்டன. அவை பொன்னாலும் முத்தாலும் செய்யப்பட்டதோடு பல திறப்பட்ட வகைகளினவாய்க் காணப்பட்டன. இதைப் போலவே, சிறு குழந்தைகளுக்கும் பல்வேறு அணிகலன் களைப் பூட்டி மகிழ்ந்தனர். இத்தகைய வாய்ப்பற்ற நானில மக்கள் பூவாலும் தொடியாலும் தழையா லும் மூங்கிலாலுமான அணிகளையும் அணிந்தனர். பெண்கள்மார்பிலணிநத அணி'மதாதணி' எனப்பட் டது சுறாமீன் வடிவிலான பசசை மணி பதிதத பொன வளை 'மகரவளை' எனப்பட்டது. கூநதல் ஒப்பனையிலும் அக்காலப் பெணகள சிறநது காணப் பட்டனர். கொணடை, கூந்தல், பின்னல முதலியன வாகக் கூநதலை நெய்பூசி, வாரி வகிடுஎடுதது ஒப் பனை செய்து கொள்வர், தலைஅணி, சுரிதம் முத லியவற்றை அணிந்தனர். அரசரின் முடிகளில் நீல மணிகள் ஒளி செய்தன.

யானைக்கும் பொனனாலான 'முகபடாம்' அணி வித்தனர், சிறுவர்களுக்குப் புலிப்பல் தாலியும், ஐம படைத்தாலியும், தலைமுடியில் நவமணி மாலையும (தொய்யகம்) அணிவித்தனர்.

**நறுமணப் பொருள்கள:** மலர்கள், காய்கள், மரப் பட்டைகள், விலங்கினப் பொருள்கள முதலியவற்றை இடித்து நறுமணப் பொடிகளும் பொருளகளும செய்யப்பட்டன. தலையிலும் கழுத்திலும் கைகளி லும் பூக்களைச்சூடுவதும், படுகையில தூவுவதும் நறுமணம் கருதியேயாகும். மாலைகளில செங்கழுநீர் மாலை, காந்தள் கண்ணி, களங்காய்க கண்ணி, வெண் டாளி மாலை, பித்திமாலை முதலிய பல்வேறு மாலை கள் அறியப்படுகின்றன. பொன், தகடு, நவமணிகள, சந்தனம், கறபூரம் முதலியவற்றைப் பனிநீரில் நனைத்து இடித்துச் சுண்ணம தயாரித்து, விரைமா (மேனிப்பொடி) வாகப்பூசிக்கொண்டனர். சில மணப் பொருள்களை அரைத்துச் சாந்தாகவும் பூசிக்கொண்ட னர். அகில புகை ஊட்டி, ஆடைகளையும் கூந்தலை யும் மணமடையச் செய்து கொண்டனர்.

**விழாக்களும் விளையாட்டுகளும்:** வாழ்நிலங்களுக் கேற்ப விளையாட்டுகளிருந்தன. விழாக்களும் அவ வாறேயாகும். 'விளக்கீட்டு விழா' என்பது பொது

வாக எங்கும் காணப்பட்ட விழாவாகும். அறுமீன் சேரும் முழுநிலா நாளில் மாலை வேளையில் இவ் விழா நடைபெறும். வீதிகளில் விளக்குகளை ஏற்றி, மலர்மாலைகளைத் தொங்கவிட்டுப் பாற்பொங்க விட்டு இவ்விழாக் கொண்டாடப்பட்டது. மலை களின் உச்சிகளிலும் விளக்குகளேற்றப்படும். திரு மால் உலகத்தில் தோன்றிய நாளை 'ஓணம்' விழா வாகக் கொண்டாடுவர். அன்று யானைகளைப் போரிடச் செய்து கணடுகளிப்பர். தை நீராடும் விழா, பேராறுகளில் புனல் நீராடும் விழா, மணியை இடுப்பிலே கட்டிக் கொணடு தெருவிலே ஆடும் உள்ளி விழா. வீரர் அம்பு தொடுக்கப் பழகும் வீரர் விழா , கூத்தர்கள் கொணடாடும் கோடியர் விழா, சித்திரை ஓரையில் முழு நிலாக் காலத்தில் கொண்டாடும் 'இந்திரவிழா' இளவேனிற் காலத்தில் கொண்டாடும் 'காமவேள் விழா' முதலியன அக்காலச் சிறப்பான விழாக்களாகும்.

பெண்கள் தனித்தும், பலர் கூடியும் மணல் வீடு கட்டியும், கழற்சிக்காய், அம்மானைக்காய், ஊஞ்சல் ஆடியும் புனலாட்டயர்ந்தும் மகிழ்ந்தனர். ஆற்றங் கரையில் கைகோத்துப் பின்னியாடும் 'தெற்றிக் கிழங்கு விளையாட்டு அல்லது குரவை விளையாட்டு', பாவைகள் பூக்கள, கிழங்குகள் முதலியவற்றுடன் சிற்றில்கட்டி, சோறாக்கிக்குடும்பம் நடத்துவதுபோல் ஆடும் சிறுமியர் விளையாட்டு, கன்றுகளுடன் சேர்ந்து நீரில் மூழ்கியும், மரத்திலேறியும் சிறுவர்கள் ஆடும் விளையாட்டு, காளைகளை அடக்கும் இளைஞர்களின் ஏறுதழுவும் விளையாட்டு, யானைகளோடு உடல் வலிமை சோதிக்கும் விளையாட்டு முதலியனவும நடைபெற்றன.

**ஊர்திகள்:** சங்க காலத்தில்நிலம், நீர், வான்வழி கடக்க ஊர்திகளிருந்தன, யானை, குதிரை, எருமை, கோவேறு கழுதை முதலியனமீதும் குதிரை, மாட்டு வண்டிகளின் (பண்டி) மீதும் ஊர்ந்து சென்றனர். கொல்லாப்பண்டி, கூடாரப்பண்டி என வண்டிகள பலவகையாக இருந்தன. வண்டிகளின் மூலம்தானியம், உப்பு ஆகியவற்றை ஏற்றிச் சென்று வாணிகம் செய்த னர். வேந்தரும் வீரரும் பரத்தையரும் தேர்களில சென்றனர். பல்வேறு வகைத் தேர்களிருந்தன. நீரைக் கடக்கக் கட்டுமரங்களும் மரக்கலங்களும் பயன்படுத்தப் பட்டன. பெரிய கப்பல் 'கலம்' என்றும், சிறிய கப்பல் 'ஓடம் (அல்லது)தோணி' என்றும் கூறப்பட்டன. நெடுந் தூரம் செல்லும் பெரிய கப்பல்களும், கடலோரமே செல்லும் கப்பல்களும் இருந்தன. அவை நாவாய், நெடுநீரி முதலிய பெயர்களால் குறிக்கப்பட்டன. 'அம்பி' என்னும் தோணி மீன்பிடிகப்பலாகும். 'திமில்' என்ற தோணி உப்பு ஏற்றும் கப்பலாகும். இது நீரைப் பிளந்து கொண்டு விரைந்து செல்லும். அயல்நாடு களுக்கு நெடுங்கடலைக் கடந்து செல்லும் கப்பல் 'வங்கம், எனப்பட்டது. இதை 'நாவாய்' என்றும் குறித்தனர். வானவூர்தியும் அக்காலத்திலிருந்ததாகத் தெரிகிறது. 'வலவன் ஏவா வானவூர்தி' (புறம்:271) என்று இதனைப் புறநானூறு சுட்டுகிறது. ஓட்டுபவன் இல்லாமலேயே வான்வழிச் செல்லும் ஊர்தி என்பது இதன் பொருள்.

**சங்ககாலச் சமயம்:** நானில மக்கள மால், செவ் வேள், வருணன், 'இந்திரன் ஆகிய நிலத்தெய்வங் களையும், பாலை நில மக்கள் கொற்றவையையும் வழிபட்டனர். மரம், நீர்நிலைகள், பேய்கள், பெண் தெய்வங்கள் முதலிய சிறு தெய்வ வழிபாடும் நில வியது.

மக்கள் ஞாயிறு, திங்கள், மழை ஆகியவற்றை வணங்கியே தம் பணிகளைத் தொடங்குவர். இந்த மூன்றையும் வழிபடும் முறையைக் கொடிநிலை, வள்ளி, கந்தழி என்னும் பெயாகளால் தொல் காப்பியம் கூறுகிறது. விணமீன், காற்று, கடல்முதலிய வற்றையும் வணங்கினர். ஆலமர் செல்வன், வேம் படிக் கடவுள, பனையடிக் கடவுள், களளிமரத்தடிக் கடவுள், உன்னமரக் கடவுள முதலான மரத்தடிக் கடவுள்களையும் வழிபட்டனர்.

குலதெய்வங்களை வழிபடும் வழக்கமும் இவர் களிடமிருந்தது. கடவுளுக்குப் பல்வேறு உருவங்கள் உண்டெனக் கொணடனர். பொதியில் (சாவடி), மன்றம், தூண், வீட்டுத் திண்ணை, மரத்தடி, ஓடை ஆறு, முதலிய இடங்களில் கடவுளின் திருவுருவங்களை வைத்து வணங்கினர். ஐந்நிலத் தெய்வங்களோடு சாமன், பிரமன், பலராமன், காமன், முதலிய தெய் வங்களையும் வணங்கினர். அச்சந்தரத்தக்க பேய், அணங்கு, சூர் முதலியனவும் வணங்கப்பட்டன. வீரக் கல் (நடுகல்) வணக்கமும் உண்டு.

**பொருளியலும் வாணிகமும்: உள்நாட்டு வாணிகம்:** சங்க இலக்கியங்கள் உள்நாட்டு வாணிகத்தைப் பற்றியும் வணிகப் பொருள்களைப் பற்றியும் கூறு கின்றன. கிரேக்கர் குறிப்புகளால் தமிழகம் அயலகத் தோடு வணிகத் தொடர்பு கொண்டிருந்ததையறி யலாம். தரைவழியாக நடந்த வாணிகத்தில் வண்டி கள் போக்குவரத்துச் சாதனங்களாகப் பயன்பட்டன. நாவாய்கள அயலகக் கடல் வாணிகத்திற்கும், தோணி கள் கடலோர வாணிகத்திற்கும் பயன்பட்டன. பொதி களை ஏற்றிச் செல்லும் வணிகர்கள் வழிப்பறிக் கொள்ளையருக்குப் பயந்து காவலர்களை அழைத் துச் சென்றனர். உப்பு வணிகம் செய்த உமணர் பொதிகளை வண்டிகளில் ஏற்றிக் கொண்டு குடும்பம் குடும்பமாக ஊர் ஊராகச் சென்று உப்பு வாணிகம்

செய்து பண்டமாற்று வாணிகத்தை வளர்த்தனர். கழுதைகளும் இவர்களின் ஊர்தியாகப் பயன்பட்டன. சாலைகள சேருமிடஙகளிலும், எல்லையோரங் களிலும் சுங்கச் சாவடிகளிருந்தன. இச்சாவடிகள் சந்தைகளாகவும் பயனபட்டன. பெரிய ஊர்களிலும் நகரங்களிலும் தனித்தனிச் சந்தைகளேயிருந்தன.

**அயல்நாட்டு வாணிகம்:** கடல்சார்ந்த தொழில் களான உப்பெடுத்தல், முத்துக் குளித்தல், கப்பல் கட்டுதல் முதலியன கடல் வாணிகத்திற்கு உறுதுணை யாயின. பெருங்கடல்களில் மிதந்து சென்ற நாவாய் களையும், அவற்றிலிருந்து சரக்குகளை ஏற்றி இறக் கிய தோணிகளையும் கடலோர வாணிகத்திற்குப் பயன் பட்ட பஃறி என்னும் கப்பல்களையும் சஙக இலக்கியஙகள் குறிப்பிடுகின்றன.

கலங்களைக் குறிப்பிடுவதைப் போலவே சங்கத் தமிழகத்தின் துறைமுகங்கள் பலவற்றையும் கிரேக்க நூல்கள் குறிப்பிடுகின்றன. மேலைக் கரையில் முசிறி, பந்தர், கொடுமணம் முதலிய துறைமுகங்களும், கீழைக்கரையில் கொற்கை, மருங்கூர்ப்பட்டினம், காவிரிப்பூம்பட்டினம், எயிற்பட்டினம் முதலிய துறை முகங்களுமிருந்தன. தாலமி என்னும் கிரேக்கப் பயணி மேலும் பல துறைமுகங்களைப் பற்றிய குறிப்புகளை யும், அவற்றிலிருந்து ஏற்றுமதியான பொருள்களை யும் குறிப்பிட்டுள்ளார். குதிரை, மதுவகைகள், கண் ணாடிச் சாமான்கள், சாடிகள், பாவைவிளக்குகள், சங்கிலிகள், வணணத்திரைச்சிலைகள், புட்பராகம், பவளம் முதலியன இறக்குமதியாயின.

இவ்வாறு, கிரேக்க, உரோம, எகிப்திய, அரேபிய நாடுகளுடனும், மலேசியா, கிழக்கிந்தியத் தீவுகளுட னும், ஈழம், சீனம் முதலிய நாடுகளுடனும் சங்கத் தமிழகம் வாணிகத் தொடர்பு கொண்டிருந்தது. கிரேக்க நாட்டுத் துறைகளுக்கும் இந்தியநாட்டுத் துறைகளுக்குமிடையே ஆண்டொன்றுக்கு ஏறத்தாழ 120 கப்பல்கள் சென்று வந்து கொண்டிருந்தனவாம். உரோமப் பேரரசு வீழ்ந்ததற்கும், வாழ்ந்ததற்கும், இந்திய வாணிகமே காரணமென்று வரலாற்றாசிரி யர்கள் கூறுவர்.

அயல்நாட்டு வாணிகர் பலரும் இந்தியாவிலேயே குடியமர்ந்து வாணிகம் செய்தனர். குன்று போன்ற பெரிய, உறுதியான வீடுகளில் வாழ்ந்த அவர்கள் அளவற்ற பணியாட்களையும் வைத்திருந்தனர். அப் பணியாட்களுக்குச் சமைத்த சோறும், குன்று போல் குவிந்து கிடந்ததென இலக்கியம் கூறுகிறது. மணிக் கற்களை வாணிகப் பொருளாகக் கொண்டவரும், முத்து, பவழம் முதலியவற்றை வாணிகப் பொரு ளாகக் கொண்டவரும் இதில் உண்டு. அவர்கள் மணிக்கற்களிலுள்ள கீறல், பிளவு, கவுங்கம், புள்ளி, இருள் முதலிய நுண்ணிய குற்றங்களைக் கணடு பிடிக்க வல்லவர்கள். அவர்கள் முத்துகளை வகைப் படுத்தி வெண்முத்து, செந்நீர்முத்து, அணிமுத்து முதலியனவாகப் பிரித்தறியவும், அவற்றிலுள்ள காற்றேறு, மணலேறு, கல்லேறு, நீரேறு முதலிய குறைபாடுகளை அறியவும் வல்லவர்கள். பவழத் திலும் துளை, கல், முறுக்கு முதலிய குறைகளைக் காண்பதிலும் வல்லவராயிருந்தனர்.

உள்நாட்டு வாணிகமென்பது இந்தியாவின் மற் றப் பகுதிகளுடன் தமிழகம் செய்த வாணிகமாகும். புகார் நகரின் இறக்குமதிப் பொருள்களை நோக்கி னால் இது விளங்கும். கடல்வழி வந்த குதிரை, நில வழி வந்த மிளகு மூடை, வடமலை மாணிக்கக் கற் கள், பொன், குடமலை வந்த சந்தனம், அகில், தென் கடல் முத்து, குணகடல் பவளம், கங்கை-காவிரிப் பொருள்கள், ஈழத்தினின்று வந்த உணவு வகைகள, பர்மா நாட்டுப் பொருளகள், வங்கம் வந்த கலிங்கம் முதலியன நோக்கத்தக்கன.

**சங்க காலக் கலைகள்: கட்டடக்கலை:** சங்க காலத்து மக்களின் உறைவிடங்களை இருவகையாகப் பிரிக்கலாம். அவை நாட்டுப்புற வாழ்க்கையும் நகர்ப் புற வாழ்க்கையும் ஆகும். நாட்டுப்புற மக்கள் சிறு சிறு குடிசைகளில் நிலத்திலும், மரக்கிளைகளிலும், மலை அல்லது மேடான பகுதிகளிலும் வாழ்ந்தனர். குடிசை கள் புல், வைக்கோல், கரும்புத் தோகை முதலிய வற்றால் வேயப்பட்டன.

நகர்ப்புற வாழ்க்கைக்கு உயர்வு தருவன மாடி வீடுகளேயாகும். அரசனும் அதிகாரிகளும் காவற் கோட்டைக்குள்ளிருந்த அரண்மனைகளில் வாழ்ந்த னர். எனவே, அக்காலத்தில் கருங்கல், செங்கல், சுண்ணக்காரைகளினான கட்டடஙகள் இருந்தன. இதனை இற்றைப அகழ்வாராய்ச்சியால் அறியலாம். கருங்கற்களை இணைப்பதற்குச் செம்பு, ஈயம் ஆகிய உலோகங்களை உருக்கி வார்த்தனர். சோழரின் கோ நகரான காவிரிப் பூம்பட்டினத்தின் அமைப்புப் பற்றி யும், அதன் அரண்மனை எவ்வாறு காவற்காடுகள, அகழிகள், புறமதில்கள், அகமதில்கள் முதலியவற்றால் பாதுகாக்கப்பட்டதென்பது பற்றியும் இரட்டைக் காப்பியங்கள் விவரிக்கின்றன. மதுரை நகரின் அமைப் பைப்பற்றி மதுரைக் காஞ்சியும் நெடுநெல்வாடையும் சிலப்பதிகாரமும் விவரிக்கின்றன.

மாடிவீடுகளை 'வேயா மாடங்கள்' எனச் சிலப்பதி காரம் சுட்டுகிறது. இவ்வீடுகளில் மணடபம், கூடம், தாயக்கட்டு, அடுக்களை என்னும் தனித்தனிப் பிரிவு களிருந்தன. அரண்மனைக் கூரைகளுக்குப் பொன்

தகடுகள் வேயப்படுவதுண்டு. சாளரங்கள் தென்றலுக் காகத் தெற்குப்பக்கமே அமைக்கப்பட்டன. அரண் மனை வாயில்கள் ஒரு போர் மறவன் யானைமீது அமர்ந்து கொடியை உயர்த்திப் பிடித்துச் சென்றா லும், இடிக்காத அளவுக்கு உயரமானவையாக இருந்தன. அதனுள்ளிருக்கும் விடிவிளக்குகள் பாவை விளக்கெனப்படும்.

வீட்டுக் கதவுகளைச் சார்த்திக் குறுக்கே 'நுகம்' என்னும் கணைய மரத்தை இட்டுப் பூட்டுவா. வாசலுக்கு இருமருங்கிலும் திண்ணைகளிருக்கும். வீடும் வாசலும் சாணத்தால் மெழுகப்படும். வீட்டினுள் தெய்வ ஓவியங்கள் தீட்டப்படும். மாளிகை களைச் சுற்றிப் பூங்காக்களிருக்கும். பின்புறம் எந்திரக் கிணறுகள் இருந்தன.

துறைமுகங்கள், உறைகிணறுகள, கிணறுகள், ஏரிகள், குளஙகள முதலியன கருங்கற்களாலும், செங கற்களாலும்கட்டப்பட்டன என்பதை அகழ்வாராயச்சி கள் மெய்ப்பிககின்றன. புத்தவிகாரை, சைத்தியம் முதலியனவும் செங்கல், கருஙகற்களால் கட்டப் பட்டன.

**களப்பிரர்கள்:** சங்க காலம் ஏறக்குறைய கி.பி. 3-ஆம நூற்றாண்டில முடிந்தது. அதனையடுதது, சேர, சோழ, பாண்டிய நாடுகளைக் களப்பிரர் கைப் பற்றி ஆண்டனர். அவர்களின் ஆட்சி சுமார் கி.பி. 6-ஆம் நூற்றாண்டு வரை இருந்தது. அவர்கள் யார்? எங்கிருந்து வந்தனர் என்பன போன்ற விவரஙகள இதுவரை கண்டறியப்படவில்லை. அவர்கள் பற்றிய வரலாறுகளையும், தாயகத்தைப் பற்றியும் பலரும பலவாறு ஊகித்தே கூறுவதால் அவர்களின் கூற்றை வரலாற்றுச் சான்றுகளோடு எடுத்துக்கொளள முடியவில்லை. அத்தகைய ஊகஙகளுள் சில பின் வருவனவாம்.

**களப்பிரர் யார்?:** 'களப்பிரர்' என்ற தமிழகத்தைச் சேர்ந்த இனத்தவரே களப்பிரர் ஆவரென்பது பி.டி. சீனிவாசையங்கார் கருத்து. திருவேங்கடமலைக கருகில் வாழ்ந்த 'களவர்' என்பாரே களப்பிரர் எனபது எசு. கிருட்டிணசாமிஐயங்கார் கருத்து. 'கள்வர்' எனற சொல்லே களப்பிரர் என மருவிய தாக டி.ஏ. கோபிநாதராயர் கூறுவார். முத்தரையரே களப்பிரர் என்பாருமுண்டு. தென்னகத்தில் வாழ்ந்த 'ஒளியர்' என்னும் வகுப்பைச் சேர்ந்தவரே களப்பிரர் என்பது டி.வி. மகாலிஙகம் கருத்து, குறும்பர்கள ஒன்று சேர்ந்து கலகம் விளைவித்து மூவேந்தர் நாடு களைப் பிடித்துக் கொண்டதால் 'கலகக்காரர்' என்ற சொல் 'களப்பிரர்' என மருவியதாகவும் கூறுவர்.

**எங்கிருந்து வந்தனர்?:** பெரிய புராணத்திலும் கல்லாடத்திலும் களப்பிரர் கன்னட நாட்டினரென் பதை அறியச் சான்றுகள் உள்ளன. கன்னட நாட்டைச் சேர்ந்த கல்வெட்டுகளில் கலிகுலன், கலிதேவன் என்னும் பெயர்கள் காணப்படுகின்றன. கொப்பம் செப்பேடும், கள்ள நாட்டுக் கலி தேவனைப் பற்றிக் கூறுகிறது. மைசூரிலுள்ள பேலூர்க் கல்வெட்டு 'கள பேரர்' என்னும் குலத்தைப் பற்றிக் குறிப்பிடுகிறது. ஒசுபெட்டுக்கு (Hospet) அருகில் கிடைத்துளள ஒரு வீரக்கல் (நடுகல்) அவர்களைப் பற்றி அறிய உதவு கிறது. களப்பிரர் நந்தி மலையில் கி.பி. 8-ஆம் நூற்றாண்டு வரை ஆணடனரெனபதையும் பின்னர் அவர்களுடைய நாடு சாளுக்கியர், மேலைக் கங்கர் நாடுகளுடன் இணைக்கப்பட்டு விட்டதென்பதையும் யாப்பருங்கலஉரை மூலம் உணரமுடிகிறது.

**ஏன் தமிழகம் வந்தனர்?:** தமிழகத்தின் வடக்கிலி ருந்த சாதவாகனரின வீழ்சசியும, சமுத்திரகுப்தனின் தென்னகப் படையெடுப்பும் பலலவரின் எழுச்சியும் தமிழகத்தில பெரும் குழப்பத்தை விளைவித்தன. தமிழகத்தில முனபே வேரூன்றிவிட்ட சமணமும், சாக்கியமும ஆரிய வைதிக சமயங்களுக்கு எதிராக எழுச்சியுறும் வாய்ப்பை அவாகள ஏற்படுத்தக் கருதித் தமிழகம் போந்தனர். பூச்சிய பாதர் என்ற சமணத் துறவியாரின மாணவரான வச்சிரநந்தி எனபவர் கி.பி.470-இல சமண அறத்தைப் பரப்புவதற்காக மதுரையில் 'திரமிள சங்கம்' (திராவிடச் சங்கம்)என னும் சஙகமொன்றை ஏற்படுத்தினாரென்பதிலிருந்து களப்பிரர் தமிழகம் வந்த நோக்கம் புலனாகிறது.

இவ்வாறு, கனனட நாட்டிலிருந்துதான் களப் பிரர் தமிழகம வந்தனரென்றும் அறுதியிட்டுக் கூற முடியவில்லை. சங்க காலந்தொட்டே கன்னடர் தமிழ கத்திற்கு கூட்டங் கூட்டமாய்க் குடிபெயர்ந்து வந்த னர் என்பது தெரிகிறது. பழநிமலைப் பகுதியில் குடி யேறிய தென்கனனட நாட்டவா அதனைப் 'பன்றி நாடு' என்னும் பெயருடன் ஆணடதை அறியலாம். கி.பி.4-ஆம் நூற்றாணடு முதல் 6-ஆம் நூற்றாண்டு வரை தொடர்ந்து கன்னடர் தமிழகத்தில் குடியேறி யதை வரலாறறுச் சான்றுகள கூறுகினறன. அச்சுத விக்கந்தன் என்னும் கன்னட அரசன மாபெரும் படை திரட்டி வந்து மூவேந்தர்களையும் வென்ற செய்தி கி.பி.5-ஆம் நூற்றாணடில் எழுந்த 'வினைய வினிச்சயா' என்னும் நூலிலிருந்து அறியலாம். இந்த அச்சுதவிக்கந்தன சோழ நாட்டில் ஆட்சிபுரிந்தா னென்பதையும், இவன புத்தசமயத்தவன் என்பதை யும் இந்நூல் தெளிவுபடுத்துகிறது. சிவனடியார்களில் ஒருவரான 'கூற்றுவநாயனார்' என்பவரைக குறிப் பிடும் போது சேக்கிழார் 'களந்தை மன்னர் களப் பிரர்' என்று குறிப்பிடுகிறார். இவ்வாறு ஒன்றுக்கு மேற்பட்ட களப்பிரர் தமிழகத்தை ஆண்டனரென பதை அறியலாம்.

**களப்பிரர் ஆட்சியின் பலன்கள்:** களப்பிரர் ஆட்சியில் சமணமும் புத்தமும் மேலும் வளர்ந்தன. சமணர்கள் தமிழ்மொழிக்கு அரிய இலக்கண நூல்களை யாத்தனர். பிராகிருதம், பாலி ஆகியவை சமண, புத்தத்தின் மொழிகளாயினும், தங்களின் சமயக் கருத்துகளைப் பரப்பத் தமிழகத்தில் தமிழ் தவிர வேறு வழியில்லை என்று கண்ட அவர்கள் தமிழ்மொழிக்கு ஆக்கம் தந்தனர். மதுரையில் கி.பி. 470-இல் தோற்றுவிக்கப்பட்ட திரமிளசங்கம் சமண புத்த நூல்களை யாத்துத் தமிழுக்கு ஆக்கம் தேடியது. சீவகசிந்தாமணி, சிலப்பதிகாரம், மணிமேகலை, நீலகேசி, குண்டலகேசி, யசோதரகாவியம் முதலிய நூல்கள் இக்காலத்தில் தோன்றின. இக்காலத்தை இருண்டகாலம் எனக் கூறுவர் வரலாற்றாசிரியர் களப்பிரர் இடையீட்டுக் காலம் என்பாரும் உளர்.

**களப்பிரர் ஆட்சியின் முடிவு:** களப்பிரால் சங்கம் நிலவிய 'பொற்காலம்' மறைந்தது என்பர். இது பொருந்தாக் கூற்றே. சங்கம் களப்பிரர் வருகைக்கு முன்பே அழிந்துவிட்டது. அவர்கள் ஏறத்தாழ கி.பி. 4-ஆம் நூற்றாண்டில் ஆட்சிக்கு வந்தனர். இரு நூறு ஆண்டுகள ஆண்ட இவர்களின் அடிச்சுவட்டைப் பல்லவர் ஆட்சி மறைத்துவிட்டது. கி.பி. 8-ஆம் நூற்றாண்டைச் சேர்ந்த வேள்விக் குடிச் செப்பேடுகளில் களப்பிரர்களைப் பற்றி வரலாற்று ஆசிரியர்கள் முதன் முதலாக அறிந்தனர். இவ்வேடுகள் சடிலபராந்தக பாண்டியனால் வெளியிடப்பட்டனவாகும். பாண்டிய நாட்டைக் களப்பிரரிடமிருந்து இவன் கைப்பற்றியதாக இவ்வேடுகள் கூறுகின்றன. கலியரசன் என்ற களப்பிர மன்னன் தமிழரசர் பலரைக் கொன்று நாட்டைக் கைப்பற்றினானென்றும், அவனிடமிருந்து நாடுகளைக் கடுங்கோன் பாண்டியன் கைப்பற்றினானென்றும் வேள்விக்குடிச் செப்பேடுகள் கூறுகின்றன. இவனைப் போலவே பல்லவ மன்னன் சிம்மவிட்டுணுவும் களப்பிரரை வீழ்த்தி நாட்டைக்கைப்பற்றினானெனக் காசக்குடிச் செப்பேடுகள் கூறுகின்றன. சாளுக்கிய மன்னர்களான முதலாம் விக்கிரமாதித்தன், இரண்டாம் விக்கிரமாதித்தன் ஆகியோரும் களப்பிரரிடமிருந்து நாட்டைக் கைப்பற்றியதற்குச் சான்றுகள் உள்ளன.

ஆகவே, கி.பி. 4-ஆம் நூற்றாண்டில் தமிழகத்தில் ஆட்சியைத் தொடக்கிய களப்பிரர்களை 8-ஆம் நூற்றாண்டில் பலரும் வென்று நாட்டை மீட்டனர் என்பது புலனாகிறது. களப்பிரர்களின் ஆட்சியமைப்புப் பற்றிய விவரம் கிடைக்காமை வருந்தத்தக்கதே.

**(ஆ)வாகாடகர்கள்:** பல்லவர்- வாகாடர்களேயென்பது சோவான்- துப்ராயின் கருத்தாகும். வாகாடர்களைப் போலவே இவர்களும் தங்களைப் பரத்துவாசக் கோத்திரத்தைச் சேர்ந்தவர்களென்று தங்கள் பட்டயங்களிலும் கல்வெட்டுகளிலும் கூறிக் கொள்வதால், வாகாடகர்கள் பிராமண கோத்திரத்தைச் சேர்ந்தவர்களென்பதைப் போலவே, இவர்களும் பிராமணர்களேயென்று இவர் கூறுகிறார். ஆந்திரப்பேரரசன் உருத்திரதாமனின் அமைச்சனான சுவிசாகன் என்பவனின் வழித் தோன்றல்கள் ஆந்திரத்தின் தென்பகுதியைக் கைப்பற்றி ஆண்டனர். அவர்களுள் ஒருவன்தான் குட்டுநாகன் மகளை மணந்த முதல் பல்லவனான வீர கூர்ச்சவர்மன் ஆவானென்றும், அவனே பல்லவ மன்னர்கள் வரிசையில் காணப்படும் முதல் அரசனென்றும் துப்ராய் கருதுகிறார். இக்கருத்தும் முழுவதும் ஏற்புடையதாக இல்லை.

**(இ) மணிபல்லவத் தீவைச் சேர்ந்தவர்:** ஈழத்தையடுத்துள்ள மணிபல்லவத்திவில் (காரைத்தீவு) பல்லவர் ஒரு காலத்தில் வசித்தவரென்றும், சோழன் வென்வேற்கிள்ளியென்பான் அத்தீவைச் சேர்ந்த நாகர் மகள் பீலிவளையென்பவளை மணந்தானென்றும், பின்னர் அவளைக் கைவிட்டுத் தன்னாடு திரும்பிவிட்டானென்றும், அவனுக்குப் பிறந்த ஆண் மகவைப் பீலிவளை தொண்டைக் கொடியால சுற்றிச் சோழ நாட்டிற்கு அனுப்பும்போது கப்பல் புயலில் சிக்கி மூழ்கியபின்னும் அக்குழவி திரைகளால் உந்தப்பட்டுக் கரைசேர்ந்ததென்றும், அவ்வாறு தொண்டைக்கொடியால் சுற்றப்பட்டுத், திரையால் உந்தப்பட்டவனே பின்னர் இந்நாட்டையாண்டான் என்றும் கூறப்படுகிறது. அவன் வழிப்பல்லவ நாடு, தொண்டை நாடு எனப்பட்டதாம். பெரும்பாணாற்றுப்படையில் இவன் 'தொண்டைமான் இளந்திரையன்' எனப்படுகிறான். இவன் வழித் தோன்றியவரே பல்லவர் என்றும் கூறுவர்.

ஈண்டு 'பல்லவர்' என்ற சொல் மணிபல்லவர் என்பதனைக் குறிப்பதாகக் கூறுவர். இக்கருத்தை முதலிற் கூறியவர் இராசநாயகம் ஆவார். (பல்லவம் -போது, தளிர், கொடி எனும் பொருளது) போது-போத்து எனவும் சொல்லப்படும். தளிர்க்கொடியால் (தொண்டைக் கொடி) சுற்றப்பட்டு வந்தமையால போத்தன் என்றும் இவனைச் சொல்லுவர். ஆதலின் இவன்வழிவந்தோரைப் போத்தரென்றனர். பின்னர்ப் போத்தர் என்ற சொல் மறைந்து அதன் பொருள்பட்ப் பல்லவரென்ற சொல்லே வழக்காற்றில் வந்துவிட்டது. பல்லவர், மணிபல்லவம் ஆகிய சொற்கள் மணிமேகலையிலும் வருகின்றன.

**2) பல்லவர் தொண்டைமண்டலத்தவரே: (அ) குறும்பர் அல்லது புலிந்தர் (அ) படைர்-பல்லவர்:** பல்லவர் தொண்டைநாட்டவரே என்னும் கருத்துமுள்ளது. அசோகன் தன் குடிமக்களுள் 'புலிந்தர்' என்பவரைப் பற்றியும் தன் கல்வெட்டுகளில் குறிப்பிடுகிறான். அப்

புலிந்தரென்போர் குறும்பர்களாக இருக்கலாமென் பர். அக்குறும்பர் தொண்டைமண்டலத்திலிருந்தவர் கள். அம்மரபினரே பல்லவரென்பது எலியட் செவேல் போன்றோர் கருத்தாகும். குறும்பர் பசுக்களை மேய்த்தனர். எனவே, கோபாலர் எனப் பட்டனர். பால்காரர் என்றும் இவர்களைக் குறித் தனர். பால்காரர்-பால்-அவர் பல்லவரென மருவி வந்திருக்கவேண்டுமென்பது அலெக்சாந்திரரே என்பா ரின் கருத்தாகும்.

மணிமேகலை ஆதொண்டைச் சக்கரவர்த்தி யைப் பற்றிக் கூறுகின்றது. அவனே குறும்பரை வென்று அவர்கள் நாட்டைத் தனதாக்கிக் கொண்டு, அதற்குத் 'தொண்டைமண்டலம்' எனப் பெயரிட்டானெனவும் அறியக்கிடக்கிறது. எனவே குறும்பரே பல்லவர் என்றகருத்தைப் பலரும் கூறுவர்.

குறும்பரே புலிந்தரென்பதற்குக் கல்வெட்டுச் சான்று கூறுவாருமுளர். செங்கை மாவட்டம் வய லூரிலுள்ள இராசசிம்மனின் தூண்கல்வெட்டில் பல்ல வரின் குலவழி கூறப்படுகிறது. அதில் 27 அரசர்களின் பெயர்கள் வருகின்றன. அவ்வாறு வரும் வரிசையில் பல்லவன் என்ற பெயர் முன்பும், அசோகன் என்ற பெயர் பின்னும் காணப்படுகிறது. இவ்வரிசை செப்பேடுகளிலும் அப்படியேவருகின்றது. அசோகனின் கல்வெட்டில் புலிந்தர் 'பலடர்' என்றும் குறிப்பிடப் படுகின்றனர். அந்தப் பலடர்தான் பல்லவரானினர் என்பது ஒரு சாரார் கருத்து.

**ஆ) பல்லவர் ஆந்திரரே:** கரிகாற்சோழன் ஏறக் குறைய கி.பி. 2-ஆம் நூற்றாண்டில் பாலாற்றங்கரை யின் தென்பகுதியிலிருந்த தொண்டை மண்டலப் பகுதியை வென்று, தன் சோழ நாட்டுடன் இணைத் துக் கொண்டான். ஆனால், காஞ்சிபுரம் மட்டும் தனித்துப் பல்லவர்களால் ஆளப்பட்டதெனத் தெரி கிறது. அப்போது பல்லவர்கள், சிற்றரசர்களாகச் சாத வாகனரின் கீழ்க் காஞ்சியை ஆண்டதால் சாதவாகனப் பேரரசின் பாதுகாப்பிலிருந்த அவர்களைக் கரிகால னால் வென்றிட முடியவில்லை என்பது புலனா கிறது. சாதவாகனப் பேரரசு கி.பி.225-இல் அழிவுற் றது. சாதவாகனப் பேரரசுக்கு அடங்கி ஆண்டுவந்த சிற்றரசர்களாகிய சாலங்காயனர், விட்டுணுகுண்மர், இக்குவாகர், பிரகத்பலாயனர், குட்டுநாகர், பல்லவர் ஆகியோர் தாம் ஆண்டு வந்த மண்டலங்களைத் தனித்தாள முற்பட்டனர். பல்லவர் காஞ்சியைச் சுற்றிலுமிருந்த நாடுகளைச் சிறிது சிறிதாக வென்று பேரரசர் நிலைக்கு மாறிவிட்டனர். தெற்கே அருவா நாடு வரை பல்லவர்களின் ஆட்சி பரவியது. எனவே, இவர்கள் ஆந்திர ஆட்சியின் (சாதவாகனப் பேரரசு) கீழிருந்த ஆந்திரரே என்பது புலனாகிறது. இக்கால கட்டத்தில் இவர்களால் வெளியிடப்பட்ட மயித வோலு, ஈரகடகள்ளி ஆகிய சிவகந்தவர்மனின் பட்ட யங்கள் பிராகிருத மொழியிலேயே இருப்பதைக் காண லாம்.

**பல்லவர்: வரலாற்றுச் சுருக்கம்:** காஞ்சியை ஆண்ட பல்லவர் கி.பி 225-இல் சாதவாகனப் பேரரசு வீழ்ந்ததும் தனித்தாள முற்பட்டனர். ஆனால், அவர் கள் எக்காலந்தொட்டுக் காஞ்சியை ஆண்டு வந்தன ரென்று கூறமுடியவில்லை. அவ்வாறு தனித்தாள முற்பட்ட முதல் அரசன் பப்பன் அல்லது பப்பதேவன் ஆவான். இவனே அருவா வடதலை நாட்டைக் கைப்பற்றியவன். அருவாநாட்டைக் கைப்பற்றிய இவன் சோழ நாடு வலுவிழந்தபோது அதையும் கைப்பற்றிக் காஞ்சியைக் கோநகராகக் கொண்டு ஆளத்தொடங்கினான்.

**முப்பெரும் பிரிவினர்:** இவனுக்குப் பின் ஆண்ட பல்லவ மன்னர்களை வரலாற்றாசிரியர்கள் மூன்று பிரிவினராகப் பிரிக்கின்றனர். 1) முதற் காலப் பல்லவர் (கி.பி.250-340), 2) இடைக் காலப் பல்லவர் (கி.பி.340-575), 3)பிற்காலப் பல்லவர் (கி.பி.575-900) என மூன்று பெரும் பிரிவினராகக் கொள்ளும் ஆசிரியர் கள் இக்கால வரையறைகளைத் தோராயமாகவே வகுத்துள்ளனர். இவர்களைப் பற்றிய பட்டயங்களும் கல்வெட்டுகளும் கிடைக்கும் இடங்கள் பெரும்பாலும் ஆந்திர நாட்டிலேயே இருப்பதால், இவர்களின் தொடக்ககாலஆட்சி பெருமளவு ஆந்திரத்திலேயே பரவி இருந்ததெனக் கொள்ளலாம்.

இடைக்காலத்தில் பதினாறு பல்லவ மன்னர் கள் ஆண்டதை அறியமுடிகிறது. விட்டுணுகோபன் ஆண்டபோதுதான் சமுத்திரகுப்தன் ஏறக்குறைய கி.பி.350-இல் காஞ்சியின் மீது படையெடுத்து வென் றான் என்று அலகாபாதுக் கல்வெட்டுக் கூறுகிறது. சமுத்திர குப்தனிடமிருந்து காஞ்சியை மீட்டவன் விட்டுணுகோபனின் மகன் குமாரவிட்டுணு ஆவான். இதனை வேலூர்ப்பாளையம் செப்பேடுகளால் அறிய லாம். களப்பிரர், சாளுக்கியர், குப்தர், வாகாடகர், கதம்பர், சோழர், முதலானோர் இக்காலத்தில் பல்லவரோடு பொருது நின்றனர். உள்நாட்டுக் கலகங் களும் ஏற்பட்டன.

பிற்காலப் பல்லவர்களுள் முதல் அரசனாகக் கொள்ளப்படுபவன் சிம்மவிட்டுணு (கி.பி.575-600) ஆவான். சிம்மவர்மனின் மகனான இவன் காலத்தில் தான் பல்லவரின் கோநகரம் காஞ்சியாயிற்று. கலை யும் பண்பாடும் தழைத்தோங்கின. பல்லவராட்சியைத் தமிழகத்தில் நிலைநாட்டியவன் இவனேயென்று உதயேந்திரம் செப்பேடுகள் கூறுகின்றன. களப்பிரர்,

சேரர், சோழர், பாண்டியர், மாளவர், சிங்களவர் ஆகியோரை வென்று வாகை சூடி, அகன்ற பல்லவப் பேராட்சியை ஏற்படுத்தியவன் இவனே என்று காசாக் குடிச் செப்பேடுகள் கூறுகின்றன. தெற்கில் கும்ப கோணம் வரை இவனுடைய ஆட்சி பரவியது. அவந்தி சுந்தரிகதை, மத்தவிலாசப்பிரகசனம், பாரவி எழுதிய சமசுகிருத நூலான கிரதார்ச்சுனீயம், வேலூர்ப் பாளையம், கசாக்குடிச் செப்பேடுகள் முதலியவற்றில் இவனைப் பற்றிய குறிப்புகள் காணப்படுகின்றன.

**முதலாம் மகேந்திரன் (கி.பி.600-630):** சிம்ம விட்டுணுவுக்குப்பின் காஞ்சித் தலைவனான இவன் காலத்தில் நாடு கிருட்டிணையாற்றுக்கும், புதுக் கோட்டை நகருக்குமிடையில் பெரும் நாடாக விரிந்தது. கடம்பரின் நண்பனான இவன் அவர்களுக் காகச் சாளுக்கிய மன்னன் இரண்டாம் புலிகேசியுடன் (609-642) புள்ளலூரில் போரிட்டு வென்றான். பாறைகளைக் குடைந்து குடைவரைக் கோயில்களை அமைக்கும் கலையில் வல்லவனான இவன், முதன் முதல் அதனைத் தமிழகத்தில் மாமண்டூரில் ஏற்படுத் தினான். எனவே, இவனுக்கு 'விசித்திர சித்தன்' என்ற விருதும், 'சிற்பகாரி (கோயில் கட்டுபவன்)' என்ற விருதும், 'சித்திரக்காரப் புலி (ஓவியப்புலி)' 'மத்த விலாசன்' (இன்பம் விரும்பி) முதலிய விருதுப் பெயர் களும் ஏற்பட்டன. இவன் சமணனாக இருந்து திருநாவுக்கரசரால் சைவனாக மாறியவன். திருப்பா திரிப்புலியூரில் உள்ள ஒரு சமணப்பள்ளியை அழித் தவன்.

**முதலாம் நரசிம்மவர்மன் (கி.பி 630-668):** மகேந்தி ரனின் மகனான இவன் பல்லவரின் பகைவரான சாளுக்கியர் மேல் படையெடுத்து மூன்று முறை வெற்றி கண்டான். மணிமங்கலத்தில் ஒருமுறையும், வாதாபியில் இருமுறையும் இரண்டாம் புலிகேசி யினைத் தோற்கடித்தான். இரண்டாம் வாதாபிப் போரில் இவனுக்குத் தானைத் தலைவராகப் பணி யாற்றிய பரஞ்சோதியே, சிறுத்தொண்ட நாயனா ராகித் திருத்தொண்டர் திருத்தொகையில் இடம் பெற்றார். சாளுக்கியரின் கோநகரான வாதாபி பல்லவர் வசமாயிற்று. இதனால் 'வாதாபி கொண்டான்' என்ற விருதுப் பெயரும் இவனுக்கு ஏற்பட்டது. இதற்குப் பிறகு சாளுக்கிய நாட்டின் தென்பகுதி சுமார் பதினைந்து ஆண்டுகள் பல்லவரிட மிருந்தது. இப்போருக்குப் பின் கி.பி 642-இல் புலிகேசி மறைந்தான். அரசர்களைப் புறமுதுகிட்டு ஓடச் செய்த புலிகேசி, காஞ்சியைக் கலக்கிய புலிகேசி இவனிடம் தோற்று, கோநகரையே பறிகொடுத்து மாண்டான். இவன் இருமுறை இலங்கைமீது படை யெடுத்துச் சென்று வெற்றி கண்டான்; தன் நண்பன் மானவர்மன் என்ற சிங்கள மன்னனுக்கு முடிசூட்டி னான்; சோழர், சேரர், களப்பிரர், பாண்டியர் களைத் திரும்பத் திரும்ப வென்றான். இவ்வாறு போரில் நிகரில்லாது நின்ற இவனுக்கு 'மாமல்லன்' என்ற பெயர் ஏற்பட்டது.

இவன் காலத்தில் மாமல்லபுரம் சிறந்து விளங்கியது இவன் கலைப் பெட்டகமாக அதனை மாற்றினான். இவன் காலத்தில்தான் யுவான்-சுவாங்கு என்னும் சீனப்பயணி காஞ்சிக்கு (கி.பி.640) வந்தான். அவனுடைய குறிப்புகளிலிருந்து காஞ்சி யின் சிறப்பையும், அங்குப் பதினாயிரம் பிக்குகள், நூறு புத்தப் பள்ளிகளிலிருந்ததையும் மற்ற விவரங் களையும் அறிய முடிகிறது.

**இரண்டாம் மகேந்திரவர்மன் (கி பி. 668-670):** இரண்டு ஆண்டுகளே ஆண்ட இவன் மாமல்லனின் மகனாவான். இவன் வேத மறைகளைப் போற்றி நான்கு வருணப்பாகுபாட்டைக் காப்பாற்றினான்; வேதக் கல்வியோங்கக் கடிகைகளைப் பெருக்கினான்; சாளுக்கிய மன்னன் விக்கிரமாதித்தனோடு போர் புரிந்தான்.

**முதலாம் பரமேசுவரவர்மன் (கி.பி.670-695):** இரண்டாம் மகேந்திரவர்மனின் மகனான இவன் ஒரு சிறந்த சிவனடியான். கூரம் என்னும் இடத்தில் சிவன் கோயிலொன்றைக் கட்டினான். மாமல்லபுரத்தி லுள்ள இராமானுசர் மண்டபமும், கணேசர்[3] தேரும் இவனால் குடைவிக்கப்பட்டன. சாளுக்கிய மன்னன் விக்கிரமாதித்தனோடு திருச்சிக்கு அண்மையில் உள்ள பெருவள நல்லூரில் போரிட்டு அவனைத் தான் சுற்றியிருந்த கந்தையுடன்போர்க்களத்திலிருந்து ஓடச் செய்தான் எனக் கூரம் செப்பேடு கூறுகிறது.

**இரண்டாம் நரசிம்மவர்மன் (கி.பி.695-722):** முதலாம் பரமேசுவரனின் மகனான இவன் சுமார் 250 விருதுப் பெயர்களைப் பெற்றவன். இவனுடைய கல்வெட்டுகள் அனைத்தும் சமசுகிருதத்திலேயே உள்ளன. இராசசிம்மன், சங்கரபக்தன, ஆகமப் பிரியன் ஆகிய இவனுடைய விருதுப் பெயர்கள இவனைச் சிவனடியானென்பதையும், வேதவழி நிற்பவனென்பதையும் காட்டுகின்றன. இவன் காஞ்சி யில் கைலாசநாதர் கோயிலைக் கட்டினான்; கடிகை களுக்குச் செல்வங்களை வாரி வழங்கிப் பிராமணர் மனம் குளிரச் செய்தான். சீனம், கிழக்கிந்தியத் தீவுகளுடன் நட்புறவு கொண்டு பரந்த தமிழகத்தை ஏற்படுத்தினான். சாளுக்கியரோடும் கங்கரோடும் திபேததோடும் போர் புரிந்தான்.

இவன் அவையிலிருந்த சமசுகிருதப் புலவர் தண்டி, 'தண்டி அலங்காரம்' என்ற அணி இலக்கண நூலைத் தமிழில் எழுதினார். பனைமலை,

மாமல்லபுரம் ஆகிய இடங்களில் கற்கோயில்களைக் கட்டினான். மாமல்லபுரம் இவன் காலத்தில்தான் ஒரு சிறந்த நகரமாக உருவாயிற்று. கடற்கரைக் கோயிலையும், பல குடைவரைகளையும் இவன் எடுத்தான். காஞ்சிபுரம் கைலாசநாதர் கோயிலைக் கட்டியதால்தான் இவன் பெரியபுராணத்தில் கழற் சிங்கநாயனாராகப் புகழப்படுகிறான்.

**இரண்டாம் பரமேசுவரவர்மன் (கி.பி.722-730):** இராசசிம்மனின்மகனான இவன்காலத்தில்சாளுக்கியர் படையெடுத்து வந்து விளந்தை என்ற ஊரில் நடைபெற்ற போரில் இவனைக் கொன்றனர். சாளுக்கிய மன்னன் சிர்புருடன் என்பவன் இவனைக் கொன்று, காஞ்சியை ஆள ஒருவரும் இல்லாமல் செய்துவிட்டான். அரசுரிமையை ஏற்று ஆள யாரும் முன்வரவில்லை. மக்கள் இளைய பரம்பரையைச் சேர்ந்த இரணியவர்மனிடம் வேண்ட, அவன் தன் 12 வயதேயுடைய இளைய மகனை நாட்டை ஆள அனுப்பினான். அவ்விளைஞனே நந்திவர்ம பல்லவன் (கி.பி. 730-795)என்ற பெயருடன் முடிசூட்டிக் கொண்டான. இதனை வைகுந்தப் பெருமாள் கோயிலிலுளள புடைப்போவியத்தால் அறியலாம்.

**இரண்டாம் நந்திவர்மன் (கி.பி.730-795):** சிம்மவிட்டுணு கொடிவழி வந்த பல்லவ மரபு இரணடாம் பரமேசுவர வர்மனோடு முடிந்துவிட்டது. இளைய தலைமுறையைச் சேர்ந்த 12 வயதேயுடைய நந்திவர்மன் அரசு கட்டிலேறினான். இவனே இரண்டாம் நந்திவர்ம பல்லவன். நந்திவர்ம பல்லவமல்லன் என்பது இவன் பட்டப்பெயர். சிறுவன் ஒருவன் தன் பகை நாட்டின் அரசனானதைக் கண்ட சாளுக்கிய மன்னன் விக்கிரமாதித்தன், காஞ்சியின்மீது படையெடுத்து, அதனை எளிதில் கி.பி. 740-இல் கைப்பற்றிக்கொண்டான். நந்திவர்மன் நகரைவிட்டே ஓடிவிட்டான். காஞ்சியிலுள்ள கலைக்களஞ்சியங்களைக கண்டு வியந்த விக்கிரமாதித்தன் கோயில்களைப் பாதுகாத்துப் பொன்னையும், மணியையும் அளித்தான். தமிழ்க் கலைஞர்களைத் தன் நாட்டிற்கு அழைத்துச் சென்று பட்டடக் கல்லில் பல கோயில்களைக் கட்டினான்.

தோற்றோடிய நந்திவர்மன் உதயசந்திரன் என்னும் தன் தானைத் தலைவன் தலைமையில் பெரியதொரு படைதிரட்டிக் காஞ்சியை மீட்டான். தந்தி துர்க்கன் மகள் இரேவா என்ற இராட்டிரகூட இளவரசியை மணந்து அவர்களுடன் நட்புறவு கொண்டான். வைணவத் தொண்டனாகிய இவன் காஞ்சியில் முக்தேசுவரர் கோயிலையும், வைகுந்தப் பெருமாள் கோயிலையும் கட்டினான். தன் தானைத் தலைவன் உதயசந்திரனின் வேண்டுகோளின்படி பாலாற்றங்கரையிலிருந்த குமாரமங்கல வெள்ளட்டூர் என்ற ஊரின் பெயரை உதயசந்திர மங்கலம் என மாற்றி அங்கு உளள குடிமக்களை அப்புறப்படுத்தி, அதனை நூறறெட்டுப் பிராமணருக்குத் தானம் செய்ததானென உதயேந்திரச் செப்பேடுகள் கூறுகின்றன.

இவன் பாண்டியரோடும், கங்கமனனன் சிர்புருடன் என்பவனோடும் போரிட்டான். கங்கரை வென்று அவர்கட்குச் சொந்தமான கஙகபாடி முதலிய ஊர்களையும் ஆறாயிரம் என்ற நிலப்பகுதியையும் கைப்பற்றி இப்போரில் தனக்குதவிய பாண அரசனுக்குக் கொடுத்தான்.

**தந்திவர்மன் (கி.பி. 796-846);** அறுபத்தைந்து ஆணடுகள் ஆணடு மறைந்த நந்திவர்மனின் மகன் தந்திவர்மனாவான். இவன் காலநதொட்டு, பலலவப் பேரரசு ஆட்டஙகாணத் தொடஙகியது. வடக்கில இராட்டிர கூடரும், தெற்கில விசயாலயன் மரபினரான சோழப் பேரரசரும் ஓங்கி வளரத் தொடங்கினர். உள்நாட்டில் கலகஙகள தோன்றின. இராட்டிர கூடரையும் பாண்டியரையும் எதிர்த்து வெற்றி பெற்ற தந்திவர்மன், சோழரை எதிர்கக்கும் ஆற்றல் அற்றவனானான். எனவே, பல்லவராட்சியின வலிமை குன்றிவிட்டது.

**மூன்றாம் நந்திவர்மன் (கி.பி. 846-869):** தநதிவர்மனுக்கும் கதம்பகுல இளவரசி அக்களநிம்மடி என்பவளுக்கும் பிறந்த இவன் காலத்தில் மீண்டும் இராட்டிர கூடரும் பாண்டியரும் பல்லவரோடு போரிட்டுத் தோறறனர். நந்திக கலம்பகத்தின் தலைவனாகிய இவனுக்குத் தெளளாறெறிந்த நந்தி, போத்தரசன், விக்கிரமவர்மன முதலிய விருதுப் பெயர்களுண்டு. இவன் கொஙகு நாட்டையும் சோழ நாட்டையும் வென்றான். எனவே, 'கொங்கன', 'சோணாடான்' என்ற விருதுப் பெயர்களேற் பட்டன. பாணடிய மன்னன இரண்டாம் வரகுணனுக்குத் துணையாக கி.பி. 862-இல் தானும், தன் மகன் நிருபதுங்கவர்மனும் இலஙகைமீது படையெடுத்தனர். இவன் கடல் கடந்த நாடுகளோடும் நட்புறவு கொண்டான். இவ்வாறு, நொடிந்த பல்லவ அரசுக்கு ஒளியூட்டியவன் நந்திவர்மன்.

**நிருபதுங்கன் (கி.பி. 870-895):** மூன்றாம் நந்திவர்மனுக்கும், இராட்டிரகூட இளவரசி சங்கா என்பவளுக்கும் பிறந்தவனும், இவர்களின் மூத்த மகனுமான நிருபதுங்கன் 870-இல் அரசு கட்டிலேறினான். தன் மாற்றாந் தாயின் மகன் அபராசித நிருபதுங்கனுடன் வாரிசுரிமைப் போர் தொடுத்து வெற்றி கண்டான். அப்போர் 895-இல் திருப்புறம்பியம் என்னும் இடத்தில் நடந்தது. இப்போரில் சோழர், பாண்டியர், கங்கர் பங்கேற்றுத் தோற்றனர். நிருபதுங்கனுக்குப் பிறகு பல்லவ அரசின கடைசி அரசனான அபராசிதவர்மன் பட்டமேற்றான்.

**அபராசித வர்மன் (கி.பி. 895-913):** வரலாற்று அடிப்படையின்படி இவனே பல்லவரின் கடைசி அரசனாவான். நிருபதுங்கவர்மனின் உடன்பிறந்த தம்பி கம்பவர்மன் இவனுக்குப் பின் ஆண்டதாகக் கூறுவர். அபராசிதவர்மனை ஆதித்த சோழன் கி.பி. 913-இல் போரில் கொன்றான். பின்னர் கி.பி. 919-இல் இராட்டிரகூடர் இந்நாட்டைக் கைப்பற்றிக் கொண்டனர்.

**பல்லவர்போர்கள்: (அ) பல்லவர் சாளுக்கியப் போர்கள்:** சிம்மவிட்டுணு(கி. பி. 570-600)காஞ்சியைக் கோநகராகக் கொணடு பல்லவ நாட்டை ஆளத் தொடங்கியதிலிருந்து பாதாமியைக் கோநகராகக் கோண்டு ஆணட சாளுக்கியர், பல்லவர் மீது பகைமை கொண்டனர். இப்பகைமை பல்லவர் அழியும் வரை தொடர்ந்ததன காரணமாக இரணடு நூற்றாண்டுகள் வரை இரு தரப்பிலும் எல்லா அரசர்களுமே போரிட்டுக் கொண்டனர்.

**முதற்போர்:** (சிம்மவிட்டுணு-முதலாம கீர்த்திவர் மன) சிம்மவிட்டுணு களப்பிரர், சோழா, பாணடியா், கேரளர் ஆகியோரை வென்று காவிரியாறு வரை தன் ஆட்சியை விரிவுபடுத்தினான். சோழ நாட்டின் பகுதிகளான புதுக்கோட்டையையும் மழவநாட்டை யும் பல்லவ அரசுடன் இணைத்தான். இவனுடைய வளர்ச்சியைக் கணடு நடுங்கிய சாளுக்கிய மனனன் முதலாம் கீர்த்திவர்மன் (கி.பி.567-598) பல்லவ நாட்டின் மீது படையெடுத்துத் தோற்றான்.

**இரண்டாம் போர்:** (மகேந்திரவர்மன்-இரணடாம் புலிகேசி) இரண்டாம் புலிகேசியின் (கி.பி. 610-642) அய்யோனிக் கல்வெட்டும், மகேந்திரனின் கூரம் செப் பேடும் கூறும் சான்றுகளிலிருந்து இவ்விருவருக்கும் பல முறை போர் நடந்ததை அறியலாம். முதற் போரில் பல்லவன் தோற்றான். பல்லவநாட்டின் வட பகுதியைப் புலிகேசி கைப்பற்றித் தன தம்பியான விட்டுணுவர்த்தனனை ஆளச் செய்தான். இவன் வழித் தோன்றியவர்களே கீழைச் சாளுக்கியர் (அ) வேங்கிச் சாளுக்கியர் ஆவர். இவர்கள் வேங்கியைக் கோநக ராகக் கொண்டு கி.பி. 1070 வரை ஆண்டனர்.

இரண்டாம் முறையாகக்காஞ்சிக்கு வடக்கிலுள்ள புள்ளலூர் என்ற ஊரில் மகேந்திரனுககும் இரண் டாம் புலிகேசிக்கும், நடந்த போரில் மகேந்திரன் வெற்றி பெற்றான்.

**மூன்றாம போர்:** (மாமல்லன்-இரண்டாம் புலி கேசி): மகேந்திரனிடம் புள்ளலூரில் தோற்றோடிய இரண்டாம் புலிகேசி, மாமல்லன் காலத்தில் மீண் டும் காஞ்சியின் மீது படையெடுத்தான். காஞ்சிக்கு அண்மையிலுள்ள மணிமங்கலம், பரியளம், சூரமாரம் என்னுமிடங்களில் நடந்த போரில் சாளுக்கியப் படைகள் முறியடிக்கப்பட்டன.

ஆனால், புலிகேசி மீண்டும் பல்லவ நாட்டின்மீது படையெடுத்தான். மாமல்லன் அவனைத் தோற் கடித்துப் போர்க்களத்திலேயே கொன்றான். தன் தானைத் தலைவன் பரஞ்சோதியை அனுபபி வாதாபி கொண்டான்.

**நான்காம் போர்** (முதலாம் பரமேசுவரவர்மன்-முதலாம் விக்கிரமாதித்தன்) பல்லவர் வாதாபியைக கைப்பற்றி அதனை கி.பி. 642 முதல் 655 வரை ஆண்டனர். இரண்டாம் புலிகேசியின் இளைய மகன் முதலாம் விக்கிரமாதித்தன் (கி.பி. 655-680) அதனை மீட்டு ஆண்டான்; வஞ்சம் தீர்க்க எண்ணிப் பல்லவ நாட்டின்மீது படையெடுத்து வெறறி கண் டான; காஞ்சி அரியணையைக் கைப்பற்றினான். தோற்றோடிய பரமேசுவர்மன் ஆநதிரப் படையின் உதவியுடன் பெருவளநல்லூரில் சாளுக்கியப் படை யுடன் போரிட்டு, விக்கிரமாதித்தனைக் கந்தையுடன் ஓடச் செய்தான். வாதாபி வரை துரத்திச் சென்று அதனையும் அழிததான்.

**ஐந்தாம் போர்** (இராசசிம்மன்-விநயாதித்தன்) முதலாம் விக்கிரமாதித்தனுக்குப் பின் விநயாதித்தன் (கி.பி. 681-696) சாளுக்கிய மன்னன் ஆனான்; பல்லவ நாட்டினமீது படையெடுத்தான். வெற்றியும் தோல்வியும் இரு தரப்பாருக்கும் மாறி மாறி ஏற் பட்டன. கொடிய பஞ்சத்தால் போர் நின்றது.

**ஆறாம் போர்** (இரண்டாம் பரமேசுவரன்-விநயாதித்தன்)விநயாதித்தன்மீண்டும் போர்தொடுத்து வலுவற்றபரமேசுவரனை வெற்றி கொண்டான. கங்க அரசனசிர்புருடன் பரமேசுவரனை விளந்தை எனனும் மிடத்தில் நடந்த போரில் கொன்றான். இதனுடன பல்லவரின் மூத்த கால்வழி முடிந்தது.

**ஏழாம் போர்** (இரண்டாம் நந்திவாமன்-இரண் டாம் விக்கிரமாதித்தன்) இளைய தலைமுறையின் முதல் அரசன் இரணியவர்மனின் மகன் இரண்டாம் நந்திவர்மன என்ற பட்டப்பெயருடன் அரசு கட்டி வேறினான். அப்போது அவனுக்கு வயது பன்னிரண்டு. அச்சிறுவனை ஒழித்துப் பல்லவ நாட்டைக் கைப்பற்ற நினைத்த விக்கிரமாதித்தன் காஞ்சியைக் கைப்பற்றினான்.

**எட்டாம் போர்** (இரண்டாம் நந்திவர்மன்-இரண் டாம் கீர்த்திவர்மன்) தோற்றோடிய நந்திவர்மன, சிறிதுகாலம் பொறுத்திருந்து, தன்படை வலிமையைப் பெருக்கிக் கொண்டான். தன் தானைத் தலைவன உதயசந்திரன் தலைமையில் பெரும்படையுடன காஞ்சிமீது படையெடுத்து அதனை மீட்டான். இப்

போரில் கங்கரும் பாண்டியரும் கலந்து கொண்டனர். வெம்பை என்ற இடத்தில் நடந்த கடும் போரில் கீர்த்திவர்மன் கொல்லப்பட்டான். இவனுடன் பாதாமிச் சாளுக்கியர் ஆட்சியும் முடிவுற்றது.

இவ்வாறு, சிம்மவிட்டுணு காலத்தில் தொடங்கிய பல்லவர் சாளுக்கியப் பகைமை இரண்டாம் நந்திவர்மனால் முடித்து வைக்கப்பட்டது. பாதாமிச் சாளுக்கியர் ஆட்சிக்கு வெம்பைப் போர் முற்றுப் புள்ளி வைத்தது.

**(ஆ) பல்லவர்-பாண்டியர் போர்கள்: முதற்போர்:** பாண்டியன் அரிகேசரிமாறவர்மன் என்பானுக்கும் முதலாம் நரசிம்மவர்ம பல்லவனுக்கும் நடந்த நெல்வேலிப் போரில் பாண்டியன் வெற்றி பெற்றான். இதனால்,இவன் 'நெல்வேலி வென்ற நெடுமாறன், என்ற விருது பெற்றான்.

**இரண்டாம் போர்:** பாண்டிய மன்னன் மாறவர்மன் இராசசிம்மன், பல்லவ மன்னன் இரண்டாம் நந்திவர்மன் மீது படையெடுத்துப் பல போர்களில் வென்றான். தோற்றோடிய நந்திவர்மன் நந்திபுரம் என்னும் கோட்டைக்குள் பதுங்கினான். பாண்டியன் படைகள் அதனை முற்றுகையிட்டன. ஆனால, பல்லவரின் தானைத்தலைவன் உதயசந்திரன் அப்படையைத் தோற்கடித்து நந்திவர்மனை மீட்டான். மேலும், பாண்டியர் படைகளை நிம்பவனம, சூதவனம், சங்கரகிராமம், மண்ணைக்குறிச்சி, சுராவழுந்தூர் முதலிய இடங்களில் உதயசந்திரன் தோற்கடித்தான்.

**மூன்றாம் போர்:** தகடூரை ஆண்ட அதிகனை எதிர்த்துப் பாண்டியன் வரகுணன் (கி.பி. 800-830 போர் தொடுத்தான். இப்போரில் பல்லவ மன்னன் நந்திவர்மன் (கி.பி. 796-840) அதிகனுக்கு ஆதரவளித்தான். சேரனும் பல்லவனோடு சேர்ந்து கொண்டான். இம்மூவரையும் தோற்கடித்த பாண்டியன் பல்லவனுக்குச் சொந்தமான சோழ நாட்டுப் பகுதியையும், தொண்டை நாட்டிலிருந்த பெண்ணையாற்றுப் பகுதியையும் கைப்பற்றினான்.

**நான்காம் போர்:** மூன்றாம் நந்திவர்மன் (கி.பி. 846-864) இராட்டிரகூடர்களோடு வடக்கில் போரிட்டுக் கொண்டிருக்கும்போது பாண்டியன் மீது படையெடுத்துக்குடமூக்கில்வெற்றி கண்டான். இவனுடன் சோழரும் சேரரும் சேர்ந்து கொண்டனர். வடக்கிலிருந்துமீண்ட நந்திவர்மன் இம்மூவரையும் தெள்ளாற்றில் வென்று 'தெள்ளாறு எறிந்த நந்தி' ஆனான். மேலும் பல இடங்களில் பகைவர்களைத் துரத்திச் சென்று வென்றான். இவனுக்குப் பின் பல்லவ நாடு வளர்ச்சி யுறத் தொடங்கியது.

**(இ) பல்லவர்-கங்கர் போர்கள்: முதலாம் போர்:** மைசூரின் தென்பகுதியை ஆண்ட தலைக்காட்டு மேலைக்கங்கன் பல்லவருக்குத்திறை செலுத்தி வந்தான். இரண்டாம் புலிகேசி கி.பி. 642-இல் நரசிம்ம பல்லவனால் போர்க்களத்தில் கொல்லப்பட்டதும், அவன் ஆண்மக்கள் மூவரும் வாரிசுரிமைப் போரிலீடுபட்டனர். அவர்களில ஒருவனான ஆதித்தவர்மன பல்லவ மன்னன் நரசிம்மவர்மன் (கி.பி. 630-668) துணையை நாடினான. விக்கிரமாதித்தன் என்னும் மற்றொருவன் கஙகர்களின் உதவியை நாடி வாரிசுரிமைப் போரில் வெற்றியும் பெற்றான். இதற்குப்பின் பல்லவருக்கும் கங்கருக்குமிடையே நேரடிப்போர் ஏற்பட்டது இப்போரில் நரசிம்மவர்ம பல்லவனே வெற்றி பெற்றான்.

**இரண்டாம் போர்:** பல்லவமன்னன் இரண்டாம், நரசிம்மவர்மன் (கி பி.695-722), சாளுக்கிய மன்னன் விநயாதித்தன் (கி.பி. 680-696) ஆகியோரிடையே போர் நடந்து கொண்டிருக்கும்போது, கங்கர்கள் பல்லவ நாட்டின்மீது போர் தொடுத்தனர். நரசிம்மன கங்கர்களை வென்றான். நரசிம்மன் தோற்றானெனக் கங்கர் பட்டயம் கூறுகிறது.

**மூன்றாம் போர்:** கங்க அரசன் சிரீபுருடன் (கி.பி. 726-788) தலைக் காட்டிலிருந்து மண்ணைக்குக் கோநகரை மாற்றிக் கொண்டான். பல்லவநாட்டின் மீது படையெடுத்து இரண்டாம் நந்திவர்மனை (கி:பி. 730-795) வென்றான். பல்லவரின வெண்கொற்றக் குடையையும், 'பெருமணபு', என்ற விருதையும் பறித்தான். அடுத்த போரில் நந்திவர்மன் வெற்றி கண்டு கங்கபாடி ஆறாயிரம் முதலான இடங்களைக் கைப்பற்றினான். இப்போரின் வெற்றிக்கு உறுதுணையாக நின்ற தானைத் தலைவன் உதயசந்திரன் நினைவாகக் குமாரமங்கலம்-வெள்ளட்டூர் என்ற ஊரின் பெயரை உதயசந்திரமங்கலம் என மாற்றி நூற்றெட்டுப் பிராமணருக்குத் தானமாகக் கொடுத்தான். (உதயேந்திரம் செப்பேடுகள்).

**(ஈ) பல்லவர்-இராட்டிரகூடர் போர்கள்:** இராட்டிரகூட அரசன் தந்திதுர்க்கன் (கி.பி. 745-758) மகள இரேவாவை மணந்து தந்திவர்மனைப் பெற்றான் பல்லவ மல்லன். மணஉறவு பூண்ட இராட்டிரகூடரும் பல்லவரும் போரிடக் காரணமென்ன? இராட்டிரகூடரின் அரசுரிமைப் போரில் பல்லவர் ஈடுபட்டதேயாகும்.

**முதலாம் போர்:** தந்தி துர்க்கனுக்கு மகப்பேறு இல்லை. அவனுக்குப் பின் அவன் சிற்றப்பனான முதலாம் கிருட்டிணன் (கி.பி. 758-773) மகன் இரண்டாம் கோவிந்தன் (கி.பி.773-780) அரசு கட்டிலேறினான். இவன் கடமையை மறந்து இன்பத்தையே

நாடினான். மக்கள் இவனை வெறுத்தனர். இவனை நீக்கிவிட்டு இவன் தம்பியே அரசனாக விரும்பினான். இருவருக்கும் அரசுரிமைப் போர் மூணடது மக்களும், பல சிற்றரசர்களும் தம்பியான துருவனை ஆதரித்த னர். இரண்டாம கோவிநதன் பல்லவர், கஙகர் சாளுக கியரின் கூட்டணியுடன் துருவனை எதிர்த்துப் போரிட்டான துருவனே வெற்றி பெறறான் அத னால் தோல்வியுறற பல்லவனைத் தன் ஆதிக்கத்தை ஏற்கச் செய்து திறையும பெற்றான்.

**இரண்டாம் போர்:** துருவன தான இறப்பதற்கு முன்பே தன மூன்றாம் மகன் மூன்றாம் கோவிந்தன (கி.பி. 793-816) எனபவனைத் தனக்குப் பின அரச னாக வேண்டுமென நியமித்தான. துருவன் இறநத தும் அவன் முதல மகன 'இசுதம்பன' எனற கம்பரசன தானே அரசனாக வேணடுமென்று கலகம் செய்தான். எனவே, இருவருக்கும் வாரிசுரிமைப் போர் மூணடது. இப்போரிலும் பல்லவர் கலநது கொண்டனர் கஙக அரசன் இரண்டாம் சிவராமன, கீழைச சாளுக்கிய அரசன் இரணடாம் விநயாதித்தன, பலலவமனனன் தநதிவர்மன் ஆகியோர் கம்பரசன் கூட்டணியில சேர்த்துக் கொணடதனால் வெற்றி பெற்றான. பின னர் கங்கர், சாளுக்கியர் பலலவ மனனர்களைக் கம்ப ரசன் வென்றான். தந்திவர்மனும் தோறறுத் திறை செலுத்தினான். மறுபடியும் தனிப்பட்ட முறை யில் கி பி. 810-இல பலலவ நாட்டினமீது படை யெடுத்து வெனறான. கடைசியாக கி.பி. 909-இல இராடடிரகூடர் பல்லவ நாட்டையே கைப்பற்றினர்.

**சோழர்கள்:** பல்லவர்களுக்குப் பிறகு தமிழகத்தில் பேரரசை அமைத்த பெருமை சோழர்களுக்கு உரிய தாகும் சோழப் பேரரசுப் பரம்பரையைத் தொடங்கி வைத்தனன் விசயாலயசோழன் (கி.பி.850-871). இவன் உறையூருக்கு அண்மையில ஒரு குறுநில மன்னனாக வாழ்க்கையைத் தொடஙகினான. பலலவருககும் பாணடியர்க்குமிடையே போா மூண்டபோது விசயா லயன் பல்லவர் பககம் சேர்ந்து போரிட்டான். பாணடியர்க்குத் துணை நினற முத்தரையர்களிட மிருந்து தஞ்சாவூரைக் கைப்பறறித் தன ஆட்சியை விரிவுபடுத்தினான. அவனுக்குப்பின ஆதித்த சோழன (கி.பி 871-907) பட்டம் எய்தினான. அவன் காலத்தில் பாணடியர்க்கும் பலலவர்க்கும் இடையே திருப்புறம் பியம என்னுமிடததில் போர் நடந்தது. ஆதித்தன பல்லவருககு உதவி செய்தான் அவ்வுதவிக்குக் கைம்மா றாகப் பல இடங்களை ஆதித்தனுக்குப் பல்லவ மன்னன் அளித்தான். பினனர்ப் பல்லவர்களுடன் போரிட்டுத தொண்டை நாட்டைக்கைப்பற்றித் தனது அரசை விரிவாக்கினான். அதன விளைவாகச் சோழ அரசின் எல்லை இராட்டிரகூட அரசின் எல்லையைத் தொட்டது. தன் வெற்றியை அறிவிக்கும் வகையில இராசகேசரி எனற பட்டத்தைச் சூட்டிக் கொண் டான். இராட்டிரகூட இளவரசியை மணந்து கொண்டு, தனது ஆதிக்கத்தை மேலும் வலுப்படுத்திக கொண்டான. பினனர்க் கொங்கு நாட்டை வெனறு, அங்கிருந்து கொணடுவந்த தஙகத்தைக் கொணடு தில்லையம்பலத்துக்குக் கூரைவேய்ந்தான் சேர மனன னுடன நட்புறவு கொணடான்

ஆதித்தனைஅடுத்துப் பராந்தகன் (கி.பி.907-955) மன்னனானான. அவன பாணடியனை வெண்ணாற்றில வென்று குமரி வரை தனது ஆதிக்கத்தை விரிவுபடுத் தினான். பினனாப் பாணடியனுடைய மணிமுடியை யும் செஙகோலையும பெறும் நோக்குடன பாண்டி யனைப் பினதொடர்ந்து ஈழததுககுச் சென்றான. தன மகள் வயிற்றுப் பிளளையான கனனரதேவனைச சோழ நாட்டு அரியணையில அமர்த்துமபொருட்டு இராட்டிரகூட மனனனான இரண்டாம் கிருட்டிணன பராந்தகனமீது போர் தொடுததான. இரு படைகளும் திருவலலத்தில மோதின. போரில வெற்றி கணட பராநதகன 'வீரசோழன' என்ற விருதை ஏறறுக் கொண்டான. இராட்டிரகூடர்கள மீணடும் படை யெடுத்து வநதபோது, அவர்களைத் தக்கோலம் எனனும ஊருக்கருகில் பராந்தகனுடைய மகன இராசாதித்தன போாககளத்தில பொருது உயிரிழந தான். இராட்டிரகூடர்கள வெற்றி பெற்றனா. சோழ அரசின பெரும் பகுதிகள இராட்டிரகூடாகள கையில சிககின. இராட்டிரகூட மன்னன மூனறாம கிருட்டிணன் காஞ்சியையும் தஞ்சையையும் கைப் பறறியவன எனற பட்டத்தைச சூட்டிக கொண டான பாணடியர் சுதந்திரம பெறறனர். ஆட்சி முறையில சில முன்னேற்றஙகள இவன காலததில ஏறபட்டன. ஊராட்சி முறை திருததியமைக்கப் பட்டது. பாசனக் காலவாயகள வெட்டபபட்டன. சிவனுக்குக் கோயிலகள எழுப்பினான. தில்லையம் பலத்துககுப் பொன வேய்ந்தான.

பராநதகனுக்குப் பிறகு முப்பது ஆண்டுகள் வரை சோழ நாட்டில் ஒரு பெரும் குழப்பம் நிலவியது. அதனை அடுததுக் கணடராதித்தன அரசனானான. அவன் மனைவியே புகழபெற்ற செமபியன் மாதேவி யாவாா அவள கட்டிய கோயில்கள பல. சைவ சமய வளர்சசிக்குப் பல சீரிய தொணடுகள ஆறறினான. ஆயினும் சோழ அரசு இவன் காலத்தில சிறியதொரு நாடாக மாறியது. தொணடைமணடலம் முழுவதும இராட்டிரகூடர் கைவசமாயிறறு கணடராதிததனுக் குப் பிறகு அரிஞ்சயன இரணடு ஆணடுகள் ஆட்சி செலுத்தினான். அவனுககுப் பிறகு இரணடாம் பராந்தகன சுந்தரசோழன் (கி.பி.956-973) பட்டம் பெறறான தன மகன இரணடாம் ஆதித்தனுடைய துணையுடன பாணடிய அரசை மீணடும் கைபபறற

இவன் முனைந்தான். வழக்கம்போல் இலங்கை அரசன் பாண்டியனுக்கு உதவி செய்யவே, இலங்கை மீது சுந்தரசோழன் படையெடுத்துச் சென்றான். வீரபாண்டியன் போரில் கொல்லப்பட்டான். பின்னர் வடக்குநோக்கிச் சென்று இராட்டிரகூடர்களைத் தோற்கடித்து முதலாம் பராந்தகனுடைய ஆட்சியில் சோழர்கள் இழந்துவிட்ட நாடுகளை மீண்டும் சுந்தர சோழன கைப்பற்றினான். சுந்தரசோழனின் இறுதி நாள்கள் துன்பத்தில் தோய்வுற்றன. இளவரசர் ஆதித்தனை உத்தமசோழன் என்பான் அரசுரி மைக்கு ஆசைப்பட்டுக் கொலைசெய்ய முற்பட்டான். ஆதித்தனின மறைவு சுந்தரசோழனின் உடல் நிலையைப் பெரிதும் பாதித்தது. விரைவில் அவன் இறந்தான். அவன் மனைவியும் இராசராசனின் தாயு மான வானவன்மாதேவி கணவனுடன் உடன்கட்டை யேறி உயிர்நீத்தாள. அவள் மகளான குந்தவைப் பிராட்டியார் வானவன மாதேவிக்குத் தஞ்சைப் பெருவுடையார் கோயிலுள் சிலை ஒன்றை எடுப் பித்துள்ளார்.

உத்தமசோழனுக்குப் (973-985) பிறகு முதலாம் இராசராசன் (985-1014) சோழ அரசு கட்டிலில் அமர்ந்தான். இவனுடைய ஆட்சி தொடங்கிய நாள் முதல் இரண்டு நூற்றாண்டுகளுக்குமேல் சோழ நாட்டு வரலாறு தமிழ்நாட்டின் வரலாறாக மாறிவிட் டது. இவன் காலத்தில் தமிழ்நாடு முழுவதும் ஒரே அரசாக மாற்றப்பட்டது. இவன் பல்லாண்டுகள் இள வரசனாக அமர்ந்திருநது ஆட்சிப் பொறுப்புகள் பல வற்றை ஏற்று நடத்தி அரசியலில் ஆழ்நத அனுபவ மும் பெற்றிருந்தான். போர்த்திறம் மிகுந்தவன். பகைவர்கள் பலரை வென்று தனது அரசைப் பேரரசு நிலைக்கு உயர்த்தி விட்டான். பாணடிய, சேர, இலங்கை அரசுகளின் கூட்டமைப்பை உடைத்துத் தன வெற்றிகளைக் குவித்தான். இரண்டு படையெடுப்பு களைமேற்கொண்டு பாண்டிய நாட்டை வென்றான்; மதுரையை அழித்தான். பின்னர், சேர நாட்டிலுள்ள விழிஞம் என்ற இடத்தைத் தாக்கி, அங்கு அணி வகுத்து நின்ற மரக்கலங்களையெல்லாம் அழித்தான். அடுத்து, இவன் கொல்லத்தைக் கைப்பற்றினான். பின்னர், குட மலைநாட்டைக் கைப்பற்றி உதகை என்ற மலைக்கோட்டையைத் தகர்த்தான். இலங கைக்கு எதிராக ஒரு கப்பற்படையை அனுப்பிவைத் தான். இப்படை இலங்கையின் வடபகுதியைக் கைப் பற்றியது. இலங்கை அரசனான ஐந்தாம் மகேந்திரன் தீவின் தென்கிழக்குப் பகுதிக்கு ஓடினான். அனுராத புரத்தைச் சோழப்படை அழித்தது. வடஇலங்கையில் அமைக்கப்பட்ட சோழ மாகாணத்திற்குப் பொலன ருவா தலைநகராக அறிவிக்கப்பட்டது. அங்கு ஒரு சிவாலயம் எழுப்பப்பட்டது.

அதைபடுத்து, இராசராசன் மேலைக் கங்கர் நாட்டின் மீது போர்தொடுத்தான். கங்கபாடி, நுளம்பபாடி, தடிகைபாடி ஆகியவற்றை அவர்களிட மிருந்து கைப்பற்றினான். அவை கி.பி. 1117-ஆம் ஆண்டு வரை சோழர்களின் ஆட்சிக்கு உட்பட்டிருந் தன. இவ்வெற்றிகள் காரணமாகச் சோழப் பேரரசின் வட எல்லை மேலைச் சாளுக்கிய அரசின் தெற்கு எல்லையைத் தொட்டு நின்றது. அப்போது அரசு செலுத்தி வந்த மேலைச் சாளுக்கிய மன்னன், சத்தியாசிரயன் நாடு பிடிக்கும் ஆசை மேலிட்டவ னாகக் காணப்பட்டான். கீழைச் சாளுக்கிய நாடான வேங்கியை வென்று தன்னுடைய நாட்டுடன் இணைத்துக்கொள்ள விரும்பினான. அந்தச் சமயத் தில் இராசராசன் வேங்கியைத் தனது பாதுகாப்புக் குட்பட்ட நாடாக மாற்றி விட்டிருந்தான். வேங்கி யிலிருந்து பீமா என்ற தெலுங்குச் சோழ மன்னரால் துரத்தப்பட்ட வேங்கி இளவரசர்களான சக்திவர் மனுக்கும் விமலாதித்தியனுக்கும் புகலிடம் அளித் தான். தன்மகள் குந்தவையை விமலாதித்தனுக்கு மணமுடித்துவைத்தான். பீமாவைத் தோற்கடித்து, சக்திவர்மனை வேங்கி அரசனாக அமர்த்தி, வேஙகி யைத் தனது கட்டுக்குள கொண்டு வந்தான். இவை யாவும் சத்தியாசிரயனுடைய கோபத்தைக் கிளறி விட்டன. அவன் தன் படைத்தலைவனை வேஙகி யைக் கைப்பற்றுமாறு அஙகு அனுப்பி வைத்தான். அதையறிந்த இராசராசன் தன் மகன இராசேந்தி ரனை மேலைச் சாளுக்கியநாட்டினமீதுபடைநடத்திச செல்லும்படி பணித்தான். பகைவர் நாட்டில் இராசராசன் பெருஞ்சேதத்தை உணடாக்கினான். அதன் தலைநகரான மானியகேடத்தைக கைப்பற்றி அழித்தான். மற்றொரு சோழப் படை கிழக்கு நோக்கிச் சென்று வேங்கியைக் கைப்பற்றிச் சாளுக்கி யப் படையை விரட்டியடித்தது. பின்னர்க் கொள்ளிப் பாக்கை என்ற மேலைச் சாளுககியக் கோட்டையை அது கைப்பற்றியது. இத்தோல்வியினால் சத்தியாசிர யனைச்சமாதானம் செய்துகொள்ளும்படி வற்புறுத்தி னான். சோழப் படைகள பெருஞ்செலவததுடன நாடு திரும்பின. அச்செல்வத்தின் பெரும் பகுதி தஞ்சைப் பெரிய கோயிலைக் கட்டப்பயன்படுத்தப் பட்டது. துங்கபத்திரை ஆறு வடவெல்லையாக இப் போதுஅமைந்துவிட்டது.

இராசராசன் தனது ஆடசியின் இறுதிக காலத் தில் மற்றொரு வெற்றியை அடைந்தான. தனது கப்பற்படைத் துணைக்கொண்டு முந்நீர்ப் பழந்தீவு பன்னீராயிரமும் வென்றான. இது மாலத்தீவுகளை (Maldives) குறிக்கிறது என்பர். வஙகக் கடலுக்கப்பால் இருந்த சிரீவிசய அரசுடன் இராசரசன் நட்புறவு கொண்டிருந்தான. அதன் அரசனான மாறவிசயதுங்கவர்மன் நாகப்பட்டினத் தில் புத்தவிகாரம் ஒன்றைக் கட்டி, அதற்குப் பெரும்

பொருளைக் கொடையாக வழங்கினான். தன் தந்தையின் பெயரையொட்டி அதற்குச் சூடாமணி விகாரம் என்ற பெயரைச் சூட்டினான். தன மைந்தன் இராசேந்திரனை கி.பி. 1012-ஆம் ஆணடில் இளவரசனாக இராசராசன் முடிசூட்டுவித்தான்.

முதலாம் இராசேந்திரன் (கி.பி. 1014-1044) சோழப் பேரரசனாக கி.பி. 1014-ஆம் ஆணடில் முடிசூட்டிக் கொணடான். தன் மகனான முதலாம இராசாதிராசனை இளவரசனாக முடிசூட்டுவிததான். தந்தை விட்டுச் சென்ற பணியினை இராசேந்திரன முடித்து வைத்தான். இலங்கையை முழுமையாக வென்று, அதன் அரசனான மகேந்திரனைச் சோழ நாட்டுக்குக் கைதியாக அனுப்பிவைத்தான். சிங்களவர் தமிழராட்சியை விரும்பவில்லை. மகேந்திரன் மகனான காசிபன் தீவின் தென் பகுதியில் தன்னை அரசனாக அறிவித்துக் கொண்டான். அப்போது ஏற்பட்ட போரில் பல தமிழர் உயிரிழந்தனர். பாண்டிய' நாட்டையும் கேரளநாட்டையும் இணைத்துத் தனி மாகாணமாக அமைத்து, அரச குடும்பத்தைச் சார்ந்த இளவரசன் ஒருவனை அதன தலைவனாக்கினான். அத்தலைவன் சோழ பாணடியன் என்றுசொல்லப்பட்டான். வேங்கியில் மேலைச் சாளுக்கியர் சோழ இளவரசின் வயிற்றிலுதித்த இராசராசனுக்கு எதிராக விசயாதித்தனுக்கு உதவி செய்தனர். மேலும், அவர்கள் துங்கபத்திரையைக் கடந்து பெல்லாரியையும், கங்கவாடியின் ஒரு பகுதியையும் கைப்பறறிக்கொண்டார்கள. ஆகவே, இராசேந்திரன் இரண்டு படைகளை அனுப்ப வேண்டியதாயிற்று. ஒரு படை மேலைச் சாளுக்கிய மன்னரான செயசிம்மனைத் தோற்கடித்துத் துங்கபத்திரைக்கு வடக்கே துரத்தியது. மற்றொரு படை வேங்கியைத் தாக்கி, விமலாதித்தனை அங்கிருந்து துரத்தியது. அங்கிருந்து வடக்கேயுள்ள கலிஙக நாட்டிற்குள் சென்று செயசிம்மனை ஆதரித்த கிழக்குக் கஙக அரசனைவென்றது. பின்னர்,கங்கைச் சமவெளி நோககிப் படை புறப்பட்டது. இராசேந்திரனும் வடக்கு நோக்கிப் புறப்பட்டுக் கிழக்குச் சாளுக்கிய இராசராசனுக்கு முடிசூட்டுவித்தான். கோதாவரி நதிக்கரையில் அவன் வாகை சூடிக்கஙகைச் சமவெளியிலிருந்து வநத சோழப் படையுடன் சேர்ந்துகொண்டான். கஙகைப் படையெடுப்பின் நினைவாக அவன் கஙகை கொணடான் என்ற பட்டத்தை ஏற்றான். கஙகை கொணட சோழபுரம் என்ற ஊரை அமைத்து, அதனைத் தன்னுடைய தலைநகராக்கினான்.சோழகங்கம்என்ற பெரிய ஏரியை வெட்டி கங்கை ஆற்றிலிருந்துகொண்டு வரப்பட்ட நீரை விடுத்தான்.

அவனுடைய சிறப்புமிக்க மற்றொரு வெற்றி சிரீ விசயாவை வென்றதாகும். சிரீவிசயநாடு இந்தியாவிற்கும் சீனாவிற்குமிடையே ஏற்பட்டிருந்த வாணிக மார்க்கத்தில் செல்வாக்குப் பெற்ற நாடாக அமைந்திருந்தது. சீனாவுடன் சோழர்கள் கொண்டிருந்த வாணிகம் மற்றும் அரசியல் தொடர்புகளுக்கு இந்நாடு இடையூறு விளைவிக்கும் வகையில் நடத்திருககக் கூடும். அதனால, அதைக் கைப்பற்ற இராசேந்திரன் முற்பட்டிருத்தல் வேண்டும். அன்றித் தாம் மேற்கொணட திக்கு விசயத்தின் ஒரு பகுதியாக அமைய வேண்டும் எனபதறகாக அதன்மீது படையெடுத்து இருக்க வேண்டும் எவவாறெனினும் இப்படையெடுப்பு மிக வெற்றிகரமாக முடிக்கப்பட்டது. சிரீவிசய மன்னன்சிறைப்பிடிக்கப்பட்டான். அவனுடைய தலைநகரம உட்படப் பல இடஙகளைச் சோழர்கள் கைப்பறறினார்கள். கடாரமும் கைப்பற்றப்பட்டது. அதன் நினைவாக இவன கடாரம் கொண்டான் எனப் பெயர் பெற்றான். இவனுடைய மேலாதிக்கத்தைச் சிரீவிசய மனனன ஏற்றுக் கொண்ட காரணத்தால், அவனிடமிருந்து வென்ற பகுதிகளை அவனுக்கே திருப்பி அளித்துவிட்டான்.

இலங்கைமீது மற்றும் ஒருமுறை கி பி. 1017-இல் படையெடுத்துச் சென்றான். இலஙகை அரசன் விக்ரமபாகு இறந்த பிறகு சோழ மாகாணத்திற்கு வெளியே அமைதி குலைந்திருநதது. சிஙகளர்களும பாண்டிய நாட்டு இளவரசாகளும கன்னோசியிலிருந்து சென்ற சகதிபாலாவும் இலஙகையில் சோழர்களுக்கு எதிராகக் கிளர்ச்சி செய்தார்கள். இறுதியில், அவர்கள் தோல்வியுற்றார்கள்.

இராசேந்திரனுடைய இறுதிக் காலத்தில் மேலைச் சாளுக்கியருடன் மீணடும் போர் ஏற்பட்டது. இரணடாம் செயசிம்மன் என்ற சாளுக்கிய அரசன வேங்கியைத் தாக்கியதே இதற்குக காரணமாகும். இராசேந்திரன் கி.பி. 1044-இல உயிர் நீத்தான். அவனையடுத்துப் பட்டமெய்திய முதலாம் இராசாதிராசன் (கி.பி. 1044-54) அப்போரைத் தொடர்ந்து நடத்தினான். அவன் படைத் தலைவன் வெற்றி பெற்றான். சாளுக்கிய நாட்டில் படை நடத்திச் சென்று கொள்ளிப் பாக்கையை எரித்தான். பின்னர், இராசாதிராசன தானே படை நடத்திச் சென்று கிருட்டிணா ஆற்றங்கரையில் பூந்தூர் என்னுமிடத்தைக் கைப்பற்றிக் கொண்டான். சாளுக்கியர் தலைநகரானகல்யாணியை (Kalyani) எரித்தான். அங்கு வீராபிடேகம்செய்து கொண்டான். ஆயினும், சாளுக்கியருடனான போர் ஓயவில்லை. ஒருசமயம் சாளுக்கியர்கள் காஞ்சி வரை சென்றனர்; வேங்கியைத் தமது மேலாதிக்கத்தை ஏற்றுக்கொள்ளும்படி செய்தனர். கொப்பம் என்னுமிடத்தில் கி பி. 1053-இல் நடந்த போரில் இராசாதிராசன் படுகாயமுற்று இறந்தான். ஆனால், அவன் இளவல் இரண்டாம் இராசேந்திரன் சோழர்

படையினைக் காப்பாற்றினான். பின்னர், இரண்டாம் இராசேந்திரன் (கி.பி. 1054-1063) கொல்காபூருக்குப் (Kolhapur) படையெடுத்துச் சென்றான. அங்கு வெற்றிக் கம்பம் ஒன்றை நிறுத்திவிட்டு நாடு திரும்பினான. சாளுககிய அரசன் சோமேசுவரன் கி பி. 1061-இல் வேங்கியில் தலையிட்டான. ஒரு படையை கங்கவாடிக்கு அனுப்பினான். இவ்விரு முனைகளிலும் இராசேந்திரன் போர் மேற்கொள்ள முடிவு செய்தான். வேங்கியில் தன பகைவர்களை அழித்தான். கூடல் சங்கமம் என்னுமிடத்தில கங்கவாடியில் நுழைந்த சாளுக்கியர்களைப் புறமுதுகிட்டோடச் செய்தான்.

வீரராசேந்திரன் (கி.பி. 1063-1070) சோழ அரசனானான். இவன் காலத்தில் சாளுக்கியர்களுடனான போர் மீண்டும் தொடஙகியது. துங்கபத்திரை நதிக கரையில் வீரராசேந்திரன் வெற்றி கண்டான. அஙகு வெற்றிக் கம்பம் ஒன்றை அமைத்தான். விசயவாடாவிற்கு அருகில் ஏற்பட்ட மற்றொரு போரில் இவன் வெற்றி கண்டான். அதை அடுத்துக் கலிங்கத்தின் மீது படையெடுத்தான். சோமேசுவரன் இறந்த பிறகு விக்கிரமாதித்தன் சோழ அரசனுடன் சமாதானம் செய்து கொண்டான். உள்நாட்டுக் குழப்பங்கள் அதற்கு முக்கிய காரணமாகும். சோழ இளவரசி ஒருத்தியை விக்கிரமாதித்தன் மணந்தான். அதனால், இவ்விரு அரசுகளுக்கும் இடையே ஏற்பட்டிருந்த போர் ஒரு முடிவுக்கு வந்தது. சோழ ஆட்சியை இலங்கையிலிருந்து அகற்ற முதலாம் விசயபாகு மேற்கொண்ட முயற்சியை வீரராசேந்திரன் முறியடித்தான். சிரீவிசய நாட்டு விவகாரஙகளிலும் தலையிட்டுத் தன் ஆதரவாளனை ஆட்சியில் அமர்த்தினான். இவனுடைய மறைவிற்குப் பின்னர் அதிராசேந்திரன் அரசுகட்டில் ஏறினான். ஒருமாத காலம் மட்டுமே அவனால் ஆட்சி செய்ய முடிந்தது. அவனுடைய மறைவுடன் விசயலாய சோழனின் நேர் பரம்பரை முடிவுற்றது.

அதிராசேந்திரனுக்குப் பிறகு கிழக்குச் சாளுக்கிய அரசனான இராசேந்திரன் முதலாம் குலோத்துங்கன் (கி.பி.1070-1120) என்ற பட்டத்துடன் சோழ அரியணையில் அமர்ந்தான். விக்கிரமாதித்தனுடன் கி.பி.1075-இல் போரிட்டு, அவனைத் தோற்கடித்துக் கங்கவாடியில தன்னுடைய அதிகாரத்தை நிலைநிறுத்தினான். அந்த வாய்ப்பைப் பயன்படுத்திக் கொண்டு வேங்கியைத் திரிபுரி அரசன் தாக்கினான். இலங்கையில் விசயபாகு சோழ ஆட்சியை அகற்றிவிட்டு இலங்கை முழுவதையும் தன்னாட்சியின்கீழ்க் கொண்டு வந்தான். பாண்டிய, மற்றும் கேரள மாநிலங்களில் கிளர்ச்சிகள் தோன்றின. ஆகவே, குலோத்துங்கன் தெற்கு நோக்கிப் படை நடத்திச் சென்றான. செம்பொனமாரி, கோட்டாறு, விழிஞம முதலிய இடங்களில் வெற்றிபெற்றுத் தனது ஆதிககத்தை மீண்டும் நிலைநாட்டினான் முக்கியமான சாலைகளில் இராணுவக் குடியேற்றங்களை அமைத்தான். சோழ பாண்டிய அரசப் பிரதிநிதி ஆட்சியை மீண்டும் ஏற்படுத்துவதற்குப் பதிலாக, அவற்றின் நிருவாகத்தை உள்ளூர அரசர்களிடம் ஒப்படைத்தான. விசய பாகுவிடம் நட்புறவு கொணடு சிஙகள இளவரசியை மணம் செய்து கொண்டான். சீனாவிற்கு 72 வணிகர்கள் கொண்ட தூதுக்குழுவை கி.பி.1077-இல அனுப்பி வைத்தான். சிரீவிசயநாட்டுடன் வாணிகம் தழைக்க முயற்சி மேற்கொண்டான். அந்நாட்டு மன்னரின் விருப்பப்படி நாகப்பட்டின விகாரஙகளை ஒழுங்குபடுத்தி, அவற்றை மேலும் விரிவுபடுத்துவதற்கு அனுமதி வழங்கினான். வேஙகியை இவன் மகன விக்கிரமசோழன் அரசப்பிரதிநிதியாக இருந்து ஆட்சி செய்தான். விக்கிரமசோழன் கலிஙகத்தின்மீது படையெடுத்து அதன் அரசனைக கப்பம் கட்டும்படி செய்தான். கப்பம்கட்டத் தவறியபோது கி.பி 1110-இல் மீண்டும் கலிங்கத்தின்மீது படையெடுத்தான். அப்போது கருணாகரத் தொணடைமான் படைத தலைவனாகப் பணியாற்றினான் இப்படையெடுப்பு கலிங்கத்துப்பரணியில விளக்கப்பட்டுளளது. கனேளசி, இந்தோ-சீனாவிலுள்ள கம்பூசியா, பர்மா ஆகிய நாடுகளுடனும் குலோத்துங்கன் நட்புறவு கொண்டிருநதான். சாளுக்கியர் கி பி.1116-இல் தங்கவாடியைக் கைப்பற்றினர். வேங்கியைத் தமது ஆதிக்கத்தின்கீழ்க் கொண்டுவர முறபட்டனர். வேங்கியிலிருந்து சோழ ஆட்சி அகற்றப்பட்டது. ஆயினும், சோழ அரசர்களுள் இவனும் மிகச் சிறந்த அரசனாகக் கருதப்படுகிறான்; நிதி நிலையில் சில சீர்திருத்தங்களைக கொண்டு வந்து சுஙகம தவிர்த்த சோழன் என்ற பட்டத்தைப் பெற்றான்; நாட்டு மக்களின் செழிபபையே தனது முக்கிய குறிக்கோளாகக் கொண்டிருந்தான்; தேவையற்ற போர்களைத் தவிர்த்தான்.

விக்கிரம சோழன் (கி.பி1120-1135): இவன ஆட்சியில் சமாதானம் நிலவியது இவன்சிதம்பரம் நடராசர் கோயிலைப் புதுப்பித்தான்; அரங்கநாதர் கோயிலைச் சீரமைத்தான்; வேங்கியை மீண்டும் கைப்பற்றினான்; கங்கவாடியின் ஒரு பகுதியை மீண்டும் கைப்பறறினான். இவனை அடுத்து இரண்டாம் குலோத்துஙகன் (கி பி. 1135-1150) ஆட்சி செலுத்தினான். சிதம்பரம் கோயிலைப் புதுப்பிகும்போது கோவிந்தராசர் சிலையைக் கடலில் இட்டானெனக் கூறப்படுகிறது. இவனையடுத்து இரணடாம் இராசராசன் (கி.பி. 1150-1173) ஆட்சி செய்தான். இவனுடைய ஆட்சி கோதாவரி வரை பரவியிருந்தது. கொங்கு நாட்டின்பெரும் பகுதி

யும் கிழக்குக் கங்கவாடியும் அதில் அடங்கி இருந்தன. இவனுக்குப் பிள்ளைகள் இல்லாமையால் இரண்டாம் இராசாதிராசனைத் (கி.பி.1173-1179) தம் வாரிசாக நியமித்தான். இரண்டாம் இராசாதிராசன் காலத்தில் பாண்டியநாட்டில் உள்நாட்டுப் போர் ஏற்பட்டது. சிங்கள மன்னன் பாராக்கிரம பாண்டியனுக்கு உதவி செய்தான. குலசேகர பாண்டியன் சோழ அரசனின் உதவியை நாடினான. சோழர்கள் அவனை அரியணையில் அமர்த்தினர். பின்னர், இலங்கையின மீது படையெடுக்கத் திட்ட மிட்டனர். அதையறிநத சிங்களவர் குலசேகரனை மதுரை அரசனாக ஏற்றுக் கொண்டு அவனுடைய நட்புறவை நாடினார்கள. குலசேகரனுடைய வஞ்சகச் செயல் சோழர்களை வீர பாண்டியனுக்கு உதவி அவனை அரியணையில் ஏற்றும்படி செய்தது. இச்சோழ மனனன காலத்தில் சோழ ஆதிக்கத்தின கீழிருந்த சிற்றரசர்கள் மீது இவன் கொணடிருந்த செல்வாககுக் குறைந்தது.

மூன்றாம் குலோத்துங்கன் (கி.பி. 1179-1216) சோழப் பேரரசர்களின் நேரான பரம்பரையில் வநதவன் அல்லன. இவன் காலத்தில் வீரபாணடியன சிங்களவர் பக்கம் சேர்ந்து கொணடு சோழர்களை எதிர்த்தான. எனவே, குலோத்துங்கன் அவன எதிரியான விககிரமபாணடியனுக்கு ஆதரவளித்து அவனுக்குப் பட்டம் சூட்டினான். வீரபாணடியன கொல்லத்தில அடைககலம் புகுந்தான். வழககம் போல் சிஙகளவர்களும் இவவிவகாரத்தில தலையிட்டனர். சிஙகள மன்னன் இருமுறை பாணடிய நாட்டின்மீது படையெடுத்து வந்தான. இராமேசுவரத்தைக் கைப்பற்றியதாகக் கூறப்படுகிறது. இறுதியில் வீரபாண்டியனும் வேணாட்டரசர்களும் சோழனுக்கு அடிபணிந்தனர். அதனால், வீரபாண்டியன் மரியாதையுடன் அமைதியாகத் தன வாழ்நாளைக் கழிக்கச் சில இடங்களைப் பெற்றான். மற்றொரு போர் நடவடிக்கையின் விளைவாகச் சேரர்களைப் போசள (Hoysala) அரசனான இரணடாம் வல்லாள னையும் தோற்கடிததுக் கொஙகு நாட்டை மீணடும் பிடித்தான். சோழ இளவரசியை வல்லாளன் மணம் செய்து கொண்டான். விக்கிரம பாண்டியனை அடுத்து ஆட்சியைப் பெற்ற சடையவர்மன் குலசேகரனுடன குலோத்துங்கன் மறறொரு பாணடியப் போரை மேற்கொளள நேர்ந்து, மதுரை அழிககப்பட்டது; முடிசூட்டுவிழா மண்டபமும் அழிக்கப்பட்டது எனினும், அந்நாட்டு ஆட்சிப் பொறுப்பைச் சடையவர்மனிடமே ஒப்படைத்தான். குலோத்துங்கன் காலத்தில கொடிய பஞ்சம் ஒன்று ஏற்பட்டது. அரசு பஞ்ச நிவாரணப் பணிகளை மேற்கொண்டு மக்களுடைய துன்பத்தைக் குறைத்தது. இவன் திரிபுவனம் என்ற ஊரில் சிவன் கோயில் ஒன்றை எழுப்பினான்.

குலோத்துங்கனுக்குப் பின்னர் மூன்றாம் இராசராசன் (கி பி 1216-1246) பட்டம எய்தினான. இவன் காலத்தில் சோழ நாட்டின் மீது பாண்டியர்கள படையெடுத்து வந்து தலைநகரைக் கைப்பற்றினர். இராசராசன் நாட்டை விட்டு ஓடினான். அவனைக காடவராயன் கோப்பெருஞ்சிங்கன் சிறையிலிட்டான் கோப்பெருஞ்சிங்கன் தெனனார்க்காடு மாவட்டத்திலுளள சேநதமஙகலத்திலிருந்து அரசாணடான். சோழர்களின் குறுநில மனனர்களுள் அவனும் ஒருவன். மேற்கில போசளர்கள் கை ஓங்கியது. போசள மன்னன் வல்லாளனுக்கும் சோழ இளவரசிக்கும் பிறந்த நரசிம்ம சோழன் கோப்பெருஞசிங்கனுடன் போரிட்டுச் சோழ நாட்டை அவனுடைய பிடியிலிருந்து காப்பாறறினான். இராசராசனை விடுவித்து அரியணையில் அமர்த்தினான். பாண்டிய நாட்டரசனையும் பணிய வைத்தான அதுமுதல் போசளருக்குக் கீழ்பட்டதொரு நிலையில சோழர் இருந்து வரலானார்கள. சோழரின் கீழிருந்த நாடுகள் சுதந்திரம் பெற்றன. நரசிம்மன மகன் திருசசியை அடுத்த கணணனூரில் தங்கியிருந்து சோழர் ஆட்சியில அடிக்கடி தலையிட்டு வந்தான்.

மூன்றாம் இராசேந்திரன (கி பி. 1246-1279) தன் செல்வாக்கை மீண்டும் பெறத் தெலுங்குச் சோழரின உதவியை நாடினான். இவன் பாணடியனை வென்று சோழர் பெருமையைப் புதுப்பித்தான். வடக்கில காகதீயமனனன் கணபதி காஞ்சியைக் கைப்பற்றினான். இந்த வாய்ப்பைப் பயனபடுத்திக் கொண்டு சடையவாமனசுந்தர பாணடியன் சோழ நாட்டின் மீது படையெடுத்தான். இமமுறை போசள அரசன் சோழனுககு உதவி செய்தான. போரில் அவன் இறக்கவே, பாணடியர்கள் சோழனை வெல்வது எளிதாயிற்று. சோழப் பேரரசு சிதறுண்டது. பாண்டிய நாட்டுக்குக கப்பம் செலுததும் நிலைக்கு அது வலிமையிழநதது.

**பாண்டியர்:** சோழப் பேரரசை வீழ்த்திப் புகழடைந்த பாணடிய அரசன் முதலாம் சடையவர்மன் சுந்தரபாண்டியன் (கி.பி.1251-1268) ஆவான். பாண்டிய மன்னருள போரிலும் புகழிலும் முனனணியில நின்றவன் இவனே. இவன மாபெரும் வீரன். முதலில் இவன் சேரமன்னன் உதயமார்த்தாண்டனை வென்றான். கணணனூரில் தங்கி ஆடசி செய்த போசளர் இவனுக்கு அடிபணிந்தனர். சோழருக்கு உதவியாக வந்த போசள மன்னன சோமேசுவரன் இவனுடன் போரிட்டு வீரமரணம் அடைந்தான். கோப்பெருஞ்சிஙகனை வெனறு சேந்தமஙகலத்தைக் கைபபறறி அவனைத் திறைசெலுத்துமாறு செய்தான். அவ வெற்றியைக் கொணடாடும் வகையில நடராசப்

பெருமானுக்கும் வணக்கத்தைச் செலுத்தினான். கோவிந்தராசப்பெருமானுக்கும் சிதம்பரத்தில் திருக் கோயிலமைத்தான். திருவரங்கம் கோயிலுக்குப்பதி னெண் நூறாயிரம் பொன தானமாகக் கொடுத்தான். இலங்கையின்மீது படையெடுத்துச்சென்று அதனுடைய வடபகுதியைக் கைப்பற்றினான். தெலுங்குச் சோழர் களை வென்றான். காகதீயரை விரட்டிக் காஞ்சியைக் கைப்பற்றினான். மேலும், வடக்கே முன்னேறி நெல்லூரைக் கைப்பற்றினான். இவனுடைய ஆட்சி தெற்கே திருவிதாங்கூரிலிருந்து வடக்கே தெனனார்க காடு வரை பரவியிருந்தது. இவன் காலத்தில் இவ னுடன் மேலும் நால்வர் அரசாண்டு வந்தனர் என்று மார்க்கபோலோ கூறுகிறார். வாசபு என்பவர் மூனறு பாண்டியர்கள் தனித்தனியாக ஆண்டன ரெனக் கூறுகின்றார். இவன் காலத்தில் சில இளவர சர்களும் ஆட்சியில் பங்கு கொண்டனர் என்பதை ஊகிக்க முடியும்.

இவனை அடுத்து அரசோச்சியவன் மாறவர்மன குலசேகர பாண்டியன் (கி பி. 1268-1310). கேரளம், கொங்குநாடு, சோழமண்டலம், தொணடைமணடலம், இலங்கை ஆகியவற்றைக் குலசேகர பாணடியன் வென றானெனக் கூறப்படுகிறது. இவன் சோழ மன்னனை யும், போசள மன்னனையும்வென்றான்; அவாகளு டைய நாடுகளைப் பாண்டிய நாட்டுடன் இணைத்துக் கொணடான. சிஙகளப் படையெடுப்பின் போது புத்தரின பல் சின்னம் ஒனறைக் கைப்பற்றி மீண்டான எனறும், சிங்களவேந்தன மதுரைக்கு வந்து அடி பணிந்து அச்சின்னத்தை மீட்டுச் சென்றான எனறும் கூறுகினறனர். இவன காலத்தில்தான வெனிசுநாட்டு மார்க்கபோலோ பாணடிய நாட்டிற்கு வந்தான. தான கணடவற்றையும் கேட்டவற்றையும் குறித்து வைத் தான். அவன் இந்தியாவிலேயே பாண்டிய நாடு சிறந்த நாடென்று கூறியுள்ளான. பாண்டிய நாட்டிலே வனப்புமிக்க முத்துகள் கிடைத்தன என்றும், மேலை நாடுகளில் இருந்து பல மரக்கலங்கள, குதிரைகளையும் வேறு பொருள்களையும் ஏற்றிக் கொண்டுதாமிர பரணியாற்றின் முகத்தில் இருந்த காயல் பட்டினத் திற்கு வந்தன என்றும், பாண்டியனிடம் பொனனும் மணியும் குவிந்து கிடந்தன என்றும், அவன் நேர்மை யுடனும் நீதியுடனும் ஆட்சி செய்தான் என்றும் அவன் தெரிவிக்கின்றான். மனனருக்கு ஐந்து மனைவியர் இருந்தனர் எனறும், உடன்கட்டை ஏறும் பழக்கம் இருந்தது என்றும், மக்கள் சகுனங்கள், சோதிடம் ஆகியவற்றில் நம்பிக்கை கொண்டிருந்தனர் என் றும், கோயில்களில் தேவரடியார்கள் இருந்தனர் என்றும் கூறியுள்ளான.

**முகமதியஆட்சி:** மாறவர்மன் குலசேகரனுக்கு மக் களிருவர் இருந்தனர். ஒருவன், சுந்தரபாண்டியன்; சொந்த மனைவியின் மைந்தன. மறறவன், வீர பாண்டியன் உரிமைமகள வயிற்று மகன. குலசேகரன் வீரபாண்டியனைத் தன வாரிசாக நியமித்தான். இதை விரும்பாத சுநதரபாண்டியன் குலசேகர பாண்டியனைக் கொன்று அரியணையைக் கைப்பற்றி னான். அதையடுத்து, வீரபாணடியன அவனைத் தாக்க முற்பட்டான. அதைத் தடுக்க இயலாமல் சுந்தரபாண்டியன மதுரையை நீங்கிச் சென்றான். அச்சமயத்தில் தில்லிச் சுலதானின் படையுடன மாலிக் காபூர் தெற்கு நோக்கி வந்து கொண்டிருந்தான். சுந்தரபாணடியன் அவனுடைய உதவியை நாடினான். மாலிக்காபூர் மதுரையைத் தாக்கினான. வீரபாண்டி யன மதுரையைவிட்டு வெளியேறிப் பல இடங்களுக்கு மாறி மாறிச் சென்று, மாலிக்காபூருக்குத் தொல்லை கொடுத்தான். நாடே போர்க்களமாயிற்று உறை யூருக்கு அருகிலுள்ள வீரபாணடியன் தலைநகரான பீர்தூல் என்ற இடத்தை மாலிக்காபூர் தாக்கிய போது பாண்டியன படையில் இருந்த முகமதிய வீரர் கள் மாலிககாபூருடன சேர்ந்து கொண்டனர். எனவே, வீரபாண்டியன் ஊரைவிட்டு ஓடினான். பின் னர்க் கண்ணனூரில அவன் இருப்பதாகக் கேள்விப் புற்று மாலிக்காபூர் அந்நகர் நோக்கிச் சென்றான. போகும் வழியில் பொனனும் மணியும ஏற்றிச் சென்ற இருபது யானைகளைமாலிக காபூர் கைப்பற்றி னான். வீரபாண்டியனைத் துரத்திச் சென்ற காபூர் சிதம்பரம் அடைநதான. அங்குக் கோயிலைத் தீக் கிரையாக்கினான. உடைமைகளைச் சூறையாடினான். மக்களைக் கொனறு குவித்தான். பின்னர், பீர்தூலை நோக்கிச் செலலும்போது வழியில கண்ட கோயில் களை அழித்தான. திருவரங்கக் கோயிலையும் அவன் விட்டுவைககவிலலை. பின்னர்மதுரைக்குச் சென்றான. செய்தி அறிந்த சுநதரபாண்டியன் அரண்மனைச் செலவத்துடன் நகரை விட்டு நீங்கி னான். மதுரையில மீனாட்சியம்மன் கோயிலுக் குத் தீயிட்டான. மதுரையிருநது இராமேசுவரம் சென்றான். அங்கு மசூதி ஒன்றைக் கட்டினான் என்று கூறப்படுகிறது. இலங்கைக்குச் சென்ற தாகவும் வரலாற்று ஆசிரியர்கள் கூறுகின்றனர். பெருஞ் செல்வத்துடன் மாலிக்காபூர் திரும்பிச் சென் றான். உள்நாட்டுப் போரும், மாலிககாபூரின அழிவுச் செயலகளும் பாண்டிய நாட்டைச் சீர்குலைததன. கேரள அரசன் இரவிவர்மன் குலசேகரன் அவ்வாய்ப் பைப் பயன்படுத்திக் கொண்டு தனது ஆதிக்கத்தைப் பாண்டிய நாட்டின்மீதும் சோழநாட்டின் மீதும் ஏற்படுத்திவிட்டு வேதவதி யாற்றஙகரையில் சோழ பாண்டிய நாட்டுப் பேரரசனாக முடிசூட்டிக் கொண்டான. பின்னர், மதுரையை ஆண்டுவந்த வீரபாண்டியன் போசள அரசன், மூன்றாம்

வல்லாளனின் துணையுடன் வடபாண்டிய நாட்டை இரவிவர்ம குலசேகரனிடமிருந்து மீட்டான். அச்சமயத்தில் காகதிய அரசன் பிரதாபருத்திரன் பாண்டிய நாட்டின்மீது படையெடுத்தான். பாண்டிய அரசர்கள் ஐவரும் ஒன்றுபட்டுக் காஞ்சிக்கு அருகில் அவனை எதிர்த்தனர். பாண்டியர்கள் தோற்றனர். அதையடுத்து அரசுரிமைப்பூசல்கள் மீண்டும் தலை தூக்கின. பாணடியராதிக்கத்திற்குட்பட்டிருந்த சிற்றரசர்கள் சுதந்திரமடைந்தனர். அவர்களுள் ஒருவன் சம்புவராயக் குடும்பத்தைச் சேர்ந்த குலசேகரன் என்பவன். மற்றொருவன் மூன்றாம் இராசேந்திரன மகனான சோமப்பிள்ளை. சுந்தரபாண்டியன் தொடர்ந்து கி.பி. 1320 வரை ஆட்சி செய்தான். தியாசுதீன் துக்ளக்குக் காலத்தில் முகமதியப் படையெடுப்பு மீண்டும் தமிழ்நாட்டில ஏற்பட்டது. உலூக்கான் மதுரையைக் கைப்பற்றினான். அதைத் தில்லி அரசின் மாகாணமாக அமைத்தான். ஆயினும், பாண்டிய ஆட்சி இராமநாதபுரம், தஞ்சை போன்ற சில இடங்களில் தொடர்ந்து நடைபெற்று வந்தது. பாண்டியரும், போசள மன்னரும் முகமதிய ஆட்சியை அகற்ற முயன்றனர். ஆனால், அம்முயறசி வெற்றிபெறவில்லை.

மதுரையில் சுல்தான்கள் ஆட்சி நிறுவப்பட்டது. சலாலுத்தீன் ஐந்து ஆண்டுகள் ஆட்சி செய்தான், பின்னர் அலாவுதீன் உதாகி ஆண்டான். இவன் இரத்த வெறி கொண்டவன். திருவண்ணாமலையில் போசள அரசன் நிறுத்திவைத்திருந்த படையுடன் இவன் மோதினான். போரில் இவன் இறந்தான். இவன் மருமகன் ஆட்சிக்கு வந்தான். சில காலததிற்குப் பிறகு விசயநகரப் பேரரசர்கள் தமிழ்நாட்டின மீது படையெடுத்துச் சென்றனர். முதலாம்புக்கன் மகன் குமாரகம்பணன மதுரையை முற்றுகையிட்டு வென்றான. இசசெய்தி இவன் மனைவி கங்காதேவி இயற்றிய மதுரை விசயம் என்ற நூலில் விளக்கமாகக் கூறப்பட்டுள்ளது. படிப்படியாகப் பல இடங்களை இப்பேரரசர்கள் கைப்பற்றினர். அவற்றுள் காஞ்சி, திருச்சி, தஞ்சாவூர், புதுகோட்டை ஆகியவை குறிப்பிடத்தக்கவையாகும்.

**விசயநகரப்பேரரசு:**விரைவில் தமிழகத்தின் பெரும் பகுதி விசயநகராட்சிக்கு உட்படுத்தப்பட்டது. அவர்களுடைய ஆட்சியினபோது பல கோயில்கள் கட்டப்பட்டன. வைணவமும் சைவமும் தழைத்தன. கலைகள் வளர்ந்தன. அமைதியும் ஒழுங்கும் நிலைநாட்டப்பட்டன.

கிருட்டிணதேவராயர் (கி.பி. 1509-29) இறந்த பிறகு அரசியல் குழப்பம் ஏற்பட்டது. அச்சுதராயன் தனக்கு உதவிசெய்த விசுவநாத நாய்க்கனுக்குப் பாண்டிய நாட்டு ஆட்சிப்பொறுப்பை அளித்தான். அவன் மதுரையில் இருந்து விசயநகர அரசப்பிரதியாக ஆண்டுவந்தான். அச்சுதராயருக்குப் பிறகு மீண்டும் குழப்பநிலை உருவாகியது. அச்சமயத்தில் விசயநகரப் படைகள், தஞ்சாவூரையும் புதுக்கோட்டையையும் கைப்பற்றி, அங்குச் செயறபட்டு வந்த குறுநில மன்னர் ஆட்சியை நீக்கி, விசயநகர அரசின் பிரதிநிதிகளாட்சியை ஏற்படுத்தின. தலைக்கோட்டைப் போருக்குப் பிறகு தமிழகத்தில் மதுரை, தஞ்சை, செஞ்சி ஆகிய இடங்களில் ஆட்சி செய்து வந்த நாயக்கர்கள் சுதந்திரமாக இயஙகலானார், கள். வேலூர் நாயக்கர்கள மட்டும் தொடர்ந்து விசயநகரப் பேரரசின் கீழ் கி.பி 1675 வரை செயற்பட்டு வந்தனர். சின்னபொம்மநாயக்கன் என்பவன் வேலூரில் ஒரு கோட்டையையும், சலகண்டேசுவரர் கோயிலையும் கட்டினான். செஞ்சியில் ஆண்ட கிருட்டிணப்ப நாயக்கன் பல சமயப் பணிகளைச் செய்துள ளான் கோவிந்தராசர் சிலை ஒனறை மீணடும் நடராசர் கோயிலில் நிலைநிறுத்தியவன இவனே. தஞ்சையில் நாயக்கர்கள் ஆட்சி கி.பி 1530-இல் தொடங்கி, யது. அச்சுதராயன் என்பவன் இவர்களுள் சிறந்தவனாவான். நாகப்பட்டினததில் போர்சுகீசியர் குடியேற அனுமதி வழங்கியவன் இவனே. இவன் புலமை சான்றவன். மதுரையில் நாயக்கர்கள் ஆட்சி கி பி. 1529-இல் தொடஙகியது. முதலில் இவன தஞ்சையை ஆண்டான். அது பிரிந்துபோன பிறகு இவனது ஆட்சி திருச்சி முதல் கன்னியாகுமரி வரை பரவியிருந்தது. நாட்டைப் பாளையங்களாகப் பிரித்து நிருவாகத் திறமையை சீராக்கியவன் இவனே. இவனுக்குப் பின னர் முதலாம் கிருட்டிணப்ப நாயக்கன பட்டம் எய்தினான். இவன் வீரத்தில் சிறந்தவன். திருவிதாங்கூர், சிங்களம் ஆகிய நாடுகளினமீது படையெடுத்தான். இவன் தந்தையின் காலத்திலிருந்து அமைசசராக இருந்த அரியநாதர் தொடர்ந்து அப்பணியைச் செய்து வந்தார். இவனை அடுத்து முதலாம் வீரப்ப நாயக்கன் (கி.பி. 1572-95) ஆண்டான். இவன் காலத்தில் மதுரையில் கிறித்தவ நிறுவனம் அமைக்கப்பட்டது.

இதற்கிடையில் திருநெல்வேலியில் பஞ்ச பாணடியர் ஆட்சி செலுத்தி வநதனர். வேறு சிலர் பாண்டியநாட்டு அரியணைக்கு உரிமை கொண்டாடினர். அவர்கள் தென்காசியில் செல்வாக்குப் பெற்றனர். அவர்கள் அனைவரையும் அரியநாதர் வெனறு மதுரை நாயக்கருடைய ஆதிக்கத்திற்கு அடிபணியச் செய்தார். திருநெல்வேலிச் சீமை பினனர் மதுரையுடன் இணைக்கப்பட்டது. கி.பி. 14-ஆம் நூற்றாண்டின் பிற்பகுதி முதல் 17-ஆம் நூற்றாண்டின் பிற்பகுதி

வரை சில பாண்டிய அரசர்களும் ஆண்டு வந்தனர். அவர்களைப் பற்றிய செய்திகள் இந்நாள் அதிகமாகக் கிடைத்தில. அவர்களுள் சிறப்பு மிக்கவன் சடையவர்மன் பராக்கிரம பாண்டியன (கி.பி 1422-63). தென்காசிக் கோயிலை எழுப்பியவன இவனே.

போர்ச்சுகீசியர்கள கி.பி. 1600-ஆம் ஆணடு முடிவதற்குள்ளாகவே வாணிகத்தின பொருட்டுத் தமிழ்நாட்டிற்கு வந்து, சாந்தோமில் ஒரு வாணிகத் தலத்தை அமைத்தனர். வணிகர்களுடன மதபோதகர்களும் வந்தனர். மாதாகோயிலும் அங்குக் கட்டப்பட்டது. பரஙகிப்பேட்டையில் கோயில் கட்டப்பாதிரிகளுக்கு உரிமையைச் செஞ்சி நாயக்கன அளித்தான. மதுரையிலும் நிறுவனம் அமைக்கப்பட்டது. இந்த நிறுவனங்களைச் சார்ந்த பாதிரியார்கள் தமிழகத்தில் கிறித்தவ மதம் பரவுவதற்கு வழிவகுத்தனர்.

தி.ஆர்.இரா.

**தமிழக வரலாறு- கி.பி. 1600 முதல் கி.பி.1800 வரை:** தமிழகம் கி.பி. 16-ஆம் நூற்றாணடில் விசயநகரப் பேரரசின் கீழ் இருந்தது.கி.பி.1509-இல பட்டத்திற்கு வந்த கிருட்டிணதேவராயரின ஆட்சிக்காலம் பல வகையிலும் குறிப்பிடத்தக்கது. தமிழகத்தில் விசயநகர ஆதிக்கம் ஏற்பட்டதன் வாயிலாகக் கலை, பணபாடு, அரசியல் முதலியவற்றில் பெரும் மாறுதல்கள் ஏற்பட்டன. கிருட்டிணதேவராயருக்குப் பின் தமிழகத்தை ஆட்சி செய்தவர்கள் அச்சுதராயர், வேங்கடபதி, சதாசிவராயர் ஆகியோராவர். பாமனி சுல்தான்களுடன் கி.பி.1565-இல் தொடங்கிய தலைக கோட்டைப்போர் விசயநகரப் பேரரசுக்குத் தோல்வியை அளித்தது.

இப்போரைத் தொடர்ந்து ஏற்பட்ட குழப்பத்தின் விளைவாக மதுரை, தஞ்சாவூர், செஞ்சி ஆகியவற்றில் விசயநகரப் பேரரசுப் பிரதிநிதிகளாக ஆட்சி புரிந்த நாயக்கர்கள் மன்னர்கள் என முடிசூட்டிக் கொண்டனர். வேலூர் நாயக்கர்களும், மைசூர் உடையார்களும் விசயநகரத் தலைமையை ஏற்றனர்.

**மதுரை நாயக்கர்கள்:** மதுரையில் விசுவநாத நாயக்கர் கால முதலாக மதுரை நாயக்கர் ஆட்சி ஏற்றம் பெற்றது. விசுவநாத நாயக்கர், முதலாம் கிருட்டிணப்ப நாயக்கர், வீரப்ப நாயக்கர், இரணடாம் கிருட்டிணப்ப நாயக்கர், முத்துகிருட்டிணப்ப நாயக்கர், முதலாம் முத்து வீரப்ப நாயக்கர், திருமலை நாயக்கர், சொக்கநாத நாயக்கர், மூன்றாம் முத்து வீரப்ப நாயக்கர், விசயரங்க சொக்கநாதர், இராணி மங்கம்மாள், மீனாட்சி முதலானவர்கள் கி.பி. 1529 முதல் 1736 வரை ஆட்சி செலுத்தினர். மதுரை நாயக்கர்களின் காலத்தில் பாளையக்காரர் முறை உருவாயிற்று. இவர்கள இந்து சமயக் காப்பாளர்களாகப் பல ஆலயத் திருப்பணிகள் செய்தனர்.

**செஞ்சி நாயக்கர்கள்** செஞ்சியில் கி.பி. 1490 முதல் 1649 வரை ஆட்சி செலுத்திய செஞ்சி நாயககர்கள பற்றி மெக்கன்சி ஓலைச சுவடி வாயிலாக அறியலாம். வையப்ப நாயக்கர், துப்பாக்கி கிருட்டிணப்ப நாயக்கர், அச்சுத விசய இராமச்சந்திர நாயக்கர், முத்தியாலு நாயக்கர், வெங்கடப்ப நாயக்கர், வரதப்ப நாயக்கர், அப்பய நாயககர், இராசாதேசிங்கு முதலியோர் குறிப்பிடத்தக்கவர்கள். பீசப்பூர் படை கி.பி.1649-இல் செஞ்சியை முற்றுகையிட்டுக் கைப்பற்றியது.

**தஞ்சை நாயக்கர்கள்:** தஞ்சை நாயக்கர்கள் கி.பி. 1632 முதல கி.பி. 1673 வரை ஆட்சி செலுத்தினர். தஞ்சையில் நாயக்கர் ஆட்சியினைச் செவ்வப்ப நாயக்கர் நிறுவினார். தொடர்நது ஆட்சி செலுத்தியவர்கள் அச்சுதப்ப நாயக்கர், இரகுநாத நாயக்கர், விசயராகவ நாயக்கர் ஆகியோராவர். மதுரை தஞ்சைக்கு இடையே ஏற்பட்ட போரில் விசயராகவர் மறைந்துவிட, மதுரையின் அரசப் பிரதிநிதியாக அழகிரி நாயக்கர் ஆட்சி செலுத்தினார்.

**தஞ்சை மராத்தியர்கள்:** தஞ்சையில் ஆட்சி செலுத்திய அழகிரியை வஞ்சகமாக நீக்கி, மராத்தியர் ஆட்சியைத் தஞ்சையில் நிறுவியவர் ஏகோசி (கி.பி.1676-85) ஆவார். சாசி, முதலாம் சரபோசி, துக்காசி, பிரதாப் சிங்கு துலசாசி, இரணடாம் சரபோசி முதலானவர்கள கி.பி.1833 வரை ஆட்சி செலுத்தினர். தஞ்சையில் மராத்தியர் ஆட்சி செய்த காலத்தில இராமநாதபுரம் தனியே பிரிந்து சேதுபதியின் கீழ் வந்தது.

**இராமநாதபுரம் சேதுபதிகள்:** இராமநாதபுரத்தைத் தலைநகராகக் கொண்டு இராமநாதபுரம், சிவகங்கை, புதுக்கோட்டை முதலிய பகுதிகளில அரசியல் ஆதிக்கம் செலுத்தியவர்கள சேதுபதிகள் ஆவர். முதலாம் சடையத்தேவர், இரண்டாம் சடையத் தேவர், திருமலை சேதுபதி, இரகுநாத தேவர், விசயரகுநாதன் ஆகியோர் கி.பி 1623 முதல 1720 வரை ஆட்சி செலுத்தினர். கட்டையத் தேவரின் கீழ்கி.பி. 18-ஆம் நூற்றாண்டில் இராமநாதபுரம் தனியரசாயிற்று. சிவகங்கை சசிவர்ணத் தேவரின் கீழ் தனியரசாயிற்று.

**பாளையக்காரர்கள்:** மதுரை நாயக்கர்களின் ஆட்சியின் கீழ் பாளையக்காரர்கள் அரசு செலுத்தினர். ஊர்க்காடு, சுரண்டை, ஊத்துமலை, வடகரை, நடுவக்குறிச்சி, தலைவன் கோட்டை, நெற்கட்டும் செவல, அழகாபுரி, தென்மலை, சிவகிரி, சாத்தூர்

முதலியன மேற்குப் பிரிவுத் தமிழ் பேசும் பாளையக்காரர்களுக்குரியன. கிழக்குப் பிரிவுத் தெலுங்கு பேசும் பாளையக்காரர்கள் எட்டையபுரம், பாஞ்சாலங்குறிச்சி, மேல் மந்தை, களத்தூர், கடல்குடி ஆகிய வற்றிற்குரியவர்கள். நெற்கட்டும் செவல புலித்தேவரும் பாஞ்சாலங்குறிச்சிக் கெட்டி பொம்மும் (கட்ட பொம்மன்) வரலாற்றில் ஆங்கிலேயரை எதிர்த்தமையால் சிறப்பிடம் பெறுகின்றனர்.

**ஐரோப்பியர்:** விசயநகரப் பேரரசுக் காலம்தான் தென்னகத்தில் ஐரோப்பியா காலெடுத்து வைத்த காலமாகும். இந்திய மண்ணில் முதலில கால்வைத்த போர்சசுகீசியர்கள் இந்திய மண்ணைவிட்டுக் கடைசியில்தான்சென்றர். போர்ச்சுகீசியரைத் தொடர்ந்து ஆலந்து நாட்டவா, தென்மார்க்கு நாட்டவர், ஆங்கிலேயர், பிரெஞ்சுககாரர் ஆகியோர் வந்தனர். சோழ மண்டலச கரையில நாகப்பட்டினத்தையும், சாந்தோமையும் வாணிகத்தளங்களாகக் கொண்டனர் போர்சசுகீசியர். தசசுக்காரர் புலிக்காடு என்ற பழவேற்காடு, நாகப்பட்டினம் ஆகியவறறைத் தலைமையிடமாகக் கொணடனர். தென்மார்க்கு நாட்டவர் தரங்கம் பாடியிலும், ஆங்கிலேயர் சென்னை, கடலூர் ஆகிய இடஙகளிலும் கோட்டைகள் அமைத்தனர். புதுசசேரி பிரெஞ்சுக்காரர்கள தங்குமிட மாயிற்று. ஐரோப்பியர் ஒவவொருவராகச் செல்வாக்கு இழந்தனர். மூன்றாம் கருநாடகப் போா முடிந்தவுடன ஆங்கிலேயர் கையே ஓங்கியது. ஆங்கிலேயரும், பிரெஞ்சுக்காரர்களும் இந்தியாவில் இருநத போரிடும் சகதிகளின பககம எதிா எதிராக நினறனர். தமிழகத்தை கி பி.1801-முதல ஆட்சி செலுத்தியவர்கள ஆங்கிலேயர்களே ஆவர்.

**கருநாடக நவாபுகள்:** முகலாய மன்னர் அவுரங்கசீபு கி.பி.1698-இல சுல்பிகார்கான என்பவரைக் குமரி முனை முதல் நெலலூர் வரை பரவியிருந்த கருநாடகம் என்னும் பகுதிககு முதல் நவாபாக நியமித தார். தாவூத்கான் சுல்பிகார்கானால் கருநாடக நவாபாக நியமிக்கப் பெற்றார். ஆர்க்காடு தலை நகராக உருவாகியது. வேலூரை கி.பி. 1704-இல் மராத்தியரிடமிருந்து கைக் கொண்டார். மதுரையும் தஞ்சையும் திறையரசுகளாயின. கருநாடக நவாபான சாதத்துல்லாகான் வாரிசற்றுப் போய்விடவே, தோசுத்து அலியை கி.பி.1701-இல் தத்து எடுத்து வாரிசாக்கினார். தோசுத்து அலிக்குப் பின் நவாபு பதவிக்குப் போராட்டம் ஏற்பட்டது. அன்வாரூதீனால் வாலாசா பரம்பரை என்னும் புதிய மரபு ஒன்று உருவாயிற்று. முகமமது அலி கி.பி.1792-இல் ஆங்கிலேயருடன மேறகொணடிருந்த 'கருநாடக ஒப்பந்தம்' கருநாடகத்தில் தலையாய சக்தியாக விளங்கியது நவாபிற்காக ஆங்கிலேயர் போர் செய்தனர். நவாபிற்குக் கடன் சுமை ஏறியது. நவாபு கி.பி.1801-ஆம் ஆண்டு மறைந்தார். அலி உசைனுடன் கி.பி 1801-இல் மேற்கொணட உடனபடிக்கை வாயிலாக ஆங்கிலேயர் கருநாடகத்தைக் கைக் கொணடனர். இவ்வுடன்பாட்டின்படி நாட்டின் வருவாயில் நானகு பங்கு ஆங்கிலேயரும், ஒரு பங்கு நவாபும் பெறறுக் கொள்ளலாம் என்று தீர்மானிக்கப் பெற்றது.

**சமுதாயம, பண்பாடு:** சமுதாயத்தைப் பொறுத்த மட்டில் பிறமொழி பேசுவோர் ஆதிக்கம் பெருகிய காலம் அது. பார்ப்பனர் கைக்கோளர், வணிக சமூகத்தவர், தாழத்தப் பெற்ற வகுப்பினர் முதலியோர் பலப்பல உட் பிரிவுகளாகப் பிரிந்து இருந்தனர். இவர்கள் யாவரும் இந்துக்கள். பிற சமயத்தவர்களான இசுலாமியர்களின எணணிக்கை ஐந்து விழுககாட்டிற்கும் குறைவாகவே இருந்தது. கிறித்தவர்களும் ஐந்து விழுக்காட்டிறகும் குறைவான எணணிக்கையினரே. சாதித் தடைகள் இருநதன. திருமணம் புனித உறவாகக காணப்பெற்றது. இருதார மணமே வழக்கிலிருந்தது. மணவிலக்கு உயர் வகுப்பாரிடையே எணணிப் பார்க்கவியலாத ஒன்று. பெணடிர் நிலை ஆடவர்க்கு அடங்கியதே. பெண கலவி புறககணிக்கப் பெற்றது. விதவைப் பெண்டிர் நிலை மிகவும் மோசமானது. உடன் கட்டை ஏறுதல, உயிருடன் வாழ்ந்தால் தலையை மழித்து மூலையில கிடக்கச் செய்தல ஆகியவை காணப் பெற்றன. 'தீட்டு' எனனும் நம்பிக்கை இருந்தது. உணவுப் பொருள்களில் வெஙகாயம், பூண்டு, காளான் முதலியவறறைச் சிலர் தவிர்த்தனா. வேட்டியைப் பாய்ச்சிக் கட்டினர். பெண்டிர் மார்க் கச்சை அணிந்தனா. சதுரஙகம், கோழிச் சணடை முதலியன பொழுது போக்குகள. மக்கள மேலாடை, இடையாடை அணிநதனர்.

'திராவிடர் பாணி தன் இறுதி வடிவம பெற்றது நாயகக மன்னர்கள் ஆட்சியில் தான்' என்பது பெர்சி பிரவுன் என்பவரின் கருத்தாகும். நாயக்க மனனாகள் உயர்ந்த கோபுரங்களை எழுப்பினர். மதுரை மீனாட்சியம்மன் கோயில சிற்ப வகைகளும், ஆயிரக கால மண்டபத்தில காணும் கணகவர் சிற்பங்களும், திருமலை மன்னர் அமைத்த புது மணடபச் சிறபங்களும் மதுரை நாயககரின் சிற்பத் திறனுக்கு எடுத்துக காட்டு. திருநெல்வேலிக்கு அருகில் திருவேஙகடநாதர் கோயிலில காணப்பெறும் வெளித் தூண்களில உள்ள சிற்பங்கள் மதுரை நாயக்கர் காலத்தவை. நெல்லையப்பர் கோவில் இசைத் தூண்களும், சுசீநதிரம் கோயில் அனுமன் சிலையும் குறிப்பிடத் தக்கன. செப்புப் படிவங்களுள, சேரன்மாதேவி இராமசாமி

கோயிலிலிருந்து கிடைத்த படிமங்களும், மதுரை, நெல்லை, திருவிடைமருதூர் செப்புப் படிமங்களும் குறிப்பிடத்தக்கன. செஞ்சிக் கோட்டை, சித்தாமூர் கல்தேர், கல்யானைகள் குறிப்பிடத்தக்கன. கிருட்டிண தேவராயரின் காலத்தில்தான் தமிழகத்தில் வைணவம் வளர்ந்தது. இவர் சிதம்பரம் கோயிலின் வடபுறத்துக் கோபுரத்தை எழுப்பியதோடு, ஆலயங்கள் பலவற்றிலும் திருப்பணி செய்தார். மராத்தியர்கள் வல்லம், தேவனாம்பட்டினம் ஆகிய இடங்களில் கோட்டைகளைக் கட்டவும் செப்பனிடவும் செய்தனர். தஞ்சை மாளிகையான மங்கள விலாசம் குறிப்பிடத்தக்கது.

தமிழ் இலக்கியங்களைப் பொறுத்தமட்டில் பதினேழாம் நூற்றாண்டில் அவை சமயம், தத்துவம் சார்ந்தவையாக அமைந்தன. பரணி, கலம்பகம், தூது, மாலை, பிள்ளைத் தமிழ் முதலானவை உருவாயின. காவியங்கள் உருவாகாத காலம் அது. சிவப்பிரகாசரும் குமர குருபரரும் குறிப்பிடத்தக்கவர்கள். ஐரோப்பியர்களின் தமிழ்த் தொண்டும் குறிப்பிடத் தக்கதே. எல்லப்ப நாவலர் திருவருணைக்கலம்பகம், திருவாரூர்க்கோவை ஆகிய சிறந்த நூல்களை இயற்றினார். திருவொற்றியூருக்கு ஒரு புராணம் ஞானப்பிரகாசரால் இயற்றப் பெற்றது. நிரோட்ட யமக அந்தாதி என்ற நூலைப் பாடியவர் சிவப்பிரகாசர்.

குமரகுருபரரின் மீனாட்சி அம்மை பிள்ளைத் தமிழ், கந்தர்கலிவெண்பா, நீதி நெறி விளக்கம், மீனாட்சி அம்மை குறம், மீனாட்சி அம்மை இரட்டை மணி மாலை, மதுரைக் கலம்பகம், காசிக்கலம்பகம், முத்துக் குமாரசாமி பிள்ளைத் தமிழ் குறிப்பிடத்தக்கவை. அந்தகக் கவி வீரராகவர், சீதக்காதியால் ஆதரிக்கப் பெற்ற உமறுப்புலவர், சாந்தலிங்க சுவாமிகள், சிதம்பரசுவாமிகள், தத்துவராயர், தாண்டவராய சுவாமிகள், தாயுமான சுவாமிகள், அருணகிரி நாதர், வில்லிபுத்தூரார், காளமேகம், படிக்காசுப் புலவர், சர்க்கரைப் புலவர், சவ்வாதுப் புலவர், குணங்குடிமகுதான் சாயபு, செய்குத் தம்பிப் பாவலர், திரிகூட ராசப்பர் ஆகியோர்களும் குறிப்பிடத் தக்கவர்கள். சிவஞான முனிவரின் காஞ்சிப் புராணம், கச்சியப்ப முனிவரின் அமுதாம்பிகை பிள்ளைத் தமிழ் ஆகியன குறிப்பிடத்தக்கன.

தமிழ் இலககிய ஊற்றுத் தோன்றியதைப் போன்று வடமொழியிலும் இலக்கிய ஊற்றுக்கள தோன்றின. தியாகையர், சியாமா சாத்திரி, முத்துச் சாமி தீட்சிதர் ஆகிய மூவரும் சங்கீத மும்மணிகள். சித்தர்கள் பெயரால் பல நூல்கள் எழுந்ததும் இக்காலமே.

மதுரை, தில்லை, திருவெள்ளறை, செங்கம் பட்டீசுரம், திருவலம்புரி, குடந்தை, திருவரங்கம் ஆகிய இடங்களில காணப்படும் ஓவியங்கள் இக்காலத்தைச சேர்ந்தவையாகும்.

நாடக நூல்களில் 'பூலோக தேவேந்திர விலாசம்', 'அதிரூபாவதி கலயாணம்', 'சங்கர நாராயண கல்யாணம்', 'சந்திரசேகர விலாச நாடகம்', 'விட்டுணு சகராச விலாசம்' ஆகியன குறிப்பிடத்தக்கன. மராத்தியர்களின் ஆதரவின கீழ்த் தோன்றிய தெலுங்குப் படைப்புகள் 'பஞ்சநாத தலபுராணம்' 'இராமாயண யட்சகானம்' 'பரமபாகவத சரித்திரம்' 'இந்துமதி பரிணயம்' ஆகியன முக்கியமானவை.

வடமொழியில் சம்பு, நாடகம், காவியம் ஆகியன தோன்றின. 'உத்திரசம்பு','திரிபுர விசயசம்பு', 'குமார சம்பவசம்பு' ஆகிய சம்பு இலக்கியங்களும், 'சானகி பரிணயம்', 'சீவாருந்தன நாடகம்', 'வித்யாபரிணய நாடகம்' 'சுபத்திரா பரிணயம்', முதலிய நாடகங்களும்,, 'சிருங்கார மஞ்சரி', 'சகேநதிர விலாசகாவியம்' முதலிய காவியங்களும், 'சித்தாந்த சந்திரிகா', 'ஆச்சாரிய நவநீதம்' முதலிய தத்துவ நூல்களும் எழுந்தன. ந.க.ம.

**தமிழக வரலாறு (கி.பி. 1800 முதல் 1950 வரை):** ஆங்கிலேயககிழக்கிந்திய வணிகக்குழு (English East India Company) கி.பி. 1600-ஆம் ஆணடில உருவாகியது. சென்னை புனித சார்சு கோட்டையில் கி.பி. 1675-ஆம் ஆண்டு, திசம்பர் மாதம் 16-ஆம் நாள நிருவாக அமைப்புகள் உறுதிபெற்றன. தமிழக நிலவரங்களைக் வணிகக்குழுவினர் அது முதல் தீவிரமாகக் கண்காணிக்கத் தொடங்கினா. மருதுபாண்டியர் கி.பி.1801-ஆம் ஆண்டில், வீழ்ச்சியுற்றபின், ஆங்கிலேயரின் செல்வாக்குத் தமிழகத்தில் வேரூன்றிவிட்டது. கி.பி.1806-இல் நடைபெற்ற 'வேலூர்க் கலகம்' சிறிது சலசலப்பை யேற்படுத்தியதெனினும் ,விரைவில் ஒடுக்கப்பட்டது. நூற்றைம்பது ஆண்டுக் காலத் தமிழக வரலாற்றினைத் (கி.பி.1800-கி.பி.1950) தெளிவாக அறிவதற்கு, இவ்விடைக் காலத்தை மூன்று பகுதிகளாகப் பிரித்துக்கொள்ளலாம். பகுதி 1) கி.பி.1800 முதல் 1914 வரை, பகுதி 2) 1914 முதல் 1930 வரை பகுதி 3) 1930 முதல் 1950 வரை. முதல் உலகப் போரையடுத்து, நாட்டுணர்சசி (Nationalism) பெருகி, விடுதலை இயக்கங்கள தமிழகத்தில் தோன்றின. பதினாறு ஆணடுகளில் (1930 வரை) இம்முயற்சிகளின் இயல்பு, சிறுகச் சிறுக மாற்றம் பெற்றதைத் தெளிவாகக் காணலாம். பெருவெள்ளமாக ஓடிய நாட்டுணர்ச்சி, 1930-க்குப் பின், காடுமலைகளைக் கடந்து, 1947-ஆம் ஆண்டில் அமைதி பெற்றது.

**பகுதி: 1 (கி.பி. 1800-1914)** கருநாடக நவாபு முகமது அலி கி.பி.1791-ஆம் ஆண்டு, வணிகக்குழு

வுடன் உடன்படிக்கை செய்து பல உரிமைகளை இழந்தான். நான்காம் மைசூர்ப் போர் கி.பி.1799-ஆம் ஆண்டு தொடங்கியபோது நவாபு உம்தத்துஉல் உமாராவின் உடல்நலம் சீரழிந்ததால, ஆஙகிலேயர் கருநாடகத்தைத் தம்வயமாக்குவதற்கு ஆயத்தமாயினர் உமாரா கி.பி.1801-இல் இறந்தபின்னர், அசிம்-உத்-தௌலாவை நவாபாக ஏற்று, முடியையும் ஒய்வூதியத்தையும் வழங்கி, உரிமைகள் யாவற்றையும் பறித்துக்கொணடனர். தஞ்சையிலும், பெயரளவிலிருந்த மராட்டிய ஆட்சிக்கு முற்றுப் புள்ளி வைத்து கி.பி.1855-ஆம் ஆண்டு அப்பகுதியையும் கைப்பற்றினர்.

தமிழகம் கி.பி.1784-ஆம் ஆண்டு முதல் 1858-ஆம் ஆண்டு வரை ஆங்கிலேய வணிகக்குழுவின் ஆட்சியிலிருந்தது. தம் விருப்பம் போல் செயற்படுவதற்குக் குழுவினர் உரிமை பெற்றிருக்கவில்லை. தலைமைப் பீடம் பொருளாதாரச் சுரண்டலில் ஈடுபாடுடையதாகவிருந்ததால், தமிழகப் பொருளாதாரச் சமூக முன்னேற்றங்களைக கருதிச் செயறபடவில்லை. நாட்டுமக்களின் நலன்கருதி அங்கொன்றும் இங்கொன்றுமாகச்சில அலுவலர்கள் செயற்பட முற்பட்ட போதிலும் 'சுரண்டல் கொள்கை'யின் விளைவுகளே மிகுதியாக இருந்தன. மேலைநாட்டுத் தொடர்பினால் தமிழகம் நலிந்தது என்ற கருத்தை முழுமையாக ஏற்பதற்கில்லை என்றாலும், மேலைநாட்டுத் தொடர்பு, பொருளாதார முன்னேற்றத்திற்கு அடிகோலியது என்ற கருத்தைத் திட்டவட்டமாக மறுக்கலாம்.பிற பணித்துறைகளிலும்புதுமைகள் ஏற்பட்டன என்று சொல்வதற்கில்லை. இரிப்பன் பிரபுவின் பெருமுயற்சியால் தலநிருவாக முறையில் தோன்றிய மாறுதல்களை விதிவிலக்காகக் கொள்ளவேண்டும்.

சமயப் பிரிவுகள் பல இருந்தன. காஞ்சியில் வடகலை தென்கலைப் போராட்டமும், தஞ்சையில் வேதியர் செல்வாக்கும் சமயப் பணியில இனவாரிப்பாகுபாடுகளும் இருந்தமை தெளிவாகிறது. இராமலிங்க அடிகளாரின் சமரச சுத்த சன்மார்க்கம் நாராயண குருவின் முயற்சிகள், தமிழகத்தின் தென்கோடியில் வைகுண்ட சுவாமிகளின் தொண்டு ஆகிய செய்திகள சமூக அடக்குமுறைகளுக்கு எதிர்ப்புகள் தோன்றிவிட்டன என்பதை விளககுகின்றன. வேலூர் செஞ்சி, ஆர்க்காடு, சென்னை, நாகப்பட்டினம், காயல்பட்டினம் ஆகிய இடங்களில் இசுலாமியரின் செல்வாக்கிருந்தது. தொண்டர்களின் அயராத உழைப்பாலும் அரசின் அரவணைப்பாலும் கிறித்தவம் வளர்ந்தது. கட்டுப்பாடு, உழைப்பு, சமூகத் தொண்டு ஆகியவற்றிற்குக் கிறித்தவச் சமயத் தொண்டர்கள் இலக்கணம் வகுத்தனர். இலக்கியத் துறையில், வடமொழி, தெலுங்கு, அரபி, பாரசீகம், உருது ஆகிய மொழிகளின் தொடர்பு கிடைத்தது. தமிழ்மொழியில் ஒப்பற்ற நூல்கள் தோன்றின.

பகுதி-2. (1914-1930) தமிழகம் சென்னை மாகாணம் (Presidency of Madras) என்ற பெயரில் இந்தியாவிலேயே மிகப்பெரிய மாகாணமாக விளங்கியது. தமிழ, மலையாளம, தெலுஙகு, கன்னடம், துளு உருது ஆகிய மொழிகள் பேசும் மககள பல்வேறு சமயஙகளைக் கடைப்பிடித்தொழுகி வாழ்ந்தனர். ஆஙகிலக்கல்வி பரசவிச்முதாயத்தைச் சார்ந்த நிலககிழார்கள், வணிகப் பெருமக்கள், ஆட்சிப் பணியாளர், வழக்கறிஞர் ஆகியவர்களிடையே சுதந்திர வேட்கையை வளர்த்தது. சாதிமுறை வலுவாக இருந்தது. ஆங்கில அறிவு பெறுவதில் மேல்சாதியினர் மிகுந்த ஆர்வம் காட்டிய காரணத்தால், அவர்கள் சமுதாயத்தில் மேல்நிலையடைய வாய்ப்பிருந்தது. வங்காள, மகாராட்டிரப் பகுதிகளைப் போலத் தமிழகத்தில் சமுதாய அமைப்பில் வியத்தகு மாறுதல்கள் ஏற்படவில்லை என்பது வரலாற்றுச் சான்றுகள் பறைசாற்றும் உண்மை.

சுதந்திரவேட்கை தமிழகத்தில் பரவத் தொடங்கிய பின் கி.பி.1852-ஆம் ஆண்டில் சென்னை வாழ் மக்கள் கழகம் (Madras Native Association) உருப்பெற்றது. சென்னைப் பலகலைக்கழகம் கி.பி.1857-இல் நிறுவப் பெற்று ஆங்கிலக் கல்வியறிவை மேலும பேணிவளர்த்தது. சென்னை மகாசன சபையும் (கி.பி. 1884) பிரம ஞான சபையும் (கி பி. 1882) உருவாயின. இவை கி.பி. 1885-இல் இந்தியத் தேசிய காங்கிரசு தோன்றுவதற்கு முன்னோடிகளாக விளஙகின. வங்காளப் பிரிவினைக்குப்பின் (1905) கி.பி.1907-இல பிபின்சந்திரபாலர் (Bepin Chandra Pal) தென்னகத் திற்குவந்தார். தீவிர இயக்கம் தமிழகத்தில் செலவாக்கடைந்தது. அது கடிசேரல அரிசர்வோத்தம ராவ, வ.உ. சிதம்பரனார், சுப்பிரமணிய சிவா, கவி சுப்பிரமணியபாரதி, வாஞ்சிநாதன் ஆகியோரை ஈர்த்தது.

பிரம ஞான சபையின தலைவி அன்னிபெசண்டு அம்மையார் கி.பி.1916-ஆம் ஆணடில தன்னாட்சி இயக்கத்தைத் (Home-rule Movement) தொடஙகினார். அவ்வியக்கம் தமிழகத்தில் நல்லாதரவு பெற்றதெனினும், சிறுபான்மையினரின் செலவாக்கை வளர்த்துவிடுமோ என்ற ஐயமும் இருந்துவந்தது. சமூக ஏற்றத்தாழவுகளை மறுப்பதற்காக கி.பி.1892-ஆம் ஆண்டிலேயே ஆதிதிராவிடர் அமைப்பு உருவாகியிருந்தது என்றாலும் கி.பி.1917-இல் எழுந்த நீதிக்கட்சியையே (Justice Party) முதல் முயற்சியாகக் கொள்ளவேண்டும். கி.பி 1917 இல் அக்கட்சியினர்

இனவாரிச் சார்பாளர் முறையை (Communal representation) வலியுறுத்தினர். அன்னிபெசண்டு அம்மையார் இம்முறையை எதிர்த்தார். நீதிக்கட்சி கி.பி. 1919 முதல கி.பி.1926 வரை செல்வாக்குடன் செயலாற்றியது. தன்னாட்சி இரட்டையாட்சியாக (Dyarchy) மாறியதை அககட்சியினர் வரவேற்றனர். நீதிக்கட்சியின் தோற்றம், செயல்படு முறைகள் ஆகியவற்றை விளக்குவதில் கருத்து வேறுபாடுகள் இருந்து வருகின்றன. 'பிரித்தாளும் கொள்கை' (Divide and rule) ஆங்கிலேயரின் கைவந்த கலை என்பதை மறுப்பதற்கில்லை.

மொழிவாரி மாகாணப்பிரிவினைக்கொள்கை கி.பி.1920-21-இல் பரவிவிட்டது. காந்தியடிகளாரும் மாகாணக் காஙகிரசக் குழுக்கள் அமைப்பதில் இக் கொள்கையைச் செயறபடுத்த ஆதரவு அளித்தார்கள். சென்னை மாகாணத்திலடஙகியிருந்த தெலுங்கு மொழி பேசிய மக்கள் (ஆந்திரர்) தனிமாகாணம் கேட்கத் தலைப்பட்டனர். நீதிக் கட்சியினரின் செல்வாக்கு ஆந்திரப் பகுதிகளில் மிகுதியாகப் பரவவில்லை. அல்லூரி சீதாராமராசர் தலைமையில் ஆந்திரப் பகுதியில் 1922-இல் கடும் புரட்சி ஏற்பட்டது. கேரளப் பகுதியில் தோன்றிய மாப்பிள்ளைகள் கலகமும் (1921) சமயக் கருத்து வேறுபாடுகளினடிப்படையில் எழுந்ததென்றே கொள்ளவேண்டும்.

நீதிக்கட்சி அமைச்சரவைகள் செய்த ஆக்கப் பணிகளில் 1925-இல் ஆந்திரப்பல்கலைக்கழகம், 1929-இல் அண்ணாமலைப் பல்கலைக்கழகம் ஆகியவை உருப்பெற்றதைக் குறிப்பிடவேண்டும். தேவையான சமூக முன்னேற்றப் பணிகளை நிறைவேற்றத் தவறியதாலும், எளிய மக்களை காக்கத் தவறியதாலும் 1934 ஆம் ஆண்டுத் தேர்தலில், நீதிக்கட்சி தோல்வி கண்டது. பெயரளவில் பின்னும் நிலைத்ததென்றாலும் கி.பி. 1938-க்குப் பின் முழுமையாகப் பெரியார் தோற்றுவித்த தன்மான இயக்கத்தில் (Self-respect Movement) கலந்துவிட்டது. இவ்விடைக் காலத்தில், இந்தியப் பொது நலச் சட்டத்திற்கு முன்னோடியாகத் தமிழகத் தாராளவாதிகள் (Liberals) தன்னாட்சிமுன்மொழிவு ஒன்றைத் தயாரித்தளித்தனர். இப்பணியைச் சிறப்பாகக் குறிப்பிடுதல் வேண்டும்.

**பகுதி-3** (1930-1950): கி.பி.1930-ஆம் ஆண்டுத் தேர்தல் நடைபெற்றபோது இசுடான்லி மாகாண ஆளுநராகப் பணிபுரிந்தார். அவ்வமயம் சுப்பராயன், அரங்கநாத முதலியார், ஆரோக்கியசாமி முதலியார், சேதுரத்தின அய்யர் ஆகியோரடங்கிய சுயேச்சையாளர் (Independents) அவை ஏற்பட்டது. சுயராச்சியக் கட்சி (Swarajist Party) எதிர்கட்சியாகச் செயற்பட்டது. மாநிலத் தன்னாட்சி (Provincial Autonomy) கி.பி. 1935-ஆம் ஆண்டு நடைமுறைப்படுத்தப் பட்டது. இரு அவைகள் கொண்ட சட்டமன்றமும் (Bicameral Legislature) தோன்றியது. மாநில ஆளுநராக இருந்த எர்சுகின் பிரபுவின் ஆலோசனைப்படி, முதலமைச்சர் தமது ஆட்சிக் குழுவை (Cabinet) அமைத்துக்கொண்டார். பின்னர், கி.பி. 1937-ஆம் ஆண்டுத் தேர்தல்களில் காங்கிரசுக்கட்சி வெற்றி கொண்டமையால், இராசகோபாலாச்சாரியாரின் அமைச்சரவை பதவியேற்றது.

இவ்வவை கி.பி.1939-ஆம் ஆண்டு, அக்டோபர் மாதம் 30-ஆம் நாள் வரை செயற்பட்டது. பின்னர் 1939-ஆம் ஆண்டு நவம்பர் மாதம் முதல் 1946-ஆம் ஆணடு மே மாதம் 24-ஆம் நாள் வரை தமிழகத்தில் நடைமுறையில் ஆளுநராட்சி இருந்தது. இராசகோபாலாச்சாரியார் அமைச்சுச்செயற்பட்ட காலத்தில் மதுவிலக்குச் சட்டம், கோயில் புகும் சட்டம் (Prohibition and Temple entry) ஆகிய சிறந்த சமுதாய நலச்சட்டங்கள் இயற்றப்பெறறன. இக்கால இடைவெளியில், இந்தி எதிர்ப்புப் போராட்டத்தையும் பொற்கொல்லர்களின் உள்ளத்தைப்புண்படுத்தும் சட்டம் இயற்றப்பெற்றதையும் அகில இந்திய அரசியல் சூழ்நிலைகளின் எதிரொலிகளாகவே கொள்ளல் வேண்டும்.

இரண்டாம் உலகப் போரின் போது ஆங்கிலேய அரசு மேற்கொண்ட முயற்சிகளுக்குத் தமிழகம பேராதரவு நல்கியது. கி.பி.1946-இல் நடைபெற்ற தேர்தலில் ஆந்திரகேசரி பிரகாசத்தின் தலைமையில் மாநில அரசு உருவாயிற்று என்றாலும், கி.பி.1947-ஆம் ஆண்டு மார்ச்சு மாதம் முதல் தன்னாட்சி ஏற்பட்டது எனக் கூறுவது மேலும் பொருத்தமுடையது. தொடர்ந்து, ஓமந்தூர் இராமசாமி ரெட்டியாரும், குமாரசாமி ராசா அவர்களும், முதல்வர்களாகத் தொண்டாற்றியபோது போரின் விளைவாகத் தமிழகப் பொருளாதாரம் சீர்குலைந்திருந்தது.

தமிழகம் கி.பி.1930-ஆம் ஆண்டு முதல் தேசிய விடுதலை இயக்கத்தில் பெரும் பங்கேற்றது. இராசகோபாலாச்சாரியார் 1930-இல் வேதாரணிய உப்புச் சத்தியாக்கிரகத்திற்குத் தலைமையேற்றார். சர்தார் வேதரத்தினம், ஓமந்தூர் ரெட்டியார், ஓ.வி.அளகேசன, நாமக்கல் கவிஞர் ஆகியோரை இங்கு நினைவில் கொளள வேண்டும். பின்னர் 1931-ஆம் ஆண்டு காமராசர் மீது கொலைச்சதி வழக்கும், வெடிகுண்டு வழக்கும் தொடரப்பெற்றதாயினும் காமராசர் விடுதலை பெற்றார். அடுத்து 1932-ஆம் ஆண்டு, சட்ட மறுப்பு இயக்கத்தில் திருப்பூர் குமரன் உயிர்நீத்தார்.

இறுதியாக 1942-ஆம் ஆண்டில் நடந்த 'வெள்ளையனே வெளியேறு'(Quit India) என்னும் போராட்டத்தில் தமிழ் மக்கள் ஆற்றிய தொண்டுகளை மறப்பதற்கில்லை. மாநிலத்தின் ஒவ்வொரு மாவட்டத்திலும் தொண்டர்கள் தடியடிகளையும், துப்பாக்கிச் சூடுகளையும் சந்தித்தனர். இந்தியா 1947-ஆம் ஆண்டு சுதந்திரம் அடைந்தது. தமிழகமெங்கும் சிறப்பாக விழாக் கொண்டாடப்பெற்றது. இந்தியா 1950-இல் குடியரசு ஆயிற்று. தி.வெ.கு.

**தமிழக வரலாறு (கி.பி.1950-இன்று வரை):** இந்தியா 1947 ஆகசுட்டு 15-ஆம் நாள் ஆங்கிலேயர் ஆட்சியினின்றும் விலகி அரசியல் சுதந்திரம் எய்தியது. எய்தவே சென்னை மாகாணமும் ஏனைய இந்தியப் பிரதேசங்களைப் போலத் தன்னாட்சி நிலையை அடைந்தது. அப்பொழுது அரசியல் நிலையில் தமிழகம் சென்னை மாகாணத்தின் ஒரு பகுதியாகவே இருந்தது. அம்மாகாணம் இப்போதுள்ள ஆந்திரப் பிரதேசத்தின் பெரும் பகுதியையும் கேரளத்தின் வடபகுதியையும் கருநாடகத்தின் சில பகுதிகளையும் தன்னுள்ளடக்கி மிகப் பெரியதொரு பகுதியாக விளங்கிற்று. 'இந்திய அரசியல் சட்டம்' 1950 சனவரியிலிருந்து நடைமுறைக்கு வந்த பொழுது, இந்தியப் பிரிவினைக்குப்பின் எஞ்சியிருந்த இந்தியத் துணைக் கண்டத்தை வேறு ஒரு வகையில் அதாவது பகுதிவாரியாகப் பிரித்து அமைத்தது. அவ்வமைப்பின்படி சென்னை மாகாணம் 'ஏ' இராச்சியங்களுள் ஒன்றாக அமைக்கப்பட்டது. இப்போதுள்ள தமிழகம் என்னும் அரசியற்பிரிவு, 1956-இல் ஆந்திரப் பிரதேசம் என்னும் இராச்சியம் பிரிக்கப்பட்ட பின்பும், கேரளத்துடனும் கருநாடகத்துடனும் சிற்சில பிரதேசப் பரிமாறல்கள் செய்துகொள்ளப்பட்ட பின்பும் எஞ்சியிருந்த பகுதியாகும்.

சென்னையில் காங்கிரசு அமைச்சரவை 1947 ஆகசுட்டில் செயற்பட்டது. ஓமந்தூர் இராமசாமி ரெட்டியார் என்பவர் முதலமைச்சராயிருந்தார். அவரது அமைச்சரவை 1949-இல் ஏப்பிரல் வரை நீடித்தது. அவரையடுத்து இராசபாளையத்தைச் சேர்ந்த குமாரசாமி இராசா முதலமைச்சரானார். புது அரசியல் சட்டத்தையொட்டி 1952-இல் எழுந்த பொதுத் தேர்தல் நடந்த வரையில் அவரே ஆட்சி செய்தார். அதன்பிறகு சக்கரவர்த்தி இராசகோபாலாச்சாரியாரின் (இராசாசி) இரண்டாம் அமைச்சரவை அமைந்தது.அப்போது சட்ட சபையில் காங்கிரசுக் கட்சிக்குப் பெரும்பான்மை பலம் இல்லாமையால் அக்கட்சி ஆட்சியை மேற்கொள்ளத் தயங்கிற்று. ஆயினும், இராசாசி சென்னை மாகாணச் சட்ட மேல் சபைக்கு நியமனம் செயப்பட்ட பின் அமைச்சரவை அமைக்க ஒருவாறு ஒருப்பட்டார். இந்தியா குடியரசு முறை அரசியல் அமைப்பினை ஏற்றுக் கொண்ட பிறகு தமிழகத்தில் நிறுவப் பெற்ற முதல் அமைச்சரவை இதுவேயாகும். இராசாசி 1952-இலிருந்து 1954 வரை சென்னை ஆட்சியைத் திறம்பட நடத்தினார். அப்போது சென்னை மாகாணத்தின் ஆளுநராயிருந்தவர் சிரீபிரகாசா என்பவர்.

சென்னையில் 1935-ஆம் ஆண்டு அரசியல் சட்டத்தின் சார்பில் 1937-இல் காங்கிரசு மந்திரிசபை அமைக்கப்பட்டபோது முதலமைச்சராயிருந்தவர் இராசாசி. அவரே இப்போதும் (1952-இல்) முதலமைச்சராகப் பதவி ஏற்றுக் கொண்டதால், தாம் முன்பு சென்னையில் செயற்படுத்தியிருந்த சீர்திருத்தங்களைத் திரும்பவும் நடைமுறைக்குக் கொணர்ந்தார். மதுவிலக்கு மறுபடியும் செயற்படத் தொடங்கியது. இந்தி மொழியைப் பரப்பும் துறையில் இராசாசி தம் கொள்கைகளை நாளடைவில் மாற்றிக் கொண்டு வந்து, இறுதியில் ஆங்கிலமே இந்தியாவிற்குச் சிறந்த அரசியல், உயர் கல்வி கற்பிக்கும் மொழியாக இருக்கத் தக்கது என்னுமளவிற்கு அவர் கருத்துகள் முதிர்ச்சியடைந்து வந்தன. அவர் குலத் தொழில் சார்ந்த கல்வித் திட்டம் ஒன்றை 1954-இல் வகுத்தார். மக்களிடம் பெருவாரியாகக் காணப்பட்ட வேலையில்லா நிலைமையைச் சமாளிப்பதற்காகச் சிறந்த திட்டத்தை அவர் கொணர்ந்தார். அதாவது, மாணவர்கள் பொதுக் கல்வி கற்றுக் கொள்வதோடுகூட, குலத்தொழிலையும் அறிந்து வைத்திருத்தல் நலம் என்னும் கருத்தையொட்டி வகுக்கப்பட்ட திட்டம் அது. ஆனால், காங்கிரசுக் கட்சியிலிருந்தவர்களிலேயே பலர் அத்திட்டத்தை எதிர்த்தனர். 'அவர் வருண ஆசிரம தருமத்தை மறுபடியும் நிலை நாட்ட முற்படுகிறார்' என்று குற்றஞ் சாட்டினர். அவரைத் தலைமையினின்றும் நீக்கிவிட இடப்பட்ட திட்டத்தின் முடிவாக, அப்போது தமிழ் நாடு காங்கிரசுக் கட்சிக்குழுவின் தலைவராக இருந்த காமராச நாடார் 1954 ஏப்பிரலில் முதலமைச்சர் பதவியை ஏற்றார்.

காமராசர் நிறுவிய அமைச்சரவை 1954-இலிருந்து 1963 வரை செயற்பட்டது. அக்கால அளவில் அவர் இரண்டு அமைச்சரவைகளை அமைத்தார். இந்தியச் சுதந்திர இயக்கத்திலும் அரசியலிலும் பெரும்பங்கு ஏற்று இந்தியத் தலைமை ஆளுநர் பதவியையும் வகித்துப் புகழ் பெற்ற இராசாசியின் பொது அலுவலர் வாழ்க்கை 1951-இல் முடிவு பெற்றது. அதன் பிறகு அவர் சுதந்திராக் கட்சியைத் தொடங்கி அதன் வாயிலாக மத்திய, மாநில அரசுகள் செய்த குற்றம்

களைக் கணடித்தும், மிதவாதக் கொள்கைளைத் திறம்பட எடுத்துரைத்தும் வந்தார்.

இராசாசியின் இரண்டாம் அமைச்சரவை செயற் பட்ட காலத்தில் நிகழ்ந்த மிக முக்கியமான நிகழ்ச்சி ஆந்திர மாகாணம் உருவானமையே என்பதில் ஐய மின்று. ஏனைய மாநிலங்களைப் போல, சென்னை மாகாணத்தில் சுதேச அரசுகள் பல இல்லை. புதுக் கோட்டைச் சமசுதானமும் இந்திய ஐககியத்தில் இணைக்கப்பட்டுவிட்டது. இது 1948-49இல் திருச்சி மாவட்டத்தின் தென் பகுதியாக அமைந்து பிறகு தனி மாவட்டமாயிற்று.

காங்கிரசுக்காரர்களே மொழிவாரி மாநிலங களைப் பற்றி 1947-க்குப் பல ஆண்டுகளுக்கு முன் பாகவே முடிவெடுத்திருந்தனர். அவர்கள், நாடு சுதந்திரம் அடைந்தபின் அதனை மொழிவாரி மாகாணஙகளாகப் பிரித்து மாற்றியமைப்போம் என மக்களுக்குத் தமது தேர்தல் அறிக்கையில் வாக் குறுதியளித்திருந்தனர். தமிழ்நாடு காங்கிரசுக் கட்சிக்குழு, ஆந்திரப் பிரதேசக் காங்கிரசுக் குழு முதலிய நிறுவனங்களை அவர்களே ஏற்படுத்தியிருந் தனர். அந்நிலையில் பொதுமக்கள் சுதந்திரத்திற்குப் பிறகு மொழிவாரியாக மாநிலங்கள் அமைக்கப்படும் என்று எதிர்பார்த்தது தவறோ வியப்போ இல்லை. 1950-இல் நடைமுறைக்கு வந்தஇந்திய அரசியலமைப் புச் சட்டப் பிற்சேர்க்கையிலேயே இம் மாறுதல்கள் குறிக்கப்படாமை சற்று வியக்கத்தக்கதேயாம்.

சென்னை மாகாணம் அக்காலத்தில் மலையாளம், தெலுங்கு, தமிழ் ஆகிய மூன்று மொழி பேசுபவர் களும் கலந்துவாழ்ந்த மாகாணமாயிருந்தது. சென்னை அரசியலில் தொடக்கத்திலிருந்தே தமிழர்கள் ஆதிக் கம் மிகுந்திருந்தனர் என ஆந்திரர்கள் நெடுநாளாகவே ஒரு மனத்தாங்கலுக்கு உள்ளாகியிருந்தனர். இரட்டை யாட்சிக் காலத்தில் பனகல் பொப்பிலி ராசாக்கள், தியாகராச செட்டியார், சுப்பராயலு ரெட்டியார் என்று தெலுங்கு பேசுவோர் முதன்மைதான் சென்னை அரசியலில் மிக்குவிளஙகிற்று என்பது வர லாறு. ஆயினும், அவர்களுக்கு அத்தகைய மனத் தாங்கல் இருந்தது உணமையே. காஙகிரசுக் கட்சியின் மொழிவாரி மாகாணஙகள பற்றிய வாக்குறுதி இதனைச் சற்று அடக்கி வைத்திருந்தது. சுதநதிரத் திற்குப் பிறகு தனிஆந்திர மாகாணம் அமைக்கப்படும் என்று அவர்கள் எதிர்பார்த்தனர். ஆயினும், 1950 அரசியல் அமைப்புச் சட்டத்தில் மொழிவாரி மாநிலங களைப் பற்றியபேச்சு எழவேயில்லை. இது அவர் களுக்கு ஒரு ஏமாற்றமா இருந்தது. ஆயினும் அப் பொழுது இந்தியாவில் பிரதம மந்திரியாக இருந்த சவகர்லால் நேரு சென்னை மாகாணத்தைப் பிரித்து ஆந்திரப்பிரதேச மாநிலம்ஒன்றை உருவாக்குவதை விரும்பவிலலை; பற்பல காரணஙகளையும் சொலலி அச்சிக்கலை அணுகாமலே இருந்தார். ஆந்திரர்களோ மாகாணப் பிரிவினையில் உறுதியான கருத்துக் கொணடிருந்தனர். சுவாமி சீதாராம் என்னும் ஆந் திரர் ஒருவர் 1951-இல தெலுஙகர்களுக்குத் தனி மாகாணம் வேணடி இறக்கும் வரை உண்ணாவிரதம தொடஙகினார். உணணாவிரதம மேற்கொணடு, நாட்டின் பொதுச் சிக்கல்களுககுத தீர்வு காண முற் படுவது காந்தி இந்நாட்டில நிறுவி வைத்த மரபு. இந்திய விடுதலை காந்திக்கு எந்த அளவுககு முக்கியமாகத் தோன்றியதோ அந்த அளவிற்குச சுவாமி சீதாராமுக்கு தனி ஆந்திர மாநிலம் முககியம என்று தோன்றியது. இவ்வாறு உண்ணாவிரதம் இருந்து பொதுச் சிக்கல்களைத் தீர்க்க முயலும மரபு தவறானது என்று சவகர்லால் நேரு அப்போது கருதினார். முப்பத்தைந்து நாள உணணாவிரதம இருந்த பிறகு சுவாமி சீதாராம் தமது விரதத்தை முடித்துக் கொண்டார். சென்னை நகரத்தின் நிலை யைப் பற்றியும் விவாதம் எழுந்தது. இராசாசி சென்னை தமிழ் நாட்டை விட்டுப் பிரிக்கப்பட லாகாது என்று கூறினார். ஆனால், ஆந்திரர் சென்னை நகரம் ஆந்திரப் பிரதேசத்தின தலைநகராக அமைய வேண்டும் என்று கருதினர். வேறு சிலா அந்நகரம் இரு மாநிலங்கட்கும் பொதுத் தலைநகராக இருக் கலாம் என்று கூறினர்.

சென்னைச் சட்டசபைத் தேர்தல் 1952 சனவரி யில் நடைபெற்ற பொழுது காஙகிரசுக் கட்சிக்குப் பெரும்பான்மை பலம் கிடைக்கவில்லை. ஆநதிர மாகாணம் அமைக்கப்படாமையால தான் இத்தகைய நிலைமை தோன்றிறறு என்று பலரும கருதினர். சுவாமி சீதாராம் மறறும் ஒரு வேண்டுகோள விடுத் துப் பார்த்தார். சவகர்லால் நேரு அவ்வேணடு கோளை ஏற்றுக் கொளவதற்கில்லை எனறார். 'மொழிவாரி மாகாணங்களை அமைப்பதற்கு இது தருணமன்று' என்று இந்திய அரசின சார்பில பாராளுமன்றத்தில் கூறப்பட்டது.

தனி ஆந்திர மாநிலம் அமைக்கும் சிக்கலை 1948 -லிருந்தே சில அகில இந்தியக் குழுககள ஆய்ந் திருந்தன. அவற்றில் எசு. கேதகார் குழுவின அறிக்கை (1948), சே.வி.பி. (சவகர்லால, வல்லபாய் பட்டாபி) குழு அறிக்கை (1948) என்பவற்றைக் குறிப்பிட வேண்டும். இவை அச்சிக்கலை ஆராய்ந்த தோடு நின்றுவிட்டன; உறுதியான முடிவு ஒன்றையும் குறிப்பிடவில்லை.

பொட்டி சிரீஇராமுலு என்பவர் 1952 அக்டோபரில் இறக்கும் வரை உண்ணாவிரதம் இருந்து 58 நாள்கள் உண்ணாது இருந்து உயிரிழந்தார். அந்நிகழ்ச்சியைத் தொடர்ந்து ஆந்திராவில் பெருத்த கலகம் நடந்தது. இக்கலகம் இந்திய அரசின் மொழிவாரி மாநிலங்கள் பற்றிய கருத்துகளை மாற்ற உதவிற்று. ஆநதிர மாகாணம் 1953-இல் சென்னையிலிருந்து பிரித்து அமைக்கப்பட்டது. 1956-இல் நியமிக்கப்பட்ட பசல் அலி ஆணைக்குழுவின் பரிந்துரைகளையொட்டி அந்த ஆண்டிலேயே விசால ஆந்திர மாநிலம் ஆந்திரப்பிரதேசம் என்னும் பெயரோடு அமைக்கப்பட்டது. எஞ்சியிருந்த மலபாரும் கருநாடகத்தைச் சேர்ந்த கொளளேகாலம் வட்டம் முதலிய இடங்களும் சென்னையிலிருந்து எடுபட்ட பின், கன்னியாகுமரி மாவட்டமும் திருத்தணியும தமிழகத்தோடு இணைக்கப்பட்டு இப்போதைய மாநில எல்லைகள் நிறுவப்பட்டன.

காமராசர் 1963-இல் தமிழக முதலமைச்சர் பதவியினின்றும் விலகிக் கொணடார். இது சவகர்லால் நேருவும் காமராசரும் சேர்ந்து உருவாக்கிய ஒரு திட்டத்தின்படி நிகழ்ந்தது. அத்திட்டம் 'முதிய காஙகிரசு காரர்கள் அரசியற் பதவிகளைத் துறந்து கட்சிக்காக உழைக்க வேண்டும்' என்னும் கொள்கையின்படி அமைந்தது. அவரையடுத்து மற்றுமோர் காங்கிரசுக்காரரான பக்தவச்சலம் என்பவர் சென்னையில் முதலமைச்சரானார். அவர் அமைச்சுக் காலத்தில் தமிழகத்தில் இந்தி எதிர்ப்புக் கிளர்ச்சியொன்று தோன்றியது. இந்திய அரசியல் அமைப்புச் சட்டம், 1950-இலிருந்து 15 ஆண்டுகளுக்குள் ஆங்கிலத்தை அகில இந்திய ஆட்சி மொழி நிலையினின்றும் நீக்கி அவ்விடத்தில் இந்தி மொழி அமர்த்தப்பட வேண்டும் என்னும் குறிக்கோளைக் கூறிற்று அச்சட்டம் விதித்த தவணை 1965-இல் முடிவுற்றிருந்தது. தமிழக மக்கள் தங்கள் மாநிலத்திற்கு இந்தி தேவையில்லை; அதனை வேண்டுவோர் தனிப்படக் கற்கலாம்; ஆனால் அது எந்த அரசின் ஆணை வலுவினாலும் ஆட்சி மொழியாகத் திணிக்கப்படலாகாது என்று கருதினர். அதன் விளைவாக இந்தி எதிர்ப்புக் கிளர்ச்சி ஒன்று 1964-இல் தமிழகம் எங்கும் புயலென உருவெடுத்தது. அப்போது மத்திய அரசு 'இந்தி மொழியைத் தாய் மொழியாகக் கொள்ளாதார் பெரும்பான்மையாக வாழும் மாநிலங்கள் வேண்டும்வரை ஆங்கிலமும் இந்தியோடு சேர்ந்து அகில இந்திய இணைஆட்சி மொழியாக வழங்கும்' என்று வாக்குறுதியளித்தது. அவர் அமைச்சுக் காலத்தில் மதுரைப் பல்கலைக் கழகம் தமிழகத்தின் மூன்றாம் பொதுப் பல்கலைக் கழகமாக நிறுவப்பெற்றது.

சென்னை மாநிலத்தில் 1967-இல் நிகழ்ந்த பொதுத் தேர்தல் அரசியல் புரட்சியொன்றைப் புகுத்தியது. காங்கிரசுக் கட்சி தோற்றது. பேரறிஞர் சி என். அண்ணாத்துரையின் தலைமையில் இயங்கிய திராவிட முன்னேற்றக் கழகம் (தி மு.க.) பெருமளவு வெற்றியடைந்தது. இதற்கிடையே சுதந்திராக் கட்சியை அமைத்து மிதவாதக் கொள்கைகளைப் பரப்பி வந்த இராசாசி தமது ஆதரவைத் தி.மு.க.விற்கு அளித்தார். அண்ணாத்துரை முதலமைச்சராக ஏறத்தாழ ஈராண்டுக் காலம் தான் விளங்கினார். அவர் அக்கால இறுதியில் (1969 பிப்பிரவரியில்) நோய்வாய்ப்பட்டுக் காலமானார். அவர் காலத்தில இரண்டாம் உலகத் தமிழ் மாநாடு சென்னையில் நடைபெற்றது. சென்னை மாநிலம் 'தமிழகம்' எனப் பெயர் பெற்றது. தமிழக அரசு மத்திய அரசு பரிந்துரை செய்த மும்மொழித் (இந்தி, ஆங்கிலம், பிரதேச மொழி) திட்டத்தை மாற்றித் 'தமிழ் மற்றும் ஆங்கிலம்' என்னும் இருமொழித் திட்டத்தை மேற்கொண்டது. தமிழ் ஆட்சி மொழியாற்று.

அண்ணாதுரையை அடுத்து அவர் அமைச்சரவையில் பொதுப்பணித்துறை அமைச்சராயிருந்த கருணாநிதி முதலமைச்சரானார். அவர் அமைச்சுக் காலத்தில் சென்னை நகருக்குக் குடிதண்ணீர் வசதி செய்ய வேண்டிய அவசரக் கட்டம் எய்தியது. தென் ஆர்க்காட்டு மாவட்டத்தில் உள்ள வீராணம் ஏரியிலிருந்து சென்னைக்குக் குடி தண்ணீர் கொணரும் திட்டம் முற்றுப் பெறவில்லை. ஆயினும், 'தலை நகரத்தின் வழியே ஓடும் கூவம் என்னும் சிற்றாறு ஓரளவு தூய்மைப்படுத்தப்பட்டது. இது ஒரு சோதனை எனலாம். அவரது அமைச்சரவை 1976-இல் மத்திய அரசால் நீக்கப்பட்டுக் குடியரசுத் தலைவர் ஆட்சி நிறுவப்பட்டது. இதற்கிடையே தி மு.க. வைச் சேர்ந்த எம்.ஜி. இராமச்சந்திரன் கருணாநிதியோடு கருத்து வேறுபட்டு அகில இந்திய அண்ணா திராவிட முன்னேற்றக் கழகம்(அ.இ.அ.தி.மு.க.) என்னும் புதியதொரு கழகத்தைத் தோற்றுவித்து அதற்குத் தலைமை பூண்டார். பின்னர், 1977-இல் நடந்த பொதுத் தேர்தலில் அவர்தம் கட்சி பெரும்பான்மை பலம் பெற்றதாதலின் அவர் தமிழக முதலமைச்சரானார். பின்னர் 1980, 1984 ஆகிய இரு ஆண்டுகளில் நடைபெற்ற பொதுத தேர்தல்களிலும் எம்.ஜி. இராமச்சந்திரனது அ.இ.அ.தி.மு.க. கட்சியே வெற்றி கண்டதாதலின் அவரே முதலமைச்சரானார்.

அவர்தம் முதல் அமைச்சுக் காலத்தில் கருணாநிதி காலத்திற் போலவே அமைச்சு நீக்கம் நிகழ்ந்தது. அப்போதும் குடியரசுத் தலைவர் ஆட்சி சில காலத்திற்கு நடைபெற்றது. 1975-76-இல் இந்திரா காந்தி கொணர்ந்த 'அவசர நிலை' ஆட்சியின விளைவுகள் எல்லா மாநிலங்களிலும் போலத் தமிழகத்திலும் காணப்பட்டன. எம்.ஜி. இராமச்சந்திரன் திடீ

றென்று மாரடைப்பால் 1987-ஆம் ஆண்டு திசம்பர் திங்களில் இறந்ததை அடுத்து அவர் தமதுணைவியார் திருமதி. ஜானகிஇராமசசநதிரன ஆட்சி தமிழ நாட்டில 23 நாட்கள் நீடித்தது கட்சிகருள் பிளவுஏற் பட்டதாலும் சட்டசபைகருள் பெரும பான்மை இன்மையாலும் அவர் தம் ஆட்சி நீக்கப்பட்டு மீண்டும் குடியரசுத் தலைவர் ஆட்சி 1988 சனவரி முதல் நடைபெற்று வருகின்றது.

எம்.ஜி. இராமச்சநதிரனின பத்தாண்டு முதல மைசசுப் பதவிக் காலத்தில பல புதிய பல்கலைக்கழ கங்கள தோற்றுவிக்கப் பட்டன. அவை தஞ்சைத தமிழப் பலகலைக் கழகம், திருசசியில் பாரதிதாசன் பலகலைக் கழகம், கோவையிலபாரதியார் பல்கலைக் கழகம, வேளாணமைப் பலகலைக் கழகங்கள, கிணடியில் தொழில் நுட்பக் கல்விப் பல்லைக் கழகம, காரைககுடியில் அழகப்பா பல்கலைக் கழகம, கோடைக் கானலில் மகளிர் பலகலைக்கழகம என்பன வாம. காந்திகிராமததிலுளள பலகலைக்கழகம் பல் கலைககழக மானியக்குழுவினால் ஒருபலகலைககழகம் என்று ஏறறுக் கொள்ளப்பட்டுச் செயலாற்றுகிறது. சாலைகள் நன்கு அமைக்கப்பட்டு உலக வங்கியின உதவி கொண்டு திருவளளுவர் முதலிய பல புதிய பேருந்து கழகங்கள ஆங்காஙகு அமைககப்பட்டன. குடிசை களுக்கும் மினசார இணைபபு வழஙகப்பட்டன. நெய்வேலி நிலக்கரியும், சேலம் இரும்பும், தூத்துக்குடி உரத் தொழிலும், துறைமுகமும் தொழில துறையில் அரசின கவனத்தால சீர்பெற்றன. பளளி மாணவர் களுக்கும் முதியோருக்கும் மதிய உணவு அளிககும் சத்துணவுத் திட்டம் ஒன்று செயறபட்டு வருகிறது. இவர்தம் சத்துணவுத திட்டமும் தனனிறைவுத் திட்டமும் இவருக்கு மேலும் புகழ சேர்த்தன. தமிழக மாநிலத்தில் இருநத சில மாவட்டங்கள ஆட்சி வசதியை முன்னிட்டுப் பிரிககப்பட்டன. சேலத்திலிருந்து தர்மபுரி மாவட்டமும் கோவையிலி ருந்து பெரியார் மாவட்டமும் தோற்றுவிக்கப் பெறறன. இராமநாதபுர மாவட்டம், காமராசர் மாவட்டம், பசும்பொன முத்துராமலிஙகம் மாவட்டம் என மூன் று மாவட்டங்களாக இராமநாத புர மாவட்டம் பிரிக்கப்பட்டது. மதுரை மாவட்டத் தின ஒரு பகுதி அணணா மாவட்டம் எனபபெயரிடப் பெற்றது. சென்னை நகருக்குக் குடிநீர் கொணரும் சிக்கலை இறுதியாக முடித்து வைக்கும் முறையில கிருட்டிணா ஆற்றிலிருநது செனனைக்கு வாய்க்கால் கள, குழாய்கள் வாயிலாகத் தணணீர் கொணரும் திட்டம் ஒன்று ஆந்திரப்பிரதேச அரசின கூட்டுறவால் உருவாகியுளளது. கரூரையும், தூத்துக்குடியையும் திண்டுக்கல, மதுரை, மணியாச்சி வழியாக இணைக்கும் அகல இருபுப்பாதைத் திட்டம் ஒன்று மத்திய அரசினால் ஏற்றுக் கொளளப்பட்டு நிறைவேற்றப் பெற்று வருகின்றது. இவ்வாறு பற்பல துறைகளில் முன்னேற்றம் இருந்தும் மக்கள் தொகைப் பெருக்க விகிதம் கணிசமாக குறையாமையால் வேலையின்மை யும், வறுமையும நீக்கியபாடில்லை. ந.சு.

துணை நூல்கள்:

Henry Heras., South India Under the Vijayanagara Empire. Cosmo, New Delhi, 1980.

Mahajan, V.D., A History of India, Vol. III, S. Chand and Co., Madras, 1980.

Mahalingam, T V., Reading in South Indian History, B R. Publishing Corporation, Delhi, 1970.

Nilakantasastri K.A., A History of South India, Oxford University Press, Madras, 1983.

Pillay, K K, A Social History of the Tamils, University of Madras Madras, 1975.

Sethuraman, N., The Cholas, Raman and Raman, Kumbakonam, 1977.

Subramanian, N., History of Tamilnad (Upto A.D. 1565). Koodal Publishers, Madurai. 1978.

**தமிழ்நாடு மீன்வளம்**: மக்களிடையே நிறைநத அளவில காணப்படும புரதசசத்துப் பற்றாக் குறையை நீககுவதில மீன் முக்கிய பங்கு வகிக்கின்றன. மீனில் புரதம, கொழுப்பு, உயிர்ச் சத்துகள, தாதுப் பொருட்கள் ஆகியவை நிரம்ப வுள்ளன. மீனின புரதம் எளிதில் செரிககும் தன்மை யுடையது. மனித நலனுக்குத் தேவையான இன்றி யமையாத அமினோ அமிலஙகள் (Amino acids) அனைத்தும மீனின் புரதத்தில் உள்ளன.

தமிழ்நாட்டில் 1000 கி.மீ. நீளமுள்ள கடற்கரை மற்றும் ஆறுகள், நீர்த்தேக்கஙகள, கால்வாய்கள், குளங்கள், உவர்நீர்ப் பரப்புகள, நீர்நிலைகள் போன்ற பலதரப்பட்ட 369 இலட்சம் எக்டேர் பரப்பளவில் உளள உளநாட்டு, கடல் மீன்வளத்தைப் பெருக்குவ் தற்கான வாய்ப்புகள ஏராளமாக உள்ளன அண்மைக் காலம் வரை நமது மாநிலத்தில் உள்ள ஏரிகள, குளங்கள், குட்டைகள், கண்மாய்கள் ஆகியவற்றில் இயற்கையாக வளரும் மீனகள் நீர் குறைந்த காலங் களில்மட்டிலுமே பிடிக்கப்பட்டு, உணவாகப் பயன் படுத்தபட்டாலும, இப்பொழுது புதியதொழில் நுட்ப முறையில மேற்கண்ட நீர்நிலைகளில் பொருளாதார அடிப்படையில் மிகுந்த வருவாய் ஈட்டித் தரும் மீன் வளர்ப்பு முறைகள் அறிமுகப்படுத்தப்பட்டுளளன.

இநதிய நாட்டின மொத்த மீன் உற்பத்தியில் தமிழ்நாட்டின் பஙகு ஏறத்தாழ 15 விழுக்காடாகும்,

மொத்த கூடல்மீன் ஏற்றுமதியில் ஏறக்குறைய 12 விழுக்காடு தமிழ்நாட்டிலிருந்து ஏற்றுமதி செய்யப்படுகிறது. இதனால் நாட்டின கடற்பொருள் ஏற்றுமதி மூலம் கிடைத்த மொத்த அந்நியச் செலா வணியில் 1985-86-ஆம் ஆண்டில் தமிழ்நாட்டின் பங்கு உரு.60 கோடி ஆகும். கடந்த 10 ஆண்டுகளில் மீன் உற்பத்தி ஏறக்குறைய 30 விழுக்காடு கூடி யுளளது.

மீன் வள மேம்பாட்டுத் திட்டங்கள மாநில அரசு மீன் துறை, தமிழ்நாடு மீன் வளர்ச்சிக் கழகம் ஆகிய வற்றால செயலாக்கப்படுகின்றன. மீன்துறை, மாநி லத்தில பயனளிக்கக்கூடிய மீன் வள வளர்ச்சி பற்றிய கொள்கைகள் குறித்து அரசுக்கு ஆலோசனை கூறும பொறுப்பேற்றுள்ளது. தமிழ் நாட்டுமீன் வளர்சசிக் கழகம் நாட்டு நீர்த்தேக்கங்களில் மீன பிடித்து அவற்றை விற்பனை செய்வதில் முக்கிய கவனம செலுத்துகிறது. மாவட்ட அளவில அமைக்கப் பட்டுள்ள மேம்பாட்டு முகமைகள் உளநாட்டு மீன வளத்தைப் பெருககுவதில கவனம் செலுத்துகினறன.

கரையோரஙகளில் இரால மீன்களைப் பிடிப் பதோடு உவர் நீர்ப் பரப்புகளில் இரால் உற்பத்தி செய்யும் முனைப்பாக அரசு பல புதிய திட்டங் களுக்கு ஒ ப்புதல் அளித்து, பல முன்னோடித திட்டங்களை நடைமுறைப்படுத்தியுள்ளது. அதன் பயனாக உள்நாட்டுககடல் மீன உற்பத்தி 1950-இல் 81, 700 கண்டி (Tonne) யாக இருந்தது 1960-இல 1, 24, 300 கணடியாகவும், 1970-இல 2, 93, 800 கண டியாகவும், 1980-இல் 3,76, 680 கண்டியாகவும் உயர்ந்து, 1985-86-இல 3. 85 இலட்சம் கண்டியாக அமைந்துளளது. மேலும், 1986-87-இல் 4. 60 இலட் சம் கணடி இலக்கு வைக்கப்பட்டுளளது. இதில் 2.8 இலட்சம் கணடி கடல் மீன் உற்பத்தியும், மீதி 1.8 இலட்சம் கணடி உளநாட்டு மீன உறபததியும் ஆகும்.

மேற்கூறிய உற்பத்தி இலக்குகளை அடையப் பல திட்டங்கள் வகுக்கப்பட்டுள்ளன. தமிழ் நாட்டிலுள்ள உள நாட்டு நீர் நிலைகளில் தேவையான மீன குஞ்சு கள இல்லாத காரணத்தால், அவற்றின் உற்பத் தியைப் பெருக்குவதற்குப் பல்வேறு இடங்களில் மீன் வளர்ப்போர் மேம்பாட்டு முகமைகள (Fish Farmers' Development Agencies) ஏற்படுத்தப்பட்டுள்ளன. புதிய தொழில் நுட்ப அடிப்படை மீன் வளர்ப்பு மூலம எளிதாக எக்டேர் ஒன்றுக்கு 1000 கிலோ முதல 3000 கிலோ வரை மீன் உற்பத்தி செய்து உரு. 5000 முதல் உரூ.15000 வரை நிகர இலாபம் பெற முடி யும்.இம் முறை கூட்டு இன மீன் வளர்ப்பு எனக் குறிப் பிடப்படுகின்றது. இதன்படி கட்லா, உரோகு, மிர்கால், சாதாக் கெண்டை, வெள்ளிக் கெண்டை, புல கெணடை போன்றனவாகிய ஆறு இனங்கள கூட்டாக வளர்க்கப்படுகினறன.

உளநாட்டு நீர் நிலைகளில் தீவிர இருப்புச செய் யத் தேவையான, தரமான மீனகுஞ்சுகள கிடைக் காமல் இருப்பது மீன உறபததிக்குத் தடையாக உளளது. நீர் நிலைகளில இருப்புச் செய்ய ஆண டொன்றுக்கு உரூ.350 மிலலியன் குஞ்சுகள தேவைப படுகினறன ஆனால்,உரூ.47.70 மில்லியனமீனகுஞ்சுகள மட்டுமே உற்பத்தி செயயப்படுகின்றன இத்தகைய உற்பத்திக்கும, தேவைக்கும இடையே காணப்படு கினற பெரிய இடைவெளியைக் குறைப்பதற்கு மீன குஞ்சு உற்பத்தியைப்பெருக்க 1987-88 ஆம் ஆணடுத் திட்டம் இன்றியமையாதது.

இயற்கை நீர் நிலைகளிலிருந்து சுமார் 20 மிலலி யன மீன் குஞ்சுகள் சேகரிககப்படுகின்றன. மாறி வரும் பருவ நிலைகள, மறறும் ஆறுகள், நீர்த தேக் கங்களிள் குறைந்த நீர்ப்போககுவரதது ஆகிய காரணஙகளினால் மீன் குஞசுகள இம் முறையில நிறையச் சேகரிக்கப்படுவதற்கு வாய்ப்பில்லை. இத்தகு மாற்று வழியாகத் தூண்டுதல் முறை இனப் பெருக்கம் மூலம் மீன்குஞ்சு உற்பத்தி செய்வதை அதிகரிக்கலாம். சிறிய பொறிப்பகஙகளில் மீன் நாற றஙகால்அமைத்துத தொடர்ந்து விரிவுபடுத்த 1986-87 -ஆம் ஆண்டு இறுதிவரை21 எக்டேர் பரப்பளவுள்ள மீன்குஞசுப்பணணை ஏற்படுத்தப்பட்டுள்ளது.' இதில 11 எகடேர் நிலப்பரப்பில மீனகுஞ்சு வளர்ப்புக் குளஙகளும், 10 எகடோ சிறிய மீன் குளஙகளும அடஙகும்.

தேசிய மீன குஞ்சு உற்பத்தித் திட்டத்தின் கீழப் பவானி சாகர், மணிமுத்தாறு ஆகிய இடங்களில் 10 எக்டேர் நிலபபரப்பில மீன பண்ணைகள அமைத்திட மததிய அரசு ஒப்புதல அளித்துள்ளது. இத்திட்டத்தினால் மீனகுஞ்சு உறபததிப் பணணை யின பரப்பளவு 41 எக்டேர் ஆக உயரும் எனப தோடு, 100 மிலலியன் மீன் குஞசுகள் ஆணடொன் றுக்குக்கூடுதலாகக கிடைககுமஎன்பதுமஎதிர்பார்ககப் படுகிறது. இப் பணணைகளுககாக 1987-88-ஆம் ஆண்டுத திட்டத்தில உரூ. 80·01 இலட்சம் ஒதுக்கீடு செய்யப்பட்டுள்ளது.

தமிழ நாட்டிலுளள பல்வேறு உவர் நீர்ப்பரப்பு களையும் அவற்றின பரப்பளவையும் அதிகரிக்க அரசு சில செயல் திட்டங்களை ஏற்படுத்தியுள்ளது. சிதம் பரத்திற்கு அருகில் உள்ள கிளளையில் உரூ. 15.80 இலட்சம் செலவில் 5 எக்டேர் நிலப்பரப்பில் இறால் பண்ணை; உரூ. 29 இலட்சம் செலவில் தஞ்சாவூரிலுள்ள தொணடிக் காடு என்னுமிடத்தில்

50 எக்டேர் பரப்பில இறால் பண்ணை: இராமநாத புரம் மாவட்டத்தில காரங்காடு எனனுமிடத்தில் 12 எக்டோ பரப்பில் இறால் பணணை; தெனனார்க்காடு மாவட்டத்திலுள்ள நிலங்கரை என்னுமிடத்தில் உரூ. 21 இலட்சம் செலவில இறால குஞ்சுகள் உற்பத்திப் பண்ணை அமைக்கத் திட்டமிடப்பட்டுள்ளது. வறட்சிககு இலக்காகும் பகுதிகளில் மேம்பாட்டுத் திட்டத்தின் கீழ, குறிப்பாக இராமநாதபுரம் மாவட்டத்திலுள்ள அரியாங்குணடு என்னுமிடத்தில் 10 எக்டேர் பரப்பில் இறால் பண்ணை ஒன்று அமைக்க அனுமதி வழங்கப்பட்டுள்ளது மேற கண்ட திட்டங்களின செயற்பாடு வெவ்வேறு நிலைகளிலுள்ளன. பகுதிகளின் மேம்பாட்டுத் திட்டத்தின் கீழ் இந்திய அரசின் 50 விழுக்காடு நிதி உதவியுடன் 200 எக்டேர் பரப்புளள உவர் நீர்ப் பரப்பை மேம பாடு செய்யும் பொருட்டு நுணுக்கமான ஆய்வு ஒன்று மேற்கொள்ளப்படவுள்ளது.

மாநிலத்தில் மீன் குஞ்சுகள உற்பத்தி செய்யப் பல ஆண்டுகளாகப் பயனபடுத்தப்பட்டு வரும் காடா துணியாலான பொறிப்பகம், கணணாடிக் குடுவைப் பொறிப்பகம், மற்றும் சீனப் பொறிப்பகம் ஆகியவை நடைமுறையில் உளளன. இம்மூனறுள்ளும் சீனப் பொறிப்பகம் நல்ல பயனுடையதாக உளளது. மேலும், இது செம்மையாகச் செயற்படுகினறதாகவும், பொருளாதார அடிப்படையில் ஏற்றுக கொள்ளக் கூடியதாகவும் உள்ளது. சாததனூா அணையில் பரிசோதனை முறையில பயனபடுத்தப்பட்ட சீனப் பொறிப்பக முறையில் மீன்குஞ்சுகளின பிழைப்பு விகிதம (Survival Rate) 70 விழுக்காட்டிலிருநது 80 விழுக்காடாக மாறி உள்ளது. இம்முறை ஊககம் ஊட்டுவதாகையால் 3 சீனப் பொறிப்பகஙகள, வட ஆர்க்காடு மாவட்டத்திலுள்ள சாத்தனூர் அணை, கோவை மாவட்டத்திலுளள ஆளியாறு (Aliyar) ஆகிய இடங்களில் அமைக்கப்பட்டுள்ளன.

சிறு மீனவர்களின வருவாயைப் பெருக்கும் நோக்கத்துடன் புதிய மீன பிடி கலனகள, கருவிகள, மேம்பட்ட தொழில் நுட்பத்தைக் கையாளுதல ஆகியவற்றில் 1982-இல் ஏற்படுத்திய வங்காள விரிகுடாத் திட்டம் ஓர் ஊக்குவிக்கும் கருவியாகச் செயலாற்றுகிறது. இத்திட்டம் தொழில் நுட்ப அடிப்படையிலும், இலாபகரமாகவும் இறால் வளர்த்து ஆண்டுக்கு இரண்டு அல்லது மூனறு முறை பயனடைய இயலுமென்பதை மெய்ப்பித்துள்ளது.

விசைப் படகுகள் தீவிரமாக மீன் பிடிப்பதால் இயக்கச் செலவு கூடுவதுடன் கடற்கரை நெடுகிலும் இறாலின் அளவு குறைந்துள்ளது. பருவநிலை வேறுபாடுகள், பல்வேறு இறாலகள கலந்து காணப்படுவது, மீன சரியான அளவு கிடைக்காததால ஏற்படும் சிரமங்கள் போன்றவை மீன் பிடிப்பில் காணப்படும் சிக்கல்களாகும. இதனால, உலக முழுவதும் இறால் வளர்பபிற்கான தொழில் நுட்பததைப் பெரிய அளவில கடைப்பிடிகக வேணடிய நிலை ஏற்பட்டுள்ளது. கழிமுகங்கள, உப்பங்கழிகள் போன்ற இறால் வளர்ப்பிற்கு ஏறறவை எனத் தெரியும் சுமார் 60,000 எக்டேர் பரப்புள்ள மிகப் பெரிய நீர்ப் பரப்புளள இம்மாநிலத்தில், இறால மற்றும் மீன் வளர்பபதற்கான தொழில் நுட்பம் விரைவாகக் கிடைத்து வருகிறது. இவ்வகைத் தொழில் நுட்பத்தை மீனவர்களிடையே பரப்பி உவர் நீர்ப் பரப்புகளில் இறால் உற்பததி செய்யுமாறு அரசு 9 இடங்களில் இறால் விளக்கப் பண்ணைகளை நிறுவியுள்ளது. பட்டுக்கோட்டை மற்றும் இராமநாத புரத்தில் உவர் நீர் அளவை விரிவாக்கப் பிரிவுகள் செயற்பட்டு வருகின்றன.

மீன் வளர்க்கும் தனியார் வருமானத்தைப் பெருககும் பொருட்டு அவர்களுககு மீன குஞ்சு உற பத்திக்கு நிதி ஊக்கத் தொகை அளிக்கப்பட்டு வருகிறது. பொறிப்பகங்கள், மிதவைக் கூடுகள் அமைத்திடத் தனியாருக்கு உரூ.0 91 இலட்சம் உதவித் தொகை 1987-88-ஆம் ஆணடில் வழங்கப்பட உள்ளது. இம முயற்சிகளின விளைவாகத் தரமுளள மீனகுஞ்சுகளின் தேவைக்கும், உறபத்திக்குமிடையே உள்ள இடைவெளியைக் குறைககும் பொருட்டு உரூ. 1.30 இலட்சம் செலவில் மேற்கு வஙகத்திலிருந்து 75 இலட்சம் வலைகளை வாஙகவும, தமிழ் நாடு மீன் வளர்ச்சிக் கழகத்திடமிருநது 2.5 இலட்சம் மீன குஞ்சுகளைக கொள முதல செய்யவும் ஏறபாடு மேற் கொள்ளப்பட்டுள்ளது.

மீன் குஞ்சு உற்பத்தியைப் பெருக்குவதில் போதுமான மீன் நாற்றஙகால்கள இலலாதது பெரும் தடையாக உளளது. மீன நாற்றஙகால்கள் கட்டச் செலவு மிகுதியாகும். ஆகையால், தேவையான இடஙகளில் குழைமக் (Plastic Covers) கூடுகளில் மீன் குஞ்சுகள வளர்ககும் முறை கணடுபிடிக்கப்பட்டுள்ளது இம்முறை பெரிய அளவில் மாநிலம் முழுவதும் விரிவுபடுத்தப்பட்டுள்ளது.

தமிழ நாட்டில் உள நாட்டு மீன் உற்பத்தியைப் பெருக்கும் முனைப்பின் ஒரு பகுதியாகத தென்னார்க் காடு, மதுரை ஆகிய மாவட்டங்களிலுள்ள பொதுப் பணித் துறை, வருவாய்த்துறை ஆகியவறறைச் சேர்ந்த பெரிய, சிறிய நீர்ப் பாசன நீர்ப் பரப்புகளில் தீவிர மீன் வளர்ப்புக்கும், மீன் பிடிப்பிற்கும் ஏற்ற வகையில் திட்டமொனறு 1984-ஆம ஆணடிலிருந்து செயற்பட்டு வருகிறது. இத்திட்டம் தென்னாககாடு

மாவட்டத்தில் 20,000 எக்டேரிலும், மதுரைமாவட்டத்தில 10,000 எக்டேரிலும் தீவிர மீன்குஞ்சு இருப்பு வைத்து அப் பகுதியிலுள்ள மீனவர் கூட்டுறவுச் சங்கங்களின் உதவியுடன் மீன்பிடித்து, அவற்றை அச்சங்கங்களுக்குப் பகிர்ந்தளித்துச் செயற்படுகிறது.

மைய அரசு உதவித் திட்டத்தின் கீழ்த் தஞ்சை, திருச்சி, தருமபுரி, தென்னார்க்காடு, செங்கற்பட்டு, பெரியார், காமராசர் மாவட்டங்களில் மீன் வளர்ப்போர் மேம்பாட்டு முகமைகள் நிறுவப்பட்டுள்ளன. இம் முகமைகளின் சில்லறைச் செலவினங்கள் நீங்கலாகப் பிற செலவினஙகளை மைய அரசும், மாநில அரசும் சமமாகப்பகிர்ந்துகொள்கின்றன. இது தவிர, தமிழ்நாடு அரசின் முழுச் செலவில் திருநெல்வேலி, வடஆர்க்காடு, புதுக்கோட்டை,கன்னியாகுமரி ஆகிய மாவட்டங்களிலும் மீன் வளர்ப்போர் மேம்பாட்டு முகமைகள் அமைக்கப்பட்டன.

இத்திட்டத்தின் கீழ் ஊராட்சித் துறைகளைச சார்ந்த குளம், குட்டைகளை நீண்ட காலக் குத்தகைக்கு எடுத்து, மீன் வளர்ப்போருக்கு மேல்வரம்பாக 10 ஆண்டுகளுக்குக் குத்தகைக்கு விடப்படுகின்றன. தேர்ந்தெடுக்கப்பட்ட மீன் வளர்ப்போருக்குக் கலப்பின மீன் வளர்ப்பில் பயிற்சியளிக்கப்படுகிறது. குளங்களைச் செப்பனிடவும், தேர்வு செய்த மீன் குஞ்சு வகைகளை வாங்கவும், கடன் மற்றும் மானியமாகப் பொருளுதவி கிடைக்கவும் வகைசெய்யப்படுகிறது.

மைய அரசின் உதவித் திட்டத்தின் கீழ் அரசு, அண்ணா மாவட்டத்தில் முகமை ஒன்றைத் தொடஙகத் திட்டமிட்டுளளது. இம் முகமையை அடிப்படையாகக் கொண்டு மேற்குத் தொடர்ச்சி மலை, வறட்சி இடங்கள் போனற பகுதிகளில் மீன்உற்பத்திப் பெருக்க மேம்பாட்டிற்கான திட்டஙகள் வரையறுக்கப்பட்டுள்ளன.

தமிழ் நாட்டில் மீன் வளம் மட்டுமன்றி, சஙகு, முத்துக் குளித்தல்போன்றவையும்நடைபெறுகின்றன. சங்கு எடுப்பதில் தமிழ்நாடு முதன்மை இடத்தைப் பெற்றிருக்கிறது. திருநெல்வேலி, இராமநாதபுரம் மாவட்டங்களில சங்கு வளம் மிகுதியாக உள்ளது. இதற்கு 1986-87-ஆம் ஆண்டு நிதி ஒதுக்கீடு உரூ.48.53 இலட்சமாகும். கடலில் எடுக்கப்பட வேண்டிய சஙகுகளின் எண்ணிக்கை 8,00,000.

முத்துக குளித்தல் 1961-இல் நடைபெற்றது. மன்னார்வளைகுடாப் பகுதியில் கிடைக்கக்கூடிய இயற்கை முத்துகளின் அளவைக் குறிக்க இயலாது. மாநில அரசு மத்திய கடல் வள ஆராய்ச்சி நிறுவனத்துடன் இணைந்து (Central Marine Fisheries Research Institute) 1973-ஆம் ஆண்டில் சப்பானிய செயற்கை முத்து உற்பத்தியைத் தூத்துக்குடிக்கு அருகில் உள்ள வேப்பலோடையில் தொடங்கியுள்ளது. இந்த முன்னோடித் திட்டம் 1981-82-ஆம் ஆணடில் ரூ. 4.58 இலட்சம் முதலீட்டில் ஐந்து ஆணடுகள் இடைவெளியில் வாணிப நோக்குடன் செயற்படுத்துவதற்கு முயற்சிகள் எடுக்கப்பட்டுள்ளன.

தமிழ்நாட்டில் மீன் விற்பனை பெரும்பாலும் தனியார் துறையிலேயே நடைபெறுகின்றது. கடல் மீனவர் கூட்டுறவுச் சங்கஙகள், விற்பனைக் கூடஙகள போன்றவை நன்கு செயற்படாத காரணத்தினால் தமிழ்நாடு மீன்வள வளர்ச்சிக் கழகம், சென்னை, கோயம்புத்தூர், மதுரை, பெரியார் போன்ற மாவட்டங்களில் விற்பனை மையஙகள் அமைத்து, அவற்றின் மூலம உள்நாட்டில் தரமான மீன் நியாய விலையில பொது மக்களுக்குக் கிடைக்கும்படி செய்துள்ளது.

மாநிலத்தின் மீன் பிடித் துறைமுகங்களிலிருந்து (சென்னை, தூத்துக்குடி, நாகப்பட்டினம்) பதப் படுத்திய மீன் இனங்கள் (கட்லா, சுறா போனறவை) இரால் போன்றவை ஏற்றுமதி செய்யப்படுகின்றன. இதனால 1986-87 நிதி ஆணடில் மேற்கூறிய விற்பனையின் மூலம் உரு. 5.10 இலட்சம் வருவாய் கிடைத்துள்ளது. கடல மீனஏற்றுமதியின பெரும்பகுதி சப்பான், அமெரிக்கா, குவையத்து, பிரான்சு, பிரிட்டன், ஆசுத்திரேலியா, சிஙகப்பூர் போன்ற இடங்களுக்குச் செல்லுகின்றன. காணக: தமிழ்நாடு மீன வளர்ப்புக் கழகம். க.சொ.

**துணை நூல்கள்:**

**Dutt and Sundaram**, Indian Economy, Sultan Chand & Co., Delhi, 1987.

**Mamohia, C.B.**, Agricultural Problems of India, Kitab Mahal, Allahabad, 1985.

**தமிழ்நாடு மீன் வளர்ப்புக் கழகம்**: மீன் பிடிப்பு, மீன் ஆராய்ச்சி, மீனவர் மறுவாழ்வு, சமுதாயப் பொருளாதார மேம்பாட்டுத் திட்டங்கள் போன்றவற்றை மாநில மீன் வளர்ச்சித் துறை செயற்படுத்துகின்றது. வணிக நோக்குடைய மீன துறையில் திட்டங்களைச் செயற்படுத்தும் நோக்குடன் 1974-இல் தமிழ்நாடு மீன் வளர்ச்சிக் கழகம் (TamilNadu Fisheries Corporation) நிறுவப்பட்டது. இதற்கு 1986-இல் வரையறுக்கப்பட்ட மூலதனம் உரு 500 இலட்சமும், செலுத்தப்பட்ட மூலதனம் உரு 282.57 இலட்சமும் ஆகும். தமிழக அரசு, மீன்

வளர்ப்புக் கழகத்திற்குத் தொடர்ந்து ஆதரவு தந்து மீன் வளர்ச்சி, மீனவர் மேம்பாட்டுத் திட்டங்களைச் செயறபடுத்த மானியங்களும், கடன் தொகையும் கொடுத்து உதவுகின்றது. அரசு மீன் துறை 1907 முதல் உள்நாட்டு,கடல்மீன் உறபத்தியை மேம்படுத்து வதில் செயற்படுகின்றது. தொடக்கத்திலிருந்தே இத்துறை மீன் வளர்ச்சிக்கான ஆராய்ச்சி, மீன வளர்சசி போன்ற முயற்சிகளில் ஈடுபட்டு வருகின்றது.

தமிழநாடு மீன் வளர்ப்புக் கழகம், முழு நேர இயக்குநரைத் தலைவராகக் கொணடு ஒரு அரசாங்க அமைப்புக்குள செயற்படுகின்றது. இவருடைய பணி களில் துணையாக இணை இயக்குநர்களும், மாவட்ட அளவில் பல துணை இயககுநர்களும் நியமிக்கப்பட் டுளளனர். இக்கழகம கீழ்க்கணட குறிக்கோள்களை மையமாகக் கொணடு செயற்பட்டு வருகினறது: 1. ஆழ்கடல் மீன்பிடிப்பு, நாவாய்கள், சிறிய மீன்பிடி படகுகள், விசைப் படகுகள முதலியனவற்றை மேம படுத்துதல்; 2. உள்நாட்டு மீன்வளர்ப்பும், மீன் பிடிப்பும், 3. கொளமுதல், பதனிடுதல் மற்றும் மொத்த சில்லறை விற்பனையை மேற்கொள்ளுதல; 4. பிராந்தியக் கடலிலும், தூரக் கடலிலும் பலதரப் பட்ட தளவாடஙகளைக் கொணடு மீன் பிடித்தல்; 5. மீன் பிடிப்பு அலலது மீன் வளர்ப்புப் பணிக்கு ஏற்ற எல்லாவிதமான உதவிகளையும், பணிகளை யும் அளித்தல்.

தஞசை, நெல்லை ஆகிய இடங்களில் 1986-87-இல் ஆழ்கடல் மீன் பிடிப்பு தொடரப்பட்டு, அவற் றின மூலம் நல்ல வருவாயும் ஈட்டப்பட்டுள்ளது. மெக்சிகோ நாவாய்களுடன் 1987-88-ஆம் ஆணடில் விசாகப்பட்டினத்திற்கப்பால் உள்ள கடலில் தொடர்ந்து மீன்பிடிப்பு நடைபெறும். கருநாடக மாநில மீன் வளாச்சிக் கழக்கத்தின் கூட்டு முயற்சி யுடன் மங்களூர்க் கடலுக்கப்பால மீன்பிடிப்பில் ஈடு பட்டிருந்த ஆறு பாரசீகப் படகுகள் செனனை, மண் டபம், மற்றும் கன்னியாகுமரி ஆகிய தமிழ்நாட்டுக் கரையிலிருந்து இயங்கக் கொண்டு வரப்பட்டுள்ளன.

**மீன்குஞ்சுகள உற்பத்தியும், உள்நாட்டு நீர்த் தேக்கங்களின் நிருவாகமும்:** தமிழ்நாட்டில் 11 நீர் நிலைகளில், தமிழ்நாட்டு மீன் வளர்ச்சிக் கழகம் மீன் வளத்தைப் பெருக்கி அருகிலுள்ள நகரஙகளில் தர மான மீன் கிடைப்பதற்கு ஏற்பாடு செய்கிறது. இந் நீர் நிலைகளிலுள்ள மீன்பண்ணைகள் ஆண்டுதோறும் சுமார் 9 மில்லியன் தரமான மீன் குஞ்சுகளை உற் பத்தி செய்கினறன. சாத்தனூரில் சீனப் பொறிப்பக முறையில் மீன் குஞ்சுகள் உற்பத்தி வெற்றிகரமாக நிறைவேறியது. சோதனை முறையில் மிதக்கும் கூடு களில் மீன் குஞ்சுகளை உற்பத்தி செய்யும் தொழில நுணுக்கம் தேசீய வேளாண்மை வங்கியின் முழு உதவியுடன் சீராக்கப்பட்டது.

**மீன் பதப்படுத்தும் நிலையம் மற்றும் எரி யெண்ணை விற்பனை நிலையம்:** மீனவர்கள கரை யிறக்கிய மீனுக்கு நல்ல விலை கிடைப்பதற்காகப் பனிக்கட்டி உற்பத்தி, குளிர்பதன நிலையங்கள் முக்கிய பங்கேற்கின்றன. சென்னை, நாகப்பட்டினம் மதுரை, தூத்துக்குடி, மணடபம் ஆகிய இடஙகளில் மீனவர்களின் தேவையை இந்நிலையங்கள நிறைவு செய்கின்றன மணடபததிலுள்ள பதப்படுத்தும் நிலையமும், எண்ணூரிலுள்ள உறையவைப்பு நிலைய மும் தொடர்நது குத்தகை அடிப்படையில் இயங்கி வருகின்றன.

**மீன்பிடி வலை தயாரிக்கும் தொழிற்கூடம்:** மீன வளத்தை உயர்நத பட்ச அளவுக்குப் பெருக்குவதில் தரமான மீன்பிடி வலை இன்றியமையாததாகும். சப் பானிய நிதியுதவி உரு. 70 இலட்சம், மாநில அரசின் உதவி உரு 20 இலட்சம் ஆகியவற்றுடன் சென்னை யிலுள்ள இராயபுரத்தில 54 கணடி (Tonne) மீன் பிடி வலை தயாரிககும் திறன் கொணட ஒரு மீன் பிடி வலை பின்னும் கூடத்தையும் 1986-இல் கழகம் நிறுவியுள்ளது. இப்பிரிவு 1986 செப்டம் பரில் நடைமுறை உற்பத்தியைத் தொடஙகியது இதுவரை உரு. 19.2 இலட்சம் மதிப்புள்ள 19 கணடி எடையுள்ள 'செயற்கை இழை' (Nylon) வலைகளை உற்பத்தி செய்துளளது.

**மீன் விற்பனை:** மீனவர்கள பிடித்து வருகின்ற மீனை நல்ல முறையில் விநியோகம் செய்யும் பொருட்டுக் கழகம் நேரடியாக மீன் விற்பனையில ஒத்துழைப்பைத தருகிறது. மீனவர்களுககு நல்ல விலை கிடைக்கச் செய்வது, நுகர்வோருக்கு நியாயமான விலையில் தரமான மீன கிடைககச் செய்வது ஆகிய இரண்டு குறிக்கோளகளை அடைய மேற்கண்ட வசதிகளைக் கழகம் ஏற்படுத்தியுள்ளது. உள் நாட்டு நீர்த் தேக் கங்களில் பிடிககப்படும் மீன், கடல் மீன் உற்பத்தி ஆகி யவை தவிர மீனவர்கள் கரையிறக்கிய மீனுககு நியாயமான விலை கிடைக்கச் செய்து மீன் விற பனைககுப் போதுமான மீனைக் கொளமுதல் செய்து இருப்பில் கொளளவும், கழகம் வெளிச சந்தையிலும் மீன் கொளமுதல செய்து இருப்பில்கொள ளவும், முயற்சி செய்கிறது. தமிழ நாட்டில் சென்னை முதலிய நகரங்களில நிறுவியுள்ள 39 மீன் விற்பனை நிலையங்களின் வழியாக இக்-கழகம் தரமான மீன்களை நியாயமான விலையில் வழங்குவதன் மூலம் பொதுமக்களின் தேவையை நிறைவு செய்கிறது.

**மீன் வளம் பெருக்குத் திட்டம்:** தமிழ் நாட்டில் மீன் வளம் பெருக்கும் திட்டங்களைச் செயற்படுத்த ஏழாவது திட்ட முதலீடான உரூ. 2400 இலட்சத்தில் முதலிரண்டு ஆண்டுகளில் பல்வேறு மீன் வளர்ச்சித் திட்டங்களைச் செயலாக்க முயற்சிகள் மேற்கொள்ளப்பட்டு, 1987-88-ஆம் ஆண்டுத் திட்டத்தில் உரூ. 671 இலட்சம் செலவிடத் திட்டமிடப்பட்டுள்ளது. இதில் உரூ. 59.19இலட்சம புதிய திட்டங்களைச் செயலாக்க ஒதுக்கப்பட்டுள்ளது. மீதித் தொகை இப்போது செயற்படுத்தப்படும் திட்டங்களுக்காகும்.

ஏழாவது ஐந்தாண்டுத் திட்டத்தின் குறிக்கோளைச் செயற்படுத்தும் முகமாக நாட்டுப் படகுகளை இயந்திர மயமாக்குதல், விசைப் படகுகள், ஆழ் கடல் மீன்பிடி படகுகளை அறிமுகப்படுத்துதல், புதிய மீன்பிடி கருவிகளை அறிமுகப்படுத்துதல், புதிய மீன்பிடி துறைமுகம் அமைத்தல் போன்ற அடிப்படை வசதிகளை ஏற்படுத்துவது ஆகியவற்றின் மூலம் கடல் மீன் உற்பத்தியை அதிகரிப்பதற்கு முயற்சிகள் எடுக்கப்பட்டுள்ளன.

இந்தத் திட்டக் காலத்தில் 1985-87-ஆம் ஆண்டில், 20 கரையேற்றும் படகுகள் வழங்கப்பட்டுள்ளன. இன்னும் 40 கரையேற்றக் கூடிய படகுகள் வாங்க முடிவு செய்யப்பட்டுள்ளது. இத்திட்டத்தின் கீழ்ப் படகின் 20 விழுக்காடு விலையை அரசு மானியமாக ஏற்றுக் கொள்கின்றது. 20 விழுக்காடு மீனவரால் செலுத்தப்பட வேண்டும். மீதியான 60 விழுக்காடு வங்கிகளிடமிருந்து கடனாக மீனவர் பெற வேண்டும். நீண்ட இடைவெளிக்குப் பின்னர் மீனவர்களுக்கு விசைப் படகுகள் வழங்கும் திட்டம் நடப்பு ஆண்டில் மீண்டும் புதுப்பிக்கப்படவுள்ளது. தொடக்கத்தில் 1987-88-இல 50 மரத்திலான விசைப் படகுகள் வழங்கத் திட்டமிடப்பட்டு,படகின் விலையை மேற்கூறிய முறைப்படி பெற்றுக் கொள்ள வழி செய்யப்பட்டுள்ளது.

தமிழ் நாட்டில் மொத்தக் கடல் மீன் உற்பத்தியில் ஏறக்குறைய 70 விழுக்காடு மீனைத் தொன்று தொட்டுப் பயன்படுத்தப்படும் 38000 நாட்டுப் படகுகளும், வள்ளங்களும், கட்டுமரங்களும் ஈட்டி உள்ளன. பெரும்பான்மையான மீனவர்களுக்குச் சொந்தமாகப் படகுகள் இல்லை. அவர்கள் படகுதாரர்களிடமிருந்து பிடித்த மீனைப் பங்கிட்டுக் கொள்ளும் முறையில் படகுகளைப் பெறுகின்றனர்.இதன்படி படகு உரிமைதாரர்கள் பிடிக்கப்பட்ட மீனில் பெரும் பகுதியை எடுத்துக்கொள்வதால் கிடைக்கப் பெற்ற வருவாயில் ஒரு பகுதியே மீனவர்களுக்குக் கிடைக்கின்றது. இக் குறையைப் போக்குவதற்குப் புதிய திட்டம் ஒன்று 1986-88 ஆம் ஆண்டில் செயற்பட உள்ளது. அதன்படி நாட்டுப் படகுதாரர்கள் உரூ.15000 விலையில் கட்டு மரம் வாங்குவதற்கு நிதியுதவி வழங்குவதற்கு வழி ஏற்பட்டுள்ளது. இதில் 20 விழுக்காடு வரை அரசு மானிய உதவித் தொகையாகவும், பயன்பெறும் மீனவர்கள் தங்களின் பங்காக உரூ 3000-ம்,மீதியுள்ள உரூ.9000 அரசுடைமை வங்கிகளிடமிருந்து கடனாகவும் பெறப்படும். மேலும் மீனவர்களுக்கு 170 படகுகள் வாங்குவதற்கான மானியமாக உரூ 5.10 இலட்சம் 1987-88-ஆம் ஆண்டில் செலவிட முடிவு செய்யப்பட்டுள்ளது.

இயக்கச் செலவினைக் குறைக்கவும், உற்பத்தியைப் பெருக்கவும் வழி செய்யும் பல வகையான படகுகள் அறிமுகப்படுத்தப்பட்டுள்ளன. படகுகள் கட்டுவதற்குத் தேவைப்படும் மரங்கள் கிடைப்பது அரிதாகவும், விலைகூடுதலாகவும் இருப்பதால், மற்றப் பொருள்களாலான கண்ணாடி இழைப் படகுகள், 'சிமெண்டு'ப்படகுகளைப் பயனபடுத்த மீனவர்கள் ஊக்குவிக்கப்படுகிறார்கள். 4 கண்ணாடியிழைப்படகுகளும், 3 இரும்புச் சிமெண்டு (Ferro Cement) படகுகளும் உரூ.25.40 இலட்சம் செலவில 1987-88 -ஆம் ஆண்டில அறிமுகப்படுத்தத் தீர்மானிக்கப்பட்டுள்ளது. இதில் 20 விழுக்காடு தொகையான உரூ. 508 இலட்சம் மானிய உதவியாக வழங்கவும், இதில பயன்பெறும் மீனவர்கள் 20 விழுக்காடு செலவுத் தொகையை ஏற்கவும் மீதியான 60 விழுக்காடு வங்கிகளிடமிருந்து கடனாகப் பெறவும் வகை செய்யப்பட்டிருக்கிறது.

நாட்டுப் படகுகளின் உட்புறத்திலும வெளிப்புறத்திலும் இயந்திரங்களைப் பொருத்தி அவற்றை இயந்திரமயமாக்கும் திட்டம் 6வது ஐந்தாண்டுத் திட்டத்திலிருந்து செயற்பட்டு வருகிறது. ஏழாவது ஐந்தாணடுத் திட்டத்தின் முதலிரணடு ஆணடுகளில 400 உட்புறம் அல்லது வெளிப்புறம் பொருத்தக் கூடிய இயந்திரங்களை மீனதுறை வழஙகியுள்ளது. இத்திட்டம் நிறைவேற 1987-88-ஆம் ஆண்டில் 200 இயந்திரங்கள பொருத்தக்கூடிய படகுகள் வாஙகுவதற்கு உரூ. 5 இலட்சம் ஒதுக்கீடு செய்யப்பட்டுள்ளது. ஏழாவது திட்டக்காலத்தில் 1200 நாட்டுப் படகுகளை இயந்திரமயமாக்க அரசு இலக்கு வைத்துள்ளது. இவ்வாறு பலதரப்பட்ட படகுகளை வழஙகுதன் மூலம் கடல்மீன் உற்பத்தி வருடத்திற்கு 1000 கண்டி அதிகரிக்கும் எனறு எதிர் பார்க்கப்படுகிறது.

இத் திட்டத்தின் கீழ்க்கடனாகவும்,மானிய அடிப்படையிலும் ஒவ்வொரு ஆண்டும் உரூ.8 இலட்சம மதிப்புள்ள செயற்கை இழை (Nylon) வலையை அளிக்க வகை செய்யப்பட்டுள்ளது. தவணை முறையிலும் வழங்க வகையுள்ளது. 1000 கி மீ. நீளமுள்ள கடற்கரைப் பகுதி கொணட தமிழ்நாட்டில் உள்ள 343 மீன் இறஙகு தளங்களில் 4000-க்கும் மேற்பட்ட வெவ்வேறு வகையான விசைப் படகுகளமீன் பிடிப்

புத் தொழிலில் ஈடுபட்டுள்ளன. இப்படகுகள் மீனை இறக்கவும், எரி பொருள் மற்றும் பனிக்கட்டியை ஏற்றிக் கொள்ளவும், பாதகமான பருவ காலங்களிலும் பத்திரமாகக் கரையில் வைக்கவும் தங்கு தள வசதிகள் தேவைப்படுகின்றன. இதைத் தவிர விற்பனை மையங்களுக்குச் செல்லும் வகையில் பிடித்த மீனைப் பாதுகாத்திடவும், படகுகளைப் பழுதுபார்க்கவும், மீனை ஏலமிடவும் கரையில் வசதிகள் தேவைப்படுகின்றன. மேற் கூறிய தேவைகளை நிறைவு செய்ய மத்திய அரசின் நிதி உதவியுடன் பல இடங்களில் பெரிய மீன்பிடி துறைமுகங்கள் சிறு தங்குதளங்கள் உரு. 1590.78 இலட்சம் செலவில் கட்டப்பட்டுள்ளன.

செங்கற்பட்டு மாவட்டத்திலுள்ள மாமல்லபுரம் தென்னார்க்காடு மாவட்டத்திலுள்ள பரங்கிப் பேட்டை, இராமநாதபுரம் மாவட்டத்திலுள்ள பாம்பன், மூக்கையூர், கன்னியாகுமரியிலுள்ள குளச்சல், தேங்காபட்டினம் ஆகிய இடங்களில் தங்கு தளங்களும் சிறிய அளவில் கரையோர வசதிகள் அமைப்பதற்கான வசதிகளும் செய்து தர முயற்சிகள் எடுக்கப்பட்டு வருகின்றன.

நாட்டுப் படகுதாரர்களின் தேவையை நிறைவு செய்யும் பொருட்டுத் தஞ்சாவூரிலுள்ள பழையாறு, இராமநாதபுரத்தில் தொண்டி, வாலி நோக்கம், ஏர்வாடி போன்ற இடங்களிலும், கன்னியாகுமரியில் முட்டத்திலும் இணைப்புச் சாலைகள், தங்குதளம், பழுது பார்க்கும் வசதிகள், பதனிடும் கூடங்கள், ஏலமிடும் இடம் வலை பின்னும் கூடம் போன்ற இன்றியமையாத வசதிகள் ஏற்படுத்தப்பட்டு வருகின்றன. மேற் கூறிய அடிப்படை வசதிகள் தவிர மீன்பிடி படகுகள் இரவு நேரங்களில் கடலில் மூழ்கியிருக்கும் பவளப் பாறைகளில் மோதிச் சேதமடையாமல் இருக்கவும், பத்திரமாகக் கரை வந்து சேரவும், வழிகாட்டி விளக்குகள் (Lighthouse) ஒரு முக்கியமான கரையோர வசதியாகும். இதுவரை அரசு 55 இடங்களில் வழிகாட்டி விளக்குகள அமைத்திட உரூ.15.88 இலட்சம் செலவிட உத்தேசித்துள்ளது. சென்னை, கடலூர், மல்லிப் பட்டினம், இராமேசுவரம், கன்னியாகுமரி ஆகிய் 9 இடங்களிலுள்ள அளவை நிலையங்கள், நல்ல மீன் கிடைக்குமிடங்களை அறிந்து மீன பிடி கருவிகளைச் சரியாகவும், பயனளிக்கும் விதத்திலும் பயன்படுத்த உதவுகின்றன. மேலும், சென்னை, கடலூர், நாகப் பட்டினம், மண்டபம், தூத்துக்குடி, குளச்சல் ஆகிய இடங்களில் இயங்கி வரும் மீனவர் பயிற்சி நிலையஙகள மீன்பிடி படகுகளை இயக்குதல், மற்றும் அவற்றின் பராமரிப்புக்குப் பயிற்சி பெற்ற மீனவர்கள் கிடைக்கச் செய்தல் ஆகிய வாய்ப்புகளை அளிக்கின்றன.

**மீனவர் கூட்டுறவுச் சங்கங்கள்:** மீனவர்களின் சமூக, பொருளாதார நிலையை உயர்த்துவதில் மீனவர் கூட்டுறவுச் சங்கங்கள் தொடர்ந்து பெரும் பங்கேற்கின்றன. கூட்டுறவுச் சங்கங்கள் மீனவர்களுக்குக் கடன் வழங்குதல், மீன்பிடி சாதனங்களையும், கருவிகளையும் அளித்தல் பிடித்த மீனை விற்பனை செய்தல் ஆகிய பணிகளை மேற்கொள்ளுகிறது. மீனவர்களின் பொருளாதார வளர்ச்சிக்குக் கடன், உள்ளீடு மற்றும் விற்பனை ஆகியவை இந்தக் கூட்டுறவுகளில் ஒருங்கிணைக்கப்படுகின்றன. தமிழ் நாட்டில் 1986இல் 601 மீனவர் கூட்டுறவுச் சங்கங்கள் செயற்பட்டன. இச்சங்கங்களுக்கு அரசு, மானியம், மூலதனக் கடன், நடைமுறை மூலதனக்கடன், மேலாண்மை ஆகிய வகைகளில் உதவி புரிகிறது. இச்சங்கங்களின் மூலம் விசைப் படகுகள், சாதாரணப் படகுகள் வழங்க, 1978-79-ஆம் ஆண்டு முதல் தேசிய கூட்டுறவு வளர்ச்சி நிறுவனம் உதவி புரிந்து வருகிறது.

**மீனவர் நலத் திட்டங்கள்:** மீனவர் கிராமங்களில் வீட்டு வசதி, சாலை, குடிநீர், ஏலக்கூடம், வலை பின்னும் கூடம், மீன் இறக்கும் மேடைகள், பதனிடும் இடங்கள் போன்ற இன்றியமையாத வசதிகளை வழங்க மாநிலங்களுக்குத் தேசிய கழகத்தின் கீழ் நிதியுதவி வழங்க மைய அரசு முன்வந்துள்ளது. இத் திட்டத்தைச் செயற்படுத்துவதற்கான மொத்தச் செலவுத் தொகையை, மாநில அரசு, மத்திய அரசு ஆகிய ஒவ்வொன்றும் 50 விழுக்காடு வீதத்தில் ஏற்றுக் கொள்ள வேண்டும் என இந்திய அரசு வற்புறுத்தியுள்ளது.

பிடித்து வரும் மீன்களை அருகிலுள்ள பதனிடும் நிலையங்களுக்கு விரைவில் எடுத்துச் செல்ல வசதியான போக்குவரத்து மற்றும் தகவல் தொடர்பு போன்ற வசதிகளை கூட்டுறவுச் சங்கஙகள் ஏற்று நடத்துகின்றன. கடலரிப்பினைத் தடுக்க உரூ.113 இலட்சம் ஒதுக்கீடு செய்யப்பட்டுள்ளது.

கடலரிப்புத் தடுப்புப் பணியைப் பொதுப் பணித் துறையிலிருந்து மீன் துறைக்கு 1986-87 ஆம் ஆண்டில் மாற்றுவது குறித்து அரசு எணணி வருகின்றது.

மீன் பிடி நடவடிக்கைகளை ஒழுங்குபடுத்தவும் விசைப்படகு, நாட்டுப் படகு மீன்பிடிகாரர்களிடையே இணக்கமான செயற்பாடுகளை உறுதிப் படுத்தவும் 1983-ஆம் ஆண்டு 'தமிழ் நாடு கடல் மீன்பிடித்தல் ஒழுங்கு படுத்தும் சட்டம்' செயற் படுத்தப்பட்டது. உள்நாட்டு மீன் பிடிப்பைப் பொறுத்தவரை பெரிய நீர்த் தேக்கங்கள், குளங்கள் ஆகியவற்றின் உரிமம், குத்தகை முறைகளில் மீனவர் கூட்டுறவுச் சங்கங்களின் உறுப்பினர்களுக்கும், உள்

ளூர் மீனவர்களுக்கும் வழங்க முடிவு எடுக்கப்பட்டுள்ளது.

தமிழ் நாடு மீன் வளர்ச்சிக் கழகத்தின செயற்பாட்டினை விரிவுபடுத்தும் நோக்குடன் அதிக முன னேற்றமடைந்த தொழில நிறுவனஙகளுடன சேர்ந்து தமிழ நாடு முத்து தனி நிறுவனம் (Pearl Private Unit), தமிழ்நாடு ஆழ்கடல் தனி நிறுவனம் (Tamil Nadu Marine Plast Ltd.) போனறவை நிறுவப்பட்டுள்ளன தென் கடல் உணவு நிறுவனம் (Southern Sea Food Limited) என்ற நிறுவனத்துடன் சோந்து வாணிக அடிப்படையில் ஓர் உவர் நீா மீன பண்ணையைத் தஞசை மாவடடத்தில் நிறுவ அரசு முடிவு செய்துள்ளது நாகப்பட்டினத்திற்கு அருகில் வேட்டககாரன் இருப்பு என்னுமிடத்தில் ஒரு புதிய குஞ்சு பொறிப்பகத்துடன் கூடிய இறால மீன் பண ணையை நிறுவ 200 எக்டேர் நிலம் தேர்வு செய்யப் பட்டுள்ளது. காண்க. தமிழ்நாடு மீன்வளம். க.சொ.

**தமிழ்நாடு வேளாண்மைப் பல்கலைக் கழகம்,** கோயம்புத்தூரில் 1971-ஆம் ஆணடு நிறுவப் பட்டது. இதன் நோக்கங்கள் முப்படித்தானவை: 1) வேளாணமையியலிலும் அதனைச் சார்ந்த அறிவிய லிலும் கலவி வழஙகுதல, 2) இத்துறைகளில் மேலும உயர்கல்வி அளித்து ஆராயச்சிக்கு வழிகோலுதல், 3) வேளாணமை சார்ந்த அறிவினைக் கூட்டுறவு முதலான பிற தொடர்புடைய அரசுத் துறைகளுக் கும் விவசாயிகளுக்கும் விரிவாக்கக் கல்வியாக வழஙகு தல். இமமூன்று நோக்கஙகளையும் ஒருஙகிணைநத முறையில் செயற்படுத்த வேணடி இப் பல்கலைக் கழகத்தின் ஆளுகை (Jurisdiction) தமிழகம் முழு வதையும் கொணடுள்ளது.

இப் பல்கலைக்கழகம் கி.பி. 1876-ஆம ஆணடு சைதாப்பேட்டையில் தொடஙகப்பட்ட விவசாயக் குழந்தைகள பளளியிலிருந்து வளர்ந்ததாகும். இது 1907-இல் கோயம்புத்தூருககு மாற்றப்பட்டுக் கல லூரியாக வளர்ச்சியடைந்தது. இன்று இப் பல்கலைக கழகத்தில ஐந்து உறுப்பு நிறுவனஙகள் (Constituent Institutions) உளளன. அவற்றுள் தலையாய நிறு வனம் கோயம்புத்தூரிலுள்ள வேளாணமைக் கல லூரி மற்றும் ஆய்வு நிறுவனம் ஆகும். இஙகுத்தான் பலகலைக்கழக மைய வளாகம் உள்ளது. இநநிறு வனம் வேளாண்மைக் கல்வி வழஙகுவதில் நாட்டில முன்மாதிரி நிறுவனமாக அமைககப்பட்டுளளது.

இரணடாம் உறுப்பு நிறுவனம் மதுரையிலுள்ள வேளாண்மைக் கலலூரி மற்றும் ஆராய்ச்சி நிறுவனம் ஆகும். இந்நிறுவனம் 1965-இல் தொடஙகப்பட்ட போது முதலில் மதுரைப் பல்கலைக்கழகத்தில இணைக்கப்பட்டுப் பின் மாற்றப்பட்டது. மூன்றாம் உறுப்பு நிறுவனம் வேளாணமைப் பொறியியற் கலலூரி. இது கோயம்புததூரில 1972-இல் தொடங் கப்பட்டது. தென்னிநதியாவில் இவ்வகைக கல்லூரி திறக்கப்படுவது இதுவே முதல முறை சென்னையி லுளள கால்நடை மருத்துவக கலலூரி நான்காம் உறுப்புக் கல்லூரியாகும் இக்கலலூரி 1976-இல் இணைககப்பட்டது. தூத்துககுடியிலுள்ள மீன்வளக் கல்லூரி ஐந்தாம் உறுப்பு நிறுவனமாகும்.

இப் பல்கலைக்கழகத்தில் பல புலஙகள் இயஙகுகின்றன. அவை, வேளாண பொறி யியல், வேளாணமையியல, மீனவள அறிவியல, காலநடை மருத்துவவியல முதலானவையாகும. கோயம்புத்தூர், மதுரை ஆகிய இடஙகளிலுளள வேளாணமைக் கல்லூரி மற்றும ஆராயச்சி நிறுவனங களில் வேளாணமைத் தாவரவியல, வேளாணமைப் பொருளியல், வேளாண விரிவாக்கப் பணி, உழவியல் (Agronomy), கால்நடை மருத்துவம், உயிா வேதி யியல், உயிரியல, பயிர் உடலியல (Crop Physiology), பூச்சியியல் (Entomology), பூ வளர்பபியல் (Floriculture), உணவும் ஊட்ட உணவும, நூற் புழுவியல (Nematology), காயகறியியல, பயிர் நோயியல, பழ வியல (Pomology), விதைத தொழிலநுட்பம், மண அறிவியலும் வேதியியலும, நறுமணப் பயிர்கள், தோட்டக் கலையியல் முதலான துறைகள உள்ளன. இப்பாடஙகளில மாணவாகள பயின்று இளம் அறி வியல், முது அறிவியல் பட்டஙகளையும் ஆராய்சசிப் பட்டங்களையும் பெறலாம் இப பலகலைக் கழகத திலபுகுமுகப் படிபபு (P.U.C.) இல்லை.

தூத்துககுடியிலுளள மீன்வளக் கலலூரியில மீன் வளாபபியல், மீனவளச சூழலியல், மீனவள உயிரியல், மீன்வளத் தொழில்நுட்பம், மொழியும் அடிபபடை அறிவியல்களும் முதலான துறைகள செயறபடுகின றன. சென்னைக கால்நடை மருததுவக் கலலூரியில உடற்கூறியல், விலங்கின மரபியல, ஒட்டுணணியியல் (Parasitology), காலநடை அறுவையியல், கோழியின வியல், பாலவள அறிவியல், தடுப்பு மருததுவம முத லான பல துறைகளில சிறபபுக் கலவி பெற வசதி யுணடு.

தமிழநாடு வேளாணமைப் பல்கலைக் கழகம் பல் வேறு துறைகளில ஆய்வினை மேறகொள்ளத் தமிழ நாடு முழுவதும் சற்றேறக்குறைய 60 ஆய்வு மையங களை ஏறபடுததிப் பல ஆய்வுகளை நடத்தி வரு கிறது அதோடு வேளாணமை மறறும் ஊரக வளர்சசி ஆய்வு மையம் ஒனறை நிறுவி விவசாயிகளின் சிக்கல களை ஆராய்ந்து அவர்களுககு உதவுவதோடு போதிய பயிற்சியும் அளித்துவருகிறது.

சென்னையிலுள்ள கால்நடை மருத்துவக கல் லூரியில் சிறநத கால்நடை மருத்துவமனையும் ஆய்வுக்கூடஙகளும உள்ளன. இவவாறே பிற உறுபபு

நிறுவனங்களிலும் ஆய்வுக்குத் தேவையான அளவு சோதனைக்கூடங்கள் உள்ளன. ஒவ்வொர் உறுப்பு நிறுவனத்திலும் சிறந்த நூலகம் உள்ளது சி.ப.

**தமிழ் நாவலர் சரிதை:** இந்நூல் சேர, சோழ, பாணடிய மன்னர்கள் உள்ளிட்ட 51 புலவர் களின பாடற்றொகுப்பாக விளங்குகிறது. இந்நூலுள் 270 பாடல்கள் உளளன. இறையனார் என்ற புலவர் தொடங்கி அந்தகக்கவி வீரராகவ முதலியார் வரை பல்வேறு புலவாகளின் பாடல்கள், அவர்களது வரலாறறை ஓரளவு அறிந்துகொள்ளும் வகையில் இதில் தொகுத்துத் தரப்பட்டுள்ளன. இதன் காரணமாகவே இந்நூலுக்குத் 'தமிழ் நாவலர் சரிதை' என்று பெயரிட்டிருககலாம் என எணணத் தோன்றுகிறது. கம்பர், ஒட்டக்கூத்தர், புகழேந்தி, காளமேகப் புலவர் முதலியோரின் பாடல்களும் இந் நூலுள் தொகுக்கப்பட்டிருப்பது குறிப்பிடத்தக்க செய்தியாகும். மேலும், முன்னரே புறநானூற்றில் தொகுக்கப்பட்டுளள கபிலர், கோவூர்கிழார், ஔவையார், சாத்தந்தையார் ஆகியோர் பாடல் களும் இத்தொகுப்பில இடம் பெற்றுள்ளன. 'இந்நூலுள சொல்லப்படும் புலவர் வரலாறுகள் இக்காலத்துப் பயின்றுவரும் வரலாற்றோடு எவ்வளவோ மாறுபடுகின்றன' என்று இந்நூலுக்கு முகவுரை எழுதிய திரிகோணமலை த. கனக சுந்தரம்பிள்ளை கூறியிருக்கிறார். இந்நூலாசிரியர் சங்கப்புலவர் இறையனார் தொடங்கி, எந்த குறிப் பிட்ட முறையையும் பின்பற்றாமல் தம் விருப்பதிற் கிணங்கப் புலவர்களை வரிசைப்படுத்தி இந்நூலில் தொகுத்திருப்பது போல் தோன்றுகிறது. புலவர் பெயர் தெரியாத பாடல்களும் இத்தொகுப்பில் இடம் பெற்றன. இந்நூலைத் தொகுத்தவர் பெயர் தெரியவில்லை. கி.பி.16-ஆம் நூற்றாண்டுப் புலவர் பாடல்களை இந்நூலாசிரியர் தொகுததிருப் பதால் அவரை அக்காலத்திற்குப் பிற்பட்டவர் என்று கூறுவர். காப்புச் செய்யுள் சைவச் சார்புடையதாக இருப்பதாலும் இறையனார், முருகவேள் முதலா னோர் பாடல்களை முதலில தொகுத்திருப்பதாலும், இந்நூலாசிரியர் சைவச் சமயத்தைச் சார்ந்தவரா யிருக்கலாம் என்ற கருத்தும் உண்டு

இந்நூல் ஔவை. சு. துரைசாமிப் பிள்ளையவர் களால செம்பதிப்பாக 1949-ஆம் ஆணடு சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகத்தால் வெளியிடப் பட்டுளளது. ச.செ.

**தமிழ்நெறி விளக்கம்:** அகப்பொருள் இலக் கணமுணர்த்தும் நூல்களுள் இதுவுமொன்று. அகப் பொருள இலக்கணம் கூறும் 25 நூற்பாக்களே இந் நூலுள் இடம் பெற்றுள. இந்நூல் 25-ஆம் சூத்திர உரையின் பிற்பகுதி கிடைக்கவில்லை. இந்நூலின் காலம் கி.பி.12-ஆம் நூற்றாணடென்பர். இந்நூலின் ஆசிரியர் பெயரும் வரலாறும் கிடைக்கவில்லை. குறிஞ்சிப்பாட்டின் அடிக்குறிப்புத்தான் முதலில் 'தமிழ்' என்ற சொல்லை 'அகப்பொருள்' என்ற பொருளில் குறித்ததாகும். அதைப்போன்றே அகப் பொருளைத் 'தமிழ்நெறி' என விளக்கும் நிலை இறைய னார் அகப்பொருள் போன்ற இலக்கண நூல்களிலும் காணப்படுகிறது. அந்த அடிப்படையில் அகப் பொருள் இலக்கணம் கூறும் இந்நூலுக்குத் 'தமிழ்நெறி விளக்கம்' என்று பெயரிட்டிருக்கலாம் என்று தோனறுகிறது. 'விளக்கம்' என்று முடியுமாறு நூலுக்குப் பெயரிடுவது பழைய மரபுகளுள் ஒன்று ஆகும். (எ-டு: இலக்கண விளக்கம், தொன்னூல விளக்கம், நீதிநெறி விளக்கம்). இந்நூல் ஐந்திலக் கணமும் அமைந்த முழுநூலாக விளங்கியிருக்க வேண்டும் என்பதும், இந்நூலையும் உரையையும் ஓராசிரியரே எழுதியிருக்க வேண்டும் என்பதும் இந் நூலைப் பதிப்பித்த டாக்டர் உ. வே. சாமிநாதையர் அவர்களின் கருத்தாகும். இந்நூல் பொருளியலை அகம், புறம், அகப்புறம் என மூன்றாகப் பகுத்துக் கூறி, பின் அகப்பொருளின் வகையாகிய முதல், கரு உரி என்னும் மூன்று பொருள்களையும் விளக்கு கிறது. இந்நூலில் இடம் பெறும் பெரும்பானமை யான நூற்பாக்கள களவு கற்புத் தொடர்பான செய்திகளையே விளக்கி நிற்கின்றன. ச.செ.

**தமிழ்ப் பல்கலைக் கழகம்:** இந்தியத் தமிழரும், அயல்நாட்டுத் தமிழரும், ஆய்வறிஞரும் பயன் பெறும் பொருட்டு 1981-ஆம் ஆண்டு செப்டம்பர்த் திங்கள் 15-ஆம் நாள் தஞ்சாவூரில், தமிழகத்தின் ஒன்பதாம் பல்கலைக் கழகமாகத் தமிழப் பல்கலைக் கழகம் தமிழக முதல்வர் டாக்டர் எம். ஜி. இராமச்சநதிரன் அவர்களால் தோற்றுவிக்கப் பட்டது. மொழிக்கென ஒரு பல்கலைக கழகம் எனற புதிய கொள்கை இப்பல்கலைக் கழகம் நிறுவப்பட்ட தன மூலம் முதன் முதலாகத் தோற்றுவிக்கப்பட்டது. பிற பல்கலைக்கழகங்களினின்றும் தமிழ்ப் பல்கலைக் கழகம் பல கோணங்களில் வேறுபட்டுள்ளது. இதற்கு ஏற்பிசைவு (Affiliation) பெற்ற கல்லூரிகள் இல்லை. இது பலவேறு துறைகளிலும் ஆராய்ச்சி, களஆய்வு வழியே கல்வி மேம்பாட்டுக்காகவும், ஆராய்ச்சி ஆகியவற்றிற்காகவும் பாடுபடக்கூடிய உயர்நிலைக் கல்வி மையமாகும்.

தஞ்சாவூர்-திருச்சி சாலையில் தஞ்சாவூரிலிருந்து 7 கி மீ. தொலைவில் வல்லம் அருகில் 1000 ஏக்கர் பரப்பில தமிழ்ப் பல்கலைக் கழகத்தின் வளாகம் அமைநதுள்ளது. இங்கு இந்திய நாடாளுமன்றக் கட்டிட அமைப்பில் நூலகமும், அதனைச் சுற்றி



தமிழ்ப் பல்கலைக்கழக நூலகம்



தமிழ்ப் பல்கலைக்கழக நூலக உள்வாயில்

'தமிழ்நாடு' என்பதன் எழுத்துகளின் வடிவில் ஐந்து புலக் கட்டிடங்களும் உருவாக்கப்பட்டு வருகின்றன.

**குறிக்கோள்:** 'உள்ளுவதெல்லாம் உயர்வுள்ளல்' என்னும் தொடரைத் தமிழ்ப் பகல்லைக்கழகம் உயர் குறிக்கோளாகக் (Motto) கொணடுள்ளது. இப்பல்கலைக் கழகம் தமிழ்மொழி, இலக்கியம் ஆகியவற்றில் உயராய்வு செய்யும் மையமாகச் செயற்படுதல்; மேலும் இவற்றைக் கற்க விரும்பும் இந்தியருககும், அயல்நாட்டவருக்கும் பயிற்சி அளித்தல்; கலை, இசை, நாடகம், ஓவியம், சிற்பம், கட்டிடக் கலை, இலக்கணம், மொழியியல், வரலாறு, சமயம், தத்துவம், நிலவியல், வானியல், கடலியல், சித்த மருத்துவல், பொறியியல், கைத்தொழில் ஆகியவற்றில உயராய்வுக்கு வழிவகுத்தல்; ஓலைச் சுவடிகளையும், அரிய கையெழுத்துச சுவடிகளையும் பாதுகாத்து அவற்றைப் பிற மொழிகளிலும் மொழி பெயர்த்தல்; பிறமொழி நூல்களைத் தமிழிலும், தமிழ் நூல்களைப் பிற மொழிகளிலும் மொழி பெயர்ததல்; தமிழரின் மொழி, இலக்கியம், பண்பாடு, வரலாறு, ஆகியவை தொடர்பான கல்வெட்டுகளைத் தேடிக் கணடுபிடித்து அவற்றைத் தொகுத்து, ஆயவு செய்து முடிவுகளை வெளியிடல்; தமிழ நாட்டிலும், இந்தியாவிலும், அயல்நாடுகளிலும் வாழும் தமிழர் களிடையே வழக்கில் நிலவும் சொற்கள, தொடர்கள், திரிபுகள ஆகியவற்றைத் தொகுத்துப் பதிப்பித்தல், அறிவியல் வளர்ச்சியின் அடிப்படையில் தமிழ்மொழி, பண்டைய இலககியம் ஆகியவற்றில் ஆயவு செய்தல்; வளர்ந்த நாடுகளின் கலவி வளர்ச்சிற்கேற்பத் தமிழ் மொழி, இலக்கியத்தை வளப்படுத்தத் தேவையான வழிமுறைகளை ஆய்வு செய்து உரிய முடிவுகள் மேற் கொளளல்; இந்தியாவின் பிற பண்பாடுகள தொடர் பாகத் தமிழ் மொழி, இலக்கியத்தில் ஆய்வு செய் தல்; தமிழ மொழி, இலக்கியம் ஆகியவற்றின் வளர்ச்சிப் போக்குகள் குறித்த ஆழமான அறிவைப் பெறத்தக்க வகையில உயர் கலவியையும், உயர் ஆய்வையும் நிறுவுதல் ஆகியவற்றைத் தமிழ்ப் பல்கலைக் கழகம் குறிக்கோளாகக்கொணடுள்ளது.

**புலங்களும், துறைகளும்:** தமிழ்ப் பல்கலைக் கழகத்தில் கலைப்புலம், சுவடிப்புலம், வளாதமிழ்ப் புலம், மொழிப்புலம், அறிவியல் புலம் என்னும் 5 புலங்கள் உள்ளன.

கலைப்புலத்தில், சிற்பத்துறை, ஓவியத் துறை, இசைத் துறை, நாடகத் துறை ஆகிய நான்கு துறை களும், சுவடிப்புலத்தில் ஓலைச் சுவடித் துறை, அரிய கையெழுத்துச் சுவடித் துறை, கல்வெட்டுத் துறை, நீரகழாய்வுத் துறை ஆகிய நான்கு துறைகளும், வளர்தமிழ்ப் புலத்தில் அயல் நாட்டுத் தமிழ்க்கல்வித் துறை, மொழிபெயர்ப்புத் துறை, தொகுப்பியல் துறை, சமூகவியல், ஊரக வளர்ச்சித் துறை ஆகிய நான்கு துறைகளும், மொழிப் புலத்தில் இலக்கியத் துறை, மொழியியல் துறை, தத்துவத் துறை, மலை யின மக்கள் ஆய்வுத் துறை ஆகிய நான்கு துறை களும், அறிவியல் புலத்தில் சித்த மருத்துவத் துறை, தொல் அறிவியல் துறை, தொல் தொழில் துறை, கட்டிடக் கலைத் துறை ஆகிய நான்கு துறைகளும் உள்ளன.

**ஆய்வுப்பணி:** முனைவர் பட்டம் பெற்ற ஆராய்ச்சி யாளர்கள் இங்கு முதுமுனைவர் (D. Litt./D.sc.) பட்டத்திற்கு ஆராய்ச்சி செய்வதற்கு அனுமதிக்கப் படுகின்றனர். தமிழ்ப் பல்கலைக் கழகத்தின் ஆய்வுப் பணி மொழியின் தேவையையும், ஆராய்ச்சியாளர் களின் திறமையையும் பொறுத்தே அமைந்துள்ளது. பண்டைய இலக்கியங்கள், ஓவியங்கள், இசை, நாடகம், கிராமியக் கலைகள், கி.பி.18-19-ஆம் நூற் றாண்டுகளில் தமிழநாட்டின் சமூகப் பொருளாதார நிலை பற்றிய மராட்டிய மோடி ஆவணங்கள், மராட்டியச் செப்பேடுகள் கூறும் வரலாறு, தென் ஆப்பிரிக்கத் தமிழர்களின் வாழ்க்கை நிலை, சித்த மருத்துவம், கப்பல் கட்டுதல், கடற்பயணம் முதலான தலைப்புகளில் ஆய்வும், தமிழிலிருந்து பிற மொழி களுக்கும், பிற மொழிகளிலிருந்து தமிழுக்கும் மொழி பெயர்ப்புகளும், பேரகராதி களஞ்சியங்கள் ஆகிய தொகுப்புகளும் பல்கலைக் கழகத்தின் பணிகளில் சில வாகும்.

தமிழக ஆசிரியர்களுக்கும, தமிழ்-திராவிட மொழிகளின ஆய்வாளர்களுக்கும் குறுகிய கால ஆய்வு மானியம் வழங்கி அவர்களை ஆய்வில் ஈடு படுத்தும் திட்டத்தையும் தமிழ்ப் பல்கலைக் கழகம் செயற்படுத்தியுளளது இத்திட்டத்தின் மூலம் நலல பல ஆய்வு நூல்கள் வெளிவந்துள்ளன. தமிழ்ப் பல் கழகம் தமிழ்நாட்டிலுள்ள ஆய்வாளர்களுக்கும் வசதி களைச் செய்து தருகிறது. அயல்நாட்டு ஆய்வாளர் கள் செருமனி, போலந்து, சுவிட்சர்லாந்து, சீனா, இலங்கை போன்ற நாடுகளிலிருந்து வந்து ஆய்வுப் பணி செய்துள்ளனர். ஒருசில சிறப்புத் தகைமைகள் மேல்நாடுகளிலுள்ள புகழ்பெற்ற அறிஞர்களுக்கு வழங்கப்பட்டுள்ளன.

**ஆய்வு மையங்கள்:** தமிழ்ப் பல்கலைக் கழகம் சில துறைகளை உயர் ஆய்வு மையங்களாக்கி அவற்றைத் தஞ்சையிலும், பிற இடங்களிலும் நிறுவியுள்ளது. நீரகழாய்வு மையம் மண்டபத்திலும், மலையின மக்கள் ஆய்வு மையம் உதகமண்டலத்திலும், தத்துவ மையம் காஞ்சிபுரத்திலும் செயற்பட்டு வருகின்றன. பேரகராதித் துறை, வாழ்வியல் களஞ்சிய மையம், அறிவியல் களஞ்சிய மையம் ஆகியவை (முன்னர்ச்

சென்னையில் நிறுவப்பட்டு இருந்தன) தஞ்சை யிலேயே இயங்கி வருகின்றன.

**நீரகழாய்வு மையம்:** மண்டபத்திலுள்ள நீரகழாய்வு மையம் மூன்று குறிக்கோள்களுடன் செயற்பட்டு வருகிறது: தமிழ்நாட்டுக் கடல் மற்றும் ஆற்றுப் படுகைகளில் ஆய்வுக்கான வாய்ப்பினைக் கண்டறிதல்; கடலடியிலிருந்து தொல் பொருள்களை மீட்டுக்கொண்டு வந்து மூழ்கிய துறைமுகங்களை அடையாளங் காணுதல்; அகழாய்வில் கிடைத்த பொருள்களை ஆய்வு செய்தல். இம்மையத்தில ஏறத்தாழ நூற்றுக்கும் மேற்பட்ட கப்பல், படகு முதலியவற்றின் பகுதிகள சேகரிக்கப்பட்டுக் காட்சிப்படுத்தப்பட்டுள்ளன.

**மலைவாழ் மக்கள் ஆய்வு மையம்:** உதகமண்டலத்தில் அமைந்துள்ள மலைவாழ் மக்கள் ஆய்வு மையம் தமிழ் நாட்டுப் பழங்குடிகள் பற்றிப் பல்வேறு சூழ்நிலைகளில் ஆய்வு செய்து, அறிக்கைகள் உருவாக்கி, அவர்களுடைய எதிர்கால நலன்களுக்காகத் திட்டமிட்டு வருகிறது. இம்மையத்தின் குறிக்கோள்கள மலைவாழ் மக்களின் பண்பாடு பற்றி ஆய்வு செய்வதும், வளர்ச்சித் திட்டங்களை மறு ஆய்வு செய்வதும், இதில் ஈடுபடும் அரசு அலுவலர்களுக்குப் பயிற்சியளிப்பதுமாகும். இங்கு மானிடவியல், சமூகவியல், மொழியியல், பொருளியல், நாட்டுப்புறக்கலை, அளவீட்டியல் முதலான பல்வேறு துறைகளில் ஆய்வுகள் மேற்கொள்ளப்பட்டு வருகின்றன.

**தத்துவ மையம்:** காஞ்சிபுரத்திலுள்ள தத்துவ மையம் வேதகால இந்து மதம், சைவ சித்தாந்தம், வைணவம், கிறித்தவம் ஆகிய துறைகளில் ஆய்வு நடத்தி வருகிறது. பன்னாட்டுக் கருத்தரங்குகள் பலவற்றை நடத்துவதோடு தமிழ்நாட்டுக் கோயில்கள் குறித்த ஒரு கோயிற்களஞ்சியமும் இம்மையத்தால் உருவாக்கப்பட்டு வருகிறது.

**கணிப்பொறி மையம்:** தமிழ்ப் பல்கலைக்கழகத்தின் கணிப்பொறி மையம் விரைந்த தானியங்கி மொழி பெயர்ப்புக்கு, உருசிய மொழியிலிருந்து தமிழிலும், தமிழிலிருந்து உருசிய மொழியிலும் மொழி பெயர்ப்புக்கு முயற்சிகள் மேற்கொண்டுள்ளது. கணிப்பொறி வழியே, ஆங்கிலம், தமிழ், மலையாளம், வங்காளம் போன்ற மொழிகளில் எழுத்து வரிவடிவ மாற்று முறையில் வெற்றி காணப்பட்டுள்ளது. இந்திய மொழிகளின் பல்வேறு எழுத்து வரிவடிவ மாற்று முறைகளையும் ஒலிப்பு முறைகளையும் படிக்கவும், ஒப்பிட்டுப் பார்க்கவும், நுணுகி ஆராயவும் இந்நுட்பம் பயன்படுவதாகும்.

**பேரகராதித் துறை, களஞ்சிய மையம்:** தமிழ்ப் பேரகராதித் துறை புதிய பேரகராதி ஒன்றை 10 தொகுதிகளில் கொணடு வருவதில் ஈடுபட்டுள்ளது. வாழ்வியல் களஞ்சியமையம் தமிழில் வாழ்வியல் களஞ்சியத்தை 14 தொகுதிகளில் கொண்டு வருவதற்குப் பாடுபட்டு வருகின்றது. அறிவியல் களஞ்சிய மையம், 20 தொகுதிகளில் அறிவியல் களஞ்சியத்தைத் தயாரிக்கும் பணியில ஈடுபட்டுள்ளது. தனித்தமிழ் அகராதி ஒன்றும் தனியாகத் தயாரிக்கப்பட்டுவருகிறது. சங்க இலக்கியப் பொருட்களஞ்சியம் ஒன்றும் உருவாகியுள்ளது. இம்மையங்கள் அனைத்தும் தஞ்சையில் செயற்பட்டு வருகின்றன.

**அருங்காட்சியகம்** தமிழ்ப் பல்கலைக் கழகத்தில் அருங்காட்சியகம் ஒன்று சிறப்பாக நடத்தப்பட்டு வருகிறது. இங்குத் தமிழர் நாகரிகத்தைக் காட்டும் பல்வேறு பழமையான அரிய பொருள்களும் காட்சிப் படுத்தப்பட்டுள்ளன.

**ஆய்விதழ்கள்:** தமிழ்ப் பல்கலைக் கழகம் இரண்டு முத்திங்கள் இதழ்களை (Quarterly) வெளியிடுகிறது. 'தமிழ்க்கலை' என்ற தமிழ் இதழும், 'தமிழ் நாகரிகம்' (Tamil Civilization) என்ற ஆங்கில இதழும் ஆய்வு வெளியீடுகளாகும். இவற்றுடன் செய்தி மலர்கள் தமிழில் ஒன்றும் ஆங்கிலத்தில் ஒன்றுமாகத் திங்கள்தோறும் வெளியிடப்பட்டு வருகின்றன.

**மாமன்னர் இராசராச சோழன் பரிசு:** தமிழில பல்வேறு தலைப்புகளில் வெளியாகும் சிறந்த நூல்களுக்கு ஆண்டுதோறும் நூலொன்றுக்கு உரூ. 5000 வீதம் பத்துப் பரிசுகளைத் தமிழ்ப் பல்கலைக்கழகம் வழங்கி வருகிறது. மேலும், இந்திய மொழிகளில் சிறந்த நூல்களுக்கு ஞானபீடம் உயர்ந்த பரிசளிப்பதைப் போன்று, தமிழ் மொழியிலும் சிறந்த நூல்களுக்குப் பரிசு அளித்து ஊக்குவிக்க வேண்டுமென்ற நோக்கத்துடன் மாமன்னன இராசராசன் பெயரில் ஆண்டுதோறும் சிறந்த தமிழ் நூலாசிரியருக்கு ஓர் இலட்ச உரூபாவைத் தமிழ்ப் பல்கலைக் கழகம் பரிசாக அளித்துப் பெருமைப் படுத்துகிறது. இத்துடன் பல்வேறு அறக்கட்டளைகளும், கட்டில்களும் நிறுவப்பட்டுச் சொற்பொழிவுகளும், ஆய்வுப்பணிகளும் மேற்கொள்ளப்பட்டு வருகின்றன.

**செயலாண்மை அமைப்பு:** தமிழ்ப் பல்கலைக்கழகத்தின் வேந்தராகத் தமிழக அரசின் ஆளுநரும இணைவேந்தராகக் கல்வி அமைச்சரும் செயறபட்டு வருகின்றனர். தமிழ்ப் பல்கலைக்கழகத்தின் நிருவாகத்தைத் துணைவேந்தர் தலைமையிலான ஆட்சிக் குழு கவனித்து வருகிறது. அலுவல் சாரா உறுப்பினர்களின் பதவிக்காலம் மூன்றாண்டுகளாகும். தமிழ்ப்பல்கலைக் கழகத்தின் நடவடிக்கைகளை நெறிப்படுத்து

வதற்குப் பேரவை ஒன்று உள்ளது. இது ஆண்டுக்கு இரு முறை கூடிக் கடந்த காலச் சாதனைகளையும் எதிர்காலத் திட்டங்களையும் சீர்தூக்கல் செய்யும்.

தமிழ்ப் பல்கலைக் கழகத்தின் முதல் துணைவேந்தர் மொழியியல் வல்லுநரான முனைவர் வ.அய். சுப்பிரமணியம் அவர்களாவார். இரண்டாம் துணை வேந்தராக 1986-திசம்பரிலிருந்து மொழியியல் பேரா சிரியரான முனைவர் ச. அகத்தியலிங்கம் பொறுப் பேற்றுள்ளார். இரா.சு.

**தமிழ் முத்தரையர் கோவை:** இந்நூல் பெயரளவில் மட்டுமே விளங்கும் ஒரு நூலாகும். இன்றளவும் இந்நூல் கிடைக்கவில்லை. இந்நூல் யாப்பருங்கலநூலின் தொண்ணூற்று ஐந்தாம் நூற்பாவுரையில் எடுத்துக் காட்டப்பட்டுள்ளது. இவ் வுரையில் சந்தமும் தாண்டகமும் இவ்வாறிருக்க வேண்டுமெனக் கூறிய உரையாசிரியர், 'குமர சேனாசிரியா கோவையும், தமிழ் முத்தரையர் கோவையும், யாப்பருங்கலக்காரிகையும் போன்ற சந்தத்தால் வருவன' எனக்கூறுமிடத்து இந் நூலையும் எடுத்துக்காட்டியிருக்கிறார். ச.செ

**தமிழ் வளர்ச்சிக் கழகம், சென்னை:** தமிழன்பர் பலர் துணையுடன் 1946-இல் அந்நாளைய கல்வி அமைச்சர் தி.சு. அவினாசிலிங்கம் அவர்கள் சென்னையில் 'தமிழ் வளர்ச்சிக் கழகம்' என்னும் அமைப்பைத் தோற்றுவித்தார்.

**நோக்கம்:** தமிழ் மொழி பண்டைச் சிறப்புகளு டன் இக்கால வாழ்க்கைக்கு வேண்டிய பிற பண்பு களையும் பெற்றுச் சிறக்கச் செய்தலே நோக்கமாக இக்கழகம் தோற்றுவிக்கப்பட்டது.

**பணிகள்:** இக்கழகம் மேற்கொண்ட இன்றியமை யாத பணிகள் மூன்றாகும். அவையாவன: 1) தமிழில் 'கலைக் களஞ்சியம்' தயாரித்து வெளியிடுதல், 2) ஆண்டுதோறும் தமிழ் வழங்கும் பெருநகர்களில் தமிழ்விழா நடாத்துதல், 3) தமிழில் வெளியாகும் பல்துறை நூல்களுக்குப் பரிசு வழங்குதல்.

மேற்கண்ட மூன்று பணிகளையும் தமிழ் வளர்ச் சிக் கழகம் செவ்வனே நிறைவேற்றியது.

**களஞ்சியப் பணி:** சுதந்திரத் திருநாளன்று (15.8.1947) அன்றைய கல்வியமைச்சர் திரு. அவினாசி லிங்கம் செட்டியார் அவர்கள், ஆங்கிலத்தில் உள்ள 'என்சைக்ளோபீடியா' போன்று தமிழில் கலைக் களஞ்சியம் தயாரிக்கும் பணியை மக்களுக்கு அறிவித் தார். தமிழ் நெஞ்சங்கள் ஆர்வத்துடன் வரவேற்றன. சென்னைப் பல்கலைக்கழகத்தில் 24.10.1947 விசய தசமியன்று அலுவலகம் அமைக்கப் பெற்றுக் களஞ்சியப் பணி தொடங்கியது. இத்தொகுப்புப் பணி யின் தலைமைப் பதிப்பாசிரியராகப் பெ. தூரன் அவர்கள் பொறுப்பேற்றார்.

ஒவ்வொரு தொகுதியும் பல்பல விளக்கப் படங் கள், வண்ணப் படங்கள், புகைப்படங்கள், தேசப்படங் கள் ஆகியவற்றுடன் 750 பக்கங்களைக் கொண்ட தாகப் பத்துத் தொகுதிகள வெளியிடத் திட்டமிடப் பெற்றது. அதன்படி, முதல் தொகுதி 1954-ஆம ஆண்டு வெளிவந்தது. பத்தாம் தொகுதி 1968-இல முற்றுப் பெற்றது. இவற்றோடு குழந்தைகளுக்கான கலைக்களஞ்சியமும் தொகுக்கப் பெற்றது.

**விழாப் பணி:** தமிழ் வளர்ச்சிக் கழகத்தின முதல விழா மதுரையில் நடைபெற்றது. அவ்விழாவில இலக்கியச் சொற்பொழிவுகளோடு அறிவியல சொற் பொழிவுகளும் இடம்பெற்றன. அதனைத தொடர்ந்து திருவாரூர், கோயம்புத்தூர், யாழப்பாணம், சென்னை, தில்லி ஆகிய இடங்களில தமிழ விழாக்கள நடைபெற்றன. அனைத்து விழாக்களிலும் அறிவியல தமிழுக்குச சிறப்புத் தனமை அளிக்கபபட்டது. அதன பின், பிற ஊர்களில விழா எடுப்பது நின்றது. சென்னையிலேயே பரிசளிப்பு விழா மட்டும் நடை பெற்றது.

**பரிசளிப்புப் பணி:** தமிழ் மொழியில் ஆண்டு தோறும் வெளியாகும் பலதுறை நூலகளும ஆராயப் பெற்று, ஒவ்வொரு துறையிலும சிறந்ததாகத தேர்வு செய்யப்படும் நூல்களுக்குப் பரிசுகள் வழங்கப் பட்டன. தொடக்கத்தில் பரிசுக்குரிய துறைகள் பன்னிரண்டாகப் பிரிக்கப்பட்டன. முதல் ஆறு பிரிவு களுக்கு ஓராண்டிலும், அடுத்த ஆறனுககு மறு ஆண்டிலும் பரிசுகள அளிக்கப்பெற்றன. தேர்ந்தெடுக் கப்படும் நூலுக்கு உரூபாய்500/- பரிசளிககப்பட்டது.

பரிசளிப்புப் பணியைத் தமிழக அரசின் தமிழ் வளர்சசி மன்றம் 1961-முதல் ஏற்றது. ஆண்டிற்குப் பத்துத் தலைப்புகள் வீதம் பரிசுபெறும் துறைகள இருபதாக விரிந்தன. முதற் பரிசு உரூபாய்.1,000/- என உயர்த்தப்பட்டு, உரூபாய்.500/- இரண்டாம் பரிசாக வழங்கப்பட்டது.

**பரிசுக்குரிய பகுதிகளாவன:** 1. கவிதை - இசைப் பாடல 2. புதினம், 3. ஆராய்ச்சி - மொழி - இலக் கியம், 4. சிறுவர் இலககியம், 5. மானிடவியல் - சமுகவியல் - பூகோளம் - அரசியல் - சட்டம், 6. பொருளாதாரம் - வணிகவியல், 7. கணிதம் - வானவியல், 8. பொறியியல் - தொழில் நுட்பவியல 9. மருத்துவம் - உடலியல் - உணவியல் - ஆரோக் கியம் -சுகாதாரம். 10. தத்துவம் - சமயம் - தருக்கம்

- அறிவியல், 11. சிறுகதை, 12. நாடகம். 13. அழகுக் கலைகள், 14. கட்டுரை - வாழ்க்கை வரலாறு - தன்வரலாறு - பயணநூல், 15. தாவரவியல் - விலங்கியல் - புவியியல் - உயிரியல் - நாட்டியல், 16. பௌதிகம் - வேதியல், 17. கல்வி - உளவியல், 18.வரலாறு - தொல்பொருளியல், 19. விவசாயம் - கால்நடை வளர்ப்பு - கால்நடை மருத்துவம். 20. சிறப்புப் பதிப்புகள்.

கலைஞர் மு. கருணாநிதி அவர்கள் 1972 ஆம் ஆண்டு தொடங்கி, முதற் பரிசு உரூபா 2,000/- ஆகவும், இரண்டாம் பரிசு உரூபா 1,000/- ஆகவும் உயர்த்தினார். மேலும், பரிசுக்குரிய துறைகள் 21 ஆக விரிந்தன.

**தேர்வு செய்யும் முறை:** தகுதியுடைய நூல்களை அனுப்புமாறு நாளிதழ்களில் வேண்டப்படும். அச்சடித்த நூல்கள் மட்டுமே ஏற்கப்படும். தொடர்ந்த இரு ஆண்டுகளில் வெளிவந்த நூல்களே தேர்வுக்கு உரியனவாக ஏற்கப்படும். பிறமொழி பெயர்ப்பு நூல்கள் ஏற்கப்படுவதில்லை. மன்ற உறுப்பினருள் மூவர் போட்டி நடத்தும் நிலைக்குழு உறுப்பினராகத் தேர்ந்தெடுக்கப்படுவர். இக்குழு ஒவ்வொரு துறையிலும் வெளிவந்த நூல்களைத் தேர்ந்து மதிப்பிடத் தனித்தனியே மூன்று நடுவர்களை நியமிக்கும் அவர்கள் அளிக்கும் மதிப்பெண்க்ளைக் கூட்டி முதலிரு மதிப்பெண்களுக்குரிய நூல்களுக்குப் பரிசளிக்கப் பெறும். பரிசு பெறுவோர் சென்னை வந்து செல்ல முதல் வகுப்பு இரயில் கட்டணம் பயணப்படியாக அளிக்கப் பெறும். வெளிநாட்டு ஆசிரியரெனில், சான்றிதழ் மட்டுமே அளிக்கப் பெறும். இப்பரிசளிப்புப் பணி இடையிடையே சில ஆண்டுகள் நடைபெறாமல் அடுத்தடுத்த ஆணடுகளில் சேர்த்தும் வழங்கப்பட்டுள்ளது.

மேலும், சிறந்த வரைவுகள், குறிப்புகள் எழுதும் அரசுப் பணியாளர்களுக்கு உரூபா 500/-,300/-,200/- என மூன்று பரிசுகளும், சிறந்தமுறையில் தமிழை ஆளும் துறையின் தலைமை அலுவலகத்திற்குத் சான்றிதழும் வழங்கப் பெறுகின்றன.

நன்முறையில் இயங்கிய இக்கழகம் 1975-இல் மூடப்பெற்று, இதன் பணியைத் தமிழக அரசின் தமிழ் வளர்ச்சித் துறை ஏற்றுக் கொண்டு இப்போது செயற்பட்டு வருகின்றது.

தமிழ்நாட்டில் காங்கிரசு அரசாங்கத்தின் கல்வியமைச்சர் சி. சுப்பிரமணியம் அவர்களால் நிறுவப் பெற்ற 'தமிழ் வளர்ச்சி ஆராய்ச்சிக் கழகம்' தி.மு.க. ஆட்சிக் காலத்தில் 'தமிழ் வளர்ச்சித் துறை' யாக மாற்றம் பெற்றது. இத்துறை ஆண்டுதோறும் சனவரித் திங்களில் திருவள்ளுவர் விழாவையும், மார்ச்சுத் திங்களில் கம்பன் விழாவையும் நடத்துகின்றது. இத்துறையின் சார்பில் முப்பெரும் விருதுகள் ஆண்டு தோறும் வழங்கப் பெறுகின்றன. அவற்றுள், 'பாவேந்தர் பாரதிதாசன் விருது' ஆண்டுதோறும் சிறந்த கவிஞருக்கு வழங்கப்படுகிறது. உரூபா 10,000/;4 சவரன் பொற்பதக்கம் ஆகியன பரிசாக வழங்கப் பெறும். அடுத்துத் தமிழ்ப் பெரியார் திரு.வி.க. விருது ஆண்டுதோறும் சிறந்த எழுத்தாளருக்கு வழங்கப்படுகிறது. இவ்விருது பெறுவோர்க்கு உரூபா 10,000/- வழங்கப்படுகிறது. மூன்றாவதாக, அறிஞர் அண்ணாவின் கொள்கை நெறி நிற்பவர், நிலை நிறுத்துபவர், பரப்புநர், ஆய்வாளர் என்னும் நான்கு வகையானும் தகுதி பெறும் ஒருவருக்கு, அறிஞர் அண்ணா விருது வழங்கப்பெறுகிறது. தங்கப்பதக்கம் பரிசு வழங்கப் பெறும் இவ்விருதினை 1985-இல் பெற்றவர் மறைந்த முன்னாள் முதல்வர் டாக்டர் எம்.ஜி இராமச்சந்திரன் ஆவார்.

தமிழ் வளர்ச்சித் துறையின் சார்பில் 1980-ஆம் ஆண்டு முதல் சிறந்த நூல்களை வெளியிட நிதியுதவி செய்யப்படுகிறது. 1,000 படிகளுக்கு ஆகும் செலவில் 50 விழுக்காடு அல்லது உரூபா 5 000/- மேலளவு நிதியுதவியாக வழங்கப்படுகிறது. கதை, நாடகம், சமய நூல்களுக்கும், வெளியீட்டாளர்களுக்கும் இச்சலுகை இல்லை. அச்சிடும் எண்ணிக்கையில் ¼ பங்கு நூல்களை அரசுக்குத் தரவேண்டும். அச்சகச் சான்றளித்துப் பாதிப் பணமும், அச்சாகி முடித்துப் படிகளை அளித்தபின் மீதித் தொகையும் பெற்றுக் கொள்ளலாம். இத்துறையின் அலுவலகம் இப்போது சென்னையில் குறளகத்தில் செயற்பட்டு வருகிறது.

வெ.தெ மா.

**தமிழகக் கட்சிகள்: தமிழரசுக் கட்சி:** தமிழக மக்களைத் தமிழ் மொழியின் மீதும், தமிழ் நாட்டின் மீதும் பற்றுக் கொண்டு தேசிய நீரோட்டத்தில் கலந்திடச் செய்தவர் ம.பொ.சிவஞான கிராமணியார் ஆவார். காங்கிரசுக் கட்சிக்காரரான இவர், பாரதத் தாயின் திருத்தேரை விடுதலையென்னும் இலக்கிற்கு இட்டுசெல்ல இந்திய மக்களின் ஒற்றுமையென்னும் உறுதியான சங்கிலி தேவையென்றும், அச்சங்கிலிவடத்தின் ஒவ்வோர் இணைப்பும் உறுதியாக இருக்க வேண்டுமென்றும், அத்தகைய உறுதியான இணைப்புகளில் தமிழகமும் ஒன்று என்றும் கூறினார். இதன் அடிப்படையில்தான் அவர் தமிழ்முரசு, செங்கோல் முதலிய ஏடுகளில் தமது இந்திய தேசியத்தில் தமிழ்த் தேசியத்தை வலியுறுத்தி வந்தார். இதற்கென 1946-இல் ஒரு கழகத்தைத் தொடங்கி அதற்குத் 'தமிழரசுக் கழகம்' எனப் பெயரிட்டார். அதுவே 'தமிழரசுக் கட்சி' எனப் பின்னர்ப் பெயர் மாற்றம் பெற்றது.

இவ்வாறு தொடங்கப் பெற்ற தமிழரசுக் கட்சிக்கு விரைவிலேயே நாடு முழுவதும் கிளைகள் தோன்றின. தமிழ் உணர்வை வளர்க்க, தமிழப் பணபாட்டை வளர்க்கப் பல்வேறு பெயர்களில் நாடு முழுவதும் செயற்பட்டு வநத பல மனறங்களும் தமிழரசுக கட்சியின் கிளைகளாக மாறின. 'உரிமைககு எல்லை வேங்கடம, உறவுக்கு எல்லை இமயம்' என அவை முழங்கின.

இக்கட்சிக் கொடியின் மேல் பகுதி வெணணிற மாகவும், கீழப்பகுதி சமநிலைத் தத்துவத்தைக (Socialism) குறிக்கும் செநநிறமாகவும திகழ்நதது. இதில் வில், புலி, மீன் ஆகிய மூவேந்தரின் சினனங்கள் நீல நிறத்தில அமைநதுளளன. முதன் முதலாக 1948-இல் தமிழர் திருநாளனறு இககொடியை ஏற்றி ம.பொ.சி. இதன விளக்கத்தைக் கூறினார. தமிழரசுக் கட்சியின் முதலாவது மாநில மாநாடு 1947-ஆம் ஆண்டு சென்னையில நடைபெறறது. தமிழரசுக் கட்சித் தொணடர் படை ஒன்றும் நிறுவப்பட்டது. தமிழ்நாடு சட்ட மனறத்தில் 1948-ஆம ஆணடு 'மொழிவாரி மாநிலம் வேணடும் தீர்மானம்' நிறைவேற்றுதற்குப் பாடுபட்டது இக்கட்சியேயாகும. அதே ஆண்டில் இந்தி எதிர்ப்பு மாநாட்டில் பங்கேற்று இநதித் திணிபபை எதிர்த்தது. தமிழநாடு முழுவதும் மதுவிலககுக் கொண்டு வரப்பட்டதை வரவேற்ற இக்கட்சி, மதுவிலக்கால் வேலை இழந்தவருக்கு இடைக்கால உதவி கேட்டுப் போராட்டம் நடத்தியது. ஆட்சியைக் கைப்பற்றும் நோக்க மில்லையெனக் கூறிய ம பொ.சி. ஆட்சி அதிகாரத தால தமது கட்சியை வலுப்படுத்தலாமெனபதை. நாளடைவில் உணர்ந்தார். எனவே, 1952-ஆம ஆண்டில் நடந்த பொதுத் தேர்தலில் காங்கிரசுக் கட்சிக்கு (Congress) ஆதரவாகத் தமது கட்சித் தொண்டர்களைப் பாடுபடச் செய்தார. இத்தேர்தலில காங்கிரசுக் கட்சிப் பெரும பலம் பெற்றுத் தமிழக அமைச்சரவையை அமைத்தது; ம.பொ சியைச் சட்ட மேலவைககு நியமன உறுப்பினராக கியது. மேலவையில தமது தமிழ மாநிலக கோட்பாட்டை வலியுறுத்திப் பேசினார். ஆனால், காஙகிரசின் ஆதரவு அவருக்குக் கிடைக்கவில்லை. அதனால, தமிழரசுக கட்சி சிறிது சிறிதாகத் தனது உறவைக் காஙகிரசுடன் துணடித்துக் கொளள முற்பட்டது.

இந்தப் பின்னணியில் 1962 தேர்தல் வரை காங்கிரசின தோழமைக் கட்சியாக இருந்த தமிழரசுக் கட்சி 1967-இல் நடநத பொதுத் தேர்தலில் திராவிட முன்னேற்றக் கழகத்தின் தோழமைக் கட்சிகளின் கூட்டணியில் சேர்ந்து தேர்தலில நின்றது. வெற்றியும் கணடது. இத்தேர்தலில் தி.மு.க பெருவாரியான இடங்களைக் கைப்பற்றி அமைச்சரவையை அமைத்தது. தமிழும் ஆஙகிலமும் என்ற அதன் இருமொழிக் கொளகையின்படி, ஆளத் தொடங்கியது. ஆனால தமிழரசுக் கட்சி தி.மு.க. நடத்திய 'ஆங்கிலப் பாது காப்பு மாநாட்டை' எதிர்த்து மறியல நடத்தியது.

இககட்சிதமிழகத்திறகும் தமிழ் மொழிக்கும பல ஏற்றஙகள உணடாககப்பாடுபட்டது கேரளததோடும ஆந்திரத்தோடும் சோக்கபபடவிருநத பல பகுதிகள தமிழ நாட்டுடன் இணைககப்படவும், தமிழ மொழி கலலூரி அளவில் பயிற்று மொழியாகவும், தமிழ ஆட்சி மொழியாகவும ஆககப்படுவதறகு இககட்சியும காரணமாக இருந்தது. பலவேறு பெயாகளில தமிழை வளர்க்க ஏற்படுத்தப்பட்ட தமிழ மனறஙகள ஒனறிணைந்து 'தமிழரசுக கட்சி' யின கிளைகளாகித் தமிழ் உணர்வையும பணபாட்டையும் வளர்த்தமை இக்கட்சியின் மறறோரு சாதனையாகும. கோ த.

**திராவிடர் கழகம்:** தமிழநாட்டில் திராவிடர் இயககம் கணடவர் பெரியாா ஈ.வே. இராமசாமி ஆவார். சேலத்தில 1944-இல் பெரியாரின்தலைமையின கீழ் நடைபெற்ற நீதிககட்சி மாநாட்டில நீதிக் கட்சி எனறபெயா, திராவிடா கழகம், எனப் பெயர் மாற்றம் செயயப்பட்டது.

**கொள்கைகள்**: மக்களிடையே காணப்படும் சாதி வேறுபாடு, பெணணடிமை, இன இழிவு, உயர்வு-தாழவு மனப்பானமை, தீணடாமை ஆகியவற்றை ஒழித்தலும், அவற்றிறகுக் காரணமாகவுளள மதங்களையும், மூட நம்பிககைகளையும நீககுதலும, மக்களைப் பகுத்தறிவு உடையவர்களாக்கி 'அனைவரும் சமம், என்ற நிலையை ஏற்படுத்துதலும், ஆண-பெண் சம உரிமை பெறப் பாடுபடுதலும் இக்கழகத்தின் முக்கியக் கொளகைகளாகும். தாய்மொழி பேணலும் இககழகத்தின் கொள்கையாகும்

**கொடி**: திராவிடர் கழகக கொடி 1946-ஆம் ஆண்டில கறுப்பில சிவப்பு வட்டம கொணடதாக உருவாககபபட்டது. கறுப்பு நிறம் அறியாமை இருளையும், மூட நம்பிககையையும சிவப்பு நிறம் சிறிது சிறிதாகப் பரவும அறிவொளியையும குறிபபதாகும.

**தலைவர்கள்.** இக்கழகத்தின் தலைவராகத் தொடக்கம முதல் 1973வரை பெரியார் இராமசாமி இருந்தார். அவரது மறைவுககுப் பின 1974-ஆம் ஆண்டு முதல பெரியாரின துணைவியார் திருமதி மணியம்மையாா தலைவரானார். அவர் 1978-இல் மறைந்ததற்குப் பின தலைவர் எனற அமைப்பு தேவையில்லல எனறு கழகததினரால் தீர்மானிக்கப் பட்டதால் தலைமைப் பதவியில் ஒருவருமில்லை.

திருச்சியில் நடநத திராவிடர் கழக மாநில. மாநாட்டில்(1945) சி.என். அணணாதுரை அவர்கள்

பொதுச் செயலாளராக்கப்பட்டார். அவர் 1949-இல் கட்சி விலகித் தனியாகத் திராவிட முன்னேற்றக் கழகம் என்ற அமைப்பினை உருவாக்கினார். அதன் பின்னர்ப் பொதுச் செயலாளராகப் பலர் இருந்தனர். ஆனால், 1974 முதல் கி.வீரமணி பொதுச் செயலாள ராகப் பொறுப்பேற்றுள்ளார்.

**தலைமையிடம்:** இக்கழகத்தின் தலைமையிடம் சென்னை ஈ.வே கி. சம்பத்துச் சாலையில் பெரியார் திடலில் இயங்கி வருகிறது. இங்குக் கூட்டங்கள் நடத்த ஓர் அரங்கும், அச்சுக்கூடமும், நூலகமும், இலவச மருத்துவமனையும் அமைந்துள்ளன.

**பணிகள்:** இக்கழகம் மனித சமுதாய மேம் பாட்டிற்குக் குறிப்பாகப் பார்ப்பனர் அல்லாதாரின் மேம்பாட்டிற்குப் பல அரிய பணிகளைப் புரிந்துவரு கிறது.

**வகுப்புரிமை:** இக்கழகம் 1951-இல் நடத்திய வகுப்புரிமைப் போராட்டத்தின் பயனாய் முதன் முதலாக இந்திய அரசியல் சட்டம் திருத்தப்பட்டு வகுப்புரிமை வழங்கப்பட்டது. இட ஒதுக்கீட்டிற்கு வருமான வரம்பு நிருணயிக்கப்பட்டதை எதிர்த்துப் போராடி 1980-இல் வெற்றி பெற்றது. பிற்படுத்தப் பட்டோருக்கான இட ஒதுக்கீடும் உயர்த்தப்பட்டது. மைய அரசுப் பணிகளிலும் இட ஒதுக்கீடு செய்யும்படி மண்டல் குழுப் பரிந்துரை செய்ததை நடைமுறைப் படுத்தப் போராட்டங்கள் நடத்தி வருகிறது. அரசு விளம்பரங்களில் 'திறந்த போட்டி' என்பதை இதர வகுப்புகள் என்று போடும் பழக்கத்தை எதிர்த்து வழக்காடி அதனைநிறுத்த வகை செய்தது.

**மூட நம்பிக்கை ஒழிப்பு:** உருவ வழிபாட்டை எதிர்த்தலும், தீமிதித்தல், தேர் இழுத்தல் முதலிய வற்றை எதிர்த்தலும் மூட நம்பிக்கையை ஒழித்தலும் இக்கட்சியின் பணிகளாகும்.

**சாதி ஒழிப்பு:** இக்கழகத்தினரின் போராட்டத் தினால் சாதிக் குறிகளும், பெயருக்குப் பின்னால் சாதிப் பெயர்களை இணைக்கும் பழக்கமும் ஒழிக்கப் பட்டன. மக்கள்தொகை கணக்கெடுப்பு 1961-ஆம் ஆண்டு நடைபெற்றபோது இக்கழகத்தினரும் பல ஆதரவாளர்களும் தங்கள் மதத்தைக் குறிப்பிடாமல் நாத்திகர் என்றே குறிப்பிட்டனர். கலப்புத் திரு மணங்கள், புரோகிதர் இல்லாத சீர்திருத்தத் திருமணங்கள் ஆகியவை நடத்தப்பட்டு வருகின்றன. கோவில்நுழைவுப் போராட்டமும், அனைத்துச் சாதியினரும் கோவில் ஆர்ச்சகராக வேண்டும் என்ற போராட்டமும் நடத்தப்பட்டு வருகின்றன.

**பெண் உரிமை:** பெண்கள் மாநாடு பெரியாரால் 1930-இல் ஈரோட்டில் நடத்தப்பட்டது. விதவை களுக்குத் திருமணங்கள செய்யப்பட்டன. பெண்களும், விதவைகளும் தலைமையேற்று நடத்தும் திருமணங் களும், பெண் விடுதலை மாநாடுகளும் நடத்தப்பட்டு வருகின்றன.

**தமிழ்மொழி தமிழர் உரிமை பேணல்:** இந்தி மொழி ஆதிக்கத்தால தமிழ் மொழியும் தமிழர் நலனும் கெடும் என்ற காரணத்கால் இந்தி ஆதிக்க எதிர்ப்புப் போராட்டங்கள் நடத்தப்பட்டு வரு கின்றன அன்றைய இந்தியத் தலைமை அமைச்சர் நேருவினால் இந்தி பேசாத மக்கள் ஏற்கும்வரை இந்தி அவர்கள்மீது திணிக்கப்படமாட்டாது என்ற உறுதி மொழி தரப்பட்டது. காவிரி நீர் இன்றி வாடும் தமிழக மக்களின் வாழ்வு வளம்பெற அனைத்துக்கட்சி மாநாட்டைக் கூட்டி அதன் தீர்மானங்களை அரசுக்கு அனுப்பிக் காவிரி நீர் பெறப பல அறப்போராட்டங் கள் மேற்கொணடு வருகிறது.

**திராவிடர் கழகத்தின் பிற அமைப்புகள்:** பெரியார் அவர்கள் நன்கொடையாக $5\frac{1}{2}$ இலட்சம் உருபாயும், இடமும் தந்ததால் திருச்சியில் பெரியார் ஈ.வே.ரா. கல்லூரி 1965-இல் தொடங்கப்பட்டது. திருச்சியில் பெரியார் ஈ.வே ரா. மணியம்மை குழந்தைகள விடுதி (1961), மகளிர் மேல்நிலைப்பள்ளி, பெரியார் சுயமரி யாதைப் பிரச்சார அஞ்சலவழிக் கல்லூரி (1982), பெரியார் மருந்தியல் மகளிர் கல்லூரி (1982) ஆகியவை பெரியார் நூற்றாண்டுககல்வி வளாகத்தில் (1980) நடைபெற்று வருகின்றன. தஞ்சை, பெரியார் நூற்றாண்டு மகளிர் தொழில் நுட்பக் கல்வி நிலையம் (1980), பெரியார்மணியம்மை இலவச மருத்துவமனை (1983), பெரியார் திறந்தவெளிப் பல்கலைக்கழகம் (1983), பெரியார் நகரக்குடும்ப நல மையம (1983) ஆகியவையும் இயங்கிவருகின்றன. பெரியார் அறிவியல் தொழில் நுட்பமையம் அமைக்கும் பணி நடந்து வருகிறது.

**பிரிந்த கழகங்கள்:** அரசியலில் ஈடுபடும் நோக் குடன திராவிடர் கழகத்திலிருந்து பிரிந்த திராவிட முன்னேற்ற கழகமும், அதிலிருந்து பிரிந்த அகில இந்திய அண்ணா திராவிட முனனேற்றக் கழகமும் ஆட்சியில் இருக்கும்போதெல்லாம் முடிந்தவரை திராவிடர் கழகக் கொளகைகளையே செயற்படுத்தி யிருக்கின்றன.

**பிற இயக்கங்கள்:** அறிவியக்கப் பேரவை, திரா விடர் கழகம், தமிழின விடுதலைக் கழகம், பெரியார் சம உரிமைக் கழகம் போன்ற இயக்கஙகளெல்லாம் உத்தி முறைகளில் வேறுபடுகின்றனவே தவிரக் கொள்கையில் மாறுபடவில்லை. அவற்றின் கொடி களும் பெரிய அளவில் திராவிடர் கழகக் கொடியி லிருந்து மாறுபடவில்லை.

தேர்தலில் வென்று ஆட்சியைப் பிடிப்பது இதன் நோக்கமன்று 'அனைவரும் சமம்' என்ற நிலை அடையத் தடையானவற்றை நீக்கவே இக்கழகம் இயங்குகிறது. தமிழினத்தைப் பாதிக்கும் அரசியல் சட்டங்களையும், பொருளாதாரக் கொள்கைகளையும் இக்கழகம் எதிர்த்துப் போராடித் தமிழின உயர்வுக்குச் சாதகமானவற்றை ஆதரித்து வருகிறது. எனவே, இதனை அரசியல் கட்சி எனபதைவிடச சமுதாயச் சீர்திருத்தக் கழகம் என்பதே பொருத்தமானதாகும் (காண்க: இராமசாமி,ஈ.வெ.) சு.ஆ.

**திராவிட முன்னேற்றக் கழகம்:** சுயமரியாதை இயக்கமாகக் கால் கொண்டு, திராவிடர் கழகமாக வளர்ந்து, தமிழர் சமுதாயத்தை ஒனறுபடுத்தும் வகையில் தோனறியது திராவிட முன்னேறறக கழகம்.

**தோற்றம்:** திராவிடர் கழகத் தலைவர் பெரியார் ஈ.வெ.ரா. தம்மைவிட முப்பது வயதுக்கும் குறைவான மணியம்மையைத் தமது 72-ஆம் வயதில் திருமணம் செய்துகொளள முடிவெடுத்தார். அதனால், குறைகொண்டிருந்த அக்கழக முன்னணியினர் கட்சியை விட்டு வெளியேறி 1949-இல் புதிய கட்சி ஒன்று நிறுவி அதன் வாயிலாகத் தொடர்ந்து பணியாற்ற முடிவு செய்து 'மாலைமணி' என்ற ஏட்டினைத் தொடஙகினர். திராவிடர் கழக மத்திய நிருவாகக்குழு உறுப்பினர் கே.கே. நீலமேகம என்பார் தலைமையில்கூடி, அமைப்புக்குழு ஒன்றினை அமைத்தனர். அக்குழு திராவிட முன்னேற்றக் கழகம் என்ற அமைப்பை ஏறபடுத்திச செயலாறறுவதென்று தீர்மானிததது. இந்த அமைப்பிற்குப் பொதுச் செயலாளராக இருநது பணியாற்றும்படி சி.என். அணணாதுரை அவாகளை அமைப்புக்குழு கேட்டுக் கொண்டது' நூற்றுப்பதின்மர் கொணட ஒரு பொதுக்குழுவும், ஒரு கொள்கை பரப்புக் குழுவும் ஒரு நிதிக்குழுவும் அமைக்கப்பட்டன

**கழகக் கொடி:** திராவிட முன்னேறறக் கழகத்தின் கொடி நீண்ட சதுர வடிவத்தில், மேல் சரிபாதி கறுப்பு நிறமாகவும், கீழ்ச் சரிபாதி சிவப்பு நிறமாகவும் அமைநதுளளது. கொடியின அளவு, அகலம் இரணடு பங்கும் நீளம் மூன்று பங்கும் ஆகும். கொடியில் உள்ள கறுப்பு, அரசியல், சமுதாய, பொருளாதார வாழ்விலுள்ள இருண்ட நிலையை உணர்த்திநிறகும் அறிகுறியாகும். இம்மூன்று துறையிலும உள்ள இருளைப் போக்கி ஒளியை உணடாக்க வேண்டும் என்பது கொள்கை இருணட கலையை ஒளி நிலை அழித்துக் கொண்டு வரவேணடும். இருண்ட வானின் அடியில் தோன்றி எழும்பும் இளம்பரிதி போல் கறுப்பு மேலும் சிவப்பு கீழும் வைககப்பட்டுள்ளன.

**கழக வளர்ச்சி:** இக்கழகம் ஏறத்தாழ 150 பேர் களைக் கொண்ட தலைமை அமைப்பாக 1949-இல் தொடங்கி 10 ஆணடுகளில் 5000 கிளைகளையும் 3000-க்கு மேற்பட்ட துணைக்சாாபு மன்றஙகளையும 12 மாவட்டக் கழகங்களையும், ஏறததாழ 3½ இலட்சம் உறுப்பினர்களையும் பெற்று வளர்ந்தது சட்டமன்றம் சென்னை மாநகராட்சி நகராட்சிகள ஆகியவற்றில் குறிபபிடத்தகு இடங்களைப் பெறறது. கழகம்தமிழ நாட்டை 1967 முதல் 1976 வரை ஆட்சி செயதது.

**கூட்டங்கள்:** கழகத்திறகெனச் சென்னையில அறிவகம், அனபகம, அண்ணா அறிவாலயம ஆகிய சொநதக கட்டங்கள உளளன. இதுபோலக கழகத்திற்கான சொநதப் பணிமனைகள, படிப்பகஙகள, நூலகஙகள, கட்டடஙகள, திடலகள நாட்டின பல பகுதிகளிலும உளளன.

**இயக்க ஏடுகள்.** இயக்க ஆதரவாகத் தோன்றிய ஏடுகள் பலவாகும. அவற்றுள மிகவும் குறிபபிடத் தக்கவை திராவிட நாடு, காஞ்சி, முரசொலி, மன்றம் தனி அரசு முதலியனவாகும். இயக்கம் நடததிய ஏடுகளில் முதலில மாலை மணியும், பினனா நம் நாடும், அதன் பின்னர்க கழகக குரலும் குறிப்பிடத் தக்கவை.

**போராட்டங்கள்:** இயக்கம் தொடங்கிய நாளிலிருந்து இனறு வரை அரசியல், சமுதாய, பொருளாதார உரிமைகளை நிலைநிறுதத, மொழி காததிட பலப்பல போராட்டஙகளை நடத்தியுளளது.

**கழக அமைப்பு:** திராவிட முன்னேற்றக கழகம் ஒரு மக்களாட்சி அமைப்பாக விளஙகுகிறது. மக்களாட்சி முறைப்படி இக்கட்சியை இயககிச் செல்லச சட்ட திட்டக்குழு அமைக்கப்பட்டது. இக் குழுவினால் உருவாக்கப்பட்ட சட்டதிட்டங்கள 1951-இல நடைமுறைக்கு வநதன. பினனர், புதிய சட்டதிட்டங்கள் 1960-இல நடைமுறைககு வந்தன. தொடக்கத்தில் பொதுச் செயலாளர் எனனும் பதவியே உயர் பதவியாக இருந்தது, அதன்பின் விதி முறைகள் மாறறப்பட்டுத் தலைவர் பதவி ஏற்படுத்தப்பட்டது. கலைஞர் கருணாநிதி முதல தலைவா. அவரே தொடர்நது தலைவராக உள்ளார்.

**கொள்கைகள்:** மொழிவழிப் பிரிந்து இனவழி ஒன்றுபடும் திராவிட நாடு அடைவது தமிழகத்தின் நோக்கமாக இருந்தது. அரசியலில் மக்களாட்சிக் கோட்பாடு, பொருளியலில சமதருமம், சமூகவியலில சமத்துவம் காணுதல் ஆகியவறறைக் கொள்கைகளாகக் கொண்டிருந்தது. அறிவியலையும், கலையயிலையும் துணையாகக் கொண்டு, பகுத்தறிவு நெறியில் நின்று, இன்ப வாழ்வுக்கு இன்றியமையாதனவாக

வேண்டப்படும் வளங்களையும் வசதிகளையும் பெறும் திட்டங்களை உருவாக்கியது.

சீனப் போருக்குப்பின் 1963-இல் நாடாளுமன்றத்தில் 'பிரிவினைத் தடைச்சட்டம்' கொணடுவரப் பட்டதால், கழகத்தின் மத்திய செயற்குழுவினால் திராவிட நாடு வேண்டுதல் கைவிடப்பட்டது.

தமிழகம், ஆந்திரம், கேரளம், கருநாடகம் ஆகிய நான்கு மொழிவழி மாநிலங்களும் இந்திய அரசுரிமை, ஒருமைப்பாடு, அரசியல் அமைப்புச் சட்டம் ஆகியவற்றிற்குள இயன்ற அளவு கூடுதலான அதிகாரங்களைப் பெற்று நெருங்கிய திராவிடக் கூட்டமைப் பாக்கப் பாடுபடுவது என்ற குறிக்கோள் கழகச் சட்ட திட்டத்தில் சேர்க்கப்பட்டது.

**தேர்தல்களும் கழகமும்:** முதல் பொதுத் தேர்தல் 1952-இல் நடைபெற்றது. அதில் தி.மு.க. பங்கேற்க முடிவு செய்தது. அதனை அடுத்து 1957, 1962 தேர்தல்களிலும் கழகம் போட்டியிட்டுப் படிப்படியாகக் கூடுதல் வெற்றி அடைந்தது. 1967-இல் 173 இடங்களுக்குப் போட்டியிட்ட தி.மு.க. சட்டமன்றத்தில் 138 இடங்களைக் கைப்பற்றி அண்ணாதுரை தலைமையில் ஆட்சிப் பொறுப்பை ஏற்றது. அண்ணாதுரை 1969-இல் காலமானபின் தமிழக முதல்வராகப் பொறுப்பேற்ற கலைஞர் கருணாநிதி 1971-இல நடந்த சட்டமன்றத் தேர்தலில் கழகம் வெற்றி பெற்று வாகை சூடுமாறு செய்தார். பின்னர் 1976-இல் நெருக்கடி நிலை அறிவிக்கப்பட்டதன் விளைவாகத் தி.மு.க ஆட்சி கலைக்கப்பட்டது.

**ஆட்சிக்கட்டிலில்:** தி.மு.க 1967 முதல் 1976 வரை தமிழகத்தில் ஆட்சி செலுத்தியது. அப்பொழுது புன்செய் நிலங்களுக்கான வரி தள்ளுபடி செய்யப்பட்டது. புகுமுக வகுப்பு வரை ஏழை மாணவர்கள் இலவசக் கல்வி பெற ஏற்பாடு செய்யப்பட்டது. சுயமரியாதைத் திருமணங்கள் செல்லுபடிச் சட்டம் நிறைவேற்றியது. சென்னை மாநிலத்திற்குத் தமிழ்நாடு எனப் பெயர் சூட்டப்பட்டது. தமிழ்நாட்டில் தமிழ், ஆங்கிலம் ஆகிய இருமொழிக் கல்விக் கொள்கையே பின்பற்றப் படும் என உறுதியாக அறிவிக்கப்பெற்றது.

**இயக்கத்தில் பிளவு:** தி.மு.க. தொடங்கியதிலிருந்து இயக்கத்திலிருந்து இரு முறை இரண்டு அணியினர் பிரிந்து சென்றனர். ஈ.வெ.கி. சம்பத்தின் தலைமையில் பிரிந்து சென்றவர்கள் 1961-இல் தமிழ்த் தேசியக் கட்சி என்ற இயக்கம் தொடங்கிக் காங்கிரசில் இணைந்தனர். கட்சியின் பொருளாளர் எம்.ஜி. இராமச்சந்திரன் தலைமையில் 1972-இல் ஒரு பிரிவினர் பிரிந்து சென்று அண்ணா திராவிட முன்னேற்றக் கழகம் என்ற தனி இயக்கம் கண்டனர்.

-ந.க.ம.

**அனைத்திந்திய அண்ணா திராவிட முன்னேற்றக் கழகம் (அ இ.அ தி மு க.):** தி மு க வின் பொருளாளராக விளங்கிய எம்.ஜி இராமச்சந்திரன் தலைமையில் பிரிந்த சிலர் உருவாக்கிய இயக்கமே அ இ அ. தி மு.க. வாகும். முதலில் அண்ணா திராவிட முன்னேற்றக் கழகமாக அமைந்த கட்சி பின்னர் அனைத்திந்திய அண்ணாதிராவிட முன்னேற்றக் கழகம் என்னும் பெயர் மாற்றம் பெற்றது.

**தோற்றம்:** கலைஞர் மு. கருணாநிதி, எம்.ஜி. இராமச்சந்திரனிடையே, 1971-ஆம் ஆணடில் நடைபெற்ற தேர்தலுக்குப் பின் பிணக்கு ஏற்பட்டது. 1972-இல். பொதுக்கூட்டம் ஒன்றில் இயக்கத்தவர்களையும் இயக்கக் கொள்கைகளையும் வெளிப்படையாகக் கட்சிக் கட்டுப்பாட்டை மீறும் வகையில் பேசினார் எனவே, பன்னிரண்டு மாவட்டச் செயலாளர்களும், எட்டு அமைச்சர்களும் 1972-ஆம் ஆண்டு அக்டோபர் 9-இல் கூடித் தக்க நடவடிக்கை மேற்கொள்ளும்படி தீர்மானம் ஒன்றை நிறைவேற்றினர். 1972-ஆம் ஆண்டு அக்டோபர் 11-இல் கட்சியிலிருந்து ஏன் நீக்கக்கூடாது என்று காரணம் காட்டுமாறு பொதுச செயலாளர் கடிதம் ஒன்றை அனுப்பினார். பின்னர் 1972 அக்டோபர் 13-ல் கூடியபொதுக் குழுவில் 377 பேருக்கு 303 பேர் கூடிக் கட்சியிலிருந்து எம்.ஜி.ஆரை விலக்குவது என்றபொதுச்செயலாளரின்முடிவினை1972 அக்டோபர் 13-இல் ஒருமனதாக ஏற்றனர். 1972 ஆம் ஆண்டு அக்டோபர் 18-இல் அண்ணா தி.மு.க. என்ற பெயரில் புதிய கட்சி ஒன்றினைத் தொடங்கினார். எம்.ஜி. இராமச்சநதிரன் கட்சியிலிருந்து விலக்கப்பட்டதற்குக் கீழ்க்கண்ட ஐந்து காரணங்கள் கூறப்படுகின்றன. குல்தீப்பு நய்யார் ''இசுடேட்சுமேன்' இதழில் தி.மு.க. அமைச்சரவையில எம்.ஜி. இராமச்சந்திரனைச் சேர்த்துக் கொள்ளாமையே முதல் காரணம் என்று எழுதியுள்ளார். தி.மு.க. அரசு மதுவிலக்கை ஒத்தி வைததும், தி.மு.க. தலைவர் மகனின் திரைப்பட நுழைவும், மன்றங்கள மகன் பெயரில் உருவானதும், வருமான வரிப் பாக்கிக்காக மைய அரசு நடவடிக்கை எடுக்க முயன்றபோது இயக்கம் உதவிடாமையும், தமக்குரிய வகையில் மதிப்புக்கிடைக்கவில்லை என்ற ஆதங்கமும் காரணங்கள் என்று கூறுகின்றனர். எனினும், பிணக்கிற்கான உண்மைக் காரணம் தெரியவில்லை.

**கொள்கைகள்:** அண்ணா தி.மு.க. விற்கெனத் திட்டமிட்டு வகுக்கப்பெற்ற கொள்கைகள் இலலை. கட்சி நிறுவனரின் அறிவிப்புகள் செயல் முறைகளே கட்சியின் கொள்கைகளாயின. எனினும், 1973-இல் செய்தியாளர்களிடம் சென்னையில் பேசுகையில் 'அண்ணாயிசம்' என்பதே தமது கட்சியின் கொள்கை

என எம்.ஜி. இராமச்சந்திரன் அறிவித்தார். அண்ணாவின் கொள்கைகளைப் பின்பற்றிச் செயற்படுவதே 'அண்ணாயிசம்' என்றும், அது முதலாளித்துவம், பொதுவுடைமை இணைந்த ஒன்று என்றும் விளக்கமளிக்கப்பட்டது. பின்னர், 1974 சூலை-இல் நடைபெற்ற 'அண்ணாயிசம்' பற்றிய கருத்தரங்குகளில் சமத்துவ சமுதாயம் அமைத்தல் பொருளாதாரக் கொள்கை என்றும், அதிகாரப் பரவல் பெறுவது அரசியல் கொள்கை எனவும், இரு மொழிக் கொள்கை, தமிழ் வளர்ச்சி ஆகியன மொழிக் கொள்கை என்றும் கூறினர். மகளிர் முன்னேற்றம், தவறு செய்யும் மக்கள் பிரதிநிதிகளைத் திரும்ப அழைக்கும் உரிமை ஆகியன பொதுவான கொள்கைகளுள் சிலவாகும்.

**கொடி:** அ.தி.மு.க.வின் கொடி நான்கு பங்கு நீளமும் மூன்று பங்கு அகலமும் என்ற அளவில், மேல் பகுதியில் தி.மு.க. கொடியில் உள்ளதுபோல, கறுப்பும், கீழ்ப்பகுதியில் சிவப்பும் உள்ளன. கொடியின் மையத்தில் அண்ணாவின் உருவம் பொறிக்கப்பட்டிருக்கும்.

**வளர்ச்சி:** இக்கட்சி 1972-இல் தொடங்கப்பட்டது. ஆனால், ஐந்து ஆண்டுகளில் தமிழகத்தின் ஆட்சியைப் பிடித்தது. நெருக்கடி நிலை 1976-இல் அறிவிக்கப்பட்டபோது, தாய்க் கழகமான தி.மு.க வின் பொறுப்பில் இருந்தவர்கள் மீது ஊழல் குற்றச்சாட்டினைச் சுமத்தி, மைய அரசிடம் மனு அளித்ததன் விளைவாகச் சர்க்காரியா விசாரணைக் குழு நியமிக்கப் பெற்றது. கழகம் தொடங்கிய ஓராண்டிற்குள் திண்டுக்கல்லில் நடைபெற்ற நாடாளுமன்ற இடைத்தேர்தலில் இவ்வியக்க வேட்பாளர் வெற்றி பெற்றார். பின்னர் 1977-இல் நடைபெற்ற நாடாளுமன்ற மக்களவைத் தேர்தலில் 20 இடங்களுக்குப் போட்டியிட்டு 18 இடங்களையும், சட்டப் பேரவைத் தேர்தலில் 200 இடங்களுக்குப் போட்டியிட்டு 126 இடங்களையும் வென்றது. அடுத்து 1980-இல் நடைபெற்ற நாடாளுமன்ற மக்களவைத் தேர்தலில் 20 இடங்களுக்குப் போட்டியிட்டு 2 இடங்களையே பெற்றது. ஆனால், தமிழகச் சட்டப் பேரவைத் தேர்தலில் 177 இடங்களுக்குப் போட்டியிட்டு 130 இடங்களை வென்றது. அதன்பின் 1984-ஆம் ஆண்டு நடைபெற்ற தமிழகச் சட்டப் பேரவைத் தேர்தலில் 234 இடங்களுக்குப் போட்டியிட்ட அ.தி.மு.க. கூட்டணியினர் 195 இடங்களைப் பெற்றனர். அ.தி.மு.க 133 உறுப்பினர்களுடன் அறுதிப்பெரும்பான்மை பெற்றமையால மீண்டும் ஆட்சியினை அமைத்தது. திருப்புத்தூர், திருச்செந்தூர், செய்யாறு ஆகிய இடங்களில் நடைபெற்ற இடைத்தேர்தல்களிலும் வெற்றிகிடைத்தது. இயக்கத் தலைவரின் செயல்கள், நடவடிக்கைகள் ஆகியன எதிர்க்கட்சியினரால் பலமுறை கண்டனத்திற்குள்ளாகியதுண்டு. இவ்வியக்க உறுப்பினர்கள் கையில் இயக்கக் கொடியினைப் பச்சை குத்திக் கொள்ளும்படி அறிவுறுத்தப்பட்டனர்.

**கட்சி அமைப்பு:** கட்சியின் விதிகள் 1978 இல் வகுக்கப்பட்டன. அவற்றின்படி நகர, கிராம அமைப்புகள் தேர்ந்தெடுத்தனுப்பும் உறுப்பினர்கள், நியமன உறுப்பினர்கள், பதவி வழி உறுப்பினர்கள் ஆகியோர் பொதுக்குழு உறுப்பினர்கள் ஆவர். பொதுக்குழுவிற்குத் தலைமை வகித்தவர் அவைத் தலைவர் ஆவார். பொதுக்குழுவிலிருந்து செயற்குழுவினர் தேர்ந்தெடுக்கப்படுவர். பொதுச் செயலாளர், பொருளாளர், தலைமைக் கழகச் செயலாளர், கொள்கைப் பரப்புச் செயலாளர், தொழிலாளர் பகுதிச் செயலாளர், மாணவர், மகளிர் அணிச் செயலாளர் முதலானோர் செயற்குழுவினர் ஆவர். செயல்முறையில் இயக்கம் தொடங்கியது முதல் இயக்கப் பொறுப்பாளர்கள் அனைவரும் நியமன உறுப்பினர்களே. தேர்தல் ஏதும் நடைபெறவில்லை. பதவியில் நியமித்தல், நீக்கல் ஆகியன இயக்கத் தலைவரின் விருப்பம். நிறுவனர் எம். ஜி. இராமச்சந்திரனே இறக்கும்போது பொதுச் செயலாளராக விளங்கினார். இடையில் சிறிது காலம் வேறு சிலர் பொதுச் செயலாளராக நியமிக்கப்பட்டனர்.

**ஆட்சி:** பத்தாண்டுகள் (1977-87) அ.தி.மு.க வின் ஆட்சி நடைபெற்றுள்ளது. இடையில் சில மாதங்கள் 1980-இல் ஆட்சியில் இல்லை. சமுதாய நலத்திட்டங்கள் முதன்மையிடம் பெற்றன. பிற்படுத்தப்பட்டோர் இட ஒதுக்கீடு 50 விழுக்காடு என உயர்த்தப்பட்டது. இலவச மதிய உணவுத்திட்டம் என்ற முன்னைய அரசுகளின் காலத்தில் செயல்படுத்தப் பெற்ற திட்டம் சத்துணவுத் திட்டம் என்ற பெயரில் விரிவு படுத்தப்பெற்றது. இலவசப் பற்பொடித்திட்டம், இலவசக்காலணித் திட்டம், நலிந்தவர்களுக்கு வேட்டி, சேலை வழங்குதல் முதலிய திட்டங்கள் நிறைவேற்றப்பட்டன. தமிழ் வளர்ச்சிக்குத் தஞ்சையில் தனிப் பல்கலைக் கழகம் அமைத்தமையும், திருச்சி, கோவை, காரைக்குடி முதலிய இடங்களில் புதிய பல்கலைக் கழகங்கள் அமைத்தமையும், கொடைக்கானலில் மகளிர்க்கெனத் தனிப் பல்கலைக் கழகம் உருவாக்கியமையும் கல்வித் துறையில் குறிப்பிடத்தக்கன. இவ்வாட்சி இலங்கை-இந்திய உடன்பாட்டில் மைய அரசின் வழிச் செயற்பட்டது. அ.இ அ தி மு க. நிறுவனர் எம்.ஜி. இராமச்சந்திரன் 1987 திசம்பர் 24 இல் மறைந்த பின்னர் இருபிரிவாக இவ்வியக்கத்தவர் பிரிந்தனர். கட்சி பிளவுபட்டதோடு, 1987 திசம்பர் 30-இல் அ.இ.அ.தி.மு.க. ஆட்சி தமிழகத்தில் முடிவிற்கு வந்தது. ந.க.ம.

**தமிழகம்**: காண்க: தமிழ்நாடு.

**தமிழக மாநிலத் திட்டக் குழு**: தமிழக மாநிலத் திட்டக் குழு தமிழ்நாடு மாநிலத்திற்கான சமூக-பொருளாதாரத் திட்டங்களை எல்லாத்துறை நிபுணர்கள், அலுவலர்கள் முதலானோர் உதவியுடன், சிறப்பான வகையில் உருவாக்க ஏற்படுத்தப்பட்ட ஒரு மாநில அமைப்பாகும் இத்தகைய அமைப்புகள் இன்று நமது நாட்டில் பெரும்பாலும் எல்லா மாநிலங்களிலும் செயற்படுகின்றன.

அறம் வழுவாப் பொருளியலை வலியுறுத்தும் பொருளாதாரப் பேரறிஞரான திருவள்ளுவர், ஏறத்தாழ ஈராயிரம் ஆண்டுகட்கு முன்பே 'திட்டமிடுதலின் (Planning) இன்றியமையாத் தேவையைத் தெளிவுற வலியுறுத்தியுள்ளார். 'எண்ணித் துணிக கருமம் துணிந்தபின் எண்ணுவம் என்பது இழுக்கு' என்ற ஒரு குறளே அதற்கு நல்ல எடுத்துக்காட்டாகும்.

உருசிய நாட்டில் 1917-இல் ஏற்பட்ட அக்டோபர்ப் புரட்சிக்குப் பின்னரே அந்நாட்டில் திட்டமிட்ட பொருளாதாரத்தின்வாயிலாகச்சமதருமப் பொருளாதார அமைப்பு உருவாகியது திட்டத்தின் அடிப்படையாக எல்லா மக்களுக்கும் தேவையான எல்லாம் கிடைக்க வேண்டும் என்ற தலையாய நோக்கம் ஏற்றுக் கொள்ளப்பட்டது. அதற்கு நாட்டின் உற்பத்தி, மாற்று, பகிர்வு எல்லாம் ஒரு மையத் திட்டத்தின்படி நடைபெற வேண்டும் என்பதும், அதன் வழியாகத்தான் சமூக-பொருளாதார வளர்ச்சியை அடைய முடியும் என்பதும் உறுதி செய்து கொள்ளப்பட்டன. இந்திய நாடு 1947-இல் விடுதலை பெற்ற பின்னர், உருசியத் திட்டத்தை முன்னோடியாகக் கொண்டு முன்னாள் பாரதப் பிரதமர் நேரு அவர்களைத் தலைவராகக் கொண்டு, இந்திய நாட்டிற்கான திட்டக்குழு (Planning Commission), நாடாளுமன்றத்தில் நிறைவேற்றப்பட்ட ஒரு தீர்மானம் (Resolution) மூலம் உருவாக்கப்பட்டது. அதன் பின் 1951 முதல் அடுத்தடுத்த ஐந்தாண்டுத் திட்டங்கள் (Five-year Plans) வகுக்கப்பட்டுச் செயற்படுத்தப்பட்டு வருகின்றன.

பொதுவாகத் திட்டமிடுதல் என்றாலே மையப்படுத்துதல் என்றுதான் பொருள்படும். ஆகையால், மாநிலத்திட்டங்களுக்கு என்று மாநிலத் திட்டக் குழுக்கள் எதற்குஎன்றெல்லாம் ஐயப்பாடுகள் தோன்றலாம். இந்திய நாட்டைப் பொறுத்தவரை அது மிகப்பரந்த நாடு; மேலும் அது பல மாநில அரசுகளைக் கொண்டு செயற்படும்ஒரு குடியரசு நாடு என்பதால்,இந்தியாவில் 'திட்டமிடுதல்' என்பது 'இந்தியாவின் குடியரசு அமைப்பில் திட்டமிடுவது' என்றுதான் பொருள்படுவதாகும். இந்திய நாட்டின் கூட்டாட்சி அமைப்பின் பிரிவுகளாக 21-க்கும் மேற்பட்ட மாநில அரசுகள், மற்றும் மைய அரசின் நேரடி நிருவாகத்தின் கீழ் உள்ள பகுதிகள் செயற்படுகின்றன. ஆகையால், மைய அரசு மட்டத்தில் இருந்து மட்டும் பொருளாதார சமுதாயத் திட்டங்களை எல்லா மாநிலங்களுக்கும் பொருத்தமான வகையில் வரைய முடியாது. ஏனென்றால் மாநிலங்களின் வளப்பங்கள் (Resources endowment) மாநிலத்திற்கு மாநிலம் பெரிதும் வேறுபடுகின்றன; அவற்றின் வளர்ச்சி மட்டங்களிலும் நிறைய வேறுபாடுகள் கொண்டுள்ளன. தேவைகள், சிக்கல்கள், வளர்ச்சிக்கானவாய்ப்புத் திறன்கள் ஆகியவற்றில் ஒரு மாநிலம் மற்றொரு மாநிலத்தினின்றும் மாறுபடுகின்றது. ஆகையால் தான், இந்திய நாட்டில் உள்ள ஒவ்வொரு மாநிலமும் அதன் வளவாயில்களைக் கவனமாக மதிப்பீடு செய்து, அந்த மாநிலத்தின் தனிப்பட்ட சிக்கல்களைக் கவனத்தில் கொண்டு, தன்னிடம் உள்ளதும் தான் பிறரிடம் இருந்து பெறக்கூடியதுமான வளர்ச்சி வாய்ப்புகளைச்செம்மையாகக் கணக்கிட்டு, சிறப்பான முறையில் மாநிலத் திட்டங்களை உருவாக்குவது மிகவும் இன்றியமையாத தேவையாகின்றது. இந்த அடிப்படையில்தான் இந்திய அரசு ஒவ்வொரு மாநிலமும் தனக்கென்று தனியாக ஒரு மாநிலத் திட்ட வாரியத்தை அல்லது குழுவை (State planning Board or Commission) உருவாக்கிக் கொள்ளுதல் வேண்டும் என்று பரிந்துரை செய்தது அப் பரிந்துரையை ஏற்றுத் தமிழ்நாடு அரசு,1971-ஆம்ஆண்டு தமிழ்நாடு மாநிலத்திற்கெனமாநிலத் திட்டக்குழுவை நிறுவியது. இந்திய அரசின் திட்டக் குழுவை (Union Planning Commission), முன் மாதிரியாகக் கொண்டு மாநிலத் திட்டக் குழுக்கள் அமைக்கப்பட்டன அவ்வாறு அமைக்கப்பட்ட மாநிலத் திட்டக் குழுக்களுள் தமிழ்நாடு மாநிலத் திட்டக் குழுவே மிகவும் சிறப்பாகச் செயற்பட்டு மற்ற மாநிலங்களுக்கு முன் மாதிரியாக விளங்குகிற ஒரு அமைப்பு என்றால் அது மிகையாகாது.

தமிழ்நாடு மாநிலத்திட்டக்குழுவிடம் ஒப்படைக்கப்பட்ட பணிகளில் பத்தாண்டுக் காலத்திற்கான (1974-84) தமிழ்நாடு தொலை நோக்குத் திட்டம் (The Perspective Plan of TamilNadu) என்பது மிக முக்கியமானதாகும். இந்தத் திட்டத்தைத் தயாரிப்பதற்கு 15 செயல் அணிகள் (Task forces) செயலாற்றின. அவை 'கல்வி, அறிவியல் தொழில் நுட்பம்' மீதான செயலணி, 'வேளாண்மை' குறித்த செயலணி, 'எரிபொருள், மின்சாரம்' குறித்த செயலணி, 'கிராமப்புற வீட்டு வசதி உள்பட கிராமப்புற வளர்ச்சிக்குரிய' செயலணி, 'பொருளாதார மேம்பாட்டுக்கான மனித வளங்கள், சமூக

மாற்றங்கள்' மீதான செயலணி, 'நிதி வாயில்களைத திரட்டுதல்-வளர்ச்சி வீதம் -மாநில- வருவாய- நிதிக கொள்கை திரட்டுதல் ஆகியவை பற்றிய செயலணி முதலியனவாகும். இச்செயலணிகள ஒவவொன்றும் நாட்டில் உளள தொடர்புடைய எல்லாநிபுணர்களை யும், அரசு அலுவலர்களையும் கொணடு அமைககப பட்டது.ஒவ்வொரு செயலணியும் தனதுபொருள்பற்றி விரிவான ஓர் அறிக்கையைத் தயாரித்துச் சம்பந்தப் பட்ட நிபுணர்களுக்கும், அலுவலர்களுக்கும் பொது மக்களுக்கும் கொடுத்து, அவ்வகையில் அவர்தம் கருத்துகள் பெறப்பட்டன. அதனமூலம் பொதுமக் களும் திட்டமிடுதலில் தக்கமுறையில பஙககேற்க வாய்ப்புகள் அளிக்கப்பட்டன எடுத்துக்காடடாகக் கிராம வளர்ச்சிச் செயலணி, வளமான முன்னேற றத்தில் கிராமியத் தமிழநாடு (1974-84 – Towards A Progressive Rural Tamil Nadu) எனற சிறப்பான திட்டத்தைத் தயாரித்து அச்சிட்டு வெளியிட்டது. இவை எல்லாவற்றின் அடிப்படையில்தான் தமிழ் நாடு தொலை நோக்குத் திட்டம், 1974-84-கசு உருவாக்கப்பட்டு, 1974-இல அச்சிடப்பட்டு வெளி யிடப்பட்டது.

தமிழ்நாடு மாநிலத் திட்டக் குழுவின மற்றொரு முக்கிய பணி மாநிலத்தின் ஐந்தாணடுத திட்டங களைத் (State Five Year Plans) தயாரிப்பதாகும். ஒரு மாநிலத்தின் நடுததர காலத் திட்டஙகள, நீணட காலத் தொலை நோக்குத் திட்டத்தின் அங்க மாக இருக்க வேண்டும் என்ற முறையில் முதன் முத லில் நிபுணர்களும் தொடாபுளள அலுவலாகள அனைவரும சேர்ந்து அறிவியல் அடிப்படையில் (On a scientiftc base) திட்டங்களை உருவாக்கத் தொடங்கியது தமிழ்நாடு மாநிலத் திட்டககுழு அமைக்கப்பட்ட பினனரே என்று சொல்லலாம்.

மேலே சொன்னவாறு அறிவியல் அடிப்படையில ஐந்தாண்டுத திட்டங்களை உருவாக்கித் தருவது டன், அந்த ஐந்தாண்டுத் திட்டஙகளின் அடிப்படை யில், ஒவ்வொரு நிதி ஆண்டிற்கும் தேவையான ஓராண்டுத் திட்டங்களையும் (Annual plans for each financial year) உருவாக்கும். மாநிலத் திட்டக்குழு தயாரிக்கும் இந்த ஓராணடு வரைவுத் திட்டங்கள மற்றும் ஐந்தாணடு வரைவுத் திட்டங்களை (Draft-Annual Plans and Draft Five Year Plans), அரசு நன்கு பரிசீலித்து, அந்த வரைவுத் திட்டங்களை, மைய அரசின் திட்டக் குழுவுடனும பிற தொடா புளள அமைப்புகளுடனும் கலந்தாலோசித்து, அந்த வரைவுகளை முடிவான திட்டஙகளாக உரு வாக்குகின்றது.

ஒவ்வொரு நிதி ஆணடிலும் திட்டத்தில் சேர்நத செயலாககச் சூழ்வுகள் (PlanSchemes) திட்டத்தில் சேராச் செயலாக்கச் சூழ்வுகள (Non-Plan Schemes) ஏற்கெனவே செயற்பாட்டிலுள்ள திட்டஙகள் அல்லாத செயலாக்கச சூழ்வுகள் (New Schemes) மேற் கொளளப்படுகினறன. ஒவவொரு குறிப்பிட்ட நிதி ஆணடிற்கும் மிகவும் தேவை என்று கருதப்படும் புதிய வரைவுச் செயலாக்கச் சூழவுகள (Draft New Schemes) துறைவாரியாகத் தயாரித்து, மாநிலத் திட்டக்குழு அரசுககுப் பரிநதுரை செய் கிறது. தலைமைச் செயலகததின் பல்வேறு அரசுத் துறைகளும் அரசின நிதித்துறையும் மாநிலத் திட்டக குழு பரிந்துரைத்தவற்றைத தீவிரமாகப் பரிசீலிதது நிதி நிலைக்குழுவின (Standing Finance Committee) ஒப்புதலுக்கும், பின்னர் நிதி நிலைக்குழு பரிந் துரைககும, புதிய திட்டஙகளை அமைச்சரவை யின (Cabinet) ஒபபுதலுக்கும் அனுப்புகினறன. அமைச்சரவை ஏறறுக் கொண்ட புதிய திட்டஙகள், சம்பந்தப்பட்ட குறிபபிட்ட நிதி ஆணடின வரவு செலவுத் திட்டத்துடன் (Budget), சட்டப் பேரவை யின் (Legislative Assembly) ஒபபுதலுக்கு வைககப படுகின்றன.

தமிழநாடு மாநிலத் திட்டக் குழுவில இயங்கும பிரிவுகளின் அமைப்பு முறையில தேவைககு ஏறற வாறு அவவப்பொழுது மாறுதல்கள் செய்யபபட்டு வருகினறன அவ்வாறே அககால கட்டஙகளுககு ஏறற வகையில குழுவின் உறுப்பினாகளின அமைப் பிலும் மாறுதலகள் செய்யபபெற்று வந்துளளன. இப்பொழுதுளள நிலையில், தமிழநாடு மாநிலத் திட்டக் குழுவில், ஒரு தலைவர் (Chairman), துணைத் தலைவர் (Vice-Chairman), முழுநேர உறுப்பினர்கள (Full-time Members), பகுதி-நேர உறுப்பினர்கள் (Part-time Members) உறுபபினர் -செயலர் Member-Secretary), தொடர்புளள பல வேறு வளர்சசி வேலைகளைக கவனிக்கப் பிரிவுகள Divisions), அப்பிரிவின தலைவர்கள (Heads of Division), திட்ட அலுவலர்கள (Planning Officers) முதலானோர் பணியாற்றுகின்றனர். தமிழநாடு மாநிலத் திட்டக் குழு, தமிழநாடு அரசுத தலைமைச செயலகத்தில, திட்டமிடுதல மற்றும் வளாசசி செய லகத் துறையுடன (Planning and Development Secretariat) இணைக்கப்பட்டுளளது.

ஒரு நாட்டின வளஙகளை நன்கு உணர்நது, வருஙகாலத்தில் அச் செலவ வளங்களையும், வளரும் மக்கள தொகையையும் முறையாகக் கணக்கிட்டுத் தக்கவாறு பயனுள்ள வகையில தேவையான சமூகப் பொருளாதார-நலத் திட்டஙகளை ஓராணடு, ஐந் தாணடு, பததாணடு, பதினைந்தாண்டு போனற தேவையான கால கட்டஙகளுக்கு வகுத்தல் வேண்

டும் என்பது இன்று வளர்ச்சியடைந்த நாடுகளும் (DvelopedCountries),வளர்ச்சியடைந்து வரும்(Developing Countries)நாடுகளும் ஒருமித்து ஏற்றுக் கொண்ட ஒரு பொருளாதாரக் கோட்பாடாகும். ஆகையால் பல மாநில அரசுகளைக் கொண்ட இந்தியா போன்ற கூட்டரசு அமைப்பினைக் (Federal form of Government) கொண்ட நாட்டிற்கு ஒரு மையத் திட்டக் குழுவும் (Central or Union Planning Commission), ஒவ்வொரு மாநிலத்திற்கும் ஒரு மாநிலத் திட்டக் குழு அல்லது வாரியமும் (State Planning Commssion or Board) இன்றியமையாத அமைப்புகளாகும். அவை அரசினைச் சார்ந்தவையாக இருந்தாலும் தாம் உண்மை என நம்பும் கருத்துகளை எந்தவிதத் தயக்கமுமின்றி அரசுக்கு எடுத்துக்கூறும் உரிமை பெற்ற அமைப்புகளாகவும் செயல்படுகின்றன. தேவ.ந.

**தமிழரசி குறவஞ்சி:** குறவஞ்சி என்னும் சிற்றிலக்கியம் பல்லவ மன்னர்களின் ஆட்சிக் காலத்தில் விளங்கிய தமிழ்ச் சங்கத்திலிருந்த புலவரால் உருவாக்கப்பெற்ற இலக்கண வகையைச் சார்ந்த 'பாட்டியல்' என்னும் நூல்கள் கூறும் பிரபந்த வகையைச் சார்ந்ததாகும்.

சங்க இலக்கியச் செய்யுள்களுள் காணப்பெறும் குறிசொல்லும் கட்டுவிச்சிக்கு ஒப்பாகப் படைத்துக் கொள்ளப்பெற்றதொரு பாத்திரம் இக்குறவஞ்சி எனக் கருதலாம். குறம் என்பதற்குக் குறிசொல்லுதல் என்பது பொருள். இதனைக் குமரகுருபரர் தாம் படைத்ததொரு சிற்றிலக்கியத்திற்கு 'மீனாட்சியம்மை குறம்' எனப் பெயரிட்டுள்ளமை கொண்டு தெரிந்து கொள்ளலாம். குறம் என்பதனைச் சாதிப் பெயராகக் கொண்டு குறவஞ்சி என்பதற்குக் (குறி சொல்லும்) குறப்பெண் என்று பொருள் கூறுவது வழக்காக உள்ளது.

இப்பிரபந்தம் பாட்டுடைத் தலைவன் பெயரைச் சார்ந்தே பெரும்பாலும் வழங்கப்படுகிறது. கும்பேசர், குறவஞ்சி, குற்றாலக் (நாதர்) குறவஞ்சி, சரபேந்திர பூபால குறவஞ்சி முதலியவை தலைவன் பெயரைச் சார்ந்தமைந்தனவாகும். தமிழரசி குறவஞ்சி பாட்டுடைத் தலைவியின் பெயரால் அமைந்துள்ளது. குறவஞ்சி இலக்கியம், பரணி, பிள்ளைத் தமிழ், கலம்பகம் என்பவற்றைப் போலல்லாமல் கோவைபோல நாடகப் பாங்காக அமைந்துள்ளமையான் குறவஞ்சி நாடகம் எனவும் வழங்கப்படுகிறது. அம்முறைமையான் இது மேடை நாடகமாகவும் நாட்டிய நாடகமாகவும் நடிக்கப் பெற்று வந்துள்ளமை சரபேந்திர பூபால குறவஞ்சி நாடக நூல் வரலாற்றான் தெரிய வருகிறது. அதற்கேற்பப் பல வகையான இயற்றமிழ்ச் செய்யுள்களொடு இசைத் தமிழ்ச் செய்யுளகளும் விரவி யாவும் உறழ் கூற்றாகவும் கவிக் கூற்றாகவும் அமைந்துள்ளன. (பிற விளக்கங்களைக் குறவஞ்சி என்னும் தலைப்பிற் காண்க.).

தமிழரசி குறவஞ்சியின் பாட்டுடைத் தலைவன் தமிழ்த்தெய்வமாகிய முருகக்கடவுள்கோயில் கொண்டருளும் திருத்தலங்களுள் தஞ்சை மாவட்டத்துள புகழ் பெற்றிலங்கும் சுவாமிமலை என்னும் தலத்தில் எழுந்தருளியிருக்கும் முருகக் கடவுளாவார். தலைவி அத்தலத்தில் உறையும் கன்னிப் பெண்ணாகிய தமிழரசி என்பவளாவாள்.

இந்நூலை இயற்றியவர் தோரமங்கலம் ஆசிரியர் திரு.அ. வரதநஞ்சையபிள்ளையாவார். இந்நூல் கரந்தைத் தமிழ்ச் சங்கத்தின் வெள்ளி விழாவின்போது திருப்பாதிரிப் புலியூர் அருட்டிரு சிவசண்முக மெய்ஞ்ஞான சிவாசாரியார் தலைமையில் தமிழவேள் த.வே உமாமகேசுவரனார் முன்னிலையில் பெரும்புலவோர் நிறைந்த பேரவையில் அரங்கேற்றப்பட்டது என்பது முன்னுரையாலும் நூலுள் வரும் சிங்கன் கூற்றாலும் விளங்குகின்றது.

இந்நூலின் நோக்கம் தமிழ் மொழியின் தெய்வத் தன்மை யொடு கூடிய சிறப்பினையும், அதன இலக்கண இலக்கிய வளஙகளையும் எடுத்துக கூறித் தமிழவேள் உமாமகேசுவரனார் தொணடினைச் சிறப்பித்தல் என்பது விளங்கப் பிற்பகுதிப் பாடல்கள் அமைந்துள்ளன. பாடல்கள யாவும் அகப்பொருளிலக்கண மரபை ஒட்டியும் அணி நயங்களொடு கூடியும் எளிமையும் இனிமையுமாக அமைந்துள்ளன. பேச்சு வழக்குச் சொற்களும் இடையிடையே விரவியுள்ளன. குறத்தி குறிசொல்லுதல், குறத்தியும் சிஙகனும் உறழ்ந்து கூறும் கூற்றுக்கள் குறிப்பாகவும், மலை வளம் நாட்டு வளம் தமிழ் மொழியின் சிறப்பு ஆகியவை விளக்கமாகவும் அமைந்துள்ளன.

'தமிழ் அன்னையை மீட்டன்றி வேறு செய்யேனென தாவி யுடல் பொருள் யாவும் அவட்கெனத் தன்னை நீர்விட்டுத் தானம் கொடுத்தாதரிக்கும் உமாமகேசன் தமிழார்வம்போல்' என்னும் சிஙகன் கூற்றில் வரும் ஒரு தொடர் குறிப்பிடத் தக்கதாகும். ச.பா.

**தமிழி:** பண்டைக் காலத்தில் தமிழ மொழியில் அமைந்த சொற்களை எழுதப் பயன்பட்ட எழுத்து வகை தமிழி என்று அழைக்கப்பட்டது. தாமிழி என்றும் இது கூறப்படுகின்றது. தமிழுக்கு ஆக ஏற்பட்டது தாமிழி. இது வடநூல் முறையை ஒட்டி வந்த பெயர். தமிழில் தமிழ் என்றே சொல்லலாம். இப்பெயர் கி.மு. முதல் (மூன்றாம்?) நூற்றாண்டிற்கு

## பிராமி எழுத்துகள்

**உயிர் எழுத்துகள்**

| அ | ஆ | இ | ஈ | உ | ஊ | ஏ | ஐ | ஒ |
|---|---|---|---|---|---|---|---|---|

| ய | ர | ல | வ | ச | ஷ | ஸ | ஹ |
|---|---|---|---|---|---|---|---|

**மெய் எழுத்துகள்**

| வரிசை | | | | | |
|---|---|---|---|---|---|
| ககர வரிசை | க | க2 | க3 | க4 | ங |
| சகர வரிசை | ச | ச2 | ச3 | ச4 | ஞ |
| டகர வரிசை | ட | ட2 | ட3 | ட4 | ண |
| தகர வரிசை | த | த2 | த3 | த4 | ந |
| பகர வரிசை | ப | ப2 | ப3 | ப4 | ம |

**தமிழி அல்லது தாமிழி**

| அ | ஆ | இ | ஈ | உ | ஊ | ஏ | ஒ |
|---|---|---|---|---|---|---|---|

| க | ங | ச | ஞ | ட | ண | த | ந | ப | ம | ய | ர | ல | வ | ழ | ள | ற | ன |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|

முற்பட்ட 'சமவாயாங்க சுத்த' (சமவாயாங்க சூத்திரம்) என்ற பெயருடைய சமணநூலில் இந்தியாவில் வழங்கி வந்த பதினெட்டுஎழுத்துவகைகளில்ஒன்றாகக் கொடுக்கப்பட்டிருந்தது. அந்தப் பட்டியலில் பிராம்மி எனப்பட்டு பம்மி என்னும் பெயராலும் அறியப் பெறும் எழுத்து வகையும் காணப்படுகிறது. எனவே மற்றவற்றோடு தமிழ் எழுத்தும் பிராமி எழுத்தோடு தோன்றின என்று கொள்ள இடமிருக்கிறது. இரண்டிற்கும் வேறுபாடு காணப்படுவதால் இந்தக் கருத்துப்பொருந்தும்.

அடியில் கோடு இடப்பட்ட எழுத்துகள் ஒன்றில் இருப்பது மற்றொன்றில் இல்லை. தமிழி எழுத்து வகையில் எகர ஒகரக் குறிலும் ஐகார ஔகாரங்களும் காணப்படவில்லை. மொழி மரபு அறிந்தவர்கள் வாசித்துக் கொள்ள இயலும் என்ற ஊகத்தின் பேரில் இவை பயன்படுத்தப்பட்டன. பிராமியோடு ஒருங்கே வைத்து எண்ணப்பட்ட தாமிழி (தமிழி)க்கும் பிராமிக்கும் பொதுவான எழுத்துகளை நீக்கிச் சிறப்பான எழுத்துகளை ஒப்பிட்டுப் பார்த்தால் அப் பொதுஎழுத்துகள் தமிழுக்காகவே உருவாக்கப்பட்டன என்று எண்ண வாய்ப்பு இருக்கிறது. ஏனெனில் சிறப்பு எழுத்துகளுள் ஒன்றாகிய ழ கரத்தைத் தவிர மற்ற ள,ற,ன என்ற மூன்று எழுத்துகளும முறையே ல,ர,ந என்ற எழுத்துகளிலிருநது பெறப்பட்டன என்பது தெளிவு.

ல→ள ர→ற ந→ன

மாறாக பிராமி எழுத்துகளில்

ச→ச2 ட→ட2 ட3→ட4 த3→த4 ப→ப2

பதினைந்து வல்லின மெய்களில் ஐந்து மெய்களும் மூன்று முதல் மெய்களிலிருந்தும் இரணடு துணை மெய்களிலிருந்தும் பெறப்பட்டன. மற்ற மெய்களுக்கு மூல எழுத்துகள் அறியக்கூட வில்லை. ஷ ஸ ஹ என்ற மூன்றும் அறவே எதற்கும் தொடர்பில்லாத எழுத்துகள். மூலம் அறியப்படாததால் பிரமனே படைத்ததாகக் கொணடு பிராமி என்று அழைக்கப்படும் எழுத்துகளுக்கும் தமிழியே மூலமாக அமையலாம். ஆயினும் எல்லாவற்றிற்கும் மூலம் இன்றும் அறிந்துகொள்ள இயலவிலலை.

தமிழியல் எழுத்துகளில் எழுதப்பட்ட கல் வெட்டுகளில் உயிர்மெய் எழுத்துகளில் அகரம் கலந்த உயிர்மெய்களுக்கு மட்டும் அகரத்தைத் தனி யாக எழுதும் வழக்கம் இருந்ததை மீனாட்சிபுரம் (மாஙகுளம்) குகைக் கல்வெட்டுகள காட்டுகின்றன:

க் க கா

மற்றைய உயிர்மெய்களில் இம்முறை இல்லை. அதனால் இதே ஒரு பயிற்சிச் சோதனை என்று கருத வேண்டியிருக்கிறது.

தமிழி எழுது முறையால் தமிழ் ஆன வரலாற் றைத் தமிழ் (எழுத்து) என்ற தலைப்பில் காண்க.

கே ஜி.கி.

**தமிழிசைச் சங்கம்:** இயற்றமிழைப் போன்றே இசைத்தமிழும் பண்டைக் காலத்திலேயே வளர்ந்து சிறந்தது; எழுவகைப் பண்களும், எண்ணிறந்த திறங்களுமாக வகுக்கப் பெற்று விளங்கியது. தொல் காப்பியம் ஐவகை நிலங்களுக்கும் உரிய பண்களைச் சுட்டுகின்றது. யாழ் முதலாகிய இசைக்கருவிகளைப் பற்றியும், பாணர் போன்ற இசைக்கலைஞர் பற்றியும் சங்க இலக்கியங்கள் குறிப்பிடுகின்றன. 'பண் என் னாம் பாடற்கியைபின்றேல்' என்று இசைக்கலையில தமிழரின் தேர்ச்சியைக் குறள் உணர்த்துகிறது. ஆழ்வார்களும், நாயன்மார்களும் 'ஏழிசையாய் இசைப்பயனாய்' இறைவனைக்கண்டனர்; தமிழோடு இசைபாட மறந்தறியாவாறு உறுதி பூண்டனர்.

சோழர் காலத்தில் மேனிலை எய்திய தமிழிசை, பின்வந்த அந்நியர் ஆட்சிக் காலங்களில் நிலை தாழ்ந்தபோது, கருநாடக இசையாக மாற்றம் பெற்று வளரலாயிற்று. காலச்சூழலில், கருநாடக இசையில் தெலுங்கு மொழியின் ஆதிக்கம் மிகுந்தது. எனினும், சங்கீத மும்மூர்த்திகளின் காலத்திற்கு முன்னும் பின்னும் முத்துத் தாண்டவர், மாரிமுத்தாப் பிள்ளை, அருணாசலக் கவிராயர், கோபாலகிருட்டிண பாரதியார், வேதநாயகம் பிளளை முதலானோர் தமிழிசையை வாழ்வித்தனர். இவ்வாறு தொன்மை யும் தொடர்ச்சியான வரலாறும் கொண்ட தமிழிசை இந்நூற்றாண்டின் தொடக்கத்தில் கேட்பதே அரி தெனும் நிலையை எய்தியது. நான்குமணி நேர இசையரங்குகளில், இறுதி ஓரிரு பாடல்களே 'துக்கடா' என்னும் பெயரில் தமிழிசையாகப் பாடப் பெற்றன. 'வித்துவான்கள் பழைய கீர்த்தனங்களைப் பாடம் பண்ணிப் புராதன வழிகளைத் தெரிந்து கொள்ளுதல் அவசியம். ஆனால், தமிழ்ச் சபைகளிலே எப்போதும் அர்த்தம் தெரியாத பாஷைகளில் பழம் பாட்டுக்களை மீணடும் மீண்டும் சொல்லுதல் நியாயமில்லை. அதனால், நமது சாதி சங்கீத ஞானத்தை இழந்து போகும்படி நேரிடும்' என்று பாரதியாரே கூறியுள்ளமை அக்கால இசைநிலையை யும் அக்காலச் சூழலையும் நன்குணர்த்தும்.

**தமிழிசை இயக்கம்:** தமிழிசையின் இழிநிலை கணடு தமிழர் பொங்கியெழுந்தனர். தமிழ்நாடெங் கும் தமிழிசை முழங்க வேண்டுமென முழங்கினர். தமிழிசை இயக்கம் தோன்றியது. அவ்வியக்கத்தின் ஆற்றலாக அண்ணாமலை அரசர் விளஙகினார். சக்கரவர்த்தி இராசகோபாலாச்சாரியார், ரா.க. சண்முகஞ் செட்டியார், டி.கே. சிதம்பரநாத முதலி யார், கல்கி ரா. கிருட்டிணமூர்த்தி, சி.எசு. இரத்தின சபாபதி போன்றோர் இவ்வியக்கம் வளரத் துணை புரிந்தனர்.

செட்டி நாட்டரசர் டாக்டர் அண்ணாமலைச் செட்டியார் இயல்பிலேயே தமிழிசையில ஈடுபாடு கொண்டவர். தமிழிசைக்கல்லூரி ஒனறை 1929-இல நிறுவி 1932-இல் அதனை அண்ணாமலைப் பல்கலைக் கழகத்துடன் இணைத்தார். அவர் 1932-இல் நடந்த சென்னை இசைக் கலைஞர் கழக மாநாட்டிலும், 1933-இல் நடைபெற்ற தென்னிந்திய இசைமாநாட் டிலும், பின்னர் 1936-இல் அண்ணாமலைப் பல் கலைக் கழக இசை மாநாட்டிலும் தமிழிசையை வற் புறுத்தி, அரிய சொற்பொழிவுகள் ஆற்றினார், எனினும் 1940-ஆம் ஆண்டுவரை அணண்ணாமலைப் பல்கலைக் கழக இசைப்பகுதியிலும் பிற மொழிப் பாடல்களே மிகுதியும் பாடப் பெற்றன.

அண்ணாமலைப் பல்கலைக் கழகப் பட்டமளிப்பு விழாவில் 1940-ஆம் ஆண்டு தமிழிசை வளர்ச்சிக் கெனப் பதினாயிரம் வெண பொற்காசுகளை நன கொடையாக அரசர் வழங்கினார். புதிய தமிழிசைப் பாடல்கள் இயற்றுவதை ஊக்குவித்துப் பழந்தமிழ் இசைப் பாடல்கள் வெளிவர வழி செய்தார். அப் பட்டமளிப்பு விழாவில், தலைமை தாங்கிய ஆளுநரின் பெயரால் உரூபாய் ஆயிரத்திற்கான பரிசுத்திட்டம் ஒன்றையும் அறிவித்தார். அரசரின் அறுபதாம் பிறந்த நாளன்று (1941) இரண்டாம் முறையாகத் தமிழிசை வளர்ச்சிக்கென உரூபாய் பதினைந்தாயிரம் நன்கொடை வழங்கினார். இவ் விழாவில் தமிழிசை வளர்ச்சிக்கெனப் பல திட்டங கள் வகுக்கப் பெற்றன.

**எதிர்ப்புகளும் மறுப்புகளும்:** தமிழகத்தின் மூலை முடுக்குகளில் இருந்தெல்லாம் தமிழிசை இயக்கத்

திற்கு எதிர்ப்புகள் எழுந்தன. பலர் கண்டனங்கள் எழுப்பினர், பேசினர். "தமிழ் மொழி இசை பாடு தற்கு ஏற்றதன்று, தமிழில் நலல கீதவர்ணங்கள் இல்லை. இசைககு மொழி தேவையில்லை என்றனர். அதற்குத் தமிழறிஞர் பலரும் மறுப்புக் கூறித் தமிழிசைக்கு ஆதரவளித்தனர்.

தமிழ்மொழி இசை பாடுதறகு ஏற்றதன்று என் பது அறியாதார் கூற்றாகும். இசைக்குமொழி அவசிய மின்றேல் வாயப்பாட்டு பாடப்பெறுவது ஏன்? கேட்போர்க்கும் பாடுவோர்க்கும் இசையின்பத்தை யும பொருட்சுவையையும் ஊட்டவல்லது தாய் மொழிப பாடலே என்று கூறி 'இப்போது இசையரங்கு களில் வேற்றுமொழிப் பாடலகளுக்குக் கொடுக்கப் படும் நேரத்தைத் தமிழ்ப் பாடல்களுக்கும் தமிழ்ப் பாடல்களுக்காக ஒதுக்கப்படும் நேரத்தை வேற்று மொழிப் பாடலுககும் கொடுக்கவேண்டும் என்பதே என் விருப்பம் என அண்ணாமலை அரசர் மொழிந தார். சங்கீதத்தை மனிதக் குரலில் கேட்கும்போது அந்தக்குரலில மொழிகள வரும்போது, அந்த மொழி கள் அர்த்தமில்லாமல் வேறு ஏதோ சப்தமாய் முர சின் சப்தமாய்-தம்பட்டையின் சப்தமாய்-இருப்பதற் மாறாகச் சஙகீதத்தின இனிமைக்கு ஏற்றதாகக் கேட் போர்க்கு விளஙகும மொழியாக இருந்தால், இசை யாகஇருந்தால், மகிழச்சியாக இருக்கும் எனபதுதான் 'தமிழிசை இயக்கத்தின நோக்கம். தாய்மொழி யில் பாடினால தான் ஆத்மாவுக்கும் திருப்தி கிடைக்கும்; 'கடவுளுக்கும் காதுகேட்கும்' எனறு இராசாசி தமிழிசையின நோக்கத்தை விளக்கினார். தமிழில் எனன இசை இருக்கிறதோ அந்த இசை எனக்குப் போதும் என்னுடைய தழிழில் ஒரு பாட்டைக் கேட்கும்போது என்ன ஆத்ம திருப்தி உண்டாகிறதோ, அந்த திருப்தி எனககு வேறு எநத மொழியில் பாட்டுக் கேட்டாலும் உண்டாகாது' என்று ரா.க. சண்முகம் உரைத்தார்.

வானொலியில் தமிழிசைக்குப் போதுமான இடம் தாராமை கண்டு, திருச்சி வானொலியில் 100-க்கு 80 பங்கும், சென்னை வானொலியில் 40 பங்கும் தமிழிசைககும் பிற தமிழ் நிகழ்ச்சிகளுக்கும் முன் னுரிமை தருமாறு அண்ணாமலை அரசர் போராடி னார்.

பல்வேறு எதிர்ப்புகளிடையே தமிழிசை இயக்கம் வேகமாக வளர்ந்தது. இவ்வியக்கத்தின் வளர்ச்சியை அறிஞர் அண்ணா, '... இந்த இயக்கம், தமிழ் நாட்டில் மிக வேகமாக வேலை செய்து, ஒரு வருடம் அல்லது இரணடு வருடத்திற்குள் தமிழ்நாடு முழு வதையுமே தன்வயப் படுத்திக் கொண்டது' என்று கூறியுள்ளார். முருகப்பா என்பவர் தமிழிசை இயக் கத்தின் தளபதியாகக் கருதப்பட்டார். நகரத்தார் தமிழிசைக்கு நற்றுணை புரிந்தனர். தமிழிசையைப் பாட மறுத்த அரியக்குடி இராமானுச ஐயஙகார், செம்மங்குடி சீனிவாசையர், முசிறி சுப்பிரமணிய ஐயர் போன்றோரைச் செட்டி நாட்டு எலலைக்கு அழைப்பதில்லை எனக் கங்கணம் பூண்டனர். சிற்றூர்களிலெல்லாம் தமிழிசை அரங்குகள் அமைத்து வளர்த்தனர்.

**தமிழிசை மாநாடுகள்:** அணணாமலைநகரில் 1941-இல் முதல் தமிழிசை மாநாடு நடைபெற்றது. மாநாட்டில் மூன்று நாட்களும் தொடாந்து தமிழி சையே முழங்கியது. அந்த ஆண்டு அக்டோபரில் தேவ கோட்டையிலும், திசம்பரில் திருசசியிலும் தமிழிசை மாநாடுகள் கூட்டப் பெற்றன. பினனர் 1942-இல் மதுரை, புதுக்கோட்டை, ஆத்தங்குடி, தஞ்சை முதலிய இடங்களிலும், 1943-இல சென்னையிலும், 1944-இல் திருச்சியிலும் 1945-இல் இரண்டாம் முறை யாகத் தஞ்சையிலும் மாநாடுகள நடந்தேறின.

**தமிழிசைச் சங்கம்:** தமிழகத்தின் பல பகுதிகளிலும் தமிழிசைச் சங்கஙகள் பல நிறுவப் பெற்றன. காரைக் குடியில் 1941-இல திரு சா.கணேசன் அவாகள் தலைமையில் தமிழிசைச் சங்கம் தொடஙகப் பெற்றது. திருநெல்வேலி, திருப்பத்தூர், திணடுக்கல், தஞ்சை, ஈரோடு, வேலூர், காஞ்சிபுரம் ஆகிய இடங் களில், 1944-இல் தமிழிசைச் சங்கங்கள தோற்று விக்கப்பட்டன. சங்கங்கள், மாநாடுகள தொடர்பாக ஆங்காஙகே பள்ளிகளும், கல்லூரிகளும் தொடங்கப் பெற்றன.

**தலைமைச் சங்கம்:** தமிழகத்திலுளள தமிழிசைச் சஙகஙகளுக்கெல்லாம் தலைமைச் சங்கம் அமைக்க அரசர் விரும்பினார். அரசர் முப்பதாயிரம் உருபாய் நனகொடையளித்து, ரா.க. சணமுகஞ்செட்டியார் துணையுடன் சென்னையில் தமிழிசைச் சங்கத்தைத் தோற்றுவித்தார். அரசரே அச்சஙகத்தின் தலைவரா கவும், ரா.க. சண்முகம் துணைத்தலைவராகவும், டி எசு. கச்சாபிகேச முதலியார் மதிப்பியல் செயலாள ராகவும், சி எசு. இரத்தின சபாபதி போன்றோர் உறுப்பினராகவும் பொறுப்பேற்க, செயற்குழு அமைக் கப் பெற்றது. இசசங்கத்திற்கு ஐந்து இலட்சம் உரு பாய் வைப்பு நிதியாகக் குவிந்தது. அண்ணாமலை அரசருக்குப் பிறகு அவர் மகன் செட்டி நாட்டரசர் மு.அ.முத்தையா செட்டியாரும் அவர்தம் இளவல் சிதம்பரஞ் செட்டியாரும் தமிழிசைச் சங்கத்தைக் கண்ணாகப் போற்றி வளர்த்தனர்.

**நோக்கங்கள்:** தமிழ நாட்டில் நடக்கும் இசை யரங்குகளில் தமிழ்ப் பாடல்களே முதன்மை பெற

வேண்டும். இசையரங்கின் தொடக்கமும் முடிவும் தமிழ்ப் பாடல்களாகவே இருக்க வேண்டும். இசை யரங்கின் பெரும்பகுதி தமிழ்ப் பாடல்களாக இருக்க வேண்டும். ஆண்டுதோறும் இசைமாநாடு நடத்தி அதைத் தொடர்ந்து பல நாட்களுக்குத் தமிழிசை யரங்கு ஏற்பாடு செய்தல், பல புதிய இசைப் பாடல் களைத் தமிழில் வெளிவரச் செய்தல், தகுதியுள்ள பாடகர்களுக்கு நற்சானறிதழ் அளித்தல், தமிழ்ப் பாடல்கள் இயற்றுவதிலோ, பாடுவதிலோ திறமை வாய்ந்த வித்துவான்களுக்கு மதிப்புறு சின்னங்கள அளித்தல், இசையின் இலக்கண இலக்கியங்களை விளக்கிக் காட்டிச் சிறந்த தொண்டு புரிந்து மேன்மை அடைந்திருப்பவர்களுக்கு மதிப்புறு சின்னங்கள் அளித்தல் முதலியன இதன் பணிகளாகும்.

**பணிகள்:** சென்னைத் தமிழிசைச் சங்கத்தின் சார்பில் இசைக்கல்லூரி ஒன்று தொடங்கப் பெற்றது. இக்கல்லூரியில் வாய்ப்பாட்டு, வீணை, பிடில், மிரு தங்கம் முதலிய பிரிவுகளில் பயிற்சியளிக்கப் பெற்று 'இசைமணி', 'இசைச் செல்வம்' என்னும் பட்டங்கள் வழங்கப்படுகின்றன. வெளிநாட்டவரும் இங்கு வந்து இக்கல்லூரியில் விரும்பிப் பயில்கின்றனர். இச்சங்கம் தமிழிசை வளர்ச்சிக்காக நடனம், நாடகம் முதலிய கலை நிகழ்ச்சிகள் நடத்த மிகவும் வசதியுள்ள இசையரங்கம் வேண்டுமென்ற நோக்குடன் 1953-இல் இராசா அண்ணாமலை மன்றத்தை நிறுவியது. இசைக்கு இன்றியமையாத கருவிகள் பற்றிப் பொதுமக்கள் அறிந்து கொள்வதற்காக நூற்றுக் கணக்கான இசைக் கருவிகளை ஒருங்கே கொண்ட இசைக்கருவி நிலையம் ஒன்று இம்மன்றத்தில் அமைக்கப் பெற்றுள்ளது.

சென்னையில் 1942-இல் தொடங்கி, ஆண்டு தோறும் திசம்பர்த் திங்களில் பத்து நாட்கள் இசை விழா நடத்தப் பெறுகிறது. அன்றியும் சில மாதங் களுக்கு ஒருமுறை. இலவசமாக இசையரங்குகள் நடத்துகின்றனர். இசைவிழாவோடு 1949 முதல் பண்ணாராய்ச்சிக் கூட்டமும் திசம்பர் மாதம் தோறும் நடத்தப் பெறுகின்றது. இக்கூட்டத்தில் பெரு முயற் சியுடன் பழைய பண்களுக்குச் சரியான இக்கால இராகங்கள் கண்டுபிடிக்கப்பெறுகின்றன. இதில் இசைப் புலவர்களும் தேவார ஓதுவார்களும் கலந்து கொள் கிறார்கள். இவ்விழாவில் தலைமை தாங்குபவர் கட்கு ஆண்டுதோறும் 'இசைப் பேரறிஞர்' பட்டம் நல்கப்படுகிறது. மேலும், மறைந்து போகவிருந்த சரபேந்திர பூபாலக் குறவஞ்சி நாடகத்தை மீண்டும் இச்சங்கம் அரங்கேற்றியது.

**போட்டிகள்:** தமிழிசைச் சங்கம் ஆண்டுதோறும் பல போட்டிகளை நடத்துகின்றது. பொதுவாக 1947-இல் தமிழிசைப் போட்டி நடைபெற்றது. முத்துத் தாணடவர் பாடல் போட்டி 1948-இல் நடைபெற்றது. தொடர்ந்து ஆண்டுதோறும் கோபாலகிருட்டிண பாரதியார் போட்டி நடை பெற்று வருகிறது. இப்போட்டியில் வெற்றி பெறு பவர்களுக்கு இராசாசியின பெயரால் 'தமபூரா' பரிசளிக்க அரசர் நனகொடைவழங்கினார். மேலும், முத்துத்தாண்டவர், சுப்பிரமணிய பாரதியார், அருணாசலக்கவி முதலானோா பெயர்களில் அவ்வப போது பாடல் போட்டிகளை நடத்தி வெற்றி பெறு பவர்களுக்குப் பதக்கம் வழங்கி வருகிறது.

**தமிழிசைச் சங்க வெளியீடுகள்:** பண்டிதமணி மு. கதிரேசஞ் செட்டியார் தலைமையில் பேராசிரியர் லெ.ப.கரு. இராமநாதன் செட்டியாரைச் செய லாளராகக் கொண்டு 1943-இல் தமிழிசை ஆலோ சனைக் குழு ஒன்று அமைக்கப்பெற்றது. இதன் மூலம் 20 தமிழிசை நூல்கள சில ஆணடுகளுக்குள ளேயே வெளிவந்தன. எது இசை (1946),'கீர்த்தனை மஞ்சரி' (1951), 'வானொலியில் தமிழிசை' (1954) முதலியன வெளியிடப்பட்டன. அண்ணாமலைப் பல்கலைக் கழக இசைப் பேராசிரியர் எம்.எம் தண்ட பாணி தேசிகர் அவர்களால் இசையமைக்கப்பெற்ற 'தேவார, திவ்வியப்பிரபந்த, திருப்புகழ்ப் பாடல்கள்' என்னும் நூல் தமிழிசைச் சங்கத்தின் 24-ஆம் ஆண்டு விழாவில் (1966) வெளியிடப்பட்டது.

**மலர் வெளியீடு:** தமிழிசைச் சங்க ஆண்டு விழா வினையொட்டி ஆண்டு தோறும் 'நிகழ்ச்சி விவரங் கள், கீர்த்தனைகளை இயற்றிய புலவர், புரவலர் பற்றிய குறிப்புகள கொண்ட மலர் வெளியிடப்படு கிறது. மேலும், இசை நுட்பங்கள் பற்றிய அறிஞர் களின் கட்டுரைகள், விழாவின் தொடக்க உரை, வரவேற்புரை, தலைமையுரை முதலியனவும் தமி ழிசைச் சங்கத்தின பிற நிகழ்ச்சிகளும இம்மலரில் இடம்பெறுகின்றன.

ஆண்டுமலர் மட்டுமன்றி, 'தமிழிசைமலர்' என்ற பெயருடன் 1946-இல் இரு மலர்களும் 1948-இல் இரு மலர்களும் 1949-இல் ஒருமலரும் வெளிவநதன. இவற்றுள் 1948 அக்டோபர் திங்களில் வெளிவநத மலர் அண்ணாமலை அரசரின் நினைவு மலராகும். தில்லையாடி அருணாசலக் கவிராயரின் 170-ஆம் ஆண்டுவிழா மலர் 1949-இல் வெளிவந்தது.

முதல் பண் ஆராய்ச்சிக் கூட்டத்தில் பெ.தூரா னின் 'பண் வரலாறு' என்ற கட்டுரையும், பேரா சிரியர் பி.சாம்பமூர்த்தியின் 'பண்-ராக ஆராய்ச்சி' என்ற கட்டுரையும் சேர்ந்த தனி நூல் வெளியாயிற்று. மேலும், பண் ஆராய்ச்சிக் கூட்டத்தின் அனைத்து

நிகழ்ச்சிகளும் அறிக்கை வடிவில் ஆண்டுதோறும் வெளியிடப் படுகின்றன.

டாக்டர் ரா. க.சண்முகஞ் செட்டியார், நீதி பதி மகராசன் முதலியோர் தமிழிசைச சங்கத்தின தலைவர்களாகப் பணியாற்றினா. இப்போது நீதிபதி கோகுலகிருட்டிணன அவர்கள் தலைவராகப் பணி யாற்றுகிறார். சென்னைச்சங்கீத நாடக சங்கமும், தில்லி சஙகீத நாடகக கழகமும் இச்சங்கத்தின கல்லூரிப் பணியையும், பண ஆராய்ச்சியினையும் பாராட்டி, ஓரளவு உதவித்தொகை வழஙகி வருகின றன.

தமிழிசைச் சங்கத்தின் அலுவலகமும் கல்லூரி யும் சென்னை அண்ணாமலை மன்றத்தில அமைந் துள்ளன. வெ தெ.மா.

**தயர், இரெசினால்டு எட்வர்டு ஆரி (கி பி. 1864-1927):** ஆஙகிலேயத் தளபதியான இவர் கி.பி. 1864-ஆம் ஆணடு பஞ்சாபிலுள்ள முரி யில பிறந்தார். காநதியடிகளின ஒப்பற்ற தலைமை யில் நடந்த விடுதலை இயககததின் குறிப்பிடத் தகுந்த கட்டம் சாலியனவாலாபாகுப் படுகொலை நிகழ்ச்சியாகும். விடுதலை இயக்கம் பஞ்சாபுககுப் பரவவிடாமல் தடுக்க வேணடுமென்று அப்பகுதியின் இராணுவத் தளபதியாகப் பணியாற்றிய தயா(Dyer, Reginald Edward Harry) விரும்பினார். இவா 1919-இல் நடக்கவிருந்த அமிர்தசரசு காஙகிரசு மாநாட்டை நடைபெறாமல் மிகவும் கொடுமையாகத் தடுக்க முயன்றதில் மிகுந்த குழப்பம் ஏற்பட்டிருந்தது. அவ்வமயம் காந்தியடிகள் அங்கு வரவழைக்கப் பட்டிருக்கிறார் என்று தெரிந்ததும் அவர் பஞ்சாபு மாநிலத்திற்குள அடி வைக்கக்கூடாதெனறு தயர் தடை விதித்தார். இதற்குப் பெரும் எதிாப்புக் கிளம்பியது.

ஆங்கிலேயர் என்றென்றும் தலைகுனியக் கூடிய பஞ்சாபுப்படுகொலை நிகழ்சசி 1919 ஏப்பிரல் 13-ஆம் நாளன்று நடந்தது. சாலியன் வாலாபாகு என்ற தோட்டத்தில் திரணட இருபதினாயிரம் மக்களமீது தயரின் ஆணையின் பேரில ஆயிரத்து அறுநூறு தோட்டாக்கள் சுடப்பப்பட்டன. ஐநநூறுபேர் மாண டனர். மூவாயிரம் பேர் கடுமையாகக் காயமடைந்த னா. தோட்டாககள் தீாந்துபோனதாலதான் சுடு வதை நிறுத்தினார். இனனும தோட்டாககள் இருந் தால சுட்டிருப்பேன் எனறாராம கலநெஞ்சக்கார னான தயர். தயர் இராணுவ ஆட்சியை அறிவித் தார். தெருக்களிலும், சநதுகளிலும மக்கள் ஊாந்து தவழ்ந்துதான் செல்லவேணடுமெனறு உத்தரவிட் டார். விடுதலை இயக்கத் தொண்டர்களைச் சிறை செய்து, தெருக்களின வழியாக இழுததுச் சென்று உடனே விசாரணை நடத்திப் பத்தாணடுகள, பதினைந்தாண்டுகள எனறு சிறைத்தணடனை அளித தார் சிலரை நாடு கடத்தினார்.

இங்கிலாநதில் தளபதி தயருக்கு 20,000 பவுன் பணமுடிப்பு அளித்துச் சிறப்புச் செய்தனா. இவர் 1927-இல இறநதார். கே.சே.

**தயாக்குகள்** போர்னியோத் தீவுகளில் வாழும் மிகத் தொனமையான பழங்குடிகள. தயாக்குகள (Dayaks) என்னும் சொல போர்னியோத தீவுகளில வாழும் இசுலாமியர் அல்லாத பனனிரணடு ஆதிககுடி களைக் குறிக்கும் சொல்லாகும். இத்தீவுகளுககுக குடி யேறிய ஆலந்து நாட்டவர்கள (Dutch) ஆவியுலக நம்பிக்கை கொண்ட அனைத்து ஆதிக் குடிகளையும் தயாக்குகள எனக் குறிப்பிட்டனர். ஆஙகிலேயர்கள இத்தீவிற்குக் குடியேறியபின் பழங்குடிகளுள் முக்கிய பிரிவினரை வேறுபடுததிக காட்டுமவகையில ஒரு குடியினரைக் கடல தயாக்குகள (Sea Dayaks) என அழைததனர். இஙகு வாழும் ஆதிக குடிகளுள ஒரு பிரிவினா இசுலாமிய சமய நம்பிககைகளைக் கொண டுளளதால இத்தீவில வாழும் ஆதிக்குடிகள இசுலாமிய சமயத்தைச சார்நதோர் எனறும், சாராதவாகள எனறும இருவகைபபடுவர்.



தயாக்கு ஆடவன்

போர்னியோத் தீவு இந்தோ சீனா பகுதிக்கும் இந்தோனேசியாவிற்கும இடையில் அமைந்துள்ளது. அதன அணமையில் மலேசியா உளளது. இயறகை வளம் மிகுந்த போர்னியோத் தீவு கலிமணடான் (Kalimantan) பகுதி, சாரவாக்குப் (Sarawak) பகுதி, சபா (Sabah) பகுதிஎன மூன்று பெரும் பகுதிகளாகப் பிரிககப்பட்டுளளது. இப்பகுதிகளில பலஆறுகளபாய்

வதால போக்குவரத்திற்கு அவை மிகவும் பயனபடுத் தப்படுகினறன.

தயாக்குப் பழங்குடியினர் மஙகோலிய இனப் பண்புகளைப் பெரிதும் கொண்டுளளனா. ஆணகள் சராசரியாக $5\frac{1}{2}$ அடி உயரமுடையவாகள. பெண்கள் சற்றுக் குட்டையானவர்களா. இவாகளின தலைமயிர் கருமையானது, சொறசொறபபானது, நேரானது. உடல் நிறம் மிதமான பழுப்பு முதல கரும் பழுப்பு வரையிலானது முகத்தில் மயிரின அளவு மிகக் குறைவு.

இஙகு வாழும் பன்னிரணடுக்கும் மேற்பட்ட பழஙகுடிகள் அனைவரும் ஒரு காலத்தில சுமததரா, இந்தோ சீனப் பகுதிகளிலிருந்து இஙகுவந்து குடி யேறியவர் எனக் கூறுவர். முதலில் வநது குடியேறிய போது கடற்கரைப் பகுதிகளில் இடம்பிடிததுப் பின் னர் உட்பகுதிகளுக்கும் சென்று குடியேறினர்.

தயாக்குகளின் குடியிருப்புகள் மிகவும் புதுமை யானவை. இவர்கள் 20) அடிக்கும் மேறபட்ட மிக நீண்ட வீட்டினைக கட்டி அதனுள் பல பகுதிகளாகப் பிரித்துப் பல குடும்பங்களாக வாழ்கின்றனர். தரை யிலிருந்து 5 அல்லது 6 அடி உயரத்தில் வீட்டின் அடித்தளம் அமையுமாறு கட்டுகினறனர். இது காட்டு விலங்குகளிடமிருநது காத்துக்கொளள உதவுகிறது.

கலிமண்டான் பகுதிகளில வாழும் தயாககுகள் மிக நீணட வீடுகளைக் கட்டும் முறையை அறிந்திருகக வில்லை. இவவகையான வீடுகள தீ விபத்திறகுளளா கும் ஆபத்து இருக்கினறதென்றும் இது முன்னேறற மடையாத போக்கினைக காட்டுவதாக உளளது எனறும் கூறுவா.



நீணட வீட்டின ஒரு பகுதி

தயாக்குகளின் பொருளாதாரம் இடம்விட்டு இடம்பெயரும் வேளாண் முறையை (Shifting Cultivation) அடிப்படையாகக் கொணடது. இமமுறை யில் காட்டுப் பகுதியினை அழித்து அவற்றை எரித் துச சாம்பலாககுவர். பின்னர் அவவிடஙகளில் மூனறு நானகு ஆணடுகளுக்குத் தொடர்ந்து பயிரிடுவர். மரஙகளை எரிக்கும் சாம்பல் மூன்று, நான்கு ஆணடு கள் வரை பயிர்களுக்கு ஊட்டத்தைத் தரும் எனறும பினனர் அச்சத்து இழக்கப்படும் எனறும நம்புகினற னா. வானமபார்த்த நெற்பயிரை இவ்விடஙகளில விளைவிக்கினறனர். தாழநிலப் பகுதிகளில் தணணீர் தேங்கி நிறகும் வாய்ப்புள்ளதால் அஙகு நீர் பாய்சசி நெறபயிரை விளைவிககின்றனர். இவர்களது முக்கிய உணவுப பயிரும் இதுவே.

போர்னியோ அரசு தயாக்குவின் இடம்விட்டு இடம பெயரும் வேளாணமை முறையைக் கட்டுப் படுத்தப் பல நடவடிக்கைகளை எடுத்தது. இவவகை வேளாணமையினால் பெருமளவு காட்டுபபகுதி அழிக்கப்பட்டு மண அரிமானம் ஏற்படுகிறது. அரசின்



தயாக்குப் பெண்கள் தானியமிடித்தல்

நடவடிக்கைகளை தயாக்குகள் பலமுறை கடுமையாக எதிர்த்ததால் அரசின் முயற்சி மறைந்துபோயிற்று.

நெற்பயிரைத் தவிர்த்து வெள்ளரிக்காய், பூசணி, மிளகாய், மக்காச்சோளம், வாழை முதலியன விளை விக்கின்றனர். இரப்பர் இவர்களது முக்கிய பணப் பயிர். இவர்களின் அண்டைய மக்களான மலாய் மக்களும் இரப்பரைப் பெருமளவு பயிரிடுவதால் இவர்கள் பயிரிடும் இரப்பரின் விலை அவ்வப்போது இடைத்தரகர்களால் குறைக்கப்படுகிறது. பணப் பயிரை விளைவித்தாலும் இவர்களின் பழங்குடித் தன்மையில் பெரும் மாற்றங்கள் ஏற்பட்டுவிடவில்லை.

காட்டுப்பொருள்கள் சேகரித்தலும் வேட்டையாடுதலும் இவர்களின் முக்கியத் துணைத்தொழில்கள். இவர்கள் சேகரிக்கும் ஒருவகைக் காட்டுக் கொட்டைகளை நறுமணப் பொருள்கள் செய்வதற்கும் பற்பசை செய்வதற்கும் பல நிறுவனங்கள் பெற்றுக்கொள்வதால் இத்தொழில் வருவாய்மிக்கதாக உள்ளது.



வெடிகுழல் கொண்டு வேட்டையாடுதல்

இவர்கள் காட்டுப் பன்றிகளையும் குரங்குகளையும் விரும்பி வேட்டையாடுகின்றனர். இவற்றோடு தேவைப்படும்போது வீட்டில் வளர்க்கும் பன்றிகளையும், கோழிகளையும் கால்நடைகளையும் கொன்று அவற்றின் இறைச்சியை உண்கின்றனர். மீன்களையும் பிடித்து உண்கின்றனர்.

இக்காலத் தயாக்குகள் மரபுத் தொழில்களுடன் அரசு நிறுவனங்கள் மேற்கொண்டுள்ள சாலையமைத்தல், எண்ணெய் வயல்கள், காட்டு மரங்கள் வெட்டுதல் முதலான தொழில்களில் கூலியாட்களாக வேலை செய்யவும் தொடங்கியுள்ளனர்.

பண்டைக் காலங்களில் தயாக்குகள் தலை வேட்டையாடி (Head Hunting) வந்தனர். இக் கொடிய செயல் பல பழங்குடிகளிடையே இருந்தது போன்று இம்மக்களும் இதனை வீரச்செயல் எனக் கருதி செய்துவந்தனர். எதிரிகளின் தலைகளை வெட்டிக் கொண்டு வருவதன்மூலம் தம் குடியினரின் வலிமையும் வளமும் பெருகும் என்ற எண்ணம் இவர்களிடம் நிலவியதே இதற்குக் காரணம். நீண்ட வீடுகளில் இவர்கள் கொய்துவந்த தலைகளின் மண்டையோட்டினை வரிசையாகக் கட்டித் தொங்கவைத்தனர். எந்த வீட்டில் எண்ணிக்கை மிகுதியாக உள்ளதோ அக்காலவழியினரின் ஆண்தன்மை மிகுதி என எண்ணிப் பெருமை கொள்வர். ஆங்கிலேயர்களும் ஆலந்து நாட்டாரும் இந்தப் பழக்கத்தை ஒழிக்கப் பெருமுயற்சி செய்தனர். இரண்டாம் உலகப்போரின் போது பல சப்பானியர்கள் (Japanese) இச் செயலுக்குப் பலியானார்கள். இதற்குப்பின் மேற்குக்கலிமண்டான் பகுதியில் இருந்த சீனர்கள் சிலரும் தலை கொய்யப்பட்டனர். அரசின் தொடர்ச்சியான முயற்சிகளின் மூலம் இப்போது இம்முறையை இவர்கள் கைவிட்டுவிட்டனர்.

தயாக்குகளின் மரபுவழிச் சட்டமுறைகள் (Customary Laws) மிகவும் விரிவானது. எழுதப்படாத இச் சட்டங்கள் பழங்குடித் தலைவர்களால் நெறிபிறழாமல் செயற்படுத்தப்பட்டன. போர்னியோ தீவை ஆலந்து நாட்டவர்களும் ஆங்கிலேயர்களும் ஆண்ட போது, இவர்களின் மரபுசார் சட்டங்களின் தன்மையைப் புரிந்துகொண்டு பழங்குடித் தலைவர்களை மட்டும் அணுகி ஆட்சி புரிந்துவந்தனர். இன்று இவ்வகைச் சட்டமுறைகள் ஓரளவு செயலிழந்துவிட்டன எனலாம். இளைய தலைமுறையினருள் சிலர் கல்வியறிவு பெற்று வருவதும் வெளியாருடன் தொடர்பு

கொண்டு வருவதும் கூலிகளாக வெளியிடங்களுக்குச் சென்று வருவதும் இதற்குக் காரணங்களாகும்.

பழங்குடிச் சமய நெறிகளிலிருந்து கிறித்தவ சமயத்திற்கு மாறியதும் இவர்களிடம் ஏற்பட்டுள்ள மாற்றங்களுக்குக் காரணமெனலாம். கிறித்தவ சமயத்திற்கு மாறிவிட்டாலும் சிலர் இன்றும் ஆவியுலக வழி பாட்டுச் சடங்குகளை மேற்கொள்ளுகின்றனர். இவ்வாறே கிறித்தவ சமயப்பரப்பிகள ஏற்படுத்தியுள்ள மருத்துவ வசதிகள எளிதில கிடைத்தாலும் ஒருசில சிக்கல்களைத் தீர்த்துக்கொளவதில் தெய்வத் தன்மை பெற்றவனின் (Shaman) மருத்துவத்தை நாடுகின்றனர். ஒருசில பழங்குடிகளைப்போலனறி இவர்கள் புதிய மாற்றங்களை ஏற்றுக்கொள்வதில் எதிர்ப்புக் காட்டவில்லை. சீ ப.

**தயாசியன் தொழிற்கூடம்** கற்காலத்தைச் சார்ந்த தொழிற்கூடம். இத்தொழிற்கூடத்தைச் சார்ந்த கற்கருவிகள் இசுரேல் நாட்டில் கார்மல் மலைக் (Carmel) குகைகளிலும் பிரான்சில் கண்டு பிடிக்கப்பட்ட தொன்மையான போன்டிசிவேடு (Bontechevade) மணடையோடுகளுடனும் கணடு பிடிக்கப்பட்டன. இவை பெரும்பாலும் சிம்புக் (Flake) கருவிகளாகும். இச்சிம்புக் கருவிகள் மிகச் சிறிய அளவை உடையவை. இத்தொழிற்கூடக் கருவி களில் கைக்கோடாரி காணப்படவில்லை. தயாசியன் தொழிற்கூடம் (Tayacian Industry) கிளக்கோனியன் தொழிறகூடத்தின் ஒரு சிறுபகுதி எனக் கூறப்படுகிறது. சு.இரா.

**தயால்பாகுக்கல்வி நிறுவனம்**, உத்தரப் பிரதேச மாநிலத்தில், ஆக்கரா நகரையடுத்துத்தயால பாகு (Dayalbagh) என்னுமிடத்தில் 1981-ஆம் ஆண்டு நிறுவப்பட்டது. பல்கலைக் கழக நலகைக்குழுவின (University Grants Commission) 1981-ஆம் ஆணடுச் சட்டத்தினபடி இந்நிறுவனம் பல்கலைக் கழகத் தகுதியைப் (Deemed University) பெற்றது. இதறகு முன்னர் மூன்று கல்லூரிகளாகச் செயற்பட்டுவநத இக்கல்லூரிகள் இணைக்கப்பட்டு தயால்பாகு சல்வி நிறுவனமாக (Dayalbagh Educational Institute) உருப்பெற்றது. இப்பல்கலைக் கழகத்தில் இநதி ஆங்கிலம் இரணடும் பயிற்று மொழியாகவும் தேர்வு மொழியாகவும் உள்ளன.

இப் பல்கலைக் கழகத்தில் கலை, வணிகவியல கலவியியல், பொறியியல் முதலான புலங்கள உள்ளன. இதன்கண் பல துறைகள் செயற்படுகின்றன. கலை, வணிகவியல் புலஙகளில் ஆங்கிலம், சமசுகிருதம், இந்தி, கலவியியல், பொருளியல், வணிகப் பொருளியல் (Business Economics), வணிக மேலாண்மையியல், மனையியல், உளவியல் சமூகவியல், அரசியல், இசை, ஓவியமும் வண்ண நீட்டுதலும் (Drawing and Painting) முதலான துறைகள் உள்ளன. பொறியியல் புலத்தில் பயன் முறை அறிவியல் (Applied Science), தாவரவியல, வேதியியல், பொறியியல், கணிதவியல், இயற்பியல், விலங்கியல் முதலான துறைகள் உள்ளன.

தயால்பாகுப பல்கலைக் கழகத்தில் புகுமுகப் படிப்பு வழங்கப் படவில்லை. தனிப்பட்ட முறையில் (Private Study) கல்வி பயிலும் வசதி மாணவர் களுக்கு இன்னும் ஏற்படுத்தப்படவில்லை. முதுகலைப் பட்டப்படிப்பு வழங்கும் அனைத்துத் துறைகளும் ஆராய்ச்சிப் பட்டஙகளையும் வழங்குகின்றன.அனைத்துப் படிப்புகளும் முழுநேரக் கல்வியாக மட்டுமே வழஙகப்படுகின்றன. இப் பல்கலைக் கழகத்தில் சிறநத நூலகமும், ஆய்வுக் கூடஙகளும் உளளன. சீ.ப.

**தயானந்த சரசுவதி** (கி.பி. 1824-1883): இவர் ஆரிய சமாசத்தை கி.பி 1875-இல் நிறுவியவர். மூல்சங்கர் என்பது இவரது இயற்பெயர்.இவர் கத்திய வாரிலுள்ள மோரவி என்ற கிராமத்தில் கி.பி.1824-இல் பிறநதார். இவருடைய பெற்றோர் செல்வர் களாகத் திகழ்ந்தனா. இருப்பினும் இவர் செல்வத்தில் நாட்டம் கொளளாமல் தமது 22-ஆம் வயதில் வீட்டைவிட்டு வெளியேறினார். இந்தியா முழுவதும் சுற்றினார்; பல இடங்களில் அறிவுரைகளைச் செவி மடுத்தார். பின்னாக்குருடரான சுவாமி விருசானந்து வின் சீடரானார். இவர், தமது கல்விப் பயிற்சி முடிந்தபிறகு எஞ்சிய நாட்களை மறை தத்துவத்தை மக்களுக்கு எடுத்துக் கூறுவதிலும் இந்து சமுதாயத்தைச் சீர்திருத்துவதிலும் செலவிட்டார்.

இவர் உருவாக்கிய ஆரிய சமாசம் மறைநெறியை நாட்டுப்பற்றின மையமாக வைத்து இயங்கியது. இவர் சமசுகிருதம், வேதங்கள்(மறைகள) ஆகிய வற்றை இரு கணகளாகக் கொணடு அனைத்துச் சிக்கலகளுக்கும் தீர்வுகாணக் கட்டளையிட்டார். இவரது இத் தத்துவம் சமரசத்திற்கு உதவவிலலை. இவரது கொள்கையை விளக்கும் ஆரிய சமாசத்தின் மறைநூலான 'சத்தியார்த்தப் பிரகாசம்' (உணமை விளக்கம்) சமசுகிருதம், மறைநெறி ஆகியவற்றில் இவருக்கிருந்த ஆணித்தரமான நம்பிககையை அறியச் செய்கிறது.

கசடறக் கற்ற இவர் மறைகளுக்கு உரை கூறுவதில் தமக்கென ஓர் வழி வகுத்துக்கொண்டார். தமது சீரிய கொளகையைப் பரப்புவதற்கென்றே கி.பி.1875-ஆம் ஆணடு ஏப்பிரல் மாதம் பத்தாம்

நாளில் பம்பாயில் ஆரிய சமாசத்தை இவர் நிறுவினார். இலாகூரில் ஆரிய சமாசத்தின் சட்டதிட்டங்களைக் கி.பி. 1877-இல வரையறுத்தார். அவை பத்துக் கட்டளைகள் என்றழைககப்படுகினறன. அவை: 1) உண்மை அறிவின் காரணகர்த்தா கடவுள். அவர்பெயராலேயே ஒவவொன்றும் அறியப்படும். 2) உணமையே கடவுள்; அது அறிவு வடிவம்; எஙகும் நிறைந்தது; அழிவற்றது; அச்சமற்றது. 3)ஒவ்வோர் ஆரியனும் மறைகளைக் கற்றும், கேட்டும், போதித்தும், பிரச்சாரம் செய்தும் கடமைகளை ஆற்ற வேணடும். 4) பொய்மையைத் துறந்து வாய்மையை ஏறகவேண்டும். 5) அனைததுச் செயல்களும் அறவழிப் பட்டதாக இருக்கவேண்டும். 6) மனித சமூகத்தின் பெளதிக, ஆனமிக, சமூக நிலைமைகளை உயர்த்துவதற்காக உலகத்தில் நற்பணிகளை ஆற்ற வேண்டும். 7) அவரவர் தகுதிகளைப் போற்றி அன்புடனும், நீதியுடனும் ஒழுகுதல்வேண்டும். 8)அறியாமையை அகற்றவேணடும். 9) தன்னலமற்ற வாழ்கைை வாழ வேணடும். 10) சமூக நலன்களுக்காக அனைதது வேறறுமைகளையும் களையவேண்டும்.

மேற்கூறிய பத்துக் கட்டளைகளில் சமய நெறி சமூக நலன்களுக்குத் துணை நிற்கவேணடும் என்பது தெளிவாகிறது. தாம் வகுத்துக்கொண்ட கொளகைகளின் அடிப்படையில் 'மறைக் காலத்திற்குத் திரும்புங்கள்' என்ற இலட்சிய முழக்கத்தைத் தயானந்தர் பறை சாற்றினார். இவரது மூழக்கம் ஐரோப்பாவில் மார்ட்டின் லூதர் 'விவிலிய நூலுக்குத் திரும்புவோம்' என்ற கத்தோலிக்க சமய பீடத்தின் பாவ மன்னிப்புச் சீட்டுக்களை எதிர்த்துக் கொடுத்த புனித அறைகூவல் போன்றிருந்தது.

சமய, சமூக சிக்கல்களுக்கு மட்டுமலலாமல் நவீன, பௌதிக, அறிவியல் உண்மைகள்கூட மறைகளில் பொதிந்துளளன என்பதாகத் தாயனந்தர் விளக்கிவந்தார். சுவாமி அரவிந்தரும் இக் கொள்கையை ஆதரித்தார்.

பிரம்மஞான சபையின் பெற்றோர்களான மேடம் பிளாவட்சுகி என்ற உருசியப் பெண்மணியும், கர்னல் ஆல்காட்டு என்ற அமெரிக்கரும் ஆரியசமாசத்தின் மறைநெறியில் முதலில் ஈடுபாடு காட்டினர். கி.பி.1878 முதல் 1881 வரைஆரிய சமாசமும்,பிரம்ம ஞான சபையும் இணைந்து செயலாற்றின. ஆரிய சமாசத்தின் விக்கிரக வழிபாடு எதிர்ப்பும், சமூகச் சீர்திருத்தப் பிரச்சாரமும் பிரம்ம சமாசத்தைக் கவர்ந்தன.

சுவாமி தயானந்தர் ஏனைய சமயங்களைப் பற்றித் தமது உண்மை விளக்கத்தில் விரிவாக வாதித்துள்ளார். எழுத்து வன்மையாலும், மேடைப் பேச்சு வன்மையாலும் இயக்கத்தைக் கட்டிக்காத்து வளர்த்த ஆற்றலினாலும் தயானந்தர் ஆரிய சமாசத்திற்கு மக்கள் தொடர்பை எளிதாக்கினார். நாட்டுப்பற்று, சுதேசி, விதவைமறுமணம், பெண்கல்வி, அனாதைப் பாதுகாப்பு, நாட்டுக் கல்வி, சமய மாற்றம், மறை நெறிக் கோட்பாடுகள், பண்பாடு ஆகியவை யாவும் தயானந்தர் இயக்கத்தின் சிறப்பு வாய்ந்த சாதனைகளாகும். சாதி வேற்றுமை, தீண்டாமை, புரோகிதத்தின் மேலாணமைக் கொடுமைகள் அனைத்தையும் சாடத் தயானந்தர்ஆரிய சமாசத்தைக் கருவியாகக கொணடார். இவ்விதம் தற்காப்பு முறையாகவும், சமய மாற்றங்களுக்கு உட்பட்டவர்களை மீணடும் இந்து சமயத்திற்குக கொணரவும் 'சுத்தி' 'சங்கடனம்' என்னும் இரு இயக்கங்களை ஆரிய சமாசத்தோடு இணைத்தார்.

தயானந்த சுவாமியின ஆரிய சமாசம் நாட்டுப்பற்றுள்ள தலைவர்களை உருவாககியது. வடக்கில இலாலாலசபதிராய், சுவாமி சிரத்தானந்தர் ஆகியோர் இவர்களுள் தலைசிறந்தவர்கள். ஆரிய சமாசிகள் 1907 முதல் 1910 வரை ஆங்கில அரசின் அடக்கு முறைக்கு ஆளாயினர். அதன் விளைவாக 1911-இல் 24,300 உறுப்பினர்களைக் கொண்ட ஒரு பேரியக்கமாக இதுமாறியது. ஆரிய சமாசம் தனது சமுதாய, சமய, கல்விப் பணிகளின மூலம் இநதியரிடையே தனனம்பிக்கை, தன்மான உணர்வுகளை ஊட்டியது எனலாம்.

கே சே.

**தயானா**, உரோமப் புராணங்களில வழங்கப் பெறும் தாய்த் தெய்வம். இத்தெய்வம், கடவுள்களின் அரசர் என உரோமானியர்களால் கருதப்படும் உரோமப் பெருந் தெய்வத்திற்கும் (Jupiter) இலட்டோனா (Latona) என்னும் தெய்வத்திற்கும் மகளாகப் பிறந்தாகும்.

தயானாவும் (Diana) அப்பல்லோவும் (Appollo) இரட்டையர்களாகப் பிறந்தவர்கள. தயானா, தெலோசுத் (Delos) தீவில் பிறந்ததால் பண்டைய உரோமானியர்கள் இத்தெய்வத்தைத்தெலீயத் தாய்த் தெய்வம் (Delian Goddess) எனவும், தெலியா (Delia) எனவும் வழங்கிவந்தனர். தயானா தாய்த் தெய்வம் கிரேக்கத் தாய்த் தெய்வமான ஆர்த்திமிசு (Artemis) தெய்வத்தை மிகவும் ஒத்துக் காணப்படுவதாகக் கூறுவர்.

உரோமானியர்கள இத் தெய்வத்தைச் சந்திரக் கடவுளாகவும், பெண்களின் வாழ்வில் அனைத்து நிகழ்ச்சிகளிலும் வணங்கப்படும் தெய்வமாகவும்

கொண்டுள்ளனர். அதனோடு இளம் பருவத்திலுள்ள உயிரினங்கள் அனைத்திற்கும் தயானா தெய்வமாக கருதப்படுகிறாள்.



தயானா

தயானா, திருமணமாகாத கற்புடைய பெண தெய்வமாதலால் இத்தெய்வத்தை வழிபடும் அனை வரும் கற்புடையவர்களாக இருக்கவேண்டும் என்பது ஒரு நெறியாகக் கருதப்படுகிறது. பல இடங்களில் வரையப்பட்டுளள தயானா தெய்வம் வேட்டைக்குச் செல்லும் உடையுடனும், வில்லுடனும், அம்புகளைக் கொண்ட கையுடனும், காட்டு விலங்கொன்றுடனும் காணப்படுகின்றது. சீ.ப,

**தர்க்கீம் ஏமீல்** (கி பி. 1858-1917), பிரெஞ்சுச் சமூகவியலறிஞராவார். இவர் பிரான்சிலுள்ள எபி னால் (Eplnal) என்னுமிடததில் கி.பி. 1858-ஆம் ஆண்டு பிறந்தார். பாரிசில் பட்டப்படிப்பை முடித் துக்கொண்டு செருமனி சென்றார். அங்குப் பொரு ளாதாரம், நாட்டுப்புறவியல், பணபாட்டு மானிட வியல் முதலியவற்றைத்தர்க்கீம்(Emıle Durkheim)கற் றார்.தொடக்ககாலத்தில் மாவட்டமேல்நிலைப்பளளி ஆசிரியராகப் பணியாற்றிய இவர் கி.பி. 1887-இல் பார்டோசோ( Bordeauso )பல்கலைக்கழகத்தில்பேராசி ரியராகச்சேர்ந்தார். பின்னர் 1902-இல் அப்பல்கலைக் கழகத்திலிருந்து விலகிப்பாரிசுப் பல்கலைக் கழகத்தில் சேர்ந்து கடைசிவரை அஙகேயே பணியாற்றி னார்.



தர்க்கீம் ஏமீல்

இவர் கி.பி. 1896-இல் சமூகவியல (Annıe Sociologique) எனற இதழை நிறுவி அதன்மூலம் தம்முடைய சமூகவியல் சிந்தனைகளையும், ஆராய்ச்சி உண்மைகளையும் வெளியிட்டு வந்தார். இவருடைய சிந்தனைகளும், ஆராய்ச்சிகளும குறிப்பாக, சமூகக் கட்டொருமைப்பாட்டைப் பற்றியே அமைந்திருந் தன. இவருடைய பெற்றோர்கள யூத இனத்தைச் சேர்ந்தவர்கள். பிரான்சில் யூத இனம் சிறுபான்மை இனமாக இருநதது. சிறுபானமை இனம் என்பதால் யூதர்கள மிகவும் ஒன்றுபட்டு வாழ்ந்து வந்தார்கள். இந்த ஒருமைப்பாடு தாக்கீமைக கவர்ந்தது. அதுவே இவரைச் சிந்திக்கவும் ஆராயவும் தூண்டியது. தர்கீம் பல சமூகவியல் சிநதனைகளை வடித்துத் தந்தார். ஆய்வுகளை மேற்கொண்டார். ஆனால் சமூகவியலில அவர் விளக்கமான நூல் ஏதும் படைக்கவில்லை. ஆயினும் அவர் வடித்துத் தநத சிந்தனைகள் முறையாக, கோவையாக அமைந்திருந் தன. பிரான்சிலும், அமெரிக்காவிலும் அவருடைய சிந்தனைகளின் அடிப்படையில் பல ஆய்வுகள நடை பெற்றன, கோட்பாடுகளும் எழுந்தன.

கோம்தேயின் (Auguste Comte) தத்துவக் கருத்து களைப் பின்பற்றிச்சமூகவியல் முறையில் தத்துவச் சிக்கலகளை அணுகினார். சமூகத்தின் கட்டொரு மைப்பாட்டினால்தான் நீதியும் மதமும் தோன்றின என விளக்குகிறார். சமூக நிகழ்வுகளுக்கு முழுக்க முழுக்க சமூகவியல் கணணோட்டத்திலேயே விளக்

கங்கள் தருகிறார். மேலும் இவர், சமூக மெய்ம்மைகள் புலனீடானவை; எனவே, செயல்முறை சார்ந்த அறிவியலான சமூகவியலால் அவற்றைக் கூர்ந்து நோக்கி ஆராயமுடியும் என்கிறார்.

இவர் மதத்தைப் பற்றியும் சிந்தித்து அது எவ்வாறு தோன்றியது என விளக்குகிறார். மதத்தின் தோற்றத்திற்குச் சடங்குகளும் சடங்கு வினைமுறைகளுமே காரணமெனச் சொல்லுகிறார். இக்கருத்தை உறுதிப்படுத்த ஆசுத்திரேலியாவில் வாழும் அருண்டாப் பழங்குடியைத் தம்முடைய ஆய்வுக்கு எடுத்துக் கொண்டார். இவர் குலக்குறிக் கொள்கையிலிருந்து (Totemism) தான் சமயம் தோன்றியது எனக் கூறுகிறார். சமயம் என்பது புனிதப் பொருள்கள் தொடர்பான நம்பிக்கைகளும் செயலாறுகளும் ஒருங்கே அமைந்த அமைப்பு முறையாகும் எனக் கூறுகிறார்

சமூகத்தில் வேலைப்பகிர்வு (The Division of Labour in Society), சமூகவியல் விதிமுறைகள் (The Rules of Sociological Method), சமய வாழ்க்கையின் தொடக்க நிலைகள் (The Elementary Forms of Religious Life), தற்கொலை (Suicide) ஆகியவை இவர் எழுதிய பல நூல்களில் சில. பிரெஞ்சுச் சமூகவியல் கருத்தினத்தைத் தோற்றுவித்த இவர் பாரிசில் 1917-ஆம் ஆண்டு காலமானார். பூ.த.

**தர்கோ, ஆன் இராபர்ட்டு**, என்ற பிரெஞ்சு அரசியலறிஞர், ஒரு சீர்திருத்தக்காரராகவும், பொருளியல் வல்லுநராகவும் விளங்கினார். பிரான்சில் கி.பி.18-ஆம் நூற்றாண்டில் வாழ்ந்த எல்விடியசு (Helvetius), வால்ட்டேர், பாசுகல் (Pascal), கண்டார்சே (Condorcet) ஆகியோரைப் போன்று இவர் மனித இனத்தின் வரலாறும் ஒரு தனியாளின் வரலாற்றைப் போன்றதே என்று கூறினார். ஆன் இராபர்ட்டு சேக்விசு தர்கோ (Anne Robert Jaguee Turgot), பிரஞ்சு அரசர்களுக்குத் திறமாகப் பணி செய்த ஒரு நார்மானியக் குடும்பத்தில் கி.பி,1727-இல் பாரிசில் பிறந்தார். திருச்சபையில் பணிசெய்யும் பொருட்டு இவர் பாரிசுப் பல்கலைக்கழகத்தில்இறையியல் பாடம் பயின்றார்; பின் அவ்வெண்ணத்தை விடுத்து, அரசாங்கத்தில் நீதிபதியாகப்பணியேற்றார். அரசாங்கப் பணிகளுக்கிடையேயும் இவர் பாரிசிலிருந்த அறிஞர் கூட்டத்தோடு நெருங்கிய தொடர்பு கொண்டு, பிரஞ்சு மொழியில் புதிதாக வெளியிடப்பட்ட கலைக் களஞ்சியத்துக்குப் பல அரிய கட்டுரைகளை எழுதி உதவினார். இயற்கைப் பொருளியல் அறிஞராகிய (Physiocrat) பிரான்க்காய் குயிசினே (Francois Quesnay) என்பவரோடு இவர் நெருங்கிப்



தர்கோ

பழகி, அவருடைய தடையற்ற வாணிகக்கருத்துகளை (Free Trade) ஏற்றார். இவர் கி.பி.1761 முதல் 1774 வரை இலிமோசசின் (Limoges) ஆட்சியாளராகப் (Intendent) பணிசெய்தபோது, தம் சீர்திருத்தக் கருத்துகளைச் செயற்படுத்த முயன்று, நில அளவை செய்து, நிலவரியைத் துல்லியமாக ஆக்கி, குடியானவர்கள் அரசாங்கத்துக்குக் கட்டாயப் பணி செய்தற்கு ஈடாக, சிறு பணவரி செலுத்தவும், தக்க சூழ்நிலைகளில் வரிக் குறைப்புப் பெறவும் ஏற்பாடு செய்தார். இவர் அரசரின் உயர் நீதி அதிகாரியாகப் பதவி உயர்வு பெற்று, அரசாங்கச் செலவில் சிக்கன முறையைக் கொண்டு வந்து, அஞ்சல் துறையையும் போக்குவரத்துத் துறையையும் சீர்திருத்தி, உள்நாட்டில் உணவுப் பொருள்கள்தடையின்றி எடுத்துச் செல்லப் படுவதற்கு ஏற்பாடு செய்தார். இவர் பாரிசிலிருந்த வாணிபத் தடைகளை அகற்றி, குடியானவர்களுடைய கட்டாயப்பணி முறையை (Corvee) ஒழித்து, நிலங்களெல்லாவற்றுக்கும் சீரான வரிவிதிப்பைக் கொண்டுவந்து, கி.பி.1776-இல் 6 ஆணைகளை விடுத்தார். இவருடைய நல்ல சீர்த்திருத்தங்களைப் பல தன்னலக்காரர்கள் எதிர்க்கவே, அரசர் இவரை நீக்கிவிட்டு, நெக்கர் (Necker) என்பவரை அமர்த்தினார்.

தர்கோ மனித இனத்தின் வரலாறு அதனுடைய இடையறா வளர்ச்சியைக் காட்டும் ஒரு தத்துவமே என்ற கருத்தில் உறுதியான நம்பிக்கை கொண்டிருந்தார். இதனையே இவர் ஒரு மையக்கருத்தாக வைத்துப் பல விளக்கங்களை மனித வரலாற்றுக்கு எழுதினார். இவர் பிரஞ்சு மொழியில் எழுதிய முக்கியமான சிறிய நூல் ஒன்றில், மனித வளர்ச்சி (Human Progress) என்ற கருத்தை ஒரு வரலாற்றுத் தத்துவமாகக் காட்டி விளக்குகிறார். மனித சமூகம்

வளர்ச்சியின் பல்வேறு நிலைகளின் வழியாக (Stage). முன்னேறி வந்துள்ளது. இயற்பியல் போன்ற (Physics) அறிவியல்களிலே திரும்பத் திரும்ப நடை பெறும் ஒரே வகையான நிகழ்ச்சிகளின் அடிப்படை விதிகள்ஆராயப்படுகின்றன. மனித வரலாறோ ஒரு நாகரிகத்தையே உருவாக்குகின்றதும், எப்போதும் வளர்ந்து வருவதுமான மனித அனுபவங்களின் திரட்சியைக் குறிப்பிடுகிறது. மனித நாகரிக வளர்ச்சியை உயிர் தோன்றிய நிலை (Animistic Stage), சிந்தனை நிலை (Speculative Stage), அறிவியல் நிலை (Scientific Stage) ஆகிய மூன்று நிலைகளாகப் பிரித்தல் இயலும் என்பது இவர் கருத்து. 'பொருள் உற்பத்தி, பங்கீடு முதலியவை பற்றிய கருத்துகள்' என்றொரு நூலையும் தர்கோ கி.பி.1766-இல் எழுதினார். பொருளுற்பத்தியிலும் பங்கீட்டிலும் அரசாங்கக் கட்டுப்பாடுகளும், வரம்பு மீறிய வரி விதிப்பு முறையும் இருத்தலாகாதென்ற கொள்கையை இவர் வலியுறுத்திக் கூறுகிறார். இவர் இயற்கைப் பொருளியலாருடைய தடையிலா வாணிகக் கொள்கையை முற்றிலும் ஆதரித்தார்.

தர்கோ. ஐரோப்பாவின் அறிவு ஒளிக்காலத்தைச் சேர்ந்த தெளிந்த, ஆக்க இயல்பான ஒரு சிந்தனை யாளர் ஆவர். இங்கிலாந்தில் செயலறிவுக கொள்கை யினடிப்படையில் (Empiricism) சான இலாக்கு ஒரு தாராள அரசியலமைப்புக் கொள்கையை வகுத் தது போல, பிரான்சில் எல்வெசியசும், கண்டார் சேயும், தர்கோவும் தாராளச் செயலறிவு இயல புடைய நோக்கில் வரலாற்று நிகழ்ச்சிகளை ஆராய்ந்தனர். தர்கோ விளக்கிய மனித இன முழுவதின் முன்னேற்றம் அல்லது வளர்ச்சி என்ற கருத்தே (Idea of Universal Human Progress), எகல் என்னும் செருமானியத் தத்துவ ஆசிரியர் தம் வரலாறு பற்றிய தத்துவக் கொள்கையை வரைதற்கு உதவியாக இருந்தது. குடியாட்சி முறை அரசாங்கம், இயற்கை உரிமைகள் முதலிய கருத்துகளெல்லாம் தர்கோ வரலாற்றுக்குக் கொடுத்த விளக்கத்தினால் முக்கியத்துவம் பெற்று, யாவராலும் வரவேற்கப் பட்டன. பிரஞ்சுப் புரட்சியை உருவாக்கிய சிந்தனை களுள் தர்கோவின் வரலாற்றுக் கருத்துகளும் இடம் பெறுகின்றன. பா.சு.

**தர்சுடன், எட்கார்,** தென்னிந்திய மானிட வியலில் பெரும் பங்காற்றியவர்; சிறந்த அருங்காட்சிய கவியலார். இவர் பிறந்து வளர்ந்தது இங்கிலாந்தில். தொடக்கக்காலத்தில் மருத்துவத் துறையில் ஈடு பட்ட தர்சுடன் (Edgar Thurston)பின்னர் அருங் காட்சியகக் கலையிலும் பயிற்சி பெற்றார்.

தர்சுடன், சென்னைக்கு வருவதற்கு முன்பு இலண்டனில் அரசர் கல்லூரியின்(King 's College) அருங்காட்சியகத்தைக் கணகாணித்து வந்தார். சென்னை வந்த இவர் அரசு அருங்காட்சியத்தின் கண்காணிப்பாளராக கி.பி 1885-ஆம் ஆண்டு பொறுப்பேற்று ஒரு கால் நூற்றாண்டுக் காலம் (1885-1908) அருங்காட்சியக வளர்ச்சியில திறம் படப் பணியாற்றினார். அருங்காட்சியகத்தின அரும் பொருள் சேகரிப்பு அந்தந்த மாநில அளவில் விரி வானதாக இருத்தல் வேண்டும் என்ற நோக்கோடு தொல்லியல், மானிடவியல், கலை, கைத்தொழில் முதலான பிரிவுகளைச் சேர்ந்த பொருள்களைச் சேகரித்தார். இவர் காலத்தில் தான் இலாகூரிலிருந்து எழில்மிகு காந்தாரக் கற்சிற்பங்களும், ஆந்திரத்தின பட்டிப்பொரோலு என்னும் ஊரிலிருந்து சிமிழ்களும் மாநிலத் தொல்லியல துறையிடமிருந்து அமராவதி பௌத்த சிற்பங்களும் சென்னை அருங்காட்சியகத் திற்குப் பெறப்பட்டன.



தர்சுடன்

விலங்கியல் பிரிவிற்காகச சென்னைக் கடற்கரை யில் கடல் விலங்குகள் பலவற்றையும் இவர் தீவிர மாகச் சேர்த்து அவற்றை வகைப்படுத்தி ஆய்வு செய் தார். இவ்வருங்காட்சியகத்தில் பார்வையாளர்

களைக் கவரும் மிகப்பெரும் சுறா மீனைச் சென்னை கடற்கரையில் பெற்றுப் பதப்படுத்திக் காட்சிக்கு வைத்த பெருமை இவரையே சாரும். புவியியல் பிரிவிற்காக அனைத்து மாவட்டங்களிலிருந்தும பல்வேறு வகையான கற்படிமங்களைச் சேகரித்து அதன் பயன்களை மக்கள் அறியுமாறு காட்சிப்படுத்தினார்.

அருங்காட்சியகக் கண்காணிப்பாளர் பதவியுடன் சென்னை மாநில இனக்குழுவியல் ஆய்வு (Ethnographic Survey) அலுவலர் பதவியையும் 1901-ஆம் ஆண்டு ஏற்றுக்கொண்டார். இப்பணியின் விளைவே 7 தொகுதிகளைக் கொண்ட 'தென்னிந்திய சாதிகளும் பழங்குடிகளும்' (Castes and Tribes of Southern India) ஆகும். இந்நூலில் மத்திய இந்தியாவைச சார்ந்த கோணடுப் பழங்குடிகள் தொடங்கித் தென தமிழ் நாட்டைச் சார்ந்த கோட்டை வேளாளர் வரையிலான இரண்டாயிரத்திற்கும் மேற்பட்ட சாதியினரையும், பழங்குடியினரையும் அவர்களின் சமூக, பொருளாதார முறைகள், வாழ்க்கையமைப்புகள், பழக்க வழக்கங்கள் முதலான அனைத்துப் பண பாட்டுக் கூறுகளையும் தொகுததுக் கூறியுள்ளார். இவர் காலத்தில்தான சென்னை அருங் காட்சியகத தில் பல்வேறு பிரிவுகளில் சேகரிக்கப்பட்ட பொருள கள் குறித்துப் பல நூல்கள வெளியிடப்பட்டன. இவரது முயற்சியினாலேயே சென்னை அருங்காட்சியக வெளியீடுகள் (Madras Museum Bulletins) கி.பி. 1893-ஆம் ஆண்டு முதனமுறையாக வெளியிடப் பட்டது. தர்சுடன, சென்னை அருஙகாட்சியகத்தில இனவியல் ஆய்வுகளுக்காக மானிட உடலளவையியல் ஆய்வுக்கூடத்தை (Anthropometric Laboratory) முதனமுதலில் ஏற்படுத்தினார். கலைப்பொருள் களைச் சிறப்புக் காட்சிக்கு வைக்க விக்டோரியா தொழில் கலை மணடபம் கட்டுவதறகான முயறசியில் வெற்றிகண்டார்.

சென்னைப் பலகலைக்கழத்தில் இவரது ஆலோசனைப்படி கி.பி. 1895-ஆம் ஆணடு மானிடவியலில முதுகலைப் படிப்பு தொடங்க ஒப்புதலாயிற்று. இவர் நூலக வளர்ச்சிக்கும் பெரும் தொண்டாற்றினார். தர்சுடனின முயற்சியால கி.பி. 1896-ஆம் ஆண்டு சென்னை அருஙகாட்சியக வளாகத்தில புதியதாகக் கட்டப்பட்ட கட்டடத்தில் கன்னிமாரா பொது நூலகம் திறந்து வைக்கப்பட்டது. இவர் சென்னைப் பல்கலைக்கழக நூலகக் குழுவின தலைவராகவும் சிறிதுகாலம் பணியாற்றினார்.

சென்னைக் கடற்கரையில் முதன்முறையாகச் சிறந்த நீர்வாழ் காட்சியகம் (Madras Aquarium) ஒன்று 1909-ஆம் ஆண்டு தர்சுடன தலைமையில் அமைக்கப்பட்டது. இநதியா போன்ற வெப்ப மண்டலப் பகுதியில் இவவகையான காட்சியகத்தினைச் சிறந்த தொழில நுட்பத்துடன ஏறபடுத்திய பெருமை இவரையே சேரும. இவர், இதன இயக்குநராகவும் சிறிதுகாலம் பணியாற்றினார்.

தர்சுடன் பல நூல்களையும் நூறறுக்கும் மேற்பட்ட கட்டுரைகளையும் வெளியிட்டு மானிடவியல் துறைக்கு உழைத்துள்ளார். இவரது அயராத உழைப்பினால பல மானிடவியலார் இவரை அடியொற்றித் தென்னிந்திய மானிடவியலில் சிறப்பிடம் பெற்றனர். நே.தே.

***தர்பங்கா***: இந்திய நாட்டில் பீகார் மாநிலத்திலுள்ள ஒரு நகரமாகுத தர்பங்கா விளஙகுகிறது. தாபங்கா என்ற நகர் சிறுபுகுமதி என்ற ஆற்றின் கரையில, 10 கி.மீ. நீளத்திற்குப பரந்து விரிந்துள்ளது. இநத நகர் பாட்னா நகரிலிருந்து வடகிழககில 95 கி.மீ. தொலைவில் இருந்தாலும், இடையே குறுக்கிடும் கங்கை நதியைப் படகுகளின துணையுடன் கடந்துதான் இந்த நகரை அடையமுடியும். இந்த நகரத்தின் 1961-ஆம் ஆணடில் எடுக்கப்பட்ட மக்கள தொகைக் கணககின்படி மக்கள தொகை 103,016 ஆக இருந்தது. இந்த நகரைச் சுற்றி மாந்தோப்புகளும், செயறகையாக வெட்டப்பட்ட குளங்களும் நிரம்பியிருக்கின்றன. இந்நகரில் உள்ள மகாராசாவின் அரணமனை 55 ஏக்கர் நிலப்பரப்பில் எழும்பி நிற்கிறது. மேலும், பீகார்ப் பலகலைக் கழகத்தோடு இணைக்கப்பட்ட ஒரு வடமொழிப் பல்கலைக் கழகமும் பல கல்லூரிகளும் இநநகரத்தில் செயற்படுகின்றன. மருத்துவக் கல்லூரி ஒன்றும் நடை பெற்று வருகின்றது.

தர்பங்கா (Darbhanga) எனற இநத நகரத்தின பெயரைக் கொணடு அமமாநிலத்தில ஒரு மாவட்டமும் இருந்து வருகிறது. தர்பங்கா மாவட்டம் நேபாளத்தின் எல்லை வரைபரவியுள்ளது. இந்தமாவட்டத்தின பரப்பளவு ஏறத்தாழ 8690. ச.கி.மீ. ஆகும். இந்த மாவட்டத்தின மக்கள தொகை 1961-ஆம் ஆணடின கணக்குப்படி 4,413,027 ஆகும். இந்த மாவட்டத்தில கங்கை, புர்கி கணடகி, புகுமதி, சிறுபுகுமதி, பாலன், சிறுபாலன, சில்சுகா ஆகிய நதிகள் பாய்ந்து வளமையைக் கூட்டுகின்றன. அதே நேரத்தில் இந்த மாவட்டம் வெள்ளப்பெருக்கின் சேதத்திற்கும் பல முறை ஆளாகியுள்ளது. கோதுமை, பார்லி, சோளம், பருப்பு வகைகள், எண்ணெய் வித்துகள், கரும்பு, புகையிலை மாம்பழம் ஆகியன இஙகுள்ள விளை பொருள்களாக இருப்பினும், அனைத்திலும் முக்கிய விளைபொருளாக நெல் விளங்குகிறது. சாலைப்

போக்குவரத்து இந்த மாவட்டத்தில் வசதியாக இல்லாவிட்டாலும், வடகிழக்குப் புகைவண்டி நிறுவனப் பணியால் இம்மாவட்டம் பயன்பெற்றுவருகிறது. இந்த மாவட்டத்தின் மேற்குப் பகுதியில் புசா என்ற நகரும் உள்ளது. இங்கு, பூச்சி மருந்தியலில் ஆய்வு மேற்கொள்ளும் வேளாணமை ஆராய்ச்சி நிலையம் ஒன்று செயற்பட்டு வருகின்றது. பீகார்ப் பூகம்பத்திற்குப் (1934) பிறகு, இங்கிருந்து மாற்றப்பட்ட நிலையம்தான் தில்லியில் செயற்பட்டு வரும் இந்திய வேளாண்மை ஆய்வு நிலையமாகும்.

தர்பங்கா கி.பி. 16-ஆம் நூற்றாண்டிலிருநது இந்தியச் சிற்றரசர்களால் ஆளப்பட்டு வந்தது. ஆனால் 1947-இல் நாடு விடுதலை பெற்ற பிறகு, இந்த அரசு இந்திய நாட்டோடு இணைக்கப்பட்டது.
அ.க.

## தர்ன்வால்டு, இரிச்சர்டு (கி.பி. 1869-1954)

சிறந்த செருமானிய மானிடவியலறிஞர்; சமுதாய நிறுவனங்களைப் பண்பாட்டிடைநிலையில் ஆய்வு செய்து (Corss-Cultural Study) புகழ்பெற்றவர், இவர் சமுதாயவியலுக்கும் குறிப்பிடத்தக்க பணியைச் செய்துள்ளார். தர்ன்வால்டு (Richard Thurnwald) வியனனாவில் கி.பி. 1869-இல் பிறந்தார்.

தொடக்கக் காலங்களில் தர்ன்வால்டு, உலகின் பல்வேறு பகுதிகளில் வாழ்ந்த மக்களைப் பற்றி ஆராய்வதில் ஆர்வங கொணடிருந்தார். இதற்காக இவர் பல புதிய களப்பணி ஆய்வுகளை மேற்கொணடார். முதன்முதலில் சாலமன தீவுகள், மைக்ரோனீசியா முதலான பகுதிகளில பல ஆண்டுகள் (1906-1909, 1932) ஆய்வு செய்தார். பின்னர் நியூகினித் தீவுகளில் நான்கு ஆணடுகளும் (1912-15) பின்னர்க் கிழக்கு ஆப்பிரிககாவில ஓராண்டும் (1930) ஆய்வு செய்தார்.

பல்வேறு சமுதாயங்களை ஆய்வு செய்ததன் மூலம் தர்ன்வால்டு பண்பாட்டிடை நிலையில் சமுதாய நிறுவனஙகளை ஒப்பீட்டு முறையில் ஆராயும் மானிடவியல அறிவினைப் பெற்றார். இவரது தொடக்கக் கால இனக்குழுவியல் ஆய்வு (Ethnographic Study) 'பனரோ சமுதாயம்' (Banaro Society, 1916) ஆகும். இந் நூல் பனரோ என்னும் நியூகினிப் பழங்குடிகளின் சமுதாய அமைப்பையும் உறவுமுறையையும் பற்றியது. பல்வேறு சமுதாயங்களை ஒப்பீட்டு அடிப்படையில் ஆராயும்போது அச் சமுதாயங்களுக்கிடையே உள்ள வேறுபாடுகள புலப்படும் என்பார். சமுதாயங்களுக்கிடையே நிலவும் இந்த வேறுபாடுகளைக் கண்டறிவதன் மூலம் இவ் வேறுபாடுகள் ஒவவொரு சமுதாயத்தில் நிலைபேறுடைமைக்கு எவ்வாறு உதவுகின்றன என்பதை அறியமுடியும் என நம்பினார்.

சமுதாய அமைப்பு, பொருளாதாரம் ஆகியவற்றோடு ஒரு சமுதாயத்தின் தொழில் நுட்பம் கொண்டுள்ள உறவைக் கண்டுபிடிப்பதிலும் இவர் ஆர்வங்கொண்டு பல ஆய்வுகளை மேற்கொண்டார். இவ் வாய்வுகளின் மூலம் 'மேல்நிலை அடுக்கமைப்பு' (Super Stratification) என்ற கோட்பாட்டை உருவாக்கினார். சமுதாயத்தில் புதிய கூறுகள் நுழையும் போது ஏற்படும் மாற்றங்கள் காலப்போக்கில் அதன் அடித்தள அமைப்பையும் மாற்றக்கூடியது எனக் கூறினார். இதனடிப்படையில் நிலமானிய முறை (Feudalism), தொடக்கக் காலத்தில் ஏற்பட்ட அரசுமுறை, நகரங்கள், 18, 19-ஆம் நூற்றாண்டுகளில் ஏற்பட்ட குடியேற்ற அரசுகள் முதலானவற்றையும் ஆய்வு செய்து தம் கோட்பாட்டினை விளக்கினார்.

தர்ன்வால்டு பல பதவிகளில் இருந்து பணியாற்றினார் என்றாலும 1924-முதல் பெர்லின் (Berlin) பல்கலைக்கழகத்தில் மானிடவியல், சமுதாயவியல ஆகிய துறைகளில் கல்வி கற்பித்தார். புகழ்மிகக மானிடவியல், சமுதாயவியல் ஆய்விதழகளின் பதிப்பாசிரியராகவும் பணியாற்றினார்.

இவர் எழுதிய நூல்களுள் குறிப்பிடத்தக்கவை 'தொன்மைச் சமுதாயத்தின் பொருளாதாரம்' (Economics in Primitive Society, 1932), கிழக்கு ஆப்பிரிக்காவில கறுப்பாகளும், வெள்ளையர்களும் (Black and White in East Africa, 1935,) 'மககள் அறிவின அமைப்பும் பொருளும்' (Structure and Meaning of Popular Knowledge, 1948) ஆகியன. இவற்றுள் இறுதி நூல் செருமனியில எழுதப்பட்டதன் மொழிபெயாப்பு. இவர் பெர்லினில் 1954-ஆம் ஆணடு காலமானார்.
சீ.ப.

# பொருளடைவு

# கலைச்சொற் பட்டியல்

## தமிழ் — ஆங்கிலம்

| | |
|---|---|
| அகமணம் | ... Endogamy |
| அதிகப் பற்று | ... Over Draft |
| அழைப்பாணை | ... Summon |
| அளவாராய்ச்சி | ... Quantitative Analysis |
| அறிதிறன் | ... Cognition |
| அன்னியச் செலாவணி | ... Foreign Exchange |
| ஆயத்தீர்வை | ... Duty |
| ஆளுமை | ... Personality |
| இமைப்புழை | ... Palpebral Fissure |
| இயல்பூக்கம் | ... Instinct |
| இயற்கைக் கொள்கை | ... Naturalism |
| இயற்கைத் தேர்வு | ... Natural Selection |
| இயற்கைவாதிகள் | ... Physiocrats |
| இருத்தல் கொள்கை | ... Existentialism |
| இருப்புச் செலாவணி | ... Reserve Currency |
| இளங்குற்ற நடத்தை | ... Juvenile Delinquency |
| இன்மைக் கொள்கை | ... Nihilism |
| இன்றியமையாக் கொள்கை | ... Essentialism |
| இனக்குழு ஒப்பாய்வியல் | ... Ethnology |
| இனக்குழுவியல் | ... Ethnography |
| இனவேறுபாட்டுணர்வு | ... Racism |
| ஈடிபசு சிக்கல் | ... Oedipus Complex |
| உடல்சார் மானிடவியல் | ... Physical Anthropology |
| உடனடி மாற்றம் | ... Mutation |
| உண்மைக் கொள்கை | ... Realism |
| உயர்பாலூட்டி | ... Primate |
| உயிர் இயற்பியல் | ... Biophysics |
| உயிர் வேதியியல் | ... Biochemistry |
| உயிரி | ... Organism |
| உரிமையியல் பொறுப்பு | ... Civil Liability |
| உருபன் | ... Morpheme |
| உள்ளுணர்வு | ... Intuition |
| உளச்சிதைவு நோய் | ... Schizophrenia |

| | | |
|---|---|---|
| உளச் சேணிலை உணர்வு | ... | Mental Telepathy |
| உளமசார் சேணிலை உணர்வு | ... | Psychic Telepathy |
| உறவுமுறை | .. | Kinship |
| எடுகோள் | ... | Hypothesis |
| எதிர்மறைச் சிக்கல் | ... | Electra Complex |
| எதேச்சாதிகார ஆட்சி | ... | Tyranny |
| ஒருதுணை மணம் | .. | Monogamy |
| ஒருபொருள் நெறி | ... | Monism |
| ஒலிப்புமுறை மொழி | ... | Tonal Language |
| ஒலிமானி | ... | Audiometer |
| ஒலியன் | ... | Phoneme |
| ஓய்வு வகுப்பினர் | ... | Leisure Class |
| ஓரிடச் சிறப்பினமாக்கம் | ... | Sympatric Speciation |
| கட்டமைப்புத் துறை | ... | Organised Sector |
| கருத்துமுதற் கொள்கை | .. | Idealism |
| கல்செப்புக்காலப் பண்பாடு | ... | Chalcolithic Culture |
| கல்செப்புக்காலம் | . | Chalcolithic Period |
| காப்புக் கொள்கை | ... | Protectionism |
| கால்வழி | ... | Lineage |
| காலமானி | . . | Chronoscope |
| கிளைமொழி | ... | Dialect |
| குடைவுச் சிற்பம் | ... | Intaglio |
| குலக்குறி | ... | Totem |
| குலம் | ... | Clan |
| குவியும் சிறப்பினமாக்கம் | ... | Convergent Speciation |
| குழந்தையைப் புணருதல் | ... | Pedophilia |
| குற்றவியல் பொறுப்பு | ... | Criminal Liability |
| குறை மதிப்பீடு | ... | Under Valuation |
| குறையறி சோதனை | ... | Diagnostic Test |
| சமூகவயமாக்கம் | ... | Socialization |
| சரக்கு வரி | ... | Tariff |
| சிலர் நல ஆட்சி | ... | Oligarchy |
| சிற்பப் பட்டகை | ... | Plaque |
| சிற்றுதவி | ... | Dole |
| சிற்றோவியம் | ... | Miniature Painting |
| சிறப்பினம் | ... | Species |
| சிறப்பினமாக்கம் | ... | Speciation |
| சிறுநிகழ்வுப் பதிவு | ... | Anecdotal Record |

சுட்டுப்பெயர் ... Pronoun
சூழ்நிலை இணக்கப்பாடு ... Acclimatization
சூழற் சோதனை .. Situational Test
சூனிய நேரம் ... Zero Hour
சூனியம் ... Witchcraft
செயல்முறைக் கோட்பாடு .. Empiricism
செயலாராய்ச்சி ... Action Research
செயற் கோட்பாடு ... Activity Theory
செயற்பாட்டியல் ... Functionalism
செலாவணி ... Currency
செலாவணி நிதி ... Monetary Fund
செலுத்து வங்கியர் .. Paying Banker
சேணிலை உணர்வு . Telepathy
சொல் மறதிநோய் ... Alexia
சொலலடுக்கு .. Paradigm
சொல்வடிவியல ... Morphology
சொற்பிறப்பியல . Etymology
சோதனை முறை .. Experimental Method
தகர்த்தெறி கொள்கை ... Iconoclasm
தகவமைப்பு ... Adaptation
தகாப்புணர்ச்சி ... Incest
தகாப்புணர்ச்சி விலக்கு ... Incest Taboo
தடுப்புரிமை ... Veto
தடைவளைப்பு ... Blockade
தந்தைத் தலைமை ... Patriarchy
தன்மயமாதல ... Assimilation
தனியார் துறை ... Private Sector
தீர்ப்புத் தண்டனை . Conviction
தீர்ப்பாயம் ... Tribune
தொகுதி Phylum
தொகுப்பு வழிமுறை ... Inductive Method
தொல்லுயிரியல் . Palaeontology
நலப் பொருளாதாரம் . Welfare Economy
நாட்டச் சோதனை .. Aptitude Test
நிறுமம் ... Company
நுண் கற்காலம் ... Microlithic Period
நுண்ணறிவு ஈவு .. Intelligent Quotient
நுணணினம் ... Micro - race

| | |
|---|---|
| நுண்படிமலர்ச்சி | ... Micro-evolution |
| நெகிழ்வுத்தன்மை | ... Plasticity |
| நெற்றி மடல் | ... Parietal Lobe |
| நெறிமுறைக் கோட்பாடு | ... Normative Theory |
| நொதிப்பி | ... Enzyme |
| பகுப்புக் கணக்கியல் | ... Calculus |
| படிமலர்ச்சி | ... Evolution |
| பண்பாட்டுவயமாக்கம் | ... Enculturation |
| பணக்கொள்கை | ... Monetary Policy |
| பணவீக்கம் | ... Inflation |
| பயன்வழிக் கொள்கை | ... Pragmatism |
| பலமயமாகுதல் | ... Polyploidy |
| பலமனைவி மணம் | ... Polygyny |
| பிணத்தைப் புணருதல் | ... Necrophilia |
| பித்துநிலை | ... Insane |
| பில்லி சூனியம் | .. Sorcery |
| புதிய கற்காலம் | ... Neolithic Period |
| புதைபடிவம் | ... Fossil |
| புலன் உணர்வு மானி | ... Aesthesiometer |
| புள்ளியியல் தரங்கள் | ... Statistical Norms |
| புறமணம் | ... Exogamy |
| பெருஞ்சினம் | ... Rage |
| பெருநிலைப் படிமலர்ச்சி | ... Macro-evolution |
| பேரரசுக் கொள்கை | ... Imperialism |
| பேருரிமைப் பத்திரம் | ... Magna Carta |
| பொட்டு மடல் | ... Temporal Lobe |
| பொதுத் துறை | ... Public Sector |
| பொருத்துவாய் | ... Suture |
| பொறுப்பாளர் | ... Fiduciary |
| போலி உருவ வழிபாடு | ... Fetishism |
| மண்ணடுக்காய்வு | ... Stratigraphy |
| மரபணு | ... Gene |
| மரபணுப் பொதுச் சேர்மம் | ... Gene Pool |
| மரபுக் கீற்று | ... Chromosome |
| மறைமுகச் செயல் | ... Latent Function |
| மனிதநேயம் | ... Humanism |
| மாற்றுவிகித மதிப்பு | ... Exchange Rate |
| மிகை ஊதியம் | ... Bonus |

| | | |
|---|---|---|
| மிகை மதிப்பீடு | .. | Over Valuation |
| முற்போக்குக் கொளகை | ... | Progressivism |
| வட்டார இனம் | ... | Local Race |
| வாலில்லாக் குரங்கு | . | Ape |
| விடுதலைத் தீர்ப்பு | ... | Acquittal |
| விரியும் சிறப்பினமாக்கம் | .. | Dıvergent Speciation |
| விலக்கு | ... | Taboo |
| விலங்கைப் புணருதல் | ... | Beastiality |
| வெளிபபடைச் செயல் | ... | Manıfest Function |
| வேற்றிடச் சிறப்பினமாக்கம் | ... | Allopatrıc Speciation |

## ஆங்கிலம் — தமிழ்

Acclimatization .. சூழ்நிலை இணக்கப்பாடு
Acquittal ... விடுதலைத் தீர்ப்பு
Action Research ... செயலாராய்ச்சி
Activity Theory ... செயற் கோட்பாடு
Adaptation ... தகவமைப்பு
Aesthesiometer ... புலன் உணர்வு மானி
Alexia ... சொல மறதி நோய்
Allopatric Speciation .. வேற்றிடச் சிறப்பினமாக்கம்
Anecdotal Record ... சிறுநிகழ்வுப் பதிவு
Ape ... வாலில்லாக் குரங்கு
Aptitude Test ... நாட்டச் சோதனை
Assimilation .. தன்மயமாதல்
Audiometer ... ஒலிமானி
Beastiality .. விலங்கைப் புணருதல்
Biochemistry ... உயிர் வேதியியல்
Biophysics .. உயிர் இயற்பியல்
Blockade ... தடைவளைப்பு
Bonus ... மிகை ஊதியம்
Calculus ... பகுப்புக கணக்கியல்
Chalcolithic Culture ... கல்செப்புக்காலப பண்பாடு
Chalcolithic Period ... கல்செப்புக்காலம்
Chromosome .. மரபுக் கீற்று
Chronoscope . காலமானி
Civil Liability .. உரிமையியல பொறுப்பு
Clan .. குலம்
Cognition . அறிதிறன
Company ... நிறுமம்
Convergent Speciation ... குவியும் சிறப்பினமாக்கம்
Conviction ... தீர்ப்புத் தண்டனை
Criminal Liability .. குற்றவியல் பொறுப்பு
Currency . செலாவணி
Diagnostic Test ... குறையறி சோதனை
Dialect .. கிளைமொழி
Divergent Speciation ... விரியும் சிறப்பினமாக்கம்
Dole ... சிற்றுதவி
Electra Complex ... எதிர்மறைச் சிக்கல்

Empiricism ... செயல்முறைக் கோட்பாடு
Enculturation ... பண்பாட்டுவயமாக்கம்
Endogamy ... அகமணம்
Enzyme ... நொதிப்பி
Essentialism ... இன்றிமையாக் கொள்கை
Ethnography ... இனக்குழுவியல்
Ethnology ... இனக்குழு ஒப்பாய்வியல்
Etymology ... சொற்பிறப்பியல்
Evolution ... படிமலர்ச்சி
Exchange Rate ... மாற்றுவிகித மதிப்பு
Excise Duty .. ஆயத்தீர்வை
Existentialism ... இருத்தல் கொள்கை
Exogamy ... புறமணம்
Experimental Method ... சோதனை முறை
Fetishism ... போலி உருவ வழிபாடு
Fiduciary ... பொறுப்பாளர்
Foreign Exchange ... அன்னியச் செலாவணி
Fossil ... புதைபடிவம்
Functionalism ... செயற்பாட்டியல்
Gene ... மரபணு
Gene Pool ... மரபணுப் பொதுச் சேர்மம்
Humanism ... மனிதநேயம்
Hypothesis ... எடுகோள்
Iconoclasm ... தகர்த்தெறி கொள்கை
Idealism ... கருத்துமுதற் கொள்கை
Imperialism ... பேரரசுக் கொள்கை
Incest ... தகாப்புணர்ச்சி
Incest Taboo ... தகாப்புணர்ச்சி விலக்கு
Inductive Method ... தொகுப்பு வழிமுறை
Inflation ... பணவீக்கம்
Insane ... பித்து நிலை
Instinct ... இயல்பூக்கம்
Intaglio ... குடைவுச் சிற்பம்
Intelligent Quotient ... நுண்ணறிவு ஈவு
Intuition ... உள்ளுணர்வு
Juvenile Delinquency ... இளங்குற்ற நடத்தை
Kinship ... உறவுமுறை

Latent Function .. மறைமுகச் செயல்
Leisure Class ... ஓய்வு வகுப்பினர்
Lineage ... கால்வழி
Local Race ... வட்டார இனம்
Macro-evolution ... பெருநிலைப படிமலர்ச்சி
Magna Carta .. பேருரிமைப் பத்திரம
Manifest Function ... வெளிப்படைச் செயல்
Mental Telepathy ... உளச் சேணிலை உணர்வு
Micro-evolution .. நுணபடிமலர்ச்சி
Microlithic Period ... நுண் கறகாலம்
Micro-race ... நுணணினம்
Miniature Painting ... சிற்றோவியம்
Monetary Fund ... செலாவணி நிதி
Monetary Policy ... பணக்கொளகை
Monism ... ஒரு பொருள்நெறி
Monogamy ... ஒருதுணை மணம்
Morpheme ... உருபன்
Morphology ... சொல்வடிவியல்
Mutation ... உடனடி மாற்றம்
Naturalism ... இயற்கைக் கொள்கை
Natural Selection .. இயற்கைத் தேர்வு
Necrophilia ... பிணத்தைப் புணருதல்
Neolithic Period ... புதிய கற்காலம்
Nihilism ... இனமைக் கொள்கை
Normative Theory ... நெறிமுறைக் கோட்பாடு
Oedipus Complex ... ஈடிபசு சிக்கல
Oligarchy ... சிலர் நல ஆட்சி
Organised Sector ... கட்டமைப்புத் துறை
Organism ... உயிரி
Over Draft . அதிகப் பற்று
Over Valuation .. மிகை மதிப்பீடு
Palaeontology .. தொல்லுயிரியல்
Palpebral Fissure .. இமைப்புழை
Paradigm .. சொல்லடுக்கு
Parietal Lobe . நெற்றி மடல
Patriarchy ... தந்தைத் தலைமை
Paying Banker ... செலுத்து வங்கியர்
Pedophilia . குழந்தையைப் புணருதல்

| | |
|---|---|
| **Personality** | ... ஆளுமை |
| **Phoneme** | ... ஒலியன் |
| **Phylum** | ... தொகுதி |
| **Physical Anthoropology** | ... உடல்சார் மானிடவியல் |
| **Physiocrats** | ... இயற்கைவாதிகள் |
| **Plaque** | ... சிற்பப் பட்டகை |
| **Plasticity** | ... நெகிழ்வுத் தன்மை |
| **Ploygyny** | ... பலமனைவி மணம் |
| **Polyploidy** | ... பலமயமாகுதல் |
| **Pragmatism** | ... பயன்வழிக் கொள்கை |
| **Primate** | ... உயர்பாலூட்டி |
| **Private Sector** | ... தனியார் துறை |
| **Progressivism** | ... முற்போக்குக் கொள்கை |
| **Pronoun** | ... சுட்டுப் பெயர் |
| **Protectionism** | ... காப்புக் கொள்கை |
| **Psychic Telepathy** | ... உளம்சார் சேணிலை உணர்வு |
| **Public Sector** | ... பொதுத்துறை |
| **Quantitative Analysis** | ... அளவாராய்ச்சி |
| **Racism** | ... இனவேறுபாட்டுணர்வு |
| **Rage** | ... பெருஞ்சினம் |
| **Realism** | ... உண்மைக் கொள்கை |
| **Reserve Currency** | ... இருப்புச் செலாவணி |
| **Schizophrenia** | ... உளச்சிதைவு நோய் |
| **Situational Test** | ... சூழற் சோதனை |
| **Socialization** | ... சமூகவயமாக்கம் |
| **Sorcery** | ... பில்லி சூனியம் |
| **Speciation** | ... சிறப்பினமாக்கம் |
| **Species** | ... சிறப்பினம் |
| **Statistical Norms** | ... புள்ளியியல் தரங்கள் |
| **Stratigraphy** | ... மண்ணடுக்காய்வு |
| **Summon** | ... அழைப்பாணை |
| **Suture** | ... பொருத்துவாய் |
| **Sympatric Speciation** | ... ஓரிடச் சிறப்பினமாக்கம் |
| **Taboo** | ... விலக்கு |
| **Tariff** | ... சரக்கு வரி |
| **Telepathy** | ... சேணிலை உணர்வு |
| **Temporal Lobe** | ... பொட்டு மடல் |

| | |
|---|---|
| Tonal Language | ... ஒலிப்புமுறை மொழி |
| Totem | ... குலக்குறி |
| Tribune | ... தீர்ப்பாயம் |
| Tyranny | ... எதேச்சாதிகார ஆட்சி |
| Under Valuation | ... குறை மதிப்பீடு |
| Veto | ... தடுப்புரிமை |
| Welfare Economy | ... நலப் பொருளாதாரம் |
| Witchcraft | ... சூனியம் |
| Zero Hour | ... சூனிய நேரம் |

